547

உ

கடவுள்துணை.

# தமிழ்ச்சொல்லகராதி.

திருவா ருலகஞ் சிருட்டித் தளிக்கும்
அருவார் பொருட்டென் னகம்.



அ—இது தமிழ்ப்பாஷையின் வர்ணமாலையில்வரும் முதல்எழுத்து. உயிர்முயற்சியாற் பிறக்கும் எழுத்துக்களுள், அங்காந்தவளவிலே ஒலிக்கும் ஒரு குற்றுயிர். [அங்காந்தவளவிற் பிறப்பதாகிய இந்த உயிரெழுத்து, அங்காப்போ டண்பல் முதலிய கருவிகளின் றொழிலைக்கொண்டுபிறக்கும் மற்றையெழுத்துக்களோடுசெறிந்தும் இருத்தல்பற்றிச் சிவஞானசித்தியார் ௨ : ௨-ல் "அக்கரங்கடோறுஞ்சென்றிடுமகரம்போல நின்றனன் சிவனுஞ்சேர்ந்தே" என அச்செறிவு, ஆன்மாக்கடோறுஞ் சிவன்சேர்ந்திருத்தற் குபமானமாக்கப்பட்டது.]

1. அஃறிணைப் பன்மைப் படர்க்கையில் வரும் ஒரு பெயர்விகுதி; அது : தன்முன் "அன்" சாரியை பெற்றும் பெறாதும் வரும். (உ-ம்.) பொருளன, பொருள. (நன். பெய. ௨௩.) அன்றியும், "இன்" சாரியை பெற்றும் வரும். (உ-ம்.) "உன்னின". (சி. சி. ௪ : ௨௫. சிவஞானமுனிவர் உரைப்படி.)

2. அஃறிணைப்பன்மைப்படர்க்கையில் வரும் ஒரு வினைமுற்றுவிகுதி; அதுவும் தன்முன் "அன்" சாரியை பெற்றும் பெறாதும் வரும். (உ-ம்.) நடந்தன, நடந்த; கரியன, கரிய. (நன்: வினை. ௧௦.)

3. ஆறும்வேற்றுமையில் அஃறிணைப் பன்மைப்பொருளில்வரும் ஓர் உருபு. (உ-ம்) என கைகள். (நன். பெய. ௪௩-ம் உரையும்.) சிறுபான்மை "என கருத்து" என்பதிற்போல அஃறிணை ஒருமைப்பொருளிலும் வரும். (உ-ம்.) "எனகருத்திடை முற்பகலெய்தினோர்" (கந்தபு. மேருப். ௫௬.)

4. ஒரு சாரியையிடைச்சொல்; இது: "பொருநக்கடுமை" "கன்னத்தட்டு" "ஈமக்குடம்" "கம்மக்குடம்" "தமிழப்பிள்ளை" என்பவற்றிற்போலத் தொடர்மொழியிடத்தும், "நடந்தது" என்பதிற்போல ஒரு மொழியின் அகத்தும் க, ங. என்பதிற்போல மெய்யெழுத்தை யுச்சரிக்குமிடத்தும் வரும். (நன். மெய். ௫. ௨௦, ௨௨; உருபு. ௫.)

5. ஒரு பெயர்ச்சொல்லின் அகத்தாவது புறத்தாவது நின்று தூரத்திற்பொருளைச் சுட்டிவரும் ஓர் இடைச்சொல். (உ-ம்.) அவன் (அகம்). அக்கொற்றன் (புறம்).

6. ஒரு பெயரெச்சவிகுதி; இஃது: உடன்பாட்டுத் தெரிநிலைவினையில் வருங்கால் இறந்தகால நிகழ்கால இடைநிலைகளுள் எற்பதொன்றினை யணைந்தும், கு டு று என்னும் எழுத்துக்களில் ஒன்றை யீறாக உடைய சில குறிலிணைப்பகுதிகள், இறுதிநின்ற உயிர்மெய்யின் ஒற்றிரட்டித் திறந்தகாலங்காட்டுவனவற்றில் உகரங்கெட அதற்குப் பற்றுக்கோடாய்நின்ற அவ்வொற்றினை யூர்ந்தும், எதிர்மறைவினையில்வருங்கால், எதிர்மறையிடைநிலையாகிய ஆகாரத்தினையடுத்த தகரமெய்யை யூர்ந்தும் வரும். (உ-ம்) உண்ட சாத்தன், உண்கின்ற சாத்தன்; புக்க மனை, தொட்ட கை, உற்ற செய்தி; உண்ணாத சாத்தன், உள்ள பொருள்; இல்லாதபொருள் (நன். வினை. ௨௩. உரை. இராமா.)

7. ஒரு வியங்கோள்விகுதி. (உ-ம்.) "நான்மறையறங்களோங்க" (கந்தபு.வாழ்).

8. ஒரு வினையெச்சவிகுதி; இது, ககர மெய்யை முன்னுடையதாய்க் "கின்று" "கிறு" என்னும் இடைநிலைகள் பெற்று நிகழ்காலங் காட்டும் இனத்தின் ஒன்றாய வினையடியோடு ககர பகரமெய்களில் ஒன்றிரட்டித் திடையில் வர அணைந்து "படிக்க" "அலைப்ப" என்பவற்றிற்போலவும், ககர மெய்யை முன்கொண்டு வாராத அவ்விடைநிலைகள்பெற்று நிகழ்காலங்காட்டும் இனத்தின் ஒன்றாய வினையடியோடு விதிப்படியணைந்து "படிய" "போக" "வர" "உண்ண" என்பவற்றிற் போலவும் வரும். இவ்வினையெச்சம், தன்னை முடிக்குஞ் சொல்லோ டொருகருத்தா உடையதாய், வினைமுதலின் அபிப்பராயத்தைப்புலப்படுத்திப் "படிக்கவந்தான்" என்பதிற்போலவும்; தனக்கு வினைமுதல் ஒன்றாகத் தன்னைமுடிக்குஞ் சொற்கு வினைமுதல் வேறொன்றாக வந்து தன்னால் உணரப்படுந் தொழிலும் முடிக்குஞ் சொல்லால் உணரப்படுந் தொழிலும் ஒருகாலத்திலே நிகழ்ந்தன என்றாவது நிகழ்கின்றன என்றாவது நிகழுமென்றாவதொருவாறுநிகழ்காலப்பொருளுடையதாய்ச் "சூரியனுதிக்க அவன் வந்தான்" "சூரியனுதிக்க அவன் வருகிறான்" "சூரியனுதிக்க அவன் வருவான்" என்பவற்றிற்போலவும்; முடிக்குஞ்சொல்லால் உணரப்படுந்தொழில் காரண மென்பதுபட வருதலாகிய காரணப் பொருளாய், "மழைபெய்ய நெல்விளைந்தது" என்பதிற்போலவும்; முடிக்குஞ்சொல்லால் உணரப்படுந் தொழிற்குத் தன்னாலுணரப்படுந் தொழில் காரியமென்பதுபடவருதலாகிய காரியப்பொருளாய், "நெல்விளைய மழைபெய்தது" என்பதிற்போலவும் வந்து நான்கு வகைப்படும்.

9. ஓரவ்வியயம்; அஃது: ஒற்றெழுத்தே முதலாகவுடைய வடமொழிப் பெயர்ச்சொற்கு முன் "அபடம்" என்பதிற்போல அந்நியங்கருதும் அன்மைப்பொருளிலும், "அப்பிராமணன்" என்பதிற்போல ஒப்புமையுள்ளிட்ட அன்மைப்பொருளிலும், "அமலம்" என்பதிற்போல இன்மைப் பொருளிலும், "அமாம்சம்" என்பதிற்போல அற்பங்கருதிய இன்மைப்பொருளிலும், "அநீதி" என்பதிற்போல விரோதங்கருதியமறுதலைப் பொருளிலும், "அகாலம்" என்பதிற்போலத் தகுதியின்மை யுள்ளிட்ட மறுதலைப்பொருளிலும் வரும். [அபடம்-சீலையல்லாத பிறிதொருபொருள். அப்பிராமணன் - பிராமணன் அல்லாதவனும் பிராமணன் போன்றும் உள்ளவன். அமாம்சம்-அற்பமாமிசம்.]

10. சிவன். அது, "ஆருமறியாரகாரமவனென்று" என்னும் (திருமந். சதாசிவ.உஉ-ஆம்-) செய்யுளாற் பெறப்படும்.

11. சுக்கு. (இராசவைத்.)

12. திப்பிலி. (இராசவைத்.)

13. பிரமா. அது, "அச்சொரூப நான்முகற்றியாநித்துக்கொண்டு" என்னுஞ் செய்யுளாற் பெறப்படும். (சூத. ஞாந. கரு: சு.)

14. விட்டுணு. (உ-ம்.) "அவ்வெனுங் கரியமாலும்" (காஞ்சிப். திருவேக. உரு.)

**அஆ**—இரக்கக்குறிப்பிலே வரும் ஒருகூட்டிடைச்சொல். (உ-ம்.) "அஆவிழந்தானென்றெண்ணப்படும்" (நாலடி. செல்வநிலை. க.)

**அஃகம்**—1. ஊறுநீர் (பிங்க. ருஞள.). 2. தானியம். 3. விலைப்பொருள். (சுவ-ஃ) (உ-ம்.) "அஃகஞ்சுருக்கேல்" (ஆத்திசூடி. கரு.). 4. முறைமை "ஒருரிரண்டஃகமாயிற்று" (சீவகசிந்தா 2087.)

**அஃகாம்**—வெள்ளெருக்கஞ்செடி. (வைத்தியபரி.)

**அஃகல்**—அஃகுதல்.

**அஃகான்**—அ என்னும் எழுத்து. (உ-ம்.) "அஃகானடைவுமாகும்" (நன். மெய். க.)

**அஃகு**—1-3. அஃகென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 4. அஃகுதல், ஒரு முதனிலைத் தொழிற்பெயர்.

**அஃகுதல்**—1. அளவிற் குறைதல், சுருங்கல். (உ-ம்.) "அஃகிய இ" (நன். எழுத். ரு). 2. கழிந்துபோதல். (உ-ம்.) "அல்லாயிரமாயிரமஃகினவால்" (இராமா. அதிகா. சுக). 3. குவிதல். (உ-ம்.) "அரிவையர் வாண் முகமதியா லாம்பன்மலர் தரநோக்கியிரவணைந்த தெனக்கரையி னிவர்ந்தமைமீட டஃகுதலும்" (காஞ்சிப். திருக்க. கoஅ). 4. நுண்மையாதல். (உ-ம்.) "அஃகிய கன்ற வறிவென்னும்" (வள். களடு). 5. நீர் வற்றுதல். (உ-ம்.) "அஃகாநின்ற பெரு

நதிகள் (இரகு. திக்கு. கச). 6. வறுமை. (திவா.).

அஃதுல்லி—உக்காரி என்னுஞ் சிற்றுண்டி (பிங்க. ககககை).

அஃகேனம்—ஆய்த எழுத்து. [இவ்வெழுத்தைப் பெயரிட்டுவழங்குவதற்காக அகர உயிர்த்துணை வேண்டப்பட்டது. ஏனம் ஒரு சாரியை.]

அஃதான்று—அஃதன்றி. (உ-ம்.) "அஃதான்றுமுன்னேன் காண்க" (திருவாசகம். திருவண்ட. உஅ.) ["அஃது" என்பதனோடு சேர்ந்த "அன்றி" என்னும் வினையெச்சம், "அன்று" எனத் திரிந்து நீண்டுநின்றது.] (நன். உயிரீற். ௩0).

அஃது—அஃறிணை யொன்றன்பாலிலே வரும் ஒருசுட்டுப்பெயர். (உ-ம்.) "மறத்திற்குமஃதேதுணை" (வள். எசு).

அஃதை—சோழனொருவன்மகள் (அகநா. 96).

அஃபோதம்—நிலாமுகிப்புள் (பிங்).

அஃறிணை — உயர்திணையல்லாத சாதி; அது மனிதர், தேவர், நரகரென்னும் உயர்திணையாரொழிந்த உயிர்ப்பொருளும் உயிரல்லாப்பொருளும் ஆகிய சாதி. (உ-ம்.) மக்கடேவர் நரக ருயர்திணை-மற்று யி ருள்ளவு மில்லவு மஃறிணை" (நன். பெய.) "தன்னுணர்ச்சிகெட்டஃறிணைகளினுட றரிப்பார்" (நல்லா. பார. யயா. க௨0.) [அல்-அன்மை. திணை-சாதி. குற்றெழுத்தின் பின்னின்ற லகரம் ஆய்தமாய்த் திரிந்தது.] (நன். மெய். உரு).

அக்கக்காய்—துண்டுதுண்டாக.

அக்ககர்நம்—1. திரிகோணவடிவத்திலே யிலம்பகோணத்துக் கெதிராகிய ரேகை. 2. பதநகேந்திரம். [அக்ஷகர்ண.]

அக்கச்சி—தமக்கை.

அக்கசாலை—பொற்பணிசெய்யும் இடம். (உ-ம்.) "போயக்கசாலை புகுந்தனள் காணந்தப் பொய்ம்மகளே" (தனிப்பா. பலவித். ௩எ.)

அக்கசூத்திரம்— உருத்திராட்சக்கோவை. (உ-ம்.) "யோகபட்டம், அக்கசூத்திரம், மௌஞ்சி, அசினம், பவித்திரம் என்னுமிவை தரித்துக்கொண்டு" (சி. வி. கிரியா. அ ஆ. தாற்.) [அக்ஷஸூத்ரம்.]

அக்கட—அவ்விடம்.(உ-ம்.)"அக்கடவிராவணற் கமைந்தவாற்றலே" இராம். (ஒரு தெலுங்குச்சொல்.)

அக்கடி—கடுங்காற்றுற் கயிறடியுண்டு(மரக்கலம்) அலைதல். [அக்கம்-கயிறு. அடி-அடித்தல்.]

அக்கணம்—வெங்காரம். (கா. வைத்.)

அக்கணு—தான்றிமரம்.

அக்கதம்—1. ஆசீர்வாதத்தில் உபயோகிக்கப்படுங் கண்டப்படாத அரிசி. (உ-ம்.) "தலைத்தலையாசிகள் சாற்றிச் - சேர்த்தனர் சிந்துந் துணருமக் கதமும்" (கந்தபு. சூரனர. உரு). 2. சிதைவுபடாதது. [அக்ஷதம்: அ-எதிர்மறை. க்ஷதம்-கிழிக்கப்பட்டது, தகர்க்கப்பட்டது.]

அக்கதயோநி—ஆடவனோடு புணராத பெண். [அக்ஷதயோநி: அ-எதிர்மறை. க்ஷதம்-பங்கப்பாடு. யோநி-பெண்குறி.]

அக்கதாரி—1. சிவன். 2. சிவனடியான். [அக்ஷதாரிந்: அக்ஷம்-உருத்திராக்கம். தாரிந்-தரித்தவன்.]

அக்கதூர்த்தன்—சூதாடுகிற தீயன். [அக்ஷதூர்த்த: அக்ஷ-சூதாடுகட்டை. தூர்த்த:-வஞ்சகன், தீயவன்.]

அக்கதேவி—1. சூது விளையாடுவோன். (சப்த.) [அக்ஷதெவிந்: அக்ஷ-சூதாடுகருவி. தெவிந்-விளையாடுவோன்]. 2. சோனைப்புல். (கா. வைத்.). 3. புங்கு (வைத்தியபரி).

அக்கதை—மங்களகாரியத்திலே ஆசிகூறி வழங்கப்படும் அரிசி. (உ-ம்.) "வெண்ணிலவெறிக்கு நித்திலவக் கதையுமிட்டாள்" (பிரபுலிங். மாயை. சச).

அக்கந்தம்—தான்றிமரம். (கா. வைத்.)

அக்கந்து—நென்முதலிய தானியங்களைக் களத்திலே தூற்றும்போது காற்றுக்கெடுட்டொதுங்கி அப்பாற்கிடக்கும் முதிராத தானியங் கலந்த பதர்க்கூட்டம்.

அக்கப்பாடு—கடலிலாவது ஆற்றிலாவது மரக்கலத்தில் ஏற்றப்பட்ட விலைப்பொருள்கள் (தானியங்கள்) கடுங்காற்று முதலிய காரணங்களினால் நட்டப்படுகை. [அக்கம்-விலைப்பொருள். பாடு-கெடுகை.]

அக்கபாடகன்—நியாயாதிபதி.

அக்கபாடம்—1. மற்போர்க்களம். 2. திரைப்புடைவை. (சி. வி-இரி. உஎ தார்.) [அக்ஷபாட: அக்ஷ-மற்போர், எடுத்தல். பாட-அடைப்பு.]

அக்கபாதன்—நியாயசூத்திரஞ் செய்த கௌதமமுனிவன். (உ-ம்.) "அக்கபாதன் கணாதன்சைமினி" (மணிமேகலை. உஎ: அஉ.).

அக்கபிரம்—மாமரம். (கா. வைத்.)

அக்கம்—1. அறிவு. 2. ஆன்மா. 3. உருத்திராக்ஷம். (உ-ம்.) "தலையெலும்பப்புச் கொக்கிறகக்கம்" (திருப்பு. சகரு). 4. ஒரு மரம். [இதன் விதைகளால் உருத்திராக்க மாலையும், சூதாடு கருவியுஞ் செய்யப்படும்.]. 5. கடலுப்பு. 6. கண். (உ-ம்.) "அக்கநிரை சிந்தினர்" (கந்தபு.சகத்திர. உஙு.) 7. கயிறு. 8. சூதாடுகருவி. 9. ஞானேந்திரியம். 10. தராசுக்கோல். 11. தானியம். (உ-ம்.) "அக்கமுங் காசுஞ் சிக்கெனத்தேடு" (கொன்-வே). 12. தான்றிமரம். 13. துரிசு. 14. தேர். 15. தேருருள். 16. தேருறுப்பு. 17. பக்கம். 18. பண்டியச்சு. 19. பதினறுமாடங்கொண்ட ஒரு நிறை. 20. பாம்பு. 21. பூகோளாட்சம். 22. பெரும் விலை. 23. பொன். 24. வியவகாரம், வழக்கு. [1, 2, 3, 4, 5, 6, 8, 9, 10, 11, 13, 14, 15, 16, 17, 19, 20, 21, 24, அக்ஷ. 22. கவடீ.]

அக்கம்பக்கம்—அண்டையயல்.

அக்கமணி—உருத்திராக்கமணி. (உ-ம்.) "பூதியக்கமணியெழுத்தைந்தாதரியாப் புன்மையோரை" (சூத. எக்கி. பூ. கஅ: உஎ.) [அக்ஷ; மணி].

அக்கமாலிகாபரணன்—சிவன்.(உ-ம்) "மன்னுமாபதி நல்லக்கமாலிகாபரணன்" (சூத. ஞாந. கக: அ.)[அக்ஷமாலிகா-உருத்திராக்ஷமாலை.].

அக்கமாலை—1. அருந்ததி-வசிட்டன்மனைவி. [அக்கமாலையணிந்ததனலாய பெயர்.]2. ஜபமாலை. (திருவால. கட. உ०.) 3. உருத்திராக்ஷ மாலை. (உ-ம்.) "அக்கமாலைகுண்டிகை" (வேதாரணியபு. பிரம. சு.)

அக்கர்—1. உருத்திராக்கமணியுடையவர். (உ-ம்.) "திசைமுகன் மாதிரளக்கரக்கரை,, (கந்தரர். க०.) [அக்ஷம்-உருத்திராக்கம்.]2. கண்ணுடையவர். (உ-ம்.) "திரளக்கர்,, (கந்தரர். க०.) [அக்ஷம்-கண்.]

அக்கரகாரம்—ஒரு மருந்துச்சரக்கு.

அக்கரகாலம்—அட்சரகாலம். (பரத. தாள. ௫०)

அக்கரச்சுதகம்—இருபதுவகைச் சித்திரகவிகளுள் ஒன்று; அஃது: ஒருபொருள் பயப்பதோர்சொற் கூறி, அச்சொல்லின் எழுத்துக்களை ஓரோரெழுத்தாக நீக்க வேறுவேறு பொருள் பயப்பது. (உ-ம்.) "கற்றோர்பரவுங் ககாரி நகாரி காரி" இதிற் ககாரி என்னுஞ் சொல்லில், முதலிலுள்ள ககாரத்தை நீக்க, "நகாரி" என்றாய்க் "ககாரி" என்பதற்கு வேறான ஒருபொருளும் அதில் நகாரத்தை நீக்கக் "காரி" என்றாய்ப் பின்னும் வேறான ஒரு பொருளும் பயந்தவாறுணர்க. (உ-ம்.)'கோமூத்திரியேகூடசதுர்த்த, மாலைமாற்றே மாத்திரைச்சுருக்க, மாத்திரைவருத்தக மெழுத்து வருத்தக, மொற்றுப்பெயர்த்தல் வினுவுத்தரமே, நாகபந்த முரசபந்தம், திரிபாகி திரிபங்கி பிறிதுபடு பாட்டுக், காதைகரப்பே கரந்துறைசெய்யுள், சக்கரஞ் சுழிகுளஞ் சருப்பதோபத்திர, மக்கரச்சுதகநிரோட்டமென்ன, முறைபெறவகுத்த மிறைக்கவியிருபது, மறிவுறக்கிளந்தவவற்றின்பால" (இலக்கண விளக். சுகூ०.) [அக்ஷரச்யுதகம். அக்ஷர-எழுத்து. ச்யுதகம்-நீக்கப்பட்டது.]

அக்கரதீபம்—அட்சரதீபம். (பரத. ஒழி, பி. 42.)

அக்கரநோய்—பித்தசிகுவாகண்டகம் என்னும் நாக்கில்வரும் ஒரு நோய். (உ-ம்.)"அக்கரநோய் தீர்க்கு மதிசாந்தா கம்போக்குந் - தக்க சிறுகுறிஞ்சாத் தான்." (பதார்த்த. ௬சச.)

அக்கரப்பிரஞ்சம்—எழுத்து மாருட்டம். (உ-ம்.)"பாணினிபிராதிபதிகத்தையும், தாதுநிட்பங்கமென்றாராலெனின், எழுத்துமாருட்டமென்னும் அக்கரப்பிரஞ்சம் வாராமைபற்றி அவ்வாறுரைத்தரென்பர் பாடியகாரர்" (பி. வி. எ. உரை.) [அக்ஷரப்ரபஞ்ச: அக்ஷர-எழுத்து. ப்ரபஞ்ச-மாருட்டம்.]

அக்கரம்— 1. அசரம். [அ- எதிர்மறை க்ஷர- இயங்குவது.] 2. (யாப்பில்) அசை 3. அழியாதது, (அ-எதிர்மறை. க்ஷர-அழிவுள்ளது.] 4. ஆகாயம். 5. எழுத்து.

(உ-ம்.) "அக்கரமொன்றினுக்கொன்றுடகப் பணம்" (சிவதரு. கோபுர. உகக.) 6. எழுதப்பட்டவாசகம். 7. ஓம் என்னும் மந்திரம். 8. சலம். 9. சொல். 10. நித்தியாநந்தம். 11. நோய்வகையினென்று. 12. பிரமம். 13. மந்திரலிபி. (உ-ம்.) "அஞ்சக்கரமெனுங் கோடாலிகொண்டு" (பட்டினத்தடி. சரு.) 14. மாமரம். (கா. வைத்.) 15. வெள்ளெருக்கு. (கா. வைத்.) 16. அக்கரகாரம் (மூ. அ.)

அக்கரவர்த்தநம்— இருபது வகைச் சித்திர கவிகளுள் ஒன்று; அஃது: ஓரெழுத்தான் ஒருமொழியாய்ப் பொருள்பயந்து, பின் ஓரெழுத்தேற்றப் பிறிதொரு மொழியாய்ப் பொருள் பயந்து, அவ்வாறு முறையானே யேற்ற ஏற்ற வேறு வேறு மொழியாய்ப் பொருள்பயந்துவரப் பாடுவது. (உ-ம்.) "உலைவி லெழுத்தடைவே யோரொன்றுய்ச் சேர்க்கத்-தலைமலைபொன் றுமரையென் றும்" [அச்செய்யுட்டொடையிலே ககரம் மகர ஒற்றை அணைந்து தலையெனப் பொருள்படும் "கம்" என்பதன்மேல் நகாரமேற்ற "நகம்" என்றுய் மலையெனப்பொருள் பயந்து, ககாரம் ஏற்றக் "கநகம்" என்றுய்ப் பொன்னெனப் பொருள்பயந்து, கோ என்பதை ஏற்றக் "கோகநகம்" என்றுய்த் தாமரையெனப் பொருள்பயந்து வருதல் காண்க.] இலக்கணவிள. சுகூ0-ம் உரையும்.) [அக்ஷரவர்த்தநம்: அக்ஷரம்-எழுத்து. வர்த்தநம்-வளர்த்தல்.]

அக்கரவிலக்கணம்—அறுபத்துநான்கு கலைகளுள் ஒன்று.

அக்கரன்—1. ஈச்சுரர் மூவரில் ஒருவனுகிய அந்தரியாமி. (த. நி. போ. க0கூ-ஆம் பக்.) 2. கூடஸ்தன். (கைவல். உப. அரும்பதவிளக்கம்.) 3. விஷ்ணு. 4. பிரமம். [அக்ஷர: அ - எதிர்மறை. க்ஷர - அழிவுடையோன்.]

அக்கராகர்ரம்— ஒருசாதிப் பூண்டு.

அக்காரம்பம்—எழுத்துப் பயிலத்தொடங்குதல். (உ-ம்) "அக்காரம்பம்பண்ணுமிடத்து" (விதாந-மைந்தர்வி. கரு. உரை.) [அக்கரம்-எழுத்து. ஆரம்பம்-தொடக்கம்.]

அக்காலத்தி-கோயிற்றீபவகை. (திருக்குற். சீவபூ. 48.)

அக்கரை—1. அப்பாற்கரை. (உ-ம்.) "அளக்கரக்கரைகாண்பான்" (கந்தரந். க0.) 2. விருப்பமிகுதி.

அக்கவடம்—உருத்திராக்ஷமாலை. (உ-ம்.) "நீறணிந்தக்கவடம்பூண்டு" (மச்சபு. கடவுள் கஉ.) [அக்ஷ-உருத்திராட்சம். வடம்-மாலை.]

அக்கவாடம்—1. சூதுவிளையாடும் இடம். 2. மற்போர்க்களம். [அக்ஷவாட: அக்ஷம்-சூதாடுகருவி, மற்போர். வாடம்-அடைப்பு.]

அக்களித்தல்—மநமகிழ்தல். [அகம்-மநம். களித்தல்-மகிழ்தல். அகக்களி என்பதிற் ககர உயிர்மெய் கெட்டு அக்களியென்றுய்த் தொழிற்பெயர்விகுதி பெற்றது.]

அக்களிப்பு— மநமகிழ்ச்சி. [அகக்களிப்பு என்பதிற் ககரவுயிர்மெய் கெட்டது.]

அக்கறை— கவனம், காரியம், தொடர்பு. (தெலுங்கு.)

அக்கன்—1. இராவணன்மக்களுளொருவன். (இராமா. ஊர்தேடு. கசச.) 2. கருடன். 3. நாய். (சூ. நிகண். ௩: உ௫.)

அக்கா—1. தாய். (சப்த.) 2. தமக்கை.

அக்காத்தநவி—குருவிவகை.

அக்காத்தான்— தான்றிமரம். (மலைபக.)

அக்காத்தி—திக்கற்றவன்.

அக்காதேவி —மூதேவி. [அக்கா-மூத்தவள். தேவீ-தெய்வப்பெண்.]

அக்காந்தி—தான்றிக்காய் (வைத்தியபரி.)

அக்காரடலை—சர்க்கரை சேர்த்தடப்பட்ட சோறு. (உ-ம்.) "ஆம்பாலக்காரடலையண் பனீருறமிர்தம்." (சிந்தா. குணமா. எஅ.) [அக்காரம்-சர்க்கரை. அடலை-அடப்பட்டது. 'அக்காரம்' என்பதில் 'அம்' கெட்டுநின்றது]

அக்காரம்—1. கரும்பு. (கா. வைத்.) 2. சருக்கரை. (உ - ம்.) "அக்கார மன்னுரவர்க்கு" (நாலடி. பொதுமக. ச.) 3. சீலை. (பிங்க.) 4. மாமரம். (கா. வைத்.)

அக்காரை—சிற்றுண்டிவகை. (சீவக. 928. உரை.)

அக்காள்—தமக்கை.

அக்காளன்—வநப்புல்லு. (கா. வைத்.).

அக்கி—1. அக்கிநிக்கரப்பன். (கா. வைத்.), 2. ஓர் நோய். (கா. வைத்.), 3. அக்கிநிதேவன். (உ-ம்.) "அக்கியுங்கரமிழந்தஞ்சினைஞ்சனன்." (சிவதரு. சௌநமரண. ௫க.)

4. ஆனைக்கரப்பனெய். 5. உட்டணம். 6. ஒரு பூச்சி. [ஸ்ரீ என்னும் வடமொழியில் நவ்வொற்றுக்கெட்டு நின்றமெய் திரிந் திரட்டித்துவந்தது.] 7. கண். (சப்தஸ்.) (உ-ம்.) ["அக்கிதாரை" அக்ஷி.]

அக்கிக்கல்—தீப்பற்றவைக்கும்கல்(-சிக்கிமுக்கிக்கல்.)

அக்கிச்சூர்—நேத்திரரோகம். (உ-ம்.) "அசைத்தொடியத்-தள்ளும்பித் தக்கிச்சூர் சர்த்தி தலைநோயவசம் - அள்ளும்பித் துக்கொள்ளு மால்" (தைல. தைலவ. அ.)

அக்கிநாயி—அக்கினிதேவன் மனைவியாகிய சுவாகா.

அக்கிநி—1. அக்கினிதேவன் (உ-ம்.) "அக்கினிபுராணம்." 2. இரவிலே யேழாவதாகவும் பகலிலே பதினொராவதாகவும் நிகழும் முகூர்த்தம். (விதான. குண. எ௨-ம் உரையும்.) 3. உதராக்கினி. (உ-ம்.) "அக்கினிமாந்தியம்." 4. ஓமாக்கினி. (உ-ம்.) "அக்கினிதாரணம்" 5. செங்கொடிவேலி. 6. நவச்சாரம். 7. நெருப்பு. (உ-ம்.) "ஈசனக்கினிமேனிகுளிப்புற." (உபதேச. சிவத. கஉஉ.) 8. பித்தம். 9. பொன். 10. மூத்திரம். 11. மூலாக்கினி. 12. வெடியுப்பு. [அக்நி.] (இது அங்கியென மருவிவரும்.)

அக்கிநிக்கட்டு—அக்கினித்தம்பகம். [அக்கினி-நெருப்பு. கட்டு-தம்பகம்.]

அக்கிநிக்கண்ணன்—1. சிவன். [அக்கினிக்கண்ணையுடையவன் என்றபடி.] 2. பயங்கர ரூபன்.

அக்கிநிக்கரப்பான்—1. அக்கி. 2. நோய்வகையுள் ஒன்று.

அக்கிநிகண்டம்—1. நாற்பத்து முக்கோண சக்கரத்திலே யெண்கோணமும், இரண்டு பத்துக் கோணமும், பதினுன்கு கோணமும் ஆகிய கண்டம். (சௌந். கக. உரை.) 2. மூலஞ் சுவாதிட்டானம் என்னும் இரண்டாதாரங்களின்இடமாகியகண்டம்.(சௌந். கசு. உரை.)

அக்கிநிகணம்—1. தீப்பொறி. 2. நோய் விளைக்குமென்று நூலின்முதற்செய்யுளின் முதற்சீராகவருதல் விலக்கப்பட்ட நிரை நேர் நிரையாகிய மூவசைச்சீர். [இதனைப் பாட்டியலார் "தீக்கணம்" என்பர்.] (இலக்கணவிளக். அ௦௦-ம் உரையுக்.) [கணம்-பொறி. ஙண—சீர்.]

அக்கிநிகர்ப்பை—1. சாமைப்பயிர். 2. பூமி. [அக்நிகர்ப்பா: கர்ப்பா - உட்கொண்டது.]

அக்கிநிகருப்பம்—1. அக்கினியைத் தன்னுட்கொண்ட வஸ்து; தீக்கடைகோல். 2. சூரியகாந்தக்கல். [அக்நிகர்ப்ப: கர்ப்ப-உட்கொண்டது.]

அக்கிநிகருப்பன்—கந்தசுவாமி. [அக்நிகர்ப்ப: கர்ப்ப-கர்ப்பத்திற்பிறந்தவன்.]

அக்கிநிகலை—சுஷும்நாநாடியில் ஓடும் சுவாசம். (சரசாத்திரம்.) கலை-கூறு.

அக்கிநிகாரியம்—1. ஓமாக்கினி வளர்த்தல். 2. ஓமாக்கினிவளர்த்துச்செய்யப்படுங்கிரியை. [அக்நிகார்ய: அக்நி-தொழில்.]

அக்கிநிகீடம்—கீடவகையுள் ஒன்று; [அஃது இருபத்துநான்கு பேதம். அவை: கௌடிந்யம், கண்டபவம், லாதரி, பத்திரவிருக்ஷிகம், சீநாதுகம், பிர்மணிகம், விடபப்பிரமணம், பாகியகி, பிச்சிலம், கும்பி, வர்ச்சகீடம், அருமேதகம், டுண்டுபம், பதுமகீடம், மகரம், சதபாதி, பஞ்சாவம், பாந்தமச்சம், சூட்சுமதுண்டம், அதிகர்த்தபி, கீடக்கிரமம், சராஷி, சீதபி, சிலேஷ்மகம் என்பன. இவற்றின் விஷத்தினுல் கடிவாயில் இரத்தங்கம்மி யிருப்பைப்பூ, பேரீச்சங்காய் இவைகளைப்போலக் கொப்புளம் எழும்புதலும் எரிச்சலும் பேதியும் உண்டாகுமென்பர். சீவரட். ௩சகூ.]

அக்கிநிகுண்டம்—ஓமாக்கினி வளர்க்குங்கிடங்கு [அக்நிகுண்ட: குண்டம்-கிடங்கு.]

அக்கிநிகுமாரன்—1. கந்தசுவாமி. [அக்கினியிற் பிறந்தவன் ஆதலால். அக்நிகுமார: குமாரன்-மகன்.] 2. அக்கினிகுமார செந்தூரம் (வைத்தியசா)

அக்கிநிகுலம்—க்ஷத்திரியகுலத்தில் ஒன்று. "சுடர்ப்பாவகப்பேரன்குலத்தோர்" (வில்லிபா. இராச. ககசு)

அக்கிநிகோணம்—தென்கீழ்த்திசை. (சப்தஸ்.) [அத்திசைக் கக்கினி தெய்வமென்பது பற்றிவந்தபெயர். கோணம்-மூலை.]

**அக்கினிகோத்திரம்**— அக்கினிக்குச்செய்யும் நைவேத்தியம், ஓமாக்கினிவளர்த்து அதற்கு நைவேத்தியஞ்செய்தல். [அக்நிஹோத்ரம்.]

**அக்கினிச்சலம்**—கார்த்திகைக்கிழங்கு (மலையக.)

**அக்கினிச்சிவம்**—குப்பைமேனி. (மலைய)

**அக்கினிச்சுவாத்தர்**—பிதிரர்வகையி னொரு சாரார். [தேவர்பிதிரர்.] (உ-ம்.) "உரைத்திடுமக்கினிச்சுவாத்த ரெனுந்தேவர் பிதிர்க்களுநீளுலப்பில் சீர்த்தி-நிரைத்தவெருகிடத ரெனுமாநுடர்தம் பிதிர்க்களும்." (கூர்மபு. பிருகு. கரு.) [அக்நிஷ்வாத்த: ஸ்வ-சொந்தம். ஆத்த-எடுத்த. நெருப்பிலே கொடுக்கப்பட்டவைகளைத் தமக்குச் சொந்தமாக எடுத்துக்கொண்டவரென்பது பொருள்.]

**அக்கினிச்சுவாலை**—1. அக்கினிக்கொழுந்து. 2. ஒரு பூண்டு; இது சாயக்காரருக்குபயோகமுள்ள சிவந்த மலர்களைப் பூக்கும். [அக்நிஜ்வாலா: ஜ்வாலா-கொழுந்து.]

**அக்கினிச்சேர்வை**—காரச்சீலை. [சேர்வை-சேர்க்கப்பட்டது.]

**அக்கினிசகன்**-வாயு.[அக்நிஸக: ஸகா-நண்பன்.]

**அக்கினிசகாயன்**—வாயு.[அக்நிஸஹாய: ஸஹாய-நண்பன்.]

**அக்கினிசந்மன்**—கந்தசுவாமி. [அக்நிஜந்மா அக்கினியிற்பிறந்தவன்.]

**அக்கினிசன்**—கந்தசுவாமி. [அக்நிஜ: ஜ-பிறந்தவன்.]

**அக்கினிசாந்தி**— அக்கினி தேவனால் வரும் இடையூற்றை நிவிர்த்தியாக்கற்பொருட்டு மந்திரம் நூற்றெட்டுருச் செபித்து நெய்முதலியவைகளைக்கொண்டு செய்யுஞ் சாந்தி. [அக்நிசாந்தி: சாந்தி-நிவிர்த்தி.]

**அக்கினிசாலம்**— 1. ஒரு பூண்டு. 2. நெருப்பினாற்செய்யுஞ் சாலவித்தை. [அக்நிஜால.]

**அக்கினிசாவர்ணி**—பதினான்கு மநுக்களில் ஒருவன். (த. நி. போ. ருரு௦.) [அக்நிஸாவர்ணி.]

**அக்கினிசிகம்**—1. அம்பு. 2. கார்த்திகைப் பூண்டு. 3. மஞ்சள். 4. வர்ணம். 5. விளக்கு. 6. குங்குமப்பூ. (அமரம். ருஅரு)

**அக்கினிசிகா**— குப்பைமேனி. (அமரம். கஅஉ.) [அக்நிசிவா: சிவா-கொழுந்து.]

**அக்கினிசிலேட்டுமரோகம்**— சிலேட்டுமரோகத்திலே யொருவகை; அது சர்வாங்கத்திலாவது கால் கை கண் மூக்கென்னும் உறுப்புக்களிலாவ தெரிச்சல், இருமல், கோழை, தாகம், கைகால்களிற் சீதளம், அதிக தீபநம் ஆகிய குணங்களைச்செய்வது. (சீவர. கக௩.) [அக்நிஶ்லேஷ்மரோகம்]

**அக்கினிசேகரம்**— 1. குங்குமமரம். (சப்தஸ்.) 2. குசும்பமரம். 3. மஞ்சட்பூண்டு. (சப்தஸ்.) [அக்நிசேகர:. சேகரம்-நுனி.]

**அக்கினிட்டம்**—1. அக்கினியில் வைக்கப்பட்டது. 2. இரும்பாலாய பொரியற்சட்டி. [அக்நிஷ்ட: அக்நி; ஷ்ட.]

**அக்கினிட்டி**—நெருப்பிடுகலம். (பிங்).

**அக்கினிட்டுது**—ஒருநாளிலேமுடிக்கப்படும் ஒருயாகம். [அக்நிஷ்டுத்: ஷ்டுத் - பலிசெய்தல்.]

**அக்கினிட்டோமம்**— அக்கினிதேவனுக்கு வசந்தகாலத்திலே ஐந்துநாட்களிற் செய்யப்படும் ஒரு யாகம். இது சோதிட்டோமயாகத்தின்முதற்பாகம். (உ-ம். அக்கினிட்டோமமாற்றிய பயன்களையடைவர்." (மச்சபு-தடாக. உரு.) [அக்நிஷ்டோம: ஷ்டோம-நைவேத்தியம்.]

**அக்கினித்தம்பநம்** — நெருப்பினைச்சுடாது தடுத்தல். [அக்நிஸ்தம்பநம்: ஸ்தம்பநம்- தடுத்தல்.]

**அக்கினித்தம்பம்**— 1. அக்கினித்தூண். 2. அறுபத்துநான்குகலைஞானங்களுள் ஒன்று; அஃது, அக்கினியின் சுடுஞ்சத்தியைத் தடுக்கும் உபாயத்தைச்சொல்வது. [அக்நிஸ்தம்ப: ஸ்தம்ப-தூண், தடுத்தல்.]

**அக்கினித்தம்பன்**—சிவன். [அக்நிஸ்தம்ப: ஸ்தம்ப- தூணவன்.]

**அக்கினித்தாழி**—ஓமாக்கினிவளர்க்குந்தாழி.

**அக்கினித்திரயம்**—மூவகையக்கினி; அவை: காருகபத்தியம், தக்கிணம், ஆகவநீயம் என்பன. (பெரியபு-தில்லைவா. ஞ. உரை. [அக்நித்ரய: த்ரய-மூன்று.]

அக்கிநித்திராவகம்— ஒருவகைச் செய்நீர்; அதுவெடியுப்புத்திராவகம்போல்வது. [அக்நி த்ராவக: த்ராவக- செய்நீர்.]

அக்கிநித்திரேதா—அக்கினித்திரயம். [அக்நி த்ரேதா: த்ரேதா- மூன்று.]

அக்கிநித்நான்—தீப்பிழம்பு.

அக்கிநிதம்—1. அக்கினியூட்டல். 2. சீரணிக்கச் செய்யும் ஒரு மருந்து. 3. வஞ்சகமாய் வீடெரித்தல். [அக்நிதம்: தம்-கொடுத்தல்.]

அக்கிநிதன்—1. தீயிலிட்டவன். 2. வீடெரிக்கிற துரோகி. [அக்நித: த:-கொடுப்பவன்.]

அக்கிநிதத்தர்—பிராமணபிதிர்க்களில் ஒரு வகுப்பார். (மநு. ௩. ௧௯௯) [அக்நிதக்த: அக்நி; தக்த-தகிக்கப்பட்ட.]

அக்கிநிதாரணம்—ஓமாக்கினி வளர்த்தல். [அக்நிதாரண: தாரணம்-வைத்துக்கொள்ளல்.]

அக்கிநிதிக்கு—தென்கிழக்கு.

அக்கிநிதிவ்வியம்— அக்கினிபரீட்சை. அஃது ஒன்பதுவகைத் திவ்வியங்களுள் ஒன்று. (மிருதிசம். ௬௫.) [திவ்யம்-தேவசம்பந்தமுடையது.]

அக்கிநிதீபநம்—சீரணசக்திப்பெருக்கம்.

அக்கிநிதேவன்—அக்கினிதேவதை. [அக்நிதேவ: தேவ-தேவன்.]

அக்கிநிநட்சத்திரம்- } 1. அக்கினி யாளுகை
அக்கிநிநாள்- } செய்யுங் காலம்;

அது, பரணி நாலாங்காலிலும் கார்த்திகையிலும் உரோகிணி முதற்காலிலும் சூரியன் நிற்குங்காலம். [இந்நாட்களில் வீடு கட்டத் தொடங்கினால் அவ்வீடு நெருப்புக் கிரையாமென்பர். சரசோ. மனை. ௧௩.] 2. கார்த்திகைநாள். [எரி பிறந்தநாள்.]

அக்கிநிப்பிரத்தரம்—1. சூரியகாந்தம். 2. தீத்தட்டிக்கல். [அக்நிப்ரஸ்தர: ப்ரஸ்தரம்-கல்.]

அக்கிநிப்பிரமணம்—ஆஜ்யத்துக்குச் செய்யும் பதினெட்டுஸம்ஸ்காரங்களுள் ஒன்று; அஃதக்கினியைச்சுற்றுதல். (சி. வி. கிரி. ௨௭, தாற்.) [அக்நிப்ரமணம்: ப்ரமணம்-சுற்றுதல்]

அக்கிநிப்பிரவேசநம். } -அக்கினியிற் புகுதல்.
அக்கிநிப்பிரவேசம். } [அக்நிப்ரவேச: ப்ரவேச-புகுதல்.]

அக்கிநிப்பிழம்பு—அக்கினித்திரட்சி. [பிழம்பு-திரட்சி.]

அக்கிநிபஞ்சகம்—1. ஆகவநீயம், தட்சிணாக்கினி, காருகபத்யம் எனக் கிழக்குத் தெற்கு மேற்குத் திசைகளிலே வேதியில் வளர்க்கப்படும் அக்கினிகளும், சப்பியம் ஆவசத்தியம் என வளர்க்கப்படும் அக்கினிகளுமாகிய ஐந்தக்கினிகள்: 2. தவஞ்செய்தோர் நிற்கும் ஐந்தக்கினி; அவை நான்குதிசையிலும் நான்கு தீக்குண்டமும், மேலே சூரியனும். ("பஞ்சாக்கினி பார்.") 3. பஞ்சகதோஷங்களுள் ஒன்று; அது பிரதானமாகக் கிருகாரம்ப கிருகப்பிரவேசங்களுக் காகாதென நீக்கப்பட்டகாலம் (உ-ம்) "பஞ்சகம்பார்க்கவேண்டியகாலம் வரையில் ஞாயிறு முதலாக அன்றையவாரம் வரையும், பிரதமை முதலாக அன்றைய திதிவரையும், அச்சுவினி முதல் அன்றைய நட்சத்திரம் வரையும், மேஷம் முதல் அப்போ துதயலக்கினம் வரையும் எண்ணிக்கண்ட தொகையை யொன்பதிற்கழித்ததின் மிச்சம் ௩, ௫, ௭, ௦, ஆயின் உத்தமம். ௧, ௨, ௪, ௬ ௮. ஆயின் நீக்கப்படும். ௧. மிருத்தியுபஞ்சகம். ௨. அக்கிநிபஞ்சகம். ௪. இராசபஞ்சகம். ௬. சோரபஞ்சகம். ௮. ரோகபஞ்சகம். (வருஷாதிநூல் ௧௩௨.)

அக்கிநிபதச்சிலந்தி— சிலந்திவகையுள் ஒன்று; அதன் கால்கடோறும் விஷமுண்டென்றும், கால்பட்ட இடங் கொப்புளிக்குமென்றுஞ் சொல்வர். (சீவரட். பக். ௩௫௪.)

அக்கிநிபம்—பொன். [அக்நிப: ப-பிரகாசம். அக்கினிப்பிரகாசமுடையது.]

அக்கிநிபரிச்சதம்—ஓமஞ் செய்தற்குவேண்டிய உபகரணம். [அக்நிபரிச்சத: பரிச்சத- உபகரணம்.]

அக்கிநிபரித்தியாகம்— அக்கினியிலே ஓமஞ் செய்யாதொழிதல் (உ-ம்) அக்கிநிபரித்தியாக பிராயசித்தம் (பராச ௬-௧௯௪ வரதாசா.) [பரித்யாக-விடுதல்.]

அக்கினிபரீட்சை— அக்கினியைக்கொண்டு பரீட்சித்தல்; அது, நெருப்பிலே நடப்பித்தாவது காய்ச்சிய இரும்பை அல்லது எண்ணெயைப் பரிசிப்பித்தாவது சோதித்தல். இப்பரீட்சையிலே அக்கினியால்தாக்கப்பட்டவனை அசுத்தனென்றும், தாக்கப்படாதவனைச் சுத்தனென்றும் முன்னோர்சிலர்கொண்டனர். [ஃஃபரீக்ஷா: பரீக்ஷா-சோதனை.]

அக்கினி பாதை — தீயால் நேருங் கேடு. (உலக வழக்கு)

அக்கினிபுத்து—ஒரு முனிவர். (வேதாரண்ய பு. வரன். ௧௰.)

அக்கினிபுராணம்— பதினெண்புராணங்களுள் ஒன்று; அது ஆக்கினேயம்; இப்புராணத்திலே விட்டுணுவுடைய அவதாரம், சிருட்டிக்கிரமம், விட்டுணுபூசை முதலியன சொல்லப்படும். அஃது தெண்ணுயிரங்கிரந்தமுடையது. (வாச.) [ஃஃபுராண: புராணம்-பழங்கதை.]

அக்கினிபூ—1. கந்தசுவாமி. 'ஆர்த்தெழுமனவிற்றோன்றலாலக்கினிபூவேயென்றும்.' (மச்சபு. குமார. ௧௧௰.) 2. நீர் [ஃஃ ஃ: ஃ-பிறந்தவன், பிறந்தது.]

அக்கினிபோஷணம்—வைசுவதேவ பூசை.

அக்கினிமண்டலம்—1. அக்கினியினாலே யதிட்டிக்கப்படும் மண்டலம். 2. சரீரத்திலே பிருதிவிக்கும் அப்புவுக்குமுரிய தானம்; அது, மூலாதாரமுதல் நாபிபரியந்தமுள்ள இடம்.

அக்கினிமணி—சூரியகாந்தக்கல். [ஃஃ மணி: மணி—கல்.]

அக்கினிமந்தச்சுரம்—சுரநோய்வகைகளுள் ஒன்று. (சீவ. பக். ௬௭.) [அக்கினி-உதராக்கினி. மந்தம்-மென்மை. சுரம்-காய்ச்சல்.]

அக்கினிமந்தநம்—தேய்த்தலாற் கோல்களினின் றக்கினியைப் பிறப்பித்தல். [ஃஃ ஃநம்: ஃநம்-கடைதல்.]

அக்கினிமந்தம்—1. கோங்கமரம். [ஃஃ ஃ: ஃ-கடைதல். கடையப்படும்பொழுதிதன் கோல்களிலே நெருப்புப் பிறத்தல்பற்றிவந்தபெயர்.] 2. சமியாமை. [ஃ-சேட்டையின்மை.] 3. தேய்த்தலாற் கோல்களினின் றக்கினியைப் பிறப்பித்தல்.

அக்கினிமரம்—காட்டுப்பலா.

அக்கினிமாந்தம்—ஒருநோய்; உதராக்கினி மந்தமுற்றிருத்தல். (உ-ம்.) "அக்கினிமாந்தங் கைகாலக்கியெரிவுழலை" (தைல-தைலவ. ௫௮.)

அக்கினிமாந்தியம்—அசீரணம், சமியாமை. (கா. வைத்.) [ஃஃமாந்த்யம்: ஃஃ-நெருப்பு. மாந்த்யம்-மந்தத்தன்மை.]

அக்கினிமாருதி—அகத்தியமுனிவர். (வாச.) [இவர் ஒரு கற்பத்திலே அக்கினிக்கும் வாயுவுக்கும் புத்திரராகப் பிறந்ததனால் வந்த பெயரென்பர்.]

அக்கினிமுகச்சிலந்தி—ஒருவகைச் சிலந்திப்பூச்சி. அஃது ததிகநோவையும் நெருப்பாற் சுட்ட கொப்புளம்போன்ற கொப்புளத்தையும் உண்டாக்கும் விஷமுடையது (சீவ.)

அக்கினிமுகம்—சேங்கொட்டை (வைத்திய பரி).

அக்கினிமுகன்—1. சூரபன்மன் புதல்வருள் ஒருவன். [கந்தபு. புதல். ௧௬. இதில் 'அங்கிமாமுகன்' எனக் குறிக்கப்பட்டவன்.] 2. தேவன். [முவ-வாய். அவியை, அக்கினியை வாயாகக்கொண்டநுபவித்தலால் வந்த பெயர்.] 3. பிராமணன். (சப்தஸ்) [சாபரூபமான அக்கினி முகத்தில் இருத்தலால்வந்த பெயர். [ஃஃமுக]

அக்கினிமூலை—தென்கீழ்த்திசை. (உ-ம்.) "அக்கினிமூலை திங்கள்." (மச்சபு. சாந்தி. அ.) [மூலை—கோணம்.]

அக்கினியத்திரம்— அக்கினிமயமான அம்பு; [ஃஃஸ்த்ர: அஸ்த்ரம்-அம்பு.]

அக்கினியாகாரம்—அக்கினியிருக்குஞ் சாலை. [ஃஃகார: ஆகாரம்-வீடு.]

அக்கினியாதானம்—ஓமாக்கினி வளர்த்தல். [ஃஃயாதந: ஆயாதநம் - செய்துமுடித்தல்.]

அக்கினியாதேயம்— 1. அக்கினிப்பிரதிட்டை. 2. இருபத்தொருவகையாகங்களுளொன்று. [ஃஃயாதேய: ஆதேய-வைக்கப்படுவது.]

அக்கினியாலயம்—ஓமகுண்டம். (வாச) [ஃஃலய: ஆலய-வீடு.]

அக்கினியுருத்திரம் — நிவிர்த்திகலையில் உள்ளதெனச்சொல்லப்படும் நூற்றெட்டுப்

புவனங்களுள் ஒன்று. (சி. வி. கிரி. உக. உரை.) [அக்நி: ஈஶ்வரம்.]

அக்கிநியுற்பாதம்—1. வால்வெள்ளி. 2. விண்வீழ்கொள்ளி. 3. விழுகின்ற நக்ஷத்திரம். [அக்ந்யுத்பாத: உத்பாத-தீமையை யறிவிக்கும் குறி.]

அக்கிநியெழுநாவண்ணம்— அக்கிநிதேவனுக்குள்ள எழுநாக்குக்களின் நிறம். அவை: அருணம், கநகம், இரத்தம், கிருஷ்ணம், சுப்பிரம், வெகுவர்ணம், அதியிரத்தம் என்பன. (வி. ணி. கரு0.)

அக்கிநியோகம்—அக்கிநிக்குரிய யோகம். அது; ஞாயிற்றுக்கிழமையிலே சத்தமி துவாதசிகளும், திங்களிலே சட்டியேகாதசிகளும், செவ்வாயிலே பஞ்சமி சத்தமிகளும், புதனிலே துதியை அட்டமிகளும், வியாழனிலே சட்டிநவமிகளும், வெள்ளியிலேயட்டமி தசமிகளும், சநியிலே நவமி யேகாதசிகளும் வரும் நாள். (சரசோ. குணகுண. ரு0.)

அக்கிநிரசம்—1. அக்கிநியின்வீரம். 2. இந்திரகோபம். 3. பொன். அக்நிரஜஸ்: ரஜஸ்-அணு.]

அக்கிநிரணம் — நெருப்புச்சுட்டமையால் வந்த புண்.

அக்கிநிரோகணிரோகம்—ஒருவகையுரோகம்; அது சரீரத்தினுன் மெலிந்தவருக்குப் பித்தப்பிரதாநமான வாத சிலேட்டுமங்களினாலேயக்குளுக்குள்ளேமாமிசகண்டத்தைப் போலக் கட்டிகளை யுண்டாக்குமென்றும், அக்கட்டிகள் கட்டையினெருப்புப்போலிருந்துபத்திரவத்தைச் செய்து, ரு. எ. கரு. ஆம் நாட்களில் மரணங்கொடுக்குமென்றும், அந்நாள் விலகினுற் சாத்தியமாகுமென்றும் சொல்லுவர். (சிவ. பக். ௩கக.) [அக்கிநி - நெருப்பு. ரோகணம் - வளர்வு. ரோகம் - நோய்.]

அக்கினிலிங்கம்—தேயுலிங்கம்.

அக்கிநிவநணன்—சூரியகுலத்திலே யிராமனுக்குப்பின்னிருந்த ஓரரசன். (இரகுவம். குலமுறை. ௩உ.)

அக்கிநிவநத்தநம்—உதராக்கிநியை வளர்க்கும் ஒரு மருந்து. [அக்நிவர்த்தக: அக்நி-உதராக்கிநி. வர்த்தகம்-வளர்ப்பது.]

அக்கிநிவநத்தநம்—1. உதராக்கிநியை வளர்க்கும் ஒருமருந்து. 2. தீவளர்த்தல். [அக்நி வர்த்தந: வர்த்தந-வளர்த்தல்.]

அக்கிநிவல்லபம்—குக்கிலியம். [அக்நிவல்லப: வல்லப-நட்பு. அக்கிநிசேர்ந் தெழுப்புவதென்றபடி.]

அக்கிநிவாகம்—1. ஆடு. (வாச.) 2. புகை. (வாச.) [அக்நிவாஹ: வாஹ-வாஹநம்.]

அக்கிநிவாகு — புகை. [அக்நிவாஹு: வாஹு-புயம்.]

அக்கிநிவிசர்ப்பம் — புண்ணின் அழற்சி [அக்நிவிஸர்ப்ப: விஸர்ப்ப-அழற்சி.]

அக்கிநிவிஷபாகரோகம்—எண்வகைவிஷபாகரோகத்துள் ஒன்று; அது வாதபித்தாதிக்கம், தேகமினைத்தல், வீக்கம், கிடைபொருந்தாமை, புரளல், கோழை, இருமல், சர்த்தி, மூர்ச்சை, வாய்நீரூறல், வயிறூதல், மலசலச்சிக்கல், பக்கநோவு என்னும் இக்குணங்களையுண்டாக்குவது. (சீவ. பக். உ0உ.)

அக்கிநிவீசம்—1. பொன். 2. ரம் என்னுமொலி. [அக்நிபீஜ: அக்நி-நெருப்பு. பீஜ-காரணம்.]

அக்கிநிவீரியம்—அக்கிநியின்வீரம். (வாச.) [அக்நிவீர்ய: அக்நி-நெருப்பு. வீர்ய-வீரம்.]

அக்கிநிவேசன்—இக்குவாகுவுக்குத் தம்பியாகிய அரிஷியனுடையவம்சத்தில் வந்த தேவதத்தன்மகன் சாதகர்ணமகாமுனி.

அக்கிநிவேசியாயநம்—அக்கிநிவேசன் வம்சப் பிராமணகுலம்.

அக்கிநீத்திரன்—1. நாவலந்தீவை யரசுசெய்த பிரியவிரதனுடைய ஒருமகன். (மிருகேந். அத்துவா. சுஎ.) 2. அக்கிநிகாரியஞ் செய்யுங்குரு. [அக்நிய: அக்நி; இந்த-கொளுத்தல்.] [அக்நீந்த்ர:] இவனை அக்கிநி தருவன் என்றும் (அ. நி. போ. பக். ௩௩0.) அங்கிதிரனென்றும் (கந்தபு. அண்ட. 28), அங்கிநேத்திரன் என்றும் (சிவதரு. கோபுர. சுரு.) சொல்வர்.

அக்கிநோய்—கண்ணோய். (உ-ம்) "இமையிலவக்கூழாட்டமக்கிநோயிவை பெரியகுமரி

யாங் கொள்ளிமுன் பல்லமாமே." (தைல. தைலவ. ௩௫.) [அக்ஷி-கண்.]

அங்கிபடலம்—கண்ணோய்களுள் ஒன்று. [அக்ஷிபடல: அக்ஷி-கண். படல-போர்வை.]

அங்கிமத்ாரம்—அக்கிராகாரம் (வைத்திய பரி).

அங்கிமச்சா—அமுக்கிராஇலை (வைத்திய பரி.)

அங்கியம்—பகலிலே பதினன்காவதாக நிகழும் உத்தரமென்னும் முகூர்த்தம். (விதா. குண. எ௩-ம் உரையும்.)

அங்கியாதம்—அறியப்படாதது. (உ-ம்.) "ஓதுமொருவருட மக்கியாத மெனவும் புகன்றே." (நல். பார. சிறப்பு. ௩௫.) [அஜ்ஞாத: அ-எதிர்மறை. ஜ்ஞாத-அறியப்பட்டது.

அங்கியாதி—பிரமத்தை (திரிபுணர்வை)ப் பற்றிய ஐவகைக் கோட்பாடுகளுள் ஒன்று; இது சாங்கியப்பிரபாகரர்மதத்தில் அங்கீகரிக்கப்பட்டது. அவ் வைவகைக்கோட்பாடுகளாவன—சத்கியாதி, அசத்கியாதி, அந்யதாக்கியாதி, அநிர்வசநீயக்கியாதி, அக்கியாதி என்பன. இவற்றின் விவரங்கள் விருத்திரத்திநவளி, விருத்திப்பிரபாகரம் முதலிய நூல்களில் விளங்கும்.

அங்கியானம்—அஞ்ஞானம்.

அங்கியானி—அஞ்ஞானி.

அங்கியெழுதுதல்—அக்கிப்புண்டீரச் செங்காவிக்குழம்பாற் சிங்க நாயுருக்க ளெழுதல்.

அங்கிரகண்ணியன்—முதல்வனக மதிக்கப்படத்தக்கவன். (உ-ம்) "மகாவீரர்க்கெல்லாமக்கிரகண்ணியன்." (சி. சி. பா. சிவாக்.) [அக்ரகண்ய: அக்ர-முதல். கண்ய-மதிக்கப்படத்தக்கவன். சப்தஸ்.]

அக்கிரகத்தம்—1. கைந்நுதி. 2. வலக்கை. [அக்ரஹஸ்த: அக்ர-நுனி, பிரதாநம். ஹஸ்த-கை.]

அக்கிரகரம்—1. கிரணத்தின் அந்தம். 2. கைந்நுதி. 3. வலக்கை. [அக்ரகர: அக்ர-நுனி, பிரதாநம். கர-கிரணம், கை.]

அக்கிரகன்—1. சிரேட்டமானவன், முதன்மையுடையவன். 2. முன்னுக்குப்போகிறவன். [அக்ரக: அக்ர-முன். க-போகிறவன்.]

அக்கிரகாரம்—1. தலைமையான இடம். 2. பார்ப்பனச்சேரி, வீதி. 3. பிராமணனுக்குச் சீவநத்திற்காகக் கொடுக்கப்பட்ட நிலம், அல்லது கிராமம். [அக்ரஹார: அக்ர-தலைமை. ஹாரம்-எடுக்கப்படுவது.]

அக்கிரச்சியை—1. கிரகங் கிழக்கு மேற்கு வீதியகறலில் வரும் ஜ்யா. 2. வில்லின் நாணினது நுனி. [அக்ரஜ்யா.]

அக்கிரசங்கை—1. கணைக்காலின் மேற்பாகம். (வாச.) [அக்ரஜங்கா] 2. முதன்மரியாதை. [அக்ர-மேல், முதல். ஜங்கா-கணைக்கால். ஸங்க்யா-எண்ணப்படுகை.]

அக்கிரசந்தாநி—இயமபஞ்சிகை; இது சேதநருடைய நன்மை தீமைகள் எழுதப்படும் ஏடு. [அக்ரஸந்தாநீ: அக்ர-முன். ஸந்தாநீ-தொடுக்கப்பட்டது.]

அக்கிரசந்மந்—1. பிரமா. 2. பிராமணன். 3. மூத்த சகோதரன். [அக்ரஜந்ம: அக்ர-முதல். ஜந்மந்-பிறந்தவன்.]

அக்கிரசம்பாவனை — முதன்மரியாதை. [அக்ரஸம்பாவநா: அக்ர-முதல். ஸம்பாவநா-மதிக்கப்படுகை.]

அக்கிரசரதை — முன்னுக்குப் போதல். [அக்ரஸரதா: அக்ர-முன். ஸரதா-போதல்.]

அக்கிரசரம்—முன்போதல். [அக்ரஸர: ஸர-போதல்.]

அக்கிரசன்—1. பிராமணன். (சி. வி. கிரி. உ௯.) 2. மூத்தசகோதரன். [அக்ரஜ: அக்ர முதல். ஜ-பிறந்தவன்.]

அக்கிரசாதகன்—1. பிராமணன். 2. முன் பிறந்தோன். [அக்ரஜாதக: அக்ர-முன். ஜாதக-பிறந்தவன்.]

அக்கிரசாதி—1. பிராமணன். 2. முன்பிறந்தவன். [அக்ரஜாதி: ஜாதி-பிறந்தவன்.]

அக்கிரசாலை—அந்தணரை யுண்பிக்குஞ்சாலை.

அக்கிரசாலைப்புறம்—அந்தணரையுண்பிக்குஞ்சாலைக்கு விடப்பட்ட மானியம்.

அக்கிரசை—முன்பிறந்தவள். (வி-ணி.) [அக்ரஜா: ஜா-பிறந்தவள்.]

அக்கிராணி—தலைவன். [அக்ரணீ: நீ-நடத்துகிறவன். ரகாரம்நோக்கிநகாரம்ணகாரமாயிற்று.]

அக்கிரதாம்பூலம்—முதற்கொடுக்கும் தாம்பூலமரியாதை.

அக்கிரபாகம்—1. சிரேட்டபாகம். 2. நுனிப்பாகம். 3. மிஞ்சியபாகம். [அக்ரபாக: அக்ர-பிரதானம், நுனி. பாக-பங்கு.]

அக்கிரபாணி—1. கைந்நுனி. 2. வலக்கை. [அக்ரபாணி: அக்ர-நுனி, பிரதானம். பாணி-கை.]

அக்கிரபூசநை — அக்கிரபூசை. (உ-ம்.) "அக்ரபூசை" (பார்.)

அக்கிரபூசை—1. மிக மேலான மதிப்பு. 2. முதற்பூசை. (வாச.) [அக்ரபூஜா: பூஜா-மதிப்பு.

அக்கிரபூமி—1. இலக்குக் குறிக்கப்பட்டதானம். 2. பெறநோக்கிய பொருள். [அக்ரபூமி: அக்ர-இலக்கு. பூமி-இடம்.]

அக்கிரம்—1. அதிகம், மிகுதி. 2. அருகு. (உ-ம்.) "அக்கிரேவணம்." (இப்பொருளில் வரும்போது, ரவ்வொற்றுக்கெட்டுக்கவ்வொற்றுத் திரிந்திரட்டித்து "அக்கம்" எனவும் வழங்கும்.) 3. இலக்கு. "அக்கிரபூமி." 4. உச்சி. (உ-ம்.) "பர்வதாக்கிரம்." 5. கிரகங் கிழக்கு மேற்கு வீதியகறல். 6. கூர். 7. சிரேட்டம். (உ-ம்.) "அக்கிராசநம்." 8. திரள். 9. தொடக்கம். (உ-ம்.) "அக்கிரகாயணம்." 10. நுனி. (உ-ம்.) "குசாக்கிரம்." "அங்நிலந்தருப்பை கைக்கொண் டக்கிரங்கிழக்கதாக." (இரகு. கடி. எக.) 11. மிச்சம். (உ-ம்.) "அக்கிரபாகம்." 12. முதலாவது, முந்தியது. (உ-ம்.) "அக்கிரசந்மன்." 13. முதற்பாகம். (உ-ம்.) "அக்கிரபாதம்." 14. மேற்பாகம். (உ-ம்.) "அக்கிரசங்கை." 15. நாலுகவளப்பிச்சை. (கூர்மபு. நித்தியகன்ம. 17.)

அக்கிரமம்—1. ஒழுக்கின்மை. 2. கொடுஞ்செயல், நீதிதிறம்புதல். (உ-ம்.) "அக்கிரமத்தாற் குற்ற மடித்துத்தீர்த் தச்சம்பண்ணி." (சி. சி. உ. கரு.) [அக்ரமம்: அ-எதிர்மறை. க்ரமம்-ஒழுக்கு. 'கிரமம்' என்பதனுற்போந்த பொருள் எல்லாவற்றிற்கும் மாறுய பொருட்கண்வரும்.]

அக்கிரமாமிசம்—இரத்தாசயம், இரத்தாசயத்தின் மாமிசம். [அக்ரமாம்ஸ: அக்ர-பிரதாநம். மாம்சம்-தசை.]

அக்கிரமி—கொடியவன்.

அக்கிரவருணம்—உயர்ந்தசாதி. [அக்ரவர்ண: அக்ர-முதல். வர்ணம்-சாதி.]

அக்கிரன் — முதல்வன், முந்தினவன். [அக்ர]

அக்கிராகரம் — அக்கிராகாரம். [அக்ர-முதல். அகரம்-உறையிடம்.

அக்கிராகியம்—1. எடுக்கத்தகாதது, எற்றுக்கொள்ளப்படத்தகாதது. 2. கிரகிக்கப்படாதது. (உ-ம்.) "அக்கிராயியமான தேசோரூபமாம்." (சி. சி. பாயிரம். சிவாக். ) 3. சம்மதிபெருதது. [அக்ராஹ்ய: அ- எதிர்மறை. க்ராஹ்ய-கிரகிக்கத்தக்கது.]

அக்கிராசநம்—தலைமைத்தானம்.

அக்கிராசநர்— தலைமைத்தானத்தே வீற்றிருப்பவர், சபைத்தலைவர்.

அக்கிராசநாதிபதி—சபைத்தலைவர்.

அக்கிராந்தம்—1. கடக்கப்படாதது. 2. சோம்பு. (வைத்தியபரி.) 3. வெல்லப்படாதது. [அக்ராந்த: அ-எதிர்மறை. க்ராந்த-கடக்கத்தக்கது.]

அக்கிராரம்—1. தலைமையான இடம். 2. பார்ப்பனச்சேரி. 3. பிராமணனுக்குச் சீவநத்திற்காகக் கொடுக்கப்பட்ட விளைநிலம். [அக்ரஹார]

அக்கிரியம்—1. முதலிலுண்டானது (பிரமோப.). 2. சிறந்தது. (பிரமோப.) [அக்ரிய] 3. தொழிலற்றது. [அக்ரிய.]

அக்கிரியன்—1. சிரேட்டன். 2. தமையன். [அக்ரிய: அக்ர- முதல். இய-ஒருவிகுதி.] 3. முயற்சியற்றவன், மந்தன். 4. கிரியைவிட்டவன், யாதொருகருமமுஞ்செய்யாமல் விட்டவன். (பகவற். சூ. க.) [அக்ரிய: அ-எதிர்மறை. க்ரிய-தொழிலுடையவன்.

அக்கிருதன் — யோகாட்டகரிலொருவன். (வி. ணி.)

அக்கிரேசரன்—தலைவன்.

அக்கிலிப்பிக்கிலி—1. குழப்பம். 2. மனக்குழப்பம்.

அக்கிலீபதை—அலியன்மை. [ க்லீப_தா: அ-எதிர்மறை. க்லீப்தா-அலித்தன்மை.]

அக்கிலு—நெருஞ்சில். (கா. வைத்.)

அக்கீம்—மகமதிய வைத்தியன்.

அக்கு—1. அகில். (கா. வைத்.) 2. உகா மரத்துக்காய். 3. உருத்திராக்கம். (உ-ம்.) "அக்கையணிந்தவர்." (திருவானைக்கா. கோச்செங். ௬.) 4. எட்டிமரம். (கா. வைத்.) 5. எருத்துத்திமில். (பிங்க. ௩0௩௬.) 6. எலும்பு. (உ-ம்.) "கக்கக்கை." (திருப்புகழ். ௬௩௧.) 7. ஒரு சாரியை. (உ-ம்.) "ஆனேயக்கேயிக்கே சாரியைமொழியே." (தொல். எழுத். ௧௧௯.) [இச்சாரியை,௩-ம் எழுத்துக்கள்கெட்டன்றிவாராதென்பர்.தொல்.எழுத். ௧௨௮.] (உ-ம்.) "தமிழநாகன்." "தாழக்கோல்." இவைகளிலே "அக்கு" என்பதன்று, "அ" என்பதே சாரியை என்பர் நன்னூலார். (நன். மெய். ௨௨.) 8. கண். (உ-ம்.) "அக்குப்பீழை." (திருப்புகழ். ௰௭௩.) 9. சங்கு. (கா. வைத்.) 10. சங்குமணி. (உ-ம்.) "அக்கேதநவல்லார்மதிகெட." (கம்பர. ௯.) 11. பலகறை. 12. உரிமை.

அக்குச்சரீ—சங்குமணிவளை. (தக்க)

அக்குசு—அக்கரை.

அக்குசை—மங்கலம் இழந்த பெண்களுள்ளே துறவுபூண்டு உபதேசம்பெற்றுத் தவஞ்செய்கிறவள். (உ-ம்.) "கன்னி யிற்றுறவன்னங்கள் கணவனிற் றுறவின், மன்னு மாரியாங் கனைகணுல் வாங்குமக் குசைகள்,என்ன மூவகைப் பெண்டவப் பள்ளிக ளெல்லாம்" (திருவிளையா. சமணரை. ௧௭.) [இது சமண பரிபாஷையில் வழங்குஞ்சொல்.]

அக்குணி—சிறிதளவு. (உ-ம்.) அக்குணிப்பிள்ளைக்குத் துக்குணிப்பிச்சை.

அக்குத்து—1. சந்தேகம். 2. நிபந்தனை. 3. இரண்டுக்குற்றநிலை.

அக்குத்தொக்கு—1. ஒட்டுப்பற்று. 2. சம்பந்தம்.

அக்குதார்—உரிமையாளன்.

அக்குமணி—1. பலகறை. 2. சங்குமணி. (கா. வைத்., வைத்தியபரி.)

அக்குமாலை—உருத்திராக்கத்தினுற் கோக்கப்பட்ட மாலை. (உ-ம்.) "அக்குமாலைகொடங்கையிலெண்ணுவார்." (தேவாரம்.நமச்சிவா. சம்ப.)

அக்குரன்—இடையெழுவள்ளல்களில் ஒருவன்.

அக்குரு—விரல். [ஃஅகுரு.]

அக்குருக்கி—கயரோகம்.

அக்குருரன்—1. கிருட்டிணனுடையதகப்பனுடன்பிறந்த ஒரு யாதவன். 2. குரூரமில்லாதவன்.

அக்குரோணி—௨௧௮௭0 யானையும், ௬௫௬௧0 குதிரையும், ௨௧௮௭0 தேரும், ௧0௯௩௫0 காலாட்களுங்கொண்ட ஒரு சேனைத்தொகை. (உ-ம்.) "இருபத்தோ ராயிரத்தெண் ணூற்றெழுப தியற்றேர்க ளியானையஃதே, பொருவற்ற பரிகளறு பத்தையா யிரத்தறுநூற் றொருபான் போர்செய், திருமிக்கோ ரிலக்கமுட னென்பதினா யிரத்துமுந்நூற் றைம்பான் சேர, நிருமித்த வகைநான்கும க்குரோணி யென்றொருபேர் நிகழுமன்றே." (நல். பார.சிறப்பு.௨௬.) ["அக்ஷௌஹிணி" என்னும் வடமொழி "அக்குரோணி" என மரீஇயிற்று. அக்ஷ - தேர். ஊஹிணி - கூட்டம்.]

அக்குரோதம்— குரோதமின்மை. [ஃக்ரோதய: அ-எதிர்மறை. க்ரோதய-கோபம்.]

அக்குல்லி—1. உக்காரி. (கா. வைத்.) 2. சிற்றுண்டி.(கா.வைத்.)3.பிட்டு.(கா.வைத்.)

அக்குவடம்—சங்குமணிவடம். (திவ். பெரியாழ்வார் 1. 7. 2.)

அக்குள்—கக்கம். ["அஃகு" என்பது, "அக்குள்" என மருவிற்று.] (உ-ம்.)"அக்குளுக்குண் மாமிசகண்டத்தைப்போற் கட்டிகளையுண்டாக்கும்." (சீவ. ௩௧0.)

அக்குளு—அக்குளுத்தல். கூச்சமுண்டாக்கல். (உ-ம்.) "அக்குளுத்துப் புல்லலு மாற்றேன்." (கலித்தொகை. ௬௪.)

அக்கேனம்—ஆய்தவெழுத்து (யாப். வி. 2. பக் 28.)

அக்கை—1.தமக்கை.2.தாய்.[அக்காள்.]

அக்கைச்சி—அக்கை.

அக்கோழங்கு—சங்குமணிவடம். (தக்க)

அக்கோ—ஓர் அதிசய இரக்கச்சொல்.

அக்கோகிணி— அக்குரோணி. [அக்ஷ; ஊஹிணி.]

அக்கோடகம்—கடுக்காய். (கா. வைத்.) [அக்ஷோடக.]

**அக்கோடம்**—அக்கோடகம். [அக்ஷோடீ.]

**அக்கோணி**—அக்குரோணி. ["அக்ஷௌஹிணி" என்பதன் மரூஉ.]

**அக்கோபம்**—1. அசையாநிலை. 2. யானை கட்டுந் தூண். [அக்ஷோப: அ-எதிர்மறை. க்ஷோப- அசைவு.]

**அக்கோலம்**— 1. தேற்றாங்கொட்டை. (கா. வைத்.) 2. தேற்றாமரம்.

**அக்கௌகிணி**—அக்குரோணி. [அக்ஷௌஹிணி: அக்ஷ- தேர். ஹிணி-கூட்டம்.]

**அக்ரகாரம்**—அக்கிரகாரம். (உ-ம்.) "அந்தணருக்கந்தவத்ரமக்ரகாரம்." (திருநெல். சுவேத அ௦.)

**அக்ரபூசனை**—முதற்பூசை, முதன்மரியாதை. (உ-ம்.) "ஆர்கொலோ வக்ர பூசனைக்குரியார்." (பாரத. இராய. ௧௬௨.)

**அக்ரமாதிசயோக்தியலங்காரம்**—முறையிலுயர்வுநவிற்சியணி. (குவ. ௫௩.) [அக்ரம; அதிசய; உக்தி; அலங்கார.]

**அக்ருத**—பிரதிட்டாகலையிற் பிரகிருதிதத்வத்திலுள்ளனவெனச் சொல்லப்படும் எட்டுப்புவநங்களுள் ஒன்று. (சி-வி. கிரி. உக. உரை.)

**அக்ரேதிதிடு**—1. தமக்கைக்கு விவாகமாகாமலிருக்கையில், தான் விவாகஞ்செய்துகொண்ட தங்கை. (பராசர. வரதாசா. பிராயச்சி. க. உ௩-உ௪.) 2. முன்விவாகஞ் செய்துகொண்ட ஒருத்தியை விவாகஞ்செய்த பிராமணன், அல்லது அரசன், அல்லது வைசியன். [அக்ரேதிதிஷு.]

**அகக்கடவுள்**—1. ஆன்மா. 2. ஆன்மாவின் உள்ளிருந் ததனைச் சேட்டிப்பிக்குங் கடவுள். 3. மநம். [அகம் - உள். கடவுள்-தெய்வம், தெய்வம்போல்வது.]

**அகக்கண்**—ஞானக்கண்ணாகிய அகத்துக்கண். (உ-ம்.) "அகத்துக்கண்கொண்டறிவதேயாநந்தம்."

**அகக்கனு**—உள்ளிருக்குங் கனு.

**அகக்கரணம்**—அந்தக்கரணம், உட்கருவி. (உ-ம்.) "சமமகக்கரணதண்டம், (கைவ. தத். ௬.) [அகம்-உள். கரணம்-கருவி.]

**அகக்கருவி**—1. உட்கருவி. 2. தேகசம்பந்தமாகிய ஆன்மாவினது உட்கருவி; அது பிருதிவிமுதலிய ஐந்துபூதங்களும், சுரோத்திரியமுதலிய ஐந்து ஞானேந்திரியங்களும், சத்த முதலிய ஐந்து தன்மாத்திரைகளும், வாக்குமுதலிய ஐந்து கன்மேந்திரியங்களும், மநமுதலிய நான்கந்தக்கரணங்களும் கால முதலிய எழு வித்தியாதத்துவங்களும், சுத்தவித்தை முதலிய ஐந்து சுத்த தத்துவங்களும் என முப்பத்தாறுவகைப்படும். (திருவால. ௩-வது. பாசலக்கணம். அகக்கருவி.)

**அகக்காழ்**—1. உள்வைரம். (உ-ம்.) "அகக்காழன" (பார்க்க.) 2. உள்வைரமுடைய மரம். 3. ஆண்மரம். (பிங்). 4. வச்சிரக்கல். [அகம்-உள்; காழ்-வைரம்.]

**அகக்காழன**— உள்வைரமுடைய மரங்கள். அவை: இருப்பை, புளி முதலியன. (வரலாறு,) "அகக்காழனவே மரமென மொழிப." (தொல். பொரு. ௬௪௧.)

**அகக்கூத்து**—அகச்சுவையாகிய குணத்தின்வழிநிகழுங்கூத்து; அது தேசி, மார்க்கம் என இருவகைப்படும். (உ-ம்.) "குணத்தின் வழியதகக்கூத்தெனப்படும்." (குணநூல்.) (சிலப். அரங்கே. ௧௨. அடியார்க்குநல்லார் உரையும், அரும்பதவுரையும்.)

**அகக்கூத்துக்கை**—அகக்கூத்திற் காட்டப்படும் கை; அஃது, எழிற்கை தொழிற்கையென இருவகையினது; பொருட்கை கூட்டி மூவகையினதென்பாருமுளர். [அது பின்வருஞ் சூத்திரத்தினாற் பெறப்படும். அவைதாம், "எழிற்கை யழகே தொழிற்கை தொழிலே பொருட்கை கவியின் பொருளாகும்மே."](சிலப். அரங்கே. ௧அ. உரை. அடியார்.)

**அகங்காரம்**—அகங்காரம். (உ-ம்.) "அகங்காரத்தால் வரும்." (ஞானவா. வைராக். ௫அ.) [அஹம்-நான். காம்-செயல்.]

**அகங்கரித்தல்**— கர்வங்கொள்ளல். (உ-ம்.) "அன்புடைய தம்முனடிவீழ்ந் தகங்கரித்தான்." (பாரத. ௧௭-ம்போர். ௧௬௨.)

**அகங்கரிப்பு**—அகங்கரித்தல்.

**அகங்களித்தல்**— மநமகிழ்தல். (உ-ம்.) "அப்பார்சடையா னடித்தொண்ட ரகங்களிப்ப." (காஞ்சிப்பு. தழுவ. உ௫.) [அகம்-மநம். களித்தல்-மகிழ்தல்.]

**அகங்களிப்பு**—மநமகிழ்வு.

**அகங்காரக்கிரந்தி**—சமுசாரபந்தம்; அஃது இருபத்தொன்பது தத்துவங்களையும் ஒருமைப்பாடாகத் தானென்று சீவன் அபிமானிப்பது. (நாநா. வா. ௫.) [அகங்காரம் - நானென்கை. கிரந்தி-கட்டு.] அஃது: இருபத்

தொன்பது தத்துவங்களையும் ஒருமைப்பாடாக நானென்று ஆவரணசக்தியால் மறைக்கப்பட்ட சீவன் அபிமானிப்பது. (நாநா. சீ. சூ.) [ஸஹஜ்ஞார; ருதி.]

அகங்காரசைதந்யவாதி— "அகங்காரவியாபாரமாய் இருக்கும் பிராணாதி வாயுக்களை ஆன்மா என்னும் ஞானத்தினாலே அதனையறிந்து அத்தத்துவம் அடைதலே மோக்ஷம்" என்னும் மதத்தன். (சி. சி. உ: எ௩. உரை. மறை.) [அகங்காரம்-அகங்காரதத்துவம். சைதந்யம்-ஞானம். வாதி-சொல்லுகிறவன்.]

அகங்காரத்திரயம்—1. முக்கிய அகங்காரம், அமுக்கிய அகங்காரம், முக்கியாமுக்கிய அகங்காரம் என மூவகைப்பட்ட அகங்காரங்கள். 2. தைசத அகங்காரம், வைகாரிக அகங்காரம், பூதாதியகங்காரம் என மூவகைப்பட்ட அகங்காரங்கள். [இது பின்வரும் மேற்கோளாற் பெறப்படும். "தானும் (அகங்காரம்) மூன்றதாய் நிகழுமென்பர் பாங்கார் பூதாதி வைகாரிகந் தைசதந்தானென்றே." (சி சி. உ: ருக.) [த்ரயம் - மூன்று.]

அகங்காரதத்துவம்—முப்பத்தாறு தத்துவங்களில் ஒன்று; அது பேரண்டத்திலிருப்பதாகப்பேசுங்கால் ஆகாய தத்துவத்திற்கு அப்பாலிருக்கும் ஒருதத்துவமென்றும், கோடிகோடியோசநம் விஸ்தாரங்கொண்ட பிரமாணமுடையதென்றுஞ் சொல்வர். (சி. வி. ஞாந. உக.) [ஸஹஜ்ஞார; தக்வ.]

அகங்காரம்—1. அந்தக்கரணம் நான்கனுள் ஒன்று; அது புத்தியினால் நிச்சயித்துக் கிரகிக்கப்பட்ட விடயங்களை நான் செய்தேன் என்று நிச்சயித்தலும், பிராணவாயுவினால் அன்னபானாதிகளைக் கிரகித்தலும், ஒன்று செய்யுமாறுபிரவர்த்தித்தலும், யான் எனது என் றபிமானித்தலுமுடையது. (உ-ம்.) "திருவார் மநமே புத்தியொடு சித்தமகங்காரமுங்கூட, மருவு மந்தக் கரணநான்காம்." (நல். பார. கௌசிக. அ௪.) "ஆனதறுவதனிலநிலனையு மியக்கி யாங்காரநீங்காதவகந்தைக்கு வித்தா, யானவதை பிறரொருவரென்னை யொப்பா ரிப்புவியி லில்லையெனு மியல்பினதாயிந்திரியம் புலன்க, டானுகருமளவிலதின் முந்தியுறும்." (சிவப். உ: உரு). 2. செருக்கு; நானென்றெழும்புகை. (சப்தஸ். ௩.) அது நான் கடத்தையறிந்தேன் படத்தையறிந்தேன் என்று புலப்பட்டவிஷயங்களைத் தொடர்ந்தறியும் அபிமாநமாகிய செருக்கு (சி. வி. ஞாந. கஎ. உரை.) 3. மநத்துக்கு மேலே பத்துப்பங்கு படர்ந்து தாணுவட்டகருக் கிடமாய் உள்ள ஒரு தத்துவம். (த. போ. ௩௪கூ.) [அஹங்கார: அஹம்-நான். காரம் - செய்தல்.] 4. கோபம். (ஆகுபெயர். 5. அந்தக்கரணமே ஆத்மா வென்னும் அபிமானம்.

அகங்காரவாதி—மநோமயகோசமே ஆன்மா என்று வாதிக்கும் மதத்தன். (உ-ம்.) "அகங்காரவாதிகள் மநோமயகோசன் ஆன்மா என்பார்கள்." (சி. சி. ௬: உ௩. உரை. மறை.)

அகங்காரான்மஞாநம்—(வைசேடிகம்) அகங்காரதத்துவமே ஆன்மா எனக்கொள்ளும் ஞாநம். (உ-ம்.) "அகங்காரான்ம ஞாநோபாயம் உபதேசிக்கும் வைசேடிகனுக் ககங்காரபுவநப் பிராப்திதானே மோக்ஷம்." (சி. சி. அ: கஉ. ஞா.) [அகங்காரம்- அகங்காரதத்துவம். ஆன்மா- உயிர். ஞாநம்- அறிவு.]

அகங்காரான்மவாதி—அகங்காரமே ஆன்மா என்று வாதிக்கும் வைசேடிகன். (உ-ம்.) "அகங்காரான்மவாதியாகிய வைசேடிகனையும்." (சி. சி. ௬: க. ஞா.)

அகங்காரி—செருக்குடையவன். (உ-ம்.) "வண்ணகங்காரிகை மற்றுமென் போற்பகர் வாரிலையென், றெண்ணகங்காரி." (முல்லையந். சூஉ.) [அகங்காரீ.]

அகங்காழ்—அகக்காழ்.

அகங்கிரகத்தியாநம்— தியாநிக்கப்படுஞ் சொருபத்தைத் தனக் கபேதமாகச் சிந்தித்தல். (விசார. உ0எ.)

அகங்கிரகோபாசநை—(தெய்வங்களைத்) தான் என்று பாவித்துச்செய்யும் உபாசநை. (உ-ம்.) 'தெய்வங்களை அகங்கிரகோபாசனை பண்ணுகிறான்' (சி. சி. அளவை 13. சிவாக்.)

அகங்கிருதன்—செருக்குடையவன். (சப்தஸ்.) [ஸஹஜ்ருத: ஸஹம்-நான். க்ருத-பண்ணப்பட்ட. தன்னை மேலாக என்னுகிறவன் என்றபடி.]

அகங்கிருதி—1. அகவிவகாரம். (உ-ம்.) "அகங்கிருதிகிரங்கிருதியுறாமல்." (வேதா. சூ. க௪அ.) 2. செருக்கு, நானென்கை.

3. அகங்காரதத்துவம். (சி. லி. ஞாந. ௧௭.) [அஹங்க்ருதி: அஹம்-நான். க்ருதி - செயல்.]

அகங்கை—உள்ளங்கை. (உ-ம்.) "அகங்கையினவிர்மதியதனை." (காஞ்சி. திருக். ௩௨௩.)

அகச்சத்தாநுவித்தசமாதி—ஆறு சமாதிகளில் ஒன்று; அது: தனித்துவிளங்கிய சச்சிதாநந்தமே யாத்துமா என்னுஞ் சிந்தனையை யகத்தில் அநுசரித்துவருதல். (உ-ம்.) "அசங்கசச்சிதாநந்த சுயம்பிரகாசசுவரூபமே தான் எனச் சிந்திப்பதே யகச்சத்தாநுவித்த சமாதியாம்." (வேதா. சூ. ௩௫௧. உரை. ௧௪அ.) [ஸத்தா - உண்மை. அநுவித்த-பதிந்தது. ஸமாதி - நன்குசித்தித்தல்.]

அகச்சத்தாநுவேதம்—அகச்சத்தாநுவித்த சமாதி. (வேதா. சூ. ௩௫௧. உரை.) [அநுவேதம்-பதிந்தது.]

அகச்சமயம்—உட்சமயம்; சைவம், பாசுபதம், மகாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம் என்னும் ஆறும் சைவசமயத்துக் குட்சமயங்களாம்.(உ-ம்.) 'அகச்சமயத்தொளியாய்.' (சிவப்பிர. மங்கல. ௭.) [சமயம்-மார்க்கம்.] சிவஞானமுனிவர்பகுப்பின்படி.) பாஷாணவாதசைவம் முதல் சிவாத்துவித சைவம் ஈறுகிய ஆறும். "பாஷாணவாத சைவர் முதலிய அறுவரும் பொருளுண்மையெல்லாஞ் சித்தாந்தசைவரோ டொப்பக்கொள்ளும் அந்தரங்கவுரிமையுடையராயினும், அவ்வப்பொருள்கட்குக் கூறுந் தன்னியல்பு பொதுவியல்புமாத்திரையின் முரணுதலான் அவர் சமயம் அகச்சமயமென வேறுவைத்தெண்ணப்பட்டன." (சிவஞானபாஷ்யம். ௫-ம் கூ-ம் பக்கம்.)

அகச்சுட்டு—பெயர்ச்சொல்லின் அகத்து முதனிலையுறுப்பாய் அமைந்துநிற்குஞ் சுட்டெழுத்து. நன். எழுத். ௧௧. உரை. (உ-ம்.) "அவன்."

அகச்சுவை—நாடகரசத்தொன்று.

அகசம்–1. அகத்தி. 2. எலுமிச்சம்பழம். (வைத்தியபரி.)

அகசியக்கூத்து—பகடிக்கூத்து; அஃது உள்ளதுபோல இல்லாததைக் காட்டும் வெளிவேடம். (ஒழிவி.)

அகசியகாரன்—விதூஷகன்.

அகசியம்—1. பகடிக்கூத்து. (உ-ம்.) 'ஒரு பாலினேழிசையு முணர்த்தும் பாட லொரு பாலி னகசியங்கள்.' (நல். பார. இராசசூ. ௧௭.) 2.பரிகாசம். 3. வேடிக்கை. [ஹாஸ்ய.]

அகசு—1. இராப்பகல்கொண்டதினம். சி. லி.யோக-௧௦௫) 2. பகற்பொழுது. [அஹந்.]

அகசை—மலையிற்பிறந்தவள், பார்வதி. [அகஜா: அக-மலை. ஜா-பிறந்தவள்.]

அகஞ்சிறை — அகத்தின்கண்ணேயுள்ள சிறை. (நன். சங்கர.)

அகஞ்சுகி—"நான் சுகி"யெனப் பொருள் படும் ஒரு வடமொழிவாக்கியம். (சி. சி. ௭. க. சிவாக்.)[அஹம் ஸுகீ: அஹம்-நான். ஸுகீ-சுகமுடையவன்.]

அகஞ்சுரிப்படுத்துதல்—1.மனத்தைத் தேற்றுதல். (ஈடு. 8. 2. 2)2. குறையச்செய்தல். (ஈடு. 4. 7. 9)

அகஞாநாமி—"நான் அறிவேன்" எனப் பொருள்படும் ஒரு வடமொழிவாக்கியம். (வி. ணி.) அஹம் ஜாநாமி: ஜாநாமி-அறிவேன்.]

அகட்டுத்தே—விநாயகக்கடவுள். (அகடு-வயிறு. தே-கடவுள்.)

அகடநம்—1. கேடு. 2. செய்யக்கூடாதது. [அகடந: அ-எதிர்மறை. கடநம்-செயல்.]

அகடம்—1. அநீதி. 2. சித்தியாகாமை. 3. பொல்லாங்கு. [அ-எதிர்மறை. கடம்-நீதி கடம்-செயல்.]

அகடவிகடம்—உண்மையை மறைத்து வேறுகத்தோன்றும்படி காட்டுஞ் சாமர்த்தியம். [அகட-செய்தற்கரியது. விகடம்-மாறுகத்தோன்றுவது.]

அகடன்—1. துட்டன். 2. நீதியில்லாதவன். [அகடு-பொல்லாங்கு. அன்-ஒரு விகுதி.]

அகடிதகடநாசாமர்த்தியம்—செய்தற்கரியதைச் செய்யும் திறம் [அகடிதம்-செய்தற்கரியது. கடநா-செய்தல். ஸாமர்த்ய-வல்லமை.]

அகடிதகடநாபடீயசி— அகடிதகடநாசமர்த்தை. (உ-ம்.) "அதிருசியமாய் இருக்கிற மாயையிற் திருசியமாயிருக்கிற பிரபஞ்சம் அகடிதகடநாபடீயசிமாயா" என்றுண்டாவ

தன்றி." (சி. சி. க: கசு. சிவா.) [படையவலி-வல்லமையுடையீவள்.]

அகடிதம்—செய்தற்கரியது. [அ-எதிர்மறை. வடிதம்-செய்யப்படுவது.]

அகடியம்—அநீதி.

அகடு—1. உள். (உ-ம்.) "வண்டுபொறையுயிர்த்துச் செழுந்தோட்டகட்டினடைகிடக்கும்." (கூர்மபு. தக்கன்வேள். ருள.) 2. நடுப்பக்கம். (உ-ம்.) "மதியகடுதோய் மாடகூடச்சிகரம்." (தாயு. சச்சி. சு.) 3. பொல்லாங்கு. (உ-ம்.) "அகடுசெய்ய" 4. வயிறு. (உ-ம்.) "அகடாரார்அல்லலுழப்பர்" (வள். கூசு.) 5. நடுவுநிலைமை. (நாலடி. 2.)

அகடூரம்—கோணமை. [அ-எதிர்மறை. ருஜு-கோணல்.]

அகடூரி—பாம்பு. [அகடு-வயிறு. ஊரி-ஊர்வது. வயிற்றாலூர்வது.]

அகண்டகம்—முள்ளில்லாதது. [அகண்டக: அ-எதிர்மறை. கண்டகம்-முள்.]

அகண்டகாவேரி—பிரியுமுன் ஒன்றாகவுள்ள காவேரி.

அகண்டச்சுருதி—அகண்டத்தன்மையான பொருளுணர்த்தும் வேதம். (சைவப். ருசு) [அ-எதிர்மறை. வண்ட-கூறு. ச்ருதி-வேதம்.]

அகண்டஞானம்—பூரணஞானம். (உ-ம்.) "அகண்டஞானத் தொலைவில் பரபதமெவர்க்குந் தோன்றுமாறு" (ஞானவா. சுக. உடு.) [அவண்டம்-பூரணம். ஜ்ஞானம்-அறிவு.]

அகண்டத்துவம்—தேசத்தினாலும், காலத்தினாலும், பொருளினாலும் சின்னப்படாதிருக்குந் தன்மை. (வாசுதே. கக.) [அவண்டம்-சின்னப்படாதது. த்வம்-தன்மை.]

அகண்டதீபம்—நந்தாவிளக்கு.

அகண்டதுவாதசி— வைகுண்டஏகாதசிக்கடுத்த துவாதசி.

அகண்டபதம்— 1. அகண்டாகாரமான பிரமபதம். (உ-ம்.) "அழுத்து மலக்கற் பகை நீக்கி யகண்ட பதத்தி லிருவெனலும்" (ஞானவா. வேதாள. க.) 2. பகாப்பதம். (உ-ம்.) "வடமொழி யகண்டபதத்திற்குப் பெயரும் மேற் பிரதமாவிபத்தி என்னும் முதல்வேற்றுமையுருபு முதலிய உருபுபெறுமாறுங் கூறுகின்றது" (பி. வி. எ.) [அவண்டம்-பிரிவுபடாமை. வதம்-நிலை, சொல்.]

அகண்டபரிபூரணம்—எங்கும் நிறைந்திருத்தல். (உ-ம்.) "அகண்டபரிபூரணமாகி வாழி." (உபதேச. சிவகாட். கo.) [அவண்டம்-எங்கும். பரிபூரணம்-நிறைந்திருத்தல்.]

அகண்டபூரணம்—எங்கும் நிறைந்திருத்தல். (உ-ம்.) "அகண்டபூரணமாய் ஞானச் சோதியாய் நின்ற மாயன்" (சி. சி. பர. பாஞ். மதம். க.) [அவண்டம்-எங்கும். பூரணம்-நிறைவு.]

அகண்டம்—1. எல்லாம். (உ-ம்.) "அண்டகூடமுமகண்டமு நெக்குவிட்டு" (நல். பாரத. உத்தா. ருஅக.) 2. கண்டிக்கப்படாதது; கூறுபாடில்லாதது. (உ-ம்.) "அகளமாய் ஞானமேயா யகண்டமா யமர்ந்ததன்றே" (கோயிற்பு. பதஞ். சுரு.) 3. பூரணம். (உ-ம்.) "அன்று சடபா வனைநீங்கிய கண்ட வறிவின் மையைப்பெறலாம்" (ஞானவா. உபசாந். ருசு.) [அவண்ட: அ-எதிர்மறை. வண்ட-கூறுபாடு.] 4. மண்விளக்கு.

அகண்டவடிவம்-அகண்டாகாரசுவரூபம். (உ-ம்) "அகண்டவடிவப்பரம்பொருளாம்." (ஞானவா. பிரகலர். கூ.)

அகண்டன்—1. அருகன். 2. கடவுள். 3. கூறுபடாதவன். (ஞானவா. புசுண். ரு. உரை..) 4. சிவன். 5. பூரணன். 6. விட்டுணு. [அ-எதிர்மறை. வண்ட-கூறு.]

அகண்டாகண்டன்—பரப்பிரமம். [அவண்ட-எல்லாவற்றிற்கும். அவண்ட-ஈசன்.]

அகண்டாகாரஞானம்-பூரணஞானம்.(உ-ம்.) (அஞ்ஞானமும் மனோவிருத்தியுமாகிய)"மூடநிலைகளையொருங்ககலப்பண்ணிப் பண்ணின விடத்துச் சதோதயமாய்நின்றொளிர்வது சுயஞ் சைதந்நியமாதலால், அதனையதுவாக நின்றறிதல் அகண்டாகாரஞானம் எனப்படுவதாம்" (உபநிட. அ. உரை. சச்சி.) [அவண்டம்-கண்டிக்கப்படாதது. ஆகாரம் - வடிவம். ஞானம் - அறிவு.]

அகண்டாகாரம்—1. அகண்டாகார விருத்திஞானம். (உ-ம்.)"ஓதரிய வஞ்ஞானந் தனை

யறியா வுணர்விதற்கோ ருறுதி மூல, மாதன் மா விருத்தியவை யகற்றியொளி தனையறியு மகண்டாகாரம்" (உபநிட. அ.) 2. பகுக்கப்ப டாத வடிவம். (உ-ம்.) "அகண்டாகாரசிவ போகமெனும் பேரின்பவெள்ளம்." (தாயு. காடு. ரு.)

**அகண்டாகாரவிருத்தி**— அகண்டாகாரவி ருத்திஞானம். (உ-ம்.) "பிரிவிலகண்டாகார விருத்தியிற் சாட்சியையறியாப் பெந்தநீங் கும்" (உபநிட. கஉ.)

**அகண்டாகாரவிருத்திஞானம்** — சாட்சியா யிருந்த கூடஸ்தரை யறியாதபடி மறைத்தி ருந்த அஞ்ஞானத்தை நீக்கும் ஞானம். (உ-ம்.) "மனோவிருத்திஞானத்தினு மேலாகப் பிரி வற்று விளங்கும் அகண்டகாரவிருத்தி ஞா னத்தினல், கூடஸ்த சைதந்யத்தையுணர வொட்டாமல் மறைத்துநிற்கும் பெந்தமா கிய அவித்தையை நீக்க அது நீங்கும்" (உப நிட. கஉ. உரை. சச்சி.)

**அகண்டி**—ஒரு வாச்சியம்.

**அகண்டிதம்**—1. இடையறுத்தொடர்பு டையது. (உ-ம்.) "அகண்டிதோற்சவம்." 2. கண்டிக்கப்படாதது; கூறுசெய்யப்படா தது. (உ-ம்.) "நின்மலமாயகண்டிதமாய்" (தாயு. ஆசை, க.) 3. மறுக்கப்படாதது. 4. முழுதும். [ஃஅகண்டித: ஃஅ - எதிர்மறை. கண்டிதம்- கண்டிக்கப்பட்டது, கூறுசெய் யப்பட்டது, மறுக்கப்பட்டது.]

**அகண்டிதன்**-எங்கும்நிறைந்தவன்.(உ-ம்.) "அகண்டிதனகம்பன் முத்தமிழ் மதுரைவா ழ்முதல்வன்." (மதுரைப்பதிற்-எ0.)

**அகணி**—1.உள்ளிருப்பது. (உ-ம்.) "கடுக் காயில் அகணி நஞ்சு." 2. பனைமட்டையின் உட்பக்கத்துநார். 3. நஞ்சு. 4. மருதநிலம். (உ-ம்.)"அகணிநாட்டுடன்." (கந்தபு. தெய் வ. கசு.) 5. வயல்.

**அகணிதம்** — கணிக்கப்படாதது. ஃஅ கணித: ஃஅ-எதிர்மறை. கணிதம் - எண்ணப் பட்டது.

**அகத்தடிமை**—அணுக்கத்தொண்டு (உ-ம்.) "அகத்தடிமைசெய்யுமந்தணன்" (தேவா. 614, 6.)

**அகத்தடியாள்**—வீட்டுவேலைக்காரி(உ-ம்.) "அகத்தடியாண் மெய்ந்நோவ" (தனிப்பா. I, 275–77).

**அகத்தமிழ்**—அகத்திணைபற்றிய தமிழ். (திருக்கோ. 70.)

**அகத்தன்**—1. இடத்தினன். (உ-ம்.)"ஆத வனெழுகிரி யகத்தராக்கினன்" (கந்தபு. சிங்க. ருகூஅ.) 2. கர்த்தாஅல்லாதவன். (உ-ம்.) "அகத்தினிற் கத்தன் றன்னி லமைந் ததே ததனி னிற்பாய்."(ஞானவா. கசன். ச.) [அ-எதிர்மறை. கர்த்ரு-கர்த்தா.]

**அகத்தார்**—1.இல்வாழ்வார். (உ-ம்.)"அக த்தாரே வாழ்வாரென் றண்ணாந்துநோக்கி." (நாலடி. ச: க.) 2. உள்ளிடத்துள்ளார். 3. சுற்றத்தார். [அகம்-உள். அத்து-ஒருசாரி யை. ஆர்-ஒரு விகுதி.]

**அகத்தாழம்**--மாலைப்பொழுது.

**அகத்தான்**—தான்றி. (வைத்தியபரி).

**அகத்தி**—1. அகத்தியமுநிவன். [ஃஅகஸ்தி: ஃஅகம்-மலை. ஸ்தி-நிலைப்படுத்தினவன். மலை யைப் பூமிக்குள்ளே யடங்கிநிற்கப்பண்ணி னவன்.] 2. உள்ளிருக்கிறவள். [அகம்-உள்.] 3. ஒரு மரம். (உ-ம்.)"நல்லகத்தி வேரதனை நாடுங்கான் மேகமெனுஞ்-சொல்லகலுந் தாக மறுந் தோகையே-மெல்லமெல்ல-மெய்யெரி வு கையெரிவு மேகத்தி னுள்ளெரிவு-மையெரி வும் போமென் றறி" (பதார்த். ருoஎ.) [அக த்தி, சாழையகத்தியும் சிற்றகத்தியும் செவ் வகத்தியும் முதலாகப் பலதிறப்படும்.] 4. முலைப்பால். (வைத்தியபரி.)

**அகத்திடல்**–1. உட்புகுத்தல். (உ-ம்.)"வா ளினையுறையகத்திட்டான்." (கந்தபு. பாநு கோபன்வதை. கஙஉ.) [அகம்-உள். இடல்-புகுத்தல்.] 2. கையால் உள்ளணைத்தல்.

**அகத்திணை**—1. உள்ளத்தே நிகழ்கின்ற இன்பமாகிய ஒழுக்கம். அது, கைக்கிளை, குறிஞ்சித்திணை, பாலைத்திணை, முல்லைத் திணை, மருதத்திணை, நெய்தற்றிணை, பெருந் திணையென எழுவகைப்படும். (உ-ம்.) "திணை யாவது ஒழுக்கம். இயல் - இலக்கணம் என வே அகத்திணையியல் என்றது, இன்பமாகிய ஒழுக்கத்தின் இயல் என்றவாறாயிற்று." (தொல். பொரு. க. உரை. நச்.) அகம்-உள்: திணை-ஒழுக்கம்.] 2. அந்தரங்கவிஷயம்.

**அகத்திணைப்புறம்** — அகத்திணைகள் எழ னுள் அகனைந்திணைக்கும்புறமாகிய கைக்கிளை யும் பெருந்திணையும். (தொல். பொருள்.ருச. உரை. நச்.)

அகத்திணையியல்—இன்பமாகிய ஒழுக்கத்தினதிலக்கணம். தொல்காப்பியப்பொருளதிகாரத்தின் முதல் இயல் இப்பெயர்த்து. (திராவிட. சக.)

அகத்தியம்—1. அகத்தியமுனிவராற் செய்யப்பட்ட தமிழிலக்கணநூல். 2. அவசியம். (உ-ம்.) "ஆகையால் திதீக்ஷை யகத்தியம் வேண்டும்." (விசாரசா. கஉ.) 3. சொல்லத்தகாதது.

அகத்தியர்குழம்பு — ஒருவகை மருந்து. (வைத்தியசாரசங்கிரகம்.)

அகத்தியன் — 1. ஒரு முனிசிரேட்டன். இவன் அகத்தியமெனப் பெயரிய இலக்கண நூலுக்கும் பிற தமிழ்நூலுக்கு மாசிரியன். பொதியமலை இவன் வாசஸ்தானம். (உ-ம்.) "ஆரணங்களுணர்ந்த வகத்தியனுக்கு" (சிவப்பிர. மங்கல. ௪.) விந்தமலையைப் பிலத்திலே புகும்படி யடக்கியகாரணம்பற்றி யகத்தியன் எனப்பெயர்பெற்றனன் என்பர். [ஸ: அகஸ்த்ய: அகம்-மலை. ஸ்த்ய-அடக்கியவன்.] 2. அகஸ்தியநக்ஷத்திரம். (பரிபா. 11, 11. உரை.)

அகத்திருசியாநுவித்தம் — ஆறு சமாதிகளில் ஒன்று. அது, மநத்தின்கண் உள்ள இராகத்துவேஷாதிவிடயங்களுக்குத்தானே சாட்சியென்று சிந்திப்பது. (வேதா.சூ. கருo. உரை.) [அகவிடயத்தில் அநுசந்தானம் ஆதலின் இப்பெயர்பெற்றது.]

அகத்தினள்—மனைவி. (உ-ம்.) "அகத்தினளேய்தனில்வருந்த." [அகம்-வீடு.]

அகத்திடு—1. உள்ளிடுதல். 2. கைக்குள்ளேவிட் டணைத்தல். 3. தழுவுதல். [அகம்; அத்து; ஈடு-இடுதல்.]

அகத்துவம்—கர்ப்பக்கிரகத்தன்மை, வீட்டுத்தன்மை. (உ-ம்.) "ஓய்வுறுகோவிலகத்துவங்கொள்க." (விதாந. நல்வினை கஉ.)

அகதம்—1.ஆரோக்கியம்.(உ-ம்.)"அகதங்காரன்". 2. மருந்து. [ஸ: அகத: அ - எதிர்மறை. கத-நோய்.]

அகதன்—நோயிலி. [ஸ: அகத: அ - எதிர்மறை. கத-நோயாளி.]

அகதி—1. தில்லைமரம். 2. புகலிடம் இல்லாதவன். (உ-ம்.) "அகதியைமறவனே." (திருப்புகழ். ௫௫௭.) 3. புகலிடம் இன்மை. 4. வேலமரம். (மலை). 5. வறியவன். [ஸ: அகதி: அ-எதிர்மறை. கதி-வழி, புகலிடம்.]

அகதிதகருமம்—"பசுவைப்பாலைக்கறந்தான்" என்பதிற்போலச் செயப்படுபொருட்பெயரும், அதனோடு சம்பந்தப்பட்டாரும் வேற்றுமையுருபுபெறற்பாலதாய்வரும் பொருட்பெயருந் தனித்தனி "ஐ"யுருபுபெற்றும் "ஆசிரியனை ஐயுற்ற பொருளை வினவினன்" என்பதிற்போலச் செயப்படுபொருட்பெயரும், அச்செயலைக் கருதும் வினைச்சொல்லோ டேழாம்வேற்றுமையுருபுபெற்றணை தற்பாலதான பொருட்பெயரும் தனித்தனி "ஐ"யுருபுபெற்றும் இவ்வண்ணம் ஈருருபிணைய நிற்குஞ் செயப்படுபொருள். (உ-ம்.) "துணைநிலையகதிதந் துகன்மகமென்பர்" (பி. வி. கஉ. உரை.) [ஸ: அகதித: அ-சொல்லப்படாதது. கருமம்-செயப்படுபொருள்.]

அகதிதம்—சொல்லப்படாதது. [ஸ: அகதித: கதித-சொல்லப்பட்டது.]

அகதீகம்—ஊடு செல்லுதற்கரியது. [ஸ: அகதீக: கதீக-செல்லற்கியைந்தது.]

அகதேசி—உள்ளூரவன்.

அகதேகு—பிணியில்லாதவன்.

அகந்தை—1. அகங்காரதத்துவம். (உ-ம்.) "ஏலுறுமகந்தையொன்றிலெய்துமைம்புலனும்" (கந்தபு. அண்ட. உ.) 2. செருக்கு. (உ-ம்.) "ஒழிந்தவானவர் குருதியு மகந்தையுங்கொண்டு" (கந்தபு. கடவுள். எ.) 3. நான் என்தென்னுந் தன்மை. (உ-ம்.) ("அகங்காரம்" பார்.) [ஸ: அஹந்தா: அஹம்-நான். தா-தன்மை.]

அகநகர்—1. கோட்டைக்குள் அடங்கிய நகரப்பகுதி. (சிலப். 14. 69. உரை.) 2. அந்தப்புரம். (மணி. 23. 57).

அகநகை—இகழ்ச்சிநகை. (சிலப். கொலைக்களக். கருச. உரை.) [அகம்-உள். நகை-சிரிப்பு.]

அகநகைத்தல் — இகழ்ச்சிநகைசெய்தல், உள்ளே சிரித்தல். (உ-ம்.) "அருந்திறன் மாக்களையகநகைத்துரைத்து" (சிலப். கொலைக்களக். கருச.) [நகைத்தல்-சிரித்தல்.]

அகநாடகம்—அகக்கூத்து. (சிலப். அரங்கே. கச. உரை.)

அகநாடகவுரு— அகக்கூத்தின்வண்ணம். அவை கந்தமுதல் பிரபந்தவுருவீறாக இருபத்தெட்டாகும். (சிலப். அரங்கே. கச. உரை.)

அகநாடு—உள்நாடு. (உ-ம்.) "அகநாடு புக்கவ ரருப்பம் வெளவி" (பத்து. மதுரைக். கசக.) [அகம்; நாடு.]

அகநாழிகை—கர்ப்பக்கிருகம். (T.A.S.,I 6.)

அகநானூறு—எட்டுத்தொகையுள் ஒன்று.

அகநிட்டலோகம்— (பௌத்தம்.) பிரமலோகம் இருபதினுள்ளே பதினாறும்லோகம். (மணிமேகலை. பக். ௩.)

அகநிட்டன்—கௌதமபுத்தன்.

அகநிர்ணயம்— ஆசௌசவிதிகளைக்கூறும் ஒரு ஸம்ஸ்கிருதநூல். [அவநிண-யம்: அவம்-ஆசௌசம். நிண-யம்-நிச்சயம்.]

அகநிருவிகற்பசமாதி—(வேதாந்தம்) ஆறுசமாதிகளுள் ஒன்று; அது: திருசியாநுவேதம், சத்தாநுவேதம் என்னும் இரண்டும் நீங்கி மனங்கரைந்து நிச்சலமாய்நிற்றல். (உ-ம்.) "புகன்றதிருசியஞ்சத்தமெனுமிரண்டுமகன்றே-யிங்கசைவிறிபமெனப் பந்தமறவிருத்தவிலங்குமகநிருவிகற்பசமாதி." (வேதா. சூ. கடுக.) [அகம்-உள். நிர்விகல்பம்-பேதமின்மை. ஸமாயி-நன்கு தியாநித்தல்.]

அகநிலை—1. உள்ளானநிலை. (உ-ம்.) "அகநிலைச்செயப்படுபொருள்." (பி. வி. கஉ. உரை.) 2. வேர். (உ-ம்.) "அரசுமேம் படீஇய வகநிலை மருங்கின்" (சிலப். இந்திர. கஅக.) 3. கடவுள். [அகம்-உள். நிலை-நிற்றல், நிற்பது, நிற்பவன்.]

அகநிலைக்குறிஞ்சி—ஒருபண். "தென்னுறு பாலைகுறிஞ்சியேமருதஞ் செவ்வழியென்னு நானிலத்திற் - பின்னகம்புறமேயருகியன் மற்றைப்பெருகியநூறமுவெண்ணிரண்டாய்-மன்னியகாதத்திசைகளில்" (கந்தபு. சூரனசி. உஉ.)

அகநிலைக்கோச்சகம்— கொச்சகபேதம். (கலித். 119. உரை.)

அகநிலைச்செயப்படுபொருள்— வினைச்சொல்லின் அகத்தே செயப்படுவதாகநிற்குந்தொழில். அது, "வந்தான்" என்பதில் 'வருதலைச்செய்தான்' எனஇவ்வாறுய்இரண்டனுருபு விரிந்துநிற்கப்பெற்ற கருமபாவம். (பி. வி. கஉ. உரை.)

அகநிலைச்செவ்வழி— ஒரு பண். (உ-ம்.) ("அகநிலைக்குறிஞ்சி." பார்.)

அகநிலைப்பசாசக்கை— மூவகைப்பசாசக்கைகளிலொன்று. அது, சுட்டுவிரனுனியிற் பெருவிரலகப்பட வளைப்பது. "அவைதாம், சுட்டுவிரனுனியிற் பெருவிரலகப்பட, வொட்டிவளைத்ததகநிலை" (சிலப். அரங்கே. கஅ. உரை.)

அகநிலைப்பாலை—ஒரு பண். (உ-ம். "அகநிலைக்குறிஞ்சி" பார்.)

அகநிலைமருதம்—ஒரு பண்; அஃது உழைகுரலாய கோடிப்பாலை. (உ-ம்.)"அகநிலைமருதமும்" (சிலப். வேனில். ௩௧.)

அகப்பகை—உட்பகை. (உ-ம்.) "அகப்பகையொன்றஞ்சிக்காப்ப." (நீதிநெறி. ௫௫.) [பகை-விரோதம்.]

அகப்பட்டி— ஒருவனுக்கு, தன் பட்டிமையிற் சுருங்கிய பட்டிமையுடையோன். (உ-ம்.) "அகப்பட்டியாவார்" (வள். க0எச. பரி.)

அகப்படல்—அகப்படுதல். (பார்.)

அகப்படுத்தல்—1. உட்படுத்தல். (உ-ம்.) "பரதவர் வலையி னகப்படுத் தரிய" (பாரத. குரு. க0௫.) 2. பிடித்தல். (உ-ம்.) "மற்றவன் பெருமுரண்முருக்கிக் கையகப்படுத் துய்ப்பனுல்" (கந்தபு. வச்சிர. ௬.) [படுத்தல்-ஆக்குதல்.]

அகப்படுதல்—1. உட்படுதல். (உ-ம்.) "ஐயிருதிங்களெல்லையகப்படக் காண்பிர்" (சிந்தா. பதுமை. உசரு.) 2. உள்ளே சிக்கிக்கொள்ளுதல். (உ-ம்.) "ஆசை வெள்ளங் கவர்ந்து கொன்டிழுப்ப வந்தக் கட்டிலேயகப்பட்டையோ" (தாயு. சிவன்செயல். க.) 3. கிடைத்தல். (உ-ம்.) 'அடியனேற் கிவர்தா மிங்கேயகப்பட்டாரச்சோவென்று' (பெரியபு. கண்ண. க0௬.) 4. பிடிக்கப்படுதல். (உ-ம்.)"எழிலுடைக்கொண்டல்வண்ணனகப்படானெவர்க்குமென்றான்" (பாரத.கிருட். கஎச.) 5. வசப்படுதல். (உ-ம்.) "தனஞ்சயன் கைவாள்வெரீஇ, யகப்படுந்தராதிபன்" (பாரத. வாரணா. அ0.) 6. குறைதல். (தொல். பொருள். 446. உரை.)

அகப்படை—அந்தரங்கபரிகரம். (உ-ம்.) 'அகப்படையென்று மிடுக்கராயிருப்பாரை' (ஈடு. 10. 1. ப்ர)

அகப்பணி—1. வீட்டுவேலை. [அகம்-வீடு. பணி-வேலை] 2. அந்தரங்க கைங்கரியம். (திவ். திருவாய். 10. 2. 6.)

அகப்பரம்—திண்ணை, வேதிகை. [அகம்-வீடு. பரம்-முன்.]

அகப்பரிவாரம்—இற்பணியாளர். (சீவக. 292. உரை.)

அகப்பற்று—1. நான் என்னும் பற்று. அது, தானல்லாத உடம்பைத் தான் எனக் கருதியதன்கட்செய்யும் பற்று. (உ-ம்.) "போமேயகப்பற்றென்றுந்தீபற" (அவிரோ. கச.) 2. மனவிருப்பு. [அஹம் - நான். அகம் - உள். பற்று-விருப்பு.]

அகப்பா—1. அகழி. 2. மதில். (உ-ம்.) "குட்டுவனகப்பாவழியநூறி" (இறைய. உரு. உரை.) 3. மதிலுண்மேடை. (பிங்க. ௩0௩௧.)

அகப்பாட்டு—1. அகநானூறென்னும்நூல். [இது அகப்பொருளைக் குறிக்கும் பாட்டென்றபடி.] 2. அகப்பொருள்பற்றிவரும் பாட்டு; அகப்பொருளிலக்கணத்திற் கிலக்கியமாகச் செய்யப்படுஞ் செய்யுட்கோவை. (இலக்கண விளக். ருகஉ. கருத்துரை.)

அகப்பாட்டுவண்ணம்— வண்ணச்செய்யுள் வகையிருபதனுள் ஒன்று. அது, முடிந்ததெனக்காட்டும் ஈற்றசையேகாரத்தானன்றி யொழிந்த உயிரீற்றானவ தொற்றீற்றானவது வந் திறுதியடி யிடையடிபோன்று நிற்பது. (உ-ம்.) "அகப்பாட்டுவண்ணம் முடியாத்தன்மையின் முடித்தன் மேற்றே"(தொல். பொரு.ருஉஎ.) [அகம்-உள். பாடு-ஆதல். வண்ணம்-விதம். இறுதி உள்போலவருதல் என்றபடி.]

அகப்பாட்டுறுப்பு — அகப்பொருள்பற்றி வருஞ் செய்யுட்கோவையின் உறுப்புக்கள்: திணை, கைகோள், கூற்று, கேட்போர், இடம், காலம், பயன், முன்னம், மெய்ப்பாடு, எச்சம், பொருள்வகை, துறை எனப் பன்னிரண்டுவகைப்படும். (உ-ம்.) "திணையே கைகோள் கூற்றே கேட்போ-ரிடனே காலம் பயனே முன்னம் - மெய்ப்பா டெச்சம் பொருள்வகை துறையென்-றப்பா லாறிரண் டகப்பாட் டுறுப்பே" (அகப்பொ. ஒழிபி. உ.)

அகப்பாடு—1. அகப்படுதல். 2. உண்ணிகழ்வது. [அகம்-உள். பாடு-ஆதல், ஆவல்.]

அகப்பு—ஆழம்.

அகப்புறக்கைக்கிளை—ஒருவன் காமக்குறிப்பிற்கமைதியில்லாத இளமைப்பிராயத்தாள்பக்கத்தில், குறிப்பறியாதுசென்றவளோடு மேன்மேலுங் கூறுவது. (உ-ம்.) "காமஞ்சாலாவிளமையோள்வயின் - குறிப்பறிவுறாது குறுகியாங்கவளோ-டிறப்பக் கூறுவதகப்புறக்கைக்கிளை" (அகப். ஒழிபி. ௩உ.) [அகத்தே நிகழும் இன்பநுகர்ச்சிக்கொவ்வாத ஒருதலைக்காமம் என்றபடி.]

அகப்புறச்சமயம்—1. தத்தம் சமயத்தின் உட்பிரிவாய் வேறுபட்ட சமயம். 2. சைவசமயத்துக்குள்ளாகிய வேதசிவாகமங்களைப்பிரமாணமாகக்கொண்டும் அவற்றுக்கு விலக்கான கொள்கையைச் சாதிக்குஞ் சமயம். அது: பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், அயிக்கவாதசைவம் என்றாறுவகைப்படும். (சிவஞானபா. ரு.) "பாசுபதர் முதலிய ஐவரும், வேதம் சிவாகமம் இரண்டிற்கும் பொதுவகையாற் பிரமாணங்கொள்ளினும் அவ்விரண்டிற்கும் புறமாகிய பாசுபதமுதலிய நூல்கட்குச் சிறப்புவகையாற் பிரமாணங்கோடலானும், வேதம் சிவாகமமிரண்டினும் ஆகாவென விலக்கப்பட்டனவற்றையாசரித்தலானும், அயிக்கவாதசைவர் வேதம் சிவாகமமிரண்டிற்கும் சிறப்புவகையாற் பிரமாணங்கொண்டு அவற்றின் விலக்கியன ஒழித்து விதித்தவழி யொழுகுவாராயினும், எல்லாப் பெருங்கேட்டிற்கும் மூலகாரணமாகிய ஆணவமலத்துண்மை கொள்ளாமையானும், அவ்வறுவகைச்சமயமும் அகப்புறச்சமயமெனவேறுவைத்தெண்ணப்பட்டன." (சிவஞானபா. சு.)

அகப்புறத்தலைவன்—கைக்கிளை பெருந்திணை யொழுக்கங்களுக்குரிய தலைவன். (கலித். 108. உரை.)

அகப்புறத்திணை — அகனாகிய ஐந்திணைக்கும் புறனாகிய ஒழுக்கம். அவ்வொழுக்கம், கைக்கிளையும் பெருந்திணையுமென இருவகைப்படும். அவை: காந்தள், வள்ளி, சுரநடை, முதுபாலை, தாபதம், தபுதாரம், குற்றிசை, குறுங்கலி, இல்லாண்முல்லை, பாசறைமுல்லையெனப் பத்தாகவிரியும். "ஆய்ந்தவகப்புறமையிரண்டுமாயுங்காற்-காந்தள் கவிமடன்மாவேறுதல்-காமமிக்-காய்ந்தவர் வள்ளிவெறியாட்டாம் வாய்ந்த-சுரநடை மாதர்

வருத்தஞ் சுரனுன் - முதுபாலைதன்னைமொழியின்மதுமலர்த்தார்க்-காவலன்வியக்கவன்றததுவாகும்-பாசறைமுல்லைதலைமகன்பாசறைக்கண் - மாசறுமாதரையுள்ளுதல் - மாசற்ற - வில்லவன்முல்லையுமஃதேயாஞ்சொல்லுங்காற் - குற்றிசைகோல்வளையாளைத் தலைமகன் - முற்றத்துறந்த துறவாங்குறுங்கலி-முற்றத்துறந்த தலைமகனை முன்னின்று - பொற்றொடிமாதர் பழிதூற்றுங் குற்றந்தீர்-தாபதங்காதற்றலைமகனை நீங்கிய-மேவருமாதர்நிலையாகுமேவருஞ்சீர் - நீக்கப்பட்டாளையுவந்ததலைமகன் - பார்த்துறாஉந்தன்மையது வாந்தபுதாரம் - பத்துமகத்தின்புறம்" (வீரசோ. பொரு. கஉ. உரை.)

அகப்புறப்பொருள்—அகப்புறத்திணை.

அகப்புறம்—1. தத்தம் சமயத்தின் உட்பிரிவாய் வேறுபட்டசமயம். 2. அகமாகிய ஐந்திணைக்கும் புறமாகிய திணை. அவை: கைக்கிளையும் பெருந்திணையும். (உ-ம்.) "ஏற்றுமுதுபாலைபாசறைமுல்லையியன்றவள்ளி — தோற்றுஞ் சுரநடையில்லவன்முல்லை தொல்காந்தளன்றி-மாற்றுங்குறுங்கலி தாபதங்குற்றிசைகைக்கிளையோ -டாற்றும்பெருந்திணையாந்தபுதாரமகப்புறமே. (வீரசோ. பொரு. கஉ.) "அகமென்பது நடுவினின்ற ஒருதிணையாதலின் கைக்கிளையும்பெருந்திணையும் அவற்றின் புறத்தினிற்றலின் அகப்புறமென்று பெயர்பெறுதலும் பெற்றும்." (தொல். பொரு. ருச. நச்சி.)

அகப்புறமுழவு — எழுவகை முழவுகளுள் ஒன்று; அது: தண்ணுமை, தக்கை, தகுணிச்சம் முதலாகப் பலவகைப்படும். (சிலப். அரங். உஎ. உரை.)

அகப்பூ—இதயகமலம். (உ-ம்.) "பெருவெண்டிங்கண் மாலகப்பூமலைந்துபெட்பநகுகின்ற" (சிந்தா. ககக. கoசு.) [அகம்-மனம். பூ - புட்பம்.]

அகப்பேய்ச்சித்தன்—"அகப்பேய்ச்சித்தர் பாடல்" என்னும் நூல்செய்த ஒரு சித்தன். [தன்னூலில் 'அகப்பேய் அகப்பேய்' என்று பலதரமும் வரப் பாடினமையால் அகப்பேய்ச்சித்தன் எனப்பட்டான்.]

அகப்பை — கறி கூழ் முதலியவற்றை அள்ளியூற்றும் கருவி.

அகப்பைக்கின்னரி—இசைக்கருவிவகை.

அகப்பைக்குறி—1. அகப்பையளவு. (ஈடு 1. 4. 6. அரும்.)2. அகப்பைகொண்டு பார்க்கும் நிமித்தவகை. (கண்ணாரக் கண்டதம்கேன் அகப்பைக்குறி.)

அகப்பைசொருகி—அகப்பை (முதலியன) சொருகிவைக்கும் சட்டம்.

அகப்பொருட்கைக்கிளை—காமம் நுகர்தற்கமைந்த இளமையையுடைய தலைமகளிடத்துண்டாகிய குறிப்பினைத் தானறியுமளவும் தலைமகன் அவளைச் சாராதுநின்று நெஞ்சொடு சொல்லுதல். (அகப்பொ. அகத். உஅ, உகூ.)

அகப்பொருட்கோவை — பிரபந்தவகைகளுள் ஒன்று; அது: முதற்பொருளும், கருப்பொருளும், உரிப்பொருளும் பொருந்திக் களவொழுக்கத்தையும், கற்பொழுக்கத்தையுங்கூறுதலே யெல்லையாகக்கொண்டு திணை முதலாகத் துறையீறாகச் சொல்லப்பட்ட அகப்பாட்டுறுப்புப் பன்னிரண்டுந் தோன்ற நானூறு கட்டளைக்கலித்துறையாகப் பாடப்படுவது. (உ-ம்.) "முதற்பொருள் கருப்பொருளுரிப்பொருண்முகந்து - களவுகற்பெனும் வரைவுடைத்தாகி - நலனுறுகலித்துறை நானூறாக - வாறிரண்டுறுப்புமூறின்றிவிளங்கக்-கூறுவதகப்பொருட்கோவையாகும்" (இலக்கணவி. அகசு.)

அகப்பொருட்டுறை— அகப்பாட்டுறுப்புக்கள் பன்னிரண்டனுள் ஒன்று; அது: உரைப்போருங் கேட்போருமின்றிக் கவிக்கூற்றாகச் சொல்லப்படுவது. "சொல்லியவல்லவொன்றினுமவற்றினோ - டொல்லும்வகைதேர்ந்துணர்த்தியல்வழாம - லுரைப்போர் கேட்போருண்மையின்றி - யுரைக்குங்கவியேயுரைப்பது துறையே" (அகப்பொ. ஒழிபி. உரு.)

அகப்பொருட்பெருந்திணை—அகத்தின்கண் உள்ள இன்பத்தைச் சிலநாள் நுகர்ந்த தலைவனுந் தலைவியும் பின் இடைக்காலத்து நுகராமைக்கான இடையூற்றுக் கூற்றுக்களைக் கூறுவது. (உ-ம்.) "அகன்றுழிக்கலங்கலும் புகன்றமடற்கூற்றுங் - குறியிடையீடுந்தெளிவிடைவிலங்கலும் - வெறிகோள்வகையும் விழைந்துடன்போக்கும்-பூப்பியலுரைத்தலும் பொய்ச்சூளுரையுந்-தீர்ப்பிலூடலும்போக்கமுங்கியல்பும்-பாசறைப்புலம்பலும் பருவமாறுபடுதலும்-வன்புறையெதிரழிந்துமொழித

லுமன்புறு - மனைவியுந்தானும் வாமடைந்து நோற்றலும் -' பிறவுமகப்பொருட்பெருந் திணைக்குரிய" (அகப்பொ. ஒழிபி. ௩௪.)

அகப்பொருள்— 1. அகப்பொருளிலக்கணத்திற் கிலக்கியமாகவருஞ் செய்யுட்கோவை. (உ-ம்.) 'பயந்தோன்றன்னையயங்குநோயறிவோர் - குரவாயலோர்சேரியோரென்றிவர் - முகத்துரைநிகழாவகப்பொருளகத்தே' (அகப்பொ. ஒழிபி. ௬.) 2. உட்பொருள். 3. சிற்றின்பம். (உ-ம்.) "5" பார். 4. பொருளிலக்கணவகையிரண்டனுள் ஒன்று; அது, புணர்ந்துரை உலகியலெனும் இரண்டுதிறத்தானும் கைக்கிளை ஐந்திணை பெருந்திணை யென்னும் எழுவகைகளையும் அமைத் தகப்பாட்டுநூல்செய்யுமுறையைக் கூறுவது. இதில் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய ஐந்துநிலங்களிலும் வசிப்பவர்க்குரிய பொதுப்பெயர்களுந் தொழிலும் உணவும் அவர்கள்வணங்குந் தெய்வமும் அவ்வந்நிலங்களுக்குரிய விலங்கு புள் மரம் இவைகளும் பிறவுஞ்சொல்லப்படும். 5. வீட்டிலுள்ள பொருள். (உ-ம்.) "அகப்பொருடமக்கருளுவார்க்கஃதுநல்கி - யுகப்புறுபரத்தையர்கள்." (தணிகை. ௩௧. எஅ.)

அகம்—1. அகக்கூத்து. (உ-ம்.) "அகத்தெழுசுவையானகமெனப்படுமே" (சயந்த நூல். சிலப். அரங். கஉ. உரை.) 2. அகங்காரம். (உ-ம்.) "அகமறுமுணர்வின்றுயும்" (ஞானவா. சுகர். அ.) [அஹம்] 3. அகநானூறென்னும் நூல். (உ-ம்.) "சுற்றறிந்தார்சொல்லுங்கலியோடகம்புறமென் - றித்திறத்த வெட்டுத்தொகை". 4. ஆகாயம். (தைல. பாயிர. உக.) 5. ஆசௌசம். (உ-ம்.) "அகமறநூற்றெட்டாகுதி மூலத்தாக்கி" (திருவானை. கோச்செங். எகூ.) [ஸ்வம்.] 6. ஆழம். 7. இடம். (உ-ம்.) "அருவியஞ் சாரலகத்து" (வாண. உ௫.) 8. இருப்பிடம், வீடு. (உ-ம்.) "அந்தகாரத்தையோரகமாக்கி" (தாயு. பரிபூரண. க௦.) 9. உபத்திரவம். [அகம்.] 10. உள்ளிடம். (உ-ம்.) 'அகம்புறநிறைந்தசோதியாய்' (தாயு. சிவன் செயல்.) 11. ஒருவனு மொருத்தியுங்கூடுங் காலத்துப்பிறந்ததோரின்பம். (தொல். பொரு. க. உரை. நச்சி.) [அகத்துநிகழ்வதனையகமென்றதாகுபெயர்.] 12. ஒரு வடமொழி விகுதியின்றிரிவு. (உ-ம்.) "நாடகம்" [நட்-அகம்.] "மன்மமையகம்" (வீரசோ. தாது. ௪.) 13. ஒரேழாம்வேற்றுமைச் சொல்லுருபு. (உ-ம்.) "கண்கால்புறமகம்" [எயிலகம் புக்கான்] (தொல். சொல். அஉ.) 14. சரீரம். (உ-ம்.) "அகத்தெலும்பு முரித்திடுவர்" (சிவதரு. சுவர்க். கச௬.) 15. சீவன். (உ-ம்.) "தேரினக மெனுஞ்சத்த மெம்மலமுமிலீர் சீவர்க்கிடுகுறிவாசகம்" (சூத. எக்கி. பூ. எ: ௬.) 16. சூரியன். [ஸூம்] 17. தானியம். (உ-ம்.) "மகபதிதனக்கு மன்னன்வருவிழா நடத்தலாலே யகமதுகுறைவிலாதாய்" (நல். பார. வியாசருற். அ.) 18. துக்கம். [ஸகம்.] 19. நான். (உ-ம்.) "முல்லைத்தண்பதியெந்தாயகங்கைக்கிளையாற்பயன் கோடலத்தன்மையதே" (திருமுல்லை. கக.) [ஸஹம்] 20. பகல். (உ-ம்.) "ஈரேழ்நாளகத் தெல்லை நீங்கி" (சிலப். பதிக. ௫க.) [ஸஹநு.] 21. பள்ளம். 22. பாம்பு. [ஸுழ: ஸ- எதிர்மறை. ழ-போதல்.] 23. பாவம். (உ-ம்,) "விருப்பொடேயுழுதொழி-லகமறக்களைமேலோன் - றருப்பைநீர் நிலத்தையன்மேற் றெளித்தமைதகுமால்." (இரகு. நாட்டு. ௩உ.) [ஸ்வம்.] 24. பூமி. (பிங்க. ௩0௩உ.) 25. மனம். (உ-ம்.) "பொய்யிலாவகமும் வாய்மையும்" (தாயு. பொன். எ௪.) [அகம் என்னும் உள்ளிடப்பெயர் ஆகுபெயராய் மனத்திற்காயிற்று.] 26. மரம். (பிங்க. ௩0௩உ.) [அழம்.] 27. மலை. (உ-ம்.) "விறற்கொள்வாகு விடுத்தன கல்லகம்" (கந்தபு. நகரழி. எ0.) [ஸழம்: ஸ-எதிர்மறை. ழ-போதல்.] 28. மார்பு. (உ-ம்.) "அகந்தனிவிணைமுலையெதிர்பொர" (திருப்பு. ௫.) 29. கெந்தகம். (வைத்தியபரி). 30. காமவின்பம். (தொல். பொருள். 1. உரை.) 31. மருதம். "ஆலைக்கரும்பினகநாடணைந்தான்" (சீவக. 1613.) 32. உள்ளடங்கியது. 33. வெள்வேல். (மலை)

அகம்படி—1. உள்ளிடம். "திருவயிற்றினகம்படியில்வைத்து" (திவ்: பெரியதிரு. 11. 6. 8.). 2. மனம். "அகம்படிக் கோயிலானை" (தேவா. 1204). 3. அகத்தொண்டு. "அகம்படிப்பெண்டுகள்" (I M. P Tp. 274). 4. அடியார். (ஈடு. 5. 8. 2.)

அகம்படித்தொண்டு— அணுக்கத்தொண்டு. 'அந்தணர்கோயிலுள்ளா லகம்படித்தொண் செய்வார்' (பெரியபு. தில்லைவா. 4.)

அகம்படிமை — அகப்படித் தொண்டு. (உ-ம்.) "நிருத்தனருட்செல்வமலியகம்படி மைத்திறலினர்தம்பதம்போற்றி" (கோயி ற்பு. பாயிர. கரு.)

அகம்படியர்—ஒரு ஜாதியார்.

அகம்படியார் — அந்தரங்கப் பணிவிடை புரிவோர்.

அகம்பதவாச்சியம்—அகமென்னும் பதத் தாற்சொல்லப்பட்ட பொருளாகிய ஆன்மா. [சி. சி. கூ: எ. ஞாந.) [ஸஹம் - நான். வதம் - சொல். வாச்யம் - சொல்லப்பட் டது.]

அகம்பன் — அசைவற்றவன் (ஞானு. 48.) [கம்பம் - அசைவு.]

அகம்பாவம்—செருக்கு, நானென்னுமெ ண்ணம். (உ-ம்.) "மிகுந்த வகம்பாவநிறை ந்து" (ஞானவா. வைரா. கரு.) [ஸஹம் ஸாவ: ஸாவம் - எண்ணம்.]

அகம்பிரதமர்—என்னை முதலாகவுடைய வர். [நானுமென்போலிகளும் என்றபடி.] (உ-ம்.) "பின் அகம்பிரதமர்க்கும்" (சி. சி. கூ: சஅ. ஞாந.) [ப்ரதமர் - முதலானோர்.]

அகம்பிரமமெனல் —சிவோகம்பாவனை செய்தல். (உ-ம்.) "அமலனைத் தன்னுட் கண்டகம்பிரமமென்றே" (சைவக. ஆசாரி. உரு.) [ப்ரஹ்ம - கடவுள்.]

அகம்பிரமவாதி— நானே பிரமமென்று வாதிக்கிறவன். (சிவப். எ. வியாக்.)

அகம்பு—உள்.

அகம்மியம்— 1. அணுகக்கூடாதது 2. அறியக்கூடாதது.(உ-ம்.)"பிரத்தியக்ஷாதிப் பிரமாணசதுட்டயங்களிலும் அகம்மியமாத லாலே" (சி. சி. அளவை. உ. சிவாக்.) [ஸகம்ய: கம்ய- அணுகத்தக்கது, அறியத் தக்கது. 3. ஒரு பேரெண். (பிங்.)

அகமகன்—பிள்ளையார். (தமிழ்லெக்ஸி கன்.)

அகமநம்—1. அடையாமை. 2. நடவா மை. 3. புணராமை. 4. போகாமை. [ஸகமநம்: ஸ- எதிர்மறை. கமநம்- அடை தல், அசைதல், புணர்தல், போதல்.]

அகமம்—1. மரம். 2. மலை. [ஸகம: கம- போதல்.]

அகமருடணதீர்த்தம்— அகமருடணஸ்நானத் துக்காகிய நீர்.

அகமருடணநாநம்— அகமருடணத்தோடு கூடிய ஸ்நானம்.

அகமருடணம்—1. வேதமந்திரவிசேடம். 2. அம்மந்திரமோதிச்செய்யும் ஸ்நானம்.

அகமருடம்–1. அகமருடஸ்நானம். (உ-ம்.) "ஆராதவிருப்பினுலகமருடம்படிய" (பெரிய பு. திருஞாந. சுഠ.) 2. அகமருடணமந்திரம். (உ-ம்.) "ஆனதடத்தினிலகமருடத்துடனு டுற்றோர்" (சேதுபு. சாத்தியா. ச.)[ஸவம்- பாவம். மர்ஷணம் - அழித்தல்.]

அகமலர்ச்சி—ஓரலங்காரம்; (குவ. சுகூ.)

அகமார்க்கம்— 1. அருமையிற் பாடல். அது: வாய்திறவாமற் கீழ்க்குரலெடுத்துப்பா டுதல். (பிங்கல. கசசഠ.) 2. உள்வழி. (உ-ம்.) 'மூச்சதுரமூலாதாரங்க ளகமார்க்கமறிந்து' (சி.சி. அ: உக. உரை. நிரம்ப.) 3. மந்திரக்கி ரமம். (சி. சி. அ: உக. உரை. சுப்பிர.) 4. மெய்த்தொழிலாற்செய்யுங்கூத்து. (உ-ம்.) "மெய்க்கூத்தாவது தேசி வடுகு சிங்கள மென மூவகைப்படும். இவை அகச்சுவை பற்றியெடுத்தலின் அகமார்க்கமென நிகழ்த் தப்படும்" (சிலப். அரங். கஉ. ஆடலாசிரி. உரை.) [அகம் - உள். மார்க்கம் - வழி.]

அகமான்மா—நானே யான்மா என்று பிர மத்தின் வேறாகத் தன்னைக்காண்போன். (உ-ம்.) "அறிவுடையோனகமான்மாவொடு வருசம்பந்தம்" (வேதா. சூ. கடுகூ.) [ஸஹ ஆத்மா.]

அகமிதம்—நான் இது என்பது. (உ-ம்.) "உகளமற்றகமிதமறவொன்றதாய்" (வே தாரணியபு. வரன்மு. டுடு.) [ஸஹம்-நான். இதம் - இது.]

அகமுகம்—அந்தர்முகம். (உ-ம்.) "அக முகமாந்தொடர்பால்"(ஞானவா.சுராகு. கஉ.)

அகமுடையாள்—மனைவி.

அகமுடையான்—கணவன்.

அகமுழவு—ஏழுவகைமுழவுகளுள் ஒன்று. அது உத்தமகருவியான மத்தளம், சல்லிகை, இடக்கை, கரடிகை, பேரிகை, படகம், குடமுழாவெனப் பலவகைப்படும். (சிலப். அரங். உஎ. உரை.)

அகமொடுக்கு—கொள்கொம்பு. (சம். அக.)

அகர்—பகல். (தொல். எழுத். மொழிமரபு. கஎ. உரை. இளம்.) [இது அஹர் என்னும் வடமொழியின்புணர்ச்சிநோக்கிய திரிபு; அகருபவாஸம் என்பதிற்போலப் பிறசொல்லோடு சேர்ந்தன்றித் தனித்துவாராது.]

அகர்க்கணம்-கலியுகாதிதொடங்கிக்குறித்தகாலம்வரையுள்ளதினங்களைக்கணித்தல்.

அகர்ணம்—1. செவிடு. (வாச.) 2. பாம்பு. (வாச.) [அகர்ண: அ-எதிர்மறை. கர்ணம்-காது.]

அகர்த்தநன்—குறள்வடிவமுடையவன்.

அகர்த்தவ்வியம்--செயற்பாலதல்லாதது. (உ-ம்.) "கரையும்விதிநிடேதவாக்கியங்களுரைத்திடுங்காற் கர்த்தவ்விய வகர்த்தவ்விய விடயமாயினவால்" (சூத. எக்கி. பூ. கo: உo.) [அகர்த்தவ்விய.]

அகர்த்தன்—கர்த்தனல்லாதவன்.

அகர்த்திருத்துவம்—கடவுளுடைய பிரபுத்துவசாமர்த்தியகுணங்கள் மூன்றனுள் ஒன்று; அது கர்த்திருத்துவம்நீங்கிநிற்றல். அஃதாவது: தநுகரணபுவநபோகங்களைக்கூடிக் கர்மாநுசாரப்பிரகாரம் ஆத்மாக்கள் பிரேரிக்கும்படி பிரேரகஞ்செய்தும் அவற்றிற் பற்றின்றித் தனியே தானிருத்தல். (உ-ம்.) "கர்த்திருத்துவமோடகர்த்திருத்துவம்பின்னந்நிதாகர்த்திருத்துவமே - யத்தன்மெய்ப் பிரபுத்துவவலி" (வேதாந். சூ. சஎ.) [கர்த்திருத்துவம் - செய்வோன்றன்மை.]

அகர்த்திருவாதம்--சிருட்டிகர்த்தா இல்லையென்று வாதித்தல். (சி. சி. பரபக்ஷ. சௌத்திராந்திகன்மதம். க. உரை.) [அ;கர்த்ரு; வாத.]

அகர்மகர்த்திருப்பிரயோகம் — அகர்மகர்த்தரிப்பிரயோகம். இது, செயப்படுபொருள் குன்றியவினைமுதலையுடைய வாக்கியம்.

அகர்மம்—1. செய்வில்லாமை. 2. தகாத செயல். [அகர்மன்: அ- எதிர்மறை. கர்மன்-செயல்.]

அகர்மி—கர்மமில்லாதவன். (பௌட். பசு. உரு.) [அகர்மின்: அ-எதிர்மறை. கர்மின்-கர்மமுடையவன்.]

அகர்முகம்—வைகறை. (உ-ம்.) "ஆறுமடுவிலகர்முகமப்பாடுநருக்கு" (தைல. பாயிர. ருரு.) [அஹர்முகம்: அஹந்-பகல். முக-தொடக்கம்.]

அகரம்—1. "அ"என்னுமெழுத்து. [அ; கரம்-ஒருசாரியை.] 2. பாதரசம் (லெக்ஸி). 3. இறையின்மை. [கரம்-இறை.] 4. ஊர். (உ-ம்.) "அகரமுல்லையயள்ளார்." (முல்லையந். எஎ.) 5. ஒற்றெழுத்தின் சாரியைகளுளொன்று. 6. கையின்மை. [கரம்-கை.] 7. செயலின்மை. கரம் - செயல். 8. பார்ப்பனச்சேரி. 9. மருதநிலத்தூர். 10. வீடு. (உ-ம்.) "அகரங்கள் பற்பலவு மாலயங்கள் பற்பலவும்" (நல். பாரத. கிருட்டிண. கக.) [அகாரம்.] 11. சூதம் (வைத்தியபரி).

அகராதி—1. சொற்களை, அவற்றின் முதலிலுள்ள எழுத்துக்கள் வர்ணமாலையின் கிரமப்படி அகரமுதலாக ஒன்றன்பின்னொன்றாய்த் தொடர்ந்துவர, அடுக்கிப் பொருள்விளக்கும் புத்தகம். [அ; கரம்; ஆதி. கரம் என்பது தீறுகெட்டது.] 2. சொற்களை, அவற்றின் முதலிலுள்ள எழுத்துக்கள் வர்ணமாலையின் கிரமப்படி யொன்றன்பின்னொன்றாய் வர நிரைக்கப்பட்ட கோவை. (உ-ம்.) "சூத்திரவகராதி." 3. பகல்தொடங்குங்காலம். (வாச.) [அஹராதி: அஹந்- பகல். ஆதி-தொடக்கம்.]

அகரிடணம்—1. துக்கம். 2. வெறுப்பு. [ஹர்ஷண-மகிழ்ச்சி.]

அகரிடம்—1. துக்கம். 2. வெறுப்பு. [ஹர்ஷ-மகிழ்ச்சி.]

அகரு—அகில், ஒரு மரம். (வைத்தியபரி).

அகருமகம்—செயப்படுபொருளில்லாதவினை. (வீரசோ. தாது. உ. உரை.) [அகர்மக: அ-எதிர்மறை. கர்மகம்-செயப்படுபொருளுடையது.]

அகல்—1. அகலுதல். 2. அல்குல். (பிங்கல. கooரு.) 3. ஓரளவு. (தொல். தொகைமரபு. உ௪. உரை. இளம்.) 4. சட்டி. (உ-ம்.) "காரகற்கூவியன்பாகொடுபிடித்த" (பத்து. பெரும்பாணாற். ருஎஎ.) 5. தகழி (உ-ம்.)

"திருவிளக்குத்திரியிட்டகல்பரப்பி" (பெரியபு. கலய. கரு.) 6. பெருமரம். 7. விரிவு. 8. வெள்வேலமரம். (வைத்தியபரி.)

அகல்கை—அகலல். [கை ஒரு தொழிற்பெயர்விகுதி.]

அகல்வட்டம்—பெரும்பரிவேடம். (லெக்ஸிகன்).

அகல்வு—1. அடர்ச்சியின்மை. (உ-ம்.) "வித்து நிலத்தின் வெறுத்தபயிர் விறப்பி னீங்க ¦விடைவாங்கிப்-பைத்தநிலத்தினகன்றபயிரகல்வினீங்கப்பறித்து" (தணிகை. திருநா. கஅ.) 2. நீங்குகை. (உ-ம்.) "அமுதம் வவ்வியகல்வுழி" (காஞ்சிப். முத்தீ. கㅇ.) 3. விசாலம்.

அகல்வோர்—1. நீசர். 2. விலகியிருப்பவர்.

அகலக்கட்டை—அகலக் குறைவுடையது.

அகலக்கவி—1. வித்தாரகவி. அது தொடர்நிலைச்செய்யுளாலும், அடிபலவாய் நடக்கும் முத்தகச்செய்யுளாலும் பாடப்படுவது. (இலக்கணவி. எசுஎ. உரை.) (உ-ம்.) "முன்மொழிக்-கேட்டிய தொன்மை யிலக்கணங்க ளிவ்வகையே, காட்டு மகலக் கவிக்கு" (வெண்பாப். முதன். உக.) [அகலம்-வித்தாரம். கவி-பாட்டு.] 2. வித்தாரகவி பாடும்புலவன்.

அகலப்பா—அகலக்கவி. (உ-ம்.) "பாங்கார்தொடர்நிலைப்பாப் பல்பாதஞ்சேர்தனிப்பா-ஈங்ககலப் பாக்களிரண்டாகும்" (வெண்பாப். செய்யு. ௫.) [அகலம்-விரிவு. பா-பாட்டு.]

அகலம்—1. அகலவுரை. அது, வினுவி அவ்வினுவுக்கு விடையாகத்தோன்றும் விகற்பங்களெல்லாங் காட்டி எழுதப்படுமுரை. (உ-ம்.) "தன்னூன்மருங்கினும் பிறநூன்மருங்கினுந் - துன்னியகடாவின் புறந்தோன்றும் விகற்பம்-பன்னிய வகல மென்மனர் புலவர்" (தொல். சிறப்புப்பா. நச்சி.) 2. உழாது விடப்பட்ட நிலம், தரவை நிலம். 3. மார்பு. (உ-ம்.) "எடவிழ்ந்ததாரகலமுமிணைத்தடந்தோளும்" (திருவிளை. நகரப். ஙரு.) 4. விசாலம். (உ-ம்.) "சென்னியகலமுப்பானிராயிரமாம்" (கந்தபு. அண்ட. உக.) 5. வித்தாரகவி. (உ-ம்.) "ஆசுமதுரஞ்சித்திரமகலமென் - றோசையெழும்பாட்டொருநால்வகைத்தே" (இலக்கணவி. எசுங.) 6. விரிவு. (உ-ம்.) 'உரைத்தனைசுருக்கியாங்கணன்றிதனகலங்கேட்க' (கந்தபு. பாயிர. அக.) [அகல்; அம்.] 7. பூமி (அக. நி). 8. ஆகாயம் (பிங்). 9. பெருமை (பரிபா 4, 30).

அகலர்—1. கலைநீங்கினவர். (உ-ம்.) "விஞ்ஞானகலர்க்குக் கலாதிசம்பந்தமுண்டாயிருந்தும் கலாதிபரதந்திரரல்லாதபடியால் அகலரே" (சி. சி. க: உரு. உரை. சிவாக்.) [சு- எதிர்மறை. கலர்-கலையுடையவர்.] 2. சண்டாளரல்லாதவர், நீசரல்லாதவர்.வ௵-நீசர், சண்டாளர்.

அகலல்—1. அடர்ச்சியின்மை. 2. ஒழிதல். (உ-ம்.) "மீன்றிகழ்விசும்பிற்பாயிருளகல" (புறநா. உரு.) 3. பிரிந்துபோதல். (உ-ம்.) "அகன்றபூங்கொடியை" (பாரத. குருகுல. எக). 4. விசாலித்தல். (உ-ம்.) "அகன்றவியன்மார்பும்" (புறநா. ங.) 5. விருத்தியாதல், பெருக்கமடைதல். (உ-ம்.) "அழுக்கற்றகன்றாருமில்லை" (வள். களo.)

அகலவுரை—ஒருவகையுரை.

அகலறை — 1. பகைவர்மேற்சென்றோருறைவிடம். 2. மலைப்பக்கம். (உ-ம்.) "மாக்கணகலறைய திர் வன முழங்க" (பத்து. பட்டி. உஙஎ. உரை.) [அகல்; அறை.]

அகலன்—1. கடவுள். 2. கொடியவனல்லாதவன். 3. பெருத்தவன். 4. பெருமையுடையவன். [சு- எதிர்மறை. வ௵ தீயன், கொடியன், நீசன்.]

அகலி—அகலியை. (உ-ம்.) "அகலிமெய்க்கேள்வனுதியர்கள்" (நல். பாரத. கிருட்டி. கக.)

அகலிகை—அகலியை.

அகலிடம்—பூமி. (உ-ம்.) "அகலிடத்துயர்ந்ததில்லை" (பெரியபு. தில்லைவா. கo). [அகல்; இடம்.]

அகலிது—அகலமுடையது. (உ-ம்.) "ஈமத்தாழியகலிதாகவனைமோ"(புறநா.உருசு). [அகல்; இ; து.]

அகலியம்—1. ஆயத்தமில்லாதது (உ-ம்.) "அகலியமாமிசம்". 2. இணங்காதது. 3. ஒருமரம். (பிங்.) 4. சாமர்த்தியமில்லாதது. 5. மரம். (பிங்கல. உசகக.) [1, 2, 4. அ- எதிர்மறை. கல்யம் - ஆயத்தம், இணக்கம், சாமர்த்தியம்.]

அகலியமாமிசம்—தன்னால் அல்லது தன் நிமித்தமாகக் கொல்லப்பட்ட பிராணியின்

மாமிசம். அது "திரிகோடி, சட்கொடி, நவகொடிமாமிசமென மூன்றும். திரிகொடி யாவது: கொலைசெய்தல், செய்வித்தல், உடன்படல் என மூன்றும். சட்கொடியாவது: அம்மூன்றுடனே தன்னிமித்தம் வேறொருவன் கொல்வது காண்டல், கேட்டல், ஐயப்படாமை கூட ஆறும். நவகொடியாவது: அந்த ஆறுடனே சுவைமேல்விருப்பம், மிகைபடத்தின்னும் கருத்து, இனிமைகூறும் கொல்லுதலாகிய புகழ்ச்சி கூட ஒன்பதாம். இவற்றின் ஒன்று வரினும் அகலியமாமிசமாம்". கொடி என்பது தொழில். (சி. சி. பர. சௌத்ராந்திகன்மதம். உகூ. உரை.) [அ- எதிர்மறை. கல்யம்-ஆயத்தம். மாமிசம்-இறைச்சி.]

அகலியாசாரன் — இந்திரன். (வாச) [அஹல்யாஜார: அஹல்யா- கௌதமமுனிவருடையமனைவி. ஜார-சோரநாயகன்.]

அகலியாநந்தனன்—சதாநந்தன். [அஹல்யாநந்தந: அஹல்யா-அகலியை. நந்தந-மகன்.]

அகலிகை—கௌதமமுனிவருடைய மனைவி. (உ-ம்.) "அகலிகைகல்லதானாள்" (சி. சி. உ: சச.) [அஹல்யா: அ - எதிர்மறை. ஹல்யா - அவலட்சணமுடையவள்.]

அகலுகை—அகலுதல்.

அகலுதல்—அகலல்.

அகலுள்—1. அகலம். (சூ. நிக. அ: கஉ.) 2. ஊர். (சூ. நிக. ரு: ௩ரு.) 3. நாடு. (சூ. நிக. ரு: ௩ரு.) 4. பூமி. (ஆசிரியநிகண்டு. ௩.) 5. பெருமை. (திவா). 6. தெரு (சிலப். 1; 47 உரை). [அகல்; உள்.]

அகலுஷிதம்—கலங்காதது. (உ-ம்.) "இந்த உபாதிகளினாலே அகலுஷிதசைதந்நியம் பிரமாதாவாம்" (சி. சி: அளவை. க.) [அகலுஷித: அ - எதிர்மறை. கலுஷிதம் - கலங்கினது.]

அகவடி—அடியினுள்ளிடம், உள்ளங்கால். (உ-ம்.) "அகவடியக்கைநாட்டக்கடை" (திருவிளை. உக்கிரபாண்டியனவ. சக.)

அகவர்—1. சூதர், அழைத்துப்புகழ்வோர். (உ-ம்.) "நாளீண்டிய நல்லகவர்க்கு" (பத்து. மதுரை. உஉ௩.) [அகவு-அழைத்தல். அர்- ஒருவிகுதி.] 2. நாட்டில்வாழ்வோர். (உ-ம்.) "அகவர்நீனிறமுல்லைப்பஃறிணை நுவல" (பத்து. பொருந. உஉ0.) [அகம்-உள்.]

அகவல்—1. அழைத்தல். (உ-ம்.) "அகவினம் பாடுவாந் தோழீ" (கலி. ச0.) 2. ஆசிரியப்பா. (உ-ம்.) "அகவலென்பதாசிரியம்மே" (தொல். பொரு. ௩அக.) ["அகவிக்கூறுதலா லகவலெனக் கூறப்பட்டது" என்பது உரை]. 3. எடுத்தலோசை. (பிங்கல. உக0கூ.) 4. ஒலித்தல். (உ-ம்.) "பல்பொறிமஞ்ஞை வெல்கொடியகவ" (பத்து. திருமுரு. கஉஉ.) 5. ஓர் ஓசை, அஃது அகவற்பாவுக் குரியது. (உ-ம்.) "ஒலிமுறையே தின்பாமலிசெப்பல் சீர்சாலகவல்" (யாப். காரிகை. செய். க.) 6. கூத்தாடல். (பிங்கல. கசகூச.) 7. மயிலின் குரல். (உ-ம்.) "பாலம்பகவன் மயிலுரைகோவியற் பாவைபங்கன்" (மறைசையந்தா. கூக.)

அகவல்விருத்தம்—ஆசிரியவிருத்தம். (உ-ம்.) "அகவல்விருத்தங்கலித்தாழிசையால்" (இலக்கணவி. 845). [அகவல்-ஆசிரியம். விருத்தம்-பாவினம் மூன்றினுள் ஒன்று.]

அகவலன்—பாணன். 'களம்வாழ்த்துமகவலன்' (பதிற். 43).

அகவலிசை—அகவலோசை. (உ-ம்.) "அகவலிசையனவகவன் மற்றவை ஏ ஓ ஈ ஆய் என் ஐ யென்றிறுமே" (இலக்கணவி. எ௩உ.)

அகவலுரிச்சீர்—அகவற்பாவுக்குரிய சீர். இது: தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்னும் வாய்பாட்டால் வரும் ஈரசைச்சீர். (உ-ம்.) "அகவ லுரிச்சீர் விகற்பமு மொன்னுதலே" (யாப். காரிகை. உறுப். க0.)

அகவலைப்படுத்துதல்—1. வலையிலகப்படுத்தல் (சம். அக). 2. வசப்படுத்துதல். (திவ். திருவாய். 6; 2; 9.)

அகவலோசை—ஆசிரியப்பாவிற்குரிய சந்தம். அது நேரொன்றாசிரியத்தளையாற் பிறப்ப தேந்திசையகவலெனவும், நிரையொன்றாசிரியத்தளையாற்பிறப்பது தூங்கிசையகவலெனவும், அவ்விருதளைகளினது கலப்பாற் பிறப்ப தொழுகிசையகவலெனவும் சொல்லப்படும். (உ-ம்.) "அகவலோசை மூன்று வகைப்படும்" (இலக்கணவி. எ௩உ-ம் உரையும்) [அகவல்-ஆசிரியம். ஓசை. சந்தம்.]

அகவற்சீர்—அகவலுரிச்சீர்.

அகவற்சுரிதகம்—தனிப்பாக்களின் கடையுறுப்பாய்த் தனிச்சொல்லின்பின் மூன்றடி முதற் பலவடியாக அகவலான்வருவது. [அகவல் - ஆசிரியப்பா. சுரிதகம்-கலிப்பாவுறுப்புக்களுள் ஒன்று.]

அகவற்பா — ஐவகைப்பாக்களிலொன்று. அது, நாற்சீருக்கு மேற்படாத அடியுடையதாய் இயற்சீர்பயின்றும், கருவிளங்கனி கூவிளங்கனியென்னும் இரண்டுமொழிந்த அயற்சீர்விரவியும், ஆசிரியத்தளை தழுவியும் பிறதளைமயங்கியும், ஏ, ஓ, ஈ, ஆய், என், ஐ என்பவைகளுள் ஒன்றனை இறுதியாகக்கொண்டு முடிவது. [அகவல் - ஆசிரியம். பா-பாட்டு.] அகவற்பாவின் பெருக்கத்துக் காயிரமடியும், சுருக்கத்துக்கு மூன்றடியும் எல்லையாமென்பர். (தொல். பொரு. சஎ0.)

அகவற்றழிசை — ஆசிரியப்பாவினத்துளொன்று; அது, எவ்வகைச்சீரானுந் தளையானும் ஒத்த மூவடியாகத் தனித்தாவது ஒருபொருண்மேல் மூன்றடுக்கியாவது வருவது. (உ-ம்.) "மூன்றடியொத்த முடிவின வாய்விடி - னென்றவகவற்றாழிசையாகும்" (யாப்பருங். எறு.) [அகவல் - ஆசிரியம். தாழிசை - பாவினத்துளொன்று.]

அகவற்றுள்ளல் — துள்ளலோசை மூவகையுளொன்று; அது வெண்டளையுங் கலித்தளையுங்கலந்துவருதலாற் பிறக்குமோசை. (உ-ம்.) "வெண்டளைதன்றளையென்றிரண்டியையி, னென்றியவகவற்றுள்ளலென்றோதுப" (யாப். காரிகை. செய். க. உரை.) [அகவல்-ஆசிரியம். துள்ளல்-துள்ளிச்செல்வது.]

அகவற்றுறை—ஆசிரியப்பாவினத்துளொன்று. அது, நான்கடிபெற் றீற்றயலடிகுறைந்தும், நான்கடிபெற் றீற்றயலடி குறைந்திடைமடக்காயும், நான்கடிபெற்றிடையிடைகுறைந்தும், நான்கடிபெற்றிடையிடைகுறைந்திடைமடக்காயும் வருவது. (உ-ம்.) "கடையதனயலடிகடைதபுநடையவும்-நடுவடிமடக்காய் நான்கடியாகி - யிடையிடைகுறைநவுமகவற்றுறையே" (யாப்பருங். எசு.)

அகவற்றூங்கல்—தூங்கலோசை மூவகையுள் ஒன்று; அது, ஒன்றுதவஞ்சித்தளையாற் பிறக்குமோசை. (உ-ம்.) காரிகை. செய். 1. உரை.

அகவன்மகள்—பாண்மகள். (குறுந். 298)

அகவாட்டி—அகத்துள்ள அடியாள். [அகம்-உள். ஆட்டி-ஆளப்படுபவள்.]

அகவாய்—உள்ளிடம் (உ-ம்.) 'அகவாயிற் பெருச்சாளி' (திவ். திருமாலை 7. வ்யா 35).

அகவாயில்—மனம். (உ-ம்.) 'அகவாயிலெண்ணத்தினேற்றமறிந்து' (குருபரம். 258).

அகவாயுக்கள்—அகத்திலுள்ள அந்தக்கரணங்களைச் சீவனோடு கூடிநின்று அசைப்பிக்கின்றனவாகச் சொல்லப்படும் வைரம்பன், முக்கியன், பிரபஞ்சனன், அந்தரியாமி, மகாப்பிராணன் என்னும் ஐந்துவாயுக்கள். (வேதா. சூ. எசு. உரை. எஎ.) [அக - உள். வாயுக்கள்.]

அகவிடன்—அகப்பொருளுக்குரிய சட்டக முதலாகிய இருபத்தேழு உரைகளுள் ஒன்றாகிய இடத்தின் வகையிரண்டனுள் ஒன்று; அது ஒரு செய்யுள் மனையும் வளாகமும் பற்றிவருவது. (வீரசோ. பொருட். ச. ரு. சூ ம் உரையும்.)

அகவிதழ்—உள்ளிதழ். (உ-ம்.) "செய்ய தாமரையகவிதழ்" (பெரியபு. திருஞான. எஅ.) [அகம் - உள். இதழ் - மடல்.]

அகவிருள்—அஞ்ஞானம்.

அகவிலை—1. தானியவிலை. (உ-ம்.) "ஆதலாலுலகினெல்லுமகவிலைகுறைந்து" (திருநெல். நெல்லுக்கு. ச.) [அகம்-தானியம்.] 2. உள்ளிதழ். 'அகவிலையாம்பல்' (தேவாரம் 5.11.8)

அகவு—1. ஆடுதல். 2. அமுக்கிரா (வைத்தியபரி). 3. கூத்தாடுதல். (உ-ம்.) "மலைக்குவட்டகவுறுமயிலின்மாழ்கினர்" (இராமா. நகர்நீங்கு. கஃஎ.)

அகவுதல்—1. அழைத்தல். 2. ஒலித்தல். (உ-ம்.) "செங்கணிருங் குயிலகவுஞ் சோலை" (கூர்மபு. சந்திர. கூச.) 3. கூத்தாடல். (உ-ம்.) "பீலிமாமயிலகவுமதுவநம்" (கூர்மபு. இராம. வ௩. கக0.) 4. பாடுதல். (பதிற்றுப். 43). 5. நெடுமையாதல். (ஈடு. 6. 2. 9.)

அகவுநர்—1. ஆடுபவர். 2. பாடுபவர். 'அகவுநர் நாகவில்பாடல்' (பரிபா. 15-42.)

அகவேற்றம்—தானியவிலையேற்றம். [அகம், அர்க்கம் என்பதன் மரூஉப்போலும்.]

அகவை—1. உள்ளிடம். (உ-ம்.) "ஆயகானகத்தகவையுட்சரித்துறு மந்நாள்" (உபதேசகா. சிவவிரத. கச.) 2. உட்பட்ட

பிராயம். (உ-ம்) "ஈராறுண்டகவையாள்" (சிலப். மங்கலவாழ்.) 3. ஏழாவதனுருபு. (உ-ம்.) 'ஆடித்திங்களகவையின்' (சிலப். உரை பெறு. 3).

அகழ்—1. அகழி. (உ-ம்.) "வையையுமொருபுறத்தகழாம்" (திருவிளை. நகரப். கஎ.) 2. குளம். (உ-ம்.) 'நீர்நசைஇக் குழித்த வகழ்' (பெரும்பாண். 108).

அகழ்தல்—1. தோண்டுதல். (உ-ம்.) "அகழ்தன்மாக்கடலன்ன" (சிந். நாமக. கoகூ.) 2. மூலத்தோடு நீக்குதல். (உ-ம்.) "அகழ்தருபாவத்தினராய்" (சூத. சிவ. கரு: ருக.)

அகழல்—அகழ்தல்.

அகழான்—அகழெலி. [அகழ்; ஆன்.]

அகழானெடுத்தல்—அகழான் நிலத்திலே வளையுண்டாக்கி மண்ணைப் புறம்பே தள்ளுதல்.

அகழி—1. கிடங்கு. (உ-ம்.) "பாருடைத்தகுண்டகழி" (புறநா. கச.) 2. கோட்டையின் மதிலினைச்சூழ்ந்துவர நீர் நிற்கும்படி ஆழமாகத்தோண்டப்பட்டிருக்குங்கிடங்கு. (உ-ம்.) "அருமிளையுடுத்த வகழிசூழ்போகி" (சிலப். புறஞ்சேரி. அரு.) 3. வாயகன்ற பாத்திரம். (உ-ம்.) 'ஓரகழிபெய்ததற்பின்' (தைலவ. தைல. 94.) [அகழ்-தோண்டு. இ-ஒரு செயப்படுபொருள்விகுதி.]

அகழுதல்—அகழ்தல்.

அகழெலி—ஒருவகைப் பேரெலி. [அகழ்; எலி.]

அக்ளங்கம்—1. களங்கமின்மை. (உ-ம்.) 'தேயுங்களங்கவுருவுடையை நீயிவன்செம்மை வாய்ந்துதேயாதென்று மகளங்கவுருவுடையனுகலின்' (செங்கழுநீர்விநாயகர்பிள்ளைத்தமிழ். அம்புலி. உ.) 2. சீதாங்கபாஷாணம். (வைத்தியபரி). [அகளங்க: அ-எதிர்மறை. களங்கம்-குற்றம்.]

அகளங்கமூர்த்தி—1. கடவுள். 2. புத்தன். (திவாகர.) [அகளங்கம்-குற்றமின்மை. மூர்த்தி-வடிவுடையவன்.]

அகளங்கன்—1. கடவுள். 2. குற்றமில்லாதவன். (உ-ம்.) "அகளங்கனநகனாதி" (நல். பாரத. கௌசிக. எஎ.) 3. புத்தன். [களங்கன்-குற்றமுடையவன்.]

அகளம்—1. சாடி. (சூ. நிக. எ: சுஉ.) 2. நிட்களம். (உ-ம்.) 'அகளமெய்வடிவாநந்தவற்புதக்கூத்தனுர்' (காஞ்சிப். திருக்கண். உஅ) 3. நீர்ச்சால். (உ-ம்.) "அகளத்தன்னநிறைசுனைப்புறவின்" (பத்து. மலை. கoச.) 4. மிடா. 5. யாழின்பத்தர். (உ-ம்.) "வயிறுசேர்பொழுகியவகையமையகளத்து" (பத்து. சிறு. உஉச.) ["தாழிபோலப் புடைபட்டிருத்தலின் அப்பெயர்த்து" என்பது உரை.] 6. சூட்சுமரூபம். [சி. வி. ஞாந. அ.] [அகலம்.] 7. தாழி (வைத்தியபரி).

அகளர்—நிட்களர். (உ-ம்.) "ஆன்மாக்கடேகம்போற் சர்மாஸ்தி முதலிய தேகதாதுக்களில்லையாகலின் அகளரே" (சி. சி. அளவை. கரு. உரை. சிவாக்.) [அ-எதிர்மறை. களர்-கலையுடையவர். கலை-உறுப்பு.]

அகளி—1. தாழி. 2. மிடா. 3. பாத்திரம். (உ-ம்.) "அப்பங்குமப்பங்கு மோரகளிபெய்ததற்பின்." (தைல-தைலவ. கூச.)

அகற்சி—1. அகலம், விசாலம். (உ-ம்.) "அன்ன மாபெருங் கயிலையி னகற்சியு நிவப்பும்" (உபதேசகாண். கயிலை. கச.) 2. பிரிவு. (உ-ம்.) "அயலோராயினுமகற்சிமேற்றே" (தொல். பொரு. ரு அ.) 3. துறவு. (உ-ம்.) 'அருளொடு புணர்ந்த வகற்சியானும்' (தொல். பொரு. 76.)

அகற்பகும்பகம்— மந்திரதியாநமில்லாத கும்பகம். (சி-வி. யோக - ச - ரு சுலோ.) [கூ; கவு; கூம்ஹகம்].

அகற்பசெபம்—விதியின்றிச்செய்யும் செபம். (தத். நி. போ. உகூஅ.) [அ-எதிர்மறை. கல்ப - விதி. ஜப - ஜபிக்கப்படுவது.]

அகற்பனை—கற்பனையில்லாதது, மநநினைவிற்சமையாதது. (உ-ம்.) "இன்பமுதிரநிறைந்த கற்பனைக்கே துன்னித்திகழ்தற்பதம் பற்றி" (ஞானவா. உற்பத்தி. கூ.) [கற்பனை-நினைவு.]

அகற்பம்—1. ஒரு பிராணயாமயோகம். அது: வாக்கினுலே மந்திரஞ்செபியாமலும், மநத்தினுலே சிவனைத் தியாநியாமலும் செய்யப்படுவது. (உ-ம்.) "அகற்பமவ்விரண்டுமின்றி யாக்கிடுமாயாமந்தான்" (சிவதரு. சிவஞாநயோ. சுகூ.) 2. கற்பம் அநுகற்பம் உபகற்பமென்னும் மூவகையுமல்லாதவிபூதி. (உ-ம்.) "இடியுண்டவிடத்திலுண்டான விபூதியும், மலையுச்சியினும் பூமியினும் விளைந்த விபூதியும் அகற்பமெனப்படும்" (சைவ. பொது. கஅகூ. உரை.) [கல்ப - நியாயவழி. சப்த.]

**அகற்பன்**— ஒப்பில்லாதவன். (உ-ம்.) "சொற்பாக் - கற்பவர்கணற்புலனினிற்புறு மகற்பா." (சேதுபு-சருவதீ-உஎ.) [அகல்ப.]

**அகற்பிதமரணம்**—விதியின்றி நிகழும் மரணம். (வி-ணி. உஉசு.) [கல்பிதம்-விதிக்கப்பட்டது. மரணம்-இறப்பு.]

**அகற்பியமாமிசம்**—அகலியமாமிசம். (சி. சி. பர. சௌத்-தம். உகூ. உரை.) [அ-எதிர்மறை. கல்ப்ய-விதியுடையது.]

**அகற்றல்—அகற்றுதல்**— அகலச்செய்தல். இஃது, "அறுவகையகற்றி" (வாதவூ. திருப். ருரு.) என்பதிற்போல நீக்குதற்பொருளிலும், "களிறுசென்று களனகற்றவும்" (புறநா. உசு.) என்பதிற்போல விசாலமாக்குதற்பொருளிலும், "மடங்கொன்றறிவகற்றுங்கல்வி" (நீதிநெ. ௩.) என்பதிற்போலப் பெருகச்செய்தற்பொருளிலும் வரும்.

**அகறல்**—1. அகலம். (சூ. நிகண். அ: கஉ.) 2. கடத்தல். (உ-ம்.) "அடர்மலர்க்காற்குங்கட்குமகறலாய்" (இரகு. மாலை. ௩ரு.) 3. நீங்குதல். (உ-ம்.) "அகறலினுற் பிறருடல்போற்றன்னுடலந்தனினுமுறுதிதருமபிமாந மின்மையேயாகி" (வேதா. சூ. சருகூ.)

**அகன்**—1. அகன்ற. (உ-ம்.) அகன்பிலவாயினர்" (கந்தபு. வச்சிர. உச.) 2. அகாசுரன். [இவன், பகன் பூதனை என்பவருக்குச் சகோதரன்; கஞ்சனுக்குச்சேனைத்தலைவன்.] 3. உள். (உ-ம்.) "அகனைந்திணையும்" (தொல். பொரு. ருச.) [அகம், அகனெனப் போலியாயிற்று.] 4. வினைமுதற்பொருளில்வரும் ஒருவிகுதி. (உ-ம்.) நாயகன். (வீர. தாது. ரு.)

**அகன்பணை**—அகன்ற மருதநிலம். (உ-ம்.) "ஆம்பலம்போதுளவோ வளிகாணும் மகன்பணைக்கே" (திருக்கோ. கக.)

**அகன்மகதாது**–செயப்படுபொருளில்லாத வினைப்பகுதி. (உ-ம்.) "நட" (பி. வி. ௩ரு. உரை.) [அகர்மகம்- செயப்படுபொருளில்லாதது. தாது-வினைப்பகுதி.]

**அகன்மகம்**—செயப்படுபொருள் குன்றிய வினை. (உ-ம்.) "செயப்படுபொருள்குன்றுவினை குன்றிய, வினைத்திறமிரண்டுஞ் சகன்மகமகன்மகம்" (பி. வி. ௩ரு. உரைச்சூத்திரம்.) [அ-எதிர்மறை. கர்மகம் - செயப்படுபொருளுடையது.]

**அகன்மகர்த்தரிப்பிரயோகம்**— செயப்படுபொருளில்லாத வினையை எழுவாயிற் பிரயோகித்தல். (உ-ம்.) "சாத்தன்வரும்" (பி. வி. உரை.) [அகர்மகம்-செயப்படுபொருளில்லாதது. கர்த்ருப்ரயோகம்-எழுவாயிற் பிரயோகிப்பது.]

**அகன்மணி**–1. அகன்றஇரத்திநம். (உ-ம்.) "அகன்மணி முன்றிலிற் றுயில்வார்" (கூர்மபு. அந்தகா. உக.) 2. தெய்வமணி.

**அகன்றவறிவு**—சர்வஞ்ஞத்துவமாகியபேரறிவு. (உ-ம்.) "ஆயவாணவமகன்றவறிவொடுதொழிலையார்க்கும்" (சி. சி. க. சக. உரை. ஞாந.)

**அகன்றிசைப்பு** — யாப்புமுறையினின்று அகன்றுகாட்டும் குற்றம் (யாப். வி. 95. பக். 403).

**அகன்றில்**—ஆணன்றில். (உ-ம்.) "உறைந்தனவகன்றிலுடனன்றிலுமிரொன்றி" (இராமா. கார்கா. எக.)

**அகர்ணம்**—செவிடு. [அகர்ண: அ-எதிர்மறை. கர்ணம்-காது.]

**அகர்ம்**—வேங்கைமரம் (வைத்தியபரி).

**அகனுதீ**—கொடிவேலி (வைத்தியபரி).

**அகஸ்தியன்**—அகத்தியன்.

**அகஸ்மாத்து**—காணப்பட்ட காரணமில்லாமல் (பௌட். பும்ஸ். கூச.) [அகஸ்மாத்: அ- எதிர்மறை. கஸ்மாத்-எதனுல். எதனுலுமின்றி என்றபடி.]

**அகாகம்**-ஆசௌசதிநம். (வாச.) [அகாஹ: அக-ஆசௌசம். அஹந்-நாள்.]

**அகாடி**—(இந்துஸ்.) 1. குதிரை முன்னங்கால் கட்டுங் கயிறு. 2. முன்.

**அகாண்டசாதம்**—அகாலத்திற் பிறந்தது. அகாண்டஜாத: அகாண்ட-அகாலம். ஜாதம்-பிறந்தது.

**அகாண்டபாதம்**—அகாலசம்பவம். [அகாண்டபாத: அகாண்ட-அகாலம். பாதம்-சம்பவித்தல்.]

அகாத்தியம்— 1. உண்ணத்தகாதது. [அவாத்ய: வாத்ய:- உண்ணத்தக்கது.] 2. பொல்லாங்கு. 3. வஞ்சனை.

அகாத்திரம்—அவசியம். கவனமின்மை.

அகாத்துமசை—பார்ப்பதி. [அகாத்மஜா: அகம்-மலை. ஆத்மஜா-புத்திரி.]

அகாதத்துவம்—மிக்க ஆழத்தன்மை. அகாதத்வம்: அகாத-ஆழம். த்வம்-தன்மை.

அகாதம்—1. நீந்துபுனல். (பிங். எஅ.) 2. பள்ளம். 3. பொந்து. 4. மிக்க ஆழம். (வாச.) (உ-ம்.) "உத்தரவாகினியாயும் அகாதமாயுமிருக்கிற கங்கைநதிக்கரையில்" (விசார. அஞ.) 5. வஞ்சகம். [அகாத: அ - எதிர்மறை. காத- நிலை, மேடு.]

அகாதன்—வஞ்சகன் [அகாத - ஆழம்.]

அகாதிகள்—அகாதிகன்மங்கள். (உ-ம்.) "தீர்ப்பதகாதிகள்" (திருநூற். அஅ.)

அகாதிதம்— உண்ணப்படாதது. [அவாதித: வாதிதம்-உண்ணப்பட்டது.]

அகாமம்—1. அகாமவினை. (உ-ம்.) "முற்றும் வினை தைவிகத்தான் மோகத்தானே யான்மூர்க்கரசர்சோரரிவர்முடுகுபயத்தாலும், அற்றுமுறையறிவழிந்துமகாமமெனவறிக"(சிவதரு. பரிகா. ௩.) 2. இச்சையின்மை. (வாச). [அகாம: காம- இச்சை.]

அகாமவினை—அபுத்திபூர்வமாகச் செய்யுஞ்செய்கை; அது: தைவிகத்தாலும், மோகத்தாலும், வியாதியாலும், சோரபயம் முதலியவற்றாலும், அறிவழிந்துசெய்யுஞ்செயல். (உ-ம்.) "இருகபதியகாமவினையினுக்குப்பரிகாரம்பகர்ந்திடுவாம்." (சிவதரு. பரிகா.உ.) [அகாமம்-இச்சையின்மை. வினை-தொழில்.]

அகாயம்—1. இராகு. 2. சரீரமில்லாதது. 3. பரப்பிரமம். [காயம் - சரீரம்.]

அகாயு—1. கத்தி. 2. காகம். 3. தீயவழியில் நடக்கிறவன். [அவாயுஸ் .]

அகாரணம்—1. காரணமின்மை. (உ-ம்.) "பொருதெல்லீருமகாரணத் தெதிர்த்தீர்" (காஞ்சிப். தக்கீ. 12.) 2. தற்செயல். 3. நிஷ்பிரயோஜனம். (சப்த) [காரணம்-ஏது]

அகாரணன்—1. கடவுள். 2. காரணமில்லாதவன். (காரணன்-காரணமுடையவன்.) (உ-ம்.) "நிராமயனகாரணன தெல்லை கயிலாயமலையே" (அருணகிரிப். அருந்தவ. கஅ.)

அகாரத்திரயவித்தை— அகர எழுத்தை முதலிலுடைய மூன்றாகிய ஆகருடணம், அதிருச்சியம், அஞ்சனம் என்னும் பதங்களாற்கருதப்பட்ட மந்திரவித்தைகள். ஆகருடணம்-தூரத்திலுள்ளதைச் சமீபத்தில் வருவித்தல். அதிருச்சியம்-கண்களுக்குப்புலப்படுவதைப் புலப்படாமற்செய்தல். அஞ்சனம்-மறைந்துகிடக்கும் பொருள்களை விளக்கிக்காட்டுதல். "அகாரமாதிமூன்றாகிய வாகருடணமே, புகரிலாவதிருச்சிய மஞ்சனம் பொருவில், வகரமாதி மூன்றாகிய வசியமே வாத, மிகலிலாவயத்தம்பமென்றின்னவைசெய்தும்" (திருவிளை. எல்லாம். கஎ.) அகாரம்-ஓரெழுத்து. அஃது அகரத்தின் விகாரமாகிய ஆகாரத்தையும் உள்ளடக்கிற்று. [த்ரய - மூன்று. வித்யா-மந்திரவித்தை.]

அகாரம்—1. அ என்னுமெழுத்து.(உ-ம்.) 'அகாரமுன்னுச்சார்ந்தவைம்பத்தோரெழுத்தின்சொரூபமாய்' (சூத. எக்கி. ௪: அ.) 2. ஒற்றெழுத்தின் சாரியைகளுளொன்று. (உ-ம்.) "லகார ளகார மாயிரண்டும் பிறக்கும்" (நன். எழுத். உக.) 3. செயலின்மை. (சப்த.) [காரம்-செயல்.] 4. வீடு. (பிங்) (சப்த.) [அகார: அக - மலை, மரம். ஜி-எழுதல், அடைதல்.]

அகாரவுப்பு—கல்லுப்பு (வைத்தியபரி)

அகாரி—1. இடி. 2. கருடன். [அகாரி: அக-பாம்பு. அரி - பகை]. 3. இந்திரன். [அக - மலை. அரி - பகைவன்]. 4. கடவுள். [அகம்-பாவம். அரி - பகைவன்.]

அகாரியம்—1. அப்பிரதானமான காரியம். [அ; கார்யம்.] 2. செய்யத்தகாத காரியம். (உ-ம்.) "நாவகாரியஞ்சொல்லிலாதவர்" திவ். பெரியாழ். 4. 4. 1. [அகார்ய.] 3. துர்க்கிரியை. (சப்த.) [கார்யம் - செய்யத்தக்கது.]

அகாருண்ணியம்— காருண்ணியமின்மை. (சி. சி. பர. நிகண்ட-மதம். ரு. உரை.) [காருண்ணியம் - கிருபை.]

அகாலம்—1. அவகாலம். 2. காலமல்லாதது. (உ-ம்.) "உடலைநோக்குறியகாலத்திறுன்னுடையுடலை." (ஞானவா. பிரகலா. ௬௧). 3. நியமமல்லாதகாலம். (உ-ம்.) இக்குவாகுவின் மரபோர் நாட்டுத் துன்றிடாவகாலந்தன்னிற் ருென்றிய மிருத்து" (இரகு.சம்புக. ௨௩.) [காலம்-சமயம்.]

அகாலமரணம்— நியமமல்லாதகாலத்திற் சம்பவிக்கும் மரணம்.

அகாலமிருந்து—அகாலமரணம். [அகாலம்-நியமமல்லாதகாலம். மிருத்யு-மரணம்.]

அகாளம்—கறுப்பின்மை. (சி. லி. கிரி. ௬௬.) காளம்-கறுப்பு.

அகி—1. ஆவணி. (இராசவைத்.) 2. இரும்பு. (பிங். ௩0௩௬.) 3. இராகு. 4. ஈயம். 5. ஒருவகைமரம். 6. சூரியன். 7. பாதகன். 8. பாம்பு. (உ-ம்.) "கடியகிப்பிணிதீர்ந்தபின்" (சேதுபு. இராமனரு. ௩0.) 9. மேகம். 10. வச்சிராயுதம். 11. வஞ்சகன். 12. வழிப்போக்கன். 13. விருத்திராசுரன். [3, 4, 6, 7, 8, 9, 11, 12, 13 அஹி.]

அகிகாந்தம்—காற்று. [அஹிகாந்த: அஹி-பாம்பு. காந்தம்-விரும்பப்பட்டது.]

அகிகை—1. இலவமரம். (வாச.) 2. திருவாதிரைநக்ஷத்திரம். (வாச.) [அஹிகா.]

அகிம்சகன்—பிராணிகளுக்குப் பீடைசெய்யாதவன். (வாச.) [அஹிம்ஸக: ஹிம்ஸக-பிராணிகளுக்குப் பீடைசெய்வோன்.]

அகிம்சாநீயாயதநலோகம்—(பௌட்.) பிரமலோகமிருபதனுள்ளே பத்தொன்பதாம் உலோகம். (மணிமேகலை. ௩.)

அகிஞ்சநன்—1.மிகவறியவன். [அ; கிஞ்சந-யாதொன்றும்.] 2. யாதொன்றுமில்லோன்.

அகிஞ்சன்—மிகவறியவன். [அகிஞ்சநன் என்னும் வடமொழியின் ஈறு தொக்கது.]

அகிம்சை—1.-கொல்லாமை. 2. வருத்தாமை. [அஹிம்ஸா: ஹிம்ஸா-கொலை, தீங்கு.]

அகிதம்—1. அயோக்கியமானது, தகாதது, உரியதல்லாதது. 2.உயிர்க்குறுதியென வேதாகமங்களில் விதித்தவற்றிற்கு மறுதலை செய்தல். (உ-ம்.) "அகிதமற்றது செய்யாமை" (சி. சி. ௨: ௬௩. சிவஞா.) 3. பகை. [அஹித: ஹிதம்-நன்மை.] 4. தீமை. 5. இடையூறு. (4, 5. லெக்ஸிகன்)

அகிதமிட்டிரன்—ஓரரக்கன். (சேதுபு. விராம. ௭௮. குறிப்பு.) [அஹிதம்ஷ்ட்ர: அஹி-பாம்பு. தம்ஷ்ட்ர-பல்லு.]

அகிதர்—பகைவர். [அஹித: அ-எதிர்மறை. ஹித-சிநேகம்.]

அகிதலம்—பாதாளம். (உ-ம்.) "அகிதல வரவினதணிமுடிமணியிடையணவின சில வாளி" (இரகு. யாகப். ௭௧. [அஹி-பாம்பு: ஸ்தலம்-இடம்.]

அகிதன்—பகைவன். (யாழ். அக.)

அகிதுண்டிகன்—1. பாம்பாட்டி. (சப்த.) 2. பாம்புபிடிப்போன். (சப்த.) [அஹிதுண்டிக: துண்டிக-துண்டத்திற்பிடித்து விளையாடுவோன். துண்ட-முகம். இக்கு-ஒரு வடமொழிவிகுதி.]

அகிப்பிரத்திநம்1.-இரவிலே நிகழும் மூன்றுமுகூர்த்தமாகிய உத்திரட்டாதி. 2. உத்திரட்டாதிநக்ஷத்திரம். (உ-ம்.) "அகிப்பிரத்திநதேவதை."

அகிப்பிரத்திநன்—1. ஓருருத்திரன். 2. சிவன். [அஹிர்புத்ந: அஹி-பாம்பு. புதி-கட்டுதல். நக்-ஒரு வடமொழிவிகுதி. பாம்புகளாற்கட்டுண்ட கழுத்துடையானென்றபடி.]

அகிபதி—1. ஆதிசேடன். 2. பெரும்பாம்பு. 3. வாசுகி. [அஹிபதி: பதி-தலைவன்.]

அகிபுக்கு—1. கருடன். (சப்த.) 2. கீரி. 3. மயில். (சப்த.) [அஹிபுஜ்: புஜ்-உண்பது.]

அகிபேநம்—1. அபின். 2. பாம்பின்விஷம். [அஹிபேந: அஹி-பாம்பு. பேநம்-நுரை.]

அகிமரால்—வெள்வேல்மரம் (வைத்தியபரி).

அகிர்—அயறு, தலைச்சுண்டு: [வழக்.]

அகிர்த்துருமவிஷம்—பாம்புமுதலிய சரப் பொருள்களிலும்; மீரமுதலிய அசரப்பொருள்களிலுமுள்ள விஷம். (சிவரட். ௩௨௭.) [ஸஹி- பாம்பு. த்ருமம் - மரம்.]

அகிர்ப்புத்திநி—1. இரவில் நிகழும் மூன்று முகூர்த்தமாகிய உத்திரட்டாதி. (விதான. குணகுண. ௭௩. உரை.) 2. உத்திரட்டாதி. (காலாமிருதம். ௩-ஆஞ் சுலோகம்.) [ஸஹிர்புத்நி.]

அகிரச்சுசாமியம்—பாம்புக்குங் கயிற்றுக்குமுள்ள ஒப்புமை. (பௌட். மாயா. ௨௧.) [ஸஹி; ரஜ்ஜு; ஸாம்யம். ரஜ்ஜு-கயிறு.ஸாம்யம்-ஒப்புமை.]

அகிரன்—1. சூரியன். 2. நெருப்பு. 3. புவர்லோகத்திலிருக்கும் பதினோருருத்திரரிலொருவன். (வி-ணி. ௨௪௨.) [ஸஹிர: ஸஹ- போதல். ஈர- ஒரு வடமொழிவிகுதி.]

அகிரிபு—1. இந்திரன். (வாச.) 2. கருடன். (வாச.) 3. கிருட்டிணன். (வாச.) 4. கீரி. (வாச.) 5. மயில். (வாச.) [ஸஹிரிபு. ஸஹி - விருத்திராசுரன், பாம்பு. ரிபு- பகை.]

அகிருத்தியம்—செய்யத்தகாத செயல்.

அகிருத—இருநூற்றிருபத்துநான்கு புவனங்களுளொன்று. (கந்தபு. கணங்கள். ௧௦. உரை.)

அகிருதகம்—செய்யப்படாதது. [க்ருதக- செய்யப்பட்டது.]

அகிருதஜ்ஞதை—நன்றிமறத்தல். [ஸக்ருதஜ்ஞதா: க்ருதஜ்ஞதா- நன்றியறிதல்]

அகிருதஜ்ஞன்—நன்றிமறந்தோன். (வாச.) [ஸக்ருதஜ்ஞ: க்ருதஜ்ஞ-நன்றியறிவோன்]

அகிருதம்—1. செய்யப்படாதது. 2. பாகஞ் செய்யப்படாத ஓமத்திரவியம். ["ஓமத்திரவியம்"பார்.] 3. முடிவுபெறாத கிரியை. [ஸக்ருத: க்ருதம்- செய்யப்பட்டது.]

அகிருதர்—கிரியை செய்யாதவர். (பௌட். பும்ஸ. ௨௭௫.)

அகில்—1. பஞ்சவிரையுள் ஒன்று (வைத்யதிபரி). 2. ஒரு மரம். (உ-ம்.) "அகிலுமாரமுமாரவங்கோங்குமே" (இராமா பால.வரைக். ௫௮.) இதீ, கள்ளியினிடையிலுண்டாவதென்பர். (உ-ம்.) "கள்ளிவயிற்றினகில்பிறக்கும்" (நான். ௪). 3. மலைவேம்பு (லெக்ஸிகன்).

அகிலம்—1. எல்லாம். (உ-ம்.) "அகிலதேவர்க்கும்"(பெரியபு. திருஞான. ௬௧.) 2. சருவலோகம். (உ-ம்.) "அகிலத்துள்ளதோர் கணங்களும்" (கந்த. பார்ப். ௬.) 3. பிரபஞ்சம். (உ-ம்.) "அழிந்தபின் னணுக்கடாமே யகிலமாய் வந்துநின்று, கழிந்திடும்" (சி. சி. க: ௧௧.) 4. பூமி. (உ-ம்.) "அகிலமெங்குநாடுவன்" (கந்தபு. சூரன்றண். ௨௬.) [ஸகில - ஸ - எதிர்மறை. கில - குறைவு.] 5. நீர். (பிங்)

அகிலநூபன்—1. எல்லாவடிவமு மானோன். 2. கடவுள். [ஸகில; ரூப - வடிவமுடையவன்.]

அகிலாங்கம்—சதுரவடிவம். (உ-ம்.)"அற்புதமாந்திரிபுண்டமதியின்பாதி யகிலாங்கந் தீபமிகுமழகார்வட்ட, முற்பொலியவுடலணியுமுறையாரன்றே முழுநீறுபூசவல்லமுனிவர்தாமே" (திருத்தொண்டர். ௬௭.) [ஸகில-பிருதிவி. ஸங்கம் - வடிவம்.]

அகிலாண்டம்—1. சகல அண்டம்.(உ-ம்.) "நீ பெற்றவகிலாண்டமுநிரைத்துவைத்தது கடுப்ப" (மீனாட்சியம்மைபிள். அம்மானை. ௫.) 2. பிருதிவியண்டம். [ஸகில - எல்லாம், பிருதிவி.]

அகிலாண்டவல்லி—உமாதேவி. [வல்லி - கொடிபோல்வாள். சகல அண்டங்களையும் பிறப்பித்த பெண் என்றபடி.]

அகிலேசர்—விசுவேசர். (உ-ம்.) "உடையாளகிலேசர்க்கு" (காசிக்க. ௨.) [ஸகில - விசுவம். ஈஶ - தலைவர்.]

அகிவைரி—1. கருடன். 2. மயில். [ஸஹி வைரி: ஸஹி - பாம்பு. வைரி - விரோதி.]

அகிற்குடம்—தூபக்குடம். 'அகிற்குடம்பரப்பி' (சீவகசிந். 2391)

அகிற்கூட்டு—ஒருவகை வாசனைக்கலவை. இது மயிருக்குப் பரிமளம் ஊட்டும்படி கொள்ளப்படுவது. (உ-ம்.) "உந்துசந் தனங்கற்பூர முடனெரி காசுசெந்தே -னந்தவேலங்க

ளென்ப வதிற்கூட்டோரைந்துந்தாமே" (சூ. நிகண். கஉ: ஙசு.)

அகீசன்—ஆதிசேடன். [அஹி - பாம்பு. ஈஶ - தலைவன்.]

அகீநகு—சூரியவமிசத்திலே ஸ்ரீராமனுக்குப்பின்னிருந்த ஓரரசன். (இரகு. குலமு. சு.) [அஹீநகு.]

அகீநம்—1. குறைவின்மை. அ - எதிர்மறை. ஹீநம் - குறைவு. 2. பலநாளாகச்செய்யப்படும் ஓர் யாகம். [அஹீந: அஹநு - நாள். ஈந - ஓர் வ - வி.]

அகீநன்—பெரியோன். [அஹீந: அ - எதிர்மறை. ஹீந - நீசன்.]

அகுசலம்—1. அதிட்டவீநம், துக்கம். (உ-ம்.) "அகுசலவேதனை" 2. சாமர்த்தியமின்மை. [அகுஶல: அ - எதிர்மறை. குஶல - சந்தோஷம், சாமர்த்தியம்.]

அகுசலவேதனை—துக்க அறிவு; இது பஞ்சகந்தங்களுள் ஒன்றாகிய வேதனையின் பகுதி மூன்றனுள் ஒன்று. (மணிமேகலை. ஙஉ.) [அகுஶல - துக்கம். வேதநா - அறிவு.]

அகுசுளாபு—அதிவிடயம் (வைத்தியபரி).

அகுட்டம்—மிளகு.

அகுடம்—கடுரோகிணி (மலை).

அகுணம்—1. குற்றம். 2. குணமின்மை, நற்குணமின்மை. [அகுணம்: அ; குணம்.]

அகுணன்—குணமில்லாதவன். [அகுண]

அகுணாத்துமா—அவ்வியத்தம். (பௌட். பும்ஸ். ஙகடு.) [அகுணாத்மா: அ - எதிர்மறை. குணாத்மா - குணவடிவுடையது.]

அகுணி—1. குணமில்லாதது. 2. குணமில்லாதவன். 3. மூடவன். [அகுணி: அ; குணம்; இ.]

அகுதம்—1. அழைக்கப்படாமை. 2. ஐவகை யாகத்துளொன்றாகிய தியாகம்; அது: மகமானது சதாசிவாதி விக்கிரகங்களுளொன்றை அன்பினுலே நினைந் தத்தியானத்திலே யிடைவிடாது கலந்துநிற்றல். 3. யாகஞ் செய்யப்படாமை. 4. வேதமோதல். (மநு. ஙःஎச.) [அஹுத: ஹுதம் - அழைக்கப்பட்டது, ஓமஞ்செய்யப்பட்டது.]

அகுதார்—தருமகர்த்தா.

அகுதி—அகதி. (உ-ம்.) "அகுதியிவடலையின்விதியாலுனும்" (திருப்பு. கசஉ. நன். பொதுவி. உக. உரை.)

அகுப்பியம்—1. பொன். 2. வெள்ளி. [அகுப்ய: குப்ய - செம்பு, பித்தளைமுதலிய இழிந்த லோகங்கள்.]

அகும்பை—கவிழ்தும்பை. (மலை.)

அகுரு—1. அகிலமரம். 2. இலகுவானது, கனமில்லாதது. 3. குருவில்லாதவன், குருவாகாதவன். [அகுரு: அ - எதிர்மறை. குரு கனம், ஆசிரியன்.]

அகுலி—நறுவிலிமரம். (மலை.)

அகுலீநன்— உயர்குலத்தோனல்லாதவன். [அ - எதிர்மறை. குலீந - உயர்குலத்தோன்.]

அகுவைங்கட்டி—அரையாப்பு. (வைத்தியபரி.)

அகுளிதநாதர்—நிஷேதகர்மசாத்திரங்கள் செய்த நவநாதசித்தர்களிலொருவர். (த. நி. போ. உடுக.)

அகுளுதி—வேப்பமரம். (வை. தீ.)

அகூடகந்தம்—பெருங்காயம். (வைத்தியபரி.) [அகூடகந்த: அகூட - மறைவின்மை. கந்த - வாசனை.]

அகை—1 - 3. அகையென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், பெயரெச்சத்தொகையும். 4. எரிதல். (உ-ம்.) "அகையுறுகழைகொன்றுண்ட" (கந்தபு. வள்ளி. கஙு.) [இது முதனிலைத்தொழிற்பெயர்.] 5. கூறுபாடு. (சிங். முத்தி. கசு. உரை.)

அகைத்தல்—1. அடித்தல். (பிங்க. உகஙஎ) 2. அறுத்தல். (உ-ம்.) "மயிருக்கொன்றாக வாங்கியகைத்தகைத்திடுவர்" (சிங். முத்தி. கசுஅ.) 3. எழுப்புதல். 4. ஓட்டுதல். (இராசவை.) 5. செலுத்துதல். (சூடா) 6. தழைத்தல், கிளைத்தல். (உ-ம்.) "குப்பைக்கீரைகொய்கண்ணகைத்த" (புறநா. கடுக.) 7. முறித்தல். (உ-ம்.) "உம்பலகைத்த வொண்

முறியாவும்" (பத்து.மலைபடு. ௪௨௯.) 8. வருத்தல். 9. உயர்த்துதல். (சூடா). 10. விட்டுவிட்டுச்செல்லுதல். (தொல். பொரு. 541. உரை)

அகைதல்—1. எரிதல். (உ-ம்.) "அகையெரியானாது" (கலி. ௧௩௯.) 2. ஒடிதல். (உ-ம்.) "அகைந்தவித்துணைமலர்" (பாரத. புட்ப. ௪௦.) 3. தளிர்த்தல். (உ-ம்.) "கொய்குழையகைகாஞ்சி"(கலி.௭௪.) 4. முறிதல். 5. வருந்தல். "அகையேலமர்தோழி" (சிங். கோ. ௧௧௩.) 6.எழுதல். (உ-ம்.) "வேங்கைகளெரியகைந்தனவலருட்கும்." (தணிகை. திருநா. ௪௧.) 7. செழித்தல். 'கயமகையவயனிறைக்கும்' (மதுரைக். 92). 8. தாமதித்தல். 'அகையாதெனதாவிதழைக்குமென' (சீவகசிங். 1379.)

அகைப்பு—1. அடித்தல். 2. அறுத்தல். 3. எழுப்புதல். 4. ஒடித்தல். 5. முறித்தல். 6. வருத்தல். 7. பிரயத்நத்தாலுண்டானது. 'அண்டத்திருமாலகைப்பு' (திவ். இயற். 4. 37). 8. மதிப்பு. 'அகைப்பில் மனிசரை' (திவ். இயற். 4. 38). 9. இடைவிட்டுச்செல்லுகை. 'அகைப்புவண்ணம்' (தொல். பொரு. 541).

அகைப்புவண்ணம்— இருபதுவண்ணங்களுள் ஒன்று; அது "வாராராயினும் வரினுமவர்நமக் - கியாராகியரோதோழீ" என்பதிற்போல அறுத்தறுத்துப் பயிலுஞ்சந்தமுடையது. (உ-ம்.) "அகைப்புவண்ண மறுத்தறுத்தொழுகும்" (தொல். பொரு. ௫௪௨.) [அகைப்பு - அறுத்தல். வண்ணம் - சந்தம். விட்டுவிட்டுச்செல்லுஞ் சந்தமுடையது என்றபடி.]

அகைமம்—குருவிச்சை. (வை. தீ.)

அகோ—ஒரு வடமொழியவ்வியயம்;இது: இகழ்ச்சி, துக்கம், இரக்கம், அழைப்பு, ஆச்சரியம், புகழ்ச்சி, பொருமை முதலியபொருள்களுளொன்றையுள்ளிட்ட ஒரு குறிப்புமொழி. (உ-ம்.) "மண்டலத்தின்மிசையொருவன் செய்த வித்தையகோவென்வும்" (ஆச்சரியம்.) (தாயு. மண்ட. ௧.) [அஹோ.]

அகோசரம்—1. அறியப்படாமை. (உ-ம்.) "காட்சிமுன்னம் பிரமாணங்களுக்கு மகோசரமதான - திருக்கில்பிரமம்" (சூத. எக்கி. பூ. ௧அ. ௬.) 2. புலன்களுக்குவிட்யமாகாமை. [அகோசர: அ - எதிர்மறை. கோசர - விடயம்.]

அகோடம்—கமுகமரம். [அகோட: அ - எதிர்மறை. கோட - வளைவுடையது.]

அகோதாரை—அதிகமாக மழைபொழிகை. [அஹோ - ஆச்சரியங்குறிக்கும் ஓரவ்வியயம். தாரா - நீரொழுக்கு.]

அகோபிலம்—சிங்கவேள்குன்றம் என்னும் திருப்பதி (உ-ம்.) "சொலகோபிலநரசிங்கம்" (திருச்செங். ௧அ: ௪௩.)

அகோரகலை—சிவபூசை செய்யும்போது சிவலிங்கத்தைச் சதாசிவனுகப்பாவித்து அவரதைந்துமுகத்திலுநிற்பனவாகக் கொள்ளப்படுங் கலைகளுள் அகோரமுகத்தில் நிற்குங் கலைகள்; அவை: தமம், மோகம், காயை, நிட்டை, மிருத்து, மாயை, உருத்திரபயம், சுவரம் என எட்டாமென்றும், அவற்றுக்குத் தானங்கள் ஹ்ருதயம்,கண்டம்,வலத்தோள், இடத்தோள், நாபி, வயிறு, முதுகு, மார்பு என எட்டாமென்றுஞ் சொல்வர். (அகோ. கிரி. ௨௪௩-௨௪௪.)

அகோரகைவல்லியப்பிரதம் — தணிகைமலை. (உ-ம்.) "வீட்டினையகோரனென்றுரைக்கு - மிறபுதவத்தோற் குய்த்தளித்திடலா லகோரகைவல்லியப்பிரதம்" (தணிகைப் புராண. ௬௦.)[அகோர-ஒரு தபோதனன். கைவல்யம் -மோக்ஷம். ப்ரதம் - கொடுப்பது.]

அகோரசிவாசாரியர் — பத்ததிக்காரர்பதினெண்மருள் ஒருவர்; இவர் வசித்த இடம் சிதம்பரம்.

அகோரதந்திரம்— உபாகமங்களுளொன்று. [அகோரதந்த்ர.]

அகோரப்பிரமம்—அகங்காரம், சக்ஷு, பாதம், ரூபம், அக்கினி யென்பவற்றிற் கதிட்டானதேவதையாகிய உருத்திரர். (கூர்மபு. பிர. தோ. ௬. உரை.)[அகோரப்ரஹ்மம்]

அகோரம் — 1. அகோரமுகம் (உ-ம்.) "விசயமுதலைந்தும் விகிர்தவகோரத்தி - லிசையவுதித்தே" (சைவச. பொது. ௩௩௩.)

2. அச்சம்விளைக்கத்தக்கது. 3. அச்சம்விளையாதது. 4. உக்கிரம். 5. கொடுஞ்செயல். (உ-ம்.) "அன்னதோர்காலையகோரவெங்காலன்" (திருநெல். சுவேத. அ௮.) 6. நரி. 7. பஞ்சமந்திரங்களிலொன்று; அது பஞ்சாபாசங்களையும் அழிப்பது. (பௌட். பதி. ௬௦) [அகோர: அ - எதிர்மறை, ஒப்புமை. கோர - அஞ்ஞாகம், பயங்கரமானது.]

அகோரமுகம் — சதாசிவனுடைய ஐந்து முகங்களுளொன்று; இது கர்த்திருசாதாக்கியமென்னும் தத்துவமும் ஈசுவரனென்னும் மூர்த்தியும் பொருந்தியுள்ளது. [அகோர; ௧௨வ.]

அகோரலிங்கம் — பஞ்சலிங்கங்களுளொன்று; (த. நி. போ. ௩௩௨.) [அகோர; லிங்.]

அகோரவுரை—அகோரமந்திரம். (உ-ம்.) "உரைத்தேயகோரவுரை" (சைவச.பொது. ௩௨௧.) [அகோரம்; உரை - மந்திரம்.]

அகோரன்—சிவன். (உ-ம்.) "அவமறுத்தெமைப்புரக்குமீசானனகோரன்சத்தியோசாதன்" (சூத. எக்கி. பூ. ௩௩. ௨.) [அகோர: அ-ஒப்புமை. கோர - பயங்கரம்.]

அகோராத்திரம்—1. அகோரம் அத்திரமென்னும் இரண்டுமந்திரங்கள். (உ-ம்.) "அருமைமகவின்சிரப்புறத்திலகோராத்திரத்தான்" (திருவானை. கோச்செங். ௭௪.) [அகோராஸ்த்ரம்.] 2. இரவும்பகலும்; அஃதொரு சூரியோதயந்தொடங்கி மற்றைநாட் சூரியோதயம்வரையுமுள்ள காலம். (உ-ம்.) "அக்கினி முப்பான்கொண்டது முகூர்த்த - முறுமது முப்பான்கொண்டது மனிதர்க்கோரகோராத்திரமாகும்"(சூத.சிவமா. அ: ௩.) [அஹோராத்ர:அஹஸ் -பகல்.ராத்ரி - இரவு.]

அகோரி—மோதிரக்கன்னி (லெக்ஸி.)

அகோரை—1. இரண்டரைநாழிகைக் காலம். [அஹோரா.] 2. புரட்டாசிமாசத்துக்கிருட்டிணபக்கத்துச் சதுர்த்தசி [அகோரா.]

அகௌரவம்—அவமரியாதை.

அங்கக்களரி—கோயிலில் தர்மம் செய்தவர்க்குச்செய்யும் மரியாதை (லெக்ஸி.)

அங்கக்காரன்—1. அழகுபடுத்திக்கொள்வோன். 2. வேஷதாரி (ஒழிவி. துறவு. 19).

அங்கக்கிரகம் — ஒருவகைச்சரீரவலி-கென்டைவாங்கல். [அங்கக்ரஹ; அங்கம் - சரீரம். க்ரஹ - பிடிப்பு.]

அங்கக்கிரியை—1. சரீரவுறுப்பினாற்செய்யுஞ்செயல். 2. சரீரத்தினால், நடநார்த்தமாகச்செய்யுஞ்செயல்; அச்செயல்: சரிகை, புரிகை, சமகலி, திரிகை, ஊர்த்துவகலிகை, பிருட்டகம், அர்த்தபிருட்டகம், சுபத்திகம், உல்லோலம், குர்த்தநம், வேட்டகம், உபவேட்டகம், தாநபதப்பிராயவிருத்தம், உட்சேபணம், அவட்சேபணம், நிகுஞ்சநம் எனப் பதினாறுவகைப்படும். (உ-ம்.) "ஈரெண்வகையவங்கக் கிரியையும்" (சிலப். அரங்கே. ௧௨. உரை. குறிப்பு.) [அங்கக்ரியா: அங்க-உறுப்பு, சரீரம். க்ரியா - தொழில்.]

அங்ககணிதம் — எண்கணிதம்; அஃது: எண்களின் சம்பந்தமுறையையும், அவற்றினாற்கணிக்கும்விதிகளையும் உணர்த்தும்நூல். [அங்க; கணிதம்.]

அங்ககம் — 1. அங்கத்தோடு சம்பந்தமானது.2.உறுப்பு.3.சரீரம்.[அங்கக: அங்க;க.]

அங்ககாரம் — 1. அங்கசேட்டை. 2. பரதத்திற் பொதுவிலக்கணங்களாகிய இருபது பேதங்களு ளொன்று. (உ-ம்.) "விண்டிடாத்தேசிசாரியே நியாயம் விருத்தியே பிரவிசாரம்பூ-மண்டலமுடனாகாசமண்டலமேமாசில்சுத்தக்கரணஞ்சேர்-கண்டவுற்புவிதகரணமேயங்ககாரமே யிரேசிதமென்னக்-கொண்டாலந்துபேதமுங்கற்றுக்கோதறப்பயின்றபினவற்றுள்" (திருவிளை. கான்மா. ௬.) [அங்கஹார: அங்க - சரீரம். ஹார - அசைத்தல்.]

அங்கஹீநம் — உறுப்புக்குறைவு. [அங்கஹீந: அங்க - உறுப்பு. ஹீநம் - குறைவு.]

அங்கஹீநமந்திரம்—இருதயம் முதலிய அங்கங்களைக்குறியாதுசொல்லும் மந்திரம். (த. நி. போ. ௨௬௭.) [அங்கஹீநமந்த்ர.]

அங்கஹீநன்—உறுப்புக்குறைந்தவன். [அங்க ஹீந: அங்க-உறுப்பு. ஹீந-குறைந்தவன்.]

அங்கச்சனி — ஒருவன் பிறக்கும்போதவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக்கணிக்கப்படுஞ் சனி. (உ-ம்.) "ஒன்றுநான்காறு நான் கோரைந்து மூன்றிரண்டுற்றிரண்டு - மென்றும் வாய்கைகாலிடக்கைவயிறுச்சி கண்ணிலிங்கம்-பொன்றுமரணம் வழிபோக்கிடர் திருப்போற்று நன்மை-நன்று தீதங்கச்சனிநின்றநாண்முதனுட்டிக்கொள்ளே" (விதாந. எச்ச. ருக.) [அங்க; ஶநி.]

அங்கச்செவ்வாய்—ஒருவன் பிறக்கும்போதவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படுஞ் செவ்வாய். (உ-ம்.) "அங்கச்செவ்வாய் பலன்" (விதாந. எச்ச. சஎ.) [அங்க - செவ்வாய்.]

அங்கச்சோமன்—ஒருவன் பிறக்கும்போதவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படுஞ் சந்திரன். (உ-ம்.) "முண்டந்தொடை கணைக்கால்பத முச்சி கண் வாய் செவிதோ-டொண்டையுரம் வயிறங்கச்சோமற்குத்தன்னோரைபற்றிக் - கண்டனரின்பநற்காலஞ்சுகநோய்கணிகை துன்ப - முண்டிடரின்பமொடோகையிலாபநோயுற்றிடுமே" (விதாந. எச்ச. சசு.) [அங்கஸோம: அங்க - உறுப்பு. ஸோம - சந்திரன்.]

அங்கசங்கம்—புணர்ச்சி. [அங்கஸங்க:அங்க-சரீரம். ஸங்க - புணர்ச்சி.] 2. பகட்டு.

அங்கசம்—1. இரத்தம். 2. உரோமம். 3. காமம். 4. நோய். [அங்கஜ:அங்க உடம்பு, மனம். ஜ - பிறந்தது.] 5. மலைகளிலொன்று. (உ-ம்.) "அங்கசமென்னுங்குன்றும்" (கூர்மபு. சம்பு. அஅ.)

அங்கசலனவாதரோகம்—ஒருவகை வாதரோகம்; அது: "வாதத்தைப் பிறப்பிக்கின்ற வஸ்துவையும், வாதகோபவஸ்துவையும் மிகவும் புசித்தலினால் சர்வாங்கத்திலும் பிறந்து வாதநரம்புத்துவாரங்களிலும் வியாபித்து, உடம்பெங்கும் பரவி வேதனையைச்செய்யும். அப்போது ஊர்த்துவாங்கத்திலாவது, அதோங்கத்திலாவது, நடுக்கல் உண்டாகும்" (சீவரட். எசு.) [அங்கம் - தேகம். சலநம் - அசைதல்.]

அங்கசவேள்—மன்மதன். (உ-ம்.) "அங்கசவேண்முரசென்னவதிர்ந்த" (பிரபுலி.கைலாச. உகூ.) [அங்கஜ; வேள்.]

அங்கசன்—1. புத்திரன். 2. மன்மதன். "அங்கசன்றென்றற்றேரிலாயினன்" (நல். பார. வந. கoரு.) [அங்கஜ: அங்க - உடம்பு, மனம். ஜ - பிறந்தவன்.]

அங்கசா — சோதிட வுறுப்புக்களிலொன்று. [அங்க - ஜ்யா.]

அங்கசாதனம்—அடையாளம் (லெக்ஸிகன்).

அங்கசாதனம்பிடித்தல்— துப்புக்கண்டுபிடித்தல் (லெக்ஸிகன்.)

அங்கசாரி—சிவன். [அங்கஜாரி: அங்கஜ - மன்மதன். அரி-பகைவன்.]

அங்கசாலைக்காரன்—ஊரதிபதியின் கட்டளைப்படி கிராமத்தாரைக் கூடும்படிசெய்வதற்கான ஆயத்தங்களைப்பண்ணுகிறவன்.

அங்கசிவயோகம் — அட்டாங்கசிவயோகம். (சி. சி. அ: உக. உரை. சிவாக்.)

அங்கசேட்டை—1. உடம்பினதுசலனம். 2. கை கால்களை வறிதேயாட்டுகை. (திருவேங். சத. 63). [அங்கம்-உடம்பு. சேஷ்டா - அசைதல்.]

அங்கசை—மகள். [அங்கஜா: அங்க-உடம்பு. ஜா-பிறந்தவள்.]

அங்கண்—அவ்விடம். (உ-ம்.) "அங்கணுற்றில" (கந்தபு. சூரன்றண்ட. உகூ.)

அங்கணபாஷாணம் — மிருதபாஷாணம். (மூ. அ).

அங்கணம்—1. இரண்டு தூண்களுக்கிடையிலுள்ள இடம். 2. உள்ளறை. 3. கடுமரம். (வைத்தியபரி.) 4. சலதாரை. (உ-ம்.) "ஊரங்கணநீருரவுநீர்ச்சேர்ந்தக்கால்" (நாலடி. நல்லின. ரு.) 5. சேறு. (உ-ம்.) "அங்கணம் படர்வோரென்னவகமெலிவுற்றேன்" (கந்தபு. வீரவாகுசய. கஅ.) 6. பத்துமுழத்தளவு. 7. பரப்பு. (உ-ம்.) "ககநாங்கணம்" 8. பொரிகாரம். (வைத்தியபரி.) 9. மதகு. 10. முற்றம். (உ-ம்.) "அங்கணத்துளுக்கவமிழ்தற்றால்" (வள். எ௨o.) 11. வெங்காரம்.

12. இடம், நிலம். (உ-ம்.) 'மூழுமாணிக்கத் தூண்-மன்னிஞ்சிறுமன்றெடுமானுங்கணமுதலேழ்நிலத்துப் - பொன்னின்சிறுலயமாயிற்றன்றே வெங்கள்புங்கவற்கே' (திருநூற். கஅ.) 13. கட்டடப்பிரிவு. (லெக்ஸி). [ஸஂஸ்க்ரு.]

அங்கணர்—சிவன். (உ-ம்.) "வீரட்டத்தமர்ந்தருளுமங்கணரும்" (பெரியபு. தடுத்தாட். அஞ.) [அம் - அழகு. கணர் - கண்ணுடையவர். அருட்கண்ணரென்றபடி.]

அங்கணன்—1. அருகன். 2. சிவன். (உ-ம்.) "அங்கணனேயருளாய்" (தேவாரம் திருமுது. ச. சுந்தர.) 3. மிருதபாஷாணம் (வைத்தியபரி). 4. விட்டுணு.

அங்கணாளர்—சிவன். (உ-ம்.) "அங்கணாளர்தமபிமுகத்தினில்" (பெரியபு. திருஞாந. கoஅ௩.)

அங்கணாளன்—கண்ணோட்டமுடையவன்: 'அறனறிந்தொழுகு மங்கணாளனை' (கலித் 144. 70).

அங்கணி— 1. கற்றாழை. 2. காளி. 3. பார்ப்பதி.

அங்கத்தவர்—சபைக்குறுப்பானவர் (லெக்ஸி).

அங்கத்தி—உதாக்கினி; அது: சமாக்கினி, விஷமாக்கினி, தீக்ஷணாக்கினி, மந்தாக்கினியென நான்குவகைப்படும். (உ-ம்.) "சேர்த்தங்கத்தீ நான்கிலா தியந்தத்தீமுறையேயெரி" (தைல. அநுபங். சுச.)

அங்கத்தை—அவ்விடத்திருக்கும் பெரியவர். இது அங்கத்தி எனவும் வழங்கும். (உ-ம்.) "அங்கத்தைக்கெல்லாந்தெரியும்" (வழக்.)

அங்கதச்செய்யுள்—வசைக்கவி. (உ-ம்.) "நெடுவெண்பாட்டே குறுவெண்பாட்டே, கைக்கிளைபரிபாட்டங்கதச்செய்யுளோ, டொத்தவையெல்லாம்வெண்பா யாப்பின" (தொல். பொரு. சஙo.)

அங்கதப்பாட்டு-அங்கதச்செய்யுள். (உ-ம்.) "அங்கதப்பாட்டவற் றளவோடொக்கும்" (தொல். பொரு. சஎக.)

அங்கதம்— 1. சந்திரகலை பதினாறிலொன்று. (வி-ணி. உசக.) 2. தோளணி - வாகுவலயம். (உ-ம்.) "மற்றடம்புயவரைமிசை வரம்பிலாவிலைகள் பெற்றவங்கதம்" (திருவிளை. மாணிக். ௧உ.) [அங்கத.] 3. பாம்பு. (உ-ம்.) "அங்கதக்குழாமங்கதுபுரிந்தன" (சேதுபு. காசிப. சஉ.) 4. பொய். 5. மார்பு. 6. யானையுணவு. 7. வசை (தொல். பொருள். சஙசு). 8. வசைக்கவி; அது: செம்பொருளங்கதமென்றும், வசைப்பொருளினைக் கரந்து சொல்வதாகிய பழிகரப்பங்கத மென்றும் இரண்டுவகைப்படும். (உ-ம்.) "ஆற்ற நன்னெடுங் கவிஞரோராங்கதமுரைப்ப" (இராமா. முதற். உசஅ.) "அங்கதந்தானேயரிறபத்தெரியிற் - செம்பொருள் கரந்த தெனவிரு வகைத்தே" (தொல். பொரு. சஙசு.)

அங்கதர்—வசைச்செய்யுள் சொல்வோர். (உ-ம்.) "புலவோர்களைப் பழிக்கும் பொல்லாவங்கதர்க்கெளியேனலேன்" (தேவார. ஆலவா. கo. சம்.)

அங்கதன் — 1. இலக்குமணனுடைய மகன். (இரகு. அவதா. சங.) [அங்கத.] 2. கிட்கிந்தையிலேயிருந்த குரக்கரசனாகிய வாலியின் மகன்- (இராமா. விடை. கஅ.)

அங்கதாரி—1. சிவன். 2. சீவன். 3. தேகம். [ஸஂஸ்க்ரு - எலும்பு, உடம்பு. தாரி - தரிப்பவன், தரிப்பது.]

அங்கதாளம்— பரதசாஸ்திரத்திற்சொல்லப்பட்ட தாளப்பிரமாணங்கள் பத்தினுள் ஒன்று; அது: அநுதுரிதம், துரிதம், இலகு, குரு, புலுதம், காகபதம் என ஆறுவகைப்படும்.

அங்கதி—1. கொடை. 2. தியாகம். 3. நெருப்பு. 4. நோய். (சப்த.) [ஸஂஹதி] 5. பிரமா. 6. யாகாக்கினிவளர்க்கும் பிராமணன். 7. வாகனம். 8. வாயு. 9. இருட்டிணன். [5, 6, 7, 8 ஸஂஸ்க்ருதி.]

அங்கதை— 1. சதாசிவனுடைய பஞ்சமுகங்களுளொன்றாகிய ஈசானமுகத்தினிற்கும் கலைகளுள் ஒன்று. (த. நி. போ. ௩௦க.) 2. தென்றிசையானையின் பெண்யானை. [ஸஂஸ்க்ருஷா.]

அங்கநட்சத்திரம்—ஒருவன்பிறக்கும்போதவனுடைய உறுப்பினிற்பதாகக் கணிக்கப்படும் நட்சத்திரம்.

அங்கநம்—1. அசைதல், போதல். 2. அரசர்மனையின்முற்றம். 3. முற்றம். [ஸஂஸ்க்ருத]

அங்கநியாசம்— அநுட்டானக்கிரியைகளுள் ஒன்று; அது: இருதயம் முதலிய அங்கங்

களை மந்திரத்தோடு கையாற்றொடுதல். (உ-ம்.) "அங்கநியாசஞ்செய்க" (சூத. எக்கி. ௫: கடு.) [ஸஂஜ ந்யாஸ: ஸஂஜ - உறுப்பு. ந்யாஸ - வைத்தல்.]

அங்கநூல்—1. வேதாங்கநூல். (உ-ம்.) 'மந்திரஞ்சிட்சை சோதிடாதி மற்றங்கநூல்' (தாயு. சிதம்பர. உ.) 2. அங்காகமம். 'அங்கநூலாதியாவும்' (யசோதர. 1. 51).

அங்கநை—1. பெண். (உ-ம்.) "அங்கநை கடவாகடஞ்செய் கச்சிவாணன்" (கம்பரந். ௨௯.) 2. கந்நிராசி. 3. வடதிசையானையின் பெண்யானை. -[ஸஂஜநா.]

அங்கப்பிரதக்கிணம்—சரீரத்தாலுருண்டு வலம்வருதல். (உ-ம்.) "வீதியிலங்கப்பிரதக்கிணம் புரிந்தோர் விமலனோடளவளாய்" (சீகாழிப்பு. தல. கச.) [ஸஂஜ - உடம்பு. ப்ரதக்ஷிண - வலம்வரல்.]

அங்கப்பிராயச்சித்தம்— தேகவியோகத்தைக்குறித்த புலம்பற்காலத்தில் வரலாய ஆசௌசம் நிவர்த்தியாதற்பொருட்டுத் தேக சுத்திபண்ணிச் செய்யும் பிராயச்சித்தம். [ஸஂஜப்ராயஸ்சித்த: ப்ராயஸ்சித்த-நிவிர்த்தி]

அங்கபங்கம்—1. சரீரவுறுப்பின் சேதம். (சாதகசிந். ௧௨௯௨.) 2. உடம்பினுறுப்புக்களின் சோர்வு. [ஸஂஜஹஂஜ: ஹஂஜ - பின்னம்.]

அங்கபடி—குதிரையங்கவடி (வழக்).

அங்கபாலி— 1. கட்டித்தழுவுதல். 2. வளர்த்ததாய். [ஸஂஜவாலி: வாலி - காப்பது, காப்பவள்.]

அங்கபாலிகை—கட்டித்தழுவுதல். [ஸஂஜ வாலிகா.]

அங்கபுதன்—ஒருவன் பிறக்கும்போதவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக்கணிக்கப்படும் புதனென்னுங் கிரகம். (உ-ம்.) "அங்கபுதன்பலன்" (விதாந. எச்ச. சஅ.) [ஸஂஜ; வுய.]

அங்கபூ—மகன். [ஸஂஜஹூ: ஸஂஜ - சரீரம். ஹூ - பிறந்தவன்.]

அங்கம்—1. அடையாளம். 2. அபராதம். 3. அரையின்மேலுள்ள உடம்பின்பாகம். 4. அழகு 5. உறுப்பு. (பிங்.) 6. உடம்பு. (உ-ம்.) "என்பங்கம்பங்கம்பிகையுறச்சேர்த்தவன்" (கம்பரந். உ.) 7. உபகரணம். 8. உபாயம். 9. எலும்பு. (உ-ம்.) "தொடுத்தணிந்ததுமம் புதரங்கமே" (மதுரைக். உ௬.) 10. எலும்புக்கோவை. 11. ஒரு தேசம். (கம்பராமா. தாடகை 2.) 12. ஒரு பாவை. (இலக்கணவி. பெயரி. க௬. உரை.) 13. ஓர் நடநவிளையாட்டு. 14. கட்டில். (உ-ம்.) மண்டணையுங்க மீதே" (திருப்புக. க௦அ.) 15. களங்கம். 16 கொன்றை (வைத்தியபரி). 17. கோளகபாஷாணம் (மூ. அ). 18. சமீபம். 19. சாயல். 20. சைநாகமமூன்றனுளொன்று; அது: ஆசாராங்கம், சூத்திரகிருதாங்கம், ஸ்தாநாங்கம், சமவாயாங்கம், வியாக்கியாப்பிரஞ்ஞப்பத்யாங்கம், ஞாத்ருகதாங்கம், உபாஸகாத்தியயநாங்கம், அந்தக்கிருத்தசாங்கம், அநுத்தரோபபிரதிகதசாங்கம், பிரச்நவியாகரணங்கம், விபாகசூத்திராங்கம், திருஷ்டிவாதாங்கம் எனப் பன்னிரு பகுப்புடையது. (சிலப். நாடு. க௮எ. குறிப்பு.) 21. இடம் 'வானங்கத்தவர்க்கு' (தேவா. 818. 1.). 22. தாளப்பிரமாணம் பத்தினொன்று. (பரத. தாள. 35.). 23. நூலினுறுப்பு. (உ-ம்.) "மூன்றுமங்கம்" (சிவப். கட்.) 24. பரதவுறுப்புக்களுளொன்று; அது: கீதாங்கம், நிருத்தாங்கம், உபயாங்கம் என மூன்றுவகைப்படும். கீதாங்கம்—கீதத்துக்கு வாசிப்பது. நிருத்தாங்கம்—நிருத்தத்துக்கு வாசிப்பது. உபயாங்கம்- இரண்டிற்கும் வாசிப்பது. (திருவிளை. கான்மா. அ. உரை.) 25. பாகுபாடு. 26. பிரதாநம், பிரதாநமாய்வேண்டியது. [இக்கருத்துப்பற்றி யரசனுக் கரசியனடாத்தற்கண் படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆகிய ஆறும் ஆறங்கங்களென்று சொல்லப்பட்டன.] (வள். இறைமா. க.) 27. மரம். 28. கீற்று. 29. வேதாங்கம். (உ-ம்.) "அளவில்பலகலையங்கமாரணங்கள்" (சிவப்பிர. மங்கல. ௪.) மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்னு மாறனையுமே வேதாங்கமென்ப. (திருவிளை. நகர. அறு. குறிப்பு.) 30. வைத்தியசாத்திரம். (உ-ம்.) "அரத்தமாதிவகைகாய்ச்சு முளவையங்கங்கூறிய வாறோர்ந்து" (தைல. பாயி. உஎ.) 31. சீவன்.

'அங்கலிங்கவறிஞர்' (சித். சிகா. சீலசம்பா. 7). 32. போர். 'தாபதர்தம்மோடெம்மோ டங்கம்வந்துற்றதாக' (கம்பரா. கும்பக. கூ). 33. ரூபகவகை. (சிலப். பக். 84). 34. அறமாத்திரம் பொருளாகவரும் நாடகம். (சிலப். 3. 31. உரை). 35. நாடகநூலின் உறுப்பு. [1, 2, 4, 13, 15, 18, 22, 23, 30 சஂஜ்.] [3, 5, 6, 7, 8, 9, 10, 11, 12, 14, 19, 20, 21, 24, 25, 26, 27, 28, 29 சஂம்ஂ.]

அங்கம்பயந்தோன்—அருகக்கடவுள். (உ-ம்.) "அங்கம்பயந்தோனருகனருண்முனி" (சிலப். நாடு. கஎ.) [அங்கம் - ஓராகமம். பயந்தோன் - செய்தவன்.]

அங்கமணி—சீதனம். "இதுக்கு அங்கமணிசெய்யலாவதே" (திவ். திருமாலை. 37. வ்யா. 121.)

அங்கமந்திரம் — இருதயமுதலியஅங்கங்களைத்தொட்டுச்செபிக்கப்படும் மந்திரம். [சஂஜ்; ஜீ.]

அங்கமாலை — 1. எலும்புமாலை. (உ-ம்.) "அங்கமாலையுஞ் சூடுமையாறரே" (தேவாரம். ஐயாறு. குறுக். எ. திருநா.)[மாலா-கோவை.] 2. பிரபந்தவகைகளுளொன்று; அது: ஆண் பெண் என்னும் இருபாலார்க்குஞ்சொல்லப்பட்ட அங்கங்களை வெண்பாவாலாதல் வெளிவிருத்தத்தாலாதல் அலங்கரித்தந்தாதியாகப் பாடுவது. (உ-ம்.) "மிக்கவுறுப்பை வெண்பாவிருத்தந் - தொக்கவொரு முறையாற் றொடர்வுறப்பாடுத - லங்கமாலையாமெனப்பகர்வர்"(இலக்கணவி. அகூ.)[மாலா-வரிசை.]

அங்கமைந்து—வாரம், திதி, நக்ஷத்திரம், யோகம், கரணம் ஆகிய பஞ்சாங்கம்.(உ-ம்.) "அங்கமைந்துடனவுணர்கண் மன்னன்முன்னடந்தான்" (கந்தபு. சூரன்றண். ௩௩.)

அங்கயற்கண்ணி — மதுரையிற் கோயில் கொண்ட மீனாட்சியம்மை. (பெரியபு. திருஞான. அசுக.)

அங்கயோகம்—1. ஒரு யோகம்; அது: உதயம், கேந்திரம், மூலத்திரிகோணம், உச்சம் என்னும் இவ்விடங்களுள் ஒன்றில் வியாழனிற்பது. (உ-ம்.) "வருமுதயங்கேந்திர முச்ச மூலத்திரிகோண மந்திரி நின்றாலங்கயோகம்" (சாதகசிந். உ௦கச.) 2. இயமாதியங்கங்களாற் சாதிக்கப்படும் யோகம். (உ-ம்.) "அட்டாங்கயோகம்" (சி. சி. அ: உக.)

அங்கர்—1. அங்கதேசத்தார். (திருவிளை. திரும. எச.) 2. அங்கமுடையவர்.

அங்கர்கோமான்—கன்னன். (உ-ம்.) "அங்கர்கோமான் பொருவரு வெற்றியென்பாற் புக்கதென்றுரைப்ப" (நல். பார. திருமுடி. உஉ.) [அங்கர்-அங்கதேசத்தார். கோமான்-அரசன்.]

அங்கர்பிரான்—அங்கர்கோமான். (உ-ம்.) "அங்கர்பிரானை வருதிநியின்பதி" (பாரத. பதிஞ. உ.) [பிரான்-தலைவன்.]

அங்கர்யாரி—நங்கூரந்தூக்கியெடுக்குங்கப்பிக்கயிறு.

அங்கரக்கா—தேகத்துக்குக் காப்பாக அணியுஞ் சட்டை. (விசாரசா. ௩௦க.) [சஂம்ஂ ரக்ஷா: சஂம்ஂ - உடம்பு. ரக்ஷா-காப்பது.]

அங்கராங்கம் — எல்லாவிதமும். [இது, "வைபவம்" "வைபோகம்" என்பவற்றோடு சேர்ந்து, "அங்கராங்கவைபவம்" "அங்கராங்கவைபோகம்" என்றாய்ச் சகல அநுபவங்களும் என்று பொருள்படும்.]

அங்கராட்சகர்—மெய்காப்பாளர்.

அங்கராட்சா—அங்கரக்கா.

அங்கராட்சிணி—1. போர்க்கவசம். 2.போர்வைச்சீலை.

அங்கராமாதி—கௌரிபாஷாணமென்னும் பிறவிப்பாஷாணம் (வைத்தியபரி).

அங்கராவல்லி—குறிஞ்சா. ["அங்காரவல்லி"என்பதிலே "கார" என்பது குறுகிற்று.]

அங்கராகம்—உடம்பிற்பூசப்படும் பரிமளதிரவியம். 'அங்கராகமணியாரமார்ப' (பாரத. மணி. 109). [ராகஂ - நிறஞ்செய்வது.]

அங்கராசன்—1. அங்கதேசத்தரசன். 2. குந்தியின் மூத்தமகனாகிய கன்னன்.

அங்கராயன்—1. அங்கதேசத்தரசன் 2. குந்தியின் மூத்தமகனாகிய கன்னன். (உ-ம்.) "விசயனுடனங்கராயன்" (பாரத. பதினெ. கஅக.)

அங்கருகம்—உடம்பிலுள்ள ரோமம் (வைத்தியபரி). [சஂம்ஂருஹம்: சஂம்ஂ - உடம்பு. ருஹம் - முளைப்பது.]

அங்கலக்கணம்—1. சரீர அழகு. 2. சாமுத்திரிகாலக்கணம்.

அங்கலாய் — அங்கலாயென்னுமேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், பெயரெச்சத் தொகையுமாம்.

அங்கலாய்த்தல்—1. இச்சித்தல். 2. துக்கித்தல். 3. பொறாமைகொள்ளுதல் (லெக்ஸி).

அங்கலாய்ப்பு—1. துக்கம். 2. பேராசை. (உ-ம்.) "இன்னதினுலே யிவளங்கலாய்ப்புற்றுளென்றறிவதே மிகுந்தகல்வி" (சி.சி.பரப. லோகா. ம. உ௦. ஞானப்பி.)

அங்கவடி — வாகனங்களாகக் கொள்ளப்படும் குதிரைமுதலிய மிருகங்களிற் பந்திக்கும் அணி. [வடீ - பந்தனம்.]

அங்கவத்திரம்—மேலாடை. (வழக்).

அங்கவம்—பழத்தின் வற்றல். [அங்கவம்; அங்க - உறுப்பு. வம் - சுருங்கியது.]

அங்கவன்—மிருதபாஷாணம். (வைத்திய பரி.)

அங்கவிட்சேபம் — அபிநயம். [அங்கவிக்ஷேப: விக்ஷேப - அசைத்தல்.]

அங்கவித்தியை—1. கணிதசாத்திரம். 2. சரீரத்திலுள்ள அங்கக்குறிகளினல் ஒருவனுடைய நன்மைதீமைகளையறிவிக்குஞ் சாத்திரம். 3. வேதத்துக்கங்கமாகிய சாத்திரம்.

அங்கவியல் — அரசியல் நடத்துதலிலேயொன்றற்கொன்று துணையாயுள்ள படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்னும் ஆறங்கங்களின் இயல்பு. (வள். சுசு - ம் அதிகாரத்தின் முகம்.)

அங்கவியாழன்—ஒருவன் பிறக்கும்போதவனுடைய உறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படும் வியாழனென்னுங் கிரகம். (உ-ம்.) "அங்கவியாழன்பலன்" (விதான. எச்ச. சக. கவிமுகம்.)

அங்கவீனன்—1. அங்கீனன், குரூபி. 2. உறுப்புக்குறைந்தவன்.

அங்கவெள்ளி — ஒருவன் பிறக்கும்போதவனுடையவுறுப்பில் நிற்பதாகக்கணிக்கப்படும்வெள்ளியென்னுங்கிரகம்(உ-ம்.)"அங்கவெள்ளிபலன்" (விதான. எச்ச. ௫௦. கவிமுகம்.)

அங்கன்—1. சுவாயம்புமநுவின்சந்ததியில் தோன்றிய ஊருவென்பவனுடைய பத்துப் புத்திரருள் ஒருவன். (கூர்மபு. தக். சபி. ௫.) 2. யயாதியின் நான்காம்புத்திரனுகிய அணுவமிசத்துப் பலிபுத்திரன். 3. புதல்வன் (திவ். இயற். 3. 65.)

அங்கனம்—கடுக்காய். (மலை).

அங்கனி—கற்றாழை (மலை).

அங்கனை—பெண் (திவா).

அங்கா—1 – 2. அங்காவென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும். 3. வாய்திறத்தல். (உ-ம்.) "ஆய்தக்கிடந்தலையங்காமுயற்சி" (நன். எழுத். ௩உ.)

அங்காகமம்—1. ஆருகத ஆகமங்கள்மூன்றனுள் ஒன்று. (சிலப். நாடு. கஅஎ. உரை.) 2. உபாகமத்துளொன்று.

அங்காங்கம்—உபாங்கம். [அங்காங்க.]

அங்காங்கிபாவசங்கராலங்காரம்— உறுப்புறுப்பிக்கலவையணி. (குவல. கஎ.) [அங்காங்கிபாவஸங்கர: ஸங்கர - கலப்பு.]

அங்காங்கிபாவம்—1. அவயவ அவயவிகளது சம்பந்தம். (உ-ம்.) "அருவினிலுருவந் தோன்றியங்காங்கிபாவமாகி" (சி. சி. க: உஎ. உரை. சிவஞா.) 2. உபகாரிய உபகாரக சம்பந்தம். 3. கௌணப்பொருளுக்கும் முக்கியப்பொருளுக்குமுண்டான சம்பந்தம். 4. தேகமும் தேகியும் போலப் பிரிவின்றி நிற்குந்தன்மை. (சி. சி. க: உஎ. உரை. நிரம்ப.) [அங்காங்கிபாவ: அங்க; அங்கீ; பாவ.]

அங்காங்கிலக்கணை—இலக்கணைவகைகளுளொன்று; அது: அங்கத்தின்பெயர் அங்கியை உணர்த்திநிற்பது. (சி. சி. ௬: உஅ. உரை. சிவாக்.) [அங்க; அங்கி; லக்ஷணா.]

அங்காடி—1. கடைவீதி. (உ-ம்.) "நடுக்கின்றி நிலைஇய நாளங்காடியில்" (சிலப். இந். தி. சுஈ.). 2. கடை (சிலப். 14. 179.) 3. சந்தை. (உ-ம்.) "நாளங்காடி நனந்தலைக்கம்பலை" (பத்துப். மதுரை. சஈ௦.) [அங்கடி - ஒரு தெலுங்குச்சொல்.]

அங்காடிக்கூலி—ஒருவகைவரி (லெக்ஸி).

அங்காடிப்பாட்டம் — கடைகட்குரியவரி. (லெக்ஸி).

அங்காத்தல் — வாய்திறத்தல். (உ-ம்.) "அராவங்காந்துண்டபோல்வ" (திருவிளை. நகர. உக.)

அங்காதித்தன்—ஒருவன் பிறக்கும்போது அவனுடைய தேகவுறுப்பினிற்பதாகக் கணிக்கப்படும் ஆதித்தன். (விதான. எச்ச. சடு. கவி முகம்.) [ஸம்ஸ்க்ருத லிபி]

அங்காதிபாதம்—1. உடற்கூறுகளை விளக்கும் ஒரு வைத்தியநூல். 2. முழுவுடம்பு. [அங்க - சிர முதலிய பிரதானவுறுப்பு. ஆதி - முதல். பாத - கால்.]

அங்காப்பு—வாய்திறத்தல். (உ-ம்.) "ஐயங்காப்போடண்பன்முதனு" (நன். எழுத்தி. உஉ. [அங்கா; பு-ஒருதொழிற்பெயர்விகுதி.]

அங்காரகம்—1. கரி. 2. சிறுநெருப்புப் பொறி. 3. தழற்கரி. 4. பிருங்கராசமென்னு மொரு படர்கொடி. 5. மஞ்சளாதியவற்றி லிருந்து வடிக்கு மொருதைலம் [அங்காரக]

அங்காரகமணி—பவளம். [அங்காரகமணி: அங்காரக - சிவப்பு. மணி - இரத்தினம்.]

அங்காரகன்—1. செவ்வாயென்னுங் கிரகம். "இராசிகடம்மினிலங்காரகனிற்பினும்" (கம்பரா. சு.) 2. நெருப்பு. (சூ. நிகண். க: சுசு.) 3. வடவாக்கினி. (இராசவைத்.) 4. செந்நீர்முத்து (சிலப். 14. 195). அங்காரக: அங்கார - சிவப்பு. க - ஒரு வ - வி.]

அங்காரகை—ஓரரக்கி. (சேதுபு. கவிதீர். கூ.)

அங்காரசையாப்பிரமணம்—ஒரு நிரயம். (உ-ம்.) "வான்மலியங்காரசையாப்பிரமண மா நிரயமதில்வைக்கும்" (சேதுபு. துராசா. ௩எ.) [அங்கார - தழல். சய்யா - படுக்கை. ப்ரமணம் - அலைதல்.]

அங்காரதாநிகை — 1. குட்டடுப்பு. 2. நெருப்புச்சட்டி. [அங்காரதாநிகா: அங்கார - தழலோடுகூடிய கரி. தாநிகா - ஆதாரமானது.]

அங்காரதாரை—ஓரரக்கி. (இராமா. கடளு. எசு.)

அங்காரம்—1. கரி. 2. சிவப்புநிறம். 3. தழல். 4. அக்கினி. [அங்கார].

அங்காரவல்லி—1. குறிஞ்சா (வைத்தியபரி). 2. சிறுதேக்கு. (மலை.) [அங்காரவல்லீ: அங்கார - நெருப்பு. வல்லீ - கொடி].

அங்காரன்—1. செவ்வாயென்னுங்கிரகம். (அறப். சத. 50) 2. நெருப்பு. [அங்கார].

அங்காரி—1. சிறுநெருப்புச்சட்டி. [அங்காரீ: அங்கார - தழற்கரி. ஈ - ஒரு விகுதி]. 2. வெங்காரம். (மூ. அ).

அங்காரிகை— 1. கருப்பந்தண்டு. (மலை) [அங்காரிகா.] 2. நன்னாரி. (உ-ம்.) "அங்காரிகைமூலி யாச்சியத்தோடுண்ண" (இராசவை. ருரு.)

அங்காவணம்—பஞ்சதருவின்பந்தர் ["ஐங்காவணம்" என்பதன் மரூஉப்போலும்.]

அங்காளம்மை—ஒரு கிராமதேவதை.

அங்காளி — அங்காளம்மையாகிய காளி.

அங்கி— 1. அக்கினி. (உ-ம்.) "அங்கியிற்றோன்றிய பொருள்கள்" (கந்தபு. சுரம்பு. எ.) 2. அக்கினிதேவன். (உ-ம்.) "அலரியங்கியாமும்பர்வான்சுடர்களுக்கு" (கந்தபு. பாயிர. ருரு.) 3. அங்கத்தையுடையது. (உ-ம்.) "கூறுமங்கியலதங்கமிலை" (வேதாரணி. மகாசமச். எ.) [அங்கிந்: அங்க - உறுப்பு. இந் - ஒரு விகுதி.] 4. அத்தநாள். 5. கார்த்திகை நாள் (சூ. நிகண். க: சுஅ.) 6. சட்டை. (உ-ம்.) "செந்தா, தங்கியிணையங்குமெய்யணிந்தவருமானார்" (இரகு. தேனு. உஅ.) [அங்க; ஈ.] 7. சாடராக்கினி. (உ-ம்.) "உடற்காதாரமடலங்கி மாந்தல்" (தைல. பாயி. ௩.) 8. நெடுஞ்சட்டை. [அங்க; ஈ.] 9. பிரதானம். [அங்கிந்.] 10. கவசம். 11. சாதிலிங்கம் (வைத்தியபரி).

அங்கிகரித்தல்—ஏற்றுக்கொள்ளுதல், தழுவிக்கொள்ளுதல். [அங்கீகாரம்]

அங்கிக்கு—சாதிலிங்கம்.

அங்கிகை—1. சட்டை. 2. பெண்களின் மார்பிற்சட்டை (ரவிக்கை).

அங்கிசகம்—ஹம்ஸம். (சி. சி. 8. 11. மறைஞா).

அங்கிசகன்—சுற்றத்தவன்.

அங்கிசம்— 1. அக்ஷபாகை. [அம்ஸ.] 2. உபநிடத முப்பத்திரண்டினொன்று. (வேதா. சூ. சிறப்பு. ௩. உரை.) [ஹம்ஸ] 3. ஒரு வகைச்சந்நியாசம். (சி.சி.அ: கக.)[ஹம்ஸ.] 4. ஒன்று பலவாகப் பங்கிடப்பட்டதில் எடுத்துக்கொண்டபாகம், பிந்தத்தின்மேல்நிற்கும்

எண்ணுகிய பாகம். 5. தாயபாகம். 6. தோட்பட்டை. 7. தோள். 8. பங்கு. (உ-ம்.) "அத்தகையவிந்துவெனும்பரமசித்தினங்கிச மாய்" (சூத. எக்கி. ௪: ௩.) 9. பிங்கம்.

அங்கிசன் — அதிதிபிள்ளைகளுளொருவன் (கூர்மபு. தக். வமி. கஉ).

அங்கிசிவயோகம்—அட்டாங்கமுடைய சிவ யோகம். (உ-ம்.) "இயமம், நியமம், ஆசநம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணம், தியாநம், சமாதி என்னும் எட்டங்கமுடைய சகள சகளாகள சிவசாக்ஷாத்காரரூப அங்கி சிவயோகத்தை" (சி. சி. அ: உக. உரை. ஞாந).

அங்கிசு— 1. அணு. 2. அலங்காரம். 3. கிரணம். 4. சூரியகிரணம். 5. சூரியன். 6. தும்பு. 7. வேகம். [ஸம்ஶு.]

அங்கிசுமாலி—துவாதசாதித்தருள் ஒருவன். (பிங்).

அங்கிசை—அமிசம்.

அங்கிஞாநம்—அவயவிஞாநம். (சி. சி. அ: உஎ. உரை. ஞாந).

அங்கிட்டு— அவ்விடத்தில். 'அங்கிட்டுப் பிறந்து' (ஈடு. 6. 8. 11).

அங்கிட்டோமம்-அக்கிநிட்டோமம்.(உ-ம்.) "அங்கிட்டோமங் கோமேத மிராயசூயம்" (இராமா.உத்.திக்கு.ககஎ.)[அக்நி; ஷ்டோம-பலி.]

அங்கித்தம்பனை — அக்கினித்தம்பனம். (திருவாலவா. 38. 23).

அங்கிதம்—1. அடையாளம். (உ-ம்.)"துக்க மிக வரசிலைபோற் பாதிமதி போற்சுடருந் தீபமேபோன்-மிக்கநுதலங்கிதங்கொண்டு" (சூத. எக்கி. பூ. 32. 11.) 2. உடற்றழும்பு. 3. கணக்கிடப்பட்டது. [அங்கித.]

அங்கிநாள்—1. அத்தநாள் (சூடா). 2. கார்த்திகைநாள். (பிங்).

அங்கியற்பொருள்—அறுவகையான இறைச்சிப்பொருள்களில் ஒன்று; அது: நிலத்திற் கங்கமாகிய பொருள். குறிஞ்சிநிலத்திற்குச் சந்தநம் பொன் வெள்ளி முதலியனவும், நெய்தல்நிலத்திற்கு உப்பு இப்பி நந்து அலவன் வலைமுதலியனவும், பாலைநிலத்திற்குச் சிழ்கு நாய் குருவி சிள்வீடு மறுபுள்ளி கோம்பி முதலியனவும், மருதநிலத்திற்குக் கரும்பு வாழை தெங்கு முதலியனவும், முல்லைநிலத்திற்குப் பூவை பூளை தும்பி காவளை கார் போகி முதலியனவும் ஆம். [அங்கமென்பதில் அம் கெட்டுநின்றது.]

அங்கியெதிர்க்கொடைப்பொருள்—விவாக சமயத்திலே யக்கிநிமுன்னிலையிலே பெண் பொருட்டுத் தந்தைமுதலானவராலே கொடுக்கப்படும்பூமி முதலானபொருள். (மிருதி. ககூரு.)

அங்கிரசு— 1. அக்கிநி. (இருக்குவேதம். க-ம் அட்டக. சூ. வாச.) 2. பிரமாவிடம் பிறந்த ஏழுமுநிவருள்ளே யொருவர். (மச்சபு. இருடிமான். ருஎ. [அங்கிரஸ்]

அங்கிரம்—ஓர் உபபுராணம்.

அங்கிரமர்திபாஷாணம்—பிறவிப்பாஷாண வகையினென்று.

அங்கிரன்—அங்கிரசு [இவன் "பிரமா நிணைத்தவுடனே பிறந்தார்கள்" என்று சொல்லப்படுகிற ஏழு இருஷிகளிலொருவன்.]

அங்கிரா—அங்கிரசுமுநிவன். (காஞ்சிப். சத்ததா. உ.) [அங்கிரஸ்.]

அங்கிரி—1. செய்யுளினடி. 2. பாதம். (உ-ம்.) "அருளுன்மையறிவினின், றவரங்கிரியாவி யுள்ளே யழுத்தும் வகையறியேன்" (முல்லையந். கூகூ.) 3. மரவேர். 4. மூன்றுகாலிருடி. [அங்க்ரி.]

அங்கிவேசன்— ஒரு முநிவன். (பாரத. வாரணா. ௩அ.)

அங்கிளி—, அங்கினி— } ஒருவிதக் கற்றுழை. (வைத்தியபரி).

அங்கீகரணம்—உடன்பாடு, சம்மதம்.

அங்கீகரித்தல் — உடன்படல். 'சித்தம் வைத்திடவு மங்கீகரித்திடுமகாதேவதேவா' (அறப். சத. 100)

அங்கீகாரம்—அங்கிகரணம்.

அங்கீகாரியம் — அங்கிகரிக்கத்தக்கது. (உ-ம்.) "விந்துமோகிநிமஹானென்னுமுபாதானத்திரயமும் அங்கிகாரியமே. (சி. சி. க: கக. உரை. சிவாக்).

அங்கீகிருதம்—அங்கிகரிக்கப்பட்டது. [அங்கீக்ருதம்]

அங்கீயம்—அங்கத்திற்குரியது. (சி.சி. எ: உரை. ஞாந.)

அங்கு — அவ்விடமெனப்பொருள்படும் ஓரிடைச்சொல். (தொல். இடை.௨௬.நச்சி.)

அங்குசதாரி—1. அரிதாரமென்னுமொரு சரக்கு. 2. யானைப்பாகன். 3. விநாயகன்.

அங்குசபாசகரன்— விநாயகன். (உ-ம்.) "அங்குசபாசகரப்பிரசித்தன்" (திருப்பு. சுடுஉ).

அங்குசபாசதரன்—விநாயகன்.

அங்குசபாசமேந்தி—விநாயகன் (சூ. நிக ண். க: உக).

அங்குசபாணி—1. காளி. 2. விநாயகன். [அங்குசம்; வாணி - கையையுடையவள், கையையுடையவன்.]

அங்குசபாதி—சிறுபுள்ளடி. (மலை).

அங்குசபாஷாணம் — சரகாண்டபாஷாணம் (மூ.அ).

அங்குசபிசாரி—கொள்ளுப்பூண்டு. (வைத்தியபரி).

அங்குசம்—1. தோட்டி; ஆயுதவகையுள் ஒன்று. (உ-ம்.) "பகழியங்குசமும்" (கந்தபு. விடைபெ.கூஎ.) 2. யானைத்தோட்டி. (உ-ம்.) "அருவிபெய்வரையிற்பொங்கியங்குசமிமிர" (இராமா. பால. எழுச். சுஉ.) [அங்குசம்] 3. வாழை. (மலை).

அங்குசமுத்திரை—ஒருவகைமுத்திரை. (சி. வி. கிரி. எஅ. உரை).

அங்குசரோசனம்—கூகைநீறு; அது ஒரு வகைக்கிழங்கின்மா.

அங்குசவி—கொள்ளு. (வைத்தியபரி).

அங்குசன்—சரகாண்டபாஷாணம்; இது பிறவிப்பாஷாணம். (வைத்தியபரி).

அங்குசிநி—பத்துநாளுக்குமேலேபதினாறு வயசுக்குட்பட்ட பாலர்களுக் கிரிட்டஞ்செய் யும் பத்துப் பிசாசதேவதைகளுள் ஒன்று. (வி - ணி. உஅஎ).

அங்குசோலி—அறுகம்புல். (வைத்தியபரி).

அங்குட்டம்—1. இருநூற்றிருபத்துநான்கு புவனங்களுளொன்று. (கந்தபு. கணங். கo. உரை.) 2. காற்பெருவிரல். (உ-ம்.) "தாளங் குட்டத்தைத்திகழிதத்தினூன்றி" (பாகவத. பற்கு. உo.) 3. கைப்பெருவிரல். (உ-ம்.) "அங்குட்டந்தர்ச்சனியின்மருவக்கூட்டி" (கூர்மபு. சுத்தா. கo.) 4. பெருவிரலளவு (உ-ம்.) "அண்டர்நாயகனோரங்குட்டவுருவாய்" (பாகவத. பரீட்சி. கஎ.)

அங்குட்டமாத்திரம்—பெருவிரலளவு.

அங்குட்டமாத்திரன் —வித்தியாதத்துவத்தி லிருக்கும் ஓர் உருத்திரன். (வி-ணி. உஎச.) [அங்குஷ்ட - பெருவிரல். மாத்ரு - அள வுடையவன்].

அங்குட்டருத்திரம் — மாயாதத்துவத்தி லிருக்கும் எட்டுப்புவனங்களுளொன்று. (சி. சி. அ: அ. உரை. மறை).

அங்குட்டரூபி—பெருவிரலளவுவடிவமுடை யவர். (உ-ம்.) "அங்குட்டரூபியாஞ்சிவனை" (காஞ்சிப். சநற். உo).

அங்குட்டான்—விரற்புட்டில். [இது சோ னகரால் வழங்கப்படுஞ் சொல்].

அங்குடம்—திறவுகோல். [அங்குட].

அங்குணம்—வெங்காரம். (வைத்தியபரி).

அங்குத்தை—1. அவ்விடம். 'அங்குத்தை வார்த்தையை இங்கே சொல்லி' (ஈடு). 2. தேவரீர்.

அங்குரகம்—பறவை முதலியவைகளின் வாசஸ்தானம். [அங்குர - முளை. க - ஓர் வ- வி].

அங்குரம்—1. இரத்தம். 2. உரோமம். 3. குப்பைமேனி. 4. சலம். 5. தளிர் 6. முளை. (உ-ம்.) "அங்குரம்போல் வளர்ந்தருளி" (பெ ரியபு. திருஞா. ருஙு). [1, 2, 4, 5, 6, அங் குர: அங்க - மறு. உர - ஒரு வ - வி].

அங்குரார்ப்பணம் — பாலிகைதெளிக்கை; முளையிடுதல். மங்கள காரியங்களின் ஆரம் பத்தே சந்திரனை அதிதெய்வமாகக்கொண்டு கும்பத்தினருகிற் பாலிகைகளிடத்துப் பா லிற்கலந்த நவதானியங்களை மந்திரத்தோடு பெய்து மண்ணிட்டு வளர்த்தல். (உ-ம்.) "இளருமங்குரார்ப்பணமுங்கிளப்பாம்" (திரு வானை. கோச்செ. உசு; பெரியபு. தடுத். கக. உரை). [அங்குரம் - முளை. அர்ப்பணம்- இடுதல்].

அங்குரி—1-3. அங்குரியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், பெயரெச்சத் தொகையும். 4. விரல். [அங்குரி: அங்க - எண்ணல். உரி - ஒரு வ - வி].

அங்குரித்தல்—முளைத்தல். (உ-ம்.) "தவ மெனும் பெரிய வித்துட் டங்கியே யங்குரித் து" (வாதவூர. மந்தி. எ.) [அங்குர].

அங்குரிதம்—1. தளிர்த்தது. 2. முளைத் தது.

அங்குரீயகம்—அங்குரீயம்.

அங்குரீயம்—மோதிரம்.

அங்குலம்—1. விரலகலம். ஒன்றின்பின்ஒன்றாக நீளவைக்கப்பட்ட எட்டு யவைகொண்ட ஓரளவு. (உ-ம்.) "அன்னயூகையெட்டியவை யென்ப - வதனிருநான்குகொண்ட தங்குலத் தளவையாமே" "அங்குலமறுநான் கெய்தி னதுகரம்" (கந்தபு. அண்ட. ௫. ௬.) 2. பெருவிரல். 3. விரல்.

அங்குலி—1. மோதிரம். (உ-ம்.) "மெல்விரறனக்குமங்குலிபொருத்தி" (நல். பார. திரௌப. ௩௰). 2. யானைத்துதிக்கைநுனி. 3. விரல். (உ-ம்.) "அங்குலியெண்களினமைத்து" (பெரியபு. ஆனாய. ௧௩). 4. ஐவிரலிச்செடி (வைத்தியபரி).

அங்குலிகம்—மோதிரம். (உ-ம்.) "அங்குலிகமொன்றுபுனலாழ்தருகிணற்றில்விழ" (பாரத. வாரணா. ௫௧).

அங்குலித்திரம்—அங்குலித்திராணம். [அங்குலித்ர: த்ர - காப்பது].

அங்குலித்திராணம்-வில்லின்நாண் தாக்காதபடி விரலிலே அணியுந் தோல். [அங்குலி த்ராண: த்ராணம் - காப்பது].

அங்குலிதோரணம்—சந்தன முதலியவைகளினாலே நெற்றியிலே தோரணம்போல வளைவாகத் தரிக்கும் முக்குறி. [அங்குலி தோரண: தோரணம் - வில்வளைவு].

அங்குலிமத்தியகம்—நடுவிரல். (சி - வி. கிரி. ௨௫). [அங்குலிமத்யக].

அங்குலியம்—மோதிரம்.

அங்குலீ—1. யானைக்கைநுனி. 2. விரல்.

அங்குலீகம்—மோதிரம்.

அங்குலீபஞ்சகம்—விரல்களைந்தின் கூட்டம். [அங்குலீபஞ்சக: பஞ்சகம் - ஐந்தன் கூட்டம்].

அங்குலீயகம்—மோதிரம்.

அங்குலீயம்—மோதிரம். [அங்குலீய].

அங்குள்—சௌரிலோத்திரம் (வைத்தியபரி).

அங்குஸ்தான்—தைப்போர் விரலிலணியுங் கூடு. (வழக்)

அங்கூடம்—1. அம்பு. 2. கிரி.

அங்கூரம்—1. எலும்பிற்றோன்றியமுளை. 2. புதிதாய்முளைத்த புல்முதலியன. 3. தளிர் (வைத்தியபரி). [அங்கூர: அங்கு என்பதில் உகரம் நீண்டது].

அங்கே—அவ்விடத்து.

அங்கை—1. அழகியகை. (உ-ம்.) "அங்கை கொடுமலர்தூவி" (தாயு. சின்மய. ௧.) 2. உள்ளங்கை. (உ-ம்.) "தலையங்கைகொண்டு நீகாபாலமாடுங்கால்" (கலி. ௧.) [அம் அழகு. அகம் - உள். கை - கரம். அகங்கை யென்பது அங்கையென விகாரமாயிற்று.]

அங்கோடம்—அழிஞ்சின்மரம். (வைத்தியபரி).

அங்கோடிங்கோடு—அங்குமிங்கும் (ஈடு. 1. 4. 9).

அங்கோலதைலம்—இந்திரஜாலவித்தைக்குரிய தைலவிசேடம் (லெக்ஸிகன்).

அங்கோலம்—1. அழிஞ்சில். (மலை) 2. மரவகை.

அங்கோலவைரவன் — அழிஞ்சின்மரம். (வைத்தியபரி).

அங்கோலை—அழிஞ்சிற்பட்டை. (உ-ம்.) "அத்தமதியுமங்கோலை" (இராச. வைத். ௨௭௰).

அங்ஙன்—1. அத்தன்மை. (உ-ம்.) "வல்லதமிழறிஞர்வரி னங்ஙனே வடமொழியில் வசனங்கள் சிறிதுபுகல்வேன்" (தாயு. சித்தர். ௧௰). 2. அவ்விடம். (உ-ம்.) "அன்பருக்கங்ஙனேயமிர்தசஞ்சீவிபோல்வந்து" (தாயு. சுக. ௪). [அ-அந்த. ஙனம் - தன்மை, இடம். "அம்" கெட்டு "ஙன்" என நின்றது].

அங்ஙனம்—1. அத்தன்மை. 2. அவ்விடம். (உ-ம்.) "அவ்வகையெலாம்புலவனங்ஙனம் வகுப்ப" (கந்தபு. தெய்வ. ௩௰). [அ-அந்த. ஙனம் - தன்மை, இடம்].

அச்சகம்—1. நீர்முள்ளி. 2. வெங்காயம். (வைத்தியபரி).

அச்சகாரம்—ஒருபொருளை யொருவன் மற்றொருவனிடம் விலைக்குக்கொள்ளப் பேசியுடம்பட்டபின் இருதிறத்தாரும் அவ்வுடம்பாட்டில் விலகாதுநிற்கும்படி கொள்வோன் விற்போனுக்குக்கொடுக்கும் விலைப்பணத்தின் ஒருபாகம். (தெலுங்கு).

அச்சச்சுவை— சுவையலங்காரவகைகளுளொன்று.

அச்சடிச்சீலை—சித்திரவர்ணம் பதிக்கப்பட்ட சீலை.

அச்சடித்தல்—அச்சிற்பதிப்பித்தல்

அச்சடியன்—அச்சினுற் சாயமூட்டப்பட்ட ஒருவகைச்சீலை.

அச்சடியோலை—முத்திரையிட்ட ஓலைப் பத்திரம்.

அச்சடை—கீழ்க்காய்நெல்லிப்பூண்டு. (உ-ம்.) "கிரியல்வழுதுணை மூலமாலூரமச்சடை வியாக்கிரிகரஞ்சமத்த மேகநாதஞ்சுரசமாகு விமுடங்கன்முலை விண்டவொரு பானெனன் றிவண்" (தைல. ௬.) [அஜஜடா].

அச்சடையாளம்—1. அங்க ஒப்புமை. 2. அடிமையென்பதைக்காட்டச் சுடுங் குறி.

அச்சணம்—அக்கணம். (உ-ம்.) "புனற்குச் செல்லுமச்சணங் கையில் வில்லேந்து மிலக் குவன்" (கூர்மபு. இரா. வந. ௬௨). [அ; க்ஷண;]

அச்சத்தி—கத்தரி. (மூ. அ).

அச்சதந்தெளித்தல்—அறுகும் அரிசியும் இடல்.

அச்சநீலம்—சுத்தநீலம்.

அச்சபாம்—நாணற்புல். (மலை).

அச்சபல்லம்—கரடி. [அச்ஹ்ஹல்ல: அச்ஹ - எதிர்முகம். ஹல்ல - கொல்வது].

அச்சம்—1. அகத்திமரம். (உ-ம்.) "அச் சத்தருணமலர்க்கிரண" (இரகு. மாலையீ. ௬அ. 2. அச்சச்சுவையாகிய அலங்காரம். (உ-ம்.) "அவைதாம், வீர மச்ச மிழிப்பொடு வியப்பே. காம மவல முருத்திர நகையே" (தண்டி. ௬௧). 3. இலேசு. 4. ஈசுரப்புல். 5. எதிர்முகம். 6. கரடி. 7. காய்ச்சற்பாஷாண ம். (சட்ட. ௧அ௩). 8. கோரைப்புல். 9. தகடு. 10. கண்ணாடி, கலங்கலில்லாத சல முதலியவற்றிற் காணப்படுவதுபோலும் நிர் மலமான தெளிவு. 11. பயம். (உ-ம்.) "அட ங்காரச்சம்பிடித்திட"(இரகு. திக்கு. ௧௬அ). [அஞ்சு; அம்]. 12. பளிங்கு. 13. மகளிர்நாற் குணத்துளொன்று; அஃது தன்புகாரணமாகத் தோன்றிய உட்கு. (உ-ம்.) "அச்சமுநாணு மடனும்" (தொல். பொரு. ௬௬). ["தன் கணவனையன்றிப் பிறரைக்காணுதற் கஞ்சுத ல்" எனத் திருவிளை. வன்னியு. ௧௬-ஆஞ்செய் யுளுரையில் ஓர் உரைகாரர் கூறுவர். வே ளூர்உரைகாரர்திருவிளை.மாபாத. எ - ஆஞ் செய்யுளுரையில் "ஆமைபோலத் தன் கண வன்முன்னன்றி யேனையோர் சாயைதோன் றினுங் கரசரணதிகள் ஒடுங்கிப் பதுங்கல்" என்பர்]. 14. மாசற்றது. (அமர). 5, 6, 10, 13, 14. [அச்ஹ]. (1, 4, 7, 8. வைத்தியபரி).

அச்சமம்—1. அளத்துப்புல். 2. முசிற் றுப்புல். (வைத்தியபரி).

அச்சமரம்—நான்குமுகப்புல்லுருவி. (வை த்தியபரி).

அச்சமாடல்—அச்சமுண்டாகப் பேசுகை. 'அழுக்காறவாவஞ்ச மச்ச மாடலும்' (நன். 31).

அச்சமாமுகம்—புல்லுருவி(வைத்தியபரி).

அச்சயன்—1. அழிவில்லாதவன். 2. கட வுள். [அக்ஷய: அ - எதிர்மறை. க்ஷயன் - அழிவுடையவன்].

அச்சாக்காய்ச்சல்—சுரவகையிலொன்று.

அச்சாசு—அப்சரஸ்திரி. (பிரபஞ். ௬௧.) [அப்ஸரஸ்].

அச்சாம்—1. நாக்கில் வரும் ஒரு நோய். 2. எழுத்து.

அச்சலச்சலாய் — பாட்டம்பாட்டமாய். 'மழை அச்சலச்சலாய்ப்பெய்கிறது'. (வழக்).

அச்சவபிநயம்—அச்சச்சுவையபிநயம்; (சிலப். அரங்கே. ௧௩. உரை).

அச்சவுபதை—உபதை நான்கனுளொன் று; அது: மந்திரியைப்பரிசோதிக்குமிடத்து, "ஒரு நிமித்தத்தின்மேலிட்டு ஓரமைச்சனு லேனையோரை அவனில்லின்கண்ழைப்பித் திவரறைபோவானெண்ணற்குக்குழீஇயினு ரென்று தான்காவல்செய்து, ஒருவனு லிவ் வரசன் நம்மைக் கொல்வான்சூழ்கின்றமை யின் அதனை நாம் முற்படச்செய்து நமக்கினிய அரசனொருவனைவைத்தல் ஈண்டையாவர்க்கு மியைந்தது: நின்கருத்தென்னையெனச் சூ ளுறவோடுசொல்லுவித்தல்" (வள். ௫௦௧. உரை. பரி). [அச்சம் - பயம். உபயா - பரீ க்ஷை].

அச்சறுக்கை— அச்சத்துக்கிடம்வையாத தன்மை. [அச்சு-பயம். அறுக்கை-நீக்குதல்].

அச்சன்—1. கடவுள். (உ-ம்.) "இச்சை ஞானந் தொழிலிவைமூன்றனோ, டச்சனின் றனைத்தும்விளைத்தாலென" (தணிகை. பிர மன்சிரு. ௨௩). 2. தந்தை. இது குட்டநாட் டார் வழக்கென்பர். (நன். பெயரி. ௧௬. உரை.)[அத்தன் என்பது அச்சனென விகார மாயிற்று].

அச்சனம்—வெள்ளுள்ளி (வைத்தியபரி).

அச்சனர்—கடவுள். (உ-ம்.) 'அச்சனு ரருள்செய்துநீங்கலும்' (காஞ்சிப். முப்புராரி. ச). [ஆர் சிறப்பித்தற்பொருளில் வரும் விகுதி].

அச்சா—மிகநன்று.

அச்சாணி—1. பண்டியிலே யுருள்கோத்த மரத்திலே யது கழலாமற் கடையிற்செருகும் ஆணி. (உ-ம்.) "உருள்பெருந்தேர்க், கச்சாணியன்னாருடைத்து" (வள். சுஎ. எ0). [அச்சு - உருள்கோத்தமரம்; ஆணி]. 2. உத்தாமணி (வைத்தியபரி).

அச்சாணிமூலி—1. வேலிப்பருத்தி 2. உத்தமதாளி (வைத்தியபரி).

அச்சாநம்—அஞ்ஞாநம். (உ-ம்.) "இழிவுறு மச்சாநத்தாலிறந்து பிறந்து" (சேதுபு. இராமனரு. கஙசு). [சுஜ்ஞாநம்].

அச்சாரம்—முன்பணம்.

அச்சாவாகன்—1. யாகத்தில் ஹோதாவுக்குத் துணையாயிருப்பவன். 2. அசடன்.

அச்சாறு—ஊறுகாய்.

அச்சான்—அச்சிலுண்டாம் உருவம்.

அச்சானியம்—1. தீக்குறிமுதலியவற்றால் நேரும் மனவிகற்பம். 2. அமங்கலம். 'ஏன் அச்சானியமாய்ப் பேசுகிறாய்' (வழக்).

அச்சி—1. அகத்திமரம். (இராசவைத்.) 2. ஒரு தேசம். (உ-ம்.) "அச்சியிலேபோனு லும்" (தண்டலையார்சத.). 3. நாயர்சாதிப் பெண். 4. ஒரு பெண்பால்விகுதி (வீரசோ. தத்தி). 5. குதிரைவகையுள் ஒன்று. 'அச்சி மட்டம்'.

அச்சித்தினை—1. ஒருவகைத் தினை. 2. ஒருவகைப்புல். (வைத்தியபரி).

அச்சிநடை—அச்சிக்குதிரையின் கதி.

அச்சிநறுவிலி—ஒருவகை நறுவிலிமரம். (மூ. அ).

அச்சிமட்டம்-அச்சிதேசத்துச்சிறுகுதிரை.

அச்சியர்—ஆர்யாங்கனைகள். 'அங்கபூவாதி நூலு ளச்சியர்க்குரிய வோதி' (மேருமந். 619).

அச்சிரக்காலை—முன்பனிக்காலம். (உ-ம்.) "வெண்மழையரிதிற்றோன்று மச்சிரக்காலையும்" (சிலப். ஊர்காண். க0டு).

அச்சிரநாள்—கூதிரும் முன்பனியும். (திவாகர).

அச்சிரம்—முன்பனிக்காலம். (சிலப். 14. 105).

அச்சிறுபாக்கம்—ஒரு சிவஸ்தலம் (பெரியபு. திருஞா. கககஉ).

அச்சினி—எட்டாமாதம் (வைத்தியபரி).

அச்சு—1. அச்சம், பயம். (உ-ம்.) "சவரனச்சொடு சகத்திரா நீகனைத் தாழா" (சேதுபு. விதூம். ககஅ). [இஃது "அச்சம்" என்பதன் விகாரம்]. 2. அச்சுலக்கை. 3. அடையாளம். 4. மூலரூபம். "நரர்களாய்த் துய்ப்ப ரென்னி னரர்பதி சுரருலோகஞ் - சுரர்களாய்த்துய்ப்பரென்னிற் சொன்னவச்சழியுமாகும்" (சி. சி. உ. சஉ). 5. ஆதாரம். (உ-ம்.) "உத்தராமாமதுரைக்கச்சு" (வள்ளுவமாலை. உக). 6. உயிரெழுத்து. (உ-ம்.) "தங்கச்சினகர நேராக்கலந்திச் சக நிறைந்தார்" (திருச்செந்தி. உஉ). 7. எழுத்து [அச்]. 8. கட்டளைக்கருவி. (உ-ம்.) "கம்பிவாங்குமச்செனலாயதால்" (இரகு. திக்கு. கஅகு). 9. உடம்பு. 10. நெய்வோர்கருவியினொன்று. 11. பண்டியுருள்கோத்த மரம். (உ-ம்.) "அச்சிற்றன" (கந்தபு. அக்கினி. சஅ). 12. முதற்பாடுமிடத்து மகர ஒற்றால் நாதத்தையுச்சரித்துக் குற்றெழுத்தை யெழுவாயாகக்கொண் டந்த நாதத்தைத் தொழில் செய்வது; அது தாளத்துடனிகழும். (சிலப். அரங்கே. உசு. உரை). 13. யுகம். 14. யோநி, வினைக்கீடாயெடுத்த உடம்போடுகூடிய உயிர். (உ-ம்.) "மலிநக்கடைமாந்தரச்சாய்" (சேதுபு. வேதாள. கசு). 15. வடமொழி உயிரெழுத்து. "இடையினான்கு மீற்றிரண்டு, மல்லாவச்சு." (நன். பதவி. கக). [அச்] 16. சரியொப்பு. 'கடைமாந்தரச்சாய்' (சேதுபு. வேதா. 16). 17. அஞ்சுருவாணி. (பிங்). 18. ஏந்திரவச்சு. 19. வலிமை. 'வேந்தடர்த்த வச்சு' (சீவகசிந்தா. 2777). 20. செய்வரம்பு. 'அச்சுக்கட்டின நிலம்.'

அச்சுக்கட்டி—1. ஆடையில் அச்சுவேலை செய்வோன். (சிலப். 5. 17. அரும்). 2. நாட்டு ரணவைத்தியன்.

அச்சுக்கட்டு—1. நெற்பயிரிடும்படியான நிலம். 2. நெய்வோர்கருவிவகையினொன்று. 3. அச்சடித்தற்காகச் சீலையை மடிக்கை. 4. வரம்புகட்டிய செய்.

அச்சுக்கட்டுதல் — சித்திரமெழுதுமுன் நூலரேகை வரைந்துகொள்ளுதல்.

அச்சுக்கம்பி—துப்பாக்கிக்குழலிலேயிட்ட வெடிமருந்தை யமரும்படியிடிக்கும் ஓரிருப்புக்கருவி.

அச்சுக்கம்பு — துப்பாக்கிமருந்திடிக்கும் மரத்தண்டு.

அச்சுத்தாலி—காசுமாலை. (திவ். திருப்பா. 7. வ்யா).

அச்சுத்திரட்டுதல்—வண்டியச்சு உருவாக்குதல்.

அச்சுந்திருத்துதல்—செய்நேர்த்திசெய்தல்.

அச்சுதந்தெளித்தல்—அறுகும் அரிசியும் இடுதல். 'மங்கலவச்சுதந்தெளித்து' (சீவகசிந்தா 2411).

அச்சுதம்—1. அறுகும் அரிசியும். (உ-ம்.) "வாழியரூழியென - வச்சுதங்கொண்டுமன்னனடிமுடிதெளித்து" (சிங். இலக். கக௭). 2. அழிவின்மை. (உ-ம்.) "கேவலமச்சுதமநந்தஞ்சார்தம்" (ஞானவா. சிகித். கசஅ). [அச்யுத: அ எதிர்மறை. ச்யுத-அழிவு.

அச்சுதன்— 1. அருகதேவன் (உ-ம்.) "அச்சுதனடிதொழுதறைகுவன்சொல்லே" (நன். பெயரி. க) 2. அழிவில்லாதவன். "அச்சுதனயனமாராகியபெயரவர்க்கு, நிச்சயம்படுமுகமனே" (கந்தபு. சூரனமை. கச0.) 3. கடவுள். 4. சிவன். (உ-ம்.) "அச்சுதனுஞ்சிவன்" (கந்தபு. அவைபுகு.அ.) 5. விட்டுணு. (உ-ம்.) "ஆணிநீங்கிய வச்சுதனாற்றவும்' (கந்தபு. மகாசா. ௩0.)

அச்சுதன்முன்னர்வந்தோன்— பலராமன். (சூ. நி. க: க0.) [அச்சுதன் - விட்டுணுவினவதாரமாயுள்ள கண்ணன். முன்னர்வந்தோன்- தமையன்.]

அச்சுதை—1. அழிவில்லாதவள். 2. உமாதேவி. (உ-ம்.) "பகவதிசம்பவைமகிடவாகநியச்சுதை" (கூர்மபு. திருக்கல். உ௩.)

அச்சுநிகள்—அச்சுவிநிகள். (உ-ம்.) "அச்சுநிகூர்த்த - மங்கியகொடுநோய்தீர்க்கும்" (வேதாரணியபு. தீர்த்த. உ௭.) [அச்வினீ]

அச்சுப்பலகை — நெய்வோர்கருவியினொன்று.

அச்சுப்பூட்டியிழுத்தல்— தறியூடு நூலைச்செலுத்தல்.

அச்சுமாறுதவாதி— அந்தஅந்தச் சீவனின் அச்சு வேறொருசீவனின் அச்சாகாமல் அந்த அந்த அச்சாகப் பிறந்திறக்கும் என்னும் மதஸ்தன். (த. நி. போ. கக௮.) [அச்சு - மூலரூபம்.]

அச்சுரம்—1. நெருஞ்சி (மூ. அ). 2. முருங்கைமரம். (வைத்தியபரி)

அச்சுருவாணி—தேரினகத்திற்செறிகதிர். (பிங்).

அச்சுலக்கை — நீரிறைகருவிகளிலொன்றாகிய துலாவினடுநிலையிற் குறுக்காக ஊடுபுகுத்தப்படுவதும், அதனிருபாலிலுந் தூண்களிலாவது பேண்மரங்களிலாவது பொறுத்திருப்பதுமான மரம்.

அச்சுவசாத்திரம்—அசுவசாத்திரம்.

அச்சுவசேநன்— தக்ககனென்னும் பாம்பின்மகனாகிய ஒருவன். (பாரத. காண்ட. சு0.) [அச்வஸேந.]

அச்சுவத்தம்—அரசமரம். (பிங்) [அச்வத்த.]

அச்சுவத்தன் — எட்டாமநுவின்காலத்திலுள்ள ஏழுமுனிவரிலொருவன். (கூர்மபு. மநுவந். உஉ).

அச்சுவத்தாமன்—அச்சுவத்தாமா. [அச்வத்தாமா: அச்வ-குதிரை. ஸ்தாமந் - நின்றவன்]

அச்சுவத்தாமா— 1. ஒரு யானை. (உ-ம்.) "எரிகணைதொடுத்தபோரி - லந்தரமடைந்ததையவச்சுவத்தாமாவென்னுஞ் - சிந்துரம்" (பாரத. பதினைங். கக.) 2. ஒரு யுத்தவீரன்; இவன் துரோணாசாரியருக்கு மகன். (உ-ம்.) "அத்தகேளடுவல்லாண்மை யச்சுவத்தாமாவென்னு - மத்தவாரணத்திற்கு" (பாரத. பதினைங். உ௭.) [அச்வத்தாமா.]

அச்சுவத்தி—சூரியகுலத்தரசர்களிலொருவன்; இவன் உவநாச்சுவனுடைய மகன். (கூர்மபு. சூரிய. க௩).

அச்சுவதி—அச்சுவிநிநாள். (உ-ம்.) "மறுவிலச்சுவதியாதியிரேவதியீறுமாதர்" (நல். பார. பதினெட். உ௩க.)

அச்சுவம்—குதிரை. (உ-ம்.) "இந்தவச்சுவங்கூர்ச்சரம்." (திருவிளை. நரிபரி. க0ரு.) [அச்வ.]

அச்சுவழகாதநம்—யோகியின் நூற்றெட்டாசநங்களிலொன்று; அது காலை மடித்துக்கொண்டு முழந்தாள்களிரண்டின்கண்ணும் முழங்கைகளிரண்டையும் ஊன்றி யுள்ளங்கைகளைக் கன்னத்திலேவைத்துக்கொண்டிருத்தல். [அச்வாஸந.]

அச்சுவமேதம்—அசுவமேதயாகம். (கூர்ம பு. வருண. கக. உரை.) [அச்வமேத.]

அச்சுவரதன்—சூரியன்றேர்பரிக்கும்நாகரு ளொருவன். (உ-ம்.) "வாசுகிகங்கணுளன் வெஞ்சீற்றத்தக்ககன் வளர்ந்த முள்ளெயிற் றுத் - தேசுடைச்சர்ப்பபுங்கவனேலாபத்தி ரன் சங்கபாலன்சீ - ராசறுமயிராபதன்றன ஞ்செயன்மாபத்மன் கார்க்கோடகனழல்வா- யேசில்கம்பள னச்சுவரதன் முறையி னிரவி தேர்மதிதொறும்பரிப்பார்" (கூர்மபு. ஆதவர் சிறப். சு.)[அச்வரத.]

அச்சுவரி—பழையவரிகளுள் ஒன்று. (I. M. P. Tn. 104)

அச்சுவன்-குதிரைச்சாதியாடவன்.(உ-ம்.) "சசனேயிடபனச்சுவனென்று."(கல்லா. எ. மயிலேறு. உரை.) [அச்வ.]

அச்சுவினி—1. இருபத்தேழு நக்ஷத்திரங் களுள்ளே முதல்நக்ஷத்திரம். (திவா.) 2. குதிரைவடிவமாய் மறைந்துநின்ற சஞ்ஞை யென்னுஞ்சூரியன்மனைவி. 3. சந்திரனுடைய இருபத்தேழு மனைவியரிலொருத்தி. [அச்விநீ.]

அச்சுவினிகள்—தேவமருத்துவர். (உ-ம்.) "அன்றவியச்சுவினிகளுக்களித்து" (வேதார ணியபு. தோற்ற. கஉ.) [அச்விநௌ. சூரி யனும் மனைவியாகிய சஞ்ஞையென்பவளும் குதிரைவடிவங்கொண்டு பெற்றவ ரென்ற படி.]

அச்சுவினிகுமாரர் — தேவமருத்துவர். [அச்விநீகுமாரௌ.]

அச்சுவினிதேவதைகள்—தேவமருத்துவர்.

அச்சுவினிதேவர்—தேவமருத்துவர். (உ-ம்.) "ஆதிபரைநந்தியமுதகடத்தோடுதித் தோ னச்சுவினிதேவர்விரியலைகடலை நுகர்ந் தோர்" (தைல. ரு. கடவுள்வணக்கம்.)

அச்சுவினிநாள்—1. அச்சுவினிநக்ஷத்திரத் திற்குரிய காலம். 2. அச்சுவினிநக்ஷத்திரம்.

அச்சுவினிபுத்திரர் — தேவமருத்துவர். [அச்விநீஸுதௌ: அச்விநீ - பெண்குதி ரைவடிவங்கொண்ட சஞ்ஞை. ஸுதௌ- மக்கள்.]

அச்சுவினிமதலையர் — நகுலசகதேவர். (பிங்.)

அச்சுறல் — 1. அச்சமடைதல். (உ-ம்.) "அச்சுறுகின்றதெனுவதாகுமால்" (கந்தபு. தருமகோ. கசு.) 2. அச்சமடையச்செய்தல். (உ-ம்.) "அச்சுறுகண்மணியாமரிமாவின்" (கந்தபு. அவைபு. உசு.) [அச்சு - அச்சம்.]

அச்சுறவு—அச்சமடைதல். (உ-ம்.) "சா ன்றகன்மாயனச்சுறவெய்தி" (கந்தபு. யாக. கஉரு.) [அச்சு - அச்சம். உறவு - அடைதல்.]

அச்சுறுகொழுந்தொடர் — மரங்களிலே யிரும்பைத்தைத்து விசையாதபடி (யானைக்) கழுத்திலே மாலைபோலிடுவதொன்று.(உ-ம்.) "அச்சுறுகொழுந்தொடர்யாப்பழித்து" (சிந் தா. கஙக. உ௬௦.)

அச்சுறுத்தல் — அஞ்சுவதை யுறுத்திச் சொல்லல். (உ-ம்.) "அஞ்சியச்சுறுத்தலும்" (தொல். பொரு. ககச.)

அச்சுறை—உடம்பு. [அச்சு-உயிர். உறை- உறப்படுபொருள்.]

அச்சென—விரைவாக. (உ-ம்.) "அச்செ னத்தணந்தேகி" (கந்தபு. நகர்புகு. கஎ.)

அச்செனல்—விரைவுக்குறிப்பு. 'அச்செ னத்தணந்தேகி' (கந்தபு. நகர்புகு. 97.)

அச்சேறுதல்—அச்சடிக்கப்படுதல்.

அச்சை—1. பீதிரோகம். (இராசவைத்.) 2. பைத்தியம். (இராசவைத்.)

அச்சொடுபுரிதல் — மூலரூபமாகச் செய் தல். சரியொப்பாகச்செய்தல். (உ-ம்.) "நீய வை-யச்சொடுபுரிந்திலை" (கந்தபு.சூரனமை. ருஉ.)

அச்சோ—1. இரக்கத்தைக்காட்டும் ஓ ரிடைச்சொல். (உ-ம்.) "அச்சோவெனப்ப லிமையோரையீண்டுசிறைவைத்தபாவமதனு ல்" (கந்தபு. அவைபு. சஈ.) 2. வியப்பினைக் காட்டும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "மழ விடையுடையான்மேனி வனப்பினை நோக்கி யச்சோ,வழகியபிரானேவென்னுவள்ளிமுத் தங்கொண்டு" (திருவிளை. இரச. உகூ.)

அச்சோப்பருவம் — தாய் குழந்தையை அணைக்கஅழைக்கும்பருவம். (திவ். பெரியா ழ். 1. 9. பதி.)

அச—நிவிர்த்திகலையிலிருக்கும் உருத்திர புவனங்கள் நூற்றெட்டினுளொன்று. அது அண்டகடாகத்துக்குப்புறம்பே கிழக்குத் திக்கிலிருப்பதென்பர். (கந்தபு. கணங். ௬௦. உரை.) நிவிர்த்திகலையிலுள்ளனவெனப்படும்

நூற்றெட்டுப்புவனங்களுள் ஒன்று. (சி. வி. கிரி. உக. உரை.) [அஜ.]

**அசக்கல்**—கட்டல். "அகடசக்கரவின்" (கந்தபு. கட. வாழ்.)

**அசக்கியம்**—1. செய்யக்கூடாதது, இயலாதது. (உ-ம்.) "கரைசெய்தியாகம்புரிதற்கசக்கியமாதலினால்" (சூத. எக்கி. பூ. கூ: ௩.) [அஶக்ய: அ - எதிர்மறை. ஶக்ய -இயன்றது.] 2. துத்தநாகமணல். 3. நாகமணல். (வைத்தியபரி)

**அசக்கியன்**—வலாதவன். [அஶக்ய.]

**அசக்கீரம்**—ஆட்டுப்பால். (வி-ஷி.) [அஜக்ஷீரம்: அஜ - ஆடு. க்ஷீரம் - பால்.]

**அசகசாந்தரநியாயம்** — மீமாஞ்சையிற் கூறப்பட்ட நியாயங்களுள் ஒன்று; அது ஆட்டுக்கும் யானைக்குமுள்ள பேதம்போலும் நியாயம். [இது பின்வரும்; மேற்கோளாற் றெளியப்படும். "ஆடு கரும்பைவிட்டிலையைத்தின்று அதனது சுவையைத் தானும் அறிந்து தனதுகுட்டிக்குங்காட்டுதல்போலவும்யானை இலையைவிட்டுக் கரும்பைத்தின்று அதனது சுவையைத் தானும் அறிந்து தனது கன்றுக்குங் காட்டுதல்போலவும் கிரியாகுரு மந்திர தந்திர கலைகளையாராய்ந் தவற்றுட் கூறிய சரியாதிகளை யநுட்டித் தவற்றான் வரும் விடயாநந்தத்தைத் தானுமநுபவித்துத் தன்னையடைந்த சீடனுக்கு மவ்வுபதேசங்களால் அவ்வாநந்தத்தை வருவிப்ப னென்பதும், ஞாநகுரு மந்திர தந்திரகலைகளைவிட்டுபதேச கலையை யாராய்ந் ததனுட்கூறிய ஞாநாநந்தத்தைத் தானும்பெற்றுத் தன்னையடைந்த பக்குவனுக்கும் அந்த ஞாநாநந்தத்தை வருவிப்பனென்பதுங் காண்க" (மூழிவி. பொது. ஞ. உரை.) [அஜகஜாந்தர ந்யாய: அஜ- ஆடு. கஜ யானை. அந்தரம் - வேறுபாடு.]

**அசகசாந்தரம்**—அசகசாந்தரநியாயம்.

**அசகண்டா**—தைவேளை (மலை.)

**அசகத்து**—விடாதது. (சி. சி. உ: ருஎ. சிவாக்.) [அ-எதிர்மறை. ஜஹத்து-விட்டது.]

**அசகந்தை**—தைவேளை [அஜகந்தா: அஜ- ஆடு. கந்தா - பரிமளமுடையது.]

**அசகம்**— 1. மலையாடு. 2. விடாமை. [அஜஹ.]

**அசகரம்**-பெரும்பாம்பு. [அஜகர: அஜ- ஆடு. கரம் - விழுங்குவது].

**அசகரோகம்**—எண்வகை மசூரிகைரோகங்களுள் ஒன்று; அது: பருத்துந் தடித்தும் ரணத்தைத்தருவதாய் அநேக கொப்புளங்கள் எழும்புவதும் கீல்களிலும், முகத்திலும் வீக்கமும், தாகமும், பிசுபிசுப்பான சலக்கசிவும் உண்டாவதுமாயிருக்கும். (சீவரட். கசச). [அஸஹ - தாங்கக்கூடாத. ரோக - நோய்].

**அசகல்லி**-குழந்தைகட்குவரும் ஒருவகை நோய் (பதார்த்த. 1155).

**அசகல்லிகாரோகம்**-அசகல்லி. (பதார்த்த 1155 உரை.)

**அசகலக்ஷணை**—விடாதலக்கணை; அது: தன்பொருளைவிடாது அதனோடு சம்பந்தமுள்ள வேறுபொருளைத் தருவது. "கவிகையாளர் செல்கின்றார்" - இவ்வாக்கியத்திலே கவிகையென்னுஞ்சொல் அதன் பொருளை விடாது அதனைக்கொண்டுவரும் புருடரைக் கருதவருவது. (தருக்கசங்கிரகவுரை. பக்கம் சஅ.)

**அசகவம்**—சிவன்வில்.

**அசகளன்** — சைநசமயத்திற் சொல்லப்பட்ட இருபத்துநான்குதீர்த்தங்கருளொருவன். (த. நி. போ. கங.)

**அசகளிகாரோகம்** — ஒருவகைச் சுத்திரவிரணரோகம்; இது சிலேட்டுமவாதங்களினால் பயற்றினைக் கயிற்றிற்கோத்ததுபோல நீளமாக மினுமினுப்புடன் நோவில்லாத கொப்புளங்களை உண்டாக்குவது. இது பிரதானமாகக் குழந்தைகளுக்குவரும். (சீவரட். ௩௦அ.)

**அசகாயசூரன்** — வேறொருவரது சகாயமில்லாமற் பகைவெல்லும் பலமுள்ளவன்.

**அசகாயம்**—சகாயமின்மை. (சி. சி. ச: ச௦. சிவாக்.)

**அசங்கதம்** — 1. அவமதிக்கப்பட்டது. 2. சமமற்றது. 3. ஒழுங்கின்மை. 4. சிதறினது. 5. தனிமையானது. 6. நெகிழ்ந்தது. 7. பற்றில்லாதது. 8. பொருத்தமில்லாதது, ஒவ்வாதது. 9. வியூகம் நான்கனுளொன்று; அது: சேனையை வேறுவேறாகநிறுத்துவது. (வள். எகூஎ. உரையின்கீழ்ப் பிற்குறிப்புரை.)

10. வெறுப்பு. 11. பொய். [1, 2. 5,7,8, 10. அஸஜ்ஞ்த: அ - எதிர்மறை. ஸஜ்ஞ்தம் - பொருத்தம். 4, 6, 9, அஸம்ஹத: ஸம்ஹத - திடமாயொன்றியிருப்பது.]

அசங்கதி—1. ஒன்றோடு கூடாமை. 2. ஒவ்வாமை. 3. தொடர்பின்மை. (மாறனலங். 203.) [அஸங்கதி: அ - எதிர்மறை. ஸங்கதி - கலப்பு.]

அசங்கதியலங்காரம் — தொடர்பின்மையணி. (குவ. ௩௭.)

அசங்கதியாடுதல் — பரிகசித்தல். 'அந்தமாமுனியுரைத்ததை யசங்கதியாடி' (செவ்வந்திப்பு. உறையூரழித். 60.)

அசங்கம் — 1. ஆசையின்மை. 2. உலகப்பற்றின்மை. (உ-ம்.) "அனையனவிங்கான் காலுமுண்மைப்போதத் தழுந்தியயற்சங்கமறலசங்கமாகும்" (ஞானவா. உற். ௭௭.) 3. தடுக்கப்படாதது. 4. தனிமை. (உ-ம்.) "விளங்குசுப்பிரகாசமாயசங்கமாய்"(வேதாரணியபு. வரன்முறை. ருச.) 5. நிச்சயம். 6. பயமின்மை, அஞ்சாமை. (உ-ம்.) "தண்டதரற்கினியசங்கம்" (திருச்செந்தி. ௧௦.) 7. விரோதம். [1, 2, 3, 4, அஸங்க: அ - எதிர்மறை. ஸங்க - பற்று, சேர்வு; 5, 6, அஸங்க: அ - எதிர்மறை. ஸங்கா - ஐயம், பயம்.]

அசங்க்ரமமாசம்—சங்கிரமணத்தின் ஆதியந்தங்களிலே அமாவாசை வர நிகழும் மாதம். (விதாந. குணகுண. அக. உரை.)

அசங்கன்—1. கூட்டமில்லாதவன். (உ-ம்.) "நிட்களவசங்கசஞ்சலரகித" (தாயு. கருணாகர. ௧.) 2. புருடன். (சாங்கியம்) [அஸங்க:]

அசங்கிதம்—1. அச்சமில்லாதது. 2. சந்தேகமில்லாதது. [அஸங்கித: அ - எதிர்மறை. ஸங்கிதம் - அச்சமுடையது, சந்தேகமுடையது.]

அசங்கியம்—1. அருவருக்கத்தக்கது; அசிங்கம். [இது அசகியம் என்பதன் விகாரம் போலும்.] 2. எண்ணிறந்தது. [அஸங்க்ய: அ - எதிர்மறை. ஸங்க்யா - எண்.]

அசங்கியா — எண்ணிறந்தது. (வி-ணி. உ௬௪.) [அஸங்க்யா: ஸங்க்யா - எண்.]

அசங்கியேயம்—எண்ணக்கூடாதது. (உ-ம்.) "அசங்கியேயகிரந்தம்" (பௌட். தந்திர. உருஇ.)

அசங்கியை—அசங்கியா.

அசங்கிரகம் — 1. இரவாமை. (மணிமேகலை. முதற்பதிப்பு. பக். ௩௯அ.) 2. பின்னுக்குவேண்டுமென்று பொருளைத் தேடிவைத்துக்கொள்ளாமை. (மணிமேகலை. முதற்பதிப்பு. பக். ௩௩அ.) [அஸங்க்ரஹ: ஸங்க்ரஹ - தேடிவைத்தல்.]

அசங்கு—அசங்கென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், பெயரெச்சத்தொகையும்.

அசங்குதல்—அசைதல், நடுங்குதல். (உ-ம்.) "கண்டசங்கரனுன்முகன் கைத்தலம் - விண்டசங்கிட"(இராமா.இராவணன்வதை.உஅ.)

அசங்கை—1. சந்தேகமின்மை. 2. பயமின்மை. [அஸங்கா: ஸங்கா-சந்தேகம், பயம்.]

அசங்கையன்—சந்தேகமில்லாதவன். (உ-ம்.) "அசங்கையனையமரர்கடஞ் சங்கையெல்லாந் தீர்த்தானை" (தேவா. திருக்கீழ்வே. ௧. திருநா.) [சங்கையன்-ஐயமுடையவன்.]

அசசாரணம் — பூரட்டாதிநக்ஷத்திரத்துக்கதிதெய்வம். [அஜசரண:]

அசசீவிகன்—ஆடுகளைமேய்த்தாவது ஆட்டுவியாபாரஞ் செய்தாவது சீவிப்போன். [அஜஜீவிக: அஜ-ஆடு. ஜீவிக-ஜீவிப்போன்.]

அசசூரம்—1. நெருஞ்சிற்பூண்டு. 2. முருங்கைமரம்.

அசஞ்சத்தம்—பற்றுதலில்லாதது. [அஸம்ஸக்த: அ - எதிர்மறை. ஸம்ஸக்தா - பற்றுதலுடையது.]

அசஞ்சத்தி—பற்றின்மை, சங்கற்பம் அறல்; அஃது உண்மையிலே மனம் ஸ்திரப்பட்டுப் பொய்ம்மைகளெல்லாவற்றையும் மறந்துவிடுதல். [இதனை ஐந்தாம் ஞானபூமியென்பர்.] (உ-ம்.) "தத்துவத்தின்மனமுறைத்துமித்தையெலா மறத்தலசஞ் சத்தியாகும்" (கைவல். சந்தே. கருக.) [அஸம்ஸக்தி.]

அசஞ்சயம் — சந்தேகமின்மை. [அஸம்ஸய: அ - எதிர்மறை. ஸம்ஸய - சந்தேகம்.]

அசஞ்சலம்—அசைவின்மை. [அஸஞ்சல:]

அசஞ்சலர் — அசைவில்லாதவர், கடவுள். (உ-ம்.) "வையைத்துறைவரசஞ்சலர்" (மதுரைப்பதிற். ருஅ.)

அசஞ்சலன்—சலியாதவன். (ஞாந. 48. 45.)

அசஞ்சிதன் — சஞ்சிதகன்மமில்லாதவன். [அஸஂசித:]

அசட்சுதரிசநம்—தீக்குணமாகிய தரிசநாவரணீயத்தினொருவகை. (சைநம்.) (சி. சி. பர. சமணரில் நிகண்டவாதிமதம். இரண்டாங்கவியுரை.)

அசட்டர்—குற்றமுடையவர். (உ-ம்.) 'விளைத்தொழிற்கள்வராயுழலசட்டர்களைவரை' (இராமா. திருவவ. எசு.) [அசடு - குற்றம். அர் - ஒருவிகுதி.]

அசட்டாளம்—1. ஆபாசம். 2. ஒழுங்கீனம். (உலகவழக்கு.)

அசட்டி—அசமதாகம். (வைத்தியபரி.)

அசட்டுவிழி — உள்ளக்குற்றத்தை வெளியாக்கும் பார்வை. (உலகவழக்கு.)

அசட்டை—1. மதியாமை. 2. பராமுகம். (உ-ம்.) "அசட்டையற் றெழுகி மைய லாக்குவனென்றுபோனாள்" (நல். பார. துட்டியந்த. உகூ.)

அசடம் — சடமல்லாத வஸ்து. (உ-ம்.) "அசடமாமயமசங்கமதுலம்" (கைவல்.சந். தே. கஙஎ.) [அஜட: அ - எதிர்மறை. ஜட- அறிவற்றது.]

அசடன் — 1. களங்கமுள்ளவன். 2. கீழ்மகன். (உ-ம்.) "அசடற்குபர்வொப்பதினற் க்ருபையுற்றடிமைக்கொருசொற்புகல்வாயே' (திருப்பு. ௬௦௦.) 3. சடமில்லாதவன். (உ-ம்.) "சதுராநபசடனுயாநந்தத்தைத்தவிர்ந்து"(ஞாநவா.உபசா.௩௧.)[அ-எதிர்மறை. ஜட - அறிவற்றபொருள்.] 4. சோம்பேறி. [1, 2, 4. அசடு - குற்றம். அன் - ஒருவிகுதி.] 5. நல்லொழுக்கமுடையவன். [அஶட: அ - எதிர்மறை. ஶட-தீயன்.]

அசடி—குற்றமுள்ளவள், பழுதுள்ளவள். (உ-ம்.) "அசடிகள் கசடிகண் முழுப்புரட்டிகள்" (திருப்பு. உசஉ.) [அசடு; இ.]

அசடு—1. இரும்பு முதலிய உலோகக்கனிற்பெயரும் பொருக்கு. 2. குற்றம், பழுது. 3. மௌட்டியம். 'அறிவுளோர் தமக்கும் யாதோ ரசடது வருமே யாகில்' (விவேக சிந். 64). 4. மூடன். 'அந்த அசடு எங்கே' (உலகவழக்கு.)

அசடுதட்டுதல்–1. அறியாமை புலப்படுதல். 2. பொலிவழிதல். 'அந்த ஊர் அசடுதட்டியிருக்கிறது' (உலகவழக்கு.)

அசடுவழிதல்–அறியாமைபெருகுதல். 'அவனிடத்தில் அசடுவழிகிறது' (உலகவழக்கு.)

அசத்தர்—1. அஞ்ஞாநிகள். (உ-ம்.) "புகலருமசத்தர்தம்பாற் பொருந்தியவலகையே போல்" (சிவப்பிர. கூ. க.) 2. வலிமையற்றவர். (உ-ம்.) "அசத்தரேலீகைவேண்டுவவீந்தும்விருப்பினுற்போகவேவுமின்" (சேதுபு. சேதுவ. எ௦.)

அசத்தல்–அசந்துபோதல்.(உ-ம்.) "பவளவல்லிகளெனச்சிலரசந்தார்" (இராமா. தைலமா. கரு.)

அசத்தன் — 1. பற்றற்றவன். 2. இவ்வுலகப்பற்றற்றவன். 3. முருகக்கடவுள். (உ-ம்.) "உந்திகலசத்தன்" (கலைசை) [அஜம் - ஆடு. அத்து - ஒரு சாரியை. அன் - ஒரு விகுதி.] 4. வலிமையில்லாதவன். (உ-ம்.) "அன்னவனுமிதுவொழிய வாக்கமாட்டா னசத்தனுமெனில்" (சிவப்பிர. உ: ரு.)

அசத்தி—வலியின்மை. (உ-ம்.) "கிலேசத்தா லசத்தியாற்றுயரம்"(சூத.எக்கி. பூ. கஎ. கரு.) [சக்தி - வலி.]

அசத்தியம்–பொய்.(உ-ம்.) "சத்தியமன்றியசத்தியமறியீர்" (உபதேச. சிவத்துரோ. கஉஅ.) [அஸத்ய: ஸத்யம் - மெய்.]

அசத்தியோநிர்வாணம்—நிர்வாண தீக்ஷைவகையிரண்டனுளொன்று; அது: தேகாந்தத்தின் முத்தியைப் பயப்பதும் வாலீசர்முதலிய மந்தபக்குவர்களுக்குச் செய்யப்படுவதுமாம். (சைவச. ஆசாரி. சுஉ. உரை.) [அஸத்யோநிர்வாண: அ - எதிர்மறை. ஸத்ய- உடனே. நிர்வாணம் - மோக்ஷம். உடனே மோக்ஷங்கொடுத்தலில்லாததென்றபடி.]

அசத்து—1. இல்லாதபொருள். சி. சி. கூ. ரு. மறை.) 2. பொய். (உ-ம்.) "அசத்தினிற் செல்கிலாச் சதுமுகத்தவற்கு" (இராமா. இராவணன்வதை. ககஎ.) 3. தீயது. 4. நிலையில்லாதது (திருக்காளத். பு. 32. 40.)

5. மாயை. (உ-ம்.) "நீளவான்மாவினுண்மையை மறைத்துநிற்றலி ஞற்றமமென்றும், வாளவிர்வித்தையென்னு ஞானத்தை மறைத்தலினவித்தையே யென்றுங், கோளுறஞ் ஞாநகாரணமாகிக்குலவலின்மோகமேயென்று, மாளுறுமசத்துவிலக்ஷணமாகியமைதலினுலசத்தென்றும்", "உலகுதித்திடற்குக்காரணமாகியுறைதலிற்காரணமென்று, மிலகுகாரியமாகியவுலகாகி யிருக்கவுந் தெரிதரப்படாத, வுலனுறுதலினவ் வியத்தமேயென்றும் வகுப்பரம் மாயைக்குப் பெயர்கள்" (சூத. சிவமா.அ: கഠ, கக.) [அஸத்: அ-எதிர்மறை. ஸத்-உள்ளது. நல்லது.]

அசத்துக்கள்—கீழோர், சிறியோர்.

அசத்துவம் — 1. இன்மை. 2. தீமை. 3. வலியின்மை. 4. வெளிப்படாமை. [அஸத்வ: ஸத்வம் - உண்மை.]

அசத்துவாபாதகம்—வஸ்து இல்லையென்று தோன்றும்படிசெய்யுஞ் சத்தி. (உ-ம்.) "பிரமமில்லையென்கிற விகாரத்துக்குக் காரணம் அஞ்ஞானத்தின் அசத்துவாபாதக சத்தியாம்" (விசார. கஉഠ.)

அசத்தை — 1. இன்மை. 2. தீமை. 3. பொய். 4. வெளிப்படாமை. [அஸத்தா: ஸத்தா - உண்மை.]

அசதி—1. ஔவையாராற்கோவைபாடப்பெற்ற ஓரிடையன். (உ-ம்.) "ஆயுங்கடைமணியைவேலசதி" (அசதிக்கோவை.) 2. கற்பில்லாதவள். (உ-ம்.) "படையனையவிழியுயரிலாயுள்போம் - ஆழமேலசதியாயுழன்று சோரும்" (திருநெல்.மகளிரி.ருஉ.) [அஸதீ: ஸதீ - கற்புடையவள்.] 3. சிரித்தல், புன்னகைசெய்தல். (உ-ம்.) "ஐயனுமசதியாடி" (கூர்மபு. இராம. வந. சகூ.)

அசதிக்கோவை—ஒருநூல்.

அசதிசன்னி—ஒருநோய்.

அசதிசுதன் — சோரபுத்திரன். [அஸதீஸுத:]

அசதியாடல் — 1. பரிகசித்தல். (உ-ம்.) "தொறுக்கொண்ட கள்வரிவரோவெனச் சொல்லிநக்காங், கொறுக்கப்படுவாரிவரென்றங்கசதியாடி" (சிந்தா. கஙக. ஙகடு.) 2. மிக்குச்சிரித்துவிளம்பல்.

அசதீசுதன்—சோரபுத்திரன். [அஸதீஸுத: அஸதீ-கற்பில்லாதவள். ஸுத-மகன்.]

அசந்தம்—உயிரெழுத்திலேமுடியுஞ்சொல். (உ-ம்.) "ஆயுமலந்தமசந்தம்" (பி. வி. தின். சசு.) [அஜந்த:அச் -உயிரெழுத்து. அந்தம் - ஈறு.]

அசந்தர்ப்பம்-சமயமின்மை, சரிப்படாமை.

அசந்தானம்—1. சந்ததியின்மை. 2. சமாதானமின்மை. [அஸந்தாந: ஸந்தாநம் - சந்ததி, சமாதானம்.]

அசந்தி—கூடுதலின்மை. [அஸந்தி: ஸந்தி-கூடுதல்.]

அசந்திக்தம்—சந்தேகப்படாதது. [அஸந்திக்த: ஸந்திக்த - சந்தேகப்பட்டது.]

அசந்துட்டம் — 1. பிரியமின்மை. 2. ஸந்தோஷமில்லாமை. [அஸந்தோஷ:]

அசந்துட்டன் — சந்தோஷமில்லாதவன். (வாசுதே. எகூ.) ஸந்துஷ்டன் - பிரியமுடையவன்.]

அசந்துட்டி — 1. சந்தோஷமின்மை. 2. திருப்தியின்மை, மனக்குறைவு. (உ-ம்) "புளிப்புங்கசப்புமுறைப்புமுவர்த்தலுஞ் சொல்லப்பட்ட இவைகளிற்சந்துஷ்டியசந்துஷ்டியின்றிச் சமனுயுண்பவனும்" (ஞானவா. விர. சூ. கங. உரை.) [அஸந்துஷ்டி: ஸந்துஷ்டி - பிரியம்.

அசந்நியம்—1. துர்க்குறியானதோற்றம். 2. பிறப்பற்றது. (உ-ம்.) "அஜந்யசம்யோகத்திற்கு நித்தியவிகாரித்துவம் வரும்" (சி. சி. உ. க. சிவாக்.) [அஜந்ய: ஜந்யம் - சநித்தது.]

அசநபன்னி—1. சிற்றகத்தி. (மலை.) [அஶநவணீ: அஶந - உணவு. வணீ - இலை.] 2. சோறு. 3. வெள்ளுள்ளி. 4. வேங்கைமரம். (2, 3, 4. வைத்தியபரி.)

அசநம்—1. சோறு. (சூ. நிகண். சு. உஉ.) 2. உணவு. (உ-ம்.) "அசனமிடுவார்கடங்கண்மனைகடலைவாசனின்று" (திருப்பு. கககு.) 3. பசி. (பிங்.) 4. வெள்ளுள்ளி. (வைத்தியபரி.) 5. வேங்கைமரம். (உ-ம்.) "சாளசண்பகவசநவப்பிரத்தகன" (இராமர். கிஷ்கிந். ஆறு

செல். கசு.)[1, 2, 5. அசந.] 6. கொழுப்பு. 7. பகுதி. 8. அளவு. (6, 7, 8. பிங்.)

அசநவம் — பிருதுமன்னனுடையவில். (கூர்மபு. தக்க. சபி. சு. உரை.)

அசநவு—இலையத்தி. (வைத்தியபரி.)

அசநவேதி—1. சீரகம்.(உ-ம்.) "அசநவேதி புல்ல" (இராசவைத். ௩௭.) 2. போசன குடாரி. (இராசவைத். 52.)

அசநாமிர்தநைலம் — ஒருவகைத் தைலம்; இது: வேங்கைப்பட்டை சீந்தில்முதலிய வற்றினின்று வடிப்பது. வடிக்கும்முறை தைலவ. சசு, சஎ-ஆங்கவிகளிற் காண்க.(உ-ம்.) "வேங்கையதள் - அசமகற்றிவாங்குமிந்தவச நாமிர்தத்தைலம்.

அசநி — 1. ஆறுதாரங்களுளொன்றாகிய விசுத்தியின் பதினறு பதுமதளங்களுள் ஒன்றிலிருக்கும் அதிதேவதை. (சி.சி.அ:உக. மறை.)[அசநி.] 2. இடியேறு. (உ-ம்.) "விண்ணிடத்தசநி"(பாரத. நிவாத. எஅ.)[அஶநி.] 3. சாம்பிராணியிலை. (இராசவைத்.)4. வச்சிராயுதம். 5. அனிச்சமரம். (வைத்தியபரி.)

அசநிபாதம்—இடிவிழுதல். (சி. சி. கக: எ. சிவாக்.) [அஶநி: அசநி - இடி. பாதம் - விழுதல்.]

அசநியேறு—இடியேறு. (உ-ம்.) "எங்குளன்கொலவனெங்குளன்கொலெனவசநியேறெனவுரப்பி" (கூர்மபு. அந்தகா. சுக.)

அசநோற்பவவிக்கல்—ஐவகைவிக்கல்களுளொன்று. அது: காரவஸ்து, மிகுதீக்ஷண வஸ்து, சீர்ணமாகாதவஸ்து, கடிநவஸ்து முதலியவைகளாற் பிறந்து நோவில்லாமற் கண்டத்திலே அற்பத்தொனி அற்ப இருமல் என்னும் குணங்களையுண்டாக்குவது. (சீவரட். ௫௬.)

அசப்பியம்—அவையல்கிளவி, சபைக்குத் தகாதது. [அஸப்ய: ஸப்ய - சபைக்கேற்றது.]

அசப்பு-பராக்கு.'ஒருவ ரசப்பிலே என்னை யழைத்தபோது' (அருட்பா. 6. பிள்ளைப் பெரு. 53.)

அசபம்—அசபாமந்திரம். [அஜப: ஜப - செபித்தல்.]

அசபா — 1. ஒருமந்திரம். அது நான் அவன் எனப் பொருள்படும் ஹம்ஸ (அஞ்ச என்பது. அவன் நான் எனப்படுஞ் சோகம் (ஸோஹம்) என்பதுவே யெழுத்துநிலைமாறி ஹம்ஸ என்றாயிற்று. (தாயு. தேசோ. சு.) 2. செபிக்கப்படுதலில்லாதது. [அஜபா.]

அசபாநலம்—அசபையாகிய அக்கினி.(உ-ம்.) "அசபாநலங்கூறினபின் மவுனியாய்" (தாயு. தேசோ. சு.) [அஜபா - ஒருமந்திரம். அநலம்-அக்கினி. வினைகளை நீறாக்கல்பற்றி "அசபாநலம்" எனப்பட்டது.]

அசபாவித்தை—அசபாமந்திரம். (உ-ம்.) "இன்னுமசபாவித்தையெனு மிதனையிலகாத் திகனேயாய் - மன்னுங்குரவன்றிருவடிக்கு வழிபாடாற்றியுணர்ந்துகொளு" (சூத.எக்கி. பூ. எ. ரு.) [அஜபாவித்யா.]

அசபிண்டன்—சபிண்டனல்லாதவன்.[அஸபிண்ட: அ-எதிர்மறை. ஸபிண்ட-சமானதேகமுடையவன், சமானபிண்டமிடுவோன்; ஞாதி.]

அசபிண்டா — சபிண்ட சம்பந்தமில்லாத கந்நி. (பராசர. சுஎ.) [அஸபிண்டா: அ; ஸபிண்டா.]

அசபிண்டி—சபிண்டியல்லாதவள். (பராசர. சுசு.) [அஸபிண்டி: அ; ஸபிண்டி]

அசபுத்தன் — சதருத்திரருள்ளே யிந்திர திக்கிலிருக்கும் தசருத்திரருளொருவன்.(விணி.)

அசபேசத்திசிவாத்மகம்— அசபாமந்திரத்திற் சத்திவடிவான சகாரமும் சிவவடிவான அகாரமும். (உ-ம்.) "அந்த ஆறுதாரங்களிலும் அசபேசத்தி சிவாத்மகமாக நிற்கும் முறைமையைப்பார்த்து" (சி. சி. அ: உக. உரை. சிவாக்.)

அசபை—அசபாஎன்னும் மந்திரம். (உ-ம்.) "பெருக்கமிகுந்தொளிரசபைக்கவயவங்களாயன்னப்பெயர் மறுக்க, ணிருக்கு மகரஞ்சகரமிரண்டுமோராகாரமியல்பினெய்துங் - திருக்கறவெவ்வாறென்னிற் பேருளாற் சிவையொடு சிவணியமேனி-யருக்ககரம் புருடபாகஞ்சகரம் பரைபாகமாகுமாலோ" (சூத.எக்கி. பூ. ச. கக.) [அஜபா.]

அசம்—1. அவமதிச்சிரிப்பு. [ஹஸ.] 2. ஆடு. (உ-ம்.) "பாயசங்கண்டு பரியாக்கியத்த" (புலியூரந். ச.) [அஜ.] 3. வெள்ளாட்

டேறு. (பிங்.) 4. ஆன்மா. 5. ஈருள்ளி. 6. உள்ளி. 7. சந்தகம். 8. சிரிப்பு. [ஹஸ.] 9. நெல். 10. பிறப்பில்லாதது. (உ-ம்.) "அசமநந்தமவிநாசி" (கைவல். சந்தே. கஙஎ.) [அஜ.] 11. மூன்றுவருடநெல். 12. அத்திக்காய். 13. நெற்குவை. (தைலவ. தைல. 43.) [5, 6, 7, 9, 11, 12 வைத்தியபரி.]

அசம்ஞ்யாசத்துவலோகம் — (பௌத்த.) பிரமலோகம் இருபதுள்ளே பதினொராவதெனப்படும் உலகம். (மணிமேகலை. ஙு.)

அசம்பந்தம்—தொடர்பின்மை.

அசம்பவம்—1. அபூர்வகாரியம். 2. இலக்கணத்தைக்கெடுக்குங் குற்ற மூன்றனுள் ஒன்று; அஃதொருசாதிப்பொருளுக்குளதெனச்சொல்லப்பட்டஇலக்கணம்,அச்சாதிப்பொருளொன்றிலும் இல்லாதிருத்தல். [அஃதாவிற்கொற்றைக்குளம்புடைமை. ஒற்றைக்குளம்புடைமையாகிய இலக்கணம்,அச்சாதிப்பொருளொன்றினுஞ் சம்பவியாமை யறிக.] (தர்க்கசங். ஙஉ.) 3. உற்பத்தியின்மை, அபாவம். 4. சூநியம். (வைத்தியபரி.)

அசம்பவாலங்காரம்—கூடாமையணி. (குவ. ஙசு.) [அஸம்ஹவாலங்காரः.]

அசம்பாடிதர்—சம்பாஷணை செய்தற்குத் தகுதியில்லாதவர். (உ-ம்.) "வேதபாஹியர்களாகையால் அசம்பாஷிதரானதுகொண்டவர்களோடு" (சி.சி.அ:கச.சிவாக்.) [அஸம்ஹாஷித: ஸம்ஹாஷித - சம்பாஷணைக்கு யோக்கியமானவர்.]

அசம்பாவநா—கிரகித்தற்கருமை, கிரகித்தற்கேலாமை. (உ-ம்.) "இது அசம்பாவநாமாயையநிர்வாச்சியம்" (த. நி. போ. கூஅ.) [அஸம்ஹாவநா: ஸம்ஹாவநா-தியானம்.]

அசம்பாவிதம் — நேரக்கூடாதது (உ-ம்.) "பிரவாகத்திற்கிராமமிருப்பது அசம்பாவிதம்" (விசார. ஙஉரு.) [அஸம்ஹாவித: ஸம்ஹாவித - சம்பவமாதற்கியைந்தது.]

அசம்பி—அசம்பை.

அசம்பிரக்ஞாதசமாதி—நிராலம்பசிவயோகசமாதி. (பெரியபு. முதற்கவியுரை.)

அசம்பிரேட்சிதம்—நன்றாக ஆலோசிக்கப்படாதது. [அஸம்ப்ரேக்ஷிதம்.]

அசம்பிரேட்சிவகாரித்துவம் — நன்றாக ஆராயாது செய்தல். (பஞ்சதந்தி.) [அஸம்ப்ரேக்ஷ்யகாரித்வம்: அ-எதிர்மறை. ஸம்ப்ரேக்ஷ்ய - நன்றாக ஆலோசித்தது. காரித்வம் - செய்வோன் தன்மை.]

அசம்பை—பிரயாணிகள் தோளிலே வைத்துக்கொண்டு செல்லுதற்குரிய ஒருவிதப் பை.

அசம்மதி—சம்மதியின்மை.

அசம்வேதநம்—உணர்வின்மை. (உ-ம்.) "மநதையுனதுவசமாக்கியசம்வேதநத்தினால் ஞாநஸ்வரூபமாய் நீக்குவாய்" (ஞாநவா. நிருவா. ச. உரை.) [அ; ஸம்; வேதநம்.]

அசமஞ்சசம்—1.பொருந்தாதது. 2.தெளிவுற விளங்காதது. 3. மதிகேடானது. [அஸமஞ்ஜஸ: ஸமஞ்ஜஸ - பொருத்தமுடையது, சமமானது.]

அசமஞ்சன் — சகராசாவுடைய மூத்த மகன். [அஸமஞ்ஜ.]

அசமடம்— } ஓமம். (வைத்தியபரி.)
அசமதாகம்— }

அசமந்தம்—1. சம்பந்தமின்மை 2. மந்தகுணம். 3. மலையத்தி. (வைத்தியபரி). 4. மலையாமை.

அசமந்தன்—மந்தகுணமுடையவன்.(வழக்கு.)

அசமந்திபம்—மலையத்தி (மலை.)

அசமபாதை—சேனை நடக்கும் வழி.

அசமம் — 1. ஒற்றை, இரட்டையல்லாதது. [அஸம.] 2. அசமதாகம். 3. நீர்முள்ளி. (2, 3 வைத்தியபரி.)

அசமயம்—1. இயையாதகாலம். 2. கெட்டகாலம். [அஸமய: ஸமய - காலம்.]

அசமர்த்தம்—சாமர்த்தியமில்லாதது, பயனில்லாதது. (உ-ம்.) "ஆதலால் அசமர்த்தம் விசேடணம்"(தர்க்கபா. எஎ.) [ஸமர்த்தம் - பயனுடையது.]

அசமர்த்தவிசேடணசித்தம் — சொருபாசித்த எதுப்போலிவகையுளொன்று. (தர்க்கபா. எஎ.)

அசமர்த்தவிசேடியாசித்தம்—சொருபாசித்த ஏதுப்போலிவகையுள் ஒன்று. (தர்க்கபா. எஅ.)

அசமருதம்—அத்திமரம். (வைத்தியபரி.)

அசமவாயி—1. அசமவாயிகாரணம். (தர்க்கபா. ௪.) 2. சமவாயமல்லாதது.

அசமவாயிகாரணம்—சமவாயிகாரணமல்லாதது. (தர்க்கபா. ௮.)

அசமுகன்—1. ஆட்டின் முகத்தையுடையவன். (உ-ம்.) "அசமுகத்தக்கன்" (கந்தபு. யாக. ௧௬௬.) 2. தக்கன். [ஸஜமுகவ.]

அசமுகி–1. ஆட்டுமுகமுள்ளவள். 2. சூரனுக்குத்தங்கையாகிய ஓ ரசுரப்பெண். (கந்தபு. அசமுகிநகர். ௧.) [ஸஜமுகவீ.]

அசமோதகம்— } ஓமம். (வைத்தியபரி).
அசமோதம்— } [ஸஜமோதி]

அசர்—1. அகிர். 2. பொடுகு. (வைத்தியபரி).

அசர்தல்—அயர்தல். 'அசர்ந்து தூங்கிவிட்டேன்' (வழக்கு.)

அசர்வகர்த்திருத்துவம் — சர்வகர்த்திருத்துவமின்மை. (உ-ம்.) "அசர்வஞ்ஞத்துவ அசர்வகர்த்திருத்துவரூப பசுத்துவத்தையுமுடையனாகி" (சி. சி. எ: உ. உரை. ஞாநப்.)

அசரசீவன் — தானுமியங்குந்தன்மையில்லாத உயிர்ப்பொருள். (உ-ம்.) "சரசீவன் அசரசீவன், சராசரசீவன் இந்தமூன்றுக்கும்" (த. நி. போ. ௨௪௧.) [ஸவரஜீவ]

அசரப்போடுதல்—தாமதிக்கவிடுதல் (வழக்கு).

அசரம் — தானுமியங்குந்தன்மையில்லாதது, நிலைத்திணை. (உ-ம்.) "அசாசரபேதமான" (தாயு. சின். ௪;) [ஸவர: அ - எதிர்மறை. வர - அசைவது, செல்வது.]

அசராது—கொன்றை (வைத்தியபரி).

அசரியம்—1. அழிவின்மை. 2. சிநேகம். [ஸஜரம்: ஜரம் - அழிவு.]

அசரீரி—ஆகாயவாணி. (உ-ம்.) "என்றது வானிடைத்தசரீரி." (பாரத. புட்ப. ௭௮.) 2. சரீரமில்லாதது. (உ-ம்.) "தானன்று நானன் றசரீரியன்று சரீரியன்றே" (கந்தால.) 3. சரீரமில்லாதவன். (உ-ம்.) "கர்த்தா சரீரியோ அன்றி யசரீரியோ" சி. சி. ௧: ௩௮. உரை. ஞாநப்.)

அசரு—1. அகிர், பொடுகு. 2. புண்ணின் அசடு.

அசருதல்—அயருதல்.

அசரை — 1. அழிவின்மை. [அஜரா: ஜரா - அழிவு.] 2. ஒரு மீன். [வழக்.] 3. நரைதிரையின்மை, வார்த்திகமின்மை. [ஜரா-நரைதிரை, வார்த்திகம்.]

அசல் — [அயலென்பதன்றிரிவு.] 1. சமீபம். 2. அந்நியம் (அக. நி.) 3. கொசுகு. (உ-ம்.) "மேகநோய் பெருங்காற்றின்மேவசலென்றுணரே" (தைல. ௩௩.) 4. மேலான துரியம். 5. மூலப்பிரதி. 6. முதல். 'அசலும் வட்டியும்' (வழக்.)

அசல்பிளந்தேறிடுதல் — பிறரிடஞ்சேர்ப்பிக்கை. (அஷ்டாதச. அர்ச்சி. ப்ர. 1.)

அசல்வியாஜ்யம்—ஒழுக்குவியாஜ்யம்.

அசலசலம் — நால்வகைச்சிவலிங்கங்களுளொன்று; அது: அசலசலலிங்கம். (உ-ம்.) "மண்டலமுங்காணினசலசலங்காண்" (சைவச. பொது. ௧௨௩.) [அசலசல: அனந்தவிசயமுதலிய தொண்ணூற்றுறுமண்டலலிங்கங்களுள்யாதொன்றுதீக்ஷைக்குச்சொல்லியபடி வேதிகையிலிட்டுப் பூசிக்கப்படின் அசலமெனவும், இட்டலிங்கமாக நாடோறுமிட்டுப்பூசிக்கப்படிற் சலமெனவும் நிற்றலால் "அசலசலம்" எனப்பட்டது.]

அசலபதி-இமயமலை. [ஸவலவதி: அசல-மலை. பதி - தலைவன்.]

அசலம்–1. ஆயுதப்பிரயோகத்திற் செபிக்கப்படும் ஒருமந்திரம். 2. கற்பாஷாணம் (வைத்தியபரி). 3. அசைவற்றது. (உ-ம்.) "அசித்தாயசலமாகி" (சிவப்பிர. ௨. ௪.) 4. நால்வகைச்சிவலிங்கங்களுளொன்றாகிய அசலலிங்கம். (உ-ம்.) "கோபுரமாதியசலம்" (சைவச. பொது. ௧௨௨.) [போக்குவரவின்மையால் அசலமெனப்பட்டது.] 5. நிலைத்திணை. 6. பூமி. 7. மலை. (உ-ம்.) "பொறியராவிருபுடைபற்றித், தருவலிமிகையாலீர்த்தனரசலந் தன்பெயர் நாட்டியதன்றே" (காஞ்சிப். மணி. ௯.) 8. வேறொருபொருளாலுஞ்சலிக்கப்படாதென்றுமொருபடித்தாய்ச் சுவதந்திரங்கொண்டுநிற்பது. (உ-ம்.) "நித்தமா யொன்றா யசலமா யொளியாய்"(கூர்மபு. பிரகி. ௪.)

அசலர்—அயலார். (உ-ம்.) "அசலருஞ் செச்சேயென" (திருப்பு. ௬௧௫.)

அசலன்—1. அசைவில்லாதவன். 2. கடவுள். 3. சிவன். 4. அருகக்கடவுள். (திவா.)

அசலா—"கண்டத்திலிருக்கும் உகாரத்திலுண்டான பதினாறு கலைகளுளொன்று." (சைவசித்தாந்தம். சி. வி. கிரி. ௨௨. தாற்.)

அசலாதிபன்—1. இமயமலை. 2. மலையரசன். [ஃஅசலாதிப: ஃஅசல - மலை. ஃஅதிப - அரசன்.]

அசலாவதி—"மலையினின்றிழிந்தான்" என்பதிற்போல அசைவில்லாத எல்லைப்பொருள் பற்றி வினைகொண்டுமுடிவது. இது, "அசலஞ்சலமாம் பூரணமாகு மவதி" யென்னும் வீரசோழிய உபகாரக மூன்றாஞ்செய்யுளாற் பெறப்படும்.

அசலேசன்—கிரீசன். (உ-ம்.) "அரனசலேசனம்பொற் றேக்குயர்கோயில்வாயிற் சேறலும்" (உபதேச. சிவபுண். ௩சரு.) [அசல - மலை. ஈச - ஆள்வோன்.]

அசலை—1. உமாதேவி. "அமிர்தையசலைசுமங்கலை" கூர்மபு. திருக்கல். ௨௦) 2. சிற்சத்திமூர்த்தி. 3. பூமி. "அசலைமங்கைதன்மெய்த்தநுவளைத்திட" (கந்தபு. இரணி. ருசு.) [ஃஅசலா: ஃஅ; சலா - அசைவுடையள், அசைவுடையது.]

அசலைமூர்த்தி—ஞானக்கிரியா சிற்சத்திமூர்த்தி; அது: தனது சங்கற்பத்தாற் றானசைவின்றி யசைவினாற் சடகாரிய நிகழப்பண்ணும். (சி. சி. க: ருசு. உரை. ஞானப்.)

அசவல்—1. அசறு. 2. கொதுகு. (சூ. நிகண். ௩: சுசு.) 3. சேறு.

அசவாகநன்—1. அக்கினிதேவன். 2. முருகன். [அஜ - ஆடு. வாஹந:]

அசவை — 1. அசபாமந்திரம். [அஜபா.] 2. பெருவிரலடி.

அசற்காரியம் — உள்ளதல்லாதகாரியம். (உ-ம்.) "இந்திரியங்களை நீங்கிச் சிவனுடைய சீர்பாதத்திலே பொருந்தியழுந்தின ஆன்மா, மீண்டும் அசற்காரியமான இந்திரியங்களிலே வந்து கூடப்பட்டாது" (சி. சி. அ: ௩எ. உரை நிரம்ப.) [அஸத் - பொய். கார்யம் - செய்யப்படுவது.]

அசற்காரியவாதம்—உள்ளதல்லாதகாரியந் தோன்றுமென்று வாதித்தல். "அப்போதான்மாவின் முன் காணாத சிவத்துவங் காணப்படுமாகில் அசற்காரியவாதத்தைத் தாக்கித் தள்ளிச் சற்காரியவாதம் ஆவிர்ப்பவிக்கும்" (சி. சி. எ: உ. உரை. ஞானப்.) [அ; ஸத்-உள்ளது. கார்யம்; வாதம்-வாதித்தல்.]

அசற்கியாதி—அசத்தான ஒன்று உள்ளது போலத் தோன்றுதல். (விசார. அகூ.) [ஃஅஸக - இல்லது. வ்யாதி - விளங்குதல்.]

அசற்சரக்கு—1. முதற்றரமானபண்டம். 2. கலப்பற்றபண்டம். 3. இயற்கைமருந்துச் சரக்கு.

அசற்சீட்டு—மூலமுறி.

அசற்சூத்திரன்—ஒழுக்கமும் தீக்கையுமில்லாத சூத்திரன். "துங்கஞ்சேர் தீக்கையொழுக்கத்தினன்றசூத்திரன்சற்சூத்திரனுமவற்றிற்சாலாப் - பங்கஞ்சார்ந்தவனசற்சூத்திரனும்" (திருவானை. கோச்செங். ௨எ.) [ஸச்சூத்ர - ஒழுக்கமுந் தீக்கையுமுடைய சூத்திரன்.]

அசத்பதம்—1. ஆகாதவழி. 2. துர்ப்போதனை, துராசாரம். [ஃஅஸத்பத: ஸத்பத - நல்வழி.]

அசற்பாத்திரம்—ஈதற்குரியராகாத படிற்றொழுக்கமுதலியவுடைய தீயோர்.

அசற்பாவம்—1. இல்லாதது. 2. கெட்ட கருத்து. 3. தீயகுணம். [ஃஅஸத்பாவ: ஃஅ; ஸத் - நன்மை. பாவ - தன்மை, கருத்து.]

அசற்பிரதி—1. சுத்தப்பிரதி. 2. மூலப்பிரதி.

அசற்பிரதிபக்கம் — அந்வயவியதிரேகியேதுவின் பஞ்சரூபங்களுளொன்று; அது, சாத்தியத்திற்கு விபரீதசாதகமாயிருக்கிற வேறோர் ஏதுவில்லாதிருக்கை. (தர்க்கபா. உசு; சி.சி. அளவை. கக. சிவாக்.) [ஃஅஸத் - இல்லாதது. ப்ரதிவக்ஷம - பக்கத்துக்கெதிர்.]

அசறு—1. ஒரு வண்டு. 2. சேறு. (பிங்க. சு0சு.) 3. சொறி. 4. தலைச்சுண்டு. 5. புண்ணில் அசடு. 6. புழு. 7. சிறுபூச்சி. (வைத்திய பரி.)

அசறுக்கம்—கருமைகலந்த சிவப்பு.

அசறுபாய்தல்—அசும்பொழுகுதல். (திவ். பெரியாழ். 5. 4. 8. வ்யா.)

அசறை—அசரை.

அசன்—1. சிவன். 2. தசரதராசனுடைய பிதா; இவன் இரகுவுக்கு மகன். 3. பிரமன். 4. பிரமனுடைய ஒருமகன். (த. நி. போ. கடுக.) 5. பிறப்பிலி. 6. மன்மதன். 7. விட்டுணு. [அஜ: 1, 3, 5, 6, 7. அ - எதிர்மறை, விட்டுணு. ஜ-பிறந்தவன்.]

அசன்மாநம் — நன்குமதியாமை. [அஸந்மாந.]

அசன்றிா—தைவேளை, வேளை. (மலை.)

அசன்று — உபயதன்மவிகலமென்னுந் திருட்டாந்தப்போலியு ளொன்று. (உ-ம்.) "அசன்றுயுள்ளவுபயதன்மைவிகல, மில்லாப் பொருட்கட்சாத்தியசாதன, மென்னு மிரண்டுங் குறையக் காட்டுதல்" (மணிமேகலை. பா. உகூ. அடி. ௩௭௪.)

அசா — 1. தளர்ச்சி. "அசாவுறுசெருவில்வென்றுடல்கொள்வதற்கு" (கந்தபு. முதனு. ௩அ௩.) 2. பிரகிருதி (சாங்கியம்). 3. மறியாடு. [2, 3. அஜா.]

அசாகசம் — 1. அமைதி. 2. பலாற்காரமல்லாதது. [அ; ஸாஹஸ - பலாத்காரம்.]

அசாகம்—அரசு. (வைத்தியபரி).

அசாகளத்தனம் — ஆட்டின்கழுத்ததர். 'அசாகளத்தனம்போல' (சிவசமவா. 39).

அசாசை—1. களி. 2. புற்கை.

அசாசநம் — 1. அரசாட்சியின்மை. 2. ஆளுகையின்மை. [அஶாஸநம்: ஶாஸநம்- ஆளுகை.]

அசாசி—1. கருஞ்சீரகம். (வைத்தியபரி). 2. சேந்தில்.

அசாட்சியம் — சாட்சியமல்லாதது. [அஸாக்ஷ்யம்: ஸாக்ஷ்யம் - கண்டவாறு கூறுவது.]

அசாணிழலி — உத்தமதாளி, வேலிப்பருத்தி. (மலை).

அசாத்தியம் — 1. அருமை. (ப. மொ. கூ.) 2. சந்தேகம். 3. சாதிக்கப்படக்கூடாதது, சித்தாந்தஞ்செய்யக்கூடாதது. (உ-ம்.) "இது பிரத்தியக்ஷாநுமானாகமங்களினுலேயசாத்தியமாகையினல்" (சி. சி. அளவை. ௪. சிவாக்.) 4. சாத்தியமாக்கக்கூடாதநோய். (உ-ம்.) "பிணியளவு சாத்தியம் அசாத்தியம் யாப்பியமென்னுஞ் சாதிவேறுபாடும், தொடக்க நடு வீறென்னு மதன் பருவவேறுபாடும் வன்மை மென்மைகளு முதலாயின" (வள். கூ௪௯. பரி.) [அஸாத்ய: ஸாத்ய - சித்தியடையத்தக்கது.]

அசாத்திரம் — 1. சாத்திரத்திற்கிசையாதது. 2. சாத்திரமல்லாதது. [அஶாஸ்த்ர: ஶாஸ்த்ர-உறுதிப்பொருளையறிவிக்குந்நூல்.]

அசாத்திரியம் — சாத்திரத்திற் சொல்லப்படாதது. (உ-ம்.) "அசாத்திரியமார்க்கமானது" (ஞானவா.முமுட்.க.உரை.)[அஶாஸ்த்ரீயம்: ஶாஸ்த்ரீயம்-சாத்திரத்திற்சொல்லப்பட்டது.]

அசாதகன் — இல்லறஞ்செய்வோர் இருதிறத்தருள் ஒருவன். (உ-ம்.) "எச்சமாற்றிப், பல்கலையும் பயின்றேற்றுப் பைங்கூழ்கள் விளைவித்தா தியத்தி னீட்டி, வெல்படைகள் பயில்வித்துப் பயின்றுளோ னசாதகனும்" (கூர்மபு. இல்லறபே. க.) [அஸாதக.]

அசாதசத்துரு — 1. தருமபுத்திரன். 2. தனக்குச்சத்துருவில்லாதவன். 3. பிறர்க்குச் சத்துருவாகாதவன். [அஜாதஶத்ரு: அஜாத - தோன்றாத. ஶத்ரு - பகை.]

அசாதநம்—1. அகாரணம். 2. சாதநமல்லாதது. [அஸாதந: ஸாதந - கருவி.]

அசாதம்—பிறவாதது. [அஜாத: ஜாதம் - பிறந்தது.]

அசாதாரணசவ்வியபிசாரம் — ஏதுப்போலிகளைவகையினென்றாகிய சவ்வியபிசாரத்தின் ஒருவகை, அது, சிறப்பனைகாந்திகம்; சபக்கவிபக்கங்களில் இல்லாத ஏது. (தர்க்கசங். ௨௦) [அஸாதாரணஸவ்யபிசார.]

அசாதாரணதருமம் — சிறப்பிலக்கணம். அஃதாவது அவ்வியாத்தி, அதிவியாத்தி, அசம்பவமென்னும் மூன்று தூஷணங்களும் நீங்கிய தருமம். அது பசுவுக்குச் சாசநாதியுடைமைபோல்வது. (தர்க்கசங். ௩௨.) [அஸாதாரணதர்ம.]

அசாதாரணம்—பொதுவல்லாதது. (சிறப்பு.) [அஸாதாரண: ஸாதாரண - பொது.]

அசாதாரணலக்கணம்—சிறப்பிலக்கணம். (உ-ம்.) "தன்னியல்பு என்பது அதிவியாத்தி யவ்வியாத்தி யசம்பவ தோஷ ரகிதமான

அசாதாரணலக்கணம். (சி.சி. அளவை. ௪.சி வாக்.) [ஃஸாதாரணலக்ஷணம்.]

அசாதி — 1. உயிரெழுத்தினை முதலாக உடையது. (உ-ம்.) "அலாதி யசாதியிவை" (பி. வி. ௪௯.) 2. செவ்வாயென்னுங் கிரகம். "சாபல மசாதி நள்ளிற் றகர்களை துலை மேற் கூட்டு" (கணிதாமிர்தம்.) [அஜாதி: அச் - உயிர். ஆதி - முதல்; அஜ - மேடம். ஆதி - அதிபதி.]

அசாது — 1. கற்புத்தவறின மனைவி. 2. தீயவன். [அஸாது: அ - எதிர்மறை. ஸாது - பதிவிரதை, நல்லவன்.]

அசாதுரியம்—சாமர்த்தியமின்மை. சொற் றிறமின்மை. [அசாதுர்ய: சாதுர்ய - சாமர்த்தியம்.]

அசாந்தர் — சாந்தமில்லாதவர். (உ-ம்.) "விரவசாந்தர்கள்" (ஞானவா. சுரகு. ௪௧.) [அசாந்த:]

அசாந்நித்தியம்—1. அண்மையின்மை. 2. சந்நிதிப்படாமை. [அஸாந்நித்யம்: ஸாந்நித்யம் - அண்மை.]

அசாபலம்—அசைவின்மை. [அசாபல: சாபலம் - அசைவு.]

அசாபாலகன்—அசாசீவி. [அஜாபாலக: அஜா-வெள்ளாட்டுமறி. பாலக-காப்போன்.]

அசாமர்த்தியம் — சாமர்த்தியமின்மை. [அஸாமர்த்யம்: ஸாமர்த்யம் - வன்மை.]

அசாரதை—சாரமில்லாமை. [அஸாரதா: ஸாரதா - சாரமுடைமை.]

அசாரம்—1. ஆமணக்கமரம். (வைத்திய பரி.) 2. ஒன்றற்குமுதவாமை. 3. பிரயோசன மின்மை. 4. பெலமின்மை. 5. முக்கியமல் லாதபங்கு. [அஸார.] 6. ஆஸ்தானமண்டபம்.

அசாரவாசி—அரசன் வாயில் காவலன். "ஒரு பூசல் உண்டென்று கூறிய அசார வாசிக்கு" (சீவக. 430. உரை.)

அசாவதானம்—அவதானமின்மை. [அஸா வதான: அ - எதிர்மறை. ஸாவதானம் - அவதானமுடைமை.]

அசாவாமை—தளர்ச்சியடையாமை. (உ-ம்.) "அருமையுடைத்தென் றசாவாமைவேண் டும்" (வள். ௬௧௧.)

அசாவிடல்—இளைப்பாறுதல். (உ-ம்.) "இரைதேர்ந்துண்டசாவிடூஉம் புள்ளின மிறைகொள" (கலித்தொகை. கநஉ.) [அசா-தளர்ச்சி. விடல் - ஒழித்தல்.]

அசாவேரி—வசந்தகாலராகத்து ளொன்று. (சைவச. மாணுக். அ.)

அசி—1-3. அசியென்னேவலும் தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 4. அவமதிச்சிரிப்பு. (சூ. நிகண். கக: சகர. ௩.) [ஹஸி.] 5. ஆயுதம். (சூ. நிகண். கக: சகர. ௩.) மிருகவதைசெய்வதிற் பிரயோகிக் கப்படும் ஆயுதம். [அஸி] 6. ஆனுயெனப் பொருள்படும் ஒருவடமொழி வினைச்சொல்; இது: "தத்துவமசி" என்னுஞ் சாமவேத மகாவாக்கியத்திலே பரமான்மாவுஞ் சீவான் மாவும் அத்துவிதமாயிருத்தலைக் கருதிநிற் கும். (உ-ம்.) "ஆரணங்கடருநத்துவமசிபதங் களின் பொருளறிந்திடாய்" (சி. சி. பர. மா யாவா. மறு. கஅ.) 7. யுத்தம் 8. வாள். (உ-ம்.) "அசிநிகர்விழியினாய்" (நல். பார. வேத்தி. உஉ.) [அஸி.]

அசிக்கல்—அரும்பொருள்.

அசிக்கிநி—1. அந்தப்புரத்திலே யேவல் செய்யும் இளம்பெண். 2. பஞ்சாப்புத்தேசத் திலுள்ள ஒரு நதி. [அஸிக்நீ: அ, ஸிக்நீ - நரையுடையவள்.] 3. தக்கன்மனைவி. (உ-ம்.) "வீரனப் பிரமனாரிதினிற்பயந்தவேய்த்தடந் தோளசிக்கினிதன்" (கூர்மபு. அந்தகா. உ.)

அசிதுவன் — 1. அசத்தியவார்த்தையும் அதிக வார்த்தையுமில்லாதவன். (வாசுதே. க௬௯.) 2.நாக்கில்லாதவன். [அஜிஹ்வ:ஜிஹ்வ- நாக்குடையவன்.]

அசிகை—1. நகைத்துப்பேசும்பேச்சு. 'கசுகு சென்னவேசொல்லசிகையென்னடி' (மதுர கவி. 4.) 2. பட்டுப்பருத்தி. (வைத்தியபரி.)

அசிங்கம்—1. அசுத்தம். 2. அவலட்ச ணம்.

அசித்தசாத்யம் — முடியாத சாத்தியம். (உ-ம்.) "பிரத்தியக்ஷத்தினாலும் அநுமானத் தினாலும் அசித்த சாத்தியம்" (சி. சி. அள வை. ௯. உரை. சிவாக்.) [அஸித்த - முடி யாத. ஸாத்யம் - சாதிக்கப்படுவது.]

அசித்தம் — 1. ஓரேதுப்போலி; அது: பக்ஷத்திலில்லாத ஏது. 2. முடியாதது.

3. முடிக்கப்படாதது. இவை மூன்றிற்கும் (உ-ம். சைவப். கசு.)

அசித்தல்—1. அழித்தல். 2. சிரித்தல். (உ-ம்.) "புள்ளெலாம் அசிப்பபோன்று" (சிந்தா. காந்த. கசுஎ.) [இது ஹஸ் என்னும் வடமொழியடியாற்பிறந்தது.] 3. பரிகாசம் பண்ணல். (உ-ம்.) "முசுக்கள்போ லொளித்திருந்த முனிவராவிதன்னேயும் - அசிக்கவீரன் விட்டகுல மள்ளியள்ளியுண்டதே" (அருணசலபு. திருவவ. உஉ.) 4. உண்டல். (தேவா 867, 3.)

அசித்தன்—1. அழிக்கப்படாதவன். 2. கண்டிக்கப்படாதவன். (வாசுதே. ககூசு.)

அசித்தி—முற்றுப்பெறுமை; கைகூடாமை.

அசித்திரம் — சித்திரமின்மை. வாசுதே. சுடு. [அவித்ரு.]

அசித்து—1. ஆன்மதத்துவமாகிய இருபத்துநான்கு தத்துவங்கள். (உ-ம்.) "சித்தசித்தொடீசனென்றுசெப்புகின்றமூவகைத் தத்துவத்தின் முடிவுகண்ட" (பாரத. பதினே. க.) 2. சடப்பொருள். (உ-ம்.) "சித்தசித்துணர்ந்தருண்முநியும்" (பாரத. ராய. கசஅ.) [அவித்: வித் - அறிவுடையது.]

அசித்துப்பொருள்—சடப்பொருள்.

அசிதம்—1. அபரபக்கம். 2. அவமதிச்சிரிப்பு. 3. கருமை. (உ-ம்.) "அசிதவெங்கடலுண்டு" (இரகு. குச. அகூ.) 4. காமன்வில். 5. சநி. 6. சிரிப்பு. 7. மூலசிவாகமமிருபத்தெட்டினுள்ளே கௌசிகமுநிவர்பொருட்டுத் தோன்றினஐந்தாகமங்களுளொன்று. (சைவச. பொது. கூகக. கூகடு. உரை; க. தொ. கசுo.) [1, 3, 5. அவிதம்: விதம் - வெண்மை. 2, 4, 6. ஹவித]

அசிதம்சம்—அசித்தின்கூறு. (சி. சி. டு: அ. ஞானப்.) [அவித - சடம். அம்ஶ - கூறு.]

அசிதர்—ஜைநதீர்த்தங்கருள் ஒருவர்.

அசிதவெலி—உதட்டிற் கரியநிறத்தைப் பெற்றிருக்கும் ஒருவகை எலி. இது கடிக்கிற் சுரீரன் கறுத்தலும் மூர்சையும் வாந்தியுமுண்டாகும். (சிவாட். கூசுo.)

அசிதன்—1. சநி. (பிரு - கம். உ: உ.) அவித: வித - வெண்ணிறமுடையவன். 2. சிவன். 3. பதினன்காமநுவின் காலத்தெழுமுநிவருள் ஒருவர். (கூர்மபு. மநுவ. கூo.) 4. புத்தன். 5. விட்டுணு. [அஜித: ஜிதன் - வெல்லப்பட்டவன்.]

அசிதாங்கவைரவன்—வைரவரெண்மருள் ஒருவர். (த. நி. போ. உகூo;) [அவித - கறுப்பு. அங்கம் - சரீரம். பைரவ.]

அசிதாம்புருகம்—நீலோற்பலம். (மலே) [அவிதாம்புருஹ: அவித - கறுப்பு. அம்புருஹம் - நீரிற்பிறந்தது.]

அசிதாரு—அசிபத்திரவநம். (ஒரு நரக விசேடம்.) (உ-ம்.) "அதிபாகங்கிரகசமற்றசிதாரு" (சிவதரு. சுவர்க். ககடு. [அவிதாரு.]

அசிதாலவநம் — நூற்றுநாற்பது நரகங்களுள் ஒன்று; அது: வாள்போலறுக்கும் மட்டைகளையுடைய பனங்காடு. (உ-ம்.) "உன்னுமசிதாலவநத் துடற்றுணியைத் தொடுத்திழுப்பர்" (சிவதரு. சுவர்க். கசடு.) [அஸிதாலவநம்: அஸி - வாள். தாலவநம் - பனங்காடு.]

அசிதை — 1. அவுரி (வைத்தியபரி). 2. பரையென்னுஞ் சிவசத்தியின் நால்வகைப் பிரிவுள் ஒன்று. (சைவச. பொது. எச. உரை)

அசிதோதம்—மேருமலையின்சாரலிலுள்ள ஒரு வாவி. (சந்தபு. அண்ட. கூஉ.)

அசிதோபலம் — இந்திரநீலமணி. [அஸிதம் - கறுப்பு. உபலம் - மணி.]

அசிதோற்பலம் — நீலோற்பலம். [அவிதோத்பல: அவித - கறுப்பு.]

அசிந்தம் — 1. கோடாகோடி, பத்துலட்சங்கோடி. 2. மரணம்.

அசிந்தன்—சிந்திக்கப்படாதவன். [அசிந்த்ய: சிந்த்ய - சிந்திக்கப்படுவோன்.]

அசிந்திதன்—1. நினைக்கப்படாதவன் 2. கடவுள். 3. அவமதிக்கப்பட்டவன். [அசிந்தித: சிந்திதன் - நினைக்கப்பட்டவன்.]

அசிந்தியம்—1. ஒரு பேரெண். 2. சிந்தைக்கெட்டாதது. [அசிந்த்ய: சிந்த்ய - நினைக்கப்பட்டது.]

அசிந்தை—1. அவமதிப்பு. 2. சிந்தனையின்மை. [அசிந்தா: சிந்தா - எண்ணம்.]

அசிநபத்திரி—வெளவால். [அஜிநபத்ரீ: அஜிந - தோல். பத்ரீ - சிறகுடையது. தோலைச் சிறகாகவுடையது.]

அசிநபத்திரிகை—வெளவால். [அஜிநபத்ரிகா: அஜிந - தோல். பத்ரிகா - சிறகுடையது.]

அசிநபத்திரை—வெளவால். [அஜிநபத்ரா: அஜிந - தோல். பத்ர - சிறகு.]

**அசிநம்** — மிருகங்களின்தோல். 'நன்னூ லுடன்பூ ணசிநத்தை' (பாரத. நச்சுப். 17.)

அசிநயோநி—மான். [அஜிநயோநி: அஜிந - தோல். யோநி - பிறப்பிடம்.]

அசிபத்திரகம் — கரும்பு (மலை). [வாள் போலுங் கூரிய இலையுடையது. அஸிபத்ரக: அஸி - வாள். பத்ரக - இலையுடையது.]

**அசிபத்திரம்**—1. கரும்பு (வைத்தியபரி). 2. படையுறை. 3. வாளலகு. [அஸி - வாள். பத்ரம் - இலை, இறகு.] 4. நரக விசேடத்தொன்று. "அசிபத்திரமெனும்............ நரகிடை" (குற்று. தல. கவுற்சன. 67.)

அசிபத்ரவநம்—ஒரு நரகம். [இதிலுள்ள மரங்கள் வாள்போலுங் கூரிய இலையுடையன.] (உ-ம்.) "அழிவுதருகாலசூத்திரமசிபத்திரவநமே" (சேதுபு. தநுக். ௩.) [அஸிபத்ரவநம்: அஸிபத்ர - வாள்போலுங் கூரிய இலை. வநம் - காடு.]

**அசிபதசொரூபம்** — கூடஸ்தனே பிரமம்; பிரமமே கூடஸ்தனென ஐக்கியார்த்தமாயறிவது. (வாசுதே. ௨௧௪.) [அஸிபதஸ்வரூபம்.]

**அசிபதம்**—"தத்துவமசி" யென்னும் மகாவாக்கியத்தின் மூன்றும் பதம்; அது சிவசீவர்களுடைய ஐக்கியத்தைக் குறிப்பது.

அசியவாமீயசூக்கம் — பொன்னைத்திருடிய பாதகந் தீர்க்குமாறு செபிக்கப்படும் ஓர் இருக்குவேத மந்திரம். (உ-ம்.) "சிவசங்கற்பங்களைவளரசியவாமீயசூக்கத்தைத் - தவவுள்ளன்பிற் செபித்திடிற்காஞ்சநங் கள்ளியபாதகந்தீரும்" (சூத. எக்கி. பூ. ௪௨:௧௫) [அஸியவாமீயஸூக்தம்.]

அசிர்க்கரம் — பெரும்பாடு (பதார்த்த. ௩௪௨. உரை.)

அசிர்க்கரரோகம்—அல்குல்வழியா லிரத்த மொழுகும் ஒருவகை ரோகம். இதனைப் பெரும்பாடு என்பர். (சீவரட். ௫௩.)

அசிர்க்கு — இரத்தம். "வாதாசிர்க்கரரோகம்" (சீவரட். ௫௩.) [அஸ்ருஜ]

அசிர்த்தல்—சந்தேகித்தல். 'தாய்வழியை நினைத்து அசிர்த்தாரிறே'. (ஈடு 6. 7. 1.)

அசிரநாநம் — கண்டஸ்நாநம். [அஸிரஸ்நாந: அஸிரஸ் - சிரமல்லாத உறுப்பு. ஸ்நாநம் - தோய்தல்.]

அசிரப்பிரபை — மின்னல். [அசிரப்ரபா: அசிரம் - அற்பகாலம். ப்ரபா - ஒளி.]

அசிரம்—1. அற்பகாலம். 2. உடம்பு. 3. காற்று. 4. தலையற்றவுடல். 5. தவளை. 6. பொறிகளின் விடயம். 7. முற்றம். 8. வச்சிரக்கல். 9. வெட்டிவேர். [1. அசிர: சிரம் - நெடுங்காலம். 4. அஸிரஸ்: சிரஸ் - தலை. 2,3,5, 6, 7, அஜிர: அஜ - போதல். இர - ஒரு வ. வி. 8 அசிரம்.]

அசிரவணம்—செவிடு. [அஸ்ரவண: ஸ்ரவணம் - கேள்வி.]

அசிரன்—1. அக்கிநி. 2. காற்று. 3. சூரியன். 4. பிசாசு. [அஸிர: அஸ் - உண்ணல். இர - ஒரு வ. வி.]

அசிராபை—அசிரப்பிரபை. [அசிராபா: அசிர - அற்பகாலம். ஆபா - ஒளி.]

அசிரீ—ஆபாசமானவன்.

அசிருபாதம் — கண்ணீர்ப்பெருக்கு, கண்ணீர் சொரிதல். [அஸ்ருபாத.]

**அசிவகரம்** — அஞ்ஞானத்தைச்செய்வது. (சி. வி. ஞாந. அ.)

அசிவம் — 1. அதிட்டவீநம். 2. தீங்கு. 3. அஞ்ஞானம். (சி. வி. ஞான. அ.) [அஸிவ: சிவ - மங்கலம்.]

அசிற்பிரபஞ்சம் — அசித்துப்பொருளாகிய பிரபஞ்சம். (உ-ம்.) "அசிற்பிரபஞ்சத்திலே சில அந்தக்கரணமுதலிய" (சி. சி. ௭: ௧. ஞாந.) [அசித்; ப்ரபஞ்ச]

அசீதகரன் — சூரியன். [அஸீதகர: அஸீத - சூடான. கர - கிரணமுடையவன்.]

அசீதம் — 1. எண்பதாவது. 2. உட்டணம். [அஶீத: ஶீதம் - குளிர்.]

அசீதளம்—கருப்பூரம். (உ-ம்.) "துல்லிய மசிதளம் பூலாங்கிழங்கசை" (தைல.தைலவ. ௬௩.) [அ - எதிர்மறை. சீதல - குளிர்.]

அசீதி — 1. எண்பது. (உ-ம்.) "அதற்கு நீளமசீதியுமைந்துமால்" (சிவதரு. கோபுர. ௮௬) [அஶீதி.] 2. சடசீதிமுகம்; அது: ஆனி, புரட்டாதி, மார்கழி, பங்குனி என்னு மாதங்களின் பிறப்பு. (உ-ம்.) "ஆனிமுதனுளசீதிபுரட்டாதிமுத - லேனையவிற்பங்குனியுமே" (சைவச. பொது. ௧௫.)

அசீதிகம் — எண்பதென்னும் அளவுடையது. [அஶீதி: அசிதி - எண்பது. க - ஒரு வ. வி.]

அசீதிகன் — எண்பது வயசுடையவன். [அஶீதிக: அஶீதி - எண்பது. க - ஒரு வ. வி.]

அசீர்—ஆபத்தம். [இது இந்துஸ்தானி.]

அசீர்ணம் — 1. சமியாமை. 2. யௌவநம். [அஜீர்ண: ஜீர்ணம் - சமிக்கை, பழமை.]

அசீர்த்தி—அசீரணம். (உ-ம்.) "அக்கினி தேவற்கசீர்த்தியென்று சுக்கரைத்து" (ஒழிவி. கிரியை ௩.) [அ; ஜீர்த்தி - சீரணம்.]

அசீரணசுரம் — சமியாமையால் வரும் வெப்புநோய்.

அசீரணபேதி-சமியாமையால் வரும்பேதி.

அசீரணம்—1. அழிவுபடாதது. (உ-ம்.) "அசீரணமாஞ் சித்துருவாஞ் சிவன்வாழும்" (ஞானவா. சிகித். ௧௩.) 2. சமியாமை. [அஜீர்ண: ஜீர்ண - அழிவு, சமிக்கை.]

அசீரணரோகம் — சமியாமையாலுண்டாகும் ஒரு நோய். (உ-ம்.) "அசீரணரோக மானது வாதபித்தகபங்களினல் முறையே ஆமாசீரணம், விதத்தாசீரணம், விஷ்டம்பா சீரணமென மூன்றுவிதப்படும். (சேவாட். ௮௩.) [அஜீர்ணரோக: ரோக - நோய்.]

அசீரணவாயு-சமியாமையால்வரும் வாயு. [அஜீர்ணவாயு.]

அசீரியம்—அழியாதது. (உ-ம்.) "அக்கிராகியமசீரியமசங்கமாயிருக்கு மமலமான" (சூத.எக்கி.உத்.பிரம.௪௦: ௧௩.) ["அசீர்ண" என்பதன் திரிவுபோலும்.]

அசீலன் — நல்லொழுக்கமில்லாதவன். [அசீல: சீலன் - நல்லொழுக்கமுடையவன்.]

அசீவநம்—சீவனில்லாமை. (கட். கொ. திருவால. சொப்பனம்.)

அசீவநி—மரணம். [அஜீவநி: ஜீவநி - சீவனுடையது.]

அசீவம்—உயிரற்றது. [அஜீவம்: ஜீவம் - ஜீவித்தல்.]

அசீவன்—சீவனில்லாப்பொருள். [அஜீவ: ஜீவ - சீவித்தலுடையது.]

அசு 1. சுவாசம். 2. பிராணவாயு (பஞ்சவாயு). 3. துக்கம். [அஸு.]

அசுங்காட்டுதல் — பரிகசித்தல். (திவ். திருப்பா. 28. வ்யா.)

அசுகம் — 1. அடைதற்கருமை. 2. சுகமல்லாதது, துக்கம். [அஸுக.]

அசுகி—கடுகு (வைத்தியபரி).

அசுகிருந்து-பகைவன். [அஸுஹ்ருத்: ஸுஹ்ருத் - நண்பன்.]

அசுசுசுத்தல்—1. அருவருத்தல். 2. சமுசயித்தல். (லெக்ஸிகன்.)

அசுகுணி—1. ஒரு பூச்சி. 2. ஒருவகைக் கரப்பன். 3. காதிற்படரும் ஒரு நோய். [அ - எதிர்மறை. ஸு - நல்ல. குணி - குணமுடையது.]

அசுகை—1. அசூயை. 2. ஐயம்.

அசுசமன் — 1. அன்பன். 2. கணவன். [அஸுஸம: அஸு - ஆன்மா. ஸம: - ஒத்தவன்.]

அசுசி — 1. அருவருப்பு. 2. அழுக்கு. "தேரு ரசுசியென் றகல்வ ரென்றான்" (நல். பார. உமாமகே. ௫௮.). 3. இழிவுபடல், அபகீர்த்தி, சுசியின்மை. 4. சூரிய சமூகத்தினின் ரூறிருதுக்களிலும் பாட்டயர்வோரில் ஒருவன். (கூர்மபு. ஆதவர்சிற. ௭.) [1,2,3. அஶுசி: ஶுசி - சுத்தம்.]

அசுசிப்படல்—அழுக்கடைதல்.

அசுட்கம் — பச்சையானது, உலராதது. [அஶுஷ்க: - ஶுஷ்க - உலர்ந்தது.]

அசுண்டவாயு — பூமிக்கு மேலே ஐம்பதுயோசனைக்கப்பாலிருக்கும் ஒரு வாயு; இது: சமஸ்தசீவன்களுக்குந் நீபநம் பிறப்பித் திராட்சதர்கெமநத்துக்கும் பட்சிகள்

கெமாத்துக்கும் ஆதாரமாயிருக்கும். (த. நி. போ. ௩௪௨.)

அசுணம்—அசுணமா. (உ-ம்.) "குழலிசை கேட் டருகணையு மசுணமென" (காஞ்சிப். அந்தகே. அ) பிங்கலநிகண்டிற் கேகயப் புள்ளென்முர். சிந்தாமணி, பதுமையாரிலம் பகம் உ௩௭ - ஆங் கவியுரையில் இசையறிவ தோர்விலங்கென்முர்.

அசுணன்—வெள்வெங்காயம். (மலை)

அசுத்ததத்துவம் — 1. ஆன்மதத்துவம். (சிவப். கட். முதலங்க.) ["ஆன்மதத்துவம் இருபத்துநான்கையும் அசுத்தமென்ற தே தென்னில், அது பிரகிருதியிற்றோற்றமாகை யாலும் மும்மலத்தையு முடைய சகலர்க்குத் தநுகரணபுவநபோகங்களா யிருக்கையாலும் என அறிக"] (சிவப்பிர. வியாக். பொது. ௨௪. உரை. நுட்பம்.)

அசுத்தப்படல்—அழுக்காதல்.

அசுத்தப்பிரபஞ்சம் — கலாதத்துவமுதற் பிருதுவிதத்துவமீருகிய தத்துவம்.

அசுத்தம்—1. அசுத்ததத்துவம். (உ-ம்.) "அசுத்தந் தந்திடும்புமான்கீழெண்மூன்ருய தத்துவம்" (சி. சி. உ: எ0.) [பிரகிருதிமுதற் பிருதிவிவரையிலுள்ள தத்துவங்களெல்லாஞ் சத்துவமுதலான குணங்களினலே மிகவும் சுகதுக்கபோகங்களையுண்டாக்குவதா லசுத்த மேயாகும். சி. வி. கிரி. ஞாந. ௨0. உரை.] 2. அமேத்தியம் = பவ்வீ. (உ-ம்.) "ஆசை யுற்றுழல் சூகரங்க ளசுத்த மேவி யளைந்து" (சி. சி. பர. லோகா. மறு. உஅ.) 3. சுத்த மின்மை. "சாதகருமமுத லறை கருமங் களால் அசுத்தமறச் சுத்தியடைந்தாளுய்" (சூத. எக்கி. பூ. உக. அ.) 4. திருத்தமின்மை. 5. வேசிமார்க்கம். 6. தீட்டு. (திவா.) [அஶுத்தஂ: ஶுத்தஂ - தூய்து.]

அசுத்தமாயர்க்கோபகர்—அநந்தேசுவரர் பௌட். பிந்து. ௧௩) [அஶுத்தமாயாக்ஷோபக: க்ஷோபக - கலக்குபவர்.]

அசுத்தமாயாதத்துவம் — அசுத்தமாயை யிலே யநந்ததேவராற் கலக்குண்ட பாகம். அது தத்துவங்களினிடைவைத் தெண்ணப் படும். (சி. சி. ச: உக. உரை. சிவஞா. [அஶுத்தமாயாதத்வ.].

அசுத்தமாயை — நித்தியமாய் ஏகமாய் எங்கும் வியாபகமாய் அருவமாய்ச் சடமாய்ப் பிரளயகாலத்திலே யான்மாக்களுடைய கன் மங்களுக் குறைவிடமாய் ஆன்மாக்களுக்குச் சுத்தாசுத்தமும் அசுத்தமுமாகிய தநுகரண புவனபோகங்கள் தோன்றுதற்கு முதற் காரணமாய்த் தன்காரியமுகத்தான் ஞாநக் கிரியைகளை விளக்குமாயினும் மயக்கஞ்செய்வ தாயுள்ள ஒரு பதார்த்தம். (சைவவினு. ௧௬. சி. பி. கை. ௧௩.) "சுத்தமாயையின் அதோ பாகமே அசுத்தமாயை" என்று சிலர் கூறு வர். "சுத்தமாயை மேலாய்நிற்ப அதன்கீழட ங்கி மல கன்மங்களோடு விரவி முதற்காரண மாயிருப்ப தசுத்தமாயை" என்பர் சிவஞாந முனிவர். (சி. சி. ௧: ௧௧.) [அஶுத்தமாயா.]

அசுத்தமார்க்கம்—அசுத்தாத்துவா (உ-ம்.) "மாயையென்னும் பெயருள்ள பாசமானது அநேகவித வல்லமையோடு கூடினதாயும் சூட்சுமரூபமாயும் அசுத்தமார்க்கத்துக்கு முக்கிய வுபாதானகாரணமாயும்" (சி. வி. ஞாந. அ. உரை.) [மார்க.]

அசுத்தன்—சுத்தனல்லாதவன். (உ-ம்.) 'அசுத்தனென்றிடவுணர்வதுகுன்றி' (திருப் பு. ௪௯.) [அஶுத்த: ஶுத்த - நல்லொழுக்க முடையவன்.]

அசுத்தாத்துவகர்த்தா — அனந்தேசுவரர். (சி. வி. ஞாந. ௧0.)

அசுத்தாத்துவா—பிருதிவிமுதற்பிரகிருதி வரையுள்ள இருபத்தைந்துதத்துவங்களின் சமூகம். [இதன்கண்ணிருப்போர் வைந் தவம் திரோதம் ஆணவம் கன்மம் மாயேய மென்னும் ஐவகைப்பாசமுடையவர். இவ் வத்துவா அநந்தேசுவரகர்த்திருத்துவம். (சி. பி - கை. ௩, ௬; சி. சி. ௧௧. ஞாநப்.) அஶுத்; அத்வா.]

அசுத்தாவி — 1. சுத்தமில்லாத அருபி. 2. பிசாசு.

அசுத்தி — 1. அழுக்கு. 2. ஆணவமலம். (உ-ம்.) "இந்த ஆணவமலத்திற்குப் பரியாய நாமங்கள், பசுத்துவம், பசுநீகாரம், மிருத் தியு, மூர்ச்சை, மலம், அஞ்ஞாநம், அவித் தை, ஆவிருதி, ருக்கு, கிலாநிபாவம், மூலம்

க்ஷயம், பாசம், அசுத்தி, பெந்தனம், வியாகாதம், களங்கம், மோகம், கேவலம், ஆவரணம், தமசு, சடம், படலம், நிரோதம், ஆச்சாதகம் இவைமுதற் பிறவுமுள'' (சிவப்பி. உ: உரை. சிதம்.) 3. சுத்தமின்மை. (உ-ம்.) ''மண்சுத்தம் பயின்றிருந்துஞ்சந்தமுறு கடாதிகளாகிய காலை யசுத்தி சுத்திதானாற்போல'' (ஞுத. எக்கி. பூ. கங. கஉ.) 4. வழுக்கலேயப்படாமை. [அஶுசி: ஶுசி - தூய்மை.]

அசுத்தை — சீலமற்றவள். ''ஆதலாலசுத்தையென்றே யறிந்துவைத் தவளைநீத்தோம்'' (இராமா. சீதை. ருசு.) [அ; ஶுத்³தா⁴ - சுத்தமுடையவள்.]

அசுதந்திரம்—சுதந்திரமில்லாமை. [அஸ்வதந்த்ர: ஸ்வதந்த்ர - தன்வசம்.]

அசுதாரணன்—சீவன். [அஸுதா⁴ரண: அஸு - பிராணவாயு - தா⁴ரண - தரிப்பவன்.]

அசுதை—விஷம். [அஸுதா⁴: ஸுதா⁴ - அமிர்தம்.]

அசுந்தரம்— 1. அழகற்றது. 2. தகாதது. [அஸுந்த³ர: ஸுந்த³ர - அழகுள்ளது.]

அசுநாதி—இரசம். (வைத்தியபரி.)

அசுப்பு—1. உளவு. 2. சடிதி.

அசுபக்கிரகம் — தீயகிரகங்கள்; அவை: ஆதித்தன், செவ்வாய், சநி, அபரபக்க சந்திரன், இராகு, கேது, ஆதித்தனுடன் கூடிநின்ற புதன் என்பன. (உ-ம்.) ''சுபாசுபக்கிரகம்''. (விதாந. மரபி. உ - ஆங் கவிமுகம்.) [அஶுப⁴க்³ரஹ.]

அசுபக்கிரியை—அமங்கலக்கிரியை. ''ஈன்றோர்க் கன்றிப், புல்லசுபக்கிரியைசெயல்'' (திருவானை. கோச்செ. ருக.) [அஶுப⁴க்ரியா: அஶுப⁴ - சுபமல்லாதது. க்ரியா - செயல்.]

அசுபதம்பவாதம்—ஒருநோய். (வைத்தியபரி.)

அசுபதி—தங்கம். (வைத்தியபரி).

அசுபபாவநை—(பௌத்த) பாவனை ஐந்துள் ஒன்று, அது: உடம்பினை அநித்தியம், துக்கம், அநான்மா, அசுசியென்றுபாவித்தல். (மணிமேகலை. நகஅ.) [அஶுப⁴; பா⁴வநா - எண்ணம்.]

அசுபம்—1. அமங்கலம். (உ-ம்.) ''சுபாசுபங்களென்னுந் துன்றுமுளை தந்தருளுமே நிவித்தாம்'' (ஞானவா. உபசா. கஎ.) 2. அமங்கலகாரியத்திற் செய்யுங் கிரியை. ''தாழ்வுபெறு சிராத்தமுத லசுபத்தும்'' (திருவானை. கோச்செ. சக.) 3. சாவு. 4. அமுக்கிரா. (வைத்தியபரி.) [உஷ்ணம்.] 5. பாவம். [1, 2, 5 அஶுப⁴ம்: ஶுப⁴ம் - நன்மை.]

அசுபயோகம்—சுபமல்லாதயோகம். அது சாதகனுக் கிலக்கினத்திற்குப் பன்னிரண்டாமிடத்திலே சந்திரசூரியரல்லாத மற்றைக் கிரகங்கள்கூடிநிற்கும்நிலை. (சரசோ. சாதக. உ0க.) [அஶுப⁴யோக³: யோக³ - கூட்டம்.]

அசுபராசி—குரூரராசி. (உ-ம்.) ''சுபராசியசுபராசி'' (விதாந. பஞ்சாங். கசு. கவிமுகம்) [அசுபராசிகள்: மேடம், சிங்கம், விருச்சிகம், மகரம், கும்பம் என்பன. இவை பாவக்கிரகங்களுக் காட்சிவீடாய் அசுபராசியாயின. [அஶுப⁴ராஶி.]

அசுபவாதநை — தீயவிடயவாதனைவருத்தத்தாலே மெத்தமுயன்றசுபவாதனையைத்தள்ளி'' (ஞானவா. முமுட். ரு.) [அஶுப⁴வாஸநா: வாஸநா - அழுத்தம்.]

அசும்பல்—1. இடையறுதொழுகல். (உ-ம்.) ''அசும்புதேனலங்கல்'' (சிந்தா. காந்த. கஉக) 2. பரவுதல். 'அவிரொளியசும்ப' (காஞ்சிப். பன்னிரு. 164.)

அசும்பு—1-3. அசும்பென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. ஊற்று. 5. நீர்ப்பொசிவு. (பிங்கல. ருஉஎ.) (உ-ம்.) ''அசும்பிவர்சாரல்'' (சிந்தா. காந்த. ௩௦.) 6. கிணறு. (சூ. நிகண். ரு; உஎ.) 7. சேறு. (உ-ம்.) ''தாழ்கணசும்பின'' (மணிமேகலை. சு.) 8. துளி. ''அம்மழையசும்பதன் புண்ணீர்'' (திருவிளை. நாட்டு. சச.) 9. பொல்லாநிலம். 10. வழுக்குநிலம். 11. பற்று. 'அசும்பறத்துடைத்தும்' (ஞானு. 41.) 12. குற்றம். 'அசும்பறவகன்ற ஞானத்துறவனே' (சேதுபு. சங்கா. 92.)

**அசும்புதல்**—1. அசும்பல். 2. வழுக்குதல். (உ-ம்.) "சோலைத்தே - னெழுகினின்றசும் புயர்சந்தனத் தொழுகிக்குன்றம்" (சிந்தா. முத்தி. சசுரு.)

அசும்புசெய்தல் — ஒளிவீசுதல். (உ-ம்.) 'ஆயபொதியில்வளைபொன்னுலசும்புசெய்து' (திருவிளை. உலவா. கஎ.)

அசுமத் — சிவன், நாமெனப் பொருள் படும் ஒரு வடமொழிப் பிராதிபதிகம். (உ-ம்.) "அசுமதாதி பாகியேந்திரியாகோசரம்" (சி. சி. உ: எக. உரை. சிவாக்.) [அஸ்மத்.]

அசுமந்தகம் — நாணற்பூண்டு. [அஸ்மந்தகம்.]

அசுமந்தம்—1. அடுப்பு. 2. அதிட்டவீனமானது. 3. எல்லையில்லாதது. 4. மரணம். 5. வயல், வெளி. [அஸ்மந்த.]

அசுமம் — 1. இடியேறு. 2. கல். 3. தீத்தட்டிக்கல். 4. மோகம். [அஸ்மந்.]

அசுமநா—சூரிய வமிசத்துள்ள அரியச்சுவனென்னும் அரசனுக்கு மகனான ஒருவன். (கூர்மபு. சூரிய. உஅ.)

அசுமரி—கல்லடைப்பு. (பைஷஜ.)

அசுமலோட்டிரநியாயம்— மீமாஞ்சையிற் கூறப்பட்ட நியாயங்களுளொன்று; அது, ஒரு மண்ணுங்கட்டியை ஒரு கல்லோடு சேர்தூக்கும்போது மண்ணுங்கட்டி மிருதுபதார்த்தமாகவும், பஞ்சோடு சேர்தூக்கும்போது அது கடினபதார்த்தமாகவும் விளங்குதல்போல, ஒருவன் தன்னின் மேலானவரோடு சேர்தூக்கப்படும்போது இழிந்தவனாகவும், தன்னின் இழிந்தவரோடு சேர்தூக்கப்படும்போது உயர்ந்தவனாகவும் காணப்படுதலாகிய நியாயம். [அஸ்மலோஷ்டந்யாய: அஸ்ம - கல். லோஷ்ட - மண்ணுங்கட்டி.]

அசுமாந்தகம்—நாணற்பூண்டு. [அஸ்மாந்தக]

அசுமாந்தம் — நாணற்பூண்டு. "இவை கிடையாவழி, தருப்பை, அசுமாந்தகார்" (பராச. க. ஆசா. உ. அத். நஎ.)

அசுமாநகிரீ—மேற்கட்டி. [இது இந்துஸ்தானி.]

அசுமர்ரோபணம்—அம்மிமிதிக்கை. (சீவக. 2464. உரை.)

அசுமாற்றம்—1. சாடை. 2. சமுசயம்.

அசுயை—அசூயை.

அசுரீ—அசுரர். 'அசுரைச்செற்ற......... மாதவன்'. (திவ். இயற். திருவிருத். 67.)

அசுரகன்—1. அக்கினி. 2. இந்திரன். 3. விட்டுணு. [அஸுரஹந்: அஸுர - அவுணன். ஹந் - கொல்வோன்.]

அசுரகுரு — 1. சுக்கிரனென்னுங் கிரகம். 2. சுக்கிராசாரியர். [அஸுரகுரு.]

அசுரசந்தி — இரணியவேளை, மாலைக் காலம். [அஸுரஸந்தி.]

அசுரநாள்—மூலநாள். (பிங்க. உடுள.)

அசுரபி — துர்க்கந்தம். (தச. ச.) [அ; ஸுரபி - நறுமணம்.]

அசுரம் — அசுரமணம். (உ-ம்.) "வரமுந் தசுரமிராக்கதமே" (நல். பார. துட்டி. சக.)

அசுரமணம் — எண்வகைவிவாகத்துள் ஒன்று; அது: "பெண்ணுக் காபரணமிட்டுப் பெண்ணின் பிதாவுக்கும் பணங்கொடுத்துப் பெண்ணினைவாங்கிச் செய்யும் விவாகம்" என்று "ஆசுரம்" என்னும் பெயருடன் மநுதருமசாத்திரம் மூன்றும் அத்தியாயம் நக-ஆஞ் சுலோகத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. தொல்காப்பியப் பொருளதிகாரவுரையிலே "அசுரமாவது: கொல்லேறுகோடல், திரிபன்றியெய்தல், வில்லேற்றுதல் முதலியனசெய்துகோடல்." "முகையவிழ்கே தையை முள்ளெயிற் றரிவையைத் - தகைநலங் கருதுந் தருக்கினி ருளரெனி - னிவையிவை செய்தாற் கெளியண்மற் றிவளெனத் - தொகைநிலை யுரைத்த பின்றைப் பகைவலித், தன்னவை யாற்றிய வளவையிற் - றென்னிலையசுரந் துணிந்த வாறே" என எழுதப்பட்டிருக்கின்றது. (தொல். பொருள். களவி. கக)

அசுரமந்திரீ—சுக்கிரன். (சூ. நிகன். க: ருஉ.) [அஸுர: மந்த்ரிந் - ஆலோசனை சொல்வோன்.]

அசுரர்—அவுணர். (பதினெண்கணத்துள் ஒரு கணம்.)

அசுராரிபு—விட்டுணு. [அஸுராரிபு: ரிபு - பகைவன்.]

அசுரவைத்தியம் — இரணவைத்தியம். (லெக்ஸிகன்.)

அசுரற்றடிந்தோன்—முருகக்கடவுள்.

அசுரன்—1. அவுணன். 2. இராகு. 3. கேது. (உ-ம்.) "தகைபெறு பூதசம்போதக னென்று மசுரனென்றும்" (மச்சபு. புவந கோச. உஎ.)

அசுரேசன்—அசுரர்களுக்குத் தலைவன். (உ-ம்.) "என்றசுரேசனிசைத்தலும்" (கந்த பு. வரவுகே. கடு.) [அஸுரேஶ: ஈஶ-தலைவன்.]

அசுரேந்திரன்— தாரகாசுரனுடைய ஒரு மகன். (கந்தபு. புதல்வ. கரு, உ௦.) [அஸுரேந்த்ர: இந்த்ர - சிரேட்டன்.]

அசுரை—1. இராக்காலம். 2. இராசி. 3. வேசி. [அஸுரா.]

அசுலபம் — அடைதற்கருமை. [அஸுலப: ஸுலபம் - இலகுவிலடைகை.]

அசுவகதி—குதிரைநடை.

அசுவகந்தி—அமுக்கிரா. (உ-ம்.) "அசுவ கந்தி பலாலட்சை நவில்வாம்" (தைல. தைலவ. உ௬.) [அஶ்வகந்தி: அஶ்வ - குதிரை. கந்தி - நாற்றமுடையது.]

அசுவகந்திகா — அமுக்கிரா. [அஶ்வகந்திகா]

அசுவகந்திபலாலட்சாதைலம்—ஒருவகைத் தைலம். (இதனிலக்கணம், தைல. தைலவ. உ௬-ஆம் கவியிற் காண்க) "அசுவகந்திபலா லட்சை நவில்வாம் — பேதகுதிகைவாயுவுஞ் சந்நியாம்பிடைவாதபித்தாமையுஞ் சீரணப், பேர்கொள்வெப்பமுதலிய நோய்களும் பெருயிர்க்கெதிர் பிணியலரரோ."

அசுவகந்தை—அமுக்கிராப்பூண்டு. [அஶ்வகந்தா.]

அசுவகம்— 1. கெந்தகம். 2. பசு. (1. 2. வைத்தியபரி.)

அசுவகிரந்தம்—ஒரு பறவை. (மகாபார தம். ௩: கசஅஅ.) [அஶ்வக்ராந்த.]

அசுவகிநி—அசுபதிநக்ஷத்திரம். [அஶ்விநீ.]

அசுவகோட்டம்—குதிரைச்சாலை. [அஶ்வ கோஷ்டம்: அஶ்வ - குதிரை. கோஷ்டம்- சாலை.]

அசுவசட்டிரம்—நெருஞ்சில். (வைத்திய பரி.)

அசுவசாத்திரம்— குதிரையிலக்கண முத லியன கூறும்நூல். [அஶ்வஶாஸ்த்ர: ஶாஸ்த்ர- நூல்.]

அசுவசாந்தி—ஒரு யாகம். [அஶ்வஶாந்தி]

அசுவசாரத்தியம்— குதிரை செலுத்தும் வன்மை. [அஶ்வஸாரத்ய.]

அசுவசாலை — குதிரைப்பந்தி. [அஶ்வ ஶாலா.]

அசுவசாவம் — குதிரைக் குட்டி. [அஶ்வ ஶாவ.]

அசுவசிகிற்சை — குதிரைவைத்தியம். [அஶ்வசிகித்ஸா: சிகித்ஸா - வைத்தியம்.]

அசுவணி—சொறி. (லெக்ஸிகன்.)

அசுவத்தம்—1. அரசமரம். 2. அத்திமரம். [அஶ்வத்த.] (1, 2 வைத்தியபரி.)

அசுவத்தாமன் — துரோணசாரியன் மக னாகிய ஒரு வீரன். [அஶ்வத்தாமந்]

அசுவத்தாமா—அசுவத்தாமன்.

அசுவத்தை — 1. நெட்டிலிங்கம். 2. நெடு நாரை.

அசுவதட்டிரம்-நெருஞ்சி. [அஶ்வதம்ஷ்ட்ர.]

அசுவதந்திரபாவம்—பரதந்திரத்தன்மை. (பௌட். விந்து. ௫௬. உரை.) [அஸ்வதந்த்ர பாவ: ஸ்வதந்த்ர பாவ - தன்வயமுடைமை]

அசுவதந்திரம்-சுவதந்திரமின்மை.(உ-ம்.) "இனி (மாயாகுணத்துவயம்)அசுவதந்திரம், சுவதந்திரமென மாயாகுணத்துவயமுண்டு" (த. நி. போ. ககஉ.) [அஸ்வதந்த்ர: ஸ்வ தந்த்ரம் - தன்வயமுடைமை.]

அசுவதமிட்டிரம் — நெருஞ்சி.

அசுவதரம் — ஆண் கோவேறுகழுதை. [அஶ்வதர.]

அசுவதரன்—ஒரு நாகசிரேட்டன். [அஶ்வ தர.]

அசுவதரி—பெண்கோவேறுகழுதை.

அசுவதி—முதல் நக்ஷத்திரம். (உ-ம்.) 'அந்தரம்வரு மசுவதிநாள்" (தணிகை. நகர. ௬௧. [அஶ்வதி.]

அசுவந்தம்—1. அடுப்பு. 2. அதிட்டவீநம். 3. இறுமெல்லை. 4. கேடாய்முடிதல். 5. மரணத்துக்குச் சமீபித்தல். 6. மரணம். 7. வயல். 8. வெளி. [1,4,5, அஸ்வந்த. 2,3,6,7. அஸ்வந்த.]

அசுவநாயன் — குதிரைகாப்போன், குதிரை மேய்ப்போன். [அஸ்வநாயக:]

அசுவப்பிரதாநம் — சுவப்பிரதாநமல்லாதது. (உ-ம்.) "பரசிவசொரூபந்தன்னை - மடிவில்சுவப்பிரதாநம்வயங்கசுவப்பிரதாநமற்றுமுள்ள - தடிவில்சமப்பிரதாநமிவற்றென்றுய்த்தியாநித்தறகுதியாலோ" (சூத. எக்கி. பூ கூ. எ.)

அசுவபரி—அலரி. (வைத்தியபரி.)

அசுவபரீட்சை — அறுபத்துநான்கு கலைஞாநங்களுள் ஒன்று; அது: குதிரையிலக்கணங்கூறுவது. [அஸ்வபரீக்ஷா: பரீக்ஷா-பரீட்சித்தல்.]

அசுவபாலன்—குதிரைப்பாகன். [அஸ்வபால: அஸ்வ-குதிரை. பால-காப்போன்.]

அசுவம்—1. அமுக்கிராக்கிழங்கு. (தைல. தைலவ. கஉடு.) 2. குதிரை. 3. குதிரைப்பற்பாஷாணம். (மூ. அ.) [அஸ்வ.]

அசுவமியம் — குதிரைப்பாஷாணம். (வைத்தியபரி.)

அசுவமுகன்—குதிரைமுகமுள்ள கிந்நரன். [அஸ்வமுக: அஸ்வ - குதிரை. முக - முகமுள்ளவன்.]

அசுவமேதம் — ஒருவகை யாகம்.

அசுவமேதிகம்—1. அசுவமேதயாகத்திற்குரியது. 2. அசுவமேதயாகத்திற்குத்தகுதியான குதிரை [அஸ்வமேதிக: அஸ்வமேத-ஒரு யாகம். இக - ஒரு வ. வி.]

அசுவமேதீயம் — அசுவமேதிகம். [அஸ்வமேதீய.]

அசுவரம்—1. கீழ்க்குரல். 2. மெய்யெழுத்து. [அஸ்வர: அ - எதிர்மறை. ஸ்வர - தொனி, உயிரெழுத்து.]

அசுவலக்கணம் — குதிரையின் குணங்களையும் குற்றங்களையும் ஆராய்தற்குரிய குறி. [அஸ்வலக்ஷண: லக்ஷணம் - குறி.]

அசுவவாகன்—குதிரைப் பாகன். [அஸ்வ; வாஹ.]

அசுவவாதரோகம்-ஒருவகைவாதரோகம்; அது: குதிரைக்குட்டியின்பாய்ச்சல்போலத் தேகம்முழுதுங் குலுங்கும்படி பாய்ந்து மேனோக்கியேறி யவ்வாறே கீழிறங்கி யண்டத்தை வீங்கச்செய் தவைகளிலே தங்கிக் கோசத்தைச் சுருங்கப்பண்ணி யக்கோசத்திலும் அடிவயிற்றிலும் அளவிடக்கூடாத நோவையுண்டாக்குவது. (சீவரட். களஅ.) [அஸ்வவாதரோக.]

அசுவவார்ரியர்—குதிரைசெலுத்துவோர். (சிலப். 5. 54 உரை.)

அசுவவித்து—1. அசுவசாத்திரம் அறிந்தவன். 2. நளமகாராசன். [அஸ்வவித்: வித் - அறிந்தவன்.]

அசுவவைத்தியம் — குதிரை வைத்தியம். [அஸ்வவைத்ய]

அசுவாதம்—அரசமரம். (வைத்தியபரி.)

அசுவாரிபரி—அலரி. (மூ. அ.)

அசுவாமகந்தம்—சிறுபூளை. (மலை.)

அசுவாமி—உடையவனல்லாதவன். [அஸ்வாமிந்: அ - எதிர்மறை. ஸ்வாமிந் - உடையவன்.]

அசுவாமிவிக்கிரயம்— உடையவனல்லாதவன் விற்றல். (மிரு. சங். ௩.) [அஸ்வாமிவிக்ரய: அஸ்வாமி - உடையவனல்லாதவன். விக்ரய - விற்றல்.]

அசுவாரசியம் — 1. இனிமையின்மை 2. பிரியமில்லாமை. 'அவன் அக்காரியத்தில் அசுவாரசியமாயிருக்கிறான்.'

அசுவாருடமூர்த்தி—மாணிக்கவாசகசுவாமிகள்பொருட்டு நரிகளைக் குதிரைகளாக்கியரிமர்த்தநபாண்டியனுக்குக் கொண்டுவந்த சிவன். (சிவபரா.கஎ௦.) [அஸ்வ; ஆரூட - ஏறிய. மூர்த்தி - மூர்த்தமுடையவன்.]

அசுவிநி—அச்சுவினி. [அஸ்விநீ.]

அசுவிநிதேவர்—அச்சுவிநிதேவர் (உ-ம்.) "விளங்குமான்குதிரையாகிச் - சென்றுறுவடவைதன்பாற்சேர்ந்துமோந்திட்டமூக்கிலன்றுறுகலிதந்தன்னிலசுவிநிதேவருற்றார்."

(மச்சபு.இளா.கசு.) [இவர் தத்திரன், நாதத்தியனென்னும் இருவர். ஊஷ்நீஷெவ.]

அசுவியம்—1. குதிரைக்கூட்டம். 2. குதிரைச்சம்பந்தமுடையது. [ஊஷ்வீய: ஊஷ்வ; ஈய - ஒரு வ. வி.]

அசுவு—அசுவுணி.

அசுவுணி — அசுகுணி. (செடிப்பூச்சிவகையு ளொன்று.)

அசுவை — 1. அச்சுவினிநாள். 2. தன்னுடையதல்லாதது. [அஸ்வா.]3. பெட்டைக்குதிரை. [1, 3. ஊஷ்ா]

அசுழம் — நாய். (உ-ம்.) "கருதசுழமாமிந்தமட்டைதனையாள" (திருப்பு. ககசு.)

அசூசம்— } 1. சுத்தமின்மை. "உன்னுடலம சூசியென நாணில்"
அசூசி— }
(சி. சி. பர. சௌத. மறு. ௩எ.) 2. சூதகம். ["அசுசி" யென்பதன் விகாரம்.]

அசூதி — 1. பிறப்பின்மை. 2. மலடு. [அஸூதி: ஸூதி - பிறப்பு.]

அசூயாபரன் — பொறாமைகொண்டவன்.

அசூயை—1. அவதூறு. 2. அழுக்காறு, பிறருடைய குணத்திலே குற்றமேற்றுதல். (உ-ம்.)"கோபமோடசூயை லோபம்" (மச்சபு. மன்வந். யுக. உஉ.) [அஸூபா.]

அசூரி — மசூரிநோய். [மசூரியென்பதின் மகரங்கெட்டது.]

அசேசரி—புவர்லோகத்திலிருக்கும் ஒரு வாயு. (வி-ணி. உ௩டு.)

அசேசன் — சுத்தவித்தியாதத்துவத்தில் இருக்கின்ற ஐம்பத்தோருருத்திரர்களில் ஒருவர். (வி-ணி. உஎஎ.)

அசேதநம்—1. அறிவில்லாதது, சடம். "விரவுசேதந வசேதநங்கட்கு மேன்மைசான்ற, பரவதிட்டாநமாய்" (சூத. ஞாந. கங: க.) [அசேதந: அசேதநம் - அறிவில்லாதது.] 2. உயிரில்பொருள்.

அசேநன் — சூரியசமூகத் தாமிருதுக்களிலும்நின்றுபாட்டயர்வோரில் ஒருவன்.(கூர்மபு. ஆதவர்சிறப். எ.)

அசேவநம்—1. அசட்டைபண்ணல். 2. கீழ்ப்படியாமை. 3. விலகுதல் [அஸேவந: ஸேவநம் - சேவித்தல்.]

அசேவை—1. அவமதித்தல். 2. சேவையின்மை. 3. விலகல். [அஸேவா: ஸேவா - வணக்கம், பூசை, சேவித்தல்.]

அசேஷம்—எல்லாம். 'அசேஷகோத்திரத்து' (S. I. I. 1. 84.)

அசை — 1. அசைநிலை. (உ-ம்.) "முன்னிலையசை" (இலக்கணவி. உஎசு.) 2,3,4. அசையென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 5. இரையை மீட்டுமெல்லுதல். (உ-ம்.) "அருந்தும் பசும்புல் லுணுத் தெவிட்டி யசைவிட்டுறங்குங் கன்று" (கூர்மபு. கண்ண - அவ.அ௩.) 6. சிரகம். (தைல. தைலவ. உகூ.) 7. செய்யுளுறுப்புக்களுளொன்று; அது: எழுத்தினாலாக்கப்பட்டு நேரசை நிரையசையென இருவகையாய்ச் சீர்க்குறுப்பாய் நிற்பது. (உ-ம்.) "அசைத்திசைகோடலினசையே" (இலக்கணவி. எகக.) 8. தாளவகையு ளொன்று; அதன் தொழில் தாக்கியெழுதல். அதன் மாத்திரையொன்று. அதற்கு வடிவு "எ" (சிலப். அரங்கே. கசு. உரை.) 9. பிரகிருதிமாயை. 10. வெள்ளாட்டுமறி. 11. மாணவர் சுவடிவைக்குந் தூக்கு. [9, 10. அஜா.]

அசைஇ—போய். (உ-ம்.) "கருங்கோட்டெருமை கயிறுபரிந்தசைஇ" (ஐங்கு. கூ௫.)

அசைஇய—மெலிந்த. (ஐங்கு.)

அசைகபாதன்—காசிபருக்குச் சுரபியயந்த பதினேருருத்திரர்களு ளொருவன். (மச்சபு. வசுருத். கஅ.) [சுஜெகவாடி.]

அசைகம்பு—பாவர் மணக்கோல். (லெக்ஸிகன்.)

அசைகை—அசைதல்.

அசைகோம்பு—கட்டுகொம்பு. (லெக்ஸிகன்.)

அசைச்சீர்—ஓரசையாலாகுஞ் சீர்; அது: நேரசையாயின் "நாள்" என்னும் வாய்பாட்டிற்கும், நிரையசையாயின் "மலர்" என்னும் வாய்பாட்டிற்கும் இலக்கியமாய்ப் பெரும்பாலும் வெண்பாவினீற்றிலும், சிறுபான்மை மற்றையவற்றுள்ளும் வரும். "நாமாண் புரைத்த வசைச்சீர்க் குதாரணநாண்மலரே" (யாப். - காரிகை. உறுப். எ.)

அசைச்சோல் — வேறு பொருளுணர்த்தாது பெயர்ச்சொல்லோடு அல்லது வினைச்சொல்லோடுசார்த்திச்சொல்லப்பட்டுநிற்குஞ் சொல். (உ-ம்.) "நீதான்" "மைந்தவென்னவே" (நன். இடையி. உஉ, உரை.)

அசைத்தல்—1. ஆட்டுதல். "நந்திபிரான் திருப்பிரம்பையசைத்தருளி". (காஞ்சிப். மணிகண். ௩௪.) 2. இயக்குதல். 3. இறுமாப்பு. 4. ஓசையெடுத்தல். 5. கட்டுதல். (உ-ம்.) "பொன்னார்மேனியனேபுலித்தோலை யரைக்கசைத்து" (தேவார. மழபாடி. ௧. சுந்தர.) 6. சார்த்துதல். (தொல். சொல். இடை. உ. உரை. சேனா.) 7. சொல்லுதல். 8. வருத்துதல். (உ-ம்.) "நாய்நாவினல்லெழி லசைஇ" (பத். சிறுபா. ௧௭.) 9. வீசுதல். (உ-ம்.) "ஆலவட்டமசைத்தனர்" (கந்தபு. திருக்கயிலா. உ௧.) 10. தூக்குதல். (பு. வெ. 7. 18.) 11. தட்டுதல். 'கதவஞ்சேர்ந்தசைத்த கை'. (கலித். 68.)

அசைத்தொழில்—தாக்கியெழுதல். (இசைநூல்.)

அசைதந்நியம்—1. அசிற்பிரபஞ்சம். 2. அறிவில்லாதநிலை. 3. அஞ்ஞானம். [அசைதந்ய: சைதந்யம் - அறிவு.]

அசைதந்நியரூபம்-சடரூபம்;(புத்தம்)அது: பிருதிவி, அப்பு, தேயு, வாயு என நான்கு வகைப்பட்ட பூத உருவும்; கடினம், கந்தம், இரதம், வன்னம் என நான்குவகைப்பட்ட உபாதாய உருவுமாகிய எட்டுங்கூடிய இடத்தில் உண்டாயது. (சி. சி. பர. சௌத். ௪, ௫ - உரை.) [அசைதந்யரூபம்.]

அசைதல்—1. ஆடுதல். 2. இயங்குதல். (உ-ம்.) "அவனன்றியோரணுவுமசையாது" (தாயு. எங்குநிறை. ௧.) 3. இருத்தல். (உ-ம்.) "தாவில்கொள்கைமடந்தையொடுசின்னாள் - ஆவினன்குடி யசைதலுமுரியன்" (பத். திரு மு. ௧௭௬.) 4. இளைத்தல். (உ-ம்.) "உண்ணு நீர்வேட்டசைந்தேனெனவுரைப்ப" (சிந்தா. கனக. ௩௬.) 5. இளைப்பாறுதல். (உ-ம்.) "கடும்பரி நெடுந்தேர்ப் பூட்டுவிட் டசைஇ" (புறநா. ௧௪௯.) 6. உலாவல். (உ-ம்.) 'தென் றியாயசைந்துமெல்லச்சிநகரம்புகுதுமெல்லை' (கந்தபு. திருவவ. ௧௧.) 7. ஒய்தல். "நடைமெலிந் தசைஇய நன்மென் சீறடி" (பத். சிறுபா. ௩௨.) 8. கலங்கல். 9. கிடத்தல். (உ-ம்.) "குரங்கின்மிசையசைஇய தொருகை" (பத். திருமுரு. ௧0௬.) 10. செல்லுதல். (உ-ம்.) "அசைந்திடாதொழிக வென" (ஞானவா. சிகித். ௭௦.) 11. சோம்பலாயிருத்தல். (உ-ம்.) "இலமென்றசைஇ யிருப்பாரைக்காணின்" (வள். ௧0௪0.) 12. தங்குதல், சஞ்சரித்தல். (உ-ம்.) "அங்கணசைந்திடுதன்மையுன்னியருள்செய" (கந்தபு. தேவகிரி. ௧0.) 13. தடுமாறுதல். (உ-ம்.) "மடங்கலின்றேற்றநோக்கியந்தகனசைந்து நின்றான்" (கந்தபு. சிங்க. ௩௧0.) 14. தள்ளாடுதல், துவளல். (உ-ம்.) "வெங்கழுத் தசையநின்று சுமந்தினைத்தனர்" (பாரத. முதற்போ. ௩௬.) 15. பயப்படல். 16. புடைபெயர்தல்.

அசைநிலை — அசைச்சொல். [பொருள் உணர்த்தாது பெயரொடும் வினையொடுஞ் சார்ந்திச்சொல்லப்பட்டுநிற்றலின் அசைநிலையாயிற்று.] (உ-ம்.) "மற்றென்கிளவி வினைமாற்றசைநிலை" (தொல். சொல். இடை. ௧௪.)

அசைநிலையளபெடை — அசைகோடற்பொருட்டுக்கொண்ட அளபெடை; அது: "செறுஅய் வாழிய நெஞ்சு" என்பதிற் போல வருவது. (பி. வி. ௫. உரை.)

அசைப்பு—1. அசைத்தல். "மலர்க்கை யசைப்பில்" (காஞ்சிப். பரசிரா. ௧௧.) 2. இறுமாப்பு. 3. சொல். (திவாகர. ௧௧.) 4. சொல்லுகை.

அசைபோடல்—இரைமீட்டல். [போடல்- போகடலென்பதன் மரூஉ.]

அசைமீட்டல்—மிருகங்கள் தாம் உண்ட உணவை மீட்டுமென் றிரைப்பைபினுட் செலுத்துதல்.

அசைபடி — கலிப்பாவினுறுப்பாகிய அம்போதரங்கம். "அசையடிமிசைத்தாய்" (இலக்கணவி. ௭௩௮.)

அசையந்தாதி — செய்யுளில் ஓரடியின் ஈற்றசை மற்றையடிக்கு முதலசையாகவருந் தொடை. [இது: யாப். காரிகை, உறுப்பி. ௧௭. உரையில். அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தையும், அசையையும், சீரையும் ஆதியாகத்தொடுப்பது அந்தாதித்தொடை யென்பதனாற் பெறப்படும்.]

அசையாநிலை—அசையாதநிலை.

அசையாப்பொருள்—தாவரம்.

அசையாமணி—விசேடசமயங்களினன்றி அசைக்கப்படாத மணி. [அரசருடைய ஆராய்ச்சிக்குக் கருவியாகவைக்கப்படுதலால் இதனைச் சிலர் ஆராய்ச்சிமணியென்பர்.]

அசையாமை—சலநமின்மை. (உ-ம்.) 'விஞ்சுமசைவசையாமையிரண்டுமொன்ருய்' (ஞாநவா. சிகித். கசுo.)

அசையிடல்—அசைபோடல்.

அசையியல் — நுடங்கிய இயல்புடைய பெண். (குறள். 1098.).

அசையு—1. அமுக்கிரா (மலை.) 2. சீரகம். (வைத்தியபரி.)

அசையும்பொருள்—ஜங்கமம்.

அசைவாடுதல்—1. அசைதல். 2. உலாவுதல்.

அசைவிடுதல்–1. அசைபோடுதல். 'அசைவிட்டுறங்குங் கன்று' (கூர்மபு. கண்ணனவ. 83.) 2. இளைப்பாறுதல். (பரிபா. 6. 2.)

அசைவின்மை—முயற்சி. (உ-ம்.) "ஆகூழாற்ருேன்று மசைவின்மை" (வள். ௩எக.)

அசைவு—1. இளைப்பு. (உ-ம்.) "செம்மலுமசைவுதீர்ந்தான்" (சிந்தா. கேமசரி.உசு.) 2. ஆட்டம், எழுச்சி. (உ-ம்.) "பெருத்துநீண்டசைவுபெற்றிடுபாளை". (கந்தபு. முதனுட். ௩அ.) 3. சலநம். (உ-ம்.) "தூணமொத்தசைவறநின்ருன்" (காஞ்சிப். சார்ந்தா. க௩.) 4. சோம்பலாகிய பாடற்குற்றம். "காசிகாகுளி - பேசுறு குற்ற மசைவொடு மாற்றி" (கல்லாடம்.) 5. சோர்வு, தளர்வு. "அற்றுத்தற் சேர்ந்தார்க் கசைவிடத்து" (நாலடி. குடிப். கo.) 6. நிலைதவறுகை. (உ-ம்.) "ஓரசைவிலாதவனறைந்தனன்" (பாரத. திருட். க௩அ.) 7. புடைபெயர்ச்சி. 8. மடிதல், பின்னிடுதல். (உ-ம்.) "அசைவிலூக்கத்து நசைபிறக் கொழிய" (சிலப். இந்திர. கடு.) 9. மநக்கலக்கம். "அசைவிலாடவன்றன்னை" (கந்தபு. சூரன்றண். உஅ.) 10. முன்னிலைமைகெட்டு வேருெரு வாருகி வருந்துதல். (உ-ம்.) "இழிவே யிழவே யசைவே" (தொல். பொரு. உடு௩.) 11. வருத்தம். "என்னுழை யசைவின்றையனை" (சிந்தா. கனக. உடுஅ.)

அசைவுசெய்தல்—உண்ணுதல். 'நஞ்சினையசைவுசெய்தவன்' (தேவா. 581. 3.)

அசைவேட்டுதல்–இரையைமீட்டு மெல்லுதல்.

அசோகத்தளிர்மணி—சௌகந்திகப்பதுமராகமணி.

அசோகம்—1. அசோகமரம். "அளிமுரலணிமல ரசோகம் பூத்தன" (நைடத. அன்னத்தைக்க. ௩சு.) 2. சோகமின்மை. (உ-ம்.) "அசோகமெய்தி - மாருததண்ணளிகூர் மலர்வான்முகமாதவியே" (வாண. கக.) 3. பாதரசம். 4. மருதமரம். (மலை.) 5. வாழை. [அஶோக] 6. நெட்டிலிங்கம். (லெக்ஸிகன்.)

அசோகமர்கடவுள்—அருகன். (பிங்.)

அசோகரோகிணி—ஒரு மருந்துப்பூண்டு. [அஶோகரோஹிணீ.]

அசோகவநம் — 1. அசோகமரச்சோலை. 2. இராவணனுடைய உத்தியாநவநம். 3. வாழைவநம்.

அசோகவநிகாநியாயம் — இராவணன் சீதையைவைத்தற்கு மற்றையிடங்களைவிட்டுப் பிரதாநகாரணம் ஒன்றுமின்றி யசோகமரச்சோலையைத்தெரிந்துகொண்டதுபோல ஒருகாரியத்தைச் செய்தற்குப் பலவழியிருக்கவும் பிரதாநகாரணமின்றி ஒருவழியைத் தெரிந்துகொள்ளுதல். [அஶோகவநிகா-அசோகமரச்சோலை. ந்யாய-நீதி.]

அசோகவநிகை — அசோகமரச் சோலை. [அஶோகவநிகா: அஶோக - அசோகமரம். வநிகா - சோலை.]

அசோகன் — 1. அருகன். "சமணருமசோகன் றனைநினைந்து" (திருவிளை. பாண்டி. சுo.) [அசோகமரநிழலில் இருக்கிறவன் என்றபடி.] 2. சோகநீங்கினவன். (உ-ம்.) "எனையசோகனெனச்செயவெண்ணியோ" (சேது. இராமனரு. களகூ.) 3. மன்மதன். [அஶோக.] 4. மௌரியசக்கரவர்த்திகளுள் ஒருவன்.

அசோகாரி-கடம்பமரம். [அஶோகாரி.]

அசோகாஷ்டமீ—ஒரு விரதநாள்.

அசோது—1. அசோகமரம். "கணியின் கொம்பருலவியே யசோகின்வாவி" (கந்தபு. வள்ளி. சஉ.) 2. மருது. 3. வாழை. 4. நெட்டிலிங்கம். (லெக்ஸிகன்.)

அசோகை–சவரிப்பூண்டு. [அஶோகா.]

அசோசம்—1. அமைதி. 2. மநத்திருத்தி. 3. விசாரமின்மை. [அஶௌச]:

அசோண்டி—அசோணம்.

அசோணம்—குறட்டைப்பூண்டு. (மலே.) சவரிப்பூண்டு. 2. சவரிலோத்திரம்.

அசோதநம்-1. அசுத்தம். 2. திருத்தமின்மை. [அசோதந: சோதநம்-சுத்தி.]

அசோதம்—அவுரி. (வைத்தியபரி.)

அசோதிதம்-1.சுத்திபண்ணப்படாதது. 2. திருத்தப்படாதது, பரிசோதிக்கப்படாதது. [அசோதித: அ; சோதித.]

அசோதை—நந்தகோபன் மனைவி; இவள் கண்ணபிரானை வளர்த்த தாய்.(உ-ம்.)"அன்றிற் பெடைபோ லரற்று மசோதை கையினளித்தார்" (கூர்மபு. கண்ணனவ. சுo.) [யசோதா: யசஸ் - கீர்த்தி. தா - கொடுப்பவள். யகாரங்கெட்டு "அசோதை" எனத் தற்பவமாயிற்று.]

அசோலம்—தேற்றுமரம்.(வைத்தியபரி.)

அசோவதி — மேருவின் வடகிழக்கிலுள்ள ஒரு நகரம். (உ-ம்.) "இலகொளி வடகீழ்த் திசையிடை விளங்கு மசோவதியென்னுநன் னகரில்" (கூர்மபு. மேருவின்சி. கரு.)

அசோனம்—வாழை. (வைத்தியபரி.)

அசௌக்கியம்—சுகமின்மை.

அசௌகரியம்—1. சௌகரியமின்மை. 2. சுகமின்மை. (1, 2 லெக்ஸிகன்.)

அசௌசம்—1. அசுசி, அழுக்கு, சுத்தியின்மை. 2. ஜநந ம்ரணங்களால் வரும் ஆசௌசம். [அசௌச: சௌசம்-சுத்தம்.]

அசௌரியம்—வீரமின்மை.[அசௌர்ய: சௌர்ய - வீரம்.]

அஞ்சத்தான்–பிரமா. (உ-ம்.)"அஞ்சத்தானடியான வானவர்" (கந்தபு. அக்கினி. கஎ.) [ஹம்ஸ - அன்னப்பறவை. அத்து - ஒரு சாரியை. ஆன் - ஒரு விகுதி.]

அஞ்சநக்கல் — கருநிமிளை. (வைத்தியரி.)

அஞ்சநக்கலிக்கம் — அஞ்சநம் பார்க்கக் கண்ணுக்கிடும் ஒரு மருந்து.

அஞ்சநக்காரன்—அஞ்சநவித்தை செய்கிறவன்.

அஞ்சநக்கிரி—நீலமலை. "அஞ்சநக் கிரியில் வாழு மசுரன்முன்" (அருண. இடப். க.)

அஞ்சநக்கோல் — அஞ்சநந்தீட்டும் இலேகினி. (உ-ம்.) "அஞ்சநக்கோலினுற்றுனகம்" (சிந்தா. விமலை. சு.)

அஞ்சநகிரி—சேடமலை.

அஞ்சநசலாகை — மைதீட்டுங் கோல். [அஞ்ஜநசலாகா: அஞ்ஜந-மை. சலாகா - கோல்.]

அஞ்சநசேவோத்தேசநம் — அஞ்சநப்பிரயோகத்தினால் விளக்குதல். (உ-ம்.) "அஞ்சனசேவோத்தேசநகிருத்தியத்தாற் கண்ணொளிவிளங்கிக் காணப்படுதல்போல்" (சி. சி. ரு. கூ. ஞாநப்.) [அஞ்ஜந; ஸேவா; உத்தேஜநம்.]

அஞ்சநத்திரயம் — மூவகையஞ்சநங்கள்; அவை: பூதாஞ்சநம், சோராஞ்சநம், பாதாளாஞ்சநம் என்பன [அஞ்ஜந; த்ரய-மூன்று.]

அஞ்சநப்பெட்டி—அஞ்சநைப்பெட்டி.

அஞ்சநபாஷாணம்—1. கல்லீயம். (வைத்தியபரி.) 2. விளைவுப்பாஷாணம் முப்பத்திரண்டினொன்று. (சட்ட. கஅஉ.)[அஞ்ஜந; பாஷாணம் - கல்லு.]

அஞ்சநம்—1. அக்கினி. 2. ஆணவமலம். (உ-ம்.) "அணுக்கடஞ்சத்திதன்னைத்தினைப்பரஞ்சநமுமற்றே" (சிவதரு. சிவஞானயோ. கூகூ.) 3. இருள். 4. ஒரு பூண்டு. 5. ஒரு மரம். (உ-ம்.) "சூரலஞ்சநமந்தாரை" (மச்சபு.அத்திரி. ரு.) 6. ஒரு மலே. (உ-ம்.) "அஞ்சநக் கவுஞ்சங்கோவத்தநந்திரிகூடங் காஞ்சி-குஞ்சரசையமேம கூடமேவிந்தமென்னு-மஞ்சிவர் வரைகளெட்டும்" (திருவிளை. யானையெ. எ.) 7. கண்ணுக்கிடும் மை. "அஞ்சநவியர்மதர்க்கண்ணிணைவிரகின்" (இரகு. தேநு. சுரு.) 8. கருமை. (உ-ம்.) "மேலோரஞ்சநப்போர்வை போர்த்தாலன்னதால்" (கந்தபு. காளிந். கo.) 9. கலிக்கம்; பாம்பு கடியுண்டவர்முதலியோர்க்குக் கண்ணிலிடும் மருந்து. 10. நீலக்கல். 11. தாமதகுண சித்திகளுளொன்று; அது: கண்ணுக்குப் புலப்படாது மறைந்துகிடக்கும்பொருளை வெளிப்படுத்திக் காட்டுவது. (கூர்மபு.உ: கச. உரை.) 12. மறைந்துகிடக்கும்பொருளைக் காட்டும் மை. 13. மேற்றிசைக்காவலமர்ந்துளதென்றுசொல்லப்படும் ஒரு யானை. (சூ. நிகண். கஉ. எசு.) 14. மை. (பிங்கல. நஉoசச.) [அஞ்ஜந.]

அஞ்சநம்பார்த்தல் — மறைந்தபொருளை மையிட்டறிதல். (பரத. பாவ. 20.)

அஞ்சநவண்ணன்—விஷ்ணு.

அஞ்சநவித்தை — அறுபத்துநான்கு கலைஞானங்களில் ஒன்று; அது: மறைந்தபொருளைக் காண்பிப்பது. (உ-ம்.) "அறுபத்துநான்கு கலைகளாவன; மாயாசம்பிரதம்.... அஞ்சநவித்தை...அஞ்சநவித்தை - மறைபட்ட பொருளைக் காண்பிப்பது" (சௌந். கூ0. உரை.) [ஃஜநவிஷ்யா.]

அஞ்சநவெற்பு—திருவேங்கடமலை. (திவ். திருவாய். 8. 2. 8.)

அஞ்சநவேர்—அவுரிவேர். (வைத்தியபரி.)

அஞ்சநன்—1. இந்திரன். 2. சநி. 3. விட்டுணு. [அஞ்ஜந-கருமை.]

அஞ்சநாட்சி — மைதீட்டிய கண்ணுடையாள்.

அஞ்சநாட்சியம்மை — திருக்கற்குடியிலே கோயில்கொண்டிருக்குந் தேவியார்.

அஞ்சநாலா — 1. கருங்காக்கணம். 2. நீலோற்பலம். (1, 2 வைத்தியபரி.)

அஞ்சநாவதி — சுப்பிரதீபமென்னும் வடகீழ்த்திசையானையின் பெண்யானை. [ஃஜநாவதி: ஃஜநாவதி - கருமையுடையது.]

அஞ்சநி—1. காயாவென்னும்மரம். (உ-ம்.) "அஞ்சநி தலையசைப்ப" (இரகு. குசனயோ. கூஅ.) 2. நாணற்புல். [அஞ்ஜந-கருமை. இ- ஒரு விகுதி.] 3. நீலோற்பலம். (1, 2, 3 வைத்தியபரி.)

அஞ்சநேயன்—அநுமான். (உ-ம்.) "அஞ்சநேயனுமார்த்தெதிர்ந்து" (நல். பார. இராவணச. சஉ.) [அஞ்ஜநா-அஞ்சனை. ஏய - மகன்மையைக்காட்டும் ஒரு விகுதி.]

அஞ்சநை — 1. அநுமானுடைய தாய். "திருமல ரஞ்சநை சேய்பணி மாலத்தர்" (மறை-தி. டுஎ.) [இவள் முன் ஓர் அப்ஸரஸ்திரீயாயிருந்து பின் ஒரு சாபத்தாற் குஞ்சரன் என்னும் வாநரனுக்குப் புத்திரியாகப் பிறந்து, இச்சித்தரூபங்களையெடுக்கும் வன்மையுடையளாய் ஒருநாள் மனுஷரூபமுள்ள ஓரிளம்பெண்ணாகி வாயுபகவானைக்கூடி யநுமானைப்பெற்றவள்; பின்னர்க் கேசரியென்னும் வாநரனை மணம்புரிந்து அவனுக்கு மனைவியாயினள் என்பர்.] 2. ஒரு நதி. (உ-ம்.) 'நங்கண்டகிமந்தாகினியேநவிலஞ்சநை மந்தகைசோணை' (விருத்தாசலபு. தீர்த்தச். கூ0.) 3. தீபசிகை. (உ-ம்.) "அஞ்சநை நாமிகாவர்த்தமரோகம்" (சீவரட். உசடு.) 4. வடதிசைக்காவலமர்ந்துளதென்றுசொல்லப்படும் சாருவபௌமம் என்னும் யானையின் பெண்யானை. [ஃஜநா.]

அஞ்சநைநாமிகாவர்த்தமரோகம் — இமையைப்பற்றிய ரோகபேதங்களு ளொன்று; அது: இமைகளின் நடுமையத்திலாவது முனைகளிலாவது பயறுகளின் பிரமாணமாகத் தாமிரநிறத்துடன் உதிரத்தைக் கக்குவதான கட்டிகளையெழுப்புவதும், அக்கட்டிகள் தினவுடன் நோவைத்தருபவைகளும், திரமுள்ளவைகளுமாக இருப்பதுமானது. (சீவரட். உசடு.)

அஞ்சப்படுதல்—மதிக்கப்படுதல். (உ-ம்.) "மாலால் அலரேந்தியஞ்சலிசெய்தஞ்சப்படுவான்" (சிந்தா. கனக. ருச.)

அஞ்சபாதம்—1. அன்னப்புள்ளினடி. 2. ஓர் புள்ளடிக்குறி. 3. சாதிலிங்கம். [ஹம்ஸ வாத: அன்னத்தின் கால்போலும் நிறமும் உருவமும் உடைமையாற் சாதிலிங்கத்திற்கு இப்பெயர்வந்தது.]

அஞ்சம்—1. அசபாமந்திரம். "காயத்திரியதனினதிகமஞ்சமாமந்திரம்" (காஞ்சிப். திருவேக. உஅ.) 2. அன்னப்பறவை. (உ-ம்.) "அஞ்சமுமஞ்சவருஞ் சசிவந்தாள்" (கந்தபு. தெய்வ. உசo.) 3. ஒருவகைச் சந்நியாசம். (உ-ம்.) "குலவுறு சந்நியாசவாச்சிரமங் குடீசகம் பகூதமஞ்சம் - நலமுறுபரமகஞ்சமேயென்ன நான்கதாம்" (சூத. சந்நியாச. உ.) 4. பங்கு. (உ-ம்.) "அஞ்சக்கலைபடு" (திருப்பு. கக.) [1, 2, 3. ஹம்ஸ, 4. ஃம்ஶ.]

அஞ்சமிருகல் — சிற்றரத்தை. (வைத்தியபரி.)

அஞ்சரதன் — பிரமன். [ஹம்ஸ; ரத - வாகநம்.]

அஞ்சல்—1. அஞ்சாதிருக்க எனப்பொருள்படும் ஒரு வியங்கோள்வினைமுற்று. (உ-ம்.) "அஞ்சலஞ்சலென்றடிமைக்கு" (தாயு. பராபர. கஉச.) 2. தபால். [வழக்.] 3. தாங்கல்.

4. தோல்வி. (பிங்க.கஅசுசு.) 5. பயப்படுதல். "எஞ்சுமவர் தம்மையிலேயோன்பரிவினேக்கி - யஞ்சல்விடுமின்களென" (கந்தபு. தகரே. கஎ.)

அஞ்சலப்பெட்டி — அஞ்சறைப்பெட்டி. (லெக்ஷிகன்.)

அஞ்சலம்—1. சீலையினேரம். [அஞ்சல.] 2. வாளுறை.

அஞ்சலர்—பகைவர். (உ-ம்.) "அஞ்சலர் தனிப்போரேறே" (நல்.பார.மார்க்.உசரு.)

அஞ்சலிந்நல்—அபயங்கொடுத்தல்.

அஞ்சலி—1. ஆடுதின்னுப்பாலை. (வைத்தியபரி.) 2. இரண்டுகைகளையும் இணைத்து உள்ளங்கைகளைப் பதித்துக்கோலிய குழி. 3. இரண்டுகைகளையும் இணைத்து உள்ளங்கைகளைப் பதித்துக்கோலிய குழியிற் கொள்ளத்தக்க அளவு. 4. இரண்டுகையும் பதாகையாய் அகம் ஒன்றுவது. (உ-ம்.) "அஞ்சலியென்ப தறிவுறக் கிளப்பின் - எஞ்சலின்றி யிருகையும் பதாகையாய் - வந்தகம்பொருந்து மாட்சித்தென்றனர் - அந்தமில்காட்சி யறிந்திசினேரே" (சிலப். அரங்கே. கஅ. உரை.) 5. சங்கங்குப்பிப்பூண்டு. 6. நான்குபலம். (உ-ம்.) "கழலடியஞ்சலியைந்து" (தைல. தைலவ. ருச.) 7. கைகுவித்துக் கும்பிடுதல் (உ-ம்.) "அஞ்சலிகுவித்தகரங்களுந் தலைமேலணைந்திட" (பெரியபு. திருஞா. சுருரு.) 8. மாவிலிங்கமரம். 9. வண்டுகொல்லிப்பூண்டு. 10. வறட்சுண்டி. 11. வௌவால். (பிங்.) 12. காட்டுப்பலா. (லெக்ஷிகன்.) 13. அரியெடுப்பு. 14. ஒருவகையம்பு. (கம்பரா. நாகபா. 113.) [2,3,7. அஞ்சலி.] (9, 10, வைத்தியபரி.)

அஞ்லிக்கை—கைமுகிழ்த்தல்.

அஞ்சலிகாரிகை—ஒரு பூண்டு.

அஞ்சலிகை—வௌவால்.(பிங்க.உஙஅக)

அஞ்சலித்தல்—அஞ்சலிசெய்தல். (உ-ம்.) "அஞ்சலித்தடிமேற்சூடி" (நல். பார. மார்க்கண். உசரு.)

அஞ்சலிபத்தன்—கூப்பியகையினன்.

அஞ்சலிபந்தனம்—கைகூப்பித்தொழுகை. [ஸஜ்ஞலிவஸ்ரூநம்.]

அஞ்சலிவந்தநம்—நெற்றியிற்கைகுவித்து வந்தனஞ்செய்தல்.

அஞ்சலினவர்—பாஞ்சராத்திரமதத்தோர். "அஞ்சலி னவர்புக ழுண்ண லாதியோர்" (கந்தபு. திருவவ. சுஉ.) [அஞ்சு - ஐந்து. அலினவர் - இராத்திரிசம்பந்தமுடையவர். அல் - இரா.]

அஞ்சலோமசம்—அன்னபேதி. [ஹம்ஸ ஸொஜஸ.]

அஞ்சவத்தை—ஐந்துநிலை; அவை: ஆன்மாவுக்குரிய சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பன. "ஆன்மாத் தங்கிய வஞ்சவத்தை" (சிவப்பிர. ௩. க.) [அஞ்சு - ஐந்து. ஜவஸ்ரா - நிலை.]

அஞ்சவாச்சிரமம்—நால்வகைச்சந்நியாசங்களுள் ஒன்று. (உ-ம்.) "பரத்தியலு மஞ்சவாச் சிரமத்திற் செய்தன்மிகப் பாங்கேயாகும்" (சூத. ஞாந. ச: உரு.) [ஹம்ஸ; ஆஶ்ரம.]

அஞ்சறுகாரன்—தபாற்கான். [வழ.]

அஞ்சறுதுழற்சி-குக்குமபாஷாணம். (வைத்தியபரி.)

அஞ்சறுதளச்சி—முப்பத்திரண்டு பாஷாணங்களுள் ஒன்றாகிய குக்குமபாஷாணம்.

அஞ்சறைப்பெட்டி—கடுகு, மிளகு முதலியன வைக்கும்படி ஐந்து அறையுள்ளதாகச் செய்யப்பட்ட பெட்டி.

அஞ்சன்—1. "அஞ்சம்" என்னும் சந்நியாச ஆச்சிரமத்துக்குரிய சந்நியாசி. இவனிலக்கணம், சூத. ஞாந. சு: எ, அ-ஆம் செய்யுட்களிற் கூறப்பட்டுளது. அவை வருமாறு: "கொண்டசீ ரஞ்சன் கமண்டலங் கந்தை கோவணம்பலிக்கலன்வேணுத்-தண்டமுத்தரீயங்கொள நிருநீறுத்தூளநந்தகச்செயற்கைமுப் - புண்டாரந்தரித்தல் சிரச்சிகைமழித்தல் பொம்மலெண்கவளமேபுசித்தன் - மண்டலம் புகழ்சாவித்திரிசந்தி வயங்குகாலந்தொறுஞ் செபித்தல்", "திடமுற வான்ம விசாரஞ் செய்திடுத நீர்த்தயாத்திரை புரிந்திடுதல் - படர்கிருச்சிரஞ் சாந்திராயண முதலாப் பல விரதமுமநுட்டித்தல்-இடமுறு மோரூ ரினிலொர்நா ளன்றியேற்நா ளிராமை சஞ்சரித்தல் - படவரவணிந்தோனருட்குறிப்பூசை பத்தியிற்புரிந்திடன் மரபால்" 2. ஆறிருதுக்களிலுஞ் சூரியசமுகத்துநின்று ஓரிருதுவுக்கிருவராகப் பாடுவோர் எனச் சொல்லப்படும்

பன்னிருவருளொருவன். (உ-ம்.) 'மன்னு மம்புருயாழ்நாரதனஞ்சன்'(கூர்மபு.ருகூ:எ) 3. பன்னிரண்டாதித்தருள் ஒருவன்; இவன் ஏழாயிரங் கதிர்பரப்பி யிருளைத் துரப்பவனென்றும், மேடமாதத்தி லுதிப்பவனென்றும் கூர்மபு. ஆதவர்கதிர்.ச,கூ-ஆம் செய்யுட்களிற் சொல்லப்படும். அச்செய்யுட்கள் வருமாறு: "ஒற்றை.....செற்றுவெங்கதிரேழாயிரம்பரப்பிச் செறியிருள் பருகிடு மஞ்சன்..... தாதா" "மாசிமீன் வருணன் பங்குனி பூடாச் சித்திரை யஞ்சன்வை காசிக் - காசறு தாதா வானியிந் திரனு டியிற்கவி தாநலா வணிக்கு-நாசமில்விச்சுவான்புரட்டாதிபகனலைப்பசிப் பரிச்சநிசீர்-வீசுகார்த்திகைதொட்டாநன்மார் கழிக்கு மித்திரன் றைக்கு விட்டுணுவே" 4. பிரமன். (உ-ம்.) "அஞ்சன் கரியோ னுருத்திரன்மற் றொருவர்க் கொருவ ரதிகரென" (சூத. எக்கி. உத். உ: கடு.) [ஹம்ஸ.]

அஞ்சனு—சாகுபடி மதிப்பு. (லெக்ஸிகன்.)

அஞ்சனுதார்—சாகுபடி மதிப்பிடுபவன். (லெக்ஸிகன்.)

அஞ்சனேஜாபிதா—புள்ளிக்கணக்கு.

அஞ்சாச்சிறப்பு — வாகைத்திணைவிகற்பங்களுளொன்று; அது: பகைவர்கண்ணுந் தன்பாலார்கண்ணும் ஒப்புமையாகப் பாசறையுள்ளாச் சால்புடைமை கூறல். (வீரசோ. பொருட். கக. உரை.)

அஞ்சாநநன்—சிவன். [அஞ்சு - ஐந்து. ஆநநன் - முகமுள்ளவன்.]

அஞ்சாப்பட்டயம் — 1. எடுத்த உரிமைகளைத் திரும்ப அளித்தற்குரிய சாசனம். 2. பிறர் கொடுமைசெய்யாவகைநியமிக்கும் சாசனம். (1, 2. லெக்ஸிகன்.) 3. அச்சமின்றி யுலாவும்பொருட்டு அரசினரால் ஒருவருக்குக்கொடுக்கப்படும் பத்திரம்.

அஞ்சாமை—திண்மை. (உ-ம்.) "அஞ்சாமையீகையறிவூக்கம்" (வள். ருஅஉ.)

அஞ்சாறப்பெட்டி — அஞ்சறைப்பெட்டி. (லெக்ஸிகன்.)

அஞ்சாலியிடையர்—இடையருள் ஒருபகுதியார். இவர்களுடைய பெண்கள் மங்கல அணியாக ஐந்தாலியணிபவர்கள். [ஐந்தாலி அஞ்சாலியென்று மருவிற்று.]

அஞ்சாவிரா—பெருங்குமிழ்.

அஞ்சி—1. அதியமான். (புறநா. 91.) 2. தபால். (லெக்ஸிகன்)

அஞ்சிந்தை—பயம். (லெக்ஸிகன்.)

அஞ்சிகம்—கன். (வைத்தியபரி.)

அஞ்சிட்டன் — சூரியன். [ஸம்ஜிஷ்ட: ஸம்ஜ் ; ஐஷ்ட - ஒரு வ-வி.]

அஞ்சித்தல் — 1. பூசித்தல். 2. அடைதல். (உ-ம்.) "அஞ்சித்தல் சொற்றபூசனையடைவுமாம்" (காஞ்சிப். திருவே. ருகூ.)

அஞ்சிதபதம்—குதியை ஊன்றிப் படத்தை மேனோக்கிவைத்துநிற்கை.(பாரத. பாவ. 83.)

அஞ்சிதம்—1. பூசிக்கப்பட்டது. 2. வளைந்தது. [அஞ்ஜித.]

அஞ்சிதமுகம்—தலையைத் தோளின்மேலே சாய்த்தல். [ஸம்ஜிதக்ரீவ: ஸம்ஜித - வளைந்த.]

அஞ்சிதவணி—தற்குறிப்பேற்ற அணி.

அஞ்சினி—ஐந்தாமாதம். (வைத்தியபரி.)

அஞ்சீரம்—1. அத்தி. 2. அத்திப்பழம். (1. 2. வைத்தியபரி.)

அஞ்சு—1-3. அஞ்சென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 4. அலங்கரித்தல். 5. ஐந்தென்னுமெண். (உ-ம்.) "அஞ்சுவைகலிவ்வகன்கிரிநண்ணி" (கந்தபு. வள்ளி. உஉடு.) 6. சூதாடுவோர் வசனிக்குங் குழூஉக்குறிகளுளொன்று. (கந்தபு. கயமுகனு. கரூஎ.) 7. பிரார்த்தித்தல். 8. போதல். 9. வணங்குதல். 10. வளைதல். 11. அச்சம். 'அஞ்சுவரத்தகுந'. (புறநா. 41.) 12. ஒளி. 'அஞ்சுவணத்தின்' (கம்பரா. ஊர்தேடு. 79.)

அஞ்சுகம்—1. கிளி. 2. உத்தரீயவஸ்திரம். 3. சீலை. 4. வெள்ளைச்சீலை. [2, 3, 4. ஸம்ஶுக.]

அஞ்சுங்குளிர்தல் — ஐம்பொறியும் இன்பமடைதல்.

அஞ்சுதகுதல்—அச்சமுண்டாதல்.(தொல். பொருள். 56. உரை.)

அஞ்சுதல்—1. நடுங்குதல். (உ-ம்.)"அஞ்சு மஞ்சுமென்னுருயிரென்னுமால்" (இராமா. நகர்நீ. கo.) 2. பயம். (உ-ம்.) "அஞ்சுதல் வெகுளி சோக மக்கணத் தகற்றி" (அருணசலபு. திருமலைவல. உகூ.) 3. மதித்தல். (உ-ம்.) "அஞ்சப்படுதல்."

**அஞ்சுபயம்**—குடிகளுக்கு நேரிடும் ஐந்து வகைப்பட்ட பயங்கள்; அவை: அரசனால் வருவதும், அவன் பரிசனரால் வருவதும், பகைவரால் வருவதும், கள்வரால் வருவதும், விலங்கு முதலிய உயிர்களால் வருவதுமாம். (உ-ம்.) "மாநிலங்கா வலனாவான் மன்னுயிர் காக் குங்காலைத் - தானதனுக் கிடையூறு தன் னாற்றன் பரிசனத்தா-லூனமுறுபகைத்திறத் தாற் கள்வரா லுயிர்தம்மா - லானபயமைந் துந்தீர்த் தறங்காப்பானல்லனோ" (பெரியபு. திருவா. ருசு.)

**அஞ்சுமாந்**—1. இருபத்தெட்டாகமங்களு ளொன்று; அது: சதாசிவமூர்த்தியுடைய வாமதேவமுகத்தினின் றுற்பவித்த ஐந்தாக மங்களுள் ஒன்றென்பர்; அதற்குக் கிரந்த சங்கியை யைந்திலக்கம். (சைவச. பொது. ருருஉ.) 2. கன்னியிராசியில் உதிக்குஞ் சூரி யன். (உ-ம்.) "அஞ்சுமாங்விட்டுணுவென்ன" (கூர்மபு. அந்தகா. கஉ.) 3. சூரியன்மரபிற் பிறந்த ஓரரசன்; இவன் சகரனுக்குப் பௌத் திரன். (கூர்மபு. சூரிய. சரு.)

**அஞ்சுமாலி**—சூரியன். [அம்ஶுமாலிந் அம்ஶு - கிரணம். மாலிந் - மாலையுடை யவன்.]

**அஞ்சுருவாணி**—அச்சாணி. (உ-ம்.) "தடை யற்றதேரிலஞ் சுருவாணி போலவே தன்னி லசையாதுநிற்கும்" (தாயு. மவுன. கூ.)

**அஞ்சுவநத்தார்**—நெய்வாரின் ஒருபகுதி யார்.

**அஞ்சுவர்ணத்தோன்**—துத்தநாகம்.(வைத் தியபரி.)

**அஞ்சுறல்**—பயப்படுதல். (உ-ம்.) "செல் லுதற்கஞ்சுறுந்தமியேன்" (கந்தபு. அக்கினி. உஎ.)

**அஞ்சேடுப்பு** — ருதுஸ்நாநத்தன்று செய் யும் ஒரு சடங்கு.

**அஞ்சேவி**—1. செவியகம். (நன். மெய். கசூ-ம் உரையும்.) [அகம் - உள். அகமென் பதிற் ககரவுயிர்மெய் கெட்டுநின்றது.] 2. வறட்சுண்டி. (வைத்தியபரி.)

**அஞ்சேழுத்து** — பஞ்சாட்சரம். (உ-ம்.) "அஞ்செழுத்தாலமைந்தமையும்" (சி. சி. சூ: அ.) அவை, நமசிவாய என்னும் எழுத்துக் கள். இவற்றுள், ந—திரோதாநசத்தியையும், ம — ஆணவமலத்தையும், சி — சிவத்தையும், வ—அருளையும், ய—ஆன்மாவையும் கருதும். (சிவப்பிர. கூ: உரை.)

**அஞ்சோலிவாள்**—சுண்டி.(வைத்தியபரி.)

**அஞ்ஞத்துவம்**—ஞானமின்மை.[அஜ்ஞத்வம் : அ; ஜ்ஞத்வ - அறியுந்தன்மை.]

**அஞ்ஞதை** — அறியாமை. (பௌட். பசு. ககரு.) [அஜ்ஞதா: அ; ஜ்ஞதா - அறியுந்தன் மை.]

**அஞ்ஞன்** — அறிவில்லான் (பிரபோத. 38. 1.) [அஜ்ஞ: ஜ்ஞ - அறிவுடையவன்.]

**அஞ்ஞாதகுலகோத்திரன்**—குலகோத்திரம் அறியப்படாதவன்.

**அஞ்ஞாதசுகிருதம்** — தன்னை அறியாமல் வந்த புண்ணியம். (ஸ்ரீவசன. 381. வ்யா.)

**அஞ்ஞாதம்** — அறியப்படாதது. (உ-ம்.) "ஞாத மஞ்ஞாதமாகிய வெல்லாவற்றிற்கு நல்லசான்றாகி" (சூத. எக்கி. பூ. கசு. எ.) [அஜ்ஞாத: அ; ஜ்ஞாதம் - அறியப்பட்டது.]

**அஞ்ஞாதவாசம்**—பிறர்அறியாமல் மறைந்து வசிக்கை.

**அஞ்ஞாதவாசி** — பிறராலறியப்படாத வாச முடையவன். (உ-ம்.) "அஞ்ஞாதவாசி யாகிய பீமசேநனேயென்று நிச்சயிப்பது" (சி. சி. அளவை. க. சிவாக்.)

**அஞ்ஞாநகிருதம்**—அறியாமற்செய்த பாவம்.

**அஞ்ஞாநபூமி** — பொல்லாதவாசனையாகிய எழுபூமிகள்; அவை: வித்துசாக்கிரம், மேற் சாக்கிரம், மகாசாக்கிரம், சாக்கிரசொப்ப நம், சொப்பநம், சொப்பநசாக்கிரம், சுழுத்தி யென்பன. (தாயு. எங்கு. ச. உரை.) [அஜ்ஞாநபூமி.]

**அஞ்ஞாநம்**—1. ஆணவமலம். (சிவப்பிர. உ:உ. உரை.) 2. ஞானமின்மை. (உ-ம்.) "அஞ் ஞானத்தாலுறுவதுதான்பந்தம்" (சி. சி. அ: உஎ.) 3. தெய்வ அறிவின்மை. 4. மாயை. (வேதாந்தம்) (விசாரசா. களக.) 5. விபரீத ஞானம். (பௌட். மாயா. சரு.) [அஜ்ஞாநம்: ஜ்ஞாநம் - அறிவு.]

**அஞ்ஞாநவிருத்தி** — அஞ்ஞானச்செயல்கள்; அவை: தமம், மோகம், மகாமோகம், தாமிச்சிரம், அந்ததாமிச்சிரம் என ஐந்து வகைப்படும். (பௌட், பும்ஸ். கசுஉஇ.)

அந்நாநி—அறிவிலி. (உ-ம்.) "அலைந்து பிறப்பிலாங்கார வஞ்ஞாநிகளாமாநுடரும்" (பிரபுலிங்க. விமலை. உகூ.) [ஃஜ்ஞாநீ: ஃ; ஜ்ஞாநீ - அறிவுடையவன்.]

அந்நான்று—அப்போது. (உ-ம்.) "அஞ்ஞான்றுடலைவெஃகி" (கந்தபு. காளி. கடு.) [அ - அந்த. ஞான்று - பொழுது.]

அந்நை—1. அஞ்ஞாநம். 2. அறிவில்லான். "உணர்விலியஞ்ஞையினும் பிரிவிலன்" (சொழிப்பு. புகலி. சு.) [ஃஜ்ஞா: ஜ்ஞா - அறிவு, அறிவுடையவன்.] 3. இலாடத்தாகம். [ஞஜ்ஞா.] 4. தாய். (உ-ம்.) "அஞ்ஞைநீயேங்கியழலென்று" (சிலப். கஞ. உச.)

அநர்—1. துன்பம். (உ-ம்.) "பேரநர்க் கண்ணன்பெருங்காடுநோக்கி" (புறநா.உசஎ) 2. நோய். 3. அச்சம். 4. வழுக்குநிலம். (2,3, 4. திவா.)

அநராட்டி—நோயுள்ளவள். (உ-ம்.) "அழிவுடையுள்ளத்தாரநராட்டி" (சிலப். புறஞ் சே. அ௦.)

அநலம்—1. கொசுகு. 2. நுளம்பு. (திவாகரம்.)

அநன்—அறிவிலான். (திவா.)

அட்சகூலை—ஒருவியாதி.

அட்சதரோகம்—உபநகரோகம்; அது: நகச்சுற்றுவந்து வேதனையைச்செய்து நகத்தின் வேரைக்கெடுத்து அந்நகம்விழுவதற்கு முன்னமே மறுநகத்தை முளைப்பிப்பதால் வரும் ரோகம். (சீவரட். உஅச.)

அட்சதை — 1. அக்கதை, மங்களவரிசி. (மஞ்சளரிசியென்பர்.) 'மாமலரட்சதை யறுகதிற்சொரிந்து' (பிரபோத. 11. 42.) 2. அரிசி.

அட்சதைப்போட்டு —— நெற்றியிலிடும் பொட்டுவகை.

அட்சதைபோட்டுக்கொள்ளுதல்—ஒரு காரியத்தை வலிந்து மேற்கொள்ளுதல்.

அட்சதைவைத்தல் — சுபகாரியத்துக்கு அழைத்தற்கு அறிகுறியாக அட்சதை கொடுத்தல்.

அட்சபாகை – பூகோளாக்ஷத்தின்பாகை.

அட்சபாடம் — திசைப்படிவை. (சி. லி. கிரி. உஎ.)

அட்சபாதன்—அக்கபாதன்.

அட்சம்—1. குன்றியைந்துகொண்ட ஒரு நிறை. (மிரு. சு. ருஅ.) 2. தான்றிக்காய். (தைல. தைலவ. கசசச.) [அக்ஷ - தான்றி. அமர.] 3. வெங்காயம். (தைல. தைலவ. கஉடு) ["அக்கம்" என்பதற்குச் சொல்லப்பட்டபொருள்களில் 7, 12, 18, 23, 24, தவிர்ந்தன இதற்கும் பொருளாம்.]

அட்சமணி—அக்கமணி.

அட்சமாலாதரன் – அட்சமாலைதரித்தவன். (உ-ம்.) "அட்சமாலாதரா" (திருப்பு. ௬௦கூ) [ஃக்ஷமாலாதர.]

அட்சமாலிகை — 1. இருக்குவேத உபநிடதங்களுளொன்று. 2. உருத்திராக்ஷமாலை. [அக்ஷமாலிகா.]

அட்சமாலை—அக்கமாலை.

அட்சய—பிரபவ முதலிய வருடங்களிலே யறுபதாம்வருடம். (வருஷாதிநூல்.)

அட்சயதிருதீயா — வைகாசிமாதத்துச் சுக்கிலபக்கத்தில் வரும் மூன்றாந்திதி. [இது முதலாவது யுகமாகிய சத்தியயுகத்தின் ஆரம்பதினமென்றும், இத்திநத்திற் செய்யும் புண்ணியக்கிரியைகள் நித்திய பலமுடையன என்றும், இதனால் இப்பெயர் வந்ததென்றும் சொல்வர். [ஃக்ஷயதிருதீயா.]

அட்சயதூணி—அருச்சுநனுடைய அம்புக்கூடு. [அக்ஷய - குறைவின்மை. தூணி - அம்புக்கூடு.]

அட்சயபாத்திரம் — 1. பாண்டவர்களுக்குச் சூரியனாற்கொடுக்கப்பட்ட பாத்திரம். 2. பிட்சாபாத்திரம். (வைஷ்ணவபரிபாஷை.)

அட்சயம் — கேடின்மை. [அக்ஷய: அ; க்ஷய - கேடு.]

அட்சயன்—கடவுள்.

அட்சயா — 1. சாந்திரமாநத்தில் ஞாயிற்றுக்கிழமை அல்லது திங்கட்கிழமை வரும் ஏழாம் நாள். 2. சாந்திரமாநத்துப் புதன்கிழமையில் வரும் நாலாம் நாள்.

அட்சரகணிதம்—பீசகணிதம். [எழுத்துக்களை யெண்ணுக்காகப் பிரயோகித்தலால் வந்த பெயர். அக்ஷர - எழுத்து. கணித - கணக்கு.]

அட்சரகாலம்—ஒரு தாளவளவை.

அட்சரச்சுதகம்—அக்கரச்சுதகம்.

அட்சரசஞ்சன்—அட்சரசணன்.

அட்சரசணன்—எழுத்துக்காரன். [அக்ஷர சண: அக்ஷர; சண - ஒரு வ - வி.]

அட்சரசநநி — எழுத்தாணி. [அக்ஷர - எழுத்து. ஜநநீ - பிறப்பிப்பது.]

அட்சரசநன்—அட்சரசணன்.

அட்சரசீவகன் — எழுத்தினுற்சீவிப்போன்.

அட்சரசீவி — அட்சரசீவகன். [அக்ஷர ஜீவிந்: ஜீவிந் - சீவிப்போன்.]

அட்சரசுத்தி — 1. உச்சரிப்புத் திருத்தம். 2. எழுத்துத்திருத்தம்.

அட்சரதாபநம் — மந்திர எழுத்துக்களை யந்திரத்திலடைத்தல். [அக்ஷர; ஸ்தாபநம் - தாபித்தல்.]

அட்சரதீபம் — கோயிலிலிடும் ஐம்பத் தொருதீபம். (லெக்ஸிகன்)

அட்சரதூலிகை—இலேகநி. [அக்ஷரதூலி கா: தூலிகா - கோல்.]

அட்சரதேவி — சரசுவதி. 'அட்சரதேவி கோவின் விதிப்படி' (திருப்பு. 1126.)

அட்சரதோஷம்—எழுத்துப்பிழை.

அட்சரப்புல்—பீனசப்புல். (வைத்தியபரி.)

அட்சரபாவனை — மகேச்சுரியபாவனை. (கூர்மபு. வருண. சங. உரை.) [அக்ஷர பாவநா.]

அட்சரம் — 1. அக்கரம். 2. தருமம். 3. தவம். 4. பிரகிருதி. 5. பிரணவம். 6. முத்தி. [அக்ஷர] 7. இராகலக்ஷணத்தொன்று 8. நாக்குவெடிப்புநோய். 9. குழந்தைகளுக்கு வரும் நோய்வகையினொன்று.

அட்சரரோகம்—கந்தாளிரோகம். (சீவரட். உஅச.)

அட்சரலட்சணம்—அக்கரவிலக்கணம்.

அட்சரவிந்நியாசம்—1. எழுத்து. 2. எழு தப்பட்டபத்திரிகை. 3. வேதம். [அக்ஷரவி ந்யாஸ: அக்ஷர; விந்யாஸ - தாபநம்.]

அட்சரன்—1. அக்கரன். 2. காலதத்து வத்திலிருக்கும் ஒரு ருத்திரன். (வி - ணி. உஎச.) [அக்ஷர.] 3. அந்தரியாமி. (வேதா. சூ. சஉ. உரை.) [அக்ஷர: - அழிவற்றவன், கடவுள்.]

அட்சராத்துமகசத்தம்-எழுத்தாலாகிய ஒலி. (த. நி. போ. உகஉ; பௌட். விந்து. கடுஇ.) [அக்ஷராத்மகஶப்த: அக்ஷராத்மக - எழுத் தாந்தன்மையுடையது. ஶப்த - ஒலி.]

அட்சராப்பியாசம் — எழுத்துப்பயில்விக் கும் சடங்கு.

அட்சராரம்பம் — அக்காரம்பம். [அக்ஷ ராரம்ப.]

அட்சன்—அக்கன். [அக்ஷ.]

அட்சாம்சம்—பூகோளரேகையின் பாகம்.

அட்சி — 1. கண். 2. கண்ணுடையவள். (உ-ம்.) "மீனாட்சி" 3. சேர் என்னும் அள வை. [அக்ஷி.] 4. நூற்றெட்டுபநிடதங்களுள் ஒன்று.

அட்சிணி — அஷ்டபோகத்துளொன்ருகிய தற்காலத்தநுபவிக்கும் சுதந்திரம்.

அட்சிபாகாத்தியபரோகம் — கண்களில் வருஞ் சங்கரரோகவகைகளிலொன்று; அது கண்கள் வீங்குதல், கலங்குதல், நீர் கம்மு தல், பீளைவடிதல், கருவிழி வெள்விழி சிவத் தல், எரிச்சல், பார்வைகெடல் முதலிய குணங்களையுண்டாக்குவது. (சீவரட். உகூo.)

அட்சியம் — யசுர்வேத உபநிடதங்களு ளொன்று. (கூர்மபு. அட்டமூ. உசு. உரை.)

அட்சீவம் — 1. ஒருவகை மாமரம். 2. முருங்கைமரம். (வைத்தியபரி.)

அட்சௌகிணி—அக்குரோணி. [அக்ஷௌ ஹிணீ.]

அட்டக்கரி — } மிக்ககறுப்பு.
அட்டக்கறுப்பு— }

அட்டகசம் — 1. ஆடாதோடை. (வைத் தியபரி.) 2. அட்டதிக்கியானை. [அஷ்டகஜ.]

அட்டகணம் — நூன்முதற்செய்யுளின் முதற்சீர்க்குச் சுபமெனவிதிக்கப்பட்ட நான் கும், அசுபம் என விதிக்கப்பட்ட நான்கு மாகிய எண்வகைக்கணம். அவை: நிலக் கணம், நீர்க்கணம், மதிக்கணம், இயமான கணம், சூரியகணம், தீக்கணம், வாயுகணம், ஆகாயகணம் என்பன. (சூ. நி. கஉ. தொ. கசு - கஎ.) [அஷ்ட - எட்டு. கண - கூட்டம்.]

அட்டகணிதம் – எண்வகைக்கணக்குகள்; அவை: சங்கலிதம், விபகலிதம், குணநம், பாகாரம், வர்க்கம், வர்க்கமூலம், கநம், கநமூலம் என்பன. அவற்றுள் சங்கலிதம் - கூட்டல். விபகலிதம் - கழித்தல். குணநம் - பெருக்கல். பாகாரம் - பிரித்தல். வர்க்கம் - ஒரு எண்ணை அவ்வெண்ணால் ஒருமுறை பெருக்கல். வர்க்கமூலம் - வர்க்கத்துக்கு மூலங்காணல். கநம் - ஒரு எண்ணாலே அந்த எண்ணைப்பெருக்கிப்பெற்ற பேற்றை மறுபடியும் அவ்வெண்ணாலே பெருக்கல். கநமூலம் - கநத்துக்கு மூலங்காணுதல். (பிங்க. சஅகச.) குணகாரம், பரியச்சம், பாற்காம், மூலம், மானதம், கன்மம், சலிதி, தருதம். (சூடா.)

அட்டகந்தம் — எண்வகை வாசனைப் பொருள். அவை: சந்தநம், அகரு, கஸ்தூரி, கருப்பூரம், பச்சிலை, குங்குமம், இலாமிச்சை, கோட்டம் என்பன. (த. நி. போ. ௬0௧.) [அஷ்ட; கந்த - வாசனை.]

அட்டகம்–1. அயமலாதி. 2. எட்டன்கூட்டம். (உ-ம்.) "உருவமெலாம் பூதவுபாதாய சுத்தாட்டகவுருவமென்னின்" (சி. சி. பர. சௌத். மறு. ௧௭;) 3. எட்டு. 4. எண்மடங்கு (உ-ம்.) "ஆற்றி னட்டகஞ் சோடசங் கயைப் பல னளிக்கும்" (வேதாரணியபு. வன்னி. ௩௪.) 5. வசம்பு. (1,5. வைத்தியபரி.) [2, 3, 4. அஷ்டக.]

அட்டகர்ணன்–பிரமன். [கர்ண - காது.]

அட்டகருமக்கரு — மாயவித்தைக்கூட்டுச் சரக்குகள்.

அட்டகருமம்–1. அரசர்க்குரிய எண்வகைக் கருமம்; அவை: ஆதாநம், விசர்க்கம், பிரஷம், நிஷேதம், சார்த்தவசநம், வியவகாரேக்ஷணம், தண்டம், சுத்தியென்பன. 2. எண்வகைக் கருமங்கள்; அவை: வசியம், மோகநம், தம்பநம், ஆகருஷணம், உச்சாடநம், வித்துவேடணம், பேதநம், மாரணம் என்பன. (வேதா. சூ. ௧௬. உரை.) [அஷ்ட கர்ம: அஷ்ட - எட்டு. கர்ம - செயல்.]

அட்டகல்யாணி–கால், முகம், தலை, வால் மார்பு: இவை வெளுத்த குதிரை. (அசுவசா. 33.)

அட்டகவர்க்கம்—அட்டவர்க்கம். (உ-ம்.) "அட்டக வர்க்க மென்பது தானே யாதித் தன் சந்திரன் செவ்வாய் - இட்டமாம் புந்தி பொன்புகர் சநிய னிலக்கிநத் துடனெட்டு வகையில்-வட்டவான்புவிமேலட்டகவர்க்கம் வகுத்தனர்" (சாதகசிந். ௧௬௫௬.) [அஷ்டக; வர்க்க.]

அட்டகவுடலம் — புரியட்டகம். (உ-ம்.) "அட்டக வுடலத் தோடே யுயிர்பிதா வருந் தந் நாதி - தொட்டவ னுதரந் தொக்குச் சுக்கிலத் துடனே தோன்றி" (சிவதரு. அ. ௧௩.)

அட்டகாசம்—1. ஒரு தலம். (உ-ம்.) "அட்டகாசத்துப் பெருந்தகை மகாநந்தேச் சுரனே" (சூத. எக்கி. பூ. ௪௩: ௨௩.) 2. பெருஞ்சிரிப்பு. (உ-ம்.) "அட்டகாசத்திலட்டகயங்களு மதிர்ந்துநிற்ப" (மச்சபு. இரணியகசிபுவத. ௧௩.) [அட்டஹாஸ.] 3. ஆர்ப்பாடம்.

அட்டகாசன் — இருபத்தெண்கலியுகத்திலொன்றில் மறைவிரிப்போன். [அட்டஹாஸ.]

அட்டகாசி—1. சிவன். 2. பெருநகைசெய்வோன். [அட்டஹாசி.]

அட்டகிரி—எட்டுமலைகள்; அவை: இமயம், மந்தரம், கைலை, விந்தம், நிடதம், எமகூடம், நீலம், கந்தமாதநம் என்பன. (பிங்க. ௪௩௩.) [அஷ்ட - எட்டு. கிரி - மலை.]

அட்டகீடம்-எட்டுவகைக்கீடமாகியபிராணிகள்; அவை: ஓணான், தவளை, அடவியீ, வீட்டுப்பல்லி, காட்டுமசகம், மக்ஷிகா, மலையெறும்பு, சிலந்தியென்பன. (சீவரட். ௩௫0.) [அஷ்டகீடம்.] (மக்ஷிகா - தேனீ.)

அட்டதுட்டம்—எட்டுவகைக் குட்டநோய்கள்; அவை: கருங்குட்டம், இரணக்குட்டம், வெண்குட்டம், செங்குட்டம், கிருமிக்குட்டம், நீர்க்குட்டம், விரல்குறைகுட்டம், சொரிகுட்டம் என்பன. இது "கருங்குட்டமிரணக்குட்டங்காசுறுவெண்மைக்குட்டம் - பெருகுசெங்குட்டநாளும் பேசருங் கிருமிக்குட்டம் - விரியுநீர்க்குட்டங் கால்கை விரல் குறைகுட்டமேனுஞ் - சொரிகுட்டமிதனோடெட்டாய்ச் சொற்றனர் பிணிதேர் நூலோர்" என்னும் வைத்தியநிகண்டாற் பெறப்படும். [அஷ்டகுஷ்ட.]

அட்டகுணச்செல்வம் — அணிமாதிகுணங்களையுடைய அட்ட ஐசுவரியங்கள். (உ-ம்.) "அட்டகுணச்செல்வமும்படைத்தவந்தமாநனவோரும்" (ஞானவா. புசுண். சஞ.)

அட்டகுணபூதன்—அருகன். (எண்குணமுடையவன் என்றபடி.) (உ-ம்.) "புசிப்பு வந்திடு பிறப்புறக்கமிவை விட்டொரட்ட குண பூதனுய்" (சி.சி. பர. நிகண். மத. ச.) [சுஷ்டகுணபூத.]

அட்டகுணம் — கடவுளுக்குரிய எட்டுக் குணங்கள்; அவை: தன்வயத்தனுதல், தூய வுடம்பினனுதல், இயற்கையுணர்வினனுதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களி னீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்ற லுடைமை, வரம்பிலின்பமுடைமை என்பன. (வள். கூ. உரை. பரி.) [சுஷ்டகுண.] [ஆருகதர் "அநந்தஞானம், அநந்ததரிசனம், அநந்தவீரியம், அநந்தசுகம், நிர்நாமம், நிர்க்கோத்திரம், நிராயுஷியம், சகலசம்மியக்குபாவம்" என்னும் எட்டினையும் அருகனெண்குணங்களென்பர்.] (சி. சி. அ: கஉ. மறை.)

அட்டகுரவர் — எட்டுவகையாசாரியர்கள்; அவர்கள்; போதககுரு, வேதககுரு, நிஷிதகுரு, காமியகுரு, சூசககுரு, வாசககுரு, காரககுரு, விகிதகுரு என்பவர்கள். இவர்களுள், போதககுரு - சாத்திரார்த்தம் போதிப்பவன். வேதககுரு - தத்துவதரிசகன். நிஷிதகுரு - வசியாகருஷணதிகளால் இகலோகத்திற் சுகமும் பரலோகத்திற் றுறக்கமுங் கொடுப்பவன். காமியகுரு-சுகர்மோபதேசத்தால் இகபரங்களிற் சுகமெய்தப்பண்ணுபவன். சூசககுரு - விவேகமுகத்தாற் சமாதிசட்குணங்களையும் ஒருங்கே வரப்பண்ணுகிறவன். வாசககுரு - விஷயங்கள் பொய்யென வெறுத்து ஆன்மவிருப்பமுண்டாகச்செய்பவன். காரககுரு - சிவசீவர் ஐக்கிய ஞானத்தை வரச்செய்கிறவன். விகிதகுரு - சந்தேகம்நீக்கி மோக்ஷம் அடையச் செய்கிறவன். (வேதா. சூ. கசு, கஎ. உரை.) [சுஷ்டகுரவ:]

அட்டகுலபருவதம்—அட்டகிரி. அவையாவன: மாலியவான், கந்தமாதனம், நிடதம், ஏமகூடம், இமம், நீலம், சுவேதம், சிருங்கம் என்பனவாம். (கந்த. அண்டகோ. ௬ச.)

அட்டகுலபானை—அட்டகசம்.

அட்டகுன்மம் — எட்டுவகைக் குன்மம்; அவை: சூலைகுன்மம், வாதகுன்மம் பித்தகுன்மம், வலிகுன்மம், சந்நிகுன்மம்; சர்த்திகுன்மம், வெய்யகுன்மம், எரிகுன்மம். (உ-ம்.) "சூலைகுன்மம் வாதகுன்மங் கொடுமைகொள்பித்தகுன்மம் - வலிகுன்மஞ்சந்நிகுன்மம் வாந்திகொள் சர்த்திகுன்மம் - நிலைதடு மாறச்செய்யு நிகரிலா வெய்யகுன்மம், உலைவுகொ ளெரிகுன்மத்தோடோதியகுன்மமெட்டே" என்னும் வைத்தியநிகண்டாற் பெறப்படும். [சுஷ்டகுல்ம.]

அட்டகை—1. அட்டமி. 2. இருபத்தொருவகை யாகத்திலொன்று. 3. பிதிரர்களையுபாசித்தற்குரியனவாய் மார்கழி, தை, மாசியென்னும் மாதங்களிலே யபரபக்கங்களிலே வருஞ் சத்தமி, அட்டமி, நவமியென்னும் மூன்று திதிகள். [பங்குனிமாதமுங்கொள்ளுப.] 4. மேற்குறித்தகாலங்களிற் செய்யப்படுஞ் சிராத்தம். (உ-ம்.) "மருவுமார்கழி தையொடு மாசியி - லருளினேடு மபரபக்கந்தனிற் - றெருளுமட்டகையென்னுஞ்சிராத்தமாங் - கொருவிடாமலுஞற்றிடவேண்டுமால்" (கூர்மபு. அழற். ௬.) மேற்குறித்த மூன்று திதிகளுள்ளும் முக்கியமாகக்கொள்ளப்படும் அட்டமி. [சுஷ்டகா.]

அட்டகைச்சிராத்தம்—பிதிரர்களையுபாசித்தற்குரியனவாய் மார்கழி, தை, மாசியென்னும் மாதங்களிலே யபரபக்கங்களிலேவரும் சத்தமி, அட்டமி, நவமி என்னும் மூன்று திதிகளிற் செய்யப்படுஞ் சிராத்தம். (உ-ம்.) "விருப்பமெய்தி - யாதரவோடுசெய்யுமட்டகைச்சிராத்தநாளின்" (கூர்மபு. பிரமசரி. உக.) [சுஷ்டகா; ஶ்ராத்த.]

அட்டகோணம்—எட்டுக்கோணம்

அட்டகோத்திரத்தார்--வைணவப்பிராமணருள் ஒரு பிரிவினர்.

அட்டங்கால்—குறுக்காக மடக்கிவைக்குங் கால்.

அட்டசத்திகள்—1. ஆரிணி, ஜநநி, ரோதயித்திரி என்னும் மூன்று பரிக்கிரகசத்திகளும், ஈசாநம், தற்புருடம், வாமம், அகோரம், சத்தியோசாதம் என்னும் பஞ்சசத்திகளுமாகிய எட்டுச் சத்திகள். 2. சயை, விசயை, சயந்தி, அபராசிதை, சித்தை, ரத்தை, அலம்புசை, உற்பலை என்னும் எட்டுச்சத்திகள். இது "தாத்திலுயர்ந்த சயை விசயை சயந்தி யபராசிதை சித்தை - யிரத்தை யோடே யலம்புசையுற் பலையென் றெண்மர் மாதர்கடாம் - புரத்திலுறுநாயகிகள்" என்னும் (ஞாநவா. புசுண் ௪௯-) செய்யுளாலும் உரையாலும் பெறப்படும். 3. சிவனுடைய கிரியாசத்தியினதுள்ளுருவும் புறவுருவுமாகிய உருவுகள் எட்டு. அவை: ஈசாநி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி, ஆரிணி, ரோதயித்திரி, ஜநநி யென்னும் எட்டுச்சத்திகள். இது பின்வரும் மேற்கோளாற்பெறப்படும். "ஈசாநி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி யென்னும் பஞ்சசத்தி புறவுருவுடைத்தாய், ஆரிணி, ஜநநி, ரோதயித்திரி என்னுந் திரிசத்தி யுள்ளுருவுடைத்தாயிருக்கும். கிரியாசத்தி சரீரப்புறவுருவிலுதித்த" (சி. சி. ௧: ஞாந. ௫. முகவாசகம்.) 4. வாமை, சேட்டை ரௌத்திரி, காளி, கலவிகரணி, பெலவிகரணி, பெலப்பிரதமநி, சர்வபூததமநியென்னும் எட்டுச் சத்திகள். (உ-ம்.) "வாமாதி சர்வபூததமநியந்தமாகிய அட்டசத்திகளுமாகி" (சி. சி. பாயிரம். சிவசத்தி.) [அஷ்டஶக்தி.]

அட்டசித்தி—அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் எட்டுச்சித்திகள். (உ-ம்.) "எந்தையட்டசித்திவேண்டுமெங்களுக்கெனத்தொழ" (திருவிளை. அட்டமா. ௬.) "அணிமாமகிமாவிலகிமா வரியகரிமாப் பிராத்திமலப் - பிணிமாசுடையோர்க்கடை வரிய பிராகாமியமீசத்துவமெய் – துணிமா யோகர்க்கெளியவசித் துவமென்றெட்டாம்" (திருவிளை. அட்டமா. ௨௨.) என்னும் செய்யுளாலும் பெறப்படும். [அஷ்டஸித்தி.]

அட்டசிரவணன் — பிரமன். [அஷ்டஶ்ரவண.]

அட்டசுபம் — அட்டமங்கலம். [அஷ்டஶுப.]

அட்டசூரணம் — இந்துப்பு, ஓமம், திரிகடுகு, கருஞ்சீரகம், காயம், சீரகம் என்பவற்றாலாய ஒரு மருந்து.

அட்டணங்கால்—அட்டணைக்கால்.

அட்டணைக்கால் — ஒன்றின்மேலொன்றாகக் குறுக்கேயணைத்துவைக்கப்பட்ட கால். [அடு; அணை; கால்.]

அட்டத்திரிஞ்சத்—முப்பத்தெட்டு. (உ-ம்.) "அட்டதிரிஞ்சற்கலைகள்" (சி. சி. ௧: ௫௧. ஞாநப்.) [அஷ்டத்ரிம்ஶத் : அஷ்ட - எட்டு. த்ரிம்ஶத் - முப்பது.]

அட்டத்திரிஞ்சற்கலைகள் — சிவபூசைசெய்யும்போது சதாசிவனது ஐந்துமுகத்தினும் நிற்பனவாகக்கொள்ளப்படும் முப்பத்தெட்டுக்கலைகள். (உ-ம்.) "கிரியாசத்தி சரீரப்புறவுருவிலுதித்த சசிநியாதியட்டத்திரிஞ்சற்கலைகளினது" (சி. சி. ௧: ௫௬. ஞாந. முகவாசகம்.) அவை: ஈசாநகலைகளைந்தும், தத்புருஷகலைகள் நான்கும், அகோரகலைகளெட்டும், வாமதேவகலைகள் பதின்மூன்றும், சத்தியோசாதகலைகளெட்டுமாம். (அகோ. கிரி.)

அட்டதந்திரவாதம் — வாயுவினால் வரும் ஒருவகை ரோகம்.

அட்டதநம்—எண்வகைச்செல்வம்; அவை: அழகு, குணம், ஆயு, குலம், சம்பத்து, வித்தை, விவேகம், தநம் என்பன. [அஷ்டதநம்.]

அட்டதயாவிருத்தி — எண்வகைத் தயவுச்செயல்; அவை: பிறரையந்தீர்த்தல், தீமைக்கஞ்சல், பிறர்துயர்க்கிரங்கல், நன்மைகடைப்பிடித்தல், பிறர்கருமத்திற் குடன்படல், பிறர்கருமமுடிக்கவிரைதல், பிறர்க்குப் பொருள்வரவை யுவத்தல், பிறர்செல்வம் பொறுத்தலென்பன. [அஷ்டதயாவ்ருத்தி: வ்ருத்தி - செயல்.]

அட்டதரித்திரம்—மிகுவறுமை.

அட்டதருமம்—எண்வகைத்தருமம்; அவை: யாகம், வேதமோதுதல், தாநம், தபம், சத்தியம், திடம், பொறுமை, லோபமின்மையென்பன. (இதோப. ௧௦.) [அஷ்டதர்ம்ம: அஷ்ட - எட்டு. தர்ம்ம - அறம்.]

அட்டதளசக்கரம்—எண்வகையிதழுடைய சக்கரம்; அவை: சோத்திரத்துவாரம் இரண்டு, நேத்திரத்துவாரமிரண்டு, ஆக்கிராணத்துவாரமிரண்டு, துவக்குத்துவாரம் ஒன்று, சிங்குவைத்துவாரம் ஒன்று. (த. நி. போ. ருடுரு.) [அஷ்டதளசக்ரம்.]

அட்டதளம் — எட்டிதழ்த்தாமரை. அது: எட்டிதழை யுடையதாகக் கொள்ளப்படுந் தாமரை. [அஷ்டதள.] (சி. லி. கிரி. சஎ.)

அட்டதா—1. எட்டுப்பிரிவு. 2. எண்மடங்கு. [அஷ்டயா: அஷ்ட - எட்டு. யா - மடங்கு.]

அட்டதாது—எண்வகைலோகங்கள்; அவை: பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, வெண்கலம், தரா, வங்கம், துத்தநாகம் என்பன. [அஷ்டயாது.]

அட்டதாநபரீட்சை—வைத்தியர் பரீட்சிக்கும் எட்டுக் குறியிடங்கள்; அவை: நாடி, முகம், மலம், அமரி, கண், நா, சரீரம், தொனி யென்பன. [அஷ்டஸ்தாநபரீக்ஷா.]

அட்டதிக்கயம் — எட்டுத் திக்கியானைகள். அவை: ஐராவதம், புண்டரீகம், வாமநம், குமுதம், அஞ்சநம், புட்பதந்தம், சார்வபூமம், சுப்பிரதீகம் என்பன. (பிங்க. முத. வான. உ0.) [அஷ்டதிக்கஜ.]

அட்டதிக்கரிணி — அட்டதிக்கயங்களின் பிடிகள்; அவை: அப்பிரமை, கபிலை, பிங்கலை, அநுபமை, தாமிரகர்ணி, சுப்பிரதந்தி, அங்கனை, அஞ்சநாவதி யென்பன; இவை ஐராவதம் முதலியவற்றிற்கு முறையே பெண்களாகும். [அஷ்டதிக்கரிணீ: திக்கரிணீ - திக்குப் பெண்யானை.]

அட்டதிக்காளர் — அட்டதிக்குப்பாலகர். (உ-ம்.) "அளக்கரும்பிரமாண்டம்போலட்டதிக்காளர் காப்பர்" (ஞானவா. வீமபா. உ.)

அட்டதிக்கு — எட்டுத்திசைகள்; அவை, கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு என்பன. (உ-ம்.) "அட்டதிக்கையுமடைப்பர்கள்" (காஞ்சிப். வாணி. கூடு.) [அஷ்டதிக்: திக் - திசை.]

அட்டதிக்குப்பாலகர் — எட்டுத்திசைகளையுங் காப்பவர்; அவர்: இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்பவர். இவர் முறையே கிழக்கு முதலிய திக்குகளிலே காவல்செய்துகொண்டிருப்பர். [அஷ்டதிக்பாலக.]

அட்டதீசம்—எருக்கஞ்செடி. (மலை.)

அட்டதிசைரசம் — சுத்தரசம். (வைத்திய பரி.)

அட்டதீரசம்—அரப்பொடி. (வைத்தியபரி.)

அட்டதேறல்—காய்ச்சிய மது. (சாருயம்.) (உ-ம்.) "அட்டதேறலுமடாதமைதேறலும்" (கந்தபு. நகர்பு. கூ0.) [அட்ட - காய்ச்சிய. தேறல் - மது.]

அட்டநம்—வட்டவடிவமாகிய பரிசை.

அட்டநாகபந்தம் — சித்திரகவிவகைகளுளொன்று; அது: நான்காமெழுத்து நாற்பத்தோராமெழுத்தாகவும், ஆறுமெழுத்து நாற்பத்தைந்தாமெழுத்தாகவும், எட்டாமெழுத்து இருபதாமெழுத்தாகவும், பன்னிரண்டாமெழுத்துப் பதினெட்டாமெழுத்தாகவும், இருபத்திரண்டாமெழுத்து நாற்பத்தேழாமெழுத்தாகவும், இருபத்துநான்காமெழுத்து முப்பத்தொன்பதாமெழுத்தாகவும், முப்பத்துமூன்றுமெழுத்து ஐம்பத்தோராமெழுத்தாகவும், முப்பத்தேழாமெழுத்து நாற்பத்தொன்பதாமெழுத்தாகவும்வரும்படியொற்றுட்பட ஐம்பத்தோரெழுத்தான் ஒரு செய்யுட்செய்து கிரமப்படி எட்டுப்பாம்பு வரைந்து அதன்கண் அடைத்துக்கொள்ளப்படுவது. (தண்டி.) [அஷ்ட; நாக; பந்த.]

அட்டநாகம் — எட்டுவகைத்திவ்யசாதிச் சர்ப்பங்கள்; அவை: அநந்தன், வாசுகி, தக்கன், கார்க்கோடகன், பதுமன், மகாபதுமன், சங்கபாலன், குளிகன் என்பன. (பிங்க. உ. க) [அஷ்ட; நாக.]

அட்டநிக்கிரகங்கள் — எட்டுத்தோல்வித்தானங்கள். (உ-ம்.) "அட்டநிக்கிரகங்களாவன" (தர்க்க - பா. எசு.) அவை: நியூநம், அதிகம், அபசித்தாந்தம், அசித்தம், விருத்தம், அநைகாந்திகம், பிரகரணசமம், காலாத்தியாப திட்டம் என்பன. [அஷ்ட நிக்ரஹ.]

அட்டப்பல்லக்கு — குறுக்காகக்கொண்டு போகும்படியமைந்த சிவிகை.

அட்டப்பிரகரணம் — எட்டுப்பிரகரணங்கள்; அவை: தத்துவப்பிரகாசிகை, தத்துவசங்கிரகம், தத்துவத்திரயநிர்ணயம், போககாரிகை, மோக்ஷகாரிகை, நாதகாரிகை, பரமோக்ஷநிராசகாரிகை, இரத்தினத்திரயம் என்பன. (சைவச. பொது. ௩௨௭. உரை.) [அஷ்ட; ப்ரகரணம்.]

அட்டப்பிரணவம்—எட்டுப்பிரணவம். (த. நி. போ. ௩௭௬.) [அஷ்டப்ரணவ.]

அட்டப்பிரபந்தம் — பிள்ளைப்பெருமாளையங்காரியற்றிய எட்டுப்பிரபந்தம்.

அட்டப்பிரமாணம் — எட்டுவகைப்பிரமாணங்கள்; அவை: அநுமானம், அபாவம், அருத்தாபத்தி, ஆகமம், உபமானம், ஐதிகம், சம்பவம், பிரத்தியட்சம் என்பன. (உபநி. கசு.) [அஷ்ட; ப்ரமாணம்.]

அட்டபதம்—1. கயிலாசமலை. 2. சரபப்புள். 3. சிலந்தி. [அஷ்டபத.]

அட்டபதி — எட்டுப்பாதமுடையது. (பி. வி. உக. உரை.) [அஷ்டபதீ: அஷ்ட-எட்டு. பதீ - பாதமுடையது. ஈ - ஒரு வ-வி.]

அட்டபந்தனம்—சுக்கான்கல், கொம்பரக்கு, சாதிலிங்கம், செம்பஞ்சு, தேன்மெழுகு, எருமைவெண்ணெய், குங்கிலியம், நற்காவியென்னும் எட்டுப்பொருளையுஞ் சேர்த்திடித்துத் திரட்டப்படும் ஒரு மருந்து; அவை சிலாவிக்கிரகங்கள் சலனமின்றியிருக்கும்படி சார்த்தப்படும். [அஷ்ட;பந்தநம்.]

அட்டபரிசம் — எண்வகைப் பரிசங்கள்; அவை: ஊன்றல், கட்டல், குத்தல், தட்டல், தடவல், தீண்டல், பற்றல், வெட்டல் என்பன. (பிங்க. சஉ௫.) [அஷ்ட; ஸ்பர்ச.]

அட்டபாதம்—1. எண்காற்புள். 2. சிலந்திப்பூச்சி. [அஷ்டபாத: பாத - கால்.]

அட்டபாலகர் — அட்டதிக்குப்பாலகர். (உ-ம்.) "அட்டபாலகரும் வசுக்களும்" (நல். பார. குமாரச. ௧௦௩.) [அஷ்ட; பாலக - காவலாளர்.]

அட்டபுட்பம் — 1. எட்டுவகைப் பூக்கள்; அவை: புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், பாதிரி, நீலோற்பலம், அலரி, செந்தாமரையென்பன. இவை புறப்பூசைக்குரியன. 2. பூப்போலக்கொள்ளத்தக்க எட்டுக்குணங்கள்; அவை: கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்பன. இவை அகப்பூசைக்குரியன. (சைவச. பொது. ௧௨அ. உரை.) (உ-ம்.) "அட்டபுட்பமவை கொண்டடிபோற்றி" (தேவார. திருப்பழ. அ. சுங்.)

அட்டபுயகம் —, அட்டபுயகரம்—, அட்டபுயங்கம்— காஞ்சீபுரத்திலுள்ள விட்டுணு ஆலயங்களெட்டினுள் ஒன்று.

அட்டபுயம்—காஞ்சீபுரத்துள்ள விட்டுணு ஆலயங்களெட்டினுள் ஒன்று. [விட்டுணு எட்டுப்புயங்களோடிருந் திலக்குமியை விவாகஞ்செய்தமையால் "அட்டபுயம்" எனப் பெயர் பெற்றதென்பர்.] (உ-ம்.) "கரிகிரியட்டபுயம்" (கந்தபு. நகர. ௬௦.) [அஷ்டபுஜ.]

அட்டபோகம் — எண்வகை யின்பஅநுபவம்; அவை: அணிகலம், ஆடை, தாம்பூலம், பரிமளம், சங்கீதம், பூவமளி, பெண், போசனம் என்பன. (பதார்த்த. வை. தி. கக.) விவேகசிந்தாமணிக்காரர் அணிகலமென்பதைவிலக்கி ஸ்நாநமென்பதைச் சேர்த்தனர். (உக௦.) [அஷ்டபோக.]

அட்டபோகஸ்வாம்யம் — அட்டபோகவுரிமை.

அட்டம்—1. அருகு. (உ-ம்.) "அடர்க்குநாய்களட்டமாகவிட்டு" (பெரியபு. கண்ணப். எசு.) 2. எட்டு. (உ-ம்.) "அட்டமாம்புயமாகுமாரூரரே" (தேவார. திருவாரூ. க-வது. திருக்குறு. எ. திருநா.) [அஷ்ட.] 3. குறுக்கு. 4. சாதிக்காய். (மலை.) 5. நேர். "அட்டமாக வழுதிமே லமர்க்கெழுந்த தொக்குமே" (திருவிளை. கடல்சு. க.) 6. மேல்வாய். 7. மேல்வீடு. 8. ராசமனை. 9. இலவம், இராமல்லி, கரந்தை, சங்கங்குப்பி, சுக்கு, தழுதாழை, பாதிரி, வழுதலை என்னும் எட்டு.

அட்டம்பாரித்தல் — பக்கலிலே விசாலித்தல், பருத்தல். [அட்டம் - அருகு. பாரித்தல் - பரத்தல்.]

அட்டமகாரோகம்—எளிதில் வசப்படாத எட்டு மகாரோகங்கள்; அவை: வாதம், கல்லடைப்பு, குட்டம், மேகம், மகோதரம், பகந்தரம், மூலரோகம், கிரகணிரோகம் என்பவைகளாம். [அஷ்டமஹாரோக.]

அட்டமகாலிகன்—வானப்பிரஸ்தருளொருவன். இவன் மூன்றுநாள் உணவின்றியிருந்து நான்காநாளிற் பின்பகலில் உண்போன். [ஒரு நாளைக்கு இருகாலப்போசனமாகக்கொண் டெட்டாங்காலத்திற்புசிப்போனென்றபடி.] [அஷ்டகாலிக: அஷ்ட - எட்டாவது. காலிக - காலசம்பந்தமுடையவன்.]

அட்டமங்கலம்—எட்டுவகை மங்கலங்கள்; அவை: கவரி, நிறைகுடம், கண்ணடி, தோட்டி, முரசு, விளக்கு, பதாகை, இணைக் கயல் என்பன. (உ-ம்.) "அட்டமங்கலமுந் தந்து" (கந்தபு. விண்குடி. ௩௬.) [சீவகசிந்தாமணி கோவிந்தையாரிலம்பகம் அறுபத்து நான்காஞ் செய்யுளுரையிற் காட்டப்பட்ட "சாமரை தீபந் தமனியப் பொற்குடங்-காமர் கயலி ணிணைமுதலாத் - தேமருவு - கண்ணடி தோட்டி கதலிகை வெண்முரச-மெண்ணிய மங்கலங்க ளெட்டு" என்னுஞ்செய்யுளால் அட்டமங்கலம் இவையெனக் காண்க. வாசஸ்பத்திய அகராதிகாரர் சிங்கம், எருது, யானை, குடம், ஆலவட்டம், கொடி, பேரி, தீபமென் பவைகளே யட்டமங்கலமென்பர்.] 2. ஒரு வகைக்குதிரை; அது, உரம், நான்கு குளம்புகள், வால், முகம், உச்சி என்னுமெட்டிடங்களிலுமுள்ள மயிர்கள் வெண்ணிறமுடையனவாயிருப்பது. (உ-ம்.) "முகமார்புச்சிவால்காலென்றுரைத்த வெட்டுறுப்பினும் வெண்மை-விரவிய தட்டமங்கலம்" (திருவிளை. நரிபரி. ௧௧௦.) 3. ஒருவகைப் பிரபந்தம்; அது: "கடவுள்காக்க" என ஆசிரியவிருத்தம் எட்டினலே பாடப்படுவது. (உ-ம்.) 'கடவுள் காக்கவெனக்கவியிருநான் - கடைவுறவகவல் விருத்தமதனல்-வகுப்பதட்ட மங்கலமாகும்' (இலக்கணவி .அ௬௩.) அஷ்டமங்கலம்: மங்கலம்-சோபனம்.

அட்டமச்சநி — உதயலக்கினத்துக் கெட்டாம் இடத்தில் நிற்குஞ் சநி. [அட்டம-எட்டாவது. சநி - ஒரு கிரகம்.]

அட்டமசுத்தி—எட்டாமிடஞ்சுத்தியாயிருத்தல். (உ-ம்.) "ஓரையிற்-பொருந்தியவட்டமசுத்தியிற் புஞ்சவனஞ்செயுமே" (விதா. மகளிர். ௧.)

அட்டமணம் — எண்வகை விவாகங்கள்; அவை: பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் என்பன. (மநு. ௩. ௨௧.) மணம்-விவாகம்.

அட்டமதம்—குலம், ரூபம், யௌவநம், வித்தை, தநம், பிரபுத்துவம், சகாயம், சகசம், என்னும் எட்டினலும் உண்டாகுஞ் செருக்கு. (தாயு. பன்மாலை. ௨. உரை.) [அஷ்ட-எட்டு. மதம் - செருக்கு.]

அட்டமம்—எட்டாவது. (உ-ம்.) "ஒத்தவுதயத்துக் கட்டமத்தேநிற்குமோரதிபன்" (விதாந. குணகுண. அஎ.) [அஷ்டம.]

அட்டமாசித்தி—அட்டசித்தி.

அட்டமாந்தம்—எட்டுவகை மாந்தநோய். அவை: செரியாமாந்தம், போர்மாந்தம், மலட்டுமாந்தம், பெருமாந்தம், வாதமாந்தம், சுழிமாந்தம், வலிமாந்தம், கணமாந்தம் என்பன. "பெருமாந்தங் கணமாந் தம்முட் பெய்திடு முணவு சற்றுஞ்-செரியாத மாந்தம் வன்மை செறிந்திடு மலட்டு மாந்தம்-பொருமிய வாதமாந்தம் புகல்வலி மாந்தங் கண்கள்-சொருகிய சுழிமாந் தம்போர் மாந்தமெண் ணெனச்சொன் னரே" என்னும் வைத்திய நிகண்டால் மாந்தவகையைக் காண்க.

அட்டமாநாகம்—அட்டநாகம்.

அட்டமி—1. எட்டாந்திதி. (உ-ம்.) "அட்டமியுமேனையுவாவும்"(ஆசாரக். ௬௭.) 2. எட்டாவது. [இது நியதமாய் வடமொழிப்பெண் பாற்பெயருக்கடையாகவருவது.] (உ-ம்.) "காமனங்காசநியட்டமியாஞ்சபை" (வேதாரண்யபு. சபை. ௬.)

அட்டமிகை — அரைப்பலம். "தனித் தனிக்கங் கஷ்டமிகை வெவ்வேறுந் தழலடியுருதுவெதுப்பி" (தைல. தைலவ. ௬௪.) [அஷ்டிகா.]

அட்டமூர்த்தம்—சிவனுக்குச்சொல்லப்படும் எண்வகைவடிவங்கள்; அவ்வடிவங்கள் நிலம், நீர், தீ, காற்று, வெளி, சூரியன், சந்திரன், இயமானன் என்பன. (உ-ம்.) "அட்டமூர்த்தங்கொண்டருளினேன் றண்டீசுரன்" (சூத. எக்கி. பூ. ௬௩.எ.) [அஷ்டமூர்த்தம்.] [சிவன், பிரமாவின் நுதலிடைத்தோன்றிய உருத்திராவதாரத்தில்சருவனென்னும்உருத்திரனுக்குப் பிருதிவியும், பவனென்னும் உருத்திரனுக்கு அப்புவும், பசுபதியென்னும்

உருத்திரனுக்கு அக்கினியும், ஈசானன் என்னும் உருத்திரனுக்கு வாயுவும், வீமனென்னும் உருத்திரனுக்கு ஆகாயமும், உருத்திரனென்னும் உருத்திரனுக்குச் சூரியனும் மாதேவனென்னும் உருத்திரனுக்குச் சந்திரனும், உக்கிரனென்னும் உருத்திரனுக்கு இயமானனும் வடிவமாமென்று சொல்வர். சைவபுராணத்திலே உருத்திரனுக்கு நெருப்பு எனவும், உக்கிரற்கு வாயு எனவும், ஈசானனுக்குச் சூரியனெனவும் மாதேவற்கு மதியமெனவும், பசுபதிக்கு இயமானனெனவுஞ் சொல்லப்படும். (உ-ம்.) "தோன்றியோர் விளையாட்டயர்ந்தெழுதலுந்தாயோற்-கேன்ற வாகுமற் றுருத்திரன் முதற்பெய ரெட்டு - மான்றதாகமோ ரெட்டுமோ ரெட்டரி வையருஞ் - சான்றமைந்தரோரெண் மருஞ்சார்ந்தனரன்றே" (கூர்மபு. அட்டமூ. ௧௧.) "எய்துநாமமென் னெனிற்பவன் சருவனீ சானன் - வைதி கந்தரு பசுபதி வீமன்மா தேவ-னெய்தினம்பிறை யுக்கிர வுருத்திர னென்ப - மைதிகழ்ந்தொளிர்கண்டனென் வடிவமும்வகுப்பாம்" (௧௨) "பரிதி வெண்கதிர்க் கடவுணீர் புவியழல் பனிவா - னுருவ நல்வளி யருமகம் புரிந்தழ லூட்டும் - பொருவி னுன்மறை யக்தன னென்பர்" (௧௩.)

அட்டமூர்த்தி—சிவன். (உ-ம்.) 'மலைமகள் பாகத்தட்டமூர்த்தியை' (பெரியபு. திருஞான. எ௮௬.) [ஸம்ஸ்க்ருதம்; மூர்த்திந் - மூர்த்தமுடையவர்.]

அட்டமூர்த்திகள்—1. எட்டுமூர்த்திகள். அவர்கள்: பவன், சருவன், ஈசானன், பசுபதி, வீமன், உக்கிரன், மாதேவன், உருத்திரன் என்பவர்கள். (உ-ம்.) "கட்டு செஞ்சடைப் பவன்முத லாகவே கழறு - மட்டமூர்த்திகடாங்களும்" (கந்தபு. கணங். ௧௧.) 2. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சந்திரன், சூரியன், ஆன்மா எனப்படுபவர். (சி. வி. கிரி. ௩௩-ம் உரையும்.)

அட்டமூர்த்திசுவரர் — பிருதிவி முதலான அட்டமூர்த்திகளுக்கு மதிபர். (சி. வி. கிரி. ௩௩-ம் உரையும்.)

அட்டமூலம்—எட்டுவகை வேர்கள். அவை: சுக்கு, அரத்தை, (சிற்றரத்தை, பேரரத்தை;) செவ்வியம், சித்திரமூலம், கண்டுபாரங்கி (சிறுதேக்கு), கோரைக்கிழங்கு, நன்னாரிவேர், காஞ்சொறிவேர் என்பன. [ஸம்ஸ்; மூலம் - வேர்.] •வைத்தியநிகண்டுடையார்: சுக்கு, சிற்றரத்தை, சித்திரமூலம், பேரரத்தை, காஞ்சொறி, செவ்வியம், திரண்டமிளகு, கண்டுபாரங்கியாகிய எட்டும் அட்டமூலமென்பர்.

அட்டமெய்ப்பரிசம்—அட்டபரிசம்.

அட்டயோகம்—அட்டாங்கயோகம். (உ-ம்.) "மெய்ஞ்ஞானந்தரு மட்டயோகத்தவமே" (கந்தர்கலி. ௬௫.) [ஸம்ஸ் யோக.]

அட்டரக்கு — உருக்கிய அரக்கு. (உ-ம்.) "அட்டரக்கனையசெவ்வாயணிநலங்கருகி" (சிந்தா. கோவிந். ௬௦.) [அட்ட - காய்ச்சிய, உருக்கிய. அரக்கு - மெழுகு.]

அட்டல்—1. அழித்தல். (உ-ம்.) "அட்டலின்றியமர்தருசாலிகை" (கந்தபு. வச்சிர. ௯.) 2. அள்ளுதல். (உ-ம்.) "அட்டித்தரப்பணியே" (தேவார. திருக்கோளி. ௧. ௬௩.) 3. கொல்லல். (உ-ம்.) "வெஞ்சமரியற்றியட்டல் பழியாகும்" (கந்தபு. சதமுக. ௩.) 4. நெருப்பிற்காய்ச்சுதல். (உ-ம்.) "அடைபலங்காயதாநியம் வெவ்வேறட்டல்" (தைல. பாயிரம். ௨௯.)

அட்டலக்ஷுமி — (அட்டலட்சுமி) தனலக்குமி, தாநியலக்குமி, தைரியலக்குமி, சௌரியலக்குமி, வித்தியாலக்குமி, கீர்த்திலக்குமி, விசயலக்குமி, இராச்சியலக்குமி என்னும் எட்டிலக்குமிகள். [ஸம்ஸ்லக்ஷ்மீ.]

அட்டலோகபற்பம் — பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, வெண்கலம், தரா, வங்கம், துத்தநாகம் என்னும் எட்டுலோகங்களாலுஞ் செய்யப்பட்ட ஒரு மருந்து. (வைத்தியபரி.) [ஸம்ஸ்லோஹஹஸ்ம - எட்டு உலோகத்தாலுண்டாகிய பற்பம்.]

அட்டலோகம்—அட்டதாது. [ஸம்ஸ்லோஹ: ஸம்ஸ்; லோஹம் - தாது.]

அட்டவசுக்கள் — எட்டுவசுக்கள்; அவர்: அநலன், அநிலன், ஆபன், சோமன், தரன், துருவன், பிரத்தியூடன், பிரவாசன் என்பவர். [ஸம்ஸ்வஸு:]

அட்டவண்ணத்திருக்கை — பெருந் திருக்கைமீன்.

அட்டவிணை—1. அநுக்கிரமணி. 2. சேர்க்கப்பட்டது. 3. விஷயசூசிகை.

அட்டவர்க்கம்— அட்டவருக்கம்— அட்டவருக்கு— } எட்டுவகை மருந்துச் சரக்குகள்; அவை: இந்துப்பு, ஓமம், கருஞ் சீரகம், சீரகம், சுக்கு: திப்பிலி, பெருங்காயம், மிளகு என்பன. (உ-ம்.) "திப்பிலிமிளகுசுக்குச் சீரகமிந்துப் போமம் - வெப்பங்கொள்பெருங்காயந்தான் விரித்தனரிவற்றினோடே - செப்பருங்கருமை கொண்டசீரகம்பின்னுஞ்சேர்க்கில் - ஒப்பிலா வட்டவர்க்க முறுமெனத் தொகுத்தார் முன் னோர்" (வைத். நிக.) 2. ஏழுகிரகங்களுக் கும் இலக்கினத்திற்கும் அவற்றின்நிலையி லிருந்து எட்டுவகையாக வகுக்கப்படும் ஒரு கணக்கு. இதன் விவரம் சாதகசிந்தாமணி முதலிய சோதிடநூலிற் காண்க.

அட்டவன் — 1. அழித்தவன். "மாற்ற லார்புரமட்டவன்" (கந்தபு. கணங்க. கஎ.) 2. எப்பொருளையாயினும் அடுதல்செய்தவன்.

அட்டவாதம் — எட்டுவகை வாதங்கள்; அவை: சிவசமவாதம், ஐக்கியவாதம், சங்கி ராந்தவாதம், பிரவாகேசுவரவாதம், காபா லிகவாதம், அவிகாரவாதம், பேதாபேத வாதம், அநேகேச்சுரவாதம் என்பன. (த.நி. போ. கூஉ.) [அஷ்டவாத.]

அட்டவிகாரம் — உயிர்களுக்கு உள்ளன வென்று சொல்லப்படும் எட்டு விகாரங்கள்; அவை: காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் அசூயை, இடும்பையென் பன. [அஷ்டவிகார.]

அட்டவிஞ்சதி—இருபத்தெட்டு. [அஷ்டா விம்ஶதி.]

அட்டவிஞ்சதியோகாசாரியர் — இருபத் தெட்டுயோகாசாரியர்; அவர்: ஸ்வேதர், சதா சிவர், தமனர், சகோத்திரர், கங்கர், லோகா க்ஷர், ஜகிஷர், ததித்தியவந்தர், விஷயர், உக்கிரர், அத்திரி, சுபாலகர், கௌதமர், வேதசிரர், கோகர்ணர், குகாவாசர், சிகண்டி, சடமாலி, அட்டகாசர், தாருகர், லாங்குலி, மகாகாயர், சூலி, டிண்டி, முண்டி, சயிஷ்ணு, சோமசர்மர், இலகுளீசுவரர் என்னும் முனீ சுவரர். (வி-ணி. கசுo.)

அட்டவித்தியேசுரர் — எட்டுவகைவித்தி யேசுரராகிய விஞ்ஞானகலர்; அவர்: அநந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏக ருத்திரர், திரிமூர்த்தர், ஸ்ரீகண்டர், சிகண்டி யென்பவர். [இவர் ஈசுவரதத்துவத்திலிருக் கும் ஈசுரனைச் சூழ்ந்திருந்து மாயையின்கீ ழுண்டாகிய சிருட்டி முதலிய கிருத்தியங் களைச் சிவனுடைய ஏவலாற் செய்பவர்களாய் அபரமுத்தி பெற்றிருப்பார். அநந்தர் முத லிய இவர் மேற்சொல்லிய அடைவே ஒவ் வொருகலை குறைந்துகுறைந்துவருதலால் ஒருவர்க்கொருவர் தாழ்வுடையவர் என்பர். அநந்தர் அதிகாரத்தில் வைரம்பிறந்து மோக்ஷமடைய அதன்பின் அவர்க்கடுத்த சூக்குமர் அவ்வதிகாரம்பெற்று அவர்போலக் கிருத்தியஞ்செய்வர். மற்றையோரும் இப் படி யடையவே யதிகாரத்தைப் பண்ணுவர். எல்லார்க்கும் பிந்தின சிகண்டியுடைய இடம் பாழ்கிடவாமல் விஞ்ஞானகலருட் பக்குவ மான ஒருவரைச் சிவன் அடையவே என் மரிற் குறையாமற் கூட்டுவர்.] (சி. சி. அ: உ. மறை.)

அட்டவித்தியேசுவரர்—அட்டவித்தியேசு ரர். (மிருகேந்திர. க. கக.) [அஷ்டவித்யேஶ்வர.]

அட்டவிதநாடகம்—எட்டுவகைத்தாடகம்; அவை: சங்கோசம், பக்கத்தம், பிரசுரிதம், முட்டி, கிலம், கர்த்தரிகை, சந்தங்கிசம், வித்தையென்பன. (கொக்கோ. ரு. எஉ. எஈ.) [அஷ்டவித - எட்டுவகை. தாடநம் - தட்டு தல்.]

அட்டவிவாகம்—எண்வகைமணம்; அவை: பிரமம், தெய்வம், ஆரிஷம், பிராஜாபத்யம், ஆசுரம், காந்தருவம், ராக்ஷஸம், பைசாசம் என்பன.

அட்டவீரட்டம் — எட்டு வீரட்டானப்பதி கள். அவை, கண்டியூர், கடவூர், அதிகை, வழுவூர், பறியலூர், கோவலூர், குறுக்கை, விற்குடி என்பன.

அட்டவைசுவரியம்—எண்வகைச்செல்வங் கள்; அவை: அடிமை, இராசாங்கம், சுற்றம், நெல், பொன், மக்கள், மணி, வாகனம் என் பன. [அஷ்ட - எட்டு. ஐஶ்வர்யம்-பாக்கி யம்.]

அட்டவைரவர்—எட்டுவைரவர்; அவர்: மகா வைரவர், உக்கிரவைரவர், சண்டாளவைர வர், குரோதவைரவர், உன்மத்தவைரவர்,

காபாலவைரவர், பீஷணவைரவர், சாகர வைரவர் என்பவர். இவர் சிவலோகத்திலே சோதிமயமான கோட்டையில் எட்டுவாயில்களிலும் காவல்செய்துகொண்டிருப்பர் என்பர். (வி-னி. உ௩௧.) [அஷ்டபைரவ.]

அட்டழித்தல்—சமைத்துப் பரிமாறுதல். (இன்ஸ்.)

அட்டன்—அட்டமூர்த்தியான சிவபிரான். (தேவா. 855, 8.)

அட்டாங்கசீலம் — நல்லொழுக்கமாகிய சீலத்தினெட்டு உறுப்புக்கள்; அவை: கொல்லாமை, இருடாமை, வியபிசரியாமை, பொய்கூறாமை, கள்ளுண்ணாமை யென்னும் பஞ்ச சீலத்துடன் இல்லறத்தார்களில் சிட்டாபரர்களைப் போகியாமை, தரையிற்படுத்தல், பாய் மேற்படுத்தல் என்பன (பௌத்தம்). (மணிமேகலை. ௧௮௮.) [அஷ்டாங்கசீலம்.]

அட்டாங்கநமஸ்காரம்—மோவாய், செவிகளிரண்டு, தலை, புயங்களிரண்டு, கைகளிரண்டென்னும் எட்டுறுப்பும் நிலத்திலே தோய நமஸ்கரித்தல். (சைவச. பொது. ௫௫௩. உரை.) [அஷ்டாங்கநமஸ்கார: அஷ்டாங்க - எட்டுறுப்பு. நமஸ்கார - வணக்கம்.]

அட்டாங்கமார்க்கம்—பழுதிலா வாழ்க்கையெனப்படும் எட்டங்கங்களையுடைய துக்கநிவாரணமார்க்கம்; அவை: நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லமைதி யென்பன. (மணிமேகலை. ௩௧௨.) [அஷ்டாங்கமார்க்க.]

அட்டாங்கயோகம் — யோக உறுப்புக்கள் எட்டு; அவை: இயமம், நியமம், ஆதநம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி யென்பன. (உ-ம்.) "மார்க்கவட்டாங்கயோகமுற்றுமுழத்தலுழந்தவர்" (சி. சி. அ: ௨௧.) [அஷ்டாங்கயோக.]

அட்டாணி — கோட்டைமதின்மேல் மண்டபம். "தலையெடுப்பாக வுயர்ந்தவட்டாணியும்" (இராமா. சுந். 3.)

அட்டாதசகணம் — பதினெண்கணங்கள்; அக்கணங்களாவார்: தேவர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், கிருதர், கிம்புருடர், காந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர், பைசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாயவாசியர், போகபூமியர் என்பவர். [அஷ்டாதசகண.]

அட்டாதசபுராணம்—பதினெண்புராணங்கள்; அவை: சைவம், பவிடியம், மார்க்கண்டம், இலிங்கம், காந்தம், வராகம், வாமனம், மச்சம், கூர்மம், பிரமாண்டம், பிரமம், பதுமம், காருடம், நாரதம், விண்டு, பாகவதம், ஆக்கிநேயம், பிரமகைவர்த்தம் என்பன. "அட்டாதசபுராண மறைமுநி" (மச்சபு. பூரு. ௧; கந்தபு. பாயிர. ௫௪, ௫௫.) [அஷ்டாதசபுராண.]

அட்டாதசம்—பதினெட்டு. (உ-ம்.) "அட்டாதச மகாபுராணங்களையு மறிந்தும்" (சி. சி. அ: ௧௧. சிவாக்; [அஷ்டாதச: அஷ்ட - எட்டு. தச - பத்து.]

அட்டாதசமூலம் — பதினெண்வகை வேர்கள்; அவை: எருக்கு, கண்டங்கத்திரி, கரந்தை, கறிமுள்ளி, குமிழ், கொடிவேலி, சங்கங்குப்பி, சிற்றாமல்லி, தழுதாழை, தூதுளை, நன்னாரி, மாவிலிங்கை, நொச்சி, பாதிரி, பேராமல்லி, முருங்கை, வில்வம், வேர்க்கொம்பென்பன. (வைத்தியபரி.) [அஷ்டாதசமூலம்.]

அட்டாதசரகசியம் — ஒரு வைஷ்ணவசித்தாந்தநூற்றொகுதி.

அட்டாதசவித்தை—பதினெண்வித்தைகள்; அவை: ஆறுவேதாங்கங்கள், நான்கு வேதங்கள், மீமாஞ்சை, நியாயம், ஸ்மிருதி, புராணம் என்னும் பதினான்கும், ஆயுர்வேதம், தநுர்வேதம், காந்தருவவேதம், அருத்தவேதம் என்பனவும். [அஷ்டாதசவித்யா: வித்யா - வித்தை.]

அட்டாதசவியவகாரபதம் — வழக்குக்குரிய பதினெண்விடயங்கள்; அவை: கடன்கோடல், உபநிதி, கூடிமேம்படல், நல்கியதைநல்காமை, ஒப்பிப்பணிசெய்யாமை, கூலிகொடாமை, உடையானல்லான்விற்றல்; விற்றுக்கொடாமை, கொண்டுள்ளமொப்பாமை, கட்டுப்பாடுகடத்தல், நிலவழக்கு, மாதராடவர் தருமம், தாயபாகம், வன்செய்கை, சொற்கொடுமை, தண்டக்கொடுமை, சூது என்பனவும் ஒழிந்தன பலவும். (மிரு. ௪. ௨: வள்.

உரைப்பா.) [அஷ்டாதஶவ்யவஹாரவத: அஷ்டாதஶ - பதினெட்டு. வ்யவஹார - வியாச்சியம். வதம் - விஷயம்.]

அட்டாதசவிவாதபதம்—அட்டாதசவியவகாரபதம். [அஷ்டாதஶவிவாதவத: விவாத - வியாச்சியம்.]

அட்டாதசோபபுராணம் — பதினெட்டு உபபுராணங்கள்; அவை: நாரசிங்கம், சநற்குமாரம், நாரதீயம், சிவதன்மம், துருவாசம், நந்திகேச்சுரம், அவுசநம், காளிகம், வாருணம், சாம்பேசம், பராசரம், பார்க்கவம், காபிலம், மாநவம், வாசிட்டலிங்கம், சவுரம், மாரீசம், பிரமாண்டமென்பன. (பிங்க. சசடு.) [அஷ்டாதஶோபபுராண.]

அட்டாதுட்டம் — அதிகதீங்கு. [அட்ட; துஷ்ட.]

அட்டாதுட்டி — 1. அதிக துட்டத்தனஞ் செய்கிறவன். [அட்ட - அதிகம். துஷ்டி - தீங்கு. இ - ஒரு விகுதி.] 2. அதிக துட்டத்தனம். [அட்ட; துஷ்டி.] 3. அதிக தீங்கான பேச்சு. 'அட்டாதுட்டிகள் பேசி' (இராமநா. ஆரணிய. 9.)

அட்டாபதம்—1. ஒருவகை வன்னப்புடைவை. 2. கதவின் தாழ். 3. கைலாசமலை. 4. சரபப்புள். 5. சிலந்தி. 6. பொன். [அஷ்டாபத.]

அட்டாலகம்—1. கோபுரம். 2. மேல்வீடு.

அட்டாலம்—1. அட்டாலை. 2. மேல்வீடு.

அட்டாலிகாகாரன் — அரசர்மனைகளைக் கட்டுஞ் சிற்பாசாரி.

அட்டாலிகை—1. அரசர்மனை. 2. மேல்வீடு.

அட்டாலை—1. அட்டாளை. 2. அட்டாலைமண்டபம். (உ-ம்.) "கீழ்த்திசைமருங்கோரட்டாலைமண்டபஞ் செய்யென வதுகேட்டெழுந்தரசன்" (திருவிளை. யானை. உங.) 3. மேல்வீடு. 4. ஒரு மரம். (வைத்தியபரி) 5. அரசர்மனை.

அட்டாலைமண்டபம்–மேல்வீடாகக்கட்டப்பட்ட மண்டபம். "அகங்கவ்விய களிப்பெய்திவர் தட்டாலைமண் டபம்பொன்னகங்கவ்விய தெனத்துஞ்ஞெரு நாஞன்கினி லெடுத்தே" (திருவிளை. யானை. உச.)

அட்டாலைமரம்—ஒரு மரம்.

அட்டாவதாநம்-எட்டுக்காரியங்களையொருகாலத்திலே யவதானிக்குஞ் சாமர்த்தியம். [அஷ்டாவதாந.]

அட்டாவதாநி — அட்டாவதாநஞ்செய்வோன். 'அட்டாவதானிசொக்கன்' (தஞ்சைவா. உரைச்சிறப்.)

அட்டாவிம்சதி—இருபத்தெட்டு. (சி-லி. சரி. எ.) [அஷ்டாவிம்ஶதி:]

அட்டாளை—காவற்பரண்.

அட்டாளைப்பெட்டி — தட்டுகள் உள்ள பெட்டி.

அட்டானம் — வீரட்டானம். (தேவா. 1170, 3.)

அட்டி—1. அதிமதுரம். (தைல. தைலவ: சுச) 2. எட்டி. 3. சந்தனம். 4. செஞ்சந்தனம். 5. இலுப்பை. (2-5, மூ. அ.) 6. தாமதம். 'அட்டிசெய நினையாதீர்' (அருட்பா. 6. திருவருட்பேறு 2.) 7. தடை. 8. குதிரை முன்னங்கால்களிற் கழற்காயளவு உண்டை கட்டும் ஒருநோய். (அசுவசா. 112.) [யஷ்டி.]

அட்டிகம்—சாதிக்காய். (மலை.)

அட்டிகை—கழுத்தணிவகையினொன்று.

அட்டிப்பேறு—தாநசாசநமூலம் கொடுக்கப்பட்ட உரிமை.

அட்டிமதுரம் — அதிமதுரம். (பு. வெ.)

அட்டிமை—சீரகம். (மூ. அ.)

அட்டியல்—அட்டிகை.

அட்டியோகம்—அரபொடி. (வைத்திய.)

அட்டில்—1. மடைப்பள்ளி. 'புனிற்றுநாய் குரைக்கும் புல்லெ னட்டில்' (சிறுபாண். 132.) 2. ஓமசாலை. 'அட்டின் மறையோராக்கிய வாவுதி' (சிலப். 10. 143.)

அட்டிலம் — வீக்கம். (சீவரட். கசுச.)

அட்டிலாரோகம்—ஆனகரோகத்திலொருவகை. (சீவரட். கககூ.)

அட்டிற்சாலை — மடைப்பள்ளி. 'அட்டிற்சாலையு மருந்தினர்சாலையும்' (மணி. 20. 7.)

அட்டினம்—சீரகம். (வைத்தியபரி.)

அட்டிலாவாதம்—ஒருவகை வாதரோகம்; அது: மூத்திரப்பையின் துவாரத்திலும் அம்மூத்திரப்பைக்குள்ளிலும் வெளியிலும் பக்கங்களிலும் கட்டிபோல வீக்கத்தைப் பிறப்பிப்பது. (சீவரட். கசுரு.) [அஷ்டீலா-வீக்கம்.]

அட்டலிகம்—கல். (சீவரட். ௩கசு.)

அட்டலிகாரோகம் — ஆண்குறியில் விரணத்தைப் பிறப்பிக்கும் ஒருவித ரோகம்; அது: குழிவிழுந்து கல்லைப்போற் கெட்டியாயிருக்கும். (சீவரட். ௩கசு.) [சுஷ்டீகா-கல்.]

அட்டு — வெல்லம். 'பனுட்டு' (தொல். எழுத். 284. உரை.)

அட்டுதல் — 1 வடிதல். 'சீயட்டு முயவுநோய்' (சீவக. 2798.) 2. வார்த்தல். 'யாப்பினு ளட்டிய நீர்' (குறள். 1093.) 3. இடுதல். 'அளகத்தினட்டிய தாதும்' (திருக்கோ. 122.) 4. ஒட்டுதல். 5. கொண்டுவருதல். 'அட்டித்தரப்பணியே' (தேவா. 825. 1.) 6. செலுத்துதல். (S. I. I. II. 147.) 7. தாநசாஸநமளித்தல். 'கோக்கருநந்தடக்கன் ..............அட்டினபூமி' (T. A. S. I. 6.)

அட்டுப்பு—காய்ச்சு லவணம். 'அமிர்தையிக்கட்டுப்பு' (தைல. தைலவ. கஎகூ.)

அட்டும்—ஒரு வியங்கோள்விகுதி. 'செய்யட்டும்'

அட்டுழியம்—தீம்பு.

அட்டை—1. செவ்வட்டை. 2. மரவட்டை 3. நீரட்டை. 'ஆக்கமுண்டே லட்டைகள் போற் சுவைப்பர்'(திவ். திருவாய். 9. 1. 2.) 4. செருப்பின் தோலட்டை. 5. காகிதஅட்டை. 6. புத்தகமேலுறை.

அட்டைக்குழி—நரகபேதம்.

அட்டைப்பூச்சி — வயிற்றுப்பூச்சிவகையுளொன்று.

அட்டையாடல் — துண்டிக்கப்பட்டவிடத்தும் அட்டைபோல வீரனுடல் வீரச்செயல் காட்டி ஆடுகை. (தொல். பொருள் 71. உரை.)

அட்டோலகம் — 1. ஆடம்பரம். 2. உல்லாசம் (லெக்ஸிகன்.)

அடக்கம்—1. அடங்கிய காரியம். 2. அடங்கிய பொருள். 3. ஒடுக்கம். 4. ஒருவகை மெய்ப்பாடு. அஃது:உயர்ந்தோர்முன் அடங்கியொழுகும் ஒழுக்கம்; பணிந்தமொழியும் தகைந்த நடையும் தானைமடக்கலும் வாய்புதைத்தலும் முதலாகப் பலவகைப்படும். (உ-ம்.) "ஆங்கவையொருபாலாகவொருபாலுடைமையின்புறநடுவுநிலையருள - றன்மையடக்கம் வரைதலன் பெனஅ" (தொல். பொரு. உசுо. உரை.) 5. கருத்து. 6. சீவனொடுங்கியிருத்தல். 7. மானவமைதி. "அடக்கமுடையாரறிவிலரென்றெண்ணி"(வாக்குண்டாம்.) 8. பிரேதச்சேமம். 9. இரகசியம். 'எல்லாம் அடக்கமாயிருக்கிறது.' 10. துறைவகை. (சிலப். 3. 27. உரை.)

அடக்கம்பண்ணுதல்—1. சேமஞ்செய்தல். 2. பிரேதமுதலியவற்றைப் புதைத்தல்.

அடக்கல் —, அடக்குதல்— } 1. ஒடுக்கல். 2. கீழ்ப்படியப்பண்ணுதல்.

அடக்கியல்—அடக்கியல்வாரம். (வீரசோ. யாப். கக. உரை.)

அடக்கியல்வாரம் — சுரிதகம். (தொல். பொருள். 456.)

அடகு–1. பச்சிலை. (உ-ம்.) "ஆயிரமாண்டு புல்லடகுமேயினன்" (கந்தபு. கயமு. எங.) 2. இலைக்கறி. (உ-ம்.) "மூலமடகுதுய்த்தல்" (கூர்மபு. வருணச். கக.) 3. மகளிர் விளையாட்டினொன்று. 'கூடலனையாளை யாடாவடகினுங் காணேன்' (திணைமாலை. 4.) 4. கடன்வாங்குவோன் ஈடாகக்கொடுக்குஞ் சங்கமப்பொருள். (உ-ம்.) "ஆபரணம்வைத்தடகு தேடுபொருள்" (திருப்பு. ருகசு.)

அடங்க—1. "உள்ளாக" எனப் பொருள்படும் ஒரு வினையெச்சம். (உ-ம்.) "அவனிமுழுது மோரடிக் குளடங்க வளந்து கொண்டவனே" (சூத. முத்தி. சு: உகூ.) 2. முழுவதும். 'வயலடங்கக் கரும்பும்' (ஈடு. 8. 9.4.)

அடங்கம்—கடுரோகிணி. (வைத்தியபரி.)

அடங்கல் — 1. அந்தர்ப்பவித்தல், உள்ளாதல். (உ-ம்.) "அளவை காண்டல் கருதலுரை யென்றிம் மூன்றி னடங்கிடுமே"(சி.சி. அளவை. க.) 2. அமைதல், செய்யப்படக்கூடிய தாதல். "இடங்கொளுந்தாதையரிட்ட காரிய, மடங்கலின் றுயினு மமையுமாயினும்"(சேதுபு. அவை. உ.) 3. எல்லாம். [இப்பொருளிலே வரும்போது பெரும்பான்மையும் முற்றும்மைபெற்றுவரும்.] (உ-ம்.) "திக்கடங்கலுங்கடந்த" (திருவிளை. திருநகரங்கண்ட. கூ.) 4. ஒடுங்குதல். (உ-ம்.) "சிந்தையுமென் போலச் செயலற் றடங்கிவிட்டால்" (தாயு. பராபர. ௩உரு.) 5. கீழ்ப்படிதல். 6. மநம் புறத்துப்பரவா தறத்தின் கண்ணேநிற்றல். (உ-ம்.) "கதங்காத்துக் கற்றடக்க லாற்றுவான்" (வள். கநo.)

7. வலிகுறைதல். (உ-ம்.) "தடிசுவைத்திரு ளுண்டுந் தழற்பசி யடங்கிடாது" (சூத. எக்கி. பூ. ௨௦. ௬.) 8. வெளிப்படாது மனத்தி னுள்ளே அமர்தல் (உ-ம்.) "அடங்கரு நாணமும் பயமுங் கொண்டனன்" (சூத. எக்கி. உ. ௪: ௨௩.) 9. தங்குமிடம். 'அடங் கல் வீழி கொண்டிருந்தீர்' (பெரியபு. ஏயர். 59.) 10. அடங்கல்வேலை. 11. சாகுபடிக் கணக்கு.

அடங்கலர்—1. ஐம்பொறிகளையும் வாட் டாதோர். (உ-ம்.) "அடங்கலர்க் கீந்த தானப் பயத்தினுல்" (சிந்தா. முத்தி. ௨௬௪.) 2. கீழ்ப்படியாதவர்கள். 3. பகைவர். (உ-ம்.) "அடங்கலர்முப்புரமெரித்தார்" (பெரியபு. இடங்கழி. ௪.)

அடங்கலாமிசம்—ஒருவருஷத்து விளைவு மதிப்பு.

அடங்கலும் — 1. அனைவரும். (உ-ம்) "பார்விசும்புறையுநீரரடங்கலும்" (கந்தபு. திருக்கல். ௭௭.) 2. எல்லாம். (திருவிளை. திருநகரங்கண்ட. ௧௫.)

அடங்கவும்—முழுவதும். (உ-ம்.) "உடம் படங்கவுமூன்கெட" (பெரியபு. திருநா. ௩௫௧.)

அடங்கன்முறை—தேவாரம் முற்றும் அடங் கிய ஒரு புத்தகம். இது, திருஞானசம்பந்த மூர்த்திநாயனர் தேவாரத் திருப்பதிகம் மூன் னூற்றெண்பத்துநான்கும் திருநாவுக்கரசு நாயனர்தேவாரத்திருப்பதிகம் முன்னூற்றுப் பன்னிரண்டும் சுந்தரமூர்த்திநாயனர் தேவாரத்திருப்பதிகம் நூற்றொன்றும் ஆகிய எழுநூற்றுத்தொண்ணூற்றேழுதிருப்பதிகங் கள் அடங்கியும், அபயகுலசேகரசோழ மகாராசாவின் வேண்டுகோளின்படி நம்பி யாண்டார்நம்பியால் ஏழுதிருமுறைகளாக வகுக்கப்பட்டும் உள்ளது.

அடங்காதோர்—1. பகைவர். (உ-ம்.) "அடி புறந்தருகுவ ரடங்காதோரே" (புறநா. ௩௫) 2. மன அடக்கம் இல்லாதோர். (உ-ம்.) "துன்று பிணியோர் துறந்தோ ரடங்கா தோர்" பாரத. கிருட்டி. ௫௨.)

அடங்காப்பற்று — அரசனணையை மீறு வோரிருக்கும் ஊர்.

அடங்காப்பிடாரி—எவர்க்குமடங்காதவள்.

அடங்காமாரி—ஒருவருக்குங்கீழ்ப்படியாது முரணிநடப்பவள். [அடங்கா - அடங்காத. மாரி - துர்க்கை.]

அடங்காமை — 1. கீழ்ப்படியாமை. 2. மனம் வாக்குக் காயங்கள் அடங்காது தீநெறிக் கட்செல்லல். (உ-ம்.) "அடங்காமையாரிரு ளுய்த்துவிடும்" (வள். ௧௨௧.)

அடங்கார்—பகைவர். (உ-ம்.) "அடங்கார் சேடுடைமுடித்தலைகள்" (காஞ்சிப். வாணீ. ௫௨.)

அடங்காவாரிதி—1. கடலுப்பு. 2. மூத் திரம். (வைத்தியபரி.)

அடங்கிடம்—அழிந்தொடுங்குமிடம். (உ-ம்.) "விந்துநாதஞ் சத்திநெறியே யடங்கிடும் பர சிவத்தினில்" (அருணசலபு. திருமலை. ௫.)

அடங்கு—அடங்குதல். (உ-ம்.) "அடங்கரு நாணமும் பயமுங் கொண்டனன்" இங்கே, வெளிப்படாது உள்ளேயிருத்தல் என்னும் பொருட்டு. (சூத. எக்கி. உ. ௪: ௨௩.)

அடங்குதல்—1. நின்றுபோதல். 'ஊற்றுநீ ரடங்கலினுண்கயங்காணது' (கலித். 13.) 2. படிதல். 'தூசியடங்கத் தண்ணீர் தெளி' 3. மறைதல். 'ஆதித்தனடங்குமளவில்' (கலித். 78, 15. உரை.) 4. உறங்குதல். 'விழித்துழி விழித்து மடங்குழி யடங்கியும்' (கல்லா. 7.) 5. சினையாதல். 'மாடு அடங்கி யிருக்கிறது. [இவையேயன்றி, "அடங்கல்" என்பதற்குக் கூறியபொருள்களில் 3, 9, 10, 11 ஒழிந்தனவும் இதற்குப் பொருளாம்.]

அடசுதல்—1. செறிதல். 2. செறிவித்தல், அடையப்பண்ணுதல். "அழுந்த வாளி யொன்றுபத்து நூறுவன்பொ ரடசினன்" (பாரத. பதினு. ௩௦.) 3. விலகுதல். 'அடசி னில்'

அடஞ்சாதித்தல் — எதிரிடைபண்ணுதல், வன்மங்கொள்ளுதல்.

அடடா — 1. ஓரதிசயக்குறிப்பு. (உ-ம்.) "அடடா! அவன் எவ்வளவு ரசமாய்ப்பாடு கிறன்" 2. தனக்குக் கீழ்ப்பட்ட ஒருவனை விளிக்கும் ஒருசொல்; [இது அடா அடா என்னும் அடுக்குமொழியின் முன்னதனிறுதி ஆகாரம் கெட்டுநின்றது.] (இராமாயணபத. யுத்த. 25.) 3. இரக்கக்குறிப்பு. 'அடடா மோசம் போனேனே.'

அடத்தி — 1. வாசி. [இது கடன்கொடுப்போன் கடன்தொகையிற் கழித்தெடுக்கும் பணம்.] 2. மொத்தவியாபாரம். 3. தரகு.

அடத்திச்சீட்டு — வணிகருள் ஒருவர் மற்றொருவர்க்கு இவ்வளவு தொகைவரை கொடுக்கலாமென்று எழுதிக் கொடுக்கும் சீட்டு.

அடதாளம் — எழுவகைத் தாளங்களில் ஒன்று.

அடநிதை—ஒரு தாளம்.

அடநம்—1. அலைந்துதிரிதல். 2. போதல்.

அடநி—வின்னுனியிலே நாண்கொளுவும் இடம்.

அடப்பங்கோடி—கொடிவகையில் ஒன்று.

அடப்பம்—1. நாவிதன் கருவிப்பை. 2. வெற்றிலைப்பை. [இஃது அடைப்பை என்பதன் மரூஉ.]

அடப்பம்விதை—வாதுமைப்பருப்பு. "அடப்பம் விதையாம் வாதுமைப் பருப்பினாலே" (பதார்த்த. அசுசு.)

அடப்பன்—1. கடப்பமரம். (மலை.) 2. நெய்தனிலத்தலைவனைக்கூறும் ஒரு பட்டப்பெயர். [வழக்.]

அடப்பிரதீபிகை—அடயோகத்தை விவரிக்கும் ஒரு வடநூல். (த. நி. போ. ௩௭௪.)

அடம்—1. அலைந்துதிரிதல். 2. பொல்லாங்கு. (அக. நி.) 3. போதல். 4. வலாற்காரம். (1, 3. அட. 2, 4. ஹ0.] 5. பிடிவாதம். 'அடம்பிடிப்பதுன் னருளினுக்கழகோ' (அருட்பா. 2. கருணைபெரு. 4) 6. வர்மம். 7. கொட்டைப்பாசி. 'அடம்போலாடியலாகம்' (ஞானு. 59. 19.)

அடம்பாரம்—முழுதும்.

அடம்பு—1. ஒரு படர்கொடி. (உ-ம்.) "தம்பைவெள்ளடம்புதிங்கள்" (பெரியபு. ஏயர். ௪0௧.) 2. அடப்பமரம்.

அடயோகம் — நால்வகையோகங்களிலொன்று; 'அடயோகத்தினல்வினை தொலைத்து' (திருக்காளத்திப். 18. 5.) இது ஒற்றைக்காலிலே நிற்றல், தலைகீழாகத்தூங்கிப் புகைசுவாசித்தல், கையுயர்த்திநிற்றல் முதலிய பிரயாசச்செயல்களோடு செய்யப்படுவது. [ஹ0பொழ: ஹ0 - வலாற்காரம்.

அடர்—1 - 3, அடரென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 4. தகடு. "அடர்ப்பொன்முட்டை" (மணிமேகலை. 15, 14) 5. நெருக்குதல். அடர்க்குறுமாக்களொடு (மணிமே. ௧௩. ௪0.) 6. பூவிதழ். 'இலவம்பூவடரனுக்கி' (சீவக. 179.)

அடர்ச்சி—1. குரூர வுரை சிந்தனை செயல்களாகிய இராசதத்தின் குணம். (உ-ம்.) "அடர்ச்சிமிகுங்கவுரவமநங்கியம்"(சிவப்பிர. உ: உச.) 2. நெருக்கம்.

அடர்சோளம் — கால்நடைமேய்ச்சற்காக அடர்த்தியாய்ப் பயிரிடும் சோளம். (லெக்ஸிகன்.)

அடர்த்தல்—1. கொல்லல். (உ-ம்.) 'இடங்கரை யாழிவலவனடர்த்தனபோல' (கல்லா. ௫௩.) 2. நெருக்கல், அமுக்குதல். (உ-ம்.) "திருவிரலாலடர்த்தான்வல்லரக்கனையும்" (தேவார. திருநனி. அ. ௬௩.) 3. போர்செய்தல், தாக்குதல். (உ-ம்.) "ஆளையாள்கொண்டடர்த்தனர்" (கந்தபு. முதனாட். ௧௧௧.) 4. வருத்துதல். (உ-ம்.) "அடர்புலன்போக்கற்றோர்க்கும்" (கோயிற்பு. பாயிர. ௧௮.) 5. கெடுத்தல். 'பாவமடர்த் தமர்வாரே சிவலோகத்து' (சைவச. பொது. 567.)

அடர்த்தி—நெருக்கம்.

அடர்தல்—1. நெருங்கல். (உ-ம்.) "அறுகையுநெருஞ்சியுமடர்ந்து" (மணிமேகலை. ௬௨ ௬0.) 2. புடைத்தல். (உ-ம்.) "வச்சிரங்கொண் டிந்திரன் வெற்படர்வதென்ன" (ஞானவா. சநகரா. ௧௪.) 3. போர்செய்தல். (உ-ம்.) "எண்ணுறு படைக ளிவ்வா றெதிர்தழீஇ யடரும் வேலை"(கந்தபு. தாரக. ௩௬.) 4. நெருக்குதல். 'வரைசேர்ந்தடர்ந்தென்ன வல்வினை' (திருவாச. 6. 37.) 5. தட்டி உருவாக்குதல். 'ஐதடர்ந்தநூற்பெய்து'. (புறநா. 29.)

அடர்ந்தேற்றம்—அடர்ந்தேற்றி.

அடர்ந்தேற்றி—கொடுமை.

அடர்ப்பம்—நெருக்கம்.

அடர்ப்பு — 1. நெருக்குகை. "அவன் சங்கற்ப புருடனைப்போ லசைவற்றிருப்ப வடர்ப்பரிதாய்" (ஞானவா. ஞானவிண். ௧௬.) 2. போர். (உ-ம்.) "அசநியினயிற்படை யடர்ப்புமோரயலாக" (இரகு. திக்கு. ௧௭௪.)

அடர்பு—1. அச்சத்தகடு. 2. ஐம்மை. 3. நெருக்கம். 4. நெருங்கித்தொடர்கை.

அடாடிபடாடி—1. முற்றும் அழிக்கை. [வழக்.] 2. பெருங்குழப்பம். (லெக்ஸிகன்.)

அடாரர்—பகைவர்.

அடரோலி—அதட்டல். (பிங்க. உகககூ.)

அடல் — 1. ஒரு மீன். 2. கொல்லுதல். "அன்னவர் தமையட லரிய தாமெனின்" (கந்தபு. மூவாயி. எ0.) 3. போர். (உ-ம்.) "அடல்வலிமானவர்" (கந்தபு. தெய்வ. சூஎ.) 4. வருத்துதல். (உ-ம்.) "அடல்வண்ணவைம்பொறியும்" (சிந்தா. கேம. ருஎ.) 5. வலி. (உ-ம்.) "அடன் மாவின் பேருரித்திறந் தரித்தனை" (கந்தபு. மோன. கஉ.) 6. வெற்றி. (உ-ம்.) "அடலயி னெடுவேலண்ணல்" (கந்தபு. சூரபன். உருசு.) 7. பகை. 'சிற்றம்பலவர்க் கடலையுற் றூரின்'. (திருக்கோ. 218.)

அடலம்—1. மாறுமை. 2. விகாரமடையாமை.

அடலார்—1. பகைவர். 2. போர்வீரர்.

அடலி — அடுக்களைவேலைபார்க்கும் அடிமைப்பெண்.

அடலை—1. சாம்பல். (உ-ம்.) "வேளும் புரமுமடலைபடவிழித்து" (உபதேச. நரகா. ருசு.) 2. பற்பம். (இராசவைத். 161.) 3. துன்பம். 'அடலைக்கடல் கழிவான்' (தேவா. 1197. 6.) 4. போர். (பிங்க.) 5. போர்க்களம். (உ-ம்.) "அடலையினுணர்வின்றாகும்" (கந்தபு. சூரபன். உருசு.) 6. மாறுமை. [அடலா.] 7. விபூதி. "ஆதியாலயத் தடலைகொண்டு" (திருவிளை. சமணரை. அஉ.)

அடலைமுடலை—வீண்வார்த்தை.

அடவாதி—1. தீங்குசெய்கிறவன். 2. பிடிவாதக்காரன்.

அடவி—1. காடு. (உ-ம்.) "விந்தத்தடவியும்" (சிலப். கடலாடு. உகூ.) 2. சோலை. 3. நந்தவனம். (திவா.) 4. தொகுதி. (உ-ம்.) "எரியலர்முண்டகத்தடவிதிக்கெறிய" (கல்லாட. ருசு.)

அடவிக்கச்சோலம் — கஸ்தூரிமஞ்சள். (வைத்தியபரி).

அடவிகம்—சாம்பல் (வைத்தியபரி.)

அடவிகன்—வனவாசி. [அடவிக.]

அடவிச்சோல்—கோரோசனை. (மூ. அ.)

அடவிசரர்—வேடர். (உ-ம்.) "அடவிசரர் குலமரகதவனிதையும்" (திருப்பு. சகூரு.) [அடவி - காடு. சரர் - சரிப்போர்.]

அடவியன்—1. வாரடை. 2. துடைப்ப வகையில் ஒன்று. (லெக்ஸிகன்)

அடவியிற்றிருடி—சதுரக்கள்ளி. (பாலவா. 291.)

அடவியீ — ஒருவகை ஈ. [இது கடிக்கில் அதிக நித்திரையும் மிகுமூர்ச்சையும் உண்டாகும். சீவரட். சருக.]

அடளை—கடல்மீன்வகையுள் ஒன்று. (லெக்ஸிகன்.)

அடா—1. தனக்குக்கீழ்ப்பட்டவனை விளிக்கும் ஒருசொல், [இது, தனக்கு ஒத்தாரோடும் மிக்காரோடும் கோபமாய் நிந்தித்துப் பேசுமிடத்தும் பிரயோகிக்கப்படும்.] (உ-ம்.) "நில்லடாசிறிது நில்லடா" (இராமா. நாக. எரு.) 2. இகழ்வு வியப்புக்களின் குறிப்பு. (லெக்ஸிகன்.)

அடாசனி — 1. புளியாரை (மலை). 2. ஆரை, (வைத்தியபரி.)

அடாசு—மட்கினபதார்த்தம்.

அடாசுதல்—1. திணித்தல். 2. விலகுதல்.

அடாணு—ஓரிராகம். [சுஷாணா.]

அடாத்து—1. பலாற்காரம். [ஹாசு.] 2. அகாரணம். 3. அவமதி. (லெக்ஸிகன்.)

அடாத—"தகாத" எனப் பொருள்படும் ஓ ரெதிர்மறைப் பெயரெச்சவினை. (உ-ம்.) "அடாத வான்களை கட்டனர்" (கந்தபு. நாட்டு. கரு.)

அடாதது—தகாதது எனப் பொருள்படும் ஒரு வினையாலணையும்பெயர். (உ-ம்.) "தமக் கடாதது செய்துயிர் வாழ்வது தன்னில்" (பிரபுலிங்க. அக்கமா - துதி. உக.)

அடாது — 1. "அடு" என்னும் பகுதியி னின்றும் பிறந்த ஓ ரெதிர்மறைவினைமுற் றுய்த், "தகாது" எனப் பொருள்படவரும் ஒருசொல். 2. தகாதது. [ஹாசு.](உ-ம்.) "அடாதுசெய் சடாசுரன்" (பாரத. சடாசு. உஉ.) [2. அடாதது என்பது அடாதென நின்றது.]

அடாதுடி—தீம்பு.

அடாபிடி —
அடாவடி — } கொடுஞ்செயல்.

அடார்—புலிமுதலியவைகளை அகப்படுத்தும் பொறி. (உ-ம்.) "பெருங்கல்லடாரும் போன்மென" (புறநா. கக.)

அடாவந்தி — 1. அநியாயம். (அடாததாய் வந்தது.) 2. இட்டேற்றம். 3. துன்பம். (லெக்ஸிகன்.)

அடாற்காரம் — வலாற்காரம். 'அடாற்காரத்தா லரிதாகப்பயிலுதலின்' (திருக்காளத்திப்பு. 18. 10.)

அடி — 1—3. அடியென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 4. அடுத்த இடம், சமீபம். (உ-ம்.) "கிணற்றடியினின்றான்" 5. உடம்பின்காற் பரட்டின்கீழிருப்பதாய் நடக்கும்போது அல்லது நிற்கும்போது நிலத்திற் றோயும் பாகம். (உ-ம்.) "தோயுநிலத்தடி" (திருக்கோ. ங.) 6. உடம்பினுறுப்பினாலே தாக்குதல். 7. கருவிகொண்டாவது கொள்ளாமலாவது கையினாலே தாக்குதல். 8. பாதமிதி. (உ-ம்.) "ஆத்த னூன்று மடிதொறுந் தோன்றிய-நீத்தம் யாவும்" (கந்தபு. காவலா. அ.) 9. கீழ். (உ-ம்.) "அடிவயிறு." 10. சத்திருபசாமர்த்தியம். (உ-ம்.) "சிவனடிசென்னிவைப்பாம்" (சி. சி. பாயிர. க.) 11. சூதாடுவார் வசமிக்குங் குழூஉக்குறிகளிலொன்று. (உ-ம்.) "அடியிதுபொட்டையீதென்பர்" (கந்தபு. கயமுக. கசுஅ.) 12. செய்யுளுறுப்புக்களுளொன்று; அது: நாற்சீர்கொண்டுவருவதன்றியும், இருசீர் முச்சீர்களினாலும் ஐந்துமுதலிய பல சீர்களினாலும் வருவதுமுண்டு. (உ-ம்.) நாற்சீர்கொண்டதடியெனப்படுமே" (தொல். பொரு. ௩௪௪-ம் உரையும்.) 13. தொடக்கம், ஆதி. "நடுவின் முடிவினி லடியி னன்றான பொருளொன்று ஞாலத் தில்லை" (ஞானவா. சநகரா. ௨௨.) 14. பகுபதத்தின் முதனிலை. 15. பழமை. (உ-ம்.) "அடியிட்டசெந்தமிழின்" (தாயு. மலைவளர் ச.) 16. பன்னீரங்குலங்கொண்ட ஓரளவு. 17. மரம் மலைமுதலியவற்றிலே நிலத்தோடடுத்திருக்குங் கீழ்ப்பாகம். உ-ம்.) "வெண் பெருமணலை யடிக்கடியிற் பொதிந்தே" (தைல. பாயிர. ௪௬.) 18. வமிசமூலம். (உ-ம்.) 'பனிமதி மரபிற் கடியுநீ' (பாரத. குருகுல. ௨௫.) 19. வீசையாயசைந்து தாக்குதல். (உ-ம்.) "மலையிலிருந் துருண்டுவந்த கல் என்றலையி லடித்தது" 20. வேர். (உ-ம்.) "அடியற்ற மரமென்ன வடியிலே வீழ்ந்து" (தாயு. தேசோ. ௧௦.) 21. அடிப்பீடம். 22. மூலம். 23. இடம். (பிங்.) 24. வையாளி வீதி. (சூடா.) 25. மதுபானம். (லெக்ஸிகன்.) 26. ஐசுவரியம். 'அடியுடையார்க்கெல்லாம் சாதித்துக்கொள்ளலாமே' (ஈடு. 4. 2. 9.) 27. உபாயம். 'நல்ல அடியெடுத்தாய்' (வழக்கு.) 28. மகடூஉமுன்னிலைச்சொல். (கம்ப. சூர்ப்பண. 93.) [சிவஞானசித்தியார் எட்டாஞ்சூத்திரம் ௨௨-ஆம் கவியுரையிலே சிவாக்கிரயோகியர் அடியென்பதன் பரியாய மொழியாகிய பதமென்பதற்கு வஸ்து என்னும் பொருளுமிருத்தலால் அடி யென்பதற்கு வஸ்து எனவும் ஒருபொருள் கூறுவர்.]

அடிக்கட்டுதல்—புண்புடைத்தல்.

அடிக்கடி — 1. அடிபெயர்க்குந்தோறும். (உ-ம்.) "அடிக்கடி படித்துகள் பரவை தூர்த்தன" (பாரத. பதினொன். ௨௦௧.) 2. பலமுறை. "அண்ணல்சா மந்தன் றுஞ்சா னடிக்கடி யெழுந்து" (திருவிளை. மெய்க்கா. ௨௦.)

அடிக்கணை — கணைக்கால். "இணைவரா ணிகாடிக்கணையாளை" (சேதுபு. விதூம. அ௦.)

அடிக்கயில் — தேங்காயின் அடிப்பாகம். (லெக்ஸிகன்.)

அடிக்கழஞ்சுபெறுதல் — பெருமதிப்புப் பெறுதல். 'உங்கள் போக்கு அடிக்கழஞ்சு பெறுதோ' (ஈடு. 1. 4. 1.)

அடிக்கழிவு—முறைக்கேடு. 'நீ செய்கிற அடிக்கழிவால்' (ஈடு. 6. 2. 6.)

அடிக்களம் — களத்திற் சிதறிக்கிடக்குந் தானியம் (லெக்ஸிகன்.)

அடிக்கீழ்ப்படுத்தல் — 1. அடக்கிநடத்துதல். 2. ஆண்டுகொள்ளுதல்.

அடிக்குச்சி—அளவுகோல்.

அடிக்குடி—அடிக்குடில். (தாயு. ஆசை. 37.)

அடிக்குடில்—1. அடிமைக்குலம். (திவ். திருப்பல். 10.) 2. அடிச்சேரி. "அன்னந் துஞ்சு மடிக்குடிலி னுள்ளன்றி" (சிந்தா. இலக்கணை. ௨௧௩.) 3. வேடரிருக்குமூர். 4. நகர்ப்புறம்.

அடிக்குள்ளே—உடனே.

அடிக்கொருக்கால் — அடிக்கொருமுறை, அடிக்கடி.

அடிக்கொள்ளுதல்—தொடங்குதல், உற்பவித்தல். "வாட்டடங்கண்ணிமார்பின் வந்தடிக்கொண்டஞான்றே" (கூர்மபு. கண்ணனவ. உடு.)

அடிக்கோல்—அளவுகோல்

அடிக்கோலுதல் — 1. அத்திவாரம்போடுதல். 2. ஆரம்பித்தல். 'அடிக்கோலி, ஞாலத்தாள் பின்னும் நலம்புரிந்த தென்கொலோ' (திவ். இயற். 2. 82.)

அடிகண்மார் — சமணருள் ஆசிரியராய் நின்றவர்களைக் குறிக்கும் ஒருசிறப்புப்பெயர். (உ-ம்.) "அடிகண்மாராவாரெண்ணுயிரவரும்" (திருவிளை. யானை. அ.)

அடிகள் — 1. கடவுள். "திருவாரூர்ப் பெருமானடிகள்" (பெரியபு. தண்டி. உ.) 2. குருக்கள். "அன்னைதன்னைத் தாதையையடிகடன்னை" (கந்தபு. வீர. சய. உக.) 3. தேவரீர். 'அடிகள்சொற்றுக' (இராமா. அகலிகை. சடு.) 4. முனிவர். "அடிகண்மார்" (பெரியபு. திருஞா. கூசக.) 5. பாதங்கள். "குமரேசனதடிகண்முன்னி" (கந்தபு. காவலா. க.) 6. மூத்தோன். (சூ. நிகண். உ. கூ.) 7. பெரியோர். 8. பெரியோர்பெயருடன் வழங்கும் மொழி. 'இளங்கோவடிகள்', 'கவுந்தியடிகள்'(சிலப்.) 9. பெருமாட்டி. 'வீரசிம்மாசனத்து முக்கோக்கிழானடிகளோடும் வீற்றிருந்தருளிய' (சோழவமி. 102.)

அடிகாசு — பழைய வரிவகையுள் ஒன்று. (I. M. P. S. M. 91.)

அடிகாற்று—பெருங்காற்று.

அடிகொள்ளல்—தொடங்குதல்.

அடிகோலல் —
அடிகோலுதல்— } 1. அத்திவாரம்போடல். 2. முயலல்.

அடிச்சால்—உழவின் முதற்சால்.

அடிச்சி—அடியாள். (உ-ம்.) 'புனைகோதை சூட்டுன்னடிச்சியை' (சிந்தா. கோவிந். எஙு.)

அடிச்சுவடு—பாதம்பதிந்த அடையாளம், பாதமுத்திரை. "எக்கர்வாயவ ரிடுமடிச்சுவட்டு" (திருவானை. நகர. உஎ.) [அடி - கால். சுவடு - அடையாளம்.]

அடிச்சூடு—பாதத்திலுறைக்கும்வெப்பம்.

அடிச்சேரி — 1. நகரவெல்லையிலிருக்கும் ஊர். 2. பணியாளருடைய குடியிருப்பு. (ஈடு. 6. 7. 1.)

அடிசாய்தல்—அடியின்நிழல் சாய்தல்.

அடிசில் — உண்பன தின்பன பருகுவன நக்குவன என்னும் ஆகாரப்பொது. (தொல். சொல். கிளவி. சகூ. உரை. சேன.) "சீலமோ டடிசில் செய்வன் சிறிதுபோ திருத்தியென்று" (கந்தபு. வில்வலன் வாதாவி வதை. கக.) 2. சோறு. "அடிசிலஞ்சாலை" (கந்தபு. திருநகர. சடு.)

அடிசிற்சாலை—அன்னசத்திரம். (சீவக. 75. உரை.)

அடிசிற்புறம் — உணவிற்காக விடப்படும் இறையிலிநிலம். (சீவக. 2577.)

அடிசிற்றளி—மடைப்பள்ளி. 'அடிசிற்றளி யானெய் வார்ந்து' (சீவக. 2579.)

அடிஞானம் — 1. முந்தியஞானம். (சிவஞானமுனிவர்.) 2. சிவஞானம். "ஆரியனுமாசான்வந் தருளாற் றேன்ற வடிஞானமான்மாவிற் றேன்றும்" (சி. சி. அ: உஅ. சிவாக்.) [அடிகள் - சிவன். அடிகளதுஞானம் அடிஞானமென் றுயிற் றென்பர் சிவாக்கிரயோகிகள்.]

அடித்தல்—1. (பறை) அடித்துச்சொல்லல். (உ-ம்.) "வாய்ப்பறைகொண்டடிநீ" (தாயு. நினை. ந.) 2. (ஆணி) அறைதல். 3. இறைச்சியின்பொருட்டு ஆடு மாடு முதலியவற்றைக் கொல்லல். (உ-ம்.) "மாடடிக்குமிடம்) 4. மோதல். (உ-ம்.) "திரையடித்துப்போகின்றது" 5. விரித்தகையினாலாவது தண்டு முதலிய கருவியினாலாவது ஓங்கித் தாக்குதல். "அக்கிரமத்தாற் குற்றமடித்துத் தீர்த்து" (சி. சி. உ: கடு.) 6. வீசுதல். "சண்டமாருதச்சுழல்வந்தடிப்ப" (தாயு. தேசோ. உ.)

அடித்தலம் — 1. அத்திவாரம். (உ-ம்.) "பாசறை கொண்டே யொப்ப வடித்தலம் படுத்து" (கந்தபு. நகர்செய். ந.) 2. கீழிடம். 3. பாதம். (உ-ம்.) "முத்தமிழ்விரகர்பொன்னடித்தலம்" (பெரியபு. திருஞா. கoஎஙு.) 4. முதலிடம்.

அடித்தழும்பு — 1. அடிச்சுவடு. 2. அடிபட்டதழும்பு.

அடித்தளம்—1. அடிவரிசை. 2. கற்படுத்த நிலம். 3. பின்னணி.

அடித்தாறு—பாதரேகை. (திவ். இயற்பா. பெரியதிருவக். 31.)

அடித்தி—1. அடிச்சி. 'அடித்தியாரு முன் பட்ட தொழிந்து நுங்கண் முகவியர்'(சீவக. 2045.) 2. வியாபாரப்பிரதிநிதி. (லெக்ஸிகன்.)

அடித்திகம்—1. அமுக்கிரா.(மலை.) 2. அக்கரா. (வைத்தியபரி.)

அடித்திப்பை—ஆதாரம். (லெக்ஸிகன்.)

அடித்திவியாபாரம்—மொத்தவியாபாரம். (லெக்ஸிகன்.)

அடித்துக்கொண்டுபோதல் — 1. வாரிக் கொண்டுசெல்லுதல். 'வெள்ளம் ஊரை அடித்துக்கொண்டுபோயிற்று'. 2. கொள்ளை கொண்டுசெல்லுதல். (லெக்ஸிகன்.)

அடித்துக்கொள்ளுதல் — 1. அறைந்து கொள்ளுதல். 'தலையில் அடித்துக்கொண் டாள்' 2. தடுத்துரைத்தல். 'அது செய்யத் தகாதென்று முன்னமே அடித்துக்கொண் டேன்' 3. சண்டையிடுதல். (லெக்ஸிகன்.)

அடித்தூறு—மரத்தின் அடிக்கட்டை.

அடித்தேறு—அநீதி. (லெக்ஸிகன்.)

அடித்தொழில்—குற்றேவல். 'அப்பிறப் பியானின் னடித்தொழில் கேட்குவன்' (மணி. 22. 134.)

அடித்தோழி—தலைமைத்தோழி. (சிலப். வாழ்த்து.)

அடிதடி—சண்டை.

அடிதண்டம்—1. அடிதண்டனை. 2. தலை யெடுக்கவொட்டாத அடி. 3. ஆலயத்துக்குச் செல்லும்போது வழிமுழுதுந்தண்டனிடுகை. (லெக்ஸிகன்.)

அடிதலை—1. ஆதியந்தம். (உ-ம்.) "அடி தலைவரிது"(அருணசலபு. திருமலைச்.௬0.) 2. கீழ்மேல். 3. வரலாறு.

அடிதலைதடுமாற்றம்—ஆதியந்தந்தெரியாது தடுமாறுதல். "அந்தமின் மறையெல்லா மடிதலைதடுமாறி" (கந்தபு.பாயிர.௯.)

அடிதிரும்புதல்—பொழுதுசாய்தல்.

அடிதொடுதல் — பிறர்பாதந்தொட்டுச் சூளுரைத்தல். 'ஒழியப்போகே னுன்னடி தொட்டேன்' (மணி. 18. 171.)

அடிதொறும்—அடிதோறும். (சீவக.106.)

அடிதோறும்—அடிக்கடி.

அடிநகர்தல்—இடம்விட்டுப்பெயர்தல்.

அடிநாள்—ஆதிக்காலம். 'அடிநாளில் யான் முயன்ற தறியீர்போலும்' (பிரபோத. 38. 20.)

அடிநிலம்—அடிப்பக்கம், அடியிடம். 'அடி நிலத்திலே படிவன விடிமுகி லனைத்தும்' (பாரத. கிருட்டிண. ௬0.)

அடிநிலை—மரவடி.

அடிநிழலார்—குடிகள்.

அடிநீறு—பாததூளி.

அடிப்பட்டகாந்தி—தீமுறுகற்பாஷாணம். (மூ.அ.)

அடிப்பட்டசாந்தி—மகாசாந்தம்.

அடிப்பட்டசான்றோர் — பரம்பரைப்பெரியோர். (நன். 266. மயிலை.)

அடிப்பட்டவழக்கு — பழமையாகவரும் வழக்கு.

அடிப்படர்தல் — 1. கீழ்ப்பாவுதல். 2. இசைந்துவருதல். 'நல்லூழியடிப்படர' (மதுரைக். 21.)

அடிப்படல்—1. கீழ்ப்படிதல். "உரிய வம்புவி - பல்லாண் டடிப்பட வாண்டான்" (பாரத. உலூகன். ௩.) 2. கீழ்ப்படையிலிருத்தல். 3. பாதத்தின்கீழ்ப்படுதல்.

அடிப்படுத்தல் — 1. கீழ்ப்படுத்துதல். (உ-ம்.)"பிறபுலங்களடிப்படுத்து"(பெரியபு. ஐயடி. உ.) 2. பாதத்தின்கீழ் அடங்கச்செய்தல். "மாவலி யளிப்ப ஞால முழுவது மாய னெய்திப் - பாவடிப் படுத்தி முன்னம் பண்பொடு கவர்ந்த வாறும்" (கூர்மபு. அநுக்கிரமணி. ௯.)

அடிப்படுதல்—1. அடிச்சுவடுபடுதல். (நாலடி. 154.) 2. கீழ்ப்படிதல். 'ஆணைகொண் டடிப்பட விருந்தன்று' (பு. வெ. 6. 31.) 3. பழகுதல். (குறள். 140. உரை.) 4. பழமையாகவருதல். 'அடிப்பட்ட சான்றோர்' (நன். 266. மயிலை.)

அடிப்படை—1. ஆதாரமாக அடியிற்கிடப்பது. 2. ஆதாரம். 3. சுவரின் அடித்தளம்.

அடிப்பணி — குற்றேவல். 'அன்னவற் குரிய னென்ன வடிப்பணி செய்வல்' (சீவக. 552.)

அடிப்பதறல்—1. கால் நடுக்குதல். 2. நிலை குலைதல். 3. மனங்கலங்குதல்.

அடிப்பந்தி—முதற்பந்தி. [அடி - முதல். பந்தி - வரிசை.]

அடிப்பரத்தல்—அடிப்பரத்துதல்.

அடிப்பரத்துதல் — ருதுஸ்நாநச்சடங்கில் ஒன்று.

அடிப்பலம்—ஆதாரவலிமை.

அடிப்பலன்—முதற்பலன். [அடி - முதல். பலன் - பிரயோசநம்.]

அடிப்பற்றல்—அடிப்பற்றுதல்.

அடிப்பற்று—1. பாண்டத்தில் அடிப்பற்றின பதார்த்தம். 2. பாறையுப்பு. (வைத்திய பரி.)

அடிப்பற்றுதல்—1. பாகஞ்செய்யும்போது வேகும்பதார்த்தம்நீரின்மையாற்பாண்டத்தினடிப்பக்கத்தினுள்ளே யொட்டிக்கொள்ளல். (உ-ம்.) "கைக்கயமூழிகொண்டே கலனடிப்பற்றுவண்ணம்" (தைல,தைலவ.கூசு.) 2. திருவடியைப்பற்றுதல். (ஈடு 4. 6. 9.)

அடிப்பாடு — 1. வழி. 2. வரன்முறை. 'மற்றவட்கு விபூதிபுக லடிப்பாட்டின் றொடர்பாகு மகேசன்" (கூர்மபு. திருக்கல். சு.) 3. வழக்கு. (நன். 132. மயிலை.) 4. அடிச்சுவடு. "நிலந்தனிலடிப்பாடுணர்ந்து" (நல். பார. அரசநீ. கருரு.) [அடி - பாதம். பாடு-படுதல்.] 5. உறுதியானநிலை. 'இதிறே உபாயத்தில் அடிப்பாடு' (ஈடு. 6. 3. 3.)

அடிப்பாய்தல்—தாவிக்குதித்தல்.

அடிப்பாரம்—1. அஸ்திபாரம். (கோயிலொ. 130.) 2. அடியிலுள்ள கனம். 3. சிரங்கின்புடைப்பு.

அடிப்பிடித்தல்—1. அடிப்பற்றுதல். 2. குறிப்பறிதல். 3. முதலிலிருந்து தொடங்குதல். 4. பின்றொடர்தல். 5. அடிச்சுவட்டைக் கண்டுபிடித்தல்.

அடிப்பிணை—1. வங்கம். 2. வங்கமணல். (மூ. அ.)

அடிப்போடுதல்—தொடங்கல்.

அடிபட்டவன்—1. பழகினவன். (உ-ம்.) "நாநா காரியங்களிலும் அடிபட்டவன்" (வழக்.) 2. தாக்கப்பட்டவன். (வழக்.)

அடிபடல்—அடிபடுதல்.

அடிபடுதல்—1. அடிக்கப்படுதல். (உ-ம்.) 'பிட்டமுதுக்கடிபடுவோன்'(திருப்பு. சஎ௨.) 2. தாக்கப்படுதல். "அவசமாகி யடிபட்டெனைத்தாமுறுப்புக் தாளாய்" (ஞானவா. மந்த். சு.) 3. நீக்கப்படுதல். 'உன்பேர் அடிபட்டுப்போயிற்று' 4. தோற்றல். 5. எட்டுதல். 'அந்தச்செய்தி என்காதில் அடிபட்டது. 6. அழுந்துதல். 'கஷ்டங்களில் அடிபட்டவன்' 7. செலவழிதல். 'எத்தனைகலநெல்லானாலும் இங்கே அடிபடும்' (வழக்.)

அடிபணிதல்—காலிலேவிழுந்து நமஸ்கரித்தல். 'அடிபணிந்தேன் விண்ணப்பம்' (திவ். பெரியாழ். 3. 10. 2.)

அடிபார்த்தல்—1. நிழலளந்து பொழுது குறித்தல். 2. சமயம்நோக்குதல். (வழக்.)

அடிபிடி—சண்டை.

அடிபிடித்தல் — 1. அடிச்சுவடுபார்த்தல். 2. பின்றொடருதல். 3. மூலமறிதல். 4. (வியாபாரத்துக்கு) முதற்பிடித்தல்.

அடிபிறக்கிடுதல்—பின்வாங்குதல். 'அடிபிறக்கிட் டோனையும்' (தொல். பொருள். 65. உரை.)

அடிபெயர்த்தல்—அடிபெயர்தல்.

அடிபெயர்தல் — நின்ற இடத்திலிருந்து விலகுதல்.

அடிம்பு—சிவதை (மலை.)

அடிமடக்கு—முன்வந்த அடியே பெயர்த்தும் வேறுபொருள்விளைத்துவருவது; அது: ஈரடிமடக்கு, மூவடிமடக்கு, நான்கடிமடக்கு என மூவகைப்படும். (தண்டி. கூ௦.) [அடி - பாவின்அடி; மடக்கு - மடங்கிவருவது.]

அடிமடி—ஆடையின் உள்மடிப்பு.

அடிமடை—நீர்வாய்க்காலின் முதன்மடை.

அடிமண்—1. கீழ்மண். 2. காலிலொட்டிய மண்.

அடிமணியிடுதல் — தொடங்குதல். 'இனி முடிக்கும் வெற்றிக் கடிமணியிட்டாய்' (கம்பரா. மகுடபங். 42.)

அடிமணை—ஆதாரம். 'எல்லாப் பண்ணிற்கும் இஃ தடிமணையாதலின்' (சிலப். 3. 63. உரை.)

அடிமயக்கு-சித்திரகவிகளுள் ஒன்று; அது: மூவர் மூன்றாசிரியவடி சொன்னால், தான் ஓரடி சொல்லிக் கிரியைகொளுத்துவது. இதனை யாப்பருங்கலநூலார் பாதமயக்கென்பர். (யாப்பருங்கலம், செய்யு. கூசு.)

அடிமறி — எண்வகைப் பொருள்கோளி லொன்றாகிய அடிமறிமாற்று. "எற்புழி

யெடுத்துடன் கூட்டுறு மடியவும் - யாப்பீ திடைமுத லாக்கினும் பொருளிசை-மாட்சியு மாறு வடியவு மடிமறி'' (நன். பொது. சுஅ.) [மறிதல் - மடங்கல்.]

அடிமறிமண்டிலம் — அகவற்பாக்களு ளொன்று; அஃது எல்லாவடியும் அளவடி யாகி யெவ்வடியை முதல் நடு இறுதியாகக் கொள்ளினும் ஓசையும் பொருளும் வழுவாது நிற்கப் பாடப்படுவது. 'நடு வாதியந்தத், தடைதரு பாதத் தகவ லடிமறி மண்டிலமே' (யாப். காரிகை. செய்யுளி. அ.)

அடிமறிமண்டிலவாசிரியம்— அடிமறிமண் டிலமென்னும் ஆசிரியப்பா. ''மனப்படு மடிமுத லிடையீ றுயின்-அடிமறி மண்டில வாசிரிய மாதலும்'' (இலக்கணவி. எசஎ.)

அடிமறிமாற்று — பொருள்கோள் எட்டி னுள் ஒன்று; அது: சீர்நின்றாங்குநிற்ப அடி கள் ஒன்றனிலைக்களத்து மற்றொன்று பொரு ளுக்கியைய மாற்றப்படுவதாய், அல்லது ஒரு செய்யுளின் யாதாயினு மோரடியை யா தாயினுமோரிடத்துக் கூட்டி யுச்சரிப்பினும் பொருளும் ஓசையும் வேறுபடாதிருப்பதாய் உள்ளது. (நன். 419.)

அடிமனை—சுற்றுச்சுவர். (சீவக. 837.)

அடிமாண்டுபோதல்—நிர்மூலமாதல்.

அடிமுடி — 1. ஆதியந்தங்கள். (உ-ம்.) ''அடிமுடியொன்றில்லாதவகண்டவாழ்வே'' (தாயு. பன்மாலை. ௩.) 2. காலுந் தலையும். 3. வரலாறு.

அடிமுதன்மடக்கு — ஆதிமடக்கென்னுஞ் சொல்லலங்காரம். (தண்டி. பக். ௩உ.)

அடிமுரண்டொடை — செய்யுட்டொடை நாற்பத்துமூன்றனு ளொன்று; அது ஒரு செய்யுளில் ஓரடியில் முதலிலே வருஞ் சொல்லாவது பொருளாவது அடுத்த அடியின் முதற்கண்ணேவருஞ் சொல்லோடும் பொரு ளோடும் மாறுகத் தொடுக்கப்படுவது. (யாப். காரிகை. உறுப். கஅ. உரை.)

அடிமை—1. அடிமைவேலைசெய்வோர். ''தள்ளரு மடிமை யாதி தாநங்கள் செய்த பேறும்'' (திருவிளை. தலவி. கo.) 2. தாழ்ந்து நின் றேவல் கேட்டல். (உ-ம்.) ''ஒன் னார்க்கடிமைபுகுத்திவிடும்'' (வள். சுoஅ.) 3. தொண்டன். 4. தொண்டுபடுந்தன்மை.

அடிமைப்படல்—தொண்டுபூணுதல்.

அடிமைப்படுத்தல் — அடிமையாக்குதல்.

அடிமைப்பத்திரம்—''ஒருவன் ஆடையுண வின்றி வருத்தப்பட்டுக் கொடியவழியிற் போகும்போது தன் துன்பந்தீரும்பொருட்டு ''நான் உனக்கடிமை; உன்பணியைச்செய்கு வேன்'' என்று மற்றொருவனுக்கு எழுதிக் கொடுக்கும் பத்திரம். (மிரு. ௩ச.)

அடிமைபூணல்—அடிமையாதல்.

அடிமையோலை — அடிமைப்பத்திரம். (சௌந். எ.)

அடிமோனைத்தொடை — செய்யுட்டொடை நாற்பத்துமூன்றி லொன்று; அது அடிக டோறும் முதலெழுத் தொன்றிவரத் தொடுக்கப்படுவது. (யாப். காரிகை. உறுப். கஅ.)

அடியக்காந்தி — தீமுறுகற்பாஷாணம். (வைத்தியபரி.)

அடியந்தாதி--ஒருசெய்யுளினோரடியடுத்து வருமடியுமாக வரத் தொடுக்கப்படுவது. (யாப். காரிகை. உறுப். கஎ. உரை.)

அடியம்—அடியேம். (உ-ம்.) ''அடியமில் லறத்தையாற்றி'' (கந்தபு. நகர. ககஉ.)

அடியர்—அடியார் (உ-ம்.) ''பணிதற் கடி யர் சென்றெதிர்கொள்ள'' (பெரியபு. திரு ஞான. ருoக.)

அடியரேங்கள்—அடியேமாகிய நாங்கள். ''சிற்றடிய ரேங்கள்செயல் சீருளதை யன்றோ'' (கந்தபு. தெய்வ. உஉசு.)

அடியவர் — தொண்டர். ''அந்நகரில் வாழ்வாரு மடியவரு மநமகிழ்ந்து'' (பெரியபு. திருஞான. ௩உரு.)

அடியவன்—அடிமையானவன். ''அமரர் நாயகன்றனக் கடியவன்'' (கந்தபு. சிங்கமுகா. உஎக.)

அடியளபெடைத்தொடை—செய்யுட் டொடை நாற்பத்துமூன்றனுளொன்று; அது அடிதோறும் முதலெழுத் தளபெடுத்து வரத் தொடுக்கப்படுவது. (யாப். காரிகை. உறுப். கஅ. உரை.)

அடியறுக்கி—மட்கலமறுக்குங் கருவி.

அடியனேன்—அடியேனாகியநான். ''பொய் யடியனேன் பிழை'' (கந்தபு. தெய்வ. ௩சு.)

அடியாகேதுகை — அடியெதுகைத் தொடை. (தொல். பொருள். 405. உரை.)

அடியார்—1. அடிமைக்காரர். (உ-ம்.) "பின்னும் பகர்வான் மகனேயிவன் பின் செறம்பி - யென்னும் படியன் றடியாரினி லேவல் செய்தி" (இராமா. நகர்நீ. கருக.) 2. தொண்டர். (உ-ம்.) "அடியார்க்கெல்லா மலகிலாவினைதீர்க்க" (தாயு. ஆசை. எ.)

அடியார்க்குநல்லார்—சிலப்பதிகார உரையாசிரியருள் ஒருவர்.

அடியாள்—அடிமைபூண்டவள்.

அடியாறு—தொன்றுதொட்ட வரலாறு.

அடியான்—ஏவலாளன்.

அடியிடுதல்—1. சீர்பலவடுக்கிச் செய்யுளுக் குறுப்பாக வருதல். 'அடியிட்டசெந்தமிழி னருமையிட்டாரூரில்' (தாயு. மலைவளர். ௬.) 2. தொடங்கல். 'பரிந்தழுவதற்குப்பாவா யடியிட்டவாறுகண்டாய்' (சிந்தா. பதுமை. உ௨௬.) 3. நடக்கக் கால்வைத்தல். 'பரவை வாயிலம்மட்டு மடியிட்டு' (தாயு. மலைவளர். ௬.) 4. நடத்தல். 'ஆடுநாடநெஞ்சி னெண் ணினோ ரடியிட்டோர்கள்' (கூர்மபு. நவகண். ௯௧.) 5. மிதித்தல். 'சேடன்முடியுங்கதிர் கொள் சென்னிவரையுந்து - ளாடவடியிட்டு' (திருவிளை. மாயப். ௬.)

அடியியைபுத்தொடை—செய்யுட்டொடை நாற்பத்துமூன் றனுளொன்று; அது: செய்யு ளடிகளினிறுதிதோறும் நின்ற எழுத்தாவது சொல்லாவதுஒன்றிவரத்தொடுக்கப்படுவது. (யாப். காரிகை. உறுப். க௮. உரை.)

அடியீடு—1. தொடக்கம். 2. பாதம்வைத்தல். 'மங்கையரடியீடேத்த'. (கூர்மபு. வயிரவ. உ௮.)

அடியீரல்—மண்ணீரல். (வைத்தியபரி.)

அடியுண்ணல்— 1. அடிக்கப்படுதல். 2. திரிந்துபழகுதல்.

அடியுப்பு—கல்லுப்பு. (வைத்தியபரி.)

அடியுரம்—1. அத்திபாரம். 2. முன்னுள்ள பெலம். 3. பிதிரார்ச்சிதசொத்து. 4. முன் வருஷத்துச் சேமதானியம் 5. சக்தி. 6. முன்புஇட்ட எரு. 7. மரத்தின் அடியைச் சுற்றியிடும் எரு.

அடியுறை—1. பாதகாணிக்கை. 'ஈட்டியபல் பொருள்க ளெம்பிரானுக் கடியுறையென்று' (திவ். பெரியாழ். 4. 3. 9.) 2. வழிபட்டுறைகை. (கலித். 140. 11.) 3. அடிக்கீழ்வாழ் வேன் என்னும் பொருளில்வரும்ஒரு வணக்க மொழி. 'நின் னடிநிழற்பழகிய வடியுறை.' (புறநா. 198.)

அடியெடுத்தல் — 1. அப்பாற்போதல். (திவ் இயற்பா. பெரியதிருவந். 30.) 2. அடி வைத்தல். 'அடியெடுத்துக்கொண் டென் பால் வரலாகுங்கொல்.' (சடகோபரந். 28.)

அடியெதுகைத்தொடை — செய்யுட் டொடை நாற்பத்துமூன் றனுளொன்று; அது அடிகடோறும் முதற்கண் இரண்டாமெழுத் தொன்றிவரத்தொடுக்கப்படுவது. (யாப். காரிகை. உறுப். க௮. உரை.)

அடியேம்—அடிமையாயுள்ளேம். 'தொழு மடியேம்வல்வினையின் வேர்தடிந்தாய்' (கந்தபு. தேவர்கள் ௩.)

அடியேன்— தொண்டனேனாகிய யான். 'அடியேற்கொன்று மற்றிவணருளியவேண் டும்' (கந்தபு. பானுகோ. கரு௩.)

அடியொட்டி—காலிற்றைக்கும்படி நிலத் திலே நட்டுவைக்கப்படுகிற ஒருவகையூசி. 'கூப்பிட்டோடுகின்றவர்கள், அங்ஙனம் ஓடாமைக்கு நட்டுவைத்த அடியொட்டி யுள் ளடியிலே பாய்கையினாலே, கால் நிலத் தோடேயொட்டிக்கொண்டு தறிவலையிலகப் பட்ட மான்போலே பின்னரு மகப்பட்டா ரென்றானென்க' (சிந்தா. முத்தி. க௭௦. உரை.)

அடியோத்தகாலம்— நடுப்பகல். (பட்டினப். 268. உரை.)

அடியொற்றுதல் — பின்பற்றுதல். (திருவாய். நூற். 1. வ்யா.)

அடியோட்டி— ஒரு யுத்தக்கருவி. அது: நெருஞ்சின்முட்போன்ற இருப்பாயுதம்.

அடியோடு—முழுதும். 'அறஞ்செய்யா தடியோடிறந்து'. (திருப்பு. 608.)

அடியோர்— பிறர்க்குக் குற்றேவல்செய் வோர். 'அடியோர்பாங்கினும்' (தொல். பொரு. உ௩.)

அடியோன்—அடியான். (தொல். பொ. 3.)

அடிலவோடாகம்— ஒருசெடி. இதனிலை களும் வேரும் சாறுபிழிந்து மந்தாரகாசம் கபமென்னும்வியாதிகட்கு மருந்தென்று மலையாளதேசத்திலே வழங்குகிறார்களாம்.

அடிவட்டம்—1. பாதவளவு. 'அடிவட்டத் தாலளப்ப'. (திவ். இயற். 3. 13.) 2. நாக சுரத்தின் அடிப்பூண். (பாத. ஒழிபி. 6.)

அடிவயிறு—கீழ்வயிறு.

அடிவரவு—பாட்டின் முதற்குறிப்பு.

அடிவாரம்—மலைச்சாரல். 'திருக்காளத்தி மலையடிவாரம்' (பெரியபு. திருஞான. கoஉக.)

அடிவானம்—1. திகந்தம். 2. அஸ்திவாரம்.

அடிவிடுதல் — அடிவிரிதல் — அடிவிள்ளுதல்— } பாத்திர முதலியவற்றின் அடிப்பொருத்து விடுதல்.

அடிவிளக்குதல்—கால்கழுவியுபசரித்தல். 'திருந்தடி விளக்கிச் சிறப்புச் செய்தபின்'. (மணி. 24. 96.)

அடிவீழ்ச்சி—வணங்குதல். 'அநங்கமாலை யடிவீழ்ச்சி' (சிந்தா. இலக்கணை. உகo.)

அடிவீழ்தல்—வணக்கம். 'அடிகண்முன்னர் யானடிவீழ்ந்தேன்' (சிலப். புறஞ்சே. அஎ.)

அடிவெண்குருந்து—முருந்து.

அடிவைத்தல்—1. ஆரம்பித்தல். 2. கால் வைத்தல். 3. நடக்கத்தொடங்குதல். 4. பிறர்காரியத்திலே தலையிடல்.

அடு—1-3. அடு என்னும் ஏவலும் தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும்.

அடுக்கணி—சொன்மிக்கணி மூவகையுள் ஒன்று; அது: சிறப்புக்காட்டவாவது அன்பு துயர் களிப் பிவற்றி னென்றின்மிகுதியைக் காட்டவாவது ஒருபொருளைத்தரும் பல திரிசொற்க ளடுக்கிவைக்கப்படுவது. 'இகழ்ந் தொளித்தானே வென்னையிகழ்ந்தகன்றானே கொடியநெஞ்சான்' என்பதுபோல. 'அடுக் கணி யொருபொருட் கடுக்கிய திரிசொல் - அடுக்கி வைப்ப தடுக்கணி யெனப்படும்' (தொன்னூல். ௩கஎ.)

அடுக்கம்—1. அரைமலை. 'ஆமழை-யணங்கு சாலடுக்கம் பொழியுநும்' (புறநா. கருக.) 2. பக்கமலை. 'மந்தியுமறியாமரன்பயிலடுக் கத்து' (திருமுரு. சஉ.) 3. ஒன்றன்மேல் ஒன்றாய் அடுக்கிச்செய்யப்பட்ட வீடு. 'விஞ்சு மேனிலவடுக்கமும்' (கந்தபு. நகர்புகு. அஉ.) 4. மரச்செறிவானசோலை. 'குரங்கமையுடுத்த மரம்பயிலடுக்கத்து' (சிலப். நாடு. கருஎ.) 5. மலைச்சாரல். 'கறிவளரடுக்கத்துமலர்ந்த காந்தள்' (புறநா. கசூஅ.) 6. மலைப்பக்கம். 'மழைமிசை யறியா மால்வரை யடுக்கத்து' (புறநா. உoo.) 7. வரிசை. (பதிற்றுப். 55. 18.) 8. அடுக்கு.

அடுக்கல்—1. அடுக்கற்க. (எதிர்மறை வியங்கோள்) 2. அடுக்குக. (உடன்பாட்டுவியங் கோள்.) 3. அடுக்கு. 'ஆரவடுக்கல் பொன் னாகமிலங்க' (கந்தபு. அவைபு. ௩௫.) 4. ஒன்றன்மேலொன்றுவைத்தல். 'திங்கண்மூன் றடுக்கிய' (சிலப். காடு. க.) 5. குவித்தல். 6. குவியல். 'மீனத்தடுக்கன் முழுவதுநோக்கி' (கந்தபு. தேவரையேவல். அ.) 7. மலை. 'அடுக்கன்மீமிசையருப்பம்பேணு' (மலைபடு. கக.)

அடுக்கலரி — அடுக்கடுக்கான பூவுள்ள வொருவகையலரி.

அடுக்கலிடல் — உயிர்முற்றக்களையும்படி நென் முதலியவைகளை யிரண்டாமுறை குற்றுதல்.

அடுக்களை—பாகசாலை. 'வகையமையடுக் களைபோல்' (மணிமே. உகூ-ஆங்காதை. ௬௯க.)

அடுக்காலாத்தி—அடுக்குத்தீபம்.

அடுக்கர்னகன்னி — 1. பவளப்புற்றுப் பாஷாணம். (வைத்தியபரி.) 2. பூரண நிலையுள்ள பெண்.

அடுக்கியல் — வண்ணகவொத்தாழிசைக் கலிப்பாவின் உறுப்புக்களுள் ஒன்றாகிய அராகம். (வீரசோ. யாப். கக. உரை.)

அடுக்கு—1-3. அடுக்கென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 4. அடுக்குத்தொடர். 'தீத்தீ' என்பது போல. 'தழுவுதொடரடுக்கெனவீரேழே' (நன் உயிரீற். உ.) 5. ஒன்றுடனொன்று பொருந்த வைக்கும் வைப்பு. 'அண்டமவையடுக்கடுக்கா வந்தரத்தினிறுத்து மதிகாரம்போல' (தாயு. மண்டல. க.) 6. ஓரினமான பலபொருள்களின் கூட்டம். 'தடிமுன் குயப்பாண்டத்தினடுக்காக' (தைல. தைலவ. கரு.) 7. சேர்மானம். 8. வரிசை. 'அண்டகோடியையெலாங் கருப்பவறைபோலவு மடுக்கடுக்கா வமைத்து' (தாயு. தேசோ. எ.)

அடுக்குதல்—அடுக்குதல்.

அடுக்குச்சாத்துதல்—கொய்த ஆடையணிதல். (கோயிலொ. 38.)

அடுக்குச்செவ்வரத்தை — அடுக்காக மலரும் செவ்வரத்தை.

அடுக்குத்தீபம் — அடுக்குவிளக்கு; ஆலய தீபவகையுள் ஒன்று. [அடுக்கு - அடுக்கப்பட்டது. தீபம் - விளக்கு.]

அடுக்குத்தும்பை—காசித்தும்பை. (மலை.)

அடுக்குத்தொடர்—அல்வழித்தொடர் பதினன்கனுளொன்று; அது அசைநிலைக்கண்ணும், விரைவு, துணிவு, உடம்பாடு, ஒருதொழில் பலகானிகழ்தல், வெகுளி, உவகை, அச்சம், அவலம் முதலிய பொருணிலைக்கண்ணும், இசைநிறைக்கண்ணும், ஒருசொல் இரண்டு முதலியவாக அடுக்கிவருவது. 'அன்றே வன்றே' அசைநிலை, 'வந்தது வந்தது கூற்று' விரைவு, 'அவனவன்' துணிவு, 'வைதேன் வைதேன்' உடம்பாடு, 'போம் போம்' ஒருதொழில் பலகாணிகழ்தல், 'ஏயே' வெகுளி, 'வருக வருக' உவகை, 'படைபடை' அச்சம், 'உய்யேனுய்யேன்' அவலம், 'பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ' இசைநிறை. (இலக்கணவி. ௩௪௬.)

அடுக்குதல்—அடுத்தல்.

அடுக்குநந்தியாவட்டம் — நந்தியாவட்ட வகையினுள் ஒன்று.

அடுக்குப்பண்ணல் — ஆயத்தஞ்செய்தல்.

அடுக்குப்பருத்தி—பருத்திவகையினென்று.

அடுக்குப்பற்சுறு — சுறுமீன்வகையுள் ஒன்று.

அடுக்குப்பாத்திரம் — ஒன்றனுள் ஒன்று அடங்கி அடுக்காகவுள்ளபாத்திரம்.

அடுக்குப்பார்த்தல்—பொருந்துமாறு பார்த்தல்.

அடுக்குப்பாளம்—கடவுளுக்குப் பின்புறத்திற் சாத்தும் கொய்த ஆடை.

அடுக்குமல்லிகை — ஒருவகைமல்லிகை. (மூ. அ.)

அடுக்குமுள்ளி—ஒருவகை முள்ளி. (மூ. அ.)

அடுக்குள்—அறைக்குள் அறை.

அடுக்கூமத்தை—ஒருவகையூமத்தை.

அடுகலன் — பாகஞ்செய்யும் பாத்திரம். 'அரிசிமுத்தழல்செம்மணியடுகலன் பிறவும்' (திருவிளை. நகர. கூசு.)

அடுகளம் — போர்க்களம். 'அடுகளத்தினெதிர்பொரநின் ருற்றலனுய்' (உபதேச. விபூ. ௫௫.)

அடுகனலவன் — சங்காரத்தொழில்செய்யுங் காலாக்கினியுருத்திரன். 'அடுகனலவன் கூர்மாண்டனுடகன்' (கந்தபு. திருக்கல். கூசு.)

அடுகிடை—எழாத கிடை. [அடுதல்-கொல்லுதல். கிடை - கிடத்தல்.]

அடுகுவளம்—அடுக்கிவைக்கப்பட்ட போனகப்பெட்டி. (ஈடு. 6. 1. 2.)

அடுகுறல்—கொல்லுதல். 'அடுகுற்றிடுசூலமடற்கதைக டொடுகுற்றனர்' (கந்தபு. மூவாயிர. உஅ.)

அடுகை—1. கொல்லுதல். 2. பாகஞ்செய்தல். (சிவதரு. சிவஞானதா. எ௦.) 3. போர்புரிதல். 4. காய்ச்சுதல். (திருவிளை. நாட்டுப். 29.)

அடுகைமனை—மடைப்பள்ளி. 'அங்கிமுதற்றென்றிசையந்தத் தடுகைமனை' (சிவதரு. சிவஞானதா. எ௦.) [அடுகை-பாகஞ்செய்தல். மனை - வீடு.]

அடுசில்—அடிசில். (பதிற்றுப். 21. உரை.)

அடுசிலைக்காரம்—செங்காயுருவி. (மூ. அ.)

அடுத்தடுத்து—1. ஒன்றன்மேலொன்றாய். 'அடுத்தடுத்து வன்காய் பலபல காய்ப்பினும்' (நாலடி. 203.) 2. அடிக்கடி. 'அடுத்தடுத்து வேகமுடைத்தாம்' (நாலடி. 348.)

அடுத்தணித்தாக—சமீபமாக. (ஈடு. 9. 8. 7.)

அடுத்தல் — 1. அடைதல். 'அடுத்தவர்க்கருத விளக்கமேய்த்தலில்' (சூத. முத். க: கஉ.) 2. ஏற்றதாயிருத்தல். 'இது யோக்கியருக்கடுத்ததல்ல' 3. கிட்டல். 'அந்நாளடுத்து வயமாருதியை' (பாரத. மணிமா. ௩.) 4. கூடியிருத்தல். 'முநிவர்யாருமடுத்திடுமவைக்கணெய்தி' (கந்தபு. ததீசியுத். ௩௧.) 5. சம்பவித்தல். 'ஆவினைந்திறவடுத்ததென்றெய்வதங்காளெனும்' (இராமா. நகர்நீ. கச.) 6. சார்தல், நண்புகொள்ளல். 'கற்பகந்தனையடுத்துய்வாம்' (சூத. முத். க: க.) 7. சேர்த்தல். 'வெண்டுகிலடுத்து' (சிந்தா. காந்த. கஉ௫.) 8. நினைவுண்டாதல், அயிர்த்தல். 'இடித்துமின்னி யிருண்டுமேகமெழுந்த போதிதுபெய்யுமென் - றடுத்ததும்' (சி. சி. பர. உலோகா. மறு. உ.) 9. கூத்தாடுதல். (பிங்.) 10. கொடுத்தல். 'விளைக்காத்தார்க் கடுத்தோம்' (திருக்கோ. 357.)

அடுத்தார்—சேர்ந்தார்.

அடுத்தி—அடத்தி.

அடுத்து—மேன்மேல். 'அதனையடுத்தூர்வதஃதொப்பதில்' (வள். கூஉக.)

அடுத்துவரல்—1. அடிக்கடி வருதல். 2. நெருங்கிவருதல்.

அடுத்துவரலுவமை — ஓரணி; அதாவது உவமைக்குவமை. (சீவக. 107. உரை)

அடுத்துவிளக்குதல் — உலோகப்பற்றுவைத் தொட்டுதல். 'அடுத்து விளக்கின மொட்டும் பறிஞையும்' (S. I. I. ii. 96.)

அடுத்தூண்—ஜீவனத்துக்குவிட்ட நிலம். (ஈடு. 4. 8. 8.)

அடுத்தேறு — மிகை. 'அடுத்தேறுகவந்த கரத்தைக்கழித்து' (ஈடு. 3. 8. 9.)

அடுதல்—1. இயக்கமறச்செய்தல். 'வியாத வீட்டியகையடுநங்தி' (கந்தபு. கடவு.) 2. குற்றுதல். 'வித்தட்டுண்டனே' (புறநா. உ௨௯.) 3. கொல்லுதல். 'அவனையாரடுதற் பாலார்' (கந்தபு. தருமகோ. எச.) 4. தீயிற் பாகஞ்செய்தல். 'சிறுவீடுகட்டியதனடுசோற் றையுண்டுண்டு' (தாயு. கருணா. ச.) 5. பொருதல். 'ஈறிலாதிக்குரம்பிருந்தாவிஃ, தாறதாக வடுவாரடலுளோர்' (சேதுபு. தனுக்கோ. ௩ச.) 6. வருத்தல். 'கழிபசிநோயடக்கவ லும்பூதரும்' (கந்தபு. சூரனமை. ௫௧.) 7. வெல்லுதல். 'அடல்வண்ணவைம்பொறியு மட்டுயர்ந்தார்கோமான்' (சிந்தா. கேமசரி. ௫எ.) 8. காய்ச்சுதல். 'அட்டாலும் பால் சுவையிற் குன்றாது' (மூதுரை.) 9. உருக்குதல். 'அட்டொளியரத்தவாய்க்கணிகை' (சீவக. 98.) 10. அழித்தல். 'எல்லாப்புவனமும் அடுபவர்' (கந்தபு. ஏமகூ. 18.)

அடுநை — கொல்வாய். (இது முன்னிலை வினை) 'அடுநையாயினும்' (புறநா. ௩௬.)

அடுப்பங்கரை—அடுப்பின்பக்கம். [அடுப்பு; அம் - ஒருசாரியை; கரை).

அடுப்பு—1. அச்சம். (பிங்க. ௩0சஎ.) 2. அடுத்தமை. 3. நிரை. (சிலப். அரும்.) 4. பரணிநாள். (சூ. நிகண். ௧: சு௭.) 5. பாகஞ்செய்யும்படி நெருப்புமூட்டி யெரித்தற்கிடமாக வைக்கப்பட்டிருக்குமது. 'பாலைக்கறந் தடுப்பேறவைத்து' (நாலாயிர. வெண்ணெய் ௫.) 6. மனைவி.

அடும்பு—1. அடப்பங்கொடி. 'அடும்பிவ ரணியெக்கர்' (கலித்தொகை. க௩உ.) 2. அடம்பு.

அடுமா—கொட்டை. (வைத்தியபரி.)

அடுவல்—வரகும் நெல்லுங் கலப்பு.

அடை—1. அடுத்தல். 'ஆடுகின்றனர் பண்ணடையின்றியே பாடுகின்றனர்' (இராமா. மந்திர. அஅ.) 2. அடைகஷாயம். (தைல) 3-5. அடையென்னேவலுந் தெரிநிலைவினைப் பகுதியும் பெயரெச்சத்தொகையும். 6. அப்பவருக்கத்துளொன்று. (சூ. நிகண். சு: உ௫.) 7. இலை. 'வனசஞ்சாய் கழைக்கடையணை விரித்திடுவன' (இரகு. நாட்டு. கூ.) 8. கரை. 'ஆற்றிடையியக்கவெண்ணுமடையினையடையும்' (சிவதரு. ச. ௩௫.) 9. கனம். (பிங்க. ௩0சஅ.) 10. கோழிமுதலியன முட்டைகளிற் குஞ்சுபொரிக்குமாறு தம்முடம்பின் அனல்படக்கிடத்தல். 11. சும்மாடு. 12. தோசை. 13. நிலவினைவிலே யரசனையடையும்பாகம். 14. (நென்முதலியவற்றின்)முளை. 'பூம்புறநல்லடையளைஇ' (பத்து. பெரும்பா. உஎஅ.) 15. விசேடணம். 'அடைசினைமுதலென' (தொல். சொல். உசூ.) 16. வெற்றிலை. 'நூறுகாயடைகூடும்' (சி. சி. பர. உலோகா. மறு. எ.) 17. சேர்ப்பிக்கை. 'அவன்கணடைசூழ்ந்தார் நின்னை' (கலித். 115. 18.) 18. அடைக்கலம். 19. அடைக்கலப்பொருள். (ஈடு. 5. 10. 5.) 20. விலை. (பிங்.) 21. வழி. (பிங்.) 22. கலிப்பாவினுறுப்பாகிய தனிச்சொல். (தொல். பொருள். 444.) 23. இலைக்கறி. (பிங்.) 24. நீலவிதை. (வைத்தியபரி.)

அடைக்கண் — கண்ணிமைகள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொள்ளும் வியாதி. (வைத். சங்.)

அடைக்கத்து — அடைகிடக்குங்கோழியிடுஞ் சத்தம்.

அடைக்கலக்குருவி — அடைக்கலம்புக்கது போல வீடுகளிற்போய்க் கூடுகட்டியிருக்கும் ஊர்க்குருவி.

அடைக்கலங்காத்தல் — 1. அடைக்கலப்பொருளைக் காத்தல். 2. அடைக்கலம்புகுந்தவனைக் காத்தல்.

அடைக்கலங்குருவி — அடைக்கலக்குருவி.

அடைக்கலப்பொருள் — அடைக்கலமாக வைக்கப்பட்டபொருள். 'அடைக்கலப் பொருள்கவர் வஞ்சகர்' (உபதேச. சிவத்துரோ. உ௧௧.)

அடைக்கலம்—1. பாதுகாத்தற்பொருட்டொப்பிக்கப்படுகிற பொருள். 'அடைக்கலமடியேனென்று' (காஞ்சிப். திருநெறி. ௫௩.)

2. புகலிடம். 'திருப்பாற்கடலில் வசிக்கும் விட்டுணுவினதடைக்கலமன்றி - வேறடைக் கலமில்லை' (ஞானவா. பிரகலாத. ச.)

அடைக்கலம்புகுதல்—சரண்புகுதல். 'இருளிறைமிடற்றினடைக்கலம்புக' (பிரபுலி. கைலாச. சஎ.)

அடைக்கலாங்குருவி—அடைக்கலக்குருவி. [வழக்.]

அடைக்காய் — 1. பாக்கு. 'வெள்ளிலையடைக்காய்விரும்பி' (தாயு. சச்சி. கக.) 2. வெற்றிலை பாக்கு; தாம்பூலம்: 'விஞ்சியவடைக்கா யுண்டி வழியிடை வெறுப்பதாகி' (அருணசலபு. திருமலைவ. உசு.)

அடைக்குடிநீர்—விருக்ஷம், செடி, கொடி, புல்லென்னு மிந்நான்குவகையிலுள்ள வேர், கிழங்கு, பட்டை, கட்டை, பிசின், இலை, பூ, கனி, வித்து என்னு மெட்டுப்பதார்த்தங்களையும், காரசாராதி திரவியங்களையும் ஒன்றுபட இடித்து ஒரு பானையிலடைத்துக் காய்ச்சுவது; இது: 'நான்காகச்செப்புவன்மைவேராதிகளை வெவ்வேறிடித்துச் சீவனீயத் தூறச் செய்தாக்கற்குடிநீ-ரொப்பிலடை' என்னும் (தைல. பாயிர. உகூ-ம் செய்யுளாற் பெறப்படும்.)

அடைகட்டி—அடைமண்.

அடைகரை— நீரடையுங்கரை. நீரினன் மணலேற்றியடைக்கப்பட்ட கரை. (ஐங்குறு.)

அடைகல்—1. ஆதாரசிலை. 'ஆமையாய் மேருத்தாங்கி யடைகலாய்க் கிடந்தபோது' (சி. சி. பர. பாஞ்சரா. மறு. கக.) 2. கம்மப்பட்டடை. 'சுட்டவல்லிரும் படைகலைச் சுடுகலாதனபோல்' (இராமா. பாச. ௩௩.) 3. மதகடைக்குங்கல்.

அடைகலம்—சேமக்கலம்.

அடைகஷாயம்—கஷாயவகையிலொன்று.

அடைகாத்தல்—அடைகிடத்தல்.

அடைகாய்—1. ஊறுகாய். 2. வெற்றிலை பாக்கு. 3. அடைகட்டி. 4. அரைமண்.

அடைகிடத்தல்-1. ஒட்டிக்கொண்டு கிடத்தல். 'முயலடைகிடக்குந்திங்கள்' (கூர்மபு. மேரு. சி. கசு.) 2. கோழிமுதலியன குஞ்சு பிறப்பிக்குமாறு தம்முடம்பின் அனல் முட்டையிற்படக் கிடத்தல். 'பெடைக்குருகணங்கின் விடுத்தவெண் சினையொடு, காவலடைகிடக்குங் கைதையம் பொழிலே' (கல்லாட. உச.)

அடைகியாழம்—அடைகிஷாயம். (பாலவா. கூஅ௫.)

அடைகுடி — சார்ந்த குடும்பம். 'இவன் தானும் இவன் அடைகுடி' (S. I. I. ii. 444.)

அடைகுதல்—அடைதல். 'புரையில்வீட்டின்ப மடைகுவான்' (வைராக்கியதீப. கஎ.) [கு - ஒருசாரியை.]

அடைகுளம்—போக்கில்லாதகுளம்.

அடைகுறடு—1. கம்மியர்பட்டடை. (பிங்.) 2. பற்றுக்குறடு.

அடைகை—1. சேர்கை. 2. பெறுகை.

அடைகொடுத்தல்— 1. நிலவிளைவிலொரு பங்கையரசனுக்குக்கொடுத்தல். 2. நிறைத்து வைத்தல். (தி. க. அ௩.)

அடைகொள்ளுதல்— அடைக்கலம்புகுந்த பொருளைக் காக்குமாறு ஏற்றுக்கொள்ளுதல். 'அடைகொண்டு பாழ்போக்குவானொருவனன்றே. (ஈடு. 5. 10. 5.)

அடைகோளி— அடைமொழியைக்கொள்ளுதலுடையது - விசேடியம். (நன். பொது. ௫0. உரை.)

அடைகோட்டை — முற்றுகையிடப்பட்ட கோட்டை.

அடைகோழி—அடைகிடக்குங்கோழி.

அடைச்சல் — பொத்துதல். 'கையாற் செவிமுத லடைச்சிச் சொன்னாள்' (சிந்தா. குண. ககூஅ.)

அடைச்சீட்டு—வரிரசீது.

அடைச்சுதல்-1. அடைவித்தல். 'அடைச்சியகோதைபரிந்து' (கலித்தொகை. ௫௧.) 2. செருகுதல். 'அலங்கலுங்குழலுந்தோழியங்கையினடைச்சி' (சிந்தா. பதுமை. உ௩உ.) 3. உடுத்துக்கொள்ளுதல். 'நெடுந்தொடர்க் குவளை வடிம்புறவடைச்சி.' (மதுரைக். 588) 4. பொத்துதல் 'கையாற்செவிமுத லடைச்சிச்சொன்னாள்' (சீவக. 1048.)

அடைசல்-அடைசுதல், பொருள்நெருக்கம்.

அடைசீலை—பாளச்சீலை.

அடைசுதல்—1. அடைதல். [வழக்.] 2. ஒதுக்கல். 3. ஒதுங்குதல். 'அஞ்சுபூதமடைசியவசடனை' (திருப்பு. ௫௩எ.) 4. கிட்டுதல்.

5. செருகுதல். 6. நெருக்குதல். 7. நெருங்குதல். 'தொடைகளிற் றொடையடைசி' (பாரத. பதினொன். உ௦௩.) 8. பொருந்துதல். 'உள்ளே சீலையடைசின............சட்டை' (சீவக. 819. உரை.) 9. நெருங்கவிடுதல். 'அழுந்தவாளியொன்றுபத்து நூறு வன்பொடடைசினான்' (பாரத. பதினொன். 30.)

அடைசுபலகை--செருகிவெளியடைக்கும் பலகை. [வழக்.]

அடைசுவலை—வலைவகையுள் ஒன்று.

அடைசொல்—அடைமொழி.

அடைத்தது—இட்ட கட்டளை. 'ஈதுனக் கடைத்ததென்ன' (கந்தபு. மேரு. ௬.)

அடைத்தல்—1. அமைத்தல். 'திருவினட் கடைத்த வினைதருமடைவினல்' (கல்லா. உக.) 2. காப்புச்செய்தல். 3. காவலிலிடுதல். 'செழியனடைத்தசென்னிபாட' (கல்லா. ௩௪.) 4. செல்லாது தடுத்தல். 'கங்கைப் பெருநதியடைக்குமன்னோ' (கந்தபு. திருவிளை. உ௩.) 5. சேர்த்தல். 'இடப்பாகமாதராளோடியைந் துயிர்க்கின்பமென்று - மடைப்பானுமதுவும்' (சி. சி. க: ௫௪.) 6. புகுத்தல். 'கடுமிற்பெரிய கடலடைக்கும்' (தாயு. சொல்லற். 7.) 7. பூட்டல். 'அடைத்தலை நீங்கிய வம்பொற்கோநகர்' (கந்தபு. சிங்க. க௪.) 8. உறுப்பின் செயலழிதல். 'வாயடைத்துப்போயிற்று'. 9. சாத்துதல். 'பாடுநர்க் கடைத்த கதவின்' (புறநா. 151.) 10. மூடுதல். 'அன்பிற்குமுண்டோவடைக் குந்தாழ்' (குறள். 71.)

அடைத்தேற்றுதல்—வருந்திக் காரியமுடித்தல். (ஈடு. 6. 8. 1.)

அடைதல்—1. நீர்ந்துபோதல். 2. ஒன்றோடொன்று சேர்ந்திறுகுதல். 3. சரண்புகுதல். 4. சேர்தல். 'கரையடைந்தார்' (பாரத. வாரணா. ௩.) 5. தருதல். 6. பெறுதல். 'உலவாப்பொன்னுலகடைதரவைத்த" (கல்லா. உஎ.) 7. பொருந்துதல். 'அணுவினோடெல்லாமாகியடைந்திடுந்தத்துவங்கள்' (சி. சி. உ: எஅ.) 8. முத்தியடைதல். 9. வண்டல்படிதல்.

அடைதூன் — கடைதறி. மத்துமந்தரம் வாசுகிகடைகயிறடைதூண் - மேத்துசந்திரன்' (இராமா. அகலி. உக.)

அடைந்தார்—1. அடைக்கலம்புகுந்தவர். 2. மித்திரர். 3. அடைந்தவர். 4. சுற்றத்தவர்.

அடைப்பம்—1. நாவிதன் கருவிப்பை. 2. பண்டம்பெய்யும் பை. 3. வெற்றிலைப்பை.

அடைப்பன்—ஒருவியாதி. [இது மாடுகளுக்குத் தொண்டையில் உண்டாவது. அடைப்பு; அன் - ஒருவிகுதி.] (வைத்தியபரி.)

அடைப்பான்—1. அடைப்பன். 2. அடைக்கும் மூடி.

அடைப்பு— 1. (குப்பிமுதலியவற்றை) அடைக்குங்கருவி. 2. அடைத்தல். 3. அடைத்தற்றன்மை. 4. படற்கதவு. 5. வேலி. 6. வேலியினாலடைக்கப்பட்ட நிலம். [அடைத்தலென்னுஞ் சொற்குரிய பொருளெல்லாம் இதற்குமாகுமாம்.]

அடைப்புண்ணுதல்—(ஒன்றனுள்) அடங்குதல். (ஈடு. 1. 1. 4.)

அடைப்பை—பாக்கு, வெற்றிலை, சாதிக்காய், ஏலம் முதலிய வாசங்கள் வைத்திருக்கும் பை. (பெரியபு. தடுத். கஅஎ. உரை.) வெற்றிலைப்பை. 'அடைப்பைபொற்களாஞ்சியேந்த' (திருவிளை. தடாதகை. ௬எ.)

அடைப்பைக்காரன் — வெற்றிலைப்பை வைத்திருக்கும் ஏவலாளன்.

அடைமண்—1. கலப்பையிலடைந்தமண். 2. வண்டல்மண்.

அடைமதிற்படுதல் — முற்றுகைசெய்யப்படுதல். (பதிற்றுப். க௬. உரை.)

அடைமழை—விடாமழை. திக்குகளெங்கும் இடைவிடாதடைத்துக்கொள்வதுபற்றி வந்தபெயர்.

அடைமாங்காய்—மாங்காயூறுகாய்.

அடைமானம்—ஈடு.

அடைமொழி — ஒருபொருளின்றன்மை விளங்க அதனோடடுத்துக்கூறப்படுஞ்சொல், விசேடணம். 'அடைமொழியினமல்லதுந் தருமாண்டுறின்' (நன். பொது. ௫க.)

அடைய—1. எல்லாம். 'அடையவன்றும் பர்பதிகுடிபுக' (பாரத. பதினே. அஅ.) 2. சேர. (ஐங்குறு)

அடையடிமை— தநம்வாங்குதன்முதலிய வற்றால் அடையப்பட்ட அடிமை. (மிரு. ௪. கஉ௬.)

அடையடுத்தவாதுபெயர்—ஒருபொருளின் பெயராய், அதனோடு சம்பந்தமுள்ள பிறி

தொருபொருளை, அடைமொழியோடுகூடி விளக்குவது. 'திருவாசகம்' என்பதிற்போல. (நன். பெய. நக. உரை.)

அடையல்—1. அடைக அல்லது அடையற்க எனப் பொருள்படும் ஒரு வியங்கோண் முற்று. 2. அடைதல். 'சாயலுளடையலுற் றிருந்தேன்' (தேவார. திருப்பிர. எ. சுங்.) 3. அடைந்தபொருள். 4. எல்லாம். 5. செருப்புவகையுளொன்று. (பரிபா. 21, 27.)

அடையலர் — பகைவர். 'அடையலர் தம்மைவென்று' (கந்தபு. அக்கினி. கருக.)

அடையலவர்–பகைவர். 'அடையலவராவி வெருவ' (திருப்பு. காப்பு. ௬.)

அடையலார்—அடையலர்.

அடையவளைஞ்சான்—கோயிலின் வெளிச் சுற்றுப்பிரகாரம். (S. I. I. i, 84.)

அடையவளைந்தான் — 1. அடையவளைஞ் சான். 2. தட்டுச்சுற்றுவேஷ்டி. 3. ஈட்டின் ஓர் அரும்பதவுரை.

அடையன்—கடுக்காய். (வைத்தியபரி.)

அடையாதவர்—பகைவர். 'அடையாதவர் மூவெயில் சீறும், விடையான்'. (தேவார. திருப்பனை. எ. சம்.)

அடையாதார்—பகைவர். 'அடையாதார் தம்புரங்கள்' (தேவார. காவிரி. க. சம்.)

அடையார் — பகைவர். 'அடையாரென னும் பொங்கிருட் பிழம்பு' (சூர்மபு. கண்ண ன்வ. கஅ.)

அடையாளப்பூ—மரபின் அடையாளமாக அணியும் பூ. (நெடுநல். முன்னுரை.)

அடையாளம்—அறிகுறி. 'அந்தமில் குணங் கள் செய்கை யாதிய வடையா ளங்கண்-முந் தையின் வழுவா வண்ண முறையினுன் மொழிந்தான் முன்னேன்' (திருவிளை. மாமனு. கஉ.)

அடையோலை — அடைமானப்பத்திரம். (I, M. P. S. A. 15.)

அடைவீகச்சோலம் — கஸ்தூரிமஞ்சள். (மலை.)

அடைவு—1. துணை. 'நின்னையடைவாக' (பெரியபு. திருஞா. சஎடு.) 2. ஈடு. [அடவு அடகென்பதன்மரூஉ.] 3. உபமானம். 4. எல்லாம். 5. முறை. 'அங்கதினெருசிலவடை விற் கூறுகேன்' (கந்தபு. அவையட. கஉ.) 6. விதம். 7. தகுதி. 8. ஏது. 'அடைவுதுன் புறுவதற்கிலை' (பெரியபு. திருஞான. 1066.) 9. புகலிடம். 'அடைவிலோ மென்றுநீ யயர் வொழி' (தேவா. 134. 5.) 10. வழி. (பிங்.) 11. வரலாறு. 'கயிலையினடைவுசொற்றும்' (காஞ்சிப்பு. வீரரா. 1.) 12. நிரனிறையணி. (வீரசோ. அலங். 12.)

அடைவுகேடு—முறைத்தவறு.

அடைவுபடுதல்—ஒழுங்காதல். (திவ். திரு நெடுங். 22. வ்யா. 206.)

அடைவே—1. கிரமமாக. 2. நெடுக. 'கரை யடைவேபோன வாய்க்காலுக்கும்' (S. I. I. III. 103.)

அண்-1-3. அண்ணெனேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், பெயரெச்சத்தொகையும். 4. மேல். 5. வேட்டைநாயின் உருவுகயிறு. 6. தடியில்வெட்டிய வரை.

அண்டகடம்—அண்டகடாகம் 'அண்டகட முதற்றரையீறாக' (கந்தபு. அண்ட. கஅ.)

அண்டகடாகம் — அண்டகோளத்தின் சுவர். 'எண்கைத்தலப்பிரமனண்டகடாக முங்கீண்டதவ்வேல்' (திருவிளை. தீர்த்த. கு.)

அண்டகபாலம்–அண்டகடாகம். 'அண்டக பாலத்தப்பாலான் கண்டாய்' (தேவார. கொட்டையூர். உ. திருநாவு.) [அண்ட; கபாலம் - ஓடு.]

அண்டகம்—1. குப்பைமேனி. (மலை.) 2. சிறுமுட்டை. 3. பீசகோசம். [அண்டக.] (2, 3 வைத்தியபரி.)

அண்டகன்—அண்ணகன். [அண்டக.]

அண்டகை — அப்பவருக்கத்துளொன்று. (சூ. நிகண். சூ: உடு.)

அண்டகோசம் — 1. அண்டசாத்திரம். 2. அண்டத்தினோடு. [கோச - ஓடு.] 3. பழத்தின்றோல். 4. பழம். 5. பீசப்பை. [அண்டகோஶ: கோஶ - உறை.]

அண்டகோளகை — அண்டகடாகம். 'அதற்குமீதேதிகழண்டகோளகையுங்கோடி யாமே' (கந்தபு. அண்ட. சுடு.)

அண்டகோளம் — உண்டைவடிவமான அண்டம். 'திசையுமண்டகோளமும் பரந்து' (திருவிளை. நகர. உக.)

அண்டங்காக்கை—அண்டங்காகம். (மறு. டு: கச.)

அண்டங்காகம்—ஒருவகைக்காகம். [இது கழுத்தில் வெண்மைதாவிய மற்றைக்காகங்கள்போலாது உடல்முழுதுங் கருமையுடையது.]

அண்டசம்–முட்டையிற்பிறப்பன; அவை: அரவு, தவளை, முதலை, ஆமை, அரணை, உடும்பு, மீன், ஓந்தி, பறவை, பல்லி, இப்பி முதலியன. (பிங்க. ௩௦௫௩.) 'அண்டசஞ் சுவேதசங்கள்' (சி. சி. ௨: ௮௯.) இராமாயணம் சூர்ப்பநகைப்படலம் 11–ஆம் கவியிலே 'அண்டசத்தருந்துயிறுறந்தவையனை' எனப் பாம்புக்கும் பிரயோகிக்கப்பட்டது. [அண்டஜ: அண்ட - முட்டை. ஜம் பிறந்தது.]

அண்டசவ்வு—முடிமாமிசம். (வைத்தியபரி.)

அண்டசன் — பிரமா. [அண்ட; ஜன் - பிறந்தவன்.]

அண்டசிறுநீர்–மூத்திரம். (வைத்தியபரி.)

அண்டசை—கஸ்தூரி. [அண்டஜா - அண்டத்திற்பிறந்ததென்றபடி.] (வைத்தியபரி.)

அண்டத்தைலம்–கோழிமுட்டைத்தைலம்.

அண்டதரன்—சிவன். [அண்டதர: தர - உடையவன், காக்கிறவன்.]

அண்டநாயகி—உமாதேவி. 'அண்டநாயகி தன்முகிழ்முலை சுரந்தபால்' (திருப்பு. ௪௮.) [அண்ட; நாயகி - முதல்வி.]

அண்டப்பரப்பு—உலகப்பரப்பு.

அண்டப்பார்த்தல்—பொருந்தச்செய்தல்.

அண்டப்பித்தி—அண்டச்சுவர். (ஈடு. 4. 2. 6.)

அண்டப்புத்தேள்—விராட்புருடன். 'திருந்துநல்லண்டப்புத்தேள் சிந்தையாம் புண்டரீக - புரந்தனில்' (கந்தபு. திருவவ. ௧௦௧.)

அண்டப்புரட்டன்—பெருமோசக்காரன்.

அண்டப்புரட்டு—பெருமோசம்.

அண்டப்புளுகன்—பெரும்பொய்யன்.

அண்டப்புளுகு—பெரும்பொய்.

அண்டபகிரண்டம் — துருவசக்கரத்துட்பட்ட உலககோளமும் அதற்குப்புறத்திலுள்ள கோளமும். 'அண்டபகிரண்டமு மாயா விகாரமே.' (தாயு. பரிபூ. ௪.)

அண்டபிண்டம் — பிரமாண்டமும் தேகமும். [அண்டபிண்டம்.]

அண்டம்–1. ஆகாயம். 'அண்டப்பாற்றுக் கிரையிடுகின்றனர் சிலர்' (கந்தபு. யாக. ௭௭.) 2. உலகம். 'பிறங்குந்தொல்லை - நீர் கொண்டவண்டத்துந் தாவரத்துஞ் சங்கமத்து நிறைந்துநின்றேன்' (அரிச்ச. பாயிர. ௩.) 3. கஸ்தூரிமானின் கோசம். 4. கோசம், பீசப்பை. 5. சுக்கிலம். 6. தலையோடு. (வைத்தியபரி.) 7. தேவுலகம். 'பின்னவர்க் கண்டமளிப்பனவஞ்செழுத்துமே' (தேவார பஞ்சாக். அ. சம்.) 8. பீசம். 'அண்டத்திலூறுசெய்வனவால்' (திருவிளை. பரிநரி. ௧௭.) 9. முட்டை. 'மயிலினண்டம்' (சி. சி. ௧. ௨௨.) 10. விதை, கொட்டை. 'இல்லமுறு மண்டங்கணூறுபலம்' (தைலவ. ௩௩.) [அண்ட]. 11. பிரபஞ்சவுருண்டை. (அஷ்டாதச. தத்வத். 2. 54.) 12. மூளை. (வைத்தியபரி.)

அண்டமான்—ஒரு தீவு.

அண்டமீன்றவன்—பிரமா. 'அண்டமீன்றவன் பிறங்கடையாச்சிரமத்தில்' (சேதுபு. கவிதீர். ௧௩.)

அண்டமுகடு—அண்டத்தினுச்சி. 'அண்டமுகட்டுறநின்று சிரித்தனன்' (பாரத. கிருட். ௨௦௨.)

அண்டமூர்த்தி–அண்டரூபி. 'அண்டமூர்த்தியழனிறவண்ணனை' (தேவார. இலிங்க. ௧௦. திருநாவு.) [அண்டமூர்த்தி.]

அண்டயோநி—1. சூரியன். (பிங்க. ௨௧௦) 2. முட்டையிற்றோற்றுவது. [அண்ட - ஆகாயம், முட்டை. யோநி - பிறப்பிடம்.

அண்டர்–1. இடையர். 'ஆன்கிளைக்காப்புச் செய்தங்கண்டர்நின்றாற்றுமோதை' (இரகு. நாட். ௫௮.) 2. தேவர். 'அண்டர்மடவார்கள்' (திருவாத. திருப்பெரு. ௫.) 3. பகைவர். (பிங்க. ௩௦௫௫.)

அண்டர்நிலை—பொன்னுலகாணி. 'அண்டர்நிலைசிவிகரியவேம்பாடகிவயற்பயறுசிறிய முற்கம்பலினியசை' (தைல. பாயிர. ௫௭.)

அண்டரசம்—சுத்தரசம்.

அண்டரண்டம்—தேவரண்டம். 'அண்டரண்டமளவிடுகுளிகை' (கந்தபு. நகரழி. ௫௭.)

அண்டல் — 1. கிட்டுதல். 'அண்டினள் சேர்தலும்' (கந்தபு. திருமண. சரு.) 2. பொருந்துதல்' 'ஆகாரமா முவமைக்கண்டா, தென்னும்' (ஞானவா. முமூட்சு. உஎ.) 3. ஒதுங்குதல். 'அண்ட நிழலில்லாமற்போனு லும்'

அண்டலர்—பகைவர். 'அண்டலர்வன்மை யாலயுதயோசனை - யுண்டதுகொழுங்கனல்' (கந்தபு. யுத்த. நகர்புகு. ருக.)

அண்டவாணர்—1. ஆகாயவாசிகள். 2. தேவர். 'அண்டவாணர்மறைபாட' (பெரியபு. தண்டியடி. க.) [அண்டம்-ஆகாயம், தேவுலகம். வாணர் - வாழ்வோர்.]

அண்டவாதம் — 1. அண்டவாயுநோய். 'மூலவியாதியொடண்டவாதம்' (திருப்பு. ருசுஅ.) [அண்டம் - பீசம். வாதம் - வாயு.] 2. அந்திரவாயு; குடர்வாதம்.

அண்டவாயு—1. அந்திரவாயு. 2. விரை வாதம். [அண்ட; வாயு.]

அண்டவிருத்தி—ஒருவகை விருத்தி. (தைல. தைலவ. கஎ.) [அண்டவிருத்தி.]

அண்டன்—1. கர்த்தா. (சி. சி. பாஞ்ச. மறு. ருக.) 2. சிவன். 'ஆதரமாதுடனுடு மண்டனடங்கண்டனையால்' கோயிற்பு. பாயிர. உரு.) [அண்ட.]

அண்டா — செம்பினலே செய்யப்பட்ட சட்டிவடிவமான ஒரு பெரும்பாத்திரம். (தெலுங்கு.)

அண்டாகாரம்—முட்டைவடிவம்.

அண்டாதவன்—பகைவன். 'அண்டாதவனுலெம் மகத்திலிரு - ளுண்டாகிய தன்மை யுணர்ந்து' (கந்தபு. முதனுட். ருருக.)

அண்டாதிநாதன்—சிவலோகத்திலே தக்கிண திசையோலக்கஞ்சேவிக்கும் பதினெட்டு முக்கிய கணேசரிலொருவன். (வி - ணி. உசுசு.)

அண்டார்—பகைவர். 'அண்டார் தமக்கோரரியே' (கந்தபு. சிங்க. சஎ௦.)

அண்டாவர்த்தம்—குதிரைத்தன்டையடியிலிருக்குஞ் சுழி. (அசுவசா. 148.)

அண்டிக்கோட்டை—முந்திரிக்கொட்டை.

அண்டிகம்—செங்காய். (பிங்க. உருகரு.)

அண்டிகா—மட்பானை. [ஹண்டிகா.]

அண்டிதள்ளுகை-நோய்வகையிலொன்று.

அண்டிமாங்கோட்டை — முந்திரிக்கொட்டை.

அண்டிரன்—ஆயென்னும் வள்ளல். 'ஆஅயண்டிரனடுபோரண்ணல். (புறநா. கஉக)

அண்டில் — மாடு முதலியவற்றின் கண்ணிற்பற்றும் ஒரு பூச்சி.

அண்டினவன்—நம்பிச்சேர்ந்தவன். 'உற்றுர்கன்மத்தாலண்டினவர்' (திருவாய். நூற். 81.)

அண்டிரன்—1. ஆடவன். 2. சமர்த்தன். [அண்டீர.]

அண்டு—மணிவடமுதலியவற்றின் உரு. (லெக்ஸிகன்.)

அண்டுகை—அண்டுதல்.

அண்டுதல்—அண்டல்.

அண்டுப்புழு—அண்டில்.

அண்டுபடுதல்-பிடிபடுதல். (லெக்ஸிகன்.)

அண்டை—1. அருகிடம். 'அவன் கிணற்றண்டையினிற்கிறுன்' 2. அயல். 'அண்டை வீட்டுக்காரி' 3. ஒன்றை நிறுத்தும்படி கொடுக்கும் முட்டு. 4. ஓட்டை முதலியன அடைக்கும் ஒட்டு. 5. சமீபம். 'கிடத்திமனையவள் சம்பத்துறைமுறையண்டைக்கொழுகையில்' (திருப்பு. ருருஎ.) 6. நீர்தூவுங் கருவி. 'செம்பொன்செய் துருத்தி தூம்பு செய்குழல் வட்டமாக - வம்பொன்செய் சிவிறி வெண்பொ னண்டைகொண்டு' (திருவிளை. உக்கிர. உசு.) 7. பீறலடைக்குந் துண்டு. 'சீலைக்கண்டைவைத்துத்தைத்தான்' 8. வரம்பு. 'அண்டைகொண்டுகெண்டை மேயும்' (திவ். திருச்சந். சகூ.)

அண்டைகொள்ளுதல் — பக்கத்துணை கொள்ளுதல். 'கிருஷ்ணனை அண்டை கொண்டு' (திவ். திருநெடுந். 13. வ்யா. 111.)

அண்டைபோடுதல்—ஒட்டுப்போடுதல்.

அண்டையயல்—அக்கம்பக்கம்.

அண்ணகன்—பீசம்வாங்கப்பட்டவன்.

அண்ணணி—மிக்க அணிமை.

அண்ணணித்து—மிகக்கிட்டியது. 'அண்ணணித்தூராயின்' (கலித்தொகை. க௦அ. 36.)

அண்ணந்தாள்—தலையையும் காலிற்பெருவிரலையுஞ் சேர்த்துக்கட்டித் தலைநிமிர்ந்திருக்கச்செய்யுந் தண்டனை.

அண்ணம்—1. உண்ணாக்கு. (திவா.) 2. மேல்வாய். 'அண்ணநண்ணியபல்' (தொல். எழுத். 93.)

அண்ணமார்கல் — கட்டடத்தில் கட்டை வளைவின் குத்துக்கல். (லெக்ஸிகன்.)

அண்ணல்—1. அரசன். (சூ. நி. உ: கஉ.) 2. அருகன். (சூ. நிகண். க: உ.) 3. சார்தல். 4. சிவன். 'அண்ணலருளானண்ணியவையவராயதனால்' (சிவப்பிர. உ: க.) 5. சிறப்பு. 'ஓங்குமண்ணன்மால்வரை' (கூர்மபு. திருக்கல். கஅ.) 6. தலைமை. 7. தலைவன். 'அடுபோரண்ணல்கேட்டிசின்வாழி' (மதுரைக். உoஎ.) 8. புத்தன். (சூ. நிகண். க. கஅ.) 9. பெருமை. 'அண்ணலங்குமராராமென்று' (பாரத. திரௌ. சு.) 10. பெருமையிற்சிறந்தோன். 'அகத்தியனுக்கோத்துரைக்குமண்ணல்' (சிவப்பிர. மங்கல. ச.) 11. முல்லைநிலத்தலைவன். 12. பற்றல். 'தொக்கண்ணியெழும்புறுணப் பூக்கிரந்திமுதனோய்தொலையும்' (தைல. தைலவ. கoசு.)

அண்ணலார் — சிவன். 'ஆடன்மேவியவண்ணலாரடி' (பெரியபு. ஏயர். கூஅ.)

அண்ணன்—தமையன். 'முன்னவனண்ணன் மூத்தோன்' (சூ. நி. உ. எஎ.)

அண்ணா—1. அருணாசலம். 'உயர்பொழிலண்ணாவிலுறைகின்றாரும்' (தேவார. திருவிடை. உ. திருநாவு.) 2. உண்ணாக்கு. 'அண்ணாவில்லாவமைவருவறுவாய்'(பொருந. கஉ.)

அண்ணாக்கு—உண்ணாக்கு. 'அண்ணாக்கை யுரிஞ்சி மூக்கையுயர்த்தினாரென்க' (சிந்தா. முத்தி. கoரு. உரை.)

அண்ணாத்தல்—1. அங்காத்தல். 'அண்ணாத்தல் செய்யா தளறு' (வள். உருரு.) 2. தலையெடுத்தல். 'நன்னார் நாண வண்ணாந்தேகி' (புறநா. சஎ.) 3. நிமிர்ந்துநிற்றல். 'அண்ணாந்தவனமுலை' (கல்லாட. உஅ.) 4. மேனோக்கல். (நற். 10.)

அண்ணாந்தாள்—அண்ணந்தாள்.

அண்ணாமலை—அருணாசலம். 'அண்ணாமலையக்கமரர்பிரான்' (பெரியபு. திருஞா. கஎo.)

அண்ணார்—பகைவர். 'அண்ணார்புரமவியக்கனல்' (உபதே. திரிபுர. ககஉ.)

அண்ணாவி—1. கூத்துமுதலியன பழக்குவோன். 2. உபாத்தியாயன். 3. அதிகாரி.

அண்ணாழ்வி—தமையன். 'எங்களண்ணாழ்வி செய்தபணி' (T. A. S. i. 103.)

அண்ணாளன்—1. பெண்வழிச்சேர்வோன். 2. அலி.

அண்ணி—தமையன் மனைவி.

அண்ணிடல்—பொருந்தல். 'பின்னுமண்ணிடும்' (சிவப்பிர. ச. க.)

அண்ணித்தல்—1. பொருந்துதல். 'அடியார்க்கென்றுமாரமுதாயண்ணிக்குமையாற்றான்காண்' (தேவார. திருவாரு. உ. திருநாவு.) 2. மதுரித்தல். 'திருப்புத்தூரானைச் சிந்தைசெயச்செயக், கருப்பஞ்சாற்றிலுமண்ணிக்குங்காண்மினே' (தேவார. திருவரிசிற்கரைப்புத்தூர். ரு. திருநாவு.)

அண்ணிது—அணிமை.

அண்ணிப்பான் — மதுரிப்பான். 'ஆகமமாகிநின் றண்ணிப்பான்' (திருவாச. சிவபுரா. ச.)

அண்ணிமை—சமீபம். (ஈடு.)

அண்ணியது—கிட்டியது. 'அண்ணியதாயுமகன்றும்' (கூர்மபு. பொது. கஉ.)

அண்ணியன்—சமீபமானவன்.

அண்ணுதல்—1. அணுகுதல். 2. சார்தல். 3. பொருந்துதல். 'உன்னடிக்கீ - ழண்ணிய மெய்யடியவர்க்கு மாதக்கவென விரந்து' (திருவிளை. மெய்க்கா. அ.)

அண்ணோரீஞ்சான்பூண்டு — சிறுபுள்ளடி. (மூ. அ.)

அண்ணை — அறிவின்றி மயங்கியிருக்குமவன். 'அண்ணை யலிகு ருடாதி யவர்களை' (சூளா—துறவு. 145.)

அண்பல்—1. மேல்வாய்ப்பல். 'அண்பன் முதனாவிளிம்புறவருமே' (நன். எழுத்தி. உஉ.) [நாவிளிம்பு அணுகுதற்காரணமாகிய பல் என்பதுபொருள்.] 2. அடிப்பல். 'அண்பனீரூறமிர்தம்' (சீவக. 928.)

அண்மல்—அண்முதல்.

அண்முதல் — கிட்டுதல். 'இந்திரஞாலம் விடுத்தனனண்மி' (தணிகை. சீபரி. ருஎஉ.)

அண்மை—1. அடையுந்தன்மை. 'விண்ணவர்பாலண்மையிலனாகுமண்ணல்' (கந்தபு. காமத. ௩அ.) 2. அந்துவயித்தற்கு வேண்டப்படும் பதங்க ளிடையீடின்றிநிற்றல். (சைவப்பிர. உரு.) 3. சமீபம். 'அண்மையினியல்பும்' (இலக்கணவி. உகரு.)

அண்மைச்சுட்டு — சமீபத்திலிருக்கும் பொருளைச் சுட்டிக்காட்டுதல்.

அண்மைவிளி — சமீபத்திலுள்ளாரை யழைத்தல். (சீவக. 1502. உரை.)

அண்வரல்—சமீபமாயிருத்தல். 'ஆவண வீதியெல்லாநிழற்பாய நின்றண் வருமே' (பாண்டிக்கோவை.13. இறையனார்களவியல். 2-ஆம் சூத்திரவுரைமேற்கோள்.)

அணங்கம்—இலக்கணம். 'அஞ்சணங்கம்'

அணங்கயர்தல் —விழாக்கொண்டாடுதல். 'சுறவமுண்மருப்பணங்கயர்வனகழிச்சூழல்' (பெரியபு. திருக்குறி. எ.) [அணங்கு - தெய்வம். அயர்தல் - செய்தல்.]

அணங்கல்—அணங்குதல்.

அணங்காட்டு — வெறியாட்டு. 'அணங் காட்டுமுதியோன்' (கல்லாட. கஎ.) [அணங்கு - தெய்வம். ஆட்டு - ஆடல்.]

அணங்காடல்—வெறியாடல். 'பேரணங் காடல்செய்து'. (பெரியபு. கண்ணப்ப. கக.)

அணங்கார் — பெண்கள். [ஆர் - ஒரு பன்மைவிகுதி.]

அணங்கிய — 1. அழகிய. 'சீரணங்கிய தேவர்கள்' (பெரியபு. திருவாரூர்ச்சி. க0.) 2. பின்னிவளர்ந்த. 'முழுநெறியணங்கிய நுண்கோல்வேரலொடு' (மலைபடு. உஉ௩.)

அணங்கினர்—தெய்வப்பெண்கள். 'புடையுறவணங்கினர்போற்றி' (கந்தபு. தெய்வ. க0.)

அணங்கு — 1-3. அணங்கென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத் தொகையும். 4. அழகு. (சூ. நிகண். கக: கஉ.) 5. ஆசை. (சூ. நிகண். கக: கஉ.) 6. காம நெறியால் உயிர்கொள்ளுந் தெய்வமகள், கொல்லியம்பாவை. 'ஆயுமறிவினரல்லார்க் கணங்கென்ப' (வள். ௬௧அ.) 7. கொலை. 'அணங்குபார்த்துநகைமுகிழ்த்தாவியோ - டுணங்குபேய்முலையூறலுண்டானரோ' (கூர்மபு. கண்ணனவ. ௫௧.) 8. திவ்வியம். 'சீரணங்கு மணிமாடத் திருச்சிற்றம்பலம் போற்றி' (கோயிற்பு. பாயிர. உ.) 9. தெய்வப்பெண். 'அணங்குகொலாய்மயில்கொல்' (வள். க0அக.) 10. தெய்வம். 'அணங்குடை நெடுங்கோடு' (புறநா. ௫உ.) [அணங்கென்பது; அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், நிருதர், கிம்புருடர், காந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர், பைசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாயவாசிகள், போகபூமியர் ஆகிய பதினெண்கணத்தாரையும், நிரயபாலரையும், பிறரையும், அணங்குதற்றொழிலராகிய சவந்தின் பெண்டிர் முதலாயினோரையும் கருதவருவதொருசொல்லென்று 'அணங்கேவிலங்கே கள்வர்தமிறையெனப்- பிணங்கல்சாலாவச்ச நான்கே' என்னுஞ் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் செய்த உரையிலிருந்து விளங்குகின்றது. (தொல். பொரு. உ௫௬.)] 11. தேவர்க்காடுங் கூத்து. 12. நோய். (பிங்க. ௩0௪௬.) 13. பராசத்தி. 'பேரணங்கினுடனும் பெரும்பற்றப்புலியூர்' (கோயிற்பு. பாயிர. உ.) 14. பெண். 'ஆண்டவ்விராக்கத வணங்குமெய்தும்' (சேதுபு. வேதாள. ௫அ.) 15. பேய்மகள். 'துணங்கையஞ்செல்விக் கணங்குநொடித்தாங்கு' (பெரும்பா. ௪௫௬.) 16. வருத்தம். 'வறிதேனுமணங்குகொள்ளலீர்' (கந்தபு. மோன. க௫.) 17. வருத்துதல். 'அரவின்பொறியுமணங்கும் புணர்ந்த-வரவின்மேலசைத்தகையை' (கலித்தொகை. ௫0.) 18. வெருவுதல். 'நான்முகத்தோன் - கண்ணணங்குறவருபவர்க்கடிதிர்' (கூர்மபு. அட்டமூ. ௫.) 19. வேலனுடல். 20. சண்டாளன். (பிங்.) 21. வடிவு. 'அருந்திறலணங்கினுவியர் பெருமகன்' (சிறுபாண். 86.) 22. குட்டி. 'ஆளியினணங்கு மரியின்குருளையும்' (சிலப். 25-48.)

அணங்குசார்ந்தாள் — படிமத்தாள். 'அழைத்தபணியென்னென்று ளணங்குசார்ந்தாள்' (பெரியபு. கண்ணப்ப. ௪௬.)

அணங்குதல்—1. அஞ்சல். 2. கொல்லுதல். 'அணங்குவாள்விடவரா' (இராமா. மந்தரை. ௪௫.) 3. வருத்துதல். 'பெண்ணணங்குபூந்தார்' (சிந்தா. முத்தி. கஎ௬.) 4. வருந்துதல். 'ஆடியுட்பாவைபோனீயணங்கிய தனங்க வென்றான்' (சிந்தா. குணமா. க0எ.) 5. விரும்புதல். 6. இறந்துபடுதல். 'நற்போரணங்கிய' (பு. வெ. 7. 27.) 7. பின்னிவளர்தல். 'முழுநெறியணங்கிய நுண்கோல் வேரலொடு' (மலைபடு. 223.)

8. பொருந்துதல். 'உரையணங்குந்தமிழ்வேந்தன்' (பாண்டிக்கோவை. 289. இறையனார் களவியல். 50-ஆம்சூத்திரவுரைமேற்கோள்.)

அணங்குதாக்கு— காமநெறியாலுயிர்கொள்ளுந் தெய்வமகள் தீண்டல். 'அணங்குதாக்கென்றுசொல்வர்' (வள். ௯௧அ. உரை.) [அணங்கு - காமநெறியா லுயிர்கொள்ளுந் தெய்வமகள். தாக்கு - தீண்டல்.]

அணத்தல் — 1. தலையெடுத்தல். 'பாம்பணந்தன்ன' (பொருந. ௬௫.) 2. மேனோக்கி நிற்றல். 'நெற்கொணெடுவெதிர்க்கணந்த யானை' (குறிஞ்சி. ௩௫.) 3. பொருந்துதல். 'முலைமூன்றணந்த சிறுநுதல்' (கல்லா. 12.)

அணப்பு—1. ஒரு நீட்டலளவை. 2. ஒரு சதுரவளவை. (தமிழ்லெக்ஸிகன்.)

அணம்—மேல்வாய். 'மூக்குற்றிதழ்நாப் பல்லணத்தொழிலின்' (நன்னூல். எழுத். ௯௯.)

அணர்—மேல்வாய்ப்புறம். (பிங்.)

அணர்ச்செவி — எடுத்தசெவி. 'நோன் புறத்தணர்ச்செவிக் கழுதைச்சாத்தொடு' (பெரும்பா. ௮0.)

அணர்தல் — மேனோக்கிச்செல்லுதல். 'அணரிநுனிநாவண்ணமொற்ற' (தொல். எழுத். 94.)

அணரி—அன்னம். 'அணரியிற்றொடரிற் பூண்டு, முடக்கினையழுத்தி' (காஞ்சிப். இருபத்தெண். ௩௧௪.)

அணரிடுதல்—கொக்கரித்தல். 'சொக்கனுமக்கணரிட்டுத் தொடைதட்டிச்சிரித்தருளி' (திருவாலவா. 52. 8.)

அணல்—1. கழுத்து. 'கறையணற் குறும்பூழ்' (பெரும்பாண். 205.) 2. மேல்வாய்ப்புறம். (பிங்.) 3. கீழ்வாய்ப்புறம். (திவா.) 4. உள்மிடறு. (பிங்.) 5. தாடி. 'மையணற் காளை' (புறநா. 83.) 6. அலைதாடி. 'மொய்யணனிரை' (பு. வெ. 1. 12.)

அணவரல்—தழுவிநிற்றல், நெருங்கியிருத்தல், பொருந்தியிருத்தல். 'அணிநிற மாளிகை மேற்பகல் பாரித் தணவருமே' (பாண்டிக்கோவை. 14. இறையனார்களவியல் 2-ஆம் சூத்திரவுரை மேற்கோள்.)

அணவல்—அணவுதல்.

அணவன்—பொருந்தினவன். 'குரங்காடுதுறைதனி லணவன்காண்' (தேவார. குரங்காடு. ௪. திருநா.)

அணவு—1-3. அணவென்னேவலும்தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 4. நடு. 5. பொருந்துதல். 'இருகரையணவுறக்கிடக்கும்" (உபதேச. மச்ச. ௯௨.)

அணவுதல் — 1. இணைதல். 2. கிட்டல். 'அணவலேயணுகல்புல்லல்' (சூ. நி. ௧௧. ௩௧அ. ௨.) 3. சேர்தல். 'ஏரணவுமெய்த்திரு' (இரகு. மாலை. ௬௯.) 4. மேனோக்கிச்செல்லுதல். 'அம்தர வகடுதொட் டணவு சீர்புகழ்' (சிந்தா. பதுமை. ௭௪.)

அணன் — பொருந்தியவன். 'சீரணனை' (திவ். இயற். நான். 67.)

அணு — 1. விநோதம். 'அணுவாய்த்துக் காலங்கழிக்க' (ஈடு.) 2. ரூபாவின் 16-ல் ஒரு பகுதி. 3. ஒரு அளவை. 4. குழி. (தமிழ்லெக்ஸிகன்.)

அணுசுரோத்திரியம் — மானியவகையுள் ஒன்று. (தமிழ்லெக்ஸிகன்.)

அணுப்பல்—அணுப்புதல். (வழக்.)

அணுப்பி—ஏய்ப்பவள். 'அணுப்பிகள் படிறிகள்' (திருப்பு. ௩௧௫.)

அணுப்பித்து—ஏய்த்து. 'அணுப்பித்துலகஞ் சேர்த்துத்திரிமானார்' (திருப்பு. ௩௪௨.)

அணுர்—கழுத்து. (திவ். பெரியாழ். 3. 5. 8.)

அணுவல்—அணவுதல். 'அருக்கன்மண்டலத்தணுவுமந்தணூர்' (தேவார. திருவாரூர். ௧. சம்.)

அணி—1. அணியிலக்கணநூல். 2. அணியிலக்கணம். 'வல்லோரணிபெறச்செய்வன செய்யுள்' (இலக்கணவி. ௧௬௬.) 3-5. அணியென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 6. அலங்காரம். (பிங். ௩0௫0.) 7. அழகு. 'அணிமாழ்கி' (கந்தபு. காம. அ.) 8. ஆபரணம். 'அணியினோங்கலும்' (கந்தபு. நகர. ௩௬.) 9. எத்தனம், அடுக்கு. 10. எல்லை. 11. ஒழுங்கு. 12. கவிப்பது கட்டுவது செறிப்பது பூண்பது முதலியவற்றின் பொதுப்பெயர். (தொல். சொல். ௪௫. உரை. சேனா.) 13. கூட்டம். 'தேவரணிதொழ' (கோயிற்பு. பதஞ்சலி. ௬.) 14. சம்பாரம். 15. சமீபம்.

'இறையணி கேட்கவுய்த் திட்டனர் பூசல்' (சிந்தா. கோவிந்தை•.கக.) 16. சேனைநிரை. 17. தளவாடம். 18. தேரின் அச்சாணி. 19. நன்மை. 20. படைவகுப்பு. 'ஆணணி புகுதலும்' (சிறுபாண. உகக.) 21. பற்று, அன்பு. (பிங்க. ௩௦௫௦.) 22. பூமாலை. 23. பெருமை. 'அணிநிலாவிரிக்கும், (சிலப். அந்தி. ௩.) 24. வரிசை. 'எயிற்றணிகறகறகலிப்ப' (கந்தபு. சூரன்றண்ட. சூ.) 25. முகம். (கலித். 121. 18.) 26. படையுறுப்பு. (பிங்.) 27. இனிமை. 'அணிநிலா'. (சிலப். 4. 3.) 28. ஓர் உவமவுருபு. (சீவக. 2562. உரை.). 29. கம்மியர் கருவியிலொன்று. 30. நுணச்செடி. (வைத்தியபரி.)

அணிகம்— 1. அணிகலம். 'அணிகமாப் பணிகள்செய்து' (சிந்தா. முத்தி. உக௩.) 'அணி திரிந்து அணிகமாயிற்று (ஷை. உரை.) 2. வாகனம் 'அணிகமூர்ந் தமரரீண்டி' (சிந்தா. முத்தி. ௫கஎ.)

அணிகலச்சேப்பு—ஆபரணப்பெட்டி.

அணிகலம்—ஆபரணம். 'அணிகலமரவென்பு' (கந்தபு. தவங்காண். கடு.)

அணிசேரை—நாகமல்லிகை.

அணிசனசம்— நாகமல்லிகை. (வைத்தியபரி.)

அணிஞ்சில்—1. அழிஞ்சில். [மருஉ.] 2. கொடுவேலி. 3. சிற்றுமுட்டி. 4. நொச்சி. 5. முள்ளி. (2-5. மலே.)

அணித்து—1. சடிதி, சமீபகாலம். 'உணர்வு மிகவணித்தாகை' (கோயிற்பு. இரணிய. ௩சூ.) 2. சமீபமானது. 'தொந்தலீலையினுலணித்துந்தூரமாம்' (ஞாநவா. சித்த. 2.)

அணிதல்—1. அலங்கரித்தல். 2. அழகுபெறல். 'பாஅயன்னபாறையணிந்து' (மதுரைக். உஎஅ.) 3. தரித்தல். 'ஆதலாற்றனை வியப்பதற்கன்றவையணிதல்' (கந்தபு. ததீசியுத். கச.) 4. படைவகுத்தல். 'இத்தகவாக வணிந்திருசேனையும்' (பாரத. பதின்மூன். அ.) 5. பூணுதல். 6. வரிசையாதல். 'ஐயிருதிசையினுமணிந்து செல்வன'(கந்தபு. தெய்வ. சூரு.) 7. வருணித்தல். 'அனையதை யணியமாட்டாது' (பிரபுலிங். கைலாச. 8.) 8. பொருந்துதல். (பதிற்றுப். 81. 20). 9. சூழ்தல். (சிறுபாண். 262.)

அணிந்தம்—கோபுரவாயிலின்மேடை.

அணிந்தவைதிருத்தல் — (பொருளிலக்கணம்) மெய்ப்பாடுகளுளொன்று; அஃது: ஒரு பெண் தான் அணிந்திருக்கும் கடிசூத்திரம் முதலியன திருத்துதல். (தொல். பொரு. உசு௩.)

அணிந்தன்று—அணிந்தது.

அணிந்துரை— பாயிரம்; அது: நூலின் பெருமைமுதலியன தோன்ற அலங்கரித்துச் சொல்லுவது. (நன். பொதுப்பா. க.)

அணிநுணு — ஒருவகை மரம். (வழக்.)

அணிப்பாடு — வர்த்தகரகசியம். (தமிழ் லெக்ஸிகன்.)

அணிப்படுத்தல் — அலங்கரித்தல். 'அண்டம்வெஃகவணிபடுத்திட்டவை' (கந்தபு. திருக்கல். ௩க.) 2. ஒழுங்காக்கல்.

அணிபெறுத்தல்— 1. அலங்காரம்பெறச் செய்தல், புனைதல். 'அங்நகருக்கொருநாம மணிபெறுத்தி யளித்தனனே' (கந்தபு. நகர் செய். உஉ.)

அணிமா—அட்டசித்திகளிலொன்று; அஃதணுப்போலாதல்;– பரமாணுவினுஞ்சூக்குமமாந் தேகமுடைத்தாயிருக்கை. 'அறவுஞ் சிறியவுயிர்தொறுந்தான் பரமகாட்டையணுவாய்ச்சென்-றுறையுஞ்சிறுமையணிமாவாம்' (திருவிளை. அட்டமா. உ௩.)

அணிமுலை—பூசணி. (மலே.)

அணிமை—சமீபம். 'மூதூரணிமையின்' (காஞ்சிப். நாட்டு. கசு.)

அணியத்துக்கட்டை — கப்பலின் முன் பக்கத்தோரம். (தமிழ்லெக்ஸிகன்.)

அணியம்— 1. ஆயத்தமாதற்குவேண்டியன. 2. படைவகுப்பு. 3. மரக்கலத்தின் முற்பக்கம்.

அணியல்—1. அணிதல். 2. அழகுசெய்தல். 'அணியலுமணிந்தன்று' (புறநா. க.) 3. எதிர்மறையில்வரும் ஓ ரேவல்வினை. 4. உடன்பாட்டில் அல்லது எதிர்மறையில்வரும் ஒரு வியங்கோண்முற்று. 5. மாலை. 'அணியலணிகுவனன்றி' (நைடத. அன்னத்தைத்தூ. கசு.) 6. வரிசை. 'அளக்கர்வாய்முத்தமுலையணியலாரணியுஞ்சோதி'(இராமா. கைகேசி சூ. எ௫.)

அணியன்—1. அணியுடையவன். 2. கிட்டினவன். 'தோன்றல்வந்தணியனுனன்' (கந்தபு. சுரம் ௨௬.)

அணியியல்—1. அணியிலக்கணம். 2. ஓர் அலங்காரநூல். (சிலப். 2. 27. உரை.)

அணியிலக்கணம்—ஐந்திலக்கணத்தொன்று; அது அலங்காரங்களைச் சொல்லுவது.

அணியெண்—முப்பத்தைந்து. 'தூதுளமியாடமணியெண்முதலிரண்டரைத்தூக்கு' (தைல. தைலவ. ௬௨.) [அலங்காரம் முப்பத்தைந்துபற்றி 35 என்னுந் தொகைவிளங்கக்கூறும் குறிப்புச்சொல்.]

அணியொட்டிக்கால்—முன்பக்கம் வேலைப்பாடமைந்த கோயிற் கற்கால். 'அணியொட்டிக்கால் மண்டபம்.'

அணில்—1. அன்றில். 'கிளிகடையினணிலோளியாங் குரல்' (திருப்பு. ௫௨௧.) [இது அன்றில் என்பதன் விகாரம்.] 2. தாய்முலையுண்டுவளர்வதாயும், முதுகிலே மூன்றுவரியுடையதாயும், மரங்களிலே விரைந்தோடும் பயிற்சியுடையதாயுமுள்ள ஒரு பிராணி. 'வரிப்புற வணில்வாற் கருந்தினை' (கல்லா. ௬.)

அணில்வரிக்கொடுங்காய் — வெள்ளரிக்காய். (புறநா. 246.)

அணில்வரியன்— 1. ஒருவகைப்பசு. 2. ஒருவகைப்பட்டு. 3. ஒருவகைப் பலாப்பழம். 4. ஒருவகை வெள்ளரி.

அணில்வாற்றினை —அணில்வால்போலும் கதிர்களையுடைய ஒருவகைத் தினை.

அணிலம்—அணில். (திவ். திருமாலை. 27.)

அணிவகுப்பு—படைவகுப்பு. அது: வகையால் நான்கும் விரியால் முப்பதுமாம். வகை நான்காவன:— தண்டம், மண்டலம், அசங்கதம், போகம் என்பன. விரி முப்பதாவன:— பிரதரம், திருடகம், தியாவத்தம், குட்சி, பிரதிட்டம், சுப்பிரதிட்டம், சியேயம், விசயம், சஞ்சயம், விசாலம், நிசயம், சூசி, அணு, கர்ணம், சமூமுகம், இரதாசியம், வலயகம், சர்வதோபத்திரம், துர்ச்சயம், அர்த்தசந்திரம், உத்தானம், சிருங்காடம், கர்க்கடகசிருங்காரி, காகபாரி, கோதிகா, கோமூத்திரிகை, கிஞ்சுகம், சஞ்சாரி, சகடம், பந்தம் என்பன. அவற்றுள்; தண்டமாவது: சேனையைக் குறுக்காகநிறுத்துவது; மண்டலமாவது: பாம்பு மண்டலமிடுவதுபோலச் சேனையை நிறுத்துவது; அசங்கதமாவது: சேனையை வேறுவேறாக நிறுத்துவது; போகமாவது: நால்வகைச்சேனைகளையும் ஒன்றுக்குப்பின்னொன்றாக நிறுத்துவது. அணிவகுப்புறுப்புக்கள்: உரம், இறக்கையிரண்டு, மத்தியம், பிரதிக்கிரகம், பிருட்டம், கோடியென எழாம்.

அணிவடம்—மாதர் கழுத்தில் அணியும் ஆபரணக்கோவை.

அணிவியூகம்—படைவகுப்பு.

அணிவிரல்—அநாமிகை (மோதிர) விரல். 'அதிரதர்தம்மையெண்ணிலணிவிரன் முடக்கவொட்டா முதிர்சிலைமுனி.' (பாரத. நிரைமீ. 92.)

அணிவில்—பேரேடு. (கணக். பதி. 36.)

அணிவு — அணிதல். 'புனையிழைகளணிவும்.' (திவ். திருவாய். 8. 9. 5.)

அணிவேர்—வெட்டிவேர். (தைலவ. ௮௬.)

அணிற்பிள்ளை—அணில்.

அணு—1. உயிர். 'மூன்றுதிறத்தணுக்கள் செய்யும்' (சி. சி. அ. ௧௦.) [விபுவாயிருந்துஞ் சூக்குமதேகத்தளவிலே ஞானக்கிரியா வியாபாரமாகையால் அணுவென்னும்பெயர் உயிர்க்காயிற்றென்பர் சிவாக்கிரயோகியர்.] 2. ஒருவகைத்தானியம். 3.சூக்குமசத்திருபம். 'வித்துச்சாகாதியணுக்களாக வேற்றதேல்' (சி. சி. க: ௧௪.) 4. சூக்குமதேகம். 'உளமணுவாய்ச் சென்றுமநந் - தள்ளவிழுங்கருவிற்றுன்' (சிவஞானபோ. ௨: எ.) 5. நுண்மை. 6. பகுக்கக்கூடாத அற்பபதார்த்தம், பரமாணு. 'ஒழிந்திடு மணுவொரு பங்கவளுலகெலாமொடுங்குமன்றே' (சி.சி. க: ௧௧.) 7. மந்திரம். (சி-வி. கிரி. ௬௯.) 8. மிகச்சிறியது. 'அண்டங்க ளெல்லா மணுவாக வணுக்க ளெல்லா, மண்டங்களாகப்பெரிதாய்ச் சிறிதாயினனும்' (திருவிளை. கடவு. ௬.) 9. பொடி. (பிங்.)

அணுக்கடிக்கை-அந்தரங்கமாகுகை. (ஈடு. 7, 3, 4.)

அணுக்கத்தொண்டர்—சமீபமாயுள்ள தொண்டர். (பெரியபு. வெள்ளா. ந.)

அணுக்கம்—1. சந்தநம். (வைத்தியபரி.) 2. சமீபம். 'அணுக்கத்தொண்டர்' (பெரியபு. வெள்ளா. ந.)

அணுக்கர்—சமீபத்தர். 'அடியவர்க் கடிமை பூண் டே யணுக்கரா யமர்வர் கண்டாய்' (காஞ்சிப். சார்ந்தா. ௩௯.)

அணுக்கன் — 1. சமீபத்தன். 'வேல்வலை னுயர்த்தருளும் வீரனையணுக்கனுய்த் தொழு தான்' (தணிகை. நந்தி. ௪௦.)

அணுக்கன்றிருவாயில் — தன்னையுடை ந் தாரைச் சிவன்சமீபராகச்செய்யும் வாயில்.—கர்ப்பக்கிருகவாயில். 'அந்த மில்லவ ரணுகி முன் றெழுதிரு வணுக்கனுந் திருவாயில்' (பெரியபு. திருஞா. ௧௫௯.)

அணுக்கி—அணுக்கன். (கலிங். 308. புது.)

அணுக்கு — சமீபம். 'தில்லையூரன்றிண் டோள் - பெருமாத்தொடுந்தன்னபேரணுக் குப்பெற்றபெற்றியினே - டிருமாப்பொழிய' (திருக்கோ. ௩௭௩.)

அணுகம்—சிறியது. [அணுகம்.]

அணுகல் — 1. கிட்டுதல். 'ஊசி காந்தத் தினைக் கண்டணுகல்போல' (தாயு. கருணா. ௯.) 2. போய்ச்சேருதல். 'தென்னாட்டினை யணுகி' (பாரத. அருச்சுனன்றீ. ௧௨.)

அணுகலர் —1. அயலார். 2. பகைவர்.

அணுகன்—சமர்த்தன். [அணுக.]

அணுகார்—பகைவர்.

அணுகாரணவாதம் — பரமாணுக்கட்டாமே பிரபஞ்சமாகத் தோன்றிநின்றழியுமென்று சொல்லுதல். 'இவ்வணுகாரணவாதஞ் சௌத்திராந்திகர் வைபாடிகர் ஆசீவகர்க்கும் ஒக்குமேனுந் தலைமைபற்றித் தார்க்கிகர்மேல் வைத்து மறுத்தவாறு' (சி. சி. ௧: ௧௧. சிவஞா. உரை.)

அணுகுதல்—அணுகல்.

அணுசதாசிவர் — சதாசிவ தத்துவத்தில் சதாசிவமூர்த்தியைச் சூழச் சேவித்துக் கொண்டிருந்து போகங்களைப்புசிக்கும் அபர முத்தர்; இவர்கள் பிரணவர், சாதாக்கியர், தீர்த்தர், காரணகர், சுசீலர், ஈசர், சூக்குமர், காலர், தேகேசுவரர், அங்சு எனப் பதின்ம ராவர்; மலபரிபாகமாந்தியத்தால் இப்படி யாய், அதோமாயாபுவனத்துள்ளார்க்குப் பக்குவம்வந்தவிடத் தநுக்கிரகஞ்செய்வ ரென்றும், போகவைராக்கியம் பிறக்கும் போதுமேலான்பதமடைவரென்றுஞ் சொல் லப்படுவர். (சி. சி. ௮: ௨. மறை. சி. சி. ௧: ௯௦. ஞானப். உரை.)

அணுசைவம்—பதினறுவகைச் சைவத்து ளொன்று; அது: சிவனை உள்ளும்புறமும் பஞ்சகிருத்தியஞ்செய்வனென்றறிந்து திகம் பரவேடங்கள்பூண்டு சன்மார்க்கலக்கணத் தோடுகூடிக் குருலிங்கவேடம் பொருளாய்ச் சிவன்செய்யுந் தொழில்களை யநுபவத்திலே பார்த் தாநந்தம்பொங்கி யதன்கண் மனோ லயமாவதே மோக்ஷமென்று சொல்லுவது. (த. நி. போ. ௨௫௧.) [அணுஶைவம்.]

அணுத்துவம்—அணுத்தன்மை. 'தூலமாய் விண்டன்னைநிறைகைக்கு மணுத்துவந்தூலத் துவமுடற்குத்தருமாறெங்ஙன்' (ஞானவா. சிகித்து. ௫.)

அணுப்பிரமன் — ஆன்மபட்சப்பிரமன். 'அணுப்பிரமாதியணுபரசிவாந்த' (சி. சி. ௨: ௭௪. ஞானப்.) [அணுப்ரஹ்ம.]

அணுபட்சநவபேதம்— சத்தியலோகமுதற் புவனாதிபதிகளாய் வாஸ்தவபேத தேசிக ளாயிருக்கும் பிரமாமுதற் சிவமூர்த்திபரி யந்தம் ஒன்பதின்மராகிய பேதம். (சி. சி. ௨: ௭௪. ஞான.) [அணுபக்ஷநவபேத.]

அணுபட்சம்—ஆன்மபட்சம். 'அணுபட்ச சம்புபட்சம்' (தாயு. மவுந. ௫.) ஆன்மாக்கள் தாமே பக்குவப்பட் டடையுநெறியென்றும், பிரேரகப்படுபவையென்றும், பொருள்படு மென்று மேற்படி நூலுரைகாரர் கூறுவர். [அணுபக்ஷ.]

அணுபரசிவன் — அணுபட்சத்துப் பர சிவன். 'அணுபரசிவாந்த அநேகேசுரர்கள்' (சி. சி. ௨: ௭௪. ஞானப்.) [அணுபரஶிவ:]

அணுபேதம் — ஆன்மபட்சபேதம். 'சிவ பேத மணுபேதமெனப் பிரமாதி' (சி. சி. ௨: ௭௪. ஞானப்.) [அணுபேத.]

அணுபை—மின்னல். [அணுபா: அணு-அற்பம். பா - ஒளி.]

அணுமூர்த்தி—ஆன்மமூர்த்தி. 'அணுமூர்த்தி வடிவுமுதற் காரியமாத்திரத்தால்' (சி. சி. பாயிர. சிவஸ்துதி. ஞானப்.) [அணுமூர்த்தி.]

அணுமை—1. அணிமை. 2. சமீபம். (ஐங் குறுநூறு.)

அணுரூபம்—1. அணுவகை. 'ஒழிந்திடுமணு ரூபங்கள்' (சி. சி. ௧. ௧௧.) 2. நுண்ணியரூபம்.

அனுநுபி—1. ஆன்மா. 2. கடவுள். [அணு ரூபி.]

அனுரேணு — சிறுதுகள். [சுண ீரே ணு: அணு-அற்பம். ரேணு-துகள்.]

அனுவங்கபதிகள்—விஞ்ஞானகலரிற் பரி பக்குவம்வந்தவர்களிற் றீவிரபக்குவம் வந் துள்ளோர்களாய்ச் சூக்குமசிவாபிவியத்தி விளங்கிச் சுத்திதத்துவத்துஞ் சிவதத்து வத்துமிருப்பவர்கள். (சி. சி. அ: ௩௦. ஞான.)

அனுவதம் — அணுவிரதம். (அருங்கலச். 64. 65.)

அனுவலி—ஆன்மசத்தி. 'அடங்கிடுமநாதி முத்தன் வலியணுவலியுமென்னில்' (சிவதரு. சிவஞானயோ. க௦எ.) [அணு-ஆன்மா. வலி-ஆற்றல்.]

அனுவிரதம் — அணுவதம்,— ஒரு ஜைன விரதம்.

அணை — 1. அணைக்கட்டு. 'கடற்றலையன் றணைவேண்டிய' (இராமா. ஆற்று. கூ.) 2-4. அணையென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதி யும் வினைத்தொகையும். 5. அணைமரம். 6. ஆசனம். 'மடங்கலேறுற்றும்-பொன்னின்மா மணியணையினும்பொருக்கென வெழுந்தான்' (கந்தபு. தெய்வ. ககக.) 7. உதவி. 8. கரை. 9. செய்கரை. (பிங்க. ௩௦௫௨.) 10. படுக்கை. 'நுண்ணிடையாள் வெய்துயிர்த்துமெல்லணை மேல் வீழ்ந்தபோது' (பெரியபு. தடுத்தா. கஎ௨.) 11. புணர்ச்சி. 12. முட்டு. 'அம்மரம் விழாதபடி ஓரணைவை.' 13. மெத்தை. 'ஆவி விரிபானுரையினுடையணையாக' (இராமா. தைலமாட்டு. க௦.) 14. வரம்பு. 'அணையை நூக்கிச்சென்றநீர்'(பெரியபு,திருஞா.எ௨௩.) 15. சேது. 16. துயிலிடம். (பிங்.) 17. தடை. 'அணையின்றி யயர்ந்த வென்றி' (கம்பரா. கும்பக. 158.)

அணைக்கட்டு—வரம்புக்கட்டு.

அணைக்காரன் — அணைக்கட்டின் காவற் காரன்.

அணைச்சை—அணைத்தல்.

அணைகட்டல் — வரம்புகட்டல். 'குரக் கினத்தாலே குரைகடறன்னை,நெருக்கியணை கட்டி' (திவ். பெரியாழ். மாணிக்கச். அ.)

அணைகடத்தல்—எல்லைகடத்தல். 'அணை கடந்தவன்பு.'

அணைகயிறு—அணைக்குங் கயிறு.

அணைசல்—ஒதுங்கல், விலகல்.

அணைசு—வெண்கலத்தாற் பண்ணி வங் கியத்தி னிடமுகத்தையடைத்தற் குரியது. (சிலப்பதி. அரங்கே. உசு. ஆம்-அடியுரை.)

அணைசுதல்—அணைதல்.

அணைசொல்—துணைச்சொல்.

அணைத்தல்—1. அடுத்துச்சேர்த்தல், அணை யச்செய்தல். 'அல்லன்மிகவுயிர்க்கிவைதா னணைத்தது' (சிவப்பிர. உ: எ.) 2. அடைகிடத் தல். 'குருகு மன்னமும் வால்வளைக் குப் பையை-யண்டமும் பார்ப்பு மாமென வணைக் கும்' (கல்லா. சஎ.) 3. அவித்தல், தணித்தல். 'விளக்கணைத்தல்' 4. கட்டுதல். 'குறுந்தாம் பணைத்த குழக்கன்றி னுருவாய்' (கூர்மபு. கண்ணன. எகூ.) 5. கூட்டிமுடித்தல். 'அணைத்தகூந்தல்' (திருமுரு. ௨௦௦.) 6. தழு வுதல். 'அன்னையடுங்கனுவொழித்துவல்லே யணைத்திடப்பெறுஞ்சிறூர்' (காஞ்சிப். தக்கி. ருகூ.) 7. உண்டாக்குதல். 'மம்மரேயணைக் குங்கள். (சேதுபு. திருநாட். 54.)

அணைதல்—1. அடைதல், போய்ச்சேர்தல். 'பெருந்துறைமருங்கினிலணைந்தார்' (திரு வாத. திருப்பெரு. ௨௩.) 2. அவிதல். 'விளக் கணைந்தது' 3. உண்டாதல், பிறத்தல். 'தவத் தாலணைந்தபுதல்வன்' 4. புணர்தல். 'கிரது வினையணைந்துபெற்றுள்' (கூர்மபு. பிருகுவா. அ.) 5. பொருந்தல். 'அடுகொலைக்கணைந்த முகிலுருப்பெறும்' (கல்லா. கரு.) 6. படுத் தல். 'அணைவதரவணைமேல்' (திவ். திருவாய். 2. 8. 1.)

அணைதறி — யானை முதலியவற்றைக்கட் டுங் கம்பம்.

அணைப்பு -1. அணைத்தல். 'அடியானும் விழியானு மணைப்பானும்' (திருவானை. ஆர. உசு.) 2. ஒருநாளில் இரண்டேரைக்கொண்டு உழக்கூடியநிலம்.

அணைமரம்—(கன்றிழந்த) பசுவைக் கறத் தற்கணைக்கும் கணைமரம்.

அணையாடை—1. பிள்ளைக்கிடும் படுக்கைத் துகில். 'அழுதணையாடையிற்கிடந்தான்' (திருவிளை. விருத்த. ௨அ.) 2. கொப்பூழிறுக் குஞ் சீலை.

அணையார் — பகைவர். 'அணையார் தம் படைக்கடலில்' (பாரத. பதினே. உசு௦.)

அணைவு — 1. அணைக்கப்பட்டது. 2. அணைத்தல். 'முன்னும் பின்னு மருங்கு மணை வெய்த' (பெரியபு. ஏயர். ௩௪௦.)

அனேக்கம்—மேனேக்கம். [மரப்பொது வெனப்பொருள்படும் 'அநோகஹம்' என்னும் வடமொழியைத் திரித்து அனேக்கம் என எழுதினரும் உளர்.]

அத்தக்குன்று—சூரியன் அஸ்தமயஞ்செய்யும் மலை. 'ஆயிடை யத்தக் குன்றுக் காதவ னணியனுக' (பாரத. நிரைமீ. ௧௭அ.)

அத்தகடகம்—கையிலணியும் வளை; 'ஆடக மணிக்குழைகள் பாரிய சரப்பணிக ளத்தகடகம்' (அரிச்ச. விவாக. ௧௧அ.) [ஹஸ்தம்-கை. கடகம்-வளை.]

அத்தகண்டாதநம்—யோகியின் நூற்றெட்டு நிலைகளு ளொன்று; அது: ஒருகாலால் நின்று கொண்டு மற்றைக்காலை நீட்டியும் ஒரு கையை நிலத்தூன்றி மற்றைக்கையால் நீட்டிய காலைப் பிடித்தும் உள்ள நிலை.

அத்தகம்பவாதம்— கராக்ஷேபகவாதரோகம். (சீவரட். ௧௪௬.) [ஹஸ்த - கை. கம்ப - நடுக்கம்.]

அத்தகம்—1. ஆமணக்கு. 2. கருஞ்சீரகம். (1, 2. மலை.)

அத்தகிரி—சூரியன் அத்தமிக்கும்இடமாகச் சொல்லப்படும் மேற்குமலை. [அஸ்தகிரி: அஸ்த-முடிவு. கிரி - மலை.]

அத்தகோரம்—நெல்லி. (வைத்தியபரி.)

அத்தகோளம்-கோளத்தின்பாதி. [அர்த்த-பாதி. கோள-உண்டை.)

அத்தசகாயம்—பொருளுதவி. [அர்த்த - பொருள். ஸஹாயம்-துணை.]

அத்தசதம்—1. ஐம்பது. [அர்த்த - பாதி. ஶதம் - நூறு.] 2. நூருண்டு. [அப்த - ஆண்டு. ஶதம் - நூறு.]

அத்தசந்திரன்-1. பாதிச்சந்திரன். [அர்த்த சந்த்ர: அர்த்த - பாதி, பங்கு.] 2. பாலசந்திரன்.

அத்தசாமம்—அர்த்தசாமம், நடுச்சாமம், இரவில் நடுப்பகுதி.

அத்தசித்திரம் — மார்க்கசடப்பிரமாணத் தொன்று; அஃது தரைமாத்திரை யோர்கலையாகக்கொண்டது.

அத்தத்தாவெனல்—அத்தா அத்தா வெனக் கூறுதல். 'காமரு நோக்கினை யத்தத்தா வென்னுநின் - றேமொழி கேட்ட வினிது' (கலித்தொகை. அ௦.)

அத்தநாசம்-பொருளழிவு. [அர்த்தநாஶ.]

அத்தநாரீசன் / அத்தநாரீசுரன் / அத்தநாரீசுவரன் } அர்த்தநாரீசுவரன்-தனது உடம்பிற் பாதி பெண்வடிவானசிவன்.

அத்தநாள் — 1. பதின்மூன்றுநக்ஷத்திர நாள். 'பங்குனி யத்தநாளிற்-கண்ணிய வரங்கர்முன்னே கவியரங் கேற்றினனே' (இராமா. அபியுத்தர். எ.) 2. பதின்மூன்றுநக்ஷத்திரம். 3. பாதிநாள்.

அத்தப்பிரகரம்—அரைச்சாமம்; அது ஒரு நாளிற் பதினறிலொருபங்குகொண்டநேரம். [அர்த்தப்ரஹர: ப்ரஹர - ஒரு சாமம்.]

அத்தப்பிரகரன்-உபக்கிரகங்களிலொன்று; புதன்மகனென்பர். (குமாரசாமீ. ௧௦.)

அத்தப்பிரபஞ்சம் — அர்த்தப்பிரபஞ்சம். (சி. போ. பா. 2. 2. பக். 134. புது.)

அத்தப்பொருந்தி—ஒரு பூடு.

அத்தபவனம்—ஏழாமிராசி. (பிருகத்சாத. அத்தி. க.) [ஹஸ்தபவந:]

அத்தபாகம் — 1. பாதிப்பங்கு. [அர்த்த பாக.] 2. பொருட்பாகம்.

அத்தம் — 1. அத்தகிரி. 'அத்தம்மணைய களிற்றங்கர்' (சிந்தா. பதிக. ௧௩) [இது அத்தகிரி என்னும் வடமொழிச்சிதைவென்றார் நச்சினர்க்கினியர்.] 2. அதிவிடயம் (மூ. அ.) 3. அருநெறி. 'கல்லதரத்தம்' (மணிமேக. ௧௩: ௩௧.) 4. கண்ணடி. 'அத்தமதில் முன்பின்போல்' (வேதா. சூ. 108). 5. காடு. 'நெடும்பேரத்தநீந்தி' (சிலப். காடு. ௭௦.) 6. குக்கிலென்னுமருந்து. (மூ. அ.) 7. குங்குலியம். 8. கை. 'ஒரு கன்னியத்த மீனத்தை நாடிச்செல' (ஒருதுறைக். ௧௩௧.) 9. கையாந்தகரை. (இராசவைத். ௫.) 10. சொற்பொருள். 'வைகரி செவியிற் கேட்பதாயத்த வசனமாகி' (சி. சி. ௧: ௨௦.) 11. பங்கு. 'தோட்டத்திலேயத்தத்துக்கிறைக்கிறூர்கள்'

12. சூரியன் முதலியன படுகை. 13. பதின் மூன்றாநக்ஷத்திரநாள். 'அத்தநலமறிவாடையே' (வீமே. கஎக.) 14. பதின்மூன்றா நக்ஷத்திரம். 'அத்தங்கும்பத்தைவிட்டப்பாவிராசிநட்பானதுவே' (ஒருதுறைக். ௩௦௯.) 15. பாதி. (சூ. நி. கக. கக.) 16. பிரயோசநம். 17. பொன். (பிங்.) 18. மரணம். 19. முழம். 20. மேகம். 21. யானைத்துதிக்கை. 22. வஸ்து, பொருள். 'அத்தத்தேகாடியலையாமல்' (இராசவைத். ௫.) 23. வருடம். 'எண்ணியசகாத்தம்' (இராமா. அயியுத்தர். எ.) 24. வழி. (பிங்.) 25. அருஞ்சுரம். 26. செம்மை (ஐங்குறு). 27. கெந்தியுரிபாஷாணம். (வைத்தியபரி.) [1, 12, 18. அஸ்த. 8, 13, 14, 19, 21. ஹஸ்த. 10, 16, 17, 22, 25, அர்த்த. 20, 23. அப்த. 24. அத்வா.]

அத்தமண்டபம்—கோயிலினுள்ளே கருப்பக்கிருகத்துக்கடுத்த மண்டபம். [அர்த்த மண்டபம்.]

அத்தமத்தக சையோகம்—கையாலே மத்தகத்திலே தடவுதல். (தாயு. பலவ. ௫. உரை.) [ஹஸ்த - கை. மஸ்தக - தலை - ஸம்யோகம் - கூடுதல்.]

அத்தமநம்— 1. சூரியன்முதலியன படுதல். 'அத்தமனமுதயமில்லை' (ஞாநவா. தாசூர. எ.) 2. மறைதல். 'சநநத்தின் மரணத்தி லுதயத்தி லத்தமநந் தனினே ராகி' (ஞாநவா. வீரதகு. ௬௨.) [அஸ்தமந.]

அத்தமம்—அத்தமிப்பு. [அஸ்தம்.]

அத்தமயம்—அத்தமயநம். 'அத்தம் மயவெற் படைந்தான்கதி ராயிரத்தோன்' (கந்தபு. தெய்வ. கசரு.) [அஸ்தமய.]

அத்தமலை—சூரியன் அத்தமிக்கும் இடமாகிய மலை.

அத்தமானம்—ஆமணக்கு. (மூ. அ.)

அத்தமானியம்— கண்டதிற் பாதி யிறை தருதல்.

அத்தமித்தல்— 1. சூரியன் முதலியன படுதல். 2. மறைதல்.

அத்தயாமம்— ஒருதினத்திற் பதினறில் ஒன்றுகொண்ட நேரம். [அர்த்த - பாதி. யாமம் - ஒரு தினத்தில் எட்டிலொன்று கொண்ட நேரம்.]

அத்தர்—1. சிவன். 'அத்தர்தந்த வருட் பாற்கடல்' (பெரியபு. திருமலை. க. ௫.) 2. தேவர். 3. பிதா. 'அத்தர் வேண்டிமுன் னுண்டவர்' (பெரியபு. திருக்கூட்ட. ௫.) 4. முனிவர். 5. வகசரர். 6. வாசனையுடைய ஒரு தைலம். [இக்துஸ்.]

அத்தராசிதம்—மடற் றுத்தம். (மூலி.)

அத்தவசனம் — நினைந்தபொருளைச்சொல் லுஞ் சொல். 'வைகரி செவியிற் கேட்பதாயத்தவசநமாகி' (சி. சி. க: ௨௦.) [அர்த்த; வசந.]

அத்தவர்—ஆசையுடையோர். 'எனக்கத்தவர்க்கு' (திருப்பு. ௬௨௨.) [அர்த்த - ஆசை.]

அத்தவரை—அத்தகிரி. 'செய்யகதி ரத்தவரை சென்றணையு முன்னம்' (கூர்மபு. கண்ணனவ. அரு.)

அத்தவாகநன்— சிவன்.

அத்தவாளம்—1. உல்லாசம். 2. காடு. 3. மேலாடை. (பிங்.) 4. முன்றானை. (ஈடு. 9. 10. ப்ர.)

அத்தவுதயம்—அருத்தோதயம்; 'மன்னுமத்த வுதய மகோதய,மென்னுமிங்கிவற் றிற்புன லாடினேன்' (சேதுபு. தநு. சுசு.)

அத்தவேடணை—பொருளாசை. [அர்த்த - பொருள். ஈஷணு - ஆசை.]

அத்தன்—1. அருகன். (சூ. நிகண். க: ௩.) 2. உயர்ந்தோன். 'அத்தநி னரும்பொருளனைத்தும்' (திருவிளை. மெய்க்கா. ௩௪.) 3. கடவுள். 'அத்தாவாலங்காடா' (தேவார. திருவாலங். க. சுந்தர.) 4. கடுக்காய். (மூ.அ.) 5. குரு. (சூ. நிகண். க: ௨௫.) 6. சிவன். 7. பிதா. 'என்னத்தனைவென்றிசைகொண்டிலானே' (கந்தபு. காமத. க௦.) 8. மூத்தோன். (திவா.) 9. வெள்ளீயம். (மூ. அ.) 10. வைரவன். (இராசவைத். ௨.) 11. விஷ்ணு. (சூ. நிகண்.)

அத்தனை—அவ்வளவு. 'இவ்வளவென் றத்தனையு மென்ற லறியுந் தரமாமோ" (தாயு. பல. கரு.) [அ; தனை - அளவு.]

அத்தாட்சி—சாட்சி, திருட்டாந்தம். (திசை. வழக். இராமநா. கிஷ்கிந். 12.)

அத்தாணி— 1. அரசிருக்கை. 'அண்டத் தமரர்கள் சூழ வத்தாணி யுள்ளங் கிருந்து' (திவ். முதலா. பூச்சூட். சு.) 2. சபை

கூடுமிடம். [ஸூஸா நீ.] 3. பிரியாமை. 'அத்தாணிச்சேவகமும்' (திவ். முதலா. திருப்பல். அ.)

அத்தாணிச்சேவகம்— ஆஸ்தானப்பணி விடை. (திவ். திருப்பல். 8.)

அத்தாணிமண்டபம்—1. அரசிருக்கைமண்டபம். 'மாளிகைமுன்னத்தாணிமண்டபத்து' (பெரியபு. புகழ்ச். கரு.) 2. சபைகூடு மண்டபம். [ஸூஸா நீஜேணவம்.]

அத்தாதிகம் — பாதிக் கதிகப்பட்டது. [அர்த்த-பாதி. அதிக - மேற்பட்டது.]

அத்தாதிகாரம்— பொக்கிஷாதிகாரியின் அதிகாரத்தானம். [அர்த்தாதிகார.]

அத்தாதுரம்— பொருளாசை. [அர்த்த-பொருள். ஆதுரம் - ஆசை.]

அத்தாந்தரம்—1. எதிரர்த்தம். 2. புதுக்காரியம். 3. வேறர்த்தம். 4. வேறுநிமித்தம். [அர்த்தாந்தரம்: அர்த்த- காரியம், நிமித்தம், பொருள். அந்தரம் - வேறு.]

அத்தாநம்—1. சரியற்றஇடம். 2. தேவாலயமுதலியவற்றின்வாயில். 3. மிகுந்தஆழம். [1, 3. அஸ்தாநம். 2. ஸ்தாநம்.]

அத்தாநி—
அத்தாநிமண்டபம் } சபைகூடுமிடம்.
[ஸூஸா நீ, ஸூஸா நீஜேணவம்.]

அத்தாயம்—1. அந்தரம். [வழக்.] 2. கடைசற்சக்கரத்திற் கடைகிறவன் மிதிக்குந் தடி.

அத்தார்ச்சநம்—திரவியந்தேடுதல். [அர்த்த - பொருள். ஆர்ஜநம் - தேடுதல்.]

அத்தார்த்தம்—1. ஆண்டிற் பாதி. [அப்த - வருடம். அர்த்த - பாதி.] 2. பொருணிமித்தம். [அர்த்த - பொருள். அர்த்த - பொருட்டு.]

அத்தாவரம்—அசைவுள்ளபொருள்; சங்கமம். [அ - எதிர்மறை. ஸ்தாவர - நிலைப்பொருள்.]

அத்தாவரி—வெட்பாலரிசி (வைத்தியபரி.)

அத்தாழம்—மாலைக்காலம்.

அத்தாளம்—இராச்சாப்பாடு. 'அத்தாளப் பட்டினியுமப்படியே' (சரவண. பணவிடு.)

அத்தான்—1. அத்தைமகன். 2. மூத்த மைத்துனன். 3. சகோதரிகணவன். 4. முடைக்கொற்றன். (வைத்தியபரி.)

அத்தி—1. அக்காள். [அத்தி: இது வடமொழியில் நாடகவழக்கு.] 2. அத்தினபுரி 3. ஆனைவணங்கி, (இராசவைத்.) 4. 'இருக்கிறான்' எனப் பொருள்படும் 'அஸ்தி' யென்னும் வடமொழி திரிந்துவந்த ஒருசொல். (சி. சி. அ: ௩௦. ஞாந.) 5. உண்டு என்பதன் பிரதிபதமாக 'அஸ்தி' யென்னும் வடமொழி திரிந்துவந்த ஓரவ்வியயம். (பி. வி. ௬௨. உரை.) 6. எலும்பு. 'அத்தி வெம்பணி தலைக் கலன் முங்கியே' (கந்தபு. பிரமயா. கஅ.) [அஸ்தி] 7. ஒருமரம். 'அழிஞ்சத்தி தொண்டை' (தைல. தைலவ. எ௨.) [ஆழலத்தி, மலையத்தி, சீமையத்தி, நீரத்தி, கொடியத்தி, கல்லத்தி, பேயத்தி யெனப் பலவகைப்படும். 8. கடல். 'அத்திமேலெழும்வெண்கரி' (காஞ்சிப். அரி. உ௩.) [அப்தி]. 9. கருவிளையென்னும் ஒரு படர்கொடி. 10. கொலை. 'கோவத்தி' [ஹத்யா]. 11. சந்திரவமிசத்துப் பரதன்குலத்திற் பிறந்த ஓரரசன்; அத்தினபுரம் அமைத்தவன். 'அக்குலத்தினி லத்தி யென்பவ னவதரித்தான்' (பாரத. குருகு. உஅ.) [ஹஸ்திந்]. 12. திப்பிலி. (மலை.) 13. நெருஞ்சி. (இராசவைத்.) 14-15. செய்யென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 16 பாதிவடிவினள். 'அத்திகையேபுனலோடு நாகமுமுற்றிடலால்' (அரிச்ச. நாட்டு. 11.) [அர்த்த; இ ஒரு பெண்பால்விகுதி.] 17. பிருதிவியின்வழியான தசநாடிகளி னென்று; 18. பெண்யானை. [ஹஸ்திந்.] 19. மலை. 20. முருகமூர்த்திபாரி தெய்வயானையம்மை. 'அத்திநகையினித்திலமும்' (கந்தரந். ௬௩.) 21. மூர்ச்சை (இராசவைத்.). 22. யானை. 'அத்தியீருரிபோர்த்திரோ' (தேவார. திருப்பை. அ. சுந்தர.) [ஹஸ்திந்.] 23. வெருகஞ்செடி. (மலை.) 24. யாசகன். 'அத்திகளாதல் கண்டாலும்' (திருநூற். 44.) 25. ஒரு பெண்பால்விகுதி. (வீரசோ. தத்தி. 4.) 26. யானைநெருஞ்சில். 27. எருக்கங்கிழங்கு. 28. வாலேரசம். [26-28. வைத்தியபரி.]

அத்திக்கள்—அத்திவேர்க்கள்.

அத்திக்கன்னி—1. கரிசலாங்கண்ணி. 2. வெருகு. (1, 2 மலை.)

அத்திக்ன்னி—கரிசலாங்கண்ணி. (மலை.)

அத்திகபம்—1. கடனுரை. 2. கணவாய் மீனெலும்பு. [இவ்வெலும்பு கடனுரை யெனக் கொண்டாரிட்டபெயர். அஸ்திகஃப.]

அத்திகர்ணி—சிற்றாமணக்கு. 'அத்திகர்ணி யவிசு' (தைலவ. தைல. 113.)

அத்திகர்ணியவிசு — சிற்றாமணக்குநெய். (தைல. தைலவ. ககா.)

அத்திகன்னி—வெருகஞ்செடி. (மலை.)

அத்திகாயம்-(ஆருகதம்.) தன்மாத்திகாயம் அதன்மாத்திகாயம் என அசீவபதார்த் தங்களோடு கூட்டிவழங்கப்படும் ஒரு வாய் பாடு. (சிவஞானபா. பக். கக.) [அஸ்திகாயம்.]

அத்திகிரந்தி—ஒருவகைக் கிரந்தி; அஃது: எலும்புகள் நொறுங்கலாலும் அபிகாதத்தி னாலு முண்டாகிப் பருத்துயருவதும் கொஞ் சம் அமுங்குவதுமாக இருக்கும். (சீவரட். ருoச.) [அஸ்தி - எலும்பு. க்ரந்தி - பொருத்து, வளைவு, கட்டு.]

அத்திகிரி — காஞ்சிபுரத்துள்ள விட்டுணு தலங்களெட்டனுள் ஒன்று: அது வெள்ளை யானை தனதமிசமொன்றினாலே விட்டுணு வைத்தாங்கப்பெற்ற காரணத்தினாலேவந்த பெயரென்பர். 'அத்திகிரி தனிலிருப்பச் செல்கின்றோம்' (கந்தபு. திருக்குற். கஉ.) [ஹஸ்திந்; கிரி.]

அத்திகூடம் — யானைக்கூடம். 'ஆயிடை யத்திகூடத்தயலெழுந்து' (யசோதர. 2. 21.)

அத்திகை—தமக்கை. [அத்திகா.]

அத்திகோசத்தான் — ஒரு குழூஉப்பெயர். (இலக்கணவிளக். கஎஎ. உரை.) [அது, இளங் துணைமகார் தம்மிற் கூடி விளையாடல்குறித்த பொழுதைக்குத் தாமே படைத் திட்டுக் கொண்டது.]

அத்திகோபம்—ஒரு நயனரோகம்.

அத்திகோலம்—அழிஞ்சின்மரம். (மலை.)

அத்திசஞ்சயம்—இறந்தவரின் உடம்பைத் தகனஞ்செய்தபின் எலும்புகளைக் கங்கை முதலிய தீர்த்தங்களில் ஒன்றில் இடும்படி பெடுத்துத் திரட்டல் [அஸ்திஸஞ்சய: ஸஞ்சய - திரட்டல்.]

அத்திசம்—1. சங்கு. 2. சந்திரன். 3. நீர் முள்ளி. (மூ. அ.) [அப்தி - கடல், நீர்நிலை. ஜ - பிறந்தது.]

அத்திசயனன் — விட்டுணு. [அப்திசயந: அப்தி - கடல். சயந - படுக்கை. கடலிற் றுயின்றவனென்றபடி.]

அத்திசயன் — விட்டுணு. [அப்திசய: கடலிற்றுயின்றவனென்றபடி.]

அத்திசாரபேதி— அதிசாரபேதி. (வைத் தியபரி.)

அத்திசாரம்—எலும்புத்துவாரங்களிலுள்ள எண்ணெய்ப்பற்றான ஊன். [அஸ்திஸார: அஸ்தி - எலும்பு. ஸாரம் - மச்சை.]

அத்திசிங்நவை—தசநாடியினொன்று. (சிலப். 3. 26. உரை.)

அத்திசிராவரோகம்— ஒருவகை ரோகம்; அஃது: இரசதாது கொதித்தலினால் இரத் தத்தின் சுபாவவன்னங் கெட்டுவரும் ரோக மென்று காசிபரும், எலும்புகளின் மத்தியி லிருக்கிற மச்சையை யுருக்கிக்கொண்டு சூலை யுடன் வெளிப்படும் ரோகமென்று ஆத்தி ரையரும், எலும்புருக்கிரோகமென்று திரு மூலர்முதலிய சித்தர்களும் சொல்வர். (சீவ ரட். ருச.) [அஸ்திஸ்ராவரோக.]

அத்திசுரம் — ஒருவகைச்சுரம். இஃது எலும்பைத்தாக்கி வருவது. [அஸ்தி-எலும்பு. ஜ்வர - காய்ச்சல்.]

அத்திந்தல்—பாதிசெய்தல்.

அத்தித்திப்பிலி—யானைத்திப்பிலி. (மூ. அ.) [ஹஸ்திந்-யானை. அதுபருமையைக்காட்டும்.]

அத்திதி—1. நிலையின்மை. 2. மரியாதை யின்மை. [அஸ்திதி: அ -எதிர்மறை. ஸ்திதி - நிலை, மரியாதை.]

அத்திதந்தம்—முள்ளங்கிக் கிழங்கு. 'விட மரக்கனி முருக்கத்திதந்தத்தின்முனைவீழி சங்குத்தாமணி' (தைல. தைலவ. எஉ.) 2. யானைக்கொம்பு.] [ஹஸ்திதந்த: ஹஸ்திந் - யானை. தந்த - கொம்பு.]

அத்திநாதுகதசுரம் — ஒருவகை விஷம சுரம். (சீவரட். ருக.) [அஸ்தியாதுகதஜ்வர.]

அத்திதாரணம் — எலும்புமாலைதரித்தல். 'மாவிரதம் அத்திதார்ஞரிகளைச்சொல்லும்' (த. நி. போ. கரு.) [அஸ்தி; தாரண - தரித்தல்.]

அத்திநகம் — நகரவாயிலின்படிச்சுருள். (சூடா.)

அத்திநபுரம் — சந்திரவமிசத்து அத்தியென்பவனாலே தாபிக்கப்பட்டதென்று மகாபாரதத்திலே சொல்லப்பட்ட ஒரு பிரதாந நகரி; இது தற்காலத்திலே டில்லிநகரத்துக்கு வடகிழக்கே அ ரை க் கா த வழி தூரத்திலே காணப்படுமென்பர். 'அத்திநபுரத்திலெய்தி' (கூர்மபு. கண்ணன்மண. ககச;) [ஹஸ்திநபுர.]

அத்திநவநீதகம்—சந்திரன். [அஸ்தி நவ நீதக: அஸ்தி - கடல். நவநீதகம் - வெண்ணெய்போல்வது. பாற்கடலைக் கடைந்தபோது பிறந்ததென்பது பொருள்.]

அத்திநாடிவிரணம் — நாடிவிரணங்களில் ஒருவகை; எலும்பின்மார்க்கத்திற் பிறந்து அந்த எலும்பினரம்புகளுக்கு உபத்திரவத்தைத் தருவது. (சீவரட். ௩௦அ.) [அஸ்தி நாடீ வ்ரணம்.]

அத்திநாத்தி — உண்டு இல்லை யெனவும் உள்ளதும் இல்லதும் எனவும் சந்தேகிக்கநின்றதெனவும் பலவேறுபொருள்களைத் தரும் ஒரு வடமொழி யவ்வியயம். 'அத்தி நாத்தி யென்றுரைக்குநாவும்' (திருவிளை. பாண். சுர. கஉ.) [அஸ்தி - உண்டு. நாஸ்தி - இல்லை.]

அத்திநாத்திவாதம்–(ஆருகதம்) உண்டில்லையென்னும்வாதம். (சி. சி. பர. நிகண். சு.)

அத்திநாபுரம்— அத்திநபுரம். [ஹஸ்திநாபுரம்.]

அத்திநாபுரி — அத்தினபுரம். 'அண்டர் தானமுழுவமைகூரத்திநாபுரியே' (பாரத. குருகு. உக.) [ஹஸ்திநாபுரி.]

அத்திநி—1. பதுமிநிமுதலிய நால்வகைப் பெண்களுள்ளே தாழ்ந்தவள்; இவள் சரீரம் கற்றுழைநாற்றமுடையது. 'பதுமிநி சித்திநி பகர்ந்த சங்கிநி-யிதமுறு மத்திநி' (கொக். க. அத். க.) யானைமதம்போல நாறுங் காமநீருடைமைபற்றி அத்திநி எனப்பட்டாள். 2. பெண்யானை. [ஹஸ்திநீ: ஹஸ்த-கை. இநி- ஒரு - வ. வி.]

அத்திப்பதி—அத்திநாபுரம்.

அத்திப்பிரக்ஷேபம் — இறந்தவருடைய எலும்பைக் கங்கை முதலிய தீர்த்தங்களில் இடுதல். [அஸ்திப்ரக்ஷேப: அஸ்தி - எலும்பு. ப்ரக்ஷேப - எறிதல்.]

அத்திபங்கம்–எலும்புமுறிதல். [அஸ்திப ங்க: அஸ்தி - எலும்பு. பங்க - முறிதல்.]

அத்திபஞ்சரம்–கங்காளம். [அஸ்திபஞ்ஜர: பஞ்ஜர - கூடு.]

அத்திபாரம் — மேலெழும் பாரத்திற்காதாரமான அடிக்கோலுகை. அத்திவாரம் பார்க்க.

அத்திபுரசாதனி—அவுரி (வைத்தியபரி.)

அத்திபெருக்கல் — அத்திசஞ்சயம். (ஆசௌ. கசஎ. அகபஞ். உ௦.)

அத்திபேதம் — ஒருநரகம். 'அடைந்திடுவனவனரக மத்திபேதம்' (சேதுபு. துராசார. ௩௫.)

அத்திபேதி—ஒரு மருந்து. [இஃது யானைகளுக்குக் கொடுக்கும் பேதிமருந்து.]

அத்திமண்டுகி—முத்துச்சிப்பி.

அத்திமாலி — சிவன். [அஸ்திமாலிந்: அஸ்தி - எலும்பு. மாலிந் - மாலையுடையவன்.]

அத்திமானம்—ஆமணக்கு. (வைத்தியபரி.)

அத்திமிர்— தெய்வயானையம்மையையுடையீர். 'உந்திமிரத்திமிர்' (கந்தரந். எ.)

அத்திமுகத்தோன்—விநாயகன். (பிங்.)

அத்திமேகரோகம்–ஒருவகைமேகரோகம்; அது: மூத்திரமானது யானைமூத்திரம் போன்று தடைப்படாது இறங்குவதும், ஒருவேளை தடைப்பட்டுக்கலங்கி இறங்குவதுமாயிருக்கும். (சீவரட். பக். கூஅ.) [ஹஸ்தி - யானை. யானையின்மூத்திரம்போலிறங்கலால் அத்திமேகமெனலாயிற்று.]

அத்தியக்கம்–1. தலைமை, மேல்விசாரணை. 2. பிரத்தியக்கம். 'ஆக்கைவிதம்பேதமெனவத்தியக்கமறிவிக்கும்' (சிவதரு. சிவஞாந யோ. கக.) [அத்யக்ஷ: அதி - மேல். அக்ஷ - இந்திரியம்.]

அத்தியக்கன் — தலைவன். 'கணத்தியக்கரை' (விநாயகபு. 80. 792.)

அத்தியக்கினி—1. அக்கினிசமீபம். 2. சீதநம், விவாககாலத்திலே யக்கினிமுன்னிலையிலே பெண்களுக்குக் கொடுக்கப்படும்பொருள். 3. வடவாமுகாக்கினி. [1, 2. ஊயூ்ஹ்நீ: ஊயி - சமீபம். ஊஹ்நீ - நெருப்பு. 3. ஊஸூியஹ்நீ: ஊ ஸூி - கடல். ஊஹ்நீ.]

அத்தியக்கிநிட்டோமம் — யாகம் இருபத்தொன்றனுள் ஒன்று. இது சோதிட்டோம யாகத்தின் இரண்டாம் பாகம். [ஊ தூ்ஹ்நீ ஷெ்டாம:]

அத்தியசநம் — 1. அதிகமுண்ணுதல். 2. ஏகோத்திட்ட ஊண். [ஊ தூ்ஶந: ஊ தி - அதிகம். ஊஶநம் - உண்ணுதல்.

அத்தியட்சரம்—பிரணவம். [ஊயூ்க்ஷர: ஊயி - மேல். அக்ஷரம்-எழுத்து.]

அத்தியட்சன் — 1. மேல்விசாரணைசெய்வோன். 2. வரவுசெலவு முதலியன விசாரிக்கும் அதிகாரி. [ஊயூ்க்ஷ: ஊயி - மேல். அக்ஷ - பார்வையிடுவோன்.]

அத்தியந்தகோபநம் — மிக்க கோபம். [ஊ தூ்ஷம்-மிகுதி. கொவநம் - கோபம்.]

அத்தியந்தகோபம்—மிக்க கோபம்.

அத்தியந்தப்பிரளயம் — (வேதாந்தம்.) ஐவகைப்பிரளயங்களுள் ஒன்று; அது: முத்தி. இந்த அவத்தையில் அஞ்ஞானஞ் சிறிது மில்லை. (வாசுதே. சஉ-நிருபகம்.) [ஊ தூ்ஷம் - அதிகம். ப்ரலயம் - ஒடுக்கம்.]

அத்தியந்தம் — 1. ஒரெண். 2. பூரணம். 'அத்தியந்தம்விமலனுகி' (சி. சி. அளவை. கா. சிவாக்.) 3. மிகுதி. 'அத்தியந்தவைரம்' [2. 3. ஊ தூ்ஷ: அதி - அப்பால். அந்தம் - மட்டு, எல்லை.]

அத்தியந்தாதிசயோக்தியலங்காரம்—-மிகையுயர்வுநவிற்சியணி. (குவல. பக். ௫௫.)

அத்தியந்தாபாவம் — அபாவப் பிரமாண வகைகளுள் ஒன்று; அஃதென்றுமில்லாமை. 'ககாரவிந்தம் ஒருகாலுமில்லையென்பதத்தியந்தாபாவம்'(உபநி. கசு. உரை.)[ஊ தூ்ஷா ஊாவ: ஊ தூ்ஷம் - என்றும். ஊாவஃ - இன்மை.]

அத்தியம்—பத்துச் சமுத்திரங்கொண்டது. 'சமுத்திரம் பத்தே யத்திய் மாகும்' (சேம் தன். திவாகர. உ: உஉஎ.)

அத்தியயநபட்டர்—அர்ச்சகன்.

அத்தியயநம்—1. படித்தல். 2. வேதமோதுதல். 'ககநத்துநெறி யத்தியயநத்தினெடு' (நல். பார. தரும. களஎ.)

அத்தியயநோற்சவம் — விஷ்ணுவாலய உற்சவங்களுள் ஒன்று. (கோயிலொழுகு.)

அத்தியயம்—1. அத்தியாயம். [ஊயூ்ய:] 2. அழிவு. 3. இடுக்கண். 4. கழிந்துபோதல். 5. குற்றம். 6. கேடு. 7. தாக்குதல். 8. தோற்றுமை. 9. நினைவுகூருதல். 10. படித்தல். 11. பொல்லாங்கு. 12. மரணம். 13 மீறுதல். [2, 3, 4, 5, 6, 7, 8, 11, 12, 13, ஊ தூ்ய:

அத்தியவசம்--மிகவும் அவசமாதல்.(சி.சி.)

அத்தியவசயித்தல்--அத்தியவசாயஞ்செய்தல்.

அத்தியவசாயம்—1. ஒருபொருளில் மற்றொருபொருளின் அபேதத்தை யையத்துடனறிதல். (விசாக. இலக்கணச். அணி. கஉ.) 2. நிச்சயஞ்செய்தல். 'புத்தியத்தியவசாயத்தினது' (சி. சி. ௫: அ. ஞாநப்.) 3. விடாதுமநஞ்செலுத்துதல். 4. விடாமுயற்சி. [ஊயூ்வஸாய.]

அத்தியவசாயிதம்—பிரயாசத்தோடு முயலப்பட்டது. [ஊயூ்வஸாயிதம்.]

அத்தியவசாயிநி — விஷயநிச்சயஞ்செய்யுமது. [ஊயூ்வஸாயிநி.]

அத்தியற்பம்—மிக அற்பம். (பௌட்-பசு. அஉ.) [ஊ தூ்ஷூ:அதி-அதிகம். ஊஷூ-சிறிது.]

அத்தியற்புதம்—மிக அற்புதம்: [ஊ தூ்ஹுத.]

அத்தியாகரணம் — 1. அவாய்நிலையாற் சொல் வருவித்து முடித்தல். 2. நியாயம் பேசுதல். [ஊயூாஹரண: ஊயி - முன். ஆஹரண - கொணர்தல்.]

அத்தியாகாரம் — 1. அவாய்நிலையால் வருவித்துமுடிக்குஞ் சொல் (பி. வி. ௫௦. உரை). 2. அவாய்நிலையாற் சொல்வருவித்து முடித்தல். 3. குற்றமேற்றல். 4. மிகப்பெருஞ்சரீரம்.

5. மிகுபோசனம். [1, 2. அத்யாஹார: 3, 4. அத்யாகார: 5. அத்யாஹார.]

அத்தியாகாரீ—மிகப்புசிக்கிறவன். [அதி; ஆஹாரீ.]

அத்தியாகாரியம்—ஒருவாக்கியத்தில் ஒரு சொல் அங்ஙனம்வெளிப்படையாயிராத மற்றொருசொல்லை யவாவிநிற்றல். [அத்யாஹார்யம்.]

அத்தியாகினம்—கருஞ்சீரகம். (வைத்திய பரி.)

அத்தியாச்சியம் — விடப்படக்கூடாதது. [அ-எதிர்மறை. த்யாஜ்ய - விடத்தக்கது.]

அத்தியாச்சிரமம்—ஆச்சிரமங்களைக் கடந்த நிலை. 'நைட்டிகம், பாசுபதம், அத்தியாச்சிரமம், பஸ்மசரியை இவைகள் முதலான விரதங்களைப் பண்ணவேண்டுவதுமில்லை' (சி. சி. அ: ௩௨. சிவாக்.) [அத்யாச்ரம: அதி-மேல். ஆச்ரம: - நிலை.]

அத்தியாச்சிரமயோகி — மூவகையோகிகளுளொருவன். (கூர்மபு. வருண. ௪௦. உரை.) [அத்யாச்ரமயோகீ.]

அத்தியாசசதுட்டயம்—ஒன்றனை மற்றொன்றாகக் கொள்ளுதலாகிய நால்வகை அத்தியாசங்கள். அவை:—மித்தியாத்தியாசம், இதராத்தியாசம், இதரேதராத்தியாசம், சத்தியாத்தியாசம் என்பன. அவற்றுள்; மித்தியாத்தியாசமாவது: நித்தியமான ஆன்மா நெருப்பின் சம்பந்தத்தால் நீரினிடத்துச் சூடுவந்ததுபோல அநித்தியமான தேக சம்பந்தத்தால் தன்னிடத்துவந்த சரித்தல் முதலிய தொழில்களைத் தன்னுடையனவாகப் பாவித்தல் எனவும், இதராத்தியாசமாவது: தனக்கு வேறான இந்திரியங்களின் தொழில்களைத் தன்னுடையனவாக் காண்டல் எனவும், இதரேதராத்தியாசமாவது: மனம் முதலியன 'யான்' 'எனது' எனச் சங்கற்பிப்பதைத் தனதாகப் பாவித்தல் எனவும், சத்தியாத்தியாசமாவது: தானல்லாததைத் தானாகக் கருதும் அகங்காரத்தைத் தானாக அறிதல் எனவும் வேதாந்திகள் சொல்வார்கள். (வேதா. சூ. ௧௧. உரை.) [அத்யாஸ; சதுஷ்டயம்.]

அத்தியாசநம்—தகனம்பண்ணின எலும்புகளின் சாம்பலைப் பிராமணனிடங்கொடுத்துச் செய்யும் ஏகோத்திட்ட அபரக்கிரியையின் ஒருபகுதி.

அத்தியாசம்—1. அடையச்செய்தல், ஒன்றன்குணத்தைமற்றொன்றன்மேலேற்றுகை, சாட்டுதல். 2. இருத்தல். 'வள்ளல் வெண்புகழ்திரண்ட வளங்கெழு கயிலைக் குன்றில், வெள்ளிவந் தத்தியாச மாகவே விளைந்த தம்மா' (பிரபுலிங். கைலாச. ௭.) 3. ஒன்றின்மேலிருத்தல். 4. கயிற்றினைப் பாம்பென்று கொள்வதுபோல ஒன்று மற்றொன்றாகவிளங்குதல். 'உற்றவத்தியாசவிலக்கணமது வேறொன்றை யொன்றாகக் கருத லிப்பி வெள்ளியதுபோல - மற்றதுநால்வகைப்படுமா மித்தையுட னிதர மற்றிதரே தாஞ்சத்தியங்களினு லன்றே' (வேதா. சூ. ௧௦.) [அத்யாஸ: அதி - முன். ஆஸ - இருத்தல்.]

அத்தியாசவாதம்—விபரீதவாதம். (சி.சிற். பா. ௧௮.) [அத்யாஸவாத.]

அத்தியாசாரம் — விதிக்கப்பட்ட ஆசாரங்களைக் கடந்து நடத்தல். [அத்யாசார: அதி - அப்பால். ஆசார - ஒழுக்கம்.]

அத்தியாசாரீ—அத்தியாசாரமாய் நடக்கிறவன். [அத்யாசாரீ.]

அத்தியாசிரமபாவனை — பிராமிபாவனை. (கூர்மபு. வருண. ௩௩. உரை.) [அத்யாச்ரம; பாவநா.]

அத்தியாசை—அதிக ஆசை. [அத்யாசா.]

அத்தியாசோபாதி — மூன்றுவகைச் சீவ உபாதிகளுள் ஒன்று; அது: அந்தக்காரணசம்பந்தமாகிய சுக துக்கங்கள் முழுதும் ஆத்துமா அநுபவிப்பதுபோல முயற்சிப்பது. 'புத்திகதமாய்-முற்றுசுகதுக்கங்களுயிர் நுகர்தல்போல முயலுதலே யத்தியா சோபாதியாகும்' (வேதா. சூ. ௧௦.) [மனோகற்பிதத்தால் உண்டான துக்கரூபமான விடயங்களைச் சுகம்போலக்கருதி நனவின்கண் அடைதற்கு விசுவனாக முயலுதலின் அத்தியாசோபாதியென்னப்பட்டதென்பர் உரைகாரர். [அத்யாஸோபாதி.]

அத்தியாத்துமஞானம் — பரமான்மாவை அறியும் ஞானம். [ஃஅய்ஹ்யாத்மஜ்ஞாநம்.]

அத்தியாத்துமதத்துவநூல் — அத்தியாத்துமஞானசாத்திரம். 'இம்மோகத்தழுந்தார்க்குத் - திதமுறவத்தியாத்தும தத்துவநூலே பிறவிநோய் தீர்ப்பதன்றே' (ஞானவா. சிகித். ௩.)

அத்தியாத்துமம்—யசுர்வேத உபநிடதங்களுள் ஒன்று. (கூர்மபு. அட்டமூ. ௨௬. உரை.)

அத்தியாத்துமா — 1. சீவான்மா. 2. பரமான்மா. [ஃஅய்ஹ்யாத்மா: ஃஅயி-மேல். ஃஆத்மா-ஆன்மா.]

அத்தியாத்துமிகநூல்—அத்தியான்மிகநூல்.

அத்தியாத்துமிகம்—1. தன்னால் வருவது. 2. பரமாத்துமாவோடுசம்பந்தமுடையது.

அத்தியாதாநம் — கிரமத்தினின்று மாறுபடுதல். [ஃஅத்யாயாநம்.]

அத்தியாநம்—தியாநாபாவம். 'அத்தியாநதியாநமெனு முபயத்துக்கும்' (ஞானவா. சாகு. அ.) [ஃஅய்ஹ்யாநः அ - எதிர்மறை. ய்யாநம்.]

அத்தியாபகர்—வேதம், நியாயம், வியாகரணம் முதலியவைகளைப் படிப்பிப்போர்; அத்தியாபகர்: ஆசாரியரென்றும் உபாத்தியாயரென்றும் இருவகைப்படுவர். அவருள், ஆசாரியராவார்: உபநயநஞ்செய்து விரதமும் நியமித்து வேதம் படிப்பிப்போராவர். உபாத்தியாயராவார்: வேதநம் வாங்கிப் படிப்பிப்போராவர். [ஃஅய்ஹ்யாவக.]

அத்தியாபநம்—1. படிப்பித்தல். 2. வேதமோதுவித்தல். [ஃஅய்ஹ்யாவநம்.]

அத்தியாபிதம் — படிப்பிக்கப்பட்டது. [ஃஅய்ஹ்யாவிதம்.]

அத்தியாயம்—1. நூற் கூறுபாடு; அது: ஒருசொல் நின்று பலபாக்களுந் தன்பொருளுதவிவருவதாகிய பாகம். 'மலிவறவிந்தவத்தியா யத்தைக் கேட்டவ ரடைகுவர் மாதோ' (கூர்மபு. நவகண். ௭௨.) 2. பாடம். 3. பாடம்படித்தற்கேற்ற காலம். 4. வேதம். 5. வேதமுதலியவைகளையோதுதல். [ஃஅய்ஹ்யாயः ஃஅயி - மேல். ஆய - போதல்.]

அத்தியாருடம்—1. மிகவுயர்ந்தநிலை. 2. மிகுந்தவளர்ச்சி. [ஃஅத்யாரூடம்.]

அத்தியாரோகணம் — அத்தியாரோகம். [ஃஅய்ஹ்யாரொஹணம்.]

அத்தியாரோகம்—ஏறுதல். [ஃஅய்ஹ்யாரொஹः ஃஅயி - மேல். ஃஆரொஹ - ஏறுதல்.]

அத்தியாரோபணம் — அத்தியாரோபம். [ஃஅய்ஹ்யாரொவணம்.]

அத்தியாரோபநம் — அத்தியாரோபம். [ஃஅய்ஹ்யாரொவநம்.]

அத்தியாரோபம்—1. ஒன்றன்றன்மையை மற்றொன்றிலேற்றுதல். கயிற்றைச் சர்ப்பமாக விளக்குதல்போல ஒருவஸ்துவை மற்றொருவஸ்துவாக விளக்குதல். 'அத்தியாரோப மபவாத மென விரண்டா யறைகுவர் கற்பிதமத்தியாரோபமுள்ள-சுத்திபூ டிலாந விரசிதம்விளைத்தல்போலச்சொற்பிரமசத்தினிலா வுலகதுகற் பித்த - லெத்திதுதான் வெள்ளியதின் றிப்பியெனல் போலோர்ந் திறைமெய்பொய் யுலகமெனத் தெளிதலப வாத - மெய்த்த பொருளறியுமிலக் கண மூன்று மவைதாம் விளங்கதத்து வாவிருத்தி தடத்தமொடு சொரூபம்' (வேதா. சூ. ௨அ.) வடநூலார் அதிகதம் - ஆரோபம்: அத்தியாரோபமென வந்ததென்பர் என்றுரைகாரர் கூறுவர். [ஃஅய்ஹ்யாரொவः ஃஅயி; ஆரோப.]

அத்தியாவசியநம் — மிகுந்த அவசியம். (சைவப். ௩௫.) [ஃஅத்யாவஶ்யக; அதி-அதிகம். ஃஆவஶ்யக - அவசியமுடையது.]

அத்தியாவாகநிகம் — அறுவகைச் சீதநங்களுளொன்று; அது: பிதாவின்வீட்டிலிருந்து கணவன்வீட்டுக்குப் புறப்படும்போது நாயகி பெற்றுக்கொள்ளும் பொருள். [ஃஅய்ஹ்யாவாஹநிக: ஃஅயி - மேல். ஆங் - முன். வஹ - கொண்டுபோதல். இக - ஒருவ. வி.]

அத்தியாவிருதவாதம்—ஆவிருதவாதவகைகளிலொன்று; அஃது: அத்திதாதுவை வாயு ஆவரணமாகச் சூழும்போது பிறப்பதொரு நோய். (சீவரட். பக். ௧௬அ.)

அத்தியான்மர்—அண்டபிண்டமிரண்டிலும் வியாபகமாயுள்ள பதின்மூன்று வாயுக்கள்.

அத்தியான்மராமாயணம்—விசுவாமித்திரராற் சொல்லப்பட்ட ஓர் உபதேசநூல். [ஃஅத்யாத்மந; ராமாயணம்.]

அத்தியான்மிகநூல் — ஆன்மஞானத்தைப் பலிப்பிக்கும் நூல்கள்; அவை: சாங்கியம், பாதஞ்சலம், வேதாந்தம் என்னும் மூன்றுமாம். இவை இருடிகளாற் செய்யப்பட்டன என்பர். (சி. கை. பக். கஉ.) [ஆத்யாத்மிக - ஆன்மசம்பந்தமுடைய. நூல்-சாத்திரம்.]

அத்தியான்மிகம் — அத்தியாத்துமிகம். [ஆத்யாத்மிக.]

அத்தியுக்தியலங்காரம் — மிகுதிநவிற்சியணி. (குவல. கூரு.) [அதி; உக்தி-பேசுதல். அலங்காரம்.]

அத்தியுத்தி—1. அதியுக்தியலங்காரம். 2. பெருப்பித்துப் பேசுதல், வன்னித்துப்பேசுதல். [அதி; உக்தி.]

அத்தியூடன்–சிவன். [அத்யூடந: அதி - மேல். ஊட - சுமப்போன்.]

அத்தியேதா — படிக்கிற மாணுக்கன். [அத்யேதா.]

அத்திரசந்தாநம் — அம்பின் தொடர்ச்சி. [அஸ்த்ர ஸந்தாந.]

அத்திரசாத்திரம்–வில்வித்தை. [அஸ்த்ரசாஸ்த்ர: அஸ்த்ர - ஆயுதம். சாஸ்த்ர - வித்தை.]

அத்திரதர்—இரதவீரரில் நான்காம்வகையார். [இஃது, அர்த்தரதர் என்பதன் மரூஉ.]

அத்திரதேவர் — மகோற்சவாதி காலங்களிலே சுவாமிக்குமுன்னே கொண்டுபோகப்படும் ஆயுதவடிவமான ஓர் அதிகாரதேவதாவிக்கிரகம். அது: பூதபிசாசாதிகளால் பிராணிகளுக் கிடையூறுண்டு மணுகாமல், இந்திராதியர்களால் திசைக்காவல் செய்வித்தற்பொருட்டுக்கொண்டுபோகப்படுவது. 'செருவின்மலியத்திரதேவர்தமக்கு விழாமுன்செய்திட்டு' (திருவானை. திருவிழா. கக.) [அஸ்த்ரதேவ.]

அத்திரப்பிரயோகம் — அம்புசெலுத்துதல். [அஸ்த்ர - அம்பு. ப்ரயோக - செலுத்துதல்.]

அத்திரபரீட்சை—1. கலைஞானம் அறுபத்துநான்கனுளொன்று; அது: வில்வித்தை. 2. வில்வித்தைகற்கை. [அஸ்த்ரபரீக்ஷா: அஸ்த்ர - வில். பரீக்ஷா - ஆராய்தல்.]

அத்திரம்–1. அம்பு. 'அத்திரமென் மாரிகொண் டவன்றனை மறைத்தான்' (கந்தபு. தருமகோ. சஎ.) 2. ஆயுதம். 3. இலந்தை. (மூ. அ.) 4. கடுக்காய்ப்பூ. 5. கழுதை. (அக. நி.) 6. குதிரை. 'அத்திரத்தாமா நீ' (பாகவத. பரீட். கo.) 7. கைவிடுபடை. 'அத்திரமேகொண்டெறிய' (திவ். பெரியாழ். 3. 10. 6.) 8. நிலையின்மை. 'அகிலவான் பொருள்கள் யாவு மத்திரமென்றும்' (நல். பார. கிருட்டிண. சகூ.) 9. பதினொருமந்திரங்களு ளொன்று. 'ஒருநூறத்திர நினைந்து' (தணிகை. அகத். ௱கூஅ.) 10. மலை. (அக. நி.) 11. முன்விடும் அம்பு. 12, வாள். 13. வில். 14. குக்குலு. (வைத்தியபரி.) [1, 2, 7, 12, 13. அஸ்த்ர: அஸ் - எறிதல். த்ர - ஒரு கருவிப்பொருள்விகுதி.]

அத்திரமந்திரம் — பதினொருமந்திரங்களிலொன்று; சாந்தியாதீதகலைக்கான மூன்றுமந்திரங்களில் ஒன்று. (சி. வி. கிரி. உக.)

அத்திரமநு— அத்திரமந்திரம். (சி. வி. கிரி. எஎ.) [அஸ்த்ரமநு.]

அத்திரயூகம் — ஒருவகைப் படைவகுப்பு. 'அத்திரயூகமாக வரும்பெருஞ் சேனையை வகுத்து' (பாரத. பதினெட். கடு.) [அஸ்த்ர - அம்பு. வ்யூஹம் - படைவகுப்பு.]

அத்திரலாகவம்— அத்திரப்பிரயோகவன்மை. [அஸ்த்ர லாகவ: அஸ்த்ர - அம்பு. லாகவம் - இலகுத்துவம்.]

அத்திரவர் — விசுவதேவர்களுளொருவர். (வி-ணி. உசரு.)

அத்திரவியம்–1. திரவியமல்லாதது. 'அந்தவாணவமலம் அத்திரவிய ரூபமோ' (சி. சி. வரலாறு. சிவாக்.) 2. நன்குமதிக்கப்படாத பொருள். [அத்ரவ்ய: அ-எதிர்மறை. த்ரவ்யம் - பொருள்.]

அத்திரா—அரசமரம் (வைத்தியபரி.)

அத்திராகரம்—அம்புக்கூடு.

அத்திராகாரம்—ஆயுதசாலை. [அஸ்த்ராகாரம்: அஸ்த்ர - அம்பு. அகாரம் - வீடு.]

அத்திராசம்—அச்சமின்மை. [அத்ராஸ: அ-எதிர்மறை. த்ராஸ - அச்சம்.]

அத்திராதாரம் — அம்புக்கூடு. [அஸ்த்ர - ஆயுதம். ஆதார - கூடு.]

அத்திராபாரம்—அம்புக்கூடு.

அத்திரி—1. இடியேறு. 2. உலைத்துருத்தி. (பிங்க. ௧௭௧௩.) 3. உள்வஸ்திரம். 4. எழுமுனிவர்களுளொருவன். 'அத்திரிப்பெயரந்தணன்' (பாரத. குருகு. ரு.) 5. ஒட்டகம். (பிங்க. ௨௪௬௬.) 6. கணை. (சூ. நிக.) 7. கழுதை. (சூ. நிகண். ௩: ௨௩.) 8. குதிரை. (சூ. நிகண். ௧௧. ௨௩.) 9. கோவேறுகழுதை. 'வானவன்கையனத்திரியேற' (சிலப். கடலாடு. ௧௧௬.) 10. சூரியன். 11. தருமநூல் பதினெட்டிலொன்று. (பிங்க. ௪௪௬.) 12. புல்லிங்க நபுஞ்சகலிங்கங்கள். 13. மரம். 14. மலை. 'சிகராத்திரிகூறிட்டவேலும்' (கந்தரல. ௰௨.) 15. மேகம். [1, 10, 13, 14, 15. அத்ரி. 12. அஸ்த்ர. 4. அத்ரி.]

அத்திரிகிலை—பூமி. [அத்ரிகீலா: அத்ரி - மலை. கீலா - ஆப்புப்போலக்கொண்டது.]

அத்திரிகை—அரப்சரப்பெண்.

அத்திரிசாதன்—1. சந்திரன். 2. முதன்மூன்றுவருணத்தாரு ளொருவன். [அத்ரிஜாத: அத்ரி - ஒருமுனிவன். ஜாத - பிறந்தவன். அத்திரிமுனிவனுடைய கண்ணிற்பிறந்தவனென்றபடி. அ - எதிர்மறை. த்ரி ஜாத - மூன்றுதரம் பிறந்தவன். மூன்றுதரமல்லன் இருதரம் பிறந்தவன் என உபநயனதாரிக்கு வந்த பெயர்.]

அத்திரிசாரம் — இரும்பு. [அத்ரிஸார: அத்ரி - மலை. ஸார - உள்ளீடு.]

அத்திரிசிருங்கம் — மலையின்கொடுமுடி. [அத்ரிஶ்ருங்க: அத்ரி - மலை. ஶ்ருங்க-கொடுமுடி.]

அத்திரிசை — பார்வதிதேவி. [அத்ரிஜா: ஜா - பிறந்தவள்.]

அத்திரிநந்தினி — பார்வதிதேவி. [அத்ரிநந்தினீ: அத்ரி - மலை. நந்தினீ - மகள்.]

அத்திரீசன்—1. இமயமலை. 2. சிவன். [அத்ரீஶ: அத்ரி - மலை. ஈஶ - தலைவன்.]

அத்திரு—அரசமரம். (மலை)

அத்திலை—செருப்படை (மூ. அ)

அத்திவாரம் — அத்திபாரம். 'அத்திவாரமிருத்தி வெண்படிகத் தமைத்ததளத்ததாய்' (அரிச்ச. இந்தி. ௧௬.) [அத்திபாரம் என்றும் பாடம்.]

அத்தின்—அதனின். 'தானத்தின்வேறுகுந் தான்' (சிவஞானபோ. ௩: ௭. வெண்பா.) [அதனின் என்பது அத்தினென மருவிற்று.]

அத்தீர்—குளிர்தாமரை (வைத்தியபரி).

அத்து—1-3. அத்தென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 4. அரைநாண், அரைப்பட்டிகை. (பிங்.) 5. அழிஞ்சில்வேர்ப்பட்டை. (இராசவைத்.) 6. இருப்பதாக எனப் பொருள்படும் ஒரு வடமொழியவ்வியயம். 'சுபமஸ்து'. 7. எல்லை. [தெலுங்கு.] 'இவ்வளவு தூரம்போய்த் திரும்புகிறதென்று ஒரு அத்தேற்படுத்திக்கொண்டு அந்த அத்துக்குள் இன்னவிதசகுனமாகவேண்டுமென்று' (பிரபஞ்ச. கருரு.) 8. ஒரு சாரியை 'அயிலுற்றிடு பொழுதத்தினில்' (கந்தபு. சரவ. ௩௩.) இந்த அத்து என்னுஞ் சாரியைமொழியின் அகரம் மரத்தின்குறை யென்பதிற்போல மகரங்கெடவிதியீறாய்நின்ற அகரத்தின்முன்னும் மகத்துக்கையென்பதிற்போல இயல்பீறாய் நின்ற அகரத்தின்முன்னும் வகரவுடம்படு மெய்பெறுது கெட்டுவரும். 'அத்தினகரமகர முனையில்லை' யென்று ரிலக்கணநூலார். அம் மீற்றுப் பெயர்ச்சொற்கள் ஐ, ஆல், இன், அது என்னும் வேற்றுமையுருபேற்குமிடத்து மரத்தை, மரத்தால், மரத்தின், மரத்தது என்பவற்றிற்போல அத்துச்சாரியைபெற்றே வருதலும் கு; கண் என்னும் வேற்றுமை யுருபேற்குமிடத்து மரத்துக்கு, மரத்துக்கண் என்பவற்றிற்போல அத்துச்சாரியை பெற்றும் மரக்கு, மரக்கண் என்பவற்றிற்போல அத்துச்சாரியை பெறுதும் வரும். 9. கடப்பம்பட்டை. (இராசவைத்.) 10. (சில விடங்களில் வேற்றுமையுருபேற்குங்கால்) அது என்னுஞ் சுட்டுப்பெயர்திரிந்துவரும் ஒரு விகாரமொழி. 'அத்தொடொருமருவு கோன்' (சௌந். ௧௧.) 11. சிவப்பு. (சூ. நிகண். ௧௧. ௧௨.) 12. செவ்வை. 13. துவர். 'ஆடுநீரனவத்துமண்களும்' (சிந்தா. இலக்கணை. ௪௧.) 14. தையல். (பிங்க. ௩௦௫௮.)

அத்துகம்—ஆமணக்கு (மலே.)

அத்துகமானி—அரசமரம். (மலே.)

அத்துச்சம் — கிரகங்களின் அதிகவுச்சம்; சூரியனுக்கு மேடத்திற் க0-ஆம் பாகையும், சந்திரனுக்கு இடபத்தில் ௩-ஆம் பாகையும், செவ்வாய்க்கு மகரத்தில் உ௮-ஆம்பாகையும், புதனுக்குக் கன்னியில் கரு-ஆம் பாகையும், வியாழனுக்குக் கற்கடகத்தில் ரு-ஆம் பாகையும், சுக்கிரனுக்கு மீனத்தில் உஎ-ஆம் பாகையும், சனிக்குத் துலாத்தில் உ0-ஆம் பாகையும் அத்தியுச்சத் தானங்களாகும். (வீமே. ககரு.) [ஸ. த்ருங்கு; இதில் யகரங் கெட்டுத் தகரமிரட்டித்து அத்துச்சமென் றாயிற்று.]

அத்துசம்—மரமஞ்சள் (வைத்தியபரி).

அத்துணை — அவ்வளவு. [துணை-அளவு.]

அத்துதல்— 1. அடைதல். 'அந்தச் சமாசாரம் எசமான்காதிலு மத்திப்போயிற்று'. 2. அப்புதல். 'மருந்தைக் காயத்தின்மேலத்திவைத்தான்' 3. சார்தல். 'என்தோளையத்திக் கொண்டுவரலாகாதா'. 4. பொருத்தியிசைத்தல். (சூ. நிகண். கக. கஉ.)

அத்துமம்—அரத்தை. (மூ. அ.)

அத்துமானி—அரசமரம். (மலே.)

அத்துருக்கம் — அகழியாற் சூழப்பட்ட கோட்டை. [ஸ. அப்துர்க: அப் - நீர். துர்க - கோட்டை.]

அத்துரோகம் — துரோகமின்மை. [ஸ. த்ரோஹ.]

அத்துலாக்கீ—கருஞ்சீரகம். (மூ. அ.)

அத்துவகமனம் — பிரயாணஞ்செய்தல். ஸ. அத்வகமந: அத்வந் - வழி. கமந - போதல்.

அத்துவகன் — 1. தீர்த்தயாத்திரைக்கு வெளிப்பட்டு வழிநடப்போனுய் உண்டியின் பொருட்டுவந்த யாசகன். (பராசர. கூ.) 2. வழிச்செல்வோன். [ஸ. அத்வக: அத்வந் - வழி. க - செல்வோன்.]

அத்துவசுத்தி — ஆறத்துவாக்களினுங் கட்டுப்பட்டிருக்கின்ற போகங்களெல்லாவற்றையும் ஏககாலத்திலே புசித்துத் தொலைப்பித்து மோட்சங்கொடுத்தல். 'அருகமே நால்வர்க்குமத்துவசுத்தி' (சைவச. ஆசாரி. கூ௪.) ஸ. அத்வசுத்தி: அத்வந் - வழி. சுத்தி.

அத்துவசோதனை—அத்துவசுத்தி. (சி.சி. அ: கூ. சிவஞா.)

அத்துவத்திரயம்—அத்துவாக்கள் மூன்று; அவை: சுத்தம், சுத்தாசுத்தம், அசுத்தமென் பன. (சி. சி. உ: எ௪. சிவாக்.)

அத்துவநிட்டம்— வழியிலிருப்பது 'அதை அத்துவநிஷ்டம்பண்ணி' (சி. சி. உ: ௬: சிவாக்.) [ஸ. அத்வநிஷ்டா: நிஷ்டா - இருத்தல்.]

அத்துவம்—1. இரண்டொன்றாயிருத்தல். 2. ஒன்றிப்பு. 3. சிவப்பு. 4. வழி.

அத்துவயதாரகம்—யசுர்வேத உபநிடதங் களுளொன்று. (கூர்மபு. அட்டமூ. உகூ. உரை.)

அத்துவயம்—1. இரண்டன்மை. 2. (வேதாந்தம்) பிரமமும் பிரபஞ்சமு மொரு பொருளானதன்மை. [ஸ. அத்வய: அ - எதிர்மறை. த்வய - இரண்டு.]

அத்துவயவாதி—1. பிரமமும் பிரபஞ்சமு மொன்றெனச் சாதிப்போன். 2. பௌத்தன். [ஸ. அத்வயவாதிந்: அ - எதிர்மறை. த்வயவாதிந் - இரண்டென்போன்.]

அத்துவயன்—பௌத்தன். [ஸ. அத்வய:]

அத்துவர்—பிரமஞானிகள்.

அத்துவர்க்கயம்—கருஞ்சீரகம். (வைத்தியபரி.)

அத்துவர்க்காயம் — 1. கருஞ்சீரகம். (வைத்தியபரி.) 2. சீரகம்.

அத்துவரியு—1. யசுர்வேதம். 2. யசுர்வேதஞானியாகிய யாகபுரோகிதன். 'வன்றிறல் வசுக்களத்து வரியுநற் பிருகு வோதா, வொன்றுநான் முகத்தோன் மிக்க பிரமனுற் காதா' (மச்சபு. சந்திரோ. கஉ. [ஸ. அத்வர்யு.]

அத்துவரியுவேதம் — யசுர்வேதம். [ஸ. அத்வர்யுவேத.]

அத்துவலிங்கம் — ஆன்மதத்துவம் அடிப் பாகமும் வித்தியாதத்துவம் நடுப்பாகமுஞ் சிவதத்துவங் கடைப்பாகமுமாக அமைந்த சிவலிங்கம். 'மண்முதற் சிவமீறான வத்துவ லிங்கந்தன்னை' (திருவிளை. இந்திரன்முடி. க௩.)

அத்துவா — 1. ஆன்மாக்களைப் பரகதி யடைவிக்கை காரணமாகிய வழி; அது: மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணத்துவா,

புவனாத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா என ஆறு. இவற்றுள்; மந்திரம், கக. பதம், அக. வர்ணம், ருக. புவனம். உஉச. தத்துவம், ௩௬. கலை. ரு. 'அத்துவாசுத்தி' (சைவச. ஆசாரி. சுச. உரை.) 2. வழி. [ஸ்வா.]

அத்துவாக்காயம்—1. கருஞ்சீரகம். (வைத்தியபரி.) 2. சீரகம்.

அத்துவாகாயாரோணம் — ஒரு தீட்சை. (த. நி. போ. உகக.)

அத்துவாசங்கற்பவாதி—அத்துவாவடிவாகச் சிவனைப்பாவிப்போன். (த.நி.போ.௩0௩.)

அத்துவாசுத்தி — ஆறத்துவாக்களிலுஞ் சஞ்சிதமாயிருந்தகன்மங்களையெல்லாம் நசிப்பித்தல். 'அழிவிலாக் கிரியையினுலாதல் சத்திமத்தாலாத லத்துவாசுத்திபண்ணி மலமகற்றி' (சி. சி. அ: சு. சிவாக்.)

அத்துவாசுத்திபண்ணல் — அத்துவாக்களிலே சாங்கங்களுக்கு ஏதுவானகன்மங்களையெல்லாஞ் சுத்திகரித்தல். (சி. சி. அ: சு.)

அத்துவாசைவம் — பதினறுசைவங்களிலொன்று; அது: சத்திநிபாதம் வரப்பெற்றசீடன் சைவவேடங்களைத்தரித்து அத்துவசோதனைசெய்து அத்துவாக்களின்முடிவைத்தியானித்துச் சிவனை வழிபடும் நெறி.

அத்துவாந்தம் — காலைமாலை வெளிச்சம். [அ-எதிர்மறை. ஸ்வாந்த - இருள்.]

அத்துவாமூர்த்தி—மந்திரமுதலியஆறத்துவாக்களையுந் திருமேனியாகக்கொண்ட சதாசிவர்க்குப் பிரானபூதராகிய பரமசிவன். 'அத்துவாமூர்த்தியாக வறைகுவதென்னையென்னி - வித்தனுய் நிறைந்தவற்றினீங்கிடாநிலைமையாலுஞ்-சித்துடனசித்துக்கெல்லாஞ் சேட்டிதனுகலாலும்- வைத்ததாமத்துவாவும் வடிவென மறைகளெல்லாம்' (சி. சி. சு: ருசு.) [சாந்தியதீதை, சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவிர்த்தி என்னுங் கலைகளைந்தும் முறையே முடி, முகம், மார்பு, குய்யம், முழந்தாள்பாதம் என்னும் அங்கங்களாகவும், புவனங்கள் உரோமங்களாகவும், வர்ணங்கள் தோலாகவும், மந்திரங்கள் இரத்தமாகவும், பதங்கள் நரம்பாகவும், தத்துவங்கள் என்பும் தசையுமாகவும் சதாசிவர்க்கு ஆறத்துவாக்களுந் திருமேனியாயின.]

அத்துவானம்—1. செவ்வானம். 2. பாழ்ங்காடு.

அத்துவிதநிலை—சிவமும் ஆன்மாவும் தம்முள் வேறற ஒற்றுமைப்பட்டுநிற்றல். 'அப்பெற்றித்தாகிய வருட்கண்ணை முதல்வன் பருவம்பார்த்திருந்து கொடுக்கப்பெற்றுடையார்க்கே யவன் அறிவுக்கறிவாய்நின் றவ்வாறுபகரித்துவரும் அத்துவிதநிலையினிது விளங்குமென்பதாம்' (சி.சி.கக: அ.சிவஞா.)

அத்துவிதபாஷியம்—வியாசசூத்திரத்திற்குச் சங்கராசாரியர் செய்த பாஷியம். இது, பரமான்ம ஐக்கியமான அத்துவித சுவரூபத்தைக் கூறுவது.

அத்துவிதம்— 1. பேதப்பொருளிரண்டு தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்தவிசேடம். அஃதாவது பொருளிரண்டாயிருந்தும் வேறறக் கலந்துநிற்குந்தன்மை. (சிவஞானபோ. கஉ. சூ. ரு. வெண்பா. சிவஞா.) 2. இரண்டுபொருளாயிராமை. 'உண்மைச்சுத்தவத்துவிதமான சுயம்பிரகாசமாகும்' (திருவிளை. வேதத்து. உகூ.) [ஸ்த்வியம்: அ - எதிர்மறை. த்வியம் - இரண்டுவகை.]

அத்துவிதர்—பரமான்மாவோடிரண்டறக் கலந்தவர். 'துகளற்ற - அத்துவிதர்க் கேதுமுதியா' (ஒழிவி. அ: ௩.)

அத்துவிதாநந்தம்—எண்வகையாநந்தங்களிலொன்று; அது: சீவன் வேறு, பிரமம் வேறு எனக்கொள்ளும் துவிதஞானம் நீங்கியவிடத்துண்டான ஆநந்தம். 'விரியுமுலகனைத்தும்போய் மெய்ம்மைதானென்னும் விவேகத்திற் றோன்றுவதே யத்துவிதாநந்தம்' (வேதா. சூ. ௩ரு.) [அத்விதாநந்த: த்வித - இரண்டின்மை. ஆநந்த - மகிழ்ச்சி.]

அத்துவிதீயம் — இரண்டாவதில்லாமை. [அத்விதீய: அ - எதிர்மறை. த்விதீய - இரண்டாவது.]

அத்துவேஷம்—துவேஷமின்மை.

அத்துவை—1. காலம். 2. தூரம். 3. மூலைகோழைகளின் கரைவு. [ஸ்வா:]

அத்துவைதம்—1. இரண்டன்மை. 2. பரமான்மாவும் சீவான்மாவும் ஒருபொருளென்றுகொள்கை. 3. பிரமம். [அத்வைத; அ - எதிர்மறை. த்வைத - இருதன்மை.]

அத்துவைதவாதி — அத்துவிதமே மெய்யென்று சாதிப்போன்; இவன், சிற்சத்தியே சகத்துக்கு உபாதானகாரணமென்பன். 'அத்வைதவாதிநிராசார்த்தமாக' (சி. சி. உ: ருரு. சிவாக்.)

அத்துவைதி—அத்துவிதக்கொள்கையுடையோன் (த. நி. போ. சரு.)

அத்தூரம்—மரமஞ்சள். (மூ. அ.)

அத்தேயம் — 1. களவுசெய்யநினையாமை. 'ஏதிலார்தம் பொருள்களி லேதேனுங் கவர வெண்ணுமை - தீதிலாவத்தேயம்' (சூத. ஞாந. கரு. எ.) 2. களவுசெய்யாமை. [ஸ்தேய: அ-எதிர்மறை. ஸ்தேய -களவு.]

அத்தை — 1. அதனை. (அதுவென்பது இரண்டாம்வேற்றுமையுருபேற்றுநின்றது.) 'அத்தையறியாதே சுட்டி' (தாயு. ஆநந்தக். கரு.) 2. ஒரு முன்னிலையசைச்சொல். 'நடுக்கின்றி நிலியரோவத்தை' (புறநா. உ: உ0.) 3. கற்றுழை. (இராசவைத்.) 4. குருவின் மனைவி. 5. தமக்கை. 6. தலைவி. 'அத்தைக்கு மெய்ப்பங்களித்தோய்' (புலியூர். சுகூ.) 7. பிதாவுடன்பிறந்தாள். 'கானிடையத்தைக் குற்ற குற்றமும்' (இராமா. பாச. கக.) 8. பெண்கொடுத்தமாமி. 'மாமியை அத்தையைத் தோயின்' (கூர்மபு. பிராய. க.) 9. மாதா. [4, 5, 8, 9 அத்தா.] 10. கணவன்தாய்.

அத்தோ—1. ஓர் அதிசய இரக்கச்சொல். 2. ஓர் இரக்கச்சொல்.

அத்தோதயம்—அர்த்தோதயம்.

அத்தோர்யாமம் — 1. ஒரு யாகம். அது சோதிட்டோமயாகத்தின் இறுவாயாகிய ஏழாம்பகுதி. 'அத்தோர்யாமத்திருப்பே - ரீட்டுமகமிழைத்தபலத்தெட்டுமடங்கெய்திடுவன்' (சேதுபு. பலதீ. உ0.) 2. சாமவேதத்தினுள்ள ஒரு சுலோகம்; அது, அத்தோர்யாம முடிவிலே அத்தியயநஞ்செய்யப்படுவது. [ஸ்ஹோய-ர்ம:]

அத்யாபி—இப்போதும். 'அத்யாபி அப்படியே நடந்துவருகிறது'.

அத்யுச்சம்—அத்துச்சம். 'அறிவுறுமத்யுச்சமாமதற் கேழ்நீச மன்னவையே' (விதாந. நட்பா. உ.) [அதி; உச்சம்.]

அத்ர—இங்கே அல்லது இதுகாரியத்திலெனப் பொருள்படும் ஒருவடமொழியவ்வியயம். 'அத்ர சிற்சத்திப் பிரமாணமென்னும் பொதுப்பிரமாணமானது பிரமிதியாகாது' (சி. சி. அளவை. க. சிவாக்.) [ஸத்ர.]

அத்விதீயம்— 1. இரண்டாவதாக உண்டென்றுசொல்லவொன்றில்லாமை. 2. ஒப்புமைசொல்ல வொன்றில்லாமை. 3. தனிமை. 4. பரப்பிரமம். [ஸத்விதீய: அ - எதிர்மறை. த்விதீய - இரண்டாவது.]

அத்விதீயன்—1. அத்விதீயத்தன்மையுடையான். 2. பரப்பிரமம். [ஸத்விதீய: அ - எதிர்மறை. த்விதீய.]

அத்வைதி—அத்துவைதி. (த. நி. போ. சரு.) [ஸத்வைதீ.]

அதக்குதல் —1. இளக்குதல். 2. கசக்குதல். 3. குதப்பல். 4. கெடுத்தல். 'மாவலியைக் குறும்பதக்கி' (திவ். பெரியாழ். 4. 9. 7.)

அதகம்—1. சுக்கு. (தைல.) 2. பெருமருந்துக்கொடி. 3. மருந்து. 'மலைமறையதக மாற்றியவதுபோல்' (கல்லா. அ.) [ஸஅகம்.]

4. உயிர்தருமருந்து. (பிங்.) 5. முத்துமுருந்து. (வைத்தியபரி.)

அதகன்—வைத்தியன். 'உறுதுயரந் தீர்த்த வதகன்' (திவ். பெரியாழ். 2. 1. 9.) [ஸஅத: மெய்க்நிலைமாற்றம்.]

அதங்கம்—ஈயம். (மூ. அ.)

அதங்கோட்டாசான்—அகத்தியமுனிவரிடங் கற்ற தொல்காப்பியர் முதலிய பன்னிரு மாணவர்களில் ஒருவர். 'அதங்கோட் டாசாற் கரிறபத்தெரித்து' (தொல். சிறப்புப் பா.)

அதசம்—1. ஆயுதம். 2. ஆன்மா. 3. காற்று. 4. சணல்நூலினாலே செய்யப்பட்ட சீலை. [அதஸ்.]

அதசி—சணல். [அதஸீ.]

அதசிரசு— பரிதாநம்வாங்குவோர் புகும் நரகு.

அதசு—நாசம். [ஹத.]

அதசுரோதோபவம் — இருவகைச் சைவாகமங்களுளொன்று. 'மற்றதிற் பிரமா கமமுறைதருமம்விசேடமாமாயனுகமஞ்சொன்னற்றரு மந்தா னதனினும் விசேட மதனினு நயச்சைவா கமஞ்சொல் - பொற்றரு மந்தான் விசேடமாம் புகலீ ததசுரோ தோபவ

மென்றும் - பற்றுறுசிர்சாலூர்த்துவசுரோதோபவமென்றுமிருவகைப்படுமால்'; 'முன்னதுகாபாலாதிபேதத்தான்மொழிபலவிதப்படுமதனிற் - பின்னதுகாமிகாதிபேதத்தாற்பேசிடு மிருபத்தெண்வகையாய்' (சூத.எக்கி. பூ. உ0. கரு, கசு.)

அதட்டம்—1. அரவின் நச்சுப்பல். 2. அரவுயிர்ப்பு.(சூடா.)[ஆப்தேயென்னும்அகராதிகாரரால் 'பல்லில்லாதது' 'பல்லில்லாப்பாம்பு' 'பல்லுப்பிடுங்கப்பட்ட பாம்பு' எனவும், சிந்தா. பதுமை - கஉக -ல் நச்சினர்க்கினியரால் 'பாம்பின் கீழ்வாய்ப்பல்' எனவும் இச்சொற்குப் பொருள் கூறப்பட்டன. ஸ—தம்ஷ்ட்ர: தம்ஷ்ட்ர - பல்.]

அதட்டல்—1. அமட்டல், புரட்டுநியாயம் பேசல். 2. உரப்புதல். 'கார்போற் குழற்சரியவேவாயதட்டி' (திருப்பு. உசுச.) 3. உறுக்குதல். 'உரத்ததொனியோடதட்டி' (நல். பார. உத்தர. நிரை. ருசு.)

அதட்டு-1-3. அதட்டென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், பெயரெச்சத்தொகையும். 4. உறுக்கு.

அதட்டுதல்—அதட்டல்.

அதடம்—மலைமுதலியவற்றின் சரிவில்லாத இறக்கம். [ஸ—அதட: அ - எதிர்மறை. தட - சரிவு.]

அதத்குணலங்காரம்—பிறிதின்குணப் பெறாமையணி. (குவல. எஎ.) [ஸ—அதத்குணாலங்கார.]

அதத்தம்—அபலக்கொடை.[ஸ—அதத்தம்; அ- இன்மை. தத்தம் - பலக்கொடை.]

அதத்துவாவிருத்தி—சரீரம் முதலியவைகளை யுத்தியால் நேதிகளைந்து எஞ்சிநின்ற ஆன்மாவைத் தெரிவித்தல். 'ஆகமுதலனநேதியதுசெய்துநின்ற வாருயிரையறிவித்த லதத்துவாவிருத்தி' (வேதா - சூ. உக.) [ஸ—அதத்வாவ்ருத்தி: அதத் - அதுவல்லாதது. வ்யாவ்ருத்தி - நீக்குதல். யகரங்கெட்டு வாவிருத்தியென்றாயிற்று.]

அதத்துவியாவிருத்தம்—மற்றைப்பொருளினின்று நீங்கி இலக்கியத்திலிருக்கும் இலக்கணம். (சைவப். உ.) [ஸ—அதத்வ்யாவ்ருத்த.]

அதநம்—1. அதிகம். (அதநு என்பதன் திரிபு.) 2. போதல். [ஸ—அதநம்.]

அதநு—1. அற்பமல்லாதது. 2. பருமையானது. [ஸ—அதநு: அ-எதிர்மறை. தநு - அற்பம்.]

அதப்பாதாளம்—எட்டாத ஆழம்.

அதபம்—குளிர்ச்சி. [ஸ—அதப.]

அதபலோகம் — (பௌத்தம்.) பிரமலோகம் இருபதனுட் பதின்மூன்றாவது. (மணிமே. பதிக. ரு.)

அதம்—1. அத்திமரம். (சூடா.) 2. கீழ். 3. சங்காரம். 'அதமுறமடிந்தபின்னர்'. (ஞானவா. வீமபா. கரு.) 4. பள்ளம். 5. பாதாலம். 6. பின்பு. 7. தாழ்வு. [2, 4, 5. ஸ—அதஸ். 3. ஹத. 6. அத.]

அதம்பம்—கற்பரிபாஷாணம்;அது, இயற்கைப்பாஷாணம் முப்பத்திரண்டிலொன்று. (மூ. அ.)

அதம்பழம் — அளிந்தபழம். (அருங்கலச். 123.)

அதம்புதல்—அதட்டுதல். [வழக்.]

அதமசரீரம் — பரலோக இகலோகபுத்திகள் இல்லாதிருக்கின்ற சீவனைக்கொண்டசரீரம்: கற்பகவிருட்சம், பாரிசாதம் முதலாயின அதமசரீரம். (நாநா. கட். கரு-வது.) [ஸ—அதம; ஶரீர.]

அதமசிருட்டி — ஐவகைச்சிருட்டிகளுள் ஒன்று; இச்சிருட்டிகாலத்திலே குணநிலயப்பிரமவிட்டுணுக்களும் பிரமாண்டநிலயப்பிரமவிட்டுணுக்களுங் குணதிபிருதிவியந்த புவநங்களிற் போக்கியப்பொருள்களையுந் தூலதேகங்களையும் தேவர்முதலிய தேகிகளையும் படைத்துக்காப்பர். (சைவப். நுஅ.) [ஸ—அதம - கீழான. ஸ்ருஷ்டி - படைப்பு.]

அதமத்தோற்கருவி — முழவேழ்வகையிலொன்று; அது: கணப்பறைமுதலான புறமுழவும், நெய்தற்பறைமுதலான புறப்புறமுழவுமாம். (சிலப். அரங்கே. உஎ. உரை.)

அதமதசம்—வெண்காரம்.(வைத்தியபரி.)

அதமதமப்பிராரத்தம்—அதமதரப்பிராரத்தத்தினும் அதிகப்பட்டபிராரத்தம்; அது: இட்டப்படிநடத்தல், புசித்தல் முதலிய பிரமாதங்களுக்கேதுவானது.(விசாரசா.ருசுக)

[அதமதரப்ராரப்தம். அதமதரம் - இழிந்தனபலவி னிழிந்தது. ப்ராரப்தம் - பயனளிக்கத்தொடங்கும் வினை.]

**அதமதாப்பிராரத்தம்** — கனிட்டப்பிராரத் தத்தினும் அதிகப்பட்ட அதமமான பிராரத் தம். அது, முதலிலே நிவிர்த்திக்கும் பின் பிரவிர்த்திக்கும் காரணமாவது. (விசாரசா. நகூக. பக்.) [அதமதாப்ராரப்தம். அதம தரம் - இழிந்தவையிரண்டிற் றாழ்ந்தது.]

**அதமதானம்** — கடைப்படுதானம்; அது: ஆசை, புகழ், அச்சம், கைம்மாறு, கண் ணோட்டம், கடப்பாடு முதலியகாரணம்பற் றிக் கொடுக்கப்படுங் கொடை. (திவாகர. கஉ. [அதம-இழிந்தது. தானம் - கொடை.]

**அதமபட்சம்**—மிகக்குறைந்தபடி. [அதம பக்ஷ.]

**அதமபிருதகன்** — சுமைகாரன். [அதம ப்ருதக: அதம-கீழான. ப்ருதக - வேலை செய்வோன்.]

**அதமம்**—1. கடைத்தரம். 'தங்கா வதமப் புகழ்க் கம்ப' (கம்பரந். ருக.) 2. மிக்ககேடு. [அதம.]

**அதமர்**—கடையாயார், கடைத்தரமான வர். 'கம்பவாழ்தருமந்தரதமர்க்கெட்டார்' (கம்பரந். சுஉ)

**அதமர்ணிகன்** — கடன்வாங்கினவன். 'உபாயமாவது அதமர்ணன் பந்துக்களைக் கொண்டு அவனுக்கு நல்வார்த்தைசொல்லி யாவது' (மநு. அ: சக.) [அதமர்ணிக: அதம - கீழான. ருணிக - கடனுடையவன்.]

**அதமவாசான்** — மூவகைக் குரவருட் கடைத்தரமானவன்; இவன், வைசியர்க்குஞ் சூத்திரர்க்குங் குரு. 'நாய்கர் குலத்துள் ளானதமவாசான்' 'அதமவாசான் வைசி யர்க்கு மொழுக்கம்பூண்ட விழுக்குடிச்சூத்தி ரர்க்கு மேதகு குரவனுவான்' (சூத. சூத்தி. ரு: ச. ரு.)

**அதமவிஞ்சதி**—பிரபவ முதலிய அறுபது வருடங்களிலே தீதாகவிளங்கும் காலமாகிய பின்னிருபதுவருடம். (பரகிதம். ரு)[அதம- தாழ்ந்த. விம்சதி - இருபது.]

**அதமன்**—1. கீழானவன். 2. நாணமில் லாக் காமி. [அதம.]

**அதமாங்கம்**—பாதம். [அதமாங்க: அதம- தாழ்ந்த. அங்க-உறுப்பு.]

**அதமாதமன்** — மிகக்கீழ்மையானவன். [அதமாதம.]

**அதர்** — 1. ஆட்டின்கழுத்திலே கழலை போலத் தூங்குமது. 2. கிடங்கு. 3. நுண் மணல். 4. புழுதி. 5. முறைமை. (இராச வைத்.) 6. வழி. 'ஆனினங்கலித்தவதர்' (புறநா. கநஅ.) 7. விலங்குசெல்வழி. 'தேக் குயர்கல்லதர்கடிதுசேணிடைப் - போக்கிய பொருளெனக்கின்றுபோந்ததால்' (இராமா. மந்தரைசூ. ருக.)

**அதர்க்கன்**—குதர்க்கி [அதர்க்க: அ-எதிர் மறை. தர்க்க - நியாயம்.]

**அதர்கொளல்**—வழிபிற் பறித்தல்.

**அதர்கோள்** — வழிப்போக்கருடைய பொருளைப்பறித்தல். (திவாகர. கூவது.) [அதர்-வழி. கோள் - கொள்ளல்.]

**அதர்ப்படுதல்**— நெறிப்படுதல். 'அதர்ப் படயாத்தல்' (தொல். பொரு. 652.)

**அதர்பறித்தல்**—கிடங்குவெட்டல்.

**அதர்மசாரி** — அதர்மவழியிற் செல்லு வோன். [அதர்மசாரிந்: அதர்ம - தரும மல்லாதது. சாரிந் - சார்பவன்.]

**அதர்மாசாரி**—துராசாரி. [அதர்ம; ஆசாரீ.]

**அதர்மம்**—தருமமல்லாதது, பாவம்; அது, வேதத்தில் விதிக்கப்பட்டன செய்யாமையும் விலக்கப்பட்டன செய்தலுமாம். [அதர்ம: அ - எதிர்மறை. தர்ம - நற்செயல்.]

**அதர்மன்** — சதருத்திரருள்ளே இயம திசையிலிருக்கும் ஒருவன். (வி. ஞி. உஎ0.)

**அதர்மாத்திகாயம்**—அதருமாத்திகாயம்.

**அதர்வசிகை**—அதர்வணவேத உபநிடதத் தொன்று. 'நான்மறைத்தலையாமதர்வசிகை நவிலும்' (காஞ்சிப். சார்ந்தா. கசு.) [அதர்வசிகா.]

**அதர்வசிரசு**—அதர்வணவேத உபநிடதத் தொன்று. (சி. சி. அ: கக. உரை. மறை.) [அதர்வசிரஸ்.]

**அதர்வசிரம்**—அதர்வசிரசு.

அதர்வணம் — நான்காம்வேதம். 'வியன் புருடம் விழுத்தகு மதர்வணமயமாம்' (திருவாஸெ. கோச்செங். கஉஎ.) சுமந்து முனிவர்க்கு உபதேசிக்க, அவர்வழியாகக் கபந்தர், தேவதரிசர், பத்தியர், மேதன், பிரமபலி, சவுல்காயநி, பிப்பலாதன், சாபாலி, குமுதாதி, சௌநகர் முதலாயினோர்க்கு உபதேசிக்கப்பட்டமையால் ஐம்பதுசாகைகளாயிற்று. (கூர்மபு. வருண. கஉ. உரை.) இது முன்னைய மூன்றுவேதமும் போலாது இடையாய வேதமென்றும் வேள்வி முதலிய ஒழுக்கங் கூறுது பெரும்பான்மையும் உயிர்கட்கு ஆக்கமேயன்றிக் கேடுசூழும் மந்திரங்களையுங் கூறுமென்றும் நச்சினார்க்கினியர் சொல்வர். (தொல். பொரு. எகு. உரை.) [ஃஅயவ-ன்.]

அதர்வணவேதோபநிடதங்கள்—அதர்வண வேதத்திற்குரிய உபநிடதங்கள்; அவை:- காருடம், தத்தாத்திரேயம், அயக்கிரீவம், கிருஷ்ணம், கோபாலதபநம், பிரச்சிநம், திரிபாத்விபூதிமகாநாராயணம், இராமரகசியம், முண்டகம், மாண்டுக்கியம், அதர்வசிரசு, அதர்வசிகை, கணபதி, மகாவாக்கியம், பஸ்மசாபாலம், பாவனை, தேவி, திரிபுராதபநி, பரப்பிரமம், பாசுபதம், ஆத்மம், சூரியன், அன்னபூரணி, பிருகச்சாபாலம், நரசிம்மதாபநி, நாரதபரிவிராசகம், சீதை, இராமதாபநி, சரபம், சாண்டில்லியம், பரமகம்சபரிவிராசகம் என்னும் முப்பத்தொன்றும். (கூர்மபு. அட்டமூ. உசு. உரை.)

அதர்வணன் — சிவன். [ஃஅயவ-ணெ: ஃஅயவ-ன் - நான்காம்வேதம். ண - ஒரு விகுதி.]

அதர்வணி — அதர்வவேதத்திலே நற்பயிற்சியுடைய பிராமணன். [ஃஅயவ-ணி: ஃஅயவ-ன் - நான்காம்வேதம். ணி - ஒரு விகுதி.]

அதர்வம் — நான்காம்வேதம். 'அதர்வவேதம்'

அதர்வவேதம்—நான்காம்வேதம். 'விண்டதர்வவேதம்' (காஞ்சிப். வைரவ. கஉ.) [ஃஅயவ-ன்வேட.]

அதரபானம் — அதரத்திலூறும்நீரைச் சுவைத்தல். 'பற்பலர்க்களித்தனரதரபானமே' (உபதேச. திரிபுர. கக௦.) [ஃஅயர - உதடு. பானம் - குடித்தல்.]

அதரம்—1. இழிந்தது. 2. உதடு. 'மணியதரம் புடைதுடிப்ப' (பெரியபு. திருஞான. கூஉ.) 3. கீழுதடு. (பிங்க. க௦௩எ.) 4. கீழுள்ளது. 5. பெண்குறி. [ஃஅயர.] 6. மஞ்சள். (வைத்தியபரி.)

அதரமதம்—இதழூறல்.

அதரமது—அதராமிர்தம். [ஃஅயர; ஃமயு- தேன்.]

அதராமிருதம்—அதர ஊறல். [ஃஅயராமுத: ஃஅயர - உதடு. ஃஅமுத.]

அதராவலோபம்— இதழதுக்கல். [ஃஅயராவலொவ: ஃஅயர - உதடு. ஃஅவலொவ - அதுக்கல்.]

அதரிகொள்ளுதல்—1. கடாவிடுதல். 'அதரி கொள்பவர்' (மதுரைக். கூச.) 2. பகையழித்தல். (புறநா. 373)

அதரிசநம்—1. காணப்படாதிருத்தல். 2. சொல்லுத் தொக்குநிற்றல். 3. பார்வையின்மை. [ஃஅஷஂந: அ - எதிர்மறை. ஃஷஂநம - பார்வை.]

அதரிசநன்—1. கடவுள். 2. குருடன். [ஃஅஷஂந: கடவுளுக்குக் காணப்படாதவன் என்பதுபற்றியும், குருடனுக்குப் பார்வையில்லாதவன் என்பதுபற்றியும் வந்த பெயர்.]

அதரிசி—அதரிசநன்.

அதரிடைச்செலவு — வீரர் நிரைமீட்சிக்குப் புறப்படும் புறத்துறை. (பு. வெ. 2. 3.)

அதரித்திரன்—1. கன்னன். 2. செல்வன். [ஃஅஷரிஷ:]

அதரிதிரித்தல்—கடாவிடல். 'கோட்டுமாப் பூட்டி வாட்கோ லாக, வாளழி வாங்கியதரி திரித்த' (சிலப். கால்கோ. உ௩௩.)

அதருமம்—அதர்மம். (தர்க்கபா. சு௩.)

அதருமாத்திகாயம் — அதர்மாத்திகாயம்; இது, பஞ்சாஸ்திகாயத் தொன்று. 'நிரந்து ழேதருமாத்திகாயமது நித்தமாயது நிறுத்திடும்' (சி. சி. பர. நிகண். எ.)

அதலதுதலம்—கலகம். (வழக்.)

அதலம்—1. கீழுலகத்திலே முதலாவதான உலகம். 'அதலவிதலமுதலந்தத்தலங்களென்னக்' (திருப்பு. கஉடு.) 2. பாதலம். 'வம்பருவதலமேழும்பதங்களாய்' (நல். பார. தருமசாத். கஙு.) [அதல: அ - எதிர்மறை. தல - அடி.]

அதலழலி—ஆடுதின்னுப்பாளை. (மூ. அ.)

அதலன்—சிவன். [அதல.]

அதவம் — அத்திமரம். 'அதவமாப்நறுநெயுண்டுலகிலன்பர்கருதிற் - றுதவுசேவடியினுலமலனுந்துதலுமே' (இராமா. விராதன் வதை. சடு.) [ௐதவம.]

அதவா — அல்லதென்பதை யுணர்த்தும் ஒரு வடமொழி யவ்வியயம். 'அதவா முரட்போர் தனக்கஞ்சு மோவென்று மடலங்கர்கோன்' (பாரத. பதினே. உஙஉ). [ஃஅவா.]

அதவிடம்—அதிவிடயமூலிகை. (வைத்தியபரி.) [இது அதிவிடயமென்பதன் மரூஉ.]

அதவு — 1. அத்திமரம். 'அதவுதிரரிசியன்ன' (கல்லா. கூஅ.) 2. பள்ளம். ஃஅவஃ.

அதவுதல்-1. கொல்லுதல். 'முதலைமடுவினிலதவிய புயலென' (திருப்பு. உஎஅ.) 2. எதிர்த்து நெருக்குதல். 'அதவிப்போர் யானையொசித்து' (திவ். இயற். 2. 89.)

அதவுநெய்-அத்திப்பிசின். (வைத்தியபரி)

அதவை—கீழ்மகன்.

அதழ் — பூவிதழ். 'ஞெகிழதழ்க்கோடலும்' (கலித்தொகை. முல்லை. க.)

அதள்—1. களகம்பளம். 2. தோல். 'அதளெறிந்தன்ன' (புறநா. கககூ.) 3. மரப்பட்டை. 'வேங்கையதள்' (தைல. தைலவ. சகூ.)

அதள்புனையரணம் — தோற்கைத்தளமென்னுங் கருவி. 'அதள்புனையரணமும்' (சிலப். ஊர்காண். கஎ0.)

அதளி—ஆரவாரம். (வழக்.)

அதளை — 1. ஒரு பெரும்பாத்திரம். 2. நிலப்பீர்க்கஞ்செடி. 'அதளைக்காய் வாய்க்குருசியாயிருக்கும்' (பதார்த்த. எக0.) 3. புளியம்பழக்களியுண்டை (வைத்தியபரி). 4. வயலிற்கட்டுங் காவற்குடில்.

அதறுதல்—பதறுதல். [திசைச்.]

அதன்மம் — பாவம். 'அருளினுலுரைத்தநூலின்வழிவராததன்மஞ்செய்யின்' (சி.சி. உ; ருரு.) [ஃஅமீ:]

அதன்மர்—கீழ்மக்கள். (பிங்).

அதன்மாத்திகாயம்—1. அதர்மாத்திகாயம்; சமணமதத்திற் சொல்லிய அசிவபதார்த்தத்தினது நான்குவகையுள் ஒன்றாய்த் தீமைபயப்பதோரத்திகாயம். (சிவஞானபா. ருடு; ருகூ. பக்.) 2. பாவத்தினுலெடுக்குந்தேகம். (சி. சி. பர. நிகண். எ. உரை.)

அதர்—அத்தி. (வைத்தியபரி.)

அதாங்கி—ஒரு காட்டுமரம்.

அதாசலம்—காட்டுமல்லிகை. (மலை.)

அதாதா—உலோபி. [ஃஅதா: அ-எதிர்மறை. தா - கொடையாளி.]

அதாதிமந்தம்—அதாதிமந்தரோகம்; அது: அதிமந்தரோகம் ஐவகையுள் ஒன்று. (சீவரட். உருகூ.) [ஹதாயிஃ:]

அதாதிமந்தரோகம் — கண்களிலே விரணத்தைப் பிறப்பித்துப் பார்வையைக்கெடுக்கும் ஒ வகைநோய். (சீவரட். உருக.)

அதாதிரு—1. லோபி. 2. (மகளை) விவாகம் பண்ணிக்கொடாதவன்.

அதாது—தாதுவல்லாதது. 'அருத்தவத்தாதப்பிரத்தியமாகித் - திருத்தகநிற்பது பிராதிபதிகம்' (பி.வி.எ. உரை.) [ஃயாதா: அ-எதிர்மறை. யாதா - வினைப்பகுதி.]

அதாயன் — தாயத்துக் குரிமையில்லாதவன். [ஃஅதாய: அ - எதிர்மறை. தாய - தாயத்திற்குரியவன்.]

அதாரன் — விவாகஞ்செய்யாதவன். [ஃஅதார; அ - எதிர்மறை. தார-மனையாளையுடையவன்.]

அதாலத்து—நியாயஸ்தலம். [அரபி.]

அதி—1. அதிகம், அப்பால், மேல், மேன்மையென்பவைகளையுணர்த்தும் ஒருபசர்க்கம். [அதி.] 2. வலைச்சாதி. 'காதலியோ டதியரையன் கனகமழை பொழிந்து' (திருவாலவா. 22. 18) 3. மிகுதிப்பொருளதோரிடைச்சொல் (குறள் 636 உரை.)

அதிக்கம்—மேன்மை. 'அதிக்கமன்னவர் முகம்' (இரகு. கடிமண. ச0.)

அதிக்கிரமம் — 1. அசட்டை. 2. அதிகப்படல். 3. கடந்துபோதல். 4. கேடுசெய்தல். 'அன்னதன்மைய னதிக்கிரமங்கள் சேட்டு' (இராமா: உத்தா. வரையெடு. ௨.) 5. மாறுபடுதல் 6. மீறுதல். [ஸ அதிக்ரம: அதி - அப்பால். க்ரம - போதல்.]

அதிக்கிரமித்தல்— 1. அசட்டைசெய்தல். 2. இல்லாதுபோதல். 3. கடத்தல். 'அழிவற்ற பரமேசுரன் நியதியாகப்பொருந்திய இதையார் அதிக்கிரமிப்பார்கள்' (ஞானவா. புசுண். ௩௬. உரை.) 4. கழித்தல், நீக்குதல். 5. குறுக்கேபோதல். 6. தப்பிப்போதல், விலகுதல். 7. போகவிடுதல். 8. மேற்படுதல். 'காமங் கோப மதிக்கிரமிக்கு மண்மேல்' (மச்சபு. மங்வந்தா. ௩௩.) 9. விடுதல். 10. விலகுதல்.

அதிக்கிராந்தம்—1. அவமதிக்கப்பட்டது. 2. எல்லைகடந்தது. 3. சென்றுபோனது. 4. மட்டற்றது, மிகுந்தது. 5. வெறுக்கப்பட்டது. [அதிக்ராந்த: அதி - மேல். க்ராந்த - போனது.]

அதிக்கிராந்தவிந்துகபாசிவம்–அதிக்ராந்த விந்துகபாசிவன். (கூர்மபு. திருக்கல். ௯. உரை.)

அதிக்கிராந்தவிந்துகபாசிவன் — சிவன் ஆன்மாக்களுடைய அறிவுக்குப் புலப்படும் பொருட்டுத் தனது சிற்சத்தி சந்நிதிமாத்திரத்திலே தோற்றுவித்த சிவபேதம் ஒன்பதனுள் முதலாவதாகிய நிட்களசிவம். இவர் விந்துவைநீங்கிய இலயராதலால் அதிக்கிராந்த விந்துக பாசிவனெனப்பட்டார். (சி. சி. ௨: ௭௪. ஞானப்.)

அதிக்கிராந்தவிந்துகபாசத்தி-சுத்தமாயையாகிய விந்துவுக்கு மேற்பட்ட விந்துவை யதிட்டிப்பவளாய் அதிக்கிராந்தவிந்துகபாசிவத்துக்குச்சத்தியாக நிற்பவள்; இந்தச் சத்தியை அதிக்கிராந்தவிந்துகபாசிவந் தோற்றுவித்தது. (சி. சி. ௨: ௭௪. ஞானப்.)

அதிக்கிராமகன்–கிரமந் தவறி நடப்பவன். [ஸ அதிக்ராமக: அதி - அப்பால். க்ராமக - நடப்பவன்.]

அதிக்கிராமம் — வைத்தீசுரன்கோயில். 'அம்பல மாரூர் காசி காளத்தி விருத்தகிரி அதிக்கிராமம்' (கடம்பவன. இலீலாசங். ௮௨.)

அதிக்குதி—1. ஒவ்வாதநடை. 2. செருக்கானநடை. வழக். அதிகக்குதி என்பது அதிக்குதி என மரீஇயிற்றுப்போலும்.

அதிகசிதம்—பெருஞ்சிரிப்பு. [அதிஹஸித: அதி - அதிகம். ஹஸிதம் - சிரிப்பு.]

அதிகடம்—யானை.

அதிகண்டம்—1. நித்தியயோகங்களிருபத்தேழனுள் ஆறுவது. இதில் ஆதியில் ஏழு நாழிகை கழித்து எஞ்சியகாலம் சுபகாரியத்திற்குக் கொள்ளப்படும். 'கண்டாதி கண்டத்துக் கேழ்கன்னல்' (விதாந. பஞ்சாங்க. ௨௬. ௨௫.) [ஸ அதிகண்ட:] 2. மரணாவத்தை.

அதிகதம் —1. அடையப்பட்டது. 2. அறியப்பட்டது. 3. சென்றது. 4. படிக்கப்பட்டது. [ஸ அதிகத: அதி - மேல். கத - சென்றது.]

அதிகதை— பயனில்சொல், வீண்பேச்சு. [ஸ அதிகதா: அதி - அதிகம். கதா - பேச்சு.]

அதிகந்தம்— 1. அதிகமணமுடையது. 2. ஒரு வாசனைப்புல். 3. கெந்தகம். 4. சண்பகமரம். [ஸ அதிகந்த: அதி - மேன்மை. கந்த - வாசனை. 2, 3, 4 மூ. அ.]

அதிகநசி— கொடிவேலி. (வைத்தியபரி.)

அதிகநாரி—கொடிவேலி. (மலை.)

அதிகப்பிரசங்கம்–1. தன்மேம்பாட்டுரை. 2. மட்டுக்குமிஞ்சிப்பேசுதல்.

அதிகப்பிரசங்கி—மட்டுக்குமிஞ்சிப் பேசுவோன். மரியாதையற்றவன். [வழக்.]

அதிகம்—1. அடையாளம். 2. இலாபம். 3. ஏற்றம். 'போகந்துய்ப்பரொன்றற்கொன்றதிகமாக' (சூத. முத்தி. ௨: ௨௬.) 4. ஓரலங்காரம்; அது:- 'உலக முழுதடங்கு மாவிசும்பி லூன்ற, னலகில் குணமடங்காவாம்' என்றாற்போலப் பெரிய ஆதாரத்தினும் ஆதேயத்தைப் பெரிதாகச் சொல்லுதலும், 'மன்சீருலகெவ்வளவுபெருமைத்தளவி, லூன்சி ரடங்கி யுள' என்றாற்போற் பெரிய ஆதேயத்தினும் ஆதாரத்தைப் பெரிதாகச் சொல்லுதலுமாம். (இலக்கணவிள. பக். ௯௯௯. விசாக.) 5. குருக்கத்தி. (மலை.) 6. சேனை. 7. நிக்கிரகத்தானம் இருபத்திரண்டி னொன்று;

அது: ஒன்றற்குப் பலகூறுதல். (சி. சி. அள வை. கச.) 8. பொலிவு. 9. மிகுதி. 'நூநங்க ளதிகநோக்கிநுகர்விப்பன்' (சி. சி. உ: உக.) 10. மேன்மை. 'அதிகமாயின திருப்பணி' (பெரியபு. ஏயர்கோ. எ.) [ஸ்யிக.]

அதிகமாதம் — இரண்டு சங்கிரமங்களுக் கிடையில், இரண்டு சந்திரோதயம்வரும் மாதம், அது: சூரியகெதியால் முப்பத் திரண்டுமாசமும் பதினறுநாளும் முப்பது நாழிகையும் ஐம்பத்தைந்துவினழிகையுஞ் செல்லச்செல்ல வரும். (விதாந. குணகுண. அக, அஉ. உரை.) [ஸ்யிகமாஸ.]

அதிகமாதாபவாதம் — அதிகமாஸதோஷ நிவிர்த்தி. (விதாந. குணகுண. அச-ஆங் கவி முகம்.]

அதிகமான்—அதியமான். (தொல். பொ ருள். 62. உரை.)

அதிகர் — பெரியோர். 'அதிகருக் கமுத மேந்தல்' (சூடா. 12. 99.)

அதிகர்த்தபி--இருபத்துநால்வகை அக்கிநி கிடங்களுளொன்று. (சீவரட். ருசகூ.)

அதிகாணத்துவம் — அதிகரணமாயிருக் குந்தன்மை.

அதிகரணம்—1. அதிட்டித்தல். (சி. சி. க: மறை. சுரு.) 2. இருப்பு. 'அதிகாரத்தோ டதிகரணத்தினுமே' (சி. சி. க: சுரு. ஞாநப்.) 3. உரிமை. 4. தன்னாற் கூறப்படும் பொருளும், அதன்கணையப்பாடும், அதற்குப் பிறர்கூறும் பக்கமும், அதனை மறுத்துரைக் குஞ் சித்தாந்தத்துணிவும், இயைபு மென்னு மிவற்றது நிலைக்களம். (சிவஞானபோ. க: வார்த்தி. கருத்துரை. சிவஞா.) 5. பதார்த் தம். 6. பிரதிக்ஞை. 7. மேன்மை, சிரேட் டம். [அயிகரண: அயி - மேல். கரண - செயல்.]

அதிகரித்தல்—1. அதிகப்படுதல். 'தீ-அதி கரித்த குந்தனை' (தைல. தைலவ. கரு.) 2. அதிகாரஞ்செலுத்துதல், ஆணையினடப்பச் செய்தல். (நன். விருத். எழுத்ததிகாரம் என் பதனுரை.) 3. அதிகாரத்தோடு பொருந்த வருதல். 'அதிகாரமாவது எடுத்துக்கொண்ட அதிகார மிதுவாதலின் இச்சூத்திரத் ததி கரித்தபொருள் இதுவென அவ்வதிகாரத் தோடு பொருந்த உரைத்தல்.' (நன். பொது. உக. விருத்.) 4. உரிமைபூண்டு கொண்டா டல். 'மறைமொழிகளை யதிகரிக்கும் பிரா மணர்' (சிவதரு. பாயிர. கூ. உரை.) 5. தலை மைப்பட்டுநிற்றல். 'எழுத்ததிகாரம்' என்ப தற்கு எழுத்து அதிகரித்தல் எனப் பொருள் கூறுவாருமுண்டு. (நன். எழுத்ததி. இராமா.) [அயிகார. மூல.] 6. கற்றல். (அரிசமய. பராங்குச. 8.)

அதிகல்—காட்டுமல்லிகைச்செடி. (வைத் தியபரி.)

அதிகவுச்சம்—அத்துச்சம். 'அதிகவுச்சந் தனையுரைக்கிற் கதிரவனுக் குத்தா ஞன மே டந்தனிலே பாகையொரு பத்தா - மதி தனக்கேரிடபத்திற்றன் மூன்றுபாகைவருஞ் சேய்க்கு மகரத்தி விருபத்தெட்டாகுங்-துதி புதற்குக் கன்னியினிற் பதினைந்து பாகை சொற்குருவுக் கேகடகந் தனிலைந்து பாகை - புதிய புகர்க் கேமீனி விருபத்தேழ் பாகை புகழ்ச்சநிக்குக் கோலிலிரு பதுபாகையென் பார்' (சாதகசிந். கஉகூ.) [ஸ்யி; உஷ்.]

அதிகற்றதி—கொடிவேலி. (மலை).

அதிகன்—1. ஆதிக்கன், மேற்பட்டவன். 'மூவர் தம்மினு மதிகனென்றால்' (இராமா. ஊர்தேடு. கஉ.) 2. ஒரு வள்ளல்; இவன் தனக்குக்கிடைத்த அமிழ்துவிளையுங் கரு நெல்லிக்கனியைத் தானுண்டு உடம்பு பெறாதே ஔவைக்குக்கொடுத்தோன். (சிறு பா. பக். அக.) 3. சிவன். 'அதிகன் வேணி யி லார்தரு கங்கையை' (கந்தபு. திருக்கயி. உ0.) [ஸ்யிக.]

அதிகாகம்—காகத்தின்மேல். (பி. வி. கா ரக. சூ. உரை.) [அயிகாக: அயி - மேல். காகம் - ஒரு பறவை.]

அதிகாங்க்ஷை—பேராசை. (த. நி. போ. உஎஎ.) [அதி - அதிகம். காங்க்ஷா - விருப் பம்.]

அதிகாசம்—பெருஞ்சிரிப்பு. [ஊதிஹாஸ: ஊதி - அதிகம். ஹாஸ - சிரிப்பு.]

அதிகாந்தம்—1. ஒரு விலையுயர்ந்த கல். 2. செவ்வானம். 3. பேரழகு. [1. ஊயி-அதிகம். காந்தம்-உயர்ந்த கல். 2. க - சூரியன். அந்த- முடிவு. 3. காந்தம் - அழகு.]

அதிகாயன் — 1. இராவணன்புதல்வருள் ஒருவன். (இராமா. அதிகாய. எகூ.) 2. மிகப் பெருஞ் சரீரமுடையவன். [அதிகாய: அதி - அதிகம். காய - சரீரம்.]

அதிகாரசத்தி—1. சிருட்டியாதி அதிகாரஞ் செய்யுஞ் சாமர்த்தியம். 'புரைத்ததி கார சத்தி புண்ணிய நண்ண லாலே' (சி. சி. க: ௩௪. ஞானப்.) 2. சிவன், இலயம் போகம் அதிகாரம் என்பவைகளுள் அதிகாரவவத்தையிலிருக்கும்போ தவரோடுநிற்குஞ் சத்தி. (சி. சி. உ. எ௰. மறை.) [ஸயிகாரஶக்தி.]

அதிகாரசத்திகள் — பிரமாவை யதிட்டித்துச் சிருட்டிசெய்யும் வாமையும், விட்டுணுவை யதிட்டித்துத் திதிசெய்யுஞ் சேட்டையும், காலருத்திரரையதிட்டித்துச் சங்காரஞ் செய்யும் ரோதயித்திரியுமாகிய சத்திகள். (சி. சி. க: ௩௪. மறை.)

அதிகாரசிவன் — மகேசர்; இவர் சுத்த மாயையிலே உற்பங்ககாரியத்தைச்செய்வதனால் அதிகாரசிவன் எனப்படுவார். (பௌட். பதி. உகூ.) [ஸயிகாரஶிவ:]

அதிகாரத்திரயம்—கர்மம், ஞானம், பத்தி.

அதிகாரதத்துவம்—ஈசுரதத்துவம். (சி. சி. க: கூகூ. ஞானப்.)

அதிகாரநந்தி—சிவாலயவிழாக்களில் உபயோகிக்கும் வாகனவகை. 'அதிகாரநந்தி சேவை.'

அதிகாரபஞ்சகம்—கர்மி, முமூட்சு, அப்பியாசி, அனுபவி, ஆருடன் என்னும் அதிகாரரைவர்; அவருள் மூடத்தனத்தாற் றன் சாதி கர்மமாத்திரம் பிடித்துச் சதசென்மத்தில் முத்தனாகிறவனே கர்மி; சகம் அசத்தென்று தெளிந்து ஆத்மகர்மநிட்டனாய் மூன்றுசென்மத்தின் முத்தனாகிறவனே முமூட்சு; சொப்பனம்போலப் பிரபஞ்சம் மித்தையென்றறிந்து அப்பியந்தரத்திலே தியானாதிகர்மயுக்தனாய் இரண்டுசென்மத்திலே முத்தனாகிறவனே அப்பியாசி; விவகாராபேட்சைவிட்டு விவேக தற்பரனாகி ஏகசென்மத்தில் முத்தனாகிறவனே அநுபவி; விசுவவிசிர்தி தோன்றாமல் ஆன்மஞானத்தாற் சத்தியோமுத்தியடைபவனே ஆருடன். (வி-ளி. உக.) [ஸயிகார; பஞ்சகம் - ஐந்து.]

அதிகாரம்—1. அதிகரித்தல். (நன். எழுத்ததி. இரா.) 2. ஆரம்பம். 3. இடம். (தொல். பொருள். ௬௬௬. உரை.) 4. உடையனாந்தன்மை. 5. உரிமை, யோக்கியம். 'விரும்பிய மந்திராதிகார மர்ச்சனாதிகார மேவும் யோகாதிகாரமெனச்சமயவிசேடம்வரும்' (சிவப்பிர. கூ. இலக்.) 6. ஒருநூலிலே ஒருபொருள்கருதிவரும் பலவியல்களின் தொகுதி. (தொல். சொல். க. சேனா.) 7. ஒரு விஷயத்தைப்பற்றிவரும் பலவாக்கியத் தொகுதி, ஒன்றனதிலக்கணம்பற்றிவரும் பல சூத்திரத்தொகுதி. (தொல். சொல். க. சேனா.) 8. தந்திரமாகியநூல். (பிங்க. உ௦ருஎ.) 9. தலைமை. 'பையாடரவோனடி பற்றுவரே, ஐயாவதிகாரநடத்துவரே' (உபதேச. சிவநாம. ௫௦.) 10. நன்மைப்பேறு. 11. பக்குவம். 'அனையவனததிகாரந்தெரிந்தருளானோக்கி' (வேதா. சூ. கக.) 12. பண்பு. 13. முறைமை. (தொல். பொருள். ௬௬௬. உரை.) [அயிகார: அதி - மேல். கார - செயல்.] 14. ஆட்சி. 'அதிகாரத்தைத் தன் மாட்டுவைத்து மன்னவன் வறிதேயிருப்ப.' 15. தகுதி. 'அனையவனதிகாரந்தெரிந்து' (வேதா. சூ. 19). 16. சந்தருப்பம். (குறள். 478. உரை.) 17. ஞானங்குறைந்து கிரியை அதிகமாயுள்ள கடவுள்நிலை. (சி. போ. பா. 2. 2. பக். 134. புது.)

அதிகாரமலம்- மலபரிபாகமாந்தியமுடையரான விஞ்ஞானாகலரைச் சுத்தாத்துவாக்களில் அதிகாரமுடையராக நிறுத்தும்பெலமுடைய மலம். (சி. சி. அ: உ: மறை.) [அயிகார; மலம்.]

அதிகாரமுத்தி—ஆன்மா சுத்த தத்துவத்திலே அதிகாரமலத்தோடுமாத்திரம் இருப்பதாகிய முத்தி. (சிவஞானபோ. சூ - ஆஞ்சூ. சூ - ஆம் வெண்பா. சிற்றுரை.) [ஸயிகாரமுக்தி: ஸயிகார; முக்தி - வீடு.]

அதிகாரமுறைமை— ஒருத்தி; அது: முன்னின்ற சூத்திரப்பொருண்மை பின்வருஞ் சூத்திரத்திற்கும் பெறற்பாலன பெறவைத்தல். தொல்காப்பியத்து ௩௪ - ஆஞ் சூத்திரத்தில் 'குற்றியலிகரம் நிற்றல்வேண்டும்' என்பதில்'நிற்றல்வேண்டும்' என்பதனை ௩௬- ஆஞ் சூத்திரத்துக் 'குற்றியலுகரம் வல்லா

றூர்ந்து' என்பதனோடு ஒட்டிநிற்றல்வேண்டு மெனக் கொள்ளவைத்தல். (தொல். பொருள். ௬௬௬. உரை.)

அதிகாரர் — அலபஞ்சகிருத்தியத்திலே உன்முகமாயிருந்த கிரியாசத்திக்குப்பின் இஃது இப்படியாகக்கடவதென்று சங்கற்பத்தைப்பண்ணுஞ் சங்கற்ப இச்சாசத்திருபமாயிருந்த ஈசர். (ப. பாச.) சுத்தமாயையானது உற்பந்நகாரியத்தையுடையதாகச் செய்பவர்.

அதிகாரவுரை — நூலுரை பதினன்கனுளொன்று; அஃது:- அதிகாரத்தால் வருவிக்கப்பட்டதென அதிகாரத்தோடு பொருந்தக் காட்டி எழுதுமுறை. (நன். உக. இராமா.) [அதிகார; உரை.]

அதிகாரன்—1. மகேசுவரன். (சி. சி. க: டுசு. இராமலி.) 2. மேல்விசாரணைசெய்வோன். [அதிகார:]

அதிகாரி—1. உடையவன் 'தநாதிகாரி' 2. நூல்கற்றற்குரியோன். (சிவஞானபோ. பாயிர. சிவஞா.) 3. நூல்செய்வித்தோன். 4. பக்குவன். 'இத்தகு ஞாந சாதநக் கதிகா ரிகளெவ ராவரென் றிடினே' (சூத. சிவ. எ: ௩௦.) 5. பாட்டுடைத்தலைவன். 6. மகேசுவரன். 'ஞானப்பிரகாசமேதிருமேனியாகவுடைய சிவன் இலயி எனவும், போகி எனவும், அதிகாரி எனவும், சிவன் சதாசிவன் மகேசுவரராக இம்மூவருங் கிருத்தியங்களுக்கிடாகப் பெயர்களைப்பெற்று' (சி. சி. க: ௬டு. மறை.) 7. மேல்விசாரணைசெய்வோன். [அதிகாரிந்: அதி - மேல்; காரிந் - செய்வோன்.]

அதிகாரித்துவம் — உடையனுந்தன்மை. [அதிகாரித்வம்: அதிகாரிந் - உடையவன். த்வம் - தன்மை.]

அதிகாரியர்— அதிகாரமுடையவர். 'ஆக்கையுடையவதிகாரியர்க்கெல்லாம்' (சி. சி. அ: கஎ. மறை.)

அதிகாரை—சாதிகாரதீக்ஷை. (அதிகாரத்தோடுகூடியது.) (சி. சி. அ: டு. சிவாக்.) [அதிகாரா.]

அதிகாலங்காரம்—பெருமையணி. (குவல. சக.) [அதிக; அலங்காரம்.]

அதிகாலம் — விடியற்காலம். 'அத்திநங் கழிந்தமற்றை யதிகாலந்தன்னில்' (மச்சபு. வீமத்துவா. கஅ.)

அதிகாலை—விடியற்காலம்.

அதிகிருச்சிரம்—பன்னிரண்டு நாள் அநுட்டிக்கப்படும் ஒரு விரதம். அதனை அநுட்டிப்பவன் முன் மூன்றுநாள்களிலும் பகலில் ஒவ்வொருகவளமும், அதன்பின் மூன்றுநாள்களிலும் இரவில் ஒவ்வொருகவளமும், அதன்பின் மூன்றுநாள்களிலும் யாசியாது வந்த உணவில் ஒவ்வொரு கவளமும் உண்டு, அதன்பின் மூன்றுநாளும் உபவாசமிருந்து முடித்தல்வேண்டும். (மநு. கக. உகங.) [அதிக்ருச்ச்ர: அதி - அதிகம். க்ருச்ச்ர-பிரயாசம்].

அதிகிருதர்—அதிகரித்தவர். 'அவற்றினதிகிருதராகிச் சிறந்த மாபுருடர்க்கு' (வேதா. சூ. க௬ச.) [அதிக்ருத: அதி - மேல். கிருதர் - செய்யப்பட்டவர்.]

அதிகிருதன்—1. அத்தியக்ஷன். 2. பிராட்டு விவாகன். (மிருதி. 5.) 3. வரவு செலவுக் கணக்கதிகாரி. [அதிக்ருத: அதி - மேல். க்ருத - செய்யப்பட்டவன்.]

அதிகிருதி—ஒரு கவிச்சந்தம்; அஃது: அடியொன்றிற்கு இருபத்தைந்தசையுடைய நான்கடிகொண்டதாய் வருவது. [அதிக்ருதி. அதி - அதிகம். க்ருதி - செயல்.]

அதிகிருதை — அதிகாரமுடையவள். (பௌட். கச.) [அதிக்ருதா.]

அதிகுணம்—நற்குணம், மேலானகுணம். [அதிகுண: அதி - மேலான. குண - தன்மை.]

அதிகுணன்—1. அருகன். (திவாகர.) 2. கடவுள். 3. சிவன். 'களிறதுபிளிறிடவுரிசெய்த வதிகுணன்' (தேவார. திருமறை. டு. சம்பந்.) 4. நற்குணன், மேலானகுணமுள்ளவன். [அதிகுண: அதி-மேலான. குண-குணமுடையவன்.]

அதிதும்பை—பொற்றலைக் கையாந்தகரை. (மலை) 2. பொற்றுது.

அதிதுய்யாஷ்டகர்—தேயுதத்துவத்திலிருக்கும் அரிச்சந்திரன், ஸ்ரீசைலன், கல்பமானன், மாதகேச்சுவரன், மகாகாளன்,

மத்திமன், கேதாரன், வைரவன் என்னும் எண்மர். (சி. சி. அ: உ. மறை.)

அதிதரு—அதிகபாரம். [ஸ்திபார: ஸதி - அதிகம். பார - பாரம்.]

அதிதை—1. அதிகமானது. 'பலாதிகை யாதல்' (பௌட். மாயா. ருரு. உரை.) 2. கடுநாட்டிலுள்ள ஒரு சிவஸ்தலம். (பெரியபு. திருமூல. சு.) [ஸயிகா:]

அதிகைவீரட்டனர் - அதிகைவீரட்டமென் னுந் தலமுடையவர்.

அதிநோய்-அழிஞ்சின்மரம்.(வைத்தியபரி.)

அதிநோரம்—தொகைநரகங்கள் இருபத் தெட்டுள் மூன்றாநரகம். 'கோரமதுதான் முதனரகங் கூறுமதன்கீழ்க் கவின் கோரங் - கோரமதன்முன் னதிகூட்டிக் கூறுமது மூன்றாநரகம்' (சிவதரு. சுவா. கoஎ.)

அதிநோலம்— அழிஞ்சின்மரம் (மூ. அ.)

அதிநோவம்—அழிஞ்சின்மரம் (வைத்திய பரி)

அதிங்கம் — அதிமதுரம் 'கணியதிங்கம் வகுளம்' (காஞ்சிப். சனற்குமார. சு.) 2. குன்றி.

அதிச்சத்திரகம் — 1. அதிச்சத்திரம். [ஸதிஹத்ரக: அதி - மேல். ஹத்ர - குடை. க. ஓர் வ-விகுதி.] 2. காளான். (மலை.)

அதிச்சத்திரம் — 1. காளான். (மலை) 2. நட்சத்திர சிரகப்பூண்டு. [ஸதிஹத்ர: அதி - மேல். ஹத்ர - குடை.]

அதிசக்கரி—ஒரு கவிச்சந்தம்; அது: அடி யொன்றிற்குப் பதினைந்தசையுடைய நாலடி கொண்டதாய் வருவது. [ஸதிஶக்ரீ: அதிமேல். ஶக்ரீ - ஒரு சந்தம்.]

அதிசக்குவரி — அதிசக்கரி; ஒத்தமைந்த சந்தப்பொதுப்பெயர். [ஸதிஶக்வரீ.] (சிவதரு. உ: க. உரை.)

அதிசத்தி—1. நெருங்கிய ஒற்றுமை. [ஸதிஸக்தி: அதி-அதிகம். ஸக்தி - ஒன்றிப்பு.] 2. பெரியவல்லமை. [ஸதிஶக்தி: ஶக்தி - வல்லமை.]

அதிசகதி - ஒரு கவிச்சந்தம்; அது: அடி யொன்றிற்குப் பதின்மூன்றசையுடைய நான்கடியால் வருவது. [ஸதிஜகதீ: ஸதி- மேல். ஜகதீ - ஒரு சந்தம். சிவதரு. உ: க. உரை.]

அதிசங்கலிதம்—ஒன்றென்னும் எண்ணை யிரண்டாற்பெருக்கிவந்த குணிதமாகிய இரண்டென்பதைப் பின்வைத் ததனை இரண்டாற் பெருக்கிவந்த குணிதமாகிய நான்கென்பதனை யதன்பின்வைத் ததனை இரண்டாற்பெருக்கிவந்த குணிதமாகிய எட்டென்பதனை யதன்பின்வைத் திப்படியே யிரண்டென்பதனைக் குணமாகக்கொண்டு வருங் குணிதத்தை யதன்பின் எழுதிப் பெருக்கி, க, உ, ச, அ, கசு, ஙஉ, சுச, கஉஅ என்றிவை முதலாகப் பெறுந்தொடர். [ஸதி - அதிகம். ஸங்கலிதம் - கூட்டப் பட்டது.]

அதிசங்கை — வீண்சந்தேகம். (கோபி லொழுகு. 29.)

அதிசஞ்சயம் — 1. அதிகமாகக்கூட்டுதல். 2. பெருங்குவியல். [ஸதிஸஞ்சய: ஸதி - அதிகம். ஸஞ்சய - கூட்டுதல்.]

அதிசந்தானம்—1. எய்த்தல். 2. பொய். 3. வஞ்சகம். [ஸதிஸந்தாந: அதி-அதிகம். ஸந்தாந - பந்தித்தல்.]

அதிசநசி—கொடிவேலி.

அதிசயச்சொல்- அதிசயத்தைக்குறிக்குஞ் சொல்.

அதிசயம்-1. ஓரலங்காரம்; அது: கவிஞன் தான் சொல்லக்கருதியபொருளின் வனப் பை யுவந்துசொல்லுங்கால் உலகநடை யிறவாமல் உயர்ந்தோர் வியப்புறச் சொல்லு தல். (தண்டி. ருச.) 2. புதிதாயாவது வழக்கத்தினின்றும் விகற்பமாயாவது ஒன்று தோன்றுதலால் உண்டாகும் மனக்கிளர்ச்சி. 'ஆரிவ னெதிர்நிற் பானென் றதிசய நீர ரானான்' (கந்தபு. திக்கு. அக.) 3. மிகுதி 4. மேன்மை. 'அடிகளிவ்வழிபோந்ததிசயமறியேனே' (தேவார. திருக்கூட. க. சுந்தர.) [ஸதிஶய:]

அதிசயமாலை — பண்டாரசாத்திரத் தொன்று.

அதிசயமொழி—ஆச்சரியச்சொல். (பிங்.)

அதிசயவிரக்கச்சொல் — இரக்கத்தோடு கூடிய அதிசயத்தை விளக்குஞ்சொல்.

அதிசயவுவமை — உவமையலங்காரவகைகளுளொன்று; அது: உபமாநம், உபமேயமென்னு மிரண்டற்குஞ் சார்பிடத்தாலன்றி ஒப்புமைக்குரிய குணத்தினாலே தம்முள்ளே பேதமில்லையென அதிசயந்தோன்றச்சொல்லப்படுவது. (அதிசயவுவமைக் குதாரணம்) 'நின்னுழையேநின்முகங்காண்டு நெடுந்தடந், தன்னுழையே தன்னையுங் காண்குவ-மின்னு-மிதுவொன்று மேயன்றி வேற்றுமை யுண்டோ - மதுவொன்று செந்தா மரைக்கு' (தண்டி. நஉ.)

அதிசயன்—அருகன். (திவாகர.)

அதிசயித்தல்—அதிசயங்கொள்ளல்'அலமந்தேங்கியதிசயித்து' (கந்தபு. திருமண. நக.)

அதிசயேந—மிகுதியாய். 'அதிசயேந சிவோகமென் றுபாவிக்கப்படுவதாம்' (சி. சி. சூ: எ. சிவாக்.) [இது மூன்றும் வேற்றுமையேற்றுநின்ற ஒரு வடமொழி. அதிஶயேந: அதிஶய - மிகுதி. ஏந - மூன்றும்வேற்றுமையுருபின்திரிபு.]

அதிசயோக்தி—உயர்வுநவிற்சியணி; அஃது ஒருபொருளானது தன்சொல்லாற்சொல்லப்படாமற் கேட்போரை மகிழ்விப்பதும், இஃது அஃதன்றென்று தெரிந்துந் தன்னிச்சையா லாமென்றுகொள்ளப்படுவதுமாகிய ஆரோப நிச்சயத்திற்கு விடயமாகுதல். 'புயலே சுமந்து பிறையே யணிந்து பொருவிலுடன் - கயலே மணந்த கமல மலர்ந்தொரு கற்பகத்தி-னயலே பசும்பொற் கொடிநின்றதால்' (வாண. க.) இங்கே புயன்முதலிய உபமானச்சொற்களாற் கூந்தன்முதலிய உபமேயங்கள் இலக்கணையாகச் சொல்லப்பட்டன. (இலக்கணவின. களஅ. விசாக.) 2. மிகப்பேசுதல். [அதிஶயோக்தி: அதிஶய-மிகுதி. உக்தி - பேச்சு.]

அதிசயோத்தி—அதிசயோக்தி.

அதிசரணயோநிரோகம்—பெண்களுடைய யோநியிலே வரும் ஒருவகைரோகம். (சீவரட். நஉந.) [அதி - அதிகம். சரணம்-சஞ்சரித்தல்; யோநி; ரோக - நோய்.]

அதிசரம்—1. நிலைபெற்றது, சற்றுநேரம் நிற்பது. [அதிவர:] 2. நெட்டுயிர்ப்பு. [அதி; ஸர - போதல்.]

அதிசான்—1. அப்பாற்போகிறவன். 2. வழிகாட்டி. [அதிஸர: அதி - அப்பால். ஸர - செல்பவன்.]

அதிசரித்தல் — அப்பாற்போதல். [அதிஸர.]

அதிசருச்சநம்—1. உதாரத்துவம். 2. கொடை. 3. கொலை. [அதிஸர்ஜந: அதி - அதிகம். ஸர்ஜநம்-படைத்தல்.]

அதிசாக்கிரதை — மிகுவிழிப்பு. [அதி; ஜாக்ரதா - விழிப்பு.]

அதிசாகரம் — ஒரு தமிழ்க்கணிதநூல். (கணக்கதி. பாயிர.)

அதிசாத்திரன்—சந்திரன்.

அதிசாமியை—வெண்குன்றிச்செடி.[அதிஸாம்யா.]

அதிசாரசன்னி — சன்னிவகையிலொன்று.

அதிசாரசிலேட்டுமரோகம் — சிலேட்டுமரோகங்களுளொருவகை; அது: சிவந்தபேதி, வயிற்றிலிரைச்சல், குத்தல், விலாவிற் சூலை, பொருமல், மார்பிலும் நெஞ்சிலும் நோவு, வாய்வறளல், இருமல், சுவாசம், தாகம், எரிச்சல் என்னுங் குணங்களையுடையது. (சீவரட். கஃந.) [அதிஸாரஶ்லேஷ்மரோக.]

அதிசாரணம்—மாவிலிங்கமரம். (மூ. அ.)

அதிசாரத்திரவியம் — அதிசாரநோயைத் தீர்க்கும் மருந்துக்குச் சேர்க்கப்படுஞ்சரக்குகள்; அவை: வெட்பாலையரிசி, அதிவிடயம், வட்டத்திருப்பி, வறட்சுண்டி, சுக்கு, கீழ்க்காய்நெல்லி, இலவம்பிசின், ஓமம், கஞ்சா, மாவிரை, திப்பிலி, சிறுகாஞ்சொறி, இருபூலா, (வறட்பூலா, நீர்ப்பூலா,) சாதிக்காய், நீர்முள்ளிவிதை, முத்தக்காசு, குக்குலியம், காட்டாத்திப்பூ, கிராம்பு, கருங்காலிப்பிசின், ஆவிரை, புளியம்வேர், வாழை, மாதுளம்பிஞ்சு, வெள்ளிலோத்திரம், கருவேல், தேன், புளியங்கொட்டைத்தோல், தென்னம்பாளை யென்பன.

அதிசாரபேதி—பேதிவகையிலொன்று.

அதீசாரம்–1. அதிமதுரம். (இராசவைத்.) 2. கிரகங்கள் ஓரிராசியினின்று தமது வழக்கமானகாலம் நீங்குமுன் மற்றோரிராசிக்குச் செல்லுதல். 3. பேதிவகையுளொன்று, வயிற்றுளைவு; இது சிலகாரணங்களால் வாயு அதிகரித்துத் தாதுக்களையும், உதராக்கினியையுங் கெடுத்து மலப்பையிற் சேர்ந்து கொண்டுமலத்தைச் சலமாக்கியபாகத்தாலே ஒழுகச்செய்யு மென்பர். 'குன்மமதி சார வெப்புக் கொடுஞ்சூலை' (சிவானந்தமாலை.) [அதிஸார: அதி- அதிகம். ஸார - போதல்.] 4. விரைவாய்ப்போதல். 5. மிகச்சிறிய பின்னவெண். (நான். பால.) 6. கல்லுப்பு. (மூ. அ.) 7. சத்திசாரம். (வைத்திய பரி.) [2, 4. அதிசார: அதி - அதிகம். சார - போதல்.]

அதீசாரவக்கிரம் — ஓரிராசியினின்று போகுங் கிரகங்கள் தமக்கு வழக்கமாக நியமிக்கப்பட்டகாலங் கழியுமுன்னே அவ்விராசிக்குமீண்டுவருதல். (விதான. கோசர. 15. உரை.) [அதிசார; வக்ர - மீள மடங்குதல்.]

அதீசிதுவை— நாக்கிலே வரும் ஒருவகை ரோகம்; அது: அடிநாவின்கீழ் நுனிநாவைப் போலத் தடித்து வீங்குவது. (சீவரட். உ. அ௫.) [அதி; ஜிஹ்வா - நாக்கு.]

அதீசிந்திரம் — தாளப்பிரமாணம் பத்துவகையுளொன்றாகிய மார்க்கம் என்பதன் பிரிவுக ளாறனு ளொன்று; அது: கான்மாத்திரை ஒருகலையாகக்கொண்டது.

அதீசிரயணம்— அனல்கொளுத்தல், சூடுகாட்டல். இஃது ஆச்சியத்துக்குச்செய்யும் பதினெட்டு ஸம்ஸ்காரங்களிலொன்றாகச் சொல்லப்பட்டிருக்கிறது. [அதிச்ரயண.]

அதீசீக்கிரம் — அதிகவிரைவு. [அதி; சீக்ர - விரைவு.]

அதீசீதம்— இருபத்தெட்டுத் தொகைநரகங்களுள்முதலாவதாகிய கோரத்துக்குள்ள ஐந்து நாயக நரகங்களுளொன்று. 'வெந்துயர்செய் ரௌரவம் மாரௌரவமே மிக்க தமஞ் - சிந்தைகலு ழதிசீத மதிவெப்ப மெனத்தெரித்த - வைந்தினையுமுதனிரயத் ததிபதிகளெனவறிக' (சிவதரு. சுவர். ககஉ.)

அதீசீர்ணம் — மிகுந்தசீரணம். 'அறைகின்ற சீரணமா யசீரண்மா யதிசீர்ண மாகியன்ன - முறைகின்றவுடலுக்குக் கூற்றமாம் நாடியுயிருலைவினாலே' (ஞானவா. சிகித்து. சஎ.)

அதீசுட்கம்—ஒருநோய்; அது: சரீரத்தை வரட்டுவது. (சீவரட். உ0௩.) [அதி; சுஷ்க - வரட்சி.]

அதீசுத்தம்—மிகுசுத்தம். 'மாயாசரீரமதி சுத்தமாய் வரும்' (சி. சி. க: சக. ஞானப்.) [அதி; சுத்த - சுத்தமானது.]

அதீசூக்குமசித்து—தூலசித்துப்போலாது மிக நுண்ணியதான சித்துப்பொருள். 'சிவமதிசூக்குமசித்தாதலி னுண் டசத்து நிற்றலாற்றாது' (சி. சி. எ. ௩. சிவஞான.) [அதி; ஸூக்ஷ்ம; வித்.]

அதீசூக்குமத்துவம் — மிகுநுண்மைத்தன்மை. (சி. சி. பா. நிகண்ட. ௫. உரை.) [அதி ஸூக்ஷ்மத்வம்: அதி - அதிகம். ஸூக்ஷ்மத்வம் - நுண்மைத்தன்மை.]

அதீசூக்குமம் — மிகநுண்மை. 'தொழுதகைய தூலஞ்சூக் குமமதிசூக் குமமாய்ச் சுடர்சத்தி சம்பந்த மாயபர சிவனே' (சூத. எக்கி. பூ. ச: உச.) [அதி - அதிகம். ஸூக்ஷ்ம - நுண்மை.]

அதீசூக்குமவாக்கு — மிகச்சூக்குமமான வாக்கு. (சி. சி. க: உ௩. சிவஞா.) [சாந்திகலாபுவநவாசிகளுள்ளே சூக்குமை முதலிய நான்குவாக்கும் அதிசூக்குமமாய்ச் சீவிக்குமென்று மறைஞானதேசிகர் சொல்வர்.] (சி. சி. க: உச. உரை.) [அதி - அதிகம். ஸூக்ஷ்ம - நுண்மை. வாக் - சொல்.]

அதீசூக்குமிப்பித்தல் — மிகநுண்மையாக்கல்.

அதீசூக்குமை—ஒரு சத்திகலை.

அதீசூரன்—1. சிங்கமுகாசுரனுடைய ஒரு மகன். (கந்தபு. புதல்வர். கஅ.) 2. மிக்க வீரன். 'வீரவதி சூரர்கிளை வேர்மாளவே' (திருப்பு. கசச.) [அதி: சூர-வீரன்.]

அதிசோபநை—உமாதேவி. 'வரதையதி சோபநைமாபெலிகாந்தை' (கூர்மபு. திருக்கல். உஉ.) [அதி - அதிகம். சோஹநா - அழகுள்ளவள்.]

அதிசௌரபம்—1. தேமாமரம் (மலை.) 2. பரிமளத்திரவியம். [அதிஸௌரஹ: அதி - அதிகம். ஸௌரஹ - வாசனையுடையது.]

அதிட்டக்காரன்—அதிட்டவான். [அத்ருஷ்ட:]

அதிட்டகன்மம் — அதிருட்டகன்மம். சுவர்க்க நரகங்களிலே யநுபவிக்கப்படுவன. (சிவப்பிர. உ: கந. உரை. சிதம்பர.) [அத்ருஷ்ட - காணப்படாதது. கர்ம-செயல்.]

அதிட்டச்செல்லி — இந்திரபாஷாணம். [இதிற் செல்லியென்பது சொல்லியென்று சில வைத்திய அகராதிகளிற் காணப்படுகின்றது.]

அதிட்டம்—1. காணப்படாமை. 'திட்டமுமதிட்டமுமில்சிட்ட' (சேதுபு. சருவ. உரு.) 2. காணப்படாதது. 3. காத்திராமல் வரும் அபாயம். 4. புத்திதத்துவத்திற் சமவாயசம்பந்தியாய்வைக்கப்பட்டுப் பலபரியந்தம் இருக்கும் ஸம்ஸ்காரமாகிய சூக்குமகன்மம். 5. மிளகு. (மூ. அ). 6. முன்னறியப்படாமல்வருஞ் சம்பவம். [1, 2, 3, 4, 6, அத்ருஷ்ட: அ - எதிர்மறை. த்ருஷ்ட - காணப்பட்டது.]

அதிட்டவலி—அதிட்டபெலம். 'நானறிந்தறியாமையாய்ப்போன லதிட்டவலிவெல்ல வெளிதோ' (தாயு. ஆனந்த. எ.)

அதிட்டாகாரர் — அறியப்படாத உருவமுடையவர். 'ஸ்ரீகண்டரூபியாயிருக்கின்ற சிவன் அதிட்டாகாரராதலால்' (சி. சி. க: சஅ. உரை. ஞானப்.) [அத்ருஷ்ட - அறியப்படாத. ஆகாரர் - வடிவமுடையவர்.]

அதிட்டாத்திரி — 1. அதிட்டிக்கிறவள். 'சிவன்நாதாதிட்டாதாவானபொழுது விந்து அதிட்டாத்திரியான சத்தியாய்' (சி. சி. உ: எடு. உரை. சிவாக்.) 2. ஆளுதல்செய்கிறவள். [அதிஷ்டாத்ரீ.]

அதிட்டாத்திரு—தலைமைவகிப்பவன். 'ஈசனதிட்டாத்திருவாம்' (வேதா. சூ. 79.)

அதிட்டாதா — 1. அதிட்டிக்கிறவன். 'அதிட்டாத்திரி' பார். (சி. சி. உ: எடு. உரை. சிவாக்.) 2. ஆளுமதிபதி. [அதிஷ்டாதா; அதி - மேல். ஷ்டாதா - நிற்போன்.]

அதிட்டாநசைதந்நியம் — சுத்தசைதந்நியமான பிரமம். 'ஏரதிட்டாநசைதந்நியத்திற்கு நாசமில்லை' (சூத. எக்கி. பூ. உ: எ.) இது கூடஸ்தப் பிரம அதிட்டாநத்தை ஒன்றாகக் காணும் அசிபதார்த்தம். (கைவல். தத்துவ. நடு.) [வியாவகாரிகனாகிய சீவத்திரய முதலியவைகளுக்கு ஆதாரமாயிருத்தலின் வந்தபெயர். அதிஷ்டாநசைதந்ய.]

அதிட்டாநபூதம் — அதிட்டிக்கும் அது. 'ஆன்மாவுடைய ஞானக்கிரியைக்கு அதிட்டாநபூதமாயிருக்கும்' (சி.சி.உ:நஅ.சிவாக்.) [அதிஷ்டாந-ஆதாரம். பூத - ஆனது.]

அதிட்டாநபூதை — அதிட்டிக்கும் அவள். 'சிருட்டியாதிகிருத்தியத்திற்குக்காரணமாகிய சத்தியே உபாதாநமாகிய விந்துவிற்கதிட்டாநபூதையாய்த் தன்காரியத்தைச் செய்கிறதென்னுங் கருத்துவிளங்க' (சித்தா. சாரா. கூ-ஆஞ்சுலோ. உரை.) [அதிஷ்டாந; பூதா - ஆனவள்.]

அதிட்டாநம்—1. அடக்கியாளுமதிகாரம். 2. ஆசநம். 3. இடம். 4. இளைப்பாறுமிடம். 'சாற்று மாயாநிவிர்த்தி தானதிட்டாநமாய்' (சூத. எக்கி. பூ. உ: சூ.) 5. சமீபமாய்நிற்றல். 6. சமீபமாயிருத்தல். 7. தேர்முதலியவற்றிநுருள். 8. நகரம். 9. நிலயம். 10. நிலை. 11. மகத்துவம். 12. மூலகாரணம். 13. வசிக்குமிடம். 14. வாழ்த்து. 15. விதிக்கப்பட்ட பிரமாணம். [அதிஷ்டாந.]

அதிட்டாநன்—1. பரப்பிரமம். 'ஈசனென்றிடுமூ வகையதிட்டாநனியம்பருமொருபரப்பிரமம்' (வேதா. சூ. திருக்குவி. நரு.) [அதிஷ்டாந - ஆதாரம். ஈசனுக்காதாரமாயிருத்தலின் வந்த பெயர்.] 2. கூடஸ்தன். 'சீவனென்றிடுமூ வகையதிட்டான சேதனனந்தரியாமி-யாவலினநுசந்தாத்திரு சயஞ்சத்தார்த்தனே டவிச்சிந்ந சீவன் - மூவரும் பாரமார்த்திகன் றூரியன்சான்றினன் பிரத்திகான் மாவா - மேவமிறெம்ப தத்திலக்கியார்த்தனென்ப கூடத்தநாமங்கள்' [வியாவ

காரிகனுதிய சீவத்திரயம் முதலியவைகட் காதாரமாயிருத்தலின் வந்தபெயர். வேதா-சூ. திருக்குவி. டு௨.]

அதிட்டாநுமாநம் — கருதலநுமாநம்; ஒருவன் சொன்ன வார்த்தையைக்கொண்டே யவனுக் கிவ்வளவு ஞானமுண்டாயிருந்த தென்றறிதல். (சி. சி. அளவை. ௩௨. நிரம்ப.) [ஸத்ருஷ்டாநுமாநம்.]

அதிட்டித்தல்—1. நிலைக்களமாகக்கொண்டு செலுத்துதல். (சைவவினா. ௫. பக்.) 'குருதேகங்களையதிட்டித்துத் தீக்ஷைசெய்யாதிருந்தால்' (சி. சி. ௬: ௬௬. ஞானப்.) 2. வாயிலாக்கோடல். 'சத்திதான்பிரேரித்துப் பின்னுனதிட்டித்துக்கொண்டே - யதினுற் புத்திமுத்தியளித்தலால்' (சி. சி. ௧: ௫அ.) 3. விரித்தல்.

அதிட்டிதம்—1. தாபிக்கப்பட்டது. (பௌஷ்ட். பசு. ௬௦.) 2. நியமிக்கப்பட்டது. (பௌஷ்ட். பசு. ௬௦.) 3. நிலைப்படுத்தப்பட்டது. (பௌஷ்ட். பசு. ௬௦.) 4. பிரேரிக்கப்பட்டது. (பௌஷ்ட். பசு. ௬௦.) 5. மேல்விசாரணைசெய்யப்பட்டது. [ஸயிஷ்டித: ஸயி - மேல். ஸ்த - நிற்றல்.]

அதிட்டேயத்தாநம் — அதிட்டித்தற்கு யோக்கியமான தாநம், நிலைக்களமாகக் கொண்டுசெலுத்துந் தாநம். 'ஈசுரதத்துவம் மகேசுவரனுக்கு அதிட்டேயத்தாநமாயிருக்கும்' (சி. சி. ௧: சிவாக்.) [ஸயிஷ்டேயஸ்தாநம்.]

அதிட்டேயபேதம் — அதிட்டித்தற்கு யோக்கியமான பொருள்களின் பேதம். 'சிவபேதமென்னும் நவபேதத்தை யொருபொருளாகிய சிவன் தானே யதிட்டேயபேதத்தை யொட்டி யபிநயித்துத் தடத்த கற்பனையினுலே காண்பிப்பன்' (சி.சி. ௨: எ௬. ஞானப்.) [ஜேத - வகை.]

அதிட்டேயம்—அதிட்டிக்கப்படும்பொருள். 'அதிட்டேயத்தாநம்'

அதிட்டேயரூபிணி—அதிட்டிக்கப்படுதற்கு யோக்கியமான ரூபமுடையவள். (பௌஷ்ட் பதி. ௧௧.) [ஸயிஷ்டேயரூபிணீ.]

அதிதந்தம் — குட்டிப்பல். [ஸயிதந்த.]

அதிதந்தரோகம் — பல்லில் வரும் ஒரு நோய்; அது: பற்களின்சந்திலே குட்டிப்பல் முளைப்பதனுல் வரும் உபத்திரவம். (சீவரட். ௨௪௧.) [ஸயிதந்தரோக.]

அதிதபநகிருச்சிரம்—கிருச்சிர விரதவகையுள் ஒன்று; அது: இருபத்தொருநாளைக்கு மூன்றுபலம் பசுப்பாலுண்டுசெய்யும் விரதம். 'அருந்துதன் முப்பலப்பான் மூவைந்தாறுதிநமு மதிதபநமரபென்றே யறிக' (சிவதரு. பரிகா. ௫௫ - உரை) [அதிதபநம் - மிகவாட்டுதல். க்ருச்ரம் - கட்டம்.]

அதிதபநம் — அதிதபநகிருச்சிரம். 'அதிதபநகிருச்சிரம்' பார்.

அதிதமம் — முதலாந் தொகைநரகமாகிய கோரமென்பதற்குள்ள ஐந்து நாயகநரகங்களு ளொன்று. (சிவதரு. எ: ௧௧௨ - உரை) [அதிதமம்.]

அதிதலசிலேட்டுமம் — ஒருவகைச்சிலேட்டுமநோய்.

அதிதவளம்—மிகுவெண்மை. 'அதிதவளமத்தவாரணமும்' (பாரத. பன்னிர. ௬௫.) [ஸதியவஜ. ஸதி - அதிகம். யவஜ - வெண்மை.]

அதிதனச்செல்வன்—குபேரன். (பிங்.)

அதிதனு—பொன்.

அதிதாதா — பெருங் கொடையாளன். [ஸதிதாதா.]

அதிதாதிரு — பெருங் கொடையாளன். [ஸதிதாத்ரு.]

அதிதாநம் — அதிகமாகக் கொடுத்தல். [ஸதிதாநம்: ஸதி - அதிகம். தாநம் - கொடுத்தல்.]

அதிதாபகவாதம் — சரீரத்தைத்தபிக்கப் பண்ணும் ஒருவகை வாதம். (சீவரட். ௧எ௧.)

அதிதாரம்—இலந்தைமரம். (மலை).

அதிதி — 1. இரவிலேநிகழும் பத்தாம் முகூர்த்தம்; அது: புநர்பூசமெனவும் பெயர் பெறும். (விதாந. குணகு. எ௩. உரை.) 2. ஒருவனிடத்திலே முன்னெருகாலமும் அறியப்படாதவனுய்ப் பசித்துவந்த பரதேசி. 'அதிதியர்க்குமங்கலத்தாற்பூசைவகுத்து' (சைவச. மாணு. ௨எ.) 3. ஓராசன், இவன்

தசரதராமன்மகனுகிய குசன்புத்திரன். 4. சிராத்தஞ்செய்யத்தகாத திதி; அது குறித்த ஒருதிதியிலே செய்யவேண்டிய சிராத்தம் அத்திதி முன்னுளிலேனும் பின்னுளிலேனும் பிதிர்காலத் த்திவியாப்தியடைவதினுல் செய்யத்தகாததாயிருப்பது. 5. தக்கன்மகளும் காசிபன்மனைவியுமாகிய ஒருபெண்; இவளைத் தேவர்களுக்குத் தாயென்பர். (இராமா. சடாயு. உஞ.) 6. பிதிரர்கள் எழுவரிலொருவர். 7. பூமி. 8. விருந்தினன். 'மறுகினின்றோர் பசுக்கறக்குநேர மதிதிவர னேக்கி' (கூர்மபு. நித்தியகர். கஙு.) [1, 5, 7, அதிதி. 2, 3, 4, 6, 8. அதிதி.]

அதிதிகிரியை—விருந்தோம்பல். [அதிதி க்ரியா: அதிதி - விருந்தினன். க்ரியா - செயல்.]

அதிதிசேவை—விருந்தினனையுபசரித்தல். [அதிதி - விருந்தினன். ஸேவா - உபசரித்தல்.]

அதிதிநாள்—புநர்பூசம். (பிங்க. உசஞ.)

அதிதிப்பம்—பசியின்மை.

அதிதிபூசநம் — அதிதிபூசை. [அதிதி பூஜந: அதிதி - விருந்தினன். பூஜநம் - பூசை.]

அதிதிபூசை — 1. தன்னுச்சிரமத்திலே பசித்துவந்தவிருந்தினனுக்குப்பாத்தியாதிகளால் உபசரித்து அன்னமூட்டல். 'கமழ்சுவையடிசிலா னதிதிபூசையும்' (காஞ்சிப். நகர. கoங.) 2. விருந்தினரையுபசரித்தல். (கூர்மபு. வருண. கக.) [அதிதி; பூஜா - உபசாரம்.]

அதிதியர்—1. சூரியர். 'அதிதி புதல்வாரா தவிழு லதிதியப் பெயரொடுங் களிப்பிற் - போக்கருஞ் செல்வத் தொடுமிரு விசும்பிற் புங்கவ ரேத்தவாழ் கின்ருர்' (கூர்மபு. அந்த. கஞ.) [அதிதிஜ.] 2. விருந்தினர். 'தீரதிதியரிவரையுபசரிப்போர்' (சூத. எக்கி. பூரு. க. எ.)

அதிதீட்சணமூலிகை — 1. முள்ளிக்கீரை. 2. சித்திரமூலம். 3. மொந்தன்வாழை. 4. செங்கீரை. 5. சீந்தில். (தைல. தைலவ. கஞ. உரை.)

அதிதீரன்—அதிகவீரன். 'அச்சது பொடிசெய்த வதிதீரா' (திருப்பு. காப்பு.)

அதிதீவிரம்—அதிகக்கடுமை. [அதிதீவ்ர.]

அதிதும்மற்பீநசம்—அதிகத் தும்மலையுண்டாக்கும் ஒருவகைப் பீநசரோகம். (சீவரட். உளசு.)

அதிதூலரோகம் — சரீரத்தைப்பருக்கச் செய்யும் ஒருவகைநோய். (சீவரட். உoங.) [அதி - அதிகம். ஸ்தூல - பருமை. ரோக - நோய்.]

அதிதெய்வம்—1. அதிட்டிக்குந்தெய்வம், ஆளுந்தெய்வம். (சி. சி. க: சுஅ. மறை.) 2. மேலானதெய்வம். 'பூதரங் குழைத்துப் புரம்பொடி படுத்த புண்ணிய னேயதி தெய்வம்' (சூத. எக்கி. பூ. சு. ச.)

அதிதேசம் — 1. ஒன்றற்குரியதை மற்ருென்றற்கு ஏற்றிக்கூறுகை. 2. ஒப்புமை காட்டிபுணர்த்துவது. (தர்க்கபா. உஅ.) 'அதிதேசவாக்கியம்' [அதிதேஶ: அதி; தேஶ - மாட்டுதல்.]

அதிதேசவாக்கியம்— ஒருபொருளையறியாதவனுக்கு அதுபோன்ற வேருெருபொருளைக்காட்டி அறிவிக்கும் வாக்கியம். 'அதிதேசவாக்கியப்பொருணினைவோடு கூடிய ஆவொப்புமை விசிட்டபிண்டஞானம் உவமானம்' (தர்க்கபா. உக.) [அதி; தேஶ; வாக்ய - சொற்கூட்டம்.]

அதிதேசித்தல் — ஒன்றற்குரியதை மற்ருென்றற்கு ஏற்றிக்கூறுதல்.

அதிதேவதை — 1. அதிட்டித்துநிற்குந் தேவதை. 2. குலதெய்வம். [அதிதேவதா: அதி - மேன்மை. தேவதா - தெய்வம்.]

அதிதேவன் — 1. மேலான கடவுள். 2. குலதெய்வம். [அதிதேவ: அதி-மேன்மை. தேவ - கடவுள்.]

அதிதைவம் — அதிட்டிக்குந் தெய்வம், ஆளுந் தெய்வம். [அதிதைவ: அதி - மேன்மை. தைவ - தெய்வம்.]

அதிநிந்திதம்—அதிகம் நிந்திக்கப்பட்டது. (சைவப். சஉ.) [அதி - அதிகம். நிந்தித - நிந்திக்கப்பட்டது.]

அதிநுட்பம்— 1. அதிகநுட்பமுடையது. 'அதிநுட்பம் யாவுள' (வள். சுஅசு.) 2. அதிகநுண்மை. [அதி - அதிகம். நுட்பம் - நுண்மை.]

அதிப்பிரகாசம்—பெரிதும்அறியப்பட்டது. [ஃதிவூகாஶ; ஃதி-அதிகம். வூகாஶ-ஒளி.]

அதிப்பிரசங்கம்—1. அதிகநட்பு. 2. அதிகமாகப் பேசுதல். 3. அதிகமான அவமரியாதை. 4. அதிவியாத்திதோஷம். 5. நெருங்கிய ஒற்றுமை. 6. பேசியதையே மேலும் மேலும் பேசுதல். [ஃதிவூஸங்ம: ஃதி - அதிகம். வூஸங்ம - கூடுதல்.]

அதிப்பிரதாநம் — அதிகப்பிரதாநம். (சைவப். சுஎ.) [ஃதி - அதிகம். வூயாந - சிரேட்டம்.]

அதிப்பிரவிருத்தப்பிரபிதாமகன் — பிரவிருத்தப்பிரபிதாமகனுடைய தந்தை. (அகபஞ்ச.அ.)[ஃதிவூவுஜூவூவிதாமஹ.]

அதிப்பிரவிருத்தப்பிரபௌத்திரன் — பிரவிருத்தப் பிரபௌத்திரனுடைய புத்திரன். (அகபஞ்ச.அ.)[ஃதிவூவுஜூவூவௌத்ர.]

அதிபக்குவர் — மிக்க பக்குவமுடையவர். (சி. சி. அ: உ. மறை) [அதி - அதிகம். பக்வ-பக்குவமுடையவர்.]

அதிபசமி—கொன்றை (மலை.)

அதிபத்தர் — அறுபத்துமூன்றுநாயன்மாருளொருவர். (பெரியபு. அதிபத். கக.)

அதிபத்தினி — ஆளுகைசெய்கிறவள், எசமாட்டி, பெருமாட்டி. [ஃயிவத்நீ: ஃயி-மேன்மை. வத்நீ.]

அதிபதி—1. அரசன். 'வேடர்க்கதிபதி நாகனெனன்பான்' (பெரியபு. கண்ணப்ப எ.) 2. சண்பகம் (மூ. அ.) 3. தலைவன். 'சதாசிவாதியதிபதிகளொடுக்கம்' (சிவப்பிர. உ: க. சிதம்பர.) [ஃயிவதி: ஃயி - மேன்மை. வதி - தலைவன்.]

அதிபதிச்சங்கம்—வாலுளுவையரிசி.

அதிபதுங்கி—கொடுவேலி (மூ. அ.)

அதிபம்—வேம்பு. (வைத்தியபரி.)

அதிபர்—முதல்வர். 'அத்தகு தொண்டர்க்கெல்லா மதிபரா மவரை நோக்கி' (வாதவூ. திருப். சுஈ.)

அதிபரமாப்தர்—சதாசிவர்; இவர், தம்மின் மேலாகிய ஆப்தர் பிறரின்மையின் இப்பெயர்பெற்றனர். (சைவச. பொது. கூஉஅ.) [அதிபரம் - மிகமேலான. ஆப்தர் - உள்ளது கூறுவோர்.]

அதிபரன்—1. தன் சத்துருவை வென்றவன். 2. பெரியசத்துரு. [ஃதிவா: ஃதி - மேல், அதிகம். வா - பகைவன்.]

அதிபலம்—1. மிகுபெலம். 'அமரிடு மதிபல வரசர்' (இரகு. திக்கு. உ.) [ஃதிவஙு.] 2. நேர்வாளம் (மலை).

அதிபலன் — சதருத்திரருள்ளே வருண திக்கிலிருக்கும் பதினொன்குருத்திரருளொருவன். (வி - ணி. உஎ. சி. லி. கிரி. உடு. தாற்.)

அதிபலா—நிவிர்த்திகலையிற் பிருதிவிதத்துவத்திலிருக்கும் நூற்றெட்டுப்புவனங்களுளொன்று. (சித்தா. சாரா. கிரியா. உக-ஆஞ்சுலோகவுரை.)

அதிபலை—1. இவன் கொலைசெய்த பூதத்தின்றேகம் தேவர்கள் வாசம்பண்ணுதற்கிடமாய் வாஸ்துபுருடனென்னும் பெயர்பெற்றதென்பர். 2. தசரதராமருக்கு விசுவாமித்திரரால் உபதேசிக்கப்பட்ட இரண்டு மந்திரங்களுளொன்று; அது தாகத்தைப்போக்குதற்கும், ஊக்கம், உடல்வலி முதலியவற்றைத்தருதற்கும் பயன்படுமென்பர். (இராமா. பால. தாட. கஅ. உரை.) 3. பேராமுட்டி. (தைலவ.)

அதிபறிச்சம்—வாலுளுவையரிசி. (மூ.அ.)

அதிபன்—1. அரசன். 2. எப்பொருட்கு மிறைவன். (பிங்க. அகூஅ.) 3. தலைவன். (பிங்.) [ஃயி - மேல். வ - காப்பவன்.]

அதிபாதகம்—மிகப் பெரும் பாதகம்; இது, சிவனுக்குஞ் சிவனடியார்க்குஞ் சிவனைப் பூசிக்குங் குருவுக்கும் விரோதமாகச் செய்யப்படுவது. சிவநிந்தை, சிவத்திரவியம் புசித்தல், கூலிக்குப் பூசித்தல், குருநிந்தை, குருதிரவியம்புசித்தல், சிவனடியார்நிந்தை, வேதாகமநிந்தை யென்பன அதிபாதகமென்பர். (சைவச. பொது. உசுக. உரை.) 'பிழைத்தவதிபாதகந் தீர்த்திலங்குகவே' (சீகாழிப்பு. ஸ்ரீகாளிபுர. சO.) [ஃதிவாதக: ஃதி - அதிகம். வாதக-குற்றம்.]

அதிபாதகர் — மிகுந்த பாதகமுடையவர். 'அதிபாதகர்க ளெம்பெருமாற் கன்பாகிய தென்னெனவயிர்த்தார்' (ஞானவா. பிரகலா. க0.)

அதிபாதம்—1. எல்லைகடத்தல். 2. நியாயப்பிரமாணத்தையாவது தேசவழக்கத்தையாவது மீறிநடத்தல். [ஸுதி - அப்பால். வாத - போதல்.]

அதிபானம்—மதுபானம்.

அதிபாரகம் — கோவேறுகழுதை. [ஸுதி ஹாரக: ஸுதி - அதிகம். ஹாரக - சுமைகொண்டுசெல்வது.]

அதிபாரகன்—மிகு நிபுணன். [ஸுதிவாரக; ஸுதி - அப்பால். வாரக - கரைகடந்துசெல்வோன்.]

அதிபாரம்—மிகுபாரம். 'அதனாலே சாவில்லாப் பல்லுயிரா லறநெருங்கு மதிபாரத்தை - யெதினாலே தீர்வமென' (ஞானவா. அருச்சுனன். கூ.) [ஸுதிஹார; ஸுதி - அதிகம். ஹாரம் - சுமை.]

அதிபாவம் — பெருங்குற்றம். 'வில்லாளி கூரம்பொ டிராமன்கை யடலம்பு மூவமிக்கி லதிபாவமே' (பாரத. பன்னிர. அஅ.) [அதி-பாவ.]

அதிபீடிதம் — அதிகமாக இருக்குதல். (கொக்கோ. சூ: உசரு.) [வீடித.]

அதிபூச்சியர் — அதிகம் பூசிக்கப்படத் தக்கவர். (வி - ணி. உசஉ.) [வூஜ்ய.]

அதிபூதம் — 1. சரீரத்துக்கு வேறாயும், இந்திரியங்களுக்கு விடயமாயும் இருக்கும் பொருள். (விசாரசா. உக.) 2. பரமாத்துமா, மேலானவஸ்து. [ஸுயிஹூதம்.]

அதிபெலம்—அதிபெலமென்னும் புவநம். (கந்தபு. கணங்கள். க0. உரை.) [ஸுதி வலம்.]

அதிமதுரகவி — ஒருபுலவர். (தமிழ்நா. 207.)

அதிமதுரம் — 1. ஒருசரக்கு. 'அருந்ததி மதுரம்' (மச்சபு. சருவபல. அ.) 2. குன்றிவேர். (மலை.) 3. மிக்க இனிமை. 'அதிமதுரக் கனியொன்று' (பெரியபு. காரைக். உரு.) 4. வெண்குன்றி.

அதிமந்தம்—சர்வநேத்திரரோகம் மூன்று வகையுளொன்று, அது: வாதாதிமந்தம், பித்தாதிமந்தம், சிலேட்டுமாதிமந்தம், இரத்தாதிமந்தம், அதாதிமந்தம் என ஐந்தாக விரியும். (சீவரட். உருஅ.)

அதிமல்லி—
அதிமலம்— } மாவிலிங்கம். (மூ. அ.)

அதிமாத்திரம் — அளவுக்குமேற்பட்டது. [ஸுதிமாத்ரு.]

அதிமாதம்—அதிகமாதம். (சரசோ. குணகுண. உ.)

அதிமாநுடன் — 1. உத்தமபுருடன். 2. சிரஞ்சீவி. 3. தேவன். 4. மநுடனுக்கு மேற்பட்டவன். [அதிமாநுஷ: அதி - அப்பால். மாநுஷ - மாநுடன்.]

அதிமாமிசநம்—ஒருவகைத் தந்தரோகம். ஸுயிமாංஸக: உண்ணாக்கில்வரும் அழற்சி என்பது மொன்று.

அதிமாமிசம்—கண்ணில்வரும் ஒருவகைத் தசைச்சுரப்புநோய். [ஸுயிமாංஸ; ஸுயி - மேல். மாංஸ-தசை.]

அதிமாமிசரோகம் — பற்களிலே வரும் ஒருவகைநோய். அது: பல்லின் வேர்ச்சந்துகளிலே ஆணியையொத்த கட்டிகளைப் பிறப்பித்துக்காதுகளிலும்தாடையிலும்நோவுண்டாக்கும். (சீவரட். உஅங.) [ஸுயிமாංஸரோக.]

அதிமாமிசார்மரோகம் — கண்ணில்வரும் ஒருநோய்; அது: வெள்ளைவிழியிலே அதிக மாமிசம் வளர்வது. (சீவரட். உரு0.)

அதிமாயம்—மாயையினின்றும் நீங்கினது. [அதிமாய: அதி - அப்பால். மாய - மாயை.]

அதிமார்க்கநூல் — பரசமயங்களுக்கப்பாற்பட்டு உட்சமயமாய்ச் சித்தாந்த மல்லாததாயுள்ள ஞானத்தைப்போதிக்குஞ் சாத்திரம்; அது: பாசுபதம், காபாலம், மகாவிரதம் என மூன்றுவகைப்படும். (சைவச. பொது. ௩௩அ. உரை; சதாசிவ. சங.) [இவை உருத்திரர்களாற்செய்யப்பட்டன என்பர். (சி. பி. கை. பக். கஉ).]

அதிமார்க்கம் — பரசமயங்களுக்கப்பாற்பட்டு உட்சமயமாய்ச் சித்தாந்தமல்லாததாயுள்ள சமயம். (சதாசிவ. சங.) [ஸுதி - அப்பால். மாநு - சமயம்.]

அதிமித்திரன்—கணவன். [அதி - அதிகம். மித்திரன் - நண்பன்.]

அதிமிதம் — 1. அளவின் மிக்கது. 2. காய்ந்தது, ஈரமில்லாதது. [அதி; மித - அளவு. அமிமித: அ - எதிர்மறை. திமித - ஈரம்.]

அதிமிதி—1. அதிக்குதி. [வழக்.] 2. வீம் பானநடை.

அதிமிருத்தியாதிமாத்திரை—கோரோசனை மாத்திரை. (வைத்தியபரி) [ஸதி; ஹ்ரு த்ரு - மரணம்; ஆதி; ஹாத்ரா.]

அதிமுத்தம் — 1. குருக்கத்தி. (மலை) 2. தேகம் நீங்கி யடையும் முத்தி. [ஸதி ஹுக்த: ஸதி - அதிகம். ஹுக்த - விடப் பட்டது.]

அதிமுத்தி—சாயுச்சியமுத்தி. [ஸதிஹுக்தி: ஸதி - மேல். ஹுக்தி - விடுதல்.]

அதிமூர்க்கம்—கடுங்கோபம்.

அதிமூர்க்கன்—கடுங்கோபி.

அதிமோகம்—1. அதிக சிற்றின்ப ஆசை. 2. அனேகம். 3. ஒருதலைக்காமம்.

அதிமோட்சம் — அதிமுத்தி. [ஸதி மோக்ஷ: ஸதி - அதிகம். மோக்ஷ - வீடு.]

அதியட்டி — அடியொன்றிற்குப்பதினே ழுசையுடையதாய் நான்கடியால் வரும் ஒரு கவிச்சந்தம். (சிவதரு. உ: க. உரை.) [ஸத்யஷ்டி: ஸதி - அதிகம். ஸஷ்டி - ஒரு சந்தம்.]

அதியம்—ஒரு மருந்து.

அதியமான் — அதியமானெடுமானஞ்சி. (புறநா. 90.)

அதியமானெடுமானஞ்சி— கடையெழுவள் ளல்களில் ஒருவன். (புறநா. 87.)

அதியர் — அதியமான்வமிசத்தோர். (புற நா. 91.)

அதியரையன் — மீன்வலைஞர் தலைவன். (திருவாலவா. 22—9.)

அதியன் — மேற்பட்டவன். 'திருவா வடுதுறையுளதியனே' (தேவா. 485. 4.)

அதியாச்சிரமம்—ஆச்சிரமங்களைக் கடந்த நிலை. (சி. சி. 8. 32. சிவாக்.)

அதியாதரம்—மிகுவிருப்பம். 'அதியாதரத் தொடமையா'' (பார்த. 'பதினெட். ச.) [ஸதி - அதிகம். ஆதர - விருப்பம்.]

அதியாமம்—1. அறுகம்புல். (மூ. அ.) 2. முயற்புல். (வைத்தியபரி.)

அதியால்—பெரியோருக்கிடுங் காணிக்கை.

அதியுக்கிரகண்டன்—ஓரியமதூதன். (வி - ணி. உஅகூ.) [ஸதி: உக்ர - கடுமை. கண் டன்.]

அதியோகம்—சென்மலக்கினத்துக்காவது சந்திரலக்கினத்துக்காவது ஆறு மேழா மெட்டாமிடங்களிற் சுபக்கிரகம் இருக்கு நிலை. இது: ஞானம், கீர்த்தி, இராசபிரியம், முதலியசுபகாரியங்களைக்கொடுக்கும்யோகம் என்பர். (விதான. சாதக. உ௩. உரை.) ஸதி- மேல். யோக.]

அதிர் — 1-3. அதிரென்னேவலும், தெரி நிலைவினைப்பகுதியும், பெயரெச்சத்தொகை யும். ''அதிர்கடல்சூழ்புவி' (சூத. எக்கி. பூ. ௬. உஉ. பெ. கை.) 4. ஒலி. 5. நடுக்கம். 6. பயம்.

அதிர்ச்சி—1. அசைவு. 2. அதிகப்படுதல். 3. ஆரவாரம், குமுறல். 'காய்சினக்களிறதிர்ந் திடு மதிர்ச்சி' (உபதேச. விபூதி. கக௮) 4. நடுக்கம். 5. பயம்.

அதிர்ச்சியம்—1. காணத்தகாதது. 'அதிர்ச் சியமுமன்றென்றுசொல்லி' (சி. சி. உ: க. ஞானப்.) 2. காணப்படாமை. [ஸத்ருஶ்ய: ஸ - எதிர்மறை. த்ருஶ்ய - காணத்தக்கது.]

அதிர்சன்னி—ஒருவகைச் சன்னி.

அதிர்த்தல்—1. அசைத்தல். 2. அதட்டல், உரப்பல். (பிங்க. உககக.) 'அரிப்பதாகனுர கப்பதாகனையதிர்த்து' (பாரத. பதினெ: க௮௬.) 3. அதிரச்செய்தல். 4. ஒலித்தல். 'மதித்தவேலையவ்வேலையினுடைந்தெனவாய் விட் டதிர்த்த' (கந்தபு. ததீசியுத். ௩உ௫.) 5. சொல்லுதல். (பிங்க. உ௦௦க.) 6. அசைத் துத் தள்ளுதல். 'அஞ்செழுத்தாலதிர்த் தெழுந்து' (கோயிற்பு. பாயிர. க.) 7. நடுங் கச்செய்தல். 'பின்னதிர்க்குஞ் செய்வினை' (நான்மணி. 68.) 8. கலங்குதல். 'கற்று ணதிர்ப்பிற் பொருளதிர்க்கும்' (நான்மணி. 21.)

அதிர்தல்—1. அசைதல். 'பெண்ணொருத்தி பேசிற் பெரும்பூமிதானதிரும்' (நீதிவெண்.) 2. ஒலித்தல். 'அதிர்ந்து வீசினன்' (பாரத. குருகுல. ருஎ.) 3. நடுங்கல். 'அதிரவருவ தோர்நோய்' (வள். சஉகூ.) 4. எதிரொலித்தல். (பரிபா. 8. 19.)

அதிர்ப்பு—1. அதிர்ச்சி, 'இப்படி யருஞ் சம ரிழைத்திடு மதிர்ப்பினில்' (உபதேசகா. சூராதி. 28.) 2. எதிரொலி. 'எதிர்குதி ராகின் றதிர்ப்பு' (பரிபா. 8. 21.)

அதிர்வு—1. அதிர்ச்சி. 2. யாழ்நரம்பின் நடுக்கம். 'செம்பகை யார்ப்பே யதிர்வே கூடம்' (சிலப். 8. 29.)

அதிர்வேடி—1. சிறுபீரங்கி. 2. திடுக்கிடச் செய்யுஞ் சிறு பீரங்கிச்சத்தம்.

அதிர்வேட்டு—அதிர்வெடி.

அதிரசம்—1. உப்பு. 'தனித்தபுரா தனத் தெளிவும் புத்தனமு மதிரசத்தைத் தள்ளி' (தைல. தைலவ. கoஎ.) 2. ஒருபண்ணிகாரம். (திருவாத. திருப்பெரு. எo. விருத்தியுரை.) 3. ஒரு பாஷம். (வைத்தியபரி.) 4. மிக்க இரசம். 'அன்னமும் பாலுந் தேனு மதிரசக் கனியுநல்கி' (திருநெல். சுவேத. ருஅ.) [அதிரஸ.]

அதிரதம்—1. ஓர் பண்ணிகாரம். 2. ஓர் பாஷம். 3. நால்வகைத்தேர்களுளொன்று. [அதிரத: அதி - அதிகம். ரத - தேர்.]

அதிரதர் — தம்மையும் தமதுதேரையும் சாரதியையும் தேர்க்குதிரைகளையும் சேனைகளையும் காத்துக்கொண்டு பகைவரை அழிவு காணவல்ல தேர்வீரர்; முழுத்தேர்வீரர். 'அதிரதர்மாய்ந்தார்' (பாரத. பதினன். கூசு.)

அதிரதன்–1. சத்தியகர்மன் மகன். இவன் கங்கைக்கரையில் வந்தடைந்த குந்தி சிசுவாகிய கன்னனை யெடுத்து வளர்த்தவன். இவன் மனைவி இராதை. (அபிதா.) 2. ஒருவகைத் தேர்வீரன்.

அதிரல்—1. அதிர்தல். 2. புனலிமரம். 'அதிரல்பூத்தவாடுகொடிப்படாஅர்' (முல்லை. ருக.) 3. மோசிமல்லிகைக்கொடி. 'விரிமல ரதிரலும்' (சிலப். புறஞ்சே. கரு௬.) 4. விரிதூறு. (திவாகர.)

அதிராகம்—கெந்தகம். (மூ. அ.)

அதிராசன் — 1. அரசனுக்கு மேற்பட்டவன். 2. சிரேட்டராசன். 3. பேரரசன். [அதிராஜ: அதி-மேன்மை. ராஜ-அரசன்.]

அதிராத்திரம் — யாகமிருபத்தொன்றி னொன்று; இது: சோதிட்டோமயாகத்தி னொருபகுதி. 'பின்பனிக்காலந் தூசினீர் நிற்கிற் சொல்லதி ராத்திரந் துலங்கிய மகப்பய னடைவர்' (மச்சபு. தடாகவி. உஎ.)

அதிராம்பை— பொற்றலைக்கையாந்தகரை. (மலை).

அதிரார்யம்—அதிசயம்.

அதிரிசாரம்—இரும்பு. (வைத்தியபரி.)

அதிரித்தம் — மிகுதி. (சிவசம. சரு.) [அதிரிக்த: அதி; ரிக்த.]

அதிருக்கு—குருடு. [அத்ருக்: அ - எதிர்மறை. த்ருக் - கண்.]

அதிருச்சியம் — காணப்படும்பொருளைக் காணாமற்போகச்செய்வது. 'அகாமாதிமூன் றாகியவாகருடணமே-புகரிலாவதிருச்சியமஞ் சனம்' (திருவிளை. எல்லாம். கஎ.)[அத்ருஶ்ய. 'அதிர்ச்சியம்' என்றதன் பொருளெல்லாம் இதற்கும் வரும்.]

அதிருசம்—அதிருசியம். [அத்ருஶ்ய.]

அதிருசன் — குருடன். [அத்ருஶ: அ - எதிர்மறை. த்ருஶ் - கண்ணுள்ளவன்.]

அதிருசியந்தி—அருந்ததி.

அதிருசியம் — 1. அறுபத்துநான்குகலை ஞானங்களுள் ஒன்று. [அது காணப்படும் பொருளைக் காணப்படாமற்போகச் செய்யுஞ் சித்தியையுரைப்பது.] 2. காட்சிக்கு விடயமாகாதது. 'உணர்வரிதாயதிருசியப்பொருளாய்' (சூத. முத்தி. ௬. கக.) 3. காணத்தகாதது. 4. தாமதகுணசித்திகளுள் ஒன்று; அது: காணப்படும் பொருளைக் காணாமற்போகச்செய்வது. (கூர்மபு. உ: கரு. உரை.) [அத்ருஶ்ய: அ - எதிர்மறை. த்ருஶ்ய - காணத்தக்கது.]

அதிருசியன்–1. கடவுள். 2. பரசிவன். 'சீர் மொய்த்த வந்தரியாமி - சால வேத்திடு திருசிய நாயகன் சாற்றதி ருசியன்னே' (சூத. எக்கி. பூ. ௩௩: அ.) [அத்ருஶ்ய: அ - எதிர்மறை. த்ருஶ்ய - காணத்தக்கவன்.]

**அதிருட்டகன்மம்**—மறுமையிலே சுவர்க்க நாகங்களை யநுபவித்தற்குக்காரணமாக இருக்கும் இம்மையிற்செய்யப்பட்ட கன்மம்; இக்கருத்து, 'அதிருட்டமாவது: இம்மையிலேசெய்த கன்மம் மறுமையிற் சுவர்க்க நாகங்களை யநுபவிக்கை' என (சி. சி. உ: கஉ. உரை.) மறைஞானசம்பந்தர் கூறிய தாற் பெறப்படும். [அத்ருஷ்ட - காணப் படாத. கர்ம - கிரியை.]

**அதிருட்டபோக்கியம்**— ஒருவர்செய்தகன்மம், தேகாந்தத்திலே சுவர்க்கத்திலாதல், நரகத்திலாதல், மற்றொருபிறப்பிலாதல் பலிப்பது. (சி. சி. உ: ஙக. ஞானப்.) [அத்ருஷ்ட- காணப்படாத. போக்ய - புசிப்பு.]

**அதிருட்டம்**—1. இந்திரியங்களாற் காணப் படாதது. (சித்தா. சாரா. ஞாந. எ-ஆஞ் சுலோகவுரை.) 2. பார்வைக்கெட்டாதது. (வி - ணி.) 3. பாவபுண்ணியத்தொழிலினாற் புத்திதத்துவத்திற் சமவாயசம்பந்தியாய் வைக்கப்பட்டுப் பலபரியந்தமிருக்கும் ஸம்ஸ்காரமாகிய சூக்குமகன்மம். இது சுவர்க்க நாகபூமிகளுக்கு ஆன்மாவுடன் சூக்கும தேகத்தில் இருந்து போதலும் வருதலும் உடையதென்பர். (சி. சி. உ: கக. ஞானப்.) [அத்ருஷ்ட: அ - எதிர்மறை. த்ருஷ்ட - காணப்பட்டது.] 4. ஊழ். 5. நல்லூழ். 6. பரகியாசம். (4, 5, 6 தமிழ்லெக்ஸிகன்.)

**அதிருட்டாநுமாநம்** — அதிட்டாநுமாநம். (சி. சி. அளவை. கஉ. மறை.) [அத்ருஷ்ட; அநுமாநம்.]

**அதிருட்டி**—குரூரமாகியபார்வை. (இலிங் கா.) [அத்ருஷ்டி.]

**அதிருட்டிபூதநா** — ஒரு குருட்டுப் பெண் பேய். இது: குழந்தைகளைவருத்தும் ஏழு பெண்பேய்களுள் ஒன்றென்று சொல்வர். (சீவரட். உஉஉ.) [அத்ருஷ்டி - கண்ணில்லாதது. பூதநா-ஒரு பெண்பேய்.

**அதிருட்டிபூதநாக்கிரகதோஷம்**-அதிருட்டி பூதனையென்னும் பெண்பேயினாற் குழந்தைகளுக்குவரும் தோஷம். அது:அற்பபார்வை, வாந்தி, சுரம், இருமல், மலபேதம், தேகநிற மாறுதல், அத்தேகத்திற் றுர்க்கந்தம் வீசுதல், அல்லது அசங்கியநாற்றம், இளைத்தல், சொற்பநித்திரை, உதடுநோவு, தினவு, விக்கல், பயம், முலைப்பாலில் அசங்கியம், ஈநத்தொனி, நடுக்கம் முதலிய குணங்களையுண்டாக்கும். (சீவரட். உஉச.) [அத்ருஷ்டி பூதநாக்ரஹதோஷ.]

**அதிருத்தி**—திருத்தியின்மை. [அத்ருப்தி: அ-எதிர்மறை. த்ருப்தி-நிறைவு.]

**அதிருப்பை**—பேய்த்தலைக்கையான்.

**அதிருபம்**—மிகச்சிறந்தவடிவம். [அதிருப.]

**அதிரேகம்**—1. அதிசயம். 2. அளவுக்கதிகம். 3. மிகுதி. 'அதிரேகமாயை' 4. மேன்மை. [அதிரேக: அதி - அதிகம். ரேகம் - கடந்தது.]

**அதிரேகமாயை** — பெரிதாகிய மயக்கம்; 'ஆரிவ்வதிரேகமாயையறிவார்' (இராமா. நாகபாச. உருஉ.)

**அதிரோகணி** — அதிரோகிணி. [அதி ரோஹணீ.]

**அதிரோகம்** — 1. கயரோகம். 2. மிகு பிணி. [அதிரோக: அதி-அதிகம். ரோக - நோய்.] 3. மேலோங்கியது. [அதிரோஹ: அதி - மேல். ரோஹ - ஏறுதல்.]

**அதிரோகிணி**—ஏணி. [அதிரோஹிணீ. அதி - அப்பால். ரோஹிணீ - ஏறுதற்குரியது.]

**அதிரோகிதபாவம்**—மறைக்கப்படாதிருத்தல். (பௌட். பசு. கருக.) [அதிரோஹிதபாவ: அ-எதிர்மறை. திரோஹித பாவ - மறைக்கப்பட்டிருத்தல்.]

**அதிரோகிதம்** — மறைபடாதிருக்கை. [அ - எதிர்மறை. திரோஹித - மறைக்கப்பட்டிருக்கை.]

**அதிரோபிதம்** — மேலாக உயர்த்தப்பட்டது, மேலாகவைக்கப்பட்டது. [அதிரோபித: அதி - மேல். ரோபித - உயர்த்தப்பட்டது.]

**அதிலவோடாகம்**- அடிலவோடாகச்செடி; இது மலையாளதேசத்துள்ளதென்பர்.

அதிலுத்தன்—பொருளில் மிக்க ஆசையுடையோன். [ஸ அதிலுப்த: லுப்த - ஆசைக்காரன்.]

அதிலோகம் — 1. இரசகர்ப்பூரம். (வைத்தியபரி.) 2. உலகத்தில். 3. சர்வலோகம், அசிற்பிரபஞ்சம். [ஸ அதி - மேல். லோக.]

அதிலோபம்—1. தன்பொருளைப் பிறர்க்குக் கொடுக்கவிரும்பாமை. 'ஆய்ந்த பொருளொருவர்க் கீயா வதிலோப - மாந்தர்' (சிந்தா. முத்தி. ௩௪௧.) 2. மிக்க பொருளாசை. (சி. சி. அ: ௩௨. மறை.) [ஸ அதிலோப.]

அதிவ்யசம்பந்தம்— அறுவகைச்சம்பந்தத்துள் ஒன்று; அது: (ஆகமவுபதேசத்தைப் பற்றிக்) குருவுக்கும் சீடனுக்குமுள்ள சம்பந்தம். (சி. சி. ௧: ௪௬. மறை.) [ஸ அதிவ்ய-திவ்யமல்லாத. ஸம்பந்த - தொடர்ச்சி.] மநுஷிய இருடியிடத்திருந்து சிஷ்யனை மநுஷனிடத்தில்வந்த ஆகமசம்பந்தம்; இஃது: ஆறுவதுசம்பந்தம். (சி. வி. சரி. உ.) [ஸ அதிவ்யஸம்பந்த: திவ்ய - தேவர்க்குரியது.]

அதிவ்வியம்—திவ்வியமல்லாதது. 'அதிவ்வியசம்பந்தம்' [ஸ அதிவ்ய.]

அதிவசநம்—1. பட்சபாதமான பேச்சு. 2. பெயர். [ஸ அதிவசந.]

அதிவசம்—1. அதிவிடயம். 2. வசம்பு. (வைத்தியபரி.)

அதிவர்ணச்சிரமி — வருணச்சிரமங்களைக் கடந்து வேதாந்தமகாவாக்கியக்கேள்வியினாலே கடவுளையும் தன்னையும் அறிந்த ஐக்கியான்மஞானி. [ஸ அதிவர்ணாஸ்ரமி: ஸ அதி- அப்பால். வர்ண - குலம். ஆஸ்ரம - நிலை.]

அதிவருணர் — அதிவர்ணச்சிரமத்தோர். 'ஐயமற்ற வதிவரு ணர்க்கெலாங், கைவிலாமலகக்கனியாகிய, மெய்யனே' (தாயு. பொன். ௩௧.)

அதிவன்ஞச்சிரமி — அதிவர்ணச்சிரமி. 'உலக முழுதுஞ் சொப்பநம்போ லுறக்கண்டிடுவா னெவனுளும்-இலகு நமபே ரொளிப்பிழம்பி னிலீந மாவா னெவனிதனுன்-மலரும் வருணச் சிரமதன்மம் வழுவ வறித ரானெவனவ் - வலகில் சீர்த்தி யுடையானே யதிவன்ஞச்சி ரமியாவான்' (சூத. முத்தி. ரு. ௧௬.)

அதிவாசநம்—1. சுவாமியை விக்கிரகத்தில் வருவித்துப் பிரதிட்டைசெய்தல். 2. மணமூட்டுதல். [ஸ அதிவாஸந.]

அதிவாசம்—1. அயல். 2. இடம். 3. பிடிவாதமாய்க்கேட்டல். 4. மணமூட்டுதல். 5. மிகுமணம். 6. யாகாரம்பத்திற்கு முதனாளிலே தெய்வங்களையாவாகித்துத் தாபிக்குங்கிரியை. 'அற்றிகழ் வொன்றுசடங் கதிவாசமமைத்தார்கள்' (கோயிற்பு. திருவிழா. ௪.) 7. வஸ்திரம். 8. வாசஸ்தாநம். 9. சிராத்தத்துக்கு முந்நாள் உபவாசம். (தமிழ் லெக்ஸிகன்) 10. விவாகச்சடங்குக்குமுன்னங்கமாக நிகழ்த்துஞ் சடங்குவகை. (சீவக. 2363 உரை.) [ஸ அதிவாஸ: ஸ அதி - மேல். வாஸ - இருத்தல்; மணம்.]

அதிவாதம்—1. சுவாமியை விக்கிரகத்திலே திருமேனிகொண்டுறையும்படிசெய்யும் பிரதிட்டைக்கிரியை. 'விதிதான் முறையேயதிவாத வினையு மற்றை வினையனைத்தும் - பதியாம் பரமன்றனக்கிசையப்பண்ணியிடுக' (சிவதரு. ௨: ௭௧.) [ஸ அதி - மேல். வாஸம்-வாதம்.] 2. நிந்தைமொழி, விரோதமான பேச்சு. [ஸ அதிவாத: ஸ அதி - அதிகம். வாத - பேச்சு.] 3. பெருங்காற்று. [அதிவாத: ஸ அதி - அதிகம். வாத - காற்று.]

அதிவாதி—1. பிறமதங்களெல்லாவற்றையுங் கண்டித்துத் தன்மதந்தாபிப்போன். 2. மிக வாய்ச்சாலமாய்ப்பேசுவோன். [ஸ அதிவாதிந்: ஸ அதி - அப்பால். வாதிந் - வாதிப்போன்.]

அதிவாலகன் — குழந்தை. [அதிவாலக: ஸ அதி - அதிகம். வாலக - இளையோன்.]

அதிவிகடம் — துட்டத்தன்மையான யானை. [அதிவிகடம்: விகடம் - பயங்கரமானது.]

அதிவிகடன் — மிக்ககோபி. [அதிவிகட.]

அதிவிசித்திரம் — மிகுந்த ஆச்சரியம். [அதி - அதிகம். விசித்ரம் - ஆச்சரியம்.]

அதிவிடம்—1. அதிவிடயம். விஷத்தைக் கண்டிக்கும் ஒரு மருந்து [அதிவிஷ: அதி- அப்பால். விஷ - நஞ்சு.] 2. அதிவிடை.

அதிவிடயம் — ஒரு பூண்டு; இதன்வேர் ஓரங்குலநீளமாயும், வெண்மைநிறமுடையதாயும், மிருகசப்பாயுமிருக்கும்.

அதிவிடை—1. அதிவிடயம்; 'திரிபலை மரீசமம் பதிவிடைகு பேரிகை சிகிப்பீலி யொலி சாதிசந் திரிபூரம் வெட்பாலை பங்கிவித் தரிசனந் திவிபிநா மங்குன்றிவேர் - கிருமியரி சிஞ்சைவித் துரியொருப தொடுநவங் கிளர்வகைக் கொருகஃசெலாங் கிண்டியிழை'(தைல. தைலவ. ௪.) 2. ஒருமரம். இது: மருந்துக்குபயோகமானது. இதன்பட்டை சாயங்கொடுத்தற்குப் பிரயோகிக்கப்படும். 3. ஒருமருந்துச்செடி. (தைலவ. தைல. 4.) [அதிவிஷா.]

அதிவிடையம்—அதிவிடை. (மூ. அ.)

அதிவித்தாரம்—அதிக விஸ்தாரம். (பௌட். பசு. ௧௨௩.) [அதி - அதிகம். விஸ்தரம் - விஸ்தாரம்.]

அதிவிந்தை—தன் கணவன் வேறொருத்தியை விவாகஞ்செய்தற்குக் காரணமாயிருந்த முதன்மனைவி. (பராச. ௧௩௭.) [அயிவிஞா: அயி - மேல். விஞா - அடைந்தவள்.]

அதிவிநயம்—1. அதிகங் கீழ்ப்படிவு. 2. மாரிசாசாரம். [அதி - அதிகம். விநயம் - வணக்கம்.]

அதிவியதை—மிக்க உபத்திரவம். [அதிவ்யதா: அதி-அதிகம். வ்யதா - வருத்தம்.]

அதிவியப்பு—அதிக வியப்பு. 'ஆழியானதிவியப்பெய்தி' (இராமா. உத். கார்த்த. க.) [அதி - அதிகம். வியப்பு - மேன்மை.]

அதிவியயம் — அதிகச்செலவு. [அதி - அதிகம். வ்யய - செலவு.]

அதிவியயி — பெருஞ்செலவாளி. [அதிவ்யயிந.]

அதிவியாத்தி—1. மூன்று தூஷணங்களுளொன்று; அது: ஒருபொருளுக்குச்சொல்லப்படும் இலக்கணம் அஃதல்லாத பொருளிலும் இருத்தல்; பசு, கொம்புடையதென்று சொல்லுமிடத்துக் கொம்புடைமையாகிய அவ்விலக்கணம் பசு அல்லாத யானை முதலிய மிருகங்களுக்கு மிருத்தலால் அதிவியாத்தி. (தர்க்கச. அன்ன. ரு. பக்.) 2. விதிப்பிரமாண மொன்றனைக் கருதியதற்குமேலே பாரித்தல். [அதி - அதிகம். வியாப்தி - வியாபித்தல்.]

அதிவியாப்தி—அதிவியாத்தி.

அதிவிரகன்—1. அதிக உபாயமுள்ளவன். 'கள்ளத்தாலருந்ததி விரகனதருளினால்' (பாரத. அருச்சுனன்றீ. எசு.) [அதி - அதிகம். விரகன் - உபாயமுடையவன்.] 2. மிக்கபிரிவு. [அதி - அதிகம். விரகம் - பிரிவு.]

அதிவிருட்டி—அதிகமழை. [அதிவ்ருஷ்டி: அதி - அதிகம். வ்ருஷ்டி - மழை.]

அதிவெப்பம் — இருபத்தெட்டுத்தொகை நரகங்களிலே முதலாவதாகிய கோரத்துக்குள்ள ஐந்துநாயகநரகங்களில் ஒன்று. (சிவதரு. எ: ௧௧௩.) [அதி - அதிகம். வெப்பம் - வெம்மை.]

அதிவெள்ளை — பறங்கிப்பாஷாணம். (வைத்தியபரி.)

அதிவெள்ளைச்சிந்தூரம் — 1. சவ்வீரம். 2. பறங்கிப்பாஷாணம். (மூ. அ.)

அதிவேகம்—மிகுகதி.

அதிவேதநம்— 1. அதிகக்கூலி. [அதி- அதிகம். வேதநம் - கூலி.] 2. முன்விவாகஞ்செய்த மனைவியிருக்கப் பின்னும் ஒருத்தியை விவாகஞ்செய்தல். [அயிவெதநः அயி - அப்பால். வெதந - விவாகம்.]

அதிக்ஷேபம்—நிந்தித்துத்தள்ளல்; [அதிக்ஷெவ. அதி-மேல். க்ஷெவ - எறிதல்.]

அதீக்கிதர்—தீக்கைபெறாதவர். 'அதீக்கிதரொழிய மற்றைமூவருள்' (சைவச. பொது: ௩௧௨. உரை.) [அதீக்ஷித: அ - எதிர்மறை. தீக்ஷித - தீக்கைபெற்றவர்.]

அதீக்ஷையோர் — தீட்சையில்லாதவர். 'அதீக்கையோர் கொணர்ந்தனவும்' (திருநெல். விபூதி. உகூ.)

அதீச்சன் — மிக்க இச்சையுடையோன். [ஆதீச்ச: ஆதி - அதிகம். இச்சா - ஆசை.]

அதீச்சுரன்—1. அதிபதி. 2. கடவுள். 3. தலைவன். 'துகளறு சாமவேதத்துக்கதீச்சுரனேயென்றும்' (மச்சபு. நட்சத். கரு.) [அதி - மேல். ஈச்வர - கடவுள்.]

அதீசன்—1. அதிபதி. 2. ஏகசக்கராதிபதி. 3. கடவுள். [அதீச: அதி-மேல். ஈச-தலைவன்.]

அதீசாரம்—அதிசாரம். [அதீஸார.]

அதீட்சணதை-கூர்மையின்மை. [அதீக்ஷ்ணதா: அ - எதிர்மறை. தீக்ஷ்ணதா - கூர்மை.]

அதீட்சணன்-கூர்மையில்லான். [அதீக்ஷ்ண.]

அதீதகலை — ஐந்துகலைகளுளொன்றாகிய சாந்தியதீதகலை; அது: விகற்பஞானஞ் சாந்தமானதென்கின்ற நினைவுங் கழன்று பரமாகாசரூபமாயிருப்பது. (சிவப்பிர. உ: ங. உரை. இலக். சிதம்.) [அதீத - கடந்த. கலா.]

அதீதகாலம் — இறந்தகாலம். (பௌட். பாசபதா. எடு.) [அதீதகால: அதீத - சென்ற.]

அதீதப்பிரமம்—மேலானபிரமம். [அதீத ப்ரஹ்ம.]

அதீதம்—1. ஆன்மாவில் ஆணவமலம் பரிபூர்ணமாயிருக்குங் கேவலாவத்தையாகிய தன்மை. 'நீக்கமிலதீதமாசு நிறைந்த கேவலமாநீர்மை' (சிவப்பிர. ச: ங.) 2. இறந்தகாலம். (பௌட். பாசபதா. சகூ.) 3. எட்டாதது, கடந்துமேலேபோனது 'சிந்தையாரதீதமானசிவசத்தி' (சி. சி. க: ருஎ) 4. சென்றது. 5. தடையினின்று விடுக்கப்பட்டது. 6. தாளப்பிரமாணம் பத்துவகையுளொன்றாகிய கிரகமென்பதன் பிரிவு நான்கனுளொன்று; அது: குரல் முன்னும் தாளம் பின்னுமாய் வருவது. 7. துரியாதீதம்; அது கருவிகளெல்லாம் நீங்க ஆணவமலம் நீங்காதிருக்க மூலாதாரத்திலே புருடனின்ற அவதரம். 'தனியதீத முயிர்க்குண்மை யெனவுணர்த்துமன்றே' (சிவப்பிர. ங: க.) 'என்னமொன்றில்லாததீதம்' (சிவப்பிர. ச: க.) 8. பொன். 9. மரித்தது. 'எல்லாமதீதமயமானதன்றோ' (தாயு. ஆன-ப. கo.) 10. மேற்பட்டது. [அதி - அப்பால். இத - போனது.]

அதீதர்—1. முனிவர். 2. மேலோர். 3. வானோர். [அதீத: உலகப்பற்றையொழித்தவரென்றபடி.]

அதீதவேதன்—வேதம் முற்றக்கற்றவன். [அதீதவேத: அதீத - படிக்கப்பட்ட. வேத - வேதமுடையோன்.]

அதீதன்-1.எட்டாதவன், கடந்தவன். 'வாக்கெவைக்கு மதீதனுமப்பிரானருளால்' (சூத. ஞான. கo: உo.) 'பாவனாதீதன்' (சி. சி. சூ: எ. சிவாக்.) 2. பாசத்தினின்று விடுவிக்கப்பட்டவன். [அதீத: அதி; இத - போன.]

அதீதாவத்தை—கீழாலவத்தை ஐந்தனுள் ஒன்று; அது: கருவிகளெல்லாம் நீங்கி ஒன்றும் அறியாமற்கிடக்கும் அவத்தை. இதிலே புருடதத்துவம் ஒன்றுமே சீவிப்பது. இந்த அவத்தையிலே வெம்மையற்ற இரும்பு போலவும், பிறவிக்குருடன் அந்தகாரத்திலே விழித்திருக்குந்தன்மைபோலவும் அறிவுவலி கெட்டிருக்கும் என்பர். (சிவப்பிர. ச: க. உரை. சிதம்பர.)

அதீதியம்—ஆசையின்மை.

அதீந்திரியம்—1. இந்திரியத்திற்கெட்டாதது. 'செறிதரு மந்தகாரஞ் சிதைத்ததீந்திரியமாகி' (மச்சபு. பிரமாண்ட. கஎ.) 2. மனம். [அதீந்த்ரிய:]

அதீனத்துவம்— / அதீனதை — } 1. வயப்பட்டிருத்தல். [அதீநத்வ.] 2. அடிமைத்தன்மை. 3. கீழ்ப்படிதல். 4. சார்ந்திருத்தல். [அதீநதா.]

அதீனம்—1. உடைமை. 2. கீழ்ப்பட்டது. 3. சார்ந்திருப்பது. 'சந்தமுறுபிராணவளியதீனமேயாய் மூலாதாரத் தேத்து' (சூத. எக்கி. பூ. ச: ச.) [அதீந.]

அதீபனம்—மந்தாக்கினி, பசியின்மை.

அதீரம் — 1. கரையின்மை. 2. தைரியமின்மை. 3. நிலையின்மை. [அதீர: அ - எதிர்மறை. தீர - கரை. ஸ்திர - நிலை.]

அந்ீரை—1. அமையாதவள். 2. பிணங்குகிற மனைவி. 3. மின்னல். [அயீரா; அ - எதிர்மறை. யீரா - நிலையுடையவள், நிலையுடையது.]

அது-1. அஃறிணைப்பிரபஞ்சம். 'அவனவளதுவெனு மவைமூவினைமையில்' (சிவஞா. போ. க.) 2. அஃறிணையொன்றன்பாலிற் சேய்மைத்தாகிய ஒன்றைச் சுட்டிவரும் ஒரு பெயர். 'அதுகண்டுநடந்தறுமாமுகவன்' (கந்தபு. தெய்வ. உகள.) 3. ஒன்றன்பாலில் வரும் ஒரு பகுதிப்பொருள்விகுதி. 'உருவினுயிர்வடிவதுவுமுணர்ந்திலர்' (சி. சி. அ: ௬௫.) 4. ஒன்றேடொன் றிணைந்துவரும் இரண்டு பெயர்ச்சொற்களில் நிலைமொழியோடிணைந் தொற்றுமைபற்றிய சம்பந்தப் பொருளிலாவது வேற்றுமைபற்றிய சம்பந்தப்பொருளிலாவது ஆறும்வேற்றுமையில் வரும் உருபுகளுள் ஒன்று. (நன். பெய. சூ. ௨௯.)

அதுக்ககாம் — துக்கமின்மையைச்செய்வது.(பௌட். விந்துபட. ௪0இ.) [அதுஃகவகார: அ - எதிர்மறை. துஃகவகார-துக்கஞ்செய்வது.]

அதுக்கம்—1. அடிப்பு. 2. அமுக்குதல். 3. ஒதுக்குதல். 4. துக்கமின்மை.

அதுக்கல்—1. அடித்தல். 'முலைக்கருங்கண்சேர்ந்து கலங்கவதுக்கினுள்' (சிந். பதுமை. ௨0௭.) 2. அமுக்குதல். 3. கடித்தல். 'நகையாச்சினவியிதழதுக்கி' (கூர்மபு. தக்கன்வேள். ௯௨.) 4. நருக்கல். 'வீரநோய் வெருவிதோற்றி விழுப்பறவதுக்கியிட்டுக் காரகற்பொரிப்பர்' (சிந். முத். ௧௭௯.) 5. மெல்லுதல். 'வாயினிலதுக்கிப்பார்த்து' (பெரியபு. கண்ணப்ப. ௧௧அ.) 6. பிசைதல். 'அவ்வயிறதுக்கும்' (திருவிளை - வன்னியுங். 41)

அதுங்கல்—1. அமுங்கல். 2. ஒதுங்கல்.

அதுட்டவிரணம்—சீள், இரத்தம், சீலைத்தண்ணீர்முதலியவை சொட்டிக்கொண்டிருந்தாலுஞ் சிலநாட்பொறுத்துச் சிகிச்சையினல் ஆற்றப்படும் விரணம். (சீவரட். ௨௧௫.)

அதுட்டி—துக்கம். 'அதுட்டியாதிநூறு குணத்தையு முடையதாய்' (சி. சி. ௨: ௫அ. சிவாக்.) [அதுஷ்டி: துஷ்டி - மகிழ்ச்சி.]

அதுநா—இப்பொழுது. [அயுநா.]

அதுநாதநம் — இப்பொழுதைக் குரியது. [அயுநாதந: அயுநா-இப்பொழுது. தந - ஒரு-வ-வி.]

அதுநாபாவம் — இப்பொழுதுள்ளது. [அயுநாஹாவ: அயுநா-இப்பொழுது. ஹாவ - இருத்தல்.]

அதும்புதல் — மொய்த்தல். 'முரல்வண்டதும்புங் கொழுந்தேன்' (திருவாச. 6. 36.)

அதுல்லியம் — ஒப்பின்மை. [அதுல்ய: அ - எதிர்மறை. துல்ய - ஒப்பு.]

அதுலம்—1. ஒப்பின்மை. 'அசடமநாமயமசங்க மதுல நிரந்தரம்' (கைவல். சந்தே. ௯௭.) 2. ஒப்பில்லாதது. 3. ஓரெண். (௧00, 0000000, 0000000, 0000000, 0000000.) [அதுல: அ - எதிர்மறை. துலா- ஒப்பு.]

அதுலன்—1. ஒப்பிலி. 'வான்மிசையதுலனுதியோராசையாட்சியும்' (காஞ்சிப். இரணீச. ௫.) 2. கடவுள். [அதுல]

அதுலிதம்—1. ஒப்பாக்கப்படாதது. 2. நிறுக்கப்படாதது. [அ - எதிர்மறை. துலித-ஒப்பாக்கப்பட்டது, நிறுக்கப்பட்டது.]

அதூரம்—சமீபம். 'அதூரத்தோடும் புந்திவிழியால்' (ஞாநவா. சிகித்து. ௫௫.) [அ - எதிர்மறை. தூர - சமீபமல்லாதது.]

அதூவபந்தம்—(சமணம்.) விட்டுவிட்டுப் பந்திக்குஞ் சொரூபத்தது. (சி. சி. பர. நிகண். ௫.)

அதெந்து—அது என்ன என்று அருளொடு கேட்டற்குறிப்பிற் பயப்படாதேயெனப் பொருள்படும் ஒரு திசைச்சொல். 'ஆதியேயடியே னுதரித் தழைத்தா லதெந்துவேயென்றரு ளாயே' (திருவா. அருட்பத். க.) [தெலுங்கு.]

அதேகி—தேகமில்லாதவன். 'தேகியதேகியெனினு முத்த னையமில்லை' (ஞாநவா. உற்பத். ௫0.) [அ - எதிர்மறை. தேஹிந் - தேகமுடையவன்.]

அதேயதாநம் — கொடுக்கத்தகாததைக் கொடுத்தல். [அதேயதாந.]

அதேயம்—கொடுக்கத் தகாதது. 'அதேய தானம்' [அ - எதிர்மறை. தெய - கொடுக்கத்தக்கது.]

அதைத்தல்—1. தாக்கிமீளல். 'அதைத்து விழுந்தபந்து' 2. வீங்குதல். 'அதைத்தமுகம்' (வழக்.)

அதைப்பு—1. தாக்கியெழுகை. 2. வீக்கம். 3. நீர்க்கோப்பு.

அதைரியம்—தைரியமின்மை. [அதையெயம்: அ - எதிர்மறை. தையெயம் - தீரமுடைமை.]

அதோ—1. கவனிப்பித்தற்காகத் தூரத்திலே தோன்றும் ஒன்றனைச் சுட்டிக்காட்டிச் சொல்லும் ஒருசொல் 2. கீழ். 'அதோகதி' [அயஸ் என்பது வேறுமொழியோடு புணரும்போது, அயொ எனத் திரிந்துவரும்.]

அதோக்கதோஷம் — சலரோகசம்பந்தமான ஐவகைத்தோஷங்களு ளொன்று; அது: நாபித்தானத்தின்கீழ் வாயுவைச் சஞ்சரிக்கச்செய் தடிக்கடி மலம் நழுவல், வாயுலர்தல் என்னுங் குணங்களையுண்டாக்கும் ஒருநோய். (சீவரட். சூக) [அயொமததொஷ: அயொமத - கீழிறங்கிய. தொஷ - குறை.]

அதோகதி—1. இழிவடைதல். 2. இறங்கல். 3. கீழேபோதல். 4. நரகத்திற்குப்போதல். 5. நரகம். 'அற்றதுநம்வாழ்வென வதோகதியின் வீழ்ந்து' (மச்சபு. கபாலமோ. கரு.) [அயொமதி: அயஸ் - கீழ். மதி - போதல்.]

அதோங்கம்—1. அபானவாயில். 2. பாதமுதல் இடைவரைக்குமான அங்கப் பகுப்பு. (தைல. தைலவ. ருச. உரை.) 3. பெண்குறி. [அயொாம: அயஸ் - கீழ். அாம - உறுப்பு.]

அதோசாதி — கீழ்ச்சாதி. 'அதோசாதியகத்தினருந்தினனும்' (சிவதரு. பரி. ௩௧.) [அயஸ் - கீழ். ஜாதி - வருணம்.]

அதோட்சசன்—விட்டுணு. [அயொக்ஷஜ.]

அதோநியாமிகாசத்தி—ஆன்மாக்களுக்குப் போகநுகர்ச்சியை விளைவிக்கும் ஆணவமல சத்தி. 'ஆவாரகசத்தியினை லான்மாவினது சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவரூப சிவத்துவத்தை மறைத்திருந்து அதோநியாமிகாசத்தியினாலே போக்கியாசத்தியைப் பண்ணி' (சி. சி. உ: அ௦. ஞானப்.) [அயஸ் - கீழ். நியாமிகா - நியமிப்பவள். ஶக்தி - வல்லமை.]

அதோபாகம்—அடிப்பக்கம், கீழ்ப்பாகம். 'அறைந்தாஞ் சொன்முறையுறவே பிரமாண்டத்ததோபாகம்' (சிவதரு. கோபுர. ௩௦.) [அயொஹாம: அயஸ் - கீழ். ஹாம - பக்கம்.]

அதோபுடம்—கீழ்ப்புறம். (சி. சி. உ: எ௩: மறை.) [அயொவுட.]

அதோபுவனம்—பூமியின்கீழுள்ள புவனம். [அயொஹுவந: அயஸ் - கீழ். ஹுவந - பூமி.]

அதோமாயை — அசுத்தமாயை. 'சுத்தமாயையின் அதோபாகமாதலால்' (சி. சி. உ: அ௦. சிவாக்.) [அயொமாயா. அயஸ் - கீழ். மாயா - மாயை.]

அதோமார்க்கம் — கீழ்மார்க்கமாகிய சரியைமுதலியன. (சி. சி. உ: ௬௧. சிவாக்.) [அயொமாமம். அயஸ் - கீழ். மாமம் - வழி.[

அதோமிதுநம் — சாந்திரமானத்தால் சேட்ட மாதங்கலந்தசௌரமாந ஆனிமாசம். (சி. வி. சரி. ௫. தாற்.) [அயொமியுநம்.]

அதோமுகக்கட்டு—வயிற்றிலேனும் இடையிலேனும் கருநிறத்துடன் பெரிதாக எழும்பி அதிக உபத்திரவத்தையும், வியர்வையையும் கொடுக்கும் ஒருவகைக் கட்டு. (சீவரட். உ௦௩.)

அதோமுகசிரம்—அதோமுகம்.

அதோமுகம் — 1. ஆற்றுநீர்க்கழிமுகம். (பிங்.) 2. கீழ்நோக்கிய நட்சத்திரங்கள்; அவை விசாகம், ஆயிலியம், கார்த்திகை, பூரத்திரயம், மகம், மூலம், பரணி என்பன. 'முற்றிலாரவழல் பூரமூன்று மகம்விற்பரணியதோமுகம்' (விதான. பஞ்சாங்க. கஅ.)

3. கீழ்நோக்கிய முகம். 'ஐந்து திருமுகத்தோ டதோமுகமுந்தந்து திருமுகங்களாறுகி' (கந்தர்கலி. ௭௮.) 4. தலைகிழாதல். 'அதோ முகமாகியாங்கோ ரும்பரின் கொம்பர் நாலு மொருவனே' (இரகு. சம்புக. ௬௧.) 5. தலை குனிந்துபார்த்தல், கீழ்நோக்குதல். [அதோமுக: அதஸ் - கீழ். முக.]

அதோமுகாத்தபித்தம் — இரத்தபித்த ரோகத்தில் ஒருவகை; அது: சலத்துவாரம், மலத்துவாரம், ரோமத்துவாரம் என்னும் மூவகைத் துவாரங்களினாலும் இரத்தம் போகச்செய்யும் ஒருவகைநோய். (சீவரட். ௫௨) [அதோமுக; ரக்த; பித்த.]

அதோமுகாசி—ஆதித்தியன்நின்ற இராசி. 'மேனோக்கியமுகமென்பர்வெய்யோன்விட்ட வோரை நின்று - தானோக்குமோரையதோ முகமாகும்' (விதான. குணகுண. ௬௩.) [அதோமுகராசி: அதோமுக - கீழ் நோக்கிய. ராசி.]

அதோமுகவாதம்—மார்பிலும் வயிற்றிலுங் கீழ்வயிற்றிலுங் கவுட்டியிலுங் கீழேயிறங்கி வேதனைசெய்யும் ஒருவகைவாதநோய். (சீவரட். ௧௭௪.) [அதோமுகவாத. அதோமுக - கீழ்நோக்கிய. வாத - வாயு.]

அதோமுகா—ஆற்றுநீர்க்கழிமுகம். 'கயற் குலவதோமுகாநற்கழிக்கரை' (இரகு. நாட். ௬௮.)

அதோமுகி — 1. கவிழ்தும்பைச்செடி. (வைத்தியபரி.) 2. மூன்றும் மருதாதார மேஸ்தானத்தில் இருக்கும் யோகினியருள் ஒருத்தி. (வி-ணி. ௨௪௧.) [அதோமுகீ. அதஸ் -கீழ். முகீ-முகமுடையவள், முக முடையது.]

அதோமுகியான்—கன்றீன்றுகொண்டிருக் கும்பசு. 'கனியதோமுகியான்கோடிநயப்புற வளித்து' (மச்சபு. வசுமான். ௧௧.) [அதோ முகி - கீழ்நோக்கியமுகமுடையது. ஆன் - பசு.]

அதோலம்பம் — 1. ஓரிரேகை மற்றோ ரிரேகையின் இடையினின் றெழுந்து தன் னிருபக்கத்திலும் வரும் கோணங்கள் சம கோணங்களாயுற நிற்பது. 2. கீழே தூங்கு தல். [அதோலம்ப: அதஸ் -கீழ். லம்ப- தூங்குதல்.]

அதோலோகம் — கீழுலகம். [அதோ லோக: அதஸ் - கீழ். லோக - உலகம்.]

அதோவதநம் — அதோமுகம். [அதோ வதந: அதஸ் - கீழ். வதந - முகம்.]

அதோவர்யு — அபானவாயு. [அதோ வாயு: அதஸ் - கீழ். வாயு - காற்று.]

அதோளி — அவ்விடம். (தொல். எழுத். தொகை: ௧௭. உரை.)

அந — உயிரெழுத்தை முதலாகவுடைய வடமொழிப்பெயர்ச்சொற்கு முன்வரும் நஞ் என்னும் வடமொழி யவ்வியயத்தின்றிரிபு. அஃது: 'அநங்கன்' என்பதிற்போல ஒப்புமை யுள்ளிட்ட அன்மைப்பொருளிலும் 'அநா ரியன்' என்பதிற்போல அந்நியங்கருதும் அன்மைப்பொருளிலும் 'அநாகுதி' என் பதிற்போலத் தகுதியின்மையுள்ளிட்ட மறு தலைப்பொருளிலும் 'அநாகாரம்' என்பதிற் போல இன்மைப்பொருளிலும் 'அநுதரை' என்பதிற்போல அற்பங்கருதிய இன்மைப் பொருளிலும் 'அநிட்டம்' என்பதிற்போல விரோதங்கருதிய மறுதலைப்பொருளிலும் வரும். [அநாரியன்-ஆரியனல்லாதான்: சூத் திரன். அநிட்டம் - வெறுப்பு. அநாகாரம் - உணவின்மை. அநாகுதி-தகுதியற்ற பாகம். அநுதரை - சிறுவயிற்றினள்.]

அந்த — 1. சேய்மைச்சுட்டுப்பொருளிற் பெயர்ச்சொற்குமுன்னாகவரும் ஓரிடைச் சொல். 'அந்தவேலை' (பாரத. பதின்.௨௧௨.) 2. இரக்கக்குறிப்பு. 'அந்தொக்கவாற்றவோ' (கம்பரா. இராவணன்சோகப். 8.)

அந்தக்கரணசதுட்டயம் — மநம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கு அந்தக் கரணம். (த. நி. போ. ௧௧௬.) [அந்தஃகரண சதுஷ்டயம்: அந்தஃகரண - உட்கருவி. சதுஷ்டயம் - நான்கன்கூட்டம்.]

அந்தக்கரணசாபேட்சம் — பாகியேந்திரி யங்களினாலே கண்ட பதார்த்தங்களைச் சிற் சத்தியானது அந்தக்கரணங்களோடு கூடி நின்று சிந்திப்பது. (சி. சி. அளவை. ௧. சிவாக்.) [அந்தஃகரணஸாபேக்ஷ. அந்தஃ கர ணம் - உட்கருவி. ஸாபேக்ஷ - அபேட்சை யோடுகூடியது.]

அந்தக்காணசைதந்நியர் —அந்தக்கரணங் களே ஆன்மாவென்று சொல்லும் மதஸ்தர். (த. நி. போ. சரு.) [அந்தஃகரண - உட் கருவி. சைதந்யம் - அறிவு.]

அந்தக்காணபுவநம்— அந்தக்கரணதத்து வங்களிலேயிருக்கும் புவநம். அவை: மநோ தத்துவத்தில் சூலேசுரமென்னும் புவந மொன்றும், அகங்காரதத்துவத்தில் தலே சுரம் என்னும் புவநமொன்றும், புத்திதத்து வத்தில்பைசாச, இராக்ஷச, யக்ஷ, காந்தர்வ, ஐந்திர, சௌமிய, பிராசேச, பிரம்ம—ஆகிய புவநங்களெட்டுமாம். (சித்தா. சாரா. கிரியா. உக - ஆஞ்சுலோகவுரை.) [அந்தஃகரண; புவநம் - உலகம்.]

அந்தக்காணம் — ஒருவனுடைய அகத்தி னின்று தொழில்செய்யும் உணர்வுகருவி; அது: மநம், புத்தி, சித்தம், அகங்காரமென நான்குவகையது. உயிரான் அதிட்டிக்கப் பட்டு ஐம்பொறிகளறிந்த விடயங்களுளொன் றனை இஃதியாதாகற்பாற்றெனச் சித்தம் சிந்தித்தறியும். மநம் அதனை யிஃது இன்ன தாகற்பாற் றெனவும், அஃதாமோ அன்றோ எனவும் இவ்வாறு சங்கற்ப விகற்பஞ்செய் தறியும். அகங்காரம் அதனை யின்னதெனத் துணிவேன் யானென் றெருப்பட்டெழுந்தறி யும். புத்தி இன்னதிதுவென நிச்சயித்தறி யும். (சிவஞா. போ. ச-ஆஞ் சூ. க. அதிகர ணம்.) [அந்தஃகரண. அந்தர் - உள். கரண- செயல், கருவி.]

அந்தக்காணான்மவாதி — அந்தக்கரணங்க ளுளொன்றே யான்மா என்று சாதிக்கும் மதஸ்தன். ‘அவையே அந்தக்கரணம் தனித் தனியான்மாவென்றல் அமைவுடைத்தென அந்தக்கரணான்மவாதிகள் கூறுங் கடாவை யாசங்கித்து’ (சிவஞா. போ. ச: க. அதி. கருத்துரை. சிவஞா.) [அந்தக்கரண-அந்தக் கரணம். ஆத்ம - ஆன்ம. வாதிந் - வாதிப் போன்.]

அந்தக்காரி—அழகுள்ளவள்.

அந்தக்கிருத்தசாங்கம் — அங்காகமத்து ளொருபகுப்பு. (சில. நாடு. கஅகூ. உரைக். கீழ்க்குறிப்பு.)

அந்தக்கேடு—அழகீநம். [அந்த - அழகு. கேடு - கெட்டது.]

அந்தக்கேணி — உள்ளே மறைந்தநீரை யுடைய கிணறு; இது, சுரப்புநீர்க்கேணி யெனப்படும். (மணிமேகலை. களஉ. பக்.) [அந்த - உள். கேணி - நீர்நிலை.]

அந்தகசயன்—யமனை வென்றோன், சிவன். [அந்தகஜய: அந்தக - யமன். ஜயன் - வென் றவன்.]

அந்தகசந்நிபாதசுரம்-ஒருவகைச் சந்நிபாத சுரம்; அது: மறதி, அடிக்கடி தலைநடுக்க முதலிய குணங்களையுண்டாக்கும். (சீவரட். உஅ.) [அந்தக - முடிவு, ஸந்நிபாத-விழுதல். ஜ்வர - காய்ச்சல்.]

அந்தகம்—1. ஆமணக்கு (மலை.) 2. ஒரு சந்நிநோய். (ஜீவரட்.)

அந்தகர்—1. அறிவிலிகள். [அந்தக.] 2. குருடர். ‘அந்தகர்செவிடராதுலர்’ (நல். பார. வேள்வி. ருக.) [அந்தக.]

அந்தகரணம்-குருடாக்கல். [அந்தகரண: அந்த - குருடு. கரணம் - செய்தல்.]

அந்தகரன் — அழிப்போன். [அந்தகர: அந்த - அழிவு. கர - செய்கிறவன்.]

அந்தகரிபு — சிவன். [அந்தகரிபு: அந்தக - ஓரசுரன். ரிபு - பகைவன்.]

அந்தகன் — 1. அந்தம்வரையுஞ் செல்லு கிறவன், நன்முகப்பயின்றவன். [அந்தக: அந்த - முடிவு. க - செல்லுகிறவன்.] 2. அழிப்போன். ‘இராவணாந்தகனை’ (திவ். பெரியதி. 2. 3. 7.) [அந்தக.] 3. யமன். ‘இருளுடலந்தகன்’ (கல்லா. உக.) [அந்தக: அந்த - முடிவு. க-விகுதி.] 4. ஓர் யமதூதன். ‘நெரித்தபுருவத்தினொடந்தகனுநீட’ (சிவ தரு. சுவர்க்கநரக. அஎ.) [அந்தக.] 5. ஓரசுரன். ‘அவுணரிற் கள்வனன வந்தகற் காய்ந்து’ (திருவிளை. அருச். கரு.) [அந்தக.] 6. குருடன். (தேவா. 859, 4.) [அந்தக: அந்த - குருடு. க விகுதி.] 7. சநி. 8. சவுக் காரம். (மூ. அ.) 9. புல்லுருவி. (மலை.) 10. மரித்தவன். [அந்தக: அந்த - முடிவு. க - சென்றவன்.] 11. அக்கிநி. 12. ஓர் அரசன்; (பாகவத. 9. எதுமரபு 29.)

அந்தகன்கணம் — குழந்தைநோய்வகை. (பாலவா. 511.)

அந்தகன்பீடம்—தராமலே. (தமிழ்லெக்ஸிகன்.)

அந்தகஜநியாயம் — ஒன்றை முற்ற ஆராயாது அதன் ஒருபாகத்தைமாத்திரங்கண்டு நிச்சயிக்கும் நெறி.

அந்தகாசுகிருந்து— சிவன். [ஸஙகா ஸுஹ்ருத். ஸஙகஃ ஓரசுரன். ஸுஹ்ருத் - பகைவன்.]

அந்தகாந்தகன்—சிவன். 'அந்தகாந்தகஙம' (பாகவத. கைலா. கஎ.) [அந்தக - யமன். அந்தகன் - முடிவுசெய்தோன்.]

அந்தகாரம்—1. அஞ்ஞானம். 'இருவினைமும்மலம் போர்த்த வந்தகாரப்படல விருணீத்து' (மச்சபு. கடவு. கரு.) 2. இருள். 'பகவரு மந்தகாரம் படர்தர விருந்த காலே' (சூத. சிவ. கஉ. உ.) [அந்தகார. அந்த - குருடு. கார - செய்வது.] 3. நரகம்.

அந்தகாரி — சிவன். 'தக்கவெக்கிய விநாசகனந்தகாரி' (சூத. எக்கி. பூ. ௩௩: ௩.) [அந்தக; அரி - பகைவன்.]

அந்தகாலம் — மரணகாலம். (நாலாயிர. முத. திள. பக்.) [அந்த - முடிவு. காலு]

அந்தகூபம்—1. ஒருநரகம். 2. செடிகள் வளர்ந்துவாய்மறைந்திருக்குங்கிணறு. [அந்த கூப: அந்த - குருடு. கூப - கிணறு.]

அந்தகோ—ஐயோ எனப் பொருள்படும் ஓர் இரக்கச்சொல். 'அந்தகோவிது வருவதேயெனக்கென வயர்ந்தான்' (வேதார. பிரமசா. உஉ.)

அந்தகோரம் } நெல்லி. (மலே)
அந்தகோலம் }

அந்தகோலாங்கூலநியாயம் — மீமாஞ்சையிற் சொல்லப்பட்ட நியாயங்களு ளொன்று; அது: ஒரு குருடன் பிறர்வார்த்தையைநம்பி ஊர்க்குப்போகலாமென்று ஒரெருத்தின் வாலை விடாமற்பிடித்துப்போய் நட்டம் அடைந்ததுபோலப் பிறர்வார்த்தையைநம்பி நட்டமடைதலைக் காட்டுவது. (விசாரசா. ௩கக.) [அந்த - குருடன். கோ - எருது. லாங்கூல - வால். ந்யாய.]

அந்தகோளம்—நெல்லி (வைத்தியபரி.)

அந்தச்சித்திரம்—உட்கலகம். (சிவசமவா. 38.)

அந்தசடகநியாயம்—மீமாஞ்சையிற் சொல்லப்பட்ட நியாயங்களுள் ஒன்று; அது: ஓர் அவிவேகியாற் சொல்லப்படுவதொன்று, ஒரு குருடன் ஊர்க்குருவியைப் பிடித்துக்கொண்டதுபோலப் பலிக்கவருவது. இது, கருத்தினாலே குணாக்ஷரநியாயத்தையொத்தது. [அந்தசடகந்யாய. அந்த - குருடன். சடக - ஊர்க்குருவி. ந்யாய.]

அந்தசடம்—வயிறு. (வைத்தியபரி.)

அந்தசூநியம்—மூன்றுவகைச் சூநியங்களுள் ஒன்று; அது: பிராசாதத்தியானஞ்செய்யும்போது அகாரமுதல் உம்மையிறுதியான பன்னிரண்டுகலைகளில் இறுதியிலுள்ளமூன்று கலைகளையொழித்து எஞ்சிநின்ற ஒன்பதுகலைகளிற் கடைநின்ற மூன்றுகலைகளைத் தள்ளுவதும் பன்னிரண்டுகலைகளிற் கடைநின்ற மூன்றுகலைகளில் இறுதியான உம்மையைத் தள்ளுவதும் ஆம். (சி. வி. கிரி. அ. உரை.) [அந்தசூந்ய.]

அந்தண் — அந்தணர்குலம். 'அந்தண்மாமுதுகுரவரென் றுன்னினன்' (கந்தபு. தவங்காண். கஉ.)

அந்தண்டை—அப்பக்கம்.

அந்தண்புலவன் — பார்ப்பனப்புலவன். 'மறையறிபவந்தண்புலவர்' (நான்மணி. 90.)

அந்தண்மை—1. அழகிய கிருபை. 'அந்தண்மைபூண்ட......அந்தணர்' (திருமந். 234.) 2. பார்ப்பனத்தன்மை.

அந்தணத்துவம் — அந்தணனுந் தன்மை. 'ஒருவனேற்றுலவாவந்தணத்துவ மடைந்தனன்' (உபதேச. சிவவி. ௩௩எ.) [அந்தணன் - பிராமணன். த்வம் - தன்மை.]

அந்தணநாபி—விஷத்தைப்போக்கும்ஒரு மருந்து (மூ. அ.)

அந்தணமை-அந்தணன்றன்மை. 'குளித்துமூன்றனலையோம்புங் குறிக்கொளந்தணமை தன்னை' (நாலாயிர. திருமாலை. உரு.)

அந்தணர்—1. பார்ப்பார். 'ஆறறியந்தணர்க் கருமறைபலபகர்ந்து' (கலித்தொகை. க.) [இங்கே நச்சினார்க்கினியர், 'அந்தத்தை அணவுவார் அந்தணர்; என்றது, வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பா ரென்றவாறு' என்றார்.] 2. முனிவர். 'அந்தணரென்போரறவோர்' (வள். ௩௦.)

அந்தணர்வாக்கு.— வேதம். [அந்தணர் - பார்ப்பார். வாக்கு - சொல்.]

அந்தணரறுதொழில்— பிராமணருக்குரிய அறுவகைத் தொழில்கள்; அவை: ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன.

அந்தணன்— 1. அபிசித்துமுகூர்த்தம்; [இது: பகலிலே நிகழும் எட்டாவதான முகூர்த்தமென்றும், நூறுயிரங் குற்றத்தைப் போக்குமென்றுஞ் சொல்லப்படும்.] 'அரன்பாம் பனுட மகம்புட் புனலாடி யந்தணன்றேர்' (விதாந. குணகு. எஉ, எஙு.) 2. அருகதேவன். 3. கடவுள். 4. சநி. 5. சிவன். 'அந்தண னாதியென்றே யேவரை யிசைத்தவம்மா வெல்லையின் மறைகளெல்லாம்' (கந்தபு. ததீசி. உக.) 6. பார்ப்பான். 'அந்தணனேவையெல்லாம்' (பாரத. பதினே. கக௦.) 7. பிரமன். (பிங்.) 'அறத்தை நல்கலினந்தணன்போல்வன' (கந்தபு. சிங்க. ஙஅச.) 8. வியாழனென்னுங்கிரகம். 'மற்றவன்மேலுயரந்தணனுலவும்' (கூர்மபு. மண்டல. கசு.) [அம் - அழகு. தணன். தண்ணளியுடையவன்.] 9. பிராமணச்சாதிப் பாம்பு. 'அந்தண னாறு மான்பா லவியினை' (சிந்தா. பதுமை. கஉஉ.) 10. முநிவன். (பிங்) 'திசைமுகமுநிசெவ்வே - தந்தனவுயிரெல்லாந் தன்னுயிரெனநல்கு - மந்தணன்' (இராமா. அயோத். வசம்புகு. உஉ.)

அந்தணளர்—1. அழகியதண்ணளியுடையவர். 'செய்யதிவண்ணரந்தணளர் கண்டீர்' (தேவார. அந்நியூர். சு. திருநாவு.) 2. பார்ப்பார். 'அருந்தவமுநிவருமந்தணளரும்' (இராமா. திருவவ. ச.) 3. முநிவர். [அந்தண் - அழகிய தண்ணளி. ஆளர் - ஆள்பவர்.]

அந்தணளன்—1. அழகியதண்ணளியுடையவன். 2. பிராமணன். 'அந்தணளனு மதிசயித் தரும்பெறன் மகட்கு' (திருவிளை. விருத்தகுமார. ரு.) 3. முநிவன் 'அந்தணளனுன்னடைக்கலம் புகுத' (தேவார. திருப்புன். க. சுங்.)

அந்தணி—1. உமை. [அழகியதண்ணளியுடையவளென்றபடி.] 'உலகடையப்பெற்றவுந்தியந்தணி' (திருப்பு. சஉ௦.) 2. பிராமணப்பெண். (பிராயச்சித்தசமுச்.)

அந்தத்தம்—அந்தத்தாக்கரம். 'யகாரமே ரகார மிலங்கிய லகாரமே வகாரமென்னுமிந்நான்கந்தத்தமென்றுரைப்பார்' (மச்சபு.) [அந்தர் - இடை. ஸ்த - நிற்பது.]

அந்தத்தாக்கரம்—ய, ர, ல, வ என்னும் இடையெழுத்துக்கள். [அந்தஸ்தாக்ஷர. அந்தர் - இடை. ஸ்தா - நிற்றல். அக்ஷர - எழுத்து.]

அந்தத்தாபம்-உள்ளே தபிக்கை. (பௌட். பசு. கசஙு.) [அந்தஸ்தாப: அந்தர் - உள். தாப - தபித்தல்.]

அந்ததமசம்-மிக்க இருள். [அந்ததமஸ்: அந்த - குருடு. தமஸ் - இருள்.]

அந்ததரம் — சித்தாந்தம். 'சிவமென்னு மந்ததர சிந்தை' (சிவஞா. போ. கஉ. அ. சிவஞானமுநிவருரைப்படி.) [அந்த - வேதாந்தம். தர - உயர்ந்தது.]

அந்ததரன் — (சர்வான்மாக்களுக்கும்) பிராணனுயுள்ளவன். 'சிவமென்னு மந்ததரன்' (சிவஞா. போ. கஉ. அ. பாண்டிப்பெருமாளுரைப்படி.)

அந்ததாமிச்சிரம்—1. ஒருநரகம். 2. தமோ சிருட்டியாகிய ஐவகை யஞ்ஞானத்துள் ஐந்தாவது; அது: திவ்வியாதிவ்விய பேதத்திலே சத்தாதிகள் பத்தும் அணிமாதி சித்திகள் எட்டும் பெற்று அதிலே மிகப்பற்றுவைத்தல். (பௌட். பும். ககஅ; சி. சி. உ. ருஅ. சிவாக்.) 3. மிகுந்த இருள். [அந்ததாமிஸ்ர: அந்த - குருடு. தாமிஸ்ர - இருள்.]

அந்ததாமிசிரம்—அந்ததாமிச்சிரம். 'அந்ததாமிசிரமென விவைநாளும்' (சூத. பிரமசிரு. ஙு.) [அந்ததாமிஸ்ர.]

அந்தந்த — அந்த அந்த என்னும் சுட்டடுக்கு, இடைநின்ற அகரங் கெட்டது.

அந்தப்புரம்—1. பெண்களுடைய அறை. 2. மன்னன்றேவியில்லம். 'அடைதருதனியே யந்தப்புரத்தினில்' (சி. சி. ஙு: ஙஉ.) [அந்தঃபுர: அந்தர் - உள். புர - வீடு.]

அந்தப்போதிகை — பின்னங்காலிற் சங்கிலி. 'அந்தப்போதிகைபரிந்த ழன்றதே' (சிந்தா. ககக. உஎரு.)

அந்தபங்குநியாயம்—மீமாஞ்சையிற்சொல்லப்பட்ட நியாயங்களுளொன்று. இது, குருடன்தோள்மேல் நொண்டியேறிக்கொண்டு வழிகாட்டக் குருடன் நடந்து செல்வதுபோன்ற நெறி.

அந்தபரம்பராநியாயம் — மீமாஞ்சையிற் சொல்லப்பட்ட நியாயங்களுளொன்று; அது குருடனைக்குருடன் பின்தொடர்வதுபோலத் தான்செய்வ தின்னதென ஆலோசியாமல் ஒருவன் மற்றொருவன்செய்வதுபோற் செய்தல். [ஸுூவரம்வரா நூாய: ஸுூ - குருடன். வரம்வரா - தொடர்ச்சி. நூாய - நியாயம்.]

அந்தபரம்பரை—குருடரைக் குருடர் பின் பற்றுநெறி.

அந்தம்—1. அவயவம். 2. அழகு. (பிங்.) 'வரகந்தமாதநவாழ்வோர்' (கம்பாந். எ௦.) 3. அளவிடல். 'அந்த மில்லதோ ராயிழை மாரொடு' (கந்தபு. பாநுகோ. ககூசு.) 4. இருள். 5. இறுதி. 'அந்தமுமாதியும்' (தாயு. ஆசையெனு. க௦.) 6. எல்லை. 7. கஸ்தூரி. (மூ. அ.) 8. குருடு. 9. சுபாவம். தன்மை. 10. நாசம். 'சதமகன்வாழ்வினுக்கந்தமாகியதோ' (கந்தபு. சுக்கிர. கஉ.) 11. நிச்சயம். 12. நீர். 13. மரணம். 'நெஞ்சமேயுடலந்தமாதியை விடாநிற்க' (வைராக்கியசத. கரு.) 14. வேதாந்தம். (சிவஞா. கஉ. அ. சிவஞா.) 15. அஞ்ஞானம். (அக. நி.) 16. பச்சைக்கர்ப்பூரம். (வைத்தியபரி.) [4, 8, 12 ஸுூ.]

அந்தமுள்-குறிஞ்சா. [இது வடநாட்டார் வழக்கு.]

அந்தர்—1. அறிவில்லார், கடையாயார். 'அந்தர்கடம்மினும்' (கல்லா. கூ.) 2. உள். 3. கீழ். [அந்த.] 4. குருடர். 'அந்தரி னலமக் தஞ்சி' (இராமா. யுத். வருண. சுசு.) 5. நடு. [அந்தர்.] 6. நிறுத்தலளவினுென்று.

அந்தர்க்கதம்—1. உள்ளானது. 'அந்தர்க்கதமானசத்தத்தை' (சி. சி. க: உக. சிவாக்.) 2. மறைந்திருக்கை. [ஸுஜகூ-த: அந்தர் - உள். கூதம் - அடைந்தது.]

அந்தர்க்கதவுவமை — உள்ளுறையுவமை. [ஸுஜகூ-த; உவமா.]

அந்தர்க்கிருகம்-உள்வீடு. [ஸுஜகூ-ஹூஹ: அந்தர் - உள். ஹூஹ - வீடு.]

அந்தர்ச்சடரம் — அங்காசயம். [ஸுஜ ஜ-஠ர: அந்தர்-உள். ஜ஠ர - வயிறு.]

அந்தர்த்தகநம்—1. உள்ளனல். 2. மது நீர்வடித்தல். [ஸுஜஃ-ஹந: அந்தர் - உள். ஃஹந-அகல்.]

அந்தர்த்தசை — சோதிடத்திற்சொல்லப்பட்ட மகாதசையில் இடைவருங்கிரகங்களுடைய அதிகாரத்தோடுபொருந்தியகாலம். [ஸுஜஃ-ஶா: அந்தர்-இடை. ஃஶா-நிலை.]

அந்தர்த்தாநம்—மறைவு. 'அந்தர்த்தாநமாநேர்ந்துபோவார்' (மச்சபு. அசுர. நக.) [ஸுஜய-ா நம்.]

அந்தர்த்துவாரம் — உள்வாயில். [ஸுஜ ஃ-ார: ஃார - வாயில்.]

அந்தர்நியமநம் — உள்ளே யடக்குதல். 'சிவன் அந்தர்ப்பகிர்வியாப்தனுகி நின்று சுவதந்திரகர்த்தாவாகித் தேகேந்திரியாதிகளுக்கு ஆன்மாப்போல ஆன்மாக்களை யந்தர் நியமநத்தையும் பகிர்ப்பிரவர்த்தநத்தையும் பண்ணுவரென்றும்' (சி. சி. ரு. க. சிவாக்.) [நியமநம் - அடக்குதல்.]

அந்தர்ப்பகிர்வியாப்தன்—உள்ளும்புறமுஞ் செறிந்திருப்போன். 'அந்தர்நியமனம்பா'ர்' (சி. சி. ரு. க. சிவாக்.) [ஸுஜவ-ஹிவ-ூாவு: அந்தர் - உள். ஸஹிர் - வெளி. வூாவு - நிறைந்தவன்.]

அந்தர்ப்பவம்—1. உள்ளாதல். 2. உள்ளே பிறத்தல். [ஸுஜஹ-வ: ஸுஜர் - உள். ஹவ - பிறத்தல்.]

அந்தர்ப்பவித்தல் — 1. உள்ளாக்குதல். 'மேற்சொல்லிய பிரமாணங்களை இம்மூன்று பிரமாணங்களுள்ளே அந்தர்ப்பவித்து' (சி. சி. அளவை. க. சிவாக்.) 2. உள்ளாதல். 'அந்த எல்லாப்பிரமாணங்களும் - மூன்று பிரமாணங்களில் அந்தர்ப்பவிக்கும்' (சி. சி. அளவை. க. ஞாநப்.) [ஸுஜஹ-வ.]

அந்தர்ப்பாவநை—உள்ளத்திற்பாவித்தல். [ஸுஜஹ-ாவநா: அந்தர்-உள். ஹாவநா-தியாநம்.]

அந்தர்ப்பாவிதகருமம் — அகநிலைச்செயப்படுபொருள். 'வந்தான்' இங்கே வருதலைச் செய்தானெனப்பொருள்பட்டுச் செயப்படுவதாகிய வருதல் அகநிலையாதலறிக. (பி. வி. கஉ. உரை.)[அந்தர்-உள். பாவித-அடைந்த. கர்மந் - செயப்படுபொருள்.]

அந்தர்ப்பாவிதணிச்சு — பிறவினைவிகுதிகள் தொக்குநிற்பது. (பி. வி. ருரு. உரை.) [ஸம்ஸ்-பாவிதணிச் : ணிச் - ஒரு பிறவினைவிகுதி. 'இருணீங்கியின்பம்பயக்கும்' என்புழி நீங்கி என்பது போல்வது.]

அந்தர்ப்பிரஞ்ஞன் — தன்னையறிகிறவன். [அந்தர் - உள். ப்ரஞ்ஞ - அறிகிறவன்.]

அந்தர்ப்பூதம் — உள்ளிருப்பது. 'அந்தமுப்பத்தாறு தத்துவங்களும், இந்தச்சரீரத்தில் அந்தர்ப்பூதமாயிருக்கிறபடியினால்' (வாசுதே. உ0உ.)

அந்தர்மலக்கிருமி — தேகத்திலே கபத்திலும் உதிரத்திலும் பிறக்கின்ற கிருமிகள்; மதுராங்கம், வெல்லம், பால், தயிர், மா, மழைத்தண்ணீர் இவ்வஸ்துக்களையுண்பதினாற்பிறக்கின்ற கிருமிகள். (சீவரட். கருரு.) [அந்தர் - உள். மலம் - அழுக்கு. கிருமி - புழு.]

அந்தர்முகம்—உள்நோக்கியமுகம். 'அந்தர்முகத்திலே தனது சைதந்நியத்தையடைய' (ஞானவா. முமூட்சு. உ. உரை.) [அந்தர் - உள். முகம்.]

அந்தர்முகி—அடங்கிய மநத்தன், உள்ளே நோக்கிய முகமுடையவன். 'இச்சையானது அந்தர்முகியையும் பகிர்முகியாக்குமென்பார்' (ஞானவா. வைராக். சுகூ. உரை.) [ஸம்ஸ் முகிந்: அந்தர் - உள். முகிந் - முகமுடையவன்.]

அந்தர்முகியோநி—வாயு அதிகரித்து அந்தர்முகமாக எழும்பிப் பெண்களுக்கு யோநித்தாநத்திலே உபத்திரவஞ்செய்யும் ஒருவகை ரோகம். (சீவரட். ஙஉஉ.) [ஸம்ஸ்முகி: உள்ளே நோக்கிய முகமுடையது. யோநி - பிறப்பிடம்.]

அந்தர்யசநம்—அந்தரியாகம். (சி. சி. கூ. கக. சிவாக்.) [ஸம்ஸ-யஜந: அந்தர் - உள். யஜந - யாகம்.]

அந்தர்யாகம்—கண்களைமூடி அல்லது மூக்குநுனியைப்பார்த்து ஞானமுத்திரையோடிருந்துகொண்டு தன்னுள்ளே குண்ட முதலிய எல்லா உபகரணங்களையும் தேடியதாகவும் புறத்திற்செய்யுமாறே உள்ளே அக்கினிகாரியஞ்செய்யப்படுகிறதாகவும் பாவித்துச் செய்யும் வழிபாடு. (சித்தா. கிரியா. கஅ.)

அந்தர்யாமித்துவம் — திருமால்நிலையுளொன்று. (அஷ்டாதச. தத்வத். 3.)

அந்தர்வஞ்சிகன் — அரசனுடைய அந்தப்புரத்திலே காவலாளனாக நியமிக்கப்பட்டவன். [ஸம்ஸவ-ம்ஸிக: அந்தர் - உள். வம்ஸிக-குடும்பமுடையவன்.]

அந்தர்வாகினி—கிழாறு.

அந்தர்வேதி—1. இரண்டு யாறுகளுக்கு நடுவேயுள்ள சமபூமி. 'அங்கவற் றிடையே யேகம்ப முதலா மாலயத் தந்தரு வேதி' (கந்தபு. நகர எசு.) 2. பிரயாகைதொடங்கிக் கங்கைக்கும் யமுனைக்கும் நடுவேயுள்ள தேசம். 'அவர்களை யந்தர்வேதி-சென்றுடன் கொணர்வா யென்று திருமுநி யருளிச்செய்தான்' (கோயிற்பு. இரணிய. க0எ.) [ஸம்ஸ வெதி - அந்தர் - நடு. வெதி - சமபூமி.]

அந்தரக்கோட்டு—கூத்துவகையினென்று. (சிலப். 3. 147).

அந்தரகணம் — பாட்டியலுட்சொல்லப்பட்ட எண்வகைக்கணங்களுளொன்று; அது; நிரை நிரை நேர் என்னும் மூவசையாலாகிய ஒரு சீர். இஃதொருநூலின் முதற்செய்யுளின் முதற்சீராக வரலாகாதென்றும், வருமாயிற் பாட்டுடைத்தலைவனுடையவாழ்நாளையகற்றுமென்றும் கூறுவர். 'அந்தரகணமே வாணாளகற்றும்' (இலக்கணவி. பொருள். பாட்டி. ச0.) [ஸம்ஸ - ஆகாயம். கண - சீர்.]

அந்தரகாந்தாரம்—சோடசசுரத்தொன்று (தமிழ்லெக்ஸிகன்).

அந்தரகாமி—ஆகாயமார்க்கமாய்ச்செல்வது (தமிழ்லெக்ஸிகன்).

அந்தரங்ககிருத்தியம் — தன்னாலே நேரே செய்யப்படுங்கிருத்தியம். 'அந்தரங்ககிருத்தியம் பகிரங்ககிருத்தியம் இரண்டு முறைமையிற் சாக்ஷாத் தன்னாலும் பிறரைச்செலுத்தியவர் தானாகி மறைவாலும் நடக்குமென்று கூறுகின்றார்' (சி. சி. க: டுச. கருத்துரை. ஞானப்.) [ஸ்ஸ்ரங்க - தன்னுடைய. க்ரு த்யம் - செயல்.]

அந்தரங்கத்தியாநி—ஆமை. (வைத்தியபரி.)

அந்தரங்கபரிகாரம் — அந்தரங்கமான பரிவாரம். (ஈடு. 10. 1. ப்ர. அரும்.)

அந்தரங்கம்—1. அதிகம் நேசிக்கப்பட்டது, அருமையானது. 2. ஆலோசனை. 3. இரகசியம். 'அந்தரங்கத்திற்பொருந்துறு புருடனோடு மாசனத்திற்பொருந்துதல்' (நல். பாரா. உமாம. ௩0எ.) 4. உள்ளம். 5. உள்ளானது. 6. தன்னுடையது. 'அந்தரங்ககிருத்தியம்' [ஸ்ஸ்ரங்க: அந்தர்-உள். அங்க-அவயவம். ஸ்ஸ்ர - உள். க - போவது.]

அந்தரங்கன்—1. அதிகம் நேசிக்கப்பட்டவன், அருமையானவன். 2. இரகசியங் கேட்டுவைத்திருப்போன், விஷயங்களில் நம்பத்தக்கவன். 3. உற்ற நண்பன். [ஸ்ஸ்ரங்க - அந்தர் - உள். அங்க - உறுப்பு.]

அந்தரங்கஸ்தானம் — இரகசியஸ்தானம். (தமிழ்லெக்ஸிகன்.)

அந்தரச்சிந்து — கற்பாஷாணம். இது முப்பத்திரண்டுபாஷாணங்களுள் ஒன்று. (மூ. அ.)

அந்தரசரிதர் — ஆகாயத்திலே திரிபவர். 'அந்தரசரிதர் கொண்டேகாமல்' (பாரத. உலூக. கஅ.) [அந்தர - ஆகாயம். சரிதர் - திரிவோர்.]

அந்தரசாதி—வேறுசாதி. 'சந்திர கலையானெக்குநீர் பொழிவ சந்திரகாந்தமேயல்லாலந்தர சாதிச் சிலையிலுண் டாகாது' (அரிச்ச. விவாக. உ0.) [அந்தர-வேறு. ஜாதி-குலம்.]

அந்தரசாரி—ஆகாயத்திற் சஞ்சரிப்போன். 'அந்தரசாரிகளறைந்தனர்' (சிலப். நாடு. கூ.) [அந்தர-ஆகாயம். சாரி-செல்வோன்.]

அந்தரசைவம்—ஒருவகைச் சைவம். [இதனிலக்கணஞ் சைவமென்னுஞ் சொல்லிற் காண்க.]

அந்தரசைவர்—அந்தரசைவத்தைத்தழுவினோர். (த. நி. போ. கஅக.) [ஸ்ஸ்ர; ஶைவ - சிவசமயி.]

அந்தரசௌசம்—உட்சுத்தி. (த. நி. போ. உகக.) [ஸ்ஸ்ர - உள். ஶௌசம்-சுத்தி.]

அந்தரத்தர் — சுவர்க்கலோகவாசிகள். 'அந்த ரத்தரி லொருவனே யினையவ ரங்கை' (கந்தபு. சூரன்றண்ட. உச.) [ஸ்ஸ்ரஸ்த; அந்தர - ஆகாயம். ஸ்த - இருக்கிறவன்.]

அந்தரத்தானம் — ஆதாரமில்லாத நிலை, இடைவெளியினிற்கும் நிலை. [அந்தர-ஆதாரமின்மை, இடைவெளி; ஸ்தாந - நிலை.]

அந்தரத்தாமரை—ஆகாயத்தாமரை. (பதார்த்த. ௩௩சு.)

அந்தரதாமசர் — இடையிற்கருமையடைந்தவர். (த. நி. போ. கசச.) [அந்தர-இடை. தாமஸர் - கரியவர். தமஸ் - இருள்.]

அந்தரதிசை — கோணத்திசை, இடையிலுள்ள திசை. [அந்தர - உள். திஶா - திக்கு.]

அந்தரதுந்துபி—ஒருதேவவாச்சியம். 'சங்கநாத - மந்தரதுந் துபிமுதலா மளவில்பெருகொலிதழைப்ப' (பெரியபு. திருஞாந. கூஅ.) [அந்தரம் - ஆகாயம். துந்துபி-ஒருவகை வாச்சியம்.]

அந்தரநடநர் — கழைக்கூத்தர். [அந்தர - ஆகாயம். நடநர் - கூத்தர்.]

அந்தரநதி — ஆகாயத்திலுள்ள கங்கை. 'அந்தரநதியைநாடி' (பாகவத. சுபத். கஅ.) [அந்தர - ஆகாயம். நதீ - யாறு.]

அந்தரநாதன்—இந்திரன். 'அன்னதொர் காலையி லந்தரநாதன்' (கந்தபு. தெய்வ உசக.) [அந்தரம் - தேவுலகு. நாத - தலைவன். ன்-ஆண்பாலில் வரும் ஓர் இறுதி நிலை.]

அந்தரப்படுதல் — பெருந்துன்பமுறுதல். 'இவள் நோக்காமையிறே அந்தரப்பட்டது. (ஈடு. 7. 1. ப்ர)

அந்தரப்பிசாசு— துர்மரணமுற்றோரடையும் பேயுருவம். (தமிழ்லெக்ஸிகன்.)

அந்தரபவனி—1. ஆகாயகதி. 2. ஆகாயகமனம். 3. மிகுவேகம். [அந்தர - ஆகாயம். பவனி - உலா.]

அந்தரபுத்தி—கிரகங்களினுட்கதி. (த. நி. போ. உஅடு.) [அந்த்ர-உள். ஹுக்தி-கதி.]

அந்தரபுருஷன் — உடம்பினுளிருக்கும் ஆன்மா. [அந்தரபுருஷ: அந்தர-உள். புருஷ.]

அந்தரம்— 1. வெளி. 2. ஆகாயம். 'அண்டமவை யடுக்கடுக்கா யந்தரத்தி னிறுத்து மவதாநம்போல' (தாயு. மண்டல. க.) 3. ஆதரவின்மை. 4. இடைக்காலம். 5. இடையிடம். 6. இருள். (பிங்க. ௩௦௬௧.) 7. உட்பக்கத்திலிருப்பது. 8. இடுப்பு. 'அந்தரமேற்செம்பட்டோடு' (திவ். திரு வாய். 7. 6. 6.) 9. உள்வெளி. 'பந்தரந் தரம்வேய்ந்து' (பதிற்றுப். 51.) 10. உள் வீடு. 11. உள்ளுக்கிருக்கும் பொருள். 12. ஒத்தது. 13. ஒப்பு. 'பொரற்குநீகொலந்தர மெனக்கெனு' (பாரத. வாரண. ௬௫.) 14. காலம். 15. கூட்டம். (பிங்க. ௩௦௬௧.) 16. சேடம் (கணிதம்). 17. சொந்தம். 18. தனிமை. (பிங்க. ௩௦௬௧.) 19. தூரம். 20. தேவாலயம். (பிங்க. ௩௦௬௧.) 21. நடு. 'மற்றோ ரந்தர விசும்பில்' (சீவக. 836.) 22. பரமான்மா. 23. தீமை. 'விண்ணோர் காறும் வென்ற வெனக்கென் மனைவாழும் - பெண் ணால் வந்த தந்தர மென்னப் பெறுவேனோ' (இராமா. கைகேசி. ௬௦.) 24. புறத்திலுள் ளது. 25. பேதம். 'அந்தரஞ்சிறிதுமன்றி' (கந்தபு. வள். உ௫௫.) 26. நடுவுநிலை. 'அந்த ரந் தீர்ந்துல களிக்கும் நீரினால் தந்தையுங் கொடியன்' (இராமா. மந்தரை. ௬௦.) 27. வேறு. 'தூலதேகம் விட்டுச் சூக்குமதேகத் தோடுபோய்த் தூலதேகாந்தரத்தைப் பொருந்துதற்கு உவமையுரைக்கிறார்' (சி. சி. உ. ௩அ. ஞானப்.) 28. இடம். 'அந்தர மிதல்லவென' (பாரத ஒன்பதாம்போர். 22.) 29. தேவலோகம். (பிங்). 30. விப ரீதம். 'விரிகோவணநீத்தார்சொல்லும் அந் தரஞானமெல்லாம்.' (தேவா. 74. 10.) 31. முடிவு. (பிங்.) [அந்த - முடிவு. ர - கொடுப் பது.]

அந்தரமகளிர்—அரம்பையர்கள். 'அந்தர மகளிர்பாட' (திருவிளை. உக்கிர. கஉ.) [அந் தர - தேவுலகம். மகளிர் - பெண்கள்.]

அந்தரர் — 1. தேவர். "அந்தரர்கோ னுதனத்தில்" (திருவிளை. பதிக. ௩.) 2. பதி னெண்கணத்துளொருவர். [அந்தர - சுவர்க் கம். ர் - ஒரு பலர்பால்விகுதி.]

அந்தரவல்லி — கருடன்கிழங்கு; கொல் லன்கோவை (மலை). [அந்தர - ஆகாயம். வல்லி - கொடி.]

அந்தரவநசம்—கொடிப்பாசி. (வைத்திய பரி) [அந்தரம் - உள். வநம் - நீர். ஜ௦ - பிறப்பது. நீருட்பிறப்ப தென்றபடி.]

அந்தரவநம்— ஊர்க்குப்புறத்திலிருக்குங் காடு. [அந்தர - புறம். வநம் - காடு.]

அந்தரவாசம்—1. ஆகாயத்தில் வசிக்கை. 2. கொட்டைப்பாசிப்பூண்டு. [அந்தர - ஆ தாரமில்லது. வாஸ - வசித்தல்.]

அந்தரவாணி — அசரீரிவாக்கு. "அந்தர வாணிகேட்டு" (கூர்மபு. கண்ணனவ. உ.) [அந்தர - ஆகாயம். வாணி - வார்த்தை.]

அந்தரவாயு—1. அண்டவாதநோய். (மூ. அ.) 2. புறம்பிலுள்ளகன்மேந்திரியங்களுக் கும் அகத்திலுள்ள அந்தக்கரணங்களுக்கும் இடையிலுள்ள ஞானேந்திரியங்களை யசைப் பிக்கின்றனவாகச் சொல்லப்படும், பிரா ணன், அபாநன், சமாநன், உதாநன், வியா நன் என்னும் ஐந்துவாயுக்கள். (வேதா. சூ. எ௬. உரை.)

அந்தரவாயுக்கிரகணி – ஒருவகைக்கிரகணி ரோகம்; அது: இரைச்சல், அசதி, தாகம், தளர்ச்சி, புசித்தவுடன்பேதியாதல், விலா வில் இசிவு, சரீரம்வெளிறல், விக்கல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். (சீவரட். அடு.)

அந்தரவீச்சு — 1. அந்தரத்தில்வீசுதல். 2. ஆதாரமின்மை, பெரும்பொய். [அந்த ரம்; வீச்சு - வீசுதல்.]

அந்தரவீணை – இருபத்திரண்டுவகைவீணை களுள் ஒன்று. (வி - ணி. உஉ௦.)

அந்தராத்மா — தாமரையிலையின் நீர் போலச் சமுசாரத்திலுள்ள பெரிய விவ காரங்களைக் கலந்துங் கலவாது சொப்பநத் திற்குச் சாட்சியா யிருக்கும் பிரமசைதந்நி யம். 'தாமரை யிலையினீர் போலத் - தோய்ந் துள குடும்பப் பெருவிவ காரந் தோய்வில னந்தராத்மாவாம்' (வே. சூ. ௩௧.) [அந்தர; ஆத்மா - சீவன்.]

அந்தராந்தரதசை — கிரகங்களின் தசையில் உள்ளுக்குள்ளான தசாகாலம். (த. நி. போ. உஅரு.) [அந்தராந்தர - வகையின் வகை.]

அந்தராபத்தினை—கருப்பஸ்திரீ. [அந்த ராவத்நீ: அந்தர - உள். அவத்நீ - பிள்ளையுடையவள்.]

அந்தராயம்—1. இடையூறு. 2. தீமை. 3. துக்கம். (சி. சி. பர. நிகண். உ. உரை.) [அந்தா - இடை. அய - போதல்.] 4. எண் குற்றங்களுள் இடையூறியற்றுவது. 5. உள்வருவாய். (S. I. I. III. 121.)

அந்தராயாமவாதம்—தேகத்தின் உட்புற நரம்புகளைப்பற்றிய ஒருநோய். (சீவரட். கருசு.) [அந்தர் - உள். ஆயாமம் - சஞ்சரித்தல். தேகத்தின் உட்புறநரம்புகளைப் பற்றிய தால் வந்த பெயர்.]

அந்தராளசம்பந்தம்—ஆகமம் உபதேசஞ் செய்த ஸ்ரீகண்டர்க்கும் உபதேசங்கேட்ட தேவர்க்கும் உள்ள சம்பந்தம். (சி. சி. க: சசு. மறை.) இது மூன்றுவது சம்பந்தம் என்பர். (சி. வி. கிரி. உ.) [அந்தராள - நடு. ஸம்பந்த - தொடர்பு.]

அந்தராளதிக்கு — கோணத்திசை. [அந்த ராளதிக்: அந்தராள - இடையிடம். திக் - திசை.]

அந்தராளம்—1. இடைக்காலம். 2. இடையிடம். 3. உட்பாகம். 4. நடுப்பாகம். 'ஒன்பதினுயிரம்யோசனையந் தராளமுண்டாய்' (த. நி. போ. ருரு.) 5. திசைநாற் கோணம் (பிங்) 6. அந்தராளமண்டபம்.

அந்தராளமண்டபம்—கருப்பக்கிருஹத்தை யடுத்த மண்டபம். (I. M. P. T. N. 270).

அந்தராளயகரணம்—அந்தக்கரணம். (சி. வி. கிரி. அஉ.)

அந்தராளன் — அநுலோமத்தந்தைக்குப் பிரதிலோமத்தாயிடத்திற் பிறந்தவன். 'மருவநுலோமத் தந்தை வளர்பிரதி லோமத் தாய்பா, லொருவறப் பிறந்த பிள்ளை யுறுபெய ரந்த ராளன்' (சூத. சிவ. கஉ: எ.)

அந்தரான்மா— 1. ஆகாயத்தில் அந்தரமாகத்திரியும்ஆன்மா. 'தூலசரீரத்துக்கேற்ற கன்மம்பரிபக்குவம் இல்லாதிருந்தால் அதற்கேற்ற பரிபாகம்வரும்வரைக்குஞ் சூக்குமசரீரத்தோடு கூடி அறிவின்றி ஆகாயத்தைப் பற்றி அந்தரான்மாவாயிருந்து கன்மபரிபாகத்திற் காலாந்தரத்தில் உடலுறும்' (சி. சி. உ: ருஎ. ஞாநப்.) 2. உள்ளுணர்வு. 3. உள்ளேயிருக்கும் ஆன்மா. 4. மநுடன் உள்ளத்திலிருக்கும் பரமான்மா. [அந்தர - ஆகாயம், உள். ஆத்மா - சீவன்.]

அந்தரி— 1-3. அந்தரியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், பெயரெச்சத் தொகையும். 4. ஆகாயவாணி. 5. ஒருவகைத் தோற்கருவி. (சிலப். அரங்கே. உஎ. உரை.) 6. துர்க்கை. 'அந்தரியிருந்த விந்தமால்வரை' (மணிமே. உ0. கா. ககரு.) 7. பார்ப்பதி. 'அந்தரிபோற்றினளன்புறு' (கந்தபு. திருமண. ருஅ.) 8. காளி. 'அந்தரியாமளையமலையாலகாலி' (அரிச்ச. பாயி. எ.)

அந்தரிட்சம்—1. பறவை முதலியனசெல்லுதற் கிடமாகப் பூமிக்குஞ் சூரியனுக்கும் இடையிலுள்ள வெளி. சத்தாசாமாநியமானது வியாபிக்க அந்தரிட்சலோகம் நசிக்கும்' (ஞாநவா. வைராக். ககஅ. உரை.) [அந்தரிக்ஷ: அந்தர் - உள். ஈக்ஷ - பார்த்தல். ரிக்ஷ - நட்சத்திரம். தன்னுள் நட்சத்திரங்களையுடையது, அல்லது உலகங்கள் பார்த்தற்குரியது என்றபடி.] 2. நற்கதி. 'அந்தரிட்சஞ் செல......கனல்புகுங் கபிலக் கல்லது' (செங். பத். 4. 232.)

அந்தரித்தல்—1. மாறுதல். 'வேடந்தரித்து விதியந்தரிக்க ஒழுகி' (திருநூற். சூஉ.) 2. ஒருதொகையை மற்றொருதொகையிற் கழித்துச் சேடம் அறிதல். 3. உதவியற்றிருத்தல். 4. தனித்திருத்தல். 5. நிலைகெடுதல். 6. மநந் தடுமாறுதல்.

அந்தரிதம்—1. ஒருதொகையை அதனிற் குறைந்த மற்றொருதொகையாற் கழித்தலால்வருஞ் சேடம் (கணக்கதிகாரம்.). 2. தேகவியோகம். 3. மறைக்கப்பட்டது. 'படிகாந்தரிதமாயிருக்கிறவஸ்து' (சி. சி. உ: சூ0. சிவாக்.) 4. விபாகம், பிரிவு. [அந்தரிதம்.]

அந்தரிந்திரியம்— 1. மநம். (தர்க்காமி.) [அந்தர் - உள். இந்திரியம் - பொறி.] 2. அந்தக்கரணம். (பிரபோத. 39. 30).

அந்தரிப்பு—அந்தரித்தல்.

அந்தரியாகம்— உட்பூசை. 'அந்தரியாகந் தன்னை' (சி. சி. கூ: கo.) [அந்தர் - உள். யாக - பூசை.]

அந்தரியாமி — 1. அகவாயுக்களைந்தனுளொன்று; அது: சித்தத்தை யசைப்பிக்குமென்பர். 'சாற்றின்வயிரம்பன்முக்கியன் பிரபஞ்சநன் அந்தரியாமியொடுமகாப்பிராணனென்னும்பெயர்கொள் - காற்றிவைகள் சீவசம்பந்தமாயே உட்கரணங்க ளியக்கியிடும்' (வேதா. சூ. எஎ.) [அகத்தில் நிறைந்திருத்தலின்வந்தபெயர்.] 2. ஆன்மா. 3. உள்ளீடாயிருப்பவன். 'சிவனெல்லா வஸ்துக்களினு மந்தரியாமியாக நின்றமையும்' (சி. சி. அ: ௩௪. சிவாக்.) 4. கடவுள். (வேதா. சூ. 41.) 5. கூடஸ்தன். 'சீவனென் றிடுமூ வகையதிட் டானன் சேதந னந்தரி யாமி - ஆவலினநுசந் தாத்திரு சுயஞ்சத் தார்த்தனேடவிச்சிந்ந சீவன் - தாவரும் பார மார்த்திகன்றுரியன் சான்றினன் பிரத்திகான் மாவா - மேவமி ரும்ப தத்திலக்கியார்த்த னென்ப கூடத்தனு மங்கள்' (வேதா. சூ. ௫௨.) 6. சிவன். 'சீர்மொய்த்த வந்தரியாமி சால வேத்திடு திருசிய நாயகன் சாற்றதி ருசியன்னே' (சூத. எக்கி. பூ. ௩௩: அ.) 7. சீவசாட்சி. 8. மாயையாகிய சத்துவகுணத்திற் பிரதிபிம்பித்த பிரமச்சாயையாகிய ஈசன். 'அகில காரணமா மாயையைமருவி யந்தரியாமியாய்' (வேதா. சூ. ௪௪.) 9. வாயு. [அந்தர்யாமி: அந்தர் - உள். யாமி - நடத்துபவன்.]

அந்தரியாமித்துவம் — 1. ஆன்மாவோடு கலந்திருத்தல் 2. உள்ளீடாயிருக்குந்தன்மை. 'சர்வாந்தரியாமித்துவம்' (வேதா. சூ. ௪எ. உரை.) [அந்தர்யாமீ - கடவுள். த்வம் - தன்மை.]

அந்தரிலம்பம்—குகோணம்; அஃது ஒடுங்கிய மூன்று கோணங்களையுடைய வடிவம். [அந்தர்லம்ப: அந்தர் - உள். லம்ப - தூங்குதல்.]

அந்தரீட்சம்—அந்தரிட்சம்.

அந்தரீபம்—தீவு. [அந்தரீப. அந்தர் - உள். அப - நீர். இது அப என்றாயிற்று.]

அந்தரீயம்—உள்ளுடை. (பௌட். பதி. க.) [அந்தரீய: அந்தர் - உள். அய - ஒரு. வ. வி.]

அந்தருத்திரேகம்—உட்டொடக்கம். 'சுக்குமயோசநசாத்தசவிகற்பத்தினது அந்தருத்திரேகத்தைப் பண்ணிக் கிரியாசத்தி பேதமாகிய இச்சாசத்தியாயிருத்தல் அதிகாரம்' (சி. சி. பாயி. உ. 'ஈசனருளி' ஞாநப்.)

அந்தருவேதி—அந்தர்வேதி, யாகசாலையினுள்ளிடம். (காஞ்சிப். அந்தரு. 22.)

அந்தலை—1. முடிவு. 2 பேறு. 3. சந்திப்பு. 4. மேடு.

அந்தளகத்தாளார் — கவசந்தரித்தவீரர். 'உத்தமசோழத்தெரிந்த அந்தளகத்தாளார்' (S. I. I. II. 97.)

அந்தளகம்—கவசம். (S. I. I. II. 98. Note.)

அந்தளம்—கவசம்.

அந்தளி—தேவர்கோவில்.

அந்தன்–1. அழகன். 'கங்கை சூடும்பிரான் மைந்தனே யந்தனே' (திருப்பு. ௪o.) 2. கடுக்காய். (மலை.) 3. குருடன். 'அந்தனண்ணிய கண்ணுமொத்த' (ஞாநவா. வைரா. ௩அ.) 4. சநி. (திவா.) 5. யமன். (தேவா. 978. 5.) 6. அறிவிலான். (கல்லா. 7.) [1. அந்தம் - அழகு. 3, 4. அந்த - குருடு, இருள் போலுங் கருமை.]

அந்தஸ்தம்—ஒரு மந்திரம். (சி. வி. சரி. 14. உரை.)

அந்தஸ்து—1. நிலைமை. 2. மேன்மாடம். 3. ஒழுங்கு.

அந்தர் — ஒரு மகிழ்ச்சிக்குறிப்புமொழி. 'அந்தாவுய்ந்தேன்' (கந்தபு. அசுரர் தோ. க.) [இது 'ஹந்த' என்னும் வடமொழித் திரிபுபோலும்.]

அந்தாதி—1. அடிதோறும் இறுதிக்கணின்ற எழுத்தாவது அசையாவது சீராவது அடுத்துவரும் அடிக்கு முதலாய் அல்லது அவ்வடிமுழுதும் மற்றையவடியாய் வரத் தொடுக்குந் தொடை. 'அந்தமுதலாத் தொடுப்பதந்தாதி' (யாப். காரிகை. உறுப்பி. க௪.) 2. ஒருசெய்யுளின் இறுதியில்நின்ற சீராவது சீரின் ஒருறுப்பாவது அடுத்துவருஞ் செய்யுளுக்கு முதலாகவரச் செய்யப்படும நூல். 'இரட்டைமாலை யந்தாதி யெடுத்துப் பாடி' (பெரியபு. காரைக். ௫௪.)

அந்தாதித்தல்—அந்தாதியாகத் தொடுத்தல். 'அடிமடக்காயந்தாதித்து' (மாறனலங். 267. உரை.)

அந்தாதித்தொடை—அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தேனும் அசையேனும், சீரேனும் மற்றை அடிக்கு ஆதியாக வருவது. 'அடியுஞ் சீரு மசையு மெழுத்து-முடிவு முதலாச் செய்யுன் மொழியின் - அந்தாதித் தொடையென் றறைதல் வேண்டும்' (இலக்கணவி. எஉடு.)

அந்தாதிமடக்கு — ஓரடியின் இறுதியில் வந்தசொல்லே வேறுபொருளோடு மற்றைய அடிக்கு முதலாகவருவது. (தண்டி. ௯-டு.) [அந்த - முடிவு. ஆதி - முதல். மடக்கு - மடக்கிவருவது.]

அந்தாமம்—பரமபதம். 'அந்தாமத்தன்பு செய்து'. (திவ். திருவாய். 2. 5. 1.)

அந்தாயம்—மாதிரி. (தமிழ்லெக்ஸிகன்.)

அந்தாளி — குறிஞ்சியாழ்த்திறன்வகை முப்பத்திரண்டில் ஒன்று. (பிங்க. கஉஅஉ.) 'கோலக்குறிஞ்சியந்தாளிக்குறிஞ்சி' (இரகு. அவதா. கசு.)

அந்தாளிபாடை—1. ஒரு பண். (திவாகர. பத்தா.) 2. பாலையாழ்த்திறன்வகையில் ஒன்று. (பிங்க. கஉஅக.)

அந்தி—1. அக்காள். (நாடகம்.) [அந்தி.] 2-4. அந்தியென்னேவலும் தெரிநிலைவினைப் பகுதியும் பெயரெச்சத்தொகையும். 'பத்தர் சித்த மெய்யிற்செவ் வந்திநீ' (கந்தர. எ.) 5. இரா. (திவ். பெரியதி. 8. 5. 1.) 6. சந்தியா காலம். 'காலையந்தியும் மாலையந்தியும்' (புறநா. ௩௪.) 7. சூரியாத்தமயத்திலே தோன்றுஞ் செவ்வானம். 'அந்திவேணியண்ணல்' (கந்தபு. காமதக. எச.) 8. தில்லை மரம். (மலை.) 9. பாலையாழ்த்திறத்தின் ஒன்று. (பிங்கல. கஉஅக.) 10. மாலைக்காலம். 'அந்தியந்தணரருங்கடனிறுக்கும்' (புறநா. உ.) 11. முடிவு, பொருத்து. 'அந்திக்கடவிற்கடிதோடா' (திருப்பு. ௩அ.) 12. முச்சந்தி, முத்தெருக்கூடுமிடம். 'அந்தியுஞ் சதுக்கமு மாவண வீதியும்' (சிலப். 14. 213.) 13. சந்தியாவந்தனம். 'ஓதியுருவெண்ணும் அந்தியால்' (திவ். இயற். 1. 33.) 14. வழிமுடிவு. 'படாணியந்திப்பசுங்கடவுள்' (கவித் 101. 24.)

அந்திக்கடை—மாலையில் பண்டம்விற்குங் கடை.

அந்திக்காப்பு—குழந்தைகளுக்கு அந்திப் போதிற்செய்யும் ரக்ஷை. (திவ். பெரியாழ். 2. 8. வ்யா. ப்ர.)

அந்திக்கோன்—சந்திரன். 'அந்திக்கோன் றனக்கேயருள்செய்தவர்' (தேவார. திருப்பாசூர். க. திருநாவு.) [அந்தி-மாலை. கோன்-தலைவன்.]

அந்திகம்—1. அயல். 2. கொளுவுகொம்பு. 3. சமீபம். [ஸந்திக.]

அந்திகாசிரயம் — கொளுவுகொம்புபோல அடுத்திருக்கும் ஆதரவு. [ஸந்திகாஸ்ரய: ஸந்திக - சமீபம். ஆஸ்ரய - ஆதரவு.]

அந்திகாவலன்— சந்திரன். 'அந்திகாவலனமுதுறுபசுங்கதிர்' (திவ். பெரியதிரு. அ. டு. க.) [அந்தி - மாலை. காவலன் - அரசன்.]

அந்திகை—1. அக்காள். (நாடகம்.) 2. அடுப்பு. 3. இரவு. 4. ஒருவகைக்கண்ணோய். 5. சமீபம். 6. மாநுடப்பெண். [ஸந்திகா.]

அந்திசந்தி—காலையும், மாலையும்.

அந்தித்தல்—1. கிட்டுதல். 'வேதமந்தித்து மறியான்செய்த திருவிளையாடல் கேட்டும்' (திருவிளை. நகர. க0சு.) 2. சந்தித்தல். 'யமபடையென வந்திக்குங்கட் கடையாலே' (திருப்பு. அடு.) 3. நியமித்தல். 'அந்தித்த நின்புணர்ப்பை' (கந்தபு. சயந்தன்பு. டுஅ.) 4. பொருந்துதல். 5. முடித்துவைத்தல். 'அந்தித் திருக்கும் பொருளில்லை' (திருவாலவா. 30. 14.)

அந்திப்பூ—அந்திமந்தாரை. (மலை.) [அந்தி-மாலை.]

அந்திபகல் — 1. இராப்பகல். 'அந்திபகலாச்சிவனையாதரித்து' (பட்டினத்தார்.) 2. கேவல சகலாவத்தைகளைக் கருதும் ஒரு குறிப்புமொழி. 'அந்திபகலென்றிரண்டையுமொழித் திந்திரிய சஞ்சலங்களையறுத்து' (திருப்பு. சஉ.) [அந்தி - இரா. பகல்.]

அந்திமகாலம்—மரணவேளை. (ஸ்ரீவசன. 1. 69.)

அந்திமதசை—அந்திமகாலம்.

அந்திமந்தாரம்—அந்திமந்தாரை. [அந்தி-மாலை. இது அந்திக்காலத்திற் புட்பிக்கும்.]

அந்திமந்தாரை—ஒரு பூச்செடி.

அந்திமல்லி—1. பத்திராட்சி. (வைத்திய பரி.) 2. அந்திமந்தாரை. (K. R.)

அந்திமல்லிகை—அந்திமந்தாரை. (மூ. அ.)

அந்திமலர்ந்தான் — அந்திப்பூ. [அந்தி - மாலை. மலர்ந்தான் - மலர்தலுடையது.]

அந்திமஸ்மிருதி—சாகுங்காலத்திற் கடவுளை நினைக்கை. 'அந்திமஸ்மிருதி யில்லையாகில் ஆதிபரதனைப்போலேமானுதல்மரையாதலா மித்தனை'. (ஈடு. 4. 1. 10.)

அந்திமாலை-பகற்காலத்தின்முடிவில்வரும் முன்னிரவு. (இராமா. மிதிலை. சுரு.)

அந்திமான் — இடையெழுவள்ளல்களு ளொருவன். (கந்தபு. கந்தவிர. கஅ.)

அந்தியக்கிரியை—அந்தியகருமம்.

அந்தியகருமம் — மரணத்தின்பின் செய்யும் பிரேதக்கிரியை. இறந்தவனை ஈடேற்ற எண்ணிச் செய்யுங் கிரியை. [ஸஂத்யகர்ம்: ஸஂத்ய - இறுதி. கர்ம் - கிரியை.]

அந்தியகாலம் — மரணகாலம். 'அந்தியகாலந்தன்னிலணிவயிற்றிரதநிற்கில்' (விருத்தாசல. சிவபூ. சக.) [ஸஂத்ய - இறுதி. காலம் - பொழுது.]

அந்தியகிரியை—அந்தியகருமம்.

அந்தியசன்—1. தாழ்ந்தவருணத்தோன். 2. தம்பி. [ஸஂத்ய - இறுதி. ஜ-பிறந்தவன்.]

அந்தியசாதி— மிகக் கீழான சாதி. 'அந்தியசாதியின்பாண்டத்துச் சல முதலியவற்றைக்குடித்தற்குப் பிராயச்சித்தம்' (பராச. வரதா. பிராயச்சி. ங. ஙo, ஙக.) வண்ணான் முச்சி, கூத்தாடி, பாய்க்குடிசையிலிருப்பவனான குருவிக்காரன், செம்படவன், மேதாவனென்னும் மூங்கிற்பாய்வேலைசெய்யு மொருவித சாதியான், வேடன் அல்லது இருளன் ஆகிய இந்த ஏழுசாதிகளும் அந்தியசாதிகளாம். [ஸஂத்யஜாதி.]

அந்தியசைவர்—சிவதீக்ஷைபெற்ற பிரதிலோமர் முதலிய சாதியார். 'அரியசதா சிவனென்போ னநாதிசைவ னவன்பால் அவதரித்த சிவமறையோ ராதிசைவ ரிவர்பால்-உரியசிவ தீக்கைபெற்ற பூசுரர்மா சைவருயர்ந்தவர சன்வணிக னநுசைவ ராவார்-பெரியகுவ ளைப்புயத்தோ னவாந்தரசைவன்சீர் பெறுசவன்ன ஞதியநு லோமர்பிரவரராம் - விரியவனி மிசையொழிந்தோ ரந்தியசை வத்தோர் விரிந்திடுமேழ் சைவவிதமிவை யெனநூல் விளம்பும்' (ஆசௌசதீபிகை. உo.) [ஸஂத்ய - இறுதி. சைவர் - சிவ சமயத்தோர்.]

அந்தியபம்—1. இரேவதி. 2. மீனராசி. [ஸஂத்யஃ: ஸஂத்ய - இறுதி. ஃo - நக்ஷத்திரம். (பிருகச்சாதக. க. அ.)

அந்தியம்—1. சமுத்திரம் பத்துக்கொண்ட எண் (பிங்க. உஎஎ.). 2. மரண காலம். 'அடல்வாலி யந்தியத்தி லறைந்த' (இராமா. உத். அநும. சுசு.) 3. முடிவு. [ஸஂத்ய: ஸஂத - இறுதி. ய - ஒரு வ. வி.]

அந்தியயாகம்—அந்தியேட்டி. (சி-வி. கிரி. உ.) [ஸஂத்யயாகஃ:]

அந்தியர்—கீழ்மக்கள். [ஸஂத - இறுதி.]

அந்தியவருணம் — 1. நான்காம்வருணம். 2. மிகக் கீழானவருணம். [ஸஂத்யவர்ண: ஸஂத்ய - இறுதி. வர்ண - குலம்.]

அந்தியாவசாயி—1. நிஷாதமாதுக்கும் சண்டாளனுக்கும் பிறந்தவன்; இவன்றொழில் சண்டாளத்தொழிலும் சுடுகாடுகாத்தலும். 2. வேட்டையாடுதற்றொழிலுடைய ஒருவருணத்தார். [ஸஂத்ய - இறுதி. ஸவஸாயிநு - வெட்டுவோன்.]

அந்தியாவயவி — இறுதியிலேவரும் அவயவமுடைய பிண்டம். 'பரமாணுத்துவயங்கள் சேர்ந்து துவியணுகங்கடோன்றும். துவியணுகங்கள் மூன்று சேர்ந்து திரிசரேணுகந் தோன்றும்; இங்ஙனமே சதுரணுகம் முதலியன முறையானே தோன்றலின் அந்தியாவயவிகளாகிய மகாபிருதிவி, மகாசலம், மகாதேயு, மகாவாயுத் தோன்றும். (தர்க்காமிர். பக். கச.) [ஸஂத்ய-இறுதி. அவயவி - அவயவமுடையது.]

அந்தியேட்டி—உத்தரக்கிரியை. 'எண்ணவரு மந்தியேட்டி மந்திரத்தாற் றகாமிலை' (ஆசௌசதீபிகை. ருக.) [ஸஂத்யெஷ்டி: ஸஂத்ய - இறுதி. ஜஷ்டி-யாகம்.]

அந்தியேஷ்டி—அந்தியேட்டி.

அந்தியேஷ்டிக்குருக்கள் – உத்தரக்கிரியை செய்விக்குங் குருக்கள்.

அந்தியை — மிலேச்சப்பெயருடையவள். (பாரசா. சுஉ.) [சுஜ -இறுதி. யா - ஒரு வ - வி.]

அந்திரக்கண்மணி—நீலக்கல். (மூ. அ.)

அந்திரக்கொடிச்சி—கெந்தகம். (மூ. அ.)

அந்திரம்–சிறுகுடல். (இங். வை.) [சுஜு : சும - பிரிதல். த்ரு - ஒரு வ-வி. உணவினைப் பிரிப்பதென்னும்பொருட்டு.]

அந்திரவசநம்–கொட்டைப்பாக்கு.(மூ.அ.)

அந்திரன்—1. தேவன். 'அந்திரனையாளுரி லம்மான்றன்னை' (தேவா. 723. 4.) 2. ஒ ரிழிந்த ஜாதியான். இவன் தந்தை வைதேக னும் தாய் காராவரப்பெண்ணும் ஆவர். இவன் காட்டுப்பசுக்களைக் கொன்று வயிறு வளர்க்கிறவன். (பாரா. கடுக.)

அந்திரு—நிவிர்த்திகலையிற் பிருதிவிதத்து வத்தில் உள்ளனவாகச் சொல்லப்படும் புவ னங்கள் நூற்றெட்டனுள் தென்மேற்றிசை யில் இருக்கும் பத்துப்புவனங்களுள் ஒன்று. (சி. வி. கிரி. உக. உரை.) [ஹஜு.]

அந்தில்—1. அவ்விடம். 'அந்திலரங்கத் தகன்பொழில்' (சிலப். காடு. சு.) 2. ஓரசைச் சொல். 'அந்தில்செம்பொனணிமணிக்கோயி லின்' (கந்தபு. பாயிர. சு.) 3. வெண்கடுகு. (பிங்க. உகஙக.)

அந்திவண்ணர்—சிவன். 'அந்திவண்ணர்த மடியவர்க்கு' (பெரியபு. அமர்நீதி. ங.) [அந்தி - செவ்வானம். வண்ணர் - நிறமுடை யவர். ர்-ஒருமைச்சிறப்பில் வந்தது.]

அந்திகிருதன் — குருடனுக்கப்பட்டவன். [சுஜீகுஈ: சுநூ - குருடன். கூத - ஆக் கப்பட்டவன்.]

அந்திபூதன் — குருடனுனவன். [சுநீ ஹுத: சுநூ - குருடன். ஹுத - ஆன வன்.]

அந்து—1. எருது. [ஹுக்ஷ.] 2. கிணறு. [சுநூ.] 3. கொலை. 'அந்துசெய்குவனென' (இராமா. யுத். இராவணன்வதை. சுக.) 4. நெற்பூச்சி. 'அந்தெயளவும்' (கந்தபு. காவிரிநீ. சுச.) 5. பாதகிண்கிணி. [சுநூ.] 6. அந்தம். 'ஆதியந்தகன்ற' (சீவக. 3082.) 7. யானைக்காற் சங்கிலி. 'அந்துப்போதிகை'. 8. அப்படி.

அந்துகம்—1. சங்கிலி. 2. பாதகிண்கிணி. 3. யானைக்காலிற்கட்டுஞ் சங்கிலி. [சுநூகு; சுஜி - கட்டுதல்.]

அந்துப்போதிகை—யானையின் பின்காற் சங்கிலிகட்டுங் குறுந்தறி. 'அடுகளி றந்துப் போதிகை பரிந்து' (சீவக. 1831.)

அந்துவாசம்—கொட்டைப்பாசி. (வைத்.)

அந்துளியிந்துளியர்த்தல்–1. சுறையாடல். 2. தலைச்சுழற்சி. 3. பதைபதைத்தல். [அந்த; உளி. இந்த; உளி: உளி - இடம். வழக்.]

அந்துகம் — யானையைக் காலிற்கட்டுஞ் சங்கிலி. [சுநூகு. சுஜி - கட்டுதல்.]

அந்தேசம்—1. அந்தரிப்பு. [அந்தே-முடி வில். ஜம - பிறந்தது. [வழக்.] 2. அபலம். 3. கதியின்மை.

அந்தேசாலம்—தேற்றுமரம். (வைத்.)

அந்தேவாசி—மாணுக்கன். [அந்தே - சமீ பத்தில், வாஸிந் - வசிப்போன்.]

அந்தை — ஒரு நிறை. (தொல். எழுத். தொகை. உஅ. நச்.)

அந்தோ—இரக்கத்தினையுணர்த்தும் ஒரு குறிப்புச்சொல். 'பெற்றிலடவமந்தோபெரு நிலமகள்' (இராமா. அயோ. வசம். உரு.) [இதனை நச்சினுர்க்கினியர் சிங்களச்சொல் என்பர். தொல். சொல். சமம. உரை.]

அந்தோட்டம் — கண்டோட்டம் என்னும் ஒருநோய்; அது: வாயு உதட்டிற்சேரும் போது பிறந்து உதடுகளிலே வெடிப்பை யுண்டாக்குவதென்பர். (சீவரட். உஎக.) [அந்த - நாசம். ஓஷ்ட: - உதடு.]

அந்தோர்—நெல்லிமரம். (மலை.)

அந்நக்களை—பெலவீனமான நேரத்திலே அன்னத்தை அதிகம்புசித்தலால்வருங்களை. அந் நம் - சோறு. களை - இளைப்பு.

அந்நக்காவடி—1. யாசகர்பொருட்டு வீடு தோறும் யாசித்துவாங்கிய அன்னங்கொண்டு போகுங் காவடி. 2. விக்கிரகத்துக்கு நிவே திக்கும்படி அன்னங்கொண்டுபோகுங் காவடி. [அந்நம் - சோறு. கா - காவுதல். அடி - அடுத் தது.] 3. தரித்திரன்.

அந்நக்கொடி—தருமமாகச் சோறுகொடுக்கப்படும் என்பதை அறிவித்தற்குச் சத்திரத்திற் கட்டிய கொடி. [அந்நம்; கொடி.]

அந்நக்கொடை—அந்நதானம். [அந்நம் - சோறு. கொடை - கொடுத்தல்.]

அந்நக்கொப்பு—காதணிகளுள் ஒன்று.

அந்நகந்தி — வயிற்றுளைவு. [𑌅𑌨𑍍𑌨𑌗𑌨𑍍𑌧𑌿: 𑌅𑌨𑍍𑌨𑌂 - சோறு. 𑌗𑌨𑍍𑌧𑌿 - மணமுடையது.]

அந்நகாலம்—போசநகாலம். [அந்நகால; அந்நம் - உணவு. காலம் - பொழுது.]

அந்நகோட்டகம்—தானியம்வைக்கும் வீடு. [𑌅𑌨𑍍𑌨𑌕𑍋𑌷𑍍𑌠𑌕: 𑌅𑌨𑍍𑌨-தானியம். 𑌕𑍋𑌷𑍍𑌠𑌕 - சாலை.]

அந்நகோட்டகன் — 1. சூரியன். 2. விட்டுணு. [𑌅𑌨𑍍𑌨𑌕𑍋𑌷𑍍𑌠𑌕: 𑌅𑌨𑍍𑌨 - உணவு. 𑌕𑍋𑌷𑍍𑌠𑌕 - கொள்ளுமிடம்.]

அந்நகோட்டம்—தானியம் வைக்கும் வீடு. [𑌅𑌨𑍍𑌨𑌕𑍋𑌷𑍍𑌠: 𑌅𑌨𑍍𑌨 - தானியம். 𑌕𑍋𑌷𑍍𑌠- சாலை.]

அந்நசத்திரம்—தருமமாகச் சோறுகொடுக்குஞ் சத்திரம். [𑌅𑌨𑍍𑌨𑌂-சோறு. 𑌸𑌤𑍍𑌰-வீடு.]

அந்நசலம்—1. கஞ்சி. 2. சீவனுக்காதாரம், வெற்றுணவு. 3. சோறுந் தண்ணீரும். [அந்நஜல: அந்நம் - சோறு. ஜல-நீர்.]

அந்நசாரம்—1. அந்நரசம். 'மன்னியவந்நசாரமிருதயமலரின்வாய்த்துத் - துன்னியநாடிதோறுஞ்சொரிந்திடும்' (சிவதரு. செநநமரண. ௬.) 2. கஞ்சி.

அந்நசாலை — அந்நசத்திரம். [அந்நம் - சோறு. 𑌶𑌾𑌲𑌾 - வீடு.]

அந்நசிராத்தம் — பாகம்பண்ணியவுணவுகொண்டு செய்யும் சிராத்தம்.

அந்நசுத்தி — நெய். [𑌅𑌨𑍍𑌨𑌂 - சோறு. 𑌶𑍁𑌦𑍍𑌧𑌿 - சுத்தஞ்செய்வது.]

அந்நத்துரோகம்—உண்டவீட்டுக்கு இரண்டகம்பண்ணுகை.

அந்நத்துவேஷம்—உணவில் வெறுப்பு.

அந்நதன் — போசநங்கொடுப்போன். [𑌅𑌨𑍍𑌨𑌦: 𑌅𑌨𑍍𑌨𑌂-சோறு. 𑌦-கொடுப்பவன்.]

அந்நதாதா—அந்நங்கொடுக்குந் தருமவான். 'அந்ந-தாதாவுமுதலானதயாவினோர்' (இராமா. உத் - திக்கு. ருக.) [𑌅𑌨𑍍𑌨𑌦𑌾𑌤𑌾: 𑌅𑌨𑍍𑌨𑌂 - உணவு. 𑌦𑌾𑌤𑌾 - கொடுப்போன்.]

அந்நதானம்—சோற்றுக்கொடை. 'அருட்படுதானந்தம்முள் விழுமிதாமந்நதானம்' (திருவிளை. மூர்த்தி. அ.) [𑌅𑌨𑍍𑌨𑌦𑌾𑌨𑌂: 𑌅𑌨𑍍𑌨𑌂 - சோறு. 𑌦𑌾𑌨𑌂 - கொடை.]

அந்நப்பாகு—அந்நரசம். [அந்நம்-உணவு. பாகு - ரசம்.]

அந்நப்பால்—கஞ்சி. [அந்நம்-சோறு; பால்-பால்போல்வது.]

அந்நப்பிராசநம் — குழந்தைக்கு முதலிற் சோறூட்டுங் கிரியை. 'பூணிருது சங்கமநங் கருப்பா தாநம் புஞ்சவநஞ் சீமந்தஞ் சாதகன்மம்-பேணுமுத்தா பநநாம கரண மந்நப் பிராசநமே பிரவாசம் பிண்டவிர்த்தி-காணவுறு சவுளமுப நயநங் கண்டோ பக்கிரக மணங்காண்ட மோச நஞ்சீர் - மாணுசமாவர்த்தநமே விவாக மின்ன வகுத்தபதி னாறுமென மதிக்க மன்னு' (திருவானை. கோச்செங். ௧௪.) [𑌅𑌨𑍍𑌨𑌪𑍍𑌰𑌾𑌶𑌨: 𑌅𑌨𑍍𑌨𑌂 - சோறு. 𑌪𑍍𑌰𑌾𑌶𑌨- விதிமுறையுண்பித்தல்.]

அந்நபாநம்-சோறும் தண்ணீரும். [அந்நம்-சோறு. பாநம் - குடிப்பது.]

அந்நபானோற்காரம்—சோற்றையும் நீரையும் வாந்திசெய்தல். (த. நி. போ. ௧௧௫.) [அந்நம்-சோறு. பாநம்-குடிப்பது. 𑌉𑌦𑍍𑌗𑌾𑌰 - உமிழ்தல்.]

அந்நபூமி — சோற்றுக்குவியல். [𑌅𑌨𑍍𑌨𑌭𑍂𑌮𑌿: 𑌅𑌨𑍍𑌨𑌂 - சோறு. 𑌭𑍂𑌮𑌿-குவியல்.]

அந்நபூர்ணி—
அந்நபூர்ணை— } துர்க்கை. [𑌅𑌨𑍍𑌨𑌪𑍂𑌰𑍍𑌣𑌾: 𑌅𑌨𑍍𑌨𑌂-சோறு. 𑌪𑍂𑌰𑍍𑌣𑌾 - பூரணமுடையவள், பூரணமாகக்கொடுப்பவள்.]

அந்நபூரணை—அதர்வணவேத உபநிடதத்தொன்று. (கூர்மபு. அட்டமூ. ௨௬. உரை.)

அந்நபேதி—சோற்றினை நீராக மாறச்செய்யுஞ் சத்தியுடையதெனச் சொல்லப்படும் ஒரு மருந்து. [𑌅𑌨𑍍𑌨𑌂 - சோறு. 𑌭𑍇𑌦𑌿𑌨𑍀 - பேதஞ்செய்வது; அந்நத்திலேபோட அதைச் சலமாக்குவது. இந்தப் பெயரால்

இரண்டுவகையான சரக்குகள் கடையில் விற்கப்படுகின்றன என்றும் ஔஷதத்துக்குப் பிரயோகிக்கப்படும் அங்கபேதி பிரகாசமான பச்சைநிறமுள்ளதாய்ப் பளிங்குக்கற்போல இருக்கின்றதென்றுஞ் சொல்லப்படுகிறது.]

அந்நம்—1. உணவு. 'பூதத்தேயங்கமாகி யங்கத்தாலுடம்புபுத்தி' (சி. சி. பர. லோகா. மதம். கஅ.) 2. சோறு. 'முல்லைமுகையின் பொற்பமைந்த வங்கஞ் சொரிந்து கருணை கொட்டி' (கூர்மபு. தென். ரு.) 3. தானியம். [ஸம்: அத் - உண்ணல். ந - செயப்படுபொருள்விகுதி.] 4. அங்கம் ["அன்ன"] என்னும் வடமொழியின் விகாரமாய்ச் சமயுக்தபதங்களில் இரண்டாம்பதமாய்நிற்பது. 5. ஆறுநாழிகைகொண்ட பகற்கூறு. இது: பூர்வாங்கம், பராங்கம், மத்தியாங்கம், அபராங்கம், சாயாங்கம் என ஐவகைப்படும்.

அந்நமயகோசம்—தூலதேகம்; இது தாய் தந்தையர் புசித்த அங்கத்தினாலே அவர்களுடைய சுக்கில சுரோணிதங்களாற் பிறந்த தாயும், பாலினாலும் அன்னத்தினாலும் வளர்த்ததாயும் இருப்பது. (வாசுதே. கஅஎ.) உணவிலேயுண்டாகிய தோல், எலும்பு, நரம்பு, மச்சை, சோரி, சுக்கிலம் என்னும் ஆறுதாதுக்களும் கூடிவந்த கோசம். (சி. சி. பர. மாயா. மதம். அ.) [ஸம் - சோறு. கோஶ - உறை.]

அந்நமயம் — 1. அங்கமயகோசம். 'மதமுறுநல்லங்கமயம் பிராணமயத்தால்' (சூத. எக்கி. உத். ௩: கக.) 2. சரீரம், போசனத்தாலாயது. [ஸம்மய: ஸம் - சோறு. மய - ஆயது என்னும் பொருளுடைய ஒரு வ-வி.]

அந்நமலம்—1. அமேத்தியம். 2. மஸ்துநீர். [ஸம்மல: ஸம் - சோறு. மல - சளிநீர், வேர்வைநீர், அழுக்கு.]

அந்நமழகி — ஒருவகையரிசி. 'அங்கமழகியரிசி யாரோக்கியங்கொடுக்கும்' (பதார்த்த. ௬௦௪.)

அந்நரசம் — 1. இரத்தம் முதலியவாக மாறும் அங்கத்தின் சாரம். 2. கஞ்சி. [ஸம் ரஸ: ஸம்-உணவு. ரஸ-சாரம், சலம்.]

அந்நவசம் — வயிறூறவுண்டதால் வரும் உறக்கம். (திவ். திருவாய்: 3. 7. 10.)

அந்நவஸ்திரம்—உணவுடைகள்.

அந்நவாகீசுரோதம்—கண்டத்தினின் றுணவை யங்காசயத்துக்குக் கொண்டுசெல்லுங் கால்வாய். [ஸம்வாஹிஸ்ரோதஸ் - ஸம்-சோறு. வாஹி - கொண்டுசெல்வது. ஸ்ரோதஸ் - கால்வாய்.]

அந்நவிகாரம்—சுக்கிலம். [அங்கவிகாரம்: அங்கம் - உணவு. விகாரம் - பரிணமம்.]

அந்நவூறல்—கஞ்சி. [அங்கம் - சோறு. ஊறல் - ஊறியது.]

அந்நவேதி—அங்கபேதி.

அந்நாகாரம் — சோற்றுணவு. [அங்கம் - சோறு. ஆகாரம் - உணவு.]

அந்நாசயம் — வயிற்றினுள்ளே உணவு போய்த் தங்குமிடம். [ஸம்ாஶய: ஸம் - சோறு - ஆஶய - தங்குமிடம்.]

அந்நாதரம் — சோறுபுசித்தலிலுண்டாகும் விருப்பம். 'அங்காதரம்போய்த் தவஞ்செய்தவிழ் பன்னமூணாய்' (ஞானவா. சுரகு. ௩௫.) [ஸம் - சோறு. ஆதர - விருப்பம்.]

அந்நாதன்—1. பிறனுடைய உணவையுண்போன். 2. விட்டுணு. [ஸம்ாத: ஸம் - உணவு. அத - உண்போன்.]

அந்நாபிடேகம்— விக்கிரகத்துக்கங்நத்தாற் செய்யும் அபிடேகம். [அங்கம் - சோறு. அபிஷேகம் - முழுகச்செய்தல்.]

அந்நாலத்தி — விக்கிரகத்துக்குமுன்னும் மணவாளனுக்குமுன்னுங் கண்ணூறுகழித்தற்குச் செய்யுஞ் சோற்றாலத்தி. [வழக்.] [அங்கம் - சோறு. ஆரதி - தீபங்காட்டல். 'ஆரதி' ஆலத்தியென மருவிற்று. நெருப்புக்கொள்ளியைக்கருதும் ஆலாதம் என்னும் வடமொழி ஆகுபெயராய் மருவிவந்து ஆலத்தியாயிற்றெனினும் இழுக்காது.]

அந்நாவிருதவாதம் — ஒருவகை ஆவிருதவாதம்; அது: அசிரணப்பட்டு நோவைத்தருகின்ற அன்னத்தை வாயு ஆவரணமாகச் சூழும்போது பிறப்பதோர் நோய். (சீவரட். கக௮.) [ஸம்ாவ்ருதவாத.]

அந்நாள்–அக்காலம். 'அந்நாளுற்றதெல்லா மவளுக்கரசனறைவான்' (இராமா. நகர்நீ. எகூ.) [அ - அந்த. நாள் - காலம்.]

அந்நியக்குடி—புறக்குடி.

அந்நியகாமி–பரதாரகமநஞ் செய்கிறவன். [ஸந்யகாமிந: காமிந - போகிறவன்.]

அந்நியகுணசகநம்-தயாவிருத்திபதினன்கி னென்று; அது: பிறர்குணத்திலே அழுக்கா றின்றிப்பொறுத்தல். [ஸந்ய குண - பிறர் குணம். ஸஹந - பொறுத்தல்.]

அந்நியத்துவம்—அந்நியமா யிருக்குந்தன் மை. 'அப்பேதந்தானயப்பவுண்டானுற்றுனந் நியத்துவம் வந்திடுமே' (சூத. எக்கி. பூ. கம. உகூ.) [ஸந்ய - வேறு. த்வம் - தன்மை.]

அந்நியதரகந்மசம் — இரண்டில் ஒன்றன் கன்மத்தாற் பிறந்தது. (தர்க்காமிர்.) [ஸந்ய தர - இரண்டிலொன்று. கர்மஜ - கன்மத் தாற் பிறந்தது.]

அந்நியதரம்—இரண்டினுளொன்று.

அந்நியதரன்—இருவரில் ஒருவன்; எதிரி. (அநுமா. பக். உ௦.)

அந்நியதராசித்தம் — ஏதுப்போலிவகையு ளொன்று. 'உபயாசித்தமன்னியதாசித்தம்' (மணிமே. உகூ) 'அந்நியதராசித்தமாவது, உபயவாதிகளில் ஒருவனுல் உள்ளதாகக் கொள்ளப்படாத பொருளை ஏதுவாகக்கூறு வது' அநுமா. பக். கக.) அந்நியதரன் - இரு வரிலொருவன். அசித்தம் - பெறப்படாதது.

அந்நியதா—1. தவருய், திருத்தமில்லாத தாய். 2. வேறுவிதமாய். 'அத்தையறியாம லந்நியதாவாகச் சொல்வார்கள்' (சி. சி. க: சூக. சிவாக்.) 3. வேறொருபொழுது. [1, 2. ஸந்யதா: ஸந்ய- வேறு. தா - விதம். 3. ஸந்யதா.]

அந்நியதாகர்த்ருத்துவம் — ஈச்சுரனுடைய பிரபுத்துவ சாமர்த்தியகுணங்கள் மூன்ற னுள் ஒன்று; அது: கடத்தைப் படமாகச் செய்வதுபோல ஒன்றை மற்றொன்ருகச் செய்யுஞ் சாமர்த்தியம். (வேதா. சூ. சஎ. உரை.) [ஸந்யதா - வேறுவிதமான. கர்த்ருத்வம் - கர்த்தாவின் தன்மை.]

அந்நியதாசித்தி–1. எடுத்துக்கொண்டசாத னத்தினின்று கருதியதல்லாத வேறு சாத்தி யஞ் சித்தித்தல். 2. போலியாய்ச்சித்தித்தல். [ஸந்யதாஸித்தி: ஸந்யதா - வேறுவிதம். ஸித்தி - பேறு.]

அந்நியதாஞானம்—ஒன்றை வேறென்ருய் அறிதல். 'ஒன்றையொன்ருகக்கருதுதலே யந்நியதாஞானமெனில்' (சிவப்பிர. உ: உ. உரை. சிதம்பர.) [ஸந்யதா - வேறுவிதம். ஜ்ஞாநம் - அறிதல்.]

அந்நியதாபிரதிபத்தி — போலி. அஃது: ஒன்று நின்றவிடத்து அதுபோன்ற வேறொன்று வந்தடைதல். [ஸந்யதா-வேறு விதம். பிரதிபத்தி - விசுவசித்தல், நம்புதல்.]

அந்நியதோவாதரோகம் — சர்வநேத்திர ரோகபேதத்திலொன்ருகிய சங்கரோகம் ஏழுவகைகளுள் ஒன்று; இது: கண், நெற்றி, வாதநரம்பு, மற்றையநரம்பு ஆகிய இந்த இடங்களில் வாயு தங்கிச் சஞ்சரிக்கும்போது பிறந்து, கண்களிற் சிவப்பு, வீக்கம், அதிக நோவு, நீர்க்கம்மலென்னு மிக் குணங்களை யுண்டாக்கும். (சீவரட். உருகூ.) [வாயு வானது தனக் கந்நியஸ்தானமாகிய பித்த சிலேஷ்ம நரம்புகளிலும் வியாபித்து நேத் திரத்திற்கு உபத்திரவத்தைக்கொடுப்பதால் வந்தபெயர்.]

அந்நியநாத்தி — வேறன்மை. 'அத்துவித மென்ற சொல்லே யந்நியநாத்தியை யுணர்த்துமாயிட்டு' (சிவஞானபோ. உ: க. அதி. வார்த்திக.) [ஸந்ய - வேறு. நாஸ்தி - அன்மை.]

அந்நியபரம் — வேறொன்றைப்பற்றியது. (திவ். திருவாய். 6. 1. 1. பன்னீ.)

அந்நியபரன் — வேறோரிடத்து மனம் பற்றியவன். (திவ். திருவாய். 6.1.1. பன்னீ)

அந்நியபாவம்—வேருயிருக்கை. 'ஆன்மா சிவனுக் கந்நியபாவத்தையு மடைந்து' (சி. சி. அ: க. சிவாக்.) [அந்ய-வேறு. பாவ- இருக்கை.]

அந்நியபுட்டம் — குயிற்பறவை. [ஸந்ய புஷ்ட: ஸந்ய-பிறிது. புஷ்ட - வளர்க் கப்பட்டது. காகத்தினுலே வளர்க்கப்பட்ட தென்றபடி.]

அந்நியம்—1. அந்நியபுட்டம். 2. வேறு. 'அந்நிய மின்மையி னரன்கழல் செலுமே' (சிவஞானபோ. சூத். அ) [அந்ய.] 3. பரதேசத்திலுள்ளது.

அந்நியமநஸ்கம்—கவனம் வேறாயிருத்தல். [அந்யமநஸ்: அந்ய - வேறு. மநஸ் - மநங்கொள்ளல்.]

அந்நியயோகவியவச்சேதம்—பிறிதினியைபு நீக்குதல். (பி. வி. ருo.) [அந்யயோக - பிறிதினியைபு. வ்யவச்சேத - பிரித்தல்.]

அந்நியர்—பிறர். 'அந்நியர்தமையொழித் தானையேத்துதி' (காஞ்சிப். திருநெறிக். ௩o.)

அந்நியவாதி—1. ஒவ்வாமற்பேசுவோன். 2. புரட்டிப்பேசுவோன். [அந்யவாதிந்:- அந்ய - வேறு. வாதிந் - பேசுவோன்.]

அந்நியவோடாலிகாகிரகம் — பாலர்களைத் தொடருகின்ற பன்னிரண்டுபெண்கிரகங்களுளொன்று; அது: குழந்தைபிறந்த எட்டாம் நாளிலாவது எட்டாம்மாதத்திலாவது எட்டாம்வருஷத்திலாவது சிசுவை அல்லது தாயைப் பிடிக்கும். அப்போது அங்கத்துவேஷம், அடிக்கடி நாவைநீட்டுதல். இளைத்தல், கோவு, சதா அழுகை, கண்மூடல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். (சீவரட். உஉஎ.)

அந்நியன்—1. பிறன். 'அந்நியன்றனைக் கொண்டாங்கருமகம் நடத்துகின்ற' (இராமா. உத். இலவண. கரு. [அந்ய.] 2. புறம்பேயுள்ளான்.

அந்நியாதீநன்—பிறருக்குக் கீழ்ப்பட்டிருக்கிறவன், பிறரைச் சார்ந்திருக்கிறவன். [அந்யாதீந: அதீந - சார்ந்திருத்தல்.]

அந்நியாயம்—அநீதி. 'என்னையந்நியாயத் தாலேயெரிவித்தசாபம்' (இராமா. உத். இலவண. கசு.) [அந்யாய: அ - எதிர்மறை. ந்யாய - நீதி.]

அந்நியை—1. பிந்நாசத்தி. (பௌட். சo.) 2. பிறள். [அந்யா.]

அந்நியோந்நியகலகம்— ஒருவரோடொருவர் இணையாத செய்யுங் கலகம். [அந்யோந்யகலஹ: அந்யோந்ய - ஒருவருக்கொருவர். கலஹ - சண்டை.]

அந்நியோந்நியம் — ஒன்றற்கொன்றிருக்கும் ஒற்றுமையான சம்பந்தம். [அந்யோந்ய: அந்ய + அந்ய - வேறு.]

அந்நியோந்நியவத்தியாசம்—இந்த வஸ்துவின் தர்மம் அந்தவஸ்துவினிடத்தும், அந்த வஸ்துவின் தர்மம் இந்த வஸ்துவினிடத்துமாகத் தோற்றப்பட்டது. (வாசுதே. எஎ.) [அந்யோந்ய - ஒன்றற்கொன்று; வ்யத்யாஸ - விபரீதம்.]

அந்நியோந்நியவிருத்தம்— ஒன்றற்கொன்று மாறுபட்டது. [அந்யோந்ய - ஒன்றற்கொன்று. விருத்த - மாறுபட்டது.]

அந்நியோந்நியவிரோதம் — ஒன்றற்கொன்றுவிரோதம். 'சகலவிஷயங்களுக்கும் நித்தியத்துவஞ்சாதிக்கின்ற மெய்ஞ்ஞானத்துக்கும் அவ்விடயங்களுக்குச் சத்தியத்துவஞ்சாதிக்கின்றதேகத்தினால் அநுபவிக்கும் பிராரத்தவினைக்கும் அந்நியோந்நிய விரோதமாய்' (வேதா. சூ. கசுரு. உரை.) [அந்யோந்ய -ஒன்றுக்கொன்று. விரோத -முரண்.]

அந்நியோந்நியாச்சிரயதோஷம் — இருபொருள்களுள் ஒன்றற்கொன்று பற்றுக்கோடாயிருக்குமென்னுந் தோஷம்; அது: இருவினைகள் உடலின்காரியமாயும், உடல் இருவினையின்காரியமாயுமிருக்கும் என்று சொல்லுதல்போல்வது. (சி. சி. உ: கo. சிவாக்.) [அந்யோந்ய - ஒன்றுக்கொன்று. ஆச்ரய - பற்றுக்கோடு. தோஷ - குற்றம்.]

அந்நியோந்நியாச்சிரயம் — இருபொருள்கள் ஒன்றுக்கொன்று பற்றுக்கோடாகஇருத்தல். (சி. சி. அ: உ. உரை. சிவாக்.) [அந்யோந்ய-ஒன்றையொன்று. ஆச்ரய- பற்றுதல்.]

அந்நியோந்நியாபாவம் — ஒன்றிலொன்றில்லாதிருக்கை. 'கடத்திற்படமும்படத்திற் கடமும் இல்லையென்பது' (வேதா. சூ. ௩ரு. உரை.) [அந்யோந்யம் - ஒன்றுக்கொன்று. அபாவ - இன்மை.]

அந்நியோந்நியாலங்காரம்— ஒன்றுக்கொன்றுதவியணி; அது: ஒன்றற்கொன் றுபகரித்தலைச்சொல்லுதல். 'திங்களிரவால்விளங்குஞ்

செப்பியவத் திங்களினுற் - கங்குன் மிகவிளங்குங் கீர்ண்' (இலக்கணவிஞ. கசூஉ. விசாக.) [ஸந்யோந்ய - ஒன்றுக்கொன்று. அலங்காரம் - அணி.]

அந்நுவயச்சொல் — பரார்த்தாநுமாநமென்று சொல்லப்பட்ட சொல்லினெரு வகை; அது: திருட்டாந்தபூர்வமாகப் போதிக்கும் உடம்பாட்டுச்சொல். 'தொக்க விவற்றுற் பிறர்தெளியச் சொல்ல லாகு மச்சொல்லு, மிக்க வந்நு வயத்தினெடு வெதிரேகச்சொல் லெனவிரண்டாம்' (சி. சி. அளவை. அ.) [ஸந்வய - உடன்பாடு. சொல்-வாக்கியம்.]

அந்நுவயம் — 1. அந்நுவயச்சொல். 'புகையா லநலுண் டடுக்கஃபோ லென்னப் புகற லந்நுவயம்' (சி. சி. அளவை. கக.) 2. ஒருவாக்கியத்திலே எழுவாய், பயனிலே, செயப்படுபொருள் என்னுமிவைகளை வெளிப்படுத்தற்குப் பொருத்தமான பதங்களை யெடுத்துக் கூட்டிக்கொள்ளுதல். (வேதா. சூ. அ.) 3. காரணகாரியங்களின் உடம்பாட்டுரூபமான சம்பந்தம். 4. சம்பந்தம். 5. பின்போதல். 6. வமிசத்தொடர்ச்சி. [ஸந்வய: அநு - பின். அய - போதல்.]

அந்நுவயலக்கணம் — பொருத்தமான பதங்களையெடுத்துக் கோத்துச் சொல்லப்படும் வாக்கியத்திற்குரிய இலக்கணங்கள்; அவை: கருத்தா, கருமம், கிரியை, விசேடணம், விசேடியம் என்பன. 'கோத்துரை செய்விசேடவிசேடியங்கருத் தாக் கருமங் கொள்கிரியை யிவையைந் தந்நுவய விலக்கணம்' (வேதா. சூ. அ.) [ஸந்வய - கூட்டிக் கொள்ளுதல். லக்ஷண.]

அந்நுவயவியதிரேகி — பரார்த்தாநுமாநவகையுளொன்று; அது: அந்நுவயத்தானும் வியதிரேகத்தானும் வியாத்தியுடையது. 'யாண்டுப்புகை, ஆண்டுத்தீ; எங்ஙனம்; அட்டிவில்' என்பது அந்நுவயவியாத்தி. 'யாண்டுத் தீயில்லே, ஆண்டுப் புகையுமில்லே, எங்ஙனம்; மடுவில்' என்பது வியதிரேக வியாத்தி. இப்படி யிருவகைவியாத்தியினலு மலேக்குத் தீயுண்மை சாதிக்கப்படக்கிடந்த தனல் இந்த நியாயம் அந்நுவயவியதிரேகி. (தர்க்கபா. உக.) [ஸந்வயவ்யதிரேகிந்: அந்வய - உடன்பாடு. வ்யதிரேகிந் - எதிர் மறையுடையது.]

அந்நுவயவியதிரேகியநுமாநம் — பிரதிஞ்ஞை, ஏது, திருட்டாந்தம், உபநயம், நிகமநம் என்னும் ரூபங்கள் ஐந்தினல் அந்நுவய வியதிரேகவியாத்திகளைக்கொண்டு சொல்லப்படும் அநுமாநம். (சி. சி. க: க. உரை. சிவாக்.)

அந்நுவயவியாத்தி — 'யாண்டுப் புகை ஆண்டுத் தீ' என்பதிற்போல அந்நுவய உண்மையது காட்சியைச்சொல்லும் உடனிகழ்ச்சிநியமம். (தர்க்கபா. உக.) [ஸந்வய வ்யாப்தி: அந்வய - உடன்பாடு. வ்யாப்தி - உடனிகழ்தல்.]

அந்நுவயாநுமாநம் — அந்நுவயவியாத்தியுள்ளது. (அநுமா. பக். சு.)

அந்நுவாகாரியபசநம் — தக்ஷிணக்கிநி. [ஸந்வாஹார்ய-ம் - ஒருசிராத்தம். வசநம் - அக்கிநி.]

அந்நுவாகாரியம்—1. இறந்த பெற்றேருக்கு முதல்வருடத்திலே மாசந்தோறுஞ் செய்யப்படும் மாசிகசிராத்தம். 2. மாசந்தோறும்வரும் அமாவாசித் திநத்திலே பிதிருக்குச்செய்யுஞ் சிராத்தம். (மநு. ந; கஉ௩.) [ஸந்வாஹார்ய: அநு - பின்: ஆஹார்ய - உண்ணத்தக்கது.]

அந்நுவாசநம் — 1. அபாநவாயிலால் உள்ளேபுகுத்தப்படும் நெய்ப்பற்றுள்ள ஒரு மருந்து. 2. உபத்திரவம். 3. துக்கம். 4. தொழில்செய்யுமிடம். [ஸந்வாஸந: ஸநு - பின். ஆஸந - இருப்பு.]

அந்நுவாதேயம்-கணவனுடைய சுற்றத்தாரால் பெண்ணுக்கு விவாகத்தின்பின் கொடுக்கப்படும் பொருள். [ஸந்வாதேய: அநு - பின்; ஆதேய - எடுக்கப்படுவது.]

அந்நுவாரோகணம் — பெண்ணனவள் இறந்த தன் நாயகனே டவன்பிரேதஞ்சுடு கட்டையிலாவது பின் வேருக அடுக்கப்பட்ட சுடுகட்டையிலாவது தகிக்கப்படும்படி யேறுதல். [ஸந்வாரோஹண: அநு - பின். ஆரோஹண - ஏறுதல்.]

**அந்யதாகர்த்திருத்துவம்** — அந்நியதாகர்த்திருத்துவம். 'கர்த்திருத்துவமோ டகர்த்திருத் துவம்பினந்நியதா கர்த்திருத் துவமேயத்தன் மெய்ப்பிரபுத்துவவலி' (வேதா. சூ. சஎ.) [ஸ அந்யதா - வேறுவிதம். கர்த்ருத்வம் - செய்வோன்றன்மை.]

**அந்யாயம்** — அந்நியாயம். [ஸ அ - எதிர்மறை. ந்யாய - நீதி.]

**அந்வயம்**—1. பொருத்தமுள்ளது. உடம்பாடாய்வருவது. (சி. சி. அளவை. அ. சிவாக்.) 2. 'அந்நுவயம்' என்னும்பதத்திற்குண்டாகிய அர்த்தங்கள் இதற்கும் அர்த்தங்களாகும். [ஸ அந்வய: அநு-பின். அய-போதல்.]

**அந்வயித்தல்** — 1. சேர்தல், கூடுதல். 'தொன்மையிற் றொடர்ந்த வாய்மை யறத்தொடுக் தொடர்ந்திலோரை யந்வயித்தோரும்' (இராமா. இரணிய. கஙசு.) [மூ. அந்வய.] 2. செய்யுட்டொடரைப் பொருட்பொருத்தமுற ஒழுங்குபடுத்துதல்.

**அந்வாசயம்**—1. அந்வாசயவும்மை. 'மன்மொழித்தோற்றஞ் சமுச்சயத்தோடுமந்வாசயமே' (பி. வி. உங.) 2. பிரதானவிஷயத்தோடப்பிரதானமான ஒன்றைச் சேர்த்துச் சொல்லல். [ஸ அந்வாசய: அநு - பின். ஆங் - முன். சி - சேர்த்தல். அ - வ - வி.]

**அந்வாசயவும்மை**—ஒருபெயர் இருவினைகொள்ளும் எதிர்மறையும்மை; அது: சாத்தன் பசுமேய்த்தும் வருவன் என்னுங்கால், மேய்க்காதும் வருவன் எனப் பின்னும் ஒரு வினைகொள்ளுவதுபோல்வது. (பி. வி. உங. உரை.) [ஸ அந்வாசய - இணைத்தல். உம்மை "உம்" என்னும் ஓரிடைச்சொல்.]

**அந்விதம்**—கூடிவருவது, தொடர்ந்துவருவது. 'யுத்தியந்விததர்க்கபாஷையை' (தர்க்கபா. க.) [ஸ அந்வித: அநு - பின். இத - போனது.]

**அநக்கம்** — குருடு. [ஸ அநக்ஷ: அந் - எதிர்மறை. அக்ஷ - கண்.]

**அநக்கரம்**—1. சொல்லத்தகாதது. 2. நிந்தை. [ஸ அநக்ஷர: ஸ அந் - எதிர்மறை. அக்ஷர - எழுத்து.]

**அநக்கரன்**—1. ஊமை. 2. கல்வியில்லாதவன். 3. சொல்லத்தகாததுசொல்வோன். [ஸ அநக்ஷர: அந் - எதிர்மறை. அக்ஷர - எழுத்து.]

**அநக்கினி**–1. அக்கினியல்லாத வஸ்து. 2. அக்கினியில்லாமை. 3. உதராக்கினியின்சேட்டையற்றவன். 4. விவாகம்பண்ணுதவன். [ஸ அநக்நி: அந் - எதிர்மறை. அக்நி - நெருப்பு.]

**அநகங்காரம்** — அகங்காரமின்மை. தானென்கிற அகங்காரமின்மை. (பகவற்கீ. கங: கஉ.) 'தேகேந்திரியங்களிற் றானென்கிற அகங்காரமற்றிருப்பதுந் தன்னுடையதல்லாதவஸ்துக்களிற்றன்னுடையதென்கிற அபிமானமற்றிருப்பதும்' (பகவற்கீ. கங: கஉ. ரா.) தன்னிடத்தில் இல்லாமலிருக்கிற குணங்கள் தன்னிடத்திலிருப்பதாக எண்ணியஞ்ஞானமடையாதிருத்தல். (பகவற்கீ. கங. கஉ. நீ. வி.) [ஸ அநஹங்கார: அந் - எதிர்மறை. அஹங்கார - கர்வம்.]

**அநகம்**—1. அழகியது. 2. இன்பமானது. 3. பாவமின்மை. 'அநகமாநெறிபடரடிகளும்மலால்' (இராமா. சடாயுவுயிர். நகசு.) 4. புல்லுருவி. (மலை.) 5. மாசின்மை. 'அநகமார்ந்துடலமுந்தன்வசப்படும்' (சூத. ஞான. கஉ: கக.) [ஸ அநவ: அந் - எதிர்மறை. அவ - தவறு, மாசு, பாவம்.]

**அநகர்**—1. அழகுடைய ஆடவர். 'அநகருமணங்கனுரு மம்மலர்ச் சோலை நின்று' (இராமா. நீர்விளை. க.) 2. அழகுள்ளவர். 3. பாவமற்றவர், மறுவற்றவர். 'அநகராநாளாங்கிதர்தமை' (திருப்பு. சஙடு.) 4. மேன்மக்கள். [ஸ அந் - எதிர்மறை. அவம் - தவறு, பாவம்.]

**அநகன்**—1. அருகன். (சூ. நிகண். க: க.) 2. கடவுள். 'அநகன்கண்டதற்கருள்செய்தேகினன்' (கந்தபு. தெய்வ. உ0அ.) 3. சிவன். 4. பதினொராமநுவின்காலத்துள்ள எழுமுனிவருளொருவன். (கூர்மபு. மநுவ. உசு.) 5. பாவமில்லாதவன். 'அநகனச்சுத னுருத்திரன்' (சிவதரு. ஐவகை. நங.) 6. விஷ்ணு. [ஸ அநவ: அந் - எதிர்மறை. அவ - பாவமுடையோன்.]

அநகை—பாவமற்றவள். (திருப்பு. 928.)

அநங்கதிலகை—ஓர் அப்சரஸ்திரீ, தெய்வ மகள்.

அநங்கம்—1. ஆகாயம். 2. இருவாட்சி. (பிங்.) 3. உடலின்மை. 'அங்கமநங்கமான மாரனுருடன்' (பாரத. அருச்சுனன்றீ. கூ0.) 4. மாம். 5. மல்லிகை (பிங்). 6. வாயு. [ஸ நம்க: அந் - எதிர்மறை. அம்க - உடல், உறுப்பு. உறுப்புப்போல ஒருவர் விரும்பத்தக்க பூவுடையவாயும் உறுப்பல் லாதிருத்தல்பற்றி உ-ஆம் ரு-ஆம் பொருள் கட்குப் பெயராயிற்று.] (சூ. நி. கக. க0)

அநங்கமாதா—1. அரக்கு. 2. செம்பஞ்சு.

அநங்கர் — மதநனெனப்படுவார் பலர். 'கோடி கோடி யநங்கரெய் தார்கொலோ' (திருவிளை. மாபாத. ரு.) [ஸ நந் - எதிர் மறை. அம்க - உடம்பு.]

அநங்கலீலை—மதநநூல்வழியாடும் விளை யாட்டு. 'அநங்கலீலையிற்றேய் காம வமுது' (இரகு. மாலை. க0கூ.) [ஸ நம்க - மன் மதன். லீலா - விளையாட்டு.]

அநங்கன்—1. உடம்பில்லாதவன். 'உடம் பிழந்தநங்கனுயமன்மதன். (தேவார. திருத் துருத்தி. அ. சம்.) 2. மன்மதன். 'அநங்கனை யொழியாமண்ணிலாடவற்றெரிதிர்'(நைட த. அன்னத்தைக்கண். ச.) [ஸ நம்க: அந் - எதிர்மறை. அம்க - உடம்புடையவன். அங்க மில்லாமையினுலும் அங்கமுடையான்போல இருத்தலைக் கருதுவதொருபெயர். "ஈநு" ஒப்புமையுள்ளிட்ட அன்மைப்பொருளில் வந்தது.]

அநங்கு—மன்மதன்.(கடைக்குறை.)'தடங் கடனஞ்சுண்டநங்கைக்காய்ந்தபிரான்' (தே வார. கைச். ரு. சம்.) [ஸ நந் - எதிர்மறை. அம்க - உடம்பு.]

அநச்சுவம்—குதிரையல்லாதது. (பி. வி. உக. உரை.) [ஸ நஶ்வ: அந் - எதிர்மறை. அஶ்வ - குதிரை.]

அநசநம்—1. உபவாசம். 'தவம், சாந்தி ராயணம், கிருச்சிரம், மாசோபவாசம், அட்டமியாதி அநசநவிரதங்கள்'. [ஸ நந் - எதிர்மறை. அஶந - உணவு.] 2. ஜைனரின் உண்ணுநோன்பு. 'அண்ண லநசநத் தவ மமர்ந்தான்.' (யசோதர. 1. 20)

அநசூயம்—1. அழுக்காறின்மை. 2. பிறர் குணத்திலே குற்றமேற்றுதலின்மை. [ஸ ந ஸூய: அந் - எதிர்மறை. அஸூய - அழுக்காறு;பிறர்குணத்திற் குற்றமேற்றல்.]

அநசூயை—1. அழுக்காறின்மை. [ஸ ந ஸூயா: அந் -எதிர்மறை. அஸூயா- பொறாமை.] 2. அத்திரிமுனிவரின் மனைவி. (இராமா விராத. ரு.)

அநஞ்சநம்—1. அஞ்சநமின்மை. 2. ஆகா யம். 3. பரப்பிரமம். [ஸ நம்ஜந: அந் - எதிர்மறை. அஞ்ஜந - குற்றம்.]

அநட்சரசத்தம் — எழுத்தொலியல்லாத ஒலி. [ஸ நக்ஷரஶப்த: அநக்ஷர - எழுத் தல்லாத. ஶப்த - ஒலி.]

அநட்சராத்மகம் – எழுத்தல்லாததனுலாய ஓசை. (த. நி. போ. உஅஉ.) [ஸ நக்ஷர - எழுத்தல்லாத. ஆத்மக - சொரூபம்.]

அநணு—1. அணுவின்மை. 2. அற்பமான அணு. [ஸ நணு: அந் - எதிர்மறை; அற்பம். அணு - நுண்ணியது.]

அநத்தம்—1. பயனற்றது. 'அநத்தமான வுள்ளந்தான்' (ஞானவா. உபசாந். கக.) [ஸ நந் - எதிர்மறை. அர்த - பயன்.] 2. பொல்லாங்கு.'அநத்தக்கடலுளழுந்தி'(திவ். பெரியாழ். 5. 3. 7.)

அநத்தியயநம்— 1. ஓதுதலொழிந்திருக்க வேண்டிய காலம். (பராசர. ஆசார உ0) 2. வேதமுதலிய ஓதாது நிறுத்துகை. [ஸ ந த்யயந: அந் - எதிர்மறை. அத்யயந - ஓதுதல்.]

அநத்தியவசர்யாத்துமா — பாவம்; அது கிராகக ஆத்துமாவினுடைய சுபாவம். (பௌட். பும்ஸ். சசஇ.) [ஸ நத்யவஸா யாத்மா]

அநத்தியாயம்—அநத்தியயநம். (பராசர. ஆசார. உ0.) [அநத்தியாயதிநத்தின் முதனு ளிராத்திரி. ஸ நத்யாய: -அந் - எதிர் மறை. அத்யாய - அத்தியயநம்.]

**அநதிக்கிரமம்**— அதிக்கிரமமின்மை. [ஆநதிக்ரம: அந் - எதிர்மறை. அதிக்ரம - கடத்தல்.]

**அநதிக்கிராந்தம்** — கடவாதது. [ஆநதிக்ராந்த: அந் - எதிர்மறை. அதிக்ராந்த - கடந்தது.]

**அநதிகதம்**—1. அறியப்படாதது. 2. படிக்காதது. (சி. சி. அளவை. க. சிவாக்.) [ஆநயிமத: அந் - எதிர்மறை. அயிமத - அறியப்பட்டது.]

**அநதிகதார்த்தகந்திரு** — ஒருகாலுமறியாத வஸ்துவை யறிவிப்பது. ‘பாட்டர் அநதிகதார்த்தகந்திரு பிரமாண மென்பர்’ (சி. சி. அளவை. க. சிவாக்.) [ஆநயிமதாயகூமந்த்ரு: அநயிமதாயகி; மந்த்ரு - அறிவிப்பது.]

**அநதிகதார்த்தம்** — அறியப்படாத வஸ்து. (சி. சி. அளவை. க. சிவாக்.) [ஆநயிமதாயகி: அநயிமத - அறியப்படாத. அயகி - வஸ்து.]

**அநதிகாரம்**—அதிகாரமின்மை. [ஆநயிகார:]

**அநதிகாரி** — 1. அதிகாரமில்லாதவன், அதிகாரமில்லாதது. ‘மேல்வினைகூடாதநதிகாரியாதலினால்’ (வேதா. சூ. கசுஉ.) [ஆந் - எதிர்மறை. அயிகாரிநு - அதிகாரமுடையவன், அதிகாரமுடையது.]

**அநதிசயம்** — அதிசயமின்மை. [ஆந் - எதிர்மறை. அதிஶய - மேன்மை.]

**அநதிதேசம்**—அதிதேசமின்றி யுணர்த்துவது. [ஆநதிதெஶ: அந் - எதிர்மறை. அதிதெஶ - மாட்டெறிந்துசொல்லுதல்.]

**அநதிரேகம்**—அதிரேகமின்மை. [ஆந் - எதிர்மறை. அதிரெக - மிகுதி.]

**அநந்த** — 1. நிவிர்த்திகலையிற் பிருதிவி தத்துவத்திலுள்ள நூற்றெட்டுப் புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. தாற்.) 2. வித்யாகலையிலே இராக தத்துவத்திலுள்ள ஐந்து புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. தாற்.) [ஆநந்த.]

**அநந்தகீர்த்தி** — அளவிறந்தகீர்த்தியுடையவர். ‘அச்சுதனநந்தகீர்த்தியாதியநந்தமில்லவன்’ (நாலாயிர. திருச்சந்த. ககஎ.) [ஆநந்த - அளவற்ற. கீர்த்தி - புகழ்.]

**அநந்தகோடி** — எண்ணத்தொலையாதன. ‘தேர்நிரை யநந்தகோடி செறிந்தன திசைகளெங்கும்’ (கந்தபு. தெய்வ. ககக.) [ஆநந்த - அளவற்ற. கொடி - ஓரெண்.]

**அநந்தசத்தி**—1. அளவிலாற்றலுடைமை; இது: கடவுளுடைய ஆறுகுணங்களுளொன்று. ‘குறையாமல் வளர்சத்தி யநந்தசத்தி’ (கூர்மபு. பிரபஞ்ச. ௩.) 2. கடவுள். [ஆநந்தஶக்தி: அநந்த - அளவற்ற. ஶக்தி - வலிமை.]

**அநந்தசத்தித்துவம்** — அளவற்ற சத்தியுடைமை. (சி. வி. கிரி. அஎ. [ஆநந்தஶக்திதவம்.]

**அநந்தசதுட்டயம்** — ஆருகதமதத்திற் சொல்லப்பட்ட மோக்ஷத்திற் பெறும்பயனாகிய அநந்தஞாநம், அநந்ததரிசநம், அநந்தவீரியம், அநந்தசுகம் என்னும் நான்கு வகை. ‘அநந்தசதுட்டயமவையெய்த’ (யாப். காரிகை. உறுப். ௯. உதாரணப்பாட்டு.) [ஆநந்த - முடிவில்லாத. வதுஷ்டயம் - நான்கன் கூட்டம்.]

**அநந்தசதுர்த்தசி** — புரட்டாசிமாசத்துச் சுக்கிலபக்க சதுர்த்தசி திதி; இது: விட்டுணுவைப் பூசிக்கும் ஒரு விசேடதிநம். [ஆநந்தவதுர்தஶீ: அநந்த - அநந்தன். வதுர்தஶீ - பதினான்காந்திதி.]

**அநந்தசயநம்** — 1. சர்ப்பசயநம். 2. மலையாளதேசத்திலுள்ள ஒருவிட்டுணுதலம். [ஆநந்த - ஆதிசேடன். ஶயநம் - படுக்கை.]

**அநந்தசயநன்** — விட்டுணு. ‘அக்குவடமுடுத் தாமைத்தாலிபூண்ட வநந்தசயநன்’ (திவ். பெரியாழ். 1. 7. 2.) [ஆநந்தஶயந: அநந்த - ஆதிசேடன். ஶயந - படுக்கையாகவுடையவன்.]

**அநந்தசாயி** — விட்டுணு. ‘கருநிறத்தநந்தசாயி’ (பாரத. பதினெ. அ.) [ஆநந்தஶாயிநு: அநந்த - ஆதிசேடன். ஶாயிநு - கிடப்போன்.]

அநந்தசீரிடை — வாசுகியின் மனைவி. [ஸநந்தஶீர்ஷா: அநந்த - அநேகம். ஶீர்ஷ - தலை.]

அநந்தசுகம்—வரம்பிலா இன்பம். (த. நி. போ. உஎஉ.) [ஸநந்த-அளவற்ற. ஸுகம்-இன்பம்.]

அநந்தசொரூபி — கடவுள். 'சோதியே சுடரேயநந்தசொரூபியே' (நல். பார. பாசறை. ௩௬.) [ஸநந்த - அளவில்லாத. ஸ்வரூபிந் - இயல்புடையோன்.]

அநந்தஞானம்—வரம்பிலா வறிவு. (த. நி. போ. உஎஉ.) [ஸநந்த - அளவில்லாத. ஜ்ஞாநம் - அறிவு.]

அநந்தஞானி—1. கடவுள். 2. பார்ப்பதி. 3. பிரமன். 4. அருகன். (சூடா.) [ஸநந்த - அளவில்லாத. ஜ்ஞாநீ - அறிவுடையவன், அறிவுடையவள்.]

அநந்தத்துவம் — அநந்தமாயிருக்குந் தன்மை. 'அந்தவநந்தத்துவ தன்மமானது' (பௌட். பசு. எஎ. உரை.) [ஸநந்த - அளவில்லாத. த்வம் - தன்மை.]

அநந்ததரிசநம் — வரம்பில்லாக்காட்சி. (த. நி. போ. உஎஉ.) [ஸநந்த - அளவில்லாத. தர்ஶந-காட்சி.]

அநந்ததிருட்டி—1. இந்திரன். (ஆயிரங் கண்ணுடைமையின்.) 2. சிவன். (எங்கும் பார்த்தலால்.) [ஸநந்தத்ருஷ்டி: அநந்த - அந்தங்கெட்ட; அளவில்லாத. த்ருஷ்டி - கண்.]

அநந்ததிருதியை — புரட்டாசி, மார்கழி, வைகாசி மாதங்களில்வருஞ் சுக்கில பக்கத் திருதியை. 'தேவருந் தொழு மநந்த திருதியை விரதந்தன்னை' (மச்சபு. அநந்த. க.) [ஸநந்த; த்ருதீயா - மூன்றாந்திதி.]

அநந்ததீர்த்தகிருத்—பதினான்காஞ் சமண தீர்த்தகன். [ஸநந்ததீர்த்தக்ருத்.]

அநந்ததீர்த்தம்—சிதம்பரத்திலே திருக் கோயிலுக்கு மேற்கே திருவநந்தேச்சுரத் துக்கு முன்னுள்ள ஒரு தீர்த்தம். (கோயிற்பு. வரலா. ௬.) [ஸநந்த-ஆதிசேடன். தீர்த்த-பவித்திரநீர்.]

அநந்ததேவன் — 1. அநந்தேசுவரன். 2. ஆதிசேடன். 3. சேடசயநத்திற் றுயில் கொள்ளுகிற விட்டுணு. [ஸநந்ததேவ: அந் - எதிர்மறை. அந்த - முடிவு; அநந்த-ஆதிசேடன். தேவ - தேவன்.]

அநந்ததை—நித்தியத்தன்மை. [ஸநந்ததா.]

அநந்தநாதன் — சர்வேசன். [ஸநந்த - அளவிறந்தவைகளுக்கு. நாத - தலைவன்.]

அநந்தநான்மை—அநந்தசதுட்டயம். 'ஆடெழிற்றேளினுயநந்தநான்மையே' (சிந்தா. முத்தி. உசஅ.) [அநந்த - முடிவில்லாத. நான்மை - நான்குதன்மை.]

அநந்தபத்மநாபன் — திருவநந்தபுரத்துத் திருமால்.

அநந்தபுரம் — திருவநந்தபுரம். (திவ். திருவாய். 10. 2. 1.)

அநந்தம்—1. அந்தங்கெட்டது, அழகின்மை. 2. அறுகு. 3. ஆகாயம். 4. எண்ணத் தொலையாதது. 'இக்கதையுமநந்தமாம்பேத மாகும்' (கந்தபு. அவையட. கரு.) 5. எல்லையின்மை. 6. ஓரெண், பத்துக்கோடி, கோடாகோடி. 7. குப்பைமேனி. 8. கௌளக பாஷாணம். (மூ. அ.) 9. சிறுகாஞ்சொறி. 10. நித்தியமானது. 11. பரப்பிரமம். 12. பெருநன்னாரி. 13. பொன். (சூ-நி. கக: னகர. கo.) 14. முடிவில்லாதது. 'அநந்தமான தற்பதத்திலிருந்தும்' (ஞானவா. தாசூர. உக.) 15. மேகம். 16. சராசரமாகவிளங்குவது. (ஞானக். தத்துவதெரிசனம்) 17. வேலிப்பருத்தி. (மலை.) 18. மயிற்சிகை. (திவா.) [ஸநந்த: அந் - எதிர்மறை. அந்த-முடிவு.]

அநந்தமயன்—அந்தரியாமி. 'சூத்திரான் மகனென் பெயர்முத லாகச் சொற்றன ரிரணிய கருப்பற்-கேத்துகா ரணமா முடம்புறு சமட்டி யெனுமபி மாநியவ் வியத்தன்-வாய்த்தகா ரணமா முபாதிக னநந்த மயன்பர தேவதை பரம-ஞர்த்ததற் பதமுக் கியார்த்தனென் பெயர்மு னந்தரி யாமிபெற் றிடுமே' (வேதா. சூ. சஉ.) [ஸநந்தமய: முடிவின்றி வியாபித்திருத்தலின் வந்த பெயர்.]

அநந்தமுடிச்சு — பெண்களணிகிற ஒரு காதணி.

அநந்தயோகம் — அநந்தேசுவரருடைய நியோகம். (சி. வி. ஞாந. கஶ.)

அநந்தர் — 1. சுத்ததத்துவங்களுள் ஒன்றாகிய ஈசுரதத்துவத்திலிருக்கும் அட்டவித்தியேசுரர்களுள்ளே தலைமைபெற்றவராகி யசுத்தாத்துவ கர்த்தாவாயிருக்கிறவர். (சி. பி. கை. சு.) இவர் மாயைக்குமேற் சுத்த வித்தைக்குக் கீழிருந்த விஞ்ஞானகலருணின்று மலபரிபாகத்துக்குத் தக்கபடி ஈசுர தத்துவத்திற் போகம்பெற்றவர். (சி. வி. ஞாந. க, கஶ. சுலோ. தாற்.) இவர் அசுத்த மாயையின் ஏகதேசத்தைக் கலக்கிக் கலை முதலியவற்றைத் தோற்றுவிப்பர். 'அருத்தி மிகுங் கலைகால நியதியுடன் வித்தை யராக மிவை யநந்தரான் மாயைதனி லாகும்' (சிவப் பிர. உ: அ.) இவருக்கு அசுத்தமாயாகிருத்தியம் ஐந்தும் நடந்தாலுஞ் சுத்த மாயையிலே திரோதாநகிருத்தியம் நடவாதிருந்தாலும் திரோதாநகிருத்தியம் பிரதாநம். (சி. சி. க: சுஶ. ஞாநப்.) இவரேயசுத்தாத்துவாவிற் கலைமுதலானவற்றால் உண்டாகிய சூக்கும தேகமுள்ள பிரளயாகலர்களையும் நூற்றப்பதினெட்டுருத்திரர்களையுஞ் சிருட்டித்துப் புரியட்டகதேகமுள்ள பிரம விஷ்ணு முதலானவர்களைக் கர்மாநுகுணமாய்வருஞ் சம்சாரத்திற்புவநாதிபதிகளாகச்செய்கிறார். (சி-வி. ஞாந. கக-ம் உரையும்.) 2. நித்திரை. 'மோகவநந்தர் முயல்வோர்க்கு' (ஞாந.62. 23.) 3. மயக்கம். (சீவக. 1249.) 4. மனத்தடுமாற்றம். 'மனங்கொள்ளா அநந்தருள்ள முடையளாய்' (தொல். பொருள். 102. உரை.) 5. உணர்ச்சி. 'கட்டுயிலநந்தர்போல' (சீவக. 1097.) 6. பருத்தி. (மலை.) 7. ஜைந தீர்த்தங்கருருள் ஒருவர். (திருக்கலம். காப்பு. உரை.)

அநந்தரத்திலவன் — அடுத்தவழித்தோன்றல். (ஈடு. 10. 7. 5.)

அநந்தரம் — 1. அடுத்தது. 'அரவுயர்த்தவனுக் கநந்தரமானதம்பியுடன்' (பாரத. பதினாறு. சஉ.) [அநந்தரமானதம்பி - துரியோதனனுக்கு நேரே இளையதம்பி.] 2. இடைக்காலம் இல்லாதது. 3. இடையிடம் இல்லாதது. [ஸ நந்தர: அந் - எதிர்மறை. அந்தர - இடை.] 4. உடனே. 'அநந்தரம் பொரற்குநீகொலந்தரமெனக் கெனுத்-தநஞ் சயன் செயிர்த்தல்கண்டு' (பாரத. வாரணா. சுரு.) 5. உள்ளே துவாரம் இல்லாதது. 6. சமீபம். 7. பரப்பிரமம். 8. பின்பு. 9. மயிலின்சிகை (பிங்க. உருகசு.)

அநந்தாவாரிசு — அடுத்த பாத்தியதையுள்ளவன். (வழக்கு.)

அநந்தரூபன் — 1. அளவிறந்த ரூபங்களைக் கொண்டவன். 2. சிவன். 'முத்தன்பூரணனனந்தரூபன்' (சூத. எக்கி. பூ. ௩௩: ௫.) 3. விட்டுணு. [அநந்த - அளவில்லாத. ரூபன் - உருவமுடையவன்.]

அநந்தலோசநன் — 1. கடவுள். 2. புத்தன். (திவாகர: எ.) [அநந்த - அளவின்மை. லோசந-கண்ணுடையவன்.]

அநந்தவாதம் — ஒருவகை வாதரோகம்; அது: முகமும் கழுத்தும் சோரும்படிசெய்வது. [அநந்தவாத: அநந்த - அந்தமின்மை. வாத - வாயு.]

அநந்தவிசயம் — 1. சுவாயம்புவ ஆகமத்திற் சொல்லப்படும் ஒரு மண்டலம். [இதனிலக்கணம் சி - வி. கிரி. ௫௫-ஆம் சுலோகத்திற் காண்க.] 2. பாண்டவருள் தருமனுடைய சங்கு. (பகவற்கீ. கசு.) [அநந்தவிஜய: அநந்த- அளவின்மை. விஜய - வெற்றி. வெற்றிதருமென்பதால் வந்த பெயர்.]

அநந்தவிரதம் — புரட்டாசிமாசச் சுக்கில சதுர்த்தசியிலே விட்டுணுசமயத்தார் அநுட்டிக்கும் ஒருவிரதம். [அநந்தவ்ரத: அநந்த- விட்டுணு. வ்ரத - நியமம். இவ் விரதம் பௌர்ணமியிற் கொள்ளப்படுகிற தென்பர்.]

அநந்தவிபவை — உமாதேவி. 'சிந்மயை யநந்தவிபவை' (கூர்மபு. திருக்கல். உ௩.) [அநந்த - அளவில்லாத. விபவா - செல்வமுடையவள்.]

அநந்தவீரம் — அளவில்லாதவீரம். (த. நி. போ. எஉ.) [அநந்த-அளவின்மை. வீரம்- ஆற்றல்.]

அநந்தவீரியம் — அநந்தவீரம். (சிலப். நாடு. கஅ. உரை) [அநந்த - அளவில்லாத. வீரியம் - ஆற்றல்.]

அநந்தவீரியன்—சைநமதத்திற் சொல்லப்படும் இருபத்துமூன்றாந் தீர்த்தங்கரன். [ஸ நஞவீய-ல.]

அநந்தன்—1. அட்டநாகங்களுளொன்று; அது: தென்கிழக்குத்திசையில் இருக்கிறது. அதன் படத்திலே வெண்டாமரைப் பூப் போலும் புள்ளிகளுள்ளன என்பர். (சீவரட் ௩௯க.) 2. அருகதேவன். 3. ஆதிசேடன். 'வெவ்வாயரவிலநந்தநீ' (கூர்மபு. திருக்கல். ௩௬.) 4. இருபத்தெட்டாகமங்களுள்ளே சந்திரஞானமென்னும் ஆகமோபதேசம்பெற்ற ஒருதொண்டன். (த. நி. போ. கருக.) 5. கிருட்டிணனுடைய தமயனாகிய பலதேவன். 6. சாகத்தீவரசனாகிய மேதாதியின் எழுபுத்திரர்களுள் ஒருவன். (சிவதரு. கோபுர. க௬. உரை.) 7. சாந்திகலையில் ஈசுரதத்துவத்தினுள்ள எட்டுப்புவநங்களுள் ஒன்று. (சி-வி. கிரி. உக. தாற்.) 8. சிவன். 9. சைநமதத்திற் சொல்லப்பட்ட பதினான்காந் தீர்த்தங்கரன். 10. கோரபாஷாணம். (சட்டமு. உக௩.) 11. பதஞ்சலி. 'கூடுமநந்தன் கூடுமநந்தங் கொடுவெம்மை' (கோயிற்பு. நடரா. ௩௭.) 12. பரப்பிரமம். 13. புத்தன். 14. வாசுகியென்னுஞ் சர்ப்பராசன். 15. விட்டுணு. 'ஆரமார்பனரங்கனநந்தன்' (நாலாயிர. மெய்யில். ௩.) 16. அநந்தேசுவரன்; அவன் சுத்தாசுத்தாத்துவாவிற்குக் கர்த்தா. (சி-வி. ஞாந. உ. தாற்.) 17. கடவுள். 18. பிரமன். [ஸ நஞ. அந் - எதிர்மறை. அந்த - முடிவு.]

அநந்தா—'பிரமரந்திரத்திலிருக்கும் நாதத்திலுண்டான பத்துக்கலைகளிலொன்று. (சி. வி. கிரி. உஉ: தாற்.)

அநந்தாசநம்—பஞ்சாசநங்களுளொன்று. அது: சர்ப்பாசநம். (சி. சி. பர. மாயா. மதம்; கரு. உரை.) [அநந்த-ஆதிசேடன். ஆஸநம்-இருக்கை.]

அநந்தாநந்தம்—வரம்பிலா ஆநந்தம். (த. நி. போ. உ௭உ.) [ஸ நஞ - அளவில்லாத. ஆநந்த-மகிழ்ச்சி.]

அநந்தாழ்வான்—ஆதிசேஷன்.

அநந்தியம்—1. அழிவற்றிருக்கை. 2. எண்ணற்றிருக்கை. 'கிரியாநந்தியம்' (சி. சி. க: சுங. ஞாநப்.) 3. நித்தியம். [ஸ ந் - எதிர்மறை. அந்தியம் - முடிவு.]

அநந்தேச்சுரம் — சிதம்பரத்திலே பதஞ்சலிமுநிவராலே தாபிக்கப்பட்டகோயில். 'ஆங்கிடமாகநாளு மமர்ந்தநந்தேச்சுரத்தும்' (கோயிற்பு. பதஞ்சலி. கூசு.) [ஸ நஞ - பதஞ்சலி. ஈஶ்வர - ஈசன்கோயில்.]

அநந்தேசுரர் — அநந்தேசுரர். [ஸ நஞேஶ்வர.]

அநந்தேசுவரர்—சுத்தாசுத்தாத்துவாவிற்குக் கர்த்தாராகிய அநந்தர்; இவர்: ஈசுரதத்துவத்தைத் தமதிருப்பாகக்கொண்டு அத்தத்துவத்திற் கபிமாந தேவதையாயிருக்கிறவர். (சி. சி. உ: எஉ: சிவாக். சி-வி. ஞாந. உ. தாற்.) இவராலே மூலப்பிரகிருதிக்கு மேலாயுள்ள ஆறுதத்துவமும் ஒடுங்குவதும் தோற்றுவதும். (சி. சி. உ: எஉ. சிவஞா.) ['அநந்தர்' என மேலே சொல்லப்பட்டவர் இவரே. ஸ நஞேஶ்வர.]

அநந்தை—1. அழிவில்லாதவள். 'பொருவரிய சிவையாகி யநந்தையா யேகையாய்' (கூர்மபு. திருக்கல். ௩.) 2. அறுகு. 3. ஒரு சிவசத்தி. (பௌஷ். மந்திர. க௦இ.) 4. கொத்தான்கொடி. (தைல. தைலவ. கஉ௫.) 5. சாந்தியதீதகலையிலே சிவதத்துவத்திலேயிருக்கும் பதினைந்து புவநங்களுள் ஒன்று. (சி-வி. கிரி. உக. தாற்.) 6. நெல்லிமரம். 7. பார்ப்பதி. 8. பிராசாத சோடசகலைகளில் ஒன்று; அது: கண்ணாடியொளிபோல்வது. அதன் வடிவு வட்டம். அது வியோமரூபிநிக்குமேல் ஓரங்குலத்திலே துவாதசாந்தத்துள்ளே யிருக்கிறதாகப் பாவிக்கப்படும் பிரசாதகலைத்தியாநம்; (த. நி. போ. ௩௭௫.) 9. பூமி. 10. வான்மிளகு. 11. திருவனந்தபுரம். [ஸ நஞா: அந் - எதிர்மறை. அஞா-முடிவுடையவள், முடிவுடையது.]

அநந்நியகதி—வேறுகதியற்றவன். 'ஐயோ இவன் அநந்நியகதி' (ஈடு. 9. 8. 7.)

அநந்நியம்—1. அந்நியமல்லாதது. 'வீட்டின்பமுயிர்க் கநந்நியமாதலின்' (வைராக். தீப. கச. உரை.) 2. ஒற்றுமை. 'கடத்தொடு மட்கநந்நியமென் வாக்கியமேபோல்' (வேதா. சூ. க௨௭.) [ஸ நந்ய: அந் - எதிர்மறை. அந்ய - வேறு.]

அநந்நியார்ஹம் — வேறொருவர்க்கு உரிமையாகாமலிருப்பது (திவ். திருவாய். 6. 1. 1. பன்னி.)

அநந்நியை—அபிந்நாசத்தி. (பௌட். பதி. ௬௦.) [ஸ அநந்யா: அந் - எதிர்மறை. அந்யா - வேறானவள்.]

அநந்நுவயம்—'அநந்நுவயமாவது: ஏது சாத்தியங்களின் றொடர்பையுணர்த்தும் அந்நுவயவியாத்திவசனமின்றித் திட்டாந்தவுருப்புக்கூறுவது. 'இம்மலை நெருப்புடைத்து; புகையுடைமையால்; பாகசாலை போல' என்பதாம். இதனுள் யாது யாது புகையுடைத்து அது அது நெருப்புடைத்து, என்னும் அந்நுவயவியாத்தி வசனம் கூறப்படாமையால் இஃது அநந்நுவய மாயிற்று' (அநுமா. பக். ௩௩.) 'அநந்நுவயமாவது: சாதனசாத்தியங் - தம்மிற்கூட்டமாத்திரஞ் சொல்லாதே-யிரண்டனுடையவுண்மையைக் காட்டுதல்' (மணிமே. ௨௯-ஆம் காதை. ௩௮௬-ஆம் அடி.)

அநந்நுவயாநுமாநம்—அந்நுவயவியாத்தியில்லது. (அநுமா. பக். ௬.)

அநந்நுவயாலங்காரம்-இயைபின்மையணி. (குவல. ௨.) [ஸ அநந்வய - இயைபில்லாதது. அலங்கார - அணி.]

அநநுபாடணம் — தோல்வித்தானம் இருபத்திரண்டனுள் ஒன்று; அது: பிறன்கூறிய பொருளையநுவதிக்கமாட்டாமை. (சி.சி. அளவை. ௧௪. மறை.) [ஸ அநநுபாஷணம்: அந் - எதிர்மறை. அநுபாஷணம் - அநுவதித்தல்.]

அநப்பியாசம் — அப்பியாசமின்மை. [ஸ அந் - எதிர்மறை. அப்யாஸ - பயிற்சி.]

அநபக்கிரியை — 1. கடன் இறுக்காமை. 2. அபகாரம் செய்யாமை. 3. பழிக்குப்பழி வாங்காமை. [ஸ அநபக்ரியா: அந் - எதிர் மறை. அபக்ரியா - தீங்கு, கடனிறுத்தல்.]

அநபத்தியம் — பிள்ளையின்மை. [ஸ அநபத்ய: அந் - எதிர்மறை. அபத்யம் - பிள்ளை.]

அநபரன்—பிரமன். [ஸ அநபர: அந் - எதிர்மறை. அபர - பின்னுள்ளான்.]

அநபாயம்—1. அழிவின்மை. 2. குறைவின்மை. 3. தேய்வின்மை. [ஸ அநபாய: அந் - எதிர்மறை. அபாய - அழிவு, நிலையாத்தன்மை.]

அநபாயன் — 1. அநபாயனென்னுஞ் சோழச்சக்கரவர்த்தி. 'வென்றிபுனை யநபாயன்விளங்கியபூங் கழல்போற்றி'(கோயிற் பு. பாயிர.) 2. அழிவில்லாதவன். 3. சிவன். 4. நிலையாயிருக்கிறவன். [ஸ அநபாய: அந் - எதிர்மறை. அபாய - அழிவுடையவன்.]

அநபாயோகம் — சந்திரனுக்குப் பன்னிரண்டாம் இடத்திற் சுபக்கிரகங்கள் நிற்கும் நிலை. 'மதிக்கிருபாலு நற்கோளெழில் வாழ்வுடனுயுமிகும் - விதிக்குமநபைசுநபை' (விதான. சாதக. ௨௩- உரை.)

அநபிகிதகருத்தன் — அநபிகிதகருத்தா. (பி. வி. ௧௧.)

அநபிகிதகருத்தா— தன்செயலையுணர்த்தும் வினைக்கு எழுவாயாகாது மூன்றும்வேற்றுமையிலே அல்லது நான்காம்வேற்றுமையிலே நிற்குங் கருத்தா. 'மகன் தந்தையால் அடிக்கப்பட்டான்' என்னும் வாக்கியத்திலே அடித்தலைச்செய்த 'தந்தை' மூன்றும் வேற்றுமையினிற்பதும், 'அவர்க்குச்செய்யத் தகும் அக்காரியம்' என்னும் வாக்கியத்திலே செய்தற்கருத்தாவாகிய 'அவர்' நான்காம் வேற்றுமையின் நிற்பதும் போல்வது. 'ஆதியதென்பரபிகிதகர்த்தாவநபிகித- மாதி விட்டாறொடு மூன்றும் பெறுமென்ப ராய்ந் துணர்ந்தோர். (பி. வி. ௧௪.)[ஸ அநபிஹித கர்த்ரு: அந் - எதிர்மறை. அபிஹித - சொல்லப்பட்டது. விகுதியினால் விளங்கச் சொல்லப்படாதது. கர்த்ரு - செய்பவன். சப்தசங். ௧௧௧.]

அநபிகிதகருமம் — செய்வினைக் கெழுவாயாகாது ௨-ஆம், ௩-ஆம், ௪-ஆம், ௬-ஆம் வேற்றுமைகளுள் ஒன்றனதுருபமாக வருஞ் செயப்படுபொருள்; அது: 'மரத்தைக்குறைத்தான்' 'ஆலத்தினாலமிர்தாக்கியகோன்' 'அவட்குக் கொள்ளுமிவ் வணிகலம்' 'குடும்பத்தினது குற்றமறைப்பான்' என்பவற்றிற்போல

வருவது. 'ஆதியதென்பரபிகிதகன்மமநபி கித - மாதியைங்தேமொழிந்தல்லாதனபெறு மாரணங்கே' (பி. வி. கச. உரை.) [ஸநபி ஹிதகர்ம்: அநபிஹித-சொல்லப்படாத. கர்ம் - செயப்படுபொருள். விணவிகுதியினுல் விளங்கச்சொல்லப்படாதது.]

அநபிகிதம்—1. சொல்லப்படாநிலை. 2. தெரியாநிலை. 'சொல்லப்படுநிலை சொல்லப் படாநிலை - யபிகிதமநபிகிதமெனமொழிப - தெரிநிலை தெரியாநிலையெனவும் பெறூஉம்' (பி. வி. கக. உரைச்சூத்திரம்.)

அநபிமதம்—சம்மதமின்மை. [ஸநபிமத: அநு-எதிர்மறை. அபிமத - சம்மதம்.]

அநபிவியத்தம்—வெளிப்படையாகாதது. 'அவ்விருத்தி நாசமாம்போ தநபிவியத்த மான கோதிலாச்சிதாகாரம்' (சூத. எக்கி. பூ. கக: சு.) [ஸநபிவ்யக்த: அநு - எதிர் மறை. அபிவ்யக்த - வெளிப்படையானது.]

அநபிவியத்தி — வெளிப்படையாகாமை. 'ஆன்மாவிற் சிவத்துவம் அப்போதப்பிர வர்த்திரூப அநபிவியத்தியெனுஞ் சத்திரூப மாயிருந்து' (சி. சி. எ: உ. ஞாநப்.) [ஸநபிவ்யக்தி: அநு - எதிர்மறை. அபிவ்யக்தி - வெளிப்படை.]

அநபேட்சன் — அபேட்சையில்லாதவன், ஆசையில்லாதவன். (பகவற்கீ. கஉ: சு.) [ஸநபெக்ஷ:அநு-எதிர்மறை.அபெக்ஷா- ஆசை.]

அநபை—அநபாயோகம்.

அநம்—சோறு. 'உறையுமவர்க்கநமுமுதவு வார்கள்' (சிவதரு. உ: எடு.) [ஸநம்.]

அநம்பு—1. சாதகப்புள். 2. நீரில்லாதது. [ஸநு - எதிர்மறை. அம்பு - நீர்.]

அநயம்-1. அதிட்டமின்மை. 2. தீங்கு. 3. வருத்தம். [ஸநய: அநு - எதிர்மறை. நய - அதிட்டம்.]

அநர்க்களம்—தடையின்மை. [ஸநர்கள: அநு - எதிர்மறை. அர்கள-தாழக்கோல்.]

அநர்த்தகம்—பிரயோசனமின்மை. [ஸநர்த்தக: ஸநு - எதிர்மறை. அர்த்த - பிரயோசநம். க-ஒரு விகுதி.]

அநர்த்தப்படுதல் — துன்பப்படுதல். (ஈடு. 1. 3. ப்ர.)

அநர்த்தபரம்பரை — துன்பத்தொடர்ச்சி.

அநர்த்தம்—1. அர்த்தம் இல்லாதது; பயன் இல்லாதது. 2. இடுக்கண். 'மெய்தரி நிமித்த மாகத் தரிப்பதாம் விளம்புஞ் சுத்த - மெய் தினர் பிறவியான வநர்த்தத்திலென்றுமெய் தார்' (ஞாநவா.வைராக். 28.) 3. பிரயோசநமற்றது. 'அருத்தங்க ளநர்த்தமாகும்' (ஞாநவா. வீமபா. ௫.) 4. புத்தியின்மை. 5. பொல்லாங்கு. 'எல்லாவநர்த்தங்கட்கு மூலமாகிய ஆணவமலத்தைப் போக்குதற் பொருட்டும்' (சி. சி. உ: எக. சிவஞா.) [ஸநர்த்த: அநு - எதிர்மறை. அர்த்த - பிரயோசநம், பொருள்.]

அநரண்ணியன்—சூரியவமிசத்திலேபிறந்த அயோத்தியரசரில் ஒருவன். (இராமா. உத். திக்கு. ௩௩.) [ஸநரண்ய.]

அநரவன் — 1. பஞ்சபட்சிபாஷாணம். 2. வேந்தோன்றிப்பூண்டு. [வைத்தியபரி.]

அநருகம்—தகுதியில்லாதது. [ஸநர்ஹ: அநு-எதிர்மறை. அர்ஹ-தகுதியுடையது.]

அநருகர் — தகுதியற்றவர். [ஸநர்ஹ: அநு - எதிர்மறை. அர்ஹ - தகுதியுடையவன்.]

அநல்—1. அக்கினி. 'அநலுமாகி' (பெரிய பு. திருஞாந. ௫௬௩.) 2-4. அநலென் னேவலும் தெரிநிலைவிணைப்பகுதியும் பெய ரெச்சத்தொகையும். 5. இடி. 'பகடுசுற்றலைப் பைம்புனலோடந-லகடடக்கி' (இரகு. ஆற். ௪.) 6. உட்டணம். 7. கொடுவேலி. (தைல. தைலவ. கஉக.) 8. பித்தம். (இராசவைத்.) 9. மூலாக்கினி. 'அநலே யம்மைகுண்டலியடிக் கலைமதியினூடுதாக்கி' (தாயு. தேசோ. க.) 10.வன்னியிலை. (இராசவைத்.) [மூ-ஸநல]

அநல்காலி — சூரியகாந்தக்கல். [அநல் - நெருப்பு. காலி - காலுவது.]

அநல்வீசுதல்—வெக்கையடித்தல்.

அநல்வென்றி—தங்கம். (மூ. அ.) [அநல்-நெருப்பு. வென்றி-வெற்றியடைவது. அநலி லேயழியாதது.]

அநலகிரி — அண்ணாமலை. [அநல-அக்கினி. கிரி-மலை.]

அநலடுப்பு — கூண்டடுப்பு. (இந்துபாக. 68.)

அநலநட்சத்திரம்—செவ்வாய்நின்றநாளுக் கேழாநாள், பதினன்காநாள், பதினாறுநாள், இருபத்தைந்தாநாளாய் வந்து தோஷம் அடைந்த நாள். (விதாந. குணகுண. ௬௦. உரை.) [அநல - நெருப்பு. நக்ஷத்ர - விண்மீன்.]

அநலப்பிரியை—சுவாகாதேவி. [அநல ப்ரியா.]

அநலபித்தம் — உண்பதைச் சீரணிக்கச் செய்யும் உதராக்கினி. (சீவரட்.௬) [அநல - அக்கினி. பித்தம்-சரீரத்திலுள்ள ஒருதாது. அக்கினித்தொழிலைச்செய்யுங்காரணத்தால் வந்தபெயர்.]

அநலபித்தரோகம் — ஒருவகைப்பித்த ரோகம்; அது: சர்வாங்கத்திலும் தடிப்பு, நித்திரைபங்கம் தலைவலிமுதலியகுணங்களை யுண்டாக்கும். (சீவரட். ௧௪௬.)

அநலம்—1. அக்கினி. 'அனையா னருட்புன லாலகங் காதல மாற்றுதற்கே' (வானன். ௩௧.) 2. அநலநட்சத்திரம். 'செய்யவனின்ற நாட்கேழிருபத்தைந்துசேர்பதின-றையபன் னன்கு மநலமென்றார்' (விதாந. குணகுண. ௬௦.) 3. வட்டணம். 4. கொடுவேலி. (தைல. தைலவ. ௧௩௫.) 5. சிவாகமம் இருபத் தெட்டினென்று. 6. திருப்தியற்றது. (பகவற்கீ. ௩: ௩௧.) 7. பித்தம். [அந-எதிர் மறை. அலம் - நிறைவு.]

அநலர்—1. அக்கினியுடையவர். 'பொங்கார் சடையர் புனலரநலர்' (தேவார. நறையூர். தக்கே. உ. சம்.) 2. அக்கினிமண்டலத்திலே யுள்ளார். [அநல் - அக்கினி. அர்-ஒருவிகுதி.]

அநலல்—கனலுதல், வெப்பமாயிருத்தல். 'அநலுமுதுகானகமகன்று' (பாரத. வெளிப். எ.)

அநலன்—1. அக்கினிதேவன். 2. அட்ட வசுக்களிலொருவன். [அநலன்: அந் - எதிர் மறை. அலம் - திருப்தி, உணவினாலே நிறை வடையாதவன்.]

அநலாச்சியம் — நரகவகையில் ஒன்று. 'அநலாச்சியமென்னும் வெந்தழனிரயம்' (உபதேச. சிவத்துரோ. 132.)

அநலாடி — சிவன். 'பொருளாவுமழுவா னநலாடி' (தேவார. நறை. தக்க. ௬. சம்.) [அநல் - நெருப்பு. ஆடி - ஆடினவன்.]

அநலி—1.சூரியன். 'அநலியேயரியேபாநு' (சூ.நி. முத. ௨௦.) 2. நெருப்பு. 'அநலியுண்ண விடுவனே விவ்வூரென்னும்' (கந்தபு. அக்கினி. ௧௬௭.) [அநல்; இ.]

அநலிமுகம்—சூரியபுடம். (மு. அ.)

அநலுதல்—கனலுதல்.

அநலேறு—இடி. (சூடா.)

அநலோடுவேந்தன் — கார்முகிற்பாஷாணம்.

அநவ்வியயகிருத்து — அவ்வியயமல்லாத கிருத்து; வேண்டும், தகும், படும் என்னுங் கிருத்துப் பிரத்தியயம் மூன்றும் ஒன்றற் கொன்று பிரதிபதமாய் இருதிணையைம்பான் மூவிடத்தினும்நிற்றலின் அநவ்வியயகிருத்தா மென்பர். (பி-வி. ௬௧. உரை.)

அநவச்சிந்நத்துவம்—அநவச்சிந்நமாயிருக் குந்தன்மை. (சி. சி. ௨: ௫௬. சிவாக்.)[அநவ ச்சிந்ந - எல்லைப்படாதது. த்வம் - தன்மை.]

அநவச்சிந்நம்—எல்லைப்படாதது. 'காலா நவச்சிந்நத்துவமே' (சி. சி. ௨: ௫௬. சிவாக்.) [அநவச்சிந்ந:அந - எதிர்மறை. அவச்சிந்ந-எல்லைப்பட்டது.]

அநவசரம் — 1. அகாலம். 2. ஓய்வுநேர மின்மை. [அநவஸர: அந - எதிர்மறை. அவஸர - காலம்.]

அநவத்தாதோஷம் — முடிவுகாணாமை யாகிய தோஷம். (வேதா. சூ. ௧௩௫. உரை.) [அநவஸ்தா - முடிவின்மை. தோஷ-குற்றம்.]

அநவத்தாநம்—1. தவறுனநிலை. 2. நிலை யின்மை. 3. வாயு. [அநவஸ்தாந: அந - எதிர்மறை. அவஸ்தாந - நிலை.]

அநவத்திரம் — நிலையற்றது. [ஸ நவஸ்தித: அ௩-எதிர்மறை. அவஸ்தித-நிலையுடையது.]

அநவத்தை—1. அநவத்தாதோஷம். 'அந்த வுயி ரனைத்திற்கு மிலையோதா னிவ் வா றநவத்தை நீக்கலரி தநேகவுயி ரெனலால்' (வேதா. சூ. கஉ௫.) 2. நிலையின்மை. [ஸ நவஸ்தா: அ௩-எதிர்மறை. அவஸ்தா-நிலை.]

அநவத்தைப்படுதல்—முடிவுகாணுது முட்டுப்படுதல். 'முன்னுகப் பலவறங்கள் பூரித்தெம் மிறைவன் முழுதுணர்ந்திங் கருளினு லுயிர்கண்முத்தி யடையப் - பின்னுகப் பிடக நூ லுரைத்தா னென்று பேசினு யிவன் முன்பு பேரறங்கள் புரிநூல் - சொன்னு ரிவனைப்போன் முன்னெருவ னென்னி லவனுக்குச் சொன்னு ரெனத் தொடர்ச்சியாகி-யன்னுய்பி னநவத்தைப் படுமொருவனின்று மாரோவுன் பாழியிருப் பாரிதனை யறையே' (சி. சி. பர. சௌ. மறு. அ.)

அநவதாநம்—அவதாநமின்மை. [ஸ நவதாந: அ௩-எதிர்மறை. அவதாந-கவனம்.]

அநவபாசம்—தோற்றுமை, வெளிப்படாமை. [ஸ௩-எதிர்மறை. அவஹாஸ-வெளிப்படல்.]

அநவரதம் — எப்பொழுதும். 'அநவரதம் பதைத்துலாவி' (ஞாநவா. சநக. கசு.)[ஸ நவரத: அ௩-எதிர்மறை. அவரத-ஓய்வு.]

அநவலோபநம் — கருப்பந்தரித்த மூன்றும் மாதத்திற்செய்யப்படுங் கர்ப்பக்கிரியை. (சீமந்தத்தின்பின் நாலாமாதத்திற் செய்யப்படுங் கர்ப்பக்கிரியை.) 'கர்ப்பந்தரித்த இரண்டு அல்லது மூன்றுந்திங்களி லெந்தத்திநத்தில் ஆண் நக்ஷத்திரத்தோடு சந்திரன் கூடியிருக்கின்றுனே அந்தத்திநம் பும்ஸவநா நவலோபநமென்னுங் கருமத்தைச்செய்ய வேண்டும்' (என்று பராசர. க-ஆங்காண்டம். உ-ஆம் அத்தியாயத்திற் கூறப்பட்டது.) [ஸ நவலோபந.]

அநவலோபம்—இச்சித்த பண்டங்களைத் தந்து திருத்திசெய்தல். (பராசர. க-ஆங்.கா. பும்ஸவநப்பிரகரணம்.)[ஸ நவலோப: அ௩-எதிர்மறை. அவலோப - துராசை.]

அநற்கல்—சிக்கிமுக்கிக்கல் என்னும் ஒரு சிலை. (தைல.தைலவ.கஉஎ.)[அநல்-நெருப்பு. கல் - சிலை.]

அநற்றுவை—நெருப்பிடுகலம். (பிங்.)

அநற்பம்—அதிகம். [ஸ நல்ப: அ௩-எதிர் மறை. ஸல்ப - சிறிது.]

அநற்புதம் — அற்புதமின்மை. (வாசுதே. சூ௫.) [ஸ௩ - எதிர்மறை. ஸத்புத - அதிசயம்.]

அநற்பொறி—தீப்பொறி. (திவா.)

அநற்றல்—1. எரித்தல், கனலச்செய்தல். 'அனற்றினு னல்லனென்றிக்காலத்தும் வெறுத்தா ரங்தோ' (காஞ்சிப். கழுவாய். கஎக.) 2. தகித்தல். 3. வயிறுளைதல். (2, 3 வழக்.) 4. கோபித்தல். 'குமரனை யநற்று மாற்றலர்' (சூளா. அரசியற். 89.) 5. வீணே உதவுதல். (வழக்.) 6. முணங்குதல். (வழக்.)

அநற்றிரள்—சோதிருபி. 'சிவனுமநற்றிரளல்லன்' (கோயிற்பு. பாயிர. உ௩.) [அநல்-அக்கிநி. திரள் - கூட்டம்.]

அநற்று — 1 - 3. அநற்றென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், பெயரெச்சத் தொகையும்.

அநற்றுதல் — அநற்றல், எரித்தல், சுடுதல்.

அநாகதசிவமூர்த்தி – அநாகத சிவமூர்த்தங் கொண்டது. 'அப்பெயர்பெறுஞ்ச மநாகலையாகும் அநாகதசிவமூர்த்தியாஞ் சத்திகலையு மதிலடங்கும்' (சி. சி. உ: எ௫. ஞாநப். உரை.) [ஸ நாஹதஸிவமூர்த்தி.]

அநாக்தசிவன் — பரசிவத்திலிருந்து தோன்றினவரும் சதாசிவத்தைத் தோற்றுவித்தவரும் சகள நிட்கள போகருமான சிவன்; இவர்: வியாபிநிக்குமேல் நாலங்குல அளவிலிருக்கின்ற வியோம என்னுஞ் சமநையின் தாநத்தை வியாபித்தவர். (சி.வி. ஞாந. க. உரை.) இவர் பிரமரந்திரத் தாநத்துக்கப்பால் துவாதசாந்தம்வரையில் வியாப்தியுள்ள சத்தி, வியாபிநி, சமநை, உன்மநையாகிய நான்கு கலைகளுக்குக் காரணேசுவரர். (சி-வி. கிரி. கo. தாற்.) [ஸ நாஹதஸிவ.]

அநாகதநாதம்—பராசத்தி. 'நின்மலதுரியாதீதத்துக்குக்காரணமாகிய அநாகதநாதமுஞ் சிவாநந்தானுபவியாகிய உள்ளமும் அதிதாவஸ்தாவஸ்தானமாகிய பிரமரந்திரத்திலே நின்று' (சி. சி. ச: ௩௪. சிவாக்.)

அநாகதம்—1. அடிக்கப்படாதது. 2. அறியப்படாதது. 3. சம்பாதித்துக்கொள்ளப்படாதது. 4. சொல்லப்படாதது. 5. கோய்ப்படுத்தப்படாதது. 6. வெளுக்கப்படாததும் புதிதுமான சீலை. 7. மானுடசரீரத்திலேயுள்ளனவாகச் சொல்லப்படும் ஆறுதாரங்களிலே நான்காவது; இது: மணிபூரகத்துக்குப் பத்துவிரற்பிரமாணத்துக்குமேலே இருதயகமலத்தில் முக்கோணவடிவினதாய்ப் பன்னிரண்டிதழுடையதாயிருக்கும். (சி. சி. அ: உக. மறை.) 8. வந்தடையாமை. 9. வருங்காலம். 10. அநாகதவெடுப்பு. (பரத. தாள. 44.) [1, 5, 6, 7. அநாஹத: அந் - எதிர்மறை. ஆஹத - அடிக்கப்பட்டது, விளங்கினது; 2, 3, 4, 8, 9. அநாகத: அநு - எதிர்மறை. ஆகத - வந்தது.]

அநாகதவெடுப்பு — தாளம் முன்னும் பாட்டுப் பின்னுமாக வரும் எடுப்புவகை.

அநாகந்துகம்—அநாதியாயுள்ளது, இடையில்வந்ததல்லாதது. (பௌட். பசு. ககசுஇ.) [அநாகந்துக: அநு - எதிர்மறை. ஆகந்துக - இடையிலுள்ளது.]

அநாகாமி — தியானங்க ளைந்தனுள்ளே மூன்றாவது. (மணிமேக. பக். சுரு.) [அநு - எதிர்மறை. ஆகாமிந் - வருவது.]

அநாகாரம் — 1. உணவின்மை. [அநாஹார: அநு - எதிர்மறை. ஆஹார - உணவு.] 2. வடிவமின்மை. [அநாகார: அநு - எதிர்மறை. ஆகார - வடிவு.]

அநாகாலபிருதன் — பஞ்சகாலத்திலே தன்னைக் காத்துக்கொள்ளும்படி ஒருவனுக்கடிமையானவன். (மிருதிசங். கஙசு.) [அநாகாலப்ருத: அநாகால - பஞ்சகாலம். ப்ருத - அடியவன்.]

அநாகாலம்—பஞ்சகாலம். [அநாகால: அந - உணவு. அகால - காலமல்லாதது.]

அநாகுலன் — கவலையற்றவன். 'அறிவனநாகுலன்.' (ஞானா. 10.)

அநாசத்தன் — விருப்பமில்லாதவன். 'சாக்கிரத்திலே யந்த இச்சா ஞானக்கிரியைகளிருக்கையாலும், அநாசத்தனான புருஷனுக்குப் போகமில்லாமலிருக்கையினாலும்' (சி. சி. உ: ருசு. சிவாக்.) [அநு - எதிர்மறை. ஆஸக்த - விருப்புடையவன்.]

அநாசரணம் — ஒழுக்கந்தவறிய நடை. [அநாசரண: அநு - எதிர்மறை. ஆசரணம் - ஒழுக்கம்.]

அநாசரித்தல் — துராசாரமாய் நடத்தல்.

அநாசாரம்—1. உபசாரமின்மை, மரியாதையின்மை. 2. உலகநடைக்கு மாறு. 3. நல்லொழுக்கமின்மை. 'அடியார் செய்தவநாசாரம் பொறுத்தருளி' (தேவார. திருமாற். திருத்தாண்டக. ரு. திருநாவு.) 4. நிருவாணம், சீலையுடாமை. [அநாசார: அநு-எதிர்மறை. ஆசார-ஒழுக்கம், சீலை.]

அநாசாரன் — நல்லொழுக்கமில்லாதவன். 'அசடவநாசாரனை யவலனை யாபாசனை யடியவரோடாள்வது மொருநாளே' (திருப்பு. ருகரு.) [அநு - எதிர்மறை. ஆசார - ஒழுக்கமுடையவன்.]

அநாசிகன்—மூக்கில்லாதவன். [அநாஸிக: அ - எதிர்மறை. நாஸிகா - மூக்கு.]

அநாசிரயம் — சார்பின்மை, பற்றுக்கோடாதலின்மை. [அநாஶ்ரய: அநு - எதிர்மறை. ஆஶ்ரய - சார்பு.]

அநாசிரிதபுவநம் — சாந்தியாதீதகலையிலுள்ள ஒருபுவநம். (சி-லி. கிரி. எரு. உரை.) [அநாஶ்ரிதபுவந.]

அநாசிரிதம் — சார்பில்லாதது, பற்றுக்கோடுபெறாதது. [அநு - எதிர்மறை. ஆஶ்ரித - பற்றுக்கோடுடையது.]

அநாசிரிதர் — அநாசிரிதையைப்பொருந்தினவர், ஒன்றைப் பற்றுக்கோடாகப்பெறாதவர். 'உன்மனைசத்திசகிதரான அநாசிரிதரை' (சி. சி. கஉ: ந. சிவாக்.) [அநு - எதிர்மறை. ஆஶ்ரித - ஒன்றனைப் பற்றுக்கோடாகவுடையவர்.]

அநாசிரிதை—1. சாந்தியாதீதகலையிற் சிவ தத்துவத்திலிருக்கும் பத்துப்புவனங்களு ளொன்று. (சி. சி. அ: கூ. மறை; சி-லி. கிரி. சுலோ. உக - தாற்.) 2. சோடசகலைப் பிரசாதத்திற் பதினொன்காவது கலை; இது: வியாபினிகலைக் கப்பாலுஞ் சமனைகலைக் கிப்பாலும் நடுவிலிருக்கின்ற நான்குகலைகளில் நான்காவதும், அந்தநான்கிலொன்றான அநாகதகலைக்குமே லோரங்குலத்தில் துவாதசாந்தத்துள்ளிருக்கிறதுமானது; அதன் வடிவு வட்டமென்றுஞ் சொல்வர். (பிராசாத கலைத்தியாகம். சி-லி. கிரி. எ. த. நி. போ. ௩எசு.) 3. திரோதாந சத்தி. (த. நி. போ. ௩எசு.) [ஸ நாஸ்ரி தா.]

அநாசிரியர்—ஆசிரியராகாதவர் (உபதேச வ. ௩. அவதாரிகை.) [ஸநு - எதிர்மறை. ஸூவாய - குரு.]

அநாட்யம் — சிவபூசைக் காதாரமான நான்குவிதலிங்கங்களு ளொன்று. அதில் இருபத்துநாலில் ஏழேமுக்காற்பங்கு அடியில் பிரமபாகமென்றும் எட்டுப்பங்கு நடுவில் விட்டுணுபாகமென்றும் எட்டேகாற்பங்கு மேலே உருத்திரபாகமென்றுஞ் சொல்லப்படும். (சி-லி. சரி. கக.) [ஸ நாஷ்ய.]

அநாத்தன்—ஆத்தனல்லாதவன். (சைவப். ௩சு.) [ஸ நாப்த: அநு - எதிர்மறை. ஆப்த - உள்ளதுகூறுவோன்.]

அநாத்துமலட்சணம் — (வேதாந்தம்.) ஆத்துமா அல்லாததன் இலட்சணம்; அவ் விலட்சணங்கள்: அசத்து, சடமென்பன. (வாசுதே. ௩உ.) [ஸ நாத்மா-ஆன்மா அல்லாதது, லக்ஷண.]

அநாத்துமா—ஆத்மா அல்லாத பதார்த்தம். 'அரசன் ஆத்துமதரிசநஞ்செய்யும் பொருட்டு அநாத்மாவான தேகத்தை நேதி செய்தல்' (ஞாநவா. சுரகு. உசு. உரை.) [ஸநு - எதிர்மறை. ஆத்மா - சீவன்.]

அநாத்தை— 1. நிலையின்மை. 2. விருப்பமின்மை. [ஸ நாஸ்தா: அநு - எதிர்மறை. ஆஸ்தா - நிலை, விருப்பம்.]

அநாதபம்—1. குளிர்ச்சி. 2. நிழல். [ஸநு- எதிர்மறை. ஆதப - வெயில்.]

அநாதம்—1. அந்தரித்தது. 2. ஆதரவற்றது. [ஸ நாத: அ - எதிர்மறை. நாத - பாதுகாப்பு.]

அநாதர் —பாதுகாப்போரையில்லாதவர். 'அநாதர்களாயுனை யடையுமவர் தம்பால்' (சேதுபு. கவிசம்பு. சூஎ.) [ஸ ந் - எதிர் மறை. நாத - பாதுகாப்போன்.]

அநாதரம்–1. அவமதித்தல். (சைவப் சூஉ.) 2. அன்பின்மை. 3. கவநமின்மை. [ஸ நாதர: அநு - எதிர்மறை. ஆதர - விருப்பு.]

அநாதரவு—அலட்சியம், உதவியின்மை. [அநாதரம் என்பதன் சிதைவு.]

அநாதரித்தல் — அலட்சியம்பண்ணுதல், பற்றிக்கொள்ளாது விடுதல். 'உள்ளபடிமுடியுமென்று நான் சொல்லவும் அதையநாதரித்து நீ வேறென்றைப் பற்றிக்கொண்டு' (தாயு. நினைவோ. சூ. உரை.) [மூ. ஸ நாதர.]

அநாதன்—1. தனக்குமே லொருதலைவனையில்லாதவன். 'ஞாலம் விழுங்கு மநாதனை' (நாலாயிர. இயற்பா. திருவிருத். எகூ.) 2. பாதுகாப்போரில்லாதவன், திக்கில்லாதவன். 'அநாதர்களா யுனையடையுமவர்' (சேது. கவிசம்பு. 67.) [ஸ நாத: அ - எதிர்மறை. நாத - தலைவன், பாதுகாப்பு.]

அநாதா-பிரமரந்திரத்திலிருக்கும்நாதத்தி லுண்டான கலைகளிலொன்று. (சி-லி. கிரி. உஉ. தாற்.)

அநாதி—1. உமாதேவி. (கூர்மபு. திருக்கல். உ௩.) 2. கடவுள். 3. சிவன். 4. தனக்கு மேலாக ஒரு சிரேட்டமில்லாதவன். 'ஆதி யநாதியுமாகி, யெனக் கானந்தமா யறிவாய் நின்றிலங்கும்' (தாயு. ஆநந்தக். க.) 5. தொடங்காதுள்ள நித்தியகாலத்திலிருக்கிறவன், ஆதியற்றவன். (பகவற்கீ. க௦: ௩.) 6. தொடங்காதுள்ள நித்தியகாலம். 'உலகாதியாகமன்னியதென்பர்' (சி. சி. க: உ.) 7. விட்டுணு. 8. தொடக்கமில்லாதது. 9. தொடக்கந்தெரியாதது. 10. திக்கற்றவன். 11. விந்து. (வைத்தியபரி.) [ஸ நாதி: அநு- எதிர்மறை. ஆதி - முதல், காரணம்.]

அநாதிகாம்பு—நெடுநாட் பாழாய்க்கிடந்த நிலம். [அநாதி - அறியப்பட்டகாலத்துக்கு முந்தியகாலம். காம்பு - பாழ்நிலம்.]

அநாதிகாரணம்—பிரபஞ்சத்தினது முதற்காரணமாகிய மாயை. 'அநாதிகாரணமாகிய மாயையினீண்டுக்கூறுதுஆதிகாரணமாகிய செவிப்புலனு மனுத்திரளை யெழுத்திற்கு முதற்காரணமென்றார்' (நன். எழுத். ௩. சங்கா.) [அநாதிகாரண.]

அநாதிசடிலன் — சிவன். அநாதியாய்ச் சடையுடையவர். [அநாதி; ஜடில.]

அநாதிசித்தபதி — அநாதியாய்ச்சித்தித்த பதித்துவமுடையவர். [அநாதிஸித்தபதி.]

அநாதிசித்தன்—1. அருகக்கடவுள். (சிவஞானபா. ௧௦.) 2. அநாதியே சித்தனுயிருப்பவன். 'சீவன் அநாதிசித்தனும், முத்தனும், பெத்தனுமென மூவகைப்படும்' (சி. போ. பா. அவை. பக். 11.) [அநாதி - இயல்பு. ஸித்த-சித்தியுடையவன்.]

அநாதிசைவம்—பதினறுவகைச்சைவத்துளொன்று; இது; பதி, பசு, பாசமென்னும் மூன்றும் அநாதிநித்தமாய் வியாத்தமாயிருக்கின்றன என்றும், பதிப்பொருளாகிய சிவனை முக்குணவிகற்பமில்லாதவராய்க் கண்டு விபூதி, உருத்திராக்கம், பஞ்சாட்சரம், குருலிங்கவேடம் பொருளாய்க்கொண்டு சிவபூசைசெய்து பாசம் நீங்கி யான்மாவானது சிவனுடன் சேர்ந்து அவரைக் கும்பிட்டிருத்தல் பாமுத்தியென்றுஞ் சொல்லும். (த. நி. போ. ௨௫௩.) [அநாதிசைவ.]

அநாதிசைவர்—1. சதாசிவமூர்த்தி.'அரிய சதாசிவனென்போனநாதிசைவன்'(ஆசௌச தீ. ௨௦.) 2. பதினறுசைவத்துளொன்றாகிய அநாதிசைவத்தைத்தழுவினவன். [அநாதிசைவ.]

அநாதித்துவம்—தொடக்கமில்லாத நித்தியத்தன்மை. (வாசுதே. ௧௨௪.) 'இதனாலே கன்மமநாதித்துவமும் ஆதித்துவமுங் கூறவே கன்மரூபங் கூறியதாயிற்று.' (சி.சி. ௧௧: ௩. மறை.) [அநாதி - ஆதியல்லாதது. த்வம் -தன்மை.]

அநாதிதரிசு — நீண்டநாள் சாகுபடியில்லாத நிலம்.

அநாதிநாதர் — நவநாதசித்தருள் ஒருவர். (சது.)

அநாதிநித்தம் — என்றும் நித்தியமாயுள்ளது. 'மூலகன்மமொன்று அநாதிநித்தமாயுண்டு' (சி. போ. சிற். 2. 2. பக். 65.)

அநாதிநின்மலன்—அநாதியாகவே மலரகிதமாயிருக்கிறவன். (சி. சி. ரு: ௬. சிவாக்.) [அநாதி - ஆதியின்மை. நிர்மல - மலமில்லாதவன்.]

அநாதிபந்தம் — அநாதியாயுள்ளபந்தம். 'அநாதி பந்தமோ டநுபந்தமாவது மலமே' (தணிகை. நந்தி. ௬௬.) [அநாதி - ஆதியல்லாதது. பந்த - கட்டு.]

அநாதிபெத்தசித்து — அநாதியே ஆணவமலத்திலே கட்டுண்டுகிடந்த ஆன்மா. (சி. சி. க: க. சிவஞா.) [அநாதி - இயல்பு. பத்த - கட்டுப்பட்ட. சித் -அறிவுடைப்பொருள்.]

அநாதிபெத்தன் — அநாதியே மலத்திற் கட்டுண்டவன். (சிவஞானபா.௧௦.) [அநாதி- இயல்பு. பத்த - கட்டுப்பட்டவன்.]

அநாதிபோதம் — இயல்பாகவே ஞானமுடைமை. இக்குணம் மலரகிதமான ஆன்மாவுக்குரியதாதலால் இதனை அநாதிமுத்தத் தன்மையில் அடக்குவர். 'சாற்றரிய வநாதிபோத மடங்கலருஞ் சுதந்திருதை' (கூர்மபு. பிரபஞ்ச. ௬.) [அநாதி-இயல்பு. போத - அறிவு]

அநாதிபோதன் — நித்தியஞானமுடையவனாகிய கடவுள். 'அடைவுதரின் முடிவின்கணநாதிபோதன்-சொன்னனும்' (சி. சி. பர. சௌத். மத. மறு. க.) [அநாதி - இயல்பு. போத - அறிவன்.]

அநாதிமலமுத்தர்—இயல்பாகவே பாசங்களின் நீங்கினவர். 'முப்பொழுது மநாதிமல முத்தனையர்ச்சித்து' (அருணகிரிப்பு. பாயிர. ௩௨.)[அநாதி - தொடக்கமில்லாத நித்தியகாலம். மலமுக்த-மலத்தால் விடப்பட்டவர்.]

அநாதிமான் — அநாதியுள்ளதாயிருப்பது. (பௌட்.பசு.௧௩௧.)[அநாதிமாந்: அநாதி- ஆதியின்மை. மாந் - ஒருவிகுதி.]

அநாதிமுத்தசித்து—இயல்பாகவே பாசங்களினீங்கினவராகிய கடவுள். 'அநாதிமுத்தசித்துருமன்னிநின்றே' (சி. சி. க:க) [ஸநாதி முக்த - இயல்பாகப் பாசங்களினீங்கிய. சித் - அறிவுடைப்பொருள்.]

அநாதிமுத்தசிவன் — அநாதியே மலபந்தமின்றியிருக்குஞ் சிவன். 'பதிபதார்த்தத்துளநாதிமுத்தசிவனுக்கு' (சி. சி. ரு. ஞானப்.) [ஸநாதிமுக்தஶிவ:]

அநாதிமுத்தத்துவம் — இறைவன்குணங்களுளொன்று; அஃது: இயல்பாகவே பாசங்களின் நீங்கியிருக்குந்தன்மை. [ஸநாதிமுக்தத்வம்: அநாதிமுக்த - அநாதியே மலத்தால் விடப்பட்டிருக்கிற. த்வம் - தன்மை.]

அநாதிமுத்தன்—அநாதியே மலத்தாற் பந்திக்கப்படாத கடவுள். 'அநாதிமுத்தனுதியேகலந்தருளமலன்' (தணிகை. நந்தியுப. கூஙு.) [ஸநாதிமுக்த: அநாதி - தொடக்கமில்லாத நித்தியகாலம். முக்த - விடப்பட்டவன்.]

அநாதியமலன்—அநாதியே மலமில்லாத நிட்களசிவன் 'அநாதியமலன்றருநூல்' (சி. சி. அ: கரு.) [ஸநாதி; அமல - மலமில்லாதவன்.]

அநாதியன் — அநாதியாயுள்ள கடவுள். 'அநாதியனை மழுமான் கரத்தனை மால்விடையானை' (பட்டணத்துப். பொது. ருஙு.) [ஸநாதி; அன் - விகுதி.]

அநாதியுருத்திரர் — ஈசுவரதத்துவத்திலிருக்கிற பதினெட்டுருத்திரருள் ஒருவர்; இவருக்கு விசயாகமம் உபதேசிக்கப்பட்டது. (சி-வி. சரி. க. உரை.)

அநாதிரேக்கியம் — மிகுதியின்மை. [அந்; ஆதிரேக்யம் - மிகுதி.]

அநாதீநவம் — ஆதீநவமின்மை, சுத்தம். [அநாதீநவம்: அந் - எதிர்மறை. ஆதீநவம் - மாசு.]

அநாதுரம்—1. அவாவின்மை. 2. சிரமமடையாமை. 3. தைரியம். 4. நோயின்மை. [ஸநாதுர-அநு-எதிர்மறை. ஆதுர-அவா, நோய்.]

அநாதை — 1. ஒரு சத்தி: அது ஞானசொரூபமாய் ஞானசத்தியாயிருக்கும். (த. நி. போ. ஙஎசு.) 2. சாந்தியாதீதகலையிற் சிவதத்துவத்திலிருக்கும் பத்துப் புவனங்களுளொன்று. (சி. சி. அ: சு. மறை.) 3. சோடசகலைப்பிராசாதத்திற் பதின்மூன்றாவதுகலை; இது: வியாபிநிகலைக் கப்பாலும் சமனைகலைக் கிப்பாலும் நடுவிலிருக்கின்ற நான்குகலைகளில் மூன்றாவதும் அந்த நான்கிலொன்றான அநந்தைக்குமே லோரங்குலத்திற் றுவாதசாந்தத்து ளிருக்கிறதுமானது. (சி-வி. கிரி. எ.)

அநாந்தம்—இறுதியல்லாதது. [அந்; ஆந்த-இறுதியுள்ளது.]

அநாமந்துப்புட்டோடம் — ஒருவகைப் பட்சிதோஷம்; அது: நெஞ்சிலுமுண்ணாக்கிலும் தடித்தலான வீக்கம், பால்தங்காமல் கக்குதல், தேகத்தில் நோவு, கால் கை நாசியென்னும் இவைகளில் எரிச்சல் ஆகிய இக்குணங்களையுண்டாக்கும். (சீவாட். உஙo.)

அநாமயம் — நோயின்மை. 'அசடமநாமயம்' (கைவல். சந்தேக. கஙஎ;) [ஸநாமய: அநு - எதிர்மறை. ஆமய - நோய்.]

அநாமதேயன்—அப்பிரசித்தன்.

அநாமயன்—1. கடவுள். 2. நோயில்லாதவன். 'நாதனநாமயன்' (ஞானு. 48.) [ஸநாமய: அநு - எதிர்மறை. ஆமய - நோயுடையவன்.]

அநாமிகை — ஆழிவிரல். 'பெருவிரலையநாமிகையோ டியையக்கூட்டி' (கூர்மபு. சுத்தாசம. கo.) [ஸநாமிகா.]

அநாமை — அநாமிகை. [ஸநாமா: அ - எதிர்மறை. நாமா - பெயருடையது.]

அநாயகம் — 1. அரசாட்சியின்மை. 2. முதன்மையின்மை. [ஸ-எதிர்மறை. நாயகம் - முதன்மை.]

அநாயதம்–1. தடையினில்லாதது. 2. நீளமில்லாதது. 3. பிரிவின்றிநெருங்கியதொடராயிருப்பது. [ஸநாயத: அந் - எதிர்மறை. ஆயத-தடையுள்ளது, நீளமானது.]

அநாயம் — 1. அநியாயம், முறைகேடு. 'அநாயமே யுகுத்தேனைய' (இராமா. கும்ப. கசo.) 2. வீண். (தேவா. 859. 7.) [அ - எதிர்மறை. ந்யாய - நீதி.]

அநாயாசகவாதம்—ஒருவகைவாதம்; அது: வேகமான ஓட்டம், மலசலமுதலிய பதினன்கு வேகத்தை யடக்கிவிடுதல், சீதளவஸ்து, க்ஷயபோஜநம் இவைகளினுற்பிறந்து சகல தாதுக்களிலும் வியாபித்துச் சரீரத்தில் மதத்தல், குத்தல், கனத்தல் முதலிய நாநாவிதவருத்தங்களை யுண்டாக்கும். (சீவரட். கசஅ.) [அ ந - பிராணன். ஆயாஸ - வருத்தம்.]

அநாயாசம்—1. அலைவில்லாதது. 'அழியாதது மநாயாசமானதுமாகிய தேவரீரது வாழ்வை விரும்புவோன்' (கந்தபு. சயந்த. எசு. உரை.) 2. இலகு. 3. சோம்பின்மை. [அநாயாஸ: அந் - எதிர்மறை. ஆயாஸ - வருத்தம், இளைப்பு.]

அநாயு—தக்கன்மக்களிலொருத்தி; இவள் விருத்திராசுரன் முதலிய நாற்பதுபிள்ளைகளுக்கும் தாய். (வி-ணி. உடுடு. பிதா.)

அநார்ச்சவம் — 1. மநக்கோட்டம், மநநேர்மையின்மை. 2. வளைவு. 3. வியாதி. [அநார்ஜவ: அந் - எதிர்மறை. ஆர்ஜவ - நேர்மை.]

அநாரதம்—1. இடையறுமை, எப்போதும். (உரி. நி.) 2. ஒய்வின்மை. [அநாரத: அந் - எதிர்மறை. ஆரத - ஒய்வு.]

அநாரம்பம்—தொடக்கமின்மை. [அநாரம்ப: அந் - எதிர்மறை. ஆரம்ப - தொடக்கம்.]

அநாரியதித்தம் — நிலவேம்பு. (மலை.) [அநார்யதிக்த: அநார்ய - இழிந்த. திக்த - கசப்பு.]

அநாரியர்—1. ஆரியரல்லாதவர். 2. மிலேச்சர். (சூ. நிகண். உ. நக.) [அநார்ய: அந் - எதிர்மறை. ஆர்ய - மதிக்கத்தக்கவர்.]

அநாரியன்—ஆரியனல்லாதவன். (சூடா.)

அநாரோக்கியம்—நோய். [அநாரோக்ய: அந் - எதிர்மறை. ஆரோக்ய - நோயின்மை, சுகம்.]

அநாவசியகம்—அநாவசியம்.

அநாவசியம்—அவசியமல்லாதது.

அநாவிதம் — வீணைவகையிலொன்று. (பாரத. ஒழிபி. 15.)

அநாவிருட்டி — மழையின்மை. 'இன்று தொட் டநாவி ருட்டி யெய்துநா ளுண் டிவற்றுள் - வென்றிவெங் கதிரோன் காய வெந்திடுந் தரணி யெல்லாம்' (மச்சபு. பிரமாண்ட. உ.) [அநாவ்ருஷ்டி: அந் - எதிர்மறை. ஆவ்ருஷ்டி - மழை.]

அநாவிருத்தி—1. திரும்பிவாராமை. 2. மறுதரம் பிறவாமை. (பகவற்கீ. அ. உசு.) 3. பாசமுத்தி. [அநாவ்ருத்தி: அந் - எதிர்மறை. ஆவ்ருத்தி - திரும்பிவருதல்.]

அநாவிலம் — 1. கலங்கலில்லாதது. 2. தெளிந்தது. [அநாவில: அந் - எதிர்மறை. ஆவில - கலங்கல்.]

அநாவிலன்—சுக்கிரன். (அக. நி.) [அந் - எதிர்மறை. ஆவிலம் - அழுக்கு, கருமைநிறம்.]

அநான்மா — 1. ஆன்மா அல்லாதது. 2. ஆன்மா அல்லாத தேகாதிப் பிரபஞ்சம். 3. தேகம். (சி. சி. சு: டு. ஞாநப்.) [அந் - எதிர்மறை. ஆத்மா - சீவன்.]

அநி—1. நெற்பொரி. (இராசவைத்.) 2. பத்தாயப்பெட்டி. (வழக்கு)

அநிகம் — 1. சங்கம் மூன்றுகொண்ட சேனை. 2. சேனை. 'அநிகமோடலும்' (சேதுபு. இராமதீ. ௩டு.) [அநீக.] 3. சிவிகை. (சூடா.)

அநிகர் — சேனையானோர். 'கவியநிகர்க் கெதிர்' (சேதுபு. இராமனரு. கடுஎ.)

அநிகேதன் — நிலையான வாசஸ்தாநமில்லாதவன். (பகவற்கீ. கஉ: கக.) [அ - எதிர்மறை. நிகேத - வீடு.]

அநிச்சகன் — விருப்பில்லாதவன். [அநிச்சக: அந் - எதிர்மறை. இச்சக - விருப்புள்ளவன்.]

அநிச்சாப்பிராரத்தம்—ஒருவருக்குப் பிரியமில்லாதிருந்தும் பலாற்காரத்தினுல் அவரைப் பயனநுபவிக்கச்செய்யும் முன்னைவினை. 'இச்சையுட னநிச்சைபிற ரிச்சையெனு மிவற்று லியம்பலுறு பிராரத்த மூன்றுவகைப் படுமா - லச்சுரர்க ளானும் விலக் குதற்கரிய வாகு மபத்தியஞ்செய் திட றனக்கே கேடெனவிங் கறிந்தும் - வைச்சுமது புரிவித்த லிச்சைசெய்யே னெனினு மன்னவர்தம் மாணைபோற் செய்வித்த லநிச்சை - யிச்சையநிச் சைகளின்றி யிருந்து மயலோரா லின்பதுன்ப நுகர்வித்தல் பிறரிச்சை வினையாம்.' (வேதா. சூ. கஎரு - உரை.) [அநிச்சா - இச்சையின்மை. ப்ராரப்த - முன்னைவினை.]

அநிச்சிதம்—நிச்சயிக்கப்படாதது. (தர்க்கபா. உரு.) [அ - எதிர்மறை. நிச்சித - நிச்சயிக்கப்பட்டது.]

அநிச்சை — இச்சையின்மை. [அநி - எதிர்மறை. இச்சா - விருப்பு.]

அநிசம் — 1. ஓயாமல், இடைவிடாமல். 2. நித்தியம். 'சிவத்துவமநிசந்-தோயநல் கலாற் சதாசிவ மெனப்பெயர் துன்னும்' (வேதாரணியபு. வேதநதி. ருஅ.)

அநிட்டநிவிர்த்தி—வேண்டாதன ஒழிதல். 'ஆன்மாவைக் கஞ்சுகம்போல ஆவரித் தேக தேசவிருத்திபண்ணிக்கொண்டு திரியும் பும்ஸ்த்வமலம்போகையால் ஜநநமரணமுமதனாலுண்டான பிராந்தியும் விகாரமும் இல்லையாம்; இது: அநிட்டநிவிர்த்தி' (சி. சி. க: உங. சிவாக்.) [அநிஷ்ட - பிரியமில்லாதது. நிவ்ருத்தி - ஒழிதல்.]

அநிட்டப்பிரசங்கம் — தர்க்கபாஷையிற் சொல்லப்படும் எட்டாம் பதார்த்தமாகிய தர்க்கம்; அது: சித்தமான வியாத்தியையுடைய தருமங்களுள், வியாப்பிய அங்கிகாரத்தால் வியாபகத்தின் வரவு. 'இம்மலை தீயுடையதோ இல்லதோ என்னும் ஐயத்தின்பின் ஒருவன் தீயில்லது என்று கருதின், அப்போ தவனைக்குறித்துத் தீயில்லதாயின், அதனால் புகையில்லதுமாகவேண்டுமென்று புகையில்லாமையின்வரவு பண்ணப்படுதல்' (தர்க்கபா. எங.) [அநிஷ்ட - இட்டமில்லாத. ப்ரஸங்க - வரவு, சாத்தியம்.]

அநிட்டம்—1. இட்டமல்லாதது, விரும்பப்படாதது. 'அநிட்டநின்றகற்றி'(நெடுங்கழில். ச. சிவப்பிரகாசர். பிரபந்த.) 2. இடையூறு, இடுக்கண். 3.உவப்பாய்க்கொள்ளப்படாதது. [அநிஷ்ட.]

அநிட்டை—நிலையின்மை. [அநிஷ்டா: அ - எதிர்மறை. நிஷ்டா - நிலை.]

அநித்தம்—1. இடையிடையே நிகழ்வது, நிலைப்படவழங்காதது. 'நித்த மநித்த மலுக் குலுக் காந்தொகை நின்றநிலை - மெய்த்த கிடக்கை முறைத்தொகைப் பாந்தம் விபரியமாம் - பொய்த்தொகை யாறும்' (பி. வி. உஎ.) 2. நிச்சயமல்லாதது, சந்தேகம். 3. நித்தியகாலத்துக்கில்லாமை. 'தருமாத்தி காயமழிவித் தநித்தமது பண்ணிடும்' (சி. சி. பர. நிகண். மதம். எ.) 4. நித்தியமல்லாத காலம். 5. அநித்தியம். (சி. சி. பர. நிகண். 7.) [அநித்ய: 'நித்ய' என்பதில் யகரங் கெட்டுவந்தது.]

அநித்யசமம்—தர்க்கசாஸ்திர விதிப்படியன்றித் திருட்டாந்தத்தைக்கொண்டு நியாயம் பேசுதல். [அநித்யஸம: அநித்ய - நித்யமல்லாதது. ஸம - போல்வது. எப்போதும் பலங்கொள்ளாத நியாயமென்றபடி.]

அநித்தியசமாசம்—நித்தியசமாசமல்லாத சமாசம்; வேறுருபமாக (தொகாநிலையாக)ப் புணர்வதும் விலக்கப்படாத ஒருவகைப் புணர்மொழி. அநித்தியசமாசத்திற் குதாரணம்: எண்டிசை; அது எட்டு, திசை யென்னுஞ் சொற்கள் புணர்ந்து சமாசமாகுமிடத்து எண்டிசையென வருதலன்றி யெட்டுத்திசையென வரலுமாம். ஆதலால் "எண்டிசை" யென்பதநித்தியசமாசம். (பி. வி. உஎ- ஆங் கவியுரை. [அநித்யஸமாஸ - எப்போழ்தும் வரவேண்டியவகையிதுவே யென ஒருநியமமில்லாததால் வந்தபெயர்.]

அநித்யத்துவப்பிரசங்கம் — அநித்தியத் துவஞ்சாதித்தல். "அப்படியாகில் தன்ம

தன்மிகளுக்கு வியாபகபேதமாதலாற் றன்மிக்கு மநித்தியத்துவப் பிரசங்கம்வரும்" (சி.சி.எ:உ.ஞாநப்) [ஸ-நித்ய த்வம் - நித்தியத்தன்மையின்மை. ப்ரஸங்க - சாதித்தல்.]

அநித்தியத்துவம்—நித்தியத்துவமல்லாமை. 'அநித்தியத்துவத்தையறையாநிற்கும்' (ஞுத. எக்கி. பூ. கஅ: ௪.) [ஸ-நித்யத்வம் - அழியாவியல்பு.]

அநித்தியதை—அநித்தியத்துவம். (சி. சி. உ: உ. சிவாக்.) [ஸ-நித்யதா.]

அநித்தியம்—1. நிலையாமை. 2. நிலையற்றது. 'இந்த வநித்திய வாழ்வு வேண்டேன்' (காஞ்சிப். திருநெறிக். 18.)

அநித்தியலிங்கம் — வடமொழியில் விசேடணமாகிவரும் பதம் ஒருலிங்கத்தில்நின்றது விசேடியமாய் வரும் பதத்துக்கு ஒத்ததாக மற்றொன்றாகவரும் லிங்கம். 'வடநூலார் கர்மதாரயனென்னும் பண்புத்தொகைக்குப் பண்பு வேறொருலிங்கமாகநின்றாலும் பண்புடைப்பொருள் எந்த லிங்கமாம் அந்த லிங்கமாக்கிப் புணர்த்துவாராதலின், அடையாக நின்ற குணலிங்கத்தை அநித்தியலிங்கமென்பர்' (பி. வி. சகூ. உரை.) [ஸ-நித்ய - நித்தியமின்மை, ஒருபடித்தாய் வராமை. லிங்க - ஆண், பெண், அலி என்னும் பகுப்பு.]

அநித்திரைச்சுரம்—அறுபத்துநான்குவகைச் சுரரோகங்களு ளொன்று; அது: நித்திரையின்மை, தேக எரிச்சல், தாகம், மயக்கம், தலைதிருப்பல், நாவும் வாயுமுலரல், மேற்சுவாசம், சீதளமதிகரித்தல், மிகு கூச்சல், அடித்தொடைச்சதையும் முழங்காற்சதையும்நோவு, ஈனத்தொனியானவார்த்தை, சதா இருமல், மூர்ச்சையென்னும்இக்குணங்களை யுண்டாக்கும். (சிவரட். ௪அ.)

அநிதம்— அளவுபடாமை. 'அநிதகோடியணிமுடிமாலையும்' (பெரியபு. திருமலை. ரு.)

அநிதாநம்—1. ஆதாரமின்மை. 2. ஒழியாமை, ஓயாமை. 3. காரணமின்மை. [ஸ-நிதாந: அ-எதிர்மறை. நிதாந - காரணம், ஓய்வு.]

அநிந்திதை — 1. உமாதேவியாருடைய தோழிப்பெண்களு ளொருத்தி. (பெரியபு. திருமலை. உ௪.) 2. நிந்திக்கப்படாதவள். [ஸ-. எதிர்மறை. நிந்திதா - நிந்திக்கப்பட்டவள்.]

அநிமிடம்— 1. இமை வெட்டாமை. 2. மச்சம். [ஸ - எதிர்மறை. நிமிஷ - இமைத்தல்.]

அநிமிடன் — 1. கண்ணிமைக்காதிருக்கிறவன். 2. தேவன். 3. விட்டுணு.

அநிமீலநம்—இறவாமை. [ஸ - எதிர்மறை. நிமீலந - இறத்தல்.]

அநிமேடம்—1. பிசாசு. 2. மீன். [ஸநிமேஷ: அ - எதிர்மறை. நிமேஷ-இமைத்தலுடையது.]

அநிமேடன்—1. இமையாது கண்ணூன்றிப் பார்ப்போன். 2. கடவுள். [ஸநிமேஷ: அ - எதிர்மறை. நிமேஷ - இமைத்துப் பார்ப்போன்.]

அநியதகன்மம்— ஈட்டியமுறையில்வராமற் பக்குவம்வந்துழிப் புசிக்கவருங் கன்மம்; அது: அசுவமேதமும் பிரமகத்தியும் ஒருகாலத்திற்செய்யப்பட்டுப் பக்குவம்வந்துழியொருங்கே இரண்டும் புசிக்கப்படாமையிற் கருத்தா இன்னகாலத்தில் இதுவென்று உறுத்திப் புசிப்பிக்குமதுபோல்வது. (சிவப்பிர. உ: கரு. உரை. சிதம்பர.) [ஸநியத - நியமமல்லாத. கர்ம - வினை.]

அநியதகாலம் — நியமமல்லாதகாலம். (பௌட். பசு. ௩க.) [ஸநியத - நியமமல்லாத. கால - சமயம்.]

அநியதகாலோபபோக்கியம்-இன்னவேளை புசிக்கப்படுமென் றறியப்படாத கன்மம். (பௌட். பசு. ௩க.) [ஸநியதகால: உபபோக்ய - புசிக்கப்படுவது.]

அநியதம்— 1. கிரமத்தில்வாராதது. 2. நியதமில்லாதது. [ஸ-. எதிர்மறை. நியத - நியமமாய்வருவது.]

அநியம்—அந்நியம். 'தனக்குடலநியமுணர்தரின்' (வைரா. தீப. கசு.) [ஸந்ய.]

அநியமச்சிலேடை— ஓரலங்காரம்; அது: சிலேடித்தபொருள் நியமஞ்செய்யப்பட்டத னோடு பிறிதுமொன்றைச் சேர்த்தல். 'சிறை படுவ புட்குலமே தீம்புனலு மன்ன' (தண்டி. எசு.) [ஸ அநியம - நியமமின்மை. ஶ்லேஷா - பலபொருட்சொற்றொடர்.]

அநியமம் — 1. அநாசாரம், அதர்மம். 'அநியமபரியாயமான வதன்மத்துக்கும்' (சி. சி. உ: சுஙு. சிவாக்.) 2. சந்தேகம், நிச்சய மின்மை. 3. மரியாதைத்தப்பான நடை. 4. விதிகற்பிக்கப்படாதது. [ஸ அநியம: அ - எதிர்மறை. நியம - ஒழுக்கநிலை.]

அநியமவுவமை — உவமையலங்காரத்தி னொருவகை; அது: இன்னதற் கின்னதே யுவமையாகுமென்று துணிந்து நியமித்த உவமையோடு பிறிதும் ஒருவலமையைச் சேர்த் தல். 'மதுவார் கவிரேநின் வாய்போல்வ தன்றி - யதுபோல்வ துண்டெனினு மாம்' (தண்டி. கூ௦.) [ஸ அநியம - நியமமின்மை. உபமா - ஓரலங்காரம்.]

அநியாயசம் — அநியாயத்தாலுண்டாயிருப் பது. (பௌட். பும். ருஅ.) [ஸ அந்யாயஜம்: அந்யாய - அநீதி. ஜம் - பிறந்தது.]

அநியாயம் — கொடுமை, நியாயமின்மை. 'அநியாயமாயெமையடக்கிக் குறுக்கே யடர்ந் தரசுபண்ணி' (தாயு. சுகவா. கஉ.) [ஸ அந்யாய: அ - எதிர்மறை. ந்யாய - நீதி.]

அநிர்தம் — அநிருதம். 'அநிர்தசடதுக் கம்' (வி. ணி.) [ஸ அந் - எதிர்மறை. ருத - மெய்.]

அநிர்வசநம் — வசநித்தற்கியலாத இல் பொருள். 'அநிர்வசநத்திநுலகந்தோன்றும் என்னு மாயாவாதத்தை' (சி. சி. க: உஎ. சிவஞா.) [ஸ - எதிர்மறை. நிர்வசந - பேச்சு.]

அநிர்வசநீயம்— வசநிக்கப்படக்கூடாதது. [ஸ அநிர்வசநீய: அ - எதிர்மறை. நிர்வச நீய - இலக்கணம் முதலியவைகளாற் சொல்லத்தக்கது.]

அநிர்வாகம்—1. இயைபின்மை. 2. உண வுக்கு வழியின்மை. 3. ஒவ்வாமை. 4. பூரண மின்மை. [ஸ அநிர்வாஹ: அ - எதிர்மறை. நிர்வாஹ - இயைபு.]

அநிர்வாச்சியம்—அநிர்வசநீயம். (வேதா. சூ. 58.)

அநிராகர்த்திருசம்பிரதாநம்— கேளாதேற்ற லில் 'முக்கண்மூர்த்திக்குப் பூவிட்டான்' என்பதிற்போல்வரும் நான்காம் வேற்றுமை. (பி. வி. கரு. உரை.) [இதனை வீரசோழிய காரர் கிடப்புக்கோளி என்பர். (வீரசோ. உபகாரக. ௩௦.) ஸ - எதிர்மறை. நிரா கர்த்ரு - தள்ளுதல்.]

அநிராகருத்தா — அநிராகர்த்திருசம்பிர தாநம். 'பெடைமயி லேயநி ராகருத் தாவும் பிரேரகமுங் - கொடையெதிர் கூற்றநு மந் தாவுமாமென்பர்கொள்பவனே' (பி.வி.கரு.)

அநிருத்தபதம்—1. ஆகாயம். 2. தடை யற்ற வழி. [ஸ அநிருத்தபத: அ - எதிர் மறை. நிருத்த - தடைப்பட்டது.]

அநிருத்தபாமிநி — அநிருத்தன்மனைவி யாகிய உஷை. [ஸ அநிருத்தபாமிநீ: பாமிநீ - சௌந்தரியமான பெண்.]

அநிருத்தம் — 1. தடையில்லது. [ஸ அநி ருத்த: அ - எதிர்மறை. நிருத்த-தடைப் பட்டது.] 2. நன்கு விளக்கப்படாதது. [ஸ அநிருக்த: அ - எதிர்மறை. நிருக்த - சொல்லப்பட்டது.]

அநிருத்தன்—1. ஒற்றன். 2. தன்னிட்ட மாய்த் திரிவோன். 3. பிரத்தியும்நனுடைய ஒருமகன். 'கண்ணன்சேய்பெறும் பொங் கெழிலநிருத்தன்' (காஞ்சிப். வாணீ. உரு.) 4. திருமாலின்வியூகமூர்த்திவகையிலொன்று. (அஷ்டாதச. தத்வத். 3. 48.) [ஸ அநிருத்த: அ - எதிர்மறை. நிருத்த - தடுக்கப்பட் டோன்.]

அநிருதம்—உள்ளதல்லாதது, பொய். [ஸ அந்ருத: அந் -எதிர்மறை. ருத-உண்மை.]

அநிருதவாதி—பொய்பேசுவோன். [ஸ அந்ருதவாதீ: அந்ருதம் - பொய். வாதீ - சொல் வோன்.]

அநிருமலம்—அழுக்கு. [ஸ அநிர்மலம்: அ - எதிர்மறை. நிர்மலம் - சுத்தம்.]

அநிருவசநம் — சொல்லொணாதது. (சிவஞானபா. கஎ) [ஸஂ.அநிர்வசநம்]

அநிலச்சூலை — வாதசூலை. 'கொடுவிடவநிலச் சூலைக் குலம்' (தைல. தைலவ. கக.) [ஸஂ.அநில; ஶூலா.]

அநிலசகன் — நெருப்பு. [ஸஂ.அநிலஸக; அநில - காற்று. ஸக - நண்பன்.]

அநிலநாள்—1. சோதிநாள். (திவா.) 2. விசாகநாள். [அநில - காற்று. நாள் - நட்சத்திரம்.]

அநிலம்—1. காற்று. 'பரிசதன்மாத்திரையடையுமநிலம்' (கூர்மபு. பிரகிரு. கஉ.) 2. பிறப்பு. 3. வாதரோகம். 'அநிலக்குழுவைபிசாகி முன்னெதிர் மறமாம்' (தைல. தைலவ. கஈ.) [ஸஂ.அந - பிராணன். இல - ஒரு வ-வி.]

அநிலன் — 1. அட்டவசுக்களிலொருவன். (பாரத. குருகு. கூஈ. அரும்பத.) 2. ஓர் இராக்கதன். 3. பிராணவாயு. 'ஆனதநுவதனிலுறு மநிலனையுமியக்கி' (சிவப்பிர. உ: உடு.) 4. வாயுதேவன். 'அநிலன் மன்னு திக்கினில்' (வேதாரணியபு. சபை. கச.)

அநிலாசநம்—உபவாசம், காற்றையுண்ணுதல். 'நிலாதவநிலாசந நியாயபரிபாலவர்' (திருப்பு. கஈ0.) [ஸஂ.அநில-காற்று. அஶநம்-உணவு.]

அநிலாத்துமசன்—1.அனுமான். 2. வீமன். [ஸஂ.அநிலாத்மஜ: அநில - காற்று. ஆத்மஜ - புத்திரன்.]

அநிலாமயம்—வாதநோய். (வைத்தியபரி). [அநில - வாயு. ஆமய - நோய்.]

அநிலி — சோதிநாள். [அநிலீ: அநில - காற்று. ஈ - ஒருவிகுதி.]

அநிவாரிதம்—தடுக்கப்படாதது. 'சிவனைப்போலே அநிவாரித சிற்சத்திப்பிரகாசசுவரூபனாகவும்' (சி. சி. எ: உ. சிவாக்.) [ஸஂ.அ-எதிர்மறை. நிவாரித - தடுக்கப்பட்டது.]

அநீகம்—1. கவசமின்மை. [அநீஹ.] 2. சேனை. 'அலகிலானையநீகமொடெய்தினன்' (திருவிளை. உக்கிர. வேல்வளை. கஎ.) 3. சேனைத்தொகையிலொன்று. (திவாகர.) 4. போர். [2, 3, 4- அநீக.]

அநீகிதம் — விரும்பப்படாதது. [ஸஂ.அநீஹித: அந - எதிர்மறை. ஈஹித - விரும்பப்பட்டது.]

அநீகிநி—1. சேனை. 'அநீகினித் தூளிகண் புதைத்த சென்று' (பாரத. வாரணா. எசு.) 2. தாமரை (வைத்திய.) 3. படைத்தொகைகளு ளொன்று; அஃது: இரண்டாயிரத்து நூற்றெண்பத்தேழு யானைகளும், அவ்வளவு தேர்களும், ஆறுயிரத்தைந்நூற்றறுபத்தேழு குதிரைகளும், பதினாயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்தைந்து காலாட்களுங் கொண்டது; இஃது தக்குரோணியின் பத்திலொருபங்கு. [அநீகிநீ: அநீக - யுத்தம். இநி - ஒரு விகுதி.]

அநீச்சுரவாதி—கடவுள் இல்லையென்பவன். [ஸஂ.அநீஶ்வரவாதிந: அந் - எதிர்மறை. ஈஶ்வர - கடவுள். வாதிந-சொல்வோன்.]

அநீச்சுவரன் — 1. கடவுள் இல்லையென்கிறவன். 2. சாமர்த்தியம் இல்லாதவன். 3. தனக்கொரு முதல்வன் இல்லாதவன்.

அநீசன்—1. சாமர்த்தியம் இல்லாதவன். (பௌட். பதிபட. அசு.) [ஸஂ.அநீஶ: அந்; ஈஶ - தலைவன்.] 2. நீசனல்லாதவன். [ஸஂ.அநீச: அ; நீச - கீழ்மகன்.]

அநீசுவரவாதி—கடவுள் இல்லையென்னும் மதஸ்தன். [ஸஂ.அநீஶ்வரவாதிந.]

அநீசுவரன்—ஈசுவரனல்லாதவன். 'இவர்களுக்குச் சிருட்டியாதி பஞ்சகிருத்தியமுஞ் செய்தற்கு வல்லமையிருந்தும் இல்லாதவர் போல அநீசுவரர்களாயிருப்பவர்கள். (சிவி. கிரி. உ. தாற்.) [ஸஂ.அந்; ஈஶ்வர.]

அநீதம்—நீதமின்மை, அநீதி. [ஸஂ.அ; நீதம்-நல்லொழுக்கம்.]

அநீதர் — நீதம் அற்றவர். [ஸஂ.அ; நீத.]

அநீதி — நீதியின்மை. 'கேடுசெய்யக்கிளர்ந்த தநீதியே' (திருநெல். சத்த - கலி. கக.) [ஸஂ.அ; நீதி - நல்லொழுக்கம்.]

அநீதிமாந்—நீதியில்லாதவன். (த. நி. போ. உஅ0.) [நீதிமாந் - நீதியுடையவன்.]

அநீதியர்—நீதியில்லாதவர். [நீதியர் - நீதியுடையவர்.]

அநு—1. ஆயுதம். 2. இனவெழுத்தால் வரும் மோனை; 'இன' எழுத்தாவன: அ, ஆ, ஐ, ஔ ஓரினமும், இ, ஈ, எ, ஏ ஓரினமும், உ, ஊ, ஒ, ஓ, ஓரினமும், ஞ, ந ஓரினமும், ம, வ ஓரினமும், ச, த ஓரினமுமாகும். 'அகரமொ டாகார மைகார மௌகா - ரிகர மொடீகார மெ ஏ - உகரமொ - டூகார மொஓ ஞநமவ தச்சகர - மாகாத வல்ல வநு' (இலக்கணவிள. செய்யுளிய. உரை. ௩௬.) 3. கதுப்பு. 4. சிவநாசஞ்செய்தல். 'கடவுள் வேடன் றருங்கணை கரத்திற் கொண்டு - தானுடைத் தநுவிற் பூட்டி யநுப்பட்ச் சமைந்த தோரார்' (பாரத. நிவாதக. ௬௪.) 5. நோய். 6. பின், போல, கீழ், கூட, நீளமாய், சமீபம், உறுப்பு, தனித்தனி, குறித்து, வரிசையென்னும் பொருள்களைக் காட்டும் ஓர் உபசர்க்கம். 7. மரணம். 8. முலைப்பால். (இராசவைத்.) 9. வேசி. [1,3,4,5,6,7,9-ஹநு.]

அநுக்கம்—1. சந்தநம். 2. பாம்பு. (வைத்தியபரி) 3. வருத்தம். 'மனவநுக்கம் விடத் தனித்தனி.' (இராமா. அயோத். கைகே. ௫௨.) 4. பாலர்வியாதி. (ஈடு. 5. 10. 3. ஜீ.) 5. பலவீநம். 'அநுக்கமாகப்பேசினுர்.' (வழக்.) 6. முணக்கம். 'அநுக்கமாகவாசிக்கிருன்.' (வழக்.) 7. கம்பிதஇசை. 8. அச்சம்.

அநுக்காட்டல் — சாடைகாண்பித்தல். [அநு - அம்சம்.]

அநுக்கிரககர்த்தா— அநுக்கிரககிருத்தியஞ் செய்யுங் கடவுள். [அநுக்ரஹ - தயை. கர்த்தா - செய்வோன்.]

அநுக்கிரகபரை — 1. அநுக்கிரகத்தை முக்கியமாக உடையது. 2. பராசக்தி. 'பரமசிவத்தில் ஆயிரத்தொரு அமிசமாகப் பராசத்தியானது ஆவிர்ப்பவித்து அநுக்கிரகபரையாயிருக்கும்' (சி. சி. உ: எ௪. சிவாக்.) [அநுக்ரஹ - கிருபை. வரா - முக்கியமாக உடையது, உடையவள்.]

அநுக்கிரகம்—1. சிவனுடைய பஞ்சகிருத்தியங்களுளொன்று; அது:பசுவாகிய ஆன்மாவில் மலம் நீக்கிச் சிவத்துவம் வருவித்தல். (சி. சி. க: ௩௭. ஞாநப்.) 'மகாசங்காரத்திற் சத்திருபமாக மாயையிலிருக்கும் புவனங்களில் அதிசூட்சுமசரீரமுள்ளவர்களாய் அங்குள்ள அதிகாரிகளும் பிரகிருதிமுதலான புவனங்களிலிருக்கும் புவநபதிகளும் வியாபாரத்தை விட்டு விஞ்ஞாநகலராவார்கள். அவர்களுக்குள்ளே மகாசங்காரகாலத்தில் மலபரிபாகம் வந்தவர் முத்தராவார்கள்; வாராதவர் தத்தந்தாநத்தைத் தரித்துக்கொண்டிருப்பார்கள். சுத்தாத்துவாதிகாரிகளாகிய அநந்தாதிகள் சர்வோத்கிருஷ்டமான பரமோக்ஷமென்னும்சிவசுவரூபத்தையடைகின்ருர்கள். இதுதான் சிவனுடைய அநுக்கிரககிருத்தியம்' (சி-லி. ஞாந. கஉஅ. தாற்.) 2. தீக்ஷைசெய்தல். (சி. சி. க: ௩௭. ஞாநப்.) 3. தீமையை விலக்கி நன்மையையதிகப்படுத்தலாகிய தயவு. 'புலனமைவிற் றகச்செய் யநுக்கிரகமெலாஞ் சிலரொருபாற் புகழ்ந்து பாட' (சூத. சிவமான். எ. உ௩) [அநுக்ரஹ: அநு - பின்; க்ரஹ - எடுத்தல்.]

அநுக்கிரகாங்குரம் — அநுக்கிரகமுண்டாதல். [அநுக்ரஹ-தயை. அங்குரம்-முளை.]

அநுக்கிரகித்தல் — அநுக்கிரகஞ்செய்தல்.

அநுக்கிரகிப்பு—அநுக்கிரகித்தல்.

அநுக்கிரமணம்—1. கிரமமாகநடத்துதல். 2. பின்போதல். [அநுக்ரமண: அநு - பின். க்ரமண - போதல்.]

அநுக்கிரமணி—அநுக்கிரமணிகை, நூற்பதிகம். 'சீர்பெறு மச்ச புராண வத்தியாயச் சிறப்புறு பெயரினை வகுத்தே - யேர்பெற வுரைப்ப விதன்பெயர் புராணத் தநுக்கிரமணியென விசைப்பர்' (மச்சபு. அநுக்கிர. க.) [அநு - வரிசை. க்ரமணீ-செல்வது.]

அநுக்கிரமணிகை — நூலினிடத்தடங்கிய விஷயங்கள் இவையெனச் சுருக்கிச் சொல்லும் பாகம். பொருளட்டவணை. [அநு - வரிசை. க்ரமணிகா - கிரமமுடையது.]

அநுக்கிரமம்—கிரமப்படிநிகழ்தல். [அநு க்ரம: அநு - பின். க்ரம-போதல்.]

அநுக்கிராககம் —அநுக்கிரகஞ்செய்வது. (சி. சி. உ: உ. ஞாநப்.) [அநுக்ராஹக: அநு - பின். க்ராஹக - எடுப்பது.]

அநுக்கிராககன்-அநுக்கிரகஞ்செய்வோன். (பௌட். பசு. ௨௩இ.) [அநுக்ராஹக: அநு - பின். க்ராஹக - எடுப்பவன்.]

அநுக்கிராகி—அநுக்கிரகிப்பவன். [அநு க்ராஹிந்: அநு - பின். க்ராஹிந் - கிரகிப்போன்.]

அநுக்கிராகிணி – அநுக்கிரகஞ்செய்பவள். [அநுக்ராஹிணீ: அநு - பின். க்ராஹிணீ - எடுப்பவள்.]

அநுக்கிராகியத்துவம்–அநுக்கிரகிக்கப்பட யோக்கியமாயிருத்தல். [அநு - பின். க்ராஹ்யத்வம்-கிரகிக்கத்தக்கதன்றன்மை.]

அநுக்கிராகியம் — அநுக்கிரகிக்கப்பட யோக்கியமானது. 'அநுக்கிராகியாநுக்கிராககசம்பந்தம்' பார். [அநுக்ராஹ்ய.]

அநுக்கிராகியன்–அநுக்கிரகிக்கப்படுதற்கு யோக்கியமுள்ளவன். (பௌட். மாயா. ௬௨இ.)

அநுக்கிராகியாநுக்கிராககசம்பந்தம்—அநுக்கிரகிக்கப்படுவதும் அநுக்கிரகிப்பதுமாகிய சம்பந்தம். 'பெத்தரிடத்திலே யேகதேசத்திலே சிவசத்திக்கொவ்வாமற் சிற்சத்திவிளங்குதலால் அநுக்கிராகியாநுக்கிராககசம்பந்தமென்றுஞ் சாற்றப்படும். (சி. சி. ௨: ௨. ஞானப்.) [அநுக்ராஹ்யாநுக்ராஹகஸம்பந்த: அநுக்ராஹ்ய - அநுக்கிரகிக்கப்படத்தக்கது. அநுக்ராஹக - அநுக்கிரகிப்பது. ஸம்பந்த - தொடர்பு.]

அநுக்குரோசம் — இரக்கம். [அநுக்ரோஶ: அநு-பின். க்ரோஶ-அழுகை.]

அநுக்ஞை — அநுஞ்ஞை. 'சோமசுந்தரனநுக்ஞையானீர்ச்செந்துக்கடோன்றுத்தீர்த்தம்' (கடம்பவந. தீர்த்த. 2.)

அநுகதநம்–சம்பாஷணே. [அநுகதந: அநு - கூட. கதந - பேசுதல்.]

அநுகதம் — 1. ஈட்டப்பட்டது. 2. தொடர்ந்துவருவது. 'அநுகதமாயப்பொழுதே பெயர்களெல்லா யாதியாம் பார்வைகள்வந் தடையாநிற்கும்' (ஞானவா. தாஞ. ௨௧.) 3. நிச்சயிக்கப்பட்டது. 'உரையுமிலிங்கமும் போல வநுகதாகாரத்தையகப்படுத்தலில்' (தர்க்கபா. ௩௧.) [அநு - பின். கதம் - போதல்.]

அநுகதன்–பின்தொடர்வோன். [அநுகத: அநு - பின். கத - செல்வோன்.]

அநுகதி — பின்போதல். [அநுகதி: அநு-பின். கதி-போதல்.]

அநுகதிகம்—அநுகதியுடையது. [அநுகதிகம்: அநு - பின். கதிகம் - போதலுடையது.]

அநுகம்—1. இசைதல். 2. செஞ்சந்தநம். (மூ. அ.) 3. பின்போதல். [1, 3. அநுக: அநு - பின். க - போதல்.]

அநுகம்பநம்—இரக்கம், கிருபை. [அநுகம்பந.]

அநுகம்பம்—இரக்கம், கிருபை. 'ஓர்த்துண ருதாரந் தாழ்ச்சி யுறவநுகம்பங் கோபந்-தீர்த்திட லென்னு மைந்து முடையரே சிறந்தார் தேரில்' (சிவதரு. பல. ௩௯.) [அநுகம்ப.]

அநுகம்பை—1. அநுக்கிரகம். (பகவற்கீ. ௧௦; ௧௧.) 2. இரக்கம். [அநுகம்பா: அநு-பின். கம்பா - நடுக்கம்.]

அநுகமநம்— } 1. கூடப்போதல். 2. தன்
அநுகமம் — } நாயகனேடுடன்கட்டையேறுதல். 3. பின்போதல். [அநுகமந: அநு - பின். கமந - போதல்.]

அநுகரணம்–1. ஒப்பாதல். 2. வேறென்று செய்வதுபோலச்செய்தல். [அநுகரணம்: அநு - போல. கரணம்-செய்தல்.]

அநுகரணவுபயவோசை — இரட்டையொலிக் குறிப்பு. (பிங்.) 'திடுதிடெனல்'

அநுகரணவோசை — வேறென்று செய்வதுபோலச் செய்யும் ஒலிக்குறிப்பு. (பிங்.) [அநுகரண: ஓசை - ஒலி.]

அநுகருடணம்—1. ஆகருஷணம்; அது: மந்திரத்தினலேயே யழைத்தல். 2. இழுத்தல். [அநுகர்ஷண: அநு - பின். கர்ஷண - இழுத்தல்.]

அநுகவீநன் — இடையன். [அநுகவீந: அநு - பின். கவீந - பசுவுக்குரியோன்.]

அநுகற்பம்—1. உபவிதி. 2. பிரதமகற்பமாகிய உரியபொருள் கிடையாதகாலத்துக் கொள்ளப்படும் இரண்டாம்பொருள். 3. பிரதிவிதி. 4. மூவகை விபூதிகளு ளொன்று; அது: காட்டிலே யுலர்ந்துகிடந்த கோமயத்தையெடுத் திடித்துத் தூளாக்கி மந்திரத்தோடு கோசலம்விட்டுப் பிசைந்து உண்டையாக்கி அக்கினியில்வைத் தெடுக்கப்படுவது. 'இனியநுகற்பந்தனையு-மிட்டமுறக்கூறுவம்' (சைவச. பொது. களகூ.) [ஸ: அநுகல்ப: அநு - பின். கல்ப - விதி.]

அநுகன்—1. கணவன். 2. காமஇச்சையுள்ளவன். 3. பின்தொடர்வோன். 4. யசமானன். 5. வேலைக்காரன். [1, 2, 3, 4, 5. ஸ. அநுக: அநு - பின். க - செல்வோன்.]

அநுகாமி—1. கூடச்செல்வோன், பின்செல்வோன். 2. தோழன். [ஸ: அநுகாமிந்: அநு - பின். காமிந் - செல்வோன்.]

அநுகாரம்—1. ஒப்புமை. 2. வேறொன்று செய்வதுபோலச் செய்தல். [ஸ: அநுகார: அநு - போல. கார - செய்தல்.]

அநுகிருதி—அநுகரணம், ஒத்தசெய்கை. 'தர்மாநுகிருதிலட்சணை' (சி. சி. சு: உஅ. சிவாக்.) [ஸ: அநு - போல. க்ருதி-செயல்.]

அநுகிலாதன்—இரணியகசிபுவின் மக்களுளொருவன். 'அநுகிலாதனுயர் கொற்றவெஞ் சிலை குனித்து' (கூர்மபு. அந்தகா. ருரு.) [ஸ: அநுஹ்லாத: அநு - பின். ஹ்லாத - மகிழ்தல்.]

அநுகீதை-வேதாந்தக்ரந்தங்களுள் ஒன்று; அது: பாரதத்தில் அசுவமேதபருவத்திற் சொல்லப்பட்டுளது. (அபிதா.)

அநுகீர்த்தநம் — பிரசித்தஞ்செய்தல். 'ஆய்ந்தநற் கிரக ரூபத் தநுகீர்த்த நத்தினுலும்' (மச்சபு. அநுக்கிர. உசு.) [ஸ: அநு - பின். கீர்த்தந - சொல்லுதல்.]

அநுகுணம்—ஏற்றது, அநுகூலமானது. 'அறைதரு மிருதி யெல்லா மவைக்கநு குணமாம்' (திருவிளை. கசு: சக.) [ஸ: அநு - அநுகூலம். குண - தன்மை.]

அநுகுணலங்காரம்— தன்குணமிகையணி; அது: மற்றொன்றன் சார்பினுலே தனது இயற்கைக்குணமிகுதல்: 'வார்செவிசேர்காவி மலர் மானனையாய் நின்கடைக்கட், பார்வையினுன் மிக்ககரும் பண்பு'' (இலக்கணவி. எஅ-வது அணி. விசாக. குவல. எஅ.)

அநுகூலசத்துரு — அடுத்துக்கெடுக்கும் பகை. 'அநுகூலசத்துருவான பூதனையை நசித்து' (திவ். திருவாய். 4. 3. 4. பன்னீ.)

அநுகூலசாத்திரம் — ஆத்தவாக்கியமாகி யிம்மைக்குரியவைகளையும் பரோட்சார்த்தங்களையுங் குற்றமறவுணர்த்திச் சுருதியின் முதன்மையை விளங்கப் போதிக்கின்ற வழிநூல். (சைவப். ௬௪.) [ஸ: அநுகூல - நன்மை. ஶாஸ்த்ரம் - நூல்.]

அநுகூலம்—1. நன்மை. 2. உதவி. 3. காரியசித்தி.

அநுகூலர்—அநுகூலமுடையவர். 'குருக்களுக்கநுகூலராய்' (நாலாயிர. நாவ. உ.)

அநுகூலன்—1. உபகாரி, இதமாக நடப்பவன். (திவ். பெரியாழ். 4. 4. 2.) 2. சிநேகன். 3. சிங்காரநாயகர் நால்வருளொருவன்.

அநுகூலி—சகாயஞ்செய்பவன், சகாயஞ்செய்பவள்.

அநுகூலித்தல்—1. பயன்படுதல். 2. குணமாதல். 'வியாதி அநுகூலித்துவருகிறது' (வழக்.) 3. உதவிசெய்தல்.

அநுகோதம் — மூளையின் பிற்பக்கத்துக் கீழ்ப்பிரிவாகிய சிறிய மூளை. [ஸ: அநு-பின். கோஷ - மூளை.]

அநுச்சுவாரம்—உயிரின்பின்வரும் மகாரவிகாரமாகிய புள்ளி; இது: வடமொழியிலுயிர்வருக்கத்துப் பதினைந்தாமெழுத்து. [ஸ: அநுஸ்வார: அநு - பின். ஸ்வார - தொனி.]

அநுச்சூநகம்—வடுப்படாது பற்குறிவைத்தல். (கொக்கோ. ரு: சுசு.) [ஶூந - வீக்கம்.]

அநுச்சை — உத்தரவு. 'அவ்வண்ணஞ் செய்வ தேயென் றரசனு மநுச்சை செய்ய' (திருவிளை. சமணரை. கo.)

அநுச்யூதன் — கலந்தவன். 'பஞ்சாவஸ்தாநுச்யூதன்' (சி. சி. கஉ. எ. சிவாக்.) [ஸ: அநுஸ்யூத: அநு-பின். ஸ்யூத-தொடர்ந்த.]

அநுசங்கம்—1. அதிகாரத்தால் வருவித்து முடிப்பது. (பி. வி. ௫0.) 2. இரக்கம். 3. காரண காரியத் தொடர்ச்சி. 4. சம்பந்தம். 'அகங்காராநுஷங்கமாயிருக்கிற பிராணுதி வாயுக்களுக்கும்' (சி. சி. உ. ௬௫. சிவாக்.) 5. சொற்புணர்ச்சி. 6. புணர்ச்சி. 7. விருப்பம். [ஸ அநுஷங்க: அநு - பின். ஸங்க - தழுவுதல்.]

அநுசந்தானம் — 1. ஆயத்தப்படுத்தல், ஒழுங்குசெய்தல். 2. இடையறாது சிந்தித்தல், செபஞ்செய்தல். 'ஓங்காராதிகளநுசந்தானத்தால்' (வேதா. சூ. ௩௬அ.) 3. இலக்குப்பார்த்தல். 4. போனதை நினைத்தல். 'சங்கற்ப வேட்கையநு சந்தானங் கணந் தோறுந் தவிர்த்தி யென்னின் - மங்குற்ற மனோலயந்தா னதுவாகும்' (ஞானவா. உத்தால. ௩.) [ஸ அநுஸந்தாந: ஸ அநு - பின். ஸந்தாந - தொடுத்தல்.]

அநுசந்தித்தல் — 1. கிரமமாகச்செய்தல். 'அநுசந்தித்தால்' (ஞானவா. வீம. ௪. உரை.) 2. சிந்தித்தல். 'நான்குவேதவாக்கியங்களில் எந்தவாக்கியத்தை அநுசந்திக்கினும்' (தாயு. கருணு. எ. உரை.) 3. சொல்லுதல். 'பன்னீராயிரம் உரு அநுசந்தித்தால்' (குருபரம். பன்னீ. 171.)

அநுசந்தேயம்—1. விசாரணைக்குப் பாத்திரமானது. 2. விசாரிக்கத்தக்கது. [ஸ அநுஸந்தேய.]

அநுசயம் — 1. ஒருபொருளிற் சம்பந்தப்பட்டிருத்தல். 'அநுசயப்பட் டதுவிதுவென்னுதே' (தேவா. பூவனூர். ௬. திருநாவுக்.) 2. பகைமை. 'அநுசயத்தை யற்றுநீ ரருணவெற் பகத்துளீர்' (அருணகிரிப். வலம்புரிப். ௩௪அ.) 3. பற்று. 4. மனஸ்தாபம். 5. பச்சாத்தாபம். [ஸ அநுசய: அநு - பின். சய - கிடத்தல்.]

அநுசர் — தம்பியர். 'ஆல்வரும் புரவித் திண்டே ரறன்மக னநுசரான - நால்வரும்' (பாரத. இராய. ௬௬) [ஸ அநு - பின். ஜ - பிறந்தவன்.]

அநுசரணம்—1. ஒன்றன்காரியம். 2. ஒன்றுடனுகிய இசைவு. 3. பழக்கம். 4. பின்தொடர்தல். 5. வழக்கம். 6. சார்ந்தொழுகுதல். (கோயிலொ. 13.) [ஸ அநுஸரண: அநு - பின். ஸரண - போவது.]

அநுசரணை—1. சார்ந்தொழுகுகை. 2. உதவி.

அநுசரன்—1. கூடச்செல்வோன். 2. தோழன். 3. பின்செல்வோன். [ஸ அநுசர: அநு - பின். சர - செல்வோன்.]

அநுசரிக்கை—அநுசரித்தல்.

அநுசரித்தல்—1. சார்ந்துநடத்தல், பின்செல்லல். 'மகாபுராணங்க ளிசைத்திடும் பொருளெலா மிசைத்தே யவை யநுசரிக்குமென்று' (மச்சபு. நைமிசா. ௨0.) 2. ஆமோதித்தல். 'சாந்தனையநுசரித்துப்பேசுகிறன்'. 3. வழிபடுதல். 4. கொண்டாடுதல்.

அநுசரிதம் — தொடர்ந்தசரித்திரம். 'வம்மிசாநுசரிதம்' (மச்சபு. நைமிசா. ௩எ.) [ஸ அநு - பின். சரித-சரித்திரம்.]

அநுசரிப்பு—1. பின்பற்றுகை. 2. இணக்கம்.

அநுசன் — தம்பி. (பிங்.) 'அநுசனிற்ற சொல்' (இராமா. பாசப். உ.) [ஸ அநுஜ: அநு - பின். ஜ - பிறந்தவன்.]

அநுசாகை—கிளைக்குட்கிளை. (S. I. I. II. 201.)

அநுசாசகன் — ஆளுபவன். [ஸ அநுசாஸக: அநு - பின். சாஸக - ஆளுவோன்.]

அநுசாசநம்—கட்டளை. [ஸ அநுசாஸந: அநு-உபசர்க்கம். சாஸந - கட்டளை.]

அநுசாத்தி — கட்டளை. [ஸ அநுசாஸ்தி: அநு - உபசர்க்கம். சாஸ்தி - கட்டளை.]

அநுசாதன் — தம்பி. [ஸ அநுஜாத: அநு - பின். ஜாத - பிறந்தவன்.]

அநுசாதை — தங்கை. [ஸ அநுஜாதா: அநு - பின். ஜாதா - பிறந்தவள்.]

அநுசாரணம்—பின்தொடர்தல். [ஸ அநுஸாரணம்: அநு - பின். ஸாரணம் - போதல்.]

அநுசாரணி—வீணையின் பக்கநரம்பு.

அநுசாரம்—1. ஒப்புமை. 2. காரியம். 3. கிரகவக்கிரம். 4. நியாயப்பிரமாண அதிகாரத்தை அங்கிகரித்தல். 5. பின்செல்லல். 'கர்மாநுசாரம்' (பௌட். பாச. சஇ.) 6. பொருட்சுபாவம்.

அநுசாரி–1. உதவிசெய்வோன். 2. சார்ந்து நடப்பவன். 3. வழிபடுவோன், பின் செல்வோன். [ஸநு - பின். ஸாரிந் - செல்வோன்.]

அநுசிதம் — 1. தக்கதல்லாதது. 'செல்யானையநுசிதமென்றதனைச்சிதைக்க' (பெரியபு. கோச்செங். ௮.) 2. பொய். (திவாகர. ௧௦.) [ஸநுசிதம்: அந் - எதிர்மறை. உசிதம் - தக்கது.] 3. சத்திசெய்கை. (உரி. நிக.)

அநுசிந்தநம்—முன்னறிந்த விஷயத்தை நினைத்தல். [ஸநுசிந்தந: அநு - பின். சிந்தந - நினைத்தல்.]

அநுசிந்தை–தியானித்தல். [ஸநுசிந்தா: அநு - பின். சிந்தா - நினைத்தல்.]

அநுசிரஞ்சவாதம் — மகாவாதமிருபத்துநான்குவகைகளு ளொன்று; அது: 'தாடியின் பூட்டையனுசரித்து எந்நேரமும் வாயைத் திறந்தாவது மூடியாவது இருக்கச்செய்யும்.' (சீவரட். ௲௧௬.) [ஸநு - பின். சிரஞ்சம் - தளர்தல்.]

அநுசீவி–ஒருவரையடைந்து சீவிப்போன். 2. வேலைக்காரன். [ஸநுஜீவிந் : அநு - பின். ஜீவிந் - சீவிப்போன்.]

அநுசுருதி — ஒத்தசுருதி. (சீவக. 657. உரை.)

அநுசூதத்துவம்—இடையறுமை.

அநுசூதம்—நீங்காதுகூடியிருப்பது. 'இம்மூன்றுபிரமாணத்தாலும் அநுசூதமாயிருக்கிற ஆன்மசிற்சத்தியானது' (சி: சி. அளவை. க. சிவாக்.) [ஸநுஸ்யூத: அநு - பின். ஸ்யூத - இயைந்திருப்பது.]

அநுசூதன்–விடாது தொடர்ந்திருப்பவன். (வேதா. சூ. 99)

அநுசை—தங்கை. [ஸநுஜா: அநு - பின். ஜா - பிறந்தவள்.]

அநுசைவர்–சிவதீக்ஷைபெற்ற க்ஷத்திரியரும் வைசியரும். 'உயர்ந்தவர சன்வணிகனநுசைவராவர்' (ஆசௌசதீ. ௨௦.) [ஸநு - பின். ஶைவ.]

அநுஞ்ஞாலங்காரம்—வேண்டலணி: அது; குணமல்லாததனுற் குணமுண்டாதலை அறிந்து அக்குணமல்லாததனை வேண்டுதல். 'வெண்டிருநீறு புனையுமா தவர்க்கு விருந்து செய் துறுபெரு மிடியுங் - கொண்டநல் விரதத் திளைக்கும்யாக் கையுநீ கொடியனேற் கருளுநா ளுளதோ' (இலக்கணவிள. ௬௬௬. விசாக; குவலயா. ௭௧.) [ஸநுஜ்ஞா - வேண்டுகோள். அலங்காரம்.]

அநுஞ்ஞை — 1. உத்தரவு. 2. கட்டளை. 'இந்நூல்சொல்லியது பெரியோரநுஞ்ஞை கொண்டாகையாலும்' (வைராக்கியதீப. எ. உரை.) 3. சம்மதம். 4. விடுகை. [ஸநுஜ்ஞா.] 5. தட்சிணைவகை.

அநுஞை—கட்டளை. 'தன்னநுஞையாலே யண்ணலங் கணத்தினேரை மூழ்குவித்து' (திருவிளை. தீர்த்த. கடு.) [ஸநு - பின். ஜ்ஞா - அறிதல்.]

அநுட்டணம்—1. உற்பலம். 2. குளிர்ந்தது. 3. சூடற்றது. [ஸநுஷ்ண: அநு - எதிர்மறை. உஷ்ண - வெம்மை.]

அநுட்டணசீதம்–சூடுங்குளிர்ச்சியுமில்லது. (சி-வி. ஞா. கக. தாற்.) [ஸநுஷ்ண - வெப்பமில்லது. அஶீத - குளிரில்லது.]

அநுட்டயம்—அநுட்டிக்கப்படுவது. 'ஆனகன்மவநுட்டயங்களந்தக்காரணசுத்திதரும்' (சி. சி. பர. மாயா. மத. கரு.)

அநுட்டாதா—1. அநுட்டிக்கிறவன். (சி. சி. உ: எரு. மறை.) 2. தொழின் முயன்று செய்வோன். [ஸநுஷ்டாதா.]

அநுட்டாநம்—1. ஒழுக்கம். 'வயக்கநுட்டாநம்பண்ணிப் பிதிர்முறை தர்ப்பணஞ் செய்து' (மச்சபு. வீம. உக.) 2. வழக்கம். [ஸநுஷ்டாந: அநு - பின். ஸ்தாந - நிற்பது.]

அநுட்டித்தல்—1. ஒழுகுதல். 'சிவாகமமுறையினீரிருபாதமுமநுட்டித்து' (காஞ்சிப். நகர. ௧௧௦.) 2. நோற்றல். 'மநுடருமநுட்டித்து' (திருவிளை. இந்திரன்முடி. உக.)

அநுட்டிப்பு—அநுட்டித்தல்.

அநுட்டுப்பு — முப்பத்திரண்டசைகளை யுடைய ஒரு வடமொழிச் சந்தம். [அநுஷ்டுப்.]

அநுட்டுபு — சூரியனுடைய தேருருஞ் சந்தஸ்ஸாக வயப்பரி ஏழின்பெயர்களுள் ஒன்று. 'நுகநுதி யச்சி னுற்ற நுதிநுவல் பக்க மாகு - மகிழ்வுறு சந்தஸான வயப்பரி யேழி னுமங்-கிகழ்காயத் திரியி னேடு திருட் டுபு செகதி வென்றி-மிகுமநுட் டுபுநற் பந்தி பிரகதி விளங்கி யோங்கும்' 'மருவுமுட் டினுகு வென்னும் வயப்பரி யேழு பூண்ட - விரதநல் லச்சு' (மச்சபு. சூரியரத. உஉ.) [அநுஷ்டுப்.].

அநுடம்-1.இருபத்தேழுநக்ஷத்திரங்களுள் ளே பதினேழாவது நக்ஷத்திரம். 'களங்கமி லநுட மூல மிவையினுங் கதிரோன் செல் வன்' (மச்சபு. சூரியசங். உரு.) 2. பகலிலே நிகழும் மூன்றும் முகூர்த்தம். (விதாந. குணகுண. எங.) [அநுஷ.]

அநுக்தசித்தம்—சொல்லப்படாமற் சித்தியானது. 'சத்திநிபாதத்துக்கு மலபரிபாகமே யேது என்பது மூவகையான்மாக்களுக்கு மநுத்தசித்தமாகையாலும்' (சி. சி. அ: உ. சிவாக்.) [அநுக்த - சொல்லப்படாதது. ஸித்த - ஏற்பட்டது.]

அநுக்தம்-சொல்லப்படாதது. [அநுக்த: அநு -எதிர்மறை. உக்த -சொல்லப்பட்டது.]

அநுக்தம்பவாதம்-ஒருவகை வாதரோகம்; அது: வாயினிருபக்கமூலங்களினுங் காதினடி களினும் வருவது.(சீவரட். கஎ0.) [ஹநு- கதுப்பு. ஸ்தம்ப - தம்பித்தல்.]

அநுத்தமம் — 1. உத்தமமல்லாதது. 2. எல்லாவற்றினும் மிக்க உத்தமம், தனக்கு மேலாக உத்தமமானஒன்றை யில்லாதது. (பகவற்கீ. எ: உச.) [அநுத்தம: அந் - எதிர்மறை. உத்தம - சிரேட்டம்.]

அநுத்தரம்—1. உத்தமம். 2. உறுதிநிலை. 3. தெற்கு. 4.மற்றொன்று கூறும் மறுமொழி. 5. மறுமொழிசொல்லக்கூடாமை, பேசா திருத்தல். 6. மாறுகொள்ளக்கூறும் மறு மொழி. 7. மிகச்சிரேட்டம், தனக்கு மேலாக ஒன்றில்லாதது. 8. மேன்மை. [அநுத்தர: அந் - எதிர்மறை. உத்தர - மேல், விடை, வடக்கு.]

அநுத்தரோபபாதிகதசாங்கம் — அங்காகமத்தி னொருபகுப்பு. (சிலப். நாடு. கஅஎ. உரை.)

அநுத்தாநம் — முகங்குப்புறக்கிடத்தல். [அநுத்தாந: அந - எதிர்மறை. உத்தாந - மேல்.]

அநுத்திருதபஞ்சமம் — குறிஞ்சியாழ்த் திறவகையினொன்று. (பிங்கல. கஙஅஉ.) [அநு-பின். த்ருத-செல்வது. பஞ்சமம்- ஓரிசை.]

அநுத்துருதம்—1. ஒரு காலஅளவு; அஃது: ஒரு துருதகாலத்தின்பாதி, ஒருமாத்திரை யின் காற்பங்கு. 2. பின்தொடரப்பட்டது. [அநுத்ருத: அநு - பின். த்ருத - செல்கின்றது.]

அநுத்துவபம்—இருகதுப்பு. (த. நி. போ. உ0ரு.) [ஹநு - கதுப்பு. த்வய-இரண்டு.]

அநுதபித்தல்—1. கழிந்ததற்கிரங்குதல். 2. பிறர் சுகதுக்கங்களில் அவரோடொன்று தல். (லெக்.)

அநுதரம் — 1. சிற்றிடை. [அநுதர: அந் - அற்பம். உதரம் - இடை.] 2. தோணிமுதலியவற்றி னேற்றுமதிக்கூலி. [அநுதர: அநு - சம்பந்தம். தர - தோணி.]

அநுதரித்தல்—படகிலேற்றல்.

அநுதாத்தம்—படுத்தலோசை, மெள்ளச் சொல்லுதல். 'உதாத்தவோசையநுதாத்த சொரிதந்தழுவவோதி' (திருவிளை. தடாதகை. அ.) [அநுதாத்த: அந் - எதிர் மறை. உதாத்த - எடுத்துச்சொல்லல்.]

அநுதாபம்—1. கழிவிரக்கம், நடந்ததற்கு வியசநப்படல். 2. பிறர் சுகதுக்கங்களில் அவரோடொன்றுகை. (லெக்ஸி.) [அநுதாப: அநு - பின். தாப - வெப்பம்.]

அநுதாவநம்—1. ஆராய்தல். 2. சுத்தி செய்தல். 3. பின்தொடர்தல். [அநுதாவந: அநு - பின். தாவந - ஓடுதல்.]

அநுதாளம் — தாளவகையினென்று. (பரத. தாள. 4.)

அநுதினம்—நாடோறும். 'அநுதின மரன் புகழ் சாற்று சைவ புராணநூல். (திருவிளை. விடையில. ச.) [ஸ்நுதிந: அநு - தோறும். திந - நாள்.]

அநுதிநாதிநம் — அநுதினம். (திருப்பு. 639.)

அநுதுருதம்—தாள அங்கவகையினென்று. (பரத. தாள. 35.)

அநுதோடம் — உபபாதகம். 'கொலைகள வாதி செய்வோர் தம்முடன் குழீஇய பாவந் - தொலைவுறுங் கணம தொன்றி லவைக்கநு தோடந் தானும்' (சேதுபு. சங்கரபா. எகூ.) [ஸநுதொஷ: அநு - பின். தொஷ - குற்றம்.]

அநுநயம்—1. ஆசாரக்கிரமம். 2. சாந்தி செய்தல். 3. பயிற்றுதல். 4. மரியாதை. 5. விண்ணப்பம். 6. விருந்தர் முதலியோரை யுபசரித்தல். [ஸநுநய: அநு - பின். நய - நடத்துவது.]

அநுநாசிகம்—மெல்லெழுத்து. (பி. வி. ரு.) [ஸநுநாஸிக: அநு - கூட. நாஸிக - நாசியையுடையது. மூக்கினுற்பிறந்ததனுல் வந்தபெயர்.]

அநுநாசிகை—அநுநாசிகம். [ஸநுநாஸிகா.]

அநுநாதம் — 1. எதிரொலி. 2. ஒலி. [ஸநுநாத: அநு - பின். நாத - ஒலி.]

அநுப்பிரவிட்டம்—உட்புகுந்தது. 'மாயாதநுமுதலியவற்றி லநுப்பிரவிட்டமாக வியாபித்து' (சி. சி. அ: நுச. மறை.) [ஸநுப்ரவிஷ்: அநு - கூட. ப்ரவிஷ் - உட்புகுந்தது.]

அநுப்பிரவேசம்—1. அநுக்கிரகம். அது: போகவாசனையைநீக்கித்தெளிவித்தல். 'ஆக்க லளித்தல்போக் குதல்சம நந்தா - னெய்த்திட லகற்று மநுப்பிர வேச மென்பன வீச னைந் தொழிலே' (வேதா. சூ. சஎ.) 2. உட்புகுந்திருத்தல். 3. ஒருவர்கருத்துக்குத் தன்னை யிசைவாக்கல். [ஸநுப்ரவெஶ: அநு - கூட. ப்ரவெஶ - அடைதல்.]

அநுப்பிரவேசி — உமாதேவி. 'நித்தை யநுப்பிரவேசி' (கூர்மபு. திருக்கல். உக.) [ஸநுப்ரவெஶீ: அநு - கூட. ப்ரவெஶீ - அடைந்திருக்கிறவள்.]

அநுப்பிராசம்—1. அநுராகம். 2. வழியெதுகை. அது: ஒருசெய்யுளடியில்வரும் பல சீர்களி லிரண்டாமெழுத்து முதலியன ஒன்றிவருதல். 'மண்டலம் பண்டுண்ட திண்டேர் வரகுணன் றெண்டியின்வாய்க், கண்டலந் தண்டுறைக் கண்டதொன் றுண்டு கனமகர - குண்டலங் கெண்டையிரண்டொடுந் தொண்டையுங் கொண்டொர் திங்கண்-மண்டலம் வண்டலம் பக்கொண்ட ருழ வருகின்றதே' (இலக்கணவிள. செய்யு. நகூ. உரை.) [ஸநுப்ராஸ: அநு-பின். ப்ராஸ-மேன்மையாயிருப்பது.] 3. விரகம்.

அநுபசங்காரம் — முடிவுபெருமை.

அநுபசங்காரி—சவ்வியபிசாரமாகிய ஏதுப் போலிவகையுளொன்ருகிய முடிவுபெருமை; அந்நுவயதிருட்டாந்தம் வெதிரேகதிருட்டாந்த மிரண்டுமில்லாதது. அது 'எல்லாப் பொருளுமநித்தம் அளவையா னளக்கற்பால தாகலின்' என்பதிற்போல. ஈண்டு முழுவதும் பக்கமாயிருத்தலிற் றிருட்டாந்த மில்லை. (தர்க்கசங். சுo.) [ஸநுவஸம்ஹாரிந்: அந் - எதிர்மறை. உவஸம்ஹாரிந் - முடிவுடையது.]

அநுபதிதம்—1. இறங்கினது. 2. பின் தொடரப்பட்டது. 3. விழுந்தது. [ஸநுவதித: அநு-பின். வதித-விழுந்தது, போனது.]

அநுபந்தசதுட்டயம் — ஒரு நூல்செய்வோன் அந்நூலோடுசேர்த்துத்தந்துரைக்கும் நான்குபொருள்கள்; அவை: விடயம், சம்பந்தம், பயன், அதிகாரியென்பன. 'சாத்தமநு பந்தசதுட் டயநூற்கு விடயஞ் சம்பந்தம் பயனதிகா ரிகளெனநான் கறியே' (வேதா. சூ. அ.) சம்பந்தநீக்கி ஆநந்தரியங் கூட்டிநான்கென்பாருமுளர். (நன். விருத்தி. சிறப். உரை.) [ஸநுவநுவதுஷய: அநு - பின். வநு - கூடிநிற்றல். வதுஷய - நான்கன்கூட்டம்.]

அநுபந்தம்—1. அடுத்து யாக்கப்படுவது. 2. அநுசரித்தல். 3. இம்மையிலுண்டா கின்ற நன்மைதீமைகள். 4. இடையறுத் தொடர்ச்சி. 5. ஒற்றுமை, ஒன்றிப்பு. 6. ஒன்றனோடிணைக்கப்பட்டது. 7. கட்டுதல். 8. காரியத்தொடர்ச்சி. 9. கூடுதல். 10. சிசு. 11. தடை. 12. தொடக்கம். 13. தொடர்ச்சி. 14. பிரயோசனமானசெய்கையைச் செய்யப் பழகல். [அநுபந்த: அநு - பின். பந்த கூடிநிற்றல்.]

அநுபந்தன்—1. உடன்பட்டவன். 'காயு மவர்க்கநு பந்தரு மாயுள் களித்திரே' (சிவ தரு. சுவர். கஙு.) 2. குருவைப்பின் றொடர்ந்துநடக்குஞ் சீடன். 3. பெற்றோ ரைப் பின்றொடர்ந்துநடக்கும் பிள்ளை. [அநுபந்த: அநு - பின். பந்த - தொடர்ப்பாடுடையவன்.]

அநுபந்தை — 1. தாகம். 2. விக்கல். [அநுபந்தா: அநு - பின். பந்தா - கட்டுவது.]

அநுபபத்தி—1. சாத்தியத்தைச் சாதிக்க வல்லதல்லாதது. 'ஓதநுபபத்திஞா னத்தாலே யுற்பத்தியாகு - மாதர வுடைய ஞான மருத்தாபத்தி யெனச்சொல்வர்' (ஞான. எக்கி. பூ. கல: கசு.) 2. சித்தாந்த மாகாத நியாயம். 3. சித்தியாகாமை. 4. தகுதியின்மை, பொருத்தமின்மை. 'அநுப பத்திச் சொன்மயக் தோன்றப் பொருள்வே றுணர்த்தில்' (பி. வி. சஎ.) 5. நிறைவேறுமை. 6. பிரயோகிக்கப்படாமை. 7. யுத்தியின்மை. [அநுபபத்தி: அந் - எதிர்மறை. உப பத்தி - தகுதி, பிறத்தல், யுத்தி.]

அநுபமம் — 1. தனக்கு நிகரில்லாதது. 'தெரிவரிதா யநுபமமாய்' (தத்துவ. பதி. ௩.) 2. மிகச் சிரேட்டமானது. [அநுபம: அந் - எதிர்மறை. உபமா-ஒப்பு.]

அநுபமன்—ஒப்பில்லாதவன். 'அநுபமன் செழியன்' (திருவாலவா. 13. 15.)

அநுபமை—1. உவமையின்மை. 2. குமுத மென்னுந் தென்மேற்குத்திசையானையின் பெண்யானை. 3. மிகச்சிரேட்டமானது. [அநுபமா: அந் - எதிர்மறை. உபமா- ஒப்ப.]

அநுபயம்—இரண்டுமல்லாதது. (தர்க்க பா. அக.) [அந் - எதிர்மறை. உபயம் - இரண்டு.]

அநுபல்லவி—பதமென்று வழங்கப்படுஞ் செய்யுளின் இரண்டாமுறுப்பு.

அநுபலத்தம்—1. அடையாமை. (தர்க்க பா. எரு.) 2. காணப்படாதது. (பௌட். பசு. கலரு.) [அநுபலப்த: அந் - எதிர் மறை. உபலப்த - அடையப்பட்டது.]

அநுபலத்தி—1. அநுபலத்தியலங்காரம். 2. அறுவகைப்பிரமாணத்துளொன்று. 'அநு பலத்தியது சீதமின்மைபனியின்மை காட்டல்போலும்' (சி. சி. அளவை. கல.) 3. அறியப்படாமை. [அநுபலப்தி: அந் - எதிர்மறை. உபலப்தி-அறிதல்.]

அநுபலத்தியலங்காரம் – நுகர்ச்சியின்மை யணி. (குவல. ககஈ.)

அநுபலத்திஹேது—ஒன்றன் இன்மையால் மற்றொன்றன் இன்மையை அறியும் ஏது. (சி. சி. அளவை. 10. மறைஞா.)

அநுபவக்காட்சி—பிரத்தியட்சஞானம்.

அநுபவசாலி—அநுபவமிக்கவன்.

அநுபவப்படல்—உற்றறிதல்.

அநுபவபூமி — இருவகை ஞானபூமிகளு ளொன்று; அது: சத்துவாபத்தி, அசஞ் சத்தி, பதார்த்தாபாவனை, துரியம் என நான்குவகைப்படும். (வேதா. சூ. கசஅ. உரை.) [அநுபவஸ்திதி: அநுபவ - தானேயறியுமறிவு. ஸ்திதி - நிலை.]

அநுபவம் — 1. அநுபோகம். 'கண்ட பேரின்ப வநுபவக் கருத்தினோ டெழுந்து' (காஞ்சிப். தழுவ. கசுஉ.) 2. காரியம். 3. கைவல்லியம். 'அநுபவநிலையுஞ்சேருமோ' (தாயு. ஆரண. கூ.) 4. சுகபோகம். 'பிறை நுதல்வஞ்சியநுபவமுண்டு' (மதுரைப் பதிற்றுப்பத். ருஅ.) 5. தானேகண்டறியு மறிவு, நினைவிற்குவேறாகிய உணர்வு. 'யதார்த்தாநுபவப்பிரமை' (தர்க்கபா. ௩.) [அநுபவ: அநு-பின். பவ-இருக்கை.]

அநுபவி — 1. உலக விவகாரங்களை நினையாமல் ஆத்துமவிவேகத்தை யடைந்து ஒருசநநத்திலே சீவன்முத்தனுவோன்.

'வீடுலக விவகாரம் நினையாமல் விவேக மேவி யோர் பிறப்பினுழுத்தன் நுபவியே' (வேதா. சூ. கச.) 2. சுகியாய்வாழ்பவன். [ஸநு ஹவிநு: அநு ஹவ; இந் - ஒரு வ - வி.]

அநுபவித்தல் — துய்த்தல். 'இச்சாபமு மநுபவித்தல்லதுவிடாதால்' (காஞ்சிப். அரிசா. கடு.)

அநுபவிப்பு—அநுபோகம்.

அநுபவை — பார்ப்பதி. (அநுபவமுள்ள வள்.) 'இமகிரி குமாரத்தி யநுபவை பரா சத்தி' (திருப்பு. ௩அச.) [ஸநு ஹவா- வடமொழி ஆவீறு தமிழில் ஐயீறாயிற்று.]

அநுபவைகவேத்தியம் — அநுபவமொன் றாலேயறியத்தக்கது. 'பரமசிவம் ஸ்வரூப ஞானாநுபவைகவேத்தியம்'(சி.சி.பாயிர.டு. சிவாக்.)[ஸநுஹவைகவெ௱ு: ஸநு ஹவ; ஏக - ஒன்று. வெ௱ு-அறியத்தக்கது.]

அநுபாடணம் — 1. கண்டிக்கும்பொருட் டாக ஒரு பிரதிஜ்ஞையைத் திரும்ப எடுத்துச் சொல்லுதல். 2. சொன்னதைப் பின்னுஞ் சொல்லுதல். 'ஆயாமமறைபொழுதிலறைந்த வநுபாடணத்தால்' (சிவதரு. சிவஞான யோ. எடு.) [ஸநுஹாஷண: அநு - பின். ஹாஷண - சொல்லுதல்.]

அநுபாடித்தல்—1. அநுவதித்தல், ஒருவர் சொன்னதை யெடுத்துச்சொல்லல். 'சுத்த மாயையி லசுத்தமாயை தோன்றுமென்றும், சூக்குமதேகத்திற் றூலதேகந்தோன்று மென்றும் சொல்லும் சைவபுராணிக மதாநு சாரிகளாயிருக்கின்ற ஆசாரியர்மதமநுபா ஷித்து' (சி. சி. உ: ருக. ஞானப்.) 2. சொல்லு தல். [மூ. ஸநுஹாஷ் : அநு - பின். பாஷித்தல்—சொல்லல்.]

அநுபாதகம் — மகாபாதக துல்லியம். 'பஞ்சபாவந்தனக்கநுபாதக-மெஞ்சலில்லன யாவையுமெஞ்சுமால்' (சேதுபு. தநுக்கோ. உக.) [ஸநு - ஒப்பு. வாதக - தீங்கு.]

அநுபாதம் — 1. கரணங்களிலொன்று. [மதநநூல்] (கந்தபு. இந்திரபுரி. சஎ.) 2. சங்கலிதம். 3. திரயராசிகம். (2, 3. கணக் கதிகாரம்.) 4. பின்றொடர்தல். [ஸநு வாத: அநு - பின். வாத - விழுதல்.]

அநுபாதேயம் — அங்கீகரிக்கப்படாதது. [ஸநுவாதெயம்.]

அநுபாதேயன்— அங்கீகரிக்கப்படக்கூடா தவன். [ஸநுவாதெய: அந் - எதிர் மறை. உவாதெய - அங்கீகரிக்கப்படக் கூடியவன்.]

அநுபாநம் — 1. மருந்தை யுட்புகுத்தற் குக்கொள்ளும் பாநம், மருந்துடன்குடிக்கும் பாநம். 2. மருந்துடனருந்தும் பதார்த்தம். 'அரசாதி - யநுபாநமது' (இராசவைத். க௦க.) [ஸநு - கூட, பின். வாந - குடித்தல்.]

அநுபாலநம்—பாதுகாத்தல். 'ஆஞ்ஞாநு பாலநம்' (பௌட். பும். சுஉ.) [ஸநுவா லந.]

அநுபாவம்—1. கண்காட்டு, கைகாட்டு முதலிய அங்கசேட்டைகளினால் மநக்கருத் தை விளக்குங் குறி.

அநுபாவியம் — அநுபவிக்கத்தக்கது. 'ஸ்வாநுபவாநுபாவியமாம்' (சி. சி. அ: ௩ச. ஞானப்.) [ஸநுஹாவு.]

அநுபூதம்—1. அறிந்துகொள்ளப்பட்டது. 'பூர்வத்திலேயநுபூதமான பேரியாதிசத்த ஜாதியங்கள் என்று நிச்சயிக்கப்படும்' (சி. சி. உ: சுக. சிவாக்.) 2. காரியமாகவந்தது. [ஸநுஹூத.]

அநுபூதி — 1. தானே கண்டறிந்ததும் பிறர்க்குச் சொல்ல இயலாததுமான அறிவு. 'பேசாவநுபூதியை யடியேன் பெற்றுய்ப் பிழைக்க' (தாயு. சொல்லற். ௩.) 2. நினைவிற் கயலாய் வேறாகிய உணர்வு. 'அநுபூதியாவது ஸ்ம்ருதிவியதிரிக்தஞானம்' (சி. சி. அளவை. க. சிவாக்.) [ஸநுஹூதி: அநு-பின். ஹூதி - ஆனது.]

அநுபூதிகம்-அநுபவிக்கத்தக்கது. 'சிவாநு பவம் சுவாநுபூதிகமாம்' (சி. சி. அ: ௩ச. சிவாக்.) [ஸநுஹூதிக: அநு-பின். ஹூதி - ஆனது. க - ஒரு வ - வி.]

அநுபோகசாலி—அநுபவமிக்கவன்.

அநுபோகம் — 1. அநுபூதி. 'தானே தானு யநுபோகந் தன்னில்' (சி. சி. பர. மாயா. மத. கச.) 2. பழக்கம். 'அவன்

இராமபாணக்குளிகைசெய்வதி லநுபோகப்பட்டவன்' [வழக்.] 3. இன்பம். 'சிவமாதுடனே யநுபோகமதாய்' (திருப்பு. ருகஎ.) 4. சுகவாழ்வு. 'நீதியநுபோகநெறிநின்று' (இராமா நூற்பய. அ.) 5. புணர்ச்சி. 'குறமாதினின்பவநுபோக சரசக்கார' (திருப்பு. ௩௫.) 6. அநுபவிக்கவேண்டிய தீவினைப்பயன். 'அநுபோகம் தொலைந்தால் அவிழ்தம் பலிக்கும்' (வழக்.). [ஸ அநு-கூட. போக- உண்ணல்.]

அநுபோகி—அநுபோகங்கொள்ளுவோன். 'இகைலோகமெலாமநுபோகி' (திருப்பு. ருகஎ.) [ஸ அநு - கூட. போகிந் - உண்போன்.]

அநுபோகித்தல்—அநுபவித்தல்.

அநுமக்கொடியோன் — அருச்சுநன்.

அநுமகுண்டம் — சேதுவிலுள்ள ஒரு தீர்த்தம். 'அநுமகுண்டவியனீராடி' (சேதுபு. சேதுயா. உஅ.) [ஸ அநுமகுண்ட.]

அநுமதம் — 1. சம்மதி. 'ஆசற்றுநிறை வேற வநுமதஞ்செய்கென' (சிவதரு. சிவஞா. தாற். உஎ.) 2. பிரியம். [ஸ அநுமத: அநு - கூட. மத - கருதப்பட்டது.] 3. வீணைவகையுள் ஒன்று. (பரத. ஒழிபி. 15.)

அநுமதி—1. கட்டளை. 'அநுமதிகொடு தொழுது' (திருவிளை. நாக. கச.) 2. சம்மதி. 'தெளிதரு புனலின் மூழ்கத் திருவருள் செய்தி யென்று - வுளமலி யுவகை யோடு முரைத்தநு மதிபெற் றங்கண்' (சேதுபு. சேதுயா. கரு.) [ஸ அநு - கூட. மதி - சம்மதமுடையது.] 3. சுக்கிலபக்க சதுர்த்தசியோடுகூடிய பௌர்ணிமை. 4. பௌர்ணமி. (பிங்.)

அநுமதியம்—பாவ ராக தாளங்களென்ற மூன்றினிலக்கணங்களையுங்குறித்து அநுமனாற்செய்யப்பட்ட பரதசாத்திரம். [ஸ அநுமதீயம்.]

அநுமந்—அநுமான். [ஸ அநுமந்.]

அநுமந்தச்சம்பா — சம்பாநெல்வகையில் ஒன்று. (ஏரெழுபது. உரை.)

அநுமந்தராயன்—அநுமான்.

அநுமந்தன் — அநுமான். 'அநுமந்தனடித்தானே' (இராமநா.)

அநுமந்தா—1. சம்மதித்தவன்போலிருக்கிறவன். (பகவற்கீ. ௧௩. உ௩. ஸ்ரீ.) 2. தேகேந்திரிய வியாபாரங்களில் தான் பிரவிருத்தியற்றவனானாலும் பிரவிருத்தியுள்ளவனைப்போலத் தோற்றப்படுகின்றவன். (ஷை ஸ்ரீ). 3. செவ்வையாயேவுகிறவன். (ஷை ரா). 4. செய்யவேண்டிய காரியங்களி லாலோசனைசொல்லுகிறவன். (ஷை நீ. வி.) [ஸ அநுமந்தா.]

அநுமந்திருசம்பிரதாநம் — சம்மதமாயேற்றற்பொருளில்வரும் நான்காம் வேற்றுமையுருபு. 'ஆசிரியன் மாணாக்கனுக்குக் கசையடிகொடுத்தான்' என்பதிற்போல. (பி. வி. ௧௩. உரை.) [ஸ அநுமந்த்ரு-சம்மதித்தவன். ஸம்ப்ரதாந - (கொடை) நான்காம் வேற்றுமை.]

அநுமரணம் — இறந்தகணவனோடுடன் கட்டையேறிமரித்தல். 'பந்தமுற வநுமரணஞ் செய்தவுருக் குமணிமுதற் பாவைமார்கள்' (நல். பார. மூத்தியடை. ௬.) [ஸ அநுமரண: அநு - கூட. மரணம். இறத்தல்.]

அநுமலோர்சை—சூரியசமுகத்து நடிக்கும் மாதர்களி லொருத்தி. (கூர்மபு. ஆதவர் சிறப். ௧௦.)

அநுமாந்—1. அஞ்சனையென்பவளுடைய மகன்; இவன் கிட்கிந்தைமலையிலே சுக்கிரீவனுடைய சேனையைச்சேர்ந்திருந்து இராமசந்திரனுக்குத் துணைவனாய் தூதனுமானவன். இந்திரனுடைய ஐராவதயானையிற் பாய்ந்து அவனுடைய வச்சிராயுதத்தினால் ஊறுபட்ட கதுப்புடைமையால் அநுமானெனப் பெயர் பெற்றான் என்பர். 'கூர்பற் றியவென் குவிசத்தாற் கூறு படுபுண் வடுத்தீர்க-வார்பெற் றார்நீ பெற்றதுநின் னநுவற் றிடலா லநுமனெனும் - பேர்பெற்று' (இராமா. உத். அநு. ௩௪.) [ஸ அநுமாந்.] 2. சிற்பநூல் முப்பத்திரண்டிலொன்று.

அநுமாநசாமக்கிரி — அநுமானத்திற்கு வேண்டும் உறுப்புக்கள். (அளவை. ௧௩. சிவஞா.) [ஸ அநுமாநம் - ஓரளவை. ஸாமக்ரீ - காரணசமூகம்.]

அநுமாநப்பிரமாணம்—கருதலளவை.

அநுமாநப்பிரமாணாலங்காரம்—அநுமாநப் பிரமாண அணி. (குவல. கா௦கூ.)

அநுமாநப்போலி — சாதநம் பக்ஷத்தி லிருக்கையின்மை, சபக்ஷத்திலிருக்கையின் மை, விபக்ஷத்தினீக்கமின்மையென்னுங் குற் றங்களோடு கூடியுஞ் சிலரூபயோகத்தால் அநுமாநம்போலத் தோற்றும் போலிநியா யம். (சைவப்பி. கரு. தர்க்கபா. எச.)

அநுமாநம்—1. ஐயத்தோடெண்ணுதல். 2. ஐயம். 'இனியிங்கிதற்குமநுமாநமோ' (தாயு. அகிலா. க.) 3. தர்க்கசாத்திரத்திற் சொல்லப்பட்ட பிரமாணங்களுளொன்றாகிய கருதலளவை. இது நேரே யறியப்படாது சாதித்துப் பெறற்பாலதாய் மறைந்துநின்ற பொருளை அதனைவிட்டு நீங்காது யாண்டும் உடனாய்நிகழும் ஏதுவைக்கொண்டு உணர்வ தாகிய ஆன்மாவின் ஞாநசத்தி; அது: புகையைக்கண்டு காணப்படாத நெருப்பை யுண்டென்றுணர்தல்போல்வது. ஏதுக்களைக் கொண்டு மறைந்தபொருள்களை யறிதல். (சி. சி. அளவை. உ. நிரம்ப.) [ஸநுமாந: அநு-பின். மாந-அளவை.]

அநுமாநவாக்கியம்—அநுமாநப்பிரமாணத் தால் ஒருவன் அறிந்ததைப் பிறன் அறியும் படியுணர்த்தும் வாக்கியம்; இவ்வாக்கியத் திற்குப் பிரதிஞ்ஞை, ஏது, உதாரணம், உபநயம் நிகமநம் என்பன அவயவங்கள். 'அநுமாந வாக்கியத்தினுடைய ஏகதேசங் கள் அவயவங்கள்.' (தர்க்கபா. எஉ.) [ஸநுமாநவாக்ய.]

அநுமாநவிருத்தம்—அநுமானப்பிரமாணத் துக்கு மாறாகப் பக்கவுறுப்புக் கூறுவது. (அநுமா. பக். கரு.)

அநுமாநவுறுப்பு—பக்கம், ஏது, திருட் டாந்தம், உபநயம், நிகமனம் என ஐந்தாம். (அநுமா. பக். கூ.)

அநுமாநாகம்மியம்—அநுமாநத்தால் அறி யப்படாதது. (சி. சி. உ: எரு. சிவாக்.) [ஸநுமாந - கருதலளவை. அகம்யம் - அறியப்படாதது.]

அநுமாநாபாசம்—அநுமாநப்போலி. (சி. சி. அளவை. கச. மறை.) [ஸநுமாந - கருதலளவை. ஆபாஸ - போலி.]

அநுமாநித்தல்-1. அநுமாநப்பிரமாணத்தா லறிதல். 2. ஐயத்தோடெண்ணுதல். 3. குதிரைகணைத்தல். 'குதிரை தற்செயலா யாவது வாங்குகிற ஆளைக்கண்டாவது அநுமாநித்தாலும் கூத்தாடினாலும்' (அசுவ சாத். கஎ.)

அநுமாநிதம்—குதிரைக்கனைப்பு.

அநுமாபகம் — அநுமிக்கப்பண்ணுவது, ஏதுவாகி அறிவிப்பது. (பௌட். பதி. எஇ.) [ஸநுமாபக.]

அநுமித்தல் — அநுமாநப்பிரமாணத்தினா லறிதல். 'மாயை யிடையை யுளண்முலையான் மற்றை மாதர் போலென்று, தூய மதிஞ ரநு மித்துச் சொல்லு மருங்குற் றோகைதான்' (பிரபுலி. பிரபுதே. ௩எ.)

அநுமிதி — அநுமாநத்தினாற்றோன்றும் அறிவு. (தர்க்கபா. கஎ.) [ஸநுமிதி.]

அநுமேயம் — அநுமாநப்பிரமாணத்தால் அறியத்தக்கது.

அநுமை—அநுமாநத்தினால்வரும் அறிவு. [ஸநுமா.]

அநுமோதநம்—1. அங்கீகரிப்பு. 2. ஒத்து மகிழ்தல். 3. சம்மதம். [ஸநுமோதந: அநு - கூட. மோதந - மகிழ்தல்.]

அநுமோனை — இனவெழுத்தால் வரும் மோனைத்தொடை. (தொல். பொருள். 402: உரை.)

அநுயாத்திரீ— } யாத்திரையிற் கூடப்
அநுயாத்திரிகன்— } போவோன். [ஸநு யாத்ரு, ஸநுயாத்ரிக: அநு - கூட. யாத்ரு, யாத்ரிக - பயணக்காரன்.]

அநுயாத்திரை—கடவுள் பெரியோர் என் றிவரது புறப்பாட்டில் உடன்செல்லுகை.

அநுயோகம்—1. கண்டித்தல். 2. தேவத் தியாநம். 3. வருந்திக்கேட்டல். 4. விசாரணை. 5. வினா. (புறப். வெண். 8. 19. உரை.) [ஸநுயோக: அநு - பின். யோக - இணைத்தல்.]

அநுயோகி—1. கூடியிருக்குமது. (தர்க்க பா. கச.) 2. விதிவினை. 'விதியநுயோகி மறைபிரதியோகி' (பி. வி. கசு. உரை.) [ஸநுயோகிந.]

அநுயோசநம்—வினா. [அநுயோஜந: அநு - பின். யோஜந - இணைத்தல்.]

அநுரஞ்சகம்-திருத்தியாக்குவது. [அநுரஞ்ஜக; அநு - கூட. ரஞ்ஜக - பிரியமாக்குவது.]

அநுரஞ்சநம்—1. நேசித்தல். 2. பிரியப்படுத்துதல். [அநுரஞ்ஜந: அநு - கூட. ரஞ்ஜந - பிரியமாதல்.]

அநுராகம்—1. சிற்றின்பவிருப்பம். 'இதனைக்கொடுத்தநுராகத்துருக்கி' (திருப்பு. உசசு.) 2. சிநேகம். 3. மிகுபிரியம். [அநுராக.]

அநுராகமாலை—ஒரு பிரபந்தம்; அது: தலைவன் கனவின்கண் ஒருத்தியைக் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து இனிமையுறப் புணர்ந்ததைத் தன் உயிர்ப்பாங்கற்கு உரைத்ததாக நேரிசைக் கலிவெண்பாவாற் கூறுவது. (தொன்னூல். உஅ௩. உரை.) [அநுராகமாலா.]

அநுராதபுரம் — இலங்கையின் பண்டை யிராஜதானிகளுள் ஒன்றான அநுரை.

அநுரூபம்—1. இணக்கம், ஏற்றது. 2. ஒத்தது. 3. தக்கது. 'முனிவர் தோன்றினர் கருமவநுருபமாய்ச் சிவாக்கினியால்' (சூத. சிவ. கக: கசு.) [அநுரூப: அநு - ஒத்த. ரூப - வடிவம்.]

அநுரை—அநுராதபுரம்.

அநுரோதம்—இணக்கம்.

அநுலாபம்—அடிக்கடிபேசுதல், மறுபடியும்பேசுதல். (விங்கா. களஉ.) [அநுலாப: அநு - பின். லாப - பேசுதல்.]

அநுலேபகம்-சந்து முதலிய பூசுங்கருவி. [அநுலேபக: அநு - கூட. லேபக - பூசுவது.]

அநுலேபநம்— / அநுலேபம் — } 1. அபிடேகஞ்செய்தல். 2. அபிடேகத்திரவியம். 3. தைலமுதலியவற்றை யுடம்பிற் பூசுதல். 'குங்கும கற்பூர சந்தநாதி யநுலேபநமாகவும்' (சி-வி. கிரி. கக. உரை.) [அநுலேபந: அநு - கூட. லேபந - பூசுதல்.]

அநுலோமசன்—அநுலோமன். [அநுலோமஜ:]

அநுலோமம் — 1. வலமுறை. 2. அநுலோமசாதி.

அநுலோமன்—நாற்குலத்துள், உயர்குலத்தாடவன் இழிகுலப் பெண்ணைக் கூடிப் பெற்ற மகன். 'குலமுய ராணுங் தாழ்ந்த குலமுறு பெண்ணுங் கூடி - யலமறப் பிறந்த மைந்த னநுலோம னென்னும் பேரான்' (சூத. சிவ. கஉ: சு.) [அநுலோம: அநு - கிரமம். லோம - தொடர்பு.]

அநுவகன் — வாயுசக்கரங்களுளொன்று. 'ஆங்க ணுவகன் பிரவக னநுவகன் சிறப்பின் - வீங்கு சங்வக னிவகன்மேற் பராவக னதன்மே - லோங்கி நின்றதோர் பரிவக னெனும்பெய ருடைய - தீங்கில் வாயுசக்கரங்களே ழுந்தனி சிறக்கும்.' (கூர்மபு. மண்டல. ச.)

அநுவட்டம்—ஒருவகையுருண்டைமுத்து. (S. i. i. II. 143)

அநுவதித்தல் — முன்னர்க்கூறிய ஒரு பொருளை யொருநிமித்தத்தாற் பின்னும் எடுத்துக் கூறுதல். 'இருவர்சொல் வழக்கு மேற்கொண் டநுவதித்து' (திருவிளை. மாமணு. ௩0; பி. வி. ௫0. உரை.)

அநுவமிசம் — வமிசவரலாறு. [அநுவம்ஶ: அநு - வரிசை. வம்ஶ - மரபு.]

அநுவயித்தல்—ஒரு வாக்கியத்திலே இலக்கணமுறைப்படி யெழுவாய் பயனிலைகள் வெளிப்படத்தோன்றுமாறு சொற்களைக் கூட்டிச் சொல்லுதல்.

அநுவர்ணநை — வர்ணித்துச்சொல்லல். 'பெருகுபிதிர்வஞ்சாநுவர்ணநை' (மச்சபு. அநுக்கிர. சு.) [அநுவர்ணநா.]

அநுவர்த்தநம்—1. காரியம். 2. கீழ்ப்படிதல். 3. சம்மதித்தல். 4. தொடருதல். 5. பிரியப்படுத்துதல். 6. முற்சூத்திரத்திற் சொல்லப்பட்டதைக்கொண்டு குறைநிரப்புதல். [அநுவர்த்தநம்: அநு - பின். வர்த்தநம் - விருத்தியாதல், தாபித்தல்.]

அநுவர்த்தீ—அநுசரித்தல். (சி. சி. ச: அ. சிவாக்.) [அநு; வர்த்தி-இருப்பது.]

அநுவர்த்தித்தல் — தொடருதல். 'அந்தச் செய்தகருமம் நசித்திடினு லொரு அபூர்வஞ் செனித்துப் பலபரியந்தஞ் சம்ஸ்காரான்மா வாய்அநுவர்த்திக்கும்'(சி.சி.உ:ருஅ.சிவாக்.)

அநுவழி—புதன். (சூ. நிகண். க: சுஅ.)

அநுவாக்கியை—யாகத்திலே தேவதையை யழைத்தற்குச் சாதநமான ஒரு வேதமந்திரம். [ஸநுவாக்யா: அநு; வாக்யா.]

அநுவாகம்—வேதத்தின் உட்பகுப்பு.

அநுவாசநம்—, அநுவாசம்— 1. அன்பு. 2. கூடியிருத்தல். 3. வாசனையூட்டுதல். 4. வேலைச்சாலை. [ஸநுவாஸ: அநு-கூட. வாஸ-இருத்தல், பரிமளம்.]

அநுவாசிதம் — வாசனையூட்டப்பட்டது. [ஸநுவாஸித.]

அநுவாதம்—1. சம்மதம். 2. நிந்தித்தல். 3. முன்னர்க்கூறிய ஒருபொருளை யொரு நிமித்தத்தாற் பின்னும் எடுத்துக் கூறுதல். (பி. வி. ருo.) 4. வாதிகூறிய பொருளை நீயிவ் வாறுகூறினையெனக் கண்டனஞ்செய்தற் பொருட்டுப் பிரதிவாதியுங் கூறுதல். 'ஆங்க வன்முனுரைத்தமொழிகேட்டவன் பாதனை யநுவாதஞ்செய்து' (பெரியபு. திருஞான. கூகஎ.) [ஸநுவாத: அநு - பின். வாத- சொல்லுதல்.]

அநுவாதவொத்தி—மறுவொத்தி.

அநுவாதி—1. அநுவாதம் செய்பவன். 2. சமணரிலொருவன். (சி. சி. பர. நிகண். மதம். க. உரை.)

அநுவாதித்தல்—அநுவதித்தல்.'சொன்ன நூலநுவாதித்து' (திருவிளை. தடாத. ருச.)

அநுவித்தம் — 1. கலக்கப்பட்டது. 2. கலந்து பிங்கப்பட்டது. 3. குயிற்றப்பட்டது. 4. கூடினது. 5. சம்பந்தப்பட்டது. 6. துளைக்கப்பட்டது. 7. பலவன்னப்பட்டது. [ஸநு விஃ: அநு; விஃ.]

அநுவிதாயினீ — அநுசரிப்பது, இணங்கியது. 'ஈசுவரனுடைய இச்சாநுவிதாயினீயாக மாயையானது ஆன்மாவாரகமாகிய ஆணவம் நீங்கும்படிக்குக் கலையாதி தத்துவங்களைத் தன்னிடத்திலே யுதிப்பிக்கும்'(சி.சி.உ: அச. சிவாக்.) [ஸநுவியாயிநீ: அநு - பின். வியாயிநீ - விதிகளையநுசரிப்பது.]

அநுவியவசாயம்—பிரத்தியக்ஷப் பிரமாணத்தினுல் உணர்ந்ததை யுணர்ந்தேன் என ஒருவனுக்குப் பின்னிகழுமுணர்வு. (தர்க்காமிர்த. சுஙு.) [ஸநு - பின். வ்யவஸாய- உணர்வு, செயல்.]

அநுவிரசநம் — வழிவிட்டனுப்புதல். [ஸநுவ்ரஜந: அநு - பின். வ்ரஜந - போதல்.]

அநுவிருத்தம் — 1. முட்டைவடிவம். 2. முன் சூத்திரத்திலிருந்து அவாய்நிலையாற் பின்சூத்திரத்துக்கெடுத்துக்கொள்ளப் படுஞ் சொல் முதலியன. [ஸநுவ்ருத்த.]

அநுவிருத்தி — 1. இசையச்செய்தல். 2. இணங்கல். 3. உபசாரம். 4. ஒப்பாகச்செய்தல். 5. கூடிநின்று செய்தல். 'அவ்வொருவனே யென்று - மான்றலிலநுவிருத்தியாயிருக்கும் வகையினுல்' (சூத. எக். பூ. கக: கo.) 6. சேர்ந்திருத்தல். 7. தொடர்ச்சி. 'ஆகில் எங்கும் ஞானமானது அநுவிருத்தியாயிருக்கையினுலே' (சி. சி. உ: சுo. சிவாக்.) 8. புறநடை. [ஸநுவ்ருத்தி: அநு-பின். வ்ருத்தி - தொழில்.]

அநுவுரு—ஒத்தரூபம். 'பார்ப்பனமாக் களினிடையே பாண்டுமைந்த, ரநுவுருக்கொண் டுருமாறி யிருந்ததன்மை' (பாரத. திரௌ. சகூ.) [ஸநு - ஒத்த. உரு - ரூபம்.]

அநுவுலோமன் — அநுலோமன். 'அரும் பிரதிலோமனு மநுவுலோமனும்' (நல். பார. கன்னிகா. உச.) [ஸநுலோம.]

அநுவேதம்—1. கூட்டுதல். 2. சம்பந்தம். 'சங்கமறு சச்சிதா நந்தவொளி யுருவந் தானெனச்சிந் தித்திடலுட் சத்தாநுவேதம்' (வேதா. சூ. கருக.)[ஸநுவெய: அநு- கூட. வெய - துளைத்தல்.]

அநுற்பத்தி—1. சித்தியின்மை. 2. பிறப்பின்மை. [ஸநுத்பத்தி: அநு - எதிர்மறை. உத்பத்தி - பிறப்பு.]

அநுற்பூதம் — காணப்படாதது. 'அநுற்பூதசத்தம்' (சி. சி. உ: சுரு. சிவாக்.) [ஸநுத்பூத: அநு - எதிர்மறை. உத்பூத - காணப்படுவது.]

**அநாகம்**—1. ஆமோதித்தல். 2. ஒழுக்கம். 3. கழிந்தபிறப்பு. 4. குணம், தன்மை. 5. கோத்திரம். [அநுபவ.]

**அநாடன்** — விவாகஞ்செய்யாதவன். [அநூடஃ: அநு-எதிர்மறை. ஊடஃ-விவாகஞ்செய்தவன்.]

**அநாநகன்**—குறைவில்லாதவன். [அநூநகஃ: அநு - எதிர்மறை. ஊநகஃ - குறைவுடையோன்.]

**அநாநம்**—1. குறைவின்மை. 2. முழுமையும்.

**அநாபசம்**—இஞ்சிப்பூண்டு. [அநூபஜ: அநூப - ஈரம். ஜ - பிறந்தது.]

**அநாபம்**—1. ஈரம். 2. எருமை. 3. தவளை. 4. நீர்நிலை. 5. நீராருகுள்ளநிலம். 6. யானை. [அநூப: அநு - சமீபம். அப் - நீர்; இது, ஊப என்றாயிற்று.]

**அநார்த்துவாத்தி**—மேற்கதுப்பினெலும்பு. [ஹநூர்த்வாஸ்தி: ஹநு - கதுப்பு. ஊர்த்வ - மேல். அஸ்தி - எலும்பு.]

**அநாரு**—1. சூரியனுடைய தேர்ப்பாகனாகிய அருணன். 2. தொடையில்லாதவன். [அநூரு: அநு - எதிர்மறை. ஊரு - தொடை.] 3. புதன். 4. விடியற்காலம்.

**அநேகத்துவம்** — அநேகமாயிருக்குந்தன்மை. (தாயு. எனக்கென. ௬௨. உரை.)

**அநேகதங்காவதம்** — காஞ்சிபுரத்துள்ள ஒரு சிவஸ்தலம். (பெரியபு. ஏயர். ௧௬௪.)

**அநேகபம்** — 1. அநேகபேசம் என்னுந்தலம். 'பச்சிமாலயநல்லநேகபங் கடம்பை' (கந்தபு. நகர. அ௧.) 2. யானை. [அநேகப: அநேக - பல. ப-குடிப்பது. கையினாலும் வாயினாலுங் குடிப்ப தென்றபடி.]

**அநேகபேசம்**—காஞ்சிநகரத்துள்ள இருபது சிவாலயங்களுளொன்று; இது: விநாயகர் கஜமுகனைக் கொன்று அவன்கொம்பினுள்ள முத்துக்களாற் சிவனைப்பூசித்தமையால் வந்தபெயர் என்பர். (கந்தபு.நகர.அ௧. உரை.) [அநேகப - யானை. ஈசம் - ஈசுரனிருக்குமிடம்.]

**அநேகம்**—ஒன்றுக்குமேற்பட்டது, பல. 'இங்ஙக ரநேகநா ளிருந்த வெல்லையில்' (பாரத. வேத்திர. ௩௭.) [அநேகஃ: அந-எதிர்மறை. ஏகஃ - ஒன்று.]

**அநேகமாய்**—பெரும்பாலும்.

**அநேகமூர்த்தி** — கடவுள். [அநேகமூர்த்தி: அநேக - பல. மூர்த்தி - மூர்த்தமுடையவன்.]

**அநேகர்**—பலர். 'அடலரக்க ரநேகருடன் அடுபோர்செய்து' (பாரத. புட்பயா. ௧௬.)

**அநேகவற்பாவி** — முன்மொழியெண்ணும் பின்மொழிதத்திதார்த்தமாயும் வந்து பலரையாவது பலபொருளையாவது கருதிநிற்குஞ் சமாசம். 'பஞ்சபாண்டவ' ரென்பதிற் போல. 'தொகைத்துவிகு-முற்பதமெண்பிற் பதந்தத்தி தார்த்த முடித்துமெழூஉம் - பற்பல வேகவற் பஃவியநேகவற் பாவியென்றே' (பி. வி. ௨௧.) [அநேக - பல. வத் - போல, ஆக. ஹாவிநு - இருப்பது.]

**அநேகன்**—1. கடவுள். 'ஏகனுமாகி யநேகனுமானவ னாதனுமானுனென் றுந்தீபற' (திருவுந்தி. ரு.) [அவனவளதுவென்று பலவாய் நிற்கத்தக்கவனென்றபடி. ஷ. சிற்றம்ப. உரை.] 2. பசுவாகிய ஆன்மா. 'ஏகனநேகனிருள்கருமமாயை' (திருவருட்பய. ௬. ௨: இது சாதியொருமை.) 3. பலயோநிகளிலும் நிற்பவன். 'ஏகனநேகன்' (சங்கற்பமாயாவாதி. சங். அ. அடி.)

**அநேகாங்கம்**—1. அநேகாங்க வுருவகம். 'உருவக மேகாங்க மநேகாங்கமென' (தண்டி. ௩௬.) 2. பல அங்கம். [அநேக; அங்க.]

**அநேகாங்கவுருவகம்** — உருவகஅணி வகையுளொன்று; அஃது: ஒன்றன் அங்கங்கள் பலவற்றையும் உருவகஞ்செய்து சொல்லுவது. 'கைத்தளிராற் கொங்கை முகிழ்தாங்கிக் கண்ணென்னு - மைத்தடஞ்சேன் மைந்தர் மனங்கலங்க - வைத்ததோர் - மின்னுளதான் மேக மிசையுளதான் மற்றதுவு-மென்னுளதா நன்பா வினி' என்னுங் கவியிற் போல. (தண்டி. ௩௬. உரை.) [அநேகாங்க ரூபக.]

அநேகாசிரிதகுணம் — இரண்டு அல்லது இரண்டுக்கு அதிகமாகிய பல திரவியங்களை ஆதாரமாகக் கொண்ட சையோகம் முதலிய குணம். (தர்க்காமிர். உகூ.) [அநேக - பல. ஆஸ்ரித - பற்றியது.]

அநேகாந்தம் — சந்தேகமானது, பலமுடிவுடையது. [அநேகாந்த: அநேக - பல. அந்த - முடிவு.]

அநேகாந்தவாதம்—ஆருகதவாதம். (சி.சி. ச: உ0. சிவாக்.) [அநேகாந்த - பலமுடிவு. வாத - பேச்சு.]

அநேகாந்தவாதி—ஆருகதன். (சி.போ.பா. அவை. 12.)

அநேகாந்திகம்—1. பலவிதம். 2. அநைகாந்திகம்.

அநேகார்த்தம் — பலபொருள். 'ஆன்மாவின் வடிவுதானும் அநேகார்த்தகூட்டமென்னில்' (சி. சி. ச: ரு.) [அநேக-பல. அர்த்த-பொருள்.]

அநேகான்மவாதம் — ஆன்மாக்கள் பல உண்டென்று வாதித்தல்.

அநேகான்மவாதி—ஆன்மாக்கள் அநேகம் என்று வாதிப்போன். 'வியங்கிய வியஞ்சக பாவ சம்பந்தத்தோடு வியாப்பிய வியாபக பாவ சம்பந்த சம்பந்தியாயிருப்பனென்றநேகான்மவாதியாய் நீர்சொன்ன தேதென்னில்' (சி. சி. உ: உ. ஞானப்.) [அநேக - பல. ஆத்மவாதிந் - ஆன்மா என்போன்.]

அநேகேச்சுரவாதம் — பல கடவுளருளரென்று வாதித்தல். 'அற்றேல் அநேகேச்சுரவாதம் பரிகரித்தற்பொருட்டு' (சி. சி. க: சு0. சிவஞா.) [அநேக; ஈஸ்வர; வாத.]

அநேகேசுரவாதி—கடவுளர் பலர் என்று வாதிப்போன். (சி. போ. சிற். 1, 3.)

அநேகேசுவரத்வம் — ஈசுவரர் பலராயிருக்குந்தன்மை. 'சத்திமானு மநேகமாய் அநேகேசுவரத்வம் வரும்' (சி. சி. க: சுக. சிவாக்.) [அநேகேஸ்வரத்வம்.]

அநேகை—அநேகமாயிருக்கிறவள். 'சத்தியநேகையென்னில்' (சி. சி. க: சுக. சிவாக்.) [அநேகா.]

அநேடமூகன்— 1. கபடமுடையவன். 2. செவிடும் ஊமையு மானவன். 3. துர்ச்சநன். [அநேடமூக: அந் - ஒப்பு. ஏட - செவிடு. மூக - ஊமை.]

அநேடன்—அறிவில்லாதவன். [அநேட: அந் - ஒப்பு. ஏட - செவிடு.]

அநைக்கியம்—அநைக்கியம். [அநைக்யம்]

அநைக்கியம்—1. ஒற்றுமையின்மை. 2. ஒன்றன்மை, பன்மை. [அநைக்யம்: அந் - எதிர்மறை. ஐக்யம் - ஏகத்துவம்.]

அநைகாந்தம் — ஏதுப்போலி மூன்றுவகையுளொன்று; அது: விபக்ஷத்தினிங்கிப் பக்ஷ சபக்ஷங்களி லிருத்தலாகிய நியமமல்லாத ஏது. இது பொதுவநைகாந்தம், சிறப்பநைகாந்தம் என இரண்டாய் விரியும். (சைவப். ககூ.) [அந் - எதிர்மறை. ஏகாந்தம் - ஏகாந்தசம்பந்தம்.]

அநைகாந்திகம்—அநைகாந்தம். இது ஆறுவகை: அவையாவன:—''சாதாரணம், அசாதாரணம், சபக்கைகதேசவிருத்தி விபக்கவியாபி, விபக்கைகதேசவிருத்தி சபக்கவியாபி, உபயைகதேசவிருத்தி, விருத்தவியபிசாரி' (அநுமான. உஉ-ஆம் பக்.) 'ஆகையால் ரூபாரூபமென்னும் விருத்ததருமத்வயாசிரயத்துவம் அநைகாந்திக தோஷமென்று இதன்பொருள்' (சி.சி.ச:கஉ.சிவாக்.) [அந் - எதிர்மறை. ஏகாந்திகம் - ஏகாந்தசம்பந்தமுடையது.]

அநைசுவரியம்—ஐசுவரியமின்மை.

அநைதிகம்—ஐதிகமல்லாதது. [அநைதிஹ்யம்: அந - எதிர்மறை. ஐதிஹ்யம் - கர்ணபரம்பரையானது.]

அநோககம் — மரப்பொது. (வைத்தியபரி.)

அப்சரசு — தேவுலகத்துள்ளவேசையர். [அப்ஸரஸ்: அப் - சலம். ஸரஸ் - சரிப்பவர்.] இவர் கந்தருவருடைய மனைவியரென்றும், ஸ்நானஞ்செய்வதிலே மிகப்பிரியரென்றும், சூரியசகாயரான ஏழுகணத்தவர்களுள்ளே யொருகணத்தவரென்றும்,

அவர் இருதஸ்தலை, புஞ்சிதஸ்தலை, மேநகை, சகசனியை, பிரமலோசை, அநுமிலோசை, இருதாசி, விசுவாசி, ஊர்வசி, பூர்வசித்தி, திலோத்தமை, அரம்பை யெனப் பன்னிருவ ரென்றும், முறையே சித்திரை முதலிய மாசந்தோறும் தனித்தனி சூரியனோடு போக்குவரவுடையரென்றும் சொல்லப்படு வர். ஊர்வசி, மேநகை, அரம்பை, மிசிர கேசி, அலம்புடை., விசுவாசி, இருதாசி, பஞ்ச சூடை, திலோத்தமை, பாநுவதி, அபலை, இரம்பியை யெனப் பன்னிருவரென்றும் கூறுவர். இவர் இன்னும் பேதித்துக்கூறப் படுவர்.

அப்தம்—வருடம். 'சகாப்தம்' [சுஷு.]

அப்தோரியாமம்-1. சோதிட்டோமயாகத் தின் எழாமங்கமாய் இறுதியிற்செய்யப்படும் யாகம். 'வடக்குநோக்கிய முகத்தினின்றும் அதர்வணவேதமும், அப்தோர்யாமமென் னும் யாகமும், அநுட்டுப்பு என்னுஞ் சந்த மும், வஞ்சிப்பாவும், எனையவும் தோன்றின' (கூர்மபு. பலவ. உச. உரை.) 2. இந்த யாகத் தி னிறுதியிலே அத்தியயநஞ்செய்யுஞ் சாம வேதவாக்கியம். [சுவொய-ரா௮.]

அப்ப—1. அப்பனையழைக்கும் அண்மை விளி. 2. ஓரதிசயச்சொல். (வழக்.)

அப்பக்கோடி—ஒருவகைக்கொடி.

அப்பட்டம்—கலப்பற்றது.

அப்பட்டா—வட்டத்திருப்பி. (மலை)

அப்படி-அவ்வண்ணம்.'அப்படியொருத்தி செல்ல' (கந்தபு. தெய்வ. அகூ.) [அ - ஒரு சுட்டெழுத்து. படி - வண்ணம்.]

அப்பணை—1. ஆதாரம். 2. உத்தரவு, கட் டளை. 'ராஜாவும் அப்பணையிட்டுவிட' (குரு பரம். ஆறு. 160.) 3. பிணை. [திசைச்.]

அப்பத்தாள் — அப்பனைப்பெற்ற தாய். (வழக்.)

அப்பதி—1. கடல். 2. வருணன். [அப் பதி: அப் - நீர். பதி - தலைவன்.]

அப்பப்ப—ஓர் அதிசயச்சொல். [வழக்.]

அப்பம்—1. ஒருவகைச் சிற்றுண்டி. 'என லெட்பொரியோடப்ப மிவையென்பவுணரா' (உபதேச. வானு. கசுக.) 2. வட்டத்திருப்பி. (மலை.)

அப்பர் — 1. ஆண் ஆட்டின் பெயர்களு ளொன்று; இஃது இப்போது வழக்கிலில்லை. 2. ஆண்குரங்கு. (தொல். பொரு. சு0உ. உரை.) 3. சிவன். (பெரியபு. நமிநந். கரு.) 4. சைவசமயகுரவர்நால்வருளொருவராகிய திருநாவுக்கரசர். (பெரிய. திருஞான. சுகூடு.) 5. தந்தையார். 'விற்பரம ரப்பருள் வித்தக மருப்புடைய பெருமானே' (திருப்பு. காப்பு. ௩.)

அப்பல்—1. ஒற்றுதல்.'யாக்கையினப்பும்' (இராமா. இராவணன்சோக. ௩௧.) 2. பூசுதல்.

அப்பவருக்கம் — சிற்றுண்டியினம். அபூ பம், இலையடை, கஞ்சம், சஃகுல்வி, நொலை யல், பூரிகை, பொள்ளல், போநகம், மண் டிகை, மெல்லடையெனப் பத்தும் அப்பவருக் கம் எனப்படும். (பிங்.)

அப்பவாணிகர் — ஒருவகைச்சாதியார்; இவர்: அப்பஞ்செய்துவிற்பவர்.

அப்பழுக்கு — 1. அசுத்தம். 2. குற்றம். 'அப்பழுக்கில்லாதவன்'

அப்பளக்காரம் — உறைப்பும், உவர்ப்பு முள்ள ஒருவஸ்து.'குடல்வாதஞ் சூலைகொடி தான வாத-மடல்புரியு மைய மறுக்கும்-நெடு வயிற்றி-னுப்பிசத்தி னோடே யுபர்குன்மநோ யகற்று-மப்பளக்காரமது' (பதார்த்த.கக0எ)

அப்பளம்—ஒருவகையப்பம்; இது: உழுந் தினாலும் அரிசியினாலும் செய்யப்படுவது. 'வாதத்தை யுண்டாக்கும் மாபலத்தை யுங் கொடுக்குஞ் - சீதத்தை மேவுகபந் தீர்க்குங் காண் - ஓதுமுழுந் - தப்பளஞ்சோற் றப்ப ளங்கா லாதிகள்வீஞ் சாதுனிலை - யொப்ப வளஞ் செய்யு முரை' (பதார்த்த. கசஉகூ.)

அப்பளாக்காரம்—உறைப்பும் உவர்ப்பும் உள்ள ஒருவஸ்து; அப்பளக்காரம்.

அப்பளாம் – அப்பளம்.

அப்பறாத்தூணி — 1. அம்புதொலையாமல் இருக்குங் கூடு. 2. சரகாண்ட பாஷாணம். (வைத்தியபரி.)

அப்பன் — 1. நீருடையவன். 'ஆடனீள் சடைமேவிய வப்பனே' (தேவார. திருவால. திருவிய. ௩. சம்.) [அப்பு - நீர்.] 2. பிதா. 'அப்பனென்று மன்னையென்று மாரிய னென்று முனையே செப்புவது' (தாயு. பரா. உஅஉ.)

அப்பன்காளை—பெருமாள்மாடு.

அப்பா — 1. அதிசயம் துக்கம் முதலிய வைகளைக் காட்டும் ஒருசொல். 'என்னப்பா மற்றிவ் வெழுபது வெள்ளமு மொருவன்-றின்னப் போதுமோ தேவரில் வலியரோ' (இராமா. மூலபல. ௪0.) 2. பிதாவைப் பிள்ளையழைக்கும் ஒரு விளிப்பெயர். 3. இளைஞர் தாம் நன்குமதிக்கும் முதியோரை விளிக்கும்போதும், முதியோர் இளைஞரை யன்பு காட்டி விளிக்கும்போதும் பிரயோகிக்கும் ஒரு சொல்.

அப்பாகம்—வாலுளுவை. (வைத்தியபரி.)

அப்பாட்டன் — பாட்டனுடையபிதா. (திசை.)

அப்பாடா— } அதிசயத்தையும் சிரமபரி
அப்பாடி— } காரத்தையும் உணர்த்தும் ஒரு குறிப்புமொழி.

அப்பாயி—தகப்பனைப்பெற்ற பாட்டி.

அப்பால் — 1. அதன்பின்; அதன்மேல். 'பின்னவன் பெற்ற செல்வ மடியனேன் பெற்ற தன்றோ-வென்னினி யுறுதி யப்பால்' (இராமா. கைகேசி. ௧௧0.) 2. அப்பக்கம். 'அப்பாலிருந்தவநசரிதரைவர்க்கு' (பாரத. நச்சுப். ௧௬.) [அ; பால்.]

அப்பாலுமடிச்சார்ந்தார் — சைவருள் தொகையடியாருள் ஒருவகையார்.

அப்பாவி—பேதை. (வழக்.)

அப்பிரை—ஐப்பசி. (S.I.I. III. 150.)

அப்பிங்கநம் — அப்பியங்கநம். [ஸம்ஸ்கிருதம் அப்யங்ந.]

அப்பியங்கநம்—அப்பியங்கம். 'தேகமுழுதும் நனையும்படி முதலில், சிரசிற்சொரிந்து ஸ்நாநஞ்செய்வதுவே அப்பியங்கநமாம்' (தைல. பாயிர. ௫௧ உரை.)[ஸம்ஸ்கிருதம் அப்யங்ந.]

அப்பியங்கம்—1. உடம்பிலே தைலம்பூசுதல். 'அப்பியங்கஞ்செய்யிற் செவிடுண்ணுக்கு மகலும்' (தைல. தைலவ. ௬அ.) 2. கண்ணுக்கு மைதீட்டல். 3. பிண்ணுக்கு. [ஸம்ஸ்கிருதம் அப்யங்க.]

அப்பியசித்தல் — அப்பியாசஞ்செய்தல். 'மறுமைக்குபயோகமான வேதாந்தசாத்திரங்களையும் நாடோறும் அப்பியசிக்கவேண்டியது' (மது. ௪. ௧௬.)

அப்பியஞ்சநம் — 1. எண்ணெய்ப்பதார்த்தம். 2. கண்மடலில் மைதீட்டல். 3. தேகத்தில் எண்ணெய்பூசுதல். [ஸம்ஸ்கிருதம் அப்யஞ்ஜந: அபி; அஞ்ஜந.]

அப்பியந்தம் — தாமதம்.

அப்பியந்தரகரணம்— அகத்துநிகழ்கருவி. 'அப்பியந்தரமேவாகியமென்னச் - செப்பிய கரண மகம்புற மாகும்' (பி. வி. ௧௨. உரைச் சூத்திரம்.) [ஸம்ஸ்கிருதம் அப்யந்தரகரண: அப்யந்தர - உள். கரண - கருவி.]

அப்பியந்தரம்—1. இடைக்காலம். 2. உள்வீதி. 3. உள்ளிடம். 4. தடை, இடையூறு. [ஸம்ஸ்கிருதம் அப்யந்தர: அபி - முன். அந்தர - உள்.]

அப்பியம்—தேவர்க்கிடும் அவிசு. (அறநெறிச். 26.)

அப்பியமேகம் — ஒருவகை மேகரோகம்; அதன் தன்மை: மூத்திரமானது யானையின் மதசலத்தைப்போல அதிவிரைவாய் ஒவ்வொருவேளைக்கொருபடியளவாக இறங்குவதும் காய்ச்சினால் உவர்மண்ணைப்போல அடியில் வண்டல்படிவதும் ஆம். (சீவரட். ௧0௫.)

அப்பியாகதன்—1. சந்திக்கவந்தோன். 2. முன்னரறியப்படாதுவந்தோன். 'அப்பியாகதரோடுத்தமவதிதிபூசையும்புரிதல்' (திருவானை. கோச்செங். ௧௬0.) 3. வந்துசேர்ந்தவன். [ஸம்ஸ்கிருதம் அப்யாகத: அபி - எதிர். ஆகத - வந்தவன்.]

அப்பியாகமநம்—1. சந்தித்தல். 2. வந்துசேருதல். [ஸம்ஸ்கிருதம் அப்யாகமந: அபி - எதிர். ஆகமந - வருதல்.]

அப்பியாகமம்—1. அடித்தல். 2. அயல். 3. எழும்புதல். 4. கொலை. 5 சந்தித்தல். 6. பகை. 7. யுத்தம். 8. வந்துசேருதல், வருதல். [ஸம்ஸ்கிருதம் அப்யாகம: அபி-கிட்ட. ஆகம வருதல்.]

அப்பியாகாரம் — 1. உண்ணுதல். 2. களவு. [ஸம்ஸ்கிருதம் அப்யாஹார: அபி; ஆஹார - உண்பது, எடுப்பது.]

அப்பியாசபூமி—ஞானபாதத்துக்குச் சாதநமாகிய சுவேச்சை, விசாரணை, தநுமாநசி யென்னும் நிலைகள். (வேதா. சூ. ௧௬அ. உரை.) [ஸம்ஸ்கிருதம் அப்யாஸ - பலகாற்செய்தல். பூமி - நிலை.]

அப்பியாசம் — 1. இருமுறை கூறுதல். 2. சமீபம். 3. தொழில்கொள்ளுகை. 4. பலகாலுஞ்செய்திருக்கை. 5. பலகாலுஞ்சொல்லுகை. 'மறுவப்பியாசஞ்செயலுமது' (சூத. ஞாந. கச: கடு.) 6. பலகாலும் அறிந்திருக்கை. 7. பழக்கம். (பகவற். சு: நடு. உரை.) 8. பெருக்கல் (கணக்கதிகாரம்). 9. வாய்ப்பாடம்பண்ணுதல். [ஸம்ஸ்க்ருத அப்யாஸ: அபி; ஆஸ.]

அப்பியாசயோகம் — கடவுளைக்குறித்துப் பலகாலுஞ் செய்யும் இயாகம். [அப்யாஸ - பலகாலுஞ்செய்தல். யோக - இயாகம்.]

அப்பியாசி — 1. அப்பியாசமுடையவன். 2. ஐந்ததிகாரிகளில் ஒருவன்; (வேதாந்த.) இவன் சற்கரும முதிர்ச்சியால் கனவைப்போல மநந்தோற்றமே செகமெனக்கருதி இரண்டு சென்மத்திற் சீவன்முத்த னாகுமவன். 'உலகங் கனவெனக்கண் டுள்ளநற் கருமஞ்சேர்ந்து பிறப்பிரண்டினி லப்பியாசி' (வேதா. சூ. கச.) [அப்யாஸிந.]

அப்பியாதாநம் — தொடக்கம். [அப்யா தாந: அபி; ஆதாந - எடுத்தல்.]

அப்பியாமர்த்தம்-யுத்தம். [அப்யாமர்த: அபி; ஆமர்த - மிதித்தல்.]

அப்பியுக்கணம்—1. நனைத்தல். 2. நால்வகைச்சுத்திகளுளொன்று; அது: கவிழ்ந்த பதாகைமுத்திரையையுடைய கைத்தலத்தினால் பதார்த்தத்தினிடத்துத்தோன்றிய சித்தினது பிரகாசமானது தன்னுடைய தானத்தைவிட்டு நீங்காமலிருக்கும்பொருட்டு மூடுவது. 'அருகங் கவசந்தா னப்பியுக்கணத் தென் - றுரைசெய்வர்' (சைவச. பொது: நடுடு.) 3. நீர்தெளித்தல். [அப்யுக்ஷண: அபி; உக்ஷண - நனைத்தல்.]

அப்பியுத்தாநம் — 1. இருக்கையிலிருந்தெழும்புதல். 2. உயர்தல், மேம்படல். 3. கீர்த்தி. 4. சித்தியடைதல். 5. சூரியோதயம். 6. மேலெழுகை. (பகவற். ச: எ.) [அப்யுத்தாந: அபி; உத்தாந - எழுதல்.]

அப்பியுதயம்—1. (கிரகம் முதலியவைகளின்) உதயம். 2. சித்தியடைதல். 3. சூரியோதயம். 4. திருவிழா. 5. தொடக்கம். 6. வளர்ச்சி, நல்வாழ்வு. 7. வர்த்திப்பு. [அப்யுதய: அபி; உதய - உதித்தல்.]

அப்பியுபகமம் — 1. அணித்தாகுகை, போய்ச்சேருகை. 2. இயைபு. 3. மெய்யென்றொத்துக்கொள்ளுகை. 4. வாக்குத்தாநம், உடன்பாடு. [அப்யுபகம: அபி; உபகம - போதல்.]

அப்பியுபபத்தி–1. உடன்பாட்டுப்பொருத்தம். 2. உதவிக்குப்போதல். 3. தயவு, இரங்குகை. 4. தேற்றுகை. 5. பாதுகாப்பு. [அப்யுபபத்தி: அபி; உபபத்தி - போதல்.]

அப்பியுபாயநம் — 1. கைக்கூலி. 2. புகழ்ந்து கொடுக்கும் உபகாரம் [அப்யுபாயந: அபி: உபாயந - உபகாரம்.]

அப்பியுபாயம் — 1. உடன்பாட்டுப்பொருத்தம் 2. மிக்க உபாயம். [அப்யுபாய: அபி; உபாய-போவது.]

அப்பிரகற்பம் — ஒரு வைத்தியநூல்; அது: அப்பிரகத்தைப்பற்றிச் சொல்வது.

அப்பிரகபற்பை — அப்பிரகபற்பம். (இராசவைத். எ.)

அப்பிரகபாஷாணம்–விளைவுப்பாஷாணத்தொன்று. (மூ. அ.) [அப்ரக; பாஷாண.]

அப்பிரகம்—ஒருவகை நிரசவஸ்து; இது: பொன்னப்பிரகம், வெள்ளியப்பிரகம், தேனப்பிரகம், கிருட்டிணப்பிரகம், கெந்தகாப்பிரகம் என நிறம்பற்றி யைவகைப்படும். இவையெல்லாம் நூற்றிருபதுவகையுலோகங்களிற் சேர்ந்தவைகள். 'அப்பிரக மென்றறைந்தா லண்ட மகோதரமும்-எப்பிரமியங்களுமுன் னீரிழிவும் - வெப்பூரற், பேதமும் போ காமேகப் பித்தமுங்கண் ணோயும்பல் - வாதமும்போந் தாதுவுமா மால்' (பதார்த்த. கஉகo.) [அப்ரக.]

அப்பிரகலோகம்—பிரமலோகம் இருபதினுள்ளே பன்னிரண்டாவது. (பௌத்த; மணிமே. ங.)

அப்பிரகாசத்துவம் — பிரகாசமில்லாத தன்மை. (வாசுதே. ககச.) [ஸ்வூகாஶ ஃவம்: அ - எதிர்மறை. வூகாஶக்வம் - பிரகாசத்தன்மை.]

அப்பிரகாசம்—1. இருள். 2. பிரகாச மின்மை. 'ஒருகாலத்துப் பிரகாச மொரு காலத் தப்பிரகாச மருவாநிற்குமோ சத்து' (சூத. எக்கி. பூ. சஎ: உஎ.) 3. பிரசித்த மல்லாதது. 4. மறைவிலிருப்பது. 5. வெளிப் படையல்லாதது. [ஸ்வூகாஶ: அ - எதிர் மறை. வூகாஶ - ஒளி.]

அப்பிரகிருட்டம்—காக்கை.

அப்பிரகை — அப்பிரகபற்பம். (இராச வைத். எ.)

அப்பிரசந்நம்—1. கலங்கல். 2. திருத்தி பெற்றிராமை. 3. பிரியவீனமாயிருத்தல். [ஸ்வூஸஜ: அ - எதிர்மறை. வூஸஜ - தெளிவு, பிரியமானது.]

அப்பிரசம் — 1. சந்ததியில்லாதது. 2. சநங்களில்லாதது. [ஸ்வூஜ: அ எதிர்மறை. வூஜா - சந்ததி, சநம்.]

அப்பிரசன் — சந்ததியில்லாதவன். [ஸ்வூஜ: அ; வூஜா - சந்ததி.]

அப்பிரசாதம் — தயவின்மை. [ஸ்வூ ஸாத.]

அப்பிரசாதை—மலடி.

அப்பிரசித்தம் — 1. பிரசித்தமின்மை, வெளிப்படையாகாமை. 2. அறியப்படாதது. (அநுமாந. கரு-பக்.) [ஸ்வூஸிஜ.]

அப்பிரசித்தவிசேடணம் — பக்கப்போலி வகையுளொன்று; அது: எதிரிக்கு வெளிப் படையில்லாதபொருளைத் துணிபொருளாக வைத்துப் பக்கவுறுப்புக்கூறுவது. (மணிமே. 29; 151) [ஸ்வூஸிஜம் - வெளிப்படை யின்மை. விசேடணம் - துணிபொருள். அவூஸிஜவிஶெஷணம்.]

அப்பிரசித்தவிசேடியம் — பக்கப்போலி வகையுளொன்று; அது: எதிரிக்கு வெளிப் படையில்லாத பொருளைப் பக்கவுறுப்பின் விசேடியமாகக்கூறுவது. (மணிமே. 29; 152.) [ஸ்வூஸிஜவிஶெஷ்யம்.]

அப்பிரசித்தவுபயம்—பக்கப்போலிகளுள் ஒன்று. (மணிமே. 29; 152)

அப்பிரசித்தாசம்பந்தம் — பக்கப்போலி வகையுளொன்று; அது: தமக்கு மாறாய்நின்ற வன், ஆராய்ந்து துணிந்தபொருளைத் தானும் அவனுக்குப் பொருந்தச் சாதித்துக்கொடுத் தல். 'அப்பிரசித்தா சம்பந்தமாவது, எதிரிக் கிசைந்த பொருள்சாதித்தல்' (மணிமே. உகூ: கஅரு.) [ஸ்வூஸிஜ - வெளிப்படை யாகாத. அஸம்பந்ந - விசேடிய விசேடண சம்பந்தமின்மை. அவூஸிஜாஸம்பந்ந.]

அப்பிரசித்தோபயம்—பக்கப்போலிவகையு ளொன்று; அது: எதிரிக்கு வெளிப்படை யில்லாத விசேடண விசேடியங்களைப் பக்க வுறுப்பாகக்கூறுவது. [ஸ்வூஸிஜொஜய.]

அப்பிரத்தியக்ஷம் — இந்திரியங்களுக்கு விடயமாகாதது. 'அமூர்த்தமாய் அப்பிரத்தி யக்ஷமாய்' (சி. சி. க: ந0. ஞாநப்.) [ஸ்வூ த்யக்ஷ: அ; வூத்யக்ஷ.]

அப்பிரத்தியயம்—1. அறிவில்லாமை. 2. சந்தேகம். 3. நம்பிக்கையின்மை. 4. விகுதி யன்மை. 'அதாது' பார். [ஸ்வூத்யய: அ - எதிர்மறை. வூத்யய - விகுதி, நிச்சயம், நம்பிக்கை, அறிவு.]

அப்பிரத்துதப்பிரசஞ்சாலங்காரம் — புனை விலிபுகழ்ச்சியணி; அது: அவர்ணியத்தை வர்ணிக்க அதனது சம்பந்தத்தால் வர்ணியந் தோன்றுதல். (குவல.) [ஸ்வூஸ்தூதவூ ஶம்ஸாலங்கார.]

அப்பிரத்துதம் — 1. சம்பந்தப்படாதது. 2. தொடங்காதது. 3. புகழப்படாதது. 4. வழக்கமில்லாதது. [ஸ்வூஸ்தூத: அ; வூ ஸ்தூத - சம்பந்தப்பட்டது; தொடங்கப் பட்டது; புகழப்பட்டது.]

அப்பிரதக்கிணம்—இடம்வருகை. [ஸ்வூ தக்ஷிண: அ; வூதக்ஷிண - வலம்வருதல்.]

அப்பிரதட்சிணம் — அப்பிரதக்கிணம். [ஸ்வூதக்ஷிண.]

அப்பிரதாநம்—1. கௌணநிலை, சிரேட்ட மில்லாதநிலை. 2. தலைமையில்பொருள்.

'பிரதா நத்தோடப்பிர தாநக் - தலைமைப் பொருளொடு தலைமையில் பொருளே' (பி. வி. கஅ. உரைச்சூத்திரம்.) 3. முக்கியமற்ற செயல். [ஸ்வ்யாந: அ; ப்ரயாந - தலைமையாயது, முக்கியமாயது.]

அப்பிரதிகாம் — ஒருநரகம். (சிவதரு. சுவர்க்கநரகவி. கூ௰.)

அப்பிரதிட்டம் — ஒருநரகம்; இதில் கொடியபாவிகள் யந்திரங்களிலிடப்பட்டு அரைக்கப்படுவார்கள்.

அப்பிரதிபந்தி — 1. தோல்வித்தாநம் இரண்டனுள் ஒன்று; அஃது: அர்த்தந் தெரியாதது. (சி. சி. அளவை. கச. சிவாக்.) 2. உண்மையாகக்கொள்ளாமை.

அப்பிரதிபை—1. தடுமாறுதல். 2. திகைத்தல். 3. தோற்றுமை. (சி. சி. ௩: ௪. சிவாக்.) 4. விடைசொல்லத்தெரியாது வேறொரு கருத்துடையான்போன்றிருத்தலாகிய தோல்வித்தாநம். (சி. சி. அளவை. கச. சிவாக், சிவஞா; தர்க்கபா. அச.) [ஸ்ப்ரதிபா: அ - எதிர்மறை. ப்ரதிபா - ஒளி, அறிவின்விளக்கம்.]

அப்பிரநாகம்—அயிராவதயானை. [அப்ர நாக: அப்ர - தேவுலகம். நாக - யானை.]

அப்பிரபுட்பம் — 1. ஆகாயப்பூ, இல்பொருள். 2. நீர். 3. மழை. [அப்ரபுஷ்ப: அப்ர - மேகம். புஷ்ப - பூ.]

அப்பிரம்—1. அப்பிரகம். 2. ஆகாயம். 3. தேவலோகம். 4. பொன். 5. மேகம். (பிங்.) 'மேகஙன்னுநீர் பொழிதலாலப்பி ரமெனு நாமஞ்சாரும்' (மச்சபு. சூரியரத. கள.) [அப்ர.]

அப்பிரமண்ணியம்—உதவிவேண்டிக் கூறுங் குறிப்புமொழி. (கலிங். 455. பண்டித. அ. கோ. பதிப்பு.)

அப்பிரமாணம்—1. அளக்கப்படாதது. 2. எல்லைக்குட்படாதது. 3. பிரமாணமல்லாதது. 'சாத்திரவசநமப்பிரமாணமாய்விடும்' (விசாரசா. ௫௬.) [ஸ்ப்ரமாண: ப்ரமாண - அளவை.]

அப்பிரமாணுபலோகம் — பிரமலோகம் இருபதனுள் ஐந்தாவது. (மணிமேக. ௬.)

அப்பிரமாணிக்கம்—1. ஆதாரமற்றது. 2. அயோக்கியத்தனம்.

அப்பிரமாதம் — சாக்கிரதை. 'புத்திநற்போதமப்பிரமாதமுமளித்தாள்' (கூர்மபு. தமோ. ௧௦.) [ஸ்ப்ரமாத: அ - எதிர்மறை. ப்ரமாத - அவதாநமின்மை.]

அப்பிரமாலை — மேகசமூகம், மேகநிரை. [அப்ரமாலா: அப்ர - மேகம். மாலா - வரிசை.]

அப்பிரமு — அப்பிரமை, ஐராவதயானையின் பெண்யானை.

அப்பிரமேயம்—1. எல்லைப்படாதது. 2. ஓரெண்; அது: தசமகாபூரி. 3. பிரமம். 4. பிரமாணத்தினால் அறியப்படாதது. [ஸ்ப்ரமேய: அ; ப்ரமேய - அளக்கப்பட்டது.]

அப்பிரமேயன் — 1. கடவுள். 2. சிவன். 'புகழ்கொளப்பிரமேயன்' (சூத. எக்கி. பூ. ௩௩: ௬.) 3. பிரமாணங்களாலறியப்படாதவன். 'அத்துவாமூர்த்தியாகி யப்பிரமேயனாகி' (சூத. ஞாந. கக: கஅ.) [ஸ்ப்ரமேய: அ; ப்ரமேய - அளக்கப்பட்டவன்.]

அப்பிரமை—1. பொய்யறிவு. [அ - எதிர்மறை. ப்ரமா - மெய்யறிவு.] 2. கீழ்த்திசைப் பெண்யானை.

அப்பிரயோச்சியம் — 1. ஏவப்படாதது. 2. பிரயோகிக்கப்படாதது. [அ - எதிர்மறை. ப்ரயோஜ்ய - ஏவப்படுவது, பிரயோகிக்கப்படுவது.]

அப்பிரயோசநம் — பிரயோசநமின்மை. 'அநிர்வசநீயமாயப்பிரயோசநமாய்' (சி. சி. சுு: ௫. ஞாநப்.) [ஸ்ப்ரயோஜந: அ; ப்ரயோஜந.]

அப்பிரவர்த்தகம்—1. செய்யஏவாதது. 2. செயலிலது. [ஸ்ப்ரவர்த்தக: அ - எதிர்மறை. ப்ரவர்த்தக - எழுப்புவது, ஏவுவது.]

அப்பிரவர்த்தநம் — 1. ஏற்படாமை. 2. சம்பவியாமை. 3. செய்ய ஏவாமை. 4. செய்யாதொழிதல். 5. அநாசாரம். 6. தொடங்காமை. 7. முன்போகாமை. [அப்ரவர்த்தந: அ; ப்ரவர்த்தந - சம்பவித்தல், ஆசாரம், தொடக்கம், போதல்.]

அப்பிரவிருத்தன்—பிரவிருத்தியற்றவன். [ஸம்ஸ்க்ருத: அ - எதிர்மறை. ப்ரவ்ருத்த - தொழில்செய்யத்தொடங்கினவன்.]

அப்பிரவிருத்தி—1. செயலொழிந்திருக்கை. 2. முயற்சியின்மை. 'ஆன்மாவிற் சிவத்துவம் அப்போ தப்பிரவர்த்திருப வஙபிவியத்தி யெனுஞ்சத்தி யருபமாயிருந்து' (சி. சி. எ: உ. ஞாநப்.) [ஸம்ஸ்க்ருத: அ - எதிர்மறை. ப்ரவ்ருத்தி - செயல், முயற்சி.]

அப்பிராகிருதம்—1. பாகதமல்லாதது. 2. பிரகிருதிசம்பந்தமல்லாதது. 'அப்பிராகிருத லோகம் நித்தியம்' (சி. சி. உ: எஉ. சிவாக்.) 3. விசேடமானது. [ஸம்ஸ்க்ருத: அ - எதிர்மறை. ப்ராக்ருத - பிரகிருதிசம்பந்த முடையது, கோடிய பேச்சு.]

அப்பிராணம் — சுவாசமின்மை. [ஸ; ப்ராண - சுவாசம்.]

அப்பிராணி—1. உயிரில்லாதது. 2. வலியற்றவன். 3. பேதை.

அப்பிராத்தகாலம்—1. நிக்கிரகத்தாநங்களு ளொன்று; அது: பிரதிஞ்ஞைமுதலிய ஐந்து அவயவங்களையும் முறைபிறழப்பிரயோகித்தல். 'அப்பிராத்தகாலமாவது - வாதம் பண்ணுமிடத்து வாதியானவன் பஞ்சாவயவங்களை யடைவின்மாறிப் பிரயோகித்த லெனவறிக' (சி. சி. அளவை. கசு. மறை.) 2. பிராத்தகாலமல்லாதது. [ஸம்ஸ்க்ருத: அ; ப்ராப்தகால - அடைந்தகால முடையது.]

அப்பிராத்தம்—1. அடையாதது. 2. வாராதது. 3. விதிப்படிவாராதது. 'ஏத்துமப் பிராத்தப் பிராத்தியபேதமெனில்' (சூத. எக்கி. பூ. ௩அ: கசு.) [ஸம்ஸ்க்ருத: அ; ப்ராப்த - அடைந்தது.]

அப்பிராந்தி — 1. தடுமாற்றமின்மை. 2. மெய்யுணர்வு.

அப்பிராப்பியம் — அடையத்தகாதது. 'அப்பிராப் பியமென் றுரைக்கினம் முத்திக் கமைந்தசா தனந்தழு வுதலென் - னெப்ப வாதலினால்' (சூத. எக்கி. பூ. ௩அ. கரு.)

அப்பிராமணன் — 1. பிராமணனல்லாதவன். 2. பிராமணனைப்போன்றும் பிராமணனல்லாதவன். (பி. வி. உக. உரை.) [ஸ - அன்மை, ஒப்புமையுள்ளிட்ட அன்மை.]

அப்பிராமாணியம் — பிரமாணத்தாலே நிச்சயம்பண்ணப்படாதது; பிரமாணமாகாமை. 'பவுதிகாசாரியர் பவுதிகர்க்குத் தீக்ஷைபண்ணக்கடவர்களென்னும் வசநம் நிஷ்பலமாய் அப்பிராமாண்ணியத் தாநமாய்ப்போகாதோ' (சி. சி. அ: ரு. ஞாநப்.) 'இதரமாமார்க்கங்களுக்கும் அப்பிராமாணிய மெடுத்தியம்பல் கூடாது' (சூத. எக்கி. பூ. உஉ: க௩.) [ஸம்ஸ்க்ருத: அ - எதிர்மறை. ப்ராமாண்ய - பிரமாண முடையது.]

அப்பிரியதரு—ஓதியமரம். [மலை.]

அப்பிரியம் — 1. மேகசம்பந்தமானது. [ஸம்ஸ்க்ருத: அப்ர - மேகம்.] 2. வெறுப்பு, வெறுப்பானசெயல். 'நேர்ந்தெனக் கப்பிரியத்தை யாற்றினை' (நல். பார. இந்திர. எஎ.) [ஸம்ஸ்க்ருத: ப்ரிய - விருப்பம்.]

அப்பிரியன்—சத்துரு. [ஸம்ஸ்க்ருத: ப்ரிய-நண்பன்.]

அப்பிரீதி—1. சிநேகமின்மை 2. பகைமை 3. வெறுப்பு. [ஸம்ஸ்க்ருத: ப்ரீதி - விருப்பு.]

அப்பிரேகசாதநம்—தன்னை யேவுவோனில்லாத கருவி; அது: பறவைக்குச் சிறையும் காலும் போல்வது. (மணிமே. உசு0.) [ஸம்ஸ்க்ருத: ப்ரேரக - ஏவுவோன். ஸாதநம் - கருவி.]

அப்பீரகம்—புளிமா. [மலை.]

அப்பு—1. அப்பென்னேவலும் தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும். 2. அம்பு. 'வில்லுமிழப்பொடு' (கந்தபு. இரண். சூரபன். சக.) [அம்பு என்பதன் விகாரம்.] 3. கடல். 4. கடன். 5. தந்தை. 6. நீர்; இது குளிர்ந்து பிறபொருள்களை நெகிழச்செய்யும். 'துப்பா யின்தாய்த் துவரத் தகைசே-ரப்பா யுவரற் றழிவில் பொருளின் - வைப்பாய்' (கந்தபு. காளிந். சு.) 7. முப்பத்தாறுதத்துவங்களுளொன்று. அது சிற்றண்டத்திலே பிருதிவிபூதத்திற்கும் அக்கினிபூதத்துக்கும்

இடையிலிருக்கும் ஓர் அசாதாரணபூதமாய்ப் பிறைவடிவமுடையதாய் வெண்ணிறமுடையதாய்த் தாமரைப்பூவாகிய அடையாளமுடையதாய் இருக்கும் என்றும், (சி. சி. உ: சுஈ, சுஎ, சுஅ, ம் உரைகளும்.) பொண்டத்திலே ஆலபூதபிருதிவிதத்துவத்துக்கப்பால் தசகுணமதிகமாக ஆவரித்திருக்குமென்றும் சொல்வர். (வி. ணி. உஎக.) 8. பாதிரிமரம். 9. பூராடநாள். 10. பகல்முகூர்த்தம் பதினைந்திலொன்று. (விதாந. குணகுண. எங. உரை.) 11. துடை. 'அம்மவென்று அப்புத்தட்டி' (ஈடு. 5. 4. 7.) 12. வீட்டுவேலைக்காரன்.

அப்புக்கட்டு — அம்புகளின்கட்டு (பதிற்றுப். 16. 4. உரை).

அப்புத்திரட்டி—கட்டுக்கொடி.

அப்புதத்துவம் — முப்பத்தாறுதத்துவங்களுள் ஒன்று. ('தத்துவம்' பார்.)

அப்புதல்—1. அறைதல். 2. ஒற்றுதல். 'இருவரும் புயங்களி னப்பி மொத்தினர்' (பாரத. பதினே. கசஎ.) 3. கும்முதல். 4. கொட்டுதல். 5. கௌவல். 6. சாத்துதல். 7. பூசுதல். 'அரைபடு மகிலுஞ் சாந்து மப்பி' (திருவிளை. நாட். கஉ.)

அப்புது—யானையைப் பாகன் தட்டிக் கொடுக்கையிற் கூறும் ஒரு குறிப்புமொழி. 'அக்கைபக்தலத்தினலப்பு தாதையென' (சித்தா. 1834.)

அப்புபூதவாதிமதம் — அப்பு என்னும் பூதமே பிரமம் என்பவனுடைய மதம். (த. நி. போ. உஅ0.)

அப்புநவம்—1. உப்பு. 2. நவசாரம்.

அப்புலிங்கத்தலம் — திருவானைக்கா என்னுஞ் சிவதலம். இத்தலத்தில் இருக்கிற கோயிலிலே மூலத்தானத்திலே சலமே லிங்காகாரமாகத் திரண்டிருப்பதனல் அப்பாகாரசிவலிங்கமென்பர். (திருவானை. மூர்த்தி. ங.)

அப்புலிங்கம் — பஞ்சலிங்கத்துள் திருவானைக்காவில் உள்ளது.

அப்புவின்கோபம்—சேத்துமம்.

அப்புளண்டம்—தகரை. (வைத்தியபரி.)

அப்புறப்படல் — குறித்த ஓரிடத்துக் கப்பாற்போதல்.

அப்புறப்படுத்தல்—இடமாற்றுதல்.

அப்புறம்—1. அப்பக்கம், மற்றைப்பக்கம். 'அப்புற வுலகினுள்ளர் ரறிந்திட யானே சென்று - செப்புவ னென்பான் போல' (கந்தபு. தேவகி. ங.) 2. அதன்பின். 3. வெளிப்பக்கம். 'சுற்றமப்புறநிற்க.' (இராமா. கங்கை. ஙஎ.)

அப்பூச்சிகாட்டுதல்—கண்ணிதழை மடித்துக் குழந்தைகளைப் பயமுறுத்துதல். (திவ். பெரியாழ் 2. 1. 1)

அப்பூதி—அப்பூதியடிகள். 'ஒருநம்பியப்பூதி' (திருத்தொண்டத்தொகை. ச.சுந்தர.)

அப்பை—1. அப்பைக்கோவை. 2. கற்கொவ்வை. 3. கொன்றை.

அப்பைக்கோவை— ஒருவகைக்கோவைக் கொடி. (பதார்த். ஙசுஎ.)

அப்பொழுது—அக்காலத்தில்.

அப்பொழுதை—அப்பொழுது. ஐ-சாரியை.

அப்போதைக்கப்போது — ஒன்று வேண்டியதாகக்கண்ட அந்தந்தக்காலம்; 'அஞ்சலஞ்ச லென்றடிமைக் கப்போதைக் கப்போதே - நெஞ்சி லுணர்த்து நிறைவே பராபரமே.' (தாயு. பரா. கஉச.)

அப்ரஸ்துதப்பிரசஞ்சாலங்காரம்—புனைவிலி புகழ்ச்சியணி. (குவல.உஅ.) [ஸ்வ ஸ்தூ த- புனையாதது. வ ஶம்ஸா - புகழ்தல்.]

அப— அபாவம், இயற்கையல்லாமை, இழத்தல், எதிர்மறை, தவறு, நீக்கம் எனப் பொருள்படும் ஒரு வடமொழி உபசர்க்கம். கீழ்மையெனவும் வித்தியாசமெனவும் பொருள்படும். [ஸ்வ.]

அபகீயாதி—1. அபகீர்த்தி. 2. நிந்தை. [ஸ்வவ்யாதி: அவ -எதிர்மறை. வ்யாதி- புகழ்.]

அபக்கிரமம்—1. கிரமமின்மை. 2. தோற்றோடுதல். 3. போதல். 4. விலகியோடுதல். [ஸ்வ - இயற்கையல்லாமை. க்ரூ - அடிவைத்தல்.]

அபக்கிரியை—அபகாரம். [ஸ்வக்ரியா: ஸ்வ; க்ரியா - செயல்.]

அபக்குவம்—1. சீர்ணமாகாதது. 2. பக்குவமின்மை. 3. பாகம்பண்ணப்படாதது. 4. பூரணப்படாதது. 5. முதிராதது. [ஸ்வக்வ: அ - எதிர்மறை. வக்வ - முதிர்ந்தது.]

அபக்குவர் — பக்குவரல்லாதவர். 'அபக்குவர்க் கோவந் நலிந்தான் விளங்கும்' (தாயு. நினை. அ.) [அ - எதிர்மறை. பக்குவர் - பக்குவமுடையவர்.]

அபக்குவி — பக்குவமில்லாதவன். 'அபக்குவியாகி என்னிலையைப் பற்றி' (தாயு.எங்கு. எ. உரை.) [அபக்வ - பக்குவமின்மை. இ - ஒரு விகுதி.]

அபகடம்—அவகடம். வஞ்சகம். 'அபகட நினைவிகள்' (திருப்பு. உசஉ.) [அபகடம்.]

அபகமம்— 1. புறப்பட்டுப்போதல். 2. மரணம். 3. மறைந்துபோதல். [அபகம: அப - நீக்கம். கம - போதல்.]

அபகர்டசமை—அசத்தான உத்தரசாதியில் ஒருவகை; அது: அவ்வியாத்தமான திட்டாந்த தருமத்தால், அவ்வியாபகமான தருமத்தினதபாவத்தைப் பொருளுக்கு வருவித்தல். 'சத்தம் அநித்தியம், காரியத்துவத்தால், கடம்போல' என்றுசொல்லுதற்கண், ஒருவன் இங்ஙனஞ் சொல்லாநின்றான்; 'காரியத்துவ ஏதுவாற் கடம்போலச் சத்தம் அநித்தியமாயின், அந்த ஏதுவாற் கடம் போலச் சத்தமுஞ் செவியாற் கவரப்படாததாகவேண்டும். கடம் செவியினாற் கவர்வதன்றே' என. (தர்க்க-பா: ச.) [அப கர்ஷஸமா.]

அபகர்த்தா — 1. அகற்றுவோன். 2. அபகரிப்போன். 3. கள்ளன். [அப ஹர்த்ரு.]

அபகரணம்—1. அபகரித்தல். 2. களவு செய்தல். 3. தவறுசெய்தல். [அப-தவறு. ஹரண - எடுத்தல். கரண - செய்தல்.]

அபகரித்தல் — 1. எடுத்துக்கொண்டு போதல். 2. கவர்தல். 'என்மய மெனக்குக் காட்டா தெனையப கரிக்க வந்த, சின்மயம்' (தாயு. ஆசை. ருரு.) 3. வஞ்சனையாய்க் கவர்தல். 'குதிரைகளையும் வேகத்தையுடைய யானைகளுடன் அபகரிக்கச் சென்றார்கள். (கந்தபு. திக்கு. ருடு. உரை.) [அப ஹார.]

அபகருடசமை — அபகர்டசமை. [அப கர்ஷஸமா.]

அபக்கிருமம் — 1. இடுக்கண்செய்தல். 2. கடனிறுத்தல். 3. தகாதசெயல். 4. துர்க்கருமம். 5. பொல்லாங்கு. [அபக்ரமம்: அப - தவறு. க்ரம - செயல்.]

அபகளங்கம்-தீராவசை.[அபகளங்கம.]

அபகாசம் — வீண்சிரிப்பு. [அபஹாஸ: அப - தவறு. ஹாஸ - சிரிப்பு.]

அபகாதம் — 1. அடித்தல். 2. கொல்லல். 3. வெட்டல்.

அபகாரகன் — கள்ளன். [அபஹாரக: அப - தவறு. ஹாரக - கவர்வோன்.]

அபகாரம்—1. களவுசெய்தல். 2. கொடுங்கோன்மை. 3. பகைமை. 4. பிறருடைமையை நியாயமின்றி எடுத்துச் செலவிடல். 5. மறைத்துவைத்தல். 6. தீயசெயல். 'அவனிச் செனர்க் கபகார மெத்தனை புரிவான்' (நல். பாரத. அரசசீ. 159.) [1, 4, 5. அபஹார: அப - தவறு. ஹார - எடுத்தல். 2, 3, 6. அபகார: அப - தவறு. கார - செயல்.]

அபகாரி—அபகாரஞ்செய்வோன். [அப காரிந.]

அபகிருதி — 1. இடுக்கண்செய்கை. 2. துர்ச்செய்கை. 3. பகைமை. [அபக்ருதி: அப - தவறு. க்ருதி - செயல்.]

அபகீர்த்தி—1. துர்க்கீர்த்தி. 2. நிந்தை. 'நாம் பகைவர்களையடக்காமல் வாழுதல் அபகீர்த்திக்கிடம்' (கந்தபு. சூரனமை. ருக. உரை.) [அபகீர்த்தி: அப - தவறு. கீர்த்தி - புகழ்.]

அபகுண்டனம் — சுற்றல்.

அபங்கம் — 1. கோளகபாஷாணம். (மூ. அ.) 2. பங்கமின்மை. [அபங்க.]

அபங்கன் — நாசமில்லாதவன், பங்கமில்லாதவன். 'மங்கையுமைபங்குறையபங்க' (சேதுபு. சருவ. உ0.) [அபங்க]

அபச்சாயை—1. சாயையில்லாதது. 2. தன்னுருபடியான சாயை. 3. தீமையைக்குறிக்குஞ் சாயை, பிசாசின்தோற்றம். [அவச்சாயா: அவ - கேடு. சாயா - நிழல்.]

அபச்சுமாரம் — 1. காக்காய்வலி. 2. பைத்தியம். [அவஸ்மாற: அவ - நீக்கம். ஸ்மார - நினைப்பு.]

அபசகுநம் — துன்னிமித்தம். [அவசகுந: அவ-தவறு. சகுந-நினைப்பு.]

அபசங்கம்-அச்சப்படாமை. [அவசங்கம்: சங்கா - பயம்.]

அபசத்தம்—1. அமங்கலமொழி. 'சுசத்தவபசத்த சொருபமாய்' (சூத. எக்கி. ௬. கஅ.) 2. வழூஉமொழி. 3. வீண்பேச்சு. [அவசப்த: அவ-தவறு. சப்த - சொல்.]

அபசதம்—இழிமை.

அபசதர் — 1. அநுலோமராகிய இழிச்சாதியார். (மநு. ௧o: ௧o.) 2. இழிமக்கள். [அவஸத: அவ-இழி. ஸத-இருப்பவன்.]

அபசதன்—1. அநுலோமனாகிய இழிச்சாதியான். 2. இழிமகன். [அவஸத.]

அபசப்தம்—1. வழூஉமொழி. 2. அமங்கலச்சொல். 3. அபக்கியாதி.

அபசயப்படல்—தோல்வியடைதல்.

அபசயம்—1. குறைவு, தேய்வு. (பி. வி. ௬௬. உரைச்சூ.) [அவசய.] 2. சித்தியடையாமை. [அவஜய.] 3. தோல்வி. 'அசுரர் சேனைக ளுறுபுரத்தொடு மபசயக்துன்ற' (மச்சபு. திரிபுரவிச. உ.) [அவஜய.]

அபசரணம்—1. பின்னிடுகை. 2. புறப்படுதல். [அவஸரண: அவ; ஸரண - போதல்.]

அபசரிதம்–1. துர்ச்சரிதம். 2. துராசாரம்.

அபசர்ச்சநம்—1. கைவிடுதல். 2. சொல்லுதல். 3. நன்கொடை. 4. பிறவிநீக்குதல். [அவஸர்ஜந: அவ - தவறு. ஸர்ஜந - விடுதல்.]

அபசவ்வியம்—வலப்பக்கம். 'நலத்தசவ்வியமேயபசவ்வியநாமம்' (வேதாா. பிரதக். கா.) [அவஸவ்ய: அவ - நீக்கம். ஸவ்யம்-இடப்பக்கம்.]

அபசாயம்—1. இறுதி. 2. நிச்சயம். 3. நிச்சயப்படுத்தல்.

அபசாரம் — 1. உபசாரமின்மை. 2. குறைவு. 3. துராசாரம். 'அத்தகையபசாரந்தா னன்னவன்செய்தும்' (மச்சபு. சந்திரோ. கஎ.) 4. பத்தியபாகங்கவனியாமை. 5. புறப்படுதல். 6. போகும்வாயில். 7. போதல். 8. மரணம். [1, 2, 3, 4, 8. அவசார. 5, 6, 7. அவஸார.]

அபசாரி—1. ஒழுக்கந்தவறினவள், ஒழுக்கந்தவறினவன். 2. பொல்லாதவள், பொல்லாதவன்.

அபசித்தாந்தம்—1. தன் சித்தாந்தத்திற் கிணங்காதனவற்றைச் சொல்லிச் சித்தாந்தஞ் சாதித்தல். (சி. சி. அளவை. க௬. சிவஞா.) 2. சித்தாந்தத்தின்கேடு; அது: நிக்கிரகத்தானத்து ளொன்று. (தர்க்கபா. அ௬.) [அவ - தவறு. ஸித்தாந்த - முடிந்தமுடிபு.]

அபசிதம்—1. குறைக்கப்பட்டது. 2. பொருட்செலவுசெய்யப்பட்டது. 3. வாழ்த்தப்பட்டது. [அவசித.]

அபசுமாரம்—1. காக்காய்வலி. 2. புத்தியின் தெளிவு நீங்குதல். (சீவரட். உ௬o.) [அவ; ஸ்மார.]

அபசுமாரரோகம்—புத்தியின் தெளிவை நீக்கும் ஒருவகைரோகம். (சீவரட். உ௬o.) [அவஸ்மார-பைத்தியம். ரோக - நோய்.]

அபசெயம் — தோல்வி. [அவஜய.]

அபஞ்சீகிருதம் — ஐந்தாகப் பகுக்கப்படாதது. 'ஆயவபஞ்சீகிருத சூக்கும வாகாயமும்' (சூத. எக். உத். ௩: ௬.)

அபட்கை—பாம்பின் கீழ்வாய் விஷப்பல். (தமிழ்லெக்ஸிகன்.)

அபட்சணம் — உபவாசம். [அபக்ஷண: அ - எதிர்மறை. பக்ஷண - உணவு.]

அபட்சியம் — உண்ணத்தகாதது. 'அபட்சியபட்சணப்பிராயச்சித்தம்' (மநு. கக: கசு.) [அபக்ஷ்ய: அ - எதிர்மறை. பக்ஷ்ய-உண்ணத்தக்கது.]

அபட்டம் — யானைத்தோட்டியின் நுனி. [அவஷ்ட]

அபட்டமம் — யானைத்தோட்டியின் நுனி. [ஸவஷ்டு 8.]

அபடி—திரைச்சீலை. [அபடி.]

அபத்தம்—1. கட்டப்படாதது. 2. தவறு. 3. பயனில்சொல். 4. பொய். [ஸபஐ: அ - எதிர்மறை. வஐ - கட்டுப்பட்டது.]

அபத்தியசத்துரு — நண்டு. [ஸவத்ய ஶத்ரு: அவத்ய - பிள்ளை. ஶத்ரு - விரோதி.]

அபத்தியதை—மருத்துவச்சி. [ஸவத்ய தா: அவத்ய - பிள்ளை. தா-கொடுப்பவள்.]

அபத்தியதோஷம் — தருணசுரத்தில் வரும் ஏழுவகைத் தோஷங்களிலொன்று. (சீவரட். ௬௦.)

அபத்தியபதம் — யோனி. [ஸவத்யவய: ஸவத்ய - பிள்ளை. வய - வழி.]

அபத்தியம் — 1. பத்தியந்தவறுதல். 'இச்சையுட னநிச்சைபிற ரிச்சையெனு மிவற்று லிபம்பலுறு பிராரத்த மூன்று வகைப் படுமா - லச்சுரர்க ளானும்விலக் குதற்கரிய வாகு மபத்தியஞ்செய் திடறனக் கே கேடெனவிங் கறிந்தும்' (வேதா. சூ. ௧௭௫.) 2. பிள்ளை. [1. ஸவஶ்ய. 2. அவத்ய.]

அபத்தியவிக்கிரயி—1. தன்மகட்கொண் டானிடம் பரிசம்வாங்கும் பிதா. 2. பிள்ளையை விற்பவன். [ஸவத்யவிக்ரயிந: அவத்ய - பிள்ளை. விக்ரயிந-விற்போன்.]

அபத்தியர்நம்—1. அவமதிப்பு. 2. கெட்ட சிந்தனை. [ஸவயூ்ாந: அவ - தவறு. யூ்ாந - எண்ணம்.]

அபத்திரபம்— } 1. வெட்கக்கேடு. 2.
அபத்திரபை— } வெட்கப்படுகை. [ஸவத்ருவா: அவ; த்ருவா - வெட்கம்.]

அபதந்திரகவாதம் — ஒருவகை வாத ரோகம்; அது: ஊர்த்துவகாயத்திலிருந்து அதோகாயத்தை மரத்தலடையச்செய்தும், அதோகாயத்திலிருந்து ஊர்த்துவகாயத்தை மரத்தலடையச்செய்தும், மிகுந்த உபத்திரவத்தை விளைப்பதும், அங்கத்தை விற்போல வளைத்து வருத்தமுற நெட்டுயிர்ப்பை யெழுப்புவதுமான ஒரு நோய். (சீவரட். கசு௦.)

அபதம்—மகாதீத பூரண நின்மல சிவம். 'புரையாருஞ் சத்தமே பதமகா தீத பூரண மின் மலசிவமே யபதமெனப் படுமால்' (சூத. எக்கி. பூ. ச: கக.) [ஸவடி.]

அபதர்ப்பணம் — 1. திருப்தியில்லாமை. 2. நோயுற்றுழிப் பசிபொறுத்தல். [ஸவதர்பண: அவ - எதிர்மறை. தர்பண- திருப்தி.]

அபதாந்தரம் — அடுத்தது, உடன். [ஸவடாஙர: ஸ - எதிர்மறை. வடி - கால். ஸஙர - இடை.]

அபதாநகம்—1. ஒருவகைவாதநோய்; அது: அபதந்திரகவாதம். 2. சுத்தமான ஒழுக்கம். 3. நன்குமுற்றுப்பெற்றதொழில். 4. மேன்மையானதொழில். [1. அவதாநக: ஸவ; தாந - பரவுதல். சகல நரம்புகளினும் பரவுதலால் வந்தபெயர். 2, 3, 4. ஸவடா நக.]

அபதாநம் — 1. நன்கு முற்றுப்பெற்ற தொழில். 2. வியந்துகொள்ளப்பட்ட தொழில்.

அபதார்த்தம்—1. உள்ளதல்லாதது. 2. உபயோகமற்றது. (தமிழ்லெக்ஸிகன்.)

அபதாறு—1. கொள்ளை. 2. துர்க்கீர்த்தி.

அபதேசம்—1. இலக்கு. 2. உபாயம். 3. கீர்த்தி. 4. திக்கு, இடம். 5. பிறர் பொருட்டநுமானத்தில் ஐந்தவயவங்களு ளொன்றுகிய ஏது. 6. புரளி, வாய்ப்புரட்டு. 7. பெயர்சொல்லிப் பொருளைத் தெரிவித்தல். 8. மறுத்தல். 9. வஞ்சகம். 10. வீண் சாட்டு. 11. வேஷந்தரித்தல். [ஸவடெஶ: ஸவ - கேடு. டெஶ - காண்பிப்பது.]

அபதேவதை — 1. துர்த்தேவதை. 2. பைசாசம். [ஸவடெவதா: ஸவ - கேடு. டெவதா - தெய்வம்.]

அபந்தலம்—செங்கத்தரி. (வைத்தியபரி.)

அபநயம்—1. அகற்றல். 2. அழித்தல். 3. கடனிறுத்தல். 4. பிணிதீர்த்தல். 5. மரணம். [அபநய: அவ - நீக்கம். நய - கொண்டுபோதல்.]

அபநீதம் — 1. அகற்றப்பட்டது. 2. இறுத்துத்தீர்ந்தது. 3. எடுக்கப்பட்டது. [அபநீத: அவ - நீக்கம். நீத - எடுக்கப்பட்டது.]

அபநுத்தம்—அகற்றப்பட்டது, தூரத்தப்பட்டது. [அபநுத்த: அவ; நுத்த - அனுப்பப்பட்டது.]

அபநுதியுருவகம் — பொருளை மறுத்து உவமையையுடன்படுத்துரைப்பது. 'கையல்ல காந்தண்மலர்' (தண்டி. ௩௦. பக்.)

அபநோதநம்—போக்குதல். [அபநோதந: அவ - முன். நோதந - அனுப்புதல்.]

அபநோதம்—1. நீக்குகை. 2. பிராயச்சித்தம். [அவ; நோத.]

அபப்பிரசாதை — வயிற்றிற் கரு அழியப்பெற்றவள். [அபப்ரஜாதா: அவ - கேடு. ப்ரஜாதா - பிள்ளைபெற்றவள்.]

அபப்பிரஞ்சம் — பாமரசாதிகளான இழிசனர்மொழி. [அபப்ரம்ஶ: அவ-கேடு. ப்ரம்ஶ - வழுவுதல்.]

அபாசகத்துரம் — சர்வபதார்த்தங்களேயும் அறிந்துகொண்டிருத்தல். (வாசுதே. ௫௨.)

அபமம்—இழ்க்கதி; அது: சூரியன் தக்கிணாயநத்திலாவது உத்தராயணத்திலாவது இறங்குதல்போல்வது. [அபம: அவ; இழ். ம - அளத்தல்.]

அபமரணம்—துன்மரணம். [அவ - கேடு. மரணம் - சாவு.]

அபமாநம் — மானக்கேடு. [அபமாந.]

அபமார்க்கம்—1. ஒருபக்கத்தாற்போகும் வழி. 2. கெட்டவழி. 3. சுத்திசெய்தல். 4. துன்மார்க்கம். 5. புன்சமயம். [அபமார்க்க.]

அபமார்க்கி — செந்நாயுருவி. 'சங்கெட்கோதபமார்க்கி மூன்றுஞ் சுட்ட சாம்பரிடை' (தைல. தைலவ. ககஅ.)

அபமிருத்தியு—1. சடுதிமரணம். 2. நோய் முதலிய காரணமில்லாத மரணம். [அபம்ருத்யு: அவ - இயற்கையல்லாமை. ம்ருத்யு - மரணம்.]

அபமிருத்து — அபமரணம். [அபம்ருத்யு:]

அபயக்கை — அபயகரம். 'வரதமோடபயக்கைகன் முறைமையினேங்க' (தாயு. தேன்முக. ௫.)

அபயகரம்—ஒருவன் பயப்படாதிருக்கும்படிக்கான கருத்தைக்குறிப்பிக்குங்கைகாட்டு. [அபயம் - பயமின்மை. கர - கை]

அபயகுலசேகரன் — அபயகுலசேகர சோழன். (திருமுறைகண். க.)

அபயங்கொடுத்தல் — பயப்படாதிருக்கும்படியொருவரைத் திடஞ்செய்தல்.

அபயதன்—அபயங்கொடுக்கிறவன், அச்சமகற்றுகிறவன். [அபயத: த - கொடுக்கிறவன்.]

அபயதாநம்—அபயங்கொடுத்தல். [அபய - பயமின்மை. தாந - கொடுத்தல்.]

அபயப்பிரதாநம் — அபயங்கொடுத்தல். 'சக்கரபாணிதேவர்க் கபயப்பிரதாநவாறும்' (மச்சபு. அநுக்கிர. ௩௭.) [அபயப்ரதாந: அபய - பயமின்மை. ப்ரதாந - கொடை.]

அபயம்—1. அச்சநீங்கியிருத்தற்குச் சரண்புகல், அடைக்கலம். 'அவநிபரெலாமபயமபயமென்றடி வணங்கவே' (பாரத. இராச. சசு.) 2. அச்சமின்மை. 'விசயைகண்ணபயம் வைத்தான்' (சிந். முத். ௩௧௩.) 3. ஒருவகை வாசனைப்புல். 4. ஓலம், முறையிடுதல். 5. பயந்தீர்க்குங்கரம். [அபய: அ; பய.] 6. செவ்வியம் (வைத்தியபரி.)

அபயமிடல்—அடைக்கலம்புகுதல், முறையிடுதல். 'அபயமிடுகுரலறியாயோ' (திருப்பு. கஅ௦.)

அபயமிடுதல்—அபயமிடல்.

அபயமுத்திரை — அபயமளித்தலைக்காட்டுங் கைக்குறி.

அபயர்—சோழர். 'சமரிற் பிறகிடு முதியருமபயருமெதிரிட் டமராட' (மீனுட்சியம்மைபி. சப்பாணி. எ.) 2. போர்வீரர். (உரி. நி.)

அபயலை—இலாமிச்சை. (தைல. தைலவ. நகச.)

அபயவத்தம் — 1. அபயகரம். 'வரதாபயவத்தங்கள்' (சூத. எக்கி. பூ. கூ: ச.) 2. இணைக்கை பதினோந்துவகையுளொன்று; அது: இருகையுஞ் சுகதுண்டமாக நெஞ்சுற நோக்கி நெகிழ்ந்துநிற்பது. 'அபயவத் தம்மே யறிவுறக் கிளப்பின்-வஞ்சமில் சுகதுண்ட மிருகையு மாட்சியி-னெஞ்சுற நோக்கி நெகிழ்ந்து நிற்பதுவே' (சிலப். அரங்கே. கஅ. உரை.) [ஸஹய; ஹஸ்த.]

அபயவாக்கு—அஞ்சாதே யென்னும்சொல். [ஸஹயவாக்: அஹய - பயமின்மை. வாக் - சொல்.]

அபயன்—1. அச்சமறுப்போன். 2. அருகக்கடவுள். (திவாகர.) 3. ஒருவகைக்கடுக்காய். 'அபயனென்னுங் கடுக்கா யங்கநோ யெல்லா மபயமிட்டோடவடிக்கும்'(பதார்த். க0நஉ.) 4. கடவுள். 5. சோழன். 6. துரியோதனன் றம்பிமாருளொருவன். (பாரத. எட்டாம். கூ) 7. பயமில்லாதவன். 'செய்யகோலபயன்' (பெரியபு. திருமலை. கஉ.) 8. வீரன். [ஸஹய]

அபயஸ்தம்—அபயஹஸ்தம்.

அபயஹஸ்தம்—அஞ்சலென்றெடுத்த கை.

அபயாஸ்தம்—அபயஹஸ்தம்.

அபர்ணை — 1. இலையில்லாதவள். 2. பார்வதிதேவி. [ஸவணா: அ; வண - இலை. சிவனைநோக்கித் தவஞ்செய்தகாலத்தில் இலையிற்புசியாதிருந்தமையாற் பார்வதிதேவிக்கு இப்பெயர் வந்தது.]

அபரக்கிரியை—பிரேதகருமம்.

அபரகாத்திரம்—1. கால். 2. பின்கால்.'தடம்பிறை மருப்புத் திண்கை யபரகாத் திரங்கடம்மால்' (சிங். காந்தரு. நகச.) [ஸவர - சிரேட்டமல்லாத. ("அவரம்" சிதைந்து நின்றது.) அபரம்-பின், சிரேட்டமல்லாதது. மாத்ரு - உறுப்பு. 'வரகாத்திரமென்பதனைத் தலையென்றும், அவரகாத்திரமென்பதனைக் காலென்றும் வடநூலார் கூறுவராதலின் தேவர் அதனைச் சிதைத்து அபரகாத்திரமென்றார்; ஐராவதம் ஐராபதமென்றாற் போல. எனவே அபரகாத்திரமென்றது கால்களை. இனிப் பின்கா லென்பாருமுளர்' என நச்சினார்க்கினியர் கூறுவர்.]

அபரசத்திதத்துவம் — அபரவிந்து. 'நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை யென்கின்ற பஞ்சகலா கர்ப்ப சத்தரூப அர்த்தரூப சத்திகலைகளும், அர்த்தரூபமாத்திர சத்திகலா புவநங்களும், அபர சத்தி தத்வமென்கின்ற அபரவிந்துவாக அறியப்படும்.' (சி. சி. உ: எசு. ஞாநப்.) [ஸவர: ஶக்தி; தத்வ.]

அபரசன்—பின்பிறந்தோன். [ஸவரஜ: அவர - பின். ஜ - பிறந்தோன்.]

அபரசாத்திரம் — பரசாத்திரமல்லாதது. (சி-லி. கிரி. கஉ.)

அபரசாமாநியம் — அற்பவிடயங்களினுளதாகிய சாமாநியத்தன்மை. திரவியத்துவ முதலியனபோல. (தர்க்கபா. சுசு.)

அபரசிவதத்துவம் — அபரநாதம். 'பிரமரந்திரத்துக்குள் இந்திகை, தீபிகை, ரோசிகை, ஊர்த்துவகையென்கின்ற பஞ்சகலாகர்ப்ப சத்தரூப அர்த்தரூப சிவகலைகளும், அர்த்தரூபமாத்திர சிவகலாபுவனங்களும், அபரசிவதத்துவ மென்கின்ற நாதநாதாந்த அபரநாதமாக அறியப்படும்.' (சி. சி. உ: எசு ஞாநப்.) [ஸவர: ஶிவ; தத்வ.]

அபரசூரியன் — ஞானவொழுக்கத்திற் சிறந்தோன். (தமிழ்லெக்ஸிகன்.)

அபரஞ்சி — புடமிட்டபொன். 'ஆயிரத் தெட்டு மாற்றி னபரஞ்சி யத்தனுற் செய்த' (மச்சபு. தாரகாசுரவத. உரு.) [தெலுங்கு.]

அபரஞானம் — கீழ்ப்பட்டஞானம்; அது: சாத்திரங்கற்றலால் வரும் ஞானம். (ஒழிவி. கிரியை. கக.) 2. காமிகமுதலிய திவ்வியாகமங்கள். (திருவிளை. வரகுண. சகூ. உரை.) [ஸவர; ஜ்ஞாந.]

அபரத்துவம்—இடத்தாலாவது காலத்தாலாவது பின்னாகநிற்குந்தன்மை. (தர்க்கபா. நிஅ.) [ஸவரத்வம்: அவர - பின். த்வம் - தன்மை.]

அபரதன் — வெடியுப்பு. (வைத்தியபரி.)

அபரதி—ஒழிகை, நிவர்த்தி. [ஸவரதி: அவ - நீக்கம். ரதி - இன்பம்.]

அபரநாதகலைகள் — இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, ஊர்த்துவகாமினி யென்னும் ஐந்துகலைகள். (சதாசிவ. கக.)

அபரநாதம்—1. அபரசிவதத்துவம். (சி. சி. உ: எச. ஞாநப்.) 2. எதிரொலி. 3. (மகாமாயையென்னுங் குண்டலி) சத்தியினது முதல்க்ஷோபத்தா லுண்டாகும் துவநிருபமான நாதம். (சி-வி. ஞாந. கஉ. தாற்.) [ஃவர; நாத.]

அபரப்பிரணவம் — சத்தப்பிரணவம். ‘மருவபரப் பிரணவமென் பதுமாயா சொருபமாய் வயங்கு சத்த-வுருவமே யிம்மறுவி னுற் சிவதத் துவவுண்மை ஞான மென்னும்-பொருவில்பிர கருடமுண்டா இப்புநிய மகத்துவமெய் பொலிசீ வர்க்குத்-திருவமுற வுறுதலிற் பிரணவமென மொழிவரிதைத் தெரிந்தோர் யாரும்’ (ஞாத. எக்கி. பூ. ரு: ந.) இதுவே ‘உம்பர்நாயகன்திருவாக்கிற் - பிரணவமுதித் ததனிடைவேதம்பிறந்தன’ என்று (திருவிளையாடற்புராணத்தில். கரு: ந, ச.) கூறியதூஉ மென்க. [ஃவரவ்ரணவ.]

அபரப்பிரமம்—சகுணப்பிரமம். (விசார.) [ஃவர; ப்ஹ்ம.]

அபரபக்ஷம் — பௌர்ணிமைக்குப் பின் வரும் பதினைந்து திதிகொண்ட பக்கம். ‘அடரிருளபரபக்கமதனில்’ (இரகு. மாலையீ. கரு.) [ஃவரவக்ஷ: அவர - பின். வக்ஷ.]

அபரபட்சம்—அபரபக்கம்.

அபரபதி—ஆணவமலம் நீங்கி யிடைக்காலத்திலே பதித்தன்மையடைந்த ஆன்மா. ‘மல நீங்கி யதிகாரமலமாத்திரர்களாய் அபரபதிகளாய்க் கடந்துபோனவர்’ (சி. சி. க: உ௫. ஞாநப்.) [ஃவர; வதி.]

அபரபுத்தி — 1. கீழ்ப்போகங்கள். ‘சரீராந்தத்திற்றோனேவரும் பராபரபுத்தியபர புத்தி போகவாஞ்சை மாத்திரத்தினலேயும்’ (சி. சி. அ: ௫. ஞாநப்.) 2. பின்புத்தி. [ஃவர; பு₃த்₃தி₄.]

அபரபுருடார்த்தம் — நான்குபுருடார்த்தங்களிற் கீழ்ப்பட்டன; அவை: அறம்பொருள் இன்பம் என்பன. (மகாவாக்கிய. பாயிர. ௧.) [ஃவரவுருஷாத₂.]

அபரபோகம் — கீழ்ப்பட்டபோகாநுபவம்; அது: அசுத்தமாயாகாரியமாகிய புவநங்களிலிருக்கும் அமரேசராதியான உருத்திரர்கள் புசித்திருக்கும் போகம். (சி. சி. அ: உசு. மறை.) [ஃவர; ஹோக₃.]

அபரம் — 1. உருத்திரருக்குபதேசித்த விஜயம் முதலிய பதினெண் ஆகமம். (சி-வி. சரி. க.) 2. எதிர்காலம். 3. ஒப்பற்றது. 4. கப்பலின் பிற்பக்கம். 5. கவசம். (பிங்க. கசுOஅ.) 6. (காலத்தாலாவது இடத்தாலாவது வரும்) பின். (தர்க்கபா. ருஅ.) 7. சகளம். (சி. சி. க: ருரு. மறை.) 8. நரகம். (பிங்க. ௩Oசுச.) 9. பிணக்கு. (சூ. நிகண். க: சுந.) 10. பிந்தினது, அடுத்துப்பின் வருவது. 11. பிற்பக்கம். (பிங்க. ௩Oசுச.) 12. பொய். (பிங்க. ௩Oசுச.) 13. மற்றையது. 14. முதுகு. (பிங்க. கOஉக.) 15. மேற்குத்திசை. 16. யானையின் பின்கால். 17. பிரேதகர்மம். [ஃவர.]

அபரமந்திரேசுவரர் — ஸ்ரீகண்டர், வீரபத்திரர்முதலிய அபரமுத்தசிவரூபர்; இவர்கள் பிரளயாகலருட் பரிபக்குவமலர்களாய்ச் சிவாநுக்கிரகம் பெற்றுப் பதிபதார்த்தங்களாவார்கள். ‘பிரளயாகலருட் பரிபக்குவமலர்கள் சிவாநுக்கிரகம் பெற்றுப் பதிபதார்த்தங்களாய் ஆதிமுத்தசிவரூபர்களாயும் ஸ்ரீகண்டர், வீரபத்திரர்முதலிய அபரமந்திரேசுவரர்கள் புவநவாசிகள் என்னும் அபரமுத்தசிவரூபர்களாயும் போயிருப்பார்கள்.’ (சி. சி. அ: உ. ஞாநப்.) [ஃவர; மந்த்ர; ஈஶ்வர.]

அபரமுத்தசிவன் — அபரமுத்தியடைந்து சிவத்துவம் பெற்றிருக்கும் ஆன்மா. ‘அணுசதாசிவர், அநந்தாதிகள், மந்திரர்கள், ஸ்ரீகண்டர், வீரபத்திரர் முதலிய அபரமந்திரேசுவரர் என்பவர்களும், இன்னுஞ் சிவாநுக்கிரகம்பெற்று நாநாபத முத்தராயிருக்கிறவர்களும் ஆகிய இவர்களி லொவ்வொருவரும் அபரமுத்தசிவன் எனப்படுவர்’ (சி. சி. அ: உ. ஞாநப்.) [ஃவரமுக்தஶிவ: அவர - முக்த - விடுதலையடைந்தோன்.]

அபரமுத்தி — சுத்தமாயாபுவனத்தை யடைந்திருத்தல்; அது: பதமுத்தி. (சி. சி. பாயிர. உ. ஞானப்.)

அபரராத்திரம் — இராத்திரியின் பிற்சாமம். [ஸ. அபரராத்ர: அபர - பின். ராத்ரி - இராத்திரி.]

அபரலோகம் — 1. கீழ்ப்பட்டலோகம். 2. மற்ற உலகம். [ஸ. அபர - கீழ், வருங்காலம். லோக.]

அபரவயசு — முதிர்ந்தவயசு. [ஸ. அபர - பின். வயஸ்.]

அபரவாக்கியம் — பிரதானவாக்கியத்திற் குப்பின்வரும் வாக்கியம். [ஸ. அபர - பின். வாக்ய - சொற்றொடர்.]

அபரவாகீசுவரர் — பரவாகீசுவரரல்லாத வர், அபரமாகிய வாக்குக்கதிபர். 'அநந்தேசு வரத்துவாரத்தினலே மாயோபாதி புவனே பாதி மணந்து, அபரவாகீசுவரி அபர வாகீசுரர்களாயும்' (சி. சி. உ : ௭௭. ஞானப்.) [ஸ. அபரவாகீஶ்வர.]

அபரவாகீசுவரி — பரவாகீசுவரியல்லாத சத்தி, அபரமான வாக்குக் கதிபதியானவள். 'அபரவாகீசுவரர்' பார். (சி. சி. 2 : ௭௭. ஞானப்.) [ஸ. அபரவாகீஶ்வரீ.]

அபரவித்தை — 1. வேதவேதாங்கம் முதலியன. 'வேதவேதாங்கமாதிகள் அபர வித்தை பரமார்த்தத்திற்குப் போதகமா முபநிடதம் பரவித்தை' (சூத. எக்கி. உத். ௭: ௩.) 2. உதயாதி யுதயாந்தமாகக்கொள்ளப் படும் ஒருநாளிலே பின்னுறச் சிலநாழிகை மற்றொருதிதிவந்துகூடிநிற்கப்பெறுந் திதி. (ஸ்மிருதிமுத்தாபலம்) [ஸ. அபரவித்யா; அபரவித்தா.]

அபரவிந்து — 1. அநதிக்கிராந்த விந்துக பராசத்தி; இது: அநதிக்கிராந்தவிந்துகபர சிவம் என்னும் அபரநாதத்தாற் றேற்று விக்கப்பட்டது. (சி. சி. உ : ௭௭. ஞானப்.) 2. அபரசத்திதத்துவம்; அர்த்தசந்திரன், நிரோதியென்னு மிரண்டும் இதிலடங்கும். (சி. சி.உ: ௭௪. ஞானப்.) 3. மூலோபாதாந மான குண்டலியினின்றுண்டான குணத் மகங்கள் மூன்றில் ஒன்று. 'அபரவிந்து, மோகினி, மகான் என்பவைகளே மூன்று குணாத்மகங்களாம்' (சி. சி. க : ௫௭. சிவாக்.) 4. மகாமாயையென்னுங் குண்டலிசத்தி யின் இரண்டாவதுக்ஷோபத்தாலுண்டாகுஞ் சங்கற்பரூபமான விந்து. (சி-வி. ஞானப். ௧௨ தாற்.) [ஸ. அபரபிந்து.]

அபரவிந்துகலை — நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதையென்னும் பஞ்சகலைகள். 'மூந்துரை நிவிர்த்தி முதலிய வபர-விந்து கலையென விளம்பிய வைந்தே' (சதாசிவ. ௩௮.) [ஸ. அபரபிந்துகலா.]

அபரன் — தாழ்வுடையோன். (சைவப். உ௯.) [அ - எதிர்மறை. பர - உயர்ச்சி யுடையவன்.]

அபராங்கம் — சரீரத்தின் பிற்பாகம். 'வேடன்ற னபராங்கம் பிளக்க வெய்தான்' (பாரத. அருச்சு. தவ. ௯௦.) [ஸ. அபர - பின். அங்க - சரீரம்.]

அபராசிதன் — வெல்லப்படாதவன். (பக வற். க : ௧௮.) [ஸ. அபராஜித: அ; பரா ஜித - வெல்லப்பட்டவன்.]

அபராசிதை — விசயதசமியில் வணங்கப் படுந் துர்க்கை. [ஸ. அபராஜிதா.]

அபராணம் — மத்தியானத்தை யடுத்துப் பின்வரும் ஆறுநாழிகைகொண்டநேரம். 'நிரைத்தபின் முகூர்த்த மூன்றை நிகழப ராண மென்ப' (மச்சபு. சூரியசந்திர. ௩௭.) [ஸ. அபராஹ்ண: அபர - பின். அஹ்ந - நாள்.]

அபராத்தர் — பின்னன ஆப்தர். (சைவப். உ௯.) [ஸ. அபர - பின். ஆப்த - உள்ளது கூறுவோர்.]

அபராத்தன் — 1. தவறுசெய்தவன். 2. தீங்குசெய்தவன். 3. பின்னன ஆப்தன். (சைவப். உ௯.) [1, 2. ஸ. அபராத்த: அப - கேடு. ராத்த - செய்தவன். 3. ஸ. அபராப்த: அபர; ஆப்த.]

அபராத்திரம் — கடைச்சாமம்.

அபராதம்—1. கட்டளையை மீறுதல். 2. குற்றமானசெயல், பாபச்செயல். 'அடியனேன் முன்னஞ் செய்த வபாராத மிரண்டுந் தீரும் - படிபொறுத் தருள்வா யென்று' (திருவிளை. கக: உரு.) 'வசையபராதமாய வுவரோத நீங்கும்' (தேவார. திருநாரை. ரு. சம்.) 3. தண்டம். [அபராத: அப - கேடு. ராத - நிறைவேற்றல்.]

அபராதர்—கட்டளையைமீறுவோர். 'அரையனும் வேறே யபாராதர் வேறே - யவர்பலமும் வேறென்றறி' (சி. சி. பர. மாயா. மறு. ௧௦. உரை.) [அபராத.]

அபராதக்ஷாபணம்—மன்னிப்புக்கேட்டுக் கொள்ளுகை. (குருபரம்பரை. 115.)

அபராதி—தீங்குசெய்கிறவன். 'உறவினுக் கபாரதியும்' (சிவதரு. பாவ. கஅ.)[அபராதிந்.]

அபரார்தம்—மேற்குக்கடற்கரையிலுள்ள தேசம். [அபராந்த: அபர - மேற்கு. அந்த - முடிவு.]

அபராந்தர் — மேற்குக்கடற்கரையிலிருக்கிறவர். 'வாசத் தண்டொடையல் வாகுவானபராந்தர்' (இரகு. திக்கு. கசஎ.)

அபராந்நம்—மத்தியானத்தையடுத்துப் பின்வரும் ஆறுநாழிகைகொண்ட நேரம். 'செப்புங்காலக் - தவ்வலில் பிராதக் காலஞ் சக்கம மத்தி யாங்க-மவ்வப ராங்கஞ் சாயாங் கம்மொன்றுக் காலுங் கன்னல்' (மச்சபு. தீர்த்த. சிரா. ௩௧.) [அபராஹ்ண: அபர - பின். அஹ்ந - நாள்.]

அபராவதாரம்—வேறவதாரம்.

அபரிகாரம் — விலக்காமை. 'சொல்லுகிறவர்களுக்கு அபரிகாரமாக இடிவிழுவது போலச் சங்கையும்வரும்.' (வாசுதே. கக௪.) [அபரிஹார: அ- எதிர்மறை. பரிஹார - விலக்குதல்.]

அபரிச்சதம் — உடைமின்மை. [அபரிச்ச்த: அ; பரிச்ச்த - மூடுகை.]

அபரிச்சிந்நத்துவம்—1. கண்டஞ்செய்யப்படாத தன்மை. 2. தேசத்தாலும், காலத்தாலும், வஸ்துவாலும் எல்லைப்படாமை. (வாசுதே. ககஎ.) [அபரிச்சிந்நத்வம்: அ - எதிர்மறை. பரிச்சிந்நத்வம் - எல்லைப்படுந் தன்மை.]

அபரிச்சிந்நம் – கண்டஞ்செய்யப்படாதது. [அபரிச்சிந்ந: அ; பரிச்சிந்ந - எல்லைப் பட்டது.]

அபரிச்சேதம் — 1. எல்லைப்படாமை, கண்டிக்கப்படாமை. 'அசுத்தமாயாகாலத் தினு லபரிச்சேதமாகையால்' (சி. சி. க: ௬௬. சிவாக்.) 2. ஒழுங்கின்மை. 3. பிரிவின்மை. [அபரிச்சேத: அ; பரிச்சேத - எல்லைப்படுத்தல்.]

அபரிசுட்டரோகம் — ஒருவகைக் குட்டரோகம்; அது: சர்வாங்கத்திலுங் கறுத்த ரத்தம் வடிதல், நோவு, தொடப்படக்கூடாமை, வீக்கம், வெடிப்பு முதலிய குணங்களுடையது. (சீவரட். கருஉ.)

அபரிசாரம்—அடுக்க இராதது; தூரம். [அபரிஸர: அ; பரிஸர - சமீபம்.]

அபரிட்சயம் — நாசமின்மை. (பௌட். பசு. கரு.) [அபரிக்ஷய: அ; பரிக்ஷய - நாசம்.]

அபரிணயநம் — இல்வாழ்க்கைப்படாதிருத்தல். [அபரிணயந: அ - எதிர்மறை. பரிணயந - விவாகம்.]

அபரிணீதை — விவாகஞ்செய்யாதவள். [அபரிணீதா: அ; பரிணீதா-விவாகஞ் செய்தவள்.]

அபரிதம்—அளவில்லாதது. ['அபரிமிதம்' என்பதன் விகாரம்.]

அபரிபக்குவமலர் — விட்டுநீங்கப்பக்குவமாகாத ஆணவமலத்தையுடைய ஆன்மாக்கள். 'விஞ்ஞாநாகலருள் அபரிபக்குவ மலர்கள் மாயைக்குமேற் சுத்தவித்தைக்குக்கீழ் ஆணவமலமொன்றுமே யுடையவராய்ப் பசுபதார்த்தங்களாய் இருப்பார்கள் என்றும், பிரளயாகலருள் அபரிபக்குவமலர் சிருட்டி காலத்திற் சகலராவார்கள் என்றும், சகலருக்குள் அபரிபக்குவமலர் சஞ்சாரிகளாயிருப்பார்கள் என்றுஞ் சொல்வார்கள்' (சி. சி. அ: உ. ஞாநப்.)

அபரிபூதம் — கனியாதது, பூரணப்படாதது, முதிராதது. [ஸ. அபரிபூத: அ; பரிபூத - பூரணமானது.]

அபரிமாணம்—அளக்கக்கூடாதது, அளவுபடாதது. [ஸ. அபரிமாண: அ; பரிமாணம் - அளவு.]

அபரிமிதம்—1. அளவுபடாதது, எல்லைப்படாதது. 'அபரிமிதமின்சொலாகவுரைசெய்தே' (பாரத. பதின்மூ. சறு.) 2. பெருமை. [ஸ. அபரிமித: அ; பரிமித - எல்லைப்பட்டது.]

அபரியந்தம்—எல்லையற்றது. [ஸ; பர்யந்த - எல்லை.]

அபரியாத்தம்—வல்லமையற்றது. (பகவற். க: கo.) [ஸ. அபர்யாப்த: அ; பர்யாப்த - வல்லமையுடையது.]

அபரியாத்தி — பூரணமில்லாமை. [ஸ. அபர்யாப்தி: அ; பர்யாப்தி-பூரணம்.]

அபரிபாத்திரம் — தசவித பாத்திரங்களிலொன்று. (வி-ணி. ௨௨௨.)

அபருபம் — அவலட்சன ரூபம். [ஸ. அபரூப: அப - கேடு. ரூப - வடிவு.]

அபரை—1. சிவசத்தி மூன்றனுள் ஒன்று; இதுவும் பிராமி, வைஷ்ணவி, ரௌத்ரியென மூன்றுவிதப்படும். இவற்றுள் பிராமி நூறுகோடியோசனை விசாலங்கொண்ட இரத்தமண்டலத்திலே சகல லோகங்களையும் சிருட்டித்தல்காரணமாகவும், வைஷ்ணவி யிரண்டுகோடியோசனை விசாலங்கொண்ட சுவேதமண்டலத்திலே சகல லோகங்களையும் இரட்சித்தல்காரணமாகவும், ரௌத்திரி மூன்றுகோடியோசனை விசாலங்கொண்ட விந்துமண்டலத்திலே சங்கரித்தல்காரணமாகவும் இருப்பார்கள் என்பர். (சைவச. பொது. எச. உரை.) 2. சிவதன்மிணி-தீகைஷ யிரண்டனுள் ஒன்று; அது: பவுதிகிதீகைஷ. (சி. சி. அ: ரு. ஞாநப்.)

அபரோட்சஞாநம்—1. சீவாவத்தை யேழனுள் ஒன்று; அது: குருகடாட்சத்தினற் பரோட்சமாய்க் கேட்கப்பட்ட பிரமசைதந்நியமே தானனது. (உபநி. கஎ. உரை.) 2. சுவாநுபூதியினல் வரும் ஞானம்.

அபரோட்சம் — 1. அநுபவ அறிவு, அபரோட்சஞாநம். 'தன்னிலைதானனதுவேயபரோட்சம்' (உபநி. கஎ.) 2. பிரத்தியக்ஷம். (சி. ஞா.) [ஸ. அபரோக்ஷ: அ, பரோக்ஷ - காணப்படாதது.]

அபரோட்சன்— பிரமசைதந்நியதரிசநன். [ஸ. அபரோக்ஷ.]

அபலம்—1. அடைக்குந்தாழ். 2. ஆண்டன்மையின்மை. 3. கனிகொடாதது. 4. கைம்மாறுவேண்டாதது. 5. பிரயோசநமில்லாதது. 'தப்பில் பலாபலமிவற்றில் விருப்பமற' (ஞாநவா. விரதசூ. கo.) 6. பெலமின்மை, பெலவீநம். 7. திமிங்கிலம். [1, 2, 3, 4, 5. ஸ. அபல: அ; பல. 6. ஸ. அபல: அ; பல.]

அபலன்—பெலவீநன். [ஸ. அபல.]

அபலாபம்—1. அறிந்ததை மறைத்தல். 2. நேசம். 3. பிதற்றல். [ஸ. அபலாப: அப; லாப - பேசுதல்.]

அபலாபனம் — மறைக்கை. 'இதனை அபலாபனம்செய்தல் யார்க்கும் ஒல்லாது.' (சிவசம. 54.)

அபலை—பெண்.

அபவம்—1. அபாவம், இராமை. 2. உலகமுடிவு. 3. திமிங்கிலம். [1, 2. அபவ: ஸ; பவ - இருத்தல்.]

அபவர்க்கம்—அபவருக்கம். 'மைஞ்ஞான்றகண்ட னருள்கூரு மபவர்க்கம்' (சேதுபு. துராசார. உஎ. இதனில் 'அபவர்க்கம்' முத்தியென்னும் பொருட்டு.) [ஸ. அபவர்க.]

அபவர்த்தம் — 1. ஆட்டியசைத்தல். 2. சுருக்குதல். 3. நீக்குதல். [ஸ. அபவர்த்த]

அபவர்த்தநம் — 1. அகற்றியெடுத்தல். 2. ஒன்றுக்கொன்று வித்தியாசமான இரண்டு இராசியையாவது பலராசியையாவது சேடம் வாராமல் அரிக்கும் வேறோர் இராசி. 'கறு,க்கும், உoக்கும் ரு அபவர்த்தம்.' [ஸ. அபவர்த.]

அபவரணம் — 1. அங்கவஸ்திரம். 2. மறைத்தல். 3. மூடுதல். [ஸ. அபவாரண: அப; வாரண - மறைத்தல்.]

அபவருக்கம்-1. நிறைவேற்றம். 2. பலம். 3. முடிவு. 4. முத்தி. [ஸ்வவர்க.]

அபவருச்சநம்-1. நற்கொடை. 2. முத்தி. 3. விடுதல். [ஸ்வவர்ஜந.]

அபவருத்தநம்—அபவர்த்தநம்.

அபவருத்தம்—அபவர்த்தம்.

அபவாகம்—1. அருத்தாபத்தி. 2. கழித்தல். 3. கொண்டுபோதல். [ஸ்வவாஹ: ஸ்வ; வாஹ - கொண்டுபோதல்.]

அபவாதம்—1. உள்ளபடியுணர்தல். அது: சர்ப்பாகாரமாகத்தோன்றுங் கயிற்றைச் சர்ப்பமன்று கயிறுதானென்றறிதல். ஞானவாசிட்ட உரைகாரர், 'அபவாதமாவது: விபரீதபாவனையாற் பார்க்கின்ற இல்லாத நாமரூப வடிவமாகிய சகத்தை யதார்த்தமான சச்சிதானந்த வடிவமாகத் தெளிவினுற் காண்குதல்' என்பர். 2. ஒவ்வாப்பேச்சு. 3. கட்டளையிடுதல். 4. கண்டனஞ்செய்தல். 5. குற்றம்பேசுதல். 6. நிந்தித்தல். 'உரையாதொழிதி மற்றொருவர்க்கபவாதம்' (சேதுபு. கவிசம். சுக.) 7. பழிச்சொல். 'அழுகையுங் கோளும் பொய்யு மயலபவாதந்தானும்' (சிவதருமோ. பாவ. சு.) 8. எய்தியதுவிலக்கிப் பிறிதுவருஞ் சிறப்புவிதி. (பி. வி: ௰. உரை.) [ஸ்வவாத: அவ - அபத்தம். வாத - பேச்சு.]

அபவாரணம் — 1. தோற்றுதொழிதல். 2. மறைவு. 3. மறைத்தல். (அமரகோசம். அ.) [ஸ்வவாரண.]

அபவித்தபுத்திரன் — தாய்தந்தையரால் நீக்கப்பட்டுப் பிறரால் எடுத்து வளர்க்கப்பட்ட புத்திரன். (மநு. கூ. களக.) [ஸ்வவித்புத்ர: அவவித்த-நீக்கப்பட்ட.]

அபவித்தன்—1. அகற்றப்பட்டவன். 2. அபவித்தபுத்திரன். 'ஔரசன், க்ஷேத்திரசன், தத்தன், கிருத்திரிமன், கூடோற்பந்நன், அபவித்தன் இவ்வாறுபுத்திரர்களும் பிதாஸ்திக்கும் பிள்ளையில்லாத ஞாதிகளாஸ்திக்கு முரியவர்கள்' (மநு. கூ: கடுக.) [ஸ்வவித்த.]

அபவித்திரம் — அசுத்தம். [ஸ்வவித்ர: அ; பவித்ர - சுத்தம்.]

அபவித்திரன்—அசுத்தன்.

அபவிதவ்வியம் — வருங்காலத்துளதாகாதது. [ஸ்பவிதவ்ய: அ; பவிதவ்ய - உளதாவது.]

அபவியயம்—அளவுக்கு மேற்பட்டசெலவு. [ஸ்வவ்யய: அவ - தவறு. வ்யய - செலவு.]

அபவியயமாநம்—1. கடனிறுமை. 2. விருதாவாகச் செலவிடல். [ஸ்வவ்யயமாந.]

அபவிருத்தி — குறைவு. [ஸ்வ - எதிர். வ்ருத்தி - வளர்ச்சி.]

அபவேட்டிதம் — கைவட்டணைநான்கனுளொன்று; அது: தர்ச்சனிவிரல்முதலாக அகம்வரப் பிடிக்குந்தொழில். (சிங். பதுமை. கூஉ. உரை.)

அபஸ்மாரம் — 1. காக்கைவலிப்பு. 2. வெறுக்கத்தக்கது.

அபாக்கியம்—நிர்ப்பாக்கியம். [ஸ்பாக்ய: அ; பாக்ய - செல்வம்.]

அபாக்கியவான் — நிர்ப்பாக்கியவான். 'பொருந்திய தரித்திரத்தைப்போல அபாக்கியவான்கள் எப்படி விளங்குவார்கள்' (ஞானவா. சிகித்து. உசு. உரை.)

அபாக்கியன்—நிர்ப்பாக்கியன். [ஸ்பாக்ய: அ; பாக்ய - செல்வன்.]

அபாகசாகம்—இஞ்சி. [ஸ்வாகஸாக.]

அபாகம்—1. சமியாக்குணம். 2. பாகம்பண்ணப்படாதது. 3. முதிராதது. [ஸ்வாக: அ; வாக - பக்குவம்.]

அபாகரணம்—1. கடனிறுத்தல். 2. நிராகரணம். [ஸ்வாகரண.]

அபாகிரோகம்—மசூரிகை ரோகவகையுள் ஒன்று; 'அது: சரீரத்திலே தூரந்தூரமாக உலர்ந்ததுபோலுங் கருகினதுபோலுங் கொப்புளங்களாக எழும்பி யிறக்கங்கொள்ளாமல் நெடுநாள்நின்று உபத்திரவஞ்செய்யும்' (சீவரட். கசச.)

அபாங்கம்—1. அங்கஹீநம். 2. கடைக்கண். [ஸ்வாங்க.]

அபாங்கதரிசநம் — கடைக்கண்பார்வை.

அபாங்கம்—1. அங்கஹீநம். 2. கடைக்கண். 3. கடைக்கண்பார்வை. 4. நெற்றித்திலகம். [ஸவாங்க: அவ; அங்க - உறுப்பு.]

அபாசங்கம்—அம்புக்கூடு. [ஸவாஸங்க.]

அபாசம் — ஆசையின்மை. [ஸவாஸ.] 2. ஆபாசம்.

அபாசிரயம்—முற்றத்திற் பந்தல். [ஸவா ஶ்ரய: அவ; ஆஶ்ரய - பாதுகாப்பு.]

அபாசீநம்—1. தெற்கிலுள்ளது. 2. தெற்கு. [ஸவாசீந: அவாசீ - தெற்கு. ஈந - ஒரு வ-வி.]

அபாசுவரம்—ஒளியில்லாதது. (தர்க்காமி. உச.) [ஸஹாஸ்வர: அ-எதிர்மறை. ஹாஸ்வர - ஒளியுடையது.]

அபாடணம்—பேச்சின்மை. [ஸஹாஷண: அ; ஹாஷண - பேச்சு.]

அபாடவம்—1. அந்தக்கேடு. 2. சாமர்த்தியமின்மை. 3. நோய். [ஸவாடவ: அ; வாடவ - சாமர்த்தியம், சுகம்.]

அபாண்டம்—1. அபாத்திரம். 2. இடுநிந்தை. பொய்க்குற்றச்சாட்டு. (வழக்.)

அபாண்டவாஸ்திரம்—பாண்டவ வம்சத்தை அழிக்கப் பிரயோகித்த அஸ்திரம்.

அபாண்டவியம்—அபாண்டவாஸ்திரம்.

அபாத்திரம்—1. அசற்பாத்திரம். 'தன்னைக்குறித் திரப்பான்றன்னை யபாத்திரமென் றுன்னிவிடுவர்' (சைவச. பொது. சஉக.) 2. கூடாதபாத்திரம்.

அபாத்திரீகரணம்—1. அயோக்கியமான கிரியைகளைச் செய்தல்; அது: பிராமணன் சூத்திரனுக்கு ஏவல்செய்தல் முதலியன. 'நிந்திக்கப்பட்டவனிடத்துப் பொருள்வாங்கல் வர்த்தகஞ்செய்தல் சூத்திரசேவை செய்தல் பொய்சொல்லல் இவையெல்லாம் தனித்தனியே யபாத்திரீகரணம்' (மநு. கக: சுக.) 2. அயோக்கியனென்று தள்ளுதல். [ஸவாத்ரீகரண.]

அபாதாநகாரகம்—நீக்கப்பொருள்கொடுக்கும் ஐந்தாம்வேற்றுமை வினையொடு முடிவது. (பி. வி. கக.)

அபாதாநம் — ஐந்தாம்வேற்றுமையில் வரும் நீக்கப்பொருள்.

அபாநத்தாநவித்திரதிக்கட்டி — ஒருவகை வித்திரதிக்கட்டி; இது: ஆசநத்திற் பலவித உபத்திரவங்களை யுண்டாக்கி மலத்துவாரத்தைக் கெடுக்குமென்பர். (சீவரட். கoஅ.) [ஸவாநஸ்தாநவித்ரதி.]

அபாநம்—1. இரகசியஸ்தாநம், மூத்திரம் முதலியபோகும் வழியென்பர். 'நன்றுறுமபாந மின்றி யோர்மக வமையப் பெற்றாள்' (மச்சபு. தீர்க்கதம. ௩உ.) 2. கடுக்காய். 3. குடிக்கக்கூடாதது. 4. மலவாயில். (சீவரட். கoஅ.) 5. மூலாதாரம். [ஸவாந: அவ - கீழ். அந - சுவாசித்தல். 3. அ; வாந.]

அபாநவாயு — பத்துவாயுக்களுளொன்று; (பிங்.) இது: நாபித்தாநத்திலே தோன்றிக் குதத்தையுங் குய்யத்தையும் பற்றிநின்று மலசலங்கள் கழிய வகைசெய்யும்.(த. வி. ச. ஒ௩.) சரீரத்திற்குள்ளிருக்கும் வாயு ஒன்றாயிருந்தபோதிலும் ஸ்தாநவியாபார பேதத்தினாலே ஐந்தென்னப்படும்வாயுக்களுள் ஒன்று; அது: குதஸ்தாநத்திலேயிருந்து மலம், மூத்திரம், சுக்கிலம் இவற்றைக் கீழே தள்ளும். (சி-லி. ஞாந. கஎ. உரை. சீவரட். ச.) [அபாநவாயு.]

அபாநவிருத்தி-அபாநவாயுவாய்ச் சேட்டித்தல். 'அத்தகுபிராணவளியின் சொரூப மூன்றென்றதோமுகமாய்ப் பூரகசொரூபமாயமைய - வொத்தவபாநவிருத்தி சொரூபமாயிருக்கும்' (ஞாந. எக்கி. பூ. ச: கரு.) [ஸவாநவ்ருத்தி.]

அபாநன்—அபாநவாயு. 'அபாநன் குதத்தினுற்றுச்சென்றுழிய மலசலங்களொழித்தலுறும்' (வேதா. சூ. எரு.) பிங்கலநிகண்டுகாரர்: 'உச்சத்தலத்திடை நிற்பதபாநன்' என்பர். (பிங்கல. ௩ச.) [ஸவாந.]

அபாநீயம்—குடிக்கத்தகாதது. [ஸவாநீத: அ; வாநீய குடிக்கத்தக்கது.]

அபாபம் — 1. குற்றமின்மை. 2. பாபமின்மை. [ஸவாவ: அ; வாவ - புண்ணியமல்லாதது.]

அபாம்பதி—1. சமுத்திரம். 2. வருணன். அரியதோர் விண்டு வாகி யபாம்பதி யாகி' (சேதுபு. சேதுயாத். கரு.) [ஸவாம்வதி: ஸவாம் - நீருக்கு. வதி - தலைவன்.]

அபாமார்க்கநாநம் — சரீரத்தில் நாயுருவி தடவிச்செய்யும் ஸ்நாநம். (பரா.மிரு. ஆசார. ஸ்நாந. ௩௮.) [அபாமார்க்கஸ்நாந.]

அபாமார்க்கம்—1. நாயுருவி. (மலை.) 2. வெண்ணாயுருவி. [அபாமார்க்க.]

அபாயம் — 1. அந்தம். 2. ஆபத்து. 'தேயத்து - வாய்த்தவபா யஞ்சிவவுஞ் சவ மிக்கா லங்களின்மெய் மயங்கு மாறு - நீத்த விழி ஞர்களுநினுந் தோடமில்லை' (சூத. எக்கி. பூ. ௬௪: ௧௮.) 3. இணக்கமின்மை. 4. கேடு. 5. சதிசெய்தல். 6. சேதம்பண்ணுதல். 7. தோற்றப்படாமை. 8. நட்டம். 9. பிரிவு. 10. போதல். 11. மோசம். 'மற்றதுகண்டு மைந்தன் வந்தநிங் கபாயமென்று' (பெரியபு. திருவா. சிற. உ௪.) [அபாய.]

அபார்த்தகம்—ஒரு நிக்கிரகத்தாநம்; அது: அவாய்நில்ல, தகுதி, அண்மையில்லனவாப் பேசல். (சி.சி.அளவை. ௧௪. மறை;சிவஞா.) [அபார்த்தக.]

அபார்த்தகாணம்-வீண்வழக்கு.[அபார்த்த காரணம்.]

அபார்த்தம் — 1. அர்த்தமில்லாதது. 2. பிரயோசனமில்லாதது. [அபார்த்த: அப. எதிர்மறை. அர்த்த-பொருள், பிரயோசநம்.]

அபாரணை — பாரணைசெய்யாதொழிதல். [அ; வாரணா - உபவாசமிருந்து பின் னுண்ணல்.]

அபாரம்—1. அளவற்றது, எல்லைப்படா தது. 'தேசகாலவஸ்துக்களால் அந்தமில்லா மல் அபாரமாயிருக்கிறது' (விசார. உ.) 2. கடவுள். 3. கரையற்றது. 4. தொலை யாதது. [அபார.]

அபாரமார்த்திகம்- பரமார்த்தமில்லாதது, யதார்த்தமல்லாதது. [அபாரமார்த்திக.]

அபாவசதுட்டயம்-முன்னில்லாமை, பின் னில்லாமை, ஒன்றினொன்றில்லாமை, என்று மில்லாமை யென்னும் அபாவம் நான்கு. [அபாவசதுஷ்டயம்.]

அபாவநம்—மறப்பு.'இம்மநத்தையபாவந மென்னுங் கத்தியினாற் கெடுப்பாய்'(ஞாநவா. உற்பத்தி. எ. உரை.) [அபாவந.]

அபாவநை—1. தியாநமின்மை. 2. நிந்தை. 3. பகுத்தறிவின்மை. [அபாவநா: அ; பாவநா - கருதல்.]

அபாவப்பிரமாணம் — ஓரளவை; அது: இல்லதனை யில்லையென்றல். 'முயற் கோடில்லையென்றவழி யதனை யுண்டோ என்று மயங்காமற் றானும் இல்லையென்று கோடல்போல்வது' (சிவ. போ. விருத்தி. ௧௫௬.) [அபாவப்ரமாணம்.]

அபாவம் — 1. அபாவப்பிரமாணம். 'அளவைகாண்டல் கருதலுரையபாவம்' (சி. சி. அளவை. ௧.) 2. அபாவயோகம். (வேதா. சூ. ௧௩௯.) 3. அறியாமை. 'அகமினதுபாவா பாவங்கள்' (வேதா. சூ. ௧0௮.) 4. இன்மை. 'அங்கிவிர்த்திதானு மபாவமாம்' (சூத. எக்கி. பூ. உ: ௬.) 5. நனவிற் சுழுத்தி. 6. நிருமூல மான அழிவு, முழுது மழிதல். 7. நினையாமை. 'பாவமொடபாவமும்' (தாயு. ஆநந்த ௫. உரை.) 8. மாணம். 'நீண்டபாவாபாவம்' (ஞாநவா. உபசா. ௧எ.) [அபாவ.]

அபாவயோகம் — ஐவகையோகங்களு ளொன்று; (த. நி. போ. ௩௭௪.) அது: கரணங்களுக் கெட்டாத பிரமத்திலே மநோ லயமாவது. (வேதா. சூ. ௧௩௯. உரை.) [அபாவயோக.]

அபாவர்த்தநம் — திரும்புதல். [அபா வர்த்தந.]

அபாவவளவை—அபாவப்பிரமாணம்.

அபாவாபாவம் — ஓரலங்காரம்; அது: 'பள்ளியுளீரம்புலராமை யேறற்க' என்பதிற் போல எச்சமும் முடிக்குஞ்சொல்லும் எதிர் மறுத்து உடன்பாட்டுப்பொருளில் வருவ தொன்று. (பி. வி. ௩௧. உரை.) [அபாவ; அபாவ.]

அபி — 1. அதட்டுகை, கண்டித்தல், கேள்வி, சந்தேகம், சையோகம், நிகழக் கூடியதன்மை, ஆவலான விசாரணை: ஆகிய வற்றின் ஒன்றன்பாற்படப் பொருள் விளைத்துநிற்பதும், பொருள் ஒன்றுமின்றி யசைத்துநிற்பதுமான ஒரு வடமொழியுப சர்க்கம். [அபி.] 2. இடத்திலாவதுகுலத்தி லாவது அதிகாரத்திலாவது மேற்பட்டிருக் குந்தன்மை, சமீபம், விருப்பம், வேறுந்

தன்மை யாகியவற்றின் ஒன்றன்பாற்படப் பொருள்விளைத்துநிற்கும் ஒருபசர்க்கம். [ஸம்ஸ்.]

அபிக்கியாதம்— அறியப்பட்டது. [ஸம்ஸ் க்யாத: அபி; க்யாத - அறியப்பட்டது.]

அபிக்கியை—1. அழகு. 2. அழைத்தல். 3. கீர்த்தி. 4. சொல்லல். 5. துர்க்கீர்த்தி. 6. நாமம். 7. பரியாயபதம். 8. பிரகாசம். 9. மேன்மை. [ஸம்ஸ்க்யா.]

அபிக்கிரகணம்—உடையவன் முன்னிலையிலே யாதாயினுமொருபொருளைக் கவர்தல், கொள்ளையிடல். [ஸம்ஸ்க்ரஹண: அபி - சமீபம். க்ரஹண - கவர்தல்.]

அபிக்கிரகம்—1. திருடுதல். 2. போர்க்கு அறைகூவுதல். 3. பலாற்காரமான களவு. [ஸம்ஸ்க்ரஹ: அபி: க்ரஹ - எடுத்தல்.]

அபிக்கிரமம்—1. அடர்த்தல் 2. ஊறுபாடு செய்ய முயலுதல். 3. ஏறுதல். 4. தொடக்கம். [ஸம்ஸ்க்ரம: அபி - மேல். க்ரம - போதல்.]

அபிகதம்—சமீபித்தது. [ஸம்ஸ்கத: அபி- கிட்ட. கத - போனது.]

அபிகமநம்—சமீபமாகப்போதல். [ஸம்ஸ் கமந; அபி - சமீபம். கமந - போதல்.]

அபிகமம்—சமீபமாகப்போதல். [ஸம்ஸ்கம: அபி - சமீபம். கம - போதல்.]

அபிகருடணம்—1. உரிஞ்சுதல். 2. பேய்க் கோட்படல். [ஸம்ஸ்வஷ்ண: அபி - சமீபம். வஷ்ண - இடித்தல்.]

அபிகாதசுரம் — ஒருவகைச்சுரம்; இது: குத்துக்காயம் முதலிய விரணங்களினாலும், அக்கினிசமீபமாயிருந்துநடத்துந் தொழிலினாலும், அதிகநடையினாலும், அதிகஉழைப்பினாலும் வருவது. (சீவரட். ௩௧.) [ஸம்ஸ் வாதஜ்வர: அபிவாத - குத்துக்காயம். ஜ்வர - சுரம்.]

அபிகாதசோபை—ஆயுதக்காயம் முதலியவற்றால் உண்டாகும் ஒருவகை ரோகம். (சீவரட். ௩௩௮.) [ஸம்ஸ்வாதஶோஹா.]

அபிகாதம்—1. அடித்தல். 2. உபத்திரவம். 3. காயப்படுத்துதல். 4. நிருமூலமாயழித்தல். 5. பரிசித்தல். [ஸம்ஸ்வாத.]

அபிகாதவாதம்—அதிகமாக வழிநடத்தல் முதலிய காரணங்களாற் பிறந்து சரீரமுழுதும் வியாபித் தடித்தாற்போல நோகச்செய்யும் ஒருவகை வாதநோய். (சீவரட். ௧௫௬.) [ஸம்ஸ்வாதவாத: அபிவாத - அடித்தல்.]

அபிகாதி—பகைவன். [ஸம்ஸ்வாதிந்.]

அபிகாரம் — 1. உடையவன் முன்னிலையிலே அவன்பொருளைப் பலாற்காரமாகக் கவர்தல். 2. ஊறுபாடுசெய்ய ஊக்குதல். 3. ஓமத்திலே நெய்விடுதல், வக்த்ரத்தில் தனித்தனி யாகுதிகொடுப்பது. (சி-லி. கிரி. ௨௭. தாற்.) 4. நெய். 5. படைக்கலந்தரித்தல். 6. படையெடுத்தல். [1, 2, 5, 6.ஸம்ஸ்ஹார: 3, 4. ஸம்ஸ்வார.]

அபிகிதகர்த்தா — தன்செயலையுணர்த்தும் வினைக்கெழுவாயாகநிற்குங் கர்த்தா. (பி. வி. ௧௧.) 'தந்தைமகனையடித்தான்' என்பதில், தந்தை அபிகிதகர்த்தா. [ஸம்ஸ்ஹித கர்தா.]

அபிகிதகர்மம்—செயலையுணர்த்தும் வினை செயப்பாட்டுவினையாய் வர அதற்கெழுவாயாக நிற்குஞ் செயப்படுபொருள்.(பி.வி.௧௨.) 'மாடம் தச்சனு லியற்றப்பட்டது' என்பதில் மாடம் அபிகிதகர்மம். [ஸம்ஸ்ஹிதகர்ம.]

அபிகிதகருத்தா—அபிகிதகர்த்தா. (பி. வி. ௧௧.) [ஸம்ஸ்ஹிதகர்தா.]

அபிகிதகன்மம் — அபிகிதகர்மம். (பி. வி. ௧௨.) [ஸம்ஸ்ஹிதகர்ம.]

அபிகிதத்துவம் — பிரமாணவாக்கியம். [ஸம்ஸ்ஹிதத்வம்.]

அபிகிதம் — 1. சொல்லப்பட்டது. 2. சொல்லப்படுநிலை, தெரிநிலை. 'சொல்லப்படுநிலை சொல்லப்படாநிலை - யபிகித மநபிகிதமென மொழிப-தெரிநிலை தெரியா நிலையெனவும் பெறூஉம்' (பி. வி. ௧௧. உரை.) [ஸம்ஸ்ஹித.]

அபிகிருதி—ஒருவகைச்சந்தம்; அஃது: ஒற்றொழித்து உயிராவது உயிர்மெய்யாவது அடியொன்றற்கிருபத்தைந்தெழுத்தாய்வருவது. (வீரசோ. யாப்பு. ௩௩. உரை.) அபிகிருதிக்குதாரணம்: 'அங்குலிக மொன்றுபுன லாழ்தருகிணற்றில்விழவந்தமுநி தேடுமினெனப்-புங்கமொடு புங்கமுற வெய்திவ னெடுத்தமை புகன்றருகு நின்ற வரைநீ-ரிங்கிதவிலைத்தொகைகள் யாவுமுரு வப்பகழியேவுமி னெனுமுன் விசயன் - றுங்கவில்வளைத்தொரு கணத்தினில் வடத்திலை துளைத்தன விலக்கி ணெடையால்' (பாரத. வாரணு. ௫௧.)

அபிசங்கசுரம் — ஒருவகைச்சுரம்; இது: பூதாவேசசுரம், ஔஷதகந்தசுரம், விஷசுரம், கோபச்சுரம், பயச்சுரம், துக்கச்சுரம், காமச்சுரம் என ஏழாக விரியும். (சீவரட். ௩௨.) [அபிஷங்கஜ்வர: அபிஷங்க - சேர்க்கை.]

அபிசங்கம்—அபிடக்கம். [அபிஷங்க.]

அபிசந்தி—1. அவதூறு. 2. இரத்தல். 3. நிந்தித்தல். [அபிஶஸ்தி: அபி; ஶஸ்தி - புகழ்தல், கேட்டல்.]

அபிசந்தானம்—1. உடன்கை. 2. எய்ப்பு. 3. சமாதானம்பண்ணுதல். 4. விசேடமான உடன்படிக்கை. [அபிஸந்தாந.]

அபிசந்தாபம்—யுத்தம். [அபிஸந்தாப: அபி - அதிகம். ஸந்தாப - வருத்தம்.]

அபிசந்தி—1. எய்ப்பு. 2. சமாதானஞ்செய்தல். 3. நோக்கம். 4. விசேடமான உடன்படிக்கை. [அபிஸந்தி; அபி-அதிகம். ஸந்தி - உடன்பாடு.]

அபிசநம்—1. கீர்த்தி. 2. பிறந்ததேயம் 3. வமிசத்தலைமை. 4. வமிசம். [அபிஜந: அபி; ஜந - பிறந்தது.]

அபிசநவான்—உயர்குலத்தோன். (பகவ். ௧௬: ௧௫.) [அபிஜநவாந்.]

அபிசம்பந்தம்—1. இனத்தொடர்ச்சி. 2. கூடுதல். 3. மைதுனம். [அபிஸம்பந்த.]

அபிசம்பாதம்—1. சாபம். 2. யுத்தம். [அபிஸம்பாத: அபி-முன். ஸம்பாத-போதல்.]

அபிசர்க்கம்—சிருட்டிப்பு. [அபிஸர்க.]

அபிசர்ச்சநம்–1. கொலை. 2. நற்கொடை. [அபிஸர்ஜந.]

அபிசான் — 1. அநுசரன். 2. தோழன். [அபிஸர: அபி-பின். ஸர-செல்வோன்.]

அபிசவம்—1. நாநஞ்செய்தல். 2. புளிப்பேறினகஞ்சி. 3. யாகம். [அபிஷவ.]

அபிசாதகுலம்—உயர்குலம். [அபிஜாதகுலம்.]

அபிசாதம்—1. அழகியது. 2. கணிக்கத்தக்கது. 3. தகுதியானது. [அபிஜாத.]

அபிசாதன் — 1. உயர்குலத்தோன். 2. தக்கோன். 3. பண்டிதன். [அபிஜாத.]

அபிசாபம் — 1. அபராதபத்திரம். 2. சபித்தல். 3. பொய்யாக அபராதமேற்றல். [அபிஶாப: அபி; ஶாப - சபித்தல்.]

அபிசாரம் — மந்திரத்தாற் கொல்லல். [அபிசாரக.]

அபிசாரசுரம் — ஒருவகைச்சுரம்; இது அதர்வணவேத மாரணமந்திரங்களைக் கொண்டு ஒருவன்பேரைச்சொல்லி யோமஞ்செய்தலினுற் பிறக்குமென்பர். (சீவரட். ௩௨.) [அபிசாரஜ்வர - ஓமாகுதிகளாற் பிறப்பதால் இப்பெயர்பெற்றது.]

அபிசாரணம்—1. சந்தித்தல். 2. சமீபித்தல். 3. விரும்பிக்கேட்டல். [அபிஸாரண.]

அபிசாரம் — 1. அதர்வணவேதத்திலும் சில தந்திரங்களிலும் சொல்லுகிறபடி பைத்தியம், உறவு, பகைமை, உணர்ச்சியின்மை, வாதம், மரணம்: என்னும் இவற்றிலொன்றை வருவிக்குமந்திரயந்திரங்கள். [அபிசார.] 2. கருவி. 3. காமுகர் சந்தித்தற்கு நியமிக்கும் இடம். 4. பெலன். 5. யுத்தம். [அபிஸார.]

அபிசாரி—1. மோகநவித்தைக்காரன். 2. மோகநவித்தைக்காரி. 3. வேசி. [1, 2. அபிசாரிந். 3. அபிஸாரி.]

அபிசாரிகை — நியமித்துக்கொண்ட குறியிடத்துச் செல்லும் பெண். [அபிஸாரிகா: அபி - சமீபம். ஸாரிகா - செல்பவள்.]

அபிசித்து—1. ஓர் யாகம். 2. ஒரொட்டு நட்சத்திரம்; இஃது: உத்தராடத்தின் நாலாங்கால் நாழிகை பதினைந்தும் திருவோணத்தின் ஆதி நாழிகை நான்குங் கொண்டது. (குமாரசுவா. நட்சத்திர. அ.) 'மகரத்தேவிரவு மம்புலி விளங்கபிசித்திடை மேவுநாள்' (வேதாரணியபு. பிரமயாத். க.) 3. பகலிலே யெட்டாமுகூர்த்தம்; ஒருமுகூர்த்தம், இரண்டுநாழிகை. (விதாந. குணகுண. எங.) 4. மத்தியாநகால அபிமாநதேவதை. (பகவற். அ: உரை.) 5. விட்டுணு. [ஸஹிஜித்.]

அபிசிதம் — கூப்பிட்டுக் கொடுக்கும் அந்நம்புசித்தல். (வி. ணி.)

அபிசிரவணம்—சிராத்தத்தில் உண்ணும் பிராமணரைக் கேட்பிக்கும் மந்திரம்.

அபிசுதம் — புளிப்பேறினகஞ்சி. [ஸஹிஷுத.]

அபிஞ்ஞர்—1. அறிந்தவர். 'தத்தத் காரியாபிஞ்ஞரா யிருக்கிற ஆப்தராலும்' (சி. சி. டு: ச. சிவாக்.) 2. நிபுணர். [ஸஹிஜ்ஞ.]

அபிஞ்ஞாநம்—1. அடையாளம். 2. அறிவு. 3. கறை. [ஸஹிஜ்ஞாந: அஹி - சமீபம். ஜ்ஞாந - அறிதல்.]

அபிட்டம்—பாதரசம்.

அபிட்டுதம் — துதிக்கப்பட்டது. [ஸஹிஷ்டுத.]

அபிடங்கசுரம் — ஆகந்துகசுரத்தினொரு வகை.(சீவரட்.நூஉ.)[ஸஹிஷங்க-சேர்க்கை.]

அபிடங்கம்-1. அபசயப்படுத்தல். 2. ஆணையிடுதல். 3. ஒன்றித்துக்கூடுதல். 4. சபித்தல். 5. தழுவுதல். 6. பேய்பிடித்தல். 7. பொய்யாக அபராதமேற்றல். [ஸஹிஷங்க.]

அபிடவணம்—1. நீரின்முழுகுதல். 2. யாகாதி செய்தல். [ஸஹிஷவண.]

அபிடவம்—1. நீரின்முழுகுதல். 2. புளிப்பேறினகஞ்சி. 3. யாகத்துக்கங்கமான ஸ்நாநம். [ஸஹிஷவ.]

அபிடிக்தர்—அபிடேகஞ்செய்யப்பட்டவர். (தணிகை. வரலாறு.) [ஸஹிஷிக்த.]

அபிடியந்தம் — 1. கண்ணின் பெலவீநம். 2. பாய்தல். 3. பெருகுதல். 4. பொசிதல். 5. மிஞ்சினபாகம். [ஸஹிஷ்யந்த: அஹி; ஸ்யந்த - சிந்துதல்.]

அபிடுதம்—புளிப்பேறின கஞ்சி. [ஸஹிஷுத: அஹி; ஷுத - கலந்தது.]

அபிடேகக்கூட்டு — சுவாமிக்கபிடேகஞ் செய்தற்குச் சேர்க்குஞ் சரக்கு.

அபிடேகதிரவியங்கள்—அபிடேகஞ்செய்தற்குவேண்டிய திரவியங்கள்; அவை: எண்ணெய்க்காப்பு, மாக்காப்பு, நெல்லிக்காப்பு, மஞ்சட்காப்பு, பஞ்சகவ்வியம், இரசபஞ்சாமிர்தம், பலபஞ்சாமிர்தம், பால், தயிர், நெய், தேன், சர்க்கரை, கருப்பஞ்சாறு, எலுமிச்சம்பழச்சாறு, நாரத்தம்பழச்சாறு, தமரத்தம்பழச்சாறு, குளஞ்சிப்பழச்சாறு, மாதுளம்பழச்சாறு, இளநீர், சந்தநக்குழம்பு: என்பவைகளாம்.

அபிடேகம்—1. குருவாய் அல்லது அரசனுப்வருதற் காரம்பத்திலே செய்யப்படும் ஸ்நாநக்கிரியை. 'சமயவிசேடநிருவாணமபிடேகமிவற்றடங்குமன்றே' (சி. சி. அ: டு.) 'அங்கண்மன்னனைப்பராசரன்முனபிடேகமங்கலத்தடநீருற்செய்து' (சேதுபு. மங்கல. எக.) 2. திருமஞ்சநம். 'அரனுக்குப் பஞ்சவமிர்தத்தின லபிடேகஞ்செய்வித்து' (உபதேச. சிவவிரத. எ.) 3. ஸ்நாநஞ்செய்தல். 4. கிரீடம். (திருப்பு. டுoஈ.) [ஸஹிஷேக.]

அபித்தியாநம்—1. இச்சித்தல். 2. தியானித்தல். [ஸஹிய்யாந: அஹி; ய்யாநம் - நினைத்தல்.]

அபித்தியை — 1. இச்சை. 2. பிறன் பொருளை யிச்சித்தல். [ஸஹிய்யா: அஹி - விருப்பம். ய்யா - நினைத்தல்.]

அபித்துரோகம்—1. கொடுமை. 2. நிந்தனை. [ஸஹித்ரோஹ: அஹி; த்ரோஹ- பலாற்காரம்.]

அபிதன்மபிடகம் — பௌத்தருடைய பிடகாகமங்கள் மூன்றனுள் ஒன்று. (மணிமே. உசடு.)

அபிதா—அபிதை. [ஸஹியா.]

அபிதாநம்—1. சலாகை. (இராசவைத்.) 2. சொல்லுதல். 3. பெயர். 'அபிதாநமும்

நான்காக' (சீகாழிப்பு. தலைவி. சுரு 4.). பெயரிடுதல். [அபியா_ந.]

அபிதாபம்—1. கலக்கம், மநச்சலநம். 2. மிகுவெப்பம். [அபி_தாவ: அபி; _தாவ - வெப்பம்.]

அபிதாமூலத்தொநி — பெயரடியாகத் தோன்றிய குறிப்புப்பொருள். 'குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே-யுடம்போ டுயிரிடை நட்பு' என்பதிலே நட்பென்பது குறிப்புமொழியாய் நட்பின்றிப்போதலை யுணர்த்துதல்போல்வது. (பி. வி. ௫0.உரை.) [அபியா; மூலம் - அடி. த்வநி-குறிப்பு.]

அபிதாமூலம்—அபிதாமூலத்தொநி. [அபியாமூலம்: அபியாமூலம் - பெயரடியாற் பிறந்தது.]

அபிதார்த்தம்—பதவுரை. (த. நி. போ. கO அ.) [அபியா-பெயர். அர்த்த.பொருள்.]

அபிதாவகம் — பின்றொடர்ந்தோடுவது. [அபியாவகம்.]

அபிதாவநம் — பின்றொடர்ந்து தூரத்துதல். [அபியாவந: அபி - பின். யாவந-ஓடுதல்.]

அபிதேயம்—1. சொல்லப்படும் விடயம், சொல்லப்படுவது. (சி. சி. சு: கூ. ஞாநப்.) 2. சொல்லின்மூலப்பொருள். 3. சொற்பொருள். 4. நாமமிடத்தக்கது. [அபியெய: அபியா - சொல். ஏய - ஒரு செயப்படுபொருள்விகுதி.]

அபிதை—1. செஞ்சொல். (பி. வி. ௫0. உரை.) அது கற்றோர்க்குங் கல்லாதோர்க்கும் ஒப்பத் திரிசொற்போலாது தன் பொருளைத் தானே விளக்கும் உலகவழக்கச் சொல். 2. (குறிப்பிலக்கணைகளின்வேறாகிய) சொல்லாற்றலென்னும் விருத்தி. 3. பெயர். [அபியா.]

அபிந்நதை—ஒன்றாந்தன்மை. [அபிநதா: அ; பிநதா - பிறிதாந்தன்மை.]

அபிந்நநிமித்தோபாதாநதை — நிமித்தகாரணமும் உபாதாநகாரணமும் வேறல்லாதிருக்குந்தன்மை. 'சிவனுடைய திருமேனியான சிற்சத்தியபிந்நநிமித்தோபாதாநதையினாலே' (சி. சி. க: சஅ. சிவாக்.) [அபிந - பிந்நமில்லாத. நிமித்த; உபாதாநதா.]

அபிந்நம்—1. ஒற்றுமை. 2. பிந்நமல்லாத எண், முற்றெண். 3. பேதமின்மை. 'பிந்நமென்றும் அபிந்நமென்றும் பிந்நாபிந்நமென்றும்' (சூத. எக்கி. பூ. ௩அ: கூ.) 4. மாற்றப்படாதது. [அபிந: அ; பிந - வெட்டப்பட்டது, வேறுபட்டது.]

அபிந்நை—வேற்றுமையின்றிக் கூடியிருப்பவள். 'ஈசுவரனுடைய சமவாயசத்தி பிரபஞ்சாநுகுணதையாய் அபிந்நையாயிருக்கையினாலும்' (சி. சி. உ: க. சிவாக்.) [அ; பிந்நா-பிந்நமுடையவள்.]

அபிநந்தை—விருப்பம். [அபிநந்தா.]

அபிநயக்கூத்து — நிருத்தக்கைதழுவாது பாட்டினது பொருளுக்குக் கைகாட்டி வல்லபஞ்செய்யும் பலவகைக் கூத்து. (சிலப். அரங்கே. கஉ.)

அபிநயபிடகம் — பிடகசாத்திரங்கள் மூன்றனுள் ஒன்று.

அபிநயம்—1. அபிநயநூல். 2. அலங்கரித்தல். 3. உபசாரணை. 4. கூத்து. 5. நடநபாவனை. 6. மநக்கருத்தைக் குறிப்பாய் விளக்கும் அங்கசேட்டை. 'கூத்தாடியொருவனே யிராவணனாதிகளைப்போல ரூபத்தையும் பிறர்க்குக் காட்டி' (சி. சி. க: சுஎ. சிவாக்.) 'கானவார் கூந்த லாமாத ரபிநயக் கைவழிக் கண்கள் செல்ல' (சூத. சிவ. எ. உஉ.) [அபிநய: அபி-மேல், மிக. நய - அடைவித்தல்.]

அபிநயர்—கூத்தர்.

அபிநயித்தல் — 1. அபிநயஞ்செய்தல். 2. நடித்தல். 'சிவபேதமென்கின்ற நவபேதத்தை யொருபொருளாகிய சிவன், தானே யதிட்டேயபேதத்தையொட்டி யபிநயித்துத் தடத்தகற்பனையினாலே காண்பிப்பன்' (சி. சி. உ: எச. ஞாநப்.)

அபிநவம் — 1. மிகப்புதியது. 2. மிகவும் இளமையானது. 'அபிநவ விசாலபூரண வம்பொற் கும்பத் தனமோதி' (திருப்பு. சங.) [அபிநவ: அபி - மிக. நவ - புதுமை.]

அபிநாசசந்நி—ஒருவகைச் சந்நி. (வைத்தியபரி.)

அபிநிட்கிரமணம் — புறப்படுதல், வெளியிற்போதல். [ஸுஹிநிஷ்ஜணை: அஹி; நிஸ்; கூஜண - போதல்.]

அபிநியாசசந்நிபாதசுரம்—ஒருவகைச் சந்நி பாதசுரம்; இது: வாதமும் பித்தமும் சிலேத்துமமும் சமமாக அதிகரித்தலினாற் பிறப்பதும் பசிநீங்குதல், முகத்திற் பளபளப்பு, பேச்சில்லாமை, துர்ப்பலம், பஞ்சேந்திரியத்தன்மைகுறைவு, மயங்கிய நித்திரை, அறிவின்மை யென்னும் இக்குணங்களை யுண்டாக்குவதும் ஆம். (சீவரட். உ௬.) [இது, தேகவியாபாரங்களை நீக்குதலால் வந்த பெயர்.]

அபிநியாசவாதம்—ஒருவகை வாதநோய்; இது: வாத பித்த சிலேட்டுமங்களை யதிகரிக்கச்செய்து வருத்தும். (சீவரட். க௬எ.)

அபிநிரியாணம்—படையெழுச்சி. [அஹி நியாண: அஹி; நியாண - வெளியிற் போதல்.]

அபிநிவேசம் — 1. ஊக்கம். 2. எனக்கிது வேண்டுமென் றவாவியபொருளினிடத்தே செல்லும் ஆசை. 'வருந்தபிநிவேசமெனு மவையைந்தும்' (கூர்மபு. விபூ. கக.) 3. மரணபயத்தாற் சரீரத்தை யிரட்சிக்கவேண்டும் என்னுங் கிலேசம். (விசார. சக.) 4. விடாப்பிடி. [ஸுஹிநிவெஶ: அஹி; நிவெஶ - பிரவேசிக்கை.]

அபிநீதி — 1. சிநேகம். 2. மனக்குறிப்பை விளக்கும் அங்கசேட்டை. 3. மரியாதை. [ஸுஹிநீதி: அஹி; நீதி - ஒழுக்கம்.]

அபிப்பிரணயநம்—பிராயச்சித்தம். [ஸுஹிஷுணயந: ஷுணயந - சுத்திகரித்தல்.]

அபிப்பிரணயம்—1. தயவு. 2. பிராயச்சித்தம்.

அபிப்பிராயபேதம் — நோக்கவேறுபாடு.

அபிப்பிராயம் — 1. கருத்து, நோக்கம். 2. சொல்லினால் அல்லது வாக்கியத்தினாற் கருதப்பட்டபொருள். 3. விருப்பம். [ஸுஹிஷாய.]

அபிபவநம்—1. கீழ்ப்படுத்தல். 2. கீழ்ப்படுதல். 3. வியாதிமுதலியவற்றால் அறிவு மாறுபடுதல். [ஸுஹிஹவந: ஹவந - இருத்தல்.]

அபிபவம்–1. அவமானமடைதல். 2. கீழ்ப்படுத்தல். 3. கீழ்ப்படுதல். 4. தோற்கச்செய்தல். [ஸுஹிஹவ: அஹி - கீழ். ஹவ - இருத்தல்.]

அபிபூதம்–1. அபசயப்பட்டது. 2. அறியப்படாதது. 3. கீழ்ப்படுத்தப்பட்டது. 4. மழுங்கினது. [ஸுஹிஹூத.]

அபிபூதி–1. அவமானம். 2. கீழ்ப்படுத்தல். 3. தோற்கச்செய்தல். [ஸுஹிஹூதி.]

அபிமதம்—1. அங்கீகரிக்கப்பட்டது. 2. சம்மதமானது. 3. விரும்பப்பட்டது. 'அவர்க்குள வபிமத மறைந்திடு மென்ன' (நல். பார. பாண்டவர். ௬.) 4. விருப்பம். [ஸுஹிமத: அஹி - மேல். மத - நினைவு.]

அபிமந்தம்—கண்ணோய். [ஸுஹிமந்த.]

அபிமந்திரணம் — 1. அழைத்தல். 2. ஆலோசித்தல். 3. விசேட மந்திரங்களாற் பிரதிட்டைசெய்தல். [ஸுஹிமந்ஹண.]

அபிமந்திரம் — மந்திரித்தல். 'இலங்கு பாம்பபி மந்திரத் தடங்குமோ வெனவும்' (காஞ்சிப். திருக்கண். கசகூ.) [ஸுஹிமந்ஹ.]

அபிமந்திரித்தல் — மந்திர உரு எற்றல். 'பாங்கி னுதவு திருநீற்றைப் பகரும் வேத மந்திரத்தாற் - றாங்கி யபிமந்திரித்து' (சூத. ஞானயோககாண். ௩: ௫.)

அபிமந்திரிதம் — 1. நால்வகைச்சுத்தியு ளொன்று; அது: மந்திரித்தலாற்செய்யப் படுஞ்சுத்தி 2. மந்திரஞ்சொல்லப்பட்டது. [ஸுஹிமந்ஹித.]

அபிமந்நு — பஞ்சபாண்டவருளொருவனாகிய அருச்சுனனுக்குச் சுபத்திரைபெற்ற ஒரு மகாவீரன். 'முந்தபிமந்நுவந் தைவரை வணங்கிநிற்றலும்' (நல். பார. புத்திர. கஎ.) [ஸுஹிமநு.]

அபிமர்த்தம்—1. உரிஞ்சுதல். 2. தேய்த்தல். 3. (சத்துருவினால்) நாடழிக்கப்படல். 4. போர். [ஸுஹிமஜ.]

அபிமாரம்—1. ஒருவனுக்கு அவன்பக்கத்தாராற் செய்யப்பட்ட துரோகம். 2. கட்டி அல்லது விலங்குபூட்டி வைத்தல். 3. கொலை. 4. போர். [ஸஹிமாா: அஹி: ஊ -மரணம்.]

அபிமன்—அபிமன்னு.

அபிமாநதுங்கன்—அன்புமிக்கோன். 'அணி கோட்டியர்கோன் அபிமாநதுங்கன்' (திவ். திருப்பல். 11.)

அபிமாநதேவதை—ஒன்றைத் தன்னுடையதாகப் பாவிக்கும் அதிதெய்வம். 'தத்துவாபிமாநதேவதைகளுக்கு மந்தத் தத்துவநாமங்களே' (சி. சி. உ: எக. சிவாக்.) [ஸஹிமா ந; ஜெவதா.]

அபிமாநபுத்திரன்—1. தக்கவயதுகழிந்தபின் சுவீகரிக்கப்பட்ட புத்திரன். 'நரசிங்க முனையரைய அபிமாநபுத்திரராய்' (பெரியபு. தடுத்தாட். கூ. உரை.) 2. வைப்பாட்டிபுத்திரன். [ஸஹிமா ந; வுத்ரு.]

அபிமாநம்—1. அறிவு. 2. ஒன்றைத் தன்னுடையதாகநினைத்துத் தனதென்று அல்லது தானென்றுகொண்டாடுதல். 'செயிரினுடனே னெனுமபிமாநஞ்சேர்ந்தது' (சூத. சிவ. கஉ: ௩அ.) 3. கொலை. 4. செருக்கு. 5. தைசதாகங்காரம். 'இவற்றினைக் கருத்தாப்-புனையபி மாநம் புற்கல னுன்மாச் சீவன்மா தாவெனப் புகல்வார்' (கூர்மபு. பிரகிருதி. அ.) 6. நானே சகலமுமென்னும் அகங்காரம். 7. நெறிதவறுதொழுகித் தன் மேன்மையைக் காக்கவேண்டும் என்னுஞ் சிந்தைமேலிட்ட கருத்து. 'கொலையபிமாநநீத்தல்' (மச்சபு. மங்வக். யுக. உஉ.) 8. நேசம். 9. கோப்படுத்தல். 10. பெருமை. 11. மகிமைபாராட்டுதல். 12. மதிப்பு. 13. விரும்பிக்கேட்டல். 14. விரும்புதல். [ஸஹிமா ந: அஹி; மா ந - அறிதல்.]

அபிமாநவிருத்தி—அகங்காரம். [ஸஹிமா நவூலி.]

அபிமாநாக்கிநி — அக்கினிமண்டலத்திலேயுள்ள அக்கினிதேவர்களாகிய அகலர் நாற்பத்தொன்பதின்மரிலே தலைமைபெற்ற ஒருவன். அவன்புத்திரர்: பாவகன், பவமாநன், சுசியென்னும் மூவர்.

அபிமாநி—1. அபிமானமுடையோன். 2. காவலன். 3. தனதாகப்பாவிக்கிறவன், தனதாகநினைக்கிறவன். 'இருதயாதிகளிலேயகாராதி யபிமாநிகளான பஞ்சசத்திகளும்' (சி. சி. ச: ௩ச. சிவாக்.) 4. மாநதத்திலுற்ற அக்கினி. 'அந்தவக்கினிதன்பேரை யபிமாநியென்பர்' (மச்சபு. அக்கினிவமிச. உ.) 5. விருப்புடன்பொருந்தியிருப்போன். [ஸஹிமா நிநு.]

அபிமாநித்தல் — 1. அபிமாநஞ்செய்தல்; இது அகங்காரதத்துவத்தின்றொழில். 'சிந்தித்துவிகற்பித்தல், சங்கற்பித்தல், அபிமாநித்தல், நிச்சயித்தல் என்கின்ற நான்கு வியாபாரங்களையும்' (சி. சி. ச: க. ஞாநப்.) 2. அளவிடல். 3. ஒருதாநத்தில் விருப்புடன் பொருந்தியிருத்தல். 'இதுவே சீவனுக்குச் சொப்பனுவத்தை; இதை யபிமாநித்த சீவனுக்குத் தைசதனென்றுபெயர்' (உபதேச. சகூ.) 4. காம்பண்ணல். 5. தனதாகப் பாவித்தல். 'அங்கதனையபிமாநித்ததுவே தானென்றறைதலினுல்' (நல். பார. கௌசிக. எஅ.) 6. மதித்தல். 7. மெச்சல். 8. விரும்புதல்.

அபிமாநிதம்—புணர்ச்சி. [ஸஹிமா நித.]

அபிமுகம்—1. எதிர்நோக்குதல், வெளிநோக்குதல். 'விடயாபிமுகமாகாது' (சி. சி. உ: ௫௫. சிவாக்.) 2. எதிர்முகம். 'வடக்கபிமுகம்' (நல். பார. கபிலை. அகூ.) 3. சமீபம். 4. முன்னிலை. 'அங்கணுளர்தம் மபிமுகத்தினில்' (பெரியபு. திருஞாந. கOஅச.) [ஸஹிமுவ.]

அபிமுகர்—1. அபிமுகமுடையவர். 2. பிரியமுற்றவர். 'ஐவரு மபிமுக ராக நின்னுழை-மெய்வரு மந்திர மருந்து வேறுண்டோ' (நல். பார. சத்தியபா. ச.) [ஸஹிமுவ.]

அபிமுகன்— 1. அபிமுகமுடையான். 2. எதிர்நோக்கியமுகமுடையவன். 3. பிரியமுற்றவன். 'அபிமுகன்பூர்வத்து' (சைவச. பொது. ௫௩அ.) [ஸஹிமுவ.]

அபிமுகி—எதிர்நோக்கிய முகமுடையது. (சி. சி. அளவை. க. சிவாக்.) [ஸஹிமுவி.]

அபியாதி—சத்துரு. [ஸஹியாதிநு: அஹி- எதிர். யா திநு - செல்வோன்.]

அபியிதம்—சொல்லப்பட்டது.

அபியுத்தம்—1. கடிந்துகொள்ளப்பட்டது. 2. சத்துருவினுற் ருக்கப்பட்டது. 3. சொல்லப்பட்டது. 4. பகையெதிர்கொள்ளல் 5. முயற்சி. [ஸஹியுக்த.]

அபியுத்தன்—1. சாவதானமுடையவன். 2. படித்தவன், வித்துவான். [ஸஹியுக்த.]

அபியூட்சணம்—அமைத்தல்.

அபியோகம்— 1. அபராதமேற்றல். 2. இடித்துரை. 3. ஊறுசெய்ய ஊக்குதல். 4. தடைசெய்தல். 5. போர். 6. போர்க்கறை கூவுதல். 7. முயற்சி. 8. முறையீடு. 'இராசத்துரோகஞ்செய்தவரென்றும், வன்செய்கை செய்தவரென்றும், பாதகஞ்செய்தவரென்றும், திருடர் கூட்டுறவினுற் றிருடரென்றும் அபியோகம் பண்ணப்பட்டவர்களுக்கு வாதி வழக்குத்தோல்வித்தண்டத்தை யொப்புதல்வேண்டாமலே திவ்வியம்விதிக்கப்படும்.' (மிரு. சங். ருஎ.) [ஸஹியோக.]

அபியோகி—1. ஊறுசெய்ய ஊக்குவோன். 2. குறைகூறுவோன். 3. முழுமுயற்சியுடையோன். 4. முறையீடுசெய்வோன். 5. வாதி. [ஸஹியோகிநு.]

அபியோத்தா—1. பகைவன். 2. முறையீடுசெய்கிறவன். [ஸஹியொக்ஷா; ஸஹியோக்தா.]

அபிரங்கி—1. கருநெல்லிமரம். 2. நீர்ப்பூலா.

அபிரட்சை-சர்வபரிபாலநம், சர்வரட்சை, பூரணமான பாதுகாப்பு. [ஸஹிரக்ஷா: அஹி; ரக்ஷா - காத்தல்.]

அபிரதி— 1. சந்தோஷம். 2. திருத்திகரம். 3. தொழில். [ஸஹிரதி: அஹி; ரதி. இன்பம்.]

அபிராமம்—1. அழகு. 2. பிரியம். [ஸஹிராம.]

அபிராமன்—1. அழகன். 'அபிராம விங்கு வருக' (திருப்பு. சூ0.) 2. மனத்துக்கினியவன்.

அபிராமி—1. அழகுள்ளவள். 2. சத்தமாதர்களுள் ஒருத்தி. 3. சரஸ்வதி. 4. பார்ப்பதி. 'என்றபி ராமி யிசைத்திட நோக்கி' (நல். பார. உமாமகே. உகசூ.)

அபிராமிபட்டர்—அபிராமியந்தாதி இயற்றியவர்.

அபிராமியந்தாதி—ஒரு பிரபந்தம்.

அபிருசி—1. கீர்த்திப்பிரியம். 2. மிகு விருப்பம். [ஸஹிருசி: அஹி; ருசி - பிரியம்.]

அபிருபன் — அழகுள்ளவன். [ஸஹிரூவ: அஹி; ரூவ - அழகு.]

அபிரேகம்—1. நாதம். 2. பூவிந்து. 3. மனோன்மணி.

அபிலாசம் — விருப்பம். [ஸஹிலாஷ:]

அபிலாசுகன் — 1. இச்சையுடையவன். 2. விருப்பமுடையவன். [ஸஹிலாஷுக.]

அபிலாசை—விருப்பம். 'அபிலாசையின்றி யாசாரியனைப் பிரிந்திருப்பாரார்' (உபதேசரத். 64.) [ஸஹிலாஷா.]

அபிலாபம் — பேச்சு. [ஸஹிலாவ: ஸஹி; லாவ - பேசுதல்.]

அபிலாஷை—விருப்பம். [ஸஹிலாஷா.]

அபிலிகிதம்—எழுதப்பட்டது. [ஸஹிலிகித: அஹி; லிகித - எழுதப்பட்டது.]

அபிலேகநம்—எழுதுதல். [ஸஹிலெவநம்: அஹி; லெவநம்-எழுதுதல்.]

அபிவந்தநம் — வந்தநஞ்சொல்லுதல். [ஸஹிவந்நம்.]

அபிவாதநம் — தன்கோத்திரம் பெயர் முதலிய கூறிப் பெரியோரைத் தொழுதல். 'அபிவாதநத்தாற் பெரியோரை வணங்குதல்' (கூர்மபு. வியாதர்கரு. அ.) [ஸஹிவாதநம்: அஹி - முன்னிலையில். வாதநம்-சொல்லல்.]

அபிவிக்கியாதம்—1. புகழ்பெற்றது. 2. பெரும்பாலும் அறியப்பட்டது. 3. பேர்பெற்றது. [ஸஹிவிவ்யாத: அஹி; வி; வ்யாத-அறியப்பட்டது]

அபிவியஞ்சகம் — தோற்றுவிக்குந் துணைக்கருவி. 'தீபமானது பதார்த்தாபிவியஞ்சகமானபொழுது' (சி. சி. உ: சூ0. சிவாக்.) [ஸஹிவ்யஂஜக: அஹி; வ்யஂஜக - வெளியாக்குவது.]

அபிவியஞ்சகர் — வெளிப்படுத்துவோர். (பௌட். பசு. சஅ. உரை.) [ஸஹிவ்யஂஜக.]

அபிவியத்தம் — மிகுவிளக்கமுற்றது, வெளிப்படை. 'நீதி லபிவியத்தமாஞ் சிதாகாரம்' (சூத. எக்ஞ. பூ. கக: சு.) [ஸஹிவ்யக்த: அஹி - மிக. வ்யக்த - விளக்கமுற்றது.]

அபிவியத்தர் — வெளிப்பட்டவர். 'அந்த மந்திரமகேசுவரமந்திரேசுவரர் களிடத்தி லபிவியத்தராய்' (மிருகேந். க. உக.) [ஸஹிவ்யக்த.]

அபிவியத்தி — வெளிப்படுதல். 'சிந்து தலில் விசேடமா யபிவியத்தியாய்ப் பொன் போற்றிகழுமாதோ' (சூத. எக்ஞ. பூ. ச: ச.) [ஸஹிவ்யக்தி.]

அபிவியாத்தம்-பரவியது. [ஸஹிவ்யாப்த.]

அபிவியாத்தி—1. அந்தர்ப்பவித்தல் 2. சர்வவியாபகத்துவம். [ஸஹிவ்யாப்தி: அஹி- எங்கும். வ்யாப்தி - பரவுதல்.]

அபிவியாபகம்—ஒருபொருண்முழுதிலும் பிறிதொருபொருள் வேறறக்கலந் தொற்றுமைப்பட்டிருப்பது. 'வேற்றுமை நயத்தால் வேறே யாயினும், ஒற்றுமை நயத்தா லொன்றபி வியாபகம்' (பி. வி. கந. உரை.) [ஸஹிவ்யாவக: வ்யாவக-பரந்திருப்பது.]

அபிவிர்த்தி—அபிவிருத்தி. 'சிஷ்யசந்தானாபிவிர்த்தியின்பொருட்டும்' (சி. சி. பாயிர. க. சிவாக்.) [ஸஹிவ்ருஷி.]

அபிவிருத்தி—1. அதிகப்படுதல், மிகப்பெருகுதல். 2. கூடுதல். 3. சித்தியடைதல். 4. பெருவாழ்வு. 'இப்படி யியற்றினோர்தங் குலமபி விருத்தி யெய்தும்' (மச்சபு. சபிண்டி. உகூ.) 5. வளர்தல். [ஸஹிவ்ருஷி: ஸஹி; வ்ருஷி - வளர்ச்சி.]

அபிவெந்சகம்—அபிவியஞ்சகம். 'கூறிடுமிப் பிரமாணந் தனக்கபிவெஞ் சகமாய்க் குறித்திடுவர் காண்டலனு மானவுரை தன்னை' (த. நி. போ. நகஅ.) [ஸஹிவ்யஜக.]

அபின் — ஒருமருந்து [இது கசகசாச் செடியிலுள்ள முதிர்ந்த காயைக் கிள்ள அதிலிருந்து வருகிற பாலென்றும், துருக்கி, ஸ்மிரினா, வங்காளம், எகிப்து, ஐரோப்பா ஆகிய தேசங்களிலிருந்து கொண்டுவரப்படுகிறதென்றும், அவற்றுள்ளே துருக்கி ஸ்மிரினாதேசங்களிலிருந்து வருவதே முதற்றரமென்றும் பதார்த்தகுண அரும்பொருளகராதியிற் சொல்லப்பட்டது. இந்துஸ்]

அபினி—அபின். 'நல்லவபி னிக்குணத்தை நாடறிய நாம்புகல்வே-மல்லல்குன்ம வாத மருஞ்செவிநோய் - பல்லின்வலி - பேதிமந்த மத்திநோய் பீநசம்போம் வன்மையுண்டாஞ்-சாதியுதிரச்சுத்திதான்' (பதார்த்த. ககநச.)

அபிஷிக்தன்—அபிஷேகம்பெற்றவன்.

அபிஷேகம்—அபிடேகம்.

அபீகன்—1. கணவன். 2. காமுகன். 3. சிவன். 4. பயப்படாதவன். 5. புலவன். [ஸஹீக:]

அபீசு—1. கலிநவார். 2. கிரகணம். 3. கைவிரல். [ஸஹீஶு.]

அபீட்சணம்—1. எப்போதும். 2. கணந்தோறும். 3. திரும்பத்திரும்ப. [ஸஹீக்ஷ்ணம்:]

அபீட்டம்—மிகவிரும்பப்பட்டது. 'நவ்வியொண் கண்ணியுன்ற னபீட்டமு நல்குவேனுல்' (மச்சபு. யயாதிபுத். கந.) [ஸஹீஷ்ட: ஸஹி; ஊஷ்ட - விரும்பப்பட்டது.]

அபீட்டியம் — துதிக்கத்தக்கது. [ஸஹி; ஸ்டுத்ய.]

அபீடங்கம்—வைதல். [ஸஹீஷங்க.]

அபீடநம்—1. சாந்தகுணம். 2. தயாளசிந்தை. 3.வருத்தஞ்செய்யாமை. [ஸவீடந: அ - எதிர்மறை. வீடநம் - வருத்துதல்.]

அபீதம்—பயமின்மை.

அபீதன்—அச்சமில்லாதவன்.

அபீதி — அச்சமின்மை. [ஸஹீதி: அ - எதிர்மறை. ஹீதி - பயம்.]

அபீநசம்-பீநசமின்மை; அது: சளியின்றி நாசிவறண்டிருத்தல். [ஸ; வீநஸ- சளி.]

அபீநசரோகம் — சிலேட்டுமத்தைக் கொண்டு மூக்கின் நரம்புகளை யடைக்கும் ஒருவகை நாசிகாரோகம். இதனால், அதிக உபத்திரவமும் சுவாசம்விடும்போது குரு குரு என்னும் ஒரு சத்தமும் நாசியிலே வேர்வையும் உண்டாகும். (சீவரட். உளஎ.) [ஸவீநஸரோக.]

அபீரன் — மாட்டிடையன். [ஸஹீர:]

அபீரு—1. அச்சமில்லாதவன். 2. கடவுளருள் ஒருவனுகச் சொல்லப்படும் வைரவன். [ஸஹீரு: அ - எதிர்மறை. ஹீரு - அச்சமுள்ளோன்.]

அபீஷ்டம்—அபீட்டம்.

அபுண்ணியம்-பாபம். [ஸவுணுூ: அ; வுணுூ - நற்செயல்.]

அபுத்தம்—1. அநுபவிக்கப்படாதது. 2. உண்ணப்படாதது. 3. செலவாகாதது. [ஸஹுக்த: அ; ஹுக்த - உண்ணப்பட்டது.]

அபுத்தன்—1. அநுபவியாதவன். 2. உண்ணுதவன். 3. புத்தியில்லாதவன். [1, 2. ஸஹுக்த: 3. அ; ஙுஜ.]

அபுத்தி—1. அறியாமை. 'அபுத்திபூருவமாய் வந்த சமயாசாரலோபத்திற்கு' (சி-வி. கிரி ரு. தாற்.) 2. புத்தியின்மை. [ஸஙுஜி: அ; ஙுஜி - அறிவு.]

அபுத்திபூர்வம்— } அறிவுடன் கூடாத
அபுத்திபூருவம்— } செயல். 'அதிசயம் பயப்ப வபுத்திபூருவமா வவனிடைத் தமோமய சிருட்டி-பொதிதரத்தோன்றிற்று' (சூத. சிவமான். கo: உ.)[ஸ; ஙுஜி; வுூவ.]

அபுத்திரகன் — புத்திரனில்லாதவன். [ஸவுத்ரக: அ - எதிர்மறை. வுத்ரக- புத்திரனுடையவன்.]

அபுத்திரன்—அபுத்திரகன். [ஸவுத்ர:

அபுதன்-மூடன்.(திருக்காளத். பு.21. 11.)

அபூதம்-1.அசுசியானது.[ஸவூத: அ; வூத-சுசி.] 2. இறந்தகாலத்தில்லாதது. [ஸஹூத.]

அபூதவுவமை — உவமாலங்காரவகையுளொன்று; அது: முன்பில்லதனை யுவமையாக்கியுரைப்பது. (தண்டி. ௩௧.) [ஸஹூத: உவமா.]

அபூபம் — கோதுமை முதலியவற்றிற் செய்த அப்பவருக்கம். (சூ. நிக, சூ: சூரு.) [ஸவூவ.]

அபூர்ணகாலசம் — காலம் பூர்ணமாகுமுன் பிறந்தது, முதிருமுன்பிறந்தது. [ஸவூணகாலஜ: அவூணகால- நிறைவில்லாதகாலம். ஜ - பிறந்தது.]

அபூர்ணகாலம் — முற்றுதற்குக்குறைவான காலம். [ஸவூணகால.]

அபூர்ணம்—பூரணமாகாதது. [ஸவூண.]

அபூர்வதை — 1. அபூர்வமாயிருக்குந் தன்மை. (வாசுதே. ௧௬ள.) 2. நான் பிரமம் அலன் என்னும் அஞ்ஞானத்துக்கு முரணுகக் கூடஸ்தப்பிரம ஐக்கியங் கூறும் வேதவாக்கியத்தைக் கேட்டலாகிய சிரவணத்திற்குச் சொல்லப்படும், ஆறுவித லிங்கங்களின் மூன்றுவதாகிய இலிங்கம்; அது: கூடத்தனே பிரமமென அப்பியசித்தனுபவித்தபொருளில் அதீதமாதல். 'துரியன்றிகழ் பிரமாணு தீதனென்கை யபூர்வதையாம்' (வேதா. சூ. ௧௩௩.)

அபூர்வம்—1. அருமை. 2. ஆச்சரியமானது. 3. ஒருகருமத்திற்குத் தூரத்திலே நிகழுங் காரியம். 4. ஒருவன்செய்யும் புண்ணியபாவங்களொழிந்தவிடத்திலே அவற்றினுல் ஸம்ஸ்காரரூபமாகத் தோன்றி நின்று மறுமையிலே பலத்தைக்கொடுக்குமது. 'செயலினபாவத்தே யபூர்வமெனு மது தோன்றித் தருஞ்செயலின் றழிவின்பின் பலிப்பிப்ப தாகும்' (சி. சி. பர. பிரபாக. மதம். உ.) 5. கிழக்கல்லாதது. 6. நூதநமானது. 7. முதலாவதல்லாதது. 8. முன்னில்லாதது. 9. மேன்மையானது. [ஸவூவ.]

அபூர்வவிதி — புதுவிதி. [ஸவூவவியி: அவூவ - முன்னில்லாதது.]

அபூர்வன்—பரமான்மா. [ஸவூவ.]

அபூரணம்—அபூர்ணம். 'துன்னு பூரண சொருபமே மாயையா லபூர்ணமாய்த் தோன்றும்' (சூத. எக்கி. பூ. ௧௩: கo.) [ஸவூண.]

அபூராணி—இலவமரம். [ஸவூராணி.]

அபூருவம்—அபூர்வம்.

அபெத்தன்-பந்தமில்லாதோன். [ஸவஜ: அ; வஜ - தளைப்பட்டோன்.]

அபேட்சன் — அபேட்சையுடையவன். (பௌட். பதி. அசூ.) [ஸவெக்ஷ.]

அபேட்சித்தல்—1. அவாவுதல். 2. மிக விரும்புதல். 3. வேண்டிநிற்றல், பற்றல். (சி. சி. ௫.) [அபேக்ஷா.]

அபேட்சிதம்—விரும்பப்பட்டது. (ஈடு)

அபேட்சிப்பு—1. அவாவுகை. 2. வேண்டிநிற்கை.

அபேட்சை—1. அவாய்நிலை. 2. ஆசை. 3. எதிர்பார்த்திருத்தல். 4. காரண காரியத் தொடர்பு. 5. சாதிவியக்திசம்பந்தம். (தர்க்க.) 6. தருணம். 7. நன்குமதிப்பு. [அபேக்ஷா: அப; ஈக்ஷா - பார்த்தல்.]

அபேதசட்டி—ஒருபொருள் தானேயுடையானும் உடைப்பொருளுமாகிவரும் ஆறும் வேற்றுமை. 'இராகுத்தலை' (பி. வி. ௧௭. உரை.) [அபேத - ஒற்றுமை. ஷஷ்டீ - ஆறுவது.]

அபேதசித்தாந்தம்-பணி பலவாயும் பொன் ஒன்றுனாற்போல ஆன்மாவும் சிவமும் ஒன்றென்றுவாதிக்கும் மாயாவாதக் கோட்பாடு. (சி. பி. கை. ௭.) [அபேத; ஸித்தாந்த - முடிந்தமுடிவு.]

அபேதசைவம் — ரூபம், அரூபம், ரூபாரூபம் என்னும் பேதமில்லாமல் இருக்குஞ் சிவனைச் சைவத்துக்குரிய வேடம், விபூதி, ருத்திராக்கம், பஞ்சாட்சரம், குருலிங்கவேட முதலியவைகளைப் பொருளாகக்கொண்டு வழிபடுஞ் சைவம். (த. நி. போ. ௨௫௪.) [அபேத; சைவ.]

அபேதப்பிறப்பு — பொன்னும் பணியும் போல ஒன்றினின்று தோன்றியும் அதனின் வேறாகாத தோற்றம். 'பொற்பணிபோல பேதப்பிறப்பிலதாய்' (சிவப்பிர. வாற். ௭.)

அபேதம்—ஒற்றுமையாய்நிற்றல். 'தக்க பரைபுருடனுடைபேதத்தையெப்போதநுசந்தானம் பண்ணும்' (சூத. எக்கி. பூ. ௪: ௧௨.) [அபேத.]

அபேதவாதம்—சிவமும் ஆன்மாவும் ஒன்றென வாதித்தல் [அபேதவாத.]

அபேதவாதி — சிவமும் ஆன்மாவும் ஒன்றென வாதிக்கும் வேதாந்தி. [அபேத வாதிந்.]

அபேதாத்தியவசாயசாதாரணதர்மம் — இயற்கையில் வெவ்வேறாய் விளங்கினும் கவியின்கொள்கையால் அபேதமாய்க் கிரகிக்கப் படுந்தன்மைகள். 'இந்துவிடத் தைச்சிவன் போ லேகுணங்குற் றத்தினைஞா-னந்தெளிவா னைன்கிரக ணம்புரிந்து-முந்தினதைச் - சேகரங்கொண் டேவிளங்கச் செய்துகடையுற்றதையம் - மாகளத்து ளேயடக்குவான்' இக்கவியில் சிவனும் ஞானந்தெளிவோனுமாகிய உபமாந உபமேயங்களுக்கு ஒருதன்மையாயினும் பொதுவாக இணங்காவிடினும் விம்பப் பிரதிவிம்பபாவத்தினால் இந்துவிடமென்பவற்றிற்கும் குணங் குற்றமென்பவற்றிற்கும் அபேதமெனக்கொள்வதாலுஞ் செய்கை யுணர்ச்சி யென்பவற்றிற்குக் கிரகணம்புரிதலென்னுஞ் சொல்லொற்றுமையிருப்பதாலும் முடியிலிருத்திப்பிரகாசிக்கச் செய்தல் சிரக்கம்பத்தாற் கொண்டாடிவிளங்கச்செய்த லென்பவைகளுக்குச் சேகரங்கொண்டே விளங்கச்செய்தல் என்னுஞ் சொல்லொற்றுமை யிருப்பதாலும், களத்தினுள்ளிருத்துதல் கண்டத்தினின்றும் வெளிவிடாமை யென்பவற்றிற்குக் களத்துளேயடக்குவானெனுஞ் சொல்லொற்றுமை யிருப்பதாலும் இது அபேதாத்தியவசாய சாதாரணதர்மமேயாம். (குவல. ௧. உரை.) [அபேத; அத்யவஸாய; ஸாதாரண; தர்ம.]

அபேநம்—1. அபின். (இப்பொருள் பிற்காலவழக்கு.) 2. நுரையின்மை. [அ; பேநம்- நுரை.]

அபேயபாநம் — குடிக்கத்தகாதது; மது. 'அபேயபாநாதி ரகிதருமாயிருக்கிற சூத்திரரிலும்' (சி. சி. அளவை. ௧௩. சிவாக்.) [அபேயபாந: பேயபாந - குடிக்கத் தக்கது.]

அபைசுநம்-நேர்மை, கோடாமை. [அபைசுநம்: அ; பைசுநம்-கள்ளம்.]

அபையம்—அபயம்.

அபோக்கியம்—1. அநுபவிக்கப்படாதது. 2. உண்ணத்தகாதது. 'அபோக்கியமான நஞ்சை' (தாயு. ஆசை. ௨௭. உரை.) [அபோக்ய.]

அபோகண்டம்--நெகிழ்ச்சிக்குணமுடைய பொருள். [ஃவொவஂஃ.]

அபோகண்டன் — 1. அச்சமுள்ளோன். 2. அவலட்சணமுடையவன். 3. குழந்தை.

அபோகம்—1. தர்க்கத்தால் ஐயந்தீர்தல். 2. தர்க்கித்தல். [ஃவொஹ: அவ; ஊஹ - தர்க்கித்தல்.] 3. போகமின்மை. [ஃஹொக: அ; ஹொக - அநுபவம்.]

அபோச்சியம்-உண்ணத்தகாதது, அசுத்தமானது. 'போதமிகு ஞாநிகட்க போச்சியமொன் றேனுமிலை' (சூத. எக்கி. பூ. கரு. ௩.) [ஃஹொஜ்ஃ: அ; ஹொஜ்ஃ-உண்ணத்தக்கது.]

அபோசநம் — உபவாசம். [ஃஹொஜந: ஹொஜந - உணவு.]

அபோத்தா—1. அநுபோகமில்லாதவன். 2. உணவில்லாதவன். (வாசுதே. ககஈ.) [ஃஹொக்தா: அ; ஹொக்தா - உண்பவன்.]

அபோதசுவருபன்—அறியப்படாதசுவரூபமுடையவன். (வாசுதே. ககஈ.)[ஃவொய ஸ்ரூவ.]

அபோதம் — அறியாமை. 'ஓத வோதப் போதங்கெட் டபோத மான தோங்கியதே' (இராமா. உத். இராவணன். பிறப். கஎ.) [ஃவொய: அ; வொய - அறிவு.]

அபோதார்த்தம் — விபரீதப்பொருள். [ஃவொய-அறியாமை. ஃய-பொருள்.]

அபௌருஷேயம்—மனுஷனினின் றுவராதது. 'வேத மபௌருஷேயமாய் நித்தியமுமாகையாற் பிரமாணமாம்' (சி. சி. அளவை. க௩. சிவாக்.) [ஃவௌரூஷெய: அ; வௌரூஷெய - புருடனால் வந்தது.]

அம்—1. அசபாமந்திரத்தின் ஓர் உறுப்பு, சீவான்மா. இது ஹம்ஸ என்னும் மந்திரத்தில் ஒருறுப்பாகிய ஹம் என்பது தமிழில் அம்மெனத் திரிந்துவந்தது. 'இம்மனுவின் பேருண்மை யினுமியம்பிற் சிவபர, செம்மொழிவா சகமாகுந் தேரினகமெனுஞ்சத்த, மெம்மலமு மிலீர்சிவத் திடுகுறிவா சகமதனு, லம்மெனுமந் திரபாகக் கருத்தஞ்சீ வான்மாவே' (சூத. எக்கி. பூ. எ. ஈ.) 2. அழகு. 'பரமரம் பாவிகைச் செம்பவ ளக்கொடி பங்கர்' (மறைசை.௩.) 3. ஒரு கருவிப்பொருள்விகுதி. 'நோக்கம்' (நன். பத. க௩. உரை.) 4. ஒரு சாரியை; 'புளியங்காய்' (நன். உருபு. ௫.) 5. ஒரு செயப்படுபொருள்விகுதி; 'தொல்காப்பியம்' (நன். பத. க௩. உரை.) 6. ஒரு தத்திதவிகுதி; 'சிங்களம்' (வீரசோ. தத்தி. க.) 7. ஒரு தன்மைப்பன்மைவிகுதி; இது: தெரிநிலையில் வரும்போது 'படிப்பம்' 'வருகுவம்' என்பவற்றிற்போல எதிர்கால இடைநிலையை நேரே புணர்ந்தும், 'படித்தனம்' 'சென்றனம்' 'உண்டனம்' என்பவற்றிற்போல இறந்தகால இடைநிலையையும், 'படிக்கின்றனம்' 'படியாநின்றனம்' என்பவற்றிற்போல 'கிறு' ஒழிந்த நிகழ்கால இடைநிலையையும், 'அன்' சாரியை இடையில்வர ஒட்டியும், குறிப்புவினையில் வரும்போது 'குழையம்' 'குழையினம்' என்பவற்றிற்போல, 'இன்' சாரியை இடையிற்பெற்றும் பெறாதும் பகுதியோடு புணர்ந்தும் வரும். இவ்விகுதி, 'நீயும் நானும் உண்டனம்' என்பதிற்போல முன்னிலையிடத்தாரை யுளப்படுத்தியும், 'அவனும் நானும் உண்டனம்' என்பதிற்போலப் படர்க்கையிடத்தாரை யுளப்படுத்தியும் 'அவனும் நானும் நீயும் உண்டனம்' என்பதிற்போல முன்னிலையிடத்தாரையும் படர்க்கையிடத்தாரையும் உளப்படுத்தியும் வரும். (நன். வினை. க௩. இராமா.) 8. ஒரு தொழிற்பெயர் விகுதி; 'வாட்டம்' (நன். பத. க௩. உரை.) 9. ஒரு பண்புப்பெயர்விகுதி; 'நலம்' (நன். பத. க௩. உரை.) 10. ஒரு வினைமுதற்பொருள் விகுதி; 'எச்சம்' (நன். பத. க௩. உரை.) 11. நீர். 'சென்னியமோகந்தவிராமுகிதோகண்' (கந்தரந். ௩.) 12. மேகம். 13. ஓரசைச் சொல். 'பொய்யுரை யன்று காணீர் போமினம், (சிந்தா. பதுமை. உசஈ.)

அம்சசக்கரம்—நவாம்சசக்கரம்.

அம்சபத்திரம்—பாகசாசனம்.

அம்சபாதம்—புள்ளடிக்குறி.

அம்சபூதன் — அம்சமாயிருப்பவன். 'நம்முடைய அம்சபூதரொருவரை' (குருபரம் பரை. 166.)

அம்சம்—1. அன்னப்பறவை. (ஞானவா. சதவுருத். க௩. உரை.) 2. உரிமைப்பங்கு. 'யோகபூமியம்சம் விடாதுறலாற் பழைய

தீவினைபோம்' (ஞானவா. நிருவா. ௩௩.) 3. ஒரு மந்திரம். 'அசபா' பார். 4. போகம்; அது: பிங்கத்தில் இத்தனைகூறுகொள்ளப்பட வேண்டியதென்பதை யுணர்த்தும் ஓரெண். (பாமகணிதம்.) 5. நூற்றெட்டுபநிடதங்களுள் ஒன்று. [1, 3. ஹம்ஸ. 2, 4. அம்ஶ.]

அம்சமந்திரம் — அசபாமந்திரம். (சி-வி. யோக. ரு. உரை.) [ஹம்ஸமந்த்ர.]

அம்சர்—அறுவகைச் சந்நியாசஆச்சிரமத்தாரு ளொருவகையர். (கூர்மபு. வருண. ௬௦. உரை.)

அம்சாம்சம்-பங்கிற்பங்கு. [அம்ஶ; அம்ஶ.]

அம்சாம்சி-பங்குபங்காக. [அம்ஶ; அம்ஶி.]

அம்சாம்சிபாவம்—பங்கும் பங்குடையது மாயிருத்தல். [அம்ஶ; அம்ஶி; பாவ.]

அம்சுசந்நா—இருதயத்தானத்திலிருக்கும் அகாரத்திலுண்டாகிய பத்துக்கலைகளுள் ஒன்று. (சி-வி. கிரி. ௨௨.)

அம்பகம் — 1. உத்தரவு. 2. எழுச்சி. [திசைச்.] 3. கண். 'நெஞ்சுட னம்பக மலர்ந்து' (பாரத. நச்சு. ௬௮.) 4. கூத்தாடிக்குப்பொருந்தின கூலி. 5. செம்பு. (மூ. அ.) [3. 5. அம்பக.]

அம்பகன்—சிர்பந்தபாஷாணம்; அது: முப்பத்திரண்டு பாஷாணவகைகளுளொன்று. (மூ. அ.)

அம்பட்டச்சி—அம்பட்டப்பெண்.

அம்பட்டத்தி—அம்பட்டச்சி.

அம்பட்டன் — அறுவகை யநுலோமருளொருவன். 2. நாவிதன். [அம்பஷ்ட.]

அம்பட்டன்கத்தி — கடல்மீன்வகையுளொன்று.

அம்பட்டன்பாரை—அம்பட்டன்கத்தி.

அம்பட்டன்வாளை—சொட்டைவாளை.

அம்பட்டை—1. அம்பட்டப்பெண். 2. வட்டத்திருப்பிப்பூண்டு. 'பெண்ணிச்சை தருமுருக்கைப் பீசமம் பட்டை சுக்கு பெருமுன்னை வேரிரத்தம் பிப்பிலி தேக்கித் தொண்டும்' (தைல. தைலவ. ௧௬.) [அம்பஷ்டா]

அம்படம்—1. ஆடுதின்னாப்பாளை. (மலை.) 2. புழுக்கொல்லிச்செடி.

அம்படலம்—1. அம்மி. 2. ஈயம். 3. ஓடம். 4. தேர். 5. மரக்கால். 6. வாழை. 7. வெள்ளி. 8. வெளி.

அம்பணத்தி — துர்க்கை. 'அந்தங் கரும்பள்ளி பாசாங் குசத்திசொல் லம்பணத்தி' (தனிப்பா. க.) [அம்பணம் - மரக்கால்; இது: துர்க்கைநடனத்துக் கொரு பெயர். அத்து, சாரியை; இ - விகுதி.]

அம்பணம்—1. ஆமை. (அக. நி.) 2. ஒருவகையாழ். 'அம்பணகரதலிக' (திருப்புகழ். ௧௦௬.) 3. அளவுகருவியாகிய மரக்கால். 'அம்பண வளவைய ரெங்கணுந் திரிதர' (சிலப். ஊர்கா. ௨௦௯.) 4. துலாக்கோல். 5. நீர். 6. நீர்ப்பத்தல். இது, லோகத்தாற் குழாய்வடிவமாகச்செய்யப்பட்ட கருவி. (மணிமேக. ௨௬அ. பக்.) 7. வாழை. (பிங்.)

அம்பணவர் — ஒருசாதியார்; இவர்கள் பாணர் என்று சிலப்பதிகார உரைகாரர் கூறுவர். (சிலப். புறஞ்சே. ௧௦௫. உரை.) [அம் - அழகு. பண் - இசை.]

அம்பதை—கள். (திவா.)

அம்பர்கிழான்அருவந்தை— திவாகரஞ்செய்வித்தோன். (திவா. இறுதிக்கட்டுரை.).

அம்பர்—1. அவ்விடம். 'அம்பரேகுநர்' (திருவானை. நகர. அ௩.) 2. ஒரு மரப்பிசின். 3. ஓர்க்கோலை. இது, கடல்படுதிரவியங்களுளொன்று. 4. சோழதேசத்தோரூர். 'அம்பரான் சோமாசி மாறனுக்கு மடியேன்' (தேவார. திருத்தொண். ரு. சுந்.)

அம்பர்மாகாளம்—ஒரு தலம். (பெரியபு. (பாரத. தடுத்தாட். ௧௧௬.)

அம்பரத்தவர் — தேவர். 'அம்பரத்தவருடன்று சீறினுமொ ரம்பிலே யழிவர்' (பாரத. கிருட். ௩௭.)

அம்பரம்—1. ஆகாயம். 'அம்பரத்துமீனை யுந் தடுத்து' (காஞ்சிப். நகர. ௬௨.) 2. கடல். 'விரும்பியம் பரமு நாளும் விரிதரு திரைக் கரங்கொண், டிரும்புறக் கவைத்தா லன்ன விருக்கருங் கோட்டுப் புன்னை' (சூத. முத். ௩: ௬௨.) 3. ஆடை. 4. திக்கு. 'விஞ்சவம்பர மேவிய போதினும்' (ஞானவா. தர்மவியாள. ௨௧.) 5. பருத்தி. 6. மஞ்சள். 7. சித்திரைநட்சத்திரம். (வீமேசுர. ௧௭.) 8. துயிலிடம். (பிங்.) [1,3,4,5, 6. அம்பர.]

அம்பரமணி — சூரியன். [அம்பர மணி: அம்பர - ஆகாயம். மணி - இரத்தினம்.]

அம்பரர் — அசுரர். 'அம்பரருயிர்' (கந்த ரங். ௨.) [அம்பர - கடல். கடலிடத் தொரு நகரில் வாழ்ந்தவராதலால் இப்பெயர் வந்தது.]

அம்பரவாணம் — எண்காற்புள்.

அம்பராந்தம் — 1. திகந்தம். 2. ஆடையி னோரம். [அம்பர - வாநம், ஆடை. அந்த - முடிவு.]

அம்பராம்புயர் — 1. ஆகாசத்தாமரை. 2. பதுமநிதி. [அம்பர; அம்புஜ.]

அம்பரான் — அம்பரென்னுந்தலத்திலிருப் பவன். (தேவார. திருவின்னம்பர். ௧. திரு நாவு.)

அம்பரீசம் — அம்பரீடம்.

அம்பரீசன் — 1. சிவன். 2. திருமால். [அம்பரீஷ.]

அம்பரீடம்-1. ஒரு மகாநரகம். 2. துக்கம். 3. நெய்விட்டுப்பொரிக்குஞ்சட்டி. 4. யுத்தம். 5. விலங்கின்குட்டி. [அம்பரீஷ.]

அம்பரீடன் — 1. சிவன். 2. சூரியன். 3. விட்டுணு. 4. விட்டுணுபத்தனான சூரியவமிசத் தோரரசன். (இராமா. மிதிலை. ௧௨௦.) [அம்பரீஷ.]

அம்பரை — நிமிளை. (மூ. அ.)

அம்பரைநாதம் — அட்பிரகம். (மூ. அ.)

அம்பல் — 1. சிலரறிந்து தம்முட் புறங் கூறுதல். 'அம்பலே சிலரறிந்திட் டதுபுறங் கூறலாகும்' (சூ. நிக. ௧௦. அ.) 2. பரவாத களவு. (திருக்கோ. ௧௮௦. உரை.) 3. சேந்தனென்னும் பிரபுவுக்குடையதாயிருந்த ஒருதேசம். 4. பழிச்சொல். 5. பூ அலர்தற் குச்சிறிதுமுன்னுள்ளநிலை. (இறை. 22. உரை.)

அம்பலக்கூத்தன் — சிவன். 'அனைத்தும் வேடமா மம்பலக் கூத்தனை' (தேவார. திருநா. ஐந்தா. திருக்குறு. கோயி. ௨: ௧.)

அம்பலகாரன் — 1. கள்ளரென்னுஞ் சாதி யாரின் தலைவன். 2. சபையாருடைய கட் டளையைப் பிரசித்தஞ்செய்வோன்.

அம்பலச்சாவடி — கிராமப்பஞ்சாயத்து மண்டபம்.

அம்பலத்தாடி — சிவன். 'புனையு மம்பலத் தாடிபொற் பாதமும் போற்றி' (சூத. எக்கி. பூ. ௪௩: ௪௪.)

அம்பலத்தி — 1. தான்றி. 2. தில்லை (மலை.)

அம்பலம் — 1. சபை. 'ஏழைசொல் அம்பல மேறுமா' (வழக்.) 2. சித்திரகூடம். 3. சிதம் பரத்திற்சபை. 'அம்பலத் தெம்பரனருளா லுணர்ந்து' (சூத. எக்கி. பூ. ௧: ௧௦.) 4. பலருங் கூத்துக்காணுமிடம். 5. வெளி.

அம்பலமேறுதல்-1. சபையாரால் ஏற்றுக் கொள்ளப்படுதல். 'ஏழைசொல் அம்பலமே றுது'. 2. நியாயஸ்தலத்துக்குச்செல்லுதல்.

அம்பலவரி — வரிவகையினொன்று.

அம்பலவன் — சிவன். 'குவளைக்களத்தம்ப லவன்' (திருக்கோ. ௩௩.)

அம்பலவாணன் — சிவன். 'ஆற்றோடு தும்பை யணிந்தாடு மம்பல வாணர்தம்மை' (பட்டணத்துப்.)

அம்பலவிருக்கம் — தில்லைமரம்.

அம்பலி — ஒரு வாச்சியம். 'அம்பலி கனுவையூமை' (இராமா. யுத். பிரமா. ௫.) 2. களி. 3. முட்டைவெள்ளைக்கரு. (ஜாலத். பக். 21.)

அம்பறாத்தூணி — அம்புக்கூடு.

அம்பறுத்தல் — அம்பைத்தூணியினின்று வாங்குதல். 'அம்பறுத்தெய்யவேண்டும்படி' (ஈடு. 1. 2. 7.)

அம்பா — 1. தாய். 2. துர்க்கை, பார்வதி. 3. பசுக்கதறல். [அம்பா.]

அம்பாயம் — 1. அக்கப்பாடு. 2. பிரசவ வேதனை.

அம்பாரம் — 1. அடுக்கு. 2. நெற்குவியல். 3. களஞ்சியம்.

அம்பாரி — அவுதா, யானைமேற்றவிசு. (இந்துஸ்.)

அம்பாலிகை-1. உமை. 2. தருமதேவதை. (பிங்.) 3. தாய். 4. தாய்போலன்புள்ளவள். 5. பாண்டுவின்தாயாகிய ஒரு பெண். 'அம்பி கைக்குமம் பாலிகைக் கும்பதி - யெம்பியே' (பாரத. குருகுலச். ௧௨அ.) [அம்பாலிகா.]

அம்பாவனம் — சரபப்பட்சி.

அம்பாவாடல் — தைந்நீராடல். 'அம்பா வாடலி னாய்தொடிக் கன்னியர். (பரிபா. 11. 81.)

அம்பி—1. இறைகூடை. 2. ஓடம். 'ஆயிர மம்பிக்கு நாயகன்' (இராமா. அயோ. கங்கை. உ௮.) 3. நீரிறைக்குங்கயிறு. 4. காராம்பி. (சூ. நிக. எ. ௫௮.) 5. சலசூத்திரம். 6. தெப்பம். 7. மரக்கலம். 8. மிடா. 9. கள். (திவா.) [ஸம்பு - நீர். இ-விகுதி.]

அம்பிகாபதி — 1. சிவன். 'அம்பிகாபதி பதத்தடைந்து' (சூத. சிவமான். எ: ௮.) [ஸம்பிகாபதி: அம்பிகா - உமை. பதி - நாயகன்.] 2. ஒருபுலவன்.

அம்பிகாவநம் — உமாதேவிக்குரிய ஒரு சோலை. (பெரியபு. திருக்குறி. ௫௧.) [ஸம்பிகாவந: வந - சோலை.]

அம்பிகாவல்லவர்—சிவன். 'அம்பிகாவல் லவர் செய்ய வடித்தாமரை' (பெரியபு. ஏயர். ௩உ௬.) [ஸம்பிகா - உமை. வல்லப - நாயகர்.]

அம்பிகேயன்-1. திருதராட்டிரன். 'அம்பி கேய னமைச்சரொடெண்ணினான்' (பாரத. திரௌபதி. ௪0எ.) 2. முருகமூர்த்தி. 3. விநாயகர். [ஸம்பிகெய: அம்பிகா - உமை; இய - ஒரு வ - வி.]

அம்பிகை—1. உமை. 'அல்லறம் மிடற் றவனு மம்பிகையு மாக' (கந்தபு. தெய்வ. ௩உ.) 2. காளி. 'அந்தரி' (பார்.) 3. கோபதி யென்பவரிடத்திலே சிந்தியாகமங்கேட்ட அணுசதாசிவருளொருவர். (சைவச. பொது. ௩௩எ. உரை.) 4. சைநமதத்தாருடைய தெய்வங்களுளொன்றாகிய தருமதேவதை. 5. தாய். 6. திருதராட்டிரன்தாயாகிய ஒரு பெண். [ஸம்பிகா.]

அம்பிகைதநயன்—விநாயகன். (சூடா.)

அம்பிகைபாகன்—சிவன். 'அம்பிகைபாகற் போற்றி' (காஞ்சிப். அந்தர்வே. ௩உ.) [ஸம்பிகா - உமை. பாக - பங்கினுடையவன்.]

அம்பியகமணி — தெப்பத்தின் உட்கட்டை. 'துறைபடி யம்பி யகமணி யீனும்.' (ஐங்குறு. ௧௬௮.)

அம்பிலி—முட்டைக்கரு. (பைஷஜ. பக். 127.)

அம்பினடி—1. திப்பலி. (தைல.) 2. திப்பலிமூலம். 'திரிகடுகு வசம்போம மம்பினடி சவ்வியஞ் சித்திரங் கோரை விடயந் - திரிபலை விளங்கமர நிசிதுளவு கோலமங் கிட்டிபா ரங்கி குப்பை' (தைல. தைலவ. ௩௧: ௫௧. பக்.)

அம்பு — 1. அஞ்சுமானென்னு மூலாகமத்தை முதலிற் கேட்ட அணுசதாசிவருளொருவர். (சைவச. பொது. ௩௩எ. உரை.) 2. பாணம் 'எம்மம்பு கடிவிடுதும்' (புறநா. ௯.) 3. ஆடுதின்னுப்பாலை. 4. எலுமிச்சை. 5. குடிநீர். 'இருசத் தம்பில்வரும் பேசு' (தைல. பாயிர. ௩0.) 6. சரகாண்டபாஷாணம். 7. தண்ணீர்முட்டான். 8. தளிர். 9. திப்பலி. 'அம்பேல மிங்கொலி' (தைல. தைலவ. ௧௧௯.) 10. நீர். 'வழிச்செல்வோர்க்கு மோதுகானவினம்புமுறைமைபோல்' (ஞானவா. வைராக். ௬௧.) 11. பாதிரிமரம். 12. மூங்கில். 13. மேகம். 14. யானைத்திப்பலி. 'அட்டவர்க்கமம்பணிவேர்' (தைல. தைலவ. ௮௬.) 15. வளையல். 'அம்புகைக்காணும்' (சீவக. 2332.) 16. கடல். 'அம்பேழும்' (திருப்புகழ். 32.) 17. உலகம். (சீவக. 2332.)

அம்புக்கட்டு — அம்புகளின் (கட்டிய) தொகுதி. (பிங்.)

அம்புக்குதை—அம்பின் நுனி. (திவா.)

அம்புக்குப்பி—அம்பின்கொண்டை.

அம்புக்குழைச்சு—அம்புக்குப்பி.

அம்புக்கூடு — அம்புவைத்திருக்குங்கூடு, அம்பறுத்தூணி. (திவா)

அம்புகிராதம்—முதலை. [ஸம்புகிராத: ஸம்பு - நீர். கிராத - துட்டத்தனமுள்ளது.]

அம்புகேசரம் — எலுமிச்சை. [ஸம்பு கெஸர.]

அம்புசந்மம்—தாமரை. [ஸம்புஜந்.]

அம்புசம்—1. இடியேறு. 2. ஒருநரகம். (மிருகே. ௩௨0. பக்.) 3. தாமரை. 4. நீரிற்பிறந்தது. [ஸம்புஜ: அம்பு - நீர். ஜ - பிறந்தது.]

அம்புசாதம் — தாமரை. 'அத்தகுபகலோன் முன்ன ரலர்செயு மம்புசாத - மொத்தவர்' (திருவாத. திருப்பெ. ௭௧.) [ஸம்புஜாத; அம்பு - நீர். ஜாத - பிறந்தது.]

அம்புசாதன்—பிரமா. 'அம்புசாதன்முகத்தினில்' (பாரத. சிறப். 2) [ஸம்பு॰ஜாத.]

அம்புசேந்மம்—தாமரை. [ஸம்பு॰ஜந்ம: ஸம்பு - நீர். ஜந்ம - பிறந்தது.]

அம்புதம்—1. கோரை (மலை.) 2. நீர். 3. நீரைக்கொடுப்பது. 4. மேகம். 'அள்ளல் வேலையு மம்புத சாலமும்'(இராமா.மிதிலைக். கூ௦.) [ஸம்பு॰த: அம்பு - நீர். த - கொடுப்பது.]

அம்புதி—சமுத்திரம். 'வேலுக்குத்தான் முன் வந்த வம்புதி முரசமாயிற்றுகையால்' (கந்தபு. தேவகிரி. ௫.) [ஸம்பு॰தி: அம்பு - நீர். தி - உடையது.]

அம்புநிதி—சமுத்திரம். [ஸம்பு॰நிதி: ஸம்பு - நீர். நிதி - பொக்கிஷம்.]

அம்புநேசம்—தாமரை.

அம்புப்பிரசாதநம்—தேற்றுங்கொட்டை. [ஸம்பு॰ப்ரஸாதந: அம்பு - நீர். ப்ரஸாதந - சுத்தி. இக்கொட்டையை உரைத்துவிடுதலினாலே கலங்கனீர் தெளியும்.]

அம்புப்புட்டில்—அம்பறுத்தூணி.

அம்புபூரணரோகம்—சகசரோகம். (சீவ ரட். உகச.)

அம்புயத்தவன் — பிரமா. [ஸம்பு॰ஜ; அத்து; அ; அன்]

அம்புயம்—1. இறைகூடை. 2 தாமரை. 'அம்புயத்தின்போதை' (நளவெண். கலிநீ. கக.) 3. நீரிற்பிறந்தது. 4. பதுமநிதி. [ஸம்பு॰ஜ: அம்பு - நீர். ஜ - பிறந்தது.]

அம்புயன்—பிரமன். 'அங்கது தெரிந்து தொழு தம்புய னிசைப்பான்' (கந்தபு. தெய்வயா. உ௩.)

அம்புயாசநை—இலக்குமி. [ஸம்பு॰ஜாஸநா: அம்பு॰ஜ - தாமரைப்பூ. ஆஸநா - ஆசநமாகவுடையவள்.]

அம்புயாதம்—தாமரை. [ஸம்பு॰ஜாத: ஸம்பு - நீர். ஜாத - பிறந்தது.]

அம்புயாதன்—பிரமா. [ஸம்பு॰ஜாத.]

அம்புயை—இலக்குமி. (திருவரங்கத்தந். ௫௬.) [ஸம்பு॰ஜா.]

அம்புரம் — கதவுநிலையின் கீழ்ப்படி. [ஸம்பு॰ர.]

அம்புராசி—கடல். 'அம்புரா சியைமான் மந்தரஞ் சுழற்றி' (பாரத. குருகுல. ௪.) [ஸம்பு॰ராஸி: அம்பு - நீர். ராஸி - கூட்டம்.]

அம்புராம்புயம்—கடற்றாமரை.

அம்புருகம்—1. தாமரை. 2. நீரில்வளரும் ஒரு பூண்டு. [ஸம்பு॰ருஹ: அம்பு-நீர். ருஹ - வளர்ந்தது.]

அம்புரோகிணி—தாமரை. [ஸம்பு॰ரோஹிணீ: அம்பு - நீர். ரோஹிணீ - வளர்வது.]

அம்புலி—1. சந்திரன். 'ஆங்கு கோக்கின னகைத்தன னம்புலிக் கடவுள்' (உபதேச. சிவவிர. ௩௫௩.) 2. அம்புலிப்பருவம்.

அம்புலிச்சோதரி—இலக்குமி. 'அம்புலிச் சோதரியாடுகூத்தையும்' (ஒருதுறைக்கோ) [ஸோதரீ - சகோதரி. இது, பாற்கடலிலே சந்திரனோடு பிறந்தமையால் வந்த பெயர்.]

அம்புலிப்பருவம் — பிள்ளைத்தமிழில் ஒருறுப்பு; அது: பிள்ளைக்குச் சந்திரனைக் காட்டி அப்பிள்ளையுடன் விளையாட அழைக்கும் பருவம்.

அம்புலிமணி—சந்திரகாந்தக்கல். (இரகு. சீதைவ. உ௩.)

அம்புலிமான்—சந்திரன்.

அம்புலியம்மான்—சந்திரன். 'அம்புலியம் மானைப் பிடித்துத்தரவேணுமென்றழுத ப்ரஜைக்கு' (ஈடு. 4. 3. ப்ர.)

அம்புவன்—அஞ்சுமானென்னும் ஆகமங் கேட்டவருளொருவன். (த. நி. போ. கடு௮.)

அம்புவாகம்—முகில். [ஸம்பு॰வாஹ: ஸம்பு - நீர். வாஹ - சுமப்பது.]

அம்புவாகன் — நீர்கொண்டுசெல்வோன். [ஸம்பு॰வாஹ - அம்பு - நீர். வாஹ - கொண்டுபோவோன்.]

அம்புவாகிநி—1. இறைகூடை. 2. நீரிறைக்கும்பாத்திரம். [ஸம்பு॰வாஹிநீ: அம்பு - நீர். வாஹிநீ - தாங்குவது.]

அம்புவாசிநீ—1. எலுமிச்சை. (மலை.) [𑌅𑌂𑌬𑍁𑌵𑌾𑌸𑌿𑌨𑍀: 𑌅𑌂𑌬𑍁 - நீர். 𑌵𑌾𑌸𑌿𑌨𑍀 - வசிப்பது.] 2. பாதிரி (மலை.)

அம்புவி—பூமி. 'அம்புவி யெயினர் போற்றும் வள்ளியை' (கந்தபு. வள்ளி. க.)

அம்பை—1. உமாதேவி. 'அம்பையொரு பாகா' (சூத. சிவமான். உ: கக.) 2. காசிராசன்புத்திரிகளுளொருத்தி. 'அமரினிற தகிர்துழி யம்பையை' (பாரத. குருகுல. கஉள.) 3. தாய். 4. துர்க்கை. 5. மூத்திரக்கிரிச்சரம். (இராசவைத்.) 6. வெட்டிவேர். [1, 2, 3, 4, 6. 𑌅𑌂𑌬𑌾.]

அம்போசம் — 1. தாமரை. 2. நாரை. 3. நீரிற்பிறந்தது. [𑌅𑌂𑌭𑍋𑌜: 𑌅𑌂𑌭𑌸𑍍 - நீர். 𑌜 - பிறந்தது.]

அம்போசயோநி—பிரமன். [𑌅𑌂𑌭𑍋𑌜𑌯𑍋𑌨𑌿: 𑌅𑌂𑌭𑍋𑌜 - தாமரை. 𑌯𑍋𑌨𑌿 - பிறப்பிடமாகவுடையவன்.]

அம்போதம்—முகில். [𑌅𑌂𑌭𑍋𑌦: 𑌅𑌂𑌭𑌸𑍍 - நீர். 𑌦 - கொடுப்பது.]

அம்போதரங்கம் — கலிப்பாவிற்குரிய உறுப்புக்கள் ஆறனு ளொன்று; அஃது: அம்போதரங்க வொத்தாழிசைக்கலிப்பாவிலே தாழிசைக்கும் தனிச்சொற்கும் நடுவிலும், வண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவிலே அராகத்திற்கும் தனிச்சொற்கும் நடுவிலுங் கரைசாரக் கரைசார ஒருகாலைக்கொருகாற் சுருங்கிவரும் நீர்த்திரைபோல நாற்சீரடியும், முச்சீரடியும், இருசீரடியுமாய்க் குறைந்து குறைந்து பேரெண், அளவெண், இடையெண், சிற்றெண்ணென்னும் நான்குவகுப்பாய் வரும். 'மன்னியவீ ரடியிரண்டு மோரடியா றன்கு-முளமலிசிந் தடியெட்டுங் குறளடியீ ரெட்டு மொருங்கியல்பே ரெண்சிற்றெ ணிடையெண்ணே டளவெண் - டளமலியம் போதரங்க மெனும் பெயரா லிலவும்' (வீரசோ. யாப்பு. கo. உரை.) [𑌅𑌂𑌭𑌸𑍍 - நீர். 𑌤𑌰𑌙𑍍𑌗 - திரை.]

அம்போதரங்கவோத்தாழிசை— அம்போதரங்கவோத்தாழிசைக்கலிப்பா } ஒருவகைக்கலிப்பா; அது: தரவு, தாழிசை, அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஐந்துறுப்பும் பெற்று வருவது. (வீரசோ. யாப்பு. கக. உரை.)

அம்போதரம்—முகில். [𑌅𑌂𑌭𑍋𑌧𑌰: 𑌅𑌂𑌭𑌸𑍍 - நீர். 𑌧𑌰 - தரிப்பது.]

அம்போதி—1. கடல். 'அம்போ ருகசதநத் தன்னம்போ லுப்பொழிய - அம்போதியார்ந்தெழிலி நல்கமிழ்தம்.' (அரிச்சந்திர வெண். அரசா. ந.) [𑌅𑌂𑌭𑍋𑌧𑌿: 𑌅𑌂𑌭𑌸𑍍; 𑌧𑌿 - உடையது] 2. காற்று. 3. பாட்டின் பொருள்.

அம்போநிதி—சமுத்திரம். [𑌅𑌂𑌭𑍋𑌨𑌿𑌧𑌿: 𑌅𑌂𑌭𑌸𑍍; 𑌨𑌿𑌧𑌿 - உடையது.]

அம்போராசி — சமுத்திரம். [𑌅𑌂𑌭𑍋𑌰𑌾𑌶𑌿: 𑌅𑌂𑌭𑌸𑍍 - நீர். 𑌰𑌾𑌶𑌿 - கூட்டம்.]

அம்போருகம்—1. தாமரை. 'அம்போருகச் சேக்கைநாடிவந்து' (காஞ்சிப். நாட். கூக.) 2. நீரிற்பிறந்தது. [𑌅𑌂𑌭𑍋𑌰𑍁𑌹: 𑌅𑌂𑌭𑌸𑍍 - நீர். 𑌰𑍁𑌹 - பிறந்தது.]

அம்போருகன்—பிரமா. 'அம்போருகன் மால்பணி' (தாயு. பாய. உ.) [𑌅𑌂𑌭𑍋𑌰𑍁𑌹.]

அம்போருகை—இலக்குமி. 'அல்லியம் போருகை யன்னநின்' (வாணன்கோ. உOO) [𑌅𑌂𑌭𑍋𑌰𑍁𑌹𑌾.]

அம்ம—1. ஓரதிசயச்சொல். 'மெய்ம்மையி னல்கிய விதியி னார்க்கியா - னம்மசெய் கின்றதோ ரளவுண் டோவென்றான்' (கந்தபு. அசுரர்தோற். கச.) 2. ஒருரையசைச்சொல். 'அதுமற்றம்ம' (நன். இடை. கக. உரை.) 3. கேட்பாயாக எனப் பொருள்படும் ஓரிடைச்சொல். 'அம்மவாழிதோழி' (நன். இடை. கக. உரை.)

அம்மகோ — ஓரிரக்கக்குறிப்புச்சொல். 'அம்மகோவெனும் விழுமழும்' (மதுரைக் கல. கச.)

அம்மங்கார்—1. ஆசாரியன்தேவி. (வைணவர்குழுவழக்கு). 2. அம்மான்மகள். (பார்ப்பனர்வழக்கு.)

அம்மட்டம்—வட்டத்திருப்பி.

அம்மட்டி—கொட்டிக்கிழங்கு.

அம்மனத்தர்—சைநர். (சிநேந். 139.)

அம்மணம்—1. அசப்பியவார்த்தை. 2. சோரமார்க்கம். 3. நிருவாணம்.

அம்மணி—1. தனக்குப் பந்துவல்லாத பெண்ணை யழைக்கும்போது பிரயோகிக்கப் படும் ஒரு மரியாதைவார்த்தை. (மநு. க: கஉக. உரை.) இது, அம்மனை என்பதன் மரூஉ. (வழக்.) 2. இடை. 'நின்னம்மைதனம் மணிமேல்' (திவ். பெரியாழ். 1. 6. 3.)

அம்மம்—1. பெண்களின்முலை. 'கொம்மை யம்மமசைவுற' (இரகு. நாட்டு. ௫௦.) 2. முலைப்பால். 'அன்னே யுன்னை யறிந்து கொண் டேனுனக் கஞ்சுவ னம்மந் தரவே' (நாலாயிர. பெரியாழ். ௩.) [ஆகுபெயர்.] 3. குழந்தையுணவு.

அம்மம்ம — மிக்க வியப்பைக் குறிக்கும் ஓரிடைச்சொல். 'அம்மம்மவெல்லவெளி தோ' (தாயு. சச்சி. ௪.)

அம்மல்—1. சமியாக்குணம். 2. மந்தாரம். 3. மூடம். 4. விறைப்பு.

அம்மவம்ம — மிக்க வியப்பினைத் தரும் ஓரிடைச்சொல். 'அம்மவம்ம கடவுண்மக னை நின்னை லறிவுற்றேன்' (ஞானவா. சிகித்து. கரு௦.)

அம்மவோ— ஓ ரிரக்கக்குறிப்புச்சொல். 'அம்மவோ விதியே யென்னும்' (கந்தபு. அக்கினி. கககூ.)

அம்மன்—1. தாய். 2. தேவதை.

அம்மன்கட்டு—கூகைக்கட்டு.

அம்மன்காசு—(புதுக்கோட்டை) நாணய வகையினொன்று.

அம்மன்கோடை — துர்க்கைகோயில் முதலியவற்றில் நிகழும் ஒரு திருவிழா.

அம்மன்கோண்டாடி—மாரிகோயிற்பூசாரி.

அம்மனே—ஒருவியப்புக்குறிப்பு. 'உடைக் கதுவு மாய்ச்சிபான் மத்துக்கே யம்மனே' (திவ். இயற்பா. 3. 28.)

அம்மனை—1. அம்மானை. 'அம்மனைவேண் டுவ தளித்தான்' (இராமா. உத்தர. அசு வமே. கஉக.) 2. அவ்வீடு. 3. நெருப்பு. 'அம் மனைக் கம்மனை வழங்கும்' (பாரத. வாரணா. கஉ௫.) 4. தாய். 'அன்புடை யம்மனை யத்த னீங்கிவர்' (கந்தபு. சயந்தன். புல. உ௩.) 5. தலைவி. 'நோற்றுச்சுவர்க்கம் புகுகின்ற வம்மனாய்' (திவ். திருப்பா. 10.)

அம்மனைப்பாட்டு — அம்மானையாடும் பொழுது பாடும் பாட்டு. (தொல். பொரு. 461. உரை.)

அம்மனைமடந்து—கலித்தாழிசையால் வினவும் விடையுமாக மகளிரிருவர் இருபொருள் படக்கூறுவதாக இயற்றும் பாட்டு. (மாற னலங். 267.)

அம்மனையோ—ஒரு துக்கக்குறிப்பு. (சீவக. 760.)

அம்மனோ — ஒரு துக்கக்குறிப்பு. (திவ். இயற். திருவிருத். 36.)

அம்மா—1. ஓர் அசைச்சொல். 'அத்திரத் திருந்தைத் தேரோ னுக்கின னிமைப்பி னம்மா' (பாரத. திரௌ. அ.) 2. ஓரதிசயச் சொல். 'சும்மாவிரு சொல்லற வென்றலு மே - அம்மாபொரு ளொன்று மறிந்திலனே' (கந்தரநு. கஉ.) 3. ஓரிரக்கச்சொல்-ஐயோ. 'ஆவம்மாவம்மா வென்னம்மா வகன்றனை யே' (சிந்தா. ககக. உசஅ.) 4. அம்மாளின் விளிப்பெயர். 5. மாவிலிங்கை. (இராச வைத்.) 6. ஓர் உவப்புக்குறிப்பு. 'அம்மா வென்றுவந்தழைக்கு மார்வச்சொல்' (திவ். பெருமாள். 9. 6.)

அம்மாச்சி — தாயைப்பெற்ற பாட்டி. (வழக்.)

அம்மாஞ்சி — 1. அம்மான்மகன். 2. மூடன்.

அம்மாட்டி—கொட்டிக்கிழங்கு. (மலை.)

அம்மாமி—மாமன்மனைவி. 'அம்மாமிதன் வீவுங் கேட்டாயோ தோழி' (சிலப். 29. தேவந்தியரற்று.)

அம்மாய்—தாயைப்பெற்றவள். (அம்மை யின் ஆய்.)

அம்மாள்—1. தாய். 2. தாய்போல மதிக் கப்படுகிறவள்.

அம்மாறு—பெருங்கயிறு. (வழக்.)

அம்மான்—1. அழகிய பெரியோன். 'திக ழத்திகழு மடிமுடியுங் காண்பான் கீழ்மே லயனுமாலும்-அகழப்பறந்துங்காணமாட்டா வம்மான்' (திருவாசக. புணர்ச்சிப்ப. ௫.) 2. சிவன். 'அன்னவர்செய்யுஞ்சிறுட்டியு மம்மானருளினாற் றன்வயத்தாக்கி'(சூத. சிவ மான். க௦: கஎ.) 3. தகப்பன். (சூ. நிகண். உ: எ௫.) 4. பெண்கொடுத்தமாமன். 'உரிய

வம்மான் மாதுலன்ருன்' (கூர்மபு. வியாதர் கரும. கo.) 5. தாயுடன்பிறந்தவன். 6. திருமால். 'ஆழியங்கைக் கருமேனியம்மான்' (திவ். திருவாய். 5. 1. 6.)

அம்மான்பச்சரிசி — சித்திரப்பாலாவிப் பூண்டு. 'சீதேவியார் செங்கழுநீர்' எனவும் கூறுவர்.

அம்மான்பொடி—சொக்குப்பொடி. (திவ். நாய்ச். 2. 4. வ்யா.)

அம்மானை—1. கலம்பகமென்னும் பிரபந்தத்தின் பதினெட் டுறுப்புக்களு ளொன்று; அது: மகளிர் அம்மனையாடும்போது பாடுவதாகக்கருதிப் பாடப்படுவது. (இலக்கணவி. அகஉ.) 2. மகளிர் அம்மனையெறிந்து விளையாடும் விளையாட்டு. 'ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெ ணம்மானை யாடியருளே' (மீனாட்சியம். பிள். அம்மானை. க.) 3. அம்மானையாடுங்கருவி. 4. அம்மானைப்பருவம்.

அம்மானைப்பருவம் — பெண்பாற்பிள்ளைத் தமிழ்ப்பருவங்களுள் ஒன்று.

அம்மானைவரி — மகளிர் அம்மானையாடும் போது பாடும் பாட்டு (சிலப். 29.)

அம்மி—1. கறிச்சரக்குச் சாந்து முதலியன அரைக்குங்கல். 'உரலி லம்மியி லோங்கு முலக்கையில்' (காசிகாண். கற்பிலக். உசு.) 2. மாமி.

அம்மிக்கல்—1. அம்மியில் அரைக்குங் குழவி. (பிங்க. கசுகசு.) 2. அம்மி. 'பெருத்தவம் மிக்கன் முதலிய தாங்கிப் பேணிவிற் றுன்பனே வுணர்வீர்' (சூத. ஞாந. கக: உஎ.)

அம்மியம்—1. கள். (பிங்.) 2. காளம். 3. சிறுசிக்கம்.

அம்மியை—மிண்டுத்தனம்.

அம்மிலசாரம்—காடி.

அம்மிலம்—புளிப்பு.

அம்மிலவிருக்கம் — } புளியமரம்.
அம்மிலவிருட்சம் — }

அம்மிலிகா—1. புளிப்பு. 2. புளியமரம்.

அம்மிலிகை—புளி.

அம்முதல்—1. அடைதல். 2. அனுப்புதல். 3. சூரியனொளிமறைந் திருண்ட மந்தாரம். 4. தலைகனத்தல், விறைத்தல்.

அம்மெனல்—1. ஓசையனுகரண ஓசை. (சூ. நிகண். பத். சஅ.) 2. நீர்ததும்பற்குறிப்பு. 'அம்மெனக்கண்ணீரரும்பி' (பதினொ. திருவிடைமும். 10.)

அம்மேயோ—ஒரு துக்கக்குறிப்பு. (சீவக. 1271. உரை.)

அம்மை—1. அமைதி. 'அம்மையஞ்சொல்லார்' (சிந்தா. முத்தி. ௩௩௩.) 2. அழகு. (பிங்க. கக௬சக.) 3. உமாதேவி. 'அரன்விடைபுரிதலு மம்மை யாங்கவன்' (கந்தபு. உமைவரு. கச.) 4. கடுக்காய். 5. செய்யுட்குரிய எண்வகைவனப்புக்களு ளொன்று; அது: 'அறிவினு ளுருவ துண்டோ பிறிதினோய் - தந்நோய்போற் போற்றாக் கடை' என்பதிற்போலச் சில அடியாகிச் சிலவாய மெல்லிய சொற்களால் ஒள்ளியபொருண் மேல் இனிதுதொடுக்கப்படுவது. 'அம்மை தானே யடிநிமிர் வின்றிச், சின்மென் மொழியாற் சீர்புனைந் தியாத்தலும்' (இலக்கணவி. எ௬௪.) [அமைதிப்படுத்தலி லம்மையெனப்பட்டது.] 6. சைநகுலதெய்வமாகிய தருமதேவதை. (சூ. நிகண். க: ௩க.) 7. சைநசமயத்துத் தவப்பெண். 'நந்திய பிண்டி வாமனன்னெறி வழாது நோற்பாள் - கந்தியே யவ்வை யம்மை கந்தியே கவுந்தி யென்ப' (சூ. நிகண். உ: ௬௨.) 8. தாய். 'அம்மையோடப்பனுதி' (சி. சி. பாயிர. 'அறுவகை' நிரம்ப.) 9. மசூரிகைநோய். [வழக். அம்மையின் விளையாட்டென்பதுபற்றிவந்த பெயர்.] 10. முற்பிறப்பு. 'அம்மையாற் றவங்கடாங்கி' (சூளா. மந்தி. கக௮.) 11. வருபிறப்பு. 'அம்மையில் வாழ்விடை யற்றமுறுமே' (கந்தபு. தெய்வ. சக.) 12. சுவர்க்கநரகங்களாகிய மறுமை. (சி. சி. உ: கக. ஞாநப்.) 13. பாட்டி.

அம்மைதண்டலி — தாயாகிய குண்டலிசத்தி. (தாயு. தேசோ. க.)

அம்மையப்பர்—சிவன். (பெரியபு. திருஞாந. க௦௦அ: உரை.) (அம்மையு மப்பருமாயான்மகோடிகளைப் பெற்றமையால் வந்த பெயரென்பர். தாயுந்தந்தையுமானவர்.)

அம்மையார்—முதியவள்.

அம்மையார்கூந்தல் — கொடியார்கூந்தலென்னும்பூண்டு.

அம்மையோ — ஒரு வியப்புக்குறிப்பு. (கலித். 85. உரை.)

அம்ருதர்-சந்திரகலைகள் பதினாறிலொன்று. (சி-வி. சரி. ௭. தாற்.)

அம்வந்தி—நீரிழிவு. (ம. தி. ௩௨. உரை.)

அமங்கலம்—1. ஆமணக்கு. 2. அசுபகாரியம். [ஸம்ஸ்: அ; மங்கல - சுபம்.]

அமங்கலி—கைம்மை. [ஸ; மங்கலீ - மங்கலமுடையவள்.]

அமங்கலை — கைம்மை. [ஸ; மங்கலா - மங்கலமுடையவள்.]

அமச்சன்— 1. மந்திரி. 2. வியாழன். 'இந்துசூரியரை - யமச்சனெழியப்புதன் சநி நோக்கில்' (விதாந. கர்ப்பா. ௬.)

அமச்சு—அமைச்சு.

அமட்டு—1. உறுக்குகை. 2. நிலைப்படாதசைதல்.

அமட்டுகை— } அமட்டுதல்— } 1. அதட்டுதல். உறுக்குதல். 2. சிக்குப்படுத்தல். 3. நிலைப்படாதசைதல்.

அமடு — சிக்குதல். 'மாதரா ரொளிரமளி பீடத்தி லமடுபடு வேனுக்கு' (திருப்பு. ௩அ௪.)

அமண்—1. சமணசமயம். 'தீயமண்கையர்கள் பிணித்து' (கந்தபு. கடவுள்வா. ௨௧.) 2. சமணர். 'வல்லமண் விடுத்த வேழம்' (திருவிளை. அங்கம். ௩.) 3. ஆடையின்மை. 'குவிமுலையார் தம்முன்னே நாணமின்றியமணே நின்றார்' (தேவா. 972. 7.) 4. வரிக்கூத்துவகை. (சிலப். 3. 13. உரை.)

அமண்டம்— } அமண்டலம்- } ஆமணக்கு. [ஸம்ஸ்.]

அமணக்கூத்து — 1. நிர்வாணமாயாடுங்கூத்து. 2. கட்டுக்கடங்காச் செயல். (திவ். திருமாலை. 34. வ்யா.)

அமணம் — 1. இருபதினாயிரம்பாக்கு. 2. நிர்வாணம். ['பதினாயி ரங்கொட்டைப் பாக்கா யிருந்தனள் பைந்தொடியே' என்னுங் கவிக்கூற்றிற் பதினாயிரங் கொட்டைப் பாக்கென்ப தரையமணமெனப் பொருள்பட்டு அரைத்துகிலின்றியிருந்தாள் எனச் சிலேஷார்த்தமாய்நின்றது.]

அமணர்—1. சமணர். 'அமணர்களிட்ட தீத்தழல்' (பெரியபு. திருஞாந. ௭௦௪.) 2. மதிகேடர்.

அமணன்பாழி — சைநாலயம். 'அமணன் பாழியிற் சிம்மத்தைக்காட்டி' (ஈடு. 4. 6. 6.)

அமணனைப்படுதல்—காமவிகாரமடைதல். 'களிறு ..அமணனைப்பட்டுத்திரியுமாபோலே' (திவ். இயற். திருவிருத். 15. வ்யா.)

அமத்திரம்—1. உண்கலம். 2. பகைவரை மேற்கொள்ளல். 3. மண்முதலியவற்றாலாய பாத்திரம். 4. வலிமை. [ஸம்ஸ்.]

அமதம்—1. அறியப்படாதது. 2. காலம். 3. சம்மதமின்மை. 4. நோய். 5. மரணம். [ஸம்ஸ்.]

அமதி—1. அறிவின்மை. 2. கபடஞ்செய்வோன், துட்டன். 3. காலம். 4. சந்திரன். [1, 2. ஸ; மதி - அறிவு. 3, 4. ஸம்ஸ் - போதல். தி - ஒரு வ. வி.]

அமந்தம்—1. உக்கிரமானது. 2. ஒரு மரம். 3. காரியசாமர்த்தியம். 4. சாக்கிரதை. 5. மந்தமில்லாமை. [ஸம்ஸ்.]

அமந்தலம்—செங்கத்தாரி. (மூ. அ.)

அமந்தி—ஒருமரம்; அது நாட்டுவாதுமை. (மூ. அ.)

அமநஸ்கம் — 1. இராசயோகத்தினொரு விதம்; இது: மநமிறந்துநிற்பது. (த. நி. போ. ௩௭௪.) 2. கவனமில்லாதது. 3. புத்தியில்லாதது. 4. மநத்தைக்கடந்தது. 'அதற்கப்பால் அமநஸ்கரான பரசிவ மிருக்கிறார்' (சித். சாரா. ஞாநபாத. ௧. ௬: தாற்.) 5. மநத்தையடக்கியாளுந்திறமில்லாதது. [ஸம்ஸ் நஸ்க.]

அமநசன் — மநமுடையனல்லாதவன். (வாசுதே. ௧௧௬.) [ஸம்ஸ் நஸ்.]

அமநி — தெரு. [ஸம்ஸ்நி: ஸம்ஸ் - போதல். நி - ஒரு வ. வி.]

அமநோயோகம் — கவனமின்மை. [ஸம்ஸ் நொயொக: அ; நொயொக - கவனம்.]

அமம்—நோய். [ஸம்ஸ்.]

அமயம் — காலம். 'ஆனதோரமயந் தன்னில்' (கந்தபு. திருக்கல். ௭௨.)

அமர்—1-3. அமரென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. நோயி னதிகரிப்பாலாகிய உக்கிரம். 5. மதில். 6. யுத்தம். 'பூழி புனைந்தவர் பாலகனுவமர் புரிவானே' (கந்தபு. வரவுகே. கங.) 7. அமைதி. (திருப்பு. ருகசு.) 8. விருப்பம். (ஐங்குறுநூறு.)

அமர்க்களம்—யுத்தகளம். 'இடைந்திலா வமர்க்களத்திடை' (இரகு. திக்கு. களஉ.)

அமர்கொடுத்தல்—பொருதல். 'கலுழனெடெதிர்மலைந்தமர் கொடுத்தனர்களால்' (உபதேச. சூராதி. 22)

அமர்ந்த—1. பொருந்திய. (கலி. ருஎ.) 2. போர்செய்த. (கலி. ருஎ.) 3. விரும்பிய. (கலி. ருஎ.)

அமர்த்தல்—1. அமரச்செய்தல். 2. இருத்துதல். 'அவானோர்குடிபுகவமர்த்திவிட்ட சுவாமி' (திருப்பு. சஅஎ) 3. பொருதல், மாறுபடுதல். 'பேதைக்கமர்த்தன கண்' (வள். கOஅசு.)

அமர்தல்—1. இருத்தல். 'திருப்பரங்குன்றமர் சேயைப் போற்றுவாம்' (கந்தபு. கடவு. கஉ.) 2. ஒப்பாதல். 'வாளமர் கண் மடவாய்' (விநாக. குனுகு. ௩அ.) 3. விராதடங்குதல். 'காற்றமர்ந்தது' (வழக்.) 4. திருத்திப்பட்டமர்தல். 'புகழூர்க் காசு முழுதுங் கொடுப்பினு, மமராகோக்கமொடு' (மலைபடு. எசு.) 5. பொருந்துதல். 'வள்ளியொடு நகையமர்ந்தன்றே' (திருமுருகா. கOஉ.) 6. பொலிவு. (திவாகர. கக.) 7. மிகுதி. (திவாகர. கக.) 8. வாய்த்தல். 'அவனுக்குச்சேவகமமர்ந்தது' 9. விரும்புதல். 'அகனமர்ந் தீதலி னன்றே' (வள். கஉ.) 10. அணைதல். 'விளக்கானது...காற்றிலல் அமருமாபோலே' (குருபரம். 305)

அமர்ந்தான்—மேற்கொண்டான். (புறப். பக். சுசு.)

அமர்நீதியார் — அறுபத்துமூன்றுநாயன்மாரு ளொருவர். (பெரியபு. அமர்நீதி. உ.)

அமர்வித்தல்—தங்கச்செய்தல். 'தொட்டிலமர்வித்தார்' (பெரியபு. திருஞான. சக.)

அமர்வு—இருப்பிடம். 'அரி புருடோத்தம னமர்வு. (திவ். பெரியாழ். 4-7.8.)

அமர—1. இருக்க எனப் பொருள்படும் ஒரு வினையெச்சம். 'குமரவே ளொருபுடையமர' (கந்தபு. சரவண. உ௫.) 2. ஒ ருவமையுருபு. (தொல். பொரு. உஅசு. உரை.)

அமரங்காரன்—1. ஆயிரங் காலாட்களுக்குத் தலைவன். 2. சிற்றரசன்கீழுள்ள போர்வீரன்.

அமரகண்டம்— 1. நருமதையாறு பாயும் ஓரிடம். (கூர்மபு. நருமதை. ௬.) [ஸமர வம்ஶ.] 2. குதிரைவலி. (ஜீவரட்)

அமரதணர்—கடுக்காய்ப்பூ.

அமரகோசம்—ஆரியபாஷையிலே அமரசிங்கர் என்பவர் செய்த ஒரு நிகண்டு. [ஸமரகொஶ: அமர; கொஶ - சொற்பொருள் அறிவிக்கும் நூல்.]

அமரசயம்—இரைக்குடர்.

அமரசிங்கம்—அமரசிங்கர்செய்த நிகண்டு. (பி. வி. சஉ. உரை.) [ஸமரஸிஹ.]

அமரசிலைக்கெந்தகம் — ஒருவகைக்கெந்தகம்; அது முப்பத்திரண்டுவகைப்பாஷாணங்களு ளொன்று. (மூ. அ.)

அமரசிலைத்கெந்தம்—அமரசிலைக்கெந்தகம்.

அமரத்துவம்—அழிவின்மை. [ஸமரக்வம்: அமர - அழிவில்லாத. க்வம் - தன்மை.]

அமரதை — அழிவின்மை. [ஸமரதா: அமர-அழிவில்லாத. தா-வ-வி.]

அமரபதி—1. இந்திரன். 2. கடவுள். 3. தேவலோகம். 4. ஒரு பருப்பதம். (சி - வி. சரி. உசு.) [ஸமரவதி: அமர - தேவர். வதி - தலைவன்.]

அமரம்—1. அமரசிங்கராற்செய்யப்பட்ட ஸம்ஸ்க்ருதநிகண்டு. 2. அரசனால் ஒருவனுக்குக் கொடுக்கப்படும் ஊர்வருவாய். 3. அழிவின்மை. 4. ஆயிரங் காலாட்களையாளுகை. 5. எலும்புக்குவை. 6. ஒருவிதக் கண்ணோய். 'விழி யருகலொடு நீர்க்கம்மலும் அமாமுங் கண்ணோயு மேகவழ றலைநோயு மாமையஞ் சிறகாமரோ' (தைல. தைலவ. ௩சு. பக். சஅ.) 7. சுத்தம். ['அமலம்' என்பதன் திரிபுபோலும்.] 8. தோணியின் பின்பக்கம். ['அபரம்' என்பதன் திரிபு.] 9. பாதரசம். 10. பொன். 11. படகைத் திருப்புந் தண்டு. [1, 3, 5, 9, 10. அமர.]

அமரமுனிவன் — தேவருஷியாகிய அகத்தியன். (மணி. பதிக. 11.)

அமரர்—1. தேவர். 'அடைந்தவி யுண்டிடு மமரர் யாவரும்' (கந்தபு. கடவு. கக.) [அ - எதிர்மறை. மர - அழிபவர்.] 2. பகைவர். (பிங்)

அமரயோநி-வித்தியாதராதிபர். 'அமரரு மமரயோனிகளும்' (பாரத. பதினே. உசரு.) [அமரயோநி.]

அமரல்—பொலிவு. (திவா)

அமரலோகம் — தேவலோகம். 'அமர லோகம தாளுடை யார்களே' (தேவார. திருக்கோழம். க௦. திருநாவு.) [அமர லோக.]

அமரன்—1. அமரசிங்கன் என்ற ஆசிரியன். 2. தேவன். 'தேவர்வணங்கு மமரன்' (தேவார. திருவா. கூ. சுங்.) [அமர.]

அமராங்கநை—தெய்வப்பெண். [அமராங்கநா: அமர - தேவர். அங்கநா - பெண்.]

அமராசயம்—கருப்பை.

அமராடல்—போராடல். 'அந்தன் சேய்களுக் காயம ராடுநின் - மைந்தன் மூனு மடிந்தனன்' (சேது. இராமதீ. ருச.)

அமராபகை-தேவகங்கை. [அமராபகா: அமர - தேவர். ஆபகா - நதி.]

அமராபதம் — தேவலோகம். [அமராபதம்: அமரா; பதம் - இடம்.]

அமராபதி-இந்திரன்நகர். (சீவக. 2335.)

அமரார் — பகைவர். 'அமராரைவெல்ல வல்லான்' (வாணன்கோ. அ.)

அமராவதி-தேவலோகம். 'அற்ப மென்ன வமரா வதியையே' (பாரத. வாரணு. ககக.) [அமராவதீ: அமர - தேவர். வதி: வ-வி.]

அமரி—1. அமிர்தம். 'அமரிவெளவிக் - கதுமென மீளுகென்றாள்' (சேதுபு. கத்துரு. உஅ.) 2. இந்திரனுலகம். 3. கற்றாழை. (மலையகராதி.) 4. துர்க்கை. 'பலர்தொழு மமரி' (சிலப். வேட்டு. ளு. ளஎ.) 5. தெய்வப்பெண். 6. மூத்திரம். 7. விஷம். [1, 2, 3, 4, 5. அமரீ.]

அமரிக்கை—அமைதி.

அமரிதம்—கடுக்காய். (மலை.)

அமரிய—'பொருத' எனப் பொருள்படும் ஒரு பெயரெச்சம். 'அமரிய சேனை.'

அமரியம் — 1. குருந்தமரம். 2. சண்பகப்பூ. 3. சண்பகமரம்.

அமரியுப்பு—ஒருவகையுப்பு. [இது மூத்திரத்திலிருந் தெடுக்கப்படுவது. அமரி - மூத்திரம்; உப்பு.]

அமரியோன்—போர்வீரன். 'அமரியோர் களோரைம்பது வெள்ளத்தர்' (கந்தபு. காவலா. 15.)

அமருடணம் — கோபமுள்ளது. [அமர்ஷண: அ; மர்ஷண - தாங்குதல்.]

அமருதல்—அடங்குதல்.

அமருலகம் — தேவுலகம். 'அமருலகந்தம் மடைந்தார்க்கு' (தேவார. திருச்சாய். கூ. திருநாவு.) [அமர; உலகம். 'அமராருலகம்' என்பதன் மரூஉ.]

அமருலகு — தேவுலகம். 'அமருலகு தாணின்ன தடியடைந்த தென்கோ' (சூளா. துறவு. ஙஙு.) [அமர; உலகம். அமராருலகென்பதன்றிரிபு.]

அமரேசன் — 1. இந்திரன். 'என்னுந் துணையி லமரேசனை யெந்தை நோக்கி' (கந்தபு. தெய்வ. கூ.) 2. குய்யகாட்டகரிலொருவன். (வி-ணி. உஎக.) 3. சிவலோகத்திலே உத்தரதிசையோலக்கஞ் சேவிக்கு முக்கியதேவர்களி லொருவன். (வி-ணி. உஙச.) 4. பிருகஸ்பதியாகிய தேவகுரு. 'அடைவில நல்வினைக் கென்றம ரேசனறைந்தனனே' (விதாந. குணகு. ஙஎ.) [அமரேஶ: அமர - தேவர். ஈஶ - தலைவன்.]

அமரேசுவரம் — அமரேசபுவநம். இது: அப்புதத்துவத்திலிருக்கிற எட்டுப் புவனங்களுளொன்று. (சிவபர. கஙக.) [அமர; ஈஶ்வரம்.]

அமரேசுவரன்—இந்திரன். [அமரேஶ்வர: அமர - தேவர். ஈஶ்வர - தலைவன்.]

அமரேந்திரமுநி — சைநமுனிவரிலொருவர். (த. நி. போ. உஎஎ.) [அமரேந்த்ரமுநி.]

அமரை—1. அறுகு. 2. கருப்பை. 3. கொப்பூழ்க்கொடி. 4. தேவலோகம். 5. வீட்டுத்தூண்.

அமரோசை — நக்கோசை. 'ஆரோசை யமரோசைகளினமைத்தார்'[(பெரியபு.ஆனய உச. உரை.)

அமரோர்—தேவர். 'மாலயனோடமரோ ரினையோனெனவே மறையோத' (திருப்பு. ருகஎ.)

அமல்—1-3. அமலென்னேவலும் தெரி நிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. மேல்விசாரணை. [இது அராபிச்சொல்.]

அமல்தார்—வரிப்பணம்வாங்கும் உத்தி யோகஸ்தன். [அராபிச்சொல்.]

அமலகம்—நெல்லிமரம். [வைத்] [ஆமலக மென்பது முதல்குறுகியது.]

அமலகமலம்—1. கோசலம். 2. மலின மற்றநீர். [அமல - சுத்தம். கமல - நீர்.]

அமலசாந்தம்—1. சுண்ணாம்பு. 2. பசுச் சாணி.

அமலம்—1. அழகு. 'இருக்கமலமலர' (திருவானை. கோச்செங். ௩.) 2. அழுக் கின்மை, புனிதம். 'ஆலமா மிடற்றோற் கான வமலமாம் பொருளை யேற்று' (கந்தபு. திருக்கல். அ௩.) 3. அறிவு. (பிங்க. ௩0௬௬.) 4. சிதம்பரம். (கோயில். வியாக். உ௯.) 5. மாமஞ்சள். (வைத்) 6. மலத்தினாற் பந்திக்கப்படாமை. ('அமலன்' பார்.) 7. வெண்மை. [அ; மல.]

அமலர்—1. சிவன். 'எற்றமலர்க் கேக முக்கா லரைகா லென்ன விசையுமண்ட லங் கவிர சிதநாடோறும்' (தைல. தைலவ. க௩எ.) 2. மலம்நீங்கினவர், 'அநந்தேசுவ ராதிகள் சிவனால் அமலரானதுபோல' (சி. சி. உ: க. சிவாக்.) [அ; மல.]

அமலல்—அதிகரித்தல், மிகுதல். 'தருக் கமலமலமென்ன' (திருவானை. கோச். ௩.) 2. செருதல். 'அமலலகலமகலலபய' (தண்டி. சொல்ல. கடு.) 3. நெருக்கல். 'வேயமலக லறை' (கலித்தொகை. சடு.) 4. பொருந்தல். 'அமலும் வேறிட மளவை யின்றியே விமல ரூபமாய் விரவும்' (சேதுபு. சிவதீர்த்த. எ0.)

அமலன்—கடவுள். மலத்தினாற் பந்திக்கப் படாதவன்.

அமலனாதிப்பிரான் — திவ்யப்பிரபந்தங் களுளொன்று.

அமலா—நெல்லிமுள்ளி. (வைத்)

அமலாவத்தை — நிர்மலான்மாவின் நிலை மை. அது: சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதமென ஐந்துவகைப்படும். அவற்றுள்: பீசத்தையுச்சரித்தல் சாக்கிரம்; விந்துபரிக்கிரகஞ் சொப்பனம்; நாதசம் யோகஞ் சுழுத்தி; சத்திசமாகமம் துரியம்; பரசிவதேசசில் சாந்தமாய் இலயிப்பது துரியாதீதம். (சி.வி. யோக. அ: உரை.)

அமலுதல்—அமலல்.

அமலை—1. இலக்குமி. 2. ஒலி. 'அறை கழல் வீர ரார்க்கு மமலையை யவிக்கு மன் றே' (நைடத. நாட்டு. க௩.) 3. கட்டி. 4. கடுக்காய். (வைத்) 5. காளி. 'அந்தரி யாமளை யமலை யாலகாலி யப்பிகை' (அரிச்சந். பாயிர. எ.) 6. கொப்பூழ்க்கொடி. 7. சுத்தம், அழுக்கின்மை. 'அங்கரணிவுறுமமலைவான வர் - பொன்னகரியல்பெனப்பொலியுமேல் வையில்' (இராமா. மந்தரை. ௩௯.) 8. சுத்த முடையவள். 'நீயமலையென்றும்' (இராமா. சீதைவ. ௯உ.) 9. சோறு. (சூ. நிகண். ௬: உஉ.) 10. திரட்சி, மிகுதி. 'அட்டவேந்தன் - வாளோராடுமமலையும்' (தொல். பொரு. எஉ.) 11. திரளை. 'பெருஞ்சோற்றமலை' (மணிமேக. கள: உ.) 12. நெல்லிமரம். 13. பார்வதி, சிவசத்தி. 'அமலைக்கு வியாபகனே யரன்' (சிவதரு. சிவஞானயோக. உஉ.) 14. கூத்து. (புறப். பக். ௬௬.) [1, 5, 6, 7, 8, 12, 13. அமலா.]

அமவாசி—அமாவாசி. 'தென்புலத்தோர்க் கூட்டிடுதற் கமவாசி' (கூர்மபு. சிராத்த. க.)

அமளி—1. ஆரவாரம். [வழக். 'அமலை' யென்பதன் மரூஉப்போலும்.] 2. மக்கட் படுக்கை, மெத்தை. 'ஐந்துமூன்றடுத்தசெல் வத் தமளிமூன்றியற்றி' (சிங். காங். ௩சரு.) 3. பள்ளியறை. 4. மிகுதி.

அமளிதமளி—பேராரவாரம். (லெக்ஸி)

அமளிபண்ணுதல் — சச்சரவுவிளைத்தல்.

அமளை—கடுகுரோகிணிப்பூண்டு. (வைத்)

அமறல்—மிகுதி.

அமன்—பன்னிருசூரியர்களுள் ஒருவனா கிய அரியமன். 'உன்னு மமனெனிர் விட்டுணு' (மச்சபு. காசிபர். ௩.)

அமன்ற—நெருங்கின.

அமாத்தியன் — 1. ஆலோசனைசொல்வோன். 2. மந்திரி. [அமாத்ய: அமா-கிட்ட. த்ய - ஒரு விகுதி. அரசனுக்குக் கிட்ட இருப்போனென்றபடி. வள். சாஅ. பரி. உரை.]

அமாதாநம்—1. சேமித்துவைத்தல். 2. அடக்கம். [அமாதாந: அமா - கிட்ட. ஆதாந - வாங்குதல்.]

அமாநநம் — அவமாநம். [அ; மாநந - மதிப்பு.]

அமாநம்—அளவின்மை. [அ; மாநம் அளவு.]

அமாநிதை—1. செருக்கின்மை. 2. மரியாதை.

அமார்—கப்பற்கயிறு. [அம்மார் என்பதன்திரிபுபோலும்]

அமார்க்கம்—1. துன்மார்க்கம். 2. வழியல்லாதது.

அமார்ச்சநம்—1. உரிஞ்சப்படாதிருக்கை, தட்டாதிருக்கை. (பௌட். பும்ஸ். கூகஇ.) 2. சுத்தியின்மை. [அமார்ஜநா: மார்ஜநா- உரிஞ்சுதல், சுத்தி.]

அமாவசி—அமாவாசியை.

அமாவாசி—அமாவாசியைத்திதி. 'ஆயிரம் வெதீபாதமொப்போரமாவாசி' (சேதுபு. சேதுபல. ருஎ.)

அமாவாசியை — 1. இடைபிங்கலைகளின் சந்தியைப் பிராணன் கூடுங்காலம். 'தழைதரு மிடைபிங் கலையெனு மிரண்டின் சந்தியைப் பிராணன்சேர் காலம் - விழைதரு மமாவா சியையென வுரைப்பர்' (சூத. ஞாந கக: உரு.) 2. சூரியனுஞ் சந்திரனுங் கூடி நிற்கும் திதி; அது: அபரபக்கசதுர்த்தசியின் பின் அடுத்துவரும் திதி. 'சோமநல்வாரந் தங்கமாவாசியை கதிர்வாரஞ் சத்தமி பொன்னியாடிடினும்' (சூத. எக்கி. பூ. சஉ: உரு.) [அமா - உடன். வாஸ்யா - வசித்தற்குரிய காலம்.]

அமாவாசை—அமாவாசியை. 'பிற்றைநாளமாவாசையில்' (உபதேச. சிவவி. உஉக.)

அமாவாசைக்கண்டம்— நோய்மிக்கார்க்கு அமாவாசையன்று உண்டாகும் ஆபத்து.

அமாவாசைக்நருக்கல் — அமாவாசையிருட்டு.

அமானத்நு — 1. ஒப்படைத்தபொருள். 2. பொக்கிஷத்தில் விவரங்குறிக்காமல் வைத்த பணம்.

அமானத்துச்சிட்டா— பொதுக்குறிப்பேடு.

அமானவன் — விரசைக்கரையிலுள்ள கடவுள். (உபதேசரத். சிறப்புப்.)

அமானி—1. இராசவிசாரணைக்குள்ளான நிலம். 2. குத்தகைகொடாமல் அரசர்நேரே இறைவாங்குதற்கிடமான நிலம். [அராபிச்சொல்.] 3. புளியாரைப்பூண்டு. (வைத்)

அமானுஷகிருத்தியம் — மனிதவல்லமையைக் கடந்த செயல்.

அமிச்சை—ஞாநம். [அபித்யா-என்பதன் றிரிபு.]

அமிசகம்—1. சௌரமாநதிநம். 2. பங்கு. [அம்சக.]

அமிசகன்—1. தாயபாகமுடையோன். பங்காளி. [அம்சக.]

அமிசடக்கம்—அமைதி.

அமிசநம்—பிரித்தல். [அம்சந.]

அமிசம்—1. அக்கபாகை. 2. அதிட்டம். 3. அன்னப்பறவை. 'பிதாவினது பாதமென்னுங் குவியாத அம்போருகத்தை அமிசம் போல அணைந்து' (ஞாநவா. வைராக். உரு. உரை.) 4. செல்வாக்கு. 5. தாயபாகம். 6. யதார்த்தம், நேர்மை. 7. பங்கு. 'அராவருமல்குலாட னமிசத்தி னனுவே யாயின்' (வேதாரணியபு. மணவாள. ருசா.) 8. (கணக்கதிகாரம்) பிநக்கணக்கிற் பிரிக்கப்பட்ட கூறுகளில் எத்தனைகூறுகள் கொள்ள வேண்டியதென்று காட்டும் மேலிலக்கம். 9. (கணக்கதிகாரம்) பிநநம். 10. பயம். 11. பெருவாழ்வு. 12. லௌகிக அநுபோகம்.

அமிசாமம்— } பிரமாவின் மாநசவாவி.
அமிசாமியம்— } [ஹம்ஸ - அன்னம்; அம - போதல்: அன்னம் சென்று தங்குமிடம்.]

அமிசு—1. அணு. 2. சூரியன். 3. பிரபை. [அம்சு.]

அமிசுகம்—1. இலை. 2. ஒளி. 3. மெல்லிய சீலை. [அம்சுக.]

அமிசை—தலையெழுத்து.

அமிந்சி—அமஞ்சி. [அந்நியபாஷைச்சொல்.]

அமிடம்—1. கபடமின்மை. 2. தசை. 3. வாழ்வு. [அமிஷ.]

அமித்திரன்—1. ஒரு முனிவன். 'அங்கெடு வனத்திற் சென்றா னகன்றபி னமித்தி ரன்பே ரென்னுமா முனிவற் கென்றே' (பாரத. பழம். க.) 2. சிநேகனல்லாதவன். 3. பகைவன். [அமித்ர.]

அமித்துரு—பகைவன்.

அமித்தை—பொய்யல்லாதது. [அமித்யா: அ - அன்மை. மித்யா - பொய்.]

அமிதசாகரர் — யாப்பருங்கலம் காரிகைகளின் ஆசிரியர்.

அமிதம் — அளவின்மை. 'அமிதமாகிய பெரும்படை' (சூளா. கல்யாண. சக.) [அமித.]

அமிதவாதி — மிதமிஞ்சின கொள்கையுடையவன்.

அமிர்தக்கடுக்காய் — காசிதேசத்திலே உற்பத்தியான ஒருவிதக் கடுக்காய். 'அமிர்தமெனுங்கடுக்கா யம்புவியி லுள்ள - திமிர்த சிலேட்டுமத்தைத் தீர்க்கும் - விமிதச் - சதைப்பற்றுண் டாயிருக்குஞ் சாற்றிலதன் றேசங் - கதிக்கொத்த காசியென்பார் காண்' என்னுஞ் செய்யுளிற் காண்க. (பதார்த்த. ௬0௫0.)

அமிர்தக்குமரி—ஒருவகைத் தைலம்; அது: சீந்திற்கொடி கற்றாழை முதலியவற்றில் வடிக்கப்படுவது. (இதலிலக்கணம். தைல. தைலவ. ௬௫. கவியிற்பார்.) 'மதுபன்னி கன்னி பட்சமே சத்திபுரி நாமமமிர் தக் குமரி யித்தைலமே.'

அமிர்தக்குழல்—மனோகரப்பணிகாரம்.

அமிர்தகலை—சந்திரகலை. 'அவனையமிர்த கலையினாலே அபிடேகம்பண்ணினதாக' (சி. சி. அ: ௬. சிவாக்.) [அம்ருத; கலா - கூறு.]

அமிர்தகவிராயர்—ஒருதுறைக்கோவையாசிரியர்.

அமிர்தகிரணன் — சந்திரன். [அம்ருத; கிரண - ஒளி.]

அமிர்தகோடி—சீந்திற்கொடி.

அமிர்தங்கலந்ததல்—மூனைகலக்குதல்.

அமிர்தசஞ்சீவநி—உயிர்தருமருந்து, குற்றுயிர்தருமருந்து. (வைத்) [அம்ருத; ஸஞ்ஜீவநீ - உயிர்தருவது.]

அமிர்தசஞ்சீவி — மரணத்தைப்போக்கி வாழ்விப்பதாகிய ஒருமருந்து. ('அங்ஙன்' பார்.) [அம்ருதஸஞ்ஜீவிநு - உயிர்தருவது.]

அமிர்தசர்க்கரை—சீந்தில்மா.

அமிர்தசாரம்—1. கற்கண்டு. 2. வெண்ணெய். [அம்ருதஸார: அம்ருத - பால். ஸார - உள்ளீடு.]

அமிர்தசாகரர்—அமிதசாகரர்.

அமிர்தசாரவெண்பா—ஒருநூல்.

அமிர்தசித்தயோகம்—ஒருசுபயோகம்.

அமிர்தசோதரம்—இந்திரனுடைய உச்சைச்சிரவம் என்னுங் குதிரை. [அம்ருதஸோதர: அம்ருத அமுதம். ஸோதர - உடன்பிறந்தது. பாற்கடலிலேஅமுதத்தோடு கூடப் பிறந்ததனால் வந்த பெயர் என்பர்.]

அமிர்தத்தாநம் — தேவயாநவழியாகச் செல்லும் புண்ணியமுள்ளார் பிரமாவின்றிந முடிவுவரையும் இன்பத்துடன் வாழ்தற்கேதுவாய மோட்சமென உபசரிக்கப்படுவதாயுள்ள ஓரிடம். (கூர்மபு. பிரமா. ச. உரை.) [அம்ருதஸ்தாந.]

அமிர்ததரங்கிணி—நிலவு. [அம்ருததரங்கிணீ: அம்ருத - அமுதம். தரங்கிணீ - கடல்.]

அமிர்தநாதம்—யசுர்வேத உபநிடதங்களுளொன்று. (கூர்மபு. அட்டமூர். ௨௬. உரை.] [அம்ருதநாத.]

அமிர்தப்பால்—தாய்ப்பால்.

அமிர்தபதி—ஒருகாவியம்.

அமிர்தபலம் — நெல்லிக்காய். 'அமிர்தபல மெளிலாங்கோதிலிரதங்களும்' (தைல. தைலவ. சஅ.) [அம்ருத; பல.]

அமிர்தபிந்து-முப்பத்திரண்டு உபநிடதங்களுளொன்று. (வேதா. சூ. சிறப். ௬. உரை.) [அம்ருதபிந்து.]

அமிர்தம்—1. அமிர்தபீசம். 'நகவமிர்தத் தைப்பிலகும்' (சூத. ஞாந. ௩௨: அ.) 2. அழிவில்லாதது. 3. இனியபொருள், உவக்கத்தக்கபொருள். 4. உணவு. 5. சோமலதைச்

சாறு. 6. சோறு. 7. நஞ்சு. 8. நீர். 9. நெய். 10. பசுவின்பால். 'திலநெய்யமிர்தம்வார நீர்க்கரையரை' (தைல. தைலவ. க.) 11. பாக்கியம். 12. பாதரசம். 13. பால். 14. பாற்கடலிற் கடைந்தெடுக்கப்பட்டதென் னுந் தேவருணவு. 15. பொன். 16. மூர்ச்சை தீர்த் துயிர்தருமருந்து. (வைத்) 17. மோட் சம். 18. மோர். 19. யாகப்பொருளில் மிஞ் சியவை. 20. யாசியாதுவந்தபொருள். 'ஒன் றிரவாமல் வருவதேயமிர்தம்' (காஞ்சிப். ஒழுக். ௯௬.) 21. விஷந்தீர்க்குமருந்து. 22. வெண்ணெய். [அம்ருத: அ - எதிர்மறை. ம்ருத - மரணம்.]

அமிர்தழடியவிடம்—சுக்கு. (தைல. தை லவ. க.)

அமிர்தழடுவிடம் — மாச்சுக்கு. 'சீரமிர்த மூடுவிடமஃதை' (தைல. தைலவ. க.)

அமிர்தயோகம்— சுபகாரியங்களுக்கு உப யோகமான வாரமும் நட்சத்திரமுங்கூடிய ஒருகூட்டம். [அம்ருதயோக.]

அமிர்தர்— 1. தேவர். 2. மநுக்களுள் ஐந்தாமநுக்காலத்தினுள்ள ஒருதேவவகுப் பினர். 'சிறப்புடை யைந்தாமநுவின்றிருநாம மிரேவதனுமகவானும - மறத்துறைபோஞ் சுகனுகுமமிர்தரறந்தருபாக நிரதர்காளும்' (கூர்மபு. மநுவந். அ.)

அமிர்தவடை—பணிகாரவடை.

அமிர்தவல்லி—சீந்திற்கொடி. (சூ. நி. ௪: ௯௬.)

அமிர்தவிந்து— 1. யசுர்வேத உபநிடதங் களுளொன்று. (கூர்மபு. அட்டமூர். உ௬. உரை.) 2. ஆகாசத்தின் அடையாளம். (சி. சி. உ: ௪௪. சிவாக். உரை.) 3. வாலைரசம். [அம்ருதபிந்து.]

அமிர்தன் — 1. கடவுள். 2. தன்வந்தரி யென்னும் தேவவைத்தியன். 3. மரணமற் றவன். [அம்ருத:]

அமிர்தாகரணன் — விட்டுணுவின் வாகந மாகிய கருடப்பறவை. [அம்ருதாஹரண: அம்ருத - அமுதம். ஆஹரண - கவர்ந்த வன். கருடன் முன்னொருமுறை அமிர்தத் தைக் கவர்ந்துகொணர்ந்தானென்பது புராணகதை.]

அமிர்தாசநர்—அமிர்தபோசநமுடையவர், தேவர். [அம்ருதாஶந: அம்ருத-அமுதம். அஶந - உணவு.]

அமிர்தாமலகத்தைலம் — ஒருவகைத் தைலம்; இது: சீந்திற்கொடி நெல்லிக்கனி முதலியவற்றிலிருந்து வடித்தெடுப்பது. இதனிலக்கணம். தைல. தைலவ. ௫௬ - ஆங் கவியிற்காண்க. 'குண்டலி சிவை - அமிர்தா மலகத்தைலமிதன் பெயரே' [அம்ருத - சீந்தில். ஆமலக - நெல்லி. தைல - என் ணெய்.]

அமிர்தாமிர்தை — பஞ்சசத்திகலைகளுள் ஒன்று. (சி. சி. உ: எ௪. ஞாநப்.) [அம்ருதா ம்ருதா.]

அமிர்தாரிவளை—சங்கநிதி.

அமிர்தீகரணம் — பூசைமுதலியவற்றிற்கு உபயோகமாகத் தன்னுடம்பை அல்லதொரு பொருளை மந்திரத்தினுல் தகித்ததாகப் பாவித்தும் அது பின் நிஷ்களங்கமாய்த் தோன்றியதாகப்பாவித்தும் அமிர்தமயமா கக் கற்பித்துக்கொள்ளுதல். (சிவப்பிரகா சர்.) [அம்ருதீகரண.]

அமிர்து—1. அந்நம், சோறு. 'அத்திரத் தா லக்ஷ்மீ ரமிர்திற் புரோக்ஷிக்க' (சைவச. பொது. உஅ௬.) 2. திரவியம். 'நாட்டகத் தமிர்து நளிகட லமிர்து நல்வரை யமிர்தமு மல்லாக் -- காட்டகத் தமிர்துங் காண்வர' (சிந்தா. மண். ௬.) 3. பால். 'கனதனத்தி லூறுமமிர் தூட்டினளால்' (கந்தபு. வள். ௯எ.) 4 பாற்கடலிற் கடைந்தெடுக்கப்பட்ட தென்னுந் தேவருணவு. 'அமரர்க்கமிர்தீய' (சிவதரு. சிவஞா. அ௯.) [அம்ருத.]

அமிர்தை—1. அழிவில்லாதவள். 2. கள். 3. சந்திரனுடையசோடசகலைகளிலொன்று. 4. சீந்தில். 'அமிர்தைவங்கம்புன்றேக்கரிக் காந்திநீடம்பின் மூலல்மிசந்து விதத்தருவரி சனத்துவயஞ்சகச்சிராட்சியும்' (தைல. தை லவ. உ௯.) 5. திப்பலி. 6. துளசி. 7. நெல்லி. 8. நெல்லிக்காய். 'கரிய கரிப்பா னமிர்தை காணி யிம்மூன்றிற்கசி யிரத முப்படி' (தைல. தைலவ. ௨௧.) 9. பஞ்சசத்திகளு ளொன்று. (சி. சி. உ: எ௪. ஞாநப்.) 10. பார்ப்பதி. 'அமிர்தை யசலை சுமங்கலை' (கூர்

மடு. இருக்கல். உ०.) 11. ரசாஞ்சநம். 'அமிர் தைமுக்கடு சாதிதிரிபலை சுசாதிபலமட்டி மதுகம்பைசாசியபயலைதரிக்கும்வேர்சா துர் சாதந்தகாமரியுண்மூலஞ்சாரிபை' (தைல. தைலவ. ௩௬.) 12. வெள்ளைப்பூண்டு. 'ஈறிய சோம்பசையமிர்தை' (தைல. தைலவ. க०கூ.) 13. அமிர்தக்கடுக்காய். (பதார்த்த. சுப்பிர. க०சகூ.) 14. கடுக்காய்மரம். (அமர.) [ஸ்ரூ தா.]

அமிரம்—மிளகு. (வைத்.)

அமிருதம்—1. அமிர்தம். 2. சந்திரனுடைய சோடசகலைகளுளொன்று. (வி-ணி. உ சகூ.) 3. தேவருணவு. 'பரமாநந்தாமிருதம்' (சி. சி. உ: டுக. சிவாக்.) [ஸ்ரூ த.]

அமிருதை—1. திப்பலி. 2. துளசி. (வைத்) 3. மது. [ஸ்ரூ தா.]

அமில்—அமல்.

அமில்தார்—அமல்தார்.

அமிழ்த்தல்-நீரிலேயாமுச்செய்தல். 'ஆடன் மைந்த ரடக்க வமிழ்த்தினன்' (சேதுபு. அக் கினி. ௩க.)

அமிழ்தம் — 1. அமிர்தம். 'தானமிழ்த மென்றுணரற்பாற்று' (வள். கக.) [இங்கே அமிர்தம் என்னும் வடமொழியில் ரகரம் ழகரமாயிற்று.] 2. இனிமை. [ஸ்ரூ த.]

அமிழ்தல் — நீரிலேயாழ்தல். 'இன்பக் கடலூடேயமிழுவேனை' (திருப்புகழ். எஅ.)

அமிழ்து—1. அமிர்தம். 'அமிழ்தினு மாற் றவினிதே' (வள். சுச.) 2. பசுவின்பால். 'இருதுணிபமிழ்து குத்ததின்' (தைல. தைலவ. உஅ.)

அமிழ்ந்தல் — அமிழ்தல். 'ஆழ்ந்தபுனற் கயமதனோர் விழுந்தமிழ்ந்தி மீளவெழும்' (சேதுபு. அகத். கச.)

அமிழ்வித்தல்—அமிழச்செய்தல். 'கேட்ட வேந்தன் மிகமுனிந்து கிளரு நீரி லமிழ்வித் தும்' (ஞானவா. வஞ்சவி. டு.)

அமிழல்—அமிழ்தல். 'இந்தமோகத்திலே ணைத்தினி கனி யமிழலுற்றனை' (ஞானவா. காதி. ௩௩.)

அமிழும்—ஆழும் எனப் பொருள்பட அமி ழென்னும் வினைப்பகுதியடியாற்பிறந்த ஓர் எதிர்காலப்பெயரெச்சம். 'உழுந்தமிழு மாச மனமாவோரேழு கடலையும் பருகவல்லீர்' (தாயு. சித்தர். க.) செய்யுமென்னும் முற்று மாம்.

அமிறு—அமீறு.

அமிநாரம்—செம்மறியாட்டுக்கடா.

அமீர்—தலைவன்.

அமீவம்-1. பாபம். 2. வருத்தம். [ஸீவ.]

அமீன்—1. பணவசூல்செய்யும் ஓர் உத் யோகஸ்தன். 2. சிவில்கோர்ட்டுக் கட்டளை களை நிறைவேற்றுகிற ஓர் உத்யோகஸ்தன்.

அமீன்சேர்சூ—கிராமநிலவளவுக்குறிப்பு.

அமீனு—அமீன்.

அழக்கடி—1. மந்தாரம். 2. முட்டாயிருத் தல். 3. மூடமாயிருத்தல். 4. மூடிக்கொள்ளு தல்.

அழக்கல்—1. அமரச்செய்தல். 'வெற்பி னுச்சிதொட் டமுக்கின சிலகரம்' (உபதேச. கூர்ம. கடு.) 2. நீரிலேயமிழ்த்தல். 'ஆழ வமுக்கிமுகக்கினும்' (வாக்குண்டாம். ககூ.)

அழக்கன்—1. இரகசியத்திற் கருமமுடிப் போன். 2. உபாயமாகக்காரியம் பார்ப் போன். 3. நித்திரையில் அமுக்கும் ஆவி யெனப்படும் ஓர் நோய்.

அழக்கனங்கிழங்கு— அமுக்கிராக்கிழங்கு.

அழக்கி — நித்திரையிலே ஒருவர் நெஞ் சிலே அல்லது வயிற்றிலே ஒருபாரத்தினால் அமுக்குண்டாற்போன்று அசையப் பேசச் சுவாசிக்கக் கூடாதிருக்கவும் பதறிய மநத் தோடு விழிக்கவுஞ் செய்யும் ஒரு நோய். இதனைப் பிற அகராதிக்காரர் அமுக்கன் என்பர்.

அழக்கிரா—அமுக்குராச்செடி. (வைத்)

அழக்கிரி—அசுவகந்திக்கிழங்கு. 'பாதிரி நெரிஞ்சிறமுதாழைவரணங்காரி பரணைசார டைசித்திரம்பருவாகைமூங்கைவிழுதிக் கிராணிமாகாளிபாலைசைரியமமுக்கிரி' (தைல. தைலவ. சஉ.)

அழக்கு—1. அமுக்குதல். 'அவனமுக் குண்டு கதறிக்கொண்டு கிடந்தான்' (வழக்.) 2. அமுக்குபாரம். 3 5. அமுக்கென்னேவ லும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத் தொகையுமாம்.

அழக்குதல்—அமிழ்த்தல்.

அழக்குரவு—அமுக்கிரா.

அழக்குரா—ஒருசெடி.

அழக்கோத்தி—ஒருவகைக் கத்தி.

அழகம்—1. கடுக்காய். 2. சீந்தில். 3. நெல்லி.

அழகாரி—பூனைக்காலி. (வைத்)

அழங்கல்—1. அமர்தல். 'கட்டமுங்கி விட்டது' (வழக்.) 2. அழுந்தல். 3. நெரிபடல். 'வீடுவிழ எல்லாரும் அமுங்கிப்போனார்கள்' (வழக்)

அழசம் — சிறுசெருப்படைப்பூண்டு. (வைத்)

அழசு—ஓட்டறை.

அழஸங்கம்—அடக்கமின்மை.

அழத்தம்—1. கைவிடாப்படை. 'சக்கராதிகள் கையால் விடப்படுவதால் முக்தமென்றும், கத்திமுதலியன அமுத்தம் என்றும், ஈட்டிமுதலியன முத்தாமுத்தமென்றும், ரவைமுதலியன யந்திரமுத்தமென்றுஞ் சொல்லப்படும்' (விசார. நுஙக.) 2. பிறப்புக்களினின்று நீங்காதது. 3. வசநாபி (வைத்) 4. விடுவிக்கப்படாதது. 5. நெல்லி. [அமுக்த: அ எதிர்மறை. முக்த - விடுவிக்கப்பட்டது.]

அழத்தல்—கர்க்கடகசிங்கி.

அழத்தி—1. அடைப்பட்டிருக்கை. 2. தன்னிட்டமின்மை. [அமுக்தி: அ - எதிர்மறை. முக்தி - விடுதல்.]

அழத்திர—1. அங்கே. 2. மறுமையில். 'இகாமுத்திரார்த்தபலபோகவிராகம்' (பிரமாநந்தவிவேகசமுத்திரம்.) [அமுத்ர.]

அழதக்கடத்தோடுதித்தோன்—தேவமருத்துவனுகிய தன்வந்தரி. (தைல. கடவுள்வா. ரு.) [கையிலமிர்தகடத்தோடு திருப்பாற்கடலிற் பிறந்தவனென்பர்.]

அழதகடிகை—சில நட்சத்திரகாலங்களிற் சுபகருமங்களுக்கு யோக்கியமாயினவாகக் கருதப்படும் நாழிகைகள்; அவை: பரணி மிருகசீரிடம் பூரம் என்பவற்றிற்கு முப்பதின்மேலும், பூசத்திற்குப் பதினென்றின் மேலும், அச்சுவினிக்கு இருபத்தொன்றின் மேலும், கார்த்திகைக்கு ஐம்பதின்மேலும், திருவாதிரை, ஆயிலியம் என்பவற்றிற்கு நாற்பதின்மேலும், பூராடம், பூரட்டாதி என்பவற்றிற்குப்பத்தின்மேலும், அத்தத்திற்கு எழின்மேலும், உத்திரட்டாதிக்குப் பதினெட்டின்மேலும், சோதிக்கு இருபத்திரண்டின்மேலும், இரேவதிக்குப் பன்னிரண்டின்மேலும், அநுடம், மூலம், உத்திராடம், அவிட்டம், புநர்பூசம், உரோகிணி என்பவற்றிற்குப் பதினன்கின்மேலும், சித்திரைக்குப் பதினறின்மேலும், கேட்டைக்கு முப்பத்தொன்றின்மேலும், விசாகம், திருவோணம், மகம், சதயம் என்பவற்றிற்கு இருபதின்மேலும், உத்திரத்திற்கு முப்பத்துமூன்றின்மேலும் வரும் நான்கு நாழிகை. விஷகடிகைக்கு மேல்வரும் நாலுநாழிகை அமுதகடிகை என்பாருமுளர். (விதான. குணகுண. உகூ. உஎ.) [அம்ருதவடிகா: அம்ருத - நன்மை. வடிகா - நாழிகை.]

அழதகதிரோன்—சந்திரன். (பிங்)

அழதகம்—1. இறவாமைக்குக் கருவியாகிய அமிர்தம். 2. பாற்கடல். 3. முலை. [அம்ருதக: அம்ருத - அழியாமை, பால். க: - ஒரு வ. வி.]

அழதகிரணன்—சந்திரன். 'செறிந்த வமுதகிரணனு மென்சேயாமென்று சிலுகிட' (பாகவத. குருகுல. கஉ.) [அம்ருதகிரண:]

அழதகுண்டம் — அமுதம்வைத்திருக்கும் பாத்திரம். [அம்ருதகுண்ட: அம்ருத - அமுதம். குண்ட - பாத்திரம்.]

அழதகுண்டை—இரப்போர்கலம். [அம்ருத; குண்டா.]

அழதகுலர்—1. இடையர். 2. சான்றோர். [அம்ருதகுல: அம்ருத - பால், இறவாப்புகழுக்கேதுவாகிய அறிவு.]

அழதங்கம்—1. கள்ளி. 2. சதுரக்கள்ளி. (வைத்)

அழதசம்பூதநன்—சந்திரன். 'அமுதசம்பூதகன் மைந்தன்' (பாகவத. குருகு. உஉ.) [அம்ருத: ஸம்பூதந - பிறந்தவன்.]

அழதசருக்கரை — சீந்திற்கிழங்கிலிருந்து செய்த சருக்கரை. [அம்ருதசர்க்கரா.]

அழதசாரணி—வெள்வேலமரம். (வைத்)

அழதசித்தயோகம் — ஞாயிற்றுக்கிழமையில் அத்தமுந் திங்கட்கிழமையில் மிருகசிரமுஞ் செவ்வாய்க்கிழமையில் அச்சுவினியும் புதன்கிழமையில் அநுடமும் வியாழக்கிழமை

யிற் பூசமும் வெள்ளிக்கிழமையில் இரேவதியும் சனிக்கிழமையில் உரோகிணியும் வருங் காலம். (வருஷாதி.)

அமுதசித்தி — மதிமண்டலத்தினின்றும் பெருமிப்பாயுங் கலா அமிர்தப்பேறு. 'ஓசை சாலுமொருசத்திமதிகப்படி, மோடுகூடி யொருமித்தமுதசித்தியோடும்' (திருப்பு. கஅக.)

அமுதசுரபி — மணிமேகலைகையிலிருந்த ஓர் அட்சயபாத்திரம். (மணி. கக. சச)

அமுதசுறு—வெள்வேலமரம். (வைத்)

அமுததாம்—மஞ்சிட்டிச்செடி. (வைத்)

அமுததாரணை — உணவின்றி நிட்டையிலிருக்கும் மௌனயோகிக்கு ஆதாரவாகத் தலையினுள்ளிருந்து வடியும் அமிர்தம். [ஸம்ரு-தயாரணா.]

அமுதப்பார்வை — இன்பப்பொருட்டான பார்வை, இனியபார்வை.

அமுதபுட்பம் — சிறுகுறிஞ்சாக்கொடி. (வைத்) [ஸம்ரு-தவுஷ.]

அமுதம் — 1. அமிர்தமாகியதேவருணவு. (சேதுபு. தீரா. சக.) 2. அமுதகடிகை. 'ஆங்கதன்மேனுன்கமுதமென்னே' (விதான. குணுகுண. உஎ.) 3. இனிமை. 'தேன்பொதிந்தமுதமூறப் - பயிரிலாசரம்பிற்கீதம்' (சிந்தா. சுரமஞ். டுச.) 4. உப்பு. (பிங்கல. கoசஎ.) 5. உயிர்தருமருந்து. 6. சீந்தில். (வைத்) 7. தயிர். 8. திரிகடுகு. அது: சுக்கு, மிளகு, திப்பலி. (வைத்) 9. திரிபலை; அது: கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய். 10. நீர். 'அரைபடு மகிலுஞ் சாந்து மப்பியின் னமுதமூட்டி' (திருவிளை.நாட்.கரு.)11. பால். 'அமுத வெண்டிரைச் சிந்துவின்' (பாரத. குருகுல. கரு.) 12. பெருமை. 13. போசனம் (வைத்) 14. முத்தி. 'அமுதம்பெறு சண்டி' (தேவார. திருநின்றி. உ. சுந்.) 15. யாகசேடம். 16. விரும்பப்படுவது. 17. சுவை. (பிங்.) 18. தன்மை. (பிங்.) 19. மழை. (அக. நி) [ஸம்ரு-த.]

அமுதமதநம் — அமிர்தத்தின்பொருட்டுக் (கடலைக்) கடைதல். 'அதிதவள மத்தவாரணமுமுத வமுதமதநத்தி வாழிமிசைவருமதகளிறு' (பாரத. பன்னிரண். சடு.) [ஸம்ரு-த - அமுதம். மத நம் - கடைதல்.]

அமுதமேந்தல் — புண்ணியம் ஒன்பதில் ஒன்று; அது: துறவிகளுக்கும் மற்றைப்பெரியோர்களுக்கும் அன்னங்கொடுத்தல். [ஸம்ரு-தம் - உணவு. ஏந்தல் - கையிற் றருங்குதல்.]

அமுதயோகம் — அமிர்தயோகம்; அது: ஞாயிற்றுக்கிழமையில் மூலம், திருவோணம், இரேவதி, அத்தம், உரோகிணி, உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதியாகிய நட்சத்திரங்களி லொன்று வரும் காலம்-திங்கட்கிழமையில் மிருகசிரம், சோதி, உரோகிணி, புனர்பூசம், திருவோணம் ஆகிய நட்சத்திரங்களிலொன்று வரும் காலம் - செவ்வாய்க்கிழமையில் உரோகிணி, மூலம், உத்திரட்டாதி, உத்திரம் ஆகிய நட்சத்திரங்களிலொன்றுவரும்காலம் - புதன்கிழமையில் பூரம், பூராடம், பூரட்டாதி, உத்திராடம், கார்த்திகை, உத்திரம் ஆகிய நட்சத்திரங்களிலொன்று வரும்காலம் - வியாழக்கிழமையில் புனர்பூசம், சோதி, பூசம், அச்சுவினி, மகம் ஆகியநட்சத்திரங்களிலொன்று வரும்காலம்-வெள்ளிக்கிழமையில் மூலம், அத்தம், இரேவதி, அச்சுவினி ஆகியநட்சத்திரங்களிலொன்று வரும் காலம்-சனிக்கிழமையில் மகம், சோதி, கார்த்திகை, உரோகிணி, சதயம் ஆகிய நட்சத்திரங்களிலொன்று வரும் காலம். (வருஷாதி.)

அமுதர்—1. அழிவில்லாதவர். 'கருகாவூரமுதர் வண்ணம் மழலும்மழல்வண்ணமே' (தேவார. கருகா. உ. சம்பந்.) 2. இடையர். 3. தேவர். 'கண்ணுதற்சாமி நின்றருளிணையிலன்னளக்க ரமுதந்தன்னுற் பூசனையாற்றியமுதரானேம்' (காஞ்சிப். சுரகரீ. கஉ.)

அமுதவல்லி—1. சீந்திற்கொடி. (வைத்) 2. விட்டுணுவின் புத்திரிகளுள் ஒருத்தி. தெய்வயானையம்மையாகப் பிறந்தவளும் இவளே என்பர். 'மாலருள்கன்னியரிருவர்-சொல்லரும்பெருவனப்பினர் சுந்தரி யமுதவல்லி யென்றிடும் பெயரினர்' (கந்தபு. விடை. க.) [ஸம்ரு-தவல்லீ.]

அமுதவிந்து—1. அமிர்தத்துளி. 'உதிருகின்ற வமுதவிந்து வொக்குமென்ன வரைசெய்வான்' (பாரத. வாரணு. சுசு.) 2. அமுதவிந்துவாகிய வட்டம். (சி. சி. உ: சுஅ. மறைஞான. உரை.)[பிந்து-துளி,வட்டம்.]

அமுதவெழுத்து—அகலக்கவியிலே முதன் மொழியிலே வருதற்குரிய சுபவெழுத்து; அவை: க, ச, த, ந, ப, ம, வ என்னும் ஏழு மெய்யெழுத்துக்களும் அ, இ, உ, எ என்னும் நான்குயிரெழுத்துக்களுமாம். 'கசதப நமவ வேழொடு மகாம்-இகாம் உகரம் எகர நான்கும் - அமுத வெழுத்தென் றறைந்தனர் புலவர்' (இலக்கணவிள. ௭௪௧.)

அமுதவேணி — சிவன். 'நிலாவெறித்த வமுதவேணிநிற்க'(திருப்பு. ௨௦௨.)[அமிர்த-நீர். வேணி - சடை.]

அமுதன்—அழிவில்லாதவன். 'ஆயிர மாவமார்த்த வமுதனே' (தேவார. தனித்திரு. ௬. திருநாவுக்.)

அமுதனார்—வைணவசமயாசாரியருள் ஒருவர்.

அமுதாசநர்—தேவர். 'அருமாதவர் பிசிதாசந ரமுதாசநர்'(சேதுபு. இராமனரு. ௧௫௭.) [அமிர்தாசந: அமிர்த; அசந - உணவாகவுடையவர்.]

அமுதாரி—பூனைக்காலி. (வைத்.)

அமுது—1. அமிர்தம். 'இளையவ ரமுதினுமினிய சொற்களே' (இராமா. நகர்நீ. ௧௩௪.) 2. இனியபொருள். 'கடல்படு மமுதும்' (நைடத. நாட்டு. ௨௫.) 3. உணவு. 'கொடிய வாலமமுதாகவிலையோ'(தாயு.பரிபூரண.௬.) 4.சந்திரகிரணம். 'திங்களின்னமு திறைப்ப' (கூர்மபு. அட்ட. ௨௭.) 5. சுபநிலை, அமுதகடிகை. 'பொன்னவன்கடத்துறினு மமுதெனப்போற்றுவரே' (விதான. குணகு. ௨௫.) 6. சோறு. 'வாடாமலரும் நல்லமுதும்' (ஞானவா. பிரகிலா. ௮.) 7. நிவேதனம். 'பேரமு தருத்தியேத்தி' (கந்தபு. காவிரிநீ. ௨.) 8. நீர். 'அமுதுகொப்புளித்திடவாங்கி' (தைல. தைலவ. ௩௪.) 9. பால். 'அமுதாற்கரையடுவடி' (தைல. தைலவ. ௬.) 10. மூர்ச்சைதீர்த்துக் குற்றுயிர்தருமருந்து. (சூ. நிகண். ௪. ௬௫.) 11. மோக்ஷம். 'விட்புலத்தவரே யன்றி வீடுபெற் றவரும் வீழ்ந்து - பெட்பமுற் றமுதுங் கைப்ப' (திருவிளையாடல். திருநகர. ௫௩.) 12. உப்பு. 'அள்ளலோங்களத் தமுதின் பண்டியும்' (இராமா. நாட்டு. ௫௪.) 13. கறியமுது, தயிரமுது என வுணவுப்பொருள்களோடு உபசாரமாகச் சேர்த்துவழங்கும் சொல். [அமிர்த.]

அமுதுகுத்துதல் — உறைமோர்குத்துதல்.

அமுதுசெய்தல் — புசித்தல். 'நறுவெண்ணெ-யாயர்மங்கையரிடவிட வமுதுசெய்து' (பாரத. நச்சு. ௧.)

அமுதுபடி—அரிசி.

அமுதுபடைத்தல்— உணவு பரிமாறுதல். 'உழையிடை யமுது படையென' (திருவாலவா. ௩௧. ௧௧.)

அமுதுபாறை — சோற்றுத்திரளைசேர்க்கும் கல்.

அமுதுமோர்—பிரைமோர்.

அமுதுறை—எலுமிச்சங்கனி. (வைத்.)

அமுதூட்டல்—சோறு உண்பித்தல், பால் குடிப்பித்தல்.

அமுதெழுத்து—அமுதவெழுத்து. (பிங்)

அமுதோர்—அமிர்தமுடையோர். 'அயினுநல் லமுதோர் சூழ்வந் தன்புடன் போற்றுவாரே' (பாரத. அருச்சுனன்ற. ௩௫.)

அமுந்திரம்—முத்தக்காசு. (வைத்)

அமுந்திரி—அரிசி. (லெக்ஸிகன்)

அமுமுட்சு—முமுட்சு அல்லாதவன். (வாசுதே. ௧௦௧.) [அ-எதிர்மறை. முமுக்ஷு - மோக்கவிருப்பமுடையவன்.]

அமுரி-சிறுநீர், மூத்திரம். (வைத்) 'கருங்குன்றி-யமுரிகலந்ததனில்' (குமா. திர. ௭௧.)

அமுரியுப்பு—அமரியுப்பு. (வைத்)

அமுரை-பூசினிமொக்குள் (இராசவைத்.)

அமூர்த்தம் — 1. அமூர்த்திசாதாக்கியம். (சைவச. பொது. ௫௪௭.) 2. உருவமில்லது. 'அமூர்த்ததிரவியமுமாய்' (சி. சி. ௪: ௧௪. சிவாக். ) [அமூர்த்த: அ - எதிர்மறை. மூர்த்த - வடிவுடையது.]

அமூர்த்தன் — வடிவமில்லாதவன். 'சிவனு மமூர்த்தனுயினும்' (சி.சி. ௧: ௩௦. மறை.) [அமூர்த்த: அ; மூர்த்த - வடிவுடையவன்.]

அமூர்த்தி—1. உருவமில்லாதது. 2. உருவமில்லாதவன். 3. உருவமின்மை. 4. விட்டுணு. [1, 2, 4. அமூர்த்தி. 3. அமூர்த்தி.]

அமூர்த்திசாதாக்கியம்—பஞ்சசாதாக்கியங்களுளொன்று; அது: பரையுடன்கூடிக் கிருத்தியத்திலே உத்தியோகமுடையது. (சதாசிவ. ௬: ௭.) [ஸாதாக்யம்.]

அமூர்த்தித்துவம்—உருவமில்லாததன்மை. (சி. சி. பர. நிகண்ட. ரு.) [அமூர்த்தித்வம்.]

அமூலம்—காரணமில்லாதது. 'அபேதமா யகாமயமா யமூலமாகி' (ஞானவா. உற்பத். ருட.) [அமூலம்.]

அமேந்நுகோட்டை — வாதுமைக்கொட் டை. (வைத்.) (திசைச்சொல்.)

அமேரிக்கா— ஒரு கண்டம்.

அமேத்தியநாறி—1. ஒரு பூண்டு. 2. ஒரு மரம். [அமேத்யம் - மலம். நாறி-நாறுவது.]

அமேத்தியம்—1. அசுத்தம். 2. துர்ச்சுகு கம். 3. பவ்வீ, மலம். 4. யாகத்துக்குத் தகா தது [அமேத்ய: அ - எதிர்மறை. மேத்ய - சுத்தம்.]

அமேநீக்கி—கற்றாழை. (வைத்.)

அமேயதை—அக்கிராகியபாவம், அறியப் படாமை. (பவுட். பசு. சo.) [அமேயதா.]

அமேயம்—பிரமேயமாகாதது. 'பரசிவ மகத்தம் பூரண மமேயம்' (வேதாரணியபு. கக்கீவ. சஉ.) [அமேய: அ; மேய - அறியப்படுவது.]

அமேயன் — பிரமாணாதீதன். (கம்பரா. எக.) [அமேய.]

அமை — 1. அமாவாசி. 'அமையதனின் மாளயந்தா னுற்றுவரேல்' (சேதுபு. துராசா. சக.) 2-4. அமையென்னுமேவலும் தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும். 'அமை யெனி னமரேச-னுந்தியி னுதவாமே யுதவிடு தொழில்வல்லான்' (இராமா. வரம்புகு. உஉ. வெல்.) 5. அழகு. (பிங்க. ௲oசுஅ.) 6. ஒரு காவல். (வைத்.) 7. ஒரு முதனிலைத்தொழிற் பெயர். 'யாரு மமைதர வொருங்குகூடி' (குத. முத்தி. க: கக.) 8. சந்திரனுடைய பதினறுங்கலை. 9. மூங்கில். (வைத்.) 'அமை யடைந்ததோட்சநகி' (சேதுபு. சேதுபல. அசு.) 10. தினவு. (தைல. தைலவ. கஉச.) [1, 8. அமா.]

அமைச்சன்—1. மந்திரி. 'காவிறத்தொடை விதுரனே யமைச்சனிக் காவலற் கெனவைத் தான்' (பாரத. சம்பவ. உஉ.) 2. மந்திரித் தலைவன். 3. மந்திரித்தலைவனுடைய நட்பா ளன். 4. வியாழன். (சூ. நிகண். க: சுஉ.)

அமைச்சி—அண்டவாதம்.

அமைச்சியல்—1. மந்திரித்தொழில், மந் திராலோசனை. 'சிறுவ ராந்தனி முதல்வற்கு மமைச்சியல் செய்வார்' (கந்தபு. அவைபுகு. ககச.) 2. மந்திரிகளிலக்கணம். (திருக் குறள்.)

அமைச்சு—1. அமைச்சன். 'அருவினையு மாண்ட தமைச்சு' (வள். சுருக.) 2. பித்தம். 3. மந்திரியின்தன்மை; அது: மந்திரியின் குணங்களுஞ் செயல்களும். (வள். அதி. சுச. உரை.)

அமைத்தல்—1. அமைதிபெறச்செய்தல். 'பாரிடக் கணங்களைப் பாணியா னமைத்து' (கந்தபு. அக்கினி. சுஎ.) 2. அழுத்துதல். 'பொற்குட முகட்டுக் கருமணி யமைத்தென' (கல்லாட. எ.) 3. உண்டாக்கல், செய்தல். 'புண்டரீகன்முன் படைத்தவப் புரவல னமைத்தது' (பாரத. குருகு. உக.) 4. சேர்த் தல், கூட்டுதல். 'அநாதியா யமைக்கவேண் டும்' (சி. சி. பர. லோகாப. மறு. கஅ.) 5. நிய மித்தல். 'நாளமைத்தழைக்க' (கல்லாட. கூ.) 6. பாகம்பண்ணல், சமைத்தல். 'ஐந்துபல் வகையிற்கறிகளும் வெவ்வே றறுசுவை மாறு மா றமைப்பேன்' (பாரத. நாடுகர. கரு.) 7. பொருந்தச்செய்தல். 'அருமறைத் தாபத னமைத்திடு செம்மலர்' (கல்லாட. கரு.) 8. பொறுமைசெய்தல். 'குற்ற மமைத்தருள்' (சேதுபு. துத்தம. கo.) 9. விதித்தல். 'கடவு ளமைத்தபடி நடக்கும்' (வழக்.) 10. வெளி யேபோகா தடங்கச்செய்தல். 'புலனைந்துந் திமைசேர்விடயங்களிற் செலாதமைத்து' (வைராக்கியசத. ௲எ.) 11. ஆயத்தஞ்செய் தல். 12. செய்துமுடித்தல்.

அமைதல்—1. செய்யப்படக்கூடியதாகல். 'அடங்கல்' பார். 2. ஏற்படுதல். 'அணுகுமா றமைந்து' (கந்தபு. காமதக. எச.) 3. ஒடுங் குதல், முடிதல். 'வாய்மொழி யமைந்து நின் றான்' (ஞானவா. வைராக். க௲ச.) 4. கோ லங்கொள்ளுதல், ஆயத்தமாதல். 'அமைதிர் போருக் கணைவிரு மென்றனன்' (கந்தபு. வச் சிர. கச.) 5. சம்பவித்தல். 6. சம்மதித்தல். 7. நட்பாய்ப்பொருந்துதல். 'அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை-வியந்தான் விரைந்து கெடும்' (வள். சஎச.) 8. நெருங்கி யிருத்தல். 'வழையமை சாரல்' (மலைபடு.

கஅக.) 9. பொருந்துதல். 'பாங்கமை பதலே யே முதல' (கந்தபு. திருப்பா. கூ.) 10. போதியதாதல். 'அன்றெனக்கு நீயிசைந்த வவனிபாதி யமையும்'(பாரத.வாரணா.அஉ.) 11. மகிழ்ப்பதித்தல். 'அமைவர' பார். 12. வசமாதல். 'அமைந்தாலுமின்பந்தேடும்' (ஞானவா. வைராக். எகூ.) 13. வழுவாயினும் ஏற்புடையதாதல். 14. தீர்மானமாதல். 15. தங்குதல். 16. நிறைதல். 17. இல்லையாதல்.

அமைதி—1. அடக்கமாயிருத்தல். 'ஆய்ந் தறி பெரியோர் சிந்தை யமைதியின்' (இரகு. தேனு. சஎ.) 2. அமரிக்கை. 3. உறைவிடம். 4. கீழ்ப்படிவு. 5. சமயம், தருணம். 6. திருத்தி, நிறைவு. 'அமைதியொடு பேசாத பெருமைபெறு குணசந்த்ர ராமென விருந்த பேரும்' (தாயு. பரிபூரண. ந.) 7. தொழில். 'அவ்விடை செய்திடு மமைதி கூறுவாம்' (கந்தபு. தெய்வ. கஅ௫.) 8. நிகழ்ச்சி. 9. பொருத்தம். 10. பொழுது, காலம். 'அன்னதோ ரமைதிதன்னில்' (கந்தபு. மூன்று. உக௦.) 11. மாட்சிமை. 'அண்ணலங் கடிநக ரமைதி செப்புவாம்' (சிந்தா. நாமக. சகூ.) 12. அறுவகை நாட்டமைதி. 'செல்வம் விளைவுபல் வளஞ்செங் கோன்மை-கொல்குறும் பின்மை கொடும்பிணி யின்மை-யிவ்வயி னாறு நன்னாட் டமைதி' (திவாகர. கஉ.) 13. செய்தி, தன்மை. 'ஆற்றின தமைதியங் கறியக் கூறினான்' (சிந்தா. பதுமை. கக.) 14. பொருந்துகை.

அமைப்பு—1. அநுபோகம். 2. கூட்டரவு, சேர்த்தல். 'அநாதி யாதி யமைக்க வேண்டு மமைப்பி னேடு மநாதியே' (சி. சி. பர. லோகா. மறுதலை. கஅ.) 3. நியமிப்பு. 4. விதி.

அமைப்போன்—செய்பவன், கருத்தா. 'அமைப்போனுதலெனக்கெங்கே' (ஞானவா. நிருவா. உ௦.)

அமைய—திருத்திவா. 'சிறுவனை யமைய நோக்கி' (கூர்மபு. கண்ணனவ. உஎ)

அமையம்—1. இலாமிச்சை. 2. காலம். 'ஆனதோ ரமையந் தன்னி லாடின ரமர மாதர்' (கந்தபு. திருக்கல். எஉ.)

அமையவன்—அருகன். (திவா)

அமையாமை — 1. கிடைத்தற்கருமை. 'அமையாவின்ப விண்ணாட்டில்' (ஞானவா. சுக்கிர. கூ.) 2. கீழ்ப்படியாமை. 3. திருத்திப்படாமை. 'பெரும்பாழ் செய்து மமையான்' (பட்டின. உஎ௦.)

அமையுமென்றல்—போதுமெனல். 'வாடி வாடியினி யமையு மென்றுதவ வநமடைந்தனள்' (பாரத. குருகுல. கசந.)

அமைவடக்கம் —1. மநம் ஒருவழிப்பட் டடங்கிநிற்றல். 2. மறைவு.

அமைவர—மநத்துட்பதிய. 'ஆசாற் சார்ந் தவை யமைவரக் கேட்டல்' (நன். பொது. சக.) [அமை - அமைதல்.]

அமைவன்—1. முனிவன். 'பிருகுவென்னு மமைவன்' (விநாயகபு. பதி. உ.) 2. கடவுள். 'அமைவன தடிபணிந்து' (இலக்கணவி. க௫கூ)

அமைவு—1. அடக்கம். 2. இடங்கொண் டிருப்பவர். 'திருக்காளத்தியுள் ளமைவே' (தேவார. திருக்காளத்தி. உ. சுந்தரமூர்த்தி.) 3. சேர்த்தல், கூடச்செய்தல். 'அநாதியே யமைவின்றெனின்' (சி. சி. பர. லோகா. கஅ.) 4. பொருந்துகை. 5. நட்பான பொருத்தம். 'அஞ்சு மறியா னமைவிலன்' (வள். அசுந.) 6. புலனடக்கம். 'அமைவுபிறக்கு மமரர்கள்' (விருத்தா. நிருத்த. கச.) 7. பொறுமை. 'ஞாலத்தார்கொலோவமைவின் மிக்கோர்' (பாரத. நிரை. கநஉ.) 8. மநவமைதி. 'உலகை, நிகராகியு மமைவுற்றோ னிமலமுத்தனும்' (ஞானவா. வேதாள. ந.) 9. மாட்சிமைப்பட்டவொழுக்கம். 'அமை விலவாயதொழில்' (வள். கூ௫சு. உரை.) 10. ஒப்பு.

அமோககாரணி — மாயை. 'பிரமசைதந் நியந் தன்னிடத்திற் பிரதிபலித்துத்தோன் றின ஈச்சுரனுக் குபாதியாயிருத்தலினால்' (த.நி.போ.ககஉ.பக்.)[அமோஹகாரணீ.]

அமோகப்படை — மருளகற்றும் படை. 'மீண்டுற்ற வமோக வியன்படை போய்' (கந்தபு. முதனா. ந௫ந.)

அமோகபாணம்—1.மருளகற்றும்பாணம். 'தீதிலா வமோக பாணஞ் சிந்தையாற் றொழுது விட்டான்' (பாரத. நிவாத. அச.) 2. வீணாகாதபாணம். [1. அமோஹபாண; 2. அமோகபாண]

அமோகம்—1. இலக்குத்தவறாமை. 2. ஒருவாயு: இது மோகமென்னும் வாயுவின்

மேல் ஐம்பதுயோசனை உந்நதத்தினின்று மாருதமென்னும் மேகம்பெய்த உதகத்தாற் பூமியிலுள்ள பிராணிகளுக்கு மரணங்கொடுக்குமென்பர். (த. நி. போ. ௬௪௨.) 3. பெருக்குத்தன்மை. 4. மிக்க பிரயோசநங் கொடுப்பது. 5. மிகுதி. 6. மோகநீயம். 7. வீணல்லாதது. [1, 3, 4, 7. அமோக.]

அமோகவாசான் — துரோணாசாரியன். ‘அண்ணலஞ் சிலைவலாருளமோகவா சானிற் பின்னை’ (சிந்தா. ௧௧௧. ௯௦.) [அமோக; ஆசான்.]

அமோகன்—மோகமில்லாதவன். ‘அமோகனே போற்றி போற்றி’ (மச்சபு. சுக்கிர. ௬௫.) [அமோஹ.]

அமோகி—மயக்கமில்லாதவன். ‘ஆலகால மருந்தினையமோகியை’(நல். பார. மருத்து. ௯௪.) [அமோஹிந்.]

அமோகை—கடுக்காய். ‘குமரியைக் கைக்கொண் டமோகையபரியா - அமுதுகொப்புளித்திட வாங்கி’ (தைல. தைலவ. ௬௪.)

அமோட்சம்—1. அடிமைத்தன்மை. 2. சீவாந்தம்வரையும் சிறையிருப்பு. 3. விடுதலை செய்யப்படாமை. [அமோக்ஷ: அ - எதிர்மறை. மோக்ஷ - விடுதல்.]

அய—1. நிவிர்த்திகலையிற் பிருதிவிதத்துவத்திலிருக்கும் நூற்றெட்டுப் புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. ௬. உரை.) 2. வித்தியாகலையில் இராகதத்துவத்தில் இருக்கும் ஐந்துபுவநங்களுள் ஒன்று. (சி-வி. கிரி. உக. ௬. உரை.)

அயக்கம் — நோயின்மை, ஙிராமயம். ‘எண்டிசைக்கிறைவராகியயக்கமாயடக்கமா’ (தேவா. ஆப்பாடி. அ. திருநாவு.)

அயக்கல் — அசைத்தல். ‘குன்றுகளயக்கலின்’ (இராமா. சேதுப. ௧௦.) [அசக்கல்]

அயக்களங்கு—1. இரும்புத்துரு. 2. இரும்புருக்கிய மணி. [அயம்; களங்கு.]

அயக்காந்தம் — ஊசிக்காந்தம். ‘அவர்தம்-புடைய ராம்படி புரியயக் காந்தமும் பொலிவ’ (திருவானை. நாடு. ௨௦.) [அயஸ் காந்த: அயஸ் - இரும்பு, லோகம். காந்த - விரும்புவது.]

அயக்கிரீவகன்—விட்டுணு. [ஹயக்ரீவ ஹந்: ஹயக்ரீவ - ஓரசுரன். ஹந் - கொன்றவன்.]

அயக்கிரீவம் — அதர்வணவேதவுபநிடதத்தொன்று. (கூர்மபு. அட்டமூர். உ௬. உரை.)

அயக்கிரீவன்—1. ஓரசுரன். (மச்சபு. இரணியகசிபுவரம். ௧௬.) 2. விட்டுணுவின் அவதாரத்துள் ஒருமூர்த்தி. [ஹயக்ரீவ: ஹய - குதிரை. க்ரீவ - கழுத்து.]

அயக்கிருட்டி—காந்தக்கல். [அயஸ் - இரும்பு. க்ருஷ்டி - இழுப்பது.]

அயக்குதல் — அசைத்தல். [அசக்குதல்.]

அயகம்—1. சிறுகுறிஞ்சாக்கொடி. 2. வசம்புப்பூண்டு.

அயகரம்—மலம்பாம்பு. [அஜகர]

அயகிட்டம்—இரும்புக்கறை. [அயஸ்; கிட்ட - கறை.]

அயசிந்தூரம் — இரும்பினாலாகிய ஒரு மருந்து. [அயஸ்; ஸிந்தூர - மருந்துவகையிலொன்று.]

அயசிலவேதை—கோளகபாஷாணம்.

அயசீசம்—அயம்.

அயசு—1. இரும்பு. ‘அயஸ்காந்தசந்நிதியிலே யயசானதுபோல’(சி. சி. ௪: அ. சிவாக்.) 2. உருக்கு. 3. பொல்லாநிலம், வழுக்குநிலம். [அயஸ்.]

அயசுபடில்—வெள்ளீயமணல்.

அயணம்—செலவு, வழி. ‘மாசறுவிசும் பின்வெய்யோன் வடதிசையயணமுன்னி’ (சிந்தா. குணமா. க.) [அயநம் என்பது அயணமெனப் பாகதமாயிற்று.]

அயத்திநம் — முயற்சியின்மை. [அயத்ந: அ - எதிர்மறை. யத்ந - முயற்சி.]

அயத்தின்சாரம்—இருப்புக்கிட்டம்.

அயத்தி—இரும்புத்தொட்டிப்பாஷாணம்.

அயத்தோட்டி — வைப்புப்பாஷாணத்தொன்று.

அயதார்த்தம்—பொய். (தர்க்கபா. ௬௭.) [அயதார்த்த: அ - எதிர்மறை. யதார்த்த - மெய்.]

அயதார்த்தமரணம் — யதார்த்தமல்லாத நினைவு; கனவிற் றோன்றும் ஞானமென்பதிற் போல. (தர்க்கபா. சுஅ.) [அயதார்த்த ஸ்மரண: ஸ்மரண - நினைவு.]

அயதார்த்தாநுபவம் — யதார்த்தமல்லாத அநுபவம்; அது: சமுசயம், தருக்கம், விபரியயம் என மூவகை. (தர்க்கபா. களு.) [அயதார்த்த: அநுபவ - தானேகண்டறியுமறிவு.]

அயதி—திருநாமப்பாலைக்கொடி.

அயநகாலம்—துலாயநத்துக்கும் மேஷாயனத்துக்கும் இடையே நிகழும் காலம். [அயந; கால.]

அயநசலநம் — கிரகங்கள் மையவரியிலிருந்து பக்கவரிக்குத் திரும்புதல். அயநத்தின் ஒரு அம்சத்தினின்று அதற்கு முன்னுவது பின்னுவது வேறிடம்போதல்.

அயநம்—1. அயநப்பிறப்பு. 'அயநமேவிடுவந்திங்கட்பிறப்பருத்தோதயம்' (வேதாரணியபு. தோற்றம். அஉ.) 2. ஆண்டிற்பாதி. 'பகருமத்திங்களோராறு தொக்கதோரயநம்' (சூத. சிவமான். அச.) 3. இடம், வாசத்தலம். (கூர்மபு. பிரமா. ச. உரை.) 4. கடையில் விடுதலை, மோட்சம். 5. சரித்திரம். 'இராமாயணம்' 6. சாத்திரம், வேதம். 7. சூரியன் சமரேகைக்கு வடக்கிலும் தெற்கிலும் போகும் பாதை. 'அயந மில்லை யருக்கனுக் கவ்வழி' (இராமா. நாடவிட். கசு.) 8. போதல். 9. வருடம் [ஹயந.] 10. வழி. [2, 3, 4, 5, 6, 7, 8, 10. அயந.]

அயநமண்டலம்—சமரேகைக்கு வடக்கே அல்லது தெற்கே சூரியன் செல்லும் வீதி. [அயந - சூரியகதி. மண்டல - பாதை.]

அயநமாசம் — அயநாஞ்சாநுசாரத்தினாலே திசமாநமுதலிய அறியும்பொருட்டுக் கற்பிக்கப்பட்ட மாசம். [அயநமாஸ.]

அயப்பனை—ஒரு மருந்துச்செடி.

அயபற்பம்—இரும்புத்தூள். [அயஸ்; பஸ்ம - தூள்.]

அயபானி — ஒரு செடி. இதனிலையாலாய குடிநீர் மிகப் பிரயோசநமானது. இதனிலையைத் துவைத்து உடனே கட்டினுற் புண்கள் மாறும். (அந்நியபாடைச்சொல்.)

அயம்—1. அசுபதி. (உள்ளமுடை. க.) 2. அதிட்டம். 3. அரத்தா லராவிய பொடி. 'அசிதளம்' பார். (தைல. தைலவ. சுு.) 4. அலரி. 5. ஆடு. 'அயக்குலத்துட் கரந்தனை' (உபதேச அயமு. எகூ.) 6. இரும்பு. 'புவனி விடங்கரடக்கய நீர்போல்' (மறைசை. உஎ.) 7. இவனென்னும் பொருள்படும் ஒரு வடசொல். (வேதா. சூ. கஉக. உரை.) 8. குதிரை. (சூ. நி. கக. யகர. ௩.) 9. சூழி. 10. குளம். 11. சிறுபூளாக்கொடி. 12. சேறு. 13. நல்வினை. 14. நிலம். 'அயங்கொண்டதிண்டோள் கொண்டவறன்மகன்' (சேதுபு. இலக்குமி. உக.) 15. நீர். (சூ. நி. க. ருச.) 16. விழா. [1,2,8, 14, ஹய. 3,6, அயஸ். 5, 11. அஜ. 7. அய.]

அயம்பற்றி—காந்தம்.

அயமகம் — அசுவமேதயாகம். 'அயமகமாயிரத்துக்கேனும்' (நல். பார. தீர்த்தம. கஅ.) [ஹய; மக.]

அயமணல்—அயமலை.

அயமத்தி—இவனிருக்கிறனெனப் பொருள்படும் ஒரு வடமொழிவாக்கியம். 'கோவாமமகிம்' என்னும் வடமொழிவினவில், 'உத்தரமொப்புச்செப்புதலாகு மயமத்தியாதிபடர்க்கை முன்னிலை தன்மைமுக்குறி' (சி. அ: ௩ம. ஞாந.) [அயமஸ்தி; அயம் - இவன். அஸ்தி - இருக்கிறன்.]

அயமரம்—அலரி.

அயமாரகம்—அலரிச்செடி.

அயமாரணம்—அரசமரம்.

அயமாரம்—அலரி.

அயமான்மாப்பிரமம் — (வேதாந்தம்.) இந்த ஆன்மாப் பிரமம் எனப் பொருள்படும் அதர்வணவேதமகாவாக்கியம். (உபதேசவுண். எ.) [அயம்; ஆத்மா; ப்ரஹ்ம.]

அயமி—வெண்கடுகு.

அயமுகம்—ஓர் இருக்கை. 'பதுமுக முற்கட் டிதமே யொப்படி-இருக்கை சம்புட மயமுகஞ் சுவத்திகந்-தனிப்புட மண்டில மேகபாத-முளப்பட வொன்பது மாகுந்-திரிதரவில்லா விருக்கை யென்ப' (சிலப். வேனி. உசு. உரை.)

அயமேதம்—அசுவமேதயாகம்.

அயர்—1-3 அயரென்னேவலும் தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. தளர்தல், வாட்டம். 'சிற்றிலிற்சென் றழியாது நின்றயர் காண்பன்' (கல்லா. ருஅ.) 5. வருத்தம்.

அயர்க்குதல்—மறத்தல். 'தன்னையயர்க்குதல்' (உபதேசகா. சிவபுண்ணி. உஅ.)

அயர்ச்சி—1. உணர்வழிவு. 2. செய்தல். 'சாறயர்ச்சிவிளைப்பன' (சீகாழிப்பு. பூர்தரா. ச.) 3. சோம்பு. 4. பெலவீனம். 5. மறதி. 6. வருத்தம். 'மறைந்து போயினு ரெனச்சிறிதயர்ச்சிய மனத்தி-னிறைந்த தோர்பெருங் கவற்சியை நீக்கினு ரென்னு' (திருவிளை. இரசவா. உள.) 7. வெறுப்பு.

அயர்ந்தல்—மறத்தல். 'அயர்த்தலே பழமறைத்துணிவு' (உபதேசகா. சநகா. கக.)

அயர்தல்—1. உணர்வழிதல். 'கள்ளுண்டயர்தல்' (கூர்மபு. திரிபுர. உஅ.) 2. இளைத்தல். 'அயராம லஞ்சலென்று'(வாண.உசo.) 3. செய்தல். 'விருந்தயர்தலும்' (வள். ருக. உரை.) 4. சோர்தல், தளர்தல். 'அற்புதனேயிங் கார்கில மென்றென் றயர்கின்றார்' (கோயிற்பு. நட. கக.) 'உடலெங்கு மோய்ந்தயர்ந் தவசமாகி' (தாயு. சுகவா. க.) 5. விரும்புதல். (ஐங்குறுநூறு.)

அயர்தி — 1. உணர்வழிவு. 2. இளைப்பு. 3. சோம்பு. 4. மறதி.

அயர்த்திகம் — செய்வோம். 'இளவியோடயர்த்திகம் விருந்தே' (கலித்தொகை.௬உ.) [இது தன்மைப்பன்மைவினைமுற்று.]

அயர்ப்பு — மறப்பு. 'அயர்ப்பிலாதானே யோலம்' (பெரியபு. இயற். உக.)

அயர்வு—1. அகலம். 2. உன்மத்தம். 3. சோம்பு. 'அயர்வில் காலன்' (ஞானவா. ஞானவின். உo.) 4. தளர்வு. 'கிளைந்துகிளைந் தயர்வுறுவார்' (சேதுபு. நாட்டு. சுஉ.) 5. மனக்கவற்சி. 'உலகுடன் பெறினுங் கொள்ளலயர்விலர்' (புறநா. கஅஉ.) 6. வருத்தம். 'அயர்வன்றியில்' (ஞானவா. புசுன். அச.) 7. வெறுப்பு.

அயர்வுயிர்த்தல்—1. சிந்துதல். 'கள்ளயர்வுயிர்க்குஞ் செழுங்கமலமென்பொகுட்டு வள்ளல்' (கூர்மபு. அட்ட. அ.) 2. தளர்ச்சி நீங்குதல். 'குருகயர் வுயிர்க்குஞ் சோலை' (சூளா. துற. உரு.) 3. வருத்தந்தீர்தல்.

அயராப்போடல்—அயரவிடல்.

அயாவிடல் — சமயம்வாய்க்கும்வரையும் அயரவிடுதல்.

அயல் — 1. அந்நியமானது. 'இருவருட்கயலுமாய்' (தாயு. சுகவாரி. ௬.) 2. அருகு. 'தனக்கயல்வந்தபரிசநத்தை' (கந்தபு. காமதக. சுரு.) 3. இடம். 'தலைக்குவட் டயன்மதி தவழு மாளிகை' (இராமா. நகர்நீ. கஙள.) 4. வேறு. 'விரியுருவா யயல்போலாய்' (ஞானவா. வீரதகு. ௬.)

அயலகத்தார் — அடுத்த இடத்தி லிருப்போர்.

அயலவர்—1. பக்கத்தார். 'அயலவர் பரவவும்' (தேவார. திருக்கழு. எ. சுங.) 2. பகையு நட்பு மில்லாதவர். (சூ. நிகண். உ: ௬கூ.)

அயலன்—அந்நியன். பிரமகோத்திரக்கயலனுகியே' (சேதுபு. பாவநா. கள.)

அயலாதாரம்—(இலக்கணம்) ஏழாம்வேற்றுமையில்வரும் நான்குவகை ஆதாரகாரகங்களுள் ஒன்று; அஃது: ஆதேயத்திற்கு அயலாக இருக்கும் ஆதாரம். 'ஆலின்கட் பசுக்கிடந்தது' என்பதிற்போல. (வீரசோ. உபகார. ச.) [அயல்; ஆதாரம்.]

அயலார்—1. அயலவர். 'அன்புடையன் கொல்லென் றயலாரெடுத்துரைப்ப' (கந்தபு. இரணியன்பு. அ.) 2. ஏவல்செய்வோர். 'தன் பன்னியோடு மயலார் சுற்றந் தமரோடும்' (திருவிளை. உலவாக்கோ. கஅ.) 3. பிறர்.

அயலி—வெண்கடுகு.

அயலுரை—1. அயலார் ஒருப்பட்ட வுரை. (திருக்கோ. கஙஎ. உரை.) 2. தலைமகட்கு யாதும் இயைபில்லாதவுரை. (திருக்கோ. கஙஎ. உரை.)

அயலோர்—1. அயலார். 2. மற்றையோர். 'ஆரியர்பேணுவதாகி யயலோர்க்கெல்லாமரிதான' (ஞானவா. முமூட்சு. கள.)

அயவணம்—ஒட்டகம். (பிங்க. உசகக.)

அயவந்தி—ஒருசிவத்தலம். (பெரியபு. திருஞான. சசுக.)

அயவாகநன்—அக்கினிதேவன். [அஜவாஹந: அஜ - ஆடு. வாஹந - வாகனமாக வுடையவன்.]

அயவாரி—வசம்புப்பூண்டு.
அயவி—சிற்றரத்தை.
அயவு—அகலம்.
அயவெள்ளை-இரும்புப்பற்பம். [அயஸ் - இரும்பு.]

அயற்படல்—விலகிச்செல்லல். 'இயற்படு மானமு நாணு மீதலு - மயற்பட' (கந்தபு. சயந்தன்பு. ரு.)

அயறு—புண்வழலை. 'அயறு சோருமிருஞ் சென்னிய' (புறநா. உஉ.)

அயன் — 1. அருகன். 2. கிரமமானது. (அராபி.) 3. சர்க்காரைச்சார்ந்தது. (அராபி.) 4. சரியானது. (அராபி.) 5. சூரியகுலத்தோரரசன்; இவன் இரகுவின் மகன். 'பேதமில்லதோர் பிரமமூர்த்தமே-யாதலாற்பெயரயனென் றேதினன்' (இரகு. அயனு. ருஉ.) 6. பிரமா. 'அயன்படைத்திடு மண்டத்திற் காவியாய்' (கந்தபு. வள்ளி. உ.) 7. பிறப்பில்லாதவன். 8. மகேச்சுரன். 'சாதலும் பிறப்புந் தோயாத் தன்மையா லயன்' (கூர்மபு. பிரகிருதித்தோற். உ௩.) [1, 5, 6, 7, 8. அஜ.]

அயன்பதஞ்சேர்ந்தோர்—சூத்திரர். 'அயன் பதஞ் சேர்ந்தோர் துங்க வீதியும்' (கந்தபு. நகர. ச0.) [பிரமாவுடைய பாதத்திலே பிறந்தமைபற்றி வந்த பெயரென்பர்.]

அயன்பதத்துதித்தோர்—சூத்திரர்.
அயன்மனைவி—சரசுவதி. (சூ. நிகண். க: ௬ரு.) [அஜ - பிரமன். மனைவி - இல்லாள்.]
அயன்முகத்துதித்தோர்—பிராமணர்.
அயன்வாவி—மானதவாவி.
அயன்றோளுதித்தோர்—அரசர்.
அயனாள்—1. உரோகிணிநாள். [பிரமன் பிறந்தநாள்.] 2. பிரமன்வாழ்நாள்.

அயனிலம் — சர்க்காருக்கு இறைகட்டும் நிலம்.

அயனூருவில்வந்தோர் - } வைசியர்.
அயனூருவிலுதித்தோர்- }
[அஜ - பிரமா. ஊரு - தொடை.]

அயா — வருத்தம். 'மானயாநோக்கியர் மருக்குல்' (சிந்தா. கஉக. உ௬௬.)

அயாசகபிச்சை — கேளாதிருக்கத் தானிருக்குமிடத்திலே மற்றொருவன் கொண்டுவந்துதர வாங்கும் பிச்சை. (சைவச. பொது. உருஎ. உரை.) [அயாசக; பிக்ஷா.]

அயாசகம்—அயாசகபிச்சை. 'சாந்தா நிக பிச்சை தக்கண மாதுகரி-யாய்ந்தார்க் கயாசகமு மாம்' (சைவச. பொது. உருஎ.) [அயாசக.]

அயாசகன்—இரந்து கேளாதவன். [அயாசக: யாசக - இரந்து கேட்பவன்.]

அயாசிதம் — கேளாமற்றரக்கொள்ளும் பிச்சை. [அயாசித - யாசிக்கப்படாதது.]

அயாசிதவிருதம்—கேளாதுவந்த பிச்சைப் பொருளைக் கொண்டு சீவநம்பண்ணுதல். 'பிராரத்தம் அல்லது வாராதென்னுமுறைமையையறிந்த பெரியோர் அயாசிதவிருதமாகப் பூமியின்கண்ணே யிருக்கவும் அவர்களுக்குச் சீவநம் நடக்கவுங் கண்டோம்' (சி. சி. உ: அ. சிவாக்.) [அயாசித - கேட்கப்படாத. வ்ருத - விருத்தி.]

அயாநம்—இயற்கைக்குணம். [அயாந: அ; யாந - போதல்.]

அயாவுதல்—வருந்துதல். 'மானயாநோக்கியர்.' (சீவக. 1822)

அயாவுயிர்த்தல் — 1. அறிவுமயக்கமாயிருந்து எழும்புதல். 'கேடு நீங்கி நீளயாவுயிர்த்தார்போல' (கந்தபு. மார்க்க. க0௬.) 2. வருத்தநீங்குதல், இளைப்பாறுதல். 'இளையவரயாவுயிர்த் தெழுந்தார்' (சிந்தா. மண். எ.) 3. நெட்டுயிர்த்தல். 'அழுதன ளேங்கியயாவுயிர்த் தெழுதலும்' (மணி. உக, உ௬.) 4. கொப்புளித்தல். (சீவக. 1125)

அயிக்கம்—ஒற்றுமை. [இஃது ஐக்கியம் என்பதன்றிரிபு.]

அயிக்கவாதசைவம்—சைவத்தின் அகப்புறச்சமயத்தொன்று. (சி. போ. பா. அவை. உஉ) [ஐக்கியவாதசைவம்.]

அயிக்கவாதி — ஐக்கியவாதி. [ஐக்ய வாதிந.]

அயிக்கியம் — ஒன்றாந்தன்மை.

அயிக்யம்—ஒன்றாந்தன்மை. 'அத்துவிதமான வயிக்யவநுபவமே' (தாயு. பரா. உக௬.)

அயிகம்—ஊமத்தைப்பூண்டு.
அயிங்கவலை—சூடைமீன்.

அயிங்கிசை—கொல்லாமை. 'அயிங்கிசை பொறையே மெய்ம்மை' (சிவதரு. சிவதரும. 3.) [இஃது "அஹிம்ஸா" என்பதன் றிரிபு.]

அயிச்சுரியம் — ஐசுவரியம். (வாயுசங். பாசுபதவி. 34) [ஐச்சுவரியமென்பதன் றிரிபு.]

அயிச்சுவரியம்—ஐசுவரியம். 'மெச்சயிச் சுவரியமுளவேள்விநாயகற்கு' (நல். பார. காருட. உச.) [வைஶ்வர்யம்.]

அயிச்சோரியம்—செல்வம். 'அதனயிச் சொரியக் நாவில்சீர்-வித்தக முநிவா விபூதி யாகுமால்' (கூர்மபு. இந்திரத். ௩௪.) [வைஶ்வர்யம்.]

அயிஞ்சி—நிலப்பனைப்பூண்டு.

அயிஞ்சை—கொல்லாமை. 'ஒப்பறு மறை யோர் பூசை குருபூசை யோங்கு மங்கி-யைப்புரி பூசை தன்னி னிங்கிசை யறத்திற் செய்திற் - றப்பிலா வயிஞ்சை யென்று சாற்றுவர் தலைமை யோரே' (மச்சபு. யோக சாத். ௧௧.) [அஹிம்ஸா.]

அயிணம்—மான்றோல். [ஐணம் என்ப தன் றிரிபு.]

அயிதம் — தீங்கு. (லெக்ஸிகன்.) 'இந்த மானியத்துக்கு அயிதம் பண்ணினவன்.'

அயிந்திரதிசை — கீழ்த்திசை. 'அயிந்திர திசையின்' (சோளத். பு. தென்கை. 64.)

அயிந்திரம்—ஐந்திரவியாகரணம். 'அயிந் திரவியாகரணமுமோதி' (இராமா. அநு. ௪௬.) [ஐந்த்ரு.]

அயிநார்—கனி.

அயிப்பை—ஒருசெடி.

அயிமாசு — 1. பரிசோதனை. 2. புள்ளி மதிப்பு. [அஜ்மாஷ்]

அயிர்— 1-3. அயிரென்னேவலும் தெரி நிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. ஆற்றுமணல். (தைல. தைலவ. ௬௨௭.) 5. கண்டசருக்கரை. 'குடதிசை மருங்கின் வெள் ளயிர் தன்னொடு' (சிலப். அந்தி ௩௫.) 6. சந்தேகம். 'அயிரிற் றீர்ந்தபே ரறிஞரும்' (திருவிளை. நகர. ௬௫.) 7. சருக்கரை. 'அயி ருந் தேனும்' (இராமா. நாட். ௫௫.) 8. சிறு நீர். (இராசவைத்.) 9. நுண்மணல். 'அயி ரார் திரைவந்தன் வண்டலம் பாவை யழித் தனவோ' (வாண. உ௮௮.) 10. நுண்மை. 11. யானைக்காஞ்சொறி. (இராசவைத்.)

அயிர்க்கடு—அங்குசம்.

அயிர்க்கல் — அயிர்த்தல். 'அயிர்க்கலாந் தன்மை யன்மைய ருகி' (உபதேசகா. சங்கா. ௯.)

அயிர்த்தல்—1. சந்தேகித்தல். 2. மறைத் தல். 'உயிரனையா யயிராம லுரையெனக்கே, (வாண. ௩0௩.)

அயிர்ப்பு—1. அருத்திரபஞ்சமம். (பிங் கல. ௩௯௩.) 2. அயிர்த்தல். 'அண்ணலங் குமர ராமென் றயிர்ப்புறு மரசர் யாரும்' (பாரத. திரௌ. ௬௩.)

அயிரம்—கண்டசருக்கரை.

அயிராணி—1. இந்திராணி. 'நகைமணிப்பூ ணயிராணி' (காஞ்சிப். நகரேற்று. ௧௪௧.) 2. பார்ப்பதி. (திவாகர.)

அயிராவணம் — 1. அயிராவதயானை. 2. இரண்டாயிரங்கொம்புடைய ஓர் யானை. அது கைலாயத்திலிருப்பது. 'இயங்குந் திற லுடைக் தீரா யிரமருப் பேய்ந்துடற்றத் - தயங்குந் திறலயி ராவணஞ் சார்வது' (தணிகை. களவு. ௬௨.) பிருதிவிலிங்க சொரூபம். 'அமரர்நாடாளாதேயாரூராண்ட-அயிராவணமே' (தேவார. திருவாரூர். ௧. திருநாவு.) [வைராவண]

அயிராவதப்பாகன்—இந்திரன். 'அண்ண லயிரா வதப்பாக னடைப்பை தாங்க' (கூர்ம பு. திருக்கல். ௭௧.)

அயிராவதம் — இந்திரனுடைய யானை. 'பனைக்கைப் பிறைவெண் கோட்டயிரா வத மேபோலும் பகட்டிலிவன்' (பாரத. திரௌ. ௪௪.) [வைராவத]

அயிராவதன் — 1. இந்திரன். [அயிரா வதம் என்னும் யானையை உடையவன் என்றபடி.] 2. சூரியனுடைய தேரைப் பரிக் கும் நாகரில் ஒருவன். "ஆசறு மயிராவ தன்" (கூர்மபு. ஆதவ. ௬.)

அயிரி—1. நெட்டிலைப்புல். 2. மீன்முள் ளரியும் ஒருவகைக் கத்தி. (பிங்கல. ௧௧௨௧.)

அயிரியம்—நெட்டிச்செடி.

அயிரை—1. ஒரு சிறுமீன். "குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி" (புறநா. ௬௭.)

2. நுண்மணல். 'அயிரைவார்கரைக் குட கடல்' (சூளா. கல்யா. ருஅ.) 3. சேரநாட்டி லுள்ளதொரு மலை. 'நேருயர் நெடுவரை யயிரைப் பொருந' (பதிற்றுப். உக.) 4. சேரநாட்டுள்ளதோர் யாறு. 'உருகெழு மரபி னயிரை மண்ணி' (சிலப். 28, 145)

அயில்—1-3. அயிலென்னேவலும் தெரி நிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. அழகு. 5. இரும்பு. 'அயிலுண்ணறல்'(தைல. தைலவ. உக.) 6. உண்ணல். 7. கலப்பை. 8. கூர்மை. 'அயில்வேற்கைக் கந்தவேள்' (கந்தபு. வள்ளி. உகரு) 9. கோரைப்புல். 10. வேலம்பட்டை. (இராசவைத்.) 11. வேற்படை. 'சுற்றுமயிலும்வட்டமுமெடுத் திருகை' (அரிச்சங். விவாக. ககஎ.) 12. கத்தி. 'அயிலரி யிரலை விழுப்புண்' (ஞாகா. 30)

அயில்வித்தல் — உண்பித்தல். 'அடிசி லயில்வோர் தம்மை யயில்வித்து' (திருவிளை. உக்கிர. வேல்வளை. கூ0.)

அயில்வு—உண்ணல்.

அயிலம் — இருப்பைவேர்ப்பட்டை. (இராசவைத்.)

அயிலல்—உண்ணல். 'உகுபாலயிலுற்றிடு பொழுதத்தினில்' (கந்தபு. சரவண. நஅ.)

அயிலவன்—வேற்படையுடையவன், கந்த சுவாமி.'திணைகாவன் மயிலை மணந்த வயிலவ.' (திருப்புகழ். நகந.) [அயில்-வேற்படை. அ - ஒரு சாரியை. அன்-ஒரு விகுதி.]

அயிலான் — கந்தசுவாமி. [அயில்-வேற் படை. ஆன்-ஒருவிகுதி.]

அயிலி—சதுரக்கள்ளி. (பிங்)

அயிலிடம்—சிற்றரத்தை.

அயிலுதல்—உண்ணல்.

அயிலுழவன்—வீரன். (உரி. நிக.)

அயிலேயம் — முசுமுசுக்கைக்கொடி. 'வானநா டயிலேயம்' (தைல. தைலவ. கக.)

அயிலை — ஒருவகைமீன். 'அயிலைதுழந்த வம்புளி' (அகநா. 50.)

அயிற்கடு—அங்குசம்.

அயிற்பெண்டு—வரிக்கூத்துவகை. (சிலப். 3, 13, உரை.)

அயிறல்—உண்ணல். 'ஆனபல் கடல்களு மயிறன் மேயினன்' (கந்தபு. சிங்க. உஎ.)

அயினி—1. சோறு, உணவு. (சூ - நி. கூ. உஉ.) 2. நீராகாரம். (இராசவைத்.)

அயினிநீர் — சோறுகலந்த ஆலத்திநீர். 'போதுட னயினிநீர் சுழற்றி' (இராமா. மிதிலை. ருக.)

அயுக்தம் — தகாதது. [ஸ - எதிர்மறை. யுக்தம் - இயைபு.]

அயுகலம் — தனிமை. [அயுகளம்: ஸ- எதிர்மறை. யுகளம் - இரண்டு.]

அயுத்தம் — 1. எதுவலங்காரவகை ஐந்த னுள் ஒன்று. அது, 'இகன்மதமால் யானை யகபாய னெங்கோன் - முகமதியின் மூர னிலவா - னகமலர்வ - செங்கயற்க ணல்லார் திருமருவு வாள்வதந - பங்கயங்கள் சாலப் பல' என்பதிற்போலக் காரணத்துக்கேலாத காரியம் நிகழ்வது. 'ஆரகா ரியமு மொருங் குடன் றோற்றமுங் - காரண முந்துறூஉங் காரிய நிலையும், யுத்தமு மயுத்தமு முத்தை யோ டியலும்' (தண்டி. கூஉ.) 2. பொருத்த மில்லாதது. [அயுக்த.]

அயுத்தி—1.நியாயவிரோதம்.2.பொருத்த மில்லாமை. [அயுக்தி: ஸ - எதிர்மறை. யுக்தி - பொருத்தம்.]

அயுதசித்தசம்பந்தம் — நீக்கமின்றியிருப்ப வற்றின் சம்பந்தம்; அது: கெடாததாய் ஒன்று மற்றொன்றை எப்பொழுதும் பற்றி நிற்பது. (தர்க்கபா. ரு.) [அயுதஸித்தஸம் பந்த: அயுத - பிரிவின்மை. ஸித்த - சித்தித்திருப்பது. ஸம்பந்த - இயைபு.]

அயுதசித்தம்-சமவாயசம்பந்தம்.[அயுத ஸித்த.]

அயுதம்–1. பதினாயிரம். 'இரண்டுபடையு மயுதவருடநேர்ந்து' (காஞ்சிப். மகாலி. அ.) 2. பிரிவின்மை. [அயுத.]

அயுதாயு — சூரியகுலத்தான் ஓர் அரசன். இவன்: சிந்துதீபனுடைய மகன். (கூர்மபு. சூரிய. சகூ.)

அயோக்கியதை–இசையாமை, பொருத்த மின்மை. [அயோக்யதா: ஸ - எதிர் மறை. யோக்யதா - பொருத்தம்.]

அயோக்கியம்—1. இசையாமை, பொருத்தமின்மை. 'பிரத்தியக்ஷத்திற்கு யோக்கியமுமயோக்கியமுமாய் ஒளித்தவஸ்துவை யறிவிப்பதாகும்' (சி. சி. அளவை. உ: ஞான.) 2. தகுதியின்மை. [அயோக்ய.]

அயோக்கியன் — யோக்கியனல்லாதவன். [அ - எதிர்மறை. யோக்ய - தக்கவன்.]

அயோக்கிரம்—1. உலக்கை. 2. சுத்தியல். [அயோக்ர: அயஸ் - இரும்பு. அக்ர - நுனி.]

அயோகநம்—சுத்தியல். [அயோகந: அயஸ் - இரும்பு. கந - அடித்தல்.]

அயோகம்—1. சுத்தியல். [அயஸ் - இரும்பு. க - போதல்.] 2. தகுதியின்மை. 3. பிரிவு, கூடுதலின்மை. 4. முயற்சி. 5. வெறுப்பு. [அயோக: அ - எதிர்மறை. யோக - சேர்க்கை.]

அயோகவியவச்சேதம் — இயைபின்மை நீக்குதல். (பி. வி. ௰௦. உரை.) [அயோக வ்யவச்சேத: அயோக - இயைபின்மை. வ்யவச்சேத - நீக்குதல்.]

அயோகன்—1. தாரமிழந்தவன். 2. மனைவியைப் பிரிந்திருப்பவன். [அயோக: அ - எதிர்மறை. யோக - கூடியிருத்தல்.]

அயோகிருதயம் — இரும்புபோன்றகடினமான மனம். [அயோஹ்ருதய: அயஸ் - இரும்பு. ஹ்ருதயம் - மனம்.]

அயோசநம்—1. ஒன்றுதலின்மை. 2. வேறுந்தன்மை. [அயோஜந: அ - எதிர்மறை. யோஜநம் - ஒன்றுதல்.]

அயோத்தி — சூரியவமிசவரசர்களுடைய இராசதானியாய்ச் சரயுநதிக்கரையிலுள்ள ஒரு நகரம். 'மணிமாட வயோத்தி யென்னும் பொன்னகரு மல்லாது புகலுண்டோ' (இராமா. கைபடை. எ.) [அயோத்யா: அ - எதிர்மறை. யோத்யா - யுத்தஞ்செய்யத்தக்கது.]

அயோதகதி—'இரும்பு சுடுகின்றது' எனப் பொருள்படும் ஒரு வடமொழி வாக்கியம். 'பிரமா சிருட்டிக்கவும் விட்டுணு இரட்சிக்கவும் காலருத்திரன் சங்கரிக்கவும் பொருந்துகையாலே, 'அயோ தகதி' யென்றாற்போலச் சிவசத்தி யிவர்களை யதிட்டித்துச் செய்கையால் இவர்களே செய்ததெனப் பெறும்' (சி. சி. க: ௩௪. சிவாக்.) [அயோ தஹதி: அயஸ் - இரும்பு. தஹதி - சுடுகின்றது.]

அயோநி—1. சிவன். 2. தொடக்கமில்லாதது. 3. நித்தியம். 4. பிரமா. 5. யோநியிற் பிறவாதது. [அயோநி: அ எதிர்மறை. யோநி - காரணம்.]

அயோநிசம் — யோநியாற் பிறவாதது. [அயோநிஜ: அ - எதிர்மறை. யோநிஜ - யோனியிற்பிறந்தது.]

அயோநிசன்—யோனியாற் பிறவாதவன்.

அயோநிசை — யோநிவழியாற் பிறவாதவள். [அயோநிஜா: அ; யோநிஜா - யோனியிற்பிறந்தவள்.]

அயோமலம்—1. இருப்புக்கிட்டம். 2. கடம். 3. பானை. [அயோமலம்: அயஸ் - இரும்பு. மலம் - அழுக்கு.]

அயோமுகி—ஓரரக்கி. (இராமா. ஆரணிய கா. அயோ. ௩௧.) [அயோமுகீ.]

அயோரசம் — அரத்தினாலே அராவியெடுத்த இரும்புப்பொடி.

அயௌதுகம் — கல்யாணகாலமல்லாத மற்றக்காலங்களிற் பெண்களால் பெறப்படும் சீதனப்பொருள்.

அர்—1. ஒருபகுதிப்பொருள்விகுதி. 'பூவர் சோலை புகுவலென் றெண்ணினான்' (சிந்தா. பதுமை. க௬௩.) 2. பெயர்வினைகளில் உயர்திணைப்பன்மையைக்காட்டும் ஒரு விகுதி; 'அவர் வந்தனர்' என்பதிற்போல. இவ்விகுதி: தெரிநிலைவினைமுற்றில் இறந்தகால இடைநிலையாகிய டகர றகர ஒற்றுக்களையொட்டி வரும்போதும் நிகழ்கால இடைநிலைகளாகிய கின்று, ஆநின்று என்பவைகளை யொட்டி வரும்போதும் தன்முன் அன்சாரியைபெற்றன்றி வருதலில்லை. மேலும் இவ்விகுதி வினைமுற்றின் ரூபமல்லாத வினையாலணையும் பெயரில் வரும்போது 'வந்தவர்' என்பதிற்

போல அகாச்சாரியையடுத்தே பின்வரும். 3. பெயர்வினைகளில் ஒருமைச்சிறப்பில் வரும் ஒரு விகுதி. 'சம்பந்தர் நின்றனர்' என்பதிற்போல. 4. மென்றொடர்க்குற்றிய லுகரப்பெயரிறுதியுகரத்தோடொத்துவரும் ஓரிடைச்சொல்; 'சுரும்பர்' என்பதிற்போல.

அர்க்கக்கீராதீந்தைலம் — எருக்கம்பால், சதுரக்கள்ளிப்பால் முதலியவற்றில் வடித் தெடுக்கும் ஒருவகைத் தைலம். [தைல. தைலவ. ௬௧, ௬௨-ஆங் கவிகளிற் காண்க.]

அர்க்கதநுநு—1. இயமன். 2. கன்னன். 3. சநி. 4. சுக்கிரீவன். [அர்க-ஸுநு: அர்க - சூரியன். ஸுநு - மகன்.]

அர்க்கபந்து—1. கௌதமபுத்தன். [சூரிய வமிசத்திலே தோன்றியதால் வந்தபெயர்.] 2. தாமரைக்கொடி. [அர்க-பந்து: அர்க- சூரியன். பந்து - உறவு.]

அர்க்கம்—1. எருக்கஞ்செடி. 2. செம்பு. 3. தேவருக்கு அல்லது பெரியோருக்கு வணக்கத்தோடு கொடுக்கும் பொருள்; அப் பொருள்; தீர்த்தம், பால், தருப்பை, தயிர், நெய், அரிசி, கோதுமை, கடுகு என்பன. 4. நீர்க்காகம். (சூ. நிகண். ௩: ௯௩.) 5. பளிங்கு. 6. பூகோளாட்சம். 7. பொன். 8. விலைப்பொருள். [2, 5. அர்க; 3, 8. அர்க.]

அர்க்கமலை—அருணாசலத்திற்குக்கிழக்கே யுள்ள ஒரு மலை. (அருணாசலபு. திருந. ௩௯.)

அர்க்கலம்—கதவடைக்குந்தாழ்[அர்கல.]

அர்க்கன்—1. இந்திரன். 2. உத்திரநட் சத்திரம். 3. சூரியன். 4. ஞாயிற்றுக்கிழமை. 5. நெருப்பு. [அர்க.]

அர்க்காதிபன்—திரவியாதிபதி. [அர்கா திப.]

அர்க்காம்சு — துவாதசகலாப்பிராசாதம். அவை: சூநியமாகிய ஹகாரத்தின்மேல் ஸ்ரீகண்ட ஆகிய அகாரம், கோணம் ஆகிய உகாரம், ஆன்மா ஆகிய மகாரம், ஸம்வித் ஆகிய பிந்து, அர்தசந்த்ரம் ஆகிய அர்த்தசந் திரன், ரோயி ஆகிய நிரோதிநி, ஊர்த்வம் ஆகிய நாதம், தண்டாந்தமாகிய நாதாந்தம், இடப்புறத்தில் விந்துவோடுகூடின கலப்பை வடிவமான சக்தி, வியாபிகா ஆகிய வியாபிநி, ஸமநா, உந்மநா ஆகியவைகளே. இதிற் சமனைவரையிற் பாசசமூகம். உந்ம நாந்தத்திற் பிராசாதமந்திரவாச்சியராகிய பரமசிவன் விளங்கினர். (சி-வி. கிரி. எ-ம் உரையும்.) [அர்காம்ஶ.]

அர்க்கார்—வேவுகாரன். [இந்துஸ்.]

அர்க்காரீ—அர்க்கார். [இந்துஸ்.]

அர்க்கியபாத்திரம் — அர்க்கியபாத்தியாச மநங்களுக்கு யோக்கியமான பாத்திரங்களி லொன்று. (சி-வி. கிரி. ௪௪. தாற்.) [அர்க்ய பாத்ரம்.]

அர்க்கியம்—அருக்கியம். 'அவரவர் மந்தி ரத்தினாலே விதமாரர்க்கியங்கொடுத்து' (சேதுபு. சேதுபல. ௯௦.) [அர்க்ய.]

அர்க்கீசம்—அருக்கீசம்.

அர்க்குளா—கடல்மீன்வகை. (லெக்ஸிகன்.)

அர்கதழநீ—அருகன். (வேதா. சூ. பொது. ௨௪.)

அர்ச்சகன்—அருச்சகன். [அர்சக.]

அர்ச்சகாகிரகம்—ஒருவகைநோய்; அது: குழந்தை பிறந்த பதினொராநாளிலாவது பதினொராம் மாசத்திலாவது பதினொராம் வருடத்திலாவது குழந்தையை அல்லது தாயைப்பீடிக்கும் ஒருபெண்கிரகத்தால் ஆய தென்பர். அதனால் தேகமிளைத்தல், சுரம், சர்வாங்கத்திலும் மிகுநோவு, அந்நத்தில் வெறுப்பு, விழித்தவிழி விழித்தபடியிருத்தல் என்னும் இக்குணங்களுண்டாகும். (சீவரட். ௨௨அ.) [அர்ஜக - சம்பாதித்தல், 'நாட் பட அநுசரித்தல்']

அர்ச்சநம்—1. திரவியஞ் சம்பாதித்தல். [அர்ஜந.] 2. பூசைசெய்தல். [அர்சந.]

அர்ச்சநாதிகாரம் — பூசனைசெய்தற்கு யோக்கியம். 'அதிகாரம்' '5.' பார். [அர்சநாயிகார.]

அர்ச்சநாபாகம்—, அர்ச்சநாபோகம்—, அர்ச்சநாவிருத்தீ— கோயிலருச்சகருக் கு விடப்பட்ட மானியம். (லெக் ஸிகன்.)

அர்ச்சநீயம்—1. மதிக்கத்தக்கது. 2. வணங்கத்தக்கது. [அர்சநீய:]

அர்ச்சனை—1. பூசை. 'செவ்வி தர்ச்சனை செய்தன ரென்பவே' (கந்தபு. திருவி. ௧௨௩.) 2. வணக்கம். [அர்ச்-நா.]

அர்ச்சாவதாரம்—திருமால்நிலையுள் ஒன்று.

அர்ச்சாவிக்கிரகம் — பூசைத்திருமேனி. 'சடகோபனை யர்ச்சாவிக்கிரகமாக பிரதிஷ்டித்து' (கோயிலொ. 7)

அர்ச்சி—1. ஒளி. 2. சுவாலை. [அர்சிஸ்] 3. பூசைசெய்யெனப்பொருள்படும் 'அர்ச்சி' யென்னேவல்.

அர்ச்சித்தல்—பூசைசெய்தல். 'அர்ச்சிப் பாரின் நூலலரினல்' (சைவச. பொது. ௫௯௯.)

அர்ச்சிதன்—1. பூசிக்கப்பட்டோன். 'ஆதி நாத னமரர்க ளர்ச்சிதன்' (தேவா. திருப்பூவ. எ. திருகாவு.) 2. விட்டுணு. [அர்சித.]

அர்ச்சியசிட்டர்—பரிசுத்தவான்கள், பூசிக் கத்தக்க பெரியோர்.

அர்ச்சியம்—பூசிக்கத்தக்கது. [அர்ச்ய.]

அர்ச்சிராதிமார்க்கம் — மோக்ஷத்திற்குச் செல்லும் ஒருவகைநெறி. (பிரபோத, 45,10.)

அர்ச்சுநம்—அருச்சுநம். [அர்ஜுந.]

அர்ச்சுநன் — அருச்சுநன். [அர்ஜுந.]

அர்ச்சை — மூர்த்தி: கல், மரம், மண் முதலியவற்றாற் செய்யப்பட்ட விக்கிரகம். [அர்ச்சா.]

அர்டணம்—1. சந்தோஷம். 'சோக மோக அர்ஷணாதிகள் அந்தக்கரண தருமமாகவும்' (சி. சி. அ: ௧௦. சிவாக்.) [ஹர்ஷண.] 2. நித்தியயோகத்தொன்று.

அர்த்தக்கிரகணம்—பாதிக்கிரகணம்.

அர்த்தக்கிரியாஸ்திதி—யாதொருபதார்த்த தெரிசனத்தினாலே ஞானமானது கெடுக்கப் படாமலிருக்குமோ அது. [அர்த்த-க்ரியா ஸ்திதி.]

அர்த்தக்கிரியார்த்தி—பிரயோசனமான கிரியையை யிச்சிக்கிறவன். [அர்த்த-க்ரியா அர்த்தி.]

அர்த்தகோளம்—பாதியுருண்டை.

அர்த்தசந்சயகிருது — ஒருவகையதிகாரி. (கூர்மபு. திருக்கல். ௧. உரை.) [அர்த்த-ஸம்சயக்ருத்: அர்த்த-பொருள். ஸம்சய-சட்டல். க்ருத்-செய்பவன்.]

அர்த்தசந்திரப்பிரயோகம் — கழுத்திற் கைகொடுத்துத் தள்ளுதல்.

அர்த்தசந்திரபாணம் — பிறைமுகங் கொண்ட அம்பு. 'அர்த்தசந்திரபாணமானது தைக்கின்ற' (ஞானவா. சிகித். ௪௭. உரை.) [அர்த்த-சந்த்ர பாண.]

அர்த்தசந்திரம்—1. வியூகவகை நான்கனு ளொன்றாகிய அசங்கதத்தின் விரி ஆறனுள் ஒன்று. 'தோலா வர்த்த சந்திரப்பேர் வியூகம் வகுத்தான்' (பாரத. ௩-ஆம் போர். ௨.; வள். ௭௯௭. உரைக் குறிப்பு.) 2. திருவாசியின் மேல்வளைவு. [அர்த்த-சந்த்ர.]

அர்த்தசந்திரன்—1. பாதிச்சந்திரன். 2. பாதிச்சந்திரன்வடிவமான வளைவாக நகத் தைப் பதித்து வைக்கும் நகக்குறி. (கொக் கோ. ௫: ௫௮.) 3. பாதிச்சந்திராகாரமாக வளைக்கப்பட்ட கை. 4. பிறைமுகாஸ்திரம். 5. புருவநடுவுக்குமேலே மூன்றங்குலம் வியாபித்துநிற்கும் பிறைவடிவுடைய கலை; அது: பன்னிரண்டுகலைகளில் ஆறுவது. (சி. சி. ௨: ௭௪. ஞானப். சி-வி. கிரி. ௬-ம் உரையும்.) இதனைப் பிரமரந்திரத்தானத்தில் இருக்கும் நான்கு கலைகளில் ஒன்றென்பர். (சி-வி. ௧௦.) [அர்த்த-சந்த்ர: அர்த்த-பாதி.]

அர்த்தசம்வித்தி — விடயத்தையறியும் அறிவு. (பௌட். பும். ௧௫௪இ.) [அர்த்த-விஷயம். ஸம்வித்-அறிவு.]

அர்த்தசாமபூஜை—கோயிலின் நடுநிசிப் பூசை.

அர்த்தசாமம் — இரவில் நடுச்சாமம். 'அர்த்தசாமத்தில் நித்திரைசெய்யும் வஞ்சிக் கொடிபோன்ற சூடாலையானவள்' (ஞான வா. சிகித். ௭௨. உரை.) [அர்த்த-யாமம்]

அர்த்தசாமர்த்தியம் — சொற்பொருளின் வலிமை. (சைவப்பி. ௩௩.) [அர்த்த-பொருள். ஸாமர்த்ய-வல்லமை.]

அர்த்தசாலம் — பொருட்கூட்டம். 'சரா சராத்மகமாயிருக்கிற அர்த்தசாலமும் கிர மத்திலுண்டாம்' (சி. சி. அளவை. ௧௩.) [அர்த்த-ஜால.]

அர்த்தசாஸ்திரம்—பொருணூல்.

அர்த்தசித்திரம்—தாளப்பிரமாணம் பத்து வகையுளொன்றாகிய மார்க்கம் என்பதன் பிரிவுகள் ஆறனுள் ஒன்று; அஃது, அரைமாத்திரை யோர்கலையாகக்கொண்டது. [ஸம்ஸ் சித்ரம்.]

அர்த்தநாசம்—பொருட்கேடு.

அர்த்தநாரி—அரதனக் குற்றவகை.

அர்த்தநாரீசுரன்—பாதியுடம்பு பெண்ணாக இருக்குஞ் சிவன். 'திருவளருமர்த்தநாரீசுரப் பொற்பதுமையதில்' (மச்சபு. புரா. உஉ.) [ஸம்ஸ்; நாரீ; ஈஸ்வர.]

அர்த்தநாரீசுவரம்—பாதிச்சரீரம் பார்வதியாரும் பாதிச்சரீரம் சிவபெருமானுமாக வீற்றிருக்குங் கோலம். (சிவபரா. எஉ. பக்.)

அர்த்தப்பிரகரன் — 1. அர்த்தப்பிரதோஷம்; அது: ஞாயிற்றுக்கிழமைமுதல் சனிக்கிழமைவரையும் முறையே வரும் நாலாஞ்சாமம், ஏழாஞ்சாமம், இரண்டாஞ்சாமம், ஐந்தாஞ்சாமம், எட்டாஞ்சாமம், மூன்றாஞ்சாமம், ஆறாஞ்சாமம், என்னும் காலங்கள். (விதான. குணகுண. ௰.) 2. புதன்மகன். (குமாரசுவா. திநாதி. உ. உரை.) [ஸம்ஸ்: ப்ரஹர.]

அர்த்தப்பிரதீதி — பொருட்டோற்றம். 'இப்படியிருக்கிற வாக்கியங்களால் வைதிக லௌகிக ஏதுவாயிருக்கிற அர்த்தப்பிரதீதியுண்டாம்.' (சி. சி. அளவை. கங. சிவாக்.) [ஸம்ஸ் - பொருள். ப்ரதீதி - அறிவு.]

அர்த்தப்பிரபஞ்சம் — சுத்ததத்துவமும் பஞ்சகலையும்.

அர்த்தப்பிராணன்—அற்பப்பிராணனுக்கும் மகாப்பிராணனுக்கும் இடையாக உச்சரிக்கப்படும் எழுத்துக்கள். (பி. வி. ச. உரை.) [ஸம்ஸ்; ப்ராண.]

அர்த்தபஞ்சகம்—ஸ்வஸ்வரூபம், பரஸ்வரூபம், புருஷார்த்தஸ்வரூபம், உபாயஸ்வரூபம், விரோதிஸ்வரூபம். (அஷ்டாதச. ச. அர்த்த.)

அர்த்தபிதாபூதம்—ஒருவகை நோய்; இது: கண்ணிமைகள் சரிந்து தொங்குதல், தலைமயிர் முறைத்தல், தாடையுலரல், முகக்களை நீங்குதல், துக்கித்தமுகம், உருட்டியுருட்டிப் பார்த்தல், அகாலநித்திரை, மந்தாக்கினி, சுபாவவார்த்தை, சொப்பனத்தில் இறந்தவர்களைக்கண்டு பேசுதல், கறுப்பாகிய வஸ்து, வெல்லம், பால், மாமிசம் இவைகளில் விருப்பம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். (சீவரட். உகரு.)

அர்த்தபிப்பலி—பாதித்திப்பலி. (பி. வி. உக. உரை.) [ஸம்ஸ்; பிப்பலீ.]

அர்த்தபிருட்டகம்-அங்கக்கிரியை பதினாறிலொன்று. (சிலப். அரங்கே. கஉ. உரை.)

அர்த்தபுஷ்டி—பொருட்பொலிவு.

அர்த்தபேதம்—பொருள்வேறுபாடு.

அர்த்தபேதரோகம் — சிரசில்வரும் ஒருவகை ரோகம். (சீவரட். உகூக.) [இது சிரசிலொருபக்கத்தைப்பேதிப்பதால் அர்த்தபேதமெனப்பட்டது.]

அர்த்தம்—1. இரந்துகேட்டல். 2. ஒருகூறு. 3. சடப்பொருள். 4. சம்பத்து. 5. சொல்லினாற் கருதப்படும் பொருள். 'மருந்தனவேதார்த்த முழுவது முரைக்கும்' (சூத. எக்கி. பூ. க: கக.) 6. திரவியம். 7. தொடக்கம். 8. நன்றாயிருத்தல். 9. பாதி. 10. பிரயோசனம். 11. பிறப்பு. 12. வியாச்சியம். [1, 3, 4, 5, 6, 7, 8, 10, 11, 12, ஸம்ஸ்; 2, 9. ஸம்ஸ்.]

அர்த்தம்பண்ணல் — பொருள்சொல்லல்.

அர்த்தமண்டபம் — கோயிலிலே மூலத்தானத்துக்கடுத்தமண்டபம். [ஸம்ஸ்; மண்டப.]

அர்த்தமாத்திரயோசநநிர்விகற்பக்காட்சி—குணங்களையின்றிப் பொருண்மாத்திரம் அகப்படுக்கும் நிருவிகற்பக் காட்சி. [ஸம்ஸ்-பொருள். மாத்ர-மட்டும். யோஜந-பொருந்துகை. நிர்விகல்ப-விகற்பமின்மை. காட்சி - பிரத்தியட்சம்.]

அர்த்தமானியம்—பாதிப்பகுதி இறையிலியாக விடப்பட்ட நிலம்.

அர்த்தரதன் — ஒருவகைத் தேர்வீரன். 'நண்ணு மர்த்த ரதர்க்கு நாயகர்' (பாரத. அணி. ௩.) [ஸம்ஸ்-ரத.]

அர்த்தராத்திரி — பாதியிரா. 'அர்த்தராத்திரிய தாகு மமரர்கோன் வாழு மூரில்' (மச்சபு. சூரியசங். கஉ.) [ஸம்ஸ்-ராத்ரி: ஸம்ஸ்-பாதி. ராத்ரி-இரா.]

அர்த்தவாதம் — 1. பிரயோசநத்தைச் சொல்லுதல். (சைவப்பி. ௩௧.) 2. புகழ்தல், துதித்தல். 'பட்டுக்களைப்போல வேதார்த்தத்தின் மகிமையைத் துதிப்பதே யர்த்த வாதமெனவும்' (வேதா. சூ. ௩. உரை.) (அருத்தவாதம் பார்.) [அர்த்த-வாத.]

அர்த்தவுதயம்—அர்த்தோதயம். 'மன்னு மர்த்த வுதய மகோதயம்' (சேதுபு. தநு. ௬௪.) [அர்த்த; உதய.]

அர்த்தவேதம்—உபவேதங்கள் நான்கனுளொன்று; அது: தட்சிணை ஆச்சியசரு உபகாராதிகளை நிர்ணயம்பண்ணுவித்துத் தருமாதி சதுர்விதபுருஷார்த்தத்திற்கும் சாதநமாயிருப்பது. (வேதா. சூ. ௩. உரை.) [அர்த்த; வேத.]

அர்த்தாங்கம்-1. அர்த்தாங்கவாதரோகம். 'இழியுமிக்த வள்ளியத்தாங் தயிலப் பேரையியம்புங்கா லர்த்தாங்க மிசிவு வீக்கம்' (தைல. தைலவ. ௧௨அ.) 2. பாதிச்சரீரம். [அர்த்த - பாதி. அங்க - சரீரம்.]

அர்த்தாங்கவாதம்-பாரிசவாதம். (சீவரட். ௧௬௪. [அர்த்த; அங்க; வாத.]

அர்த்தாங்கவிசிவு—பக்ஷவாதம். (தைலவ. தைல. 128)

அர்த்தாங்கீகாரம் — ஒருபகுதியை யங்கீகரித்தல்,பாதியை யங்கீகரித்தல். 'இங்ஙனங் கூறிய உபதேசமொழிகளை யர்த்தாங்கீகாரமாக உட்கொண்டு' (வைரா. சத. ௧௧. அவதாரி.) [அர்த்தாங்கீகார: அர்த்த-பாதி. அங்கீகார - ஒத்துக்கொள்ளுதல்.]

அர்த்தாட்சி-பக்கப்பார்வை. [அர்த்தாக்ஷி]

அர்த்தாத்—அர்த்தத்தினாலே, இருக்கிறபடி, உள்ளபடி. 'கர்த்திருத்துவமுண்டான பொழுதே யிச்சை யர்த்தாத் சித்தம்' (சி. சி: உ: ௫௬. சிவாக்.) [அர்த்தாத் என்பது வடமொழி ஐந்தாம்வேற்றுமையில் மணிப்பிரவாளத்துள் வந்தது.]

அர்த்தாதுரம்—பொருளாசை.

அர்த்தாந்தரநியாசம் — வேற்றுப்பொருள் வைப்பென்னும் ஓரலங்காரம். (விசா. இலக். ௬௧; குவ. ௬௧.) [அர்த்தாந்தர ந்யாஸ: அர்த்த - பொருள். அந்தர-வேறு. ந்யாஸ-வைப்பு.]

அர்த்தாந்தரம்—1. தோல்வித்தாநம் அறுபத்தைந்தில் ஒன்று; அது: தனக்கு வரும் தோல்வியைப் பிறிதொன்றுபேசி மறைத்தல். (சி. சி. அளவை. ௧௪. மறை.) 2. வேறர்த்தம். 3. வேறுகாரணம். [அர்த்தாந்தர: அர்த்த - பொருள். அந்தர - வேறு.]

அர்த்தாபத்தி — அருத்தாபத்தியென்னும் பிரமாணம். (சி. சி. அளவை. ௧.) [அர்த்தாபத்தி: அர்த்த - பொருள். ஆபத்தி-பேறு.]

அர்த்தாபத்தியலங்காரம் — பொருட்பேறணி. (குவல. ௧௧உ.) [அர்த்த; ஆபத்தி; அலங்கார.]

அர்த்தாலங்காரம்-பொருளணி. [அர்த்தாலங்கார.]

அர்த்தி—1. இரந்துகேட்போன். 2. எவியதுசெய்வோன். 3. முறையிடுசெய்வோன். 4. வாதி. [அர்த்திந்.]

அர்த்தித்தல் — இரத்தல், வேண்டுதல். (தாயு. மௌந. ௬. உரை.)

அர்த்திதவாதம்—ஒருவகை வாதரோகம். (சீவரட். ௧௬௯.) (இது பாதிமுகத்தை விகாரப்படுத்துதலால் வந்தபெயர்.) [அர்த்தித வாத.]

அர்த்தோதயம் — அறுபதுவருஷத்துக் கொருமுறை வரும் ஒரு விசேடகாலம்; அது: தைமாசத்திலே ஞாயிற்றுக்கிழமையும் அமாவாசையும் திருவோணநக்ஷத்திரமும் வியதீபாதயோகமும் கூடிய காலம். (சைவ. வினா.) 'அயநசங்கிராமமாசி மகத்திலர்த்தோதயத்தில்' (அருணசலபு. திருமலைவலம். உ௪.) [அர்த்தோதய.]

அர்ப்பகன்—பாலகன். [அர்பக.]

அர்ப்பணம்—1. ஒப்பித்தல். 'ஈசுரார்ப்பணம்' (ஞாநவா. அருச்சு. ௧௬.) 2. கொடுத்தல். 3. திருப்பிக்கொடுத்தல். 4. துளைத்தல். 5. நிவேதித்தல். [அர்பண.]

அர்ப்பம்—1. ஒளியில்லாதது. 2. பனி. 3. பிள்ளை. 4. பூண்டு. [அர்ப.]

அர்ப்பன்—மாணுக்கன். [அர்ப.]

அர்ப்பித்தல்—நிவேதித்தல்.

அர்ப்பிதம் — 1. கொடுக்கப்பட்டது. 2. நிவேதிக்கப்பட்டது. [சுவி-கித.]

அர்ப்பீடம்—அரப்பாயம். (வீரசோ. பொருட். உக. உரை.)

அர்ப்புதோட்டரோகம் — உதடுகளிலே சிறிய பேரிச்சங்காய்போல வீக்கத்தை உண்டாக்கும் ஒரு ரோகம். (சீவரட். உஎகூ.)

அர்ப்புதம் — 1. இந்தியாவிலே மேற்குத் திசையிலிருக்கும் ஒரு மலை. 2. ஓரெண்; அது: ஆயிரம் இலட்சங்கொண்டது. (த. நி. போ. உடு.) பத்துக்கோடி. (சி-லி. ஞான. உடு. சு.) 3. பாம்பு. 4. மாமிசமொத்தை. 5. மேகம். [சுவ-பூத.]

அர்ப்புதவர்த்தமரோகம் — கண்ணிமையினோரங்களிலே மாமிசமொத்தையைப்போலத் தடித்தலையுண்டாக்கும் ஒரு நோய். (சீவரட். உசடு.) [சுவ-பூத - மொத்தை வர்த்ம - இமை.]

அர்ப்புதாகிரகம்—பாலரைத்தொடருகின்ற பன்னிரண்டு பெண்கிரகங்களுள் ஒன்று; அது: குழந்தைபிறந்த பன்னிரண்டாம் நாளிலாவது, பன்னிரண்டாம் மாசத்திலாவது, பன்னிரண்டாம் வருஷத்திலாவது சிசுவை அல்லது தாயைப் பீடிக்குமென்பர். (சீவரட். உஉஅ.)

அர்வாசீநம்—1. நவீநகாலத்தது. 2. பின்வருவது. 3. மாறுனது. [சுவ-ாவீந.]

அர — பாம்பு. 'உள்வாழ்ரக்கொடெழுதிண்கலுழனெத்தான்' (இராமா. கடறு. அச.) [அரா என்பது அர என நின்றது.]

அரக்கம்—1. கொம்பரக்கு. 2. திருநாமப்பாலைப்பூண்டு. 3. நன்னாரிக்கொடி. 4. அகில். 5. எருக்கு. 6. அவலரக்கு. 7. இரத்தம். (பதிற். 30, 27)

அரக்கர் — 1. அசுரர். 2. இராக்கதர். 'அரக்கரோ ரழிவுசெய்து கழிவரேல்'(இராமா. வாலிவதை. எகூ.)

அரக்கல்—1. 'அரக்கல்' என்னும் ஒரு வியங்கோள்வினைமுற்று. 2. அரைத்தல். 3. இருப்புவிட்டுப்பெயர்தல். 4. தேய்த்தல். 5. புடைபெயர்தல். 'கல்லரக்குங்கடுமையவல்ல' (இராமா. நகர்நீ. உஉடு) 6. வருந்தச்செய்தல். 'எல்லரக்கு மயினுதிவே லிராவணனும்'(இராமா. ஊர்தேடு. உகூo.)7. அழுத்துதல். 'விரலாற் றலைபரக்கினன்' (தேவார 223, 11.) 8. வெட்டுதல். 'தாளுந் தோளு மரக்கி' (விநாயகபு. 42, 4.) 9. வினைதறித்தல். 10. முழுதும் உண்ணுதல். [அரங்கு என்னுந் தன்வினையினின்ற ஙகரங் ககரமாய்த் திரிந்து பிறவினைப்பொருளில் வந்தது.]

அரக்கரிசி—அரக்குவகை.

அரக்கன்—1. அசுரன். 'ஆம்பன்முகவரக்கன்' (கல்லா. க.) 2. இராக்கதன். 'ஆயிடையரக்கன்' (இராமா. நிந்தனை. உக.) [ரக்ஷஸ்]

அரக்காம்பல்—செவ்வாம்பல். 'மருவரக்காம்பல் பங்கயந் தழைந்து' (சூத. முத்தி. அ: கூo.) [அரக்கு - சிவப்பு.]

அரக்கி—1. இராக்கதமகள். 'மைவண்ணத் தரக்கி போரில்'(இராமா. அகலி. அஉ.) 2. பாஷாணம்.

அரக்கிநடத்தல் — 1. நெளிந்துநடத்தல். 2. துடை உராய நடத்தல். (லெக்ஸிகன்)

அரக்கிலச்சினை — மெழுகினால் வைத்த முத்திரை.'அரக்கிலச்சினையில்வைத்த வெஞ்சலி லோலை காட்ட' (சூளா. தூது. அஉ.)

அரக்கினிரதம் — கொம்பரக்குக்கஷாயம். 'அரக்கினிரதஞ் சுவச்சமும்' (தைல. தைலவ. உகு.)

அரக்கு—1-3. அரக்கென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. கொம்பரக்கு. 'வாரகர்ணிபலை யரக்கோர் வகைக் கிரைம்பலமாம்' (தைல. தைலவ. உச.) 5. சாதிலிங்கம். 'அங்கை யரக்குத் தோய்ந்தன்ன சேயிதழ்' (சிறுபா. எச.) 6. சாறுயம். 7. சிவப்பு. 'அரக்குண் பஞ்சிகடிாட்டி' (சிந்தா. கஙக. அ.) 8. சிவப்பு மெழுகு. 'தீயூட்டாக்கேயென்ன வுருகி' (கந்தபு. மார்க்கண். கூடு.) 9. தேன்.

அரக்குக்காந்தம் — ஒருவகைக்காந்தக்கல்.

அரக்குச்சாயம் — 1. சீலைகளுக்கூட்டும் கருஞ்சிவப்புச்சாயம். 2. வார்ணிசு. (லெக்ஸிகன்)

அரக்குத்தைலம்—கொம்பரக்கு முதலிய வற்றிலிருந்து வடிக்கும் ஒருவகைத் தைலம். (தைல. தைலவ. ருக. சூo.)

அரக்குதல்—1. அழித்தல். 2. இருப்பு விட்டுப்பெயர்த்தல். 3. உரைஞ்சுதல், தேய்த்தல். 'அரக்க னிரைந்துவாயு மலறவே யரக்கினு னடியாலும்' (தேவார. திருவை. கo. திருநா.) 4. சகடம் பூமியிற்படப் புடைபெயர்தல். 'பிள்ளையரக்கி யரக்கிவந்தது' (வழக்.) 5. அழுத்தல். 'விரலாற் றலையரக்கினான்' (தேவா. 223, 11.) 6. வருத்துதல். 'எல்லரக்கும்...இராவணன்' (கம்பரா. வீர் தேடு. 230.) 7. கினைதறித்தல். 8. வெட்டுதல். 'தாளுந் தோளு மரக்கி' (விநாயகபு. 42. 4.) 9. குறைத்தல். 'காரரக்குங்கடல்' (தேவா. 46. 8.) 10. முழுதும் உண்ணல். [அரக்கல், அரக்குதல்' இரண்டும் ஒரு பொருளன.]

அரக்குநீர்—1. இரத்தநீர். 'புண்ணிடை யரக்குநீர் பொழியச் சாம்புவர்'(சூத.முத்தி. எ: உரு.) 2. சாதிலிங்கங்கலந்த நீர். 'அரக்கு நீர்ச் சிவிறியேந்தி' (சீவக. 2657.) 3. ஆலத்திநீர். 'அரக்குநீர் சுழற்றி' (விநாயகபு. 80. 277.) [அரக்கு - சிவப்பு.]

அரக்குமஞ்சள்—மிகச்சிவந்த மஞ்சள்.

அரக்குவளையல் — அரக்கினுலியன்ற கங்கணம்.

அரக்குவைத்தல்—அரக்குமுத்திரை வைத்தல்.

அரகா—சிவ சிவ எனப் பொருள்படும் ஒரு அடுக்குமொழி. (திருவிளை. இந்திரன் முடி. கஎ.) [ஹரஹர.]

அரங்கக்கூத்தி — பகிரங்கமான நாடகசாலையிற் கூத்தாடும் பெண். 'அரங்கக்கூத்தி யெனச்செல்லும்' (கூர்மபு. நவகண். சாு.)

அரங்கசீவகன்— மைப்பூச்சுவேலைசெய்து சீவிப்போன். [ரங்கஜீவக: ரங்க - சபை. ஜீவக - சீவிப்போன்.]

அரங்கணி—1. முழுதும். 2. நீர்வற்றிய கால். (லெக்ஸிகன்)

அரங்கநாதன்— திருவரங்கத்துத்திருமால்.

அரங்கபூசை—1. போர்த்தொடக்கத்துச் செய்யும் போர்க்களப்பூசை. 2. பந்தய விளையாட்டின் றொடக்கத்திற் செய்யும் பூசை. 'சினந்தணிந் தரங்கபூசை செய்வன்' (பாரத. வாரணு. 65) 3. நாடகத்தொடக்கத்திற் செய்யும் பூசை.

அரங்கபூதி — ஐப்பசிமாசப்பௌரணைவரும் இராத்திரி. [ரங்க; பூதி.]

அரங்கபூமி—1. நாடகசாலை. 2. யுத்தகளம். [ரங்கபூமி.]

அரங்கம்—1. அபிநயசாலை, கூத்துப் பயிலிடம். 'ஆடம்பலமு மரங்கமுஞ் சாலையும்' (சிந்தா. மண்மக. கக.) 2. கல்விச்சாலை. 'சென்மலி யரங்க மன்றந் தெற்றியே முதல வெல்லாம்' (கந்தபு. சூரனகர்புரி. உகூ.) 3. கூத்தாடிப்பாடல். 4. சத்திரம். 5. சதுரச்சாலை. 6. சபை. 'குளிகை யரங்க மன்றம்' (கந்தபு. நகர்செய். எ.) 7. சிலம்ப கூடம். 8. சூதுபயிலிடம். 9. சோழதேசத் துள்ள ஸ்ரீரங்கம் என்னும் விட்டுணுதலம். 'அலங்காரமளிக்குந்தென்னரங்கத்திடை தொழுதான்' (பாரத. அருச்சுனன்றீ. ககூ.) 10. நிறம். 11. யாற்றிடைக்குறை. 'அந்திலரங்கத்தகன்பொழில்' (சிலப். காடு. கூ.) 12. யுத்தகளம். 13. வண்ணங்கொடுக்கும் மை. [1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 12, 13. ரங்க.]

அரங்கல்—1. அழிதல். 'பிணியரங்க வினையகல' (இராமா. குலமுறைகி. உ.) 2. ஈடழிதல், மனங்கலங்கல். 'கோடரங் கிட வெழுங் குவிதடங் கொங்கையார்' (இராமா. பால. எதிர். ௩௩.)

அரங்கன் — ஸ்ரீரங்கத்துப்பெருமாள். 'அத்த னச்ச னரங்கன்' (நாலாயி. தேட்டரும். க.) [ரங்க.]

அரங்கு—1-3. அரங்கென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. அறை. 5. இடம். 6. சபை. 7. சூதாடுதற்கு வகுத்த தானம். 'அரங்கின்றி வட்டாடியற்றே' (வள். ௪௦க.) 8. நாடகசாலை. 'அவை புகழரங்கின்மேலாடுவா ளணிநுதல்' (கலித்தொகை. எக.) 9. போர்க்களம். 10. யாற்றிடைக்குறை. 11. கருப்பம். 'அரங்கிலவனென்னை யெய்தாமற் காப்பான்' (திவ்யப். இயற். நான். 30) [4, 5, 6, 7, 8, 9, ரங்க.]

அரங்குவீடு—உள்ளறை.

அரங்கேசன்—அரங்கநாதன்.

அரங்கேற்றம் — சபையாரிடங்கொண்டு வந்து அவரது அங்கீகரிப்பைப் பெறல்.

அரங்கேற்று—1. அரங்கேற்றம். 2-4. அரங்கேற்றென்னேவலும் தெரிநிலைவினைப் பகுதியும் வினைத்தொகையும்.

அரங்கேற்றுதல் — 1. அரங்கேறச்செய்தல். 2. புதிதாக இயற்றப்பட்ட ஒரு நூலைச் சபையார்முன்கொண்டுவந்து தெரிவித்து அவரது சம்மதத்தைப் பெறல். 'கன்னிய வரங்கர் முன்னே கவியரங் கேற்றி ஞனே' (இராமா. சிறப்பு. கக.) 3. முதன்முறை சபைக்குமுன் கொண்டுவருதல்.

அரங்கேறுதல் — சபைக்குமுன்வருதல்.

அரங்கொழிசெய்யுள்—புறநாடக உருக்களுள் இறுதியுரு. (சிலப். ௩: ௧௪. உரை.)

அரசகேசரி—தமிழிரகுவமிச ஆசிரியர்.

அரசவமைமை—பகையரசன் அணித்தாக இருக்கை. அஃது ஈதிகள் ஆறனுள் ஒன்று. (வள். எ௩உ. பரி.)

அரசநாபி—நாபிவகை. (மூ. அ.)

அரசநீதி — அரசுநடாத்துமுறைமைகூறு நூல். 'தேறலார்தமைத் தேறலுந்தேறினர்த் தேறலாமையுமென்று - மாறலாருடன் மலைதலு மாறுடன் மருவிவாழ் தலுமுன்னே - யாற லாதன வரசருக் கென்றுகொண் டரசநீதியிற் சொன்னர்' (பாரத. சூது. எஉ.)

அரசபரி—பெண்களது மனம்போல மிக்க மனத்ததாய் வாழைமடலைப்போலச் செவியுளதாய் நான்கு காலும் பிடரும் முகமும் முதுகும் முன்புறமும் வெண்ணிறமாய் எண்பத்திரண்டுவிரலுயர்ந்த குதிரை. (சூ - நிக. கஉ. க௫௦.)

அரசம்—1. சாரமில்லாதது. 2. சுவையில்லாதது. 3. மூலரோகம். 'அரசம்மோவி குன்மம்' (தைல. தைலவ. அ௪.) [1, 2. ஊரஸ.]

அரசமுல்லை—ஒரு புறத்துறை.

அரசர்க்குறுதிச்சுற்றம் — அரசரைப்பற்றி நின்றவர்க்குயிர்த்துணையாவோர்; அவர்: படைத்தொழிலோர், நிமித்திகப்புலவர், மருத்துவக்கலைஞர், நட்பாளர், அந்தணாளர் என்னும் ஐவர். (சூ - நிகண். கஉ. ௩எ.)

அரசர்க்கெண்பேராயம் — அரசர்க்குத் துணையாம் எண்மர்; அவர்: காரணத்தியலவர், கடைகாப்பாளர், நகரமாக்கள், படைத்தலைவர், சுற்றம், யானைவீரர், புரவிவீரர், அமைச்சர் என்பவர். (சூ. நிகண். கஉ. க௩.)

அரசர்க்கைம்பெருந்குழு — அரசரோடு கூடித் தொழினடாத்தும் ஐவர்; அவர்: அமைச்சர், புரோகிதர், தூதுவர், ஒற்றர், சேனைத்தலைவர் என்பவர். (சூ - நிகண். கஉ. ௩எ.)

அரசர்குணம்—தூங்காமை, கல்வி, துணிவு என அரசர்க்குரிய மூவித இலக்கணங்கள். இது: 'தூங்காமை கல்வி துணிவுடைமை யிம் மூன்று - நீங்கா நிலனள் பவற்கு' என்னுங் குறளாற் பெறப்படும். (வள். ௩அ௩.) [தூங்காமை - விரைவுடைமை.]

அரசர்குழு — அமைச்சர், புரோகிதர், சேனைத்தலைவர், தூதுவர், ஒற்றர் என்போர். (திவா)

அரசர்சின்னம்—குடை, கவரி, தோட்டி, முரசு, சக்கரம், யானை, கொடி, மதில், தோரணம், நீர்க்குடம், பூமாலை, சங்கு, கடல், மகரம், ஆமை, இணைக்கயல், சிங்கம், தீபம், இடபம், ஆசனம் என்பன. (சூடா)

அரசர்பக்கம்—ஓதல், வேட்டல், ஈதல், காத்தல், தண்டஞ்செய்தல் என்பன. (தொல். பொ. 75)

அரசர்பா—அகவற்பா. 'அரசர் பாவா லாற்றுப்படைமேல்' (இலக்கணவிளக். பாட். அள௩.)

அரசர்பின்னோர்—வணிகர். 'அரசர்பின் னோரகநகர் மருங்கில்' (சிலப். அடைக்கல. க௦௬.)

அரசர்மன்னன்—துரியோதனன். (சூடா)

அரசராறுகுணம்—1. சந்தி, விக்கிரகம், யானம், ஆசனம், துவைதம், ஆச்சிரயம் என்பன. (இரகு. திக்கு. உ௦); 2. நட்பு, பகை, செலவு, இருக்கை, கூடினரைப்பிரித்தல், கூட்டல் என்பன. (பு. வெ. 9. 30. உரை.)

அரசராறுதொழில்—அரசர்க்குரிய ஆறுதொழில்கள்; அவை: ஈதல், பல்லுயிரோம்பல், ஓதல், படைக்கலம்பயிலல், பகைத்திறந் தெறுதல், வேட்டல் என்பன. (வள். ௩அ௪. திவா. கஉ-வது.)

அரசரியல்பு — அரசர்க்கெப்பொழுதும் இருக்கவேண்டிய தன்மைகள்; அவை: அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம் என்பன.

இது: 'அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு-மெஞ்சாமை வேந்தர்க் கியல்பு' என்னுங் குறளாற் பெறப்படும். (வள். ௩அ௨.)

அரசரொளி — குடியோம்பல், கொடை, செங்கோல், நலியளி ஆகிய அரசர்க்குரிய மகிமை. இது: 'கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு-முடையானாம் வேந்தர்க் கொளி' என்னுங் குறளாற் பெறப்படும். (வள். ௩௯௦.)

அரசவனம் — திருவாவடுதுறையென்னும் ஒரு சிவஸ்தலம். (தணிகை. முகவு.)

அரசவாகை—ஒரு புறத்துறை. (பு. வெ. 8. 3.)

அரசவாரியன் — குதிரைநடத்துவோரிற் சிறந்தவன். (கலித். 96. உரை.)

அரசவை — இராசசபை. 'அரசவை யிருந்த (பொருந. 55.)

அரசளித்தல்—இராச்சியபரிபாலநஞ்செய்தல். 'அருாரசளிப்பவரருளினால்' (பெரியபு. திருஞாந. ௫௦௩.)

அரசன்—1. இறைவன். 2. எப்பொருட்கு மிறைவன். 3. கார்முகிற்பாஷாணம். 4. குருசு. 5. பாணகெந்தகம். 6. வியாழன். 'ஒகையோ டரச னேதிடு கின்றான்' (கந்தபு. திருச்செந்தி. ௧அ.)

அரசன்விருத்தம் — தொண்ணூற்றாறு பிரபந்தங்களுளொன்று; அது: பத்துக்கலித்துறையும், முப்பது விருத்தமும், கலித்தாழிசையுமாக, மலைவருணனையும், கடல்வருணனையும், நாட்டுவருணனையும், நிலவருணனையும், வான்மங்கலமும், தோண்மங்கலமும் பாடிமுடிப்பது. இது முடிபுனைந்த அரசனுக்குரியது. (தொன்னூல். உ௮௩. உரை.)

அரசன்விரோதி—1. கொவ்வைக்கொடி. 2. பூவரசமரம்.

அரசநீதி—அரசாகிய காவலை நடாத்து முறை. (வள். ௩௯-ம் அதி.)

அரசனுயிர்காத்தோன்— காண்டாமிருகம். [இஃதொரு கதையிலே ஓரரசனுயிரைக் காத்ததென்பதனால்வந்தபெயர்.]

அரசாட்சி — அரசாளுதல். 'யானுமிவ் வரசான்வ னென்னேயிவ் வரசாட்சியினிதே யம்மா' (இராமா. யுத். மீட். ௨௨௧.)

அரசாணி — 1. விவாகமண்டபத்திலே யரசங்கால் நாட்டும் மேடை. 2. அரசங்கொம்பு. 'அரசாணியை வழிபட்டு' (திவ். பெரியாழ். 3. 8. 3.)

அரசாணிக்கால்— விவாகமண்டபத்திலே யரசாணியிலே முருக்குடன் நாட்டப்படும் அரசங்கொம்பு.

அரசாணிப்பானை— விவாகமண்டபத்துக்கு முன்னிறுத்தப்படும் அடுக்குப்பானை.

அரசாணிமேடை — அரசங்கால்நட்ட விவாகமேடை.

அரசாளுகை—இராச்சியஞ்செய்கை.

அரசாளுதல் — அரசுசெய்தல். 'மூண்ட பகைசெற்றுலகமுற்றுமரசாளும் - பாண்டியன்' (திருவாதவூ. மந்திரி. உ.)

அரசானம்—1. அரசமரம். 2. ஆத்தைப் பூண்டு. 3. பேராத்தைப்பூண்டு.

அரசி—1. அரசன்மனைவி. 'அரசிற் புகுந்துபேரரசியானநீ' (இராமா. மந்த. ௬௧.) 2. அரசுசெய்கிறவள். 3. சிரேட்டமானவள். 'உன்னைக்காட்டினன் கற்பினுக் கரசியென் றுலகில்' (இராமா. மீட். ௧௨௩.)

அரசிகம்—சுவையில்லது, ரசமில்லாதது. [சுா வலிக.]

அரசிகன்—சுவையறியாதவன்.

அரசிப்படுதல்—அரசியின் தன்மைவகித்தல். 'சொல்லிலரசிப் படுதிநங்காய்' (திவ். பெரியாழ். 2, 9, 10).

அரசியல்—1. அரசனதியல்பு. (வள். ௩௯-ஆம் அதி.) 2. அரசுநடாத்துமுறைமை. 'அழைத்துநீடரசியலுசாவி' (பாரத.வாரணா. ௧௨அ.)

அரசிருக்கை — 1. அரசன்வீற்றிருக்குஞ் சபை. (சூ. நிகண். ௫. ௪௧.) 2. அரசுசெய்யும் உரிமை. 'தனயனுக்குலோத்துங்கற்குத் தன்னரசிருக்கைநல்கி' (திருவிளை. பழியஞ்.) உ.) 3. சிங்காசநம்.

அரசிருத்தல்— இராசாவாகவீற்றிருத்தல். 'தென்னவனீன்றகன்னிப்பெண்ணரசிருந்து' (திருவிளை. தடாதகை. ௪௩.)

அரசிருப்பு—1. அரசிருக்கும் இடம். 'அவனகருமாசிருப்புமண்டமும்' (திருவிளை. மாணிக். எஎ.) 2. அரசிருத்தல்.

அரசிலியை—ஒரு சிவஸ்தலம். (பெரியபு. திருஞான. ககஅரு.)

அரசிலை—1. அரசமரத்தின் இலை. 2. மிருகங்களுக்கிடும் அரசிலைக்குறி. 3. அரைமூடி.

அரசிலைநீராண்டி—கொத்துக்கரண்டி.

அரசிலைத்தூக்கம் — அரசிலைபோலுந் தொங்கல்.

அரசிலைப்பஞ்சாயுதம் — ஐம்படைக்காப்பு வகை.

அரசிறை—1. அரசர்க்கரசன். 'அரசிறையரசரொடெழுதலும்' (சூளா. கல்யாண. கoசு.) 2. அரசர்க்கிறுக்கும் இறைப்பொருள்.

அரசு—1. அரசர். 'அரசுபட வமருழக்கி' (மதுரைக்காஞ்சி. கஉஅ.) 2. அரசன். 'நராதிபனுகருக்கரசாய் - மகுடமேந்திய குரிசில்' (பாரத. குருகு. கசு.) 3. அரசாட்சி. 'அரசேதஞ்சமென்றருங் கானடைந்த'(சிலப். புறஞ்சேரி. சுசு.) 4. அரசியல், அரசன்றன்மை. 'அரசுவீமம்படீஇய' (சிலப். இந்திரவிழ. கருக.) 5. அரசென்னுமரம். 'மீச்செலாதவரசு' (சூத. எக்கி. பூ. சுஃ ஙஉ.) 6. இராச்சியம். 'எனதுயிரரசுவாழ் வென்பயாவையு-நினது' (பாரத. குருகுல. சுரு.) 7. சிரேட்டம். 'மின்னுர்தமக்கோரரசே' (கந்தபு. தெய்வ. கசுஙு.) 8. திருநாவுக்கரசுநாயனர். (பெரியபு. திருஞான. சகூச.) 9. ஒருவகைப் பட்டப்பெயர். 'வேளெனவும் அரசெனவும் உரிமையெய்தினேரும்'(தொல். பொ. 30. உரை.)

அரசுகட்டில் — சிங்காசனம். 'அரசுகட்டி விற்றுஞ்சியதறியாது' (சிலப். அழற்படு. எ.)

அரசுவா—நான்குகால்கள், துதிக்கை, கோசம், வாலென்னும் ஏழுறுப்பும் நிலத்திலே தோய்வதாய், காலினகம்பாலையுஞ் சங்கினையும் ஒத்த வெண்ணிறம் உடையதாய், நான்கு கால்கள் துதிக்கை வால் இரண்டு கொம்புகளென்னும்எட்டுறுப்பாலுங்கொல்ல வல்லதாய், ஏழுமுழ உயர்ச்சியும் ஒன்பது முழநீட்சியும் பதின்மூன்றுமுழச் சுற்றுமுடையதாய்ச் சிறுகண்ணுஞ் செம்புள்ளியுமுடையதாய், முற்பக்கமுயர்ந்து பிற்பக்கந் தாழ்ந்த அரசியானை. 'அரசுவாவதனெடாடி' (சூளா. கல்யாண. கoக.)

அரசோநம் — வெள்ளைப்பூண்டு. (தைல. தைலவ. கூ.) [ஸம்ஸ்.]

அராட்சி—மனக்குழப்பம்.

அரட்டல்புரட்டல் — நோய்முதிர்தலால் நிகழும் வேதனை.

அரட்டம்—பாலைநிலம்.

அரட்டர்—1. குறுநிலமன்னர். 'அரட்டக் கரும்படை-மானவேற்குறுமன்னவர் நண்ணினர்' (திருவிளை. உக்கிர. வேல்வளை. கக.) 2. குறும்பர், துட்டர். 'அடைந்தவர்க் குறுகணுற்று மரட்டரும்' (காஞ்சிப். இருபத். ஙஅச.)

அரட்டல்—அச்சுறுத்தல்.

அரட்டன்—குறுநிலமன்னன். 'ஆதிருமதியினெய்தியரட்டனையடர்த்து' (சிந்தா. பதுமை. ருசு.)

அரட்டி—1. அச்சம். [இஃதரளென்னுஞ் சொல்லினின்று பிறந்தது.] 2. அச்சுறுவித்தென்னும் செய்தெனச்சம்.

அரட்டு—1. அச்சம். 2. ஏவல். 3. வினைத்தொகை. 4. கருவம். 'அரட்டடக்கிதன்னருரடைமினே' (தேவா. 710. 5.) 5. குறும்பர். 'அரட்டமுக்கி' (திவ். பெரியதிரு. 3. 4. 10.) 6. குறும்பு. 'மலநோயரட்டொதுக்கும்' (காஞ்சிப். சிவபு. 10.)

அரட்டுகம்— } தசநாடகத்தொன்று.
அரட்டுசம்— }

அரட்டுதல்—அச்சுறுத்தல்.

அரட்டையடித்தல் — வீணிடம்பம் பேசுதல்.

அரண்—1. அழகு. 2. காவல். 'அரணிலானென்கட் டங்கிய வன்பினல்' (சிந்தா. கஙக. உருஎ.) 3. காவற்காடு. 4. கோட்டை. 5. மதில். 6. மதில், கடல், மலை, காடு என்னும் நான்கனுனும் ஆகிய காவல். இது: 'மணிநீருமண்ணு மலையுமணிநிழற்-காடுமுடையதரண்' 'உயர்வகலந்திண்மையருமையிந்நான்கி - னமைவரணென்றுரைக்குநூல்' என்னுங் குறள்களாற் பெறப்படும். (வள். எசுஉ. எசுங.) 7. வேல். (பிங்கல. ஙஎஎ.)

அரண்மனை—1. இராசகிருகம். 2. அரசன்றேவியில். (பிங்.) 3. மதிலாற் காவல் செய்யப்பட்ட வீடு.

ஆரணம் — 1. அழகு. 2. இருப்பிடம். 'துன்னெறியவுணர்யாருந் துவன்றிய வரண மாகி' (கந்தபு. விந்தம்பி. க.) 3. கதவு. 4. கருஞ்சீரகம். 'அரணம்பலங்கடுகை நீரடி முத்தமொலிபோஷபுட்பேந்திரங்காரமட்டம்' (தைல. தைலவ. ககஉ.) 5. கவசம். 'பாசம்பிணித்தவரணம் பரிவெய்த' (கந்தபு. அவுணர். ருச.) 6. கழித்தல். 'புறம்பாக வைத்ததனை யரணஞ்செய்யும்' (சாதக. அட்ட. உஉ.) 7. கட்டாலாய காவல். 8. காவல். 'அவுணர்வைகுமோரரணமானகிர வுஞ்சகிரி' (கந்தபு. தாரகன்வதை. கoஅ.) 9. காவற்சாலே. 10. கோட்டை. 11. தொடு தோல். 'அடிபுதை யரணம்' (பெரும்பாண். 69.) 12. மாணுக்கனுக்குச்செய்யும் நற்கொடை. 'அயர்ந்தழல்சமிப்ப-வரணவாசிநீ ரருளினுற்றெளித்தளித்து' (சேதுபு. மங்கல. ருக.) 13. நீக்குதல். 'பாசகாணம்' (சி. சி. அ: உ.டு. சிவாக்.) 14. மஞ்சம். 15. மதில். 'நம்மூர்ப்புறத்திவி லரணமீதாய்ப் போகுத லரிது' (கந்தபு. அசுசெப். ௩.) 16. வேலி. 'மாற்பெரு மதிலேச்சூழ வரம்பறு தானை தன்னையேற்புடையரணமாகவியற்றிவித்து' (கந்தபு. அசுரர்யா. ௩எ.) 17. வேற்படை. 18. காட்டுத்துருக்கம். (பிங்.)

அரணம்வீசுதல்—கவசமணிதல். 'அரசரு மமர்மலைந் தரணம் வீசினர்' (சீவக. 777.)

அரணும்பரம்—1. மதில். 2. வேலி.

அரணி—1. அக்கினி. 2. அக்கினியைப்பிறப்பிக்க உபயோகமாகும் அரசுமுதலிய மரக்கவின் கட்டை. (பிரமோப. ௩௩.) 3-5. அரணியென்னேவலும் தெரிநிலேவினைப்பகுதியும் வினைத்தொகையும். 6. கணிகாரிகையென்னு மொருசிறுமரம். அது தீக்கடைதற்கானது. 7. கவசம். 8. காடு. 9. சூரியன். 10. தீக்கடைகோல். 'அரணியின்புறத்தனலென' (பாரத. சம்பவச். எ.) 11. தீத்தட்டிக்கல். 12. மதில்.

அரணித்தல்—1. அரணுக்கல். 2. உரத்தல், கடினப்படல், முறைத்தல். 3. காவல் செய்தல். 4. சிறப்பித்தல்.

அரணிப்பு—அரணித்தல்.

அரணிய — காவலையுடைய. 'அரணிய இலங்கைமூதூர்' (பாரத. ராச. 67.)

அரணியகதலி—காட்டுவாழை. [ஆரண்ய கதலீ: ஆரண்ய - காடு. கதலீ - வாழை.]

அரணியசடகம் — காட்டுக்குருவி. [ஆரண்யசடக.]

அரணியசாறணை—காட்டிஞ்சி.

அரணியம்—காடு. [ஆரண்ய.]

அரணியன் — காட்டிலிருப்பவன். 'அரணியனென்றவர்க்கன்புகூர்ந்தனை' (இராமா. விபீடண. உ.) [ஆரண்ய.]

அரணியா—காட்டுக்கருணை. (மலை.) [ஆரண்யா.]

அரணியாநி–பெருங்காடு. [ஆரண்யாநீ.]

அரணிருக்கை—கோட்டை.

அரணை—1. ஒரு செந்து. (சீவரட். ௩சசு.) [இது கடித்தால் சரீரமுழுது நடுங்கல், வாயால் நுரைவீழ்தல், நாத்தடித்தல் என்னும் இக்குணங்களுண்டாகும்.] 2. பாம்பரணை.

அரத்தகம்—செம்பஞ்சி. 'அரத்தகமருளச் செய்தசீறடி' (சிந்தா. இலக்க. அஉ.) [ரக்தக.]

அரத்தம்—1. அரக்கு. 'அரத்தமாதிவகை காய்ச்சு-மூளவை' (தைல. பாயிர. உஎ.) 2. இரத்தம். 'அரத்தமுண்டொளிரும்வாளவுணர்ச்செற்று' (நைடத. நளன். கசு.) 3. குங்குமப்பூ. (தைல. தைலவ. அரும்பத.) 4. சிவப்பு. 'அரத்தவேணியர்' (கந்தபு. முதனு. அஉ.) 5. செங்கடம்பு. (பிங்.) 6. செங்கழுநீர். (சூடா.) 7. செங்குவளை. 8. செம்பரத்தை. (மலை.) 9. செம்பருந்து. 10. செம்பு. 11. செம்மெழுகு. 12. செம்மை, செவ்வை. 13. பவளம். (சூ. நிகண். சூ: எ.) 14. பொன். 15. மஞ்சள். [ரக்த.] 16. செம்பஞ்சு. 17. செம்பருத்தி. 18. ஒருவகைத்துகில். (சிலப். 14. 108. உரை.)

அரத்தன்–1. ஆசையில்லாதவன். (பௌட். பாச. உக.) [அ - எதிர்மறை. ரக்த - ஆசையுடையவன்.] 2. செவ்வாயென்னுங்கிரகம். (பிங்.)

அரத்தி — 1. இன்பமானது. [ரக்தி.] 2. செவ்வல்லி.

அரத்திரி—1. சிறுவிரல்நீட்டிய பிடிமுழம். 2. முழங்கை. [அரத்நி.]

அரத்துறை — ஒருசிவஸ்தலம். (பெரியபு. திருஞாந. கஅஎ.)

அரத்தை — ஒரு செடி; இது: சிற்றரத்தை, பேரரத்தையென இருவகைப்படும். 'அரத்தைமுக்கடுமுஸ்தைமஞ்சிட்டி' (தைல. தைலவ. க.)

அரத்தோற்பலம் — 1. செங்கழுநீர். 2. செங்குவளை. [ரக்தோத்பல.]

அரதநம் — 1. இரத்திநம், அகன்மணி. 'அரதநகலகவியன்கரம்' (தணிகை. கடவுள் வாழ். ரு.) 2. சிரேட்டமானது. 3. பெண்கள் காலிலணியுஞ் சிலம்பு. அது: பொன்னினால் அல்லது வெள்ளியினால் ஆக்கப்பட்டது. 4. மிருதபாஷாணம். [1, 2, 3. ரத்ந.]

அரதநாகரம் — 1. இரத்தினமெடுக்குஞ் சுரங்கம். 2. சமுத்திரம். 'மரகதா திகளுறுத்த விழித்துமணி மேடையினும் வாரிவீச-அரதநா கரமான தன்றுமுத வின்றளவு மாழி தானே'(அருணசலபு. திருக்கண். கச.) [ரத்நாகர.]

அரதி — வேண்டாமை. 'அரதிகைவிஞ்சு மோகம்' (திருவாய்மொழிநூற். 62.)

அரதைப்பெரும்பாழி—ஒரு தலம். (பெரியபு. திருஞாந. சഠரு.)

அரந்தம்—கடுக்காய்.

அரந்தை-1.குறிஞ்சிப்பண்.(பிங்க.ருഠஎக.) 2. சுரவெட்டை. (இராசவைத்.) 3. பாரிசசந்நி. (இராசவைத்.) 4. மநக்கவற்சி. 'அரந்தைப்பெண்டிரினைந்தனரகவ' (மதுரைக் காஞ்சி. கசுசு.) 5. வருத்தம். 'வானத்தரக் கரந்தைப்படவீர்ந்து' (மறைசையர். கக.) 6. வீதனம். 'துன்பத் தரந்தையிற் கன்றுபு கனலும்' (ஞானு. 27.)

அரநி—ஒரு அரிட்டதேவதை.

அரப்பதுமம்—துளசி.

அரப்பள்ளியான்—சர்ப்பசயநராகிய விட்டுணு. 'அரப்பள்ளியானு மலருறைவானும்' (தேவார. திருச்சி. திருஞாந கூ.)

அரப்பிரியை—உமாதேவி. 'அரப்பிரியை பார்ப்பதியே' (திருவானை. கோச்செங். அக.) [ஹர - சிவன். ப்ரியா - மனைவி.]

அரப்பு—அரைப்பு.

அரப்பொடி — 1. அயவெள்ளை. 2. இரும்பை யரத்தினலே யராவியெடுத்த தூள்.

அரபி—1. கடுக்காய். (மலை.) 2. காடு. 3. ஒருதேசம். 4. ஒரு பாஷை.

அரம் — 1. இரணம். (இராசவைத்.) 2. இரும்பு முதலியவைகளை யராவுதற்காகக் கூரிய பற்களுடையதாக உருக்கினுற் செய்யப்பட்ட ஒருகருவி. 'அரம்போலுங்கூர்மையரேனும்' (வள். கூகஎ.) 3. உருளையின் சிலைக் கம்பு. 4. கீழரை. 5. குகை. 6. பாதலம். 'அரமேவி வெம்பினபணி' (இரகு. யாகப். 81.) 7. வாளரம். 'அரம்போழ்ந்தறுத்த' (மதுரைக்காஞ்சி. ருகசு.)

அரம்பணம்—வெற்றிலை நறுக்குங் கருவி. (லெக்ஸிகன்.)

அரம்பன்-குறும்புசெய்வோன். 'அரம்பாவுன்னை யறிந்துகொண்டேன்' (திவ். பெரியாழ். 3. 1. 6.)

அரம்பு—குறும்பு.'மேலைவரம்பிகந்தரம்பு செய்யுங்-கலியதுபிறவி' (சிந்தா.முத். கஉகூ.)

அரம்பை—1. அசமதாகம்.(இராசவைத்) 2. தெய்வப்பெண். 'செருவின்மாண்டவரரம்பையர்ச்சேர்குவரன்றே'(நைடத. நிலா. கரு.) 3. தேவவேசையருளொருத்தி. 'திலோத்தமை யரம்பை யுருப்பசி மேநகை முதலோர்' (கூர்மபு. மேரு. கூ.) 4. வாழை. 'துன்னரம்பைநிரம்பிய தொல்வரை' (இராமா. வரைக்காட்சி. ருகூ.) [2, 3, 4. ரம்ஹா.]

அரமகள்-தெய்வப்பெண்.'அங்கினிதிருந்த காலை யரமகளவனை நோக்கி'(கந்தபு. வள்ளி. உருஎ.)

அரமங்கை—தெய்வப்பெண். 'அரமங்கையர் சாமரை பாங்க ரசைத்திட' (காஞ்சிப். பன்னி. உகச.)

அரமனுபம்—வாழை.

அரமனை—அரசன்மனை. 'அரமனைக்கெய்து முனியம்பினேன்' (பாரத. கீசக. கூ.)

அரமாதர்-தெய்வப்பெண்கள். 'அம்மென் மூரலரமாதரொருவர்க்கொருவர்' (இரகு. திக்கு. கഠரு.)

அமரரவம்—நாயுருவி. (மலை.)

அரமி—கடுக்காய்.

அரமியம்—1. அரண்மனை. (பிங்) 2. செல்வர்வீடு. 3. நிலாமுற்றம். 'நிரைநிலைமாடத் தரமியந்தோறும்' (மதுரைக்காஞ்சி. சடுக.) 4. பிரமி. (மலை.) [1, 2, 3, ஹர்ம்ய.]

அரமுறி—இரும்புமுறி.

அரயன்—அரசன்.

அர-ஜைநதீர்த்தங்கருள் ஒருவர். (திருக்கலம். காப்பு. உரை.)

அரம்—1. ஆயுத முதலியன வைக்கும் உறை. 2. கதவுத்தட்டு. 3. துன்னூசி. [ஆரா.]

அரி—கதவு. (சூ-நி. எ-சஅ.)

அரு—சத்துரு.

அரல்—சிலேட்டுமம்.

அரலை—1. கடல் (சூடா.) 2. கழலை. 'அயிலரி யரலைவீழ்ப்புண்' (ஞானா. 30) 3. குற்றம். 'காம்பினரலைதீரவுரீஇ' (மலைபடு. உச.) [அது: முடக்கிப்பற்றன்மைபோலிருப்பதா லரலையென்றாயிற்று.] 4. துர்க்கை. 5. மரல். (சூடா.) 6. விதை. 'அரலைபுக்கனைநெடுந்தாளாசினி' (மலைபடு. கஙஅ.) 7. கோழை. (வைத்தியபரி.) 8. கொடுமுறுக்கு. (மலைபடு. 24. உரை.) 9. பொடிக்கல். 'அரலைக்கற்கனாற் சிவபரனை மறைத்திட்டானல்' (திருக்காளத். பு. 5. 8.) [1, 2, 4, 5, 6. சூ. நிகண். கக. ரகர. கரு.]

அரவக்கிரி — வேங்கடமலை. 'அரவக்கிரி சார்ந்தான்' (பாரத. அருச்சுனன்றீ. கஉ.)

அரவக்கொடியோன் — துரியோதனன். 'அரவநெடுங் கொடியுயர்த்தோன்' (பாரத. நிரோ. ருச.) [அரவம் - பாம்பு.]

அரவஞ்செய்தல் — 1. மனங்கலங்குதல். 'கண்ணும் புருவமு மரவஞ்செய்ய.' (சீவக. 2806.) 2. சத்தமிடுதல்.

அரவணிந்தோன்—சிவன். (சூடா.)

அரவணை — 1. பாம்பாகிய படுக்கை. 'நெளிந்தாடரவணையையன்' (பாரத. அருச்சுனன்றீ. கக.) 2. விஷ்ணுகோயில்களில் அர்த்தசாமத்தில் நிவேதிக்கும் ஒருவகைச் சருக்கரைப்பொங்கல்.

அரவணைத்தல்—1. தழுவிக்கொள்ளுதல். (ஏகாம். உலா. 436.) 2. ஆதரித்தல். 'ஐயன் புரியு மரவணைப்பும்' (பணவிடு. 27.)

அரவணையான்—விட்டுணு. 'அரவணையான் சிந்தித்தாற்றுமடி' (தேவார. திருவதிகை. க. திருநா.)

அரவதண்டம் — யமதண்டனை. 'அரவ தண்டத்திலுய்யலுமாமே' (திவ். பெரியாழ். 4. 5. 3.)

அரவப்பகை — கருடன். 'அரவப்பகை யூர்தி' (திவ். பெரியாழ். 3. 5. 11.)

அரவம் — 1. ஆயிலியநாள். 'ஆதிரை கேட்டையரவம்' (விதாந. பஞ்சா. கரு.) 2. ஆரவாரம். 3. இராகுகேது. 'வரியரவம் பெண்' (விதாந. பஞ்சா. கஎ.) 4. இரைச்சல். 5. ஒலி. (சூ. நிகண். கக. ரகர. ச.) 6. சிலம்பு. 7. படையெழுச்சி. (வீரசோ. பொருட். கரு.) 8. பதஞ்சலிமுனிவர். 'புலி யரவங் கண்டு கொண்டாடவாடும் புராதநன்' (புலியூரந். எக.) 9. பாம்பு. 'நச்சனை யரவமென்ன' (பாரத. பதினன். கருஙு.) 10. பேரொலி. 'அரவமாநதியன்னையும்' (பாரத. குரு. கககூ.) 11. மனக்கலக்கம். 'கண்ணும்புருவமு மரவஞ்செய்ய' (சிந்தா. முத்தி. உ0அ.) 12. அதிமதுரம். [2, 4, 5, 10. ரவ.]

அரவமணித்தல்—மணிக்குடல்.

அரவர்—தமிழர். (அக. நி.)

அரவன்— சிவன். 'அரவன் பால்வெண்ணீற்றன்' (சூத. எக்கி. பூ. ஙச: க.)

அரவாட்டிப்பச்சை—தொழுகண்ணி.

அரவாபரணன்—சிவன். 'அரவாபரணன் றந்தருளருமாமறை' (பாரத. பதினன். ருக.) [அரவு - பாம்பு. ஆபரணம் - அணி.]

அரவாய்க்கடிப்பகை — வேப்பிலை. (மணிமேகலை. 7. 73.) [அரம்போன்ற வாயுடைய தாய்ப் பேய்க்குப் பகையாயிருத்தல்பற்றி வந்த பெயரென்பர். அரம்; வாய்; கடி (பிசாசம்); பகை.]

அரவித்தல் — ஒலித்தல். 'அரவத்தால் வரையைச் சுற்றியமரரோடசுரர் கூடி -யரவித்துக்கடைய' (தேவார. திருநனி. எ. திருநாவு.)

அரவிந்தப்பாவை—திருமகள். (திவ். பெரியாழ். 5. 2. 10.)

அரவிந்தம் — 1. தாமரை. (திவ். திருநெடுந், 21) 2. நாரைப்பறவை. 3. பஞ்சலோகத்தொன்றாகிய செம்பு. [அரவிந்த]

அரவிந்தலோசநன்— விட்டுணு. 'அணைத் துலகுமுடைய வரவிந்தலோசநனை' (நாலாயிர. திருவாய்மொழி. 6. 7. 10.)

அரவிந்தன் — பிரமா. 'அரக்கரவிந்தன் குலத்தோர்' (கல்வளை.) [தாமரைப்பூவி லிருக்கிறவனென்றபடி.]

அரவிந்தாக்கன்—விட்டுணு. [ஸாவிநு - தாமரை. ஸக்ஷ - கண்ணன்.]

அரவிந்தை—இலக்குமி. 'அரவிந்தையன் னானை' [ஸாவிநா - தாமரையுடையாள்.]

அரவின்விந்து—இரசதம்.

அரவினாள்—ஆயிலியம். (திவா.)

அரவீசம்—பாதரசம்.

அரவு—1. ஆயிலியம். (இராசவைத்.) 2. பதஞ்சலிமுனிவர். 'புலியோடரவுதொழுங் கூத்துடையவர்' (வெங்கை. ௩௯௨.) 3. பாம்பு. 'நச்சாடரவணையான்' (பாரத. பதின்மூ. ௧௦௮.) 4. வைக்கோற்பழுதை. 'கிட்டுவார்பரி நிறுத்துவாரர வுருட்டுவார்' (திருவிளை. மண்சுமந்த. ௫.) 5. விடம்; ஆகுபெயர். (ஐங்குறு.) 6. ஒலி. 'பாய்குழக்கன்றி னார்ப்பரவும்' (திருக்காளத். பு. 2. 7.) 7. தொழிற்பெயர்விகுதி. 'தோற்றரவு' (ஞானவா. தேவபூ. 1.)

அரவுதல் — 1. வருத்துதல். 'வேளரவு கொங்கையிளமங்கையர்கள்' (தேவா. 686. 2.) 2. அரவஞ்செய்தல். 'வண்டரவு கொன்றை' (தேவா. 89. 3.)

அரவுநாள்—ஆயிலியநாள்.

அரவுயர்த்தவன் — துரியோதனன்.

அரவுநட்டுதல்—வைக்கோற்புரியை உடைப் பிற்செலுத்துதல். (திருவிளை. மண்சுமந். 5.)

அரவேணுந்துதி — கருமசாந்தி. (தைல. அரும்பத.)

அரவொலி—ஹர என்று சொல்லுஞ்சத்தம். 'அரவொலியாகமங்களறிவாரறிதோத்திரங்கள்' (தேவார. நொடி. அ. சுந்தர.)

அரவோன் — பதஞ்சலிமுனிவன். 'சேரரவோனும்' (கோயிற்பு. நடராஜ. ௭௦.)

அராவல் — அராவுதல். 'அரண்டார்சிலர்' (இராமா. இலங்கையழி. ௬௬.)

அராவி—1. நாறிமரம். 2. பீநாறிமரம். 3. பெருமரம். 4. ஒருவகைப்பூச்செடி; இது அலரியின் மரூஉ.

அராவிந்தோக்கு — பீநாறிமரப்பட்டை.

அராவுதல்—பிரமித்தல், மிகஅஞ்சுதல்.

அரற்றல்—1. அரற்றுதல். 2. யாழ்நரம் போசை. (பிங்கல. ௧௬௬௪.)

அரற்று—1. ஒலி. 'அரற்றொடு குறைந்து வீழ்ந்தும்' (கந்தபு. சூரப. வ. ௬௮௮.) 2. புலம்பல். 'தேவந்தியரற்று' (சிலப். 29.) 3. குறிஞ்சியாழ்த்திறவகை. (திவா.) 4. பலவுஞ்சொல்லியழுது தன் குறைகூறுதல், வாய்விட்டழுதல். (சிந்தா. நாம. ௨௭௩. உரை.)

அரற்றுதல் — 1. அலறுதல். 'அறுமறையின்னமுங்காணுதரற்ற' (தாயு. ஆகார. ௬.) 2. புலம்பல். 'கல்லுயர்பொருப்பினிடைகாமரடிசெல்ல - வல்லனகொலென்றுமணிநூபுரமாற்ற' (கந்தபு. தெய்வ. ௨௩௦.) 3. ஒலித்தல். 'நோன்கழல் - கல்லென வரற்றிடக் கழலிற் பூட்டினான்' (கந்தபு. முதனாட்பா. ௨௨.) 4. சத்தமிட்டுச்சொல்லுதல். 'அங்கசரீரியரற்றியசாபம்' (பாரத. புட்ப. ௭௧.) 5. பலவுஞ் சொல்லித் தன்குறை கூறுதல். (தொல். பொருள். 260. உரை.)

அரன்—1. இரௌத்திரமூர்த்தம்; இது பகலினும் இரவினும் முதலில் நிகழுமுகூர்த்தம். (விதான. குணகு. ௭௩.) 2. எப்பொருட்கு மிறைவன். 3. சிவன், சங்காரகர்த்தா. (சிவதரு. ஐவகை. ௩௩.) [பக்குவான்மாக்களுடைய பாசத்தையரிக்கையினாலே யரனென்னும் நாமத்தையுடைய சிவன் என்பர் சிவாக்கிரயோகியர். சி. சி. அ: சூ. சிவாக்.] 4. திரிகாலனிடத்திலே காமிகாகமங்கற்றுக் கொண்ட ஒருவன். (த. நி. போ. ௧௫௮.) 5. பதினோருருத்திரரிலொருவன். 6. மஞ்சட் பூண்டு. [1-5. ஹர.]

அரன்மகன்—1. குமரன். 2. விநாயகன். 3. வீரபத்திரன்.

அரன்றோழன்—குபேரன். [ஹர- சிவன். தோழன் - நண்பன்.]

அரனாள்—திருவாதிரை. (பிங்.)

அரனிடத்தவள்—உமாதேவி. [சிவனுடைய இடப்பக்கமுடையவளென்றபடி.]

அரனெறி—ஒரு சிவாலயம். (பெரியபு. திருஞான. ௫௧௩.)

அரா—1. அராவென்னேவல். 2. ஆயிலிய நாள். ‘மூற்றிலாரவமூல்பூராமூன்று - மகம் விற்பாணியதோமுகம்’ (விதாந. பஞ்சா. கஅ.) 3. நாகமல்லி. (இராசவைத்.) 4. பாம்பு. ‘பொங்காரவெயின் மணிப்பூணும்’ (பாரத. பதின்மூ. உ0அ.)

அராக்கோள் — இராகுகேது. ‘அராக் கோளிரண்டும்’ (சேந்தன் திவாகர. கஉ.)

அராகதத்துவம்—வித்தியாதத்துவம் எழி னென்று; அது: வித்தையிலிருந்து தோற்றிப் போகத்திலே யாசையை யெழுப்புவது. ‘வித்தியாதத்துவத்திலே யராகதத்துவந் தோன்றி யான்மாக்கள் செய்த கன்மத்துக் கேடாகப் பிரகிருதியினின்றும் பிறந்த சுக துக்கானுபவங்களை மேலுமேலும் புசிக்கை யின்பொருட் டிச்சையைப்பண்ணுநிற்கும்’ (சி. சி. உ: ருசு. மறை.) [राग; तत्व:]

அராகபகவான்—புருஷதத்துவத்திற்கும் அராகதத்துவத்திற்கும் அபிமானதேவதை. (சி. சி. உ: எக. சிவாக்.) [राग; भगवत.]

அராகம்—1. இச்சையின்மை. [अराग: அ - எதிர்மறை. राग - விருப்பு.] 2. அடங் காத இச்சை. ‘அரகர வராகமில ரானவர் பரவும்’ (சேதுபு. சருவ. உக.) 3. ஒருவன் தான் விரும்பியபெண்ணைப் பெறுதபோது மிகவும் வருந்தி யழும்படி யாசையைச்செய் வது. (சி. சி. உ: அ0. மறை.) 4. இராகதத் துவம். ‘அருந்தின்பத்துன்பமுள்ளத்தறிவி னுக் கராகமாதி - தருந்தன்வேதனையாங் காட்சி’ (சி. சி. அளவை. எ.) 5. இராகம். ‘பாவமொ டராகந் தாளமிம் மூன்றும் பகர்ந் திடு முறையினற் பரதம்’ (திருவிளை. மாதி யாடி. அ.) இது: பைரவிமுதற்குறிஞ்சியீரு யுள்ள கூஉ-என வரையறைப்படினும் இவ் வரையறையுள் அடங்காது; நெஞ்சு, மிடறு, நாக்கு, மூக்கு, அண்ணம், உதடு, பல், தலை யென்னும் எட்டுத்தானங்களினின்று எடுத் தல், படுத்தல், நலிதல், கும்பித்தல், குடிலம், ஒலி, உருடு, தாக்கு என்னும் எட்டுக்கிரியைக ளால் இன்னும் பலவகைப்படும். 6. கலிப்பா வுறுப்புள் ஒன்றாகிய முடுகியல். அது: அள வடிமுதலாக எல்லா அடியானும் வந்து நான் கடியிற் குறையாமலும் எட்டடியில் மிகாமலு மிருப்பது. (இலக்கணசிங். எஎ.) 7. சிவப்பு. (பிங்.) 8. செம்பராகம். ‘நெய்யராகமழிய’ (இராமா. நீர்விளை. கசு.) 9. பாலையாழ்த் திறம். (சூ. நிகண். க0: ஙஙு.) 10. பொன். 11. தக்கராகம். (பிங்.) [रागं என்னும் வடமொழி தமிழில் அகாரம்பெற்று அராக மென நிற்றலன்றி இராகம் என இகாரம் பெற்றும் நிற்கும். 2. 10. राग.]

அராகவொத்தாழிசைக்கலிப்பா — வண் ணகவொத்தாழிசைக்கலிப்பா. அது: தரவுந் தாழிசையும் வந்தபின் வண்ணகமும் அதன் பின் அம்போதரங்கமும் அதன்பின் தனிச் சொல்லும் சுரிதகமும் வந்து ஆறுறுப்பினுல் முடிவது. (இலக்கணசிங். எசு.)

அராகித்தல்—இடையறுது கடுகிச்செல்லு தல். (தொல். பொருள். 464. உரை.)

அராசகம்—(தேசம்) அரசியலற்றிருக்கை. (கோயிலொழுகு. 86)

அராட்டுப்பிராட்டு—போதியதும் போதா ததுமானது. (ஈடு. 3. 7. 3)

அராத்தல்—1. அராவுதல். 2. சிந்தித்தல். 3. முட்டுதல். [வழக்.]

அராத்திரி — கைலாசமலை. [हराद्रि: हर - சிவன். अद्रि - மலை.]

அராத்துதல்—அராத்தல்.

அராதி—சத்துரு. [अराति.]

அராந்தாணம்—சைனப்பள்ளி. ‘தவலருஞ் சிறப்பினராந்தாணத்துளோன்’(மணி.3.87)

அராநட்பு—பிடிகொடாதநேசம். [வழக்.]

அராபதம்—வண்டு. ‘தங்கராபதநெருங்கு தொங்கலணி தாமவேலடலரக்க’ (பாரத. மணிமான். க0சு.)

அராம்பை—1. கழுதை. 2. தும்பை.

அராமி—1. கெட்டவள். 2. கெட்டவன்.

அராமுனி—பதஞ்சலிமுனி. ‘அராமுனியீது வேண்டும்’ (திருவிளை. வெள்ளி. திருக்கூ. உரு.)

அராலம்—1. கொடுவாள். 2. மதம்பிலிற் றும் யானை. 3. வளைந்தது. [अराल.]

அராலை—1. நாட்டியப்பெண். 2. வேசை. [अराला.]

அராவணம்—புலம்பாமை. ‘ஞாலம்-அரா வணமதாவவதரித்திடுமருட்சிதரா’ (சேதுபு. இராமனருச். ருசு.)

அராவணை—அரவணை.

அராவல்—1. அழுத்தல். 2. உரிஞ்சுதல். 1-2. வையராவிய மாரன்வாளியும் வானிலா நெடுவாடையும் - மெய்யராவிட வாவிசோர' (இராமா. கைகேசி. ௫௪.) 3. மிண்டல்.

அராவாரம்—கொடிமுந்திரி. 'மதுமாங்கனி மாதுலங்கம்-கதலிபராவாரங் கொளுஞ்சி' (தைல. தைலவ. ௧௩௫.)

அராவுதல்—1. அரத்தாற்றேய்த்தல். 2. உரசுதல். 'பொருப்பராவியிழிபுனல்' (தேவா. 360. 7.) 3. மாறுபடுதல்.

அராவைரி—1. கருடன். 2. கிரி. 3. மயில்.

அராளகடந்ராமுகம் — நிருத்தக்கை முப்பதனுளொன்று. (சிலப். அரங்கே. ௧௨.)[இது: சுத்தானந்தப்பிரகாசமென்னும் தமிழ்ப்பரத நூலிற்காணப்பட்டதென்றார்.]

அராளம்—1. இருவாட்சிச்செடி. 'ஓம்பு புளியாரை மருக்கொழுந் தராளம் பதின் மூன்றும்' (தைல. தைலவ. ௧௩௫.) 2. குங்கிலியம். (தைல. தைலவ. ௧௧௯.) 3. இணையாவினைக்கையினொருவகை; அது பெருவிரல் குஞ்சித்துச் சுட்டுவிரன் முடக்கி ஒழிந்த விரன் மூன்றும் நிமிர்ந்து வளைவது. 'அராளமாவதறிவரக்கிளப்பிற் - பெருவிரல் குஞ்சித்துச் சுட்டுவிரன்முடக்கி - விரல்கண் மூன்றும் நிமிர்த்தகம் வளைத்தற் - குரிய தென்பவுணர்ந்திசினோரே' (சிலப். அரங்கே. ௪அ. உரை.)

அரி—1. அக்கினி. 2. அக்கினிதேவன். 'அரியுமற் றெனது கூறு நீலனென் றறைந் திட்டானல்' (இராமா. திருவவ. ௨௭.) 3. அங்கிதிரனுடைய ஒன்பதுபுத்திரர்களிலொருவன். 'கிம்புருடனரிகேதுமாலன்' (கந்தபு. அண்டகோ. ௨அ.) [அங்கிதிரனென்பது ஆக்நீத்ர என்பதன்விகாரம். ஆக்நீத்ர என்பது மிருகேந்திரம் அத்வப்பிரகரணம் ௬௭-ஆஞ் சுலோகத்திற்காணப்பட்டது.] 4. அடர்பு. 5. அரிசி. 'வாலரி கழுவிய வண்ணச்செம் புனல்' (சிந்தா. காந். ௩௩அ.) 6. அரித்தல். 'அரிக்கூடின்னியம்' (மதுரைக்காஞ்சி. ௬௧௨.) 7. அரிதல். 'ஆக்கரிய மூக்குங்கை யரியுண்டாளென்றுரை' (இராமா. சூர்ப்பநகை. ௧௨௫.) 8-10. அரியென்னேவலும் தெரிநிலைவினைப் பகுதியும் வினைத்தொகையும். 'ஆலவாய்க் கரும்பின் றேனு மரிதலைப் பாளைத் தேனும்' (இராமா. நாட்டு. ௯. வி - கை.) 11. விட்டுணு. 12. அழகு. 'அரிநீரவிழ்நீலமல்லி' (கலித்தொகை. ௯௧.) 13. அறுத்தல். 'அரிபுகும் பொழுதில்' (மதுரைக்காஞ்சி.) 14. ஆயுதம். (சூ. நிகண். ௧௧: ௩௪.) 15. ஆவணிமாதம். (இராசவைத். ௧௬௦.) 16. ஆறென்னும் எண். [அரியாகிய உட்பகைகள் ஆறென்னுங் குறிப்புப்பற்றிவந்த பெயர்.] 17. இந்திரன். 'அரிதிரு முன்னரெய்தி' (கந்தபு. திருவிளை. ௩௭.) 18. வெற்றி. 19. இயமன். 'ஆருயிர் கொண்டிடு மரித னூர்தியும்' (கந்தபு. தான. ௪௦.) 20. இலக்கினத்திற் காமுமிடம். 21. ஈர்வாள். 22. உட்டுளை. (சூடா.) 23. பகை (பிங்). 24. உருக்குமகவசவரசனுக்குமகனும் விதர்ப்பநாட்டரசனுமாயிருந்த ஒருவன். (மச்சபு. போச. ௧௦.) 25. உருளை. 26. ஐம்மை. 'அரிமயிர்த்திரண்முன்கை' (புறநா. ௧௧.) 27. ஒருதாளம். (சூ. நிகண். ௧௨. ௧௦௨.) 28. ஒன்பதுகண்டங்களுளொன்று. 29. கட்டில் (திவா). 30. கடல் (பிங்). 31. கடுக்காய். (இராசவைத். ௧௬௩.) 32. கண்வரி. செவ்வரி. 'அரிமதருண்கணூர்' (கலித்தொகை. ௯௧.) 33. கபிலநிறம். 34. கருங்காலிமரம். 35. கருங்கிளி (பிங்க. ௨௩௫௧.). 36. கருஞ்சிவப்பு. 37. கள்ளு. (சூ. நிகண். ௧௧. ௩௪.) 38. காகம். (இராசவைத். ௧௬௯.) 39. காற்று. (பிங்). 40. கிளி. 'மாப்புக்கரியுங் குயிலும் பயில்பொழில்' (பழமலையந்தாதி. ௭௭.) 41. கிரணம், ஒளி. 'அரிமணிச்சிலையின் சலாகையால்' (பாரத. இந்திரப். ௨௩.) 42. சிழ்க்காய்நெல்லி. (இராசவைத். ௧௬௩.) 43. குதிரை. 'நன்றிகொ ளரிமக நடத்த வெண்ணியோ' (இராமா. திருவவ. ௮௧.) 44. குசத்தீவிலுள்ள ஒருமலை. 'அரியெனுங் குன்றும்' (கூர்மபு. பிலக்க. ௨௭.) 45. குயில். 46. குரங்கு. 'அரியினஞ் சென்ற சென்ற வடவிக ளனைத்தும்' (இராமா. மீட். ௧௧௯.) 47. குற்றம். (சூ. நிகண். ௧௧: ௩௩.) 48. குன்மம். (இராசவைத். ௧௬௩.) 49. கூர்மை. (சூ.நிகண். ௧௧: ௩௪.) 50. கொடுவேலி. (மலை.) 51. வெண்புகை. (ஆசிரியநிகண்டு.) 52. கொள்ளின்வேர். (இராசவைத்.) 53. சத்துரு. 'தங்க, டிராரியே வலினல் வந்த திலோத்தமை' (பாரத. இந்திர. ௬௩.) 54. சந்திரன். (பிங்). 55. சிங்கம். 'அரியெனும்

பெயர்பொருமையில்' (பாரத. காண்டவ. ௩௭.) 56. சிங்கமுகன் என்னும் அசுரன். 'திறலரிக்ளைவல்' (கந்தபு. கிரவுஞ்ச. க.) 57. சிங்கராசி. 'மதியரியாதின்' (விதாக. குணகுண. சடு.) 58. சிலம்பு (பிங்). 59. சிலம்பு முதலியவைகளுக்குள்ளிடுமணி. 'சில்லரிச்சிலம்பின்வள்வார்' (சிந்தா. கோவிக். ருo.) 60. சிவன். 'முராரிநாராயணனரி முதற்புகலுநாமங்கள் - விளையிலந்தணிர் காரணவள்ளினவ்விமலனையுணர்த்தும்மே' (சூத. எக்கி. பூ. ௩௩. ௬.) 61. சுரம். (இராசவைத். கருசு.) 62. சூரியன். 'நிலவெனக்கென வரியெனக்கெனு நீதியொப்பன வீதியே' (அரிச்ச. இந்திர. கச.) 63. செம்மறியாட்டுக்கடா. 'அரியிளெடுதாக்குற வாடுமே' (மச்சபு. நைமி. ௩o.) 64. சோலை. (பிங்.) 65. தகட்டுவடிவம் (பிங்). 66. தவளை. 'தொல்லையோர்பிரமன்றுஞ்சிய காலைத்தோன்றியமீத்தமேலரிபோற்-செல்லு மார்க்கண்டன்' (கந்தபு. திருநகர. எஎ.) 67. தான்றிக்காய். (இராசவைத். கரு௩.) 68. திருவோணநட்சத்திரம். 'அரிமகங் குன்றிருபான்' (விதாக. குணகுண. உஎ.) 69. துண்டம். 70. துளசி. (தைல. தைலவ. கடு.) 71. தேர் (பிங்). 72. நித்திரை. (பிங்கல. ௩oஅ௫.) 73. நிறம். 'வெள்ளரி வெண்சோறு' (மலைபடு. சகரு.) 74. நீர். (விசுவநிகண்டு.) 75. நீர்த்தொட்டி. (மேதினி கோசம்.) 76. நெருக்கம். 77. நெல். 'அரி மண்டலம்புதைத்து' (தைல. தைலவ. அச.) 78. நெற்கதிர். 'எறிதருமரியின்சும்மை யெடுத்துவானிட்டபோர்கள்' (இராமா. நாட். உக.) 79. நெற்கதிர்களின் பசுங்காய்த் தண்ணீர். (இராசவைத்.) 80. நெற்குடு. 'என்னாவரிமானுடர்மிகுப்ப' (இலக்கணவி. சுஎக. உரை.) 81. விசி (பிங்.) 82. மஞ்சணிறம். 83. பச்சை(பிங்). 84. மக்கள்துயிலிடம். (பிங்.) 85. பர்த்திருஹரியென்னும் புலவன். 86. மருதப்பறை. 'அரிக்குடாரிமின்யாமை மிளிர' (புறநா. உசக.) 87. பன்றி. 'அரிக்குருளைவடிவான' (திருவிளை. கரிக்குருவி. க.) 88. பனைமட்டைக்கருக்கு. (இராசவைத். கசஅ.) 89. பாம்பு. 'காத்தரிக்கங்கணங்கட்டானும்' (திருச்செந்திலிரோட்ட.) 90. பிரமன். 91. புகை. 'சாதிநறுந் தைலவரி யார்க்குநிறை யாயு டந்தளித்தாலென' (தைல. கடவுள்வா. ரு.) 92. பொடி. (இராசவைத்.) 93. பொன். 'அரித்தேர்நல்கியுமமையான்' (பெரும்பாண.சகo.) 94. மருடன். 95. மஞ்சணிறம், செந்நிறம். 'அரித்தளிர்மெல்லணை' (இராமா. மிதிலை. அக.) 96. மயில். 'அரியிளெடுமரியுறவாடு மால்' (மச்சபு. நைமிச. ௩o.) 97. மரகதம். (சூ. நிகண். சு: சு.) 98. மரவயிரம் 'அரி கிணைமுழக்கி' (கல்லாட. ருங.) 99. மலர்மாலை (சூடா). 100. மலை. 101. நீர்த்திவலை. (திவா). 102. மூங்கில். 103. மென்மை. 'மெல்லிலையரியாம்பலொடு' (மதுரைக்காஞ். உருஉ.) 104. யாழின்நரம்பு. 'அரிக்குரற்றட்டை' (மலைபடு. ௬.) 105. வண்டு. 'அரி விரசுந்துழாய்' (பாரத. இராய. கஎ.) 106. வரி. (சூ. நிகண். கக: ௩௩.) 107. வலிமை. (சூ. நிகண். கக: ௩௪.) 108. வாயுதேவன். 'இரண்டரிகளருளாண்மையோரும்'(பாரத. இராச., கஎ.) 109. அன்னம். 110. கதிர் அறுக்கும் பருவம் (பெரும்பாண். 202.) 111. கண். 'அரிமுதிரமரர்க்கரசன்' (கல்லா. 9). 112. தெருச்சந்தி. (பிங்.) 113. சக்கரம். (பிங்.) [1, 2, 3, 11, 15, 17, 18, 20, 25, 29, 32, 34, 36, 37, 40, 41, 42, 44, 46, 47, 54, 55, 56, 57, 60, 61, 62, 66, 74, 82, 83, 85, 89, 90, 91, 93, 94, 95, 96, 97, 108, 109. ஹரி; 16, 21, 24, 26, 35, 53, 75, 81. அரி.]

அரிக்கன்சட்டி — அரிசியரித்தற்குச் சிறுதுவாரங்கள் விட்டுச் செய்யப்பட்ட சட்டி.

அரிக்காந்தி—விஷ்ணுக்கிராந்தி.'புனர்நவ மரிக்காந்திதாழை' (தைல. தைலவ. எ௩.)

அரிக்காரன்—1. தூதன். 2. வெள்ளித் தடிபிடித்துக் கட்டியங்கூறுவோன். (லெக்ஸிகன்.)

அரிக்கி—கடுக்காய்.

அரிக்கிராவி-நெல்வகையினென்று. (லெக்ஸிகன்.)

அரிக்குதல்—அரித்தல்.

அரிக்குரல்—1. அரித்தெழுமோசை. 2. இனியகுரல். 3. தவளைச்சத்தம். (1, 3. ஐங்குறு.)

அரிகண்டம்—1. ஒருவிரதவேடம்; அது: படலமாக இருப்புத்தகடுகளிணைத்துச்

செய்து தன்னை வருத்தும்படி கழுத்திலே மாட்டிக்கொள்ளும்வேடம். 2. தொந்தரவு. 3. நவகண்டங்களுளொன்று. 'அரிகண்டத்து வாழ்வோர்' (கந்தபு. அண்ட. சo.)

அரிகண்டம்பாடுதல் — சமுத்திபாடவும் பாடத்தவறினால், கத்தியினால் அரியப்படவு மிசைந்து கழுத்திலே கத்திகட்டிக்கொண்டு பாடல். (பாவலர்சரித். கoஉ.)

அரிகயிறு—அரிநூற்பொறி. (சிந்தா. நாம. எரு. உரை.)

அரிகரகுமாரன் — அரிகரபுத்திரன். (சூ. நிகண். க: உஅ.) [ஹரி - விட்டுணு. ஹர - சிவன். குமார - மகன்.]

அரிகரப்பன்—ஒரு கரப்பன். [வழக்.]

அரிகரப்பான்—வாதக்கரப்பான். 'குட்டரி கரப்பான் வெய்யமருத் தணிமருட்காய்கள் வதப்பும்போம்' (தைல. தைலவ. கஙரு.)

அரிகரபுத்திரன் — ஐயனர். 'அத்தகுந்திரு மைந்தற்கரிகரபுத்திரனெனுநாமம்புனைந்து' (கந்தபு. மகாசாத். ருo.) [ஹரிஹர புத்ர: ஹரி விட்டுணு. ஹர - சிவன். புத்ர - மகன். விட்டுணு மோகினியென்னும் பெண்வடிவங்கொண்டபோது அம் மோகினியைச் சிவன் கூடிப் பெற்றபிள்ளை யென்பர்.]

அரிகரன்— விஷ்ணுவும் சிவனும் கூடிய மூர்த்தி.

அரிகரி—அத்திக்கொழுந்து.

அரிகல்—மகாமேரு.

அரிகள்—பகைவர். (சூ. நிகண். உ: ருக.) [அரியென்னும் பேரின் பன்மைச்சொல்லாதலால் அப்பெயரின் பொருளனைத்துக்கும் பன்மையாம்.]

அரிகளவம்—நதி.

அரிகறையான்—1. அரிக்குங்கறையான். 2. தொந்தரவுகொடுக்கிறவன். [கறையானரிப்பைப்போல இடுக்கண்செய்கிறவன் என்றபடி.]

அரிகாரம்—சினக்காரம்.

அரிகால் — அரிதாள். 'அரிகாலின்கீழுகூஉமக்நெல்லே' (பொருந. தனிப்பா.)

அரிகிணை — மரவயிரத்தினற் செய்யப்பட்ட ஒரு மருதநிலவாத்தியம். 'அழலவிர் மணிப்பூண்மள்ள ரரிகிணைக்கிசையவூதும் - குழலிசையறுகான்மாதர் குழலிசையறுகாற் கூட்டம்' (அருணசலபு. திருக்கண். சரு.)

அரிகீரை—அறைக்கீரை.

அரிகுரல் — கரகரத்தகுரல். 'அரிகுரற் கோழிநாமத் தரவவட் கடித்ததாக' (சிந்தா. கஙக. கஙகூ.)

அரிகூடம்—கோபுரவாயில் (பிங்).

அரிகேசம் — சூரியன்கதிர்களினென்று. 'ஆதவன் கதிரி லேழ்கதிர்சிறந்த வவற்றினிற் சுசுமுனைத்தோடு - மேதமற் றெளிரு மியலரி கேச மிரண்டும்வான் புதற்கொளி வழங்கும்' (கூர்மபு. ஆதவர்க. க.)

அரிச்சந்திரம் — 1. பிரதிட்டாகலையிலே தேயுதத்துவத்திலுள்ள எட்டுப் புவநங்களு ளொன்று. (சி-வி. கிரியா. உக-ஆம் சுலோ. உரை.) [ஹரிஶ்சந்த்ர:] 2. கூரைக்கை தாங்குங்கட்டை. (லெக்ஸிகன்.)

அரிச்சந்திரன் — சூரியகுலத்தரசர்களு ளொருவன்; இவன் திரிசங்குவின் மகன். அறுவகைச் சக்கரவர்த்திகளிலொருவன் 'ஓடைமால்யானைச் சத்தியாதனன்ற னுயிர் நிகரெழிலுடைமைந்த - னேடவிழ்நறுந்தார் மன்னவர் போற்று மடலரிச் சந்திர னென்பான்' (கூர்மபு. சூரியன்மர. ஙச.) [ஹரிஶ்சந்த்ர.]

அரிச்சிகன்—சந்திரன்.

அரிச்சுவடி — அரிவரியெழுதப்பட்டஏடு.

அரிசட்டுவர்க்கம் — காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மற்சரம் என்னும் ஆறு உட்பகையின் கூட்டம். (மணிமேக. கoஉ. பக்.) [அரி - பகை; ஷட் - ஆறு; வர்க்க.]

அரிசந்தநம் — 1. ஐந்தருவிலொன்று. 2. செஞ்சந்தநம். 'மலரரிச்சந்தநவாசம்' பாரத. அருச்சுனன்றவ. கருஅ.) 3. தாமரைப்பூந் தாது. 4. நிலவு. 5. மஞ்சள் [ஹரிசந்தந:]

அரிசம்—1. அமாவாசை அதிகமும் பிரதமை குறைவுமாகக் கூடிநிற்குந் தினம். 'சொல்லமாவாசைமிஞ்சிற்பிரதமைதுலங்கு மங்கா-ளொல்கலி லரிசமென்பர்' (மச்சபு. புரூரவா. உஎ.) 2. மகிழ்ச்சி. (சி. சி. உ: அo. மறை [ஹர்ஷ: அரிசமாவது புத்திர மித்திராதிகளைக்கண்டு களித்து இனியமக்

கொன்றுங் குறைவில்லை யென்கை.] 3. மிளகு. 4. மஞ்சள்.

அரிசயம்—1. எலுமிச்சை. 2. சரக்கொன்றை. (மலை.) [அரிசயமென்பதை அரிசலமெனவுங் கூறுவர்.]

அரிசரன் — சிவன். [ஹரி - விட்டுணு. ஶர - அம்பு. விட்டுணுவை அம்பாகக்கொண்டவரென்றபடி.]

அரிசரி—அத்திக்கொழுந்து.

அரிசனம்—1. மஞ்சள். 'அரிசனமேனி நல்லாள்' (கந்தபு. தெய்வ. அஎ.) 2. மஞ்சள் விரவிய கலவைப்பொடி. 'ஆசனத்தணிமோட்டியரிசனஞ்சாத்தி' (பெரியபு. தடுத்தாட். கரு. உரை.)

அரிசா—பெருங்குமிழ் (மலை)

அரிசாரணம்—மாவிலிங்கு.

அரிசி—1. உமியுடைப்பொருளில் உமிகழற்றி யெடுக்கப்பட்ட உட்பதார்த்தம். 'பண்டுமுளைப்ப தரிசியேயானாலும்' (வாக்குண்டாம்.) 2. விதைமுதலியவை. [அதவரிசி, உருளரிசி, ஏலவரிசி, கார்புகா அரிசி, மூவா அரிசி, வெட்பாலையரிசியென ஔஷதவகைக்காக ஆறுவகையரிசி யுண்டென்பர் வைத்தியர்.] 3. கடுக்காய்.

அரிசிக்காணம் — பழையவரிவகையிலொன்று (லெக்ஸிகன்).

அரிசிப்புல்—மத்தங்காய்ப்புல். 'அரிசிப்புல்லார்க்கமோட்டின' (சிவக. 43.)

அரிசிரங்கு—சொறிசிரங்கு.

அரிசில்—1. ஒருநதி. 'அரிசிற்றென்கரை யழகார்திருப்புத்தூர்' (தேவார. திருப்புத். கு. சச.) [இது, 'அரிசொல்' என்பதன்றிரிபு.] 2. ஒரு பழையவூர்.

அரிசு—1. மிளகு. 2. தேன்.

அரிசொல் — கும்பகோணத்துள்ள ஒருநதி. 'அரிசொற்கரைப்புத்தூர்' (பெரியபு. திருப்பதிகக். கஉ.)

அரிசோபகந்தரவிரணம்—மூலபகந்தரம். (சீவரட். ௩0உ.) [அர்ஶஸ் - மூலம். பகந்தரம்.]

அரிசோரோகம்—ஆண்குறியில்வரும் ஒருவகைரோகம்; அது: வாத பித்த கபங்கள் இரத்த மாமிசங்களை யருசிக்கும்போது பிறப்பதும், அப்போது ஆண்குறியினுள்ளிலாவது வெளியிலாவது நமைச்சல், அவ்விடங்களில் மூலரோக முளைகளைப்போலுஞ் சிறுசிறு காளான் முளைகளைப்போலும் மாமிசம் எழும்புதல், அவைகளில் மிகவும் வியர்வை கசிதல், இரத்தம் வடிதல் என்னும் இக்குணங்களுண்டாவதுமானது. (சீவரட். ௩கரு.) [அர்ஶஸ் - மூலம்.]

அரிசோவர்த்தமரோகம் — கண்ணிமையில் வரும் ஒருவகைரோகம்; அது: இமைச்சந்திகளிலே தூர்மாமிசம்வளரக் கண்களிலே மரத்தல், மினுமினுப்பு, எரிச்சல், சிவப்பு என்னுங் குணங்களுண்டாதல். (சீவரட். உசஎ.) [அர்ஶஸ்; வர்த்மம்.]

அரிட்டசூதனன் — விட்டுணு. [அரிஷ்ட ஸூதந: அரிஷ்ட - ஓரசுரன். ஸூதந - கொன்றவன்.]

அரிட்டநேமி—1. சூரியனுடைய துவாதச சாரதிகளுளொருவன். 'கோங்கிள முலையார் நால்வரை யரிட்ட நேமிகைக் கொள்கெனக் கொடுத்தான்' (கூர்மபு. அந்தகா. ச. வி-ணி. உசரு.) 2. சைநமதத்திலுள்ள இருபத்து நான்கு தீர்த்தகருள் இருபத்திரண்டாந் தீர்த்தகரன். [அரிஷ்ட; நேமி.]

அரிட்டம்—1. அதிட்டஙேம். 'சாடுநோயாதி - யளவில்லாதபல்லரிட்டங்களனுங்கவும்' (திருவானை. நான. க.) 2. கள்ளு, மது. 3. காகம். 'எங்குஞ்சங்கவரிட்டவிரக்கமே' (இரகு. திக்கு. கஅ௫.) 4. தீங்கு, கேடு. 5. துன்னிமித்தம். 6. நல்லதிட்டம். 7. நாரை. 8. பிரசவமண்டபம். 9. பிறவிக் குற்றம், சென்மதோஷம். (பிங்க. ௩0அசு.) 10. மரணக்குறி. 'இவைமுன்னுய வரிட்டங்க ளெய்துங்காலை' (சூத. எக்கி. பூ. சசு. உசு.) 11. முட்டை. (சூ. நிகண். ௩: சுக.) 12. மோர். 13. வெள்ளுள்ளி (மலை). 14. வேப்பமரம் (அக. நி). 15. கடுகுரோகிணி. 16. மிளகு [அரிஷ்ட].

அரிட்டன்—ஓரசுரன். [அரிஷ்ட.]

அரிட்டாநகம்—1. அபசயம். 2. எக்கம். [அரிஷ்டாநக.]

அரிட்டித்தல்—கொல்லல்.

அரிட்டை—1. கடுரோகிணி (தைல. தைலவ. உரு.) 'அதிபலை' பார். 2. கந்தருவராயிரவர் தாய். (கூர்மபு. வாணசு. கூ.) 3. தீங்கு. 'நந்துயராமரிட்டையோதும்' (அருட்பா. 2. ஸ்ரீசிவசண்முக. 4.)

அரிடணம்—1. சதாசிவனுடைய பஞ்சமுகங்களுளொன்றாகிய ஈசானமுகத்தினிற்குங் கலைகளுளொன்று. (த. நி. போ. நூ0க.) 2. சந்தோஷம். 3. நித்தியயோகங்களுளொன்று (வருஷாதி). 4. மன்மதனுடைய பஞ்சபாணங்களிலொன்று. [ஹஷிணே.]

அரிடம்—1. அதிட்டகிம். 'அரிடமான தன்விதியினல்' (பாரத. நிரை. சுரு.) 2 கடுரோகிணி (மலை). 3. கேடு. 'ராவணபுயாரிடநிராமயசரோருகரனருள்பாலா' (திருப்பு. நூ0.) 4. மூலத்திலே வரும் ஒருவகை நோய். 5. விடாமழை. 6. வீடு முதலிய வளங்களைக்கண்டு களித்து இனியெமக்கென்னகுறையென்னுங்குணம். (சிவப்பிர. உ: உ. சிதம்பர.) 7. வேம்பு (மலை). 8. ரோமபுளகம். [1-3. அரிஷ்ட. 4-5. அரிஷ. 6, 8. ஹஷித]

அரிடிகம் — சிற்பநூன் முப்பத்திரண்டி னொன்று.

அரிணம்—1. சிவப்பு. 2. பொன். 3. மான். (சூ. நிகண். ரு. உஉ.) 4. யானை. 5. வெள்ளை. 6. எலுமிச்சை. 7. சந்தனம். [1, 2, 3, 5. ஹரிண.]

அரிணவம்—கடல். [அர்ணவ.]

அரிணன்—1. சிவன். 2. சூரியன். 3. விட்டுணு. [ஹரிண.]

அரிணி — 1. சித்தினிசாதிப்பெண். 2. பெண்மான். 3. பொன்னுலாய வுருவம். 4. மான்சாதிப்பெண். 'அரிணிவடவையத்தினியென்பவை-தெரியுங்காலை யரிவையர்சாதி' (கல்லா. எ. உரை.) 5. வஞ்சிக்கொடி. [1. 4. ஹரிணீ.]

அரிணை—கள்.

அரித்தல்—1. கழித்தல். 2. கெடுத்தல், 'பாவிக்குமரிக்குந்தாணிழல்' (கம்பரா. கடு.) 3. சங்கரித்தல். 'சருப்பத்தையுமரைக்கச்சௌத்தரிப்பானுலகரிப்பான்' (சீகாழி. ஆபத்து. ச.) 4. சிறிதுசிறிதாக அரித்தல். 'களக்கறை யானைச்சற்றெண்ணு நெஞ்சே-கலங்கலரிக்குநந் தீவினையான கருங்கலையே' (மறைசையந். கக.) 5. நீர் சிறிது சிறிதாக அறுத்துச்செல்லுதல். 'அரித்தொழுகுவெள்ளருவி' (தேவார. திருவையா. ரு. திருநா.) 6. புல்முதலியவைகளைத் துகணீக்கியெடுத்தல். 7. மாமுதலியவற்றை அரிக்குங்கருவியிலிட்டுக் கழிவுநீக்கியெடுத்தல். 8. வகுத்தல். 9. படைத்தல், 'ஓங்குலகையரித்துமளித்து மழிப்பவராத்தரென்னு' (திருநூற். கரு.) 10. தினவெடுத்தல். 11. மேய்தல். 'மாலையைவேய்ந்தரிக்குமினிறு' (சீவக. 1769.) 12. கூட்டுதல். 'சருகரிக்கநேரமன்றி'. 13. பூச்சிதின்னல். 'கணைச்சிதலரித்த' (சிறுபாண். 133.) 14. இமிசித்தல். 15. இடைவிடுதல். (அகநா. 45.)

அரித்திரம்—1. சுக்கான். 2. தோணிவலிக்குந்தண்டு. 3. மஞ்சள் (பிங்க. களஉரு). [1, 2. அரித்ர. 3. ஹரித்ர]

அரித்திரா—1. மஞ்சட்கிழங்கின்மா. 2. மஞ்சள். [ஹரித்ரா.]

அரித்திராசுரம்—ஒருவகைச்சுரநோய்; அது: சர்வாங்கத்திலும் மஞ்சள்வன்னத்துடன் தடிப்பு, சயித்தியம், சடத்துவம், முகத்தில் எண்ணெய்தடவினதுபோலப் பிசுபிசுத்தல், நகங்களிலும் கண்களிலும் நோவு, இல்களில் வீக்கம், எப்பம், கொட்டாவி, விக்கல், கைகால் குளிர்ச்சி, சிரோபாரம், தலைதிருப்பல், நாவுகசத்தல், தாகம், நெஞ்சுலருதல், மார்பெரிச்சல், அக்கினிமந்தம், மலபந்தம், பலவீனம், அரோசகம், வாயில் நுரைவீழ்தல், அதிகப்பேச்சு என்னும் இக்குணங்களையுண்டாக்கும். (சீவரட். சசு.)

அரித்திரான்னம் — மஞ்சட்சோறு. இது: ஆறுவித நைவேதநங்களுளொன்று (த. நி. போ. நூ0உ.) [ஹரித்ரா-மஞ்சள். அன்ந-சோறு.]

அரித்திராப்பிரமேகரோகம் — ஒருவகைப் பிரமேகரோகம்; அது: மஞ்ணிறமான வெள்ளைகாணல், சூடாக நீரிறங்கல், நெருப்பைக் கொளுத்தினதுபோல எரிச்சலுடன் கூடியகடுப்பு, விருவிருப்பு, உட்டிணம்,

முகத்தில் மஞ்சணிறம், நாவிற் கசப்பு, மகந் திடுக்கிடல் என்னும் இக்குணங்களையுண்டாக் கும். (சீவரட். ருகக.)

அரித்திராபம்—1. ஒரு மரம். 2. மஞ்சள். (பிங்). 3. பொன்னிறம் (உரி. நி.). [ஹரி த்ராப: ஹரித்ரா - மஞ்சள். ஆப - போன்றது.]

அரித்திராமேகம்—போகத்தால் விளைந்த பித்தவெட்டை. 'போகத்தால்விளைந்த அரித் திராமேகம் வாந்தியென்னும் ரோகங்களெல் லாம்' (தைல. தைலவ. ருஅ. உரை.)

அரித்து—1. அரித்தெனப்பொருள்படும் ஒரு வினையெச்சம். 2. சிங்கம். 3. சூரியன். 4. சூரியனுடைய பச்சைநிறக் குதிரை. 5. திக்கு. 6. பச்சைதாவிய மஞ்சணிறம். 7. பச்சைநிறம். 8. மஞ்சணிறம். 9. விரைவா கச்செல்லுங் குதிரை. [2-9. ஹரித்]

அரித்துவசன் — 1. சிங்கக்கொடியுடை யோன். 2. வீமன். 'அரித்துவசன்றனை நோக்கியரக்கன் - கருத்துடனின்றிவை கட் டுரைசெய்வான்' (பாரத. புட்ப. எஉ.) [ஹரி-சிங்கம். த்வஜ - கொடியுடையோன்.]

அரித்துவஞ்சத்துவம் — இருபத்தைந்து சிவமூர்த்தத்தொன்று; அது: யமனைச்சங் கரித்த மூர்த்தம். (வி-ணி. உஎஅ.) [ஹரி - யமன். த்வம்ஸத்வம் - அழித்தற்றன்மை.]

அரித்துவம்—பகைமை.

அரித்துவாரம்— கங்காத்துவாரம், மாயா புரி. (கூர்மபு. தக்கன்வேள். உ. உரை.) மாயாபுரியின்பக்கத்திற் கங்காநதியுற்பத்தி யென்பர். [ஹரித்வாரம்.]

அரித்தை — 1. அரித்தாயெனப்பொருள் படும் ஒரு முன்னிலைவினைமுற்று. 2. கிலே சம். 3. துன்பம்.

அரிதகி—கடுக்காய். 'அரிதகியினலர்பாரி பாவியம்',தைல.தைலவ.சுசு.'[ஹரீதகீ.]

அரிதம்—1. இருண்டநீலநிறம். 2. பச்சை. (பிங்). 3. பசும்புன்னிலம். 4. பசுமை. 5. பொன்மை (பிங்க. கககஉ). 6. மஞ்சள். 7. திக்கு. (சூ. நிகண். டு.) [ஹரித.]

அரிதல்—1. கத்தி முதலிய ஆயுதங்களா லறுத்தல். 'நாக்கரியுந்தசமுகனார்' (இராமா. சூர்ப்பந. கஉடு.) 2. செங்கலறுத்தல். (லெக்ஸிகன்)

அரிதவெலி—மஞ்சணிறமுடைய ஒருவகை யெலி. இது: கடித்தலால் அக்கினிமந்தமுங் கொட்டாவியும் மயிர்க்கூச்செறிவும் உண்டா கும் என்பர் (சீவரட். ருசுO.). [ஹரித - மஞ்சணிறம்.]

அரிதளம்—1. பொன்னரிதாரம். 2. தாள கம். [இஃது அரிதாளம் என்பதன் குறுக்கம்.]

அரிதாரம்—1. இலக்குமி. 'அரிதாரமன்னவ ளம்பகங்காட்டும்' (மறைசை. சஉ.) [ஹரி- விஷ்ணு. தார - மனைவி.] 2. ஒரு மருந்து. மனோசிலையென்னும் அரிதாரமானது மலை களிலேயுதிக்குமென்றும், அதற்கு வேறாய் நறுமணம் வீசும் அரிதாரம் மான்வயிற் றுதிக்குமென்றும் பெரியபுராண உரைகாரர் கூறுகின்றார். 'மானின்வயிற்றரிதாரத்திலக மிட்டு' (பெரியபு. கண்ணப்ப. சஅ.) 3. தாளகமென்னும் பாஷாணம். இது: சீன தேசத்திலிருந்தும் பர்மாதேசத்திலிருந்தும் சுமத்திராதேசத்திலிருந்தும் வருகிற சரக் கென்றும் பாஷாணவகையிற் சேர்ந்ததென் றும், இது: பொன்னரிதாரம், தாளகம், கட்டியரிதாரம், கரட்டரிதாரம், தகட்டரி தாரம், மடலரிதாரம், வைப்பரிதாரம், கனத் தியரிதாரம் எனப் பலவகைப்படுமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. 4. பழுப்பு. 5. கஸ்தூரி. 'மான்வயிற்றி னொள்ளரிதாரம் பிறக்கும்' (நான்மணிக். 6.)

அரிதாலம்—1. பொன்னரிதாரம். 2. மஞ்சணிறமான ஒருசாதிப் புறா. [ஹரி தால.]

அரிதாலிகை — புரட்டாசிமாதச்சுக்கில பக்கச்சதுர்த்தி. [ஹரிதாலிகா.]

அரிதாள் — நெல்லுமுதலியவைகளின் கதிரறுக்கப்பட்டதாள்.

அரிதாளம்—1. நவதாளத்தொன்று. 2. பொன்னரிதாரம். [ஹரிதால.]

அரிதினம்—ஏகாதசி. 'ஏதமறுந் துவாதசியி லிலங்குமரிதினத்தும்' (வேதாரணியபு. அக்தர். க.) [ஹரி - விஷ்ணு. தி ந-நாள்.]

அரிதினவயச்சி — 1. திருநாமப்பாலை (மலை). 2. நன்னாரிக்கொடி.

அரிது—1. அருமையென்னும் பண்படியிற் பிறந்து 'அருமையானது' எனப் பொருள் படும் ஒரு குறிப்புவினைமுற்று. 'அரியவற்று ளெல்லாமரிதே' (வள். சசங.) 2. அருமை யானகாரியம். 'பழிப்பருமுலகங்களெவையும் பன்முறை - யழித்தளித்தியற்றுவார்க்கரி துண்டாகுமோ' (இராமா. யுத்த. மந்திர. ஙு.) 3. அருமையென்னும் பண்படியிற்பிறந்து ஏலாதெனப்பொருள்படும் ஒரு குறிப்புவினை முற்று. 'அன்னதுகாத்திடலரிதுகாணென் றாள்' (கந்தபு. அக்கினி. கககக.) 4. பச்சைநிறம். [ஹரித்.]

அரிதை—பகைமை. [அரிதா.]

அரிதோடர்— துவக்குசங்கிலிகளு ளொரு வகை. 'துவக்குசங்கிலி யெறிந்திழுக்குமரி தொடர்பிடித்தகை' (திருவிளை. நகர. உஎ.)

அரிந்தமன்—1. பகைவனையடக்குவோன். 2. விட்டுணு. 'அரிந்தமன்சிலைநாணெடிதார்த் தலும்' (இராமா. மாராமர. கங சூ.) 3. வெற்றி யாளன். [அரிந்தம.]

அரிநர் — (நெல்) அறுக்கிறவர். 'அரிநர் கீழ்மடைக்கொண்டவாளையும்' (புறநா. சஉ.)

அரிநாதம்—சிங்கநாதம். [ஹரி; நாத.]

அரிநிம்பம்—மலைவேம்பு.

அரிநூற்பொறி — நகரத்தின் மதிலிலே வைக்கப்படும் பொறிகளுளொன்று. (சிலப். அடை. உகசூ. உரை.)

அரிநெல்லி—ஒருவகை நெல்லிமரம்.

அரிப்பர் — அரித்துப் பொருள்தேடுவார். 'அரிப்பர்கையகப் படுவன வாயிரத்திரட்டி' (திருவிளை. நகர. சூசூ.)

அரிப்பரித்தல்— கொழித்தெடுத்தல். 'கைத்தலத்தவுப்த்துச்சொரிந்திட்டரிப்பரித் தாங்கு' (நீதிநெறி. 9.)

அரிப்பறை — அரித்தெழுமோசையை யுடைய பறை. 'அறிப்பறைவினைஞர்' (ஐங் குறு. அக.)

அரிப்பன் — 1. பொற்றுகளைமணலினின் றும் அரித்தெடுப்போன். 'குருட்டரிப்ப னூர்க்குங் குபேரனென்றுபேரோ' (ஒழிவி. பொது. ரு.) [குருட்டரிப்பனூரென் றிழிபின் கட் பன்மையாகக்கூறினுரென்பர்.] 2. மண் முதலியவைகளையரிக்கிறவன்.

அரிப்பாளன்—அரிப்பன். 'பிறவியந்தக னாகிய வரிப்பாளனுக்கும் குபேரனென்று பெயருண்டுகொலோ' (ஒழிவி. பொது. ரு. உரை.]

அரிப்பான்—அரிப்பன்.

அரிப்பிரத்தம்—இந்திரப்பிரத்தம். 'இள வன்மீளவுமரிப்பிரத்தநகர்' (பாரத. இராச. ருஙு.) [ஹரி - இந்திரன். ப்ரஸ்த - நன்றாய் நிலத்தது, சமநிலம்.]

அரிப்பிரியம் — 1. கடம்பு. 2. சங்கு. [ஹரிப்ரிய.]

அரிப்பிரியை—1. இலக்குமி (பிங்). 2. சுக்கிலபட்சத்துப் பன்னிரண்டாந்திதி. 3. துளசி. 4. பூமிதேவி. [ஹரி - விஷ்ணு. ப்ரியா - பிரியமானது.]

அரிப்பு—1. அரித்தல் 'அரிப்பாளன்'. 2. குற்றம். (சூ. நிகண். அ: ருஅ.) 3. கோபம். (சூ. நிகண். அ: சூஉ.) 4. சொரிதல். 5. தினவு. 6. பிரித்துக்கழித்தல்.

அரிப்புக்காரன்—அரிப்பாளன்.

அரிப்புக்கூடை—1. அரிப்பெட்டி. 2. சல் லடை.

அரிப்புழக்கல்—அரிசிச்சோறு. 'வாலரிப் புழுக்கலும்' (திருவிளை. குண்டோ. சூ.) [அரி - அரிசி. புழுக்கல் - வெந்தது.]

அரிப்பெட்டி — மாமுதலியன அரிக்குஞ் சல்லடைப்பெட்டி.

அரிபடைவட்டம்—எழுநரகத்தொன்று.

அரிபாலுகம்— 1. தக்கோலச்செடி. 2. தக்கோலவிதை. [ஹரிவாலுக.]

அரிபிளவை—தசையையரிக்கும் பிளவைக் கட்டி.

அரிபீடிகை — 1. ஸம்ஸ்கிருதபாஷையி லுள்ள ஒரு வியாகரணநூல். (பி. வி. எக. பக்.) 2 சிங்காசனம். [ஹரிபீடிகா.]

அரிபுரம்— 1. கலிங்கதேசத்துள்ள ஒரு நகரம். 'கலிங்கநாடதன்பா லாவதத்தநேர் மாக்கள்வா ழரிபுரமதனில்' (கந்தபு. மார்க்க. ககச.) 2. சத்துருவின் நகரம்.

அரிபெட்டி—அரிப்பெட்டி.

அரிமஞ்சரி—குப்பைமேனி (மலை.)

அரிமணல்—நுண்மணல்.

அரிமணி—மரகதம். 'எறுதேசிகவனேயரி மணிக்கதிரிகல' (இரகு. நாட். கரு.) [ஹரி நணி: ஹரித - பச்சை. மணி - ரத்நம்.]

அரிமணை—அரிவாண்மணை.

அரிமநா—வெள்வேல் (மலை).

அரிமர்த்தநன்—1. ஒரு பாண்டியன். 'இற லரிமர்த்தநனென்னுந் தென்பார்வேந்தன்' (திருவிளை. மண். கம.) 2. சத்துருவைச் சங்கரிப்போன். [அரிமர்த்தந: அரி - சத் துரு. மர்த்தந - இடித்தல்.]

அரிமல்—மாவிலிங்கமரம்.

அரிமா — 1. சிங்கம். 'அரிமாப்பிழைப் பெய்தகோல்' (நாலடி. கரு: உ.) 2. சிங்க ராசி.

அரிமாநோக்கம் — சிங்கத்தின் பார்வை; அது: முன்னும் பின்னும் பார்த்தல். 'ஆற் றொழுக்கரிமாநோக்கம்' (நன். பொது. கக.)

அரிமான்—சிங்கம். 'அரிமானிடித்தன்ன' (கலி. பாலை. கசு.)

அரிமுக்கை — மூன்றுகைப்பிடியளவாக எடுக்கப்படும் ஒருவகை நெல்லாயம். 'அரி முக்கையுட்பட்ட பல நெல்லாயங்களும்' (S I I. 89.)

அரிமுகச்சிவிகை — சிங்கத்தலைச்சிவிகை; அது: சமயவாதிகளை வென்ற ஆசிரியர்க ளேறுவது. [ஹரி - சிங்கம், முக; சிவிகா.]

அரிமுகவம்பி—சிங்கமுகவோடம். 'பரிமுக வம்பியுங் கரிமுகவம்பியு மரிமுகவம்பியும்' (சிலப். புற. கஎஎ.)

அரிமுகன்— சிங்கமுகாசுரன். 'இற்றைப் பகலிறந்தாயரிமுகனே' (கந்தபு. சிங்க. சஎக.) [ஹரி - சிங்கம். முக - முகம்.]

அரிமேரை—நெற்களசுதந்திரவகை. (லெக் ஸிகன்.)

அரிமைநா—வெள்வேலமரம்.

அரிய—அருமையான.

அரியகம்—1. காற்சரியென்னுங் காலிலணி யும் ஆபரணம். 'அரியகங் காலுக்கமைவுற வணிந்து' (சிலப். கடலாடு. அச.) 2. கொன் றைமரம்.

அரியசம்—சரக்கொன்றை. (மலை.)

அரியசாரணை—மாவிலிங்கு. (மலை.)

அரியணை — சிங்காசநம். 'இணையகாலையி லரியணைப்பீடநின்றிழியா' (கந்தபு. தெய்வ. உசுக.) [ஹரி - சிங்கம். அணை - ஆசநம். இங்கே செய்கைச்சிங்கத்தைக் கருதிற்று.]

அரியணைச்செல்வன்-அருகன். (சூ. நிகண். க: ௩.)

அரியபச்சை—வங்காளப்பச்சை. 'பச்சிலை யரியபச்சைபத்திகாய்மயூரம்' (தைல. தை லவ. கசு.)

அரியது—அருமையானது. 'தவந்தனிலரிய தொன்றில்லை' (கந்தபு. காசிபனுப. உ௩.)

அரியம்—வாச்சியம்.

அரியமன்—அரியமான்.

அரியமா— 1. ஒரு பிதிரர்கணம். 2. சூரி யன். 3. பன்னிருசூரியருளொருவன்; அவன்: மிதுனத்திலுதிக்கும் பதினயிரங்கிரணங் களையுடையவன். (கூர்மபு. ஆதவர்சிறப். உ.) [அர்யமந்.]

அரியமான்—1. அதிதியின் புத்திரராகிய சூரியர் பன்னிருவரிலொருவன். (கூர்மபு. அந்தகா. கஉ.) 2. பிதிரர்களுட்டலைவனுகிய அரியமன். 'தென்புலத்தோரி விச்சையுறு மரியமான்யான்' (கூர்மபு. விபூதி. கம.) [அர்யமந்.]

அரியர் — கிடைத்தற்கருமையானவர். 'நிதடையாச்செல்வர்மொழிதிறம்பாதசூரர் நடுத்தெரிந்துநோக்கு-நாதரிவர் மிகவரியர்' (ஞானவா. வைராக். சுசு.)

அரியல் — 1. அரித்தல். 'வெங்கீரரியல் விரலலைகறும்பிழி' (பெரும்பாணு. உஅக.) 2. அரிதல். 3. கள். 'அரியலார்ந்தமர்த்தலின்' (சிந்தா. பதுமை. அசு.)

அரியன்—1. அருமையானவன். 'மறைக் கடேடரியனுவோன்' (பாகவத. சிசுபால. சுசு.) 2. சிரேட்டன். 3. மேலானவன். 4. வைசியகுலத்தோன். [2-4. அர்ய.]

அரியாசம்—ஒருவாசனைத்திரவியம்.(சிலப். 5. 14. அரும்.)

அரியாசனம்—சிங்காதனம். 'அரியாசனத் தில்' (தனிப்பா. 1. 2. 1.)

அரியாணி — வைசியசாதிப்பெண். [அர்யாணீ.]

அரியாயோகம் — 1. அரைப்பட்டிகை, (சிலப். 14. 170.)• 2. மருந்து. (சிலப். 14. 170).

அரியாலுகம் — 1. தக்கோலச்செடி. 2. தக்கோலவிதை.

அரியான் — ஒருவகை நெல்.

அரிமீயம்—1. நெட்டிமுட்டி. 2. செம்பு.

அரியுண்மூலம்—கோரைக்கிழங்கு. (தைல.)

அரியுப்பு — கரியுப்பு.

அரியூர்தி—கருடன். (திவா.)

அரியெடுப்பு — கிராமஊழியக்காரர்க்குக் களத்திற்கொடுக்கும் இருகையளவுந்தானியம்.

அரியேறி—துர்க்கை. (திவா). [ஹரி - சிங்கம். ஏறி - ஏறுதலுடையவள்.]

அரியேறு — 1. ஆண்சிங்கம். 'அடுதிறனிருபவேழக்குழாமடுமரியேறிந்த' (இரகு. தேனுவந். ௩௭. 2. ஆண்சிங்கத்தினது சாயலாகச்செய்யப்பட்ட வடிவம். 'நவமணியழுத்திய வரியேறேந்துமாசநம்' (பாரத. கிருட். எ௬.)

அரிராசி — களத்தில் வழங்கும் சுதந்திர வகை.

அரில்—1. குற்றம். 'அரிலகற்றுங்கேள்வியார்' (திரிகடு. ௨.) 2. சிறுகாடு, 'பிணங்கரினுழைதொறும்' (மலைபடு. ௩ எக.) 3. பகை. 4. மாறுபாடு. 'அகத்திணைமருங்கினரிறபவுணர்ந்தோர்' (தொல். பொருள். ௫௬.) 5. பின்னுதல். 'நுணங்கரின்மாலை' (பொருநரா. க௬க.) 6. மூங்கில் (மலை). 7. பிணக்கு, 'மூதரினிவந்த முதுகழையாரிடை' (பு. வெ. 10. 2.) 8. சிறுதூறு. 'முளியரிற்பொத்திய முழங்கழல்' (கலித். 13.)

அரிவட்டம் — கழுத்திலே மாட்டும் அரிகண்டம்.

அரிவரி—அகரமுதலாக முறையே கோவை செய்யப்பட்ட வரிவடிவமான எழுத்துக்களையுடைய நெடுங்கணக்கு.

அரிவருடம் — நவகண்டத்துளொன்று; இஃது ஏமகிரிக்கும் நிடதகிரிக்கும் இடையேயுள்ளது. 'அம்புவியினிடதமுதலேமங்காறுமரிவருடம்' (கந்தபு. அண்டகோ. ௩ எ.) [ஹரி- அங்கிதிரனுடையபுத்திரரிலொருவன். வருஷ - கண்டம்.]

அரிவாட்கள்ளன் — கூன்வாள்பிடிக்குங் கைப்பறண்டையில்வரும் ஒருநோய். [வழக்.]

அரிவாட்சொண்டன்— கடலிற்றிரியுமொருவகைக் கொக்கு.

அரிவாட்டாயர்— அறுபத்துமூன்றுநாயன்மாருளொருவர். (பெரியபு. அரிவாட். உஉ.)

அரிவாண்மணை — 1. அரிவாண்மணைப்பூண்டு. 2. காய்முதலிய கறிப்பதார்த்தங்களையரியுங்கருவிசெறிக்கப்பட்ட கட்டை. (பிங்.)

அரிவாண்மணைப்பூண்டு—ஒருவகைப் பூண்டு.

அரிவாண்மூக்கன் — 1. அரிவாண்மணைப்பூண்டு. 2. அரிவாட்சொண்டன்.

அரிவாள்—1. நெல் முதலியவைகளையரியுங் கூனிரும்பு. 2. மரம் முதலியவைகளையரியும் வாள். 'அறுதிமரத்துக்கோரிவாள்' (ஞானவா. புசுண். எ௫.)

அரிவி—1. கதிர்ப்பிடி. 2. நெல்முதலியவற்றின் தாள்.

அரிவிக்கள்ளன்—அரிவாட்கள்ளன்.

அரிவிமயிர் — வீரர் வேல்நுனியிலணியும் பறவையிறகு. (லெக்ஸிகன்.)

அரிவியரிவாள்—கருக்கரிவாள்.

அரிவை—1. பத்தொன்பதுவயசுக்குமேற்பட்டும் இருபத்தைந்துவயசுக்குமேற்படாதுமிருக்கும்பருவத்தையுடையபெண். 'பதினொன்காதிபத்தொன்பான்காறு - மெதிர்தருமடந்தைமேலாறுமரிவை' (இலக்கணவி. அ௬உ.) 2. பெண். 'அம்மா வரிவை முயக்கு' (வள். கக0எ.)

அரீள்—பயம்.

அரீடம்—1. கடுகு. 2. கடுரோகிணி (மலை.)

அரு—1. அணு. 2. உருவமற்றது. 'ஒளிருமேனி-அருவென்றூர்சிலர்சிலர்கள்' (இராமா. மருத். ௩க.) 3. (பௌத்தம்) உருவல்லாத பொருள்; அது: சித்தவரு, கன்மவரு என இரண்டு. 'புலன்கள் பொறிவழியோடியறிய அதனைக்கண்டதுசித்தவரு' 'அப்படிக்கண்ட பொருளைநன்றென்றுந் தீதென்றுங்காண்டல் கன்மவரு' 'அருவியல்சித்தங்கன்மமென்றிரண்டாகும்' (சி. சி. பர. சௌத்.மதம்.௬-ம் உரையும்.) 4. கடவுள். 5. காணப்படாத தன்மை. 'நிலவுமருவுருவின்றி' (சிவப்பிர. பொது. க.) 6. காயம், புண். 7. மும்மலங்களுளொன்றாகிய மாயை. 'அருவினிலுருவந்

தோன்றி' (சி. சி. க: உஎ.) 8. சித்தபதம். ''விண்ணோர்பதந்தந்து பின்னுமருத்தருமத் தனை' (திருநூற். கரு.) 9. அட்டை. 'இரு நிலந்தீண்டாவரு' (தொல். பொ. 71. இளம் பூ.)

அருக்கசர் — அச்சுவினிதேவராகிய தேவ வைத்தியர். [அர்க்க-ஜஸ: அர்க்க - சூரியன். ஜஸ - பிறந்தவர். ஸம்ஸ்க்ருத அவிவசக விகுதி தமிழிற் பலர்பால்விகுதியாய்த் திரிந்துவந்தது.]

அருக்கசன்—1. கன்னனென்னும் அரசன். 2. சனியென்னுங்கிரகம். 3. சுக்கிரீவனென் னும் குரக்கரசன். 4. யமராசன். [அர்க்க-ஜ.]

அருக்கபாதவம் — வேப்பமரம். [அர்க்க வாதவ.]

அருக்கபுத்தி — சூரியகதி. [அர்க்க - சூரி யன். புத்தி - உணவு. அது சூரியனுண்ணுங் காலம்.]

அருக்கம்—1. அக்கினி. 2. உணவு. 3. எருக் கஞ்செடி. 'அருக்கவெண்பஞ்சுபோல' (அரு ணாசலபு. திருவவ. ருக.) 4. குறைவு, சுருக் கம். 'ஆவியாயவியுமாகியருக்கமாய்ப்பெருக்க மாகி' (தேவார. திருப்பய. 7. திருநா.) 5. செம்பு. 6. துன்னிமித்தம். 7. நீர்க்காக்கை. 8. பளிக்கு. [1, 2, 3, 5, 8, அர்க்க.]

அருக்கர் — சூரியர். 'அருக்கர்தந்தொகை யனைத்தையும்' (கந்தபு. திருவி. ககசு.)

அருக்கல்—1. அச்சம். 2. அருமைப்படுத் துதல். 3. குறைத்தல், சுருக்கல். 'மழை யருக்குங்கோள்' (திரிகடு. ருo.) 4. சுண்டக் காய்ச்சுதல்.

அருக்கலம்—1. கடற்றிரை. 2. கதவடைக் குந் தாழ். [அர்கள.]

அருக்கவிக்கேபம்—சூரியாட்சம். [அர்க்க விக்ஷேப.]

அருக்கவிட்சேபம்—அருக்கவிக்கேபம்.

அருக்களித்தல் — 1. அருவருத்தல். 2. பயப்படல்.

அருக்களிப்பு—1. அருவருப்பு. 2. பயம்.

அருக்கன் — 1. இந்திரன் 2. சூரியன். 'அருக்கனணிநிறமுங்கண்டேன்' (இயற். 3. 1.) 3. ஞாயிற்றுக்கிழமை. 4. தமையன். 5. பண்டிதன். 6. வேர்க்கொம்பு. 7. காணுக் கிரகங்கள் இரண்டு. 8. எருக்கு. 9. சுக்கு. [1, 5, 8. அர்க்க.]

அருக்கன்வீதி — கிராந்திமண்டலத்தை நான்கு ராசிகொண்ட மூன்றுபாகமாகக் கொண்டு சூரியன் செல்லும் வீதி.

அருக்காணி — 1. அருமை. 2. அருமைப் படுத்துதல். 3. பிரியவீநங்காட்டிப் பின்னிற் கை. [வழக்.] 4. அழுத்தம்.

அருக்கிநம்—நோவின்மை, ஆரோக்கியம்.

அருக்கியத்திரவியங்கள் — சலம், பால், தருப்பைநுனி, அட்சதை, எள், யவம், சம்பாநெல், வெண்கடுகு என அருக்கியத் திற்கு உபயோகமாகும் எட்டுத்திரவியங்கள். (திருவாதவூர. திருப்பெ. எ0. விருத்தி.)

அருக்கியம் — 1. சலத்தோடரிசிமுதலிய வற்றைக்கொண்டாவது, தனியே சலத்தைக் கொண்டாவது தேவர்களுக் கல்லது பெரி யோருக்கு வணக்கத்தோடுசெய்யும் உபசா ரம், 'அருக்கியமுதலினோடாசநங்கொடுத்து' (இராமா. திருவ. சஉ.) 2. வணங்கப்படத் தக்கது. [அர்க்ய.]

அருக்கீசம்—இருதயமுதற்கண்டமட்டாக எழங்குலம் வியாபித்துநிற்கும் ஒரு கலை. (பிரசாததீபிகை.) [அர்கீச.]

அருக்கீசன் — தேவர்யாவருள்ளும் மிகப் பூசிக்கப்படத்தக்கமகாதேவன். [அர்கீச.]

அருக்கு —1. அஞ்சுகை. 2. அருக்காணி. 3-5. அருக்கென்னேவலும் தெரிநிலைவினைப் பகுதியும் வினைத்தொகையும். 6. அருமை. 'நிதியினருக்குமுன்னி' (திருக்கோ. உஎரு.) 7. எருக்கஞ்செடி. 'சூளையருக்கஞ்சாறுதோய மதி' (இராசவைத். எக.)

அருக்குதல்—1. பாராட்டுதல். 'ஒருக்குநா மாடுங்குரவையுணம்மை - யருக்கினன்போ னேக்கியல்லனேப்செய்தல்' (கலித்தொகை. க0ச.) 2. ஒடுக்குதல். 'முருக்கிமுன்னரரி முதலோருயிருக்கி' (உபதேசகா. சிவத்து. சஉ.) 3. குறைத்தல், காய்ச்சுதல், சுருக்கு தல். 'நீரருக்கி மோர்பெருக்கி' (பதார்த்த குண. 1592.) 4. செய்யப்பின்னிற்றல். 'அம்புவி தனிற்பொ னுள்ளோ னுலோபியா யருக்கினனேல்' (மச்சபு. சங்கிரா. கக.)

5. சாரச்செய்தல், அணைத்தல். 'அருக்குமங்கையர்மலரடி' (திருப்பு. ச.) 6. அச்சமுறுதல். 'பலவிலங்கிற்கருக்கி' (உபதேசகா. சிவவிரத. 66.) 7. விலக்குதல். 'அருக்குகயார் மாட்டுமுண்டி' (நான்மணி. 88.)

அருக்கை—தமக்கை.

அருக்கேந்துசங்கமம் — அமாவாசை. [ஸ்கேந்து ஸங்கம: ஸ்க - சூரியன். இந்து - சந்திரன். ஸங்கம - கூடுதல்.]

அருக்கோபலம் — சூரியகாந்தக்கல். [ஸ்கோபல: ஸ்க-சூரியன். உபல - கல்.]

அருகசனி—பேரேலம். (மலை.)

அருகஞ்சி—சீந்தில். (மலை.)

அருகணி—பிரண்டை. (மலை.)

அருகண்ணை—நுழைவாயிலின்பக்கம். 'கோபுரத்தில் சேதமான முகவணை அருகணை' (கோயிலொ. 138.)

அருகத்து—(பௌத்த.) தியானங்கள் ஐந்தனுள் நான்காவது. (மணிமே. பக். ௩௫.) [ஸஹத்.]

அருகந்தர்—அருகசமயத்தோர். 'ஊத்தைவாயருகந்தர் கூடி' (சூத. ஞானயோ. க. ௩௯.) [ஸஹந்த.]

அருகந்தன் — 1. அருகசமயத்தோன். 2. சிவன். 3. சைநமதத்திற்சொல்லப்படும் இருபத்துநான்கு தீர்த்தகரருளொருவர். (த. நி. போ. க௩. பக்.) [ஸஹந்த.]

அருகந்தாவத்தை — மோட்சநிலை. (சீவக. 3107. உரை.)

அருகம்—1. உரிமை, உரியது. "அருகங்கவசந்தான்" (சைவச. பொது. ௩௫௫.) 2. சமணசமயம். 'பௌத்தமருகமிவற்றுழல்கநாளும்' (சூத. எக்கி. பூ. ௩௨: ௪௨.) 3. சமீபம். 4. பக்குவம். 5. யோக்கியம். 6. அகிற்கட்டை. 7. சீந்திற்கொடி. [1, 2, 4, 5. ஸஹ.]

அருகர்—1. அருகசமயத்தோர். 'கருநடர்வேந்தனருகர்ச்சார்ந்து' (கல்லா. ௫௭.) 2. அருகில் இருக்கிறவர், அருகிலிருக்கும் நண்பர். 3. அருகு, சமீபம். 'ஆண்டகையாண்டவ்வானேர்துறக்கநாடருகர்கண்டான்' (இரா. மா. கடறுவு. ௨.) [இது: அருகென்பதன் போலி.] 4. இருடிகள். 'அருகாறவனறிவோர்க்கல்லதென் - னிருகையுங்கூடியொருவழிக்குவியா' (சிலப். நாடு. ௨0௨, ௨0௩.) 5. தக்கவர். 'அங்கண்ஞாநநிலைமைசேரவருகராகுமவர்கடாம்' (சேதுபு. முத். ௫௨.) 6. யோக்கியர். [1, 4, 5, 6. ஸஹத் - பூசிக்கத்தக்க யோக்கியன்.]

அருகல்—1. அணுதல். 2. அருகு. 'அவனென்னருகலிலானே.' (திவ். திருவாய். 1. 9. 2.) 3. ஒழுகுதல், சிந்துதல். 'நீரருகிப்பாய்தல்' (வழக்.) 4. கிட்டுதல். 5. குறைதல், சுருங்கல். 'அருகலிலாயபெருஞ்சீரமரர்கள்' (திருவாய். க: ௯: ௩.) 6. சரீரக்கிலேசஞ்செய்தல். 'விணைகண்மாற்றிடவருகலும்' (கந்தபு. பாயிர. ௨௬.) 7. சாதல்.

அருகன்—1. அருகசமயத்தவன். இவன், உலகமெல்லாம் நித்தியம் என்றும், அருகேசுரன் குருத்துவமாத்திரத்திலே கர்த்தா என்றும் பிராணவாயு ஆன்மா என்றும் சொல்வன். (சி. சி. பாயிர. க. ஞாநப்.) 2. அருகதேவன். 'அங்கம் பயந்தோனருகனருண்முனி' (சிலப். நாடு. ௧௮௭.) [பூசிக்கவெனப்படுதலால் வந்தபெயர்.] 3. நண்பன். (பிங்.) 4. தக்கவன், பக்குவி. 'அன்புகொளறத்திற்கருகனேனுதலின்' (மணிமேக. ௨அ. ௯௬.) [1, 2, 4. ஸஹ]

அருகன்குடை—பொற்குடை முத்துக்குடை இரத்திநக்குடையென முறையே சொல்லப்படும் சகலபாசநம், சந்திராதித்தியம், நித்தியவிநோதமாகிய அருகதேவனுக்குரியவாய முக்குடைகள். (சூ. நிகண். பாயிர. க.)

அருகன்குணம் — அருகதேவனுடையனவாகச் சமணநூலிற்சொல்லப்படும் நற்குணங்கள். அவை: அநந்தசுகம், அநந்தஞாநம், அநந்ததரிசநம், அநந்தவீரியம், நிர்க்கோத்திரம், நிர்நாமம், நிராயுஷியம், அழிவின்மை என எட்டாம். இது: (சி. சி. பர. சமணரில் நிகண்ட. ௨-ஆங்கவியானும் உரையானும் பெறப்படும்.)

அருகன்சிறப்பு — அருகதேவனுடைய மங்கலப்பொருள்கள். அவை: தூபதீபக்காட்சி, தேவதுந்துபி, தெய்வத்துவனி, சிங்காதநம், பிண்டி, வெண்சாமரை, புட்பமாரி, மும்மைக்குடை என எட்டாம்.

அருகன்ஞானம்—அருகனுடைய ஐந்துவகை ஞானங்கள். அவை: மதிஞானம், சுருதஞானம், அவதிஞானம், மனப்பரியயஞானம், கேவலஞானம் என்பன. இவற்றுள்: மதிஞானம் - சுபாவபுத்தி; சுருதஞானம் - நூலுணர்ச்சி; அவதிஞானம் - தன்னுடைய முற்பிறப்பை யறியும் அறிவு; மனப்பரியயஞானம் - தன்னுடைய முற்பிறப்பையும் பிறருடைய முற்பிறப்பையும் அறியும் அறிவு; கேவலஞானம். திரிகாலவுணர்ச்சி. (சிலப். நாடு. கஎஎ. குறிப்புரை.)

அருகன்மதில் — உதயதரம், கலியாணதரம், பிரிதிதரம் எனச் சொல்லப்படும் அருகனுடைய மும்மதில்கள்.

அருகன்விட்டகுணம் — அருகதேவனுக்குடையனவல்லவாகச்சமணநூலிற்சொல்லப்படுந் தீக்குணங்கள். அவை ஞானாவரணீயம், தரிசநாவரணீயம், வேதநீயம், மோகனீயம், ஆயுஷியம், கோத்திரம், நாமம், அந்தராயம் என எட்டாம். (இது: சி. சி. பர. சமணரில் நிகண்டவாதி. உ-ஆங் கவியாலும் உரையாலும் பெறப்படும்.)

அருகனைத்தரித்தாள் — தருமதேவதை. (பிங்.)

அருகாழி — கால்விரல்மோதிரம். (குருபரம். 117.)

அருகி—1. 'அருகி' என்னும் ஒரு வினையெச்சம். 2. கள். (திவாகர. ஞ.) 3. யோக்கியமுடையவன். [அர்ஹ-ம்.]

அருகித்தோன்றல்—1. அரிதாகத்தோன்றல். 'விண்ணிலங்கருகித்தோன்று மேதகு வடமீனன்றி' (பாரத. சூது. ௨0௨.) 2. சுருக்கித்தோற்றல். 'அம்மலைமுடிமே லேறிநின்று மீண்டுபோர்க்குமிடத்து முன்னிருந்த மாமலையும் பின்வந்த மலையிடமும் தானின்ற விடத்திற்குக் கீழ்ப்பட் டருகித்தோற்றுமா போலும்' (ஒழிவி. பொது. சஉ. உரை.)

அருகியாத்தம்—பூனைக்காலி. (மலை.)

அருகியற்குறிஞ்சி — ஒரு பண். (கந்தபு. ஞானா. உக.)

அருகியற்செவ்வழி — ஒரு பண். (கந்தபு. ஞானா. உக.)

அருகியற்பாலை—ஒரு பண். (கந்தபு. ஞானா. உக.)

அருகியன்மருதம்—ஒரு பண்; அது: குரல் குரலாய செம்பாலை. (சிலப். வேனி. ௪0.)

அருகு—1. அடுத்த இடம், சமீபம். 'அணியுங் கழற்காற் சுயோதநனுக் கருகாசனத்திருந்தவர்' (பாரத. திரௌ. ௩௪.) 2-4. அருகென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 5. ஓரம். 'தாமரையின்மொய்ம் மலரைத்தும்பி - யருகுடைக்குநன்னாட்டரசு' (களவெண். கலிநீங். உ௪.) 6. சாரலின் ஒரு பகுப்பு. 'சால்புறுமகம்புறத்தோ டருகொடு பெருகுஞ்சார - நூலுணர்ந்துறழினூற்று மூன்றதாநுவலும்பண்ணே' (கூர்மபு. கண்ணன்மண. கடு௮.) 7. நீவர்த்தி. 8. பக்கம். 'அவ்வருகுகடத்தும் ஓடம்'. (ஈடு). 9. இடம். (பிங்.)

அருகுக்கால்—கதவுநிலை.

அருகுதல்—1. அருகல்பார்க்க. 2. குறைதல். 'ஒன்னார் மதிநிலையருக' (இரகு. யாகப் 34). 3. அரிதாதல். 'அருகுவித்தொருவரை யகற்றலின்' (கலித். 142.) 4. அஞ்சுதல். அஞ்செஞ்சாய லருகாநனுகும் (சிலப். 30. 126). 5. கெடுதல். 'பருகுவன்ன வருகா நோக்கமொடு' (பொருந. 77). 6. கிட்டுதல். (சூடா.) 7. குறிப்பித்தல். (இறை. 11. உரை.) 8. அறிதல். (இறை. 11. உரை).

அருகுவைத்தல்—சூடுபோடுதல்.

அருகுறல்—கிட்டுதல். பக்கத்தில் வருதல். 'ஆன்றவிச்செல்வமித்தனையுமொய்த்தருகுற' (இராமா. பால. எதிர். உ௯.)

அருங்கலச்செப்பு—1. மணிக்கலம்பெய்த பணிப்பெட்டகம். (சிலப். அரும்பதவுரை.) 2. ஒரு ஜைனநூல்.

அருங்கலச்செவ்விதழ் — பொற்றாமரை. (சிலப்.)

அருங்கலம்—1. பெறுதற்கரிய ஆபரணம் போலுஞ் சிரேட்டமானபொருள். 'பூவினுக் கருங்கலம்பொங்குதாமரை' (தேவார. நமச்சிவாய. உ. திருநாவு.) 2. ஆபரணம். 'அருங்கல வெறுக்கையொ டளந்துகடை யறியா' (சிலப். இ௩. ௨0.) 3. விலையுயர்ந்த ஆபரணம் 'பெண்ணினிற் கருங்கல மனைய பெய்வளை' (இராமா. கார்கால. ௨0.) 4. இரத்தினத்திரயம். 'காதர்றவன்றவருங்கலம்' (திருநூற். 70).

அருங்கலநாயகன்—புத்தன். (திவா.)

அருங்கவி—1. சித்திரகவி. 2. சித்திர கவிப்புலவன். (யாப். வி. 96. பக். 513.)

அருங்கிடை—1. கடும்பட்டினி. [வழக். அருமை; கிடை - கிடத்தல்.] 2. நோயாற் படுத்தபடுக்கையாயிருக்கை.

அருங்கு — அருமை. 'உறலருங்குண்மை யின்' (தொல். பொருள். 146).

அருங்குரைத்து — அருமைத்து எனப் பொருள்படும் ஒரு குறிப்புவினை. 'கருங்களி றட்டவன்றனக்குக்காப்பதிங் - கருங்குரைத் தென' (காஞ்சிப். கழுவாய். கஙக.)

அருங்கேடன்—1. கேடில்லாதவன். 'அருங் கேடனென்பதறிக' (வள். உகO.) [அருமை- இன்மை.] 2. மிகக்கெட்டவன்.

அருங்கேடு—கேடில்லாமை. 'அருங்கேட்டா லாற்றவினைவது' (வள். எருஉ.) [அருமை - இன்மை.]

அருங்கொடைத்தானம் — உத்தமதானம். 'அருங்கொடைத்தானமாய்ந்தவருந்தவந்தெரி யின் மண்மேன் - மருங்குடையவர்கட்கல் லால் மற்றவர்க் காவதுண்டோ' (சிந்தா. முத். ருஉரு.)'

அருங்கோடை—1. மிக்க வெப்பத்தைக் கொடுக்குங் கோடைகாலம். 2. மிக்க வெப்பம்.

அருங்நிமேடவர்த்தமரோகம்—இமையைப் பற்றிய ஒருவகை ரோகம்; இது: வாயு இமைச்சந்திகளிலேநிற்கும்போதுபிறந்திமை களை ஓயாதாட்டுவிப்பது. (சீவரட். உசச. பக்.) [ஸ்ரீ - நோவின்மை. நிமேஷ - இமைகொட்டல். வ த-ஃ - இமை.]

அருச்சகன் — கோயிற்பூசைசெய்வோன். 'ஆதிசைவனுமருச்சகனொருவன்' (திருவிள. வாதவூர. உரு.) [ஸ்ரீ.]

அருச்சநம்—1. தேவர்க்கு அல்லது பெரி யோர்க்குச் செய்யும் பூசை. 2. பூசைத் திரவியம்.

அருச்சநை—பூசை. 'தம்முளத் - தரந்தை நீங்க வருச்சனைசெய்து' (கந்தபு. திருவி. சஉச.)

அருச்சநைவடிவு—அர்ச்சாவதாரம். 'திரு வாழ்மார்பனருச்சனைவடிவிற்கெல்லாம்' (அரி சமய. பராங். 47.)'

அருச்சயோகம்—பூசை.

அருச்சி — 1-3. அருச்சியென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகை யும். 'ஆசாரியன்மனைவியை யடி தீண்டா தருச்சி' (சைவச. மாணு. கக.) 4. பூசை. 'வள்ள றன்னைமெய் யன்பினு லருச்சிசெய் வானோர்' (திருவிளை. நகரங்க. கக.)[அருச்சி- ஒரு முதனிலைத்தொழிற்பெயர்.]

அருச்சிக்கை—அருச்சித்தல். 'அந்தயுகந் தோறுமடி தீண்டியருச் சிக்கை' (சைவச. மாணு. உO.)

அருச்சிகன்—சந்திரன்.

அருச்சித்தல்—1. தெய்வத்திற்குப் பூசை செய்தல். 'அல்லும்பகலுமருச்சிக்க' (சைவச. பொது. எரு.) 2. பெரியோர்க்குப் பூசை செய்தல்.

அருச்சிதம்—வழிபாடு. [ஸ்ரீ]

அருச்சிதன் — பூசிக்கப்படுவோன். [ஸ்ரீ.]

அருச்சிப்பு—அருச்சித்தல்.

அருச்சியம்—1. உவப்பில்லாதது, இணக்க மில்லாதது. [ஸ்ரீ: ஸ்ரீ; ஸ்ரீ - உவப்பு.] 2. வணக்கம். [ஸ்ரீ.]

அருச்சுநசந்நியாசி—கபடசந்நியாசி.

அருச்சுநம்—1. எருக்கஞ்செடி (மலை.) 2. ஒருவகை நேத்திரரோகம். அது: வெள்விழி மேற் கடப்பம்பூநிறமானபடலத்தைப்பிறப் பிக்கும். (சீவரட். உருO.) 3. களங்கமின்மை. 'துன்றருச்சுநநான்மறையுரவுடன்றெடர' (பாரத. பதினைன். சரு.) 4. புல். 5. பொன். 6. மயிற்பறவை. 7. மருதமரம். 'சென்றருச் சுநமிரண்டுதைத்தருளினேன்' (பாரத. பதி னன். சரு.) 8. வெண்மை. (சூடா.) 9. அரக்கு. [2, 8. ஸ்ரீ.]

அருச்சுநவட்டம் — திருவிடைமருதூர். 'மண்ணிடையருச்சுநவட்டத்தெய் தினர்' (கந்தபு. உமைக. உரு.)

அருச்சுநன்—1. ஒருதாயின் தனிமகன். 2. கார்த்தவீரியனென்னும் அரசன்; இவன் ஆயிரம்புயங்களுடையவனென்பர். 'மருவல ரின்றிமண் ணுண்ட - வாயிரந் திண்டோ ளருச்சுநன்றனக்கும்' (இராமா. கார்த்தவீ. உ.) 3. சுத்தன். 4. பஞ்சபாண்டவருளொரு வன்; இவன், இந்திரனுக்குக் குந்தியிடம்

அலங்காரபஞ்சகம் — தொண்ணூற்றாறு பிரபந்தங்களிலொன்று; அது: வெண்பாவும், கலித்துறையும், அகவலும், ஆசிரியவிருத்தமும், சந்தவிருத்தமும் முறையே மாறிமாறி நூறுசெய்யுள் அந்தாதியாகவரப் பாடப்படுவது. 'வெள்ளை கலித்துறை யகவல் விருத்த - மெள்ளவில்வண்ணமிவையோரைந்து - மலங்காரபஞ்சகமாகுமென்ப' (இலக்கண வி. அ௬௪.)

அலங்காரம்—1. அழகு. 'அலங்காரநிகழாக்கு' (செந்தினிரோட். ௪.) 2. ஆபரணம். 'பாம்பலங்காரப்பரன்' (திருக்கோ. ௧௧.) 3. உடை, உத்தரீயம், ஆபரணம் முதலிய அணிகளாற் சிறப்பித்தல். 4. சிங்காரம். (பிங். ௧௧௩௫.) 5. பஞ்சலக்கணத்து ளொன்று; அது: சொற்சுவை, பொருட்சுவைகளோடு வாக்கியம் எழுதும் முறையைக் கூறுவது. [இதனை அறுபத்துநான்கு கலைஞானங் களுளொன்றென்பர்.] 6. வாசகச்சுவை. [அலம்-அணி. காரம்-செய்தல்.] 7. வெடிகாரம். 8. சங்கீதவுறுப்பு வகை. 9. விஷ்ணுகோயில்களில் நிவேதிக்கப்படும் ஒருவகைத்தளிகை.

அலங்காரித்தல் — அலங்கரித்தல். 'அபலலங்காரித்து' (தணிகை. அகத். ௧௬௩.)

அலங்கிதன்—அரிதாரம்.

அலங்கியம்—கடத்தற்கரியது. [அலங்க்யம்: அ; லங்க்ய - கடக்கத்தக்கது.]

அலங்கிருதம் — அலங்கரிக்கப்பட்டது. [அலங்க்ருத: அலம் - அணி. க்ருத - செய்யப்பட்டது.]

அலங்கிருதி—அலங்காரம். [அலம் - அணி. க்ருதி - செய்யப்பட்டது.]

அலங்கு — 1-3. அலங்கென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும் 4. அலங்குதல். [ஒரு முதனிலைத் தொழிற்பெயர்.] 'முடங்குளையலங்குறுமுதியபூதல்' (கந்தபு. மார்க்க. அ௧.)

அலங்குதல் — 1. அசைதல், அலைதல். (ஐங்குறு.) 2. இரங்குதல். (பிங்.) 3. ஒளிசெய்தல். 'சிகரிலாதகம் - மறையருளாலடைக்கலங்குமுத்தியில்' (சூத. முத். அ: அ௪.) 4. மனந்தத்தளித்தல்.

அலங்கை—துளசி (மலை).

அலங்கோலம் — 1. கிரமமின்மை. 2. கோலக்கேடு. [வழக்.]

அலச்சை—இலச்சையின்மை. [அலஜ்ஜா: அ; லஜ்ஜா - நாணம்.]

அலசகம்—1. சோம்பு. 2. வாயுப்பொருமல்.

அலசகுட்டம்—ஒருவகைக் குட்டரோகம்; அது: இரத்தநிறமாக ஆற்றிற் கிடக்குஞ் சிறு சிறு கூழாங்கல்லுகளையொத்த கொப்புளங்கள் பிறந்து உடைந்து ரணங்களாக வருவது. (சீவரட். ௧௪௧.)

அலசடி—துன்பம்.

அலசத்துவம்—சோம்புத்தன்மை. [அலஸத்வம்: அலஸ - சோம்பு. த்வம் - தன்மை.]

அலசம்—1. ஒருமரம். 2. சோம்பு. 3. பொத்தைக்கால், யானைக்காலேப். 4. மந்தம். 'சர்த்திதலைநோயலசம்' (தைல. தைலவ. அ.) [அலஸ.]

அலசரோகம் — மந்தத்தினால்வரும் ஒருவகைக் கொடியரோகம். (சீவரட். அ௯.) [அலஸ - மந்தம்.]

அலசல்—1. அநுகூலமாகாதவேலை. 2. அலைவு. 3. இழைநெருக்கமில்லாதவத்திரம். 4. கழுவுதல். 5. சிதறுண்டுகிடப்பது. 6. சோம்பல். 7. சோர்வு. 'அவன்செயத் திருவுடம்பலச நோற்கின்றான்' (இராமா. சூர்ப்பநகை. ௧அ.)

அலசவிரணரோகம் — விரணபேதங்களுளொன்று; அது: அழுகற்சேறு முதலிய வற்றைப் பலதரம் மிதித்தலினாலே பாதங்களினேரங்களிலும் உள்ளங்கால்களிலும், விரற்சந்துகளிலும் தினவோடுண்டாகும் வெளிறினபுண். (சீவரட். ௩௧௨.)

அலசி—ஒருவகை நத்தை.

அலசிரோகம்—1. ஒருவகைக் குய்யரோகம்; அது: ஆண்குறியினின்றும் மேகத்தை விழச்செய்து, விரணத்தையுண்டாக்குவது. (சீவரட். ௩௧௫.) [அலசி - மேகவிரணம்.] 2. வெள்விழிக்கும் இமைச் சந்திக்கும் இடையில்வரும் ஒருவகை ரோகம்; அது: கருவிழிக்குள்வீக்கத்தைப்பிறப்பிக்கும்.(சீவரட். ௨௪அ.) [அலஜி.]

அலசிவர்த்மரோகம்— இமைகளில்வரும் ஒருவகைரோகம்; அது: கருவிழிக்கு வெளியிற் சிவந்த கட்டிகளைப் பிறப்பித்து ஓயாத பீளையைத் தருவது. (சீவரட். உசடு.) [ஸஜி- வீக்கத்தையுடையது. வர்த்ம-இமை.]

அலசு—1-3. அலசென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. வருந்துதல். [இது: ஒரு முதனிலைத்தொழிற்பெயர்.] 'ஐதின் மேனி யலசுற யான்றவஞ் செய்து' (கந்தபு. மாயைப். எக.)

அலசுதல்—1. கழுவுதல். 2. வருந்துதல். 'திருவுடம் பலச நோற்கின்றான்' (கம்பரா. சூர்ப்ப. 18.) 3. அலைதல். 'இறுநுசுப்பலச வெறுநிலஞ் சேர்ந்தாங்கு' (மணி. 9. 7.) 4. சோர்தல். (சிலப். 16. 197. அரும்.)

அலஞ்சரம்—நீர்விட்டுவைக்கும் மட்சாடி. [ஸஜ்ஜர.]

அலட்சிதம் — அறியப்படாதது, காணப்படாதது. [ஸக்ஷித:]

அலட்சியம் —அலக்கியம் - மதிப்பின்மை, கவனமின்மை. அச் சிறியவனுக்காக இப்பெரியமந்திரம் அநுசிதமென்பான் 'மந்திரம் வேண்டுமோ மற்றிதற்குமே' என் றலட்சியமாகக் கூறினன். (கந்தபு. சூரனமைச். ருரு. உரை.) [ஸக்ஷ்ய.]

அலட்டல்—அலட்டுதல்.

அலட்டி—அலட்டுகிறவன்.

அலட்டு — 1-3. அலட்டென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. அலட்டுதல்; உபத்திரவித்தல். 'யோக்கியர் தம்மைத் தேடி யீந்திடா தொருவன் கூறும் - வாக்கியத் தலட்டுக் கீதல்' (மச்சபு. பத்திமான். உ௨.) 5. பிதற்றுகை.

அலட்டுகை—அலட்டுதல்.

அலட்டுச்சந்நி—பிதற்றுங் குணமுடைய சந்நிநோய்.

அலட்டுச்சனி—வக்கிரச்சனி.

அலட்டுதல்—1. பிதற்றுதல். 2. வீண் வார்த்தைகளை மேன்மேலும் பேசுதல். 3. உபத்திரவித்தல்.

அலத்தகம்—1. செம்பஞ்சுக்குழம்பு. 'அஞ்சலார்த மலத்தக மலர்த்தா ணீவி' (நைடத. நாட்டு. உ௬.) 2. செம்பருத்தி. [ஸக்தக.]

அலத்தம்—1. செம்பஞ்சுக்குழம்பு. 2. செம்பருத்தி (மலை.) [ஸக்த.]

அலத்தல்—1. அலைதல். 'ஐவர்வந்து முறைமுறை துயரஞ் செய்ய - வற்றுநானலந்துபோனேன்' (தேவார. திருவாரூ. அ. திருநாவு.) 2. ஆசைப்படுதல். 3. துன்பமுறுதல். 'அலந்திலர் செருக்களத் தஞ்சினுரலர்' (இராமா. கிங்கர. ருஅ.) 4. வறுமைப்படல். 'அலத்தற்காலையாயினும்' (புறநா. ௧௦௩.)

அலத்தி—நுளம்பு, மின்மினி.

அலத்துவம்—மிக்கதன்மை. [ஸஂ-மிகுதி. த்வம் - தன்மை.] (அகராதிகாரர் அலைத்துவமென்பர்.)

அலநரன் — 1. உழவன். 2. பலராமன். [ஹலபர: ஹல - கலப்பை. பர - தரித்தவன்.]

அலநிதலநி — அலங்கோலம். 'இரிந்தன ரலநி குலநியோ டேழ்கலிங்கரே' (கலிங். போர். 47.)

அலது — அல்லதென்பதில் லகரமெய் தொக்க ஒரு விகாரமொழி. 'பூதங்கள் பேய்க்கோலமாய் விதண்டைபேசுமோ வலதுதான் பரிபாககாலம் பிறக்கவில்லையோ' (தாயு. எங்கு. எ.)

அலந்தம்—மெய்யீறு. 'ஆயுமலந்தமசந்தமலா தியசாதியிவை - மாயுமெய்யீறுயிரிறுயிராதி மதிநுதலாய்' (பி. வி. ச௬.) [ஹல் - மெய்யெழுத்து. அந்தம் - ஈறு.]

அலந்தல் — 1. செங்கத்தரி (மலை). 2. மயிலடிக்குருந்து.

அலந்தலை — 1. துன்பம். 'அலந்தலைப் பட்ட சிந்தையனுகி' (உபதேச. சநகாதி. உ௩.) 2. மயக்கம். 'அலந்தலையுற்றவரும் புலன்களைந்தும்' (இராமா. கைகேசிசூழ். ௩௬.)

அலந்தலைமை — உபத்திரவம். 'அலந்தலைமை செய்துழலு மையன்' (திவ். பெரிய தி. 4. 4. 3.)

அலந்தார் — 1. துன்பமுற்றவர். 'அலந்தாரை யல்லனோய் செய்தற்றால்' (வள். ௧௩௦௩.) 2. வறுமையுற்றவர். 'அலந்தார்க்கொன் றீந்த புகழும்' (திரிகடு. சக.)

அலந்நு—நொந்து(புறப்பொருள்வெண்).

அலந்தை—1. குளம். 'இருடீர்மலையமுனி யலந்தையிராமனிலஞ்சியிலக்குமன்பேர்ப்-பொருவிலோடை' (சேதுபு. சேதுவந்த. சச.) 2. துன்பம்.

அலந்தோர்—1. துன்பமுற்றவர். 'அலந் தோர்க்களிக்கும்பொலம்பூட்சேஎய்' (திருமுருகாற்று. உஎக.) 2. வறுமையுற்றவர்.

அலப்படை — கலப்பைப்படை. 'அலப் படை-யண்ணலாம் பலபத்திரவாண்டகை' (காஞ்சிப். பலபத். ௨.)

அலப்படைதொண்டோன் — பலராமன். (சூ. நிகண். க: க௦.)

அலப்பல் — 1. அலப்புதல். 2. பிதற்று தல். 3. கலப்புக்கட்டோசை. (பிங்).

அலப்பன்—வீண்பேச்சுக்காரன். [வழக்.]

அலப்பாரித்தல்—வீண்பேச்சுப் பேசி யார வாரித்தல்.

அலப்பியம் — அடையக்கூடாதது. [அலப்ய: அ; லப்ய - அடையத்தக்கது.]

அலப்பிருந்து — 1. உழுகிறவன். 2. பல ராமன். [ஹலப்ருத்: ஹல - கலப்பை. ப்ருத் - தரித்தவன்.]

அலப்பு — 1-3. அலப்பென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகை யும். 4. மனக்கலக்கம். 'அலப்பா யாகா சத்தை நோக்கி' (திவ். திருவாய். 5. 8. 4.)

அலப்புதல் — 1. வீண்பேச்சுப்பேசுதல். 2. ஆரவாரித்தல். 3. அலட்டுதல்.

அலபதுமம் — நிருத்தக்கை முப்பதனு ளொன்று. (சிலப். அரங்கேற்று. கஉ. உரை.)

அலம்—1. அடைதல். 2. அணி, பூடணம். 3. அமையுமெனல், போதுமெனல், வேறு வேண்டாமெனல். 'அல்லற்பிறவியலமலம் வின்றுறைந்து - தொல்லைத்திருநகருந் தன்புமலமலமால்' (கந்தபு. சயந்தன்பு. எஎ.) 4. அமைவு. 'அலந்தருமறிவான் மூத்தோ ரனைவருமிசைய' (திருவிளை. மாமனு. கஉ.) 5. அலமரல். 'சித்தாமலமில்லை' (சி. சி. அ: ௩உ. சிவாக்.) 6. கலப்பை. 'சிலை யலங்கணிச்சிவெண்ணெய்தெவ்வி' (தணிகை. நாட். உக.) 7. சஞ்சலம். 'அல மகன்முத்தியுண்டாம்' (சூத. எக்கி. பூ. உ: அ.) 8. சாமர்த்தியம். 9. தேன். (திவாகர. சஉ. பக்.) 10. தேளின்வாலிற் கொடுக்கு. 11. பொன்னரிதாரம். 12. மிகுதி. 'ஆசலம் புரியைம்பொறிவாளியும்' (இராமா. ஆற்றுப். க.) 13. முழுதும். 'புலன்களிற் பழகிச் சித்தம் பூண்ட வாதனைகண் முன்னே-யலம் பெறமாற்றி' (ஞானவா. முதல். கசன். க௦.) 14. விருச்சிகராசி. 15. துன்பம். (சூத. எக். கிய. பூ. 2. 8.) [1, 2, 3, 4, 8, 10, 11, 12, 13, அலம்; 6. ஹல.]

அலம்பசன் — ஓரரக்கன். (பாரத. எட் டாம். உக.) இவன் துரியோதனனுக்காகப் போர்க்குவந்தவன்.

அலம்பல்—1. அலக்குத்தடி. 2. ஆரவாரித் தல். 'மாடலம்பின மாமணித் தேர்மணி - பாடலம்பின பாய்மத யானையே' (இராமா. முதற்போர். கஎ.) 3. கழுவுதல். 4. ததும் பல். 5. தவறல். 6. தொந்தரவு. 7. பிரயா சம். 8. வீண்பேச்சு. [வழக்.]

அலம்பிறத்தல்—திருத்திபிறத்தல். 'அந்தரி யாசனத்திலேமனதலம்பிறவாமல்' (சி. சி. கூ: கக. சிவாக்.)

அலம்பு — 1-3. அலம்பென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகை யும். 'மட்டலம்புகோதையார்' (திருவிளை. வளை. ௩௪.) 4. தசநாடியிலொன்று. (சிலப். அரங்கே. உரை. பக். அச.)

அலம்புசை — 1. அப்சரஸ்திரீகளு ளொருத்தி. 'அவர்தமிற்சிலர்நடித்தபினலம் புசைநாமத் - துவரிதழ்க்கொடியாடினள்' (சேதுபு. விராம. கரு.) [அலம்போஷா: இங்கே ஷகாரம் சகாரமாயிற்று.] 2. பத்து நாடிகளிலொன்று. அது: மூலாதாரந் தொடங்கியிடதுகாதளவும்நிற்பது. (வேதா. தத். ௫எ.)

அலம்புடம்—1. வாந்திசெய்தல். 2. விரல் கள் விரித்த உள்ளங்கை. [அலம்போஷ.]

அலம்புடை—அலம்புசை; இது: தசநாடி களிலொன்று.

அலம்புதல் — 1. அதிர்தல். 'நிமிர்ந்த - வலம்புமோதையால்' (ஞானவா. பிரகலாத. ௫௫.) 2. கழுவுதல். 'வைத்தசுவாலம்பின் மண்போமோ' (தாயு. பரா. உகச.) 3. ததும்புதல். 'கள்ளலம்புற்றதண்டார்' (கந்த பு. எமகூட. உஉ.) 4. தவறுதல். 5. அலைதல்.

'வண்டலம்புஞ்சோலை' (திவ். திருவாய். 2. 8. 11.) 6. அலைத்தல். (திவ். பெரியாழ். 4. 2. 1.)

அலம்புருடன் — தசநாடிகளிலொன்று. இது: கண்களிலே நிற்பது.

அலம்புருடை—அலம்புருடன்.

அலம்வரல்—1. அமைவுண்டாதல். 'அலம் வரவடியேற்கருளுவாயே' (திருப்பு. ருஅச.) 2. சுழலுதல். 'அங்குமிங்குமாகி யலம்வருவோர்' (சி. சி. அ: ௩௧.)

அலமந்த—ஒரு தெரிநிலைவினைப்பெயரெச்சம். [இஃது 'அலமரு' என்னும் பகுதியினின்று பிறந்தது.]

அலமந்து — அலமரு என்னும் பகுதியினின்று பிறந்த ஒரு தெரிநிலைவினையெச்சம். 'ஓடியலமந்து' (கோயிற்பு. இரணி. உஅ.)

அலமரல் — 1. அச்சங்கொள்ளல். 'ஐமேலுந்தி யலமந்தபோதாக வஞ்சேலென்றருள் செய்வான்' (திருவையாறு. திருஞான.) 2. இளைத்தல். 3. கலங்கல். 4. சுழலல். 'விளரி வண்டினங்களலமருங்கழனி' (நைடத. அன்னத்தைத்தூ. கo.) 5. துன்பமுறல். 'அழுதரற்றியலமந்தாரே' (பாரத. பதினெட். கக.)

அலமரு — 1-3. அலமரு என்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அலமருதல் — 1. சுழலுதல். 'விளரிவண்டினங்களலமருங்கழனி' (நைடத. அன்னத்தைத்தூ. 10.) 2. மனஞ்சுழலுதல். (தொல். சொல். 311.) 3. அஞ்சுதல். (திவா.) 4. வருந்துதல். 'கொம்பரில்லாக்கொடிபோலலமந்தனன்' (திருவாச. 6. 20.) 5. அசைதல். 'ஆலைக் கலமருந் தீங்கழைக் கரும்பே' (மலைபடு. 119.)

அலமலத்தல்—1. அங்கலாய்த்தல். 2. மனங்கலங்கல். [வழக்.] 3. ஆதுரப்படுதல்.

அலமலாத்தல் — 1. அங்கலாய்த்தல். 2. கலங்கல். ?. சுழலல். [வழக்.]

அலமாப்பு — துன்பம். 'அலமாப்பினிற் பாரிவருகூத்து' (திருப்பு. 879.)

அலமாரி—1. அவாவுள்ளோன். [அலவாரி பென்னுஞ்சொல் இதன் அபத்தத்திரிபென்பர்.] 2. ஒருவகையான மரப்பேழை. [வழக்.]

அலமான் — } திப்பிலி.
அலமீளது— }

அலமுகவிரும்பு — கலப்பையின் கொழு. 'அலமுகவிரும்புதேய' (திருவிளை. நாட். கக.) [ஹல - கலப்பை.]

அலமுறல் — துன்பமடைதல். 'தந்தை தாயை-யிழந்தலமுறுமினென்னு' (திருவிளை. பன்றி. எ.)

அலயம் — 1. உற்பத்தி. 2. ஒடுங்காமை, அழியாமை. 3. நிலையுண்மை. [அ - எதிர்மறை. லய - அழிவு.]

அலயன்—1. அழிவில்லாதவன். [லய - அழிவு.] 2. வீடில்லாதவன். [ஆலய: அ; லய- வீடுடையவன்.]

அலர் — 1-3. அலரென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. நீர். (பிங்க. ருஎ.) 5. பலரறிந்து பழிதூற்றல். 'அலரெமக்கீந்ததிவ்வூர்' (வள். ககசஉ.) 6. பழிச்சொல். 'அருந்தவந்தபுள்ளார்த்தலர் தூற்றுமால்' (நைடத. நகர. உக.) 7. பூமாலை. 'நீயன்றுசூட்டலர்' (வாண. உஅரு.) 8. மகிழ்ச்சி. (பிங்க. ௩௦கச.) 9. மஞ்சள். (மலை.) 10. மலர்ந்தபூ. 'அலரின்வண்டளகத்தலர்பாய்வன' (தணிகை. நாட். கoசு.) 11. மிளகு. (மலை.)

அலர்க்கம்—1. ஒருவகைக்கிருமி. 2. விசர் நாய். 3. வெள்ளெருக்கு. (மலை.)

அலர்ச்சி—மலர்தல்.

அலர்த்தல் — 1. மலரச்செய்தல். 'பருதியலர்த்திடுவதுபோல்' (சி. சி. கக: அ.) 2. விரித்தல். 'காகமலப்போதலர்த்தித் தாங்கினன்' (திருவிளை. வெள்ளையா. ௩.)

அலர்த்தி—மலர்ச்சி.

அலர்த்துதல்—அலர்த்தல்.

அலர்தல் — 1. பரத்தல். 'அலர்தல்லமா நிலம்புரக்கும்' (நைடத. சிறப்புப்பாயிர. க.) 2. பருத்தல். 'கனஞ்சேர்ந் தலர்துளி காலுமுன்னே' (வாண. உசுக.) 3. மலர்தல். 'தாமரையலர்ந்தபூந்தடம்' (நல். பாரத. நகர. உச.) 4. விளங்குதல். 'ஆழியங்கிழவனுயலரும்' (சூளா. குமார. 43.) 5. சுரத்தல். 'அலர்முலைச்செவிலி' (பெரும்பாண். 250.)

அலர்ந்தபூ — 1. சொற்றுன். (மலை.) 2. மலர்ந்தபூ.

அலர்ந்திடுதல் — மலர்தல். ‘ஏம்பரித் தோவற்காணி னலர்ந்திடுத வியல்பன்றே’ (நைடத. அன்னத்தைத்தூ. ௧00.)

அலர்மகள் — 1. இலக்குமி. ‘அலர்மகள் மலிதர வவனி யிகழ்பவர்’ (தேவார. திருவீழி. ௧. திருஞாந.) 2. சரசுவதி. [அலர்-பூ. தாமரைப்பூவினிடத்திருக்கிறவள்.]

அலர்முகாரகம் — பாத உறுப்புக்களுள் ஒன்று.

அலர்வு — அலர்தல். ‘வாளின்முந்திரவி யெதிர்முளரியலர்வுறுமொன்று’ (சிவப்பிர. ௧: ௫.)

அலரவன் — பிரமன். ‘அலரவன் முதலமரருமுனிவரும்’ (கந்தபு. தெய்வ. உ௫௯)[அலர்-பூ.]

அலராகின்று — அலராயிற்று. (ஐங்குறு.) [அலராயினது எ-து, அகரங்கெடத் நகரந் திரிந்தது.]

அலராங்கட்டு — பழிமொழியை அங்கே உடையது. (ஐங்குறு.)

அலரி — 1. அலரிப்பூ. ‘அலரிவாய்கமழக் கூதிருன்’ (சிக். ௧௩௧. ௬௨.) 2. அழகு. (பிங்.) 3. ஒருமரம். ‘பாதிரியலரிபுன்னை’ (சேதுபு. இராமநாத. ௫௫.) [இதன் வேர் முதலியன நஞ்சுடையன என்பர்.] 4. கண்வரி. (பிங்க. ௩0௬௩.) 5. கோதுமை. 6. சூரியன். ‘அலரியாதி-மிடிதுளக்குந் தேவர்தமை’ (தணிகை. ௩௧௭. ௧௯.) 7. தேனீ. 8. நீராவி. 9. பூப்பொது. (சூ. நிகண். ௧௧. லகர. ௧.)

அலல் — அல்லல். ‘அலலுறுவனுரியன்’ (சைவச. ஆசா. எ௮.) [அது லகரமெய்கெட்டு வந்த விகாரமொழி.]

அலவர்-உழுதொழிலாளர். ‘அலவர் சாலிகொய்தன்னுமை’ (தணிகை. நாட். ௧௧௭.) [ஹல - கலப்பை.]

அலவல்—1. அலமரல். ‘அலவலையுடையையென்றிதோழி’ (கலித்தொகை. ௧௨௨.) 2. கந்தைச்சீலை. 3. நூல்நெருக்காது நெய்த சீலை.

அலவலை-1. ஆராயாது மநத்திலேதோற்றியதைச் செய்தல். ‘அலவலைச்செய்திக்கந்தினன்’ (மணிமே. ௧எ. ௫௧.) 2. சீர்கெட்டநிலைமை. 3. புலம்பல். ‘சிறைநின்ற வலவலையில்லாக்குடியும்’ (திரிகடு. ௩௪.) 4. பேச்சுக்காரன். ‘அல்லவைசெய்யுமலவலையும்’ (திரிகடு. ௬௯.)

அலவலைமை—வெகுவாகப்பேசுகை. ‘சிசுபாலன்றன்னை யலவலைமை தவிர்த்த வழகன்’ (திவ். பெரியாழ். 4. 3. 5.)

அலவன்— 1. ஆண்நெண்டு. (பிங்க. ௨௩௭௭.) ‘அலவன்பேட்டுடனம்புயச்சேக்கைமேல்’ 2. இஞ்சிரசம். (இராசவைத்.) 3. கர்க்கடகராசி. 4. சந்திரன். (சூ. நிகண். ௧: ௫௮.) 5. நண்டு. 6. பூனை. (சூ. நிகண். ௩: ௨௯.)

அலவாங்கு — பிடிவேண்டாது முழுதும் இரும்பாற் செய்த கடப்பாரை. [வழக்.]

அலவாட்டு — வழக்கம். [தெலுங்கு.]

அலவாநிற்றல்—அங்கலாய்த்தல். ‘அலவாநிற்குமன்பிலேன்’ (திருவாசக. திருச்சத. ௫௪.)

அலவான் — பல்லாங்குழியாட்டத்திற் கூடும் காய்கள்.

அலவுதல்—1. சிந்துதல். ‘அலவுநுண்டுளி பருவிசீரம்பையராட’ (இராமா. சித்திர. ௨௫.) 2. வருந்துதல். ‘அன்பனைக் காணுதலவுமென் னெஞ்சன்றே’ (சிலப். 18. 17.) 3. மனத்தடுமாற்றம் ‘ஆதுலமாக்களு மலவுற்று விளிப்ப’ (மணிமே. 4, 42.)

அலவுறல்-அலம்வருதல். ‘நறையும்விரையுமோச்சியுமலவுற்று’ (குறிஞ்சி. எ.)

அலவை—1. அல்லவை. ‘அலவைசொல்லுவார்’ (தேவார. பூந்தரா. ௧0. திருஞாந.) 2. விடாது பிதற்றுபவள். ‘மாயவலவைசொற்கொண்டு’ (திருவாய். 4, 6, 4.) 3. வியபிசாரம். ‘அவமறைந்தொழுகு மலவைப் பெண்டிர்’ (சிலப். 5, 129.)

அலவைப்பெண்டிர் — வியபிசாரப்பெண்கள். ‘அவமறைந்தொழுகு மலவைப்பெண்டிர்’ (சிலப். இந்திர. ௧௨௯.)

அலற்றுதல் — இடைவிடாமலும் முறையின்றியும் பேசுதல். (திவ். திருவாய். 1, 3, 10.)

அலறல் — 1. அழுதல். ‘பொருமாகணை விட்டிடலும் புவிமீதலறிப் புரள’ (இராமா. நகர்நீ. எ௫.) 2. ஓயாதுசத்தமிடல். ‘சங்குகுலனைந்தலறிய தடம்பணை’ (நைடத. நாட். ௫.) 3. கமையிலாதழைத்தல். ‘ஆதியென்று

மாரூராவென் றென்றே யலறு நில்லே' (தேவார. திருவாரூர். திருத்தாண்ட. க. திருநா.) 4. சிதறுதல். [வழக்.] 5. விரிதல். 'அலறுதலையோமை' (ஐங்குறு. 321.) 6. திரண்ட ஓசை. (பிங்.) 7. மாடு ஆந்தை முதலியன கதறுதல். 8. வருந்துதல்.

அலறு — அலறென்னேவலும் தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அலறுசந்நி—அலறியலறி யெழும்பச்செய்யும் ஒருவகைச் சந்நிபாதசுரம். (சீவரட். உசு.)

அலறுதல்—அலறல்.

அலறுதலை — 1. காய்ந்ததலை. 2. விரிந்த தலை. 'அலறுதலையோமை' (ஐங்குறு. ௩௨௧.)

அலன்—பலராமன். (பரிபா. 3, 83.)

அலன்றல்—சாதல்.

அலாக்கு—தனிமை. [இந்துஸ்.]

அலாசம்—அடிநாக்கில் வரும் ஒரு நோய். [அலாஸ: அ; லாஸ - உமிழ்நீர்.]

அலாதம்—1. கரி. 2. நெருப்புக்கொள்ளி. [அலாத.]

அலாதா—1. தொழிற்படாதது. 2. வேறு. [இந்துஸ்.]

அலாதார்—ஒழிந்த பிறர். 'மின்னுரிடை மின்னேரிழை மென்கொம்பை யலாதார்' (பாரத. அருச்சுனன்றவ. கஙஉ.) [இது அல்லாதார் என்பதில் லகரமெய்கெட்டது.]

அலாதி—1. மெய்யெழுத்துமுதல். (பி.வி.) [ஹல் - மெய். ஆதி - முதல்.] 2. தனியானது.

அலாது — 1. அல்லாது. 'கடியுடன்வந்தளிக்கினலாது களிப்பரிதாம்' (தணிகை. களவு. ௩௩௦.) [லகாரமெய்கெட்டுவந்த ஒரு விகாரமொழி.] 2. தொழிற்படாதது. 3. வேறு. [2, 3. இந்துஸ்.]

அலாபத்திரம்–ஒற்றைக்கைக்குக் காட்டிய முப்பத்துமூன்றுவகையுள் ஒன்று; அது:சிறுவிரன்முதலாகிய ஐந்தும் வளைந்து மறிவது. 'அலாபத்திரமேயாயுங்காலை - புரைமையின் மிகுத்த சிறுவிரன்முதலா - வரன்முறை யைந்தும் வளைந்துமறிவதுவே' (சிலப். அரங்கேற்று. கஅ. உரை.)

அலாபதம்—இலாமிச்சை (மலை.)

அலாபம்–1. அடையாமை. 2. இடையூறு. 3. தீமை. 4. நட்டம். [அலாப: அ; லாப - அடைதல்.]

அலாபு—சுரை. (பிங்.) [அலாபூ:]

அலாபுகம்—சுரைக்காய். (சீவரட். உஅ. [அலாபூக:]

அலாபுகரோகம்—ஒருவகைரோகம்; அது கழுத்தின் உட்புறத்திற் சுரைப்பிஞ்சு போன்று அடியகன்ற மாமிசகண்டமாய் வரும்; அதனாற் சுவாசம்விடுதல் பிரயாசமாகும். (சீவரட். உஅ.) [அலாபூக ரோக.]

அலாயுதம்—கலப்பைப்படை. 'அலாயுதங் கொடுமுன் மேருமால்வரையை யைந்துவிற் கிடையிழுத்திடுங் - கிலாதன்' (கூர்மபு. அந்தகாசு. ௩௭. [ஹல - கலப்பை. ஆயுத - படை.]

அலாயுதன்—பலராமன். 'அறிவுருவகை யலாயுதன்முதல்வடமதுரை - செறியும்யாதவர்' (பாரத. அருச்சுனன்றீ. ௭௨.) [ஹலாயுத:]

அலாரம் — கதவு.

அலாரி — அலரி.

அலாரிதா—அலரி. (மலை.)

அலாரிப்பு – நாட்டியபவாரம்பத்திற் பாடும் சொற்கட்டு.

அலால்—அல்லால். 'மனஞ் சஞ்சலப்படுமலால்' (தாயு. பரிபூ. ௬.) [லகரமெய் கெட்டுவந்தது.]

அலாவு — சுரை. (அறப். சத. 65.)

அலி–1. ஆண்பெண்ணல்லாதது. 'பெண்ணே டாணலியாய்ப் பிறவாவுருவானவனே' (தேவார. திருக்கடவூர். சுந். ௬.) 2. இயமன். 3. உழவுசால். 4. உழுவோன். 5. காகம். 6. குயில். 7. தேள். 8. நறுவிலிமரம். (சூ. நிகண். ச: ௩௨.) 9. நெருப்பு. (அக. நி.) 10. பலராமன். 'அலிமுகந்தொழுமிளவல்' (பாரத. பதினேன். ௪௧.) 11. விருச்சிகராசி. 12. வேளாண்மை. 13. வைரமில்லாதமரம். 14. சோறு. (அக. நி.) [3, 4, 10, 12. ஹலிந். 5, 6, 7. அலி.]

அலிக்கிரகம் — ஆண்பெண்வகுப்பிற் சேராதகிரகம். அவை: சனி, கேது, புதன் என மூன்றும். (உள்ளமுடையான். ௧௨௧.)

அலிக்கை—அறுவகைக் கையினுளொன்று; அஃது: அறுவகையது. 'சர்ப்பசிரம் வண்டு தனிமுகுளங் கத்தரிக்கை - விற்பனஞ்சேர் கோசங் கபித்தமுட-னற்புதமே - யாகுமலிக் கைகளாறென் றுரைப்பாரே - பாகனையசொல் லாய் பரிந்து' (சிலப். அரங்கேற்று. ௧௮. உரை.)

அலிகம்-நெற்றி. [ஸுஂ - அலங்கரித்தல். இக - ஒரு வ-வி.]

அலிகை — காணல்.

அலிங்கம்—1. இலிங்கமல்லாதது. 'அலிங்க மென் றுணர்ந் துமையமாயடைந்தேன்' (வேதாரணியபு. கக்கே. ௬0.) 2. குறிகளில்லாதது. [ஸுலிஂமஂ.]

அலிச்சர்ப்பம்—ஒருவகைச்சர்ப்பம்; அது: மிருதுவுடனீண்ட உருவத்தையும் வெளுத்த படத்தையும் மந்தநடையையும் குறைந்த தொனியையும் அற்பகோபத்தையும் உடையது. (சீவரட். ௩௩௮.)

அலிசி—அலிசிவிரை.

அலிசிவிரை—ஆளிவிரை.

அலிஞ்சரம்—நீர்விட்டுவைத்திருக்கும் மட்சாடி. [ஸுலிஞ்ஜர.]

அலிந்தம் — கோபுரவாயிலிற்றிண்ணை.

அலிநாள்—ஆண் பெண் என்னும் வகுப்பில்லாத நட்சத்திரங்களாகிய மிருகசிரமும் சதயமும். (வருஷாதி.)

அலிப்பேடு—அல்லியமென்னும் கூத்து. (சிலப். கடலாடு. ௪௮. உரை.)

அலிபகம்—1. கருவண்டு. 2. தேன். 3. நாய்.

அலிபிந்நன் — எழுத அறியாதவன். [ஸுலிபிஜ்ஞ: ஸ; லிபி - எழுத்து. ஜ - அறிந்தவன்.]

அலிமரம்—முருக்குப்போல உள்ளாவது வெளியாவது வைரமில்லாததாதிப்பட்ட மரம். (பிங்.)

அலிமுகப்பாண்டுரோகம் — ஒருவகைப் பாண்டுரோகம். (சீவரட். ௩௬௬.)

அலியர்—அலித்தன்மையுடையவர், ஆண்மையில்லாதவர். 'அலியாரல்லதையாண்டகையார்கொலோ' (கந்தபு. சூரன்றன். ௨௫.)

அலியன்-1. கடுமரம். 2. கடுக்காய். (மலை.)

அலியெழுத்து — 1. ஆய்த வெழுத்து. (வெண்பாப். முதன்மொ. 6. உரை.) 2. மெய்யெழுத்து. (பிங்.)

அலிவேதம்—மோகனுவரணியத்தொன்று. (சி. சி. அ: ௧௨. மறை.)

அலீகம்—1. நெற்றி. 2. பொய். 3. வானம். 4. வெறுப்பானது. [ஸுலீக.]

அலீகன்—தலை. 'அலீகனிற அற்றுழியும் உடம்பாடுதலின்' (தொல். பொருள். 71. உரை.)

அலீசா — 1. கிண்டன்சீலை, பட்டுவகையுளொன்று. 2. தோணிவலிக்குந் தண்டு.

அலு — 1-3. அலுவென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. நீர்விட்டுவைக்குஞ் சிறுகுடம். [ஸுலு.]

அலுக்ந—(குடத்தைவனைந்தானென்பதிற் போல) வேற்றுமையுருபு வெளிப்பட்டு நிற்குந் தொடர். 'நித்தமநித்தமலுக்குலுக் காந்தொகை' (பி. வி. ௨௭.) [ஸுலுக்.]

அலுக்குத்து—மகமதியப்பெண்டிர் அணியும் ஒரு காதணி.

அலுங்குதல்—1. பிலுக்குப்பண்ணல். 2. சிறிது அசைத்தல். [வழக்.]

அலுங்குலைதல்—1. அடுக்குக்குலைதல். 2. தாறுமாறுதல். [வழக்.]

அலுங்குலைவு—அலுக்குலைதல்.

அலுங்குதல்—சிறிதசைதல்.

அலுசிலும்பல்-ஒழுங்கின்மை, குழம்பல். (திசை.)

அலுத்தசத்தி—பேரருளுடைமை. (சி. சி. பாயிர. க. சிவஞா.) [ஸு - எதிர்மறை. லுப்த - குறைந்தது.]

அலுத்தம் — 1. ஆசையின்மை. 2. மனத்திருப்தி.

அலுத்தல் — 1. அலைக்கழிவுபடல். 2. இளைத்தல். 'ஐபாமிகவுமலுத்தோமலுத்தோமே' (கந்தபு. தேவர்பு. ௬.) 3. வருந்துதல், சோர்தல். (தேவா. 946. 8.)

அலுத்தன் — ஆசையற்றிருப்போன். 'இகபர மிரண்டும் வேண்டா திருப்பவனலுத்தனென்றும்' (மச்சபு. பத்தி. ௨௪.)

அலுப்பு—1. இளைப்பு. 2. வருத்தம். 3. தளர்வு.

அலுமாரி — உடுப்பு, புத்தகம் முதலிய வைத்திருக்கும்படி பலகைத் தட்டுக்களை யொன்றின்மேல் ஒன்ருக இடைவெளிவிட்டு நிரைத்து நாலுபக்கமும் பலகைகளால் மூடி மூட்டப்படுவது.

அலுமினியம்—உலோகவகை.

அலுவல்—வேலை, தொழில். 'உனக்கலுவ லுண்டோ'.

அலுவலுவெனல் — அலப்பல், ஓயாமற் பேசுதல்.

அலுவீநம்—வில்வமரம்.(மலை)

அலேகம்—1. எழுதப்படாத வெள்ளேடு. 'அரிய விதழினலேகத்தையளித்தாரனையர்' (சிவதரு. சிவஞானதாந. ருஅ.) 2. லோக மணல்.

அலை—1. அசைதல், அலைதல். 'மதியப் புத்தேள் கலங்கலம்புனலிற்ருேன்றி - யலைப் படுதன்மைத்தன்ருே' (கந்தபு. வள்ளி. எரு.) 2. அலையச்செய்தல். 'அலைமேற்கொண்டல் லவைசெய்தொழுகும்வேந்து' (வள். ருருக.) 3. அல்லை என்பதில் லகரமெய்கெட்டுநின்ற ஒரு முன்னிலைக்குறிப்புவினை. 'நீயலையோ சொல்லாய்' (தாயு. பராபர. ௩௨௪.) 4-6. அலையென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதி யும் வினைத்தொகையும். 7. கடல். 'அலைவளம் பெரிதென்கோ' (நைடத. நாட். உஉ.) 8. திரை. 'ஆழியினமுதம்பொங்கி யலையெறிந் தொழுகிற்றென்ன' (கந்தபு. தெய்வ. ௬க.) 9. கொலை. (பிங்க. ௩௦௬௫.) 10. திரை யடித்தொதுக்கிய கருமணல். 11. நீர். 12. பூமி. 13. மது. 14. மிகுதி. 'கண்ணீரலைப் பட்டகொங்கையாள்' (நளவெண். கலிநீ. ௩௪.) 15. வருத்துகை. (தொல். பொ. 258.)

அலைக்கல்—1. அலைத்தல். 2. நீரைக் கலக்குதல். 'முகேரெனவலைக்கலுற்ருர்' (கந்தபு. சுரம்புகு. ௩௦.)

அலைக்கழித்தல் — அலைந்துவருந்தச்செய் தல். 'அவனையலைக்கழித்தான்' (தண்டலை யார். கககக.)

அலைக்கழிதல்—அலைந்துவருந்துதல். 'ஐம் பூதத்தாலே யலைக்கழிந்ததோடமற' (தாயு. தத். க.)

அலைக்கழிவு—அலைக்கழிதல்.

அலைகல் — கரையை நீர் கரையாதபடி அமைக்கும் கல்.

அலைகுதல்—அலைதல். 'நின்ருருதலைகுதல் விருப்புனக்கு' (வைராக்கியசதக. உ௩.)

அலைகுலையாக்குவித்தல் — நிலைகுலையச் செய்வித்தல். 'கயிலைதன்னை...தாக்கினன் றன்னை யன்று அலைகுலையாக்குவித்தான்' (தேவா. 776. 4.)

அலைச்சல்—1. திரிகை. 2. தொந்தரவு.

அலைசடி—1. தொந்தரவு. [இழிசனர் வழக்.] 2. சோர்வு.

அலைசடை—அலைசடி.

அலைசல்—1. அலைவு. 2. துன்பம். 3. சோம்பல் (திவா).

அலைசுதல்—1. கழுவுதல். 2. சோம்பல். (பிங்க. கஅ௬க.) 3. குலுக்குதல். 4. கலக்கு தல்.

அலைசோலி — அலைக்கழிவு. [சோலி.] (தெலுங்கு).

அலைத்நரல்—அலைதல். 'கருங்குழனிமழன் றெருத்தலைத்தர' (சிந்தா. குண. உருக.)

அலைத்தல்—1. அசைத்தல். 'கொலைத் தலைய சூர்வாளி கோப்புண்டு கிடந்ததுகால் அலைத்தலையவீழ்ந்து' (திருவிளை. பழியஞ்.அ.) 2. அடித்தல். 'எயிற்றிமாதர் வயிறலைத் தோட' (இராமா. ஆற்றுப்.கச.) 3. அலையச் செய்தல், உலைத்தல். 'ஆநிரைமுழுவது மலைத்து' (கந்தபு. ஆற்று. க௬.) 4. கெடுத் தல்.'கூற்ற-ஞறுமுகத்தானடியவராவியலைத் தானே' (கந்தபு. அக்கினிமுகா. உக௦.) 5. திரையடித்தல். 'அலைக்கு மாழி யடங்கிட' (இராமா. சூர்ப்பநகைப். எரு.) 6. நீரைக் கலக்குதல். 'அலைத்தலையடையுமெல்லை' (கந்தபு. சுரம்பு. ௩க.) 7. வருத்துதல். 'ஆரஞர்க்கடலலைப்ப' (கந்தபு. வீரவாகுமீ. உஉ.) 8. உருட்டுதல். 'தேறல்கல்லலைத் தொழுகுமன்னே' (புறநா. 115. 4.)

அலைத்திடல்—1. அலையச்செயல். 2. வருத்துதல். 'உயிர்ப்பெனுமோதைநின்றுயி ரலைத்திட' (கந்தபு. சயந்தன்பு. ரு.)

அலைதரல்—அலையச்செய்தல். 'அங்க வாளியலைதர' (திருவிளை. நாட். கஉ.)

அலைதல்—1. ஆடுதல், அசைதல். 'திருத் தகுதாமரையலைதல் சேர்தடம்' (நைடத. அன்னத்தைக்கண். ௬௦.) 2. சோம்பல்.

3. தள்ளாடல். 4. திரிதல். 'புசிப்புக்கலைந் திடல்' (தாயு. சித்தர்கண. ரு.) 5. திரிந்து வருந்தல். 'மெத்தவலைந்தேனுன்னைமறவா வின்பத்தால் வாழ்கின்றேன்' (தாயு. பன்மா. க0.) 6. துன்பம்.

அலைதாங்கி — அலையைத்தடுக்கும் செய்கரை.

அலைநாடி — பசுவின்கழுத்திலே புடைத் தித்தூங்குந் தசை. (தர்க்கசங். ஙஉ.)

அலைநாரை—நீர்ப்பெருக்கின் அளவுகாட் டும் குறி.

அலைநீர்—கடல். 'அலைநீராடை' (சிலப். இந்திர. க.)

அலைப்படுதல்—வருந்துதல். 'தாயிலாச் சேய்போலலைந்தலைப்பட்டேன்' (தாயு. சிவன். ரு.)

அலைப்பு—1. அசைப்பு. 2. அலைத்தல், வருத்தல். 'அலைப்புறுமனைவாழ்க்கை' (பெரிய பு. வெள்ளா. உக.) 3. ஒன்பதுவகைக் கூத்துக்களிலொன்று.

அலைமகள்—இலக்குமி. (பிரமோத். 7. 26.) [அலை - கடல். மகள் - புதல்வி.]

அலைமான்—இலக்குமி. 'அலைமான்புணரு மால்' (சேதுபு. காயத்திரி. ஙஉ.)

அலையல்—1. அலைதல். 'அக்குமிக்கு மென்றலையலாமோ' (தாயு. பரா. ஙஉக.) 2. சோம்பல். 3. துன்பம். 4. சோர்வு. (பதிற். 50. 21. உரை.)

அலையெடுத்தல்—அலையெழும்புதல்.

அலையெறிதல் — வெகுதூரம் பரவுதல். 'கிருஷ்ணனுடைய இங்குத்தைநீர்மை பரம பதத்திலுஞ் சென்று அலையெறியும்படி' (திவ். திருப்பா. 1. வ்யா).

அலையேறு — அலையெறிகை. 'அலையேற் றிலே கொண்டுபோய்' (ஈடு. 7. 2. 2.)

அலைவாய்—1. கடல். 'சூரலைவாயிடைத் தொலைத்து' (கந்தபு. கடவுள்வா. கரு.) 2. திருச்செந்தூர். 'மேவருங் கூடன் மேலை வெற் பினி லலைவாய் தன்னில்' (கந்தபு. திருநகா. க0க.)

அலைவாய்க்கரை—கடற்றிரைவந்து மறியு மிடம்.

அலைவு—1. அசைவு, சலம், இபக்கம். 'அலைவிலசேதனமாயையாதலாலும்' (சிவப் பிர. க: ச.) 2. அமைவின்மை. 3. அலைதல். 'ஓதநீரி - னலைமடவார்விழியகலின்கொழுந் தொடுமின் னிவைக்கெலா மலைவு கற்பித்து' (ஞானவா. வைராக். அசு.) 4. சஞ்சலம். 'மாவலைவெல்லா மொழித்து' (ஞானவா. சநகரா. உக.) 5. வருத்தம். 'அலைவுசெய் தொல்லையி னடல்பெற்றேகுவான்' (கந்தபு. சூரனமை. ருக.)

அலோகநம்—காணப்படாமை. [ஸஹொ கநம்: ஸ; ஹொகநம - காண்டல்.]

அலோகம் — காட்சிக்கு விடயமாகாதது, காணப்படாத உலகம் 'தங்கியவலோக விருளுந்தனிதுரப்ப' (கூர்மபு. விச்சுவ. ரு.) [ஸ; ஹொக.]

அலோசி—பசளை. (மூ. அ)

அலோபம்—1. ஆசையின்மை. 2. லோப மின்மை. [ஸ; ஹொஹ.]

அலோமி — பொற்றலைக்கையாந்தகரை. (மலை.)

அலௌகிகசந்நிகருடம்— லௌகிகமல்லாத சம்பந்தம். (தர்க்கா. சு0.) [ஸஹௌகிக: ஸநிகஷ௯.]

அலௌகிகப்பிரத்தியக்ஷம் — லௌகிகப் பிரத்தியக்ஷமல்லாதது. (தர்க்க. சு0.) [ஸஹௌகிக; ஹ்ரதூக்ஷ.]

அலௌகிகம் — லௌகிகமல்லாதது, உலகநடைக்குமாறுனது. (தர்க்கா.) [ஸஹௌகிக.]

அலௌகிகீ—சிவதன்மிணிதீக்ஷை. (சி-வி. கிரி. நக. உரை.) [ஸஹௌகிகீ.]

அவ் — அவை. 'அவ்வே-இவ்வெனவறி தற்குமெய்ப்பெறக் கிளப்ப' (தொல். சொல். கஉக) [இஃது: அஃறிணைப்பன்மைச்சுட்டுப் பெயர்.]

அவ்வண்ணம்—அப்படி. 'அவ்வண்ணத் தவர்நிலைமை கண்டும்' (திவ். திருநெடுந். 21.)

அவ்வது — அவ்வாறு. 'அவ்வதுறைவ தறிவு' (வள். சஉசு.)

அவ்வமை—இந்தப்பு.

அவ்வயிறு—அழகிய வயிறு. (அகநா. 21.)

அவ்வரி—அழகிய வரி. (ஐங்குறு.)

அவ்வருகு—1. அப்பால். 'எண்ணுக்கு அவ்வருகே பெருகியிருக்கிற' (ஈடு. 1. 2. 10. ஜீ.) 2. உயர்வு. 'ஒரு குரங்கை நித்யாச்ரிதை யான பிராட்டிக்கும் அவ்வருகாக நினைத் தான்.' (ஈடு. 1. 3. 1.)

அவ்வழி—1. அதன்பின்பு. 'அவ்வழி குழ வித்திங்க ளடுசிலை வடிவேற் செங்கேழ்' (கூர்மபு. வருண. ௫.) 2. அந்தமார்க்கம். 3. அப்படிவருமிடத்து. 'அவ்வழியாவியிடை மையிடமிடறுரும்' (நன். எழுத். ௨௦.)

அவ்வாய்—அழகிய இடம். 'அவ்வாய் வளர்பிறை' (பெரும்பாணாற். ௩௧௨.)

அவ்வாறு—1. அந்தவழி. 2. அப்படி. 'எழில் சூர்வனத்-தவ்வாறுபயில்கின்றவருள்வா ரி' (பாரத. புட்ப. ௧௨௫.) [அ-ஒரு சுட்டு. ஆறு-வழி.] 3. ஆறு ஆறு. 'அப்பதினுபிர வர்க்குமொவ்வொருத்திக் கவ்வாறு - யொப் பரியவறுபதினுபிரங்குமாருளர்' (திருவிளை. பழியஞ். ௪.) [ஆறு - இரட்டித்தது.]

அவ்வித்தல்—1. பொறாமைகொள்ளுதல். 'அவ்வித்தழுக்காறுடையானை' (வள். ௧௬௭.) 2. மனத்தைக் கோணச்செய்தல். (குறள். 167. உரை.)

அவ்விதழ் — அழகிய இதழ். 'அவ்வித ழவிழ்பதங்கமழ' (நெடுநல். ௪௧.)

அவ்விதை—நேர்வாளம்.

அவ்வியஞ்சநம் — 1. அடையாளமில்லா தது. 2. கொம்புமுளைக்கும்பருவம்வந்துங் கொம்புமுளையாத மிருகம். [அவ்யஜ்ஞ ந: அ; வ்யஜ்ஞ ந - அடையாளம்.]

அவ்வியத்தக்கிரமம்--வழக்கத்தில்வெளிப் படாதகிரமம், மயக்கமாகச்சொல்லப்பட்ட கிரமம். 'பாச பசு பதி யென்னு மவ்வியத்தக் கிரமமாகச்சொன்னது, முதற் பாசதரிசநம் பண்ணி நீங்கினபின்பு பசுதரிசனமாய் அதன் பின்பு பதிதரிசநமாகவேண்டுமாகையால்' (சி. சி. அளவை. ௪௦. சிவாக்.) [அவ்யக்த.]

அவ்வியத்தகாயத்திரி — வெளிப்படச் செபிக்கப்படாத காயத்திரி. (த. நி. போ. ௨௧௭.) [அவ்யக்த; காயத்ரீ.]

அவ்வியத்தசாமியம் — அறியப்படாத சங்கியைவைத்துச் செய்யும் சமீகரணம். [அவ்யக்த; ஸாம்ய.]

அவ்வியத்தபூதம் — அவ்வியாகிருதபூதத் தை வியாபித்திருக்கும் பஞ்சபூதம். (உப நிட. ௨ அ.)

அவ்வியத்தம்—1. அறியப்படாத என், மறைநிலையிராசி. (வீசகணித.) 2. ஆன்மா. 3. இரச்சுவிலே சர்ப்பத்துவம்போலப் பிர மத்தினிடத்தில் விவர்த்தமாகத் தோன்று கிற மூலப்பிரகிருதியென்னுஞ் சத்தி. 'பே சரியபரத்தினிலா ரோபமதாமூலப் பிரகிருதி தனி லவ்வியத்தந் தோன்றும்' (உபநிட. ௧௯.) 4. ஒரெண்; அது: கோடிகோடிகோடி கோடா கோடி. 5. காட்சிக்கமையாதது, வெளிப் படாதது. 'பிரளயாகலருக்கு அவ்யத்தசரீ ரங்களும் அவ்வியத்தபுவநங்களும் மாயைக் குள்ளே யநேகமிருக்கின்றன' (சி-வி. ஞான. ௨௨. தாற்.) 6. சாமவேதஉபநிடதத்தொன்று. (கூர்மபு. அட்டமூ. ௨௬. உரை.) 7. சிருட் டிக்கப்படாதது. 8. சூக்குமம். 'பொருவிலவ் வியத்தமாயழிவின்றி' (கூர்மபு. பிரகிரு. ௩.) 9. நிச்சயிக்கப்படாதது, நிதானிக்கப்படா தது. 10. பரப்பிரமம். 11. பிரகிருதிமாயை; அது: சுத்தமாயை தூலபரிணாமமாய்த் தோன்றுவது. 'மாயையி னவ்வியத்தம் வக் திடும்' (சி. சி. ௧: ௧௯.) [முக்குணங்களும் விளங்காதிருத்தலால் அவ்வியத்தமென்றார்] (சி சி. ௨. ௫௭. மறை.) 12. பிரிந்துதெரியா தது. 'அவ்வியத்தசத்தம்' (சி. சி. ௨: ௬௨: சிவாக்.) 13. பீடமும் இலிங்கமுமாயிருக் குஞ் சிவலிங்கம்; அது: கரசரணாதி யவயவங் கள் வெளிப்படத்தோன்றாதது. 'அவ்வியத் தம்பீடலிங்க மங்கமனைத்தும்விளங்கு-மவ்வி லிங்கமேவியத்தமாம்' (சைவச. பொது. ௧௧௯.) 14. மகேச்சுரன். 'கருதரியவவ்வியத் தத்தருளானுங்காண்வருசேர்ப் - புருடனுருற் றிடலானும்' (கூர்மபு. பிரகிரு. ௧௬.) 15. சாங்கியர்சொல்லும் மூலப்பிரகிருதிமாயை. 'இலகுகாரியமா கியவுலகாகி யிருக்கவுந் தெரி தரப்படாத - வலனுறு தலினவ் வியத்தமே யென்றும் வகுப்பரம் மாயைக்குப்பெயர்கள்' (சூத. சிவமான். அ: ௧௧.) [அவ்யக்த.]

அவ்வியத்தலக்கணே—உமாதேவி. 'சருவ சத்திகலையவ்வியத்தலக்கணே' (கூர்மபு. திருக்கல். ௨௩.) [அவ்யக்தலக்ஷண - சிவன். ஐ-ஒருபெண்பால்விகுதி.]

அவ்வியத்தன் — 1. சிவன். அந்தர்யாமி. (வேதா. சூ. ௪௨.) [இந்திரியங்களின் விடயமாகாதடங்கிநிற்றலின் வந்த பெயர்.] 2. மன்மதன். 3. மூடன். 4. விட்டுணு. 5. கடவுள். (வேதா. சூ. 12.) [அவ்யக்த.]

அவ்வியதத்திதன் — அவ்வியயதத்திதன். (பி. வி. ௩௩.)

அவ்வியதி—1. அஞ்சாதது. 2. குதிரை. (வேதம்.) [அவ்யதி: அ; வ்யத - வருத்தம். போரில் இளையாததென்றபடி.]

அவ்வியதிதி — 1. இரவு. 2. பூமி. [அவ்யதிதி.]

அவ்வியபாவம்—அவ்வியயீபாவம். 'முன்மொழி யவ்வியஞ் சேர் தொகை பேர்முன்மொழித்தொகையே-சொன்மொழி யவ்வியபாவமருவும்' (வீரசோ. தொகை. ௬.) [அவ்யயீபாவ.]

அவ்வியம்—1. அழுக்காறு. 'அவ்வியநெஞ்சத்தானாக்கமும்' (வள். ௧௬௯.) 2. இடைச்சொல். 'முன்மொழியவ்வியஞ்சேர்தொகை' (வீரசோ. தொகைப்பட. ௬.) 3. தேவர்க்கிடும்பலி. (மநு. ௩: ௧௩௦.) 4. நெய். 5. வடிவமில்லாமை. 'அவ்வியமென் சொப்பநமாதலினால்' (வேதா. சூ. ௧௨௮.) 6. வஞ்சகம். (பழ. 264.) 7. மனக்கோட்டம். [2. அவ்யயம். 3, 4, ஹவ்ய. 5. அவியம்; அவ்வியமென விகாரமொழியாயிற்று. வியம் - வடிவம்.]

அவ்வியயதத்திதன் — இடைச்சொற்களாலாய தத்திதன்; அவை: ஆங்கு, ஆன், ஈன் முதலியவாக வருஞ் சுட்டுப்பிளந்துநில்லாத இடப்பெயர்களும்; அவ்வயின், இவ்வயின், உவ்வயின், அங்கண், இங்கண், அவ்வாய், ஆயிடை எனச் சுட்டோடும் எவ்வயினென வினாவோடும் வந்து ஏழாம்வேற்றுமையிடப் பொருளுணர்த்துவனவும் ஆம். 'பேர்கொண்ட சுட்டுப் பெயரிற் பிளந்துநில்லா விடனு-சேர்கொண்ட வெஞ்சுட்டெ காரங்களேழோடு நின்றனவு - மேர்கொண்ட வேழனிடப்பொருள் காட்டு மிடைச்சொற்களாந்-தார்கொண்ட பூங்குழ லாயவை யவ்விய தத்திதனே' (பி. வி. ௩௩.) அவ்வியய என்றதில் ய கெட்டுநின்றது. [அவ்யய.]

அவ்வியயபூர்வபதம்— 'அவ்வியயீபாவம்' [அவ்யயபூர்வபத:]

அவ்வியயம்—1. அழியாதது. 'ஊழிதனினுங் குன்றதீர்த்தலினாலவ்வியயம்' (வேதாரணியபு. வேதநதி. ௭௩.) 2. அற்பமாகச் செலவுசெய்தல். 3. இடைச்சொல். (பி. வி. ௩௩.) 4. செலவுசெய்யாமை.

அவ்வியயன்—1. விட்டுணு. 2. நாசமில்லாதவன். (சி-வி. ஞான. ௨.) 3. கடவுள். [அ; வ்யய - அழிவு.]

அவ்வியயீபாவம் — 1. அழிவுறுமை. 2. இடைச்சொற் சமாசம்; அது: நாமபூர்வபதம், அவ்வியயபூர்வபதம் என இருவகைப்படும். பெயர்க்குப் பின்வரும் இடைச்சொல் நாமபூர்வபதம்; 'வாண்மன்' என்பதிற்போல. பெயர்க்கு முன்வரும் இடைச்சொல் அவ்வியயபூர்வபதம்; 'மற்றையாடை' என்பதிற்போல. 'முன்மொழிப் பேர்ச்சொ லிடைச்சொ லிரண்டு முரணிநிற்குந்-தன்மொழியவ்வியயீபாவம்' (பி. வி. ௨௩.) [அவ்யயீபாவ.]

அவ்வியவகிதம் — அடுத்திருத்தல், கிட்டினது. 'அவ்வியவகித வஸ்துக்கள்' (சி. சி. ௨: ௬௧. சிவாக்.) [அ; வ்யவஹித - வேறானது.]

அவ்வியவச்சிந்நம் — தடுக்கப்படாதது. [அ; வ்யவச்சிந்ந - தடுக்கப்பட்டது.]

அவ்வியவத்தை—1. அபத்தமான அறிவு. 2. கிரமமல்லாதது. 3. விதிதவறுதல். [அவ்யவஸ்தா: அ; வ்யவஸ்தா - கிரமம்.]

அவ்வியவாகன்—அக்கினிதேவன். [ஹவ்யவாஹ: ஹவ்ய - அவி. வாஹ - கொண்டு செல்லுகிறவன்.]

அவ்வியன்—1. ஒன்பதாமநுவின்காலத்து எழுமுனிவருளொருவன். 'சீர்கெழுநற்றுதிமானவ்வியன்றனோடு' (கூர்மபு. மநுவ. ௨௩.) 2. சுவாயம்புமநுவின் புத்திரனாகிய பிரியவிரதனுடைய எழுமக்களு ளொருவன். 'தொல்சீர் - தங்குமவ்வியனே' (கந்தபு. அண்ட. ௨௭.) 3. பிரதானம். (சாங்கியம்).

அவ்வியாகிருதம்—1. ஈசுரனுடைய காரண சரீரமாகிய மாயை. (நாநாசீவ. ௧௫.) [அவ்யாக்ருத: அ; வ்யாக்ருத - பிரிக்கப்பட்டது.] 2. தகாதது. 'அவ்வியாகிருதவியாபாரம்'.

அவ்வியாகிருதன் — சுழுத்தியவத்தையிற் சமட்டிகாரணசரீரத்தில் அபிமானித்த ஆத்மாவாகிய அந்தரியாமி. (வாசுதேவ. அவத்தாத்தி. ௨௦௧.) [நாமரூபரகிதமாயிருக்கிறபடியால் வந்த பெயர்.]

அவ்வியாத்தி — 1. அடைதலின்மை. 2. இலக்கியத்தினேகதேசத்தில் இலக்கணமில்லாமை; அது: 'ஆவிற்குக் கபிலநிறத்தன்மை' (தருக்கசங்.) 3. பிரிக்கக்கூடாதது. (சி. சி. அளவை. ௧௪. சிவாக்.) 4. ஒன்று மற்றொன்றில் அடங்கியிருத்தலின்மை. [அவ்யாப்தி.]

அவ்வியாப்பியம் — முழுதிலுஞ்செறிந்திராதது, வியாப்பியம் இல்லாதது; பெரும்பாலனவற்றிற்செறிந்திராதது. [அவ்யாப்யம்: அ; வ்யாப்யம் செறிந்திருப்பது.]

அவ்வியாபகம் — வியாபகம் இன்மை. (தர்க்கபா. ௮௪.) [அவ்யாபக.]

அவ்வியாபி—சர்வவியாபகம் இல்லாத-துவன்-வள். 'கண்ணுக்குத்தோற்றிய பூதங்காரணமென்னும் லோகாயதனுக்குப்போல அவ்வியாபியன்றி' (சி. சி. ௨: ௫௫. ஞானப்.) [அவ்யாபிந்.]

அவ்வியாவிருத்தி — வேறுபாடின்மை. (அநுமான. ௪௫. பக்.)

அவ்வுதல்—அவாவி விழுதல்.

அவ்வெதிரேகம்—வெதிரேகவாக்கியமின்றிக்கூறுவது. (அநுமான. ௪௬. பக்.)

அவ்வேபன் — பதின்மூன்றாமனுவின் காலத்து எழுமுனிவருள் ஒருவன். 'பொங்கொளிசேர்திதிமானவ்வேயன்' (கூர்மபுரா. மநுவக். ௨௧.)

அவ்வை — 1. ஆத்திசூடி முதலிய சில நூல்கள் இயற்றிய தமிழ்ப்புலமை நிரம்பிய ஒரு பெண். 'அவ்வைபாடலுக்கு நறுநெய் பால்பெருகி' (பாரத. சிறப். ௮.) 2. தவப்பெண். 3. தாய். 'ஈன்ற-வவ்வையுமத்தனுமாரருள்செய்தார்' (கந்தபு. தெய்வ. ௨௬ ௮.) 4. கிழவி.

அவ்வையன்—கடுக்காய்ப்பிஞ்சு.

அவ்வோ—அந்தந்த. 'அவ்வோபதார்த்தங்கள்தோறும்' (ஈடு. 1. 1. 7.)

அவ்வோன் — அவன். 'அவ்வோனுயிருக்கழிவில்லை' (பாரத. பதினெட். ௧௧௧.)

அவ — அறிவு, கட்டளையிடல், குறைத்தல், சுத்திசெய்தல், திருத்துதல், நிந்தை, நீக்கம், புறம்பு, போஷித்தல், வியாபகம், ஆதாரம், தோல்வி, கீழ்: எனப்பொருள்படும் ஓர் அவ்வியயம்.

அவக்கத்தலா—கீழ்க்காய்நெல்லி.

அவக்கவக்கெனல் — விரைவுக்குறிப்பு மொழியில் ஒன்று.

அவக்கியாதம்—அவமானம்.

அவக்கியாதி—அபகீர்த்தி.

அவக்கிரகணம்—1. அவசங்கை. 2. தடை. [அவக்ரஹண: அவ; க்ரஹண-எடுத்தல்.]

அவக்கிரகம் — 1. எடுத்தல். 2. ஏற்றுக்கொள்ளுதல். 3. சுபாவகுணம். 4. தடை. 5. நிந்தனைப்பேச்சு. 6. நிந்தித்தல். 7. பிடித்தல். 8. மழையின்மை. 9. யானைத்திரள். 10. யானையின் நெற்றி. [அவக்ரஹ: அவ-முன். க்ரஹ-எடுத்தல்.]

அவக்கிரசம்—காடி.

அவக்கிரந்தநம் — உரத்தழுதல். [அவ; க்ரந்நம் - அழுதல்.]

அவக்கிரயம்—1. அரசனுக்கிறுக்கும்வரிப்பணம். 2. குத்தகைப்பணம். 3. கூலி. 4. சம்பளம். 5. விலை. [அவக்ரய: அவ; க்ரய - கொள்ளுதல்.]

அவக்கிராகம்—1. அவமானம். 2. சாபமிடுதல். 3. மழையின்மை. [அவக்ராஹ: அவ - கீழ். க்ராஹ - எடுத்தல்.]

அவக்கிராந்தி—1. இறங்குதல், கீழ்ப்போதல். 2. சமீபமாய்ப்போதல். [அவக்ராந்தி: அவ - கீழ். க்ராந்தி - செல்லல்.]

அவக்கிரியை—1. அசட்டை. 2. விதித்தனசெய்யாதொழிதல். [அவக்ரியா: அவ- கீழ். க்ரியா - செயல்.]

அவக்குறி—கெட்டகுறி.

அவக்கெனல்—1. ஒரு விரைவுக்குறிப்பு. (வழக்.) 2. ஓர் அச்சக்குறிப்பு.

அவகட்டநம் — உரசித்தள்ளுதல். [அவ வட்டநம்.]

அவகடம்—1. எதிராயது. 2. கீழே. 3. பின்னே. 4. வஞ்சகம். [1, 2, 3. அவமுக.]

அவகண்டநம்—1. அழித்தல். 2. களைதல், பிரித்தல். (பார. மி. ௫௨.) [அவகண்டந.]

அவகண்டம்—முகத்தில் அல்லது கன்னத்தில் வரும் விரணம். [கண்ட - கன்னம் அல்லது முகம்.]

அவகணிதம் — அவமதிக்கப்பட்டது. [அவகணித]

அவகணிதன் — அவமதிக்கப்பட்டவன். [அவகணித]

அவகத்தம்—புறங்கை.

அவகதவாய்—மேக்காய்நெல்லி.

அவகதன்—பிரசித்திபெற்றவன், அறியப்பட்டவன். [அவகத]

அவகதி — 1. அறிவு. 2. இடம்விட்டுப் பெயர்தல். 3. புலப்படுதல். 4. தாழ்ந்தநிலை. 'அவமாய தேவ ரவகதியி லழுந்தாமே' (திருவாச. 11. 4.) [அவகதி]

அவகமம்—1. அகற்றல். 2. அறிதல். 3. யதார்த்தமான அறிவு. [அவ; கம்-போதல்.]

அவகர்த்தநம்—1. சீவுதல். 2. தறித்தல். [அவகர்த்தந: அவ - கீழ். கர்த்தந - வெட்டுதல்.]

அவகர்த்தம்—குழி. (சீவரட். ௩00.)

அவகர்த்தவிரணம்—ஒருவகை விரணம்; அது குழிவிழுந்துள்ளது. (சீவரட். ௩00.)

அவகரணம்—1. அபகரித்தல். 2. மீட்டுதல். [அவஹரண.]

அவகாகநம் — 1. நன்றான பயிற்சி. 2. நீராடுதல். [அவகாஹந: அவ - முன்; காஹந - ஆடுதல், முழுகல்.]

அவகாகம்—1. நீராடுதல். 2. நீராடும் இடம். [அவ - முன்; காஹ - ஆடுதல்.]

அவகாகித்தல்—1. உட்புகுதல். (திவ். திருவாய். 6. 1. 4. பன்னீ.) 2. ஊன்றியறிதல்.

அவகாசதன் — ஒதுக்கிடங்கொடுப்பவன். [அவகாஶ - இடம். த - கொடுக்கிறவன்.]

அவகாசப்பிரதம் — இடக்கொடுப்பது. 'அகங்காரநஷ்க்கமாயிருக்கிற பிராணாதி வாயுக்களுக்கும் அவகாசப்பிரதமாயிருக்கும்' (சி. சி. ௨: ௬௫. சிவாக்.) [அவகாஶ - இடம். ப்ரத - கொடுப்பது.]

அவகாசம்—1. ஆகாயம்; (பௌட். பும். ௨௮௨.) 2. காலம். 3. இடம். 'பரமமுத்தியிலே சிவமேயாகையினால் இந்த விசாரத்துக்கு அவகாசமேயில்லை' (சி. சி. ௬: ௬. சிவாக்.) 4. இடையேயிருக்கும் இடம். 5. ஓய்ந்திருக்கும் நேரம். 6. கொள்கலம். 7. வலிமை 'கடனிறுக்க எனக்கு அவகாசம் இல்லை' [வழக்.] 8. துவாரம். 9. பரந்த இடம். 10. பொருள்வைக்குமிடம். [அவகாஶ: அவ - ஊடே. காஶ-பிரகாசித்தல்.]

அவகாசமுறி—பாகபத்திரம்.

அவகாசித்தல்—தாமதித்தல். (சிலப். 18. 25. உரை).

அவகாசிப்பித்தல்— இடங்கொள்ளச்செய்தல், இடங்கொடுத்தல். (த. நி. போ. ௧௧௪.) [அவகாஶ.]

அவகாதம்—1. அடித்தல். 2. அவமானம். 3. கொல்லுதல். 4. சடிதிமரணம். 5. தானியங்களை யுரலிலிட்டு உலக்கையாற் குற்றுதல். [அவகாத: அவ; காத-அடித்தல்.]

அவகாரம்—1. அழைத்தல். 2. சுறாமீன். 3. சூதாடுகை யுத்தஞ்செய்கையாகிய இவற்றினின் றோய்ந்திருத்தல். 4. பதிதனுடைய தன்மை. 5. யானைமீன். [அவஹார.]

அவகாரன்—கள்ளன். [அவஹார:]

அவகாலம்—1. அசுபகாலம். 2. கெடுகாலம், பஞ்சம் கொள்ளைநோய் முதலியன பரம்புங் காலம்.

அவகாஹம்—(மனத்திற்) பதிகை.

அவகிருத்தியம் — கெட்டசெய்கை. [அவக்ருத்ய.]

அவகீதம்—1. குணமில்லாத பாடல். 2. நிந்திக்கப்பட்டது. 3. பொல்லாதது. 4. வசையாகப்பாடப்பட்டது. [அவகீத.]

அவகீர்ணம் — 1. அவமதிக்கப்பட்டது. 2. சிதறுதல். 3. பருப்பொருளாகக் குத்தப்பட்டது. 4. மண்ணையெடுத்தல்; இது குண்டசுத்திநிமித்தஞ்செய்யப்படும் பதினெட்டு ஸம்ஸ்காரங்களுள் ஒன்று. (சி-வி. கிரி. ௨௭. தாற்.) [அவகீர்ண.]

அவகீர்ணி-ஸ்த்ரீசங்கமஞ்செய்தலாற்பிரமசரியநெறிதவறினவன். [அவகீர்ணிந்.]

அவகீர்த்தி — அபகீர்த்தி. 'உனத்தகு கீர்த்தியல்லாதவகீர்த்தியுலகினிற்ப' (மச்சபு. பத்திமான். கச.) [அவகீர்த்தி.]

அவகீரணிவிரதம்—ஒரு விரதம்; அது: சந்நியாசி மகளிர்போகம்விரும்பி நினைந்த தோஷம்நீங்கச் செய்யப்படுவது. 'வளம் பெறு சந்நியாசியென்றுரைப்போன் வரிமுலை மங்கையர் போக - முளம்பெறவேண்டி னுற்றிட வேண்டு முயரவ கீரணி விரதம்' (சூத. ஞானயோ. கஎ: ௩௧.) [அவகீர்ணி; வ்ரதம்.]

அவகுஞ்சநம்—1. சுருங்குதல். 2. வளைதல். [அவகுஞ்சநம்: அவ; குஞ்சநம் - வளைதல்.]

அவகுடாரம்—1. எதிரானது, மாறுனது. 2. கீழ்ப்போவது. 3. பின்போவது. [அவகுடாரம்.]

அவகுண்டநம்–1. இழுத்தல் (சித்தாந்தம்). சிவனுடைய இருதயாதிதாநங்களிலிருதயாதி மந்திரங்களைக் கவசஞ்சுற்றுவதுபோல நியாசஞ்செய்வது. (சி-வி. கிரி. உ௩. தாற்.) 2. சுற்றுதல், மூடுதல். 'பத்திசேர்கவசத்தவகுண்டநம்பண்ணி' (கடம்பவந. இலீலாசங். கஅச.) 3. மறைத்தல். 4. முகத்தை மறைக்குஞ் சீலை. [1, 2. அவகுண்டநம். 3, 4. அவகுண்டநம்.]

அவகுண்டநமுத்திரை — இரண்டுமுட்டிகளையும் பிடித்துத் தற்சநிவிரல்களைமாத்திரம் நீட்டி மண்டலாகாரமாகச் சுற்றுதல். (சி-வி. கிரி. உ௩. தாற்.)

அவகுண்டிதம்—1. இழுக்கப்பட்டது. 2. சுற்றப்பட்டது. 3. மறைக்கப்பட்டது. 4. மூடப்பட்டது. [1, 2. அவகுண்டிதம். 3, 4. அவகுண்டிதம்.]

அவகுணம்—1. கெட்டகுணம். 2. கெட்ட குறி. 'திவ்வியைச் சக்கரத்தா-லவகுணஞ் செய்தன்றோட' (சி. சி. பர. பாஞ். மறு. உ௬.) [அவகுண.]

அவகேசி—பூத்துக் காயாத மரம். (பிங்.) [அவகேசிந்: கேச - கனி.]

அவகேடு—மிக்ககேடு.

அவகேளநம்—அவமதிப்பு. [அவஹேளநம்: அவ; ஹேளநம்.]

அவகேளம்—அவகேளநம். [அவஹேளம்: ஹேளு - நிந்தித்தல். ம - ஸ்வார்த்தம்.]

அவகேளிதம் — அவமதிக்கப்பட்டது. [அவஹேளிதம்.]

அவகோரணம் — கொலைசெய்யக்கருதி ஆயுதங்களால் ஊறுபடுத்தல். [அவகோரண]

அவச்சா—துன்மரணம்.

அவச்சாயை—தள்ளுபடியான சாயை.

அவச்சாவு—அவச்சா.

அவச்சிந்நம்—1. எல்லைக்குள் அடங்கியது. 2. ஒருபொருள் அதன்விசேடகுணங்களால் மற்றைப்பொருள்களினின்று வேறுபடுத்துணர்த்தப்படல் (தர்க்கம்). 3. வெட்டப்பட்டது. 4. வேறாகப்பிரிக்கப்பட்டது. [அவச்சிந்ந: சிந்ந - வெட்டப்பட்டது.]

அவச்சிந்நன்—1. எல்லைப்படுத்தப்பட்டவன். 'ஆன்மா அந்தக்கரணவச்சிந்நனுகியிருதயத்திலேநின்று' (சி. சி. சு: கரு. சிவாக்.) 2. வேறுபடுத்தப்பட்டவன். [அவச்சிந்ந.]

அவச்சுரிதகம்— } குதிரைக்கனைப்பு.
அவச்சுரிதம்— } [அவச்சுரிதக:]

அவச்சூழி—கெட்டவிதி.

அவச்சேதகம்—1. எல்லைப்படுத்தல். 2. ஒருபொருளை மற்றொருபொருளினின்று விசேடகுணங்களாற்பகுத்துக்காட்டல், அளவிடல். 'பதார்த்தாவச்சேதககாலம்' (சி. சி. உ: ௬ச. சிவாக்.) 3. நிச்சயித்தல். 4. விசேடகுணம். 'ஆன்மாவச்சேதகமாயிருக்கிற அகங்காரம்' (சி. சி. உ: ௬ரு. சிவாக்.) 5. விசேடித்தல். 6. வேறாக்கல். [அவச்சேதக.]

அவச்சேதநம்—1. களைதல். 2. பகுத்தறிதல். 3. பிரித்து வேறாக்கல். [அவச்சேதந.]

அவச்சேதம்—1. அங்கஞ்சேதித்தல். 2. எல்லை. 3. ஒருபொருளை மற்றொருபொருளினின்று விசேடகுணங்களாற் பகுத்துக்காட்டல். 4. தடை. 5. பங்கு. [அவச்சேத.]

அவச்சொல்—அசுபவார்த்தை.

அவசகுநம்—துன்னிமித்தம்.

அவசங்கை—1. அழகின்மை. 2. சாமர்த்தியமின்மை. 3. அவமரியாதை.

அவசத்தம் — தீங்கைக்குறிக்குஞ் சத்தம்.

அவசதம்—1. கல்லூரி. 2. கிராமம். 3. வீடு. [அவஸத.]

அவசநம்—பேசாமை. [அ - எதிர்மறை. வசநம - பேச்சு.]

அவசம்—1. தன்வசப்படாமை, அடங்காமை. 'இந்திரியமஞ்ஞானிக்கவசமாயிருக்கும்' (ஞாந. எக்கி. உத். கக: எ.) 2. தன்னிட்டமின்மை. 3. பலமின்மை, உதவியின்மை. 4. மூர்ச்சித்தல், அயர்வாதல். 'விண்ணோ - ரவசம்படவேழ்கணை தூண்டினன்' (கந்தபு. திருவிளை. ருச.) [அவஶ.]

அவசயம் — 1. புட்ப முதலியவைகளைத் திரட்டுதல். 2. வெற்றியடைதல். [1. அவஶய: ஶய - திரட்டுதல். 2. அவஜய: ஜய - வெற்றி.]

அவசர்ப்பிணி — 1. உலகம் வாழ்நாள் போகம் முதலியவற்றால் தேய்பிறைபோலச் சுருங்குங்காலம். (வள். ௩௬௧. பரி.) 2. ஒரு கால அளவு. [அவஸர்ப்பிணி.]

அவசாக்கடுக்கை—பதற்றக்காரன்.

அவசாநாமம்—நிற்கு நிலைக்கேற்ற பெயர். (சி. சி. உ: ௫௬. சிவாக்.)

அவசரம் — 1. இடம். 2. இரகசியாலோசனை. 3. இறக்கம். 4. உற்றகாலம். 'நிராசை கெஞ்சின னவசரத்தவளிடைநிகழ்ந்தமெய்க் குறிதன்னால்' (பாரத. சம்பவ. ௬௩.) 5. ஓய்வுநேரம். 6. கணப்பொழுது. 7. சமயம், காலம். 'அந்தரப்புட்பமுங்கானனீருமோ ரவசரத்துபயோகமோ' (தாயு. மௌந. ௩.) 8. தக்ககாலம். 9. மழை. 10. வருடம். 11. விரைவு. [வழக்.] 12. கோலம். 'பெருமாள் இருந்த அவசரமாய்ச் சேவை சாதிக்கிறார்' [அவஸர.]

அவசாதம்–1. இளைப்பு, ஆயாசம். 2. காம ஆசையிலே சித்திபெறுமையால் வரும் மெலிவு. 3. தைரியக்குறைவு. 4. தோல்வியடைதல். 5. முடிவு. 6. வீண்வழக்கு. (ஸ்மிருதி.) [அவஸாத.]

அவசாநம் — 1. இறுதி. 2. எல்லை. 3. ஒழிவு. 4. மரணம். 5. முடிவு. [அவஸாந.]

அவசாயம் — 1. சமாப்திசெய்தல். 2. நிச்சயம். 3. நிச்சயித்தல். 4. இறுதி. [அவஸாய.]

அவசாயகன்—1. சமாப்திசெய்வோன். 2. நிச்சயிப்போன்.

அவசாரணம்—1. அகற்றுதல். 2. இடம் விட்டுப்பெயரச்செய்தல். 3. நடத்துதல். [அவஸாரண]

அவசாரம்—1. புறம்போதல். 2. வேசித்தனம். [அவஸார.]

அவசாரி — வேசி. 'ஆங்காலமானதெலா மவசாரியாடி' (தண்டலை. ௬௬.)

அவசி — கழுதைப்பாலை, நச்சறுப்பான். 'தழற்கொடி யவசிதிகழ் பாதலத்தம்பியும்' (தைல. தைலவ. எ௨.)

அவசிகத்தம்—கடனுரை.

அவசிட்டம்—மிச்சமானது. [அவஶிஷ்ட: அவ; ஶிஷ்ட - மிஞ்சியது.]

அவசித்தாந்தம் — சித்தாந்தம் ஆகாதது, தவறானமுடிவு. 'அஃது ஆகமவசநங்களோடு முரணுதலின் அவசித்தாந்தமென்றொழிக' (சி.சி. க: உ௬. சிவஞாந.) [அவஸித்தாந்த.]

அவசிதம்–1. அறியப்பட்டது. 2. கூட்டிச் சேர்க்கப்பட்டது. 3. செய்துமுடிக்கப் பட்டது. [அவஸித.]

அவசியம்—1. இன்றியமையாதது. 2. நிச்சயம். 'அவசியஞ்செய்யவேண்டியவேள்விக் குதவிவேண்டல்' (ஞானவா. வைராக். சக. உரை.) 3. வசியப்படாதது. [அவஶ்ய: வஶ்ய - வசப்பட்டது.]

அவசீநம்—தேள். [அவஶீந.]

அவசுத்தம்–சுத்தமின்மை. [அவ ஶுத்த.]

அவசூலம்—சாமரை. [அவசூலம: அவ - கீழ். சூலம - குடுமி.]

அவசேகம்—1. நனைத்தல். 2. புரோட்சித்தல். [அவஸேக.]

அவசேடம்–1. இறுதி. 2. மிச்சமாய்விடப் பட்டது. [அவஶேஷ.]

அவஞ்ஞாதம்—அவமதிக்கப்பட்டது. [அவ ஜ்ஞாத: அவ - உபசர்க்கம். ஜ்ஞாத - அறியப்பட்டது.]

அவஞ்ஞாலங்காரம்—இகழ்ச்சியணி; அஃது ஒன்றின் குணத்தாலும் குற்றத்தாலும் மற்றொன்றற் கவையுண்டாகாமல் இருப்பதைக் கூறுவது. இது பின்வருஞ்செய்யுளாற் புலப்படும். 'மற்றொன்றினுக்குமொன்றின் குணங்குற்றமருவிலதைச் - சொற்றலிகழ்ச்சியணி நாழிவாரிதொடினுஞ்சிறி - துற்றபுனல்கொளுங்கஞ்சக்குவிவினுடபதிக்கென் - குற்ற மென் றேத லிலக்கியர் தென்னிளசைக்குமனே'. (குவ. எ௦.) [அவஜ்ஞா - இகழ்ச்சி.]

அவஞ்ஞை — அவமாநம். [அவஜ்ஞா.]

அவஞாநம்—அவமாநம். [அவஜ்ஞாந.]

அவட்சயம்—1. அழிவு. 2. நட்டம். [அவ க்ஷய: அவ - உபசர்க்கம். க்ஷய - அழிவு.]

அவட்சேபணம் — விழுதல். (தர்க்கபா. சாச.) [அவக்ஷேபண.]

அவட்சேபம்—1. எறிதல். 2. தவறாக எறிதல். 3. நினைவுக்கு மாறான அர்த்தம் விளைக்குஞ்சொற்களைச் சொல்லி நிந்தித்தல். [அவ க்ஷேப.]

அவட்டம்—நாய்வேளை.

அவடம்—பள்ளம். (இலிங்கா.) [அவட.]

அவடம்பதி — வசம்பு.

அவடி—1. கிடங்கு. 2. கிணறு. 3. திரைச்சீலை. (பிங்.) 4. துவாரம். (அங்கசோதநவித்தை.) [1, 2, 4, அவடி. 3. அவடீ.]

அவடு — 1. கழுத்தின் பிற்பக்கம், பிடரி. 2. கிணறு. 3. குழி. 4. பிளப்பு. [அவடு.]

அவண்—1. அவ்விடம். 'பால்வளாய் பசும்பொற்கஞ்ச - வீசிலகொணரவேண்டுமேவுதுமவண்யாமென்று' (சேதுபு. வேதாள. சாசா.) 2. அவ்விதம். 'அற்றதுமாயையுமற்றறியலனே' (ஞானு. 22.)

அவண்ணியம்—அவர்ணியம்.

அவண — அவ்விடத்தன. 'அரைசெலாமவணமணியெலாமவண' (இராமா. நகரப். எ.)

அவணம் — 1. இருபதினுயிரம்பாக்கு. 2. ஒரு முகத்தலளவைப்பெயர்; [அஃது: இத்தேசத்து ஏறக்குறைய ஏழரைப்பறை அல்லது எட்டுப்பறைகொண்ட அளவு.] 3. நிந்தனை. [அவ ர்ண.]

அவணன்—1. திண்ணியன். 'சுவணவண்ணனொடு கண்ணனுறை தோளன் விசைதோயவணன் விண்ணிடை நிமிர்ந்துபடர்கின்றவன்' (இராமா. விராதன். ௩அ.) 2. துர்க்கீர்த்தியுடையவன். 3. நீசன். [2, 3, அவர்ண: வர்ண - கீர்த்தி.]

அவணி — நன்மை.

அவத்தம் — 1. நாய்வேளை. (மூ. அ.) 2. பிரயோசநமின்மை. 'பெருஞ்சமயத்தின் மயங்கி - யவத்தமே பிறந்து' (இராமா. தோத்திரப். உ௩.) 3. பொய். 'அவத்தத் தன்மைவிட்டுழி' (தேவா. திருத்தினை. கூ. சுங்.) 4. கேடு. 'அவத்தங்கள்விளையும்' (திவ். திருவாய். 10, 3, 9.)

அவத்தன் — பிரயோசநமில்லாதவன். 'துவக்குணும்பங்கப்பித்தனவத்தன்' (திருப்பு. எ.)

அவத்தாசதுட்டயம்—மனிதருடைய நான்கு பருவநிலை; அவை: பாலியம், கௌமாரம், யௌவநம், வார்த்திகம் என்பன. [அவஸ்தா சதுஷ்டய: அவஸ்தா - நிலை. சதுஷ்டயம் - நான்கு.]

அவத்தாத்திரயம்—1. சாக்கிரம், சொப்பநம், சுழுத்தி என்னும் மூன்று அவத்தைகள் சுரோத்திராதி இந்திரியங்களினுற் சத்தாதி விடயஞாநம் எந்தமட்டும் வருகின்றதோ அந்தமட்டும் சாக்கிரம், சாக்கிரவாசனையாற் பிறந்த விடயத்துடன்கூடின ஞாநமே சொப்பநம்; சமஸ்தவிடயஞாநங்களும்இல்லாதிருத்தல் சுழுத்தி. (வாசுதே. உ௦௦.) 2. மூன்றுதன்மைகள். 'சத்தர், உத்தியுத்தர், பிரவர்த்தர் என்னும் பதியவத்தாத்திரயா சாதாரணலட்சணங்கள்' (சி. சி. அளவை. ரு. சிவாக்.) [அவஸ்தா - நிலை, தன்மை. த்ரய - மூன்று.]

அவத்தாநம் — 1. நிலை. 2. நிலைத்தல். 3. நிற்குமிடம், இருக்குமிடம். 'மாயாத்துவய

மந்தியே அவத்தாகஞ் சொல்லப்பட்டது' (சி. சி. அ: உ: சிவாக்.) 4. விடாத்தொடர்பு. (வேதாந்தம்.) [அவஸ்தா நம்.]

அவந்திதன்—இருந்தவன். 'சகலாவத்தித ஞனவான்மா' (சி. சி. சு: ௩௧. சிவாக்.) [அவஸ்தித.]

அவந்திதி—இருப்பு. (பௌட்.பும்.௩௪௬.) [அவஸ்திதி.]

அவந்தியம்—1. இழிந்தது. 2. தீங்கு, குற்றம். 3. பாவம். 4. மரணத்துக்குவிலக்கு. 5. வெறுக்கப்பட்டது. [1, 2, 3, 5. அவத்யம்: அ-எதிர்மறை. வத்யம்-சொல்லத்தக்கது; 4. அவத்ய; வத்ய-கொலைக்குரியது.]

அவந்தியன் — கொல்லத்தகாதவன். [அவத்ய:]

அவந்தியா — கப்பலின் முன்புறத்துக் கயிறுகட்டுந் தம்பம்.

அவந்திரங்கம்—அங்காடி, கடை.

அவந்திரியம்—ஆபத்து.

அவத்து—1. உதவாதபொருள். 2. பொருளல்லாதது. 'மாயை அநிர்வசநீயமாகிற அவத்துருபமாகாது' (பௌட். மாயா. ௯: உரை.) [அவஸ்து: அ; வஸ்து-பொருள்.]

அவத்துறை—தீயவழி.'அவத்துறைபோய நெஞ்சத்தக்கனுக் கறைந்திட்டானே' (கூர்ம பு. தக். வே. எ.)

அவத்தை-1. ஆபத்துநிலை, வேதனை. 'அன்னவளவத்தைகண்டாங்கிளையவன்' (இராமா. சீதைவன. ௬௧.) 2. தன்மை, நிலைமை. 'சிலகொணுதலாய்ப்பின்னர்வரு மவத்தைசேராதருள்புரியாய்'(நைடத.அன்னத்தைத்தூ. ௧௭.) 3. மலத்திலே கட்டப்பட்ட ஆன்மாவினது சாக்கிரமுதலாகிய ஐவகைநிலை; அது: காரணவத்தை, காரியாவத்தையென இருதிறப்படும். 'ஆன்மாவுடலினுளவத்தை யைந்துமுறும்' (சி. சி. சு: ௩௨.) 4. காட்சி, வேட்கை, ஒருதலையுள்ளுதல், மெலிதல், ஆக்கஞ்செப்பல், நாணுவரையிறத்தல்,நோக்குவவெல்லா மவையேபோறல், மறத்தல், மயக்கம், சாக்காடு என்பவை. (நம்பியகப். 36. உரை.) 5. இலயம், போகம், அதிகாரம் என்பவை. [அவஸ்தா: அவ-உபசர்க்கம். ஸ்தா-நிற்றல்.]

அவந்தைப்பிரயோகம் — 1. அறுபத்து நான்குகலைஞானங்களுள் ஒன்று; அஃது: உயிரைப் பஞ்சாவத்தைகளில் ஒன்றிலே நிறுத்துவதைப்பற்றியது. 2. சூநியம்வைத்துக்கொல்லல்.

அவதஞ்சம்—1. காதணியிலொன்று. 'மருவியசெவிமலர்ப்பூமன்னுகன்னவதஞ்சம்'(சூ. நிகண். எ: உஅ.) 2. தலையணி. 3. பூமாலை. [அவதம்ஸ.]

அவதந்திரம் — தவறானவழியால் ஒன்று செய்தல், சதியாலோசனை. 'அவதந்திரந் தனதந்தரம்' [அவ-எதிர்மறை. தந்த்ர-நியாயவழி]

அவதந்திரி—அவதந்திரஞ்செய்வோன்.

அவதரணம் — 1. இறங்குதல். 2. பிறர் சொன்னதையெடுத்துமொழிதல். 3. மொழிபெயர்த்தல்.[அவதரண: அவ; தரணம்-கடத்தல்.]

அவதரணிகை—1. நூலின் ஆரம்பத்திலே சொல்லப்படுங் காப்பு. 2. முகவுரை. [அவதரணிகா.]

அவதரம்—1. இறங்குதல். 2. காலம், சமயம். 'விடயங்களைப் புசிக்கவருகிறவவதரத்திலே' (சிவப்பிர. உ: ௨௯. சிதம்ப.) [1. அவதர. 2. அவஸர.]

அவதரித்தல் — 1. கருவிற்புகுதல். 2. சிந்தித்தல்.'அந்தமநமாதியந்தக்கரணம்கிரமத்தில் விஷயங்களை நினைப்பது நிச்சயிப்பது அபிமானிப்பது அவதரிப்பது வியாபாரமாம்' (த. நி. போ. ௧௧௩.) 3. தங்கல். 'வாகீசச் சுவாமி மடத்தவதரிப்ப' (திருவாலவா. 37. 32.) 4. பிறத்தல். 'அங்கவர்தம்மிடை யவதரித்தனன்' (கந்தபு. பாயி. ௬௪.) [2. அவதார.]

அவதாதம் — 1. சிறந்தது. 2. சுத்தம். 3. மஞ்சணிறம். 4. வெண்மை. (உரி. நி.) [அவதாத.]

அவதாதன் — வெண்ணிறமுள்ளோன். [அவதாத:]

அவதாநம்—1. கவநம்.'அந்தரத்தினிறுத்து மவதாநம்போல' (தாயு. மண்டலத்தி. ௧.) 2. கிரகிக்கை. 3. சாக்கிரதை. 4. ஞாபகம்.

5. நீட்டுதல், விரித்தல். 6. மேன்மையான செயல். 'இறைவன் செய்த சிந்தைகூ ரவ தானத்தின் திறங்களை' (திருவாலவா. நால் வர. 7.) [1, 2, 3, 4. ஸவயாநு; 5. ஸவ தாந; 6. ஸவதாந.]

அவதாநம்பண்ணல்- கவநமாய்நினைத்தல்.

அவதாநி — 1. கவனிப்புள்ளவன். 2. வேதங்களில் தேர்ச்சிபெற்றவன். 'இவனவ தாநி யிவன்கிரமதாடி' (பிரபோத. 11. 5.) 3. அவதாநஞ்செய்வோன். 'அஷ்டாவதாநி'

அவதாநித்தல் — அவதாநம்பண்ணல். [ஸவயாநு.]

அவதாநிப்பு—அவதாநித்தல்.

அவதாரணஞாநம் — நிண்ணயம். (தர்க்க பா. ௯.) [ஸவயாரண - நிச்சயித்தல்.]

அவதாரணபூர்வபதகருமதாரயன் — சமா சங்கள் ஆறனு ளொன்று; அது: முன்மொழி தேற்றமாகிய பண்புத்தொகை. அஃது 'அருட்செல்வம்' என்பதுபோல்வது. (பி.வி. ௨௨.)[ஸவயாரணம்- தேற்றம். வூவ- வடிம - முன்மொழி. கமீயாரய-பண்புத் தொகை.]

அவதாரணம்-1.எடுத்தல். 2.சிலையினேரம். 3. துண்டங்களாக வெட்டுதல். 4. தேற்றம். 'சம்பாவனையவதாரணமுறையேயெண்ணங் தேற்றமெனப் பெயர் பெறுமே' (பி. வி. ௨௨. உரை.)5.நிச்சயம்.6.நிச்சயித்தல்.'அவதாரண ஞாநம் நிண்ணயம்; அது: பிரமாணபலம்' (தர்க்கபா. ௯.) 7. நான்முகம். 8. பிளத் தல். 9. பேயினுற் பிடிக்கப்படுதல். 10. மண் தோண்டுங் கருவி. 11. மண்தோண்டுதல். 12. வணக்கம். 13. வற்புறுத்தல். [1, 2, 7, 9, 12. ஸவதாரண; 3, 8, 10. 11. ஸவதாரண; 4, 5, 6, 13. ஸவயாரண.]

அவதாரம் — 1. யோநிசம்பந்தமின்றி வெளிப்படுதல், இறங்குதல். 2. குளம். 3. கேணி. 4. தீர்த்தக்கரை. 5. நுட்பமாய் நிச்சயித்தல். 6. முகவுரை. 7. மொழி பெயர்த்தல். 8. பிரிக்கை. [1, 2, 3, 4, 5, 7. ஸவதார; 6. ஸவயார.]

அவதாரிகை — முன்னுரை. (ஞானவா.) [ஸவதாரிகா.]

அவதாவநம் — 1. சுத்திசெய்தல். 2. துரத்துதல். 3. பின்தொடருதல். [ஸவ யாவந: ஸவ; யாவந - ஓடுதல்.]

அவதி—1. அளவு. 'எள்ளவதியேனுங் கன்ம மடாது' (கம்பரா. ௭௮.) 2. இறுதி. 3. நியமிப்பு, விதி. 'அக்காலத்தே யகலு மோ வவதியென்றுன் றுளதானல்' (இரா மா. தைல. ௮௪.) 4. (காலத்திலாவது இடத்திலாவது) எல்லை. 'அத்தனைக்கு ணின்பொருடரவவதியீகென்றான்' (அரிச்ச. சூழ்வினை. ௧௮.) 5. ஐந்தாம்வேற்றுமை. 'எல்லைப்பொருள் ஒழிபவதி' (பி. வி. ௯.) [இது நீக்கப்பொருளுடையது.] 6. கணக்கு. 'ஆயிரமாயிரமவதிசேரவுணர்தஞ்-சேயதன் குஞ்சியைச் செங்கையாற்பற்றியே' (கந்தபு. வச்சிரவா. ௫௪.) 7. கவநம். 8. காலப்பகுதி. 'போனவவதியில் நாம் மிக வருத்தப்பட் டோம்'. 9. காலம். 'கங்குலவதியுமுறங்கா துற்றான்' (கந்தபு. கந்தவிர. ௧௩.) 10. கிடக்கு. 11. துன்பம். 'இன்னம் பாழவதிப் பட வெனக்கு முடியாது' (தாயு. பன்மாலை. ௪.) 12. அவதிஞானம். 'ஆங்குமுனியவதியி னறிந்தபொருளதனை' (யசோதர. 5. 23.) [ஸவயி.]

அவதிகத்தம்—1. கடனுரை. 2. காலாந் தரத்தில் இற்றுவந்த கடலிப்பியின் ஓடு

அவதிகாரகம் — ஆறு காரகபதங்களில் ஒன்று; அது: யாதொன்றினின்று ஒருபொ ருள் நீங்குமோ அது. இது 'யாதனினீங்கு மவதியதாம்' என்பதனுற் பெறப்படும். (வீரசோ. உபகாரக. க.) [ஸவயி; காரக.]

அவதிஞாநம் — 1. அதீதகதமான பரிஜ் ஞாநம்; அது: முற்பிறப்பையறியும் அறிவு. (சிலப். நாடு. ௧௬௭. உரை.) 2. முக்காலத் தையும் அறியும் அறிவு. (நினைக்கும் அவதி யிற்றோன்றும் ஞாநம் என்றபடி.)

அவதிதரிசநம்—தரிசநாவரணியம் ஒன்பது பேதத்துள் ஒன்று. (சி. சி. ௮: ௪௨. மறை.)

அவதிப்படல்—துன்பப்படல்.

அவதீரணம் — அவமதித்தல். [ஸவயீ ரண.]

அவதும்பரகுட்டரோகம் — ஒருவகைக் குட்டரோகம்; இதிற், கொப்புளங்கள் அத்திப்பழத்தையொத்து விஸ்தரித்துச் சிவந்திற் பிறந்து நசுங்கிக் குழிவிழுந்த ரணங்களாகும். (சீவரட். ௧௪௭.)

அவதும்பரம் — அத்திப்பழம். (சீவரட். ௧௪௭.) [ஔது ம்பர என்பதன் திரிபு.]

அவதூதகீதை — அதிவர்ணாச்சிரமத்தைக் கூறும் ஒரு நூல்.

அவதூதம்—1. அசைக்கப்பட்டது. 2. அடிக்கப்பட்டது. 3. அவமதிக்கப்பட்டது. 4. சிதறப்பட்டது. 5. திருப்பியனுப்பப் பட்டது. 6. நீக்கப்பட்டது. 7. மல்யுத்தத்தி னொருவகை; அது: புறங்கையாற் கீழே தள்ளுவது. (கூர்மபு. அட்டமூர்த். ௨௬. ௨௪.) 8. நூற்றெட்டுபரிடதங்களுள் ஒன்று. [அவ-தூத.]

அவதூதன்—அதிவர்ணாச்சிரமி. இலௌகிகபதார்த்தம் அனைத்தையும் விட்டுநீத்தவன். [அவ-தூத]

அவதூதி—அவதூதன்.

அவதூநநம்—1. அகற்றல். 2.அசைத்தல். 3. அசைதல். 4. கலங்குதல். 5. மிதித்தல். [அவ-தூநந: அவ - முன். தூநந- அசைதல்.]

அவதூறு—1. நிந்தை. 2. பிறர்பழிகூறுதல்.

அவதோகம்—பால்.[அவதோஹ: அவ; துஹ - கறத்தல்.]

அவந்தரை — 1. குழப்பம். 2. கைவிடப் பட்டவன். 'அவந்தரையாய்ச்சாக'. 3. சீர்கேடு. 'பகு அவந்தரையாயிருந்தபடியினலே' (கோயிலொ. 42.) 4. பிரயோசனமின்மை. 'அவந்தரையாய்ப்போக'.

அவந்தன்—பாக்கியஹீனன், வீணன். 'நின் மகன் அவந்தனுப் வெறுநிலத் திருக்கலான போது' (இராமா. மந்தரை. ௫௫.)

அவந்தி—1. அவந்திதேசம்;அஃது:ஐம்பத் தாறுதேசங்களுள் ஒன்று. 2. சத்தபுரிகளுள் ஒன்றாகிய உச்சயினி நகரம். (உபதேசகா.சிவ நாம. ௧௦௮.) 3. ஒருநதி. 4. காடித்தண்ணீர். 'அதிலவந்தியுமெண்ணெயுமுபய முபயம்படி பெய்' (தைல. தைலவ. ௧௧௧.) 5. கிளி. (பிங். ௨௦௧௧.)

அவந்திகல்லணி — பெருகன்கிழங்கு, வெருகஞ்செடி. (மலை.)

அவந்திகன் — அவந்திதேசத்தரசன். 'இவனேகண்டா யவந்திக னென்னச் சொன் னாள்' (இரகுவமி. மாலையீ. ௬௬.)

அவந்திகை—1. அவந்திநகரம், உச்சயினி. 'அழகிய வயோத்தி மதுரையே மாயை யவந்திகை காசிநற் காஞ்சி' (கந்தபு. திரு நகர. ௭௫.) 2. கிளி. (சூ. நிகண். ௩: ௫௫.)

அவந்திசோமம்—புளித்தகஞ்சி. [அவந்தி ஸோம: ஸோம - கஞ்சி. அவந்திநகரிற் செய்யப்படுவது.]

அவந்தியன்—அவந்திதேசத்தவன். 'அவந் தியன்முரசமார்ப்ப' (சிந். காந்த. ௨௨௧.)

அவநதம் — 1. குனிதல். 2. தலைகவிழ்தல். [அவ - கீழ். நத - வளைதல்.]

அவநதன் — 1. குனிந்தவன். 2. தலை கவிழ்ந்தவன். 'அரசனவநதனானன்' (கோ யிற்பு. இரணி. ௧௪.) [அவநத: அவ - கீழ். நத - வணங்கியவன்.]

அவநதி — 1. குனிதல். 2. தலைகவிழ்தல். 3. தாழ்மை. 4. மரியாதை. 5. மேற்குத் திசையில் அத்தமித்துப்போதல். 6. வணக் கம். [அவ - கீழ். நதி - வளைதல்.]

அவநம்—1. அலங்கரித்தல். 2. இருத்தல். 3. காத்தல். 4. கொல்லல். 5. செய்தல். 6. தழுவுதல். 7. தாங்குதல். 8. திருத்தி கொடுத்தல். 9. திருத்தியடைதல். 10. தீவி ரம். 11. பட்சம், அன்பு. 12. பிடித்தல். 13. பெலன். 14. தரும்படிகேட்டல். 15. போ தல். 16. விருத்தியாதல். 17. விருப்பு. [அவந.]

அவநம்பிக்கை—நம்பிக்கையீனம். [அவ - கேடு.]

அவநாசி—சரசுவதி.

அவநாயகம்—இறங்கச்செய்வது. [அவ- கீழ். நாயகம - அடைவிப்பது.]

அவநி—1.பூமி. 'அன்றெனக்கு நீயிசைந்த வவனிபாதி யமையும்' (பாரத. வாரணா. ௮௨.) 2. மருதநிலம். (இராசவைத்.) [அவ நி: அவ - காத்தல்.]

அவநிகேள்வன்—விட்டுணு. (பூமிதேவிக்கு நாயகன் என்றபடி.) 'அவநி கேள்வனு-நாற்றிசை முகமுடை நளிநத்தேவுமே' (கந்த பு. திருவவதா. ௭0.)

அவநிதம்—தோத்திரித்தல்.

அவநிந்தை—தூஷணம்.

அவநிபதி — 1. அரசன். 2. விட்டுணு. [ஸவநி - பூமி, பூமிதேவி. வதி - தலைவன்.]

அவநிபன்—அரசன். 'அவனிபனகரியில்' (பாரத. வாரணா. கஅ.)

அவநிபாரகன்—அரசன்.

அவநிபாலகன்—அரசன். [ஸவநிவாலு: ஸவநி - பூமி. வாலுக - காப்போன்.]

அவநிபாலன்—அரசன். [ஸவநிவாலு: வாலு - காப்பவன்.]

அவநியாயம்—நியாயவீனம்.

அவநீதம்—நீதவீனம். [ஸவ; நீத - நடத்துதல்.]

அவநீதி — நீதியின்மை. 'மறனுறும்வநீதியை' (பாகவத. குருகுல. ௫௩௭.)

அவநுதி—1. ஓரலங்காரம்; அஃது: ஒன்றன் உண்மையை மறுத்துப் பிறிதொன்றாக உரைப்பது. 'நறைகமழ்தார் வேட்டார் நலனணியு நாணு - நிறையு நிலைதளரா நீர்மை-யறநெறிசூழ் - செங்கோலனல்லன் கொடுங்கோலன் றெவ்வடு போர் - வெங்கோப மால்யானை வேந்து: இதன்கண் செங்கோன்மையுடைமையாகிய சிறப்புண்மையை மறுத்துக் கொடுங்கோன்மையாகிய பிறிதொன்றாகக் கூறியவாறு காண்க. 'சிறப்பினும் பொருளினுங் குணத்தினு முண்மை - மறுத்துப்பிறிதுரைப்பதவநுதியாகும்' (தண்டியலங். பொருள். ௭௩.) 2. துதித்தல், புகழ்தல்.

அவநுதியுருவகம்— ஒருவகையுருவகவலங்காரம்; அது: 'பொங்களகமல்லபுயலே' யென்றதிற்போல, உண்மைப்பொருளை மறுத்து ஒப்புமைப்பொருளைப் பொருளாகச் சாதிப்பது. 'உவமை யேது வேற்றுமை விலக்கே,யவநுதிசிலேடையென் றவற்றொடு வருமே' (தண்டியலங். ௩௬.)

அவநெறி—பாவவழி. 'தீவினையா லவநெறியிற் செல்லாமே' (பெரியபு. தடுத்தா. ௭௧.)

அவப்படுதல்—பயனின்றாதல். 'அருந்தவமவப்படாதருளி' (உபதேசகா. சூராதி. 129.)

அவப்பலம்—நிப்பயன். 'வெய்தவப்பலத்துருநன் னிலைகொடு' (இரகு. யாக. 2.)

அவப்பிரசவம்—ஆறுக்குமேலான மாதங்களிலே கருவழிதல். (சி. சி. உ: ௯௩. மறை.)

அவப்பிரஞ்சம்—இழிசனர்மொழி.

அவப்பெயர்—துர்க்கீர்த்தி.

அவப்பொழுது — வீண்பொழுது. 'அவப்பொழுதகலவிருப்பதென்விருப்போ' (வைராக். தீப. கஅ.)

அவபத்தி — 1. பத்தியின்மை. 2. மூடபத்தி.

அவபத்தியம்—பத்தியந்தவறுதல். [ஸவ; வத்யூ - இணக்கமானது.]

அவபாகுநவாதம் — தோள்களைச் சூம்பச் செய்யும் ஒருநோய். (சீவரட். ௧௬அ.) [ஸவ. கீழ். வாஹு - தோள்.]

அவபாசகத்துவம் — விளக்குதல். [ஸவஹாஸகத்வ.]

அவபாசகம்—1. ஒளியுடையது. 2. பரப்பிரமம். [ஸவஹாஸக.]

அவபாசகன் — விளக்குகிறவன். [ஸவஹாஸக:]

அவபாசநை—1. விளக்குதல். 2. விளங்குதல். [ஸவஹாஸநா.]

அவபாசம்—1. அறிவு. 2. இடம், எல்லை. 3. ஒளி. 4. காட்சியறிவு. 5. தோற்றுதல், வெளிப்படுதல். 6. விபரீதஞானம். [ஸவஹாஸ: ஸவ; ஹாஸ - ஒளி.]

அவபாதநம்—1. தறித்தல். 2. வெட்டுதல். [ஸவவாதந: ஸவ - கீழ். வாதந - வீழ்த்தல்.]

அவபாதம் — 1. இறங்குதல். 2. படுகுழி. 3. யானைப்படுகுழி. 4. விழுதல். [ஸவவாத: ஸவ - கீழ். வாத - விழுதல்.]

அவபிரதம்—யாகத்தின் முடிவில் நீராடுகை. 'முனிவ ரவபிரதங் குடைந்தாட' (திவ். பெரியாழ். 4, 7, 6.)

அவபிருதம்—1. சுத்திசெய்தற்கானசலம். ‘அரசு ராடுறு ரவபிருதத்தி லாடுக’ (சூத. ஞாக. எ: க.) 2. முதல்வேள்வியிலுண்டான குறையை நீக்கச்செய்யும் இரண்டாம் யாகம். 3. யாகமுடிவிலே சுத்திசெய்தற் பொருட்டுச்செய்யும் ஸ்நாநம். [அவஹ்ரூய.]

அவபுத்தி — 1. துர்ப்புத்தி. 2. கெடுமதி.

அவபேதகவாதம்-ஒருவகை வாதரோகம்; அது: கண், புருவம், நெற்றியென்பவைகளிலே வியாபித்து நெற்றி பிளந்துபோவதுபோலச் சகிக்கக்கூடாத வேதனையைச் செய்வது. (சீவரட். களசு.) [அவஹெடி; வாத.]

அவபோதகன் — 1. உபாத்தியாயன். 2. சூரியன். 3. விழிக்கச்செய்வோன். [அவவொயக: அவ; வொய - அறிவு.]

அவபோதநம் — 1. அறிவு. 2. காட்சியுணர்வு. [அவவொயந.]

அவபோதம்—1. அறிவித்தல். 2. அறிவு. 3. ஞானம். 4. படிப்பித்தல். 5. விழிப்பு. [அவவொய: வொய - அறிவு.]

அவபோதரூபம்—அறிவுருபம். (சி-வி. சரி. அவதாரிகை.)

அவம் — 1. ஆகாயத்தாமரை. (இராசவைத்.) 2. கேடு, தீமை. ‘அவஞ்செய்வாராசையுட்பட்டு’ (வள். உ௬௬.) 3. பயனின்மை, வீண். ‘அம்மையி னாத்தவம்புரியாதவமே பிறந்தேற்கு’ (தணிகை. களவு. ௩௪க.)

அவம்போதல்—வீணாகப்போதல்.

அவமதி — 1-3. அவமதியென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. நிந்தை. ‘இழிகுன்புலைக்காக்கீண்டியென்னை யவமதிசெய்திட’ (காஞ்சிப். பரசிரா. ௪௨.) 5. வெறுப்பு. [4, 5. அவமதி.]

அவமதிச்சிரிப்பு—நிந்தனையாகச்சிரித்தல்.

அவமதித்தல்-இகழ்தல். ‘பரனைக்குருவையவமதித்தோர்’ (தணிகை. அகத். ௩௩௬.)

அவமதிப்பு — இகழ்தல். ‘அவமதிப்புமான்ற மதிப்பும்’ (நாலடி. பெரியாரை. ௩.)

அவமர்தம்—கலத்தல். (சீவரட். ௩௧௫.)

அவமர்தரோகம் — ஆண்குறியிலேவரும் ஒருவகைரோகம், அஃது: ஆண்குறியில் நீளவடிவாய் அநேக கொப்புளங்களை யுண்டாக்க, அக்கொப்புளங்களின் நடுவில் பிறவுண்டாகிச் சீழும் இரத்தமும் ஒழுகுவதும், அன்றி, வேதனையும் உரோமச்சிலிர்ப்புமுண்டாம். (சீவரட். ௩௧௫.) [அவஹீஷ - கலத்தல். இது பல உபத்திரவங்களோடு கலந்து வெளிப்படுதலால் வந்தபெயர்.]

அவமரணம்—1. துர்மரணம். 2. அகாலமரணம்.

அவமரியாதை—மரியாதைத்தவறு. ‘பொன்போலும் அரியதவத்தையுடைய எல்லாமுநிவர்களுங் கோபித்து எங்களுக்கு அவமரியாதைசெய்தபடியினாலே’ (அருணசலபு. இடப்பாக. ௬௬. உரை.)

அவமழை — கேடுசெய்யும் அகாலமழை.

அவமாக்கல்—வீணாக்கல்.

அவமாநம் — 1. இழிவு. ‘ஆசிரியன்வாடவவமாநமதுசெய்தோன்’ (சூத. எக்கி. பூ. ௬எ: ௬.) 2. மாநபங்கம். ‘அமணர்கடாமென்னையவமாநஞ் செய்ய’ (பெரியபு. தண்டி. கக.) [அவ; மாந - மதிப்பு.]

அவமாநித்தல்-1. அவமானப்படல். (பாரதவெண். ௬௭௫.) 2. அவமானப்படுத்தல். ‘மாதகம் வெருவ வேந்த ரவையினி லவமா நித்தபாதகன்’ (நல். பார. சொர்க்கதெரி. ௩க.)

அவமாநிதம்—அவமானமடைந்தது.

அவமிருத்து—1. அபமிருத்து. ‘பல்கோடி சன்மப் பகையு மவமிருத்தும்’ (கந்தர்கலி. ககஉ.) 2. கேதுவின்மகன். (குமார. திரு திரா. உ. உரை.)

அவமிருத்துரோகம்—திருவாதிரை கேட்டை ஆயிலியம் பரணி கார்த்திகை முப்பூரம் என்னும் நாட்களுடனே பாவவாரமும் இருத்தையும் கூடிவருவது. (விதாந. பஞ்சாங்க. 16. உரை.) [இந்தயோகத்திலே வியாதிகொள்ளின் மரணம்வரும் என்பதுபற்றி வந்த பெயர்.]

அவமோசநம் — 1. விடுதல். 2. விடுதலையாக்கல். [அவமோசந: அவ; மோசந - விடுதல்.]

அவய—வெண்கடுகு.

அவயம் — 1. புகலிடம். (கம்பரா. வருணனை.67.) 2. (கோழிமுதலியன) அடைகிடத்தல். 3. அழுகை. 4. இலாபிச்சை. 5. நன்மையின்மை. 6. வெட்டிவேர்.

அவயவசாபிண்டியம் — தேகஉறுப்புக்களின்கலப்பினாற்சபிண்டராயிருக்குந்தன்மை. 'அவயவசம்பந்தத்தால் மகனும் தகப்பனும் சபிண்டசம்பந்தம் உடையோர்.' (பரா. மி. ௬௭.)

அவயவம் — 1. அநுமானவாக்கியத்தினுறுப்பு; அவ்வுறுப்புக்கள்: பிரதிஞ்ஞை, ஏது, உதாரணம், உபநயம், நிகமநம் என ஐந்து. (தர்க்கபா. ௭௨.) 2. உடம்பு. 3. உறுப்பு. 'ஆராமந் தொறுந்தங்க ளவயவம் போல்வனகொய்தார்' (பாரத. காண்ட. ௬.) 4. ஒருபொருளின் ஏகதேசமாய்த் தனித்தனி பிரிக்கப்படுந்தகுதியுடையது; ஆடையின் ஏகதேசமாய்த் தனித்தனி பிரிக்கப்படுநூல்கள் போல. (சிவஞானபாடியம். ௨௪.)

அவயவவுருவகம் — உருவக அலங்காரத்தின் ஒருவகை; அஃது: அவயவத்தை உருவகஞ்செய்து அவயவியை வாளா உரைப்பது. 'புருவச்சிலைகுனித்துக் கண்ணம்பென்னுள்ள-முருவத்துரந்தாரொருவர்' (தண்டியலங். ௩௬.)

அவயவி—1. அநுமானவாக்கியம். 2. அவயவத்தையுடையது. 3. உடம்பு.[ஸவயவிநு: ஸவயவம் - உறுப்பு. இ-ஒரு விகுதி.]

அவயவியுருவகம் — உருவக அலங்காரத்தின் ஒருவகை; அஃது: அவயவியை யுருவகஞ்செய்து அவயவத்தை வாளா உரைப்பது. 'வார்புருவங் கூத்தாட வாய்மழலை சோர்ந்தசைய-வேர்வரும்பச் சேந்து விழிமதர்ப்ப-மூரல்-அளிக்குந்தெரிவைவதனாம்புயத்தாற்களிக்குந் தவமுடையேன்கண்'(தண்டியலங். ௩௬.)

அவயோகம் — 1. தீயசம்பவம். 'தீமை-மனையவன் முகக்கண் டவயோக முணர்ந்தழிந்து' (வேதாரணியபு. அக்கினிதீர். அ.) 2. நாசயோகம். (விதான.குணகுண. க. முகத்துரை.)

அவர்—1. அவர்கள். (பலர்பாற்படர்க்கையில்வரும் ஒரு சுட்டுப்பெயர்.)'புவியினரேனையர் புராணந்தேரினுஞ் - சிவகதையுணர்கிலரென்னிற் றீருமோ - வவர்மயல்' (கந்தபு. அவையட. ௧௧.) 2. உயர்திணைப்பொருள். 'அவையவராய்' (சிவப்பிரகாச. உ: க.) 3. உயர்திணையில் ஒருமைச்சிறப்பாய்வருவதொரு சுட்டுப்பெயர். 4. நாயகன். (இது நாயகி தன்னாயகன்பெயர் கூறாது படர்க்கையிற் சுட்டிச்சொல்லுமிடத்து வழங்குவது.) 'யானுரைப்பதவர்திறம்' (வள். ௧௧அ௪.)

அவர்கள் — 1. பலர்பாற்படர்க்கையில் வரும் ஒரு சேய்மைச்சுட்டுப்பெயர். 'அவர் கண்முன்றோன்ற' (சூத. எக்கி. பூ. ௨௦: ௨௧.) 2. ஒருவரைக்குறிக்கும் பன்மைச்சொல்.

அவர்ச்சநீயம் — தள்ளிவிடத்தக்கதல்லாதது. 'அவர்ச்சநீய சம்சித்த பஞ்சகிருத்திய கர்த்திருத்துவம்' (சி. சி. ௬: க. ஞான.) [ஸ-எதிர்மறை. வஜ்ரநீய-தள்ளத்தக்கது.]

அவர்ணியம்—வர்ணித்துச்சொல்லப்படுவதல்லாதது, உபமானம். (அணியி. 3.) [ஸ; வர்ணிய-வர்ணித்துச்சொல்லப்படுவது.]

அவரகாத்திரம்—1. கால். (சிந். காந்த. ௩௧௪. உரை.) [ஸ-எதிர்மறை. வர-சிறேட்டம். காத்ர - உறுப்பு. 'வரகாத்திரம் என்பதனைத் தலையென்றும் அவரகாத்திரம் என்பதனைக் கால் என்றும் வடநூலார் கூறுவர்' என்றார் நச்சினார்க்கினியர்.] 2. யானையின் பின்காலும் முன்காலும். [ஸவர - யானைப் பின்கால். காத்ர - யானைமுன்கால்.]

அவரசன்—1. சூத்திரன். 2. தம்பி. [ஸவரஜ: ஸவர-கீழ், பின். ஜ-பிறந்தவன்.]

அவரசை—தங்கை. [ஸவரஜா: ஸவர-பின். ஜா-பிறந்தவள்.]

அவரசைலம் — அஸ்தமயமலை. [ஸவர - மேற்கிலுள்ளது. ஶைல - மலை.]

அவரஞ்சக்காரம்—வெடிகாரம்.

அவரம் — 1. கடைசியானது. 2. கீழ்மையானது. 3. பிரதானமல்லாதது. 4. பின்புறம். 5. பின்வருவது. 6. மேற்கிலுள்ளது. 7. யானைப்பின்னங்கால், யானைப் பின்னந்தொடை. 8. வயதிலிளையது.

அவரயன்—அவரசன்.

அவராகம் — இச்சையின்மை. 'தராதலமென்னுஞ் செங்கண் - மானவராகவேத மலர்முனிதனக்குச்சொன்னாள்' (பாரத.சூது போர். ௨௦௪.) [அவ-எதிர்மறைப்பொருளில் வந்த ஒரு உபசர்க்கம்; அவபத்தியம் என்பதிற்போல. ராகம் - இச்சை.]

அவரி—அவுரி.

அவருணியம்—அவர்ணியம்'பொருச்சிறப் புக்களி லொன்று வருணியமாகவும் ஒன்று அவருணியமாகவும் இருப்பனவாம்' (குவ. ௬௧. உரை.)

அவரை — 1. ஒரு கொடி. 'குளிர்புரை கொடுங்காய் கொண்டன வவரை' (மலைபடு. ௧௧௦.) 2. கொள் துவரைமுதலியவை.

அவரோகணம்—1. இறக்குதல். 2. விழுது. 3. கமகம் பத்தனுள் ஒன்று. (பாரத. இராக. 24.) [அவரோஹண.]

அவரோகணமந்திரம்—ஒரு மந்திரம். (பிர பஞ்ச. ௧௭௬.)

அவரோகம்—1. மரத்தைச்சுற்றி அடி தொடங்கிக் கொடிபடருகை. 2. இறங்குதல். 3.சுவர்க்கம்.4 (ஆலமரம்முதலியவைகளின்) விழுது. [அவரோஹ: அவ கீழ். ருஹ் - ஏறுதல்.]

அவரோகி—ஆலமரம்.[அவரோஹிந்: அவரோஹ - விழுது. இ - உடைமையை யுணர்த்தும் ஒரு விகுதி.]

அவரோதநம் — 1. அரசன்மனையில் அந் தப்புரம். 2. தடுத்தல். 3. முற்றுகை, அரணை வளைத்து வழிதடுக்கை. [அவரோத ந.]

அவரோதம்—1. அடைக்கப்பட்ட இடம். 2. அரசன்மனையிலே அவன் தேவியிருக்கும் உள்வீடு. 'கோயிலவரோதம்' (பாரத. அருச். தீர்த். 23.) 3. கட்டுப்பாடுசெய்தல். 4. குழி யாதல். 5. தடை. 6. முற்றுகை, அரணை வளைத்துவழிதடுக்கை.7.வேலி.[அவரோத: அவ; ருத - தடுத்தல்.]

அவரோபணம் — 1. இலதாகச்செய்தல். 2. இறக்குதல். 3. குறைத்தல். 4. வேரோடு பிடுங்குதல். [அவரோபண.]

அவல்—1. ஒருசிற்றுணவு; இது நெல்லைத் தண்ணீரிலே நனையவைத்துப் பின் சிறிது உலரச்செய்து பொரித்து உரலிலிட்டிடித் தெடுக்கப்படுவது. 'அவலெறியுலக்கைபோ யதிரத்தாக்கலும்'(தணிகை.திருநகர. ௩௬.) 2. குளம். 3. பள்ளம். 'மேடவல்சிலைவிளை நிலம்' (தணிகை. அகத். ௨௪௭.) 4. விளை நிலம். 'மெல்லவலிருந்தலூர்தொறும்' (மலை படு. ௪௫௦.)

அவலக்கணம் — அவலட்சணம். [அவ; லக்ஷண.]

அவலச்சுவை — ஒன்பதுசுவைகளுள் ஒன்று. அது: துயருறுதல்.

அவலச்சுவையலங்காரம்— சுவையலங்கார வகையுள் ஒன்று; அது: பொறியுணர்வாலாகி யுள்ளத்திலே நிகழும் துயரைக் குறிப்பது. கழல்சேர்ந்த தாள்விடலை காதலிமெய் தீண் டும் - அழல்சேர்ந்து தன்னெஞ்சயர்ந்தான் - குழல்சேர்ந்த - தாமந் தரியா தசையுந் தளர் மேனி - யிமந் தரிக்குமோ வென்று' (தண்டி யலங். ௬௮.)

அவலச்சூழ்—கெட்டவிதி.

அவலட்சணம்—1. அழகின்மை. 2. இலக் கணக்கேடு. [அவ: லக்ஷண.]

அவலட்சணன்— இலக்ஷணமில்லாதவன்.

அவலத்தவிநயம்—சோகரசம் தோன்றும் அபிநயம்.விலக்குறுப்புப் பதினொன்கனுள் ஒன் றாகிய சுவை ஒன்பதுவகையுள் ஒன்று: 'அவலத் தவிநய மறிவரக் கிளப்பின் - கவலை யொடு புணர்ந்த கண்ணீர் மாரியும் - வாடிய நீர்மையும் வருந்திய செலவும் - பீடழி யிடும் பையும் பிதற்றிய சொல்லும் - நிறைகையழி தலு நீர்மையில் கிளவியும்-பொறையின் றாக லும் புணர்த்தினர் புலவர்' (சிலப். அரங்கே. ௧௩. உரை.)

அவலம்—1. எண்வகைமெய்ப்பாடுகளுள் ஒன்றாகிய அழுகை. 'எரியின்மெழு - கன்ன ளவலக்கூயலமந்தலறினளால்' (உபதேசகா. சிவவிர. ௨௬௮.) 2. குற்றம். 'உள்ளு மவலத்தையற்றார்' (சைவச. ஆசா. ௭.) 3. சோர்வு. 'கைதொழு தவலங்கூர்ந்து நின்றனள்' (கந்தபு. வரவுகேள். ௧௭.) 4. நோய். (தைல. தைலவ. ௧௧௫.) 5. பிரயோ சனமற்றது.'கற்றதுங் கேட்டது மவலமாய்ப் போதனன்றோ'. (தாயு. சச்சி. ௫.) 6. பெல னிம். 7. மனக்கவலை. 'நெஞ்சத்தவலமிலர்' (வள். ௧௦௭௨.) 8. வறுமை. 'கெடுகநின் னவலம்' (பெரும்பா. ௩௮.) 9. துன்பம். 'செய்வினை முற்றும லாண்டோ ரவலம் படு தலு முண்டு' (கலித். 19.) 10. மாயை. (மதுரைக். 208. உரை) [5 அஃபலம்; 6 அபலம்.]

அவலம்பகசிலேட்டுமம் — இதயத்தானத்திலே வாசம்பண்ணிக்கொண்டு, தனது சுபாவபராக்கிரமத்தைக்கொண்டு திரிகத்தானத்துக்கும், அங்கசாரத்தைக்கொண்டிதயத்தானத்துக்கும் சலத்தொழிலைக்கொண்டு மற்ற நான்குசிலேட்டுமங்களுக்கும் ஆதாரமாயிருக்குஞ் சிலேட்டுமம். (சீவரட். ரு.)

அவலம்பகம்—பற்றுதல். (சீவரட். சு.)

அவலம்பம்—1. ஆதாரம், சார்வு. 2. ஊன்றுகோல். 3. ஒரு ரேகையினின்றெழும்பித் தனதிருபக்கத்துஞ் சமகோணம் வரத்தக்கதாக மேலே செல்லும் ரேகை. 4. தூங்குதல். [ஸவலம்ப.]

அவலம்பித்தல்—சார்ந்துநிற்றல். 'சாலம்ப சிவயோகம் அவலம்பித்து' (சி. சி. ௯: ௧௦. ஞானப்.)

அவலரக்து—அரக்கில் ஒருவகை.

அவலவிநயம்—அவலத்தவிநயம். (சிலப். அரங்கே. ௧௩. உரை.)

அவலன்—குற்றம் உடையவன். 'அறவும் பரிய னவலன்' (சைவச. ஆசா. அ.)

அவலி–1-2. அவலியென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும். 3. பூனைக்காலி (மலை).

அவலிடி — வரிக்கூத்துவகையிலொன்று. (சிலப். 3. 13. உரை.)

அவலித்தல்—1. புலம்புதல், அழுதல். 'அவலித்தணங்குநையாவகை தேறற்கு' (தணிகை. களவு. ருகஉ.) 2. மனம்வருந்துதல். 'யானெவன் செய்வ லென்றே யவலியாவிருந்த போதில்' (சிங். நாமக. உஅரு.) 3. பதறுதல். 'அவலித்திழிதலின்' (சிலப். 23. 186)

அவலீலை—1. அவமரியாதை, நிந்தனை. 2. விளையாட்டு, களிப்பு. [ஸவலீலா.]

அவலுஞ்சநம் — 1. கிழித்தல். [ஸவ; லுஞ்ச் - பிரித்தல்.] 2. வேரோடுபிடுங்குதல். 3. வெட்டுதல். [ஸவலுஞ்ஜந.]

அவலுண்டநம்—1. களவுசெய்தல். 2. நிலத்திலேவிழுந்து உருளுதல். [ஸவலுண்டந: லுண்டந - களவாடல். உருளுதல்.]

அவலுப்பு—அவிரியினின்றெடுக்கும் ஒருவகையுப்பு.

அவலேகநம் — நாவினாலே நக்குதல். [ஸவலேஹந: லேஹந - நக்குதல்.]

அவலேகம்—1. இலேகியம். 2. கஷாயம். 3. நக்குதல். [ஸவலேஹ: ஸவ; லேஹ - நக்குதல்.]

அவலேசம்—1. அவமானம். 2. அற்பம், சிறுமை. 3. ஆபத்து. [1, 2. ஸவ; லேஶ - அற்பம்.]

அவலேபநம்—1. ஒன்றுதல், கூடுதல். 2. கெர்வம், இறுமாப்பு. 3. தைலம். 4. பூசுதல். [ஸவலேபந: ஸவ; லேபந - பூசுதல்.]

அவலேபம்—1. அலங்காரம். 2. ஒன்றுதல், கூடுதல். 3. கெர்வம், இறுமாப்பு. 4. நிந்தனை. 5. பூசுதல். [ஸவலேப.]

அவலை—1. கடுப்பு. 2. காடு, பாழ்நிலம். 'காடுங் கடுப்பு மவலையின் கண்ண' (பிங்க. ௩௧௦௦.) [ஸஹலா: ஸ - எதிர்மறை. ஹலா - பிரயோசநம்.]

அவலோககன் — ஒற்றன், வேயன். [ஸவலோகக: ஸவ; லோகக - பார்ப்போன்]

அவலோகநம்—பார்வை. 'அநுக்கிரகாவலோகநம்' (சி. சி. அ: ௩. சிவாக்.) [ஸவலோகந.]

அவலோகம்—பார்த்தல், பார்வை.

அவலோகிதம் — காணப்பட்டது. [ஸவலோகித.]

அவலோகிதன்—1. சமணமுனிவன். 'ஆயுங்குணத் தவலோகிதன்பக்கல்' (வீரசோ. பாயி. உ.) 2. காணப்பட்டவன். [ஸவலோகித]

அவவாதம்—1. கடைப்பிடி. 2. கற்பித்த கட்டளை. 3. நம்பிக்கை. 4. நிந்தனை. 5. வீண்பேச்சு. 'அம்புயநின் - வனமுகம் போன்மின்னுளதெனின்வீணவவாதம்' (குவ. எதிர்நிலையணி. அ.) [ஸவவாத: வாத - பேச்சு.]

அவவு — அவா - ஆசை. 'அவவுக்கை விடுதல்' (கலித்தொகை. கச.) [குறியதன் கீழ் ஆகாரங் குறுகி உகரமேற்றது.]

அவள்—1. உயர்திணைப் பெண்பாற் படர்க்கையிற் சேய்மைச்சுட்டுப்பொருளில் வரும் ஒருபெயர். 'அவளால்வந்தவாக்கம்' (சி. சி. க: ௬௯.) 2. உயர்திணைப் பெண்பாற் பிரபஞ்சம். 'அவனவளதுவெனுமவை' (சிவஞாநபோ. க.)

அவளம்—நிமை. 'அவளங்கடருகாரண மாம்' (வேதா. சூ. 56.)

அவளிநை—இடிதிரை. (பிங்க. ௬௨௯௪.)

அவளிவணல்லூர்—ஒரு தலம். (தேவார. அவளிவ. திருஞாந.)

அவழ்தம்—கஞ்சி.

அவழ்தாளான்—ஒருவகைக்காளான்.

அவன்—1. அவம். 'அவன்செயத்திருவுடம் பலச கோற்கின்றான்' (இராமா. சூர்ப்ப. கஅ.) [குறிலிணைக்கீழ்வந்த மகரம் னகரப் போலியாயிற்று.] 2. உயர்திணையாண்பாற் படர்க்கையிற் சேய்மைச்சுட்டுப்பொருளில் வரும் ஒருபெயர். 'அறுன்சிவன்மற்றவனிள் கழற் கன்புசெய்வாம்' (கந்தபு. கடவு. உ.) 3. உயர்திணையாண்பாற்பிரபஞ்சம். 'அவ னவளதுவெனுமவை' (சிவஞாநபோ. க.)

அவா—1-3. அவாவென்னேவலும் தெரி நிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகை யும். [க, ௩. பொருள்களில் வருங்கால் உக ரச்சாரியை பெறும்.] 4. ஆசை. 'புன்கட் குதவாவேட்டையினவாவெறும்பொய்யேயற்- றின்கட்போவாமாதராவா' (இரகுவ. தச ரத. ௯.) 5. ஆசைப்பெருக்கம், பொருள்க ளைப் பெறவேண்டுமென மேன்மேல்நிகழும் ஆசை. (வள். ௩எ௦.) 6. இறங்குகை. 7. ஒருபதந் தன்னோ டந்நுவயித்துப் பொருண் முடிதற்குரிய வேறொருபதத்தை வேண்டு தல். (சைவப்பி. உ௫.)

அவாது—கஞ்சி. [யவாகூ: இங்கே வடமொழி யகரமெய் கெட்டது.]

அவாகேசவப்பி—பெருந்தும்பை.

அவாங்மாநசகோசரம்—வாக்குக்கும் மனத் துக்கும் எட்டாதது.

அவாச்சியம்—1. கெட்டது. 2. சொல்லத் தகாதது. 3. சொல்லினால் வெளிப்படுத்த முடியாதது. 'அதனையின்னதென்றுரைத் திடப்படாமையா லவாச்சிய வடிவாகும்' (கைவல். சந்தே. ௬௫.) 4. தெற்கிலுள்ளது. [அ - எதிர்மறை. வாச்யம் - சொல்லத் தக்கது. அவாச் -தெற்கு. ய-ஒரு விகுதி.]

அவாசி—1. கீழ்த்தேசம். 2. தெற்குத்திசை. மாசிலாவவாசிநின்று' (சேதுபு. வேதாள. ௪௧.) [அவாசி: அவ - கீழ். அஞ்ச் -போதல். கீழ்ப்போன இடம் என்றபடி.]

அவாசியர்—1. ஞாநிகள். 2. தென்னாட்டார்.

அவாசீநம்—1. இறங்கினது. 2. கீழுள் ளது. 3. தெற்கிலுள்ளது. [அவாசீந.]

அவாத்தம்—அடைந்தது. [அவாப்த:]

அவாதிதம்—கண்டிக்கப்படாதது. 'அது நீயுடைமை, யாதுபிரமாணத்தாலும் அவா திதம்' (தர்க்கபா. உ௫.) [அபாதித: அ - எதிர்மறை. பாதித-கண்டிக்கப்பட்டது.]

அவாதிதவிடயம்—அநுமாநவாக்கியத்திற் சொல்லப்படும் பஞ்சரூபங்களுள் ஒன்று; அஃது எதுவுக்கு விடயமான சாத்தியதரு மம் எப்பிரமாணத்தாலுங் கண்டிக்கப்படா திருத்தல். (தர்க்கபா. உ௫. 'பஞ்சரூபம்') [அபாதிதவிஷய.]

அவாந்தரகாரணம் — இடையில்வந்த காரணம்.

அவாந்தரசங்காரம்—பிரகிருதி தத்துவம் வரையில் நிகழும் சங்காரம்; இது பிரம வருடம் பரார்த்த சங்கியையானபின் நிகழ் வது. (சி-வி. ஞாந. உ௪. உரை.)

அவாந்தரசிருட்டி — இடையில் நிகழும் சிருட்டி. 'நடுவே நடுவே வரு மவாந்தர சிருட்டியில்' (சி. சி. க: ௰௪. ஞாநப்.)

அவாந்தரசைவர் — சிவதீக்ஷைபெற்ற சூத்திரர். (சைவச. பொது. ௪௩௫. உரை.) 'கரைந்தவவாந்தரசைவன்றனக்குங் கன்மத் துரிமையில்லை' (திருவானை. கோச். உ௩.)

அவாந்தரதிசை—இடையிலுள்ள திசை; அவை: தென்கிழக்கு, தென்மேற்கு, வட மேற்கு, வடகிழக்கு என்பன. [அவாந்தர திசா.]

அவாந்தரப்பிரயோசநம் — இடையில் வரும் பிரயோசநம், பிரதாநம் அல்லாத பிரயோசநம். 'அவாந்தரப்பிரயோசநமாகிய போகத்தையுங் கொடுப்பவர்' (சி. சி. பாயி. க. சிவாக்.)

அவாந்தரப்பிரளயம் — 1. பஞ்சப்பிரளயங்களுள் ஒன்று. 'அனைத்துள விஞ்சையாவு மவாந்தரப் பிரளயத்தி-னினைத்துணையாகச்சேரும்' (மச்சபு. பிரமாண்ட. ௬.) 2. பிரகிருதியந்தமான பிரளயம். (சி-லி.) [ஸவாஂதர - இடை.]

அவாந்தரபேதம்—உட்பிரிவு.

அவாந்தரம்—1. அந்தர்ப்பவித்தது. 2. அழிவு. 3. இடையிலுள்ளகாலம், இடையிலுள்ள இடம், இடையினிற்பது. 'அவாந்தரவியாபாரம்' (சி. சி. அளவை. ௧. சிவாக்.) 4. உதவியின்மை. 5. பிரதாநமல்லாதது, இரண்டாவதாயுள்ளது. 6. வெறுவெளி. [ஸவ; ஸஂதரம் - உள்.]

அவாந்தரவாக்கியம்—விதிருபமும் விலக்குரூபமும் ஆகாதுவரும் வாக்கியம்; அஃது: 'சோதிட்டோமாதிகளைப்பண்ணினுற் சீவனுக்குச் சொர்க்காதிபலனுண்டாகும்' என்றற்போல்வது. (வாசுதே. ௨௪௦.)

அவாந்தரவியாபாரம் — தறித்தற்கருவியாகிய கவியத்துக்கு மரத்தோடுகூடுதல்போல இடையிலுள்ளசெயல். 'நடுவுதோன்றியனவாகிய சங்கிகர்ஷமுதலியன எவ்வளவோ அவையனைத்தும் அவாந்தர வியாபாரம்' (தர்க்கபா. ௪௨.) [ஸவாஂதர - இடை. வ்யாவார - தொழில்.]

அவாந்தரவெளி—வெட்டவெளி.

அவர்ந்தரை—அவாந்தரம். [ஸவ; ஸஂதர - உள்.]

அவாபுஷ்பி—பிரமி.

அவாம்—அவாவும் என்னும் பெயரெச்சம். (வகரவுகரங் கெட்டுநின்றது.) 'கண்ணவாம் வனப்பினானை' (சிந். கேமசரி. ௧௧௭.)

அவாய்—அவாவி. 'கேட்டார்ப்பிணிக்குந் தகையவாய்' (வள். ௬௪௩.)

அவாய்நிலை — ஒருபதம் தன்னோடு பொருந்திப் பொருண்முடித்தற்குரிய மற்றொருபதத்தைவேண்டிநிற்கும் நிலை. 'கெடுப்பதூஉங் கெட்டார்க்குச்சார்வாய்மற் றாங்கே, யெடுப்பதூஉமெல்லாமழை.' என்பதில், எல்லாம்வல்லது மழை யென்பதுபோல்வன. வல்லது-அவாய்நிலையால் வந்தசொல். (வள். ௧௫. உரை.)

அவாயம் — அபாயம். 'அவாயமறவே' (திருமந். 2718.)

அவாரபாரம் — கடல். [ஸவார்வார: ஸவார - இக்கரை. வார - அக்கரை.]

அவாரம்—1. ஆற்றின் இக்கரை. 2. இந்தப் பக்கம்

அவாரி—1. தடையின்மை. 'அவாரியாகப் பிராமணருக்கு ஸத்ரபோஜநமிடுவர்' (குருபரம். ஆறு. 218.) 2. சிறுநீர்.

அவாவல்—அவாவுதல்.

அவாவன்—1. கள்ளன். 2. பேராசையுடையோன். 'கோவியவாவன்' (சைவச. ஆசா. ௧௭.)

அவர்வாமை — ஆசைப்படாமை. (வள். ௩௬௩. பரி.)

அவாவு—1-2. அவாவென்னேவலும் வினைத்தொகையும்.

அவாவுதல்—1. இறங்குதல். 2. ஒருபதம் தன்னொடுபொருந்திப் பொருண்முடித்தற்குரிய மற்றொருபதத்தைவேண்டுதல். 3. பேராசைகொள்ளுதல். 'பின்னையும் போய் நெய்தற்கவாவுநெடுநாடா' (களவெ. கலிநீ. ௫௧.) 4. விரும்புதல். 'முகுந்தனேனேர் வாழ்க்கையு மவாவுகில்லேன்' (காஞ்சிப். திருநெறி. ௨௧.)

அவி — 1-3. அவியென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 'தரிய லார்முர ணவிமதி லயோத்தியைச் சார்ந்தான்' (சூத. சிவமா. ௧௩: ௮.) 4. ஆடு. 5. எலி. 6. கம்பளிப்படாம். 7. காற்று. 8. கெடுதல் எனப் பொருள்படும் ஒரு முதனிலைத்தொழிற்பெயர். 'அவி தருமகிழ் வினரற்று நுண்மருங்குல்' (சூத. முத்தி. ௮: ௨௮.) 9. சூரியன். 10. சோறு. 11. தலைவன். 12. தேவர்க்கு வேள்வித்தீயிற் கொடுக்கும் உணவு. 'அவியுணவினொன்றாரோடொப்பர்' (வள். ௪௧௩. பரி.) 13. நீர். 14. நெய். (பிங்.) 15. மதில். 16. மலை. 17. உணவு. 'அவியடுநர்க்குச் சுவைபகர்ந் தேவி' (பதினெ. திருவிடை. 7.) [4, 5, 6, 7, 9, 11, 15, 16. ஸவி. 10, 12, 13, 14. ஹவிஸ்.]

அவிக்கிநம்—1. இடையூறின்மை. [ஸவிக்ந: ஸ - எதிர்மறை. விக்ந - இடையூறு.] 2. ஒருமரம். [ஸவிக்ந.]

அவிக்கியாதார்த்தம் — தோல்வித்தானம் இருபத்திரண்டனுள் ஒன்று; அது: பொருள் இனி துவிளங்காத சொற்களை யெடுத்துக் கொண்டு பேசுதல். (சி. சி. அளவை. கஅ. மறை. சிவஞான.) [அவிவ்யாதாயம்: அ - எதிர்மறை. விவ்யாத - அறியப்பட்ட. அர்த்த-பொருள்.]

அவிக்கிரமம் — பராக்கிரமமின்மை, வீரமின்மை. [அவிக்ரம: அ - எதிர்மறை. விக்ரம - வீரம்.]

அவிக்கை—அவித்தல்.

அவிகசம்-குவிந்தது, மலராதது. [அவிகச: விகச - விரிந்தது.]

அவிகசிதம் — மலராதது. [அவிகசித: விகசித - மலர்ந்தது.]

அவிகடம்—ஆட்டுக்கூட்டம். [அவிகட.]

அவிகண்—ஒருவகைக் கண்ணோய்.

அவிகம் — வைரம். [அவிக: அவி - சூரியன். க - ஒரு விகுதி.]

அவிகலம் — 1. குறைவின்மை, நிறைவு. [அ; விகல - குறைவு.] 2. அத்தியந்தநிஷ்களம். (சி-வி. யோக. எ.)

அவிகற்பம் — 1. சந்தேகமின்மை. 2. நிருவிகற்பக்காட்சி; அது: பொருளுண்மை மாத்திரம் உணரும் உணர்வு. 'அவிகற்பமத்தமுனதென்றறிகை' (சி. சி. அளவை. ௩. மறை.) [அவிகல்ப: அ - எதிர்மறை. விகல்ப - வேறுபாடு.]

அவிகாயம் — 1. அழற்சி. 2. ஒரு காசநோய். 3. சீற்றம். 4. மனவேகம். [அழன்று கொண்டிருத்தல்; காயம்பட்டோனுக்குள்ள குணம்போலுதலின் இப்பெயர்த்து.]

அவிகாரம்-1. இயல்பான ரூபத்தினின்று வேறுபடாமை. 2. பரிணாமமில்லாதபொருள். (சி. சி. ௪: உஅ. ஞானப்.) 3. விகாரமின்மை, வேறுபடுதலின்மை. 'நனவாதிகளினவிகாரமாசி' (வேதா. சூ. ௧0அ.) [அவிகார.]

அவிகாரவாதசைவன்-பக்குவம் அடைந்த ஆன்மாவானது ஞானம்பெற்று, விகாரமின்றி நிற்கும் பதியைத் தானே சென்றடையும் என்றுசொல்லுஞ் சைவன். (கந்தபு. கா. அட. உரை.)

அவிகாரன்-1. ஆட்டுக்காரன். 2. கடவுள்.

அவிகாரி—1. கடவுள். 2. மாறுதலின். 3. விகாரமற்றது.

அவிச்சின்னம்-பிரிக்கப்படாதது. 'லோகத்தில் அவிச்சின்னமாய் இடைவிடாத சம்பிரதாயமுள்ளவைகளும்' (சி - வி. சரி. அ. உரை.) [அவிச்சின்ன.]

அவிச்சின்னன்-பாரமார்த்திகன். [தேகேந்திரியாதி யுபாதியினாற் பரிச்சின்னமாகிறபடியால் வந்த பெயர்.]

அவிச்சை—அவித்தை.

அவிசம்வாதி—வேறு பிரமாணத்தையநுசரிப்போன். (சி. சி. அளவை. க. சிவாக்.) [அவிஸம்வாதிந்: விஸம்வாதிந் - பிரமாணமுடைய நல்லோன்.]

அவிசல்—அவிந்தது. (திருப்பு. 557.)

அவிசாரம்—1. ஆராய்ச்சியில்லாமை. (கோயிற்பு. பதஞ். 31.) 2. கவலையில்லாமை. 3. அபிசாரம். 'அவிசாரமவிசாரத்தமைத்தார்கள்' (கோயிற்பு. பதஞ். 31.)

அவிசாரி—வியபிசாரி.

அவிசாரிதண்டம் — 1. இடுதண்டம். 2. மனமொவ்வாத வீண்செலவு.

அவிசு-1. உப்பின்றிச் சமைத்த பச்சரிசிப் புற்கை. 2. சுத்தம். 3. நீர். 4. நைவேத்தியம். 'உப்பு மிளகு புளியொழித்தே யுருற்று மவிசு நிவேதித்து' (மச்சபு. நட்சத்திர. ௨0.) 5. வெண்ணெய். [ஹவிஸ்.]

அவிசுவாசம் — விசுவாசமின்மை. (மநு. கல: உசு.) [அவிஶ்வாஸ: அ - எதிர்மறை. விஶ்வாஸ - நம்பிக்கை, நன்றி.]

அவிசுவாசி—விசுவாசமில்லாதவன். [அவிஶ்வாஸிந்.]

அவிசேடம் — விசேடமல்லாதது, ஒரு தன்மையானது. 'சத்திருபமாய்க் காரியஞ் சுருக்கிக் காரணமான காலத்திற் காரிய காரணங்கள் அவிசேடங்களாய்த் தோன்றும்' (சி. சி. ௪: உஎ. ஞானப்.) [அவிஶேஷ அ - எதிர்மறை. விஶேஷ - வேறுபாடு.]

அவிஞ்சதை—அறியாமை.

அவிஞ்சன் — 1. அறியாமையுடையோன். 2. போதிக்கப்படாதவன். [அவிஜ்ஞ.]

அவிந்சை — அவித்தை. 'அவிஞ்சையின் இல்லை' (ஞானவா. நிருவாண. க.) [ஸவிஜ்ஞா: ஸ - எதிர்மறை. விஜ்ஞா - ஞானம்.]

அவிந்நாதம் — அறியப்படாதது. [ஸ விஜ்ஞாத: ஸ; விஜ்ஞாத - அறியப்பட்டது.]

அவிந்நாதார்த்தம் — அவிக்கியாதார்த்த மென்னுந் தோல்வித்தானம். 'பிரதிவாதியானவன் ஒரேதுவை மூன்றுதரஞ்சொல்லுகையிலும் சபையிலேயிருக்கிற பரீட்சித்துக்கள் அறுவாதிக்கையிலும் வாதியானவன் எதுவையறியேனென்றல்' (சி. சி. அளவை. கஅ. மறை.) 'பொருளினிதுவிளங்காதசொற்களை யெடுத்துக்கொண்டு பேசுதல்' (சி. சி. அளவை. கஅ. ஞாந.) வாதியானவன் தனக்கு வந்த தூஷணம் மறைத்தற்காகத் தெரியாத சத்தங்களைக்கொண்டு பேசுதல்' (சி. சி. அளவை. கஅ. நிரம்ப.) 'வாதியானவன் மூன்றுபிரகாரஞ்சொல்லியிருக்கையிலும் மத்தியஸ்தருக்கும் பிரதிவாதிக்கும் அர்த்தந்தெரியாத சத்தஞ்சொல்லுகை' (சி. சி. அளவை. கஅ. சிவாக்.) [ஸ; விஜ்ஞாத - அறியப்பட்ட அர்த்த - பொருள்.]

அவிந்நை — அஞ்ஞானம். 'நிரைபவத் தவிஞ்ஞையாகி' (ஞானவா. வைராக். கூஉ.) [ஸவிஜ்ஞா: ஸ - எதிர்மறை. விஜ்ஞா - ஞானம்.]

அவிட்டம் — இருபத்தேழுநட்சத்திரங்களுள் இருபத்துமூன்றாவதுநக்ஷத்திரம்.

அவிட்டுமான் — ஆருமநுவின்காலத்துச் சத்தவிருடிகளுள் ஒருவன். 'அவிட்டுமான் சீர்காத்தருளுத்தமன் மநுவத்திரி' (கூர்மபு. மநுவந். க௦.)

அவிடி—திரைச்சீலை. (பிங்க. கஉகச.)

அவிடியந்தியசூக்கம் — குருவின் இல்லாளைப்புணர்ந்த பாதகந் தீர்க்குமாறு செபிக்கப்படும் ஒரு மந்திரம். 'அவமில்புருடசூக்கத்தை யவிடியந்தியசூக்கத்தை - யிவராசையினெண்ணிற்குரவ னில்லாட் புணர்ந்த பாதகம்போம்' (சூத. எக்கி. பூ. சஉ: கரு) [ஹவிஷ்யஞ்சீய.]

அவிடியந்தீயம்—ஒரு வேதமந்திரம். (சூத. எக்கி. பூ. சஉ: கரு.)

அவிடியந்தீயம்—அவிடியந்தியம். (மநு. கக: உருக.) [ஹவிஷ்யஞ்சீய.]

அவித்தம்—1. அறியப்படாதது. 2. வறுமை. [ஸவித்தம்: ஸ.எதிர்மறை. வித்தம்- அறியப்பட்டது, திரவியம்.]

அவித்தல்—1. அடக்குதல். 'ஐந்தவித்தானாற்றல்' (வள். உரு.) 2. அவியச்செய்தல், வேகச்செய்தல். 'அறுத்தவித்தாரச் சமைத்தபிள்ளைக்குகந்தார்' (மறைசை. உ௦.) 3. அழித்தல், கெடுத்தல். 'ஒருமூன்றவித்தோன்' (சிலப். நாடு. கசுஅச.) 4. துடைத்தல். 'பொங்குபூஞ் சிலம்பிற் போர்த்த பூந்துகளவித்து' (சிந். சுரமஞ். எ௦.)

அவித்தியம்—1. அறியாமை. 2. மாயை. 3. பாதரசம்.

அவித்தியசம்—பாதரசம். [ஸவித்யஜ.]

அவித்தியமானம் — உள்ளதல்லாதது. இராதது. [ஸவித்யமாந: ஸ - எதிர்மறை. வித்யமாந - இருப்பது.]

அவித்தியாபஞ்சகவுரு — அபுத்திபூர்வமாகிய ஐவகைச்சிருட்டி; அவை: தமம், மோகம், மாமோகம், தாமிசிரம், அந்ததாமிசிரம் என்பன. 'அதிசயம் பயப்ப வபுத்திபூருவமா வவனிடைத் தமோமய சிருட்டி - பொதிதரத் தோற்றிற் றதுதம மோகம் புகலுமா மோகந்தா மிசிரம்' (சூத. சிவமான். க௦: உ.) 'அந்ததா மிசிர மெனவிவை நாலு மவித்தியா பஞ்சக வுருவாய் - உந்துரவிருக்கு மெனநலோ ருரைப்பர்' (சூத. சிவமான். க௦ங.)

அவித்தியா—அஞ்ஞானம். (இதே அவித்தையெனத்திரிந்தது.) 'பொல்லாவவித்தியா புரமொன்றமைத்தான்' (பிரபோத. அவித்தியாபுரச். ச.) [ஸவித்யா.]

அவித்தியை—1. அஞ்ஞானம். 'அநிர்வசநீயாவித்தியையோ' (சி. சி. வரலாறு. சிவாக்.) 2. அவித்தை.

அவித்துருமம்—இருப்பைமரம்.

அவித்துவையல்-பச்சடி. (பிங்க. ககஉரு.)

அவித்தை—1. அஞ்ஞானம். 2. அறியாமை. 3. ஆணவமலம். 'அவித்தைசிந்தத்தருங்கலையாதிமாயை' (சி. சி. உ: அச.) 4. பிரமத்திலே ஆரோபமாகத் தோன்றின மூலப்

பிரகிருதியென்னுஞ் சத்தியில் உண்டான இராசதகுணம். இதிலே பிரமப்பிரதிவிம்பமான சீவர்கள் தோற்றுவார்கள். 5. மாயை. [அவித்யா]

அவித்யமாநம் — உள்ளதல்லாதது. [அ - எதிர்மறை. வித்யமாந - இருப்பது.]

அவிததம்—மெய்ம்மை. [அவிதத: அ - எதிர்மறை. விதத - பொய்.]

அவிதல்—1. இறத்தல். 'பொய்க்கரி புகலும்புன்கணூர், குலங்களினவிந்தனர்' (இராமா. மிக். ருஅ.) 2. கெடுதல், அழிதல். 'அகல்விசும்புறையுந்தேவ ரொளியவிந் திருப்ப' (சிந். முத்தி. சடுரு.) 'அவியினும் வாழினுமென்' (வள். சஉ0.) 3. சூட்டினால் வெதும்பல். 4. தணிதல். 'குணகடற்றிரை பொடும் பொருதலதவியாதே' (சூளா. கல்யா. ருக.) 5. அன்னீர்கமலப் புண்படல். 'வாயவிந்தது' 6. யாதேனும் ஒருபொருள் நீர்விட்டபாத்திரத்திலே நீரினுள்ளாவது மேலாவது நெருப்பினால் ஆவியெழும்படி வேகுதல். 7. வருந்தல். 8. வேர்த்துப் புழுக்குதல்.

அவிதா—யாதேனும் ஓர் ஆபத்து அடைந்தவர் அதினின்றும் நீங்குதற்கு உதவிபெறும் பொருட்டு முறையிட்டுக்கூறும் ஒருசொல். இது 'துணைசெய் துணைசெய்' எனப் பொருள்படும். 'ஆவவெந்தாயென் றவிதாவிடு நம்மவர்' (திருவாசக. 5. 4.) [அவிதா.]

அவிநாநம் — கிரமமின்மை, நியமித்த விதியைவிட்டு விலகுதல். [அவிதாந: அ - எதிர்மறை. விதாநம் - விதி.]

அவிதாவிடல்—ஆபத்தில் உதவிவேண்டி முறையிட்டுக்கூறுதல். 'சாவமுன்னாட் டக்கன்வேள்வித்தகர்தின்று நஞ்சமஞ்சி - யாவவெந்தாயென்றவிதாவிடுநம்மவரவரே' (திருவா. திருச்சத. ச.)

அவிதி—1. கிரமமின்மை. 2. விதிக்கு விரோதம். [அவிதி: அ - எதிர்மறை. விதி - கட்டளை.]

அவிதூசம்—ஆட்டுப்பால். [அவிதூஸ: அவி - ஆடு. தூஸ - பால்.]

அவிநயக்கூத்து—நிருத்தக்கை தழுவாது பாட்டின்பொருளுக்குக் கைகாட்டி வல்லபஞ்செய்யும் பலவகைக் கூத்து. (சிலப். அரங்கே. கஉ. உரை.) இது சாந்திக்கூத்தின் நால்வகைகளுளொன்று. (திருவி. கான்மா. க0. உரை.)

அவிநயசாலை—நாடகசாலை.

அவிநயம்—1. அபிநயமாகிய நாடகாங்கம். 'தத்துவப்பெருநாடகசாலையுஞ்சமைத்த விநயக்காட்டி - யத்தலத்தெனையாட்டுவிப்பானும்' (மதுரைப் பதிற். கஉ.) 2. அவிநயர் செய்த ஒரு யாப்பிலக்கணநூல். 3. துராசாரம். 4. நற்பழக்கமின்மை. [அ - எதிர்மறை. விநய - நல்லொழுக்கம்.]

அவிநயர்—1. அகத்தியருடையமாணாக்கர் பன்னிருவருள் ஒருவர். (தொல். பொருள். பதிப். உ.) 2. கூத்தர். (சூ. நிகண். உ: கஅ.)

அவிநயனார்—அவிநயநூலாசிரியர்.

அவிநவம்—புதுமை. (உரி. நி.)

அவிநாசி—1. அழியாதது. 'அசமநந்தமவிநாசி' (கைவல். சந். கஅஎ.) 2. அழிவற்றவன். 'அவிநாசிகண்டாயண்டத்தான் கண்டாய்' (தேவார. திருவலஞ்சுழி. திருக்கொட்டையூர். எ. திருநா.) 3. கொங்குநாட்டுள்ள ஒரு சிவஸ்தலம். 'அவிநாசியெந்தை பெருமான்' (பெரியபு. வெள். க.)

அவிநாபாவம் — விட்டுநீங்காது உடனிகழுந்தன்மை. 'அவிநாபாவம், பேசுறுமேதுக்கொண்டு' (சி. சி. அளவை. உ.) [அவிநாபாவ: அ - எதிர்மறை. விநா - இல்லாமல். பாவ - இருத்தல்.]

அவிநாபூதம்—நீக்கமின்றியிருத்தல். (சி. சி. பாயிர. ௩. சிவாக்.) [அவிநாபூத.]

அவிநாபூதை — விட்டுப்பிரியாதிருக்கிறவள். ஈசுவராவிநாபூதைபானசத்தி' (சி. சி. பாயிர. உ. சிவாக்.) [அவிநாபூதா: அவிநா - விட்டுநீங்காமல். பூதா - இருக்கிறவள்.]

அவிநிகமம் — தருக்கநூலுக்குத்தகாத நிகமநம். [அவிநிகம: அ - எதிர்மறை. வி-விசேஷம். நிகம - நிச்சயம்.]

அவிநீதம்—1. தீய ஒழுக்கம். 2. மரியாதையின்மை.

அவிநீதன்—நல்லொழுக்கம்பயிற்றி வளர்க்கப்படாதவன். [அ - எதிர்மறை. விநீத - சன்மார்க்கன்.]

அவிநீதை—கற்பில்லாதவள். [அவிநீதா: அ - எதிர்மறை. விநீதா - சன்மார்க்கமுடையவள்.]

அவிப்பலி—இன்னது செய்யேனுயின், இன்னதுசெய்வேன் என வஞ்சினங்கூறித் தன்னுயிரை அக்கினிக்குப் பலியாகக்கொடுத்தல். இது: வாகைத்திணையின் துறைகளுள் ஒன்று. (தொல். பொருள். புறத். எ௬.)

அவிப்பாகம்—அவியின்பங்கு, தேவருணவின்பங்கு. 'ஆவா திருமாலவிப்பாகங்கொண்டன்று - சாவா திருந்தானென்றுந்தீபற' (திருவாச. திருவுந். ௬.)

அவிப்பிணம்—சுவரிஉப்பு.

அவிபட்சம்—1. எதிரியில்லாதது. 2. விபட்சமல்லாதது. [அவிபக்ஷ: அ - எதிர்மறை. விபக்ஷ - விரோதபட்சம்.]

அவிபடம்—ஆட்டுமயிர்க்கம்பளம். [அவி படா: அவி - ஆடு. படா - சீலை.]

அவிபத்தர்—1. பகுக்கப்படாதபொருட்குரியவர். (மிரு. சங். ௧௧௬.) 2. பங்காளிகள். [அவிபக்த.]

அவிபவநம் — மேற்கொள்ளுதல், விசயமடைதல். [அவிபவந.]

அவிபாகம்—1. அசீர்ணம். 2. கூறுக்கப்படாத தாயம். 3. கூறுக்கப்படாதது. 'மேவ வெங்கும் வியாபித்த வெளி கடாகாசாதி விபாகத்தாலும், பாவவவிபாகத்தாலுந் தோன்றுமெப்படி' (சூத. எக்கி. உத். ௬: ௧௧.) 4. முதிர்வடையாமை. 5. முற்பிறப்பிற்செய்த வினைகளின்பயனை அநுபவியாமை. [1, 4, 5. அவிபாக: அ - எதிர்மறை. விபாக - முதிர்தல். 2, 3. அவிபாக: அ - எதிர்மறை. விபாக - பிரிவு.]

அவிபாச்சியம்—பிரிக்கத்தகாதது. [அவிபாஜ்ய: அ - எதிர்மறை. விபாஜ்யம் - பிரிக்கக்கூடியது.]

அவிபாடிதம்—அதிகம்பிளத்தல். (சீவரட். ௩௧௬.)

அவிபாடிதரோகம் — வாதபித்தசிலேஷ்மங்களினுல் ஆண்குறியினது சருமத்தையெல்லாம் மிகவுந் தடிக்கச்செய்து பின்பு அத்தடிப்பைப் பிளப்பிக்கும் ஒரு ரோகம். (சீவரட். ௩௧௬.) [அவி - அதிகம். பாடிதம் - பிளத்தல்.]

அவிபாவநம் — பிரத்தியட்சமாகாமை. [அவிபாவந: அ-எதிர்மறை. விபாவநம்-பிரத்தியட்சம்.]

அவிமுத்த—பிரதிட்டாகலையில் ஆகாயத்திலிருக்கும் எட்டுப்புவநங்களிலொன்று. (சி-லி. கிரி. உக. தாற்பரி.) [அவிமுக்த.]

அவிமுத்தம்—1. காசிநகரம். 'குன்றிரண்டு சுமந்தொசியுங் கொடியன்னு ரவிமுத்தங் குடிகொண் டாகம்-ஒன்றிரண்டுவடிவானுர்' (குமர. காசிக்கலம். ௫௫.) 2. நீக்கிவிடப்படாதது. [அவிமுக்த: அ - எதிர்மறை. விமுக்தம் - விடப்பட்டது.]

அவிமுத்தி—காசியை அடுத்திருக்கும் ஒரு தலம்.

அவிமுத்தேசன் — காசியிலிருக்கும் விசுவநாதசுவாமி. [அவிமுக்தேச்வர.]

அவிமுத்தேசுவரன்—காசியிலிருக்கும்விசுவநாதசுவாமி. [அவிமுக்தேச்வர: அவிமுக்தம் - காசி. ஈச்வர - கடவுள்.]

அவியம்—வடிவமில்லாமை, பொய்வடிவம். (வேதா. சூ. ௩௨அ. உரை.)

அவியல் — 1. அவிக்கப்பட்ட உணவு. 'அணில்வாற்குரலசெந்தினையினவிய லன்ன' (கூர்மபு. கண்ணன்மண. ௧௨௫.) 2. அவிதல். 3. உடம்பிலே வாய்முதலிய உறுப்புக்களிலே வெப்பினுல் வரும் புண். 4. புழுக்கம். 5. வெப்பம். 6. பாகஞ்செய்கை. (பிங்.) 7. கறி வகையில் ஒன்று.

அவியாகிருதம் — பிரிவின்றிநிற்பது. [அ; வ்யாக்ருத.]

அவியாத்தம்—வியாபியாதிருப்பது. [அ; வ்யாப்த.]

அவியாத்தி—அவ்வியாத்திதோஷம். [அ; வ்யாப்தி.]

அவியாப்பியம் — முழுதிலும் வியாபித்திருப்பது. [அவ்யாப்ய.]

அவியோகம்—கூடுதல். [அ - எதிர்மறை. வியோகம் - கூடாமை.]

அவிர்—1-3. அவிரென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. பிரகாசம். 'அவிர்தருதிருமுகமாகும்' (சூத. எக்கி. பூ. ௯: ௯.) 5. பீறல். 6. புல்லு.

அவிர்தல் — 1. ஒளிசெய்தல். 'அவிர்பூணொளியாமல்' (நைடத. அன்னத்தைத்தூது. ௭௮.) 2. பீறல்.

அவிர்ப்பாகம்—அவிப்பாகம், தேவருணவின் பங்கு. 'பாமனுருக்கடவுளவிர்ப்பாகங்கல்கே' (தைல. பாயி. ௬௪.)

அவிர்ப்புக்கு—1. அக்கினி. 2. க்ஷத்திரிய பிதிர். (மநு. ௩: ௧௯௭.) [ஹவிர்-புஜ்]

அவிர்யஞ்ஞம்—ஒருவகை யாகம்; அது: ஆதேயம், அக்கிகோத்திரம், தரிசனம், பௌர்ணமி, மாசியம், சாதுர்மாசியம், பசுபந்தம், சௌத்ராமணி என எட்டு.

அவிரதம்—ஓயாமல், என்றும். (உரி. நி.)

அவிரளம்—நெகிழ்ச்சியின்மை. 'அவிரளசிவைக்கியப்பிராப்தி' (வி - ணி. ௨௯௦.) [அவிரள: அ - எதிர்மறை. விரள - நெகிழ்ச்சி.]

அவிரி—லேிப்பூண்டு. அவுரி என்பதன் மரூஉ.

அவிருகம்—அதிவிடயம். (மலை.)

அவிருத்தம்—விரோதமில்லாதது. 'அவிருத்தமான சின்மாத்திரத்தை' (சூத. எக்கி. உத். ௫: ௧௭.) [அ - எதிர்மறை. விருத்த - விரோதமுள்ளது.]

அவிரேசநம்—மலவரட்சி. [அவிரேசந: அ - எதிர்மறை. விரேசநம் - கழிதல்.]

அவிரோதச்சிலேடை—சிலேடையலங்காரபேதங்களுள் ஒன்று. அது: முன்னர்க்கொண்ட சிலேடைச்சொற்பொருள்களோடு பின்வரும் சிலேடைச்சொற்பொருள்கள் விரோதமுறாமல் இயையத் தொடுப்பது. 'சோதி பிரவிகாத்தா விரவொழிக்கும் - மாதிடத்தான் மன்மதனை மாறழிக்கும் - மீதாம் - அகமதிதோற்றிக்குமுதமளிக்கும் - தகதனிருதிக்கோன்றன்' (தண்டி. ௭௬) [அவிரோத; ச்லேஷா.]

அவிரோதம்—1. சம்மதம். 'சிவசாத்திரத்துக்கவிரோதாம்சத்தால்' (பௌட். ௭: ௭அ.) 2. தடையின்மை. 3. மாறின்மை. 'மறையவிரோதமும் வகுப்பங் கேண்மினோ' (சூத. எக்கி. பூ. ௩௯. ௧.) [அவிரோத.]

அவிரோதவுந்தியார்— சாந்தலிங்கசுவாமிகள் செய்த நூல்களிலொன்று.

அவிலம்பிதம்—விரைவு.

அவிவாதம்—இணக்கம், சம்மதம், மாறுபாடின்மை. [அ - எதிர்மறை. விவாத - மாறுபாடு.]

அவிவு—ஒழிவு. 'கந்தத்தவிவே முத்தி' (பெரியபு. திருஞான. ௯௧௬.)

அவிவேகம்—விவேகமின்மை. 'என்னுமவிவேகவிடன் வாழ்மனையாம்' (ஞானவா. வைராக். ௮௭.) [அவிவேக: அ - எதிர்மறை. விவேக - புத்தி.]

அவிவேகி—விவேகமில்லாத - வன் - வள். 'அவிவேகிக்குப்பாரஞ்சாத்திரம்' (ஞானவா. வைராக். ௬௮.) [அவிவேகிந்: அ - எதிர்மறை. விவேகிந் - விவேகமுடையவன்.]

அவிழ்—1-3. அவிழென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 'தளையவிழ்பாடலத்தின்கவரிணர்' (நைடத. அன்னத்தைக்கண். ௩௩.) 4. பருக்கை. 'ஈசனுதியர்க்களித்தவுணவிழொன்றற்கு' (தணிகை. அகத். ௧௧௯.) 5. சோறு. 'வாலவிழ்வல்சி' (மலைபடு. 183.) [இஃது: கவி-கவிழ் என வந்தாற்போல அவியென்னும் வினையடியாற் பிறந்ததுபோலும்.]

அவிழ்கேசி—விரிதலை-யன்-யள். 'மோராரவமாடையிலிடுமவிழ்கேசி' (செகரா. யாத்தி. ௨௧.) [கேஶ - மயிர்.]

அவிழ்த்தல்—1. கட்டுநீக்கல். 'பசுநிரையையவிழ்க்கின்றனர்' (கந்தபு. யாக. ௭௧.) 2. மயக்கிக்கிடந்தபொருளை விளக்கிக்காட்டுதல். 'கொடியவிழ்த்தல்' 3. மலரச்செய்தல். 'புல்லிதழ்த்தாமரைப் புதுமுகையவிழ்ப்ப' (கல்லாட. ௫௩.)

அவிழ்தம் — மருந்து. 'அற்பவவிழ்தமும் பலிப்பதாகும்' (தண்டலை. எ௫.) [இஃது, 'ஔஷதம்' என்பதின் சிதைவு.]

அவிழ்தல் — 1. உதிர்தல். 'அவிழ்பன்ன மூணுய்' (ஞானவா. சுரகு. ௩௫.) 2. குலைதல். 'கூந்தறேமென்மலரோடவிழ' (கூர்மபு. கண்ணனவ. சுகூ.) 3. சொட்டுதல். 'மட்டவிழலங்கன்மறவோனுடன்' (பாரத. மணிமா. ௩அ.) 4. நெகிழ்தல். 'சிந்தையவிழ்ந் தவிழ்ந்து' (தாயு. பராபர. எ௫.) 5. பிரிவு. 'அருட்கண்ணுகிச் - சமமுமுடன் கலப்புமவிழ்தலும் யாங்காணத் தண்ணருடந்து' (தாயு. ஆகாரபு. ௫.) 6. மலர்தல். 'தோடவிழ்ந்ததாமரை' (நைடத. கைக்கி. கசூ.)

அவிழதம்—அவிழ்ந்தபூ. (பதிற்றுப்பத். ௫உ.)

அவிளம்பம் — விரைவு. [சுவியம்ப: சு - எதிர்மறை. வியம்ப - தாமதம்.]

அவிளம்பிதம்—விரைவு. [சுவியம்பித: சு; யம்பித - மெல்ல.]

அவினி-அபின். 'மதுவினுள்ளு மவினியாதியானபன் மருந்தினும்' (பிரபோத. 26. 62.)

அவீசி—1. இராசாதிராசநரகம். 'கிருமிசெறியவீசியிறை யெவற்றினுக்குங் கிளக்குங்கால்' (சிவதரு. சுவர்க்கநரகவி. கஉஎ.) 2. இருபத்தெட்டாவதாகிய மாயையென்னும் நரகத்திலுள்ள நாயகநரகங்கள் ஐந்தனுள் ஒன்று. 'அறக்கொடிய தீவிரமே யவீசியென வறைந்தனவுஞ் - செறித்ததிக வொருநூற்று நாற்பதென' (சுவர்க்கநரகவி. கஉசூ.) 3. திரையில்லாதது. [சுவீசி: சு; வீசி - திரை.]

அவுசநசம் — உசநசுமுனிவராற் செய்யப்பட்ட ஓர் உபபுராணம். [ஔஶநஸ.]

அவுசநம் — அவுசநசம். 'மானவஞ்சீர் வாய்ந்த-வவுசநம்' (கூர்மபு. இந்திரத். க௦.)

அவுசுப்பம்—தொடரி.

அவுசுமாபகவாதரோகம்—ஒருவகை வாதரோகம். (சீவரட். கசூஅ.)

அவுடதகந்தசுரம் — ஒருவகை அபிஷங்க சுரம்; அஃது: இரசம், கந்தகம், பாஷாணம், சேங்கொட்டை முதலியவைகளின் வேகத்தாற் பிறப்பது. (சீவரட். ௩உ.)

அவுடதம் — ஔடதம். [ஔஷத]

அவுணர் — அவுணர். 'அவுண்மகசேனை' (திருப்பு. ௨௫௩.)

அவுணன் — அசுரன். 'அன்றிலம் பேர்பெற் றுள்ள வவுணனத் தன்மை கண்டான்' (கந்தபு. கிரவுஞ். ௧.)

அவுத்திரம்—ஔத்திரிதீக்ஷை. 'அவுத்திராதியநேகமுள' (சி. சி. அ௱. ௩.)

அவுத்திரி—ஔத்திரிதீக்ஷை. 'அவுத்திரிதான் வியன்கிரியை ஞானமென விருபாலாய்' (காஞ்சிப்பு. தழுவ. ௫௩.)

அவுதசியம்—பசுவின்பால். 'மாருச்சிநேகபலநேயமவுதசியம்' (தைல. தைலவ. ௫௩.) [ஔயஸ்ய - பால். ஊயஸ் - முலைமடி.]

அவுதா—யானைமேற்றவிசு.

அவுபசர்க்கிகரோகம்—கண்களில் வரும் ஒருவகைரோகம்; அது: துர்ப்பலகாலத்திற் சூரியவிம்ப முதலிய தீட்சண ஒளிகளைத் திரந்திரம் உற்றுப்பார்ப்பதனுல் வாத பித்த கபங்கள் கண்களில் வியாபிக்கும்போது பிறந்து அவ்விழிகளின் ஒளியைக் குறைத்துப் பார்வையில்லாததுபோலச் செய்யும்; அல்லது வைடூரியத்திற்சொலிக்கும் பிறங்களைப்போலத் தோற்றுவிக்கும். (சீவரட். உ௫எ.) [இது, மற்றேரொளியினுற் பிறந்து நேத்திர ஒளியைக் கெடுத்தலால் வந்த பெயர். [ஔபஸர்கிக.]

அவுபலபாஷாணம்— விளைவுப்பாஷாணம் முப்பத்திரண்டினென்று (மூ. அ.)

அவுபாசநம்—ஔபாசநம். விவாககாலத்திலே ஓமகுண்டத்தினின்றும் எடுத்த அக்கினியை அவியாது வளர்த்துவருவதற்குப் பிராமணவருணத்தாராற் செய்யப்படும் ஒருகிரியை. (கூர்மபு. வருணச். உ௩. உரை.) 'வேற்றேர் புலத்தி னெய்தினுந்தன் மனைவி வீந்தா ளானுலும் - போற்றுமவுபாசநமொழிதல் புலவோர்புரியார்' (கூர்மபு. வருணச். உ௪.)

அவுரி — நீலிச்செடி. 'இந்தடிதராமுளி யிலங்கவுரிசயையாயில்' (தைல. தைலவ. எ௨.)

அவுழ்தம் — மருந்து. 'மெய்யினேய்மாற் றவுழ்தம்' (தாயு. பைங்கி. சஎ.)

அவுஷதம்—மருந்து. [ஔஷதம். 'அவு' ஔகாரத்தின் போலி. 'ழ' ஷ. என்பதனோடொத்த உச்சரிப்பினையுடைய தமிழெழுத்து.]

அவுஷதி—1. ஔஷதிரோய். 2. பித்தாதிக்கம்.

அவேளி—நரிவிளாமரம். (இராசவைத்.)

அவேட்சை—1. உடம்பாடு. 2. கவசம். 3. பார்த்தல். [அவேக்ஷா: அவ; ஈக்ஷ-பார்த்தல்.]

அவேட்டிதம்—சுற்றிக்கொள்ளப்படாதது, மூடப்படாதது. (பௌட். எ: உகஇ. உரை.) [அ; வெஷ்டித:]

அவேத்தியம்—1. அறியப்படாதது, இரகசியமானது. 2. பசுக்கன்று. [அவேத்ய: அ; வேத்ய - அறியப்படத்தக்கது, நோக்கப்படுத்தத்தக்கது.]

அவேத்தியன்—அறியப்படாதோன். 'சர்வவியாபியாகிய சிவன் மாயாகரணங்களினாலே வேத்தியனும் சர்வான்மா அவேத்தியனுமல்லாமல் சச்சித் சுவரூபனாகிநிற்பன்' (சி. சி. சு: சிவாக்.) [அவேத்ய: அ - எதிர்மறை. வேத்ய - அறியப்படுவோன்.]

அவேதம்—மறதி, ஞாபகத்தில் வாராமை. [அவேத: அ; வேத - அறிதல்.]

அவை—1. அஃறிணைப்பன்மையில்வரும் ஒரு சேய்மைச்சுட்டுப்பெயர். 'அரசர்க் கடைவே யவையின்க ணவையனைத்து - முரசக் கொடியோ னயமாக மொழிந்த போது' (பாரத. வெளி. உரு.) 2. அஃறிணைப்பொருள். 'அவையவராய்' (சிவப்பிர. உ: க.) 3-5. அவையென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 6. கற்றவர். (சூ. நிகண். உ: அ.) 7. கூட்டம் (பிங்க. உஉஙரு.) 8. சபாமண்டபம். 'வேரங்கின்டுதமரியத் தவைக்கணேச்சி' (கந்தபு. நகரழி. சு.) 9. சபை. 'அரசவைக்களத்துளேகினர்' (கந்தபு. பாநுகோ. வதை. கருக.) 10. நாடகவரங்கு. 'கூத்தாட்டவை' (குறள். 332)

அவைகரணம்—1. தோண்டல். 2. மூடல்.

அவைத்தல் — 1. கையினற் குத்துதல். 'ஆவியயர்த்தன தங்கையவைத்தலின்' (சேதுபு. தேவிபு. சுக.) 2. நெரித்தல். 'இறைவிரலாலவைத்துகந்தவீசா'. (தேவா. 1161, 11) 3. நென் முதலிய குற்றல். 'அறையுரற் குழிகொளேன லவைக்குமொய்க் கோட்டுலக்கை' (சூத. எக்கி. பூ. உ௦: ஙு.) 4. அவித்தல். (பிங்.)

அவைதிகசாத்திரத்திரயம்—வேதவிரோதமான மூன்று சாத்திரங்கள்; அவை: சார்வாகம், சைநம், பௌத்தம் என்பன. (த. நி. போ. கங.)

அவைதிகம்—வேதசம்பந்தப்படாதது.

அவைப்பரிசாரம்—சபைவணக்கம். (சீவக. 4. உரை.)

அவைப்பு — 1. குற்றப்பட்ட அரிசி. 'கவைக்கதிர்வரகினவைப்புறுவாக்கல்' (புறநா. உகரு.) 2. குற்றப்பட்டது. 'அவைப்புமாணரிசியமலைவெண்சோறு' (சிறுபா. கஙச.)

அவையடக்கம்—1. ஒருவர் தாஞ்செய்த நூலிலே குற்றம் ஏற்றுதபடி கற்றோரை வழிபட்டடக்குதல். 'அவையகத்தாரெல்லார்க்கும் வழிபடுகிளவி சொல்லுதல் அவையடக்கமெனப்பெறும்' (சி. சி. பாயிர. ச. மறை.) 2. சபையார்முன் அடங்கிநிற்றல்.

அவையடக்கு — அவையடக்கம். 'அவையடக்கியலேயரிறபத்தெரியின்' (தொல். பொருள். சஉரு.)

அவையத்தார் — 1. பண்டிதசபையோர். 2. நியாயம்வழங்குஞ் சபையோர். (தொல். பொருள். 76. உரை.)

அவையம்—1. அபயம். 'அவையநின்னவயமென்ன' (இராமா. வருண. சுஎ.) 2. நியாயம் வழங்குஞ் சபையார். 'சிறந்தகொள்கையறங்கூறவையமும்' (மதுரைக். சஙஉ.) 3. சபாமண்டபம். 'ஆறுமாமுகவள்ளல்வாய்மையிகழ்ந்துளானவையத்தைமுன்-னீறுசெய்து' (கந்தபு. சதமுக. உக.) 4. சபை. 'தருக்குறுமவையங்காணியபெறுது' (கந்தபு. சூரனர. உ௦.) 5. பண்டிதர்கூட்டம்.

அவையர்—சபையிலுள்ளார். 'அன்னவன் கருத்துக் கேற்ப வவையரு மனைய ரானர்' (திருவி. இசைவாது. உஉ.)

அவையல்—1. அவல். 2. குற்றலரிசி. 'ஐந்திணையரிசியவையலன்ன' (பொருநரா. கசு.) 3. திரட்சி.

அவையல்கிளவி—அவையின்கண் உரைக்கத்தகாதசொல். 'அவையல்கிளவி மறைத்தனர்கிளத்தல்' (தொல். சொல். ௪௪௨.)

அவையறிதல் — சபையினதியல்பை அறிதல்; அது: மிகுதி ஒப்பு தாழ்வு என்னும் மூவகையில் எத்தன்மைத்தெனத் தன்னொடு தூக்கியறிதல். 'அவையறிந் தாராய்ந்து' (வள். ௭௧௧.)

அவையாவரிசி—கொழியலரிசி. 'அவையாவரிசி யங்களித் துழவை' (பெரும்பா. ௨௭௫.)

அவையிற்றின் — அவற்றின். 'அவையிற்றின்மேலுமறைவர்' (சி. சி. அளவை. ௧.) [இற்று - ஒரு சாரியை.]

அவைராக்கியம் — வைராக்கியமின்மை. (த. நி. போ. ௩௦௦.) [ஸ்வைராக்ய.]

அழக்கு—ஆழாக்கு. 'அருந்தழக் - கவிக்காச்சியமுப்பும் புளிப்பும்' (தைல. தைலவ. ௮௪.)

அழக்குடம் — பிணக்குடம். (தொல். எழுத். 354. உரை.)

அழக்கொடி—பேய்ப்பெண். 'அழக்கொடியட்டான்' (திவ். திருவாய். 2. 10. 5.)

அழகர்—1. அழகுடையவர். 2. வெள்ளெருக்கு (மலை.)

அழகர்மலை—1. சுப்பிரமணியர்தலம் ஆறினொன்று. 2. விட்டுணுதலங்கள் நூற்றெட்டினுளொன்று.

அழகவேதம்—அதிவிடயம். (மலை.)

அழகன் — அழகுடையவன். (கம்பரா. மூலபல. 162.)

அழகி—அழகுடையவள். 'அழகி கூத்தாடுகின்றாள்' (சிந். பதுமை. ௮௧.)

அழகிது — நன்றாயிருந்தது. நோற்றுத் திரிந்தவா றழகிதாமே' (சி. சி. பர. சௌத். மறு. ௧௦.)

அழகிய-அழகுடைய. 'நீண்டழகிய' (சிந். ௧௧௧. ௧௧௫.)

அழகியர்—அழகியார். 'ஆடுமாறு வல்லாரவரேயழகியரே' (தேவார. திருப்பனையூர். ௧. ௬ந்.)

அழகியவாணன்—ஒருவகை நெல்.

அழகியன் — அழகியான். (திருவாசக. 17. 3.)

அழகியார் — அழகையுடையவர். 'பரிமேலழகியாரடைவுறவிரிப்பார்' (திருவி. நரிபரி. ௧௦௮.)

அழகியான் — அழகுடையவன். (திவ். இயற்பா. நான்மு. 22.)

அழகு—1. அளவு நிறம் முதலிய குணங்களினால் கண்ணுக்கு அல்லது மனத்துக்கு இனிதாகத்தோன்றுந்தன்மை. 'அழகெனுமதுவுமோ ரழகுபெற்றதே' (இராமா. மிதிலை. ௩௪.) 2. ஒழுங்கு. 3. சருக்கரை. 4. தக்கசெயல். 'சூதைக்கருதிமறைவிருந்துதொடுத்ததழகோசொல்லாயே' (நல். பார. இராமன்படை. ௭௬.) 5. நூலின் இனியதன்மை. 'சுருங்கச்சொல்லல் விளங்கவைத்தல்-நவின்றோர்க்கினிமை நன்மொழிபுணர்த்தல்-ஓசையுடைமை ஆழமுடைத்தாதன் - முறையின் வைப்பே யுலகமலையாமை - விழுமியதுபயத்தல் விளங்குதாரணத்த - தாகுதனூலிற் கழகெனும்பத்தே' (நன். பொதுப்பா. ௧௩.) 6. பதினாறுபேற்றினொன்று. 7. சுகம் (பிங்). 8. சிறப்பு. (திருநூற். 9.)

அழகுகாட்டுதல்—1. உடை முதலியவற்றாலுயசிறப்பினைக் காண்பித்தல். 2. சரசஞ்செய்தல். 3. அங்கசேட்டைகளாற் பரிகசித்தல்.

அழகுகாமாலை—காமாலைவகைகள் பதின்மூன்றனுள் ஒன்று; அது: சரீரம் வாட்டமில்லாமல் வெப்பத்துடன் மினுமினுத்தல், கால்கைகள் அசதி, புருவம், கண், மூத்திரம் இவைகள் மஞ்சணிறமாதல் முதலிய குணங்களை உண்டாக்கும். (சீவரட். ௧௩ ௬.)

அழகுசென்றேறுதல் — விளையாட்டுக்காகச் சாரிவருதல். (ஈடு. 7. 3. 1.)

அழகுதுரைப்பெண்—இந்திரபாஷாணம். (மூ. அ.)

அழகுதேமல்—அழகாகத் தோன்றும் ஒருவகைத் தேமல், அழகுத்தேமல்.

அழகுவனப்பு — செய்யுள்வனப்பெட்டினொன்று; அது: செய்யுட்சொல்லாகிய திரிசொற்களினாலோசைபெறப்பாடுவது.

அழகோலக்கம் — தன்னழகுதோற்றக் கொலுவிருக்கை. (திவ். இயற்பா. திருவிருத். 13 வ்யா. பக். 90.)

அழத்தியன்—பெருங்காயம். (மூ. அ.)

அழம்—பிணம். 'அழத்தினைவேட்டுனும்' (தணிகை. களவு. ௱௪௭.)

அழல் — 1-3. அழலென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. அழுதல். 'எழுந்தோவிட்டழல்கேட்டு' (சேதுபு. அறும. ௩௨.) 5. எரிவு. 6. எருக்கு. (மூ. அ.) 7. கள்ளி. (மூ. அ.) 8. கார்த்திகை நட்சத்திரம். 'அழலெனுமீன்வர்க்கத்தறுவரும்' (கந்தபு. திருவவ. ௧௨௬.) 9. கேட்டை நட்சத்திரம். (பிங்க. ௨௫௬.) 10. கொடிவேலி. (மலை.) 11. கொதிப்பு. 'சினக்காமன்வாளியு-மழல் பிரிந்தன' (இராமா. நகர்நீ. ௨0௬.) 12. கோபம். 13. செவ்வாய். (பிங்.) 14. நஞ்சு. 'அரவின்சிற்றத்தாரழல்குளிக்குற்றார்' (சிர். காந்த. ௨௫௪.) 15. நரகம். 'அழனம்மைநீக்குவிக்கும்' (தேவா. 1225. 4.) 16. நெருப்பு. 'அலையஞ்சிலைவேளாகமழல்பட' (கந்தபு. காமத. ௯0.) 17. வெப்பம். 'படுமழனீக்க' (கல்லாட. ௧அ.) 18. வேகம். 'பன்மருந்தழலும்' (தைல. தைலவ. ௧௨௩.) 19. தீக்கொழுந்து. 'தீயழறுவைப்ப' (பரிபா. 5. 3.) 20. உறைப்பு. 'அழற்காய்' (தைலவ. தைல. 54.)

அழல்வண்ணன்—சிவன். 'அத்தனிடமழல்வண்ணனிடம்' (தேவார. திருக்கச்சி யேகத. ௫. ௬௧.)

அழல்விதை — நேர்வாளவித்து. (மலை.)

அழல்விரியன் — எரிவிரியன்பாம்பு.

அழல்விரை—நேர்வாளம்.

அழல்விழித்தல்—கோபத்தோடு நோக்குதல். (திருவாலவா. 14. 5.)

அழலம்பு—தீம்பூமரம். 'அழலம்பூ நறவார்ந்து' (சீவக. 939.)

அழலல்—அழலுதல்.

அழலவன்—1. அக்கினிதேவன். 2. சூரியன். (பிங்க. ௨௪0.) 3. செவ்வாய். (பிங்க. ௨௩0.)

அழலாடி—சிவன். (சூ. நிகண். ௧: அ.)

அழலி—நெருப்பு. (பிங்.)

அழலிக்கை — மனமெரிதல், பொறுமை.

அழலுதல் — 1. எரிதல். 'இரவிகாந்தமழல்வதென்னவாறெனு' (நைடத. கைக்கி. ௧௭.) 2. கோபித்தல். 'அவன்வந்திருபகராதமுன திவேகமொடழலா' (பாரத. மணிமா. ௧௬.) 3. வெம்மைசெய்தல். 'அலமுங்குளிர்வுறவழலவீசினன்' (பாரத. மணிமா. ௬௧.) 4. பிரகாசித்தல். 'மணிவிளக்கழலும்பாயலுள்' (கம்பரா. கடிமணப். 68.) 5. காந்துதல். (புறநா. 25. 10. உரை.) 6. பொறாமைகொள்ளுதல். [அழல் என்னும் பகுதி உகரச்சாரியைபெற்றது.]

அழலூட்டுதல் — தீயுண்ணச்செய்தல். (தேவா. 445. 8.)

அழலேந்தி—சிவன். (சேந். திவா. ௧: ௧.) [அழல் - அக்கினி. ஏந்தி - தரித்தவன்.]

அழலை — 1. தொண்டைக்கரகரப்பு. 2. ஆயாசம்.

அழலோம்பல் – அக்கினிகாரியஞ்செய்தல். 'பொறியழலோம்பல் பூசையில்' (சைவச. பொது. ௩௨௫.) [அழல் - அக்கினி. ஓம்பல் - காத்தல்.]

அழலோன் — 1. அக்கினிதேவன். 'அஞ்சியந்தவழலோனு மப்பொழுதொ ரந்தணாளன் வடிவாகியே' (பாரத. இராய. ௫௭.) 2. சூரியன். 'பலிக்கதிரல்லீயழலோய்' (கந்தபு. ஆற்று. ௨௪.) 3. செவ்வாய். (சூ. நிகண். ௧: ௬0.)

அழற்கடவுள் – அக்கினிதேவன். 'அந்நாளினழற்கடவுள்கரியாக' (கந்தபு. காமத. ௧0௬.)

அழற்கண்ணன்—1. உருத்திரன். 2. சிவன். [அழல் - நெருப்பு. கண்ணன் - கண்ணுள்ளவன்.]

அழற்கண்வந்தோன்—1. சுப்பிரமணியன். 2. வீரபத்திரன். (சூ. நிகண். ௧: ௨௨.)

அழற்கதிர் — சூரியன். 'வேலையழற்கதிர் படிந்தவியன்கங்குல்' (பெரியபு. திருஞா. அ.) [அழல் - வெப்பம். கதிர் - கிரணம்.]

அழற்கருமம்—அக்கினிகாரியம். 'இல்வாழ்வுற்றோர்தரும மழற்கருமமதிதிபூசை' (கூர்மபு. வருணச். ௧௧.)

அழற்காய்—மிளகு. 'தோகைவிளங்கழற்காய்' (தைல. தைலவ. ௫௪.)

அழற்சட்டம் — கார்த்திகை. (புறநா. 229. 1.)

அழற்சந்துதல்-வேகமானநாற்றம்வீசுதல்.

அழற்சி—1. அழுக்காறு. 2. உறைப்பு. 'புளிப்புக்கைப்பழற்சியுப்பு' (ஞானவா.

விரதகு. கரு.) 3. எரிதல். 'நெற்றியங் கண்ணும் வெய்ய வலக்கணு மழற்சிசீங்கா - துற்றிடுமென்றால்' (கூர்மபு. கண்ணனவ. கஉச.) 4. கோபம். 'யாண்டுநேரெல்லையாக வவன்றிறத்தழற்சியின்மை - வேண்டுவ லென்றுசொன்னான்' (சிங். நாம. ௩௬௪.) 5. கால்நடைகளுக்குச் சுரமுண்டாக்கும் ஒரு நோய்.

அழற்பால் — எருக்கஞ்செடி. [அழல் - அழற்சி.]

அழற்பித்தம்—ஒருவகைப் பித்தநோய்.

அழற்பிரபை—ஏழ்நரகவட்டத்தொன்று; அது: தீநரகு.

அழற்புற்று — ஒருவகைப் புற்றுரோகம்; அது: வெள்விழியிற் காந்தலுடன் விம்மலான தசையையுண்டாக்கும். (சீவரட். உ௬௬.)

அழற்றடம் — தீக்காய்கலம். 'அழற்றடம் புரையு மருஞ்சுரம்' (திருக்கோ. 202. கொளு.)

அழற்றி—அழலச்செய்யுமது.

அழற்று-1-3. அழற்றென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அழற்றுதல் — 1. அழலச்செய்தல். 'அழற்றியபல்கதிராதபத்திரம்' (கந்தபு. திருப்பர. ௬.) 2. சுடுதல்.

அழறு—சேறு. 'அழறலர் தாமரை' (திவ். இயற். திருவிருத். 58.)

அழன்—1. பிணம். 'அத்தன்மிசை காட்டுறை யழன்பணியை யேற்றி' (சேதுபு. காசிப. கடு.) 2. பேய். (பிங்.)

அழனம் — 1. நெருப்பு. (பிங்க. ௩௧௦௧.) 2. பிணம். (பிங்.) 3. வெம்மை. (பிங்.)

அழனாகம்—ஒருவகை விடப்பாம்பு.

அழாக்கு — ஆழாக்கென்னும் அளவு. 'வீரியமழாக்குடற்பித்தமுழக்கு' (தணிகை. அகத்தி ௩௦அ.) ['ஆழாக்கு' 'அழாக்கு' எனக் குறுகிகின்றது.]

அழாந்தை—அழானுக்குத்தந்தை. (தொல். எழுத். 348. உரை.)

அழால் — அழுதல். 'அழான்மறந்த புன்றலைச்சிறார்' (புறநா. ௪௬.) [அழு; ஆல்.]

அழி-1-3. அழியென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. அழிவு. 'அழிவந்தசெய்யினும்' (வள். ௮௦௭.) 5. இரக்கம். 'அழிவரப்பாடிவருநரும்' (புறநா. கடுஅ.) 6. வைக்கோல். 'உழுதநோன் பகடழிதின்றாங்கு' (புறநா. கஉரு.) [4, 5 பெயர்ப்பொருளைத்தரும்; இவை-முதனிலைத்தொழிற்பெயர்கள். 6. தின்றழிதலால் வந்த பெயர்.]

அழிக்கல்—அழித்தல். 'ஐயருமழிக்கலாகா' (இரகு. மீட்சி. ௬௬.)

அழிகட்டு—1. ஒன்றனையழித்தற்குச்செய்யும் எதிர்ச்செய்கை. 2. தடை. 3. பொய்யேதுக் கற்பித்து மறுத்தல். 4. விடம் முதலியவைகளுக்கு மாற்று.

அழிகவுள்—மதம் இடைவிடாதொழுகுதலாலே தனதியற்கையழிந்த கன்னம். 'அழிகவுளியானைகொன்ற - வெஞ்சினத் தரியின்' (இராமா. வரைக்காட். ௩அ.)

அழிகிரந்தி - கிரந்திநோய்வகையினொன்று.

அழிஞர் — தோற்றவர். 'அழிஞர்புறக்கொடை' (பு. வெ. 3. 20. கொளு.)

அழிகை—1. அழிவு. 2. சிதைவு.

அழிச்சாட்டம்—அழிச்சாட்டியம். 'அழிச்சாட்டங்கூடுமோ' (குருபரம். பன். பக். 343.)

அழிச்சாட்டியக்காரன் - 1. தீப்புள்ளவன். 2. பொய்வழக்கையெழுப்புவோன்.

அழிச்சாட்டியம் — 1. அழிவழக்கு. 2. அழிவுசெய்தலைக்கருதிய தீச்செயல்.

அழிசெய்தல்—கெடுத்தல். 'கன்னியையழிசெயக்கருதினேன்' (கம்பரா. பள்ளி. 109.)

அழிஞ்சில் — 1. ஒருமரம். (பதார்த்த குண. ௰௪.) 2. அழிஞ்சிற்பட்டை. (தைலவ. தைல. 42.)

அழிஞ்சு — அழிஞ்சில். (தைல. தைலவ. எஉ.)

அழிஞ்சுக்காடு—பாலைநிலம். 'பெருவிடாயனைவன் அழிஞ்சுக்காடேறப்போக' (ஈடு. 6. 2. ப்ர.)

அழித்தல் — 1. இல்லதாகச் செய்தல். 'இல்லவளணிகலமழித்தல்' (தணிகை. அகத். உ௪உ.) 2. கண்டித்தல். 3. குலைத்தல். 'ஈடுசொல்போரழித்து' (சிங். நாமகள். ௩௦.) 4. கெடுத்தல். 'கோல-மழித்துமேவியவரம்பையர்' (இராமா. சித்திர. உக.) 5. சங்கரித்தல். 'உலகழித்துநிற்குமொருபெருங்கடவுள்' (கந்தபு. நகரழி. ௬.) 6. சிவனுடைய

பஞ்சகிருத்தியத்துள் ஒன்று; அது: பிரபஞ்சத்தையொடுக்குதல்: தநுகரண புவநபோகங்களையொடுக்குதல். 'அறுதியிலானேயெல்லாமழித்தலால்' (சி. சி. ௧: ௩௫.) 7. பாழாக்கல். 8. செலவழித்தல். 'தேடாதழிக்கிற்பாடாய்முடியும்' (கொன்றை.) 9. கலைத்தல். 'கோலமழித்தியாகிலும்' (திவ். நாய்ச். 2. 5.) 10. உள்ளதைமாற்றுதல். 'உடையிலைப் பலகாலும் அழித்துடுத்தல்' (தொல். பொரு. 262. உரை.) 11. மறப்பித்தல். 'பொய்தலழித்துப்போனாரொருவர்' (சிலப். 7. 43.) 12. நடவுதல். 'சன்னமழித்திலைதின்று' (உபதேசகா. சிவபுண்ணிய. 225.) 13. நீக்குதல். (கலித். 131. 34.)

அழித்தழித்து—திரும்பத்திரும்ப. 'அழித்தழித்து விவாகம்பண்ணுமாபோலேயும்' (திவ். திருநெடுங். 16. வ்யா.)

அழித்து—1. மீட்டும். 'அழித்துப் பிறந்தனனே' (புறநா. 383.) 2. மாறுபாடாய். 'அழித்தழுதாள்' (குறள். 1317.)

அழிதகவு—துக்கம். 'அழிதகவுள்ளமொடாற்றினனாகி' (மணி. 12. 43.)

அழிதகன் — 1. அழிக்கப்படத்தக்கவன். 'அறத்தைக்காயுமழிதகன்' (கந்தபு. தருமகோ. ௭௮.) 2. தகுதிகெட்டவன், துன்மார்க்கன். 'அழிதகன்குறுகுவான்முன்' (திருவிளை. மாபாத. ௨௧.)

அழிதகை — தகுதிக்கேடு.

அழிதகையவன் — தகுதிகெட்டவன். 'அழிதகையவனைப்பார்த்தித் - திறப்பழியாங்குச்சென்றும்' (திருவிளை. மாபாத. ௩௦.)

அழிதகையாள்—தகவழிந்தவள், கற்பழிந்தவள். 'அன்னையென்னுமழிதகையாள்' (திருவிளை. மாபாத. ௭.)

அழிதரவு—அழிதல். 'அன்னைமூப்பழிதரவார்கொ லாற்றுவார்' (நைடத. அன்னத்தைக்கண். ௬௮.)

அழிதல்—1. இரங்குதல். 'அழிந்தநெஞ்சம்' (புறநா. ௨௨௧.) 2. கலங்குதல். 'மஞ்சுதம் வயிறழிந் - தஞ்சிநீருகுத்தவே' (சிந். காந்த. ௭௮.) 3. குலைதல். 'உண்டையுமழிதலுற்ற' (கந்தபு. தருமகோ. ௭௧.) 4. சிதைவுறுதல். 'ஆரவண்டலழியும்' (நைடத. கைக்கி. ௧௦.) 5. சிதறுதல். 'அழிகருவெயர்விற்றோன்ற' (நைடத. அன்னத்தைக். ௨௭.) 6. தவறல். 'நீயுரைத்ததொன்றுமழிந்திலது' (கம்பரா. பிராட்டி. 30). 7. தோல்வியடைதல். 'ஆரமருடற்றிமல்லரனைவருமழிந்தபின்னர்' (பாரத. மற்போர். ௭.) 8. நிலைகெடுதல். 'உள்ளமார்வமோடழிந்ததே' (நைடத. கைக்கி. ௪.) 9. பெருகுதல். 'அழியும்புனல்' (சிந். பதுமை. ௨௮.) 10. மனங்கலங்கல். 'இதற்குள்ளமழியே லென்றான்' (இராமா. நகர்நீங். ௧௮.) 11. வருந்துதல். 'தீயின் மேயதளிரின் வாடியழிதல்கண்டுசிந்தியா' (நைடத. கைக்கி. ௧௧.) 12. நாசமாதல். 13. பரிவுகூர்தல். 'புணர்ந்த நெஞ்சமோடழிந்தெதிர்கூறி விடுப்பினும்' (தொல். பொரு. 40.) 14. செலவாதல்.

அழிதலை — 1. தலையோடு 'அழிதலையங்கையிலேந்தி' (தேவார. திருவாழ் ௭. திருஞான.)[அழிந்ததலையென்றபடி.]2. சிரமாலை. (பிங்.)

அழிதன்மாலைய — அழியுந்தன்மையுடையன. 'அழிதன்மாலையவென்றறத்துறந்தவர்' (தணிகை. அகத். ௨௩௧.)

அழிதுளி—மிக்கதுளி. (ஐங்குறு.)

அழிநூ—அலி. 'அந்தணரிலழிநூவானீர்' (கந்தபு. அநந்தன்சா. ௩௯.)

அழிந்தவள்—கற்பழிந்தவள்.

அழிந்தோரைநிறுத்துதல்—வேளாண்மாந்தர்க்குரிய அறத்துறுப்பெட்டினுள் ஒன்று. (திவா.)

அழிப்படுத்தல் — நெற்கதிரைக் கடாவிட்டுழக்குதல். 'ஆளழிப்படுத்தவாளேருழவ' (புறநா. 368.)

அழிப்பன் — சங்கரிப்பவன். (திவ். பெரியாழ். 4. 8. 6.)

அழிப்பாளன்—தட்டான். (ஈடு. 5. 8. 1.)

அழிப்பாளி— பொருளை வீணாயழிப்பவன்.

அழிப்பு—1. அதிகஞ்செலவுசெய்தல். 2. அழித்தல், சங்காரம். 'அழிப்பரியேவலென்றாய்' (சி. சி. பர. பாஞ். மறு. ௮.) 3. குற்றம். (திவா.)

அழிபசி—1. மிக்கபசி. 'அற்றாரழிபசிதீர்த்தல்' (வள். ௨௨௯.) 2. அறிவுமுதலிய அழிதற்குக் காரணமான பசி. (சிறுபா. ௧௪௦. உரை.)

அழிபடர்-மிக்குநடக்கும் விதனம். (புறப். வெண். பக். ௧௨௬.)

அழிபடல்—
அழிபடுதல்— } 1. வருந்தல். 'ஆனலின்ன லழிபடக்காண்பான்' (கல்லாட. ௪௧.) 2. சிதைதல். 3. செலவாதல்.

அழிபாடு — அழிவு. 'அழிபாடில்லாதகடலின்' (தேவா. 212. 8.)

அழிபு — 1. நாசம். 'ஒன்னுர்நாடழிபிரங்கின்று' (பு. வெ. 3. 8. கொளு.) 2. அழித்து. 3. அழிதல். 4. தோல்வி. 5. நொந்து. (புறப். வெண்.)

அழிபுன்—ஆறாத புண்.

அழிபெயல் — மிக்க மழை. 'அழிபெயல் காலை' (பரிபா. 10. 1.)

அழிம்பன் — 1. தீம்புசெய்கிறவன். 2. வீணாய் அதிகஞ் செலவுசெய்கிறவன்.

அழிம்பு—1. கேடு. 2. தீம்பு.

அழிமதி—கெடுமதி.

அழிமானம்—அழிவு.

அழியமாறுதல் — தன் நிலையையழித்து வேறுதல். 'தன்னை யழியமாறியும் உதவினவனுடைய' (ஈடு. 4. 2. 6.)

அழியல்—சஞ்சலம். (குறுந். 213.)

அழியாதபத்தினி — திரௌபதி. [வடநூ. மனைவி. ஐவர்க்குமனைவியாயும் கற்பழியாமை பற்றிவந்த பெயர்.]

அழியாமுதல்—1. கடவுள். 2. நிலமுதலிய அசைவற்றபொருள். 3. நிலையான மூலநிதி.

அழியாமை—1. அழிவின்மை. 2. மனங் கலங்காமை. 'இடுக்கணழியாமை' (வள். அதி. ௬௩.)

அழியுநர் — தோற்பவர். 'அழியுநர்புறக் கொடையயில்வாளோச்சாக் கழிதறுகண்மை' (வெண்பாமாலை. வஞ்சிப். ௨௦.)

அழிவது—கெடுதி. 'அவனை யாங் கிழமை கொள்ள அழிவதுண்டோ' (இறை. 28. உரை).

அழிவழக்கு — 1. நியாயம் இல்லாத ஓர் ஏதுவைக் கற்பித்து வாதாடும் வழக்கு. 2. வீண்வாதம். 3. இழிந்தோர்வழக்கு. (தொல். எழுத். மொழி. 31. இளம்.)

அழிவாய்—சங்கமுக மணன்மேடு.

அழிவி — கழிமுகம். 'அழிவிநின்றகண்டல்' (குறுந். 340.)

அழிவு—1. கழிமுகம். (பிங்க. ருஅ௬.) 2. குற்றம். 3. கேடு. 'அழிவிலாயுளும்' (கந்தபு. தருமகோ. ரு.) 4. தோல்வி. 'அரும்புறு காலைக்கொங்கைக்கழிவுற்றமுகமொவ்வாது' (கந்தபு. மாயைப். ௫௧.) 5. நட்டம். 6. மனக்கலக்கம். 'அடுக்கிவரினுமழிவிலானுற்ற' (வள் ௬௨௫.) 7. தீமை. அரக்கரோ ரழிவுசெய்து கழிவரேல்' (கம்பரா. வாலிவதை. 79.) 8. செலவு. 'வேண்டும் அழிவுக்குப் பொலிசை யூட்டுக்குவைத்த' (S. I. I. II. 69.) 9. வருத்தம். 'அழிவுதலைவரினும்' (தொல். பொரு. 115.) 10. வறுமை. 'அழிவினாற் கொண்ட வருந்தவம் விட்டானும்' (திரிகடு. 79.)

அழிவுகாலம்—யுகமுடிவு, ஊழி. (சூடா. 12. 76.)

அழிவுபாட்டபாவம் — அபாவப்பிரமாண வகையுள் ஒன்று; அஃதொருபொருள் அழிவதனாற் பின்னில்லை யென்னும் அபாவம். 'குடம் உடைந்தா லஃதில்லையென்கை' என்பதிற்போல. (சி. சி. அளவை. ௧. உரை.) [அழிவுபாடு-அழிவுபடல். அபாவம்-இன்மை.]

அழிவுபாடு—அழிவு.

அழு — 1-3. அழுவென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 'அழுகுரல்விலக்கியபின்' (பாரத. சம்பவ. ௧௦௫.)

அழுக்ககற்றி—சாம்பற்சாரநீர், வண்ணான் உபயோகிக்குங் காரநீர்.

அழுக்கடித்தல் — அழுக்குப்போக்குதல். 'அழுக்கடிக்கும் வண்ணர்போலாய்' (தாயு. உடல். ௬௫.)

அழுக்கடைதல்—அசுத்தப்படுதல்.

அழுக்கணவன் — ஒருபுழு. [அழுக்கு; அணவு - ஒட்டல். அன் - உலகவழக்கில் ஒன்றன்பாலில்வரும் ஒரு விகுதி.]

அழுக்கம்—கவலை. 'அழுக்கமுற்றெழுந்து' (திருவிளை. விறகு. ௪௪.) [அழுங்கு-அம்.]

அழுக்கறுத்தல்-பிறராக்கத்திற் பொறாமையடைதல். (வள். ௧௬௬.)

அழுக்கறுதல் — பொறாமைகொள்ளுதல்.

அழுக்கறுப்பான்- பொறாமைகொள்பவன். 'கொடுப்பதழுக்கறுப்பான்சுற்றம்' (வள்.166)

அழுக்காமை—ஒருவகையாமை.

அழுக்காறுமை — அழுக்காறுசெய்யாமை. (வள். அதி. ௧௭.) [அழுக்காறு என்னுஞ் சொல். எதிர்மறையாகாரமும் மைவிகுதியும் பெற்றுநின்றது.]

அழுக்காறு — 1. பிறராக்கம்பொறாமை. 'அழுக்கா றவாவெகுளி யின்னுச்சொன்னன் கும்' (வள். ௩௫.) 2. பொய். 3. மனத் தழுக்கு (பிங்.)

அழுக்கு — 1. அவித்தை. 'அழுக்கொடுபற் றுஞ்சிவர்க்கு' (கைவல். தத்து. ௩௪.) 2. அழுக்காமை. 3. ஆணவமுதலிய பாசம். 'உயிர்க்கழுக்கறுக்க' (சிவதரு. பாயிர. எ.) 4. சடப்பொருளின் அசுத்தம். 'இரண்டியக்க முதலான வழுக்காடையெய்தின்' (தணிகை. அகத். ௩௪௨.) 5. சித்துப்பொருளின் அசுத் தம். 'அழுக்குளத்தினும்' (தணிகை. அகத். ௨௯௩.) 6. பொறாமை. 'உள்ளத் - தழுக்கறு மையாலின்னமு மமரர் கண்ணுறங்கார்'(திரு விளை. ௩௧. ௧௦௦.) 7. பிரசவத்தின்பின் வடி யும் ஊனீர். 8. வெறுத்தற்குரிய மாசுபடிந்த ஆடை.

அழுகண்—கண்ணோய்வகையினொன்று.

அழுகண்ணி—ஒரு பூண்டு. [நீர்பொசிந்து கொண்டிருப்பதனால் வந்த பெயர்.]

அழுகல் — 1. அசுத்தம். 'தேம்புகலாம் வினைத்திடுவானழுகல்வாயினன்' (தணிகை. அகத். ௩௪௪.) 2. அழுகுதல். 3. பதனழிதல். 4. பதனழிந்த பதார்த்தம்.

அழுகள்ளன் — கள்ளமாய் அழுவோன், பாசாங்குசெய்வோன்.

அழுகள்ளி—பாசாங்குக்காரி.

அழுகு — 1-3. அழுகென்னேவலும் தெரி நிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அழுகுசப்பாணி — 1. அழுகுசர்ப்பம். 2. ஒரு விடநோய்.

அழுகுசர்ப்பம்—ஒரு விஷசெந்து.

அழுகுணி—1. அழுகிற குணம் உள்ளவன்- வள். [அழு: குணம்; இ-ஒருவிகுதி.] 2. ஒரு சரப்பனோய். [அழுகு-உண்; இ.]

அழுகுதல் — 1. அருவருக்கப்படுந்தன்மை யாதல். 'அழுகுசேறதிந்து'(தணிகை.நாட்டு. ௯௦.) 2. பதனழிதல்.

அழுகை—அழுதல், அவலம். 'அழுகையுங் கோளும் பொய்யும்' (சிவதரு. பாவ. ௯.)

அழுங்கல்—1. அஞ்சுதல் (திவா). 2. அலை தல். 3. அழுதல். 4. அழுந்தல். 5. இரக்கம். 'அதுசேர்ந்தல்கியவழுங்கலாலே' (புறநா. ௨௨௦.) 6. உருவழிதல். 'பிணனழுங்கக்களை னுழக்கி' (புறநா. ௯௮.) 7. ஒலித்தல். 'அழுங் கியகழற்கால்வீரன்' (கந்தபு. கடல்பாய். ௧.) 8. ஒளிமழுங்கல். 9. கேடு, கெடுதல். 'குண னழுங்கக்குற்றமுழைநின் றுகூறுஞ்சிறிய வர் கட்கு' (தொல். சொல். ௩௫௦. உரை.) 10. சோம்பு. (சூ. நிகண். அ: ௬௭.) 11. தாமதித் தல், தவிர்தல். 'செலவழுங்குகிளவி'(தொல். பொரு. ௧௭௭.) 12. துன்பப்படுதல். 13. யாழ் நரம்போசை. (பிங்க. ௧௪௪௧.) 14. வருந் தாதேயெனப்பொருள்படும் ஒரு முன்னிலை யேவல்வினை.'அலரதாகாதொழியுமேயழுங்க லென்று' (சிந். ௧௩௧. ௧௧௦.) 15. வருந்து தல். 'ஆனகற்புலவர் தாரித்திரத்தினலழுங்க லானும்' (பஞ்சத. சுகிர். ௨௩.) 16. நோய். (திவா.) 17. ஆரவாரம். (திவா.) 18. துக்கப் படுதல். (பிங்.)

அழுங்காமை — 1. அழுங்குதலடை யாமை. 2. ஒருவகை ஆமை.

அழுங்கு — 1-3. அழுங்கென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகை யும். 'வெள்ளநோக்கியழுங்குசெம்பியன்' (திருவிளை. விடை. ௧௨.) 4. ஒரு விலங்கு. 'குறுமுய லுடும்போடாமைமுட்பன்றி யழுங் கிவை கொன்றருந்தினுமாம்' (கூர்மபு. அல் லவை. ௯.) 5. பாலையாழ்த்திறவகையி னொன்று. (பிங்க. ௧௩அ௧.) 6. ஆமை.

அழுங்குதல்—அழுங்கல்.

அழுங்குப்பிடி — நெகிழாது பிடித்தபிடி, விடாப்பிடி. [அழுங்குபோலப் பிடித்தல்பற்றி வந்த பெயர்.]

அழுங்குவித்தல்—1. துன்பமுறப்பண்ணல். 'நெஞ்சமழுங்குவிக்குமாலே' (சிங். சுரமஞ். ௰எ.) 2. விலக்குதல். (குறள். 1154. உரை.)

அழுத்தக்காரன்—1. அடக்கமானவன். 2. இறுக்கமுடையவன்.

அழுத்தங்கோல்--ஒருவகையெழுதுகோல், மைதீட்டுங்கோல். (சி. சி. அளவை. ௧.மறை.)

அழுத்தம்—1. அடக்கம். 2. இறுக்கம். 3. உலோபத்தனம். 'திரவியத்தி லழுத்தமான வன் செத்தாலுங் கொடான்' 4. உறுதி, திடம். 5. ஒப்பம், சருச்சரை

யின்மை. 6. கடினம். 7. பதிப்பு. 8. பிடிவாதம், முரட்டுத்தனம். 9. பிரியமாய் அழுந்திநிற்றல். 'உயிரசைவால் வாதனைப்பா லழுத்தத்தாலறிவை விரிவாக்கா யென்னில்' (ஞானவா. உபசா. ௨௦.) 10. மிக்ககவனம்.

அழத்தல் — அழுத்துதல். 'ஆர் தருசாக்கிரங்கனவு சுழுத்தியென வழுத்தலுறு மவத்தைமூன்று' (சூத. எக்கி. பூ. ௫: ௩௯.)

அழத்தி — அழுந்தச்செய்கிறவள் - வன். 'புயமீதேகோங்குபடைத்ததநத்தையழுத்திகள்' (திருப்பு. ௨௯௩.)

அழத்து—1. அழுத்துகை. 2. பதித்தல். 'நகறுதியழுத்தைக்காட்டி' (திருப்பு. ௪௦௩.) 3-5. அழுத்தென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அழத்துகை—அழுத்துதல்.

அழத்துதல்—1. அழுந்தச்செய்தல். 'இதையுன்மனத்திலேயழுத்திப்பார்' 2. உறுதியாக்குதல். 3. பதித்தல். 'தாவேது மில்லாத் தமனியமீது தலம்புரக்கும்-கோவேயழுத்துவரோவறியோருக்குருவிந்தமே' (வாண. அ௨.) 4. பாராட்டல். 5. மனத்திலுறைக்கச்செய்தல், வற்புறுத்தல். 'அவன் அழுத்திப்பேசினான்' 6. அமிழ்த்துதல். 7. எய்தல். 'பகழி...அண்ணல்யானை யணிமுகத்தழுத்தலின்' (குறிஞ்சிப். 171)

அழதல்—1. இரங்கல். 2. கதறுதல். 3. சிணுங்கல். 4. துக்கத்தினால் அல்லது வருத்தத்தினால் கண்ணீர்விட்டுச் சத்தமிடல். 'இன்பவீடெதுவென்றே-யின் றுநின் றழுதிலே (வைராக். சத. ௧௧.) 5. வருந்துதல். வீணே செலவிடல்.

அழதுவழிதல்—பொலிவின்றியிருத்தல்.

அழந்த—இறுக. 'அவரை அழுந்தப்பற்றி' (புறநா. 77).

அழந்தல்—1. அமிழ்தல். 'அள்ளல் கூர்மமழுந்தும்' (தணிகை. நாட்டு. ௧௦௭.) 2. அமுங்குதல். 'கால்கள் சேற்றிலழுந்திட' (பஞ்சத. சுகிர். ௨௩.) 3. இறுகுதல். 'அவரையழுந்தப்பற்றி' (புறநா. ௭௭.) 4. பதிதல். 'நன்முகவழுந்த எழுது'. 5. வருந்துதல். 'அழுந்தே னரகத்தி யானென்றிருப்ப' (திருக்கோ. ௧௯௯.) 6. அனுபவப்படுதல்.

அழந்து—1. அமிழ்ந்துதல். 'அழுந்துபட்டுள ரொத்தயர்ந்தார்' (இராமா. இலங்கையெரி. ௨௪.) 2. அழுந்துதல். 3-5. அழுந்தென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 'இறையடிக்கணேயழுந்துநேசமொடு' (திருவிளை. அட்ட. ௧௧.) 6. ஆழம். 'அழுந்துறுபாலின்வேலையமரர்கள் கடைந்தகாலை' (கந்தபு. காசிபன்பு. ௨௫.) 7. வெற்றிலைநடும் வரம்பு.

அழந்துதல்—அழுந்தல்.

அழந்துபட்டிருத்தல்—நெடுங்காலம் அடிப்பட்டிருத்தல். 'அழுந்துபட்டிருந்த பெரும்பாணிருக்கையும்' (மதுரை. ௩௪௨.)

அழந்தூர்—ஓரூர். (பெரியபு. ஞான. ௩௯௪.)

அழந்தை—அழுந்தூர். (தேவார. அழுந்தூர். ௩. திருஞா.)

அழப்பு—சோறு.

அழப்புகம்—தேவலோகம்.

அழம்பில் — ஓரூர்; அது: வானவிறல் வேளென்னுங் குறுநிலமன்னனுடையது. 'வானவிறல்வே-ளழும்பிலன்ன நாடிழந்தனரும்' (மதுரை. ௩௪௫.)

அழம்புதல் — செறியக்கலத்தல். 'அமரவழும்பத்துழாவியென்னாவி' (திவ். திருவாய். 1. 7. 9).

அழவம்—1. அப்பவருக்கம். 2. அழுக்குநிலம். 3. ஆழம். 'கடன்மண்டழுவத்துக் கயவாய்கடுப்ப' (மலைபடு. ௫௨௮.) 4. கடல் 'நீண்டொலியழுவங்குறைபடமுகந்து' (புறநா. ௧௬௧.) 5. குழி. 'ஆரிடழுவத்து' (மலைபடு. 368). 6. துருக்கம். (திவா.) 7. நடுக்கம். 8. நாடு. (சூ. நிகண். ௫: ௧). 9. பரப்பு. 'நீரழுவநிவப்புக்குறித்து'(புறநா. ௧௪.) 10. பெருமை (திவா). 11. போர்க்களம். 'வாளமரழுவத்தவுணர்கோன் சேனை' (கூர்மபு. அந்தகா. ௫௧.) 12. முரசு. 13. வழுக்குநிலம். 14. காடு. (அகநா. 79.) 15. போர். 'வாளழுவந்தாங்கி' (பு. வெ. 8. 23.) 16. நடு. 'அமரழுவத்து'(பு. வெ. 10. பொதுவி.) 17. மிகுதி. 'படையழுவ மாரி' (சீவக. 802.)

அழை—1-3. அழையென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. அழுகை.

அழைத்தை—அழைத்தல்.

அழைத்தல்-1. கூட்டிக்கொண்டுபோதல். 2. கூட்டிக்கொண்டுவருதல். 3. கூப்பிடுதல். "நீலவுண்கண் - கையா லழைப்பன போ லிமையாநிற்கும் காரிகைக்கே" (வாண. ௩.) 4. வாச்செய்தல். "அரசியலுரிமையெல்லா மாங்கவரழைத்து" (கந்தபு. விண். ௪௦.) 5. கதறுதல். (பிங்.)

அழைப்பித்தல் — தருவித்தல். 'பத்தடி உத்திரமுள்ள மரங்களும் அழைப்பித்து' (கோயிலொ. 146)

அழைப்பு—1. அழைத்தல், கூப்பிடுகை. 'அப்போதொழியுமழைப்பு' (நாலாயிர திவ். இயற்பா. நான்மு. ௩௮.) 2. பொருள் புணராவோசை: (திருக்கோ. 102. உரை.)

அழையுறுத்தல்—கூவுதல். 'அழையுறுத்து மாமயில்களாலுஞ்சோலை' (தேவா. 483.7 ).

அள்—1-3. அள்ளென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும் 4. ஒருநோய். 'தள்ளும்பித் தக்கிச்சூர் சர்த்தி தலை கோயலசம் - அள்ளும்பித் துக்கொள்ளுமால்' (தைல. தைலவ. அ.) 5. காது. 'விழிமூக்கட்டான்' (தைல. பாயிர. ௨௪.) 6. கூர்மை. 'அள்ளிலைவேற்கைநம்பி' (கந்தபு. வள்ளி. ௧.) 7. நீர்முள்ளி. (இராசவைத்.) 8. நெருக்கம், செறிவு. 'அள்ளிலைத்தாளி' (புறநா. ௨௫௨.) 9. பற்றிரும்பு. (சூ. நிகண். எ: ௧௫.) 10. பெயர்ச்சொல் வினைச்சொற்களிற்பெண்பாற்படர்க்கையில்வரும் ஒரொருமைவிகுதி. 11. பூட்டு. (பிங்.) 12. வண்டி வில்லைத்தாங்குங் கட்டை. 13. அள்ளப்படுவது. 14. வன்மை. (சூடா.) 15. வரன்முள்ளி. (இராசவைத்.)

அள்வழுப்பு—காதுக்குறும்பி. 'அள்வழுப் புச் சார்வலமே வினையூழை' (திருப்பு. ௵௩.)

அள்ளகடு-செறிந்த வயிறு. (புறப்.வெண். பக். ௧௨.)

அள்ளல் — 1. அள்ளுதல். 2. இசைக்கரணங்கள் எட்டினுள் ஒன்று; அஃது: அரம் - 'அரும்பொற் சுட்டுவிரல் சேடந்தன்னுலள்ளல்' (கூர்மபு. கன்னன்மண. ௧௭௭.) 3. சேறு. 'அள்ளலங்கருஞ்சேற்றிடை' (நைடத. நாட்டு. ௭.) 4. நரகம் ஏழனுள் ஒன்று, 'அல்செயள்ள லகல்காறும்' (தனிகை. அகத். ௨௮௫.) 5. நெருக்கம். 'அள்ளற் பயலை யூர்கின்றது' (திவ். இயற். திருவிருத். 12.)

அள்ளாடுதல் — செறிதல். 'அள்ளாடிய கவசத்தவிர் மணியற்றன.' (கம்பரா. முதற் போர் 177).

அள்ளாத்தி—ஒரு மீன்.

அள்ளாயமானியம் — அள்ளுசுதந்திரம். (I. M. P. Sm. 91).

அள்ளி—வெண்ணெய். (இராசவைத்.)

அள்ளிக்கொட்டுதல்-1. பரவுதல்.'அம்மை. அள்ளிக்கொட்டியிருக்கிறது. 2. மிகச் சம்பாதித்தல். 'அவன் வியாபாரம்செய்து பணத்தை அள்ளிக்கொட்டுகிறான்' 3. மிகக் கொடுத்தல்.

அள்ளிக்கொண்டுபோதல்—1. வேகமாயோடுதல். 2. வியாதி கடுமையாகக் கொள்ளை கொள்ளுதல். 'அந்த ஊரில் பேதி அள்ளிக் கொண்டுபோகிறது.

அள்ளித்துள்ளுதல் — மிகச்செருக்குதல். 'அள்ளித்துள்ளி அரிவாண் மணையில்விழாதே'

அள்ளியிறைத்தல் — மிதமிஞ்சிச் செலவிடுதல்.

அள்ளிருள்-கும்மிருட்டு, செறிந்தஇருட்டு.

அள்ளிவிடுதல்—மிகக்கொடுத்தல்.

அள்ளு—1. அள்ளப்படும் பொருள். 2. அள்ளுநோய். (தைல. தைலவ. அ. உரை.) 3-4. அள்ளென்னேவலும் வினைத்தொகையும். [உகரம் - ஒரு சாரியை.] 5. பற்றிரும்பு. (பிங்). 6. வண்டிவில்லைத்தாங்குங் கட்டை. 7. காது. (பிங்). 8. அளவுகூலியாகக்கையால் அள்ளிக்கொள்ளும் தானியம்.

அள்ளுக்காசு — கூடைக்காரரிடமிருந்து வசூலிக்கும் பணம்.

அள்ளுகொண்டை — மகளிர் மயிர்முடி வகை.

அள்ளுகொள்ளை — 1. அதிகவரவு. 2. பெருங்கொள்ளை.

அள்ளுதல்—1. அள்ளியெடுத்தல், திரளாயெடுத்தல். 'உதிர்சருகுகந்தமூலங்களேனுங்கனல்வாதைவந்தெய்தினள்ளிப் புசித்து' (தாயு. சச்சி. ௫.) 2. செறிதல். (சிந். காந்த. ௧௨௨. உரை.) 3. நெருங்குதல். 'அள்ளிய நிருமிநின்ட' (சூத. எக்கி. பூ. ௭௭. ௭.)

4. வாரியெடுத்தல். 'கற்பகநகர்க் கிறைவனை-யள்ளி மண்ணிடைக் களிற்றெடு மறைத்த தொருகை' (கூர்மபு. தக்கன்வேள். ௩௫.) 5. எற்றுதல். (பிங்). 6. நுகர்தல். 'அள்ளுற வளித்தகாமம்' (சீவக. 1387)

அள்ளுமாந்தம்—ஒருவகை மாந்தரோகம்; அது: விலாவைத் தூக்கிக்கொள்ளுவது. (சீவரட். உ௧அ.)

அள்ளூறல்—வாயூறல். 'அத்தனுநந்தனமுத னென்றள்ளூறித் - தித்திக்கப்பேசுவாய்' (திருவாச. திருவெம். ௩.)

அள்ளை—பேய். (பிங்).

அள — அள்வென்னேவலும் தெரிநிலை வினைப்பகுதியும்.

அளக்கர்—1. உப்பளம். (சூ. நிகண். ௫: உ௧.) 2. கடல். 'அங்கண்மா ஞாலஞ் சூழு மளக்கரை நிகர்த்ததாமே' (கந்தபு. ஆற்று. ௩௬.) 3. கார்த்திகைநட்சத்திரம். (சூ. நிகண். 1. 68). 4. சேறு. (சூ. நிகண். 5. உஅ.) 5. நீள்வழி. (சூ. நிகண். ௫: ௬௪.) 6. பூமி. (சூ. நிகண். ௫: அ.)

அளக்காய்—வெள்ளெருக்கு.

அளக்கார்—உப்புமைப்போர்.

அளக்கல்—அளத்தல். 'அளக்கலாகாவள வும் பொருளும்' (நன். பொதுப். உஅ.)

அளக்குதல்—அளக்கல்.

அளக்கை—அளத்தல்.

அளகநந்தை—ஒரு தீர்த்தம். (கூர்மபு. மேருவின். ௧அ.)

அளகநாதர்—ஒரு தீர்த்தகரர். (த.நி.போ. உ௭௬.)

அளகபந்தி—கூந்தலினொழுங்கு "நல்லா ரளக பந்தியென விருண்டசெவ்வி நளிர் தண்கா" (இரகு. திக்கு. ௬உ.)

அளகபாரம்—கூந்தற்பாரம். 'அளகபார மலைந்து குலைந்திட' (திருப்பு. ௬௭.)

அளகபேதம்—அதிவிடயம்.

அளகம்—1. நீர். (சூ. நிகண். ௧: ௫௪.) 2. பன்றிமுள். 3. பனிச்சை. 'கொய்பூந் - தாது கொண்டளகத்தப்பி' (சிந். முத்தி. ௩௫0.) 4. மயிர்ச்சுருள். 5. பெண்மயிர். 'கானே யளகக்கரும்புயலே' (வாண. ௫உ.) 6. வெள்ளெருக்கு. [3, 4 ஸம்ஸ்கி.]

அளகவல்லி—மயிர்மாட்டி. (சூளா. சுயம். 106.)

அளகாதிபதி — குபேரன். 'ஆயபொழு தளகாதிபதி' (பாரத. மணிமா. ௫௩.) [ஸம்ஸ்காயிவதி: ஸம்ஸ்கா - அளகை. ஸயிவதி - தலைவன்.]

அளகாதிபன் — குபேரன். 'அளகாதிப னுரைத்தவாசகம்' (இராமா.வரையெ.௨௬.) [ஸம்ஸ்காயிவ: ஸம்ஸ்கா; ஸயிவ.தலைவன்.]

அளகாபதி—குபேரன். 'அல்லதுநீடளகா பதிதானும்' (பாரத. புட்ப. ௬௩.) [ஸம்ஸ்கா; வதி - தலைவன்.]

அளகாபுரி—குபேரனுடையநகரம். 'அளகா புரியுறைவோர்' (பாரத. மணிமா. ௧௫.)

அளகு—1. கார்த்திகைநட்சத்திரம். (வீமே. ௧௫.) 2. கோழி, கூகை, மயில் என்னும் பறவைகளின் பெடை. (தொல். பொரு. ௬௪௪: ௬௪உ.) இவற்றுள், 'மனைவாழளகின் வாட்டொடும்பெறுகுவிர்'(பெரும்பா.உ௫௬.) என்பதிற் கோழிப்பெடைக்கும், 'அளகி னோடுபாட் டிரட்டுமா லைதொறுங் குரால்கள்' (தணிகை. நாட்டு. ௩௧.) என்பதிற் கூகைப்பெடைக்கும் வந்தவாறு காண்க. 3. சேவல். 'அளகைப்பொறித்தகொடியினை யோன்' (திருவிளை. அருச்சனை. ௩௪.) 4. பறவைப்பேடு. 'அளகைநேடிப் - பார்வல்வந் தணையுமாபோல்' (கந்தபு. சூரம்பு. உ௬.)

அளகேசன்—குபேரன். 'அளகேச னமர் வென்றதனியாண்மையான்'(பாரத.ஐந்தாம். அ.) [ஸம்ஸ்கா; ஈஶ - தலைவன்.]

அளகை—1. எட்டுவயதுக்கும் பத்துவய துக்கும் இடைப்பட்ட பெண். 2. குபேரனுடைய நகரம். 'அதுபொழு தவுணர்க ளளகை யூடுபோய்' (கந்தபு. திக்குவி. ௩௫.) [ஸம்ஸ்கா:ஸம்ஸ்-அலங்கரித்தல். க-ஒருவிகுதி.]

அளகையாளி—குபேரன். 'அளகையாளி யை யெம்பிரான் வரவழைத்தருளி' (உபதேசகா. சிவபு. ௩௧௪.)

அளத்தல்—1. அளவளாவுதல். 'என்முக மளக்குங்கால்' (கல்லாட. ௧௧.) 2. அறிதல். 'ஆசைப்புறத்தளவா' (வாண. ௪௬.) 3. எட்டுதல், தீண்டுதல். 'மௌலியண்டமுகட்டினை

யளப்ப' (கூர்மபு. தக்கன்வேள். கரு.) 4. எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் அளவைகளோடு கலந்தாவது கலவாமலாவதென்னி யளவுசெய்தல். 'மன்னவர் தருதிறையளக்கு மண்டபம்' (இராமா. நகர. ௬௨.) 5. கீழ்ப்படுத்தல். 'தாமுலகளந்தவென் றித்தனிவிற் சேவகனுய்த்தோன்றி' (திருவிளை. யானையெ. ௨அ.) 6. நியதிசெய்தல். 'அளக்துகாக்தாறுகர்க்து' (திருவாதவூ. திருப்பெருக். ௬௬.) 7. கொடுத்தல். (பு. வெ. 8. 29.) 8. பிரமாணத்தைக்கொண்டறிதல். 'இதனுனே காட்சிமுதலிய மூன்றும் படும் பாகுபாடும் அவற்றுன் அளக்கப்படும்பொருள்களின் பாகுபாடும் தொகுத்துக்கூறப்பட்டன' (சி. சி. அளவை. ௬. சிவஞா.) 9. மட்டறிதல். 'வரம்பில் கட்புலங் கொண்டவ ரேனுமற்றிவ் வூர்-விரும்பியித் திரு நோக்னு மளத்தன்மே வருமோ' (கந்தபு. நகர்பு. அ௰.) 10. கருதுதல். 'ஊறளந்தவர்வயின்' (கலித். 17.) 11. வரையறுத்தல். 'முன்னமளந்தறிவளித்து' (சிவப்பிர. ௧௦: ௬.) 12. கலத்தல். 13. வீண்பேச்சுப்பேசுதல்.

அளத்தி—நெய்தனிலப்பெண். (சூ. நிகண். ௨: ௭௨.)

அளத்தியம் — 1. சவர்க்காரம். 2. நீலபாஷாணம்.

அளத்தியர்-1. உப்பமைப்போர்பெண்கள். 2. நெய்தனிலப்பெண்கள். 'மீட்டளத்தியர்க டாரம்பாடுபவிளரிவேண்டார்' (இரகு. நாட்டு. ௰௩.)

அளத்துநிலம்—களர்நிலம்.

அளத்துப்பச்சை—மருக்கொழுந்துச் சக்களத்தி. (மூ. அ.)

அளத்துப்புல் — முயிற்றுப்புல். (மூ. அ.)

அளத்துப்பூண்டு—ஒரு செடி.

அளந்திடல்—அளத்தல். 'அளந்திடற்கரிதாய' (திருவிளை. புராணவர. ௧.)

அளப்பம்—1. அலப்பு. 2. அளக்கை. 3. ஊழ். 4. முறுமுறுக்கை. 5. உபாயம். 6. அக்கப்பிச்சு.

அளப்பளத்தல் — 1. பிதற்றல், வீண்பேச்சுப்பேசுதல். 2. முறுமுறுத்தல். [அலப்பு எனற்பாலது அளப்பு எனநின்றது.]

அளப்பன் — 1. குதர்க்கம்பேசுவோன். 2. வீணுகப்பேசுவோன். ["அலப்பன்" என்பது திரிந்தது.]

அளப்பு—1. அலப்பு. 2. அளத்தல். 'அடியினதெல்லையளப்பரிதென்றால்' (பாரத. புட்ப. ௰௧.) 3. அளவு, எல்லை. 'ஈசனையளப்பில்காலமிதயமேலுன்னி' (கந்தபு. ததீசிப். ௩௨.) 4. ஆராய்ந்தறிதல். 'அருமறையாகம முதனூலனைத்து முரைக்கையினலளப்பரிதாம்' (சி. சி. அ: ௧௪. நிரம்.) 5. ஊழ். 6. முறுமுறுக்கை.

அளப்புந்து — முடக்கொற்றான். (மூ.அ.)

அளப்புதல்-1. அலப்புதல். 2. குழப்புதல்.

அளபு — 1. அளபெடை. 'குற்றுயிரளபி னீறாம்' (நன். எழுத்தி. ௯௩.) 2. அளவு. 3. ஓரலங்காரம்; அஃது அளபெடையாய்வருவது. 4. மாத்திரை. 'அளபிறந்துயிர்த்தலும்' (தொல். நூன்மரபு. ௩௩.)

அளபெடுத்தல் – எழுத்தின்மாத்திரையை யெழுப்புதல்.

அளபெடை—எழுத்துக்கள் தத்தம் மாத்திரையின் நீண்டொலிக்கப்படல். 'ஒற்றளபெடையாறேழ்' (நன். எழுத்தி. ௬.) அஃது உயிரளபெடை ஒற்றளபெடை யென இருவகைப்படும். இயற்கையளபெடை செயற்கையளபெடையென இருவகைப்பட்டும் வரும். [அளபு-எடு-ஐ.]

அளபெடைவண்ணம்-இருபதுவண்ணங்களுள் ஒன்று; அஃது உயிரளபெடை அல்லது ஒற்றளபெடை பயின்றுவரப் பாடப்படுவது. 'அளபெடைவண்ணம் அளபெடை பயிலும்' (தொல். பொரு. ௫௩௨.) 'மாஅமலரொடு விராஅய்ப்பராஅம்' எனவும் 'கன்ண்டன னெனக் கண்டுக்கேட்டும்' எனவும் வருவன வற்றிற்போல.

அளம்—1. ஆயுதக்கூர்மை. 2. உப்பளம். 'அளம்படுவார்தரும்பண்மினர்நேர' (தஞ்சை. களவுப். ௬௩௧.) 3. நெய்தனிலம். 4. நெருக்கம். (அக. நி.) 5. புத்திக்கூர்மை. 6. களர்நிலம். (அக. நி.)

அளம்படுதல்-வருந்துதல். 'அளம்பட்டறிவொண்ணுவகை' (தேவா. 245. 9.)

அளம்பற்றுதல்-உப்புப்பூத்தல். 'உளுத்து அளம்பற்றினசுவர்' (திவ். திருக்குறுந். 19. வ்யா.)

அளமம் — பொன்.

அளமரல்—அலமரல். 'அளமருபிறப்புக வமலர்க்குய்த்திடும்-வளமலர்' (தணிகை. நாட்டு. ௬௬.) அலம் - சுழற்சி. 'ல'ளவ்வாகி யது போலி.]

அளமருதல் — அலமருதல். 'அளமருகுயி லினம்' (சீவக. 49.)

அளமனோதல்—1. அளவளாவுதல். 2. மிக அளைதல். [சுமும் - மிகுதி.]

அளர்—1. நீர். 2. மஞ்சள்.

அளர்க்கம்— } தூதுளை. 'சித்சுரச
அளருகம் — } மார்க்கவஞ்சங்குசாறடை முட்டிதேட்கடைபெரும்புன்முள்ளி - சிம்ம முகி பொடுதலை தமாலகியளர்க்கமெண்டெரி பனிரு வகையிரதமும்' (தைல. தைலவ. ௧௩.)

அளவடி — நாற்சீரான்வரும் அடி. 'நா லொருசீ-ரறைதருகாலையளவடி' (கா.ரிகை. உறுப். ௧௨.)

அளவடிவிருத்தம்—கலிவிருத்தம். (காரி கை. செய். ௧௩.) [நாற்சீரடியால் வரும் விருத்தமாதலின் இப்பெயர்த்து.]

அளவர்—1. அளக்கிறவர். 2. உப்பமைப் போர். 'பரதவரளவர் வாரிப் படுத்தமீனுப் பின் குப்பை' (கந்தபு. ஆற்று. ௩௦.)

அளவல் — 1. அளவுதல், கலத்தல். 'கோற்றேனி லளவுந் தீஞ்சொல்' (கூர்மபு. கண்ணன்மண. 71.) 2. பொருந்தியிருத்தல். 'வளமலிகாஞ்சி தன்வைப்பிடை - யளவலி னிந்தவடுக்கலை' (தணிகை. விடை. ௩௧.) 3. எட்டுதல். 'கொண்டலைபளவியகோங்கு பூத்தவே' (கந்தபு. இந்திரனருச். ௧௮.) 4. கலப்புறுதல். 'புறத்திணைக்கண் இயற் பெயர் அளவிவரும்' (தொல். பொருள். 55. உரை) 5. உசாவுதல். (தொல். பொருள் 146)

அளவழிச்சந்தம் — குருவும் இலகுவும் ஒவ்வாதனவாய் மற்றவை யொத்த அடிக ளால் வருவன. (சிந்தா. கடவுள். ௧. உரை.)

அளவழித்தாண்டகம்—குருவும் இலகுவும் ஒவ்வாது மற்றவை யொத்துவருவன. (சிந் தா. கடவுள். ௧. உரை.) [அளவு; அழி-அழிந் தது.]

அளவளத்தல்—கலத்தல்.

அளவளாதல்—அளவளாவுதல்.

அளவளாய்-அளவளாவியெனப் பொருள் படும் ஒரு வினையெச்சம். 'அருந்ததிகணவன் வேர்தோடளவளாய்' (கூர்மபு. இராமனவ. ௭௮.)

அளவளாவல்—அளவளாவுதல்.

அளவளாவு—1-3. அளவளாவென்னேவ லும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத் தொகையும். 4. கொண்டாட்டம், நெஞ்சு கலத்தல். 'அளவளாவில்லாதான் வாழ்க்கை' (வள். ௫௨௩.)

அளவளாவுதல்-கொண்டாடுதல், நெஞ்சு கலத்தல். 'ஆனவுபசாரமொழிகூறியவரோ டளவளாவியபின்' (இராமா. அநும்ப. ௫௪.)

அளவறுத்தல் — அளவு வரையறுத்தல். 'அளவறுப்பதற்கரியவன்' (திருவாச. திருச் சத. ௩௫.)

அளவன்—1. அளக்கிறவன். 2. உப்பமைப் போன். 3. சோரபாடாணம். (மூ. அ.)

அளவி — அளவு. 'அளவியையார்க்குமறி வரியோன்' (திருக்கோ. ௧௦.) [துறவு-துறவியெனநின்றாற்போல அளவு அளவி என நின்றது.]

அளவிடுதல் — 1. அளவுபடுத்தல். 'மன் னுற்றவெல்லை யளவிட்டுமால்கொளென்றே' (கந்தபு. அகத்தி. ௭.) 2. அளாவுதல், முட்டு தல். 'வானிலமளவிடவளர்ந்தபுன்னைகள்' (கந்தபு. இந்திரனருச். ௧௪.) 3. மட்டிட்டறி தல். 'அளவிடா வானந்தவடிவே' (தாயு. ஆரண. ௩.)

அளவிடை—1. அளவிடுகை. 2.நிருவாகம். 3. நிறை. 4. மட்டறிதல், மதிப்பிடல்.

அளவியல் — பாவின் அடிவரையறை. (தொல். பொரு. 313.)

அளவியற்சந்தம்—தனித்தனி நான்கெழுத் துச்சிறுமையும் இருபத்தாறெழுத்துப் பெரு மையும் பெற்று எழுத்தளவொத்துக் குருவும் இலகுவும் ஒத்தவடிகளான் வருவது. (சிந்தா. கடவுள். ௧. உரை.)

அளவியற்றாண்டகம்—அஃது: இருபத்தா றெழுத்துமுதலாக எழுத்தளவொத்துக் குரு வும் இலகுவும் ஒத்தவடிகளான் வருவது. (சிந்தா. கடவுள். ௧. உரை.)

அளவிறத்தல்—1. எண்ணிலதாதல். 2. எல்லைகடத்தல். 3. மீறுதல். [இறத்தல்-கடத்தல்.]

அளவின்மை—அபரிமிதம்.

அளவினர்—நேர்வாளம்.

அளவு — 1. எண்ணியறியப்படுதல், பரிமாணம். 'அளவில்பூதவெம்படையொடும்' (கந்தபு. குமாரபுரி. ௧.) 2. காட்சிமுதலிய அளவைகளைக்கொண்டு அளந்து உள்ளவாறறிதலாகிய நெறி. 'அளவின்கணின்றொழுகலாற்றார்' (வள். ௨௮௫.) 3. தாளமாத்திரைகளுளொன்று. அது: தாக்கின ஓசை நேரே மூன்றுமாத்திரைபெறுமளவும் வருதல். (சிலப். அரங்கே. ௨௫. உரை.) 4. பரந்த எல்லை, 'பாவைமாநிலத்தளவெனப்பகர்ந்தனர்' (கூர்மபு. மண்டல. ௨.) 5. மட்டு. 'தனித்தனியேதாமறிந்தவளவில்' (சி. சி. அ: ௧௬.) 6. வரையறை. 7. சமயம். 'நமக்குக் கிஞ்சித்கரிக்க நல்லவளவு' (ஈடு. 1. 4. 4.) 8. தன்மை 'ஏனவில்லா வளவினர்' (திருக்கோ. 308.) 9. நிலவளவு. (I. M. P. TJ. 1000.) 10. ஞானம். (ஈடு. 3. 7. 3.)

அளவுக்கல் — நீரேற்றங்காட்டுக் கல். (S. I. I. i. 130.)

அளவுகோல் — நிலம் அளக்குந் தண்டு. 'வியனிலத்தளவுகோல்' (பிரபுலிங். துதி. ௧௯.)

அளவுதல்—கலத்தல். 'கனியினமிழ்திற் கோற்றேனி - லளவுந்தீஞ்சொல்' (கூர்மபு. கன்னன்மண. ௭௧.)

அளவுபடுத்துதல்—வரையறைசெய்தல்.

அளவுபடை—சிறுசேனை. 'அளவுபடைக்குப் பெரும்படை தோற்பது' (ஈடு. 2. 4. 7.)

அளவுவர்க்கம்—ஒரு பழையவரி. (S. I. I. II. 247.)

அளவெடுத்தல் — ஒன்றினுடைய நீளம் அகலமுதலிய அளவைக் குறித்தல். [அளவு; எடுத்தல்.]

அளவெண் — அம்போதரங்கவகையுள் ஒன்று; அது: நாற்சீர் ஓரடியாக நான்கடி வருவது. 'கனல்படவிழித்துக் காமற் காய்ந்தனை - மனைவிவேண்டலின் மரித்தவற்றந்தனை - பருவரைபெயர்த்த வரக்கனை நெரித்தனை - புரிநரம்பின்னிசை புகன்றவற்கருளினை' (காரிகை. செய். ௧௦.) [வீரசோழியவுரைகாரர் இருசீரடிபதினாறினை அளவெண் என்பர். வீரசோ. யாப்பு. ௧௧.]

அளவை—1. அளவு; அஃது: எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என நான்கு வகைப்படும். 2. அளவுக்கருவி. 3. ஆராய்ந்தறிதல். 4. எண்ணியளந்தறியப்படுதல். 'ஆசினி வருக்கை யாதி யளவையில் கனிகள் சேறி' (கந்தபு. வில்-வதை. ௨௦.) 5. ஒருதருக்கநூல். 6. எல்லை. 'ஐந்தியாண்டென்னுமளவை நிற்ககன்றுழி' (கந்தபு. உமைகயிலை. 49.) 7. சமயம், காலம். 'அன்னதோரளவையில்' (கந்தபு. குமாரபுரி. ௩௨.) 8. தன்மை. 'அதன்பயமெய்தியவளவைமான' (பொருநரா. 92.) 9. நாள். 10. பிரமாணம். 'அளவைகாண்டல் கருதலுரை யபாவம் பொருளொப் பாறென்பர்' (சி. சி. அளவை. ௧.) [உலகத்துப்பதார்த்தங்களை எண்ணல் எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் நால்வகை அளவினால் அளந்தறியுமாறுபோலப் பதிமுதலிய பொருள்களைப் பிரமாணத்தினால் அளந்தறிதலினாற் பிரமாணம் அளவையெனப்பட்டது.] 11. அறிகுறி. 'இவையளவையாக விடர்க்கடல்கடத்தி' (கம்பரா. (பிராட்டி. 29.)

அளவைக்கால்—மரக்கால். (திவா.)

அளவைநூல்—தருக்கநூல். 'அளவைநூல் சொன்னூல் கற்றே கற்கவேண்டுதலின்' (குறள். 725. உரை.)

அளவையாகுபெயர் — ஆகுபெயர்வகையுள் ஒன்று; அஃது: எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் அளவுகளுள் ஒன்றன்பெயர் அவ்வளவையுடைய பொருளுக்காய்வரும் பெயர்; கால் என்னும் எண்ணலளவைப்பெயர் அவ்வளவைக்கொண்ட உறுப்பிற்காதல்போல. (நன். பெயரி. ௩௩.)

அளவைவிளக்கம்—பிரமாணங்களை விளக்கும் ஒருநூல். (சி. சி. அளவை. ௧. மறை.)

அளறல்—அளறுதல்.

அளறு—1-3. அளறென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. குழம்பு. 'வளமுலைச்சுண்ணமுமளறும்' (கல்லாட. ௨௮.) 5. குழைசேறு. (சூ. நிகண். ௫. ௨௮.) 6. நரகம். 'அளறேழுகோடியுறுவர்' (தணிகை. அகத்தி. ௨௮௮.) 7. நீர். 'குளிர்பொய்கையளறுநிறைய' (பரிபா. 8. 93.) 8. காவிக்கல். 'அளற்றுப்பொடி' (திவ். திருப்பா. 14. வ்யா.)

அளறுதல்—1. ஓயாதழைத்தல். 2. சிதறி வெடித்தல். 3. நெரிதல். 4. பின்னமாய்ப் பிளத்தல்.

அளறுபடுதல்—1. சேறுதல். 2. நிலைகலங்குதல். 'இராவணனை யளறுபட வடர்த்தானிடம்' (தேவா. 1026, 8.)

அளாய்குளாய் — பரபரப்பானசெய்கை. 'அளாய்குளாயாய்ப்போகுமது' (ஈடு. 9. 1. 9.)

அளாய—அளாவிய, கலந்த. 'ஆங்கெலா மகிழ்புகையளாயவாசமும்' (சிந்தா. கேமச. உக.)

அளாயின — 1. அளாவியவை எனப் பொருள்படும் ஒருவினைமுற்றுப்பலவின்பாற் பெயர். 'வாளும்வேலும்விட்டளாயினவனைய கண்மயிலே' (இராமா. சித்திர. உ.) 2. அளாவின எனப் பொருள்படும் ஒரு பலவின் பால்வினைமுற்று.

அளாவல்—அளாவுதல்.

அளாவன்—கலப்பு. 'அளாவனுனசத்துவத்தையுடையராய்' (ஈடு. 1. 1. 5.)

அளாவு — 1-3. அளாவென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும்வினைத்தொகையும்.

அளாவுதல் — 1. (கையால்) அளைதல். 'சிறுகையளாவியகூழ்' (வள். ௬௪.) 2. ஊடாடுதல். 3. எட்டுதல். 'மாயிருவிசும்பினையளாவு மன்னவன்-கோயிலை' (கந்தபு. மூவாயி. க.) 4. கலத்தல். 'அட்டதோர்புகைமுகிலளாவிற்றெருக்குமே' (கந்தபு. நாட்டு. ௩௩.) 5. சேர்ந்துபற்றல். 6. தடவுதல். 7. துழாவியாற்றுதல். 8. உசாவுதல். (குறள். 523.)

அளி—1. அருள். 'வலியுந்தெறலுமளியுமுடையோய்' (புறநா. உ.) 2-4. அளியென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 5. அன்பு. 'அடியுநீயினியென மகிழ்ந் தளியுட னளித்தான்' (பாரத. குருகுல. உ௫.) 6. எளிமை. 'தாய்த்தாய்க்கொண்டேகுமளித்திவ்வுலகு' (நாலடி. இளமை. ௫.) 7. கருந்தேனீ. 8. கள். 9. காகம். 10. காய். (மூ. அ.) 11. கிராதி. (திசைச்சொல்.) 12. குளிர்ச்சி. 'திங்களுளளியுநீ' (பரிபா. 3. 67.) 13. கொடை. (திவாகர. கக. க௪௬. பக்.) 14. சாந்தம். 'அளியருமனத்தன்புடையன்பருக்கு' (திருவிளை. விடை. உக.) 15. தேள். 16. தேன். 17. மதுரம். 18. வண்டு. 'அளியினுக் குணவதாந்தேறல்' (கந்தபு. தெய்வ. கரு௩.) 19. விருச்சிகராசி. 20. ஆசை. 'அளியாலிவ் வூர் காணு நலத்தின்' (கம்பரா. ஊர்தே. 83.) [7, 8, 9, 15, 16, 18, 19. அலி.]

அளிகம்—1. கட்டழகு. 2. நெற்றி. (பிங்.) 3. பொய். [ஃஅளீக: ஃஅளு - அலங்கரித்தல். ஐக - ஒரு விகுதி.]

அளிகுலம்— 1. தேனீக்கூட்டம். 2. வண்டுக்கூட்டம். 'இன்னிசைமுரன்றெழுமளிகுலம்' (திவ். பெரியதிருமொழி. திருவகிந்திர. இருந்தண். க.) [ஃஅளிகுல.]

அளித்தல்—1. அரசாளுதல். 'நீதியானுல களிப்பதேயரசர்தங்நெறியே' (கந்தபு. அவைபுகு. க௦உ.) 2. அருள்செய்தல். 'அஞ்சினர்க் களித்தலும் வெஞ்சினமின்மையும்' (சிறுபா. உக௦.) 3. ஈனுதல். (மகவாகப்) பெறுதல். 'காந்தார-பதியளித்தமெய்க்கன்னியை' (பாரத. சம்பவ. உ௩.) 4. காத்தல். 'தோற்றுவித் தளித்துப் பின்னுந் துடைத்தருடொழில் கண்மூன்றும்-போற்றவேயுடையனீசன்' (சி. சி. க: ௩௩.) 5. கொடுத்தல். 'அறவோர்க் களித்தலும்' (சிலப். கொலை. எக.) 6. சிருட்டித்தல். 'இத்திறமளப்பில்-காலம்யாவையுமளித்தனனிருத்தலும்' (கந்தபு. அபனைச் சிறைநீ. க.) 7. செறித்தல். (பிங்க. ௩க௦எ.) 8. பங்கிட்டுக்கொடுத்தல். 9. சொல்லுதல். 'முகமனளித்தும்' (கல்லா. 13.) 10. விருப்பமுண்டாக்குதல். 'அளித்தயில்கின்றவேந்தன்' (சீவக. 192.) 11. சோர்வைநீக்குதல். 'கொண்டவற் களித்ததோர் குளிர்கொள் பொய்கை' (சீவக. 1622.)

அளித்து–அளிக்கத்தக்கது. (புறப். வெண். 9. 25.)

அளிதல்—1. உருகுதல். 2. குழைதல். 'சோறளிந்துபோயிற்று' 3. கனிதல். 'மேம்பழுத்தளிந்தனசுளையும்' (சூளா. நகர. க௪.) 4. பிரியமாயிருத்தல். 'மந்தி யளிந்த கடுவனையே நோக்கி' (திவ். இயற். 3. 58.) 5. கலத்தல். 'சிறியார்களோடளிந்தபோது' (கம்பரா. ஊர்தே. 154.)

அளிது—1. அளிக்கத்தக்கது. 'அளிதோதானேயதுபெறலருங்குரைத்தே' (புறநா. ௫.) 2. இரங்கத்தக்கது. 'அளிதோதானே பாரியதுபறம்பே' (புறநா. க௦க.)

அளிந்தம் — 1. கோபுரவாயிற்றிண்ணை. 'தெளிபளிக்களிந்தம்'(சேதுபு. திருநா. ௪0௨.) 2. வீட்டின் வெளிச்சாலை. [அலிந்த.]

அளிந்தார்—அன்புடையார். (பழ. 182.)

அளிப்பாய்ச்சுதல்—வெலியிடுதல்.

அளிப்பு—சிருட்டிப்பு.

அளிய—அளிக்கத்தக்கன. (ஐங்குறு.)

அளியர்—1. அருளுடையவர். 'வேதவளிய ரிற்சிறந்த' (இரகு. தேநுவக். ௩௧.) 2. அன்புடையோர். 3. எளியவர். 'அளியராகிய வமரரும்' (கந்தபு. முதனாட்பா. ௮.)

அளியன்—1. அளிக்கத்தக்கவன். 'அளியன்றானேமுதுவாயிரவலன்' (திருமுரு. ௨௮௪.) 2. அன்புள்ளவன், இருபையுள்ளவன். 'பொன்றிலனளியன்போலப்புலம்பினன்வழி தேயென்னும்' (கந்தபு. அக்கினி. ௧௧௮.) 3. எளியன், தாசன். 'அவ்வயினலையகாண்டற் கமைதலாலளியனென்றான்' (இராமா. தைலமா. ௨0.)

அளீகதை — பொய்ம்மை. [அலீகதா: அலீக - பொய். தா - தன்மை.]

அளீகம்—1. நெற்றி. 2. பிரியமில்லாதது. 3. பொய். [அலீக.]

அளுக்கல்—1. அச்சக்குறிப்பு. (சூ. நிகன். ௮: ௫௩.) 2. குலைதல். (பிங்க. ௧௮௫௩.)

அளுக்கு — 1-3. அளுக்கென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும்வினைத்தொகையும்.

அளுக்குதல் — 1. அஞ்சுவித்தல். 2. குலைதல். (திவா)

அளுங்கு—அழுங்கு.

அளேசுவேப்பம்- } அதிவிடயம். (மூ.அ)
அளேசுவேப்பு- }

அளேநகம்—தூதுளை.

அளை—1-3. அளையென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. எலிமுதலியவற்றின்வளை. 5. ஏழாம்வேற்றுமையுருபுகளுளொன்று. 'கல்லளைச்சுனைநீர்' (நன். பெயரி. ௭௫. உரை) 6. குழி. 7. தயிர். 'பாலளையிளேடுறமோதனம்' (கந்தபு. ததிசியுத். ௫௫.) 8. புற்று. 'பாம்பளைபுகுவதே போல்' (கந்தபு. ஆற்று. ௩௩.) 9. பொந்து, வளை. (ஐங்குறு.) 10. மலைக்குகை. 'அளைச்செறியுழுவையுமாளியுமுளியமும்'(குறிஞ்சிக். ௨௫௨.) 11. மோர். 'அளைவிலையுணவிலைச்சியர்தம்மொடு' (சிலப். கொலை. ௩.) 12. வெண்ணெய். 'அம்புலாங்கடலலைத்தநாளாரளைக்கள்வன்' (சேதுபு. விதும. ௭௫.) [அளை-தயிர், வெண்ணெய்.]

அளைகுதல்—அளைதல். [கு-ஒருசாரியை.]

அளைதல்—1. அருந்துதல், அனுபவித்தல். 'அளைவது காம மடுநறவு' (சிந்தா. கேமச. ௧௪0.) 2. கலத்தல். 'ஊனளைந்தவுடற்குயிராமெனத்- தானளைந்துதழுவினதண்ணுமை' (இராமா. பள்ளி. ௧௫.) 3. தீண்டுதல். 'வேழத்தங்கம்பிளந்தளைவதல்லாமல்' (கூர்மபு. வயிரவர்பலி. ௫௧.) 4. தொட்டழுக்காக்கல். 5. புரளுதல். 'தாதளைந்தினவண்டு கண்படு' (நைட. அன்னத்தைக்கண். ௨.) 6. வருடல். 7. குழைதல். 8. துழாவுதல். 'இன்னடிசில் புக்களையுந் தாமரைக்கை'(நள. கலிதொ. 68) 9. தழுவுதல். 'என் னணியார் முலையாக மளைந்து' (திருவாச. 49. 4.) 10. கூடியிருத்தல். 'ஆர்வமொடளைஇ' (தொல். பொருள். 146)

அளைமறிபாப்பு— } பொருள்
அளைமறிபாப்புப்பொருள்கோள்- }

கோளெட்டினுளொன்று; அது: செய்யுளின் இறுதியி னின்றசொல் அதன் இடையிலும் முதலிலும் சென்று பொருள்கொள்ளப்படுவது. 'தாழ்ந்தவுணர்வினராய்த் தாளுடைந்துதண்டூன்றித் தளர்வார்தாமுஞ் - சூழ்ந்தவினையாக்கைசுடவிளிந்துநாற்கதியிற் சுழல்வார்தாமு - மூழ்ந்த பிணிநலிய முன்செய்தவினையென்றேமுனிவர்தாமும் - வாழ்ந்தபொழுதினேவானெய்துநெறி முன்னிமுயலாதாரே'என்பதிற்போல.(நன். பொதுவி. ௫௫. உரை.) [அளை - புற்று. மறி - மடங்குதல். பாப்பு - பாம்பென்பதன் விகாரம்.]

அளையெடுத்தல்—1. புரைசெய்தல். 2. வளைதோண்டுதல்.

அளைவு — அளைதல். 'இழுதளையளைவுறு செயலால்' (திருவிளை. அன்னக்குழி. ௧௧.)

அளைவைத்தல்—அளையெடுத்தல்.

அற்கத்தி—திப்பிலி. (மலை).

அற்கம்—1. அலரி. 2. குன்றி. 3. தும்பை. 4. துளசி. 5. நந்தியாவர்த்தம். 6. முருக்கு. 7. வன்னி. 8. வெண்டுளசி. 9. வெள்ளெருக்கஞ்செடி. 10. வேம்பு. (இராசவைத்.)

11. அடக்கம். 'அற்கமொன்று மறிவுறுள்' (திவ். திருவாய். 6. 5. 4.)

அற்கல்—1. அடைதல். 'பொம்மன்முலையாளையற்கச் செய்தயாப்பினராகி' (சிந்தா. குணமா. உ௪௦.) 2. அறிவு. 3. தங்குதல். 'வன்னிலமவற்றினற்கும் வன்குரம்' (தணிகை. நகர. உ௩.) 4. நிலைபெறுதல். 'அற்குபவாங்கேசெயல்' (வள். ௩௩௩.)

அற்கன்—சூரியன். 'அற்கன்மேல் வருமெழிலிகளென.' (கந்தபு. கயமுகன்வ. 35.)

அற்கா — நிலையாத 'அற்காவியல்பிற்றுச் செல்வம்' (வள். ௩௩௩.) [அதற்காத என்னும் எதிர்மறைப்பெயரெச்சம் அற்கா என நின்றது.]

அற்காமை—1. அறிவின்மை. 2. நிலையாமை.

அற்கி—ஓரிலைத்தாமரை. (இராசவைத்.)

அற்குதல் — நிலைபெறுதல், நிலைத்தல், தங்குதல்.

அற்சிரம் — முன்பனிக்காலம். 'அற்சிரமறக்குநரல்லர்' (ஐங்குறு. 464.)

அற்சிரை — அற்சிரம். 'அற்சிரைவெய்யவெப்பத்தண்ணீர்' (குறுந். 277.)

அற்பக்கியன் — சிற்றறிவுடையவன். 'அற்பக்கியனுகியசிவற்கு' (சூத. எக்கி. உத், ௩: அ.) [ஸ்வஜ்ஞ: ஸ்வ - சிறிது. ஜ்ஞ - அறிந்தோன்.]

அற்பகந்தம் — செந்தாமரை. [ஸ்வ ஗ந்த: ஸ்வ - குறைவு. ஗ந்த - மணம். மணங் குறைந்ததென்றபடி.]

அற்பகம் — 1. சிறுமை. 2. நுட்பம். [ஸ்வக.]

அற்பகேசி—வசம்பு. [ஸ்வகெஶீ: கெஶிநு - மயிருடையது.]

அற்பச்சுருதிவாக்கியம் — கர்மாநுஷ்டானக்கிரமங்களைச் சொல்லும் வேதவாக்கியம். [ஸ்வஶ்ருதி; வாக்ய.]

அற்பசி—1. ஐப்பசி. (அக. நி.) 2. அச்சுவினி. (அக. நி.)

அற்பசுருதி—கருமகாண்டம். [இதுவேதத்தின் ஒருபகுதி. ஸ்வஶ்ருதி.]

அற்பசோபாட்சிபாகரோகம்— கண்களில் வரும் ஒருவகைச் சங்கரரோகம்; அது: கண்களில் அற்பவீக்கமாய்ச் சோபாட்சிபாகரோகத்தின்குணங்களையெல்லாம் உண்டாக்குவது. (சீவரட். உ௬௦.)

அற்பத்தனம்—சிறியகுணம்.

அற்பதநம் — திரவியக் குறைவுடைமை. [ஸ்வ ய௩: ஸ்வ - சிறிய. ய௩ம் - செல்வம்.]

அற்பதை — இழிவுத்தன்மை. ஸ்வதா: தா - தன்மை.]

அற்பப்பிராணன்—1. சிறுமூச்சு. (சப்தசங். ௫.) 2. சிறுமூச்சுடன் உச்சரிக்கப்படும் எழுத்துக்கள்; அவை: ஸம்ஸ்க்ருதபாஷையிலே 'க' வர்க்கம் முதலிய ஐவருக்கங்களினும் ஒன்று மூன்று ஐந்தாம் எழுத்துக்களும், ய ர ல என்பவைகளுமாம். (சப்தசங். ௫.)

அற்பபத்திரம்—1. ஒருவகைத்துளசி. 2. திருநீற்றுப்பச்சை. [ஸ்வபத்ர: ஸ்வ - சிறிய. பத்ரம் - இலை.]

அற்பபதுமம்—செந்தாமரை. [ஸ்வபத்ம.]

அற்பம்—1. அணு. 2. இலேசு. 3. இழிவு. 'அற்பமென்னவமராவதியையே' (பாரத. வாரணு. ௧௧௧.) 4. சிறுமை. 'பழு-நன்னியற்பநகும் பரிதிப்படை' (இரகு. திக்கு. ௧௭௭.) 5. நாய். (அக. நி.) 6. பஞ்சு. 7. புகை. [ஸ்வ.]

அற்பமரிசம்— } சிறுகீரை. (மலை)
அற்பமாரிடம்— } [ஸ்வமாரிஷ.]

அற்பர்—கீழ்மக்கள். அறிவிலாத - வற்பரானவர்க்குச் செல்வ மல்லது பகைவேறுண்டோ' (திருவிளை. இந்திரன்பழி. ௬௫.)

அற்பரம்—மக்கட்படுக்கை.

அற்பருத்தம்—வாழை. (மலை).

அற்பாசி — ஆருதாரங்களுள் ஒன்றுகிய விசுத்தியினது பதினறு பதுமதளங்களுள் ஒன்றிலிருக்கும் அதிதேவதை. (சி. சி. அ: உ௧. மறை.)

அற்பாயு — } 1. அற்பவயசு, குறைந்த
அற்பாயுசு— } வாழ்நாள். 'அற்பாயுநாற்கென்றேயமலன்வேதம்' (சிவதரு. பரமதரு. உ௬.) 2. அற்பவயசுடையவன். 3. குட்டி. 4. வெள்ளாடு. [1, 2, 3, 4. ஸ்வாயுஸ்: ஸ்வ - சிறிய. ஆயுஸ் - வயது.]

அற்பாலங்காரம்—சிறுமையணி, அஃது தற்பமான ஆதேயத்தைப்பார்க்கினும் ஆதாரத்தை யற்பமாகக்கூறுவது. (குவ. ௬௨.)

அற்பிதம்—அர்ப்பிதம்.

அற்பியம்—மிக அற்பம். [அல்பீயஸ் - சிறு; ஈயஸ் - ஒரு விகுதி.]

அற்புத்தளை—நேசபந்தம். 'அற்புத்தளையு மவிழ்ந்தன' (நாலடி. இளமை. ௨.)

அற்புதக்கண்—அபிநயக்கண்வகை. (பரத. பாவ. 95)

அற்புதசயா—சாத்துக்கடுக்காய். (தைல. தைலவ. ௧௨௫.)

அற்புதம்—1. அழகு. (திவா.) 2. ஆச்சரியம், அதிசயம். 'அற்புத புத்திரமுத்தியளித்தருளாலே' (திருவாதவூ. மந்தி. ௧௧.) 3. சிதம்பரம். 'சுத்தம் பரமற்புதமெய்ப்பதம்' (கோயிற்பு. வியாக். ௨௧.) 4. ஞானம். 'அற்புதமூர்த்தி' (நன். சிறப்பு.) 5. ஆயிரங்கோடி (பிங்க. ௨௨௩௮.) 6. ஓரலங்காரம். [அத்புத.] 7. நவரசத்தொன்று. (திவா.)

அற்புதமூர்த்தி—கடவுள். 'அற்புதமூர்த்தி தன்னலர்தருதன்மையின்' (நன். சிறப்பு.) [அத்புதம் - ஞானம். மூர்த்தி - மேனியுடையோன். ஞானமே மேனியாக உடையவன் என்றபடி.]

அற்புதர்—1. கம்மாளர். 2. ஞானமுடையவர்.

அற்புதவாதம்—ஒரு வாதநோய்.

அற்புதன்—1. ஆச்சரியபூதன். 'அற்புதவகோசர' (தாயு. கருணா. ௧.) 2. ஒன்பதா மநுவின்காலத்துள்ள இந்திரன். 'வாய்த்த திறலொன்பதாமநுவினும்ம் வழங்குதக்க சாவணன்மகவானுமக் - கோத்தபுகழ்ச் சுதையுலகமுழுதாக்கிட்டுங் குணமுடையற்புதனென்றுகூறுவாரால்' (கூர்மபு. மநுவந். ௨௨.) 3. கடவுள். 'தனிவேற்செங்கையற்புதன்றன்னை' (கந்தபு. கந்தவி. ௨௦.) 4. கம்மாளன்.

அற்புதாக்கிரம் — ஒருவகைநோய்; அது குழந்தை பிறந்த பன்னிரண்டாநாளிலாவது பன்னிரண்டாமாதத்திலாவது பன்னிரண்டாம்வருடத்திலாவது குழந்தைக்கு அல்லது தாய்க்கு வருவது. (சீவரட். ௨௨௮.)

அற்றப்படுதல்—1. கவனத்தினிடையறவுபடுதல். (தொல். பொருள். 260. உரை.) 2. இல்லாமையாதல். 'ஆளற்றப்பட்டிரந்தாள்' (திவ். இயற். திருவிருத். 29.)

அற்றம்—1. அச்சம். 'செற்றியவசுரர்தஞ் சேனைதன்னுடன்-அற்றமிருரக னமர்தன் மேயினான்' (கந்தபு. தாரக. ௮.) 2. அவமானம். 'அற்றமறைக்கும்பெருமை' (வள். ௯௮௦.) 3. அழிவு. 'அறிவற்றங்காக்குங் கருவி' (வள். ௪௨௧.) 4. இல்லாமற்போஞ் சமயம். 'அருந்தவன் றந்தையையற்ற நோக்கியே' (இராமா. திருவவ. ௪௧.) 5. உண்மை. 6. குறைவு, கேடு. 'அற்றமிலிரக்கமுடன்' (கந்தபு. தெய்வ. ௨௨௫.) 7. சமயம், காலம். 'பிறங்குபொற் கதவங்கடிறக்கு - மற்றநோக்குவன்' (நைடத. நகர. ௨.) 8. சோர்வு. 'அற்றத்தினனுகியாசுரத்தின்பாற் போன' (கந்தபு. அசுரேந். ௧௨.) 9. துன்பம். 'இரக்தோரற்றந்தீர்க்கென' (புறநா. ௧௫௮.) 10. மறைக்கத்தக்கது. 'அற்றமறைத்தலோ புல்லறிவுதம்வயிற்-குற்றமறையாவழி' (வள். ௮௪௫.) 11. மெலிவு. 12. வறுமை. 'பண்பிலார்க் கற்றமறியவுரையற்க' (நாலடி. 78.) 13. பொய். 'அற்றமின்மையினவலநீக்கினார்' (சீவக. 1764.) 14. விலகுகை. 15. இடைவீடு. 'அற்றமில்பெரும்படை' (சீவக. 565.)

அற்றறுதி—முற்று யற்றுப்போதல்.

அற்றார்—1. அறு என்னும் வினையடியாற் பிறந்த ஒரு தெரிநிலைவினைமுற்று. 2. இறந்தோர். 3. நீக்கப்பெற்றவர். 'அவாவற்றார்' (வள். ௩௬௫.) 4. முனிவர். 5. வறியவர். 'அற்றாரழிபசிதீர்த்தல்' (வள். ௨௨௬.) 6. தம்மை ஒன்றற்கென்றேயொப்படைத்தவர். 'முதல்வன்பாதத்தற்றாரடியார்' (தேவா. 396. 10.)

அற்று—1. அத்தன்மை. 'அற்றால் விதித்திறங்கூடிற்றில்லை' (கந்தபு. உருத்திரர் கேள்வி. ௫.) 2. அத்தன்மைத்து. 'அற்றாகின்ற வேலையின்' (கந்தபு. ததீசியுத். ௨௪௧.) 3. அறு என்னும் வினையடியாற்பிறந்த ஒரு வினையெச்சம். 'வலியற்று' (கந்தபு. அக்கினிமுகா. ௭௨.) 4. ஒரு சாரியை. 'அங்கவற்றிடை' (கந்தபு. நகரப். ௭௫.) 5. குறிப்புமுற்றாகப் பொருள்படும் ஓர் உவமையுருபு. 'வாருணிநீர்நிறைந்தற்றே' (வள். ௨௧௫)

6. அற்றறுதிப்பட்டு. (புறப்பொருள் வெண். ௧௭௮. பக்.) 7. அதுபோன்றது.

அற்றுப்போதல் — 1. இல்லாமற்போதல். 2. இடைமுறிதல். 3. முழுதும் கைவருதல்.

அற்றுவிடல் — கழலுதல். 'இருண்மலவிக்கமற்றுவிட்டவே' (திருவிளை. அட்ட.௭௭.)

அற்றூரம்—மரமஞ்சள்.

அற்றேல்—அப்படியானால்.

அற்றை-1. அற்பம். [பலநாளில் வருவன போலாது ஒருநாள் வருவது சிறிதாதலின் அன்று என்பதின் ஆகுபெயராய் அற்பம் எனப் பொருள்பட்டது.] 2. அன்று. 'அற்றைவெஞ்சமரில்' (பாரத. பதினே. ௨.) ['அன்று' என்பது ஐகாரச்சாரியையும் வலித்தல்விகாரமும்பெற்று "அற்றை" என நின்றது.]

அற்றைக்கூலி — 1. அந்த அந்த நாளிற் பெறுங் கூலி. 2. அற்பக்கூலி.

அற்றைநாள் — அந்நாள். 'யான் காவல் பூண்ட வற்றைநாண் முதலா' (அரிச்ச. விவாக. ௨௬.)

அற்றைப்பரிசம்—விலைமாதர் ஆடவரிடம் அன்றன்று வாங்கும் விலை. (மணிமே. ௩௬௮.)

அற்றைப்பிழைப்பு — அன்றன்றுசெய்யும் ஜீவனம்.

அற்றைவாக்கியம்—நிகழ்கின்ற பஞ்சாங்க வாக்கிய காலமாகிய இருநூற்றுநாற்பத்தெட்டுத் தினங்களில் எடுத்துக்கொண்ட தினமாகிய அன்றைத்தினத்துக்கு ஆகிய வாக்கியம். இது பின்வருஞ்செய்யுளாற்பெறப்படும். "எல்லையி தினத்தின் மன்னன் வீடுசூழ் குளமெடுத்துப் - பல்லியோ லிக்கரித்த பலமுதலாகுஞ்சேடஞ் - செல்விகேழெதிர்மாவென் றரித்தது விருத்தஞ் சேடம் - சொல்லிடி லற்றை நாட்குத் தோன்றும் வாக்கியமதாமே" (பரகிதம். ௧௫).

அற — 1. செய என்னும் வாய்பாட்டில் வரும் ஒரு வினையெச்சம். 'போரறமலைந்து வென்று' (பாரத. பதினெ. ௨௬.) 2. மிக. 'அறவேதுயர்செய்தனுகாதிகலித்' (கந்தபு. காசிபன்பு. ௬௫.) 3. முற்ற. 'வகையறச் சூழாது' (வள். ௪௬௫.) 4. தெளிவாக. 'அறமறக்கண்ட......அவையத்து' (புறநா. 224.)

அறக்கடவுள்—1. இயமன். 'தொல்லறக் கடவு ளருளுட னளித்த தோன்றறன் றனை வரைகோக்கி' (பாரத. நாடுகா. ௩.) [நீதியை நடத்துவோன் என்றலின் வந்தபெயர்.] 2. விதுரன். 'சிறிப்புதல்வனுக்குநல் லறக் கடவுளுக்கு முறையா' (பாரத. வாரணு. ௫௪.) [இவன் வியாசருக்கு அம்பிகையின் றோழியிடத்திற் பிறந்தவன்; இயமனமிசமாக அவதரித்தவன் என்னும் கதைபற்றி வந்தபெயர்.] 3. தருமதேவதை. (குறள். 204. உரை).

அறக்கடை—பாவம்.

அறக்கப்பிளப்பி—திருநாமப்பாலை.

அறக்கம்—சுக்கு.

அறக்கருணை—அநுக்கிரகரூபமான கருணை.

அறக்கழிவு—உலகவழக்கிற்குப் பொருத்தமில்லாமை. 'அறக்கழிவுடையன் பொருட் பயம்படவரின்' (தொல். பொருள். 218.)

அறக்களவழி—வேளாண்டொழிலைக்கூறும் புறத்துறை. (மாறன. 120. உரை).

அறக்களவேள்வி—யாகச்செயல். (சிலப். 28. 131.)

அறக்கற்பு—மறந்தவிர்கற்பு. (திருவிளை. அங்கம். ௬.)

அறக்காடு—சுடுகாடு.

அறக்குளாமீன்—சூரைமீன்.

அறக்கொடி—உமை. 'அறக்கொடிபாகன்' [அறம் - முப்பத்திரண்டுவகைத் தருமங்கள். கொடி - பெண். முப்பத்திரண்டறங்களையும் வளர்த்தவளென்பதுபற்றிவந்தபெயர்.]

அறங்கடை—அறன்கடை, பாவம். 'எய்த்தும் - அறங்கடையிற்செல்லார்' (நீதிநெறி. ௯௫.)

அறங்கூறவையம்—நியாயசபை. 'அறங் கூறவையத் துரைநூல் கோடி.' (சிலப். 5. 135).

அறச்சாலை—தருமசாலை. 'பிறரறச்சாலைகள் காப்போரும்' (தணிகை. அகத்தி. ௩௪௦.) [அறம் - தருமம். சாலை - வீடு.]

அறச்செல்வி—1. உமாதேவி. 'அறத் தனிச்செல்விபாகவன்பிலேன்' (திருவாதவூ. திருப்பெ. ௧௯௨.) [முப்பத்திரண்டுவகையறங்களையும் வளர்ப்பவள் என்பதனால் வந்த பெயர்.] 2. தருமதேவதை. (சூ. நிகண். ௧: ௩௭.)

அறசம்—கத்தரி.

அறசோகணக்கு—கருணைக்கிழங்கு.

அறணை—காட்டுக்கருணை.

அறத்தவிசு — நியாயபீடம். 'அறத்தவி சிருப்போ ரெவ லாட்வ ரோடும் போந்து' (திருவிளை. மாமனா. கஎ.) [தவிசு - ஆசனம்.]

அறத்தளி—அந்தப்புரம்.

அறத்தின்செல்வி—தருமதேவதை.(பிங்).

அறத்தின்சேய்—பஞ்சபாண்டவருள் ஒருவனாகிய தருமன். (சூ. நிகண். உ: கசு.) [அறம் - இயமன். சேய் - புத்திரன்.]

அறத்தின்மூர்த்தி—1. தருமதேவதை. 2. பார்வதி.

அறத்துப்பால் — நான்குபுருடார்த்தங்களில் ஒன்றாகிய தருமநெறியைக் கூறும் பாகம்; அது: நாலடியார் வள்ளுவர் முதலிய நூல்களிலே இல்லறம் துறவறம் என இரண்டாகப் பகுத்துக்கூறப்படும்.

அறத்துறத்தல்—1. உலகப்பற்றை முற்றாக விடல். 'அறத்துறந்தோன்' 2. முற்றாகக் கைவிடல். 'ஈன்றறத்துறந்தவன்றையினும்' (பாரத. நிருட்டி. உருசு.) [அற - முற்ற. துறத்தல் - நீக்குதல்.]

அறத்துறந்தோன்—உலகப்பற்றை முற்றாகவொழித்தவன், சந்நியாசி. 'வானப்பிரத்தனறத்துறந்தோன்' (கூர்மபு. வருணாச். உக.)

அறத்துறுப்பு — அறத்துக் கங்கமாக எண்ணப்படுங் குணங்கள்; அவை: அழிந்தோரைநிறுத்தல், அறம்விளக்கல், ஐயப்படாமை, பழியைநீக்கல், மயக்கமின்மை, பேரன்புடைமை, விருப்பின்மை, வெறுப்பின்மை என எட்டு. (சூ. நிகண். கஉ: அங.) 'அறத்துறுப்பெய்தினுமன்பினாலறஞ் - சிறப்புறச்செய்தவிக்கரிது' (பிரபுலிங். இட்டலிங்க. கட.)

அறத்துறை — தருமநெறி. 'அறத்துறையறிந்தநீ' (பாகவ. 1. 8. 40)

அறத்தைக்காப்போன் — அரிகரபுத்திரனாகிய ஐயன். (சூ. நிகண். க: உஅ.)

அறத்தொடுநிலை — அறத்தொடுநிற்றல். 'ஆற்றறத்தோன்ற மறத்தொடுநிலையே' (அகப்பொ. அகத்திணை. சஎ.)

அறத்தொடுநிற்றல் — களவை முறையே வெளிப்படுத்திநிற்றல். 'தலைவிபாங்கிக்கறத்தொடுநிற்கும்' (அகப்பொ. அகத்திணை.சஅ.)

அறநரம்—மிருதபாஷாணம்.

அறநிலை—1. பிரமமணம். 2. மறைமுதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும் ஆகிய தருமநிலை. (வள். உரைப்பா. பரி.)

அறநிலைப்பொருள்—நெறிவழிநின்று தத்தம் நிலையினால் முயன்று பெறும் பொருள். (பிங்கல. எசுங.)

அறநிலையறம் — நான்குவருணத்தாரும் தத்தம் வருணநெறியிற் பிறழாது நிலைபெறப் பாதுகாத்தல். (பிங்க. எசுக.)

அறநிலையின்பம்—ஒழுக்கமும் குணமும் குலமும் பருவமும் ஒத்த கன்னிகையை அக்கினிமுன்னிலையில்வேட் டில்லறத்திருந்து அனுபவிக்கும் இன்பம். (பிங்க. எசுரு.)

அறப்பால்—அறத்துப்பால்.

அறப்புறம்—1. அறச்சாலை. 'மடமறப்புறநீர்ச்சாலை' (திருவிளை. நாட்டு. ஙங.) 2. ஓதும்பள்ளி. (திவாகர. ரு. சுங. பக்.) ஓதுவிக்குஞ்சாலை. (சிந்தா. நாமக. சஎ.) 3. தருமத்துக்கு விடப்பட்ட இறையிலிநிலம். 'அடிசில் வைக லாயிர மறப்புறமுமாயிரம்' (சிந்தா. நாமக. சஎ. உரை.) [புறம் - இடம். அறத்திற்குவிடப்பட்ட இடம் என்றபடி.] 4. பாவச்செயல். 'மறத்திறுக்குளாகின்றுவன்மைசெய்வதேயறப்-புறத்தினார் புரம்பொடித்த புண்ணியாவெனக்கரைந் - துறைத்துவேண்டினான்' (திருவிளை. தண்ணீ. கூ.) [அறத்திற்குட் படாதசெயல் என்றபடி.]

அறபு—அறபியாஷை.

அறம்—1. இயமன். 'அறத்தின்மைந்தன்' [நீதிநெறியைக் கருதும் அறமென்னும்பெயர் ஆகுபெயராய் அதனையுடையானுக்காயிற்று.] 2. கடவுள் அருளிய வேதாகமங்களில் விதித்தனசெய்தலும் விலக்கியன ஒழிதலும்; மறைமுதலிய நூல்களிலே விதித்தனசெய்தலும் விலக்கியன ஒழிதலுமாகிய ஒழுக்கம். (வள். உரைப்பாயி. பரி.) இது நான்குபுருடார்த்தங்களுள் ஒன்றாகவும் பெரியோரியல்பேழனுள் ஒன்றாகவும் சொல்லப்படும். 3. தீங்கினை வருவிப்பது. 4. புண்ணியம். 'அறம்பாவங்கள் பெரிதாற்றி' (தணிகை. அகத்தி. ஙஙங.) 5. முறைமை. 'அறங்கூர்மனத்தருளால்' (வாண. ருஎ.) 6. சமயம். (சீவக. 544.)

7. அறச்சாலை. 'அறத்துக்குப்புறத்தல்' (தமிழ்லெக்விகன்.) 8. நோன்பு. (சீவக. 386.) 9. தருமதேவதை. (குறள். 77.)

அறம்பகர்ந்தோன்—புத்தன். (மணிமே. ௬௪௭.) [தருமநெறியைச்சொன்னவன் என்றபடி.]

அறம்பாடல்—கையறம்பாடுதல்.

அறம்புறம்—முறைமையல்லாதது. [அறம்-முறை. புறம் - பின்.]

அறமறை—வாழை.

அறல்—1. அரித்தொழுகுதல். 'நீம்புளிக் களாவொடுதுடரிமுனையின் - மட்டறனல் யாற்றெக்கரேறி' (புறநா. ௧௭௭.) 2. அறுக்கப்பட்ட தன்மை. 3. அறுதல். 'ஆயிரங்கர மறலும்' (கந்தபு. யாளிமு. ௩௧.) 4. இல்லாமற்போதல். 'துறக்கமாண்டவறவோர்கடுப்பங்கறலும்' (தணிகை. அகத்தி. ௩௩௪.) 5. நீர்த்திரை. (திவா.) 6. கருமணல். 'நெடுந்திரைகொழித்ததெள்ளறலோ' (நைட. அன்னத்தைத்தூ. ௧௧.) 7. சிறுதூறு. (சூ. நிகண். ௪: ௫௬.) 8. நீர். 'அறவிற்புடைபெயருமயிலைத்தருவொருவி' (கந்தபு. சரவண. ௩௩.) 9. மயிர்நெறிப்பு. (பெரும்பாண். 162. உரை.) 10. கலியாணம். (மாறன. பக். 438.)

அறவணைப்பு—ஆதரிப்பு. 'ஐயன்புரியும் அறவணைப்பும்' (பணவிடுதூது.)

அறவர்—1. அறஞ்செய்தலைத்தொழிலாக வுடையவர். 'அறவர்க்கேய்தா விராச்சியமதனைமுன்னளித்த' (இரகு. தசர. ௪. ௪.) 2. பிராமணர். 3. முனிவர். (சூ. நிகண். ௨. ௧.) [அறம்; அர்.]

அறவழக்கம் — தருமோபதேசம். 'அருளிருந்த திருமொழியா லறவழக்கங் கேட்டிலமால்' (வீரசோ. யாப். 15. உரை.)

அறவன் — 1. புண்ணியசொருபனுகிய கடவுள். 2. புத்தன். (திவாகர.) 3. மறுநீதியிற் பிறழாதவன். 'அறவனியல்லையோவுன்னகத்தினுக்கிசைந்தசெய்கென் - றிறைவனதருளால் வானின்றெழுமொழிகேட்டுவைபைத் - திறைவனும்' (திருவிளை. தண்ணீ. ௩௬.) 4. முனிவன். (சூடா). 5. பிராமணன். 'அறவாடிதொடினும்' (பரிபா. 8. 68.)

அறவாக்கல்—அறவிடுதல். [அற - சிக்கற. ஆக்கல்.]

அறவாணர் — சிவன். 'அறவாணர்க்கன் பென்னுமமுதமைத்து' (பெரியபு. வாயி. ௮.)

அறவாழி—1. தருமசக்கரம். 'அருளோடெழுமறவாழி' (திருநூற். ௫.) 2. மிகுதியினுற் கடல்போன்ற அறச்செயல். 'அறவாழியந்தணன்' (வள். ௮.)

அறவாழியந்தணன்—1. அருகன். (திவாகர.) [தருமசக்கரத்தையுடைய அந்தணன் என்றபடி.] 2. கடவுள். 'அறவாழியந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற் - பிறவாழி நீந்தலரிது' (வள். ௮.)

அறவாழியாள்வோன் — புத்தன். (மணிமேக.)

அறவாழிவேந்தன் — அருகன். 'வென்றோர்பெருமானறவாழிவேந்தன் விரிபூந்தாமரைமேல்' (சிந்தா. முத்தி. ௨௧௬.)

அறவாளன்—அறச்செயலுடையவன்.

அறவி—1. அறமுடையது. 'பிறவியுமறவியும்பெற்றியினுணர்ந்த' (மணிமே.) 2. அறவழிநின்றோன் 'ஆசில்கொள்கையறவிபாலணைந்து' (சிலப். புறஞ்சே. ௧0௩.) 3. பொதுவிடம். (மணிமே. 7. 93.)

அறவிடுதல்—1. அறவாக்குதல், தன்டுதல். [அறவு; இடுதல்.] 2. முற்றாக நீக்குதல். 'அகமென்பது மென்னுததவு முளதமிலது மறவிட்டு' (ஞானவா. மாறுவே. ௭.) [அற; விடுதல்.] 3. விற்றல். 'ஆபத்துக்காலத்திலே அறவிட்டு ஜீவிப்பாரும்' (ஈடு. 3. 6. 9.)

அறவிய—அறத்தோடு கூடிய. (மணிமே. ௬௮.)

அறவியங்கிழவோன்—புத்தன். (மணிமே.)

அறவியான்—அறத்தினிற்போன். 'அறவியாற் காறுமூன்றுமமைந்த காலமிர்தமேந்த' (சிந்தா. குணமா. ௨௭௫.)

அறவிருத்தம்— தருமத்துக்குமாறுபட்டது. 'குலமார்கொடிநீயறவிருத்தங்குறிப்பதழகோ' (நல். பார. யயாதி. ௭௫.)

அறவிலை—சுத்தக்கிரயம். 'அறவிலைசெய்தனன்' (திவ். திருவாய். 8. 1. 10.)

அறவிலைவாணிகன் — பொருளை விலையாகக்கொடுத்து அறங்கொள்வோன். 'இம்மைச் செய்தது மறுமைக் காமெனும், அறவிலை வாணிகன்' (புறநா. 134.)

அறவினை — புண்ணியச்செயல். (குறள். 909.)

அறவு—1. அறுதல், தொலைதல். 'நீரற வறியாக்கரகத்து' (புறநா. க.) 2. அறுபட்ட இடம். 3. ஆசைநீக்கம். 'அறவேபெற்றார் நின் னன்பர்' (திருவாச. பிரார். ௬.) 4. வெளிகண்ட இடம். [வழக்.]

அறவுபதை—உபதை நான்கனுள் ஒன்று; அது: மந்திரிமுதலியோரைப் பரிசோதிக்குமிடத்து, அவரிடம் புரோகிதரையும் அறவோரையும் விட்டு, அவரைக்கொண்டு 'இவ்வரசன் அறவோனன்மையின் இவனைப் போக்கி அறனும் உரிமையு முடையானொருவனை வைத்தற்கெண்ணினம்; இதுதான் யாவர்க்குமியைந்தது; நின்கருத் தென்னை?' எனச் சூளுறவோடுசொல்லுவித்தல். (வள். ௫0௧. பரி.)

அறவுரை — தருமோபதேசம். (அருங்கலச். 116.)

அறவுளி — நோயாளி ஆரோக்கியமடையும்படி செபிக்கும் மந்திரம். 2. முடியுமிடம்; அறுமிடம், தீருமிடம்.

அறவூதல்—புடமிடல்.

அறவை—1. உதவியற்றநிலை. 'அறவையேன் மனமே கோயிலாக்கொண்டு' (திருவாச. 37. 6) 2. தீமை. 'அறவைத்தொழில் புரிந்து' (தேவா. 1197. 7.)

அறவைச்சிறை—கடுஞ்சிறை. 'ஸம்ஸாரமாகிற அறவைச்சிறை' (ஈடு. 1. 3. 11.)

அறவைச்சோறு — அநாதருணவுக்காகிய அன்னம். (பிங்க. ௧0௧.)

அறவைத்தல்—புடமிடுதல். 'வெள்ளியறவைத்தனைய நிறத்தர்' (கூர்மபு. நவகன். ௭.) 'அறவைத்தோங்கும் - பொன்னிறத்தர்' (கூர்மபு. நவகன். ௬.) [அற - களிம்பற.]

அறவைத்தூரியம் — அநாதர்அணியத்தகிய புடைவை. (பிங்க. ௧0௧.) [அறவை; அநாதர்; தூரியம் - புடைவை.]

அறவைப்பிணஞ்சுடுதல் — அநாதப்பிரேதத்திற் கிமக்கடன்செய்தல். (பிங்க. ௧0௧.)

அறவையேன்—அநாதையேன். 'அறவையேன் மனமேகோயிலாக்கொண்டாண்டு'(திருவாச. பிடித். ௬.) [என்-ஒரு தன்மைவிகுதி.]

அறவோர்—அறவர்.

அறவோர்பள்ளி — 1. அருகர்பள்ளி. 2. புத்தர்பள்ளி. 'அறவோர்பள்ளியுமறனோம்படையும்' (சிலப். இந்திர ௧௭௧.) [பள்ளி - வசிக்குமிடம்.]

அறவோன்—1. அருகன். 'அறிவனறவோனறிவுவரம்பிகந்தோன்' (சிலப். நாடு.௧௭௬.) [அறஞ்செய்தலையே தொழிலாகவுடையோன் என்றபடி.] 2. தருமக்குணமுள்ளவன். 3. பிரமன். 4. பிராமணன் 5. புத்தன். 'போதியணிதிகழ்நீழலறவோன்' (சிலப். நாடு.௧௨.)

அறனை—1. ஒருநோய். 2. மரம் முதலிய கருவிகள் நன்னிலையற்றுப்பேதப்பட்டிருக்குந்தன்மை. (வழக்.)

அறன்—1. அறக்கடவுள். 'வழிநின்றறனேயருளாய்' (சிந்தா. கேம. ௧0௧.) 2. அறம். 'அறனெனப்பட்டதேயில்வாழ்க்கை' (வள். ௪௧.) [இங்கே மகரத்துக்கு னகரம் போலி.] 3. இயமன். 'அறனுல்வந்த மைந்தன்' (பாரத. நச்சு. ௬அ.) 4. வேள்விமுதல்வன். (பரிபா. 3. 5.)

அறன்கடை-பாவம். 'அறன்கடைநின்றாருளெல்லாம்' (வள். ௧௪௨.) [அறத்தினீக்கப்பட்டமையின் அறன்கடையென்றார்.]

அறன்மகன்—பஞ்சபாண்டவருள் ஒருவனாகிய தருமன். 'ஆல்வரும்புரவித்திண்டேரறன்மகனநுசரான - நால்வரும்' (பாரத. இராய. ௬௬.)

அறனளித்துரைத்தல் — அறக்கிழவனையன்புசெய்தல். (தொல். பொரு. ௨௭0.)

அறனில்பால்—தீவினை. (ஐங்குறு.)

அறனிலாளன்—தருமமில்லாமையையுடையவன். (ஐங்குறு.)

அறனையம்—காட்டுக்கருணை.

அறனோம்படை — 1. தருமம்போதிக்குமிடம். 'அறவோர்பள்ளியுமறனோம்படையும்' (சிலப். இந்திர. ௧௭௧.) [அறன் - தருமம். ஓம்பு - காத்தல். அடை - அடுத்தது.] 2. தருமம் பாதுகாக்கை. (சிலப். 5. 179.) 3. தருமம் பாதுகாக்குமிடம். (சிலப். 5. 179.)

அறட்டுப்பிராட்டு—போதியதும் போதாததுமானது. (திவ். திருவிருத். 23. வ்யா.)

அறம்பை—தும்பை.

அறமி—1. தீயதன்மையுள்ளது. 2. இடக்குப்பண்ணுகிற குதிரை. (அசுவசா. 139)

அறமை-1. கவிழ்தும்பை (மலை.) 2. அறல் என்பதன் எதிர்மறைத்தொழிற்பெயர்.

அறயிரம்—ஆறுயிரம். (தொல். எழுத். 469. உரை.)

அறவிலை — அளவுக்குமேற்பட்ட விலை. 'நடந்துகொள்ளுநர்க்கறுவிலைபகர்ந்து நான் மாட - மிடைந்த வீதியுங் கவலையு முடுக்கரு மிடைந்து' (திருவிளை. விறகு. ௧௭.)

அறவிலைக்காலம்—கருப்புக்காலம்.

அறவுதல் — அடித்தல். 'மத்திகையினு லறுவி' (சீவக. 703.)

அறி—1-3. அறியென்னேவலும் தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. அறிவு. 'அறிகொன்றறியானெனினும்' (வள். ௬௩௮.) [இது முதனிலைத்தொழிற்பெயர்.]

அறிக்கி—கடுக்காய்.

அறிக்கை—1. அறியும்படி பண்ணப்பட்ட காவற்செயலாகிய கட்டுப்பாடு. (வழக்.) 2. அறிவித்தல். 'தானறவுயர்ந்ததுன்பந்தனை நினக்கறிக்கைசெய்ய' (வேதாரணியபு. மண வாள. ௩௩.) 3. குற்றத்தை ஒப்புக் கொள்கை.

அறிக்கைப்பத்திரம்—1. காவற்செயலாகிய கட்டுப்பாட்டையறிவிக்கும்பத்திரம். (வழக்.) 2. விசேடகாரியங்களை யறிவிக்கும்படி எழு தப்படும்பத்திரம். 3. வேள்வித்துணையினர், புரோகிதர், ஆசாரியர் முதலான தக்கோர் களுக்கு அரசர் அமைப்பிதுவென்று காரியங் களை அறிவித்தற் கெழுதப்படும் இலிகிதம். (மிருதிசங். ௩௧.)

அறிக்கைப்பத்திரிகை-அறிக்கைப்பத்திரம்.

அறிக்கையிடல் — அறியப்பண்ணுதல்.

அறிகண்ணி—எருக்கங்கிழங்கு.

அறிகரி — பிரத்தியக்ஷசாட்சி. 'அங்கியங் கடவுள் அறிகரியாக' (தொல். பொரு. 142. உரை.)

அறிகருவி—1. அறிதற்கருவியாகிய ஞானேந்திரியம் முதலியன. 'அறிகருவி யணையா' (சிவப்பிர. உ: ௧௰.) 2. சுத்ததத்து வம். (சிவப்பிர. உரை. சிதம்பர.)

அறிகிலாதார் — அறியவன்மையில்லாதார். 'செய்வதொன்றறிகிலாதார்' (பெரியபு. திரு ஞா. எ௧௨.) [இல்-ஆற்றலையுணர்த்தும் ஓர் இடைநிலை.]

அறிகுதல்—அறிதல். 'மாயனுமெனைத்தா னறிகுதல்' (பாகவத. உபதேச. எ௨.) [கு- ஒரு சாரியை.]

அறிகுறி — ஒன்றனை யறிவிக்கும்பொருட் டமைக்கப்பட்ட அடையாளம். 'திங்கள் மாட் டறிகுறியொன்று செய்துவைத்தன ரால்' (காஞ்சிப். நகர. அ௰.) ["ஓஒதல் வேண்டும்" இதன்கண் ஓகாரம் அளபெடுத் தமையை அறிவித்தற்கு, ஒகரம் அறிகுறி.]

அறிகை—அறிதல்.

அறிசா—பெருவரைமீன்.

அறிஞர் — 1. அறிவுடையோர். 'அறிஞர் சூழ்விலைக்-கோல்வளை மகளிர்பாற் கூட்ட மொத்ததே' (கந்தபு. நாட்டு. ௪.) 2. புலவர். 'ஆனசொற்றமிழ்வல்ல வறிஞர் முன்' (கந்த பு. அவையட. ௨.) 3. முனிவர். (சூ. நிகண். ௨: ௨.) [அறி; ஞ்-ஓர் இடைநிலை. அர் - ஒரு விகுதி.]

அறிஞன் — 1. அறிவுள்ளோன். 'அன்ன காலையில்வீரவாகுப்பெயரறிஞன்' (கந்தபு. வச்சிரவா. ௬௧.) 2. புத்தன். 3. புதன். (சூ. நிகண். ௧: ௬௧.) 4. புலவன். 5. முனிவன்.

அறிட்டம்—1. கடுகுரோகணி. 2. மிளகு. 3. வேம்பு.

அறிதல் — 1. உணர்தல். 'வல்லறிதல் வேந்தன்றொழில்' (வள். ௫அ௨.) 2. நினைத் தல். (பிங்.) 3. மதித்தல். 'யாமறிவதில்லை' (குறள். 61.) 4. அனுபவித்தல். 'கண்டுகேட் டுண்டுயிர்த்துற்றறியுமைம்புலனும்' (குறள். 1101.) 5. பயிலுதல். 'களவறிந்தார்நெஞ் சிற்கரவு'. (குறள். 288) 6. நிச்சயித்தல். 'அழிபடலாற்றலறிமுறையேன்று' (பு. வெ. 8. 19.)

அறிதுயில் — அறிவுகுன்றாதுசெய்யும் நித் திரை, யோகநித்திரை. 'அணிகிளரரவினறி துயிலமர்ந்த-மணிவண்ணன்' (சிலப்.நாடு.௧.)

அறிதுயிலமர்ந்தமூர்த்தி — விட்டுனு. (சூ. நிகண். ௧: ௧௪.)

அறிநன்-அறியவல்லன். 'கோடியர் தலைவ கொண்ட தறிந' (பொருநா. ௫எ.)

அறிப்பலம்—திப்பலி. (மலை.)

அறிப்பு-உணர்கை. 'நினைந்தவர் சிந்தையு ளறிப்புறுமமுதாயவன்' (தேவார. திருவே கம்பம். திருக்குறுந்தொகை. ௪. திருநாவு.)

அறிபொருள்வினா-தன்னால் அறியப்பட்ட பொருளையே அறிவொப்புக்காண்டல் முத லிய பயன்நோக்கி ஒருவன் வினவுவது. (தொல். சொல். இளவி. ௩௨. சேனா.)

அறிமடம்—1. தான்கூறுவது அறியும் அறிவில்லார்மாட்டுத் தான் அறிந்தும் அறியாதான்போன்றிருத்தல். (சூ. நிகண். அ: ௫௦.) 2. விளையாடும்பருவத்து நிகழும் அறியாமை. (தொல். பொரு. 264. உரை.)

அறிமுகம்-1. முன்கண்டறிந்த முகம். 'அறிமுகம்பிற காண்கிலே னடுத்த வூ ரறியேன்' (சேதுபு. வி௲ம. ௬௬.) 2. பழக்கம்.

அறியல்—1. அறிதல். (சி. சி. அளவை. ௫. சிவஞா.) 2. மூங்கில்.

அறியலுறவு-அறியவிரும்பியது. (தொல். சொல். கா. சேனு.)

அறியாதுடம்படல் — தந்திரவுத்திகளுள் ஒன்று; அது: தான் ஓதிய இலக்கணத்தின் வேறுபட வருவன தான் அறிந்திலனுக்கூறி அதன் புறத்துச் செய்வதோர் புறனடை. "கிளக்தவல்லவேறுபிறதோன்றினுங் - கிளக்தவற்றியலா னுணர்க்தனர்கொளலே" என்பது போல்வது. (தொல். பொரு. ௬௬௬.)

அறியாமை — 1. அறியாததன்மை. 'அறிவினிற்சிறியரோ ரறிந்தறியாமையாலும்' (தணிகை. விராட். ௬௦௪.) 2. ஆணவமலம். 'அறியாமையிற்கட்டுணலுற்ற தென்னுண்மை' (வைராக். சதக. தோத்தி. ௭௩.) 3. ஆன்மா ஆணவமலத்தான் மறைப்புண்டு மயக்கமுற்றிருக்குங் கேவலாவத்தை. 'அறியாமையறிவகற்றி' (சி. சி. அ: ௩௦. மறை.) கருவிகளெல்லாம் நீங்கி ஒன்றும் அறியாமற் கிடக்கிற அதீதாவத்தை. (ஷை நிரம்ப.)

அறியாவறிவு — அறிதற்கரிதாய அறிவு. 'சானுறென்றறியா-வறிவை-யறிந்து' (ஒழிவி. அறவு. உ௩.)

அறியாவினு—தான் அறியாததொன்றை யறிதற்கு வினவும் வினு. (இலக்கணவிளக். ௩௦௯.)

அறியுநர் — அறிகிறவர்கள். 'அறியுநராவி போழு மசங்கனங்கணையும்' (சிந்தா. கஙக. கசு.)[அறி; உ - ஒரு சாரியை. ந் - ஓர் இடைநிலை. அர் - ஒரு விகுதி.]

அறிவர்—1. அறிவார் எனப் பொருள்படும் ஒரு முற்றுவினை. 2. கம்மாளர். (திவாகர.உ.) 3. நல்ல அறிவுடையோர். 'அறிவர் தேர்குறின்' (கந்தபு. மார்க்கண். உ௫௬.)

அறிவர்சிறப்பு — இறைவர்பூசனை. 'கற்றுநஞ் சீல நடுக்காத் தவமறிவர் சிறப்பிற் நான்கும்' (சிந்தா. கேமச. ௬௩௪.) [அறிவர் - இறைவர். சிறப்பு - பூசை.]

அறிவரன்–1. அருகன். 'அறிவரனீயன்றே' (சிந்தா. பதுமை. அக.) [அறிவுக்குவரன் என்றபடி.] 2. அறிவிற்சிறந்தவன்.

அறிவழி—1. கள்ளு. 2. பிசாசம். [அறிவு; அழி - அழிப்பது.]

அறிவறிவாக — விவரமாய்த்தெரிந்து கொள்ளும்படி. 'மரியாதைகளும் அறிவறிவாக விசாரித்து' (கோயிலொ. 42.)

அறிவறை—1. அறிவற்றவன்-வள்-து. 2. அறிவற்றதன்மை.

அறிவறைபோதல் — அறிவுகெழற்றுப் போதல். (சிலப். 20. 25.)

அறிவன்–1. அருகன். 'அறிவனறவோன்' (சிலப். நாடு. ௧௭௬.) 2. அறிவுடையோன். 'அந்தமிலறிவனிவணங்கி' (இராமா. மந்திர. ௧௨.) 3. உத்திரட்டாதி. (வீமேசுர. ௧௬. உரை.) 4. கடவுள். 'அநாதியேயமலனுயவறிவன்' (சி. சி. அளவை. ௧௩. மறை.) [எல்லாம் அறிகிறவன் என்றபடி.] 5. கம்மாளன். (திவா.) 6. சிவன். 'அறிவனேயமுதே' (திருவாச. திருச்சதகம். ௫௦.) 7. செவ்வாய். (பிங்க. உ௩௦.) 8. புத்தன். (பிங்.) 9. புதன். (திவா.) 10. விட்டுணு. 11. வியாழகுரு. 'அல்லவுற் றறிவன்றன்னைத் தேடுவா னுயினனே' (திருவிளை. இந்திர. ௫.) 12. கணி. (கலித். 39.)

அறிவனுள் — உத்திரட்டாதி. (திவாகர.)

அறிவாகரன் — ஞானத்துக்கு இருப்பிடமாக வுள்ளவன். [அறிவு; ஆகரம்-இருக்கை.]

அறிவாளர் — அறிவுடையோர். 'செஞ்சொலறிவாளர்' (இராமா. நாகபா. உசு௩.)

அறிவாளி—அறிவுடையவன்-வள்.

அறிவிக்கை—அறிவிப்பு.

அறிவித்தல்—1. அறியச்செய்தல். 'அத்தகு கடவுடன்னையறிவிக்குங்குரவன் யாவன்' (சூத. முத்தி. க: உ௦.) 2. பிரசித்தஞ்செய்தல். [வி - ஒரு பிறவினைவிகுதி.]

அறிவிப்பு–அறிவித்தல், பிரசித்தஞ்செய்தல்.

அறிவிலார்—1. அறிவில்லாதவர். 2. புல்லறிவாளர். 'அறிவிலார்தாந்தம்மைப் பீழிக்கும் பீழை' (வள். அசரு.)

அறிவிலி—1. அறிவில்லாதவள். 'ஆதியாதலி னறிவிலி யடங்குதி யென்றாள்' (இராமா. மந்தரை. ௬௭.) 2. அறிவில்லாதவன். 'அறிவிலியுடனே' (பாகவ. சிந்து. உ௬.)

அறிவிற்பரிந்தான் — சோழன். 'அறிவிற் பரிந்தா னகத்தினெடும்' (சிவதரு. பாவ. ௩௩.)

அறிவினா—அறுவகை வினாக்களுள் ஒன்று; அஃது; ஒருவன் தான் அறிந்தபொருளைக் குறித்து வினவுதல்; ஆசிரியன் மாணாக்க னிடம் வினவுவதுபோல்வது. (நன். பொது வி. ௩௪. உரை.)

அறிவீநம் — அறிவுக்குறைவு. [ஹீநம் - குறைவு.]

அறிவீநன்—அறிவுக்குறைவுடையோன்.

அறிவு—1. அறிதல். 'அறிவுறு ம்பொருளோ ரீசன்' (சி. சி. ௬: க.) 2. அறிதற்கருவி யாகிய இந்திரியம். 'அறிவுடல்சிந்தை யான்மா' (சி. சி. ௪: உக. ஞானப். மறை.) [மேற்கூறியசெய்யுளில், அறிவு என்பது விஞ்ஞானநந்தமயகோசமாகிய காரணசரீ ரம் என்பர் சிவாக்கிரயோகியர்.] 3. அறிய வேண்டியது. 'அறிவறிந்தமக்கட்பேறு' (வள். ௬க.)4. இயல்பாகிய அறிவோடுகூடிய கல்வியறிவு. 'தம்மிற்றம்மக்களறிவுடைமை' (வள். ௬அ.) 5. ஞானசத்தி. 'ஈசனருளிச்சை யறிவியற்றல்' (சி. சி. பாயிர. உ.) 6. புத்தி. 'எதிராதாக்காக்குமறிவினார்க்கு' (வள்.௪உக.) 7. பொறியுணர்வு. 8. ஆன்மா. 'அறிவுரு வதனோடநித்தமன்மையும்.' (ஞானா. 44. 5.)

அறிவுகேடன்—ஞானமற்றவன். (ஈடு.)

அறிவுகொளுத்தல் — போதித்தல்.

அறிவுசூடு — நினைத்திருக்கத்தக்கதாகச் செய்யுஞ்செயல். [சூடு - சுடுதல்.]

அறிவுடைமை — உண்மையறிவுடையனாகு தல். (வள். அதி. ௪௩.)

அறிவுணர்த்தல்—அறிவுறுத்தல்.

அறிவுநூல்—ஞானசாத்திரம். 'அறிவுநூல் கல்லாது' (நாலடி. 140.)

அறிவுமடம்—தான்கூறுகின்றவற்றையுண ரும் அறிவில்லார்மாட்டுத் தானும் அறியா தான்போன்றிருத்தல். 'அறிவுமடம்படுதலு மறிவுநன்குடைமையும்' (சிறுபா. க௬.)

அறிவுவரம்பிகந்தோன் — 1. அருகன். 'அறவோனறிவுவரம்பிகந்தோன்' (சிலப். நாடு. கஎ௬.) 2. வரம்புகடந்த அறிவினை யுடையோன்.

அறிவுறல்—அறிவுறுத்தல். 'நாமறிவுறலிற் பழியுமுண்டோ' (குறிஞ்சிப். உஉ.). [அறி வுறு; ஆல்.]

அறிவுறுத்தல்—1. தெரிவித்தல். 'சான்றீ ருமக்கொன்றறிவுறுப்பென்' (கலித்தொகை. க௩௬.) [உறுத்தல்-உறச்செய்தல்.] 2. அறிவு புகட்டுதல்.

அறிவுறுதல்—1. அறிதல். 2. துயிலெழு தல். 'சீரிய சிங்க மறிவுற்று'. (திவ். திருப்பா. 23.)

அறிவை — ஞானம். 'அறிவையென்னு மமுதவாறு' (திவ். பெரியாழ். 5. 4. 2.)

அறு—1-3. அறு என்னேவலும் தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. ஆறு என்னும் எண்ணுப்பெயரின் விகாரமாய்ப் பிறிதொருபெயர்ச்சொல் தொடர வருவது. 'அறுமுகமுடையவோரமலன்மாக்கதை' (கந் தபு. அவையட. க.)

அறுகை—அறுத்தல்.

அறுகடி—அறுகுபற்றியநிலம்.

அறுகரிசி—அக்கதை, விவாககாலத்திலே நாயகனுக்கும் நாயகிக்கும் சாத்தும் அறுகம் புல்லோடு கூடிய அரிசி. 'சென்னி-திருத்த முறுமறுகரிசியிட்டு' (திருவானை. கோச். க௩.)

அறுகழி—நீரற்ற கழி. (ஐங்குறு.)

அறுகால்—1. அறுகிறபொழுது, இல்லாத போது. 'அரிக்கிணைக்கிசைபவூதுங் - குழலி சையறுகால்' (அருணாசலபு. திருக்கண். ௪௫.) 2. தேனீ. 3. வண்டு. 'அறுகாற்பே டிசை பாடும்' (திருவிளை. பாயிர. ௩0.) 4. பாம்பு. (திருவிளை. பாயி. ௩0)

அறுகாழி — மோதிரவகை. 'கையுமறு காழியுமான வடிவை'. (ஈடு. 8. 10. 6)

அறுகிடுதல் — விவாகத்தில் அறுகிட் டாசிர்வதித்தல். 'மங்கைக்கறுகிடவந்துநின் றார்' (தமிழ்நா. 50.)

அறுகீரை—அறைக்கீரை. 'சேம்பறுகீரை' (தைல. பாயிர. ருஅ.)

அறுகு—1. ஆண்புலி. 2. ஆளிவிதையரைத் துப்பிழிந்த ரசம். (இராசவைத்.) 3. ஒரு புல்லு. 'அறுகுநிம்பமடிசிலரிசநம்' (கந்தபு.

திருக்கல். ௩௫.) 4. சிங்கம். 'வாயி - லறுகு சூழ்கிரைதெற்றியிவ்விடந்தொறும்' (திருவிளை. எல்லாம்வ. எ.) 5. யானை. 6. யானையாளி. 'அறுகுமாமுகத்தண்ணல்' (கந்தபு. யாளிமுக. ௩.அ.)

அறுகுணன்—கடவுள். [ஆறுகுணங்களுள்ளவன் என்றபடி. அவ் வாறுகுணங்கள்: ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்பன.] இவ்வாறுகுணங்கட்கும் பகம் என்னும் பெயருண்மையாற் பகவனென்பர். (வள். க: க. குறிப்புரை.)

அறுகுதாசு—சிறுதராசு.

அறுகுறை—கவந்தம். 'ஆடின வறுகுறை யலகைகளுடனின்று' (பாரத. நிவாத. ௯௪௧.) [தலையற்ற உடல் என்றபடி.]

அறுகை—1. அறுகம்புல். 'அறுகையுநெரிஞ்சியுமடர்ந்து' (மணிமே. ௧௨-காதை. ௬௦.) 2. அறுதல். 3. ஒரு குறுநிலமன்னன். (பதிற்றுப்பத்.)

அறுகோணம்-ஆறுகோணப்பட்டவடிவம். 'தன்பிறைமூன்றுகோணந்குவறுகோணம் வட்டம்' (சி. சி. ௨: ௬எ.)

அறுசமயம் — அறுவகைச்சமயசமூகம். அவையாவன: சைவம், வைணவம், சாக்தம், சௌரம், காணபத்யம், கௌமாரம் என்பன.

அறுசரம்-இனிய ஓசைதரும் யாழ்.(திவா.)

அறுசுவை—அறுசுவை; அவை: கைப்பு, தித்திப்பு, புளிப்பு, கார்ப்பு, உவர்ப்பு, துவர்ப்பு என்பன. 'அறுசுவையுண்டி யமர்ந்தில்லாளூட்ட'(நாலடி.செல்வநிலையாமை.க.)

அறுத்தல்—1. அரிதல். 'வாளினாலறுத்து' (நைட. காட்டு. ௧௦. உரை.) 2. அழித்தல். 'அரக்கர்கோனை வேரொடு மறுத்தவாறும்' (கூர்மபு. அறக்கி. ௧௦.) 3. அறுத்துச்செய்தல். 'செக்கலறுத்தான்' 4. இல்லாமற்செய்தல். 'அல்லலறுத்தாகந்தமாக்கியதே' (திருவாச. க) 5. நிர்மாணித்தல். 'இதனாலெய்துவாமெனவுளத்தி-னறுத்தவர்போல்' (தணிகை. காட்டு. ௧௨௬.) 6. காலையறுத்தான் என்பதிற்போலச் சிறிதும் இழவாமல் முதலையாயினும் சினையையாயினும் இருகூறு செய்து வேறுபடுத்தல். (தொல். சொல். ௭௨. சேனா) 7. வினைதோன்டல். 8. வெட்டுதல். 'மாமுகக்களோ-ராயிரந்தன்னையு மறுத்தவிட்டியே' (கந்தபு. யாளிமு. ௩௩.) 9. ஊடறுத்தல். 'விசும்பறுத்திழிந்து'(சீவக. 3055) 10. சீரணித்தல். 'ஆரவுண்டறுக்கலாற்றாது' (சீவக. 2839). 11. வெல்லுதல். 'ஆடுசிறை யறுத்த நரம்புசே ரின்குரல்' (பதிற்றுப். 43. 21) 12. இடைவிடுதல். 'அகைப்புவண்ணமறுத்தறுத்தொழுகும்' (தொல். பொருள். 544.) 13. நீக்குதல். 'தடையறுத்துக்கொடுப்போன்' 14. பங்கிட்டுக்கொடுத்தல். 'அற்றார்க்கறுது வதிந்தோரும்' (பிரமோத். 16. 37) 15. வருத்துதல்.

அறுத்திசைப்பு—வேற்றிசைகலந்துவரும் ஒருவகை யாப்புவழு. (யாப். வி. 95. பக். 403)

அறுத்திடல்—அவாவறுக்கை. (சூடா)

அறுத்துக்கட்டல்— } கணவன் இறந்தபின் மறுதாலி கட்டி மணத்தல்.
அறுத்துக்கட்டுதல்— }

அறுத்துமுறி—மனைவியைத் தள்ளிவிடுகை.

அறுத்துரைத்தல் — 1. வரையறுத்துச் சொல்லுதல். 2. பிரித்துச்சொல்லுதல். (திருக்கோ. 272. உரை.)

அறுத்தோடி—அரித்தோடும் நீரோட்டம்.

அறுதல்—1. அறுந்தது. 'அறுதற்கயிறு' 2. இல்லாமற்போதல். 'அல்லலோடருவினையறுதலாண்மையே' (தேவார. திருவெண்காடு. ௧௧. திருஞா.) 3. ஒன்றுக்குங்கூடாதவன், ஒன்றுக்கும் உதவாதவன். 4. கைம்பெண். 5. நூல் கயிறுமுதலியன இருகூறுதல். 'கோடுபோரதசாபநாணறுகுமிலவோதை'(இரகு. யாகப். அஎ.)'6. பிரயோசனமிலதாதல். 'உறினட்டறினொருஉ மொப்பிலார்' (வள். அக௨.) 7. தீர்தல். 'அற்ற காரியம்' (சிலப். 17. முன்னிலைப்பரவல். 2. உரை.) 8. தங்குதல். 'மணிமாநிலத்தற்றதோர் கோதையின்'(சீவக. 226.) 9. நட்புச்செய்தல். 'பேணித்தம்மோடற்றவருக்கறுதோரும்' (உத்தரரா. திக்குவி. 55). 10. பாழாதல். (பு. வெ. 3. 15. கொளு.)

அறுதலி—அமங்கலி, விதவை. 'அறுதலி மகனுக் கங்கமெலாஞ்சேட்டை' [மங்கலியம் அற்றவள் என்றபடி.]

அறுதி—1. இல்லாமை. 2. முடிவு. 'அறுதியாகவின் றருஞ்சமர் முடித்துமென்று' (பாரத. பதினெட். ௬௬.) 3. சொந்தம். 'செம்மகள்கரியோற்கறுதியாக' (கல்லாட. ௧அ.)

4. தீர்ப்புவிலை. 'அறுதியிதென்றுகொண்டு' (திருவாலவா. 46. 32) 5. நாசம். 'அறுதியிலரனே' (சி. சி. ௧: ௩௫. சிவாக்.) 6. நிச்சயித்தல். 'மேவுகதையாற்சிற்சத்திவிரிவேயுலகென்றறுதிவரும்' (ஞானவா. அயிக். உ.) 7. நீக்கம். 'அறுதியிலாத்துயர்க்கடலின்' (காஞ்சிப். பன்னிரு. ௨௩.) 8. வரையறை. 'காடுமன்னுநின்புதல்வருக்கறுதிசெய் காலமோகழிந்தன்று' (பாரத. உலூக. ௧௩.) 9. விக்கிரயச்சீட்டு. 10. வரை. 'அன்றுமுதலின்றறுதியா' (திவ். திருவாய். 4. 10. 9)

அறுதிக்கறை—நிலங்களைச் சமுதாயத்தில் வைக்காமல் தனித்தனியாய் உரிமையுள்ளவர்களுக்குப் பிரித்துக்கொடுக்கப்பெறும் முறை.

அறுதிக்களநடை — வருடாந்தரநெற்கணக்கு.

அறுதிச்சாதனம்—கிரயபத்திரம்.

அறுதிச்சீட்டு—அறுதிச்சாதனம்.

அறுதிச்சொல்— உறுதியாகச்சொல்லுகிற சொல்.

அறுதிப்பங்கு — சமுதாயத்திலில்லாத சொந்தநிலம்.

அறுதிப்பரியட்டம்—, அறுதிப்பரிவட்டம்— கோயில்மரியாதையாகத் தலையிற் கட்டிக்கொடுத்துவிடும் பட்டு. (வைஷ்ண)

அறுதிப்பாடு—முடிவுபேறு.

அறுதியிடல் — 1. காலங்குறித்தல். 2. நிச்சயித்தல். 'புசிக்கத்தக்கவிடயங்களையறுதியிட்டுப்புசிப்பதுஞ்செய்து' (சி. சி. உ: ௰அ. நிரம்ப.) 3. முடிவுக்குக்கொண்டுவருதல்.

அறுதியுறுதி — ஒருவன் தன்பொருளை வேறொருவனுக்கு விலைக்குக் கொடுத்தலையெழுத்தில் அமைக்கும் பத்திரம்.

அறுதொழில்—1. அறுவகையானதொழில்; அவை: ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்: அந்தணரறுதொழிலென்றும், ஓதல், வேட்டல், ஈதல், உலகோம்பல், படைபயிறல், பொருதிட்டல்: அரசரறுதொழில் என்றும், ஓதல், வேட்டல், பொருளீட்டல், ஈதல், பசுக்காத்தல், ஏருழல்: வைசியரறுதொழில் என்றும், முதன்மூவர்க் கேவல்செய்தல், பொருளீட்டல், உழுதல், பசுக்காத்தல், குயிலுவத்தொழில்செய்தல், காருகவினைகளாக்கல்: சூத்திரரறுதொழில் என்றும் சொல்லப்படும். 2. உழவு, சிற்பம், தொழில், வரைவு, வாணிகம், வித்தை: என்னும் இவ்வாறனையும் சாதாரணமாக அறுதொழில் என்பர்.

அறுதொழிலோர்—முற்கூறிய ஆறுதொழிலுடையோராகிய பிராமணர். 'ஆபயன் குன்றுமறுதொழிலோர்நூன்மறப்பர்' (வள். ருசு0.)

அறுந்தருணம்—, அறுந்தருவாய்— 1. உற்றசமயம். 2. அவசரசமயம்.

அறுந்தொகை–சேடமின்றிப்பிரிக்கப்படும் எண். 'கடு' ஆகிய எண் ஐந்தாற்பிரிக்க அறுந்தொகையாகும். (கணக்கதி.)

அறுப்பன்பூச்சி — நாணியப்பூச்சிவகையிலொன்று.

அறுப்பு — 1. அரிவியறுத்தல், கதிரறுத்தல். 'அறுப்புக்காலம்' (வழக்.) 2. அறுத்ததுண்டு. 3. அறுத்தல். 'அச்சமார்தலையறுப்புண்டான்' (சி. சி. பர. பாஞ்ச. மறு. ௩.) 4. ஆட்சேபிக்கை. 5. தாலியறுத்தல். 6. மரமுதலியவற்றின் அறுவாய்.

அறுப்புக்காலம் — அரிவிவெட்டுங்காலம், கதிரறுக்கும்பருவம்.

அறுப்புக்கூலி—1. கதிரறுக்குங்கூலி. 2. மாமுதலிய அறுக்குங்கூலி. 3. விதவைக்குக்கொடுக்கும் ஜீவனும்சம்.

அறுபகை—ஆறுவகையான உட்பகைகள்; அவை: காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பன. 'ஐம்புலன்களையடக்கிநின்றறுபகைதுறந்து' (காஞ்சிப். திருமேற். சு.)

அறுபடுதல்—அறுக்கப்படுதல்.

அறுபத்துநாலுகலை — 1. அக்கரவிலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகர்ணம், நீதிசாத்திரம், சோதிடசாத்திரம், தருமசாத்திரம், யோகசாத்திரம், மந்திரசாத்திரம், சகுனசாத்திரம், சிற்பசாத்திரம், வைத்தியசாத்திரம், உருவசாத்திரம், இதிகாசம், காவியம், அலங்காரம், மதுரபாடணம், நாடகம், நிருத்தம், சத்தப்பிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அத்திரபரீட்சை, கனகபரீட்சை, இரத

பரீட்சை, கசபரிட்சை, அசுவபரீட்சை, இரத்தினபரீட்சை, பூமிபரீட்சை, சங்கிராமவிலக்கணம், மல்லயுத்தம், ஆகருடணம், உச்சாடனம், வித்துவேடணம், மதனசாத்திரம், மோகனம், வசீகரணம், இரசவாதம், காந்தருவவாதம், பைபீலவாதம், கவுத்துகவாதம், தாதுவாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப்பிரவேசம், ஆகாயகமனம், பரகாயப்பிரவேசம், அதிருசியம், இந்திரசாலம், மகேந்திரசாலம், அக்கினித்தம்பம், சலத்தம்பம், வாயுத்தம்பம், திட்டித்தம்பம், வாக்குத்தம்பம், சுக்கிலத்தம்பம், கன்னத்தம்பம், கட்கத்தம்பம், அவத்தைப்பிரயோகம் என்பன. (சது.) 2. கீதம், வாத்தியம், நிருத்தம், சித்திரம், பத்திரதிலகங்கத்தரிக்கை, பல்வகையரிசி பூக்களால் கோலமமைத்தல், பூவமளியமைக்கை, ஆடை உடை பற்களுக்கு வர்ணமமைக்கை, பள்ளியறையிலும் பானவறையிலும் மணிபதிக்கை, படுக்கையமைக்கை, ஜலதரங்கம், நீர்வாரியடிக்கை, வேடங்கொள்கை, மாலைதொடுக்கை, மாலைமுதலியன அணிகை, ஆடையாபரணாதிகளால் அலங்கரிக்கை, சங்குமுதலியவற்றூற் காதணியமைக்கை, வாசனைகூட்டுகை, ஆபரணமியற்றுகை, இந்திரஜாலம், கௌசுமாரம், ஹஸ்தலாகவம், பாகசாஸ்திரவுணர்ச்சி, தையல்வேலை, நூல்கொண்டுகாட்டும் வேடிக்கை, வீணை டமருகப்பயிற்சி, பிரேளிகை, ஈற்றெழுத்துக்கவி கூறுகை, நெருட்டுச்சொற்றொடராமைக்கை, சுவைதோன்றப் பண்ணுடன்வாசிக்கை, நாடகம் வசன மிவற்றினுணர்ச்சி, ஸமஸ்யாபூரணம், பிரம்பாதிகளாற் கட்டில்முதலியன அமைக்கை, கதிரில் நூல்சுற்றுகை, மரவேலை, வாஸ்துவித்தை, நாணயரத்னங்களின்சோதனை, தாதுவாதம், மணிக்கு நிறமமைக்கையும் மணியினுற்பத்திஸ்தானமறிகையும், தோட்டவேலை, ஆடுகோழி முதலியவற்றின் போர்முறை, கிளிநாகணவாய்களைப் பயிற்றுகை, உடம்புபிடிக்கையும் எண்ணெய்தேய்க்கையும், சங்கேதாக்ஷரங்களமைத்துப்பேசுகை, இரகசியபாஷை தேசபாஷையுணர்ச்சி, புஷ்பரதமமைக்கை, நிமித்தமறிகை, பொறியமைக்கை, ஏகசந்தக்கிராகித்வம், துவிசந்தக்கிராகித்வம், பிதிர்க்கவிவிடுக்கை, காவியமியற்றுகை, நிகண்டுணர்ச்சி, யாப்புணர்ச்சி, அலங்காரவுணர்ச்சி, சாலவித்தை, ஆடையுடுத்தலிற் சாமர்த்தியம், சூதாட்டம், சொக்கட்டான், பொம்மை பந்து முதலியனவைத்தாடுகை, யானைமுதலியவற்றின்பயிற்சி, படைக்கலப் பயிற்சி, தேகப்பயிற்சி எனவும் கூறுவர்.

அறுபத்துமூவர் — பெரியபுராணத்திற் கூறப்பட்ட தனியடியார்.

அறுபதம்—1. ஆறுகால். 'அறுபதவண்டினமார்ப்பத்தாமரை' (சிந்தா. நாமக. ௬௭.) 2. கையாந்தகரை. (பிங்.) 3. வண்டு. 'அஞ்சிறையறுபதமளகவோளிய' (இராமா. கார்கா. ௧௧௬.)

அறுபதாங்கலியாணம் — சஷ்டியப்தபூர்த்தி.

அறுபதாங்குறுவை— } அறுபதுநாளில்
அறுபதாங்கோடை— } விளையும்ஒருவகை
நெல்.

அறுபது—ஓரெண்.

அறுபருவம் — ஆறுபருவங்கள்; அவை: கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பன. (சூடா. 1. 87).

அறுபான் — அறுபது. 'ஓரறுபானேற்றவழுவிலாத்திரேதை' (பரகித. ௨.)

அறுபுள்ளிவண்டு—ஒருவகை வண்டு. இது கடித்தாற்சர்வாங்கத்திலுஞ்சிலநாட்சென்றபின்பு வட்டம் வட்டமான தடிப்புக்களுண்டாகும் என்பர். (சீவரட்சா. 364.)

அறுபொருள் — ஐயமற்றபொருள், பரம்பொருள். (சிலப்.)

அறும்பன்—கொடியன்.

அறும்பு—1. கொடுமை. 2. பஞ்சகாலம்.

அறுமணை — 1. அரிவாண்மணை. [அறு; மணை - தண்டு.] 2. ஊத்தைநாறிப்பூண்டு. 3. சீர்கேடி, அழகற்றவள். [மண்ணுதல் அற்றவள் என்றபடி.]

அறுமர்—எண்ணெய்வாணிகர்.

அறுமான்—புழுவகையிலொன்று. 'அத்திக்காயில் அறுமான்போலே' (ஈடு. அவதா.)

அறுமீன் — 1. கார்த்திகைநட்சத்திரம். (பிங்.) [ஆறு நக்ஷத்திரக்கூட்டம் என்றபடி.] 2. கார்த்திகைமாதர். 'அறுமீன்முலையுண்டமுதுவிளையாடி' (கந்தர்கலி. ௮௬.)

அறுமுகன்—கந்தசுவாமி. 'அறுமுகன்றனையணங்கினையவையுளோரெவரும்' (கந்தபு.

தெய்வ. உடுள.) [அறு - ஆறு என்பதன் விகாரம். முகன்-முகமுள்ளோன்.]

அறுமுறைவாழ்த்து—முனிவர், பார்ப்பார், ஆநிரை, மழை, முடியுடைவேந்தர், உலகு: என்ற ஆறனையும்பற்றிக் கூறும் வாழ்த்து. (தொல். பொருள். 81. உரை.)

அறுமை—1. நிலையின்மை. 'அறுமையிவ் வுலகு தன்னை யாமெனக்கருதி'(தேவா.838. 3.) 2. ஆறு. 'அறுமைதந் துதவுமிருமையா னும்' (கல்லா. 11. 18.)

அறுவகைத்தானை—வேற்றானை, வாட்டா னை, விற்றானை, தேர்த்தானை, பரித்தானை, களிற்றுத்தானை என்பன. (திவா.)

அறுவகைப்படை—1. மூலப்படை, கூலிப் படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப் படை, பகைப்படை: என்னும் ஆறுவிதப் படை. 'உறவின்மிக்கவர் பகையினெய்த்தவ ருதவுமப்படை குடைநிழற் - செறிதலத்தி லில் வளர்நகர்ப்படை திரள்வனப்படை பொருள்விலைத் - தறுகண்மெய்ப்படை யுறுதி யிற்பொரு தமதகப்படையெனவிரா - யறு வகைப்படைகளும்வகுத்தன வணிகளுட்கின பணிகளே' (பாரத. அணிவகு. ௧௨.) 2. அறு வகைத்தானை.

அறுவகைப்புறச்சமயம்—உலோகாயதம், பௌத்தம், ஆருகதம், மீமாஞ்சம், பாட்டா சாரியம், பாஞ்சராத்திரம் எனச் சைவத் துக்குப் புறமான சமயங்கள் ஆறு. (சி. சி. பாயிர. க. மறை; பிங்க. ௬௦௭.)

அறுவகைப்பேதி-உஷ்ணபேதி முதலியன

அறுவகைப்போகபூமி — ஆதியரிவஞ்சம், நல்லரிவஞ்சம், ஏமதவஞ்சம், இரணவஞ் சம், தேவகுருவம், உத்தரகுருவம் என்னும் ஆறுவகைப்போகபூமிகள். (கூர்மபு-வருணச். ௨௬.) [இவை, இராசதகுணத்தினின்றோர் அடையும் மத்திமகதியின்பாற்பட்டன என்பர்.]

அறுவகையுட்சமயம்-சைவம், பாசுபதம், மகாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம்: எனச் சைவத்துக்கு உட்பட்ட சமயங்கள் ஆறு. (சி. சி. பாயிர. க. மறை; பிங்க. ௬௦௮.)

அறுவகைவழக்கு — தொகையுண்மை வழக்கு, தொகையின்மைவழக்கு, தொடர்ச்சி யுண்மைவழக்கு, தொடர்ச்சியின்மைவழக்கு, மிகுத்துரையுண்மைவழக்கு, மிகுத்துரை யின்மைவழக்கு எனப்படும் ஆறுவகை வழக்குகள்; இது 'சொற்றருந்தொகை தொடர்ச்சி மிகுத்துரையென்று மூன்று - யுற்றிடும் வழக்கிரண்டு மொன்றுமூன் றுமி யாறும்' என்னும் சி. சி. பர. சௌத். மதம் ௬-ஆஞ்செய்யுளாற் பெறப்படும்: வேறு மொருவகையாய், உள்வழக்கு இல்வழக்கு உள்ளதுசார்ந்த உள்வழக்கு உள்ளதுசார்ந்த இல்வழக்கு இன்மைசார்ந்த உள்வழக்கு, இன்மைசார்ந்த இல்வழக்கு என ஆறுவழக் குள்ளன. 'உள்வழக் கில்வழக் குள்ளது சார்ந்த வுள்வழக்கோ - டுள்ளது சார்ந்த வின்மை வழக்குட னின்மை சார்ந்த - வுள்வழக்கின்மை சார்ந்த வில்வழக் கென் றோ றாறும்' (சி. சி. பர. சௌத். மதம். ௧௦.)

அறுவடை—நென்முதலியன அறுத்தல். [வழக்கு.]

அறுவடைமேரை — கிராமவூழிய சுதந் திரம்.

அறுவரி — குறித்தகாலத்திற் கொடுக்க வேண்டிய வரி.

அறுவாய்—1. இறுமிடம், குறைவிடம். 2. கத்திமுதலியவைகளால் அறுக்கப்பட்ட இடம். 3. கார்த்திகைநக்ஷத்திரம். 'அறு வாய்நிறைந்த மதிப்புறத்தோவென' (கல் லாட. ௩௩.) [அறு; வாய் - இடம்.]

அறுவாய்ப்போதல்-முற்றும் செலவாதல்.

அறுவிடுதல்—வசூலித்துவிடுதல்.

அறுவிதி—தீர்ப்பு.

அறுவு — அறுதி. 'கொன்னுமிக்கள்வன் றன்னைக் கொண்டுபோய்த் தண்டஞ்செய் தெம் - பொன்னெலாமறுவுகொண்டுவாங்கு மின் போமினென்றான்' (திருவிளை. நரிபரி. ௬.)

அறுவை—1. சித்திரைநக்ஷத்திரம். (சூ. நிகண். ௧: ௭௩.) 2. ஆடை. 'அறுவை யொளித்தான்வடிவென்கோயாம்' (சிலப். ஆய்ச்சியர். ௩௧௧. பக்.) [அறுக்கப்படுதலின் வந்தபெயர்.] 3. தோளிலிடும் உறி. 'சுவன் மே லறுவையும்' (சிலப். 10. 98.)

அறுவையர்—1. ஆடையுடையவர். 'செங் கற்றோய்த்தவறுவையர்'(திருவிளை. நகர. 86)

2. மலைநெய்வார். 'கைவினை வன்ன வறுவையர் வளக்கிக் மறுகும்' (மணிமே. உஅ. காதை. ௫௩.)

அறை—1. அடி. 2. அடித்தல், மோதுதல். 'அறையதின் மல்லினவா யறைதிறந் தாவிபோனன்' (சேதுபு. வேதாள. ௪௪.) 3. அரங்கு, சூதாடுவதற்கு வகுத்த அறை. 4. அறுகை. (சிலப். 14. 30. அரும்) 5-7. அறையென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 'வண்டறைகுழல்கணெங்கும்' (பெரியபு. திருநாட். ௬௨.) 8. உத்தரம். 'சொல்லுவார்தமக்கறையோ சொல்லொணுதே' (சி. சி. அ: ௧௬.) 9. எழுத்தோசை. 10. ஒலி. 'அறைபடுமாலைகளிடைமிட்டாட்டலே' (கந்தபு. நாட்டு. ௩௧.) 11. பாறை. 'அறையும்பொறையுமணந்த' (புறநா. ௧௧௮.) 12. குழி. (சிலப்.) 13. சிற்றில். (சூ. நிகண். ௧௧: ௪௦. ௩௪.) 14. சொல். (சூ. நிகண். ௧௧: ௪௦. ௩௪.) 15. சொல்லுதல். 'அறைபெற்றிடு மித்திறமானவெலாம்' (கந்தபு. காமத. ௧௪) 16. தட்டல். 17. செயித்தற்கரிதென்று சொல்லுதல். 'பைம்பொற்பன்றி-யறையெனத்திரியு மாய்பொற்பூமியில்' (சிந்தா. மண். எ௧.) 18. திரைச்சீலை. (சூடா.) 19. சல்லி. (சூடா) 20. பாத்தி. 'குறையறைவாரா நிவப்பின்' (மலைபடு. ௧௧௮.) 21. மலையுச்சி. 22. மாளிகை. 'அலக்கல்வேலவர்மாளவரக்கறையெரித்தல் கேளா' (கூர்மபு. கன்னன்மண-௧௧௧.) 23. முழைஞ்சு. 'அறைக்கண்டவழருவிக்கிரி' (மறைசைய. ௬௫.) 24. வகுக்கப்பட்ட இடம். 'அறைபடைத்திவணீண்டிய' (கந்தபு. நகர்பு. ௪௫.) 25. வஞ்சனை. 'அருளாதறை கொன்று' (கலித். ௧௪௬.) 26. வெட்டுதல். 'அறையுற்றனைக்கலமரும்' (மலைபடு. ௧௧௮.) 27. பாசறை. (பதிற்றுப். உ௪.) 28. அலை. (சூடா.) 29. பத்திராலாபனக்குறிப்பு. (சீவக. 2180) 30. உள்வீடு. (சூடா). 31. பெட்டியினுட்பகுதி. 32. பிரசவவீடு. 33. சுரங்கம். 'பொய்யறைவாய்ப் புகப்பெய்த மல்லர்' (திவ். பெரியதி. 2. 5. 5.) 34. அம்மி. (பரிபா. 10. 83). 35. துண்டம். 'அறைக் கரும்பு' (தொல். பொருள். 467. உரை.)

அறைக்கட்டு—1. வீட்டின் உட்பகுதி. 2. உற்சவப்பந்தல்.

அறைக்கீரை—ஒருவகைக்கீரை. 'சொல்லு மறைக்கீரை' (மச்சபு. பிதிர்வழி. உ௧.)

அறைக்கீரைக்காய்—வெள்ளரிக்காய்.

அறைகுறை—1. முடிவிற்குறைபாடு. 2. முடியாமை.

அறைகூவல் — 1. பொர அழைத்தல். 'சஞ்சத்தகர்வந்தறைகூவ' (பாரத. பதின்மூ. அ.) 2. வலிந்தழைத்தல். 'அறைகூவியாட்கொண்டருளி' (திருவாசக. திருவண். ௧௪௮.)

அறைசெய்தல்—அறுத்துத் துண்டமாக்குதல். 'அறைசெய்கன்னல்' (இரகு. நகர. எ௨.)

அறைத்தொழிலார் — கீழறுக்குந்தொழிலுடையார். 'அறைத்தொழிலார்க்குஞ்செல்லா' (சிந்தா. குணமா. உ௬௨.)

அறைதல்—1. அடித்தல். 'அவனறைந்த கற்றூணிடை வந்தாய்' (பாரத. கிருட். ௪௩.) 2. ஒலித்தல். 'அறைகழல்வீரர்' (நைட. நாட். ௧௩.) 3. சொல்லுதல். 'அன்றவணிகழ்ந்தபூசலாகுலமறைதற்பாற்றோ' (கந்தபு. மார்க்க. ௧௦௬.) 4. (ஆணி) கடாவல். 'நினைப்புடைமிதயத்தாணி-யறைந்ததும்' (இரகு. இந்துமதி. அ௫.) 5. மோதல். 'முரசறையுமாக்கடல்காரெனவார்த்தன' (சிந்தா. மண். ௬௭.) 6. பறைமுதலியன கொட்டுதல். 'அறைபறையன்னர் கயவர்' (குறள். 1076). 7. துண்டித்தல். (தொல். பொருள். 467. உரை.) 8. எறிந்துகட்டுதல். 'மண்சுவர் நாலுபடையறைந்தேன்' (வழக்.)

அறைநர்—அறுப்பவர். 'அறைநர்கரும்பிற் கொண்ட தேனும்' (புறநா. ௪௨.)

அறைப்படுத்தல்—கீழறுத்துத் திறப்பித்தல். 'அறைப்படுத்தும் பற்றற் கரிய தரண்' (வள். எ௪எ.)

அறைபோக்கு — 1. அற்றுப்போதல். 'கள்ளுண்டல்காமமென்பகருத்தறைபோக்குச்செய்வது' (திருவிளை. மாபாத. உ௬.) 2. ஒதுக்குகை. 'அறைபோக்கொழியக்குல முழுதும் வளைஇ' (ஞானா. 46. 14).

அறைபோதல்—1. அற்றுப்போதல். 'அறிவறைபோயினர்' (கந்தபு. அடிமுடி. ௫௬.) 2. ஓட்டைபோதல். (மதுரைப்பதிற்றுப். ௩௩.) 3. கீழறுத்தல், உள்ளேநின்று துணை செய்யும் உற்றவன்போலத் தன்னைக்

காண்பித்துநின்றுசதிசெய்தல். 'அறைபோகமைச்சர்' (சிலப். இந்தி. ௧௧௦.) 4. மீறுக்கப்படுதல். 'அழிவின்றறைபோகாதாகி' (குறள். 764.)

அறைமாரி—மரப்பேழை. (தைல. பாயிர. ௧௧. உரை.)

அறைமுறையிடல்—இல்லாமை சொல்லி முறையிடுதல்.

அறையல்—சொல்லல். 'அங்கதற் கதுவேயல்லா லறையலாம் படிமற் றுண்டோ' (கந்த பு. மாயைப். ௭௪.)

அறையிடுதல்—அறைகூவுதல். 'மாரிகையேறி யறையிடுங்காலத்தும்' (திவ். இயற். திருவிருத். 19).

அறையுண்ணல் — 1. அடிக்கப்படுதல். 'கையினலறையுண் ணும்பந்துபோல' (ஞான வா. தாசூ. ௩௦.) 2. அறுக்கப்படுதல். 'சோரிக்கணையாலறையுண்டு' (பாரத. சம்ப. ௫௦.)

அறையோ–1. முறையிடுஞ்சொல். 'அறையோவிதறிவரிதே' (திவ். இயற். திருவிருத். 10) 2. வெற்றி மகிழ்ச்சிகளைப்பற்றிவரும் ஒரு குறிப்புச்சொல். (திவ். திருவாய். 5. 1. 1.) 3. ஒரு வஞ்சினமொழி. (சீவக. 2514).

அறையோலை—வரையறைசெய்யும் சாசனம். (S. i. i. iii. 161).

அறைவித்தல்—பறையடிப்பித்தல். 'செல்வன் திருமுரசறைவிக்கின்றான்' (சிந்தா. பூமக. ௪௮.)

அன்—1. உயர்திணையாண்பாலொருமைப் பெயரிலும் வினையிலும் வரும் விகுதி; அஃது: உடன்பாட்டுத் தெரிநிலைவினையில் வருங்கால் இறந்தகால இடைநிலைத் தகரத்தையாவது தகரத்திரிபாகிய டறக்களையாவது நிகழ்காலத்தில் வரும் ஆநின்று கின்று என்னும் இடைநிலைகளையாவது குடுறுக்களையிறுதியிலுடைய சில குறிவிணைவினைப்பகுதிகள் விகாரப்பட்டுவர உகரமூர்ந்துநின்ற அவ்வொற்றுக்களையாவது அன்சாரியை தொடர அதனையடுத்துப் பின்வருதலும், அவ்வினையாலணையும்பெயரில் வருங்கால் இறந்தகால நிகழ்கால இடைநிலைகளையும் முற்கூறிய விகாரப்பட்ட பகுதியையும் எதிர்காலத்தில் வரும் பகர இடைநிலையையும் தொடர்ந்து அகரச்சாரியைவர அதனையடுத்து வகர உடம்படுமெய்யைச்சார்ந்து பின்வருதலும் ஆகும். அவன் (பெயர்); வந்தனன், உண்டனன், சென்றனன், வாராநின்றனன், வருகின்றனன், புக்கனன், விட்டனன், உற்றனன், குழையன். (வினை) வந்தவன், உண்டவன், சென்றவன், வாராநின்றவன், வருகின்றவன், வருகிறவன், வருபவன், புக்கவன், விட்டவன், உற்றவன். வினையாலணையும்பெயர்.) 2. தன்மையிடத்தில் ஒருமையில் வரும் ஒரு வினைவிகுதி; அது: உடன்பாட்டுத்தெரிநிலைவினையில் வருங்கால் மேற்சொல்லியவாறு இறந்தகால நிகழ்காலங்களில் அன்சாரியை தொடர அதனையடுத்துப்பின்வரும். நான் வந்தனன், நானுண்டனன், நான் சென்றனன், நான் வாராநின்றனன், நான்வருகின்றனன், நான் புக்கனன், நான் விட்டனன், நானுற்றனன், நான்வருவன், நானுண்பன். 3. பெயர்வினைகளில்வரும் ஒரு சாரியை. ஒன்றன்கூட்டம். (பெயர்.) படித்தனன் (வினை.) 4. விலங்கின் ஆணைக்குறிக்கும் அஃறிணை யொன்றன் பாலிலே வரும் ஒரு பெயர்ச்சொல் விகுதி. கடுவன்முதலிய பெயர்களிற் காண்க.

அன்பகம்—சமுத்திரசோகிப்பூண்டு.

அன்பகர்—சமுத்திரப்பாலை. (மலை.)

அன்பன்—1. கணவன். 'உயிரினன்பரைக் கூடின ரழுதனர்' (இராமா. நகர்நீங். ௨௧௧.) 2. அன்புடையவன். 3. தோழன்.

அன்பு–1. தொடர்புடையார்மாட்டுண்டாகும் பற்று. 'அன்பொத்த அவர்' (பரிபா. 6. 21. உரை.) 2. தயை. (பிங்.) 3. நேசம். 4. பக்தி. 'நரரோடொத்துத்திரிபவர்க்கன்பு செய்வார்' (திருநூற். 86.)

அன்புகூர்தல்—மிக நேசித்தல். (பாரத. தற்சிறப். 1.)

அன்புடைக்காமம் — ஐந்திணைபற்றி நிகழுங் காமம். (நம்பியகப். அகத். 4.)

அன்புவைத்தல்—அபிமானித்தல்.

அன்புறல்—நேசத்திலழுந்தல்.

அன்புறுத்தல்—நேசமுண்டாக்குதல்.

அன்மயம்—மாறு. 'உரைத்த கல்லுரைக் கன்மயமில்லை' (கம்பரா. மருத்து. 92.)

அன்மை — 1. அல்லாமை. 2. தீமை. 'அன்மைகடியுந்தவவலியால்' (சேதுபு. முத்தீர். ௮.)

அன்மொழி—1. அல்லாதமொழி. 2. அன்மொழித்தொகை. 'ஐந்தொகைமொழிமேற் பிறதொகலன்மொழி' (நன். பொதுவி. கஅ.)

அன்மொழித்தொகை — அறுவகைத் தொகையிலைத்தொடர்மொழிகளுள் ஒன்று.

அன்யாபதேசம்— உள்ளுறையல்லாத வெளிப்படைப்பொருள். (ஈடு. 6. 5. ப்ர.) 2. சாக்கிட்டுச்சொல்லுஞ் சொல்.

அன்வாதேயம் — கலியாணத்தின்பின்பு தாய்வழிதந்தைவழிச்சுற்றத்தார் கணவன் குலத்தினர் முதலியோரால் பெண்ணுக்குக் கொடுக்கப்படுஞ் சீதனப்பொருள்.

அன்றன்று—தினந்தினம்.

அன்றடம்—அன்றன்று.

அன்றாடு—அன்றன்று. 'கைமேலே இலக்கைபெறுதார்க்கு அன்றாடு படிவிடவேணுமிறே' (ஈடு. 4. 8. 7.)

அன்றி -1. அல்லாமல். 'ஆராயினயன்றி யாரே துணையாவார்' (கந்தபு. சயந்தன்பு. சுஉ.) "அன்றி" யென்னும் வினையெச்சம் செய்யுளில் "அன்று" எனத் திரிந்தும் வரும்; 'நாளன்றுபோகிப்புள்ளிடைதட்ப' (நன். உயிர். உங. உரை.) அது என்னுஞ் சுட்டுப்பெயரைத்தொடர்ந்து வருங்கால் "ஆன்று" என முதல் நீண்டுவருதலும் ஆம்; 'அதான் றம்ம வெண்பா வீறே' (நன். உயிர். ௩௦. இரா). 2. மாறுபட்டு எனப் பொருள்படும் வினையெச்சம்.

அன்றிக்கே—அன்றி. (ஈடு. அவ.)

அன்றியனைத்தும்—அவ்வனைத்தும். 'அன்றியனைத்தும் பெயர்ப்பயனிலையே' (தொல். சொல். சுசு.) [அகரச்சுட்டு அன்றியென ஈறுதிரிந்துநின்றதென்பர். ஷ சேனா.]

அன்றியில் — அன்றி. 'விவேகிக்கு ஓர் உபாதியன்றியில்' (சி. சி. 4. 8. சிவாக்.)

அன்றியும் — அல்லாமலும். (சிலப். 5. 110. அரும்.)

அன்றில் — 1. கிரவுஞ்சமென்னும் ஒரு பறவை. 'அன்றிலம்பெடைகளையணுகி' (கந்தபு. நாட்டு. ருக.) இஃது ஆண் பெண் என்னும் இரண்டற்கும் பொதுவாய்நிற்றலன்றிச் சில இடங்களிற் பெண் அன்றிலையே விசேடமாகக் கருதியும் வரும். 'உறைந்தன மகன்றிலுடனன்றிலுமிரோன்றி' (இராமா. கார். எக.) 2. ஒரு மலை. 'அன்றிற்கற்பக வேலெறிவேடுணவன்' (கல்வளை. உ.) [கிரௌஞ்சன் என்னும் ஓரவுணனே அகத்தியராற் சபிக்கப்பட்டு இம்மலையாயினன் என்னும் கதைபற்றி வந்தபெயர். கிரௌஞ்சம் -அன்றில்.] 3. மூலநாள். (பிங்.)

அன்றிற்றீவு—கிரௌஞ்சத்தீவு. 'அன்றிற்றீவினிலுறைபவரிவர்' (இராமா. படைக்கா. கஉ.)

அன்றினர் — பகைவர். 'அன்றினர்க்காலமா யண்மினர்க் கமுதமாம்' (தணிகை. விராட். க௦க.)

அன்றினர்—பகைவர். 'அன்றினர் வெந்துவிழவும்' (தேவா. 306. 10.)

அன்று — 1. அந்நாள். 'மன்றங்கறங்க மணப்பறையாயின - அன்றவர்க்காங்கே பிணப்பறையாய். (நாலடி. யாக்கை. ௩.) 2. அநாதி. 'மூவகையாருயிர்வர்க்கமலத்தார் கன்மமூலமலத்தார்மூன்றுமுடையாரன்றே' (சிவப்பிர. அ.) 3. அல்லாமல். 'நாளன்று போகிப் புள்ளிடை தட்ப' (புறநா. கஉச.) [அன்றியென்னும்வினையெச்சத்திரிபு.] 4-6. அன்றென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 7. அஃறிணையொருமைப்படர்க்கையில் அன்மைப்பொருளில்வரும் ஒரு குறிப்புவினைமுற்று. 'திரவியமுவமையன்று' (சி. சி. உ. கக.) மற்றைத்திணைபாலிடங்களில் மயங்கிவருதலும் உண்டென்பாருமுளர். 'யான் பிறனன்றே' (கந்தபு. திக்கு. கஉ௩.) என்பதில் தன்மையொருமைக் குறிப்புமுற்றாயும், 'அத்துவாமார்க்கத்துள்ளா னன்று' (சி. சி. க: சஉ.) என்பதில் உயர்திணையொருமைப்படர்க்கைக் குறிப்புமுற்றாயும் வந்தமைகாண்க. "அன்று" என்பது உயர்திணைப் படர்க்கையில் வாராதென்னுங் கருத்துடையராய் 'அத்துவாமார்க்கத்துள்ளானன்று' என்பதை 'அத்துவாமார்க்கத்துள்ளானலன்' எனத் திருத்திப் பாடமோதுவாருமுளர். 8. ஓர் அசைச்சொல். 'அமுதெனப் பரந்ததையன்றே' (நைடத. நாட்டு. ரு.) 9. கழிந்துபோனகாலம், பழையகாலம், முன்னொருநாள், முற்காலம். 'அமரர்க்கன்றெழு-நீலமெய்புருவினைநீத்து' (கந்தபு. காசிபன்புல. சஉ.) 10. முதுமைக்காலமாகிய வருங்காலம். 'அன்றறிவா மென்னாது' (திருக்குறள். 36.)

11. மாறுபாடு. 'ஒன்றிடையாயிரம் அன்றறவகுத்த' (அருட்பா. 6. அருட்பெருஞ்சோதியகவல். 621.)

அன்றுதல் — 1. மாறுபடுதல், பகைத்தல். (சி. சி. க: சஉ. சிவஞா.) 2. கோபித்தல். 'அவ்வானத்தையன்றிச்சென்று' (திவ். இயற். திருவிருத். 18.)

அன்றெறிந்தான்— } சிறுபுள்ளடி.
அன்றெறிந்தான்பூடு— } (மலை)

அன்றே — 1. "ஏ" என்னும் ஈற்றசையோடுகூடிவந்த ஓர் அசைநிலையிடைச்சொல். 'அமுதெனப்பரந்ததையன்றே' (நைடத. நாட்டு. ரு.) 2. குறிப்பேர்சையாற்பொருளுணர்த்தும் ஓர் இடைச்சொற்றொடர். 'அவனன்றே இது செய்வான்' இது தெளிவுப்பொருளும் பிறபொருளும் குறிப்பானுணர்த்தும். (தொல். சொல். உஅஉ. சேனு.)

அன்றை — அந்நாள். 'அன்றையமரினில்' (பாரத. ஆறும். உச.) [அன்று என்பது ஐகாரச்சாரியை பெற்றுநின்றது.]

அன்றைக்கன்று—அன்றன்று, அந்த அந்த நாளுக்கு. 'வருநாட்கு - மன்றைக்கன்றிருமடங்கா' (திருவிளை. மெய்க்கா. கஉ.)

அன்றோ—தெளிவுப்பொருளும் பிறபொருளும் உணர்த்தும் ஓர் இடைச்சொற்றொடர். 'வருபயன்கோடற் கன்றோ மற்றவை வரைதல் செய்யார்' (கந்தபு. மார்க்க. ருஅ.) [அன்று என்பதனோடு ஓகாரங்கூடிநின்றது.]

அன்ன—1. அத்தன்மையன எனச் சுட்டுப்பொருளிற் பலவின்பாலில் வரும் ஒரு குறிப்புவினைப்பெயர். 'ஆண்டகைப்பிரான் மகிழ்ந்தன்னவாகவென்று' (காஞ்சிப். குமர. சரு.) 2. அத்தன்மையன எனச் சுட்டுப்பொருளிற் பலவின்பாலில் வரும் ஒரு குறிப்புவினைமுற்று. 'பிறவுமன்ன' (தொல். எழுத். உஎ.) 3. உவமைப்பொருளில் வரும் ஒரு குறிப்புவினைப்பெயரெச்சம். 'அரிமாவன்ன வணங்குடைத் துப்பிற்-திருமாவளவன்' (பட்டின. உகூஅ.) 4. ஒத்தன என உவமைப்பொருளிற் பலவின்பாலில்வரும் ஒரு குறிப்புவினைமுற்று. 'பாசிழைமடந்தை பூண்ட பன்மணிக் கோவையன்ன' (திருவிளை. நகர. எச.) 5. சுட்டுப்பொருளில் வரும் ஒரு குறிப்புவினைப்பெயரெச்சம். 'அன்னசாரலதனிற்சிவமுனி' (கந்தபு. வள்ளி. உசச.) 6. ஓர் உவமவுருபு.

அன்னக்கொடி — அன்னந்தீட்டியகொடி.

அன்னக்கொடியோன்—பிரமன்.

அன்னக்கொப்பு — அன்னப்பறவைவடிவு சித்தரிக்கப்பட்ட மாதர்காதணியிலொன்று.

அன்னசுத்தி—நெய்.

அன்னணம் — அவ்விதம். 'அன்னணமரசர்பேசியிருந்தபின்' (சூளா. கல். கசஎ.)

அன்னதாழை—அன்னுசி.

அன்னதானத்துறுவை—ஒருவகைநெல்.

அன்னதானச்சம்பா — நெல்வகையிலொன்று. (ஏரெழுபது. உரை.)

அன்னதீபம் — கோயில்விளக்குவகையில் ஒன்று. (பாரத. ஒழி. 41.)

அன்னது—1. அத்தன்மைத்தெனப் பொருள்படும் ஒரு குறிப்புவினைமுற்று. 'அன்னதெனினும்' (கந்தபு. திருவிளை. அஎ.) 2. அது என்னுஞ் சுட்டுப்பொருட்டாய ஒரு பெயர். 'அன்னதுசெய்வனென்னு' (நல். பார. கந்தமா. உஎ.) 3. ஒத்தது. 'தாமரைக் கொட்டையன்னதாய்' (சிந்தா. கேமச. ருஉ.) 4. சுட்டுப்பொருளில்வரும் ஒரு குறிப்பு வினையாலணையும் பெயர். 'அன்னதோரெல்லை' (கந்தபு. மூவாயிரர்வதை. அஅ.)

அன்னப்பெயர்மந்திரம்— அசபாமந்திரம். (பிரபுலிங். விமலை. உடு.)

அன்னபம்—ஆல். (மூ. அ.)

அன்னபேதி—ஒரு மருந்து.

அன்னம் — 1. ஒரு பறவை. 'அன்னம் பயிலாதெதிராக' (நல். பார. நாட்டு. சு.) 2. கவரிமா. 3. தங்கம்.

அன்னம்பாறல்—புலம்பல். (வழக்.)

அன்னல் — 1. அனல். 2. புகை. (ஈடு. 8. 5. 4.)

அன்னவம்—கடல். (சூடா.) [சுண—வ: சுண—வி - நீர். வ - ஒரு விகுதி.]

அன்னவன்—1. அவன், அத்தன்மையன். 'அன்னவன்புகழ்கேட்டலும்' (நைடத. அன்னத்தைக்க. ரு.) 2. ஒத்தவன். 'அருங்கலக் கொடி யன்னவ னேகினன்' (சிந்தா. பதுமை. உ0எ.)

அன்னவாய்க்கை — அபிநயக்கைவகையிலொன்று. (பரத. பாவ. 34.)

அன்னவூசல்—ஒருவகையூஞ்சல்.

அன்னவூர்தி — 1. அன்னவாகனம். 2. பிரமா. 'அன்னவூர்தியருஞ்சிறை நீக்கலன்' (கந்தபு. அயனைச்சிறைநீ. கஅ.)

அன்னவை—1. அவை, அத்தன்மைகள். 'அன்னவையொற்றர்களறிந்து' (கந்தபு. நகர்புகு. சஉ.) 2. ஒப்பானவை.

அன்னன் — 1. அவன், அத்தன்மையன். 'அன்னனவ் விடத்த ருக வாசனு மமைந்து நோக்கி' (இரகு. யாகப். ௯௬.) 2. ஒத்தவன்.

அன்னாசி — பழச்செடிவகையிலொன்று, அன்னதாழை, பரங்கித்தாழை.

அன்னாய்-1. அன்னையே. (விளி.) 'என்றவ டன்னிடங்குறுகி - யன்னாயிதற்கே தூரை யென்ன' (கல். பார. சர்ப்பயா. ௧௦.) 2. ஒத்தவளே. 'ஆவியன்னாய்கவலேல்' (திருக்கோ. ௩௪.) 3. ஓர் அசைநிலை. 'அன்னாய் பின்னகவத்தைப்படும்' (சி. சி. பா. சௌத். மறு. ௮.)

அன்னார்—1. அத்தன்மையர். 2. ஒத்தவர். 3. கல்நார் என்னும் ஒரு மருந்துச்சரக்கு.

அன்னான்—1. அன்னவன். 2. அவன்.

அன்னுழி — அப்பொழுது. 'அன்னுழியிக் கிரௌஞ்சமுகேசன்- றன்னொருகையிடைதக்கி யைகலுங்' (கந்தபு. தெய்வயா. உசடு.) [அ; ன்-சாரியை. உழி-இடம்.]

அன்னுழை—அவ்விடம். 'மன்னுமன்னுழை போயபின்னர்' (திருவாலவா. 18. 10.)

அன்னே — தாயே. 'உயிரெல்லா - மன்னேயெனவக்களிக்குந்தகையாயோ' (கந்தபு. அசுரர்யா. உக.) [அன்னையென்னும் பெயர் விளிவேற்றுமையில் ஐ கெட்டு ஏகாரம் பெற்றுவந்தது.]

அன்னை—1. அக்காள். (சூடா.) 2. தாய். 'அன்னையும் பிதாவும் முன்னறிதெய்வம்' (கொன்றை. க.) 3. தோழி. [தலைவி தோழியை யன்னையென்பாள், தோழி தலைவியை யன்னையென்பாள் என்றார் நச்சினார்க்கினியர். (தொல். பொரு. உசசு.)] 4. பார்வதி. (பிங்.)

அன்னோ—1. ஓரதிசயச்சொல். 2. ஓரிரக்கச்சொல். 'வேந்த - னன்னோ வெனவே யிரங்கா' (கந்தபு. திருவிளை. ௰௧.)

அன்னோன் — 1. அவன். 'மாதிரக்களிற் றையன்னோன்வல்லியிற்கொணர்திரென்று' (கந்தபு. தருமகோ. கக.) 2. ஒத்தவன்.

அன்னோன்றி—வலியற்றவன்.

அன—ஒப்பான. 'கரும்பனமொழியினர்' (இராமா. நகர்நீ. கஎ.) [அன்ன என்பதில் னகாரவொற்றுக் கெட்டுநின்ற ஒரு விகாரமொழி.]

அனகம்—புல்லுருவி (மலை.)

அனந்தர்—1. நித்திரை. 2. பருத்தி. 3. பித்து. 4. மயக்கம். 'அனந்தர்நோக்குடைக்கரியவாய் நெடியகட் கடைசி மங்கையர்' (சிந்தா. பதுமை. அ௬.) 5. மயிற்சூட்டு.

அனந்தரம்—வேலிப்பருத்தி.

அனந்தல்—1. செருக்கு, மதம், மயக்கம். 'வைகறைப்பழஞ்செருக்குற்றனுமனந்தரீர' (மலைபடு. கஎ௨.) 2. நித்திரை. 'அனந்தலாடேல்' (ஆத்திசூடி. ௩௦.) 3. மந்தவொலி. 'எடுத்தெறியனந்தற்பறை' (புறநா. 62. 5.)

அனந்தற்பந்தி — சூரியவெப்பந்தெரியாதவாறடர்ந்த பச்சிலைக்கொடிப்பந்தர்.

அனந்தன்—வெடியுப்பு.

அனந்தை—கொத்தான்கொடி.

அனயகம்—1. இருவாட்சி. 2. மல்லிகை.

அனரசம்—பக்கணவகையிலொன்று.

அனரவம்—வெந்தோன்றி. அநரவன் எனவும் எழுதப்படும்.

அனலிமுகம்—சூரியபுடம். (மூ. அ.)

அனலுதல் — அழலுதல். 'ஊரலோவாதனன்று' (சூளா. சீய. 164.)

அனனிலம்—பாலைநிலம். (திவா.)

அனுசி—அன்னாசி. (மூ. அ.)

அனுசிப்பூ—ஒரு பூ; இந்தச்சரக்கு சீனதேசத்தினின்று கொண்டுவரப்படுகின்றது.

அனாரியதித்தம் — நிலவேம்பு. (அநாரியதித்தமென்று மெழுதுவர்.)

அனிச்சம்—ஒருமரம். 'அனிச்சப்பூக் கால் களையாள்' (வள். ககஎடு.)

அனிச்சை— 1. அனிச்சமரம். 2. நாகமல்லிகை. (மலை.) [அநிச்சை எனவும் எழுதுவர்.]

அனிஞ்சில்—வில்வம்.

அனித்தம் — அனிச்சம். (பெருங். உஞ்சைக். 53. 162.)

அனிழம்—அனுடம். (s. i. i. 1. 83.)

அனிசு — 1. நட்சத்திரசீரகம். (மூ. அ.) 2. பெருஞ்சீரகம்.

அனுக்கம் — 1. அச்சம். 2. அனுங்குதல். 3. சந்தாபம். 4. சோம்பு. 5. பாம்பு. 6. புலம்புகை. 7. வருத்தம். 'மனமனுக்கம்விடத் தனித்தனிவள்ளலைப்புணர்கள்ளவன் - கனவினுக்கிடையூறடுக்க' (இராமா. கைகேசிசூழ். ருஉ.) 8. வாட்டம். 'அனுக்கமாய்ப்பேசினார்' (இது அநுக்கமெனவும் எழுதப்படும்.)

அனுக்கல்—1. ஒன்றோடொன்று முட்டச்செய்தல். 2. கெடுத்தல். 'அல்லலனுக்குபன் மணி' (தணிகை. நகரப். ரு.) 3. வருத்துதல்.

அனுக்காட்டல்—1. குறிப்புக்காட்டல். 2. சிறிதுதோன்றல். 'காய்ச்சலனுக்காட்டிற்று' [வழக்.]

அனுக்கியடித்தல்—ஒருவிளையாட்டு.(வழக்.)

அனுக்கு — 1-3. அனுக்கென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அனுக்குசிரம்—சிர அபிநயவகையில் ஒன்று. (பரத. பாவ. 78.)

அனுக்குதல்—அனுக்கல்.

அனுகம் — செஞ்சந்தனம். (அநுகம் எனவும் எழுதப்படும்.)

அனுங்கல்—1. அசைதல். 2. இழுகல். 3. ஒன்றோடொன்று முட்டுதல். 4. கெடுதல். 'வாட்படையனுங்கவேடர்' (சிந்தா.கோவிந். உஅ.) 5. புலம்பல். 6. வருந்தல். 'ஒதிம மச்ச முற் றனுங்கி' (உபதேச. சிவத்துரோ. உகO.) 7. வாடல்.

அனுங்கு — 1-3. அனுங்கென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அனுங்குதல்—அனுங்கல்.

அனுட்டனம்—சேம்பு.

அனுப்பல்—அனுப்புதல்.

அனுப்பு — 1. அனுப்புதல். 2-4. அனுப்பென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அனுப்புதல்—போகச்செய்தல். 'ஆங்கவர் பிடித்தசைத் தனுப்பி' (உபதேசகா. சிவத்துரோக. கஎச.)

அனுமதை—ஒருவகைப்புல்.

அனுமனித்தல்—கனைத்தல். (திருவாலவா. 28. 49.)

அனுமாசாக்கார்ய்—பொன்னுங்காணி.(மலை.)

அனுபரம்—இஞ்சி.

அனை — 1. அத்தன்மை. 'அனைநால்வகையும்' (தொல். பொரு. உசரு.) 2. ஒரு மீன். (பாரத. சூது. 14.) 3. தாய். 'அனைதனை விடைகொண்டே' (கந்தபு. வில்-வாதா. கசு.) [இடையில் னகரங்கெட்டது.] 4. அத்தனை. (ஐங்குறு.)

அனைத்து—1. அத்தன்மையது. 'ஐயவமைந்தன் றனைத்தாகப்புக்கீமோ' (கலித்தொகை. எஅ.) 2. அவ்வளவு. 'அனைத்தறன்' (வள். ௩௬.) 3. எல்லாம். இப்பொருளில், வரும்போது உம்மைபெற்றுவரும். 'ஆவிகளனைத்துமாகி' (கந்தபு. மேருப். எரு.) உம்மைதொக்கும் வருவதுண்டு. 'போகமனைத்தினுக்குறுப்பாம்.' (பெரியபு. புகழ்ச். ௩.)

அனைமார்—தாய்மார். 'எம்மனைமாரினி யெங்ஙனம்வாழ்குவிர் - நும்மனைமார்களை நோவவந்துக்கி' (சிந்தா. கோவிந். கஎ.)

அனைய—1. அந்த, அத்தன்மையான. 'அனையகாலையிலாயிடைநீங்கியே' (கந்தபு. வள்ளி. உ௬.) 2. அவைகள். 'அரசர்தங்கோமக னனையகூறலும்' (இராமா. திருவவ. ரு.) 3. எல்லாம். [இப்பொருளில் வரும்போது இச்சொல், 'உம்' பெற்றுவரும்.] 'ஆருயிர்-அனையவும்புரப்பவனாதலால்' (கந்தபு. பாயிர. ௩க.) 4. ஒத்த எனப் பொருள்படும் ஒரு பெயரெச்சக்குறிப்பு. 'பால்பரந்தனையபட்டார்' (சிந்தா. காந்த. சக.) 5. ஒத்தன எனப் பொருள்படும் ஒரு குறிப்பு வினைமுற்று. 'அகல்விசும்பிடைக்கதிர்களின் புறமறைத்தனைய' (கந்தபு. நகரப். உஎ.)

அனையது—1. அத்தன்மையது. 'அனையதாகிய தேரினை' (கந்தபு. சூரபன். உ௬.) 2. அது, அத்தன்மை. 'இனையது கண்டு பின்னுமிறுதிசெய்யிறைவற்கின்று - லனையதென்றறிதரேற்றார்' (கந்தபு. ததீசியு. கக௩.) 3. அவ்வளவு. 'எனையதெனைய தெய்தினா ரனையதனையதாயினார்' (சிந்தா. காந்த. உகஎ.) 4. ஒத்தது. 'மேலுலகனைய தொன்றே' (சிந்தா. நாமக. அ௨.)

அனையம்—1. அத்தன்மையினேம் எனப் பொருள்படும்ஒருகுறிப்புவினைமுற்று. 2. ஒத்தனேம் எனப் பொருள்படும் ஒரு குறிப்பு வினைமுற்று. 'கடலேயனையம் யாங் கல்வியா லென்னும்' (நன்னெறி. ௭.)

அனையவன்—1. அவன், அத்தன்மையன். 'அனையவன்கழன்முன்' (கந்தபு. மேருப். ௩௧.) 2. ஒத்தவன். 'ஈசனையனையவன்' (நல். பார. சலந்தா. ௧௫.)

அனையவை — 1. அவை, அத்தன்மையுடையவை. 'அறத்தாற்றினீட்டப்பட்டவனையவை' (திருவிளை. மண்சும. ௬௨.) 2. ஒப்பானவை.

அனையன்—1. அவன், அத்தன்மையன். 'அனையனையெடுக்குமம்மை' (கந்தபு. சூரம்பு. ௩௫.) 'அனையனைமறுக்கஞ்செய்தாய்' (திருவிளை. மண்சும. ௬௩.) 2. ஒத்தவன்.

அனையன—1. அத்தன்மையன. 'அனையனபலபாராட்டி' (கலித்தொகை. ௫௫.) 2. ஒத்தவை. 'பவளமேயனையனபன்மயிர்ப் பேரெலி' (சிந்தா. விமலை. ௧0.)

அனையிர்— } 1.ஒத்திர். 2.அத்தன்மையீர்.
அனையீர்— }

அனையேன்—1. ஒத்தேன். 2. அத்தன்மையேன்.

அனையை—1. ஒத்தாய். 2. அத்தன்மையாய்.

அனையோம்—அனையம்.

அனையோர்—1. அவர்கள், அத்தன்மையோர். 'ஆண்டகையார்கொலோவனையோர்' (கந்தபு. சூரன்றண். ௨௫.) 2. ஒப்பானவர்.

அனைவர்—எல்லாரும் 'ஆயிரம்புயமுடைத் திறலோர் - அனைவர்தம்மையும்' (கந்தபு. சகத்திர. ௩௩.)

அனைவரும் — எல்லாரும். 'அனைவருந் தொழுதுடன்வர' (கந்தபு. தெய்வ. ௨௬௧.)

அனைவிரும்— } எல்லீரும்.
அனைவீரும்— }

அனைவோரும்—எல்லாரும்.

ஆ.

ஆ—இது தமிழ்ப்பாஷையின் வர்ணமாலையில்வரும் இரண்டாமெழுத்து; உயிர்முயற்சியாற்பிறக்கும் எழுத்துக்களுள், அங்காந்த வளவிலே ஒலிக்கும் ஒரு நெட்டுயிர்.

1. அஃறிணைப்பன்மைப் படர்க்கையெதிர்மறைத்தெரிநிலைவினைமுற்றில் வரும் ஒரு விகுதி. 'கடலோடாகால்வனெடுந்தேர்' (வள். ௪௯௬.)

2. அதிசயத்தைக்குறிக்கும் ஓரிடைச்சொல். 'ஆசிறுவனல்லன்' (கந்தபு. தகரேறு. ௧0.)

3. ஆக. 'செல்வப்புதல்வனேயீர்ங்கவியா' (நீதிநெறி. ௪.) [ஆக என்னும் செயவெனெச்சம் விகாரமாகி ஆ என நின்றது.]

4. ஆச்சாமரம். 'ஆவுமாரமுமோங்கின வெங்கணும்' (சிலப். வேட்டு. ௭௬.)

5. ஆதல். 'இலயித்தவாறுளதாவேண்டும்' (சிவஞானபோ. க: உ. சிவஞா.) [இது முதனிலைத்தொழிற்பெயர்.]

6, 7. ஆவென்னேவலும் தெரிநிலைவினைப் பகுதியும். [இது வினைத்தொகையில்வரும் போது "ஆகூழ்" என்றாற்போலக் குச்சாரியையைபெற்றுவரும்.]

8. ஆன்மா. 'ஆதிருக்கச்சிவம்' (கம்பரங். ௩௧.)

9. இரக்கக்குறிப்புணர்த்தும் ஓரிடைச்சொல். 'ஆவம்மாவம்மாவென்னம்மாவகன்றனையே' (சிந்தா. கனகமா. ௨௪௮.)

10. உடன்பாட்டில்வரும் ஒரு தெரிநிலை வினையெச்சவிகுதி. 'பாராவணங்காப்பரவலுறுவிம்மிதமுஞ் - சோரா' (கந்தபு. வள். ௧௧௭.)

11. எருமை பெற்றம் மரை: இம்மூன்றன் பெண்பாற்பெயர். (தொல். பொருள். ௬௧௬.)

12. ஒரு சாரியையிடைச்சொல். 'இல்லாப்பொருள்' (நன். மெய்யீ. ௩0. உரை.)

13. ஒரு வினையாலணையும்பெயர்விகுதி. 'உண்ணுகிடந்தன' (நன். உயிரீ. ௨௧-உரை.)

14. சம்மதம், அருளின்கட்குறிப்பு, அன்பு, துக்கம், அற்பம், நினைப்பு, எல்லை, முற்று என்னும் இப்பொருள்களைக்குறிக்கும்

ஒரு வடமொழியவ்வியயம். 'ஆமயங்கே லெனவாண்டனன்' (கம்பராம். ௧0.)

15. சிவஞானம். (சி. சி. அளவை. ௧௩. சிவாக்.)

16. தன்மை, விதம். 'இனந்தெரிந்தெய்து மாபோல்' (கந்தபு. ஆற்று. ௩௫.) ["ஆறு" என்பது ஆ என நின்றது.]

17. தெரிநிலைவினையில் எதிர்மறைப்பொருளுணர்த்தும் ஓரிடைநிலை. 'உண்ணுமை' இவ்விடைநிலை சிறுபான்மை "உணராநோக்கிய" என்பதிற்போல எதிர்மறை வினையெச்சத்திலும், "உண்ணுமுலே" என்பதிற்போல எதிர்மறைப்பெயரெச்சத்திலும் இறுதிநிலையாய் நிற்கும். (வள். ௧௧௭௨. கந்தரந். ௨.)

18. "தொடங்கி" அல்லது "வரையும்" எனப் பொருள்படும் ஒருபசருக்கம்.'ஆகன்ன முறச்செம்பொன்வரைவில்வாங்கி' (பாரத. அருச்சுனன்றீ. ௭௯.) "ஆபாத, சூடங்கருதி" (பாரத. இராசசூ. ௭அ.)

19. பசு. 'ஆபயன்குன்றும்' (வள். ௫௬0.)

20. "அன்னு" என்பதிற்போலப் பொதுப்பெயர்க்கண்ணும் "மன்னு" என்பதிற்போல உயர்திணைப்பெயர்க்கண்ணும் வரும் ஒரு விளியுருபு.

21. இடபம். 'ஆவார்கொடிபாய்' (திருவிளை. நரிபரி. 19.)

22. மொழியிறுதியினின்று வினப்பொருளைத்தரும் ஓரிடைச்சொல். அவன் கந்தனு?

23. வைகாசிமாதம். (இராசவைத்.) [ஆ-இடபம். இப்பெயரையுடைய இராசியில் சூரியன் நிற்கும் மாதம் வைகாசி.]

24. குரலிசையின் எழுத்து. (திவா.)

25. இகழ்ச்சிக்குறிப்பு.

26. ஆவது. 'தேவரா......அசுரரா வந்து கேட்டிலர்'

ஆஅ — அதிசயம், இரக்கம், துக்கம்: இவற்றின்குறிப்பு. (பிங்.)

ஆக்கக்கிளவி — ஆக்கச்சொல். 'ஆக்கக் கிளவி காரணமின்றியும்' (தொல். சொல். கிளவி. ௨௨.)

ஆக்கங்கூறல் — ஆசிவசநஞ்சொல்லுதல். 'மன்னவற்காக்கங்கூறி மழவிடைக்கொடியோன்கூடற் - பன்னரும் புகழ்மையோது பனுவலையருளிச்செய்ய' (திருவிளை. மாயப். ௨௬.)

ஆக்கச்சொல் — செயற்கையுணர்த்துகிற "ஆ" என்னும்பகுதியிற்பிறந்து "ஆயினன்" என்பன முதலியனவாய் வழங்கும் வினைச்சொல். 'எண்ணெய் பெற்றமையான் மயிர் நல்லவாயின' என்பதிற்போல. (தொல். சொல். கிளவி. ௨௨. சேனு.) [இவ்வாக்கச்சொல் செயற்கையையுணர்த்தலேயன்றிச் சிறுபான்மை "நிற்குணனுய் நின்மலனுய்" என உண்மையையுணர்த்தலுமுண்டு. (சிவஞானபோ. ௬. ௩. வெ. சிவஞா.) மேலும் "ஆள்வாரிலிமாடாவேனே" என உவமைப்பொருளுணர்த்தலும் உண்டு. (சிவஞானபோ. ௭. ௩. வெ. சிவஞா.)]

ஆக்கஞ்செப்பல் — மன்மதபாணத்தால் வரும் பத்தவத்தையினென்று; அது: தன் மனவருத்தத்தைப் பிறர்க்குரைத்தல். 'பத்தவத்தை: காட்சியும், வேட்கையும், ஒருதலையுள்ளுதலும், மெலிதலும், ஆக்கஞ்செப்பலும், நாணுவரையிறத்தலும், நோக்குவவெல்லாமவையேபோறலும், மறத்தலும், மயக்கமும், சாக்காடும் என்னும் இவை' (அகப்பொ. அகத்திணை. ௩௯. உரை.)

ஆக்கணங்கெளிறு — கெளிற்றுமீன்வகையுள் ஒன்று.

ஆக்கணி — ஆறுதாரங்களுள் ஒன்முகிய அநாகதத்துக்குரிய பன்னிரண்டிதழ்களுள் ஓரிதழில் நிற்கும் ஓரதிதேவதை. (சி. சி. அ: ௨௧. மறை.) [ஆகூஷணி.]

ஆக்கதம்—முதலே.

ஆக்கந்திதம்—அசுவகதியினென்று.

ஆக்கப்பாடு—பேறு. 'அண்ணலவர்க்கருள்புரிந்த வாக்கப்பாடருள்செய்தார்' (பெரியபு. திருஞான. 77.)

ஆக்கப்பெயர் — காரணக்குறியாயாவது இடுகுறியாயாவது இடையில் ஆக்கப்பட்ட பெயர். (நன். பெயரி. ௧௭. இராமா.) [இடையிலே பொன்னுடைமைபற்றி ஒருவனைப் பொன்னன் என்பது காரணவாக்கம். 'மானவேன் முட்டைக்கு மாருய தெவ்வர்போங் - கானவேன் முட்டைக்குக் காடு' என்னும் பொய்யாமொழிப்புலவர்பாட்டிற் குமரனை "முட்டை" என்றது இடுகுறியாக்கம்.]

ஆக்கப்பொருள் — ஆகுபெயர்ப்பொருள்.

ஆக்கபாடிகன்—1. சூதாடுமிடத்தலைவன். 2. நீதிபதி. [ஆக்ஷவாடிக.]

ஆக்கபாதன்-ஒரு தார்க்கிகன். [அக்ஷபாதராகிய கௌதமர் செய்த நியாயநூலைக் கற்றவன் என்பதுபற்றி வந்தபெயர். ஆக்ஷவாத.]

ஆக்கம்-1. அமைத்துக்கோடல். (தொல். சொல். கிளவி. ௧. சேனா.) 2. ஆக்கச்சொல். (தொல். சொல். உக.) 3. ஆக்கியதன்மை. 4. ஆகியதன்மை. 5. ஆசிவசநம். 'புங்கவர் மந்தாரமழை பொழியவருக்தவராக்கம் புகல' (திருவிளை. தடாதகை. ௩௧.) 6. இலக்குமி. (சூ. நிகண். ௧: ௩௪.) 7. இலாபம். 'ஆக்கங்கருதி முதலிழக்குஞ்செய்வினை' (வள். ௪௬௩.) 8. எழுச்சி. 9. கொடிப்படை. (திவா.) 10. சிருட்டிப்பு. 'ஆக்கமவ்வவர் கன்மமெல்லாங்கழித்திட' (சி. சி. ௧: ௩௭.) 11. செல்வம். 'அளப்பருங்கல்வியுமாக்கம் யாவையும்' (கந்தபு. மாயையுப. ௬௨.) 12. மேன்மேலுயர்தல். 'அறத்தினூஉங்காக்கமுமில்லை' ... 'அறத்தினூஉங்காக்க மெவனோவுயிர்க்கு' (வள். ௩௧. பரி.) 13. வளர்ச்சி. 'தன்னொருமதலை யாக்கமுங் கருதிச் சானவித்தடங்கரை யடைந்தான்' (பாரத. குருகுல. ௮௦.) 14. வாழ்வு, பெருவாழ்வு. 'அவனால் வந்தவாக்கமிவ்வாழ்க்கை யெல்லாம்' (சி. சி. ௧: ௬௧.) 15. விருத்தி. 'தேக்கியின்பத்திளைக்கத்திளைக்கவே - யாக்கமாயெனக்கானந்தமாகியே' (தாயு. பொன். ௨௮.) 16. ஈட்டம். 'அருளொடு மன்பொடும் வாராப்பொருளாக்கம்' (குறள். 755.) 17. பொன். (பிங்.)

ஆக்கர்—1. படைக்கப்பட்டதேவர். 'இவ்வுருகிலாக்கரான இந்திராதிகள்' (ஈடு. 5. 2. 3.) 2. தாப்பனம்.

ஆக்கல்—1. அடுட்டித்தல். 'அறமதனை யதிக்கு கிலாதனையாக்கி' (சிவதரு. பாயிர. ௧௫.) 2. உயர்த்தல். 'ஒன்னார்த்தெறலுமுவந் தாரையாக்கலும்' (வள். ௨௬௪.) 3. சிருட்டித்தல். 'சூரியன்குலாலனுப்பின்றாக்குவனகில மெல்லாம்' (சி. சி. ௧: ௧௮.) 4. செய்தல். 'திக்கோர்காவிரண்டினுந்தன்செய்ய - கோல் வரும்படியேயாக்கிக்கொணர்ந்தனதிறைகள்' (பாரத. இராச. ௬௬: ௫.) பாகஞ்செய்தல், காய்ச்சுதல். 'சிவஞியத்தூறச்செய் தாக்கற்குடிநீர்' (தைல. பாயிர. ௨௬.)

ஆக்கவினை-1. ஆக்கவினைச்சொல். [ஆக்கமாகிய வினைச்சொல் என்றபடி.] 2. ஆக்கவினைக்குறிப்பு. [ஆக்கத்தைக்கொண்டிருக்கும் குறிப்புவினையென்றபடி.]

ஆக்கவினைக்குறிப்பு — ஆக்கச்சொல்லைக் கொண்டிருக்கும் வினைக்குறிப்புச்சொல். 'சாத்தன் நல்லனாயினான்' என்புழி "நல்லன்" என்னும் வினைக்குறிப்பு "ஆயினான்" என்னும் ஆக்கச்சொல்லைக்கொண்டிருத்தலால் ஆக்கவினைக்குறிப்பு. (நன். வினை. ௨௮.)

ஆக்கவும்மை-தன்னைப்பெற்ற சொல்லின் பொருள் பிறிதொன்றுமாயிருத்தலைக் குறிப்பிக்கிற "உம்" என்னு மிடைச்சொல். (நன். இடை. ௫. உரை.) ["பாலுமாயிற்று" என்புழிப் "பாலும்" என்பதின் உம்மை "அப்பால் இனிய துப்பாதலேயன்றி நோயைத்தீர்க்கும் மருந்துமாயிற்று" என்பதனைக் குறிப்பித்தல் காண்க.]

ஆக்கிடல் — செய்தல். 'ஆக்கிடுமதிகாரத்திற்கழிவினை' (சி. சி. ௧: ௨௩.)

ஆக்கிநாகரணம் —கட்டளைப்படிசெய்தல், கீழ்ப்படிதல். [ஆஜ்ஞாகரணம்.]

ஆக்கிநாசத்தி — ஆஞ்ஞாசத்தி. 'அவனுந் தனதாக்கினாசத்தியுங் கோடாமற் செங்கோல் நடத்தாநிற்பன்' (சி. சி. ௯: ௩௧. மறை.) [ஆஜ்ஞா; ஶக்தி.]

ஆக்கிநாபங்கம்—கீழ்ப்படியாமை, ஆணைப்படி நடவாமை. [ஆஜ்ஞாபங்க.]

ஆக்கிநிகநாநம் — எழுவகை ஸ்நாநத்துளொன்று; அது: விபூதியை விதிப்படி தரித்தல். [ஆக்நேயஸ்நாநம்: அக்கினியில் வெந்த திருநீறுகொண்டுசெய்யப்படுவதால் இப்பெயர்த்தாயிற்று.]

ஆக்கிநேயம்—1. அக்கிநிக்குரியது. 2. அக்கிநிபுராணம். இது: பதினெண்புராணத்தொன்று. 'ஆக்கிநேயம்மழற்கதையாம்' (கந்தபு. பாயிர. ௫௫.) 3. அக்கிநியஸ்திரம். 'பொய்யறுமாக்கிநேயமவித்தவிப்புகழோன் மற்றை - மையறுபகழியாவும்' (இரகு.மீட்சி. ௬௭.) 4. இரத்தம். 5. இருபத்தெட்டாகமங்களுள்ளே சதாசிவமூர்த்தியினுடைய அகோர

முகத்திினின்று உற்பவித்த ஐந்து ஆகமங்களுள் ஒன்று. இதற்குக் கிரந்தசங்கியை முப்பதினாயிரம் (சைவச. பொது. ௩௩௩.) 6. எழுவகைஸ்நாநத்துள் ஒன்று; அது: விபூதியை விதிப்படி தரித்தல். 'வாருணமாக்கிநேயமந்திரமிவைமுன்னுன - பேருணர் வளிக்குநாநஞ்செய்தவர்' (திருவிளை. தீர்த்தவி. ௨௦.) 7. கார்த்திகைநாள். 8. தென்கீழ்த்திசை. 9. நெய். 10. பொன். 11. விபூதி. (வி-ணி) [ஆக்நேய: அக்நி; ஏய - ஒரு வ-வி.]

ஆக்கிநேயன்—கந்தசுவாமி. [ஆக்நேய: இஃது: அக்கினிக்கு மகன் எனப் பொருள் படும் ஒரு தத்திதபதம்.]

ஆக்கிநேயி — 1. அக்கினிதேவன்மனைவியாகிய சுவாகாதேவி. 2. ஊரு என்னும் அரசனுடையமனைவி. [அக்கினியின்மகள்.] (கூர்மபு. தக்கனைச்சபி. ரு.) 3. தென்கீழ்த்திசை. [ஆக்நேயீ:]

ஆக்கினை—1. ஆருதாரங்களில் ஒன்று. அதன் தாநம் இலாடம். 2. கட்டளை. 'ஐந்து குரவர்களுடைய ஆக்கினையைத் தடுத்து நடத்தலும்' (திரிகடு. ௬௭. உரை.) 3. தண்டஞ்செய்தல். [வழக்.] [ஆஜ்ஞா.]

ஆக்கினைப்பத்திரம் — சாமந்தர், வேலையாளர், நாடுபுரப்பவர் முதலானவர்களுக்கு இக்காரியம் செய்யவேண்டுமென்று அரசரால் எழுதப்படுங் கட்டளை. (மிருதிசங். ௩௧.)

ஆக்கியாதம்—1. சொல்லப்பட்டது. 2. பிரசித்தஞ்செய்யப்பட்டது. 3. வினைச்சொல். [ஆக்யாதம்.]

ஆக்கியாநம்—1. கட்டுக்கதை. 2. பிரசித்தஞ்செய்தல். 3. பேசுதல். [ஆக்யாநம்.]

ஆக்கியை—நாமம். [ஆக்யா.]

ஆக்கியோன்—1. ஆக்கினவன், சிருட்டித்தவன். 2. நூல்செய்தவன். 'ஆக்கியோன் பெயரே' (நன். சிறப்பு. க.)

ஆக்கிரகம்—1. கடுங்கோபம். 2. கிரகித்தல். 3. சாமர்த்தியம். 4. தயை. 5. வெற்றிகொள்ளுகை. 6. விடாப்பிடி. [ஆக்ரஹ.]

ஆக்கிரகாயணகம்—மார்கழிமாசம். [ஆக்ரஹாயணக(ணிக): அக்ர - சிரேட்டமானது. ஹாயந-நெல். மிருகசீரிடத்தினத்திற் புதுநெற்கொண்டு ஒருவகையாகஞ்செய்யப்படுதலால் அக்ரஹாயணி என்பது மிருகசீரிடத்தின்பெயராம். அதனோடுகூடிய பூரணை, "ஆக்ரஹாயணி" எனப் பெயர் பெற்றது. அப்பூரணையையுடையதாகையால் மார்கழிமாசத்துக்கு "ஆக்ரஹாயணிகம்" என்றும், "ஆக்ரஹாயணம்" என்றும் பெயராயின. இனி அக்ர-கடைசி. ஹாயந-ஆடிமுதலாறுமாதங்கள்; ஆகையால் அயநத்தின்கடைசி என்பதுபற்றிவந்தபெயரென்பது சிலர் கொள்கை.

ஆக்கிரகாயணம் — ஆக்கிரகாயணிகம். [ஆக்ரஹாயண:]

ஆக்கிரகாயணி — 1. புதுநெற்கொண்டு மிருகசீரிடநாளிற்செய்யப்படும் ஒருவகையாகம். 2. மார்கழிமாசப்பௌர்ணிமை. 3. மிருகசீரிடம். [ஆக்ரஹாயணீ:]

ஆக்கிரகாயணிகம் — ஆக்கிரகாயணம். [ஆக்ரஹாயணிக.]

ஆக்கிரகி—1-2. ஆக்கிரகியென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும். [ஆக்ரஹ.]

ஆக்கிரகித்தல்—1. ஆதரித்தல். 2. உக்கரித்தல். 3. தயவுசெய்தல். 4. வலாற்காரமாயெடுத்தல். 'அவன் என்வீட்டை ஆக்கிரகித்துக்கொண்டான்' 5. வலிமைகாட்டல். 6. வெல்லல். [ஆக்ரஹ.]

ஆக்கிரந்தம்—1. அழுதல். 2. உக்கிரமான சண்டை. 3. கூப்பிடுதல். 4. சத்தம். [ஆக்ரந்த: ஆ; க்ரந்த-அழுதல், கூப்பிடுதல்.]

ஆக்கிரமணம்—வலிந்துகவர்கை.

ஆக்கிரமம்—1. அடைதல். 2. அதிபாரமேற்றுதல். 3. கடந்துபோதல். 4. நெருங்கித்தாக்குதல். 5. மேலாகப்பரத்தல். 6. மேற்கொள்ளுதல், வெல்லுதல். 7. வீரம். [ஆக்ரம: க்ரம - போதல், ஏறுதல்.]

ஆக்கிரமி—1-2. ஆக்கிரமியென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும்.

ஆக்கிரமித்தல்—1. அணுகிவருதல். 2. அதிகபாரமேற்றுதல். 3. உள்ளேயடக்கிக் கொள்ளுதல். 'பிரதாநத்திலேயாக்கிரமிக்கப்

பட்டிருக்கின்ற தன்மை' (சி. சி. உ: எஅ. சிவாக்.) 4. சினத்துவீரங்கொண்டெழும்பு தல். 5. நெருங்கித்தாக்குதல். 6. வெல்லு தல், மேற்கொள்ளுதல். [ஆக்ரமி.]

ஆக்கிரயணம்—1. அக்கினிட்டோமயாகத் திலே செய்யப்படுஞ் சோமநீர்நைவேத்தி யம். 2. விளைவுகாலத்திலே தானியங்களைப் பலியிட்டுச்செய்யும்ஓர்யாகம்.[ஆக்ரயண:]

ஆக்கிராணம்—1. ஆக்கிராணேந்திரியம். (சிவப்பிரகாசக்கட். ௩-ஆம். அங்கம்.) 2. திருப்தி. 3. மணத்தைக்கவர்தல். 4. மூக்கி லிடும் மருந்துப்பொடி. 5. மூக்கு. (சூடா.) [2, 3. ஆக்ராண:]

ஆக்கிராணி — 1. ஆக்கிராணியென்னேவ லும் தெரிநிலைவினைப்பகுதியும். [ஆக்ராண.]

ஆக்கிராணித்தல்—1. மணத்தைக்கிரகித் தல். 2. மணக்குகவர்ந்தெடுத்தல். 'இமைய வல்லி - சத்தியாகிய தனது கூறாகவுள்ள உதிராமாமிசங்களை யவருடலிற் சிறிதுமின்றி யாக்கிராணித்துக்கொள்ளல்' (சிவபரா. எக். பக்.)

ஆக்கிராணேந்திரியக்காட்சி — ஆக்கிரா ணேந்திரியத்தைக்கொண்டு அறியும் அறிவு. [அனு கந்தமறிதல்.]

ஆக்கிராணேந்திரியம் - ஞானேந்திரியமைந் தினொன்று; அது: நாசியினின்று மணத்தைக் கிரகிக்குங்கருவி. (வாசுதே. ௫௬.) [ஆக்ரா ணம்; இந்த்ரியம்.]

ஆக்கிராந்தம்—1. ஆக்கிரமிக்கப்பட்டது. 2. ஆளப்பட்டது. 3. கூடிவரப்பட்டது. 4. பாரமேற்றப்பட்டது. 5. மறைக்கப்பட்டது, கைக்கொள்ளப்பட்டது.'அஞ்ஞானாக்கிராந்த மாயிருக்கிற ஞானத்தையுடையனுவன்' (சி. சி. உ: ௬௧. சிவாக்.) 6. மேலிடப்பட்டது, வெல்லப்பட்டது. 7. மேற்பரவப்பட்டது.

ஆக்கிராந்தி—1. ஏறுதல். 2. கடந்துபோ தல். 3. வீரம்.

ஆக்கிராயணம் - ஆக்கிரயணம். [ஆக்ரா யண.]

ஆக்கிரீடம்—1. இராசாவுடையபூந்தோட் டம். 2. பொழுதுபோக்கு. 3. விளையாட் டிடம்.[ஆக்ரீட; ஆ;க்ரீடா - விளையாட்டு.]

ஆக்கு—1-3. ஆக்கென்னேவலும் தெரி நிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

ஆக்குதை— } 1. செய்தல். 'எரிப் ஆக்குதல்— } பச்சுட் டெவ்வகோ யாக் கும்' (நாலடி. 124). 2. படைத்தல், சிருட் டித்தல். 'அனைத்துலகு மாக்குவாய்' (திரு வாச. 1. 42.) 3. அமைத்துக்கொள்ளுதல். 'நொய்யும் நுறுங்குங் களைந்து அரிசியமைத் தாரை அரிசியாக்கினரென்ப' (தொல். சொல். 1. சேனா.) 4. சமைத்தல். 'ஆக்கப் பொறுத்த நமக்கு' (இராமநா. அயோத். 13.) 5. உயர்த்துதல். 'உவந்தாரையாக்க லும்' (குறள். 264) 6. மாற்றுதல். 'முல்லை யை மருதமாக்கி' (கம்பரா. ஆற்றுப். 17.).

ஆக்குமவன் - செய்வோன்; 'இடர்நோக்கி யுயிர்க்காக்குமவன்' (சைவச. ஆசா. 11.)

ஆக்குமாறு — ஆக்குதலினால். 'ஆக்குமா றயனும்' (பாரத. தற்சிறப். ௪.) [மாறு 'அணையையாகன்மாறே' என்பதுபோல மூன்றனுருபின்பொருள்படவந்த இடைச் சொல்.]

ஆக்குருட்டம்—கோபப்பேச்சு. [ஆக்ருஷ்டம்:]

ஆக்குரோசகம்— } 1. ஆணையிடுதல். 2. ஆக்குரோசநம்— } உரத்துக்கூப்பிடுதல். ஆக்குரோசம்— } 'மஞ்சத்தனுயிருக்கிற புருடனுடைய ஆக்குரோசத்தை ஆதாரமா யிருக்கிற மஞ்சத்துக்கு லக்கணையாகச் சொன்னது' (சி. சி. ௫: ௪. சிவாக்.) 3. கடுங் கோபம். 4. சாபமிடுதல். 5. நிந்தித்தல். [1, 2, 4, 5. ஆக்ரோஶ: ஆ; க்ருஶ்- கூப்பிடுதல்.]

ஆக்குரோடம்— மார்புவரைக்கும். [ஆ க்ரோடம்: ஆ - வரைக்கும். க்ரோடம் - மார்பு.]

ஆக்குவயம்—அபிதானம், பெயர். (பிங்.) [ஆஹ்வய:]

ஆக்குவோன்—சிவன். 'அவமெனுங்களைக ளிங்கியாக்குவோனருளால்' (திருவாத. மந்திரி. ௭.)

ஆக்கூர்—ஒரூர். (தேவார. ஆக்கூர். திரு ஞான.)

ஆங்கெளுத்தி—1. கெளிற்றுமீன்வகையி னொன்று. 2. கடற்கெளிற்றுவகையிலொன்று.

ஆங்கேபகன்—1. மறுத்துச்சொல்வோன். 2. தடைகூறுவோன். [ஆக்ஷேபக.]

ஆங்கேபம்—1. மறுத்துச்சொல்லல். 2. சந்தேகம். 3. தடைமொழி. (வீரசோ. அலங். கக. உரை.) [1, 2, ஆக்ஷேப: ஆ; க்ஷிப் - எறிதல்.]

ஆங்கை—1. உடம்பு. 'ஆக்கையுள்ளுறை யாவிகெடுத்தவன்' (சிந்தா. பது. கஙௗ.) [யாக்கையென்பதில் யகரவொற்றுக்கெட்டது. நாடி, நரம்பு முதலியவற்றால் யாக்கப்பட்டமைபற்றிவந்தபெயர்.] 2. நார். 'நரம் பாக்கையாத்து' (தேவா. 631. 3).

ஆங்கொத்துமம்—சரக்கொன்றை. (மலை.)

ஆங்கோல்லி — 1. ஒருபுழு. 2. இல்லை. (மலை.)

ஆக—1. ஆகட்டும். (சி. சி. அ: ௫. ஞாநப்.) 2. முற்றெச்சப்பொருளைத்தரவரும்ஓரிடைச்சொல். 'காரெதிர் கானம் பாடினே மாக' (தொல். இடை. ௩௨. நச்.) 3. முழுதும். 'ஆகவுயர்திவ்வியவாண்டாறிரண்டாயிரஞ் ச்துரயுகமதாகும்' (கூர்மபு. பிரமாவி. ௭.) 4. விகற்பப்பொருளைக்காட்டும் ஓரிடைச்சொல். 'தெய்வத்தானாக, மக்களானாக, தனக்குவந்த துன்பங்களை' (வள். சசஉ. பரி.) 5. அவ்வாறாக. 'ஆகராகவனை யவ்வழிகண்டான்' (கம்பரா. இராவணன்ற. 19). 6. நான்காம்வேற்றுமையுருபுடன்வரும் துணைச்சொல். 'அவனுக்காகக்கொடுத்தான்'. 7. செய்திகுறிக்கும் இடைச்சொல். 'அவன்கண்டதாகச்சொன்னான்' 8. மொத்தம். 'ஆகத்தொகை.'

ஆகச்சதி—வருகிறான் எனப்பொருள்படும் ஒரு வடமொழிவினைமுற்று. (பி. வி. காரக. கஉ.) [ஆகச்சதி.]

ஆகச்செய்தே—ஆகவே. (ஈடு.)

ஆகச்சே—ஆகச்செய்தே.

ஆகட்டும்—ஆகுக. (சி. சி. அ: ௫. ஞாநப்.)

ஆகடியக்காரன் — பரிகாசம்பண்ணுகிறவன்.

ஆகடியம் — 1. அநியாயம், கொடுமை. 'அஞ்சுபூதமுண்டாகடியகாரரிவர்' (திருப்பு. கசஅ.) 2. பரிகாசம். 'ஆகடியம்பண்ணுகிறான்' (வழக்.)

ஆகண்டலன்—இந்திரன். 'அண்டர்க்கெல்லாமரசானவாகண்டலனுக்கு' (பாரத. இராய. கஉக.) [ஆவண்டல: ஆ; வண்ட - வெட்டுதல். அல - ஒருவிகுதி. மலையின்சிறகரிந்தோனென்றபடி.]

ஆகதம்—1. அடிக்கப்பட்டது. 2. அறியப்பட்டது. 3. கோடிச்சீலை. 4. வந்தது. 'துரியாவத்தைக்குக்காரணமாகிய ஆகதவிந்து நாதம் குடிலையிலும், சித்தம் பிரகிருதியிலும் லயிக்க' (சி. சி. சு: ௩௪. சிவாக்.) 5. வாத்தியம். 6. வியர்த்தமானபேச்சு. 7. கமகம் பத்துள் ஒன்று. [1, 2, 3, 5, 6. ஆஹத. 4. ஆகத.]

ஆகதர் — சைனர். 'ஆகதர்க்கெளியேனலேன்' (தேவா. 858. 2.)

ஆகந்து—1. இடையில்வந்தது. 2. வருதல். [ஆகந்து.]

ஆகந்துகசுரம்—அருந்துகின்ற அறுசுவை வருக்கங்களின் காரணமில்லாமல் வருகிற சுரம். அஃது: அபிஷங்கசுரம், அபிகாதசுரம், அபிசாரசுரம், சாபச்சுரம் எனப் பலவகைப்படும். (சீவரட். ௩க.) [ஆகந்துகஜ்வர.]

ஆகந்துகம்—இடையில்வந்தது, வந்துகூடியது. 'இந்த மலம் ஆன்மாவினுடைய ஞாநசத்தியை மறைத்தலால் சகசமே ஆகந்துகமலமன்று' (சிவப்பிர. உ: உ. உரை.) 'காய்ந்திடு சகசமே யாகந்துகப் பவங்க ளர்க்கும்' (மச்சபு. யோகசாத். ௩அ.)

ஆகந்துகமசூரிகைரோகம்—ஒருவகையான மசூரிகைரோகம். அது: திரிதோஷமசூரிகைக்கொப்புளங்களைப்போலவே யிருந்தாலும் அதைப்போல் ஒரேகாலத்தில் பிறக்காமல் முதன்முதல் ஒரு அவயவத்திற்பிறந்து உடனே சரீரமுற்றிலும் வியாபிப்பதாயிருக்கும். (சீவரட். கசரு.) [ஆகந்துகமஸூரிகாரோக.]

ஆகந்துகவிரணம்—காயங்களினாலுண்டாகின்ற ஒருவகை விரணம். (சீவரட். உகரு.)

ஆகந்துகன்—புதியவனாகவந்தவன். [ஆகந்துக.]

ஆகநம் — கிண்டுதற்கருவி. [ஆவந: ஆ, வந - கிண்டுதல்.]

ஆகநிகம்—1. எலி. 2. பன்றி. 3. மண்ணகழ்கருவி. [ஆகநிக: ஆ; வந- கிண்டுதல்.]

ஆகநிகன்—1. கள்வன். 2. மண் கிண்டுவோன். [ஆகநிக:.]

ஆகம்-1. உடம்பு. 'ஆகத்தைவருத்துகின்ற வரும்பசியவித்தாய்' (கந்தபு. வள். கo௪.) 2. குப்பைமேனி. (இராசவைத்.) 3. சுரை. 4. பாறை, மண்வெட்டி. [ஆக.] 5. மனம். 'ஆகத்தெழுகனல்கண்வழியுக' (இராமா. கான்வ. ௬எ.) 6. மார்பு. 'முகைவாயவிழ்ந்த தகைசூழாகத்து' (திருமுரு. க௩௧.)

ஆகம்பநம் — 1. அசைவு. 2. நடுக்கம். [ஆகம்பந:]

ஆகம்பம்—1. அசைதல். 2. சிறிதசைதல். 3. நடுக்கல். [ஆகம்ப.]

ஆகம்பிதசிரம் — சிர அபிநயவகையுள் ஒன்று. (பரத. பாவ. 71.)

ஆகம்பிதம்—1. சம்மதிக்குறிகாட்டுமுகம். 2. சிறிதசைக்கப்பட்டது. [ஆகம்பித.]

ஆகம்பிதமுகம் — பதினன்குமுகநிலைகளிலொன்று; அது: சம்மதியைக்காட்டும்படி அசைக்கப்படும்முகம். [ஆகம்பிதமுக.]

ஆகமசாத்திரம்—சைவ வைணவ சாக்த ஜைந தந்திரங்கள்.

ஆகமநகாலம்—1. சங்கிராந்திகாலம். 2. பிரசவகாலம். [ஆகமநகால.]

ஆகமநம்—1. திரும்பிவருதல். 2. தேட்டம். 3. வந்துசேருதல். 'கமநமாகமநமெனுஞ் சொல்விட்டு' (நல். பாரத. கிருட்டிண. ௪அ.) [ஆகமந.]

ஆகமப்பிரமாணம்—காட்சியாலும் அநுமானத்தினலும் அறியப்படாத பொருளையும் அறிவிக்கும் ஆப்தவாக்கியமாகிய சாத்திரம்.

ஆகமப்போலி—உள்ளதுகூறுதவாக்கியம் (சைவப். உஎ.)

ஆகமபரோட்சஞானம் — காட்சிக்கெட்டாததை ஆகமவழியாலறிதல். (சி. சி. கக: க. ஞான.) [ஆகமபரோக்ஷஜ்ஞாந: ஆகம; பரோக்ஷ - காணப்படாதது. ஜ்ஞாநம் - அறிதல்.]

ஆகமம் — 1. ஆன்மாக்களுக்கு மலத்தை நாசஞ்செய்து ஞானத்தையுதிப்பித்து மோட்சங்கொடுத்தற்காக உபதேசிக்கப்பட்டதெனச் சொல்லப்படும் நூல். இது: மந்திரகலை, தந்திரகலை, உபதேசகலை யென மூவகைப்படும். 'அநாதியேயமலனயவறிவனூலாகமந்தான்' (சி. சி. அளவை. க௩.) [ஆ-சிவஞானம். க-மோட்சசாதநம். ம-மலநாசம். (சி. சி. அளவை. க௩. சிவாக்.) திருவாசகத்துச் சிவபுராணவகவலிலே ஆ-பசு. கம்-பதி. ம-பாசம் எனவும், பசு பதி பாசம் என்பவற்றின் இலக்கணங்களைவிரித்துணர்த்துநூல் ஆகமம் எனவும் உரைகாரர் கூறினர்.] 2. கடவுளருளியநூல். 3. கல்வி. 4. சாட்சியாக வரும் உறுதிப்பத்திரம். 5. தருமநூல். 'ஆகம மென்பன மநுமுத லாகிய, வறனெடு புணர்ந்த திறனறி நூலே' (தண்டி. யலங். கஉக.) 6. தோன்றல்விகாரத்தால் வருமெழுத்து. 'மூன்ருெடு நான்கொன்ப தாமுயிர்ப் பின்னுயிர் முந்திரடு, வான்றயகா ரம்வந் தாகம மாகும்' (வீரசோ. சந்தி. க௩.) 7. மரம். [இது அகமமென்பதனீட்சி. இயங்குதலில்லாதது என்றபடி.] 8. வந்துசேருதல். 9. வருதல். 10. வேதம். (சி. சி. அளவை. க௩. சிவஞான.) [ஆகம.]

ஆகமமலைவமைதி — ஆகமமலைவாயினும் நாடகவழக்குப்பற்றி யொன்று அமையும் எனக் கோடல். (தண்டி. கஉஉ. உரை.)

ஆகமமலைவு — இன்னதுசெய்தல் அறமென்று விதிக்குந் தருமநூல்விதியிற் பிறழ வருவது. (தண்டி. கஉக.)

ஆகமவளவை—சத்தப்பிரமாணம். (குறள். 37. உரை.)

ஆகமன்—சிவன். 'ஆகமன்சிவனே' (சிந்தாமணிநிகண்டு.) [ஆகமி: ஆகமத்தையுடையவன் என்றபடி.]

ஆகமாநுமானம்—உரையாலநுமானம். (சி. சி. அளவை. கஉ. மறை.)

ஆகமோத்தம் — ஆகமத்திற்சொல்லப்பட்டது. [ஆகமோக்த: ஆகம; உக்த - சொல்லப்பட்டது.]

ஆகர்ஷகம்—கவர்வது.

ஆகர்ஷணம் — 1. இழுக்கை. 2. அஷ்டகருமத்தொன்று.

ஆகர்ஷித்தல்-1. இழுத்தல், பற்றுதல், கவர்தல். 'இவைகாட்டுசிவோயம், சிவோகம் என்று ஒன்றையொன்று ஆகர்ஷிக்கும் இரண்டுபாவனையியற்றலாமே' (சி. சி. சு: க. ஞாநப்.) 2. வரவழைத்தல். [ஆகஷ-ணம்.]

ஆக்ர — பிடி என்னும் ஏவற்பொருள் கொண்ட ஆரியவினை. (கந்தபு. அக்கினிமுகா. வதை. உ0அ. கீழ்க்குறிப்பு.) [ஆஹர.]

ஆகாசம்—1. இரத்தினாதிகள்; (த.நி.போ. கஉசு. பக்.) 2. சுரங்கத்திற்றேன்றவது. (தர்க்கச. ச.) [ஆகரஜ: ஆகர° - சுரங்கம்; ஜ° - பிறந்தது.]

ஆகரணம் — 1. அகற்றுதல். 2. ஏவுதல். 3. கொண்டுவருதல். 4. பிடித்தல், பற்றுதல். 5. விவாகசமயத்திற்கொடுக்குஞ் சீதனப்பொருள். [ஆஹரண: ஆ; ஹ்ரு - எடுத்தல்.]

ஆகரம்-1. உறைவிடம், இரத்தினங்களின் உற்பத்திஸ்தானம். 'எரிமணிபுட்பராகமென் றிவற்றிற்காகரம்' (பாரத. இந்திர. கஉ.) [இது ஆகாரத்தின் குறுக்கம்.] 2. எடுத்தல். 3. கவர்தல். 4. குற்றுவாள். 5. சாலாங்கபாடாணம். (மூ. அ.) 6. சிரேட்டம். 7. சுரங்கம். 8. திரள். 9. நிச்சுவாசம். 10. மண்கிண்டுங்கருவி. 11. வீடு. 'ஆகாமுதலியவிடந் தொறுமாய்குவார்' (கந்தபு. இந்திரன்கர. கஉ.) [6. 7. 8. ஆகர: ஆ; க்ரு - செய்தல். 10. ஆவர. 9. 2. 3. ஆஹர: ஆ; ஹ்ரு - எடுத்தல்.]

ஆகரன்—1. உறைவிடமுடையோன். 2. கிண்டுவோன். [ஆவர.]

ஆகரி—1. ஓர் இராகம். (சிலப். 14. 166. உரை.) 2. சுரங்கத்திற்பிறந்தது. [ஆகரிக.] 3. திப்பலி.

ஆகருடணத்தம்பநவாதரோகம்—அந்தராயாமவாதரோகம். (சீவரட். கசஎ.) [ஆகஷணம் - இழுத்தல்.]

ஆகருடணம் — 1. அறுபத்துநான்குகலைகளிலொன்று. அது: ஆகருடணகருமத்தைக் கூறுவது. 2. இழுத்தல். 'முன்னுள்சொற்றிடும் யோகத்தாலே - யாற்றலாகருடணஞ்செய் தாற்கயிறமையவீக்கி' (மச்சபு. பிரமாண். எ.) 3. தூரத்தில் இருக்கும் பொருளைச் சமீபத்தில் வருவிப்பது. அது: தாமதகுணமெட்டனுளொன்று. (கூர்மபு. வருண. கச. உரை.) 4. நவநாதசித்தர்களாற் கற்பிக்கப்பட்ட கௌளயாமளாதிகளிற்சொல்லப்படும் அட்டகர்மங்களுளொன்று. அஃது ஒருவன் பொன் பெண் முதலிய வஸ்துக்களை இருந்தவிடத்திலிருந்து தானிருக்கும் இடத்துக்கு வரச்செய்தல். 'அகரமாதிமூன் றாகிய வாகருடணமே' (திருவிளை. எல்லாம்வல். கஎ.) [ஆகஷணம்.]

ஆகருடணி—காய் பழம் முதலியவற்றைக் கொளுவி இழுத்துப் பறித்தற்குரிய ஒருவகைத்தோட்டி. [ஆகஷணி.]

ஆகருடணை—1. அழைத்தல். (பிங்கல. கசுகசு.) 2. இழுத்தல்.

ஆகருடித்தல்—1. அழைத்தல். 2. இழுத்தல். 'அங்குசமுத்திரையினுலேபூரகத்தால் ஆகருஷித்து' (சி-லி. கிரி. எஅ. உரை.)

ஆகருணநம்-காதினுற்கேட்டல். [ஆகரண நம்:]

ஆகல்—1. ஆகுக வென்னும் வியங்கோள். 2. ஆகுதல். 3. வினையெச்சமாய் வரற்பாலதொன்று வினைமுற்றுப்பெயராய் வருமிடத்து அப்பெயராகிய வினைமுதலுக்குப் பயனிலையைத் தன்னகத்துட்கொண்டு, ஆக்கப்பொருளிலே இடைச்சொற்றன்மையாய்வரும் ஒரு தொழிற்பெயர். 'அவனேவலின்வழா தகலையடைந்து' (பாரத. வாரண. கு0.)

ஆகலநம்—1. அறிந்துகொள்ளுதல். 2. எண்ணுதல். (கணக்கதிகா) 3. சிறைசெய்தல். 4. பிடித்தல். 5. விசாரணை. 6. விரும்புதல். [ஆகலந.]

ஆகலாகல்—ஆகவாக. (தொல். சொல். 280. சேனு.)

ஆகலூழ் — ஆகூழ். 'அவ்விணைவிரம்பக் கற்ற-னகலூழ்வவியால்' (திருவிளை. அங்க. ச.)

ஆகலே-மிருகத்தின் காற்குளம்பு. (இராசவைத்.)

ஆகவநம் — 1. பலி. 2. பலியிடுதல். [ஆஹவந.]

ஆகவநீயம்—1. மூவகை வேதிகளுள் ஒன்று; அது: நாற்சதுரமாய் யாகசாலையிலே வடக்கின்கண் வைக்கப்படுவது. (கந்தபு. அசுரர்யாகப். சஅ. உரை.) 2. வேதாக்கினி மூன்றனுள் ஒன்று; அது: நாற்சதுரமாய் யாகசாலையின்வடக்கின்கண் வைக்கப்பட்டுத் தேவர்களுக்கு அவிகொடுத்தற்குரியது. (பெரியபு. இல்லைவா. ரு. உரை.) [ஆஹவநீய.]

ஆகவபூமி-போர்க்களம். (பிங்.) [ஆஹவ பூமி.]

ஆகவம்—1. சிலை. 2. பலியிடுதல். 3. யுத்தகளம். 'மாகவந் தங்கள் கூறி வாய்ப் பறை யிமுற்றவாடு - மாகவந் தங்குமெல்லை யகன்று' (கந்தபு. தேவகிரி. க.) 4. போர். (பாரத. பதின்மூன். 97.) [ஆஹவ.]

ஆகவாக—உடம்படாமை ஆதாரமின்மை களைக் குறிக்கும் அசைநிலை. (தொல். சொல். 280. சேனா.)

ஆகவியன் — போர்வீரன் (நிகண்டு).

ஆகவும்—ஆகுக. 'இத்தன்மமுட்டில்... மன்றப்பெறுவதாகவும்' (S. I I. III. 95.)

ஆகவே — ஆதலால். [முன்னர்க்கூறியதனாலே பெறப்பட்டதொன்றனைப் பின்னர் விளக்குமிடத்து அவற்றினியைபை விளக்கிக்கொண்டு இடையில்நிற்பது.] (தொல். சொல். இடை. கக. சேனா.)

ஆகளாசம்—அபின். (தைல. தைலவ. கசு.)

ஆகற்க—ஆகாதொழிக. (ஐங்குறு.)

ஆகற்பகம்—1. அவா. 2. அறிவுமயக்கம். 3. இருள். 4. பச்சாத்தாபம். 5. மகிழ்ச்சி. 6. முடிச்சு. [ஆகல்பக.]

ஆகற்பம்—1. அதிகப்படுத்தல். 2. அலங்காரம். 3. உடை. 4. கற்பகாலம்வரையும். 5. நோய். [ஆகல்ப.]

ஆகன்மாறு—ஆதலால். (பதிற்றுப்பத்து. 38. 10.)

ஆகன்னம் — காதுபரியந்தம். 'ஆகன்ன முறச்செம்பொன் வரைவில் வாங்கி' (பாரத. அருச்சுனன்றீர்த்த.சக.) [ஆகர்ண: ஆ - வரைக்கும்; கர்ண - காது.]

ஆகஸ்மிகம் — எதிர்பாராமற் சடிதியிற் சம்பவித்த ஒன்று. [ஆகஸ்மிக. இஃது அகஸ்மாத் என்பதினின்று பிறந்த தத்திதபதம்.]

ஆகா — 1. அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை எதிர்மறையில்வரும் ஒரு வினைமுற்று. 2. ஆகாதவெனப்பொருள்படும் ஒரு பெயரெச்சம். 3. ஆகி எனப் பொருள்படும் வினையெச்சம். 4. ஒரு கந்தருவன். 'வீணை பயில்வோர்முகம் பார்த்துரைப்ப - வாகாவெனலா லவர்க்கப்பெயர் சேர்த்தினரே' (நைடத. அன்னத்தைத் தூது. சுசு.) [ஹாஹா.] 5. வியப்பையுணர்த்தும் ஓரிடைச்சொல். 6. சம்மதக்குறிப்பு.

ஆகாங்களங்க — மிருதாரசிங்கி. அது: முப்பத்திரண்டுபாஷாணங்களினொன்று. (மூ. அ.)

ஆகாங்கிஷை-ஆகாங்ஷை. [ஆகாம்க்ஷா.]

ஆகாங்ஷை—1. அவாய்நிலை. 2. ஆசை. [ஆ; காம்க்ஷா-விருப்பம்.]

ஆகாசக்கத்தரி—ஒருவகைக்கத்தரி.

ஆகாசக்கப்பல் — வானத்திற்செல்லும் விமானம்.

ஆகாசக்கரை—
ஆகாசக்கரைக்கட்டு } மனோராச்சியம். [ஆகாசத்திலே கரைகட்டுதல், பாவனையிலன்றி யில்லாமையால் மனோராச்சியத்தைக் கருதுகிறது.]

ஆகாசக்கல்—ஆகாசத்திற் பறக்கும் அணு.

ஆகாசக்கோட்டை—மனோராஜ்யம்.

ஆகாசகக்ஷை — காண்போர் பார்வைக்குப் பூமியைத்தொடுவதுபோலத்தோற்றும் அடிவானம். [ஆகாஶகக்ஷா: ஆகாஶ; கக்ஷா - இடைக்கச்சை, சுவர்.]

ஆகாசகங்கை—1. ஆகாசத்திலுள்ள கங்கை. [ஆகாஶகம்கா.] 2. பால்வீதிமண்டலம்.

ஆகாசகபாலி—1. புரளிக்காரன். 2. மிக நல்லவன்.

ஆகாசகம்—பறவை. [ஆகாஶக: ஆகாஶ; க - செல்லுதலுடையது.]

ஆகாசகமநம்—1. அறுபத்துநான்குகலைகளிலொன்று. அஃது: ஆகாசத்திலே நடத்தலைப்பற்றியது. 2. ஆகாசத்திற்செல்லுகை. [ஆகாஶகமந: ஆகாஶ; கமந - போதல்.]

ஆகாசகர்ணி—ஒரு தேவதை. (வி-ணி. ௨௩௮.)

ஆகாசகருடன் — 1. கொல்லங்கோவை (மலை). 2. கோவை. 3. சீந்தில். 4. பேயத்தி.

ஆகாசகாமி — 1. குதிரைகளுள் ஒருவகை. அஃது: ஆகாசத்திற்செல்லும் வல்லமையுடையது. [ஆகாஶகாமிநு: ஆகாஶ; காமிநு - செல்வது.] 2. பறந்து செல்லுமாற்றலுடையோன்.

ஆகாசகாமினி—ஆகாயத்திற் செல்லுதற்குதவும் ஒரு மந்திரம். (சிந்தா. 1713 உரை.)

ஆகாசசபை-காஞ்சீபுரத்து நடராஜசபை. (அபி. சிந்.)

ஆகாசத்தாமரை—1. இல்பொருள். [ஆகாசத்திலே தாமரையில்லையென்றபடி.] 2. ஒரு நீர்ப்பூண்டு. 3. கொட்டைப்பாசி.

ஆகாசதரன்—ஒட்டடை.

ஆகாசதானம்—கொட்டைப்பாசி.

ஆகாசதீபம்—1. உயர்ந்த கம்பத்தில் வைக்கப்படும் ஒரு விளக்கு. 2. சூரியன் துலாராசியிலிருக்கும் ஐப்பசியின் முழுவதும் நாடோறும் தவறாமல் மாலைக்காலத்திலே உயர்ந்தவிடத்திலே நல்லெண்ணெயிலேற்றப்படுந் தீபம். 3. கார்த்திகைமாசத்திலே விளக்கீட்டுத்திருநாளிலே உயர்ந்த கம்பத்தில் ஆகாசத்திலேநின்றெரியும்படிவைக்கப்படும்ஒரு விளக்கு. [ஆகாஶதீவ: ஆகாஶ தீவ - விளக்கு.]

ஆகாசதூள்—ஒட்டடை.

ஆகாசப்பந்தல்—மனோராஜ்யம்.

ஆகாசபஞ்சாங்கம் — பெரும்பொய்.

ஆகாசபட்சி—சாதகப்புள்.

ஆகாசபலம்—விண்வீழ்கொள்ளி. 'ஆகாச பலம் வீழ்வதுபோல்' (ஞானவா. சகக. 7.)

ஆகாசபூதவாதிமதம் — ஆகாசமென்னும் பூதமே பிரமம் என்பவனுடைய மதம். (த. நி. போ. பக். ௨௮௨.)

ஆகாசம்—1. ஆகாயகமனம். 2. இடம். 3. சிற்றண்டத்திலே வாயுபூதத்திற்குமேலாக இருக்கும் ஓர் அசாதாரணபூதமாய் வட்டவடிவமும், அகாரபீசாக்கரமும், புகைநிறமும், அமுதவிந்துவென்னும்அடையாளமுமுடையதாய்ச் சதாசிவனை அதிட்டாதாவாகக்கொண்டிருக்கும் ஒரு பூதம். (சி. சி. ௨. ௬௬, ௬௭, ௬௮ உரை.) 4. வெளி. [ஆகாஶ: ஆ; காஶ - பிரகாசித்தல்.] 5. வானம்.

ஆகாசமண்டலம்-1. ககோளம். [ஆகாஶ மண்டல: ஆகாஶ; மண்டல - விருத்தாகாரம்.] 2. பாதத்தின் பொதுவிலக்கணங்களாகிய இருபதுபேதங்களு ளொன்று. (திருவிளை. கான்மா. ௬.)

ஆகாசமயம்—வெறுமை, சூனியம்.

ஆகாசமாஞ்சி— சிறுசடாமாஞ்சிப்பூண்டு.

ஆகாசயானம் — 1. ஆகாசத்திற்செல்லும் ஊர்தி. ஆகாசத்திற் பிரயாணஞ்செய்தல். [ஆகாஶ: யாநம் - ஊர்தி, போதல்.]

ஆகாசராமன்—அநாமதேயன்.

ஆகாசலிங்கம்—பஞ்சலிங்கத்துள் சிதம்பரத்துள்ளது.

ஆகாசவல்லி—1. ஒரு பூண்டு. 2. சீந்தில். [ஆகாஶவல்லீ: ஆகாஶ; வல்லீ - கொடி.]

ஆகாசவாசிகள்—1. அந்தரசஞ்சாரிகள். 2. பதினெண்கணங்களுளொருவகையார். இவர்: ஆகாசத்தில் வசிப்போர். (திருமுரு. ௧௬௮ உரை.)

ஆகாசவாணம் — ஆகாசத்திற்செல்லும் சிறுவாணம்.

ஆகாசவாணி-அசரீரிவார்த்தை.[ஆகாஶ வாணீ: ஆகாஶ; வாணீ - வார்த்தை.]

ஆகாசவீணை—ஒருவகை வீணை. (வி-ணி. ௨௨௦.)

ஆகாசாநந்தியாயதநலோகம் — பிரம்மலோகமிருபதனுட் பதினேழாவது.(மணிமே.)

ஆகாசாஸ்திகாயம் — பஞ்சாஸ்திகாயத்தொன்று.

ஆகாசி—சீந்தில். (மூ. அ.)

ஆகாசிநி—ஒரு தேவதை. (வி-ணி. ௨௩௬)

ஆகாசேசன்—1. ஆதரவற்றவன். [ஆகாசமன்றி வேறு துணையில்லாதவன் என்றபடி.] 2. இந்திரன். [ஆகாஶேஶ: ஆகாஶ, ஈஶ - தலைவன்.]

ஆகாடம் — 1. எல்லை. 2. செங்காயுருவி. 3. வெண்ணாயுருவி. [ஆவாட.]

ஆகாத்தியம்—பொல்லாங்கு. [ஆவாத என்பதினின்றுவந்த தத்திதபதம்.]

ஆகாத — 1-2. அன்பெறாத அகாவீற்றுப் பலவின்பால்வினைமுற்றும்அம்முற்றுவினையாலணையும்பெயரும். 3. பொல்லாத எனப் பொருள்படும் ஒருஉனிர்மறைப்பெயரெச்சம். 'அந்தக்கரணமெனுமாகாதபேய்கள்' (தாயு. பரா. ௨௫௪.)

ஆகாதநம் — நிவிர்த்திகலையிற் பிருதிவி தத்துவத்திலுள்ள நூற்றெட்டுப்புவனங்களு ளொன்று. (சி-வி. கிரி. ௨௪. உரை.)

ஆகாதநம்-1. அடித்தல். 2. கொல்லுதல். 3.மிருகக்கொலக்கொல்லுமிடம்.[ஆவா த ந: ஆ; ஹநு - கொல்லுதல்.]

ஆகாதம்—1. அடித்தல். 2. ஆபத்து. 3. காயம். 4. குளம். 5. கொல்லுதல். 6. மிருகங்கிளக்கொல்லுமிடம். [ஆவாத: ஆ; ஹநு - கொல்லுதல்.]

ஆகாது—இயலாது. 'யாரையும் பிராற்றம் மா-லாசறப் போற்றலாகா ததுதுணிவாகும்' (கந்தபு. பார்ப்ப. ௩௩.)

ஆகாமி—அஷ்டபோகத்தொன்றும்பிற் காலத்தனுபவிக்கப்போகுஞ் சுதந்தரம்.

ஆகாமியப்பதிபந்தம் — } இன்னும் சில
ஆகாமியப்பிரதிபந்தம்— } பிறப்பெடுத்துப் பெரும்போகங்களநுபவித்தலாலல்லது இச்சைவிடாதென்கின்ற சங்கற்பம், வஸ்துநிச்சயந்தெரிந்து மஃதாகவொட்டாமற்செய்வது. (வேதா. ஞ. ௧௪௪.) [பிரதிபந்தம் - தனக்கு வேறாகநின்று பந்திப்பது.]

ஆகாமியம் — 1. அதிக்கிரமம். 2. மூவகைக்கன்மங்களுள் ஒன்று; அது: பிராரத்தத்திற்கிசைய எடுத்த தேகத்திலே அதன் பலம் புசிக்கையில் விருப்புவெறுப்புக்களா லுண்டாய புண்ணியபாவங்கள். (சி. சி. ௨: ௩௨. மறை.) 3. வருங்காலத்திற்குரியது.(வி-ணி.) [ஆமாமி].

ஆகாயக்கக்கரிக்காய்—ஒருவகைக்கக்கரிக்காய். 'காந்தியும்போ மாகாயக் கக்கரிக்காய்' (பதார்த்த. ௭௮0.)

ஆகாயக்கத்தரி—ஆகாசக்கத்தரி.

ஆகாயகங்கை—மந்தாகினி. (மணி. பதி. 17.)

ஆகாயகணம் — பாட்டியலிற் சொல்லப்பட்ட கணப்பொருத்தத்து ளொன்று; அது: கருவிளங்காயென்னும் வாய்பாட்டால் வரும் மூவசைச்சீர். இது நூலின் முதற்சீருக்கு விலக்கு. (இலக்கணவி. ௮00. உரை.)

ஆகாயகமநம்—ஆகாசகமநம்.

ஆகாயகருடன்—ஆகாசகருடன்.

ஆகாயகாமி—ஆகாசகாமி.

ஆகாயச்சொல் — தானேகூறல். 'நெஞ்சொடுகூறல் கேட்போர்க்குரைத்தல், தஞ்சம் வரவறிவு தானே கூறலென் - றம்மூன் றென்ப செம்மைச் சொல்லே' (திருவிளை. கான்மா. ௧௪. உரை.)

ஆகாயசாரிகள்—சாரணர். (மணிமே.)

ஆகாயநூலை — குதிரைநோய்வகையுள் ஒன்று. (அசுவ. 50.)

ஆகாயத்தாமரை—அந்தரத்தாமரை. 'எப்போழ்து மந்தரத்தாமரையால்' (பதார்த்த குண. ௩௩௪.)

ஆகாயத்தூள்—ஒட்டடை.

ஆகாயதத்துவம்—வாயுதத்துவத்துக்கப்பாலிருக்கு மொரு சத்துவம்; அது: பத்துநூறாயிரங்கோடியோசனைகொண்ட விஸ்தாரமுடையது. (சி-வி. ஞான. ௨௪. தாற்.)

ஆகாயநந்தம்—நகம்.

ஆகாயப்பிரவேசம்—1. அந்தரத்திற் புகுதல். 2. அறுபத்துநான்குகலைகளிலொன்று; அஃது: ஆகாசத்திற்புகுதலைப்பற்றியது.

ஆகாயப்பூ — ஆகாயத்திலே பூத்த பூ. இஃது: இல்லாத ஒன்று என்பதைக் குறித்தற்கு உலகத்தாரால் வழங்கப்படும் ஒரு சொற்றொடர். 'ஒப்பிலா மலடி பெற்ற மகனொரு முயற்கொம் பேறித்-தப்பிலா காயப் பூவைப் பறித்தமை சாற்றினரே'(சி. சி. பர. ௬. ௨லோ.)

ஆகாயம்—1. ஆகாசம்.'ஆகாயந்தேரோடு மிராவணனை'(தேவார.புள்ளிரு.ச.திருஞா.) [இது: சிவனுடைய அட்டமூர்த்தத்து ளொன்று.] 2. ஆகாயகணம். 3. சவஞ்சுடுங் கட்டை. 4. வீடு.

ஆகாயமந்தி — } சிறு சடாமாஞ்சி.
ஆகாயமாந்தி— } (மலை.)

ஆகாயமுலி—ஆகாயத்தாமரை.

ஆகாயவல்லி—சீந்தில். (மலை.)

ஆகாயவாசிகள்—ஆகாசவாசிகள்.

ஆகாயவாணி—ஆகாசவாணி.

ஆகாயவீதி—நட்சத்திரவீதி.

ஆகாயவேளி—மூலை.

ஆகாரதுத்தி — உள்ளத்துமிகழ்ச்சியை மறைத்துக்கொள்ளும் வேஷம். [ஆகார குப்தி: ஆகார - தோற்றம்; குப்தி - மறைத்தல்.]

ஆகாரசம்பவம் — உடம்பின் நிணநீர். [ஆஹாரஸம்பவ: ஆஹார - உணவு. ஸம்பவ - பிறத்தல்.]

ஆகாரசமிதை—ஓமதண்டிலத்தின் தென் கிழக்கிலும் வடகிழக்கிலும் வைக்கப்படும் சமிதைகள். (சீவக. 2464.)

ஆகாரணம்—அழைத்தல். [ஆகாரண.]

ஆகாரதாகி — வீடுசுடுவோன். [ஆகார தாஹிந்: ஆகார - வீடு. தாஹிந் - சுடு வோன்.]

ஆகாரம்— 1. அடையாளம். 2. ஆ என் னும் எழுத்து. 'மகரவாகாரநங்கை மணமக னாகக்கண்டான்' (சேதுபு. சங்கரபா. ௫௧.) 3. உடம்பு. 'ஆகார மழகெறிப்ப விருவருமாங் குடனெழுந்தா ராவிபோல்வார்' (பாரத. காண்டவ. ௧௯.) 4. உருவம். 'நல்ல-வாகாரம் புத்திரர்பாலாம்' (சைவச. ஆசாரி. ௬.) 5. உள்ளத்தினிகழுங்கருத்தை வெளிப்படுத்தும் முகத்தோற்றம். (வள். ௭௪௨. பரி.) 6. கொண்டுபோதல். 7. கொண்டுவருதல். 8. நெய். (பிங்.) 9. புரோட்சித்தல். 10. போச னம். 'ஆகாரதோடமற வன்னை புசித்தால்' (சைவச. ஆசாரி. ௬.) 11. போசனம்பண்ணு தல். 12. வீடு. [1, 2, 3, 4, 5. ஆகார. 6, 7, 10, 11. ஆஹார: ஹ்ரு -எடுத்தல். 8, 9, ஆவார: வ்ரு - புரோட்சித்தல். 12. ஆகார.]

ஆகாரி—1. உயிர். 2. பூனை. [ஆகார; இ-ஒருவிகுதி. உடம்பையுடையது என்றபடி. ஆகு; அரி - எலிக்குப்பகையென்றபடி.]

ஆகாரியம் — 1. எடுக்கத்தக்கது. 2. ஒரு வகையவிநயம். 3.ஒளபாசநாக்கினி. 4. செயற் கையானது. [ஆஹார்ய.] 5. இன்னத் தக்கது. 6. லௌகிகம். 7. வஞ்சகம். 8. வியாப்பியம். [1, 2,3,5,6,7,8. ஆகார்ய.]

ஆகாரியாரோபம்—காணப்பட்ட ஒருவடிவி லே காணப்படாத மற்றொன்றை யாரோபித் தல்; அது: புத்திபூர்வமாகச் சிலையைத் தெய்வமாகக்கொண்டு வணங்குதலும், பிற னொருவனைத் தந்தையாகக்கொண்டு சிராத் தம் புசிப்பித்தலும் போல்வது. (பி-வி. திங்பு. ௧௯. உரை.) [ஆகார்யாரோப.]

ஆகாரை—வடிவமுடையவள். 'காளிவாயு வாகாரை' (சி-வி. ஞாந. ௪. உரை.) [ஆகாரா.]

ஆகாலம்—தக்ககாலம். [ஆகால.]

ஆகாலிகம்—அகாலசம்பந்தமுடையது.

ஆகாவம்—1. அழைப்பு. 2. நீர்த்தொட்டி. 3. நெருப்பு. 4. யுத்தம். [ஆஹாவ.]

ஆகிஞ்சநம் — தரித்திரம். [அகிஞ்சந என்பதினின்றுவந்த தத்திதபதம்; அ - எதிர்மறை. கிஞ்சந - அற்பம்.]

ஆகிடந்து — ஒரு நிகழ்காலவிடைநிலை. 'உண்ணாகிடந்தான்' (நன். பதவி. ௧௮. உரை. இராமாநு.)

ஆகிய—பண்புருபு.

ஆகியபத்திரம்—தாமரை.

ஆகியர்—ஆகுக எனப் பொருள்படும் ஒரு வியங்கோள்வினைமுற்று. 'பொய்யாகியரோ பொய்யாகியரோ' (புறநா. ௨௩௩.)

ஆகிரதம்—வணங்கல்.

ஆகிரந்தம்—புன்கு. (மலை.)

ஆகிரம்—விரிவு.

ஆகிரா—ஒரு பட்டணம்.

ஆகிரி—ஓரிராகம். (பரத. இராக. 75.)

ஆகிருதி—1. ஒரு சந்தம்; அது: அடிதோ றும் இருபத்திரண்டசைகொண்ட நான்கடி யுடையதாய்வரும்பாட்டு. (வீர. யாப்பு. ௩௩. உரை.) 2. குலம். 3. சாதி. 4. தேகம். 5. மாதிரி. 6. வடிவம். [ஆக்ருதி.]

ஆகிருதிகணம்— ஒரேசாதிப்பட்ட சொற் கூட்டம். (பி. வி. பக். ௨௦.) [ஆக்ருதி கண.]

ஆகிருநனந்தம்—புன்கமரம்.

ஆகிலாதிநி — தாலுத்தானத்திலிருக்கும் மகாரத்திலுண்டான உகூகலைகளில் ஒன்று. (சி-வி. கிரி. ௨௨. தாற்.) [ஆஹ்லாதிநீ.]

ஆகிலியர்—ஆகாதொழிக. (புறநா. ௨௧.)

ஆகின்று—ஆகாநின்றது. (ஐங்குறு.) 2. ஆயிற்று. (புறநா. க.)

ஆகு—1. ஆகு என்னேவலும் தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 2. எலி. (பிங்.) 3. கவரி. (பிங்கல. உ௬௯௬.) 4. கள்வன். 5. கொப்பூழ். (அக. நி.) 6. சாமரம். 7. பன்றி. 8. பெருச்சாளி. 'போ வாகுவை யுடையவ னிளவல்பே ரருளால்' (கந்தபு. துணை. உ௫.) 9. உலோபி. [ஆகு.]

ஆகுகன்—விநாயகன். [ஆகுக: ஆகு-பெருச்சாளி. க - செல்வோன். பெருச்சாளியில் ஏறிச்செல்வோன் என்றபடி.]

ஆகுதை—ஆகை.

ஆகுங்காரியம் — செய்யக்கூடியகாரியம்.

ஆகுஞ்சநம்—1. அடக்குதல். 2. குவித்தல். 3. சுருக்குதல். 'தாமரைப்பூவின் கேசராக் ரத்திலேயுள்ள சந்திரமண்டலத்தை ஆகுஞ் சநத்தினாலே மூலாக்கினியை வன்னிபீஜோச் சாரணத்தினாலே யெழுப்பி' (சி. சி. அ: உக. சிவாக்.) 4. முடக்குதல். 'கிரியையாவது ஆகுஞ்சந ப்ரசாரணப் பிரமணாதிகளன்றோ' (சி. சி. உ: ௰௬: சிவாக்.) 5. வளைத்தல். 6. விளைத்தல். [ஆகுஞ்சந.]

ஆகுஞ்சிதம்—1. ஒடுக்கியது. 2. சுருக்கியது. 3. சுருண்டது. [ஆகுஞ்சித.]

ஆகுண்டநம் — அவகுண்டநம்; அது: பரசிவனை லிங்காதியில் ஆவாகநஞ்செய்து பிடித்து நிகழ்த்தும் பத்துஸம்ஸ்காரங்களில் ஒன்று: - சிவனுடைய முகங்களிற் பிரத்தியக்ஷமாகப்பிரகாசமாதல். (சி - வி. கிரியா. உ௩.) [சிவனது இருதயாதிதானங்களில் இருதயாதி மந்திரங்களைக் கவசஞ்சுற்றுவதுபோல நியாசஞ்செய்வதென்று சிலர் சொல்வர். ஆகுண்டந.]

ஆகுண்டிதம்—கோழை.

ஆகுதம் — உயிர்க் குறுதிசெய்தல். [ஆஹுத.]

ஆகுதல்—1. ஆதல். 'நூலாருணூல்வல்ல னாகுதல்' (வள். ௬௮௩.) 2. உண்டாதல்.

ஆகுதி—1. அக்கினிகாரியம். 'தர்ப்பணத்தி யர்ச்சனைமி லாகுதியி லந்தரிக்க' (சைவச. ஆசா. ௫௨.) 2. ஓமாக்கினியில் நெய்முதலியவற்றைப் பெய்கை. 3. தெய்வத்திற்கு இடும் பலி. 'ஆகுதிதடத்தினல்கார்' (சேதுபு. இராமனரு. உ௩௯.) 4. தெய்வத்திற்குப் பலியிடுகையுடன் சேர்ந்த ஒரு கிரியை. [ஆஹுதி.]

ஆகுபாஷாணம்—1. எலிப்பாஷாணம். 2. காந்தக்கல். 3. வெள்ளைப்பாஷாணம். [ஆகுபாஷாண.]

ஆகுபுக்கு—பூனை. [ஆகுஹுக் (ஜ்): ஆகு - எலி. ஹுக் - உண்பது. எலியைப் புசிப்பதென்றபடி.]

ஆகுபெயர் — ஒன்றன்பெயராயிருந்தும் அதனோடு சம்பந்தமுடைய மற்றொன்றற்குத் தொன்றுதொட்டுவரும் காரணப்பெயர். 'கடுத்தின்றான்'. "ஒன்றன்பெயரா னதற் கியைபிறிதைத் - தொன்முறை யுரைப்பன வாகுபெயரே" (இலக்கணவி. ௬௬௨.)

ஆகுரதன் — விநாயகன். [ஆகுரத: ஆகு - பெருச்சாளி. ரத - ஊர்தி.]

ஆகுரவம்—அதிகமானகநம். [ஆகுரவ.]

ஆகுலத்துவம்—கலக்கம். [ஆகுலத்வம்.]

ஆகுலம்—1. ஆரவாரம். 'ஆகுலநீரபிற' (வள். ௩௪.) 2. ஒலி. 3. கலக்கம். 'நாற்றமேற்றுவந் தெம்மை நலிந்திடத் - தோற்றுமாகுலச் சூழ்வினை' (அரிச்சந். வஞ்சனை. ௬௦.) 4. குழப்பம். 5. துன்பம், வியாகுலம். 'வாகுலப் பரியதோர் மாதர் மாலெனு-மாகுலப் புணரியு ளழுந்தி னேரையும்' (கந்தபு. குமாரபுரி. ௪அ.) 6. மாறுபாடு. [ஆகுல.]

ஆகுலி — 1. கலக்கம். 2. சிற்றரத்தை. (தைல. தைலவ. ௧௧௩.) ஆவிரையென்பர்.

ஆகுலித்தல் — 1. அழுதல். 2. ஆரவாரித்தல். 3. வருந்துதல். 'அடல்கடந்தபோர் வாளியென்றாகுலித்தழுதான்' (இராமா. பிரமாத். ௧௩௩.)

ஆகுவாகநன்—விநாயகன். 'வாரண முகத்தோ ராகு வாகநன் வலவை கேள்வன்' (திருநெல். தாருகா. ௯௦.) [ஆகுவாஹந: ஆகு - பெருச்சாளி. வாஹந - ஊர்தி.]

ஆகுளி — சிறுபறை. 'விரனான்றுபடுக ராகுளிகடுப்ப' (மலை. ௩௪௦.)

ஆகுனி—ஆகுனிவாதம்.

ஆதுனிவாதம்—ஒரு நோய்; அது வாத நோய் என்பதினொன்று.

ஆகூதம்—1. அழைக்கப்பட்டது. 2. ஆச்சரியம். 3. கருத்து. 4. விருப்பம். [1. ஆஹூத; 2, 3, 4. ஆகூத.]

ஆகூதி — 1. அழைத்தல். 2. சுவாயம்பு மநுவுக்குச் சதருபையிடத்துப் பிறந்தவள். 'சதருபை-யக்கண்மா ஞால முழுவது மளிக்குஞ் சுவாயம்பு மநுவினை யணைந்து பங்கமில் பிரிய விரதனை யுலகம் பரவுமுத் தானபாதனைச்சொன் - மங்கைநற் பிரசூதி சிறந்த வாகூதி யிவர்தமை வயிறுவாய்த் தனளால்' (கூர்ம.தமோ. ௪.) [ஆஹூதி.]

ஆகேடகம் — வேட்டை. [ஆவெடக.]

ஆகேடம் — வேட்டை. [ஆவெட.]

ஆகேறு—சரக்கொன்றை. (மூ. அ.)

ஆகை—ஆதல். 'மையனும்புணர்ப்புமற்ற வாகையால்' (கந்தபு. மேரு. ௨௬.) 2. உயருதல். 3. சம்பவிக்கை.

ஆகைச்சுட்டி—ஆகையால். (ஈடு. 7.10.8.)

ஆகையால் — ஆதலால். (கந்தபு. மேரு. 26.)

ஆகோடனம் — பிரசித்தமாகக்கூறல். [ஆவொஷண.]

ஆகோடிபம் — 1. தடை. [ஆக்ஷேபம் போலும்.] 2. மறியல்.

ஆகோள்—பசுவையகப்படுத்திக்கொள்ளுதல். 'ஊர்கொலையாகோள்பூசன்மாற்றே' (தொல். பொருள். ௫௮.)

ஆகௌசலம்—சாமர்த்தியமின்மை. [ஆகௌஶல. ௮ - இன்மை. கௌஶல - சமர்த்தன். இஃது 'அகுசல' என்பதினின்று வந்த தத்திதபதம்.]

ஆங்க—1. கட்டுரைக்கண் அசைத்துநின்று அங்ஙனே எனப் பொருள்படும் ஓரிடைச்சொல். 'ஆங்கக் குயிலு மயிலுங் காட்டி' (தொல். சொல். ௨௭௧. நச்.) 2. வினையுவம வாய்பாடுகளுள் ஒன்று. (தொல். பொருள். 287.)

ஆங்கண் — அவ்விடம். 'ஆங்கண்மேதக விளங்கினன்' (சேதுபு. மங்கல. ௮௦.)

ஆங்கனம்—1. அப்படி. 'ஆங்கனம்போற்றி யடிபணிந்து' (பெரியபு. திருஞான. ௬௬௧.) 2. அப்பொழுது. 'ஆங்கன மவர்தமை ஆதி நோக்கி' (கந்தபு. திருவவதா. ௭௫.) 3. அவ்விடம். 'பாங்கியுந் தலைவியும் பகர்ந்து மற்றிவை - யாங்கன மிருத்தலும்' (கந்தபு. வள். ௧௨௬.) [ஆங்கனமென்பதில் ஙகரம் ககரமாக மருவிவந்தது.]

ஆங்காங்கு—அங்கங்கு.

ஆங்காரம்—1. அகங்காரமென்னும் அந்தக்கரணம். 'ஆங்காரம்புத்தியின்கணுதித்து' (சி. சி. ௨ : ௫௧.) 2. செருக்கு. 'ஆங்காரமிக்க மகவான்' (கந்தபு. திருவிளை. ௫௫.) 3. அபிமானம். 'தேனங்காரப்பொழில்' (திவ். திருவாய். 10. 7. 11.) 4. நெருப்புக்கொள்ளிக் கூட்டம். [1, 2. அஹங்காரம் என்பதில் ஹகார உயிர்மெய்கெட்டு முதனீண்டுவந்த விகாரம் என்பாரும் ஹகாரமெய் கெட்டுத் தீர்க்கம்பெற்றுவந்த விகாரமென்பாரும் என இருதிறப்படுவர் ஆசிரியர். 4. ஆங்கார: அங்கார என்பதினின்று வந்த தத்திதபதம்.]

ஆங்காரரகிதன் — நானென்னுஞ் செருக்கில்லாதவன்.

ஆங்காரி — செருக்குக்கொள்ளுகிறவன்-வள்.

ஆங்காரித்தல் — செருக்குக்கொள்ளல்.

ஆங்காலம் — ஆகுங்காலம், சித்திக்குங்காலம். 'ஆங்காலமெய்வருந்தவேண்டாம்.'

ஆங்கிகம் — 1. உள்ளக்கருத்தைவெளிப்படுத்தும் உறுப்பின்றொழில். 2. சரீரசம்பந்தமுள்ளது. 3. புருவமுதலிய அங்கங்களாற் பிறப்பிக்கப்பட்ட காரியம். [அங்கம் என்பதினின்றுவந்த தத்திதம். ஆங்கிகம்.]

ஆங்கிரசம்—தருமநூல் பதினெட்டனுள் ஒன்று. (வேதா. சூ. பாயிர. ௩. உரை.)

ஆங்கிரசன்—1. ஆங்கிராமுநிவின் சந்ததியான். 2. அங்கிராவின்மகனான பிருகஸ்பதி. [ஆங்கிரஸ:]

ஆங்கிரம்—உபபுராணம் பதினெட்டனுள் ஒன்று. (வேதா. சூ. பாயி. ௩. உரை.)

ஆங்கிரன்— } ஆங்கிரசன்.
ஆங்கிரா — }

ஆங்கிலம்—இங்கிலீஷ் பாஷை.

ஆங்கிரச — வியாழவட்டமாகிய அறுபது வருடத்தில் ஒன்று.

ஆங்கிரசன்—சத்தவிருடிகளுளொருவன்.

ஆங்கு-1. அக்காலத்து. (சிறுபாணு. ககக. உரை.) 2. அப்படி. 'ஆங்கு, தொழுவிடை யேறுகுறித்துவளர்த்தார்' (சிலப். ஆய்ச்சியர் குரவை. எடுத்துக்காட்டு.) 3. அவ்விடம். 'ஆங்குறுகுமரப்புத்தேள்' (கந்தபு. அயனைச் சிறைநீ. சஉ.) 4. ஓர் அசைநிலை. 'தென் புலத்தார் தெய்வம் விருந்தொக்க லுனென் றாங்கு' (வள். சங.) 5. ஓர் உவமவுருபிடைச் சொல். 'பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாங்கு' (திருமுரு. உ.) 6. எழனுருபு. (மணி. 11. 47.)

ஆங்ஙனம் — 1. அத்தன்மை, அங்ஙனம். 'ஆங்ஙனம்விரிப்பின்' (தொல். பொரு. ௬டுக.) 2. அவ்விடம். 'ஆங்ஙனமேகி' (கந்த பு. மகே. நகர்பு. சுக.) [ஆ - அந்த. ஙனம் - இடம், தன்மை.]

ஆச்சமாரம்—மூகைப்புல்.

ஆச்சரியத்துவம் — ஆச்சரியத்தன்மை. [ஆஶ்சர்ய-த்வம்: ஆஶ்சர்ய-; த்வம் - தன்மை.]

ஆச்சரியம்—புதியதாய் அல்லது வழக்கத் திற்குமாறாய் ஒன்று தோன்றுதலால் உண் டாகும்மனக்கிளர்ச்சி. 'சொன்னவக்கதையை யுன்னுக் தோறுமாச்சரியமெய்தி' (இராமா. உத். இலவண. கo.) [ஆஶ்சர்ய.]

ஆச்சல்—1. அசைத்தல். 2. பாய்ச்சல்.

ஆச்சா—சாலமரம். (சிவக. 2613. உரை.)

ஆச்சாட்டு—அற்பமான ஈரம். [ஶாட் - என்னும் வடமொழி, சாட்டு எனத் திரிந்து ஆ என்பதனோடு கூடிவந்ததுபோலும். ஆ-அற்பம். ஶாடு - சேறு, பசுமை.]

ஆச்சாதநசத்தி—ஆத்துமஞானத்தை மூடிக் கொண்டிருக்குஞ் சத்தியாகிய விவர்த்தக மாயை. (த. நி. போ. ககடு.)

ஆச்சாதநபலம் — பருத்திக்கொட்டை. (நைலவ. நைல. 33)

ஆச்சாதநம்—1. ஆணவமலம். (சிவப்பிர. உ. உ. உரை.) 2. ஆத்துமஞானத்தை மூடிய அஞ்ஞானம். (த. நி. போ. ககடு.) 3. உறை. 4. சீலை. 5. மறைப்பு. 'மூன்றுமல மும் ஆன்மாவுக்கு அரிசிக்குத் தவிடும் உமி யும் முளையும்போலப் பிரகாசாச்சாதநமும் ஆவாரகமும் உற்பத்திஹேதுவுமாய் நிற்கும்.' (சி. சி. உ: அசு. சிவாக்.) 6. மூடி. 7. மே லங்கி. 8. வீட்டின் மேல்வெளியை மூடியிருக் கும் மரவுருக்கவிப்பு. [ஆச்சாதந: ஆ; சாதந - மூடுதல்.]

ஆச்சாதம்—1. உறை. 2. சீலை. 3. மூடி. 4. மேலங்கி. [ஆச்சாத: ஆ; சாத-மூடுதல்.]

ஆச்சாதநமுத்திரை — அத்திரமுத்திரை முதலிய முத்திரைவிதங்களில் ஒன்று. (த. நி. போ. ௬oo.)

ஆச்சாமரம்—1. கள்ளி. 2. மராமரம்.

ஆச்சாள்—தாய். 'எங்களுடையாச்சாளுக் கூறுகாயாகாமல்' (தனிப்பா. 1. 42. 83)

ஆச்சான்—ஆசாரியன். 'நாலூராச்சான்'

ஆச்சி—தாய். (ஈடு. 4. 3. ப்ர)

ஆச்சியகந்திமேகரோகம்— ஒருவகைமேக ரோகம். இதில் மூத்திரமானது நெய்யை யொத்துச் சீலையிற்றோய்த்துக்கொளுத்தில் எரிவதும் நாளொன்றுக்குக் குறுணியென் னும் நாழுபடியளவாக இறங்குவதுமாக இருக்கும். (சீவரட். கoடு.)

ஆச்சியசுத்தி—நெய்யினாற்செய்யுஞ்சுத்தி.

ஆச்சியத்தாலி—ஆச்சியபாத்திரம். [ஆஜ்ய ஸ்தாலீ: ஆஜ்ய - நெய். ஸ்தாலீ-பாத்திரம்.]

ஆச்சியபர் — வைசியபிதிரர். (மநு. ௩. ககஎ.)

ஆச்சியபுக்கு — அக்கினிதேவன். [ஆஜ்ய ஹுஜ்: ஆஜ்ய - நெய். ஹுஜ் - உண்பவன்.]

ஆச்சியம்—1. நெய். 'ஆச்சியந்தயங்குமங் கேழ்க்குண்டத்தில்' (காஞ்சிப். கச்சி. கசு.) [ஆஜ்ய.] 2. பரிகசிக்கத்தகுந்தது. 'ஆச்சியப் பேய்களோடு' (தேவா. 1094. 10) [ஹாஸ்ய.]

ஆச்சியாடு—இரந்துசேர்க்கும் ஆடு.

ஆச்சிரமதர்மம்—ஆச்சிரமத்திலேநிற்போர் செய்யவேண்டிய விசேடதருமம். [ஆஶ்ரம தர்ம: ஆஶ்ரம - நிலை. தர்ம - கடன்.]

ஆச்சிரமம் — 1. இளைப்பாறுமிடம். 2. சங்கம், கூட்டம். 3. வாழ்க்கைநிலை; இந்த நிலை, பிரமசரியம் கிருகஸ்தம் வானப்பிரஸ் தம் சந்நியாசம் என நான்குவகைப்படும். 'மூதறி வுடையோர் சேராச் சிரமமூன் றிற்கு மொய்ம்பா-லேதமி லுபகா ரஞ்செய் யில்ல வாச் சிரமந் தன்னை' (இரகு. அயனு. கூ.)

4. நிலை. 5. பர்ணசாலை. 6. முனிவர்கள்வசிக்குமிடம். 'அடையுமாக்கலைபலவுளவதன்கணுச்சிரமம்' (சேதுபு. நைமிசா. கரு.) [ஆஶ்ரம: ஆ; ஶ்ரம-பிரயாசமானசெயலைச் செய்தல்.]

ஆச்சிரமி — ஆச்சிரமநெறியினிற்போன். [ஆஶ்ரமிந.]

ஆச்சிரமிகன்— ஆச்சிரமநெறிக்குரியவன். [ஆஶ்ரமிக: ஆஶ்ரம; இக - ஒரு வ-வி.]

ஆச்சிரயம்—1. அடைக்கலத்தானம். 2. அடைக்கலம்புகுதல். 3. அரசர்க்குரிய அறுகுணங்களுள் ஒன்ருகிய கூட்டல். அது: பகையைவெல்லுதற்காக ஒருவனைத் தனக்குத் துணையாகச்சேர்த்தல். 'ஆச்சிரயமங்கொருவன் செய்சமர்-கடக்கமற் றெருவனை நட்புக் காண்டலே' (இரகு. திக்கு. உஉ.) 4. உரியசெயல். 5. ஒன்றனைபடுத்து அதனயலிவிருத்தல். 6. ஒன்றுடனென்றிருத்தல். 7. குடியிருக்கும்வீடு. 8. பாதுகாப்பு. 9. பொருள் அல்லது குணமிருத்தற்கான ஆதாரம். [ஆஶ்ரய: ஆ; ஶ்ரி - உதவுதல்.]

ஆச்சிரயன்—1. ஒருபொருளையடைந்திருப்பவன். 2. பாதுகாப்பவன். [ஆஶ்ரய:]

ஆச்சிரயாசித்தம்— ஏதுப்போலிவகையுள் ஒன்று. (மணி. 29. 194.)

ஆச்சிராமம்—1.ஆச்சிரமம். 'வதரியாச்சிராமம்' (திவ். பெரியதிரு. 1. 4. 1.) 2. ஆளுகை செல்லுமிடம்.

ஆச்சிலை—கோமேதகரத்திநம்.

ஆச்சு—1. ஆய்த்து என்னும் அஃறிணையொன்றன்பால் இறந்தகாலத் தெரிநிலை வினைமுற்று விகாரப்பட்டுவந்து ஆயிற்று எனப் பொருள்படும் ஒரு சொல். 2. ஒருவகையுரையசை. 'முக்கணிறைநேர்மையாய்க் கைகொண்டுபோதிப்பதாச்சறிவிலே' (தாயுமான. சுகவாரி. கவி. ௯.)

ஆச்சுரிதகம்—1. அட்டகாசம். 2. ஒன்றேடொன்று கைநகங்களை உரிஞ்சி ஓசையுண்டாக்குதல். 3. குதிரைக்கனைப்பு. 4. கைந்நகத்தினல் ஊறுசெய்தல். 5. நொடித்தல். [ஆக்ஷுரிதக.]

ஆச்சுவத்தம்—அரசமரத்தின்காய்.(இது: அச்சுவத்தம் என்பதினின்று வந்த தத்திதபதம்.) [ஆஶ்வத்த.]

ஆச்சுவரி—அரசமரம். (மூ. அ.)

ஆச்சேதநம்— ⎫ அற்பமாகவெட்டுதல்.
ஆச்சேதம்— ⎭ [ஆச்சேதந: ஆ - அற்பம். சேதந - வெட்டுதல்.]

ஆச்சோதநம் — வேட்டையாடுதல். [ஆச்சோதந:]

ஆச்யாசம் — 1. உல்லாசம். 2. களிப்பு. 'ஆச்யாசத்திலே பிரியனும்' (சி. சி. ௪. ௩௧. சிவாக்.) [ஹாஸ்யரஸ.]

ஆச்ரயம்—இருக்குமிடம். 'வங்நிக்காச்ரயமாம்' (சி. சி. அளவை. ௬. சிவாக்.) [ஆஶ்ரய.]

ஆசகவம்—சிவனுடைய வில். [அஜகவ.]

ஆசகாரம் — திரிபுரசங்காரத்திலே சிவனேறிய இடபம். [ஆஜகார.]

ஆசங்கம்—1. அடர்த்தி. 2. அண்மை. 3. சேர்ந்திருத்தல். [ஆஸங்க.]

ஆசங்கித்தல்—1. சந்தேகித்தல். 'சாங்கியர் மதம்பற்றியாசங்கித்து' (சி. சி. ௧: ௧அ. சுப.) 2. ஆக்ஷேபித்தல், மறுத்தல். (சி. போ. சிற். 2: 2.)

ஆசங்கை—1. சந்தேகம். 'மழையென்றுசங்கைகொண்ட கொடைமீளியண்ணல் சராமன்' (இராமா. நாகபா. உ௬௩.) 2. சிந்தித்தல். 3. பயம். 4. விசாரணை. 5. ஆட்சேபம். [ஆஶங்கா]

ஆசட்சு — 1. கண். 2. பண்டிதன். [ஆசக்ஷுஸ் : ஆ - உபசர்க்கம்; சக்ஷுஸ் - கண். 2. ஆசக்ஷ: ஆ - உபசர்க்கம். சக்ஷ - பேசுதல்.]

ஆசத்தர்—விருப்புள்ளவர். (பௌட். பசு. ௧உஅ.)

ஆசத்தி—1. இலாபம்; சம்பாத்தியம். 2. சமவாயசம்பந்தம். 3. சாமர்த்தியம், வல்லபம். 4. பதங்கள் ஒன்றையொன்று தொடர்ந்திருத்தலாகிய அண்மை. (சைவப். உடு.) 5. பற்றித்தொடரும் விருப்பம். 'எப்போதுஞ் சிவபூசை அக்கினிகாரியம்: இவற்றில் ஆசத்தியுள்ளவனுமிருப்பது' (சி-வி. கிரி. க. உரை.) [1, 2, 3, 4. ஆஸத்தி; 5. ஆஸக்தி.]

ஆசந்தன் — விட்டுணு. [ஆஸந்த.]

ஆசந்தீ—சவங்கொண்டுபோகும் பாடை. [ஆஸந்தீ.]

ஆசந்திரகாலம்—சந்திரனுள்ளகாலம்வரையும். (ஆ - வரையும்.)

ஆசந்திரதாரம்—சந்திரனும் நக்ஷத்திரங்களும் உள்ளவரை. 'இப்பரிசு ஆசந்திரதாரம் செட்டுவதாக' (S. I. I. iii 3.)

ஆசந்திரார்க்கம் — சந்திரசூரியருள்ள காலம்வரையும். 'மின்குல மாசந்திரார்க்க மூன்றுநின் றிலங்க வென்றே' (மச்சபு. சோமவமிச. ௪௦.) [ஆ - வரையும். சந்த்ர: சந்திரன்; அர்க்க - சூரியன்.]

ஆசந்நகாலம்—1. மரணகாலம். 2. மரணத்துக்குக்கிட்டியகாலம். [ஆஸந்நகால: ஆ; ஸத் - போதல்.]

ஆசந்நப்பிரசவம்—பிரசவிக்குங் காலத்தினது அணிமை. (சீவரட். உ௦அ.)

ஆசந்நம்—1. பிற்பொழுது. 2. காலத்திலாவது இடத்திலாவது எண்ணிலாவது கிட்டியிருப்பது. [ஆஸந்ந.]

ஆசநத்தடைப்பு — குதாவர்த்தவாதம். 'மையலா சநத்தடைப்பு வலியிழுப் புதரப்பிடை' (தைல. தைலவ. ௧௧.)

ஆசநம்—உயர்குடிப்பிறப்பு. [ஆஜநந.]

ஆசநம்—1. அங்கயோகம் எட்டினுள் ஒன்றாகிய இருத்தல், அது: சுவத்திகம், கோமுகம், பதுமம், வீரம், சிங்கம், முத்தம், மயூரம், சுகம், பத்திரம் என ஒன்பதுவகைப்படும். (சூத. ஞாந. ௧௫: உ.) 2. அரசர்க்குரிய அறுகுணங்களுள் ஒன்றாகிய இருத்தல்; அஃது: ஏற்றகாலம்வரையும் பகைவர்மேற் செல்லாதிருத்தல். 'ஆசந முந்தியகாலமக் குணர்ந்திருத்தல்' (இரகு. திக்கு. உ௧.) 3. பலிபீடம். 4. பிருட்டம். 5. புலித்தோல், பலகை, பீடம், பாய் முதலிய தவிசு. 'தூய வாசநத்தேற்றி' (இரகு. அயனுதய. உ.) 6. மலவாயில். 'ஆசந முபத்தங் கைகால் வாக்கிவை யைந்தாங் கன்மம்' (மச்சபு. பிரமமு. ௧௧.) 7. யானைமேற்றவிசு. [ஆஸநம்]

ஆசநமூர்த்தி — சிவலிங்கம்.

ஆசநவாயில் — மலவாயில்.

ஆசநன் — சக்கிரன்.

ஆசநாதர்சம் — நிலைக்கண்ணாடி. [ஆஸநம் - இருப்பு. ஆதர்ச - கண்ணாடி.]

ஆசம்—1. ஆசநம். 2. உரைகல். 3. சிரிப்பு. (பிங்கல. ௧௬௧௭.) 4. நெய். (யகரமெய் கெட்டு ஆசம் என்றாயிற்று.) 5. வில். [1, 5. ஆஸ; 3. ஹாஸ: 4. ஆஜ்ய]

ஆசமநகம்— வெற்றிலைத்தம்பலக்களாஞ்சி. [ஆசமநக.]

ஆசமநத்திரவியங்கள் — சாதிக்காய், கிராம்பு, ஏலம், பூலாங்கிழங்கு, சண்பக மொட்டு, பச்சைக்கர்ப்பூரம் என்னும் ஆறு திரவியங்கள். இவை ஆசமநத்துக் குபயோகமானவைகள். (திருவாத. திருப்பெருந். எ௦. விருத்தி.)

ஆசமநம் — 1. ஆசமநீர். 2. உள்ளங்கையில் விடப்பட்ட அற்பமான நீரை உட்கொள்ளுதல். 'இனைய நியமத் தொழின் முடித்து மனையி னெய்தி யாசமநம் - புனித நெறியிற் றனியியற்றி' (கூர்மபு. நித்திய.௧௧.) 3. வாயையலசிக் கொப்புளித்தல். [ஆசமநம்: ஆ; சம் - உண்ணுதல்.]

ஆசமநீயம்—ஆசமநஞ்செய்தற்குரிய நீர். [ஆசமநீய: ஆசமந; ஈய - ஒரு விகுதி.]

ஆசமி—ஆசமியென்னேவலும் தெரிநிலை வினைப்பகுதியும்.

ஆசமித்தல்—ஆசமநஞ்செய்தல். 'அணி நீர்கரந்தொட்டாசமித்தான்' (சேதுபு.சேதுவந். உ௬.)

ஆசயம்—1. அதிட்டம். 2. அந்நாசயம். 3. அநுகூலம். 4. அபிப்பிராயம். 5. உடைப்பொருள். 6. உறைவிடம், தங்குமிடம். 7. சூழ். 8. ஒன்றைத்தன்னகத்துட்கொண்ட உடம்பினுட்பை. 'கருப்பாசயக்குழிக்கே தள்ளுமோ' (பட்டினத்தார்பாடல். திருச். ௯.) 9. களஞ்சியம். 10. கூட்டிச்சேர்த்தல். 11. தன்னிட்டம். 12. படுக்கையறை. 13. மரம். [1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 11, 12, 13. ஆசய: 10. ஆசய. ஆ; சீ - தங்குதல்; ஆ; சி - கூட்டுதல்.]

ஆசர்—ஆயத்தம். (இந்துஸ்.)

ஆசாணம்-1. அநுசரித்தல். 2. ஒழுக்கம். 3. செய்கை. 4. வஸ்துசேருதல். 5. வழக்கம். [ஸ்ரீவாரணம்: ஸ்ரீ; வர - போதல்.]

ஆசாணை—ஆசரித்தல். 'மங்களாசாணை' (வேதா. சூ. அ.)

ஆசரி — ஆசரியென்னேவலும் தெரிநிலை வினைப்பகுதியும்.

ஆசரித்தல் — 1. அநுசரித்தல், கைக்கொள்ளுதல். 'ஆசரிக்குங் கண்டியுமொன்றும்' (சைவச. ஆசா. சடு.) 2. அநுட்டித்தல், செய்தல். 'உக்கிர தவ மாசரிக்கிற' (வேதா. சூ. உச. உரை.) 3. உபசாணை. 4. வணங்கல்.

ஆசரிதம்-1. ஆசரிக்கப்பட்டது. 2. வழங்கப்பட்டது. 3. விதிக்கப்பட்டது. [ஸ்ரீவரித.]

ஆசரிதவுபாயம்— கொடுத்தகடன்வாங்குதற்குச்செய்யும் நால்வகையுபாயங்களுள் ஒன்று; அது: தநிகனானவன் கடன்கொடுக்கவேண்டியவனுடைய பெண்டுபிள்ளைகளையும் பசுக்களையும் வெளியிற்போகாதபடி தடுத்து வீட்டையடைத்து முத்திரையிட்டுத் தன் கடனைக் கொடுக்கும்படிசெய்தல். (மிருதிசங். கoஎ.) [இஃது அசரித என்பதினின்று வந்த தத்திதபதம். சவரித-போகாத.]

ஆசரிப்பு—அநுசரிப்பு.

ஆசலை—ஆடாதோடை. (இராசவைத்.)

ஆசவத்துரு—பனைமரம். [ஸ்ரீஸவத்ரு; ஸ்ரீஸவ - கள். த்ரு - மரம்.]

ஆசவம்—1. கள். (பிங்) 2. விரைவு. 3. மது. [1, 3. ஸ்ரீஸவ; 2. ஸ்ரீஶவா.]

ஆசவுசம்—ஆசௌசம், தீட்டு. 'மன்னுகுரவனிறந்திடிலாசவுசமூன்றுநாண்மருவும்' (கூர்மபு. சூதகா. ௩.)

ஆசற-முற்ற. 'சொல்லப்புகுந்தபொருளை யாசறக்கூறாது ஒழியப்போதல்' (தொல். பொரு. சுசுச. உரை.)

ஆசறுதல்—அழிதல், முடிதல். 'ஊழி சென்றாசறுங்காலத் தந்நிலையதாக' (இராமா. சரபங்க. ௩௦.)

ஆசறுதி—1. குற்றமின்மை. [ஆசு - குற்றம். அறுதி - கெடுதல்.] 2. முடிவு. 'கொற்ற மங்கலத்துக்கு எல்லையாசறுதியி னட்ட திருவாழிக்கல்' (S. I. I. 1. 87.)

ஆசறுநீப்பல்—கடைவாய்ப்பல்.

ஆசனி—1. பலா. 2. பெருங்காயம்.

ஆசா—1. ஆசை. 'ஆசாபிசாசமுதலாம்' (தாயு. சின்மய. ௩.) 2. திக்கு. 3. நம்பிக்கை.

ஆசாசி—சீந்தில்.

ஆசாட்டம்—1. அழுகை. 2. அற்பமான தோற்றம். [ஆசு - அற்பம்; ஆட்டம் - அசைதல்.]

ஆசாடகம் — ஆடிமாசம். [ஸ்ரீஷாடக.]

ஆசாடபூதீ—1. முருக்கமரத்தாற்செய்யப்பட்டதண்டமாகிய செல்வமுடையவன். (பஞ்சதந். மித்.) [ஸ்ரீஷாட - முருக்கமரம். பூதி - செல்வம்.] 2. வேஷதாரி.

ஆசாடம்—1. ஆடிமாதம். 2. துறவிகள் வைத்திருக்கும் பலாசந்தண்டு. 3. பொதியமலை. 4. முருக்கு. 5. பிரதிட்டாகலையிலிருக்கும் புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.) [ஸ்ரீஷாட]

ஆசாடா—பூராட உத்திராடநட்சத்திரங்கள். [ஸ்ரீஷாடா:]

ஆசாடி—1. ஆடிமாதப் பௌர்ணிமை. 2. சிவலோகத்திலே உத்தரதிசையோலக்கஞ்சேவிக்கும் முக்கிய தேவதைகளில் ஒருவன். (வி-ணி. உசுச.) 3. உப்பகாஷ்டகரிலொருவன். (வி-ணி. உஎக.) [ஸ்ரீஷாடீ.]

ஆசாடியோகம்—சாந்திரமான ஆடிமாதத்திலே உத்திரட்டாதிநட்சத்திரம்வரும்திநம். இத்திநம் சோதிடர்களாலே அவ்வவ்வருடத்திலே இன்ன இன்ன தாநியம் பலிதமாகும்; இன்ன இன்ன வஸ்து மலியும்; இன்ன இன்ன வஸ்து ஒறுக்கும்; மழை குறையும், அல்லது மிகும்; என்னும் இவை முதலியன பரீட்சித்தறிதற்குரிய திநமாம். (பிருகற்சங்கிதை. பூர்வபாகம். அத்தியாயம். உ௩.)

ஆசாதிதம் — 1. அடையப்பட்டது. 2. காரியப்பட்டது. 3. பரந்தது. [ஸ்ரீஸாதித: ஸ்ரீ; ஸத - போதல்.]

ஆசாநதேவர்— தேவர்களுளொருசாரார். 'சித்தர்கிந்நராசாநதேவர்' (வேதாரணியபு. தேவல. க.)

ஆசாநம்—பிறப்பு. [ஸ்ரீஜாநம்.]

ஆசாநுபாகு—முழந்தாளளவு நீண்ட கையுடையவன்.

ஆசாபங்கம்—ஆசைப்பட்டது இடையாதொழிதல். [ஆஶா஭ங்க: ஆஶா - விருப்பம். ஭ங்க - கேடு.]

ஆசாபந்தம்—1. ஆசாபாசம். 2. சிலம்பிநூல். [ஆஶாப³ந்த⁴: ஆஶா; ப³ந்த⁴ - கட்டு.]

ஆசாபாசம்-அறிவுமேற்படாது பந்தித்து நிற்கும் ஆசை. [ஆஶா - ஆசை. பாஶ - பந்தம்.]

ஆசாம்பரன்—சிவன். 'அமகரவாசாம்பர' (திருப்புகழ். ௩௩௫.) [ஆஶா - திக்கு அம்பரம் - வஸ்திரம்.]

ஆசாமி—1. ஆள். [அராபி.] 2. ஓர் உத்தியோகஸ்தன். [அராபி.]

ஆசாரக்கோவை — சங்கமருவிய பதினெண்கீழ்க்கணக்கினுள் ஒன்று. இதுசெய்தவர் பெருவாயின்முள்ளியென்பவர்.

ஆசாரகீநன் — ஆசாரமில்லாதவன். [ஆசாரஹீந: ஆசார; ஹீந - இல்லாதவன்.]

ஆசாரச்சாவடி—கொலுமண்டபம்.

ஆசாரபரன்-ஒழுக்கத்தில் பற்றமுடையவன். 'ஆசாரபரனுமிருந்துமென்ன' (அறப். சத. 37)

ஆசாரபோசன்—1. பெருந்தேசி 2. ஆடம்பரத்தோற்றமுடையவன்.

ஆசாரம்—1. அரசிருக்கை. (பிங்கல. ௬௫௧.) 2. உபசாரம். 3. ஒழுக்கம். 'ஆசாரசாணத்தவஞ்செய்து' (சித்தா. முத். ௨௧௧.) 4. ஒழுக்கவிதி. 5. சேலை (சூடா). 6. சத்தம். (சூடா) 7. சேனைகள்போய்ச் சத்துருவை வளைத்தல். 8. தருமசாத்திரத்திலுள்ளமூன்று காண்டங்களுளொன்று; அது: விதிவிலக்குகளால் ஒழுக்கத்தைக்கூறுவது. 9. பிரதிட்டை செய்தல். 10. பெருமழை. 'ஐவகைய தருமலி ஞசாரம் பொழிந்தார்த்தார்' (சேதுபு. தேவிபுர. ௭௦.) 11. போசனம். 12. வழக்கம். 13. வேதாகமங்களிற்சொல்லியவைகளை அநுட்டித்தல். 'ஒழுக்கமன்பருளாசாரம்' (சி. சி. ௨: ௨௩. மறை.) [6, 7, 10, 11. ஆஸார. 3, 4, 8, 12, 13. ஆசார.]

ஆசாரவந்தன் — சன்மார்க்கமுள்ளவன்.

ஆசாரவாசல்— } 1. இராசாவினது
ஆசாரவாயில்— } கொலுமண்டபத்தின் தலைவாயில். 2. கோயிலின் தலைவாயில்.

ஆசாரவீநன்—ஒழுக்கத்திற்றவறியவன்.

ஆசாரவீநிகள்—ஆசாரமில்லாதபெண்கள். 'முகந்துலக்கிக ளாசாரவீநிகள்' (திருப்புகழ். ௬௮.)

ஆசாரவீநை — ஒழுக்கத்திற்றவறியவள்.

ஆசாரி — 1. கம்மாளர்பட்டப்பெயர். 2. மாத்துவப்பிராமணர்பட்டப்பெயர்.

ஆசாரியபுருஷம் — குருக்களுக்குவிடப்படும் மானியம்.

ஆசாரியபுருஷன் — பஞ்சஸம்ஸ்காரம் செய்தற்குரிய குரு.

ஆசாரியபோசம்—ஆசாரியன் அநுபவிக்கும் சுதந்திரம். (S. I. I. II. 107)

ஆசாரியவிருத்தம்—ஆசாரிய அதிகாரம்.

ஆசாரியன் — 1. உபநயநஞ்செய்வித்து வேதம் ஓதுவிப்போன். 2. உபாத்தியாயன். 3. குரு. 4 சமயதீக்ஷை, விசேஷதீக்ஷை, நிருவாணதீக்ஷை, ஆசாரியாபிடேகம் என்னும் நான்கும்பெற்றுக்கொண்டு நித்திய கருமங்களோடு தீக்ஷை பிரதிட்டை முதலிய கிரியைகளும் செய்பவன். (சைவவினா. ௯௯.) 'வண்புகழானென் றாயவாசாரியனுன' (சூத. எக்கி. ௨: ௰௧.) [ஆசார்ய.]

ஆசாரியன்திருவடியடைதல் — வைகுந்தமடைதல்.

ஆசாரியாணி—ஆசாரியன்மனைவி. [ஆசார்யாணீ.]

ஆசாரியாபிடேகம் — குருவாகவருவதற்குச் செய்யப்படும் ஸ்நானத்தோடுகூடிய தீக்ஷைக்கிரியை. [ஆசார்யாபி⁴ஷேக: ஆசார்ய - குரு. அபி⁴ஷேக - ஸ்நானம்.]

ஆசாள்—1. குருவின்மனைவி. (திவா) 2. தலைவி. (சூ. நிகண். ௨: ௩௨.)

ஆசான்—1. அருகன். (சூ. நிகண். ௧: ௨.) 2. உபாத்தியாயன். 'ஆசானுரைத்த தமைவரக்கொளினும்' (நன்னூல். பொதுப்பாயிர. ௪௪.) 3. கந்தசுவாமி. (சூ. நிகண். ௧: ௨௬.) 4. குரு. 'ஆரியனுமாசான்வந்து' (சி. சி. ௮: ௨௮.) 5. சுக்கிரன். 'நீயுரை

யென்ன வாசா னிருபனுக் குரைக்க லுற்முன்' (கந்தபு. அண்ட. க.) 6. தலைவன், மூத்தோன். (திவா) 7. பாலையாழ்த்திறம். (பிங்கல. கஉ௩௬.) 8. வியாழன். 'ஆதியிற் சேய்கதிரம்புலிசுன்னந்தத்தாசான்'(விதான. காலசக். உ௩.) [ஆசாரியன் என்பது ஆசான் என விகாரமாயிற்று.]

ஆசான்றிறம்—1. குறட்குரியதிறம். (பிங்.) 2. பாலையாழ்த்திறம். (சூடா.)

ஆசி — 1. ஆசியென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும். 2. சமநிலம். 3. நிந்தை. 4. பாம்பின்பல். 5. பிரார்த்தனை, வேண்டல். 6. போதல். 7. யுத்தகளம். 8. யுத்தம். 9. வாழ்த்து. 'காசிபன் முதற்கடவுள் வேதியர் கருத்தா - லாசிபெறு மப்புதல்வர்' (பாரத. சம்ப. க௦எ.) 10. வாழ்த்தணி. (வீரசோ. அலங். 33.) [2, 3, 6, 7, 8. ஆஜி. அஜ் - போதல். இ-ஒருவிகுதி. 4, 5, 9. ஆஶீஸ்]

ஆசிக்கல்—காகச்சிலை.

ஆசிகம் — ஆட்டுப்பிழுக்கை. (சிவரட். உ௰௧.)

ஆசிகரோகம்—கருவிழியிற் பிறக்கும் ஒருவகைரோகம். அது கருவிழியில் உயர்ந்தும் பளபளத்துமிருக்கின்ற விரணக்கொப்புளத்தையும் அதைச்சுற்றிலுஞ் சிறுசிறு கொப்புளங்களையும் உண்டாக்கும். (சிவரட். உ௰௧.) [இது, ஆட்டின்பிழுக்கையைப்போலக் கடான கொப்புளங்களை யெழுப்பலால் வந்த பெயர்.]

ஆசிகன்—1. இருப்பவன். 2. வாளாயுதமுடையவன். (இஃது அசி என்பதினின்று வந்த தத்திதபதம்.) [ஆஸிக:. ஆஸ் - இருத்தல். இக - ஒருவிகுதி. அஸி - வாள்.]

ஆசிடல்—ஆசிடுதல்.

ஆசிடுதல் — 1. நேரிசைவெண்பாவிலே தனிச்சொற்கு முன்னே செப்பலோசை நிறைத்தற்பொருட்டு ஓர் அசையேனும் இரண்டசையேனும் சேர்த்தல். 'நெறிநுண் கருங்குழ னேரிழை யாசிட்ட நேரிசையே' (யாப். காரிகை. செய்யு. ௩.) 2. பற்றுச வைத்தல். [ஆசு-அற்பம். இடுதல்-வைத்தல்.]

ஆசிடை—1. கூட்டம். 2. சேலை. 3. வாழ்த்து. 'அந்தணராசிடைகூறி' (குளா. குமாரகால. உ௦.)

ஆசிடையிட்டெதுகை— ஆசிடையெதுகை.

ஆசிடையெதுகை — எதுகைவகையுளொன்று. அது: யரலழ என்னும் நான்கெழுத்துக்களுள், ஒன்று-செய்யுளில் யாதேனும் ஓரடியில் எழுத்தொன்று மெதுகையில் வரும் எழுத்திற்கும் அதன்முதலெழுத்திற்கும் இடையே வருவது. 'யரலழ வென்னு மீரிரண் டொற்றும் - வான்முறை பிறழாது வந்திடை யுயிர்ப்பினஃ - தாசிடை யெதுகை யென் றறிதல் வேண்டும்' (யாப். காரிகை. ஒழிபு. ௬. உரை.)

ஆசித்தம்—1. காரியப்பட்டது. 2. சித்தியானது. [ஆஸித்த.]

ஆசித்தல் — ஆசைப்படுதல். 'ஆசித்தார் மனத்திற்புகுமுத்தம' (திருப்புகழ். ௬௦உ.)

ஆசிதகம்—இருத்தல்.(கொக்கோ. ௩:௫.)

ஆசிதநதன் — சகரசக்கரவர்த்தி. [அசிதன்மகன் என்றபடி.]

ஆசிதம்—1. ஆசனம். 2. நகரம். 3. நீலநிறமுடையது. (த. நி. போ. கக௦.) 4. வண்டியிலேற்றும் பாரம். 5. பத்துப்பாரங்கொண்ட அளவு. 6. வசிக்குமிடம். (அசிதம் என்பதினின்றுவந்த தத்திதம்.) [1, 2, 3, 6. ஆஸித. 4, 5. ஆசித.]

ஆசிநயன்—நாவிதன்.

ஆசிப்பு—ஆசித்தல்.

ஆசிமொழி — வாழ்த்தணி. (வீரசோ. அலங். 33. உரை)

ஆசியக்காரன்—விகடஞ்செய்வோன்.

ஆசியக்குவாதவாதரோகம் — ஒருவகை வாதரோகம்.(சிவரட். க௭௫.) [அது வாயைக் கோணச்செய்யும்படிசெய்தலால் வந்தபெயர். ஆஸ்யம் - வாய்.]

ஆசியபத்திரம்—தாமரை.

ஆசியபாகபித்தரோகம்—ஒருவகைப் பித்தரோகம். அது: வாயிற்கொப்புளங்களெழும்பிப் பழுத்துடைதல் முதலிய செயல்களை யுண்டாக்கும். (சிவரட். கஅ௨.)

ஆசியபாகவாதம்— ஆசியக்குவாதவாதம். (சிவரட். க௭௫.)

ஆசியம் — 1. அங்காந்தவாய். 2. அவ்விடம். 3. அவமதிச்சிரிப்பு. 4. கருஞ்சீரகம். 5. சிரித்துவிளையாடல். 6. சிரிப்பு. 7. முகம். (அக. நி) 8. லலாடமத்தியத்திலிருக்கும்

விந்துஸ்தானம். (சி-வி. ஒரி. கஉ. தாற்.) 9. வாய். 10. நவரசத்துள் ஒன்று. [1, 7. 9. ஆஸ்யம்: ஆ-முன். ஸ்ய - போதல். 3, 5, 6, 10. ஹாஸ்ய: ஹஸ் - சிரித்தல். ய - ஒரு விகுதி.]

ஆசியாசம் — நவரசங்களுள் ஒன்றாகிய நகைச்சுவை. (சி. சி. ௨. ௩௩. சிவாக்.) [ஹாஸ்யரஸ: ஹாஸ்ய நகை. ரஸ - சுவை.]

ஆசியா—ஒரு பூகண்டம்.

ஆசியாசவம் — வாயினூறுநீர். [ஆஸ்யாஸவ: ஆஸ்ய - வாய். ஆஸவ - ஊறு நீர்.]

ஆசியாட்சேபவாதரோகம்—காதிலும் நாசியிலும் தாடையிலும் அறுசரித்து வாயினடுவிலும் அதற்குக்கீழும் மேலும் சஞ்சரித்துக்கொண்டேயிருக்கும் ஒருவகை வாதரோகம். (சீவரட். கஎஉ.) [ஆஸ்யம் - வாய்.]

ஆசிரை—இருக்கை. [ஆஸ்யா.]

ஆசிரபம்—மூலநட்சத்திரம். [ஆஸ்ரப: இது, இரத்தத்தைக்குடிக்கும் இராக்கதனைத் தெய்வமாக உடையதென்பதுபற்றி வந்தபெயர்.]

ஆசிரபன் — இராக்கதன். [ஆஸ்ரப: ஆஸ்ர - இரத்தம். ப - குடித்தல்.]

ஆசிரம்—1. இடம். [ஆசிரயத்தின் விகாரம்போலும்.] 2. கண்ணீர். [ஆஸ்ர.] 3. நீ. [ஆஸிர.]

ஆசிரமம்—1. ஆச்சிரமம். 2. பன்னசாலை, முனிவருறைவிடம். 'அறவோர்வைகுமாசிரமத்தெழுந்தருளி' (சேதுபு. சக்கர. க.) 3. சன்னியாச ஆச்சிரமம்.

ஆசிரமி—1. ஆச்சிரமி. (த. நி. போ. பக். உஅ௬.) 2. சன்னியாசி.

ஆசிரயணம் — சார்ந்துநிற்கை. (திவ். திருவாய். 6. 1. 6. பன்னீ)

ஆசிரயம்—1. ஆச்சிரயம். 2. இருப்பிடம். 'தமத்தையுடைய பர்வதம் நிச்சிதார்த்தமாகிய வந்நிக்கு ஆசிரயமாம்' (சி. சி. அளவை. ௩. சிவாக்.) [ஆஸ்ரய.] 3. சமீபம். 4. வழக்கு.

ஆசிரயன்—ஆச்சிரயன்..

ஆசிரயாசித்தம்—அசித்தம் என்னும் ஏதுப்போலிவகைமூன்றனுள் ஒன்று; அது: சாத்தியத்திற்குப் பற்றுக்கோடில்லாமையாற் சித்தியாகாதது. 'ஆகாசத்தாமரை மணமுடைத்து; தாமரைத்தன்மையால், பொய்கைத்தாமரைபோல: என்பதன்கண் இல்லாததாகிய ஆகாசத்தாமரை ஆசிரயமாகக்கொள்ளப்பட்டது' (தர்க்கபா. உஎ.) [ஆஸ்ரய - பற்றுக்கோடு. அஸித்த - சித்தியாகாதது.]

ஆசிரயி—ஆசிரயி என்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும்.

ஆசிரயிகள்—சூத்திரப்பெண்ணைச் சண்டாளன்கூடிப் பெற்ற பிள்ளை. 'பின்னோர் மாதை விழைந்துசண் டாளன் சேர - வாதலே யடைந்த மைந்த ஞசிர யிகப்பேர் பூண்பன்' (சூத. சிவமா. கஉ: ௩௦.)

ஆசிரயித்தல்–1. அடைதல். 'மகத்துக்களை யாசிரயித்து' (வழக்.) 2. பற்றுக்கோடாகக் கொள்ளல்.

ஆசிரவம்—1. இணக்கம். 2. உபத்திரவம். 3. ஓடுதல். 4. கீழ்ப்படிவு. 5. சப்தபதார்த்தங்களிலொன்று. அது, பொறிவழிச்சேறல்; கன்மத்தொடர்ச்சியென்பாருமுளர். (வேதா. சூ. உச. உரை. சிவஞானபா. ௩௬.) 6. தவறு. 7. நீரோட்டம். 8. பாய்தல். 9. மீறுதல். 10. யாறு. 11. வேகுஞ்சோற்றிற்பொங்கியெழும்புமது. 12. நவபதார்த்தங்களுள் ஒன்று. (சீவக. 2814. உரை) [2, 3, 5, 6, 8, 9, 11, ஆஸ்ரவ: 1, 4, 7, 10, ஆஸ்ரவ]

ஆசிரன்—சூரியன்.

ஆசிராவம்—உபத்திரவம். [ஆஸ்ராவ.]

ஆசிரித்தல் — ஆசிரயஞ்செய்தல். 'அவிர்தரு பரம வஞ்ச மாசிரித் திடுதல் வேண்டும்' (சூத. எக்கி. பூ. உ: கச.)

ஆசிரிதம்—சார்ந்திருக்கை.

ஆசிரியச்சீர்—அகவலுரிச்சீர்.

ஆசிரியச்சுரிதகம்—அகவலாகிய சுரிதகம். (இலக். வி. 738. உரை.)

ஆசிரியத்தளை — எழுவகைத்தளைகளுள் ஒன்று; அது: தேமா புளிமா என்னும்

வாய்பாட்டுச்சீர்களின்முன் நேரசையும், கரு விளம் கூவிளமென்னும் வாய்பாட்டுச்சீர்களின்முன் நிரையசையும் வரத் தொடுக்கப்படுவது. (யாப். காரிகை. உறுப். ௧௦.)

ஆசிரியத்தாழிசை — ஆசிரியப்பாவினத்துளொன்று; அது: தம்முள் அளவொத்த மூன்றடியுடையதாய்த் தனித்தேனும் ஒரு பொருண்மேன் மூன்றடுக்கியேனும் எனைத்துச்சீரானும் வருவது. (இலக்கணவிளக். ௭௩௫. உரை.)

ஆசிரியத்துறை — ஆசிரியப்பாவினத்துளொன்று. அஃது: எனைத்துச்சீரானும் வரும் அடி நான்குடையதாய், ஈற்றயலடி குறைந்தேனும், ஈற்றயலடிகுறைந்து இடை மடக்கியேனும், இடையிடை சுருக்கடியா யேனும் இடையிடை சுருக்கடியா யிடை மடக்கியேனும் வருவது. (யாப். காரிகை. செய். ௯.)

ஆசிரியநிலைவிருத்தம் — அடிமறியாது வருவது.

ஆசிரியப்பா — நால்வகைப்பாவுளொன்றாகிய அகவற்பா. (தொல். பொரு. ௬௧௧.)

ஆசிரியம்—ஆசிரியப்பா. (தொல். பொருள். ௬௧௧.)

ஆசிரியமண்டலவிருத்தம் — அடிமறியாக வருவது.

ஆசிரியவசநம் — முன்னுள்ள ஆசிரியருடைய நூல்களினின்று மேற்கோளாக எடுக்கப்பட்டவசநம்' 'ஆசிரியவசனமென் றீரேழுரையே' (நன். பொதுப். ௨௧)

ஆசிரியவிருத்தம்—ஆசிரியப்பாவினத்துள் ஒன்று; அஃது: அளவொத்த கழிநெடிலடி நான்கினுல்வருவது. (யாப். காரிகை. செய். ௯.)

ஆசிரியவுரிச்சீர்—அகவலுரிச்சீர்.

ஆசிரியன்—1. குரு, நூலாசிரியன், உரையாசிரியன், போதகாசிரியன்: இந்நால்வர்க்கும் பொதுப்பெயர். 2. புலவன் (பிங்).

ஆசிலேடம்—1. ஆலிங்கநம். 2. சமவாய சம்பந்தம். [ஆஶ்லேஷ: ஆ; ஶ்லிஷ - மடக்குதல்.]

ஆசினி—1. ஆகாசம். 'செல்லுமீனுந்திகழ் தருமாசினி' (திருச்செந்தூர்ப்பு. செயந்தி. ௩௪.) 2. ஈரப்பலா. 'ஆசினிக்கவினியபலவி னார்வுற்று' (புறநானூ. ௧௫௮.) 3. மரவயிரம். (சூடா) 4. மரவுரி. (சூடா)

ஆசியம்—கருஞ்சீரகம். (மூ. அ)

ஆசீர்வசநம்—ஆசிகூறுதல். 'தப்பாத வாசீர் வசந மெனவுணர் தாழ்குழலே' (வீரசோ. அலங். ௩௩.) [ஆஶீர்வசந:]

ஆசீர்வதி—ஆசீர்வதியென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும்.

ஆசீர்வதித்தல் — ஆசீர்வாதஞ்செய்தல், வாழ்த்தல்.

ஆசீர்வாதம்—வாழ்த்துதல், ஆசிகூறுதல். 'ஆசீர்வாதமகத்துறுபாவணையாம்' (திருவாணை. கோச்செங். ௨௧.) [ஆஶீர்வாத: ஆஶிஸ் - வாழ்த்து. வாத - கூறுதல். ஆஶீ: என்பதிலுள்ள விசர்க்கம் ரகரமெய்யானது வடமொழிவிதி.]

ஆசீவகப்பள்ளி — சமணமுநிவரில் ஒரு வகையாருடைய உறைவிடம். [பள்ளி - முநிவர்வாசம்.]

ஆசீவகன்—1. ஆருகதமதத்தருள் ஒரு பிரிவினன். (சி. சி. பர. ஆசீவகமத. ௧; சி. சி. ௪: ௧௫. முகம். மறை.) இவன் ஆன்ம அணுவும் பூதஅணுக்கள் நான்கும் தம்மிற் கூடிக் காரியப்படும் என்பன். 2. சமண முனிவன். (பிங்).

ஆசீவகம்—ஆசீவம். [ஆஜீவக.]

ஆசீவம்—1. சீவநம். 2. சீவநோபாயத் தொழில். [ஆ: ஜீவ - சீவித்தல்.]

ஆசீவன்—ஆருகதமுநிவன். [ஆஜீவ:]

ஆசீவிகை — சீவநோபாயத்தொழில். [ஆஜீவிகா.]

ஆசீவிடம்—1. அமாவாசைக்கு இரண்டு ஆறு ஒன்பது பதினொன்று பதின்மூன்று பதினாறு பதினெட்டாந்திநங்களாலாகிய தோஷம். 'மன்னுங்கதி ருடன்மாமதி மருவுந்தின மதனுக் - கன்னந்தரு நடையாயிரண் டாறென்பதி னுடனே - பன்னொன்றுரை பதினாறொடு பதினெட்டுயர் பதின்மூன்-றென்னுந்திந மாசீவிட மென்றும் மிவை கொடிய' (சரசோதி. குணகுண. ௧௦௮.) 2. பாம்பு. [ஆஶீவிஷ: ஆஶீ - பல்; விஷ - நஞ்சு.]

ஆசு—1. அல்லிமொக்கு. (இராசவைத்.) 2. அற்பம். 'ஆசுமன் பிலாத புன்பெண் கூந் தல்யா னிவைவ லென்றான்' (சிந்தா. சுரமஞ். ௮.) 3. ஆசுகவி. 'ஆசுகா றுவ ரவலர்கா' (இரகு. நாட்டு. ௪௦.) 4. ஆணவமலம். 'நிரோதமாசருள்சிவஞ்சூழ்தா' (சிவப்பிர. ௪௦: ௧௨.) 5. இலக்கு. 6. உவர். (குற்ற மெனப் பொருள்பட்டுக் குற்றமுடைய உவருக்காயிற்று.) 'உன் ஞமு லை யு மை ம மைர்தாசரணம்' (கந்தாங். ௨.) 7. ஒரு விதபாஷாணம். 8. கவசம். 'காலாசோடற வெறிந்தகனைகழற்கால்' (சிந்தா. மண். ௧௩௰.) 9. கார்காலத்திலே விரைவில் விளை யும் ஒருவகைநெல். 10. குற்றம். 'ஆசற வறிவதாகும்' (சி. சி. அளவை. ௨.) 11. கைக்கவசம். (அக. நி) 12. தூசி. (தைல. தைலவ.) 13. நாவிழைக்குங் கருவிகளி லொன்று, ஆசுமணையென்றது மிது. 14. பற் றுசு. 15. பற்றுக்கோடு. 'ஆசாகெந்தையாண் டுளன்கொல்லோ' (புறநா. ௨௩௫.) 16. பொதுவிதிக்கு விரோதமாகச் செய்யுளில் வரும் அசை அல்லது எழுத்து. (ஆசிடை நேரிசைவெண்பாவில் தனிச்சொற்குமுன் வரும் அசைகளும் ஆசிடையெதுகையில் வரும் யர லழ என்னும் எழுத்துக்களும் இத் தன்மைய.) 'ஆசிட்டநேரிசையே' (யாப். காரி.செய். ௩.)17. விரைவு. 'அக்கணமாசுவி ளைகன்மைந்தன்' (பாரத. புட்ப. ௬௬.) 18. நுட்பம். 'தேசிகமென்றிவை யாசி னுணர்ந்து.' (சிலப். 3; 47) 19. ஐயம். 'அம லனையாசறவுணர்ந்தவமலர்' (ஞானா. 66. 17.) 20. துன்பம். 'ஆசுக வயந்திர்பெய்த வறிமதி' (ஞானா. 24. 4) 21. வாளின் கைப் பிடி. 'குற்றுடைவா ளாசுங் கண்டமும்' (S. I. I. II. 185) [ஆஶு.]

ஆசுகம்—1. அம்பு. 'ஐந்திறனுகிய வாசுக வில்லேவன்' (கந்தபு. சாமதக. ௧.) 2. காற்று. 'விரைந்துபட ராசுகமதென்ன' (கந்தபு. சூர. வதை. ௨௨௩.) 3. பறவை. 4. விரைவாய்ப்போதல். [ஆஶுக: ஆஶு- விரைவு. க - போவது.]

ஆசுகவி—1. ஆசுகவிபாடும்புலவன். [ஆசு- விரைவு. கவி - பாட்டு, புலவன்.] 2. நால் வகைக்கவியினுளொன்று. அஃது: ஒருவன் இன்னபடிபாடுகவென்று கேட்க அப்பொழு தே யவன்கருத்திற்கு ஒப்ப விரைந்துபாடுங் கவி. 'எழுத்துச் சொற்பொரு ளணியாப் பிவையின்-விழுத்தக வொருவன் விளம்பிய வுள்ளுறை-யப்பொழு துரைப்ப தாசுகவியே' (இலக்கணவி. எ௬௬.)

ஆசுகன்—1. காற்று. 2. வாயுதேவன். 'ஆசுகன்மதலையென்றறிந்து' (பாரத. வார ணா. ௧௫.) [ஆஶுக: ஆஶு - விரைவு - க - செல்வோன்.]

ஆசுகி—பறவை (சூடா).

ஆசுசுக்கணி—1. அக்கினிதேவன். 'அடவி யை வளைத்தன னாசுசுக்கணி' (பாரத. காண் டவ. ௬௪.) 2. காற்று. [ஆஶுஶுக்ஷணி: ஆஶு - விரைவு. ஶுக்ஷ் - காயச்செய்தல்.]

ஆசுணம் — 1. அசோகு. (மூ. அ) 2. அரசு. (மூ. அ)

ஆசுபந்திரி—ஒருமரம். [ஆஶுவத்ரி.]

ஆசுபதம்—இடம், காரணம். 'அநேகே சுரவாதத்துக் காசுபதமேயில்லை' (சி. சி. சு. ௪. ஞானப்.) [ஆஸ்பத.]

ஆசுமணை — நெய்வார்கருவியினொன்று.

ஆசுமநன்—சூரியனுடையதேர்ப்பாகனாகிய அருணன். [ஆஶ்மந: ஶ்ம - கல். காலிலி யாதலாற் கற்போல அசைவில்லாதவன் என்றபடி. இஃது ஶ்ம என்பதினின்றுவந்த தத்திதபதம்.]

ஆசுரபம்-மூலநட்சத்திரம். [ஆஸுரப: ஆஸுர - அசுரசம்பந்தமான. ப.நட்சத் திரம்.]

ஆசுரபாவம் — அசுரத்தன்மை. 'நீசுர ரோடு விண்ணோர் நிகழநின் மைந்த னேடு - மாசுர பாவஞ் சார்வா யாகெனச் சபித்து' (இராமா. உத். இலவண. ௬௮.) [ஆஸுர ஹாவ: ஆஸுர - அசுரருக்குரிய. ஹாவ - தன்மை.]

ஆசுரம்—1. அசுரசம்பந்தமானது. 'ஆசு ரப்பெரும்படைக்கலம்'(இராமா.இராவணன் வதை. ௬௭.) 2. அசுரர்கூட்டம். 'எங்குமாசுர மொழித்தலாற்குமரவேளென்ன' (திருச் செக். செயந்தி. ௯௫.) 3. இஞ்சி. (மூ. அ.)

4. எண்வகைவிவாகத்துள் ஒன்று; அது: தலைமகட்குப் பொன்பூட்டிச் சுற்றத்தார்க்கும் பொன் வேண்டுவனகொடுத்துக் கொள்வது. (நம்பியகப். கள. ௪. உரை.) 5. சிங்கமுகாசுரனுடைய நகரி. 'ஆசுரமென்னு மகன்பதி வாழ்வோன்' (கந்தபு. சிங்கமு. ௬௨)

ஆசுரவைத்தியம் — இரணவைத்தியம், சத்திரவைத்தியம்.

ஆசுரி — 1. ஆசுரவைத்தியம். 2. இரணவைத்தியன். 3. கடுகுப்பூண்டு. 4. அசுரஸ்திரீ. 'ஆசுரியின் சின்னங்களாவ' (விநாயக பு. 83. 76.) [ஆஸுரீ.]

ஆசுவம்—1. குதிரைக்கூட்டம். 2. குதிரைகளிழுக்குந் தேர். 3. குதிரைச்சம்பந்தமுடையது. இஃது அசுவம் என்பதினின்றுவந்த தத்திதம். [ஆஶ்வ.]

ஆசுவயம்—1. விரைவு. 2. வேதநுட்பம்.

ஆசுவயுசம்—ஐப்பசிமாதம். [ஆஶ்வயுஜ]

ஆசுவயுசி—1. ஐப்பசிக்குரியது. 2. ஐப்பசிப்பௌர்ணிமை. 3. யாகமிருபத்தொன்றினொன்று. (திவா). [ஆஶ்வயுஜீ: ஆஶ்வயுஜ - அசுவதி. இ - ஒரு விகுதி.]

ஆசுவலாயநம் — ஆசுவலாயநராற்செய்யப்பட்ட சூத்திரம். இது பிராமணருள் ஒரு வகையாராற் கைக்கொள்ளப்படுவது.

ஆசுவலாயநன்—ஒரு முநிவன். 'சௌநக முநி புலக னசுவலாயநன்' (காஞ்சிப். புராண வ. அ.) இவன் இருக்குவேதவிதிதகருமங்களைக் குறித்துச் சூத்திரஞ்செய்தவன். [ஆஶ்வலாயநः]

ஆசுவலாயநீயம் — உபநிடதம் முப்பத்திரண்டினொன்று. (வேதா. சூ. ௩. உரை.)

ஆசுவாசம்—1. ஓய்தல், இளைப்பாறுகை. 2. சுவாசித்தல். 3. நூலின்பிரிவாகிய அதிகாரம். (த. நி. போ. ௧௪௪.) 4. மெய்போலத் தோற்றுங் கதை. [ஆஶ்வாஸः ஆ; ஶ்வாஸ - சுவாசித்தல்.]

ஆசுவிகன்—ஆசீவகன். (S. I. I. 1. 108)

ஆசுவிநீ—ஐப்பசி.

ஆசுவிநம்—ஐப்பசிமாதம். (அசுவினியிற் பௌர்ணிமைவரும் மாசம் என்றபடி.) [ஆஶ்விந.]

ஆசுவிசம் — ஐப்பசி.

ஆசூசம்—1. அசுத்தி. 'புறங்காற்சந்திற்றெடுத்தநீர்தோய்ந்திடாசூசமென்றறிந்துட் புக்கான்' (நல். பாரத. நளன். அள.) 2. ஆசௌசம்.

ஆசூடணம்—1. இரத்தம்வாங்குங்கன்னுடிக்குழலைத் தோலிலே பிரயோகித்தல். 2. உறிஞ்சுதல். [ஆசூஷண: ஆ; சூஷண - உறிஞ்சுதல்.]

ஆசூரம் — வெள்ளைவெங்காயம். (மூ. அ.)

ஆசேநுகை—ஆசிடையெதுகை.

ஆசேகம் — நனைக்கை. 'ஆசேகவொன்புனல்' (கந்தபு. வில்வலன்வாதாவிவ. 12.)

ஆசேசநம்—புரோட்சித்தல். [ஆஸேசநः ஆ; ஸிச் - நனைத்தல்.]

ஆசை—1. அன்பு. 'அரும்பெறற்குமரர்மேலாசை' (கூர்மபு. இந்திரத்துய். ௪௨.) 2. திக்கு. 'ஆசையங்கரிகடம்மை' (கந்தபு. திருவிளை. ௨௫.) 3. நீளம். 4. பொன். 'மண்ணாசைபெண்ணாசைமூன்றுநீத்து' (திருவாப்பனூர்ப்புரா. கடவுள். ௩.) 5. விருப்பம். 'இறைவனார் கமல பாத மின்றியா னியம்புமாசை' (சி. சித். பாயிரம். கவி. ௪.) 6. வேண்டாதுறும்பொருட்கட்செல்லும் விருப்பம். 7. பொருளாசை. 8. காமஇச்சை. 9. பேற்றில் நம்பிக்கை. [ஆஶா.]

ஆசைக்காரணர்—திக்குப்பாலகர். 'ஆசைக்காரண ரேனோ ராட்லை நேரே கண்டார்கள்' (கோயிற்பு. நடராச. ௨௪.) [ஆசை - திக்கு.]

ஆசைக்கிழத்தி—வைப்பாட்டி. 'சிருபனுக்கங்காசைக்கிழத்தியாம்' (திருக்காளத். பு. 30. 42.)

ஆசைப்படல் —, ஆசைப்படுதல்— } ஆசைகொள்ளுதல், விரும்புதல்.

ஆசைப்பாடு—விருப்பம். 'ஆசைப்பாட்டினரணைப்புகழுதல்' (உபதேச. சிவபுண். ௨௨.)

ஆசையம்—பொன்னுகம்.

ஆசோத்தியம்—பிரயாசமின்மை.

ஆசோதை—இளைப்பாறுதல்.

ஆசௌசம்—1. அசுத்தி. [இஃது அசுசி என்பதினின்றுவந்த தத்திதபதம்.] 2. தாயத்தாருடைய பிறத்தல் இறத்தல்களால் வரும் அசுத்தம். 'மன்பெருஞ் சூதகத்தோ டியவுமாசௌச வுண்மை - நன்கிதி னுரைத்தவாறும்' (கூர்மபு. பதிக. ௨௫. உரை.)

ஆஞ்ஞநம்—கண்ணுக்கிடும் அஞ்சனம். [ஸ்ரூஜ நம.]

ஆஞ்சநன் — அநுமான். [ஸ்ரூஜ ந.]

ஆஞ்சநேயன் — அநுமான். 'இவ்வண மிருந்த னேக்கி யியலுடை யாஞ்ச நேயன்' (கல். பார. இராமன். படையெழு. ககக.) [அஞ்சனை என்பதினின்று வந்த தத்தித பதம். ஏய-விகுதி. ஸ்ரூஜநெய.]

ஆஞ்சான் — 1. அந்தரிப்பா யசைவது. 2. பாரிக்னக்குங் கயிறு. 3. மரக்கலப்பாயை யிழுக்குங் கயிறு. 4. மரத்தின் சிறிய தனிக் கொம்பு.

ஆஞ்சான்பற்றி — மரக்கலப்பாய்கட்டுங் கம்பம்.

ஆஞ்சி — 1. அலேயல். (பிங்.) 2. ஏலம். 'ஆஞ்சி மதுஸ்யிகு தோகை விளங்கழற்காய் மெல்லிலவங் கத்தூரியும்' (தைல. தைலவ. ௰௪.) 3. சோம்பு. (சூடா.) 4. கூத்து. (அக. நி.) 5. விளையாட்டு. 6. அச்சம். (தொல். பொரு. 79.)

ஆஞ்சிக்காஞ்சி—1. போர்க்களத்தில் இறந்த கணவன்மேல் வேல்வடுவைக்கண்டு மனைவி அஞ்சிக் கூறிய புறத்துறை. (தொல். பொரு. 79.) 2. போர்க்களத்திறந்த கணவனுடன் தீயில் மூழ்கும் மனைவியின்பெருமைகூறும் புறத்துறை. (பு. வெ. 4. 22.)

ஆஞ்சில்—இசங்குஞ்செடி. (மூ. அ.)

ஆஞ்செல்கை — தெப்பம்.

ஆஞ்ஞம் — பிரகிருதி; இது சத்ருவை யசத்தியினற் கலக்குண்டமகாமாயையின் பிரத்தேசத்தின் ஒருவிதம். (சி. சி. க: ௰௭. சிவாக்.)

ஆஞ்ஞா—ஆஞ்ஞை.

ஆஞ்ஞாகரணம்—1. கீழ்ப்படிதல். 2. பணி புரிதல். [ஸ்ரூஜ்ஞாகரண: ஸ்ரூஜா- ஆஞ்ஞை. கரணம் - செய்தல்.]

ஆஞ்ஞாகரன்-ஏவல்செய்வோன். [ஸ்ரூஜ்ஞா கர: ஸ்ரூஜ்ஞா; கர: - செய்வோன்.]

ஆஞ்ஞாசக்கரம் — தந்திரங்களிலே சொல்லப்படும் ஆறுசக்கரங்களி லொன்று, அரசாணையாகிய சக்கிரம். [ஸ்ரூஜ்ஞாவக்ரு.]

ஆஞ்ஞாசத்தி—1. ஆணையாகிய சத்தி. 2. அரசனுடைய ஆஞ்ஞாசத்தி. [ஸ்ரூஜ்ஞா-கட்டளை; ஶக்தி - வலிமை.]

ஆஞ்ஞாபங்கம்—1. கட்டளைக்கமையாமை. 2. கீழ்ப்படியாமை. [ஸ்ரூஜ்ஞாஹங்க: ஸ்ரூஜ்ஞா - ஆஞ்ஞை. ஹங்க - கேடு.]

ஆஞ்ஞாபத்திரம்—சாமந்தர், வேலையாளர், நாடுபுரப்பவர் முதலியோர்க்கு இன்ன காரியஞ்செய்யவேண்டும் என்று எழுதப் படுங் கட்டளை. (மிருதிசங். ௩௧.)

ஆஞ்ஞாபநம்-1. அறிவித்தல். 2. கட்டளையிடுதல். [ஸ்ரூஜ்ஞாபநம்.]

ஆஞ்ஞாபித்தல் — 1. அறிவித்தல். 2. கட்டளையிடுதல். 3. நியமித்தல். (பௌட். பதி. ௫௯.)

ஆஞ்ஞை-1. கட்டளை. 2. மானுடதேகத்தி லுள்ளதாகச்சொல்லப்படும் ஆறுதாரங்களில் ஆறுவது. இது விசுத்திக்குப் பத்துவிரற்பிரமாணத்துக்குமேலே புருவமத்தியிலே வட்டவடிவமாய் இதழிரண்டுடையதாயிருக்கும். (சி. சி. அ: ௨௧. மறை.) இதனடுவேயுள்ள எழுத்து யகாரம். அதிதேவதை சதாசிவன். (வேதா. தத். ௬௨.) [ஸ்ரூஜ்ஞா.]

ஆஞா— } தந்தை. [திசைச்சொல்.]
ஆஞீ—

ஆட்கடியன் — பாம்புவகையில் ஒன்று. (குற்ற. தல. கண்டகசே. 32.)

ஆட்காசு—பழங்காசுவகையில் ஒன்று.

ஆட்காட்டி-1. ஒருபறவை. 'ஆட்காட்டிப் பட்சி' (பதார்த்த. ௬௫௫.) 2. சுட்டுவிரல். (ஆள், காட்டி - காட்டுவது.)

ஆட்கொல்லி — 1. ஆளைக்கொல்வோன். 2. பணம்.

ஆட்கொள்ளுதல் - அடிமைகொள்ளுதல். 'என்னையுமாட்கொண்டருளி' (திருவா. 10. 4.)

ஆட்சபணம் — உபவாசித்தல். [ஸ்ரூக்ஷவணம்.]

ஆட்சபாதிகன்—நியாயாதிபதி.

ஆட்சபாதன்—ஒரு தருக்கசாத்திரி.

ஆட்சாரணம்-குற்றமேற்றுதல். [ஸ்ரூக்ஷாரண.]

ஆட்சாரம்—ஆட்சாரணம்.

ஆட்சி — 1. ஆண்மை, உடைத்தாதல். 'கண்டே னிவர்தங் கடுந்திறலி னாட்சிதனை' (கந்தபு. அசுரர்யாக. ௧௬.) 2. ஆளப்படுவது. 'மற்றெனாட்சியாமண்டலங்கள்' (கந்தபு. சூரபன்மன்வதை. ௧.) 3. உரிமை. (பிங்கல. ௨௯௧௬.) 'வினையமீதல்லதில்லை விண்ணுநின் னாட்சியாக்கி' (இராமா. சூர்ப்பந. ௫௫.) 4. ஒன்றனைத் தன்னுடையதாக அநுபவிக்கை. 'ஆட்சியி லாவ ணத்தி லன்றிமற் றயலார் தங்கள் - காட்சியின் மூன்றி லொன்று காட்டு வா யென்ன' (பெரியபு. தடுத்தாட். ௫௬.) 5. ஒன்றிலுள்ள பிரயோசநங்களை அநுபவிக்கை. 6. நன்னிமித்தம். 7. பழக்கம். 'அசாவேரி யவனுக்கு நல்ல ஆட்சி' 8. முயற்சி. 9. வழக்கம். 10. மக்கள் அணையலாகாதெனக் கட்டளையிடப்பட்ட இடம். (திருக்கோ. 282. உரை.) 11. கிரகநிலையுள் ஒன்று.

ஆட்சிப்படல்—உரிமையாதல்.

ஆட்சியர் — ஆட்சியுடையார். (இராமா. சுந்தர. பிணிவீட். ௭.)

ஆட்செய்தல் — அடிமைவேலைசெய்தல். 'நா னெடிதுன் மாற்றவ - டாதியர்க் காட்செய' (இராமா. மந்தரை. ௫௪.)

ஆட்சேபநம்–1. குற்றச்சாட்டு. 2. நோய். 3. வலி.

ஆட்சேபகன்—ஆக்கேபகன்.

ஆட்சேபசமாதாநம் — சங்கோத்தரம்.

ஆட்சேபநம்—ஆக்கேபம்.

ஆட்சேபம்–1. ஆக்கேபம், தடை. 'பார்க்கவன்றனைக்குமாரியாட்சேபம்பகர்ந்தவாறும்' (மச்சபு. அநுக்கிர. ௬.) 2. குற்றம். 3. சங்கை. 4. தூஷணை. 5. நிராகரணம். 6. விலக்கணி. (கு. தண்டி. பக். ௬௧.) 7. பாதாக்ஷேபகவாதம். (தைல. தைலவ. ௭௮.)

ஆட்சேபித்தல் — ஆக்ஷேபஞ்செய்தல், தடைசெய்தல். 'தெய்வயானி யாட்சேபித் ததனைச் சாற்றவேண்டுமென' (மச்சபு. தெய்வயானியாட். ௧.)

ஆட்சை—கிழமை. வியாழவாட்சை. (T. A. S. I. 179.)

ஆட்டகம்–திருமஞ்சனசாலை. 'ஆட்டகத்தி லானைந்துகந்தார்போலும்' (தேவா. 720. 4.)

ஆட்டத்துவெளி–வையாளிவிடுகிற வெளி. (ஈடு. 7. 4. 5.)

ஆட்டம் — 1. அசைவு. 'இமையில்வங்கூமாட்டம்' (தைல. தைலவ. ௫௫.) 2. அலைவு. 3. ஒத்ததன்மை. 4. சூதாடுதல் முதலியவற்றின் ஒருமுறைவிளையாட்டு. 5. திரும்பத்திரும்பச்செய்யும் முயற்சி. (வழக்.) 6. விளையாட்டு. 'தவப்பகடியாட்டங்காண்' (ஒழிவி. யோகம். ௪.) 7. கூத்தாட்டு. 'ஆட்டமும்பாட்டமும்' (வழக்.) 8. சஞ்சாரம். 'அஞ்சனமேனியை யாட்டங்காணேன்' (திவ். திருவாய். 10. 3. 3.)

ஆட்டல்-1. அசைத்தல், அலைத்தல். 'அறைபடு மாலைக ளிடையிட் டாட்டலே' (கந்தபு. நாட்டு. ௩௧.) 2. அபிடேகஞ்செய்தல். 'ஆன்பா றழைத்தவன்பாலாட்ட' (சேதுபு. கடவு. ௧௨.) 3. அரைத்தல். 4. நடப்பித்தல். 5. நடிப்பித்தல். 'உருவினைக்காட்டியாட்டி' (சி. சி. ௪: ௧௩. மறை.) 6. ஸ்நாநம்பண்ணுவித்தல். 'அம்பினாட்டுதுமென்று' (இராமா. ஆற்று. ௩.) 7. துரத்துதல். 'ஆட்டிவிட்டா றலைக்கும்' (ஐங். ஐம். 34.) 8. வெல்லுதல். 'இகலமராட்டி' (சிலப். 5. 225.)

ஆட்டாங்கள்ளி—திருகுகள்ளி. (மலை.)

ஆட்டாங்கொடி—சோமலதை.

ஆட்டாங்கோரை — ஒருவகைக்கோரை. (மலை.)

ஆட்டாண்டு — ஒவ்வோராண்டும். 'ஆட்டாண்டுதோறும் அளக்கக்கடவநெல்' (S. I. I. II. 70.)

ஆட்டாம்பிழுக்கை—ஆட்டின்மலம்.

ஆட்டான்—ஆட்டிடையன்.

ஆட்டாளி — நிர்வகிப்போன். 'உங்கள் காரியங்களுக்கெல்லாம் நான் ஆட்டாளியா'

ஆட்டி—1. அலைத்து. (ஐங்குறு.) 2. ஆட்டுவோன். 3. தலைவி, மனைவி. 'ஆட்டியு மகவுந் தானுமதற்குடன்பட்டவன்றன்-மாட்டினைப் பெருக்கி' (சேதுபு. வேதா. ௩௧.) 4. பெண். 5. பெண்பாலில்வரும் ஒருவிகுதி. 'கம்மாட்டி' (வீரசோ. தத்தித. ௫.)

ஆட்டியம்—கூடல். (சீவரட். ௧௬௭.)

ஆட்டியவாதரோகம் – சப்ததாதுக்களிருக்கின்ற வாதமார்க்கங்களையும் சிலேட்டுமமார்க்கங்களையும் அடைத்துச் சிலேட்டுமத்தோடுகூடிக்கொண்டு உபத்திரவத்தைச்செய்யும் ஒருவகை வாதரோகம். (சீவரட். ௧௬௭.)

ஆட்டு-1. அசைப்பு, வல்லமை. 2. ஆட்டுந்தன்மை. 3. ஆட்டென்னேவலும் தெரிநிலை வினைப்பகுதியும். 4. ஆடுந்தன்மை. 5. கொண்டாட்டு. (தொல். பொரு. ௯௦.) 6. கூத்து. 'உரையும் பாட்டு மாட்டும் விரைஇ' (பத். மதுரை. ௬௧௬.) 7. முழுகுதல். 'அருப்பு முலையார் பூப்பெய்தி நீராட்டயரு நாண்முதலா' (கூர்மபு. வருணச். ௨௨.) 8. விளையாட்டு. 'முன்னே குழவியி னாட்டயர்கால்'(தணிகை. களவு. ௧௫௨.)

ஆட்டுக்கடா—ஆணாடு.

ஆட்டுக்கல் — 1. அமிர்தபாஷாணத்தொன்று. 2. அரைக்குங் கல்லுரல்.

ஆட்டுக்கால் — 1. அடம்பங்கொடி. 2. பூமருது (மலை).

ஆட்டுக்காற்கல்—கொக்கைக்கல்.

ஆட்டுக்கிடை—ஆட்டுப்பட்டி.

ஆட்டுக்கொம்பவரை — அவரைவகையில் ஒன்று.

ஆட்டுக்கோன்—சிவன். [ஆட்டு - கூத்து. கோன் - இறைவன்.] 'மாட்டுக்கோன் றங்கை மதுரைவிட்டுத் தில்லைநக - ராட்டுக்கோனுக்குப்பெண் டாயினாள்' (தனிப்பாடற் றிரட். காளமேகம். ௭௮.)

ஆட்டுசம்—ஆடாதோடை. (மலை)

ஆட்டுநப்பி—ஆடு அசையிடும் இரை.

ஆட்டுதல்—ஆட்டல்.

ஆட்டுப்பட்டி—ஆட்டுக்கிடை.

ஆட்டுப்பலகை—செக்கின்மேலுள்ள சுற்றுமரம்.

ஆட்டுமந்தை—1. ஆட்டின்கூட்டம். 2. ஆடுகூடுமிடம்.

ஆட்டுரல்—ஆட்டுக்கல்.

ஆட்டுவாகனன்—அக்கினிதேவன்.

ஆட்டை—வருடம். (ஆண்டு என்பதன் விகாரமாகிய ஐயீற்றுடைக்குற்றுகரம்.) 'ஆட்டைவிழவாகத் தன்னகரவீதிதோறும்' (சிலப். உரைபெறுகட். ௩.)

ஆட்டைக்காணிக்கை—ஒரு பழைய வரி. (i. M. P. TP. 234)

ஆட்டைச்சிராத்தம்—ஆட்டைத்திதி.

ஆட்டைத்திதி— } இறந்தவன் பொ
ஆட்டைத்திவசம்— } ருட்டு முதல்வருட முடிவிலே அவனிறந்ததிதியிலே செய்யப்படுஞ் சிராத்தக்கிரியை.

ஆட்டைவட்டம்—வருஷந்தோறும். 'ஆட்டைவட்டம் அரைக்காற்காசு பொலிசை' (s. i. i. II. 125.)

ஆட்டைவட்டன்-ஆட்டைவட்டம். (s. i. i. II. 403.)

ஆட்டைவிழா—வருஷத்திருவிழா. (சிலப். உரைபெறு. 3.)

ஆட்படல்—ஆட்படுதல்.

ஆட்படுந்தல்-அடிமைகொள்ளுதல். (திவ். திருப்பள்ளி. 10.)

ஆட்படுத்துதல் — 1. ஆட்படுத்தல். 2. வளர்த்து ஆளாக்குதல். 3. முன்னுக்குக் கொண்டுவருதல்.

ஆட்படுதல் — 1. அடிமைப்படுதல். 'ஆட்படுநெறியிற்சேர்த்து மாறியினாழ்தந் துய்க்க' (கந்தபு. சூரப. ௪௬௪.) 2. புருடத்துவமடைதல். 3. உயர்நிலையடைதல். 4. தேகசுகமடைதல்.

ஆட்பலி—நரபலி. 'தலைக்காட்பலிதிரிவர்' (திவ். இயற். நான்முகன். 52.)

ஆட்பிடியன்—முதலை.

ஆட்பிரமாணம்—ஆளளவு.

ஆட்யம்—நிறைந்தது. (சி-வி. ஞாந. ௯.) [ஆட்யம்.]

ஆடககருப்பன் — பிரமன். 'ஆடக கருப்பனை நிகர்வது கந்தமாதநம்' (சேதுபு. கந்த. ௯.) [ஹாடகம்.பொன். கருப்பன் - கருப்பமுடையவன். இரணியகருப்பன் என்பதன் பரியாயம்.]

ஆடகச்சயிலம்—மேரு. (கல்லா. 72. 1.)

ஆடகத்தி—குங்குமபாஷாணம்.

ஆடகம் — 1. சிறுநாகப்பூ. 'மாடகமாடக மாகுலிகோலகமட்டனுக்கம் பலினி யரேணுகம்' (தைல. தைலவ. ௨௩.) 2. தானிய அளவையினொன்று; அது: நான்குபிரஸ்தங் கொண்டது. (ந. நி. போ. ௨௯.) [உவின்சிலோ இருபதுபடிகொண்ட அளவு என்பர்.] 3. துவரை. (சூ. நிகண். ௪: ௪௧.) 4. நால்வகைச் சாதிப்பொன்னுளொன்று. 'சாதரூபங் கிளிச்சிறை யாடகஞ் - சாம்பூநதமென வோங்கிய கொள்கையிற் - பொலந்தெரி மாக்கள்' (சிலப். ஊர்காண். ௨௦௨.) 5. நிவிர்த்திகலையிற் பிருதுவிதத்துவத்திலிருக்கும் நூற்றெட்டுப்புவநங்களிலொன்று. (சி-வி. கிரி.

உக. உரை.) 6. பொன். 'ஆடகமாமதி லம் பொற்கோபுரம்' (கந்தபு. நாட்டு. ௫௬.) 7. சிறுகாஞ்சொறி. 8. உலோகக்கட்டி. (பிங்.) [2. ஹாடகம். 4. 5. 6. ஹாடகம். ஹாட - பிரகாசம். ஷக - ஒரு விகுதி.]

ஆடகமயம்—பொன்னாலாயது. [ஹாடகமய: ஹாடக - பொன். மய - ரூபம்.]

ஆடகர்—ஆடகேசவுருத்திரர்; இவர் பூமியிலிருந்து இரண்டுகோடியோசனைக்குக் கீழே, கரிட்டபாதலத்துக்கு மேலே இருப்பர். 'இதன்மிசை யிலக்க மொன்பா னாடகரிருக்கை யாகும்' (கந்தபு. அண்டகோ. கஎ.)

ஆடகன்—1. ஆடகேசவுருத்திரன். 'அடுகனலவன் சூர்மாண்ட னாடகனையன்' (கந்தபு. திருக்கல். ௬௪.) 2. இரணியகசிபன் என்னும் அசுரன். 'தளர்ந்து வீழ்ந்திசா சரனு மாடகன் றன்னையொத்தனன்' (பாரத. வேத். ௧௫.) 3. சூரபன்மன்புத்திரர்களிலொருவனாகிய இரணியன். 'சேந்த மெய்யுடை யாடகனுறையுளூந் தீர்ந்தான்' (கந்தபு. நகர்பு. ௬௬.)

ஆடகி—துவரைச்செடி. (தைல. பாயிர.) [ஆடகீ.]

ஆடகூடம்—செம்புமலை.

ஆடகேசன்—ஓர் உருத்திரன். 'ஆடகேசனுமுருத்திரன் கயிலையி லடைந்தான்' (கந்தபு. கணங். ௬.)

ஆடகேசுரம் — பாதாளலோகத்தில் ஆடகேசர்வாழ்கின்ற புவனம். 'தேவர்தொழும் பரஞ்சுடர்வா ழாடகேசுரம்' (அருண. திருமலைச். ௪௬.)

ஆடசை—துவரை.

ஆடம்—1. ஆமணக்கு. (மலை.) 2. இருபதுபடிகொண்ட ஓரளவு.

ஆடம்பரம்—1. அலங்காரமானதோற்றம், இடம்பத்தோற்றம். 'ஆடம்பர மன்வேடமகற்றி' (பாரத. அருச். தீர். எ.) 2. இறுமாப்பு. 3. இன்பம். 4. கண்மடல். 5. கோபம். 6. தொடக்கம். 7. போர்ப்பறை. 8. யானைபிளிறொலி.

ஆடரி—சுப்பிரமணியன். [ஆடு: அரி-பகை.]

ஆடல்—1. அசைதல். 'ஆடு கேதனத் தளவையு மன்னதே' (கந்தபு. திருநகர. உ௬.) 2. அளைதல். 'குருதியாடியகூருகிர்க்கொடுவிரல்' (பத். திருமுரு. ௫௨.) 3. ஆளுதல். 'அகிலலோகமு மாடற்குரியரென்று' (பெரிய பு. திருக்கூட். ௪.) 4. கூத்தாடல். 'பதமெடுத்திறையாடல்' (தணிகைப். நகர. எ.) 5. ஆடுதல். 'கூத்தொருவ னாடலாற் பாடுபெறும்' (நான்மணிக். அ௫.) 6. செய்தல். 'அருமிது கேண்மினம ராடுகளனேகி' (கந்தபு. தாரக. ௧௦அ.) 7. சொல்லுதல். 'யார்க்குநன்னய மாடல்செய்யு நாரதன்' (கந்தபு. தகரேறு. உ௪.) 8. ஸ்நாநஞ்செய்தல். 'அத்தகுவரைப்பி னெழுசுனை யாடி' (தணிகைப். புராணவர. எஎ.) 9. நட்புரை. 10. புணர்தல். 'தடங்கண்கள் குவளைபூப்பத் தையலோ டாடுமன்றே' (சிந்தா. காந். ௩௪.) 11. பொருதல். 'ஆடலந் தொழின்மேற் கொண்டே' (கந்தபு. தகரே. உக.) 12. விளையாட்டு. 'கழங்கு கந்துக மம்மனை யாடலும்' (பாரத. சம்பவ. உஎ.) 13. வீரம். 'ஆடன்மொய்ம் புன்டையோன்-பேரழற்பொறி கதுவுறநோக்கியே' (கந்தபு. தாரக. அ௩.) 14. வெற்றி. 'ஆங்கெதிர் விடிலொன் றூட லங்கையி னயகாலை - வாங்கிடி லொன்றி ரண்டு மந்திரத் ததுவால்' (இரகு. அயனெழு. கக௮.) 15. துன்பம். 'அத்தனை ஆடல்கொடுக்கைக்கு' (ஈடு. 9. 9. ப்ர.)

ஆடல்கொடுத்தல்—1. இடங்கொடுத்தல். 'இவ்வாற்றுமைக்கெல்லாம் ஆடல்கொடுத்த ஆழ்வார்' (ஈடு. 8. 5. 11.) 2. துன்பத்தை யனுபவித்தல். (ஈடு. 9. 9. ப்ர.)

ஆடலார் — நடனமுடையவர். 'பாடலாராடலார்' (தேவார. பந்தணைநல்லூர். உ. திருநாவ.)

ஆடலை—1. பூவில்லாமரம். 2. பூவிளா.

ஆடவர்—1. ஆண்மக்கள். 'காவலாடவர் தம்முட னுதித்திடார்' (கந்தபு. மார்க். ௬௧.) 2. விவாகஞ்செய்யும்பருவமடைந்த ஆண்மக்கள். 'சிறூர்குழாமு-மாடவர் குழாமும் வாட்கணரிவையர்குழாமும்' (கந்தபு. மேரு. உ௨.)

ஆடவல்லான் — 1. தஞ்சாவூர் நடராஜப்பெருமான். (s. i. i. II. 125.) 2. முதல் இராஜராஜசோழன்காலத்தொட்டு மரக்கால் நிறைகல் துலாக்கோல்களுக்கு வழங்கிய பழையபெயர். (s. i. i. II. 403. 400. 408.)

ஆடவவிருத்தம் — நாற்பத்தெட்டுவயதுக்கும் அறுபதுவயதுக்குமிடையிலுள்ளபருவம்.

ஆடவள்—1. விருத்தை. 2. விவாகஞ்செய்யும்பருவமடைந்த பெண்.

ஆடவன் — 1. ஆண்மகன். 2. இளைஞன். (திருக்கோ. 219.) 3. நான்காம்பருவத்தினன்.

ஆடவை—1. ஓரேவல். 2. திருத்தசபை. 3. பெண். 4. மிதுனராசி. (திவாகர.)

ஆடற்கூத்தியர் — அகக்கூத்தாடும் பதியிலார். (சிலப். இந்திரவி. ௫ ௦.)

ஆடனூல் — பரதநூல். 'ஆடனூல்வரம்பு கண்டவராகி' (திருவி. கான்மாறி. எ.)

ஆடா — கால்களிற் கட்டியைப்போலுண்டாகும் ஒரு குதிரைநோய். (அசுவ. 102.)

ஆடாசம்—கெந்திபுரிபாஷாணம்.

ஆடாதோடை— } ஒரு மருந்துச் செடி.
ஆடாதோடை— } (பாவட்டையென்பாருமுளர்.) 'ஆடாதோடைப் பன்னமையறுக்கும்' (பதார்த்தகுண. ௩௮௪.) [ஆடு தொடா என்பதன் திரிவென்பர்.]

ஆடி — 1. ஆடு என்னும் அடியாற்பிறந்த ஒரு வினையெச்சம். 2. ஆதித்தன் கற்கடராசியில் நிற்கும் நான்காமாதம். 'ஆடிவைகாசித்திங்கள்' (தணிகை. அகத். ௧௭௬.) 3. உத்திராடமுகூர்த்தம்; அது பகலில் பன்னிரண்டாம்நாழிகையின்பின்வரும் இரண்டுநாழிகை கொண்ட முகூர்த்தம். 'அரன்பாம்பநுடமகம்புட்புனலாடி' (விதான.குணகுண.௭௬.) 4. உத்திராடநாள். (சூ. நிகண். ௧: ௭௬.) 5. கண்ணடி. 'வேலையங் தலைவன் காலையொண்பகலாடி காட்ட வுமைமக னங்க ணுற்றுன்' (கந்தபு. திருவவ. ௬௬.) 6. காற்று. 7. கூத்தாடுவோன். 'மணிப்பையரவினடி' (பாரத. அருச். தவநி. ௧௧௩.) 8. பளிங்கு. 'விதிமாணடியின் வட்டங்குயின்று' (மணி. 8. 47.)

ஆடிக்கரு—ஆடிமாசத்திலுண்டாகும் கருமேகம். இதனால், பின்மழை உண்டு இல்லை என்பது அறியப்படும். 'ஆடிக்கரு அழிந்தால் மழைகுறைந்துபோம்' [வழக்.]

ஆடிடம்—விளையாடுமிடம். (மணிமே.)

ஆடிப்பட்டம்— ஆடிமாதத்துப் பயிரிடும் பருவம்.

ஆடு — 1. ஆடென்னேவலும் தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும். 2. ஒரு நாற்கால்விலங்கு. 3. கூத்து. 4. கூர்மை. 5. கொல்லுதல். 'ஆடுகொள்வென்றி' (புறநா. ௬௭.) 6. கொல்லுதல்போல வருத்துதல். 'ஆடுறு பசியினோ ராக்கம் கண்டுழி' (கந்தபு. தெய். கரு.) 7. மறியாடு. 8. மேடராசி. 'வெந்திறலரியேறுடு' (சரசோ. சோடசு. ௬௫.) 9. வெற்றி. 'ஆடுதுவன்றுவிழவினடார்த்தன்றே' (மதுரைக். ௬௨௮.) 10. சமைக்கை. 'ஆடுநனிமறந்த கோடுயரடுப்பின்' (புறநா. 124.) 11. காய்ச்சுகை. 'அருநிலைச் சாடி யாடுறுதேறல். (பு. வெ. 1. 2.)

ஆடுநம்—ஆடுவேம். (ஐங்குறு.)

ஆடுகால் — கிணறுமுதலியவைகளிலே நீரிறைத்தற்கு ஏற்றப்படுந் துலாவைத் தாங்கியிருக்கும்படி நடப்பட்ட மரம். (துலா நின்று ஆடுங்காலென்றபடி.)

ஆடுதல் — 1. அசைதல். 'ஆடியகறங்கு போல்' (தாயுமான. சித்தர்கணம். எ.) 2. உடனுதல். (சிலப். கனத்தி. ௬௯. உரை.) 3. கூத்தாடுதல். 'ஆனந்தவெள்ளமே யென்றென்றுபாடினே னடினேன்' (தாயுமான. சுகவாரி. எ.) 4. செய்தல். 'அனந்தலாடேல்' (ஆத்திசூடி.) 5. சொல்லுதல். 6. ஸ்நானஞ்செய்தல். 'இந்நநற் றைல நாலுநாட் கொரு காலிட்டொரு வருடமாடிட'(தைல. தைலவ. ௬௭.) 7. பூசுதல். 'வெண்பளித நறுஞ்சாந்தஞ் சேருடி' (கந்தபு. காமத. ௬௦௯.) 8. பொருதல். 'மற்றவனே டாடி......மாய்ந்த தனை' (கந்தபு. சிங்கமு. 460.) 9. விளையாடுதல். (மணி. 10. 55;) 10. சஞ்சரித்தல். (கலித். 41. 25.) 11. முயலுதல். 'இளையானே......ஆடுமகன்' (பழமொ. 150.) 12. பிறத்தல். 'மாசை மாக்கடல் மன்னவ னடவின்' (சீவக. 911.) 13. சொல்லுதல். 'அவர் சொல்லியவாறேயாடினர்'(திருவிளை. விறகு. 61.) 14. அனுபவித்தல். (சிலப். பதிக. 16.) 15. அளைதல். (பெரும்பாண். 90.)

ஆடுதின்னுப்பாலை— 1. ஒருவகைச் செடி. (ஆட்டினுலே தின்னப்படாதது என்றபடி.) 2. புழுக்கொல்லி.

ஆடுதின்னுப்பாளை — ஆடுதின்னுப்பாலை.

ஆடுதீண்டாப்பாளை — ஆடுதின்னுப்பாளை. (பதார்த்தகுண, ௩௧௧, முகம்.)

ஆடுதுறை—ஓரூர். (புறநா.)

ஆடுமாலை—யௌவனஸ்திரீ.

**ஆடூஉ** — ஆண்மகன். 'ஆடூஉவு மகடூஉவு மாகத்தோன்றி' (கந்தபு. அண்டகோ. ௩௮.)

**ஆடூஉக்குணம்**— ஆடவருக்குரிய பிரதான குணங்கள். அவை: அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி யென்பன. அறிவு, 'எப்பொருளாயினும் அப்பொருட்கண் நின்று மெய்ம்மையை யுணர்வது.' நிறை, 'காப்பன காத்துக் கடிவனகடிந்து ஒழுகும் ஒழுக்கம்'. ஓர்ப்பு, 'ஒருபொருளை யாராய்ந்துணர்தல்'. கடைப்பிடி, 'கொண்டபொருண் மறவாமை'. (இறையனு. ௨. உரை.) [நிறை, பொறை, தேற்றம், நீதி, சால்பு: என்னும் ஐந்தும் ஆடவர்க்குரிய ஐங்குணங்களாமென்பது மொன்று.]

**ஆடூஉவறிசொல்** — உயர்திணையாண்பாலென்பதனை அறிவிக்குமனகரவீற்றுச்சொல். 'னஃகானொற்றே யாடூஉவறிசொல்' (தொல். சொல். ௫.)

**ஆடை**—1. உறையும்பாலில் மேலே எழும்பும் நெய்ப்பற்றுள்ள எடு (போர்வை) 'இடையர்தமிற் பாலாடை கவர்ந்தா னிவனென்னு-வடைவுறுதம்பாலாடையளித்தார்' (சேதுபு. கோடி. ௭௦.) 2. உடை. (பிங்.) 3. நீர்ப்பதார்த்தத்திலே மேலே படர்ந்திருக்கும் போர்வை. 4. நேத்திரபடலம். 5. பதினான்காம் நட்சத்திரமாகிய சித்திரைநாள். (சூ. நிகண். ௧: ௭௩.) 6. பனங்கிழங்கினுட்டோல்.

**ஆடைக்குங்கோடைக்கும்**—எல்லாப்பருவத்தும். 'ஆடைக்குங்கோடைக்கும்வற்றாதஏரி'.

**ஆடைக்குறி**—வண்ணாரிடுந் துணிக்குறி.

**ஆடைத்தயிர்** — ஏடெடாத தயிர்.

**ஆடைமேல்** — கழுத்து. (சிநேந். 107. உரை.)

**ஆடையொட்டி** — 1. சேலைப்பேன். 2. பேய்ப்புல். [ஆடை - சேலை. ஒட்டி - ஒட்டுவது.] 3. ஒரு பூடு.

**ஆடோபம்**—1. இறுமாப்பு. 2. பரக்கை. 3. வாயுக்கொள்ளுதல். 4. வீக்குகை. [சூடொவ.]

**ஆண்** — 1. ஆண்பால். 'ஆண்பெண்ணுருவாகி' (கந்தபு. கடவுள். ௨.) 2. ஆண்மகன். 3. ஒரு மரம். 'ஆணடிநிழலோம்பியமர்துயின் மகன்மாவை' (தணிகை. வீரா. ௬௮.) 4. தலைமை. 'ஆணுகுமாறுமுகத்தெனத்தனே' (சிவதரு. சுவர். ௨௨௩.) 5. வீரியம். 'மானமதாணி யாணிற்றுங்கல்' (ஞானு. 17. 7.) 6. வீரன். 'ஆணணிபுகுதலும்' (சிறுபாண். 211.)

**ஆண்கடன்**—ஆண்மக்கள்தொழில். 'நினைத்துநீக்குதலாண்கடன்' (சிந்தா. பது. ௨௩௫.)

**ஆண்கிரகம்**—ஆண்கோள்; அவை: செவ்வாய், வியாழம், சூரியன் என்பன. 'தரைமகன்பொன்கதிராண்'(விதாந. பஞ்சாங். ௧௭.)

**ஆண்தமஞ்சான்**—குங்குலியம். (மலை.)

**ஆண்குறி** — ஆணைக்குறிக்கும் விசேட உறுப்பு. 'மும்மலம்விட்டோர்தம்மாண்குறியறுத்திட்டொல்லை' (கூர்மபு. பிராயச். ௩௨.)

**ஆண்நடை**—ஆண்பாற்செயல்காட்டும் அபிநயக்கை. (சிலப். 3. 18. உரை.)

**ஆண்கோள்**—ஆண்கிரகம்.

**ஆண்சத்தி** — சிவனுக்குரிய நால்வகைச் சத்திகளுள் ஒருவராகிய திருமால். 'சிவபெருமானுடைய அருட்சத்தியெனப்படுமின்பசத்தி உமையென்றும், அழித்தற்சத்தி ஐயையென்றும், சீற்றச்சத்தி காளியென்றும், ஆண்சத்தி அரியென்றும் கூறப்படும். (கந்தபு. நவ. பக். ௪௩.)

**ஆண்சந்ததி**—ஆண்மகவு. 'அவனுக்கு ஆண் சந்ததியுண்டு'

**ஆண்சரக்கு**—கல்லுப்பு வெடியுப்பு முதலியன. (மூ. அ.)

**ஆண்செருப்படி** — } செருப்படைவகையில் ஒன்று(மூ. அ.)
**ஆண்செருப்படை** — }

**ஆண்டகை**—1. அரசன். 2. ஆண்டன்மை. 'ஆண்டகைமள்ளர்' (கந்தபு. ஆற்று. ௩௧.) 3. ஆளும் அதிகாரப்பெருமையுடையோன். 'மன்னுயிர்க்குயிராய்நின்ற வாண்டகையுணர்வுநல்கி' (கந்தபு. உருத்திரர்கேள்வி. ௫.) 4. பெருமையிற்சிறந்தோன். 'அசைவுறீஇ மயங்கிச் சோரு மாண்டகை யசுவத்தாமன்' (சேதுபு. அசுவத். ௩௧.) 5. வீரன். 'அண்டர்பிரா னளித்தசிலை யாண்டகையை' (பாரத. அருச்சுனன்தீர். ௩௧.)

**ஆண்டகைமை**—1. ஆண்டன்மை. 'ஆண்டகைமைக்கங்கிவிழிமிகையாமென் றணியாதநுதலில்' (தணிகைப்பு. வள்ளி. ௧௧௭.) 2. வீரம்.

**ஆண்டகையோர்** — ஆண்மக்கள். 'ஆண்டகையோர்களு மகன்று சிந்தினார்' (கந்தபு. மார்க்கண்டேய. ௮௪.)

ஆண்டமை — ஆண்டதன்மை. 'நங் கள வறுத்துநின் றாண்டமை கருத்திநுள் கசிந் துணர்ந்திருந்தேயும்' (திருவாச. திருச்ச. கரு.)

ஆண்டலை—1. கோழிப்பறவை. 'ஆண்டலை யுயர்த்தவன்' (கந்தபு. தெய்வ. எ.) 2. படைத் தலைவன். 3. பூவாதுகாய்க்கும் மரம். (மூ. அ) 4. ஆண்மகன் தலைபோன்ற தலையுடைய ஒரு புள். (மணி. 6. 7.)

ஆண்டலைக்கொடி — 1. ஆண்மகன் தலையும், புள்ளின் வடிவுமாக எழுதின கொடி; இது: பேய்முதலியன பலியை நுகராமற் கட்டப்படுவது. (திருமுரு. உஉஎ. உரை.) 2. முருகக்கடவுளின் சேவற்கொடி.

ஆண்டலைக்கொடியுயர்த்தோன் — சுப்பிர மணியன். (சூ. நிகன். க: உரு.) (ஆண்டலை-கோழி.)

ஆண்டலைப்பறவை — ஆண்மகனது தலை போன்ற வடிவமுள்ள ஒருவகைப் பட்சி. (மணி)

ஆண்டலையடுப்பு — ஆண்டலைப்புள்வடி வாகப்பண்ணிப் பறக்கவிட உச்சியைக் கொத்தி மூளையைப் பருகும் பொறிநிரைகள். 'ஆண்டலையடுப்பும்' (சிலப். அடைக். உகக.)

ஆண்டவரசு — திருநாவுக்கரசுநாயனர். 'பத்தர்பல வாண்டவர செனும்பெயராற் பண்ணினமை' (பெரியபு. திருநாவு. உ0க.)

ஆண்டவன் — 1. அரசன். 'ஆண்டவன் களிற்றின் காநிகர் தாரை' (பாரத. காண்ட. ௰உ.) 2. ஆளுகைசெய்தவன். 3. கடவுள். 'ஆண்டவனுரனன்கம்பனென்றேத்த' (கம்ப ரசு. கூ0.)

ஆண்டளப்பான் — வியாழன். 'முரணிய விருவோர் தக்கன் மொய்ம்பையாண் டளப் பான் றன்பால்-விரவின ருரைப்ப' (சோழிப் பு. சூரியன். கூ.) [ஆண்டு-வருடம். அளப் பான்-அளப்பவன். ஒரிராசியில் ஒருவருடம் நிற்போன் என்றபடி.]

ஆண்டார்—1. உடையோர். (அக. நி.) 2. தேவர். (அக. நி.)

ஆண்டான் — 1. ஆண்டவன். 'இலங்கை விலங்கலெய்தி-யாண்டா னடிமைத் தொழி லாற்றலி லாற்றலுஞ்சேல்'(இராமா. கடறு. சுஉ.) 2. எசமானன்.

ஆண்டி—1. பிச்சையேற்றுண்பவன். 'எத் திரப் பாண்டி யெனவையமேற்கு மிறைவன்' (மறைசை. சுசு.) 2. பண்டாரம். 3. பரதேசி. 4. வரிக்கூத்துவகை. (சிலப். 3. 13. உரை.)

ஆண்டிச்சி—யாசகஞ்செய்துண்பவள். 'ஒரு தோழன் மகமாய்க் கொண்ட-ஆரமிகு மனைக் கிழத்தி யாண்டிச்சி வடிவுகொண்டாள்' (தண்ட. எ0.)

ஆண்டு—1. அவ்விடம். 'ஆண்டிலெடுத்தவ ராமிவர்' (திருக்கோ. உசக.) 2. ஆள் என் னும் பகுதியடியாற்பிறந்த செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம். 'பன்னெடுங் கால மிந்தப் பாரினை யாண்டு' (இராமா. இல வண. கக.) 3. ஓ ரசைச்சொல். 'உடுத்தாடை யில்லாதார் நீராட்டும் பெண்டிர்-தொடுத் தாண் டவைப்போர் புகலும்' (திரிகடு. எக.) 4. வருடம். 'ஆண்டுபன்னிரண்டாமளவு' (கந்தபு. வள். உகக.) 5. வயது. 6. கொல்ல மாண்டு.

ஆண்டை—1. அடிமைவைத்தாளுவோன், எசமான். 'கார்க்குழ விழையா டன்மேற் கண்சிவந்து கறுத்தாண்டை சீறிடவே' (பறு ளைப்பள். அக.) 2. அவ்விடம். 'சூத்திரத்துட் பொருளன்றியு மாண்டைக்கு'(நன். பொதுப். உரு.) 3. தேட்கொடுக்கி. (மூ. அ.) 4. அழிஞ் சில். 5. ஆண்மரம். 6. காத்தொட்டி.

ஆண்டையர்—1. அவ்விடத்தவர். 'காண்டகு மிமைப்பில ராகிக் காட்சியா-லாண்டையர் திரிகுவார்க் ககற்று மையமே' (இரகு. நகர. கக.) 2. மனிதர். (சூடா.)

ஆண்டொழில்—பராக்கிரமவேலை.

ஆண்டொழின்மைந்தன் — அருச்சுனன். (பிங்கல. எசுக.)

ஆண்பனை — பூம்பாளையுடையதாய்க் காயாதுநிற்கும் பனை. 'குரும்பையாண்பெண் பனையீனு மென்னும் வாய்மை குலவுதலால்' (பெரியபு. திருஞான. கஅ0.)

ஆண்பால் — 1. ஆண்டன்மை. 2. உயர் திணையொருமையாண்பகுதிச்சொல். (நன். பெயரி. ௰. உரை.)

ஆண்பாற்பிள்ளைக்கவி—ஆண்பிள்ளையைக் குறித்துப் பாடப்படுந் தொடர்நிலைச்செய்யு ளாகிய பிள்ளைக்கவி. அது: காப்புமுதற் சிறு தேருருட்டல் ஈறாகப் பத்துறுப்புடையது. (இலக்கணவி. அ0சு.)

ஆண்பிள்ளை-1. ஆண்குழந்தை. 2. ஆண்மகன். 3. சாமர்த்தியமுடையோன். 4. தலைவன். 5. வீரன்.

ஆண்மகன் — 1. ஆணிற்சிறந்தோன். 2. கணவன். 3. மகன். 4. மனிதன்.

ஆண்மரம் — 1. அழிஞ்சில் (மலை.). 2. உள்வயிரமுள்ள மரம். (சூ. நிகண். ௪: ருஎ.) 3. சேமரம். (பிங்.)

ஆண்மாரி — கொற்றிபோலும் ஆண்மையுடைய பெண்.

ஆண்மை—1. ஆண்டன்மை. 'ஆண்மை திரிந்த பெண்மைக்கோலத்து' (சிலப். கடலாடு. ரு௬.) 2. ஆளுந்தன்மை. 'அருள்வலியாண்மை கல்வி' (சிந்தா. குணமா. ௩௧௫.) 3. ஆளுமதிகாரம். 'அடவியெங்கணும் வேட்டையாற் றங்கள்பே ராண்மை நடவி' (பாரத. வார. ௧உ௬.) 4. உடையராந்தன்மை. 'புல்லறிவாண்மை கடை' (வள்ளுவர். ௩௩௧.) 5. உண்மை. (பிங்) 6. தைரியம், வலி. 'தொல்லாண்மைப் பாண்டவர்க்குத் தூது போய் மீண்டதற்பின்' (பாரத. கிருட். ௬௯.) 7. மனமுயற்சி. 8. வெற்றி. (பிங்.) 9. அகங்காரம். 'நானென்ற வாண்மை'

ஆண்மைச்சினைப்பெயர் — சினையுடைமையாகிய நிமித்தம்பற்றி முடவன், பெருங்காலன் என்பவற்றிற்போல ஆண்மையை யுணர்த்தும் பெயர். (தொல். சொல். பெய. உ௩.)

ஆண்மைச்சினைமுதற்பெயர்-முடக்கொற்றனிவன், முடக்கொற்ற னிவ்வெருது என்முற்போல்வன. (நன். பெய. உஎ.)

ஆண்மைத்தனம் — ஆண்மைத்தன்மை. 'உன்னைக்கொன்றன் றுருவிலியாக்கினேன் - றன்னைக்கொல்லுவ தாண்மைத்தனமலால்' (அரிச்ச. விவாக. ௧அ௫.)

ஆண்மைப்பொதுப்பெயர் — உயர்திணையாண்பாலையும் அஃறிணையாண்பாலையும் குறித்துநிற்கும் பெயர். (நன். உ௮௪. உரை.)

ஆண்மைமுதற்பெயர் — ஆணினையுணர்த்தும் முதற்பெயர். (நன். உ௮௩. உரை.)

ஆண்மைமுறைப்பெயர்—ஆணினையுணர்த்தும் முறைப்பெயர். (நன். உ௮௩. உரை.)

ஆண்வழி—ஆண்சந்ததி.

ஆணகம்—1. சுரைக்கொடி. (மலை) 2. கோளகபாஷாணம்.

ஆணங்காய் — 1. ஆண்மரத்தின்காய். 2. ஆண்பனையின் பாளை.

ஆணத்தி—கட்டளை. (S. I. I. III. 93.)

ஆணம்—1. குழம்பு. (பிங்கல.) 2. கொள்கலம். 3. சிறுமை. 'ஆணமில் சிந்தை வீரன்' (கந்தபு. வீரவாகு கந்த. ௩௧.) [இஃது ஆணகம் என்னும் வடமொழிச்சிதைவு.] 4. நேயம். 'ஆணமி னெஞ்சத் தணிநீலக் கண்ணார்க்கு' (நாலடி. பொதும. ௪.) 5. பற்றுக்கோடு. 'தேவரை யாணமென் றடைந்து.' (திவ். திருச்சந். 69)

ஆணர்-1. நன்மை. 2. பாணர். 3. வளமை.

ஆணரசு—ஒருமரம். 'நெல்லியாணரசாலத்தி கணி வாகை முருங்கையிருவேற்றேறு நிம்பம்' (தைல. தைலவ. ௧௩௫.)

ஆணவம்-1. அதிகச்சிறுமை. 2. கோளகபாஷாணம்; இது முப்பத்திரண்டுவகைப் பாஷாணத்தொன்று. (மூ. அ.) 3. தான் பெரியவனென்றெண்ணும் அகங்காரகுணம். 'நானென்கின்ற வாணவ மடைந்திட்டிருக்க' (தாயு. சின்மயானந்த. ௩.) 4. மும்மலங்களுள் ஒன்று; அது: செம்பிற் களிம்புபோல ஆன்மாக்களில் அநாதியே யுடன்கலந்துநிற்பதாய், ஒன்றேயாய், ஆன்மாக்கடோறும் வெவ்வேறாய், அவைகளுடைய அறிவையும் தொழிலையும் மறைத்துநின்று தத்தங்கால வெல்லையிலே நீங்கும் அநேக சத்திகளுடையதாய்ச் சடமாயிருப்பது. (சி. சி. உ: அ0. உரை.) [ஆணவம் - அணுசம்பந்தமானது. அணு - ஆன்மா, சிறுமை. ஆன்மாக்களை அணுத்தன்மைப்படுத்திநிற்றல்பற்றி இப்பெயர்த்தாயிற்று. சிவப். உ. உ. உரை.]

ஆணவமலம்—மும்மலத்தொன்று.

ஆணவமறைப்பு—மூலமலத்தடை.

ஆணவேதி—கட்டளையிடுகிறான். இஃது, ஆஞ்ஞாபயதியென்னும் ஸம்ஸ்கிருதக் கிரியாபதத்தின் திரிபு. (பி. வி: காரக. உ. உரை.)

ஆணன்—1. ஆண்மையுடையோன் 'அரவாட்டியவாணனே' (சிவதரு. சுவர்க்கநரக. உ௨உ.) 2. அன்புடையோன்.

ஆணு—ஒரு மரம். (தொல். எழுத். உயிர்மய. உ௧. இளம்.)

ஆணுடுதல் — இச்சைப்படிநடத்தல். 'அசோதை யாணுடவிட்டிட்டிருக்கும்' (திவ். நாய்ச். 3. 9.)

ஆறுப்பிறந்தோன்—1. ஆவிரை. (மூ. அ) 2. கழுக்காணி. 3. மனிதன்.

ஆறுள் — ஆண்நட்சத்திரம். அவை: பரணி, கார்த்திகை, உரோகணி, புநர்பூசம், பூசம், அத்தம், அநுடம், திருவோணம், பூரட்டாதி, உத்திரட்டாதி என்னும் பத்துமாம். இது: 'பரணியழற்றேர்பூசங்களத்தம் பனைவோணம் பாத - முரசினை யாண்' (விதான. பஞ்சா. கஎ.)

ஆறுறு—மேற்குநோக்கி யோடும் ஆறு. 'ஆறுறு பெண்ணுறுகள் ஒன்றின்றிக்கே' (ஈடு. 4. 4. ப்ர.)

ஆணி—1. அச்சாணி. 'உருள்பெருந்தேர்க் கச்சாணி யன்னு ருடைத்து' (வள். ௬௬எ.) 2. உரலினடித்துவாரத்தையடைக்கும் மரக்கட்டை. 3. உரையாணி. 'ஆணிக்கனகம்' (அழகரந். 3.) 4. எல்லை. 5. எழுதும் ஆணி. 'பித்திகைக்கொழுமுகை யாணிகைக்கொண்டு' (சிலப். வேனி. ௰௫.) 6. ஒரு மரத்துண்டை அல்லது பலகைமுதலியவற்றை மற்றொன்றனோடுபொருத்துதற்கு இரும்புமுதலியவைகளால் அகன்ற தலையும் கூரிய நுதியுமுடையதாய்ச் செய்யப்படுமது. 'புகழாகவொட்டா தறையாணியாகுமே' (இரகு. திக். உ௬.) 7. கதரரோகம். அது, பருக்கைக்கற்களின்மேனடத்தலாலும் முட்களை நைத் தொடிதலாலும் பாதத்தில் அரத்தைப்போலிருக்கின்ற முடிச்சுக்களை யுண்டாக்குவது. (சீவரட். ௬கக.) 8. கருவிழியிலுண்டாகும் ஒருவிதப் பூரோகம். (சீவரட். உ௬௫.) 9. லேகம். 10. முதன்மை. 11. மென்மை. 12. வாட்பல். 13. புண்ணுணி. 14. ஆதாரம். 'ஆணியா யுலகுக்கெல்லாம்' (கம்பரா. கடறுவு. 27.) 15. ஆசை. (திவ். பெரியாழ். 5. 2. 3.) [1, 4, 12. குணி.]

ஆணிக்கல் — பொன் நிறக்குங் கல். 'கச்சிப்பேட்டு ஆணிக்கல்லால் நிறை இருபதின் கழஞ்சு பொன்' (S. I. I. 1. 117.)

ஆணிக்குருத்து—பனை தெங்கு முதலியவற்றின் மூலக்குருத்து.

ஆணிக்கோவை — உரையாணி கோத்த மாலை.

ஆணிச்சவ்வு—விழிப்படலம்.

ஆணிச்சேதுக்கம்— இலவணபாஷாணம்.

ஆணிடி—உருமேறு. (கந்தபு. நகரழி. எஎ. உரை.)

ஆணித்தங்கம்—உயர்ந்த பொன்.

ஆணித்தரம்—1. உறுதி. 2. நல்லமுத்து. 3. முதற்றரம்.

ஆணிப்பூ— } கண்ணில வரும் ஒரு
ஆணிப்புடு— } நோய். (மூ. அ.)

ஆணிப்பொன்—ஆணித்தங்கம். 'ஆணிப்பொனினுஙியது' (இராமா. ஆரணி. மாரீ. உக௯.)

ஆணிமுத்து—சிரேட்டமான முத்து.

ஆணிவேர்—மூலவேர். (மூ. அ.)

ஆணு—1. அன்பு. (மணிமே. பக். உ.) 2. இனிமை. (சூடா.) 3. நன்மை. 'ஆணுமைந்தர்க டேறுவா ஞுறுபார்த் தயர்வார்' (கந்தபு. மகே. நகர்பு. ௬க.)

ஆணெழுத்து-1. ஆண்பாற்படும் எழுத்து; அவை: குற்றெழுத்துக்கள் ஐந்தும். 'ஆடூஉக் குறில்' (இலக்கணவிளக். எஎ௬.) 2. உயிர்பன்னிரண்டும். (பிங்கல. க௬௫அ.)

ஆணை—1. அடையாளம். (பிங்கல. ௬௬0.) 2. ஆஞ்ஞை, கட்டளை. 'நாயகனுணையாலே நடத்திடுஞ் சகத்தையெல்லாம்' (சி. சி. உ: ௰௪.) 3. ஆளுமதிகாரம். 'அரும்பதி செல்வம் நல்கி யாணையும் வைப்பன்' (சி. சி. உ: ௬க.) 4. ஏவல். (பிங்கல. ௬௬0.) 5. சத்தியம். 'மறுத்துரைய லாணைநமதென் ருன்' (கந்தபு. மார்க். ௰க.) 6. சபதம். (சீவக. 640) 7. தடுத்தல். (பிங்கல. ௬௬0.) 8. நிக்கிரகவநுக்கிரக கர்த்திருத்துவம். (சி. சி. உ: ௬க. ஞானப்.) 9. மெய். (பிங்கல. ௬௬0.) 10. வெற்றி. (சூடா.)

ஆணைச்சக்கரம்—இராசாங்கதத்துவம்.

ஆணைத்தன்மை — ஆணையினியல்பு. 'தற்பர வடிகளுணைத் தன்மையா லலகையீட்டம்' (கந்தபு. மேருப். உக.)

ஆணைப்பெயர் — வலியோரஞ்சும்படி உலகம் பேசும் பெயர். (பன்னிருபா. 149.)

ஆணையிடுதல்—1. சத்தியஞ்செய்தல். 2. சபதஞ்செய்தல். 3. கட்டளையிடுதல்.

ஆணையோலை — கட்டளைத்திருமுகம். 'இன்று ஓராணையோலை......வாராநின்றது. (திருக்கோ. 327. உரை)

ஆணைவழிநிற்றல்—1. அரசன்கட்டளைப்படி நிற்றல். 2. வேளாண்மாந்தர் ஒழுக்கங்களுள் ஒன்று.

ஆணைவிடுதல்—சூளுறவை நீக்குதல்.

ஆத்தம்—1. இட்டம். 'ஆத்தமாய்வளரா நின்றது' (ஞானவா. சுக்கி. ௩௮.) 2. குருவுக்குச்செய்யும் பணிவிடைநான்கனு ளொன்று; அது: குருவுக்குப் பிரியம்வர நடத்தல். 'ஆத்தமுயர் குருபரன்குற்றேவலே' (வேதா. சூ. ௧௨. உரை.) 3. பெற்றுக்கொள்ளப்பட்டது. [ஸூஆப்த.]

ஆத்தர்—தலைவர். 'ஓங்குலகை-யளித்து மளித்து மளிப்பவ ராத்தரென்று' (திருநூற். ௧௬.)

ஆத்தல்—1. அமைத்தல். 'அடுஞ்சமர மாத்து' (பாரதவெண். ௭௫௩.) 2. கட்டுதல், பிணித்தல். 'தண்டாரணியத்து-ளங்காத்திருந்தானை' (சிந்தா. ௧௩௧. ௩௨௬.) [யாத்தல் என்பதில் யகரங்கெட்டுநின்றது.]

ஆத்தவாக்கியம் — வேதசாத்திராதிகள்.

ஆத்தன்—1. அருகன். (சூ. நிகண். ௧: ௨.) 2. உள்ளபொருளைக்கூறுவோன். (சைவப். ௨௨.) 3. உள்ளவன். 4. சிவன். 'ஆத்தனமர்ந்த வகன்கிரி நண்ணி' (கந்தபு. மகாசாத். ௬௪.) 5. தக்கவன். 'ஆத்த னூன்று மடிதொறும்' (கந்தபு. காவலா. ௮.) 6. நண்பன். 7. நம்பப்படுவோன். (சைவப். ௨௨.) [ஸூஆப்தஃ]

ஆத்தா—1. அணிநுணாமரம். 2. சேத்தா. (மூ. அ.) 3. மனிலா.

ஆத்தாடியுள்ளான்—ஒரு குருவி.

ஆத்தானம்—1. ஆபத்து. 2. இடம். 3. கோபுரவாயில். (பிங்கல. ௬௩௫.) 4. தங்குமிடம், பலரும்வந்து இருத்தற்குரிய சிறந்தவிடம். (மணிமே.) 5. தருமசபை. 6. இராசசபை. 7. பிரயாசம். [2, 4, 5, 6, 7. ஸூஆஸ்தானம்.]

ஆத்தானமண்டபம் — 1. கோபுரவாசலிலுள்ள மண்டபம். 2. சபைகூடுஞ் சாலை. [ஸூஆஸ்தானமண்டப.]

ஆத்தானி-சபைகூடுமிடம் [இது அத்தாணியென மருவிவழங்குகின்றது. ஸூஆஸ்தானீ]

ஆத்தானிமண்டபம் — சபைகூடுஞ் சாலை. [ஸூஆஸ்தானீமண்டபம்.]

ஆத்தாழத்தான்—பூனைக்காலி.

ஆத்தாள் — பார்வதிதேவி. 'ஆத்தாளை யெங்க ளபிராம வல்லியை' (அபிராமி. ௧௦௧.) 2. தாய். 'அப்ப னிரந்துண்ணி யாத்தாள் மலைநீலி' (தனிப்பா. காளமே. ௭௪.)

ஆத்தான்—பெரியோன்.

ஆத்தி—1. ஒருமரம். 'சம்புமகி ழாத்தி' (சைவச. பொது. ௨௯.) அது, திருவாத்தி காட்டாத்தியென இருவகைப்படும். 2. பெண்பால்விகுதி. (வீரசோ. தத்தித. 5.) 3. சம்பத்து.

ஆத்திக்கனி—வெருகஞ்செடி.

ஆத்திக்கியம் — கடவுளுண்டென்னும் கொள்கை. 'நியமமாவது-தபசு, சந்தோஷம், ஆத்திக்கியம், தானம், ஈசுவரபூசை, ஞானசாத்திரத்தைக்கேட்டல், இலச்சை, புத்தி, செபம், விரதம் எனப் பத்துவிதம்' (சி. சி. அ: ௨௧. சிவாக்.) [இஃது 'ஆத்திக' என்பதினின்றுவந்த தத்திதம். ஸூஆஸ்திக்யம்.]

ஆத்திகம் — 1. கடவுளுண்டென்னும் கொள்கை. 'ஆத்திகாசாரம்பண்ணு மறைநெறி' (த. நி. போ. பக். ௩௫௬.) 2. சமயாசாரத்தில் அன்பு. (சி-வி. கிரி. ரு. தாற்.) 3. தேவபத்தி. 4. யானைக்கூட்டம். [1, 3. ஸூஆஸ்திகம். 4. ஹாஸ்திகம். இவை அஸ்தி ஹஸ்தி என்பவைகளினின்றுவந்த தத்திதம்.]

ஆத்திகன்—1. கடவுளும் புண்ணியபாவமுமுண்டென்போன். 'பொன்னுலகம் வெந்நரகம் புண்ணியபா வம்புரிவார், நின்மலனுமுண்டென்று நிச்சயித்தார்-இந்நிலைமை யாத்திகரே' (சைவச. பொது. ௪௬௮.உரை.) 2. பத்திமான். 'சிரா வாத்திகர்தாந் திகழ் ஞான யாகத்தா-லேராருஞ் சிவஞான மெய்துவதற் கையமில்லை' (சூத. எக்கி. பூ. ௨: ௩௨.) 3. யானைக்கூட்டமுடையவன். (பாரதவெண். ௭௩௧.) 4. யானையிலேறிச்செல்வோன். (பாரதவெண். ௭௩௧.) [1, 2. ஸூஆஸ்திக 3, 4. ஹாஸ்திக.]

ஆத்திசூடி—1. ஔவையார்செய்த நூல்களுள் ஒன்று. 2. சிவன். 'ஆத்திசூடியமர்ந்த தேவனை' (ஆத்திசூடி. காப்பு.)

ஆந்திசூலை-குதிரைநோய்வகையில்ஒன்று.

ஆந்திட்டி—நீர்முள்ளி. (மூ. அ.)

ஆந்தியந்தப்பிரளயம்—நால்வகையொடுக்கத்துள் ஒன்று. (கூர்மபு. பதிக. ௩௩. உரை.)

ஆந்தியந்தம்—முதலும் முடிவும்.

ஆந்தியந்திகம் — ஆதிதொடங்கி அந்தம் வரைக்குமுள்ளது. 'ஆத்தியந்திகதுக்கவிச் சேதமோ' (சி. சி. வரலாறு.) [ஆதி-முதல். அந்தம் - முடிவு. இக - விகுதி.]

ஆந்தியன்—1. சிவன். [ஆதியிலுள்ளவன் என்றபடி.] (ஆதி - ய - ஒரு விகுதி.] 2. ஆத்திமாலையணிந்தவன், சோழன்.

ஆந்தியான்மிகசாத்திரம்— ஆத்தியான்மிக நூல். (த. தி. போ. கசு.) அது: கபில பதஞ்சலி வியாச முனிவர்களாற் கிரமத்திற் சொல்லப்பட்ட சாங்கியம் பாதஞ்சலம் வேதாந்தம் என மூன்றுவகைப்படும்.

ஆந்தியான்மிகசிநாகமம் — சிவசத்தியால் விளக்கப்பட்ட சிற்சத்தியாகிய பரமான்ம ஞான ஆமகம்.

ஆந்தியான்மிகம் — 1. தாபத்திரயங்களு ளொன்று. அது: தன்னாலும் பிற ஆன்மாக்களாலும் வருவது. இது, 'தன்னாற் பிறராற் றனக்குவருந் தீங்குதலை-மின்னு விலங்கரவக் தேளெறும்பு-சென்முதனீ - ரட்டை யலவன் முதலை மீனரவ மாதியினுக்-கட்டமின் கான்மிகமே காண்' (சைவச. பொது. ௪௪௨. உரை.) 2. பரமாத்துமசம்பந்தமுடையது. [அத்யாத்மிக: அதி - மேல். ஆத்மா - ஆன்மா. இக - ஒரு விகுதி.]

ஆந்தியேட்டிகை-கோயிற்கட்டிடத்திற்கு ஆதியில்வைக்கப்படுஞ் செங்கல்.

ஆந்தியை—துர்க்கை. [ஆத்யா.]

ஆந்தியோபாந்தம்—ஆதிதொட்டு அந்தம் வரைக்குமுள்ளது. [ஆத்யோபாந்த: ஆதி - உப - அந்த.]

ஆத்திரக்காரன்—அவசரப்படுபவன்.

ஆத்திரகம்—இஞ்சி. (மூ. அ.)

ஆத்திரம்—1. கோபவிரைவு. 2. விரைவு. 'ஆத்திரம் வந்தவர் போலலையாமல்' (தாயு. பாயப்புலி. ௫௧.)

ஆத்திரவம்— }
ஆத்திரி — } ஆத்திரம்.
ஆத்திரியம்— }

ஆத்திரேயம்—ஒரு வடமொழிநூல். இது வேதாங்கமாகிய கற்பவகைகளு ளொன்று. அத்திரிமுனிவராற் செய்யப்பட்டது. (மணிமே. பக். ௨௫௪.)

ஆத்திரேயன் — 1. சந்திரன். (மணிமே.) 2. தத்தாத்திரேயமுனி. [அத்திரிமகனெனப் பொருள்படும்.]

ஆத்திரை — யாத்திரை. (பெருங்கதை. உஞ்சைக். 36. 221.)

ஆத்திரையம்—ஆத்திரேயம்.

ஆத்திரையன்—ஆத்திரேயன்.

ஆத்திரையன் பேராசிரியன்— தொல்காப்பியப் பாயிரஞ்செய்த ஆசிரியன். (தொல். பொரு. 653. உரை.)

ஆத்தின்னி — பாணன். 'புலையாத்தின்னி போந்ததுவே' (திருக்கோ. 386.)

ஆத்துமகத்தியை — தற்கொலை. [ஆத்ம ஹத்யா: ஆத்ம - தான். ஹத்யா-கொலை.]

ஆத்துமகநநம்—தற்கொலை. [ஆத்மஹநநம்: ஆத்ம - தான். ஹநநம் - கொலை.]

ஆத்துமகம் — 1. ஒருக்குசேர்ந்திருக்குமது. 'மூலப்பிரகிருதியானது திரிகுணத்துமகமாதலின்' (சி. சி. ௧: ௧௬. சிவாக்.) 2. தன்மை. 3. பிறத்தல். 4. வடிவம். [ஆத்மக.]

ஆத்துமகாதம்-தற்கொலை. [ஆத்மவாத: ஆத்ம - தான். வாத - கொலை.]

ஆத்துமதப்தா - பூனைக்காலி (மலை.)

ஆத்துமகோஷம்—காகம்.

ஆத்துமசத்தி — 1. ஐம்பத்தொருருத்திர சத்திகளிலொருத்தி. (வி - ணி. ௨௭௭.) 2. தனதுசத்தி. [ஶக்தி - வல்லமை.]

ஆத்துமசன் — புத்திரன். [ஆத்மஜ: ஆத்ம - தான். ஜ:-பிறந்தவன்.]

ஆத்துமசிநேகிதன்—உயிர்த்தோழன்.

ஆத்துமசுத்தி — ஆன்மசுத்தி, தன்னைச் சுத்தமாக்கிக்கொள்ளல். இது ஐந்துசுத்தியினொன்று. அது: பூதசுத்தி, அந்தரியாகம், சமாதி என்னும் மூன்றன் றொகுதி. (சைவச. பொது. ௰௦௨. உரை.) விவேகசிந்தாமணி,

'சௌச, ஆசமந, ஸ்நாந, பஸ்ம, ருத்திராக்ஷதாரண கவச, மந்திர கலா நியாச தியாநாதி ரசனைகளைச் செய்வதே ஆத்ம சுத்தி' என்று கூறும்.

ஆத்துமசை—மகள். [ஸ்ரீ-த்மஜா: ஸ்ரீ-த்ம-தான். ஜா-பிறந்தவள்.]

ஆத்துமசொருபலக்கணபஞ்சகம் – ஆன்மாவின் சொருப இலக்கணங்கள் ஐந்தன் கூட்டம். அவை: சத்து, சித்து, ஆநந்தம், நித்தியம், பூரணம் என்பன. (த. நி. போ. ௧௦௬.)

ஆத்துமசௌசம்—அகத்தூய்மை.

ஆத்துமஞ்ஞன்–ஆத்துமாவை அறிந்தவன். [ஸ்ரீ-த்மஜ்ஞ: ஸ்ரீ-த்ம - ஆன்மா. ஜ்ஞ-அறிந்தவன்.]

ஆத்துமஞானம் — ஆத்துமாவை அறிதல். [ஸ்ரீ-த்மஜ்ஞாந: ஸ்ரீ-த்ம; ஜ்ஞாநம - அறிதல்.]

ஆத்துமஞானி — தன்னையறிந்தவன். (ஈடு. 4. 1. 10.)

ஆத்துமத்திரயம்—மூவகை ஆன்மாக்கள். அவை: சீவாத்துமா, அந்தராத்துமா, பரமாத்துமா என்பன. (த. நி. போ. ௧௦௯.)

ஆத்துமதத்துவஞ்ஞன் — ஆத்தும தத்துவத்தை அறிந்தவன். [ஸ்ரீ-த்மதத்வஜ்ஞ:]

ஆத்துமதத்துவம்—ஆன்மதத்துவம். [ஸ்ரீ-த்மதத்வம்.]

ஆத்துமதரிசகம் — கண்ணாடி. [ஸ்ரீ-த்ம; த³ர்ஶக:]

ஆத்துமதரிசநம்—ஆத்துமாவின் நிலையை அறிதல். [ஆ-த்மத³ர்ஶநம: ஸ்ரீ-த்ம; த³ர்ஶநம - அறிதல்.]

ஆத்துமதரிசம்—கண்ணாடி. [ஸ்ரீ-த்மத³ர்ஶ: ஸ்ரீ-த்மநு; த³ர்ஶ - பார்வை.]

ஆத்துமநாசம்–தன்னைக் கெடுத்துக்கொள்ளுகை.

ஆத்துமநிவேதநம் – தன்னைக்கொடுத்தல்.

ஆத்துமநேபதம்–தன்பொருட்டுச்செய்யுந் தொழிலைக்குறிக்கும் வினைச்சொல். (பி. வி. ௩௬. உரை.)

ஆத்துமப்பிரபோதம்—இருக்குவேத உபநிடதங்களு ளொன்று. (கூர்மபு. அட்டமூர். ௨௬. உரை.)

ஆத்துமப்பிராசாதம் — பஞ்சப்பிராசாத மந்திரங்களுள் ஒன்று. (த. நி. போ. ௨௯௬.)

ஆத்துமபந்து — உயிர்க் குறுதிச்சுற்றம்.

ஆத்துமபுத்தி–தன்னறிவு. [ஸ்ரீ-த்மபு³த்³தி⁴: ஸ்ரீ-த்ம - தான். பு³த்³தி⁴ - அறிவு.]

ஆத்துமபூ—1. சிவன். 2. பிரமன். 3. மன்மதன். 4. விட்டுணு. [ஸ்ரீ-த்மபூ⁴.]

ஆத்துமபோதம்—ஆத்துமஞானம். [ஸ்ரீ-த்மபோ³த⁴.]

ஆத்துமம்—1. அரத்தை. (மூ. அ.) 2. சீவசெந்து. 3. சிவாத்துமா. 4. பிராணன். 5. மனம். 6. நூற்றெட்டுபநிடதத் தொன்று.

ஆத்துமயோநி—1. காமன். 2. சிவன். 3. பிரமன். 4. விட்டுணு. [ஸ்ரீ-த்மயோநி: ஸ்ரீ-த்ம - மனம், தான். யோநி-பிறப்பிடம்.]

ஆத்துமருபம்—ஆன்மருபம்.

ஆத்துமலக்கணம்–ஆத்துமாவின் இயல்பு; அவ்வியல்புகள், சத்து சித்து ஆநந்தம் என்பன. (வாசுதேவ. ௬௨.)

ஆத்துமலாபம்—1. ஆன்மலாபம், தன்னையறிகை. (ஈடு 4. 1. 10.) 2. சொந்தலாபம்.

ஆத்துமவசம்—தன்னையடக்குதல்.

ஆத்துமவசன் — தன்னையடக்கிக்கொள்பவன். [ஸ்ரீ-த்மவஶ: ஸ்ரீ-த்ம - தான். வஶ - அடக்கிக்கொள்ளுதல்.]

ஆத்துமவதம் — தற்கொலை. [ஸ்ரீ-த்மவத⁴: ஸ்ரீ-த்ம - தான். வத⁴ - கொலை.]

ஆத்துமா — 1. அக்கினி. 2. ஆன்மா. 3. உடம்பு. 4. உறுதி. 5. கரடிக்குட்டி. 6. காற்று. 7. சீவசெந்து. 8. சுபாவகுணம். 9. சூரியன். 10. தான். 11. பிரமம். 12. பிரயத்தினம். 13. மகன். [ஸ்ரீ-த்மா.]

ஆத்துமாநஞ்சிநத்தி — தன்னைக்குத்திக் கொள்கிறான் எனப் பொருள்படும் ஒரு வடமொழிவாக்கியம். (பி. வி. காரக. ௧௨. உரை.) [ஸ்ரீ-த்மாநம - தன்னை. ஹிநஸ்தி - குத்துகிறான்.]

ஆத்துமாநந்தம் — சீவஞானவன் தனது பிரியத்தைத் தநாதிவிடயங்களின்மேல் வைத்து அவைகளை இன்பமாய் அநுபவிக்குமிடத்து அநுபவிப்பானும், அநுபவமுமாயெ இரண்டுமின்றி உதிக்கும் பயன்.

ஆத்துமாநவாதரோகம் — அடிவயிற்றிலே வேதனையைச்செய்கின்ற ஒருவகை வாத ரோகம். (சீவரட். கசுo.) [வயிற்றில் சத்தத்தையும் உப்புதலையுந்தருதலால் வந்த பெயர்.]

ஆத்துமாநுபவம் — தன்னைத்தான் அநுபவிக்கை.

ஆத்துமாபகாரம்—ஆன்மாவின் சொருபத்தை வேறாக நினைக்கை.

ஆத்துமார்த்தம் — 1. ஆத்துமலாபத்திற்குரியது. 2. தன்பொருட்டு. [ஆத்மார்த்த: ஆத்மா - தான். அர்த்த - பொருட்டு.]

ஆத்துமாரோபணம்-முப்பத்திரண்டு உபசாரங்களுள் ஒன்று. (த. நி. போ. ருo௨.)

ஆத்துமாவச்சேதம்-ஆன்மாவின் விசேடகுணம். 'ஆத்துமாவச்சேதமாயிருக்கிற அகங்காரமே'(சி. சி. ௨: ரு௫. சிவாக்.) [ஆத்மா; அவச்சேத - விசேடகுணம்.]

ஆத்துமிகம்—ஆன்மசம்பந்தம். (வி- ணி.) [ஆத்மா; இக - ஒரு விகுதி. ஆத்மா என்பதினின்று வந்த தத்திதம்.]

ஆத்தை-1. ஈன்றாள். 2. ஓரிசையிரக்கச்சொல்.

ஆதக்ர—ஆகக்கடவன.

ஆதத—ஆகின்ற. 'ஆதகுகாலையில்' (கந்தபு. திருவவ. சுசு.)

ஆதங்கம் — 1. அச்சம். 'ஆதங்கத்தென்றிசைக்கூற்று' (மறைசையந். ௨ரு.) 2. ஆபத்து. 3. உபத்திரவம். 'இப்பா ராதங்கமாற' (பாரத. அருச்சுனன்றீர். அஎ.) 4. கலகம். 5. சுரநோய். 6. தீங்கு. 7. நோய். 8. வாத்தியவொலி. [ஆதங்க]

ஆதஞ்சநம்-1. அழித்தல். 2. உபத்திரவம். 3. திருப்திசெய்தல். 4. தீங்கு. 5. பஸ்மமாக்கல். 6. பாலானது தயிராதற்கு உறையிடுதல்போல ஒன்றன்றன்மைதிரிந்து வேறாதற்கு அதனோடு வேறொன்றைச் சேர்த்தல். 7. வேகம். [ஆதஞ்சந:]

ஆதண்டை—காற்றொட்டி.

ஆததாயி-கொடியவன். 'கொடியவரென்றது, தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற்கொல்வார், கள்வர், ஆறலைப்பார், குறைகொள்வார், பிறனில்விழைவாரென் றிவர் முதலாயினோரை. இவரை வடநூலார் ஆததாயிகள் என்ப' (வள். ருருo. பரி.)

ஆததாயிதை — ஆததாயியின் தன்மை. [ஆததாயி தா: ஆததாயிந் - கொடியவன். தா - தன்மை.]

ஆதநம்-1. ஆசநம். 'ஆதநத்திடையிருத்தி' (தணிகை. நைமிச. கசு.) 2. எண்வகையோகவுறுப்புகளினொன்று. அது: சுபத்திகம், கோமுகம், பதுமம், வீரம், கேசரி, பத்திரம், முத்தம், மயூரம், சுகம் என ஒன்பதாம். (கந்தபு. நகர. ருரு. உரை.) 3. சேலை. 4. நீளம். 5. பார்வை. 6. விரித்தல். [1, 3. ஆஸந. 4, 5, 6. ஆதநம்: ஆ; தநு - விரித்தல்.]

ஆதநமூர்த்தி—ஆசநமூர்த்தி.

ஆதபத்திரகம்—குடை. [ஆதபத்ரக: ஆதப - வெய்யில். த்ரக - காப்பது.]

ஆதபத்திரம்-1. குடை. 'சுருக்கிய பூம்பட்டாதபத்திரம் போன்றன தாமரை யடவி' (பாரத. கிருட். அஅ.) 2. வெண்குடை. (சூ. நிகன். எ: ருஎ.) [ஆதபத்ர: ஆதப - வெய்யில். த்ர - காப்பது.]

ஆதபத்தினர்—சூரியர். 'ஆதபத்தினர் பரிமுகர் வசுக்க ளன்னையர்' (கந்தபு. அயனி. ரீ. ௨.)

ஆதபநீயம்—ஒருவகை நெல்.

ஆதபம்—1. ஒளி. (பிங்கல. கசரு அ.) 2. குடை. 3. வெய்யில். 'கவிகையிலாதபங்காப்ப' (கந்தபு. தெய்வ. எக.) [ஆ; தப - பிரகாசம்.]

ஆதபவாரணம்—குடை. [ஆதபவாரணம்: ஆதப - வெய்யில். வாரணம் - தடுத்தல்.]

ஆதபன் — 1. சூரியன். 'ஆதபன்மதிமுதலமரர்யாவரும்' (கந்தபு. தெய்வ. கசுஎ.) 2. பிராமணன். [ஆதப:]

ஆதபாபாவம்-நிழல். [ஆதபாபாவ: ஆதப - வெய்யில். அபாவ: - இன்மை.]

ஆதபோதகம் — கானற்சலம். [ஆதபோதக: ஆதப - வெய்யில். உதக - சலம்.]

ஆதம்—1. ஆதரவு, விருப்பு. 2. அன்பு. 'ஆதமெய்தினின் றஞ்சலித் தேத்தியே' (கந்தபு. திருக்கலி. கக.) 3. கூந்தற்பனை.

ஆதம்பேதி — செப்புநெருஞ்சி (மலை.)

ஆதமிலி— ஆதரவற்றவன். 'ஆதமிலி நாயேனை யல்லலறுத் தாட்கொண்டு' (திருவாசக. கண்டபத்து. ரு.)

ஆதர் — 1. அறிவில்லாதவர். 'முல்லைப் பொன்னையுள்ளா - மருளாதரித்திறந்தோர்ந் தறியார்' (முல்லையந். உ௪.) 2. குருடர்.

ஆதர்வணன் — அதர்வணவேதம்பயின் றோன். அதர்வண என்பதினின்றுவந்த தத்திதபதம். [ஆதர்வண:.]

ஆதர்வணிகன்—ஆதர்வணன். [ஆதர்வணிக: அதர்வண; இக - ஒரு விகுதி.]

ஆதரம்—1. அன்பு. 'எம்பா-லாதரங் கொடு தணிகைவெற் படைவரேல்' (கந்தபு. வள்ளி. உ௨௭.) 2. ஆசை. 'கங்கையாளிடத்தி லாதர மெலிந்த காலையில்' (பாரத. குருகுல. ௬௬.) 3. ஆரம்பம். 4. உபசாரம். 'அன்புநீடியதத்தமிற்றிகழாதரங்கள்பெருக்கினர்' (கோயிற்பு. இரணிய. ௬ரு.) 5. ஊர். (பிங்கல. ௬௭ரு.) 6. சிலம்பு. 7. மரக்கலக் கூலி. 8. சங்கை. [1, 6. ஆதர. 7. ஆதார: ஆ; த்ரு - கடத்தல்.]

ஆதரவு—1. அன்பு. 'ஆதரவிலாதான் செய்யு நல்லவு மல்லவாகும்' (பிரபுலிங். வசவண்ணர். ௪௪.) 2. ஆதாரம். 3. உதவி. 'மூரிமதன்-கன்றினங் காதர வாருளரோ' (முல்லையந். ௫அ.) 4. தேற்றுதல். 5. பேரன்பு. 'தன்னாதரவாற் கயற்கண்ணி தலைவன் றன்னை யருச்சித்து' (திருவிளை. உலவா. ௪.) 6. விருப்பம். 'ஆதரவு கொண்டே யலமந்த வைம்புலமாம்' (கந்தபு. மார்க்க. உக.)

ஆதராதிசயம்—அன்புமிகுதி. (ஈடு).

ஆதரிக்கை — அன்புசெய்தல். 'ஆகமப் பத்தருமற் றூரணச்சுத்தருமுற் றாதரிக் கைக்கு' (திருப்புகழ். ருக0.)

ஆதரிசநம்—1. கண்ணாடி. 2. வெளிப்படையாக்கல். [ஆதர்சந: ஆ; த்ருஶ் - காட்டுதல்.]

ஆதரிசம்—1. கண்ணாடி. 2. கையெழுத்திலுள்ள மூலப்பிரதி. 3. வியாக்கியானம். [ஆதர்ஶ: ஆ; த்ருஶ் - காட்டுதல்.]

ஆதரித்தல்—1. அன்புவைத்தல். 2. ஆசைகூர்தல். 'அடியே னாதரித் தழைத்தால்' (திருவாச. 29. 4.) 3. உதவிசெய்தல். 4. உபசரித்தல். 'காந்தாரி நூறு மகவான கருப்பமொன்று - வேந்தாதரிக்கத் தரித்தாள்' (பாரத. சம்பவ. ௫அ.) 5. சங்கித்தல். 6. தாபரித்தல். 7. தேற்றுதல். 8. விரும்புதல். 'ஆதரித்த நற்குணங்கள்' (ஞானவா. வைராக். ௭௭.) 9. பாதுகாத்தல்.

ஆதரிப்பு—அன்புவைத்தல். 'ஆழிவலவனை யாதரிப்பும்' (திவ். திருவாய். ௭. உ. ரு.)

ஆதல்—1. ஆகுதல். 'பணிவுடைய னின்சொல னாதல்' (வள். ௬ரு.) 2. ஆவது எனப் பொருள்படும் ஓரிடைச்சொல். 'பொருந்துமோர் துலாத்தி னாத லரைத்துலாம் பொன்னி னாத-திருந்துகாற் றுலாத்தி னாதல் சதுரமாய்த் தகடு செய்தே' (கூர்மபு. தான. ௬ரு.) 3. உண்டாகுதல். 'ஆதலு மழிவு முன்னோ' (பாரத. பதின்மூ. கருக.) 4. கல்விநூல். 5. கூத்து. 6. தரிசநம். 7. நுணுக்கம்.

ஆதலை—1. உதவி. 2. தாபரிப்பு.

ஆதவச்சுரம்— வெய்யில்வழிநடப்பதினால் உண்டாம் ஒருவகைச் சுரம். (சீவரட். ௬௭.) [ஆதப - வெய்யில். ஜ்வர - காய்ச்சல்.]

ஆதவம்—1. ஒளி. 2. குடை. 3. கொன்றைப்பூ. (இராசவைத்.) 4. வெய்யில். 'ஆதவம் பனிமழை யகிலத் தச்சுறுப் - பாதவ மாமென' (கந்தபு. மார்க்க. கஎ௬.)

ஆதவன்—1. சூரியன். 'இருட்கார்க்கு வன்றேர்-கடவாதவன்' (கம்பரந். ௪௬.) 2. பிராமணன்.

ஆதளபாதனை—1. அதிகவருத்தம். 2. மனக்கலக்கம். [அதல-விதல.]

ஆதனை—1. ஆமணக்கு. 2. ஆயாசம். [அ; தல - அடி.] 3. எலியாமணக்கமரம். 4. மாதுளை. (நைடத. அன்னத்தைக். உஅ.) 5. ஒருவகைச்செடி.

ஆதன்—1. அருகன் (சூடா). 2. அறிவில்லான். 'பொருள்செய்யாதா ராதரே' (சிறுபஞ். 20.) 3. உயிர். (சூ. நிகண். உ: க0ரு.) 4. குருடன். 'ஆதன் பொருளானேன்' (தேவா. திருவெண்ணெய். சுந்தா. ரு.)

ஆதன்மையால்—ஆகையால். 'ஆதன்மையால் அதுவே நமதுய்விடம்' (திவ். பெரிய தி. 2. 4. 9.)

ஆதனம் — 1. ஆசனம். 'தலையினோடாதனத்தட்ட' (திவ். திரு. 3. 5. 3.) 2. நிலைமை, ஆஸ்தி.

ஆதனவினி—ஒருசேரன். (ஐங்குறு. க: வேட்கைப்பத்து.)

ஆதனழிசி—ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன் கண்பருள் ஒருவன். 'ஆதனழிசியும்' (புறநா. எக.)

ஆதனுங்கன்-ஒரு கொடையாளி. 'கல்லிழியருவி வேங்கடங் கிழவோன்.........ஆதனுங்கன்' (புறநா. ௩௮௯.)

ஆதனோரி— ஓரியென்னும்வள்ளல். 'அடுபோ ரானு வாத னோரி' (புறநா. கருக.)

ஆதாநம்—1. அடகு. 2. எடுத்தல். (சி-வி. ஞாக. கஅ. தாற்.) 3. ஏற்றுக்கொள்ளுதல். 4. ஔபாசநாக்கினியாக்குதல். 5. கருத்தரித்தல். 'வேதா கமங்க ளுரைநூலின் விளம்புங் காலங் தனிலுரைத்த - வாதாநத்தியல்பதனை' (சரசோதி. சோடச. க.) 6. கருத்தரித்தற்பொருட்டுச் செய்யப்படும் ஓமம். 7. சங்கற்பித்தல். 8. செய்தல்,செய்துமுடித்தல். 'அக்கி-யாதாநம் பயின்மறையோர்' (சேதுபு. அகத். ௩அ.) 9. தாபநம், வைத்தல். 10. பிறப்பித்தல். 11. மந்திரத்தினாலே நெருப்பைச் சுத்திபண்ணி யுண்டாக்கல். 12. யானைமுழக்கம். 13. பற்றுகை. (மச்சபு. பிரமமு 11). [1, 2, 4, 5, 6, 7, 9, 11. ஆதாந. 8, 10. ஆதாந.3, 12. ஆதாந.]

ஆதாநமுகூர்த்தம்—கருப்பாதாந முகூர்த்தம்.(குமாரசு.ச. எ௯ .) [ஆதாந+முஹூர்த்த.]

ஆதாநிகம் — கருத்தரிக்கும்பொருட்டுச் செய்யுங் கிரியை. [ஆதாநிக: ஆதாநம் - கருத்தரித்தல். இக-ஒரு விகுதி.]

ஆதாயம் — 1. இலக்கிநத்திற்குப் பதினொன்றாமிடம். 2. இலாபம். 3. நன்மை.

ஆதாரகாரகம் — ஏழாம்வேற்றுமை வினையோடுமுடிவது. (வீரசோ. உபகார. க.)

ஆதாரசத்தி — சிவசத்தியாலதிட்டிக்கப்பட்ட குண்டலினீசத்தி. (சி-வி. சரி. உ௯. தாற்.) 'இயங்குமாதாரசத்தி பீடத்தி னிருநூல்கூறும்-நயங்கொளு மிலிங்கத் தாபித்து' (சூத. சிவமா. ௪: கஎ.)

ஆதாரசிலை — சிலாவிக்கிரகத்தைத்தாங்கும் அடிக்கல்.

ஆதாரசுத்தி—இலயயோகஞ்செய்யப் பிரயத்தநஞ்செய்யும்போது செய்யுஞ் சாதநங்களில் ஒன்று; அஃது: ஆதாரங்களாறினையுஞ் சுத்திசெய்தல். (த. நி. போ. ௩௫௩.)

ஆதாரதண்டம்—முதுகெலும்பு.

ஆதாரதீக்ஷை — சிவன் குருமூர்த்தங்கொண்டு சகலர்க்குச்செய்யுந் தீக்ஷை. (ப. பா. கரு.)

ஆதாரநிலை—பற்றுக்கோடு. (பிங்).

ஆதாரம்—1. ஆதரவு. 'ஆதாரமிலே னருளைப் பெறவே - நீதானொரு சற்று நினைந்திலையே' (கந்தரநு. உ௬.) 2. இடம், பற்றுக்கோடு. 'புணருமாதாரமும் புளினமாங்கதிலணையுமாதேயமும் புளினமாகுமே' (சேது. கந்த. அ௬.) 3. உடம்பிலுள்ள விசேடமான இடம்; அவ்விடங்கள்: மூலாதாரம், சுவாதிட்டாநம், மணிபூரகம்,அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்பன. 'படர்தரு மிருமூன் றுயவா தாரம் பயிறரு பொருளுணர்ந் தேகி' (சூத.சிவமா.௪: க௮.) 4. உடம்பு.(சூ. நிகண். உ: அரு.) 5. இடப்பொருளில்வரும் ஏழாம் வேற்றுமை. 'சிட்டாரவதியொடாதாரமென் றறிதேமொழியே' (வீரசோ. வேற்றுமை. க.) 6. காத்தல். 7. கொள்கலம். 8. தாங்குமது, தரிக்குமது. 9. நிலை. 10. பாத்தி. 11. மரக்கலக்கூலி. 12. மழை. 13. வரம்பு. 14. வாய்க்கால். 15. பிரமாணம். 16. ஆதரவுச்சாதநம். [1-10, 13, 14. ஆதார. 11. ஆதார. 12. ஆஸார.]

ஆதாரயோகம்—ஒருவகையோகம். 'இப்படி யறிந்து சேர்கைக் கியம்பு மூலத்தை யர்த-வொப்பிலா வெழுத்தை விந்து நாத மோ டுச்சரித்து-அப்பாஞ் சோதி நோக்கி யமைவதா தார யோகம்' (த. நி. போ. பக். ௩௭௧.)

ஆதாரலக்ஷணை— ஆதாரத்துக்குரியபெயர் ஆதேயத்தைக்கருதிநிற்பது. அது: கட்டில் கூப்பிட்டது என்புழி ஆதாரமாகியகட்டிலின் பெயர் அதிலுள்ள புருடனுக்காதல்போல் வது. (சி. சி. பாயி. குருவண. ஞாநப்.)

ஆதாளி — 1. அந்தரநிலையிலிருப்பவன். மகக்கலக்கமுடையவன். 'ஆதாளியையொன் றறியேனையறத்-தீதாளியையாண்டதுசெப்பு மதோ' (கந்தரனு. ௩௮.) 2. புரட்டல். 3. பெருமைபாராட்டல். 'ஆதாளிவாயனை' (திருப்பு. ௰௫.) 4. பேரொலி. 5. மகக்கலக்கம். 'ஆதாளிகள்புரி கோலாகலவிழியாலே' (திருப்பு. க௯௩.)

ஆதாளிக்காரன் — பெருமைபாராட்டுவோன்.

ஆதாளித்தல்—ஆயாசப்படுதல்.

ஆதாளிமன்னன்—காடி.

ஆதாளை—ஆதளை, ஒருவகைச் செடி.

ஆதானும் — எதுவாயினும். 'ஆதானும் செய்ய' (திவ். இயற். பெரியதிருவ. 25)

ஆதி—1. அடகு. 2. அதிசயம். 3. அருகன். (சூ. நிக. க: ௩.) 4. ஆவல். 5. ஆவாயெனப் பொருள்படும் ஒரு முன்னிலைவினைமுற்று. 'ஏலாதியேகடுகமென் றுரைக்குமின்மருந்து. போலாதியென்ன' (கந்தபு. அசுரர்யாக. உ௯.) 6. இடமாக்கல். 7. இறைவன். 8. எசமான். 9. எழுவாய். 10. ஒரு தாளம். 11. காய்ச்சற்பாஷாணம். 12. காரணம். 'புகைத-னுதியானவனல்காட்டலாகும்' (சி. சி. அளவை. க0.) 13. சிருட்டிக்கடவுள், பிரமா. 'அத்திதியு மாதியுமா மங்கு' (சிவஞாநபோ. க: உ. வெண்பா.) 14. சிவன். 'ஆதி தன்னரு ளெய்தி யவன் திருப்-பாததாமரைசூடிய' (கந்தபு. திருக்கைலா. உஉ.) 15. சூத்திரம். 16. சூரியன். 17. திரோதாநசத்தி. 'பாந்தபரா பரையாதி பரனிச்சை' (சிவப்பி. மங்கல. உ.) 18. தொடக்கம், ஆரம்பம், தொடக்கமுள்ளது. 'அந்தமுமாதியுமில்லாமறைசையி லத்தர் தம் மேல்' (மறைசை. காப்பு.) 19. தொன்மை வனப்பு; அஃது: உரைவிராய்ப் பழங்கதை பொருளாகச் செய்வது; அதனைப் பெருந்தேவனார்பாரதம் முதலியவற்றிற் காண்க. 20. நேரோடல். 'ஆதிவருகதிப்பரியும்' (பாரத. இராய. க௩0.) 21. பதி, கடவுள். 'சொற்ற வாதியுந் தோமுறு வான்றனை - யுற்றவாவியு மொன்றல' (கந்தபு. சுக்கிர. உ௮.) 22. பழமை. (பிங்கல. ௩க௩உ.) 23. பிரதாநம். 'வியாகரண - மணிகண்டவாதிவிபுதர்கள்' (கம்பரா. சக.) 24. புத்தன். 25. போதல். 26. மண்டலமாயோடுகை. 27. மனவருத்தம். 28. மனவிருப்பம். 29. மிருதபாஷாணம். 30. முதல். 31. முதற்பாகம். 32. முதலியவை. 'இருக்காதிமறைமொழிந்தோன்' (பாரத. சிறப்புப்பா. உ௩.) 33. முதன்மை, சிரேட்டம். 'பண்ணவர்தமக்கு - மேமுறப்படுமறைக்கெலாமாதிபெற்றியலும்- ஓமெனப்படுங் குடிலையே' (கந்தபு. அவைபுகு. க௩௪.) 34. முற்காலம். 'ஆதியின்மாறு கொண்டமர்செய்தாலென' (கந்தபு. மூன்றுநாட். ௰௫.) 35. முன்னுள்ளபொருள். 'விதிமுத லுரைக்குஞ் - செயலினுக்கெலா மாதியாய்' (கந்தபு. அயனைச்சிறைபுரி. க௮.) 36. வரவுநோக்குகை. 37. வாசஸ்தாநம். 38. விட்டுணு. 'காதியிறனரகாசுரன்றனை-யாதிவெங் கோலமன் றளித்த வாறுபோல்' (பாரத. வேத்திர. ௩க.) 39. வேர். (தைல. தைலவ.) 40. ஆடாதோடை. [1, 2, 6, 15, 27, 28, 36, 37. ஆயி. 25. ஆதி. 12, 18, 23, 30, 31, 32, 33, 34, 35. ஆதி.]

ஆதிக்கடுந்சாரி—நவச்சாரம். (மூ. அ.)

ஆதிக்கம்—1. உரிமை. 2. முதன்மை, தலைமை. 'ஆதிக்க நல்வினைவ ராரிந்த மாயைக்கு' (தாயு. மௌநகுரு. ௩.) 3. மேன்மை. 'குலதனவித்தியாதிக்கத்தால்' (சி. சி. உ: உ௩. சிவாக்.) [ஆயிக்ர்ய.]

ஆதிக்கமேகரோகம் — மூத்திரமானது காய்ச்சினாலும், சும்மா வைத்திருந்தாலும் இளநீர்போலவே நிறமும் வாசனையுமுள்ளதாக இருக்கும் ஒருவகை மேகரோகம். (சீவரட். க0௬.)

ஆதிக்கற்பேதம்—அன்னபேதி.

ஆதிக்கன்—1. உரிமைக்காரன். 2. பெரியவன், மேன்மகன். 3. முதன்மையானவன்.

ஆதிக்கன்றூதம்—அன்னபேதி. (மூ. அ.)

ஆதிக்கியம்-1. அதிகமாந்தன்மை. 'சாத்துவிதகுணாதிக்கியத்தால்' (சி. சி. உ: ருஅ. சிவாக்.) 2. மேன்மை. 'மௌனமந்திராதிக்கிய வித்தையை' (தாயு. மலை. அ.) [ஆயிக்கு]

ஆதிக்குடி—சவர்க்காரம். (மூ. அ.)

ஆதிக்குரு-1. முப்பூ; அது பஞ்சலோகங்களைப் பேதிக்கச்செய்வது. 2. பூவழலை.(மூ.அ.)

ஆதிகடவுள்—முதற்கடவுள்.

ஆதிகடுஞ்சனி—மகநட்சத்திரம்.

ஆதிகடுஞ்சாரி—நவச்சாரம்.

ஆதிகம்—1. சிறுகுறிஞ்சா. (மூ. அ.) 2. முதலியன. 'சீடற் குபதேசாதிகமும்' (வேதா. சூ. கசஉ.)

ஆதிகமாதம் — அதிகமாதம். 'தலையாமூவாவிரண் டுட்பெறச் சக்கிர மித்தலன்றேற் - றலையா மூவாவிலிற் சக்கிர மித்தல் பிறையிரண்டாங்-குலையா துதயம் பெறுதிங்களையொன் றியகுணிதக் - கலைவான ராதிக மாதமென்றோதிக் கழித்தனரே' (குணகுண. அக.) [அதிகம் ஆதிகம் என்று விகாரப்பட்டது.]

ஆதிகர்—பிரமதேவன், சிருட்டிப்போன். [ஆதிகர: ஆதி-முதல். கர-செய்வோன்.]

ஆதிகல்நாதம்—அன்னபேதி.

ஆதிகவி — 1. பிரமதேவன். 2. வான்மீகிமுனிவன். 'வான்மீகியென்னும் ஆதிகவி' (விசார. கடுO.) [ஆதிகவி: ஆதி - முதல். கவி - புலவன்.]

ஆதிகாரணகாரியம் — முதற்காரணத்தினின்று தோற்றிய காரியம். 'மண்ணுலாகிய குடம்' (நன். பெய. சO.)

ஆதிகாரணம் — முதற்காரணம். 'தற்பராவுலகுக் காதி காரணந்தான் தலைமையி லுயிருடன் சடத்தைச் - சொற்றிடிற் பழுதால்' (சிவதத்து. கடு.) [ஆதிகாரண.]

ஆதிகாரிகன் — அதிகாரமுடையவன். [ஆயிகாரிக:]

ஆதிகாலம்-முற்காலம், பண்டைநாள். 'ஐபகேனெனை யாதிகா லந்தனி லளித்த-மையுலாவரு களத்தினன்' (கந்தபு. அபனேச்சிறைபு. எ.)

ஆதிகுடி—சவர்க்காரம்.

ஆதிச்சாரக்கு—சூதம்.

ஆதிச்சனி—மகநட்சத்திரம்.

ஆதிச்சுருதி—பரமாத்தனால் உபதேசிக்கப்பட்ட பரமார்த்தமுடைய வாக்கியசமூகம். (சைவப். உஅ.)

ஆதிசத்தி-1. பஞ்சசத்திகளுள் ஒன்றாகிய திரோதானசத்தி; இது சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம் என்னுங் கிருத்தியங்கள் நான்கையும் ஆரிணி, ஜநநி, ரோதயித்திரி ரூபமாயிருந்து செய்யும் என்றும், பராசத்தியில் ஆயிரத்தொருகூறு வலியுடையது என்றுஞ் சொல்லுவர். (சதாசிவ. ஙூ.) 2. ஆதியாகிய சத்தி. 'சிவமெனும்பொருளு மாதி சத்தியொடு சேரின்' (சௌந்த. 1.)

ஆதிசதாசிவர் — அநாதி விராட்சொரூபமான மகேசுவரனின்றுந் தோன்றினவர். இவருக்குப் பதினைந்துமுகங்களும், பதினைந்துகால்களும், பதினைந்துகைகளும் உள்ளன. (த. நி. போ. பக். கரு௬.)

ஆதிசாரம்—சிற்பநூல் முப்பத்திரண்டின் ஒன்று.

ஆதிசான்முனிவன்—புத்தன். (மணிமே.)

ஆதிசித்தபதி — இடைக்காலத்திலே சித்தித்த பதித்துவமுள்ளவர். 'ஆதிசித்தபதிகளும் பசுக்களு மாகதமென்றும்' (சி. சி. உ: உ. ஞாந.)

ஆதிசிருட்டி—மகத்தத்துவசிருட்டி. 'ஆதிசிருட்டி மகானென்ன வறைவர்' (கூர்மபு. பலவகை. எ.)

ஆதிசேடன்—பூமியைத் தாங்கிக்கொண்டிருக்கிறது என்று சொல்லப்படும் அநந்தன் என்னும் பாம்பு, சங்காரகாலத்தின்பின்னும் எஞ்சிநிற்பவன். 'ஆதிசேடனைமுத லரவினத்தையே' (நல். பாரத. உதங்க. கக.)

ஆதிசைவம்—ஒருவகைச்சைவம். (த. நி. போ. உ௫௬.)

ஆதிசைவர்—அநாதிசைவராகிய சதாசிவமூர்த்தியுடைய ஐந்து திருமுகங்களினும் நிகழிக்கப்பட்ட இருடிகளுடைய கோத்திரங்களிற் பிறந்தவராகிய சிவப்பிராமணர். 'இறைவன் - றருதிரு மேனி தீண்டிடு மாதி சைவர்வாழ் வீதிகள் பலவால்' (தணிகைப். நகரப். கO௫.)

ஆதிசைவன்-சிவப்பிராமணன். 'அனைத்து நா லுணர்ந்தி ராதி சைவனென் றுணர்வீ ரென்னை' (பெரியபு. தடுத்தா. ருசு.)

ஆதிட்டம்—1. கட்டளையிடப்பட்டது. 2. சொல்லப்பட்டது. 3. போசநசேடம். [ஆதிஷ்ட:]

ஆதிட்டி — பிரமசாரி. [ஆதிஷ்: ஆதிஷ்ட - உபதேசிக்கப்பட்ட. இ-ஒருவிகுதி.]

ஆதித்தசயநம்—ஒரு விரதம். 'ஆதித்த சயந மென்னும் விரதமொன் றெமக்கன் பாமால்' (மச்சபு. ஆதித்தசய. ௩.)

ஆதித்தபுடம்—சூரியபுடம்.

ஆதித்தபுத்தி—அருக்கபுத்தி.

ஆதித்தம்—1. காவிக்கல். 2. துரிசு.

ஆதித்தமண்டலம்—1. இருதயகமலத்தில் அறுகோணமாய் எட்டிதழுடைய ஒரு புஷ்பமாய் வாழைப்பூப்போன்று கீழ்நோக்கியிருக்கும் ஒரு யோகஸ்தானம்; (வேதா. தத். சுஉ.) இது இருதயமுதல் கண்டத்தானமளவும் நிற்பது. 2. சூரியமண்டலம்.

ஆதித்தமணி—1. சூரியன். 2. முத்து.

ஆதித்தமத்திமபுத்தி—சூரியனுடைய சராசரி நாட்கதி.

ஆதித்தர் — 1. சூரியர். 'ஆதித்தர் பன்னிருவ ரச்சுவினிக ளிருவர்' (பிங்கல. கஎஅ.) 2. தேவர். (சூ. நிகண். க: சஉ.) 3. பன்னிரண்டு. 'நறுமணச் சந்தக் காழை நானிலம் புகழா தித்தர்-பலங்கொண்டோ ரெருந்தே றிட்டு' (தைல. தைலவ. கூச.) [இஃ தொரு குறிப்புமொழி. ஆதித்ய என்பதில் யகர மெய்கெட்டது.]

ஆதித்தவாரம் — ஞாயிற்றுக்கிழமை. 'ஆதித்தவாரந்தா னேனும்' (மச்சபு. ஆதித்தசயந. ச.)

ஆதித்தன் — 1. ஆதிகுரு. 2. சூரியன். 'ஆதித்த னருங்குல மன்னர்' (அரிச்சந்திர. விவாக. சூக.)

ஆதித்தன்கூர்மை—இலவணபாஷாணம்; அது முப்பத்திரண்டு பாஷாணங்களி னொன்று.

ஆதித்தன்வெள்ளை — ஆதித்தன்கூர்மை.

ஆதித்தியசூநு—1. இயமன். 2. கன்னன். 3. குரங்குகளுக்கு அரசனாகிய சுக்கிரீவன். 4. சநியென்னுங்கிரகம். [ஆதித்யஸூநு: ஆதித்ய; ஸூநு - மகன்.]

ஆதித்தியம்—1. விருந்தினர்க்குச் செய்யும் உபசாரம். 2. கவனித்தல். [ஆதித்ய: அதிதி - விருந்தினன். ய - ஒரு விகுதி.]

ஆதித்தியர் — 1. அதிதியிடத்திலே காசிபப் பிரசாபதிக்குப் பிறந்த புத்திரர். இவர்: தாதா, மித்திரன், அரியமன், இந்திரன், வருணன், அமிசுமந்தன், பகன், விசுவந்தன், பூடன், சவிதா, துவஷ்டா, விஷ்ணு எனப் பன்னிருவர், இப்பன்னிருவரும் சிருட்டியில் இச்சையில்லாதவராய்ப் பிரமாவினது ஆஞ்ஞைக்குட்படாராயினர். அதனால் மநுவந்தரங்கடோறும் பிறக்குமாறு சபிக்கப்பட்டார்கள். ஆதித்தியர் பன்னிருவர் பெயரும் வேதத்திலுள்ளனவேயாம். ஆயினும், ஆதித்தியர் பன்னிருவரும் வேறு. உலகத்திற்குப் பிரத்தியக்ஷமாகவுள்ள சூரியனும் வேறு. ஆதித்தர்-சோதிருபர். சூரியன்-அக்கினிருபன். 2. தேவர். "ஆதித்தியரி லுபேந்திர னி" (கூர்மபு - திருக்கல் - ௩௩.)

ஆதித்தியன் — 1. சூரியன். "திங்களு மாதித்தியனு மெழுந்தாற்போல்." (திவ். முதலா. திருப்பாவை. உஉ.) [அதிதிபுதல்வனெனப் பொருள்படும் ஒரு தத்திதபதம்.] 2. தேவன். 3. விருந்தினன். [1, 2. ஆதித்ய: 3. ஆதித்ய.]

ஆதித்தியை—சரச்சுவதி.

ஆதிதமோமயசிருட்டி — முதலிற் றோன்றிய ஒருவகைச் சிருட்டி. அது, தமம், மோகம், மாமோகம், தாமிச்சிரம், மந்ததாமிச்சிரமென ஐந்துவகைப்படும். 'துன்னிமுன் புத்தியாதி தமோமய சிருட்டி தோன்றிற்-றன்னதின் வகையோ ரைந்தாந் தமமோக மாமோ கஞ்சிர்-மன்னு தாமிச்ரம் மந்த தாமிச்சிர மென வகுப்பார்' (கூர்மபு. பலவகை. உ.)

ஆதிதாரணம்—அடகுகொடுத்துக் கடன் பட்டிருத்தல். [ஆதி - அடகு. தாரணம் - கடன்பட்டிருத்தல்.]

ஆதிதாளம்—தாளவகையினொன்று. (பரத. தாள. 3.)

ஆதிதேயம்-அங்கபாகாதிகொடுத்து அதிதியைப் பூசித்தல்.

ஆதிதேயன்—1. தேவன். 2. விருந்தினரை உபசரிப்போன். 'செந்தமிழ்வேள்விகூராதிதேயரே' (பாரத. வேத். ௩௪.) [1. ஆதிதேயஃ; அதிதிஃ - தேவமாதர். ய-ஒரு விகுதி. 2. ஆதிதெயஃ; அதிதிஃ-விருந்தினன்.]

ஆதிதேவன்-1. சிவன். 'ஆதி தேவனருளுமைந்த னவனுன் னத்தை நோக்கியே' (கந்தபு. அயனைச்சிறைபுரி. ரு.) 2. சூரியன். 3. முதற்கடவுள். 4. விட்டுணு. 5. புத்தன். (சூ. நிக. க. கஎ.) [ஆதிதெவஃ: ஆதி - முதல். தெவஃ - கடவுள்.]

ஆதிதைவிகம் — தாபத்திரயங்களுள் ஒன்று; அது, தெய்வத்தால் வருவது. அதனை, 'கருவிற் றுயர்செனிக்குங் காலத் துயர்மெய் - திரைநரைமூப் பிற்றிளைத்துச் செத்து - நரகத்தி - னுழுந் துயர்புவியை யாளின்ப மாதியெலா - மூழுதவு தைவிகமென் றோர்' என்னும் வெண்பாவா லறிக. (சைவச. பொது. சகஉ. உரை.) [ஆயிதெவிக: அயி-மேல். தெவிக - தெய்வத்தாலாயது.]

ஆதிநாதர்—1. இருபத்துநான்கு தீர்த்தங்கருளொருவர். (த. நி. போ. கஅ.) 2. நவநாதசித்தர்களிலொருவர். (த. நி. போ. பக். உருக.)

ஆதிநாதன்—1. கடவுள். 'ஆதிநாதனறிவன்' (திருவாலவா. 13. 7.) 2. சிவன்.

ஆதிநாராயணன்—1. வச்சிரக்கல். 2. விட்டுணு.

ஆதிநூல்—1. முதனூல். 2. வேதம். 'ஆதி நூலு மனைத்துல குங்கெடும்' (அரிச்சந். விவாக. உ0ச.) [ஆதி-முதல்.]

ஆதிப்பிரசாதம்—பஞ்சப்பிரசாத மந்திரங்களுள் ஒன்று. (த. நி. போ. பக். உகரு.)

ஆதிப்புலவன்-அகத்தியமுனிவன். (பிங்.)

ஆதிபகவன்— 1. கடவுள். 'ஆதிபகவன் முதற்றே யுலகு' (வள். க.) 2. சிவன். 'ஆதி பகவன் ஞானவடி வழகிற் பூத்து'(திருப்போ. காப்பு. டு.) [ஆதியாகிய பகவன் என விரியும்.]

ஆதிபத்தியம்-1. சுதந்திரம். 2. சத்துவம். 3. தலைமையான அதிகாரம். 'பூமியாதிபத்தியம்' (சி. சி. ௯: கஉ. சிவாக்.) 4. மகத்துவம். [ஆயிபத்யம்: அதிபதி என்பதினின்று வந்த தத்திதபதம். ய-ஒரு விகுதி.]

ஆதிபதி—விந்து

ஆதிபரம்—அதிபலம், சாதிக்காய்.

ஆதிபரன்—முதற்கடவுள்.

ஆதிபலம்—சாதிக்காய்.

ஆதிபன்-1. அரசன். 'ஆதிப நினது செல்வமா நகரில்' (பாரதம். நாடுகாண். கக.) 2. எப்பொருட்குமிறைவன். (சூ. நிகண். உ: க0.) 3. தலைவன். 'பூதி நலந்திகழ் பூரு குலத்திற் - காதிப னாகி யநங்கனை வென்றோன்' (பாரத. வார. கரு.)

ஆதிபாடை-1. தமிழ்மொழி. 2. வடமொழி.

ஆதிபிட்சு — சிவன். [பிக்ஷு - பிச்சையேற்போன்.]

ஆதிபுங்கவன்—1. அருகன். 2. கடவுள்.

ஆதிபுரி — திருப்பேரூர் திருவொற்றியூர் என்னுந் தலம். (தணிகைப்பு. முகவுரை.)

ஆதிபுருடன்—1. சிருட்டிகருத்தா. 2. விட்டுணு. [ஆதிபுருஷ: ஆதி - சிரேட்டம். புருஷ - ஆடவன்.]

ஆதிபூதம்—அதிட்டாநபூதம்.

ஆதிபூதன்— 1. பிரமன். 2. முன்பிறந்தவன். 3. முன்னுள்ளவன். [ஆதிபூதஃ ஆதி - முதல். பூதஃ-தோன்றினவன்.]

ஆதிபோகம்— அடகுவாங்கினபொருளின் பயனை அநுபவித்தல். [ஆயிபோகஃ: ஆயி - அடகு. போகஃ - அநுபவித்தல்.]

ஆதிபௌதிகம் — தாபத்திரயங்களுள் ஒன்று; அது, பிருதிவிமுதலிய பூதங்களால் வருவது. (சைவச. பொது. சகஉ. உரை.) [ஆயிபௌதிக: அயி - மேல். பௌதிக - பூதசம்பந்தம்.]

ஆதிமகாதரு—அரிசு. (மூ. அ.)

ஆதிமகாநாதம்—உலோகமணல். (மூ.அ.)

ஆதிமகேசுவரர்—ஆதியீசுவரனிடத்திலே தோன்றினவர். இவருக்குப் பதினைந்துகைகளும் பதினைந்து கால்களுமுள. (த. நி. போ. கடுக.)

ஆதிமடக்கு—மடக்கு என்னும் அலங்கார வகையுள் ஒன்று; அது: செய்யுளிலே, அடியின் முதலில்வரும் எழுத்துக்கூட்டம் பெயர்த்தும் வேறுபொருள்விளைத்து வருவது. இது, முதலடிமுதன்மடக்கு, இரண்டாமடிமுதன்மடக்கு, மூன்றாமடிமுதன்மடக்கு, ஈற்றடி முதன்மடக்கு, முதலடியு மிரண்டாமடியு முதன்மடக்கு, முதலடியு மூன்றாமடியு முதன்மடக்கு, முதலடியு மீற்றடியு முதன் மடக்கு, மூன்றாமடியும் நான்காமடியு முதன் மடக்கு, இரண்டாமடியும் மூன்றாமடியுமுதன் மடக்கு, இரண்டாமடியும் ஈற்றடியு முதன் மடக்கு, ஈற்றடியொழித் தேனை மூன்றடியு முதன்மடக்கு, இரண்டாமடியொழித் தேனை மூன்றடியும் முதன்மடக்கு, மூன்றாமடி யொழித் தேனை மூன்றடியு முதன்மடக்கு, முதலடியொழித் தேனை மூன்றடியும் முதன் மடக்கு, முற்றும் முதன்மடக்கு எனப் பல வாக வரும். (தண்டி. சொல்லணி. ங, ச.)

ஆதிமம்—முதலாவது. [ஆதிமீ:]

ஆதிமருந்து—சுக்கு, மிளகு, திப்பிலி, இம் மூன்றும். (தைல. தைலவ. கஙரு.)

ஆதிமலட்டுரோகம் — வயிற்றில் மூன்று மடிப்புவிழுந்து இடுப்பும் பருத்துச் சரீர முந் தூலித்து இருப்பதால் கருப்பந்தரிக்க மாட்டாமையாகிய ரோகம். (சீவரட். உ0ரு.)

ஆதிமலை—இமயமலை. (பிங்கல. ரு0௧.)

ஆதிமார்க்கம்—முதற்சமயம்.

ஆதிமார்க்கிகசாஸ்திரம்— அதிமார்க்கநூல். (த. நி. போ. பக். கரு.) இது: பாசுபதம், காபாலிகம், மாவிரதம் என மூவகைப்படும். [ஆதிமார்கிக.]

ஆதிமீன் — அசுவதிநட்சத்திரம். 'ஆதி மீன் ரேணியீ றவற்றின் வண்ணமாய்' (சேது கந்த. கஎ.)

ஆதிமுத்தசிவன்—ஆதிமுத்த பதி.

ஆதிமுத்தபதி—இடைக்காலத்திலே மலம் நீங்கப்பெற்றுப் பதியான ஆன்மா. இவர், அநாதிமுத்தபதிபோலச் சச்சிதாநந்தசொரூபியாய்ச் சர்வவியாபியாய் அகண்டிதமாய், நிரபேட்சமாய்ச் சிவசாத்தியவியத்தமாய்ச் சர்வபொருட் பிரத்தியட்ச சாட்சாத்காரமாய்ச் சிவதுல்லியசிவமாய் இருப்பர். (பசு. பாச. கங.)

ஆதிமுத்தர்—மலமுடையராயிருந்து பின் மலம் நீங்கினவர். 'ஆதிமுத்தரான அநந் தேசுராதிகள்' (சி. சி. க: க. சிவாக்.) [ஆதி-முதல்; முத்தர் - மலநீங்கினவர்.]

ஆதிமுதல்—1. ஆதிமூலம். 2. தொடக்க முதல்.

ஆதிமுதல்வன்—, ஆதிமுநிவன்— } 1. கடவுள். 2. புத்தன். (மணிமேகலை.)

ஆதிமூர்த்தி — முழுமுதற்கடவுள். 'ஆதி மூர்த்தியென்றுளளவாகுமோ' (திவ். திருவாய். ங. ங. ரு.)

ஆதிமூலம்—1. ஆட்சிக்கிரகம். 2. கடவுள். 3. முதற்காரணம். 4. முதன்முதல்.

ஆதியங்கடவுள்—1. அருகன். 'ஆதியங் கடவுளை யருமறைபயந்தனை' (சூளா. இரத. கூசு.) 2. சிவன். 'ஆதியங்கடவுண்மைந்தன்' (கந்தபு. அசுரேந்தி. சுரு.) 3. முதற்கடவுள். 'அன்புறு மீசன் மாலயன் றனக்கு மாதியங் கடவுணீ யெனவும்' (சிவதத். ஙரு.)

ஆதியந்தணன்—பிரமன். (பரிபா. 5, 22.)

ஆதியந்தபாதீச்சா—1. சீக்கிர உச்சம். 2. மகரச்சா.

ஆதியந்தம் — 1. ஆதிதொடங்கி அந்தம் வரைக்கும். 'ஆதியந்தம்பட வணைத்துங் காட்டிய - வேதியன் படைப்பினின் மிகையிரண்டுள' (இரகு. நகர. ரு.) 2. முதலும் முடிவும். 'ஆதியந்த மரியெனயாவையுமோதினர்' (இராமா. பாயிர. ங.)

ஆதியரிவஞ்சம்—அறுவகைப் போகபூமிகளுள் ஒன்று. (பிங்கல. ச0ச.)

ஆதியாமம்—மூகைப்புல்.

ஆதியாழ்—ஆயிரநரம்புள்ள யாழ். (பிங்.)

ஆதியீசுவரன்— ஆதிசதாசிவனிடத்திலே தோன்றினவர். இவருக்கு ஆறுமுகங்களும், பன்னிருபுயங்களும் மூன்று பாதங்களு முள. (த. நி. போ. பக். கருசு.)

ஆதியுகம்—முதலாவதாகிய கிருதயுகம். இது, நானூறு தேவவருடமும் நானூறு சந்தியஞ்சமுங் கொண்ட காலம். (கூர்ம. பிரமா. சு. உரை.)

ஆதியுலா — திருக்கைலாயஞானவுலா. (திருவாரூ. அவை.)

ஆதியூழி—கிருதயுகம். 'ஆதியூழியின் அந்தத்தே.' (தொல். பொ. 145.)

ஆதியெழுந்சதி — மகநட்சத்திரம். (பிங்கல-உசஅ.)

ஆதியெழுத்து—உயிர் பன்னிரண்டும் மெய் பதினெட்டுமாகிய முதலெழுத்துக்கள்.

ஆதியொடிடைமடக்கு— } மடக்கு என்னுஞ் சொல்லலங்காரவகையுள் ஒவ்வொன்று. (தண்டி. ௯௨. ௯௩.)
ஆதியொடுகடைமடக்கு— }

ஆதிர்—ஆவிர். 'அதனை நீவிர் - தூய்த்திடுமெல்லை தன்னிற் றொல்லுரு வாதி ரென்றான்' (கந்தபு. சூரம்பு. ௩௫.)

ஆதிரம்—நெய். (பிங்கல. ககஙஉ.)

ஆதிரவிசிலை—காவிக்கல்.

ஆதிரன்—பெரியோன்.

ஆதிராச்சியம்—ஏகாதிபத்தியம், தலைமையரசு. (௬௫. 4. 3. 4.) [ஆயிராஜ்யம்: அபி - மேல். ராஜ்யம்.]

ஆதிரை—1. ஒரு அருகசாதுவின் மனைவி. 2. திருவாதிரைநட்சத்திரம். 'ஆதிரை நாளிற் சோமவாரத்தின்' (தணிகை. அகத். கசஎ.)

ஆதிரையன்— } திருவாதிரைக்குரியவன்.
ஆதிரையான்— }

ஆதிரௌத்திரம் — சவ்வீரபாஷாணம். (மூ. அ.)

ஆதிவாரகம்— } விட்டுணு. (சூ. நிகண். க: கஉ.)
ஆதிவாரகன்— }

ஆதிவருணர்—பிராமணர். (சூ. நிகண். உ: ௫.) [ஆதி - முதல். வர்ண - குலம்.]

ஆதிவாகியம்—சூக்குமசரீரம். 'உடலாய் மருவு மாதி வாகியமே' (ஞானவா. ஞானவி. 24.)

ஆதிவாயிலார் — பாரதவேனுபதியநூலாசிரியர். (சிலப்பதி).

ஆதிவாரம் — ஞாயிற்றுக்கிழமை. 'நிகரிலாதிவாரத்தில்வரு மருத்தோதயம்' (சேது. சேதுப. ௫௫.)

ஆதிவித்து — 1. கார்முகிற்பாஷாணம். (மூ. அ.) 2. நீலபாஷாணம். 3. மழை.

ஆதிவிராதன்—1. அருகன். 2. சிவன். 3. சோரபாஷாணம். (மூ. அ.)

ஆதிவிராட்டியம்—வெள்ளைப்பாஷாணம்.

ஆதிவிராட்டியன் — 1. சூதபாஷாணம். (மூ. அ.) 2. சோரபாஷாணம் (மூ. அ)

ஆதிவிருத்தி—தத்திதப்பிரத்தியயம்வந்து புணரும்போது நிலைமொழியின்முதல் திரிவது. அப்படித்திரியுமிடத்து இகர ஈகார ஏகாரங்கள் ஐகாரமாகவும், உகர ஊகார ஓகாரங்கள் ஔகாரமாகவும், அகரம் ஆகாரமாகவும், இரு ஆராகவும் வரும். (பி. வி. உஅ.) சைவன், தைரியம், கைவல்லியம், கௌரவம், பௌரவர், ஔடதம், தாசரதி, பார்த்தன் என்பனவற்றிற்போல.

ஆதிவேதநிகம் — ஒருவன் இரண்டாம் விவாகஞ்செய்யும்போது முதலாம் மனைவிக்குக் கொடுக்கும்பொருள். [ஆயிவெடிநிக.]

ஆதீனடுதூற்றி — ஆவுரிஞ்சுதறி. (சீவக. 415. உரை)

ஆதீநம்—1. ஆஸ்தி. 2. ஆளுகை. 3. சுதந்திரம். 'கருவிகரணாதிகளைவிட்டுச்சென்றுகூடுதற்கரிதாகிய புருவமத்தியத்தைப்பொருந்தித் தன்னுடைய வாதீநமின்றி யருளின் வழியேநின்று' (சி. சி. ௯. அ. மறை.) 4. வமிசம். 5. சைவமடம். 6. வசம்.

ஆதீநவம் — கீழ்ப்படியாமை, மீறுதல்.

ஆதீபநம்—கோலஞ்செய்தல். [ஆதீவநः ஆ; தீவந - அலங்கரித்தல்.]

ஆது—1. அது என்பது நீண்ட ஒரு விகாரமொழி. 'ஆதுகொடு நீயசுரர்குலம்.' (உபதேச. திருமா. கரு.) 2. சம்பந்தப்பொருளில் வரும் ஆறாம்வேற்றுமையுருபுகளுள் அஃறிணை ஒருமையில்வரும் ஓர் உருபு. 'கஞ்சர் கண்ணர் கடமாதங்கம்' (கம்பர. அஎ.) 3. தெப்பம். [ஆதர]4. யானையைப் பாகர் தட்டிக்கொடுக்கும்போதுகூறும் ஒரு குறிப்புமொழி. 'அங்கை யந்தலத்தினு லப்புதாதையெனக்-கொங்கலர் கண்ணியான் கொம்மைதான் கொட்டலும்' (சிந்தா. கநக. உஎஅ.)

ஆதுநிகம்—இப்போதுள்ளது. [ஆயுநிக: அயுநா - இப்பொழுது. இக ஒரு விகுதி.]

ஆதுநிகர்—பின்னோர். 'பிராசீநர் முன்னோராதுநிகர் பின்னோர்.' (பி. வி. காரக. உ. உரை.)

ஆதுராதுமசகர்—சந்நியாச ஆச்சிரமத்தார் அறுவகையருள் ஒருவகையர். (கூர்மபு. வருண. ௪௦. உரை.)

ஆதுரம்—1. அவா. 2. நோயுடைமை. 3. பரபரப்பு. [ஆதுரம்]

ஆதுரன்—1. ஆசையுற்றோன். 2. நோயாளி. 'ஆதுரனளவு' (வள். கூசகூ. பரி.)

ஆதுலம்—கள்.

ஆதுலர்—1. நோயாளிகள். 2. மிக்க வறுமையுடையோர். (மணிமே.)

ஆதுலர்சாலை — முப்பத்திரண்டுதருமங்களுள் ஒன்று. (பிங்கல. கoகூ.)

ஆதுலன் — 1. வறியவன். 'அறியாத தேயத்தானுதுலன்மூத்தான்' (ஆசாரக்கோ. கoo.) 2. வலியற்றவன்.

ஆதுவம்—கள்.

ஆதேரிசம்—கண்ணடி. [ஆதர்சம்.]

ஆதேசம்—1. உபதேசம். 2. கட்டளை. 3. கிரகசாரபலம். 4. திரிந்த எழுத்து. 'ஆன்ற மூலோபத்தொடாகமமாதேசமாரியத்தன் - மூன்றும்' (வீரசோ. சந்தி. கo.) 5. புத்தி. [ஆதேசம்:]

ஆதேயம் — 1. அடகு. 2. இடத்தில் அடைந்திருக்குமது, தாங்கப்படுவது. (திருமந். 1754.) 3. வாங்கத்தக்கது. [1, 2. ஆதேயம். 3. ஆதேயம்.]

ஆதேயலக்கணை — ஆதேயத்துக்குரிய பெயர் ஆதாரத்தைக் கருதிநிற்பது.

ஆதொண்டை—காற்றோட்டிக்கொடி, காற்றோட்டிச்செடி. 'புன்காதொண்டைமுட்டி பருவாகைபுன்முருக்கைகூந்த - லாயிலகுடம் பருக்குறிஞ்சிபதின்மூன்றும்வகைக்கு' (தைல. தைலவ. கஎ.)

ஆதொண்டைச்சக்கரவர்த்தி — தொண்டைமண்டலத்தையாண்ட ஆதியரசன்.

ஆதோரணமஞ்சரி — எதிர்ந்த மதயானைகளை அழித்தும் அடக்கியும் போந்த வீரன் சிறப்பை வஞ்சிப்பாவாற்றெடுத்துப் பாடும் ஒருபிரபந்தம். (தொன். வி. 283. உரை.)

ஆதோரணர்—1. தூத்துகிறவர்கள். 2. யானைப்பாகர். [ஆதோரண: ஆ; தோரண - அசைத்தல்.]

ஆந்தகம்-1. குருடர்கூட்டம். 2. பாதாளம்.

ஆந்தரங்கம்—1. அருமையானது. 2. இரகசியம். 'வேதவாய்மை-யாந்தரங்கம் வெளிசெய்வோன்' (சேதுபு. கடவு. உ.) 3. நம்பிப் பற்றத்தக்கது, உற்ற சிநேகம். 'ஆந்தரங்கமாஞ் சுற்றநீ யல்லியோ வென்றான்' (கந்தபு. கந்தவி. ௫௫.) [அந்தரங்கம் என்பதினின்றுவந்த தத்திதம்.]

ஆந்தரதேகம் — உள்ளிருக்குந் தேகம். 'சுழுத்தியவத்தையிற் புறப்பொருளறிவின்றி யாந்தரதேகமாத்திரவறிவாய்' (சி. சி. சு: கூo. ஞாநப்.)

ஆந்தரப்பிரத்தியக்ஷம் — ஆன்மமனசையோகத்தினன் உள்ளத்திற்றோன்றும் பிரத்தியட்சஞானம். (தர்க்காமிர். பிரத்தியக்ஙிரூ.)

ஆந்தரப்பிரமாணம் — சுருதியின் அகத்திருந்து காட்டும் பிரமாணம். (சைவப்பி. கூரு.) [அந்தர - உள்.]

ஆந்தரபந்தம்—உள்ளாக அமைந்த பந்தம். 'ஆந்தரபந்தமானது ஆணவமலத்தைக் காரணமாயுள்ளது' (சி. சி. சு: ௬ எ. சிவாக்.)

ஆந்தரபூதம்—பூதங்களின் ஒருபிரகாரம். அது, தூலதேகத்திலிருந்து சரீரத்தை வளர்த்து உள்ளே இடங்கொடுத்தன் முதலிய தொழில்களைச்செய்வது. (சி. சி. உ. சுரு: ஞாநப்.) [அந்தர - உள்.]

ஆந்தரபோகம்—உட்போகம்-அது: 'சாட்சாத் பரமசிவனே போகத்தைக் கொடுக்குங் கர்த்தாவானதினல் சுத்ததத்துவத்திலுண்டாகிய போகமானது (ஆந்தரபோகம்) உட்போகமெனப்படும்.' 'ஆந்தரபோகம் புசிப்பவர்களுக்குப் போகமுடிவில் மோட்சமாகும்' (சி-வி. ஞாந. உo. தாற்.)

ஆந்தரம்—1. அகத்தது. (சைவப்பி. உ.) 2. தூலதேகத்திலிருந்து சரீரத்தை வளர்த்து உள்ளிடங்கொடுத்தல் முதலிய தொழிலையியற்றும் பூதம். 3. மறைவானது. [அந்தர் - உள்.]

ஆந்தராளிகன்—மத்தியஸ்தன். (ஈடு. 10. 9. 4.)

ஆந்தரி—அந்தரங்ககருவி. (சி-வி. ஞாநபா. கூ.)

ஆந்நரியம் — உள்ளிருப்பது. 'ஆத்துமஞானமே சமஸ்த பாவனைக்கு மாந்தரியமாமென்று பார்ப்பவர்' (ஞாநவாசி. தர்மவியாள. எ. உரை.)

**ஆந்தரிட்சம்** - ஆகாயத்திலுள்ளது. (அந்தரிட்சம் என்பதினின்று வந்த தத்திதம்.) [ஆந்தரீக்ஷ]

**ஆந்தாளம்** — இடவிசேடம். (மணிமே.)

**ஆந்திகை**-அக்காள். (நாடக) [ஆந்திகா]

**ஆந்தியம்**-குருடு. [ஆந்த்ய: அந்த என்பதினின்றுவந்த தத்திதம்.]

**ஆந்திரபித்வாதரோகம்** — குடல்வாதம். (சீவரட். கஙக.) [ஆந்திரம் - குடல். பித் - பேதித்தல்.]

**ஆந்திரம்** — 1. குடல். 'சுழலடியாந்திர மருத்தும் பீஜமருத்தும் மவற்றின் சுரப்பு நோயும்' (தைல. தைலவ. ருச.) 2. தெலுங்குதேசம். 3. தெலுங்குப்பாடை. 4. மாணம். [4. ஹாந்த்ர. ஹந - கொல்லல்.]

**ஆந்திரன்**—தெலுங்கன். (சி. சி. உ: ஙக. சிவாக்.)

**ஆந்திரிகநூல்** — குடலைப்பற்றி யறிவிக்கு நூல்.

**ஆந்திரிகம்**—குடலோடு சம்பந்தமுள்ளது. [ஆந்த்ரிக: அந்த்ர - குடல். இக-ஒரு விகுதி.]

**ஆந்தை**—1. ஒரு பறவை. அது: பஞ்ச பட்சிகளிலொன்று. 'கொம்புறு கிள்ளை யலகு சொல் லாந்தை' (கந்தபு. நகர. கரு.) 2. பேராமுட்டி. (மூ. அ.) 3. ஓரிபற்பெயர். (தொல். எழுத். 348. உரை.)

**ஆந்தைக்காதல்**—1. ஆந்தை கூவுகை. 2. ஆந்தைநூல்.

**ஆந்தோளம்**—1. ஊசலாடு மசைவு. 2. கமகம் பத்தனுள் ஒன்று. (பாரத. ராக. 24.) [ஆந்தோல:]

**ஆந்தோளி**—1. ஒருவகைச் சிவிகை. 'ஆந்தோளியின் மாதுமையேக' (திருவாலவா. திருவிழா. உக.) 2. ஓரிராகம். 3. தண்டிகை. (சாதகா. ௪-ம் பாவம்.)

**ஆந்நிகம்**—நித்தியகருமம். 'குருவானவர் நித்தியமான ஆந்நிகம் இரண்டையுஞ் செய்து.' (சி-வி. கிரி. ௬௬.) [ஆஹ்நிகம்.]

**ஆநகதுந்துபி**—1. இரணபேரி. 2. கண்ணபிரானுடைய பிதாவாகிய வசுதேவன். 'அந்நாதந் தமிழுழங்கச் சங்க மார்ப்ப வாககதுந் தமிழுதல்வ ளுதி யாக' (பாரத. நிரோன. ௫அ.) [அநகதுந்துபனுடையமகனெனப் பொருள்படுந் தத்திதம். ஆநக துந்துபி: ஆநக - முழக்கம். துந்துபி - பறை.]

**ஆநகம்**—1. இடி. 2. காதினுட்சவ்வு. 3. சுரை. (மூ. அ.) 4. தம்பட்டம். 5. தேவதாரு. (மூ. அ.) 6. போர்ப்பறை. 7. மத்தளம். 8. முரசம். 'ஆநகம் பல முழங்கவர் தெதிர் பணிந்து' (பாரத. சூது. ருக.) 9. முழங்கு மேகம். 10. மேளம். 11. தேவதாரம். [ஆநக.]

**ஆநண்பாயதுறை** — கோமதீசுரக்ஷேத்திரம். 'குற்றாலம் பணிந்தெழுமா - நண்பாய துறையாலங்காடு' (வேதாரணியபு. வரன்முறை. ௬௬.)

**ஆநத்தம்**—1. சேலை தோல் முதலியவற்றாற் கட்டப்பட்டது. 2. மேளம்.

**ஆநந்த** — வியாழவட்டமாகிய அறுபது வருடங்களுள் நாற்பத்தெட்டாம் வருடம். [ஆநந்த.]

**ஆநந்தக்கண்ணீர்** — மகிழ்ச்சிமிகுதியால் வரும் கண்ணீர். (திருவாச. 17. 2.)

**ஆநந்தக்கரப்பான்** — தினவுண்டாக்கும் ஒருவகைக் கரப்பான் ரோகம். (சீவரட். உகக.)

**ஆநந்தக்களிப்பு**-1. பேரின்பத்திற் செருக்குறுதல். 2. யோகிகள் பத்தியாற்பாடும் பாடல். 'ஆனந்தக்களிப்பு' (தாயு.)

**ஆநந்தகரம்**—மகிழ்ச்சிதருவது.

**ஆநந்தகாநநம்** — காசிநகரம். [ஆநந்த காநந: ஆநந்த; காநந - காடு.]

**ஆநந்தகாநம்**—காசிநகரம். 'ஆநந்த கானந் தொடுத்திங்குள வான சைவத்-தானம் பலவுந் தொழுத் தற்பர மாகி' (திருவிளை. கல்லானை. அ.)

**ஆநந்ததத்தம்**—ஆண்குறி. [ஆநந்ததத்த: ஆநந்த - மகிழ்ச்சி. தத்த - கொடுப்பது.]

**ஆநந்ததாண்டவம்**-நடராஜர்புரியும் நிருத்தம். (கோயிற்பு. பதஞ். 1. உரை.)

**ஆநந்ததீர்த்தர்**—மத்துவாசாரியர்.

**ஆநந்தநம்** — 1. இன்பங்கொடுப்பது. 2. இன்பம். 3. உபசரணை. 4. சந்தோஷித்தல். [ஆநந்தந]

ஆநந்தநி—பிரமன்பட்டணம்.

ஆநந்தநித்திரை—யோகநித்திரை.

ஆநந்தநிருத்தம்—ஆநந்ததாண்டவம்.

ஆநந்தப்பிரபவம் — சுக்கிலசுரோணிதங்கள். [ஆநந்தப்ரபவ: ஆநந்த - மகிழ்ச்சி. ப்ரபவ - தோன்றியது.]

ஆநந்தப்பிராப்தி — ஆநந்தமடைதல். (த. நி. போ. உ௫உ.) [ப்ராப்தி - அடைதல்.]

ஆநந்தப்பையுள்-1. கணவனிறப்ப மனைவி மெலிந்து வருந்தும் புறத்துறை. (பு. வெ. 10. 13.) 2. பிரிந்த தலைவன் தலைவியருடைய துயர்மிகுதியைப் பாட்டுடைத்தலைவனுடைய நாட்டுடனும் ஊருடனும் சார்த்திச் சொல்வதாகிய நூற்குற்றம். (யாப். வி. 96. பக். 523.)

ஆநந்தபடம்—கூறைப்புடவை. [ஆநந்தபட: ஆநந்த-சந்தோஷம். பட-சேலை.]

ஆநந்தபரவசம் — ஆநந்தத்திற் பரவசமாதல், மகிழ்ச்சியால் தன்னை மறக்கை. (கோயிற்பு. இரணிய. 55.)

ஆநந்தபாட்பம்—மிக்க மகிழ்வினால்வருங் கண்ணீர். 'தாமரைமலர்போன்ற ஒளியினையுடைய கண்கள் ஆநந்தபாஷ்பம் பெருக நின்றார்' (இராமா. அகத்திய. ௪௯. உரை.) [ஆநந்தபாஷ்வ: ஆநந்த; பாஷ்வ - கண்ணீர்.]

ஆநந்தபைரவம்– சிந்தூரவகையில் ஒன்று. (பதார்த்த. 1209.)

ஆநந்தபைரவி–ஓரிராகம். [பைரவீ.]

ஆநந்தம்—1. அரத்தை. 2. கடவுள். 3. சாக்காடு. 'செல்வோர் செப்பிய மூதாநந்தமும்' (தொல். பொருள். ௭௯.) 4. நாலுவர்ணங்களில் ஒன்று. 'சத்தியம், ஞாநம், அநந்தம், ஆநந்தம் என்பதே நாலுவர்ணம்.' (வாசுதே. உ௧௧.) 5. நூற்குற்றங்களுள் ஒன்று; அது: செய்யுளிலே நிறுவியபொருளுக்கு அழிவுபயத்தற்கிடனான எழுத்துநிலை, அல்லது சொல்நிலை. இயற்பெயரைச் சார்ந்து அளபெடைவருவது எழுத்தாநந்தம் என்றும், அமங்கலமானதொழிற்சொல்வருவது சொல்லாநந்தம் என்றும் சொல்லப்படும். 'ஆழியிழைப்பப் பகல்போ மிரவெல்லாந்-தோழி துணையாத் துயர்தீர்வன் - றோழி - நறுமாலை தாவுந் திரையவோஒ வென்னுஞ்-செறுமாலை சென்றடையும் போது' இதன்கண், திரையவோஒ என இயற்பெயர்சார்ந்து அளபெடை வந்தமையின் இஃது எழுத்தாநந்தம். 'என்னிற் பொலிந்த திவண்முக மென்றெண்ணித்-தன்னிற் குறைபடுவான் றண்மதிய - மின்னி-விரிந்திலங்கும் வெண்குடைச் செங்கோல் விசய-னெரிந்திலங்கும் வேலி னெழும்' இதனுள் விசயன் என்னும் இயற்பெயர்சார்ந்து 'எரிந்து' என்னும் அமங்கலமான தொழின்மொழி வந்தமையான் இது சொல்லாநந்தம். இவற்றோடு பொருளாநந்தம் யாப்பாநந்தம் முதலியவைகளைச் சேர்ப்பாருமுளர். (இலக்கணவி. அ௮௭.) 6. புணர்ச்சியின்பம். (சி-வி. ஞாந. க௮.) 7. பேரின்பம். 'ஆநந்தவெள்ளந் துளைந் தாடவைத்தி' (கம்பரந். ௪௮.) 8. மகிழ்ச்சி. 'ஆநந்தமாயறிவாய்நின்றிலங்கும்' (தாயு. ஆநந்தக்களிப்பு. க.) [ஆநந்த.]

ஆநந்தமயகோசம் — 1. கேவலத்தில் ஒன்றுமின்றிநின்ற ஆன்மா மாயையிற் கலக்குண்ட பாகமாகிய காரணசரீரத்தை முதற்கட் பொருந்தி அறிவிச்சைசெயல்கள் பொதுமையான் அவ்வளவு விளங்கப்பெற்ற மாத்திரையே அம்மயக்கறிவால் ஓர் ஆநந்தமுண்டாக நின்ற நிலை. (சி. சி. ௪: உ௩. சிவஞா.) 2. பஞ்சகோசங்களுள் ஒன்று: அது: காரணசரீரமாகிய அஞ்ஞாநம். இது 'அவித்தையாநந்தமயமாம்' என்பதனாற் பெறப்படும். (உபநிட. உ௫.) [ஆநந்தமயகோஶ.]

ஆநந்தமயம்—1. ஆநந்தநிறைவு. 'ஆநந்தமயமான வாதியை' (தாயு. சிவ. ௩.) 2. ஆநந்தமயகோசம். 'போற்றுமா நந்த மயமதல் லாதொரு போதமுண்டோ' (த. நி. போ. உ௮௪.) [மயம் - அதுவாந்தன்மை.]

ஆநந்தமயன்—அந்தரியாமி. (த. நி. போ. ௧0௯.)

ஆநந்தமூலி—கஞ்சா. 'அப்பனே யாநந்த மூலிச் சாறே' (வைர. ௪௩.)

ஆநந்தயித்திரீ–ஆநந்தத்தைச் செய்யுமது. [ஆநந்தயித்ரீ.]

ஆநந்தயோகம் — அட்டயோகங்களில் ஒன்று. (த. நி. போ. ௩௭௩.)

ஆநந்தரசம்—ஒருவகை மருந்து. 'ஆநந்தரசம் விநோதமாம்' (பதார்த்தகுண. ௧உ௩௮.)

ஆநந்தரியம் — ஆநந்தரியம். 'வடநூலார் யாப்பை ஆநந்தரியமென்றும், நுதலிய பொருளை விடயமென்றும், கேட்போரை அதிகாரிகளென்றும், பயனைப் பிரயோசநமென்றும் கூறுப' (நன். சிறப்புப்.)

ஆநந்தரியம்–1. அந்தரமின்மை. 2. இடையிற் பிறிதொன்றின்றி அடுத்திருத்தல். 3. காரணத்தினின்று நேரேதோன்றும் காரியம். 4. சம்பந்தம்; அஃது இந்நூல் கேட்டபின் இந்நூல் கேட்கவேண்டும் என்னும் இயைபு. (சிவஞா. போ. சிற். உ.) [அநந்தரம் என்பதினின்றுவந்த தத்திதம். ஈய - ஒரு விகுதி.]

ஆநந்தருபசத்தி — பிரமசந்நிதாநத்தில் இலக்கணசூநியமாயிருக்கின்ற சத்தியிடத்திலுண்டாகிய சுத்ததத்துவகுணம். (நாநாசி. பக். உ.)

ஆநந்தருபன் — பஞ்சகோச கன்மபந்த சென்மமாறுதி அற்ற வடிவன்.

ஆநந்தலட்சணம் — நிருபாதிகமாய் நிரதிசயமாய் நித்தியமான சுகசொருபம். (வாசுதே. கூ)

ஆநந்தவருவி —ஆநந்தபாஷ்பப்பெருக்கு.

ஆநந்தவல்லி—1. உமாதேவி. 2. கோழித்தலைக் கந்தகம். (மூ. அ.) 3. தைத்திரிய உபநிடதத்தின் ஒருபாகம்.

ஆநந்தவாதி–கௌரிபாஷாணம். (மூ. அ.)

ஆநந்தவுரு–1. அறிவுரு, பரமசைதந்நியம். 'அகண்டிதமா யாநந்தவுருவாய்' (சிவப்பிர. க: க.) 2. சுகசொருபம்.

ஆநந்தவுவமை — மிகவும் இழிந்தபொருளோடு ஒப்பிடுதலாகிய உவமைக்குற்றம். (புறநா. 60. உரை.)

ஆநந்தவோமம்—தசாகத்தன்று நிட்டுக் கழியச்செய்யும் சடங்கு.

ஆநந்தன்—1. அருகன். (சூ. நிகண். க. ௩.) 2. சிவன், சுகசொருபியாயிருப்பவன். 'அத்தனாநந்த னமுதனென் றள்ளூறி' (திருவாச. திருவெம். ௩.) 3. கடவுள். 4. பலராமன்; அநந்தனுடைய அமிசமாய் அவதரித்தவனென்றபடி.

ஆநந்தாகிருதி–கடவுளுடைய எண்குணங்களுள் ஒன்று; அது ஆநந்தருபமாயிருத்தல். (சிவதரு. சிவஞாந. கூ. உரை.) [ஆநந்த; ஆக்ருதி - வடிவம்.]

ஆநந்தாட்டகம்—எட்டுவகையான ஆநந்தங்கள்; அவை: விஷயாநந்தம், பிரமாநந்தம், வாசநாநந்தம், முக்கியாநந்தம், நிசாநந்தம், ஆத்மாநந்தம், அத்வைதாநந்தம், நித்தியாநந்தம் என்பன. [அவற்றுள் வநிதாதி விஷயலாபத்திற் றோன்றுவதே விஷயாநந்தம்; நித்திராகாலத்திற் றோன்றுவதே பிரமாநந்தம்; நித்திரை தெளிந்துந் தெளியா இடத்திற் றோன்றுவதே வாசநாநந்தம்; ஸ்தாநாஸ்தாநமில்லாத உபேக்ஷா புத்தியிற் றோன்றுவதே முக்கியாநந்தம்; யோகாப்பியாசபலத்தால் மநோலயமான இடத்திற் றோன்றுவதே நிசாநந்தம்; பிரியமான வநிதாதி விஷயமத்தியில் தானே பிரியாத் மகனென்றறிந்த இடத்திற் றோன்றுவதே ஆத்மாநந்தம்; நாமரூபப்பிரபஞ்சமெல்லாம் மித்தை, தானே சத்தியமென்று விவேகத்திற்றோன்றுவதே அத்வைதாநந்தம்; தத்துவமசியாதி வாக்கியசந்நியமான அபரோக்ஷ ஞாநத்திற் றோன்றுவதே நித்தியாநந்தம்.] (த. நி. போ. க0கூ, க0எ.) [ஆநந்த: அஷ்டக - எட்டன்கூட்டம்.]

ஆநந்தாத்துமா—பிரமா. [ஆநந்த - விட்டுணு. ஆத்மா - மகன்.]

ஆநந்தாலயம்—சந்திரலோகம்.

ஆநந்தி—1. அரத்தை. 2. ஆநந்தமுடையவன். 3. ஆநந்தியென்னேவலும் வினைப்பகுதியும். 4. ஆருதாரங்களுளொன்றாகிய ஆஞ்ஞைக்குரிய இதழ்கள் இரண்டில் ஒன்றில் நிற்கும் ஓ ரதிதேவதை. (சி. சி. அ: உக. மறை.) 5. உமாதேவி 6. மகிழ்ச்சி. [1. 4.5.6. ஆநந்தி. 2. ஆநந்திந்.]

ஆநந்திகம்—அநேகம். (சி. சி.) [அநந்தம் என்பதினின்றுவந்த தத்திதம்.]

ஆநந்தித்தல்—1. சந்தோஷித்தல். 2. சுக்கில சுரோணிதக் கலவையி லின்பமுறுதல். (சிவப். கட். ௩. அங்கம்.) 3. பெருமகிழ்ச்சி கொள்ளல்.

ஆநந்தியம்—1. அழிவின்மை. 2. ஆநந்தத்தின்றன்மை. 3. காலத்தில் அல்லது இடத்தில் அல்லது எண்ணில் அந்தமின்மை. 4. நித்தியம்.

ஆநந்தை—1. உமாதேவி. 2. கொட்டைக் கரந்தை. 'அதிற்பெய்நெய்யாநந்தையிரதம்' (தைல. தைலவ. ௩௯.) 3. குறிஞ்சியாழ்த் திறத்தொன்று. (பிங்.) 4. பேராமுட்டி.

ஆநநம் — 1. முகம். 'ஆநநமாறுள வண்ணல்' (கந்தபு. சூரபன்-வதை. ௯௫.) 2. வாய். [ஈந - சுவாசித்தல்.]

ஆநம் — 1. கள். 2. பூரகவாயு. 3. மஸ்துள்ள பாநம்.

ஆநமிதம்—1. குனிதல். 'சொற்படாநமித மென்ன' (கொக்கோ. ௬: ௫.) 2. வளைந்தது. [ஆ: நம - வளைவு.]

ஆநபநம்— } 1. உபநயநம். 2. கொண்டு
ஆநயம் — } வருகை. [ஆ: நீ-அடைதல்.]

ஆநர்த்தம் — 1. ஒரு தேசம். 2. கடல். 3. தோல். 4. நாடகசாலை. 5. நீர். 6. யுத்தம். [ஆநர்த்த: ஆ; ந்ருத் - கூத்து.]

ஆநாதசுரம்—ஒருவகைச் சுரம். இது: மலபந்தம், மலத்துவாரத்திற் சூலை, அக்கிமந்தம் முதலிய குணங்களையுண்டாக்கும். (சீவரட். ௫0.) [ஆநாஹம் - கட்டுதல்.]

ஆநாகம்—1. சலவடைப்பு. 2. மலங் கட்டுப்பட்டுநிற்றல். [ஆநாஹ: ஆ; நஹ் - கட்டுதல்.]

ஆநாகரோகம்-வயிற்றில் இரைச்சல் மலச்சிக்கல் சுரம் சுவாசம் முதலிய உபத்திரவங்களையுண்டாக்கும் ஒருவகைரோகம். (சீவரட். ௧௧௯.) [வயிற்றையிழுத்துப்பிடிப்பதால்வந்த பெயர். ஆநாஹம் -இழுத்துப்பிடித்தல்.]

ஆநாயகலை—வலைபோன்ற சீலை.

ஆநாயம்—1. வலை. 2. வாயுசெல்லத்தக்க கண்ணறை. [ஆநாய]

ஆநாயி—வலைஞன்.

ஆநி—1. இன்மை. 2. கழிதல். 3. குறைவு. 4. கேடு. 'உரவோய்நின்-பிள்ளைமேனிக்கோரானிவந்தில தினிச்செயலென்' (இராமா. யுத். இரணிய. அ௬.) 5. விடுதல். [ஹாநி.]

ஆநிகம்—ஆங்கிகம்.

ஆநியம்—1. நாள். (பிங்.) 2. பருவம். (சூடா.) 3. பொழுது 'பன்னுசெந் தமிழ்சேர் செஞ்சொற் பராச சேகரன்கை-யன்னதப் பொழுதின் மற்றை யாநியத் தொவ்வா தன்றே' (இரகு. அயனுத. ௬0.) 4. மூலநாள். (பதிற்றுப். 69. 14.) 5. நாட்படி. 'இரட்டியாநியம் பெறுவதாகவும்' [ஸஹ்: என்னும் வடமொழியினின்றுவந்ததுபோலும்.]

ஆநிருண்யம்—கடனின்மை. [ஆந்ருண்ய: அநிருணம் என்பதினின்றுவந்த தத்தித பதம்.]

ஆநிலன்—1. அநுமான். 2. பாண்டவருள் ஒருவனாகிய வீமன். 'இருவோரினு மாநிலன் பலவான்' (பாரத. பதினெட். ௧அ௧) [அநிலன் மகன் எனப் பொருள்படுந் தத்திதபதம். அநிலன்-காற்று. ஆநிய]

ஆநிலி — 1. அநுமான். 2. சோதிநட்சத்திரம். [அநிலசம்பந்தமுடையது.] 3. வீமன். 'ஆநிலியி னுடல்விழ வமரிடை யாவி கவர்தர' (பாரத. மணிமா. ௬௯.) [அநில; இ-ஒரு விகுதி. அநிலன்மகன் எனப் பொருள் படும் தத்திதம்.]

ஆநிலை—பசுக்கொட்டில்.

ஆநின்று — நிகழ்காலஇடைநிலைகளுள் ஒன்று.

ஆநீர்—கோசலம். 'கரந்தனன் போத வாநீர் கண்கழூஉக் காணப் பட்டான்' (இரகு. யாக. ௯அ.)

ஆநுகூலியம் — அநுகூலமுடையது. [ஆநுகூல்ய: அநுகூல; ய-விகுதி.]

ஆநுசங்கிகம்—1. காரியமாகத்தொடர்ந்தது. 2. கூடநிகழ்வது. 'ஐந்துகிருத்தியமும் ஒவ்வொருகருத்தாவுக்கு ஒவ்வொருகிருத்தியஞ் சுவதந்திரமாகவும், நின்றநாலுகிருத்தியமும் ஆநுஷங்கிகமாகவும், பரமசிவனது சத்தியாலேபொருந்தும்' 3. சம்பந்தப்பட்டது. [ஆநுஷங்கிக: அநு; ஸங்க - தொடர்பு. க-ஒரு வ-வி. ஆதிநீடலும், இகரத் தோற்றமும் விகாரம்.]

ஆநுபூர்வம் — கிரமமான தொடர்ச்சி. [ஆநுபூர்வ.]

ஆநுபூர்வி — கிரமமான தொடர்சசி. (சீவக. 3076. உரை.)

ஆநுபூர்விகம்— } கிரமம், வரிசை.
ஆநுபூர்வியம்— }

ஆநுமாநிகம் — அநுமானிக்கப்பட்டது. [அநுமாந; இக - ஒரு விகுதி.]

ஆநெய்—பசுவின்நெய்.

ஆப்தர் — உள்ளது கூறுவோர். 'ஆப்தர் மொழியொன்று கண்டால்'(தாயு. எங்கு. க.)

ஆப்தன்—1. நண்பன். 2. நம்பத்தக்கவன்.

ஆப்திகம் — தலைத்திவசம். [ஆப்திக: அப்த-வருடம். இக-ஒரு விகுதி.]

ஆப்பம்—1. கும்பராசி. 2. அப்பம்.

ஆப்பி—பசுச்சாணி. 'புற்பைங்கூழாப்பி' (ஆசாரக்கோ. உ அ.)

ஆப்பிடல்–அகப்பட்டுக்கொள்ளல். 'மாப்பிட்ட-ஆப்பிட்டுக்கொண்டடிபட்ட' (தனிப்பா. பலவித். க.)

ஆப்பியந்தரம்–உள்ளானது. 'அரும்பரைபூசைபாகிய மாப்பியந்தர மெனவிரண் டாகும்' (சூத. சிவமான். Ꮼ: உ.) [ஆப்யந்தர: அபி; அந்தர - உள்.]

ஆப்பியந்தரவாயு — சுரோத்திராதி ஞானேந்திரியங்களைச் சேட்டிப்பிக்கும் பிராணன் முதலிய வாயு. (த. நி. போ. ககச.) [அபி - அந்தர - உள்.]

ஆப்பியம்—1. அடையத்தக்கது. 2. அப்பு தத்துவம். (சி. சி. உ: ᏬᎯ. சிவாக்.) 3. பகலில் வரும் ஆறுவதுமுகூர்த்தம். (விதானமாலை. எக) 4. சலசம்பந்தம். (சி-வி. கிரி. கிஅ - ககூ. தாற்) 5. நீரையுடையது. [1, 2, 4, 5, ஆப்யம்: அப்-நீர். ஆப் - அடைதல். ய - ஒரு விகுதி.]

ஆப்பியமூர்த்தி—அட்ட மூர்த்திகளிலொன்று; அது காலதத்துவாந்தம் வியாப்தியுள்ளது. (சி-வி. கிரி. ௩௩-உரை.)

ஆப்பியாசிகம்—அப்பியாசசம்பந்தமுடையது. [ஆப்யாஸிக: அப்யாஸ; இக - ஒரு விகுதி.]

ஆப்பியாநம்—சரீரக்கொழுப்பு. [ஆப்யாந]

ஆப்பியாயநம்—1. கொழுப்பாதல். 2. திருப்தி. 'ஆன்மாவினுடைய ஆப்பியாயகார்த்தமாக'(சி. சி. அ: ௩. சிவாக்.) [ஆப்யாயந]

ஆப்பியோபசாரம் — பஞ்சோபசாரங்களில் ஒன்று; அது சலசம்பந்தமான பாநீயம். (சி-வி. கிரி. கஅ, ககூ. தாற்.)

ஆப்பிரச்சநம்—ஒருவன் தன்னிடம் வரும்போது அல்லது போகும்போது அவனுக்குச் செய்யும் உபசாரம். [ஆப்ரச்சந: ஆ; ப்ரச்சந - கேட்டல்.]

ஆப்பிளாயம்—பிரளயபரியந்தம். (சி. சி. சூ: ௩. சிவாக்.) [ஆ - வரையும். ப்ரளய - ஒடுக்கம்.]

ஆப்பிலவநம் — 1. நீர்தெளித்தல். 2. முழுகுதல். [ஆப்லவநம்: ஆ; ப்லு-நீந்துதல்.]

ஆப்பு—1. எட்டி. (மூ. அ) 2. மரம்பிளக்கும்போது பிளப்புவாயில்வைத்து இறுக்கும் ஒரு கருவி. 'ஆப்பதனைப் பிடித்தசைத்த பேய்க்குரங்கு போல' (தனிப்பாடல்.) 3. மூளை. 'ஆப்பதில்லாததேரிவையெலாமொன்றாகும்' (அறப். சத. 57) 4. நோய். 5. கட்டு. (திவ். இயற். 1. 75.) 6. சரீரம். (திவ். இயற். 4. 93).

ஆப்புளண்டம்—கையாந்தகரை. (மலை)

ஆபகம்—ஆறு.

ஆபகேயன்—1. கிருட்டிணன். 2. நதியின் மகன். 3. வீட்டுமன். [ஆபகேய: ஆபகா - நதி. எய - ஒரு விகுதி.]

ஆபகை–1. நதி. 'ஒருதுசெல் வடிக்கணைகளாபகை யெனப்பெருகி யோடிய முடைக்குருதியால்'(இரகு.திக்கு.உகூ.) 2. நீரோட்டம். [ஆபகா: ஆப-நீர்க்கூட்டம். கா - போவது.]

ஆபச்சத்தமநு—ஒரு மந்திரம். 'பொருவிலாபச்சத்தமநுப் புகன்று' (திருவானை. கோச். எச.)

ஆபணம்-ஆவணம், அங்காடி. [ஆபண]

ஆபணிகம்—1. அங்காடியின் சம்பந்தமுடையது. 2. வாணிகசம்பந்தமுடையது. [ஆபண; இக - ஒரு விகுதி.]

ஆபணிகன் — வாணிகஞ்செய்வோன். [ஆபண; இக.]

ஆபணியம்—1. அங்காடிச்சரக்கு. 2.அங்காடிவீதி. [ஆபண-ய-ஒரு விகுதி.]

ஆபணீயம்—1. அங்காடிச்சரக்கு. 2. அங்காடிவீதி. [ஆவண; ஈய-ஒரு விகுதி.]

ஆபந்தம்—1. அன்பு. 2. ஆபரணம். 3. கட்டுதல். 4. நுகம். 5. பிரதிட்டை. [ஆவந்த: ஆ; வந்த - கட்டு.]

ஆபந்தம்பசூத்திரம் — ஆபத்தம்பராற் செய்யப்பட்ட சூத்திரம். இது: பிராமணருளொருவகையாராற் கைக்கொள்ளப்படுவது.

ஆபத்தம்பம் — தருமநூல் பதினெட்டினொன்று. இது: வேதாங்கமாகிய கற்பவகைகளு ளொன்று; ஆபஸ்தம்பமுனிவராற் செய்யப்பட்டது. (பிங்)

ஆபந்தம்பன்—ஒரு முனிவன். 'அரிதகன் பவுலன் சுமுந்தர னாபத்தம்பன்' (தணிகை. நைமி. ௧௦.) [ஆவஸ்தம்பஃ]

ஆபத்தி—1. அடைதல், பெறுதல். 2. அதிக்கிரமித்தல். 3. இடுக்கண்ணுன சம்பவம். 4. தவறு. 5. பொருத்துதல். [ஆவத்திஃ: ஆ; வத் - போதல்.]

ஆபத்து—1. அவசரம். 2. இடுக்கண். 'ஆபத்தால் வந்தடைந்தவர்போல்' (பாரத. துருவாச. ௧.) 3. துக்கம். 4. பெருந்தேவை. [ஆவத்.]

ஆபத்துசம்பத்து—தாழ்வுவாழ்வு.

ஆபதநம்—1. அறிவு. 2. இறங்குதல். 3. சம்பவித்தல். 4. வருதல். [ஆவதநம்: ஆ; வத் - போதல்.]

ஆபதம்—ஆபத்து. 'சந்திராபதமுந் திநகராபதமு மிருபொழு தினுமெழச் சமைத்த - மந்திராதிகளும்' (பாரத. இந்திர. ௧௪.) [ஆவதம்.]

ஆபதுத்தாரணம் — ஆபத்தைநீக்கிக் காத்தல். 'ஆபதுத்தாரணவத்தியாயம்' (சீர்காழி.)

ஆபதோத்தாரணமூர்த்தம்—முனிவர் முதலானோர் ஆபத்துக்காலத்தில் தமது துயர்கூறி யாசிக்க, அவர்கள் துன்பத்தைத் தொலைத்துச் சகாயஞ்செய்யும்படி எழுந்தருளியுள்ள சிவனது திருக்கோலம். அக்கோலமாவது, மானுடச்சட்டைசாத்தி இரண்டுகரங்களோடு தண்டமும் கபாலமு மேற்று வீற்றிருத்தலும், அவ்வச்சமயங்கட்கேற்ப நானாவகையுருவங்கள்கொள்வதுமாம். (சிவபராக்கிரமம். ௧௩௯, ௩௪௦.)

ஆபதோத்தாரணன்—1. ஆபத்தை நீக்குவோன். 2. வைரவமூர்த்தி. [ஆவத் - ஆபத்து. உத்தாரண - கடத்துவோன்.]

ஆபந்தம்—1. அலங்காரம். 2. அன்பு. 3. கட்டு. 4. நுகக்கயிறு. [ஆவந்த: ஆ; வந்த - கட்டு.]

ஆபந்நம்—1. அடைந்தது. 2. ஆபத்தடைந்தது. 3. தேடிக்கொண்டது. [ஆவந.]

ஆபந்நன் — சம்பாதித்துக்கொண்டவன்.

ஆபநம்—1. அடைதல். 2. மிளகு (மலை). [ஆவந]

ஆபநிகம்—மரகதரத்தினம். [ஆவநிக.]

ஆபநிகன்—மிலேச்சன். [ஆவநிகஃ.]

ஆபம்—1. தீவினை. 2. நீர். 'வல்லிசம்படியுகரமாபமிருங்கரமடவந்துபுன லரைங்காம்' (தைல. தைலவ. ௬.) 3. நீர்க்கூட்டம். [ஆவஸ்.]

ஆபரணக்கடைப்புணர்வு —பின் கொக்கி.

ஆபரணந்தாநம்—இலக்கினத்துக்குமூன்றுமிடம். (சோதிடக்கடல்.)

ஆபரணம்—1. அணிகலம். 'ஆபரணஞ் சூடி லரியலீலாலயமாம்' (பதார்த்தகுண. ௧௪௨௨.) 2. சத்தாவத்தையினொன்று. அஃது, இருபத்தைந்து தத்துவங்களையுமொன்றற்கொன்று பேதந் தெரியவொட்டாமல் மறைத்திருப்பது. 3. சேலை. 4. போஷித்தல்.

ஆபராணிகம்—பிற்பகலுக்குரியது. [ஆவராஹ்ணிகஃ: அவராஹ்ண என்பதினின்று வந்த தத்திதபதம்.]

ஆபவன் — வசிட்டமுனிவன். [ஆவவ.]

ஆபற்காலம் — ஆபத்துக்காலம். [ஆவத்கால]

ஆபற்சந்நியாசம் — ஆபத்துக்காலத்திற் பெறுந் துறவு. 'ஆபற்சந்நியாசந் தீது' (வைராக். தீபம். ௨௫.) [ஆவத்; ஸந்ந்யாஸ-துறவு.]

ஆபற்சந்நியாசி—ஆபற்சந்நியாசம்பண்ணிக்கொண்டவன். 'இக்கணத் திருந்த தினிவருங் கணத்து டிருக்குமோ மரிக்குமோ வுடலென் - றக்கண மனையர் திகட்கான்

றணியா மன்றென வெணித்துற வறஞ் சார் - மிக்கவ ளுபற் சந்நியாசி' (வைராக். தீபம். உசு.)

ஆபன் — அட்டவசுக்களிலொருவன். 'குங்குமமெழுதுங்குடவரைத் தடந்தோ ளாபன்' (கூர்மபு. அந்தகா. கூ.) [ஆுவஃ.]

ஆபனம்—மிளகு (மலை).

ஆபாகம்—1. அடுப்பு. 2. மட்கலஞ்சுடுஞ் சூளை. [ஆவாகஃ: ஆ; வஹ் - சுடுதல்.]

ஆபாசம்—1. அபிப்பிராயம். 2. ஒளி. 3. கெடுதல். 4. பயங்கரரூபம், இறுமாந்த தோற்றம். 'அல்லார்ந்த மேனியொடு குண்டு கட் பிறையெயிற் ருபாச வடிவமான' (தாயு. தேசோ. கூ.) 5. பிரதிவிம்பம். 6. பொய்த் தோற்றம். 'ஊத்தைச் சரீரத்தை யாபாசக் கொட்டிலை' (பட்டின-பா.) 7. போலிநியா யம். 8. மிகுவிருப்பு. [ஆுஹாஸ.] 9. அசுத் தம். 'ஆபாசக்கொட்டிலை' (பட்டினத்தார். திருப்பா. திருவேகம். 27.)

ஆபாசன்—1. சிவன். 'சாற்று காணங் களு மாபாசனுக்கே விடயம்' (உபநிட.உரு.) 2. போலிநியாயம்பேசுவோன். 'அவலனை யாபாசனை' (திருப்பு. ருகரு.)

ஆபாசித்தல்–1. உள்ளதுபோலத்தோற்று தல். 'ஆன்மாவின்ஞாகம் பிராகபாவம்போல ஆபாசித்தலால்' (சி. சி. எ: உ. ஞாகப்.) 2. பிரதிபிம்பித்தல்.

ஆபாடணம்—சம்பாஷித்தல். [ஆஹாஷ ண: ஆ; ஹாஷ் - பேசுதல்.]

ஆபாடம் — பாயிரம். [ஆஹாஷ: ஆ - முன். ஹாஷ் - பேசுதல்.]

ஆபாதசூடம் — அடிதொடங்கி முடிவரை யும். 'ஆபாத-சூடங் கருதித் தொழுதார் சில மாதர்' (பாரத. இராய. எஅ.) [ஆ - வரை. வாக - அடி. வூடீ - முடி.]

ஆபாதபாதாளம் — பத்து நூ றுயிரம் யோசனை யுச்சுமுடைய பாதாளம். இது கூர்மாண்டபுவகத்துக்குமேலுள்ள ஒன்பதி னுயிரம்யோசனை உயர்ச்சியுடைய இடை வெளிக்குமேலா யிருப்பது. 'உரைத்தபுரி யிசைவெளிதா னென்பதினு ருயிரமாக் - தெரித்ததன்மே லாபாத பாதாள நீர்க்கத் தைத்-தரித்திடுக பத்திலக்க மென'(சிவதரு. கோபுர. உக.)

ஆபாதம் — 1. அடர்த்தல், தாக்கல். 2. இறங்கச்செய்தல். 3. இறங்குதல். 4. உபத் திரவஞ்செய்தல். 5. ஓடுதல். 6. சம்பவித்தல். 7. நட்டஞ்செய்தல். 8. வீழ்த்தல். 9. விழு தல். [4, 7. ஆவாய. 1, 2, 3, 5, 6, 8, 9. ஆவாத: ஆ - எதிர். வத் - போதல். வத் - வதைத்தல்.]

ஆபாதன்—நீயன். 'ஆபாதனேனு நாளு நினைவது.' (திருப்பு. 326.)

ஆபாநம்–மதுவிற்குங் கடை. [ஆவாநஃ: ஆ; வா - குடித்தல்.]

ஆபாலகோபாலம்—எல்லோரும். (சி. சி. பாயி. சத்திவண. சிவாக்.)

ஆபாலி—பேன். [ஆவாலி.]

ஆபி-பூராடநட்சத்திரம். [ஆவி: அவ் - நீர். இ-ஒரு விகுதி.]

ஆபிகை—கொட்டாவிவிடுதல். [ஹாவிகா.]

ஆபிசாரம் — 1. சத்துரு மரணமடையும் படிசெய்யும் ஒரு கொடுந்தொழில். (திருவிளை. யானையெ. கo. உரை.) 2. ஆபிசாரவேள்வி. 'தென்னனை யாபி சாரஞ் செய்துயிர் செகுத் தால்' (திருவிளை. யானையெ. கo.)

ஆபிதாநீயகம் — அபிதாக சம்பந்தமுடை யது. [ஆஹியாநீயக.]

ஆபிலவநம்–1. நீர்தெளித்தல். 2. முழுகு தல்.

ஆபீடம்–1. இறுக்குதல். 2. உச்சித்தலையி லணியும் மாலை. 3. வருத்துதல். [ஆவீவ: ஆ; வீவ - வருத்தல்.]

ஆபீநம் — 1. ஆயர்வீதி. (சூ. நிகண். ரு: சஅ.) [உவின்சிலோ சிற்பர்வீதி என்பர்.] 2. கிணறு. 3. கொழுப்பு. 4. பசுவின்மடி. (சூடா.) [2, 3, 4. ஆவீந: அவ் - நீர். ஏ௦ந - ஒரு வ-வி.]

ஆபீரபள்ளி — இடைச்சேரி. [ஆஹீர வஜீ: ஆஹீர - இடையன். வஜீ - சேரி.]

ஆபீரம்—ஆயர்வீதி. (சூடா.)

ஆபீரன் — இடையன். [ஆஹீர]

ஆபீரி — இடைச்சி. [ஆஹீரீ.]

ஆபீலம் — 1. சங்கடம். 2. நவரசங்களி னென்று.

ஆபூடம் — ஒருவகை உலோகம்; அது, துத்தநாகம். [ஆவ-ஷி]

ஆபூப்பியம்—1. இடித்த மா. 2. நஞ்சுக் கொடி. [ஆவ-வ்யு: அவ-வ; ய - ஒரு விகுதி.]

ஆபூபிகம் — அப்பக்கூட்டம். [ஆவ-விக: அவ-வ - அப்பம். இக - ஒரு விகுதி.]

ஆபூர்த்தி — 1. திருப்தி. 2. நிறைவு. [ஆ வ-திசி: ஆ; வ-திசி - நிறைவு.]

ஆபூர்யாணி — தாலுத்தாநத்திலிருக்கும் மகாரத்திலுண்டான இருபத்துநான்குகலை களி லொன்று. (சி-லி. கிரி. உஉ. தாற்.)

ஆபூர்வம் — கன்மபலம். 'செய்தகருமம் நசித்து அதனல் ஒராபூர்வஞ் சனித்துப் பல பரியந்தம் ஸம்ஸ்காரான்மாவாய்' (சி. சி. உ: ருஅ. சிவாக்.)

ஆபேட்சிகம்—அபேட்சையோடுகூடியது. 'இந்தவியாபகத்துவம் ஆபேட்சிக வியாபகம் என்றும், நிரபேட்சிகவியாபகமென்றும் இரு வகையாம்' (விசார. ககள.)

ஆபை—1. அழகு. 2. ஒளி. 3. தோற்றம். 4. நிறம். [ஆஹா: ஆ; ஹா - ஒளி.]

ஆபோக்கியம்—இலக்கிநத்துக்கு மூன்று ஆறு ஒன்பது பன்னிரண்டாங் தானம். (குமார. இராசி. உ.)

ஆபோக்கிலிமம்—இலக்கிநத்துக்கு மூன்று ஆறு ஒன்பது பன்னிரண்டாங் தானம். [ஆ வொக்லிம.]

ஆபோகம்—1. அநுபவம். 2. தேவுறுப்பி னென்று. (சிலப்பதி.) 3. சுற்றெல்லை. 4. பூரணம். 5. முயற்சி. 6. வருணன் குடை யாகப் பிடித்த பாம்பின் படம். 7. வளைவு. [ஆஹோம.]

ஆபோகவன் — ஆயோகவன். (பரா. மி. கசஅ.)

ஆபோசநம் — உணவுண்பதற்குமுன்னும் உண்டபின்னும் மந்திரபூர்வமாக நீரை உட் கொள்ளுகை.

ஆபோதநம் —1. அறிவு. 2. போதித்தல். [ஆவொயந: ஆ; வுய் - அறிதல்.]

ஆபோஞ்சோதி—அப்புவாகியசோதி. (த.நி. போ. உஅ௦.) [ஆவொஜ்யோதி.]

ஆம்—1. அவ்வியயம். 'ஓம் ஆம் என்பன உடன்பாட்டையுணர்த்தும் வடமொழியவ் வியயங்கள்' (பாரத. கிருட்டிண. ச௦. குறிப்பு.) 2. ஆகுமெனப்பொருள்படுஞ் செய்யு மென்னும்வாய்பாட்டுச் சொல். 3. ஈரம். 4. ஒரு சாரியை. 5. ஓரசைச்சொல். 'வளக்கரி யன்றுகொலாம்' (கம்பராங். சுங.) 6. ஒ ரிகழ்ச்சிக்குறிப்புமொழி. 'அன்னை யானவரு மிருவராமுத லளித்த தந்தையர்களைவராம் - பின்னையாசைகொடுகுருகுலத்துரிமைபெறுவ ராம்' (பாரத. கிருட். கஉச.) 7. ஒருவம வுருபு. 'அல்லாங்குழலாள்' 8. ஒரு வாக்கியத் திற் பயனிலையாகவரும் வினைச்சொல் வினை யாலணையும்பெயராய்எழுவாயினிற்க அதனை முடிக்குஞ்சொல்லாய் 'யான் பிறர்சொல்லக் கேட்டேன்' எனப் பொருள்விளக்கும் ஒரு சொல். 9. கடுகு. (இராசவைத். மகுட.) 10. சம்மதத்தையுணர்த்து மொரு வடமொழி. 11. சிறுகீரை. (இராசவைத். மகுட.) 12. தக்கது. 'ஏறு மன்றி லேற்றவு மாமன்றென்னு தாள்' (பாரத. நான்கா. சக.) 13. தனித்தன் மைப்பன்மைப் பொருளிலும் உளப்பாட்டுத் தன்மைப்பன்மைப் பொருளிலும் வரும் ஒரு விகுதி. 14. நீர். 'ஆமிழியணிமலை அலர் வேங்கைத்தகைபோல' (கலி. சஅ.) 15. வெந் நீர். (இராசவைத்.) 16. வெள்ளரி. (இராச வைத்.) 17. அழகு. 'ஆம்பாற்குடவர்மக ளோ' (சீவக. 492.)

ஆம்பல் — 1. அடைவு. 2. இசைக்குழல், ஆம்பற்பண்ணையுடைய குழல். 'பையுள்செய் யாம்பலும்' (சிந்தா. பதுமை. கசகு.) 3. ஊதுகொம்பு. 'வீணைகுழலாம்பல்' (கந்தபு. இரண்டா. ருச.) 4. ஒரு பண். 'ஆம்பற்குழ லாற் பயிரெம் படப்பைக் காஞ்சிக்கீழ்ச் செய் தேங் குறி' (கலி. க௦அ.) 5. ஒழுங்கு. 6. ஒருபேரெண். 'அடையடுப்பறியாவருவியாம் பல்' (பதிற்று. சுரு: கரு.) 7. கள். (பிங்கல. ருகருரு.) 8. குமுதம், அல்லி. 'ஆம்பலம் போதுளவோ' (திருக்கோ. கக.) 9. சந் திரன். 10. துதி. 11. துன்பம். 12. நெல்வி.

13. புளியாரை. 14. மூங்கில். 'சுருதிச்சயக் கோடையாம்பன்முத்தே' (மறைசை. கூஉ.) 15. யானை. 'புதைகொண்மா மதத்த வாம்ப லாகசப் புகிதப் பொற்றேன்' (இரகு.காப்பு.)

ஆம்பலரி—1. சூரியன். 2. மூதலை. [ஆம்பல் - குமுதம், யானை. அரி - பகை.]

ஆம்பலா—புளியாரை. (மூ. அ.)

ஆம்பற்குழல்—1. ஆம்பலென்னும்பண்ணைப் பாடற்கிசைந்த குழல். (பத். குறிஞ்சி.உஉஉ.) 2. மூக்கிற்குழல். 3. வெண்கலத்தாலே குமுதவடிவாக அணைசுபண்ணிச் செறித்த வோ ரிசைக் குழல், 'ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழி' (சிலப். ஆய்ச்சியர்கு. பாட்டு. உ.)

ஆம்பால்—ஆகுந்தன்மை, முடியுங்காலம். 'நோற்றிடுபகுதியாலாம்பாலொன் றில்லை' (கந்தபு. தவங்கா. கக.)

ஆம்பி — 1. இறைக்குங்கருவிவகையுள் ஒன்று; அது, பன்றிப்பத்தர். 'ஏற்றத்தோடு வழங்குமகலாம்பியினிசை' (மதுரை. கக.) 2. ஒலி. (சூடா.) 3. காளான். 'ஆடுகனி மறந்த கோடிய ரடுப்பி-னாம்பி பூப்ப' (புறநா.கசுச.)

ஆம்பிகேயன் — 1. முருகக்கடவுள். 2. திருதராட்டிராசன். [ஆம்பிகேய: ஸம்பிகா - உமை, காசிராசன்மகள். எய-ஒரு விகுதி.]

ஆம்பியம்—பாதரசம். (மூ. அ.)

ஆம்பிரம்—1. ஆமிரம்—தேமா (திவா.) 2. புளிப்பு. 3. புளிமா. (1, 2, 3. சூ. ங்கண். கக: மகரவெ. கச.) 4. ஆம்பிலம்.

ஆம்பிலம்—1. கள். (மூ. அ.) 2. சூரை. 3. புளிப்பு. (பிங்). 4. புளியமரம். (திவா.) 5. ஆமிலம்.

ஆம்பு—காஞ்சொறி (மலை.)

ஆம்புடை—உபாயம்.'ஆம்புடைதெரிந்து' (சீவக. 232.)

ஆம்புடையான்—கணவன். [பக்கத்தவன் என்றபடி.]

ஆம்புலம்—சூரை. (மலை.)

ஆம்பூறு—1. சுரை. 2. சூரை. (மூ. அ)

ஆம்மிரம்—ஒருபலம்.'மோதியலார்தவை யைந்தைந்தாம்மிரகீர்கடம்பை' (தைல. (தைலவ. சஅ.)

ஆம்மிலம்—புளி.

ஆம்மிலை—ஆமிலை, புளியாரை.

ஆமக்கட்டி—சுரக்கட்டி.

ஆமக்கணரோகம்—ஒருவகைக் கணரோகம். அது, நெஞ்சிற் றுடித்தல் சிறுநீர் மஞ்சளாக இறங்குதல் முதலிய குணங்களை உண்டாக்கும். (சீவரட். உகசு.)

ஆமக்கழிச்சல்-சீதபேதி. (பாலவா. 894.)

ஆமகணம் — குழந்தைகளுக்குச் சீத வழும்புவிழும் ஒருநோய், சீதக்கட்டு.(மூ.அ.)

ஆமங்கர் — கோமேதகீவில் வசிக்குஞ் சாதியாரு ளொருவகையார்.'மந்தகராமங்கர் மாகதர் மானசர் மாக்கன் மதிமுன்றெய் வம்' (கந்தபு. அண்டகோச. ருரு.)

ஆமசந்நி — ஆமசுரத்தினின்றுண்டாகு மொருவகைச் சந்நி.

ஆமசிராத்தம் — பாகம்பண்ணாது பச்சையாகப் போசனபதார்த்தத்தைக் கொடுத்துச் செய்யுஞ் சிராத்தம். 'பின்ன ரிரணிய சிராத்தம் பிறங் காமசிராத்தம்' (சேதுபு. சேதுபல. கஅ.) [ஆம - பச்சை. ஶ்ராத்த- பிதிரர் களைநோக்கிச்செய்யும் ஒரு கிரியை.]

ஆமசுரம் — குழந்தைகளுக்கு அஜீரணத்தால் வரும் ஒருவகைச்சுரம்.[ஆம-சமியாமை. ஜ்வர - காய்ச்சல்.]

ஆமசூலம்-சமியாமையினால்வரும் வயிற்று வலி, வயிற்றுக்குத்து.(மூ.அ.)[ஆமஶூல.]

ஆமசூலரோகம்—ஒருவகைச் சூலரோகம். அது, அதிசலபாகமுதலியகாரணங்களால் அசீரணம் விருத்தியடைந்துபிறக்குஞ் சூலரோகம். (சீவரட். கஉக.) [ஆம-அசீரணம்.]

ஆமசூலை— 1. ஒருவகைச் சூலைநோய். 2. சமியாமையால் வரும் வயிற்றுவலி. (மூ. அ.)

ஆமடி—எட்டி. (மலை.)

ஆமண்டம் — 1. அலங்கரித்தல். 2. ஆமணக்கு, சிற்றாமணக்கு, (தைல.தைலவ.கஉ.) [ஆமண்ட:]

ஆமணக்கழுத்து—ஆமணக்கங்கொட்டை.

ஆமணக்கு — ஒரு செடி. அது, 1. செவ்வாமணக்கு, 2. சூரியகாந்தவாமணக்கு, 3. மலையாமணக்கு, 4. கடலாமணக்கு, 5. காட்டாமணக்கு, 6. ஏரிக்கரைக்காட்டாமணக்கு,

7. எலியாமணக்கு, 8. புல்லாமணக்கு, 9. பறங்கியாமணக்கு, 10. மணியாமணக்கு, 11. பேராமணக்கு, 12. படுக்கையாமணக்கு, 13. அறுபதாங்கொட்டை, 14. சிற்றாமணக்கு எனப் பலவகைப்படும்.

ஆமணக்குநெய் — சிற்றாமணக்கங்கொட்டையிலிருந்து எடுக்குநெய். 'ஆமணக்குநெய்யா லனலமுண்டாம்' (பதார்த்த. கடுங.)

ஆமயாந்தீ—கோரோசனை. (மூ. அ.)

ஆமந்திரணம்—1. அழைத்தல். 2. வந்தனஞ்செய்தல். 3. விளிவேற்றுமை. 4. வினவுதல். [ஆமந்த்ரண: மந்த்ர - ஆலோசனை.]

ஆமந்திரிகை—இடக்கையென்னும் வாச்சியம். 'முழவொடு கூடிநின் றிசைத்த தாமந்திரிகை' (சிலப். அரங். 143.)

ஆமபித்தரோகம் — ஒருவகைப் பித்தரோகம். (சீவரட். கசரு.)

ஆமம்—1. கடலை. 2. சமியாமை. 3. சீதபேதி, சீதக்கட்டு, சீதம், சீதவழும்பு. 'விள்ளாத வாமம் விழுவிக்கும்' (பாலவா. எசசு.) 4. தண்ணீர்முட்டான். (இராசவைத்.) 5. துவரை. 6. நோய். 7. பதர்களைந்தெடுத்த தானியம். 8. பாகஞ்செய்யாததண்டுல முதலியன. 9. மலவரட்சி. 10. முதிராதது. [ஆம.]

ஆமயம் — 1. நோய். 'ஆமயந்தீர்த் தடியேனை யாளாக் கொண்டார்' (தேவா. 1231, 1.) 2. பசுச்சாணி. 'அத்தலை நிலத்தை நீரா லாமயம் பூசி' (கந்தபு. வில்வ. வதை. கஉ.) [ஆமய.]

ஆமயாவி—1. அசீரணத்தால் வாதிக்கப்பட்டவன். 2. குன்மநோயாளி. 3. நோயாளி. [ஆமயாவிந்.]

ஆமயாவித்துவம்–அசீரணம். [ஆமயாவித்வம்: ஆமயாவிந்-அசீரணநோயாளி. த்வம்-தன்மை.]

ஆமர்த்தகமடம் — கோதாவரிக்கரையிலே மந்திரகாளீசுவராலயத்துக்குச் சமீபமாகத் திருவாசமுனிவராலே தாபிக்கப்பட்ட ஒரு மடாலயம். (சி. சி. அ: மு. ஞானப். சி-வி. கிரி. அக. தாற்.) [இம்மடத்திற்கதிபதி சனற்குமாரன்.]

ஆமர்த்தம்–1. நருக்குதல். 2. நெருக்குதல். 3. பிடுங்குதல்.

ஆமரணாந்தம்–மரணபரியந்தம். [ஆ-வரை. மரண - சாவு. அந்தம் - முடிவு.]

ஆமரணாந்திகம்— மரணபரியந்தமுள்ளது. [ஆ - வரை. இக - விகுதி.]

ஆமரம்—எட்டி. (மலை)

ஆமரி—வார்த்தை.

ஆமரிகம்—நெல்லி.

ஆமல்–1. மூங்கில். 2. விஷமூங்கில். (மலை)

ஆமலகம்—1. நெல்லிப்பழம். 'மாமுனிக் குணவாய் நின்ற மதுரவா மலகந் தன்னை' (பாரத. பழம்பொ. ங.) 2. நெல்லிமரம். 3. பளிங்கு. [ஆமலக.]

ஆமலகமலம் — 1. ஆகாசத்தாமரை. 2. கொட்டைப்பாசி. (மலை)

ஆமலகி—நெல்லி. 'கோகனக மாமலகியின் சா றெள்ளின்' (தைல. தைலவ. ஙo.)

ஆமலகை—1. நெல்லிக்கனி. 2. காய்ச்சல் குளிருள்ள விஷப்பிணி. (இராசவைத்.)

ஆமலம்—பரிசுத்தம். 'இறையாமலங்கையான்' [நீட்டல்விகாரம்.]

ஆமவடை—ஒருவகை வடை.

ஆமவர்த்தம்—வரிவகை. (INSC.)

ஆமவாதரோகம் — வாதநோய்வகையிலொன்று.

ஆமளம்—சிவதோத்திரவகையில் ஒன்று. 'ஆம ளஞ்சொலி யன்பு செயினல்லால்' (தேவா. 233. 4.)

ஆமா—1. காட்டுப்பசு. 'கானத்தி லுள்ள கலைமானினங் காட்சி யாமா' (பாரத. சம்பவ. சஎ.) 2. நெல்லிக்கனி. (இராசவைத்.)

ஆமாகோளம்— } கடுக்காய்ப்பூ.
ஆமாகோளா — }

ஆமாங்கு — 1. ஆகவேண்டியமுறை. 2. விபரீதம்.

ஆமாசயம் — 1. இரைப்பை. 2. வயிறு. [ஆமாஶய: ஆம; ஆஶய - இடம்.]

ஆமாசீரணரோகம்–கண்களிலும் நாடைகளிலும் அதைப்பு எப்பம்வாய்நீரூறல் முதலிய குணங்களையுண்டாக்கும் ஒருவகை அசீரணரோகம். (சீவரட். அக.)

ஆமாத்தியன் — 1. ஆலோசனைசொல்லுவோன். 2. சேனாபதி. 3. மந்திரி (திவா.). 4. வைத்தியன். [ஆமாத்ய:]

ஆமாந்திரர்–1. மந்திரிகள். 2. வைத்தியர்.

ஆமாத்தூர்—ஓரூர். (திருஞாந. தேவார. ஆமாத்.)

ஆமாதிசாரம் — வயிற்றுக்கழிச்சல். [ஆமாதிஸார: அதிஸார - கழிச்சல்.]

ஆமாலசகரோகம்-பிரமாணந்தப்பி மேன்மேலும் புசிக்கும் அசநகாதனுக்கு அந்த அன்னமானது வாந்தியாகாமலும், பேதியாகாமலும், ஜீரணிக்காமலும், ஆமமாகிய சிலேட்டுமத்திற்பிசிறிக்கொண்டுவேதனையையுண்டாக்கும் ஒருவகை அலசரோகம். (சீவரட். அஎ.)

ஆமாவாசியம்-அமாவாசையோடு சம்பந்தமுடையது. [ஆமாவாஸ்ய: அமாவாஸ்யா என்பதினின்று வந்த தத்திதபதம்.]

ஆமாறு-உபாயம். 'ஆமாறறியும்பிரானே' (திவ். பெரியாழ். 2. 7. 8.)

ஆமான்-காட்டுப்பசு.[னகரமெய்சாரியை.] 'ஆமானினக் திரியுந்தடஞ்சாரல்' (தணிகை. களவு. ௯௯௯.)

ஆமான்புகல்வி-ஆமானேறு. 'புழற்கோட்டாமான் புகல்வியுங் களிறும்' (குறிஞ்சிப். உ௫௯.)

ஆமிசம்—ஆமிடம்.

ஆமிடம்—1. அநுபவம். 2. இச்சை. 3. கைக்கூலி. 4. போசநம், உணவு. 'கோழ்வாயரியின் குலத்தாய்கொடுங் கூற்று முட்க-வாழ்வா யெனக்கா மிடமாய்வரு வாய்கொலென்று' (இராமா. சுந். கடறு. ௬௭.) 5. மாமிசம். 'ஆகலின் யானினியிதனுக்காமிடம்' (இராமா. கவந்தன். உ௪.) [ஆமிஷ.]

ஆமிநாயம்—1. ஆகமம். (சை. பி. ௯௦.) 2. பாரம்பரையான வழக்கம். 3. பாரம்பரியவுபதேசம். 4. வேதம். 'ஆதிகுருவினின்றுந்தொடக்கிப் பாரம்பரியமாகப் பயிலப்படுதலினாலும், கற்கப்படுதலினாலும் ஆமிநாயமெனவும்' (கந்தபு. நவீ. வேதாகமப். வேதாகமோ.) [ஆம்நாய: ஆ - வரை. ம்நா - பயிலல், நினைத்திருத்தல் ய - செயப்படுபொருள் விகுதி.]

ஆமிரம்-1. பலம். 'வெவ்வேறிரண்டாமிரஞ்சேர்த்து' (தைல. தைலவ. ௯.) 2. புளிப்பு. 3. மாம்பழம். 4. மாமரம். 'ஆடல்வே லெறித லோடு மாமிர வடிவாய்' (கந்தபு. சூரபன். ௪அஅ.) 5. புளியமரம்.

ஆமிரவணம்—மாமரச்சோலை. [ஆம்ர - மாமரம். வநம் - சோலை. நகரம் முன்னின்ற ரகரத்தைநோக்கி ணகரமாயிற்று.]

ஆமிருத்யுகா—நிவிர்த்திகலையிற் பிருதுவி தத்துவத்திலிருக்கும் ௧௦அ புவனங்களுள் ஒன்று. (சி-வி. கிரி. உக. ௬. உரை.)

ஆமிரேசன்—ஏகாம்பரநாதசுவாமி. 'அக்கூலத்தம ராமிரேசனை' (வேதாரணியபு. அந்தர்க். ௯.)

ஆமிரேடநம்—சொன்ன சொல்லைப் பின்னுஞ் சொல்லுதல். [ஆம்ரேடநம்: ஆ; ம்ரேட - பித்தம்.]

ஆமிரேடிதம்-1. அடுக்குத்தொடர்மொழி. 2. அடுக்குத்தொடர்மொழியின் பின்னுள்ளது. 'பாம்புபாம்பு' இதிற் பின்னது ஆமிரேடிதம். [ஆம்ரேடித.]

ஆமிலபித்தரோகம் — ஒருவகைப் பித்தரோகம். அது, மஞ்சளைக்கரைத்ததுபோலப் புளித்த வாந்தி சூலை அக்கினிமந்தம் நடுக்கம் இருமல் முதலிய குணங்களை யுண்டாக்கும். (சீவரட். ௧அக.)

ஆமிலம்-1. புளி. (தைல. தைலவ. ௯அ.) 2. புளிப்பு. (பிங்) 3. புளியமரம். (சூடா) [ஆம்ல.]

ஆமிலவிதக்தரோகம் —ஒருவகைரோகம். அது: மெத்தவும் புளிப்புள்ள வஸ்துக்களைப் புசிப்பதினாற் பிறந்து விழிகளில் வீக்கமும் நமைச்சலும் கலக்கலு முண்டாக்கும். (சீவரட். உ௫எ.)

ஆமிலிகை—1. புளித்தல். 2. புளியமரம். [ஆம்லிகா: ஆம்ல - புளி. இகா - ஒரு விகுதி.]

ஆமிலை—புளியாரை. (தைல. தைலவ. ௧௦௯.)

ஆமிலோட்சிதரோகம்—கண்களில் வரும் ஒருவிதரோகம். (சீவரட். உ௬௦.)

ஆமீலநம்—கண்களை மூடுதல். [ஆமீலந: ஆ; மீல ந - மூடுதல்.]

ஆமுகம்—தொடக்கம். [ஆமுகம்: ஆ; முக - தொடக்கம்.]

ஆமுகர்—நந்திதேவர். [ஆ-இடபம். முகர்-முகமுடையவர்.]

ஆமுடையாள்—மனைவி.

ஆமுடையான்—கணவன். [ஆம் என்பது அகம் என்பதன் திரிபு.]

ஆமுத்தம்—விடப்பட்டது. [ஆமுக்தம்: ஸ; முக்த - விடப்பட்டது.]

ஆமுத்தி — மோக்கம். [ஆமுக்தி: ஸ; முக்தி - விடுதல்.]

ஆமுஷ்மிகம்—மறுமைக்குரியது. 'சுவர்க்க நரகவேதுவாய் அந்யோந்யவிருத்தமுமாய்ச் சமபலமுமாயிருக்கிற ஆமுஷ்மிக புண்ணிய பாவங்களுக்கு உபலக்கணம்' (சி. சி. ச: ச0. சிவாக்.) [ஆமுஷ்மிக.]

ஆமூர்—சோழநாட்டுள்ள ஓரூர். (ஐங்குறு)

ஆமேற்பல்லூரி—கோரோசனை. (மூ. அ)

ஆமேற்பில்லூரி—கடுக்காய்ப்பூ.

ஆமை—1. இராசசின்னத் தொன்று. 2. ஊரும்பிராணிகளு ளொன்று; 'ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின்' (வள். கஉசு.) 3. ஒருநோய். 4. வாசனை.

ஆமைக்கல் — நிலத்திலே பதித்தற்காக அமைக்கப்படும் ஆறுகோணமுடைய கல்.

ஆமைச்சுரம் — ஆமச்சுரம்; சிறுவர்க்கு வரும் ஒரு சுரநோய்.

ஆமைதவழி—ஆமை சஞ்சரித்தலால் ஆகாதென்று விலக்கிய நிலம். 'உடும்போடி யாமை தவழி புற்றும்' (S. I. I. III. 35)

ஆமைநெய்—ஆமையினின்றெடுக்கு நெய். 'ஊனாமைநெய் மூலமோட்டும்' (பதார்த்த. கருஉ.)

ஆமைமடி — ஆமைவடிவமான சிறுமடி. இது அதிகம் பாலுடையது.

ஆமையாழ்—செவ்வழியாழ்த்திறம்.

ஆமையோட்டுக்கட்டி — மேகரோகக்களினால்வரும் ஒருவகைக் கட்டி. அது: குழிகள் விழுந்தும், மினுமினுத்தும், நோவைத்தருவதும், ஒருவேளை தராததுமாய், அநேகவித சிகிச்சைகளுக்கு வசப்படாமல், ஆமையோட்டைக் கவிழ்த்துமூடினதுபோல விருப்பது. (சீவரட். க0உ.)

ஆமையோடு—ஆமையின் முதுகோடு.

ஆமோசனம்—1. பந்தித்தல். 2. பிரகாசித்தல். 3. விடுதலைசெய்தல். [ஆமோசந: ஸ - எதிர்மறை. மோசந - விடுதல்.]

ஆமோட்சத்தாயி — மோக்ஷம்வரையும் நிற்பது. 'மோகினியே நித்தியமென்றதும், ஆமோக்ஷஸ்தாயி ஆகையினாலும்' (சி. சி. க: ருஎ. சிவாக்.)

ஆமோட்சம்—மோக்ஷபரியந்தம். 'அகில் அசித்தாகிய ஆணவ மாயை கன்ம மசத்தேயோவென்னில் அவைகளும் ஆமோக்ஷமே சத்து' (சி. சி. எ: க. சிவாக்.)

ஆமோதம்—1. சங்கர்ஷணன் இருக்கு மூலகம். (இராமா. நாகபாச. உருஉ. உரை.) 2. மகிழ்ச்சி. 3. மிக்க மணம். 'ஆமோத சீதள குங்கும பாடீர பூஷண' (திருப்புகழ். ருரு.) [ஆமோத: ஸ; முத் - மகிழ்ச்சி.]

ஆமோதனம்—பிரேரணைக்கு உடன்படுகை.

ஆமோதித்தல்—1. மகிழ்தல். 2. உடன்படல்.

ஆய்—1. அழகு. 'ஆய்சிலம்பரியார்ப்ப' (கலி. ருஎ.) 2. ஆயென்னேவலும் தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும். 'ஆய் கதிர் முடியினன்' (அரிச்ச. விவாக. எரு.) 3. இடையராகிய ஆய்ச்சாதி. 'ஆய்ப்படை நெக்கது' (சிந்தா. கோவி. கஅ.) 4. கடைவள்ளல்கள் எழுவரி லொருவன்; இவன்: பாம்பு தனக்குக் கொடுத்த நீலக்கலிங்கத்தை ஆலமர்செல்வனுக்குக் கொடுத்தவன். 'நீல நாக நல்கிய கலிங்க - மாலமர் செல்வற் கமர்ந்தனன் கொடுத்த - சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோ - ளார்வ நன்மொழி யாயும்' (சிறுபா. கூசு.) 5. சிறுமை. 'ஆய் நுதன்மடந்தை' (புறநா. உசக.) 6. தாய். 'தாய்தன்னை யறியாத கன்றில்லைத் தன் கன்றை -யாயு மறியும்' (இராமா. விராதன். ருரு.) 7. நுண்மை. 8. மென்மை. 'ஆய்தூவி மடவனமே' (நைட. அன்னத்தைத்தூ. க0எ.) 9. பொதுப்பெயரிலும் அஃறிணைப்பெயரிலும் ஐகாரத்திரிபாய்வந்து விளித்தற்பொருளைக் கொடுக்கும் ஓர் உருபு. 'அன்னாய்' 'கிள்ளாய்' (நன். பெயரி. சக. உரை.) 10. முன்னிலையொருமை ஏவல்வினைவிகுதி. 'அஞ்சனக்கிரியே யருளாயெனும்' (இராமா. சூர்ப்பந. அசு.) 11. முன்னிலையொருமை வினைவிகுதி. 'படிப்பாய்.' 12. வருத்தம்.

ஆய்ந்தகல்—ஒரு விஷக்கல்.

ஆய்ந்தடி—இடைச்சேரி. (மணிமே.)

ஆய்க்குழல்-இடையருடைய வேய்ங்குழல். அது: கொன்றையங்குழல் முல்லையங்குழல் வேய்ங்குழல் என்னும் மூன்றுமாம்.

ஆய்ச்சி—1. தாய். 2. முல்லைநிலப்பெண். 'பணைத்தோ ளிளவாய்ச்சி பால்பாய்ந்த கொங்கை'(திவ். பெரியாழ். சீதக்கடல். ங.) 3. பாட்டி.

ஆய்ச்சியர்—இடைச்சியர். 'கொடிச்சியர் குறிஞ்சிப் பாடற் காய்ச்சியர்' (இரகு. நாட். ௫௭.)

ஆய்ஞன்—ஆராய்பவன். (தொல். எழுத். 29. உரை.)

ஆய்த்தியர்—இடைச்சியர். 'ஆய்த்தியர் கலைக் காசெ றாணனுன்' (சிந்தா. கோவி. கக.)

ஆய்ந்து—ஆ என்னும் வினைப்பகுதியி னின்றுபிறந்து ஒன்றன்பாலிலே இறந்த கால வினைமுற்றாகவந்து ஆயிற்று எனப் பொருள்படும் ஒருசொல். 'உன்சொ லிந்திர சால மாய்ந்ததே' (சி. சி. உ: உ௦.)

ஆய்தக்குறுக்கம்—குறுகிய ஆய்தம். அது: தகரம்வந்துபுணரத் தனிக்குற்றெழுத்தின் பின்னின்ற லகர ளகரங்களின் திரிபினு லாகிய ஆய்தம். (நன். ௯௭. உரை.)

ஆய்தப்புள்ளி — ஆய்தவெழுத்து. (நன். 97.)

ஆய்தம்—அஃகேனம்; இது, அங்காப்பு முயற்சியாலே தலையினிடமாகப் பிறந்து முப் புள்ளி வடிவினதாகிய ஓரெழுத்து; குற்றுயி ரின்பின்னும் வல்லெழுத்தின்முன்னும் நிற் பது. 'வன்ன வாய்தநேர்-நாட்டமுற்ற வள்ள லாரை' (தணிகை. நைமி. ௬.)

ஆய்தல்—1. ஆராய்தல். 'பல்லோராய்ந்த நூல்வெள்ளங்கடந்தனன்' பாரத. குருகுல. அ௭.) 2. காய்முதலியவைகளைப் பிரித்தெடுத் தல். 3. தெரிதல். 4. தெரிந்தெடுத்தல். 'அணங்குகொ லாய்மயில்கொல்'(வள். 1081. பரி.) 5. நுண்மை. (சூ. நிகண். அ: கக.) 6. முன்னுள்ளதனிற் சிறியதாதல். 'ஆய்ந்த தானை' (தொல். சொல். ௩௩௦.) 7. வருந்து தல். (திணைமாலை. 17). 8. அழகமைதல். 'ஆய்ந்தமோட் டினவான்' (சீவக. 2395.) 9. அசைதல். 'ஆய்மறியே' (திருக்கோ. 125. உரை.) 10. சோதனைசெய்தல். 11. கொண்டாடுதல்.'ஆயு மடுதிறலாற்கு'(பு.வெ. 4. 16.) 12. கொய்தல். 13. காம்புகளைதல். 14. குத்துதல். 'அரக்கன்றனைச் சூலத்தி லாய்ந்தது' (தேவா.)

ஆய்தூவி — சூட்டுமயிர். 'ஆய்தூவி யன மென' (கலி. ௫௬.)

ஆய்ந்தோர்—1. அறிஞர். (சூ. நிகண். உ: எ.) 2. பிராமணர். (சூ. நிகண். உ: ௫.) 3. புலவர்.

ஆய்நலம்—1. அழகியநலம். (ஐங்குறு.) 2. மெலிந்தவழகு. (ஐங்குறு.)

ஆய்நுதல்—அழகுகுறைந்த நெற்றி. (ஐங் குறு.)

ஆய்ப்பாடி — இடையரூர். 'பாலருந்த நி நறுநெய்யாய்ப் பாடியின்' (பாரத. அருச்சு நன்றீ. எ௬.) [ஆய் - ஆய்ச்சாதி. பாடி - ஊர்.]

ஆய்ப்பு—1. அசைப்பு. 2. வருத்தம். 3. ஒடுக்கம். 'தேய்ப்புண்டவனுஞ் சிலசில் கணை யா - லாய்ப்புண்டவனும்' (இராமா. யுத். அதிகா. க௦.) 4. வீச்சு.

ஆய்மதி—1. ஒளியற்ற மதி. 'ஆய்மதி - மொய்கொள் பூமி முளைப்பது போலவே' (சிந்தா. நாம. ௩௧௬.) 2. விசேஷபுத்தி.

ஆய்மயில்-விசைகுறைந்த மயில்.'அஃகிய மதுகை தன்னு லாய்மயி லூரு மாங்கண்' (சிந்தா. நாமக. உ௭௦.)

ஆய்மலர்—தாமரை.

ஆய்மை—ஆராயுந்தன்மை. 'மதியின்கூர் மைய - னுய்மையின் மந்திரத் தறிஞு னுமென' (இராமா. சடாயுகாண். ௫.) 2. நுண்பொருள். (திருவாலவா. நகர. 11.)

ஆய்விட்டு—ஆராய்ந்து. 'தாங்கித்தேடி - யாய்விட்டுப் பிரமனழ' (திருவிளை. விருத்த. உ௬.)

ஆய்வு—1. அகலம். (சூ. நிகண். அ: கஉ.) 2. அழகு. 3. ஆராய்தல். 'ஆய்வரும் பெரு வலி யரக்கர் நாமமே' (இராமா. ஆரணி. அகத். ௫.) 4. நுட்பம். 5. வருத்தம்.

ஆய்வை—துயிலிடம். (பிங்.)

ஆய—ஆகிய. 'இம்மாண் கதைக்கோ ரிறையாய விராமனென்னும்' (இராமா. பால கா. அரசியல். க.)

ஆயக்கட்டு—1. ஒரு மாகாணம் அல்லது கிராமத்திலுள்ள பூமியின் முழு விஸ்தி ரணம். 2. மோசடியான பேச்சு. 3. குளப் புரவு.

ஆயக்கல்—காரக்கல்.

ஆயக்காரன்—சுங்கம்வாங்குவோன்.

ஆயக்காரி—வேசி. 'கொள்ளுமாயக்காரிகள்' (திருப்பு. ௫௭௧.) [ஆயம் - வருவாய்.]

ஆயக்கால்—1. குத்துக்கால், சிவிகை முதலியன தாங்குங் கால். 2. முட்டுக்கட்டை.

ஆயக்கோல்—ஆயக்கால்.

ஆயசம்—1. இருப்பாயுதம். 2. இருப்புச் சட்டை. 3. இரும்பினாற் செய்யப்பட்டது. [ஆயஸம். அயஸ் என்பதினின்றுவந்த தத்திதபதம். அயஸ் - இரும்பு.]

ஆயதூரி—கடுகு. (மூ. அ)

ஆயத்தக்கால்—குத்துக்கால்.

ஆயத்தம்—1. முயற்சிசெய்தல். [ஆயஸ்தம்: ஆ; யஸ் - முயற்சி.] 2. சித்தம், சந்நத்தம். 'மோக்குமுன் வாலுகமெழற் காயத்த மென்னின் - முதிரலன்று கரகரப் பாம் பாக மாகும்' (தைல. பாயிர. ௫௩.)

ஆயத்தலம்—ஆயத்துறை.

ஆயத்தன்—1. அடிபட்டவன். 2. கூர்மையுள்ளவன். 3. தள்ளப்பட்டவன். (சப்த கற்ப.) [ஆயஸ்த:]

ஆயத்தார்—தோழியர்கூட்டம். 'ஓங்கிய ஆயத்தாரு மேறினா ருடனத் திண்டேர்' (திருவிளை. திருமணப். அ.)

ஆயத்தி—1. உருக்கம். 2. எல்லை. 3. நன்னடை. 4. நாள். 5. நித்திரை. 6. நீளம். 7. பலம். [2, 3, 4, 5, 6, 7. ஆயதி: ஆ; யத் - முயற்சி.]

ஆயத்துக்கருத்தன் — அஞ்சனபாஷாணம். (மூ. அ)

ஆயத்துய்த்தல்—தலைவியைப் பாங்கிமுதலிய பெண்கள்கூட்டத்தில் விடுதல்.

ஆயத்துறை — சுங்கம்வாங்குந் துறை. 'ஆயத்துறைப்பிறந் தந்தணர்பால்குடித்து' (தனிப்பாடல்.)

ஆயதநம்—1. ஆலயம். 2. இடம். (மணிமே.) 3. பலிபீடம். 4. வீட்டினுட்டளம். 5. வீட்டுக்குரிய நிலம். 6. வீடு. [ஆயத-நீளம்.]

ஆயதம்—1. அகலங் குறைந்து நீளங் கூடியிருக்கும் வடிவம். 2. அளவிற்பெருமை. 3. நீளம். (சூ. நிகண். அ: ௧௩.) [ஆயத.]

ஆயதி—1. அடைதல். 2. சந்திப்பு. 3. நீளம். 4. மனவடக்கம். 5. மேன்மை. 6. வருங்காலம். [ஆயதி.] 7. வைதரணி, மேருவைச்சேர்ந்து பெற்ற மகள். (கூர்மபு. தக்க-சபி. ௧௭. உரை.)

ஆயந்தி—தமையன்மனைவி.

ஆயந்தீர்த்தல்—வரிசெலுத்துதல்.

ஆயநம்—1. ஒருவகைநெல். 2. வருடம். (பிங்). [ஹாயந.]

ஆயப்பாலை—நால்வகைப்பாலையுள் ஒன்று. அது: 'ஆயஞ் சதுரந் திரிகோணம் வட்டமெனப்-பாய நான்கும் பாலை யாகும்' என்பதனாற் பெறப்படும். (சிலப். ஆய்ச்சியர். உரை. பக். ௪0௫.)

ஆயம்—1. இலாபம். 2. உதயத்துக்குப் பதினோராமிடமாகிய இலாபத்தானம். 'உதயந் தனமுட னேபிறப் பொண்டோ மமை மகவு-சிதையும் பகைபெண்டிர் தேய்வுறுஞ் சாவு செழும்புண்ணிய-மிதமொன் றியகன்ம மாயம் வியமெனு மாறிரண்டும் - விதமொன் றியவோரைப் பேரெனச் சான்றோர் விதித் தனரே' (விதான. மாபி. ௪.) 3. கவறு. 4. கூட்டம், திரள். 'வெற்பராயமோடி' (பெரிய பு. கண்ண. ௭௭.) 5. சுங்கம், கடமை. 'இங்கோ மென்றிலை யுடற்சுமைய தாகவு மெடுத்தா விறக்கவென்றே யெங்கெங்கு மொருதீர்வை யாயமுண் டாயினும்' (தாயு. சுகவாரி. ௫.) 6. சூதாடுதாயம். 7. சூது. (ஆகுபெயர்) 'அடையாவா மாயங் கொளின்' (வள். ௯௩௯.) 8. தாய். 9. தேட்டம். 10. தோழி. 11. தோழியர்கூட்டம். 'இவ் வுயர் பொழில்வாய்ச் சூழுடை யாயத்தை' (திருக்கோ. ௭.) 12. நாணி. 13. நீளம். 14. பசுத்திரள். (சிலப்பதி.) 15. பேறு. 'முநியாய மாயதமிழ்' (மருதூரந். ௭௧.) 16. மகளிர் கூட்டம். 'மஞ்ஞை-யாயங்கொலோவெனு மாயத்துள்ளாள்' (வாண. ௨௧.) 17. மல்லரிப்பறை. 18. வந்துசேருதல். 19. வருவாய். 'பொருளாயம் போஒய்ப் புறமே படும்' (வள். ௯௩௩.) 20. இரகசியம். 'உன்னுலல்லது அவ்வாயம் வெளிப்பட்டிருக்குமோ' (குருபரம். 126) 21. வருத்தம். 'ஆய மின்றிப்போ யண்டமாள்வதற்கு' (தேவா. 648. 7.) 22. மேகம். (பிங்). 23. குடியிறை.(பிங்)

24, 34 அங்குல ஆழமுள்ள குழி. (சர்வா. சிற். பக். 21) [1, 9, 17, 18. ஆய.]

ஆயமானம்—1. இரகசியம். 2. உயிர்நிலை.

ஆயமுற்காவலன்—குபேரன்.

ஆயர்—இடையர். 'ஆயர்தம்பதியி னங் குரித்த-செங்கண்மால்' (பாரத. இந்திர.அ.)

ஆயர்பாடி—இடைச்சேரி. 'ஆநிரை புரக்கு மாயர்பாடியி லொளித்துவைகும்' (கூர்மபு. கண்ணனவ. கஎ.)

ஆயல்—ஆராய்தல். 'ஆயோதநத்துக் குறு நீர்மைக ளாய்வுற்றுர்' (பாரத. வெளிப்பா. கூ0.)

ஆயவர்—ஆகியவர். 'கடைகாப்போ-ராய வர்பலர்' (கந்தபு. தவங்கா. கூ.)

ஆயவன்—அவன். 'நெற்றிகாட் டத்தா - ளாயவன்சுட ருதவியோர் மதலையா யமர்வா-னேயினுன்' (கந்தபு. அணிவர். உ.)

ஆயவியயம்—வரவும் செலவும். [ஆய வ்யய: ஆய - வரவு. வ்யய - செலவு.]

ஆயன்—1. இடையன். 2. கிருட்டிணன். 'ஆயன் பதியி லான்பதிவந்துற்று' (தனிப்பா. ஔவை.)

ஆயாசம்—1. இளைப்பு. 2. துக்கம். 3. பிரயாசம். 4. மனவருத்தம். 5. முயற்சி. [1, 3, 5. ஆயாஸ: ஆ; யஸ் - முயற்சி.]

ஆயாசாவர்த்தவாதரோகம்-ஒருவகை வாத ரோகம். அது: பிரமாணந்தப்பியுண்ணுகின்ற பித்த கப வஸ்துக்களினாலும் பலவகை அன் னத்தினாலும் பிறந்து பித்தத்தோடுகூடி ஆயாசத்தைப் பிறப்பித்து வேதனையைச் செய்யும். (சீவரட். கசுக.)

ஆயாசி-1. இளைப்படைந்தவன். 2.முயற்சி யுடையவன். [ஆயாஸிந்.]

ஆயாசிதம் — வருந்தி யாசிக்கப்பட்டது. [ஆயாசித: ஆ; யாசு் - யாசித்தல்.]

ஆயாதம்—1. இயற்கைக்குணம். 2. வரு தல். [ஆயாத: ஆ; யா - அடைதல்.]

ஆயாமம்—1. அகலம் (கணக்கதி). 2. உயரம். (சிவதரு. சிவஞாந. தாந. சு0. உரை.) 3. சஞ்சரித்தல். 'பாயியாயாமவாத ரோகம்' (சீவரட். கசுசு.) 4. தடுத்தல். 5. அடக்குகை. 6. நீட்சி. 7. பிராணாயாமம். 'யாக்கைகண்ணியவழிப் பிராணன் - றவலற வதை நிறுத்த றன்னை யாயாம மென்பர்' (கூர்மபு. யோக. கூ.) [1, 4, 6. ஆயாம: ஆ; யம - ஒழிதல்.]

ஆயாமி-1. அடக்குவோன். 2. தடுப்போன்.

ஆயாள்—1. செவிலித்தாய். 2. தாய். 3. பாட்டி.

ஆயான்—1. ஆகியிருப்பவன். 'உலகேழு மாயானை' (திருவாச.) 2. தமையன். 3. மூத்தவன்.

ஆயி—1. ஒரு சத்தி. 'கவுரிகுண்டலியாயி பண்ணவிதனருளினாலே' (தாயு. சித்தர்கண. ச.) 2. தாய். (சூ. நிகண். உ: எசு.)

ஆயிட்டு—ஆகலான், ஆயிடலால். 'அத்து விதமென்றசொல்லே அந்நியநாத்தியை யுணர்த்துமாயிட்டு' (சிவஞாநபோ. பக். கூச.) இனி, மழைபெய்து குளம்நிறைந்த தென்புழிப்போல ஆயிடலாலென்பது ஆயிட் டெனத் திரிந்ததென்றலு மொன்று.

ஆயிடல்—தோன்றுதல், ஆகுதல். 'ஆயிடு மதுவுமென்னில்' (சி. சி. க: கரு.)

ஆயிடை—1. அவ்வளவில். 2. அவ்வேளை யில். (சீவக. 219.) 3. அவ்விடம். 'இனி-யா யிடை வந்திடு மாசர் செய்கையும்' (கந்தபு. தெய்வ. கசுஉ.)

ஆயிரக்காலி—1. துடைப்பம். (வழக்.) 2. மாவட்டை.

ஆயிரங்கண்ணான் — இந்திரன். 'ஆயிரங் கண்ணோ னருங்கலச் செப்பு' (சிலப். ஊர். சுஅ.)

ஆயிரங்கதிரோன்—சூரியன். 'மதியொடு திகழ்மீ - னாயிரங்கதிரோன்வரக் கரந்தவா றதுபோல்' (கந்தபு. மூன்று. க0க.)

ஆயிரங்காய்ச்சி — அதிகமாகக்காய்க்கிற ஒருவகைத் தெங்கு. இதனை ஆயிரங்கச்சி எனவும் வழங்குவர். 'வயிற்றுவலி யுந்தொலை யும்-ஆயிரங் காய்ச்சிக் கறி' (பதார்த்தகுண. எ0.)

ஆயிரங்காலி-செவ்வட்டை. 'ஆயிரங்காலி யமைந்த வரிச்சுருள்' (சட்டமுனி. நி. அக.)

ஆயிரஞ்சோதியுள்ளோன்—சூரியன். (சூ. நிகண். க: ௰.)

ஆயிரநாமன் — 1. சிவன். 2. திருமால். 'ஆயிர நாமத் தன்ன லனையவன் வன்மை காணு' (கந்தபு. நகரழி. கக.)

ஆயிரம் — பத்துநூறு கொண்ட எண்.

ஆயிரம்பெயரோன்—திருமால். (பிங்.)

ஆயிரமுகத்தோன்—வீரபத்திரன். (பிங்.)

ஆயிரவாரத்தாழியன்—புத்தன். (மணி.)

ஆயில் — 1. ஆயிலியநட்சத்திரம். 'நிறைகொள் கவ்வைபணி யாயில்' (உள். உடை. ௧௬.) 2. ஆயிற்பட்டை.(தைல. தைலவ. ௧௦௪.) 3. ஒருமரம். 'கருங்காலி யாயின் மருதும்' (சைவசு. பொது. ௨௭.) 4. செவ்வகில்.

ஆயிலியம் — இருபத்தேழுநட்சத்திரங்களுள் ஒன்பதாம் நட்சத்திரம். 'மாசி லாயிலியத்திற் காமமுண்டாம்' (கூர்மபு. ௧௬-வது சிராத்தமு. ரு.)

ஆயிழை—1. அரிவாணுனி. 2. கன்னிராசி. 'அலவன்றடி'விடையாயிழை விற்றுலே' (விதாந. பஞ்சா. ௧௪.) 3. தெரிந்தெடுத்த அணிகலம். 4. பெண். 'ஆயிழையொடின்புறு மறத்தைமுத லாற்றுய்' (கந்தபு. மார்க். ௪௮.)

ஆயின்—1. ஆதலால். (பதிற்று.) 2. ஆராயின். 3. ஆனல். 'விளக்கு - மிருள்படுவதாயின்' (பழமொ. கல்வி. ௩.)

ஆயின்று — ஆயிற்று. (ஐங்குறு.)

ஆயினி—ஆசினி.

ஆயினும்—1. ஆனலும் எனப் பொருள்படும் எதிர்மறைப்பொருளிலே வரும் உம்மையடுத்த ஒரு வினையெச்சம். 'காலமோ வறிவின் ருகு மாயினுங் காரியங்கள் - காலமே தரலே காண்டும்' (சி. சி. ௧: ௧௦.) 2. ஆவது. 'பத்தாயினும் எட்டாயினும் கொடு' 3. உம்மைப்பொருளில்வரும் எண்ணிடைச்சொல். (சிலப். 1. 14. உரை.)

ஆயு — 1. ஆயுமான் என்னும் நித்தியயோகம். (குமாரசுவா. திநதி. ௪.) 2. சந்திரவம்சத்துள் புரூரவா என்னும் அரசன்மகனுகிய ஓரரசன். 'ஆயு வென்றெரு செம்மலேயம்மக னளித்தான்' (பாரத. குரு. ௧௩.) 3. வயது, வாழ்நாள் 'ஆயுவழியு மதிக மிலிங்கமெனின்' (சைவசு. பொது. ௧௦௬.) [3. ஆயுஃ: அயி - போதல். உ - ஒரு விகுதி.]

ஆயுகம்—ஆயுசு.

ஆயுகாரகன்—சநி என்னுங் கிரகம். [ஆயு - வயது. காரக - செய்வோன்.]

ஆயுசு—1. சீவன். 2. வயது, வாழ்நாள். [ஆயுஸ்.]

ஆயுட்டாநம்—ஆயுத்தாநம்.

ஆயுட்டோமம்—தீர்க்காயுப் பெறுவதற்குச் செய்யும் யாகம். [ஆயுஷ்ஷோமஃ: ஆயுஸ் - வயது. ஹோம - யாகம்.]

ஆயுட்பொருத்தம்— மணப்பொருத்தங்களுளொன்று; அது பெண்ணினுடைய நட்சத்திரமுதல் புருஷனுடைய நட்சத்திரம்வரையும் எண்ணின தொகையையும், புருஷனுடையநட்சத்திரமுதல் பெண்ணினுடைய நட்சத்திரம்வரையும் எண்ணின தொகையையும் தனித்தனி ஏழிற் பெருக்கி இருபத்தேழுக் கிந்த சேஷம். பெண்ணினுடைய நாளின்றெகை குறையில் ஆயுட்பொருத்தம் பொருந்தும் எனக் கொள்வது.

ஆயுடியம் — 1. சீவத்துவம், வாழ்நாள். 'தேவாயுஷியம்' (சி. சி. அ: ௯௨. மறை.) 2. சீவனைக் காப்பது.

ஆயுத்தாநம் — சென்மலக்கிநத்துக்கும் சந்திரலக்கநத்துக்கும் எட்டாந்தாநம். அஃது ஆயுவினெல்லையை அறிவிக்குமிடம்.(வீமேசுரவுள்ள.உருள.) [ஆயுஸ் -வயசு. ஸ்தாநம்- இடம்.]

ஆயுதசாலை—படைக்கலவீடு. 'ஆயுத சாலையி லவுணர் கோன்மகன்' (கந்தபு. முதனு. ௨௦.)

ஆயுதபாணி—கையிலே ஆயுதங்கொண்டவன்.

ஆயுதபீடை—இலக்கிநத்துக்கு ஆறுமிடம். (சோதிடகடல்.)

ஆயுதபூசை — புரட்டாசிமாசத்திலே வரும் நவராத்திரியிலே ஆயுதங்களை வைத்துத் துர்க்கையைமுன்னிட்டுச் செய்யும் பூசை.

ஆயுதம்—1. உபகரணம். 2. கூத்துப்பயிலிடம். 3. படைக்கலம். 'ஆயுத மநேகவிதமானவை யெனைப்பலவு மழகுற வியற்றியும்' (பாரத. வாரணு. ௫௭.)

ஆயுதாகாரம் — ஆயுதசாலை. [ஆயுதாகார: ஆயுத - படைக்கலம். அகார - வீடு.]

ஆயுதிகன்—ஆயுதங்கொண்டு போர்செய்வோன். [ஆயுதிகஃ: ஆயுத; இக - ஒரு விகுதி.]

ஆயுதேந்திரம்—விட்டுணு சக்கரம்.

ஆயுப்பிரதம் — ஆயுளைக் கொடுப்பது. [ஆயுஷ் - வாழ்நாள். ப்ரத - கொடுப்பது.]

ஆயுமறை — வைத்தியநூல். 'ஆயுமறை வானவர்மகாரும்' பாரதம். வெளிப்பாட்டுச். ௩.)

ஆயுமான்—நித்தியயோகம் இருபத்தேழனுள் ஒன்று. [ஆயுஷ்மாந்.]

ஆயுர்விருத்தி — தீர்க்காயு. [ஆயுஷ் - வாழ்நாள். வ்ருத்தி - வளர்ச்சி.]

ஆயுர்வேதம் — உபவேதம் நான்கனுள் ஒன்று. அது: சீவனோடுகூடிய யாக்கையின் நோயையறிந்து மருந்துமுதலியவைகளால் ஆரோக்கியஞ்செய்யும் உபாயத்தை அறிவிப்பது. (வேதா. சூ. ௩. உரை.) [ஆயுர்வேத: ஆயுஷ் - சீவன். வேத - அறிதற்கருவி.]

ஆயுர்வேதாக்கினி — மருந்துசெய்தற்கு உபகாரமாகும் அக்கினி. அது: தீபாக்கினி, கமலாக்கினி, காடாக்கினி என மூன்றுவகைப்படும். [ஆயுர்வேதாக்நி.]

ஆயுர்வேதி — வைத்தியன். [ஆயுர்வேதிந்.]

ஆயுரவசானம்—ஆயுவின்முடிவு. 'பிரமாவினுடைய ஆயுரவசானத்திலே பிரமாண்டம் பிரளயத்தையடையும்' (சி. சி. சுப: ௩. சிவாக்.) [ஆயுஷ் - வாழ்நாள். அவஸாநம் - முடிவு.]

ஆயுவின்மை — அருகனென்குணத்தொன்று; அது, காலத்தால் எல்லைப்படாமை. (சி. சி. பர. நிக. உ.)

ஆயுள்—1. சீவன். 'இறுமுயிர்க்கு-மாயுண் மருந்தொழுக்க நீதன்றால்' (நீதிநெறி. சுக.) 2. வயது. 'ஆயுண் மற்றுமக் கெத்துணை யத்துணை யளவும்' (கந்தபு. ததிசிப். சஉ.) 3. வாழ்நாள். 'ஆயுளினெல்லையு மெய்த' (கந்தபு. மார்க்க. கசசு.) 4. அப்பொழுது. 'சொன்ன வாயுளே' (சீவக. 415.)

ஆயுள்வேதம் — ஆயுர்வேதம். 'வைத்த வாயுள்வேதர் தநுர்வேதம்' (நல். பாரத. அரசநீதி. உகசு.)

ஆயுள்வேதர்-மருத்துவநூலோர். 'ஆயுள் வேதருங் காலக்கணிதரும்' (சிலப்.)

ஆயுள்வேதியன்—வைத்தியன்.

ஆயே-அன்புகாட்டி அழைத்தலைக் குறிக்கும் ஒரு வடமொழியிடைச்சொல்.

ஆயோ — குறிஞ்சிநிலமகளிர் பறவையோப்புமிடத்துநிகழ்த்துமொருவகையொலி. (திவ். இயற். திருவிருத். 10.)

ஆயோகம் — 1. நீர்க்கரை. 2. புட்பாதிகளைக் கொடுத்தல். [ஆயோக.]

ஆயோகவன்-சூத்திரனுக்கு வைசியகன்னியிடத்திற் பிறந்தவன். (பரா. மி. பக். க0எ.)

ஆயோகவி — ஆயோகவன். (பரா. மி. பக். க0எ.) [ஆயோகவீ.]

ஆயோசநம்—1. எடுத்தல். 2. திரட்டுதல். 3. பிடித்தல். 4. முயற்சி. [ஆயோஜந.]

ஆயோதநம்—1. சேனை. 2. போர். 'தங்களாயோ தநத்துக் குறுநீர்மைக ளாயலுற்றூர்' (பாரத. வெளி. ௩0.) 3. யுத்தகளம். [ஆயோதந:]

ஆயோதம்—1. சேனை. 2. போர். [ஆ; யுத் - போர்.]

ஆயோர் — 1. அவர்கள். 'ஆயோர்தம துயிரேயென வவணைக்குறித் தணைந்தார்' (கந்தபு. சரவண. ௩எ.) 2. ஆனோர். 'அறிஞராயோர்சிந்திக்கும்' (கந்தபு. திருவவ. சங.)

ஆர்—1. அச்சுருவாணி. 'ஆரழிந்தன வுருளழிந்தன வச்சழிந்தன' (பாரத. முதற். சடு.) 2. அசைநிலையாகவரும் ஒரு இடைச்சொல். இப்படி வரும்போது உம்மையிடைச்சொல்லின்முன்னுவது உம்மீற்று வினைமுன்னுவது வரும். 'பெயரினாகிய தொகையுமா ருளவே' 'எல்லா வுயிரொடுஞ் செல்லுமார் முதலே' 3. அருமை. 'அரும் பெறற் பாவா யாருயிர் மருந்தே' (சிலப். க. மனையற. எடு.) 4. அழகு. (ஆசிரியநிகண். அ: சுு.) 5. ஆத்தி. 'தேங்கடி யாரர வார் சடையார்' (கம்பரா். அ.) 6. ஆரென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 7. உயர்திணைப் பன்மைப்படர்க்கையில்வரும் ஒரு விகுதி. 'பெரியார்வந்தார்'. 8. உருளையிலே அச்சடையுந் துவாரம். 9. ஒருவரை உயர்த்திக்கூறுமிடத்துவருமொரு விகுதி. 'இறைவனூர் கமல பாதம்' (சி. சி. பாயிர. ௩.) 10. கூர்மை. (பிங்கல. கசுOங.)

11. சரக்கொன்றை. (மூ. அ.) 12. சீனிப்பாகு. 13. சோதி. 14. தேருருளையிற் குறட்டிலிருந்து குட்டிற் போகுங் கம்பு. 'ஆருடைத் திகிரிச் சில்லி' (கந்தபு. தாரக. சக.) 15. நிறைவு. 'கொழுதிய லார்செய் குழன் மடவீர்' (வாணன். எ.) 16. நுண்மை. 17. பூமி. 'திருவாரணங்குமணமகன்' (மறைசையந். க.) 18. செவ்வாய். 19. யாரெனப் பொருள்படு மொரு வினச்சொல். 'இவ்வாலயத்து-ளாண்டவனாரணவுற்றான்' (கம்பராந். ௩௦.) 20. வினைப்பகுதியோடு எதிர்மறையிடைநிலையின்றி நேரேயணைந்து உயர்திணைப் பன்மைப்படர்க்கையெதிர்மறையில் வரும் ஒரு விகுதி. 'கல்லார்'. 21. மலரின் பொருத்துவாய். (குறுந். 329.)

ஆர்க்கங்கோடன் — கொல்லன்கோவை. (மூ. அ)

ஆர்க்கண்ணியன்—சோழராசன். [ஆர் - ஆத்தி. கண்ணி - மாலை.]

ஆர்க்கம்—1. இரத்தம். 2. இலாபம். 3. அகில். 4. சந்தனம். 5. கொல்லன்கோவை. 6. பித்தளை.

ஆர்க்கி—சூரியன்மகன். [அர்க்கனென்பதினின்றுவந்த தத்திதம். ஆர்க்கி.]

ஆர்க்கியம்—காட்டுத்தேன். [ஆர்க்ஷ்யம்: ருக்ஷா - தேனீ. ய - ஒரு விகுதி.]

ஆர்க்கு—1. எருக்கு. 'மேன்மதிலார்க்கிலைத்தமாலகிமத்தமுதிர்சம்ப மாதுலங்கத்திரதமும்' (தைல. தைலவ. ௬.) 2. எருக்கின்பட்டை. (தைல. தைலவ. ௬௨.) 3. ஒரு மீன். 4. இலைக்காம்பு. 5. கிளிஞ்சில்வகையில் ஒன்று.

ஆர்க்குவதம் — கொன்றைமரம்.

ஆர்க்கை—1. கட்டுகை. 2. துரும்பு. 3. வாரடை.

ஆர்கத்தியம்—அருகசமயியுடையதன்மை. [ஆர்ஹத்ய.]

ஆர்கதம் — சமணசமயம். [ஆர்ஹத: அர்ஹத் என்பதினின்றுவந்த தத்திதபதம்.]

ஆர்கதன்—சமணசமயத்தோன்.

ஆர்கதி—திப்பலி. (சூ. நிகண். ௪: ௨௬.)

ஆர்கலி—1. கடல். 'ஆர்கலியுலகின்' (வேதாரணியபு. மேன். ௩௨.) 2. நிறைந்த முழக்கம். (ஐங்குறு.) 3. மழைவெள்ளம். 'பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தென-வார்கலி முனைஇய கொடுங்கோற் கோவலர்' (நெடுநல். ௩.)

ஆர்கலிவாரணம்—அயிராவதயானை. [ஆர்கலி - கடல். வாரணம் - யானை. கடலிற்றோன்றிய யானை என்றபடி.]

ஆர்கோதம்—சரக்கொன்றை. (மூ. அ)

ஆர்ச்சநம்—1. உபசாரம். 2. சம்பாத்தியம். 3. தேடுதல். 'சிவார்ச்சநமார்ச்சநமாயின்' (கோயிற்பு. வியாக். ௪.) 4. பாதுகாத்தல். 5. பூசை. 6. விருந்தோம்பல். 1. அர்ச்சந. 2, 3. அர்ஜந.]

ஆர்ச்சனை—ஆர்ச்சநம்.

ஆர்ச்சவம்—1. உண்மை. 2. சத்துருவையும் மித்திரனையும் சமமாயெண்ணல். 'செயிரில்சேய்மித்திர களத்திராதியிடத்துந் தெவ்விடத்து-மயர்விற்றன்னுன்மாவிடத்துமமையச் சமபாவனைவைத்தல்-வயிரமறுமார்ச்சவமென்றேவகுப்பார்' (சூத. ஞாந. ௧௩: ௧.) 3. நேர்மை. [ஆர்ஜவம்: ருஜு என்பதினின்றுவந்த தத்திதபதம். ருஜு - நேர்.]

ஆர்ச்சிகம் — 1. இருக்குவேதசம்பந்தமுடையது. 2. சாமவேதம். [ஆர்சிக.]

ஆர்ச்சித்தல்—ஈட்டுதல். 'பன்னருந் தனமார்ச்சித்து'(நல். பாரத. தருமசாத்திர. ௩௩.)

ஆர்ச்சிதம்—1. உபசாரம். 2. சம்பாதிக்கப்பட்டது. (சி. சி. அ: ௬. சிவாக்.) 3. பாதுகாத்தல். 4. விருந்தோம்பல்.

ஆர்ச்சுநி – அருச்சுநன்மகனாகிய அபிமந்யு. [ஆர்ஜுநி: அர்ஜுந என்பதினின்றுவந்த தத்திதபதம். இ - ஒரு விகுதி.]

ஆர்சவுரியோகம்—தநு, மீநம், மகரம், இடபம், சிங்கம் என்னு மிவ்விராசிகளின் பிற்கூற்றிலே செவ்வாயும் சநியும் கூடிநிற்பது. (விதாந. பதி. ௩௩. உரை.) [ஆர்-செவ்வாய்.]

ஆர்த்ததாதுகம் — எச்சவினை. 'ஆர்த்ததாதுகமாமீரெச்சமும்' (பி. வி. ௩௮. உரை.) [ஆர்த்தாதுகம்.]

ஆர்த்தநாதம் — நோவினுற் புலம்பல். [ஆர்த்தநாத: ஆர்த்த-நோவுடையோன். நாத - ஒலி.]

ஆர்த்தபம்—1. பூப்படைதல். 'பிராத மார்த்தபக் தோன்றின இலக்கிகம்' (விதான மா. தெருட்சி. ௪. உரை.) 2. பூப்படைந்த பின் கருத்தரித்தலுக் குபகாரமாயிருக்கு நாட்கள். [ஸூ த-லெ.]

ஆர்த்தம்—1. கலக்கமடைந்தது. 2. நோவடைந்தது. 'ஆர்த்த மென்றெனை யாளுகந் தானே' (தேவா. 157. 4) [ஸூ த-ெ.]

ஆர்த்தர்—1. எளியர். 2. நோயுற்றோர். 'இல்லைப்பல்பூம்பொழிற்செப்பும்வஞ்சினமு மார்த்தரக்கஞ்செய்யுமால்' (திருக்கோவை. கஅஎ.) 3. பெரியோர்.

ஆர்த்தல்—1. அணிதல். 'பொடியார்க்குந் திருமேனி' (பெரியபு. திருநாவ. ௧௦௫.) 2. அநுபவிக்கச்செய்தல், உண்பித்தல். 'விடலரும் பவப்பே ருர்த்தி வீடருள் கருணையன் றே' (கந்தபு. மேருப். ௪௪.) 3. ஒலித்தல். 'தோட்டுணைகொட்டியார்த்து' (நைட.போர். உ௫.) 4. கட்டல். 'பாகசாதனன்றனைப் பாசத்தார்த்து' (இராமா. பாலகா. திருவவ. ௬௦) 5. தொடுத்தல். 'ஆர்த்தபதம்' (வேதா. ஞ. அ) 6. நிறையச்செய்தல். 'வருநிதி பிறர்க்கார்த்து மாசாத் துவனென்பான்' (சிலப். மங்கல. ௩௪. பக்.) 7. பொருத்தல். 8. பொருதல். 9. தட்டுதல். 'மார்பார்த்தல்' (இன்னா. 19.) 10. அலர்தூற்றுதல். (கலித். 33. 14.)

ஆர்த்தவம்—1. புட்பம். 2. மகளிர்பூப்பு. [இருது என்பதினின்று வந்த தத்திதம். ஸூ த-லெ.]

ஆர்த்தன் — துயருறுவோன், நோயுற்றோன். [ஸூ த-ெ:]

ஆர்த்தி—1. அநுபவம். 2. அழிவு. 3. உண்பித்து எனப் பொருள்படும் ஒரு தெரிநிலை வினையெச்சம். 'வரையுறழ்தனப்பா லார்த்தி வரம்பறு காப்பு நேர்ந்தாள்' (கந்தபு. பார்ப்ப. உஎ.) 4. கிரியாசத்திக்குடையதாயிருக்கும் புறவுருப் பஞ்சசத்திகளில் ஒன்று. 'ஈசாநி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி என்னும் பஞ்சசத்திபுறவுருவுடைத்தாய்' (சி. சி. க: ௫௬. ஞானப்.) 5. கொடுத்து. (பொருந. ௧௭௪.) 6. துன்பம். 'ஆர்த்தி யாவுமே யகல வென்றுடைச்-சீர்த்தி யண்ணல்பாற் சேறல் சிந்தியாய்' (கந்தபு. இந்திராணிமறு. ௧அ.) 7. விருப்பம். 8. வில்லின் நுனி. [ஸூ தி-ெ.]

ஆர்த்திகம்—பாதிக்குரியது. [ஸூயி-ெகம்: அர்த்தம் என்பதினின்றுவந்த தத்திதம்.]

ஆர்த்திகை—துன்பம். 'ஆர்த்திகை யுறுத வுள்ளத் தரிமுத லமரர் யாரும்' (கந்தபு. திருவவ. ௧௧௪.) [ஸூ தி-ெகா:]

ஆர்த்தீயம்—காட்டுத்தேன்.

ஆர்த்திரகம்—இஞ்சி. 'அரைப்படியென் னையக் கருணைச்சாறு படியிரண்டூற் றழிஞ் சில்விதைகோட்டமிளகார்த்திரகம்' (தைல. தைலவ. அஎ.)

ஆர்த்திரசாகம்—இஞ்சி.

ஆர்த்திரம்—1. ஈரம். 2. உலராதது.

ஆர்த்திரமூலரோகம்—எந்நேரமும் இரத்த முதலிய கசிவையுண்டாக்கும் ஒருவகை மூல ரோகம். (சீவரட். எ௫.)

ஆர்த்திரேந்தநம்—ஈர விறகு. (சி. சி. க: ஏ௦, சிவாக்.) [ஊநநம - விறகு.]

ஆர்த்திரை—திருவாதிரை.

ஆர்த்துதல்—1. நிறைத்தல். 2. நிறைவேற்றுதல். 3. புசிப்பித்தல், கொடுத்தல். (பொருந. 174).

ஆர்த்துபம்—பேராத்தை. (மூ. அ.)

ஆர்தல்—1. அநுபவித்தல். 2. அன்பு செய்தல். 'ஆரியனைத்தான்வணங்கிப்பிச்சைக் கருமமிபெற் - றுருயிருள்ளானடியுமார்ந்து' (சைவச. பொது. ௩௭அ.) 3. ஒத்தல். 4. உண்ணுதல். 'காரியீதுணக்கடனன்றுலென- வாரவன்முதோறகல' (தணிகை. நாட். ௧௪௯.) 5. குடித்தல். 6. தங்குதல். 7. நிறைதல். 8. பொருந்தல். 'நீலப்பிறங்க லலையான்பணியா - லார்கின்றதின்றோ ரல ரே' (கந்தபு. தேவரையேவல்கொள். ௧௧.) 9. பரவுதல். 'போதாரி வண்டெலாம்' (திணை மாலை. 95. உரை) 10. திருத்தியாதல். 11. அணிதல். (பிங்.)

ஆர்ந்த—போன்ற. 'உயிரார்ந்-தமரவரிக் கிறையார்க் கரிதானும்' (மரு-தி. ௬௩.)

ஆர்ப்பதம்—1. சாரம். 2. பச்செனவு.

ஆர்ப்பரவம் — ஆரவாரம். 'ஆர்ப்பரவத் தெங்கிருந்தாரும் வெருவ' (சேதுபு. தேவி பு. உ௪.)

ஆர்ப்பரித்தல்—ஆரவாரித்தல்.

ஆர்ப்பரிப்பு — ஆரவாரித்தல். 'போற்று நன்மகமு மறைகளார்ப்பரிப்பும்' (மச்சபு. திரிபுரநிருமாண. ௪௬.)

ஆர்ப்பு-1. கட்டு, பந்திக்கப்பட்டது. 'ஆர்ப் பரிய காயந்தன்னை' (சி. சி. ௬: ௨௬.) 2. சிரிப்பு. (பிங்கல. ௧௧௩௭.) 3. நுண்ணியது. 4. பேரொலி. 'ஆர்ப்புக் கொண்டுகை விசைத் தெறி மணிக்கல்வக் தணைய' (கந்தபு. நாட். ௬௫.) 5. மாத்திரையிறந்த சுருதி; ஓங்க விசைத்தல். 'இன்னிசை வழியதன்றி யிசைத் தல்செம் பகையதாகும், சொன்னமாத் திரையி னோங்க விசைத்திடுஞ் சுருதி யார்ப் பே' (பஞ்சபாரதீயம். சிலப். வேனிற். ௨௬.) [இது, யாழின் குற்ற நான்கனு ளொன்று. இதனை மரக்குற்றத்தால் வருவது என்பர் திருவிளையாடற்புராண உரைகாரர்.] 6. முள்ளின் கூர்ப்பாகம். 7. போர். (சூ. நிகண். ௩: ௪௯.) 8. மகிழ்ச்சி. (குற்றால. மந்தமா. 110.)

ஆர்பதம் — 1. உண்ணுமுணவு. 'நெல்லி-னம்பண வளவை விரிந்துறை போகிய - வார் பதநல்குமென்ப' (பதிற்றுப். ௬௬: ௩.) 2. நிழல். (அக. நி.) 3. வண்டு. (பிங்கல. ௨௩௮௨.)

ஆர்பதன் — ஆர்பதம். 'தேரிற்றந்தவர்க் கார்பதனல்கும்' (பதிற்றுப். 55.)

ஆர்மதி — 1. கர்க்கடகராசி. (திவா.) 2. நண்டு. (திவா.)

ஆர்மை—1. கூர்மை. 2. மதில்.

ஆர்வக்கோளிக்காரகம்—கேளாது விருப் பாய்க்கொடுக்கப்பட்ட பொருளை விருப்ப மாய் ஏற்றற்பொருளில் நான்காம்வேற்று மையிலே வரும் பெயர். (வீரசோ. உபகாரக. ௩.)

ஆர்வம்—1. அன்பு. 'ஆர்வநெஞ்சமொடு' (தொல். பொருள். 40.) 2. ஆசை. 'வண் டார்வஞ் செய்து மதுவுண்டு' (நைடத. அன்ன-அ. ௬௫.) 3. ஒலி. 'ஆர்வத்தோடி வயல்புகும்' (கந்தபு. ஆற்று. ௩௫.) 4. கடைப் படுதாகமேழினொன்று. அது: அன்பு முதலிய வற்றுனளித்தல். 5. சேலை. 6. நரகமேழனுள் ஒன்று. 7. பெறக்கருதியபொருண்மேற் றோன்றினபற்றுள்ளம். (மதுரை. ௪௮௯.) 8. பக்தி. 'அடியார்தமார்வத்தாற் கூறிய' (திவ். இயற். 1. 35.)

ஆர்வமொழி—முப்பத்திரண்டு அலங்காரங் களுள் ஒன்று; அஃது, உள்ளத்துநிகழு மாசையை மிக வெளிப்படுத்துஞ் சொற்க ளாற் சொல்வது. 'ஆர்வமொழிமிகுப்பதார்வ மொழியே' (தண்டி. ௬௭.)

ஆர்வலன்-1. அன்புடையோன். 'ஆர்வல ராகுமைந்தராறுவரும்' (கந்தபு. சுரம்புகு. ௨௬.) 2. கணவன். (பிங்.) 3. மித்திரன். 4. பரிசிலன். 'இனிய செய்திநின் னார்வலர் முகத் தே' (புறநா. 12.)

ஆர்வலித்தல்—அன்புகூர்தல். 'சிந்தையார வார்வலித்து' (தேவா. 997. 5.)

ஆர்வு—1. ஆராய்தல். 2. உண்ணல். 3. குடித்தல். 4. நிறைவு. 5. விருப்பம், ஆசை. 'ஆர்வுற்றார்நெஞ்சமழியவிடுவானோ' (கலி. ௬௨.)

ஆர்வை—கோரைப்பாய்.

ஆர — 1. நிறைய. 'வாயார வுண்டபேர் வாழ்த்துவதும் நொந்தபேர் வைவதுவும்' (தாயு. சச்சி. ௮.) 2. நுகர. 'பொன்மலிந்த விழுப்பண்ட-நாடாரநன்கிழிதரும்' (பத்துப். மதுரை. ௮௨.) 3. ஒருவமச்சொல். (தொல். பொருள். 286. உரை.)

ஆரக்கம்—1. அகிற்கட்டை. 2. செஞ்சந்த னம். (மூ. அ.)

ஆரக்கால்—சக்கரத்தின் ஆர்.

ஆரக்துவதம் — சரக்கொன்றை. (பிங்.)

ஆரக்ட்டம்—ஆழமாகிய கிணறு.

ஆரகம்—1. இரத்தம். 2. பிரிக்குமெண். 3. பிங்கத்திலே கீழெழுதப்படுமெண். [ஹாரக: ஹ்ரு - எடுத்தல்.]

ஆரகன்-1. அனுப்புவோன். 2. எடுப்போன். 3. கள்ளன். 4. கொள்ளையிடுவோன். 5. சங்கரிக்கிறவன், உருத்திரன். 'படைத்திடப் பட்டயாவு-மாரகன்' (சிவதரு. சிவஞானயோ. ௩௧.) 6. சூதாடுவோன். [ஹாரக: ஹ்ரு - எடுத்தல். அக - ஒரு விகுதி.]

ஆரகூடம் — பித்தளை. (பிங்.) [ஆர கூட: ஆர - போதல். கூட-குவிவு.]

ஆரகூளம் — பித்தளை. [ஆரகூட: டகரம் ளகரமாயிற்று.]

ஆரகேரம்—வாகுவலயம்.

ஆரகோதம்—சரக்கொன்றை. (மூ. அ.)

ஆசகம்—அகில். (மூ. அ.)
ஆந்ரோதி—அருந்ததி.
ஆட்சகன்—1. இடையன். [ஆ - பசு.] 2. காவற்காரன். [ஆ; ரக்ஷக - காப்போன்.]
ஆரண்ணியகம்—வாகப்பிரஸ்தர்களுக்கே பயன்படுவதாய் வநத்தில் வைத்தெழுதப் பட்டது எனக் கருதப்படும் வேதத்தின் மூன்றாம்பாகம். (மச்சபு. முகவுரை.)
ஆரண்ணியம்—காடு.
ஆரண்யம்—ஆரணியம். 'நைமிசாரண்யம்' (மச்சபு. நைமிசா. கஉ.)
ஆரணங்கு — 1. அரிய தெய்வப்பெண். 'விண்ணவர் கோமான் ஜெருன்ஞு, ளாரணங் குடனே காழி யடைந்ததே யெழுவாயாக' (கந்தபு. வீரவாகுசய. உ०.) 2. அரியதெய்வம். 'ஆரணங் குயர்ந்தோ ரல்லோர் புள்விலங்கு' (அகப்பொரு. அகத். கக.) 3. ஆறுதற்கரிய வருத்தம். 'நல்லவர்க் - காரணங்காகியமார் பில்' (புறநா. கச.) [ஆர் - அரிய. அணங்கு- தெய்வப்பெண், தெய்வம், வருத்தம்.]
ஆரணத்தான் — பிரமன். 'ஆரணத்தா னருள்பார்' (வாண. உசுடு.) [ஆரணம் - வேதம். அத்து - ஒருசாரியை. ஆன் - ஒரு விகுதி.]
ஆரணம்—1. வேதம். 'மன்னி லாரண நிக ரென வியாதனுர் வகுத்த' (பாரத. தற்சிறப். ச.) 2. வேதத்தின் ஞானபாகை. (சி. சி. அ: உஎ. மறை.)
ஆரணவாணர்—1. பார்ப்பார். 2. முநிவர். 'ஆரண வாணர்க் கென்றங்-கேள்ளானமௌற் கல்லியன்' (பாரத. இரௌ. எங.) [ஆரணம்- வேதம். வாணர் - வாழ்வோர்.]
ஆரணவுருவர் — 1. திருமால். 2. சிவ பிரான். 'ஆரண வுருவார் தில்லையம்பல மெய்தப் பெற்ருேர்' (கோயிற்பு. இரணிய. எச.) [ஆரணம் - வேதம். உரு - வடிவம். வேதவடிவினர் என்றபடி.]
ஆரணன்—1. சிவன். 'ஆண்டவ ஞரணன் கம்பனென் றேத்த' (கம்பாரு. ந०.) 2. பார்ப் பான். 3. பிரமன். 'ஆரணன் றனது மைந்தர்க் கரும்பெறன் ஞானபோதம்' (கந்தபு. மேரு. கஅ.) 4. விட்டுணு. 'ஆரணனே யானே' (பாரத. கிருட்டின. உ०க)
ஆரணி—1. ஆறுதாரங்களுளொன்றுகிய ஆாகதத்துக்குரிய பன்னிரண்டிதழ்களுள் ஓரிதழில் நிற்கும் அதிதேவதை. (சி. சி. அ: உக. மறை.) 2. காளி. (சூ. நிகண். க: ந அ.) 3. சுழல்காற்று. 4. பார்ப்பதி. 'ஆரணி சடைக்கடவு ளாரணி யெனப்புகழ' (தாயு. மலைவளர். ரு.)
ஆரணியகன்—காட்டில் வசிப்போன்.
ஆரணியம் — 1. காடு. 'ஐந்துபெரும் பார்த்திவரோ டாரணியம் புகுந்தபிரான்' (பாரத. பதினெட். உசங.) 2. காட்டுத் துருக்கம். (பிங்.)
ஆரணியராசி — சிங்கராசி. [ஆரண்ய ராசி.]
ஆரத்தி—1. ஆலத்தி. 2. தீபாராதனை.
ஆரத்தியம்—ஒழிவு.
ஆரதம்—மாமிசமின்றிச் செய்யும்போசநம்.
ஆரதி—1. ஒய்வு. 2. தீபங்காட்டல்; இது சோடச உபசாரத்தொன்று. 3. ஆரத்தி. 4. ஆலத்திப்பாட்டு. [ஆரதி.]
ஆரதிகர்ப்பூரம்—கர்ப்பூரவகை.
ஆநாலகம்—காடிச்சலம். [ஆர - போ தல். நால - மணம்.]
ஆரநாளத்தைலம்—ஒருவகைத் தைலம். 'காடியெணெய்பெருகம்பு நாலொன்றரைப் படி - மாடியமர்சிரணச்சுரமுமயிலுண்ணறலி தாரநாளத்தைலம்' (தைல. தைலவ. உக.)
ஆரநாளம் — காடி. 'ஆரநாளத்தைலம்' (தைல. தைலவ. உக.)
ஆரப்தம்—ஆரம்பிக்கப்பட்டது. (பௌட். மாயா. ருசுஇ.)
ஆரபடி — 1. தைரியம். 2. நால்வகை விருத்தியுளொன்று; அது, பொருள் பொரு ளாகவீரராகிய மாநுடர்தலைவராக வருவது. (சிலப். அரங். 13. உரை.) [ஆரபடீ.]
ஆரபி—ஓரிராகம்.
ஆரம்—1. அஞ்சநபாஷாணம். (மூ. அ.) 2. ஆட்டதர். 3. ஆத்தி. 'ஆரங்கண்ணிச் சோழன்' (சிலப். பதிக. கஉ.) 4. ஆபரணம். 'அம்பையாரஞ்செறியாகர்' (மரு. தி. கசு.) 5. ஒரு பாணம். 6. கடப்பமரம். (மூ. அ.) 7. கண்ணீர். 'விழிக ளாரஞ் சொரிய' (பாரத. சேகன்வ. கஎ.) [முத்துப்போலுந் தோற்றமுடைய தென்றபடி.] 8. களிம்பு. [ஐ-போதல்.] 9. சேச்சுக்கிட்டம். 10. கோடக சாலை. (மூ. அ.) 11. கோணம். 12. சந்தனக்

குழம்பு. 'அரைத்தவாரமும்' (பாரத. நிரை மீட்சி. உக.) 13. சந்தனமரம். 'வன்னி கொன்றைவழை சண்பகமார மலர்ப் பலா சொடு செருந்திமந் தாரம்' (பெரியபு. தடுத் தாட். கூ௪.) 14. சநி. 15. செவ்வாய். 16. நந்தவநம். 17. நுனி. 18. பட்சிகளுடைய கழுத்துவரி. 19. படப்பொறி. 20. பதக்கம். (திவா.) 21. பித்தளை. (அக. நி.) 22. பிங்கத் திலே கீழெழுதப்படு மெண். 23. பிரிக்கு மெண். 24. மணிவடம். (பிங்கல. ௩௧௩௪.) 25. மாதாணிவடம். (பிங்கல.) 26. மாலை. 'செம்பொ னாரம தாயிற் றம்மா' (கந்தபு. திக்கு. கூ௩.) 27. முத்தினாற்செய்த கச்சு. 'ஆரந்தாங்கிய வலர்முலையாகத்து' (நெடுநல். ௧௩௬.) 28. முத்து. 'ஆரக் குழம்பி லளைந் தார மணிந்து விம்மும் பாரக் குசங்கள்' (பாரத. சம்பவ. ௫௫.) 29. முத்துமாலை. 'கழுஉவிளங் காரங் கவைஇய மார்பே' (புற நா. கக.) 30. யுத்தம். 31. வண்டியின் ஆர். 'அச்சுடைச் சாகாட் டாரம் பொருந்திய' (புறநா. உ௫௬.) 32. பூமாலை. (சூடா.) 33. காட்டாத்தி. (திவா.)34. ஒருவகை வாசனைத் திரவியம். 35. தோட்டம். (பிங்.) [8, 9, 11, 14, 15, 21. ஆர; 22, 23, 26, 27, 30. ஹார]

ஆரம்பநூரன்—1. தொடக்கத்திலே சுறு சுறுப்பாயிருப்போன். 2. மேன்மைபாராட்டு வோன்.

ஆரம்பம்—1. கொலை. 2. செருக்கு. 3. தொடக்கம். 4. பேரொலி. 5. முகவுரை. 6. முயற்சி. 'ஆரம்பநிலைகண்டு' (நல். பாரத. தெட்சிண. ௬௧.) 7. விரைவு. [ஆரம்ப:]

ஆரம்பநுபம் — கடனீரினின்றுதிரைபிறத் தல்போல ஒருபொருளினின்று பிறக்கும் விகாரரூபம்.

ஆரம்பவாதம்—காரியப்பாடெல்லாம் நூ லாணுய ஆடைபோலாமென்னுந் தார்க்கிக வாதம். (சி. சி. க: உ௪. சிவஞா.) நிலமுத லிய உருவப்பொருளினின்றுங் கந்தகுணமுத லிய அருவந்தோன்றுமென்பார்வாதமுமாம்.

ஆரம்பித்தல்—1. ஒலித்தல். 2. தொடங் கல்.

ஆரமரோட்டல்—வெட்சித்திணையி லொரு துறை. அது, குறுநிலமன்னருங் காட்டகத்து வாழும் மறவரும் போர்த்தொழில்வேந்த ரைப் பொருது புறங்காண்டல். (தொல். பொரு. ௬௦.)

ஆரல்—1. ஒரு சிறுமீன். 'பூக்கதூஉ மின வாளை-நுண்ணாரற்பருவரால்' (புறநா. ௧௮.) 2. ஒரு பூண்டு. 3. கார்த்திகைநட்சத்திரம். 'மறுவறு மாரலாகு மாதர்மூ விருவர்தாமும்.' (கந்தபு. திருவவ. ௧௧௬.) 4. செவ்வாய். 'ஆதித்தனோ டம்புலி யாரல் புதன் வியாழம்-சோதிப் பெருமாமதிச்சுக்கிரன் சௌரி தூம-கேதுப் பவனன்' (அரிச்ச. இந்திர. ௨௭.) 5. நெருப்பு. (சூ. நிகண். க: ௪௧.) 6. பித்தம். 7. மதில். 'ஆரலோங்கியவயோத்திமாநகரி' (அரிச்ச. விவாக. உ௮௩.) 8. மதின்மே லமைக்கப்படும் மறைப்பு.

ஆரலம்—பகை.

ஆரவடம்-முத்துவடம்.(தண்டி.47.உரை.)

ஆரவம் — ஒலி. 'ஆரவ மிகுந்த பல்புள் ளகழிசூழ் புரிசை கண்டார்'(பாரத. திரௌ. ௧௭.) [ஆரவ: ஆ; ரு - ஒலி.]

ஆரவரியம்—அரசு.

ஆரவலர்—காட்டாத்திப் பூ. (தைல. ௬௮.)

ஆரவாரம்—1. ஆடம்பரம். 2. ஒலி. 'ஆர வாரஞ்செய் தனுகினனரோ' (கந்தபு. காவிரி. உ.) 3. பேரொலி. 4. துக்கம். (பிங் கல. ௩௧௩௬.)

ஆரவாரித்தல் — மிகவொலித்தல். (திவ். பெரியாழ். 1. 7. 1.)

ஆரவாரிப்பு—ஆர்ப்பு.

ஆரற்சுவர்—மேலே மறைப்புடைய சுவர்.

ஆராகரியம்—அரசமரம்.

ஆராகவரியம்—அரசமரம். (மூ. அ.)

ஆராட்டுதல்—தாலாட்டுதல்.

ஆராத்தியர்—ஆராத்திரியர்.

ஆராத்திரவியம்-அரசருடையபொக்கிஷம்.

ஆராத்திரியர்—வீரசைவப்பார்ப்பார்.

ஆராத — திருத்தியடையாத எனப் பொருள்படும் ஒரு பெயரெச்சம். 'ஆராத காதலூறு' (கந்தபு. வள். ௧௧௭.)

ஆராதகர்—அருச்சகர். (கோயிலொ. 27.)

ஆராதநம்—1. சம்பாத்தியம். 2. நிறை வேற்றுதல். 3. பாகஞ்செய்தல். 4. மகிழ்வித் தல். 5. வணக்கம், வழிபாடு, பூசை. 'ஆரா தநஞ்செய்து' (திருவாந். ௩௦.) [ஆரா தந: ஆ; ராத் - முடித்தல்.]

ஆராதனை—பூசை, வணக்கம். ‘ஆராதனை செய்துழிமந்தரம்’ (கந்தபு. மகாசாத். ரு.) [ஆராயநா.]

ஆராதி-1. ஆராதியென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும். ‘ஐங்கரனையாராதி சந்தர்ப்பணைசெய்’ (தைல. தைலவ. சஙு.) [ஏவல்.] 2. பகைவன்.

ஆராதித்தல் — 1. பூசைசெய்தல். ‘மட்டிதழி யுருத்திரனை யாராதித் தாடினும்’ (தைல. தைலவ. கஉ௦.) 2. உபசரித்தல்.

ஆராதீயம்—சமீபத்திலுள்ளது. [ஆராதீயம்: ஆராத் - சமீபம். ஈய-ஒரு விகுதி.]

ஆராதூரி—1. அதிகஞ்செலவுசெய்பவன். 2. அழிவு. 3. துட்டத்தனம். (வழக்.) 4. ஊதாரி.

ஆராப்பத்தியம் — 1. அற்பம். 2. கடும்பத்தியம்.

ஆராமம்-1. இன்பம். 2. உபவநம். (மணிமே.)3. மலைச்சோலை.(பிங்)4. பூந்தோட்டம். ‘முகிலூர்தி - யந்தப்புரத்தி லாராம மந்தப்புரத்துக் காராமம்’ (பாரத. இரௌப. சக.) 5. மகிழ்ச்சி. [ஆராம: ஆ; ரம.மகிழ்ச்சி.]

ஆராமை—1. நிரம்பாமை. (மணிமே.) 2. பேரன்பு. ‘என்றமிழிலுக் கின்னல்பகரா அலைக மாராமைமேலிட்டிருத்தலால்’ (தாயு. சித்தர்க. அ.)

ஆராய்ச்சி—1. ஆராய்ச்சிமணி. 2. ஆராய்தல். 3. தலையாரி. [வழக்.]

ஆராய்ச்சிமணி-தங்கள்குறையை அரசன் கேரேயறிதற்பொருட்டுக் குறையுடையார் அடிக்கும் அசையாமணி; அஃது: இராசவாயிலிற் கட்டியிருப்பது. ‘பொன்னு லலங்கரித்த அழகிய ஆராய்ச்சிமணியைப் போய்த் தன்னுடைய கொம்பினுலடித்தது’ (பெரியபு. திருவாரூர். உஎ. உரை.)

ஆராய்தல் — 1. யாழ்நரம்பினுள் நின்றொலிக்கும் ஓசையை யாராய்தல். ‘நரம்பினுண்ணின் றொலிக்குமோசை செவியுறவாராய்த லாராய்தல்’ (கூர்மபு. கன்னன் மண. கசஅ.) 2. தேடல். 3. பண்ணல் முதலிய கலைத்தொழில் எட்டனு ளொன்று. அது, ஆரோகண அவரோகண வகையாலிசையைத் தெரிதல். (கூர்மபு. அட்டமூ. க. உரை.) 4. விசாரணைசெய்தல். 5. விசாரணை செய் தறிந்துதள்ளுதல். ‘உற்றவை யாராய் வான் செய்க வினை’ (வள். ருகஉ.)

ஆராய்வு—1. நுண்ணறிவு. 2. விசாரித்தல்.

ஆரார்—பகைவர். ‘ஆரார் திரிபுரங்க ணீறு நோக்கு மனலாடி’ (தேவா. 296, 1.)

ஆரால்—ஆரன்மீன்.

ஆராலிகன்—பாகஞ்செய்வோன். [ஆராலிக: அராலு - குனிவு. போசனபதார்த்தங்களிலே குனிந்துநின்று தொழில்செய்வோன் என்றபடி.]

ஆராவம் — பேரொலி. ‘வாளி யீரைந்து சேரத் தொடுத்தேவினு-னாராவ முடனிட்ட கவசம் பிளந்தோடி’ (பாரத. ஐந்தாம்போர். கக.) [ஆராவ.]

ஆராவமுது—உண்ணுந்தோறும் இன்னும் உண்ணவேண்டும் என்னும் விருப்பத்தைக் கொடுக்கும் அமுது. ‘ஆரா வமுதே யரசே யாநந்தவெள்ளப்-பேராறே மோநப் பெருக்கே பராபரமே’ (தாயு. பராபர. ௬.)

ஆராவுணர்வு—சிற்றறிவு. ‘ஆராவுணர்வா லறிவுற்றயரா’ (கோயிற்பு. வியாக். உஎ.) [ஆரா-நிறையாத. உணர்வு-அறிவு.]

ஆரி— 1. அழகு. 2. கதவு. 3. சோழன். [ஆர் - ஆத்திமாலை. இ - ஒருவிகுதி.] 4. தர்க்கை. 5. தோல்வி. 6. பார்ப்பனி. 7. பார்வதிதேவி. 8. மாலை. 9. மேன்மை. (1, 2, 3, 9. சூ. நிகண். கக. ரகரவெ. ௬௦.) 10. அருமை. (மலைபடு. 161.) [1, 5. ஹாரி: ஹ்ரு-எடுத்தல். 4, 7. ஆர்யா என்பதன் விகாரம்.]

ஆரிடதீர்த்தம் — பஞ்சவித தீர்த்தங்களு ளொன்று; அது, விரல்களின் இறைச்சந்தியால் இருடிகளுக்குத் தர்ப்பணஞ் செய்வது. (சைவச. பொது. ௬௬. உரை.) [ஆர்ஷ - இருடிசம்பந்தம். தீர்த்தம்-நீர்.]

ஆரிடம்— 1. ஆகமம். 2. இருடிகளுரல். ‘ஆரிடத்துத் தானறிந்த மாத்திரையின்’ (ஆசாரக்கோ. க.) 3. இருடிசம்பந்தமானது. 4. எண்வகை விவாகத்துள் ஒன்று. ‘பேராரிடந் தெய்வத்தோடு’ (நல். பாரத. துட்டிய. சஉ.) 5. கல்வி. 6. பூசை. 7. வழக்குநிலம். (சூடா. 11. 189.) 8. வேதம். [ஆர்ஷ:]

ஆரிடர்—1. சமணர். 2. பொறுத்தற்கரிய வருத்தம். 'குன்றிடம்பட்ட வாரிடரழுவத்து' (மலைபடு. ௩௬௮.) [இடர்-துயர்.] 3. முனிவர். 'ஆரிட ருயிரை யெல்லாம்' (கந்தபு. வில்வலன் வாதா. கடு.)

ஆரிடலிங்கம்—இருடிகளாலே தாபிக்கப் பட்ட பரார்த்தலிங்கம். அசுரர் இயக்கர் சித்தர் முதலானவர்களாலே தாபிக்கப்பட் டது மது. 'சயம்புத் தைவிகமு மாரிடமும்' (சைவச. பொது. ௨௩௧.)

ஆரிடை — அரியவழி. 'அறியாத் தேயத் தாரிடை யுழந்து' (சிலப். ஊர். ௧௬.)

ஆரிணம் — மானின்சம்பந்தமுடையது. [ஹாரிண: ஹரிண - மான்.]

ஆரிணி-சிவனுடைய பரிக்கிரகசத்திமூன்ற னுள் ஒன்று. அது, பஞ்சகிருத்தியங்களுட் சங்காரம், அநுக்கிரகம் என்னும் இரண்டுஞ் செய்வது. (சி. சி. ௧: ௫௬. சிவாக்.) [ஹாரிணீ.]

ஆரித்திரம்-1. கடப்பமரம். 2. மஞ்சணிற மானது. [ஹாரித்ர: ஹரித்ரா-மஞ்சள்.]

ஆரிதம்—தருமசாத்திரத்திலொன்று.

ஆரிப்படுகர் — பிரயாசத்தோடு ஏறியும் இறங்கியுஞ் செல்லும் வழி. 'அலங்குகழை நரலு மாரிப் படுகர்' (மலைபடு. ௧௬௧.)

ஆரிய—சிறிய. 'ஆரிய விடைதன் மாண்ட வழகினை' (திருவிளை. மாயப். 21.)

ஆரியக்கூத்து — கழைக்கூத்து. 'ஆரியக் கூத்தாடினுங்காரியத்தின் மேற்கண் ணாயிரு' (வழக்)

ஆரியகம்—சிறுகுறிஞ்சா. (மூ. அ)

ஆரியதச்சரி — மருதயாழ்த்திறவகை, (பிங்.)

ஆரியச்சி—ஆரியப்பெண், (வீரசோ. தத். ௫. குறிப்பு.)

ஆரியத்திரிவு—தற்பவம். (உரி. நி.)

ஆரியநாடு— 1. ஆரியாவர்த்தம். 2. ஒரு தேசம். (பதிற்றுப். 6. பதி. உரை)

ஆரியப்பாவை—பாவைக்கூத்துவகை,

ஆரியப்பிராமணர்- ஒருவகைப்பிராமணர்.

ஆரியப்பூமாலை — 1. அடங்காப்பெண், 2. காத்தவராயன்மனைவியாகிய ஒருபெண்.

ஆரியப்பேடி — ஆரியக்கூத்தரிற் பேடி. (மணிமே.)

ஆரியபடலம்— முதனூலாற்பெயர்பெற்ற ஒரு பழைய நூல். (நன். 48, மயிலை.)

ஆரியபரியேடணசூத்திரம் — மத்தியம நிகாயமென்னுநூலின்பகுப்பினு ளொன்று; இதிற் புத்தசரிதங் கூறப்படும். (மணிமே.)

ஆரியபுத்திரன்-1. குருபுத்திரன். 2. பெரி யோன்மகன். 3. மனைவி தன்னாயகனையும், ஒருவன் தன் தமயன்மகனையும் விளிக்கு மிடத்து நாடகவழக்கில் வழங்கு மொரு சொல். [ஆர்யபுத்ர:]

ஆரியபூமி—ஆரியாவர்த்தம். (சைவப். ௩௫.)

ஆரியம்—1. இமயமலைக்கும் விந்தமலைக்கு நடுவுள்ளதேசம். 'ஆரியவாசிவாணிகர்போல வே' (திருவாத. குதிரை. ௨.) 2. ஸம்ஸ் கிருதபாஷை. 'ஆரியநூன் முழுதுணர்ந்தீர்' (சேதுபு. பிரமகத்தி. ௩.) 3. செல்வப்பொ ருள். 4. தேடப்படுவது. 5. நல்லது. 6. நற் குலமுடையது. 7. பூசிக்கப்படுவது. (5, 6, 7. சைவப். ௩௫.) 8. கேழ்வரகு.

ஆரியமம்-பகலில்வரும் பதினன்காம் முகூர்த்தம். [ஆர்யம.]

ஆரியமொழி—வடமொழி.

ஆரியர்—1. அறிஞர். 'ஆரியரு மாரியரை யல்லாரைக் குலப்பழுது மறைவரேயோ' (சிவதரு. சிறப். ௬.) 2. ஆசிரியர். 3. ஆரிய தேசத்தவர். 'தீதிலமாதுரகங்கொடுசேர்கெழு மாரியர்வந்தனர்' (திருவாத. மந்திரி. ௨௬.) 4. ஒருவகைப்பிராமணர். 5. காரியதரிசிகள். 'முறைமுறை வணங்கிநின்ற வாரியர்முகத் தைநோக்கி' (திருவாத. மண்சுமந்த. ௧௭.) 6. குருமார். 7, சாகத்தீவில் வசித்த ஒரு வகைச்சாதியார். 'ஆரியர்விந்தகர் குகர ராண்டுவாழ்வார்' (கந்தபு. அண்டகோச. ௪௮.) 8. பிரயாணிகள். 'உன்னுமெய்க் காவ லாள ராரிய ருரிமை யோர்கள்' (கோயிற்பு. இரணிய. ௧௧௮.) 9. புலவர். 10. மிலேச்சர்: இதனைச் 'செங்கட் புன்மயிர்த் தோறிரை செம்முக-வெங்க ணேக்கிற்குப் பாய மிலேச் சனை' (திருவாத. மண்சுமந்த. ௧௭, உரை.) 11. வைத்தியர். [8. ஹாரி.]

ஆரியநபன்-எய்க்கிறவன், மாசாலமுடை யவன். [ஆர்ய-ர-இவ:]

ஆரியவராடி—ஒரு பண்,

ஆரியவாசியம்—ஓமம். (மூ. அ.)

ஆரியவேளர்கொல்லி— } செவ்வழியாழ்
ஆரியவேளாகொல்லி— } த்திறவகையுள் ஒன்று. (பிங்கல. காஅ௪.)

ஆரியன்—1. அறிவுடையம். 2. அறிஞன். 3. உபாத்தியாயன். 4. உயர்குலத்தோன். 5. எசமானன், உடையவன், தலைவன். 6. ஐயனார். (சூ. நிகண். க: உ௮.) 7. கழைக் கூத்தன். 8. குரு. 'ஆறுகோளொடுப்பவெள்ளி யாரியன்முதுகிட்டானே' (பாரத. நிரைமீட். கா.) 9. சிவன். ஆரியன்குலாலனுய்நின் றாக்குவ னகிலமெல்லாம்' (சி. சி. க: க௮.) 10. சூரியன். 11. நண்பன். 12. புத்தன். 13. புலவன். 14. வணங்கப்படத்தக்கவன். 'ஆரியனு மாசான் வந்து' (சி. சி. அ: உ௮.) 15. வியாழன். (சோதிடக்கடல்.) 16. வைத்தியன். [ஸூ ஆர்ய.] 17. மிலேச்சன். (பிங்)

ஆரியாங்கனை — ஜைனருள் இல்லறத்திற் கணவனோடுவாழுங்காலையிலே துறவுபூண்டு உபதேசம்பெற்றுத் தவநோற்கும் பெண். 'கன்னியிற்றுற வன்னங்கள் கணவனிற் றுற வின்-மன்னு மாரியாங் கனைகளால் வாங்கு மக் குசைக-ளென்னு மூவகைப் பெண்டவப் பள்ளிக ளெல்லாம்' (திருவிளை. சமணரை. கஎ.)

ஆரியாவர்த்தம் — கீழ்கடல் மேல்கடல் களுக் கிடையிலும் வடக்கே இமயத்துக்குத் தெற்கே விந்தியத்துக்குமிடையிலுமுள்ள தேசம். [ஸூ ஆர்யாவர்த: ஸூ ஆர்ய; ஸூ ஆவர்த - குடிநெருக்கியவிடம்.]

ஆரியை—1. காளி. (பிங்கல. ககக.) 2. துர்க்கை. (பிங்கல. கஉச.) 3. பார்வதி. 'ஆரியைதவஞ்செய்பதியாதியன' (கந்தபு. அடிமுடி. கரு.)

ஆரின்கண்ணியன்—சோழன் (சூடா.)

ஆரின்மாலையன்—சோழன். (பிங்)

ஆரிவி—மயானம்.

ஆரீதம்—1. தருமநூல்களுளொன்று. 2. கரிக்குருவி. 'கறிமிலைதருமிருளி லாரீதம்புக் குலாயுலைதருமலையவெற்பு' (இரகு. திக். ககக.) [ஹாரீத.]

ஆரீதன்—ஒரு முனிவன். (வேதாரணி. வான்மு. கக.) [ஹாரீத.]

ஆரீரம்—சித்திரம். [ஆர்-அருமை.]

ஆரு—1. ஒருமரம். 2. குடம். 3. நண்டு. 4. பன்றி. [ஸூ ஆரு: ஐ - போதல்.]

ஆருகதம்—1. நாவன்மரம். (பிங்.) மூவகை காத்திகமதங்களுள் ஒன்றாகிய அருகசமயம்.

ஆருகதன்—அருகசமயத்தவன்.

ஆருணி — நூற்றெட்டுபநிடதங்களு ளொன்று.

ஆருத்திரை—திருவாதிரைநாள்.

ஆருதல்—ஆர்தல்.

ஆருப்பியம்—வங்கமணல்.

ஆருபதம்—பித்தளை. (அக. நி)

ஆருயிர்மருந்து—சோறு, உணவு. (மணிமே.)

ஆருவம்—நீர்.

ஆருழலைப்படுதல் — 1. உஷ்ணத்தால் தகிக்கப்படுதல். 2. தாகத்தால் வருந்துதல்.

ஆருடம்—1. உதித்தல். 2. ஏறுதல். 3. குறிகேட்போனுடைய இராசிநிலைகொண்டு கூறுஞ் சோதிடம். 4. முன்னறிவிக்கை. [ஸூ ஆரூட.]

ஆருடன்—1. ஏறினவன். 'இடபாருடன்' 2. வேதாந்த பஞ்ச அதிகாரிகளிலொருவன்; அவன், அநுபவவறிவின்முதிர்ச்சியாலே தானே சகமாய்விளங்கப்பெற்று அப்பிறப் பிற்றானே சகத்தோற்றரவின்றிச் சாட்சாத் காரமாய்ச் சீவன்முத்தனாயிருப்பன். 'உலக நிலைதோன்றுமற் றன்றிகழ் ஞானத்தா லுண் மைமுத்தனுமவனேயாருடன்' (வேதா. சூ. கரு.)

ஆருபம்—1. ஒவ்வாமை. 2. நீங்காமை.

ஆரூர்—திருவாரூர். 'ஆரூரின்மேவியபின்' (கந்தபு. கந்தவி. கஉக.)

ஆரூர்க்கால்—கர்ப்பூரவகை. (சிலப். 14. 112. உரை).

ஆரூரன்—சுந்தரமூர்த்திநாயனார். (தேவா.)

ஆரேவதம் — சரக்கொன்றை. 'சம்புமா கமுகுதாழைநற்புன் - காரேவதம்' (தைல. தைலவ. கரு) [ஸூ ஆரேவத: ஸூ; ரேவத - நம்பிக்கை. நோய்நீங்குமென்னும் நம் பிக்கைவிளைத்தலால் வந்த பெயர்.]

ஆரை—1. ஆத்தி. (மூ. அ) 2. நீருள் ஆரைப்பூண்டு. 3. புற்பாய். (சூ. நிக. எ. ருரு.) 4. கோட்டைமதில். 'வண்கிடங்கு சூழுமா ரை வைசயந்த நகரிலே' (சேதுபு. சீதை. ரு.) 5. அச்சுமரம். 'ஆரைச்சாகாட்டாழ்ச்சி' (புறநா. 69)

ஆரைக்காலி—தாழைக்கோரை.

ஆரைக்கீரை — நீராரைக்கீரை. 'நாலித மா நீராரைக் கீரையது நீ' (பதார்த்த குண. ௬௬௪.)

ஆரைப்பற்றி—உடம்பு. [ஆர்-பூமி.]

ஆரையெலும்பு—முன்கையெலும்பிரண்டனுட் பெருவிரற்பக்கமுள்ளது.

ஆரோக்கியம் — 1. ஆரோக்கியஸ்நாநம். (தைல. தைலவ. ௧௩௦.) 2. நோயின்மை, சௌக்கியம். 'ஆரோக்கியஞ் சேர்த்தி சிறக்க வுதவி' (வேதார. வேதநதி. ௪௭.) [ஆரோக்ய: ஆ - எதிர்மறை. ரோக - நோய். ய- ஒரு விகுதி.]

ஆரோகணகதி—1. இசையை யேற்றிப் பாடுதல். 2. மேலாகச்செல்லல்.

ஆரோகணம்—1. எழும்புதல். 2. ஏணி. 3. ஏறுதல். 4. தாழ்வாரம். (பிங்.) 5. கற்படி. (திவா.) 6. கமகம் பத்தனுளொன்று. (பரத.) [ஆரோஹண: ஆ; ருஹ் - ஏறுதல்.]

ஆரோகம்—1. ஏறுதல். 2. ஓரளவு. 3. குவியல். 4. சகநம். 5. நீளம். 6. பாரம். 7. மலை. 8. மாதரிடை. [ஆரோஹ: ஆ - ருஹ் - ஏறுதல்.]

ஆரோகி—இசையின் வர்ணபேதங்களுள் ஒன்று.

ஆரோசை—ஏற்றிப்பாடும் இசை. (பெரிய பு. ஆநாய. 24.)

ஆரோதமடித்தல் — தயையாற் கொடுஞ் செயலினின்றும் மனநெகிழ்தல். (ஈடு. 3. 10. 1.)

ஆரோப்பியம்—ஒன்றன்குணம் வேறொன்றில் விபரீதமா யேற்றப்படுவது. (சி. சி. ௨: ௨. சிவாக்.)

ஆரோபணம்—1. அணிதல். 'பவித்திராரோபணம்' (சி-வி. சரியா. ௭. உரை.) 2. உயர்த்துதல். 3. ஏற்றுதல். 4. ஒப்புக்கொடுத்தல். 5. காட்டுதல். 6. வில்வளைத்து நாண் பூட்டல். [ஆரோபணம்: ஆ; ருஹ் - ஏற்றுதல்.]

ஆரோபம் — ஏற்றுதல். ஒன்றன்குணத்தை மற்றொன்றி லேற்றல், வைத்தல். [ஆரோப: ஆ; ருஹ் - ஏற்றல்.]

ஆரோபித்தல்—ஆரோபஞ்செய்தல்.

ஆரோபிதம்—1. அப்பிரகிருதகுணம். 2. ஏற்றப்பட்டது. 3. செய்யப்பட்டது. 4. நிறுத்தப்பட்டது. 5. வைக்கப்பட்டது. [ஆரோபித.]

ஆல்—1. ஆமெனல் (சூடா). 2. ஆலமரம். 'ஆல்படைப்பையே லரசையும் படைப்பையின் றறவோய்' (சேதுபு. காசிப. ௩௧.) 3. ஒரு முதனிலைத்தொழிற்பெயர். 4. இறந்தகாலவிடைநிலையையடுத்துவரும் ஒரு வினையெச்சவிகுதி. 'நீவந்தால்'. 5. ஒருதொழிற்பெயர்விகுதி. 'உழாலிற் பொலிவண் டிவர் பூந்தொடை' (தணிகை. வள். ௫௧.) 6. ஒரு வியங்கோள்விகுதி. 'மரீயதொராஅல்' (தொல். சொல். ௪௪௩.) 7. ஓரசைச்சொல். 'யாதானுநாடாமால்'(வள். ௩௯௭.) 8. நஞ்சு. 'ஆற்படுகளத்தினன்' (இரகு. மாலை. ௪௧.) [ஆலம் என்பது அம் கெட்டுநின்றது.] 9. மூன்றாம்வேற்றுமையுருபுகளுளொன்று. 'வாளால்வெட்டினான்' 10. நீர். 'ஆலின்மேலாலமர்ந்தான்' (திவ். திருவாய். 9. 10. 1. ஈடு.) 11. வெள்ளம். (மாற. 262. பக். 446). 12. கார்த்திகை. 'அகலிருவிசும்பி னால் போல' (மலைபடு. 100.) 13. அதிசயம், இரக்கம், தேற்றம்: இவற்றைக்குறிக்கும் இடைச்சொல்.

ஆல்வாட்டு—உலர்ச்சி.

ஆல்வாட்டுதல்—சிறிதுகாயச்செய்தல்.

ஆல்வாடுதல்—சிறிதுகாய்தல்.

ஆல்வு—அகலமானது.

ஆலக்கச்சி—அரிதாரம்.

ஆலக்கட்டி—துரிசு. (மூ. அ.)

ஆலக்கிரீடை — அலரிச்செடி. [ஹால - நஞ்சு. க்ரீடா - விளையாட்டு.]

ஆலக்கோடி—தாளகம்.

ஆலக்கோடிச்சி—1. அரிதாரம். (மூ. அ.) 2. தாளகம்.

ஆலகண்டன்—1. சிவன். 2. வாசுகி.

ஆலகம்—நெல்லிமரம். (மூ. அ.) [ஆமலகம் என்பதன் விகாரம்போலும்.]

ஆலகாலம்—பாற்கடலிற்றோன்றிய ஆலாகலம் என்னும் விடம். 'ஆலகாலமு மஞ்சனக் குன்றமு மாரிருட்பிழம்போடு' (இரகு. இலவண. ௬.) 2. நஞ்சு. 3. நிலவாகை. (மூ. அ.) [ஹாலாஹல.]

ஆலகாலவிடத்தைலம் — ஒருவகைத் தைலம். 'வாதாசன-விலக்கட லாலகால விடத் தயிலமுமீ தாமால்' (தைல. தைலவ. கஉ.)

ஆலகாலி—காளி. 'அந்தரி யாமளை யமலை யாலகாலி' (அரிச்சந். பாயிர. எ.)

ஆலகிரீடை—அலரி. (மூ. அ.)

ஆலங்கட்டி—1. கன்மழை. 2. துரிசு.

ஆலங்காட்டாண்டி — வரிக்கூத்துவகை. (சிலப். 3. 13. உரை.)

ஆலங்காடு–ஒரு சிவஸ்தலம். 'ஆலங்காட்டி லக்தேனை' (தேவார. பாவநாச. ரு. திரு நாவு.)

ஆலசம்–1. சோம்பு. 2. செல்வி. [ஸூலஸ: அலஸ - சோம்பு.]

ஆலசியம்–1. சோம்புத்தன்மை. 'நிவப்புறு மாலசியமே நெடுமோகம் பிராந்தியே' (சூத. எக்கி. உ: கூ0.) [ஸூலஸ்யம்: அலஸ - சோம்பு. ய - ஒரு விகுதி.] 2. தாமதம்.

ஆலசுந்தரர்–ஆலாலசுந்தரர். 'ஆலசுந்தரர் பித்தவெனுஞ் சொற்பழியாளா' (வெங்கைக். உகஅ.)

ஆலத்தி — நீராஞ்சனம். 'பல்லாண்டிசைக் கும்பத்தை மாலத்தி காட்டுகிற்பதும் வேந்தர்க்கே கடனதாயிற்று' (இரகு. குறை. அ.)

ஆலத்தியெடுத்தல்—ஆலத்தி சுற்றுதல்.

ஆலத்திவழித்தல் — ஆலத்தியெடுத்தல். 'வெறும்புறத்திலேஆலத்திவழிக்கவேண் டுக்கையிலேயிறே திருவாழிதரித்தது' (ஈடு. 1. 8. 9.)

ஆலந்தான்—சிவன். (உரி. நி.)

ஆலந்தை—ஒரு சிறுமரம்.

ஆலம் — 1. அம்புக்கூடு. 2. ஆகாயம். 'ஆலத்தி னுடுக்கள் காட்டி யருந்ததிகாட்டு வார்போல்' (கைவல். தத்துவ. உரு.) 3. ஆலமரம். 'சிறியதோர் வித்தி - னாலம் யாவையு மொடுங்கியே யவதரித்ததுபோல்' (கந்தபு. ஞானமைச். கஉரு.) 4. ஈயம். 5. கலப்பை. (பிங்.) 6. துரிசு. 7. நஞ்சு. 'ஆலமா மெனச்-செஞ்சுடர்ப்படிவமேற் செறித்தமா மணிக்-கஞ்சுகக்கடவுள்' (கந்தபு. கடவுள். க0.) [ஹாலாஹலம்: இது தமிழில் ஆலால மென்றும் ஆலம் என மருவிற்று.] 8. நீர். (சூ. நிகண். க. ருஉ.) 9. பாம்பு. (ஆனந்த லகரி. உச.) 10. புன்கமரம். 11. பூ. (பிங்கல. உஅ0அ.) 12. மஞ்சளும் சுண்ணமும் கலந்த நீர். 13. மழு. 'ஆலங் கணையங் குலிசாயுத மாதியாக' (கந்தபு. தாரக. கருஎ.) 14. மழை. (அக. நி.) 15. மாவிலிங்கை மரம். 16. விஸ்தாரம். 17. கடல். (பிங்.) 18. அலாயுதம். (கந்தபு. தாரக. 157.) 19. கருமை. 'ஆலக்கோலத்தினஞ்சு' (தேவா. 111. 3.) [ஸூல: 5. ஹல - உழவு. 6. ஹால.]

ஆலம்பநம் — தாங்குதல். [ஸூலம்ப ந]

ஆலம்பம்–1. ஆதாரம். 2. இலம்பரேகை, நிறுத்திட்டவரி. 3. கொள்கலம். 4. தாங்குதல். 5. பற்றுக்கோடு. (பிங்.) 6. புகலிடம். [ஸூலம்ப.]

ஆலமர்கடவுள் — சிவன். 'எங்க ளாலமர் கடவு ளன்றி யமரரில் யாவ ரம்மா' (கந்தபு. ததீசி. உ0.) [கல்லாலின்கீழிருந்தவரென்ற படி.]

ஆலமர்செல்வன்–சிவன். (மணி. 3. 144.)

ஆலமுடையோன்—துரிசு.

ஆலமுண்டோன்–சிவன். (திவாகா. க: க)

ஆலயம் — 1. தங்குமிடம். 2. தேவர் கோயில். 'மற்றை - யாலயங்களாயுள்ளவும்' (கந்தபு. வழிநடை. க0.) 3. நகரம். (பிங்கல. கூகசஅ.) 4. பிராமணர்வீடு. 5. யானைக்கூடம். (சூ. நிகண். ரு: ருச.) 6. வீடு. 'மெழுகினை நமக் காலயம் வகுத்ததும் விரகே' (பாரத. வாரணா. ககக.)

ஆலயவிஞ்ஞானம் — உருவகந்தத்தை நிருவிகற்பமாக உணரு முணர்வு. இதனைப் பிரவிருத்திவிஞ்ஞானகாரணமென்பர் சிவஞான பாஷியகாரர்.

ஆலல்—1. ஆடல். 'அணிக்குல மஞ்ஞைக ளகவி யாலுவ' (சேதுபு. கந்த. கூச.) 2. ஆரவாரித்தல். 'மகிழ்சிறந் தாலும் பீலி மஞ்ஞையி னிகலி' (பெரும்பா. கூஉ0.) 3. சேருதல். 'தோரா லு மெழுபரியோன்' (சூத. சிவமா. எ. க0.) 4. மயிற்குரல். (பிங்.)

ஆலலம்—கூறை.

ஆலவட்டம்—1. கால்செய்வட்டம், பெருவிசிறி. 'படுவேய்வெள்வளையமுந்தண்பட் டாலவட்டமும்' (பாரத. காண்ட. கச.) 2. விசிறி.

ஆலவணியம்—1. அவலட்சணம். 2. சுவையின்மை. [ஆலவண்ய: அ - எதிர்மறை. லவண - அழகு, உப்பு. ய - ஒரு விகுதி.]

ஆலவன்—1. ஆசை. 2. சந்திரன். (பிங்கல. ௩௧௪௬.) 3. விட்டுணு. 'கண்ணுதல் விமலனன்றெனி-ஞாலவனன்றெனி னயனுமன்றெனின்' (கந்தபு. சூரனமைச். ௪௩.) [ஆலிலையிற்றுயின்றவனென்றபடி.]

ஆலவனம்—திருவாலங்காடு என்னும் ஒருபதி. 'ஆலவநத் தமலனடங் கண்டுவந்த' (சிவதரு. சிறப். ௪.)

ஆலவாட்டு—வெய்யிலில் வாட்டுகை.

ஆலவாய் — 1. பாம்பு. 'மேருக் கோட்டியாலவாய் நெடுநாண் பூட்டி' (திருவி. சோழன். க௩.) 2. மதுரைநகர். 'ஆலவாயிற் கடவுளிடும் பரிவரவு காண்பானெண்ணி' (வாதவூ. குதிரை. ௯.)

ஆலவாலம்—1. சிறுபாத்தி. 'ஆலவாலத் தவிர்மதியாற்புனல் - காலவாய்ந்தகதிர்மணி முல்லையின்' (நைடத. அன்னத்தைத்தூ. ௪௦.) 2. வயல். [ஆலவால: ஆ; லூ - கிண்டல்.]

ஆலவிடம் — ஆலகாலவிடம். 'அருந்திய வாலவிடத்தினனே' (சிவதரு. சிவஞானதான. ௮௦.)

ஆலவூணி—உமாதேவி. 'குணவதி யாலவூணி யபிராமி' (திருப்பு. ௩௧௩.)

ஆலன் — 1. சாலிவாகனன். 2. சிவன். 'ஆல னிவ்வழி போந்த வதிசயம்' (தேவார. கூடலையா. ௯. சுந்தர.) [ஆலகீழலுடையோன் என்றபடி.] 3. பலராமர். [ஹால: ஹல - கலப்பை.]

ஆலா—ஒரு பறவை. (பட்டினத்தடி. திருவொற்றி. ௮.)

ஆலாகலம்—ஆலகாலம். 'கடியதோ ராலாகலவெள்ளம்போலக் கக்கினான்' (திருவிளை. நாக. ௧௭.) [ஹாலாஹல.]

ஆலாங்கட்டி — கன்மழை, மழைக்கட்டி. 'மெய்மயக்க மும்போக்குக் - கக்குமா லாங்கட்டி காண்' (பதார்த்தகுண. ௧௨.)

ஆலாசியம்—1. ஆலவாய், மதுரை. 2. முதலை. [1. ஹாலாஸ்ய. 2. ஆலாஸ்ய: ஆல - அகலம். ஆஸ்ய - வாய்.]

ஆலாட்டு—ஆல்வாட்டு.

ஆலாத்தீ—ஆலத்தி. (சௌந்தரி. 103.)

ஆலாத்து—1. அம்மாறு. (பெருங்கயிறு.) 2. ஒரு புள். 3. கப்பல். 4. வௌவாற்கொடி முடியுங் கயிறு.

ஆலாதம்—நெருப்புக்கொள்ளி. [ஆலாத.]

ஆலாநம்—1. கட்டு. 2. கயிறு. 3. யானைகட்டுங் கயிறு. 4. யானைகட்டுந் தூண். 5. விலங்கு. [ஆலாநம: ஆலா - கட்டு.]

ஆலாபநம்—1. சம்பாஷித்தல். [ஆலாபநம: ஆ; லப் - பேசுதல்.] 2. இராகத்தை விஸ்தரித்துப்பாடுகை.

ஆலாபம்—1. சம்பாஷணை. 2. பேசுதல். [ஆலாப:]

ஆலாபி—பேசுவோன். [ஆலாபிந.]

ஆலாபித்தல் — 1. சம்பாஷித்தல். 2. சுருதிகூட்டல்.

ஆலாபிநி—ஒருவகை வீணை.

ஆலாலம் — 1. நஞ்சு. 'ஆலாலமெனக் கதுவா' (பாரத. நான்காம்போர். ௫.) 2. வௌவால். (பிங்.) 3. ஒருமரம். 4. நீர். 5. பூ.

ஆலாலர் — ஆலாலசுந்தரர். 'ஆலாலர் தோற்றரவு' (சி. சி. க: ௬௧, சிவஞா)

ஆலாவர்த்தம் — ஆலவட்டம். [ஆலாவர்த்த.]

ஆலி—1. அமுதம். 2. ஆலங்கட்டி. 'ஆலியாநீரி னருளிறையாய்' (வைரா. தீப. ௩.) 3. ஆலியென்னேவலும் தெரிநிலைவினைப் பகுதியும். 4. கள். 'தேனு மாலியுந் தீமிசைச் சிந்தியே' (கந்தபு. அசுரயாக. ௭௧.) 5. காற்று. (அக. நி.) 6. தேள். 7. தேனீ. 8. தொடர்ச்சியானது, நிரை. 9. தோழி. 10. மழை. 'புயல்காலாலியெனக்குளிர்தூங்க' (கூர்மபு. திரிபு. ௫௫.) 11. மழைத்துளி. (சூ. நி.) 12. மனைவியின்றங்கை. 13. வரம்பு. 14. விஷமுள்ளது. 15. தலைப்பெயன்மழை. (பிங்.) 16. பூதம். [6, 7, 8, 9, 13. ஆலி: 12. ஹாலி.]

ஆலிகன்— 1. உழுவோன். 2. கலப்பைகொண்டுபொருவோன். [ஹாலிக: ஹல - கலப்பை. இக-ஒரு விகுதி.]

ஆலிநை—அகலிகை. (கம்பரா. கடிப்புக். 6.)

ஆலிங்கநம்—தழுவுகை. (சூடா.) [ஆலிங் கந.]

ஆலிங்கிதம்—தழுவியிருப்பது. (பௌட். பும். கசு.)

ஆலிந்தாம்—பெருஞ்சாடி. [ஆலிஞ்ஜர.]

ஆலிடம்—தெருச்சிறகு. (திவா.)

ஆலித்தல்—1. களித்தல். 'ஆலிக்கு மந்த ணர் வாழ்கின்ற' (திருப்பல்லாண்டு.) 2. செருக்குறுதல். 'பகலவனோ - டிகல்செயக் கருதி யிருடிரண் டாலித் தெழுந்தன' (அரிச் ச. விவாககா. கக.) 3. நீர்நுவுதல். 'நீத்த வியற்கை தன்னையெல்லா - முண்டா லித்தே வாளிகண் மீண்டே யுறுகாலே' (கந்தபு. சூர பன்மன்வதை. ச0க.) 4. ஒலித்தல். 'வெங் கூற்றாலிப்ப' (பு. வெ. 44.)

ஆலிந்தகி—அணில்.

ஆலிநாடன்—திருமங்கையாழ்வார். (திவ். பெரியதி. 3. 4. 10.)

ஆலிப்பு—ஆரவாரம். 'அப்பரிசாளரு மஃதேபிடித்த தாலிப்பாலடுத் தந்நூல்களும் விரித்தே' (தாயு. ஆகார. ௬.)

ஆலியகம்—சிறுகுறிஞ்சா. (மூ. அ.)

ஆலியப்பறை—பறையருள் ஒருவகை.

ஆலீடம் — அம்பெய்தற்குச் சொல்லப் படும் நால்வகைநிலையுளொன்று. அது, வலக் கான்முழந்தாளை முன்வைத்து இடக்காலைப் பின்வாங்கிநிற்பது. திவாகரத்திலே, 'வலக் கான் மண்டலித் திடக்கான் முந்துறு-மதன் பெய ராலீட நிலைய தாகும்' என்று சொல லப்பட்டது. [ஆலீட]

ஆலிநகம்—அத்தநாகம்.

ஆலீநம்—1. உருக்கப்பட்டது. 2. புதை யல். [ஆலீந.]

ஆலு — 1. ஆந்தை. 2. உண்டற்குரிய கிழங்கு. 3. கருங்காலி. 4. குடம். 5. சிறிய நீர்ச்சாடி. 6. தெப்பம். 7. பல். [1, 2, 4, 5, 6; ஆலு: 7. ஹாலு.]

ஆலுதல் — 1. ஆடுதல். 'இளங்குயில்கூவ மயிலாலும்பொழில்' (சூத. சிவமா. விநாய கர்துதி. கஎ.) 2. ஒலித்தல். 'ஆலுமறைசூழ் கயிலை' (பெரியபு. தடுத்தா. உஅ.) 3. நிறை தல். 4. களித்தல். (திவ். திருமாலை. 14. வ்யாக்.) 5. தங்குதல். (கலித். 36. 2. உரை.)

ஆலும்— 1. எதிர்மறைப்பொருளில்வரும் உம்மையாற்றொடரப்பட்ட இறுதிநிலை.'படித் தாலும்'. 2. ஆரவாரித்தாடும். 3. ஒலிக்கும். (ஐங்குறு.)

ஆலூகம்—வில்வம். (மூ. அ.)

ஆலேக்கியம்—1. எழுதப்பட்டது. 2. சித் திரப்படம். [ஆலேக்யம்: ஆ: லிக - எழுதுதல்.]

ஆலேகநம்— 1. எழுதுதல். 2. சித்திரித் தல். [ஆலேகந.]

ஆலேநி — 1. எழுதுகோல். 2. எழுத் தாணி. [ஆலேகநீ.]

ஆலேபநம்–1. பூசுதல். 2. பூசுந் தைலம். [ஆலேபந:]

ஆலேபம்—ஆலேபம். [ஆலேப.]

ஆலை—1. கருப்பஞ்சாறு. 2. கரும்பாட் டுஞ் செக்கு. 'அறைபடு மாலைக ளிடையிட் டாட்டலே' (கந்தபு. நாட்டுப். ௩0.) 3. கரும்பு.'ஆலையங்கழனியும்' (கந்தபு. நாட்டுப். 30.) 4. கள். (பிங்.) 5. யானைக்கூடம். 'அது சேர்ந் தல்கிய வழுங்க லாலை' (புறநா. ௨௨0) [ஹாலா.] 6. சாலை. 'ஆலைசேர் வேள்வி' (தேவா. 844.)

ஆலைக்குழி—கரும்பாலையிற் சாறேற்கும் அடிக்கலம்.

ஆலைத்தொட்டி — கருப்பஞ்சாறு காய்ச் சுஞ் சால்.

ஆலைபாய்தல் — மனச்சுழற்சி (அருட்பா. விண். 406.)

ஆலைமாலை — அலைச்சல். [அலை என்பதி னின்று ஆலை எனவும், மலை என்பதினின்று மாலை எனவும் வந்ததுபோலும்.]

ஆலையடித்தல்—ஆலையாட்டுதல்.

ஆலையாட்டுதல்— கரும்பாலை சுழற்றுதல்.

ஆலையோட்டுதல்—ஆலையாட்டுதல்.

ஆலோகநம்—பார்வை. [ஆலோகநம்: ஆ; லோக் - பார்த்தல்.]

ஆலோகம்—1. பார்வை. 2. பிரபை. 3. முகமன்வார்த்தை.[ஆலோக:ஆ;லோக் - பார்த்தல்.]

ஆலோகன்—தெளிந்த புத்திமான்.

ஆலோசகபித்தம்—கண்களில் வாசம்பண்ணிக்கொண்டு எல்லாப்பொருள்களையும் நன்ருகத்தெரியப்படுத்தும் பித்தம்.

ஆலோசநம்—ஆலோசனை. [ஆலோசநம்.]

ஆலோசனை—1. காட்சி. 2. சிந்தித்தல். [ஆலோசநா.]

ஆலோசித்தல் — சிந்தித்தல். 'என்றுளமுடைந்தாலோசித்து' (மச்சபு. திரிபுரஞ் சமுத். ரு.)

ஆலோசிதம்— 1. காணப்பட்டது. 'நிருவிகற்பஞானாலோசிதமாய்' (சி. சி. உ: ருக. ஞானப்.) 2. சிந்திக்கப்பட்டது. [ஆலோசிதம்.]

ஆலோடநம்—கலக்குதல். [ஆலோடநம்: ஆ; லோட - அசைத்தல்.]

ஆலோலம்— 1. அசைதல், அலைதல். 2. நீரொலி. (அக. நி.) 3. புள்ளோப்புமோரொலி. 'பூவைகாள் செங்கட் புறவங்காளாலோலம்' (கந்தபு. வள். ருச.)

ஆலோலிதம்— 1. அசைக்கப்பட்டது. 2. சந்தோஷத்தைக்காட்டும் அசைவு. [ஆலோலிதம்.]

ஆலோலிதமுகம்- பதினன்கு முகநிலைகளுளொன்று. அஃது: ஆசையான் மலர்ந்த முகமா யழைப்பதைக் குறிப்பது.

ஆலோன்—சந்திரன். 'கிளைக்கடல் வளைவுமாலோன் கிளருடு வளைவும்' (இரகு. குறை. க.)

ஆவ—1. ஓர் இரங்கற்குறிப்பு. 'அணிச்சந் திகழுமஞ் சீரடி யாவ வழல்பழுத்த, கனிச்செந் திரளன்ன கற்கடம் போந்து' (திருக்கோ. உகக.) 2. அபயக்குறிப்பு. (திருவாசக. 5. 4.)

ஆவகம்—1. ஏழு வாயுக்களுளொன்று. 2. சுமக்குமது. [ஆவஹம்: வஹ-சுமத்தல்.]

ஆவகன் — சத்தமருத்துவர்களி லொருவன். (மச்சபு. துர்ச்சகு. 2.)

ஆவகை—யாறு. [ஆவஹா.]

ஆவச்சீவாளம்—முழுநிலை. (வழக்.)

ஆவசதம் — 1. ஓமாக்கினிவளர்க்குமிடம். 2. வீடு. [ஆவஸதம்.]

ஆவசப்பியம் — 1. சீடரும் துறவிகளும் இருக்கும் சாலை. 2. பஞ்சாக்கினியி லொன்று. 3. வீடு.

ஆவசியகம் — 1. அவசியஞ்செய்யவேண்டிய கடமை அல்லது செயல். 2. அவசியம். 3. நிச்சயசாத்தியம். [ஆவஶ்யக.]

ஆவசியம்—அவசியம். [ஆவஶ்யம்.]

ஆவஞ்சி—இடக்கையென்னும் ஒருவகைத் தோற்கருவி. (சிலப். அரங்கே.) [ஆவினுடைய வஞ்சித்தோலைப்போர்த்தலால் இப்பெயர்பெற்றது.]

ஆவட்டை—ஒரு பூண்டு.

ஆவடுதுறை —திருவாவடுதுறையென்னுந் தலம். 'அதுவோவுன தின்னருளாவடுதுறையானே' (தேவார. திருவாவடுதுறை. திருஞானசம்பந்த. க.)

ஆவணக்களம் — பத்திரப்பதிவுச்சாலை. 'ஆவணக்களத்தே அறக்கொண்டு விற்று' (S. I. I. III. 108.)

ஆவணக்களரி — பத்திரப்பதிவுச்சாலை. 'ஆவணக்களரியே காட்டிக் காப்பிட்டு' (சோழவ. 68.)

ஆவணம்—1. அடையாளம். 2. உரிமை. (பிங்.) 3. உரிமைப்பத்திரம், அடிமையோலை. 'அண்ணலோர் விருத்தன் போல்வந் தாவணவோலை காட்டி' (கந்தபு. வழிநடை கஉ.) 4. கடைவீதி. 'குறுகி யாவணஞ் சித்திர கூடநாற் சந்தி' (திருவிளை. எல்லாம். எ.) 5. கரை. 6. தெரு. (சூடா. நிக. கக. வகரவெ. சு.) 7. தேர்மொட்டுப்பொருந்திய பீடம். 8. புனர்பூசம். 'பாலை யாவணம் புரைகொண்மூங்கில் புனர்பூசம்' (உள்ளமுடை. கவி. கசு.)

ஆவணமாக்கள் — பிரமாணம் வாங்குவோர். (அகநா. 77.)

ஆவணவீதி—கடைத்தெரு. (திருவிசை. கரு. 7. 1)

ஆவணவோலை—உரிமைப்பத்திரம். (கந்தபு. வழிநடை. 12)

ஆவணி—1. அவிட்டநக்ஷத்திரம். (சூ. நிகண். எஅ.) 2. ஐந்தாமாதம். 'அங்கிளர் மதுரையம் பதியி லாவணித்-திங்களில்' (வாதவூர. குதிரை. க.) [சிராவணம் என்னும் ஆரியபதம் தமிழில் ஆவணி என மருவிற்றுப்போலும்.]

ஆவணியம்—
ஆவணீயம்— } ஆபணியம்.

ஆவத்தனம் — ஆபத்தனம். (திவ். பெரியாழ். 4. 2. 6)

ஆவத்து—ஆபத்து. (கம்பரா. சூர்ப்ப. 86.)

ஆவது—1. ஆகவேண்டியது. 'ஆவதாகிய பரிசெலாம்' (கந்தபு. இக்குவிச. ௬.) 2. விகற்பப்பொருளைத்தரும் ஓர் இடைச்சொல். 'உரிய மனைவி மைந்தன்பா னுறவைத் தாவ துடன்கூடித் - தெரியவரக்கொண்டாவது' (சூத. ஞானயோ. ௫: ௨.) 3. விவரம் பின் வருதலைக் குறிக்குஞ் சொல். 'கொல்லையாவது.' (S. i. i. I. 103) 4. எண்ணொடு வருஞ்சொல்.

ஆவந்தியன்—1. அவந்திதேசத்தான். 2. பிராமணனுக்குப்பிறந்து உபநயநந்தவறிப் போன விராத்தியனுக்கும் பிராமணப்பெண்ணுக்கும் பிறந்து நீசத்தொழிலுடையரான பிராமணர்களி லொருவகையான். (பரா. பக். ௩0௮.) [ஆவந்த்ய.]

ஆவநாழி — அம்புக்கூடு. 'ஆவநாழிதானென் றுமருளவடைந்தே' (வேதாரணியபு.)

ஆவநாழிகை — அம்புக்கூடு. 'சேடாவநாழிகையிற் புடைதிரண்டு. (சிந்தா. நாமக. ௩௪௭.)

ஆவநேயன்—செவ்வாயென்னுங் கிரகம். [ஆவநேய: அவநி-பூமி. ஏய-ஒரு விகுதி. அவநியின்மகன் எனப் பொருள்படுந் தத்திதபதம்.]

ஆவபநம் — 1. செசவுபண்ணுதல். 2. விதைத்தல். [ஆவபந.]

ஆவம்—1. அம்புக்கூடு. 'புற்றுகு மாவமுறைவாளிப் புயங்கமுன்ன' (நைடத. அன்னத்தைத்தூ. ௭௧.) 2. குங்குமமரம். 3. வில்நாணி. (பிங்)

ஆவயின்—அவ்விடம். 'ஆவயின் மகிழ்ந் தவை யளித்து' (சீகாழி.சூரியன்.௩௨.) சுட்டு நின்றது.

ஆவர்—யாவர். 'ஆவரிவைசெய்தறிவார்' (திவ். பெரியதி. 3. 3. 7.)

ஆவர்த்தகம்—1. குதிரைமயிர்ச்சுருள். 2. சுழல்காற்று. 3. சுழலுதல். 4. மனக்கலக்கம். 5. மயிர்முடி. [ஆவர்த்தக.]

ஆவர்த்தநம்—1. உருக்குதல். 2. கடைதல். 3. கலக்குதல். 4. சுழற்றுதல். 5. பழக்கம். 6. ஆவர்த்தம். 7. மறுவிவாகம். [ஆவர்த்தந.]

ஆவர்த்தம் — 1. ஏழுமுகில்களிலொன்று. அது நீர்பொழிவது. (சூ. நிகண். ௩௨.) 2. குடிநெருங்கிய இடம். 3. சிந்தித்தல். 4. சுழல்காற்று. 5. சுழி. 6. தடவை, திரும்புதல். 'ஈரைந்தாவர்த்தமடக்கு'. 7. மயிர்முடி. [ஆவர்த்த.]

ஆவர்த்தி—தடவை.

ஆவரகம் — 1. திரைச்சீலை. 2. மூடி. [ஆவரக.]

ஆவரசன்—மூன்றாம்வசுவின் குமாரன். (வி-ணி. ௨௰௬.)

ஆவரணச்சுவர்—கோயிற்றிருமதில்.

ஆவரணசத்தி—மூலப்பிரகிருதியின் தமோகுணத்திலுண்டான இருசத்திகளிலொன்று; அது ஈசுவரனையும் ஞானிகளையும் தவிர மற்றைச் சீவராசிகளுக்கெல்லாஞ் சரீரத்திரய சாக்ஷி சைதந்நியங்களை ஒன்றற்கொன்று பேதந்தெரியவொட்டாது மறைக்கும் மாயை. (உபநிட. ௩௪.)

ஆவரணதேவதை — பரிவாரதேவதை. (த. நி. போ. ௨௩௭.)

ஆவரணம்—1. ஆணவமலம். (சிவப். ௨: ௨. சிதம்பர.) 2. ஈட்டி. 3. கேடகம். 4. தடை. 5. புறவேலி. 6. மதில். 'தீர்த்தனாவரணுதி சிதைந்திட' (சிவதரு. பாவ. ௭௧.) 7. மூடுதல், மறைத்தல். 'இலிங்கசிரசு ஆவரணமில்லாமற் சூநியமாயிருந்தால்' (சி-வி. கிரி. ௧. உரை.) 8. ஆடை. (பிங்) [ஆவரணம்.] 9. சட்டை. (சூடா).

ஆவரணித்தல்—மறைத்தல். (வேதா. சூ. ௩௮. உரை.)

ஆவரணீயம்—மறைப்பது.

ஆவரி—அம்பு.

ஆவரிக்கை—மறைத்தல். 'இந்தக் கலாதி தத்துவங்கள் விபுவாயிருக்கிற ஆன்மாவை இலிங்கசரீரமாவரிக்கையால்' (சி.சி. ௨. ௫௰. சிவாக்.)

ஆவரித்தல்—மறைத்தல். 'நின்மலமான ஆன்மஞானத்தைச் சமலமான தேகம் ஆவரித்தது அந்த உபாதியினு லவத்தாதிகளுளன்டாமென்னில்' (சி. சி. ௮. ௧௯. சிவாக்.)

ஆவரை—1. ஆவாரை, ஆவிரை. (நைல. தைலவ. கந௫.) 2. நிலவாகை.

ஆவல் — 1. ஆவேனெனப்பொருள்படும் ஒரு தன்மைவினைமுற்று. 'கயிலைக்கினை யாவலென்றே சிந்தித்ததுகொல்' (கந்தபு. அகத்தி. ௬.) 2. பேராசை. 'அநுபவநிலையுஞ் சேருமோ வாவலோ மெத்த' (தாயு. ஆரண. ௬.) 3. வளைவு. 4. விருப்பம். 'ஆவலாலெமக் காமலர் மரங்களாக்கல்' (வாதஆர. திருப்பெரு. ௬௯.)

ஆவல்லி—சீந்திற்கொடி. (மூ. அ.)

ஆவலங்கொட்டல் — ஆர்த்து வாயிலடித்தல். 'மேவலன் றனது சென்னி மெல்லிதழுதுக்கி விண்மே-லாவலங்கொட்டிச்செல்ல' (கந்தபு. சிங்கமு. ௬௨௮.)

ஆவலப்பேச்சு—ஆதரவற்ற பேச்சு, பலமற்ற பேச்சு.

ஆவலம்—1. கொல்லை. 2. வாயாலார்த்தல்.

ஆவலர்—1. உற்றார். 2. கணவர். 3. காதலர். (2, 3. பிங்கல. ௬௧௫0.)

ஆவலாதி — பிரயோசனமில்லாத பேச்சு. 2. குறைகூறுகை. (அக. நி)

ஆவலி—1. இரேகை. 2. ஒழுங்கு. 'மஞ்சுளரோமாவலி' (கம்பரங். ௭௬.) 3. தொடர்ச்சி. 4. வம்மிசவரிசை. [ஆவலி:]

ஆவலித்தல் — 1. அழுதல், புலம்பல். 'இல்லை யாகிய வென்மகற் காண்பனென் - றெல்லை யாவலித் தோடினளேகினுள்' (கந்தபு. பாநுகோபன்வதை. ௧௧௪.) 2. ஆசைப்படுதல். 3. கொட்டாவிவிடுதல். வாய்திறத்தல். 'அங்குள பரிசனங்க ளாவலித் திரங்கிச்சூழ' (திருவிளை. வன்னியும். ௧௨.)

ஆவலிப்பு—1. ஆசை. 2. பேராசை. 3. வளைவு. 4. கருவம்.

ஆவளி—1. இரேகை. 2. ஒழுங்கு, வரிசை. 3. வமிசபரம்பரை.

ஆவளித்தல்—ஆவலித்தல். [லகரம் ளகரமாயிற்று.]

ஆவறி—அவா. (வழக்.)

ஆவா—1. அதிசயக்குறிப்புணர்த்தும் ஓர் அடுக்குமொழி. 'ஆவா குறவர்தவ மாரளக்கவல்லாரே' (கந்தபு. வள். ௧௪௬.) 2. இரக்கக்குறிப்புணர்த்தும் ஒரு அடுக்குமொழி. 'ஆவா வெனக் கொடுங்கூற்றென வொருசார்வரும்' (கந்தபு. சூரபன். ௪௧0.)

ஆவாகநம்—1. அக்கினிக்குப் பலிசெலுத்தல். 2. அழைத்தல். 3. தாபிக்கும்படி தெய்வத்தை யழைத்திருத்தல். 'ஆவாகநாதினை' (சைவச. பொது. ௫௨௫.) [ஆவாஹந.]

ஆவாகநிமுத்திரை—இருகையும் அஞ்சலியாகச்சேர்த்து இரண்டநாமிகைவிரல்களின் அடிக்கணுக்களில் இரண்டங்குஷ்டங்களையுஞ்சேர்த்துக் காட்டுவது. (சி-லி. கிரி. ௨௯. உரை.)

ஆவாகித்தல்—தாபநஞ்செய்தற்குத் தெய்வத்தையழைத்தல். 'சேந்தபொற் குண்டத்தோங்குஞ் சிகைத்தழன் மிசையே கம்ப-வேந்தையாவாகித்து' (காஞ்சிப். நகர. ௧௧௯.)

ஆவாநை—நிலவாகை. (மூ. அ.)

ஆவாசம்—1. புகலிடம். 2. மருதநிலத்தூர். (சூ. நிகண். ௫: ௨0.) 3. வசிக்குமிடம். 4. வீடு. [1, 3, 4. ஆவாஸ: ஆ; வஸ் - வசித்தல்.]

ஆவாதம்—ஆகதம். (பாரத. இராக. 24)

ஆவாபநம்—1. நூல்சுற்றும் பரிவட்டம். 2. நெய்வார் தறி. [ஆவாபந.]

ஆவாபம்—1. இடுதல். (சைவப். ௨௯.) 2. கையிலணியும் வளையல். 3. சமமற்ற நிலம். 4. நீர்நிற்கும்படி மரத்தைச்சூழக் கிண்டிவிடும் பாத்தி. 5. விதைத்தல். [ஆவாப:]

ஆவாரகசத்தி—ஆன்மாவுக்கு அநாதியே உண்டென்று சொல்லப்படுஞ் சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவரூப சிவத்துவத்தை மறைக்கும் ஓ ராணவமல சத்தி. (சி. சி. ௨: ௮0. ஞாநப்.)

ஆவாரகம் — மறைப்பு. 'சர்வான்மாக்களுக்கு மாவாரகமல்ல' (சி. சி. ௨: ௮0. சிவாக்.) [ஆவாரக: ஆ; வ்ரு - மறைப்பு. ௬க - ஒரு விகுதி.]

ஆவாரம்—1. தாரகம். (சிவப்பி. வியாக். கo.) 2. மயக்குவது. 'கன்மாந்தமனுக்கபிபார்க்கு மாவாரமாய்' (சிவப்பி. உச.) 3. மறைத்தல். 'இரிமாதிராவாரதிகிரிசாய' (திருப்பு. கூஉரு.)

ஆவாரிதை—மறைத்தல். (சி-வி. ஞாந. சு.)

ஆவாரை—1. ஆவாரைவேர். 'ஊர்விலாமிச்சாவரை யூனிமாலூரம்' (தைல. தைலவ. கூச.) 2. ஆவிரை. 'ஆவாரைமூலியது' (பதார்த்த. உருச.) 3. நிலவாகை. (மூ. அ.)

ஆவாரைப்பஞ்சகம் — ஆவாரையின் வேர், பட்டை, இலை, பூ, காய் என்னும் ஐவகையங்கங்கள். 'ஆவாரைப்பஞ்சகங்கொள்' (பதார்த்த. சகூக.)

ஆவாலம்—1. மரத்தடியிற்கோலிய பாத்தி. 2. வெளவால். [ஆவாலு.]

ஆவி—1. உயிர். 'பதுமகோமளையெனுந் திருமங்கை-யாவிநீங்கினள்' (கந்தபு. இரணியன்புல. உ.) 2. உயிர்ப்பு. 3. உயிரெழுத்து. 'ஆவியு மொற்று மளவிறந் திசைத்தலும்' (நன். கoக.) 4. குளம். 'ஆவியம்புனலறு தமரும்' (கந்தபு. சயந்தன்புல. அ.) 5. நீரிலெழுமாவி. 6. பிட்டு. (பிங்கல. ககoஅ.) 7. புகை. 'காவியுங்காரகிலாவியுந்தோய்குழல்' (வாண. உo.) 8. புகையிலை. 'கடுபுளிபாறயிர்கைப் பாவிகண்டு' (தைல. பாயிர. இஅ.) 9. வாசனை. 'கன்னாவி நாறுங் கமழ்கோதையிற்போயவாறும்' (சிந்தா. பதிக. கரு.) 10. நெட்டுயிர்ப்பு. (கம்பரா. உலா 30.) 11. கொட்டாவி. (சீவக. 1572.) 12. மனம். (சீவக. 1588.) 13. வலிமை. (கம்பரா. நிந்தனை. 69.) 14. வேளிர்தலைவருள் ஒருவன். (அகநா. 1.)

ஆவிகம்—1. ஆட்டிலிருந்து வருவது. 2. ஆட்டுமயிர்க் கம்பளம். [ஆவிகஃ; அவி - ஆடு. க - ஒரு விகுதி.]

ஆவிகை — பற்றுக்கோடு. 'ஆகாயம் போவார்க்கு மாவிகையோ' (ஒழிவி. கிரியை. இ.)

ஆவிடை—சத்திரூபம்.

ஆவிடையார்—ஆவுடையாள்.

ஆவித்தல் — 1. கொட்டாவிகொள்ளல். 'வெய்யவா-ளரவுபைத் தாவித் தாங்கன்ன காந்தளவிழ்ந் தலர்ந்தன' (சிந்தா. ககக. கரு.) 2. புகைத்தல். 'தூபபாத்திரமாவித்தபுகை' (சிந்தா. இலக். சகூ. உரை.) 3. பெருமூச்செறிதல். 'தோன்றியைச்சேர்ந்-தாவித் தகந்தளரும் மணிகாலு மராவென்னவே' (வாண. உஎo.) 4. வாய்விடுதல். (சீவக. 3124.) 5. வெளிவிடுதல். (சீவக. 2426.)

ஆவிதம்—1. துறப்பணம். (துளைக்குமூசி) 2. திருகூசி. [ஆவியஃ]

ஆவிப்பதங்கம்—வைப்புச்சரக்கு.

ஆவிபத்தம்—பேராமுட்டி.

ஆவிபத்திரம்—புகையிலை. (மூ. அ.) [ஆவி-புகை. பத்திரம் - இலை.]

ஆவிபதம்—1. புறாமுட்டை. 2. பேராமுட்டி. (மலை.)

ஆவியம்—1. உயிர். 2. சரீரபலம். 3. சரீரம்.

ஆவியர்—1. வேடர். 2. வேளாளர். (அக. நி) 3. வேளாவியின் மரபினர். (புறநா. 147.)

ஆவியர்கோ — பேகனென்னும் வள்ளல். (புறநா.)

ஆவியேற்றம்—பெருமூச்சு.

ஆவிர்த்தி — மறைத்தல். 'ஆதலால் மலம் ஆவிர்த்தி நிவிர்த்திச் சொற்சொல்லும் மறைத்தல் திரும்புதல்என்னுமீரேகசுவபாவ சத்திமத்தாதலால்' (சி. சி. எ: உ. ஞாநப்.)

ஆவிர்ப்பவித்தல் — 1. உண்டாதல். 2. தோற்றுதல்.

ஆவிர்ப்பாவம்—1. பிறப்பு. 2. தோற்றம். 'பஞ்சேந்திரியங்களுடைய ஆவிர்ப்பாவமே' (சி. சி. கூ: ச. சிவாக்.) [ஆவிர்பாவஃ; ஆவிஸ் - வெளிப்படையான. பாவ - தன்மை.]

ஆவிர்ப்பூதம் — 1. தோன்றியது. 2. வெளிப்பட்டது. 'பிரணவபஞ்சகலாவிர்ப் பூதவதிருக்குமைமுதலிய' (சி. சி. சு: சo. ஞாநப்.) [ஆவிர்பூத: ஆவிஸ் - வெளிப்படை. பூத - ஆனது.]

ஆவிருட்டி—மழைபெய்தல். [ஆவ்ருஷ்டி.]

ஆவிருத்தி—1. சுற்றிப்போதல். 2. திரும்பி வருதல். 3. பிரயோகம். 4. (இரண்டாவிருத்தி என்றாற்போல எண்ணுப்பெயரோடு சேர்ந்துவருங்கால்) தரம். 5. பரிவிருத்தி. 6. பிறவியிற் சுழலுதல்.

ஆவிருதம் — மறைக்கப்பட்டது. 'அந்த அஞ்ஞாநத்தாற் சேதநம் ஆவிருதமாயிருக்கிறது. (விசார. கஉசு.) [ஆவ்ருத.]

ஆவிருதன்–1. க்ஷத்திரியனுக்கும் சூத்திர ஸ்திரீக்கும் பிறந்த உக்கிரையிடம் பிராமணனுக்குப் பிறந்தவன். (பரா. ௧௦௭.) 2. மறைக்கப்பட்டவன். 'மலாவிருதன்' (பௌட். பசு. ௧௨௫.)

ஆவிருதி–1. ஆணவமலம். (சிவ. போ. சிற். ௪. ௫.) 2. கிரமம். 3. சடங்கு. 4. மறைப்பு. (சி. சி. ஞான. அரும்பத.) 5. விதம். [ஆவ்ருதி: ஆ; வ்ருதி - மறைப்பு.]

ஆவிருந்து — ஒரு நிகழ்கால இடைநிலை. 'உன்னாவிருந்து' (நன். ௧௪௫. சூ. இராமாநு.)

ஆவிரை—1. ஒரு செடி. 2. ஒரு மரம். 'வானளாவினவார்கனி யாவிரை' (காஞ்சிப். சுரகரி. ௧௨.)

ஆவிலம்—1. அழுக்கு. 2. கலங்கனீர். (சூ. நிகண். ௫. ௨௬.) [ஆவிலம்:]

ஆவின்—புல்லுருவி.

ஆவினன்குடி-சுப்பிரமணியமூர்த்திக்குரிய அறுதலங்களி லொன்று; அது பழனிமலைக் கணித்தாயுள்ளது. 'ஆவினன்குடிவருமமலற் போற்றுவாம்' (கந்தபு. கடவுள்வா. ௧௪.) இத்தலம் இக்காலத்துப் பழனியென்று வழங்குகின்றது.

ஆவீதம்—1. சென்றது. 2. பூணூல். [ஆவீதம்.]

ஆவீதீ—வலப்புயத்திலே உபவீதமுடைய பிராமணன். [ஆவீதிந்,]

ஆவீரம்—இடையரூர்.

ஆவீரன் — இடையன். இவன் றொழில்: ஆடு, மாடு, எருமை என்னும் மூவினமேய்த்தல். (பரா. மி. ௧௫௬.) [ஆவீர:.]

ஆவீரி—இடைச்சி. [ஆவீரீ.]

ஆவு—குன்றி. (மூ. அ.)

ஆவுடையார்—ஆவுடையாள்.

ஆவுடையாள்—சத்திரூபமாகிய பீடம். 'ஆவுடையாளுஞ் சிவலிங்கமும் ஒன்றைவிட்டொன்று நீங்காது தம்மிற்கூடியிருந்து ஆன்மாக்களை இரட்சிக்கும்முறைமையறியார்கள்' (சி. சி. ௬௧. நிரம்ப.)

ஆவுத்தன்–சகோதரிபுருடன். [ஆவுத்த]

ஆவுதல்–விரும்புதல். 'செங்நெலங் கழனிச் செய்வேட்டாவிய மறையோன்' (உபதேச கா. சிவத்துரோ. 120.)

ஆவுதி — யாகம். 'ஆவுதி மண்ணியவிர் துகின் முடித்து' (மதுரைக். ௪௯௪.) [ஆஹுதி என்பதில் ஹகாரமெய் கெட்டுநின்றது.]

ஆவுரிஞ்சி — ஆவுரிஞ்சுதறி. அஃது ஆ தினவு தீண்டுகுற்றி. 'அறுசமயத் தோர்க் குணவோ டாவுரிஞ்சுதறி' (திருநெல். அறம் வள. ௩௩.)

ஆவெனல்—1. ஆவென்றிரங்குதல். 'ஆவென் றலறி' (தேவா. 70. 8.) 2. வாய்திறத்தல். 'காசினிக்கும் வெண்ணெய்க்குஞ் செம்பவள மாவென்றான் சேர்பு' (திருவேங்கட மாலை. ௧௬.)

ஆவேகம்—1. சீக்கிரம். 2. தடுமாற்றம். [ஆ: விக் - பயங்கரமடைதல்.]

ஆவேகி—ஆடுதின்னாப்பாளை. (மூ. அ.)

ஆவேசசமவாதம்—காபாலம்.

ஆவேசசாமியவாதீ —காபாலமதத்தோன்.

ஆவேசநம்–1. அக்கசாலை. 2. சிற்பர்வீதி. (சூ. நிகண். ௫. ௪௮.) 3. சினம். 4. சூரியமண்டலம். 5. சித்திராகாரர்வீதி. [ஆவேஶநம்.]

ஆவேசநீர்—கள் முதலியவை. 'ஆவேச நீரைக் குடித்த துட்டர்' (திருப்பு. 794.)

ஆவேசம் — 1. உட்புகுதல். 'முத்தியினதாவேச வாசைக் கடற்குண் மூழ்கி' (தாயு. சின். ௧.) 2. இறுமாப்பு. 3. ஒன்றிலே மனமழுந்திநிற்றல். 4. காக்கைவலிமுதலியவற்றில் வரும் தலைச்சுழற்சி. 5. பேய்க்கோள், வெறியாட்டு, தெய்வமேறல். 'சாயா புருடனைப்போ லாநந்த மேதடித்த - மாயா வயிரி மநமாண்ட-நேயவுரை-யாவேசர் வீர ரசர் மடலாளர்-சாவாநந் தர்க்குச் சரி' (ஒழிவி. பொதுவி. ௧௦.) [ஆவேஶ:; ஆ-விஶ் - பிரவேசித்தல்.]

ஆவேசவாதீ—காபாலிகன்.

ஆவேசிகன்—விருந்தனுகவந்தவன். [ஆவேஶிக:; ஆ; விஶ் - பிரவேசித்தல்.]

ஆவேசித்தல்–உட்பிரவேசித்தல். 'அந்தச் சிவன் இந்தக்குருதேகத்தி லாவேசித்து' (சி. சி. ௧௨. ௭. ஞானப்.)

ஆவேட்டகம்—1. மதில். 2. வேலி. [ஸ்ரூ வெஷ்டக: ஸ்ரூ; வேஷ்டக - வளைத்துளது.]

ஆவேட்டநம்-1. அடைக்கப்பட்ட இடம். 2. கட்டுதல். 3. முடிக்கட்டல். [ஸ்ரூவெஷ்டநம்]

ஆவேட்டிதம் — சூழப்பட்டது. (சி-வி. யோக. ௪.)

ஆவேதகன்—1. அறிவிப்போன். 2.வியாச்சியத்திற் பிரவேசிப்போன். [ஸ்ரூவெடிகஃ; ஸ்ரூ; வித் - அறிதல்.]

ஆவேதநம்—1. அறிவிப்பு' 2. முறையீடு செய்தல். 3. முறையீட்டுப்பத்திரம். [ஸ்ரூ வெடிநம: ஸ்ரூ; விதீ - அறிதல்.]

ஆவேதிதம்-அறிவிக்கப்பட்டது. [ஸ்ரூவெ டிக.]

ஆவேலி—தொழுவம். (திவா.)

ஆவேறு—இடபம். 'ஆவேறுயர்த்தோன்' (உபதேச. இரு. 16.)

ஆவோ—ஓர் அதிசய இரக்கச்சொல்.

ஆழ்—1. ஆழ்ந்த என்னும் பொருள்படும் ஒரு வினைத்தொகை. 'ஆழ்துயர்க்கடலிடை' (நைடத. அன்-கண். ௭௧.) 2. ஆழென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும்.

ஆழ்கடற்றுயின்றோன்—திருமால். (திவா.)

ஆழ்த்தல்—1. அமிழ்த்துதல். 'துன்பத்திலாழ்த்தன் முறையோ' (தாயுமா. ௬௧. ௧௧.) 2. கட்டல். 3. தாழ்த்தல். 'அடலேறனைய செருக்காழ்த்தி' (நன்னெறி. ௭.)

ஆழ்த்துதல்—ஆழ்த்தல்.

ஆழ்தல்-1. அழுந்தல். 'அல்லலுற் றழுங்கி நெஞ்சிற்கட்டியக் கார னாழ்ந்தான்' (சிந்தா. கோவிக். ௬0.) 2. தொழிற்பெயர். 'ஆழுறு மிலக்கையு மாழி மேலெழ' (கந்தபு. யாளிமுக. ௨௪.) 3. தாழ்தல். 'இன்னலங் கடலுளாழ்க் திறக்குமேகொலாம்' (நைடத. அன்-கண். ௬௮.) 4. பதிதல். 'ஆளிக ளன்னவர் கிறத்தி னாழ்பவே' (இராமா. நகர. ௬௪.) 5. மூழ்குதல். 'ஆழ்கலத்தன்ன கலி' (நாலடி. 12.) 6. விழுதல். 'கைம்முதறுணிந்துகளிறுழ' (சீவக. 282). 7. சோம்புதல். (திவா.) 8. அழமாதல். 'ஆழ்கடல்' 9. வருந்துதல். (பதிறெ. காரைக். திருவிரட்டை. 6.) 10. அகழ்தல். 'ஆழ்ந்து காணு ருபர்ந்தெய்தகில்லார்' (தேவா. 1153.9.)

ஆழ்வார் — 1. திருமாலடியார் பதின்மர். 2. ஜைந பௌத்தப் பெரியோர். 3. சுவாமி. 'ஆழ்வார் திருவரங்கதேவர்' (s. i. i. III. 150.) 4. பகவத்குணங்களில் ஆழ்ந்து ஈடுபடுபவர்.

ஆழ்வார்கன்மி — திருமால்கோயிலருச்சகன். (s. i. i. III. 150.)

ஆழ்வான்—சூரியன். 'ஆழ்வான்சேய்காரி' (சிரேங். தாதுகாண். 102.)

ஆழ்வு — ஆழம். 'நுடங்கும் வெம்பகைபாகமிட் டாழ்விளிற் பதிந்த தாயினும்' (இரகு. திக்கு. ௨௬.)

ஆழங்காற்படுதல்—அழுந்துதல். 'பகவத் விஷயத்தி லாழங்காற்பட்டு' (ஈடு. 4. 3. 6.)

ஆழம்-1. கடல். 2. நுண்ணுணர்வா லறியவேண்டிய பொருளுடைமை. 'ஆழமன்னேவுடைத் திவ்வையர் வார்த்தை' (திருக்கோ. வை. ௬௪.) 3. பூமியின்மேற்பரப்பினின்று கீழேபோகுமளவு, மேலே நின்று கீழே போகுமளவு. 'உள்ளுற வாயிர வாயிர யோசனை யுறுநீளக்-கொள்வதொ ராழமும்' (கந்தபு. அசுரயாக. ௬௨.)

ஆழம்பார்த்தல்-1. ஆழத்தையளந்தறிதல். 2. ஒருவனறிவுமுதலியவற்றைச்சோதித்தல்.

ஆழமுடைத்தாதல்-நூலுக்குரியபத்தழகுகளுள் ஒன்று. அஃது: அரிதுணர்பொருளாதல். (நன். பொதுப். ௧௩.)

ஆழல்—1. ஆழமுடைத்தாதல். 2. ஆழுதல். 3. கறையான். (பிங்கல. ௨௫௩௮.)

ஆழாக்கு—அரைக்காற்படி.

ஆழாத்தல்—ஈடுபடுதல். 'அருளின் பெருநசையா லாழாந்து' (திவ். திருவாய். 2.1. 8.)

ஆழாரம்—முற்காலத்து வழங்கிய வட்டமான ஒருவகைப் புதைகுழி.

ஆழி—1. ஆஞ்ஞாசக்கரம். 'ஆழியுழவன் புதல்வ' (இராமா. ஆரணி. அகத்தி. ௫௩.) 2. கடல். 'ஆழி நீத்தம தொத்தது மதிற்புறத் தகழி' (கந்தபு. திருநகர. ௬.) [ஆழ்; இ-ஒரு வினைமுதற்பொருள்விகுதி.] 3. கடற்கரை. (சூ. நிகன். ழகரவெ. ௨.) 4. கூடற்சுழிவட்டம். (சிந்தா. குணமா. ௧௭௮.) 5. சக்கராயுதம். 'ஆழிவேண்டிச் - சிவசங்கர வென்றரி போற்றிய செம்மன் மைந்தன்' (கந்தபு. திருவி. ௫௪.) 6. தேருருளை.

'ஆகண்டலன்மக - ஞழித் தேர்வல வற்கினை யாளரோ' (சேதுபு. தேவிபுர. ருo.) 7. பண்டி. 8. மோதிரம். 'ஆழிவாய் விரலிற் காம னம்பொடு சிலைகை யேந்த' (சிந்தா. காந்தருவ. ௩சுக.) 9. யானைக்கைக்நுனி. 10. வட்டம். (சூ. நிகண். கக. ழகரவெ. உ.) 11. கட்டளை. 'ஆழிநிற்குதி யல்லையேற் பழி வரும்' (உபதேசகா. சிவவிரத. 16.) 12. குயவன்திகிரி. 'மட்கலத் தாழியென்ன' (கம்பரா. வாலிவ. 37.)

ஆழித்தல்—ஆழமாகத்தோண்டல்.

ஆழித்தேர்—வட்டக்காலாற் சிறந்த தேர். (புறப். வெண்.)

ஆழிதொட்டான்—ஏனுதிமோதிரந் தரித்த சேனுபதி. (சீவக. 2167.)

ஆழிமால்வரை—சக்கரவாளகிரி. (புறத். ஆசிரிய.)

ஆழிமுரசோன்—மன்மதன். (சூ. நிகண். க: உசு.) [ஆழி - கடல். முரசு - ஒரு வாத்தியம்.]

ஆழியளித்தோன்-சிவன். [விட்டுணுவுக்குச் சக்கரங்கொடுத்தோன் என்றபடி.]

ஆழியன்—வருணன்.

ஆழியான்—1. விட்டுணு. 'ஆழியான்வேத னமரர்க்கிறைமுதலோர்' (கந்தபு. இரணியன்பு. கரு.) 2. அரசன்.

ஆழியிழைத்தல்-கூடலுக்கு வட்டமிழைத்தல். 'வெண்முத்த வார்மணன்மே-லன்றுங் கணியிழையாளாழியிழைத்தாளே' (சிந்தா. குணமா. கஅஎ.) [ஆழி-வட்டம். இழைத்தல்-செய்தல்.] இது கண்பாராமல் விரலினுலே நிலத்திலே சுழிக்குஞ் சுழி வட்டமாகப் பொருந்துமாயிற் றலைவனேடு கூடலைக் குறிக்குமென்றெண்ணித் தலைவியாற் செய்யப்படுவது.

ஆழிரேகை-சக்கரரேகை; இது காலிலும் கையிலும் இருக்கும்.

ஆழிவலியான்மணி — மிளகு. 'சோடசத் தொன்றுக் - காழி - வலியான்மணிமிளவு' (தைல. தைலவ. கருடு.)

ஆழிவித்து—முத்து.

ஆழிவிரல் — அநாமிகைவிரல், மோதிரவிரல். [ஆழி - மோதிரம்.]

ஆழுதல் — 1. அழுந்தல். 2. தாழ்தல். 'சொல்லரும் பிறவியுட் டுன்பத் தாழுவார்' (கந்தபு. காசிபனு. உக.)

ஆள்—1. அடிமை. 'விமலனுக் காளல்லார்' (வைராக். சத. ருo.) 2. கணவன். 'ஆளில்லா மங்கைக் கழகு' (வாக். ௩.) 3. ஆண்மகன். 'அடுத்தூன்று - நல்லா ளிலாத குடி' (வள். கoருசு.) 4. ஆளுதல். 'எம்மையாளுடையா னன்பர்' (திருவாத. மங். ரு.) 5. ஆளென் னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத் தொகையும். 'மாலையாற்றண்ணளிசுரந்தாள்' (கம்பரங். ௩ரு.) 'மற்றவனுடைரை' (வைரா. தி. ரு.) 6. உயர்திணைப்பெண்பாற்படர்க்கை யில்வரும் ஒரு விகுதி. 'இல்லாள்வந்தாள்'. 7. உயர்திணையிலே ஆண் பெண் அலி என்னும் முப்பாலின் ஒன்றன்பாற்பட்ட சீவன். 'ஆட் பார்த் துழலு மருளில்கூற் றுண்மையாற் - றேட்கோப்புக் காலத்தாற் கொண்டுய்மின்' (நாலடி. இளமைநி. உo.) 8. காலாள். 'யானை தேர்பரி யாளெனு நால்வகை' (பாரத. நிவாதகவச. ருஉ.) 9. வீரர். 'ஆளுமற்றிரு தோளுமற்று' (அரிச்சந். வேட்டஞ். சுகூ.) 10. கூலியாள். 'அன்றொரு மடந்தைக் காளா யடியவர்க் கெளியார்' (திருவாத. குதிரை. சுசு.) 11. தலைவன். 'ஆளினெஞ்சமும் வார்த் தையும்' (பாரத. சூது. அஉ.) 12. அரசு. 13. தொட்டால்வாடி. 14. சமர்த்தன். 'ஆ ளல்லான் செல்வக்குடியுட் பிறத்தலும்' (திரிகடு.)

ஆள்கை—ஆளுதல். 'பயங்காய்ந்தென்னை யாள்கைக்கு' (மரு. தி. உஉ.)

ஆள்வணங்கி—1. அரசமரம். 2. தொட் டால்வாடி. 3. கல்லித்தி.

ஆள்வரி—தலைவரி. (சாசனம்.)

ஆள்வள்ளி—ஒரு கிழங்குக்கொடி. (வைத்திய அகராதிக்காரர் மலைச்சர்க்கரைவள்ளி என்பர்.)

ஆள்வாரி—ஆளோடி. (பூவணவுலா. 101.)

ஆள்வாரிநிலம்—கோட்டையுள் மதிற்புறமாக ஆட்கள் சுற்றிவருதற்குச் செய்த வழி. (பிங்.)

ஆள்விடுதல்—தூதனுப்பல். (ஈடு. 6. 1. அவ.)

ஆள்வினை—1. தைரியம். 2. பணிவிடை. 'சுந்தர விடங்கன்றன்னை-யாள்வினை யன்புந் தானும் வைகலு மடைந்து தாழ்ந்து' (திருவிளை. அங்கம். ௩.) 3. முயற்சி. 'ஆள்வினையு மான்ற வறிவும்' (வள். ௧௦௨௨.) 4. உற்சாகம். (சூடா.)

ஆள்வினையுடைமை-இடைவிடாதமெய்ம் முயற்சியுடையனாதல். (வள். அதி. ௬௨.)

ஆள்வினைவேள்வி-விருந்து புறந்தருகை. (பதிற்றுப். 21. 13. உரை.)

ஆள்வு — ஆளுதல். 'அவனிஇருந்திவ் வேழுலகாள்விடம்' (இராமா. நகர. ௫.)

ஆளகம்—அளை. (மலை.)

ஆளத்தி — மூலாதாரந் தொடங்கிவரு மெழுத்தின் நாதம். (சிலப். அரங்கேற். ௮௫. பக்.)

ஆளரி-1. சிங்கவேறு. 'ஆனதொர்காலையி லாளரி வெய்யோன்' (கந்தபு. சிங்கமு. ௭௭.) 2. நரசிங்கமாகிய விட்டுணு. 'ஆளரிக்கு மரி தாய்' (திருக்கோ. ௨௨௫.)

ஆளல்—ஆளுதல்.

ஆளவந்தார்-1. ஒரு வைணவாசாரியர். 2. தமிழ்நூலவர்சிட்ட நூலாசிரியர்.

ஆளாபம்—ஆலாபனம். (சிந்தா. காந்தரு. ௨௩௧.)

ஆளான்—1. கட்டுத்தறி. 2. கலப்பை. 3. யானைகட்டுந் தறி. 'இருகோட்டுக் குன்றங் கன்றி - யாளான் மதிற்பிணிப்புண் டருஞ் சிறைப்பட்டதுபோல்' (இரகு. குறை. ௫௫.) 4. ஞாண். (பிங்.)

ஆளி—1. ஆள்வோன். 'அளகையையாளி தானும்' (கந்தபு. சூரப. ௫௭௧.) 2. ஒருசெடி. 3. ஒழுங்கு. 4. சிங்கம். 'ஆளிக்கொடியேந் தியதங்கை' (தணிகை. நாட். ௬௦.) 5. சிங்க விராசி. 6. பிறபெயரோடணைந்து உடைய வன் எனப் பொருள்படும் ஒரு வினைப்பெயர். 'பகையாளி'. 7. யாளி. 'ஆளிசிங்கமிபம்பரித் திரள்' (அரிச்சந். இந்திர. ௨௧.) 8. வரம்பு. [ஆலி.] 9. ஒரு தேரை.

ஆளிடுதல்—பிரதி மனிதரை நியமித்தல். (S. I. I. II. 254.)

ஆளியூர்தி—1. துர்க்கை. 2. காளி.

ஆளிவித்து—, ஆளிவிதை— } ஒரு வித்து. 'வாதமும் போகு - மாளிவிதை தன்னாலறி' (பதார்த்தகுண. ௮௬௦.)

ஆளிந்தம்—திண்ணை. [ஆலிந்த.]

ஆளிவிரை — சிறியதும், சீனதேசத் துள்ளதுமான ஒரு விதை.

ஆளுகை—1. ஆட்சி. 2. ஆளுந்தன்மை. 3. இராச்சியம்.

ஆளுடையான்—அடிமையாகவுடையவன். 'எம்மையா ளுடையா னன்ப ரிதயமா மலைக ளெல்லாம்' (திருவாத. மங். ௫.) ஆளுதலை யுடையானென்றுமாம்.

ஆளுதல்—1. அடிமைக்கொள்ளுதல். 'சற் றிரங்கியாளத் தகாதோ பராபரமே' (தாயு. பராபரக். ௪௬.) 2. அரசுசெய்தல். 'துணைவ ரோடாளலாமே' (பாரத. பதினெட். போர். ௧௨௧.) 3. ஆட்சிபண்ணல். 'காளை வினை விடுத்த' (பாரத. கிருட்-தூ. ௧௪.) 4. உப யோகித்தல். 'எடுத்தாளாத பொன்' 5. ஓம்பல். 'தீவினைக்கடற்பட்டுள்ள வெம்மை யாளுவதற்கு' (கந்தபு. திருவவ. ௪௧.) 6. கட்டுதல். 'நெகிழ்ந்ததாடானை' (கம்பரங். ௫௬.) 7. பிரயோகித்தல். 'சான்றோரா லாளப்பட்டசொல்' 8. விடாதொழுகல். 'உயிர்ப்பொருட்டா - ணாண்டுறவார்நாணாள்ப வர்' (வள். ௧௦௧௭.)

ஆளெனல்-நாயின் கதறற்குறிப்பு. (சீவக. 936. உரை.)

ஆளை—அரக்கு. (மூ. அ.)

ஆளொட்டி—1. காவற்கூடு. 2. மறைவு.

ஆளொதுங்கி—ஆளொட்டி.

ஆளோட்டி—வேலைவாங்குவோன்.

ஆளோடி-தடாகத்தின்மதிலினுட்புறமாக மக்கள் நடப்பதற்குக் கட்டிய வழி.

ஆளோலை — அடிமையோலை. 'எழுது மாளோலை வாங்கி' (பெரியபு. தடுத்தாட். ௪௫.)

ஆற்கந்திதம்—குதிரையின் விரைவுநடை. [ஆஸ்கந்தித; இது பழைய அகராதிகளில் ஆஸ்கிரந்திதமென வழுவாக எழுதப்பட் டது.]

ஆற்கோதம்—கொன்றை.

ஆற்பதம்-1. ஆசனம். 2. ஆதரவு, ஆதாரம். 'எறும்புக்குமாற்பத மில்லைமுன்னாள்' (தனிப் பாடல். சத்திமுத்.) 3. இடம். 4. கொள் கலம். 5. தொழில். 6. நிலை. 7. மேன்மை. 8. வசிக்குமிடம். [ஆஸ்பத.]

ஆற்பலம்—1. சாரம். 2. பலம்.

ஆற்பனேபதம்-ஒரு செயலால்வரும் பலம், செய்பவனை யடைவதாகக் காட்டும் வினைச்சொல். 'கர்த்திரு காமிக் கிரியாபலத்தைப், பயப்ப தாற்பனே பதமெனமொழிப' (பிரயோக. ௩௬. உரை.)

ஆற்ற-1. மிக. 'அமிழ்தினுமாற்றவினிதே' (வள். ௬௪.) 2. முற்ற. 'அவாவினை யாற்ற வறுப்பின்' (வள். ௩௬எ.)

ஆற்றல்-1. அறிவு. (சூ. நிகண். கக. றகர வெ. ரு.) 2. இன்னசொல் இன்னபொருளை உணர்த்துமென்னு நியதி. (தர்க்கசங்.) 3. கூட்டல். (பிங்கல. உ௯௪.) 'ஆற்றியமெய்ச் செல்வத்தால்' (பாரத. சிறப். உக.) 4. ஒத்திருத்தல், உவமையாயிருத்தல். 'செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும் - வானகமு மாற்ற லரிது' (வள். க0க.) 5. செய்தல். 'மகன்றந்தைக் காற்றுமுதவி' (வள். எ0.) 6. தணித்தல். 7. தாங்குதல், பொறுத்தல். 'ஆற்றுவா ராற்றல் பசியாற்றல்' (வள். உஉரு.) 8. நிலைபெறுதல். 'ஆற்றவே யுடையதாகி' (சி. சி. க: உஉ.) 9. நீங்குதல். 'அன்னை மூப் பழிதர வார்கொ லாற்றுவார்' (நைடத. அன்-கண். ௬அ.) 10. பெருமை. 'ஆற்றுவா ராற்ற லிகழாமை' (வள். அ௯க.) 11. முயற்சி. 12. வல்லமை. 'ஆற்றலை யுள துமா தவம தன்றியே, வீற்றுமொன் றுளதென விளம்ப லாகுமோ' (கந்தபு. காசிபனுப. கரு.) 13. வல்லராந் தன்மை. 'ஆற்றுவாராற்றல்பணிதல்' (வள். ௯அரு.) 14. வலி. 'ஆற்றற் கிறிலா-விப்பரி சனரொடு மேகி' (கந்தபு. மாயையுப. ௯அ.) 15. வெற்றி. (பிங்கல. ௩கரு௩.)

ஆற்றலர்-சகிக்கமாட்டாதவர். 'தோற்றிய நுதல்விழிச் சுடரின் சூழ்வினுக் - காற்றலராகியே' (கந்தபு. திருவவ. ருரு.)

ஆற்றலங்கல்—காட்டுப்பூவரசு.

ஆற்றலரி—1. ஒருவகையலரி. 2. சுடலைப் பூச்செடி. 3. செங்கொட்டை மரம். (மூ. அ.) 4. கோடைச்சவுக்கு. 5. முதலைப்பூண்டு.

ஆற்றறுத்தல்—1. கைவிடுதல். 'அல்லற்க ணாற்றறுப்பார் நட்பு' (வள். எ௯அ.) 2. வலியழித்தல். 'அற்றத்திட் டாற்றறுத்தான் மார்பு' (கலித். க௯௪.)

ஆற்றமை-1. சகிக்கக்கூடாமை, பொறுக்கக் கூடாமை. 'இரணியற் காற்று தடைந்தனம்' (கூர்மபு. அந்தகாசு. உஎ.) 2. செய்யமாட்டாமை. 'அஃ தாற்று தெழுவாரை யெல்லாம் பொறுத்து' (வள். க0௩உ.) 3. பொறுக்கும் வலியில்லாமை. (ஐங்குறு.)

ஆற்றார்—1. தரித்திரர். 2. தோற்றார். 3. பகைவர். 4. வருந்தினர். 5. வலியரல்லாதார். 'ஆற்றாரு மாற்றி யடுப' (வள். ௪௯௩.)

ஆற்றான்—1. சத்தியில்லாதவன். (திரிகடுகம். சரு.) 2. தரித்திரன்.

ஆற்றி—ஆறுதல்.

ஆற்றிடல் — செய்தல். 'அங்கா ளமலன் பணியாற் றிடலும்' (கந்தபு. காமத. உ௬.)

ஆற்றிடைக்குறை — ஆற்றினடுவே நீரில்லாது உயர்ந்த இடம்.

ஆற்றிய—தேடிய. (சிந்தா. முத். ௩அஅ.)

ஆற்றிலுப்பை—மரவகையி லொன்று.

ஆற்றிறல் — இறால்மீன்வகையி லொன்று.

ஆற்றிலவிந்து—கர்ப்பூரசிலாசத்து.

ஆற்று—1. ஆற்றென்னேவல். 2. தலைவாயில். 3. தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 'ஆற்று தொல்கருப் பத்துடன் பற்பக லமர்ந்தார்' (கந்தபு. துணைவர். க௬.)

ஆற்றுக்கால் — ஆற்றிலிருந்து நீர்பாயும் வாய்க்கால்.

ஆற்றுக்காலாட்டியர் — உழத்தியர் எனப்படும் மருதநிலப் பெண்கள். 'ஆற்றுக்கா லாட்டியர்முகத்துக் கழிந்த கமலங்களை' (நல். பாரத. நாட். அ.)

ஆற்றுக்கெண்டை—ஒருவகைச் சிறுமீன்.

ஆற்றுக்கோடி—பேய்த்தும்மட்டி.

ஆற்றுச்சந்தலை—மலைவட்டை.

ஆற்றுச்சவுக்கு—1. கோடைச்சவுக்கு. 2. செடிவகையிலொன்று.

ஆற்றுச்செருப்படி— } ஒரு பூண்டு.
ஆற்றுச்செருப்படை— } (மூ. அ.)

ஆற்றுணா – வழியிலுண்பதற்குக் கொண்டுபோகுங் கட்டுச்சோறு. (சூ. நிகண். ௬:உ௩.) [ஆறு - வழி. உணா - சோறு.]

ஆற்றுத்தும்மட்டி — பேய்க்கொம்மட்டி. (மூ. அ.)

ஆற்றுத்துவரை — செடிவகையிலொன்று.

ஆற்றுதல்—1. ஈட்டுதல். 2. ஒத்திருத்தல். 3. சகித்தல், பொறுத்தல். 'விதுரனும் வெஞ்சொ லாற்றான் வில்லினை யிறுத்து நின்றான்' (பாரத. எட்டாம்போர். க௪.)

4. சுமத்தல். 'புலிமுற்றும்-ஆற்றிய பணிக் கிறை' (கந்தபு. அசுரேந். சஉ.) 5. செய்தல். 'ஆதலின் மைந்தர்கா ளறத்தை யாற்றுதிர்' (கந்தபு. காசிபனுப. உச.) 6. தணித்தல். 'கரையழி காத லாற்றை யறிவெனுங் கரை செய் தாற்றி' (அரிச்சந். விவாககா. உக.) 7. தரித்தல். 'ஆற்றுதொல் கருப்பத்துடன்' (கந்தபு. துணைவ. கரு.) 8. நடத்துதல். 'ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குதவுதல்'(கலித்.கஙங.)9. நீக்கல்.'மைய லாற்றிய குணத்து மாதவர்' (அரிச்ச. விவாக. சஉ.) 10. பிரித்தல். 'சேற்று வார்கதிர் சேரக் கொணர்த்துவைத் - தாற்றுவார்' (அரிச்சந். நாட்டு. சரு.) 11. வலியராதல். 12. போதியதாதல். 'தட்டுமுட்டு விற்றுமாற்றுது' (பண விடு. 225.) 13. உய்தல். (பிங்.)14. உதவுதல். 'ஒருவி ரொருவிர்க் காற்றுதிர்' (புறநா. 58.) 15. கூட்டுதல். (பிங்.) 16. ஈரமுலர்த்துதல். 'குஞ்சியையாற்றினபின்பு' (சீவக. 2422. உரை.) 17. நூலைமுறுக்காற்றுதல்.

ஆற்றுநீர்ப்பொருள்கோள் — பொருள்கோள் எட்டனு ளொன்று; அது:சொல்லிருக்கிற நிரைப்படி பொருள் அக்கங்கே அமைந்து நடப்பது. 'சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போன்-மெல்லவே கருவிருந் தீன்று மேலலார் - செல்வமே போற் றலை நிறுவித் தேர்ந்தநூற் - கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே' (சிந்தா. நாம. உசு.) இக்கவியிலே நெல் எனப் பொருள்படுஞ் சொல் என்னும் எழுவாயை முதலெடுத்து அதன்றொழில்களாகிய வினையெச்சங்கள் ஒன்றை ஒன்று கொள்ளும்படி முறையாக வைத்து அவற்றை முடித்த "காய்த்த" என்னும் பயனிலையை இறுதியில் வைத்தமையால் இப்பொருள்கோள் ஆற்றுநீரொழுக்கிற்குச் சமமாயிற்று. (நன். பொது. சுக.)

ஆற்றுநெட்டி—நீர்ச்சுண்டி. (மூ. அ.)

ஆற்றுப்பச்சை—நாகப்பச்சை. (மூ. அ.)

ஆற்றுப்படுத்தல்—1. அகற்றுதல். 'ஆற்றுப் படுத்துன் மனத்தே யிருந்த வருந்துயரே' (வெங்கைக்கோவை. நடுடு.) 2. நன்னெறியிலுட்படுத்தல். 3. வழிப்படுத்தல். 'நெஞ்சாற் றுப்படுத்த நிறைதபு புலம்பொடு' (முல்லைப். அக.)

ஆற்றுப்படை—1. ஒரு பிரபந்தம். அது: பரிசுபெற்றுவருவார், கூத்தர், பாணர், பொருநர், விறலியர் என்னும் நால்வருட் பரிசிற்குப்போவார் ஒருவரை ஆற்றிடைக் கண்டு தலைவன் கீர்த்தி முதலியவைகளைச் சொல்லி வழிப்படுத்துவதாக அகவற்பாவாற் செய்யப்படுவது. இது கூத்தராற்றுப்படை, பாணராற்றுப்படை, பொருநராற்றுப்படை, விறலியாற்றுப்படை என நான்குவகைப் படும். (இலக். விளக். பாட்டி. ககங.) 2. வழிப்படுதல். (சூ. நிகண். கூ: சடு.)

ஆற்றுப்பாசி—ஒரு நீர்ப்பூண்டு. (மூ. அ.)

ஆற்றுப்பாய்ச்சி—நதியிற் கப்பல்செலுத்துவோன். (INSC.)

ஆற்றுப்பாலை—மரவகையி லொன்று.

ஆற்றுப்பிதலம்—நிலத்தினின்று நதியைப் பிரிக்கு மெல்லை.[ஆறு-நதி. பிதலம்(ஸ்ரீடிஷ)-பிரித்தல்.]

ஆற்றுப்பூத்தான்—பூனைக்காலி. (மூ. அ.)

ஆற்றுப்பூவரசு—மரவகையிலொன்று.

ஆற்றுப்போடி—ஆற்றிலுள்ள சிறுமீன்.

ஆற்றுபவர்—ஆற்றலுடையவராய்ப் பிறர் மேற்செல்வார். 'ஆற்று பவர்க்கு மாண்' (வள். எசுக.)

ஆற்றுமடை—வாய்க்காலின் முகம்.

ஆற்றுமரி—நீருமரி. (மூ. அ.)

ஆற்றுமல்லிகை—ஒரு மல்லிகைக்கொடி. (மூ. அ.)

ஆற்றுமுள்ளங்கி—மணன் முள்ளங்கி.

ஆற்றுமுள்ளி—1. கண்டங்கத்தரி. (மூ.அ.) 2. கழுதைமுள்ளி.

ஆற்றுமேலழகி—ஒரு பூண்டு. (மூ. அ)

ஆற்றுவரி—இசைப்பாவகையு ளொன்று. (சிலப்பதி.)

ஆற்றுவாய்முகம்—நதி கடலொடுகலக்கும் இடம். 'ஆற்றுவாய் முகத்திற் றேக்கி யுமிழ்வதே யொக்கும்' (கம்பரா. இராவணன்கள. 25.)

ஆற்றுவார்—எடுத்துக்கொண்டது முடிக்க வல்லார். 'ஆற்றுவா ராற்ற லிகழாமை'(வள். அகக.)

ஆற்றுவாளை—ஆற்றில் வசிக்கும் ஒரு மீன்.

ஆற்றுவித்தம்—ஆறபாய்முகம். [ஆறு-நதி. வித்தம் - துளைக்கப்பட்டது.]

ஆற்றுவித்தல்–1. உறுதிசெய்தல். 2. செய்வித்தல். 3. தணியச்செய்தல். 4. வலிதரல்.

ஆற்றுவைப்பு — நதியின் ஒதுக்கத்தால் சாகுபடிக்குத் தகுதியான நிலம்.

ஆற்றெழுக்குநிலை — சூத்திரநிலைகளினொன்று; அது: சூத்திரங்கள், இடையறுது, ஓடுகின்ற ஆற்றுநீரோட்டம்போலத் தொடர்ந்துநிற்கும் நிலை. (நன். பொது. கக.)

ஆறக்கட்டுதல்–பேய்க்கோளை மேற்செல்லவொட்டாமல் தடுத்தல்.

ஆறநீர்ம்—1. ஆறு. 2. கல்நார் என்னுஞ்சரக்கு.

ஆறந்தம் — முடிவிலே நிச்சயிக்கப்படுந்தெளிவுரைகள் ஆறு. அவை: நாதாந்தம், சித்தாந்தம், போதாந்தம், யோகாந்தம், காலாந்தம், வேதாந்தம் என்பன. (த. நி. போ. கஅஎ.)

ஆறம்—குடசப்பாலை.

ஆறல்—1. ஆறுதல். 2. அலைதல்.

ஆறல்பீறல்–உபயோகமற்றது. 'தன்னோடொக்க ஆறல்பீறலாயிருப்பதொரு தேவதையைப்பற்றி' (ஈடு. 7. 4. 8.)

ஆறலை — வழிப்பறி. 'ஆறலைகள்வரூர் கலக்கி' (கந்தபு. ஆற்றுப். கசு.) [ஆறு - வழி. அலை - அலைத்தல்.]

ஆறலைத்தல் — வழியினின்று பறித்தல். 'வன்கண்ண ராட்டிவிட் டாறலைக்கு மத்தம்' (ஐந். ஐம். 34.)

ஆறலைப்பார் — வழியினின்றுபறிப்பவர். (வள். ௩௰. பரி.)

ஆறலைப்பு—ஆறலைத்தல்.

ஆறன்மட்டம்—தாளவகை. (சிலப். 3.16. அரும்.)

ஆறக்காரியம்—தேற்றம்.

ஆறட்டம்—நோயுற்றூர் படும் அவத்தை.

ஆறட்டு—தீர்த்தவாரியுற்சவம். (குற்றால. வடவருவி. 37.)

ஆறடி — 1. தெருத்தோறு மலைந்துதிரிவோன். 2. நிலைகெட்டவன்.

ஆறடுதல் — தீர்த்தவாரி.

ஆறதாரம்–உடம்பிலுள்ள ஆறுதாரங்கள். அவை: மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்பன. 'ஆறுதாரமுமுறைமையிற்கழிதலும்' (தணிகை. நந்தி. சகூ.)

ஆறுமீன்—கார்த்திகைநட்சத்திரம்.

ஆறயிரப்படி — திருவாய்மொழியின் வியாக்கியானங்களுள் முந்தியது. (உபதேசரத். 41. வ்யாக்.)

ஆறியகற்பு—அறக்கற்பு. (பதிற்றுப்.)

ஆறிருகரத்தோன்—முருகக்கடவுள். (பிங்.)

ஆறு—1. ஓரெண். 2. சமயம், மார்க்கம். 'சைவ-நல்லாறேுங்க' (பெரியபு. சண்டேசு. ௰எ.) 3. தன்மை. 'செல்லா திமுக்கிச் சுடுகாடவள் சேர்ந்தவாறும்' (சிந்தா. பதிக. சு.) 4. நதி. 'செம்புன - லாறெழுக்குற்றதால்' (கந்தபு. அக்கி. கருசு.) 5. நன்னெறி. 'ஆறலாதன வாசருக் கென்றுகொண்டு' (பாரத. சூது. எஉ.) 6. படி. 'போமாறடர்த்தான்' (இரகு. திக்கு. கூ.) 7. வழி. 'அமர்செய்யாறெலாம்' (கந்தபு. அக்கி. கருசு.) 8. விதம். 'கற்பழியாவாற்றால்' (நல்வழி. கரு.) 9. பக்கம். 'நாலாறுமாறாய்' (நாலடி. 383.) 10. பயன். 'அறத்தா றிதுவென' (குறள். 37.) 11. அறம். 'ஆறன்மையின்' (சீவக. 2261.) 12. உபாயம். 'ஆற்றின் வருந்தா வருத்தம்' (குறள். 468.) 13. இயல்பு. (குறள். 219.)

ஆறுகட்டி—1. ஆறுபற்களுக்குமேல் முளையாத மாடு. 2. சைவர் காதிலணியும் உருத்திராக்கமணிவடம்.

ஆறுகாட்டி—வழிகாட்டி.

ஆறுகிராணி — ஆறுவகையான கிராணி நோய்கள். அவை: பித்தக்கிராணி, உட்டணவாதக்கிராணி, சிலேட்டுமவாதக்கிராணி, மேகக்கிராணி, மூலக்கிராணி, வாதக்கிராணி என்பன.

ஆறுகை— ஆறுதல். 'மனமாறுகைக் கெம்மை வந்தாளு நாதன்' (மருதூரந். கஉ.)

ஆறுசூடி–சிவன். (கங்கையாறுசூடினவர்.) 'ஆறுசூடியை' (நல். பாரத. மருத். கசு.)

ஆறுசூலை–ஆறுவகையான சூலைநோய்கள். அவை: பித்தசூலை, வாதசூலை, சிலேட்டுமசூலை, வாதபித்தசூலை, சிலேட்டுமபித்தசூலை, ஐயகணசூலை என்பன.

ஆறுசெய்கையான் — பிராமணன். [அறுதொழிலோன் என்றபடி.] 'ஆறுசெய்கையானில்லிடம் புகுந்து' (சேதுபு. கவிசம்பு. உஉ.)

ஆறுதல்—1. ஆறியிருத்தல், ஓய்தல். 2. சூடுதணிதல். 'ஆறிய பசுந்தண் காவி னசை வொரீஇ' (பாரத. நிரைமீட். கoகூ.) 3. தணிதல், நீக்கல். 'ஆறுவிட ரென்வயி ருக்கினையால்' (கந்தபு. அக்கி. உஈரு.) 4. அடங்குதல். 'ஐம்புலனுமா றினர்களும்' (கம்பரா. தேரேறு. 25.)

ஆறுபருவம்—வருஷத்தை ஆறாகப்பகுத்த பெரும்பொழுதுகள்; அவை: கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பன.

ஆறுபொழுது— தினத்தைப் பகுத்த ஆறு சிறுபொழுதுகள்; அவை: மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல், எற்பாடு என்பன.

ஆறுமலடு — ஆறுவகையான மலடுகள்; அவை: வாதபித்தமலடு, கிருமிமலடு, சீழ் மலடு, வாயுமலடு, சூதகமலடு, அன்மாம்ச மலடு என்பன.

ஆறுமுகன்— குமாரக்கடவுள். 'ஆறுமுகனைப்பயந்தாதி' (பாரத. வாரணு. அரு.)

ஆறுவிதநைவேத்தியம்- சுவாமிக்கு நிவேதிக்கும் ஆறுவித உணவுகள்; அவை: அரித்திரான்னம், பரமான்னம், முற்கான்னம், கிருதான்னம், தத்தியன்னம், குளான்னம் என்பன. (த. போ. கூ0உ.)

ஆறெழுத்து — 1. குமாரக்கடவுளுடைய சடாக்கரமாகிய மந்திரம்.(திருமுருகா. கஙுரு அடி. உரை.) 2. பிரணவத்தோடுகூடிய பஞ்சாக்கரம். 'தாரகப் பிரம மாகி-முன்மொழி கின்ற நந்த மூவிரண் டெழுத்து மொன்றாயுன்மகன் நாமத் தோரா றெழுத்தென வுற்ற வன்றே' (கந்தபு. திருவி. கஅ.)

ஆறெறிபறை—வழிபறிக்குங்காற் கொட்டும் பறை. 'ஆறெறிபறையும்' (சிலப். வேட்டுவ. ச0.)

ஆன்— 1. அவ்விடம். 'ஆன்வழிக் கொள்ளும் வேத னவன்றனைப் பற்றி வல்லே-யீன்வரு கென்ன' (தணிகைப். வீராட்ட. அக.) 2. ஆயின். 'தங்கண்ண ரானுந் தகவில கண்டக்கால்' (பழமொ. அரசி. க0.) [இடைக்குறை.] 3. இடபம். 'ஆன்முகத்த னடற்கணநாயகன்' (கந்தபு. பாநுகோ. கஞ.) 4. உயர்திணைப் படர்க்கை யாண்பாலொருமையில் வரும் ஒரு விகுதி. 'வந்தான்'. 5. எருமை, பசு, மரை என்பவற்றின் பொதுப்பெயர். (திவாகரம். தொகுதி. கூ.) 6. ஒரு சாரியை. 'ஒருபான்' (நன்.) 7. பசு. 'கோதி லானின் குளப்படி நீருமுண்டு' (சேதுபு. அவையட. அ.) 8. மூன்றாம் வேற்றுமையிலே கருவிப் பொருளினில் வரும் ஓர் உருபு. 'பாவத்தான் வரும்பொருள்'. இது, 'நூங்குகையானேங்கு கடைய' என்பதிற்போல உடனிகழ்ச்சிப் பொருளிலும் வரும். (நன். பெயர். ச0. உரை.) 'ஊரானோருகோயில்' என்பதிற் போலத் தொறுப்பொருளிலும் வரும்.

ஆன்பொருந்தம்—ஒரு நதி.

ஆன்பொருநை—ஆன்பொருந்தம்.

ஆன்மகம்—ஆத்துமகம். (சி. சி. உ: சஅ. மறை.)

ஆன்மசங்காரம் — தத்துவங்களையும் தத்துவவியாபாரங்களையும் ஒடுக்கி ஆன்மாவின் அறிவுத்தொழில்களை மறையப்பண்ணுவது. (பதிபசுபா. க0.)

ஆன்மசிருட்டி — தத்துவங்களைச் சிருட்டித்து ஆன்மாக்களின் இச்சா ஞானக்கிரியைகளை விளக்குவது. (பதிபசுபா. 10.)

ஆன்மசுத்தி—1. ஆன்மா பரஞானத்தைக் கூடித் தன்செயலை விடுதல். 'தேசுற மருவு மான்ம தெரிசன மான்ம சுத்தி' (சிவப். அ. க.) 2. ஆன்மா தான் மலமுமாகாமற் சிவமுமாகாமற் சிவத்தோ டிரண்டறக்கலந்துநிற்பது. (ஒழிவி. விர. அ.) 3. தசகாரியத் தொன்று. 4. பஞ்சசுத்தியுள் ஒன்று. 5. தாந்திரிக பஞ்சசுத்தியுள் ஒன்று.

ஆன்மசுபாவம் — ஆன்மா சகசமாகிய ஆணவமலத்தோடு சேர்ந்த வடிவம்.(ஒழிவி. விர. கூ.)

ஆன்மசொரூபம்—ஆன்மா மும்மலங்களையும் நீங்கிநிற்குந் தன்மை. (ஒழிவி. விர. கூ.)

ஆன்மஞானம் — தன்னறிவு. 'ஆன்மாவைச் சிவன் பிரிவறக்கலந்திருக்கையாற் சிவஞான வ்யதிரிக்தமாக ஆன்மஞானத்திலே தரிசிக்கப்படுமவனல்லன்' (சி. சி. கூ: அ.சிவாக்.)

ஆன்மதத்துவம்-1. உருத்திரன். 'ஆன்மாவுக்கு அதிதெய்வமாகிய தத்துவம் ஆன்ம தத்துவமென உருத்திரனுக்குப் பெயராயிற்று' என்பர். 2. பிரகிருதி எனக் கருதும் மஹான் என்னும் பதம் எழுத்துநிலை மாறி ம, என்பது பின்னும் ஹான் என்பது

முன்னுமாய் ஹான்ம என நின்று ஹகார மெய்கெட்டு ஆன்ம எனத் தமிழில் வந்தது போலும். (சி. சி. உ: எ௨. சிவஞாந. உரை. மறைஞா. இது அச்சுப்பிரதிகளிலில்லை.) 3. பூதங்கள் ஐந்தும், தன்மாத்திரைகள் ஐந்தும், ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும், அந்தக்கரணம் நான்குமாகிய ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட இருபத்துநான்கு தத்துவங்கள்.

ஆன்மதரிசநம் — விடயபோதத்தை நீக்கி ஆன்மா தன்னை யருளாற் காணுதல். (ஒழிவி. விர. அ.) பாசமானது விட்டுப்போக ஆன்மா பரஞானத்தைத் தரிசிக்கை. (சிவப். அ: க.)

ஆன்மபோதம்—அது இது என்று சுட்டியறியும் அறிவு. (சி. சி. க: சுடு. நிரம்ப.)

ஆன்மமந்திரம்—அசபா.

ஆன்மமநு — அசபாமந்திரம். 'கருதுமான்மமநுவில்வாம்' (சூத. எக்கி. பூ. எ: க.)

ஆன்மமூர்த்தி — சர்வபூததமநன். (சி-லி. ஞாநபா. ச-ஆஞ்சுலோக. உரை.)

ஆன்மரூபம் — ஆசாரியரது அருளினாலே தன்னையும் தன்னிடத்திலே பந்தமாயிருக்கிற தத்துவவிகாரங்களையும் எவ்விடத்திலுந் தோன்றாமல் மறைத்துநின்ற ஆணவமலத்தையு நீக்கித் தான் அறியும் முறைமையும் அவனது ஞானம் அறிவுக்கறிவாய்நின்று உபகரிக்குமுறையும் தன்னறிவிலே விளங்கக் காண்பது. 'பாயிரு ணீங்கி ஞானந் தனைக் காண்ட லான்ம ரூபம்' (உண்மைநெறிவிளக். க௨.)

ஆன்மலாபம் — ஆன்மா சிவரூபம்பெற்று அதிலே அழுந்துதல். (சிவப். அ: க.) சிவாநந்தாநுபவம். (சி. சி. அ: உ௨. சிவாக்.)

ஆன்மலயவாதி—உயிர் கெட்டுச் சிவத்தையணைந்து ஒன்றாய்நின்றதென்று வாதிப்பவன். (சி. சி. கக: கூ. சிவாக்.)

ஆன்மவித்து—ஆன்மசொரூபமறிந்தவன். (சி. சி. க: உரு. மறை.)

ஆன்மவுருவம்—ஆன்மாவிற்குக் கருவிகள் செயற்கையாய்வந்து பொருந்தின வடிவம். (ஒழிவி. விர. கூ. உரை.)

ஆன்மா—1. ஆதியந்தமின்றி நித்தியமாய், சர்வவியாபகமாய், இச்சா ஞானக்கிரியா சொரூபியாய், சைதந்நியமாய், அருபியாய், யான் எனதென்னுஞ் செருக்குடையதாய், பின்னு பின்னமாய்ப் பந்தித்த மும்மலத்தோடு கூடியதாயிருப்பது. (பதிபசுபா. கரு.) 2. சிவன். 'முத்தனையான்மாவென்றும்' (சி. சி. சு: உஅ.) 3. இரண்டு எனப் பொருள்படும் ஒரு குறிப்புமொழி; சீவான்மா, பரமான்மா இரண்டாதலின் (தைல. தைலவ. ககரு.) 4. நினைக்குஞ்சத்தியும், அறியுஞ்சத்தியுமுடையதாய் மாநுடதேகத்தில் வசிக்கும் அருவப்பொருள். 5. தைசதவாங்காரம். 6. மகத்தத்துவம். (கூர்மபு. பிரகிரு. அ.)

ஆன்மாச்சிரயம் — தன்னைப்பற்றுதலென்னுங் குற்றம்.

ஆன்மாநந்தம் — சீவனது தன்பிரியத்தைத் தநாதிவிடயங்களில் வைத்து அவைகளை இன்பமாய் அநுபவிக்குமிடத்து அநுபவிப்பானும் அநுபவமுமாகிய இரண்டுமின்றி உதிக்கும் ஆநந்தம். (வேதா. சூ. ருசு. உரை.)

ஆன்மார்த்தபூசை—1. இட்டலிங்கப்பூசை. (சைவச. பொது. ருoக. உரை.) 2. தன் பொருட்டுத் தானேசெய்யும் பூஜை.

ஆன்மார்த்தலிங்கம்—இட்டலிங்கம். [ஆன்மார்த்தம்-தன்பொருட்டு.]

ஆன்மிகம்—1. ஆன்மாக்களால் வருவது. (சிவப். உ: கக. உரை.) 2. தன்செயல். 'ஆன்மிகத்தானும், பௌதிகத்தானும் வரும் பிணிகளை' (சி. சி. உ: ருசு. சிவஞா.) 3. தன்னுடைய சம்பந்தம்.

ஆன்மிகதுன்பம் — ஆன்மாக்களால் வரும் துக்கம்; அது: சரீரத்தினாலும், மனத்தினாலும் வருவது. அது: தத்தஞ்சரீரத்திலுண்டான வியாதிகளினாலும், மிருகங்களினாலும், பறவைகளினாலும், இராட்சதர்களினாலும், பசாசுகளினாலும், கள்வர்களினாலும், மற்றுள்ள மனிதர்களினாலும் வரும் சரீர துக்கங்களும்; பிறருடையகல்வியும், சௌந்தரியமும் செல்வமுங் கண்டு பொறாமை, அபிமானக்கெடுதல், எழுந்தது புத்தியாகச்செய்தல், கோபியாய்த்திரிதல் என்னும் இவை முதலாகவுள்ள மனோதுக்கமுமாமென்க. (சிவப். வியா. பக். உoக)

ஆன்மீட்சணம்—தேடல்.

ஆன்மெழுந்த — பசுச்சாணம். (தைல. தைலவ.)

ஆன்வல்லவர் — } பசுக்காக்குமிடையர்.
ஆன்வல்லோர்— } (சூ. நிகண். ௨: ௬௮.)
[ஆன்-பசு. வலிமை - இடையர்.]

ஆன்ற —1. இல்லையான. 'அருவி யான்ற வணியின் மாமலை' (மதுரைக். ௩௦௬.) 2. மாட்சிமைப்பட்ட. 'தொல்லைகான்முகற் - கான்றதொர் காதலன்' (கந்தபு. மாயைப். ௨௫.) 3. விசாலமான. 'ஆயதென் புனலா யான்ற தொல்கட லழுவ நண்ணி' (கந்தபு. மூன்று. ௧௩௭.) 4. விரிவான. 'ஆன்ற தொன் மறைகளெல்லா மார்த்தன' (கந்தபு. திருவவ. ௬௯.) 5. அடங்கிய. 'ஆன்ற பெரியா ரகத்து' (குறள். 694.)

ஆன்றடங்கூர்—கோதுமைரொட்டி.

ஆன்றது—மாட்சிமைப்பட்டது. 'ஆன்ற தோர் சிவன் முத்திப் பதத்தினை யடைந்து' (ஞானவா. வைராக். ௧௫)

ஆன்றமைதல் — அடங்கியமைதல். 'துகி லத்தெழுது பாவையி லான்றமை புலத்தி னன்' (கந்தபு. குமாரபுரி. ௬௪.)

ஆன்றல்—1. அகலம். (சூ. நிகண். அ: ௧௨.) 2. மாட்சிமை. 'ஆன்றதவச் செந்நெறி யின் வைகுந் திலதவதியார்' (பெரியபு. திரு நாவு. ௪௧.) 3. மிகுதல். 'பாடான்றவிந்த பனிக்கடல்' (மதுரைக். ௬௨௯.) 4. நீங்கல்.

ஆன்றவர்—1. அறிவுடையார். 'ஆன்றவ ரடக்கம்போல்' (கலித். ௩௨.) 2. அமைந்த வர். (மணிமே.) 3. தேவர். (பரிபா. 19. 3.)

ஆன்றர் — 1. அறிவுடையார் 'ஆன்றார் கேட்கிற் செவிபுதைக்கும்' (பாரத. சூது. ௨௬௩.) 2. படித்தவர்.

ஆன்றிசின்—அமைவாயாக. (ஐங்குறு.)

ஆன்று — 1. அடங்கி, நீங்கி. 'புகல்சேர வொலியான்று' (கலித். ௧௨௧.) 2. விரிதல். 'மாநிலமான்றகேன்டிட' (கந்தபு. காவலர் வதை. ௭.) 3. விசாலித்து. 'அத்தமேல்கிரி யுதய மால்வரைத் துணையான்று' (கந்தபு. சூரபன்மன். ௧௭௨.)

ஆன்றேர் — ஆன்றார். 'செம்மைகொ ணுணர்வி னான்றோர் தெளிகுவர்' (கந்தபு. தவங்கா. ௨௬.)

ஆன-1. அந்த. இது, அன்ன என்பதன்விகா ரம்போலும். 'ஆன காலை யரியய னுடோனு' (கந்தபு. தெய். ௨௩௩.) 2. ஆகிய. 'மேலான விரதமும்' (பாரத. ஆரும்போ. ௨௦.)

ஆனகம்—சுரை.

ஆனஞ்சு—பஞ்சகவ்வியம். 'இகவானஞ்சு மாடி' (கம்பரங். ௨௫.)

ஆனத்தவாயு—வாதநோயி லொன்று.

ஆனத்தேர்—விடத்தேறு. (மூ. அ.)

ஆனது—1. அன்னது. 'ஆனதோ ரமை யங் தன்னி லாடின ரமரர் மாதர்' (கந்தபு. திருக்கல். ௭௨.) 2. ஆகியதெனப் பொருள் படும் ஒரு வினைப்பெயர். 'இயக்கர்கோ னுறையுள்ளானதும்' (கந்தபு. வரைபுனை. ௧௦.) 3. நிகழ்ந்தசெய்தி. 'ஆனதுரை செய்து மென' (திருவிளை. மாயை. ௧௦.) 4. பொருந் தியது. 'மறையெனுந் தரங்கவேலையி-லான தொர்பொருளினை' (கந்தபு. பாயிர. ௨௩.)

ஆனதும்பி—ஒருவகை மீன்.

ஆனந்தக்கந்தம்—மருக்கொழுந்து.

ஆனந்தபைரவம் — ஒருவகை மருந்து. 'ஆனந்த பைர வம்பி னடர்சுத்த பைரவம்' (பதார்த்தகுண. ௧௨௬௮.)

ஆனந்தம்—அரத்தை.

ஆனபடி — அப்படி. 'ஆனபடியே யழ லமைக்க' (கந்தபு. அசுரேந்திர. ௧௯.)

ஆனம்—1. எழுத்துச்சாரியை. (தொல். சொல். 298. உரை.) 2. கள். (திவா.) 3. தெப் பம். (திவா). 4. மரக்கலம் (திவா.)

ஆனமை—ஆனதன்மை. 'ஆனமையான் மேலான' (சி. சி. அ: ௨௩.)

ஆனர் — ஆயினர். 'எத்தனை தந்தையுந் தாயரு மானரென் றெண்ணுவனே' (திரு நூற். ௬௧.)

ஆனல்—நீங்குதல்.

ஆனவை-ஆகியவை. 'எண்ணில் வேதிகை யானவை புரிந்தனன்' (கந்தபு. வரைபு. ௧௫.)

ஆனன்—சிவன். (தேவா. 1029. 2)

ஆனு—1. அடங்காத, அமையாத. 'நம்பர் பா லானுப்போன்புமிக' (பெரியபு. தடுத்தா. ௧௧௫.) 2. கெடாத. 'ஆனுவமுதே' (கந்த ரனு.) 3. நீங்காத. 'ஆனு வறிவி னவர்கட் கென் னுங்கொல்' (யாப். காரிகை. அவை யட.) [இது ஓர் எதிர்மறைப்பெயரெச்சம்.]

ஆனுமை—1. அமையாமை. 'யானறி யள வையி னேத்தி யானுது' (திருமுரு. ௨௭௭.) 2. உத்திராடம். 3. நீங்காமை. 'ஆனுமையா யகில நிகில பேத மனைத்தினுள்ளுந் தானுகி' (தாயு. பன்மா. ௫.)

ஆனுயநாயனுர் — அறுபத்துமூன்றுநாயன்மாருள் ஒருவர்.

ஆனுயர்—பசுமேய்க்குமிடையர். 'ஆனுயர் கூடியமைத்த விழவை' (திவ். முதலா. அலம் பாவெருட். ௬.)

ஆனுலும்—ஆயினும். 'மனைவி வீந்தா ளானுலும்' (கூர்மபு. வருணுச். ௨௦௬.)

ஆனி—1. உத்திராடநட்சத்திரம். (சூ. நிகண்: ௧. ௭௬.) 2. எல்லை. 3. ஒரு மாதம். 'ஆனிமுதனுளசீதி' (சைவச. பொது. ௧௫.) 4.கேட்டைநட்சத்திரம். 5. கேடு. (சூ. நிகண். ௧௧. ௧௪௧. ௬.) 6. ஆன்பொருநை. 7. மூல நட்சத்திரம். (சூ. நிகண். ௧: ௭௫.) 8. வாளலகு. 9. வெட்டுக்குருத்து.

ஆனிக்கருந்நலை—ஆனிமாதக்கடைசி.

ஆனித்தூக்கம் — ஆனிமாதத்திலே காற்றடங்கியிருக்குங் காலம்.

ஆனிரை — பசுக்கூட்டம். 'ஊரானிரையினுடன்புக்கபோது' (பெரியபு. சண்டேசு. ௪௯.)

ஆனிலை—1. பசுக்கொட்டில். 'தேவகுல நிழலானிலை - வெண்பலி' (ஆசாரக்கோ. ௨௮.)2. கருவூர்ச்சிவாலயம். (தேவா. 929,6) [ஆன் - பசு. நிலை - நிற்குமிடம்.]

ஆனிலையுலகம்—ஆனுலகு. 'மேல தானிலை யுலகத்தானும்' (புறநா. 6.)

ஆனும்—ஆயினும் என்பதில் யகர விகரந் தொக்குவந்த ஒரு விகாரமொழி. 'வால் பெறமுளைத்த கூன்கோடானும்' (கல்லா. ௨௦.)

ஆனுலகு—கோலோகம். (அக. நி.)

ஆனேறு—எருது. 'ஆனேற்றுக் கொடியோன்போ லெதிரிய விலவமும்' (கலித். ௨௬.)

ஆனை—1. அத்திமரம். 2. யானை. 'ஆனை மும்மத மாடிய காடெலாம்' (சிந்தா. இலக். ௨௦௧.)

ஆனைக்கண்–1. அதிகங்கனிந்து பழுதுற்ற பழங்களிலே தோன்றுந் திரண்ட கரும்புள்ளி. 'பலாப்பழம் ஆனைக்கண்பட்டது' 2. யானையின்கண்.

ஆனைக்கண்ணி—அத்தித்தளிர்.

ஆனைக்காடு — ஆனையதுகுபற்றிய காட்டு நிலம்.

ஆனைக்கள்ளிமுளையான்—ஒரு பூண்டு.

ஆனைக்கற்றலை—ஒருமீன்.

ஆனைக்கற்றுழை — ஒருவகை நீண்ட கற்றுழை.

ஆனைக்கன்று—அத்தி.

ஆனைக்காசு—ஒருவகை நாணயம்.

ஆனைக்காயம்—ஆனைப்பெருங்காயம்.

ஆனைக்காரை—ஒரு மரம்.

ஆனைக்கால்—1. பெருங்கால். 2. பெரிய நீர்த்தூம்பு.

ஆனைக்குப்பு — சதுரங்கவிளையாட்டு. 'ஆனைக்குப்பாடுவாரைப்போலே' (ஈடு. 10. 3. 9.)

ஆனைக்குரு—ஒரு மரம்.

ஆனைக்குன்றிமணி—மஞ்சாடி.

ஆனைக்கூடம்—1. யானைகட்டுமிடம். 2. பழையவரியி லொன்று.

ஆனைக்கெளுத்தி—ஒருவகை மீன்.

ஆனைக்கொம்பன்—1. ஆனைவாழை. 2. ஒருவகை நெல்.

ஆனைக்கோடன்சுரை—ஒருவகைச் சுரைக்கொடி.

ஆனைக்கோரை—ஒருவகைக்கோரை.

ஆனைச்சப்பரம்—ஆனைமேற் றவிசு.

ஆனைச்சாத்தன்—கரிக்குருவி. (திவ்.திருப்பா. 7.)

ஆனைச்சிரங்கு—பெருஞ்சிரங்கு.

ஆனைச்சிலந்தி—ஒருவகை நோய்.

ஆனைச்சீரகம்—ஒரு பூண்டு.

ஆனைச்சுண்டை-சுண்டைவகையில்ஒன்று.

ஆனைச்செவியடி–1. யானையின்செவியடி. 2. ஒரு பூண்டு.

ஆனைச்சொறி—பெருஞ்சொறி.

ஆனைத்தடிச்சல்—1. புளிநரளை. (மூ. அ.) 2. புளியரணை.

ஆனைத்தடிப்பு—ஒரு பூண்டு.

ஆனைத்தாள்—மதகு. 'அகவாயிலுள்ளதுக் கெல்லாம் ஆனைத்தாளிறே' (ஈடு. 6. 1. 7.)

ஆனைத்திசை—வடக்கு.

ஆனைத்திப்பலி—ஒருவகைத் திப்பலி.

ஆனைத்தீ— } பெரும்பசியைவிளைப்ப
ஆனைத்தீநோய்— } தொரு வியாதி (மணிமே.)

ஆனைத்தும்பை—பெருந்தும்பை (மூ. அ.)

ஆனைத்தூம்பு — யானைவடிவமைந்த நீர் விழுங் குழாய்.

ஆனைத்தெல்லு—ஒருவகைத் தெல்.

ஆனைத்தொழில்—பெருஞ்செயல். 'இவன் பெரிய ஆனைத்தொழிலைச் செய்யாநிற்க.' (ஈடு. 7. 4. 3)

ஆனைத்தோட்டி—அங்குசம்.

ஆனைநீறு—பஞ்சகவ்வியம்.

ஆனைநெருஞ்சி—பெருநெருஞ்சி. (மூ. அ)

ஆனைநெருஞ்சில்—1. பெருநெருஞ்சில். 2. புளியாரை.

ஆனைப்படுவன்—ஒருவகை நோய்.

ஆனைப்பாகன் — பாகனைசெலுத்துவோன்.

ஆனைப்பார்வை — மேல்நோக்கிய பார்வை.

ஆனைப்பிசாசன்—ஒரு பூண்டு.

ஆனைப்புல்—ஆனைக்கோரை.

ஆனைப்புளி—பப்பரப்புளி.

ஆனைப்பெருங்காயம்—ஒருவகைப் பெருங் காயக்கலவை.

ஆனைப்பேன் — கத்தரிச்செடியிலுண் டாகும் ஒரு பூச்சி.

ஆனைமஞ்சள்—ஒருவகை மஞ்சள்.

ஆனைமயிர்க்காப்பு — ஆனையின் வாலின் மயிரினாற் செய்தணியுங் காப்பு.

ஆனைமலை—மதுரைக்குப் பக்கத்திலுள்ள ஒரு மலை.

ஆனைமிக்தவம்—கறுப்புமருதுவகை.

ஆனைமீன்—பெருமீன். (சூ. நிகண்.)

ஆனைமுகன்—1. கசமுகாசுரன். 2. விநாயகன். 'ஆனைமுக னடியரை யர்ச்சிக்க' (சைவச. பொது. ௫௦௦)

ஆனையச்சு—ஒருவகைப் பொற்காசு.

ஆனையடி—சதுரங்கவிளையாட்டில் யானை செல்லுங் கதி.

ஆனையறுகு—ஒருவகை யறுகம்புல்.

ஆனையாட்டுதல் — குழந்தைகளுடம்பை யசைத்தல்.

ஆனையிறஞ்சிப்புள்- } யானைவிழுங்கும்
ஆனையுண்குருகு — } பறவை.

ஆனையுரித்தோன் — சிவபிரான். (திவா.)

ஆனையூர்தி—1. இந்திரன். 2. ஐயனர்.

ஆனைவணங்கி—1. தேட்கொடுக்கி. 2. ஆனை நெருஞ்சில்.

ஆனைவாழை—ஒருவகை வாழை.

ஆனைவிழுங்குமீன் — திமிங்கிலம். (சூ. நிகண். ௩: ௭௧.)

ஆனைவீரர்—அரசனுக்குரிய எண்வகைத் துணைவரி லொருவகையார்.

ஆனோர்—ஓர் எழுவாயுருபு. 'பெற்றிடுங் குரவரானோர்' (கந்தபு. மேருப். ௪௫.)



# இ

இ—இது தமிழ்மொழியின் வர்ணமாலையில்வரு மூன்றாமெழுத்து. உயிர்முயற்சியாற் பிறக்கும் எழுத்துக்களுள், அண்பல்லடியை நாவினது விளிம்பு பொருந்தப் பிறக்கும் ஓருயிர்க்குற்றெழுத்து. இவ்வெழுத்து ஆரிய மொழியுள் இரண்டுமெய்க ளிணைந்து ஓரெழுத்துப்போல நடக்கும்போது அவ் விணைந்த எழுத்துக்களிற் பின்னின்ற யகரத்திற்கும் ரகரத்திற்கும் லகரத்திற்கும் முதலில் இயாகம் இரமம் இலேசம் என்பன போல வரும். இன்னும் இராமன் என்பதிற் போலவும் இயக்கன் என்பதிற்போலவும் இலாபம் என்பதிற்போலவும் அங்ஙனமிணையாத ய ர ல என்னுமெழுத்துக்களை முதலி லுடைய ஆரியமொழிக்கு முதலிலும் வரும்.

1. அன்பு.
2. ஆச்சரியம்.
3. இகழ்ச்சி.
4. இருதிணை முக்கூற்றொருமையில் வரும் ஒரு விகுதி. 'செவியிலி இவன்; செவியிலி இவள்; செவியிலி இது.'
5. உயர்திணையாண்பால் பெண்பால்களில் வரும் ஒரு பெயர்விகுதி. 'வில்லி, தினிதோளி' [மீளி, மருளி, வெகுளி என்பனவற்றிற்போலத் தொழிற்பெயர்விகுதியாயும் வரும்.]
6. ஒரு பெயர்ச்சொல்லின் அகத்தாவது புறத்தாவதுநின் றன்மைப்பொருளைச் சுட்டி வரும் ஓரிடைச்சொல். இவன் (அகம்); இக்கொற்றன் (புறம்).
7. ஒருமுன்னிலையேவலொருமைவிகுதி. 'நிற்றியீண்டெனு நிறுவிப்போயினன்' (கந்தபு. வள். ௧௪௧.)
8. செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சப்பொருள்கொடுத்துவரும் ஒருவிகுதி. 'நிறுவிப்போயினன்' (கந்தபு. வள். ௧௪௧.)

9. தெரிநிலை குறிப்புவினைகளில் வரும் ஒரு முன்னிலைவிகுதி. உண்டி; வில்லி.

10. வினைமுதற்பொருளிலாவது செயப்படுபொருளிலாவது கருவிப்பொருளிலாவது வரும் ஒரு படர்க்கைப்பெயர்விகுதி. அலரி; ஊருணி; மண்வெட்டி.

இஃது—இது. 'இந்தா விஃதோ ரிளங் குழவி' (கந்தபு. வள். ௩௫.) [இச்சுட்டுப் பெயர் உயிரையும் யகரமெய்யையும் முதலாகவுடைய மொழி வரும்பொழுது ஆய்தங் கெடாதுநிற்குமென்றும், மற்றையவிடத் தெல்லாங் கெட்டுநிற்குமென் றுஞ்சொல்வர்.]

இக்கட்டு — 1. இடநெருக்கம். 2. தடை. 3. தரித்திரம். 'இக்கட்டாய்வருவதல்லாற் செல்வமுண்டோ' (தண்ட. எஈ.) 4. துன்பம். 5. வெல்லக்கட்டி. [இக்கு - கரும்பு. அட்டு - அடுதல்.]

இக்கணம்—இந்தக்கணப்பொழுது. 'இக் கணமிடையூறும்' (பாரத. மணிமான். எச.) [இ; க்ஷண.]

இக்கரை—1. இந்தக்கரை. 2. இந்துப்பு.

இக்கவம்—கரும்பு. [இக்ஷவ.]

இக்கன்–மன்மதன். 'சேதிக்கனைத் துகள தாக்குநோக்கினன்' (கந்தரங். ௬௪.) [கரும்புவில்லோன் என்றபடி.]

இக்கா–1. கொட்டாவி. (சீவரட். கஅச.) 2. விக்கல். (சீவரட். ககஉ.)

இக்கி—மன்மதன். [கரும்புவில்லை புடையனென்றபடி.]

இக்கிடைஞ்சல்—இடையூறு.

இக்கிரசம் — கருப்பஞ்சாறு. [இக்ஷு; இரசம்.]

இக்கிரி — ஒரு முட்செடி. [இது சிங்கள நாட்டுவழங்குஞ்சொல்லென்பர்.]

இக்கு — 1. ஆபத்து. 2. ஒரு சாரியை. 'ஆடிக்குக்கொண்டான்' (தொல். எழுத். உசஅ.) [இவ்வுதாரணத்திற் குவ்வை ஏழாவதாக்கிச் சாரியைப்பேற்றை நீக்குவர் இக் காலத்தார்.] 3.கரும்பு. 'இக்கொடுதென்னங் காயும்' (கந்தபு. காவிரிநீங்கு. உ௫.) 4. கள். (சூ. நிகண். ௬: ௩௦.) 5. தடை. 'இக்கு வைக்குமாடைவிழ' (திருப்பு. ௩௬௫.) 6.மூங்கில். 'இக்கென விணைய தீயோ விறப்ப வென்றுன்னி' (கந்தபு. வரவுகேள்வி. உ.) [இந்த உதாரணத்தில் இக்கென என்பதற்கு விரைவிலெனப் பொருள்கூறுவாருமுண்டு. இக்கெனல் - ஒரு விரைவுக் குறிப்பு.] 7. கூட்டில்வைத்த தேன். (மாறன. 111. உதா. 212.) 8. காடி. [3. இக்ஷு.]

இக்குக்கந்தை—1. நாணல். 2. நீர்முள்ளி. 3. நெருஞ்சில். 4. வெள்ளைவிரலிச்செடி.

இக்குக்கோட்டுதல் — ஒலிக்குறிப்பினால் ஒன்றையறிவித்தல்.

இக்குமேகம் — சலரோகம். [இக்ஷு மேஹ; இக்ஷு-கரும்பு. மேஹ-மூத்திரம்.]

இக்குவாகு — 1. அயோத்தியிலே அரசாண்ட சூரியவமிசத்து முதல்வந்த ஓரரசன். இவன் வைவச்சுவதமனுவின்மகன். இவன் சந்ததியானொருவனுக்கும் இப்பெயருண்டு. [இக்ஷ்வாகு.] 2. பேய்ச்சுரை.

இக்குவிகாரம் — சருக்கரை. [இக்ஷு விகார.]

இக்குரம்—நீர்முள்ளி.

இக்குறழலி—பெருமருந்து.

இக்குறி—1. அந்நியநாள். 2. இச்செலவு. 3. இம்முறை. 4. இவ்வடையாளம்.

இக்கூறு—1. அந்நியநாள். 2. இச்செலவு. 3. இப்பங்கு. 4. இப்பிரகாரம்.

இக்கெனல்—ஒரு விரைவுக்குறிப்பு.

இக்கோ—ஓரதிசய விரக்கச்சொல்.

இக்ஷி—கஸ்தூரிமஞ்சள்.

இக—1. இகவென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும். 2. இங்கே, இவ்விடத்து. 'இகவானைஞ்சுமாடி' (கம்பராந்தா. உ௫.) 3. இந்தக்காலத்து எனப் பொருள்படும் ஒரு வடமொழியவ்வியயம். 4. ஒரு முன்னிலை யசைச்சொல். 'தண்டுறைபூரகாணிக' (நன். இடை. உக. உரை.) [2, 3. இஹ.]

இகசுக்கு—நீர்முள்ளிப்பூண்டு.

இகடம்—மூங்கில்முளை. [இகட்ட.]

இகணை–ஒருவகைமரம். 'இலையணியிகணையும்' (பெருங். இலாவாண. 9, 8.)

இகத்தல் — 1. கடத்தல். 'சேணிகந்து விளங்கும்' (திருமுரு. கக.) 2. நடத்தல். (பிங்கல. ௩௧௫௫.) 3. நீங்கல். 'பற்றிகந்து

காணமுன்றுமொருநெறியேசெல்ல' (திருவிளை. அங்க. உ௮.) 4. பழித்தல். 5. புறப்படுதல். 6. பொறுத்தல். (பிங்கல. ௩௧௫௫.) 7. போதல். 8. மீறுதல். 'நெறியிகந்துநம் மாபினன் வீரல செய்யும்' (காசிகாண்.)

இகந்தன்று — இகந்தது, கடந்தது. 'இளமையினிகந்தன்றுமிலனே' (குறிஞ்சிப். உ௪௪.) [றுவ்விகுதி, தகர ஒற்றிடைநிலையின்முன் அன்சாரியைபெற்றுவந்தது.]

இகந்துபடுதல் — 1. கடந்துபோதல். 2. தவறுதல். 3. நிராகரிக்கப்படுதல். 4. பிறழுதல். 'எய்தியஇகந்துபடாமற்கூறினார்' (நன். உயிரீற்று. உ௬. இராமாநு.)

இகந்துழி—தூரமான இடம். (பழ. 175.)

இகப்பு—பழித்தல். 'இகத்தல்' (பார்.)

இகபாராதநம் — இம்மைமறுமைக்கடுத்த கடமைகளைடைப்பித்தல். [ஐஹபாரலௌகிகஸாதநம்.]

இகபாரசுகம் — இம்மைக்கும் மறுமைக்குமுரிய சுகம். [ஐஹபாரலௌகிகஸுகம்.]

இகபரம்—1. இப்பிறப்பும் மறுபிறப்பும். 'இன்னலெனும் பெருங்கடலின் கரைநின்றேறி யிகபரத்தும்போக நுகர்ந் திடுவரன்றே' (பிரமோ. சோமவார. எ.) 2. இம்மையும் மறுமையும்; அது பூலோகபரலோகாநுபவம்.

இகபோகம்—இவ்வுலகவின்பம்.

இகம் — 1. இம்மை. 'இகமுடனுத்தரத்தில்வருபோகவிராகம்' (வேதா. ௬.) 2. இம்மைக்குரியபோகம். 'இகமொடுபரமும் வீடும்' (கந்தபு. திருவிளை. ௬0௫.) 3. இவ்விடம். 4. உலகம், பூமி. [1, 2, 3. ஐஹ]

இகமலர்—விரிமலர். (பிங்.)

இகரக்குறுக்கம் — குற்றியலிகரம்.

இகரம்–1. இ என்னும் எழுத்து. 'அகரமுமிகரமு முகரமும்' (இலக்கணவி. ௩௩எ.) [இ; கரம்-ஒரு சாரியை.] 2. சந்தம்.

இகல் — 1. இகலென்னேவலும், தெரிநிலைவினைப் பகுதியும், வினைத்தொகையும். 2. இருவர் தம்முட் பொருது வலிதொலைதற்கேதுவாய மாறுபாடு. (வள். அசு-ம்-அதி.) 3. ஒப்பு. (சூ. நிகண். ௮: எ௮.) 4. பகை. 'தன்னூரிகலறநூறி' (நன். சிற. பாயிரம்.) 5. பெருங்காப்பியவுறுப்புளொன்று; அது செருச்செய்கையைக் கூறுவது. 'மந்திரந்தூதுசெலவிகல்வென்றி' (தண்டி. எ.) 6. போர். (சூ. நிகண். ௧௧: ௩.) 7. முட்டு. 'சைவாகமங்களுண் ஞானபாதப்பொருளினிகலறுத்து' (சிவஞானபாஷ்யம். பக். ௧.) 8. வலி. 'ஒருவனிகன்மிகுந்-திடமதிப்பெயரினுன்' (சேதுபு. பாவநா. ௧௪.) 9. அளவு. 'இகலிரிகடங்கண்டால்' (ஞானு. 50. 5.) 10. புலவி. 'இகலினிகந்தாளை' (பரி. 9, 36.)

இகல்வு — 1. எதிரிடை. 2. இகலுதல்.

இகல — 1. மறுதலையாகவெனப்பொருள்படும் ஒரு வினையெச்சம். 2. உவமைச்சொல். (சூ. நிகண். ௮.)

இகலல்—1. எதிர்த்தல். 'இரண்டுகுருவிகள் இகலிப்பாடுகின்றன' (வழக்.) 2. ஒப்பாதல். 'குலிகமோடிகலியவங்கை' (நன். விரு. பெயரி. ௧உ.) 3. பகைத்தல். 'எல்லைமை மந்தவிகன்றுசென் றறைகூவினான்' (சேதுபு. சேதுவந்த. ௧உ.) 4. பொருதல். 'எதிர்முனைந்தனரிகலியே' (பாரத. ௧-ம். போர். ௩௫.) 5. வாக்குவாதஞ்செய்தல்.

இகலன் — 1. கிழநரி. 2. நரி. 'மதுரையாளும்வழுதிக்கிகலனைக் - குதிரையாகக்கொடுவந்தகொற்றவா' (மதுரை. பதிற்று. எஉ.) 3. பகைவன். 4. விகலாத்தர். 'இந்தவிகலாத்தருக்குச் சொலிகனென்று மிகலனென்றும்பேர்' (த. நி. போ. உஎ௫.)

இகலாட்டம்–1. போராட்டம். 2. முரணுகை. [இகல்; ஆட்டம்.]

இகலி—1. ஒருவினையெச்சம். 2. சபதம். 3. சேத்துமம். (இராசவைத்.) 4. பெருமருந்துப்பூண்டு.

இகலியார் — பகைவர். 'இகலியார்புரமெய்தவன்' (தேவா. 75, 1.)

இகலுதல்—இகலல்.

இகலோகம் — இவ்வுலகம். 'எண்ணுமிகலோகத்தே' (சி. சி. ௮: ௩௧.) [ஐஹலோக; ஐஹ - இவ்விடம்.]

இகலோர்—பகைவர். [ஆ, ஓவாயிற்று.]

இகலோன்—பகைஞன். (திவா.)

இகவு—இகழ்ச்சி. [இக; உ.]

இகழ்—1. இகழென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. நிந்தை. 'இகழறு சீற்றத் துப்பின்' (காஞ்சிப் பு. கச்சி. உக.)

இகழ்ச்சி—1. இழிவு. 2. குறைவு. 'இகழ்ச்சி யொன்றுனுமின்றி' (பெரியபு. தடுத்தாட். கக.) 3. மறதி. 'இகழ்ச்சியிற்கெட்டாரை' (வள். ருஙக.) 4. வெறுப்பு. 'நன்றுதீ திகழ்ச்சி வேட்கை நட்பிகல் விளைக்கு மாயை-வென்ற வன்' (திருவிளை. உக்கிரபா. ரு.) [இகழ்; சி.]

இகழ்ச்சித்தானம்—இலக்கினத்துக்கு ஆறு மிடம். (சோதிடக்கடல்.)

இகழ்ச்சிப்புகழ்ச்சி—புகழ்மொழியா னிகழ் தல்; அது: பேரில்லானொருவனைநோக்கி யிவன் பேராளியென்பதுபோல்வது.

இகழ்ச்சியணி — ஓரலங்காரம்; அஃது: ஒன்றின்குணத்தாலும் குற்றத்தாலும் மற் றொன்றுக் கவையுண்டாகாதிருப்பதைக்கூறு வது. 'மற்றொன்றினுக்கு மொன்றின்குணங் குற்றமருவிலதைச் - சொற்றலிகழ்ச்சியணி.' (குவல. எ௦.)

இகழ்ச்சியில்புகழ்ச்சி — ஓரணி; அஃது: இகழ்ச்சியின்றிப்புகழ்தல். [சத்தியத்தில் அரிச்சந்திரன் என்பதிற்போல.]

இகழ்ச்சியுட்புகழ்ச்சி — ஓரணி; அஃது: இகழ்ச்சியும் புகழ்ச்சியுங் கலந்து கூறல்.

இகழ்ச்சிவிலக்கு—ஓர் அலங்காரம்; அது: காரியத்திற்குரிய காரணத்தை இகழ்ந்து விலக்குவது. 'ஆசைபெரிதுடையேமாருயிர் மேலப்பொருண்மே - லாசைசிறிதுமடைவில மாற் - றேசு - வழுவாநெறியின்வருபொருண் மேலண்ண-லெழுவாயொழிவாயினி' இங்கே அண்ணலே நீ செல்க அல்லது தவிர்க என்கு ளாயினும் நின் செலவால் உயிரிழப்பேம்; உயிர்மேலன்றிப்பொருண்மேலெமக்குவிருப் பில்லை என்பதனாற் செல்லுகைக்குக் காரண மான பொருளை யிகழ்ந்துகூறிச் செல்லுதலை விலக்கியவாறு. (தண்டி. சச. உரை.)

இகழ்தல் — 1. தள்ளுதல். 'எத்தினாற் பத்திசெய்தே னென்னைநீ யிகழவேண்டா' (தேவாரம். திருநாவு. கோயி. நேரி.) 2. நிந்தித்தல். 3. மிகையாயின செய்தல், மிகை யாயின சொல்லுதல். (வள். கடுக. பரி.)

இகழ்ந்துரை—இகழ்ச்சிச்சொல். (குறள். 182. உரை.)

இகழ்பு — இகழ்ந்து. 'இகழ்பாடுவோ ரொருத்தமடங்க' (புறநா. ௪0: ௬.)

இகழ்வார் — நிந்தைசெய்வார். 'இகழ் வார்ப்பொறுத்தறலை' (வள். கடுக.)

இகழ்வு—நிந்தை.

இகழற்பாடு—இகழப்படுகை. (குறள், 192. உரை.)

இகழாவிகழ்ச்சி—ஓரலங்காரம், அஃது: புகழ்வதுபோலப்பழித்தல்.

இகழுதல்—இகழ்தல்.

இகழுநர்—இகழ்ந்திருப்போர். 'இகழுநர்ப் பிணிக்கு மாற்றலும்' (மலைபடு. எ௩.)

இகளை—வெண்ணெய். [ஐஹவா: ஐஹ; வா - ஒடுக்கம்.]

இகன்றவர் — பகைவர். 'இகன்றவர்ச் செற்று' (பாரத. வாரணவத. கக௩.)

இகனி—வெற்றிலை.

இகா—முன்னிலையசை. (கலித். 105. உரை.)

இகாதநம்—இந்நாள், இப்பகல். [ஐஹ - இந்த. சுஹநு - பொழுது.]

இகாசம்—பழிகூறல்.

இகாமுத்திர—1. இம்மையினும் மறுமை யினும். 2. இங்குமங்கும். [ஐஹ - இங்கே. சுமுத்ரு - அங்கே.]

இகாமுத்திரார்த்தபலபோகவிராகம் — சா தநசதுட்டயத்தின் இரண்டாவது; அஃது: இம்மையினும் மறுமையினும்வரற்பாலனவாய அர்த்தபலபோகங்களினுண்டாய வெறுப்பு. (வாசுதேவ. பக். க௩.) [ஐஹ; சுமுத்ரு; சுயடு; ஷய; ஹொக; விராக-வெறுப்பு.]

இகி—ஆச்சரியம் இகழ்ச்சிமகிழ்ச்சியெனு மிவைகளின் குறிப்பை அல்லது களியாட் டின்குறிப்பை உணர்த்தும் ஒரு வடமொழி யவ்வியயம். [ஹிஹி.]

இகிதம்—இன்பம்.

இகு—1. இகுவென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும். 2. வீழ்ச்சி. (ஐங்குறு.) [இஃது ஒரு முதனிலைத்தொழிற்பெயர்.]

இதகு—மூங்கில். [உக்ஷு என்பதன்றிரிவு போலும்.]

இதடி—1. ஆதொண்டை. 2. காற்றோட் டிக்கொடி.

இருத்த — சொரிந்த, சொரியப்பட்ட. 'இருத்தகண்ணீர்' (புறநா. கசாஉ: கஉ.)

இருத்தல்—1. அழித்தல். 2. அழைத்தல். (சூ. நிகண். கக: எ.) 3. இரித்தல். (சூ. நிகண். கக: எ.) 4. ஈதல். (சூ. நிகண். கக: எ.) 5. எறிதல். 'என்னை இருநெற்றியிலிருத்த வடுவென்றான்' (பாரத. வெளிப்பாட். ச.) 5. ஒலித்தல். 'மழையெதிர்படுகண்முழவுக ணிருப்ப' (மலைபடு. ருஉஉ.) 6. குழைத்தல். 7. கொல்லல். (சூ. நிகண். கக: எ.) 8. சொரிதல். 'இருத்தகண்ணீர்நிறுத்தல்செல லாள்' (புறநா. கசாஉ. கஉ.) 9. தாண்டல். 10. தாழப்பண்ணல். 'கணைக்கோள் கூளி யொடு கதுப்பிருத் தசைஇப்-பிணந்தின் யாக் கைப் பேய்மகள்' (பட்டினப். உருக.) 11. துடைத்தல். 12. புடைத்தல், அறைதல். 'முரசுகடிப்பிருப்பவும்' (புறநா. கருஅ. க.) 13. புறங்காட்டச்செய்தல். (சூ. நிகண். கக: எ.) 14. மறித்தல். 15. யாழ்வாசித்தல். 'நும்மருப்பிருத்துநொமின்' (மலைபடு. ஙகக.) 16. வருத்தல். 17. வீழ்த்தல். (சூ. நிகண். கக: எ.)

இருத்துவித்தல்—மடையடைத்தல். 'ஏரி கட்டியிருத்துவித்தோமானோம்' (S. I. I. iii, 9.)

இருதரும்—தாழ்ந்துவிழும். (பத்து. மலை.)

இருதல்—இறுதல். (கலி. கஎ.)

இருப்ப—1. அறைய. 'முரசுகடிப்பிருப்ப வும்' (புறநா. கருஅ: க.) 2. ஒலியாநிற்க. (பத்து. மலை. ருஉஉ.)

இருப்பம் — திரட்சி. 'இருங்கலிருப்பத் திறவரைசேராது' (மலைபடு. ஙகஎ.)

இரும் — முன்னிலைமொழியைச்சார்ந்து வரும் ஓரசைச்சொல். 'மெல்லம்புலம்ப கண் டிரும்' (தொல். சொல். உஎச. சேனா.) 'கண்டிருமல்லமோ' எனத் தன்மைக்கண் ணும், 'புகழ்ந்திரு மல்லரோ பெரிதே' எனப் படர்க்கைக்கண்ணும் வரும். (தொல். சொல். உஎரு. சேனா.)

இருவர்—சகோதரர்.

இருவை—வழி. (உரி. நி.)

இருள்—1. ஆரல்மீன். 2. இடி. 'இரு டணித்தனிகான் றனவெக்குமே' (இரகு. ஆற் று. ச.) [இரு - எறிதல்.] 3. கார்த்திகைநாள்.

இருளி—1. இடியேறு. (பிங்கல. சுo.) 2. கொன்றைமரம்.

இருளை—1. சுற்றம். (சூ. நிகண். உ: ருஙு.) 2. தோழி. 'சொற்றிடு மிருளையைச் சுளித்து நோக்கியே' (கந்தபு. வள்ளி. கஉரு.) 3. நட்பு. (சூ. நிகண். ககர. கக: ஙு.)

இரூஉ—இருத்து, வீழ்த்தி. (பதிற்றுப். சo.)

இரை—இரையென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும்.

இரைத்தல்—1. கொடுத்தல். 2. நடத்தல்.

இங்கஞ்செடி—முத்தாயிலைச்செடி.

இங்கண்—இவ்விடம். 'இங்க ணுறைத விழுக்கன்றோ' (நளவெண். கலிநீ. சுo.)

இங்கம்—1. அறிவு. 2. ஆச்சரியம். 3. உள்ளக்கருத்தை வெளிப்படுத்தும்அங்கசேட் டை. 4. நோக்கம். [1, 2; 3. ஐங்கு.]

இங்கரி—கஸ்தூரி.

இங்காரம்—கரி. (வட. நைஷ. க-வது.)

இங்காலம்—கரி. [ஐங்காலு.]

இங்கிசை—1. கொலை. 2. சங்கையீனம். 3. தீங்கு. [ஹிம்ஸா.]

இங்கிட்டு—இங்கு. (வழக்.)

இங்கிதகவி—1. இனிமையானகவி. 2. இனிமையான கவிபாடுவோன். 3. பாட் டுடைத்தலைவன் கருத்தைக் குறிப்பினு லறிந்துவிளக்குங் கவி. [ஐங்கிதகவி.]

இங்கிதகாரன்—1. இங்கிதஞ்செய்கிறவன். 2. இனியவைகூறுவோன். [ஐங்கிதகார.]

இங்கிதஞ்ஞன் — இங்கிதத்தைவிளக்குஞ் சாமர்த்தியமுடையவன். [ஐங்கிதஜ்ஞ.]

இங்கிதம்—1. அடையாளம். 2. அசைதல். 3. அபிப்பிராயம். 4. இனிமை. 5. உள்ளக் கருத்தைவெளிப்படுத்திக் குறிப்பானிகழும் உறுப்பின்றொழில். 6. நெஞ்சு முதலியவற் றின் றுடிப்பு. 7. போதல். [ஐங்கித.]

இங்கிரி—கஸ்தூரி.

இங்கினும் — இங்குநின்றும். 'என்னவா றவன்போனவாறிங்கினும்போன' (திருவிளை. விறகு. சுஉ.)

இங்கு—1. இவ்விடம். 'இங்கெளிதுபோந் தீர்' (சிவதரு. சுவர்க்கநரக. கூஅ.) 2. பெருங் காயம். 'இங்குத்தங்கிப்போம் பாத்திரமும்.' (சி. சி. கo: சு.) [2. ஹிங்கு.]

இங்குக்காண்டான்—1. நெருஞ்சி. 2. நீர்முள்ளி. 3. பெருங்கரும்பு.

இங்குகாதி—பீதரோகணி.

இங்குசக்கண்டன்–1. நெருஞ்சி. (மூ. அ.) 2. நீர்முள்ளி.

இங்குடுமம்—பெருங்காயம்.

இங்குத்தை — இவ்விடம். 'இங்குத்தை நின்றுந் துரப்பன்' (திவ். நாய்ச். 5, 10.)

இங்குதம்—ஒருமரம். [ஐ௦஗ுடி.]

இங்குதல்–1. தங்குதல். 'இங்குசுவை யின்னமிர்தமேந்த' (சீவக. 2025.) 2. அழுந்துதல். 'வேனிறத்திங்க' (களவழி. 41.)

இங்குநாதி—பீதரோகிணி.

இங்குநாரி–1. நூற்றிருபதுலோகபேதங்களுள் ஒன்று. (பேரோசனை.) 2. கோரோசனை. 3. ஒருவகை உலோக மண்.

இங்குநாழி—பீதரோகிணி. (மூ. அ).

இங்குநூரி—கோரோசனை.

இங்குமம்—இக்கு.

இங்குராமம்—பெருங்காயம். (மூ. அ.)

இங்குலிகம்—1. சாதிலிங்கம். (சூ. நிகண். ௬: ௬௭.) 2. சிவப்பு. [ஹி௦஗ுலிக.]

இங்குளம்—1. சாதிலிங்கம். 2. சிவப்பு. 3. பெருங்காயம். [1, 2. ஹி௦஗ுல.]

இங்குளி—பெருங்காயம். 'வாசனை வயத்தான் இங்குளிவாங்குங்கலம்போல வந்து தாக்கும்' (சிவஞானபோ. ௩௨. சூ. வெண்பா. ௧. சிவஞா.) [ஹி௦஗ுலி.]

இங்கே–இங்கு. (திவ். திருவாய். 8,10, 3.)

இங்ஙன்–1. இப்படி. 'ஒப்பவிரித்துரைப்பரிங்ஙன் பொய்மெய்யென்ன வொன்றிலையொன் றெனப்பார்ப்ப தொவ்வாதார்க்கும்' (தாயு. ஆகார. ௯.) 2. இவ்விடம். 'இங்ஙனியற்றிய மகத்தின் மேவி' (கந்தபு. யாகசங். ௩௭.)

இங்ஙனம்—1. இத்தன்மை. 'இன்னதுன் கருத்தே லிங்ஙனமாக' (தணிகை. சீபரி. ௧௩௪.) 2. இவ்விடம். 'இங்ஙனம் வருதலென்னு' (தணிகை. வீராட். ௧௦௨.) இது இஙன் எனவும் வரும். 'எந்தமுறை யாதுமிங னேதுமது பாலே-வந்துதவி யானது' (சிவதரு. சுவர்க்க. ௩௭.)

இச்சகம்—1. இச்சையுடைமை. 2. இந்த உலகம். 'இச்சகத்துயிர் யாவையு முய்யவீற்றிருந்தான்' (கந்தபு. வள்ளி. ௨௧௪.) 3. பெறக்கருதியதொகை (கணக்கதிகாரம்). 4. முகமன். (வழக்.) [1, 3. ஐ௸. 2. இ; ஜக௲.]

இச்சம்–இச்சை. 'புணர்த்திய விச்சத்துப் பெருக்கத்திற் றூனேந்து' (பரிபா. 7, 37.)

இச்சயம்—ஆசை.

இச்சலம்—நீர்க்கடம்பு.

இச்சாசத்தி–1. ஒருசிவசத்தி; அஃது: ஆதிசத்தியின் ஆயிரத்தொருகூறுகத்தோன்றி ஆன்மாக்களுக்கு அநுக்கிரகஞ்செய்யும் பொருட்டாகச் சிருட்டியாதி கிருத்தியங்களைச் செய்தல்வேண்டுமென்று விரும்பி இப்பொரு ளிப்படியாம், இப்பொரு ளிப்படியாகாது என்னும் நியமத்தைச் செய்வது. (சி. சி.பாயிர. பக். ௬௮, ௭௭.) 2. முதல்வன் ஆன்மாக்களுக்கு மலபந்தத்தை நீக்கிச் சிவத்தையளித்தற்க ணுளதாகிய கருணை. (கூர்மபு. திருக்கல். ௯. உரை.) [ஐ௸ஶக்தி.]

இச்சாநிவர்த்தி — 1. இச்சையடக்கம். 2. இச்சையொழிவு. [ஐ௸நிவ்ருத்தி: ஐ௸ - இச்சை. நிவ்ருத்தி - ஒழிவு.]

இச்சாப்பிராரத்தம்— முன்வினைப்பயனாகிய சுகதுக்கங்களைத் தன் இச்சைப்படி முயன்று செய்யுஞ்செயலே காரணமாக அநுபவித்தல்; அது, பத்தியந்தவறல் தனக்கே துன்பமென்றறிந்திருந்தும் பத்தியந்தவறிச்செல்வதுபோல்வதும், (வேதா. சூ. ௧௭௫. உரை.)தன் இச்சையினாற்போய் இராசாவின் மனைவியைத் தீண்டலால் வருந் துன்பம் போல்வதும். (சி. சி. ௨: ௩௨. மறை.) [ப்ராரப்த.]

இச்சாபத்தியம் — 1. புறப்பத்தியம். 2. மருந்துண்ணுங்காலத்திற் புணர்ச்சியொழித்திருத்தல். [ஐ௸; ௯வயூ - பத்தியந் தவறுதல்.] 3. கடுகு நல்லெண்ணெய் முதலியவற்றை நீக்கியுண்ணும் பத்தியம்.

இச்சாபோகம்— இச்சித்தபடிகொள்ளும் போகம். 'இச்சா போக மாக விரைந்து' (பாரத. பதினேழா. ௧௩௭.) [ஹோக.]

இச்சாரோகம் – போகாதிக்கத்தால்வரும் நோய்.

இச்சாவசு-திக்குப்பாலகருளொருவனாகிய குபேரன். [வஸு-செல்வம்.]

இச்சாவதி-சந்தனபுஷ்பாதிகளிலே மிக்க விருப்பமுள்ளவள்.

இச்சாவான்—இச்சையுடையோன்.

இச்சி — 1. இச்சியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. இத்திமரம். 3. அரசு. 4. ஆல். 5. உயர்திணைப்பெண்பால் ஒருமையில் வரும் ஒரு பெயர்விகுதி. 'அச்சியொடாட்டியனியாத்தியத்திதியாளொடன்னி-இச்சியியாதியும்' (வீரசோ. தத்தி. ௫.)

இச்சித்தல் — 1. காமமுறல். 'இச்சித்தவின்ப நுகராமலிளைத்தமெய்யாள்' (பாரத. திரௌபதி. எ௫.) 2. விரும்புதல். 'இச்சித்த தெய்வம்போற்றி' (சி. சி. உ: உ௪.)

இச்சிதா—1. இச்சாசத்திமான். 'சத்திமானாகிய சிவனும் ஏகனுய் இச்சிதா என்றும், ஞாதா என்றும், கர்த்தா என்றும், அனந்தனென்றும் பிரிப்பின்றி மூன்றனந்தபேதமாயிருப்பன்' (சி. சி. க: ௬௩. ஞானப்.) 2. இச்சிக்கிறவன். [ஐஷ்-து.]

இச்சியம்— } கடுகுரோகணி. (மூ. அ.)
இச்சியல்— }

இச்சியன் — தேவகுருவாகிய வியாழன். [ஐஜ்ய.]

இச்சியால்—1. இத்திமரம். 2. கல்லித்திமரம்.

இச்சில்—ஒரு மரம். 'அலரசத்திவேங்கை கூவிளமதிஞ்சிலிச்சில்' (மச்சபு. அத்திரி. ௪.)

இச்சு — 1. ஓரிடைநிலை. 2. விரும்புதல். [ஐஷு.]

இச்சுக்கொடுத்தல்—1. புள்ளொலித்தல். 2. ஒலிக்குறிப்பினால் மறுமொழிகூறுதல்.

இச்சை — 1. அநுராகம். 2. ஆசை. 'முனிவர்யாவரும் பெருகுமிச்சையால்-வினவுகிற்பவர்கள்' (சேதுபு. பாவநாச. ௬௦.) 3. இச்சாசத்தி. 'இச்சையுயிர்க்கருணேசமாகும்' (சி. சி. க: ௬௩.) 4. இச்சாப்பிராரத்தம். (வேதா. சூ. ௭௫.) 5. இட்டம். 6. உறுதிச்சொல். 7. கிரிச்சை. 8. பிரியம். 'இச்சைப்படி தன்பேரற மென்னுன்கும் வளர்க்கும்-பச்சைக்கொடி' (பாரத. அருச். தீர். ௩௬.) 9. பேராசை. 10. பொய். 11. வினு (கனக் கதிகாரம்.)

இச்சைசெய்தி—திரோபவம். (கோயிற்பு. பதஞ். 66.)

இசக்கி—இசக்கியம்மன்.

இசக்கியம்மன்—துர்க்காபேதம்.

இசதுப்பிசது— } குழப்பம்.
இசதுபிசது — }

இசங்கு—1. சங்கஞ்செடி. (பிங்.) 2. சங்கங்குப்பி.

இசங்குதல்—போதல். 'ஸ்ரீபிருந்தாவனத்துக்கு வழி இசங்கும்படி' (ஈடு. 5, 10, 2.)

இசப்புதல்—ஏமாற்றுதல்.

இசநகம்—வெள்ளைத்தும்பை. (மூ. அ.)

இசலாட்டம்—இகலாட்டம்.

இசலிகள்—பிணங்கிகள். 'குசலிகளிசலிகள்' (திருப்பு. உ௪உ.)

இசலிப்புழுக்குதல்—கலகப்படுதல். (வழக்.)

இசலுதல்–1. வாதாடல். 2. மாறுபடுதல். 'ஒன்றுக்கொன்று இசலி வளராநிற்கும்' (ஈடு. 4. 10. 6.)

இசவில்—கொன்றை. (மூ. அ.)

இசி—1. இசியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. இணக்குகை. 3. சிரிப்பு.

இசிகப்படை — ஒருவகை யம்பு. 'இசிகப் படையெய்தான்' (கம்பரா. நிகும். 130.)

இசிகர்—கடுகு. (மூ. அ.)

இசித்தல் — 1. இணுக்குதல். 2. இழுத்தல். 'பனிமுட்களிற்கட்டியிசித்திட' (திருப்பு. ௩௧௧.) 3. ஒடித்தல். 4. சிரித்தல். 5. நரம்பிழுத்தல். 6. நோவுண்டாதல். 7. உரித்தல்.

இசிதல்–1. இணுக்கப்படுதல். 2. இழுபடுதல். 3. நீளுதல்.

இசிதாரு—கடம்பு.

இசிப்பு — 1. இணுக்குகை. 2. ஈர்ப்பு, இசிவு. 3. சிரிப்பு. 4. நரம்புச்சுருக்கு. 5. வயிற்றுவலி. 6. இழுப்பு.

இசிபலம்—பேய்ப்புடல். (மூ. அ.)

இசிவு—இசிப்பு.

இசிவுசன்னி—ஒருவகைச்சன்னி.

இசிவுநோப்பி — சன்னியைத் தடுக்கும் மருந்து.

இசின்–1. ஓரசைநிலை. 'காதனன்மாநீமற்றிசினே' (தொல். சொல். உ௬அ. நச்சினர்.) இது தன்மைக்கண்ணும் படர்க்கைக்கண்ணும் வரும். (புறநா.) 2. செய்யுளிடத்து

வரும் ஓ ரிறந்தகால இடைநிலை. 'என்றிசி னேரே' (நன். பதவி. கஅ.)

இசுக்கோல்விதை—இசப்கோல்விதை.

இசுநாரு—கடப்பமரம்.

இசும்பு—1. வழுக்கு. 'மெய்யே-யிசும்பி னிற் சிந்தைக்குமேறற் கரிது' (திருக்கோ. கசகூ.) 2. ஏற்றிழிவுமிக்ககடுவழி.(திருக்கோ. 149. உரை.)

இசுழ—நாமம். (அராபி.)

இசை—1. இசைப்பாட்டு. 2. இசைப்பு. 3. இசையுணர்ச்சி. 'வேத - பாராயணப்பனு வன் மூவர்செய் பனுவலது பகாவோ விசையு மில்லை' (தாயு. சச்சி. ௩.) 4. இசையென் னேவலும், தெரிநிலை வினைப் பகுதியும், வினைத்தொகையும். 5. இணக்கம். 6. இரா கம். 'இசைவழாத-கிங்கரமிதுநம்' (கூர்மபு. திருக்கல். ௬௭.) 7. இனிமை. (அக. நி.) 8. ஒலி. 'சுரும்பின மிசையொடு துவன்றிச் சுற்றிட' (கந்தபு. பார்ப்பதி. கடு.) 9. கூடி நிற்றல். 10. கொடை. 11. சங்கீதம். (தைல.) 12. சரிகமபதநி என்னும் ஏழெழுத்தினையும் மாத்திரைப்படுத்தித் தொழில் செய்ய அவற் றுள்ளே சட்சம், இடபம், காந்தாரம், மத்தி மம், பஞ்சமம், தைவதம், நிடாதம் எனப் பிறந்துநிற்பது. இவ்விசையுட் பண் பிறக் கும். (கூர்மபு. திருக்கல். ௬௭.) 13. பண்பு. 14. பாட்டினிசை. 15. புகழ். 'எய்தவிவ ணியலுமிசையும்'(மருதூ. கடு.) 16. பொன். 17. முத்தமிழினுென்ருகிய இசைத்தமிழ். 'இயலு மிசையும் பயின்மருதூரிறையின்னரு ளால்' (மருதூ. கடு.) 18. வார்த்தை. 'மரா மரமேழுமெய்தவாங்குவிற்றடக்கைவல்வில், விராமனை வல்லனென்ப திசையலாற் கண்ட தில்லை' (சிந்தா. ககக. அஎ.) 19. ஊதியம். 'இசைபெறுவா னெண்ணி யிழந்தான் முத லும்' (வெங்கையுலா. 328.) 20. சீர். (யாப். வி. 22.)

இசைக்கரணம்—இசைக்கருவியிற் காட்டுந் தொழில். (சிலப். 7. கட். 15.)

இசைக்கருவி—வாத்தியம். (சூடா.)

இசைக்கழல்—தேர் நூறு, குதிரை ஆயிரம், யானை நூறு, காலாள் பதினுயிரம் போரின் மடியவென்ற வேந்தர் வலக்காலிலணியும் வீரச்சிலம்பு.

இசைக்குழல்—ஊதுகுழல்.

இசைக்காரன்— } இசைபாடுகிறவன்.(பி.
இசைகாரன் — } வி. உஅ. உரை.)

இசைகுடிமானம்—கல்யாணத்தில் எழுதப் படும் சாட்சிப்பத்திரம்.

இசைகேடு — 1. அபகீர்த்தி. 2. சத்துக் கேடு. 3. சுரபேதம்.

இசைகோள்ளல்—கீர்த்திபெறல்.

இசைஞானியார்—சடையநாயனர் மனைவி யார். இவருடைய அருமைத்திருவயிற்றிற் சுந்தரமூர்த்திநாயனர் திருவவதாரஞ் செய் தருளினர். (பெரியபு.)

இசைத்தமிழ்—முத்தமிழுள் ஒன்று. (பிங்.)

இசைத்தல்—1. இசைபிறக்க ஒலித்தல். 'ஏசலொப்பன கோகிலப் பறவைக ளிசைத் தல்' (கந்தபு. நாட்டு. சச.) 2. இணைத்தல். 3. ஈதல். 4. ஒலித்தல். (பழமொழி. கஙடு.) 5. கட்டல். (திவா.) 6. சங்கீதம்பாடுதல். 7. சொல்லுதல். 'அஞ்சுவ தென்கொலென் றிசைத்தான்' (பாரத. நிரைமீட். ௬௨.) 8. பொருந்தப்பண்ணுதல். 9. அறிவித்தல். 'காலையிசைக்கும்பொழுதொடுபுலம்புகொள' (பதிற்றுப். 81. 5.) 10. இசைக்கருவிவாசித் தல். 'யாழிசைக்குப்புக்கு' (தொல். சொல். 310. உரை.) 11. ஒத்தல். 'கூற்றிசைக்கு மென' (பாரத. இராச. 52.)

இசைத்திரிபு—1. இசைமாறுகை. 2. இசை யறுத்துக்கூறுகை. 3. ஓசைப்பிறழ்வு.

இசைதல்—1. இராகவோசையொவ்வல். 2. உடன்படல். 'அதன்புடைபோகவுமிசை யா' (கந்தபு. சுரம்பு. சூ.) 3. பொருந்துதல். 'தேர்ற்றமுமிசையாதாகும்' (சி. சி. க: சூ.)

இசைநாள்—1. உத்திரட்டாதி. (சோதிடக் கடல்.) 2. பூரட்டாதி. (சோதிடக்கடல்.)

இசைநிறை—ஓசைநிறைத்துநிற்பது.

இசைநுணுக்கம்—சாரகுமாரன் அல்லது சயந்தகுமாரன் இசையறிதற்பொருட்டு அகத்தியமுனிவர்மாணுக்கரு ளொருவராகிய சிகண்டியென்னுமருந்தவமுனிவரால் வெண் பாவா லியற்றப்பட்ட ஓ ரிசைத்தமிழ்நூல்.

இசைநூபுரம்—யானையைக்கொன்ற சுத்த வீரன் வலக்காலிலணியும் வீரச்சிலம்பு.

இசைநூல்—சங்கீதசாத்திரம்.

இசைப்பா — தேவபாணி; [இசைத்தமிழில் வருங்கால் இப்பெயர்த்து.] (கூர்மபு. பிரமாவி. கஉ. உரை.) இது பத்துவகைப் படுமென்றும், ஒன்பதுவகைப்படுமென்றுங் கூறுவர். (சிலப். கடலாடு. ௩௫-அடி உரை.)

இசைப்பாட்டு—சாஹித்தியம். (சிலப். பதி. 60. உரை.)

இசைப்பாடு—கீர்த்திமிகுதி. (பிங்.)

இசைப்பாணர் — பாணருள் ஒருவகையார். (மணிமே.)

இசைப்பாழகநிலை—கொச்சகம்.

இசைப்பு-1. இசை. (தொல். சொல்லதி. ௩௪௦.) 2. இணக்கம். 3. கூடிநிற்றல். 4. சொல். (திவா.) 5. பொருத்து. 6. இசைவு. (பிங்.)

இசைப்புள்-1. அன்றிற்பறவை. 2.குயில்.

இசைப்பொறி—செவி. 'வேறிசைப்பொறி விழியலாதுற்றிலான்' (சேதுபு. காசிபச். ௩௦.) [இசை-ஒலி. பொறி-புலனறிகருவி.]

இசைமகள் — } சரச்சுவதி. (பிங்.)
இசைமடந்தை— } (சூ. நிக. ௧. ௩௫.)

இசைமணி—பதினுயிரம் பேரை வென்ற வேந்தர் வலக்காலிலணியும் பொன்னுற் செய்த வீரகண்டை.

இசைமரபு—ஓர் இசைநூல். (சீவக. 658. உரை.)

இசைமறை — சாமவேதம். (திவ். திருவாய். 8. 9. 9.)

இசைமுட்டி—செருந்தி. (மலை.)

இசைமுடி—இசைமுடி.

இசைமுடி—கொந்திகாயகம். (மலை.)

இசைமை — 1. சீர்த்தி. 'இத்தகுபண்பு சான்ற சீர்மையா லிசைமைமீதி' (திருவிளை. உக்கிரபா. சஎ.) 2. ஒலி. (பரிபா. 13. 14.)

இசையர்தாதி — ஓரலங்காரம். அஃது: ஒரு வசனத்தீறு மற்றொருவசனத் தாதியாக வருவது. (தொன்னூல். ௩௧௬.)

இசையளவுகண்டான்—பாண்டியன் சிங்காதனம். (I. M. P. Mr. 200.)

இசையளவுபா — தேவபாணி. இசைத்தமிழில்வரும்போது இப்பெயர்த்து. (சிலப். கடலாடு. ௩௫-அடி. உரை.)

இசையறிபறவை—அசுணம். (பிங்.)

இசையாசிரியன் — சங்கீதப்புலவன். (சீவக. 672. உரை.)

இசையானந்தம்—அவலமுற்றிருந்தோர்க்குரிய இசைகள் தலைவன்பாட்டிற்கு இசையாகிவரப் புணர்க்கும் நூற்குற்றம். (யாப். வி. பக். 524.)

இசையுரிச்சொல்—ஓசைப்பண்பு குறிக்கும் உரிச்சொல். அது: 'கலிகடல்' என்பதிற் போல வருவது.

இசையெச்சம்—வாக்கியங்களில் அவ்வவ்விடத்திற்கேற்ப ஒருசொல்லும் பலசொல்லுமாக வருவித்துரைக்கப்பட்டு வருவது. [இசையென்பது சொல். 'கற்றதனாலாயபயனென்' என்புழி நூலைக்கற்றதனால் என ஒரு சொல்லும் 'அந்தாமரையன்னமே நின்னை யானகன் றுற்றுவனோ' என்புழி என்னுயிரினுஞ்சிறந்த நின்னை எனப் பல சொற்களும் வருவிக்கப்படுதல் காண்க.] (நன். ௩௬௦. உரை.)

இசையெடுத்தல் — பாடுதல். 'என்னையாளுடையநாயகிக்கிசையெடுப்பவள்' (இராமா. பாலகா. அகலிகை. ௬.)

இசையோலை—ஒப்பந்த ஓலை. (I. M. P N. A. 727.)

இசையோன்—இசைக்காரன். (சிலப். 3. 14.)

இசைவல்லோர்—1. கந்தருவர். 2. சங்கீதபாடகர்.

இசைவளை—குதிரைநூறு போர்க்களத்திற் பொருது வென்ற வீரர் காற்பெருவிரலி லணியும் வளை.

இசைவாணர்—இசைவல்லோர். [வாழ்; ந்; அர்.] 'தெள்ளுதமிழ்வாணரிசைவாணர் சூழ' (திருவாலவா. 57. 22.)

இசைவிரும்பி—அசுணம்.

இசைவு — 1. உடன்பாடு. 'தாமுமமறையோரிசைவினுல்' (பெரியபு. சண்டேசு.உச.) 2.ஒட்டம். 'ஈரம்வைத்தசிந்தைமன்ன னிசைவெனக் கழுத்தின்முத்-தாரம்வைத்து' (பாரத. சூது. ௪௫.) 3. பொருந்துகை. 'இன்னவை பிறவு மிசைவில வெல்லாம்' (பெருங். மகத. 15. 9.) 4. தகுதி.

இசைவுகேடு—1. பொருத்தமின்மை. 2. காரியத்தவறு.

இசைவுபிசகு-1. இசகுபிசகு. 2. இணக்கமின்மை.

இஞ்சக்கம்—பரிதானம்.

இஞ்சம்—1. வெங்தோன்றிக்கிழங்கு. 2. வெண்காந்தள். (மலை.)

இஞ்சல்—1. இறுகல். 2. சுவறல்.

இஞ்சாகம்—இறுன்மீன். [ஐஞாக.]

இஞ்சி—1. இஞ்சிக்கிழங்கு. 'வெறுத்தவரி சனமிஞ்சித் - தொத்தெடுப்பதொருபாலாம்' (தணிகை. நாட். கஉ.) 2. இஞ்சி. 3. கேடகம். 4. கொத்தான். (மூ.அ.) 5. மதில். 'இஞ்சிவானேங்கி' (இராமா. நகர. கo.) 6. வாவி.

இஞ்சிச்சூரசம் — இஞ்சிச்சாற்றாலாகிய கஷாயம்.

இஞ்சித்தேறு—இஞ்சித்துண்டு.

இஞ்சிப்பாகு—இஞ்சிக்கிழங்கோடு வேறு பதார்த்தங்களுஞ்சேர்த்துச் செய்யப்படும் ஒரு மருந்து.

இஞ்சிவேர்ப்புல்—சுக்குநாறிப்புல்.

இஞ்சுசாறு—வெல்லம்.

இஞ்சுதல்— 1. சுவறுதல். 2. சுண்டுதல். 3. இறுகுதல்.

இஞ்சை —1. தீங்கு. 'தந்தியிஞ்சைவிடற் கருள்கூர்த்தமால்' (சேதுபு. சக்கரதீர்த். கடு.) [ஹிம்ஸா: ஹிஜி - வருந்துதல், கொல்லுதல்.] 2. துன்பம். 3. கொலை.

இட்சு—கரும்பு.

இட்சுபாகம்—கவிகளில் அமைக்கப்பட்ட பொருளமைதிவகையினென்று. அது, கரும்பின் மதுரம்போலக் கவியின் நடுவேயிருப்பது. (வீரசோ. எரு.) [ஐக்ஷுவாக.]

இட்சுமூலம்—மூங்கில். [ஐக்ஷுமூல.]

இட்சுவாகு—இக்குவாகு. [ஐக்ஷ்வாகு.]

இட்டகந்தம் — சுகந்தம். [ஐஷ்டகந்த.]

இட்டகாபதம்—வெள்வெட்டிவேர்.

இட்டகாமியபலம் — விரும்பியதைப் பெறும்பொருட்டுச் செய்யுங் கருமத்தினால் அடையலாகும் பலம். (சி. சி. உ.உச:மறை.) [ஐஷ்ட - விரும்பியது. காம்ய - கருமம்.]

இட்டகாமியம் — விரும்பியதைப் பெறும் பொருட்டுச் செய்யுங் கருமம். (சி. சி. உ: உச. மறை.)

இட்டகை — செங்கல். [ஐஷ்டகா.]

இட்டங்கட்டல் — இராசிநிலைவரைதல். (சோதிடம்.)

இட்டசட்டம்—யதேச்சை.

இட்டசித்தி—1. விரும்பியதை அடைகை. 2. ஒரு பொய்கை. (சிலப். 11. 95.)

இட்டடுக்கி—காதணிவகையினென்று.

இட்டடை—இட்டிடை.

இட்டதமன்—1. அதிகாதிகப்பிரியன். 2. கணவன். [ஐஷ்ட - பிரியம். தம - அதிகாதிகம்.]

இட்டதரன்—அதிகப்பிரியன். [ஐஷ்டதர]

இட்டதாநன் — கன்னன். [ஐஷ்டதாநஃ: ஐஷ்ட - விரும்பியது. தாநம் - கொடை. கொடையை விரும்பியவன் என்றபடி.]

இட்டதெய்வம்—வழிபடுகடவுள்.

இட்டதேவதை — தன்கருத்துக்கியைந்ததொரு கடவுள். 'தனக்கு இட்டதேவதையைப் பூசித்துவாழுந் தருமக்கிரியைக்கு' (சி. சி. உ: உச. சிவாக்.) [ஐஷ்டதேவதா.]

இட்டதேவன்— இட்டதேவதை. [ஐஷ்டதேவஃ.]

இட்டநூல்—வலித்தநூல். (சிந்தா.நாமக. அரு.)

இட்டப்பிரசாதம்—1. கைம்மாறு வேண்டாக் கொடை. 2. தெய்வத்துக்கு இட்ட வமுது. 3. தேவகிருபை. 4. தொடர்ந்த அன்பு. 5. யாகசேடம். [ஐஷ்டப்ரஸாத.]

இட்டபோகம்—விரும்பினபடி அநுபவிக்கை. [ஐஷ்டபோக.]

இட்டம்—1. அடிமைவிடுதலை. 2. அன்பு. 3. ஆமணக்கமரம். 4. கிரகநிலையாலாகும் பலாபலம். 5. சுயேச்சையாய்நடக்குந்தன்மை. 6. ஸ்நாநமுதலியசெய்து இயற்றுமொரு கிரியை. 7. துருவத்துக்கும் இராசியினந்தத்துக்குமிடையேயிருக்கும் வித்தியாசம். 8. பிரியம். 'இட்டமானவியற் புகரோனிடங்-கிட்டினன்' (கந்தபு. சுக்கிரனுப. கடு.) 9. யாகபலி. 10. யாகம். 11. விருப்பம்.

இட்டலி—ஒரு சிற்றுண்டி. 'புரையிலிட் டலியெள்ளுண்டை' (மச்சபு. ரசகல்யாண. கரு.)

இட்டலிங்கம்—ஆசாரியன் விசேஷதீக்ஷை யைப்பண்ணிச் சீடனிடங்கொடுக்க அவன் 'அடியேன்இச்சரீரமுள்ளவரையுஞ்சிவபூசை செய்தன்றி ஒன்றுமுட்கொள்ளேன்' என்று பிரதிஜ்ஞைசெய்துகொண்டு வாங்கிப் பூசிக் கும் இலிங்கம். (சைவச. பொது. சசுஈ, சஈசு, சைவவி. ஈக.) இது ஆன்மார்த்த லிங்கமெனவும் சலலிங்கமெனவும் பேர் பெறும். [ஐஷ்டலிங்க.]

இட்டவழக்கு — சொன்னது சட்டமா யிருக்கை. 'அவர்கள் இட்டவழக்காயிருக்கு மிறே' (ஈடு. அவ. ஜீ.)

இட்டவியாத்தி—விரும்பியதைப் பெறுதல். (சி. சி. க. உ௩. சிவாக்.) [ஐஷ்ட - விரும்பி யது. வ்யாப்தி - அடைதல்.]

இட்டளப்படுதல் — சிறிய இடத்தில் நிரண்டுதேங்குதல். 'சௌந்தரியசாகரம் இட்டளப்பட்டுச் சுழித்தாற்போலே' (ஈடு. 10. 10. 9.)

இட்டளம்—1. உபாதி. 2. தளர்வு. (பிங்.) 3. துன்பம். 'அடியேனிட்டளங்கெடவே' (தேவா. திருமுதுகு. க. சுந்தர.) 4. நெருக் கம். 'பரமபதத்தில் இட்டளமுந் தீர்ந்தது' (ஈடு. 3. 8. 2.) [ஐஷ்டஸ: ஸ - ஒடுக்கம்.]

இட்டளர் — தளர்ந்தவர், மனச்சஞ்சல முற்றவர். (திருநூற். ஈக. உரை.)

இட்டறுதி—1. இரண்டுக்குற்றகாலம். 2. நியமித்தவெல்லை. 3. வறுமை.

இட்டறை—யானையைவிழ்த்துக் குழி.

இட்டன் — 1. அன்பன். 2. நாயகன். 'இட்டனெனக்காண்பரவனேவலரையேவல ரென்-றிட்டனையார்காண்பாரியம்பு'(சைவச. மாணக். கசு.) 3. நண்பன். 4. எசமானன். [ஐஷ்டீ.]

இட்டாபூர்த்தம்—யாகஞ்செய்தல், தவஞ் செய்தல், வேதாத்தியயநஞ்செய்தல், கிணறு வெட்டல், மராமட்டுதல், முதலிய புண்ணிய கிரியை. [ஐஷ்டாவூர்த்தம்: ஐஷ்டம் - யாகம். வூர்த்தம் - புண்ணியகிரியை.]

இட்டார்த்தம்-விரும்பியபொருள்.[ஐஷ்டா ர்த்தம்.]

இட்டி — 1. ஈட்டியாயுதம். 'இட்டிவேல் குந்தம்' (சிந்தா. முத். கசுசு.) [ஈட்டி என் பதன் விகாரம்.] 2. செங்கல். [இட்டிகை என்பதன் விகாரம்.] 3. யாகம். 'இட்டிக ளும்பலவியற்றி' (காஞ்சிப். கடவுள். கக.) 4. விருப்பம். [3, 4. ஐஷ்டி.]

இட்டிகை — 1. இடுக்குவழி. 2. கூட்டு மெழுகு. (பழமொழி. கருசு.) 3. செங்கல். 'கருஞ்சாந்திட்டிகை சுண்ணத்தால்' (தைல. பாயிர. க௦) [3. ஐஷ்டிகா.]

இட்டிகைவாய்ச்சி – செங்கற்களைச்செதுக் கும் ஆயுதம். (சீவக. 2689. உரை)

இட்டிடம்-இட்டவிடம். 'இட்டிடத்திசை யும்' (சி. சி. பர. லோகா. அ.)

இட்டிடை—1. அற்பம். 'இட்டிடையிடை தனக் கிரக்கம்வைக்கிலார்' (கந்தபு. தெய்வ யா. கஅ௩.) 2. கடைசற்கருவியின் ஓ ருறுப்பு. 3. தரித்திரம். 4. துன்பம். 5. சிறிய இடை.

இட்டிடைஞ்சல்—1. துன்பப்படுகை. 2. வறுமை.

இட்டிது — சிறிது எனப் பொருள்படும் ஒரு குறிப்புவினை. 'ஆகா றளவிட்டிதாயினும்' (வள். சஎஅ.)

இட்டிமை—1. சிறுமை. (திவா) 2. ஒடுக் கம். (திருக்கோ. 149. உரை.)

இட்டிய — சிறிய. 'கட்டளையன்ன மணி நிறத்தும்பி - யிட்டிய குயின்ற' (ஐங்குறு. உகரு.)

இட்டியம்—1. யாகசம்பந்தம். 2. யாகம். [ஐஷ்ட்ய.]

இட்டியயநம்-ஒரு யாகம்.[ஐஷ்ட்யயநம்.]

இட்டிடு—விவாதம். 'என்னோடே இட்டிடு கொண்டல்லது'. (ஈடு. 8. 2. 6)

இட்டிடுகொள்ளுதல் — வார்த்தையிட்டு வார்த்தைகொள்ளுதல். (ஈடு. 6. 2. ப்ர)

இட்டிறு — செருக்காற்செய்யுஞ் செயல். 'இட்டிறிட்டு விளையாடி' (திவ். நாய்ச். 14.1.)

இட்டு—1. அற்பம். (சூ. நிகண். அ. கக.) 2. இடு என்னுந் தெரிநிலைவினைப்பகுதியோடு தொடுத்துவந்த செய்து என்னும் வாய்பாட் டில்வரு மொரு வினையெச்சம். 3. தனக் கென வேறுபொருளின்றிப் பகுதிப்பொருள் விகுதியாய்வரும் இடு என்பதன் விகா ரம். 'எழுந்திட்டான்' [இதனை ஒருவினை

யிடைச்சொல் என்பாருமுளர்.] 4.விருப்பம். [ஊஷ்டு.] 5. காரணமாக. 'அதையிட்டுவந்தான்' (வழக்.)

இட்டுக்கட்டுதல்—1. இல்லாததை நியமித்துப்பேசுதல். 2. கற்பனைசெய்தல்.

இட்டுக்கொடுத்தல் — ஏற்றிக்கொடுத்தல். (புறப்பொருள்வெண்.)

இட்டுக்கொண்டுபோதல் — கூட்டிக்கொண்டு செல்லுதல். (வழக்)

இட்டுப்பிரிதல் — அணிமையில் தலைவன் பிரிதல். (கலித். 121. உரை)

இட்டுப்பிரிவு — சமீபமான இடத்திற் றலைவன்பிரியும் பிரிவு. 'இட்டுப்பிரிவிரங்கினும்' (தொல். பொ. 111.)

இட்டுப்பிறத்தல் — ஒருகாரியத்துக்காகப் பிறத்தல், 'கைங்கர்ய சாம்ராஜ்யத்துக் கிட்டுப்பிறந்து' (ஈடு. 2. 3. 1.)

இட்டுரைத்தல் — சிறப்பித்துச்சொல்லுதல். (பு. வெ. 4. 11)

இட்டுவருதல்—1. அழைத்துவருதல். 2. கொடுத்துவிட்டுவருதல்.

இட்டுறுதி—கண்டிப்பு, இறுக்கம்.

இட்டேற்றம்—1. செய்யாதிருக்கச்செய்ததாகக் கற்பித்துக் குற்றமேற்றுதல். 2.கொடுமை.

இட்டோட்டு—அலைக்கழிவு, தொந்தரை.

இட்டோடு—பிரிவு.

இடக்கயம்—கொடி. 'பட்டிடக்கயங்கள் கோடி'(திருநெல்.விட்டுணு.கஅ.)[தெலுங்கு]

இடக்கர்—1. குடம். (பிங்கல. நி.) 2. சபையிலுள்ளார்க்கு வெளிப்படுத்திச்சொல்லத்தகாதவார்த்தை. 3. தூர்த்தர். (சூ. நிகண். கக: டகர. ௩.) 4. நெருங்கல்.

இடக்கரடக்கல் — சொல்லத்தகாத பொருளை மற்றொருபொருளுடைய சொல்லால் மறைத்துச்சொல்லுஞ் சொல். (நன். பெயரி. ௪0. இராமாநு.)

இடக்கரடக்கு—இடக்கரடக்கல்.

இடக்கல்—தோண்டல். 'ஆதியேனமதாயிடக்கலுற்றுனென்று' (பெரியபு. திருமலைச். அ.)

இடக்கன்—தாறுமாறுசெய்வோன்.

இடக்கியம்—தேர்க்கொடி.

இடக்கு—1. குதர்க்கம். 2. சபையிலே வெளிப்படுத்தத்தகாதசொல். 3. சேட்டை. 4. தடை. 5. முருட்டுத்தனம். 6. சங்குமுடி.

இடக்குமடக்கு—1. குதர்க்கம். 2. தொந்தரை.

இடக்குமுடக்கு—சங்கடம்.

இடக்கை—1. இடப்பக்கக்கரம். 2. ஒரு தேசம். [வக்ஷ.] 3. நால்வகை உத்தமத் தோற்பெருங்கருவிகளுள் ஒன்று. (சிலப். ஊர்காண். கடுக. உரை.) [வக்ஷா.] 4. மருதநிலத்தூர்.

இடக்கையான்—அஞ்சாவீரன்.

இடகலை—இடைகலை. [சுஜா.]

இடங்ககம்—வெள்ளிநாணயம்.[டஂகக.]

இடங்கணம்—வெண்காரம். [டஂகண.]

இடங்கணி—1. ஆந்தை. 2. உளி. 3. சங்கிலி. (சூ. நிகண். எ: கடு.) 4. ஒருபொறி. (சீவக. 102. உரை.)

இடங்கம்—1. கல்வெட்டியின் உளி. 2. காசு. 3. கொடுமுடி. 4. யாகத்திற் பிரயோகிக்குங் கத்தி. 5. வாள். 6. வாளிட்டுவைக்கும் உறை. [டஂக.]

இடங்கர்—1. ஒருவகை முதலை. 'கொடுந்தாண்முதலையுமிடங்கருங்கராமும்'(குறிஞ்சி. உறுஎ.) 2. குடம். (சூ. நிகண். எ: சுசு.) 3. சிறுவழி. 4. தூர்த்தர். (சூ. நிகண். கக: டகரவெ. எ.) 5. நீர்ச்சால். (சூ. நிகண். எ: சுசு.) 6. முதலை. 'இடங்கர்களும் விறக்குமன்னோ' (தணிகைப்பு. நகர. சுo.)

இடங்கரம்—மகளிர்சூதகம்.

இடங்கழி-1. காமமிகுதி. (புறப்பொருள் வெண்.) 2. தமக்குரிய இடத்தைவிட்டுக் கழிதல். 3. நெருக்குகை. 4. நெருங்கல். 5. மீதூரல். (சூ. நிகண். கூ: கடு.) 6. மரப்பாத்திரம். 7. ஒருபடியளவு.

இடங்கழிமை — 1. இடங்கழித்தன்மை. 2. நெருக்குகை. 3. நெருங்கல்.

இடங்கழியர் — தூர்த்தர். [தமக்குரிய இடத்தைவிட்டுக் கழிந்தவர் என்றபடி.] (சூ. நிகண். உ: சடு.)

இடங்காரம்—1. ஆச்சரியம். 2. கீர்த்தி. 3. மத்தளத்தி னிடப்பக்கம். 4. வில்லின் நாணோசை. [டஂகார.]

இடங்கேடு—1. தரித்திரம். 2. தாறுமாறு.

இடங்கை—இடக்கை. 'நெடுங்கோதண்ட மிடங்கையினெடுத்து' (திருவிளை. யானை. க0.)

இடங்கொடுத்தல்—1. சம்மதித்தல், இளகிக்கொடுத்தல். 2. கண்டிப்பின்றி நடக்கவிடுதல்.

இடங்கொள்ளுதல் — 1. வியாபித்தல். 'இடங்கொள் சமயத்தையெல்லாம்' (திவ். திருவாய். 5. 2. 4.)

இடங்கோலுதல்— 1. இடஞ்செய்துகொள்ளுதல். 2. ஆயத்தம்பண்ணுதல்.

இடச்சுற்று—1. இடப்புறமாய்ச்செல்லும் வளைவு. 2. இடஞ்செல்லுகை.

இடசாரி — இடப்பக்கமாகச் சுற்றிவருதல். [வாரி.]

இடஞ்சுழி—உடம்பிலே இடப்பக்கநோக்கியிருக்குஞ் சுழி.

இடத்தகைவு—வீடு கோயில் இவை முதலாகிய இடம்விட்டுப் போகுதலொழிவாயாக வென்று தடுத்தல். இஃது: அரசனுணையினுலே வாதியானவன் செய்கின்ற நால்வகைத்தகைவுகளிலொன்று. (மிரு-ச. பக். கரு.)

இடத்தல் — 1. அகலப்பண்ணுதல். 2. சோலித்தல். 3. தகர்தல். 'மழைமதக்களிறு வழங்கலிடைந்த மண்ணினுல்' (கூர்மபு. அந்தகாசுரன். ச0.) 4. தோன்டல். 'தங்கண்முன் னிடக்குங் கையைத் தடுக்குமூன்றடுக்கு' (பெரியபு.கண்ணப்.கஅஉ.) 5.பிளத்தல். 'அடியினுலகப்படுத்தியு மிடந்துமுற்றருளும்' (கந்தபு. திருக்கைலாச. கச.) 6. விரிந்துநிற்றல். 7. பெயர்த்தல். 'எயிற்றுப் படையாலிடந்து' (பு. வெ. 6. 13.) 8. குத்தியெடுத்தல். (திவ். இயற். 1. 2)

இடத்திடல்—சோலித்திடல். (சூ. நிகண். க: உஅ.)

இடத்தை — நகத்தின் இடப்பக்கத்து எருது.

இடதுசன்னம்—, இடதுசெவி—, இடதுதோடை— } இலக்கினத்தின் பதினோராமிடப்பெயர். (சோதிடக்கடல்.)

இடந்தலைப்படுத்தல்—கூட்டுதல். (சிலப்.)

இடந்தலைப்படுதல் — குறித்த இடத்தே கூடுதல். (வாண. கஈச. உரை.)

இடந்தலைப்பாடு—1. இடத்தையடைதல். (ஐங்குறு.) 2. களவுப்புணர்ச்சி நான்கனுள் ஒன்று; அது: குறித்த இடத்திலே சென்று கூடுதல். (வாண. கஈச.)

இடந்து — பெயர்த்து. (புறப்பொருள் வெண்.)

இடநாகம்—அடையிருக்கும் பாம்பு.

இடநாள்—உரோகிணி, மகம், விசாகம், திருவோணம் முதலாக மும்மூன்றுநாள்கள். (விதாந. காலசக்கா. உ)

இடநிலைப்பாலை — ஒருபண். (சிலப்பதி. நாடுகாண். கச-அடி. உரை.)

இடப்படி—ஓர் அடிவைப்பு.

இடப்பு—1. இடக்கப்பட்டது. 2. கான் முதலியவற்றையகலவிடுதல். 3. பிளப்பு. 4. மண்கட்டி. 5. விரிக்கை.

இடப்பெயர்—இடத்தைக்கருதும் பெயர்ச்சொல்.

இடப்பெயர்ப்பகுபதம்—இடம் அடியாக வரும் பெயர்ப்பகுபதம்.

இடப்பொருள்—ஏழாம்வேற்றுமைப் பொருள்.

இடபக்கோடியோன்—, இடபத்துவசன்— } சிவன், இடபக்கொடியையுடையவன்.

இடபம்—1. இரண்டாமிராசி. அது: கார்த்திகையின்முக்காலும் உரோகணியும் மிருகசீரிடத்தின் முன்னரையுங்கொண்டது. (திவா) 2.இராசசின்னத்தொன்று. 3.எருது. (திவா) 4. ஒருமலை. 5. கணேசுரர் எண்மரிலொருவர். (சைவச. பொது. 0உஅ. உரை.) 6. சிவன்கொடி. 7. புல்லாங்குழலிலிருக்குந் துளைகளுள் ஒன்று; அது: சட்சத்துளைக்கு அடுத்தது. (பெரியபு. ஆனய. உச. உரை.) 8. மேற்றிசைப்பாலன்குறி. 9. ரி என்னும் இசை; இஃது: ஏழிசைகளுள் ஒன்று: 10. பொலிபெருது. (பிங்.) 11. நந்தி. (பிங்.) 12. வைகாசி. (பிங்.) [ஔஷஃ.]

இடபவாகனன்—1. எருமைநாக்கிப்பூண்டு. 2. சிவன். [ஔஷஃவாஹந.]

இடபவீதி—சூரியனது மூவகை வீதியினென்றாகிய நடுவீதி. [வீழி - வழி.]

இடபன்-இடபச்சாதியாடவன். [ஐஷ. ஊ:]

இடபாரூடர்-இருபத்தைந்து சிவமூர்த்திகளுள் ஒருவர்; இவர், இடபவாகனங்கொண்ட மூர்த்தி. 'பிரமகபாலத்தர் மறைபேசுமிடபாரூடர்' (திருநெல். அறம்வளர். கக.) [ஐஷ ஊாா-ஙூ.]

இடம்—1. அகலம். 2. அதிகம். 'இடம்படமெய்ஞ்ஞானங்கற்பினும்' (நாலடி.மெய்ம்மை. கஉ: சா.) 3. ஆகாயம். (திவா.) 4. ஆதாரம். 5. இடப்பக்கம்.'தேரிரண்டு மிடம் வலந்திரிந்து' (பாரத. பதினேன். கச.) 6. இடம்பாடு. 7. இராகத்தகுதி நான்கினென்று; அது: ஐந்திணைபற்றிவருவது. 8. இளக்காரம். 9. ஏது. 10. எழாம்வேற்றுமைப்பொருளில்வருமோரிடைச்சொல்.'இல்லிடப்பரத்தை'(நன். ஙoஉ. உரை.) 11. சம்மதி. 'என்னவுமிடங்கொடாமலெதிர்வுற' (பாரத.நிரைமீ.கஉங.) 12. சமயம். 13. செல்வம். 'இடமில்லாக்காலு மிரவொல்லாச்சால்பு' (வள். கoஙச.) 14. தருணம். 'தொன்னில மனையா னில்லாவிடத்தவன் றேவி பாற்போய்' (திருவிளை. அங்கம். எ.) 15. தலம். 'இடமெல்லாங்கொள்ளாத்தகைத்தே' (வள். கoசச.) 16. தன்மை முன்னிலை படர்க்கை யென மூவகைப்படும் பெயர்வினைச்சொற்களின் நிலை; அஃதாவது: பேசுகிறவன் தன்னைச்சுட்டி நான்செய்தேனென்றும், முன்னிலையானை நோக்கி நீ செய்தாயென்றும், படர்க்கையிடத்தானைநோக்கி அவன் செய்தானென்றுஞ் சொல்வது. 17. ஸ்தானம், இருக்குமிடம். 'முனிவர் நாக ரிடந்தொறு மிருப்பமன்னோ' (கந்தபு. மார்க்கண். கஅசா.) 18. தூரம். 19. படுத்தல். (பிங்.) 20. பெருமை. 21. வலி. (பிங்.) 22. விசாலம். 'இடம்பட வீடெடேல்' (ஆத்திசூடி.) 23. வீடு. 'கோவிட மாட முபரிகை மேடை' (திருவிளை. நாகமெய். கஅ.) 24. அளவு. 'உகலிடந்தான்சென்று' (திருக்கோ. 42.) 25. பொழுது. 'அகலிருவிசும்பிற் பகலிடந்தரீஇயர்' (பதிற்றுப். 52. 28.) 26. சந்தருப்பம்.

இடம்பக்கம்—திரவிய முதலிய வுதவி.

இடம்பகம்—செல்வமும் கீர்த்தியும் [ஊ ஞ- கீர்த்தி.]

இடம்படல்—மிகுதல். 'தம்மி - விடம்படு மன்பும் மின்புற் றிருவரு மிருந்தார் மன்னோ' (திருவிளை. வன்னி. ருக.)

இடம்பம்—1. தான் செய்யுந் தருமங்களை யாரு மறிந்து தன்னை மெச்சவேண்டுமென்று வருகிற சித்தவிருத்தி. 2. பெருமை. (சி. சி. உ: ருஎ. சிவாக்.) [ஃoஊ.]

இடம்பரம்-1. இடப்பக்கம். 2. இறுமாப்பு. 3. இனியபார்ஷிதம். 4. கூட்டம். 5. புகழுடைமை. 6. போலித்தோற்றம். 7. வழிவகை. 8. வேடிக்கை. [ஃoஃபா.]

இடம்பன்—ஆடம்பரமுள்ளவன். 'இடம்பனையழைத்து' (பிரபோத. 24. 67.)

இடம்பாசாரம்—இடம்பநடை. (சி. சி. உ: ருஎ. சிவாக்.) [ஃoஃபாஃபா.]

இடம்பாசாரி—இடம்பன்.

இடம்பாடு — 1. செல்வம். 2. பெருமை. 3. விரிவு.

இடம்புதல்—1. விலகுதல். 2. வெறுத்து விடுதல்.

இடம்புரி — 1. இடக்கைக்குன்முறுக்கிய கயிறு. 2. இடப்பக்கப்புரியையுடைய சங்கு. 'இப்பிவாலிடம்புரிவலம்புரி' (தணிகை. நாட்டு. கசசா.) இது: இப்பி ஆயிரஞ்சூழ்ந்த தென்பர். (பிங்கல.) 3. ஒரு பூடு. 4. சங்கு.

இடம்பூணி — நுகத்தின் இடப்பக்கத்து எருது. (நேமி. சொல். 5. உரை.)

இடம்மாரம் — இடம்மானம்.

இடம்மானம்—ஒருவகைப்பறை. 'கோட்டு வெங்கரி யொட்டகை யிடபங்கள் குதிரை, யீட்டு பொன்னணி செய்முது கேற்றிடம் மானம்' (திருநெல். விட்டுணு. உரு.)

இடம்வரையறுத்தல் — தவஞ்செய்வார்க்குரியநியமங்களொட்டினுளொன்று.(மணிமே.)

இடமரம் — 1. ஆயுதப்பிரயோகமின்றிச் செய்யுஞ் சண்டை. 2. உரப்பியும் அங்கசேட்டை செய்துஞ் சத்துருவைப் பயமுறுத்தல். 3. ஊர்க்கலகம். 4. பயந்தோடுமோட்டம். [ஃஊா.]

இடமலைவமைதி — ஓரலங்காரம். அது: இடமலைவாகிய வழுவை நாடகவழக்கில் அங்கிகரித்தல். 'மாகதச்சோதியுடன் மாணிக்கச் சோதி - யிருமருங்குஞ்சேர்ந்தரிவைபாக-னுருவ, மலைக்கு மகில்சுமந் தாரத்து

வான்கோ - டலைந்து வரும்பொன்னி யாறு'. இதனுள்ளே, காவிரி பிறமலைக்கும் பிற நாட்டிற்குமுரிய மரகதமும் மாணிக்கமும் சந்தனமும அலைந்து வருகின்றதென்றமை யால் இடமலைவாய்ப் புகழ்ச்சியிடத்துப் பொருந்துவதால் அலங்காரமாயிற்று. (தண்டி. கஉஉ. உரை.)

இடமலைவு—செய்யுட்குப்பொருந்தாதன வாகிய அறுவழுக்களுளொன்று. அது: மலை, காடு, ஆறு என்னுமிவைகளிலே ஒரிடத்துள்ளது மற்றோரிடத்துள்ளதாகச் சொல்லுதல். 'தென்மலையின் மான்மதமுஞ் சாமரையுந் தேமருசீர்ப்-பொன்மலையின் சந்தனமுமாரமும் - பன்முறையும்- பொன்னிவளநாடன்முன்றிற் பொதுளுமே -மன்னர் இறைகொணரவந்து'. இதிலே இமயத்திலுள்ளன பொதியத்திற்குரியவாகவும், பொதியத்திலுள்ளன இமயத்திற்குரியவாகவும் கூறியது இடமலைவு. (தண்டி. ககஎ. உரை.)

இடமன்—இடப்புறம்.

இடமாம் — இடம்மாரம். [டம்மார மென்பதன் விகாரம்.]

இடமானம்—1. மேன்மையான இடம். 2. விசாலமான வீடு. 3. பறைவகையிலொன்று. (திருநெல். பு. வீட்டுண. 25.)

இடமிடுதல்—பருத்தல்.

இடமிடைஞால்-இடமுடக்கு, நெருக்கடி.

இடமுடங்கு—1. இடங்கழிமை. 2. ஒழுக்கம். 3. நெருக்கம், இடமிடைஞ்சல்.

இடமை—பூமி.

இடயிசும்—மகளிர் சூதகம்.

இடர்—1. ஆபத்து. 2. துன்பம். 'என்றனை யிடருழக் திறைஞ்சி யேத்தலும்' (இராமா. திருவவதா. உ0.) 3. மிடி. (புறப்பொருள் வெண்.)

இடர்ப்படுதல் — 1. வருத்தமுறுதல். 2. கவிந்து பொருள்கொள்ளுதல். 'இடர்ப்பட்டுப் பொருள்கண்டார்'.

இடர்ப்பாடு — இடர்ப்படுதல். 'இடுக்கணிடர்ப்பாடுடைத்து' (வள். சுஉச.)

இடர்ப்பிலிலம்—ஒருவகைக் கண்ணோய்; இஃது: இமையினடியிலும், புருவமத்தியிலுமிருக்கின்ற நரம்புகளை மஞ்சள்நிறமாக்கித் தடிக்கப்பண்ணுவது. (சிவரட். உசுஎ.)

இடராகம் — இராகத்தகுதிநான்கனுளொன்று. அத்தகுதிப்பட்டராகங்கள்: குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தலாகிய ஐந்நிலங்களுக்குரிய குறிஞ்சி, பஞ்சரம், சாதாரி, மருதம், செவ்வழி என்னுமிராகங்கள்.

இடரேட்டு—நாட்டிற்குவரக்கூடிய என்வகைத்தீமை. அவை, 'விட்டில் கிளிநால்வாய் வேற்றரசு தன்னரசு, நட்டம் பெரும்பெயல்காற் றெட்டு' என்பனவாம். (பு. வெ. 9. 17. உரை.)

இடல்—1. எறிதல். 'வித்துமிடல்வேண்டுங்கொல்லோ' (வள். அடு.) 2. கொடுத்தல். 'இட்டார்பெரியோ ரிடாதார்' (நல்வழி. உ.)

இடலம்—1. அகலம். 2. விசாலம்.

இடலித்தல் } 1. விசாலித்தல். 2. அகல
இடலிப்பு } மாதல்.

இடலை—1. துக்கம். 2. துன்பம். 3. மரவகை.

இடவகம்–1. இலவங்கம். 2. பனம்பிசின். 3. மாம்பிசின்.

இடவகை—வீடு. (பிங்)

இடவம்—பூமி.

இடவயின்—இடத்து. (தொல். பொ. 76)

இடவழு—தன்மை முன்னிலை படர்க்கையென்னும் மூவிடத்தைப் பிறழக்கூறல். ஐந்திணைக்குரியவற்றுள் ஒன்றற்குரியவற்றை மற்றொன்றற்குக் கூறுவதுமாம்.

இடவன் — 1. இடப்பக்கத்தெருது. 2. மண்ணாங்கட்டி. 'ஏனத்துருவாகியவீசனெந்தை யிடவனெழவாங்கி யெடுத்தமலை' (நாலாயிர. அட்டுக்குவி. ரு.)

இடவாகுபெயர்—இடத்தின்பெயர் அவ்விடத்திலிருக்கும் பொருளுக்காய் வருவது. 'அகனமர்ந்து செய்யா ளுறையும்'. இதிலே அகம் என்னு முள்ளிடத்தைக் கருதும் பெயர் அங்கிருக்கும் மனத்துக்காதலால் இடவாகுபெயர். (வள். அச.)

இடவிய—1. அகலமுள்ள 'இடவியவறை நின்று' (தணிகை. வீரா. சுரு.) 2. விரைவுள்ள.'இடவிய கதியின்வாசி' (திருவாலவா. 28. 59.)

இடவை—வழி. (பிங்கல. சஎக.)

இடவோட்டு-1. இடப்பக்கமாகச்செல்லு தல். 2. இராகுகேதுவின் நடை.

இடற்சம்—1. குக்கிற்பிசின். 2. குக்கில். (மூ. அ)

இடறல்—1. தடைபண்ணல். 2. நிந்தித் தல்.

இடறி—யானை.

இடறு—1. ஆபத்து. 2. இடறென்னேவ லும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத் தொகையும். 'இடறேட்ட வினநெடிய வரை யுருட்டி' (இராமா. குலமுறை. அ.) 3. தடை.

இடறுகட்டை - தடையாகநிற்கும்பொருள்.

இடறுதல்—1. உழக்குதல். 'தேனிடறு வாசமிகுதெய்வமலர்' (பாரத. மணிமான் வதை. ௩௦.) 2. ஊறுபடுத்தல். 'ஊனிடறு வாளிகள்' (பாரத. மணிமான். ௩௦.) 3. கடத்தல், மீறுதல். 'எண்டரு நெறிமுறை யிடறு கீசகன்' (பாரத. கீசகன். ௩௨.) 4. காலினாலெற்றுதல். 'தாடத்திற்பரிக்காரர் தலையிடறி' (பெரியபு. திருநாவுக்கரசு. ௧௧௦.) 5. தட்டுதல். 6. தடுக்குதல். 'தார்-சுற்றிடுந் தாண்மிசையிடறுஞ்சூல்வளை' (கந்தபு.நாட்டு. ௪௧.) 7. தடுத்தல். 'கெடுவீர்கா ளிடறேன்மி னே' (தேவா. 717. 1.) 8. துன்பப்படு தல். 'ஈமினெமக்கொருதுற்றென் றிடறுவர்' (திவ். திருவாய். 4. 1. 7.)

இடன்—1. அகலம். 'இடனுடைவரைப் பின்' (பொருந. ௬௫.) 2. இடப்பக்கம். 'என்கணுந் தோளும் மார்பு மிட னுறத் துடிக் கை மாறு' (பாரதம். பதின்மூன்றும்போர். ௧௬௪.) 3. இடம். (இறுதிப்போலியாயிற்று.) 4. செல்வம். 'இடனில்பருவத்தும்' (வள். ௨௧௮.) 5. தக்கசமயம். 'இடனறிந்து துன்னியார்' (வள். ௪௧௪.) 6. இடப்பக்கத் திருப்பவன். (பரிபா. 3. 83.)

இடனறிந்தொழுகல்-1.வணிகரெண்குணத் தொன்று. [அதுசமயத்துக்குத்தக்கபடிசெய் தல்.] 2. இருக்குமிடம்நோக்கி அதற்கிசைய நடக்கை.

இடா—1. இடார். (சிலப். 10. 111. உரை). 2. ஓரளவு. (தொல். எழுத். 170. உரை.)

இடாஅ—குத்தி. 'எயிறுபடையாக வெயிற் கதவிடாஅ' (புறநா. ௩.)

இடாகினி—1. சுடுகாட்டிற் பிணங்களைத் தின்னும் பேய். 'இடுபிணந்தின்னு மிடா கினிப்பேய்' (சிலப். கனாத். ௨௧.) 2. சூர்மகள். (சூ. நிகண். ௧: ௩௧.) [டாகினி.]

இடாது—புள்ளி. (அக. நி.)

இடாசுதல் — 1. அகலநிற்றல். 2. அடித் தல். 3. அவமதித்தல். 4. தள்ளல். 5. நெருக் கல். 6. மேற்படல்.

இடாடிமம்—தாதுமாதுளை.

இடாப்பித்தல்—காலை யகலப்பண்ணிநிற் றல்.

இடாப்பு-1. அட்டவணை. 2. பார்த்தெழு தும் பிரதி. 3. பெயர்விலாசம். [இஃது இந் துஸ்தான்.]

இடாபிரமம்—தாதுமாதுளை.

இடாம்பிகன் — இடம்பன். 'இடாம்பிக ரோடும் புக்குநீ' (பிரபோத. 24. 67.)

இடாமிடம்—எறுமாறுனபேச்சு. [ஊசா திஷம்: ஊசா - பேச்சு. திஷம்-எதிரிடை, ஏமாற்று.]

இடாமிடாந்து— } 1. எதிரிடை. 2. எறு
இடாமுடாந்து— } மாறுகப்பேசுந்தன் மை. 3. ஒழுங்கின்மை.

இடாயம் — இசையின்பிரிவாகிய ஐந்து துறைகளுள் ஒன்று. 'இசையின்பிரிவாயிருக் கின்ற ஆயத்தம், எடுப்பு, உக்கிரம், சஞ்சா ரம், இடாயம் என்னு மைந்துதுறைகளிலு முறையாகப் பாடினர்' (பெரியபு- ஆனாய. ௨௬. உரை.)

இடார்—1. இறைகூடை. (சூ. நிகண். ௭: ௫௮.) 2. எலிமுதலியனபிடிக்கும் பொறி.

இடாவேணி — அளவிடப்படாத எல்லை. (பதிற்றுப். 24. 14.)

இடி — 1. இடியென்னேவலும் தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. இடி யேறு. 'பல்லியங்களு மிடியொலி காட்டுவ' (கந்தபு. தெய்வயா. ௬௭.) 3. இந்திரன் கொடி. 4. உறுதிச்சொல், உறுக்கிச் சொல் லுஞ் சொல். 'இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர்' (வள். ௬௦௭.) 5. ஒலி. 'இடியின் னளவெழுகார்' (திருவிளை. யானைபெ. ௧௭.) 6. சிற்றுண்டி. (பிங்.) 7. சுண்ணம். (பிங்.)

8. தாக்குகை. 9. தினைமுதலியவற்றின் மா. 'செந்தினையிடியுந் தேனும்' (கந்தபு. வள்ளி. உ0அ.) 10. அடிப்பு. 11. மயிர்ச்சாந்து.

இடிக்கால்-இடிபோல முழங்கல். 'விசைவி-லிடிக்கலுற்றதுநியவாய்' (கந்தபு. சூரன் றண்ட. சு.)

இடிக்கொடி—இடியேறுதீட்டிய கொடி. அஃது: இந்திரனதுகொடி. 'தனிவிசும்பரங்கி ளூடு - மிடிக்கொடி வீழவெய்தான்' (இரகு. யாக. அஅ.)

இடிக்கொடியன்—இந்திரன்.

இடிக்கோள்—காட்டுக்கொள்.

இடிகம்—பெருமருந்துக்கொடி. (மலை.)

இடிகரை—அழிகரை. அஃது: ஆற்றோரத் தில் வெள்ளத்தாற் கீழறுக்கப்பட்டுநின்ற கரை. 'ஆக்கையெனு மிடிகரையை மெய் யென்ற பாவிகான்' (தாயுமான. சின்மயா னந்த. உ.)

இடிகை—பூமி. [ஐலிகா.]

இடிசாமம்—1. கெடுகாலம். 2. நிந்தை.

இடிஞ்சில்-விளக்குத்தகழி. 'இரியு மிடிஞ் சிலு நெய்யுஞ் சார்வாக எரியுஞ்சுடர்' (பழ மொழி. அ௯.)

இடித்தடு — பிட்டு. 'நரைத்தலைமுதியோ ளிடித்தடு கூவிகொண்டு' (கல்லா. 46.)

இடித்தம்-மரத்தாற் செய்யப்பட்ட யானை. [வித்ரு.]

இடித்தல்—1. இடியேறுகாறுதல். 'கோ ளரிமுகத்தன் றன்மே - லிடித்தெனக்கையா லெற்ற' (கந்தபு. சிங்கமுகா. கஎ0.) 2. ஒலித் தல். 'இடித்துமின்னிருண்டுமேகமெழுந்த போது' (சி. சி. பர. உலோகாயதமதமறு தலை. உ.) 3. கண்டித்துப் புத்திசொல்லல். 'சட்டன் மிகுதிக்கண்-மேற்சென் றிடித்தற் பொருட்டு' (வள். எஅச.) 4. குத்துண்டாற் போலப்படும் வருத்தத்தைச்செய்தல். 'தலை யிடித்தல்' 5. தகர்த்தல். 'தபனியத்தவைக்க ளஞ்சி-யிடித்தனனொருதானிற்கும்'(கந்தபு. நகரழி. சு.) 6. அடித்தல். 'நெஞ்சிடித்தல்' 7. பலாற்காரமாகமுட்டுதல். 'பெருவலியாக் கன்றன்னை-யிடித்து' (இராமா. கும்பகரு ணன்வதை. சஅசு.) 8. பொடிபடச்செய்தல். 'மூலமலநூரத்தாவிடிப்பன்' (சி. சி. அ: ௬0.) 9. பொத்தினைகையினால் அல்லது கூரில்லாத கருவியினாலே தாக்குதல். 10. மோதுதல். 11. கோபித்தல். 'கூற்றின்னிடிக்குங்கொலை வேலவன்' (சீவக. 432.) 12. நசுக்குதல். 13. தாக்குதல். 14. கொல்லுதல். 'இடிக் குங்கொ லிவனையென்பார்' (சீவக. 1108.) 15. தோண்டுதல். 'கணிச்சிகளிற் கயம்பட நன்கிடித்து' (சீவக. 592.) 16. கெடுத்தல். 'விருப்பிடித்து' (இரகு. தேனுவ. 71.)

இடித்துக்கூறல்— உறுதிச்சொல்லுரைத் தல். (வாண. சுஉ. உரை.)

இடித்துரை—உறுதிச்சொல்.

இடித்துவரைநிறுத்தல்-கண்டித்துப் புத்தி சொல்லி ஒரெல்லையிலே நிறுத்தல். 'இடித்து வரைநிறுத்தலுமவரதாகும்' (தொல். பொரு. கருகு.) [வரை-எல்லை]

இடிதல்—1. உடைதல். 2. தகர்தல். 3. சரிதல். 'உலகமோர்மூன்று மிடிந்துபாழாகு மூழியிறுதியில்' (கூர்மபு. பிரமவிஷ்ணுக்.உ.) 4. நொறுங்கல். 'இடித்தனமிசையினெல்லை' (கந்தபு. நகரழி. அ.) 5. வருந்துதல். 'என் னேயுங்கொண்டதனை யெண்ணியிடிவேனே' (அருட்பா. V. ஆற்று. 5.) 6. முறிதல். (பிங்.)

இடிப்பு — 1. இடித்தல். 2. ஒலித்தல். 'இரங்கினசேவலங்கொடியிடிப்பினுல்' (கந்த பு. திருப்பரங்கு. உ0.)

இடிபடல்–1. இடியுண்ணல். 2. நொறுங்கு தல். 'எண்டகு பொதியின் முற்று மிடிபட' (கந்தபு. நகரழி. ௬உ.) 3. தாக்கப்படுதல். 4. வெடிபடுதல். 'இடிபடமுழங்கி' (சீவக. 1084.) 5. துன்பப்படுதல்.

இடிபு-இடிதல். (தொல். எழுத். தொகை. உ. இளம்.)

இடிம்பன் — வீமனுற்கொல்லப்பட்ட ஓ ரிராக்கதன். (பாரத. வேத்திரகீய. கஈ.) [ஹிம்ஹ; ஹிடிம்ப.]

இடிம்பிகை — அதிமோகஸ்திரி. [ஹிம்பிகா]

இடிம்பு—அவமதிப்பு.

இடிம்பை—இடிம்பன்சகோதரியும் வீமன் மனைவியுமாகிய ஓரரக்கி. (பாரத. வேத்திர கீ. சு.)

இடிமரம்—உலக்கை.

இடிமருந்து – பொடியாக்கப்பட்ட மருந்து.

இடியப்பம்—ஒரு சிற்றுண்டி.

இடியல்—பிட்டு. 'இடியலினுணவு' (குமர. பிர. காசிக். 4.)

இடியாப்பம்—இடியப்பம்.

இடியிடல் — முழங்குதல். 'கோட்டினிற் குத்திக் கோத்திட் - டிடியிட் டதிர்கா ரெதி ரேற்றெழுந் தாங்குநோக்கி' (திருவிளை. மாயப். கஎ.)

இடியூ—இடித்து. (ஐங்குறு.)

இடியேறு—பேரிடி. (திவா.)

இடிவு—அழிவு, ஒடிவு, இடிதல்.

இடு—1. இடுவென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. ஒரு பகுதிப்பொருள் விகுதி. 'உரைத்திடு' (நன். கசூ0. உரை.)

இடுக்கண்-1. துன்பம். 'இடுக்கண்வருங்கா னகுக' (வள். சூஉக.) 2. வறுமை. 'இடுக் கண்வந்துயிர்க்கு மூற்றமெய்தினும் வாய்மை காத்து - வடுக்களைந் தொழுகு நாலா மரபி னுன்' (திருவிளை. இந்திரன்முடி. டுஅ.) 3. மலர்ந்தநோக்கமின்றி மையனோக்கம்படவரு மிரக்கம். (தொல். பொருள். 260. உரை.)

இடுக்கணழியாமை — இடுக்கண்வந்துழி அதற்கு மனங்கலங்காமை. (வள். அதி-சூக.)

இடுக்கணி—ஒடுங்கிய இடம்.

இடுக்கப்படல்—1. ஒடுக்கப்படல். 2. துன் பப்படல்.

இடுக்கப்படுத்தல்–1. துன்பப்படுத்தல். 2. நெருக்கல்.

இடுக்கம் — 1. ஒடுக்கம். 2. துன்பம். 'சொர்க்கத்தரிடுக்கங்கெட' (திருப்பு. 419.) 3. நெருக்கம். 4. வறுமை.

இடுக்கல்—1. இடுக்குதல். 2. சந்து.

இடுக்கி—1. இடுக்குவது. 2. உலோபி. 3. குறடு. 4. எலிமுதலியவற்றை அகப்படுத்தும் பொறி.

இடுக்கிடை—நெருக்கம்.

இடுக்கு—1. இடுக்கென்னேவலும், தெரி நிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. இடைஞ்சல், துன்பம். 'இடுக்கிவணியம்புவ தில்லை' (கம்பரா. யுத். மந்தி. 27.) 3. உலுத்தகுணம். 'இடுக்குடையுள்ளத்தான் பெற்ற பெருஞ்செல்வம்' (நாலடி. ஈயாமை. ச.) 4. ஒடுக்கப்பிடிக்குங் கருவி. 'இடுக்குக் கொடுத்து' (வழக்.) 5. ஒடுங்கியவிடம். 'கவட்டுத்தொன் மரத்திடுக்கிற் காலுழைத் துக்கொண்டே' (தனிப்பாடல்.) 6. கொடுக்கு. 7. சந்து. 8. முட்டு. 'இடுக்கொன்றுமின்றி யெஞ்சாமை' (திருநாவு. தேவார. பசுபதி. திருவிரு. டு.) 9. முடுக்கு. 10. மூலை.

இடுக்குத்தடி—கள்ளுமுதலியவூறுதற்குப் பக்குவமாமாறு பனை முதலியவற்றின் பாளை யை இடையில்விட்டு நெருக்கிப்பிடிக்கப் பிர யோகிக்கும் இரட்டைத்தடி.

இடுக்குத்திருத்துழாய்– திருமால்கோயிலில் மரியாதையாகத் திருவடிநிலையினிடையில் வைத்துக்கொடுக்கும் துளசி.

இடுக்குதல்—1. அணைத்தல். 'இடுக்குவார் கைப்பிள்ளை' (தாயு, பன்மா. சு.) 2. நெருக் கம். 3. கவ்வுதல்.

இடுக்குப்பனை — கள்ளூம் பதநீரு மூறும் பனை.

இடுக்குப்பிள்ளை—கைக்குழந்தை.

இடுக்குமரம்—1. எண்ணெயூற்றுமரம். 2. கடம்புமரம்.

இடுக்குமுடுக்கு — 1. சங்கடம். 2. மூலை முடுக்கு.

இடுகாடு — 1. சுடுகாடு. 'என்புபூண்டிடு காட்டிற்பொடியாடுமுருத்திரனுக்கு' (திரு விளை. விருத்த. ௩க.) 2. பிணம்புதைக்குங் காடு. 'இடுகாட்டுண் மாத ரெலும்பிற் புரண் மால்' (நால்வர்நான். கூ.)

இடுகால்—பீர்க்கு. (மலை.)

இடுகிடை—சிற்றிடை. 'இளங்குயிலன்னார் தங்களிடுகிடை' (சேதுபு. திருநாட். அசு.)

இடுகு—1. இடுகென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 'இடு கிடை' 2. ஒடுக்கம். 'இடுகு கண்ணின ரிட ருறு மூப்பினர்' (இராமா. சித்திரகூட. ௩0.)

இடுகுதல்—1. ஒடுங்குதல். 2. சுருங்குதல். 'இளங்குயிலன்னார்தங்களிடுகிடை' (சேதுபு. திருநாட்டு. அசு.) 3. நோவு.

இடுகுறி — 1. இட்டபுண்டரம். 'இடுகுறி கோத்திரமுதன்மற் றியாவுந்தோன்ற' (திரு வாலவா. 31. 3.) 2. இடுகுறிப்பெயர். (நன்.)

இடுகுறிச்சிறப்புப்பெயர்—ஒருகாரணமும் பற்றாது வழங்குவதாய் ஒருவருக்கப்பொரு ளுக்கே சிறப்பாய் நிற்கும் பெயர். 'பலா, மா என்பனவும் அப்படியே யிடுகுறிச்சிறப்புப் பெயர்களாம்' (நன். சூஉ. உரை.)

இடுகுறிப்பெயர்—காரணம்பற்றாது வழங்கி வரும் பெயர். (நன். 62.)

இடுகுறிப்பொதுப்பெயர்— பலவினங்களுக்கும் பொதுவாகவரும் இடுகுறிப்பெயர். 'மாம் என்பது ஒருகாரணமும்பற்றாது வழங்கும்பெயராய்ப் பனை, பலா, மா முதலிய பலவருக்கப்பொருளுக்கும் பொதுவாகலால் இடுகுறிப்பொதுப்பெயர்' (நன். சுஉ. உரை.)

இடுகுறிமரபு — இடுகுறியாகத் தொன்று தொட்டுவரும் பெயர். (நன். 275. உரை.)

இடுகுறியாக்கம் — இடுகுறியாக ஒருவன் இட்ட அல்லது ஆக்கிக்கொண்ட பெயர். (நன். 275. உரை.)

இடுகை—1. இடுதல். 2. கொடை. (பிங்.)

இடுங்கலம்—கொள்கலம். (பிங்.)

இடுங்கற்குன்றம்—செய்குன்று. (மணிமே. 19. 102.)

இடுங்குதல் — உள்ளொடுங்குதல். 'கண் ணிடுங்கி' (திவ். பெரியதி. 1. 3. 4.)

இடுசிவப்பு—செயற்கைச்சிவப்பு. (ஈடு. 7. 7. 9.)

இடுதங்கம்—1. கல்நகையினுள்ளே பதிக்கிற தங்கம். 2. புடமிட்டதங்கம்.

இடுதண்டம் — 1. தண்டமாக இறுக்கும் பணம். 2. பணமிறுக்கும்படி செய்து தண்டித்தல்.

இடுதல் — 1. அணிதல். 'புங்கவனிடுவினை புடைத்துமீளவந்து' (திருவிளை. வினய.உஎ.) 2. இருத்திவைத்தல். 'இடுதல் கொண்டிடு சிறையினை' (கந்தபு. சூரனமை. கசஉ.) 3. ஈதல். 'இடுங்கடுக' (நல்வழி. ௩.) 4. உவமித்தல். (சிந்தா. இலக்கண. ௩உஉ.) 5. எற்றிச் சொல்லுதல், சாரச்செய்தல். 'படாததொரு வார்த்தை-யிட்டனர்' (சிலப். கனாத்திற. சஎ-சஅ.) 6. எறிதல். 'சிலைநிலத்திலிட்டான்' (கந்தபு. வன். ௩௬.) 7. சொரிதல். (திவா.) 8. நியமித்தல், குறியிடுதல். 'இட்டதொருபேரழைக்கவென்னென்றுக்கு' (சிவஞானபோ. கு. உ: வெண்பா. க.) 9. புகுத்தல். 'மடியகத்திட்டான்மகவை' (சிலப். கூ: உஉ.) 10. வைத்தல். 'கந்தமும் பிறவு மாக விலைபோலி கலத்தி லிட்டு' (கந்தபு. வன். உ0அ.) 11. பரிமாறுதல். (வழக்.) 12. குத்துதல். 'இடுமேருப்பியானை' (கலித். 24. 10.) 13. சித்திரமெழுதுதல். (சீவக. 2383.) 14. உண்டாக்குதல். 'கள்ளி யிட்ட வகில்' (இரகு. நகர. 52.) 15. முட்டையிடுதல். 16. கைவிடுதல். 'இனையவளாகிட்டு' (சீவக. 1226.) 17. புதைத்தல். 'இடுகாடு' 18. தொடுத்துவிடுதல். 'கணையிட்டு' (திருப்புகழ். 418.) 19. செய்தல். 'அரக்கனுங் காள மேக மிடுகின்ற வேள்வி' (கம்பரா. நிகும். 99.) 20. தொடங்குதல். (திவ். திருவாய். 2. 10. பன்னீ. ப்ர.) 21. வெட்டுதல். (சீவக. 1680. உரை.) 22. ஒரு துணைவினை.

இடுநீ—அம்புக்கூடு.

இடுநீரை—திரைச்சீலை. (திவா.)

இடுதெண்டம்—1. இடுதண்டம். 2. வாராவந்தி, அடாவரி.

இடுதேளிடுதல் — தேளல்லாததொன்றை மறையக்கொண்டுவந்து ஒருவர்மேலிட்டுத் தேளென நினைக்குமாறுசெய்து அவரைக் கலங்கப் பண்ணுதல். 'ஊரா ரிடுதேளிட் டென்றன்மேல்' (சிலப். கனாத்திற. சஅ.)

இடுப்பு—இடை, ஒக்கலை, அரை.

இடுப்புவலி—ஒருநோய், பிரசவவேதனை.

இடுபலம்—பேய்ப்புடோல்.

இடுபிணம்—குழியிற் புதைக்கும் பிணம். 'இடுபிணந் தின்னு மிடாகினிப்பேய்' (சிலப். கனாத்திற. உக.)

இடுபு—1. இட்டு. 'புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த' (புறநா. ௩௩.) 2. இடுதல்.

இடுபொருள்—பிறர் வரவிட்ட பொருள். (மணிமேக.)

இடும்பர் — 1. செருக்கர். 2. துயர்செய்வோர். 'இடும்ப ரொருவழி யிணையிலர் கசடர்கள்' (திருப்பு. ௩கஅ.)

இடும்பன்—1. குமரக்கடவுள் கணத்தலைவன். 2. செருக்குள்ளவன். 3. இடிம்பன். (அக. நி.)

இடும்பி — 1. செருக்குடையாள். 2. இடிம்பை. 'இடும்பிகொழுநன்' (பிங்.)

இடும்பு—1. அகந்தை. 2. அவமதிப்பு. 3. கொடுமை. 4. சேட்டை. 5. உபத்திரவம்.

இடும்பை—1. அச்சம். (திவா.) 2. தரித்திரம். (பொருநரா. சுஎ.) 3. துன்பம். 'இடும்பைக்கிடும்பைபடுப்பர்' (வள். சுஉ௩.) 4. நோய். 'காப்பிடும்பையில்லாரை' (வள். கoஙு.) [துன்பத்தின்பேர் துன்பத்தைத் தரும் நோய்க்கு வந்தமையால் ஆகுபெயர்.]

5.பொல்லாங்கு.6.விகாரமெட்டிஞென்றாகிய அகங்காரம். 7. வைக்கும் பை. 'இடும்பைக் கிடும்பை யியலுடம்பு' (நல்வழி. ௩.) [இடும்; பை.] 8. எலி.

இடுமருந்து — ஒருவரை ஒருவர் வசியப் படுத்தும்பொருட்டு அன்ன முதலியவற்றி லாவது, நீர் முதலியவற்றிலாவது தாம்பூலம் முதலியவற்றிலாவது சேர்த்துக் கொடுக்கப் படும் வசியமருந்து. இது பற்பல செந்துக்க ளின் கபாலபஸ்மம், அற்பவீரியவிஷம், மல மூத்திர ஔஷதம், பச்சிலைமூலி எனப் பல வகை. (சீவரட். ௩௨௫.)

இடுமுடுக்கு—நெருக்கமான இடம்.

இடுமுள்—வேலியாக இடும் முள். (சீவக. 774. உரை.)

இடுமோலி – ஒரு மரம். [இது மலையாளக் கடற்கரையில் வளர்வது.]

இடுலி—பெண்ணுமை. [வ௱வி.]

இடுவந்தி—1. அடாவரி. 2. அநீதி. 'எவ் வந்தியோவறியே னிவள் சொன்ன இடுவந்தி யே' (தனிப்பா. ௩௧௧.) 3. குற்றமில்லாதவன் மேற் குற்றத்தையேற்றுதல். 'பொற்கொல்ல னெஞ்ச மிடுவந்தி கூறுதலைப் புரிந்துநோக்க' (சிலப். கொலைக்கள. ௧௨௦. உரை.)

இடுவல்—இடுக்கு.

இடுவேற்று—இடைத்தட்டு.

இடை—1. அளவு. (தைல. பாயிர. ௩௧. உரை.) 2. இக்குவாகுவின் மகளாகிய புதன் மனைவி. 3. இடப்பக்கம். 'நுண்ணூலிடை யாளை யெங்கள் பெம்மா னிடையாளை' (அபி ராமி. அ௪.) 4. இடம். 'ஆயிடைநின்ற கிரிடி யை' (பாரத. பதின்மூ. ௨௧௭.) 5. இடைச் சொல். 'பெயர்வினையிடையுரிநான்கும்பகாப் பதம்' (நன். பதவி. ௪.) 6. இடையின எழுத்து. 'அல்வழியுயிரிடைவரின்' (நன். மெய்யீற்று. ௧௭.) 7. இடையிடு. 'இடையில்வண்புகழ்' (தொல். பொரு. எ௬.) 8. இடையென்னேவலும், தெரிநிலைவினைப் பகுதியும், வினைத்தொகையும். 9. ஒருருபு. அது: பெயர்ச்சொல்லைச்சார்ந்து ஏழாம் வேற்றுமைஇடப்பொருளில்வருவது. 'அதன் வாயிடைவந்தனன்' (பாரத. பதின்மூ. ௨௭.) 10. சமயம், பொழுது. 'இடையறிந்தெம் மைச்சேர்மின்' (திருவிளை. வளையல். ௭.) 11. சரசுவதி. 12. தேகத்தில் நாபிக்குக் கீழே கொஞ்சதூரத்திலே யுண்டாயிருக்கிற கந்தத்திலிருந்து இடப்புறமாகப் புறப்பட்டுப் பிரமரந்திரபரியந்தம் வியாபித்து வெளியில் இடப்பக்கத்து நாசித்துவாரத்தை யாசிர யித்திருப்பதொரு நாடி. (சி-வி. யோக. ௧.) சுழுமுனையிலே தோன்றிப் பிங்கலையோடு கத் திரிகைக்கால்போலப் பின்னி வீணுதண்டுக்கு வில்லிஞணிட்டாற்போலக் கபாலத்தைச் சுற்றிக்குதிரைமுகமாக நாசியளவும் நிற்பது. (த-வி.) 13. நடு. 'பாசிலையிடையிற் பூத்த பைந்துணர்' (நைடத. அன்னத்தைக்கண். ௩௪.) 14. நடுநேரம். 15. நிறை. 'இடைதான் குறைந்தது மச்சமுங் காட்டுவ தில்லையென் றால்' (ஒரு துறைக்கோ. ௧அ௫.) 16. நீட்ட லளவையிலொன்று. 17. பக்கம். 18. பசு. 19. பூமி. 'இடையிற்படுகிற்கிலம் யாம்' (கம்ப ரா. அதிகாய. 73.) 20. போசனம். 21. பௌ ரணை. 22. மருங்குல், சரீரத்தின் நடு. 'துடி யிடை யறன்மென் கூந்த லொண்டொடி' (நைடத. சுயம்வர. ௧௧௫.) 23. யானை. 24. வழி. 'அழலவிராரிடை' (கலித்தொ. ௨.) 25. வாக்கு. 26. வானம், சுவர்க்கம். 27. விரைவு, கதி. 28. மத்தியதரத்தார். 'இடையெலா மின்னுமையஞ்சும்' (நாலடி. 297.) 29. இடைச்சாதி. 30. தொடர்பு. 'உங்களோ டெங்களிடையில்லையே' (திவ். திருவாய். 8. 2. 7.) 31. காரணம். 'இடைதெரிவரிபது' (சூளா. கலியாண. 144.) 32. நூறுபலம். 33. துன்பம். (திருக்கோ. 368. உரை.) 34. தடை. 'இடைகொண்டியாமிரப்ப' (கலித். 3. 7.) [2, 11, 12, 18, 19, 20, 25, 26, 27. இடா.]

இடைக்கச்சு— } இடைக்கட்டு.
இடைக்கச்சை– }

இடைக்கட்டு—1. அரைக்கச்சு. "யோக பட்டத்திடைக்கட்டினர்" (திருவிளை. இரச வா. ௧௧.) 2. நிறுத்தன அறியுமிடத்து நிறுக்கப்படும்பொருளுக்கு ஆதாரமாயிருந்த பாத்திரத்தின் நிறையைக் கழித்துப்பார்த் தல். 3. ஓராபரணம். 4. இடைகழி. 5. வீட் டின் நடுக்கட்டு.

இடைக்கணம் — இடையினவெழுத்து. அவை: ய, ர, ல, வ, ழ, ள என்னும் ஆறுமாம். (நன். ௭௦. உரை.)

இடைக்கருவி — தோற்கருவிகளுள்ளே மத்தளத்திற்கும் உடுக்கைக்குமிடையே காங் கொள்ளப்படுங் கருவி. அதனைச் சல்லியென்பர். (சிலப். அரங்கேற்று. உஎ. உரை.)

இடைக்கலம்—மட்பாண்டம். 'இல்லுள் வில்லேற்றி இடைக்கலத் தெய்துவிடல்' (பழ. 24)

இடைக்காடன்-1. ஒரு புலவன். 'இடைக் காடனுடன் போய்' (திருவிளை. இடைக் காடன்.1.) 2. பதினெட்டுச்சித்தரிலொருவர்.

இடைக்காற்பீலி-பரதவர்மகளிர் அணியும் கால்விரலணிவகை.

இடைக்கிடப்பு-இடைப்பிறவரல். (சீவக. 2697. உரை.)

இடைக்கிடை-1. ஊடேயூடே. 'இலங்கை யூர்கடக்குந்தானை-கார்க்கருங்கடலை மற்றோ ரிடைக்கிடை காலன்றானே-சேர்ப்பதுபோன் றது' (இராமா. படைக்காட்சி.கு.) 2. ஒன்றை விட்டொன்று. 3. நிறைக்குறை.

இடைக்குலநாதன்-விட்டுணு. [கிருஷ்ணாவதாரத்தில் இடையர்குலத்திற் கதிபனாயிருந் தமைபற்றி வந்த பெயர்.]

இடைக்குறை-1. ஆற்றிடைக்குறை. அஃதாவது ஆற்றுக்குள்ளே நீரில்லாதிருக்கு நிலம். 2. பதத்தின் இடைநின்ற எழுத்துக் குறைந்துவருஞ் செய்யுள்விகாரம். 'வேதின வெரிநினோதிமுதுபோத்து' என்பதிற்போல. இங்கே ஒந்தி எனற்பாலது ஒதி என இடை குறைந்துநின்றது. (நன். கருகூ. உரை.)

இடைக்கொள்ளை-1. அவமிருத்து. இஃது இடைக்காலத்திற் கொள்ளைநோயால் வரு மழிவு. 2. ஒருபொருளைக்குறித்து இருவர் எனக்கு எனக்கு என வாதாட, அவர்க்கில் லாது இடையிலேவருமொருவன் கொள்ளை கொண் டபகரித்தல்.

இடைகலை—1. இடமூக்கால்வருஞ் சுவாசம், சந்திரகலை. 'இடைகலையென்பதுவே இடப்பக்கநாசியில் வருஞ் சுவாசம். அதுவே சந்திரகலை எனப்படும்' (சாநூல். கூ. உரை.) 2. இடமூக்கினிற்கு நரம்பு.

இடைகழி-இடைக்கட்டு. (திவ். இயற். 1. 87.)

இடைச்சங்கம்—மதுரையில் இரண்டாவதாயிருந்த தமிழ்ச்சங்கம். (இறையனாரகப் பொருள். நக்கீருரை.)

இடைச்சநி—பூரநாள். 'விரையிடைச்சநி துர்க்கையுநாவிதன் மிக்கபூரம்' (வீ - உள்ள முடை. கஅ.)

இடைச்சரி—தோள்வளை. (ஈடு. 2. 5. 6.)

இடைச்சன்-முதற் பேற்றுக்கும் இறுதிப் பேற்றுக்குமிடையே பிறந்த புத்திரன்.

இடைச்சாதி — இடையர்சாதி.

இடைச்சி — 1. இடையையுடையவள். 'ஓசைபெற்றதுடிக்கொளிடைச்சிகள்' (திருப் பு. உருச.) 2. முல்லைநிலப்பெண். 'இடைய ரிடைச்சியர்' (தொன்னூல்.கஎஅ.) 3.இடைச் சாதிப்பெண்.

இடைச்சியர் — கலம்பகவுறுப்பினு ளொன்று.

இடைச்சீர்-வெண்சீர். 'மூவசையொன்றி நேரிறுவதிடைச்சீர்' (வீரசோ. யாப். பு. க.)

இடைச்சீலை—திரைச்சீலை.

இடைச்சுரிகை—உடைவாள்.

இடைச்சுவர் — இடையூறு. 'இதுக் கிடைச்சுவருண்டாவதே' (திவ். திருமாலை. 19. வ்யா. பக். 69.)

இடைச்செருகல்-ஒருவர்செய்யுளிற் பிறர் வாக்கைக் கலக்கை.

இடைச்செறி—1. குறங்குசெறியென்னு மணி. (சிந்தா.) 2. துணைமோதிரம். (ஈடு. 6. 1. 1.)

இடைச்சேரி—இடையரூர்.

இடைச்சொல் — பெயர்வினைகளோடே சார்ந்து வழங்குஞ்சொல். அது: பெயரும் வினையும் உணர்த்தும்பொருளைச் சார்ந்து நின்று அவற்றையே வெளிப்படுத்துதலப்ப தாய்த் தனக்கென வேறுபொருளுணர்த்தும் இயல்பில்லாததாய் வருஞ் சொல். அச் சொற்கள் (க) இருமொழி தம்மிற் புணர்த லியன்ற நிலைமைக்கண் அவற்றின் பொரு ணிலைக்கு உதவிசெய்துவருவனவும், (உ) முதனிலைநின்று காரியத்தினைத் தோற்று விக்குமிடத்துக் காலங்காட்டியும் பாலு மிட முங் காட்டியும் வருவனவும், (ங) செயப்படு பொருண்முதலாய வேற்றுமைப்பொருட் கண் உருபென்னுங்குறியாய் வருவனவும், (ச) தமக்கொருபொருளின்றித் தாஞ்சார்ந்த பெயர்வினைகளை அசையப்பண்ணுநிலைமைய வாய்வருவனவும், (ரு) செய்யுட்கண் இசை நிறைத்தலே பொருளாகவருவனவும்,

(சு)கூறுவார் தாந்தாங்குறித்த குறிப்பினாலே அவர் குறித்தபொருளைவிளக்கி நிற்பனவும், (எ) ஒப்புமைப்பொருளையுணர்த்திவரும் உவம உருபுகளும் என ஏழு இயல்பினையுடைய. (தொல். சொல்லதி. உருக, உருஉ, நச்சி.) [பெயர்ச்சொல் வினைச்சொற்களு மாகாது அவற்றின் வேறுமாகாது இடைநிகரதாய் நிற்குஞ்சொல் என்றும், தனித்துநடத்த லின்றிப் பெயர்வினைகளிடமாக நடக்குஞ் சொல் என்றுங் கூறுப.]

இடைச்சொற்பகாப்பதம் — நால்வகைப் பகாப்பதங்களிலொன்று; அது: மற்று,ஏ, ஓ, என்பனபோல வருவது.

இடைசுருங்குபறை—துடி. (சூ. நிகண். எ: சஉ.)

இடைதுரி — உருத்திராக்க முதலியவற்றி னிடையிற் கோக்கும் அரும்புவளையம்.

இடைஞ்சல்—1. இடுக்கு 2. உபத்திரவம். 3. தடை. 4. நெருக்கம்.

இடைத்தரம்—நடுத்தரம்.

இடைத்திரிசொல் — இயற்சொற்போலத் தனதுபொருள் எளிதில் விளங்கலில்லாது அரிதுணர்பொருளதாய்நிற்குமிடைச்சொல். 'சேறும்' என்பதில் வரும் விகுதி போல்வன. (நன். உஎஉ.)

இடைத்தொடர்க்குற்றுகரம் — இடையின வொற்றைத் தொடர்ந்துவருங் குற்றுகரம். (நன். கூச.)

இடைதல் — 1. ஒதுங்கல், விலகுதல். 'இடைந்தொதுங்குகை. (ஈடு. 5.4.6) 2. இளை. 3. தாழ்தல். 4. நெகிழ்தல். 'எந்தையேயென விடைந்திடைந்துருகுமெளியனேன்' (தாயு. சிற்சு. ௩.) 5. பலங்குறைதல். 6. பின்னிடு தல். 'இற்றது குலங் கண்ட வசமுதி யிடைந்து போனான்' (கந்தபு. மகாகாளர். உ0.) 7. வருந்தல். 'இடையோமினித் தனிப் போநெறிக்கே' (திருநூற். ௩எ.) 8. சோர் தல். (சீவக. 446. உரை.)

இடைதெரிதல்—செவ்வியறிதல். (குறள். 712.)

இடைநரை—அங்குமிங்குஞ் சிறிது நரைத் திருக்கை.

இடைநாடி — தசநாடியினொன்று, இடை கலை.

இடைநாழிகை—கோயிலில் அர்த்தமண் டப மஹாமண்டபங்கட்கு இடைப்பட்ட இடம். (T. A. S. 100)

இடைநிகராதல் — நடுத்தரமான நிலையி லிருத்தல். (குறள். 635. உரை.)

இடைநிலை–1. இடைநிற்குந் தாவு. (சிலப். கடலாடுகாதை. ௩௫. உரை.) 2. இடையி னிற்றல். 'இடைநிலைமொழியே' (நன். சகங.) 3. இருபுறத்தினுஞ்சாராமனிற்கை. 4. தனிச்சொல். (வீரசோ. யாப்.கக. உரை.) 5. பகுபதத்திற் பகுதிக்கும் விகுதிக்கு மிடையே, சாரியை சந்தியாகிய இவற்றின் பாற்படாததாய்நிற்கும் உறுப்பாகிய இடைச் சொல். அறிஞன் (ஞகரவிடைநிலை); அறிந் தான் (தகரவிடைநிலை) என்பனவற்றிற் போல.

இடைநிலைக்குணத்தீவகம் — இடைநிலைத் தீபகம் குணங்குறித்துவருவது. (தண்டி. ௩அ. உரை.)

இடைநிலைச்சாதித்தீவகம் — இடைநிலைத் தீபகம் சாதிகுறித்துவருவது. (தண்டி. ௩௯. உரை.)

இடைநிலைத்தீவகம் — தீபகவலங்கார மூவகையு ளொன்று. அது ஒரு சொல் நடு நின்று முன்வருஞ்சொற்களோடுபொருந்திப் பொருள்விளைத்தும் பின்வரும் சொற்க ளோடு பொருந்திப் பொருள்விளைத்தும் நிற் பது. 'உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண - வண்ணாத்தல் செய்யா தளறு' இதிலே, 'ஊன்' என்பது முன்னும் பின்னுஞ் சேர்ந்து பொருள்விளைத்துநின்றமை காண்க.

இடைநிலைத்தொழிற்றீவகம் — இடை நிலைத்தீபகம் தொழில்குறித்து வருவது. (தண்டி. ௩அ. உரை.)

இடைநிலைப்பாட்டு — தாழிசை. 'இடை நிலைப்பாட்டுத்தரவுபோக்கடையென - நடை பயின்றொழுகுமொன்றெனமொழிப'(தொல். பொரு. சசச.) [கலிப்பாவிலே இடைநிற்ற லுடைமையின் இப்பெயர்பெற்றது.]

இடைநிலைப்பொருட்டீபகம்— இடைநிலைத் தீபகம் பொருள்குறித்து வருவது. (தண்டி. ௩௯. உரை.)

இடைநிலைமெய்ம்மயக்கு-சொல்லினகத்து வருமெழுத்துக்கள் ஒன்றோடொன்று கூடுங் கூட்டம். (நன். எழுத்தி. ௫௫. இராமாநு.)

இடைநிலைவிளக்கு— இடைநிலைத்தீவகம். (சிலப். 1. 22. உரை.)

இடைப்படி.—பலம் பன்னிரண்டுகொண்டது. (தைல. தைலவ. ௧௨௧. உரை.) [இதனை மாகதப்படி என்பர்.]

இடைப்படுதல்—1. நடுவாதல். 2. இடையிற் சம்பவித்தல்.

இடைப்படுதாரம் — மத்திமதாரம். (சூ. நிகண்.)

இடைப்படுவள்ளல் — இடைவள்ளல். 'தம்பா லணைந்திடுங் காலை யெஞ்சி-யீண்டிய வெறுக்கை வீசு மிடைப்படு வள்ள லொத்தார்' (கந்தபு. ஆற்று. ௩௧.)

இடைப்பழம் — காய்க்குலையில் இடையிடையே பழுத்திருக்கும் பழம்.

இடைப்பழுப்பு—பச்சைகலந்த பழுப்பு.

இடைப்பாட்டம் — பழைய வரிவகையுள் ஒன்று. (S. i. i. ii. 521.)

இடைப்பால்—ஆடலரங்கிற் குரிய நிலம்.

இடைப்பிறவரல் — எழுவாய் முதலியன கொண்டுமுடியுஞ் சொற்களினிடையில் பிற சொற்கள்வருதல். சாத்தன் வயிறார உண்டான் என்பதிலே 'வயிறார' என்பது இடைப்பிறவரல். (நன். பொது. ௫.)

இடைப்புணர்வளபெடை — நடுவிருசீர்க்கண்ணு மளபெடைவருவது.

இடைப்புணர்விழைபு — நடுவிருசீர்க்கண்ணு மியைபுவரத் தொடுப்பது.

இடைப்புணர்முரண் — முரண்டொடையில் ஒருவகை; அஃது: ஓரடியிலே இடையினின்ன இருசீர்க்கண்ணும் முரண்வரத் தொடுப்பது. 'வணங்கு சிறுமருங்குற் பேரமர்க்கண் மாதர்' (யாப். காரிகை. ஒழிபி. ௫.)

இடைப்புணர்மோனை — நடுவிருசீர்க்கண்ணும் மோனைவரத்தொடுப்பது.

இடைப்புணர்வெதுகை— இடையிருசீர்க்கண்ணும் எதுகைவருவது.

இடைப்புட்சி-இடைப்பாட்டம். (S. I. I. II. 521)

இடைப்பூட்டு—அரையிற்கட்டுங்கச்சு.

இடைப்போகம்—இடைக்காலத்துப் புன்பயிர்விளைவு.

இடைமகன்—இடையன். 'இடைமகனுந் தானேநிறைஞ்சிவிட்ட கன்றுன்' (பெரியபு. சண்டேச. ௨௪.)

இடைமடக்கு—1. இடையிற்றடுக்கை. 2. ஒருவன் எடுத்தவிஷயத்தைப் பேசி முடிக்கவொட்டாது தடுத்தல். 3. மடக்கென்னுஞ் சொல்லணியி னொருவகை; அது: செய்யுளின் ஓரடியின் இடையேநிற்குஞ்சொல் வேறு பொருள்விளைத்துப் பெயர்த்தும் வருவது. 'மனமேங் குழைய குழையவாய் மாந்தர்' (தண்டி. ௯௨, ௯௩) [இடையிலே மடங்கி வருதலுடைமையின் இப்பெயர்த்து.]

இடைமருது — திருவிடைமருதூர் என வழங்கு மோரூர். 'வாட்டமுற்றிரிக்குமிடைமருது' (தணிகைப். புராணவ. ௪௫.)

இடைமிடைதல்-நடுவே கலத்தல். 'பொய்யோ டிடைமிடைந்த சொல்' (நாலடி. 80)

இடைமுள்-1. இடைப்பரு. 2.ஒரு கரப்பன்.

இடைமை — இடையினவெழுத்துக்கள். (நன். 75)

இடையர்—1. முல்லைநிலத்துத் தாழ்ந்த ஆடவர். (அகப்பொ. அகத்திணை. ௨௨.) [இடை - பசு.] 2. முல்லைமாக்கள்.

இடையல்—1. துகில். (சூ. நிகண். ௭: ௯௧.) 2. மெலிதல். 3. வருந்தல். 'இனம் பிரிந்த மான்போல வினையா வண்ணம்' (தாயு. ஆகார. ௨.)

இடையறல்-1. இடைக்காலத்தொழிதல். 2. இடையிடத்தொழிதல். 'இரும்பனி யிடையறு விமயப் பொன்வரை' (கந்தபு. பார்ப். ௯௫.)

இடையறாமை—1. இடைக்காலத்தொழியாமை. 2. இடையிடத்தொழியாமை.

இடையன் — பசுமேய்க்கிறவன், முல்லைநிலத்தோன். 'வேயிருக்குமிதழிடையனுக்கு' (பாரத. கிருட்டி. ௧௩௫.)

இடையன்கால்வெள்ளி — மேடராசியில் நிற்கும் ஒரு விண்மீன். [திசைச்சொல்.]

இடையாகெதுகை — எதுகைவகையினொன்று; அஃது: அடிதோறும் இரண்டாமெழுத்து ஒன்றிவரத்தொடுப்பது. 'அகர முதல வெழுத்தெல்லா மாதி - பகவன் முதற்றே யுலகு' என்பதிற்போல. (யாப். காரிகை. ஒழிபி. ௬. உரை.)

இடையாயார்—நடுவாயுள்ளார்.

இடையிட்டுமொழிதல்—'தவஞ்செய்வார்க்குரிய நியமங்களெட்டினு ளொன்று. (மணி. மேக.)

இடையிட்டெதுகை—ஒவ்வோரடி இடையிலொழித்துவருமெதுகை. 'தோடாரெல்வளை நெகிழநாளு-நெய்தலுண்கண் பைதலுழப்ப-வாடாவவ்வரி புதைஇப் பசலையும் - வைக றோறும் பைப்பயப் பெருகி' (யாப். காரிகை. ஒழிபி. ௬. உரை.)

இடையிடுதல்—1. இடையில் இல்லதாதல். 'இருசீரிடையிடின்' (தொல். பொரு. ௪௧௧.) 2. இடையிலேபுகுத்தல். 'செங்கால்வெட்சிச் சீறிதழிடையிடுபு' (திருமுரு. ௨௧.) 3. விக்கினநேரிடுதல். (இறைய. ௩௩.) 4. மறித்தல். 'வாயிலை யிடையிட்டுக்கொண்டுநிற்கும்படியாக' (கலித். 109. 26. உரை.)

இடையிடை—இடைக்கிடை. 'இடையிடை கால்களும்' (கந்தபு. தெய்வ. ௭௨.)

இடையியற்சொல் — உலகவழக்கினுஞ் செய்யுள்வழக்கினுந் தன்பொருளைத் தெற்றென விளக்கும் இடைச்சொல். வரலாறு: 'மண்ணை'இதில்ஐஇடைச்சொல்.(நன்.௨௭௧.)

இடையினம் — மூவினமான ஒற்றெழுத்துக்களுளோரினம்; அவை: மிடற்றினின்று பிறக்கும் ய ர ல வ ழ ள என்னும் ஆறெழுத்துக்கள். 'இடையினம் ய ர ல வ ழ ள வென வாறே' (நன். ௭௦.)

இடையினமோனை—மோனைத்தொடையினொருவகை; அஃது: இடையினவெழுத்தி லொன்று அடியின் முதலெழுத்தாய்வர அவ்வடியிற் பின்னே இடையினத்தின் மற்றோரெழுத்துவரத் தொடுப்பது.

இடையினவெதுகை-இடையினவெழுத்திலொன்று ஓரடியில் இரண்டாமெழுத்தாய் நிற்க, மற்றோரிடையெழுத்து மற்றோரடியில் இரண்டாமெழுத்தாய்வரத் தொடுக்கும் எதுகை. 'எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப் - பொய்யா விளக்கே விளக்கு' என்பதிற்போல. (யாப். காரிகை. ஒழிபி. ௬.)

இடையீட்டெதுகை—இடையிட்டெதுகை.

இடையீடு—1.இடையில்விடுதல், ஓய்தல். 'ஒருவிடயத்தின்கண்ணும் விட்டுவிட்டறிவதன்றி இடையீடின்றி அறியமாட்டாது' (சி. சி. ௨: ௯௪. சிவஞான.) 2. இடையிலுறுவது. 3. விக்கினம்.'பகற்குறியிடையீடு' (அகப்பொ. களவிய. ௩௯.) 4. வித்தியாசம். 'பெருமறை யுடன்மெய்த் தொண்டர்க் கிடையீடு பெரிதாமன்றே' (பெரியபு. திருஞான.592.)

இடையுவா—பௌர்ணிமை.'சரற்காலசந்திர-னிடையுவாவில்வந்தெழுந்தாலேபோல' (நாலாயிரப். கருப்பூர. ௩.)

இடையூறின்மை — ஈச்சுரன் எண்குணத்தொன்று. அஃது: அந்தராயமின்மை, துக்கமின்மை. (சி. சி. பர. நிகண். ௨.)

இடையூறு — 1. ஊறுபாடு, விக்கினம். 'இவன்மிசை யிடையூறென் றெய்துறுவதன் முன்யாம்' (பாரத. மணிமான். ௭௨.) 2. தடை.'இறுதியில்லவனைத்தொழற்கிடையூறிதென்றநுரெய்துவான்' (திருவிளை. விடையில. ௧௦.)

இடையூறுகிளத்தல்—தலைவி நாணிக் கண்புதைத்ததனாலெழுந்த துன்பத்தைக் கூறுதல். (வாண. ௧௨. முகம்.)

இடையெண்—சிந்தடி ஓரடியாக எட்டு வருவது. (வீரசோ. ௧௦௧.)

இடையெழுஞ்சநீ—பூராநாள். (சூ. நிகண். ௧: ௭௧.)[மூலத்திரிகோணத்தில் இடைவருங் கோணத்திற்குரிய நட்சத்திரமாதலின் இப்பெயர்த்து.]

இடையெழுத்து—இடையினம்; அது: வல்லோசை மெல்லோசை என்னுமிரண்டற்கும் இடையிலுச்சரிக்கப்படும் எழுத்து. (இலக்கணவினா.)

இடையொடிவு — அவாந்தரசங்காரம். (ஈடு. 1. 3. 3.)

இடையொடுகடைமடக்கு—ஓரலங்காரம். அஃது அடிகளினிடையுங் கடையும் மடங்கி வருவது. (தண்டி. ௬௨. உரை.)

இடையொத்து — தாளவகையிலொன்று. (திவ். திருவாய்.)

இடைவண்ணம் — இசைவகை மூன்றனுளொன்று; அது: இடையெழுத்தே மிகுத்து வருவது.'எண்ணியநூற் பெருவண்ண மிடைவண்ணம் வனப்பென்னும் - வண்ணவிசை வகையெல்லாம்' (பெரியபு. ஆனாய. ௨௮.)

இடைவரி—வரிவகையிலொன்று.

இடைவழக்கு — வாதிபிரதிவாதிகளுக்கிடையிலே வேறொருவன் தனதென்று வாதாடுதல்.

இடைவழி—1. இரண்டுதானங்களுக்கிடையிலே இருக்கும் வழி. 2. நடுவழி. (திவ். பெரியாழ். 4. 5. 5.)

இடைவள்ளல் — கொடுப்பவர் எழுவர். அக்ரூரன், சந்திமான், அந்திமான், சிசுபாலன், வக்கிரன், கன்னன், சந்தன்' (சூ. நிகண். உ: உங.) [இடை - நடு. வண்மை - கொடை, அல்-ஒரு பெயர்விகுதி.]

இடைவிடல்—இடையிலே விலகவிடுதல். 'கைக்கயமுழிகொண்டேகன லடிப்பற்று வண்ணம்-இடைவிடாமற்றுழாவி' (நைல. நைலவ. கூச.)

இடைவிடுதல்-இடையில் ஒழிதல். 'இடைவிடாமற்றுழாவி' (நைலவ. நைல. 94.)

இடைவிலக்கல்—இடையிலேவந்து தடுத்தல். 'நிருதரிடைவிலக்காவண்ணம்' (இராமா. கையடை. சo.)

இடைவிடு—நடுவில் விட்டுவிடுகை. (திவ். திருவாய். 1. 10. 8.)

இடைவு—தோல்வி.

இடைவேட்டு-இடையிற்பெறுதல். [வழக்.]

இடைவேட்டுப்பணம் — 1. மாறுமுத்திரைவிழுந்தபணம். 2. வேறுவழியாகக் கிடைத்த இலாபம்.

இடைவேட்டுப்பேச்சு—நிந்தனை.

இடைவெளி — 1. இருபொருளுக்கு இடையே இருக்கும் வெளி. 2. பிளப்பு.

இடோல்-ஒரு பெரும்பறை. [தெலுங்கு.]

இடோலி — ஒருவகைச் சிவிகை. [தெலுங்கு.]

இண்டஙீரேடி — இண்டு; அது: செவ்விண்டு, வெள்ளிண்டு என இருவகை.

இண்டர் — 1. இடையர். 2. சிநேகர். 3. சுற்றம். 4. சண்டாளர். 'இண்டக்குலத்தை' (திவ். திருப்பல். 5.)

இண்டிரன்—1. சிறைச்சாலையின் வெளிப்புறக்காப்போன். (பராசர. பீக். சoக.) 2. சோதிடன்.

இண்டு — 1. இண்டங்கொடி. (பிங்கல. உஅஅ.) 2. செடிவகையிலொன்று. 3. தொட்டாற்சுருங்கி. 4. புலிதொடக்கி. (மலை.)

இண்டை—1. ஒருவகைக்கொடி. (பிங்கல. உஅஅ.) 2. தாமரை. (சூ. நிகண். ந: குஅ.) 3. சிரசின்மேல் வட்டவடிவாய்ச் சுருக்கு இறுக்கட்டிச் சாத்தும் ஒருவகைமாலை. 'விழுத்தொண்டர்-குழுக்கடந்த விண்டைநிகர் சுமையடைமேல்' (திருவிளை. மண். கசு.) 4. முல்லைக்கொடி. 5. புலிதொடக்கி. (மலை.) 6. தொட்டாற்சுருங்கி. 7. ஆதொண்டை.

இணக்கம்—1. இசைவு, சம்மதம், சேர்மானம். 2. திருத்தம். 'இதனையிணக்கமாகச் செய்' (வழக்.) 3. பொருத்தம். 4. சிநேகம். 'நல்வினைக்கமல்ல நல்லற்படுத்தும்' (கொன்றைவேந்தன்)

இணக்கு — 1. இணக்கம். 'இணக்குறு மென்னேமைமைதான்' (தாயு. பரா. உஎசு.) 2. இணக்கென்னேவலும், தெரிநிலைவினைப் பகுதியும். 3. ஒப்பு. 'இணக்கிலாததோரின்பமே' (திருவாச. 30. 1)

இணக்குதல்—உடன்படுத்தல். (திவ். திருவாய். 6. 2. 8.)

இணக்கோலை-ஒருவிஷயத்தைக்குறித்து இருதிறத்தார் தம்முள் இணங்கி யெழுதிக் கொள்ளுகிற பத்திரம்.

இணங்கர் — ஒப்பு. 'கற்பிற் கிணங்கரின் மையான்' (கம்பரா. மீட்சிப். 147.)

இணங்கல்-1. உடன்படல். 2. பொருந்துதல். 'இணங்கிடா விச்சாஞானக் கிரியைகள்' (சி. சி. சு: எ.)

இணங்கலர்—பகைவர். [இணங்கு; அல்; அர்.]

இணங்கன்—1. சிநேகிதன். (திருவாலவா. திருவிளை. 28. 24.) 2. வெடியுப்பு.

இணங்கார் — பகைவர்.

இணங்கி — தோழி. 'இணங்கி மார்தமையேவின வில்லையால்' (சேதுபு. விதூமச்ச. கசு.)

இணங்கு—1. இணக்கம். 'உள்ளப்பெருநிணக்கையொழிவேனே' (திருப்பு. உஅ.) 2. இணங்கென்னேவலும், தெரிநிலைவினைப் பகுதியும், வினைத்தொகையும். 3. பிசாசம். 4. பேய். (திவா.) 5. ஒப்பு. 'இணங்காகு முனக்கவளே' (திருக்கோ. 68.)

ணங்குதல்—இணக்கல்.

இணர்—1. கிச்சிலிமரம். (மலை.) 2. குலை. 'இணர்ப்பெண்ணை' (பட்டினப்பாலை. கஅ.) 3. தளிர். 'ஒள்ளிணர்க் கனியின் கொம்பர்' (கந்தபு. வள்ளி. கஉ.) 4. பூங்கொத்து. 'இணருழ்த்து நாறு மலரணையர்' (வள். சுOo.) 5. பூந்தாது. (பிங்.) 6. பூ. 'தேங்கமழ்மருதிணர்கடுப்ப' (திருமுரு. நசு.)

7. மாமரம். (மலை.) 8. பலசுடர். 'இணரெரி தோய்வன்ன' (வள். ௩0௮.) 9. பூவிதழ். 'பல்லிணர்க்குரவம்' (குறிஞ்சிப். 69.) 10. ஒழுங்கு. 'புகரிணர்சூழ் வட்டத்தவை' (பரிபா. 15. 61.) 11. தொடர்ச்சி. (பழ. 78.)

இணர்தல்—நெருங்குதல். 'இணரியஞாட்பினுள்' (களவழி. 34.)

இணுட்டு—1. ஓலைத்துண்டு. 2. மீன்செதில். [வழக்.]

இணுப்பு—ஏய்ப்பு. [வழக்.]

இணுப்புதல்—ஏய்த்தல்.

இணி—1. எல்லை. 2. ஏணி. 3. கண்ணறு.

இணுக்கு—1. இணுங்கப்பட்டது. 2. கிளைமுதலியவற்றிடைச்சந்து. 3. குலையினெட்டு. 4. கைப்பிடியளவிணுக்கப்பட்டது.

இணுக்குதல்—இணுங்குதல்.

இணுங்குதல் — இசித்தல், பறித்தல். 'இணுங்கினகாய்' (சிந்தா. கேமசரி. ௬௮. உரை.)

இணை— 1. இணைத்தொடை. (காரிகை. உறுப். 19.) 2. இசைவு. 3. இசையென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 4. இரண்டு. 'இணையடிக்கீழ்' (பாரத. பதினே. உ௬௬.) 5. ஒப்பு. 'இணையாருமிலாவரசே' (பாரத. பதினே. உ௬0.) 6. கூந்தல். (சூ. நிகண்.) 7. சோடு. 'ஈரிணைமாடு' 8. துணை. 9. நால்வகைநரம்புகளுளொருவகை நரம்பு. அஃது: இரண்டு நரம்பு. 'இணைகிளை பகைநட் பென்றிந் நான்கின்-இசைபுணர் குறிநிலை யெய்த நோக்கி' (சிலப். வேனிற். ௩௩.) 10. எல்லை. 'இணையிலின்பமுடையோய்நீ' (சீவக. 1243.)

இணைக்கயல் —1. இரண்டுகயன்மீன்வடிவாகப் பொன்முதலியவற்ருற் செய்யப்பட்டுள்ளதொன்று. இதனை அட்டமங்கலங்களுளொன்ருகவும், அரசசின்னம் இருபத்தொன்றனு ளொன்ருகவும், கொள்ப. 2. கையிலுள்ள ஓரிரேகை. 'மதிமருண்டா னிணைக்கயற்கையான்' (பாரத. கீசகன்வதை. ௩.)

இணைக்குறளாசிரியப்பா — அகவற்பாவுளொன்று; அஃது, ஈற்றடியும் முதலடியு மளவொத்து, இடையடிகள் சீர்குறைந்து குறளடிசிந்தடியாக வருவது. (காரிகை. செய்யுளிய. அ. உரை.)

இணைக்கை — இரட்டைக்கை. 'இணைக்குடன்வருவ திணைக்கையாகும்' (சிலப். அரங்கே கஅ. உரை.)

இணைக்கோடைப்பொருள் — மணவாளனும், மணவாட்டியுமாகிய இருவரும், கலியாணமுதலிய சுபகாரியங்களில் ஓரிடத்திலே கூடியிருக்கும்போது அவர்களுக்கு எவர்களாலேனுங் கொடுக்கப்படுவது. (மிரு. ச. கக௬.)

இணைக்கோணத்தடை — மூக்கிரட்டையிலையெனப் பொருள்படு மொரு குறிப்புமொழி. 'இணைக்கோணத்தடைமுழுதுங்கொள்ளட்டு' (இராசவைத். ச0.) [இணை - இரண்டு. கோணம்-மூக்கு. அடை-இலை.]

இணைக்கோணம்—மூக்கிரட்டை.

இணைத்தகோதை—இதழ்பறித்துக்கட்டினமாலை. 'இணைத்தகோதை யணைத்தகூந்தல்' (திருமுரு உ00.)

இணைத்தல் — 1. இரண்டையொன்ருகச் சேர்த்தல். 2. உவமித்தல். 3. தொடுத்தல். 4. பொருத்தல்.

இணைத்தொடை — அளவடியுள் முதலிரு சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது. (இலக். வி. 723. உரை.)

இணைதல்—1. இசைதல். 2. சேர்தல். 3. ஒத்தல். 4. சையோகஞ்செய்தல். 'எயிற்றியரிளமுலை யிணைய வெண்ணுபு' (தணிகை. நாட்டு. ௱௩.)

இணைப்படம் — இரண்டுபுறமுமொத்த படம். 'மன்னுகவிணைப்படமுந் தேர்த்தட்டும்' (சிந்தா. நாமக. கசச.)

இணைப்பு-1. இசைப்பு. 2. சேர்ப்பு. 3. ஒப்பு.

இணைபிரியாமை—விட்டுப்பிரியாமை.

இணைமட்டப்பலகை — இரட்டைக்கோடு காட்டுங் கருவி.

இணைமணிமாலை—தொண்ணூற்றாறு பிரபந்தங்களுளொன்று; அஃது. வெண்பாவும் அகவலும், வெண்பாவும் கலித்துறையுமாக இரண்டிரண்டாக விணைத்து வெண்பாவகவ லிணைமணிமாலை யெனவும், வெண்பாக் கலித்துறையிணைமணிமாலை யெனவும் நூறு நூறு அந்தாதித்தொடையாக வரப் பாடப்படுவது. 'வெண்பாவகவல் வெண்பாக்கலித்துறை - பண்பானிரைம்பஃதந்தாதி - யியலின்வகுப்ப திணைமணிமாலை' (இலக்கணவி. அகஅ.)

இணைமுரண்—இணைமுரண்டொடை.

இணைமுரண்டொடை—தொடைநாற்பத்துமூன்றுவகையுளொன்று; அஃது: ஓரடியின் முதலிருசீரும் முரணாக இணைந்துவரத் தொடுப்பது. 'சீரடிப்பேரகலல்குலொல்குபு' என்பதிற்போல. (யா. காரிகை. உறுப். கசு. உரை.)

இணைமோனை — இணைமோனைத்தொடை.

இணைமோனைத்தொடை—தொடை நாற்பத்துமூன்றுவகையுளொன்று; அஃது: ஓரடியின் முதலிருசீர்க்கண்ணும் மோனையியைந்து வரத்தொடுப்பது. 'அணிமலரசோகின்றளிர் நலங்கவற்றி' என்பதிற்போல. (யாப். காரிகை. உறுப். கசு. உரை.)

இணையசை — நிரையசை. [இருகுறிலும் குறில் நெடிலுமாக இவ்விரண்டு எழுத்துக்களால் வருமசையென்றபடி.]

இணையடிதல் — முட்டுக்கால் தட்டுதல்.

இணையணை—இருவர்போகநுகர்தற்கான சயநம். 'அன்னத்தூவியிற்செறித்த - விணையணை மேம்படத் திருந்து துயில்பெறாஅ' (சிலப். அந்திமா. சுஎ.)

இணையல்—இணைதல்.

இணையளபெடை — இணையளபெடைத் தொடை.

இணையளபெடைத்தொடை — தொடை நாற்பத்துமூன்றுவகையுளொன்று; அஃது: ஓரடியின் முதலிருசீரும் அளபெடையோடு இணைந்துவரத்தொடுப்பது. 'தாஅட் டாஅமரை மலருழக்கி' (யாப். காரிகை. உறுப். கசு.)

இணையாவினைக்கை — ஒற்றைக்கையாற் புரியும் அபிநயம். 'இணையா வியல்வ திணையா வினைக்கை' (சிலப். அரங்கேற்று.கஅ. உரை.)

இணையியைபு— இணையியைபுத்தொடை.

இணையியைபுத்தொடை — தொடை நாற்பத்துமூன்றுவகையுளொன்று;அஃது:ஓரடியிலிறுதிச்சீரிரண்டும் இயைபாக விணைந்து வரத்தொடுப்பது.'மொய்த்துடன்றவழு முகிலே பொழிலே' (யாப். காரிகை. உறுப். கசு. உரை.) ['இறுதியொன்றலேயியைபு' என்பவாகலின் இயைபுக்கு அடியினிறுதியே முதலாகக்கொள்ளப்படும்.]

இணையிலின்பம்—அகந்தசுகம். (சிந்தா.)

இணைபிரோதி—கடையொத்த நெய்ப்பிணையுடைய கூர்தல். (திருமுரு. உ0. உரை.)

இணையெதுகை — இணையெதுகைத் தொடை.

இணையெதுகைத்தொடை — தொடை நாற்பத்துமூன்றுவகையுளொன்று; அஃது: ஓரடியின் முதலிருசீர்க்கண்ணும் எதுகை இயைந்து வரத் தொடுப்பது. 'பொன்னி னன்ன பொறிசுணங் கேந்தி' (யாப். காரிகை. உறுப். கசு. உரை.)

இணையெழுத்து — போலியெழுத்து. [இணை-ஒப்பு.]

இணைவன்—இணைந்திருப்பவன். 'இணைவனு மெப்பொருட்கும்' (திவ். திருவாய். 2. 8.1.)

இணைவிழைச்சி—, இணைவிழைச்சு— இருவர்காமத்தாலாய புணர்ச்சி. 'அரிவையரோடுதேவ - ரிணைவிழைச் சியற்கை கூடாதிரங்கினர்' (கந்தபு. மேரு. கக.)

இணைவு — 1. ஒன்றிப்பு. 2. கலப்பு. 3. புணர்ச்சி.

இத்தம்—புளியமரம்.

இத்தலே—இக்காலம். (சிந்தா.)

இத்தனை — 1. இவ்வளவு. 'இத்தனைகாலமும் போய்க்கிறிப்பட்டேன்' (திவ். பெரியாழ். 5. 3. 8.) 2. சிறிது. 'உனைத்தனையே யொக்கவித்தனைநாளிலுயர்த்துகையே' (திருநூற். அகு.)

இத்தால் — இதனாலென்னும்பொருள்பட இது என்னுஞ் சுட்டுப்பெயர் உருபேற்று விகாரப்பட்டுவந்தமொழி. 'வந்துதொடருமித்தால்' (தாயு. ஆகார. கடு.)

இத்தி—1. ஒரு துவர்மரம், இதனைக் கல்லாலென்பர். 'இத்திதன்னின்கீழிருமூவர்க் - கத்திக் கருளிய வரசே போற்றி' (திருவாச. போற்றித். கசஉ.) 2. இச்சிமரம். 3. கல்வித்தி.

இத்திநடைபம்—நத்தை.

இத்தியாதி — இதுமுதலானவை. 'மோகியென்றும், மகானென்றும் இத்தியாதி நாமங்களுண்டு. (சி. சி. க: ருஎ. சிவாக்.)

இத்து—1. காவட்டம்புல். (காமாட்சிப் புல்.) [மலே.] 2. தன்பொருட்டன்றி யாதானுமொருகாரியத்தின்பொருட்டு உச்சரிக்கப்படுகிற எழுத்து. (சப்தசங்கிரகம்.)

இத்துணை—1. இதுகாலம்வரையும். 'தண்டம் வல்லையிற் புரிந்தில னித்துணை தாழ்த்தான்' (கந்தபு. அவைபுகு. ௧௦எ.) 2. இவ்வளவு. 'அத்தகு தேவரா லைய நங்களுக்-கித்துணை யலக்கண்வந் தெய்திற்று' (கந்தபு. சூரனமை. ௩அ.)

இத்துரா — காவட்டம்புல். (காமாட்சிப்புல்) [மலை.]

இத்துரு — 1. ஈயமணல். [மூ. அ.] 2. காவட்டம்புல். (காமாட்சிப்புல்.) [மூ. அ.]

இத்துவரம்—எருது.

இத்துவரன்-நீசன், எளியவன். [ஐ த்வர.]

இத்துவரீ—வியபிசாரப்பெண். [ஐ த்வரீ.]

இத்தை—1. இதனை. 'இத்தை - யாயுமறிவுடையனுய்' (சி. சி. ௧௧: ௧.) [இது என்னுஞ் சுட்டுப்பெயர் ஒற்றிரட்டித்துருபேற்றது.] 2. ஒரு முன்னிலையசைச்சொல். 'நீ யொன்று பாடித்தை' (நன். இடை. ௨௧. உரை.)

இத்மா—விக்கல். (சீவரட். ௧அ௪.)

இதசத்துரு—புறத்தில் நட்புள்ளவன்போல் நடித்து அகத்தில் விரோதியா யிருக்கிறவன். 'மடமை யிதசத்துருவாகவந்து - சிந்தை குடிகொள்ளுதே' (தாயு. ப.ரிபூ. ரு.)

இதடி—பெண்ணெருமை. 'இதடிகரையும்' (திணைமாலை. 83.)

இதண் — இதணம். 'நெட்டிதணேறுமிப் புனத்தினள்' (கல்லா. ருரு.)

இதணம்—1. அட்டாலை. 2. காவற்பரண், பரண். 'குறவர்கைத்தொழிலா - லிட்ட விதணத் திருந்தெம் பெருமாட்டி' (கந்தபு. வள்ளி. ருஉ.)

இதம்-1. அன்பு. 'இரவிதநந்தும்பரவையை' (மரு-தி. எ௪.) 2. இது எனப்பொருள்பட வரும் ஒரு வடமொழித்திரிவு. (பௌட். ௪: அஉ.) 3. இன்பம். 'இதந்தருமடந்தையொடியைந்து' (திருவாதவூ. பாயிர. உ.) 4. இனிய சொல். 5. உயிர்க்குறுதியென வேதாகமங்களின் விதித்தவற்றைச் செய்தல், நன்மை. (சி. சி. உ: ௬. சிவாக்.) 6. உரிமை. 7, எற்ற தன்மை. 8. சொல். 9. இருதயம். 'இதஞ்சலிப் பெய்தநின் றேங்கின ரேங்கவும்' (திருவாச. 2. 139.) [1, 3, 4, 5, 6, 7. ஹித. 2. ஊ௶.]

இதமித்தல்—இதஞ்செய்தல், பற்றுச்செய்தல். [இது பெயரடியாற் பிறந்த வினைப்பெயர்.] 'இதமித்தல் பாசத்தினின்றி' (சிவஞானபோ. சிவஞா. ௧௦: ௬. வெண்பா.)

இதமியம்—1. இதப்படுத்தல். 2. இனிமை. 3. திருத்தி.

இதயகமலம்—உள்ளத்தாமரை; சிவனைப் பூசித்தற்குக் கற்பிக்கப்படும் அந்தர்த்தாகமாகிய ஆசனம். இதற்குமேலே சத்திமூர்த்தியும், சிவன் மூர்த்திமானுமாவர். இது; பிருதிவிதத்துவமுதல் சத்திதத்துவமீருகிய முப்பத்தைந்தினையும், கிழக்குமுதல் பீசமீருகிய அவயவங்களாக வுடையதாயிருக்கும். (சி. சி. ௩: ௬. சிவஞான.) இது; வாழைப்பூப்போல அதோமுகமாய் நாலங்குலந் தாழ்ந்திருக்கும். (மறைஞான.) [ஹ்ருதயகமல.]

இதயத்தர்ச்சித்தல் — இதயகமலத்திலே எட்டங்குல வுயரமுடைய சிவலிங்கமாகக் கற்பித்து அஞ்செழுத்தாற் பூசைசெய்தல். (சி. சி. ௩: அ. மறை)

இதயபதுமம் — இதயகமலம். (சி. சி. ௩: ௬. மறை.) [ஹ்ருதயபத்ம.]

இதயம்—1. இருதயம், மனம். 'கருதுவாரிதயத்து' (தேவா. 619. 1.) 2. மார்பு. 'இதயமென்மயி ரணிந்திடில்' (காசிக. மகளிர். 23.) 3. பதினெருமந்திரங்களுளொன்று. (சி. சி. அ: எ. மறை.) [ஹ்ருதயம்.]

இதரகர்மம்—அந்நியமாயிருக்கிற கன்மம். 'இதனுற் கன்மசாமியம் வந்தாலும் இதரகர்மபரிபாகமாகாததால் அநுக்கிரகங் கூடாது' (பௌட். ௪: உ௬. உரை.)

இதரபதார்த்தம்—வேறுவஸ்து. [ஐதர பதார்த்த.]

இதரபதார்த்தாநவச்சிந்நவான்மா — வேறு பதார்த்தங்களின் எல்லைக்குளடங்காத வான்மா. [ஐதரபதார்த்தாநவச்சிந்ந ஆத்மா: ஐதரபதார்த்த-வேறுபதார்த்தம். அந - ஓர் எதிர்மறை. அவச்சிந்ந-எல்லைக்குளடங்கியது. ஆத்மா - சிவன்.]

இதரம் — 1. அழிவு. 2. ஈனம். 3. ஒரு மருந்து. 4. கீழ்மை. 5. தீங்கு, பகை. 'இதரங்கடந்தான்' (பாரத. துருவாச. 12.)

6. நீசம். 7. பாதரசம். 8. மற்றென்று. 9. வித்தியாசம்.

இதராயோகவிவச்சேதம்-பிரிவின்மை. [இதர அயோகவ்யவச்சேத: வ்யவச்சேத - பிரிவு.]

இதரர் — 1. அந்நியர். 'இதரர்க்குமாதர்க் காகா' (விருத்தா. சிவபூசா. ௩௪.) 2. கீழ் மக்கள்.

இதரவிதரம்-1. அந்நியோந்நியம்; ஒன்றுக் கொன்று. 'பொருவு போரிவை போற்பிற வின்மையா - லிருவர் போர்க்கு மிதர விதர மே-மருவ கேருவ மாகம்' (சேதுபு. இராம தீர். ௩௩.) 2. இதரேதரவுவமை. (தண்டி. 30)

இதராத்தியாசம்—அத்தியாசம் நான்கனு ளொன்று. 'அத்தியாசசதுட்டயம்' பார்க்க. [இதராத்யாஸ.]

இதரேதரக்கிரியை — தடுமாறுதொழில். 'புலிகொல்யானை' இது, புலியைக்கொன்ற யானையெனவும், புலியானது கொன்றயானை யெனவும், புலி கருமமாகியும் கருத்தாவாகி யும், யானை கருத்தாவாகியும் கருமமாகியும் வா நிற்பது. (பி. வி. ௧௰. உரை.) [இதரேதரக்ரியா: இதர - மற்றொன்று.]

இதரேதரத்தொகை—உம்மைத்தொகையி லொருவகை. அது, தனித்துச்செய்யலாகாத ஒருசெயலை ஒருங்கிசைந்துசெய்பவர்களை அல்லது செய்பவைகளைக் கருதி வரும் பெயர்களின்கூட்டம். 'கபிலபரணர் தங்களி லேவாதுசெய்தார்கள்' (வீரசோ. தொகைப் பட. ௮.)

இதரேதரம்—இதரவிதரம்.

இதரேதரயோகத்துவந்துவம் — உயர் திணைப்பன்மையிருகவந்த உம்மைத்தொகை. 'சேரசோழபாண்டியர்' (பி. வி. சமாச. ௨௩. உரை.) [இதரேதரயோக - ஒன்றோடொன்றுகூடுதல் கூட்டம். த்வந்த்வ - உம்மைத்தொகை.]

இதரேதரயோகம் — இதரேதரயோகத் துவந்தன். (பி. வி. சமாச. ௨௩. உரை.)

இதரேதரவுவமை— உவமையலங்காரத்தி னோரினம்; அது: பொருளொருகா லுவமை யாகவும், உவமை யொருகாற் பொருளாக வும் ஒருதொடர்ச்சிக்கண்ணே வருவது. 'களிக்குங் கயல்போலு நின்கண்ணின் கண் போற்-களிக்குங் கயலும்' (தண்டி. ௩௦.) [இதரேதரஉபமா.]

இதரேதராச்சிரயம் — அந்நியோந்நியாச் சிரயமென்னுந் தோஷம்: 'கன்மாந்தரம் சரீராந்தரம்: கன்மாந்தரஞ்சரீராந்தரத்துக் குக்காரணமாதலால் இதரேதராச்சிரய தோஷமுமில்லை' (சி. சி. ௨: ௰௦.ஞாநப்.) [இதரேதராச்ரய: இதர - அந்நியம். ஆச்ரய - இடம்.]

இதரேதராத்தியாசம் — அத்தியாசநான்க னுளொன்று. 'அத்தியாசசதுஷ்டயம்' பார்க்க.

இதல்–1. கவுதாரி. (தைல. பாயிர. ௫௭.) 2. காடை. 3. சிவல். (திவா).

இதலை–கொப்பூழ். (சூ. நிகண். ௨. ௮௧.)

இதவிய—நன்மையான. 'இதவியபுல்லு மிட்டேம்' (திருவாலவா. 29. 6.)

இதவு — இதம். 'இதவார்குலசேகரன்' (அழகர்கல. காப். 3)

இதழ்—1. இலை. 2. உதடு, வாயிதழ். 'மீநீழிதழுறப்பம்மப்பிறக்கும்' (நன். எழுத். ௨௬.) 3. கண்ணிமை. 'நீரொடுநிறைந்த விரிதழ்மழைக்கண்' (புறநா. ௧௯௪.) 4. கத வின் இலை. 5. பனையேடு. (சூ. நிகண். ௧௧: தகா. ௧.) 6. மாலை. 'சோர்ந்தவிழிதழின்' (பரிபா. 17. 27) 7. பாளை. 8. பூவிதழ். 'பொன்னிதழ்ச்சண்பகத்தின்' (நைட. அன் னத்தைக்கண். ௩௨.) 9. வகிர்ந்தவோலை. 10. ஓரிதழ்த்தாமரை. 11. சாதிபத்திரி. (மூ. அ)

இதழ்குவிதல்–1. மலர்கூம்புதல். 2. இமை கூடுதல். 3. மேலுதடுங் கீழுதடுங் குவிந்து நிற்றல். (நன். 78.)

இதழ்விள்ளல்—1. பேசல். 2. மலர்தல். 3. வாய்திறத்தல்.

இதழி—1. கொன்றைப்பூவாற் றொடுக்கப் பட்ட மாலை. 'இதழிந்தாழ்சடையான்' (சி.சி. காப்பு.) 2. கொன்றைமரம். 'நறையிதழியந் தொடையே' (பாரத. ௧௩. போர். ௫௨.) 3. சரக்கொன்றை. (தைல. தைலவ. ௭௨.)

இதள்—1. பாதரசம். (மூ. அ) 2. சிறு தூறு.

இதளை—கொப்பூழ்.

இதன்—நன்மையுள்ளவன்.

இதா — 1. இதோ எனப் பொருள்படும் ஒரு திசைச்சொல். 'மாலைவெள் ளருவி சூடி மற்றிதா தோன்றுகின்ற - சோலைசூழ் வரையின்' (சிந்தா. பதுமை. சுஎ.) 2. இப்பொழுதெனப் பொருள்படு மொரு வடமொழியவ்வியயம்.

இதாகிதம் — நன்மைதிமை. 'இதாகிதம் பகையுறவுவிட்டு' (சேதுபு. விராம. கூஉ.)

இதார்த்தம்—1. இனிய அர்த்தம். 2. உண்மை. [இப்பொருளில்வரும்போது யதார்த்தமென்பது இதார்த்தம் என வந்தது என்பர்.]

இதி—1. அத்தாட்சிப்படுத்தல், நிதரிசனம். 2. உறுதி, நிர்மாணம்பண்ணுதல். 3. காரணம். 4. பிசாசம். (வீரமாமுனி.) 5. பிரகாசம். 6. முடிவு. [ஐதி - என்பது, என்று இப்படியென்னும் பொருள்களையும் தரும்.]

இதிகை—பரம்பரையுபதேசம். [ஐதிஹ: ஐதி - இப்படி. ஹ - செய்தி.]

இதிகாசப்பிரியர்—1. நைமிசாரணியர். 2. வேதவியாசர். [ஐதிஹாஸப்ரிய.]

இதிகாசபுராணம்—1. அதர்வணவேதத்தினொரு பாகம். 2. இதிகாசமும் புராணமும். [ஐதிஹாஸபுராண.]

இதிகாசம்—1. அறிவு. 'இதிகாசமிகுசாலவிரும்பூதாம்' (வேதார. பிரவர. உ.) 2. ஐதிகப்பிரமாணம். (இது, பௌராணிகமதம்.) 3. தருமார்த்தகாமமோக்ஷங்களைக் கொடுக்கும் பூர்வ கதை. அவை, பாரத முதலியன. 'வேதஃவே தார்த்தம் விளங்கிதிகாச மேதகு புராணம்' (சேதுபு. சடாதீர். கூ.) 4. மேற்கோள். 5. உதாரணம். (பிங்).[ஐதிஹாஸ.]

இதிர்த்தல்—1. அதட்டல். 2. சொல்லுதல்.

இது — இஃது எனப் பொருள்படும் ஓரஃறிணையொருமைச் சுட்டுப்பெயர். 'இதுவலாலதனுக்கியம்பலாமுவமைமற்றியாதோ' (இராமா. நகர. கூ.)

இதை—1. கலப்பை. (அக. நி) 2. காராமணி. (பிங்கல. உகசுo.) 3. புதுக்கொல்லை. 'ஒதிதை' (காஞ்சி. சுரகரீ. கக.) 4. மரக்கலப்பாய். 'மாலிதை மணிபல் லவத்திடைவீழ்த்து' (மணிமே. கச: அக.)

இதைப்புனம்—புதுக்கொல்லை. (சூ. நிகண். ரு: சுக.)

இதோ — இடஞ்சுட்டிவருவதோரிடைச்சொல். 'இதோவந்து நின்றதென் மன்னுயிரே' (திருக்கோ. 39)

இதோத்தி — நற்புத்தி. [ஹிதோக்தி:]

இதோள் — இவ்விடம். (தொல். எழுத். 398. உரை.)

இதோளி—இவ்விடம். (தொல். பொருள். 392. உரை.)

இந்த — அண்மைச்சுட்டுப்பொருளிலே பெயர்ச்சொற்குமுன்னேவரும் ஓரிடைச்சொல். 'இந்தவெற்பினை' (கந்தபு. வள். உஉசு.) இதனை மரூஉ என்பர். (நன். பெயரி. கo. உரை.)

இந்தநம்—1. காடு. 2. சுவாலை. 3. நறும்புகை. 4. மேல். 5. விறகு. 'எற்றிய நறுநெய் வீசியிந்தந மடுக்கினும்' (பாரத.இருட்டிண. கசசு.) [ஐந்தந.]

இந்தம்—1. புளியமரம். (மூ.அ) 2. விறகு.

இந்தம்வரம் — நீலோற்பலம்.

இந்தரி — இராகு. [ஐந்து - சந்திரன். அரி - பகை.]

இந்தளம்—1. ஒரு பண். 'மொழியிந்தள முதலில்' (பெரியபு. தடுத்தாட். எகு.) 2. தூபமுட்டி. (சூ. நிகண். எ: கூசு.)

இந்தனுடை—உத்தரீயம்.

இந்தா—1. இதோ. 'இந்தா விஃதோ ரிளங்குழவி யென்றெடுத்துச்-சிந்தா குலந்தீரத் தேவிகையி லீந்தனனே' (கந்தபு.வள். கூரு.) 2. இங்கேவா. [இந்தா என்பது இங்கு என்னும் இடைச்சொற்பொருடரு மொருமொழி யென்றும், அஃது அங்கு என்னும் பொருடரும் அந்தா என்னும் தெலுங்கு நிலத்திருந்து வந்த திசைமொழிநோக்கி அஃதொப்பத் தமிழ்நிலத்து வழங்குவதென்றுங் கூறுவாருமுளர்.] 3. இதை வாங்கிக்கொள் என்னுங் குறிப்புமொழி.

இந்தி—1. இலக்குமி. 2. பூனை.

இந்திகை — 1. அபராதத்திற் கலைகளைந்தி லொன்று. (சதாசிவ. கக.) 2. சாந்தியாதிதகலையிலே சிவதத்துவத்திலிருக்கும் பத்துப்புவனங்களுளொன்று. (சி-வி. ஒரி. உக. உரை.)

இந்திகோபம்—ஈயம்.

இந்திடம் — இவ்விடம். 'பொய்குன்ற வேறிய ரோதிட முந்திட மிந்திடமே' (திருக்கோ. உஎக.)

இந்தியம்-1. இந்திரியம். 'உணர்விந்தியங் களும்' (சி. சி. பர. உலோகா. ம. கூ.) [இந்திரியம் என்பதிலே 'ரி' தொக்கது.] 2. சுக்கிலம். 'இந்தியச் சேறு சிந்தி' (பட்டினத். திருப்பா. பொது. 31)

இந்திரகணம்—கவிநாயகனுக்குப்பொருந்த முறச்செய்யுநூலின் முதற்செய்யுளின் முதற்சீர்வரும் வகைகளுளொன்று. அது, தேமாங்காய் வாய்பாடாக மூன்று நேரசைவரப் பாடுவது. 'இந்திரகணமேபெருக்கஞ்செய்யும்' (இலக்கணவிள. அ00. உரை.) [இந்திரகண.]

இந்திரகந்தம்—நன்னாரி. இந்திரசுகந்தம் எனவும் வரும்.

இந்திரகம்—சபாமண்டபம். [இந்த்ரகம்: இந்த்ர - மேலான. க-ஒரு விகுதி.]

இந்திரகாளியம்— யாமளேந்திரனென்னும் ஆசிரியனாற்செய்யப்பட்ட ஓர் இசைத்தமிழ் நூல். (சிலப்.)

இந்திரகீலம் — 1. இந்திரன்கொடி. 2. மந்தரமலை. [இந்த்ரகீல.]

இந்திரகோடணை—இந்திரவிழா. 'இந்திர கோடணையிந்நகர்க்காண-வந்தேன்' (மணிமே. துயிலெழு. கஎ.)

இந்திரகோபம்—தம்பலப்பூச்சி. 'இந்திர கோபநிறத்த' (கூர்மபு. வானவர் வாழ்க்கை. கூ.) [இந்த்ரகொவ: இந்த்ர-இந்திரனைத் தெய்வமாகவுடைய கார். கொவ - பாதுகாப்பு. கார்காலத் துண்டாவதென்பது பொருள். இந்த்ர-மேலான. ஹொ - பிரபை. வ - விருத்திசெய்தல்.]

இந்திரசத்தி-இந்திராணி. [இந்த்ரஶக்தி.]

இந்திரசாபம் — 1. இந்திரனுடையவில். 2. வானவில். 'தாலந்தனில் வந்ததொரிந்திர சாபமென்ன' (அரிச். நாட்டு. கo.) [இந்த்ரசாப.] இவ்வானவில்லின் றோற்றம் தேவர்களின்றோற்றத்திற் குவமைகூறப்படும். (மணிமே.)

இந்திரசாரதி — இந்திரனுடைய தேர்ப்பாகன். (இவன்பெயர் மாதலி.) [இந்த்ர ஸாரயி; இந்த்ர; ஸாரயி-தேர்ப்பாகன்.]

இந்திரசாலம்—1. அறுபத்துநான்குகலைஞானங்களுளொன்று; அஃது, அற்புதங்களைக் காட்டுகிறேனென்று செய்யுங் கண்கட்டிவித்தையைக்கூறுநூல். 2. ஏய்ப்பு. 3. கண்கட்டிவித்தை; அஃது, இல்லாததொன்றை யுள்ளதுபோற்காட்டும் வித்தை. 'அதிலாசையொழிந்தாரிந்திரசாலமெனு' (பாரத. நச்சு. கக.) [இந்த்ரஜாலு: இந்த்ர - ஞானேந்திரியம். ஜாலு - வலை.]

இந்திரசாலி—1. அழிஞ்சில். (மலை) 2. இந்திரசாலவித்தைக்காரன்.

இந்திரசாலிகன் — இந்திரசாலவித்தைக்காரன். [இந்த்ரஜாலிகஃ.]

இந்திரசாவருணி—பதினான்காவது மநு. [இந்த்ரஸாவணி.]

இந்திரசித்து-1. இராவணனுடைய மூத்த மகனாகிய ஓரரக்கன். 2. கருடன். 3. திருட்டினன். [இந்த்ரஜித்.]

இந்திரசிற்பம்—சிற்பநூலினொன்று. [இந்த்ரஶில்ப.]

இந்திரசிறப்பு—வைசுவதேவம். 'இந்திர சிறப்புச் செய்வோன் முன்னர்' (மணிமே. 11-88.)

இந்திரசுகந்தம்—நன்னாரி. (மலை)

இந்திரசுரசம்—நொச்சில்.

இந்திரசேநன்-1. அருச்சுனன்பேரனாகிய பரீக்ஷித்துமகாராசாவின்பிள்ளைக ளறுவரில் நான்காமகன். (மகாபாரத. ஆதி. கச. அத்.) 2. தருமன்வேலைக்காரரில் ஒருவன்.

இந்திரஞாலம் — 1. இந்திரசாலவித்தை. 'இந்திர ஞால விடர்ப்பிற வித்துய ரேகுவதாகாதே' (திருவாச. திருப்படை. ந.) 2. சூரபன்மன் வரத்தாற்பெற்றுக்கொண்ட ஒருதேர். 'அவ்வண்டப்பரப்பனைத்துமேகும் வண்ணத்-திண்டிறல்பெற் றிடுகின்ற விந்திர ஞாலமதென்னுந் தேருநல்கி' (கந்தபு. வரம்பெறு. உக.)

இந்திரதநு — வானவில். 'இந்திரதநுவென விலங்கக மூடுத்து' (மணி. 28. 22)

இந்திரதநுப்புடம்-பரிவேடபுடத்தை மண்டலவிராசியிற் கொண்டுநின்றநிலை. (விதாக. குணகுண. ருச.) [ஐந்த்ர; யநுஸ்; ஸ்புட;]

இந்திரதிசை—கிழக்கு. (திவா) [ஐந்த்ர திஶா.]

இந்திரதிரு—மருதமரம்.

இந்திரதிருவன்-இக்திரனைப்போற் செல்வமுடையவன். 'இக்திரதிருவன் சென்றினிதேறலும்' (மணிமே. 19, 116)

இந்திரநகரி-தணிகைநகரம். "இந்திரற்குவரமளித் திடலா லிந்திர நகரி" (தணிகை. புராணவர. சூ௦.) [ஐந்த்ர நகரீ.]

இந்திரநீலசைலம்-இக்திரநீலமலை. 'இக்திர நீலசயிலத்தின்' (பாரத. புட்ப. எ.)[ஐந்த்ர நீலஶைல.]

இந்திரநீலநிலநலம்—பத்மவொளிபாதாளத்துக்கும், அதற்குமேல் இடைவெளிக்கும் மேலாகவிருக்கிற ஒரு பாதாளம். (சிவதரு. கோபுர. உஅ. உரை.)

இந்திரநீலம்-நீலரத்நம். "இந்திர நீலத்தாலொரு - திறலரி யணையினைச் சிறப்பிற் செய்தனன்" (கந்தபு. வரைபுனை. உ௦.)

இந்திரப்பிரகாணம்—1. இடியேறு. 2. ததீசியின் முதுகெலும்பினாலாய வச்சிராயுதம். [ஐந்த்ர ப்ரஹாண; ப்ரஹாண - மேலாகக்கொள்ளப்பட்டது, அடித்தல், ஆயுதம்].

இந்திரப்பிரஸ்தம் — பாண்டவர்களுடைய ராஜதானிநகரம். [ஐந்த்ர ப்ரஸ்த.]

இந்திரப்பிரியம் — பொதியமலையிலுண்டான மஞ்சணிறமுள்ள சந்தனம். [ஐந்த்ர ப்ரிய.]

இந்திரபதம் — இந்திரனுடையவுலகம், சுவர்க்கம். [ஐந்த்ர பத.]

இந்திரபதவி — இந்திரனுயிருக்கும் நிலை.

இந்திரபம் — 1. பாலை. 2. வெட்பாலை. (மலை) [இது கார்காலத்திற் செழிப்படைவது.]

இந்திரபலம்—வெட்பாலையரிசி.

இந்திரபாஷாணம் — வைப்புப் பாஷாண முப்பத்திரண்டினென்று.[ஐந்த்ர பாஷாண]

இந்திரபுட்பம்— } வெண்டோன்றி.(மலை)
இந்திரபுட்பி— }

இந்திரபுட்பிகை — வெண்டோன்றிப் பூண்டு. [ஐந்த்ர புஷ்பிகா.]

இந்திரபுட்பை—வெண்டோன்றிப்பூண்டு. [ஐந்த்ர புஷ்பா.]

இந்திரபுரி — அமராவதி. "இந்திரபுரியுமிந்திரப்பிரத்தமும்" (பாரத. இந்திரப்பிரத்த. உச.) [ஐந்த்ர புரீ.]

இந்திரபுரோகிதன் — தேவகுருவாகிய வியாழன். 'இந்திர புரோகித னியம்புமொரு நூலின்' (சி. சி. பர. உலோகாயத. க.) [ஐந்த்ர புரோஹித.]

இந்திரம்—1. இரா. 2. கடப்பமரம். 3. சம்புத்தீவின் நவகண்டங்களுள் ஒன்று. 4. சிற்பநூன்முப்பத்திரண்டி னொன்று. 5. இந்திரியம். 'இந்திரத்தை யினிதாக வீந்தார் போலும்' (தேவா. 721. 8.) 6. தேகத்தினுள் வசிக்குஞ் சித்து. 7. பரதகண்டத்தி லுள்ள எட்டுத்தீவுகளு ளொன்று. 'இந்திரமே சேருகமே தாமிரமே யெழிற்கபத்தி - சந்துமலி நாகமதே சவுமியமே காந்திருவ - மந்தமலி வாருணமே யெனவெட்டு மதித்திடுக' (சிவதரு. கஉ: சசூ.) 8. மாயம். 9. மேன்மை, உசிதம். 'இந்திரத்திரு மாமுடியேந்தியே' (கந்தபு. பட்டா. சூ.) 10. மேலான அதிகாரம். 11. வண்டு. [ஐந்த்ர.]

இந்திரமகம் — 1. கார்காலத்திலே தேவேந்திரனது மகிழ்ச்சியின்பொருட்டுச் செய்யப்படுந் திருவிழா. [ஐந்த்ர மஹ.] 2. தேவேந்திரனுடைய மகிழ்ச்சியின்பொருட்டுக் கார்காலத்திலே செய்யப்படும் ஒரு யாகம். [ஐந்த்ர மஹ.]

இந்திரமாமுனி—சைநதீர்த்தங்கரரிலொருவர். (த. நி. போ. ௨எஎ.)

இந்திரயாநி—இந்திராணி. [ஐந்த்ர-இந்திரன். ஜாநி - மனைவி.]

இந்திரர்—1. மேலான வதிகார முடையோர். 'இந்திர ராகிப் பார்மே லின்பமுற்றினிது மேவி' (கந்தபு. கடவுள்வா. ச.) 2. தேவர். (புறநா. 182).

இந்திரலுத்தம் — பயிர்முதலிய பச்சிலைகளை எரித்து ஒன்றுமில்லாமற் செய்யும் ஒருவகை எரிப்பூச்சி. (சிவராட். உகூ.)

இந்திரலோகம்—1. சுவர்க்கம். 2. பரமபதம். 'இந்திரலோகமாளு மச்சுவை' (திவ். திருமாலை. 2. வ்யா.)

இந்திரலோகதம் — இந்திரஞாலத்தேர். (கந்தபு. வரம். உக. உரை.) [ஐந்த்ரலொகரத.]

இந்திரவம்—1. கருங்குவளை. 2. வெட்பாலை.

இந்திரவல்லி—1. கொற்றான். 2. முடைக்கொற்றான். (தைல. தைலவ. கூ.) 3. பாரிசாதக்கொடி. 4. பிரண்டைக்கொடி. (தைல.)[ஐந்த்ரவல்லீ.] 5. தளிர்.

இந்திரவாசம்—செய்தல். (மலை) [ஐந்த்ரவாஸ.]

இந்திரவாமம்—செய்தல். (மலை) [ஐந்த்ரவாம.]

இந்திரவாருணி-பேய்க்கொம்மட்டி. (மலை) [ஐந்த்ரவாருணி:] இந்திரனுக்கும் வருணனுக்கும் இட்டமானபூண்டு என்றபடி.

இந்திரவாருணிகை— பேய்க்கொம்மட்டிப்பூண்டு. [ஐந்த்ரவாருணிகா.]

இந்திரவிகாரம்—காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த ஒரு பௌத்தப்பள்ளி. (மணி. 26.55)

இந்திரவிகூட்டம்-சந்திரனுஞ் சூரியனுங் கூடியிருக்குங் காலம், அமாவாசியென்னுந் திதி. (சூ. நிகண். க: அ௬.) [இந்து; ரவி]

இந்திரவியாகரணம் — இந்திரன் செய்த ஸம்ஸ்கிருதபாஷையி னிலக்கணம். [ஐந்த்ரவ்யாகரண.]

இந்திரவில்—வானவில். (திவா.)

இந்திரவிழவு— } இந்திரனைக்குறித் துச்
இந்திரவிழா— } செய்யும் ஒரு திருநாள். (சிலப்பதி. 67.)

இந்திரன்–1. அரசன். 'இந்திரனிருக்கை.' (இராமா. கோலங். க.) 2. கடவுள். 3. கேட்டைநாள். 'இரவிதன் வாரத்துப் புட்பனை யிந்திர னிந்து' (விதான. குணகுண. க.) 4. சுவர்க்கலோகத்தரசனும் கீழ்த்திசைப்பாலகனுமாகிய ஒரு தேவன். 5. தலைவன். 'உயர்வானவரி னிந்திரனீ' (கூர்மபு. திருக்கல். கூஉ.) 6. மிருகசீரிடநாள். (திவா) 7. மேலான அதிகாரமுடையோன். 'இந்திராகிப் பார்மே லின்பமுற் றினிது மேவி' (கந்தபு. கடவுள். ௬.) [இந்த்ர.]

இந்திரன்மைந்தன்—1. அருச்சுனன். 2. குரக்கரசனாகிய வாலி. 3. சயந்தன்.

இந்திரன்றிசை — கிழக்கு. 'அருணனிந்திரன்றிசை யணுகினன்' (திருவாச. 20. 2.)

இந்திராள்—கேட்டை. (சூ. நிகண். க: எ௬.)

இந்திரவிருக்கை — 1. அரசனிருக்கு மாசனம். 'தேவியர் மருங்குசூழ விந்திர னிருக்கை சேர்ந்த' (இராமா. கோலங். க.) 2. இந்திராசனம்.

இந்திராணி-1. பொன்னாங்காணி. (தைல. தைலவ. ௬௬.) 2. அமராவதி.

இந்திரா—இலக்குமி. 'இந்திரா பதியவ் விந்திரன் பெயரா லிந்திரப் பிரத்தமென் றிட்டான்'(பாரத. இந்திரப்பி. க௬.)[இந்திரா.]

இந்திராட்சி—பார்வதி. [ஐந்த்ராக்ஷீ.]

இந்திராணி — 1. இந்திரன்மனைவி. 2. சத்தமாதரிலொருத்தி. 3. நொச்சி. (தைல. தைலவ. ௬௬.) 4. நொச்சிவேர். 'மெருகு பலபாடமுண்டனி நீவியிந்திராணி' (தைல. தைலவ. கூக.) 5. நொச்சிவேர்ப்பட்டை. (தைல. தைலவ. சஉ.) [ஐந்த்ராணீ.]

இந்திராணிகாணி — பொன்னாங்காணி. (தைல. தைலவ. கச.)

இந்திராணிகை-நொச்சி. [ஐந்த்ராணிகா.]

இந்திராணிப்பூ — கையணியினொருறுப்பு.

இந்திராநுசன்—இந்திரன் தம்பி. அவர்; அதிதிமகனாகப் பிறந்து வாமநாவதாரமெடுத்த விஷ்ணுமூர்த்தி. [இந்த்ராநுஜ: அநுஜ - தம்பி.]

இந்திராபதி—விட்டுணு.(பாரத.இந்திரப். 14.) [இந்த்ராவதி: இந்த்ரா; வதி-தலைவன்.]

இந்திராயுதம் — 1. கருங்கட்குதிரை. 2. வச்சிராயுதம். 3. வானவில். [இந்த்ராயுத.]

இந்திராரி—1. அசுரன். 2. இராக்கதன். [இந்த்ராரி: இந்த்ர; அரி - பகைவன்.]

இந்திராலயம் — காஞ்சிநகரிலுள்ள இருபதுசிவாலயங்களு ளொன்று; அதிலே இந்திரன் சிவனைப் பூசித்து இந்திரபதம் பெற்றானென்பர். (கந்தபு. நகர. அ௬. உரை.) [இந்த்ராலய.]

இந்திராவரசன் — விட்டுணு. [இந்த்ராவரஜ: இந்த்ர; அவரஜ-பின்பிறந்தோன்.]

இந்திரி—1. காந்தம். 2. கிழக்கு. 'வந்தனன் வந்தன னென்ற வாசகம்-இந்திரி முதற்றிசை யெட்டுங் கேட்டன' (கம்பராமா. வாலிவதை. க.) 3. நன்னாரி. 4. இச்சி.

இந்திரியக்காட்சி — விடயங்களை நோக்கியோடு மறிவாகிய ஆன்மசிற்சத்தி, ஞானேந்திரியங் கருவியாக, ரூபமுதலிய வஸ்துக்களை யறியுமறிவு. 'உயிரினோ டுணர்வு வாயி லொளியுரு வாதி பற்றிச் - செயிருறு விகற்ப மின்றித் தெரிவதிந் திரியக் காட்சி' (சி. சி. அளவை. ௬.)

இந்திரியக்கிராமம் — பஞ்சேந்திரியக்கூட்டம். [இந்த்ரியக்ராம: இந்த்ரிய; க்ராம - கூட்டம்.]

இந்திரியக்கோடி—சுண்டி.

இந்திரியகோசரம் — புலனுக்கெட்டியது. [இந்த்ரியகோசர: இந்த்ரிய; கோசர - விடயம்.]

இந்திரியசமட்டி—இந்திரியங்களினது கூட்டத்திலே வியாபகமாயிருப்பது. (சி.சி.வ-று.) [இந்த்ரிய; ஸமஷ்டி.]

இந்திரியசாபேட்சப்பிரத்தியட்சம் — ஞானேந்திரியத்துவாரா வஸ்துக்களையறியுமறிவு. (சி. சி. அளவை. க. சிவாக். உரை.) [இந்த்ரிய; ஸாபேக்ஷ; ப்ரத்யக்ஷ: ஸாபேக்ஷ-கூடினது.]

இந்திரியசாபேட்சம்-இந்திரியங்களினுதவியால் விடயங்களையறிவது. (சி-வி. ஞான. ௪. உரை.) [இந்த்ரியஸாபேக்ஷ.]

இந்திரியசைதந்நியர் — இந்திரிய சைதந்நியவாதிகள். (த. நி. போ. ௪௫.) [இந்த்ரிய சைதந்ய.]

இந்திரியசைதந்நியவாதி— இந்திரியங்களே ஆன்மாவென்று வாதிக்கின்றவன். [இந்த்ரிய சைதந்யவாதீ.]

இந்திரியஞானம் — ஞானேந்திரியத்தினாற் பெறு மறிவு. 'அயர்விலிந் திரிய ஞான மைம்புலன் சார்ந்துயிர்க்கண் - மயர்வற வந்த ஞானம்' (சி. சி. அளவை. ௬.) [இந்த்ரிய; ஜ்ஞாந.]

இந்திரியத்துவாரம்—பொறிவாயில்.

இந்திரியதிருசியதை — இந்திரியத்தா லறியப்படுந்தன்மை. (வி-ணி. ௨௫௨.) [இந்த்ரிய; த்ருஶ்யதா - காணப்படுதல்.]

இந்திரியநிக்கிரகம் — பொறியடக்கம். [இந்த்ரியநிக்ரஹ: நிக்ரஹ - தடுத்தல்.]

இந்திரியநிரபேட்சம்—எப்போதும் பந்தமில்லாத சிற்சத்தியானது சுவபாவமாகச் சகலபதார்த்தங்களிலும் சேர்ந் தறிவது.] [இந்த்ரியநிரபேக்ஷ:]

இந்திரியநுகர்ச்சி—ஐம்புலநுகர்ச்சி.

இந்திரியப்பிரத்தியட்சம் – பஞ்சேந்திரியக்காட்சி. [இந்த்ரிய; ப்ரத்யக்ஷ- காட்சி.]

இந்திரியபுவநம்—ஞானேந்திரிய கன்மேந்திரியதத்துவங்களிலேயிருக்கும் புவநங்கள். (த.நி. போ. ௪௫. பக்.) [இந்த்ரியபுவந:]

இந்திரியபோகம்–இந்திரியங்களானுகரும் போகம். [இந்த்ரிய; போக -அநுபவம்.]

இந்திரியம்–1. அறிதலுக்கு அல்லது செய்தலுக்காகிய ஆன்மசிற்சத்திக் கருவி; அது: ஞானேந்திரியம், கன்மேந்திரியம், அந்தரிந்திரியம் என மூவகைப்படும். 2. இந்திரசம்பந்தமுடையது. 3. இந்திரனாற்செய்யப்பட்டது. 4. சுக்கிலம். (பிங்.) [1, 2. இந்த்ரிய.]

இந்திரியவம் — வெட்பாலையரிசி. 'நீர்ச்சித்திரம் போகி யாணந் தந்தி பீசமிந் திரியவஞ்சரம் வகைக்கு' (தைல. தைலவ. ௧௧௬.) [இந்த்ரியவ.]

இந்திரியவிப்பிரதிபத்தி—விபரீதக்காட்சி. [இந்த்ரிய; விப்ரதிபத்தி - திரிவு.]

இந்திரியாகோசரம் — இந்திரியங்களினால் அறியக்கூடாதது. [இந்த்ரியாகோசர: அகோசர - விஷயமாகாமை.]

இந்திரியாசங்கம் — இந்திரியவிஷயங்களிற் பற்றுறிருத்தல். [இந்த்ரியாஸங்க: இந்த்ரிய; அஸங்க-கூடாமை.]

இந்திரியாந்தக்கரணநிரபேட்சப்பிரத்தியட்சம்—இந்திரியங்களோடும் அந்தக்கரணங்களோடுங் கூடாம லறியு மறிவு. அஃது, ஒருகாலத்தும் மறைப்பில்லாமலிருக்கிற ஈசுவரனிற்சத்தியினாலே ஆன்மா சிவானந்தத்தை அநந்நியமாக அநுபவிப்பது. (சி. சி. அளவை. க. சிவாக்.) [இந்த்ரிய; அந்த:கரண; நிரபேக்ஷ; ப்ரத்யக்ஷ.]

இந்திரியாயதநம்—உடல். [இந்த்ரியாயதந: இந்த்ரிய; ஆயதநம்-உறைவிடம்.]

இந்திரியார்த்தசந்நிகர்ஷம் — இந்திரியத்திற்கும் பொருளிற்கு முண்டாகுஞ் சம்பந்தம். (தர்க்கபா. கஉ.) [இதனாலுண்டாகு மறிவு பிரத்தியட்சம்.]

இந்திரியார்த்தம் — ஞானேந்திரியத்துக்கான விடயம். [இந்த்ரியார்த்த: அர்த்த-விஷயம்.]

இந்திரியான்மஞானம் — ஞானேந்திரியமே ஆன்மாவென்றுகொள்ளுகிற அறிவு. (சி. சி. அ: கஉ. ஞானப்.) [இந்த்ரிய: ஆத்ம; ஜ்ஞாநம்.]

இந்திரியான்மவாதி — 1. இந்திரியபுவகப்பேற்றினை முத்தியென்று சொல்லுகிறவன். (கூர்மபு. பலவ. கங.) 2. ஞானேந்திரியமே ஆன்மாவென வாதிக்கிறவன். (சி. சி. ங: ங. சிவாக்.) [இந்த்ரியாத்மவாதீ.]

இந்திரியான்மைகதேசவாதி— பஞ்சேந்திரியங்களில் ஒவ்வொன்றும் ஓரான்மாவென வாதிக்கிறவன். (சி. சி. ங: ச. சிவாக்.) [இந்த்ரிய; ஆத்ம; ஏகதேஶ; வாதீ.]

இந்திரோகம்— } வெட்பாலை.
இந்திரோபம்— }

இந்திரோயம்—பாவட்டை. (மலை.)

இந்திரை — 1. அரிதாரம். 2. இந்திரன் மனைவியாகிய இந்திராணி. 'இந்திரையிந்திரனெண்ணிறவத்தோர்' (சேதுபு.மங்கள.ங.) 3. இலக்குமி. 'இந்திரையினுமெழிலாள்' (அரிச்ச. பு. விவாக. சுo.) [இந்திரா.]

இந்திரைக்குமுந்நாள் — மூதேவி. (சூ. நிகண். க: ஙசு.)

இந்திரைகேள்வன்—திருமால். 'இந்திரைகேள்வனொடு-போமர்புரிந்தவெல்லை' (கந்த. திக்குவிசய. அக.)

இந்திவரம்—1. கருங்குவளை. 2. நெய்தற்கிழங்கு. (தைல.தைலவ.கஙடு.)[இந்தீவர.]

இந்தீவரம்— 1. கருங்குவளை. 'இந்தீவரவலரொக்குமிடற்றர்' (வெங்கைக்கோ.286.) 2. கருநெய்தல். (பிங்.) [இந்தீவர.]

இந்து—1. இந்துப்பு. (தைல. தைலவ. அரும்பத.) 2. எட்டி. 'இந்துசிரந்துடிசாயிருசந்திரு' (தைல. தைலவ. கஙு.) 3. கருப்பூரமரம். (மூ. அ.) 4. காடி. 5. கரி. 6. கௌரிபாஷாணம். (மூ. அ.) 7. சந்திரன். 'அருக்கனெச்சனிந்துவனல்' (திருவாச. 13. 4.) 8. சிந்துநதி. 9. பச்சைக்கருப்பூரம். 10. மிருகசீரிடம். (விதான. குணகுண. 1.) 11. யாகம். (நிருத்தம்.) 12. இந்துமதஸ்தன். [3,7,9,10. இந்து.]

இந்துகமலம்—1. வெண்டாமரை. (மலை) 2. வெள்ளாம்பல்.

இந்துகாந்தம்—சந்திரகாந்தக்கல். [இந்துகாந்த.]

இந்துசநகன்—1. அக்கினிதேவன். 2. அத்திரிமுனிவன்.

இந்துசிகாமணி—சிவன். (திருவாச. 49. 7.)

இந்துசேகரன்—சிவன். 'இந்துசேகரன் ஞானமும்' (பிரமோத்தர. பஞ்சாட். ரு.) [இந்துசேகர: சேகரம்-முடி.]

இந்துதலம்—சந்திரன்கலை. [இந்துதல: இந்து; தல-பிரிவு.]

இந்துதேசம் — சிந்துதேசம், பரதகண்டம்.

இந்துப்பு—1. ஒரு மருந்துச்சரக்கு. 2. பனிக்கூர்மை. 3. பூரத்தின்மித்துரு. 4.மதிக்கூர்மை. 5. மதியுப்பு.

இந்துபம்—மிருகசீரிடநாள். [இந்துப: இந்து; ப-நட்சத்திரம்.]

இந்துமதி — 1. அசனென்னும் அரசனுடைய மனைவி. இவள், விதர்ப்பராசன் சகோதரி. 'மழவில் பிறைக்கீழ் வைத்தன்ன

மடநோக் கிந்து மதியெனுமோ - ரழகைப் புதுப்பித் தழகூட்டி' (இரகு. மாலே. சஎ.) 2. பூரணை. [ஐநு꠶தீ:]

இந்துமராம்—கடம்பு. (மலே)

இந்துரத்திநம்—முத்து. [ஐநு꠶ரத்ந.]

இந்துரம் — எலி. [ஐநு꠶ர:]

இந்துரவிகூட்டம்—அமாவாசை.

இந்துரேகை— } சந்திரகலே. [ரெவா-

இந்துலேகை— } வரி.]

இந்துலோகரம் — வெள்ளி. [ஐநு꠶ லொஹக.]

இந்துவர்ரி — தண்லீர்விட்டான். (மலே)

இந்துழி—பெருங்காயம்.

இந்துள்—நெல்லி. (மலே)

இந்துளபம்—நெல்லி.

இந்துளம்—1. கடம்பு. (திருப்பு. 192.) 2. நெல்லிமரம்.

இந்துளி—நெல்லிமரம். (மலே)

இந்துறு—இலந்தை. (மலே)

இந்தோ—இதோ.

இந்தோளம் — 1. ஊசல். 2. ஓரிராகம். (பரத. ராக. 73.) [ஹிநொஉ.]

இந்நாள்–1. அண்ணியகாலம். 2. இன்று.

இநன் — 1. அத்தாள். 2. அதிபதி. 3. அரசன். 4. சந்திரன். 5. சூரியன். 6. தைரியவான். 7. வல்லபமுடையோன். [இந.]

இப்படி–1. இந்தப்பூமி. 2. இவ்வண்ணம். 'இப்படியி லிப்படிவம் யாவருள ரென்ன' (திருவாத. குதிரையிட்ட. கசு.)

இப்பந்தி—1. உலோபி. 2. பலவீனன். 3. பேடி. 4. வகைதெரியாதவன். 5. கலப்புச் சாதி. 6. சங்கடம்.

இப்பந்தியாடு—ஒருவகையாடு.

இப்பர் — மூன்றும் வருணத்தவராகிய வைசியரில் ஒருவகுப்பார். (சூ. நிகண். உ: உரு.)

இப்பாடு — இவ்விடம். 'இப்பாடேவந் தியம்பு' (திருவாச. 19. 6.)

இப்பால்—1. இந்தப்பக்கம், இந்த இடம். 'இப்பா லிவ்வா ரேமஞ்செய் திவனிப் பூத மினிதெழுப்ப' (பாரத. நச்சு. கரு.) 2. இனி, பின்பு. 'மகபதி யிருந்தன னிப்பான்-முன்னமேகிய வசமுகி' (கந்தபு. சூரனர. க.)

இப்பி–1. சங்கு. 2. சிப்பி. 'துறையிடை யுறங்கு மிப்பி' (இராமா. நாட்டு. சு.)

இப்புறம்—இப்பக்கம், இவ்விடம். 'இப் புற வுலகி லுள்ளார் யாவரும்' (கந்தபு. தேவகிரி. ங.)

இப்பை—இருப்பை.

இப்போது—இப்பொழுது. 'எப்போதோ தெரியாதே யிப்போதேதான்' (தாயு. ஆகார. ஙo.) [இ-இந்த. போது-பொழுது.]

இபங்நம்—புளிமா. (பிங்.)

இபபாலகன் — யானைப்பாகன். [இஹ வாஉக.]

இபபோதம்—பத்து வயதுடைய யானை. [இஹவொதம்.]

இபம்—1. மரக்கோடு, மரக்கிளை. 'இடம் படு கோட்டினனு மிபமுக நேர்தலானும்' (தணிகைப். நந்தியுப. எசு.) 2. யானை. 'சேனை யிபமுகமற்றுவிழுவன' (பாரத. ஆறும்போ. உஎ.) [இஹ.]

இபாந்து—கல்லுப்பு.

இபாரி—சிங்கம். [இஹாரி: இஹ. யானை. அரி-பகை.]

இபி—பெண்யானை. [இஹி.]

இபேரமம்—பதினன்குவயதுள்ள யானை.

இம்பர்—1. இவ்விடம். 'மந்தணமுரைக்க லுற்று-லிம்பர்மற் றியாது சொல்ல வினை ஞரை யழைத்த தென்றான்' (பாரத. கிருட் டிண. களரு.) 2. இவ்வுலகத்துள்ளார். 3. இவ்வுலகம். 'இம்பர்வாரியெழுந்ததுபோன்ற தே' (இராமா. ஆற்று. ங.) 4. பின். 'நெட் டெழுத் திம்ப ரொற்றுமிகத் தோன்றும்' (தொல். எழுத்ததி. கககு. நச்சி.)

இம்பரார் — இவ்வுலகத்தார். 'இம்பரார் நடுங்கினர்' (பாரத. இரண்டாம்போ. ச.)

இம்பரும்பர்–1. பிராமணர். 'இம்ப ரும்பர் தங் கூலம் வவ்விடார்' (சேதுபு. கவிசம்பு. க.) 2. இவ்விடமும் மேலிடமுமாம்.

இம்பி—கருக்கிணை. (மூ. அ.)

இம்பிதம்—மிளகு.

இம்பில்—ஒரு விளையாட்டு. (பாடுதுறை. 109)

இம்பிலம்—மிளகு.

இம்பூறல்—சாயவேர். [இஃது, "இரும் பூறல்" என்பதன் மரூஉ.]

இம்புறச்சக்களத்தி—ஒரு பூண்டு.

இம்மடி—யானை.

இம்மி—1. அற்பம். 2. ஒன்றென்னு மெண்ணின் பத்திலட்சத்தெழுபத்தையாயிரத்திருநூற்றிலொருபங்காகிய ஒரு சிற்றெண். (ஆறுமுகநாவலர் பாலபாடம்.) 3. நுண்மை. 4. புலம். 5. பொன்மை. 6. மத்தங்காய்ப்புல்லரிசி. 'இம்மி யரிசித் துணையானும் வைகலு-நும்மி லியைவ கொடுத்துண்மின்' (நாலடி. ஈகை. ௪.) 7. அணு. 8. ஒரு சிறுநிறை. (சீவக. 302.)

இம்மிக்கணக்கு—கீழ்வாயிலக்கக்கணக்கு.

இம்மெனல் — 1. இம்மெனு மநுகரணவோசை. 'இம்மெனப் - பெய்ய வெழிலி முழக்குந் திசையெல்லாம்' (நாலடி. 392.) 2. விரைவையுணர்த்து மொரு குறிப்புச்சொல். 'ஏறுடை முதல்வன் மைந்த னிம்மென வங்கட் சென்றான்' (கந்தபு. சூரப. வதை. உசரு.)

இம்மை—1. இந்தவுலகம். 'இம்மையேயிரெட்டாண்டெய்தி' (சி. சி. அ: கஉ.) 2. இப்பிறப்பு. 'இம்மை யம்மை மறுமை யென்னவிசைந்த மாமறை கூறிய-மும்மை யுந்தெளிவுற்ற' (அரிச்ச. பு. இந்திர. ௬.) 3. இம்மையின்பம். (ஆகுபெயர்.) 'இன்மை யெனவொரு பாவி மறுமையு - மிம்மையு மின்றிவரும்' (வள். ௧0௪உ.)

இமகான்—இமகிரணன்.

இமகிரணன்—சந்திரன். 'சிலரருக்க னிமகிரணன் வருண னுனோர்'(ஞானவா. தாசூர. உஅ.)

இமகிரி—இமயமலை. [ஹிமகிரி: ஹிம-பனி. கிரி - மலை.]

இமசலம் — பனிநீர். 'இமசலந்தனிற் குழைத்தசெஞ் சாந்தமும்' (மாறன. உதா. செய். 560.)

இமசாநு—1. இமயமலை. 2. இமயமலையின் மேற்பரப்பு. [ஹிமஸாநு: ஹிம-பனி. ஸாநு - மலைமேற்பக்கம்.]

இமதம்—பெருக்காயம்.

இமப்பிரத்தம்—இமயமலை. [ஹிமப்ரஸ்த: ஹிம - பனி. ப்ரஸ்த - இருப்பிடம்.]

இமப்பிரபை— } ஏழ்நரகவட்டத்
இமப்பிரவை— } தொன்று; அது: குளிர்மிகுந்தவிடம். [ஹிமப்ரபா.]

இமபடி — சூரியன். [ஹிமபதி: ஹிம - பனி. பதி - மறைப்பது.]

இமம் — 1. இமயமலை. 2. இரவு. 3. உறைந்தபனி. 4. குளிர். 5. சந்தநம். 6. பனி. 'இமஞ்சூழ்மலையும்' (திவ். இயற். 3. 98.) 7. பொன். 8. முத்து. [ஹிம.]

இமயகிரி—யோனி.

இமயம் — 1. ஒரு குலமலை. 'போயினனிமயத்தில்' (கந்தபு. தவங்கா. ௩.) 2. மைநாகபருப்பதம். 3. மந்தரமலை. (சீவக. 963.) 4. மேரு. (கலித். 38.) 5. பொன். 'இமயம் புனைமன்றில்' (குமர. பிர. சிதம்பரச்செய். 23.) [ஹிமயம்: ஹிம - பனி. ய-அடைதல்.]

இமயவதி—பார்வதி. (பிங்.)

இமயவரம்பன்—ஒரு சேரன். (பதிற்றுப். 20. பதிகம்.)

இமயவல்லி — பார்வதி. 'கற்புறு மிமயவல்லி' (கந்தபு. நகரப். ௧0௪.)

இமயவில்—1. இமயமலையிடத்துப் பிறந்த மூங்கிலாகிய வில். 'இமயவில் வாங்கிய வீர்ஞ்சடை யந்தணன்'(கலித். ௩அ.) 2. மேருமலையாகிய வில். (சிந்தா. குணமாலையா. ௧௧௩.) [நச்சினார்க்கினியர், இமயம், மலைகட்காசாதவின் அதன்பெயர் எனமலைகட்கும் பெயராகுமெனக் கூறுவர்.]

இமயவில்லி—சிவன். 'எழுந்தரு ளிமயவில்லியைக் காண விண்விழி பனிப்ப' (சீகாழி. சேட. ௨எ.) [மேருவை வில்லாகவளைத்தவ னென்றபடி.]

இமலம்—மாமஞ்சள். (மலை.)

இமவத்—1. இமயமலை. 2. பனியையுடையது.

இமவந்தம் — இமயமலை. 'இமவந்தந் தொடங்கி யிருங்கடலளவும்' (திவ். பெரியாழ். 4. 7. 4.) [பனியையுடையதென்றபடி.]

இமவற்சுதன்—மைநாகபருப்பதம். [ஹிமவத் - இமயம். ஸுத - பிள்ளை.]

இமவற்சுதை—1. கங்காநதி. 2. பார்வதிதேவி. [ஸுதா - மகள்.]

இமவாலுகை—பச்சைக்கருப்பூரம். (தைல. தைலவ. ௩௪.) [ஹிமவாலுகா.]

இமவான்—1. இமயமலை. 2. மலையரசன். 'கயிலா யருக்கன் றிமவா னளித்த கனங் குழையே' (அபிராமி. ௬௬.)

இமாசலம்—இமயமலை. [ஹிமாசலம்.]

இமாசலை — உமாதேவி. 'என்றிமாசலை வரனுவந் தளித்தனள்' (உபதேச. திருமால். ௩௩.)

இமாலயம்—இமயமலை. [ஹிமாலய.]

இமிசித்தல்—துன்புறுத்தல்.

இமிசை — 1. கொல்லுதல். 2. தீங்கு. 'பொய்யிலா ரிமிசை செய்யார்' (நல். பாரத. ஆசார. ௩௦.) 3. வருத்துகை. [ஹிம்ஸா.]

இமிர்தல்—1. ஒலித்தல். 'சுரும்பிமிர்ந்திம் மென' (கலித். 119. 8.) 2. முரிதல். 3. மொய்த்தல். 4. ஊதுதல். 'கைவைத்திமிர்பு குழல்' (பரிபா. 19. 41.)

இமில்—எருத்துத்திமில். 'துளங்கிமி னல் லேறு' (மலைபடு. ௩௩௦.)

இமிழ் — 1. இமிழென்னேவலும், தெரி நிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. இனிமை. 3. ஒலி. 'இமிழ்கொண்ட' (மலைபடு. ௨௬௬.) 4. கயிறு. (சிந்தா.) 5. பறை. 6. பந்தம். 'இமிழ்கொளுமன்பு' (திருவானைக். வரங்கொள். 20.)

இமிழ்த்தல்—1. ஒலித்தல். (பிங்.) 2. கட்டல். 'இரண்டுட னிமிழ்க்கொளீஇ' (சீவக. 1835.)

இமிழ்தல்—1. இனிதாதல். 2. ஒலித்தல். 'புள்ளின மிமிழும் புகழ்சால் விளைவயல்'(புறநா. கடு.) 3. கக்குதல். 4. முழங்கல். 'அக விரு வானத் திமிழ்ந்தினி திசைப்ப'(மதுரைக்கா. ௨௬௭.) 5. யாழொலித்தல். (பிங்.) 6. தழைத்தல். 'மருதிமிழ்ந் தோங்கிய' (பதிற்றுப். 23.) 7. கட்டுதல். 'ஆணையினு விமிழ்ந் திடப்பட்டு' (விநாயகபு. 17. 14.)

இமிழிசை—இயமரம், ஒருவகைப் பறை. 'கோடுமுழங் கிமிழிசை யெடுப்பும்' (பதிற்றுப். ௫௦.)

இமை—1. அற்பம். 2. இமைத்தல். [முதனிலைத் தொழிற்பெயர்.] 3. இமை யென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 4. ஒரு மாத்திரைப் பொழுது; அஃது: இயற்கைமகனது கண்ணிமையிரண்டும் அவனது குறிப்பின்றி ஒருகாற் கூடிநீங்கின காலக்கழிவு. 'கண்ணிமை நொடியென வவ்வே மாத்திரை-நுண்ணிதி னுணர்ந்தோர் கண்ட வாறே' (தொல். எழுத். எ. நச்சி.) 5. கண்விளிம்பு. (சூ. நிகண். ௨. ௬௬.) 6. கரடி. 7. மயில். (அக.நி.)

இமைக்குரு — இமையிலுண்டாகும் சிறு கட்டி.

இமைக்குழிவு—கண்ணிமையில் வரும் ஒரு வகைக் குத்துநோய்.

இமைகொட்டல்—இமைத்தல்.

இமைத்தல்—1. ஒளிசெய்தல். 'அகலா மீனி னவிர்வன விமைப்ப' (திருமுரு. அஅ.) 2. கண்களி னிதழ்களிரண்டினையும் குவித்தல். 3. கண்ணிமைத்தல். (சிந்தா. முத்தி. ௬௬.) 4. சுருங்குதல். 'இமையாக் கருங்கண் முலைதாங்கி' (கூர்மபு. அந்தகா. ௬௬௬.) 5. விளங்குதல். (ஐங்குறு.)

இமைப்பளவு — கண்ணிமைப்பொழுது. 'இமைப்பளவுந் துன்பமொன் றில்லாத' (சூளா. துற. 221)

இமைப்பிலர்—தேவர். 'பரந்திடு நின்னை யிமைப்பி லிமைப்பிலர் பதம்' (சேதுபு. தேவிபுர. ௫அ.)

இமைப்பு — 1. இமைத்தல். 'அந்தரஞ் சந்திராதித்த-ரிமைப்பிலர்திரிவர்' (இராமா. நகர. ௩.) 2. இமைப்பொழுது. 'இமைப் பினிற் றொலைக்க வுன்னின்-மூரலாலடுவன்' (கந்தபு. சூரபன்மன்வதை. ௭௪.) 3. ஒளி, விளக்கம். 'மின்னுறழிமைப்பிற்சென்னிப் பொறப்ப' (திருமுரு. அ௫.)

இமைப்பொழுது — கணப்பொழுது. 'இமைப்பொழுது மென்னெஞ்சினீங்காதான் றாள்வாழ்க' (திருவாச. 1. 2.)

இமைபிறத்தல்—இமைத்தல். 'உம்ப ரிமை பிறப்ப' (பரிபா. 17. 31.)

இமைபொருந்துதல்—நித்திரையடைதல். (திவ். நாய்ச். 5. 4.)

இமையம் — இமயமலை. 'என்றுமிமயமும்' (கந்தபு. பார்ப்பதி. ௧௩.) [போலி.]

இமையவர்—வானோர். 'எண்டிசையும் வணங்கின்ற விமையவர்' (பாரத. மணிமான். ௫௧.)

இமையவர்வேந்தன்—இந்திரன். [இமையவர் - தேவர். வேந்தன் - அரசன்.]

இமையாடுதல்—கண்கொட்டுதல்.

இமையார்—தேவர். 'இமையாரின் வாழி நலம்' (வள். கூ0௬.) [இமைத்தலில்லாதார் என்றபடி.]

இமையிலி—கருடன். (பிங்.)

இமையோர் — இமையவர். (தொல். பொருள். 248.)

இயக்கம் — 1. அசைதல், இயங்குதல். 'என்பியக்கங் கண்டும் புறந்தாரார்' (நீதிநெறி. அஎ.) 2. இந்திரன் மண்டபம். 3. இயக்க குலத்தார். 4. செய்குதல். 5. பாக்கியம். 6. பிரகாசம். 7. பெருமை. (திவா.) 8. பலம். 9. போதல். 10. மலசலங்கள். 'ஏரியக்க- நடைவழி சாம்ப ரானில நீர் நள்ளுற விடுத்தல்' (காஞ்சிப். ஒழுக்க. ௪௨.) 11. மிகுதி. 12. வடதிசை. 13. வழி. 'வெயிற் புறந் தரூஉ மின்ன லியக்கத்து' (மலைபடு. ௩௭௪.) 14. குறிப்பு. 'கண்ணிணையியக்கம். (மணி. 25. 8.) 15. இசைப்பாட்டுவகை. (சிலப். 3 67.) 16. சுருதி. (சிலப். 8. 42.)

இயக்கர்—கந்தருவர். 'இயக்கர்தங் குலத் தனான்' (இராமா. தாடகை. உ௬.) [இவர்கள் பதினெட்டுக் கணங்களு ளொருவகையார்.]

இயக்கர்கோமான்— } குபேரன். (சூடா.)
இயக்கர்வேந்தன் — } (திவா.)

இயக்கல் — 1. செலுத்தல். 'அநிலனையு மியக்கி' (சிவப்பிர. உ: உ௫.) 2. தொழிற் படுத்தல். 'குரலா - வீடுதந் திரியியக்கியும்' (கந்தபு. வள்ளி. உகக.)

இயக்கன் — 1. ஒல்லையூர்தந்த பூதப் பாண்டியனுடைய நல்பருள் ஒருவன். 'வெஞ்சின வியக்கனும்' (புறநா. எக.) 2. கந்தருவன். 3. நாய். (நிகண். கக: ௩0உ.) 4. குபேரன். (திவா.) [யக் - வணக்கம்.]

இயக்காதிபர்புவநம்-பிரதிட்டாகலையிலே வாயுதத்துவத்திலிருக்கும் ஒரு புவநம். (சி. சி. அ:எ. மறை.) [யக்ஷ: ஜபிவ; ஹுவந.]

இயக்கி–1. ஆரியாங்கனை. (சிலப். அடைக் கல. கக௬.) 2. ஒலிப்பித்து எனப் பொருள் படும் ஒரு வினையெச்சம். 'கோடுவாய் வைத்துக் கொடுமணி யியக்கி' (திருமுரு. உ௪௬.) 3. கந்தருவப்பெண். 4. குபேரன் மனைவி. 5. தருமதேவதை. (சூ. நிகண். க: ௩௧.) [1, 3, 4, 5. யக்ஷி.]

இயக்கிமார் — இயக்கஸ்திரிகள். 'சந்து சூழ்மல யச்சி லம்பர் தவம்பு ரிந்தவி யக்கி மார்க்-கந்த நாலிரு சித்தி தந்த தறைந்தனம்' (திருவிளை. விடையி. க.)

இயக்கினி—1. குபேரன்மனைவி. 2. துர்க் கையின் ஒரு பரிவாரதேவதை.

இயக்கிலி—கண்டங்கத்தரி. (மலை)

இயக்கு — 1. அசைவு, செலவு. 'நீரியக் கன்ன நிரைசெல னெடுங்தேர்' (மலைபடு. ௩௭௧.) 2. இயக்கென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும்.

இயக்குதல்—1. செலுத்துதல். 'தோணி யியக்குவான்' (நாலடி. 136 ) 2. ஒலிப்பித் தல். 'கோடுவாய் வைத்துக் கொடுமணி யியக்கி' (திருமுரு. உ௪௬.) 3. இயங்குவித் தல். 4. நடத்தல், வழிபோக்குதல். 5 பழக் குதல். 6. தொழிற்படுத்தல்.

இயக்குரோதம் — 1. அசுணப் பறவை. (இராசவைத். எ0.) 2. ஆலமரம். (சூ. நிகண். ௪: க௪.)

இயங்கல் — 1. இயங்குதல். 2. சஞ்சரித் தல். 'பிணிசெல்வ மாண்பின் றியங்க லிவை மூன்றும்' (திரிக. அஅ.)

இயங்காத்திரை—சூநியதிசை. (சரநூல்)

இயங்காத்திணை – தானுயிடம்விட்டுப் பெயரவியலாத சாதிப்பொருள். [இயங்கா- தானுயசைதலில்லாத. திணை - சாதி.]

இயங்கியற்பொருள்—தாமாயியங்குந் தன் மையையுடைய பொருள்; அவை: தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வனவாகிய சரப்பொருள்கள். (சைவ வினு. கூ. பக்.)

இயங்கு—1. இயங்கென்னேவலும், தெரி நிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 'கல்வியங்கு கருங்குற மங்கையர்' (இராமா. வரைக். ௬க.) 2. ஒரு முட்செடி. 3. செல்லு கை. 'இயங்கிடை யறுத்த கங்குல்' (சீவக. 1360.)

இயங்குதல் — 1. அசைதல். 2. உலாவல். 3. ஒளிசெய்தல். 4. தங்கல். 5. நடத்தல். 6. போதல். 7. வலிகுறைந்தழுச்சுநிகழ்தல்.

இயங்குதிரை—பூரணதிசை, சுவாசமியங் கும் நாசித்துவாரம். (சரநூல்)

இயங்குதிணை — தானுயிடம்விட்டுப் பெயருஞ் சாதிப்பொருள்.

இயங்குநர் — வழிப்போவார். 'இடுக்கண் செய்யா தியங்குந ரியக்கும்' (மலைபடு. கஅ.)

இயங்குபடையரவம் — வஞ்சித்திணையின் துறைகளு ளொன்று. அஃது, இயங்குகின்ற படையெழுச்சியின் ஆர்ப்பரவம். (தொல். பொருளதி. சுசு.)

இயசமானன் — 1. குடும்பத்தலைவன். 2. குருவைக்கொண்டு யாகம் செய்விக்கிறவன். 3. போஷகன். 4. யாகஞ்செய்கிறவன். [யஜமாநः]

இயசுசு — யசுர்வேதம். [யஜுஸ்.]

இயசுரு—யசுர்வேதம்.

இயத்தநம்—1. பிரயாசம். 2. முயற்சி.

இயத்தல் – கடத்தல். 'உணர்ந்துருவியந்த விந்நிலைமை' (திவ். திருவாய். 1. 3. 6.)

இயந்திநம்—1. ஆயத்தம். 2. கருவி. 3. பிரயாசம். 4. முயற்சி. [யத்ந.]

இயந்திரம்–1. ஆலை. 2. பொற்றகடு முதலியவற்றிலே வட்டம் சதுர முதலிய வடிவக் கோடுகள் கீறி அவற்றிடையே பீசாக்கர முதலிய மந்திரங்களெழுதித் தேவசாந்நித்தியத்தின்பொருட்டுப் பூசைசெய்யப்படும் சக்கரம். 3. தேர். (திவா.) 4. நீரிறைத்தல், அச்சடித்தல், சீலைநெய்தல் முதலிய விசேடகிருத்தியங்களைச்செய்தற்காகப்பல உறுப்புக்களுமமைத்து இயற்றப்படுகிற கருவி. 5. மதிலுறுப்பு. [யந்த்ர]

இயந்திரி—இத்தி. (மலை)

இயந்திரித்தல்–1. இயந்திரத்திலிட்டாட்டுதல். 'இக்கெனவே செக்கிடையிட் டியந்திரிப்பர்' (சிவதரு. சுவர்க்க. நரக. கசுக.) 2. இயந்திரம் அமைத்தல். (சீவக. 103. உரை.)

இயந்தை–செவ்வழியாழ்த்திறவகை.(பிங்)

இயபரம் — இம்மை மறுமை. 'இயபரமாவன வின்னம்ப ரான்ற னிணையடியே' (தேவா. 252. 9.)

இயம்—1. ஈ. 2. ஒலி. 3. சொல். 4. மிருதாரசிங்கி. (மூ. அ.) 5. வாச்சியம்; அது; கொட்டுவன, ஊதுவன, எழுப்புவன என்னுந்தொடக்கத்தனவற்றிற்கெல்லாம் பொதுவாம். 'இயங்களார்த்திடுமோதையும்' (கந்தபு. திக்குவி. உசு.)

இயம்பல் — 1. ஒலித்தல். 'தொல்லைவேழுஞ்-செயிருத் தியம்பி முருகேசன்முன் சென்றதன்றே' (கந்தபு. திருவிளை. சஅ.) 2. சொல்லல். 'இன்னணமியம்பலும்' (கந்தபு. பார்ப்பதி. ௬.) 3. வாச்சியமுழக்கல். 4. வாச்சியமொலித்தல். 'வென்றிகெழுதொண்டகம்வியன் றுடியியம்ப' (கந்தபு. வள். கூ.)

இயம்புணர்தூம்பு – நெடுவங்கியமென்னும் வாத்தியம். (ஐங்குறு. 377.)

இயம்புதல்–1. சொல்லுதல். 2. துதித்தல். 'ஞானக்கொடிதனை யியம்புவோமே' (குற்ற. குற. 7.)

இயம்புதல்வேட்கையுவமை — உவமாலங்காரத்தினொருவகை; அது, பொருளை இன்னதுபோலுமென்றுசொல்ல என்னுள்ளம் விரும்புகின்றதென்று ஒருவர் சொல்லுவது. 'மடுத்ததைந்த தாமரையின் வாண்முகத்திற் கொப்பென் - றெடுத்தியம்ப வேண்டுகின்ற தின்று' (தண்டி. ௩க.)

இயமகணம்—இயமகிங்கரர்.

இயமகம்—ஓரெழுத்துமுதற் பத்தெழுத்திறுய் ஓரடிபோல நான்கடியும் வரப் பாடுவது. (தண்டி. கசு. உரை.)

இயமகாயமகம் – மடக்கலங்காரத்துளொருவகை. அஃது, ஒரு சொல்லானே நான்கடியும் மடங்கிவருவது. 'உமாதரனுமாதர - னுமாதரனுமாதர - னுமாதரனுமாதர - னுமாதரனுமாதரன்' என்பதிற்போல. (தண்டி. கசு. உரை.)

இயமகிங்கரர் — இயமதூதர். [கிங்கரர்-பணிபுரிவோர்.]

இயமதங்கியார் — பரசுராமன். (தொல். பொருள். 631. உரை.)

இயமதூதன் — 1. நமனுடையபணிபுரியுந்தூதன். 2. பாம்பின் நான்கு நச்சுப்பற்களினொன்று. 'கடுவமருகாலெயிற்றுக்கும் - பேர் சொல்வேன், காளிகா ளாத்திரியமன் யமதூதனும்' (சித்தரா. க.) [யமதூத.]

இயமதூதி — பாம்பினது நச்சுப்பற்களினொன்றாகிய யமதூதன்.

இயமபடர் — இயமதூதர். 'சங்கையிலாவகை யமபடராலுயிர் தளர்பொழுது' (பாரத. கரு-ஆம் போர். க.) [யமபடः படர்- படைவீரர்.]

இயமம் — அட்டாங்கயோகத் தொன்று. அது: கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, பிறர்மனைவியரையும் பொதுமகளிரையும் விரும்பாமையாகிய ஆண்டகைமை, இரக்கம், வஞ்சனையில்லாமை, பொறையுடைமை, மனங்கலங்காமை, அற்பாகாரம், சுசியுடைமையென்னும் பத்துமாம். (சைவவி. உகூ.)

இயமயோகம் — அட்டாங்க யோகத் தொன்று. [யமயொமு.]

இயமரம்—ஒருவகைப் பறை. (பதிற்றுப். ருo. உரை.)

இயமன் — 1. அரவின் நான்கு நச்சுப் பற்களிலொன்று (சித்தா. கூ.) 2. மரணத்துக்கு அதிகாரியும், நரகத்துக்கு அரசனும், தென்றிசையிலிருப்பவனுமாகிய கூற்றுவன்.

இயமனூர்தி—எருமைக்கடா. (பிங்.)

இயமாநகனம் — கலிநாயகனுக்குப் பொருத்தமுறச் செய்யுநூலின் முதற்செய்யுளின்முதற்சீர்வரும்வகைகளுள் ஒன்று. அது தேமாங்காய்வாய்பாடாக மூன்றுநேரசை வரப் பாடுவது. அது இந்திரகணமெனவும்படும். (வீரசோ. யாப்பு. ௩௩. உரை.) [யஜமாநகணை: யஜமாந - இந்திரன்.]

இயமாநன்—1. இந்திரன். 2. உயிர். ‘இருநிலனாய்த்தீயாகிநீருமாகி யியமானனாயெறியுங் காற்றுமாகி’ (தேவார. பொது. நின்றதிருத். க. திருநாவு.) 3. குடும்பத்தலைவன். 4. யாகஞ்செய்விப்போன். [யஜமாந: யஜ் - வணங்குதல்.]

இயமான்—இயமாநன், எசமான். ‘நான் மறையோருமகத்தியமான்பட’ (திருவாச. 14. 14.)

இயர்—வியங்கோள்விகுதி.

இயல்–1. ஆகமம். ‘இயலோதேல்’ (சைவச. பொதுவி. ௩௪௬.) 2. இசை. 3. இயலென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். ‘இயறேர்’ (ஐங்குறு.) 4. இயற்கை. ‘என்றிவை யாதியாய வியற்குணமுடையனாகி’ (திருவிளை. உக்கிரபா. சரு.) 5. இயற்றமிழ். (பிங்.) 6. இலக்ஷணம். ‘இயன்மேனிகொண்ட’ (திருவிளை. வருகுண. உ.) 7. ஒழுக்கம். (சூடா.) 8. ஒழுங்கு. 9. நூலின் சிறுபிரிவு. 10. குணம். ‘அந்தப் பேரியலானையீதி’ (ஞானவா. வைராக். சச.) 11. கூறுபாடு. 12. சாயல். ‘இயல்புடைபெயர்வன’ (இராமா. நாட்டு. சஉ.) 13. தமிழ். ‘இயலே சாயலுந் தமிழ்நடையு மாகும்’ (சூ. நிகண். கக: யகரவெ. கூ.) 14. தன்மை. ‘சுரத்தியல்புகலும்’ (அகப்பொ. ஒழிபி. அ.) 15. நடை. (சூ. நிகண். கக: யகரவெ. கூ.) 16. பொருந்தல். ‘கடிமனைபுகுந்த-மின்னியற் சடைமாதவர்’ (திருவிளை. குண்டோ. உ.) [இது முதனிலைத்தொழிற்பெயர்.] 17. விதி. 18. தகுதி. ‘இயலென் றெனக்கில்லை’ (திருக்கோ. 240.) 19. சுகுமாரதை. (சூடா.) 20. உழுவலன்பு. ‘தொல்லியல் வழாமை’ (கலித். 2.) 21. செலவு. ‘புள்ளியற் கலிமா’ (தொல். பொருள். 194.) 22. நூல். ‘இயலோதேல்’ (சைவச. பொது. 346.) 23. திவ்யப்பிரபந்தத்தைக் கோஷ்டியாகநின்று ஓதுகை. 24. மாறுபாடு. ‘இயலாடிய பிரமன்னரி யிருவர்க் கறி வரிய’ (தேவா. 979—9.)

இயல்பளவை — பலபொருள்கொள்ளக் கிடந்த ஒருசொல்லாற் கருதியபொருள் இஃதெனச் சொல்பவனதுகுறிப்பா லறிதல். அது; மா பூத்ததென்று ஒருவன் சொல்ல, பூத்ததென்னுங் குறிப்பினாலே மாமரமே பூத்ததென் றறிதல்போல்வது. (சி. சி. அளவை. க. மறைஞா.) ‘மாமே விருந்தொரு கோறு வெனிற்சுள்ளிக் கோறாலும் - நாமே விருந்தொரு கோறு வெனிற்றா வேதுணிந்து பூமேவுங் கன்னழுத் தங்கோல் கொடுத்தலும் பூதலத்தே-காமே வியல்பென்று கூறுவர் நல்லசொன் னாவலரே’ (அளவை - விளக்கம்.)

இயல்பாகவேபாசங்களினீங்குதல் — கடவுளுடைய அறுவகைக்குணங்களுள் ஒன்று. ‘அநாதிபோதம் அநாதிமுத்தத்தன்மை எனப்படும் இயல்பாகவே பாசங்களினீங்குதல் கூறப்பட்டது’ (சி. சி. பாயிர. க. சிவஞா.)

இயல்பு—1. இயற்கைவடிவம். 2. ஒழுக்கம். ‘சால்பும் வியப்பு மியல்புங் குன்றின்’ (குறிஞ். பா. கடு.) 3. ஒழுங்கு. ‘அங்கலாரியல்புற வணிய’ (நைடத. நகர. ௩.) 4. குணம். ‘எதிலாரென்பாரியல்பில்லார்’ (நான்மணிக். சச.) 5. சுபாவம், விகாரமில்லாத் தன்மை. ‘இயல்புகாண் டோற்றி மாய்கையென்றிடி னியல்பினுக்குச், செயலதின்

நியல்பு செய்தி செய்தியே வியல்ப தின்றும்' (சி. சி. க: ங.) 6. தகுதி. 'இயல்பாகு நோன் பிற்கொன் றின்மை யுடைமை'(வள். ஙசச.) 7. தன்மை. 'அபாமுத்திப் பெரும்போகத்தி னியல்பிதுவென' (சி. சி. க: உங. சிவஞாந.) 8. வலிமை. 'இயல்புகேடு' 9. பொருட்குப் பின்றோன்றாது உடனிகழுந்தன்மை; அது: நீரினது தண்மைத்தன்மையும், தீயினது வெம்மைத்தன்மையும் போல்வது. (தொல். சொல். கிளவி. கக. சேனு.) 10. முறைமை. 'இயல்பினு னில்வாழ்க்கை வாழ்பவ னென் பான்' (வள். சஎ.) 11. வரலாறு. 'உலகின்று டக்கன்மகளா யுதித்தவியல்பும்' (கூர்மபு. திருக்கல். க.) 12. வில்வம்.

இயல்புக்காட்சி—காட்சிபேதத்தொன்று.

இயல்புகேடு—பலவீனம்.

இயல்புநயம்—ஒற்றுமைமுதலிய நான்கு நயங்களுளொன்று. (மணிமே. 30. 218.)

இயல்புப்புணர்ச்சி — பதங்கள் விகார மின்றி ஒன்றோடொன்று கூடிநிற்றல். 'நிலம் வலிது' என்பதிற்போல. (நன். உயிரீற். ங.)

இயல்புரை — அகப்பொருளுக்குரிய இரு பத்தேழுரைகளுளொன்று; அஃது, இயற் கையிலேயுள்ளதனை இன்னதென்று கூறு தல். அஃது: 'இயல்பெனப் படுவ தியல்புழி யெண்ணி-யின்னுழியா யின்ன தியன்ற திது வென்ன - வின்ன முரைப்ப தென்மனுர் புல வர்' என்பதனுற் பெறப்படும். (வீரசோ. பொரு. ரு. உரை.)

இயல்புவழக்கு — எப்பொருளுக்கு எப் பெயர் இயல்பிலமைந்ததோ அப்பெயரா லேயே அப்பொருளைக் கூறுகை. (நன். 267.)

இயல்புளி — விதிப்படி 'இயல்புளிவழி பட்டு' (காஞ்சிப். அபிராமி. 4.)

இயல்பூ—வில்வம்.

இயல்பூதி— 1. நாய்வேளை. 2. வில்வம். 3. இண்டிலை.

இயல்பேது—அநுமான அளவைக்கு உப காரகருவியான மூன்றேதுக்களி னென்று. இதனை 'ஏதுமூன்று மியல்பு காரியத்தோ டநுபலத்தியிவை-யோதி னியல்பு மாமரத் தைக் காட்டல்' (சி. சி. அளவை. கo.)

இயல்வு—1. இயல்பு. 2. பெறுகைக்குத் தக்க உபாயம். 'எனமாய் நின்றார்க் கியல்பு' (திவ். இயற். 1. 12.)

இயல—அசைய. 'முழவுறழ் தடக்கையி னியல வேந்தி' (திருமுரு. உகரு.)

இயலடி—இயற்சீரான்வருமடி.

இயலணி—இயற்கையழகு. (ஐங்குறு.)

இயலல் — 1. அசைதல். 'இயல வேந்தி மென்றோட் பல்பிணை' (திருமுரு. உகரு.) 2. உடன்படல். 'யாதுநீகருதிற்றன்னதியன் றனன்' (ஞானவா. வைராக். உஅ.) 3. உலா வல். 'பீலி மஞ்ஞையி னியலி' (பெரும்பா. ஙஙக.) 4. ஏவுதல். 5. பொருந்தல். 'நிலை மண்டிலைப்பாச் - சாற்றிய தன்னே ரடியா வியலும்' (வீரசோ. யாப்பு. கூ.) 6. விதிக்கப் படுதல்.

இயலறிவு—சப்தஞானம். 'பிள்ளை இயலறி வுக்கு' (ஈடு. 2. 5. 10.)

இயலாசிரியன் — பரதநூலிற்கூறப்பட்ட பஞ்சாசாரியரிலொருவன். (மணிமே.)

இயலாமை—கூடாமை.

இயலி—1. நடந்து. (ஐங்குறு.) 2. உலாவி. (பெரும்பா. ஙஙக.)

இயலிசையந்தாதி—பொருளாலன்றி ஓசை யால் வரும் அந்தாதித்தொடை. (ஈடு. 1. 6. 2. ஜீ.)

இயலுதல்—1. நேர்தல். 'இயன்றதென் பொருட்டினுலிவ்விடர்' (கம்பரா. குகப்.40.) 2. பொருந்துதல். 'வெயிலியல் வெஞ்சுரம்' 3. தங்குதல். 'மாவியல்கின்ற' (கந்தபு. ஏமகூ. 4.) 4. செய்யப்படுதல். 'எற்றாலியன் றதோ' (நாலடி. 353.) 5. அசைதல். (திரு முரு. 215.) 6. நடத்தல். 'மென்மெல வியலி' (ஐங்குறு. 175.) 7. உலாவுதல். 'மஞ்ஞையி னியலி' (பெரும்பாண். 331.) 8. உடன்படல். 'யாது நீகருதிற் றன்ன தியன்றனன்' (ஞானவா. வைராக். 42.) 9. அணுகுதல். (கலித். 83. 16.) 10. ஒத்தல். 'பொன்னியலுந் திருமேனி' (திருவாச. 49. 6.) 11. போட்டிபோடுதல். 'இயலுமாலொடு நான்முகன்' (தேவா. 601. 8.)

இயவநம்—காராமணி.

இயவசம்—புல்.

இயவநர்—1. கம்மாளர். 2. சித்திரகாரர். 3. சோநகர், கிரேக்கசாதியார்.

இயவபலம்—மூங்கில்.

இயவம்— 1. ஒரு தானியம். அது: வாற் கோதுமை. 2. நெல். (சூ. நிகண். ச. ஙஅ.)

இயவர்— 1. கீழ்மக்கள். (அக. நி.) 2. சண்டாளர். 3. தோற்கருவியாளர். (மதுரைக். 304.) 4. வாச்சியக்காரர். (ஐங்குறு.)

இயவாசம்—சிறுகாஞ்சொறி.

இயவானி — ஓமம். 'எண்ணெயமியவானி முதிரை' (தைல. தைலவ. எஎ.)

இயவு — 1. ஊர். 2. காடு. 3. செலவு, போதல். (சிலப்.) 4. புகழ். 5. வழி. 'இயவிடைவருவோன்' (மணிமே. கங: கரு.)

இயவுள் — 1. தலைமை. 'இயவுள்யானை' (அகநா. 29.) 2. தெய்வம். (பிங்.) 3. புகழாளன். (திவா.) 4. எப்பொருட்குமிறைவன். 'பெரியோரேத்தும் பெரும்பேரியவுள்' (திருமுரு. 274.) 5. வழி. (அகநா. 29. உரை.)

இயவை—1. எட்டுயூகைகொண்ட ஓரளவு; அஃது: ஓரங்குலத்தெட்டிலொன்று. 'அன்ன யூகையெட்டியவை' (கந்தபு. அண்டகோ. டு.) [யூகை-பேன்.] 2. துவரை. 3. தோரை நெல். 4. வழி. (சூ. நிகண். டு. சுஉ.) 5. மலைநெல்வகை. (பிங்.) 6. காடு. (அக. நி.) 7. மூங்கிலரிசி. (திவா.)

இயற்கை—1. இயல்பு, செயற்கையல்லாதது. 'இயற்கை யல்லன செயற்கையிற்றோன்றினும்' (புறநா. ௩டு.) 2. இலக்கணம். 'தேசுடைப் பிரமசாரி யியற்கையைத் தெரிந்த வாறும்' (கூர்மபு. பதிக. உக.) 3. ஏது. 4. குணம். 'பனிக்குறும் பெறியும் வெய்யோர், புனிதமா மியற்கை யாவும் புகரறப் புகன்ற வாறும்' (கூர்மபு. பதிக. களஎ.) 5. தகுதி. 6. நிராணி. 7. பாக்கியம். 8. முறைமை. 9. வழக்கம். 'இயற்கையறிந்துசெயல்' (குறள். 637.)

இயற்கைஞானம்—நூன்முதலியவற்றைக் கற்றலினாலும் ஆராய்தலினாலு மின்றிச் சுபாவமாகவுள்ள அறிவு.

இயற்கைப்புணர்ச்சி— களவுப்புணர்ச்சியிலொன்று. பொருளதிகாரத்திற் கூறப்பட்ட தலைமகனும் தலைமகளும் ஓரிடத்தெதிர்ப்பட்டுத் தெய்வமிடைநிற்பத் தம்முளொத்த வன்பினராய்த் தம்முட்டாமே கூடுங் கூட்டம். இஃது: அகப்பொருளிற் கூறப்படும் இருபத்தைந்து கிளவிக்கொத்திலே காட்சிமுதற் பாங்கியறிதலீறாகிய பதினெட்டுத்துறைகளுள்ளது. (திருக்கோ. க. உரை.)

இயற்கைப்பொருள்—தனது தன்மைதிரியாதுநின்றபொருள். 'இயற்கைப்பொருளை யிற்றெனக்கிளத்தல்' (தொல். சொல். கிளவி. கக.)

இயற்கையளபெடை—இசை விளிபண்டமாற்று முதலிய இடங்களில் நிகழும் அளபெடை. (பிரயோகவி. டு. உரை.)

இயற்கையுணர்வினனுதல்— கடவுளென்னுங் குணத்து ளொன்று. (வள். கூ. பரி.)

இயற்கைவினைக்குறிப்பு — ஆக்கச்சொல் விரிந்தேனும் தொக்கேனும் வரவேண்டாத தாய்ச்செயற்கையல்லாததன்மையையுணர்த்தும் வினைச்சொல். 'சாத்தன் கரியன்' (நன். வினையிய. உஅ.)

இயற்சீர்—அகவலுரிச்சீர். 'ஈரசை கூடிய சீரியற் சீரஃ - தீரிரண் டாமவை யகவற் கிசைதலும்' (இலக்கணவிள. எகரு.) [இயல்புவகையான் ஒரோவொன்றாகநின்றசொற்கள் வருதல் பெரும்பான்மையாகலானும், நான்கு பாவிற்கும் பொதுவாகியன்றிவருதலாலும், இயலசையான்வரும் ஈரசைச்சீராகலானும், இவற்றை ஒருபாவிற்கு உரிமை கூறுதலரிதாகலானும், ஈரசைச்சீரை இயற்சீரெனப்படுமென்று பேராசிரியர் சொல்வர். (தொல். பொருளதி. ௩உடு.)

இயற்சீர்விகற்பம் — இயற்சீர்வெண்டளை. 'வெண்சீ ரொன்ற வியற்சீர் விகற்பமென் - றவ்விரு தளையும் வெள்ளைக் கமைதலும்' (இலக்கணவி. எகஅ.) [இதிலே நேர்முன்னிரையும், நிரைமுன் னேரும் வருதலை விகற்பமென்றார்.]

இயற்சீர்வெண்டளை — சீர்களை ஒன்றோடொன்று தொடுக்கும்வகைகளுளொன்று; அஃது, அகவலுரிச்சீரினிறுதியில் நிற்கிற நேரசைமுன் நிரை யசையும், நிரையசைமுன் நேரசையும் வரத்தொடுப்பது. 'அகரமுதல' 'மலர்மிசையேகினான்' என்பவற்றிற்போல. (இலக்கணவி. எகஅ.)

இயற்சொல் — திரிசொற்போலாகாது கற்றார்க்குங் கல்லாதார்க்கு மொப்பத் தன் பொருளை விளக்குந் தன்மையினையுடைய உலகவழக்கச்சொல். (நன். பெயரி. கச.) [திரிபின்றி இயல்பாகிய சொல்லாதலின் இயற்சொல்.] (தொல். சொல்லதி. ௩கூஅ. சேனா.)

இயற்படமொழிதல்-இயல்புபடச்சொல்லுதல். (வாண. உகூரு. உரை.)[இயல்-குணம்.]

இயற்படுத்துரைத்தல் — வழிப்படுத்திச்சொல்லல்.

இயற்பலகை—சங்கப்பலகை. (திருவாலவா. 56-10)

இயற்பழித்தல் — குணத்தைப் பழித்தல். (ஐங்குறு.)

இயற்பழித்துரைத்தல் — தலைவனியல்பைப் பழித்து இகுளை சொல்லுதல். (தணிகை. களவு. சஙூக. முகம்.)

இயற்பா — திவ்யப்பிரபந்தத்துள் ஒரு பகுதி.

இயற்பெயர்—ஆதியிற் குரவராற் பெற்ற பெயர். 'இயற்பெயர் கிளவித் தலைவற் கிசையார்' (அகப்பொருள். ஒழிபி. ௩க.)

இயற்றமிழ்—முத்தமிழுள் ஒன்று. (பிங்)

இயற்றல்—1. செய்தல். 'யானியற்றுந் தவவேள்விக்கு' (இராமா. கையடை. கO.) 2. நடத்துதல். 'எம்முயிருணின்றியற்றுகின்றுன்' (கந்தபு. உபதேச. கO.) 3. பொருள்கள் வரும் வழிகளை உளவாக்கல். 'இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த-வகுத்தலும் வல்ல தரசு' (வள். ௩அரு.) 4. முயற்சி. (திவா.)

இயற்றளை—1. ஆசிரியத்தளை. 2. இயற்சீர்வெண்டளை. 'இயற்றளை வெள்ளடி' (யாப். காரிகை. ஒழிபி. ச.)

இயற்றநியற்றல்— கருவிகளாற்செய்யாது சங்கற்பத்தாற்செய்தல்.

இயற்றி—1. முயற்சி. (பிங்) 2. ஆற்றல். 'தனக்கு இயற்றியுள்ள காலத்திலே' (ஈடு. 9. 1. 4).

இயற்றியார் — செய்தவர். 'இயற்றியார் யாரோ வென்பார்' (கந்தபு. அசமுகிநகர் காண். உஅ.)

இயற்று—1. இயற்றென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. மண்முதலியவற்றுற் செய்யப்பட்ட பாத்திரம். [வழக்கு.]

இயற்றுதல்—1. செய்தல். 'இயல்பதாம் பூதந் தானே யியற்றிடுஞ் செய்தி யென்னில்' (சி. சி. க: ௩.) 2. நடத்தல். 'நெஞ்சே யியற்றுவா யெம்மொடு' (திவ். இயற். பெரிய திருவந். 1.) 3. முன்னில்லதனையுண்டாக்குதல். (பி. வி.காரக. கஉ. உரை.)4. விதித்தல். 5. ஈட்டல். 'ஒன்பொருள் காழ்ப்ப வியற்றியார்க்கு' (குறள். 760) 6. சிருட்டித்தல். 'கெடுக வுலகியற்றி யான்'(குறள். 1062.) 7. நூல்செய்தல்.

இயற்றுதற்கருத்தா— பயனிலைச்செயலைத் தானகச்செய்பவனுகிய கருத்தா; அது; தச்சன் கோயிலைக்கட்டினுன் என்பதிற்போல. இதிலே தச்சன் இயற்றுதற்கருத்தா. (நன் 297. உரை)

இயற்றும்வினைமுதல் — இயற்றுதற் கருத்தா.

இயற்றுவான்—செய்கிறவன், உண்டாக்குகிறவன். 'மண்ணி னில்லதாம் படங்கடாதியெழிறரு மியற்றுவானுல்' (சி. சி. க: சு.)

இயறல்-1. இசைதல். 2. கூடியதாயிருத்தல். 3. பொருந்தல். 4. போதல்.

இயன்மகள் — சாசுவதி. (பிரமோத். 8. 20.)

இயன்மணம்-இயற்கைவாசம். 'அரமாதர் மெய்யு-மிருங்குழற் காடுஞ் சூழ்போ மியன்மணம் விழுங்கு மன்னே' (திருவிளை. ககா. ருO.)

இயன்மொழி — இயன்மொழிவாழ்த்து. (தொல். பொருள். 90. உரை.)

இயன்மொழிவாழ்த்து—1. தொண்ணூற்றுறுபிரபந்தங்களுள் ஒன்று. அது: கவிநாயகன் தன் குடிப்பிறந்தோர்க்கெல்லாம் இயல்பாகிய குணமுடையவென்பதுமுதலாகச்சொல்லி அவனை உயர்ந்தோர் வாழ்த்துவதாகக் கூறுவது. (தொன்னூல். உஅ௩. உரை.) 2. புறத்துறைவகையினுள் ஒன்று.

இயனம்—மரமேறிகளின் கருவியுறை.

இயனூல்-இயற்றமிழிலக்கணங்கூறுநூல்.

இயனெறி—நல்லொழுக்கம். 'இயனெறியுங் கைவிடாது' (நாலடி. 294)

இயாகதம்—1. சிற்றகத்தி. 2. அத்தி.

இயாகம்—1. கொன்றை (மலை) 2. பாத்திரம். 3. வேள்வி.

இயாகாதிபதி — இந்திரன். [யாகாதிபதி.]

இயாசாவியம்—கொன்றை. (மலை)

இயாதரம்—அத்தி. (மலை)

இயாதம்—1. தோட்டியால் யானையைச் செலுத்துகை. 2. யானைத்தோட்டி. (பிங்) [யாதம்.]

இயாபகம்—கொன்றையிலே.

இயாவம்—சுக்கு.

இயுசாவியம்—கொன்றை (மலே)

இயூகம்—கருங்குரங்கு. (பெருங். வத்தவ. 17. 14)

இயேசு—இயேசுநாதர்

இயேசுநாதர்—இயேசு.

இயை—1. அழகு. (ஆசிரியநிகண். அ: சு.) 2. இசைப்பு. 3. இயைதல், கூடுதல். 'எள் ளூறு காதல ரியைதந்தார்' (கலி. ௩௫.) 4. இயையென்னேவலும், தெரிநிலேவிணைப் பகுதியும், விணைத்தொகையும். 5. புகழ்.

இயைத்தல்—1. இணக்கல். 2. பொருத் தல். 'பூவொடு நாரியைக்கு மாறு' (பழ மொழி. கஉ௫.) 3. முறைப்படுத்தல்.

இயைதல்–1. இணங்கல். 2. பொருந்தல். 'இன்னயதோ ரின்ப மென்று மியைந்திலேன்' (ஞானவா. வைராக். உசு.) 3. நிரம்புதல். 'மாக்கடல் கண்டியைய மாந்திக்...கார் தோன்ற' (திணைமாலை 100) 4. ஒத்தல். (நன். 367)

இயைபிசையணி—தொன்னூல்விளக்கத் தார் சொல்லுஞ் சொல்லொப்பணிநான்கு வகையு ளொன்று; அது: பற்பலவசாத்திற்று மொழிகள் தம்மு ளியைந்துவருவது. 'செங் கதிர் நெடுக்கை நீட்டி மல்கிருட் கங்கு லோட்டிப் படரொளி முகத்தைக் காட்டி' என்பதிற்போல. (தொன்னூல். ௩உ௩.)

இயைபிலுருவகம்—உருவகவலங்காரத்தி னெருவகை; அது: பலபொருளுந் தம்மு ளொன்ருேடொன்றியையா தனவற்றை வைத் துருவகஞ்செய்வது. 'தேனக் கலர் கொன்றை பொன்னுகச் செஞ்சடையே- சுனற் பவளக் கொடியாகத்-தான-மழை யாகக் கோடு மதியாகத் தோன்றும்-புழை யார் தடக்கைப் பொருப்பு' என்பதிற்போல. (தண்டி. ௩௫. உரை.)

இயைபின்மைநீக்கம் — தன்னே டியை பின்மைநீக்கும் விசேடணம்.

இயைபின்மைநீக்கல் — இயைபின்மை நீக்கம். (தொல். சொல். 182. சேன.)

இயைபின்மைமாத்திரை நீக்கிய விசேட ணம்—வெண்குடை என்பதுபோல்வன. (சிந்தா.)

இயைபின்மையணி — உவமாலங்காரத்தி னெருவகை; அஃது: உவமையைக் கூறி மறுத்துப் பொருள் தனக்குத்தானே உவ மையென் றுரைப்பது. உவமைக்கும் பொரு ளுக்கும் இயைபுதோன்றப் பொதுத்தன்மை யில்லாமையின் இது பொதுநீங்குவமை யெனவும்படும். 'திருமருவு தண்மதிக்குஞ் செந்தா மரையின்-விரைமலர்க்கு மேலாந் தகையாற் - கருநெடுங்கண்-மானேயிருளள கஞ் சூழ்ந்தநின் வாண்முகந்-தானேயுவமை தனக்கு' என்பதிற்போல. (தண்டி. ௩க.)

இயைபு—1. இசைவு. 2. இணக்கம். 3. இயைபுவனப்பு. (தொல். பொருள். 552) 4. பொருத்தம். 5. இயைபுத்தொடை; அஃது: அடியினிறுதியிலேயுள்ள சொல்லா வது எழுத்தாவது இயையும்படி தொடுக்கப் படுவது. 'இறுதியியைபு' (யாப். காரிகை. உறுப்பி. கசு.) 6. புணர்ச்சி. (தொல். சொல். 308.) 7. இது கேட்டபின் இது கேட்கத் தக்கதென்னும் யாப்பு. (நன். விருத். சிறப்புப்.)

இயைபுத்தொடை — செய்யுட்டொடையி னெருவகை; அது: செய்யுளடிகளினிறுதி யிலேயுள்ள எழுத்தாவது, சொல்லாவது ஒன்றிவர அல்லது ஓரடியின் வருஞ்சீர்களி லே சிலவாயினும் பலவாயினும் இறுதி யெழுத்துக்கள் ஒன்றிவரத் தொடுப்பது; 'இறுதி யியைபு' (காரிகை. உறுப்பி. கசு.)

இயைபுருவகம் — உருவகவலங்காரத்தி னெருவகை; அது: பலபொருளை உருவகஞ் செய்யுங்காற் றம்முள் இயைபுடையவாக வைத் துருவகஞ்செய்வது. 'செவ்வாய்த் தளிரு நகைமுகிழுங் கண்மலரு-மைவா ரளக மதுகாமுஞ்-செவ்வி - யுடைத்தாந் திருமுக மெ னுள்ளத்து வைத்தார்-துடைத்தாரே யன்ருே துயர்' என்பதிற் போல. (தண்டி. ௩௫. உரை.)

இயைபுவண்ணம் — இருபதுவண்ணங்க ளுளொன்று; அஃது: இடையெழுத்துக்கள் பெரும்பான்மையாகவருஞ் சந்தம். 'வால் வெள் ளருவி வரைமிசை யிழியக்-கோள்வல் லுழுவை விடரிடை யியையும்'(தொல்.பொரு. ருகக.)

இயைபுவனப்பு—செய்யுளி னெட்டுவனப்புக்களி னொன்று. அது, ஞண நமனயரல வழள வென்னும் பதினொருபுள்ளியீற்றினு ளொன்றனை இறுதியாகச்செய்யுஞ் செய்யுளைச் சொற்றொடராகவும் பொருட்டொடராகவுஞ் செய்வது. சீத்தலைச்சாத்தனாராற் செய்யப்பட்ட மணிமேகலையும், கொங்குவேளாற் செய்யப்பட்ட தொடர்நிலைச் செய்யுளும் போல்வன. அவை னகாரவீற்று னிற்றன. (தொல். பொருளதி. ருருரு.)

இயைபுளன்—புகழாளன்.

இயைமே—1. வாழைப்பொது. (மலை) 2. கொன்றை.

இயைய—ஒருவமையுருபு; இது: பெயரோடு வினைபுணருங்கால் உவமப்பொருளின் வரும் வினையெச்சவுருபுகளிலொன்று. (நன். பொதுவி. கரு.) 'குயிலியையப் பாடினன்'

இயைவது—தக்கது. 'மன்னன்மாமகட் கியைவதே' (கந்தபு. தவங்காண். கஎ.)

இயைவு—1. இசைவு. 2. இணக்கம். 3. பொருத்தம். 4. சேர்க்கை. (திவா)

இர—1. இரத்தல். 'இரத்தக்கார்' (வள். கoருக.) [இதனை ஒரு முதனிலைத்தொழிற் பெயரென்பர் பரிமேலழகர்.] 2. இரவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 3. இரா. 'இரவருமதி' [இரா - இர எனக் குறுகியது.]

இரக்கக்குறிப்பு—பரிதாபம் துயரம் இவைகளைக் குறிக்கும் மொழி. (சீவக. 295. உரை)

இரக்கச்சொல்—பரிதாபமொழி.

இரக்கம்—1. ஒலி. 'பன்றி வாய்விடு மிரக்கமும்' (திருவிளை. பரிநரி. ருக.) 2. கிருபை, மநவுருக்கம். 'இரக்க மாயருணந்தியை நினைந்தன னிறையோனே (கந்தபு. மோகநீ. கரு.) 3. துன்பம், விசனம். 'இப்படியு நந்தலையில் விதித்தா னென்னு விரக்கமொடு மறுத்தலஞ்சி' (கந்தபு. தேவரையேவல். ச.) 4. பிச்சை.

இரக்கிக்கை—இரட்சித்தல். 'இரக்கிக்கையாலே' (சைவச. பொது. உoச.)

இரக்கை—1. இரட்சித்தல். 'அமரரிரக்கையினாலே' (கலி. பாலை. உ. உரை.) 2. விபூதி. 'இரக்கிக்கை யாலே யுயிரினை யெல்லா - மிரக்கையெனும் பேரா மிதற்கு' (சைவச. பொது. உoச.) [தன்னைத் தரித்த ஆன்மாக்களை இரட்சித்தலால்வந்த பெயரென்பர்.]

இரகசியத்தானம்—மறைவிடம்.

இரகசியம்—1. அந்தரங்கம், மறைவு. 2. பெண்குறி. 3. மறைத்துவைக்கத்தக்கது. 4. மறைத்துவைக்கப்பட்டது. [ரஹஸ்ய: ரஹஸ் - மறைவு.]

இரகதம்—துத்தி.

இரகம்—1. சூரியகாந்தம். 2. பளிங்கு. 3. பெருமழை. [ரக.]

இரகிதம்—1. இட்டம். 2. விடப்பட்டது, நீக்கப்பட்டது. [ரஹித.]

இரகு—திலீபன்மகன்; அயோத்தியரசன். [ரகு.]

இரகுநாதன்—அயோத்தியிலரசனாயிருந்த இராமன். [ரகுநாத.]

இரகுவம்மிசம்—1. அயோத்தியரசனாகிய இரகுவினது சந்ததியார். 2. காளிதாசகவி ஸம்ஸ்கிருதபாஷையிலே யியற்றிய ஒரு காப்பியம். அதிலே இராமனுடைய சரித்திரமும், அவன் முன்னோராகிய இரகு முதலியோருடைய சரித்திரங்களுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. [ரகுவம்ஶ.]

இரங்கல்—1. அழுதல். 2. இரங்கற்க எனப் பொருள்படும் ஒரு வியங்கோள்வினைமுற்று. 'வேறுபின்னைநீயிரங்கல்' (திருவிளை. திருமண. ரு.) 3. ஒலித்தல். 'இரங்கிவீழருவியிற் கவிழ' (திருவிளை. நாகமெ. கஎ.) 4. கருணைசெய்தல். 'இன்னல்செய் யாக்கற் காற்று தெய்தின னிரங்கல் வேண்டும்' (ஞானவா. வைராக். உக.) 5. பரிதபித்தல். 'போம் வாழ்நாளென் றிரங்கிப்பாடும்' (ஞானவா. வைராக். சo.) 6. மநமுருகல். 7. யாழ்நரம்போசை. (பிங்கல. கசசக.) 8. வருந்தல். 'எங்கா டணைவோ மெனவிரக்க' (திருவிளை. உலவா. ச.) 9. நெய்தலுரிப்பொருள். (தொல். பொருள். 14.)

இரங்கல்விலக்கு—குறிப்பினால் விலக்குவதாகிய முன்னவிலக்கென்னு மலங்காரத்தி னொருவகை; அஃது: இரங்கல்தோன்றக் கூறிவிலக்குவது. 'ஊச றொழிலிழக்கு மொப்பு மயிலிழக்கும் - வாசஞ் சுனையிழக்கும் வள்ளலே - தேசு - பொழிலிழக்கு நாளையெம்

பூங்குழலி நீங்க - வெழிலிழக்கு மங்தோ விவண்' என்பதிற்போல. (தண்டி. சச.)

இரங்கலே—இரங்கு என்னும் வினையடி யாற் பிறந்து எதிர்மறையில்வருமோ ரேவல் வினை. 'இரங்கலே யிரங்கலே யென்று தேற்றி னான்' (கந்தபு. சூரன்நகர்புரி. கசு.)

இரங்நாசீவி — சித்திரமெழுதுவோன். (பாராசர. ககo.) [ரங்காஜீவிநு.]

இரங்கு-இரங்கென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 'கரை கொன் றிரங்கு திரைக்கடல் வான்குழிசி யாக' (கூர்மபு. இந்திர. கஅ.)

இரங்குக்கெளிறு-கெளிற்றுமீன்வகையில் ஒன்று.

இரங்குசொல் — இழுமென விசைக்குஞ் சொல். 'திருந்து தேனென விரங்குசொற் செவிமடுத்து' (திருவிளை. இரச. உo.)

இரங்குதல்—இரங்கல்.

இரங்கோலி-முறையிடு. 'என்றிரங்குவோ ரிரங்கோலி' (திருவிளை. நரிபரி. உரு.)

இரச்சு—1. கயிறு. (சூ. நிகண். எ: சுo.) 2. சடை. 3. பந்தம். [ரஜ்ஜு.]

இரச்சுப்பொருத்தம்— மணப்பொருத்தங் களு ளொன்று. அது, ஸ்திரீ புருஷர்க ளுடைய நட்சத்திரங்கள் ஒரே ரச்சுவி லில் லாமலிருப்பது. இரச்சுக்கள் சிரோரச்சு, கண்டரச்சு, உதரரச்சு, தொடைரச்சு, பாத ரச்சுவென ஐந்துவகைப்படும். (சோதி. சிந். 197.)

இரச்சுலம்—கவண். [ரஹ்ஹூ.]

இரச்சுவம் — குற்றெழுத்து. 'குறிலுங் குறுமையும் இரச்சுவ மும்குறில்' (பேரகத். 13.)

இரச்சை—1. கயிறு. 2. மலைமரவகை.

இரசக்கட்டு-இறுகச்செய்தரசம். (மூ.அ.)

இரசக்களிம்பு — இரணம் ஆற்றும் ஒரு வகை மருந்து. (பைஷஜ.)

இரசக்கிணறு—இரசக்குழி.

இரசக்குடுக்கை — பாதரசம் அடைக்கும் குப்பி.

இரசக்குண்டு- கல்லியாணவீடுமுதலியவற் றிலே அலங்காரத்தின்பொருட்டுத் தூக்கப் படும் இரசமூட்டிய திரண்டவடிவுடைய பளிங்கு.

இரசக்குழி—பாதரசமெடுக்குஞ் சுரங்கம்.

இரசகந்தபாஷாணம்—சாதிலிங்கம். (மூ. அ.)

இரசகந்தாயம்-1. வரி. 2. நிலக்கொழுமை.

இரசகபுவம்—கடைச்சரக்கு.

இரசகம் — 1. பாகஞ்செய்யப்பட்ட இறைச்சி. 2. பீர்க்கு. (மலை) [ரஸக.]

இரசகர்ப்பூரம்-1.இரசம்உப்புத்திராவகத் தோடு கலத்தலாற் பிறந்த இரசபுட்பம். 2. கிண்ணிக்கர்ப்பூரம். [ரஸகர்ப்பூர.]

இரசகன்—வண்ணான்.

இரசகி — வண்ணாத்தி. 'இரசகியென்று' (திருவானை. கோச். சசு.) [ரஜகீ.]

இரசகுளிகை — செம்பில்நின்று அதன் களிம்பைப் பரிசித்தமாத்திரத்திலே நீக்குஞ் சத்தியையுடையதாக இரசத்தாற் செய்யப் பட்ட குளிகை. 'செம்பிலுறுங் களிம்பிரத குளிகை பரிசிக்கக் கழியும்' (சி. சி. கக: ரு.) [ரஸகுளிகா.]

இரசகேந்தபாஷாணம்—சாதிலிங்கம்.

இரசகேசரம் — கருப்பூரம். [ரஸகே ஸர.]

இரசச்சுண்ணம்—ஒருவகைமருந்து. (மூ. அ.)

இரசசாநு—1. இருதயம். 2. முகில். [ரஜ ஸாநு.]

இரசசித்தன்— இரசவாதஞ்செய்கிறவன். [ரஸஸித்த: ஸித்த - சித்தியடைகிறவன்.]

இரசசித்தி — இரசவாதப்பயிற்சியறிவு. [ரஸஸித்தி.]

இரசசிந்தூரம்—இரசத்தினாலே செய்யப் பட்ட ஒரு சிந்தூரம். [ரஸஸிந்தூர.]

இரசசு — 1. இராசதகுணம். 2. துகள். 3. பூந்தாது. 4. மகளிர் பூப்புநீர். [ரஜஸ்.]

இரசசுவலை-பூப்படைந்திருக்கிற பெண். [ரஜஸ்வலா.]

இரசசோதநம் — வெண்காரம். [ரஸ ஶோதந.]

இரசஸ்வலம்—எருமை.

இரசதகிரி—வெள்ளிமலை. (அழகர்கல. 33.)

இரசதசபை — மதுரையிலுள்ள நடராஜ சபை.

இரசதபஸ்பம்—வெள்ளிபஸ்மம்.

இரசதம்—1. அரைப்பட்டிகை. (பிங்.) 2. இரத்தம். 3. இராசதகுணம். 'இரசதத்தின் குணமெய்தி நான்முகனு யுலகினும்' (கூர்மபு. பிரகிரு. உஉ.) 4. கழுத்தணி. 5. பொன். 6. யானைத்தந்தம். 7. வெண்மை. 8. வெள்ளி. 'இரசதவெற்படைகுவரால். (திருநெல்.தீப.உ.) 9. பாதரசம். (மூ.அ.)[ரஜத.]

இரசதமணல் — வெள்ளித்துகளிருக்கும் மணல்.

இரசதாது — சூதம். [ரஸதாது.]

இரசதாரை-அன்னரஸம் செல்லும்குழாய்.

இரசதாளி—கப்பல்வாழை.

இரசநம் — 1. சுவைக்குங் கருவியாகிய நாக்கு. 2. சுவைத்தல். 3. தொனித்தல். [ரஸந.]

இரசநா-ஒருவகை அரத்தை. [ரஸநா.]

இரசநாதம்—, இரசநாதன்— } சூதம். (மூ. அ.) [ரஸநாத.]

இரசநாயகன்—சிவன். [ரஸநாயக.]

இரசநி—1. அவுரி. 2. இரவு. (சூ. நிகண். கஃ அஉ.) 3. பிசின். 4. மஞ்சள். 'ஏலமாவொடுநெல்லியிரசநி' (தக்ஷிண. அர்ச்சநா. ௬அ.) [ரஜநி.]

இரசநிகரன் — சந்திரன். [ரஜநீகர.]

இரசநிசரன்—கள்வன். [ரஜநீசர.]

இரசநீகரன் — சந்திரன். [ரஜநீகர.]

இரசநீசலம்—பனி. [ரஜநீஜல.]

இரசனை—1. அணிவகுப்பு. 2. சாறு. 3. சுவை. 4. நா. 5. மயிர்கோதுதல். 6. மாதரிடையணி. 7. மாலைகோத்தல். 8. மாலைதூக்கியலங்கரித்தல். 9. வாசகமிணைத்தல். [1, 5, 7, 8, 9. ரசநா. 4, 6. ரஸநா.]

இரசப்பிடிப்பு-முடக்குவாதம். (பைஷஜ)

இரசப்பிரீதி—நூற்றிருபதுவகைப்பாஷாணங்களு ளொன்றாகிய இரசமாதா. [ரஸப்ரீதி.]

இரசப்புகை—பாதரசத்தின் ஆவி.

இரசபஞ்சாமிர்தம் — விதிப்படி கூட்டியமைக்கப்பட்ட பால், தயிர், நெய், தேன், சருக்கரை என்பவைகளின் றொகுதி. (சைவச. பொதுவி. ருகரு.) [ரஸபஞ்சாம்ருத.]

இரசபலம்—தெங்கு. [ரஸபல: ரஸ-நீர். பல - பழம்.]

இரசபற்பம்—சூதபஸ்பம். (மூ. அ.)

இரசபாடாணம்—கடுமையாகத்தியென்னும் பாஷாணம்.

இரசபுட்பம்-1. இரசகர்ப்பூரம். (மூ. அ.) 2. இரசபற்பம். [ரஸபுஷ்ப.]

இரசம் — 1. அநுபோகம். 2. அன்பு. 3. இன்பம். 4. உடம்பிலுள்ள சத்ததாதுக்களுளொன்று. 5. உபரசம். அது, காந்தம் வெங்காரமுதலியனவாகப் பலதிறப்படும். 6. சாறு. 7. சுக்கிலம். 8. சுவை. அது, கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு என அறுவகைப்படும். 9. சூதம். 10. செய்யுட்சுவை. அஃதாவது, உள்ளத்துநிகழுந்தன்மை புறத்துப்புலனாய் விளங்க வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, காமம், அவலம், உருத்திரம், நகை ஆகிய எண்வகை மெய்ப்பாட்டானும் நடப்பது. [வடநூலார் இரசங்கள் ஒன்பதென்றும் அவை: சிருங்காரம், ஆசியம், கருணை, ரௌத்திரம், வீரம், பயாநகம், வீபத்சம், அற்புதம், சாந்தமென்றுங் கூறுவர்.] 11. துளி. 12. நஞ்சு. 13. வாயூறுநீர். 14. பூந்தாது. 15. பூப்பு. 16. மதம். 17. மரச்சார்வு. 18. மிளகுநீர். 19. பாதரசம். 20. இரதம். 21. ஒருவகை வாழை. (மூ. அ.) 22. மாமரம். [ரஸ.]

இரசமணி—இரசக்கட்டிபமணி. [இது நோய்நீங்குகள் அகலும்பொருட்டும், எடுத்த காரியங்கள் சித்தியாதற்பொருட்டும், மந்திரோச்சாரணத்தோடு காப்பாக அணியப்படுமென்பர். ரஸமணி.]

இரசமாத்திரை—இரசகுளிகை. (மூ. அ.) [ரஸமாத்ரா.]

இரசமாதா—அப்பிரகபாஷாணம்.(மூ.அ) [ரஸமாத்ரு.]

இரசமெழுகு—ஒரு மருந்து. (பைஷஜ)

இரசலிங்கம்—1. ஒரு சிவலிங்கபேதம்; இது, வாணலிங்கத்திலும் கோடிமடங் கதிகமென்பர். (சைவச. பொதுவி. அக.) 2. சாதிலிங்கம். [ரஸலிங்க.]

இரசவாதம்—1. இரசத்தால்வாதித்தல். 2. கலைஞானமறுபத்துநான்கினொன்று; அதனை அக்கினியிலே பஞ்சலோகத்தையும்வைத்து வேதிக்கும் வித்தையென்பர். 3. தாமதகுண சித்தி எட்டனுளொன்று; அது: செம்பு, பித்தளைமுதலிய தாழ்ந்த உலோகங்களை மாற்றுயர்ந்த உலோகமாகச்செய்வது. (கூர்மபு. வருணச். கசு. உரை.) [ரஸவாத.]

இரசவாதி — உலோகங்களைப் பேதிப்போன்.

இரசவாழை—பேயன்வாழை.

இரசவைப்பு — இரசஞ்சேர்த்துப் பக்குவஞ்செய்யப்பட்டது.

இரசனு—ஒருவகை அரத்தை. (மலை)

இரசனி—1. இரவு. 'பரநிருபவிரசனி' (இரகு. அரசியற். 5.) 2. மரமஞ்சள். 'ஏல மாவொடு நெல்லி யிரசனி' (தக்கயாகைக. அர்ச்சனு. 38.) 3. அவுரி. (மூ. அ)

இரசாதலம்—1. கீழேழுலகினொன்று. 2. பாதலம். [ரஸாதல.]

இரசாதிபதி—இரசவஸ்துக்களுக் கதிகாரியாங் கிரகம். [ரஸாதிபதி.]

இரசாதிபன் — இரச வஸ்துக்களுக் கதிகாரி. [ரஸாதிப.]

இரசாபாசம்—1. அழிவு. 2. இரசமின்மை. 3. மெய்ப்பாடுதோன்றாதுமறைத்தல். (அணியிலக்கணம்) [ரஸாபாஸ]

இரசாயநம்—1. இரசவாதநூல். 2. காயசித்திமருந்து; அது: நெடுங்காலஞ் சீவித்திருக்கச்செய்யுமென்று சொல்லப்படு மொரு மருந்து. (சி. சி. கo. மு. மறை) 3. நஞ்சு. 4. மோர். [ரஸாயந: ரஸ - சூதம், சாரம். அயந - வழி, போதல்.]

இரசாயநன்—கருடன். [ரஸாயந.]

இரசாலம்—1. கரும்பு. 2. கோதுமை. 3. பலாமரம். 4. மாமரம். [ரஸால.]

இரசிகம்—1. குதிரை. 2. அர்த்தத்தன்மை. 3. யானை. [ரஸிக.]

இரசிகன் — சுவையுணர்வுடையோன்.

இரசிகை—1. அர்த்தை. 2. நா. 3. மாதரிடையணி. [ரஸிகா.]

இரசித்தல்—சுவைத்தல், இனித்தல்.

இரசிதசுத்தி—ஈயம். [ரஜிதசுத்தி.]

இரசிதநாள் — சுக்கிரவாரம். (தைல. தைலவ.)

இரசிதபாஷாணம் — ஒருவகை வைப்புப் பாஷாணம்.

இரசிதம்—1. இடிமுழக்கம். 2. ஒலி. 3. வெள்ளி. 'ஈயஞ்செம்பிரும்பிரசிதமென் பவும்புணர்ப்பால்' (திருவிளை. இரச. உ௩.) 4. வைப்புப்பாஷாண முப்பத்திரண்டி னொன்று. [1, 2. ரஸித. 3. ரஜித.]

இரசிதலிங்கம்—விசுவதேவன். (த. நி. போ. ௩௩o.)

இரசிப்பு—சுவையுடைமை.

இரசுநம்—உள்ளி. [ரஸுந.]

இரசுவம்—1. குறுகிய அளவு. 2. குற்றெழுத்து. [ஹ்ரஸ்வ.]

இரசுவரோகம் — பித்தத்தினுற் பிறந்து கண்களின்பாவையை அற்பமாத்திரந்தெரிய மறைக்கும் ஒருவகை ரோகம். (சீவரட். உ௫௬. பக்.)

இரசுவன் — குறிய உருவமுடையவன். [ஹ்ரஸ்வ]

இரசேந்திரன்—1. சூதம். 2. பரிசநவேதி. [ரஸேந்த்ர.]

இரசேந்திரியம்—நாக்கு. [ரஸேந்த்ரிய.]

இரசோகரன்–வண்ணான். [ரஜோஹர: ரஜஸ் - அழுக்கு. ஹர: - நீக்குகிறவன்.]

இரசோதுணம்—இராசதகுணம். [ரஜோகுண.]

இரசோநகம்—வெள்ளைப்பூடு.

இரசோநம்—ஒருவகை வெள்ளைப்பூண்டு. (தைல. தைலவ. க.) [ரஸோநம்.]

இரசோபலம்–1. இருள். [ரஜோபலம்: ரஜஸ் - அள். பலம்-குவியல்.] 2. முத்து [ரஸோபல: ரஸ - நீர். உபலம் - கல்.]

இரசோரசம் — இருள். [ரஜோரஸம்: ரஜஸ் - அள். ரஸ-சாரம்.]

இரஞ்சகம்—1. அன்பு. 2. இயக்குமது. 3. சாயமூட்டுமது. 4. தன்மைதிரிக்குமது.

5. துப்பாக்கியின் பற்றுவாய் மருந்து. [தெலுங்கு.] 6. மகிழ்ச்சிதருவது. [1, 2, 3, 4. ரஜக.]

இரஞ்சகன்—1. இயக்குகிறவன். 2. சாயமூட்டுகிறவன். 3. நிறங்கொடுக்கிறவன், சித்திரகாரன், வன்னக்காரன். 4. பிரியம்வரச்செய்கிறவன். [ரஜகஃ.]

இரஞ்சநம்—1. இருதயத்தாக்கம். 2. சாயம். 3 சாயமூட்டல். 4. சித்திரித்தல். 5. செஞ்சந்தநம். 6. திரிவாய்மருந்து. 7. திருத்தியடைதல். 8. பிரியங்கொள்ளல். 9. பிரியம்வரச்செய்தல். [ரஜநு.]

இரஞ்சநை — களிக்கச்செய்தல். [ரஜநா.]

இரஞ்சிதபடம் — வரிசையானசித்திரம் வரையப்பட்ட படம். 'சித்திரப் படமோர் பொருளொடுங் கூடாத் திகழ்வினிற் றவுதமே யெனவு - நெய்த்தசூழ் வருடக் கடிதமே யெனவு நீனிறத் திலாஞ்சனை யெனவும் - பத்தியோ வியஞ்சேர்ந் திரஞ்சித மெனவும் படுதல்போல்' (வேதா. சூ. சங.) [ரஂஜித வடம்]

இரஞ்சிதம்–1. இரஞ்சிதபடம். 2. இன்பமானது. 3. சாயமூட்டப்பட்டது. 4. தன்மை திரிக்கப்பட்டது. 5. பிரியம். [ரஂஜிதம்.]

இரட்சகம்—இரட்சணை. [ரக்ஷக.]

இரட்சகன்—1. காப்பாற்றுகிறவன். 2. மீட்கிறவன். ரக்ஷகஃ.]

இரட்சசு–1.பசாசு. 2.பூதம். [ரக்ஷஸ்.]

இரட்சண்ணியம்–1. இரட்சிப்பு. 2. பாதுகாத்தல். [ரக்ஷண்ய.]

இரட்சண்ணியன்—இரட்சகன்.

இரட்சணம்–1. காத்தல். 2. காவல்செய்தல். [ரக்ஷண.]

இரட்சணியம் — காப்பு. [ரக்ஷணீயம்.]

இரட்சணை — 1. காவல். 2. மீட்பு. [ரக்ஷணா.]

இரட்சபன் — சேட்டாதேவியின்பிள்ளை. (சைவச. பொதுவி.சசுக உரை.)[ரக்ஷவஃ]

இரட்சம்—இரட்சை. [ரக்ஷ.]

இரட்சன்—வேந்தனுக்குரிய ஒரு பட்டப்பெயர். (பராசர. உக.) [ரக்ஷஃ.]

இரட்சாபந்தநம்—1. காப்புக்கட்டல். 2. மந்திராட்சர யந்திரக்காப்பு. [ரக்ஷாவநநம்.]

இரட்சி—1. இரட்சிக்கிறவன். [ரக்ஷிநு.] 2. இரட்சியென்னேவலும், தெரிநிலைவினைப் பகுதியும்.

இரட்சித்தல்—1. காத்தல். 'விட்டுறு இரட்சிப்பென்றும்' (சிவப்பி. வியாக். ஆரம்பம். ரு.) 2. மீட்டல்.

இரட்சிதம்—காக்கப்பட்டது. [ரக்ஷித.]

இரட்சிதா — காக்கிறவன். [ரக்ஷிதா.]

இரட்சிப்பு—இரட்சித்தல்.

இரட்சை—1. காவல். 'மாணத் தயிலவருக்கச் சுருக்கமெனு - மேணத் தமிழிற் கிரட்சையாம்' (தைல. கடவுள். ங.) 2. திருநீறு. (பொது. உ0ச.) [தன்னைத்தரித்த ஆன்மாக்களை இரட்சித்தலால் வந்தபெயர்.] 3. மந்திராட்சரயந்திரக்காப்பு. 4. மீட்பு. 5. விசேடகாலங்களிலே மணிக்கட்டிற் கட்டிக்கொள்ளும் பட்டுநூற்காப்பு. [ரக்ஷா.]

இரட்சோவதி — நிருதிக்குரியதாய் மகாமேருபர்வதத்தின் மேற்கங்கணத்திலே இருக்குமொருபட்டணம். ஈசானனுக்குரிய பட்டணத்துக்கும்பெயர். (த.நி.போ.ருகக.) [ரக்ஷோவதீ.]

இரட்டகத்துந்தி—கத்தூரிவெண்டை.

இரட்டர்—1. ஒரு சாதியார். 2. இராஷ்டிரகூட அரசர். 'ஒன்டிறலிரட்டமண்டலம்' (சோழவமி. பக். 91)

இரட்டல்—1. அசைத்தல், வீசுதல். 'குளிர்சாமரை யிருபாலு மிரட்ட' (பாரத. அருச்சுனன்றவ. கரு0.) 2. அசைதல். அமரிட்ட - வெழினிகள் புடையே மென்காலெறிதலி னிரட்டல் போலும்' (கந்தபு. திருவவ. ககக.) 3. இரட்டித்தல். 'டறவொத் திரட்டும் வேற்றுமை மிகவே' (நன். கஅங.) 4. ஒலித்தல். 'நுண்ணிராகுளியிரட்ட' (மதுரைக். சு0சு:) 5. மாறிபொலித்தல். 'படுமணியிரட்டுமருங்கில்' (திருமுரு. அ0.) 6. யாழ்நரம்போசை. (பிங்)

இரட்டி — 1. இரட்டிச்சாதியான். 2. இரட்டியென்னேவலும், தெரிநிலைவினைப்

பகுதியும். 3. இரண்டுபங்கு. 4. கொட்டி. (புறப்பொருள். வெ. கடு-ஆம் பக்.) 5. இணைக்கை. (சிலப். 3. 20. அரும்.)

இராட்டித்தல்—1. இரண்டாமுறையுழுதல். 2. இருமடங்காக்குதல். 3. உண்டபோசநமிணங்காதிருத்தல். 4. வியாதி மக்களித்தல். 5. வேறுபடல். 'இந்தச்சாட்சியிரட்டிக்கிறது.' 6. திரும்பச்செய்தல். 7. ஒன்று இரண்டாதல்.

இராட்டிப்பு—1. இரட்டித்தல். 2. இருமடங்கு.

இராட்டு—1. இரட்டித்துநிற்றல். 'இரட்டைக் கிளவியிரட்டிற்பிரிந் திசையா' (தொல். சொல். சேனா. சஅ.) 2. இரட்டென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 3. இரட்டைநூலால் அல்லது தடித்த நூலால் நெய்த புடவை, முருட்டுத்துணி. 4. இருமடங்கு. 5. ஒலி. 'முழக்கிரட்டு' (நன். உரி. கஅ.)

இராட்டுதல்—1. இரட்டல். 2. கொட்டுதல். 'அரசுடைவாணன்.........குடமுழவிரட்ட' (கல்லா. 21.) 3. உச்சரித்தல். 'அஞ்செழுத்துக் குறையா திரட்ட' (கல்லா. 57.) 4. தெளித்தல். 'நீரை யிரட்டிக்கொள்ளுமா போலே' (திவ். திருக்குறுக். 1. வ்யா.)

இராட்டுமி—ஒரு வாத்தியம்.

இராட்டுறக்காண்டல் — ஐயக்காட்சி. 'திரியக்காண்டலும் இரட்டுறக்காண்டலும் தெளியக்காண்டலுமெனக் காட்சி மூவகைப்படும்' (சி. பொ. பா. 9. பக். 190.)

இராட்டுறமொழிதல்—முப்பத்திரண்டு தந்திரவுத்திகளு ளொன்று; அஃது: இரண்டு பொருள்படச்சொல்லுதல். (நன். பொதுப். கச.) [இரண்டு+உற+மொழிதல்.]

இராட்டுறல் — சிலேடை. (மாறன. 299. உரை.)

இராட்டுறுதல்—1. இருபொருள்படுதல். 2. ஐயுறுதல். 'இரட்டுறவெண்ணலிர்' (சேதுபு. பலதீ. 14.) 3. மாறுபடுதல். 'தானத்து மணியுந் தானு மிரட்டுறத் தோன்றி னானே' (சீவக. 387.)

இராட்டை—1. ஆனிமாதம். (இராசவைத். எக.) 2. இரட்டைத்தொடை. 'அடிமுழுதும் வந்தமொழியே வருவதிரட்டை' (யாப். காரி. உறுப்பி. கஎ.) 3. இரண்டாயிருந் தொன்றுபட்டபொருள். 4. இ ர ண் டு. 5. வேதமோதுமுறைகளுள் ஒன்று. 'வேதங்களைச் சந்தை யிரட்டைமுதலியன விலக்கணத் தோடோதியும்' (சி. சி. அ: கக. மறை.) 6. ஒற்றைப்படாத எண். 7. கோடு. 8. தம்பதிகள். (சூ. நிகண். உ: சுருு.) 9. மிதுநராசி. (சூ. நிகண். க: சுரு.) 10. இரட்டைப்பிள்ளைகள். 11. அரையாடைமேலாடைகள். 'இரட்டைகள் அழுக்கானாலும் மடிகுலையாமல் வைக்குமாபோலே' (ஈடு. 5. 9. 3.) 12. துப்பட்டி. 'மேலேசுற்றின இரட்டைகளும்' (ஈடு. 3. 5. 4.)

இரட்டைக்கிளவி — இரட்டித்துநின்று பொருளுணர்த்துஞ்சொல். 'இரட்டைக் கிளவி யிரட்டிற்பிரிந் திசையா' (நன். ருகசுரு.) அது: 'சளசள வெனமழைத் தாரை கான்றன' என்பதிற் போல்வது. (இராமா. திருவவதார. சுரு.)

இரட்டைக்தண்டட்டிகை — ஒருவகைக் கழுத்தணி.

இரட்டைக்கை—இணைக்கை. (சிலப். அரங்கே. கஅ. உரை.)

இரட்டைக்கோடிபடுப்பு-ஒருவகையடுப்பு. (இந்துபாகசாத்திரம்.)

இரட்டைத்தவிசு—இருவர் இருத்தற்குரிய ஓராசனம். (பெருங். உஞ்சைக். 34. 42.)

இரட்டைத்தொடை — நாற்பத்துமூன்று தொடைகளு ளொன்று. அஃது: அடிமுழுதும் வந்தமொழியே வருவது. 'ஒக்குமே யொக்குமே யொக்குமே யொக்கும் - விளக் கினிற் சிறெரி யொக்குமே யொக்கும், குளக் கொட்டிப் பூவி னிறம்' என்பதிற்போல. இதிலே முதலடிமுற்றும் ஒருசொல்லேவரத் தொடுத்தமை காண்க. (யாப். காரிகை. உறுப். கஎ. உரை.)

இரட்டைநாகபந்தம் — சித்திரகவியில் ஒன்று. (தண்டி. 95. உரை.)

இரட்டைப்பேய்மருட்டி } வெதுப்படக்கி.
இரட்டைப்பேய்மிரட்டி } (பாலவா. 494.)

இரட்டைமணிமாலை — தொண்ணூற்றாறு பிரபந்தங்களுளொன்று; அது: வெண்பாவும் கலித்துறையுமாக அல்லது வெண்பாவும் ஆசிரியவிருத்தமுமாக அந்தாதித்தொடையான் இருபதுசெய்யுள்வரப் பாடுவது. 'இருபது வெண்பாக் கலித்துறையியைன்-வருவ

திரட்டை மணிமாலை யாகும்' (இலக்கணவி. அககூ.) 'வெண்பா விருத்தம் வியப்புற விரு பஃ-தெண்பட வுரைப்பது மிரட்டை மணி மாலை'

இரட்டையர்—1. இரட்டைப்பிள்ளையாகப் பிறந்து சிறப்படைந்த இளஞ்சூரியர் முது சூரியர் என்று வழங்கும் கவிராயர் இருவர். 2. ஒருவயிற்றி லொரேகாலத்திலே பிறந்த இருவர். 'ஓங்குதிறற் சூரனென்றும் பதும னென்று மிரட்டையருக் குரைத்து' (உப தேச. சூராதி. எஅ.) 3. நகுலசகாதேவர். (பிங்க.)

இரட்டைவலம்புரி—ஒருவகை வலம்புரிச் சங்கு.

இரட்டைவிருத்தம் — பதினெருசீர்க்கு மேற்பட்ட சீரான்வரும் கழிநெடிலடியாசி ரியவிருத்தம். (வீரசோ. யாப். 3. உரை.)

இரண்டகம்—1. இருமகம். 2. நம்பிக்கைத் துரோகம்.

இரண்டகவாதி—நம்பிக்கைத்துரோகி.

இரண்டடிப் பாடகமடக்கு-மடக்கலங்கார வகையுளொன்று; அஃது: ஒருசெய்யுளிலே இவ்விரண்டடிமடக்கிவருவது. 'பணிபவ நந் தன தாக மன்னுவார், பணிபவ நந்தன தாக மன்னுவார், அணியென மேயது மன்ப ராகமே, அணியென மேயது மன்ப ராகமே' என்பதிற்போல. (தண்டி. கூசு. உரை.) [வா௦க-படித்தல்.]

இரண்டடியேதுகை — முன்னிரண்டடியு மோரெதுகையும் பின்னிரண்டடியும் மற்றோ ரெதுகையுமாய்வருவது. 'துவைக்குந் துளி முந்நீர்க் கொற்கை மகளி - ரவைப்பதம் பல் விற் கழகொவ்வா முத்த - மணங்கமழ்தா ரச்சுதன் மண்காக்கும் வேலி - னணங்கு மமுதமு மங்கலார் பாடல்' (யாப். காரிகை. ஒழிபி. சூ. உரை.)

இரண்டறக்கலத்தல் — முத்தியடைதல்.

இரண்டாங்கட்டு — வீட்டின் இரண்டாம் பகுதி.

இரண்டன்—எதிரிடைசெய்யுங் குணமுடை யவன்.

இரண்டாட்டுதல் — இருநெறிப்படுதல். 'இரண்டாட்டா தொழிந்தீசன் திறமே பேணி' (தேவா. 811. 3.)

இரண்டாந்தரம்— 1. முக்கியமல்லாதது. 2. இடைவேளைப்போசனம்.

இரண்டாநிலம் — மேன்மாடம். (திவ். திருப்பா. 10. வ்யா.)

இரண்டாம்பக்ஷம் — 1. முக்கியமில்லா தது. 2 நிச்சயமில்லாதது.

இரண்டிடை—இண்டை. (மலை)

இரண்டு—1. ஒன்றையுமொன்றையுங்கூட் டலால் வருமெண். 2. சில. 'இரண்டுநாளைச் சுற்றமே யிரங்கல் வேண்டா' (சீவக. 270.) 3 உகரவெழுத்து. 'எட்டி ரெண்டிரண் டும் மறி யேனையே' (திருவாச. 5. 49.) 4. மல சலம். 'இரண்டடக்கார்' (திருவேங். சத. 74.)

இரண்டுடை—கருவேல், வெள்வேல் என் னு மிவை. கூவிளநீர்க்-கண்டகியிரண்டுடை முக்கண்டகிதுவஞ்சூரி' (தைல. தைலவ. கநரு.)

இரண்டுபடுதல்—1. ஐயுறல். 2. வேறுபடு தல்.

இரண்டுவவு—அமாவாசையும்பூரணையும். 'ஓவா திரண்டுவவு மட்டமியும் பட்டினிவிட் டொழுக்கங் காத்தல்' (சிந்தா. கேமசரி. கருசு.)

இரணக்கொடி—போர்க்கொடி. [ரணம் - போர்.]

இரணகளம்-போர்க்களம். [ரணவக்ஷ: ரணம் - போர்.]

இரணகாளம் — போர்திறத்த ஊதுங் காளம். [ரணம் - போர்]

இரணகெம்பீரம்—யுத்தத்தின் போரார்ப் பரவம். [ரணகம்பீர: ரணம் - போர். கம்பீரம் - போரார்ப்பரவம்.]

இரணங்கொல்லி — ஒரு பூடு, ஆடுதின் னுப்பாளை. (மூ. அ.)

இரணசங்கம் - போர்வென்றூதுஞ்சங்கு. [ரணசங்க.]

இரணசன்னி — புண்களால் உண்டாகும் சன்னி.

இரணசிந்நம்—1. படைக்கலம். 2. படைச் சகம். [ரணசிஹ்நம்.]

இரணசுக்கிரன்—கண்ணோயுளொன்று.

இரணத்துருவம்—கிரகபுடத்திற் கழிக்கப்படுவது. [ரணத்ருவ.]

இரணத்தொடை—முரண்டொடை; அது: சொல்லாலேனும் பொருளாலேனும் மறுதலைப்படத்தொடுப்பது 'கருதிற் கடையே கடையிணை பின்கடைக் கூழையுமென் - றிரணத் தொடைக்கு மொழிவ ரிடைப்புணர் வென்பதுவே' (யாப். காரிகை. ஒழிபி. ரு.) [இரணம்-போர்.]

இரணதோரணம் — பகைவரை வெட்டி அவர்தலைகளைத் தோரணமாகக்கட்டிப் பிடிப்பது. [தோரண.]

இரணபத்திரகாளி—துர்க்கை.

இரணபரீட்சை—சத்திரபரீட்சை. [ரணபரீக்ஷா.]

இரணபாதகம்— 1. கொலைப்பாதகம். 2. நம்பிக்கைத்துரோகம். 3. கடன்தீராத துரோகம். [பாதகம்.]

இரணபாதகன்—கொலைப்பாதகன்.

இரணபேரி-போர்ப்பறை. [ரணபேரீ.]

இரணபேரிகை—இரணபேரி.

இரணம்—1. உணவு, இரை. 2. உப்பளம். [இரண.] 3. உவர்நிலம். 4. ஒலி. [ரண.] 5. கடன். (சூ. நிகண். கக: லகரவெ. உக.) 6. பகை. 7. பல். 8. புண். 'உள்ளிவிருபல மிட்டுப்பூசிரணம்போமால்' (தைல. தைலவ. கoங.) 9. பொன். (சூ. நிகண். கக: லகரவெ. உக.) [ஹிரண்ய.] 10. போர். (பிங்கல. ககஎங.) 11. மாணிக்கம். (சூ. நிகண். கக: லகரவெ. உக.) [ரண.] 12. வனாந்தரம். [இரண.] 13. வேட்டை.

இரணமத்தம் — யானை. [ரணமத்த: ரணம் - போர். மத்தம் - மதமுள்ளது.]

இரணமயகோசம்—சிதம்பரம். (கோயிற்பு. பக். சரு.) [ஹிரண்மயகோஶ: பொன்மயமாகிய கோசமாதலின் இப்பேர்பெற்றது.]

இரணமாலை—பகைவர்குடரை மாலையாக அணிவது.

இரணமுழக்கு — உதிரம் உடலெங்குந் தோயும்படி போர்செய்தல்.

இரணரங்கம்—1. போர்க்களம். [ரண; ரங்க.] 2. யானையின்முகத்திலே தந்தங்களுக்கிடையேயிருக்கும்பகுதி. [ரணரங்க.]

இரணரணம்—1. கொசுகு. 2. துக்கம். [ரண - போர், இரைச்சல்.]

இரணவந்தசம் — அறுவகைப்போகபூமிகளுளொன்று. (கூர்மபு. வருணச் உசு. உரை.)

இரணவிரணம்—1. கொசுகு. 2. துக்கம். 3. போர்செய்யுமிடத்துப்பட்டகாயம். [ரணவ்ரண: ரண-போர். வ்ரண-காயம்.]

இரணவீரம்—தன்வேந்தர் தடுத்தும் அஞ்சாது போர்புரி சௌரியம்.

இரணவீரன்—1. போர்வீரன். 2. அங்காளம்மைகோயிற் பரிவாரதேவதை.

இரணவைத்தியம் — சத்திரவைத்தியம். [ரணவைத்ய.]

இரணவைத்தியன் — சத்திரவைத்தியன்.

இரணங்கணம்—போர்க்களம். [ரணாங்கண: அங்கணம் - களம்.]

இரணசிரம்—போர்க்களம். [ரணாஜிர: அஜிரம் - களம்.]

இரணபியோகம்—படையெழுச்சி. [ரணாபியோக: அபியோக - ஏற்படுதல்.]

இரணி—1. குருவியால். (இராசவைத்.) 2. பன்றிமொத்தை. (மலை.)

இரணியகசிபன்—திதிபுத்திரராகிய ஐம்பத்தாறுகோடி இராக்கதர்களு ளொருவன்; இவனுக்குப் பிரகலாதன், சகலாதன், அநுலாதன், சிபி, பாஷகன் என ஐவர் புத்திருண்டு. இவனை விட்டுணு நரசிங்காவதாரத்திற் கொன்றனனென்பர். (வி-ணி. உசரு.)

இரணியகசிபு— இரணியகசிபனென்னும் அசுரன். (காஞ்சிப். இரணி. உஉ.) [ஹிரண்யகஶிபு: ஹிரண்ய - பொன். கஶிபு - வஸ்திரம். இவனுக்கு இரணியனென்னும் பெயருமுண்டு என்பர்.]

இரணியகசிபுகந்—விட்டுணு. [ஹிரண்யகஶிபுஹந்: ஹந் - கொன்றவன். இரணியகசிபுவைக் கொன்றவனென்றபடி.]

இரணியகர்ப்பசார்வாகன் — உலோகாயதர் இருதிறத்தாரு ளொருவன். (சி. சி. பர.

உலோகாயத. மறு. ௩௧. உரை.) [ஹிரண்ய கர்ப்ப-ஹிரண்யம்-பொன்-கர்ப்பம்-கரு.]

இரணியகர்ப்பம் — 1. ஈசுவரனுடைய சூக்ஷ்ம சரீரம். (உபநிடத. ௨௦.) 2. உட்பொன்னுடையசாளக்கிராமம். 3.ஒருயாகம். [ஹிரண்யகர்ப்ப.]

இரணியகர்ப்பயாஜி — இரணியகர்ப்பயாகம்பண்ணினவன்.

இரணியகருப்பதானம்— சோடசதானங்களுளொன்று. (கூர்மபு. பதிக. ௨௩. உரை.) [ஹிரண்யகர்ப்பதானம்.]

இரணியகருப்பமதம் — சார்வாகமதத்தினொருவகை; இம்மதத்தன் பிராணனே ஆன்மா என்பன். (த. நி. போ. கரு.) பிரமாவே சிருட்டிகர்த்தாவாய்த் தனதாற்றலோடு நிலைபெறுவர் என்றுகொள்ளும் மதம் என்பர் சித்தியாருரையில்.

இரணியகருப்பன்—1. சமட்டி சூக்கும தேகத்தை அபிமானிக்கின்ற ஈசுவரன். (வேதா. சூ. ௪௧.) [விகசிதமாய்ப் பிரகாசிக்கின்ற யாவையும் தனதுதரத்துள் அடக்கியிருப்பவன் என்றபடி] 2. சார்வாகமதத்தரிலொருவகையானவன்; இவன் பிராணனே ஆன்மா என்பவன். (த. நி. போ. கரு.) 3. பரசொப்பனத்தை நானென்று அபிமானித்த பரன். (ஞான. தற்பத மகாம்.) 4. பிரமதேவன். 'புருடனிர ணியகருப்பன் மறைக்கிழவன் புவகத்துக்-கொருமுதல்வன் கஞ்சனென வவனையே யுரைத்திடுவார்' (கூர்மபு. பிரகிருதி. ௧அ.) பொன்மயமானகருப்பமுடையவனும், கருப்பத்திற்பொன்மயமான பூமியையுடையவனுமாகவின்வந்தபெயரென்பர். [ஹிரண்யகர்ப்ப.]

இரணியசிராத்தம்-பொன்கொடுத்துச்செய்யும் சிராத்தம். 'ஆமசிராத்தஞ்செய்தற்கு இயலாவிடத்து இரணியசிராத்தஞ்செய்யலாம்' (பாலபாடம்.) [ஹிரண்ய -பொன்.]

இரணியதானம்—சொர்ணதானம். (வி-ணி.)

இரணியநேரம்—மாலைநேரம். [இரணியனைக் கொன்றநேரம் அது என்பர்.]

இரணியம்-1. அழியாதவஸ்து. 2.ஓரளவு. 3. சுக்கிலம். 4. பொன். (சூ. நிகண். ௬: ௩.) 5. வெள்ளி. 6. பணம். [ஹிரண்ய.]

இரணியவருடம் — நவவருடத்தொன்று; சிருங்ககிரிமுதற் சுவேதகிரிவரையிலுமுள்ள தேசம். 'சிருங்கமுதற்சுவேதமட்டு - நீதிபிரணியவருடம்' (கந்தபு. அண்டகோச. ௩௬.) [ஹிரண்யவர்ஷ.]

இரணியவிந்து—அக்கினி. [ஹிரண்யவிந்து.]

இரணியவேளை—அந்திநேரம்.

இரணியன்—1. ஓரசுரன்; இவன் காசிபமுனிக்கு அதிதிவயிற்றிற்பிறந்தவன்; இரணியகசிபு என்பவ னிவனே. பொன்னிறமுடையவன் என்றபடி. (காஞ்சிப். தல. ௨.) 2. துவாதசாதித்தரிலொருவன். 3. பிரகற்பதி. (இராசவைத்)

இரணியாக்கன்—ஓரசுரன்; இவன் இரணியகசிபுவுடைய தம்பி. (காஞ்சிப். இரணி. ௧அ.) [ஹிரண்யாக்ஷ. பொன்போன்ற கண்ணுடையவன் என்றபடி.]

இரணை — இரட்டை. 'இரணையலவன் பார்க்கும்' (நற். 123.)

இரத்தக்கட்டி—ஒருவகைப்புண்.

இரத்தக்கட்டு—உதிரஞ்சுரக்கை.

இரத்தக்கண்ணன்—கோபக்கண்ணுடையவன்.

இரத்தக்கலப்பு—நெருங்கிய உறவு.

இரத்தக்கவிச்சு—உதிரநாற்றம்.

இரத்தக்கழிச்சல்-பேதிவகையில் ஒன்று. (மூ. அ.)

இரத்தக்கனப்பு — 1. இரத்தங்கதித்துவருமொருநோய். 2. கருவம்.

இரத்தக்காட்டேறி—காட்டிலிருக்கும் ஒரு பெண்பசாசு.

இரத்தக்காணிக்கை — போரில் வீழ்ந்த வீரருடையமைந்தர்க்குக் கொடுக்கும் மானியம்.

இரத்தக்கிராணி—ஒரு நோய். அது நீடித்திருக்கும் ஒருவகை இரத்தக்கழிச்சல். கிரகணி என்னும் ஸம்ஸ்கிருதபதம் கிராணி எனத் திரிந்துவந்தது. [ரக்த க்ரஹணி.]

இரத்தக்குலை—ஒருவகைநோய்.

இரத்தக்குழல்—உதிரமோடுங்குழாய்.

இரத்தக்கோதி—1. துக்கமுதலியவற்றில் உண்டாகும் உதிரக்கொதிப்பு. 2. காமக்கிளர்ச்சி.

இரத்தக்கொழுப்பு—1. உதிரபுஷ்டி. 2. மதம். 3. செருக்கு.

இரத்தக்கோமாரி — மாட்டுக்கு இரத்தக் கழிச்சலோடு வரு மொருநோய். (மூ. அ)

இரத்தகதசுரம்—இரத்தத்தோடு சம்பந் தப்பட்ட ஒருவகைச்சுரம். [ரக்தகதஜ்வர.]

இரத்தகம்—1. குசும்பாப்பூ. 2. சிவப்புச் சீலை. [ரக்தக.]

இரத்தகமலம்—செந்தாமரை (மலை). [ரக்த கமலம்: ரக்த - சிவப்பு.]

இரத்தகாசம்—இரத்தமுமிழ வருவதாகிய ஒருவகைக் காசநோய்.

இரத்தகுமுதம்—1. செவ்வாம்பல். 2. செந் தாமரை (மலை). [ரக்தகுமுத.]

இரத்தகுன்மம் — மலடிகளுக்கு மாதாந்த ருதுகாலரத்தத்தைவெளிப்படுத்தாத ஒரு வகைநோய். (தைல. தைலவ. ௧௦அ.) [ரக்தகுல்ம.]

இரத்தகைரவம்—செவ்வாம்பல். (மூ. அ.) [கைரவம்.]

இரத்தகோகநதம்—செந்தாமரை. [ரக்த கோகநத.]

இரத்தச்சுரப்பு — 1. இரத்தமிகுதி. 2. இரத்தவூறல். 3. செருக்கு.

இரத்தச்சுருட்டை—பாம்பில் ஒருவகை.

இரத்தசந்தநம்—1. செஞ்சந்தநம். 2. மஞ் சள். [ரக்தசந்தந.]

இரத்தசந்தியகம் — 1. செங்கழுநீர். 2. செந்தாமரை. (மலை) [ரக்தஸந்த்யக: ரக்த- சிவப்பு. ஸந்த்யக - மாலைநேரம்.]

இரத்தசாகம்—செங்கீரை. (மலை)

இரத்தசாமண்டி—தூர்க்காபேதம்.

இரத்தசிதுவம்—சிங்கம். [ரக்தஜிஹ்வ.]

இரத்தசுரம்—ஒருவகைச்சுரம். [ரக்தஜ்வர.]

இரத்தசூலை — ஒருநோய்; அது: சூதக வாயு. [ரக்தசூலா.]

இரத்தத்துறை—ஒருவகை மீன்.

இரத்தசேந்துகம் — நாகப்பூச்சி. [ரக்த ஜந்துக.]

இரத்ததாது — 1. செம்பு. 2. செவ்வரி தாரம். [ரக்ததாது.]

இரத்ததந்தி—பார்வதிதேவி. [ரக்ததந்தீ: ரக்த - சிவப்பு. தந்த - பல்.]

இரத்ததுண்டம் — கிளி. [ரக்ததுண்டம்: துண்டம் - அலகு.]

இரத்ததூரணம் — நாலிராசிபதினெட்டுப் பாகைவைத்து அதிலே, செவ்வாயுடைய அற்றைச் சுத்தபுடத்தைக் களைந்துவந்ததில் அற்றைநாளுறுமேல் அது. (விதாந. குண குண. ௩அ. உரை.)

இரத்தநரம்பு — இரத்தம் ஓடிக்கொண் டிருக்கிற நாடி.

இரத்தப்பழி—கொலைப்பழி.

இரத்தப்பிரமியம்—சலவாயிலா லிரத்தம் போகு மொருநோய்.

இரத்தப்பிரமேகம் — இரத்தப்பிரமியம். [ரக்தப்ரமேஹ.]

இரத்தப்பிரவாகம்—உதிரப்பெருக்கு. [ரக்தப்ரவாஹ.]

இரத்தப்பிராவை — ஏழ்நரகவட்டத் தொன்று. அஃது: இரத்தநிலம். [ரக்தப்ர பா.]

இரத்தப்பிரியன் — கொலைவிருப்புடை யோன்.

இரத்தபீநசம்—நாசியால் இரத்தத்தைப் போக்கு மொருவகைத் தலைநோய். [ரக்த பீநஸ.]

இரத்தப்புடையன்—ஒருவகைப் புடையன் பாம்பு. இதன்விஷம் கடியுண்டவனது கண் நாசிவாய் முதலிய தேகத்துவாரங்களினாலே இரத்தத்தைப்போக்கிக்கொண்டிருக்கும்.

இரத்தப்பெருக்கு—உதிரப்பிரவாகம்.

இரத்தப்பெரும்பாடு — உதிரப்பெரும்பா டாகிய ஒருநோய். 'வழுக்கிரத்தப் பெரும் பாடு மெலும்புருக்கிப் பிணியும் மலடிமைந்த ராங்கலைதேர் மருத்துவர்க ளிதனை' (தைல. தைலவ. சக.)

இரத்தபலம் — ஆலம்பழம். [ரக்தபலம்: ரக்தம் - சிவப்பு. பலம் - பழம்.]

இரத்தபலி-1. இரத்தத்தோடுசெலுத்தும் பலி. 2. கொலை. [ரக்தபலி.]

இரத்தபலை—கொவ்வைப்பழம்.

இரத்தபாதம்–கிளி. [ரக்தபாதம்: சிவந்த பாதத்தையுடையதென்றபடி.]

இரத்தபாரதம்—சாதிலிங்கம். [ரக்தபாரதம்.]

இரத்தபாஷாணம் — 1. ஒரு நோய். 2. வைப்புப்பாஷாண முப்பத்திரண்டினுென்று. (மூ. அ.)

இரத்தபிட்சாப்பிரதாநமூர்த்தி — வைரவமூர்த்தமாய் இறுமாப்புற்ற இமையவர்பால் இரத்தத்தைப் பலியேற்று அவர்களகந்தையை அடக்கிவைத்த சிவபிரான். (சிவபரா. உசஉ.) [ரக்தபிக்ஷாப்ரதாநமூர்த்தி]

இரத்தபிண்டம்—1. சினமல்லிகை. (மலை) 2. வாயாலும் மூக்காலும் இரத்தம்போகின்ற ஒருநோய்.

இரத்தபித்தம்–இரத்தத்தோடு சம்பந்தப்பட்ட ஒரு நோய்; அஃது: இரத்தக்கதிப்பாய் வாய், மூக்கு, மலவாயில் முதலியவற்றால் இரத்தங்கழிதன் முதலிய குணங்களையும், தலையிடி சுரம் முதலிய உபத்திரவங்களையுமுடையதாயிருக்கும்.

இரத்தபிந்து – 1. வயிரக்குற்றத்தொன்று. 2. இரத்தவிந்து.

இரத்தபீனசம்—மூக்கிலிருந்து இரத்தங்காணும் ஒரு நோய்.

இரத்தபுட்பிகா— } மூக்கிரட்டை. (மலை)
இரத்தபுட்பிகை– } [ரக்தபுஷ்பிகா.]

இரத்தபோளம் — ஒருவகை வாசனைப் பண்டம். (மூ. அ.)

இரத்தம்–1. உதிரம். (திவா) 2. குங்குமப்பூ. 3. கொம்பரக்கு. (தைல. தைலவ. கஙடு.) 4. சாதிலிங்கம். 5.சிவப்பு. (சூ.நி.) 6. செம்பு. 7. பவளம். (மூ. அ.) 8. ஈரல். (பிங்.)

இரத்தமடக்கி—உதிரங்கட்டுமருந்து.

இரத்தமண்டலம் — செந்தாமரை(மலை).

இரத்தமண்டலி — ஒரு பாம்பு; இதன் விஷம் கடிபட்டவனுடைய தேகத் துவாரங்களினாலே இரத்தம் வரச்செய்யும்.

இரத்தமாடன்—ஒரு பேய்.

இரத்தமாரணம்—காவிக்கல்.

இரத்தமானியம்—ஒருவகை மானியம்.

இரத்தமூத்திரம்–சிறுநீருடன் உதிரமொழுகும் ஒரு நோய்.

இரத்தமூலம்—இரத்தத்தோடு சம்பந்தப்பட்ட ஒரு நோய்.

இரத்தமேகம்—இரத்தவெட்டை.

இரத்தரோகம்—1. ஒரு நோய். 2. கண்ணோயுளொன்று. [ரக்தரோகம்.]

இரத்தல்—1. குறைகூறல். 'கைதொழுதிரந்துவேண்டி' (திருவிளை. மெய்க்கா. உசு.) 2. பிச்சைகேட்டல். 'இல்லெனவிரக்தோர்க்கொன் றீயாமை யிளிவென' (கலி. பாலைக். உ.) 3. பிரார்த்தித்தல். 'இனியுன்னை யென்னிரக்கேனே'(திருவாச. 22.5)

இரத்தவடி—மசூரி, வைசூரி. (மூ. அ)

இரத்தவமனம்—இரத்தவாந்தி.

இரத்தவரடி—இரத்தவடி.

இரத்தவலிப்பு–இரத்தம் அதிகரித்தலினாலெழுமொரு வலிப்பு. (மூ. அ)

இரத்தவழலை — விஷப்பாம்பு வகையில் ஒன்று.

இரத்தவள்ளி—உணவுக்குரிய ஒருவகைச் சிவப்புநிற வள்ளிக்கிழங்கு.

இரத்தவாதபித்ததன்மம்— பெண்களுக்கு வரும் ஒருவகைநோய்.

இரத்தவாரி—ஒரு நோய்; அது பெரும்பாடிறைத்தல்.

இரத்தவிந்து–1. இரத்தத்துளி. 2. இரத்திநக்கல்லுக்குக்குற்றமாயுள்ள சிவந்த மறு. 3. மாணிக்கரத்திநத்தின் ஒருவகுக்கமாகிய குருவிந்தம். (சிலப். ஊர்காண்காதை. ககூ. உரை.) [ரக்தபிந்து.]

இரத்தவிரியன் — ஒருவகைப் புடையன் பாம்பு.

இரத்தவிசம்—1. மாதுளை. (மலை) 2. மாதுளங்கனி. [ரக்தபீஜ; பீஜம் - விதை.]

இரத்தவெறி—1. இரத்தங்குடித்த வெறி. 2. செருக்கு.

இரத்தாக்கம் — 1. எருமை. 2. புறா. [ரக்தாக்ஷ: அக்ஷ - கண்.]

இரத்தாக்கன்–1. கொடியவன். 2. கொடுங்கோலன். 3. செங்கண்ணன்.

இரத்தாகத்தமிர்தம்— சிற்றுமணக்குநெய். 'சுரசமித்திர வல்லி விழுதிசு வேத மூலயுத் தாமணி பர்ப்பணக் - தோய பாணமில் வேழிர தத்தொடு சோசப் பாவிரத் தாகத் தமிர்தமும்' (தைல. தைலவ. கஉ.)

இரத்தாகம் — சிற்றுமணக்கு. 'நற்புல விரத்தாக செய்யொன் றரைப்படி நகத் தயி ரனந்தை குப்பி' (தைல. தைலவ. கஉரு.)

இரத்தாங்கம் — 1. செவ்வாயென்னுங் கிரகம். 2. மஞ்சள். 3. மூட்டுப்பூச்சி. [ரக்தாஂக.]

இரத்தாசயம் — தேகத்திலே இரத்தந் தங்கும் கோளம், இருதயம். [ரக்தாஶய: ஆஶய - கொள்கலம்]

இரத்தாட்சி—1. எருமை. 2. செம்போத்து. 3. புறா. 4. வியாழவட்டமாகிய அறுபது வருடத்தொன்று. [ரக்தாக்ஷி.]

இரத்தாதாரம்—தோல். [ரக்தாதாரஂ.]

இரத்தாதிசாரம் — வயிற்றுளைவோடுவரும் இரத்தக்கழிச்சல். [ரக்தாதிஸார.]

இரத்தாம்பரம்—செவ்வாடை.

இரத்தி—1. இத்திமரம். 2. இரத்தின கருப்பம். 3. இலந்தைமரம். 'இரத்திநீடிய வகன்றலைமன்றம்' (புறநா. ௬௪.) 4. சமுத்திரம். 5. பிரியமானதன்மை. [ரக்தி.]

இரத்திநகசிதம் — இரத்தினம்பதிக்கப் பட்டது. [ரத்நகசித.]

இரத்திநகம்பளம் — உயர்ந்த சித்திர கம்பளம். [ரத்நகஂபல: ரத்ந-சிரேட்டம்.]

இரத்திநகம்பளி — இரத்தினகம்பளம்.

இரத்திநகருப்பம் — சமுத்திரம். [ரத்ந கர்ப.]

இரத்திநகருப்பன்—குபேரன்.

இரத்திநச்சுருக்கம் — 1. ஒரு வைத்திய நூல். 2. புகழேந்திப்புலவரியற்றிய ஓர் உறுப்புவமைநூல்.

இரத்திநசபை—திருவாலங்காட்டு நடராஜ சபை.

இரத்திநசாநு — மகாமேருமலை. [ரத்ந ஸாநு: ஸாநு - மலைத்தொடர்.]

இரத்திநத்திரயம் — 1. நன்ஞானம், நற் காட்சி, நல்லொழுக்கமாகிய மூன்று தலைமைக்குணங்கள். (சிந்தா. நாமக. ௬௪௫. உரை.) 2. வடமொழியிலியற்றப்பட்டிருக்கும் ஒரு சைவசித்தாந்தநூல். (சி. சி. க: கக. சிவஞா.) [ரத்நத்ரய.]

இரத்திநதீவம் — இலங்கை. (மணி. 11. 21.)

இரத்திநப்பிரத்தம்—கைலாயத்தின்கண்ணதாகிய தாழ்வரை. (சி. சி. க: ருஉ. மறை.) [ரத்நப்ரஸ்த.]

இரத்திநப்பிரபை — எழுநரகங்களுளொன்று. (சிந்தா. முத்தி. உகக.) [ரத்நப்ரபா.]

இரத்திநபரீட்சை — கலைஞான மறுபத்து நான்கினொன்று. அஃது: இரத்தினங்களது தன்மையையறிவிப்பது. [ரத்நபரீக்ஷா.]

இரத்திநம் — 1. சிரேட்டம். 2. விலையுயர்ந்த திரவியம். 3. விலையுயர்ந்த மணி. இது, பஞ்சரத்திநம், நவரத்திநம், சதுர்த்தசரத்திநம் எனப் பலதிறப்படும். 4. அரத்தை.

இரத்திநமாத்திரை—ஒரு குளிகை. [ரத்ந மாத்ரா.]

இரத்தினமாலை—மணிவடம்.

இரத்திநமாலையணி—ஓரலங்காரம். அது: வருணிக்கவேண்டிய பொருள்களை உலகத்திற் பிரசித்தமாக விருக்கின்ற முறையை வழுவாமற் கூறுவது. 'புகழும் பொருளை முறைவழு வாது புகலுதற்குப்-பகருறு நாம மிரத்திநமாலை' என்பதனாற் காண்க. (குவல. அ௪.)

இரத்திநலிங்கம் — இரத்தினத்தாலாகிய சிவலிங்கம். இது: செம்பு முதலிய லோகங்களாலாகிய இலிங்கத்துக்கு நூறுமடங் கதிகமென்பர். (சைவச. பொதுவி. அ0, அக. உரை.) [ரத்நலிஂக.]

இரத்திநவருடகம்—குபேரனுடைய தேர். [ரத்நவஷ்டக.]

இரத்திநாகரம் — 1. இரத்தினமிருக்குஞ் சுரங்கம். 2. கடல். 3. தனுக்கோடிக்கு வடக்கிலுள்ளகடல். [ரத்நாகர: ஆகர - உறைவிடம்.]

இரத்திநாங்கம்—கருடன்.

இரத்திநாவளி — இரத்தினமாலையணி. (குவல. எ௪.)

இரத்திநி—1. பிடிமுழம். 2. முட்டியாகப் பிடித்த கை. 3. முழங்கை. 4. முன்கைப் பேரெலும்பு. [ரத்நி.]

இரத்தியம்—1. இரதத்திற்பூட்டுங் குதிரை. 2. உயர்ந்ததெரு. 3. உருள். 4. பல தெருக்களின் சந்திப்பு. [ரத்ய.]

இரத்திரி—இத்திமரம்.

இரத்துதல்—பேசலா லெழு மொலி.

இரத்தை—1. அபரை, பராபரை, பரையென்னுஞ் சந்தியாசிவசத்தி மூன்றனுள் சைவாசாரியர்களாலே பிராதக்காலத்திற் றியானிக்கப்படும் பரையின்பேதமாகிய ஒரு சத்தி. (சைவச. பொது. ௭௪. உரை.) 2. மஞ்சிட்டி. 'பாமரமிரத்தைசாரிபைமிருணாள மஞ்ச-டோலடர் நிசிமுன் முகச் சொலுங் கனி' (தைல. தைலவ. ௫௨.)

இரத்தோற்பலம் — 1. செங்குவளை. 2. செந்தாமரை (மலை). [ரக்தோத்பல.]

இரதகம்—இச்சி. (மலை)

இரதகாரன்—1. அரசன் பிராமணப்பெண்ணைச் சோரத்திற் கூடிப் பெற்ற பிள்ளை. 'பொற்றட மகுட வேந்தன் போற்றுவேதியர்தம் மாதை - யுற்றசோ ரத்திற் கூடவுதித்தவ னிரதகாரன்' (சூத. சாதிவரலா. ௩௩.) 2. கரணமங்கை மாகிட்டியனைக் கூடிப்பெற்ற பிள்ளை. 'நிரைவளைக் கரணமங்கை நேர்மாகிட் டியற்புணர்ந்து - தரையிடைப் பெற்ற மைந்தன் றக்கக னிரதகாரன்' (சூத. சாதிவரலா. ௨௪.) [ரதகார. இவனது தொழில் இரதஞ்செய்தல்.]

இரதகிண்டகன்—1. தூர்த்தன். 2. பலாற்காரமாக ஒரு பெண்ணைப் பிடித்துக்கொண்டு போய்க் கற்பழிக்கிறவன். [ரதஹிண்டக: ரத - புணர்ச்சி. ஹிடி-போதல்.]

இரதகீலம் — நாய். [ரதகீல: ரத - புணர்ச்சி. கீல - இறுகுதல்.]

இரததரு—கணவன். [ரதகுரு.]

இரததளிகை — இரசகுளிகை. (சிவப். உ: உ.) [ரஸகுளிகா.]

இரதகூசிதம்— மகளிர் புணர்ச்சியில் வரும் முறுமுறுப்பு. [ரதகூஜித: ரத- புணர்ச்சி. கூஜித - முறுமுறுப்பு.]

இரதசத்தமி — மாகமாதச் சுக்கிலபக்ஷத்துச் சத்தமி. (விநாயகபு. 75. 13)

இரதசந்தியாகம்—செந்தாமரை.

இரதசாரி – 1. தேரேற்றம். [ரத்யவாரி.] 2. வேசி, அபிசாரி. [ரதவாரி.]

இரததந்மாத்திரை— பூதாதியகங்காரத்தினின்றுதோன்றிய வைந்து தன்மாத்திரைகளு ளொன்று. அது, சுவையறியு மிரசேந்திரியம், தன்விடயத்தை விடயிக்குமாறு ஊக்கஞ்செய்வித்து உடனிற்குமென்ப. (சி. சி. ௨: ௬௪. சிவஞாந.) [ரஸதந்மாத்ரா.]

இரததாலி—1. காமதூர்த்தி. 2. காமாதுரன். 3. தூர்த்தன். [ரததாலீ.]

இரதநாரீசன் — 1. தூர்த்தகாமி. 2. நாய். 3. மன்மதன். [ரதநாரீவ: ரத - புணர்ச்சி. நாரீ-பெண். வி-சேர்த்தல்.]

இரதபதம்—புறா. (அக. நி)

இரதபந்தம்-1. சித்திரகவிகளு ளொன்று; அது: தேர்க்கவி. [ரதபந்த.] 2. மகளிர் புணர்ச்சி.

இரதபரீட்சை—கலைஞாந மறுபத்துநான்கி னொன்று; அது: தேருரும்வித்தை. [ரத பரீக்ஷா: பரீக்ஷா-ஆராய்ந்தறிதல்.]

இரதபாதம் — தேருருள். [ரதபாத.]

இரதம்—1. அரைஞாண். (சூ. நிகண். ௧௧. ரகரவெ. ௨.) 2. அவயவம். 3. இரசம், சாறு. 4. இரசலிங்கம். 'மணிவான லிங்கமிரதஞ் சுயம்பு' (சைவச. பொது. அக.) 5. இனிமை. 'இரதமுடைய நடமாட்டுடையவர்' (திருக்கோ. 57.) 6. உடல். 7. மூர்த்தி. 8. குணம். 9. சத்ததாதுக்களுளொன்று; அஃது: உமிழ்நீர். (திவா). 10. சாத்தியம். 11. சுவை. அது: நாவினாற் கவரப்படுவது (பிங்). 12. சூதம். அஃது: இரும்புமுதலிய உலோகங்களைப் பொன்னாக்குவதொரு பொருள். 'சம்புவின்வந்ததோர்தகைசா-லிரதமுண்டு' (கந்தபு. மார்க்கண். ௩௨௧.) 13. தேர் (சூ. நிகண். ௧௧: ரகரவெ. ௨). 14. பல் (மூ. அ). 15. பாதம். 16. புணர்ச்சி (சூ. நிகண். ௧௧: ரகரவெ. ௨). 17. மகிழ்ச்சி. 18. மாமரம் (மூ. அ). 19. வண்டல். 20. வண்டு (பிங்). 21. பாவனை. 'பரிசவிதையிரதத்தி லெழுவதாம்' (ஞானவா. தாகு. 34). [2, 6, 7, 13, 15. ரத. 11. ரஸ. 14. ரத. 16, 17. ரத.]

இரதயோகநிர்க்குண்டி — ஒருவகைத் தைலம். 'மீயுண ரிரத யோக நிர்க்குண்டித் தைல மீதே' (தைல. தைலவ. கஅ.)

இரதயோநி—வியபிசாரி.

இரதர்—விருப்பமுடையவர். (சைவவிஞ. ௬உ.)

இரதலிங்கம்-இரசலிங்கம். [ரஸலிங்கம்.]

இரதவாழை—ஒருவகை வாழை.

இரதவிரணன்—நாய். [ரதவ்ரண: ரத- புணர்ச்சி. வ்ரண-புண்.]

இரதன்—1. கள். 2. கிளி.

இரதனம்—1. அரைஞாண் (சூ. நிகண். எ: உஅ.). 2. கிண்கிணி. 3. பல். [ரஸந.]

இரதாங்கபாணி — விட்டுணு. [ரதாங்க பாணிு: ரதாங்க - சக்கரம்.]

இரதாங்கம்-உருளை, சக்கரம். [ரதாங்க.]

இரதாயநி — வேசி. [ரதாயநீ: ரத - புணர்ச்சி. அயந - வழி.]

இரதாருடன்—தேரூர்வோன்.

இரதி—1. ஆசை (சூ. நிகண். கக: ரகரவெ. உசு). 2. இரத்தல். 3. இரதத்திலின்று போர்புரிவீரன். 4. இரதத்தை ஊருகிறவன். 5. இரதமுடையவன். 6. இலந்தை (மலை). 7. உருசி. 8. காந்தள். 9. காமம். 10. நிறுக்கும் படிக்கல். 'மரகதத்தை நிறுக்குமொரு அளவின்பேதம்' (வேதா. சூ. ௬. உரை). 11. பித்தளை (தைல. பாயிர. உக). 12. பெண். 13. பெண்யானை (சூ. நிகண். கக: ரகரவெ. உசு). 14. புணர்ச்சி. 15. மன்மதன்தேவி. (சூ. நிகண். கக: ரகரவெ. உசு). [1,9,14,15 ரதி. 3, 4, 5. ரதிந். 13. ரதிநு.]

இரதிக்கிரகம்—யோநி. [ரதிக்ருஹ.]

இரதிக்கிரியை-புணர்ச்சி. [ரதிக்ரியா.]

இரதிக்கிர்டை—புணர்ச்சி.

இரதிகன் — 1. தேரையுடையவன். 2. தேரையூர்வோன். [ரதிக.]

இரதிகாதலன்—மன்மதன். (சூ. நி.)

இரதிகாந்தன்— 1. தாமரை. 2. மதன். (பிங்.)

இரதிகுகாம்—யோநி. [ரதிகுஹர.]

இரதித்தல்—1. அடக்குதல். 2. இடுக்கட்படுத்துதல். 3. இழுக்குதல். 4. இன்பமாயிருத்தல். 5. உருசித்தல். 'முக்கனிகளோ அமிர்தமோ வென்றுசொல்லும்படி யிரதிக்கும்' (தாயு. நினைவொ. அ. உரை.) 6. மூடுதல். 7. விரும்புதல்.

இரதிநன்—இரதத்திலேறுகிறவன், இரதமுடையவன்.

இரதிபதி — இரதிகாதலன், மன்மதன். (உரி. நி.)

இரதிமந்திரம் — 1. களியாட்டயரும்வீடு. 2. யோநி. [ரதிமந்திர.]

இரதியாளர்—யாசகர்.

இரதிரமணன் — காமன். [ரதிரமண - ரமண - நாயகன்.]

இரதோபத்தம்-இரதசாரதி தேரிலிருந்து செலுத்து மாசநம். [ரதோபஸ்த: உப - சமீபம். ஸ்த - தரித்தல்.]

இரதோற்சவம்—தேர்த்திருவிழா.

இரந்தரம்—வெளி. 'இரந்தர மாகி வான்றுனிடங்கொடுத்திடும்' (சி.சி. உ: சுசு. சிவாக்.)

இரந்திரம்—1. குழி. (சி. சி. உ: சுசு. சிவாக்.) 2. குறைவானதன்மை. 3. துவாரம். 4. பலங்குன்றினவிடம். 5. வெளி. (சி. சி. உ: சுசு. சிவாக்.) 6. ஜன்மலக்கினம். 7. இரகசியம். [ரந்த்ர.]

இரந்துபின்னிலைநிற்றல்— தலைவியையிரந்திதஞ்சொல்லுதல். (வாண. சு: உரை.)

இரந்துபின்னிற்றற்கெண்ணல்— தலைவன் தலைவியை யிரந்து இதஞ்சொல்லுதற் கெண்ணுதல். (வாண. ரு.)

இரந்தை—இலந்தை. 'இரந்தையின்கனி' (சேதுபு. காசிப. 46.)

இரப்பாளன்—யாசகன். (ஈடு. 2. 6. 1.)

இரப்பு—1. தரித்திரம். 2. பிச்சை. 3. யாசித்தல். 'தேர்வழியீவார்பாற்சென்றிரப்ப நன்று' (இன்னிசை. கச.)

இரப்புக்கோளிக்காரகம்-வேண்டுமென்று இரந்தபொருளை ஏற்றற்பொருளில் நான்காம்வேற்றுமையிலே வரும் பெயர், வினைகொண்டுமுடிவது. அஃது: அந்தணர்க்குப் பொன்கொடுத்தான் என்பதிற்போல. (வீரசோ. உபகார. ௬.)

இரப்புணி—இரந்துண்ணி.

இரம்பக்கல்—குருந்தக்கல். (தெலுங்கு.)

இரம்பம்—1. ஈர்வாள். 2. கத்தூரிமிருகம். (அக. நி.)

இரம்பிகம்— } மிளகு. (மலை.)
இரம்பிலம்— }

இரம்பை—இரம்பம்.

இரம்மியகம்—சம்புத்தீவின் நவவருஷங்களு ளொன்று.

இரம்மியகன் — அக்கினிதுருவன் புத்திரரொன்பதின்மரு ளொருவன்; இவன்: நவகண்டமாக்கப்பட்ட சம்புத்தீவில் ஒருகண்டத்தை யாண்டவன்.

இரம்மியம்—1. சம்பகமரம். 2. சுக்கிலம். 3. மகிழத்தக்கது. 4. நவவருடத்தொன்று.

இரமடம்—பெருங்காயம். (மூ. அ.)

இரமணம் — 1. இன்பம்விளைப்பது. 2. கழுதை. 3. காமசேட்டை. 4. சுரதவிளையாட்டு.

இரமணன்—1. கணவன். 2. தலைவன். 3. மன்மதன்.

இரமணியம்—சரசவிளையாட்டு.

இரமணீயம் — 1. இன்பமானது. 2. சௌந்தரியமுடையது.

இரமதி—1. காகம். 2. காமி. 3. காலம். 4. சுவர்க்கலோகம். 5. மன்மதன். [ரம - விளையாடுதல், தரித்தல்.]

இரமம்—1. ஆசை. 2. ஆநந்தம்.

இரமன்—1. அன்பன். 2. கணவன். 3. மன்மதன்.

இரமாப்பிரியம்—தாமரை (மூ.அ). [ரமா ப்ரிய: ரமா - இலக்குமி. ப்ரிய - விரும்பப்பட்டது.]

இரமாபதி—திருமால். [ரமா- இலக்குமி. பதி - கணவன்.]

இரமித்தல்—1. சந்தோஷித்தல். 2. சரசஞ்செய்தல், போகஞ்செய்தல், புணர்தல்.

இரமியம்—1. இரம்மியம். 2. இரம்மிய வருடம். அது: சுவேதகிரிக்கும் நீலகிரிக்கும் நடுவிலுள்ளதேசம். 'சுவேதநீல நெடுங்கிரியினடுவ ணிரமியமாம்' (கந்தபு. அண்டகோச. ௩௬.)

இரமியவருடம்—நவவருடத்தொன்று.

இரமை—1. இலக்குமிதேவி. 2. செல்வம். 3. மனைவி. [ரமா.]

இரலை—1. அச்சுவினிநாள். (சூ. நிகண். க: ௬௭.) 2. ஊதுகொம்பு. (சூ. நிகண். கக: ௨௧௬. ௪.) 3. கருமான். (சூ. நிகண். ௨: ௨௨.) 4. கலைமான். 'இரலை மரைமான் பிறவும்' (கந்தபு. வள்ளி. ௫௩.) 5. தந்தரிக்கொம்பு. (சிந்தா. கோவிந். ௨௬.) 6. புல்வாய். (சூ. நிகண். ௩: ௨௨.)

இரவச்சம் — மானந்திரவரு மிரப்புத்தொழிலுக் கஞ்சுதல். (வள். அதி. ௧௦௭.)

இரவணம்—1. ஒட்டகம் (பிங்.) 2. குயில். 3. பரிகாசம்பண்ணுதல். 4. வெண்கலம். 5. வெப்பம்.

இரவதம்—குயில். [ரவ - சத்தம். த - கொடுப்பது. இன்னோசைகொடுப்பதென்றபடி.]

இரவம்—1. ஒலி. 2. இருள்மரம். (புறநா. 281.)

இரவரல்—இரவுவரல். 'இரவர வேந்தல் கருதி யுரைப்ப' (திருக்கோ. ௩௨௪. உரை.)

இரவல்—1. இரத்தல். 'இரவன்மாக்கள்' (புறநா. ௨௪.) 2. மீண்டுகொடுக்க உடன்பட்டு வாங்கிக்கொண்ட பொருள். 'இரவலுடம்போ சுமந்துகொண்டிருக்கைக்கு' (௩டு. 2. 4. 2.) 3. யாசகஞ்செய்யாதே எனப் பொருள்படும் முன்னிலையில் வரும் ஒரு எதிர்மறைவினை, 'இரப்பிற் கரப்பா ரிரவன்மி னென்று' (வள். ௧௦௬௭.)

இரவலர்—இரப்போர். (ஐங்குறு.)

இரவலன்-இரத்தற்றொழில்வல்லோன், யாசகன். (பெரும்பா. ௫௫.)

இரவலாளன்—யாசகன்.

இரவறிவான்—கோழிச்சேவல்.

இரவன்—சந்திரன். 'இரவன்பகலோனு மெச்சத்திமையோரை' (தேவா. 571. 4.)

இரவாக்கல்—ஓரிரத்தினம்.

இரவாணம்—ஒரு வாச்சியம். [ரவணம் - ஒலி. இது நீட்டல்விகாரம்பெற்றுவந்தது.]

இரவி—1. இராவிபெனப் பொருள்படும் ஒரு வினையெச்சம். 'மதிகலவாலே - யிரவியெனதுயிர் கவர' (திருப்பு. ௫௦௨.) 2. சித்திரமூலம். (இராசவைத்.) 3. சூரியன். 'சந்திர னிரவி தன்னைச் சார்வதோர் தன்மை தோன்ற' (இராமா. எதிர்கோள். ௪.) 4. மலை. (பிங்.) 5. மூக்கின்வலத்துவாரம். 6. வாணிகத்தொழில். (பிங்.)

இரவிக்கை—முலைக்கச்சு.

இரவிகன்னம் — பூமிக்குஞ் சூரியனுக்கு முள்ளதூரம். (சோதி. கஉசு.) [ரவிகர்ண: ரவி - சூரியன். கர்ண - குறுக்களவு.]

இரவிகாந்தம்—1. சூரியகாந்தக்கல். 'இந்திரவி நீள்கிரண மெய்கு நிறைந்தாலு - மிந்திரவி காந்தத் திலங்குமே' (நீதிவெண்பா. ருo.) 2. தாமரை (மலை). [ரவி - சூரியன். காந்த - ஒருவகைக்கல்.]

இரவிகுலம்—சூரியவமிசம். 'இரவிகுலம் பாரிக்கத் தகுவனென்றே' (கலிங்கத். 10. 6.)

இரவிகேந்திரம்—அணித்தானபாதையில் வருஞ் சூரியனுக்குங் கிரகத்துக்கு முள்ள தூரம். (சோதி. கஉச.) [ரவிகேந்த்ர.]

இரவிசங்கிராந்தி— சூரியன் முன்னிராசியைவிட்டுப் பின்னிராசியிற் புகுதல். [ரவி ஸங்க்ராந்தி.]

இரவிநாள்—இரேவதிநாள். (சூடா.)

இரவிநிறமணி—சாதுரங்கபதுமராகம்.

இரவிபீசம்—குடம்.

இரவிபுடபுத்தி—சூரியனது உத்தமபுடம். [ரவிஸ்புடபுக்தி.]

இரவிமண்டலம்—சூரியமண்டலம். [ரவி மண்டல.]

இரவிமத்திமபுத்தி — சூரியனது மத்திமபுடம். [ரவிமத்யமபுக்தி.]

இரவிமது—வெள்ளி.

இரவிவலயம்—சூரியவட்டம்.

இரவிவாரம்—ஞாயிற்றுக்கிழமை.

இரவிவிக்ஷேபம் — சூரியகிரகணத்திற் சூரியன் கிராந்திமார்க்கத்திற் சாய்ந்திருக்கை.

இரவு — 1. இரத்தல், இரப்பு. 2. சூரியாஸ்தமயமுதல் சூரியோதயம்வரை நிகழுங் காலம். 'இரவிடைச் சூழ்ந்தவண்ணம்' (பாரத. கிருட்டிண. கசுஅ.) 3. மஞ்சள். (தைல. தைலவ. கoங.) 4. இருள்மரம். (பெருங். உஞ்சைக். 52. 40.)

இரவுக்குறி—களவுப்புணர்ச்சியில் தலைவனும் தலைவியும் இரவிற் சந்திக்க நியமிக்குமிடம். (அகப்பொ. களவி. சக.)

இரவுத்திரம்—இரௌத்திரம், சிவதீக்ஷை. [ரௌத்ர.]

இரவுத்திரியம்—சிவதீக்ஷை. 'விளங்குமிரவுத்திரிய முற்றுவித்து' (பிரமோத். 22. 69.)

இரவுபகல் — 1. இராக்காலமும் பகற்காலமும். 2. கேவல சகல அவத்தைகள். 'இரவுபகலில்லாவிடத் திரண்டற் றேங்கும் பரமசிவம்' (சைவச. மாணு. நஉ.)

இரவுரவம்—இரௌரவம். [ரௌரவ.]

இரவேரி-இரவிற் சோதிமயமாக விளங்குகின்ற ஒரு மரம். 'புன்னை கூவிளங் குங்குமமகில்புன்கு புளி யிரவெரிமகிழ்' (மச்சபு. நைமி. அ.)

இரவை—1. அற்பம், அணு. 2. துப்பாக்கியிவிடு மீயச்சன்னம். 3. வச்சிரம். 4. கோதுமைக் குறுநொய். [தெலுங்கு.]

இரவோன் — 1. சந்திரன். (பிங்.) 2. யாசகன். 'சேமத் திருநிதி பெற்றிடு மிரவோனெனத்திகழ்வான்' (கந்தபு. அசுரர்தோ. ரு.)

இரளி—கொன்றை. (மலை)

இரற்று—1. இரற்றென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. ஒலித்தல். 'இரற்றெடு சூழ்படை யீட்ட நோக்கியே' (கந்தபு. சூரபன்மன்வதை. சக.)

இரற்றுதல்—ஒலித்தல். 'கடலினுரையிரற்றும்' (ஐங்குறு. ககச.)

இரக்ஷாபோகம்—காவல்வரி. (T. A. S. H. O. P. 3.)

இரா—1. இரவு. 'இத்தை நீயிரா வெரியிவிட் டெடுக்கினன் பொன்னும்' (திருவிளை. இரச. உச.) 2. இராத எனப் பொருள் விளைத்துவரும் ஈறுதொக்க ஒரு பெயரெச்சச்சொல். 3. இருத்தலைச்செய்யா எனப் பொருள்பட்டு அஃறிணைப்பன்மையிலே வரும் ஒரு வினைமுற்று. 4. இருந்து எனப் பொருள்விளைத்துவரும் ஒரு வினையெச்சச்சொல். 5. உணவு. 6. கள். 7. சரசுவதிதேவி. 8. நீர். 9. பூமி. 10. வாக்கு.

இராக்கசி—கருஞ்சோளம்.

இராக்கடைப்பெண்டிர்— } பொதுமகளிர்.
இராக்கடைவேசையர் — } (சிலப். 5. 50. உரை.)

இராக்கதம் — 1. எண்வகைமணத்துளொன்று. அது, பெண்ணின்சுற்றத்தாருடன்பட்டாதிருக்க அவளைப்பலாத்காரமாய்ப் பிடித்துச்செய்யும் மணம். 2. பரணி எனப்படுமிராமுகூர்த்தம். அஃது இரவிலேவரும் ஆறுமுகூர்த்தமாம். (விதான. குணகுண. எஙு. உரை.) 3. யோகங்களுளொன்று. 4. இரணவைத்தியம்.

இராக்கதர்—அரக்கர்; இவர் பிசிதவுணரும் நிசாசரருமாகிய ஒரு சாதியார். இவர்கள் இந்திரன் முதலிய சுவர்க்கலோகவாசிகளுக்குச் சத்துருக்களாயிருந்தவர்கள். 'அசுரரிராக்கதரை - யிண்டக்குலத்தை யெடுத்துக் களைந்த விருடீகேசன்றனக்கு' (திவ். திருப்பல். ச.)

இராக்கதன்—அரக்கன். (திவ். பெரியாழ். 4. 4. 8.)

இராக்கதி—அரக்கி. (திவ். பெரியதி. 10. 6. 9.)

இராக்கதிர் — சந்திரன். 'கங்குலினிடையிராக் கதிரை நேர்தர' (நல். பாரத. துட்டி. சக.)

இராக்கதிரோன் — சந்திரன். 'வருமிராக் கதிரோ னீண்ட மணிக்கத விகைக டேய்ப்ப' (திருநெல். நகர. உகு.)

இராக்காய்ச்சல்—இராக்காலத்திலே வரும் ஒருவகைச் சுரம்.

இராக்கிடைப்பெண்டிர் — இராக்கடைப் பெண்டிர். (சிலப். 5. 50. உரை.)

இராக்கினி—அரசன்மனைவி. [ராஜ்ஞீ.]

இராக்குருடு—மாலைக்கண்.

இராகசூத்திரம் — 1. சாயமூட்டப்பட்ட நூல். 2. தராசுக்கயிறு. 3. பட்டுநூல். [ராக ஸூத்ர: ராக-நிறம். ஸூத்ர - நூல்.]

இராகத்தானம் — உதயலக்கினத்துக்குப் பத்தாமிடம். (வீமே. உஎஉ.) [ராகஸ்தாந]

இராகத்துவம்–1. ஒரு தத்துவம். (த. நி. போ. கூசக.) 2. விரும்புகை.

இராகதத்துவம் — 1. பிரகிருதிதத்துவத்திலும் பார்க்க நூறுபாகம் விரிவும் உயர்ச்சியும் எற்றமும் கொண்டிருக்கும் ஒரு தத்துவம். அது, நிகர்வஸ்தாநம். (சிவபரா. கஉக.) 2. வித்தியாதத்துவங்களுளொன்று; இதன்றொழில் இச்சாசத்தியை விளக்கி விடயங்களிலே ஆசையைப் பெருக்குவதாம். (சி. சி. உ: ருசு. மறை. உரை ஞானப்.) [ராகதத்வ.]

இராகப்புள்—இன்னாம். (பிங். உகூசக).

இராகம்–1. அன்பு. 2. ஆசை. 'நல்விராகமிஞ்ச' (பாரத. சம்பவ. கூச). 3. இசை. 4. இன்னிசை. 5. சடத்தியினொன்று. 6. சிவப்பு (பிங்). 7. நிறம் (திருக்கோ. 194). 8. மோகம். 9. வித்தியாதத்துவமேழினொன்று. [ராக.]

இராகமாலிகை — இசைப்பாட்டுள் ஒருவகை.

இராகமெடுத்தல் — இராகமாலாபித்தல்.

இராகவன் — 1. சூரியகுலத்தரசனாகிய இரகுமாபிற் பிறந்தவன். 2. தசரதராமனாகிய சூரியகுலத்தரசன். 'இராகவன் குண்டமாம்' (சேதுபு. இரா. தீர்த்த. ச). [ராகவ.]

இராகவி—பெருநெருஞ்சில். (மலை).

இராகவினாருடகம் — சரக்கொன்றை. (மலை).

இராகவிராகம் விருப்பு வெறுப்பு. [ராகவிராக.]

இராகவேசம்—ஆசைமிகுகை (புறப். வெ. 12. பெண். 5. உரை).

இராகாந்தநிலையர்–ஸ்ரீகண்டமூர்த்தி. (சி. சி. க: கூச. ஞானப். உரை). இராகதத்துவத்தினந்தத்திலிருக்கிறவர் என்றபடி. [ராகாந்த.]

இராகி—1. கேழ்வரகு. 2. பற்றுள. (பி. வி. கூ௦. உரை). [ராகி.]

இராகித்தியம் — 1. இல்லாமை. 2. நீக்கியிருத்தல். [ராஹித்யம்.]

இராகு—1. கோமேதகரத்தினம். 2. சைங்கிகேயனென்னும் ஒரு அசுரன்; இவன் ஒரு கிரகமாய்நின்று சந்திரனை மறைத்தலால், சந்திரகிரகணம் வருமென்பர். 'எழுமதியுண்ணு மிராகுவென' (சேதுபு. தேவிபுர. ருசு). [ராஹு: ரஹ் - விடுதல்.]

இராகுக்கிராகம்—சந்திரகிரகணம். [ராஹுக்ராஹ: க்ராஹ - பற்றுதல்.]

இராகுக்கிராசம்—கிரகணத்தில் இராகுவி னலே கிரகம் பற்றப்பட்டிருத்தல். [ராஹு ग्रास.]

இராகுகாலம்-ஒவ்வொரு நாளிலும், கீழே வருஞ்செய்யுளிலே கண்டிருக்கிற நேரமுதலாக, மூன்றேமுக்கால்நாழிகைநேரத்துக்கு இராகுநிற்கும் அசுபகாலம். 'அரியிரு பத்தா றேகா லம்புலி மூன்றே முக்கால்-எரிவண்ண னிருப தோடு மிரண்டரை புதன்மூ வைந்து-குருபதி னெட்டே முக்கால் குளிர்வெள்ளி பதினென் றேகால்-கரியனே ழரையி ராகு காலமென் றறிந்து கொள்ளே' (வருஷாதி. உசு). [ராஹு காலு.]

இராகுமண்டலம்-பூமியின் சாயை. 'மருவு பூமியின் சாயைபா மிராகுமண்டலம்' (கூர்ம பு. மண்டலவளவை. ௪௦). [ராஹு மண்டலு.]

இராகூச்சிட்டம் — உள்ளி (மலை). [ராஹு-உச்சிஷ்ட: ராஹு; உச்சிஷ்ட - வாந்தி செய்தல்.]

இராகேசுரம்—கருப்பூரம்.

இராகை — 1. சொறிநோய். 2. பூப்புத் தொடங்கிய பருவத்துப் பெண். [ராஹா] 3. பௌர்ணிமையிரவு. [ராகா.]

இராச்சியக்காரர் — இராச்சியம் பண்ணுவோர்.

இராச்சியபரிபாலநம்—இராச்சியப் பாதுகாப்பு.

இராச்சியபாரம்—அரசாளும் பொறுப்பு. [ராஜ்யஹார.]

இராச்சியம்—1. அரசனுடைய ஆளுகைக்குட்பட்டஇடம். 'இராச்சியமதனை முன்னளித்த-விறைவர்க்கேயும்' (இரகு. தசரத. ௪). 2. ஆளுகை. 3. உலகு. 4. நாடு.

இராச்சியவதி—இராச்சியக்காரி.

இராச்சொல்லாதது—1. ஊசி. 2. வசம்பு.

இராச்சொல்லாதவன்—அம்பட்டன்.

இராசக்கிருகம்—அரண்மனை.

இராசகம்-அரசர்களின்கூட்டம். [ராஜக.]

இராசகயம்—இராசயானை. [ராஜகஜ.]

இராசகரம் — அரசனுக்குக் கொடுக்கும் இறைப்பொருள். [ராஜகர: கர - இறை.]

இராசகலகம்—1. அரசர்செய்யுஞ்சண்டை. 2. கொடுங்கோன்மை. 3. படைக்குழப்பம். [ராஜகலஹ.]

இராசகற்பனை—அரசனாணை.

இராசகன்னி—அரசிளம்பெண்.

இராசகனி—எலுமிச்சங்கனி (மலை).

இராசகாரியம் — 1. அரசர்க்குச்செய்யுங் கடமை. 2. அரசியல்.

இராசகீயம் — 1. அரசனுக்குரியது. 2. இராசாங்கசம்பந்தமானது. [ராஜகீய.]

இராசகிரி-கிரிகளுக்குட் பிரதான கிரி. இது வெண்ணிறமுடையது. (மூ. அ).

இராசகுஞ்சரம்—அரசயானை. 'எழுமி ராச குஞ் சரமேன்-மற்றைநால் வருந்தற் சூழ்வரத் தருமன் மைந்தன்மா நகர்வலம் வந்தான்' (பாரத. இந்திர. ௬).

இராசகேசரி—1. ஒரு சிறப்புப்பெயர். 2. சோழர்காலத்து அளவுகருவி. (S. i. i. I. 140)

இராசகோபாலச்சக்கரச்சுழி— ஒருவகைப் பொன்னுணயம்.

இராசகோலம்—இராசவேஷம்.

இராசரோகம்—1. இராசபயம். 2. ஒரு நோய். இஃது, இரத்தங்கக்கச்செய்யுஞ் சேட்டுமந்தொட்ட நோய்.

இராசசபாவம்—அவைராக்கியம். (சி-வி. ஞாந. கசு. உரை.)

இராசசபை—அரசவை.

இராசசம்—1. அரசரானுண்டாகியது 2. இராசதகுணத்தோடு சம்பந்தப்பட்டது. 3. இராசப்பிறப்பு. [1,3. ராஜஜ. 2. ராஜஸ]

இராசசமுகம்—அரசனுஸ்தானம்.

இராசசாசநம்—அரசன் நிலம் முதலியவற்றை ஒருவனுக்குக் கொடுக்கும்பொழுது எழுதிக்கொடுக்கும் உறுதிப்பத்திரம். (மிருச். உக.) [ராஜஶாஸந.]

இராசசாரசம்-மயில். [ராஜஸாரஸ.]

இராசசிங்கம்—அரசரேறு.

இராசசிந்நம் — 1. இராசதத்துவம். 2. அரசர்சின்னம், இராசாங்கத்துக்குரிய உபகரணங்கள். அவைகள்: முடி, குடை, கவரி, தோட்டி, முரசு, சக்கரம், யானை, கொடி, மதில், தோரணம், நீர்க்குடம், பூமாலை,

சங்கு, கடல், மகரம், ஆமை, இணைக்கயல், சிங்கம், தீபம், இடபம், ஆசநம் என்னு மிவைகளாம். (சூ. நிகண். கஉ: கஉ0.) [ராஜ விஹ.]

இராசசிருங்கம்-பொன்னுலாயபிடியமைந்த இராசாங்கக்குடை. [ராஜஸ்ருங்ம.]

இராசசூயம்—1. தாமரை (மலை). 2. திறை கொடுக்குமரசர்சமுகமாக ஏகசக்கிரவர்த்தியி னாலே செய்யப்படு மொரு பெரிய யாகம். அஃது: அவனது அதிகாரத்தை மறுப்பவ ரிலரென்பதனைக்காட்டுதற்கொரு குறியாகச் செய்யப்படுவது. எல்லா அரசர்களையும் வென்று ஐந்துதினத்தில் அல்லது எழு, ஒன்பது, பன்னிரண்டு திங்களில் நாலு மேடங்களால் க்ஷத்திரியர்கள்செய்யும் யாகம். (திருவிளை. தலவி. கூ. உரை.) 'தாமரை யனைய செங்கட் டரணிப னிராச சூய - மாமக முற்றி' (பாரத. சூது. உ.) 3. மலை. [ராஜஸூய.]

இராசசேகரன்—அரசர்தலைவன்.

இராசசேவை—1. அரசனுக்குச்செய்யும் பணிவிடை. [ராஜஸேவா.] 2. அரசதரிசனம்.

இராசத்துவம்—1. அரசனுயிருக்குந் தன்மை. 2. இராசாங்கம்.

இராசத்துவாரம்—1. அரண்மனைவாசல். 2. ஆஸ்தானம். 'இராசத்துவாரத்துக்கோர் மந்திரியாய்' (தனிப்பா).

இராசதகுணம்- முக்குணங்களுளொன்று. [ராஜஸகுண.]

இராசதண்டம் — 1. அரசனால் விதிக்கப் பட்ட சிட்சை. 2. செங்கோல். [ராஜதண்ட.]

இராசதண்டனை—இராசதண்டம்.

இராசதந்தம்—முன்வாய்ப்பல்; அது நடுவாக இருக்கும் இரண்டுபற்களையே குறிக்கும்.

இராசதந்திரம்—1. அரசியல். 2. அரசியல் நூல்.

இராசதபுராணம் — பிரமனைத்துதிக்கும் புராணத்தொகுதி. அவை: பிரமம், பிரமாண்டம், பிரமவைவர்த்தம், மார்க்கண்டேயம், பவிடியம், வாமனம் என்பனவாம்.

இராசதம் — 1. இராசசப்பிரவிருத்தி. 'மதந்தவிர்சந்நியாசிகள்போன்மாநமிராசத மகிழ்ச்சிமறுக்கமாற்றும்' (ஞானவா. வைராக். ருக.) 2. ஒருகாலம்; அது: முக்குணவேளையி னென்று; அஃது: ஊக்கம், ஞானம், வீரம், தருமம், தவம், தானம், கல்வி, கேள்வி என்னு மெண்குணமுடையது என்பர். (சூ. நிகண். கஉ: கூ.) ஞானகை, ஞானமுடைமை, ஊக்கமுடைமை, மானமுடைமை, வைராக்கியம், பலம், வன்கண்மை, போகியாதல், இடம்பமான கூடாவொழுக்கம் என்னு மொன்பதும் இராசதமெனச் சிவப்பிரகாச உரைகாரர் கூறுவர். (சிவப்பி. உ: உச. உரை.) [ராஜஸ.]

இராசதருமம் — அரசன்செய்யவேண்டிய கடமை. [ராஜதர்ம.]

இராசதவாங்காரம் — வைகரியாங்காரம். 'சொன்னவாங்காரமூன்றில்வைகாரி தலக்கு சாத் துவிதவாங் காரம் - அன்னதில் வருமித் தியவதிட் டான தெய்வதம்' (கூர்மபு. பிரகி. க0; பௌட்கரம் - பும்ஸத்துவ - கசுகஇ) இராசதகுண மதிகமாயிருப்ப தென்றபடி. [ராஜஸாஹங்கார.]

இராசதானம்-இராசதானி. [ராஜஸ்தான]

இராசதானி—1. அரசன்மனை. 2. அரசனது தலைநகரம். 'ஏகசக்ர மாப்புரக்குமிராச தானி' (பணவிடு. 69.) 3. மாகாணம். 'சென்னையிராசதானி' [ராஜதானீ.]

இராசதாலம்-கமுகு. (மலை)[ராஜதால.]

இராசதாலி—கமுகு.

இராசதிருஷ்டி—அரசன் கண்ணேறு.

இராசதுரோகம்—1. அரசனுக்கு விரோதமாகச்செய்யுந் துரோகம். 2. கொடுங்கோன்மை. [ராஜத்ரோஹ.]

இராசநரகம் — ரௌரவநரகம். 'இருள் புழுதி வடிவாகி யிடர்மிகுத்த ரௌரவத்தை யரையனென வறிந்திடுக' (சிவதரு. சுவர்க்க நரக. கவி. கஉஎ.)

இராசநாகம்—நால்வகை நாகப்பாம்புகளு ளொன்று. [ராஜநாக.]

இராசநிட்டூரம்— கொடுங்கோன்மை. [ராஜநிஷ்டூர.]

இராசநீதி—இராசதருமம்.

இராசநோக்கம்—இராசநோக்கு.

இராசநோக்காடு — கடைசியான பிரசவ வேதனை.

இராசநோக்கு — 1. இராசகிருபை. 2. இராசபார்வை.

இராசப்பிரதிநிதி—பிரதிகாவலன்.

இராசபஞ்சகம் — ஐந்துவகையானபஞ்ச கங்களுளொன்று; அஃது: அரசரால்வருந் தீங்கு. பஞ்சகம்பார்க்கவேண்டியகாலம் வரையில் ஞாயிறு முதலாக அன்றையவாரம் வரையும், பிரதமைமுதலாக அன்றையதிதி வரையும், அச்சுவினிமுதல் அன்றைய நக்ஷத் திரம்வரையும், மேடம் முதல் அந்நேரத்து லக்கினம்வரையும் எண்ணிக் கண்டதொகை யை ஒன்பதிற் கழிக்க வருஞ் சேடம் நாலே யாகில் அந்நேரம் இராசபஞ்சககாலமெனக் கண்டுகொள்க. விவாககாலத்திலே இராச பஞ்சகம் நீக்கப்படும். (வருஷாதி. கoஎ-பக்.)

இராசபட்டம் — 1. இராசாதிகாரம். 2. ஒருவகைத் தலைப்பாகை. 3. கீழ்த்தரமான ஒருவகை வைராத்திநம்; அஃது: இந்தியா வின் வடமேற்றிசையிலிருக்கும் விராட தேசத்திலிருந்து கொண்டுவரப்படுமென்பர். 4. முடிசூட்டு.

இராசபத்திரம் — அரசனது அதிகாரப் பத்திரிகை.

இராசபம்—கழுதை. [ராஸப.]

இராசபாட்டை—இராசபாதை, போக்கு வரவுக்குரிய பெருவழி.

இராசபாதை—பெருவழி.

இராசபாவம்—அரசத்தன்மை. (சிலப். 27. 53. அரும்).

இராசபிளவை—பெரிய விஷப்புண்.

இராசபுத்தி—1. இராசாவின் அநுபவம். [ராஜபுக்தி.] 2. சிரேட்டமான புத்தி. [ராஜபுத்தி.]

இராசபுத்திரன் — 1. அரசன்மகன். 2. க்ஷத்திரியவமிசத்தான். 3. புதன் என்னுங் கிரகம். [ராஜபுத்ர: ராஜ - அரசன், சந்திரன்.]

இராசபுள்—என்காற்புள்.

இராசபோகம் — அரசன் அநுபவத்துக் குரிய சுகம்.

இராசமகிஷி—அரசன்மனைவி.

இராசமண்டலம்—இராசசங்கம், அரசர் கூட்டம். 'எங்கணு நெருங்கி வைகு மிராச மண்டலங்களோடும்'(பாரத. திரௌப. கஅ.) [மண்டலம் - கூட்டம்.]

இராசமனை—இராசமாளிகை.

இராசமாடம்-பெரும்பயறு [ராஜமாஷ.]

இராசமாநாகம்—கருவழலைப்பாம்பு. (சூ. நிகண். ௩: சக.) [ராஜமஹாநாக.]

இராசமாநியம்—1. அரசர்களாலே மதிக் கப்படத்தக்கதன்மை. 2. அரசர்பொறுப்பாய் நடப்பது. 3. அரசரால் விடப்பட்ட இறை யிலி நிலம்.

இராசமாநியராஜஸ்ரீ — அரசர்களாலே மதிக்கப்படத்தக்க இராசலட்சுமீகரமுடை மையைக் கருதுமொரு பெருமைச்சொல்; இஃது: ஒருவரை உயர்த்திக்கூறற்பொருட்டு அவர்பெயர்க்குமுன் வழக்கத்திற் பிரயோ கிக்கப்படுவது.

இராசமாபுரம்—சீவகனுடைய தலைநகர். (சீவக. 78. உரை).

இராசமாமநந்தம்-ஒருவகைப்பாம்பு. (சீவக. 1276. உரை.)

இராசமார்க்கம் — 1. இராசாவின்தெரு; அது: யானை குதிரைகள் செல்லக்கூடிய தாய் நாற்பதுமுழ அகலமுடையதாயிருப் பது. (ஸ்மிருதி.) 2. இராசபாட்டை. [ராஜ மார்க: மார்க - வழி.]

இராசமாளிகை—அரசர் அரண்மனை.

இராசமானியம்—இராசமாநியம்.

இராசமுடி—1. அரசர்கிரீடம். 2. சாயக் கொண்டை.

இராசமுத்திரை — அரசர் இலச்சினை. [ராஜமுத்ரா.]

இராசமோடி—இராசகெம்பீரம்.

இராசயானை-எழுமுழ உயரமும், ஒன்பது முழநீளமும், பத்துமுழச்சுற்றளவுமுடைய யானை. (சூ. நிகண். கஉ: கசஅ.) இதைப் பட்டத்து யானை எனவும் கூறுவர்.]

இராசயுகம்—பாலை (மலை).

இராசயோகம்—1. ஒருவன் அரசனாக வருவான் என்பதனைக் குறிப்பிக்கும் பிறந்த காலத்துக் கிரகங்களின் சுபநிலை. (விதான.

சாதக. உச.) 2. ஞானிக்குரிய யோகநான் கனு ளொன்று. அது: தாரகம், சாங்கியம், அமநஸ்கம் என மூன்றுவகைப்படும். (த. நி. போ. ஙஎச.) 3. அரசருடைய சுகாநுபவ நிலை. [ராஜயோக.]

இராசராசதேவன் — சில சோழவரசர் பெயர். (சாசனம்.)

இராசராசநரகம்—கும்பீபாகநரகம். (சிவ தரு. சுவர்க்கநரகவி. கஉஎ. உரை.)

இராசராசன்—1. இராசாதிராசன். 2. சக்கரவர்த்தி. 3. குபேரன். 4. துரியோதநன். 'என்னுயிர் தானும் வேண்டே னென்றன னிராச ராசன்' (பாரத. கங-ஆம் போர். கஉ.) 5. சில சோழவரசர்பெயர். [ராஜ - அரசன், இயக்கன்.]

இராசராசேச்சரம் — தஞ்சைப் பெரிய கோயில். 'தஞ்சை யிராசராசேச்சரத்து' (திருவிசை. கருவூர். தஞ்சை 1).

இராசராசேச்சுவரி — இராசராசேசுவரி.

இராசராசேசுவரி—1. துர்க்கை. 2. பார்வதி. [ராஜராஜேஶ்வரீ]

இராசரிகம்—அரசாட்சி.

இராசரிஷி—அரசனுயிருந்து இருடியானவன். [ராஜர்ஷி.]

இராசலட்சணம்—1. அரசர்க்குரிய உடற்குறி. 2. அரசர்சின்னம்.

இராசலட்சுமி — அட்டலட்சுமிகளுள் ஒருத்தி; இவள்: அரசருடைய ஆளுகையைத் துலக்கச்செய்பவள். [ராஜலக்ஷ்மீ.]

இராசலேகம்—1. அரசனு லெழுதப்பட்ட கட்டளை. 2. அரசனு லெழுதப்பட்ட நிருபம். [ராஜலேக.]

இராசவசதி—1. இராசமாளிகை. 2. சிங்காசநம். [ராஜவஸதி.]

இராசவசித்துவம் — இராசாவைத் தன் வசமாக்கல். [ராஜவஶித்வ.]

இராசவசியம் — இராசவசித்துவம். (த. நி. போ. உருக). [ராஜவஶ்ய.]

இராசவசீகரம்—இராசவசித்துவம். [ராஜவஶீகர.]

இராசவட்டம்—1. இராச்சிய சமாசாரம். 2. இராசதோரணை. 'நானிவலியவருவா ரவருக் கிராசவட்ட மென்னடி' (மதுரகவி).

இராசவதி—1. அரண்மனை. 2. சிங்காசநம்.

இராசவமிசம் — அரசகுலம்.

இராசவர்க்கம் — 1. இராசசந்ததி. 2. இராசவமிசம். 3. வெண்மையும் கறுப்பும் கலந்த நிறம்.

இராசவரிசை — அரசர்க்குச்செய்யுஞ் சிறப்பு.

இராசவல்லபன்—1. அரசர்க்கு வழங்குவதொரு சிறப்புப்பெயர். 2. அரசனிடத்துச் செல்வாக்குள்ளவன்.

இராசவள்ளி—ஒருவகை வள்ளிக்கொடி. [இதன் கிழங்கு பருத்ததுஞ் சிவந்ததுமா யிருக்கும்.]

இராசவாகநம்—1. சிவிகை (சூ. நிகண்). 2. அரசனூர்தி (பிங்). [ராஜவாஹந.]

இராசவாகம் — இராசவாகநம். [ராஜவாஹ: வாஹ - வாகநம்.]

இராசவாகியம் — இராசயானை. [ராஜவாஹ்ய.]

இராசவிட்டிரம்—கொடுங்கோல். [ராஜவிஷ்டர.]

இராசவிரணம் — பெரும்விரணம், ராஜபிளவை.

இராசவிருக்கம்— } கொன்றை (மலை).
இராசவிருட்சம்— } [ராஜவ்ருக்ஷ.]

இராசவீதி—1. அரசர் பவனிவரும் பெருந்தெரு. 2. பெருந்தெரு. [வீதி.]

இராசவைத்தியம் — பத்தியமில்லாத வைத்தியம்.

இராசன்—1. இந்திரன். 2. இயக்கசாதியான். 3. க்ஷத்திரியவமிசத்துப் பிறந்தவன், அரசன். 4. சந்திரன். 'இராகுதெசையில் வாழ்ந்தவனில்லை; இராசதெசையில்கெட்டவனில்லை' 5. தருமன். 6. தலைவன். 7. பிறபதங்களோ டிணைந்து "சிரேட்டன்" "மேலானவன்" எனப் பொருள்விளக்கும் ஒரு பதம். [ராஜந்.]

இராசனை — வெள்ளைப்பூண்டு. (தைல. தைலவ. சரு).

இராசஸ்ரீ—1. கீர்த்திபெற்ற. 2. மதிப்பான. [ராஜஶ்ரீ]

இராசஸ்திரீ—1. அரசன்மனைவி. 2. அரசு செய்கிற பெண்.

இராசா—அரசன்.

இராசாக்கினை — 1. இராசகட்டளை. 2. இராசதண்டனை. [ராஜாஜ்ஞா.]

இராசாகி-இருதலைமணியன் பாம்பு. [ராஜாஹி: அஹி - பாம்பு.]

இராசாங்கம் — 1. அட்ட ஐசுவரியத்தொன்று. 2. அரசாளுகைக்கு வேண்டிய உறுப்புக்கள்; அவை: அமைச்சு, நாடு, அரண்; பொருள், படை, நட்பு என்னும் ஆறுமாம். நாடு குடிகளெனக் கொள்க. (வள். ௩௮௧. உரை). 3. இராசத்துவம். 4. அரசாட்சி.

இராசாணி—இராணி.

இராசாத்தி—1. அரசன்மனைவி. 2. அரசி.

இராசாதிகாரம்-அரசனுக்குரிய அதிகாரம்.

இராசாதிகாரி—இராசாங்கத்திலே உத்தியோகத்திலிருப்பவன். [ராஜாதிகாரிந்.]

இராசாதிபதி—1. இராசாதிபன். 2. இராசாதிராஜன்.

இராசாதிராசநரகம்—அவீசியென்னும் நரகம். (சிவதரு. சுவர்க்கநரக. ௧௨௭. உரை).

இராசாதிராசன்—அரசர்களுக்கு மேலாக அதிகாரஞ் செலுத்துமரசனாகிய சக்கரவர்த்தி. [ராஜாதிராஜந்.]

இராசாமந்திரி—ஒரு விளையாட்டு.

இராசாவர்த்தம்-கீழ்த்தரமான ஒருவகை வைராத்திகம். அது: விராடதேசத்திலிருந்து கொண்டுவரப்படுமென்பர். இதிலே வெண்ணிறமுடைய சுவேதராசாவர்த்தம், நீலநிறமுடைய நீலராசாவர்த்தம், பொன்னிறமுடைய பீதராசாவர்த்தம், செந்நிறமுடைய சுரோணராசாவர்த்தம் என நான்கு விதமுள்ளன என்பர். [ராஜாவர்த்த.]

இராசாளி—1. ஒரு பறவை. 2. வல்லூறு. 3. பைரி. 4. கள்ளஜாதியாருள் வழங்கும் ஒரு பட்டப்பெயர்.

இராசான்னம்—ஒருவகை உயர்ந்த நெல் (பெரும்பாண். 305. உரை).

இராசி — 1. இணக்கம். 2. ஒழுங்கு. 3. கணக்கின்பொருட்டு எழுதிக்கொள்ளப்படும் இலக்கங்கள். 4. குவியல், திரள் (பிங்). 5. கூட்டம். (சூ. நிகண். ௧௧: ரகர. ௨௪). 6. நிரை. 7. மத்தியாநம் (வீரமாமுநி). 8. முன்னூற்றறுபதுபாகைகொண்ட ஒரு சக்கரத்திலே பன்னிரண்டிலொன்றாகிய இரண்டேகால் நட்சத்திரங்கொண்ட ஒரு கூறு. அப்பன்னிரண்டுகூறுகள்: மேடம், இடபம், மிதுநம், கர்க்கடகம், சிங்கம், கந்நி, துலாம், விருச்சிகம், தநு, மகரம், கும்பம், மீநம் என்பவைகளாம். 9. சமாதானம். 10. அதிட்டம். [3, 4, 5, 8. ராஶி. 2, 6. ராஜீ.]

இராசிக்காரன்—அதிட்டமுடையவன்.

இராசிகட்டுதல்—தானியவிளைவு முன்மதிப்பளவாதல்.

இராசிகம்—1. அட்சரகணிதம். 2. அமிசம். 3. அரசனால் வருவது. 4. ஓரிராசி. 5. குவியல். 6. நரம்பு. 7. வரி. [ராஜிக.]

இராசிகாணுதல்—இராசிகட்டுதல்.

இராசிகை—1. வயல். 2. வரி. [ராஜிகா.]

இராசிச்சக்கரம்– } 1. இராசிமண்டலம்.
இராசிசக்கரம் – } 2. இராசிகளை யெழுதியடைத்த சக்கரம். [ராஶிசக்ரம்.]

இராசித்தலைவர்பொருத்தம் — இராசியதிபதிப்பொருத்தம். அது: மணப்பொருத்தம் பத்தினொன்று.

இராசிநாதன்—அவ்வவ் விராசியினின்று ஆளுகைசெய்யுங் கிரகம். [ராஶிநாத.]

இராசீநாமா–1. உடன்படிக்கைப்பத்திரம். 2. உத்தியோகத்தினின்று விலகிக்கொள்வதற்கு எழுதும் பத்திரம்.

இராசிப்பணம்—தனித்தனி யெண்ணாமல் மொத்த அளவில் எண்ணும் பணம்.

இராசிப்பிரிவு—கிரகம் தான் நின்ற ராசியைவிட்டுப் பிரிதல்.

இராசிப்பொருத்தம்—மணப் பொருத்தம் பத்தினொன்று; அது: பெண்ணிராசி முதற் புருடனிராசிவரை எண்ணும்போது ஆறிராசிக்கு மேற்படினும் அல்லது ஒரு ராசியாயிருப்பினும் உத்தமமெனவும், பெண்ணிராசிக்குப் புருடனிராசி மூன்றும் நாலாமிராசியாயின் மத்திமமெனவும், இரண்டாம் ஐந்தாம் ஆறு மிராசியாயின் அதமமெனவும் அறியத்தக்கது. (விதாந. கடிமண. ௧௨. உரை).

இராசிபண்ணுதல்–சமாதானஞ் செய்தல்.

இராசிபாகம் — பிங்கம். [ராஶிஹாம.]

இராசிபுடம்—இராசிகளில் கிரகம் நிற்கும் நிலையைச் சரிவரப் பார்க்கை.

இராசிபோகம்—இராசிக்கூடாகக் கிரகஞ் செல்லுதல். [ராஶிபோம.]

இராசிமண்டலம்–1. இராசிகள் செல்லும் வீதி. 2. ஓரை.

இராசியடி—களத்தில் பொலியளந்தபின் கிடக்குந் தானியம்.

இராசியத்தானம் — 1. அந்தப்புரம். 2. இரகசியத்தானம். 3 மறைக்கப்படும் அவயவப்பகுதி. 4. மூலஸ்தானம்.

இராசிபதிபதிப்பொருத்தம்-மணப்பொருத்தங்களுளொன்று; அது: சூரியனுக்கு வியாழனும், சந்திரனுக்கு வியாழனும் புதனும், செவ்வாய்க்குப் புதனும் சுக்கிரனும் நட்பென்றும், மற்றையோர் சத்துருக்களென்றும், புதனுக்குச் சூரியனும், வியாழனுக்குச் செவ்வாயும், சுக்கிரனுக்குச் சூரியனும் சந்திரனும், சனிக்குச் சூரியனும் சந்திரனும் செவ்வாயும், சத்துருவென்றும், மற்றையோர் மித்திரரென்றும், ஸ்திரீராசியதிபதியும், புருஷராசியதிபதியும் மித்துருவானாற் பொருந்துமென்றும் கொள்வது. (விதாந. கடிமண. கரு).

இராசியம்—1. அந்தப்புரம். 2. தாமரை (மூ. அ). 3. பெண்குறி (சூ. நிகண். கக: ரகர. எ). 4. மறைபொருள். 5. மறைவு. (சூ. நிகண். கக: ரகர. எ). 6. விந்துநாதம். [ரஹஸ்ய.]

இராசியளத்தல் — பொலியாகக்குவித்த தானியத்தை யளத்தல்.

இராசில்—மகிழம்பூ.

இராசிலம்–1. சாரைப்பாம்பு (சூ. நிகண். ரு. சஎ). 2. நீர்ப்பாம்பு. [ராஜில.]

இராசிவக்கிரம்—ஓர் இராசியில் உள்ள கிரகம் வக்கிரித்து விட்டுவந்த இராசிக்குச் செல்லுகை.

இராசிவட்டம்—இராசிச்சக்கிரம்.

இராசீகம்–அரசனால் வருவது. [ராஜிக.]

இராசீகரம் — 1. அரசாட்சிக்குரியது. 2. அரசாளுகை. [ராஜீகா.]

இராசீலம்—இராசிலம்.

இராசீவம்—தாமரை (பிங்).

இராசூனை—சிற்றரத்தை.

இராசேந்திரதேவன்–சோழவரசரிற் சிலர் பெயர்.

இராசோத்துங்கன்—சிறந்த அரசன்.

இராசோபசாரம் — அரசனுக்குரிய உபசாரம்.

இராட்சச—ஒருவருடம் (சோதிட. சிக்).

இராட்சசம் — 1. புத்திதத்துவத்திலிருக்கும் எட்டுப்புவனங்களுளொன்று. (சிவபரா. கருக). 2. இராக்கதம். [ராக்ஷஸ.]

இராட்சசன்—இராக்கதன்.

இராட்சசி—அரக்கி.

இராட்சத—வியாழவட்டமாகிய அறுபது வருடத்திலே நாற்பத்தொன்பதாவது. [ராக்ஷஸ.]

இராட்சதகணம்—நக்ஷத்திரங்களுள் ஒரு குழு. இது கார்த்திகை, ஆயிலியம், மகம், சித்திரை, விசாகம், கேட்டை, மூலம், அவிட்டம், சதயம் என்னும் ஒன்பதுங் கூடியது.

இராட்சதர்—இராக்கதர். (கூர்மபு. பலவ. உஉ. உரை). [ராக்ஷஸ.]

இராட்டினத்தொட்டி — இராட்டினம்போலச் சுழல்கின்ற தொட்டி.

இராட்டினம்—1. நூனூற்குங் கருவிகளுளொன்று. 2. மாளிகைகளிற் கட்டப்பட்டுச் சுழன்றுகொண்டிருக்கும் ஒருவகைச் சுழறேர். (கந்தபு. நகர. உஅ. உரை). 3. நீரிறைக்குங் கருவி. 4. நூல்சுற்றுங் கருவி.

இராட்டினவாழை—ஒரு குலையிலே நடுவிட்டு மேலுங் கீழுஞ் சீப்பிடும் வாழை.

இராட்டினவூசல்— } இராட்டினம்போல
இராட்டினவூஞ்சல்– } ச் சுற்று மூஞ்சல்.

இராட்டு—1. இராசா. 2. தேன்கூடு. 3. இராட்டினம். [ராஜ்.]

இராடம்—1. ஒரு தேயம் (அக. நி). 2. கழுதை (அக. நி). 3. பெருங்காயம் (மூ. அ). 4. வெங்காயம் (மலை).

இராணம் — 1. இலை. 2. மயிற்றோகை. [ராண.]

இராணி—அரசி.

இராணிவாசம் — அந்தப்புரம்.

இராணுவம்—1. படை. 2. யுத்தமுகம்.

இராணுவமோடி—அணிவகுப்பு.

இராத்தல்—எடுத்தலளவி லொருவகை.

இராத்திரகம் — ஐந்திரவின் கூட்டம். [ராத்ரக.]

இராத்திரகன் — வேசிவீட்டிலே ஒரு வருஷத்துக்குத் தங்குகிறவன். [ராத்ரக.]

இராத்திரி—1. இராக்காலம். [ராத்ரி.] 2. மஞ்சள் (தைல. தைலவ. ௩௦). 3. விசுத்தி தாநத்துக்குரிய பதினாறிதழ்களி னொன்றிலே நிற்கு மோ ரதிதேவதை. (சி. சி. அ: உக. மறை.)

இராத்திரிகாசம்—வெள்ளாம்பல். (மலை.) [ராத்ரி ஹாஸ: ஹாஸ - நகைத்தல்.]

இராத்திரிசரன்— 1. அரக்கன். 2. கள்வன். 3. சேகண்டிக்காரன். 4. பைசாசம். [ராத்ரி சர.]

இராத்திரிஞ்சரன்—1. இரவிலே திரிகிறவன். 2. கள்வன். 3. காவற்காரன். 4. பசாசு.

இராத்திரிவேதம்—கோழி.

இராத்திரிவேதன் — கோழிச்சேவல். [ராத்ரி வெத - இரவிலே காலத்தையறிவது என்றபடி.]

இராத்திரிவேதி — இராத்திரிவேதன். [ராத்ரி வெதிந.]

இராதங்கம்—1. கால். 2. கோரம்.

இராதம்—1. கடைக்கொள்ளி (சூ. நிகண். சூ. ௧௧). 2. வைகாசிமாதம். [ராய.]

இராதாங்கம்—1. கலப்பை. 2. கன்மழை. 3. மழைத்துளி. [ராயாங்க.]

இராதேயன் — குந்திமகனாகிய கன்னன். [ராயெய: இராதையினால் வளர்க்கப்பட்டவனென்றபடி.]

இராதை — 1. கிருட்டிணன்மனைவிகளி லொருத்தியாகிய ஓரிடைச்சி. 2. திரிதராட்டிரனது தேர்ப்பாகனாகிய அதிரதன் மனைவியாகிய ஒரு பெண். 3. மின். 4. விசாக நட்சத்திரம். [ராயா.]

இராதைகாந்தன்—கிருட்டிணன்.

இராந்து—1. இடுப்பு. 2. தொடைச்சந்து.

இராந்துண்டு—இலந்தை. (மலை.)

இராப்பகல்— 1. இரவும் பகலும். 2. கேவல சகல அவத்தைகள். 'மறைத்தலும் நினைத் தலுஞ்செயு மாணவ மாயைநின் றவை தம்மைத் - துறத்த லேயிராப் பகலகல் வீடெனச் சொல்வர்' (வைராக். ௩௧.)

இராப்பத்து — ஒரு திருவிழா. அது: விஷ்ணுவாலயங்களில் நடக்கும் அத்தியயனோற்சவத்தின் பிற்பகுதியாகும்.

இராப்பாலை—மரவகையிலொன்று.

இராமக்கம் —, இராமக்கன்— ஒருநோய்; இஃது உடம்பிலே பருக்களாக வெளியே தோன்றிப் பின் உள்ளடங்கி வேதனை செய்யும் ஒருவகைச் சின்னமுத்துநோயென்பர்.

இராமக்கிரி—குறிஞ்சிப்பண்களுள் ஒன்று. (பிங்.)

இராமக்கிரியம்— இராக முப்பத்திரண்டி னொன்று; இது வசந்தமென்னும் புருடராகத்தின் மனைவியென்று இசைநூலார் வகுப்பர்.

இராமக்கிரியை—இராமக்கிரியம்.

இராமக்கோவை—கற்கோவை.

இராமகர்ப்பூரம் — கர்ப்பூரமணத்தைக் கொடுக்கும் ஒருவகைப் புல். [ராமகர்ப்பூர.]

இராமகலி—பெண்ணிராகங்களுள் ஒன்று; அது: மத்தியாநத்திற் பாடப்படுவது.

இராமகிரி — ஒருமலை; இதனைத் தசரதராமன் காட்டுக்குப் போனபோது சிலகாலந் தங்கியிருந்த சித்திரகூடமலையென்பர். [ராமகிரி.]

இராமசந்திரன்—தசரதராமன். 'ரகுபதி ராமசந்த்ரன் மருகோனே' (திருப் பு. ௧௭௪.)

இராமசீத்தா—அணிநுண என்னு மொரு மரம்.

இராமசேது — இந்தியாவுக்கும் இலங்கைக்குமிடையிலே இராமர் கட்டுவித்த அணை. [ராமஸெது.]

இராமடங்கா — ஒருவகைப் பொன்னணையம்.

இராமடம் — 1. பெருங்காயம் (மூ. அ). [ராமட.] 2. வழிப்போவார்க்கு இரவிலே அன்னமளிக்கும் சத்திரம்.

இராமடமுட்டுதல் -- விமுகரான தம்மக்கள் புசிக்கும்படி தாய்தந்தையர் ராத்திரிச் சத்திரங்களால் உணவூட்டுதல். (ஈடு.1.1.5.)

இராமடை—பெருங்காயம்.

இராமதாபநி — அதர்வணவேத உபநிடதங்களு ளொன்று (கூர்மபு. அட்டமூ. உசு. உரை.)

இராமதுளசி—துளசியி லொருவகை.

இராமதூதன்–அநுமான். [ராம-தூத]

இராமநவமி—சித்திரைமாசத்துச் சுக்கில பக்கத்துவரும் நவமிதிதி. [இராமன் பிறந்த திநம் அஃதாதலின்.]

இராமநாதபுரம் — சேதுபதியரசர் பிரதான நகரி. [ராமநாயவுர.]

இராமநாதன்— சேதுத் தலத்திலிருக்கும் சிவபிரான். 'இராமநாதனையேத்துவர்' (சேதுபு. இராமதீர். உரு.)

இராமப்பிரியா—ஓர் இராகம்.

இராமபத்திரன்—தசரத ராமன். [ராம ஹஜ: ஹஜ - அநுகூலம்.]

இராமபத்திரி—ஒரு மருந்து.

இராமபாணம்—1. இராமனம்பு. 2. ஒரு புழு. 3. ஒரு மருந்து. 4. ஒருவகை மல்லிகை. [ராமவாண.]

இராமம்—1. அழகு (சூ. நிகண். அ: உச). 2. ஆசைப்படயோக்கியமானது. 3. கருமை. 4. வெண்மை.

இராமமரம் — 1. அணிநுணுமரம். 2. ஆத்தா. 3. மன்னிலா.

இராமரகசியம்— அதர்வணவேத உபநிடதங்களு ளொன்று (கூர்மபு. அட்டமூ. உசு. உரை).

இராமரசம்—ஒரு பானமருந்து.

இராமராச்சியம்—நல்லரசாட்சி.

இராமலிங்கம் — 1. இராமேச்சுரத்துச் சிவபிரான். 2. ஆறுபடிகொண்ட மரக்கால்.

இராமவாசகம்—தவறாத வாக்கு.

இராமன்—1. அழகன். 2. கருமைநிறமுடையவன். 3. சந்திரன் (சோதிடக்கடல்). 4. சமதக்கினியின் மகனாகிய பரசுராமன். 5. சமுத்திரராசனாகிய வருணன். 6. தசரத புத்திரனாகிய ராமசந்திரன். [இது ரமு என்னுந்தாதுவிலிருந்துபிறந்தது. இருதயங்கடோறும் நிறைந்து இன்பத்தைக்கொடுப்பவனென்பது பொருள்.] 7. வசுதேவன்மகனாகிய பலராமன். 'வெள்ளைமேனி - யேசில் புதல்வர்க் காங்கே யிராமனெனப் பேரிட்டு' (கூர்மபு. கண்ணனவ. சுச.)

இராமா — சுபகருமங்களுக்கு விலக்காக இருக்கிற இரா. இது, மாசத்தியாச்சியம் (தாரண. பஞ். ரு).

இராமாநம்—இராநாழிகை.

இராமாநுசகவிராயர்—ஒரு புலவர்.

இராமாநுசகூடம் — வைணவப்பிரயாணிகள் தங்குமிடம்.

இராமாநுசதரிசநம்—விசிஷ்டாத்வைதம்.

இராமாநுசநூற்றந்தாதி — திவ்யப்பிரபந்தத்துள் ஒன்று.

இராமாநுசம்—வைணவர் உபயோகிக்கும் ஒருவகைச் செப்புப்பாத்திரம்.

இராமாநுசர் — விசிட்டாத்துவைதமதஸ்தாபநாசாரியர்.

இராமாநுசன் — 1. தசரதராமன் றம்பியாகிய இலக்குமணன். 2. விட்டுணுசமயாசாரியர்களி லொருவர். [ராமாநுஜ: அநுஜ-தம்பி.]

இராமாநுசீயர்—ஸ்ரீவைஷ்ணவர்.

இராமாயணம்—ஓர் இதிகாசம். அது: தசரதராமனுடைய சரித்திரத்தைக் கூறுவது.

இராமாலை—இருளடைந்த மாலைநேரம்.

இராமாவதாரம்—1. தசரதராமனாக அவதரித்த திருமால் பிறப்பு. 2. கம்பராமாயணம். 'நாயகன்றேற்றத்தி-னிடைநிகழ்ந்த விராமாவதாரப்பேர்......மாக்கதை' (கம்பரா. பாயிர.)

இராமாறு—இராத்தோறும் (ஈடு.7.2.1).

இராமிலன்—1. கணவன். 2. மன்மதன். [ராம - இன்பம். இல - ஒரு விகுதி.]

இராமேச்சுரம்—ஒரு சிவத்தலம்.

இராமேசம்—இராமேச்சுரம். 'திருவிராமேசங் கண்டு - கறைப்படு மிடற்றினானை யருச்சித்துக் கருணை வாங்கி' (திருவிளை. மாயப். ருசு.)

இராமேசுரம்— ஒரு சிவதலம். அஃது, இராமனாலேதாபிக்கப்பட்ட ஈசுர ஸ்தானம். [ராமேஶ்வர.]

இராமேசுவரம்—இராமேச்சுரம்.

இராயசக்காரன்—எழுத்தாளன்.

இராயசம்—1. எழுதுந்தொழில். 2. சம்பிரதித்தொழில். 3. எழுத்தாளன். 4. சம்பிரதி.

இராயசன்—சம்பிரதி.

இராயணி—அரசி.

இராயபுரி—1. ஒருவகைச் சர்க்கரை. 2. இராசநகரம்.

இராயர்—1. விஜயநகர அரசர் பட்டப்பெயர். 2. மகாராஷ்டிர மாத்துவப்பிராமணர் பட்டப்பெயர்.

இராயன்—அரசன். [ராஜநு.]

இராயிரம் — இரண்டாயிரம். 'மற்றைய சலமிருமூன்றுமிராயிரம்' (கந்தபு. அண்டகோச. ருடு.)

இராவடம்—1. அசோகு (மலை). 2. அராவுந்தொழில்.

இராவடி— 1. ஏலம் (மூ. அ). 2. பேரேலம் (மலை).

இராவணசந்நியாசி-மோசவேஷக்காரன்.

இராவணம்—1. அழுதல். 'முன் இராவண இராவண இராவண விராஜன்' (திருப்பு. ருருக.) 2. ஆரவாரித்தல். 3. விளக்கு.

இராவணன்—1. இரவின் வண்ணமுடையவன். 2. இலங்கைவேந்தனயிருந்த ஓரரக்கன்.

இராவணன்மீசை—ஒரு புல் (மூ. அ).

இராவணாகாரம் — அச்சுறுத்தும் வடிவம். 'இராவணாகாரமாகி' (தாயு. மௌன. 9.)

இராவணாசுரம்—ஒருவகை வீணை (பரத. ஒழிபி. 15).

இராவணாத்தம் — ஒருவகைச் சிறுவீணை. [ராவணஹஸ்த.]

இராவணாரி—இராமன்.

இராவணி — இராவணனுடைய மகன். 'ஹனுகந்துதின் திடுமிடிம்பனென் றெருவ விக்கிரா வணியையொத்துளான்' (பாரத. வேத்திர. ச.)

இராவதம்—1. சூரியன்குதிரை. 2. மேகலோகம்.

இராவதி—1. ஒரு கொடி. 2. ஒரு நதி. 3. யமபுரம்.

இராவறிவன்—சேவல்.

இராவிரேகு—1. அரசிலைச்சுட்டி, அஃது அரசிலையாகாரமாயிருப்பது; குழந்தைகள் அணியும் அணிகளில் ஒன்று; தலைமயிரிலிருந்து நெற்றியில் தூங்குவது. 2. அரைமூடி. அது: சிறுபெண்குழந்தைகள் இரகசியத்தானத்தை மூடியணியும் வெள்ளியினுல் அல்லது பொன்னினுலே அரசிலைவடிவமாகச் செய்யப்பட்ட ஒரு தகடு.

இராவுத்தன்—1. குதிரைப்பாகன். 'இராவுத்தர் கைக்குளடங்காது பரி கான்மீற' (விறலிவிடுதூது). 2. தமிழ்நாட்டு முஹம்மதியரில் ஒரு பிரிவினரின் பட்டப்பெயர் (இந்துஸ்).

இராவுதல்—அராவுதல்.

இராவைக்கு—இரவுக்கு. 'இராவைக்குப் போனகப் பழவரிசி' (S. I. I. II. 146).

இராவோன்—சந்திரன். 'மூளைத்தனனிராவோன்' (திருவாத. பு. புத்தரை. 30).

இரிக்கல்—1. ஓட்டல். (சி. சி. பாயிர. ரு). 2. கெடுத்தல்.

இரிதம்—1. இரத்தாசயம். 2. இருதயம். 3. நியாயப்பிரமாணம். 4. மனம். 5. வழக்கு.

இரிங்கணம்—1. ஊர்தல். 2 ஒரு புள். 3. தவழ்தல். 4. நெறிதவறல். [ரிங்கண.]

இரிசல்—1. இரிதல். 2. புலனை வேறென்றிற் செலுத்தல். 3. மனமுரிதல். 4. பிளவு.

இரிசியா—பூனைக்காலி (மலை).

இரிஞ்சி—மகிழ் (மலை).

இரிஞர் — 1. அச்சமுள்ளவர். 2. தோற்றோடுபவர். 3. பகைவர்.

இரிஞன்—பகைவன். (திவா).

இரிணம்—உவர்த்தரை. (சூ. நிகண். ரு: உக).

இரித்தல்—1. அச்சுறுத்தல். 2. அழித்தல். 3. ஓட்டுதல். 'இருணனி யிரவி தான்வந்திரித்தலும்' (சிவப்பி. ரு: ச). 4. கெடுத்தல். (சீவக. 1769). 5. தோற்கச்செய்தல்.

இரித்தை—1. சதுர்த்தி, நவமி, சதுர்த்தசியென்னுந் திதிகள் (சூடா). 2. நாழிகை (பிங்).

இரிதல்—1. அகலுதல். 'கலம்பெய் பூண் முலை யார்சிலர் கண்புதைத் திரிந்தார்' (திருவிளை. குண்டோ. கரு). 2. அஞ்சுதல் (திவா). 3. ஓடல். 'புனலொழுகப் புள்ளிரியும்' (நாலடி. 212). 4. கெடுதல். 'மாறிரியச்சீறி' (பு. வெ. 2. 9). 5. சாய்தல். (சூ. நிகண். கூ: உக).

6. தோல்வியடைதல். 7. வடிதல். 8. விலகுதல். 'உத்தரியங்களு மிரிய வோடுவார்' (கம்பரா. வர்தேடு. 51).

இரிப்பு—1. அச்சுறுத்தல். 2. ஓட்டுதல். 3. தோற்கச்செய்தல்.

இரிபம்—பூமி. (நிருத்தம்).

இரிபு-1. அச்சம். 2. ஓடுதல். 3. தோல்வி. 4. பகை. 5. பகைவன். 6. வெறுப்பு.

இரிபேரம்-வெட்டிவேர். (தைல. தைலவ. ருரு).

இரிமான்—எலிவகையில் ஒன்று.

இரியல்-1. இரிதல், ஓடுதல். 'இரியல்போமதவேழத்தை' (திருவானைக்கா. நாட்டுப். கஅ). 2. இரியாதே எனப் பொருள்படும் ஓரெதிர்மறைவியங்கோள். 3. கெடுதல். 'எறிபயமுடைமையி னிரியன் மாக்களோடு' (மணிமே. கரு: அஉ). 4. நல்லாடை. 5. பறத்தல். 'மேகவண்ணன் றனைவீழ்த்தி - யிரியல்போக' (கூர்மபு. தக்கன்வே. சஎ). 6. இலவங்கப்பட்டை. 7. அச்சத்தால் நிலைகெடுகை (பெரும்பாண். 202). 8. அழுகை 'அழுவா ளிரியற்குரல்' (கம்பரா. நகர்நீ. 35)

இரியல்போக்குதல் — சாய்த்துக்கொடுத்தல். 'கறையடி யானை யிரியல் போக்கும்' (புறநா. கருரு).

இரியல்போதல்—தோற்றோடுதல். (கூர்மபு. தக்கன்வேள். 47).

இரீஇ—1. இருத்தி எனப் பொருள்படும் ஒரு வினையெச்சம். 'கண்ணிற் காண நண்ணுவழி யிரீஇ' (பொருந. எரு). 2. இருந்து எனப் பொருள்படும் ஒரு வினையெச்சம். 'கல்லென்னெக்கல்நல்வலத்திரீஇ' (மலைபடு. ருசக.)

இரீஇயினர்—இருத்தினர் எனப் பொருள்படும் இரு என்னுந் தாதுவினின்றுபிறந்த ஒரு வினைமுற்று (இறைய. பக். ச).

இரீட்டம்—குறுகல்.

இரீட்சை—பிறர்க்குத் துக்கம்வரவேண்டுமென்றும், தனக்கு வரக்கூடாதென்றும் எண்ணுகிற சித்தவிருத்தி. (வாசுதே. கஎ). [ஈர்ஷ்யா.]

இரீதி-1. இயற்கைக்குணம். 2. இரும்புக்கறை. 3. எல்லை. 4. கிட்டம். 5. தேசவழக்கம். 6. நீர்பொசிந்தொழுகல். 7. பாரம்பரியமான வழக்கம். 8. பித்தளை. 9. பித்தளைப்பற்பம். 10. போதல். [ரீதி.]

இரீதிகவுளம்—ஓ ரிராகம்.

இரு—1. பெரிய. 'மாயிருஞாலம்' (குறள். 999). 2. கரிய. 'இருமலர்க் குவளையுண்கண்' (சீவக. 1171). 3. இருவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 'யான்செல்வ னிரு' (ம-தி. கசு). 4. காட்டுமல்லிகை. (இராசவைத்). 5. பிற பெயர்ப்பதத்துக்கு முன்னின்று இரண்டு எனப் பொருள்படுமொரு விகாரமொழி. 'இருசிலை யுண்டென் றிந்த விருநிலத் தியம்பும் வில்லின்' (பாரத. இருட்டின. கசக).

இருக்கம்—பூசநட்சத்திரம்.

இருக்கல்—இருத்தல். 'அடியரோடிருக்கலாமே' (சி. சி. பாயிர. ரு).

இருக்கன் — இருக்குவேதமுணர்ந்தவன். 'இருக்கன் சதுர்முகன்சிட்சைப்பட்டொழிய' (திருப்பு. சகஅ).

இருக்கால்—1. இரண்டுதரம். 'உருளாழிகொ டேர்மே - லிருக்கால்வர முக்கால்வர வெக்காலு மழித்தே' (பாரத. கரு-ஆம் போர். ககக). 2. கவற்றிற் றாயத்து ளொன்று.

இருக்காழி — இரண்டு விதைகளையுடைய காய். [காழ் - வித்து. இ - ஒரு விகுதி. இரு காழி என்பது இருக்காழியென்றாயிற்று.]

இருக்கு — 1. உபநிடத முப்பத்திரண்டி னொன்று. 2. நான்குவேதங்களிலே முதல் வேதம். 'எழுறுமிருக்குவேதம்' (மச்சபு. சக்கிர. ருo). 3. மந்திரம். 4. வாக்கு. (நிருத்தம்) 5. வேதம். 'சொல்லுவ திருக்கையெங்கும்' (பெரியபு. திருநாட்டு. கஉ). [ருச்.]

இருக்குகை—இருத்தல். 'பரசமயங்களிலே செல்லாதிருக்குகைக்கும்' (சி. சி. உ: கo. நிரம்ப அழகியர் உரை.)

இருக்குதல்—இருத்தல்.

இருக்குவேதம் — நால்வகை வேதங்களுளொன்று; சதாசிவமூர்த்தியுடைய அதோமுகங்கள் நான்கனுளொன்றாகிய தற்புருடமுகத்தினின்று தோன்றியது. அஃது, இருபத்தொரு சாகைகளையுடையது. (சைவச. பொதுவி. கூகஅ).

இருக்குவேதவுபநிடதங்கள் — இருக்குவேதத்திற்குரிய உபநிடதங்கள்; அவை: ஐத

ரேயம், கௌடபதம், நாகவிந்து, ஆத்மப்பிரபோதம், நிருவாணம், திரிபுரை, வஜ்ரஸூசம், முத்கலை, சௌபாக்கியம், அக்ஷமாலிகை என்னும் பத்தும். (கூர்மபு. அட்டமூ. உசு. உரை.) [ஸ்ரீமுடி; உவநிஷதீ.]

இருக்கை—1. ஆசனம். 2. இருக்குமிடம். 'பாலுறுந்தயிழுதுதேனிருக்கைகள்பலவும்' (கந்தபு. திருநகர. சச). 3. இருத்தல், உட்கார்ந்திருத்தல். 'முந்துற்-றிருக்கை நலம்' (இராமா. அகத்திய. ருச). 4. ஊர் (பிங்). 5. குடியிருப்பு. 'தண்பணைதழீஇய தளரா விருக்கை' (பெரும்பா. உசஉ). 6. வசிக்குமிடம். 'தன் னிருக்கை கொண்டேகினன்' (கந்தபு. சுக்கிரனுபதேச. கஅ). 7. கோள்களிருக்கும் இராசி. (பரிபா. 11 3). 8. கோயில். 'மேலியிருக்கை' (கந்தபு. மார்க்க. 144). 9. அரசர் போர்புரியக் காலங் கருதியிருக்குமிருப்பு (பு. வெ. 9 30. உரை).

இருகடம்—ஒரு தூணி. 'விதிதிரை வருபுன லிருகடம்'

இருகண்—ஊனக்கண்ணும் ஞானக்கண்ணும். 'இருகணும் புதைத்து வைக்கும்' (சீவக 1578).

இருகரையன்— இரண்டுத்தேசமுள்ளவன். (திவ். பெரியாழ். திருப்பல். 2 வ்யா).

இருகால்—1. இரண்டுபாதம். 2. இரண்டுமுறை. 3. ஒன்றன்பாதியாகிய அரை.

இருகுமிழி—1. குமிழ். 2. நீர்க்குமிழ்.

இருகுரங்கின்கை — முசுமுசுக்கை. இது ஒரு குறிப்புமொழி. 'இருகுரங்கின் கைச்சாறு படிதா னென்று' (தேரையர்வைத்தியநூல்.)

இருகுறளேரிசைவெண்பா — ஒருவகை நேரிசைவெண்பா. (காரிகை. செய்யுளிய. ௩.)

இருகை—இருபக்கம். 'வந்திரு கையுந் தங்கண் மாந்தளிர்க் கைக வீட்ட' (திருவிளை. திருமண. கசுரு). [கை - பக்கம்.]

இருகோட்டறுவை — முன்னும் பின்னும் தொங்கலாகநாலவிட்ட துகில். 'இருகோட்டறுவையர் வேண்டுவயிற் றிரிதர' (நெடுநல்வா. ௩ரு).

இருகோபி—1. சிறுநன்னாரி. 2. பெருநன்னாரி. (தைல. தைலவ. எசு)

இருங்கோவேள்—வேளிர்தலைவருள் ஒருவன். (புறநா. 201).

இருங்கரம்—பதக்கு. (தைல. தைலவ. எசு)

இருசகம் — மாதுளை (மலை). [ஜவக.]

இருசட்டு—பன்னிரண்டு. (தைல. தைலவ.)

இருசடு—பன்னிரண்டு. 'கடுபத்திரந்தச மூலமிருசடு' (தைல. தைலவ. உஉ).

இருசடை—இலாமிச்சுவேர், வெட்டிவேர். (தைல. தைலவ. ௬அ).

இருசண்பகம் — சிறுசண்பகப்பூ, பருஞ்சண்பகப்பூ. (தைல. தைலவ. உஅ).

இருசந்தம்—வெண்சந்தனம், செஞ்சந்தனம் (தைல. தைலவ. ௬ச).

இருசந்து—வெண்சந்தனம், செஞ்சந்தனம். (தைல. தைலவ. க௩).

இருசமயவிளக்கச்சோதி— இருசமயவிளக்கத்தின் மறுப்பாகிய ஒரு நூல்.

இருசமயவிளக்கம் — சைவ வைஷ்ணவ சமயத்தை விளக்கிக்கூறிய ஒரு நூல்.

இருசி—1. ஆகூதிக்கு நாயகன் (கூர்மபு. தமோ. ரு). 2. இருதுவாகுந்தன்மையில்லாத பெண். 3. ஒரு பெண்பசாசு. [ஜஜ்.]

இருசிறியார்—1. கருஞ்சீரகம். 2. நற்சீரகம்.

இருசீரகம்—நற்சீரகம், கருஞ்சீரகம். 'தாளிசந் தகரம் மிருசீரகஞ்-சாற்று பாதிரிக் கூட்டம்' (தைல. தைலவ. உ௩).

இருசு—1. நேர்மை, செவ்வை (சூ. நிகண். கக: ரகரவெ. கஉ ). 2. பண்டியின் அச்சிரும்பு. (சூ. நிகண். கக: ரகரவெ. கஉ). 3. மூங்கில் (மலை). [ஜஜு.]

இருசுகம்—மாதுளை.

இருசுடர் — சூரியசந்திரராகிய இரண்டு வானசோதிகள். 'இருசுடர்த்தோற்றம்' (தண்டி. பொது. எ).

இருசுடர்த்தோற்றம் — பெருங்காப்பிய வுறுப்புளொன்று; அஃது: ஆதித்தோதய சந்திரோதயங்களை வருணிப்பது. (தண்டி. பொது. எ.)

இருசுழி—1. இரட்டைச்சுழி. 2. இரட்டைச்சுழியுள்ள உடம்புடையவுயிர். 'இருசுழி இருந்துண்டாலும் உண்ணும், இரந்துண்டாலும் உண்ணும்.

இருஞ்சிறை—1. காவல். 2. நரகம். 3. மதில்.

இருட்சரன் — இராக்கதன் (பார. வெ. ருக). [இருளிலே திரிகிறவனென்றபடி.]

இருட்சி—1. இருள்கை. 2. மருளுகை.

இருட்டல்—இருளச்செய்தல்.

இருட்டு — 1-2. இருட்டென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும். 3. இருளுடைய காலம். 'இருட்டிலே போனான்' 4. இருளுடையவிடம். 'அருந் த ற் க வி ருட் டி ன்' (சைவச. பொதுவி. உருஎ.) 5. அறியாமை.

இருட்டுதல்—1. இருளச்செய்தல். 2. மந்தாரமிடல்.

இருட்பகை —
இருட்பகைவன்— } சூரியன். 'நீடிருட் பகைவன் றன்னைத் தருதி' (கந்தபு. புதல்வரைப்பெறு. எ.)

இருட்படலம்—இருட்டொகுதி.

இருட்பிழம்பு — இருட்டிரள். 'ஓராழித் தேரேறி யகிலமெல்லாம்-படருமிருட் பிழம் பறுக்கும் பண்ணவனே' (மச்சபு. மச்சா. கஉ.)

இருட்பூ—ஒரு மரம்.

இருடபி—1. பேடி. 2. வயதுவந்தும் ருதுவாகாமலிருக்கும் பெண். [ஐஷஹி: இதனை வழக்கத்திலே பகரவொற்றைக்கெடுத்து, வடமொழிமுப்பத்தோராம் மெய்யை "ழ" கரமாய்த் திரித்து "இருழி" என வழங்குவர்.]

இருடி—1. ஆந்தை (சூ. நிகண். ந: சுO.) 2. ஒளி. 3. சுவாதிட்டான ஆதாரத்துக்குடைய ஆறிதழ்களிலே நான்காமிதழின் அட்சரமாகிய "ய"கர அட்சரத்தி னதி தேவதை. (சி. சி. அ. உக. மறை.) 4. முனிவன். 'இருடியருஞ்சித்தருமாடுவர்காண்' (தைல. தைலவ. கருசு.) 5. வேதம். [ஐஷி.]

இருடிகேசன்—திருமால். 'இருடிகேசன் கோவிந்தன்' (திருவானை. கோச்செங். சுசு.) [ஹ்ருஷீகெஶ.]

இருடிச்சந்தம்—ஒருவகைச் செபம் (த. நி. போ. நடுசு.) [ஐஷிஹூத.]

இருடிழலம்—வசம்பு.

இருடியந்நம்—வேதாத்தியயகம். [ஐஷி யஜூ.]

இருண்டி—சிறுசண்பகம் (மலை).

இருண்மதி— 1. கிருஷ்ணபக்ஷத்துச் சந்திரன். 'இருண்மதியிற் றேய்வன கெடுக' (மதுரைக். 195). 2. அமாவாசை. (பரிபா 11. 37.)

இருண்மலம் — ஆணவமலம். 'என்னரி தாய் நித்தமா யிருண்மலத்தி லழுந்தி' (சிவப்பி. உ: க.)

இருண்முகா—நாவி.

இருண்மை—இருளுடைமை.

இருணம்—1. கணக்கதிகாரம். 2. கழிக்கப் படு மெண். 3. கோட்டை. 4. நிலம். 5. நீர். 6. உவர்நிலம். (பிங்.) 7. கடன். [2, 3, 4, 5. ஐண.]

இருநாள்—கிருஷ்ணபக்ஷத்துநாள்.(திவ். பெரியதி. 8. 8. 9.)

இருணிலம்—நரகம் (திவா.)

இருத்தம்—பிரகாரம். [ஐஞ.]

இருத்தரல் — இருத்தலைச்செய்தல். 'மலை புரைமாடத்துக் கொழுநிழ லிருத்தர' (மதுரைக்கா. சOசு.)

இருத்தல்—1. உட்காருதல். 'அதிசய முடனமர்ந் தயலிருந்துழி' (இராமா. திருவவதார. கஎ.) 2. இருக்கச்செய்தல். 3. சீவித்தல். 'நெடுநாளிருந்தபேரும்' (தாயு. பரி. கO.) 4. தங்கல். 'மேயிருந்தனன்பணி வேந்தன்கோயிலே' (பாரத. வாரணவதச். கஎ.) 5. தாபித்தல். 6. தாழ்தல். 7. நிலைகோள்ளல். 'வலம்வரும்படி யிருப்பது கயிலைமால் வரையே' (கந்தபு. திருக்கைலாச. கஉ.) 8. உளதாதல். 9. முல்லையுரிப்பொருள் (நம்பி யகப். உடு).

இருத்தி — 1. இருக்கச்செய்து எனப் பொருள்படும் ஒரு வினையெச்சம். 'உபசார முட னருகுற விருத்தி' (பாரத. நாடுகரக் துறை. நக.) 2. இருக்கிறாய் எனப் பொருள் படும் ஒரு முன்னிலைவினை. 'உடையா னுன்ற னடுவிருக்கு முடையா னடுவு ணீயிருத்தி' (திருவாசகம். கோயின்மூத்த. க.) 3. இருப்பாய் எனப் பொருள்படு மோர் ஏவல்வினை. 4. சித்தி. 'அறவெயில் விரித்தாங் களப்பி லிருத்தியொடு' (மணிமே. உக: கசுசு.) 5. சுபாவாதிதகிரியாசாமர்த்தியம். 'சமணரி லிருத்திபெற்றேன்' (சூ. நிகண். உ: ச). 6. மேன்மை. 7. வளர்ச்சி. 8. விருத்தி. [4, 7, 8. ஐஷி.]

இருத்திப்பேசுதல் — அழுத்திச்சொல்லுதல்.

இருந்திர்—இருக்கச்செய்திர். 'இக்கொடி யார்போற் கண்ணு ளெம்மையு மிருத்தி ரென்றார்' (திருவிளை. வளைய. கக.)

இருந்தினர்-யாகத்திலே குருவுக்கு உதவி செய்பவர். 'இருத்தினர் யாரையும்' (கந்தபு. வேள்வி.4.) [ஸ்த்விஜ்.]

இருந்தினோர் — யாகாசாரியனுக்கு உதவி செய்பவர். 'முற்றுநாடிய விருத்தினோரணி யின்முறையால்' (கந்தபு. வேள்வி. ங.)

இருந்து-1. யாகாசாரியருக்கு உதவிசெய்பவர், இருத்துவிக்கு. (மச்சபு. விருக்க. 2.) 2. வயிரக்குற்றங்களுள் ஒன்று. (சிலப். 14. 180. உரை.)

இருந்துக்கள்—இருத்துவிக்குகள். 'வாவி தாமிருத் துக்களை யலங்கரித்து' (மச்சபு. விருக்கவுற்சவ. உ.)

இருந்துதல்— 1. அழுத்தல். 'குறகுகுறு கௌவிருத்தி' (கந்தபு. திருக்குற்றாலு.கடு.) 2. இருக்கச்செய்தல். 3. நெடுங்காலமிருக்கச் செய்தல். 'பசுமட்-கலத்துணீர் பெய்திரீஇ யற்று' (வள். சுசுo. பரி.)

இருந்துவித்து—யாகபுரோகிதர்.'இருத்து விக்கெனப்படு - மன்னவர்க்கு' (காஞ்சிப். சிவா. ஙச.)

இருந்துவித்துக்கள்—யாகபுரோகிதர்.

இருந்தை—1. இருபத்துநான்கு நிமிஷங் கொண்ட ஒரு நாழிகை. 2. சேங்கொட்டை (மலை). 3. நாழிகைவட்டில். 4. இரித்தை: நான்காம்பக்கம், ஒன்பதாம்பக்கம், பதினான் காம்பக்கம் இம்மூன்றுக்கும் பெயர் (சூ. நிகண். க: அசு.)

இருதம்—1. உஞ்சவிருத்தி. 'உஞ்சநல் விருத்தியிருதமாம்' (காஞ்சிப். ஒழுக்க.ஙசு.) 2. நீர். 3.மெய்ம்மை. [ஸ்த.]

இருதயசோசம் — இரத்தாசயகோசம்.

இருதயத்தானம்— இலக்கினத்துக்கு ஐந்தா மிடம் (சோதிடக்கட).

இருதயம்—1. அன்பு. 2. இரத்தாசயம். 3. இருதயமந்திரம். 'ஏலவிருதயநூறெண்' (சைவச. பொதுவி. ஙoo) 4. உள்ளம், மனம். 'இருதயகமலமுகுளங் கட்டவிழ்ந்து' (திருப்பு. கஉகு.) 5. நடு. 6. கருத்து. [ஹ்ருதய.]

இருதரு—தேவதாரம், சரளதேவதாரம். (தைல. தைலவ. கரு).

இருதலை—இரண்டுபக்கம்.

இருதலைக்கபடம்—விலாங்குமீன்.

இருதலைக்கொள்ளி— 1. இருமுனையிலுந் தீயுள்ள கட்டை. 2. எப்பக்கத்துந் துன்பஞ் செய்வது.

இருதலைஞாங்கர் — சுப்பிரமணியசுவாமி யின் வேல்; அதனை 'ஏயென முருகன்றொட்ட விருதலை படைத்த ஞாங்கர்' (கந்தபு. சூர பன்மன்வதை. சசுரு). [இரண்டுதலையை யுடைய வேல் என்றபடி. ஞாங்கர்-வேல்.]

இருதலைநோய் — எழுஞாயிறு என்னும் ஒரு நோய். 'இருதலைநோய் பயித்தியங் கண்ணோய்கள்' (தைல. தைலவ. உசு.)

இருதலைப்புள்— இரண்டுதலைகளையுடைய தென்று சொல்லப்படும் ஒரு பறவை. (சீவக. 1631. உரை.)

இருதலைப்பூச்சி—ஒரு பூச்சி.

இருதலைமணியன் — 1. மணிபொருந்திய இரண்டுதலைகளையுடையதென்றுசொல் லப் படு மொரு பாம்பு. 2. குறளைசொல்வோன்.

இருதலைமாணிக்கம்— முத்திபஞ்சாக்ஷர மந்திரம். 'பொருளரு ளன்மாப் பொருந் திடுந் திரோதை - மருவிரு மலமாய் வயங்கு மைந் தெழுத்தின்-றிரோதையு மலமுந் தீர்த் தத னிடத்தில் - வரோதய மான வாசியை நிறுவி-வளம்பொலி சிவாய வாசியென் றுளத் தில்-விளம்புக நின்னை விளக்குமா நந்த - முத்தியைந் தெழுத்து மொழிந்தனம்' (சிற் றம்பலநாடிகள்) [இது முதலெழுத்தினின்று வாசிப்பினுங் கடையெழுத்தினின்று வாசிப் பினுஞ் சொல்லொன்றேயாய்வருதால் இரு தலைமாணிக்கம் எனப்பட்டது. சாணிக்கு.]

இருதாரைக்கத்தி — இருபுறமுங் கூர்மை யுள்ள கத்தி.

இருதாவிருதம்— ஒருவகை வாதரோகம். (சீவரட். கசுங.) [இருத்-மார்பு. ஆவிருதம்-சூழல்.]

இருதிணை—1. உயர்திணை அஃறிணையாகிய இருவகைச்சாதி. 'இருதிணை முக்கூற் றொரு மைத் தன்மை' (நன். ஙஙக.) 2. இயங்கு திணையும் நிலைத்திணையும்.

இருது—1. ஏற்றகாலம். 'இன்னபோது மங்கலங்களா மிருதுவீ தியாத்திரைக்கிது காலம்' (ஞானவா. வைரா. கஉ0.) 2. கடவுளின் முத்தொழில். 3. பிரபை. 4. மகளிர் கருத்தரித்தலுக்கு உபயோகமாகியகாலம்; அது: பூப்படைந்ததிநம் முதலாகப் பதினாறு நாள். 5. மகளிர்சூதகம். 6. மகளிர் முதற்பூப்பு. 7. மாசமிரண்டுகொண்ட பருவம் 'பொருள்வயிற்பிரிவோரி ரு து வி ன் க ண் ணுடைத்து' (அகப்பொ. அகத்திணை. சக.) 8. இலக்கை. [ஐ.தா.]

இருதுக்காட்சி — அகப்பொருட்டுறையினொன்று.

இருதுகாலம்— 1. கருப்பந்தரிக்கக்கூடிய காலம்; அது: பூப்படைந்தநாண்முதற் பதினாறுநாள்வரையுள்ளகாலம். 2. மாதவிடாய்க்காலம்.

இருதுசங்கமநம் — நாயகியுடைய இருது காலத்திலே முதன்முதல் நாயகன் கூடற்குச்செய்யுங் கிரியை. [ஐ.தா.ஸம்கமநம்.]

இருதுசந்தி— 1. இரண்டுபருவங்களுக்கிடையிலே நிகழுங் காலம்; அஃதாவது: முன்பருவத்தி னிறுதி ஏழுநாட்களும், பின் பருவத்தின் முன் ஏழுநாட்களும் இருதுசந்தி என்பர். 2. ஒருபருவத்தின் முடிவிலே மற்றொருபருவந் தொடங்குதல். [ஐ.தா ஸந்தி.]

இருதுசாந்தி — இருதுவானபெண்ணுக்குத் தீங்குநேரிடாதபடி செய்யுஞ் சாந்திக் கிரியை. [ஐ.தா.ஶாந்தி.]

இருதுடி—ஏலம், காட்டேலம். (தைல. தைலவ. கூ.)

இருதுத்தம் — தத்தம், துரிசு (தைல. தைலவ. கூக).

இருதுநுகர்வு-பருவங்கட்குரிய அநுபவம் (சீவக. 2668 தலைப்பு).

இருதுப்பெருக்கி—சூதகத்தைவெளியேற்றும் மருந்து.

இருதுமதி—1. பூப்படைந்திருக்கிறகாலத்துப்பெண். 2. பூப்படைந்தவள். 'ஈனர் புலையரிருதுமதி நாய் பன்றி' (சைவச. பொதுவி. கூ0எ). 3. கருத்தரித்தற்குரியநிலையிலிருப்பவள். [ஐ.தா.மதீ: மதீ - உடையவள்.]

இருதுராசம் — வேனிற்காலம். [ஐ.தா ராஜ]

இருதுவலி-மாதாந்த இருதுகாலகுன்மம். 'உயர்கருவறை - யிற்குநெட்டியவலியொடிருதுவலியிவை' (தைல. தைலவ. உஎ).

இருதுவாதல்—பூத்தல்.

இருதுவிருத்தி—பருவங்களின் பெயர்ச்சி. [ஐ.தா.வ்ருத்தி.]

இருதோண்டு — பதினெட்டு (தைல. தைலவ).

இருதோத்தி—மெய்பேசல். [ஐதோக்தி: ஐத - மெய். உக்தி - பேசல்.]

இருந்ததிருக்கோலம் — திருமாலின் வீற்றிருக்கும் இருப்பு.

இருந்ததேகுடியாக-எல்லாருமாக. 'இருந்ததேகுடியாகக் காணும்படி' (ஈடு. 4. 1. 1).

இருந்தவளமுடையார்-கூடலழகர் (சிலப். 18. 4. அரும்).

இருந்தாற்போல் — திடீரென்று (திவ். திருவிருத். 12. வ்யா. அப்பு).

இருந்தில்—இருந்தை (திவ். பெரியதி. 2. 10. 3).

இருந்து—1. ஒரு தனிவினை 'எழுந்திருந்தான்'. 2. இரு என்னும் தாதுவிலிருந்து பிறந்த ஒரு வினையெச்சம். 3. கரி. 'இருந்தும் வெளிறும்' (புலியூரந்). 4. ஐந்தாம் வேற்றுமைச் சொல்லுருபு.

இருந்துணர்—இலக்கை.

இருந்தேத்துவார்-மாகதர் (சிலப். 5. 48. உரை).

இருந்தை—1. கரி (தைல. தைலவ). 2. கரிப்புடச்சாலை (தைல. பாயிர. கஉ).

இருந்தையூர்—மதுரையிலுள்ள ஒரு திருமால்தலம் (பரிபா. பக். 165).

இருந்தையூர்க் கருங்கோழிமோசியார்—இடைச்சங்கப்புலவர்களுளொருவர் (இறையனாரகப். பக். ச).

இருநடுவாதல் — இடைமுரிதல் (சிந்தா. முத்தி. உ0கூ).

இருநா—1. உடம்பு. 2, பாம்பு (இருநாவையுடையதென்பது பொருள்).

இருநிசி — கத்தூரிமஞ்சள் கப்புமஞ்சளென்னு மிருவகை மஞ்சள். 'அரேணுகவிருநிசி' (தைல. தைலவ. உக).

இருநிதி-சங்கநிதி, பதுமநிதிகள். 'தருவே வறிஞர்க் கிருநிதியே' (மதுரைப்பதிற்றுப். ரு).

இருநிதிக்கிழவன்—குபேரன் (பிங்).

இருநிம்பம்—வேம்பு, மலைவேம்பு (தைல. தைலவ. எசு).

இருநியாமம்—1. அல்லங்காடி. 2. நாளங்காடி (மதுரைக். ருசுரு).

இருநிலம் — பூமி. 'இருநிலமாள்வோன்' (சிலப். 28. 78).

இருநினைவு — 1. இரண்டெண்ணம். 2. ஊசலாடும் மனம், ஒருநினைவி லுறைத்துநில்லாமை.

இருநெறியின்றெறிப்பு-ஓர் வியாதி. 'இருநெறியின்றெறிப்புவலியெயிறதைப்பு'(தைல. தைலவ. சச).

இருப்பவல்—ஒரு பூண்டு. இதன் வேர் மருந்தாக உபயோகிக்கப்படும்.

இருப்பன—நிலைத்திணைப் பொருள்கள். 'இருப்பனமுதற் றேகங்க ளத்தனையும்' (தாயு. பரி. 2.)

இருப்பாணி—இரும்பினாற்செய்த ஆணி.

இருப்பாயுதம்—இரும்பாலாய படை.

இருப்பாவை—கருமூஞ்சிப்பாரை.

இருப்பிடம்-1.வாசஞ்செய்யுமிடம்.'இருப்பிடமெமக்கீ தென்ன' (கந்தபு. திருநகர. ககச). 2. ஆசநம். 3. பிருட்டம்.

இருப்பு-1. ஆசநம். 'இறைஞ்சியவேந்தர்க் கெல்லாமிருப்பளித்து' (பாரத. சூதுபோர். ரு). 2. இருக்குந்தன்மை. 3. இருத்தல். 'புனையுமோவியமேபோலச் - சந்ததமிருப்பை நோக்கி' (ஞானவா. வைராக். உச). 4. குதம். 'இருப்பினி னுகர்' (கந்தபு. சூரப. வதை. சஉரு). 5. கையிருப்பு. 6. மிகுந்திருப்பவை. 7. வாசஞ்செய்யுமிடம். 'முத்தொழிற்புரி மூவரிருப்புடன்' (சேதுபு. இராமதீர்த்த. உ0). 8. பொருண்முதல். 9. நிலை.

இருப்புக்கச்சை-வீராணியும் இரும்புடை.

இருப்புக்காய்வேளை—ஒரு செடி.

இருப்புக்கிட்டம்-இரும்புருகிய ஒருவகைக் கட்டி.

இருப்புக்கொல்லி—சிவனார்வேம்பு(மலை).

இருப்புக்கோல்—நாராசம்.

இருப்புச்சட்டம்—ஓட்டுபவன் இருத்தற்குரிய வண்டியின் முகவணை.

இருப்புச்சலாகை — 1. இரணவைத்திய ஆயுதத்தினென்று. 2. இரும்புநாராசம். 3. துப்பாக்கிச் சலாகை.

இருப்புச்சில் — சிறுவர்விளையாட்டுக்கருவியில் ஒன்று.

இருப்புச்சீரா—இருப்புச்சட்டை.

இருப்புச்சுவடு—இருப்புச்சீரா.

இருப்புச்சுற்று-இரும்புப்பூண். 'இருப்புச்சுற்றுர்கெட்டிலைச்சூலம்' (சீவக. 1136).

இருப்புத்தாள்—இரும்புக்கோல். (ஞானு. 55. 12. உரை).

இருப்புத்திட்டம் — செலவுநீக்கி மிகுந்த தொகை.

இருப்புநாராசம்—1. ஒரு இரும்பாயுதம். (சீவக. 1676. உரை). 2. ஓலையிற் கோக்கப்படும் இருப்புக்கோல்.

இருப்புநெஞ்சு—இரக்கமின்மையால் இரும்புபோலும் உள்ளம். 'வன்னெஞ்சோ விரங்காத மரநெஞ்சோ விருப்புநெஞ்சோ' (தாயு. ஆசையெனு. ச).

இருப்புப்பத்திரம்-இரும்புத்தகடு (பெருங். இலாவாண. 8. 175).

இருப்புப்பாரை — குழிகல்லுங் கருவி; அஃது: இரும்பினுற் செய்யப்பட்டதும் மரத்தினுற் செய்த பிடிபூண்டதுமா யிருக்கும். 'கெட்டிருப்புப் - பாரைக்கு நெக்குவிடாப் பாறை' (நல்வழி. ருரு).

இருப்புமுள்—தாறு (திவா).

இருப்புமுறி—ஒரு செடி.

இருப்புயிர்—நரகருயிர் (சிந்தா. 3108).

இருப்புலக்கை — ஓராயுதம்; அஃது: இரும்பாலாய உலக்கை.

இருப்புலி—துவரை (மலை).

இருப்பூறல்—இரும்புக்கறை.

இருப்பூறற்பணம்—கலப்புவெள்ளி நாணயம்.

இருப்பெழு—உழலை. 'மருப்புநிலைக் கந்தி னிருப்பெழுப் போக்கி' (பெருங். இலாவாண. 5. 38).

இருப்பை—1. இருப்பாய் எனப் பொருள்படும் ஒரு முன்னிலைவினைமுற்று. 'இருப்பை நாடொறுநெஞ்சமே' (வைராக். ருசு). 2. இருப்பைமரம். 3. ஓரூர். 'இருப்பையூர்வாழ்' (தாயு. பொது. க0).

இருப்பைத்திப்பி—இலுப்பைப்பிண்ணாக்கு. (தைல. பாயிர. சுடு).

இருப்பைப்பூச்சம்பா—ஒருவகைநெல்.

இருபகம்—வெண்காக்கட்டான், கருங்காக்கட்டான் (தைல. தைலவ. எசு).

இருபத்தாறாந்தத்துவம் — அகங்காரகத சிநாபாசசீவன் (த. நி. போ. ககச).

இருபத்தாறாம்பொருள்—ஈசுரன் (சிவதரு. கO: ௩உ).

இருபத்துநாலாந்தத்துவம்—மனம் (த. நி. போ. ககச).

இருபத்துநாலாயிரப்படி — திருவாய்மொழிக்குப் பெரியவாச்சான்பிள்ளை இருபத்துநாலாயிரங்கிரந்தத்தில் இயற்றிய ஒரு வியாக்கியானம்.

இருபத்தெட்டாந்தத்துவம் — அகங்கார சீவர்க்கு அதிட்டானமான கூடஸ்தன் (த. நி. போ. ககச.)

இருபத்தேழாந்தத்துவம்— மாயோபாதிகனான ஈச்சுரன் (த. நி. போ. ககச).

இருபத்தேழாம்பொருள் — பரமேசுரன். (சிவதரு. கO. ௩உ.)

இருபத்தைந்தாந்தத்துவம் –மூலாங்காரம். (த. நி. போ. ககச.)

இருபத்தைந்தாம்பொருள் — புருடனாகிய ஆன்மா (சிவதரு. கO. ௩உ).

இருபத்தொன்பதாந்தத்துவம் — மாயவீச்சுரருக்கு அதிட்டானமான பிரமம் (த. நி. போ. ககச).

இருபது—இரண்டுபத்து.

இருபரசிவன்—இலயசிவன். 'இருபர சிவனென லயசிவன் றானென்றும்' (சி. சி. கஉ: எ. ஞானப். உரை.)

இருபலை — சிற்றுமுட்டி, பேராமுட்டி. (தைல. தைலவ. எஉ).

இருபன்னியம்—சேங்கொட்டை (மலை).

இருபனி—முன்பனி, பின்பனி. 'இருபனியு மழையும் வெயிலு நின்று' (மதுரைப்பதிற்றுப். ச.)

இருபால்வீடு — இருவகைப்பகுதியினையுடைய முத்திகள். அவை: சாலோக, சாமீப, சாருபமாகிய பதமுத்திகளும், சாயுச்சியமாகிய பரமுத்தியுமாம். 'இருபால் வீட்டினை வெஃகினோர்க்கு' (கந்தபு. திருநகர. அஅ.)

இருபாலும் — இரண்டுபக்கமும். 'மாலு நான்முகத் தண்ணலும் வந்திரு-பாலுமாகி' (கந்தபு. பாயிர. கசு.)

இருபாவிருபஃது— } அருணந்திசிவாசாரியரா லருளிச்செய்யப்பட்ட ஒரு நூல்; அது: சித்தாந்தசாத்திரம் பதினான்கனு ளொன்று.
இருபாவிருபது —

இருபான்—இருபது. 'இருபான்கணை' (கந்தபு. அக்கினிமு. 82.)

இருபிறப்பாளர்—1. அந்தணர்; உபநயனத்திற்குமுன்பு ஒரு பிறப்பும் பின்பு ஒரு பிறப்பு மாகிய இருபிறப்பினையு முடையராதலின் (திருமுரு. கஅ௨). 'இருபிறப்பாளர் முதன் முதனாற்சாதிக்காகும்' (திருவிளை. மாணிக்க. எஉ.) 2. வேதியர், அரசர், வைசியராகிய மூன்றுவருணத்தவர்களும். (பராசர. உக.)

இருபிறப்பு—1. இரண்டுசன்மம் (சூடா.) 2. சந்திரன். 3. சிறகு. 4. பல். 5. பறவைகள்.

இருபிறவி—1. இரண்டுசன்மம். 2. இருசாதிசேர்ந்து பிறக்கும் உயிர்வருக்கம்.

இருபுட்சன்—1. இடியேறு. 2. இந்திரன். 3. சுவர்க்கலோகம். [ஜஹுக்ஷிது: ஜஹு-தேவன். க்ஷி-வசிக்கிறவன்.]

இருபுட்சி — இந்திரன். [ஜஹுக்ஷிது.]

இருபுடைமெய்க்காட்டு — ஒன்றே இருவேறுவகையாகத் தோற்றுவது. (திவ். திருநெடுக். 21. வ்யா).

இருபுரியாதல் — மாறுபாடாதல். (திவ். கண்ணிநுண். 11. வ்யா).

இருபுலன்—மலசலங்கள். 'உமிழ்வோடிரு புலனுஞ்சோரார்' (ஆசாரக். 33.)

இருபுறக்கருமம்-கருமகாரகத்துளொன்று; அது: பற்றுக்கருமம் விட்டுக்கருமம் இரண்டற்கும் புறமாகிய கருமம். 'மாவுண்ணுஞ் சிறுக்கன் அதன்கணைந்த தளியைத்தின்றான்' என்பதிற் போலும். இதில் தளி வேண்டப்படாமையால் பற்றுக்கருமமுமன்று; அறிந்திலாமையால் விட்டுக்கருமமுமன்று. (வீரசோ. உபகாரக. ச.)

இருபுறவசை—வசைபோன்ற வாழ்த்து. (யாப். வி. 95. பக். 512.)

இருபுறவாழ்த்து — வாழ்த்துப்போன்ற வசை. (யாப். வி. 95. பக். 512.)

இருபுனல் — மேல்நீருங் கீழ்நீருமாகிய இரண்டுநீர். 'இருபுனலும் வாய்ந்த மலையும்' (வள். எ௩எ.)

இருபூ—இருபோகம். (ஈடு.)

இருபெயரொட்டாகுபெயர் — ஆகுபெயர் வகையில் ஒன்று. (நன். 290. விருத்.)

இருபெயரொட்டு — இருபெயர் ஒருபெயராக நிற்பது.

இருபெயரொட்டுப்பண்புத்தொகை—ஆகிய வென்னும் பண்புருபு இடையே தொக்குநிற்கப் பொதுவுஞ் சிறப்புமாகிய இரண்டுபெயர் இணைந்துநிற்றல். 'சாரைப்பாம்பு' என்பதிற்போல். (நன். பொதுவி. கச. உரை.)

இருபொருள் — கல்வியுஞ் செல்வமும். (சூடா).

இருபொழுது—காலையும் மாலையும் 'இருபொழுதுஞ் சிறுகரன்டி யிடைநுகர்மண்டலமே' (தைல. தைலவ. சக.)

இருபோகம்—இரண்டுதரம் விளைவு.

இருபோது—காலைமாலைகள்.

இரும்—இருமல். 'இருமிடைமிடைந்த சில சொல்' (புறநா. உசரு.)

இரும்பல்காஞ்சி—ஒரு தமிழ்நூல்.

இரும்பலி—இரும்பிலி.

இரும்பன்—1. எலி (திவா). 2. அகழெலி (பிங்).

இரும்பிடர்த்தலையார்— கடைச்சங்கப்புலவரு ளொருவர். இவர்: சோழன் கரிகாலனுடைய அம்மான். (மணிமே.)

இரும்பிலி—ஒரு செடி.

இரும்பினீர்மை — இழிந்தநிலை (சிந்தா. 952).

இரும்பு— 1. இரும்பாற்செய்த ஆயுதம் (சீவக. 782). 2. கடிவாளம். 'இரும்பு குதட்டி விலாழியுமி ழிவுளி' (கூர்மபு. தக்கன்வேள். உஎ.) 3. சிம்புரி. 'இரும்புசெய் குழவித் திங்கள் மருப்பிடை' (சிந்தா. குணமாலை. உ௨௬.) 4. சத்தலோகங்களுள் ஒன்று. அது: கரும்பொன்.

இரும்புக்காய்வேளை — வேளைவகையில் ஒன்று (மூ. அ).

இரும்புக்கொல்லன்—கருங்கொல்லன்.

இரும்புச்சலாகை—1. இரணவைத்தியக் கருவியி லொன்று. 2. இருப்புநாராசம்.

இரும்புத்துப்பு—இரும்புக்கறை (மூ. அ).

இரும்புத்துரு—மண்டூரம்.

இரும்புப்பொடி—அரபொடி (மூ. அ).

இரும்புயிர்—இருப்புயிர்; ஐவகையுயிர்களு ளொருவகை யென்பர். இது: ஜைனநூல் வழக்கு. (சீவக. 3111. உரை.)

இரும்புலி—1. ஒரு செடி. 2. துவரை.

இரும்புளி—ஒரு மரம்.

இரும்பூறல்—சாயவேர். [இம்பூறல் என்று வழங்கும்.]

இரும்பை–1. இருப்பை. 'இரும்பை வகுளமொடு' (திருப்பு. க௩எ.) 2. குடம் (பிங்). 3. பாம்பு (உரி. நி).

இரும்பொறை — சேரர் பட்டப்பெயர்களுள் ஒன்று. 'பல்வேலிரும்பொறை நின் கோல்செம்மையின்' (பதிற்றுப். அகூ.)

இருமடங்கு — இரட்டித்தஅளவு. 'இன்றைக் காயிர நாளைக் கிருமடங்கு' (திருவிளை. மெய்க்கா. க௨.)

இருமடி—இருமடங்கு.

இருமடியாகுபெயர் — ஆகுபெயராய்நிற்கும் ஒன்றன்பெயர் அவ்வாகுபெயர்ப் பொருளோ டியைந்த பிறிதொன்றற்காய்நிற்பது. 'கார்' என்பதிற்போலும். கருமையின்பெயராகிய கார், முதலில் மேகத்தின்பெயராய் நின்று பின், அம்மேகம் மழைபெய்யுங் கார்காலத்தின்பெயராய்வந்தது.

இருமடியேவல்— ஈரேவல்; அது: செய்விப்பி என்பதிற்போல.

இருமரபு—தாய்வழி தந்தைவழி (திவா).

இருமருந்து—சோறும் தண்ணீரும். 'இருமருந்து விளைக்கு நன்னாட்டு' (புறநா. எ௦.)

இருமல்–1. ஒரு நோய். 'இருமலுஞ் சோகையு மீளையும் வெப்பும்' (திருமக். அறன்செயா. ச.) 2. ஆட்டுநோயில் ஒன்று.

இருமல்லி—சிறுமல்லி பெருமல்லி என்னும் இருவகைமல்லி (தைல. தைலவ. உ௩).

இருமனம்—கவர்த்த மனம்; அஃதாவது: ஒன்றைச் செய்தலையுஞ் செய்யாமையையும் ஒரேகாலத்திலே விரும்பும் மனம். 'இருமனப் பெண்டிரும்' (வள். க௨௦.)

இருமா—ஒரு பின்னவெண்.

இருமாவரை—அரைக்கால்.

இருமிஸ்நகி—ஒரு மருந்து.

இருமு — இருமல். 'இருமிடைமிடைந்த சிலசொல்' (புறநா. 243. 13.)

இருமுதல் — ஈரலிலிருந்து சளிமுதலிய பதார்த்தத்தை உரத்த சத்தத்தோடு தொண்டைத்துவாரத்தாற் கக்கல். 'விக்கி-இருமா முன் மாகாணிக் கேகாமுன்' (தனிப்பா. காஎ.)

இருமுதுகுரவர் — தாய்தந்தையர். 'இருமுது குரவர்தா ளிறைஞ்சி' (காஞ்சிப். வலம்புரி. கக.)

இருமுதுகுரவோர்—இருமுதுகுரவர்.

இருமுதுமக்கள்—தாய்தந்தையர். 'இன்றியமையா விருமுது மக்களும், பொன்றினமை கண்டும்' (பழமொழி.)

இருமை — 1. இம்மையும் மறுமையும். 'இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்' (வள். உக.) 2. இரண்டு (தைல. தைலவ). 3. இருதன்மை.'அருவதா யுருவா-யிருமையா யுறை பூரணன்' (கந்தபு. ததீசி. ருஎ.) 4. உள்ளும் புறம்பும். 'இருமையா லெழுதி னேர்ந்தேன்' (பெரியபு. தடுத்தாட். ருக.) 5. கருமை. இருமையென்பதில் மைவிகுதிகெட்டது. 'இருமலர்க்குவளையுண்கண்' (சிந்தா. பதுமையா. கூ.) 6. துக்கம். 7. பெருமை. 'இருமை யயன்முடி' (காஞ்சிப்.திருநகர.எ.)

இருமையியற்கை — வேற்றுப்பொருள் வைப்பு என்னும் அலங்காரவகையுள் ஒன்று; அது: கூடுவதையும், கூடாதவதனையுங் கூடக் கூறுவது. 'கோவலர்வாய் வேய்க்குழலே யன்றிக் குரைகடலுங்-கூவித் தமியோரைக் கொல்லுமால்-பாவாய்-பெரியோரும் பேணு து செய்வரே போலுஞ் - சிறியோர் பிறர்க் கியற்றுந் தீங்கு' என்பதிற்போலும் (தண்டி. சஎ. உரை).

இருலவங்கம்—இலவங்கம், கிராம்பு.

இருலிங்கவட்டி—சாதிலிங்கம்.

இருவகைக்கூத்து — சாந்தி, விநோதம் (சிலப்).

இருவகைநிம்பம்—வேம்பு, சிவனார்வேம்பு.

இருவகைப்பொருவு — உறழ்பொருவும் உவமப்பொருவு மென இருவகையான ஒப்புமை (தொல். சொல். எஎ. சேனு).

இருவகையேது — ஞாபகஏதுவும் காரக ஏதுவும் (தொல். சொல். எஎ. சேனு).

இருவகைவேற்றுமைமயக்கம்—பொருண் மயக்கமும் உருபுமயக்கமுமாகிய இருவகை மயக்கம்; அவை: முறையே தன்பொருளிற் றிராது பிறிதொன்றன்பொருட்கட் சேறலும், தன்பொருளிற் றீர்ந்து சேறலுமாம்' (தொல். சொல். அச. சேனு.)

இருவங்கம்—வெள்ளீயம்.

இருவயிற்பற்று—அகப்பற்று, புறப்பற்று. 'பாடலாடலிற் பயிலினு மிருவயிற் பற்றறுத் திருப்பாரே' (மதுரைப்பதிற்று. கடு).

இருவர்மாறுகோளொருதலைதுணிவு—எழுவகைமதத்தி னொன்று (நன். பொதுப்பாயிர. கக).

இருவாட்சி—1. ஒரு மரம். 'கண்ணொளியு மெய்யிற் கமழ்மணமு நீடழகு - கண்ணும் வலிமூர்ச்சை நாசமாம்-பண்ணளியுங் - கங்குலும்வாழ் வார்குழலே காரமொடு வெப்பு மிகத் - தங்குமிரு வாட்சிமரத் தால்' (பதார்த்தகுண. உஉரு.) 2. ஒருசெடி (திவ். பெரியாழ். 2. 7. 10).

இருவாட்டித்தரை—மணலுங் களியுமான நிலம்.

இருவாடி—இருவாட்சி.

இருவாம்—நாமிருவரும். 'இருவாமையனை யேத்துவாம்' (கலி. சஉ.)

இருவாய்க்குருவி—ஒரு பறவை.

இருவாய்ச்சி—இருவாட்சி.

இருவாரம்—மேல்வாரமும் குடிவாரமும்.

இருவி—1. இருத்தியெனப்பொருள்படும் ஒருவினையெச்சம். 'ஒல்குநிலை னெடுந்திருவி' (தனிகைப். நாட்டு. உக.) 2. தினைக்கதிர் கொய்ததாள். 'இருவிசெய்தாளின் றுகாட்டும்' (திருக்கோ. கசச). 3. பச்சைகாவி.

இருவிக்காந்தம்—ஒரு நச்சுமூலிகை.

இருவில் — கரியவொளி. 'வாண்முகத் தோடிய விருவிலும்' (சீவக. 339).

இருவினை—1. நல்வினை தீவினைகள். 'இருவினை யின்ப துன்பத்து' (சி. சி. உ: ச.) 2. பெருஞ்செயல்; அது சிவயோகம். 'இருவினை புணர்த்து ஞான விழிமுனை திறந்து' (திருப்பு. ககo.)

இருவினையொப்பு — நல்வினையால்வரு மின்பத்திலும் தீவினையால் வருந் துன்பத்தி லும் சமபுத்திபண்ணல்.

இருவுக—இருத்துக எனப் பொருள்படு மொரு வியங்கோள்வினைமுற்று. 'கண்ணடிக் குள் ளொளிர்சாயை யென்கையி னிருவு கென' (தணிகைப். களவு. ௩அக).

இருவுதல்-இருக்கச்செய்தல். 'என்னெஞ் சிருவிய வம்பொற் றிருவடி' (காஞ்சிப். தழுவ. 145).

இருவேம்-இருவராகிய நாம். (கலி. சாஙு).

இருவேர்—வெட்டிவேர், இலாமிச்சுவேர் கள் (தைல. தைலவ. உஅ).

இருவேரி—வெட்டிவேர். 'நறையு நானமு நாறிருவேரியும்' (பெருங்.)

இருவேல்-1. வெள்வேலும், கருவேலும். (தைல. தைலவ. கஙரு). 2. பர்மாதேசத்து மரவகையி லொன்று.

இருவேலி—வெட்டிவேர் (திவா).

இருவேளை— தைவேளை, நாய்வேளைகள்.

இருழி—இருடபி.

இருள்—1. அதிகோரமென்னுநரகத்தின் பத்துவகையான நாயகநரகங்களுளொன்று. (சிவதரு. சுவர்க்கநரகவி. ககஙு.) 2. அந்த காரம். 'இருளுலகி லறவுலவு மிரவியின்றேல்' (சிவதரு. பரமதரு. உஉ.) 3. அறியாமை. 'புந்திமேற்கொண்ட - விருளொழிந்தனர்' (கந்தபு. ததீசிப். சுo). 4. ஆணவமலம். 'கண்ணிருடீர்ந்து' (சி. சிவஞானபோ. பக். உ). 5. கருமை. 'இரும்பிடி மேளந்தோ லன்ன விருள்சேர்பு' (மதுரைக்கா. சுஙச). 6. நரகம். 'இருணீங்கியின்பம்பயக்கும்' (வள். ௩ருஉ.) 7. மயக்கம். 'இருள்சே ரிருவினை யுஞ் சேரா' (வள். ரு). 8. மலம். 'பிறவி மாயா விருளெலா மிரிக்க லாகும்' (சி. சி. பாயிர. ரு.) 9. யானை. 10. துன்பம். 'அச்சற் றேமமாகி யிருடீர்ந்து' (பதிற்றுப். 90. 2.) 11. பிறப்பு. 'இருணீங்கி யின்பம் பயக்கும்' (குறள். 352). 12. குற்றம். 'இருடீர்பொறை யும்' (ஞானா. ஆசிரியர்துதி.) 13. மரகதக் குற்றம் எட்டனுள் ஒன்றாகிய கருகல் (சிலப். 14. 184). 14. இருவேல். 15. இருள்மரம் (பெருங். உஞ்சைக். 41. 33). 16. ஒரு சிறு தெய்வம்.

இருள்பருதமருமணி — உதயகிரியிற் சிந் தூர அருவிவீழ்ந்த சிந்தூரசாகரத்திலே பிறந்து பதினாறுசதுர்யுகஞ் சிவப்பேறின முழுமாணிக்கம். (சிந்தா. நாமக. கசo).

இருள்வட்டம் — எழுநரகத் தொன்று (திவா).

இருள்வரை—கிரௌஞ்சகிரி. 'இந்திரன் டனையகூர்ம்ப விருள்வரை நெஞ்சுபோழ்ந்த- மைந்தனில் வலிய காளை' (திருவிளை. இந் திரன்முடி. ருச).

இருள்வலி—சூரியன். 'நாரத னிருள்வலி வழிவரு நரபதி நலமேவ' (வேதாரணியபு. கோலாகல. கூசு).

இருள்வீடு — 1. தூக்கம். 2. சோதி விருட்சம் (பெருங். உஞ்சைக். 41. 33.)

இருள்வேல்—இருவேல்.

இருளடைதல் — பொலிவின்றியிருத்தல்.

இருளர்—வேடர்.

இருளல்—இருளுதல்.

இருளறை—ஆணவமலம். 'அவத்தை தத் துவ மழிபட விருளறை விலக்குவித்து' (திருப்பு. உசஉ).

இருளன்-1. ஒரு சிறு தெய்வம். 2. மலையில் வாழு மோர் வேடசாதியான். 3. ஒருவகை வரிக்கூத்து (சிலப். 3. 13. உரை).

இருளி—1. கருஞ்சீரகம் (மலை). 2. பன்றி (திவா). 3. வேட்டுவப்பெண் (இராசவைத்). 4. இருசி.

இருளிச்சேவி-அமுக்கிரா 'கடகரோகணி யிருளிச்செவி' (தைல. தைலவ. ௩உ).

இருளுதல்—1. இருளாதல். 2. ஒளிமழுங் கல். 3. கருநிறமுடையதாதல். 'இருண்ட கல்லையுந் தன்னிற மாக்கிய விரதம்' (இராமா. வரைக். அ). 4. மருளல்.

இருளுலகம்-நரகம். 'இம்மூன்று மிருளுல கஞ் சேராத வாறு' (திரிகடு. கo).

இருளுவா—அமாவாசை (பரிபா. 11. 37. உரை).

இருளை—நாணம் (பிங்).

இருளோவியகரை — முத்தி. 'இருளோ வியகரையேறவுய்ப்பாய்' (திருநூற். ரு).

இருஷிழலம்—வசம்பு (பாலவா).

இருமிமஸ்தகி-ஒரு மருந்து (மூ. அ.) இது தைலம் அல்லது பிசினுள்ளவஸ்து என்றும், பலங்கொடுக்கும் மருந்து என்றும், சாலா மிசிரி என்னும் வஸ்துவுடன் சேர்த்துக் கொடுக்கப்படுகின்றதென்றும், சையாமென்னுந் தீவிலிருந்து செங்கடல்வழியாக வருகின்றதென்றுஞ் சொல்லுவர்.

இரோட்டி—ஒரு சாதி [தெலுங்கு].

இரேப்பை—கண்மடல் [தெலுங்கு].

இரேக்கு-1. ஒருவகைச் சல்லா. 2. தத்துவம். 3. பூவிதழ். 4. பொற்றகடு [1, 3, 4 தெலுங்கு].

இரேகபிராணன் — 1. தேகத்தோடைக்கியமான சீவன். 2. மிகுசிநேகம்.

இரேகம் — 1. அச்சம். 2. சந்தேகம். 3. தவளை. 4. தேகம். 5. மலமோசநம், நோயினலாதல் மருந்தினலாதல் வயிறுகழிதல் [ரெக.]

இரேகன்—1. கீழ்மகன். 2. சாதியாற் றள்ளுண்டவன் [ரெகு:]

இரேகாகணிதம்—1. கீற்றினலளக்கப்படுவது. 2. கேத்திரகணிதம் [ரெவா மணித]

இரேகாத்திரயம்—அபயஞ்செய்தல்.

இரேகி—1. அதிட்டவான். 2. கீழ்மகன்.

இரேகித்தல்—1. ஒன்றுபடுதல். 2. சேருதல். 3. பழகுதல்.

இரேதுத்தி—ஓரிராகம்.

இரேதுபதி—ஓரிராகம் (அ.ரி. வி. ரு).

இரேகை—1. அற்பம். 2. இறை. 3. எழுத்து. 4. சந்திரரேகை. 5. சித்திரம். 6. தொடர். 7. நிரை. 8. வரி. 9. வரை [ரெவா.]

இரேசகதுணு—கடுகு (மலை).

இரேசகம் — 1. நாசியால் அகத்துள்ள அசுத்தவாயுவைப்புறத்தேகழித்தல். 'போற்றிரே சகனன் மூச்சை விடுக்குதல்' (கூர்மபு. யோகமு. கக). [இது, பிங்கலையினலே, கோணலில்லாமல் நேராயிருக்கிற ஊர்த்தவ சரீரம் கண்டம் இவற்றையுடையவனய்ச் செய்யவேண்டும்]. 2. பேதிமருந்து. 3. வெறுமையாக்கல்.

இரேசகி—1. கடுக்காய் (மலை). 2. சிந்தில் (மலை).

இரேசகித்தல்—நாசியி னெருதுவாரத்திலே வாயுவை வெளிவரவிடுதல். 'இடையாவிரேசகித்தல்' (சூத. ஞானயோக. கரு. ரு).

இரேசந்திரம்—இரதம், சூதம்.

இரேசநம் — 1. குறைத்தல். 2. நாசியி னெருதுவாரத்தினல் வாயுவை விடுதல். 3. விரேசநம். 4. வெறுமையாக்கல். [ரெவந.]

இரோசம்—இரசம், சூதம்.

இரேசலம்-1. நவமணிக்குற்றத்தொன்று. 2. நெல்லினிறம்.

இரேசன் — 1. அரசன். 2. வருணன். 3. விட்டுணு. 4. வெள்ளுள்ளி (மலை). [ரெஶ.]

இரேசி—இரேசியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 'முன்ன மிரேசி முயறுபின் பூரகம்-பின்னது கும்பம் பிடி' (ஔவை குறள். தன்பால். சிவயோகநிலை. சு).

இரேசித்தல்—1. உமிழ்தல். (கோயிற்பு. பதஞ்சலி. ருஉ. உரை.) 2. நாசியினெருதுவாரத்தாலே சுவாசம்விடுதல்.

இரேசிதம்—1. குதிரையின் ஐங்கதிகளு ளொன்று; அது: சுற்றியோடல் (திருவிளை. மெய்க்கா. கஎ. உரை). 2. பரதத்தின் பொதுவிலக்கணமாகிய இருபதுபேதங்களு ளொன்று. 'அங்காரமே யிரேசிதமென்ன' (திருவிளை. கான்மா. 9.) 3. வெறுமையாக்குதல். [ரெவித.]

இரேசுதல்—அசிரணம்.

இரேணு — 1. துகள். 'வணங்கிரேணு வடிவுமிலாது' (தக்ஷிண. அர்ச்ச. கசு.) 2. பூந்தாது.

இரேணுகம்—ஒரு மருந்து.

இரேணுகை — 1. காட்டுமிளகு. 'இரேணுகை கச்சந்தரு சாய் நாரி யிவை' (தைல. தைலவ. உச). 2. சமதக்கினியின்மனைவியும் பரசுராமன் தாயுமான ஒரு பெண். (நீதி வெண்பா).

இரேதசு—சுக்கிலம். [ரெதஸ்.]

இரேபதம்—1. தருமனுல் பதினெட்டி னென்று. 2. வடவிரேபதம் தென்னிரேபதம் என நவகண்டங்களு ளிரண்டைக் கருதும் ஒருபதம்.

இரேயம்—1. கள் (பிங்). 2. காய்ச்சி வடித்த சாருயம்.

இரேவணசித்தர் — அகராதிநிகண்டிபற்றியவர்.

இரேவணாரத்தியர்—சிவஞானதீபவாசிரியர்.

இரேவதம்—1. இரேபதம். 2. இரேவதி நட்சத்திரம்.

இரேவதன் — பலதேவன் மனைவியின் பிதாவாகிய ஒரு பிரபு.

இரேவதி—1. இருபத்தேழாநட்சத்திரம். 2. பலதேவன்மனைவி (பிங்). [ரேவதீ.]

இரேவதிகோன்கள் — பலதேவன். (சூ. நிகண். க: கo).

இரேவந்தன்— நிகழுங் கற்பத்தின் ஐந்தாம் மநு.

இரேவற்சின்னி—1. நாட்டுமஞ்சட் சினக்கிழங்கு. 2. ஒரு மரம்.

இரேவு—1. ஆயத்துறை. 2. இறங்குந்துறை. [தெலுங்கு.]

இரேவை—நருமதை (பிங்).

இரை—1-3. இரையென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 'இரைசங்கொலி' (பெரியபு. திருநாவு. எசு). 4. உணவு. 'இரைக்கேயிரவும்பகலுந்திரிந்து' (பட்டினத்தடி. திருக்காளத்தி. ரு). 5. ஒலி. 'இரையுந்தெழுதுநீர்வையை' (திருவிளை. பரிகரி. ருஎ). 6. கள். 7. நீர். 8. பூமி. 9. பேச்சு. 10. விலங்குமுதலியவற்றினுணவு 'இரையென வதனை விழுங்குமுன்' (பாரத. குருகுல. கoரு).

இரைஇய—இரத்தற்கு (பதிற்றுப்).

இரைக்குடர்—} இரைப்பை.
இரைக்குடல்—}

இரைக்குழல்—உணவுசெல்லுங்குழாய்.

இரைகொள்ளி — 1. இரையைக்கொள்ளும் உறுப்பு. 2. பெருந்தீனிதின்போன்.

இரைச்சல்—ஆரவாரம்.

இரைத்தல்—1. ஒலித்தல். 'இரைத்துவருகான்மகனும்' (பாரத. வெளிப்பா. ரு). 2. சீறுதல். 'இரைக்கின்ற பாம்பினை' (பதினொ. காரைக். திருவிரட். 7). 3. மூச்சுவாங்குதல். 'ஈண்டு துன்பத் திரைத்திட வோடினன்' (உபதேசகா. அயமுகி. 55.) 4. வீங்குதல்.

இரைந்து—1. இண்டஞ்செடி. 2. வெண்கலம். 3. உப்பிலி. 4. புலிதொடக்கி (மலை).

இரைதல்—1. ஒலித்தல். 2. சீறுதல்.

இரைதேர்தல் — உணவுதேடுதல், 'இரைதேர்வண் சிறுகுருகே' (திவ். திருவாய். 1. 4. 5).

இரைதேறுதல்—உணவு செரியாமற் றங்குதல்.

இரைநீர்—கடல்.

இரைப்பற்று—சமியாதிருக்கு முணவு.

இரைப்பு—1. இரைச்சல். 2. ஒரு நோய். 3. மூச்சுவாங்குகை.

இரைப்புமாந்தம்— மாந்தநோய்வகையில் ஒன்று. (சீவரட்.)

இரைப்பூச்சி—நாக்குப்பூச்சி.

இரைப்பெட்டி—இரை தங்கும் பை.

இரைப்பெலி—ஒருவகை யெலி; இது கடித்தலினாலே கடிபட்டவர்க்குக் குறுமூச்சுண்டாகுமென்பர்.

இரைப்பை—இரைக்குடல்.

இரைமீட்குதல்—அசைபோடுதல், இரையெடுத்தல்.

இரையூர் — ஓரூர். (மச்சபு. முகவுரை).

இரையெடுத்தல்— 1. பறவை, பாம்பு முதலியவை உணவுகொள்ளுதல். 2. அசைபோடுதல்.

இரௌகிணேயன்-1. குணதத்துவத்துக்கு மேலே இருபத்தைந்தாந் தத்துவமாகிய வாசுதேவனினின்றும் சகத்தை உண்டாக்கு நிமித்தமாகத் தோன்றிய நால்வரு ளொருவன் (சிவஞாநபா. கஅ). 2. புதனென்னுங் கிரகம். [ரௌஹிணேய.]

இரௌத்தர்— 1. குதிரைச்சேவகர். 2. சோனகர் (இந்துஸ்தானி).

இரௌத்திரம் — 1. பெருங்கோபம். 2. உருத்திரசம்பந்தமானது. 3. சூரியவெப்பம். 4. பகலில் வரும் முதன்முகூர்த்தம் (விதாந. குணகுண. எஉ. உரை). 5. வீரம் முதலிய எண்சுவைகளு ளொன்று. அது: கோபச்சுவை. 6. வெப்பம். [ரௌத்ர.]

இரௌத்திரன்—1. உருத்திரனை வணங்குகிறவன். 2. நமன். [ரௌத்ர.]

இரௌத்திராகாரம் — பெருங்கோபத் தோற்றம்.

இரௌத்திரி — 1. உருத்திரன்மனைவி. இவள் மூன்றுகோடியோசனை விசாலங் கொண்ட இந்துமண்டலத்திலே சங்கரித்தல் காரணமாக இருப்பவள் (சைவச.பொது. எச. உரை). 2. கோபமுடையாள். 3. வியாழ வட்டமாகிய அறுபதுவருடத்தில் ஐம்பத்து நாலாவது. [ரௌத்ரீ.]

இரௌரவம்—1. ஒரு நரகம். 'இருள் புழுதிவடிவாகியிடர்மிகுத்த ரௌரவத்தை-யரையனெனவறிந்திடுக' (சிவதரு. சுவர்க்க நரக. கஉஎ.) 2. சிவாகமம் இருபத்தெட்டி னொன்று; இஃது: ஆதியிலே ருரு என்பவருக்கு உபதேசிக்கப்பட்டமையால் ரௌரவமெனப் பெயர்கொண்டது. இந்த ஆகமத்தின் எழுபத்துமூன்றுவதுபடலமாகிய பாசவிமோசநப்படலத்துப் பன்னிரண்டாவது அத்தியாயத்துப் பன்னிரண்டு சூத்திரமே சிவஞானபோதம் (சி. சி. வ-று).

இல் — 1. இடம். "உடலமண்ணுற விழுந்து - வேயிலை யடைந்தவரை மெய்ப்புகழ் வழுத்தா" (திருவிளை. வாதவூ. ௩௩.) 2. இராசி. "ஒற்றையில்லினிற்புரிலாண்" (விதாந. கர்ப்பா. ரு.) 3. இல்லாத. 'கிளைஞரில்போழ்திற் சினக்குற்றம்' (நான்மணிக் கடிகை. கக). 4. இல்லையெனப் பொருள்படும் ஒரு குறிப்புவினைமுற்றுச்சொல். 'எஞ்ச லெஞ்ஞான்று மில்' (வள். சச). 5. எண்ணின்கண்வருமொரு சாரியை. 'ஆட்சியிலாவணத்தில்' (பெரியபு. தடுத்தா. ருசு). 6. எதிர்மறைப்பொருளைக் கொடுக்கும் ஓரிடைநிலை. 'செய்திலன்' 7. ஏழாம்வேற்றுமையில் இடப்பொருளிலே வரும் ஓருருபு. 'ஊரிலிருந்தான்' 8. ஐந்தாம்வேற்றுமையிலே வரும் நீங்கல், ஒப்பு, எல்லை, ஏதுவாகிய இவற்றுள் ஒருபொருளிலே வரும் ஓருருபு. 'தமரிற் நீர்ந்தான், காக்கையிற் கரிது களம்பழம், சென்னையில் வடக்குச் செருத்தணி வரை, கல்வியிற் பெரியவன் கம்பன்' 9. சாவுப்பொருளைக் கொடுக்கும் இன்மையடியாற் பிறந்த ஒரு குறிப்புவினைமுற்று. 10. மருத முல்லைநிலங்களின் தலைவியர் (பிங்). 11. தேற்றுங்கொட்டை. 'இல்லாமலக மிரண்டு மயின்றால்' (இராசவைத். சரு). 12. மனைவி. 'புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை' (வள். ருக). 13. வீடு. 'இதுவென்னி னின்னிலது வென்னினும்' (பாரத. இருட்டின. கoஅ). 14. இல்லறம். 'இல்வாழ்வானென்பான்' (குறள் 41). 15. குடி. 'இற்பிறந்தார்' (குறள். 951.)

இல்புலப்பயன்றற்குறிப்பு — ஓரலங்காரம்; அஃது: இயல்பாய் இல்லாத பயனை யுள்ளதாகத் தற்குறிப்புச்செய்தல். 'வனத்தினின் றுருற்று தவத்தினால் நின் சீரடிக் கிணையாயது கமலம்' என்பதிற்போல.

இல்புலவேதுத்தற்குறிப்பு — ஓரலங்காரம்; அஃது: இல்லாத வேதுவை யெடுத்துத் தற்குறிப்புச்செய்தல். 'முகவொளியைப் பாவாய் பெறற்குமுண்ட கத்தோ-டிகலுமதி யைய மிலை' (விசாக. அணி. கஉ).

இல்பொருள்—இல்லாதபொருள், அசத்து. 'மேற்கூறிப்போந்த இருதிறனு மல்லாத பிரமப்பொருளாவது உள்பொருளுமன்று இல்பொருளுமன்று இரண்டுமாவதுமன்று வேறுமன்று என்று அநிர்வசநமாகக்கூறிற்படு மிழுக்கென்னையெனின்' (சி. சி. ௩: ரு. சிவஞாந.)

இல்பொருளுவமை—இல்லாத ஒன்றனைக் கற்பித்துக்காட்டு முவமை. 'பெற்றம் புலியின்றேல் போர்த்துமேய்க் தற்று' என்பதிற்போல. (வள். உஎ௩. பரி.)

இல்பொருளுவமையணி — முன்பில்லதனை யுவமையாக்கியுரைக்கும் அலங்காரம்; இல்பொருளுவமை.

இல்லக்கிழத்தி—மனைவி.

இல்லகம் — வீடு. 'மனையாளையில்லாதானில்லகம்' (நாலடி. 361.)

இல்லடை—1. அடைக்கலப்பொருள் (பிங்). 2. இல்லுவமம். 3. பண்டகசாலை. 4. வீட்டிலே பாதுகாப்புக்காக வைக்கப்பட்ட பொருள். 5. அடைமான திரவியம். (அருக் கலச். 70). 6. ஒட்டடை.

இல்லடைக்கலம்—இல்லடை.

இல்லத்துப்பிள்ளை—ஈழவர்.

இல்லதனபாவம்—அபாவவகையினொன்று. (சி. சி. அளவை. 1. மறைஞா.)

இல்லது—1. இல்லாதது, கிடைக்காதது. 'இல்லதெ னில்லவள் மாண்பானல்' (வள். ருஉ). 2. இல்பொருள். 'தேரினில்லதற்கோ தோற்றமுள்ளதற்கோ' (சி. சி. ௧: ௫).

3. மனையிலுள்ளது. 4. மனைவியுடையது. 5. பிரகிருதி. (திவ். திருவாய். 1. 2. 4.)

இல்லதுசார்ந்தவில்வழக்கு—உணர்வில்லாமற் போவது; அஃது: உள்ளங்கையின் மயிருண்டென்பதும் அம்மயிராற் செய்த கயிறுண்டென்பதும் என முன்னும் பின்னும் இல்லதென்பது. 'உணரினல்லதுசாரின்மையுள்ளங்கையுரோமமானே' என்பதிற் காண்க. (சி. சி. பர. சௌத்திராந்திகன். கக.)

இல்லதுசார்ந்தவுள்வழக்கு—அறிவு முன்புள்ளதல்லதாய்ப் பின்புண்டாமென்பது. அஃது: 'உணர்வுமுன்பின்றித் தோன்றவில்லது சார்ந்த வுண்மை' என்பதனாற் பெறப்படும். (சி. சி. பர. சௌத்திராந்திகன். கக.)

இல்லம் — 1. இல்வாழ்க்கை. 2. தேற்றுமரம். (தைல. தைலவ. ௩௩). 3. மனைவி. 4. வறியேம் எனப் பொருள்படும் ஒரு தன்மைப் பன்மைக் குறிப்புவினைமுற்று. 'இல்லமென்ளெவி யங்காட் டிருப்பவ ரிசைக்குங் காலே-வெல்லருங் கேள்வி மேலோர் விதித்திடு மிலக்க ணத்துட் - சொல்லிடும் பெயரே யேனைத் தொழிற்குறிப் பிரண்டி னுள்ளும்' (சேதுபு. நாட்டு. ௧0௧). 5. வீடு. 'அருளுடை யறத்தின் வாழ்வா மங்கக ரில்லமெங்கு-மிருளுடை யிந்திர நீலத் தியன்றசா ளரங்க ளுனக்கி' (பாரத. இந்திரப்பிரத். ௩௧.)

இல்லல்—1. கடத்தல். 2. நடக்கை (பிங்).

இல்லவண்முல்லை — இல்லாண்முல்லை. (முல்லைப்புறம்.) 'தலைமகன் பாசறைக்கண்-மாசறு மாதரை யுள்ளுதல் - மாசற்ற - வில்லவன் முல்லையு மஃதேயாம்' (வீரசோ. பொருட். கஉ. உரை.)

இல்லவள்—மனைவி. 'இல்லதெனில்லவண் மாண்பானால்' (வள். ருந.)

இல்லவன்—1. கணவன். 2. தலைவன்.

இல்லவை—1. இல்லாதவைகள். 2. மனையிலுள்ளவைகள்.

இல்லறத்தின்றுறைகள்—தன்னையொழிந்த மூவர்க்கும், துறந்தார்க்கும், துவ்வாதவர்க்கும், இறந்தார்க்கும், தேவர்க்கும், முனிவர்க்கும், விருந்தினர்க்கும், சுற்றத்தார்க்கும், பிறர்க்கும் துணையாதலும், வேள்விசெய்தலும், சிலங்காத்தல் முதலியனவும், அருளுமன்பு முடையனாதலும் பிறவும். (சிலப்.)

இல்லறம்—இல்வாழ்க்கைநிலைக்கு வேண்டிய நெறிக்கண் நின்று அதற்குத் துணையாகிய கற்புடைமனைவியோடுங்கூடியொழுகுமொழுக்கம். 'இந்நாள்காறு மடிய மில்லறத் தையாற்றி' (கந்தபு. திருநகர. கக௨.)

இல்லாக்குடி—தரித்திரகுடும்பம்.

இல்லாகியர் — இல்லையாகுக. 'இயைந்த கேண்மை யில்லாகியர்' (புறநா. கக0.)

இல்லாகியார்—வறிஞராய்வந்தோர், இலராயொழுகினோர்.

இல்லாதுக—இல்லையாகுக.

இல்லாச்சிரமம்—இல்லறநிலை.

இல்லாண்முல்லை — 1. தலைவி நாயகனை வாழ்த்தி யில்லின்மிகுதியைக் கூறியது. (புறப்பொருள். பொதுவியல். முல்லை. ரு). 2. பாசறைத்தலைவனை இல்லாள் நினையும் புறத்துறை. (திவா.)

இல்லாண்மை—குடியினை ஆளுந்தன்மை; அது: தன்குடியிலுள்ளாரை உயரச்செய்து தன்வழிப்படுத்தல். 'தான்பிறந்த - வில்லாண்மை யாக்கிக் கொளல்' (வள். ௧0௨௬.)

இல்லாத்தனம்—வறுமை.

இல்லாதபொய்—முழுப்பொய்.

இல்லாதவன்—வறியவன்.

இல்லாநயநி—கண்ணில்லாதவன். 'இல்லா நயநி தன்மகன் சொற்கேட்டு' (பாரத. நச்சுப். சஉ.)

இல்லாமை — 1. உள்ளதாகாமை. 'ஒரு மநுவெனக்கிங் - கில்லாமை யொன்றினையு மில்லாமை யாகவே' (தாயு. எங்குநிறை. அ.) 2. தரித்திரம். 'இல்லாமை சொல்லி யொருவர்தம் பாற்சென் றிழிவுபட்டு - நில்லாமை நெஞ்சி னினைகுவிரேல்' (அபிராமி. ருச.)

இல்லார்—1. இல்லையாகச்செய்தவர்; இது பண்படியாற்பிறந்த வினைப்பெயர். 'மலை வில்லாரருளிய' (சிவஞானபோ. சிவஞா. காப்பு.) 2. வறியவர். 'உடையார்மு னில்லார் போல்' (வள். ௩௯ரு.)

இல்லாள்—1. உடையளல்லாதவள். 'மனையெனு முறையில்லாள்' (கந்தபு. இல்வலன் வாதாவி. க). 2. வறியவள். 3. மனைவி. 'இல்லாளி னூடிவிடும்' (வள். ௧0௩௧). 4. மருத முல்லைநிலங்களின் தலைவியர் (திவா).

இல்லாளன்–1. கிருகஸ்தன். 2. கணவன். 'இல்லாளன் வைக்கவென' (பெரியபு. காரைக். 20.)

இல்லாளி—கிருகஸ்தன். (சைவச. பொது வி. ௩௭௬.)

இல்லான்—1. இல்லாதவன், வறியவன். 'இல்லானுக் கன்பிங் கிடம்பொரு ளேவன் மற்றெல்லா மிருந்துமவற் கென்செய்யும்' (நன்னெறி. கரு). 2. கணவன். [இல்லையுடையவன் என்றவாறு.]

இல்லி—1. பொள்ளல். 'இல்லிக்குடம்' (நன். பொதுப். ௩௮). 2. தேற்றுமரத்தினிலை. 3. பெண்ணுறுப்பிற் குறைவுள்ளாள். 4. வான்மிளகு. (மூ. அ). 5. தேற்றுமரம். (மூ. அ). 6. வெற்றிலை. 7. துளை. 'இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை' (புறநா. 164. 4). 8. ஒருவகைப் புழு.

இல்லிக்கண்–1. மிகச்சிறிய கண். 2. கூசுகின்ற கண்.

இல்லிக்காது—துளையுள்ள காது.

இல்லிடம்—1. வீடு (பிங்). 2. ஊர் (பிங்).

இல்லிழந்த—சில்லிமூக்கு.

இல்லுநர்—மேவினர்.

இல்லுவமம்— } உவமாலங்காரத்
இல்லுவமை– } தொன்று; அஃது: உலகத்தில் உளதல்லாத தொன்றனை உவமையாகவெடுத்துச்சொல்லுதல். 'ககனாரவிந்தம் போலும்'

இல்லுறைகல்—அம்மி. 'இல்லுறை கல்லின் வெண்மலர் பரப்பி' (கல்லா. ௧௧.)

இல்லுறைதெய்வம்–கிருகதேவதை. 'இல்லுறை தெய்வமன்னார்' (சீவக. 1095.)

இல்லெலி — வீட்டெலி. 'இல்லெலி பார்த்து' (சீவக. 2985.)

இல்லென்றல்–1. இல்லையென்றுசொல்லி மறுத்தல். 2. பொருளில்லையென்றுசொல்லுதல்.

இல்லெனல்—1. இல்லையென்றல் (பிங்). 2. மரணம் (பிங்). 3. சூனியமாகுகை.

இல்லை – 1. இன்மைப்பொருளையுணர்த்தி ஐம்பான்மூவிடத்திலும் வரும் ஒரு குறிப்பு வினைமுற்று. 'உய்திற மில்லையென் றயிர்ப்பு வீங்கினர்' (இராமா. திருவவதார. ௪௮). 2. சாதலையுணர்த்தி ஐம்பான்மூவிடத்திலும் வரும் ஒரு குறிப்புவினைமுற்று. 'நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்' (வள். ௩௩௬.)

இல்லைசெய்தல்—மறுத்தல். 'இல்லைசெய்யாதே இசைகைமிறே' (திவ். திருப்பா. 15. வியா.)

இல்லையாதல்–இறத்தல். 'இல்லையாயினனுன்மக னின்றென' (கம்பரா. இராவணன் சோ. 3.)

இல்லொடுவரவு—குடிப்பிறப்பு. 'இளமையும் வனப்பு மில்லொடு வரவும்' (பெருங். உஞ்சைக். 36. 89.)

இல்லொழுக்கம் — இல்லாளோடு வீட்டிவிருந்து அறஞ்செய்தல். 'கூறு மில்லொழுக்கந்தனை' (கந்தபு. மார்க்கண்டேய. ௩௩.)

இல்லொழுக்கு–இல்லொழுக்கம். 'எதிலார் பக்க மாகி யில்லொழுக் கிறந்தார்' (கந்தபு. தவங்காண். ௨௨.)

இல்லோர்மெய்ம்மறை — வறியவர்களுக்குக் கவசம்போல்வான். (பதிற்றுப்.)

இல்லோன்—1. கணவன். 2. தரித்திரன்.

இல்வலன் — வாதாபியின் முன்னோன். (வேதாரணி. மணவாள. 13 )

இல்வழக்கு — 1. இல்லததனை இல்லையென்கை. அது: முயற்குக் கொம்பில்லையென்பது போல்வது. 'முயற்கோடின் றில்வழக்கே' (சி. சி. பர. சௌத். ௪௦). 2. பொய்வழக்கு.

இல்வாழ்க்கை— மனையாளோடுகூடிவாழ்தல். 'தனக்குரிய வில்வாழ்க்கையதனையே யறமெனக்கூறி' (வை. நீ. ௧௧.)

இல்வாழ்பேய்—தீயமனைவி.

இல்வாழ்வான் — இல்லறத்தோடுகூடி வாழ்பவன். 'இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு - நல்லாற்றி னின்ற துணை' (வள். ௪௧.)

இல்வாழ்வு — இல்லோடுகூடி வாழுகை. 'இல்வாழ் வென்னும் வெஞ்சிறை யகத்தும் வீழேன்' (கந்தபு. மார்க்கண்டேய. ௩௨.)

இல — 1. இலவு. 'இலமலர்ப்பஞ்சிப் பாதத்து' (சீவக. 2641). 2. ஏடா வென்னும் பொருளுள்ள விளிப்பெயர். 'எவனில குறுமக ளியங்குதி' (அகநா. 12.)

இலக்கணக்கருமம்—சாமுத்திரிகம். (பெருங். உஞ்சைக். 38. 292.)

இலக்கணக்கோத்து—ஒரு நூல்.

இலக்கணச்சிதைவு—இலக்கண நூலிலே விதித்த விதிகளுக்கு விலக்காகச் சிதைந்து வழங்குஞ் சொல்.

இலக்கணச்சுழி-குதிரைகளுக்கு அமைய வேண்டிய நல்ல சுழி. (அசுவநூல்.)

இலக்கணச்சொல் — இலக்கணவழியால் வருஞ் சொல்.

இலக்கணநூல்—ஒரு பாஷையைப் பேசுதற்கும் எழுதுதற்கும் வேண்டிய முறையைக் கற்பிக்கும் நூல்.

இலக்கணப்போலி—இலக்கணநெறியால் வருவதன்றாய் இலக்கணமுடையதுபோலச் சான்றோராலே அடிப்பட வழங்கப்பட்டு வருஞ் சொல்; அஃது: இல்முன் என்பது முன்றில் என்றும் நகர்ப்புறமென்பது புறநகரென்றும் வழங்கப்பட்டுவருவனபோல நிலைமொழி வருமொழிகள் முன்பின்னாக மாறி நிற்பதும், கோவில் என்பது கோயில் என்றும் பொதுவில் என்பது பொதியில் என்றும் வருவனபோல எழுத்துமாறி வருவதுமாம். (நன். பெயரியல். கo. இராமாநு.)

இலக்கணம் — 1. அசாதாரணதருமம்; அஃது: அவ்வியாத்தி, அதிவியாத்தி, அசம்பவம் என்னும் முக்குற்றங்களுமில்லாத தன்மை. (தருக்கசங்கிரகம். பக். ௩.) 2. அடையாளம். 3. இயல்பு. 4. இலக்கியத்தினமைதி. 5. உறுப்பு. 6. ஒழுங்கு. 7. சிறப்பு. 'கருமையெல்லா மிலக்கணத்தொருங்கே யீண்டி' (கந்தபு. மாயைப். ௩க.) 8. சுபவாழ்வையுரைக்குமொரு அங்கக்குறி. 9. நற்குணம். 10. இலக்கணங்கூறு நூல்; அஃது: எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணியென ஐந்துவகைப்படும். 11. முறைமை. 12. மேன்மை. 13. அழகு. [வடலக்ஷண.]

இலக்கணமுடையது – இலக்கணவழியால் வருஞ் சொல் (நன். 267).

இலக்கணமுலந்தோனி — இலக்கணையடியாய்த் தோன்றிய குறிப்பு. அது: 'நுசுப்பிற்கு நல்லபடாஅ பறை' என்பதுபோல் வது. (வள். ககக௫.) [இதிலே மக்கட்குரிய சாக்காடும்பறைபடுதலும் இலக்கணைக்குறிப்பால் நுசுப்பின்மே லேற்றப்பட்டன.] (பி. வி. ௫o. உரை.) [வடலக்ஷணாமூலத்வநி]

இலக்கணவழக்கு—இலக்கணநடை.

இலக்கணவழு—இலக்கணப்பிழை.

இலக்கணவிளக்கச்சூறவளி — இலக்கணவிளக்கத்திற் சிலபாகத்தை மறுத்துச் சிவஞானமுனிவர் செய்த ஒரு நூல்.

இலக்கணவிளக்கம்-வைத்தியநாததேசிகரால் இயற்றப்பட்ட ஓர் இலக்கண நூல்; அது: பஞ்சலக்கணங்களையு மறிவிப்பது.

இலக்கணி—1. அழகிய ரூபமுடையவன். 2. இலக்கணமறிந்தவன்.

இலக்கணை — 1. ஒரு பொருளை நேரே யுணர்த்தும் பதம், அப்பொருளை யுணர்த்தாது அதனோடியைபுடைய பிறிதொன்றனை யுணர்த்துவது. அஃது: ஆதாரம், காரணம், காரியம், சமீபம், அங்காங்கி, தர்மாநுகிருதி என அறுவகைப்படும். (சி. சி. சு: உஅ. சிவாக்.) 2. விட்டவிலக்கணை, விடாதவிலக்கணை, விட்டும்விடாதவிலக்கணை என மூன்றுவகைப்படக்கூறுதலும் உண்டு. (நன். 269. விருத்தி). 3. சீவகன்மனைவியரி லொருத்தி.

இலக்கம் — 1. இலக்கு. 'அத்தநுவின் பெருமையையு மிலக்கத் துள்ள வருமையையுங் கருதாம லாண்மை கூறி' (பாரத. திரௌபதி. ககஅ.) 2. இலங்குதல், பிரகாசித்தல். 'எல்லேயிலக்கம்' (தொல். சொல். இடை. உக.) 3. எண். 'இலக்கமில் கூறையாதி பொழிந்து' (கோயிற்பு. இரணியவன்ம.௯o.) 4. எண்ணைக் குறிக்கும் வடிவம். 'குறியிலக்க மெழுதே' (தைல. தைலவ.கரு.) 5. காணுதல். 6. நூறாயிரம். 'இலக்கத் தொன்பதின்மர்செவ்வே-டம்பியராகிவந்த' (கந்தபு. திருவவதார. ௯௭.) [வடலக்ஷ.]

இலக்கமடைத்தல் — எப்படிக்கூட்டினும் மொத்த எண் ஒன்றேயாக வரும்படி எண்களைச் சதுரங்கவறைகளில் அடைத்தல்.

இலக்கமிடல் — 1. இலக்கமெழுதல். 2. கணக்குப்பார்த்தல்.

இலக்கர்—1. இலக்கமென்னுந் தொகையினர். 'இலக்கர்தம்மையுஞ் சூளிகைதன்னுடன்' (கந்தபு. சததமுகன்வதை. கரு.) 2. கந்தை. 3. சீலை. 4. ஆடை. (அரிசமய. குலசே. 34).

இலக்கல்—விளக்குதல்; அஃது: அறியும்படிசெய்தல். 'உருத்திர னுருத்தனி லுதித்த குமர-னிலக்குமியலே' (சிவதரு. சிறப்புப் பாயிர. க.)

இலங்காந்தரம்—இடையிலக்கம்.

இலங்காரம்—இலக்கர் (சூடா).

இலக்கித்தல் — உருவரைதல். 'இவ்வுருவு நெஞ்சென்னுங் கிழியின்மேலிருந்திலக் கித்து' (சீவக. 180.)

இலக்கிதம் — குறிக்கப்பட்டது. 'பேசும் பொருளுக் கிலக்கிதமாம்' (திருவாச. 48.7.) [ஸ்கூிதம்.]

இலக்கினசட்டுவருக்கம் — இராசிக்குரிய ஆறு காரியம்; அவை: ஓரை, சுடர்ச்செலவு, திரேக்காணம், நவாமிசம், துவாதசாமிசம், கோட்கூறு என்பன. (விதான. சட்டுவருக்க. க. உ. ங.)

இலக்கினசடுவருக்கம் — இலக்கினசட்டுவருக் கம்.

இலக்கினபத்திரிகை – சுபமுகூர்த்தத்தைக் குறிப்பிடும் பத்திரிகை.

இலக்கினபுடம் — இராசியைப்பற்றிவருஞ் சுத்தபுடம். [ஸ்ஹ்ஹ்ஹ்டு.]

இலக்கினபோக்கியம்—உதயாற்பரம். (பிரு கற்சாதக.)

இலக்கினம்—1. ஒருவன் பிறக்கும்பொழு துதிக்கும் ராசி. (விதான. மரபியல். ங. உரை.) 2. சுபமுகூர்த்தம். (விதான. மர பியல். ங.)

இலக்கினமிருத்து — 1. மரணபலத்தைக் கொடுக்குமிலக்கினம்; அது: பாபக்கிரகங்கள் ங, சு, கக என்னுமிடங்களில் நில்லாது க, உ, ச, ரு, எ, அ, கூ, க0, கஉ என்னுமிடங்க ளில் நிற்பதும், சுபக்கிரகங்கள் சு, அ, கஉ என்னுமிடங்களில் நிற்பதுமாம். (விதான. குணகுண. கஉ, கங.)

இலக்கினாதிபதி—இலக்கினத்திற்கு உடை யவன்.

இலக்கியம் – 1. இலக்கணமமைந்திருக்கப் பட்டபொருள். 2. இலக்கணையாய் வரும் பொருள். 3. உதாரணம். 'எற்றப் படாதன வின்னிசைச் சிந்திற் கிலக்கியமே' (யாப். காரிகை. செய்யு. ரு). 4. குறி, அடையாளம். 5. செய்யுணடையாயாவது வசனநடையாயா வது ஆன்றோராற் செய்யப்பட்ட நூல். [இராமாயணம், கந்தபுராணம், திருவள்ளு வர்குறள் முதலியன.]'இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலின்' (நன்னூல். கசக). 6. செய்யுள்வழக்கினுவது, உலகவழக்கி னுவது தொடுக்கப்பட்டுவருவது. [ஸ்க்ஷ்ய.]

இலக்கியார்த்தம் — இலக்கணையாலறியும் பொருள். 'தற்பதத்திறுக்கு விராட்புரு டாதியகன்ற தனி நிருபாதிகப்பிரமமே யிலக்கியார்த்தம்' (வேதா.சூ.கககூ.)[ஸ்க்ஷ்யா ர்த்த]

இலக்கு — 1. அசாதாரணதருமம். 2. எண்ணம். 3. எதிரி. 4. எது. 5. ஒப்பு. 6. குறி, குறிப்பொருள். 'நிலையிலாவிலக்குமஃ தே' (பாரத. திரௌபதி. ஙக.) 7. சமயம். 8. நேர். 9. அடையாளம். 10. இடம். 11. நாடியபொருள். 12. அளவு. (சேதுபு. இராமதீ. 3.) 13. சமயம். 'இலக்குவாய்த் தழி' (சி. போ. பா. 12. 2. பக். 233.) [ஸ்க்ஷ]

இலக்குதல்—1. அடையாளமிடுதல். 'அது தன்னிவிரேகை-யிலக்குக' (சைவச. பொது வி. உஎச). 2. இலங்கப்பண்ணல். 'இட்ட முடன்றந்த மிலக்கிடும்போதிற் பாரேல்' (சைவச. பொதுவி. ஙஉ.) 3. சொலிப்பித் தல். 'எரியத்திரத் திலக்கியே' (சைவச. பொதுவி. உகச.) 4. வரைதல். 'இரேகை யிலக்குக' (சைவச. பொது. 274.)

இலக்குப்பார்த்தல்—1. குறிபார்த்தல். 2. சமயம்பார்த்தல்.

இலக்குமணன் — 1. இராமன் றம்பியரி லொருவன். (காஞ்சிப். வீரராக. அ.) 2. சுப லக்கினமுடையவன். [ஸ்க்ஷ்மண.]

இலக்குமணை—சாரசபட்சியின் பேடு [ஸ்க்ஷ்மணா.]

இலக்குமன்—இராமன்றம்பியாகிய இலக் குமணன். (திவ். பெரியதி. 2. 3. 7.)

இலக்குமி—1. அதிட்டம். 2. அழகு. 3. செல்வம். 4. மஞ்சள். (விநாயகபு. 3. 57.) 5. முத்து. 6. விட்டுணுவின்மனைவியாகிய ஒரு தெய்வப்பெண்; இவள் பிருகுவுக்குக் கியாதியிடத்தில் பிறந்தவள். [ஸ்க்ஷ்மீ.]

இலக்குமிசோ—உமை. 'அம்பிகைசி றிலக் குமிசோ' (காஞ்சிப். வயிரவ. உங.)

இலக்குவன்—இலக்குமணன். 'இவரென விலக்குவற் கிராமன் காட்டினுன்' (இராமா. வேள்வி. சங.)

இலக்குவைத்தல்—குறிவைத்தல்.

இலக்கை—1. ஆடை. 2. மாதச்சம்பளம். (ஈடு. 4. 8. 8. ஜீ.)

இலகடம்—யானைமுதுகின்மேற் றவிசு, அம்பாரி. 'யானைமேல்......பொன்னிலகடங் கள்' (கலிங். புதுப்ப. 278.)

இலக்ம்—ஊமத்தை (மலை).

இலகரி—1. ஓர் நூல். 2. பெருந்திரை. 3. மகிழ்ச்சி. 4. மது. 5. வெறி. 6. கஸ்தூரி. (மூ. அ.) [ஸஹரீ.]

இலகாம் — } கடிவாளம்.
இலகான் — } (இந்துஸ்தானி.)

இலகிமா—அட்டசித்திகளுளொன்று; அது மிக நொய்தாதல். அஃதாவது சீக்கிரவேகி யாய்ச் சேற்றிலுஞ் சலத்திலும் அடியமிழ்ந் தாமற்செல்லுந் தேகத்தையுடைத்தாதல். (சி. சி. உ. ருஅ. சிவாக்). 'இலகு மேரு பாரம் போ லிருக்கும் யோகி தனையெடுத்தா-லிலகு வான தூலமென விருப்ப திலகி மாவாகும்' (திருவிளை. அட்டமாசித்தி. உச.) [ஸவிமா.]

இலகிமாசித்தியோகம் — அட்டமாசித்தி யோகங்களு ளொன்று. அஃது: அணிமாவிற் கூறிய அவ்வக்கினியைத்தானே மேருத்தண்டு வழியாக வாயுவாலே குண்டலிமட்டாக எழுப்பி அதிலேற்றி இரண்டுவருஷம் நோக் கில் நீர் நுரைகள்போலத் தேக மெத்தென வுண்டாவது. (த. நி. போ. ௩௭௨.)

இலகிரி—1. அபின். 2. கஞ்சா. 3. சாதிக் காய். 4. சாதிபத்திரி. [ஸஹரி.]

இலகு—1. அகில். 2. இலகென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகை யும். 3. கனமின்மை, இலேசு. (சூடா). 4. காலவகையினொன்று. (பரத. தாள. 27.) 5. குற்றெழுத்து. (யாப். வி. 95. பக். 471.) 6. தணிவு. 7. நுண்மை. 8. சிறுமை. (உரி. நி). 9. சுலபம். 10. அங்கவகையினொன்று. (பரத. தாள. 35). 11. சீதேவி. [3,4,5,6,7. ஸவகு]

இலகுசம்—1. ஈரப்பலா (மலை). 2. இலா மிச்சைவேர். [ஸவகுஜ.]

இலகுத்துவம்—அட்டசித்திகளு ளொன்று; அஃது: இலகுத்தன்மை. [ஸவகுத்வ.]

இலகுதல்—விளங்குதல். (திவ். திருவாய். 8. 8. 1.)

இலகுநட்சத்திரம் — அசுபதி, அத்தம், பூசம் என்னும் நட்சத்திரங்கள். 'பரியத்தம் பூசம் லகு' (விதாந. பஞ்சாங்க உ௦.) [ஸவகு நக்ஷத்ர.]

இலகுபுடம்— ஒருசாணுயரத்திற்குட்பட்ட புடம்.

இலகுவியாக்கியானம்—சிற்றுரை.

இலகுளம் — தடி, தண்டு. [ஸகுல.]

இலகுளீசன் — இலகுளேசமூர்த்தி, சிவ பிரானமிசமான ஒரு குருமூர்த்தம். 'அடுத் தங் குடனும் பரம்பொருளை யன்பே விரவ வொட்டாமற் - றடுத்து முக்கூற் றுயிருணர் வைத் தகையும் விச்சை முழுதிரிய-மடுத்த கருணைத் திருநோக்கின் மாணுக் கருக்குப் பொருளுரைப்ப - வெடுத்த கரத்தான் வீற் றிருக்கு மிலகு ளீசன் றிருவுருவும்' (காஞ்சிப். சிவபு. உ௦.)

இலகுளீசுரன் — பிருதிவியாதாரத்திலே தெய்வமாயிருக்கும் ஈசன். 'கிளரிலகு ளீ சுரனை-வாழி நீற்றினும்.' (திருவானை. கோச். ௬௪.)

இலகுளேசுவரபுவனம்—அப்புதத்துவத்தி லிருக்கும் புவனங்களின் மத்தகத்தில் சோதி மயமுற்றதாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக் கும் புவனம். (சிவபராக். ௧௬௨.)

இலகுளேசுவரமூர்த்தம் — அப்புதத்து வத்தில் வலப்புறம் மழுவொடு சூலமும், இடப்புறக் கலசமும் எடுத்தகரமும் தாங்கிப் புவனத்துள்ள ஆன்மாக்கட்கு மும்மலங்களை யும் போக்கி நற்கதி அநுக்கிரகிக்க ஆசாரிய மூர்த்தியாயெழுந்தருள் இலகுளேசுவரர் வீற்றிருக்கும் மூர்த்தம். (சிவபரா. ௧௬௧.)

இலங்கணி — இலங்கையின் கோட்டை வாயிற் காவற்றெய்வம்.

இலங்கநம்—1. அதிக்கிரமித்தல், விதி கடத்தல். 'எவ்வ மாகவக் தெய்திரஞ் சமய லங் கநமும்' (பெரியபு. திருநாவு. அ௬.) 2. உபவாசம். 3. குதித்துப்பாய்தல். 4. கோட்டைபிடித்தல். 5. தாண்டுதல். 6. போதல். [ஸங்கந.]

இலங்கநீ — கடிவாளத்தின் கடியிரும்பு. [ஸங்கநீ.]

இலங்கம்—1. எறும்பு. 2. களரி. 3. கூட் டம். 4. கூடுதல். 5. முடம். [ஸங்க.]

இலங்கர்—நங்கூரம். (இங்குஸ்.)
இலங்கல்—இலங்குதல்.
இலங்காசிதை—நாகப்பூ.
இலங்காதாகி — அநுமான். [லங்காதா ஹிநு: தாஹிநு-சுடுகிறவன்.]
இலங்காபுரம் — இலங்கை. 'இலங்கா புரமெரித்தா னெய்து' (திவ். இயற்பா. மூன்றாந்திருவந்தாதி. ருக). [லங்காபுர.]
இலங்காபுரி—இலங்கை. [லங்காபுரீ.]
இலங்கிசார்—1. அலைக்கழிவு. 2. இடைஞ்சல்.
இலங்கித்தல் — 1. குதித்தல். 'இமைப் பினி னிலங்கித்திட்டான்' (சிந்தா. மண். கூ0.) 2. கடத்தல். 'இலங்கியாதே நாயக மேற்றிச் சொல்க' (சைவச. பொது. 147)
இலங்கிழை—பெண். (சிந்தா. நா.ருஎ.)
இலங்து—குளம்.
இலங்குதல்—1. ஒளிசெய்தல். 2. விளக்க மாகத்தெரிதல். 'இலங்கு மிருகுழை யருகு பொருது' (சிவப்பிர. மங்கல. ரு.)
இலங்குபொழுது — 1. அத்தமிக்கும்போ திருக்குஞ் சூரியவொளி. 2. படுஞாயிறு.
இலங்கேசன் — இராவணன், இலங் கைக்கு இறைவன். [இலங்கா; ஈசன்.]
இலங்கை—1. ஆற்றிடைக்குறை. (பிங்). 2. ஈழமண்டலம். 3. இராவணனூர். 'இலங்கை யன்றடர்த் தானும்' (ம. தி. கஎ.) 4. வில்லி யாதனூர். 'நெல்லமல் புறவினிலங்கை கிழ வோன்-வில்லியாதன்' (புறநா. ருஎகூ.)
இலங்கோதயம்—சமரேகை. (பிருகற்சா) [இம் மத்தியரேகையிலேயே இலங்கை இருந்தது என்பது சோதிடநூற்றுணிபு. லங்கா - உதயம்.]
இலச்சி—இலச்சியென்னேவலும், தெரி நிலைவினைப்பகுதியும். [லஜ்.]
இலச்சித்தல்—வெட்கித்தல்.
இலச்சிதன் — இலச்சையடைந்தவன், வெட்கப்பட்டவன். [லஜ்ஜித.]
இலச்சினை—1. அடையாளம், முத்திரை. 'பெயரிலச் சினையுக் கிட்டி' (திருவிளை. மேரு வைச். ருரு.) 2. முத்திரைமோதிரம். (பிங்)
இலச்சை—1. அவமதிப்பு. 2. கூச்சம். 3. தகாத காரியமுயற்சியிலே மனத்தைச் சுருக்கல். (சைவப். சுo.) 4. பழிக்கப்பட்ட செய்கை செய்கையிலே விலகுதல். (சைவப். சுo.) 5. வெட்கம். 'மோடியோ டிலச்சை யாய சாபமெய்தி முக்கணன்' (நாலாயிர. திருச்சந்த. ருரு.) [லஜ்ஜா.]
இலச்சைகெட்டமரம் — 1. கற்றேக்கு (மலை). 2. சுண்டி.
இலச்சைப்படுதல்—வெட்குதல்.
இலசு—இலசுநம்.
இலசுநம்—1. வெள்ளைப்பூண்டு. (தைல. தைலவ. சுசு.) 2. மணியின் குற்றங்களு ளொன்று. [லசுந.]
இலநுநம்—வெள்ளைப்பூண்டு.
இலநுபம்—கீழ்க்காய்நெல்லி.
இலந்சம்—பரிதானம். [தெலுங்கு.]
இலந்சி—1. ஏரி, மடு. 'கடுமுரண் முத லைய நெடுநீ ரிலஞ்சி' (புறநா. ருஎ.) 2. கிழ். 3. குணம். (சூ. நிகண். கக. லகரவெ. ச.) 4. குழிந்தாழ்ந்த நீர்நிலை, வாவி. 'வல்சி தேர்ந்திலஞ்சிக் - காரந்திரி கல்லதர்வாய்.' (வாண. உசஉ.) 5. கொப்பூழ். 'புரிமல ரிலஞ்சியால்' (சேதுபு. கந்த. ரு.) 6. சா ரைப்பாம்பு (பிங்). 7. புன்கு(மலை). 8. புனம். 9. மகிழமரம். (சூ. நிகண். கக. லகரவெ. ச.) 10. மதில் (சூடா).
இலந்சியங்காநம்—ஒரு காடு. 'எழில்வளஞ் சுரக்குந் தொல்லை யிலஞ்சியங் கானநோக்கி' (கந்தபு. குமாரபுரி. அக.)
இலந்சியம்—கீழ்க்காய்நெல்லி (மலை).
இலந்சு—1. புன்கு. 2. மகிழ்.
இலட்சணம்—இலக்கணம். [லக்ஷண.]
இலட்சணாத்திரயம் — அத்துவாவிருத்தி லட்சணை, தடத்தலட்சணை, சொருபலட்சணை ஆகிய மூன்று லட்சணைகள். (வாசுதே. மகா வாக்கியநிருபகத்தி லறிக.) [லக்ஷணா த்ரய: த்ரய - மூன்று.]
இலட்சம்—1. அடையாளம். 2. இலக்கு. 3. நூறாயிரம். 4. பொய்க்கோலம். [லக்ஷ.]
இலட்சயம்—எண்ணத்தக்கது.
இலட்சாதிகாரி— } பெருஞ்செல்வன்.
இலட்சாதிபதி— }
இலட்சாதிலட்சம்—பெருந்தொகை.

இலட்சிதம் — 1. இலக்கணமமைக்கப்பட்டது. 2. காணப்பட்டது. 3. குறியினாலே விளக்கப்பட்டது. [ஞக்ஷித.]

இலட்சியம்—1. ஆத்துமா காரிய உபாதி எழையும் நீங்கிநின்றநிலை. (ஞானக். தொம்பத. சிரவணம்.) 2. இலக்கியம். 3. எண்ணப்படல். 4. எதிர். 5. பார்க்கப்படல். 6. குறி. 7. மதிப்பு. [ஞக்ஷ்ய.]

இலட்சியார்த்தம்—இலக்கணையாற்பெறப்படும் பொருள். (வாசுதே.) [ஞக்ஷ்யாழ்ச: ஞக்ஷ்ய - இலக்கணையால் வந்தது. அ௩ழ்ச - பொருள்.]

இலட்சியித்தல்—இலக்கியமாகக்கொள்ளுதல். 'இங்ஙனம் இலட்சியித்த ஒப்பற்ற பரவஸ்துவை' (வேதா. சூ. உ௦. உரை.)

இலட்சுமணம்—1. ஒருமரம். 2. தாளி (மலை.)

இலட்சுமணன்-இலக்குமணன். [ஞக்ஷ்மண]

இலட்சுமி—திருமகள்.

இலட்சுமிசக்கரம்— இலக்குமிதேவியைப் பூசித்தற்பொருட்டுச் செய்யப்படும் இயந்திரம். [ஞக்ஷ்மீவக்ர.]

இலட்சோபலட்சம்—பெருந்தொகை.

இலட்டன்—ஈசன்.

இலட்டு—இலட்டுகம்.

இலட்டுகம்—1. அப்பவருக்கத்தொன்று. 2. தோசை. 3. மோதகம்.

இலட்டுவம்—இலட்டு. 'கன்ன லிலட்டுவத் தோடுசீடை காரெள்ளி னுண்டை கலத்திலிட்டு' (திவ். பெரியாழ். 2. 9. 9.)

இலடம்—புளியமரம்.

இலடவி—அகில்.

இலண்டம் — ஆனையிலத்தி. (தொல். சொல். 443. உரை)

இலண்டன்—முருடன்.

இலண்டு—முருட்டுத்தனம்.

இலணை—அரசமரம். (மலை)

இலத்தி—1. குதிரை, யானை, கழுதை யிவற்றின் மலம். 2. சிப்பிலிமீன்.

இலத்தை—இலத்தி.

இலத்தைபரதம் — கரகரண முப்பத்து மூன்றுவகையு ளொன்று. (திருவிளை. கான்மா. ௬௦. உரை.)

இலதாவேட்டநம்-கொடிபோலச் சுற்றித் தழுவுதல். [ஞதாவெஷ்டந:]

இலதாவேட்டிதகம்— இலதாவேட்டிதம். [ஞதாவெஷ்திதக.]

இலதாவேட்டிதம்-கொடிபோலச் சுற்றித் தழுவுதல். (கொக்கோக. 5. 41.)

இலதிகை—1. படர்சிறுகொடி. 2. முத்துமாலை. [ஞதிகா.]

இலது—1. இலதாகச்செய்தல், சங்காரம். 2. காரணரூபத்தினாலே இல்லாதது. 'உள்ளது மிலது மின்றிநின்றதொன் றுளதே லுண்டாம்' (சி. சி. க: ௬.) [இல்லது என்பதில் லகரங் கெட்டுநின்றது.]

இலதை—1. இணையாவினைக்கைமுப்பத்து மூன்றுவகையுளொன்று; அது: நடுவிரலுஞ் சுட்டுவிரலுங் கூடி நிமிரப் பெருவிரல் அவற்றின் கீழ்வரைசேர ஒழிந்த இரண்டுபெருவிரலும் வழிமுறை பின்னே நிமிர்ந்துநிற்பது. 'இலதை யென்ப தியம்புங் காலைப் பேடியுஞ் சுட்டும் பிணங்குட னிமிர்ந்து - கூடிய பெருவிரல் கீழ்வரை குறுகக்-கடையிரு விரலும் பின்னர் நிமிர்ந்த-நடையின தென்ப நன்னெறிப் புலவர்' (சிலப். அரங். க௮. உரை.) 2. இலந்தை (மலை). 3. கோற்கொடி. 4. தக்கோலம். (தைலவ.) 5. நூற்கும் நூல். 6. படர்கொடி. (தைல. தைலவ. கஙரு.) 7. மரக்கொம்பு. 8. வள்ளிக்கொடி. (பிங்). 9. ஒருவகையொலி. (இலக்வி. 3. உரை)

இலதைவந்நி—கொடுவேலி.

இலதைவன்னி — கொடுவேலி. 'நற்கடுகரத்தை சவியஞ்சிகர மிலதைவன்னி நாரி சடைவசைவீரணி' (தைல. தைலவ. சங.)

இலந்தை — 1. ஒரு முண்மரம்; அது: கொடியிலந்தை, நிலவிலந்தை, நரியிலந்தை எனப் பலதிறப்படும். 'பாதிரி யிலந்தை தேமா' (மச்சபு. அத்திரியா. ௬.) 2. குளம்.

இலந்தைத்தம்பலம் — இலந்தைமரப்பட்டையிலே பூச்சிகளாலான புடைப்பு.

இலபநம்—1.பேசுதல். 2. வாய். [ஞபந.]

இலபி—1. பேறு. 2. விதி. [ஞஹீ.]

இலபித்தல்—1. சித்தித்தல். 2. நேரிடல். 4. பேறுகிடைத்தல். 4. வாய்த்தல்.

இலபிதம்—1. சம்பவிப்பது. 2. பட்சித்தல். 3. பேச்சு. 4. பேசப்பட்டது. 5. பேறு. 6. விதி. [1, 2, 5, 6. ஜஹித. 3, 4, ஜவித.]

இலபிப்பு—சித்திப்பு.

இலம் — 1. இல்லறம். [இல்லமென்பது இலமென இடைக் குறைந்துநின்றது] 'கருங்காலியாயின் மருதுமிலங்கைத்தா' (சைவச. பொதுவி. உஎ.) 2. வறுமை (புறநா). 3. வறியோம் எனப் பொருள்படும் ஒரு தன்மைப்பன்மைக் குறிப்புவினைமுற்று. 'இலமென்று வெஃகுதல் செய்யார்' (வள். கஎச).

இலம்பகம்— 1. நூலி னுட்பிரிவு. 'நாமகளிலம்பகம்' (சிந்தாமணி). 2. நுதலணிமாலை 'இழைக்குமா மணிசூழ்பட்ட மிலம்பகமிலகப் பெய்து' (திருவிளை. திருமண. கருஙு.) 3. மாலை (சூ. நிகண். சு: சுருரு.) [ஜம்வக.]

இலம்படுதல்—வறுமையடைதல். 'இலம்படு புலவ ரேற்றகை நிறைய' (மலைபடு. ருஎரு.) [இலம்-இல்லாமை. படுதல்-உண்டாதல்.]

இலம்படை—1. இடுக்கண். 2. தரித்திரம். 'இலம்படைவந்துழி' (கந்தபு. மூவா. 46.)

இலம்பம் — 1. உச்சத்திற்குந் துருவத்திற்குமுள்ள தூரம். 2. ககோளசாத்திரத்திற்கூறு மொரு பாகையளவு. 3. கைக்கூலி. 4. தன திருபாலும் ஒத்த கோணங்களையுடையதாக மற்றொரு ரேகையினின்றுஎழும்பும் ரேகை. 5. தூங்குதல். 6. நீட்சி. 7. பற்றியிருத்தல், சார்ந்திருத்தல். 8. விரிவு. 9. மாலை. 10. தொங்கல். [ஜம்ப.]

இலம்பநம் — 1. கீழே தூங்குதல். 2. கொப்பூழ்வரைக்குந் தூங்கு மொரு கழுத்தணி. 3. தொங்கல். [ஜம்பந.]

இலம்பாட்டார்—வறியவர். 'எனைத்துணைய வேனு மிலம்பாட்டார் கல்வி' (நீதிநெறி. கo.)

இலம்பாடி—1. ஒருசாதி. 2. வறியவன். 3. வறியவள்.

இலம்பாடு — 1. இன்மை. 2. வறுமை. 'வந்த விலம்பா டகற்றென்று' (திருவிளை. உலவாக்கி. கங.)

இலம்பிகை—அண்ணாக்கு.

இலம்பிதச்சா — சூரியன் மேஷிராசியில் ஏறும் பாகையளவு. [ஜம்பிதஜ்யா.]

இலம்பிதம் — 1. அசைவு. 2. சந்திர புடத்தைச் சூரியபாகையிற் சேர்க்கு மோரளவு. 3. தூக்கப்பட்டது. 4. தூங்குகை. [ஜம்பித.]

இலம்பிலி—ஒரு மரம்.

இலம்பு—தொங்குகை. 'இலம்புடைநறு மலர்' (பெருங். மகத. 14. 136.)

இலம்பை—1. இடுக்கண். 2. தரித்திரம். 3. துயரமானநிலை.

இலம்பைநா—சுரைக்கொடி.

இலம்போதரன் — விநாயகக்கடவுள். [ஜம்வொதர: ஜம்வ-தூங்குகிற. உதரம்-வயிறு.]

இலமலர் — இலவமலர். 'இலமல ரன்ன வஞ்செங் நாவின்' (அகநா. 142.)

இலயகாலம்—1. அழிவுகாலம். 2. உலகாந்தரம்.

இலயசத்தி—இலயியான சிவசத்தி. 'சிவன் இலயியானபோது இலயசத்தி யெனவும், போகியானபோது போகசத்தி யெனவும், அதிகாரியானபோது அதிகாரசத்தியென வும் இப்படிப் பெயருற்றுநிற்கும்' (சி. சி. உ. எகு. மறை.) [ஜயஶக்தி.]

இலயசிவன்—1. இலயத்தானத்து நின்ற சிவன்; இவர் சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியமென்னும் மூன்று தத்துவங்களையு மொடுக்குவர். (சி. சி. உ: எஉ. சிவஞான.) 2. சங்காரத்தொழில் செய்யுஞ் சிவன். [ஜயஶிவ.]

இலயஞானம் — நால்வகைக் கேள்விகளு ளொன்று. 'நால்வகைக்கேள்வியாவன:- நேதஞானம், இலயஞானம், சுருதிஞானம், தாளஞானங்கள்' (திருவிளை. இசைவாது. உஎ. உரை.)

இலயத்தானம்—ஒடுக்குமிடம். [ஜயஸ்தாந.]

இலயதத்துவம்—1. கிரியாசத்தி ஞானத்தொழின்மாத்திரத்தைப் பண்ணி ஞானசத்திரூபியாயிருந்தபோது பெறும் பெயர். (கூர்மபு. திருக்கல். க. உரை.) 2 சிவதத்துவம். 3. மகாப்பிரளயத்திலே மகாமாயா

காரியமெல்லாம் ஒடுக்கி ஞானத்தொழில்மாத்திரத்தைப்பண்ணி ஞானசத்திரூபியாயிருக்குஞ் சிவசத்தி. (சி. சி. ௧: ௫௰. ஞானப்.) [லய தத்வ.]

இலயபிடி—1. இலயத்தானம். 2. ஒடுக்கம்.

இலயம்—1. அழிவு, சாவு. 2. ஆழ்ந்த ஏகாக்கிரசிந்தனை. 3. இலயபிடி. 4. உருக்கல். 5. ஒடுக்கம். 6. ஒருவகைக் கூத்து. 'இலயங்களாடக் கண்டேன்' (தேவா. 1234. 6.) 7. ஒளித்தல். 8. ஒன்றுதல். 9. ஓய்க்திருத்தல். 10. கரைத்தல். 11. தழுவுதல். 12. துருதம், மத்தியம், விளம்பிதம் என மூவகைப்படநிற்குங் காலமாத்திரை. 13. தாளவறுதி. 'ஆக்கிய விலயம் நீங்கிற்று' (சீவக. 1256). 14. நடுக்கம். (இராசவைத்). 15. இரண்டறக்கலக்கை. 16. ஞானமாத்திரமே திருமேனியாகவுடைய கடவுள்நிலை.

இலயமாதல்—1. ஐக்கியமாதல். 2. அழிதல். 'சாந்த மிலயமா வாடுகின்றான்' (சீவக. 1256.)

இலயயோகம் — நான்கு யோகங்களுளொன்று; அஃது: ஆதாரதேவதை, பிரசன்னமாகும்போது பிறக்கும் தசநாதத்தைத் தியானஞ்செய்து மனம் லயமாவது. (த. நி. போ. ௯௫௩). [லயயோக.]

இலயர்—முத்தி வியத்தி கிருத்தியத்தை முடித்து ஞானசத்திமாத்திரையாயிருக்குஞ் சிவன். (சி. சி. ௧: ௫௰. இராமலிங்க.)

இலயன்—அதிக்கிராந்த அநதிக்கிராந்த பரசிவன். (சி. சி. ௧: ௫௰. இராம.)

இலயி—இலயசிவன். (சி. சி. ௧: ௫௰. மறை.)

இலயித்தது—1. ஒடுங்கியது. 'இலயித்த தத்திதியிலென்னின்' (சிவஞானபோ. ௧:௨.) 2. ஒடுங்கியபொருள். 'இலயித்ததாம்' (சிவஞானபோ. ௧: ௨.)

இலயித்தல்—1. ஒடுங்குதல். 'இலயித்த வாறுளதாவேண்டும்' (சிவஞானபோ. ௧. ௨.) 2. சேர்ந்தொன்றுதல். 3. அழிதல்.

இலயை—1. இலயகாலம். 2. தாளப்பிரமாணம்பத்தனு ளொன்று. [லயா.]

இலலாடகம்—நெற்றி. [லலாடக.]

இலலாடம்—நெற்றி (பிங்.) [லலாட.]

இலலாடரேகை — 1. நெற்றியிற் காணப்படு மிரேகை. 1. நெற்றியிற் சுருக்கு. 3. சமயக்கொள்கைவிளங்க நெற்றியிலிடப்படுங் குறி. [லலாடரேகா.]

இலலாடலிபி—தலையெழுத்து.

இலலாடிகை— 1. சந்தனமுதலியவற்றால் நெற்றியிலிடும் திலகம். 2. நெற்றியிலணியுஞ் சுட்டி. [லலாடிகா.]

இலலாமம்—1. அடையாளம். 2. அரசசின்னம். 3. அழகு. 4. ஆபரணம். 5. இரேகை. 6. குதிரை. 7. கொடி. 8. கொம்பு. 9. தன் சாதியிற் சிரேட்டமானது. 10. நெற்றியிலிடும் அணி. 11. நெற்றியிலிடுங் குறி. 12. பிடரிமயிர். 13. மகத்துவம். 14. வால்.

இலலிதபஞ்சகம்—ஓ ரிராகம்.

இலலிதம்—1. அழகு. 2. அபிநயம். 3. உபசாரம். 4. ஓ ரிராக விகற்பம். 5. காமக்குறி. 6. பரிகாசம். 7. மகளிர்விளையாட்டு. 8. மாதுரியம்.

இலலிதாசத்தமி — புரட்டாசிமாதத்துச் சுக்கிலபக்கத்துச் சத்தமிதிதி. [லலிதா ஸப்தமீ.]

இலலிதாபஞ்சமி—ஐப்பசிமாதத்துச் சுக்கிலபக்கத்துவரும் பஞ்சமிதிதி. [லலிதா பஞ்சமீ.]

இலலிதை — 1. இராகமுப்பத்திரண்டினொன்று. 2. பார்வதி. 3. பெண். 4. மான்மதம்.

இலவங்கத்தோல் — இலவங்கப்பட்டை.

இலவங்கப்பட்டை — 1. ஒரு வாசனைப்பட்டை, கருவாப்பட்டை. 2. தாளிசபத்திரி.

இலவங்கப்பூ—1. கிராம்பு. 2. காதணியிலொன்று.

இலவங்கப்பத்திரி—இலவங்கத்தின்இலை, ஒரு பச்சிலை (மூ. அ). [லவங்கபத்ரீ.]

இலவங்கபாஷாணம்—ஒரு பாஷாணம்.

இலவங்கம்—1. கிராம்புமரம். 'முகிரேய்கந்தமார்குழை முகத்தல ரிலவங்கங்காட்டும்' (காஞ்சிப். நாட்டு. ௪௰.) 2. கிராம்பு(திவா). 3. கருவாமரம். 4. காட்டுக்கருவாமரம்.

இலவசம் — விலையின்றிப்பெறுவது அல்லது கொடுப்பது. [லவஶஸ்.]

இலவசமாய்—விலையின்றி.

இலவணசமுத்திரம்—உவர்க்கடல்.

இலவணபஞ்சாட்சரம்—1. ஒரு மந்திரம். 2. ஒரு மாந்திரீகநூல். [லவணவஞா க்ஷர.]

இலவணபாடாணம்- வைப்புப்பாடாணம் முப்பத்திரண்டினுளொன்று. (மூ. அ.)

இலவணம்—உப்பு.

இலவணவாயு—உப்புவாயு.

இலவணவித்தை—ஒரு வித்தை. [லவண வித்யா.]

இலவணன்—ஓரிராக்கதன்.

இலவத்தீவு — சான்மலித்தீவு. 'இலவத் தீவினி னுறைபவ ரிவர்கள்' (இராமா. படைக் காட்சி. கக.)

இலவத்தோல் — இலவக்கப்பட்டை. (தைல. தைலவ. கஅ௫.)

இலவந்தி—இலவந்திகை (சிலப். 25. 4.)

இலவந்திகை — 1. தண்ணீரிறைக்கும் யந்திரம். 2. நீராவியைச் சூழ்ந்த வயந்தச் சோலை. 'பன்மலரடுக்கிய நன்மரப்பந்த-ரில வந்திகையி னெயிற்புறம்போகி' (சிலப். நாடு காண். ௩க.) 3.யந்திரவாவி. 'இலவந்திகையி னெயிற்புறம்போகி' (மணிமேகலை. ௩: சடு.)

இலவந்தீவு—ஏழுதீவுகளுள் ஒன்று. (கந்த பு. அண்டகோ. 19.)

இலவம்–1. அழிவு. 2. அற்பம். 3.இலவங் கம். (தைல. தைலவ. கஅ௫.) 4. ஏழுதீவுகளி லொன்று (பிங்). 5. ஒரு மரம்; இதன் காய்க் குள்ளிருந்து மெத்தை முதலியவற்றிற்குரிய பஞ்சு எடுக்கப்படும். 'இலவம்பஞ்சிற்றுயில்' (ஆத்திசூடி.) 6. கண்ணிமைப்பொழுதி லறு பதிலொன்று. 7. கிராம்பு. 8. காலதசப் பிர மாணங்களு ளொன்று. 9. சாதிக்காய். 10. பசுவாலின்மயிர். 11. பிழைநீக்கல். 12. மயிர். 13. முப்பத்தாறு இமை அல்லது இரண்டு காட்டை கொண்ட நேரம். அது, கஷ்டம் எட்டுக்கொண்டது. 14. வணக்கம். 15 இயமனூர்வள்ளி. 16. சுவை.

இலவம்பஞ்சு–இலவங்காயிலிருந்து எடுக் கப்படும் பஞ்சு.

இலவம்போதுமணி — சௌந்திகப்பதும ராகமணி.

இலவலி—வள்ளிக்கொடி.

இலவலேசம்—மிகச் சிறியது.

இலவன்—இராமன்மக்களு ளொருவன்.

இலவியம் — 1. விலையின்றிப் பெறுதல் அல்லது கொடுத்தல். 2. வெட்டப்பட்டது. [லவ்ய.]

இலவிலை—குபேரனுடைய தாய்.

இலவு—1. இலவமரம். 'நீர்க்கடுப்பு நீ ரெரிவு நீண்டொழுகு மேகமும்போ - மார்க் கும்விந்து வேரடைக்கு மாண்மையுறும்- பார்க்கு - ணிலவு மதிவதன நேரிழையே வெப்பா-மிலவு மரத்தா லியம்பு' (பதார்த்த. உ௩எ.) 2. தேற்றாமரம் (மலை).

இலவுகிகம் — உலகசம்பந்தமுடையது. 'ஏசாரா விலவுகிகநூல்' (சூத. ஞான. ௩: அ.) [லௌகிக.]

இலவை—காலநுட்பம். [லவா.]

இலள் — இல்லாதவள். 'தருமமதிலள்' (கந்தபு. இல்வலன்வாதாபி. க.)

இலளிதபஞ்சகம்—ஓ ரிசைவிகற்பம்.

இலளிதம் — 1. அழகியது. 2. இலளிதை ராகம். 3. உபசாரம். 4. சரசம், லீலை. 5. சிவாகமங்க ளிருபத்தெட்டனு ளொன்று; அஃது: எண்ணூயிரங் கிரந்தங்களை உடைய தென்றும், அகத்தியருக்குத் திட்சைசெய்தற் பொருட்டுத் தோன்றிய எட்டாகமங்களு ளொன்றென்றுஞ் சொல்லப்படும். (சைவச. பொது. ௩௫). 6. விரும்பப்பட்டது.

இலளிதை–1. கஸ்தூரி. 2. பார்வதிதேவி. 'வென்ற நல்லெழில் விரிந்ததன் மெய்பிடப் புறத்து - மன்றல் வார்குழ லிலளிதை மாதினை' (காஞ்சிப். திருவேகம்ப. ௫.) 3. காமச்சேட்டையுடைய பெண். 4. முப்பத் திரண் டிராகங்களு ளொன்று. [1, 2, 3. லலிதா.]

இலாக்ஷணிகம்—இலக்கணையாக வந்தது. [லாக்ஷணிக.]

இலாக்கிகி — செம்மெழுகு. [லாக்ஷிகீ. இதனை இலாக்கிரியென வழங்குவர்.]

இலாக்கை-1. இந்திரகோபத்தை நிகர்த்த ஒருவகைப் பூச்சி. 2. ஒருவகைச் சிவப்பு நிறத்தையுடையது, செம்மெழுகு.[லாக்ஷா]

இலாகரி-1. களிப்பாட்டு.2.வெறி.[லஹரீ]

இலாகவம்—1. ஆரோக்கியம். 2. எளிமை, அற்பம். 3. கவனமின்மை. 4. சாமர்த்தியம். 'குலிசமன்னுங் கையிலாகவத்தி ளேடும்' (திருவாலவா. 1. 14.) 5. சுருக்கம். 6. தாபரம். 7. நிந்தனை. 8. விரைவு. [லாவவ.]

இலாகன்—ஒரு மீன்.

இலாகிரி—இலாகரி. [லஹரீ.]

இலாகு—1. இலகு. 2. சாமர்த்தியம். 3. தாங்கல். 'கைலாகுகொடுத்தழைத்துப்போ'

இலாகுளம்—சைவப்பிரிவுகளுள் ஒன்று. (திருக்காளத். பு. 30. 26)

இலாகை—மாதிரி [தெலுங்கு.]

இலாங்கலம்—1. ஆண்குறி. 2. கலப்பை. 3. பனை தெங்கு முதலியவை. [லாංகல.]

இலாங்கலி—1. செங்கரந்தைப் பூண்டு. 2. செங்காந்தள் (பிங்கல). 3. தென்னை. (சூ. நிகண். கஉ: ச.) 4. தேங்காய். (இராசவைத்.) 5. பலராமன். 6. பாம்பு. 7. வெண்தோன்றிப்பூண்டு. 8. கலப்பை. (பிங்). [லாංகலீ.]

இலாங்கலிகம்—கலப்பைக்கிழங்கு. (சிவரட். கூஉஎ.) [லாංகலிக.]

இலாங்கலித்தைலம் — தேங்காய்ப்பால் முதலியவை சேர்த்து வடிக்கப்படும் ஒரு தைலம். (தைல. தைலவ. க0ரு.) [லாංகலீ தைல.]

இலாங்கூலம்—1. ஆண்குறி. 2. தானியம்வைக்குங் கூடை. 3. தானியம்வைக்குமிடம். 4. மயிரடர்ந்த வால், விலங்கின்வால். (சூ. நி. கூ: சஉ.) [லாංகூல.]

இலாங்கூலி-குரங்கு. [லாංகூலிந.]

இலாச்சம் — 1. ஒரு நிலஅளவை. 2. தானியமளக்குமொருகருவி; அஃது, ஐந்துபடி கொண்டது. 3. பதினெட்டுக்கோல் நீளமும் ஒருகோலகலமுங்கொண்ட நிலப்பரப்பு.

இலாச்சி—செருகுபெட்டியின் அறை.

இலாசடி—தொந்தரை. [லாஜ்.]

இலாசடை—1. இலாசடி. 2. வருத்தம். [வழக்.]

இலாசம்-1. நனைத்த தானியம். 2. பொரி. [லாஜ.]

இலாசமஸ்தகம்—ஓமம்.

இலாசவோமம் — பொரியாற் செய்யும் ஓமம். (சீவக. 2464 உரை)

இலாசை—பொரித்த தானியம். [லாஜா.]

இலாஞ்சநபடம் — ஒரு வன்னத்திலுலே உருக்கடோன்ற அச்சுக்கட்டப்பட்ட படம். [லாංஞநபட.]

இலாஞ்சநம்—1. அடையாளம். 2. களங்கம், கறை. 3. கீர்த்தி. 4. நிலஎல்லைக்குறி. 5. பெயர். 6. முத்திரை. 7. இலாஞ்சநபடம் [லாංஞந.]

இலாஞ்சநை—1. அடையாளம். (பிங்கல. உஉகரு.) 2. இலாஞ்சநபடம். 'நீணிறத் திலாஞ்சநையெனவும்' (வேதா. சூ. சங.) 3. முத்திரை. 4. கூச்சம். [லாංஞநா.]

இலாஞ்சி— } ஏலம்.
இலாஞ்சிலி— }

இலாஞ்சினைப்பேறு — பழைய வரிவகையுள் ஒன்று. (S. I. I. ii. 115.)

இலாட்சை—1. செவ்வரக்கு. 'ஒளிரிலாட்சைச் - சத்தான தைலத்தின்பெயரைச் சொல்லின்' (தைல. தைலவ. ரு0.) 2. செம்பஞ்சு. [லாக்ஷா.]

இலாடசங்கிலி — இலாடதேசத்து யாசகர் விநோதார்த்தமாகக்கொண்டுதிரியும் ஒருவகைச் சங்கிலி; இதனைப் பின்னுதலும் கழற்றுதலும் பிரயாசம்.

இலாடசிங்கி — இலாடசங்கிலி. 'கையிலாடசிங்கி கழற்ற' (விறலிவிடு. 100.)

இலாடசிந்தூரம்—குதிரைக்காற் குளம்பிலிணைத்துத் தைக்கும் இரும்பை நீற்றிய பற்பம். [லாடஸிந்தூர.]

இலாடபாஷை-இலாடதேசத்தார்பேசும் பாஷை. [லாடபாஷா.]

இலாடம்—1. ஒரு பாஷை. 2. குதிரைக்காற்குளம்பி லிணைத்துத் தைக்கு மிரும்பு. [தெலுங்கு.] 3. குற்றம். 4. தேயமைம்பத்தாறினொன்று. 5. நெற்றி. 'இலாடத்தேசாக்கிரத்தை யெய்தியவுள்ளம்' (சி. சி. ச: எ.) 6. புடவை. 7. புளியமரம். (மலை). 8. வங்காளதேசத் தொருபகுதி. (Insc.) [2, 3, 4. லாட. 5. லலாட.]

இலாடர்—இலாடதேசத்தவர்.

இலாடவி—அகில் (மலை)

இலாடன்பருத்தி—ஒருவகைப்பருத்தி.

இலாதார்—சஞ்சாயம். [ஆ த - எடுக்கப்பட்டது.]

இலாந்துதல் — வீட்டின்மேற் கட்டை பரப்பிச் சாந்திடுதல்.

இலாபகரம்—இலாபந்தருவது.

இலாபந்தாநம் — இலக்கிநத்துக்குப் பதினோரமிடம். (சோதிடக.) [லாஹஸ்தாந.]

இலாபதி—1. அரசன். 2. புதன்.

இலாபம்–1. ஆதாயம். 2. நயம். [லாஹ.]

இலாமச்சம்—ஒரு பரிமளப்புல். 'இலாமச்சந்தோய்ந்த-காமருநீர்' (மச்சபு. ஆர்த்திராந. கஎ.) [லாமஜ்ஜக.]

இலாமர்சை—வாசனையைத்தரும் வேரையுடைய ஒரு புல்.

இலாமிச்சு—வாசனையைத்தரும் வேரையுடைய ஒரு புல். 'வெறிகருப்புரம் வெட்டிவேர் மருவிலாமிச்சு' (கடம்பவநபு. இலீலாசங். கஅஉ.)

இலாமிச்சை–வாசனையைத்தரும் வேரையுடைய ஒரு புல். (திவா).

இலாயம்–1. ஏலவரிசி. 2. குதிரைப்பந்தி.

இலாலநம்—இலாலநை. [லாலந.]

இலாலநை — 1. அன்புபாராட்டல். 2. சீராட்டுதல். [லாலநா.]

இலாலி-1. இச்சகவார்த்தை. 2. ஏமாற்றுவோன். 3. ஒரு வாழ்த்து. 4. காமி. 5. தீமைக் குட்படுத்துவோன். 6. மங்கலப்பாடல். (தெலுங்கு.) [1-2-3-4-5. லாலி.]

இலாவண்ணியம்—இலாவணியம். [லாவண்ய.]

இலாவண்ணியார்ஜிதம்—சீதனவகை.

இலாவணம்—1. உப்பு. 2. சம்பாஷணை. 3. பெயர்ப்பதிப்பு. (தெலுங்கு.)

இலாவணியம்—1. அழகு. 2. உப்புத்தன்மை. [லாவண்ய.]

இலாளம்—பரதகண்டத்தில் ஒருதேசம். (S. I. I. i. 83)

இலாளன்—இல்லாதவன். 'மனையாளையஞ்சும் மறுமையிலாளன்.' (வள். கoச.)

இலாளனை—இலாலநை.

இலாளிதம் — அழகு. 'பெருகுமதகும்பலாளிதக் கரியென' (திருப்பு. கஉச.) [இலளிதம் என்பதன் நீட்சி.]

இலான்—இல்லாதவன். 'வரிலான்' (கந்தபு. மாயைப். க.)

இலி—இல்லாதவன். 'தாயுமிலி தந்தையிலி தான்றனியன் காணேடீ.' (திருவாச. திருச்சாழல். ரு.)

இலிக்கை—இலிக்கை. [லிக்ஷா.]

இலிகம்—எழுதுகை. [லிக.]

இலிகன்—எழுதுகிறவன். [லிகா.]

இலிகனம் — எழுதப்பட்ட புத்தகம். [லிகந.]

இலிகி—1. எழுத்து. 2. எழுதுகை.

இலிகித்தல்—எழுதல்.

இலிகிதசான்றினன்—பத்திரத்திலே தனதுசாதி பெயர் இடம் முதலியவற்றோடெழுதப்பட்ட சாட்சி. (மிரு. ச. சஎ.)

இலிகிதம்–1. எழுதப்பட்டது. 2. எழுதப்பட்ட புத்தகம். 3. கலியாண மறுபத்து நான்கி னென்று. 4. கடிதம். [லிகித.]

இலிகிதன்—1. எழுத்தாளன். 2. ஸ்மிருதிகர்த்தாக்களுள் ஒருவர்.

இலிதசம்—எலுமிச்சை. (இராசவைத்). [லிகுச.]

இலிசை—பூமி. [உலிசா.]

இலிங்கக்கட்டு—சாதிலிங்கக்கட்டு. இஃதோர் வைப்புச்சரக்கு. (பைஷஜ. 127)

இலிங்கக்கல் — விளவுக்கட்டிடத்தின் நடுக்கல்.

இலிங்கக்கவறை — சைவக்கவறைவகுப்பு.

இலிங்ககாசம்—நேத்திரவென்படலம்.

இலிங்கங்கட்டி-இலிங்கதாரி, வீரசைவன்.

இலிங்கசங்கமம் – அந்தரியாகபூசையிலே தியானிக்கப்படும் வடிவம். [லிஂ஗ஸங்கம.]

இலிங்கசரீரசமஷ்டியபிமாநி — இரணியகர்ப்பன். (த. கி. போ. கoக). [லிஂ஗ஶரீரஸமஷ்டியபிமாநீ.]

இலிங்கசரீரம் — ஆன்மாவோடு சககாரியாய்க் கருப்பத்திலே பதியும்பொழுது கூடப்பதிந்தும், தூலதேகத்தைவிட்டுப் போம்பொழுது கூடப்போயும், மோட்சபரியந்தம் அநுவர்த்திப்பதான சூக்குமசரீரம். (சி. சி. உ: உ. சிவாக்).

இலிங்கசுத்தி–பஞ்சசுத்திகளு ளொன்று. அது, புறப்பூசையில் ஸ்நாநவேதிகையில் விரித்தவஸ்திரத்திலே சடுத்தாசநங் கற்பித்து இலிங்கத்தை யெழுந்தருளப்பண்ணி அந்த ஸ்நாநவேதிகையிலேவைத்து விதிப்படி பூசித்து நின்மாலியங்கழித்து இலிங்கத்தையும் ஆவுடையாரையும் அலம்பிச் சாமாநியார்க்கியத்தாலும் சுத்தோதகத்தாலும் அபிஷேகஞ்செய்து தைலமுதல் அருக்கியசலமீறாக முறைப்படி யபிஷேகஞ்செய்து திருவொற்றாடைசாத்திப் பீடத்தி லெழுந்தருளப்பண்ணி ஒருபுட்பஞ்சாத்துதல். அகப்பூசையில் அது, பதியெங்கும் பூரணமாய்ப் பசுபாசங்களிரண்டினும் பிரிவறநின்று அவற்றைச் சேட்டிப்பித்துநின்ற தன்மையறிந்து அத்தகைய சிவம் இலிங்கத்தினும் எழுந்தருளியிருக்குமென் றறிதல். (திருவாத. திருப்பெருந்துறை எ0. உரை). [ஷி°ஹஶுத்தி.]

இலிங்கசுவாயித்தியம்—ஒரு தீக்கை. (த. நி. போ. உகக). [ஷி°ஹஸ்வாஹித்ய.]

இலிங்கநூலை—ஆண்குறியைப்பற்றிவரும் ஒரு நோய். [ஷி°ஹஶூலா.]

இலிங்கதாரணத்தலம்–இலிங்கந்தரிக்கும் தலம். (த. நி. போ. உகக) [ஷி°ஹதாரண ஸ்தல.]

இலிங்கதாரி—தனது தேகத்திலே சிவலிங்கந் தரித்துக்கொள்ளுகிறவன். [ஷி°ஹ தாரிந்]

இலிங்கதேகம் — சூக்குமசரீரம்; இது: ஞானேந்திரியங்களைந்தும், மநம் புத்தி என்னும் அந்தக்கரணங்களும், கன்மேந்திரியங்களைந்தும், பிராணாதி பஞ்சவாயுக்களும் ஆகிய பதினேழு தத்துவங்களாலாய தேகம். 'இந்தப் பதினேழு மிலிங்கதேகஞ் சுர ரசுரர் விலங்காய்த்தோன்றிய வுயிர்கட்கெல்லாம்' (கைவல். தத்துவ. நஎ, நஅ). [ஷி°ஹ தெஹ.]

இலிங்கதேகி—சூக்குமதேகத்தையுடையவன். (த. நி. போ. உகஅ).

இலிங்கப்பிராணி — சூக்குமதேகத்தில் வசிக்குஞ் சீவன். (த. நி. போ. உகக). [ஷி°ஹப்ராணீ.]

இலிங்கப்புடோல் — 1. ஐவிரலி (மலை). 2. கோவை (மலை).

இலிங்கப்புற்று—ஒரு நோய்.

இலிங்கப்பொருத்தம் — மணப்பொருத்தங்களிலொன்று; அது: ஸ்திரிபுருஷர்கள் ஒரே லிங்கநட்சத்திரங்களுடையராயினும் புருஷர்கள் ஆண்லிங்கமும் ஸ்திரீ பெண்லிங்கமுமாயினும் பொருத்தமென்று கொள்வது. (இரகுநாத. பிலவ. பஞ். உச).

இலிங்கபற்பம் — ஒரு மருந்து. [ஷி°ஹ ஹஸ்ம.]

இலிங்கபாஷாணம்–விளைவுப்பாஷாணம். முப்பத்திரண்டிெனான்று (மூ. அ.) [ஷி°ஹ வாஷாண.]

இலிங்கபுடோல்—இலிங்கப்புடோல்.

இலிங்கபுராணம்-1. சிவபுராணம் பத்தனுளொன்று; அது: பதினோராயிரங்கிரந்தமுடையதாய் அக்கினிகற்பத்திறுதியிலே சீவர்களடையும் சீலம், ஐசுவரியம், இன்பம், மோட்சம் என்பவைகளையும் அதிரகசிய ஞானமயமாகிய சிவலிங்கங்களையும் விரித்துணர்த்துவது. 2. ஒரு தமிழ்நூல். (கந்தபு. நவ. உரு).

இலிங்கம்—1. அடையாளம் (பிங்). 2. ஆண்குறி (திவா). 3. ஆண், பெண், அலி என்னுங் குறிப்பை விளக்க வரும் பால். 4. இலிங்கபுராணம். 'மார்க்கண்டமிலிங்கம்' (கந்தபு. பாயிர. ருச.) 5. உபநிடதமுப்பத்திரண்டினொன்று. 6. எது; அது, வியாத்திவலியான் மறைந்த பொருளை யுணர்த்துவது. (சைவப். க0). 7. கருவிழியினடுவி லிருக்கின்ற பாவை. (சீவரட். உருரு). 8. கறை. 9. சாதிலிங்கம். 'படியிலிங்கங்களிகாய்சுக் கட்டிமுட்டி மூன்றிடு' (தைல. தைலவ. க0.)

10. சிவம். (சைவவினா. சு). [லிங்க-சித்திரித்தல். படைத்தல் காத்தல் முதலியவைகளினாலே உலகத்தைச் சித்திரிப்பது என்றபடி] சுத்தசிவம், ஆன்மாக்களின் தியானபாவனா நிமித்தம் நிட்களசகளத் திருவுருக்கொண்ட நிலை; அஃது சிவலிங்கமெனப்படும். (சிவபராக். எ). 11. நோய்க்குறி. 12. பிரகிருதி. (சாங்கியம்). 13. பிரமசாரியநிலையி னொன்று. 14. அநுமானம்.

இலிங்கமூர்த்தி—மூர்த்தி சாதாக்கியம். (சதாசிவ. கஉ. உரை.)

இலிங்கமேழநு—ஒரு மருந்து.

இலிங்கர்—இலிங்கிகள்.

இலிங்கரோகம்—ஆண்குறியில் வரும் ஒரு புண். [லிங்கரோக.]

இலிங்கவட்டம்—கிணறு இடியாமல் வைக்கும் மரவட்டை.

இலிங்கவிரணம்—ஆண்குறியில்வரும் ஒரு புண்.

இலிங்காங்கம்—அனுறுப்பு. 'அச்சைலாம் லிங்காங்க பகாங்கமாம்படி' (சி. சி. க: சுகூ. சிவஞான.) [லிங்காங்க.]

இலிங்கி—1. இலிங்கத்தையுடையது. 'ஆதலால் இலிங்கத்தைக்கொண்டு இலிங்கியை ஊகிக்கிற ஞானம் அநுமானமெனக் கொள்க' (சி. சி. பர. உலோகாயத. மறு. ௩. தத்துவரா). 2. இலிங்கமுடையோன். 3. சிவலிங்கத்தை வணங்குவோன். 4. சூக்குமதேகி. 5. துறவி. 'சொல்வென்றி வேண்டு மிலிங்கியுமிம்மூவர்-கல்விப் புணைகைவிட் டார்' (திரிக. கஎ). 6. யானை. [லிங்கிந்.]

இலிங்கியர்—அநுமானத்தை முக்கியமாகக் கொண்டு வாதிக்கும் தார்க்கிகர். (திவ். திருவாய். 4. 10. 5.)

இலிங்கு—மாவிலிங்கு. 'இந்தடிதாமுளி யிலிங்கவுரிசயை' (தைல. தைலவ. எஉ.)

இலிங்கோத்தாரணம் — இலிங்கந் தாபித்தல். (த. நி. போ. உகசு.) [லிங்கோத்தாரண.]

இலிங்கோத்தாரம் — பூசித்தற்பொருட்டுக் குருமுகமாகச் சிவலிங்கம் பெறுதல். (சி. சி. அ: கக. ஞானப்.) [லிங்கோத்தார.]

இலிங்கோற்பவமூர்த்தி — தான் அக்கினி மலையாய்நின்றபோது அதன் அடிமுடிகளைத் தேடியும் காணப்படாத பிரமவிட்டுணுக்களாற் காணுதற்கு அவாவிப் பிரதிட்டை செய்து அர்ச்சிக்கப்பட்ட சிவலிங்கத்திலே நீலகண்டமும் மான்மழுவரதாபயம் பொருந்திய சதுர்ப்புயமும் நெற்றிக்கண்ணும், பிறையணிசடையும் தேவிபாகமுமாகத் தோன்றிய சிவன். (சிவபராக். கரு.) [லிங்கோத்பவ மூர்த்தி.]

இலிங்கோற்பவர்—இருபத்தைந்து சேவலவடிவங்களுள் ஒன்றாகிய இலிங்கோற்பவமூர்த்தங்கொண்ட சிவன்.

இலிதை—1. குறிப்பிசை. 2. பூமி.

இலிந்தகம்—கருங்குவளை.

இலிபி — 1. இலக்கம். 2. எழுத்து. 3. மெழுகுதல். 4. விதி. [லிபி.]

இலிபித்தல்—1. அநுகூலமாதல். 2. எழுதுதல். 3. நியமித்தல். 4. விதித்தல்.

இலிர்த்தல் — 1. சிலிர்த்தல். 'இலிர்த்த மெய்ம்மயிர்' (சீவக. 3009.) 2. தளிர்த்தல். 'பூங்கமுகின்தெனவிலிர்த்த' (உபதேச.சிவபு. கூகூ.) 3. பொடித்தல்.

இலிற்றுதல் — 1. சுரத்தல். 'குழவிக் கிலிற்றுமுலை' (புறநா. சுஅ). 2. துளித்தல். 'தேம்பெய் தமிழ்துபொதிந்திலிற்று மடங்குபுரி' (சிறுபாண. உஉஎ). 3. சொரிதல். 'தேனினங் கவர்ந்துண விலிற்று மும்மதத்து' (சீவக. 2521.)

இலிக்கை—ஈர், ஒரு நீட்டலளவை. 'கதிரெழு துகளோன் மூன்று கசாக்கிர கந்தானுகு-மிதுதொகை யிருநான் குற்ற திலிக்கை' (கந்தபு. அண்டகோச. ௫.) [லீக்ஷா.]

இலீநம் — 1. உருகினது. 2. ஒட்டியிருந்தது. 3. முற்றாக உள்வாங்கப்பட்டது, விழுங்கப்பட்டது, பூரணமாய்க் கலந்தது. [லீந.]

இலீலாவதி—1. அழகியபெண். 2. இன்பமுடையவள். 3. காமச்சேட்டையுடைய பெண். 4. துர்க்கை. 5. ஒரு கணிதநூல். 6. பாஸ்கராசாரியருடைய மகள் பெயர்; இவள் பெயரால் அவர் செய்த கணிதநூல் மேற்சொல்லியநூல். [லீலாவதீ.]

இலீலாவிநோதம்—சுரத விளையாட்டு. [லீலாவிநோத.]

இலீலை-1. கதை. 2. சரசம். 3. புணர்ச்சி. 4. மகளிர் மோகவிளையாட்டு. 5. விளையாட்டு. [லீலா.]

இலுதை—அணில் (பிங்).

இலுப்பெண்ணெய் — இலுப்பைக் கொட்டையிலிருந் தெடுக்குமெண்ணெய்.

இலுப்பை—இருப்பைமரம். 'இலுப்பை விதை யந்தரவாய் விற்கும்விடத் திற்கு-மலுப்பையுன் டாக்கி யகற்றும்' (பதார்த்த குண. அருச.)

இலுப்பைக்கட்டி-இலுப்பைப்பிண்ணாக்கு.

இலுப்பைக்கடுகு—1. இலுப்பெண்ணெயி னடியிற்படியும் வண்டல். 2. இலுப்பைப் பருப்பு. (மூ. அ.)

இலுப்பைநெய்—இலுப்பையெண்ணெய். (பதார்த்த. 158.)

இலுப்பைப்பால்— இலுப்பைநெய். 'இலுப்பைப்பால் முக்கலனே குறுணி நானாழி' (s. i. i. II 426.)

இலுப்பைப்பிண்ணாக்கு — இலுப்பைக் கட்டி.

இலுப்பைப்பூச்சம்பா—ஒருவகை நெல். 'பித்த மிகப்பெருக்கும் பேருலகில் யாவ ருக்கு - முற்ற தலைவலிநோ யுண்டாக்குஞ் - சத்தியமாய்த்-தாகமெடுப் பிக்குந் தழலிலுப் பைப் பூச்சம்பா-வாதமதி ஞேய்வளர்க்கு மாய்' (பதார்த்தகுண. 808.)

இலேக்கியம்—1. எழுதப்பட்டது; இஃது அரசனமைப்பும் தேசத்தமைப்பு மென இரு வகைப்படும். 2. கையாலெழுதப்பட்ட புத்த கம். (மிரு. ச. உசு). 3. சித்திரிக்கப்பட்டது. [லேக்ய.]

இலேககன்—1. எழுத்தாளன். 2. எழுது றவன். 3. சித்திரகாரன். [லேகக.]

இலேகநசாதநம்-எழுதுதற்கு வேண்டிய உபகரணம். [லேகநஸாதந.]

இலேகநம்—1. எழுத்து. 2. நாவழித்தல். 3. பனையோலை. [லேகந.]

இலேகநீ — 1. எழுதுகோல். 2. எழுத் தாணி (சூடா). [லேகநீ.]

இலேகநிகன்—1. அதிகாரம்பெற்று வே றொருவனுக்காகக் கையொப்பம் வைக்கிற வன். 2. காகிதங் கொண்டுபோகிறவன். [லேகநிக.]

இலேகம்—1. எழுத்து. 2. திருமுகம். 3. பாகாகக்கிண்டிய மருந்து (மூ.அ.) [லேக.]

இலேகர் — வானோர். 'இறையவனிலேக ராலு மிழைப்பபதோ' (சேதுபு. வேதாள. சச). [லேக.]

இலேகித்தல்—1. எழுதுதல். 2. சித்தி ரித்தல் 'இலேகித்த சித்திரமண்டபம்' (வி நாயகபு. 79. 43).

இலேகிநீ — 1. எழுதுகோல். 2. எழுத் தாணி. [லேகிநீ.]

இலேகியம் — 1. நக்கப்படுவது. 2. பா காகக்கிண்டிய மருந்து. [லேஹ்ய.]

இலேகை—1. எழுத்து. 2. ஓரம். 3. சித்திரம். 4. வரி. 5. வரை. [லேகா.]

இலேசம்—1. அற்பம். 2. இரண்டுகலை கொண்ட ஒரு காலஅளவு. 3. ஓரலங்காரம்; அது: கருதியது வெளிப்படுக்குங் குணங்க ளைப் பிறிதொன்றால் நிகழ்ந்தனவாக மறைத் துச் சொல்வது. (தண்டி. சூச). 4. குற் றத்தைக் குணமாகவும் குணத்தைக் குற்ற மாகவும் கூறுவது. 'கோதைக் குணமென வுங் குணமானதைக் கோதெனவு-மோதப் பெறுவதிலேசம்'. (குவல. ௩). 5. நொய்ம்மை. 6. மிகை. 'இலேசம் மிகையே லவமென மொழிப' (பி. வி. சச. உரைச் சூத்திரம்). 7. அதிசீக்கிரம் (சூடா.) [லேஶ.]

இலேசவணி—இலேசம் என்னும் அலங் காரம்.

இலேசு — 1. அற்பம் (சீவக. 770). 2. எண்வகைப்பரிசங்களு ளொன்று; அது: நொய்ம்மை, கனமின்மை. (நன். உரி. கங. இராமாநு. உரை). 3. எளிது. 4. குறிப்பி னாலே பொருளை விளக்குஞ் சிறியசொல். 5. பலவீனம். 'இலேசான தூண்' 6. மிகை.

இலேசுணம்—அரிதாரம். (மூ. அ.)

இலேந்து—கந்தகவுப்பு (மூ. அ).

இலேபகரன் — எழுதுகிறவன். [லேப கர.]

இலேபகன்-சாந்துபூசுபவன். [வெவக.]

இலேபபாகிதகள்-பிண்டக்கொடுப்போன் முதல் ஐந்தாம் ஆறும் ஏழாம் பாட்டன்மார் (பராசர. சுறு). [வெவஹாஜ.]

இலேபபாகர் — பிண்டம் கொடுப்போன் முதல் ஐந்தாம் ஆறும் ஏழாம் பாட்டன்மாராகிய மூவர் (பராசர. சுறு). [வெவஹாம.]

இலேபம்—1. கறை. 2. சாந்து. 3. துன்மார்க்கம். 4. பூச்சு (நன். 273 மயிலை). 5. போசநம். 6. மெழுகுதல். 7. வான்மிளகு. [வெவ.]

இலேபநம்-1. சேட்டித்தல் 'ஆண்குறியும் நாவும் இலேபநமும் நீரூறலுமாகிய அடையாளங்களைக் காட்டுமானல்' (வைராக். சத. சுறு. சிதம்பர. உரை). 2. பூசுஞ் சாந்து. 3. பூசுந் தைலம். [வெவந.]

இலேபி—1. இலபி. 2. பூச்சு.

இலேபிதம்—தடவல்.

இலேபை-மெழுகுதடவிய துணி, பிளாஸ்திரி.

இலேம்புநம்—நிலக்கடம்பு (மலை).

இலேலாயமாநா—அக்கினியின் ஏழு நாக்குக்களி லொன்று.

இலேலிகம் — 1. பாம்பு. 2. வயிற்றில் வளரும் கிரைப்பூச்சி. [வெலிஹ.]

இலேவநம் — மெழுகுதல். [வெவந.]

இலேவாதேவி—பண்டமாற்றல், கொடுக்கல் வாங்கல். [இந்துஸ்.]

இலேவுந்து—கந்தகவுப்பு (மூ. அ).

இலை-1. இயந்திரசக்கரத்தினுடைய ஆர். 'இலைமுகத் தழலுகின்ற வெந்திரத் திகிரி நாப்பண்' (பாரத. திரௌ. ௩௧). 2. இல்லை. (தாயு. ஆரண. ௬). [இல்லையென்னும் குறிப்புவினைமுற்றில் லகரமெய் தொக்கது.] 3. உலோபம். 4. தகட்டுவடிவு. 'நெட்டிலை வடிவாள் குந்தந் தோமர நேமி நெய்த்தோர்' (திருவிளை. மெய்க்கா. உச). 5. பச்சிலை. 'உருளரிசி கிச்சிலி மதூகம் மாரவலரிலையசை' (தைல. தைலவ. ௯அ). 6. பத்திரம். 'இலைமுதிரேனல்' (கந்தபு. வள். ௧௧). 7. வெற்றிலை. 'இலைபிளவதனை நடித்துக் கேட்கவும்' (திருப்பு. 47). 8. கதவின் இலை. 9. படலைமாலை. (பரிபா. 6. 19.) 10. அணிகளின் இலைத்தொழில். 'இலைகொள்பூண்' (சீவக. 1371). 11. ஆயுதவலகு. 'நச்சிலை வேற்படைவீரர்' (சீவக. 2209). 12. பூவிதழ். 'அகவிலையாம்பல்' (தேவா. 511. 8). 13. மரம் செடி கொடிகளின் இலை.

இலைக்கதவு—ஒருவகைக் கதவு.

இலைக்கம்மம் — இலைவடிவாக அணியிலமைக்குந் தொழில். (பெருங். இலாவாண. 19. 136.)

இலைக்கள்ளி—ஒருவகைக் கள்ளி.

இலைக்கறி—1. கீரை. 2. கீரை முதலிய இலைகளைப் பாகஞ்செய்தெடுத்த கறி.

இலைக்காம்பு—இலையின் தண்டு.

இலைக்கிளி—வெட்டுக்கிளியி லொருவகை.

இலைக்கிள்ளி—மழைக்கிளி.

இலைக்கூரம்பை-பர்ணசாலை. (திவ். இயற். பெரியதிருமடல். 13.)

இலைக்குழல் — இலையாலமைத்த ஊதுகருவி. 'அன்ன விலைக்குழ லூதி' (திவ். பெரியதி. 10. 7. 6.)

இலைக்குறடு — பொற்கொல்லர் கருவியிலொன்று.

இலைக்கோடி—வெற்றிலைக்கொடி (பிங்).

இலைகிள்ளல் — இலை முதலியவற்றைக் கிள்ளுந்தொழில். அது: மகளிர் விளையாட்டுக் கைத்தொழில் ஐந்தனுள் ஒன்று.

இலைங்கம்—இலிங்கத்தோடு சம்பந்தப்பட்டது. பதினெண்புராணங்களு ளொன்று. அது: இலிங்கபுராணம் (திவா).

இலைச்சித்தல்-முத்திரையிடுதல். (பெருங். நரவா. 1. 46.)

இலைச்சினை — இலச்சினை. 'இடபவிலைச்சினையை' (கலித். 82. உரை.)

இலைச்சுமி -பதுமராகமணியின் பதினறு வகைக்குற்றங்களு ளொன்று. (திருவிளை. மாணிக்க. சுஉ. உரை.)

இலைச்சுருள்—வெற்றிலைச்சுருள். 'இலைச்சுருளைப் பிளவோடே குதட்டிய' (திருப்பு. 124.)

இலைச்சுருளி—ஒரு பூண்டு.

இலைச்சை — நிறம். 'வெண்சக்கேரிலைச்சை' (குளா. துற. 226.)

இலைசுனி—மாணிக்கத்தின் குணங்களுள் ஒன்று. 'மாணிக்கம், சட்டமும் இலைசுனியும் ஒன்றும் உட்பட' (S. I. I. ii. 430. 434.)

இலைநெமல்-இலைச்சுருகு. 'இரியன் மகளி ரிலைநெமலுளின்ற - வரியிளஞ்செங்காற்குழ வி' (முத்தொள்ளாயிரம். எ.)

இலைத்தட்டு—வெற்றிலை வைக்கும் தட்டு. (S. I. I. ii. 419.)

இலைத்தல் — 1. சாரமின்மை. 2. சுவை குறைதல். 3. பச்சைநிறமாதல். 4. அரோசித்தல்.

இலைத்திரி-காதிலே துளையிடலால் வரும் புண்ணை யாற்றுதற்பொருட்டு அத்துளையிலே வைக்கும் இலைச்சுருள்.

இலைநிறம்—பச்சைநிறம்.

இலைப்பசளி—பெரும்பசளி (மலை).

இலைப்பணி — இலைவடிவாகச் செய்யுந் தொழிலமைந்த அணி. (பெருங். மகத. 5. 22.)

இலைப்பலி—இலைச்சாம்பல் (சிந்தா).

இலைப்பாசி — பாசிவகையினுள் ஒன்று (மூ. அ).

இலைப்புரைகிளைத்தல்—தேடுதல். 'ஈட்டமும் வேறுமாக விலைப்புரை கிளைத்திட்டே மே' (சிந்தா. கஙக. கஅரு.)

இலைப்புரைதடவுதல்—இலைப்புரைகிளைத்தல். (கலிங். புதுப். 448.)

இலைப்புல் — ஒருவகைப் புல் (மூ. அ).

இலைமறைகாய்—மறைபொருள்.

இலைமுகப்பைம்பூண்-பத்திராவலி; அது: வெற்றிலைச்சரப்பணி. (நீதிநெறி. உஎ).

இலைமுகக்கத்தி — வெற்றிலைக்காம்பரியுங் கத்தி (திவா).

இலைமேற்காய் — 1. வெள்ளைக்கடம்பு. 2. மலைத்தணக்கு.

இலையடை—அப்பவருக்கம் (பிங்).

இலையம் — 1. கூத்தின்விகற்பம். 2. கூத்து (பிங்கல).

இலையமுதிடுவோர் — வெற்றிலை விற்போர். (சிலப். 5. 26. உரை).

இலையமுது—வெற்றிலை. 'அடைக்காயமுதிரண்டும் இலையமுது நாலும்' (S. I. I. iii. 138).

இலையாகிருதி—இலைவடிவு. [சூகஈரு தி.]

இலையான்—ஒரு சிறுபறவை.

இலையிரட்டை — ஒற்றையாய்வரற்பால தாகிய ஓரிலையில் நுனிப்புற மிரட்டையாக விருத்தல். 'மறைமுதலேமுதலே யென்ற அடுக்கு, பூவிரட்டையும் இலையிரட்டையும் போலாது, மக்களிரட்டைபோல வேற்றுமையின்றிக் கலத்தல்பற்றிவந்த அடுக்கென்க'. (கூர்மபு. சுவேதவரா. ச. உரை).

இலையுதிர்காலம்—இலைகள் உதிரும் பருவம்.

இலையுதிர்வு-1. இலைசொரிதல். 2. முதுகாடு (திவா).

இலைவாணிகம்— } வெற்றிலை முதலிய
இலைவாணிபம்— } இலைவியாபாரம்.

இலைவாணிபர்— } வெற்றிலைவிற்போர்.
இலைவாணியர்— }

இலைவேல்-இலைத்தொழில்களாற் சிறந்த வேல் (புறப்பொ).

இலைவைத்தகொடும்பூண்—வளைந்தவெற்றிலைச்சரப்பணியென்னு மாபரணம்.'நீண்ட-விலைவைத்த கொடும்பூண்' (திருவிளை. வன்னியுங். கக).

இலௌகிகதருமம்—1. உலகாசாரம். 2. உலகத்துக் கேற்ற தருமம். [லௌகிக யாஈரு.]

இலௌகிகநூல்-ஆயுள்வேதமும் தண்டநீதியும் முதலாய நூல்கள்(சைவச.பொதுவி. ஙஙஅ. உரை).

இலௌகிகம் — உலகசம்பந்தமானது, இவ்வுலகத்துக்கேற்றது, உலகவழக்கம்.

இவ்—இவை 'சொல்வினைப்படுந் தூதர்க் கிவ்வெலா-மொல்வதன்று' (கந்தபு. தெய்வயானை. ருஎ).

இவ்விரண்டு — 1. இந்த இரண்டு 'இவ் விரண்டி லாகாசபலம்போல மெய்ஞ்ஞான மிசைந்த தன்மை' (ஞானவா. சஙகராச. அ). 2. இரண்டிரண்டு.

இவ்வோர்—இவர். 'இவ்வோர் விரைவி லிவன்றன்னை வினவ' (பாரத. பதினெட்டாம்போர். கககு).

இவக்காண் — இங்கே. 'உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென் - மேனி பசப்பூர் வது. (வள். கக அரு.)

இவண்—1. இவ்விடம். 'இவணில்லா-துய்ந் திட நினைந்துகடி தோடுமினி யென்றாள்' (கந்தபு. வள்ளி. கூக). 2. இம்மை (திவா).

இவணர்—இவ்வுலகத்திலுள்ளார். (பதிற்றுப். எச.)

இவநட்டம்—மிளகு (மலை).

இவர்—1. இவர்கள்; அது: பலர்பாற்படர்க்கையிலே அண்மையிடத்தாரைக் கருதி வருமொரு சுட்டுப்பெயர். 2. இவரென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 'அறலிவர் தடம்பொருநை' (திருவிளை. மாயப். கூ). 3. உயர்திணையாண்பால் பெண்பால் ஒருமையிலே உயர்த்திக் கூறுமிடத்து வழங்கும் ஓர் அண்மைச்சுட்டுப் பெயர். 'நன்றிவர் திறமென நாணிக் கூறுவாள்' (கந்தபு. வள். அக.)

இவர்தல்—1. ஆசை. 2. உயர்தல். 'கோடிவர் நெடுவரை' (கந்தபு. வள். அஎ). 3 உலாவுதல். 'இரைதேர்ந் திவரும் கொடுந்தாண் முதலையொடு' (மலைபடு. கூ0). 4. எழும்புதல். 'பொன்னிவர் திரிகோட்டுப் புரிதகராய் நிற்க' (கந்தபு. இல்வலன்வாதாவி. உசு). 5. ஏறுதல். 'மட்டு வாரிசத் தோடிவர் வண்டுபோல்' (சேதுபு. இராமதீர்த்த. ௩). 6. கலத்தல். 'சொருபமிவராதியைக் குறியாமே' (திருப்பு. ௩௩க). 7. செல்லுதல், போதல். 'இருவிசும் பிவர்தலுற்று' (சீவக. 959). 8. நெருக்கமாய்ச்சொரிதல். 'இவர் குலைத்தெங்கு' (தணிகைப். நகர. ௩கூ). 9. படர்தல். 'தூறிவர் துறுகற்போல' (பட்டினப்பா. உ௩ச). 10. பரத்தல். 'இவர்கனை வளர் கொடி' (மலைபடு. ருகச). 11. பேராசை. 12. பாய்தல். 'குன்ற விறுவரைக் கோண்மா விவர்ந்தாங்கு' (கலித். 86.32). 13. பொருந்துதல். 'மாதிவர்பாகன்' (திருவாச. 43. 1). 14. மேற்கொள்ளுதல் (குறள். 1182). 15. விரும்புதல். 'ஆனெய் பாற்கிவர்ந்த தொத்தது' (சீவக. 1051). 16. ஒத்தல். (பு. வெ. 11. ஆண்பாற். 1.)

இவர்வு—ஏறுதல். 'இவர்வுறுகாதலாளர்' (கந்தபு. மார்க்கண்டேய. ௩எ.)

இவராவட்டி—ஏலம்.

இவரித்தல்—எதிர்த்தல். 'இவரித் தரசர் தடுமாற' (திவ். பெரியதிரு. 8. 8. 9)

இவவு—இழிவு.

இவள்—உயர்திணைப் பெண்பாற்படர்க்கையிடத்து அண்மைச்சுட்டுப் பொருளிலே வருமொருபெயர். 'இவளெம திடத்தில் வந்ததெம்பெருந் தவமே யென்றார்' (கந்தபு. வள். ககூஅ.)

இவறல்—1. ஆசை. 'இவறலுமிகலுமின்றி' (கந்தபு. திருவவ. ௩). 2. ஆசைப்படுதல். 'ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்' (வள். க00௩). 3. ஆசைப்பெருக்கம். (சூ. நிகண். கக: வகரவெ. ௩). 4. கைவிடாதிருத்தல். 5. மறதி. (சூ. நிகண். கக: வகர. ௩). 6. உலோபம். 'இவறலு மாண்பிறந்த மானமும்' (வள். ச௩உ.)

இவறன்மை—1. அசட்டை. 2. ஆசை. 3. உலோபகுணம் (குறள். 438).

இவறியார்—1. கைவிடாதார். 2. ஆசைப்பட்டோர். 'கவறும் கழகமுங் கையுந் தருக்கி-யிவறியா ரில்லாகி யார்' (வள். ௯௩0).

இவறு — இவறென்னேவலும் தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும். 'இவறு திரை' (ஐங்குறு).

இவறுதல்-1. ஆசையுறல். 'அற்றைத்-திவசத் திவறு வரமங்கையர் வீழச்சென்றார்' (பாரத. நிவாத. கூஅ). 2. மறத்தல் (பிங்). 3. உலோபஞ்செய்தல் (குறள். 432). 4. மிகுதல். 'இன்பத்திவறினர்காமவெள்ளத்து' (சீவக. 966). 5. உலாவுதல். 'இவறுதிரை திளைக்கு மிடுமணல்' (ஐங்குறு. 177.)

இவன் — உயர்திணையாண்பாற்படர்க்கையிடத்து அண்மைச்சுட்டுப்பொருளிலே வரும் ஒரு பெயர்.

இவியாடம்—இரசகர்ப்பூரம் (மூ. அ).

இவுளி—1. குதிரை. 'அலங்குளைப் பரிஇ யிவுளி' (புறநா. ச). 2. மாமரம். (இராச வைத்.)

இவை — அஃறிணைப்பன்மையிலே வரும் ஓரண்மைச்சுட்டுப்பெயர். 'இலங்கியதோற்ற நிற்ற லிதிவை யிசைத வாலே' (சி. சி. க: ச.)

இழ — இழவென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும்.

இழத்தல் — 1. இல்லாதுபோகவிடுதல். 'கொடாது வைத்திட்டின ரிழப்பர்' (நாலடி. செல்வநிலையாமை. க0). 2. கெடவிடுதல். 'மெய்வலி யரக்கரால் விண்ணு மண்ணுமே-செய்தவ மிழந்தன' (இராமா. திருவவ. கஅ.)

இழந்தோறும்-இழக்குந்தோறும். ‘இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோல்’ (வள். கூசo.)

இழந்தநாள்—பயனின்றிக் கழிந்த நாள். (அஷ்டா. முமுக்ஷுப். திருமந். 1. 110.)

இழப்பு — 1. இழத்தல். 2. கீழ்மை. 3. நட்டம்.

இழப்புணி-1. இழப்புண்டவள். 2. இழப்புண்டவன்.

இழவு—1. இழத்தல், நட்டம். 2. சாவு. 3. அவலச்சுவைதோன்றற்குரிய நான்கு பொருள்களு ளொன்று; அது: தந்தையும் தாயும் முதலாகிய சுற்றத்தவரையும் இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலாகியவற்றையும் இழத்தல். (பொருள். 253. உரை). 4. வறுமை. ‘பேறிழ வின்ப மோடு பிணிமூப்புச் சாக்கா டென்னு-மாறும்’ (சி. சி. உ: கூ. சிவஞாந). 5. கேடு. ‘செந்தொடை இழவுபடு மென மறுக்க’ (தொல். பொரு. 406. உரை). 6 சரமக்கிரியை. 7. எச்சில் (பிங்).

இழவுக்கடித்தல் — சாவீட்டிலே மார்பிலடித்தழுதல்.

இழவுகாத்தல் — சாவிட்டிலே துக்கங் கொண்டாடிக்கொண்டிருத்தல்.

இழவுசொல்லல் — மரணத்தைப்பற்றிப் பிறர்க் கறிவித்தல்.

இழவுவிழுதல்—1. கேடுசம்பவித்தல். 2. மரணஞ்சம்பவித்தல்.

இழவுவீடு—சாவீடு.

இழவூழ் — கேடுதரும் வினைப்பயன். ‘பேதைப்படுக்கு மிழவூழ்’ (குறள். 372).

இழவோலை-ஒருவர் மரித்ததை அறிவிக்க எழுதப்பட்ட பத்திரம்.

இழி—1. இழியென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும். 2. இழிவு, இகழ்ச்சி. ‘இழித்தகு தூதனல்’ (கந்தபு. சூரனமைச்சு. எக).

இழிக்கப்பெறுதல்—ஆழமாகத்தோண்டப்படுதல். ‘தூவுதினை நிழிக்கப்பெறுவதாகவும்’ (S. I. I. ii. 521).

இழிகடை — இழிந்தவன், இழிந்தவள், இழிந்தது.

இழிகண்-எப்பொழுதும் பீளைநீரொழுகுங் கண்.

இழிகுலம் — தாழ்ந்தகுலம். ‘இழிகுலமாகிய எயினர் பாவைநான்’ (கந்தபு. வள். கூo).

இழிகை—1. கைச்சுரிகை. ‘பவளப்பாய் காற் பசுமணி யிழிகை’ (சீவக. 558). 2. இறங்குகை.

இழிஞ்சு—1. ஈனம். 2. வடு.

இழிச்சல்வாய்—திறந்தவாய்.

இழிச்சு — இழிச்சென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.

இழிச்சுதல் — 1. இழிவுபடுத்துதல். 2. இறக்குதல். ‘அட்டகரியின் பதமறிந்தங் கிழிச்சி’ (பெரியபு சிறுத்தொண்ட. சுசு). 3. தள்ளிக்கொடுத்தல். ‘இறையிழிச்சிக்கொடுத்தோம்’ (S. I. I. i. 69). 4. இடித்தல். ‘திருமண்டப மிழிச்சியெடுப்பதற்கு’ (S. I. I. iii. 93.)

இழிச்சொல்—பழிச்சொல் (பிங்).

இழிசநர்—கீழ்மக்கள்.

இழிசினர்மொழி—அவப்பிரஞ்சம் (உரி.நி.)

இழிசினர்வழக்கு — தாழ்ந்தோர்பேச்சு.

இழிசினன் — புலைமகன். ‘கட்டினிணக்கு மிழிசினன்’ (புறநா. அஉ).

இழிசுதல்—பூசுதல். ‘சாந்திழிசியகோலம்’ (திவ். பெரியதி. 2 8. 7).

இழிசொல்—1. அசப்பியவார்த்தை. 2. இழிசனர்பேசுஞ் சொல். 3. பழிச்சொல். (பிங்).

இழிஞர்—சண்டாளர். ‘இழிஞர்தம்பதிக் சேகும் வெம்பவம்’ (கந்தபு. வீரவாகுமீட்சி. ரு).

இழிஞன்—புலையன். ‘இழிஞன்புலைக்கரந்தீண்டி’ (காஞ்சிப். பரசிரா. சஉ).

இழித்தல் — 1. அருவருத்தல். ‘எம்பிரானிழித்திட்டேனே’ (திருவாச. திருச்சத. சுரு). 2. இழிவுபடுத்தல். 3. இறக்குதல். 4. தாழ்த்தல்.

இழித்துதல்—1. இறக்குதல். 2. வரிநீக்குதல். ‘எப்பேர்ப்பட்ட இறையும் இழித்தி’ (S. I. I. iii. 103).

இழிதகவு—1. இழிவு (பிங்). 2. எளிமை.

இழிதகன் — பிறர்பழிக்கத்தக்க செயலையுடையவன். ‘இழிதக னியற்கை போலா-மண்ணறன் செயலும்’ (கந்தபு. ததீசிப். கசு).

இழிதல்—1. இறங்குதல். 'பொன்வரை யிழிவதோர் புயலின் பொற்புற' (இராமா. திருவவதார. கா). 2. குறைதல். 3. தாழ்தல். (திவ். திருவாய். 3. 7. 9). 4. விழுதல். 'வெண்மதியம் நிலந்திழிந்ததொத்தெனவே' (சீவக. 2238). 5. இழிவுபடுதல். 'மாந்தர் நிலையி னிழிந்தக் கடை' (குறள். 964.)

இழிதிணை—அஃறிணை; அது, தேவர் மனிதர், நரகரல்லாதன (நன். 245).

இழிந்தவர்—இழிந்தோர்.

இழிந்தோர் — தாழ்ந்தநிலையி லிருக்கின்றவர். 'ஈது நிலைத்தன்றே யிழிந்தோ ருபர்ந் திடுவார்' (கந்தபு. அசுரர்யாக. உ௦.)

இழிப்பு—1. இகழ்வு. 2. இழிவுபடுத்தல். 3. சுவையென்னு மலங்காரத்தினெண்வகைப் பட்ட மெய்ப்பாடுகளு ளொன்றாகிய அருவருப்பு. அஃது, 'உடைதலையு மூளையு மூன்றடியு மென்புங் - குடருங் கொழுங்குருதி யிர்ப்ப - மிடைபேய் - பெருநடஞ்செய் பெற்றித்தே கொற்றப் போர்க் கிள்ளி, கருநடரைச் சீறுங் களம்' என்பதிற்போல. (தண்டி. சுகூ. உரை). [தொல்காப்பியர் இதனை இளிவரல் எனவும், மூப்புப் பிணி வருத்தம் மென்மை என்னும் நான்குங் காரணமாகப் பிறக்கும் எனவும் கூறுவர்] 4. நிந்தை.

இழிபாடு—இழிவு. 'இழிபாடிலாத கடலின்' (தேவார. நாரை. அ. திருஞாந).

இழிபிறப்பினோன்—இழிசினன். (புறநா. 363.)

இழிபு-1. இறங்கி (ஐங்குறு). 2. கீழ்மை. 3. சிறுமை. 'அறத்தா றிதுவென வெள்ளைக் கிழிபு' (யாப்.காரிகை.உறுப்.கரு). 4. தாழ்வு. 5. பள்ளம்.

இழிய—ஒழுக. (ஐங்குறு).

இழியற்கண்—இமைதிறந்த கண்.

இழியினன்—இழிசினன். 'இழியினர்க்கே யானும் பசித்தார்க ணீதல்' (சிறுபஞ். 77.)

இழிவரவு — இழிவு, அவமானம். 'யான் பட்ட விழிவரவை மதிக்கிலாயோ' (கந்தபு. அசமுகிபுலம்பு. கச.)

இழிவழக்கு—இழிசினர்வழக்கு (தொல். எழுத். 64. நச்.)

இழிவு—1. இகழ்ச்சி (சூடா). 2. குற்றம் (திவா). 3. கேடு (திவா). 4. குறைவு. 'இழி வறிந்துண்பான்' (வள். சுசுசு). 5. தாழ்வு. 'துன்பவெம் பிறப்பி னிழிவையும்' (வைராக்கியதீ. கரு). 6. பள்ளம் (சூ. நிகண். ரு: சுக). 7. திட்டு. 'இழிவு தொடக்கிற்று' (பெரியபு. நமிநந். 24).

இழிவுசிறப்பு — இழிந்த தன்மையைப் பெருப்பித்தல். (நன். இடையியல். சு. உரை).

இழிவுசிறப்பும்மை — இழிந்த தன்மையைப்பெருப்பித்தற்பொருளை விளக்கும் உம்மென்னு மிடைச்சொல். 'புலையனும் விரும்பாத' (அரிச். மயாந. கஅ.)

இழின்—ஓர் ஒலிக்குறி. 'ஆன்படுபாலுலை- பொங்கிய வாவியி னுற்பொலிச் - தேந்து மாடங்கடாமிழினென்பன' (சிந்தா. இலக்கணையா. கஅ).

இழு — இழுவென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும்.

இழுக்கடித்தல்—அலையவைத்தல். 'இழுக் கடித்தாய் நெஞ்சே' (தாயு.உடல்பொய்.65).

இழுக்கம் — 1. ஈனம், இழிவு. 'இரக்கிடு தொழில ராகி யிழுக்கமுற் றார்க ளன்றே' (கந்தபு. மாயைப். சஅ). 2. ஒழுக்கமின்மை. 'இழுக்கத்தின் மிக்க விழிவில்லை' (பழ. கருரு). 3. குறை. 4. தவறு 'நாளிழுக்க நட்டார் செயின்' (குறள். 808). 5. தளர்வு. 'எதிமழு வாளவ னிழுக்க-முற்ற வன்றிறும்' (இராமா. மந்திர. சஉ). 6. தாமதம். 7. பின்வாங்குதல். 8. வசை.

இழுக்கல் — 1. தவறுதல் 'எற்றதென் டிரைநீர்ச்சேர்ப்பன் றன்செய லிழுக்கி' (திருவிளை. நான்மா. ச). 2. நிந்தைவருதல். 'எங்குல மிழுக்குமென் றிகுளை யகற்றல்' (தணிகைப். களவு. உஉஎ-அங்கவிழுகம்). 3. வழுக்கல் 'இழுக்குந் தேன்களே' (கந்தபு. நாட்டுப். சக). 4. வழுக்குநிலம். 5. தளர்வு (திவா).

இழுக்காமை—மறவாமை. 'இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை - வாயி னதுவொப்ப தில்' (வள் ருகூசு).

இழுக்காறு—துன்மார்க்கம். 'இழுக்காற்றின் இன்பநலமெய்தார்' (தாயு. பரா. உகஎ).

இழுக்கி—நப்பி (புறநா).

இழுக்கிய—இழிவானவை. 'கோளிலன்பர்க ளிழுக்கிய புரியினும்' (கந்தபு. மோக. எ).

இழுக்கு—1. ஆபரணத்தி னுறுப்பு. 2. இழுக்கென்னேவலும், தெரிநிலைவினைப் பகுதியும், வினைத்தொகையும். 3. ஈனம். 'எமருக் கெல்லாம்-வெம்மாசு படுபாவம் பழியிரண் டும் படவிழுக்கு விளைத்து' (திருவிளை. பரிநரி. ௪௧). 4. கீழ்மை. 'யாமாரினு மிழுக்குற்ற னம்' (கந்தபு. சரவண. ௨௮). 5. தவறு, வழு. 'என்றனன் மறித்தலோடு மிழுக்குரை யாடி வைது' (திருவிளை. மாமனு. ௧௬). 6. தளர்தல். 7. நிந்தை. 'எம்பெருங் கிளைக்கி தோ ரிழுக்கை-மண்ணி னுட்டவோ வந்தது' (கந்தபு. வள். ௧௩௩). 8. பொய். 9. பொல்லாங்கு (பிங்கல. ௩௧௭௭). 10. மறதி (திவா). 11. வருத்தம். 12. வழுக்குநிலம். 'நூழிலு மிழுக்கும்' (குறிஞ்சிப். ௨௫௮).

இழுக்குதல்—1. இழுக்கல். 2. இழுத்தல். 3. தள்ளிவிடல். 'இழுக்கி விட்டவிக் கிழமக னிசையிதேல்' (திருவிளை. விறகு. ௪௮). 4. தவறுதல் (சீவக. 2238). 5. துன்புறுதல் (அகநா. 18). 6. வழுக்குதல் (சீவக. 476). 7. தளர்தல் (திவா). 8. அகப்படுதல் (சிலப். 12. 24. அரும்). 9. மறத்தல் 'முன்னுறக் காவா திழுக்கியான்' (குறள். 535). 10. இழத்தல். 'மகிழ்நகையிழுக்கியான்' (புறநா. 71). 11. கடிதல். 'நான்கு மிழுக்கா வியன்ற தறம்' (குறள். 35). 12. அழித்தல். (சிலப். 12. 24).

இழுக்கை—இழுப்பு.

இழுகிய—பூசிய (மணிமே).

இழுதணி—1. உலோபி. 2. சோம்பன்.

இழுகுதல்—1. தாமதித்தல். 'இடைந்து பின்னரி னேகுமக் கணைநுழைக் கிழுக' (இரகு. திக்குவிசய. ௨௦௬). 2. பிசுனித் தனம்பண்ணுதல். 3. பின்போதல். 4. பூசுதல். 'வெள்ளிவெண்சுதையிழுகிய மாடத்து' (மணிமே. சக்கர. ௪௩).

இழுதுபறை—துடிப்பறை (அகநா. 19. உரை).

இழுங்கு—நீக்குகை (சீவக. 3093. உரை).

இழுத்தல்—1. உறிஞ்சல். 2. கயிறு முதலிய கருவியின் துணைக்கொண்டாவது கொள்ளாமலாவது கையினால் இருப்பினின்று பெயர்த்துத் தன்னைநோக்கிவரச் செய்தல். 'தேரிழுத்தான்'. 3. காலநீட்டித்தல். 'அந்த வழக்குநெடுகஇழுத்துக்கொண்டுவருகிறது.' 4. சாம்பாடுதல். 5. சுழித்துவாங்கல். 6. நீட்டித்துப்பேசல். 7. நீளமுடையதாகச் செய்தல். 8. பின்வாங்குதல். 9. புறத்தி லுள்ளாரது குறைகுணங்களை வெளிப்படுத் தல். 10. வசமாக்கல். 11. வலித்தல். 12. கவர்தல். 13. வலிந்து சம்பந்தப்படுத்தல்.

இழுத்துப்பறித்தல்—1. வலிந்துகொள்ளுதல். 'அடர்ந்தியம னிழுத்துப் பரிக்கில்' (அருட்பா. 5. வேட்கை. 4). 2. பெரிதுமுயறல். 3. போராடுதல்.

இழுத்துவிடுதல்—1. காரியத்தை நீட்டித்து விடுதல். 2. வலிந்து தொடர்புண்டாக்குதல். 3. வெளிப்படுத்துதல். 4 புதிதாய் உண்டாக்கல்.

இழுது—1. கள் (இராசவைத்). 2. குழம்பு, குழைசேறு. 'இழுது செய்யினு ளிக் கிராத் தெய்வதந்-தொழுது' (பெரியபு. திருநாட். ௧௨). 3. தேன். 'இழுதார்......பூ' (சீவக. 3137). 4. நிணம். 'இழுதுடை யின மீன்' (கம்பரா. வருண. 29). 5. நெய். 'இழுதுபெய்து-பொரிப்பன பொரித்திட்டு' (கந்தபு. இல்வலன்வாதாவிவதை. ௧௭). 6. மூடம் (இராசவைத்). 7. வெண்ணெய். 'இழுதார்மென்பள்ளிமேல்' (சீவக. 1576).

இழுதுதல்—1. கொழுத்தல். 2. நெய்த்தல்.

இழுதை—1. அறிவின்மை. 'நெறியிடை யொழுகலா விழுதை நீரரை' (கந்தபு. நாட்டுப். ௩௧). 2. பேய். 3. பொய்.

இழுப்பறை—ஒருபெட்டியி லிழுக்கும்படி யமைத்த சின்ன அறை.

இழுப்பாட்டம்—1. காலநீட்டித்தல். 2. நிச்சயமின்மை.

இழுப்பாணி—1. கலப்பையின் ஏர்க்காலை நுகத்திலே பூட்டு மாணி. 2. காலதாமதம் பண்ணுகிறவன்.

இழுப்பு—1. இசிவு என்னும் நோய். 'இழுப்பின் பேச்சைப்போழ்த்திழுப் பாகும்' (தைல. தைலவ. ௯௯-உரை). 2. இழுத்தல். 3. சுவாசரோகம். 'ஆச்நத்தடைப்புவலி யிழுப்புதரப்பீடை' (தைல. தைலவ. ௧௧௭). 4. விலகல். (தைல. தைலவ. ௯௯). 5. கவர்ச்சி. 6. நீரிழுப்பு. 7. காலதாமதம். 8. நிச்சய மின்மை.

இழுப்புண்ணுதல்—இழுக்கப்படுதல்.

இழப்புப்பறிப்பாதல்—1. அவதிப்படல். 2. போராட்டமாதல். 3. போதியதும் போதாததுமாதல்.

இழப்புமாந்தம் — ஒருவகை மாந்தநோய் (சீவரட்).

இழபறி—1. பிணக்கு. 2. வாது.

இழம்—1. இனிமை (பிங்). 2. உவப்பு. 3. ஓர் அநுகரணவோசை. 4. மென்மை. 'இழுமென்மொழி' (இலக்கணவிளக்.எடுச).

இழமு—1. உவப்பு. 2. தித்திப்பு.

இழமென்மொழி — மெல்லென்றசொல். 'இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்' (தொல். பொருள். ருகூக.)

இழமெனல்—1. இழுமென்னும் அநுகரணவோசை பிறத்தல். 'இழுமென் புள்ளின்' (பெரும்பா. சuரு.) 2. இனிமை. (சூ. நிகண். கக. ழகர. ங.) 3. எண்வகைப் பரிசங்களு ளொன்று; அது வழுவழுத்தல். (நன். உரி. கங. இராமாநு. உரை.) 4. சீர்மை.

இழவல்—1. காலதாமசம்பண்ணுகிறவன். 2. சுயகாரியந்துறந்து பிறர்காரியம் நடத்துகிறவன். 3. காலதாமதம். 4. இழுக்கை. 5. நிச்சயமின்மை.

இழவை—1. இழுக்கப்படுவது. 2. இழுக்கும் வடம். 3. இழுப்பு. 4. ஒரு முட்செடி. 5. சுவடு.

இழை—1. ஆபரணம். 'தமகியம் வளைஇய தாவில் விளங்கிழை' (மதுரைக். எOச.) [இழைக்கப்பட்டதென்பது பொருள்.] 2. இழையென்னேவலும், தெரிநிலை வினைப் பகுதியும், வினைத்தொகையும். 3.நூற்கயிறு. 'இடங்கெழுதுளைத்துன்னூசி யிழைதொடுத் திசைக்கப்பட்ட - படங்கெழுமாடகூடத்து' (கந்தபு. தெய்வயா. ககஉ.) 4. பஞ்சிநூல். 'தடமுலை யிரண்டேயாகி-யிழையிடைகிடக்க நீங்கி' (திருவிளை. திருமண. கஙக.) 5. பூண் வடிவாகக்கட்டிய மலர்மாலை. 'பன்மலர் துதையத்-தழையுங் கோதையு மிழையு மென் றிவை' (கலி. கOஉ.) 6. நூலிழை. 7. மாதரணிவடம். (பிங்). 8. கையிற்கட்டுங் காப்பு.

இழைக்கட்டி—ஒருவகைக் கழலை.

இழைக்கட்டு — கைக்காப்பாகக் கட்டும் நூற்கயிறு.

இழைக்கயிறு—1. தென்னந் தும்பினு லிழைத்த கயிறு. 2. நூற்கயிறு.

இழைக்குளிர்ச்சி—
இழைக்குளிர்த்தி— } ஆடையின் மென்மை.

இழைக்கை—இழைத்தல்.

இழைகூடு—இழைப்புளி.

இழைகொள்ளுதல் — தைத்தல். (பதிற்றுப். 42. உரை)

இழைத்தல்—1. அழுத்துதல், பதித்தல். 'மரகத மணியி - னிழைத்த செய்குன்றின்' (நைடத. நகரப். சு.) 2. ஆராய்தல். (சீவக. 1089) 3. கலப்பித்தல். 4. சீவுதல், செதுக்குதல் (ஈடு. 1.4.7). 5. செய்தல். 'செய்யுண் மருங்கின் மெய்பெற நாடி யிழைத்த விலக்கணம்.' (தொல். பொருள். ருருசு.) 6. பின்னுதல். 'பாயிழைத்தான்' 7. வரைதல். 'குங்குமவருணக் கொங்கையி னிழைத்து' (சிலப். ஊர்காண். கசO.) 8. வஞ்சினங்கூறுதல்; அஃதாவது, இன்னது செய்யேனுயின் இன்னனாகுவனெனக் கூறுதல். 'இழைத்த திகவாமைச் சாவாரை யாரே - பிழைத்த தொறுக்கிற் பவர்' (வள். எஎகூ.) 9. விதித்தல். 'இழைத்த நாளெல்லை கடப்ப தன்றால்' (தேவா. 727. 5) 10. நூற்றல். 'சின்னூல் பலபல வாயா லிழைத்துச் சிலம்பி பின்னும்' (அஷ்டப். திருவரங். மாலை. 18) 11. நுண்பொடியாக்குதல். 12. மாவாக்குதல். 13. கூறுதல். 'கிழவனை நெருங்கி யிழைத்து' (தொல். பொருள். 150) 14. அமைத்தல். (பொற்பா விழைத்துக் கொளற் பாலர்' (சீவக. 4). 15. திரட்டிவைத்தல். 'பொங்கரினிழைத்த' (மாறன. பக். 244). 16. சங்கற்பித்தல். (குறள். 779.) 17. இழையாக்குதல். 18. மாத்திரை முதலிய வுரைத்தல். 19. நிமிண்டுதல். 20. பஞ்சு முதலியன ஆய்ந்தெடுத்தல். 21. நுண்ணிதாக ஆராய்தல். 'இழைத்துணர்ந்து' (குறள் 417). 22. மூச்சிரைத்தல்.

இழைதல்—1. உட்குழைதல். 'விழைந் திழைந்து, வேண்டி யவர்க்கண்ட கண்' 2. உராய்தல். 'மூங்கில் ஒன்றோடொன்றிழைந்து தீப்பற்றிக்கொள்ளும்.' 3. கலப்பு. 4. பிணைதல். 'பாம்புகள் ஒன்றோடொன் றிழையும்' 5. நெருங்கிப்பழகுதல். 6. கூடுதல். 'இழைந் தவர் நலத்தை பெய்தி' (சீவக. 2720).

7. சிறுகுதல். 8. மனம்பொருந்துதல். 'இழையச்சொல்லி' (சீவக. 1593).

இழைந்தவர்—கூடினவர். (சிந்தா.)

இழைநெருக்கம்—இழைக்குளிர்ச்சி.

இழைப்படம்—இரத்தினக்கற் பதித்துச் செதுக்கிச்செய்யும் வேலை.

இழைப்புளி—சீவுளி.

இழைபிடித்தல்—காயத்தை மூடித் தைத்தல்.

இழைபு — செய்யுள்வனப்பு எட்டனுளொன்று; அது, வல்லெழுத்து யாதுந் தீண்டாது செய்யுளியலுடையார் எழுத்தெண்ணி அடிவகுக்கப்பட்ட குறளடி முதலாக வைந்தடியு முறையானேயுடைத்தா யோங்கிய சொற்களால் வருவது. 'ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடக்காது-குறளடி முதலா வைந்தடி காறு-மோங்கிய மொழியா னோங்கன மொழியி-னிழைபி னிலக்கண மியைந்த தாகும்' (யாப்பருங்கலக் காரிகை. அ. உரைச்சூத்திரம்.)

இழைபோடல்—புடவை பொத்துதல்.

இழைய—பொருந்த. (சிந்தா.)

இழையாடுதல்—இழையிட்டுத் தைத்தல்.

இழையிடுதல்—இழையாடுதல். (ஈடு. 10. 2. 5. ஜீயர்)

இழையூசி — புடவைக்கு இழைபோடத் தக்க மெல்லிய ஊசி.

இழையோட்டுதல்— } இழையாடுதல்.
இழையோடுதல்— }

இழைவாங்கி—இழையூசி, ஆடை தைக்கும் ஊசி.

இளஃகுதல்—தளிர்த்தல். 'இன்னுயிர்... .........இளஃகுமே' (சீவக. 149).

இளக்கம்—1. இளகுதல். 2. தளர்ச்சி. 'இளக்கமில் கடற்படை' (கம்ப. ஊர்தேடு. 71.) 3. விலைக்குறைவு. 4. மென்மை. 5. இளக்காரம்.

இளக்கரித்தல்—1. இளகிப் பின்னிடுதல். 2. எளிமையாதல். 3. தளர்தல். 4. வேகந் தணிதல், காரியத்தில் ஊக்கமின்றியிருத்தல்.

இளக்காரம்—1. கடுமைகாட்டாது நடத்தல். 2. மனநெகிழ்ச்சி. 3. தாழ்நிலை.

இளக்கு—கொழுப்பு.

இளக்குதல் — 1. இளகச்செய்தல். 2. அசைத்தல். 'வெளி விளக்கும் களிறு போல' (பட்டினப். ௬௭௨.) 3. நெகிழச்செய்தல்.

இளகல்—1. அசைதல். 2. இளகுதல். 3. தழைத்தல்.

இளகு—நெய்.

இளகுசம்—கத்தரி.

இளகுதல் — 1. தணிதல், உக்கிரத்தில் அல்லது வேகத்தில் அல்லது இருந்தநிலையிற் குறைதல். 2. தழைத்தல். 'இளகுகாடிளகப் பரிகொண்டதே' (சிந்தா. கஙக. ௨௨௨). 3. அசைதல். (சீவக. 1778). 4. மனக்குழைதல், மனநெகிழ்தல். 'இளகியவுள்ளத்தனுயிருப்பையாயில்' (சி. சி. அ: ௩௦. சிவாக்). 5. மிருதுவாதல், மெல்குதல். (சீவக. 718).

இளகும்—தளிர்க்கும் (சிந்தா).

இளங்கதிர்—1. உதயகாலத்திற்றோன்றுஞ் சூரியகிரணம். 2. உதயகாலத்திற்றோன்றுஞ் சூரியன். 3. பயிரின் முதிராக்கதிர் (பிங்). 4. வெப்பங் குறைந்த கிரணம். 'வான்போயெறித்தனை திரிதிநாளுமிளங்கதிர் நடாத்தி' (கந்தபு. அரசுசெய். ௩).

இளங்கலையன்—ஒருவகை நெல்; அது: மற்றைய சிலசாதி நெற்களினுங் குறைந்த காலத்திலே விளைவது.

இளங்கற்று—இளங்கன்றையுடைய பசு.

இளங்கன்று—1. பசு முதலியவற்றின் முதிராத கன்று. 2. மரக்கன்று.

இளங்காய்—முதிராத காய்.

இளங்கார்—கார்நெல்; அது: கார்காலத்திலே கொய்யப்படுவது.

இளங்கால் — 1. இளங்கொழுந்து. 2. இளமைப்பருவம். 'பண்டையிளங்காலுவப்பன் பாலடிசில்' (சிந்தா. சுரமஞ்சரி. ௧அ). 3. வெற்றிலையிளங்கொடி. 4. தென்றல். (சிலப். 8. 9.)

இளங்காலை—1. அதிகாலை 'இளங்காலையிற் புதுமலர் கவர்ந்து' (செவ்வந்திப். உறையூரழித். 5). 2. இளமைப்பருவம் 'இளங்காலையே யாண்டுகொண்டருளிய' (அருட்பா. 6. அருட்பெருஞ்சோதியக 290).

இளங்காற்று—மெல்லிய காற்று, மந்தமாருதம், தென்றல்.

இளங்கிளை—தங்கை. 'மாலவற்கிளங்கிளை' (சிலப். 12, 68).

இளங்குடர்—கடைக்குடல்.

இளங்குரல் — 1. சிறுகுரல். 2. பயிரி னிளங்கதிர்.

இளங்கேள்வி—உதவிவிசாரணைக்கர்த்தா. (கோயிலொ)

இளங்கொடி—1. சிறுகொடி, முதிராத படர்கொடி. 2. பசுவின் நஞ்சுக்கொடி. 3. பெண். 'இருங்குன்ற வாண ரிளங்கொடியே' (திருக்கோ. கரு).

இளங்கோம்பு—வளார்.

இளங்கோற்றி—இளங்கன்றுடைய பசு.

இளங்கோ — 1. வணிகன். 'கோட்டமி லிளங்கோ மாற்றங் கோவிந்த சாமி கேளா' (சேதுபு. வேதாள. ருகூ). 2. இளவரசன். 'இளங்கொடி தோன்றுமா லிளங்கோமுன்' (மணிமே. 4. 125). 3. பூவைசியன் (பிங்).

இளங்கோக்கள் — வைசியசாதியார். 'குலவு மப்பெரும் பதியிளங் கோக்களி லொருவன்' (திருவிளை. நகரங். ரு).

இளங்கோயில்—பாலாலயம். (T. A. S. I. 177).

இளங்கோவடிகள் — சிலப்பதிகாரநூ லாசிரியர்.

இளசாட்சசம்—கொன்றை (மலை).

இளஞ்சாயம் — நன்றாகப்பற்றாத சாயம்.

இளஞ்சார்வு—குருத்தோலை.

இளஞ்சி—ஈனுக் கத்தரி.

இளஞ்சூடு—சிறு சூடு.

இளஞ்சூல்—1. கருவிலிருக்கும் முதிராப் பிண்டம். 2. பயிரி னிளங்கரு (பிங்).

இளந்தண்டு — முளைக்கீரை. 'வெள்ளா டிளந் தண்டு' (தைல. பாயிர. ருஎ).

இளந்தலை—1. இளமைப்பருவம். 'இளந் தலைக் கைம்பெண்'. 2. கீழ்மை, எளிமை. 'சிவேதனுடன் வீடும வினைத்தா - னிளந்தலை யுருதபடி யேகுமின்' (பாரத. முதற்போர். ருக). 3. கனமின்மை. 4. மரத்தின்முற்றாத பாகம் (சர்வார்த்தசிற். 68).

இளந்தாரி—இளமைப்பருவத்தையுடை யோன், வாலிபன்.

இளந்திரையம்—இளந்திரையன் என்பவ னாற் செய்விக்கப்பட்ட ஒரு நூல். (இறை. 1. பக். 3. உரை).

இளந்தெய்வம் — சிறுதெய்வம். 'அணங் காடு மிளந்தெய்வமன்று' (திவ். திருவாய். 4. 6. 2.)

இளந்தேவி—அரசனது இளையமனைவி. 'இறந்தான்ற னிளந்தேவி' (கம்பரா. குக. 68).

இளந்தை—வாலிபம். 'பிறர்புகழின்சொற் பயிலு மிளந்தைப் பருவம்' (திருப்பு. ருஎக).

இளந்தோய்ச்சல்—இளந்தோயல்.

இளந்தோயல் — 1. ஆயுதங்களின் இளகிய தோய்ச்சல், பதமிடுந் தோய்ச்சல். 2. உறைந்துவருந் தயிர்.

இளநகை—புன்சிரிப்பு. 'இளநகை காணச் செல்வேன்' (அருட்பா. 6. தலைவிவருந்தல். 12).

இளநலம் — 1. இளமைப்பருவத்தி லனு பவிக்குமின்பம். 'கிழமுதி ரிளநலங் கிடைப்ப' (கந்தபு. கடவுள்வாழ்த்து. கஎ). 2. இளைய வடிவு. 'பண்டைத்தன்-மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி' (திருமுரு. உகo).

இளநாக்கடித்தல் — உறுதியற்ற சொற் சொல்லுதல்.

இளநாக்கு-1. குழந்தைகளின்நாக்கு; அது பேச்சுத்திருந்தாதது. 2. பேச்சுறதிப்படாத நாக்கு. 'இளநாக்கடித்தல்'

இளநாள்—இளவேனில். 'இகழுந ரிகழா விளநா ளமயம்' (அகநா. 25).

இளநிலா—அந்திநிலா. (சிலப். 14. 103. உரை).

இளநிறம்—நன்றாகப் பற்றாத நிறம்.

இளநீர்—1. தெங்கி னிளங்காய். 'தாழை யிளநீர் விழுக்குலை யுதிரத் தாக்கி' (திருமுரு. ருoஅ). 2. தெங்கினிளங்காய்க்குள்ளிருக்கும் நீர். 3. மணியி னிளநிறம்.

இளநீர்க்கட்டு—உண்ணுக்குநோய்.

இளநீர்க்குழம்பு — இளநீராற் செய்யப் படும் கண்மருந்துகளி லொன்று. 'இளநீர்க் குழம்பிடுகிற குரும்பைச் சொல்லுதல்' (ஈடு. 5. 6. 1. ஜீ).

இளநீலம்—வெளிறின நீலம்.

இளநெஞ்சன்—1. இளகியமனமுடையோன். 2. கோழைமனமுடையோன்.

இளநெஞ்சு—1. இளகினமனம். 2. கோழை மனம்.

இளநேரம் — சூரியோதயத்தின்மேல் ஐந்துநாழிகைமுதற் பத்துநாழிகைவரையும் நிகழும் பகற்பொழுது.

இளப்பம்—1. கீழ்மை, தாழ்வு. 2. உறுதியின்மை.

இளம்—இளநீர் (இராசவைத்).

இளம்பச்சை—நன்ருகப் பற்ருத பச்சை நிறம்.

இளம்பசி—அற்பமான பசி.

இளம்படியர் — இளம்பெண்கள். 'வானிளம்படியர் வந்துவந் தீண்டி' (திவ். பெரியாழ். 3. 6. 3).

இளம்பதம் — 1. இலேகிய முதலியவற்றின் பதக்குறைவு. 2. இளம்பாகம். 3. உருகு பதம். 4. நெல் முதலியவற்றின் காய்ச்சற் குறைவு. 5. பக்குவமற்றது, முதிராத் தன்மை. 6 வறுபடாப்பொரி. 7. வேகாப் பதம்.

இளம்பருவம்—1. இளவயசு. 2. மெல்லிய பதம்.

இளம்பறியல்—முற்ருதநிலையிற் பறித்த காய்.

இளம்பாடு—1. முற்ருமை. 2. இளமையிற் படும் பாடு.

இளம்பிராயம்—இளம்பருவம்.

இளம்பிள்ளை—சிறுபிள்ளை. (திவா)

இளம்பிள்ளைவாதம்—சிறுபிள்ளைகளுக்கு வரும் ஒருவகையான வாதநோய்.

இளம்பிறை—1. இணையாவினைக்கை முட்பத்துமூன் றுவகையு ளொன் று.'சுட்டும் பேடு மாமிகை சிறுவிர - லொட்டியகம் வளைய வொசித்த பெருவிரல் - விட்டுநீங்கும் விதியிற்றென்ப.' (சிலப். அரங்கே. கஅ. உரை.) 2. வளர்பக்கத்து முன்ஞட்களிலே வருஞ் சந்திரன். 'குடபா - லின்றெழுந்திடு மிளம் பிறை நோக்கினன்' (உபதேச. சிவவிர. ௩௰௫).

இளம்புல்—1. அறுகு (மலை). 2. முதிராத புல் (திவா).

இளம்பூரணர்—தொல்காப்பியத்தின் முதலுரையாசிரியர். (நன். 359. மயிலை.)

இளம்பூரணவடிகள் — இளம்பூரணர். (சிலப். 8. 1. உரை).

இளம்பெண்—1. இளம்பருவத்துப் பெண். 2. கற்ருழை. 'இனித்தநற் ருளி மோகி யிளம் பெணிந் திராணி காணி' (தைல. தைலவ. கூசு).

இளமட்டம்—1. இளம்பருவத்தையுடைய குதிரை. 2. இளம்பருவத்தினன்.-ள்.

இளமண்—மணற்கொண்ட தரை.

இளமண்டை—பலங்குன்றிய தலை.

இளமனற்பாய்தல் — மனமிளகி யீடுபடுதல் (ஈடு. 1. 3. ப்ர).

இளமத்தியாநம்—உச்சிப்பொழுதுக் கணித்தான காலம்.

இளமரக்கா—1. இளஞ்சோலை. 2. வயல் சூழ்ந்த சோலை. (சிலப். 11. 14. உரை.)

இளமழை—சூன்முதிராத மேகம். 'இள மழையாடு மிளமழையாடும்' (கலி. சுக. உ௫.)

இளமார்பு—ஒருவகைக் கருப்பூரம் (சிலப். 14. 109. உரை).

இளமை—1. அறிவுமுதிராமை. 2.முதிராத பருவம். 'சின்ஞண்மெய்ப்பயின் றிளமைதீ நட்பைவிடு மறிஞர்திறம்போல்' (ஞானவா. வைராக். சுகூ). 3. மென்மை. 4. ஒன்றை வேறென்ருக மயக்கும் மயக்கம் (பிங்). 5. தாழ்வு (சூடா). 6. காமம் (சூடா).

இளமைச்செவ்வி—கோமளம் (திவா).

இளமைப்பருவம்—சிறுவயசு. 'இளமைப் பருவத்துக் கல்லாமை குற்றம்' (நான்மணிக் கடிகை. கூ௩).

இளமையாடுதல் — திரிபுணர்ச்சியுறுதல். 'மந்தி......இளமையாடியிருக்கும் வனத்து' (சீவக. 2491.)

இளவட்டம்—இளமட்டம்.

இளவடி—இளம்பதத்தில் வடிப்பு.

இளவணி—காலாட்படை. 'நின்ற இள வணிகலங்கி' (ஈடு. 7. 4. 1.)

இளவரசு—1. இராசகுமாரன். 2. இராச பட்டத்துக்குரிய பிள்ளை. 'இந்த நிலக்கினி யிளவரசு' (பாரத. வாரணவத. கக௫.) 3. இளமையான அரசமரம். 4. குழந்தைப் பருவமுடைய அரசு.

இளவல்—1. இளைய சகோதரன். 'இங் கெனதுயிர்போலுற்றவிளவலுமிளையசேயும்' (கந்தபு.சூரபன்மன்வதை. சச0). 2. முதிராதது. 'இந்தத் தேங்கா யிளவல்'. 3. சிறுவன்.

இளவன்—சோரபாஷாணம் (மூ. அ).

இளவாடை—மெல்லிய வாடைக்காற்று. 'குன்றிவிள வாடைவரும் பொழுதெல்லாம்' (பாரத. அருச்சுனன்தீர்த். உக)

இளவாளித்தல்-அற்பமான ஈரத்தன்மை யுடையதாதல்.

இளவாளிப்பு—அற்பமான ஈரத்தன்மை.

இளவிரிசு—ஒரு மரம். 'இளவிரிசு சென்னகரை' (தைல. தைலவ. கஙடு.)

இளவுச்சி—முன்பகலிலே உச்சிப்பொழுதுக்கு அணித்தாயிருக்குநேரம். 'இளவுச்சியினேய் கொற்றமன்னர் கெடும்' (விதாந. எச்சவினை. ச.)

இளவுடையான்-யுவராசா, இளையராசா. (சிந்தா.)

இளவுறை—முற்ற உறையாத தயிர்.

இளவெந்நீர்—சிறுசூடான நீர்.

இளவெயில்—முதிராத வெயில்.

இளவெலும்பு—முதிராத எலும்பு.

இளவேந்து—இளவரசு.

இளவேனில்—வேனிற்காலத்தின் முன் பருவமாகிய வசந்தகாலம். அது: சித்திரை, வைகாசிமாசங்களிலே வருவது. தென்றல் வீசலும் வண்டு, கிளி, பூவை, அன்றில், குயில் இவை மகிழ்தலும் மாங்கனியுதிர்தலும் புன்னை, மகிழ், தாழை, சண்பகஃ இவைமுதலியன மலர்தலும இக்காலத்துக்குரியன.

இளா—1. பசு. 2. பூமி. [ஐளா.]

இளாபதி—1. அரசன். 2. புதன். (பாரத. குருகுலச். கூ.) [ஐளாவதி: ஐளா - பூமி, மநுவின்மகளாகிய இளை.]

இளாவிருதம்-நாவலந்தீவிலுள்ள ஒன்பது வருடங்களு ளொன்று. 'மேருப்-பூதரஞ் சூழ்வருட மிளாவிருத மாகும்' (கந்தபு. அண்டகோச. ௩௬.) [ஐளாவ்ருத.]

இளாவிருதவருடம்- நவவருடத்தொன்று.

இளாவிருதன் — அக்கினிதுருவன்குமாரர் ஒன்பதின்மரு ளொருவன். (த. நி. போ. ௩௩௰.) [ஐளாவ்ருத.]

இளி-1. அவமதிச்சிரிப்பு, இகழ்ச்சியைக் குறிக்கும் ஒருவகைச் சிரிப்பு. 2. இகழ்ச்சி. 3. இசை. 'இளிபுண ரின்சி ரெஃகுளங் கிழிப்ப' (மணிமே. கக: உ௬.) 4. இணக்கம். 5. இழிவு. 'இளிவரின் வாழாத மானமுடையார்' (வள். கஎ௦.) 6. இளியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.: 7. நெற்றியிலிருந்து பிறக்கு மிசை. 8. யாழி னொரு நரம்பு. 'இளிப்பயி ரிமிருங் குறும்பறங் தூம்பொடு' (மலைபடு. எ.) 9. குற்றம். 'இளியொருவற் கஃதிறந்து வாழ்துமெனல்' (குறள். 971.) 10. சிரிப்பு. (பிங்.) 11. பஞ்சமசுரம். (திவா).

இளிகண்—பீளைக்கண். 'இளிகண்ணனைப் புண்டரீகாக்ஷனென்றும்' (ஈடு. 3. 9. ப்ர.)

இளிச்சவாய்ப்பட்டம்—ஒன்றுந்தெரியாதவன் என்ற பட்டம்.

இளிச்சவாயன்—1. எப்போதும் பல்லைக் காட்டுபவன். 2. எளிதில் ஏமாற்றப்படுபவன்.

இளிச்சற்கண்—இளிகண்.

இளித்தல்—1. அவமதித்தல். 2. சிரித்தல். 3. பரிகசித்தல்.

இளிதல் — 1. இறுக்குதல். 'இளிந்தவீயும்' (சீவக. 1241). 2. உரித்தல். (சூடா). 3. இகழப்பட்டு எளியனுதல். (தொல். பொருள். உ௫௩. உரை).

இளிப்படுதல் — அகப்படுதல். 'இளிப்பட்டன விகைப்போர்' (கலித். 95)

இளிப்பு—1. இளித்தல். 2. நிந்தை.

இளிபு—அருவருப்பு. (மணிமே.)

இளிபுரிதல்—இகழ்ச்சிசெய்தல்.

இளிம்பு—சாமர்த்தியமின்மை. 'இடையரிளிம்புகண்டால்' (ஈடு. 3. 5. 3)

இளிவந்தசொல்—பழிச்சொல். 'இன்மையிளிவந்த-சொற்பிறக்குஞ் சோர்வு தரும்' (வள். ௪௦௪௪.)

இளிவால்—1. இழிவுவருதல். 'இளிவரின் வாழாத மாக முடையார்' (வள். கஎ௦.) 2. இழிப்புச்சுவை. (தொல். பொரு. 251.)

இளிவரவு-இழிதொழில், உலகத்தாரிகழு மிகழ்ச்சி. (வள். சகூச. பரி.)

இளிவு—1. அருவருப்பு. 'இரவும் பகலு மிளிவுடன் றரியாது' (மணிமேகலை. கூ: கூஅ.) 2. அவலச்சுவை நான்கனு ளொன்று; அது, பிறரால் இகழப்பட்டு எளியனுதல். 'இளிவே யிழவே யசைவே வறுமையென-விளிவில் கொள்கை யழுகை நான்கே' (தொல். பொருளதி. உ௫௩.) 3. இளிவரவு.

'எள்ளி னிளிவாமென் றெண்ணி' (வள். கஉகூஅ.) 4. இகழ்ச்சி. 'இளிவென்னு மேதப் பாடு' (குறள். 464). 5. இழிதகவு. (திவா).

இளை—1. இலக்குமி. 2. இளமை. (சூ. நிகண். கக: ளகரவெ. கூ.) 3. இளையென் னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத் தொகையும். 4. காவல். 'இளையினிது தந்து' (பதிற்றுப். உஅ.) 5. காவற்காடு. 'இளையுங் கிடக்குஞ் சிதைய' (பு. வெ. 5.3.) 6. கோழை. [இஃது, ஈளையென்பதன் குறுக்கம்.] 'மூக்குக் குட்சளி யிளையோடும்' (திருப்பு. கூ0.) 7. பசு. 8. தலைக்காவல் (திவா). 9. பூமி. 'இளை யெனுந் திருவினை யேந்தினன்' (கம்பரா. கிள. 119). 10. வாக்கு (நிருத்தம்). 11. வேலி. (சூ. நிகண். கக: ளகரவெ. கூ.) 12. வைவச்சுவதமநுவின் மகளும் புதன் மனைவியுமான ஒரு பெண். 'இளையெனும் பெயர் மடவா லாயின னென்ப' (பாரத. குருகுல. எ.) 13. கட்டுவேலி. 'இளைசூழ் மிளை' (சிலப். 14. 62) 14. மேகம் (பிங்).

இளைச்சி—தங்கை. 'அகிலமு முண்டார்க்கு கோரிளைச்சி' (திருப்பு. 1037)

இளைசு—இளையது.

இளைஞர்— 1. இளையோர். 'இம்பர்மற் றியாது சொல்ல விளைஞரை யழைத்த தென் றான்' (பாரத. கிருட்டிண. கஎகு.) 2. தம்பி மார்.

இளைஞன்—1. சிறுவன், இளையோன். 2. தம்பி.

இளைத்தல்—1. வலிகுறைதல். யாகசே கனு-மிளைத்த நெஞ்ச னன்றி' (பாரத. வார ணாவத. எஎ.) 2. தளர்தல். 3. தொய்ந்து போதல். 'எஞ்சினர் தமைப்போ விளைத்த பின்' (பாரத. இராசசூய. கஙஎ.) 4. மெலி தல். 5. வளக்குறைதல். 6. பின்னடைதல். 7. எளிமைப்படல்.

இளைத்தோர் — 1. எளியவர். 'மேலவ ரிளைத்தோ ராவர்' (ஞானவா. வைராக். ஙகு.) 2. மெலிவடைந்தோர்.

இளைது — இளையது. 'இதனினிளைதிது' (தொல். சொல். எஅ. சேனு.)

இளைப்படுதல் — வலையில் அகப்படுதல் (அகநா. 3. உரை).

இளைப்பாற்றல்—1. சத்திகுன்றிய ஒன் றற்குப் பின்னர்ச் சாமர்த்தியத்தை யுண் டாக்கல். 'அழிப்பிளைப்பாற்றல்' (சி. சி. க: ஙஎ.) 2. தொய்வுதீர்த்தல், இளைப்புநீக்கல். [இளைப்பு. ஆற்றல்-ஆரச்செய்தல்.] 3. விடாய் தீர்த்தல்.

இளைப்பாற்றி — இளைப்பாறச்செய்வது.

இளைப்பாறுதல் — 1. சத்திகுன்றியபின் சாமர்த்தியத்தைப் பெறும்பொருட்டு ஓய்ந் திருத்தல். 2. தொய்வுதீர்தல், இளைப்பு நீங்கல். 'இன்னமு தன்ன தண்ணீர்குடித் - தென்னற்ற கழுதாட லதுகண் டிருந்தங் கிளைப்பாறினன்' (பாரத. புட்பயாத்திரை. கஉச.) 3. விடாய்தீர்தல்.

இளைப்பு—1. தொய்வு. 'போக்கொடு வர விளைப்பு' (சி. சி. க: உரு.) 2. மெலிவு. 'எழுதிரைநீக்கிவர் தெடுத்தென திளைப்பாற- வைத்து' (மதுரை. பதிற்று. கஉ.) 3.சோர்வு. 'இளைப்பெய்த' (திவ். இயற். பெரியதிருவ. 23.) 4. கிலேசம். 'இளைப்பினை யியக்கநீக்கி' (திவ். திருக்குறுங். 18.)

இளைமை—இளமை.

இளைய — இளமைத்தன்மையையுடைய எனப் பொருள்படும் பண்படியாற்பிறந்த ஒரு குறிப்புவினைப் பெயரெச்சம்.

இளையதம்பி — இளையவனுக் கிளையவன். 'கும்பகன்பி னிளையதம்பி' (திருப்பு. ஙஎஉ.)

இளையபிள்ளையார்—கந்தசாமி. (சிவப்பிர. மங்கல. ச. உரை.)

இளையபெருமாள்—இலக்குமணன். (திவ். திருநெடுங். 21. வியா.)

இளையர்—1. இளைஞர். (பரிபா. 6. 27). 2. வேலைக்காரர். 'இளையர் விருந்தினர்' (தொல். பொருள். 193)

இளையவர்—1. இளம்பெண்கள். 2. இள மைத்தன்மையையுடைய ஆடவர். 3. வேலைக் காரர்.

இளையவள் — 1. இளமைத்தன்மையை யுடையவள். 2. தங்கை. 'மூவாமுகுந்தற் கிளையவளோ' (அபிராமி. கங.)

இளையவன்—1. இலக்குமணன். 2. இளை ஞன். 3. தம்பி. 4. முருகன். 'வேலைமே - லிளையவ னென்னவே லெறிந்த தோதுவாம்' (திருவி கடல்சுவ. க.)

இளையள்—1. இலக்குமி. (சூ. நிகண். க. ௩௬.) 2. பின்பிறந்தாள். 'இம்மையு மிளைய ளானேன்' (கந்தபு. வள். உருஎ.)

இளையன் — 1. இளமைப்பருவமுடைய வன். 'இளையனுக் - கள்ளுண்டுவாழ்வான் குடிமையும்' (திரிகடுகம். ருகூ.) 2. தம்பி. (பரிபா. 2. 21)

இளையார்—1. பெண்கள். 'முற்று விளை யார் விளையாட்டொடு' (திவ். பெரியதி. 3. 8. 8). 2. சேடியர். 'இளையார் குழாத்திடை யாள்' (சீவக. 2585).

இளையாழ்வார்—இராமாநுசர். (குருபரம் பரை.)

இளையாள்—1. இலக்குமிதேவி. (பிங்). 2. இளமைத்தன்மையையுடையவள். 3. தங் கை. 4. இளையதாரம்.

இளையான்—1. தம்பி. 2. இளமையுடைய வன். (சீவக. 1593)

இளையான்குடிமாறநாயனர் — அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவர். (பெரியபு.)

இளையெள்—முற்றுத எள். (பிங்)

இளையோன் — 1. இளஞ்சேட்சென்னி; இவன் கரிகாற்பெருவளவன் தந்தை. 2. கந்தசுவாமி. 'யானை மகளை மணந்துவரு மிளை யோன்' (திருவிளை. உக்கிர. வேல். ருஅ.) 3. தம்பி. 4. சிறுவன்.

இளைவலி—கரிக்காடு.

இற்கடை—வீட்டுவாயில். (கலித். 97)

இற்கிழத்தி — இல்லக்கிழத்தி. 'தன்னை யிகழ்தல் பொறுத்திடினும் தனதிற் கிழத்தி தனையிகழின்' (கூர்மபு. தக்கன்வேள். ருகூ.)

இற்செறித்தல் — தலைவியை வெளியே போகவிடாது வீட்டிலிருத்துதல். 'செற்ற மெய்தியே யன்னவ டன்னையிற் செறித் தார்' (கந்தபு. வள். கருஉ.)

இற்செறிப்பு—இற்செறித்தல். 'இரவுகல் வன்புறை யிற்செறிப் புணர்த்தலென்று' (அகப்பொருள். களவியல். ௩எ.)

இற்செறிப்பார்—வீட்டிற்சேர்ப்பார். (ஐங் குறு.)

இற்செறிப்புணர்த்தல் —இற்செறித்தலைத் தலைவனுக்குணர்த்தல்.

இற்செறிவு—இற்செறித்தல்.

இற்பரத்தை-காமக்கிழத்தியாகக்கொண்ட பரத்தை. (பரிபா. 6. உரை)

இற்பாலர்-நற்குடிப்பிறந்தவர். (பழ.184)

இற்பிறந்தார்—உயர்ந்தகுடிப் பிறந்தவர். 'இற்பிறந்தார்கண்ணேயும்' (வள். க0சச.)

இற்பிறப்பு — உயர்குடிப்பிறப்பு. 'இற் பிறப்பென்பதொன்றும்' (இராமா. திருவடி தொ. சுஉ.)

இற்புலி—பூனை. (தைல. தைலவ. க.)

இற்ற— அழிந்தனவெனப் பொருள்பட்டு நிற்கும் இறு என்னும் வினையடியாற்பிறந்த அஃறிணைப் பலவின்பாலில் வரும் ஒரு வினை முற்று. 'இற்றபித்திகையின்சூழல்' (கந்தபு. நகரழி. அ.)

இற்றது—ஒழிந்தது. இஃது இறு என் னும் வினையடியாற்பிறந்து அஃறிணை ஒன் றன்பாலிலே வரும் ஒரு வினைமுற்று. 'இற் றது கொல்லெம தின்ன வின்றெனு'(கந்தபு. திருவவதார. எச.)

இற்றி—1. இத்திமரம் (ஐங்குறு). 2. ஊன் (பிங்).

இற்றிசை—இல்லறம். (சிந்தா.)

இற்று-1. இத்தன்மைத்து எனப்பொருள் படும் ஒரு குறிப்புவினைமுற்று. 'இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்' (நன். பொதுவி. ருஅ.) 2. இறு என்னும் வினை யடியாற் பிறந்து செய்து என்னும் வாய் பாட்டிலே வரும் ஒரு வினையெச்சம். 'மாளி கை-யிற்றுவிழ்தலும்' (கந்தபு. நகரழி. சுஎ.) 3. ஒரு சாரியை. 'பதிற்றுப்பத்து' (நன். உசச)

இற்றுச்சொட்டுதல் — நீர் இடைவிட்டுச் சொட்டுதல்.

இற்றுப்போதல்—1. அழுகிப்போதல். 2. முரிந்துபோதல். 3. நைந்துபோதல்.

இற்றும்—மேலும், இன்னும். 'இற்றுங் கூறுவேன்' (பெருங். வத்தவ. 6. 38)

இற்றுவிழல்—நைந்துவிழல்.

இற்றை—இன்று. [இன்று; ஐ.] 'இற்றை யில் விளித்தனை யேகு நீயென்றான்' (கந்தபு. தெய்வயானை. ரு.)

இற்றைத்திநம்—இற்றைநாள்.

இற—1. இறவென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும். 2. இறால். ['இறு' என்ப தன் விகாரம்.] 3. இறக்கும்படி. 'எய்யு மாறனை விடுத்தன மவனையு மிறச்செய் தான்' (கந்தபு. மோக. ௩.)

இறக்கம்—1. இறங்குதுறை. 2. இறங்குந் தன்மை. 3. போகிற வழி. 4. மரணம். 5. மிருகங்கள்செல்வழி. 6. இறங்குதல். 7. சரிவு. 'ஏற்றமும் இறக்கமுமான வழி' 8. நிலைதவறுகை. 'இறக்கமுற் றனென வேக்க மெய்தினன்' (கம்பரா. சடாயுகா. 19)

இறக்கல்—இறக்குதல்.

இறக்கிடல்—குனிதல். 'தம்மிற்றம் முகத்தை நோக்கார் தலையிறக் கிட்டுச் செல்வார்' (திருவிளை. திருமண. ௧௨௫.)

இறக்கு—1. இறக்குகை. 2. இறக்கென் னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.

இறக்குதல்—1. இறங்கச்செய்தல், உயர்ந்த இடத்திலிருந்து கீழேவரச்செய்தல். 'சனங்களைத் தோணியி லிறக்கினன்' 2. கவலையொழித்தல். 3. கீழ்ப்படுத்தல். 4. சாதல். 'எல்லையி றுயரொடு மிறக்கு மேகொலாம்' (நைடத. அன்னத்தைக்கண்ணுற்ற. ௬௬.) 5. தலை தோள் முதுகு ஒக்கலை முதலியவற்றிலிருக்குஞ் சுமையையகற்றிக் கீழேவைத்தல். இது உருவகமாகவும் வரும். 'விக்கிரமன்றோளேந்து மண்பொறை யிராசசேகரன் புயத்திறக்கி' (திருவிளை. மாறியா. ௨). 6. தைல முதலியவை வடித்தல். 7. கெடுத்தல். 'இத்தர்மமிறக்குவான்' (S. I. I. i. 77). 8. கொல்லுதல். 'எரிமாலை வேனுதியி னிறக்கி' (சீவக. 961). 9. விஷம், நோய்முதலியன தணித்தல். 'விஷத்தை யிறக்கினன்'

இறக்குதுறை—இறங்குதுறை.

இறக்குமதி—1. இறக்குஞ் சரக்கு. 2. இறக்குகை.

இறக்கை—இறகு.

இறகர்—1. இறகு. [மொழியிறுதியிலே உகரம் நின்றவிடத்து அர் வந்து ஒத்துநடக்கது.] 2. சிறகு.

இறகு—1. சிறகு. 'குன்றிற கரிந்தவன்' (தணிகைப். களவு. ௨௨௭). 2. தனியிறகு. 3. மயிற்பீலி (திவா).

இறகின்முள் — இறகின் அடிக்குருத்து. (சூடா.)

இறகினடிமுள்—இறகின்முள் (பிங்).

இறகுமஞ்சள்—சாப்பிராவிரை.

இறகுளர்தல்-சிறகடிக்கொள்ளுதல் (புறப் பொரு).

இறங்கண்டம்—குமுறலண்டம் (சீவரட். ௧௧௨).

இறங்கமாட்டான்—ஒருவகைக் கார்நெல்.

இறங்கர்—குடம் (பிங்கல. ௧௭௩௧).

இறங்கல்—1. இறங்குமிடம். 2. மேலேயிருந்து கீழேவருதல். 3. அடைபடுகை. (S. I. I. i. 119). 4. அரசிறையின்மை. 5. ஒரு நெல்.

இறங்கலிடுதல் — 1. போதல். 'ஏதங்களாயின வெல்லா மிறங்கலிடுவித்து' (திவ். பெரியாழ். 5. 2. 8). 2. தருமம் பூசை முதலியன நிறுத்துதல். 'தானத்தை இறங்கலிட்ட இதுவும்' (S. I. I. i. 119.)

இறங்கழிஞ்சில்—அழிஞ்சிலி னொருவகை.

இறங்குதல்-1. கீழ்நோக்குதல், தாழ்தல் (ஐங்குறு). 2. கீழ்ப்படுதல். 3. வளைதல். 'இறங்குகதிரலம்வருகழனி' (புறநா. ௬௮). 4. கரைசேர்தல். 5. உட்செல்லுதல். 6. தங்குதல். 7. விஷம் நோய் முதலியவை தணிதல். 8. விலைகுறைதல். 9. நிலைகுலைதல். 'இறங்கு கண்ணிமையார்' (சீவக. 248.)

இறங்குபொழுது—பின்பகல்.

இறங்குமட்டான்—ஒரு நெல்.

இறங்குமிராசி — கடகமுதற் றநுவிறுன விராசி.

இறங்குமுகம்—தணியும் நிலை.

இறஞ்சி—1. அவுரி. 2. ஒருவகைத்துகில். (சிலப். 14. 108. உரை).

இறட்டுதல்—முகந்து வீசுதல். (திவ். திருமாலை. 36. வ்யா.)

இறடி—1. கருந்தினை. (சூ. நிகண். ௪:௫௦.) 2. தினை. 'குரூஉக்கண் ணிறடிப் பொம்மல் பெறுகுவிர்' (மலைபடு. ௧௬௯).

இறத்தல்—1. எட்டாமற்போதல், கடத்தல். 'மநத்தொடு வாக்கிறந்த-சித்துரு' (சி. சி. ௬:௫). 2. கழிதல். 'இறந்தநீள் காலஞ் செய்ய' (ஞானவா. தாமவியாள. ௩௫). 3. சாதல். 'இறந்தா ரிறந்தா ரனையர்' (வள். ௩௧௦). 4. நெறிகடந்துசெல்லல். 'இறந்தார் வா-யின்னுச்சொ னோற்கிற்பவர்' (வள். ௧௬௫). 5. போதல். 'இல்லிறப்பான்கண்' (வள். ௧௪௬). 6. மிகுதல். 'இறந்தமைந்த சால்புடைய ராயினும்' (வள். ௯௫௦). 7. வழங்காதுபோதல். 'இறந்தது விலக்கல்' (நன். பொதுப்பா. ௧௪). 8. நீக்குதல். (பரிபா. 17. 31.)

இறந்தீ – போதியென்னும்பொருட்டாகிய இறவென்னும் வினையடியாற்பிறந்த ஓர் எதிர்காலவினைமுற்று. 'இன்னினி யமர்செய விறத்தி யென்னினும்'(கந்தபு. சூரனமைச்சி. சச.)

இறந்த—கடந்த. 'புலவரையிறந்தபுகழ்' (புறநா. உக.)

இறந்தகாலம் — சென்றகாலம். 'இறந்த காலந் தருந்தொழி லிடைநிலை' (நன். கசஉ.)

இறந்தகாலவினைத்தொகை – சென்றகால வினை தொக்குநிற்பது.

இறந்தகாலவினையெச்சம்—உ, இ, இய், பு, ஆ, ஊ, என என்னும் ஏழுவிகுதிகளிலே ஒன்றுபெற்று இடைநிலைபெற்றும் பெறாதும் வரும் தெரிநிலைவினையெச்சம். செய்து, புல்லி, போய், செய்குபு, செய்யா, செய்யூ, செய்தென என்பதிற்போல வரும்.

இறந்தது — 1. மிகுந்தது. 'இறந்தோர் பொருண்மைய திரண்டின் வன்மையும்' (கந்த பு. மாயையுபதேச. அ). 2. செத்தது.

இறந்ததுதழீஇயவெச்சவும்மை — செல்காலநிகழ்ச்சியை விளக்கிநிற்கும் உம்மை.

இறந்ததுவிலக்கல்—முப்பத்திரண்டு தந்திரவுத்திகளில் ஒன்று; அஃது: முற்காலத்து வழக்கியும் பின் வழங்காதொழிந்ததனை நீக்கிவைத்தல். (நன். பொதுப். கச.)

இறந்தவினைவிலக்கு — முன்னவிலக்கென்னு மலங்காரத்தி னொருபேதம். அஃது இறந்தகாலவினையோடு கூடிவரும் விலக்கு. (தண்டி. சஉ. உரை.)

இறந்தன்று—1. மிக்கது. 'வியப் பிறந்தன்றே' (புறநா. உகஎ). 2. இறந்தது.

இறந்திரீ—இத்திமரம் (மலை).

இறந்திவாய் — கழிந்துபோகின்றவளே. (கலித்தொகை. ருசு.)

இறந்து–1. கடந்து (ஐங்குறு). 2. செத்து.

இறந்துபடுதல் — சாதல். 'அதனுலிவ ளிறந்துபடும்' (வான. அ. உரை.)

இறந்துபாடு–இறந்துபடுதல். 'இறந்துபாடாயினன்கொ லேகிய மதன னென்னு' (கந்தபு. காமதகன. கக.)

இறந்தோர்—1. நெறிகடந்தோர். 2. மரித்தோர்.

இறந்தோர்சேர்வனம்—மயானம்.

இறப்ப—மேன்மேலும், மிகவும். 'குறிப்பறிவுறாது குறுகியாக்கவளோ டிறப்பக் கூறுவது' (அகப்பொரு. ஒழிபி. கூஉ).

இறப்பு—1. அழிகை. 2. இறந்தகாலம். 'இறப்பெதிர்வு நிகழ்வெனக் கால மூன்றே' (நன். பொதுவி. கூக). 3. கடத்தல். 4. கெடுகை. 5. தொழிலதுகழிவு, அஃதாவது: தொழின் முற்றுப்பெற்ற நிலைமை 'இறப்பி னிகழ்வி னெதிரி னென்ற, வம்முக் காலமும்' (தொல். சொல். ககஎ. சேனு). 6. போக்கு. 7. மரணம். 'எப்பொழு தத்தினு மிறப்பின் றுயினன்' (கந்தபு. மார்க்கண்டேய. உஅ). 8. மிகுதி. 'இறப்பேபுரிந்ததொழிற்றும்' (வள். கஎஎ). 9. மிகை, குற்றம். 'பொறுத்தலிறப் பினை' (வள். கருஉ). 10. வழக்கமில்லாது போதல். 11. வீட்டிறப்பு. 'சில்வலையும் பல வாரும் முன்னிறப்பிற்றூக்கும்' (மீனா. குறம். கக). 12. மோக்ஷம். 'இறுகலிறப்பென்னும் ஞானிக்கும்' (திவ். திருவாய். 4. 1. 10.)

இறல்—1. அழிவு. 'இறலீனு மெண்ணாது வெஃகின்' (வள். கஅ0). 2. இறுதியைச் செய்தல், இறத்தல். 'இறன்முறையா - னேதம் பலவுந் தரும்' (வள். அஅ). 3. கிளிஞ்சில் (திவா). 4. கேடு. 5. நரம்பு. 6. முரிதல். 7. விசை. 8. சிறுதூறு (சூடா).

இறலி—1. இத்தி (பிங்). 2. கொன்றை. (மலை). 3. சத்ததீவுகளி லொன்று. 'இறலி யப்பெருந் தீவிடை யுறைபவ ரிவர்கள்' (இராமா. படைக்காட்சி. எ). 4. மருது (மலை).

இறவம்-இறான்மீன். 'இறவக்கழிநெய்தலக் கானலின் ஞாங்கர் மொய்த்த-விறவப் புலவு கழுவிர்த்துறைப் பொன்னி சேர்ந்தான்' (திருவிளை. வரகுண. கக.)

இறவாணம்—ஒரு வாச்சியம்.

இறவாமை—இறப்பின்மை. 'பிறவாமை யென்றைக்கு மிறவாமையாய்வந்து' (தாயு. பரிபூரண. உ.)

இறவாரம்—தாழ்வாரத்து மேற்கூரையின் முன்பாகம்.

இறவி—இறத்தல். 'இறவிக்கஞ்சிச் சிஃ றுபதர்கண் மாதவ - முறையிற் செய்தார்' (காஞ்சிப். இறவா. உ.)

இறவின்மை — இறைவ னெண்குணத் தொன்று (பிங்).

இறவிறுணங்கல்—இறான்மீனின் வற்றல். (மணிமே).

இறவு—1. இறால். 'பறவை தாமரையிருந் திற வருந்துவ' (பெரியபு. திருக்குறிப்பு. எ). 2. இறுதி, முடிவு. 'இறவிலே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்' (திருவாச. பிடித்த பத்து. ௬). 3. உற்றசமயம். 4. எல்லை. 5. செல்லுகை. 6 தேன்கூடு. (ஞானவா. தாருக. 69). 7. மிகுதி. 8. வீட்டிறப்பு. 9 சாவு. 'பிறவினோ டிறவு மானான்' (தேவா. 447. 1). 10. நீக்கம். 'இறவுபார்க்கின்ற' (கம்பரா. சடாயுவு. 20 )

இறவுள்—குறிஞ்சிநிலம்.

இறவுளர் — குறிஞ்சிநிலமாக்கள். 'புண்டவாதவே லிறவுளர் புனத்தெரி மடுப்ப' (திருவிளை. நாட்டு. ௪அ.)

இறவை—1. இறவு. 2. இறைகூடை (சூ. நிகண். கக. றகரவெ. க). 3. ஏணி (சூ. நிகண். கக. றகரவெ. க). 4. காடை. 5. விற்புட்டில் (சூ. நிகண். கக: றகரவெ. க.)

இறா—இறவுமீன் (ஐங்குறு).

இறாஞ்சுதல்—1. உராஞ்சுதல். 2. தட்டியெடுத்தல். 3. பறவையறைதல். 'பருந்து இறாஞ்சல்'. 4. பறித்தல். 'பூமியை மஹாபலி போல்வார் இறாஞ்சிக்கொள்ள' (ஈடு. 2. 8. 7.)

இறாட்டாணியம்—இடுக்கண்.

இறாட்டுதல்-1. உரைசுதல். 2. பகைத்தல்.

இறாத்தல் — 1. ஆறுபலங்கொண்டநிறை. 2. மீன்றீர்வைத் துறை.

இறாத்தலம் — இறவுமீன் வைத்து விற்குமிடம்.

இறாய்த்தல்-பின்வாங்குதல். 'அவ்விருளுக்கிறாய்த்து அங்கே இங்கே சஞ்சரியாநிற்க' (ஈடு. 2. 1. 8.)

இறால் — 1. இடபவிராசி. 2. இறவுமீன். 3. எருது (பிங்). 4. கார்த்திகைநாள். (வீமேசருள்ளமுடையான். கடு). 5. தேன்கூடு. 'கூனிறால் பாயக் குவளை தவளைவாய்த்-தேனிறால் பாயுந் திருநாடா' (நளவெண்பா. கலிநீங். க௪.)

இறாலியர் — அழியாதொழிக என்னும் பொருளையுடைய ஒரு வியங்கோள்வினை முற்று. (பதிற்றுப். ௪௦).

இறாவில்—வெள்ளீயம்.

இறாவுதல்—வாட்டி மயிர்போகச் சீவுதல். 'காடுபடுதீயி-னளிபுகை கமழா திறாயினிர் மிசைந்து' (மலைபடு. உ௪௬.)

இறீஇயர் — கெடுவதாக. 'இறீஇயரென் னுயிரென' (புறநா. உக௦.)

இறுக்கம் — 1. அழுத்தம். 2. இளகாத ஒன்றுகை. 3. கடினம். 4. கையழுத்தம். 5. நெருக்கம். 6. பிசுனித்தனம். 7. வெப்பம்.

இறுக்கர்—பாலைநிலமாக்கள் (சூடா).

இறுக்கல்-1. அழுந்தக்கட்டல். 2. இறுகச் செய்தல். 3. தற்றல் (சூ. நிகண். எ: எ௬). 4. உறுப்புக்களை நெருங்க ஒன்றும்படி செய்தல். 5. எடுக்கல். 6. கடிந்துகொள்ளல். 7. திறைகொடுத்தல். 'இறுக்கல்வேண்டுந் திறையே' (புறநா. ௯எ.)

இறுக்கன்—உலுத்தன்.

இறுக்கு—1. இறுக்கிய கட்டு, இறுக்கென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. இறுக்கிய முடிச்சு. 3. உறுக்குகை.

இறுக்குதல்—1. அழுந்தக்கட்டுதல். 'புயங்களாற்பிடித்திறுக்கினன்' (கம்பரா. கும்பக. 266.) 2. இறுகவுடுத்துதல் (சூடா). 3. ஒடுக்குதல். 4. உள்ளழுத்துதல். 'இறுக்காணி காட்டி' (திருப்பு. 695.) 5. உறையச்செய்தல்.

இறுக்குவாதம் — வாதநோயில் ஒன்று. அது உடலை வளைத்து வருத்தும். 'இறுக்குவாதம் பற்றினார்போலே' (ஈடு. 3. 5. 2).

இறுகங்கியான்—கையாந்தகரை (மலை).

இறுகத்தழுவல்—இறுக அணைத்தல்.

இறுகநீக்குதல் — கைவிடுதல். (சிந்தா. 1237).

இறுகல்—1. இறுகுதல், கெட்டிப்படுதல். 'இகப்பொருளின் வாதனையி னிறுகல் பந்தம்' (ஞானவா. சுகர். உக.) 2. பதுமராகமணியின் பதினாறுவகைக்குற்றங்களு ளொன்று. (திருவி. மாணிக்க. ௪௩. உரை.) 3. நிலைபெறாதே கொள். (சிந்தா).

இறுகுதல்—1. அழுந்துதல். 2. இளகிய நிலைநீங்கல். 3. உறுப்புக்கள் நெருக்கமாயொன்றுதல். 'இந்துவின் குலத்து வேந்தேயெம்மைநீ யிறுகக் கட்டி' (சேதுபு. சேதுமா. ௯௦.) 4. கடினமாதல். 'வெயிற்பட்டு நிலமிறுகிற்று' 5. நெருங்கல். 'வாழை-யிறுகுகுலை முறுக' (மலைபடு. க௩உ.) 6. முரணுதல்.

7. உறுதியாதல். 'இறுகவேண்டும் பாவனே' (ஞானவா. வேதாள. 12.) 8. நிலைபெறுதல். 'அச்சத்திறுகல் நீ' (சீவக. 946.) 9. மூர்ச்சித்தல். 'இறுகிமெய்ம் மறந்து சோர்ந்தாள்' (சீவக. 299). 10. மரகதக்குற்றமெட்டனுள் ஒன்று. (சிலப். 14. 184 உரை).

இறுங்கு—ஒருவகைச் சோளம். 'ஐவனக் குரல் தினைக்கதி ரிறுங்கவை யவரை' (இராமா. சித்திரகூட. ௩௪.)

இறுத்த–1. தைத்த. 'அம்புசென் றிறுத்த' (புறநா. கக). 2. முடித்த. (பெரும்பாணு. ௪௪௬.) 3. விட்ட, தங்கிய. (புறப்பொரு).

இறுத்தரல்—வருதல். 'இளவேனி லிறுத்தந்தபொழுதினுன்' (கலி. ௩௪.)

இறுத்தல்—1. அரசனுக்குரிய வரி முதலிய கொடுத்தல். 2. ஒடித்தல். (திவா.) 3. கடனைக்கொடுத்தல். 'கொடைக்கடனிறுத்த கூம்பாவுள்ளத்து' (பெரும்பா. ௪௪௬.) 4. சங்கரித்தல். 'இறுத்தல்செய்திடுந் தன்மையா லீசனேபோல்வ' (கந்தபு. சிங்க-வதை. ௩அ௪). 5. சொல்லுதல். 6. தங்கல். 'கழி நாரைவரையிறுப்ப' (பொருநரா. உஉ௫.) 7. தெளித்தல். 8. போய்ச்சேர்தல். 'ஏவிய செஞ்சரம்-வேறேவர் கண்ணு மிறுத்திலவே' (கந்தபு. சூர-வதை. கூ௪.) 9. முடித்தல், அந்தமுறச்செய்தல். 'அவ்வுரையிறுக்குமுன்னர்' (கந்தபு. சுரம். ௩௪.) 10. முரித்தல். 'விதுரன் மூரிவில்லிறுத்ததும்' (பாரத. கிருட்டிண. உ௬௪). 11. வடித்தல். 'பார்க்க வருந் துகளாக்கி யதிலிட்டுச் சிறுகவட்டிப் பதத் திறுத்துப் பருகவழித் தங்கமெலாந் துவாலையிடுசீதசுரம்பறக்குந் தானே' (தைல.தைலவ. ௩உ.) 12. விடைசொல்லல். 'இல்லெனுந் தீச்சொ லிறுத்தனர் தாமும்' (கல்லா. 74). 13. வெட்டல். 14. உடைத்தல். 'இரவிகளி லொருவன்பல் லிறுத்துக் கொண்டார்' (தேவா. 1233. 9). 15. அழுத்தல். 'ஏழு லோகத்தையுமிறுக்க' (கம்பரா. மூலபல. 12). 16. வீழ்த்துதல். 'என்படு மிறுத்தோன்' (பாரத. பழம். 3). 17. எறிதல். 'முனைகெட விறுத்த வென்வே லாடவன்' (பு. வெ. 3. 24. கொளு). 18. வினுதல். 'எங்கே மகளென் றிறுப்பாள்' (வெங்கைக்கோ. 319). 19. அம்புமுதலியன தைத்தல். 'அம்புசென் றிறுத்த வரும்புண் யானை' (புறநா. 19. 9).

இறுதல்—1. அறுதல். 'கட்டிய தாம்பிற' (திருவிளை பழியஞ்சு. ௩௧.) 2. இறத்தல். 'மூன்றுகோடி யசுரருமுடனேசேர-விற்றது கண்டேன்' (பாரத. நிவாத. க௫௫.) 3. ஒடிதல். 'நகமிறுமுனைவாய் - வச்சிரமனையது' (பாரத. நிவாத. க௩௬.) 4. கெடுதல். 5. முடிதல். 6. முறிதல். 'பீலிபெய் சாகாடு மச்சிறும்' (குறள். 475). 7. தளர்தல். 'பாத வைப்பிற' (இரகு. தேனு. 45.)

இறுதி—1. அழிவு. 'உயிர்க்கிறுதி யாகி விடும்' (குறள். 476). 2. எல்லை, அளவு, முடிவு. 'இறுதியில்லதோர் விலங்கின துருவு கொண்டு' (கந்தபு. அசுரர்தோற்று. உ௧.) 3. மகாசங்காரம். 'இருவருந்தம் - முறுதியின்றிரென்னிலிறுதி தானுண்டாகாதாம்' (சி. சி. க: ௩௫.) 4. மரணம். 'இறுதியே வரினும்' (பாரத. பழம்பொருந்து. ௧௭.) 5. முடிந்த காலம். 'சொன்னதோரிறுதியின்' (கந்தபு. சூரனமைச்சி. ௫௪.) 6. முடிந்தவிடம், கடையிடம். 'ஆவியரழவிறுதி' (நன். உயிரீ. கக.)

இறுதிக்காலம் — 1. மகாசங்காரகாலம்; அது, 'இறுதியாங்காலந்தன்னிலொருவனே' என்பதனுற் பெறப்படும். (சி. சி. க: ௩௫.) 2. மரணகாலம்.

இறுதிநிலைத்தீபம்–தீவகவலங்காரவகையிலொன்று; அஃது, ஒருசொல் இறுதியிலே நின்று முன்வரும் சொற்கள் பலவற்றேடும் பொருந்திப் பொருள்விளைப்பது. 'எண்பெயர் முறைபிறப் புருவ மாத்திரை, முதனி றிடை நிலை' என்பதிலே நிலையென்னுஞ்சொல் இறுதியிலே நின்று முதல் என்பதனேடும் ஈறு என்பதனேடும் இடையென்பதனேடுஞ் சேர்ந்து பொருள்விளைத்தமை காண்க' (நன். எழுத்ததி. உ.)

இறுதிநிலைத்தீவகம்– } இறுதிநிலைத்தீபகம்; இதைக் கடை
இறுதிநிலைவிளக்கு– } நிலைத் தொழிற் றீபகம் என்பர். (தண்டி. ௩அ. உரை.)

இறுதியிலின்பம்–வீட்டின்பம். 'இம்மையு மறுமையு மிறுதியிலின்பமும்' (மணி. 3. 96.)

இறுதிவிளக்கு—கடைநிலைவிளக்கு.

இறுதிவேள்வி—அக்கிேட்டி. 'அன்னையர்க் கிறுதி வேள்வி விதிமுறை யாற்றினனே' (இரகு. அவதா. ௪௪).

இறுநாகம்––இலாமிச்சை (மலை).

இறுப்ப—இடக்க. (பொருநரா. ௨௨௫.)

இறுப்பு— 1. ஆவண ஓலை. 2. கடனைக் கொடுத்துத் தீர்த்தல். 3. குடியிறை. (சீவக. 2570.) 4. தங்குகை.

இறுபு—இற்று. (ஐங்குறு.)

இறும்பி—எறும்பு.

இறும்பு — 1. இளமரக்காடு. 'மஞ்ஞை யாலுமரம்பயிலிறும்பின்'(பெரும்பா. ௪௯௫). 2. காந்தள். (மலை.) 3. குறுங்காடு. 'அகன் மலை யிறும்பிற் றுவன்றிய யானை' (மலைபடு. ௨௦௫). 4. சிறுமலை. 5. கார்த்திகைப்பூ. 6. தாமரை. (சூ. நிகண். ௧௧. றகரவெ. ௧௨.) 7. தூறு. (பிங்). 8. மலை. (திவா.) 9. வண்டு. 10. அதிசயம். (பிங்.)

இறும்பூது — 1. அதிசயம். 'இறும்பூது கருவிய வின்குரல் விறலியர்' (மலைபடு. ௩௫௮). 2. சிறுதூறு. (சூ. நிகண். ௧௧: றகர ௧௨.) 3. தளிர். (சூ. நிகண். ௧௧: றகரவெ. ௧௨) 4. தாமரை. 5. தீபம். 6. பித்திகை. 7. பெருமை. (சூ. நிகண். ௧௧: றகரவெ. ௧௨.) 8. மலை. (சூ. நிகண். ௧௧: றகரவெ. ௧௨.) 9. வண்டு.

இறுமாத்தல் — 1. அகங்கரித்தல். 2. பெருமைபாராட்டுதல். 3. செருக்கடைதல். 'மூவரென் றேயெம் பிரானொடு மெண்ணி விண் ணாண்டுமண்மேற்-றேவரென் றேயிறு மாந்தென்ன பாவந் திரிதவரே' (திருவாச. திருச்சதக. ௪.) 4. நிமிர்தல். 5. மிகமகிழ்தல்.

இறுமாப்பு—1. அகந்தை. 2. ஏமாப்பு. 3. நிமிர்ச்சி. 4. பெருமிதம். 'யாவர்க்குமே லானேனென்றிறுமாப்பெய்தி' (சி. சி. ௧௨. ௧.) 5. மிகுமகிழ்ச்சி. 'வண்டுளருந் தண் டுழாய் மாயோ னிறுமாப்பும்' (திருவிளை. வெள்ளை. ௧௪.)

இறுமுறி–1. கிழித்த உறுதி, மாட்டறைந்த உறுதி. 2. தீர்ந்துபோனபத்திரம்.

இறுமுறை—1. முடியுமுறை. 'இறுமுறை யெழுச்சியி னெய்துவ தெல்லாம்' (சிந்தா. நாம. ௩௦௪) 2. வருந்துந்தன்மை. (சிலப்.)

இறுவதஞ்சாமை — வணிகரெண்குணங் களுளொன்று; அது: நட்டத்துக்கஞ்சாமை. (பிங்).

இறுவரை—1. அழியுங் காலம், இறக்குங் காலவெல்லை. 'மார்க்கண் டப்பெயர்ச்-சிறுவ னுக்கிறுவரை செப்பு மென்னவே' (கந்தபு. மார்க்கண்டேய. ௨௧௧.) 2. பக்கமலை. (ஐங் குறு.) 3. பெரியமலை. (ஐங்குறு). 4. முடி விடம், கடைசியிடம். 'இருடுங் கிறுவரை' (கலி. ௪௩.) 5. அடிவாரம். (குன்றவிறு வரைக் கோண்மா' (கலித். 86.)

இறுவாக—இறுதியாக. (சூடா. 12. 98).

இறுவாய்—1. முடியுமிடம், அந்தம். 'எழு வா யிறுவா யிலனுகலானும்' (சி. சி. ௧: ௪௪. சிவஞாந.) 2. மாணம். 'இறுவாயெய்த' (கந்தபு. அசுரேந். 58.)

இறே—பிரசித்தி, தெளிவு முதலியவற் றைக் குறிக்குஞ் சொல். (ஈடு. 2. 1. 1.)

இறை— 1. அணு. 2. அரசன். 'இறை கடிய னென் றுரைக்கு மின்னாச்சொல்' (வள். ௫௬௪). 3. அரசியல். 'இறை முறைசெயு நாளில்' (திருவிளை. மாறியா. ௩.) 4. அற் பம். 'ஏந்திளவனமுலை யிறைநெரித்ததூஉம்' (மணிமே. ௧௮: ௬௯). 5. இறகு. (சூ.நிகண். ௧௧. றகரவெ. ௧௧.) 6. இறந்துபடுதல். 'பிரிந் திறை சூழாதி யைய' (பாலைக்கலி. ௧௮. உரை.) 7. இறைப்பொழுது, அற்பகாலம். 'அணங்கையில்வைத் - திறையும் பிரிவதற் கெண்ணுகிலேன்' (வாண. ௨௫௦). 8. தலை மை. (பிங்.) 9. இறையென்னேவலும், தெரி நிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 10. உயர்ச்சி. 'ஏந்துகொடி யிறைப்புரிசை' (புறநா. ௧௭.) 11. உயர்ந்தோன். (சூ.நிகண். ௧௧. றகரவெ. ௧௧.) 12. ஊழித்தீ. 13. எப் பொருட்குமிறைவன். 14. கடமை. (திவ். திருவாய். 5. 3. 8.) 15. கடவுள். 16. கடன். (சூ. நிகண். ௧௧. றகரவெ. ௧௧.) 17. காலவிரைவு. 18. குடியிறை. 'அரசனுக்கு இறைப்பொருள் ஆறிலொன்றாயிற்று' (வள். ௪௩. உரை.) 19. கை. [ஆகுபெயர்.] (சிந்தா. காந்தரு. ௧௬௪.) 20. கையிலணியுந் தொடி. [ஆகுபெயர்.] 'வீங்கிறை வடுக்கொள வீழுநற் புணர்ந்தவர்' (மருதக்கலி. ௬௬.) 21. கையிறை. (சூ. நிகண். ௧௧: றகரவெ. ௧௧). 22. கைவிரல். 'இறைநிலமெழுதுமுன்' (கந்தபு. அவையட. ௧.) 23. சந்து. 'வணங் கிறைப் பணைத்தோள்' (மதுரைக்கா. ௪௧௪.) 24. சந்தையுடைய முன்கை. 'வணங்கிறைப் பணைத்தோள்' (புறநா. ௩௨.) 25. சிவன். 'அவனே தானே யாகிய வந்நெறி - யேக னாகி யிறைபணி நிற்க' (சிஞானபோ. ௧௦)

26. சிறுமை. 27. தங்கல். 'வண்டிறை கொண்ட கமழ்பூம்பொய்கை' (மதுரைக்கா. உருரு.) 28. தலை. (சூ. நிகன். கக: றகரவெ. கக.) 29. தலைமையானது.'படைக் கலத் திறையை யீந்தான்' (கந்தபு. குமார புரி. எரு.) 30. நடுவுநிற்றல், நீதிசெய்தல். 'ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந்து' (வள். ருசுக.) 31. நீர்முதலியன இறைத்தல். 'இறைத்தொறு மூறுங் கிணறு' (பழமொ. சாரு). 32. நுட்பம். 33. நோய். 34. பிரமன். (பிங்). 35. பெருமை. 36. மறுமொழி. 'வினு விறை' (நன். பொது. உச). 37. மாமரம் (மலை). 38. முன்கை. 'வணங்கிறைவளையூர' (பாலைக்கலி. சரு). 39. மூத்தோன் (பரிபா. 15. 8 . 40. வசித்தல். 'உடன்றிறைகொள் புள்ளொடு விலங்கலறி யோட' (திருவி. மாயப். அ). 41. வருத்தம் (வள். அசஎ). 42. விட்டுணு. 43. விடை. 44. வீட்டிறப்பு. 'தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த-குறி யிறைக் குரம்பை' (பெரும்பா. உருச). 45. வேற்றரசர் கொடுக்குந் திறை. 'எத்திசை நிதியமுமிறைகொண்டு' (சிந்தா. கநக. சாரு). 46. தலைவன் (திவா). 47. கணவன். 'நப் பின்னைதனக்கிறை' (திவ். பெரியதி. 2. 3. 5). 48. ஆசனம். 'இறையிடை வான்முறையேறி' (கம்பரா. அயோத். மந்திர. கஉ). 49. விரல் வறை. 'இறைக்கரஞ் சிவப்பெய்திட' (இரகு நாட்டுப். 34). 50. விரலிறையளவு. 51. உட லுறுப்பின் மூட்டுவாய். 'இறைகளவை நெறு நெறென' (திவ். பெரியதி. 5. 10 4). 52. மூலை. 'முடங்கிறை' (முல்லை. 87.) 53. வாளின் உறை. 'வாய்ந்தவிறைவிட்டால் மரு வலர்கள் மார்புறையாப் பாய்ந்து' (கூளப்ப. 45). 54. கூட்டம். (தக்கயாகப். 638. உரை).

இறைக்கட்டு — வரி. 'இறைக்கட்டும் தவிர்த்து' (S. I. I. Vol 414.)

இறைக்கள்ளன்—இறைப்பிளவை.

இறைக்குடி—வரிகொடுப்போன். (சிலப். 4. 9. உரை.)

இறைக்குத்தல்–கண் புரட்சியற்றுநிற்றல்.

இறைக்குத்து — சாகுந்தருணத்தில் கண் அசைவற்றுநிற்கை.

இறைகாவல்—தலையாரிக்குரிய வரி. (I. M. P. Tp. 121–2.)

இறைகிழவன்—இறைவனுதற்றன்மையை யுடையவன் (பதிற்றுப்).

இறைகுத்தல்–1. விரலிறையா லளவிடல். 2. மதிப்பிடல்.

இறைகூடல்–அரசாளுதல். 'ஈறும் பேறு மிருந்திறை கூடி' (பொருந. எகூ.)

இறைகூடை–நீரிறைக்கும் கூடை (திவா).

இறைகூர்தல்—தங்குதல் (ஐங்குறு).

இறைகொள்ளுதல்–தங்குதல். 'தேனிறை கொள்ளு மிரும்பல் யானை' (புறநா. கஎ)

இறைகோளல்—தங்குதல். 'இறைகொ ளில்லிடைத் தெய்வதம்' (கந்தபு. நகர்பு. எஎ.)

இறைச்சி—1. நேயம். 'வீழுநர்க்கிறைச்சி யாய்' (கலி. அ.) 2. மாமிசம். (பிங்கல. உருசக.) 3. இறைச்சிப்பொருள். 4. கருப் பொருள்.

இறைச்சிப்பொருள் — 1. கருப்பொருளி னுள்ளே தோன்றும் பொருள்; 'அஃது: அங்கியற்பொருள், திணைநிலைப்பொருள், வன் புலப்பொதுப்பொருள், மென்புலப்பொதுப் பொருள், பெருமைப்பொதுப்பொருள், சிறுமைப் பொதுப்பொருள் என ஆறு என் பர். அவற்றுள், அங்கியற்பொருளாவது: அந்நிலத்திற்கு அங்கமாம்பொருள். அவை யாவன: குறிஞ்சிநிலத்துச் சந்தனம், பொன், வெள்ளி முதலியனவும், நெய்தனிலத்து உப்பு, இப்பி, நந்து, அலவன், வலைமுதலி யனவும், பாலைநிலத்துச் சிழ்கு, நாய், குருவி, சில்வீடு, அறுபுள்ளி, கோம்பி முதலியனவும், மருதநிலத்துக் கரும்பு, வாழை, தெங்கு முதலியனவும், முல்லைநிலத்துப் பூவை, பூளை, தும்பி, காவளை, கார்போகி முதலி யனவுமாம். திணைநிலைப்பொருள்: அவ்வந் நிலத்திற்குரிய ஒழுக்கநிலையின்பொருள். வன் புலப்பொதுப்பொருள்: ஆர், புன்கை, அரசு, இளிஞ்சில், காரை, பருத்தி, கரும்பு முத லாயின. மென்புலப் பொதுப்பொருள்: கோரை, வழுதுணை, கிடை, சணப்பு, வேரி, மருதம் முதலாயின. பெருமைப் பொதுப்பொருள்: தாளி, பூவல், காவல், கழஞ்சு, வேலி, மாறு, பதடி, சோலை, குரை, சுரை, சுரும்பு, வண்டு, துவரை, அத்தி, ஐம்பெருமுதிரை முதலாயின.

விருந்துப்பொதுப்பொருள்: ஒருதிணைக்குரியன மற்றொருதிணையைச் சேர்ந்திருப்பது' (தொல். பொருளதி. உ௬0.) 2. தருக்க சாத்திரத்தொன்று. 3. அகத்திணைக்குரிய தெய்வமுதலாகிய பொருளின்கண்ணே பிறத்தல். 4. புறத்தே சொல்லுங் குறிப்புப் பொருள்.

இறைச்சிப்போர்—உடம்பு. (சிந்தா.)

இறைச்சோறு—வரிவகை. (S. I. I. VIII. 87).

இறைதூதன்—பிரமன். (பிங்)

இறைஞ்சல்—1. குனிதல். 2. வணங்கல். 'இந்திரனிறைஞ்ச' (திருவானைக்கா. திருநாட்டு. ரு.) 3. தாழ்தல். 'குலையிறைஞ்சிய கோட்டாழை' (புறநா. 17. 9.) 4. வீழ்ந்து கிடத்தல். 'புல்லுவிட்டிறைஞ்சிய பூங்கொடி' (கலித். 3. 13.)

இறைஞ்சலர்— } பகைவர்.
இறைஞ்சார்— }

இறைஞ்சி—1. மரவுரி. (சூ. நிகண். எ: எ௬.) 2. வணங்கியெனப் பொருள்படும் ஒரு வினையெச்சம். 'இறைவிதன் மலரடியிறைஞ்சியேத்துவாம்' (கந்தபு. கடவுள்வாழ். எ.)

இறைஞ்சு — இறைஞ்சென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 'குருவாதி மூவுருவையுந் தாழ்ந்திறைஞ்சு' (வைராக். சத. சஎ.) [ஏவலிலே வந்தது.]

இறைஞ்சுதல்—1. குனிதல். 2. படிதல். 'புன்முழுதிறைஞ்சுங்கோட்டு' (சிந்தா. கனக. கஉஅ.) 3. வணக்குதல். 'இடருழந் திறைஞ்சியேத்தலும்' (இராமா. திருவவதார. உ0.) 4. தாழ்தல். 'குலையிறைஞ்சியகோட்டாழை' (புறநா. 17. 9.) 5. வீழ்ந்துகிடத்தல். 'புல்லுவிட் டிறைஞ்சிய பூக்கொடி' (கலித். 3. 13.)

இறைஞானம்—சிவஞானம். 'வடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே யெறிவிழியின் படுகடைக்கே கிடந்துமிறைஞானக்-கூடுமவர்' (சி. சி. க0: ௫.)

இறைத்தல் — 1. கிணறுமுதலிய நீர்நிலைகளிலிருந்து நீரையள்ளிப் புறத்தே பாய்ச்சுதல். 'நெல்லுக் கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி - புல்லுக் கிறைப்பாரோ' (நன்னெறி. ௩௬.) 2. நீரைச்சொரிதல். 'இரங்கியே யிருவிழிக ணீரிறைப்ப' (தாயு. சுகவாரி. ௪.) 3. நீரைவீசித் தெளித்தல். 4. மிகக்கொடுத்தல். 5. சிதறுதல். 6. நிறைத்தல். 'வீணையரின்னிசை செவிதொறு மிறைப்ப' (உபதேச கா. சிவபுண்ணிய. 318).

இறைதல்—1. சிதறுதல், சிந்தல். 'வளைமுத்திறைய வெற்றும் - பின்னலூறு வெண்டிரை பிறங்குகட னுப்பண்' (சூத. திருமான் முதலிய தேவர்கள். உ.) 2. வணங்குதல். 'இணையடி யிறைமின்' (பதினோ. ஆளு. திருக்கலம். 48.)

இறைதிரியல்—அரசநீதிதிறம்பல்.

இறைப்பாரம் – பல்லுயிரையும் காக்கின்ற அரசன் பாரம். (சிந்தா.)

இறைப்பிளவை — கையிறையிலே வரும் ஒரு பெரும்புண்.

இறைப்பு—நீரிறைக்கை.

இறைப்புணைப்படுதல்— ஒருவன் இறுக்க வேண்டும் வரிக்குப் புணைகொடுத்தல். (S. I. I. V. 376.)

இறைப்புப்பட்டரை— கிணற்றுப்பாய்ச்சசுள்ள நிலம்.

இறைபயப்பது — நேரே விடையாகாது குறிப்பாக விடைப்பொருள்கொள்ளக்கிடக்குங் கூற்று; அது: 'சாத்தா இது செய்வாயோ' என்றவழி நீசெய் யென ஏவலாயும், செய்வேனோ என வினவாயும், உடம்பு நொந்த தென உற்றதுரைத்தலாயும், உடம்பு நோம் என உறுவதுகூறலாயும், மற்றையது செய்வே னென இனமொழியாயும் வரும்' (நன். ௩அ௬. உரை.) [இறை - விடை.]

இறைபுரிதல்—1. அரசாட்சிசெய்தல். 2. நீதிசெலுத்துதல்.

இறைமகள்—1. துர்க்காதேவி. 'இறைமக ளமுது செய்ய' (தக்கயாகப். 751). 2. அரசபுத்திரி. 'இருந்தரு ணம்பி னென்னு விறைமகட் கெந்தை சொற்றான்' (கந்தபு. வள். கஎஅ.)

இறைமகன் — 1. அரசன். 'பெற்றபி னிறைமகன் பெண்மகாரெமக்-குற்றிலரென நினைந்து'' (பிரமோத். சோமவாரவி. கரு.) 2. அரசபுத்திரன். 3. கந்தசுவாமி. 4. விநாயகன். (பிங்.) [இறை-அரசன், சிவன்.]

இறைமரம்—1. இறைவை மரம். 2. ஏற்ற மரம். 3. நீரிறைக்கும் மரப்பத்தல்.

இறைமலை—மேருமலை. 'இறைமலைவில்லி' (தக்கயாகப். 170).

இறைமாட்சி—1. அரசனது நற்குண நற்செய்கைகள். (வள். அதிகார. ருகூ.) 2. அரசாட்சிக்குரிய மகத்துவம். 'சீரிறை மாட்சி செலுத்தி யமர்ந்தான்' (கந்தபு. தெய்வயானை. சஅ.)

இறைமாண்டார்—அரசர். [இறைமாட்சியுடையா ரென்றபடி.]

இறைமை — 1. அரசியல். 'அநந்தகுண பாண்டியற்குத் தன்னிறைமை முழுது மீந்தான்' (திருவிளை. அங்கம். உஎ.) 2. தலைமை. 'இறைமையில்லோர்க்கு மிழிகுலத்தோர்க்கும்' (அகப்பொருள். ஒழிபி. ருரு.) 3. கடவுட்டன்மை. 'அவனது இறைமைக்கு இழுக்காய்முடியும்' (சி. சி. அ: ருஅ. சுப்பிர.)

இறைமையாட்டி—1. அரசி. 2. தலைவி. (திவா.)

இறைமொழி—1. உத்தரம். 'ஈறிலா னன்பர் கேட்க விறைமொழி கொடுத்து' (திருவிளை. மண். கக௨.) 2. இறைவனருளிய ஆகமம். 'இறைமொழியல்லது மறுதர வோதி' (சிலப். 10. 206.)

இறையணி— ஓரலங்காரம்; அஃது: ஒரு கருத்தையுட்கொண்டவிடைமிறுப்பது. 'கருத்தொன் றிணமறை வாயுட் கொளும்விடை காட்டலிறை' (குவல. அரு.)

இறையமன்—சனி. (பரிபா. 11. 8.)

இறையவன் — 1. கடவுள். 'கறைமிடற் றிறையவன்மருக்காக' (கந்தபு. மோன. ரு.) 2. தலைவன். 3. தேவர்தலைவன். 'இந்திரன் முதலிய இறையவர் பதங்களும்' (குறள். பரி. உரைப்பா.)

இறையனர்— சங்கப்புலவரு ளொருவர்; அவர், ஓ ரகப்பொருளிலக்கணஞ்செய்தவர்.

இறையனரகப்பொருள்—மதுரைச் சோமசுந்தரக்கடவுளின் கூறுகிய இறையனாருளிய ஓ ரிலக்கண நூல். இது: களவியலென்றும் பெயர்பெறும். இதன் உரையாசிரியர் மதுரைக் கணக்காயனர்மகனர் நக்கீரனர்.

இறையாயிரங்கொண்டான் — கோயிற்களஞ்சியம். (கோயிலொழுகு. 63.)

இறையால்—1. முக்கால் ரூபா. 2. முன் இலங்கையிலே வழங்கிவந்த ஒரு நாணயம்.

இறையான் — சிவன். 'இறையான்மகிழிசைபாடினனெல்லாநிகரில்லான்' (பெரியபு. தடுத்தாட். எ௫.)

இறையிலி—1. இறையிறுதவன். 2. சர்வமானியம். 'எம்மையொப் பவர்க்கு முற்றியிறையிலி யாக விட்ட - மும்மைநற் பதிகடம்மின்' (கோயிற்பு. இரணியவன்ம. சுஎ.) 3. வரிநீக்கப்பட்ட நிலம். 'அறத்திற்கு விட்ட இறையிலிநிலங்களும்' (சிவக. 76. உரை.)

இறையிலிநிலம்—சருவமானியம். (சிந்தா.)

இறையிழிச்சுதல்— } வரி நீக்குதல். (s.
இறையிழித்துதல்— } i. i. III. 4, 6.)

இறையிறுக்குங்கோல் — வரிவிதித்தற்காக நிலத்தை யளக்க உபயோகிக்கும் அளவுகோல். (s. i. i. V. 107.)

இறையுணர்வு—பதிஞானம். (பிங்.)

இறையெண்ணுதல் — விரலிறைபாற் கணக்கிடுதல்.

இறையோன்—1. அரசன். 'நேர்ந்துதனி நின்று விருதர்க்கிறை யோனே' (கந்தபு. அசுரர்யாக. கக௨.) 2. கடவுள். 3. சிவன். 4. தலைவன். 'இறையோன் முதலா வெனைவருக் கேட்ப' (அகப்பொருள். ஒழிபி. கஎ.)

இறைவர்மலர்—கொன்றைமலர். அஃது: 'இறைவர்தன்மலரினேடுறுசாத்தி' (பாரத அருச்சுனன்றவ. ககச.) [இறைவர்-சிவன்.]

இறைவரை — கணப்பொழுது. 'ஈப மீற்றிதோ ரிறைவரை யாகுமால்' (கந்தபு. மோன. அ.)

இறைவன்—1. அரசன். 'இறைவன்குலபூடணன்' (திருவிளை. வளையல். உ). 2. எப்பொருளிலுந் தங்குங் கடவுள். 'இறைவன் குரவ னியல்குண னெங்கோன்' (சிலப். நாடுகாண். கஅச). 3. கடவுள். 'மற்றவரிறைவன் மலரடிவணங்கி' (பாரத. இராசசுய. கசடு). 4. குரு (பிங்). 5. சிவன். (பரிபா. 11. 78. உரை). 6. சிவனர்வேம்பு. (மூ. அ.) 7. தலைவன். 'இவ்வூ ரிறைவனை யிழந்து' (சிலப். 22. 144.) 8. பரமகர்த்தா; அவர் சர்வஞ்ஞத்துவத்தையும், சர்வகர்த்திருத்துவத்தையும், சர்வாநுக்கிரகத்தையும் பிறரொருவராலே பெறுதலின்றித் தமக் கியல்பாகவுடையவர்.

'இறைவனு வான்ஞான மெல்லா மெல்லா முதன்மையநுக் கிரகமெல்லா மியல்புடையான்' (சி. சி. அ: கஎ). 9. பிதா. 10. பிரமன் (பிங்). 11. மூத்தோன் (திவா). 12. விட்டுணுவி னவதாரமாயுள்ள கண்ணபிரான். 'இறைவ னெழிற்கதிர் மணிக ளழுத்திய தவிசி னிருத்தலும்' (பாரத. கிருட்டி. ககக). 13. கணவன். 'நற்புவிதனக்கிறைவன்' (திவ். பெரியதி. 2, 3, 5). 14. திருமால். (குறள். 610. உரை.)

இறைவன்வேம்பு—சிவனார்வேம்பு.

இறைவனிம்பம்—சிவனார்வேம்பு (மலை).

இறைவனூல்-கடவுளருளிய ஆகமம் (நன். 7. சங்கர.)

இறைவனெண்குணம்—பவமின்மை, இறவின்மை, பற்றின்மை, பெயரின்மை, உவமையின்மை, வினையின்மை, குறைவிலறிவுடைமை, கோத்திரமின்மை என்பனவாம் (பிங்).

இறைவாசனம்—இடபம் (பிங்).

இறைவி—1. அன்னை. 2. அரசி. 3. குருவின் மனைவி. 4. தலைவி. 'இறைவியும் பிரியினுய்யாள்' (கந்தபு. வள். கசூஉ). 5. பார்வதி தேவி, உமை. 'அறுவகைநெறிகளும் பிறவுமாக்கிய - விறைவிதன் மலரடி யிறைஞ்சி யேத்துவாம்' (கந்தபு. கடவுள்வாழ். எ). 6. மனைவி. 7. துர்க்கை. (சிலப். 12. உரைப் பாட்டுமடை. உரை)

இறைவிழுந்துதல் — வரிநீக்குதல். 'சந்திராதித்தவரை இறைவிழுத்திக் கொடுத்தோம்' (S. I. I. iii. 80.)

இறைவை—1. இறைகூடை. 'இறைவை கொளுங்கூவல்' (திருப்பு. ௩உஉ). 2. ஏணி. 'ஏறுதற் கமைத்த தோற்றத் திறைவையி னின்ற வன்றே' (இரகு. யாக. க௦ச). 3. தூற்றுக்கூடை. 4. நீரிறைக்கும் மரப்பத்தல். 5. புட்டில். (திவா)

இன்—1. இப்பொழுது. 2. இறந்தகாலப் பொருளிலே வரும் ஓர் இடைநிலை; இது: குற்றியலுகரவீறாகிய வினைப்பகுதிகளோடு சேர்ந்தும், வகர உகரம் இயல்பீறாகவரும் வினைப்பகுதிகளைச்சேர்ந்தும், ஞ ண ந ம ன ர ல வ ள ஆகிய ஒற்றுக்களிறுதியாகிய வினைப்பகுதிகள் உகரச்சாரியை பெற்று வருவனவற்றைச் சேர்ந்தும் வரும். உகரச்சாரியை பெற்றுவருவன என இங்கே சொல்லப்பட்டன, பகுதியோடு தல் விகுதி சேர்ந்து தொழிற்பெயராகும்போது உகரச்சாரியைபெற்றன்றி அங்ஙனமாகாத பகுதிகளேயாம். 'நீடினான், தழுவினான், உரிஞினான்' 3. இனிமையென்பதன் விகாரமாய் இனிமையான எனப் பொருள்பட்டுநிற்கும் ஒரு பண்புப்பெயர். 'இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனி தேன்' (தாயு. சுகவாரி. க). 4. ஐந்தாம்வேற்றுமையுருபுகளி லொன்று; அது: நீக்கம், ஒப்பு, எல்லை, ஏது ஆகிய பொருள்களி லொன்றைக் குறித்துவரும். 'ஐந்தா வதனுரு பில்லு மின்னு - நீங்கலொப் பெல்லை யேதுப் பொருளே' (நன். பெயரிய. சஉ). 5. ஒரு பொதுச்சாரியை; அஃது: ஒரு பதம் விகுதியோடு அல்லது பதத்தோடு அல்லது உருபோடு புணருமிடத்து வருவது. 'கச்சினன்' 'வண்டின்கால்' 'மலையினை' 6. ஏழனுருபு. (திருக்கோ. 19. உரை). 7. இனிமை. 'இன்வளரிளம்பிறை' (சீவக. 1008.)

இன்கண்—1. இன்பம். 'இன்கண்ணுடைத் தவர் பார்வல்' (வள். ககுஉ.) 2. கண்ணோட்டம். 'இன்கணில்லாதாள்பாரி' (அரிச். மயான. ௩.)

இன்கவி — 1. மதுரகவி. 2. மதுரகவி பாடும் புலவன். (யாப். வி. 95. பக். 503.)

இன்சபம்—இராசசபை.

இன்சொல்—அன்புடைமையை வெளிப் படுத்துஞ்சொல். 'இன்சொ லினிதீன்றல் காண்பான்' (வள். ௬௬.)

இன்சொலுவமை – உவமையலங்காரத்தி னொருவகை; அஃது: உவமேயத்தினும் உவமானத்துக்கு ஒரு மிகுதிதோன்றக்கூறி உவமித்து இன்ன மிகுதியையுடைத்தேனும் ஒப்பதன்றி மேற்பட்டதன்றென்பது. 'மான்விழி தாங்கு மடக்கொடியே நின்வதன-மான் முழுதுந் தாங்கி வருமதிய மானுலு - முற்றிழை நல்லாய் முகமொப்ப தன்றியே-மற்றுயர்ச்சி யுண்டோ மதிக்கு' (தண்டி. பொருளணி. ௩௦.)

இன்சொற்சொல்லல் — சாமோபாயம். (குறள். 467. உரை.)

இன்பக்கோடி — காமவல்லி 'நந்தையு மின்பக்கனியொத்தாள்' (சீவக. 365).

இன்பசத்தி—சிவசத்தி நான்கனு ளொன் ருகிய உமை. 'சிவபெருமானுடைய அருட் சத்தியெனப்படும் இன்பசத்தி யுமை யென் றும்' (கந்தபு. நவ. சஙு.)

இன்பசாகரமடல்-ஒரு காமநூல். (தத்து வப். 155. உரை.)

இன்பசாரம்—ஒரு காமநூல். (கல்லா. 7. மயிலேறும்பெருமாள்.)

இன்பதுன்பம்—சுகதுக்கம். (திவ். திரு வாய். 8. 8. 6.)

இன்பம்-1. அகமகிழ்ச்சி. 'ஆய்ந்த மூவரு மாயிடை யின்பமுற் றமர்ந்தார்' (சேதுபு. பராவசு.சடு). 2. ஆநந்தம். 'இன்பக்கடலிற் புகுந்திடுவான்' (தாயு. சொல்லற்கரி. ச.) 3. இனிமை. 'கண்டு தண்டாக் கட்கின்பத்து' (மதுரைக். கசு.) 4. சிற்றின்பம். 'துச்சாரி நீகண்ட - வின்ப மெனக்கெணைத்தாற் கூறு' (நாலடி. பிறர்மனை. ச.) 5. நவரசத்து ளொன்று. 6. நால்வகை நூற்பயன்களு ளொன்று. 'அறம்பொருளின்பம்வீடடைத னூற்பயனே' (நன். பொதுப். கo.) 7. பெரி யோரியல்பினொன்று. 8. போகந்துய்ப்புழித் தோன்று மூவகை. (பெரியபு. திருநாட்டு. ஙக. உரை.) 9. வைதருப்பநெறியில் சொல்லி னுற்சுவைபடத்தொடுத்தலும், பொருளினுற் சுவைபடத் தொடுத்தலும். 'சொல்லினும் பொருளினுஞ் சுவைபட வின்பம்' (தண்டி. கஅ). 10. காமம். 'அறம்பொருளின்பம்' (குறள். 501). 11. கலியாணம். 'கொம்பனை யாளையும்......குன்றனையானையும்.....இன்ப மியற்றினர்' (சீவக. 1980.)

இன்பர்—இன்பங்கொடுப்போர். 'இமை யோர்கடமக்கெலா மின்பராகி' (தேவா. அன்பிலாலந். ரு. திருநாவு.)

இன்பவணி—முயற்சியின்றித் தான் கரு திய காரியம் முற்றுப்பெறுவதைக் கூறுவது. 'முயலுகை யின்றி யவாவிய காரிய முற்றுறு தற், கியலும்பெயரின்பமேயாம்" (குவல. சுஎ.)

இன்பவுபதை-உபதைநான்கனு ளொன்று. (குறள். 501. உரை.)

இன்பன்—1. கணவன். 'பதுமத் தலர் மகடனுக்கு மின்பன்' (திவ். பெரியதி. 2. 3. 5). 2. இன்பத்தையுடையவன்.

இன்பித்தல்—இன்பமூட்டுதல். 'என்னை யுருக்கியின்பித்தவடி' (பாடு. திருவருட்).

இன்பு—சுகம். 'இன்பருளவாடையழுக் கேறுமெமக்கு' (தாயு. பைங்கிளி. ௬).

இன்புறல்—இன்பம் பொருந்தல்.

இன்புறவு—மகிழ்கை. (திருக்கோ. 219. அவ).

இன்புற—சாயவேர். (பதார்த்த. 490).

இன்புறூஉம்— இன்பத்தை மிகுவிக்கும். 'இன்புறூஉமின்சொலவர்க்கு' (வள். கச.) [உறூஉம் என்பது உறுவிக்குமென்னும் பிற வினைப்பெயரெச்சத்தின் விகாரம்].

இன்பூறல்-இன்புறு. 'கவிர்பரியின்பூறல்' (தைல. தைலவ. கoஙு).

இன்பூறவேர்-ஒரு மருந்துச்சரக்கு. 'சிரக மின்பூறும்வேர் தேசாவரந் தவளவிருளி காட்டுள்ளி' (தைல. தைலவ. கஙுடு').

இன்மணியாரம் — இறந்துபட்டதோர் இசைநூல். (யாப். வி. 540).

இன்மை—1. இல்லாமை. 'துளியின்மை ஞாலத்திற்கெற்று' (வள். டுடுள). 2. உடை மைக்கு மறுதலை. (சிந்தா). 3. வறுமை. 'இன்மையி னின்னாத தியாதெனின்' (வள். கoசக). 4. அபாவம்.

இன்மைநவிற்சி—இன்மைநவிற்சியணி.

இன்மைநவிற்சியணி—ஓர் அலங்காரம்; அது: யாதேனும் ஒன்றின்மையால் உபமே யத்துக்கு உயர்வேனும் தாழ்வேனும் தோன் றச் சொல்லுதல். (குவல. உஉ.) 'மன்னவ னின்னவை கோளறைவோன் - றனையடையா மையின் மிக்கொளியாம்' என்பது உயர்வு. 'கல்வியுயர்-வதுதானெனினும் வணக்கநிதிய மருவிலதேல் - அது மேலன்று' என்பது தாழ்வு.

இன்மைவழக்கு — அறுவகைவழக்கினுள் ஒன்று. (மணிமே).

இன்றி—இல்லாமல் எனப் பொருள்படும் ஒரு குறிப்புவினையெச்சம். 'சாதக மின்றி யொன்றைச் சாதிப்பா ருலகி லில்லை' (கை வல். தத்துவவிளக். கக).

இன்றிய — இல்லாத. 'தரித்திரவின்றிய விவற்றை' (பெருங். மகத. 14. 214).

இன்றியமையாமை—தான் இல்லாமல் நிறையாமை. 'மங்கலமாகி யின்றியமையாது' (நன். பொதுப்பா. ௬o).

இன்று—1. அசைச்சொல் (திவா). 2. இந்நாள். 'இன்றுமக வான்மகளை யீந்திட னினைந்தான்' (கந்தபு. தெய்வயானை. ௨௨௫). 3. இப்பொழுது. 'இன்று நோக்குரை நடக்குமியல்பிலோர்க்கு' (சிவப். ௯: ௨). 4. இல்லையெனப் பொருள்பட்டு அஃறிணை ஒன்றன்பாலிலேவரும் ஒரு குறிப்புவினைமுற்றுச் சொல். 'பொருட்குப்பொருடெரியினதுவரம்பின்றே' (தொல். சொல். ௩௬௧). 5. இன்றியென்பதன் விகாரமாய்வந்து இல்லாமல் எனப் பொருள்படும் ஒரு குறிப்புவினையெச்சம். 'விண்ணின்று பொய்ப்பின்' (வள். ௧௩).

இன்றேல்—இல்லையேல்.

இன்றை—இந்நாள். 'அன்றுமுதலின்றைவரை' (தாயு. ஆகார. ௩௦). [இன்று என்னுஞ் சொல் ஐகாரச்சாரியையேற்று நின்றது.]

இன்றொடை—இனிய கோவை (புறப்பொ).

இன்ன — 1. இத்தன்மையான. 2. இத்தன்மையுடையன. 'இன்னவாகிய பலவளனுண்டு' (கந்தபு. தவங்காண். ௧௭). 3. இந்த 'இன்ன தன்மைக ளியல' (கந்தபு. தெய்வயானை. ௨௦௦). 4. உவமையுருபாக அருகிவரும் ஒரு பெயரெச்சக் குறிப்பு. (நன். பொதுவி. ௧௬.)

இன்னகையாயம்—இயலிசை நாடகத்தாலும் இனிய மொழிகளாலும் இனிய மகிழ்ச்சியைச் செய்யும் திரள். (சிறுபாணு. ௨௨௦. உரை.)

இன்னணம்—இத்தன்மை. 'இன்னணம்வளருங்காலை' (பாரத. சம்பவ. ௧௧௧.) [இவ்வண்ணமென்பதன் மரூஉவென்பர்.]

இன்னதல்லதிதுவெனமொழிதல் – தந்திரவுத்தி முப்பத்திரண்டனு ளொன்று; அது: சந்தேகிக்க நின்றவிடத்து இப்படிப்பட்டதல்லாதது இதுவெனச் சொல்லுதல். (நன். பொதுப். ௧௪.)

இன்னது—1. இது. 'இன்னது கேண்மென விசைத்தன் மேயினன்' (கந்தபு. அசுரர்யாக. ௧). 2. இத்தன்மையையுடையது. 'வளவயல் வைகலு மின்னதென்ப' (சீவக. 64.)

இன்னம்—1. இத்தன்மையையுடையேம். (சிந்தா). 2. இனிமேலும், இன்னும். 'இன்னம்பிறவியும் வேண்டும்' (தாயு. சிவன். ௭.)

இன்னமும்—இன்னும். 'இன்னமும் வந்திலள் வருந்தி யீன்றதாய்' (கந்தபு. (சூரனமைச்சி. ௩௫அ.)

இன்னயம்—உபசாரவார்த்தை. (உரி. நி.)

இன்னர்—1. இத்தன்மையர். 'இன்னரை நோக்கி யெங்கோன்' (காஞ்சிப். தக்கேச. ௬௦.) 2. உற்பாதம். 'இன்னலின்னரொடு' (பரிபா. 4. 19)

இன்னல்—1.குற்றம். 2. தீமை. 3.துன்பம். 'இன்னறீர்தரு போகம தாற்றின ரிருந்தார்' (கந்தபு. தெய்வயானை. ௨௬அ.)

இன்னவர்—இவர். 'இன்னவர் சேனை வெள்ளத் தியாரையென் றறிவ தென்றான்' (திருவிளை. மெய்க்கா. ௩௫.)

இன்னவன்—இப்படிப்பட்டவன்.'இன்னவன்றனையடுதியேல்'(கந்தபு. தாரகன்வதை. ௫.)

இன்னவை — இவை. 'அசரீரி பின்னுமின்னவை யுரைத்ததம்மா' (பாரத. நிவாத. ௬௨.)

இன்னன்—இன்னான், இப்படிப்பட்டவன், (பு. வெ. 244)

இன்னன—1. இவைகள். 'ஏத மின்னன வின்னணம்' (சிந்தா. கனக. ௨௫௯.)2. இவை போன்றன.

இன்னா—1. ஆகாமை. 2. இகழ்ச்சி. 3. கீழ்மை. 4. தீமை. 'இன்னாசெய்தாரை யொறுத்தல்' (வள். ௩௧௪.) 5. துன்பம். 'இன்னாவாகப் பிறர்மண்கொண்டு' (புறநா. ௬௨.) 6. வெறுப்பு. [இன்-இனிமை. ஆ-எதிர்மறை.]

இன்னாங்கு—1. தீமை. 2. துன்பம். 'இன்னாங் கெழுந்திருப்பார்' (நாலடி. இளமைநி. ௧.)3.கடுஞ்சொல். 'ஒருவன் இன்னாங்குரைத்தான்' (தொல். சொல். 246. உரை)

இன்னாங்கோசை — கடுமையான ஓசை. (திவா).

இன்னாச்சொல்—1. இழிசொல். 2. கடுஞ்சொல். 'அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொல் நான்கும்' (வள். ௩௫.)

இன்னாத—1. துன்பஞ்செய்வன. 'இன்னாதசெய்தபின்' (வள். கூகூ.) 2. துன்பத்தை விளைக்கின்ற எனப் பொருள்படும் ஒரு குறிப்புவினைப் பெயரெச்சம்.

இன்னாதது—1. தீதானது. 'மரணத்தின் பாத்திரமாம் வாணாள் போல வின்னாத தில்லை' (ஞானவா. வைராக். சுக.) 2. துன்பஞ்செய்வது. 'இன்மையி னின்னாத தியாதெனின்' (வள். கoசக.)

இன்னாதாதல்—துன்புறுதல். 'அவள்...... இன்னாதாகிறாள்' (ஈடு. 1. 4. 7.)

இன்னாதார்—பகைவர். (நீதிநெறி. ருக.)

இன்னாது—1. தீது. 'பிறப்பின்னாதென் றுணரும்' (நாலடி. 173). 2. துன்பு. (ஈடு).

இன்னாநாற்பது—கெடுதியை விவரிக்கும் நாற்பதுபாட்டுள்ள ஒருநூல், இது பதினெண்கீழ்க்கணக்கினுள் ஒன்று.

இன்னாப்பு — துன்பம். 'இன்னாப்பாலே சொல்லுகிறார்' (ஈடு. 5. 4. 3).

இன்னாமுகம்—சந்தோஷமில்லாத முகம். (வள். ருசுரு.)

இன்னாமை—1. இனியதாகாமை. 2. தவறு. 3. தீமை. 4. துயரம். 5. துன்பம். 'இன்னாமை யின்ப மெனக்கொளின்' (வள். சுஙo.) 6. வேண்டாமை.

இன்னாமொழி — அலர்மொழி. 'இன்னாமொழி நாவடங்க மொழிந்து' (வாண. கூகரு.)

இன்னார்—1. இத்தன்மையர். 'இன்னார்க் கின்ன தியைகவென்று' (இலக்கண வி. சுஅக.) 2. பகைவர். 'இனியார்போன் றின்னாராய்' (நாலடி. 378)

இன்னாரினியார் — பகைவரும் நண்பரும். 'துறவிகட்கு இன்னாரினியாரென்பதில்லை'

இன்னாரினையார்—இத்தன்மையுடையவர். 'இன்னாரினையாரென் றெண்ணுவாரில்லை காண்' (திவ். நாய்ச். 7. 5)

இன்னாலை—இலைக்கள்ளி (மலை).

இன்னாவறிவு-தீங்குபயக்கும் அறிவு.'இகன்மேவ-லின்னா வறிவி னவர்' (வள். அுஙஎ.)

இன்னாவிசை—செய்யுட்குற்றம் இருபத்தேழனுள் ஒன்று. (யாப். வி. 525)

இன்னான்—1. இத்தன்மையன். 2. துன்பத்தைச்செய்பவன். (ஐங்குறு.) 3. பகைவன்.

இன்னிசை—1. இராகம். 2. இன்பமான வோசை. 3. ஏழு நரம்புள்ள வீணை. 4. இன்னிசைவெண்பா. (யாப். காரிகை. செய். 4.)

இன்னிசைக்கலிப்பா—கலிப்பாவுள் ஒன்று.

இன்னிசைக்காரர்— } பாணர்.
இன்னிசைகாரர்— }

இன்னிசைச்சிந்தியல்வெண்பா— ஒருவகை வெண்பா; அஃது: இன்னிசைவெண்பாப் போலத் தனிச்சொற்பெறாது நடந்து மூன்றடியான் வருவது. 'சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய-யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப - கானக நாடன் சுனை'. 'நேரிசையின்னிசை போல நடந்தடி மூன்றின் வந்தா, னேரிசை யின்னிசைச் சிந்திய லாகும்' (யாப். காரிகை. செய்யுளியல். ரு.)

இன்னிசைமாலை — அகப்பொருள்பற்றிய ஒருநூல். (கள. கா. 24)

இன்னிசைவெண்பா—வெண்பா வகையுளொன்று; அஃது: ஒருவிகற்பத்தாலேனும் பலவிகற்பத்தாலேனும் நான்கடியாய்த் தனிச்சொல்லின்றிவருவது. 'வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்-வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்-வைகலும் வைகற்றம் வாழ்நாண்மேல் வைகுதல்-வைகலை வைத்துணராதார்' 'கடற்குட்டம் போழ்வர் கலவர் படைக்குட்டம்-பாய்மா வுடையா னுடைக்கிற்குந்-தோமில்-தவக்குட்டந் தன்னுடையா னீந்து மவைக்குட்டங்-கற்றான் கடந்து விடும்' இவை முறையே ஒரு விகற்பத்தானும் பல விகற்பத்தானும் வந்தன. அன்றியும், இரண்டாமடியினிறுதி தனிச்சீர்பெற்று - மூன்றுவிகற்பத்தான் வருவனவும், மூன்றாமடியினிறுதி தனிச்சொற்பெற்று இருவிகற்பத்தான் வருவனவும், தனிச்சொல்லின்றிப் பலவிகற்பமாகி அடிதோறும் ஒருஉத்தொடைபெற்றுவருவனவும், பிறவாற்றானும் நேரிசைவெண்பாவிற் சிறிதுபிறழ்ந்து நான்கடியாய்வருவனவும் இன்னிசைவெண்பா எனப்படும். (காரிகை. செய்யுளி. ௮.)

இன்னிசைவெள்ளை — இன்னிசைவெண்பா. (பிங்)

இன்னிதாய்-இனிதாக. 'என்னை யின்னிதாயாண்டுகொண்டவா' (திருவாசக. திருச்சதக. கரு.)

இன்னியம்—இன்பமான வாத்தியங்கள். (பெருங். வத்தவ. 2. 30)

இன்னியர்—பாடுவோர், பாணர். (அக. நி.)

இன்னிலை—கிருகத்தாச்சிரமநிலை. 'இன்னிலையொழுக்கும்' (திருவி. தடாதகை. ௫௬.) [இல்-நிலை.]

இன்னினி — இப்பொழுது. 'இன்னினிக் கணமதொன்றில் - ஒற்றன் முரண்வலியதனைச் சிந்தி' (கந்தபு. அக்கினிமுகாசுரன் வதை. ௧௩௭.)

இன்னும்—1. இன்னமும். 'இன்னுமோர் சூலமுண் டெறிவன்' (கந்தபு. அக்கினிமுகாசுரன்வதை. ௧௧௧.) 2. இப்பொழுதும். 'மிச்சிலுக் கின்னு மிச்சைசெய் பெருமான்' (கல்லாடம். ௧௬. அகவலுரை.) 3. பின்னும். (சிந்தா). 4. இவ்வளவுகாலஞ்சென்றும். 5. மறுபடியும். 6. மேலும். 7. அன்றியும். 'இன்னு மிழத்துங் கவின்' (குறள். 1250)

இன்னுமின்னும்—மேன்மேலும். 'இன்னுமின்னுமெங்காம மிதுவே' (பரிபா. 13. 64)

இன்னுயிர்—1. இவ்வுயிர். 'இன்னுயிரைப் புறத்தகற்றவல்லதான' (ஞானவா. உத்தாலகன். ௪௨) 2. இனியவுயிர்.

இன்னுழி — இன்னவிடத்து 'இன்னுழியாகாது' (தொல். பொருள். 186. உரை.)

இன்னே—1. இத்தன்மையே. 'விதியார் செய்கையின்னேயோ' (கந்தபு. மார்க்கண்டேய. ௧0௫.) 2. இப்பொழுதே. 'கொடியேன்செய் குற்றமெல்லா - மின்னே தணித்தே யெனையாண்டு கொள்ளுமென்றாள்' (கந்தபு. வள். ௧௧௮.) 3. இவ்விடத்தே. 'இன்னேவருங்கள்' (திருக்கோ. 55)

இன்னேம்—இத்தன்மையை யுடையேம். 'இன்னேமாயினேம்' (புறநா. ௧௪௧.)

இன்னோசை—இனிய வோசை.

இன்னோர் — இவர். 'இன்னோரெவருஞ் சிவனேயென் றிரக்கலோடும்' (கந்தபு. திருக்கல். ௪௬.)

இன்னோன்—இப்படிப்பட்டவன். 'இன்னோர்தம் வன்மைக் கிறுதி யிலவேனும்' (கந்தபு. அசுரர்யாக. ௧௮.)

இன—இன்னவற்றை. (சிந்தா.)

இனக்கட்டு—1. இனக்கூட்டம். 2. முறைமை.

இனங்காப்பார்—கோவலர். 'இனங்காப்பார் குழறோன்ற' (கலித். 143. 37)

இனத்தார்—சுற்றத்தார்.

இனந்திரிபதுமம் — செந்தாமரை வெண்டாமரைகள். 'இனந்திரி பதுமக் கோயிலிருவரும்' (திருவிளை. தடாதகை. ௪௭.)

இனநடை—விதம்விதமான நடை. 'இதமிசைந் தனமா மெனவே யினநடை நடந்தனர்' (திருப்பு. ௧௫௬.)

இனம்—1. அரசர்க் குறுதிச்சுற்றம். 2. இன்னம். 'நீயினமிருந்தனை' (இராமா. பள்ளி. ௭௨.) [இன்னமென்பதன் விகாரம்.] 3. குலம். 4. கூட்டம். 5. சம்பந்தம். 6. சுற்றம். 'நங்களினத்தை யுயிருண்ணு' (கந்தபு. அக்கினிமுகாசுரன்வதை. ௨0௬.) 7. நிரை. 'வெள்வாய்க்கழுதைப்புல்லினம்பூட்டி' (புறநா. ௧௫.) 8. பசுக்கூட்டம். 9. மந்திரிகள். 10. வருக்கம்.

இனமாலை—ஒருவகை மாலை. (சிந்தா.)

இனமாற்றல்—ஓரினக் கணக்கை மற்றோரினக் கணக்காக மாற்றுகை.

இனமொழிவிறை — ஐவகைவிடைகளுளொன்று.

இனமோனை — ஒரு எழுத்துக்குமோனையாக அவ்வெழுத்தின் இனவெழுத்துவருதல்.

இனல் — இன்னல் என்பதின் னகரந் தொக்க ஒரு விகாரமொழி. 'கண்டகமுமினலுறவே குதத்தியற்றி' (சிவதரு. சுவர்க்கநரக. ௧௭௬.) [இடைக்குறை.]

இனவரி — பழைய காசாய வரிவகை. (S. I. I. i. 89)

இனவரிக்காசு—ஒரு பழையவரி (I. M. P. C. G. 1068)

இனவழி—வமிசபரம்பரை.

இனவழிக்கணக்கு—பேரேடு.

இனவாரி—இனம் இனமாய்.

இனவெதுகை—ஒரு எழுத்துக்கு இனவெழுத்தால் வரும் எதுகை.

இனவெழுத்து — 1. தானம் முயற்சி, அளவு, பொருள், வடிவு முதலிய ஏதுக்களினாலே ஒரு சாதியாய்வரும் எழுத்துக்கள். அவை, உச்சரிக்கப்படுங் கால அளவை ஒரு மாத்திரையாதல்பற்றி அ இ உ எ ஒ என்னு மெழுத்துக்கள் ஐந்தும் குறிலென ஓரினமாகவும், இரண்டுமாத்திரையாதல்பற்றி

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்னு மெழுத்துக்க ளேழும் நெடிலென ஓரினமாகவும், சுட்டுப் பொருளிலே வருதல்பற்றி அ இ உ என்னும் எழுத்துக்கள் மூன்றும் சுட்டெழுத்தென ஓரினமாகவும், வினாப்பொருளிலே வருதல் பற்றி எ ஏ ஆ ஓ யா என்னுமெழுத்துக்கள் ஐந்தும் வினாவெழுத்து என ஓரினமாகவும், மிடற்றைத் தானமாகக்கொண்டு பிறந்து தனித்தியங்கு மாற்றலுடைமையால் அம் முதல் ஔகாரமீறாகிய எழுத்துக்கள் பன்னிரண்டும் உயிரெழுத்தென ஓரினமாகவும், உச்சரிக்கப்படுங் காலஅளவை அரைமாத்திரையாதல்பற்றியும், புள்ளிவடிவுடைமை பற்றியும், உயிரெழுத்தொடு கூடியல்லது இயங்குமாற்றலின்மைபற்றியும், கம்முதல் னவ்வீறாகிய எழுத்துக்கள் பதினெட்டும் மெய்யெழுத்தென ஓரினமாகவும், உரத்தைத் தானமாகக்கொண்டு பிறத்தல்பற்றிக் கசடதபற என்னும் எழுத்துக்கள் ஆறும் வன்கணம் என ஓரினமாகவும், மூக்கைத் தானமாகக்கொண்டு பிறத்தல்பற்றி ஙஞணநமன என்னும் எழுத்துக்கள் ஆறும் மென்கணமென ஓரினமாகவும், மிடற்றைத் தானமாகக் கொண்டு பிறத்தல்பற்றி யரலவழள என்னும் எழுத்துக்கள் ஆறும் இடைக்கணமென ஓரினமாகவும் கொள்ளப்படும். (நன். எழுத். எ௨, எ௫.) 2. முயற்சிவகையால் ஒன்றற்கொன்று இனமாகிய எழுத்துக்கள் 'ஐ ஔ இ உச் செறிய முதலெழுத்-திவ்விரண் டோரின மாய்வரன் முறையே' (நன். எழுத். கரு.)

இனவெழுத்துப்பாட்டு—வல்லினமுதலிய மூவினங்களுள் ஓரினத்தெழுத்துக்களே வரப் பாடுஞ் சித்திரகவி. (யாப். வி. 503).

இளன்–1. சுற்றம். 'குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்ற - வினனு மறிந்தியாக்க நட்பு' (வள். எகரு) [மகரம் நிற்குமிடத்து னகரம் போலியாய்வந்தது. 2. சூரியன். (பிங்.) 3. சமானன். (திவ். திருவாய். 1.1.2.)

இறு—1. நகை, இகழ்ச்சி. 2. வருத்தம், துன்பம்.

இறுப்பித்தல் — துன்பமுண்டாக்குதல். 'இறுப்பிச் செற்றிடு கூட்டில்' (திருப்பு.90).

இறும்—1. நன்கொடை. 2. பயன் நோக்காத ஈகை.

இனி — 1. இப்பால். 2. இப்பொழுது. 'இனியன்ன நின்னொடு சூழ்வாரியார்' (வள். கஉகசு.) 3 இன்று. 'இனியைக் - நலைநாக நன்மணியும் பெறலாம்' (வாண. கஅ.) 4. இனிமேல், பின்பு.

இனிச்ச—இனித்த. [இது போலி.]

இனித்தல்-1. இன்பமாதல். 2. தித்தித்தல்.

இனிது — 1. இனிமையுடையது என்னும் பொருள்படும் ஒரு குறிப்புவினைமுற்று. 'குழலினிதியாழினிது' (வள். சுசு.) 2. இன்பந்தருவது. 3. நன்மையானது. 4. நன்றாக. 'புலியூர்ப்புக் இனிதருளினன்' (திருவாச. 2. 145.)

இனிப்பு — 1. சிநேகம். 2. தித்திப்பு. 'இனிப்பைநல்கு முக்கனிமுதலிய வுணவினை' (வைராக். சதக. சடு.) 3. மகிழ்ச்சி. 'இனிப்போடு நகையாடவே' (குமர. பிர. மதுரைக். 39.)

இனிப்புக்காட்டுதல்—1. ஆசைகாட்டுதல். 2. உருசியாதல்.

இனிப்புத்தட்டுதல்—1. ஆசையுண்டாதல். 2. உருசியுண்டாதல்.

இனிமணல்—இனியமணல். 'இனிமணல் வையை' (பரிபா. 8. 51.)

இனிமேல்—1. இதற்குப்பின். (பு. வெ. 8. 33. உரை.) 2. இதுமுதல்.

இனிமை—1. இனிப்பு. (பிங்.) 2. சந்தோஷம், 'இனிமைகூர்ந்து' (திருவா.1.18.) 3. மேன்மை. 4. இன்பம்.

இனிய—இனியவைகள். 'இனியசெய்தி' (புறநா. க௨.)

இனியர்—1. இனிமைதருபவர். 'நாயகன் பரிவுதீர்க் கினியர் சூழ' (சிங். காங். கக.) 2. மகளிர். 'இனையரு மினியரும்' (பரிபா. 6.27.)

இனியவன்—இனியன்.

இனியவைநாற்பது—ஒருநூல்; இது பதினெண்கீழ்க்கணக்கினு ளொன்று.

இனியன்–1. இனிமையுடையவன். 'இனியனு யேகதத்துவத்திலே சமுத்தியிதயமுற் றின்பமே பெறுவாய்' (ஞானவா. தாசூர. கoக.) 2. பிறரை மகிழ்விக்கும் ஒழுக்கத்தை யுடையவன்.

இனியான—தன்கண் உவகையை வெளிப்படுத்துவன. 'மனங்களிப்ப - வினியன வுரைகள் பயிற்றி' (பாரத. நாடுகோட்துறை. ௬.)

இனியோர் — நண்புடையோர். 'இனியோர்க்கினிமைசெய்து' (பாரத,வாரணாவத. ௧௩௬).

இனுங்காவலை—கடலில் வேலிபோற்கட்டி மீன்பிடிக்கவுதவும் வலை.

இனும்—இன்னும். 'ஆசையாயினுநித்தந் தளராதே' (திருப்பு. ௩௭௪.) [விகாரம்.]

இனை — 1. இன்ன. 'இனைத்துணைத்து' (வள். ௮௭.) 2. இனையென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.

இனைகூஉ—வருந்திக் கூப்பிடுங் கூப்பீடு. 'வினைபுனை நல்வி னிணைகூஉக் கேட்பவும்' (புறநா. ௬௪.)

இனைத்தல்—1. ஒலித்தல். 2. வருத்தல். (ஐங்குறு. 237). 3. கெடுத்தல். 'வெவ்வெரி யினைப்ப' (புறநா. 23.)

இனைத்து–1. இத்தன்மைத்து. 'குடிலையிற் பயனினைத்தென்றே - கட்டுரைத்திலன்' (கந்தபு. அயனைச்சிறை. ௧௪.) 2. இவ்வளவிற்று.

இனைதரல்—மெலிதல். 'விதித்த னெழுத்தினை தரவரு மொருபொரு ளருளாயோ' (திருப்பு. ௨௭௭.)

இனைதல் — 1. இரங்குதல். 'வானதிச் சடை வேதியன்பாதத் - தினைய' (திருவி. அன்னக். ௮). 2. வருந்துதல். 'சேர்தியோ வென் - றினைந்திரங்கி' (சிந்தா. நாமகள். 263.) 3. அஞ்சுதல். 'என்னை வருவதெனக் கென்றினையா' (பரிபா. 7. 68.)

இனைப்ப–1. கெடுப்ப. 'வினைபுனை நல்லில் வெவ்வெரி யினைப்ப' (புறநா. ௨௩). 2. வருத்த. (ஐங்குறு.)

இனைய — 1. இத்தன்மையான எனப் பொருள்படும் ஒரு குறிப்புவினைப் பெயரெச்சம். 'இனையகொள்கை' (கந்தபு. மூன்றுநாட்பாறு. ௧௭). 2. இத்தன்மையானவைகள். 'இனைய கூறின னிரதிவேண்டுதலும்'(கந்தபு. மோன. ௨௮). 3. இதுபோல்வன. (ஐங்குறு.) 4. வருந்த எனப் பொருள்படும் ஒரு வினையெச்சம்.

இனையது—இத்தன்மையது. 'இனையது நோக்கி' (கந்தபு. வள். ௧௰௮.)

இனையர்—1. இத்தன்மையர். 'இனையரிவ ரளவிறந்த நெடுங்கால மரசுபுரிந் திருந்தாரன்றே' (உபதேச. சூராதி. ௭௭). 2. இவர்கள். 'மேற்றிக ழிலக்கத் தொன்பான் வீரர் மற் றினைய ரோடும்' (கந்தபு. சூரனமைச்சு. ௨.)

இனையவர்—இவர்கள், இத்தன்மையர்.

இனையள்—1. இத்தன்மையானவள். 2. இனைதலையுடையாள். (சிலப்.)

இனையன்–1. இத்தன்மையையுடையேன். 'இனையன் பாவனை யிரும்புகன் மனஞ்செவி யின்னதென் றறியேனே' (திருவாச. திருச்சதக. ௩௭). 2. இத்தன்மையுடையவன்.

இனையன—1. இத்தன்மையன. 2. இவைகள். 'வலம்படுதிகிரி மாயவற் கொருபான் மருங்குநின் றினையன வகுப்பான்' (உபதேச. சநகாதி. ௨௩.)

இனையாள்—இவள். 'இனையாளை யவன் விருப்பொடு வரையுமோ' (கந்தபு. தவங்காண். ௪௦.)

இனையினள்–வருந்தினள். (பாரதவெண். ௩௮.)

இனையை—இத்தன்மையையுடையாய்.

இனையோன்–இவன். 'இனையோன்-முன்னவன்' (கந்தபு. தாரகன்வதை. ௫.)

இனைவரல்—வருந்துதல். 'அழுதகண்ணீரோ - டினைவரு தையல்' (பாரத. கீசகன் வதை. ௬௯.)

இனைவு–1. துன்பம். 'மன்னன்றேவிபாவினைவுடனெய்தி' (பாரத. கீசக. ௩௮). 2. இரக்கம். (சூடா.)

இனைவை—வருந்துவாய், முன்னிலைவினைமுற்று.

இஷ்டதேவதை—உபாசனைதெய்வம்.

இஷ்டப்படி—விருப்பப்படி.

இஷ்டபூர்த்தி—விருப்பம்நிறைவேறுகை.

இஷ்டவிகாதம் — விருப்பத்தைக் கெடுக்கை. (சிவசம. பக். 54.)

இஷ்டாநிஷ்டம்—விருப்புவெறுப்பு.

இக்ஷ்வாகு—சூரியவமிசத்து முதலரசன்.

இகூி—கத்தூரிமஞ்சள். (மூ. அ.)

## ஈ

ஈ—[ இது: தமிழ்ப்பாஷையின் வர்ண மாலையிலுள்ள உயிர்வருக்கத்தில் நான்கா மெழுத்து; இஃது: அங்காப்போடு மேற் பல்லை யடிநாவின்விளிம்புபொருந்தப்பிறக்கு மொரு நெடில். நன். எழுத்தி. உஉ.] 1. அம்பு. 2. அரைநாண். 3. இந்திரவில். 4. இலக்குமி. 5. இலையான் என வழங்கு மொரு சிறுபறவை. 'ஈயிருக்குமிடமெனி னும்' (பாரத. கிருட்டிண. கககூ.) 6. ஈ யென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 7. ஒரு முன்னிலையசைச்சொல். 'சென்றீ பெரும' (நன். இடையிய. உக. இராமாநுஜ). 8. குகை. 9. கொசுகு. 10. சரசுவதி. 11. தாமரையிதழ். 12. தேனீ. 'ஈவிளையாட. நறவிளை வோர்ந்து' (திருக்கோ. கரு௩.) 13. நரி. (இராசவைத்.) 14. பாம்பு. 15. பார்வதி. 16. வண்டு. (திவா.) 17. துத்தவிசையி னெழுத்து. (திவா.) 18. அதிசயக்குறிப்பு. 'எங்களுக்குத் தெரியாதபடி யிராநின்றதீ' (ஈடு.1.3.9.) 19. சிறகு. (பிங்). 20. அழிவு. 'ஈபாவஞ்செய்து' (திவ். திருவாய். 2. 2. 2.)

ஈக்க—தருக. (சிலப். அரும்பத.)

ஈக்கால்— வயிரக்குற்றவகையிலொன்று.

ஈக்காலாணி-சிற்றாணி. (S. i. i. II. 213.)

ஈக்கை—1. புலிதொடக்கி. (மூ அ.) 2. உப்பிலி. (மலை.)

ஈக-இக என்பதன் விகாரமாய்வந்த ஒரு முன்னிலையசை. 'என்-போரியானை வந்தீக வீங்கு' (கலி. அரு.)

ஈகம்—1. இச்சை. (அமா.) [ஈஹ.] 2. சந்தனமரம் (மலை.)

ஈகாமிருக்ம்—தசரூபகத்துளொன்று.

ஈதல் — 1. கொடுத்தல். 'ஆயாவமுத மீகுதலானும்' (கல்லாட. 20.) 2. கட்டியா தல். 'திரட்டுப்பாலும் ஈகினநெய்யும் கட்டித் தயிரும்' (திவ். பெரியாழ். 3. 2. 6. வ்யா. பக். 545.)

ஈகை—1. இண்டு. (பிங்.) 2. கற்பகம். (அக. நி.) 3. கொடை. 'திருமலி யீகை போகம்' (சிந்தா. குண. ௩கரு.) 4. பொன். 'அணிநகை யிடையிட்ட வீகையங் கண்ணி போல்' (கலி. ௩உ.) 5. மேகம். 6. புலி தொடக்கி. (மலை.) 7. காடை. 'ஈகைப்போர்' (கலித். 95. 12.) 8. இல்லாமை. 9. காற்று.

ஈகையன் — கொடையாளன். (கம்பரா. மந்தரை. 18.)

ஈகையாளன் — கொடையாளன். (கு. நிகண். உ: சஅ.)

ஈங்கண் — இவ்விடம். 'ஈங்க ணின்றுநீ திரும்பினை யேகுதி யென்றான்' (சேதுபு. காசிப. ௩க.)

ஈங்கம்—சந்தனமரம். (மலை.)

ஈங்கன்—ஈங்கனம். 'ஈங்கனிறந்தவர்க்கு' (பிரபோத. 36. 3.)

ஈங்கனம்—1. இவ்விடம். 'ஈங்கன நமது கண்ணி னெய்திய குமாரன்' (கந்தபு. திரு விளை. கசு.) 2. இங்ஙனம். 'ஈங்கனங் களை யிரு ளெல்லை நீந்தினன்' (சீவக. 1942.)

ஈங்கிசை—1. கொலை. 2. தீங்கு. 3. வசை. 'ஈங்கிசை யுற்ற வலக்குண மட்டைகள்' (திருப்பு. உசு௩.) [ஹிம்ஸா என்னும் வட மொழி ஈங்கிசை என விகாரமாயிற்று.] 4. வருத்தம். [ஹிம்ஸா].

ஈங்கு—1. இண்டங்கொடி. 2. இவ்விடம். 'ஈங்குநம்மானுள்வருமேல்' (சிலப். ஆய்ச்சி. க.) 3. உவமவுருபு. (சிந்தா.) 4. என்னிடம். (சிந்தா.) 5. சந்தனம். 6. இப்படி. (சீவக. 1593.) 7. புலிதொடக்கி. (மலை.) 8. ஈக்கை.

ஈங்கை — 1. இண்டஞ்செடி. 'வெண் கொடியீங்கைப் பைம்புதலணியும்' (ஐங்குறு. சடுரு.) 2. இண்டம்பூ (குறிஞ்சிப்). 3. உப்பிலி. (மூ. அ.)

ஈங்கைத்துவக்த — ஒரு மரப்பட்டை. (தைல. தைலவ. அரும்பத.)

ஈச்சங்கசந்து—ஈஞ்சி வேர்க்கு.

ஈச்சந்தோல் — ஈயி னெச்சம்பிடித்த தோல். [ஈயெச்சம் என்பது ஈச்ச என விகார மாயிற்று.]

ஈச்சப்பி—உலோபி. [வழக்.]

ஈச்சம்பனை—காட்டீஞ்சு.

ஈச்சம்பாய்—ஈந்திலையா லாகிய பாய்.

ஈச்சிதகருமம்— கருத்துள்வழிச்செயப்படு பொருள். 'சோற்றையுண்டான்' என்பதிற் போல (பி. வி. காரக. கஉ). [ஈச்சிதம் - விரும்பப்பட்டது. கருமம் - செயப்படு பொருள்.]

ஈச்சிதம்-விரும்பப்பட்டது.[ஈப்ஸிதம்.]

ஈச்சிதாநீச்சிதகர்மம்—விரும்பியும் விரும்பாமலுஞ் செய்யப்படும் செயப்படுபொருள். 'ஆளியோடு பாற்சோற்றையுண்டான்' என்பதிற்போல. [இதில் பாற்சோறு விரும்பப்பட்டதும், ஆளி விரும்பப்படாததுமாம். ஈச்சித - விரும்பப்பட்ட. அநீச்சித - விரும்பப்படாத. கர்மம் - செயப்படுபொருள்.]

ஈச்சு—ஈச்சமரம்.

ஈச்சுங்கோட்டல்—சிழ்க்கையடித்தல்.

ஈச்சுர—ஈசுவர; வியாழவட்டமாகிய அறுபது வருடத்துள்ளே பதினோராம் வருடம். (சோதிடக்கடல்.)

ஈச்சுராதிரயாதிட்டாத்துரு—பிரமம். (த. நி. போ. ககக.) [ஈச்சுரர் மூவரையும் அதிட்டித்துநிற்பவ ரென்றபடி.]

ஈச்சுரம்—சுத்த தத்துவங்களு ளொன்று, ஈசுரதத்துவம்; அது: ஞானங் குறைந்து கிரியை யுயர்ந்தது. (சிவப். கட். 3.)

ஈச்சுரமூலி—பாதாளமூலி, பெருமருந்துக் கொடி. (பதார்த்த. 256.)

ஈச்சுரன்–1. ஈசுவரன். 2. மகதத்துவம். 'அனையகன் மகதத் துவத்தினைப் புத்தி, மகான்மதி பிரக்கியை யான்மா - வனைதருங் காதி மேதையீச் சுரனென் றுரைப்பர்' (கூர்ம பு. பிரகிரு. அ.)

ஈச்சுரன்பஞ்சகிருத்தியம் — ஈசுரனுடைய ஐந்தொழில்கள். அவை, சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்பன. (த. நி. போ. ககo.)

ஈச்சுரன் பிரபுத்துவ சாமர்த்திய குணத்திரயம்—ஈச்சுரனது பிரபுத்துவ சாமர்த்தியமான மூன்று குணங்கள். அவை: கர்த்திருத்துவம், அகர்த்திருத்துவம், அந்நியதாகர்த்திருத்துவம் என்பன. (த. நி. போ. ககo.)

ஈச்சுரன்முக்கியகுணம் — ஈச்சுரனுடைய பிரதான குணங்கள். அவை: சர்வஞ்ஞத்துவம், சர்வேச்சுரத்துவம், சர்வநியந்திருத்துவம், சர்வாந்தரியாமித்துவம், சர்வ கர்த்திருத்துவம், சர்வசத்தித்துவம் என்பன. (த. நி. போ. ககo.)

ஈச்சுவரன்– 1. இராகதத்துவத்திருக்கும் பன்னிரண்டுருத்திரர்களிலொருவன். (வி-ணி.) 2. ஐம்பத்தோருருத்திரர்களி லொருவன். (வி-ணி.) 3. கடவுள். 4. தலைவன். 5. வித்தியாதத்துவத்திலிருக்கும் ஓர் உருத்திரன். (வி-ணி.) 6. ஈசுவரன்.

ஈச்சுவரை—டார்ப்பதி.

ஈச்சோப்பி—1. ஈப்பிணி. 2. ஈயோட்டி. (தேவா. 692. 7.) 3. சிலந்தி.

ஈசசகன்—குபேரன்.

ஈசசகி—குபேரன்.

ஈசத்துவசித்தியோகம் — அட்டமாசித்தியோகத்துள் ஒன்று. அது: கண்ணிலுள்ள அநலை வாயுவாலே வாங்கி மேருத் துளைவழியாகச் சிரசிலேற்றி ஏழாண்டுநோக்கி எல்லாருக்கும் பாபங்களைப்போக்கி எல்லாச் சீவனிலும் ஏகமாய்க் கலந்துநிற்றல். (த. நி. போ. ௩எ௨.)

ஈசத்துவம்–அட்டமாசித்திகளு ளொன்று. அது: பிரமாமுதலிய சகலரிடத்துந் தன்னுடைய ஆணையைச் செலுத்துகை. (சி. சி. உ: ௫அ. சிவாக்.) 'ஈச னெனமுத் தொழிலுந் தன் னிச்சை வழிசெய் தெழுபுரவித்-தேசன் முதற்கோள் பணிகேட்பத் திகழ்வ தீசத் துவமாகும்' (திருவிளை. அட்டமா. உஎ.) [ஐஶத்வ.]

ஈசதத்துவம்—சுத்ததத்துவம் ஐந்தனுள் ஒன்று. (சிவப். கட்).

ஈசதிசை — வடகிழக்குத்திசை. 'ஈசாந முச்சிமுக மீசதிசை நோக்கியுறும்' (சைவச. பொது. ௨௩அ.)

ஈசதேசாத்தி-பெருமருந்துக்கொடி (மலை).

ஈசப்பரிவிந்து—கந்தகம்.

ஈசம்—ஈசோபநிடதம்.

ஈசமநோகரீ — இராகவகையில் ஒன்று. (பரத. ராக. 103.)

ஈசர்—1. அதிகாரியாகிய சிவன். (சி. சி. க: ௬௫. மறை.) 2. சதாசிவதத்துவத்திலிருக்கும் அணுசதாசிவர்பதின்மருள் ஒருவர். (சி. சி. அ: உ. மறை.) 3. தேவர். 'ஈசர் தம்மின் மகேச்சுரனீ' (கூர்மபு. திருக்கல். ௩௫.)

ஈசல்— 1. ஈயல், சிறகுமுளைத்த கறையான். (கந்தபு. மோகநீங்கு. உ. உரை.) 2. சிழ்க்கை.

ஈசன்— 1. அரசன். 2. ஆளுபவன். 3. உருத்திரமூர்த்தி. 4. எப்பொருட்குமிறைவன். (சூ. நிகண். உ: கo.) 5. கடவுள்.

6. கணவன். 7. குரு. (பிங்.) 8. கௌரிபாஷாணம். 9. சிவன். 'அதிர்கழ லீசனெ டம்மையிருந்தாங்கு' (கந்தபு. தெய்வ. உகூஎ.) 10. பிரமன். 11. மகேசுரன். (சி. சி. க: கூரு. இராமலி.) 12. மாயையிலே பிரதிபலித்த பிரமம். 'மாயையிலே தோய்ந்தா லீசன்' (உபநிட. கடு.) மாயையாகிய காரணசரீரத்தையும், விராட்டாகிய தூலசரீரத்தையும், இரணியகருப்பமாகிய சூக்குமசரீரத்தையுமுடைய, மாயையிற் பிரதிபலித்த பிரமம். 'ஈசனுக்குத் தூலவுடல் பூதபௌ திகமே-யீசனுக்குச் சூக்கவுட லிருவகைச்சூக்குமமே-யீசனுக்குக் காரணமா முடன்மாயை யவனே-யீசன்' (உபநிட. உ0.) 13. மூத்தோன். (சூ. நிகண். உ: கூ.) 14. மூவகைப் பச்சைக் கருப்பூரத்துள் ஒன்று; அது: வெளுப்பும் காரமும் தளதளப்பு முள்ளது. இது: வசியத்துக்குரிய ஒரு மருந்தென்பர். 'ஈசனெனும் பூரம் வெண்மையென் றறிவாய்' (பதார்த்த குண. ககஈ0.) 15. வடகிழ்த்திசைப்பாலன். 16. விட்டுணு. [ஈஶ.] 17. தகப்பன்.

**ஈசன்மைந்தன்**-1. முருகன். 2. விநாயகன். 3. வீரபத்திரன் (பிங்.)

**ஈசன்யோகம்**—சாலம்ப சிவயோகம். (சி. சி. அ: உடு. ஞாநப்.)

**ஈசன்றார்**—கொன்றை.

**ஈசன்றினம்**—திருவாதிரை (சூடா).

**ஈசனாரணி**—கொன்றை. (தைல. தைலவ. கஙடு.)

**ஈசனாள்**—திருவாதிரை.

**ஈசாநகலை** — முப்பத்தெட்டுக்கலைகளுள் ஈசாநமுகத்துக்குரிய ஐந்துகலைகள். (த. நி. போ. ஙாக.) அவை: சசிநி, அங்கதை, பிரமேட்டை, மரீசி, சுவாலிநி என்பன. (அகோ. கிரி. உசஙு.) இவற்றை நியசிக்குந்தாநம் முறையே ஊர்த்துவம், பூர்வம், தக்ஷிணம், உத்தரம், பச்சிமம் என்னு மூர்த்தினிகளாம்.

**ஈசாநகற்பம்**-ஒரு கற்பம். 'ஆசின் றுயர்ந்த கற்பத்தி னருளீ சாந கற்பமீ' (கூர்மபு. திருக்கல். ஙடு.)

**ஈசாநகோணம்**—ஈசாநதிசை. (திருவாலவா. 32. 12.)

**ஈசாநதிக்கு** — வடகிழக்கு. 'இருந்திசைகளோரெட்டுங் குண்டமமைத் தீசாநதிக்கும்' (கூர்மபு. தாந. ச.)

**ஈசாநதிசை**—வடகிழ்த்திசை. (திவா.)

**ஈசாநதேசிகர்**—சுவாமிநாததேசிகர்.

**ஈசாநப்பிரமம்**—சதாசிவமூர்த்தி. இவர்: புருடன், சோத்திரம், வாக்கு, சத்தம், ஆகாயம்: இவற்றிற்கு அதிட்டாநதேவதை. (கூர்மபு. பிரகிரு. கூ. உரை.)

**ஈசாநம்** — 1. சதாசிவமூர்த்தியுடைய ஐந்துமுகங்களுள் ஒன்று. 'ஈசாநந்தன்னிற் புரோற்கிதமாதியெட்டும்' (சைவச. பொது. ஙாரு.) 2. சாந்தியதீதகலையில் வியாபித்திருக்கும் மூன்றுமந்திரங்களுள் ஒன்று. (சி. சி. அ: கூ. மறை.) 3. பதினொருமந்திரங்களுளொன்று. (சி. சி. அ: கூ. மறை.) 4. வடகிழக்குத்திசை.

**ஈசாநமேரு**—கைலாசமலை.

**ஈசாநர்**-1. கலாதத்துவத்திலிருக்கும் ஓர் உருத்திரர். (வி-ணி. உஎரு.) 2. வடகிழ்த்திசைப் பாலன். 'ஆசை-யீறுசேர் தருமீ சாநரிருந்தனர்' (கந்தபு. ததீசி. உஅ.)

**ஈசாநன்**—1. ஆஞ்ஞாபிக்குஞ் சத்தியுடையவனுய்ச் சர்வலோகத்துக்கும் மேலாயிருப்பவன். (சி. சி. க: ருக. சிவாக்.) 2. ஓர் உருத்திரன்; இவன்: மகேசுரனுடைய அழுகையில் உதித்த எழுவரிலொருவன். [ஐசுவரியமுடையவன் என்றபடி.] 3. கடவுள். 4. சிவசூரியன். 5. சிவன். 6. வடகிழ்த்திசைப் பாலன். 'உலவைவேந்த னீசாந - விருதி' (கூர்மபு. தக்கன்வே. ஙங.) 7. பதினொருருத்திரருள் ஒருவன். (திவா.) [ஈஶ-அருதல். ஆந - ஒரு விகுதி.]

**ஈசாநி**—1. சிவனுடைய கிரியாசத்தியின் புறஉருப் பஞ்சசத்திகளி னொன்று. (சி. சி. க: ருசு. ஞாந.) 2. பார்ப்பதி.

**ஈசாநியம்**—ஈசாநம், வடகிழ்த்திசை.

**ஈசாநியமலை**—ஈசாநியம்.

**ஈசாநியன்**—ஈசாநன்.

**ஈசாவாசியம்** — யசுர்வேத உபநிடதத்தொன்று. (கூர்மபு. அட்டமூர். உசு. உரை.)

**ஈசாவாசியோபநிடதம்**—ஈசாவாசியம்.

**ஈசி**-1. பார்வதி. 2. ஓ ரிகழ்ச்சிக்குறிப்பு. 'ஈசிபோமின்' (திவ். பெரியதிரு. 1. 3. 8.)

**ஈசித்துவம்**—ஈசத்துவம்.

**ஈசிதை** — அட்டசித்திகளுள் ஒன்றுயெ ஈசத்துவம். (பௌட். பும். கூ0உஇ.) [ஈஶிதா.]

ஈசுரக்கோவை—ஈசுரமூலி.

ஈசுரதத்துவம்—சுத்தமாயையிற்றோன்றிய ஐந்துதத்துவங்களு ளொன்று. அது: மகேசுவரனுக்கு அதிட்டேயத்தாநமாகியும், கிரியை எறி ஞாநங்குறைந்த அவதரமாகியும் இருக்கும். (சி. சி. க: சுரு, சுசு. சிவாக்.) [ஈஶ்வர தத்வம்.]

ஈசுரம்—ஈசுரத்துவம்.

ஈசுரமருந்து—ஈசுரமூலி.

ஈசுரமூலி — 1. ஈச்சுரமூலி. 2. தராசுக்கொடி. 3. பெருங்கிழங்கு. 4. பெருமருந்துக்கொடி (மலை.) 5. பெருமரம்.

ஈசுரவிந்து—பாதரசம். (மூ. அ.)

ஈசுரவேர்—ஈசுரமூலி. (மலை.)

ஈசுரன்—1. அநந்தேசுரன். 'ஈசுரனெனு மநந்தேசுரனுக்கும் சுத்தமாயையிற் றிரோதாநகிர்த்தியம் நடவாதிருந்தாலும், அசுத்தமாயாகிர்த்தியம் அஞ்சும் நடந்தாலும், திரோதாநகிர்த்தியம் பிரதானம்' (சி. சி. க: சு0. ஞாநப்.) 2. கடவுள். 3. சிவன்.

ஈசுவர—ஒரு வருடம்.

ஈசுவரக்கோவை—ஆறுமாதத்தில் விளையும் ஒருவகை நெல்.

ஈசுவரசத்தித்திரயம் — செநநி, ஆரிணி, ரோதயித்திரி என்னும் மூன்று சத்திகள். (சி. சி. உ: ருச. சிவாக்.)

ஈசுவரசரீரத்திரயம்-ஈசுவரனுடையமூன்று சரீரங்கள். அவை: விராட்டுவாகிய தூலசரீரமும், இரணியகர்ப்பமாகிய சூக்குமசரீரமும், அவ்வியாகிருதமாகிய காரணசரீரமுமாம் (நாநா. கட். கரு).

ஈசுவரசாட்சி—பிரமசைதந்நியம். (உபநி. உ0.)

ஈசுவரத்திரயம்-விராட்புருடன், இரணியகர்ப்பன், அந்தரியாமி என்னும் மூவர்.(த. நி. போ. க0க.)

ஈசுவரத்துவம்-ஈசுவரனுயிருக்குந்தன்மை. (வாசுதேவ. சசு.)

ஈசுவரத்துவைதம்-ஈசுவர விராட்டு சரீரமாகிய இந்த அண்டபேதங்களெல்லாந் தானெனல். (உபநி. ௯க.)

ஈசுவரதத்துவம் — சாந்திகலையிலிருக்கும் மூன்றுதத்துவங்களு ளொன்று. அது: ஈசுவரனு லதிட்டிக்கப்படுந் தத்துவம். கிரியாசத்தி சம்பந்தத்தினுலே மந்திரேசுவரரான அநந்தாதிகளோடு கூடிய தத்துவம். (சி. சி. அ: அ. மறை. சி-லி. ஞாந. கூ. உரை.)

ஈசுவரதரு—கடப்பமரம்.

ஈசுவரதாரு—வெண்கடம்பு.

ஈசுவரதிநம்—உருத்திராயுக்காலமிரண்டு கூடின காலம். (சைவப். ருக.)

ஈசுவரம்—சுத்தமாயையின் ஐந்துதத்துவங்களுள் ஒன்று. அது: சாதாக்கிய தத்துவத்திற்குக் கீழிருப்பது. (பௌட். பதி. ரு0.)

ஈசுவரமூர்த்தி-பரமசிவனுடைய ஒன்பது திருமேனிகளுள் ஒன்று. அது: சதாசிவமூர்த்தியிற் பத்திலொன்றிலே தோன்றின ஓர் உருவத்திருமேனி. (சி. சி. உ:எச. மறை.)

ஈசுவரவருடம்—1. ஈசுவரதிநம் முந்நூற்றறுபது கூடினகாலம். (சைவப். ருக.) 2. ஈச்சுர.

ஈசுவரவவிகாரவாதசைவம்- அகச்சமயத்தொன்று.

ஈசுவரவுபாதி—ஈசுவரனுடைய விசேடகுணங்கள். அவை: சர்வஞ்ஞத்துவம், சர்வகாரணத்துவம், சர்வாந்தரியாமித்துவம், சர்வேசுரத்துவம், சர்வசிருட்டித்துவம், சர்வஸ்திதித்துவம், சர்வசங்காரத்துவம் என்பன. (உபதேச. ருஎ.)

ஈசுவரன்—1. சிவன். 2. உடையவன். 3. கடவுள். 4. கிரியையேறி ஞாநங்குறைந்த அவதரமாகிய ஈசுவரதத்துவத்திலே அநுப்பிரவிட்டனுயிருக்கும் மூர்த்தி. (சி. சி. க: சுரு, சுசு. சிவாக்.) 5. சர்வகர்த்திருத்துவசமர்த்தன். (பௌட்.பசு. கருஎ.) 6. மாயையிற் பிரதிபலித்த பிரமம். (உபநி. கரு.) 7. தலைவன். [ஈஶ்வர: ஈஶ - ஆளுதல். வர - ஒரு விகுதி.]

ஈசுவரன்சூக்குமசரீரம்- இரணியகருப்பம். (நாநா. கட். கரு.)

ஈசுவரன்தூலசரீரம் — விராட்டு. (நாநா. கட். கச, கரு.)

ஈசுவராயுக்காலம்-ஈசுவர்வருடம் பரார்த்தங்கூடின காலம். (சைவப். ருக.)

ஈசுவரார்ப்பணம் — கடவுளுக்கு உரிய தாக்குகை.

ஈசுவரி—உமாதேவி. [ஈஶ்வரி]

ஈசுவரிநாதம்— } கந்தகம். (மூ. அ.)
ஈசுவரிவிந்து— }

ஈசுவரைக்கியவாதி—நீரும் நீருஞ் சேர்ந்தாற்போல ஆன்மாவுஞ் சிவனும் முத்தியில் இரண்டறக் கலந்திருக்கும் என்னும் மதஸ்தன். (சி. சி. கக: கூ. சிவாக்.) இவன் ஆணவமலம் இல்லையென்றும், மாயாகன்மங்களே யுள்ளனவென்றும், சுத்தராயுள்ள ஆன்மாக்கள் செய்த புண்ணிய பாவங்களுக்கீடாகக் கர்த்தா உடம்பு முதலாயினவற்றைக் கொடுக்க அதனாலே சநந மரணப்பட்டுக் கன்மவொப்பு வந்து, ஆன்மா, பண்டு போலச் சுத்தனும் என்றுஞ் சொல்வன்.

ஈசுவரோபாஸ்தி — கடவுள்வழிபாடு. (வேதா. சூ. 24. உரை.)

ஈசேல்—சிறகுக் கறையான்.

ஈசை—1. உமாதேவி. [ஈஶ.] 2 ஏர்க்கால். [ஈஷ.]

ஈசோபநிடதம் — தசோபநிடதங்களுள் ஒன்று.

ஈஞ்சு—ஈச்சமரம். 'இலவ ஞாழலு மீஞ்சொடு சுரபுன்னை' (தேவார. திருமாந்துறை. ச. திருஞாந.) இது, பேரீஞ்சு, காட்டீஞ்சு, சிற்றீஞ்சு என மூன்றுவகைப்படும்.

ஈஞ்சை—1. கொலை. 2. தீங்கு. 3. நிந்தை. [ஹிம்ஸா.]

ஈட்சணம்—1. கண். 2. பார்வை. [ஈக்ஷணம்: ஈக்ஷ - பார்த்தல். அண-ஒரு விகுதி.]

ஈட்டிடிமை—தங்கணிடத்தி லீடாகவைக்கப்பட்டவன். (மிரு. ச. கஙகூ.)

ஈட்டம்—1. கூட்டம். 'புனல்குடை மகளிரீட்டம்' (நைட. நாட். கஉ.) 2. சம்பாதித்தல். 'ஈட்டமிவறி' (வள். க00ங.) [இதனை வணிகரெண்குணத்து ளொன்றென்ப.] 3. திரள். 4. தேட்டம். 5. மிகுதி. 'இங்குமாநட ரியற்றும் புண்ணியத் தின்பவீட்டம்' (சி. சி. உ: சக.) 6. வலிமை. 'புராரிகாதலனீட்டமொ டொருகணை யேவி' (கந்தபு. தாரகன்வதை. கசசு.)

ஈட்டல்—1. சம்பாதித்தல், திரட்டுதல். 'இயற்றலுமீட்டலும்' (வள். ஙஅ௰.) [ஈட்டு, ஈண்டு என்பதன் பிறவினை.] 2. செய்தல். 'ஈட்டிய மாயைக ளெவையும்' (கந்தபு. தாரகன்வதை. கஙக.) 3. தொகுதி. 4. வணிகர் குணத்தொன்று. (பிங்.)

ஈட்டி—1. குந்தம்; இது வேலின் ஆகிருதியாகச் செய்யப்பட்டுக் குத்றுதற்குப் பிரயோகிக்கும் ஓராயுதம். 'குறியவீட்டிகொடு குற்றுவர்' (கந்தபு. இரண்டா. ஙசக.) 2. தோதகத்தி.

ஈட்டியது—1. சஞ்சிதவினை. 2. தேடியது.

ஈட்டியெழுபது—ஒட்டக்கூத்தராலியற்றப்பட்ட ஒரு நூல்.

ஈட்டிராவுத்தன்—ஈட்டிப்படைவீரன்.

ஈட்டு — 1. ஈட்டுதல். 'ஈட்டுறு பல்பவம்' (கந்தபு. காமத. அ.) 2. ஈட்டென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 'ஈட்டு சேனை யமைச்சுளார் பிற ரியாருமின்றி' (திருவிளை. விடையி. அ.) 3. கூட்டம். 'ஈட்டரும் புள்ளினம்' (சீவக. 95.)

ஈட்டுக்கீடு—சரிக்குச் சரி.

ஈட்டுதல்-1. சம்பாதித்தல், ஈட்டல். 'இன்னாரும்பொருளை யீட்டுதலுந் துன்பமே' (நீதிவெண்பா. சகூ.) 2. கூட்டுதல். (பிங்.)

ஈட்டுப்பத்திரம் — ஒருவன் அசைவுள்ள பொருளையேனும், அசைவில்லாதபொருளையேனும், தங்கணிடம் ஈடாகவைத்து எழுதிக் கொடுக்கும் பத்திரம். (மிரு. ச. ஙங.)

ஈட்டுமம்—வசந்தகாலம். [ஈஷ்மம்.]

ஈட்டுமன் — மன்மதன். [ஈஷ்ம - வசந்தகாலமுடையவன் என்றபடி.]

ஈடகம் — மனத்தைக் கவர்வது. 'ஈடகமான நோக்கி' (தேவா. 607. 3)

ஈடணம்—புகழ். [ஈஷண.]

ஈடணு—விருப்பம்.

ஈடணுத்திரயம் — ஆசை மூன்று. அவை: அர்த்தேடணை, புத்திரேடணை, உலகேடணை. (வி. ஙி. உஉச.)

ஈடணை—1. விருப்பம், ஆசை. 2. துன்பம்.

ஈடத்து—அற்பம். (பௌட். பசு. கசஅ. உரை.) [ஈஷத்.]

ஈடம்—1. இடம் என்பதன் விகாரமொழி. 'நஞ்சுண் டிருள்கண்டத்த ரீடமாவது' (தேவார. திருஞாந. திருக்கேதீ. உ.) 2. ஐப்பசி மாதம். [ஈஷம்.]

ஈடழித்தல் — வலிமையைக்கெடுத்தல். 'ஒருகரி யீடழித் துரித்தனை' (தேவார. திருவெழுகூற்றிருக்கை. வரி. கங. திருஞாந.)

ஈடழிதல்—ஈடழிவு.

ஈடழிவு—1. பெருமைகெடல், சீர்கெடல். 'இரவியைக் கண்ட மின்மினிக் குலம்போ லீடழிந்திடவுடன்று' (பாரத. பதினேன்காம். கக.) [ஈடு-பெருமை.] 2. வலிகெடுகை. (திவ். நாய்ச். 8. 3)

ஈடறல்-வலிகெடுதல். 'இந்தவெம் பகழிக் கெல்லா மீடறு மிவனெனன் றெண்ணி' (பாரத. நிரைமீட்சி. கடு.)

ஈடறவு—பெருமைகேடு. (திவ். இயற். பெரியதிருமடல். 143).

ஈடன்—1. பணக்காரன். 2. பெருமை யுடையோன். 3. வலியுடையோன். [ஈடு-பெருமை, வலி. அன்-ஒரு விகுதி.]

ஈடாட்டம்–1. நெகிழ்ந்தசைதல். 2.கொடுக்கல் வாங்கல். 3. தளதளப்பு. 4. திராணி. 5. விசாலம். 6. போட்டி. 7. பணப்பழக்கம். 8. நெகிழ்ச்சி. 9. ஈனஸ்திதி.

ஈடாடல்—1. நெகிழ்ந்தசைதல். 2. உழலல். 3. நேர்நிற்றல். 4. போட்டிபோடுதல்

ஈடாடுதல்—ஈடாடல்.

ஈடாதண்டம் — ஏர்க்கால். 'நகைபெறு மீடாதண்டம்' (மச்சபு. சூரியரத. உக.) [ஈஷாதண்ட.]

ஈடிகை–1. அம்பு. 2. ஆயுதம். 3. சித்திரமெழுதுங்கோல். [ஈஷிகா.]

ஈடிதம்—துதிக்கப்பட்டது. [ஈடித.]

ஈடு—1. அடகு, அடைமானம். 2. ஒப்பு. 'இறத்தலிற் றுறத்தலீ டலவால்' (வை. நீ. உ௫.) 3. ஒரு மருந்து. 4. குழைவு. (சூடா) 5. கைம்மாறு. 6. தகுதி. 'ஆட்செய்யுமீடே' (திவ். திருவாய். 1. 6. 2.) 7. நோராகுகை, பொருத்தம். 8. பதில். 9. பெருமை. 'ஈடுறு பிலங்கட் கெல்லா மிறைவராய்ப் பாது காப்போர்' (கந்தபு. அண்ட. கஅ.) 10. வலிமை. 'யானே-வீட்டொடு தாரந்தேன்கொல்'(கந்தபு. காவிரிநீ. சக.) 11. வருத்தம். 'ஈடினு லிருந்தெண்ணி' (சீவக. 1762) 12. இடுகை. 'ஈடமை பசும்பொற் சாந்தம்' (சீவக. 1256). 13. 'மலர்ந்த வீட்டினுல்' (கம்பரா. இலங்கைகேள். 4). 14.உள்ளீடானவிஷயம். 'முடங்க னிமிர்த்தத வீடுநோக்கி' (கம்பரா. பள்ளி. 6.) 15. உபாயம். 'அடியேன் சொல்லு மீடவர்க்கே' (திருக்கோ. 111). 16. கவசம். 'உடம்புக் கீடிடாதே' (ஈடு. 7. 5. 9.) 17. திருவாய்மொழிவியாக்யானங்களுள் முப்பத்தாறுயிரப்படி.

ஈடுகட்டல்—, ஈடுகட்டுதல்— 1.சரிக்கட்டுதல். 2.பிணை கொடுத்தல். 3. வன்மை கெடாதிருத்தல். 4. பிணையாதல்.

ஈடுகொடுத்தல்—1. எதிர்நிற்றல். 2. நிகராதல். 3. பதிலளித்தல். 4. திருப்திசெய்தல்.

ஈடுகொள்ளுதல் — மனங்கனிதல். 'திருமுகமிறைஞ்சி யீடுகொண்டு' (திருவாலவா. 55. 20)

ஈடுசெய்தல் — 1. பிரதியாகச்செய்தல். 2. சரிக்கட்டுதல்.

ஈடுசெலுத்தல்—1. ஈடுகட்டல். 2. பதிலளித்தல்.

ஈடுபடல்—, ஈடுபடுதல்— 1.வலியழிதல்.(பிரபோத. 19. 11.) 2. அகப்படுதல். 'விலங்கீடுபட்டதே' (பாரத. வாரணு. 79.) 3. மனங்கனிதல். 4. துன்பப்படுதல்.

ஈடுபாடு—1. ஈட்டுக்கமைந்திருத்தல். 2. ஒப்பு. 3. சாரவைத்தல். (தாயு. ஆகாரபுவந. உ: உரை. 4. நயநஷ்டம். 5. பெருந்துன்பம். 'ஈடுபா டித்தனையும் பட்டு' (அரிச்ச. மயாந. ௬ச) 6. மனங்கனிதல்.

ஈடேற்றம்—1. இரட்சிப்பு. 2. உய்வு. 3. ஈடேறச்செய்கை. 4. மீட்பு.

ஈடேற்றல்—ஈடேறச்செய்தல்.

ஈடேறல்—ஈடேறுதல்.

ஈடேறுதல்—1. அநுகூலமுடையதாதல். 2. உய்வுபெறுதல். 3. வாழ்வடைதல். 'என்னைநீ யீடேற்றத்-திருவுளத்தருள்செய்குக' (பாரத. நச்சு. ரு.)

ஈடை—1. ஏர்க்கால். 2. புகழ்ச்சி.

ஈண்டல் — 1. கூடுதல். 'அமண்கையர் பலரீண்டி' (பெரியபு. திருநாவு. ருஉ.) 2. நிறைதல். 3. நெருங்குதல். 'வண்சுண்ணப்-புழுதி யீண்டலின் வறப்பவான் கங்கையும் புலர' (கந்தபு. நகர்பு. ருரு.) 4. மிகுதல். 'இயைந்தொருங்கீண்டி' (சிலப். 6. 145.) 5. விரைந்துசெல்லுதல். 'இடுக்கண் களைதற் கீண்டெனப்போக்கி' (சிலப். 13. 101.) 6. தோண்டுதல். 'மலர்க்கண்ணையீண்ட...ஆழி யீந்தார்' (தேவா. 192. 5.)

ஈண்டு—1. இவ்வண்ணம் (சூடா). 2. இவ்விடம். 'ஈண்டு வைகுது மென்றவண் வைகினன்' (கந்தபு. இரணியன். ௧௩௧.) 3. ஈண்டென்னேவலும், தெரிநிலைவினைப் பகுதியும், வினைத்தொகையும். 4. புலி தொடக்கி (மலை). 5. விரைவு. (சூ. நிகண். ௯: ௩௧.) 6. இம்மையில். 'ஈண்டறம் பூண்டார்' (குறள். 23.) 7. இப்பொழுது. 'ஈண்டேகிக் கொணர்வேன்' (கம்பரா. திருவவ. 57)

ஈண்டுதல்—1. கூடுதல். 2. நிறைதல். 'உப்பீண்டுவரி' (நாலடி.) 3. நெருங்குதல், செறிதல். 4. விரைதல். 5. தோண்டுதல். 6. மிகுதல்.

ஈண்டுநீர் — கடல். 'ஈண்டுநீர் மிசைத் தோன்றி' (கலித். 100).

ஈண்டென-விரைந்து. 'நீயே யீண்டெனத் தந்தருளவேண்டு மென்கின்றார்' (திவ். திருவாய். 2. 9. 2. ஆறு).

ஈண்டை—இவ்விடம். 'ஈண்டை மாநிதி யாவு நல்குகோ' (கந்தபு. தெய்வ. ௫௫.)

ஈண்டையார்-இவ்விடத்தார். 'ஈண்டையா ரல்லர்' (கம்பரா. தைல. 75).

ஈணி—பனைநார்.

ஈணை—அகணி, பனைநார்.

ஈத்தல்-1. கொடுத்தல். 'துள்ளியின் புனலீத்திட்டாலும்' (சூத. ஞான. ௪: ௧௨.) 2. இழிந்தோர்க்குக் கொடுத்தல். 'ஈயென் கிளவி யிழிந்தோன் கூற்றே' (தொல். சொல். 445) 3. பகிர்ந்துகொடுத்தல். 4. வகுத்தல். 5. படைத்தல். 'எவ்வுயிர்களும் ஈந்தான்' (கம்பரா. அகலி. 49) 6. ஈனுதல். 7. நேர்தல் (பரிபா. 9. 17).

ஈத்தை — தருவாய் எனப் பொருள்படும் ஒரு முன்னிலைவினை. (கலி. ௮௯.) [ஈ; இத்தை; இதில் இகரங் குறைந்துநின்றது.]

ஈத்வரீ—வியபிசாரி.

ஈதல்—கொடுத்தல்.

ஈதா—இந்தா. 'அறிந்திலே னீதா' (பரிபா. 8. 60)

ஈதி — 1. அதிகமழை, மழையின்மை, எலி, விட்டில், கிளி, அரசண்மை என்னும் ஆறினும் நாட்டுக்கு வருங் கேடு. 'ஈதி யாதென நிலந்தலை யெடுத்திடச் சிறுகா - வீதி வாதையுங் கையகன் றனவெனில்' (இரகு. தசரத. ௯.) 2. ஒருவரோடொருவர் பொருதல். 3. குட்டி. 4. கொடுத்தி எனப் பொருள்பட்டு இரப்புரையாய்வரும் ஓர் ஏவல்வினை. 5. பரதேசப்பிரயாணம், பரதேசசஞ்சாரம்.

ஈதிபாதை—தருமசங்கடம்.

ஈதிவர்தை—தருமசங்கடம். (இரகு. தசரத. 6).

ஈது—இது. 'அஃதோவீததிசயமா'(தாயு. ஆகார. ௧௧.) [இது என்பதில் இகரம் நீண்டு வந்த விகாரம்.]

ஈதை—துன்பம். 'ஈதைகள் தீர்க்கு நாமத் திராமனை' (கம்பரா. நாகபா. 275.)

ஈந்து — 1. ஈச்சமரம். 'ஈந்தின் சிலம்பி பொதி பைங்காய்' (யாப். காரிகை. உறுப். எ. உரை.) 2. பேரீச்சு. (தைல. தைலவ. ௧௩௫.) 3. நஞ்சு. 4. சிற்றீந்து.

ஈநசந்தி—1. அகாலம். 2. தொல்லை.

ஈநசாதி — இழிந்தசாதி, விலக்கப்பட்டசாதி. [ஹீநஜாதி.]

ஈநசாமந்தர்—சாமந்தர்வகையினர். (சுக்கிரநீதி. 26)

ஈநதை — 1. இழிவு. 'தாமறவீநதை யுடைய' (ஞானவா. தாசூ. 23). 2. குறைவு. [ஹீநதா.]

ஈநம்-1. அழிவு. 2. இல்லாதது. 3. இழிவு. 'ஈநமாயில்விருந்து' (நாலடி-தாளா. அ.) 4. குறைபாடு. 5. சிதைந்தது. 6. விடப்பட்டது.

ஈநன்—1. இல்லாதவன். 2. இழிவுள்ளவன். 'ஈநனுமொருவன்' (திருவாத. திருப்பெருந். 133.) 3. குறைவுள்ளவன். 4. விடப்பட்டவன். [ஹீநஃ.]

ஈநாயம்—1. சங்கையின்மை. 2. நிந்தை.

ஈப்சை—ஒன்றுபெறவேண்டும் என்னும் விருப்பு. [ஈப்ஸா.]

ஈப்பி—1. ஈயின்மலம். [ஆப்பி என்பதிற் போல இதன்கண்ணும் பகரவிகாரங் குறுகிற்று.] 2. ஈர்.

ஈப்பிணி—உலோபி.

ஈப்புலி—ஈயைக் கொல்லும் பூச்சி.

ஈம்—1. ஈயும் என்பது, இடையே நின்ற உயிர்மெய் தொக்குவந்த ஒரு விகாரமொழி. 'நீரினி - யிம்மறை யியல்பினை ரெவர்க்கு மீமென' (கந்தபு. பாயிர. ௪௧.) 2. சுடுகாடு. 'ஈமுங் கம்மும்' (நன். ௨௬௩.)

**ஈமக்கடன்**—சுடுகாட்டிற் செய்யப்படும் பிரேதகக முதலிய கிரியைகள். 'ஏந்திழை யீமக் கடனிறு விப்போ தென்றேவி' (திருவிளை. பழியஞ். ௩௦.)

**ஈமத்தாடி**—சிவன். (திவா)

**ஈமத்தாழி** — முதுமக்கட்டாழி. (புறநா. 256.)

**ஈமம்**–1. சுடுகாடு. 'ஈமத்தே நடம்புரியுங் கண்ணுதலோ னெடாதசிலை' (கந்தபு. தாரக. ௩௩.) 2. பாதிரி (மலை). 3. விறகு, பிணஞ் சுடுதற்கடுக்கும் விறகடுக்கு. 'கரிபுற விறகி னீம வொள்ளழல்' (புறநா. ௨௩௧)

**ஈமவநம்**—மயாநம்.

**ஈமவாரி**—வசம்பு.

**ஈமவிதி**—பிரேதக்கிரியை. 'அரசை யீம விதி செய்ய' (பாரத. சம்பவ. 105.)

**ஈயக்களங்கு**—வங்கவெட்டை.

**ஈயக்கற்கண்டு**—வங்கச் சுன்னம்.

**ஈயக்கிட்டம்**—ஈயமுருக்கியெடுத்த கறை.

**ஈயக்குழவி**–நீலபாஷாணம். இது, 'ஈயத் தின்பிள்ளை' எனவும் வழங்கும். (மூ. அ.)

**ஈயக்கொடி**—1. புலிதொடக்கி (மலை.) [ஈகைக்கொடி என்பதன் திரிவு.] 2. இண்டஞ்செடி.

**ஈயச்சிந்தூரம்**—வங்கசிந்தூரம்.

**ஈயச்சுரதம்** — இண்டஞ்சாறு. (தைல. தைலவ. ௧௧௧.)

**ஈயச்செடி**—இண்டு. (மூ. அ.)

**ஈயசிந்தூரம்**—சிந்தூரவகையிலொன்று.

**ஈயடிச்சான்காப்பி** — மூலத்திலுள்ளபடி யெழுதும் பிரதி.

**ஈயத்தண்டு**—இண்டு. (மூ. அ.)

**ஈயத்தின்பிள்ளை**—நீலபாஷாணம்.

**ஈயப்பற்று**—வங்கப்பற்று.

**ஈயபற்பம்**—வங்கபற்பம்.

**ஈயம்** — 1. பஞ்சலோகத்தொன்று. 2. பாதிரிமரம். 3. மிருதாரசிங்கி. (மூ. அ.)

**ஈயமணல்**—வங்கமணல், ஈயப்பொடி.

**ஈயமலை**—ஒரு மலை.

**ஈயல்**–1. இந்திரகோபப்பூச்சி. 'நன்மாரிக் காலமுறை யீயலது காண்' (பதார்த்தகுண. ௬௨௨௬.) 2. ஈசல், சிறகுமுளைத்த கறையான். 'நந்திய வீய லுண்டி நசையொடு மிசைவார்' (பெரியபு. கண்ணப். 35.) 3. ஈதல். [அல் - தொழிற்பெயர்விகுதி.]

**ஈயலி**—தம்பலப்பூச்சி. (வை. மூ.)

**ஈயவரி**—1. பெருமருந்துக்கொடி. 2. ஈச்சுரமூலி. (மலை.)

**ஈயவிரி**—பெருமருந்துக்கொடி.

**ஈயவெள்ளை**—1. மரம் முதலியவற்றிற் குப் பூசும் ஒருவகை வெள்ளை மை. 2. பற்ப வகையிலொன்று.

**ஈயன்மூதா**— } (பிங்.) இந்திரகோபம்.
**ஈயன்மூதாய்**– } (கலித். 85. உரை.)

**ஈயாப்பத்தன்**—உலோபி. (மதி. களஞ். 1. 88.)

**ஈயிலை**—இண்டிலை.

**ஈயுவன்**—இராவணன். (அக. நி.)

**ஈயெச்சத்தோல்** — ஈயினெச்சம்பிடித்த தோல், பூச்சியரித்த தோல்.

**ஈயெனல்**—பல்லைக்காட்டுங் குறிப்பு.

**ஈயை**—1. இஞ்சி. (மலை.) 2. இண்டங்கொடி. 3. சஞ்சீவி. 4. புலிதொடக்கி. (மலை.)

**ஈயோட்டி**–ஈயைத் துரத்தும் ஒரு கருவி.

**ஈயோப்பி**—ஈயோட்டி.

**ஈர்**—1. இரண்டு என்பதன் விகாரமாய் வேற்றுமையுருபேலாததாய்ப் பெயர்ச் சொல்லுக்கு முன்னாகவரும் ஓ ரெண்ணுப் பெயர். 'ஈருடன் முயங்கு மார்வ மின்றியே' (கந்தபு. மேரு. ௧௮.) 2. ஈரம். 'ஈர்நறுங் கமழ்கடாஅத் தினம்பிரி யொருத்தல்' (கலி. ௨௧.) 3. ஈரென்னேவலும், தெரிநிலைவினைப் பகுதியும் வினைத்தொகையும். 4. ஒரு முன்னிலைப்பன்மைவிகுதி. 'வந்தீர்'. 5. கரும்பு. (மலை.) 6. நெய்ப்பு. 'ஈன்றவ டிதலைபோ லீர்பெய்யுந் தளிரொடு' (கலி. ௩௨.) 7. பேன்குஞ்சு. 'ஈருடை யிருந்தலை யாரச் சூடி' (பெரும்பாண். ௨௧௬.) 8. பேன்முட்டை. 9. முன்னிலையொருமைச் சிறப்பில்வரு மொரு விகுதி. 'முநிவ ரேநீ ரெங்குளீர் செப்புமென்றார்' (பெரியபு. தடுத்தா. ௪௬.) 10. கதுப்பு. (அக. நி.) 11. நுண்மை. 'ஈரயிர் மருங்கின்' (சிலப். 6. 146.) 12. ஈர்க்கு. 'இடையீர் போகா விளமுலையாளை' (தேவா. 1061. 2.) 13. இறகு. (பிங்.) 14. பசுமை. 'இருவெதிரீர்ங்கழை' (மலைபடு. 20.) 15. இனிமை; (திருக்கோ. 28.)

ஈர்க்கில் — 1. அம்பினிறகு. (சூடா.) 2. ஓலையீர்க்கு.

ஈர்க்கிறல்—இறால்மீனில் ஒருவகை.

ஈர்க்கு-1. அம்பினிறகு. 'வையம்பணிசிலை வாழிடமீர்க்குவட் காரைவெல்லும்-வையம்' (கம்பரங். உக.) 2. ஓலையின்புறத்தில் நடுவே தடித்திருக்கு மது. 'ஈர்க்கிடை புகாது வீங்கு மிளமுலை'(கூர்மபு. கண்ணன்மணம். களறு.)

ஈர்க்குக்கம்பி—ஆடையின் சன்னக்கரை.

ஈர்க்குச்சம்பா-ஒருவகை நெல். 'ஈர்க்குச் சம் பாவென் றியம்பு மரிசியது-நாக்குக் கதி யுருசி நல்குங்காண்' (பதார்த்தகுண. 885.)

ஈர்க்குமல்லிகை-ஒருவகை மல்லிகை (மூ. அ)

ஈர்கொல்லி—1. ஈர்கோலி. 2. உப்பிலி (மூ. அ.)

ஈர்கோலி—ஈர்வாரி.

ஈர்ங்கட்டு—குளிர்காலத்திற்குரிய உடை. 'இளையருமீர்ங்கட்டயர' (கார்நாற். 22.)

ஈர்ங்கதிர்-1. குளிர்ந்த கதிர். 'ஈர்ங்கதிர்ச் சிவிகை' (இரகு. அய. ௬௧.) 2. சந்திரன். (சோதிடக்கடல்.)

ஈர்ங்கழை-பசியகோல். 'இருவெதி ரீர்ங் கழை தத்தி' (மலைபடு. ௨௦௭.)

ஈர்ங்கை—உண்டுகழுவிய கை. 'ஈர்ங்கை விதிரார்' (வள். ௧௦௭௭.)

ஈர்த்த—குளிர்ந்த எனப் பொருள்படும் ஒரு குறிப்புப்பெயரெச்சம். 'ஈர்த்தமா மதி சசியென்பது' (கந்தபு. திருநகர. ௨௧.)

ஈர்த்தல் — 1. அறுத்தல். 'யானென தெனுஞ் செருக்கீர்த்த மகனே' (அவிரோ. ௧௦.) 2. இழுத்தல். 'நார்தொடுத் தீர்க்கி லென்' (நாலடி. யாக்கை. ௬.) 3. ஈரித்தல். 4. உரித்தல். 'புலியி னீருரி யுடுக்குமோ'(கந்த பு. ததீசியுத். ௩.) 5. பிளத்தல். 6. வெட்டல். 7. எழுதுதல். (கலித். 143. 32.)

ஈர்தல்—1. அறுத்தல். 'உயிரீரும்வாளது' (வள். 334.) 2. அரிதல். 3. அறுப்பதுபோல வருத்தஞ்செய்தல். 'அஃ தயிரை - யீர்கின் றது' (கந்தபு. தேவரையேவல். ௧௧.) 4. பிளத்தல். 5. வெட்டல். 6. இழுக்கப்படுதல். (சிறுபாண். 18.)

ஈர்ந்திரி—நெய்தோய்ந்த திரி. 'இரும்பு செய் விளக்கி னீர்ந்திரிக் கொளீஇ' (நெடு நல். ௪௨.)

ஈர்ப்பி—ஈர்.

ஈர்ப்பு—1. இசிவுநோய். 2. இழுத்தல். 'ஈர்ப்புடைக் காராஅத் தன்ன வென்னை' (புறநா. ௧௦௪.) 3. உரித்தல்.

ஈர்பட்டு—ஈர்வெட்டு.

ஈர்மணி — இரத்தினப்பிரபையென்னும் நாகம். (ஏலா. 67.)

ஈர்மை — 1. நன்மை. 2. வருத்தம். 'என்னை யீர்மைசெய்து' (திவ். திருவாய். 9. 6. 3.)

ஈர்வடம்-ஈர்வாணி, ஈர்க்கினாலே பின்னப் பட்ட கயிறு.

ஈர்வலி—ஈர்வாரி, ஈர்வாங்குங் கருவி.

ஈர்வலித்தல்—ஈர்வாங்கல்.

ஈர்வாங்கி—ஈர்வாரி.

ஈர்வாணி — ஈர்க்கினாலே பின்னப்பட்ட கயிறு.

ஈர்வாரி-தலைமயிரிலுள்ள ஈருருவுங் கருவி.

ஈர்வாள்—மரமரியும் வாள், இரம்பம். 'அல் லரும்பக லென்னுமீர் வாளினா லரிக்கு' (பெருந்திரட்டு.)

ஈர்வு — 1. அரிகை. 2. பிளக்கை. 3. வெட்டுகை.

ஈர்வெட்டு-ஈர்பட்டு, பனையீர்க்குக் கயிறு.

ஈர்ஷை-பொறாமை. (சி.சி. 2.39. சிவாக்.)

ஈரக்கல்—1. ஒரு மருந்துக்கல். 2. குரு விந்தக்கல்.

ஈரக்கையாலேதடவுதல்— அன்புகாட்டித் தேற்றுதல். 'நாட்டை ஈரக்கையாலே தடவிக் கம்ஸன்காலத்திற் பட்ட நோவுதீர ரக்ஷித்து' (திவ். இயற். திருக்குறுந். 1. வ்யா.)

ஈரங்கை—கொடுங்கை. (அக. நி.)

ஈரங்கொல்லி—வண்ணான். (பிங்.)

ஈரங்கொல்லியர் — வண்ணார். [ஈரத்தை உலர்த்துவோ ரென்றபடி.]

ஈரங்கொல்லுதல்-ஈரத்தையுலர்த்துதல். 'ஈரங்கொன்றபின்........குஞ்சியை' (சீவக. 2422.)

ஈரங்கொள்ளி—ஈரங்கொல்லி. (S. i. i. II. 277.)

ஈரங்கோலி—ஈரங்கொல்லி. (சூடா.)

ஈரங்கோலியர்—வண்ணார். (சூ. நிகண். ௨: ௩௨.)

ஈரசைச்சீர்—இரண்டசை கூடிவருஞ் சீர்; அது: தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்னும் வாய்பாட்டான் வருவது.

ஈரடி — 1. இணையடி. 'ஈரடிவெண்பாக் குறள்' (யாப். காரிகை. ௩.) 2. ஈரெட்டு. 3. கவர். 4. சந்தேகம். [இரண்டடுத்த தென்றபடி.]

ஈரடிப்பயன் — 1. இருபொருள், கவர் பொருள். 2. கபடம். 3. சந்தேகம். 4. விகற்பம்.

ஈரடிப்பா—1. குறள்வஞ்சிப்பாச்சிறுமை. 2. குறள்வெண்பா.

ஈரடிமடக்கு — மடக்கலங்காரத்தின் ஒரு வகை. அஃது: ஓரடியில் வந்த சொற் றொடரே மற்றையடியிலும் வேறுபொருள் விளைத்துவருவது. (தண்டி. ௬௩. உரை.)

ஈரடிவருக்கம்—செய்யுள்வகையில் ஒன்று.

ஈரடிவெண்பா—குறள்வெண்பா. 'ஈரடி வெண்பாக்குறள்' (யாப். காரிகை. ௩.)

ஈரடுக்கொலி—ஒருசொல்லை இரண்டுதரம் அடுத்துச்சொல்லுதலாற் குறிக்கப்பட்ட ஓசை. 'நெறுநெறென முரிந்தது'

ஈரணம்—1. களர்நிலம். 2. வெறுநிலம். 3. கள்ளி.

ஈரணி—புனலாடும் மகளிர் அணியுமவை. (பரிபா. 7. 61.)

ஈரணை—இரண்டுசோடி.

ஈரந்துவட்டல்—ஈரத்தைத் துடைத்தல்.

ஈரந்தூர்—ஓரூர். (புறநா. கஅ௦.)

ஈரந்தை — ஈரந்தூர். 'ஈரந்தையோனே பாண்பசிப்பகைஞன்' (புறநா. கஅ௦.)

ஈரநா—பழிகூறுகிற நாக்கு. 'ஈரநாவுக் கென்பில்லை'

ஈரப்பச்சை—ஈரப்பசுமை.

ஈரப்பசுமை—ஈரப்பற்று.

ஈரப்பசை—1. ஈரக்கசிவு. 2. இரக்கம்.

ஈரப்பசையுள்ளவன் — 1. இரக்கமுடையவன். 2. செல்வமுடையவன்.

ஈரப்பலா—ஆசினிப்பலா. 'படிக்கு ளீரப் பலாப்பழுத் தொண்புவி - வெடித்த வாயில்' (பிரபுலிங். மாயையு. எ.)

ஈரப்பற்று—1. அன்புப்பற்று. 2. ஈரப் பிடிப்பு. 3. சம்பத்து. 4. நன்றி. 5. இரக்கம்.

ஈரப்பாடு — 1. ஈரமாயிருக்கை. 2. மன நெகிழ்ச்சி. 'ஈரப்பாட்டைவிளைத்து' (ஈடு. 9. 6. 4.)

ஈரம்—1. அழகு. 2. அறிவு. (அக. நி.) 3. அன்பு. 'ஈரமில்லா நெஞ்சத்தார்க் கீந்த வுபகாரம்' (வாக்குண். உ.) 4. இறை. 5. கரும்பு. (மலை.) 6. குங்குமப்பூ. (மலை.) 7. குங்குமம். 8. குளிர்ச்சி. 'ஈரமு நிழலுங் காயுங் கனிகளு மியாவு மீண்டி' (பாரத. அருச். தவநி. உ.) 9. தயை. 'மலைநாட - னீரத்து ளின்மை தோன்றின்' (கலி. சக.) 10. நனைவு. 11. நீர்ப்பற்று. 'ஈரம்புலராக் கரத்தோருக்கு' (பாரத. திரௌபதி. ௬௧.) 12. பண்பு. 13. வெள்ளரி. (இராசவைத்.) 14. பகுதி. (அக. நி.) 15. பசுமை. 16. நயனுடைமை. 'எதிர் பெய்து மறுத்த வீரத்து மருங்கினும்' (தொல். பொருள். 147.) [இச்சொல் சிலவிடங்களிலே அம் கெட்டு ஈர் என நின்று வரும் வல்லொற்றுக் கினமான மெல்லொற்றோ டணைந்து 'ஈர்ங்கதிர்' என்றாற்போலக் குளிர்மைமுதலிய பண்புப்பொருளை விளைத்தலு முண்டு.]

ஈரம்பனை—கூந்தற்பனை.

ஈரமானி—ஈரத்தையளக்குங் கருவி.

ஈரரசு—இருவர் ஆளுகை. 'ஈரரசுதவிர்த் தாலிறே சேஷித்வம் பூர்ணமாவது' (திவ். அமலனாதி. 1. வ்யா.)

ஈரல்—1. ஈருள். 'மார்புகீண்-டீரலை வாயிடுமெஃகம்' (கந்தபு. கடவுள்வாழ். ௯௩.) [இது ஈருள் என்பதன் மரூஉ.] 2. வருந்துகை. 'பாதகவர்க்கத்துக்கு ஈரலாம்படி' (ஈடு. 9. 9. ப்ர.)

ஈரல்கருகுதல் — 1. வேதனைமிகுதல். 2. அஞ்சுதல்.

ஈரல்பதறல்—பயப்படுதல்.

ஈரல்வலி—ஒரு நோய்.

ஈரலித்தல்—ஈரமாதல். [வழக்.]

ஈரலிப்பு—ஈரம்.

ஈரலுலர்த்தி — மாட்டுநோய்வகையில் ஒன்று. (மாட்டுவை. சி. 41.)

ஈரலெரிச்சல்—ஒரு நோய்.

ஈரவணி—ஈரணி. (பரிபா. 11. 86. உரை.)

ஈரவன்—1. ஈரம். 2. சந்திரன்.

ஈரவிதைப்பு—1. ஈரநிலத்திலே விதைத்தல். 2. ஈரமானநிலத்துண்டான பயிர்.

ஈரவுள்ளி—ஈரவெண்காயம்.

ஈரவெங்காயம்—ஈரவெண்காயம்.

ஈரவெண்காயம்— கறிப்பதார்த்தங்களுக்குப் பிரயோகிக்கும் ஒரு பூடு, ஈருள்ளி.

ஈரற்கருகுதல் — 1. ஈரல்வாடுதல். 2. மிகவும் பயப்படுதல்.

ஈரற்கல்—மந்தாரச்சிலை.

ஈரற்குலை—1. ஈரற்கொத்து. அஃது: ஈரலும் ஈரலைச்சேர்ந்த பிரிவும். 2 கல்லீரல். 3. நுரையீரல்.

ஈரற்குலைபதைத்தல் — 1. மிகுவேதனைப்படல். 2. மிக அஞ்சல்.

ஈரற்குழி—1. ஈரலுறுதாகம். 2. நெஞ்சிற்சுழி.

ஈரற்பிச்சு—ஈரற்பித்து.

ஈரற்பித்து—பித்தநீர் தங்கும் ஈரல்.

ஈரற்றிதல்—ஈரற்கருகுதல்.

ஈரறம்—இருவகையறம். அவை: இல்லறம், துறவறம்.

ஈரறிவு—1. இம்மை மறுமை யறிவு. 2. பெரிய அறிவு.

ஈரறிவுயிர்—பரிசமும் சுவையும் அறியும் இப்பி நந்து முதலியன. (நன். உரி. ரு.)

ஈராசிடைவெண்பா— இரண்டாமடியிலே மூன்றுஞ்சீரில் ஆசாக இரண்டசைபெற்று வரும் நேரிசைவெண்பா. 'தாமரையின் றாதாடித் தண்டுவலைச் சேறளைந்து - தாமரையினூற்றமே தானுறும்' என்பதிற் போல.

ஈராட்டி—1. இரண்டுமனைவியர். 2. காற்றுமாறியடிக்கை. 3. காற்றின் அமைதி. 4. நிலையின்மை.

ஈராட்டை—இரண்டுவருடம்.

ஈராடி—ஈராட்டி—1. காற்றினமைந்த நிலை, அற்பமாயசைதல். 2. நிலையின்மை. 3. மழைக்குணம். 4. ஈரம்.

ஈராதிகாரணப்போதகம் — இருபொருண்மை.

ஈரான்—பாரசீகம்.

ஈரி—1. கந்தைச்சீலை. 2. பலாக்காய்த்தும்பு. 3. மகளிர்விளையாட்டுளொன்று. 4. மனக்கனிவுள்ளவள். 'என்கண்ணனுக்கென்றீரியாயிருப்பாள்' (திவ். திருவாய். 6. 7. 9.)

ஈரிடை—அழுக்காறு, பொறுமை. (சி. சி. உ: ருக. சிவாக்.) [ஸஂஷ-ரா.]

ஈரிணம்—களர்நிலம்.

ஈரித்தல்—1. குளிர்தல். 'ஈரித்த குடனரம்பாற் செறிந்து' (ஞானவா. வைராக். எ0) 2. ஈரமாதல்.

ஈரிப்பு—1. ஈரம். 2. குளிர்மை. 3. சிநேகம். (ஈடு. 2. 4. 3.)

ஈரிய—1. அன்புடைய. 2. ஈரத்தையுடைய 'ஈரிய கலுழுமிவள் பெருமதர் மழைக்கண்' (குறிஞ்சிப்பா. உசஅ.) 3. குளிர்ந்த. 'ஈரிய நறும்பூ வாளி யேறுபட் டாவியோடும்-வீரியம் விடுத்து' (திருவிளை. மாயப். உக.)

ஈரியது—1. ஈரமுள்ளது. 2. குளிர்ந்தது.

ஈரிலை—சூரியன். (அக. நி)

ஈரிலைப்பயிர்—இரண்டிலை வெளியில்வந்த இளம்பயிர்.

ஈரிழை—இரட்டையிழை.

ஈரிறை — 1. இரண்டரசு. 2. இரண்டு முறைபெறும்வரி.'நானும்பிறந்து அவர்களும் பிறக்கவேணுமோ? ஈரிறையுண்டோ?'(ஈடு. 1. 3. ப்ர.)

ஈருடல்— இரண்டுதன்மைத்தாய வுடல். 'நாரசிம்மன்'

ஈருதல்—1. அரிதல். 2. வருத்துதல். 'காமநோ-யீருகின்றது' (கந்தபு. மாயைப். எஉ.)

ஈருயிர்க்காரி—கருப்பவதி.

ஈருநவி—ஈர்வலி.

ஈருவா—அமாவாசை பௌர்ணிமைகள்.

ஈருள்—ஈரல். 'ஈருட்டடிமூடியீண்டு மலப்பிண்டப்-போர்வை' (சிந்தா. முத். ககஉ.)

ஈருள்ளி—ஈரவெங்காயம்.

ஈருள்ளிக்கோரை—ஒருவகைக் கோரை.

ஈருளி—ஈருள்ளி. (தைல. தைலவ. க0அ)

ஈரெச்சம் — இரண்டெச்சங்கள். அவை: பெயரெச்சம், வினையெச்சம் என்பன. (நன். உயிர். உ.)

ஈரெண்வகைக்கூலம்— நெல்லு, புல்லு, வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, இராகி, எள்ளு, கொள்ளு, பயறு, உழுந்து, அவரை, கடலை, துவரை, மொச்சை: என்பன.

ஈரைந்துசீலம்—புத்தர்கள் கூறும் பத்துக்குணங்கள். அவை: கொல்லாமை, பொய்சொல்லாமை, களவின்மை, காமமின்மை, பிறர்பாலிரவாமை, உயர்ந்த ஆதநத்திருத்தல் கிடத்தலின்மை, சந்தநம் மாலை முதலிய தரியாமை,பொன்வெள்ளிகளைத்தீண்டாமை,

பாடலாடல் விரும்பாமை, உதயத்திற்குமுன் பசித்தல் என்பன. 'ஒதியீரைந்து சீலமுடையராய்' (சி. சி. பர. சௌத். க.ஞாநப்.)

ஈரோட்டு—1. இரண்டுக்குற்றது. 2. நிச்சயமில்லாதநிலே. 'நோயாளியின் காரியம் ஈரொட்டு'

ஈரோற்றுவாரம் — இரண்டுமாத்திரை பெற்றுவருஞ் செய்யுள். (சிலப். அரங்கேற். கநகூ. உரை.)

ஈலி—1. ஆயுதம். 2. குறுந்தடி. 3. கைவாள். 4. சுரிகை. 5 கத்தி. [ஈலீ.]

ஈவித்தல்—பங்கிடுதல்.

ஈவிரக்கம்—உதாரகுணமு மிரக்கமும்.

ஈவு—1. கொடை. 2. பங்கிடுகை. 3. பிரித்துக்கண்டபேறு. 4. வரம், நன்கொடைப்பொருள். 5. ஒழிகை. 'ஈவிலாத தீவினைகள்' (திவ். திருவாய். 4. 7. 3)

ஈவுக்கணக்கு— } 1. பங்கிடுதல். 2. பிரிவுக்கணக்கு, வகுத்தற்கணக்கு.
ஈவுகணக்கு—

ஈவுசோர்வு—கொடையும் இளகுதலும்.

ஈவுதரம்—சராசரி வரிவசூல்.

ஈவுமானியம் — நிலவரும்படிக்குத் தக்கபடி ஈவித்துக்கொடுக்கும் சுதந்திரம்.

ஈவோன்—1. படிப்பிப்போன். (தொல். பாயி. உரை.) 2. பொருள் கொடுப்பவன். 'பன்னுசொற்கொள்வோ னீவோன்' (கந்தபு. நகர. கஉந.)

ஈழக்கருங்காசு — பழையநாணயவகையி லொன்று. (M. E. R. 47. of. 1925.)

ஈழக்காசு — பழையநாணயவகையி லொன்று. (I. M. P TJ. 38)

ஈழக்கிழங்கு—பெருவள்ளி.

ஈழங்கனுக்காணுதல் — கண்ணிற்காணுததைக் கனுக்காணுதல். (திவ். திருக்குறுங். 1. வ்யா.)

ஈழச்சேரி — கள்ளிறக்குபவர் வாழிடம். (S. I. I. II. 44.)

ஈழத்துசுற்றியோடல்—இலங்கைக்குக் கிழக்கே சுற்றிச்செல்லுங் கப்பற்பிரயாணம்.

ஈழத்தலரி—1. ஒருவகையலரி. 2. பெருங்கள்ளி. 3. பொன்னலரி. [ஈழம்-பொன்.]

ஈழதண்டம் — ஈடாதண்டம், ஏர்க்கால். 'நேமி வரையு மந்தரமு நிகழ்த்து மீழ தண்டமாய்' (கூர்மபு. திரிபுர. நகூ.)

ஈழநாடு—இலங்கை. (தேவா. 1239. 7)

ஈழப்புளி—கொறுக்காய்ப்புளி.

ஈழம்—1. இலங்காபுரி. 'ஈழமன்னனு மஞ்செழுத்து மியம்பி' (திருவாத. புத்தரை. அஎ.) 2. உலோகக்கட்டி. 3. கள்ளி. (மலை) 4. கள். (சூடா) 5. சிங்களதேசம். (திவா). 6. பொன். 'இறைபடைத்திறுக் குந்தொடையீழமே' (இரகு. நகர. சுஅ.)

ஈழம்புந்தை — பழையவரியி லொன்று. (S. I. I. IV. 122)

ஈழம்பூட்சி — பழையவரியி லொன்று. (S. I. I. II. 521. 31)

ஈழமண்டலம்—இலங்கை.

ஈழவக்கத்தி–ஈழவர்க்குரியகத்தி. (தொல். எழுத். 153. உரை.)

ஈழவர்–இலங்கையிலிருந்து சிறைசெய்யப்பட்டுச்சென்று சேரநாட்டில் வசிக்குஞ் சிங்களவர், கள்ளிறக்குவோர்.

ஈழற்கடிவரி–வரிவகையில் ஒன்று. (S. I. I. VII. 24)

ஈழுவர்—ஈழவர்.

ஈளை—1. காசநோய். 2. கோழை. 3. தொய்வு.

ஈளைக்கோல்லி—1. தாளகம். 2. அரிதாரம்.

ஈளம் பாதிரி.

ஈளை—1. கோழை. 2. இழைப்பு. இது மூச்சுக்கு முட்டுச்செய்வது. 'இருமலுஞ் சோகையு மீளையும் வெப்பும்' (திருமந். அறஞ்செ. ச.) 3. க்ஷயரோகம்.

ஈளைத்தரை—ஈரத்தரை. (சிலப். 3. 96. உரை.)

ஈற்றசை—1. பாட்டினிறுதியினிற்குமசை. 2. இறுதியில்வரும் அசை.

ஈற்றம்—ஈனுகை. 'போறத்தா லீற்றம்' (சிறுபஞ். 74)

ஈற்றயல்–இறுதிக்கடுத்தது. 'பெயர்வினையிடத்து னளரய வீற்றய, லாவோ வாகலும்' (நன். பொது. உ.)

ஈற்று—ஈற்றுப்பசு. 'சாற்றூர வாரத்திற் றும்பறுத்துப் புறநின்ற-ஈற்றுவை வெருளவிடுத் திவனுவி கவர்கென்றான்' (திருவிளை. பழியஞ். நஎ.)

ஈற்றில்லாக்கடாரி—ஈனுக்கடாரி. (தைல. தைலவ. கநடு.)

ஈற்று—1. ஈனப்பட்டது. 2. ஈனுகை, பெறுகை. 'ஈற்று மான்பிணை' (கந்தபு. வள். ௩க.) 3. மரக்கன்று.

ஈற்றுக்கடன்—அந்தியக்கிரியை.

ஈற்றுத்தாய்—பெற்றதாய். (திவ். பெரியாழ். 3. 9. 4)

ஈற்றுநிலையெழுத்து—சொல்லிறுதியி னிற்றற்குரிய எழுத்து. அவ்வெழுத்துக்கள் தமிழில் உயிர் பன்னிரண்டும் ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்னும் மெய்யெழுத்துக்களும்.

ஈற்றுமிசை—ஈற்றயல். (திருக்கோ. 164. உரை.)

ஈற்றுளைதல் — ஈனுகையில் வருந்துதல், பிரசவவேதனைப்படல். 'ஈற்றுளைந்து-சென்ற வண்டு பொறையுயிர்த்துச் செழுந்தோட்டகட்டி னடைகிடக்கும்' (கூர்மபு. தக்கன் வேள். ருள.)

ஈற்றெலும்பு—கடையெலும்பு.

ஈற்றெழுத்து—ஈற்றுநிலையெழுத்து.

ஈற்றெழுத்துக்கவி — முற்பாட்டினந்தத்தெழுத்தேனுஞ் சொல்லேனும் வரும் பாட்டிற் காதியாய் வருவது.

ஈற்றேறுதல்—பயிர்க்கருமுதிர்தல். 'சாலியீற்றேறும்போது' (ஏரெழு. 47)

ஈறல்—1. துக்கம். 2. நெருக்கம். 3. பின்னல்.

ஈறற்பற்றை—நெருக்கமான தூறு.

ஈறந்தம்—இறுதிமுடிவு.

ஈறந்தரம்—கடைத்தரம்.

ஈறம்வரிசை—கடைமுறை. (திருவாலவாயுடையார் திருவி.)

ஈறிலான்—1. கடவுள். 2. சிவன். 'ஈறிலாரை யிவரணைந் தார்கொலோ' (கந்தபு. திருக்கல். உஉ)

ஈறிலி—கடவுள். (அக. நி.)

ஈறு—1. உப்பளம். 2. எல்லை. 'கொன்ற போர்மன்ன ரீறிலர்' (பாரத. நிரைமீ. 49) 3. பல்நிற்கும் தசை. 4. மரணம். 'புழுவு மீறெய்தின்' (காசிக. தேவ. அக. 5) 5. முடிவு, நாசம். 'ஈறுசேர் பொழுதினு மிறுதி யின்றியே' (கந்தபு. கடவுள். கஅ.) 6. பயன். (அக. நி).

ஈறுகட்டி—இரசகர்ப்பூரம்.

ஈறுகடை—இறுதிமுடிவு.

ஈறுகரைதல்— } ஈறழிதல்.
ஈறுகெடுதல்— }

ஈறுகொழுத்தல்—பல்லீறு வீங்குதல்.

ஈன்—1. இவ்விடம். 'ஈன்வருகென்ன நோக்கி' (தணிகை. வீரட்ட. அக.) 2. இவ்வுலகம். 'ஈனிற வியலகங் கவையிய-வீனு மும்பரும் பெறலருங் குரைத்தே' (ஐங்குறு. ௪0௧.) 3. ஈனென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும். 4. மரவகையிலொன்று. 5. ஆச்சா. (சித். அக)

ஈன்மர்—பெறுவார். 'ஈன்மரோவிவ்வுலகத் தானே' (புறநா. எ௪.)

ஈன்றணிமை—புனிறு, சமீபகாலத்திலே ஈனப்பட்டமை. 'நாளீன்றணிய .......... கன்று' (கூர்மபு. கண்ணனவ. அ0.)

ஈன்றணிய — சமீபகாலத்திலீனப்பட்ட.

ஈன்றணுமை—ஈன்றணிமை.

ஈன்றல்—1. மகப்பெறுதல், கருவுயிர்த்தல். 2. விளைதல். 'இன்சொ விளைநின்றல் காண்பான்' (வள். கக.)

ஈன்றவள்—1. தாய். 'இருள்குடிகொண்ட மெல் லோதியர் சிறினு மீன்றவளை-மருள் குடி கொண்டவக் காலம் விடாது மிறை யழுவார்' (தணிகைப். களவு. ருஎ௬.) 2. பார்ப்பதி.

ஈன்றவன்—1. பிதா. 2. பிரமன்.

ஈன்றர்—தாய்தந்தையர்.

ஈன்றாள்—1. தாய். 'ஈன்றாள் பசிகாண்பா னாயினும்' (வள். ௬௫௬.) 2. பார்ப்பதி.

ஈன்றான்—1. தந்தை. 2. பிரமன்.

ஈன்றுளார் — தாய்தந்தையர். 'யாண்டைய ரோவெமை யீன்று ளாரெனும்' (கந்தபு. சயந்தன்பு. கஎ.)

ஈனசந்தி—அகாலம்.

ஈனசாதி—தாழ்ந்த சாதி.

ஈனசுரம்—தாழ்ந்தகுரல்.

ஈனத்தார்—கொன்றை. (மலை).

ஈனம்—1. அழிவு. 2. இழிவு. 3. கள்ளி. 4. குறைபாடு. 5. கேடு. 6. தள்ளல். 7. சரிவு. (அக. நி) 8. முயல். (அக. நி.)

ஈனல்—1. ஈனுதல். 'விரிதலை யரம்பை யீன்ற மென்பழன்' (நைட. நாட். ௨0.) 2. கதிர்.

ஈனவன் — இழிந்தோன். (திவ். இயற். நான்மு. 6.)

ஈனனம்—வெள்ளி. (அக. நி.)

ஈனுர்கதிர்—கருவிலிருக்குங் கதிர்.

ஈனுக்குமரி—பிள்ளைபெறுத இளம்பருவப் பெண்.

ஈனுமலடு—, ஈனுமாடு— மலட்டுப்பசு, அல்லது எருமை.

ஈனுயம்—சங்கையீனம், நிந்தை.

ஈனுவரக்கி—கொடியவள்.

ஈனில் — பிரசவிக்குமிடம். 'பேடைச் செவ்விநோக்கி யீனிலிழைக்க' (பதினே. திருவாரு. 19.)

ஈனுதல்—1. கருவுயிர்த்தல். 'மைந்த ரிரு வரை யீன்றனள்' (பாரத. குருகுல. ககக.) 2. பிறப்பித்தல். 'அருவுரு வீனுதாகும்' (சி. சி. க: உஅ.)

ஈனுமணிமை—1. சூதகம். 2. புனிறு.

ஈனை—1. இலைநரம்பு. 2. ஒரு வியாதி. 3. சித்திரக்குறிப்பு, பருமட்டக்குறிப்பு.

ஈனேர்—இவ்வுலகத்தோர். (மணிமே.)



## உ

உ—[தமிழ்ப்பாஷையின் வருணமாலையின் உயிர்வருக்கத்தில் வரும் ஐந்தாமெழுத்து; அஃது: அங்காப்போடு இதழ்குவித்து உச்சரிக்கப்படும் ஒரு குறில்.] 1. இரக்கத்தைக் குறிக்கும் ஓரிடைச்சொல். 2. இரண்டு என்னும் இலக்கத்தைக்குறிக்கும் ஓரெழுத்து. 3. இறந்தகாலவிடைநிலையாகிய தகரமெய்யை அதன் திரிபாகிய டகர றகரமெய்களுள் ஒன்றை ஊர்ந்துவரும் ஒரு வினையெச்ச விகுதி. 'செய்து; உண்டு; கற்று.' 4. ஒரு சாரியை. 'மின்னு' 5. ஒரு தொழிற்பெயர் விகுதி. 'வரவு' 6. ஒருபண்புப்பெயர் விகுதி. 'மழவு' 7. கோணகலை. (சி-வி. கிரி. எ. உரை.) 8. சிவன். 'ஆலுக்கணிகலம் வெண்டலைமாலை' (கந்தரலங். சுஉ.) ஆல், உ எனப் பிரித்து ஆலவிருக்ஷத்தினடியி லெழுந்தருளிய சிவபிரான் என வறிக. 9. சுட்டுப்பொருளில் பதத்தினகத்தாவது புறத்தாவதுவரும் ஓரிடைச்சொல். 'உவன்; உக்கொற்றன்' இது எதிர்முகத்திற்போல எதிர்முகமின்றிப் பின்னிற்கும் பொருளையுஞ் சுட்டிவரும் 'ஊழையு முப்பக்கங் காண்பர்' (வள். 620.) 10. பிரமா. 11. சிவசக்தி. (திருமந். 1751.) 12. பஞ்சபட்சிகளுள் காகத்தைக் குறிக்கும் எழுத்து. (பிங்.)

உக்கணம்—தெளித்துச் சுத்தி செய்தல். [உக்ஷண.]

உக்கம்—1. போாலவட்டம். 'உக்கமுந் தட்டொளியுந்தந்து' (திவ். திருப்பா. 20.) 2. சிற்றாலவட்டம். 'உழைச்சென் மகளிருக்கமேற்றி' (பெருங். 1. 34. 213.) 3. இடபம். (பிங்.) [உக்ஷந.] 4. உடம்பின் நடுக்கூறாகிய மருங்கு. 'உக்கஞ் சேர்த்திய தொருகை' (திருமுரு. க0அ.) 5. கோழி. 6. தூக்குக்கயிறு. [தெலுங்கு.] 7. நெருப்பு. (சூடா.) 8. பசு. 9. பந்து. 10. பொன். (ஆசிரி. நிக. சு: க.) 11. தலை. 'உக்கத்தின் மேலு நடுவுயர்ந்து' (கலித். 94.) 12. உக்கிரம். 'உக்கதவர் தித்ததவர்' (மேருமந். 1097.)

உக்கம்பருத்தி—வனப்பருத்தி.

உக்கரித்தல்-1. உக்காரமிடல். 2. வாந்தி பண்ணுதல்.

உக்கரைத்தட்டு—மிருதங்கவலந்தரையின் நடுப்பாகத்துக்குமேலுள்ள பாகம். (கலைமகள். XII. 400.)

உக்கல்—1. அழிதல். 'கரிந்துசாம்பராயுக்கவாறுகண்டு' (திருவிளை. சமணரை. 38.) 2. பக்கம். 3. பதனழிந்தபொருள். 4. பதனழிவு. 5. உளுத்தது.

உக்கலை—மருங்கின்பக்கம். (பிங்.)

உக்கவர்—இறந்தவர், அழிந்தவர். 'உக்கவர்சுடுநீறணிந்து' (தேவார. திருவிளை. திருஞாந.)

உக்களம்-1.இராக்காவல். 2. தலைக்காவல். 3. பாளயத்தைச்சூழ்ந்த அகழி.

உக்களவர்—இராக்காவற்காரர்.

உக்களி—இனிய பணிகாரவகையில் ஒன்று. (இராசவைத். 125.)

உக்களை—உக்கலை.

உக்கா—1. கஞ்சாப்புகைமுதலிய குடிக்குங் கருவி. [இந்துஸ்.] 2. கள்.

உக்காக்கம்—அரைஞாண். [உக்கம்-அரை; அக்கம் - நாண்.]

உக்கார்—இறந்தவர். 'உக்கார் தலைபிடித் துண்பலிக்கூர்தொறும் - புக்கார்' (தேவார. திருப்புக. ச. திருநாவு.)

உக்காரம் — 1. சத்திபண்ணல், வாந்தி பண்ணல். (பிங்.) 2. சத்தமிடுகை.

உக்காரி—ஒருவகைச் சிற்றுண்டி. (திவா.)

உக்காரை—உக்காரி.

உக்கி—1. அம்மனைக்காய் (இராசவைத்.) 2. தோப்பிக்கரணம். 3. ஒரு தண்டனை.

உக்கிடர்—ஒருவகைச் சிலந்திப்பூச்சி.

உக்கிநசிரம்—ஆகாயமுகட்டை நோக்குஞ் சிரவபிநயம். (பரத. பாவ. 74.)

உக்கிர — இருநூற்றிருபத்துநாலுபுவனங் களி லொன்று. (கந்தபு. கணங். ௧௦. உரை.)

உக்கிரகந்தம்— } 1. உள்ளி. 2. கரும்பு. (மலை.) 3. கருவேம்பு.
உக்கிரகந்தி — } (மலை.) 4. சண்பகமரம். 5. பெருங்காயம். 6. மிகுமணம். 7. வசம்பு. (மலை.) 8. வேம்பு. (மலை) [1, 3, 4, 5, 6, 7. உக்ரகந்த: உக்ர - கடுமை. கந்த - மணம்.]

உக்கிரகந்தை—1. வசம்பு. (சித். அக.) 2. ஓமம். (நாநார்த்த.)

உக்கிரகர்மம்—கொடுஞ்செய்கை. [உக்ர கர்ம: உக்ர - கொடுமை. கர்ம - செய்கை.]

உக்கிரகெந்தம்—உக்கிரகந்தம்.

உக்கிரச்சுரவார்— } ஆதொண்டை. (மலை.)
உக்கிரசவா — }

உக்கிரசேநசன்—கிருஷ்ணனுடைய மாமனாகிய கஞ்சன். [உக்ரஸேநஜ: உக்ரஸேந - ஓரரசன். ஜ - பிறந்தவன்.]

உக்கிரசேநன்—1. கஞ்சனுடைய பிதா. (கூர்மபு. கண்ணனவ. ௨௩௫.) 2. பரீக்ஷித்தென்னும் அரசன்மகன். [உக்ரஸேந]

உக்கிரநட்சத்திரம்—1. புதன் நின்ற நாளுக்குப் பதினெட்டாநாளும், இருபத்துநான்காநாளும். (விதாந. குணகுண. ௪௦. உரை.) 2. மகம், பூரம், பரணி என்பன. (விதாந. பஞ்சாங்க. ௨௦. உரை.)

உக்கிரநாள்—பரணி, மகம், பூரம், பூராடம், பூரட்டாதி ஆகிய ஐந்து நட்சத்திரங்கள். (சோதிடசிற். 36.)

உக்கிரப்பெருவழுதி— கடைச்சங்கமிருந்த பாண்டியருள் ஒருவன். (இறை. 1. உரை. பக். 5.)

உக்கிரம்—1. உருத்திரமென்னுஞ் சுவை. 2. உறைப்பு. 3. கடுமை. ‘உக்கிரமாக வீமன் வந்த வுறுதிகண்டு’ (பாரத. இரண்டா. ௧௨.) 4. தேவுறுப்பினுளொன்று. (சிலப். 3. 150. உரை.) 5. கொடுமை. 6. கோபம். ‘நிலமேல்வருமுக்கிரவடவைக்கனல்’’ (திருவிளை. யானையெய். ௨௦.) 7. தலைக்காவல். (பிங்.) 8. பயங்கரமானது. 9. பரணி. 10. பாத்திரபதம். 11. பலமுள்ளது. 12. முருக்கைமரம். 13. மேலானது. 14. வெப்பம். 15. வேகம். 16. இலாமிச்சை (மலை) 17. [illegible]க்க மிகுதி. [உக்ரம்]

உக்கிரமது—வைராக்கியமான குணம்.

உக்கிரமம்—1. மூர்க்கம். 2. சுவாலை.

உக்கிரவைரவன் — அட்டவைரவர்களுளொருவன். (த. நி. போ. ௨௪௧.)

உக்கிரன்—1. க்ஷத்திரியனுக்குச் சூத்திரப் பெண்ணிடம் பிறந்தவன். (சைவச. பொது. ௪௬௬. உரை.) சூதசங்கிதைகாரர் வைசியனுக்குச் சூத்திரப்பெண்ணிடம் பிறந்தவன் என்பர். ‘கருங்குழற் சூத்தி ரப்பெண் கடிதட மூழ்கி நாய்கன் - பெருங்கன கம்போற் பெற்ற பிள்ளையுக் கிரப்பேர் பூண்பன்’ (சூத. சிவமான். ௧௨. ௧௧.) 2. உருத்திரன். 3. தருவாசன். 4. மகேசுரனுடைய அழுகையினின்றுபிறந்த எழுவரிலொருவன். ‘இளம்பிறை யணிந்திடு முக்கிரனென்ப’ (கூர்மபு. அட்டமூ. ௰௨.) [உக்கிரன்-கோரமுடையவன்.] 5. விசுவாமித்திரன். 6. வீரபத்திரன். (சூ. நிகண். ௧: ௨௨.) [உக்ர:]

உக்கிராட்சன்—1. சிவன். 2. வீரபத்திரன். [உக்ராக்ஷ.]

உக்கிராணக்காரன் - சரக்கறைமேற்பார்ப்பவன்.

உக்கிராணம்—சரக்கறை. [தெலுங்கு.]

உக்கிரி—1. துர்க்கை. 2. வசம்பு.

உக்கிரிட்டம்— } 1. மிகுதி. 2. மேன்மை.
உக்கிருட்டம்— }

உக்கிரை—1. க்ஷத்திரியனுக்குச் சூத்திரப் பெண்ணிடம் பிறந்தவள். (பரா. ௧௦௭.) 2. கருவசம்பு. 3. ஏழாஞ்சுருதியின் பேதங்களுள் ஒன்று. (பரத. இராக. 46.)

உக்கு—இலவங்கம்.

உக்குதல் — 1. இற்றுப்போதல். 2. பயப்படல். 3. மெலிதல்.

உத்நமத்து-1. செல்வாக்கு. 2. செருக்கு. 3. உடக்தை.

உத்தரோட்டு—கரி. (நாமதீப.)

உத்தளான்—சருகுதின்னும் முயல்.

உத்தறள்—குற்றியலுகரம்.

உத்தம்-சொல்லப்பட்டது. 'உக்தசாத்திய வத்தல்ல' (சி. சி. அளவை. கரு. சிவாக்.) [உக்தம்]

உத்தி—1. பேச்சு. 2. பேசுதல்.

உத்ரம்—1. வித்தியாகலையில் புருடதத் துவத்திலிருக்கும் ஆறுபுவனங்களுள் ஒன்று. (சி-வி. கிரியா. உக.சுலோ. உரை.) 2. வேதம். 'உக்ரமிகு சக்ரதர னென்னநிற்பீர்' (தாயு. சித். க.)

உக — உகவென் னேவலும், தெரிநிலை வினைப் பகுதியும்.

உதகனல்—வடவாமுகாக்கினி.

உகசந்தி—ஒருகம் முடிந்து மற்றேருகந் தொடங்கும் எல்லை.

உத்தூரியர்—பன்னிரு சூரியர்.

உகட்டுதல்—அருவருப்பாதல். 'உகட்டிப் போந்த விஷயம்' (திவ். திருக்குறுந். 4. வ்யா. பக். 17)

உகந்தல்-1.உயர்த்துவிடுதல்.'எமதிடும்பை யோங்க லொன் றிரண்டுகூறுபட வொளி திகழ் வேலுகர்த்த' (சிவப். மங்கல. ச.) 2. உயர்தல். 'எல்லேதணக் துகந்திருந்த வாக்கு' (தணிகை. நகர. சுகூ.) 3. உயரப்பறத்தல். 'கந்துகோ ளீயாது காழ்பல முருக்கி-யுகக் கும் பருந்தி னிலத்துநிழல் சாடி' (பதிற்றுப். எஎ.) 4. மகிழ்தல். 'உகந்தாவடிக்குமிடை யர்' (மறைசை. ஙசு.) 5. திருத்தியடைதல். 6. மகிழ்வோடுகொள்ளல். 7. விரும்புதல். 'காக்கை யுகக்கும் பிணம்' (வாக்குண்டாம். உச.)

உகந்தது—அங்கீகரிக்கப்பட்டது.

உகந்துடைமை — கணவனுடைய சொத் தில் மனைவிக்குரிய பாகவுரிமை.

உகப்பார்போன்—ஒருவகை வரி. (S. I. I. III. 110.)

உகப்பிரளயம்—யுகமுடிவு.

உகப்பு—1. உயர்ச்சி. (தொல். சொல். கூ0சு.) 2. மகிழ்ச்சி. 'உகப்புற விவனே டவனியாளுக' (பாரத. குருகுல. அஅ.) 3. விருப்பம். 4. விரும்பிவசிக்குமிடம் 'இரா வணனை......யெய்தானுகப்பு' (திவ். இயற். நான்மு. 28)

உகபந்சிருட்டி-ஒன்றின்பின்னென்றாகாது ஏககாலத்திலே ஒருங்கு சிருட்டித்தல். 'தெரித்த காரியத்தோற்ற மிருவகையாங் கிரமசிருட் டி யுகபற் சிருட்டியென' (வேதா. சூ. அ0.)

உகம்—1. ஒருசோடு, இரண்டு. 2. தலைப் பாட்டு. (சிலப்பதி.) 3. நாள். (அக. நி) 4. நான்கு என்னு மெண்ணைக் குறிப்பாயுணர்த் துவதான ஒருமொழி. 5. நுகம். 6. பாம்பு. (அக. நி) 7. பூமி. 'ஈட்டுக மயிற்றடங் குழற்க ணீண்டலர்-சூட்டுவவென' (இரகு.நாட்.42.) 8. முடிவு. 9. யுகம், ஊழி. 'உகம்பலசென் றன' (கந்தபு. மேருப். 66) [1, 4, 5, 9. யுகம் இப்பொருள்களில் யகரமெய்கெட்டு உகமெனநின்றது.]

உகமகள்—பூமிதேவி. 'உகமக ளுதற்க ணிடையெழுது பளிதத்திலதம்' (இரகு. திக்குவி. உ0அ.)

உகமாருதம்—ஊழிக்காற்று.

உகமுடிவு—1. ஊழியிறுதி. (திவா.) 2. மடங்கல். (பிங்கல.)

உகரக்குறுக்கம்-குற்றியலுகரம். [உ என் னும் எழுத்து.]

உகரம்—இரண்டு. (நைல. நைலவ. 6.)

உகருத்திரர்—பதினேருருத்திரர்.

உகல் — 1. அழிதல். 'உகலிடந் தான் சென்று' (திருக்கோ. சஉ.) 2. உதிரல். 3. கழலல். 4. சிந்தல்.

உகலுதல்—தாவுதல். 'உகலி யாழ்கடல் ஓங்கு பாருளீர்' (தேவா. 75. 1.)

உகவல்லி—நாகமல்லி. (மலை.)

உகவு—நிலையழிவு. 'உகவிலா துணர்த்தி' (வேதா. சூ. கஉச.)

உகவை — 1. நட்பு. 'உகவை யிலாரொ டுறேனினி யென்றே' (பாரத. வாரணு. 102.) 2. மகிழ்ச்சி. 'உகவையால் நெஞ்சமுள் ளுருகி' (திவ். திருவாய். 6. 2. 9.) 3. அநு கூலம். 'உள்குவார்கட் குகவைகள் பலவுஞ் செய்து' (தேவா. 1146. 5.) 4. உகவைப் பொன். (S. I. I. III. 38.)

உகவைப்பொன்-காசாயவகையில் ஒன்று. (s i. i .VII 290.)

உகள் — உகளென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும்.

உகளம்-1. இட்டம் (அக. நி.) 2. இரண்டு. 'உகளப் - பொன்னின்வார்கழல்' (கந்தபு. அதிவீர. 34.) [யுகளம்.]

உகளல்—1. ஓடித்திரிதல். 'பன்மயிர்ப் பிணவொடு கேழ லுகள' (மதுரைக். 174.) 2. கடத்தல். 3. குதித்தல். 4. பாய்தல். 'வெள்ளுளைக் கலிமான் கவிகுளம் புகள' (புறநா. கஉ.) 5. தாவுதல். (குறுந். 65.) 6. நழுவிவிழுதல். 'ஒளிமேகலையுகளும்' (திருக்கோ. 350.) 7. துள்ளல். (ஐங்.) 8. பிறழ்தல்.

உகளி—1. உகளியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. பிசின். (நாமதீப.)

உகளித்தல்—1. குதித்தல். (பாரத. பதினாறாம். 51.) 2. நீர் நிறைந்து பாய்தல். 'திசைநான்கு முகளித்தேறி' (பாரத. முதற்போர். சுக.) 3. மகிழ்ச்சிமிகுதல். 'மேலைத் தொண்டுகளித்து' (திவ். திருவாய். 10.8.7.)

உகளுதல்—1. கடத்தல். 2. குதித்தல். 3. பிறழ்தல். 'வயலுகளுஞ் - சேலன்னமீள்விழியாய்' (வாண. கoக.) 4. தாவுதல். (குறுந். 65.) 5. ஓடித்திரிதல். 'பன்மயிர்ப் பிணவொடு கேழ லுகள' (மதுரைக். 174.) 6. நழுவிவிழுதல். 'ஒளிமேகலையுகளும்' (திருக்கோ. 350.) 7. துள்ளல். (ஐங்.)

உகா—1. உவாமரம். (மலை.) 2. ஓமை. (பிங்.)

உகாதி—அருகன். [யுகாதி என்பதில் முதல் யகரங் கெட்டது.]

உகாந்தகாலன்—1. சிவன். 2. விட்டுணு.

உகாந்தநாதன்—உகாந்தகாலன்.

உகாந்தப்பிரளயம்-உலகத்தின் காலமுடிவிலே வரும் அழிவு.

உகாந்தம்-யுகமுடிவு. 'உகாந்தத்து-மஞ்சினீடுரு மொலியென' (பாரத. காண்டவ.28.) [யுகாந்தம்.]

உகாமை—1. அழியாமை. 2. உமிழாமை. 3. சிதறாமை. 'உண்கவுகாமைநன்கு' (ஆசார. கசு.) 4. நிலைகுலையாமை. 5. வெளிவிடாமை. 'யாண்டு - முகாஅமை வல்லதே யொற்று' (வள். ருஅரு.)

உகாய்—உகா. (நேமி. எழுத். 15. உரை.)

உகாரம்—காதம்.

உகாரவுப்பு—கல்லுப்பு. (மூ. அ.)

உகாரி—உருத்திரமூர்த்தி.

உகிர்—நகம். 'வள்ளுகிர்கிள் ளாகசி-யேயத்தளவற்று' (கந்தபு. மாயை. ருo.)

உகிர்ச்சுற்று—நகச்சுற்று.

உகிர்நிலைப்பசாசக்கை — மூவகைப் பசாசக்கைகளி லொன்று; அது: சுட்டுவிரலும் பெருவிரலும் உகிர் நுனைகவ்விநிற்பது. (சிலப். 3. 18. உரை.)

உகிர்ப்புறவன்—நகத்தின்மேல் அணியும் அணிவகை. (s. i. i. II. 16.)

உகிரம்—இலாமிச்சை. (மூ. அ.)

உகின்—புளிமா. (மலை.)

உகினம்—புளிமா. (அக. நி.)

உகு — உகுவென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும்.

உகுணம்—மூட்டுப்பூச்சி. [உகுணம்.]

உகுத்தல்—1. உதிர்த்தல். 'பகலோன்பல் லுகுத்தவனே' (தேவார. திருக்காளத். கூ. சுங்.) 2. சிந்துதல். 'நெடுங்கணீருகுத்து' (சிலப். பதிக. கூஉ.) 3. சொரிதல். 'மென் பழனுகுத்ததேனும்' (நைடத. நாட். 20.) 4. வெளிவிடுத்தல். 5.சிதறுதல். 'வாடையன்மையி னுண்ணுதுகுத்தென' (மலைபடு. 148.)

உகுதல்—1. அழிதல், கெடுதல். 'வினைக ளுக' (சி. சி. அ: உக. சுப்பி) 2. உதிர்தல். 'போயுகு மிலைகளெல்லாம்' (சி. சி. க: கரு.) 3. கழலல். 4. சொரிதல், சுரத்தல். 'உகு நிணச்சேற்றினூன்றி' (பாரத. பதினோரா. 10.) 5.நிலைகுலைதல்.'செஞ்சகவாய்மலரன்ன கண் ணீர்மல்க' (வாண. கருo.) 6. வெளிவிடுதல். 7. சிதறுதல். 'உண்க உகாஅமை நன்கு' (ஆசாரக். 21.) 8. சிந்துதல். 'அங்கணத்து ளுக்க' (குறள். 720.) 9. சாதல். 'உக்கார் தலைபிடித்து' (தேவா. 641. 4.) 10. கரைந்து தேய்தல். 'உக்கு விடுமென் னுயிர்' (கலித். 138.) 11. விழுதல். 'உதயக்குன் றினின்றுகு குன்றில்' (கம்பரா. இராவணன்று. 39.) 12. பறத்தல். 'ஊதவுகு தன்மையினொ டொல்கி' (சீவக. 2014.)

உகுவு—சிந்துதல். 'சோர்ந்துகு வன்ன' (மதுரைக். 415.)

உகுனை — நெற்பயிர்க்குவரும் நோயில் ஒன்று. (நீலகேசி. 366. உரை.)

உறை—உகா.

உறைத்தல்—1. எழுப்பல். 'பல புரவி நீ றுகைப்ப' (மதுரைக். ருகடு) 2. செலுத்தல். 'மதகயமுகைப்பார்' (சேதுபு. திருநா. 103.) 3. பதித்தல். 'நீலமொன்றுகைக்கு நிறைந்த கணையாழி' (பணவிடு. 97.) 4. எழுதல். 'உகத்தின் முடிவினி லுகைத்த கனைகடல்' (கலிங். 342. புதுப். 11. 44.) 5. உயர எழும்புதல். 'கொடித்தடங்தேரினின் றுகைத்துமுன்குதியா' (பாரத. நிரைமீ. 41.)

உறைதல்—1. எழுதல். 2. செல்லுதல். 'கரைவிடவுகையுநாவாயாலும்' (கல்லாட.20)

உங்கண்-உவ்விடம். 'எந்தனயரைக் கண் டிரோ-வுங்கண்' (சேதுபு. அக்கினி. 32.)

உங்கரித்தல்—உங்காரஞ்செய்தல். 'காமர் வில்லாளியாகி யுங்கரித்து' (திருக்காளத். பு. 6. 39.)

உங்கள்—நீங்களென்னும் பன்மை முன்னிலைப்பெயர் வேற்றுமையேற்குமிடத்துத் திரிந்துவந்த ஒரு விகாரமொழி. 'உங்களுக் கொன்னலரும்பர்' (கந்தபு. மாயையுப. கடு.)

உங்காரம்—1. அச்சுறுத்தும் தொனி. 2. உம்மென்றொலித்தல், வண்டின் ஒலி. 'உங் காரமதுகரங்கள்' (பாரத. காண்டவ. 3.) 3. தொனிசெய்தல். 4. நாணேறொதை. 5. முழங்குதல். 'உங்காரத்தி னுரப்பு மோதையாள்' (கந்தபு. அக்கினி. கடு.) [ஹுங்காரஃ.]

உங்காரனை—அவுரி.

உங்கு-உவ்விடம். (கந்தபு. உமைவரு.31.)

உங்குணி—பெருங்கிளிஞ்சல்.

உங்கை—உன் தங்கை. 'ஆக்கரிய மூக்குங் கை யரியுண்டா ளென்றுரை' (இராமா. சூர்ப்பந. ௧௨௫.)

உங்ஙன்—} 1. உவ்வாறு. 'உங்ஙனநாரத
உங்ஙனம்-} னேதிய துணர்வுறு'(கந்தபு. தக்கன்மக. ௫௨.) 2. உவ்விடம். 'அதற்பி-னுங்ஙனம் பிறந்தயருவர்' (கந்தபு. அவை புகு. ௧௦௫.)

உச்சக்கிரகம்—உச்சத்திலே நிற்குங் கிரகம். [மேடத்திற் சூரியனும் இடபத்திற் சந்திரனும் கடகத்தில் வியாழனும் கன்னியிற் புதனும் துலாத்திற் சனியும் விருச்சிகத்தில் இராகுகேதுக்களும் மகரத்திற் செவ்வாயும் மீனத்திற் சுக்கிரனும் உச்சக்கிரகங்களாம்.]

உச்சட்டம்—1. இலக்கு. 2. நேர்.

உச்சடம்-1. கோபம். 2. விரைவு.

உச்சடை—1. இறுமாப்பு. 2. ஒருவகைப் புல். 3. வழக்கம். 4. வெள்ளுள்ளி. 5. இடம்பாசாரம்.

உச்சத்தலம் — உச்சி. 'உச்சத்தலத்திடை நிற்ப தபானன்' (பிங்.)

உச்சத்தனம்—உச்சக்கிரகம்.

உச்சத்தானம்—அதிக சுபநிலையிற் கிரகம் நிற்கும் இடம்.

உச்சத்துவம்-உச்சத்தன்மை. [உச்சத்வம்]

உச்சதசை—நல்ல அதிருஷ்டநிலை.

உச்சதமம் — மிக அதிகமான உச்சம். [உச்சதம.]

உச்சதரம் — அதிகவுச்சம். [உச்சதரம்]

உச்சதரு—1. உயர்ந்தமரம். 2. தென்னை மரம். (பச். மூ.) [உச்சதரு: உச்-உயர்ச்சி. தரு - மரம்.]

உச்சதேவன்-கிருட்டிணன். [உச்சதேவ]

உச்சந்தம்—1. அதிகப்படல். 2. தணிவு.

உச்சந்தலை—தலையின் உச்சி. 'உச்சந்தலை யோடிவைவயென்ப' (ஆசார. ௫.)

உச்சந்திரம் — இராவிற் கடைச்சாமம். [உச்சந்த்ர]

உச்சநிலைநாள்—மிருகசிரம், சித்திரை, அவிட்டம் என்ற மூன்றுநட்சத்திரங்கள். (சோதிடசிந். 36.)

உச்சபாஷணம்-உரத்துப்பேசுதல். [உச்சபாஷணம்: உச்: பாஷணம் - பேசுதல்.]

உச்சம்—1. உயர்ச்சி. 'உச்சமாமகத்தில்' (பாரத. காண்ட. சூ௫.) 2. கிரகங்களின் ஐந்துநிலையினொன்று; அது: நீசத்திற் கேழாமிடம். 3. தலைக்குநேரான ஆகாயமுகடு. 'உச்ச முற்றவெயி லர்க்கனொத்து' (பாரத. வேத். ௫௭.) 4. நுனி. 5. வல்லிசை. 'அந்த வுச்சமது பிறப்பித் தல்லவிசையும்' (இரகு. அவதார. கடு.) 6. சிறப்பு. 'உச்சமாணிக்கத் தாலே' (இராமநா. பாலகா. 17.) 7. உச்சந்தலை. 8. எண்வகைப் பாடற்பயன்களுள் ஒன்று. (சிலப். 3. 16. உரை.) 9. புணர்ச்சி வகையுள் ஒன்று. (கொக்கோ. 3. 5.)

உச்சம்போது-நடுப்பகல். 'உச்சம்போதே யூருர் திரிய' (தேவா. 298. 9.)

உச்சம்பொழ்து—உச்சம்போது. (s. i. i. III. 3.)

உச்சயிச்சிரவம்—உச்சைச்சிரவம். 'உச்சயிச் சிரவ மென்னு மோங்குஙௌப் புரவி தோன்ற' (உபதேசகா. கூர்மாவ. ௩௪.)

உச்சயிச்சிரவா—உச்சைச்சிரவம். (சேது பு. கத்துரு. 7.)

உச்சயினீ — ஒரு நகரம்; இது: விக்கிரமாதித்தனுக்குத் தலைநகரமாயிருந்தது. [உஜ்ஜயிநீ: உத்-மேல், ஜயனீ-ஜெயித்தது.]

உச்சர்ச்சநம் — வேதமோதி நிறுத்துவதற்குமுன் செய்யத்தக்க ஒரு விரதம். (மறு தரும. ௪. ௬௯.)

உச்சராசி—1. கிரகம் உச்சத்திலிருக்கப்பெற்ற ராசி. 2. அதிருஷ்டராசி.

உச்சரித்தல் — 1. இதழ்முதலியவற்றின் முயற்சியால் எழுத்துக்களைப் பிறப்பித்தல். 2. செபித்தல். 'ஓசைதரு மஞ்செழுத்தை விதிப்படியுச்சரிக்க' (சி. சி. ௯: க.)

உச்சரிப்பு—1. எழுத்தினோசை. 2. உச்சரித்தல்.

உச்சலம்—1. அசைதல். 2. அறிவு. 3. மனம். [உச்சலம்.]

உச்சவம்-1. விழா. (திவா.) 2. சம்பத்து. (ஞானவா. உபசா. 12.)

உச்சவாசகசெபம்—சொற்களை உரத்துச் சொல்லிச் செய்யுஞ் செபம்; இதனை, 'உரை வாசகமற் றுச்ச முபாமிசு வென்றிரண்டாம்' (சூத. ஞான. ௧௪: ௧௫.)

உச்சவானம் — தலைக்குநேராக மேலே தோன்றும் ஆகாயம். 'வட்டமணித் தேரவனுச்சவானத்தடைந்தான்' (பாரத. தருவாசமுனி. ௩.)

உச்சவீடு-ஒருகிரகம் உச்சநிலையில் நிற்கப்பெற்ற இராசி; ஆதித்தன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனியாகிய கிரகங்களுக்கு மேடம், இடபம், மகரம், கன்னி, கர்க்கடகம், மீனம், துலாம்: என்பவை முறையே உச்சவீடுகளாம். 'மறிவிடைமான்மகள் நள்ளிமீன் வாணிகன் ஞாயிறுதி-செறிவுறுமுச்சம்' (விதாந. நட்பாட்சி. ௨.)

உச்சற்நம்—அபானம்.

உச்சன்—இராசிச்சக்கரத்தில் தன் உச்ச நிலையில்நிற்கும் கிரகம்.

உச்சனிமாகாளி — 1. உச்சயினிநகரத்திலுள்ள காளிதேவி. 2. ஒரு கிராமதேவதை.

உச்சாகம்—மனவெழுச்சி.

உச்சாசநம்-கொலை. 'உச்சாசநஞ்சொல்லி' (பாரத. ஐந்தா. ௬.) [உஜாஸநம்.]

உச்சாட்டியம்—ஒட்டல்.

உச்சாடநம் — 1. அழித்தல், கெடுத்தல். 2. கலைஞாநம் அறுபத்துநான்கினொன்று; அது: பேயகற்றுதன்முதலியவைகளைப்பற்றியது. 3. துரத்துதல். 4. மந்திரம் முதலியவைகளால் ஒருவனைக் கெடுத்தல். 5. வேரோடு பிடுங்கல். [உச்சாடநம்:]

உச்சாணி—1. உச்சி. 2. உயர்வு.

உச்சாயம்—1. உற்சாகம். 2. உயர்வு. 'உச்சாயமாக முகமன்கள் கோடி யுரைசெய் திருந்த பொழுதில்' (நல். பாரத. வனம்புகு. ௧௯௩.)

உச்சாரணந்நன் — பலபாஷைகளையும் உச்சரிக்க அறிந்தவன். [உச்சாரணஜ்ஞ.]

உச்சாரணம்—1. உச்சரித்தல். 2. உச்சாடநம். [உச்சாரணம்.]

உச்சாரணை—உச்சாரணம். 'தப்புட னுச்சா ரணையினல் லான்மிகத் தோன்றரிதே' (வீரசோ. யாப்பு. ௩௫.)

உச்சாரம்-1. உச்சரித்தல். 'பிசாக்கரத்தினுச்சாரஞ் சாக்கிராவத்தை' (சி. சி. ௪: ௩௫. மறை.) 2. மலம், பகரவிகாரம். (இதோப. ௩.) 3. மிகவுயர்ச்சி. [உச்சாரம்]

உச்சாரிதம்—உச்சரிக்கப்பட்டது. [உச்சாரித.]

உச்சி—1. ஆண்மயிர். 2. உச்சந்தலை. 3. தலை. 'ஊரரை யுச்சி மிதித்து' (கலி. ௧0௪.) 4. தலைக்குநேரிடம். 5. நடு. 6. நவிரம். (பிங்கல.) 7. காய். (பிங்கல. ௨௫௬௬.) 8. நுனி. 'மாற்றரும்பசம்பொனின்மாடத்துச்சிமேல்' (சிந்தா. நாமக. 58). 9. மத்தியானம். (சூ. நிகண். க. ௧அ.) 10. மயிர்முடி. 11. ஆகாயமுகடு. 12. எல்லை. 'நற்றவத்துச்சி கொண்டார்' (சீவக. 2888.) 13. புல்லுருவி.

உச்சிக்கடன்—மாத்தியான்னிகம். (கூர்ம பு. நித்தியகன். 15)

உச்சிக்கரண்டி—சிசுவின் தலையில் எண்ணெய் வார்ப்பதற்காக உபயோகிக்கும் சிறு கரண்டி.

உச்சிக்காலம்—1. நண்பகல். 2. கோவிலின் மத்தியானபூஜை.

உச்சிக்கிழான்—சூரியன். 'உச்சிக்கிழான் கோட்டம்' (சிலப். கரு. கக.)

உச்சிக்குடுமி—உச்சிச்சிகை.

உச்சிக்குழி—உச்சந்தலைப்பள்ளம்.

உச்சிக்கொண்டை — 1. உச்சியின்மயிர் முடி. 2. சேவல்முதலியவற்றின் தலைச் சூட்டு.

உச்சிக்கொம்பன்—1. நிமிர்ந்தகொம்புள்ள மாடு. 2. காண்டாமிருகம்.

உச்சிகுளிர்தல்—மகிழ்வடைதல். 'அப்பா என்றால் உச்சிகுளிருமோ' (ஈடு. 4. 3 ப்ர.ஜீ)

உச்சிச்சுட்டி—ஓராபரணம்.

உச்சிச்செடி—புல்லுருவி. (மூ. அ.)

உச்சிச்செடில்—செடிலாட்டம்.

உச்சிசந்தி—உச்சிக்காலபூஜை.

உச்சிட்டசாங்கரியம் — எச்சிற்கலப்பு, ஒரு பாத்திரத்திலே பலர்கூடியுண்கை. [உச்சிஷ்டம் - எச்சில். ஸாங்கர்ய - கலப்பு.]

உச்சிட்டம்—1. எச்சில். 'ஆசமந முச்சிட்ட மன்று' (சைவச. பொது. ௬௪.) 2. கைவிடப்பட்டது. 3. சேடம் 'உச்சிட் டம்மென் றலகினை யுண்கிலார்' (கந்தபு. வீரபத். 41.) [உச்சிஷ்டம்.]

உச்சிட்டமோதநம்-மெழுகு. [ஶோதநம். மகிழ்ச்சி.]

உச்சித்தம்-மகாக்கை. (சிலப்.3.18.உரை)

உச்சித்தி—நிருமூலமாக்கல், முற்றுயழித்தல். [உச்சித்திः.]

உச்சித்திலகம்—ஒரு பூஞ்செடி.

உச்சிதம் — 1. அரியது. 2. அழகு. 3. உசிதம். 4. உயர்ச்சி. 5. கொடை. 6. தகுதி. 7. நெருஞ்சில் (மலை.) 8. மேன்மை. 'உச்சித மெய்ப்புற' (திருப்பு. க௪௬.) [1, 6, 8. [உசித.]

உச்சிந்நம் — 1. அழிக்கப்பட்டது. 2. வெட்டப்பட்டது. [உச்சிந்ந.]

உச்சிநி—உச்சயினி.

உச்சிநிமாகாளி—உச்சனிமாகாளி.

உச்சிப்படுதல் — உச்சமாதல். 'வெள்ளி உச்சிப்பட்டது, வியாழம் அஸ்தமித்தது.' (திவ். திருப்பா. 13. வ்யா)

உச்சிப்பள்ளி — சதுர்த்தசிதோறும் பள்ளிக்கூடத்தில் விடப்பெறும் பகல் விடுமுறை.

உச்சிப்பிளவை — உச்சந்தலையில்வரும் பிளவைநோய். (மூ. அ.)

உச்சிப்பிறை — பரவமகளிரணியும் தலையணிகளுள் ஒன்று.

உச்சிப்பின்னல்—உச்சிச்சடை.

உச்சிப்பூ — குழந்தைகளின் தலையணிகளுள் ஒன்று.

உச்சிப்பொழுது—நண்பகல்.

உச்சிபடுகை—உச்சியிடிக்கை.

உச்சிமல்லிகை—ஊசிமல்லிகை. (மூ. அ)

உச்சிமலை—செங்குத்தான மலை.

உச்சிமாகாளி—உச்சிநிமாகாளி.

உச்சிமோத்தல்—உச்சிச்சிரசைமோத்தல். 'தனிப்புதல்வன் றனையணைத்துத் தகவுச்சி மோந்து' (கோயிற்பு. வியாக். உ.)

உச்சியணி — தலைச்சீராவிலுள்ள அலங்காரத்தொங்கல்.

உச்சியாட்டம் — விளையாட்டுவகையுள் ஒன்று.

உச்சியார்-தேவர். 'உச்சியார்க் கிறையவ ஞ யுலகமெலாங் காத்தளிக்கும்' (யாப். வி. 86. பக். 315)

உச்சியிடிக்கை-குழந்தையின் உச்சந்தலை தாயின்மார்பிற்படுதலால் அவட்குண்டாகும் நோய்.

உச்சியெடுத்தல்—வகிரெடுத்தல்.

உச்சியெண்ணெய்—குழந்தைகளின் உச்சந்தலையில் இடும் எண்ணெய்.

உச்சிரட்டம்—தள்ளப்பட்டது.

உச்சிரதம்—1. உயர்ச்சி. 2. பிரண்டைக் கொடி. 3. பிறத்தல். [1, 3. [உச்ச்ரித.]

உச்சிரதன்—பிறந்தவன். [உச்ச்ரிதः.]

உச்சிரயம்-1. உயரம். 2. முக்கோணநிர்த்திட்டவரி.

உச்சிரயோகன்—தனவான்.

உச்சிராயம்—உயர்நிலை. [உச்ச்ராய.]

உச்சிருட்டர் — காலதத்துவத்திலிருக்கும் ஒருருத்திரர். (வி-ணி. உஎச.)

உச்சிரேகை—வானவளவைக்குரிய பெரிய ரேகை.

உச்சிவிடுதி—மத்தியானகோ விடுதலை.

உச்சிவிழுகை—குழந்தைகளின் பிராணு பாயக்குறியாக உச்சி குழிகை.

உச்சிவினை—உச்சிக்கடன். (சேதுபு. தீத்தம. 6.)

உச்சிவீடு — 1. உச்சிவேளையில் மழை விட்டிருக்கை. 2. இடைவிடுகை. 'உச்சிவீடு விடாதே இத்தையே மநோரதியாநின்றது.' (ஈடு. 9. 3. 7.)

உச்சிவெளி—உச்சிவீடு.

உச்சிவெறி—உச்சிவீடு.

உச்சிவேர்—மூலவேர்.

உச்சின்னம்—சமப்படுதல்.

உச்சினி — 1. உச்சயினி. 2. இரண்டா மாதம். (பொதி. நி.)

உச்சீவனம்—உய்தல்.

உச்சீவித்தல்—1. ஈடேறுதல். 2. மாணு பாயத்தினின்றுதப்பிப்பிழைத்தல். 3. பிழைத்தல். (தாயு. பரா. ௰௫. உரை.)

உச்சுச்காட்டல் — நாயை யேவிவிடுதல். [உய்த்து என்பதன் விகாரம்.]

உச்சுக்கொட்டுதல் — 1. இக்குக்கொட்டுதல். 2. வெறுப்புக்குறிகாட்டுதல்.

உச்சுதல்—1. இலக்கெறிதல். 2. தள்ளுதல். 3. பிறர்பொருளைக் கவர்தல். 4. வெல்லுதல்.

உச்சுவலம்—1. ஆசை. 2. எரிதல். 3. பொன். 4. பிரபை. [உஜ்ஜ்வ.]

உச்சுவாசம் — 1. சுவாசத்தை யுள்ளே யிழுத்துவிடுதல். 2. நூலின் உட்பிரிவு.

உச்சூடை—கொடிக்கம்பநுனி.

உச்சூநம் — 1. கொழுப்பு. 2. பருமை. [உச்ச்ரூநம்.]

உச்சேடணம்—மிச்சம். [உச்சேஷண.]

உச்சேதம்—1. அழித்தல். 2. வெட்டல். 3. நாசம். (நீலகேசி. 657) [உச்சேத.]

உச்சைச்சிரவம்—இந்திரன்குதிரை. (பிங்) [உச்சைஃச்ரவஸ்: உச்சைஸ் - உயர்ந்த, ச்ரவஸ் - காது.]

உச்சைச்சிரவா—உச்சைச்சிரவம். 'அவர் கானை வினைர்துன துச்சைச்சிரவா-வென்னு மகவான்புரவி' (சேதுபு. கந்துரு. எ.)

உசகம்—ஆமணக்கு.

உசநம்—1. உபபுராணம் பதினெட்டினுென்று. 2. தருமநூல் பதினெட்டினுென்று. (பிங்க. சசகூ.)

உசநன் சுக்கிரன். 'உசநவப்பெயர்க் கவியுதித்த' (இராமா. ஆறுசெல். கரு.) [உசநஸ்.]

உசம்—நகரம். (பிங்)

உசரம் — உயரம். 'நாலுதோரை உசரத்து.' (S. i. i. II. 134).

உசரிதம்—செருஞ்சில். (மலை)

உசல்—விடியல். (நாமதீப)

உசவு—கரியும் எண்ணையும் கலந்துகூட்டிய மை. (சிந்தா.)

உசவுதல்—ஆலோசித்தல். (பாரத. பதினேழாம். 221.)

உசற்காலம் - சூரியனுதித்தற்குமுன் ஐந்து நாழிகையுள்ளகாலம்.

உசனர் - சுக்கிரன். 'உசனர்-தந்த மூப்பை நீர் கொண்மின்' (பாரத. குரு. உ௩.)

உசா—1. ஆராய்ச்சி. 'உணர்ச்சிபச்சாக வுசா வண்டியாக' (அறநெறிச். கருக.) 2. ஒற்று. (திவா.) 3. சூழ்ச்சி. 'உசாவே சூழ்ச்சி' (தொல். சொல் ௩௭௦.) 4. மநநம். 'தன்று சிந்தையும் வசனமு முசாவுமத் தொல் பொருட் பொருட்டாகி' (ஞாநவா. லீலை. ௩அ.) 5. மூக்குத்தி.

உசாக்கேட்டல்—ஆலோசனைகேட்டல்.

உசாத்துணையர் — ஆலோசனைசெய்வோர். 'ஒன்றிய மோனர்போய வுசாக்கையரொருக்கு போனுர்' (இரகு. அயனே. கஉ.)

உசாத்தானம்—ஒரு தலம். (தேவார. திருஞாந.)

உசாத்துணை—உசாவுதுணை - உற்றதுணைவன். (திருக்கோ. 400 உரை)

உசாதேவி—சூரியன்மனைவியரிலொருத்தி. (சி. சி. பர. உலோகாய. கரு. உரை.)

உசாபதி—அநிருத்தன். [உஷாவதி.]

உசாவடி—உட்பிரிவு. (I. M. P. TJ. 894)

உசாவல்—உசாவுதல்.

உத்தரகுருக்கள் — உத்தரகுருகண்டத்துள்ளவர். 'அத்திசைக்கரை சானவுத்தர குருக்கண் மேன்மையை யடக்கி' (பாரத. இராசசூயச். சஅ.)

உத்தரகுருவம் — உத்தரகுரு. (பெருங். இலாவாண. 7. 141.)

உத்தரகோசமங்கை — பாண்டிநாட்டுள்ள ஒரு சிவஸ்தலம். 'உத்தர கோச மங்கை யென்னுமூரிற் சென்று' (திருவாத. மண். கூ.)

உத்தரகோசலம் — 1. அயோத்திநகரம். 'நன்றி யுத்தர கோசல நாயகன்' (இரகு. மாலை. ககஉ.) 2. கோசலதேசத்தின் வடபகுதி.

உத்தரகோசலை-அயோத்திநகரம்.[உத்தர கோஸலா.]

உத்தரகோடி—பிற்பாகம். 'கிரியாசத்தியினது உத்தரகோடியாயிருக்கும்' (சி. சி. க: சுஈ. ஞானப்.)

உத்தரகோளார்த்தம்-பூகோளத்தின் வடபாதி.

உத்தரங்கம்-கதவுநிலைக்குமேலே வில்வளைவாக வைக்கப்பட்டிருக்கும் ஒரு மரவடிவம். (உத்தரம்-மேல், கம்-போதல்.) [உத்தரங்கம்.]

உத்தரங்கள் — உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி என்னும் நக்ஷத்திரங்கள். 'செக்குத்தரங்கள்' (விதான. நல். 18).

உத்தரசமஸ்காரம் — பிற்கருமத்தினாலே திருத்திச் சுத்திசெய்தல். [உத்தர - பின், சம்ஸ்காரம் - சுத்தி.]

உத்தரசாட்சி — பிரதிவாதியின் சாட்சி. [உத்தரஸாக்ஷிநு.]

உத்தரசான்றினன்—முன்னொருவிடயத்திலே சாட்சியாயிருந்த ஒருவன் தேசாந்தரஞ் செல்லும்போதேனும் மரணாவத்தையடைந்த போதேனும் தானறிந்ததை 'நீயறிந்திரு' என்று சொல்ல அதனைக் கேட்டிருந்து சாட்சியாவோன்' (மிரு. சங். சஎ.) [உத்தரம்-பின், சான்று - சாட்சி.]

உத்தரசைவம் — சித்தாந்தசைவம். 'சிவகுணசங்கிராந்தி சமுற்பத்தி சமாவேச சிவசமத்துவமென் றிம்முத்திகளுக்கு மேலாயிருக்கிற சிவசாயுச்சியப்பிரத மாகையால் உத்தரசைவமென்றும், இதைப் பூர்வபக்ஷம் பண்ணுவதற்கு ஒரு சமயமு மில்லையாகையால் சித்தாந்தசைவமென்றும் பெயரையுடைய வைதிகசைவமே சர்வோத்கிருஷ்டமான சமயம்'. (சி. சி. அ: கூ. சிவாக்.)

உத்தரசைவர் — சித்தாந்தசைவர். 'சிவானந்தபரவசத்தினாலே சிவமேயாய்நிற்பது மோட்சமென்றுசொல்லிப் பரமுத்தியை யடைவது உத்தரசைவராகிய எம்மனோரே' (சி. சி. அ: கஉ. சிவாக்.)

உத்தரட்டாதி — இருபத்தாறாவதான நட்சத்திரம். 'வாணியாம் பூரட்டாதி யுத்தரட் டாதியாங்கண்' (மச்சபு.நட்சத்திர.13.)

உத்தரட்டாதியான்—உத்தரட்டாதிநட்சத்திரத்திற் பிறந்தவன். 'ஊனத்திற் றீர்ந்த சீர்த்தியுத்தரட் டாதியானே' (சிந்தா. நாம. நூடுஅ.)

உத்தரணம் — 1. பங்கிட்டெடுத்தல். 2. முற்றத்துறத்தல், முற்றநீங்குதல். 3. கக்குதல். 4. வேரோடுபிடுங்குதல். 5. உயர்த்தல்.

உத்தரணி—பஞ்சபாத்திரக்கரண்டி, ஆசமனஞ்செய்தற்கு நீர்முகக்குஞ் சிறுகரண்டி.

உத்தரத்திரயம்—உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி என்பவை.

உத்தரதாரா-அருந்ததி. 'தளர்நேரிடையவருத்தர தாரா கணமனையார்' (சேதுபு. அனுமகு. எ.)

உத்தரதாரை—அருந்ததி.

உத்தரதுருவம்—வடதுருவம்.

உத்தரதேசம்—வடதேசம்.

உத்தரபச்சிமம்—வடமேற்கு.

உத்தரபட்சம்—1. அபரபக்கம். 2. உபநயவாசகம். 3. சித்தாந்தபட்சம், சாதனங்களினாற்பெற்ற சித்தி. 4. மறுப்புரை. 5. மறுமொழி. 6. வடக்குப்பக்கம். [உத்தரவக்ஷ.]

உத்தரபதம் — தொடர்நிலைப்பதத்திலே பின்னாகநிற்கும் பதம்.[உத்தரவத.உத்தர-பின். வத - சொல்.]

உத்தரபற்குனி—உத்தரம்.

உத்தரபாகம்—பிற்பாகம்.

உத்தரபாத்திரபதம் — 1. இரேவதிநாள். 2.உத்தரட்டாதிநாள்.[உத்தரஹாத்ரவத.]

உத்தரபாதம் — மறுமொழி. [உத்தர வாத.]

உத்தரபாலன்—குபேரன். [உத்தரவாயு. உத்தர - வடக்கு, வாயு - காப்பவன்.]

உத்தரபாற்குனி — பன்னிரண்டாம்நட்சத்திரமாகிய உத்தரம். [உத்தரஃபால்குநி.]

உத்தரபூமி—வடபூமி.

உத்தரபூர்வம்—வடகிழக்கு. [உத்தரம் - வடக்கு, பூர்வம்-கிழக்கு.]

உத்தரபூருவதிசை — வடகிழக்குத்திசை. 'உச்சிமுக மீசான மொளிதெளியப் பளிங்கே யுத்தரபூ ருவதிசையை நோக்கியுறு முகந்தே' (சிவதரு. பரிகார. அக.)

உத்தரம்—1. இடப்பக்கம். 2. உத்தராயணம். (விதான. குணகுண. எச.) 3. உயர்ச்சி. 4. ஊழித்தீ. (திவாகர.) 5. எதிருரை. 6. மறுமொழி. 'உன்னை யான்வின வுரைதனக் குத்தர முரைத்து' (பாரத. நச்சு. ௫௧.) 7. காமிகபேதம் மூன்றனுள் ஒன்று. (த. நி. போ. கருக.) 8. காரியம். 9. சேஷம். (கணக்கதி) 10. பலம். 11. பன்னிரண்டாம் நக்ஷத்திரம். 'உயருத்தரத்திற் பாவந்தீரும்' (கூர்மபு. சிராத்த. ௫.) 12. பின். 13. மேலானது. 14. வடக்கு. 'உறைதரு குவடு நீங்கி யுத்தர முடிவு கண்டான்' (பாரத. அருச். தவ. ௩௦.) 15. வருங்காலம். 16. விட்டம். (நெடுநல். 82. உரை.) 17. வாமதேவமந்திரம். (உத்தரதிசையைநோக்கும் வாமதேவமுகத்துக்குரிய மந்திரமாதலின் அப்பெயர்பெற்றது.) [உத்தர.]

உத்தரமடங்கல்—வடவைத்தீ. (திவா)

உத்தரமத்திமபூமி — 1. சீதோஷ்ணசமத்துவபூமி. 2. துருவசக்கரத்திற்கும் கற்கிசக்கரத்திற்கும் நடு.

உத்தரமதுரை—கண்ணபிரான் அவதரித்த வடமதுரை. (திருவள்ளுவமாலை. 21)

உத்தரமந்தரி—பிரதான மந்திரி. 'உத்தர மந்திரிபதமெய்தின' (I. M. P. Mr. 366)

உத்தரமந்தோச்சம் — கிரகங்கள் சூரியனுக்கு அதிதூரத்திற் செல்லு மெல்லை.

உத்தரமீமாஞ்சை — பதினன்குவித்தைகளுள் ஒன்றாகிய மீமாஞ்சையின் இரண்டாம் பாகம்; இஃது எட்டத்தியாயத்திற் சூத்திர வடிவமாக வியாசமுனிவரால் இயற்றப்பட்டது. இவ்வெட்டத்தியாயங்களுள்ளே முதனான்கத்தியாயமும் தேவதாகாண்டம் எனவும்பின்னுள்ள நான்கத்தியாயமும்பிரமகாண்டமெனவும் சொல்லப்படும். 'உரைத்த விரண் டாங்கூறு பிரமமுரைப் பதனு லுத்தரமீ மாஞ்சை யெனப் பட்டருள்சூர் வியாதன் - றெரித்த சூத் திரவடிவ மாயிரு நான்கத் தியாயமா மவற்றுண்முத னான் கத்தி யாயம் - விரித்தலுறு தேவதா காண்ட மெனப்பட்டுவிளங்குறுதெய்வதவிலக்கணம் பலபத் திரனு-னிரைத்துரைசெய் யப்படுமே னன்கத்தியாய நிகழ்பிரம காண்டமென வே நிகழ்த்தப் படுமால்' (வேதா. சூ. சிறப்பு. 5.)

உத்தரமீன்—அருந்ததி. 'உத்தரமீன்கொண் கனே' (சேதுபு. துத்தம. ௬.)

உத்தரவாணி—கண்டங்கத்தரி. (வை. மூ.)

உத்தரவாதம் — 1. உத்தரஞ்சொல்லல். 2. பிணை. 3. பொறுப்புநிற்றல். 4. ஈடு. 5. எதிர்வாதம்.

உத்தரவாதி—1. உத்தரஞ்சொல்வோன், 2. எதிரி. 3. பிணையாளி. 4. பொறுப்பேற்றவன். [உத்தரவாதிநு. உத்தர - விடை. வாதிநு - சொல்வோன்.]

உத்தரவாருணி—ஒரு கொடி.

உத்தரவினை — உத்தரக்கிரியை. 'உதிட்டிர னேதுமாற்று லுத்தரவினைக ளாற்றி' (சேதுபு. இராமதீ. எச.)

உத்தரவு—1. ஒருவருக்கு ஒன்றுசெய்யும்படி அதிகாரமுடையவராற் கொடுக்கப்படுஞ் சம்மதி. 2. தெய்வசம்மதம். 3. மறுமொழி, விடை. 4. விடுதலை.

உத்தரவுச்சீட்டு—1. அதிகாரப்பத்திரிகை. 2. விடுதலைப்பத்திரிகை.

உத்தரவேதம்—திருக்குறள்.

உத்தரவேதி — வேள்வியக்கினியிருக்குமிடம். 'தனியொருமாணியாய் உத்தரவேதியுணின்ற வொருவனை' (திவ். பெரியாழ். 1. 9. 6.)

உத்தரன் — 1. சிவன். 2. விட்டுணு. 3. விராடராசன்மகன். 'உரைத்த வன்னையைக் கதுமென வுத்தரன் வணங்கி' (பாரத. நிரை. உக.)

உத்தராக்ஷணம்—அடுத்தநிமிஷம்.

உத்தராகம்—பிரபத்திக்குப்பின் செய்யும் தீவினை. (ஈடு. 10. 2. 1. ஜீ.)

உத்தராங்கம் — மேல் நான்கு ஸ்தாயி ஸ்வரங்கள்.

உத்தராசங்கம்—உத்தரீயம், மேலாடை. 'சிங்கத்துரி யுத்தராசங்கத் தண்ணறற்கு' (தணி. களவு. ௧௧௬.) [உத்தராஸங்க. உத்தர - மேல். ஸங்க - சுற்றுதல்.]

உத்தராசாபதி—குபேரன். [உத்தராஸாபதி. உத்தர - வடக்கு. ஆஸா - திக்கு. பதி - தலைவன்.]

உத்தராசை—வடக்குத்திக்கு.

உத்தராட்சம்—பூகோளத்தின் வடபாகம்.

உத்தராடம் — இருபத்தோராம் நட்சத்திரம். 'எதிலுத்தராடமாய விடங்களில்' (மச்சபு. நட்சத்தி. 12.) [உத்தராஷாடா.]

உத்தராத்தகோளம் — பூமியின் வடபாதியுண்டை.

உத்தராதரம் — உயர்வுதாழ்வு, மேல்கீழ். [உத்தராதர: உத்தர - உயர்வு, மேல். அதர - தாழ்வு, கீழ்.]

உத்தராதலம்—உத்தராதரம்.

உத்தராதி—1. வடதிசை [தெலுங்கு]. 2. வடநாட்டான்.

உத்தராதிகாரம் — ஒருவன் இறந்தபின் அவன் பொருளுக்கு உரியராதல். [உத்தராதிகார.]

உத்தராதிகாரி— இறந்தவன்பொருளுக்கு உரியவனாய்ப் பின்வருபவன். [உத்தராதிகாரிந். உத்தர - பின். அதிகாரிந் - அதிகாரமுடையவன்.]

உத்தராபதம்—1. வடக்கு. 2. வடக்கு வீதி. 3. வடநாடு. (பெருங். உஞ்சைக். 38. 298.) [உத்தராபத: உத்தர - வடக்கு. பத - வழி.]

உத்தராபதி — வடநாடு. 'உத்தராபதியுள்ளோம்' (பெரியபு. சிறுத். 40.)

உத்தராபாசம்—போலியுத்தரம், பொய்ம் மறுமொழி. [உத்தராபாஸ: உத்தர - விடை. ஆபாஸ - போலி.]

உத்தராபோசனம்-போசனத்தின்முடிவில் மந்திரபூர்வமாக நீருட்கொள்கை. (காசிக. இல்லற. 31.)

உத்தராயணம் — சூரியன், மகர, கும்ப, மீன, மேட, இடப, மிதுனங்களென்னும் இராசிகளினிடமாய் வடவீதியாகச் செல்லுங் காலம்; அக்காலம் தைமுதல் ஆனிவரையும். 'திங்களோராறு கொண்டதயன முத்தராயணமுஞ் சிறப்பினோடு-தங்குதெக்கி ணாயனமு மெனவிரண்டாம்' (கூர்மபு. பிரமா. ௪.) [உத்தராயண: உத்தர - வடக்கு. அயந - போதல்.]

உத்தரார்த்தம்—பிற்பாதி. 'நின்றிடுமென் றதனைச் சமர்த்திதற்கு......உத்தரார்த்தமாதலின்' என்பது. (சிவசம. பக். 62.)

உத்தராரணி — அரணியின்கண் ஒன்றிக் கடையும் ஓர் கருவியாயுள்ள மரத்துண்டு. (பிரமோபநி. ௩௩.)

உத்தராஷாடம்—உத்தராடம்.

உத்தரி—1. உத்தரியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. குதிரை. 'வயங்குகொய்யுளை-யுத்தரச் சலதியும்' (இரகு. திக். ௩௩). 3. யானை. (அக. நி). 4. பாம்பு. (அக. நி). 5. பருத்திச்செடி.

உத்தரிகம்—உத்தரியம். 'சிங்கவேற்றுரிவையுத்தரிகம்' (குற்று. தல. தக்கன்வே. 8.)

உத்தரித்தல்—1. அழுந்தல். 2. அனுப்பித்தல். 3. ஈடுசெய்யல். 4. கடன்செலுத்தல். 5. சகித்தல். 6. சம்மதித்தல். 7. தருக்கித்தல். 8. தீவினைப்பயன் அனுபவித்தல், வருந்தல். 9. நியாயங்காட்டல், சாதித்தல். 10. எதிர்த்துநிற்றல். 'தன்னை நாடியுத் தரிக்கமாட்டா நராதிபர் பதாகைத்தூசும்' (பாரத. நிரைமீட். 135.) 11. பொறுப்புநிற்றல். 12. மறுமொழிசொல்லுதல். 13. எடுத்துநிறுத்துதல். 'ப்ருதிவியை.........உத்தரித்த பெரியோனே' (ஈடு. 8. 1. 2). 14. இமிசித்தல். 'உத்தமனுக்கை யுத்தரித்தபாடுகள் அத்தனைக்கும் என அறிதி'(இரக்ஷணிய. பக். 78.)

உத்தரிப்பு—1. உத்தரித்தல். 2. வருத்தம். 3. எழும்புகை.

உத்தரியம்—உத்தரீயம். (சைவச. ஆசா. ௪௭.)

உத்தரீயகம்—உத்தரீயம்.

உத்தரீயம் — மேலாடை. 'தரணிமான் மார்பிற் பயிலுமுத் தரீயமும் போன்று' (பாரத. சிறப். அ.)

உத்தரு—சுண்ணாம்பு.

உத்தரை — 1. அபிமன்னுவின்மனைவி. 'உத்தரையும் வில்விசயனுக்குரியளென்றான்' (பாரத. வெளிப்பா. ௧௪). 2. ஒரு நட்சத்திரம். 3. வடதிசை. [உத்தரா.]

உத்தரோத்தரம்—1. எதிரியின் உத்தரத்துக்கு எதிர் உத்தரம். 2. ஒன்றன்பின் வருதல். 3. மிகுதி. 4. மேலும் மேலும். 'இருதயாதிகளிலே அகாராதி அபிமானிகளான பஞ்சசத்திகளும் ஆன்மாவினுடைய அனுக்கிரகார்த்தமாகக் கிரமத்திலே உத்தரோத்தராதிகமாகச் சிவாபிவியத்தியைக் கொடுத்தல்செய்யும். (சி. சி. ௪: ௩௪. சிவாக்.) [உத்தர+உத்தரம்.]

உத்தவம் — 1. ஓமாக்கினி. 2. திருவிழா. (நாநார்த்த). [உத்தவ.]

உத்தவன் — கிருஷ்ணனுடைய நண்பனும் உசாத்துணைவனுமான ஒரு யாதவன்.

உத்தவாணி—கண்டங்கத்தரி. (மூ. அ.)

உத்தவாறு—சொல்லப்பட்டபடி. 'உத்தவாறேது வருமது வருகென் றமூர்ந்தி யொருமையானான்' (ஞானவா. சனகா. ௩௧.)

உத்தளம் — 1. உத்துளனம். 2. மத்தளபேதம். 'இத்தகைய மத்தளப்பேர்......... உத்தளமே' (பாத. ஒழிபி. 13.)

உத்தாநத்துவாதசி— கார்த்திகைமாதத்துச் சுக்கிலபக்கத்துவாதசி. (M. E. R. 571 of 1926.)

உத்தாநபர்தசன் — உத்தானபாதன்மகனாகிய துருவன். [உத்தானபாதஜ]

உத்தாநபாதன் — சுவாயம்புமனுவின்மகனாகிய ஓரரசன். 'இலங்குபுகழ்ப் பிரியவிரதனைப்புகழுத் தானபா தனையாங் கின்றான்' (கூர்மபு. தக்கனைச். க.) [உத்தானபாதஃ]

உத்தாநம்—1. அடுப்பு. 'உத்தான மிட்டு முதற் பொருளை வாழ்த்தி யொல்கவெரித் தைந்தானா ளுதய மூந்தி' (தைல. தைலவ. ௬௦). 2. அத்தநாள். 3. ஆழமற்றது. 4. இசைப்பு. 5. இடை. 6. எல்லை. 7. எழும்புதல், உத்தாபனம். 'உத்தானஞ்செய்து' (நாலாயிர. வண்ணமாட. அ). 8. ஏறுதல். 9. கட்டுதல். 10. கவிந்தநிலை. 11. கரவற்ற தன்மை. 12. சங்கிராந்தி. 13. சேனை. 14. துணைக்காரணம். 15. துயிலெழும்பல். 16. பரவப்பட்டது. 17. பலியிடுங்கோட்டம். 18. புத்தகம். 19. புடைப்பு. 20. புருடத்துவம். 21. மகிழ்ச்சி. 22. மல்லாந்துகிடத்தல். 23. மலங்கழித்தல். 24. முயற்சி. 25. முற்றம். 26. யுத்தம். 27. வடவாமுகாக்கினி. 28. அடக்குகை. [1, 5, 9, 12, 27, உத்தாந. 3, 6, 7, 11, 13, 15, 16, 17, 18, 20, 21, 23, 24, 25, 26, உத்தாந. 10, 22, உத்தாந.]

உத்தாநி—ஒரு நரம்பு, உத்தாபநி.

உத்தாநைநாதசி—விட்டுணு நான்குமாதம் நித்திரைசெய்து பின் எழும் கார்த்திகைமாசச் சுக்கிலபக்க ஏகாதசி. [உத்தானைகாதஶீ]

உத்தாபநம்–1. அசுத்தமாகிய அறைவீட்டினின்றும் சுத்தமாகிய உயர்ந்த இடத்திற் குழந்தையைச்சேர்க்குங் கிரியை. 2. எழுப்புதல். [உத்தாபந.]

உத்தாபம் — 1. உபத்திரவம். 2. மனக்கிளர்ச்சி. 3. மிக்கவெப்பம். 4. முயற்சி. 5. தவிப்பு. [உத்தாப]

உத்தாபலம்—1. இசங்கு. (மூ. அ). 2. முந்திரிகை.

உத்தாபனம் — 1. எழுப்புதல். 2. பதில்வைத்தல்.

உத்தாபனி–1. விசிநரம்பு. 2. தசைநரம்பு.

உத்தாபித்தல்—உறுக்கிப்பேசல்.

உத்தாமணி—வேலிப்பருத்தி. 'மூலைவிழி சங்குத்தாமணி' (தைல. தைலவ. ௭௩.)

உத்தாரக்கூறு—பாகப்பிரிவினை. (சுக்கிரநீதி. 12.)

உத்தாரணம்—1. உயர்த்துதல். 2. பங்கிடுதல். 3. நிலைநிறுத்தல். 4. நீங்கினின்று மீட்கை. [1, 2, உத்தாரண.]

உத்தாரணவைரவர் — அட்டவைரவருள் ஒருவர்.

உத்தாரம்—1. அடுப்பு. 2. உத்தரவு. 3. உயர்ச்சி. 4. கடன். 5. கட்டளை. 6. சிரேட்டமானது. 7. நிலையின்மை. 8. பங்கு. 9. மறுமொழி. 10. வாக்கிசெய்தல். 11. நியதமாகக் கொடுக்கும் வேதனம். 'மாதவழி நாது பொன்னும் உத்தாரம்' (தெய்வச். விறலிவிடு. 295.) [1, 3, 4, 8, உத்தார. 6, 7, 10, உத்தார.]

உத்தாரவிபாகம் — பங்கிடுதல். [உத்தார விபாக.]

உத்தாலகம்—1. ஒரு மணி. 2. ஒருவகைச் சோளம். 3. ஒருவகை மரம். (வீரவனப்பு. விரைபலா. 26.)

உத்தாலம்—கறுவிலி. (மூ. அ.)

உத்தி — 1. அனுமானம். 2. அயின். 3. அறிவு. 4. இசைவு. 5. இணக்கம். 6. சீதேவி யென்னுந் தலைக்கோலம். 'பொலம்புரி யுத்தியும் பொருத மஞ்ஞையும்' (கந்தபு. தெய்வ. கஎஅ). 7. செல்வம். 8. சேர்க்கை. (மணிமே). 9. தக்கதன்மை. 10. தந்திர வுத்தி; அது: நூற்பொருளை உலகவழக்கத் திற்குஞ் செய்யுள்வழக்கத்திற்கும் பொருந் தக் காண்பித்து ஏற்புழியறிந்து இதற்கு இவ்வகையாமென்று தக்கபடியாகவைக்குந் தன்மை; அவ்வுத்தி முப்பத்திரண்டுவகைப் படும்; அவையாவன: நுதலிப்புகுதல் முதலி யன. (நன். பொதுப். கச, கரு. பார்). 11. ஆபரணத்தொங்கல், திருவுறுப்பு. 12. தூக் கம். 13. தேமல். (திவா). 14. பாம்பின் படப்பொறி. (சூ. நிகண். ௩: சக.) 15. பாரம்பரிய வழக்கம். 16. பேச்சு. (பிங்). 17. பேசுதல். 18. பொருந்துமாறு. (வள். 242. பரி). 19. கடல். (அக. நி). 20. தாற் காலிகமாக அமைக்கப்பட்ட கண்ணிக்கால். [1, 7, 13, 16, யுக்தி. 14, 15, உக்தி.]

உத்திகை — தாற்காலிகமாக அமைக்கப் பட்ட கண்ணிக்கால்.

உத்திட்டம்—1. உத்தேசிக்கப்பட்டது. (சி. சி. க. க. சிவாக்.) 2. சொல்லப்பட்டது. 3. விசேடிக்கப்பட்டது. 4. குறிப்பு. [உதிஷ்ட.]

உத்திதாங்குலி — விரல்கள் விரிந்தநிலையி லிருக்கும் உள்ளங்கை, இதனை அபயக்கை என்பர். [உத்திதாங்குலி.]

உத்திமறுதலை — செய்யுட்குற்றங்களுள் ஒன்று. (யாப். வி. 525)

உத்தியம்—1. உத்தியோகம். 2. யாகமிரு பத்தொன்றி னொன்று. (கூர்மபு. உ: கக. உரை.) [பதினெண் யாகங்களுள் ஒன்றென் பது முண்டு.

உத்தியாபனம்—1. முடிவுசெய்தல், விர தோத்தியாபனம், அது: விரதபலனையடை யும்பொருட்டுச் செய்யும் ஒரு கிரியை. 'உத்தியாபனமுஞ்செய்திட்டு' (மச்சபு. கல் யாணசத். 12.) 2. நீங்கச்செய்கை. 'அன்ன லோடுமையை நண்பி னுத்தியாபனஞ்செய் தே' (பிரமோத். 18. 31) [உத்யாபந.]

உத்தியானபாலன் — 1. தோட்டமுடை யோன். 2. பூந்தோட்டக்காவலன். [உத்யானபால: உத்யான-பூந்தோட்டம், பால-காப்போன்.]

உத்தியானம் — 1. பிரணவத்து உகார தியானம். 2. புறப்படுதல். 3. பூந்தோட்டம், சோலை. 'நாண்மல - ருத்தியானத்துமோ ருததிகாட்டுமால்' (இரகு. நாட். சக.)

உத்தியானவனம்—பூந்தோட்டம்.

உத்தியுத்தசிவம் — சகல நிட்களராகிய சிவன். (சி. சி. உ: கக. ஞானப்.)

உத்தியுத்ததத்துவம் — சதாசிவதத்துவம் (சி. சி. க: கரு. ஞான.) அது: சிவசத்தி, ஞானமுங் கிரியையு மொத்த கிரியைத் தொழிலையியற்றிக்கிரியாசத்திரூபியாயிருக்கு மவதாரம். (கூர்மபு. திருக்கல். க. உரை.)

உத்தியுத்தர்—1. ரூபாரூபர். 2. சகளநிட் களர்.

உத்தியுத்தன்—1. சதாசிவன். (கூர்மபு. திருக்கல். க. உரை.) [இது: சிவன் சதாசிவ தத்துவத்திற் பெறும் பெயர்.] 2. ஊக்கமுடை யோன். [உத்யுக்த.]

உத்தியுத்தை—முயற்சிசெய்பவள். (சி. சி. க: கரு. ஞானப்.)

உத்தியோகம்—1. அதிகாரத்தோடு கூடிய தொழில். 2. உள்ளமிகுதி. 3. தொழில். (சி-வி. ஞானபாத. க.) 4. நிலைபெறுத்துந் தொழில். (சி. சி. பாயிர. க. சிவஞான.) 5. முயற்சி. [உத்யோக.]

உத்தியோகவான் — சிருட்டியாதி வியா பாரமுள்ளவர். (சி-வி. ஞானபா. உ.)

உத்தியோகன்—உத்தியோகஸ்தன். 'உப யத்திரானையும் எத்திவாங்கிடும் உத்தியோ கர்கள்' (சர்வசமய. பக். 190)

உத்தியோகித்தல்—1. முயலுதல். 'கைங் கர்யம்பண்ண உத்யோகிக்கும் அளவையில்' (கோயிலொ. 13.) 2. தொடங்குதல்.

உத்திரட்டாங்கம் — தசநாடகத்தொன்று.

உத்திரட்டாதி— இருபத்தேழுநட்சத்திரங்களுள் இருபத்தாறும்நட்சத்திரம். (திவா) [உத்தரட்டாதியின் திரிவுபோலும்.]

உத்திரத்திரயம்—உத்தரத்திரயம். (விதான. கர்ப்பா. 2. உரை)

உத்திரதம் — அச்சுருவாணி. [உ௫ய.]

உத்திரப்பூண்டு—சிவனார்வேம்பு.

உத்திரம்—1. இருபத்தேழுநட்சத்திரங்களுள்ளே பன்னிரண்டாம் நட்சத்திரம். [இஃது: உத்தரத்தின்திரிவுபோலும்.] 2. சிறுவலை. 3. விட்டம். 'செழுந்துமிருத்திரம் பரப்பி' (பாரத. இராச. ௬.) 4. மேற்பட்டது. 'உத்திர நூல்களெல்லாம்' (விநாயகபு. 75. 6). 5. மஞ்சள். 6. மரமஞ்சள்.

உத்திரவதலி—அருந்ததி.

உத்திராடம்—உத்தராடம், இருபத்தேழுநட்சத்திரங்களுள்ளே யிருபத்தோராம் நட்சத்திரம். [உத்தராடத்தின்திரிவுபோலும்.]

உத்திராபம்—பேரொலி.

உத்திராபன்னி—சணல். (மூ. அ)

உத்திராவம்—பேரொலி. [உ௫ாவ.]

உத்திரி—1. அருச்சனை. 2. தியானம். 3. பருத்தி. (மூ. அ) 4. மந்திரம்.

உத்திரிப்பொருள்—1. அருச்சனை. 2. மந்திரம். 3. யோகம்.

உத்திரேகம்–1. அதிகரித்தல். 2. தொடக்கம். 3. மிகுதி. [உ௫ேக.]

உத்திலேசம் — நால்வகையுபாயங்களால் ஒருவனை உண்மைகூறும்படி செய்கை. (சுக்ர நீதி. 282)

உத்தினம்—மத்தியானம்.

உத்திபகம்–1. ஒளிவிடல். 2. சுவாலித்தல். 3. மனவிகாரமெழுப்புதல். 4. மலையெறும்பு.

உத்திபனம்—1. தகனஞ்செய்தல். 2. தீபமேற்றல். 3. மனவிகாரத்தை யெழுப்புதல். [உ௫ீவந.]

உத்தியம்—எழுவகைச் சோமயாகங்களுள் ஒன்று. (பிரபோத. 39. 14)

உத்து—1. அத்தாட்சி. 2. தெளிவு.

உத்துங்கம்—1. உயர்ச்சி. 'உத்துங்கமிக்க வொருதன் றவிசேறி' (கந்தபு. சிங்க.௪௭௫.) 2. நெடுமை. 3. மகத்துவம். 4. மிருது. 5. மேன்மை. 'உத்துங்க துங்கன்' (விக்கிரம. உலா) [உத்௩ம.]

உத்துதம்—உத்துதமுகம்.

உத்துதமுகம்—உத்துவாகிதமுகம்.

உத்துதல்—கழித்தல். 'பொன்னெல்லாம் உத்தியெறிந்து' (கலித். 64).

உத்துவகனம்—விவாகம். (த. நி. போ. உ௪.) [உஙஹந.]

உத்துவருத்தனம்—1. அரைத்தல். 2. எறுதல். 3. சரீரத்தைத் தேய்த்தல். 4. மிக வளர்ச்சி. 5. முனைத்தல். 6. வாசனையூட்டல். [உங௫ர்நம.]

உத்துவாகம்—விவாகம். [உஙாஹ.]

உத்துவாகனம்—1. உழுதிரட்டித்தல். 2. விவாகம். [உஙாஹந.]

உத்துவாகிதம்—1. உயர்த்தப்பட்டது. 2. நிமிர்த்தப்பட்டது. [உஙாஹித.]

உத்துவாகிதமுகம்—நிமிர்ந்த முகம்.

உத்துவாசனம்—1. அகற்றுதல். 2. கொல்லல். 3. மிக வளர்ச்சி. [உஙாஸந.]

உத்துவாந்தம்—மதமில்லாதயானை. [உஙாஷ.]

உத்துவாபம்—1. சிதைத்தல். 2. தள்ளுதல். [உஙாவ.]

உத்துவானம் — சர்த்திசெய்யப்பட்டது. [உஙாநம.]

உத்துவிதம் — நிருத்தக்கை முப்பதனுள் ஒன்று. (சிலப். பக். 81)

உத்துவேகம்—1. அச்சம். 2. எறுதல். 3. துக்கம். 4. பாக்கு. 5. மனக்கலக்கம். 6. மிகுவிரைவு. 7. விவாகம். [உஙெம.]

உத்துவேகன் — விரைந்துசெல்வோன். [உஙெம.]

உத்துவேட்டனம் — 1. அடைக்கப்பட்ட இடம். 2. சூழ்தல். [உஙெஷ்ந.]

உத்துளம்—விபூதியை நீரிற்குழையாது உடலிற் பூசுகை. 'மிக்கவிரு முத்துளமெய் வீற' (அலங்காரச்சிந்து. 9.)

உத்தூடணம்–1. மயிர்சிலிர்த்தல். 2. விவாகம்முதலான உற்சவம். [உங௫ஷண.]

உத்தூதம் — 1. உயர்த்தப்பட்டது. 2. நிமிர்த்தப்பட்டது. [உஃஙூத.]

உத்தூதமுகம்—உத்துவாதிதமுகம்.

உத்தூளம் — உத்தூளனம். (சித். சிகா. விபூதி. ௧௪.)

உத்தூளனம்-விபூதியை நீரிற்குழையாது தூளாகப்பூசுதல். 'ஒருவிரலொருகையானிட வுத்தூளனஞ்செயா தணிதல்' (தணிகை. இராம. ௨௨.) [உஃஙூஊந.]

உத்தூளி—உத்தூளம். 'வெண்ணீற்றினுத் தூளி' (சிதம்பர. திருப்பதி. 454)

உத்தூளித்தல் — விபூதியை நீரிற்குழையாது உடம்புமுழுது மணிதல். 'ஒண்மைய னே திருநீற்றை யுத்தூளித் தொளிமிளிரும்' (திருவாச. நீத். ௨௨.)

உத்தூளிதம்—1. தூள்விபூதி. 2. விபூதியைக் குழையாது தூளாக உடம்புமுழுது மணிதல்.

உத்தேகம்—1. மதிப்பு. 2. விருப்பம்.

உத்தேகித்தல்—மதித்தல்.

உத்தேசம்—1. அபிப்பிராயம். 2. உடன்படிக்கை, பொருத்தம். 3. நோக்கம். 4. பெயர்மாத்திரையாற் பொருளைச்சொல்லல். 'ஆதியுத் தேசத் தானு மிலக்கண வமைதியானும்' (திருவிளை. தடாதகை. 54.) 5. மதிப்பு. 6. விசாரணை. 7. விவரம். [உத்தேஶ.]

உத்தேசனம்—1. அனுப்பல். 2. சாணை பிடித்தல். 3. விளக்கம். 'அஞ்சனதேவோத் தேசனமிருத்தியத்தால்' (சி. சி. இ: ௯. ஞானப்.) [உத்தேஜநம்.]

உத்தேசித்தல்—1. மதித்தல். 2. கருதல்.

உத்தேசியம்—கருதியபொருள், [உத்தேஶ்யம்.]

உத்தேசியன்—முக்கியன் (சி. சி. ௨. ௨௪. சிவாக்.)

உத்தேரிதம்—குதிரையின் ஐவகைக் கதியில் ஒன்று. [உத்தேரித.]

உத்பலன்-அரசமாதுக்குவ் கனகனுக்கும் பிறந்தவன். (சூத. சாதி. ௩௧.)

உத்பவ — இருநூற்றிருபத்துநான்கு புவனங்களிளென்று. (கந்தபு.கணக். ௧௦.உரை.)

உத்பாதகன்—பிறப்பிக்கிறவன்.

உத்பாதம் — 1. பிறப்பித்தல். (பௌட். உ: ௧௩.) 2. மேலெதூக்கின கால். 3. தூர்க்குறி.

உத்பாதனம்—பிறப்பித்தல்.

உத்பாதித்தல்—உண்டாக்குதல். (சி. சி. உ: ரு௬. சிவாக்.)

உத்பிச்சம்-உற்பிச்சம், நிலத்தைப்பிளந்து கொண்டுமுளைக்குஞ் செடி முதலியவை.

உத்பிசம்-உற்பிச்சம். (வி-ணி.) [உத்பிஜ]

உத்பிரேட்சை — தற்குறிப்பேற்றமென்னும் அலங்காரம்.

உத்பூதம்—உற்பூதம்.

உத்யுக்தசக்தி — திதிருத்தியத்தி லேற்பட்டிருக்குஞ் சத்தி; இதில் ஞானக்கிரியைகள் சமமாயிருக்கும். (பௌட். பதி. ௬௨.)

உத்யுக்தர்—போகசிவன். (பௌட். ௨௩.)

உத்ராவம்—ஓடுதல்.

உத்வகனம்—விவாகம்.

உத்வாசனம்—கொல்லுதல்.

உத்வாந்தம்—மதமில்லாத யானை.

உத்வானம்—அடுப்பு.

உத்ஸர்ஜனம்—ஒழிர்திருக்கை. 'உபக்ரம உத்ஸர்ஜனகாலத்தை' (கோயிலொ. 33)

உத்ஸேதம்—உயரம். 'உத்ஸேதம் எழு நூற்றெழுபத்தைந்து வில்' (ஸ்ரீபுராணம்.)

உத்க்ஷேபணம்-கூத்தின் அங்கக்கிரியைகளுள் ஒன்று. (சிலப். பக். 81.)

உதக்கிரம்— 1. உயர்ச்சி. 2. நீட்சி. 3. பெரிது. [உதக்ர: உத் - மேல். அக்ர - நுனி.]

உதக்கிரியை—உதகக்கிரியை. [உதகக்ரியா: உதக - நீர். க்ரியா - செயல்.]

உதக்கு—1. பின்னனது. 2. மேலானது. 3. வடக்கு. "உதக்குத் திசைநோக்கும்" (தணிகை. அகத். ௬௩௪.) [உதக்.]

உதகக்கிரியை—பிதிருக்கு நீரினலே தர்ப்பணஞ்செய்தல். (சீவக. 1737. உரை.) [உதகக்ரியா.]

உதகக்கோட்டு — நீரிழிவுநோய். (ஞானு. 19.)

உதககும்பம்—தண்ணீர்க்குடம். [உதககும்ப: உதக - நீர். கும்ப - குடம்.]

உதகசாந்தி—மந்திரநீராற்செய்யுஞ் சாந்திச்சடங்கு.

உதகசுத்தி — தேற்றாங்கொட்டை 'உண்சாமா மணக்குடசர் தகரமத கங்கோட்டமுதகசுத்தி' (தைல. தைலவ. அ௬.)

உதகஞ்சிதறி—மழை. (திவா.)

உதகஞ்செய்தல்—பொருளைத் தாரைவார்த்துக்கொடுத்தல்.

உதகத்திண்ணை—தண்ணீர் நிரப்பிவைப்பதற்குக் கட்டிய சதுக்கம். 'கற்றூணுக் கலங்காரக் குறடுதகத் திண்ணை' (தைல. தைலவ. க௬.)

உதகதன் — 1. நீர்கொடுப்பவன். 2. பிதிரர்களுக்குநீரிலேதர்ப்பணஞ்செய்வோன். [உதகத: உதக - நீர். த - கொடுப்போன்.]

உதகதானம்—1. நீர்வார்த்துக்கொடுக்குந் தானம். 2. பிதிரர்களுக்கு நீரிலே தர்ப்பணஞ்செய்தல். (சைவச. பொது. உ௬௧. உரை.) [உதகதாநம்: உதக - நீர். தாநம் - கொடுத்தல்.]

உதகநெறி — தானஞ்செய்யவேண்டிய முறை. 'உதகநெறி தப்பாவாறு மூர்த்தவளித்து' (திருவாலவா. 31. 5.)

உதகபூர்வஞ்செய்தல் — தானஞ்செய்யும்போது நீர்வார்த்துச்செய்தல். 'உதகபூர்வஞ் செய்துகொடுத்தேன்' (S. I. I. i. 77.)

உதகம்—1. நீர். 'உதகமு நொய்தி லுண்பான்' (சிவதரு. சிவஞானயோ. ௬உ). 2. பூமி. (உரி. நி). 3. மழை. 4. மழைத்துளி. [உதகம்]

உதகம்பண்ணுதல்—உதகஞ்செய்தல். (S. I. I. iii. 35.)

உதகமுய்த்தல்—உதகஞ்செய்தல்.

உதகமூலம்—1. தண்ணீர்விட்டான்கிழங்கு. 'இயவானி முதிரையுமூந் துதகமூலம்' (தைல. தைலவ. எஎ). 2. பச்சைவேர். 'சாலவிருட்சோதகமூலம்' (தைல. தைலவ. அ௫.)

உதகமேகம்—நீரே மூத்திரமாகக் கழியும் ஒருவகைச் சலரோகம். [உதகமேஹ: உதக - நீர். மேஹ - சிறுநீர்விடல்.]

உதகமேற்றல் — தானம்பெறுதல். 'நான் உதகமேற்றது அளந்துகொள்ளவேண்டாவோ' (திவ். பெரியாழ். 1. 8. 8. வ்யா. பக். 173.)

உதகரணம் — உதைத்து அழுத்துகை. 'இலங்கைக் கோமானை..... ....திருவிரலாலுதகரணஞ்செய்து' (தேவா. 286. 10.)

உதகரித்தல் — உதகரித்துச்சொல்லல், திருட்டாந்தங்காட்டிக்கூறல். (சி. சி. க: உ. மறை.)

உதகவன் — 1. கொடுவேலி. 2. நீக்கடவுள்.

உதகாதாரம் — நீர்நிலை. [உதகாதாரஃ: உதக - நீர். ஆதார - இடம்.]

உதகாரம்—மேகம். [உதஹார: உத - நீர். ஹார - எடுத்தல்.]

உதகாரன்—நீர்கொண்டுபோவோன். [உதஹார: உத - நீர். ஹார - கொண்டுபோவோன்.]

உதகான்னம்—நீருஞ் சோறும். 'மிதித்திழுப்ப ருதகான்ன மூதவாத வெட்டியரை' (சிவதரு. சுவர்க்கநரகவி. க௬அ.) [உதக - நீர். அந்நம் - சோறு.]

உதகு—புன்கு. (மூ. அ.)

உதகும்பம்—உதககும்பம். [உதகும்ப.]

உதகோதரம்—1. மகோதரம், நீராமயம். 2. முகில். [உதகோதரம்: உதகம் - நீர். உதரம் - வயிறு.]

உதசகிதம்—ஓமத்தோடுகூடியது. (சி. சி. அ: ௬. சிவாக்.) [ஹோதஸஹித: ஹோத - ஓமம். ஸஹித - கூடியது.]

உதசம் — 1. சாபம். 2. நீரிற்பிறப்பது. [உதஜ: உத - நீர். ஜ - பிறந்தது.] 3. பசுமடி. [ஊதஸ்.]

உதஞ்சநம்—1. இறைகூடை. 2. எழும்புதல். 3. எறுதல். 4. மூடி. [உதஞ்ஜந.]

உதட்டடி—வாய்வெருட்டு.

உதடன்—பருத்த அதரமுடையவன்.

உதடி—1. தடித்த உதட்டையுடையவள். 2. கடல்மீன்வகையில் ஒன்று.

உதடு—1. அதரம், வாயிதழ். 'உதட்டை மென்று' (திருப்பு. ௬). 2. விளிம்பு. 3. வெட்டுவாய்.

உதடுபிதுக்கி—பிதுக்கிய உதடுள்ளவன்-ள்.

உதடுவேடிப்பு — 1. ஓர் உதட்டுநோய். (வைஷஜ). 2. உதட்டுமுளி.

உதன் — மொட்டம்பு. 'யானை யுதனும் கடிந்தான்' (திணைமாலை. 2.)

உதனம்—உதன். 'புகலும் வடிக்கணை யுதனை மெடுத்தன' (பாரத. இருட். 204.)

உதத்தியன் — அங்கிராமுனியின் மகனான ஒரு முனி. [உதத்ய.]

உதத்தியாநுசன்—வியாழன் என்னுங் கிரகம். [உதத்யாநுஜ: உதத்ய - ஒரு முனி. அநுஜ - தம்பி.]

உததரிசம் — நீர்த்தோற்றம். 'உததரிச மாமின்ப புத்தமிர்த போகசுகம்' (திருப்பு. ௧௧௧.)

உததி — 1. கடல். 'உததிமன்னுளோர்' (பாரத. குரு. 66.) 2. நீர்க்குடம். 3. மேகம். [உதயி: உத - நீர். யி - வைத்தல்.]

உததிக்கிரமன் — 1. கடல்யாத்திரைசெய்வோன். 2. கலவன். [உதயிக்ரம: உதயி - கடல். க்ரம - போதல்.]

உததிசுதை-1. இலக்குமிதேவி. 2. துவாரகாபுரி. [உதயிஸுதா: உதயி - கடல். ஸுதா - மகள்.]

உததிமேகலை—பூமி. [உதயிமேகலா: உதயி - கடல். மேகலா - இடையிலணியும் ஓர் அணி.]

உதநிரம்—தகரம்.

உதந்தம்—1. சமாசாரம். 2. சரித்திரம். 'இராமோதந்தம்'

உதந்தன்-சன்மார்க்கமுடையோன், சாது. [உதங்க.]

உதந்நியம்—நீர்த்தாகம். [உதந்ய.]

உதப்பி-1. ஈரல். 2. சேரணமாகாத உணவு. 3. பேசும்போது தெறிக்கும் வாய்நீர்.

உதப்பிவாயன் — எச்சில் தெறிக்கும்படி பேசுகிறவன்.

உதப்புதல் — 1. இகழ்ந்து நீக்குதல். 2. கடிந்துகொள்ளல். 3. குதப்புதல்.

உதபாநம்—கிணறு. [உதபாந: உத - நீர், பாந - குடிப்பது.]

உதபாரம்—மேகம். [உதஹார: உத - நீர், ஹார - பரிப்பது.]

உதம்—1. அழைக்கப்பட்டது. 2. ஓமம், ஓமம்பண்ணப்படுதல். 'உதசகிதமாகப் பண்ணுந் தீட்சை' (சி. சி. அ: ௩. சிவாக்). 3. கேட்டல். 4. நீர் (சூடா). [1, 2. ஹூத, 4. உத.]

உதம்புதல்—1. அதட்டுதல். 2. கடிந்து கூறுதல்.

உதமேகம் — நீர்கொண்டமுகில். [உதமேக: உத - நீர்; மேக - முகில்.]

உதயகாந்தாரி — இராகவகையில் ஒன்று. (பரத. ராக. 103)

உதயகாலம்—, உதயகாலை — 1. சூரியசந்திரநக்ஷத்திரங்கள் தோன்றுங்காலம். 2. சூரியோதயகாலம்.

உதயகிரி—1. இருஷகிரி. 2. சூரியனுதித்தற்கு இடமாய் நிற்பதென்றுசொல்லப்படும் ஒரு மலை. 3. செம்பாலையிற் பிறக்கும் ஒரு பண். (சிலப். வேனி. ௩௫. உரை.) 4. நெல்லூரிலுள்ள ஒரு மலை. [2. உதயகிரி: உதய - உதித்தல். கிரி - மலை.]

உதயகுமரன் — காவிரிப்பூம்பட்டினத்தரசனாகிய கெடுமுடிக்கிள்ளியின் புதல்வன்; இவன்பெயர் இளங்கோனெனவும் வழங்கப்படும். (மணிமே.)

உதயணகுமாரகாவியம்—ஒரு தமிழ்நூல். இது வச்சதேசத்தரசனாகிய உதயணகுமாரன்சரிதங்கூறுவது. (மணிமே).

உதயணன் — வச்சதேசத்தரசன்; இவன் வத்தவனென்றும் வழங்கப்படுவன். (மணிமே.)

உதயணன்கதை—ஒரு தமிழ்நூல்; இது பெருங்கதையென்றும் வழங்கப்படும். (மணிமே).

உதயதாரகை—விடிவெள்ளி.

உதயநம் — 1. உதித்தல். 2. காரியம். [உதயநம்.]

உதயநன்-1. அகத்தியமுனிவன். 2. கௌசாம்பிநகரத்தரசனாகிய சந்திரவமிசத்துச் சகத்திராநீகன்மகன். 'உதய வெற்பினி லுதித்தலா லுதயன னென்றோர்-பதமிசைத் ததப் பாலனை நாடிவின் பரப்பில்' (சேதுபு. விதும. ௧௦௬.) [உதயந.]

உதயப்பருப்பதம்—உதயகிரி. (திவ். நாய்ச்சி. 14..6)

உதயபர்வதம்-உதயகிரி. [உதயபர்வத]

உதயபாநு—1. இராகவகையில் ஒன்று. (பரத. ராக 103). 2. எழும் இரவி.

உதயம்—1. இலாபம். 2. உதயகிரி. 'உதயமெனுங்-குன்றமிசை' (பாரத. ஒன்பதா. ௬௪. 3. உதயராசி. (சூரியன் முதலிய வானசோதிகள்.) 4. உதித்தல். 'உதயத் திங்கண் மாமரபில்' (பாரத. ஆதி. குரு. 1.) 5. உலகத் தோற்றம். 6. எழும்புதல். 7. ஒலி. 8. சீர்பேறு. 9. சூரியோதயகாலம். 10. செருப்படை (இராசவைத்). 11. தோற்றம். 12. நல்ல அதிட்டம். 13. பிறப்பு. 'ஓடைமா களிறனு னுதய ராசிகோள்' (இராமா. திருவவ. ௧௧௦). 14. வெளிச்சம். [உதய.]

உதயமநகிரி—உதயகிரி.

உதயமநம்—1. உதயகாலம். 2. உதயமலை. 3. உதயம்.

உதயாரநம்—காலைப்பண். (பரத. இராக. 69. உரை)

உதயராசி—உதயலக்கினம்.

உதயலக்கிநம் — 1. ஒருவன் பிறக்கும்போது சூரியன் நிற்கும் இராசி. 2. சென்மலக்கினம். (சோதிடக்கடல்.) 3. தற்காலத் துதிக்கும் இராசி.

உதயன் — சூரியன். 'உதித்ததே ருதயனென் றுரைப்ப' (பாரத. இந்திர. ௫.)

உதயாசலம்—உதயகிரி. (உதய, அசலம்-மலை.)

உதயாத்தம்—உதயாத்தமநம்.

உதயாத்தமநம்—1. கோள் உடுக்களின் உதயமும் அத்தமநமும். 2. காலைமாலைகள்.

உதயாதீ—விடியல்.

உதயாதிபன்-1. ஒருவன் பிறக்கும்போது நிற்கும் இராசியில் ஆட்சியாயிருக்குங்கிரகம். 2. சூரியன். 'உதயா திபனென நின்றார்தம் வெங்கையில்' (வெங்கைக்கோ. 15)

உதர்க்கம்—1. அநாகாலத்திற் பிறக்குங்காரியம். 2. வருங்காலம். 3. முடிவு. 'ப்ரதமத்தில் ஹிதமுமாய், உதர்க்கத்தில் ப்ரியமுமாயிருக்கும்' (ஈடு. 1. 2. 3). [உதர்க]

உதர்ச்சி—1. அக்கினி. 2. ஒளி. 3. சிவன். 4. மன்மதன். [உதர்சிஸ்: உத்-மேல். அர்சிஸ்-சுவாலை.]

உதர்த்தம்—1. அக்கிநோய். 2. ஒருவகைத் தொற்றுச் சுரநோய். முதனாளிலே கண்டதாபிதமடைவதும், இரண்டாநாளிலே சிவப்புநிறக் கரப்பன் வருவதும், ஆறும் ஏழாம் நாளிலே தோலுரிவதும் இதன் குணங்களாகும். [1. உதர்த. 2. உதர்த்த.]

உதரக்கனல்—தீபாக்கினி.

உதரக்கோதீ—1. பசி. 2. மிகுபசி.

உதரகம்—சோறு. (பிங்.)

உதரகோமதம்—பாலடைப்பூண்டு. (மலை)

உதரத்தீ— உயிர்முத்தீயினொன்று-உதராக்கினி.

உதரத்துடிப்பு—உதரக்கொதி.

உதரதீ—1. சமுத்திரம். 2. சூரியன். [உதரதி.]

உதரநாடி—இரத்தநரம்பு.

உதரநெருப்பு — உதராக்கினி. 'உதர நெருப்பானொந்து' (திருவாலவா. 2. 14.)

உதரப்பிரிவினர்-ஒருகுடிப்பிறந்தார் (பிங்).

உதரபந்தநம்-1. அரைப்பட்டிகை 'சுற்று நீடணிமணிச் சோதி பொங்கமேல்-ஒற்றை மா மணியுமி ழுதர பந்தநம்'(இராமா. கடிமண. ௬௨.) 2. யோகப்பட்டை. 'உதரபந்தநமுள்ளான்' (சிவதரு. சிவஞானயோ. ௬௨.)

உதரபந்தம்—அரைப்பட்டிகை. 'மருவிய வுதரபந்தக்கோப்பும்' (கோயி. நடரா. ௧௧.)

உதரம் — 1. வயிறு. 'உதரங்குளிர்ந்து' (பாரத. அருவா. ௪௨). 2. கீழ்வயிறு. [உதரம்.]

உதரம்பரி — வயிறுநிறைப்போன். [உதரம்பரி: உதரம் - வயிறு. பரி - நிறைப்போன்.]

உதரவணி—கண்டங்கத்தரி.

உதராவணி—உதரவணி.

உதரவாயு—உப்பசம்.

உதராக்கினி — உதரத்திலிருந்து பசியை விளைவிக்குந் தீ. 'உதராக்கினி சுடுதலினாலும்' (வை. தீ. உரை)

உதராந்திரம்—மணிக்குடர்.

உதராமயம்—1. கிராணி. 2. வயிற்றுளைவு. [உதராமயம்: உதர - வயிறு. ஆமயம் - நோய்.]

உதராவர்த்தம்—1. கொப்பூழ். 2. திட்டுக்கட்டு. [உதராவர்த்த: உதர - வயிறு. ஆவர்த்த - சுழி.]

உதராவி—மரமஞ்சள். (மலை)

உதராவேட்டம்—நீரைப்பாம்பு. [உதராவேஷ்ட: உதர-வயிறு. ஆவேஷ்ட சுற்றுதல்.]

உதவகன்—1. அக்கினி. 'உன்னுடலை யின்னே யுதவகற் குதவல் வேண்டும்' (சேதுபு. சங்கர. ௪௪.) 2. கொடுவேலி. (மூ. அ.) [ஹூதவஹ: ஹூத - ஓமஞ்செய்யப்பட்டது. வஹ - தாங்குவோன்.]

உதவர்சிரம்—சமுத்திரத்திலிருந்து திரண்டெழுந்து மேலேபோகும் நீர்த்தம்பம். [உதவஜ்ர: உத - நீர். வஜ்ர - தம்பம்.]

உதவசிதம்—வீடு. [உதவஸிதம்: உத - நீர், வஸிதம் - மூடப்பட்டது. நீர் உள்ளே வராதுமூடப்பட்டதென்றபடி.]

உதவாக்கேட்டது—
உதவாங்கேட்டது— } மிகவு மிழிந்தது.

உதவல்—1. கொடுத்தல். 'கொங்கை-யூறு பாலமிர்த மன்னோர்க் குதவலும்'. (கந்தபு. திருவவ. ௧௧௭.) 2. துணைசெய்தல். 'தந்தையர்க்குதவு முதவியின்' (பாரத. குரு. ௧௦௨.)

உதவாக்கட்டை—
உதவாக்கடை—
உதவாக்கரை— } உபயோகமற்றவன் - ள்.

உதவாக்கழிகுறடு — உபயோகமில்லாதவ-ன்-ள். 'கானடுக்க முற்றனையோ போடா வுதவாக் கழிகுறடே'(பஞ்ச. திருமுக.1142.)

உதவாகநம்—மேகம். [உதவாஹந: உத - நீர். வாஹந - தாங்குவது.]

உதவாசநம்—முகில்.

உதவாசம்—நீர்க்கரையிலுள்ள வீடு. [உதவாஸ: உத - நீர். வாஸ - வீடு.]

உதவாரக்கேட்டது—உதவாக்கெட்டது.

உதவாரங்கேட்டது - உதவாக்கெட்டது.

உதவி—1. துணை, சகாயம். (வள். ௧௦௧) 2. கொடை. 'உயர்ந்தவர்க் குதவிய வுதவி' (கம்பரா. வேள்வி. 35)

உதவிந்து — நீர்த்துளி. [உதபிந்து: உத - நீர். பிந்து - துளி.]

உதவு — உதவென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும்.

உதவுதல் — 1. கொடுத்தல். 'ஈக்காற் றுணையு முதவாதார்' (நாலடி 218.) 2. துணைசெய்தல். 'நம்மாட் டுதவிய நன்னர்க்கு' (பெருங். வத்தவ. 3. 11) 3. சொல்லுதல். 'அன்னையர்க்குதவல்வேண்டும்' (கல்லா. 40) 4. பயன்படுதல். 'இது மருந்துக்குதவும்'

உதள்-1. ஆட்டுக்கடா. 'அதளோன் றுஞ்சுங் காப்பி னுதள' (பெரும்பா. ௧௬௧.) 2. ஆடு. 'உரங்கொடு பற்றி யீர்ப்ப வுதளனு மதனை' (சேதுபு. சாத். ௨௫.) 3. மேடராசி. (திவா.) 4. ஒரு மரம்.

உதளிப்பனை—கூந்தற்பனை.

உதனை—காட்டலரியில் ஒருவகை.

உதறல்-ஒட்டியிருக்குமொன்றுபற்றுவிடும்படியசைத்தல். 'மலர்க்கயத் தமிழ்ந்தியே நனைந்த வான்றுகி-லுலர்த்திய வெடுத்தெடுத் துதறல் போலுமே' (சேதுபு. கந்த. ௪௧.)

உதறிமுறிப்பான்—விட்டுணுகிராந்தி.

உதறு — உதறென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும்.

உதறுகாலி—1. உதறுகாற்பெண். 2. எறிகாற்பசு.

உதறுதல் — 1. அசைத்தல். 2. ஆட்டியசைத்தல். 'விட்டிடு கின்ற வாளி வெய்யவனங்க மெங்கும்-பட்டிடு கின்ற காலைப் பதைபதைத் துதறிச் சிந்தி' (கந்தபு. சூரபன்மன். வதை. 388.) 3. இடங்கொடாமற் றள்ளுதல். 'பேறனைத்து மணுவெனவே யுதறித் தள்ளப் பேரின்ப மாகவந்த பெருக்கே' (தாயு. ஆகார. ௫.) 4. ஒட்டியிருக்குமொன்று பற்றுவிடும்படி யசைத்தல். 'கோகனதங் - கைந்நீங்காதிருந்ததெனக் காமுதறிக் கரைந்திடுவார்' (சேதுபு. நாட்டு. ௪௨.) 5. விதிர்த்தல். 6. குளிர் பயம் முதலியவற்றால் கைகால் நடுங்குதல்.

உதறுவலி — ஒருவகை நோய். 'ஒழியாக் குடைச்ச லுதறுவலி' (தைல. தைலவ. ௧௫.)

உதறுவாதம்—ஒருவகை வாதநோய்.

உதன்—சிவன். [ஹூத.]

உதனம்—சிறிது. 'உதனமு முணர்விலெ' (நீலகேசி. 802)

உதாகரணம்—1. உதாரணம். 2. சொல்லுதல். 3. வியாத்தியோடுகூடிய திருட்டாந்தத்தையுணர்த்துவது. (சைவப். கஉ.) [உடாஹரண: உடீ-மேல். ஆஹரண-எடுத்தல்.]

உதாகரி—உதாகரியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

உதாகரிகன் — எடுத்துக்காட்டாகவுள்ளவன். 'சொன்மருவுதாகரிகன்' (மான்விடு. 198)

உதாகரித்தல் — 1. உதாரணங்காட்டிச் சொல்லுதல். (சி. சி. பர. கரு. உரை.) 2. சொல்லுதல். (சி. சி. உ: ரு. ஞாநப்.)

உதாகலம்—உரல்.

உதாகாரம்—உதாகரணம். [உடாஹார]

உதாசநம்—1. எண்ணுமை. 2. தூஷணம்.

உதாசநன்—1. அக்கினி. 'உதாசநனையக் குலவவிடு' (தைல. தைலவ. கஉஎ.) 2. அக்கினிதேவன். 'ஒளித்து வந்தன னிருபிறப் பினனலே னுதாசந னென்னுமம்' (பாரத. காண்ட. உ௩.) 3. கன்குத்திப் பாம்பு. 4. கொடுவேலி (மூ. அ). 5. நிந்திப்பவன். [1, 2. ஹூதாஶந: ஹூத-ஓமஞ்செய்யப்பட்டது. அஶந-உணவு.]

உதாசநி—1. கொடியவள். 'சூர்ப்பநகைப் படு மூளி யுதாசநி' (திருப்பு. உ௬௬.) [அக்கினிபோல்பவள் என்றபடி] 2. பங்குனி மாதப் பௌர்ணிமை. [ஹூதாஶநி.]

உதாசநித்தல்—1. இகழ்தல். 2. நிந்தித்தல். 3. அலட்சியஞ்செய்தல்.

உதாசம்—உதாசீநம்.

உதாசினபாவம்—நிந்தனைக்குற்றம்.

உதாசினம்—அலட்சிய வார்த்தை.

உதாசீநசத்தசிவம்-சிருட்டியில் முயலாதவராய் இலயதத்துவத்திலிருக்கும் நிட்கள சிவம். (சி. சி. ச: கக. ஞாநப்.)

உதாசீநதை—விருப்பும் வெறுப்பு மின்றிப் பொதுமையாயிருக்குந்தன்மை. [உடாஸீநதா.]

உதாசீநம்—1. விருப்பு வெறுப்பின்மை. 2. இகழ்வு.

உதாசீநநபிணி— விருப்புவெறுப்பற்றிருப்பவள். (பௌட். க: ௪௦.)

உதாசீநன் — 1. இருவகைக் கிருகஸ்தருளொருவன்; அவன், முனிவர்கடன் கேள்வியாலும், தேவர்கடன் வேள்வியாலும், பிதிரர்கடன் புதல்வராலும் இறந்தபின், இல்லறமுநீங்கியிருப்பவன். 'ஓதுமில் லறத்தினின்றோ னுயருதா சீநன் மிக்க - சாதகனெனவி ரண்டாக் தன்மைய னவரின் முன்னே-னேதமில் கடன்கள் மூன்றுங் கழித்தபின் னில்லிற் றீர்ந்தோன்' (கூர்மபு. வருண. ௩அ.) 2. அயலான். 3. விருப்பு வெறுப்பின்றிப் பொதுமையாயிருப்பவன். 'அசங்கோதாசீநனுகிரிக்க' (சி. சி. ௬. அ: சிவாக்.)

உதாசீநை— கிருத்தியமில்லாமலிருக்குஞ் சத்தி. (பௌட். க: ௪உ.) [உடாஸீநா.]

உதாத்தம் — 1. உபகாரக்கொடை. 2. நேசிக்கப்பட்டது. 3. அலங்காரங்களுள் ஒன்று; அது: செல்வத்தின் உயர்ச்சியையேனும் உள்ளத்தினுயர்ச்சியையேனும் புனைந்துரைப்பது. 'கன்றும் வயவ ரினங்கள் பல கவர்ந்தும், என்றும் வறிஞ ரினங்கவர்ந்தும்-ஒன்றும், அறிவரிதா நிற்கு மளவினதா லம்ம, செறிகதிர்வேற் சென்னி திரு' இது செல்வமிகுதிகூறிய வுதாத்தம். 'மன்னகன்று தன்னிளைவி னிங்கி வனம்புகுந்து, பன்னூர் தவத்திசைந்த பார்த்தன்முன்-எண்ணிறந்த, மீதண்டர் கோன்குலையும் வெய்யோர் குலந்தொலைத்தான், கோதண்ட மேதுணையாக் கொண்டு' இஃது உள்ளத்தின்மிகுதிகூறிய வுதாத்தம். (தண்டி. பொரு. உஉ.) 4. வேதத்துக்குரிய உச்சாரணம் மூன்றனுள் ஒன்று; அஃது: எடுத்துக்கூறுதல். 'மந்திர முதாத்த - வோசைபனு தாத்தசொரி தக்தழுவ வோதி' (திருவிளை. தடாதகை. அ.) [உடாத்த: உத் - மேல். ஆத்த - உச்சரிக்கப்பட்ட.]

உதாத்தன்—1. சிறப்புள்ளோன். 2. பெரியோன். 3. வள்ளல். [உடாத்த]

உதாநம்—1. கண்ணிமை. 2. கொப்பூழ். 3. சூத்திரபிடகத்தின் சிற்றுறுப்பினு ளொன்று. 4. நாபியினிற்கும் வாயு. 5. பாம்பு. [உடாந.]

உதாநவாயு — தசவாயுக்களி லொன்று; அஃது: அனலாகாரமாய் உணவைச் சீரண மாக்குவது. (த. நி. போ. 365). சரீரத்திற் குள் ஒன்றாயிருப்பினும் வியாபாரபேதத்தி னாலே ஐவகைப்படும் வாயுக்களுள் ஒன்று; அது: கண்டதேசத்திலிருப்பது. பேசுகின்ற புருஷனுக்குப் பேசும் முயற்சியை முன் னிட்டுத் தேகத்துக்குள்ளிருக்கும் ஆகாயத் தின்குணமாகிய துவனியை வாயில் வாக் கிந்திரியத்தோடுகூட்டி வர்ணமாகச் செய் வது. (சி-வி. ஞாந. களு.)

உதாநன்—உதாநவாயு; அஃது: உதராக்கினி யையெழுப்பி உண்டவைகளை நாடியிற் செலுத்திச் சரீரத்தை வளர்த்து நாபியி னிலேதங்குவிற்பது. (கூர்மபு. பலவ. 18 உரை) இது கண்டத்தாநத்தி னிற்குமென்பர் அடி யார்க்குநல்லார்.

உதாநன்றிசை—வாயுவிளங்கம்.

உதாம்பரம்—செம்பு.

உதாமநியு—உதாமநு (சேதுபு. அசுவத் தா. ௵.)

உதாமநு—பாரதயுத்தவீரரு ளொருவன். 'உதாமநு முதலோ ரோரிரு புறத்தினுஞ் சூழ' (பாரத. பதினொன். ௯.)

உதாரநுணம்—கொடைக்குணம். [உதார-கொடை.]

உதாரணம்—1. எடுத்துக்காட்டு; அது: கூறப்படும்விதிக்குப் பிரயோகமாக அமைந்த இடம். 'நாமாண் புரைத்த வசைச்சீர்க் குதாரண நாண்மலரே' (யாப். காரிகை உறுப். ௪). [உதாஹரணம் என்பதிலே ஹ காரங்கெட்டு உதாரணம் என நின்றது.] 2. எதிர்காலம். 3. துணைக்காரணம்.

உதாரத்துவம் — கொடைத்தன்மை. [உதார - கொடை. துவம் - தன்மை.]

உதாரதை - 1. உதாரத்தன்மை, கொடை. 'ஷணிலான் செய்யு முதாரதையும்' (சிறு பஞ்சமூலம்). 2. வைதருப்பநெறி பத்த ளுள்ளே ஒன்றாகிய உதாரம். 'ஈண்டுஞ் சிலிட்ட முதாரதை காந்தி' (வீரசோ. அலங் கார. ௬.) [உதாரதா.]

உதாரம் — 1. கொடை. 'உதாரசீலனுய ரங்கர்கோன்வரிவி லொன்றுமேபமையும்' (பாரத. இருட். ௧௩௪). 2. சாமர்த்தியமான வாக்கு. 'விழுமிய குணத்தான் மிக்கோன் விரத்தியாய் விளம்புஞ் சொற்கள், முழுது நல் லுதார மாகி முடிவிலற் புதமா மென்றார்' (ஞானவா. சுகர்கதை. 5). 3. தயவான குணம். 4. பெருமை, மேன்மை. 'கனமிலதா யுதாரமதா மெனினும்' (ஞானவா. வைராக். ௬௨). 5. வீரம். 6. வைதருப்பநெறி பத்த னுள் ஒன்று; அது, சொற்படுபொருளின்றிக் குறிப்பினு லொருபொருள் நெறிப்படத் தோன்றுவது. 'செருமான வேற்சென்னி தென்னுறந்தை யார்தம்-பெருமான் முகம் பார்த்த பின்னர்-ஒருநாளும், பூதலத்தோர் தம்மைப் பொருணசையாற் பாராவாம் - காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்' என்ப தன்கண் இரப்போர்வறுமைதீரக் கொடுப் போன் என்பது குறிப்பினாலே தோன்றிற்று. (தண்டி. பொது. ௨௦.) [உதாரு: உத் - மேல். ரு: ஐ - போதல்.]

உதாரன்—1. கொடையாளன். 2. வாக்கு வல்லவன். 3. வீரன். 4. சிறந்தவன்.

உதாரி—1. கொடையாளி. 'ஓங்கு தோள் வலி யானொர் துக்க வுதாரி மேவிய கர்ன மே' (சேதுபு. தருமகுத். ௬.) 2. வாக்கு வல்லமையுள்ளவன்-ள். 'பணஞ்சுற் றிக்கொ ளுபாய வுதாரிகள்' (திருப்பு. 578). 3. வீரன். 4. சிறந்தவன்.

உதாவணி—கண்டங்கத்தரி. (மூ. அ)

உதாவர்த்தம் — 1. உதாவர்த்தவாதம். 'ஊருத்தம்ப மாக்ஷேப முதாவர்த்தந் தினந் தோறும் பகலிற் - றூங்கிய நிபத்தால் வரும் பலமருத்தும்' (தைல. தைலவ. எஅ.) 2. தடைப்பட்டுவரும் பூப்பு. [உதாவர்த்தம்: உத் - மேல். ஆவர்த்தம் - வசித்தல்.]

உதாவர்த்தவாதம்—ஒருவகை வாதரோகம்; அது: வேகத்தோடுவருகிற மல மூத்திராதி களை அடக்கல், மந்தவஸ்து மலபந்தவஸ்துக் களைப் புசித்தல் ஆகிய செய்கைகளினாலே பிறந்து கீழ்வயிற்றிலே கனத்தல், நோவு, உப்பல், மல சலக் கட்டு என்னும் இக்குணங் களையுண்டாக்குவது. அதோங்கத்திலிருக் கின்ற நரம்புகளையும் மல மூத்திரங்களையும் மேலாக இழுத்துப்பிடித்துச் சுழலுவதால் வந்தபெயர். (சிவரட். பக். ௧௬௫.) [உத் - மேல். ஆவர்த்தம்-சுழலுதல்.]

உதி—1. உதியென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும். 2. உலைத்துருத்தி. ‘உதியுறு துருத்தி யூது முலையுறு தீயும்’ (இராமா. வரை. ௩௬.) 3. ஒதியமரம். (தொல். எழுத். உ௪௩.) 4. வித்தை. ‘உதியொரே ழிரண்டுக் தந்த முனிவநிற் குதவவென்ன-நிதியமென் றறைந்தேன்’ (இரகு. அயனுதய. ௧௧.)

உதிட்டிரன்-தருமராசன்; இவன் பாண்டுவின் மூத்தகுமாரன். ‘உதிட்டிரன் பிறந்த காலை’ (பாரத. சம்பவ. ௬௮.) [யுதிட்டிரன் என்பதிலே யகரமெய் கெட்டுநின்றது. யுதிஷ்டிரஃ]

உதித்தல்—1. உதயமாதல். 2. தோன்றுதல், உற்பத்தியாதல். ‘உதிப்பது மீறுமுண் டென்று’ (சி. சி. ௧: உ.) 3. பருத்தல். 4. பிறத்தல்.

உதிதம்—1. உயர்ந்தது. 2. சொல்லப்பட்டது. 3. தோற்றப்பட்டது. (பௌட். ௧: ௩௧.) 4. விரிந்தது.

உதிதன் — 1. தோன்றினவன். ‘மதியங் கெடுத்த வயமீனெனத் தம்பி மாழாங் - துதிதற் குரியாள்’ (சிந்தா. பதிகம். ௧௮.) 2. ஒரு பாண்டியமன்னன். (இறை. களவி. 2. 31)

உதிப்பு—1. தோற்றம், பிறப்பு. ‘மரிப் போ டுதிப்பு’ (பிரபுலிங். முத்தாயி. 23). 2. ஞானம். ‘ஊற்றுச் செறித்துட னுதிப்பை யாக்கும்’ (யசோதர. 1. 65.)

உதியஞ்சேரன் — பழைய சேரவரசருள் ஒருவன். (பதிற்றுப். 2. பதி)

உதியர்வேந்தன் — சேரஅரசன். ‘அதிர் கழ லுதியர்வேந்தன்’ (பெரியபு. சேரமா. உ௮.)

உதியன்—1. சேரன். (சூ. நிகண். உ:௧௮) 2. வித்துவான், பண்டிதன். 3. ஒரு பாண்டியன்.

உதிர்—1. உதிரென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. கோரைக்கிழங்கு. 3. துகள். ‘ஓத நீர்முகிலார்ப்பொடுபுவிக்கண்வீழ்க் துடைந்தன வுதிராகி’ (கந்தபு. சதமுக. ௧௩.)

உதிர்க்குக்கிடாரி—கருடன்கிழங்கு.

உதிர்த்தல்—1. உகுத்தல். ‘தழையுடைப் பொதும்பர் பைங்காய் தலைத்தலை யுதிர்க்குமாபோல்’ (கந்தபு. :வீரவாகுகர். உ௪.) 2. பொடியாக்கல். 3. உதறுதல். ‘பலரிடை யாடையுதிரார்’ (ஆசாரக். 37)

உதிர்தல்—1 சாதல். ‘சீக்கிர முதிர்ந்து போவாய்’ 2. சிதறுதல். 3. சிந்துதல். 4. சொரிதல். 5. பிதிர்தல். ‘உதிருகின்ற சிற் றுண்டிகொண்டு’ (கந்தபு. ஆற். உ௭.) 6. கீழ்விழுதல். 7. குலைதல். (பு. வெ. 6. 4)

உதிர்ப்பு—உதிர்த்தல்.

உதிர்வு—உதிர்தல்.

உதிரக்கட்டு — 1. இரத்தங் கட்டுப்பட்டு நிற்றல். 2. பூப்புப்படாமை.

உதிரக்கலப்பு-இரத்தக்கலப்பான உறவு.

உதிரக்கிரகி—1. அட்டை. 2. காடி [இரத்தத்தைக் கிரகிப்பதென்றபடி]

உதிரக்குடோரி—கருடன்கிழங்கு (மூ. அ)

உதிரச்சிக்கல் — மாதவிடாயைப்பற்றியெழும் ஒரு நோய்.

உதிரசூலை — இரத்தசூலை, கருப்பநோயி னுள் ஒன்று.

உதிரத்துடிப்பு-இரத்தத்துடிப்பு, நெருங்கிய உறவினர்படுந் துன்பங்கண்டுழி உண்டாகும் மனவேதனை.

உதிரத்தெறிப்பு — இரத்தசம்பந்தமான உறவு. ‘நாராயணத்வப்ரயுக்தமான உதிரத் தெறிப்பாலே’ (ஈடு.)

உதிரநரம்பு—இரத்தநாடி.

உதிரப்பட்டி—இரத்தக்காணிக்கை. (சிலாசாசனவழக்கு)

உதிரப்பாடு—பெரும்பாடு.

உதிரப்பாவாடை—இரத்தத்தில் தோய்த் தெடுத்த துணிவிரிப்பு. (வீரநாரா. நூல் வர. 9.)

உதிரபந்தம்—மாதுளை. (மலை)

உதிரபாசம்—இரத்தசம்பந்தமான வுறவு.

உதிரம் — இரத்தம். ‘உரத்தி னூர்தகமுரீஇக்குளத் தழுத்தின துதிரமோ டுயிர் சோர்ந்தான்’ (தணிகைப். சீபரிபூ. உ௩௪.) [ருயிர]

உதிரமண்டலி — விஷஜந்துவில் ஒன்று. (தஞ்சை. சரசு. III. 102)

உதிரமறிப்பான் — விட்டுணுகிராந்தி. (மூ அ)

உதிரல் — உதிர்ந்தபூ. ‘வேங்கைவிரிந்த விணருதிரலொடு’ (பரிபா. 7. 12.)

உதிரவாயு—சூதகவாயு. (மூ. அ)

உதிரவாழை—செவ்வாழை.

உதிரவிரியன்—ஒருவகைப் பாம்பு.

உதிரவேங்கை—ஒருவகை வேங்கைமரம்; இதன்சாரம் இரத்தமாயிருந்து குடிப்பவரை மயக்கும். (மூ. அ).

உதிரன்—செவ்வாயென்னுங் கிரகம். (சூ. நிகண். ௧: ௬௦.)

உதிரி—1. உதிர்ந்தது. 2. செவ்வாழை. 3. சிறுகீரை. 4. துளசி. 5. வசூரிநோயிலொருவகை. 6. பிட்டு. 7. கதிரினின்று உதிர்ந்தநெல். 'உதிரிமுளைத்துப்பலபர்யந்த மாமாபோலே' (ஸ்ரீவசந. 389)

உதிரிக்குத்து-வசூரியினாலுண்டாகும் ஒருவகைக்குத்து.

உதிரித்தழும்பு—அம்மைவடு.

உதிரோற்காரி—எழுவகைமுகிலினொன்று. அஃது, இரத்தம்பொழிவது. [உதிர-இரத்தம், உற்காரம்-உமிழ்தல்.]

உதீசம்—குறுவேர். (சித். அக)

உதீசி — வடக்குத்திசை. 'கருத்தியல் காட்சித் தாகிக் கவினிய வதற்கு தீசித் - திருத்திய திசையில்' (இரகு. முடி. ௯௪). [உதீசீ.]

உதீர்ணன்—நற்சிந்தையுள்ளவன்.

உது—அண்மை சேய்மைகளுக் கிடையே யெதிர்முகத்திலுள்ளதனைச் சுட்டிவரும் ஒரு சுட்டுப்பெயர். 'உலகம் யாங்கணு மிழியிருகுணமிக வுதுதேர்ந்து' (தணிகைப். புராண வர. ௧.) 2. முன்னிலையிடத்துப்பொருள்.

உதும்பரம் — 1. அத்தி. 'சூரிய தருப்பை யுதும்பரக்கொம்பு'(திருவானை.கோச். ௬௪.) 2. எருக்கு (மூ. அ.) 3. செம்பு. (பிங்). 4. செவ்வகத்தி. (மூ. அ.) 5. நெற்களம். 6. வாயிற்படி. 'ஒன்றிய கபாடஞ் சாரு முதும்பரங் கடந்து சென்றான்'. 7. செங்குட்டநோய். (நாநார்த்த.) [1, 3. உதும்பர.]

உதும்பிரேசம் — நிவிர்த்திகலையிற் பிருதிவிதத்துவத்திலிருக்கும் (௧௦௮) புவனங்களு ளொன்று. (சி-வி. கிரியா. ௨௧. உரை.)

உதூகலம்—உரல். [உதூகல.]

உதை—1. உதைத்தல். 'தாளா-லுதைபடக் கிடந்த கூற்ற மொத்தது' (திருவிளை. யானையெய். ௯௨.) 2. உதையென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. காலாலழுத்துகை. 4. காலெறி. 5. முட்டுக்கால்.

உதைகால் — 1. முட்டுக்கால். 2. உதைகாற்பசு. (சூடா). 3. உத்திரத்தின்மீதுள்ள குத்துக்காலின் ஆதாரக்கால்கள் (C. E. M.)

உதைகாலி—உதையுங்குணமுள்ள மாடு.

உதைகொடுத்தல்—1. உதைத்தல். 2.முட்டுக்கொடுத்தல்.

உதைசுவர்—முட்டுச்சுவர்.

உதைத்தல் — 1. அலட்சியம்பண்ணல். 2. காலி னடிப்புறத்தாலே தாக்குதல். 'வாமச் சேவடிதன்னாற் சிறிதுந்தி - யுதைத்தான் கூற்றன் விண்முகில் போல்மண் ணுற வீழ்ந்தான்' (கந்தபு. மார்க்கண். ௨௫௩.) 3. தாக்கல். 'கடியகா லுதைப்பப் பெய்யுங் கடுஞ்செல வெழிலி' (திருவிளை. நான்மாட. ௧௧.) 4. பிரயோகித்தல். 'நவையறு திறலுடை யங்குசா முதையா' (பாரத. நிவாத. ௧௩௨.)

உதைதல்—1. காலினடியினாலே தாக்கல். 2. பிரயோகித்தல்.

உதைப்பளவு — கைந்நொடிப்பொழுது. 'கண்ணன் உதைப்பளவு போதுபோக்கின்றி' (திவ். இயற். நான்மு. 32.)

உதைப்பு—1. உதைத்தல். 2. பயம்.

உதைபு—கதவு. (பிங்).

உதைமானம்—உதைகால்.

உதையம்—1. உதயம். 2. செருப்படை. (இராசவைத்.)

உதையுண்ணல்—உதைபடல்.

உதோள்—உதோளி. (தொல். எழுத். 398. உரை)

உதோளி—உவ்விடம். (தொல். எழுத். தொகை. ௧௭. உரை.)

உதோன்முகம்—மேன்முகம்.

உந்த-உங்கேயுள்ள. 'உந்தவேல்' (பாரத. பதினான். ௨௧௨.)

உந்தரம்—1. எலி. 2. வழி. [உந்தூர.]

உந்தல் — 1. அசைந்துபோகச்செய்தல், தள்ளுதல். 'மந்த ரக்கிரி யனையதை மணி விரற் றலையா-லுந்த' (கூர்மபு. இராமன் வன. ௭௨.) 2. அனுப்புதல். 'பெரும்படை யோய்விலன் பெரிதுந்தினன்' (ஞானவா.

தாமவியாள. உ௯.) 3. யாழினு லிசைபாடு வார்செய்யுங் கைத்தொழில்களுள் ஒன்று; அது: யாழ்நரம்புமுழுவதையும் தடவித் தள்ளல். 'இசையனைத்துந்-தழுவு நரம்பு முழு தினையுந் தடவித் தள்ள லுந்தல்' (கூர்மபு. கண்ணன்மணம். ௧௪௬.) 4. எழும்புதல். 'உந்துநீர்க் கங்கையாற்றி னுய்த்தலும்' (கூர்மபு. இராமனவ. ௯௧.) 5. எறிதல். 'அந்தமின் முயின வள்ளி யள்ளியே-யுந்தி னன் றிசைதொறு மரற்றி வீழவே' (கந்தபு. நகரழி. உ௯.) 6. ஏறுதல். 'உந்துபயம்' (சிவப்பிர. உ: ௯௦.) 7. (குணத்தால்) உயர்தல். 'உந்துசுடர்ஞானத்தை' (சேதுபு.நாட்டு. ௯.) 8. செலுத்துதல். 'உரம்படச் சரங்கண் மேன்மே லுறுக்கிவேல் வீம னுந்த' (பாரத. புட்ப. ௧௦௯) 9. பொருந்துதல். 'உந்துதல்-பொருந்துதல்.' (சி. சி. ௪: ௯௪. சிவஞாந.) 10. (வடிவால்) உயர்தல். 'உந்திரதத்திடை போய்' (பாரத. பதின்மூன். ௧௨.)

உந்தி—1. ஆன்கோட்டம். 2. உயர்ச்சி. (அக. நி) 3. கடல். 'உந்தியுல கத்திலுல காயுத னுரைப்பான்' (சி. சி. பர. உலோ காயதன்மதம். ௧.) 4. குழாங்கூடிய மகளிரது ஒரு விளையாட்டு (பிங்). 5. கொப்பூழ். 'உந்தியின் மீது போயவுரோமத்தி னெழுக்க மன்றே' (கந்தபு. மாயைப். ௫௨.) 6. சாய்த்து. 'விண்டொடு பைந்தருக்களை யுந்தியே' (திருவிளை. விடையி. ௧௦) 7. தேர் உருளை. 'உந்திக ளுலுடை யுந்தி ரதத்திடை போய்' (பாரத. பதின்மூ. ௧௨.) 8. தேர்த் தட்டு (பிங்கல. ௯௧௧௬). 9. தொழில். 10. நடு (அக. நி). 11. நீர் (பிங்கல. ௯௧௧௬). 12. நீர்ச்சுழி. 'பெற வுந்திவிரி நீருவரி' (கூர்மபு. பலவ. ௧௬.) 13. பரப்பு. 14. யாழுகத் தோருறுப்பு. 'சென்றுவாங்குந்தி'(மலை படு. ௯௪). 15. யாற்றிடைக்குறை. 'உந்தி-சிவந்துசென்னீத்தம்' (மதுரைக். ௨௪௫.) 16. யாறு (பிங்கல. ௯௧௧௬). 17. வயிறு. 'உந்தி நிரப்புறு முண்டிய தின்றி' (கந்தபு. சூர. வதை. 312). 18. துணை. 19. பறப்பன.

உந்திக்கமலம் — தாமரைப்பூவடிவான கொப்பூழ். இது விட்டுணுவின் உந்தி என்பர்.

உந்திச்சுழி—1. கொப்பூழ்ச்சுழி. 'உந்திச் சுழிவயி னிலங்க' (பாரத. பாயிர. ௭.) 2. நீர்ச்சுழி.

உந்திடம் — உவ்விடம். 'பொய்குன்ற வேதிய ரோடிடு முந்திடம்.' (திருக்கோ. 223)

உந்திநாளம்—கொப்பூழ்க்கொடி. 'உந்தி நாளத்தை-மெல்லவரிந்து புறத்தொழிக்க' (திருவானை. கோச்செங். ௭௧.)

உந்திபறத்தல்—குழாங்கூடியமகளிர் உந்தி விளையாட்டாடுதல். 'உந்தி பறந்த வொளி யிழையார்கள்' (திவ். பெரியாழ். 3. 9. 11.)

உந்திபூத்தவன்—விட்டுணு. 'உந்திபூத்தவ னுவணத்தினடிகளும்' (திருநெல். நகர. 72.)

உந்திபூத்துளான்—விட்டுணு. 'உந்திபூத் துளா னுலகமெய்தினன்' (கூர்மபு. மாவலி. ௧௨.)

உந்திபூத்தோன்—நாபியிலிருந்துதோன்றச் செய்தோன், விட்டுணு. 'அந்த நான்முகனை யுந்திபூத்தோன்' (கல்லா. ௨௨.)

உந்திமலர்—விட்டுணுவி னுந்தியங்கமலம். 'உந்திமலர்மக னிதனை யுரைத்திடலும்' (சேதுபு. தேவி. ௧௮)

உந்தியார்—வேதாந்தசாரநூல்.

உந்தியில்வந்தோன்—பிரமன் (பிங்).

உந்தியிலுதித்தோன்—பிரமன் (திவா).

உந்தியிறைவன் — பிரமன். 'ஒப்பற்ற வுந்தியிறைவன்' (திருப்பு. ௨.)

உந்து—1. உந்தென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. கச்சோலம். 3. செய்யுமென்னும்வாய்பாட்டுப் பெயரெச்சத்தினிறுதிநின்ற உம் விகுதியின் திரிபு. 'தெண்கடற்றிரை மிசைப்பாயுந்து' (புறநா. ௨௪.) 4. பசுவையழைக்கும் ஒரு குறிப்புச்சொல்.

உந்துதல் — 1. தள்ளுதல். 'உந்திட வெழுந்து மூழ்கி' (ஞானு. 16. 17). 2. வீசியெறிதல். 'கரிகடேர்த்தொகை.....யள்ளியே யுந்தினன்' (கந்தபு. நகரழி. 23). 3. அம்பு முதலியன பிரயோகித்தல். 'சரங்கள்...... விமனுந்த' (பாரத. புட்ப. 104.) 4. செலுத்துதல். 'தேரினைத் துரோண னுந்தினன்' (பாரத. நிரைமீ. 86). 5. அனுப்புதல். 'வயிரவிதன்னை யாங்கே யுந்தினன்' (பிரபோத. 24. 45) 6. வெளிப்படுத்தல். 'கடல்வண னுந்தியுந்திய நாற்றிதழ்த் தாமரை. (கம்பரா. இரா. 121). 7. யாழ்நரம்பு தெறித்தல். 'வாரியும் வடித்து முந்தியும்' (பொருந. 23).

8. மாமுதலியவற்றைக் கடைதல். (சி. போ. 9. 3. 2). 9. ஆயக்காய் முதலிய உருட்டுதல். 'கவறுந்தினர்'. 10. எழும்புதல். 'உந்துநீர்க்கங்கை' (கூர்மபு. இராமனவ. 39). 11. பெருகுதல். 'உந்துசுடர் ஞானத்தை' (சேதுபு. நாட்டு. 3). 12. செல்லுதல். 'வானுந்து மாமதி' (திருக்கோ. 147). 13. நகர்தல். 'அன்பர்.........உந்தினர் மார்பினுல்' (பெரியபு. திருநா. 358). 14. நீங்குதல். உந்தாதவன்போடு' (பதினெ. திருத்தொண். 19). 15. பொருந்துதல். 'தானந்தோறு முந்திடுங் காணம்' (சி. சி. 4. 34. சிவஞா.)

உந்தூரம்—எலி. [உந்தூரம்.]

உந்துரு—1. எலி. 2. பெருச்சாளி (பிங்).

உந்தூழ்—பெருமூங்கில். 'உரிதுநா றவிழ் தொத்துந்தூழ்' (குறிஞ்சிப். சுரு.)

உந்தை—உன் தந்தை. 'உந்தையும் பிறரும் வந் துன்னை நாடுவர்' (கந்தபு. வள். கசச.)

உந்நதம்—1. உயர்ச்சி. 'உந்நதமானகோடி' (கந்தபு. அண்ட. கஉ). 2. நீட்சி. 3. மேலானது. [உந்நத:]

உந்நதி—1. எழும்புதல். 2. ஏறுதல். [1, 2 உந்நதி.] 3. கருடன்மனைவி. [உந்நதீ:]

உந்நதீசன்—கருடன். [உந்நதீஶ: உந்நதீ-ஒரு பெண், ஈஶ - நாயகன்.]

உந்நம்—1. ஈரம். 2. தயவு. [உந்நம்.]

உந்நமநம்—1. உயர்த்துதல். 2. எழுப்புதல். [உந்நமந:]

உந்நயநம்—1. அநுமித்தல். 2. ஆலோசித்தல். 3. உயர்த்துதல். 4. தண்ணீரிறைத்தல். 5. பன்றிமுள்ளினுற் பாவட்டையின்மே விழுத்தன்முதலிய கருமம் [1,4. உந்நயந.]

உந்நயம்—1. உயர்த்துதல். 2. ஒப்புமை. [உந்நயம்.]

உந்நாமம்—
உந்நாயம்— } உயர்த்துதல்.

உந்நேத்திரு—
உந்நேதா— } யாகாசாரியர் பதினறுவரில் ஒருவன்.

உந்மணி—உயர்ந்தமணி.

உந்மத்தகம்—ஊமத்தை. 'உந்மத்தகமலர் சூடி' (தேவா. தனித்திரு. சு. திருநாவு.)

உந்மத்தகி—1. குறிஞ்சா (மலை). 2. சிறுகுறிஞ்சா (மூ. அ).

உந்மத்தம்—1. ஊமத்தை (திவா). 2. பைத்தியம், உளமருட்கை. 'இவனுக்குந்மத்த மொழியு முபாய முரையென்றான்' (சேதுபு. தருமகுத். 28.) 3. மன்மதபாணத் தொன்று. 4. காமனைங்கணைகளுள் ஒன்றன்செயல். 'மாறிலுங் மத்தமொடு மதநஞ்ச மோகமே மருவுசந் தாபத்துடன், வசிகரண மைந்தும் மலர்க்கணைப் பேராம் வகுப்பரிய சுப்பிரயோகம் - வீறுவிப் பிரயோக மேசோக மோகம் விலக்கரிய மரண மைந்தும், விளம்பிய மலர்க்கணை யவத்தையின் பெயராம்' (ஆசிரியநி). 5. வெறி. 'உந்மத்த மேற்கொண் டுழிதருமே' (திருவாச. 5. 7.) [உந்மத்த: உத் - அதிகம். மத்தம் - வெறித்தது.]

உந்மத்தன் — 1. பேயாற் பீடிக்கப்பட்டவன். 2. பைத்தியமுடையோன். 'ஊமத்தம் பயன்றுய்த் தார்போ லுன்மத்த ஞகி யுற்றான்' (கந்தபு. வள். உஉ.) 3. வெறியன்.

உந்மத்தி—குறிஞ்சா.

உந்மத்து—
உந்மத்தை— } ஊமத்தை (மலை).

உந்மதம் — 1. பைத்தியம். 2. மயக்கம். 3. வெறி. 4. கழிகாமம். 'முன்னமுந்மதத் தான்' (பாரத. குரு. 95.) [உந்மத.]

உந்மந்தம்—1. கலக்கம். 2. கொலை.

உந்மநாகலை—1. பிரமரந்திரத்துக்குமேல் எட்டங்குலத்துக்கு மேற்பட நாலங்குலத்திலும் வியாபித்திருக்குங் கலை. 2. விந்துவையுடைய ருசுவான ரேகை. (சி.வி.கிரி.9.உரை.)

உந்மநி — 1. உந்மநிசத்தி. 'உந்மநிக்குள்ளொளிர்பரஞ் சோதியாம்' (தாயு. பொன். 38). 2. உடலிலேயுள்ள ஒரு யோகஸ்தாநம்.

உந்மநை—1. சோடசகலாப்பிராசாதத்திற் சமனைக்குமேலே நிற்கும் பதினறுங் கலை. இதி னந்தத்தில் பிராசாதமந்திரவாச்சியரான பரசிவன் விளங்குகிறார். (சி-வி. கிரியா. எ. தாற்.) 2. துவாதசப்பிராசாதமந்திர கலைகளிற் பன்னிரண்டாவது விந்துவையுடைய ருசுவான ரேகைவடிவம். (சி-வி. கிரியா. கூ.) 3. பராற்பரநாதம். (சி. சி. உ. எச. ஞாநப்.)

உந்மாதநம்—பைத்தியமாக்கல், வெறிக்கச் செய்தல். [உந்மாதந:]

உந்மாதம்—1. அசைத்தல். 2. கலக்குதல். 3. கொல்லுதல். 4. புலிமுதலியன பிடிக்கும் பொறி. 5. பைத்தியம். 6. மிக்க மநவிகாரம். 7. வெறி. [1,2,3,4. உந்மாத:5,6.உந்மாத.]

உந்மாநம்—நிறுக்கை. (பி. வி. 23. உரை.)

உந்மார்க்கம்—1. தப்பான வழி. 2. துராசாரம். 3. வழிதவறிப்போதல். [உந்மார்க:]

உந்மிதம் — அளக்கப்பட்டது. [உந்மித]

உந்மீலநம்—1. கண்ணிமைத்தல். 2. மலர்தல். 3. விழித்தல். 'நயநோந்மீலநாதிக்கிரியை' (சி. சி. ௪. ௩௬. சிவாக்.) [உந்மீலந: உத் - மேல். மீலநம் - இமைத்தல்.]

உந்மீலிதம் — தோற்றுவித்தல். (பௌட். ௬: ௮.)

உந்மீலிநி – சுயம்பிரகாசமாய் இருப்பவள். (பௌட். ௪: ௩௭.)

உந்முக்கியம் — நோக்கியிருப்பது. 'காரியோந்முக்கியவிசிட்டசத்தியோ' (சி. சி. வரலாறு.)

உந்முகம்—1. எதிர்முகம். 'பிரவிருத்தியுந்முகமாகப் பதிய' (சி. சி. அளவை. ௧௩. சிவாக்.) 2. ஒரு விஷயத்திலே சிந்தையாயிருக்கை. 3. மேனோக்கல். 4. மேனோக்கிய முகம். 5. அநுகூலமாயிருக்கை. 'சிவசத்தி அவ்வக்காரியங்களில் உந்முகமாதலாகிய சங்கற்பம்' (சி. போ. 5. 2. 1. சிற்.) [உந்முகம்.]

உந்முகன்—1. ஒருவிஷயத்திலே கருத்தாயிருப்போன். 2. மேனோக்குவோன்.

உந்முகி—உந்முகமுடையவன் - ள்.

உந்மூலநம் — வேரோடு பெயர்த்தல். [உந்மூலநம்.]

உந்மேடம்-கண்ணிமைத்தல். [உந்மேஷ.]

உந்மேதை — கொழுப்பு. [உந்மேதா]

உப்பக்கம் — 1. உந்தப்பக்கம். 'உப்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தான்' 2. முதுகு. 'ஊழையு முப்பக்கங் காண்பர்' (வள். ௬௨௦.)

உப்பங்கழி—1. கானல். 2. உப்பளம்.

உப்பங்காற்று—கடற்காற்று.

உப்பங்கோரை-உவர்க்கழிகளிலே முளைப்பதான கோரைவகை. (M. N. A. D. ii. 170.)

உப்பசம் — 1. சுவாசகாசம். 2. வயிற்றுவீக்கம்.

உப்பட்டி—அரித்திரள்.

உப்பந்தரவை—உவர்நிலம்.

உப்பம்பருத்தி—ஒருவகைப் பருத்தி.

உப்பமைத்தல்—உப்புவிளைவித்தல்.

உப்பமைப்போர்-உப்புவிளைவிக்கும்நெய்தநிலமாக்கள், உமணர் (திவா).

உப்பர்—உப்பமைப்போர் (பிங்).

உப்பர்காவி—காவியின் மேற்பாய்.

உப்பர்சவர் — கப்பலின் மேலிடத்துக் கட்டப்படும் பாய்வகை.

உப்பரவர்—1. குளம் முதலியன அகழுவோர். 2. குறவருள் ஒருவகுப்பார்.

உப்பரிகை-மேன்மாடம். 'ஆடகப்புரிசையுப்பரிகை' (மச்சபு. நைமிசாரணி. ௨.)

உப்பல்—உப்புதல்.

உப்பளநீலம் — ஒருவகை நீலரத்தினம். (S. I. I. ii. 204. 63.)

உப்பளம்—1. உப்புவிளைநிலம் (பிங்). 2. கழிநிலம் (பிங்).

உப்பளவர்—உப்புவிளைப்போர்.

உப்பறுகு — உவர்நிலத்துள்ள ஒருவகையறுகு.

உப்பனாறு — கடலிலிருந்து எதிர்த்துப் பெருகும் உவர்நீருள்ள ஆறு. (அசுவசா. 147.)

உப்பாணி—உப்புச்சுமத்தல்.

உப்பாயம்—உப்புவரி. (S. I. I. ii. 115.)

உப்பாரக்காரன்-சுண்ணாம்புபூசும் வேலைக்காரன்.

உப்பால்—1. உப்பக்கம். 'இப்பா லுலகத் திசைநிறீஇ யுப்பா - லுயர்ந்த வுலகம்புகும்' (நான்மணிக்- ௨௭.) 2. முதுகு.

உப்பிசம்—பொருமுதல்.

உப்பிஞ்சி—இஞ்சியில் ஒருவகை. (S. I. I. vii. 299.)

உப்பிதம்—கூத்தின்விகற்பம். (பிங்.)

உப்பிலி — 1. இண்டங்கொடி. 2. ஈர்கொல்லிக்கொடி. 3. உப்பில்லாதது. 'அடகவிந்தன வுப்பிலி யருந்தியும்' (உபதேச. சிவவிர. 65.) 4. புலிதொடக்கி. (மலை.)

உப்பு-1. இராகம். 2. இனிமை. 'கூடலிற் றோன்றிய வுப்பு' (வள். 1328.) 3. உப்புக்கடல். 'எப்பெருங் குலத்த மேக மும்விசும் பிறந்தியே - உப்பருந்தி வெற்பிருந் தொரு

முழங்க லொக்குமால்' (இரகு. அயனெழு. 39.) 4. கடல்படுதிரவியத்துள் ஒன்று; அது: போசகபதார்த்தத்துக்கு நல்லுருசியைக் கொடுக்கும் உவர்ப்புச்சுவையுடையது. 'பரதவ ரளவர் வாரிப்படுத்தமீ னுப்பின் குப்பை' (கந்தபு. ஆற்று. 30.) 5. மகளிர்விளையாட்டு ளொன்று (திவா). 6. விளையாட்டுமணற்குவியல். 7. உவர்ப்பு (பிங்). 8. அன்பு (அக.நி.)

உப்புக்கட்டி — சிறுகட்டுக்கொடி. இதன் பால் பிசுபிசுப்பாயிருக்கும்.

உப்புக்கட்டுதல்-1. குழந்தையை முதுகிற் சுமந்து விளையாடுதல். 2. இளையர் விளையாட்டில் ஒன்றுக்கு மணல்குவித்தல்.

உப்புக்கடல் — 1. எழுகடலுள் ஒன்று; அது: உவர்நீருடையது. 'பரவுமிவ் வுலகி லுப்புப் பாறயிர் செய்யே கன்ன - விரதமா மதுநீராகு மெழுகடல்' (கந்தபு. அண்ட. ௨௦.) 2. சவக்கடல். (விவிலி. ஆதி. 14. 3.)

உப்புக்கண்டம்-உப்பூட்டிக் காயவைக்கப் பட்ட மாமிசம் அல்லது மீன்.

உப்புக்கரித்தல்—உப்புக்கூர்த்தல்.

உப்புக்கரிநீர்முள்ளி—கழுதைமுள்ளி.

உப்புக்காசு-பழைய வரிவகையுள் ஒன்று. (S. I. I. vii. 41.)

உப்புக்கீரை—ஒருவகைக் கீரை.

உப்புக்குத்தி—ஒருவகைப் பறவை.

உப்புக்கூர்த்தல்—உவர்த்தல்.

உப்புக்கோள்ளல்—ஒரு விளையாட்டு.

உப்புகை—உப்புதல்.

உப்புச்சாறு — 1. கடல்நீர். 2. அமுதம். 'உப்புச்சாறு கிளறுவது எப்போதோ என்று கிடக்கிற தேவசாதி' (ஈடு. 1. 3. 11.)

உப்புச்சுமத்தல்—1. உப்புவிற்கத் தூக்கிச் செல்லுதல். 2. ஒரு விளையாட்டில் வென்றவனைத் தோற்றவன் முதுகிற் சுமத்தல்.

உப்புச்சுன்னம்—ஒரு மருந்து.

உப்புச்சோளம்—சோளத்தில் ஒருவகை. (விவசா. 3.)

உப்புசம்—வயிற்றுவீக்கம்.

உப்புடாலி—ஒரு மூலிகை. (வை. மூ.)

உப்புத்தரவை—உவர்நிலம்.

உப்புத்திராவகம்-ஒருவகைத் திராவகநீர்.

உப்புத்திரி— மலங்கழித்தற்பொருட்டு உப்புத்தடவியேற்றும் ஒருவகைத் திரி.

உப்புதல்—பொருமுதல்.

உப்புப்படுத்தல்—உப்புவிளைத்தல்.

உப்புப்படுதல்—உப்புவிளைதல்.

உப்புப்பற்றுதல்—உப்புப்பிடித்தல்.

உப்புப்பாத்தி — உப்புவிளைதற்கிடமான பாத்தி. (மதுரைக். 117. உரை.)

உப்புப்பால்—ஈன்றணிமையுள்ள தாயின் பால்.

உப்புப்புல்—உவர்த்தரையிற் புல்.

உப்புப்பூத்தல்—உப்புப்பற்றுதல்.

உப்புமண்—உவர்நிலம்.

உப்புமாந்தம் — குழந்தைகட்கு வயிறு உப்புதலால் உண்டாகும் ஒரு நோய்.

உப்புமாறுதல்—உப்புவிற்றல்.

உப்புமிளகி—ஒருவகை நெல்.

உப்புல்—செங்கள்ளி.

உப்புவாடி—உப்புக்கொட்டும் மேடை.

உப்புவாணிகர் — உப்புவிற்போர்.

உப்புவிந்து—ஆண்சரக்கு.

உப்புறைத்தல்—உப்புக்கரித்தல்.

உப்பூர்கிழார்—சங்கத்தார்க்குப் பொருளறிவுறுத்திய ஊமன்பிதா. 'ஒன்றிய வணிக னுப்பூர் கிழார்மகன்' (திருவாலவாயுடையார். திருவிளை. ஊமை தமிழறி. ௪.)

உப்பூரணி — உப்பூறுந்தன்மையுடையது.

உப்பெடுத்தல் — 1. நாட்டுக்கோட்டை நகரத்தார் நிகழ்த்தும் விவாக உடன்படிக்கைச் சடங்கு. 2. உப்புத்தொகுத்தல்.

உப்பை-ஔவையினுடைய சகோதரிகளி லொருத்தி.

உப-1. ஆரியத்துள்ள ஒருபசர்க்கம்; அது: ஒட்டியது, அடுத்தது, தாழ்ந்தது முதலிய பொருள்களுள் ஒன்றை உணர்த்தும். [உவ.] 2. இரண்டு. [உஹ.]

உபக்கிரகணம்—1. பிடித்தல். 2. வேதாப்பியாசஞ்செய்தல். [உவக்ரஹண:]

உபக்கிரகம் — 1. அப்பிரதானக்கிரகம். அவை: சூரியன்புத்திரன் காலன், சந்திரன் புத்திரன் கலைக்கியானபாதன், அங்காரன் புத்திரன் கரேசன், புதன்புத்திரன் அர்த்தப் பிரகரன், வியாழன்புத்திரன் எமகண்டன், சுக்கிரன்புத்திரன் விடகடிகை, சனிபுத்திரன் குளிகன், இராகுபுத்திரன் அமிர்தகடிகி, கேதுபுத்திரன் அபமிருத்து: என்பன. (குமாரசாமி. திநாதிநாமோ. ௨. உரை.)

2. உதவி. 3. உற்பாதம். 4. கிரகாதிபதி. 5. சிறைப்படுத்தல். 6. சிறை (நாநார்த்த). 7. தயவு. 8. தருப்பைப்புற்கட்டு. [உவக்ரஹ:]

உபக்கிரமணம்—1. அணுகுதல். 2. தொடக்கம். 3. முயலுதல். 4. வைத்தியஞ்செய்தல். [உவக்ரமண.]

உபக்கிரமணிகை—1. முகவுரை. 2. பாயிரம். [உவக்ரமணிகா.]

உபக்கிரமம்—1. ஆராய்ந்துதெளிதல். 2. காரியமுயற்சிசெய்தல் (வேதாந்த.) 3. சடுவிதலிங்கங்களுள் முதலாமிலிங்கத்தின் முற்கூறு; சிருட்டிக்குமுன்பின் எப்போதுஞ் சகத்தானது சத்தமாத்திரமான பிரமமாகத் தோன்றி விளங்குவது. (வேதா. சூ. 132.) 4. சமீபித்தல். 5. தைரியம். 6. தொடக்கம். 'விஞ்சு முபக்கிரம முபசங்கார நடையாய்' (பிரபோத. 22. 17.) 7. விக்கிரமம். (நாநார்த்த.) 8. வைத்தியாப்பியாசம். [உவக்ரம:]

உபக்கிரமித்தல்—தொடங்குதல். 'முதல் விருத்தத்திலே சித்துருவென்று உபக்கிரமித்து' (சி. சி. க: எo. சிவாக்.)

உபக்கிராகியம்—பெரியோர்க்குச்செய்யும் உபகாரம். [உவக்ராஹ்யம்.]

உபக்கிருதி—அநுபந்தம். [உவக்ருதி.]

உபக்குரோசம் — நிந்தித்தல். [உவக்ரோஶ.]

உபகசிதம் — அவமதிச்சிரிப்பு. [உவஹஸிதம்]

உபகண்டம் — 1. ஊருக்குச் சமீபித்த இடம். 2. கழுத்துக்குச் சமீபம். 3. குதிரைக் கதிகளினொன்று. 4. சமீபம். [உவகண்஠ம்.]

உபகணம் — இராகு கேதுக்கள். (மங்கள. பாயி. 1.)

உபகதை — 1. கட்டுக்கதை. 2. கிளைக்கதை. [உவகயா.]

உபகந்தம்—சுகந்தம். [உவமந்ய.]

உபகநிட்டிகை—அநாமிகைவிரல். [உவகநிஷ்஠ிகா.]

உபகமம்—1. அடைதல். 2. கொள்கை. 3. சமீபித்தல். 4. அங்கீகாரம். 5. பொருத்தம். 6. மைதுனம். [உவமஃ.]

உபகர்ணிகம் — ஊர்க்கதை. [உவகணி்கஃ]

உபகர்த்தா—துணைசெய்வோன். [உவகர்தா.]

உபகரணம்—துணைக்கருவி (திவா). [உவகரண.]

உபகரித்தல்—1. உதவுதல். 2. உபகாரஞ்செய்தல். 3. உபசரித்தல். 4. தயைசெய்தல். 'இப்படி யுபகரித்துநிற்கிற சத்தியேயமையாதோ' (சி. சி. க: சுக. நிரம்ப.)

உபகற்பம்—மூவகைவிபூதியு ளொன்று; அது: 'மரத்தோடுமா முரிஞ்சித் தானே யுண்டான அக்கினியினால் வெந்த சாம்பலைப் பஞ்சகவ்வியம்வார்த்துக் குழைத்து உண்டையாக்கிப் பதரின்மேல்வைத்து விதிப்படி சிவாக்கினியினாலேதகித்தெடுத்தது' (சைவச. பொது. கஅரு-கஅசு). [உவகல்ப.]

உபகற்பிதம்—1. ஆயத்தஞ்செய்யப்பட்டது. 2. பிரதியாகக் கற்பிக்கப்பட்டது. [உவகல்பித.]

உபகாசம் — அவமதிச்சிரிப்பு. [உவஹாஸ.]

உபகாதம்—1. அடித்தல். 2. அழித்தல். 3. தொடுதல். 4. நிந்தித்தல். 5. நோய். 6. பற்றுசு. [உவவாத.]

உபகாரகத்துவம் — உபகாரஞ்செய்யுந் தன்மை. [உவகாரகத்வம்.]

உபகாரகம் — உபகாரஞ்செய்தல். (சி. சி. அ: உக. ஞானப்.) [உவகாரக.]

உபகாரகன் — உபகாரஞ்செய்வோன், அருள்செய்வோன். 'ஆன்மோபகாரகராயிருக்கின்ற சிவனை' (சி. சி. அ: உஅ. ஞானப்.)

உபகாரணன் — உபகாரபரன். [உவகாரண.]

உபகாரதை—உபகாரத்தன்மை. (பௌட். டு: உஉ.) [உவகாரதா.]

உபகாரபரன் — உபகாரஞ்செய்தலிலே முயற்சியுடையவன். [உவகாரவர.]

உபகாரம்–1. மகிழ்ச்சி (அக. நி). 2. உதவி. 'நல்லாரொருவர்க்குச்செய்தவுபகாரம்'(வாக். உ.)3. கொடை. (சூ. நிகண். ௯: ௬.) 4. சகாயம். 5. சமாதானத்தின்பொருட்டுக் கொடுக்குந் திறைப்பொருள். 6. தயவு, பிறர்க்கிதஞ் செய்தல். 'இந்தச் சத்தி யான்மாக்களை யுபகரித்துக்கொண்டுநிற்கிற வுபகாரத்தை' (சி. சி. ௧: ௬௬. நிரம்ப.) 7. தூக்கப்பட்டமாலை. 8. தெய்வத்துக்குக் கொடுக்கும் பொருள். 9. பெரியோர்க்குக் கொடுக்கும் பொருள். 10. மலர்ந்த பூ. 11. விருந்தர்க்குக் கொடுக்கும் உணவு. 12. காணிக்கை. (திருவால. திருவிளை. 2. 4.) [2, 3, 6, 7, 10. உவகார. 5, 8, 9, 11. உவஹார.]

உபகாரலக்கணை—ஒரு பொருளின்பெயர் அதற்கு உபகாரமாயிருக்கும் மற்றொரு பொருளுக்குப் பெயராதல். (சி. சி. ௪: உ௮. ஞானப்.) [உவகாரலக்ஷணா.]

உபகாரவர்மா— தசகுமாரசரித்திரமென்னும் வடநூலிற் கூறப்பட்டுள்ள பத்துக் குமாரருளொருவன். (மணிமே.)

உபகாரன்—உபகாரஞ்செய்வோன்.

உபகாரஸ்மிருதி — செய்ந்நன்றியறிகை. 'உபகாரஸ்மிருதியினலே ஆழ்வானைக்கொண்டாடுகிறார்கள்' (திவ். திருப்பல். 7.)

உபகாரி—1. உதவிசெய்பவள். 2. உதவிசெய்வோன். 'சுத்தவடி யார்களுக்கு முபகாரி' (திருப்பு. ௩௭௬.) 3. கொடுப்பவள். 4. கொடையாளன். 5. பிரயாணிகள் தங்குஞ் சத்திரம். [உவகாரிநு.]

உபகாரிகை—1. தலைவி. 2. பிரயாணிகள் தங்கும் சத்திரம். [உவகாரிகா: உவகார - உதவி. இக - ஒரு விகுதி.]

உபகாரித்துவம் — உபகாரியாந்தன்மை. (பௌட். ௩: ௩௯.) [உவகாரிக்வம்.]

உபகாரியம் — உபகாரத்தையடையுமது. (சி. சி. ௪: உ௧. ஞானப்.)

உபகிதம்—உபாதியுடையது. (விசாரசங். 321)

உபகிருதம்—1. உதவி. 2. உபகரிக்கப்பட்டது. (சி. சி. ௮: ௯உ. ஞானப்.)[உவகுத.]

உபகிருதன்—தானாகவே ஒருவருக்குச் சுவீகாரம் புகுந்தவன் (ஏலா. 31).

உபகிருதி—உதவி. [உவக்ரு தி:]

உபகுஞ்சம்—கருஞ்சீரகம். 'உபகுஞ்சம் பலமிரண்டிட்டு' (தைல. தைலவ. ௧௩௩.)

உபகுஞ்சி—கருஞ்சீரகம். [உவகுஞ்சி.]

உபகுஞ்சிகை–1. ஏலம் (மூ. அ). 2. கருஞ்சீரகம். 'அதிமதுர முபகுஞ்சிகை' (தைல. (தைலவ. ௬௬.) [உவகுஞ்சிகா]

உபகும்பம் — கும்பத்துக்கு அருகுநிகழ்வது. (வீரசோ. தொகை. ௬.)

உபகுர்வாணன்—உவகுருவாணன்.

உபகுரு—உதவியுபாத்தியாயன். [உவகுரு:]

உபகுல்லம்—சுக்கு (மூ. அ).

உபகுல்லியம்—திப்பிலி.

உபகுல்லியை—1. அகழி. 2. திப்பிலி. 3. இளைவாய்க்கால் (நாநார்த்த). [உவகுல்யா:]

உபகுலியம்—திப்பிலி (மூ. அ).

உபகூகநம்–1. அதிசயம். 2. ஆலிங்கனம். 3. மறைத்தல். [உவகூஹந.]

உபகேசி — [உவகெஶீ] உபகேசன் மனைவியான திருமகள்; இது, இலக்கணையாய்த் திருமகளின்கூறான நப்பின்னையைக் குறிக்கும். 'உபகேசி தோண்மணந்தான்' (திருவள்ளுவமாலை 21; நேமிநா. சொல். 5. உரை). [உபகேசன்–பிரமனையும் சிவனையும் தன்பக்கத் துடையான்.]

உபச்சிலேடம்—1. ஒரோவழி மேவுதல். 'ஒரோவழி மேவுத லுபச்சி லேடம்' (பி. வி. ௧௩. உரை.) 2. ஒன்றோடொன்றுடடுத்திருத்தல். 3. தழுவுதல். [உவஶ்லேஷ.]

உபசங்காரம்—1. அழித்தல். 2. அழிவு. 3. ஒடுக்கம். 'தநுவாதி யுபசங்காரப்படுகையால்' (சி. சி. ௧: ௩உ. சிவாக்.) 4. சடுவித லிங்கத்திலே முதலாவதின் இரண்டாங் கூறு. அது: சகத்தைப் பிரமத்திற் கரைத்துக் கூடஸ்தனுக்குப் பிரமத்தோடு ஐக்கியஞ் சொல்லுதல். 'சகஞ்சிவத்தின்மாய்த்துப் - பவமகலத் துரியற்குப் பிரமமுட னயிக்கம் பகர்ந்தத்து விதங்கூற லுபசங்கா ரந்தான்' (வேதா. சூ. ௧௩உ.) 5. சுருக்கம். 6. திரட்டி

முடிபுரைகூறுதல். 'தத்சங்நிதிமாத்திரத்திலே பஞ்சகிருத்தியமுண்டாவதென்று உபசங்காரம் பண்ணுகின்றது' (சி. சி. க: எ०. சிவாக்.) 7. திரட்டு. 8. நிக்கிரகித்தல். 9. மீட்டுக்கொள்ளுதல். 10. விலக்குதல். [உவஸம்ஹார.]

உபசங்கிருதம் — உபசங்காரமடைந்தது. (சி. சி. க: கக. சிவாக்.) [உவஸம்ஹூத.]

உபசத்தி—1. உபகாரக்கொடை. 2. ஊழியம். 3. ஒன்றித்தல். 4. ஐக்கியம். 5. சேவை. 6. உதவி. [உவஸத்தி:]

உபசதநம்—1. அயல்வீடு. 2. சீடனுகக் குருவையடைதல். [உவஸதந:]

உபசந்தாநம்—1. இணைத்தல். 2. தொடுத்தல். 'ஓரைஞ்ஞூறு வெங்கணை நெறியினல்கியாங்கவை யுபசந் தாநம் புரியரு மறையுமீந்தான்' (கூர்மபு. இராமனவ. உக.) [உவஸயாந.]

உபசந்தி—சந்திக்குச் சமீபகாலம். (சைவச. பொது. எசு. உரை.) [உவஸம்யி.]

உபசந்நத்துவம்—1. அடைகை. 2. குருவின் சமீபத்திலிருந்து கேட்கவேண்டியவைகளைக் கேட்டல். 'சற்குருவை யடைந்து - அருட்குருவே யென்பாசத்தழிவு-தானுமெத் திறத்தினு லெனவினவல் சீடன் றனதுவிதிவத்துபசந் நத்துவமா மன்றே' (வேதா. சூ. கஅ.) 3. சமீபம். [உப-கிட்ட. சந்நத்துவம்-இருத்தல்.]

உபசந்நன்—1. அடைந்தவன். 2. குருவை யடைந்த சீடன் (வி-ணி). 3. சமீபத்திலிருப்போன். [உவஸனு:]

உபசம்பந்நபதம் — பௌத்தத்துறவிகளிலே நான்கனு ளொன்று. (பெரியபு. திருஞான. சுகசு. உரை.)

உபசம்மாரம் — உபசங்காரம். 'பிரமவிட்டுணுக்களும் உபசம்மாரத்தைப் பொருந்துவார்கள்' (சி. சி. க: ௩௫. சிவாக்.) [உவஸம்ஹார.]

உபசமநம்—1. அமைதி. 'மனவுபசமநார்த்தம்' (ஞானவா. சநகரா. 1. உரை.) 2. ஒழிவு. [உவஶமநம்.]

உபசமம்-1. அமைதி. 2. ஓய்வு. [உவஶம]

உபசமித்தல்—உபசாந்தமடைதல். (மேருமந். 724.)

உபசயசரீரம்—ஸ்தூலசரீரம். 'ரோகாதிகளாற் கெடுகின்ற உபசயசரீரம் விட்டு' (நீலகேசி. 309. உரை.)

உபசயம்—1. உதயலக்கினத்துக்கு மூன்று ஆறு பத்துப் பதினோராம் இடங்கள். 'மூன்றாறு பத்துப் பதினென் றுபசயம்' (விதான. மரபி. 3.) 2. உயர்ச்சி. 3. குவியல். 4. திரளுகை. 5. மிகுதி. (பி. வி. 44. உரை.) 6. வளர்ச்சி. [உவசய.]

உபசர்க்கம்—1. ஆரியபதங்களோடிணைந்து முன்னிற்கும் அவ்வியயம்; அவை: பிர, பரா, அப, சம், நி, அவ, அநு, நிர், துர், வி, (ஆஙி) அதி, சு, உத், பரி, பிரதி, அபி (ஆஹி), உப, ஆங்: என்பன. (சத். பக். ௬.) [இவை தம்மோ டிணைந்துநிற்கும்பதங்களிலே மறைந்துநிற்கும்பொருளை வெளிப்படுத்திவருவன என ஒரு சாராரும், பதங்களின்பொருளை விகாரப்படுத்தியும், வலியுறுத்தியும் வருவன என மற்றொருசாராரும் கூறுவர். 2. கிரகணம். 3. சிவப்பு. 4. சொன்மூலம். 5. தளிர். 6. நோய்காரணமாகச் சரீரத்திலேவரும் வேறுபாடு. 7. பின் நிகழ்வருமென்பதனை முன்னுணர்த்தும் உற்பாதம். 8. மரணக்குறி. 9. மாறுதல். 10. ஒருவகைநோய். 11. துன்பம். (நாநார்த்த). [1, 2, 6, 7, 8 உவஸஂ.]

உபசர்க்கை—உபசர்க்கம்.

உபசர்ச்சநம்-1. அடைதல். 2. கிரகணம். [உவஸஜந.]

உபசரணம்—1. நேரேபோதல். 2. புகலிடமாக அடையப்பட்டது. [உவஸரண.]

உபசரணை—உபசாரம்.

உபசரம்—பசு முதன்முறை கருக்கொள்ளுதல். [உவஸர.]

உபசரி — உபசரியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

உபசரித்தல்—வழிபாடுசெய்தல், மரியாதைசெய்தல். 'குமரன் - றன்னை முற்கொடுபாதலம்போ யுபசரித்த-பின்னர்' (சேதுபு. விதூம. கக०.)

உபசரிதம் — 1. உபசரிக்கப்பட்டது. 2. உபசாரமாகச் சொல்லப்பட்டது. (சி. சி. எ: உ. ஞாநப்.) [உவவரித.]

உபசரிப்பு—உபசரித்தல்.

உபசருக்கம்—உபசர்க்கம்.

உபசருச்சநம்—உபசர்ச்சநம்.

உபசல்லியம்-1. பறையர்சேரி. 2. ஊரின் அருகு (நாநார்த்த.)

உபசாகை — 1. அப்பிரதாநமான மரக்கொம்பு (சி. சி. 1: 14. சிவாக்). 2. நூலில் அப்பிரதாநபாகம். 3. உட்பிரிவு. 'நான்குவேதமே முப்பத்திரண்டு உபநிடதமாயும் நான்கு வாக்கியமாயும் ஆறுசாத்திரமாயும் இன்னும் அநேக சாகோபசாகைகளாய் விரிந்திருந்தாலும்' (ஞாநக்.) [உவஶாவா.]

உபசாந்தம்—1. மன அமைதி. 2. ஓய்வு. 3. குறைக்கப்பட்டது. 4. சமாதாநம். 5. தயை. 6. விருப்புவெறுப்பின்மை. 7. தணிகை.

உபசாந்தர்-தேகம் முதலியவையெல்லாம் பொய்யென்று தெளிந்து ஒடுங்கினவர். 'தேநாதி பொய்யெனவே தேர்ந்தவுப சாந்தருக்கு-மோகாதி யுண்டோ மொழியாய் பராபரமே' (தாயு. பராபர. உகஅ.)

உபசாந்தி—உபசாந்தம். (சேதுபு. கோடிதீ. 3.)

உபசாபகன்—காதுக்குள்ளே இரகசியஞ் சொல்லிப் பேதஞ்செய்வோன். [உவஜாவக.]

உபசாபம்-1. ஒற்றுமையின்மை. 2. கோட்சொல்லிப் பகைவிளைத்தல். 3. பெருந்துரோகம். 4. வெறுப்பு. 5. வேறுபாடு.

உபசாயம் — இராக்காவல்புரியுமிருவரில் ஒருவர் விழித்திருக்க மற்றவர் நித்திரை செய்தல். [உவஶாய.]

உபசாரக்கிரியை—உபசாரச்செயல்.

உபசாரக்கை — இரண்டுகைகளையும் குவித்து மார்போடிணைத்து உபசாரமாகக் காட்டும் இணைக்கை. 'உபசாரக்கை......... குடக்கை யிரண்டுங் கூட்டிமார் பிருத்தல்' (பரத. பாவ. 54.)

உபசாரகரணம் — உபசாரஞ்செய்தல். [உவவாரகரண.]

உபசாரகருமம்—விருந்தோம்பல்.

உபசாரகன்—உபசாரஞ்செய்வோன்.

உபசாரம்-1. அருத்தாபத்தி. 2. ஆசாரம். 3. உபகாரம். 4. ஊழியம். 5. கைக்கூலி, பரிதாநம். 6. சொல்லெஞ்சிநிற்றல். 7. தாம்பூல முதலியன கொடுத்து உபசரித்தல். 8. தொழில். 9. நோயாளருக்கு உதவிசெய்தல். 10. மரியாதை. 11. மன்றாட்டு. 12. முகமன் வார்த்தை. 'யாங்கி ளந்த விருந்தனுக் கோடியி-னேக்கு சீருப சாரமென் றேது வான்' (சேதுபு. தனுக் உச.) 13. வழிபாடு. 'எண்ணிரண் டுபசா ரங்க ளெஞ்சிடா வகையியற்றி' (சேதுபு. இராமனருச். கoக.) 14. வைத்தியஞ்செய்தல். 15. வாழ்த்து. 16. காணிக்கை (நாநார்த்த). 17. உபசாரவழக்கு. (பி. வி. 48.) [உவவாா.]

உபசாரவசனம்—முகமன்வார்த்தை.

உபசாரவழக்கு—ஒன்றன்றன்மையை மற்றொன்றன்மேல் ஏற்றிக்கூறுவது. (குறள். 73. உரை.)

உபசாரன்- } உபசாரஞ்செய்வோன்.
உபசாரி— }

உபசாரிகம் — ஔபசாரிகம், உபசாரவழக்கு. 'ஆவிணையேயருமரசென்பதுபோலவுபசாரிகந்தான்' (வேதா. சூ. 126.) [உவவாரிக.]

உபசிக்வாரோகம் — உண்ணாக்குரோகம். (தைல. தைலவ. கூஅ. உரை.)

உபசிரதம்—சம்மதப்படல்.

உபசிருட்டம் — 1. இராகு கேதுக்களாற் கிரகிக்கப்பட்டது. 2. மைதுநம். [உவஸூஷ.]

உபசீவகன் — பிறரைச் சார்ந்து சீவிப்போன். [உவஜீவக]

உபசீவநம்—1. சீவநப்பொருள். 2. பிறரைச்சார்ந்து வாழ்கை. [உவஜீவந.]

உபசீவித்தல்—உயிர்தரிக்கப் பிறரை அல்லது பிறிதொன்றைச் சார்ந்திருக்கை. 'இந்த ஔஷதமொன்றையுமே உபசீவிக்கவமையும்' (ரஹஸ்ய. 1225.)

உபசுந்தன் — நிகும்பன்மகனும் சுந்தனுடைய தம்பியுமாகிய ஓரசுரன். 'சுராரிகடம்மிற் சுந்தோ பசுந்தரென் றிருவர்' (பாரத. இந்திர. சங.) [உவஸூந்த.]

உபசுருதம்--அங்கீகரிக்கப்பட்டது. [உவ ஶ்ருத.]

உபசுருதி – இரவிலே கேட்கப்படும் ஆகாய வாணி. 'போகேலென்ன உபசுருதிசொல்லி யவையெலாம்' (அறப். சத. 62.) [உவ ஶ்ருதி.]

உபசேநம்—ஊழியம்.

உபசேவநம் — 1. பணிவிடைபுரிதல். 2. வணங்குதல். [உவஸெவந.]

உபட்சேபணம்-எறிதல். [உவக்ஷெவண.]

உபட்சேபம் — செய்யுட்போக்கு. [உவ க்ஷெவ.]

உபத்தம்–1. ஜனனேந்திரியம். 2. ஆண்குறி. 3. பெண்குறி. [உவஸ்ு.]

உபத்தாநம்—1. அணிமை. 2. அயல். 3. கூட்டம். 4. முன்னிலையில்வருதல். 5. சந்தியா வந்தனமுடிவிற் சொல்லும் மந்திரம். (கூர்ம பு. நித்தியகன்ம. 6.) [உவஸ்ுாந]

உபத்தாயம்—1. உபத்திரம். 2. உபாயம். 3. கபடம். 4. அபத்தம்.

உபத்திதி–1. அடைதல். 2. அறிவு. 3. அநு சிந்தநம். 4. சமீபம். [உவஸ்ிதி.]

உபத்திரம்– உபத்திரவம்– உபத்திரியம்– 1. ஊர்க்கலகம். 2. காலக் கொடுமையாலாவது பஞ்சத்தினாலாவது கொடுங் கோன்மையாலாவது ஊர்க்குவரும் இடுக்கண். 3. கொடுங்கோன்மை. 4. நோயினால் வருந்தும் ஒருவனை மேலும் வருத்தும் பீடை. 5. வலாற்காரம்.

உபதம்சரோகம்—மேகவிரணம்.

உபதம்சம்—1. உணவின் உபகரணம். 2. உபத்தத்திலேவரும் ஒருவகை ரோகம். [உவ஢ංஶ.]

உபதரிசகன்—1. வழிகாட்டி. 2. வாயில் காப்போன். [உவ஢ஶ்கை.]

உபதளம்—கீழிதழ், சிற்றிதழ்.

உபதாகம் - பனை. (மூ. அ.)

உபதாது–பொன்முதலிய எழு தாதுக்களை யும்போலத் தோற்றமுடைய இழிந்த எழு லோகங்கள்; அவை: சுவர்ணமாக்ஷிகம், தார மாக்ஷிகம், துத்தம், காஞ்சியம், இரீதி, சிந் தூரம், சிலாசத்து: என்பன. [உவயாது.]

உபதாநகம் — தயவுபெறும்பொருட்டுக் கொடுக்குங் கொடை. [உவ஢ாநக.]

உபதாநம்—1. அத்திவாரம். 2. கடமை. 3. தயவுபெறும்பொருட்டுக் கொடுக்குங் கொடை. 4. தலையணை (திவா). 5. துணைக் காரணம். 'அவை யிதற்கே யுபதாந மாகு மென்றான்' (பாரத. சபா. ராச. 4.) 6. நஞ்சு. 7. பட்சம். 8. வணக்கம். 9. விரதம் (நா நார்த்த.). [3. உவ஢ாந: 4, 6, 8. உவ யாந.]

உபதாபம் — 1. சீக்கிரம். 2. நோய். 3. வருத்தம். 4. வெப்பம் (நாநார்த்த). [உவ தாவ.]

உபதாபிநன் — நோய்முதலியவற்றாலே துன்புற்றுவந்தவன் [உவதாவிநு].

உபதாமநநாடி—சுவாசக்குழனடி.

உபதாளம்-ஆதிதாளம், பார்வதிலோசநம், குடுக்கம், சிங்கநந்தம், திரிமாத்திரை என் னும் ஐந்து சிறுதாளங்கள் (பரத. தாள. 3).

உபதி–1. அச்சம். 2. வஞ்சனை(நாநார்த்த). 3. கை. 4. தேருருளை. 5. சக்கரத்தின் ஆரம். [உவயி]

உபதிகன் — ஏய்க்கிறவன், கபடஞ்செய் வோன். [உவயிக.]

உபதிசை–இரண்டுதிசைகளுக்கு இடையி லுள்ள கோணத்திசை. [உவ஢ிஶா:]

உபதிருஷ்டா—கூடவிருந்து பார்ப்பவன், புரோகிதன் (சிந்தா. 2362. உரை).

உபதூபிதன்-மரணம்சமீபித்திருப்போன். [உவயூவித.]

உபதேசகலை — 1. ஆகமப்பிரமாணவகை மூன்றனுள் ஒன்று; அது: கடவுளின் தன்மை யைக் கூறுங் கலை. 'பொருவி லாரணத்தி னுப ருபதேச கலையினை' (தணிகைப். நந்தி.155). 2. மததத்துவ போதனமுறை. (சி. சி. அளவை. 13. சிவாக்)

உபதேசகன் — உபதேசஞ்செய்வோன். [உவ஢ெஶக.]

உபதேசநம்—உபதேசித்தல். [உவ஢ெ ஶந.]

உபதேசம்—1. கடவுளின் தன்மையைக் கூறுதல், ஞானோபதேசம். 'தனுதியீறிலா தான் றன்மை யுணர்த்துத லுபதேசந் தான்' (சி. சி. அளவை. கரு.) 2. நற்புத்தி கூறுதல். 3. போதித்தல். 'புங்கவன் பழியு மன்னுன் புனையிழை பழியும் போதற்-கிங் குபதேசம் வேறுண்டு' (சேதுபு. சங்கரபா. எரு.) 4. மந்திரம். 'சேமு ரவிக்கம் படை யாக வீசுப தேசமுந் நூற்-சேமர்' (கந்தரந். ச௦.) 5. மந்திரம்போதித்தல், தீக்ஷை. 'ஈச னருவை கலமுப தேசத்திற் கேய்ந்தனவே' (விதாந. நல். 15.) 6. விசேடித்துச் சொல்லு தல் [உவதெ³ஶ.]

உபதேசவுரையளவை — உபதேசகலை யென்னும் அளவை. (சி. சி. அளவை. கரு. சிவஞாந.)

உபதேசி — 1. உபதேசஞ்செய்கிறவன். 2. உபதேசிக்கப்பெறுகிறவன். (சி. போ. 7. 3. சிற்) [உவதெ³ஶிநு]

உபதேசித்தல் — உபதேசஞ்செய்தல். 'தேவதேவுபதேசித்த சித்தியைச் சிலம்பன் செல்வி' (திருவிளை. அட்டமா. உக.)

உபதை — 1. ஈற்றயல். (பி - வி. திங்கு. ந: உரை.) 2. ஏய்த்தல். 3. ஒருவ னுடைய மனவியல்பை யாராய்ந்து தெளி தல்; அஃது: அறவுபதை, பொருளுபதை, இன்பவுபதை, அச்சவுபதை: என நான்கு வகை என்பர் பரிமேலழகர். (வள். ௫௦க. உரை.) 4. பரிதாநம். 5. பெரியோர்க்குக் கொடுக்கும் உபகாரம். 6. காணிக்கை. (நாநார்த்த).[1, 2, 3. உவயா: 4.5 உவதா.]

உபநட்சத்திரம்—அப்பிரதானநட்சத்திரம். [உவநக்ஷத்ரம்.]

உபநதி — பெரியநதியில் வந்து கலக்கும் சிறுநதி.

உபநயநம்—1. முப்புரிநூல்தரிக்கும் கிரி யை; அது: பிராமணர், அரசர், வணிகர் என்னும் மூன்றுவருணத்தார்க்கும் விதிக்கப் பட்டுளது. 'உபநய நத்தும் வேரோ ருற்பவ முற்று னன்றே' (இரகு. இரகுவுற். ச௦.) [இது, சிவத்தைத் தரிசிப்பதற்குச் சமீப மாகிய நயநத்தையுண்டாக்குங் கிரியையென் பர். திருவா. கோச். கச. உரை.] 2. மூக்குக் கண்ணடி. 3. வழிநடத்துதல்.[உவநயந.]

உபநயம்—1. அடைதல். 2. உபநயநக்கிரி யை. 3. அநுமானவுறுப்புக்க ளைந்தனுள் ஒன்று. 4. கொண்டுவருதல். [உவநய]

உபநயித்தல் — பூணூற்கிரியை செய்தல். 'உபநயித்தோன் பிணியாதன் மரித்தறிடம்' (விதாந. மைந்தர். உரு.)

உபநளகம்—முன்காற் சிற்றெலும்பு.

உபநாகநம் — 1. அபிடேகத்திரவியஞ் சார்த்துதல். 2. பூசுதல். 3. மருந்துவைத் துக் கட்டுதல். [உவநாஹந:]

உபநாகம்—1. விரணம் முதலிய ஆறும் பொருட்டுப் பிரயோகிக்குஞ் சேர்வை மருந்து, மா முதலியன. 2. யாழின் பிருடை. (நாநார்த்த). [உவநாஹ]

உபநாயகன்—1. சோரநாயகன். 2. பாட் டுடைத்தலைவனுக்குக் கீழான சிரேட்டன்.

உபநாயம்—1. துவைத்துக்கட்டுமருந்து. 2. பூணூலணிதல். 3. புண்கட்டிகளில் வைத்துக் கட்டும் மா முதலியன.

உபநிட்கரம்—1. தெரு. 2. பெருந்தெரு. [உவநிஷ்க்ர.]

உபநிட்கிராமணம் — 1. இராசவீதி. 2. பிள்ளைபிறந்த நான்காமாதத்திலே பிள்ளை யை வெளியிற்கொண்டுபோய்ச் செய்யும் ஒரு கிரியை. 'வகுநாம கரணஞ்சோ றூட்டலுப நிட்கிரா மணமு நீக்கி' (திருவாளை. கோச். நக.) 3. பெருந்தெரு. [உவநிஷ்க்ரமண.]

உபநிட்டாநம்—உபநிட்கிராமணம். 'உறுப் படை யுபநிட் டாந மோதநம் பிறவு முற்ற' (கந்தபு. மார்க். கக௦.) [உவநிஷ்டா²ந.]

உபநிடத்து—உபநிடதம். 'வேதக் காட் சிக்கு முபநிடத் துச்சியில் விரித்த-போதக் காட்சிக்கும்' (கந்தபு. சூரனமைச். கஉஎ.) [உவநிஷத்.]

உபநிடதம்—1. அயல்வீடு. 2. இரகசியம் (நாநார்த்த). 3. சதாசாரம். 'முப்பகலிலே மலைவ னுபநிடத விற்கை முனியும்' (பாரத. அணி. நஉ.) 4. பரப்பிரமஞாநம். 5.வேதம். 'உபநிடத மொருநான்கும்' (கலிங். கடவுள். 5). 6. வேதத்தின் ஞாநகாண்டம். (பிங்) 7. வேதத்தினுட்பொருள். (சூ. நிகண். க௦: உஉ.) வேதத்தி னுட்பொருளைக்கூறு நூல்.

'உன்-றிருவடிக் கேதன் கருத்தெலா மமைத் தாள் சிருப நிடதமா மிவளே' (சிவதத்துவ. 19). 8. தர்மம். (நாநார்த்த) [உவநிஷத்.]

உபநிடம்—உபநிடதம். 'பாத பங்கய முப நிடப் பாதுகை சூட' (திருவிளை. எல்லாம் வல்ல. ௬.)

உபநிதாநம் — கடன்கொடுத்தவனிடத்தி லே அடகாக வைத்திருக்கும்படி கொடுக்கப் படும் பொருள். [உவநியாநஃ]

உபநிதி—வியவகாரபதங்கள் பதினெட்ட னுளொன்று; அஃது: உபநிதியெனவும் நிக்ஷேபமெனவும் நியாசமெனவும் மூன்று வகைப்படும். அவற்றுள் உபநிதி: ஒருவன் தநமுதலான தனதுபொருள் தன்னிடத் திருந்தால் அரசன் பங்காளி திருடன் இவர் கள் முதலானவர்களால் அபாயப்படுமென் றெண்ணி யச்சமுற்றுப் பொருளைச் சேமப் படுத்தற்பொருட்டு நற்குலப்பிறப்பும் நன் னடையும் அறந்தெரிதலும் உண்மையுரைத் தலும் பலகிளையுடைமையும் பொருளுடை மையு முடையவனாகியும் நம்பத்தக்கவனாகியு மிருப்பவனிடத்தில் இன்னதென்று சொல் லாமலும் காட்டாமலும் எதிரே யெண்ணா மலும் பெட்டிமுதலானவைகளில் மறைத்து முத்திரையிட்டுவைப்பதாம். நிக்ஷேபமாவது: ஒருவன் மேற்சொல்லிய விசேஷணங்க ளெல்லாமுடைய ஒருவனிடத்தில் தனது பொருளை அவனெதிரே யெண்ணிக்கொடுப் பது. நியாசமாவது: ஒருவன் மேற்சொல்லிய அச்சத்தால் தன்னுடைய எருதுமுதலிய காலிகள் வெண்கலப்பாத்திரமென்னு மிவை முதலானவைகளை மேற்சொல்லிய விசே டணங்களை யுடையவன் அயலூருக்குப் போயிருக்கும்போது அவன்வந்தபின்னர் அவனிடத்தில் ஒப்புவிக்கவேண்டுமென்று சொல்லி அவனுடைய வீட்டாரிடத்திற் கொடுப்பது. [உவநிதி.]

உபநியசித்தல்—விரிவுரைசெய்தல். 'தம் முடைய மதத்தை உபநியசித்துநின்றார்கிழ்' (ஈடு. 1. 1. 9. வ்யா.)

உபநியாசம்—1. அடகு. 2. அடுத்துவைத் தல். 3. கொடுத்தல். 4. செயற்பாலது இதுவென்று சொல்லுதல். 5. சொல்லத் தொடங்கல். 6. முகவுரை. 7. விதிப்பிர மாணம். 8. பிரசங்கம். [உவந்யாஸ.]

உபநியாயம்—1. உதவிநியாயம். 2. திரும்ப நியாயமெடுத்துக்காட்டல்.

உபப்பிரதாநம்—1. உபகாரம். 2. திறை. 3. பரிதாநம். [உவப்ரதாந.]

உபப்பிரமா—1. தசப்பிரசாபதியுள் ஒரு வர். 2. தக்கன். (கந்தபு. திக்குவி. ௬௫. உரை.)

உபப்பிரமிதம்—அதிகமாய்ச் சொன்னது. (சி. சி. அ: ௩௫. சிவாக்.)

உபப்பிரும்மணம்—வேதப்பொருளை விவ ரிக்கும் இதிகாசபுராணாதிகள்.

உபப்பிலவம்—1. இராகு. 2. உற்பாதம். (1. 2. நாநார்த்த).

உபபட்டணம்—பேட்டை.

உபபத்தி—1. ஏது. 2. ஒழிவு, ஒப்பு, 3. காரியப்படுத்தல். 4. சடுவிதலிங்கங்களுள் ஒன்று; அது: வேதாந்த வாக்கியங்களின் தாற்பரியமாகிற அத்துவிதார்த்தத்திற்கு அநுகூலமான திருட்டாந்தம். 5. சம்பந்தம். 6. சம்பவித்தது. 7. செய்கை. 8 சேவகம். 9. தகுதி. 10. நியாநம். 11. சாதகம். 'உப பத்தி-சாதநம்' (சி. சி. ௫: க. சிவாக்). 12. பிறப்பு. 13. முகாந்திரம். 14. வழங்கியது. 'கான்மிகமென் றுபபத்தி. (சி. சி. உ: ௩௩. சிவாக்.) 15. நியாயம். 16. ஆஸ்தி. 17. சொல்லும்விஷயத்தை ஸ்தாபிக்கும்பொருட் டுக் காட்டும் யுக்தி. 'சச்சிதாநந்த முபபத்தி யகமுஞ் சிவனுமாய்' (பிரபோத. 22. 17.) [உவபத்தி.]

உபபத்திரம் — இலைக்காம்பருகேயுள்ள சிறிய இலை.

உபபதம்—1. அற்பம். 2. பட்டப்பெயர். (சங்கராசாரியர் என்பதில் ஆசாரியர் என்பது பட்டப்பெயராகிய உபபதம்.) [உவபதம்.]

உபபதி—1. இரண்டாமதிகாரி. 2. சோர நாயகன். [உவபதிஃ]

உபபலம்—1. உதவி. 2. துணைவலி.

உபபாதகம் — சிறுபாதகம். 'இதநுக் கணித்தான வுபபாதகமு மினியறைவாம்' (சிவதரு. பாவ. ௩௪.)

உபபாவம்-உபபாதகம். 'அகழுஞ்சூக்கும பாவ முபபாவ மடரு மாபாவம்' (சூத. ஞாந. எ: கூசு.)

உபபிருந்து—ஆலமரத்தினாலே திரண்ட வடிவமாகச்செய்யப்பட்ட ஒரு பாத்திரம்; இது, யாகங்களில் வழங்கப்படுவது.

உபபீடநம்—வேதனைசெய்தல்.

உபபுரம் — நகர்ப்புறம். [உவவுர:]

உபபுராணம்—அப்பிரதாநபுராணம். மகா புராணங்கட்கு அடுத்து மதிக்கப்பெறும் சிறு புராணங்கள். 'பதினெட்டாமுறைநூலுக்கு மன்னுபபுராணமும்' (மச்சபு. புராணவநுக். கூரு.)

உபபோக்கியம் — பலவித அரசிறையை ஈட்டுவதிலும் காப்பாற்றுவதிலும் செலவு செய்யப்படும் பொருள். (சுக்கிரநீதி. 98.)

உபபோகம்—1. இன்பம். 2. பொருளின் பலத்தை அநுபவித்தல். 3. மைதுநம். [உவ ஹோக.]

உபபோகாந்தராயம் — அநுபவிக்கும் பொருள்களை விலக்குவது. (சிந்தா. 3081. உரை.)

உபபோந்நிருத்துவம்-உபபோக அநுபவி யின் தன்மை. (சி. சி. அ: கூ0. ஞாநப்.)

உபம் — இரண்டு. 'மற்றையுபமுபயத் துகளிடு' (தைல. தைலவ. கoக.)

உபமந்நியன்- வியாக்கிரபாதமுனிவ ருடைய குமாரர். 'பின்பக் கொடிமன் னுப மந்நியனைப் பெற' (கோயிற்பு. வியாக். 24.)

உபமந்நியு — உபமந்நியன். 'சென்றுப மந்நியு நாளும்'(கூர்மபு. கண்ணன் சிவதீ. 9.)

உபமம்-1.உவமை. 2.பாவனை. [உவமா.]

உபமலம்—உள்ளேயிருக்கும் மலம்.

உபமாதீவகம்—தீவக அலங்கார பேதத் தின் ஒன்று; அஃது: ஓர் உவமேயச்சொல். ஓரிடத்து நின்று செய்யுளிற் பலவிடத்தும் நின்ற உவமச்சொற்களோடும் பொருந்திப் பொருள்விளைப்பது. 'முன்னங் குடைபோன் முடிநா யகமணிபோன் - மன்னுந் திலகம் போல் வாளிரவி - பொன்னகலந் - தங்குங் கவுத்துவம்போ லுந்தித் தடமலர்போ-லங்க ணுலகளந்தாற் காம்' (இலக்கணவி. சுசஎ.)

உபமாநதீவகம் — உபமாதீவகம். (இலக் கணவி. சுசஎ. உரை.)

உபமாநம்—1. உவமை, யாதேனும் ஒரு பொருளுக்கு ஒப்பாகச் சொல்லப்படுமது. 'மதிபோலும்முகம்' இதில்,மதி உபமாநம். 2. ஒரு பிரமாணம். [உவமாந.]

உபமாநரகிதம்-உவமையில்லாதது. [உவ மாநரஹித.]

உபமாபூர்வபதம் — முன்மொழியொப்பு; அஃது: இருசொற்றொடரில் முன்மொழி உவமையாய்வரும் பண்புத்தொகை. சங்க வெள்ளை என்பதிற்போல. (பி. வி. 22. உரை) [உவமாவூர்வவதம்: உவமா - உவமை. வூர்வ - முன். வத - மொழி.]

உபமிதசமாசன்—உவமைத்தொகை. (பி. வி. உடு. உரை.) [உவமித ஸமாஸ.]

உபமிதம் — உபமானங்காட்டப்பட்டது. [உவமித.]

உபமிதி—1. உபமானப் பிரமாணத்தினால் வரும் அறிவு. ஆமா ஆப்போல்வது என்று கேட்ட ஒருவன் ஆவொப்புமைத்தன்மை யுடைய பொருளைக் கண்டபின்னர் இது ஆமா என்று அறிதல். (தர்க்கபா. கூ0.) 2. ஒப்பு.

உபமிருதி—அப்பிரதாந மிருதிசாஸ்திரம். அம்மிருதிகள்: கணாவம், கபிலம், லோகிதம், தேவலம், காத்தியாயநம், லோகாக்ஷி, புத மிருதி, சாதாதபம், அதிமிருதி, பிரசேதம், தக்ஷம், விட்டுணு, விருத்தவிட்டுணு, விருத்த மநு, தௌமியம், நாரதம், பௌலத்தியம், உத்தராங்கிதம் எனப் பதினெட்டு. (அபி தாந.) [உவஸ்மிருதி.]

உபமேயம் — உவமிக்கப்பட்ட பொருள். [உவமேய.]

உபமேயோபமாலங்காரம்-உவமான உவ மேயங்கள் ஒன்றற்கொன்று உவமான உவ மேயங்களாகவரும் அணி. (அணியி. 3.)

உபமேயோபமானம்—உவமேயத்தை உவ மானமாகவும் உவமானத்தை உவமேயமாக வும் சொல்வது.

உபமேயோபமை — இதரேதரவுவமை. [உவமேயோவமா:]

உபமை—1. உவமையணி. 2. ஒப்புமை.

உபமோத்தரபதகர்மதாரயன்— பிற்சொல் உவமானமாயிருக்கும் பண்புத்தொகை. 'அடிமலர்' (பி. வி. உஉ. உரை.) [உவமோத்தரபதகர்மதாரய: உவமா - உவமை. உத்தரபத - பிற்சொல். கர்மதாரய - பண்புத்தொகை.]

உபயகர்ப்போட்டம்— மார்கழிமாதத்துக் கடைசிநாளிற் சூற்கொண்டு மழைபெய்யாது நிற்கும் மேகம்.

உபயகவி — இருபாஷைகளிற் கவிபாட வல்லவன். 'உபயகவிப்புலவன்' (திவா. 1. கட்டுரை.)

உபயகுலம்-இருமரபு. அது: தந்தைதாயர் மரபு. [உபயகுல.]

உபயகோமுகி—கன்றீனும்போது அதன் முகம் வெளியே தோற்றமாகும் சமயத்துப் பசு. 'உபயகோமுகியை யீந்தோர்' (காசிக. தேவர்கள்பி. 22.) [உபயகோமுகீ: உபய - இரண்டு. கோ - பசு. முகீ - முகமுடையது.]

உபயசம்பவம் — ஒருபக்கத்திலும் விலக வழியில்லாத நியாயம். [உபயஸம்பவ: உபய - இரண்டு. ஸம்பவ - உளதாதல்.]

உபயதன்மவிகலம் — சாத்திய சாதன மிரண்டும் குறைந்த திட்டாந்தப்போலி வகை. (மணிமே. 29. 359.)

உபயநாகமலர்—சிறுநாகப்பூ, பெருநாகப்பூ. (தைல. தைலவ. கஙரு.)

உபயநொச்சி-வெண்ணொச்சி, கருநொச்சி. (தைல. தைலவ. எசு.)

உபயம்-1. இரண்டு. 'படியுபயஞ்சேர்த்து' (தைல. தைலவ. எஎ.) 2. இரண்டுதன்மையுமுடையது. 'அருவநாலிக் குபயநாலுருவமொன்றும்' (சி. சி. உ: எச. ஞாநப்). 3. உபகாரம். 4. கோயிற்காணிக்கை. 5. கோயில் முதலியவற்றிற்குக் கொடுக்கும் தருமம். (S. I. I. iii. 209). 6. பழைய சுவர்ணதாயவகை. (S. I. I. i. 81.) [உபய.]

உபயமாதம் — உபயராசிக்குரிய மாதம்; அவை: ஆனி, புரட்டாசி, மார்கழி, பங்குனி என்னும் மாதங்கள். [உபயமாஸ.]

உபயமார்க்கம்—வரிவகையிலொன்று. (S. I. I. iv. 99.)

உபயமுகி-கன்றின்முக முதலாய்நிற்கும் பசு. [உபயமுகீ.]

உபயமுகிதானம்-உபயகோமுகிதானம். (த. நி. போ. உ௫.)

உபயர்—இருவர். 'அவர்க்கொப்பறு புதல்வரு முபயராயினர்' (வேதாரணியபு. கோளகல. ௩எ.)

உபயராசி — 1. சரம் திரம் என்னும் இரண்டுதன்மைக்கும் ஏற்ற ராசி; அவை: கன்னி, தநு, மிதுனம், மீனம் என்பன. (விதான. மரபியல். ௫). 2. உடைவாரம். [உபயராசி.]

உபயவசை—சீரகம், கருஞ்சீரகமென்னும் இரண்டும். 'உபயவசைமுசலி - யுருமமுறு செவ்வல்லிகண மொவ்வொன்றினுக்கு' (தைல. தைலவ. ௫௧.) [உபய; அசை.]

உபயவாதி — இருபக்கத்தையுஞ் சார்ந்து நிற்போன்.

உபயவாதிகள்—1. வழக்கின் வாதி பிரதிவாதிகள். 2. தருக்கவாதஞ்செய்யும் இருதிறத்தார். 'ஈதுபயவாதிகள்சம்மதம்' (தாயு. எங்கு. ௩.)

உபயவிட்டகம்-கருப்பந்தரித்து நாளுக்குநாள் விருத்திபடையும்போது மாதாமாதம் ருதுகாலத்தில் வெளிப்படுவதுபோலச் சோணிதம் வெளிப்பட்டுக்கொண்டேயிருந்தாலும் சிசுவுக்குக் கெடுதியிராமல் மிகவும் இளைத்து மரப்பாவையையொத்துத் தாய்க்குத் தெரியாமல் வயிற்றுக்குள் ஒவ்வொரு வேளை கொஞ்சம் அசைவதாயிருக்கும் பிண்டம். (சீவரட். உ௦சு.) [உபயவிஷ்டக]

உபயவிபூதி — லீலாவிபூதியும் நித்தியவிபூதியும். (ஈடு. 6. 1. 8.)

உபயவேதாந்தம்-வடமொழி தென்மொழி வேதமுடிவு.

உபயவேர்-வெட்டிவேர், இலாமிச்சுவேர் எனப்படும் இரண்டுவேர். 'உபயவேர் நகரம் வெள்ளிலோத்திரம்' (தைல. தைலவ. 36.)

உபயவோசை—ஈரடுக்கொலி (திவா.)

உபயாங்கம்—கிருத்தத்துக்கும் கீதத்துக்கும் வாசிக்கும் வாத்தியம். (சிலப். 3. 14. உரை.)

உபயாங்கன்—சதாசிவன். [உபயாங்கঃ: உபய - இரண்டு. அங்க - சரீரம்.]

உபயாசித்தம்—எதுப்போலிவகையி ஞென்று. (மணிமே. 29. 193.)

உபயாத்தம்—உபயார்த்தம்.

உபயாமம்—விவாகம்.

உபயார்த்தம் — 1. இரண்டுநோக்கம். 2. இரண்டுபொருள். [உபயார்த்த: உபய - இரண்டு. அர்த்த - பொருள்.]

உபயாவியாவிருத்தி—சாதனம் சாத்தியம் இரண்டும் மீளாதிருக்கும் வைதன்மியதிட் டாந்தப்போலி. (மணி. 29. 442.)

உபயோகப்படுதல்—பயன்படுதல்.

உபயோகம் — 1. இட்டசித்தியை முடித் தற்கு அநுகூலமாயிருக்குஞ் செய்கை. 2. உதவி. 3. ஒருயோகம்; அஃது: இலக்கினத்தி லும் இரண்டாம் மூன்றும் நான்காம் இடங் களிலும் ஏழு கிரகங்களும் நிற்பது. (உள்ள முடை. ௩௧௨). 4. ஒன்றனை முடித்தற்கு வேண்டும் பொருள். 'தாங்கியுபயோகந் தன்னையும்' (சைவச. பொது. ௨௫௧). 5. சமீபம். 6. தக்கதன்மை. 7. நல்லொழுக்கம். 8. பிரயோகம். 9. பிரயோசகம். 10. மருந்து செய்தல். [உபயோகঃ]

உபயோகி — 1. உபயோகமுடையது. 2. உதவுபவன்.

உபயோகித்தல்—உபயோகஞ்செய்தல்.

உபரசநீர் — உபரசக்குடிநீர். (தைல. தைலவ. ௧௩௫. உரை.)

உபரசம் — 1. இழிந்தசுவை. 2. சுபாவ பதார்த்தமாகிய சரக்கு; அச்சரக்குகள் நூற் றிருபத்தெட்டுவகை. 'தாரார்மணி யுபரசங் களையும்' (தைல. பாயிர. 31). 3. கடல்நுரை. 4. கல்லுப்பு (மூ. அ). 5. உபதாது (தைலவ. பாயி. 31.) [உபரஸ.]

உபரசன்—தம்பி. (யாழ். அக.)

உபரசிதம்—1. ஆயத்தஞ்செய்யப்பட்டது. 2. உபசரிப்பு. 3. உண்டாக்கப்பட்டது. 4. குருவைக் காத்தல். [உபரசித:]

உபரஞ்சகம் —அவச்சேதகம் நான்கினுள் ஒன்று. (விசாரசங். 320.)

உபரஞ்சிப்பித்தல் — சந்தோஷிக்கச்செய் தல். 'பிறரை யுபரஞ்சிப்பிக்குங் குணம்' (சி. சி. ௨: ௨௩. ஞானப்.)

உபரட்சணம்—புறக்காவல். [உபரக்ஷணம்]

உபரதம்—வெடியுப்பு. (மூ. அ.)

உபரதி — 1. செயலொழிவு. 'நித்திரை யென்றது இந்திரியங்களுடைய உபரதியே யாகையால்' (சி. சி. ௩: ௫. சிவாக்). 2. பெண்டு பிள்ளை முதலிய குடும்பவியவகாரங் களை ஒட்டற விட்டுநிற்றல். இது மூன்றுஞ் சாதநமாகிய சமாதி சட்க சம்பத்தியில் ஒன்று. 'மட்டிலாப் பெண்டி ராதி மகிழ்புக ழாவ தெல்லாங்-கட்டற நீக்கவேண்டுங் கழ லாது நிற்கு மாயில்-தட்டுறு பிறவி நீங்காத் தன்மையென் றுன்னி யுன்னி-ஒட்டற விட்டு நிற்ற லுபரதி யாகுங் காணே' (உபதேசவு. 9). 3. பெருமகிழ்ச்சி. 4. மரணம். 5. இறுதி. 'உபரதியில் மண்டிலம்போன் முன்னிறுத்தி' (விறலிவிடு. 559.) [உபரதி.]

உபரதித்தல் — வெறுத்துத்தள்ளுதல்.

உபரமணம்—1. ஒழிதல். 2. துறத்தல். 3. விஷயவைராக்கியம். [உபரமண.]

உபராகம்—1. இராகு. (நாநார்த்த.) 2. ஒருபுண்ணியகாலம். (சி. சி. அ: ௩௩. மறை.) 3. சிவப்பு. 4. சூரியசந்திர கிரகணம். "ஒரு பாநுவெண்மதி யுபராகத்தில்" (சேதுபு. சேதுபல. ௨௧.) 5. துராசாரம். 6. நிந்தனை (நாநார்த்த). 7. வருத்துதல். [உபராக.]

உபராசன் — 1. அரசனுக்கு இரண்டாவ தான அதிபதி. 2. இளவரசன். [உபராஜ.]

உபராசிதம்—சிற்றகத்தி. (மூ. அ.)

உபராமம்—1. சந்நியாசம். 2. துறத்தல். 3. மரணம். 4. வெறுத்தல்.

உபரால்—உதவி.

உபரர்வம் — சமீபத்திருந்துபேசுதலால் வரும் ஒலி.

உபரி—1. அதிகம். 2. ஒரு மீன். 3. மேல். 'உபரியெழுகின்றபயம்' (பாரத. பதின்மூன். ௩௧.) 4. உபரிசரதம். 'மிக்காம் உபரிசெயக் கார்க்கொண்டை பின்சரிய' (விறலிவிடு. 523)

உபரிகை—மேன்மாடம். 'கோவிட மாட முபரிகை மேடை கோபுர மரக்கெலாம் பரந்து' (திருவிளை. நாகமெய். ௧௮.)

உபரிசரர்—மேலே சஞ்சரிப்போர். 'உபரி சரரென வுரனொடு புகுதர' (பாரத. பதினெ. ௩௦.) [உவரிசர: உவரி - மேல். சர - சஞ்சரிப்போர்.]

உபரிசுரதம் — புணர்ச்சிவகையுள் ஒன்று.

உபரிநம்—உபரிசுரதம். 'இசலியிசலியு ரிதலீலையுற்று' (திருப்பு. 497).

உபரிபாகம் — வேதாந்தம். 'உபரிபாகப் பொருள்' (பதினொ. திருநாவுக். 1.)

உபரிபுருஷன் — வாகனமேறுகிறவன். [உவரிபுருஷ:]

உபரியாவி—கோட்டம். (வை. மூ.)

உபரிலீலை — உபரிசுரதம்.

உபரை—தூற்கதிர்.

உபரோதகம்-உள்வீடு. [உவரோயக.]

உபரோதம்—1. அநுகூலம். 2. கட்டுதல். 3. தயவாக ஒன்றைச் செய்துமுடித்தல். 4. நற்காப்பு. 5. மறுப்பு. 6. முற்றுகையிடல். [உவரோய: உவ; ருயி - தடை.]

உபலக்கணம்—, உபலட்சணம்— } 1. ஒருமொழி ஒழிக்த தன் இனத்தையும் குறிப்பது. 2. இலட்சியத்தைப் பக்கவுதவி யைக்கொண்டு உணர்த்தும் லட்சணம். [உவலக்ஷண]

உபலட்சித்தல்—பார்த்தல். (சி. சி. அ: உஉ. ஞானப்.)

உபலட்சியம் — குறிப்பினுற் பொருள் விளக்குமது. [உவலக்ஷ்யம்.]

உபலத்தி—1. அடைதல். 2. அறிவு. 3. சம்பாத்தியம். [உவல஬்தி]

உபலம்—1. இரத்தினக்கல். 2. எருமுட்டை. 3. கல் (சூடா). 4. பளிங்குக்கல். 'பல நிறங் கவரு முபலமாய்' (தாயு. சிற்சுகோ. உ.) 5.பூசித்தல். 6.சிறுகல். (பிங்)[உவல.]

உபலம்பம்—தோற்றுகை. 'அவன் தனக்கு ஈசுவரனையொழிய ப்ருதக்ஸ்திதியாதல் உப லம்பமாதல் இல்லாமையாலே' (ஈடு. 1. 1.6)

உபலாலநம் — கொண்டாடுதல். [உவலாலநம்.]

உபலாலநை—கொண்டாடுகை.

உபலாலிகை—தாகம். [உவலாலிகா.]

உபலாவி — விராடதேசத்தினின்றும் புறப்பட்டுப் பாண்டவர்கள் தங்கிய இடம். 'போயோதை வீதி யுபலாவி புகுந்து தங்கள்' (பாரத. வெளிப்பாட். ௩௦.)

உபலாளநம்-1. தூய்மைசெய்தல் (திவா). 2. உபலாலனை. 'உத்ஸவங்களையும் உபலாள நங்களையும் ஸ்ரீபாஞ்சராத்ரப்ரகாரமாக விய வஸ்தைபண்ணி' (கோயிலொ. 54)

உபலிங்கம்—திங்கை அறிவிக்கும் இயற் கைக்குறி. [உவலிங்஗:]

உபலேபநம்—1. பூசுதல். 2. மெழுகுதல். [உவலெவந.]

உபலேபம்—1. பூசுதல். 2. மெழுகுதல். [உவலெவ.]

உபலை—1. சர்க்கரை. 2. சுக்கான்பார். (1, 2. நாநார்த்த).

உபலோகத்திரம் — வெள்ளி. (வைத்திய பரி)

உபலோத்திரம்—விளாம்பிசின். (மூ. அ.)

உபவசி—உபவாசி. 'அருக்கினலற்றைக் குபவசியாய்' (சைவச. பொது. ௩௦௩.)

உபவசித்தல்—உபவாசஞ்செய்தல். 'அழி பசிக் கழியா தன்றுப வசித்து' (வேதாரணிய பு. நியம. அ.)

உபவம்—சிந்தில். (மூ. அ.)

உபவருத்தநம்—1. இராச்சியம். 2. குடி யில்லாவூர். [உவவத்தநம்:]

உபவனம் — 1. காஞ்சொறி. (மூ. அ.) 2. நந்தவனம். 'அந்த மன்ன னேர்காளி னு பவனத் தொருவனு யிருந்து' (ஞானவா. உற் பத்தி. ௩௧.) [உவவநம்.]

உபவாசம் — 1. உணவின்றியிருத்தல். 'இதன்புனலாடி உபவாச முருற்றியக்கால்' (சேதுபு. பலதி. ௧௧) 2. ஓமபீடம். 3. ஓமாக்கினி வளர்த்தல். 4. விடயவிருப்பம் நீக்கி விரதங்கொள்ளல். [உவவாஸ: உவ; வஸ்.]

உபவாசி - உபவாசஞ்செய்வோன். 'மதத்த வுடலதனு லற்றவுப வாசியொளித் துண்பா னென் றுணர்தல்' (உபநிடத. ௧௬. உரை.) [உவவாஸிநு.]

உபவாசித்தல் - உபவசித்தல். 'ஓங்குக்திரி திசையுபவாசித்தே'(மச்சபு.அநந்ததிரி.உஅ.)

உபவாடிகை — 1. மந்திரிவீட்டுத்தோட்டம். 2. வேசிவீட்டுத்தோட்டம்.

உபவாயுக்கள்—நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தநஞ்சயன் என்னும் அப்பிரதாந வாயுக்கள். (விசார. கஎசு.)

உபவிட்டன்—உட்கார்ந்திருப்பவன்.

உபவிஷ்டாம்—தங்குபிண்டம். (சீவரட். 206.)

உபவீதம்—1. தேவகாரியத்தில் இடதுதோண்மேனின்று வலதுதோளின்கீழ்த் தொங்கும்படியணியும் முப்புரிநூல். (பிரமோப.) 2. பூணூல். (பிங்) 3. பூணூல் தரித்தல். [உவவீ த:]

உபவீதி — உபவீதமணிந்தவன். [உவ வீ திநு.]

உபவேசநம் — உபவேசம். [உவ வெஶ நம்.]

உபவேசம்—1. ஆசனம். 2. இருத்தல். 3. மலங்கழித்தல். [உவவெஶ:]

உபவேட்டநம்—கூத்தின் அங்கக்கிரியைகளுள் ஒன்று. (சுத்தா. சிலப். பக். 81)

உபவேட்டிதம்—கைவட்டணை நான்கினுளொன்று. (சிந்தா. பதுமை. கூஉ. உரை.)

உபவேதம்—அப்பிரதாநவேதம். 'ஆயுர்வேதம், தநுர்வேதம், காந்தருவவேதம், அருத்தவேதம் என்பன உபவேதம்' (சைவ. வி. உஉ.)

உபற்பவம்—1. இராகு. 2. கிரகணம்.

உபறியாவி—கோட்டம். (மூ. அ.)

உபஸ்தம்—உபத்தம்.

உபஸ்தாநம்—மந்திரத்தொடு வழிபடுகை.

உபஸேசநம் — ஊறுகாய் முதலிய உபகரணங்கள். 'யாவனொருவனுக்கு ம்ருத்யு உபஸேசநகோடியிலே நிற்கிறான்' (ஈடு. 1. 1. 8. வ்யா. பக். 37.)

உபா — தன்மாத்திரை. 'உபாக்டெரி வுரைப்பின்' (நீலகேசி. 486. உரை)

உபாக்கியாநம் — கிளைக்கதை. 'நளோபாக்கியாநம்' [உவாவ்யா நம்:]

உபாகமம்—1. அங்கீகரித்தல். 2. அப்பிரதானமான ஆகமங்கள். 'விசுவான்மகமுதல் நாரசிங்கம் இறுதியாயுள்ள இருநூற்றுநாற்பத்தேழு உபாகமங்கள்' (கூர்மபு. உ: கஉ. உரை.) 3. கிட்டிவருதல். 4. வந்துசேருதல். [உவா மஃ:]

உபாகரணம் — 1. பசுக்களை யாகத்திற் கொல்லுதல். 2. வேதாத்தியயநஆரம்பத்துக்குமுன்செய்யும் ஒரு கிரியை. [உவா கரண:]

உபாகருமம்-1. ஆயத்தஞ்செய்தல். 2. பிதிர்தர்ப்பணம். 3. வேதம்படிக்கத்தொடங்குதல். 4. வேதாத்தியயந ஆரம்பத்துக்குமுன் செய்யும் ஒரு கிரியை. [உவாகூ-௧்:]

உபாகிதம் — 1. அக்கினியினால் வரும் அழிவு. 2. எரிகொள்ளி (நாநார்த்த.) [உவா ஹித.]

உபாகிதை—விண்வீழ்கொள்ளி.

உபாகிருதம் — 1. தீங்கினையறிவிக்கும் உற்பாதம். 2. யாகத்திலே கொல்லுதற்கு ஆயத்தஞ்செய்யப்பட்டிருக்கும் மிருகம். [உவாக்ரு த:]

உபாங்கதாளம்—தாளவகையில் ஒன்று. (பரத. தாள. 4. உரை.)

உபாங்கம்—1. பக்கவாத்தியம். 'முல்லைத்தார் கிண்டு வண்டுபாங்கங் கூடத் - துளைத்த வேய்க் குழற்சா தாரி தொம்மெனத் தொனிக்கு மன்றே' (இரகு. நாட். 54.) 2. அப்பிரதாநமான உறுப்பு. 3. ஒருவகைத் தோற்கருவி. (சிலப். அரங். உஎ. உரை.) 4. ஒருவரை விட்டுநீங்காமற் சமீபத்தில் இருக்குமது; பிராமணனுக்குப் பூணூல்போல. (சி. சி. க: சஎ. மறை.) 5. பரதத்தின் பொது இலக்கணங்களாகிய இருபது பேதத்து ளொன்று. "பாத - மாவையினங்க முபாங்கமே பிரத்தி யாங்கமே யலர்முக ராகம் - ஓவறு சீர்சால் காப்பிர சார முவமையில் சிரக்கர கருமம் - தாவறு கரகேத் திரங்கர காணந் தானகமேசுத்த சாரி" (திருவிளை. மாறியா. அ.) 6. வேதத்துக்கு இரண்டாமங்கமாகிய நூல்கள். 'மீமாஞ்சை, நியாயம், புராணம், ஸ்மிருதி என்பன உபாங்கங்கள்' (சி. சி. அ: 14. மறை.) 7. உபாங்க தாளம். 'அங்கமுபாங்கமாகிடும்' (பரத. தாள. 4.)

உபாங்கராகம் — இராகவகையில் நன்று. (மணிமே.)

உபாச்சிரயம்—1. அடைக்கலம். 2. ஆதாரம். 3. கொள்கலம். [உவாஶ்ரய: உவ - கிட்ட. ஶ்ரய - அடைதல்.]

உபாசகர் — 1. உபாசனைசெய்வோர். (சி. சி. ௧: ௫௭. சிவாக்). 2. பௌத்தரில் இல்லறத்தோர். (மணிமே.)

உபாசகன்—1. உபாசனைசெய்வோன். 2. ஏவல்செய்வோன். 3. பௌத்தரில் இல்லறத்தான். (மணிமே.) [உவாஸக]

உபாசகைகள் — பௌத்தரில் இல்லறநடத்தும் மகளிர். (மணிமே.)

உபாசங்கம் – அம்புக்கூடு. [உவாஸங்க.]

உபாசநம்–1. அத்திரப்பிரயோகப்பயிற்சி. 2. ஆசநம். 3. ஓமாக்கினி. 4. தேவத்தியாநம். 5. தேவாராதனை, வழிபாடு. 6. தொண்டு செய்தல். [உவாஸநம்.]

உபாசநாபரவாதம்–சிந்திக்கப்பட்ட வஸ்துவைத் தனது பிரியத்தை வைத்து அன்போடு ஒரு விக்கிரகத்தினிடத்தில் உபாசிக்கும் உபாசனையே தேவதாரூபமாய் இட்டப்பிராப்தியைத் தருவதுபோல எதிரிட்ட வஸ்துக்களைத் தனது ரூபமாகச் சிந்தித்தலின் அச்சிந்தனையடையலாம் என்பது. 'எழிற்பதுமையைத் தேவெனல்போ லிருமைதரு முபாசநாபரம்' (வேதா. சூ. ௧௨௬.)

உபாசநை — உபாசநம். [உவாஸநா.]

உபாசயம்—நித்திரை.

உபாசி — உபாசியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

உபாசித்தல்–வழிபடுதல். 'நயந்துபா சித்த வாறும்' (விநாயக. பதி. 3.)

உபாசிதம் — வணக்கம். [உவாஸித:]

உபாசிரயம்—அடைக்கலம்.

உபாஞ்சநம்–கோமயத்தாலே மெழுகுதல். [உவாஂஜந.]

உபாஞ்சு—1. இரகசியம். 2. மந்திரோச்சாரணபேதம் மூவகையுள் ஒன்று; அது: மந்தமாகச் செபித்தல். (சைவச. பொது. ௩௰௨. உரை.) [உவாஂஶு.]

உபாத்தி — ஆசாரியன், உபாத்தியாயன் (பிங்). கற்பிப்பவன், கற்பிப்பவள். 'மன்பிறங் கொளிறும் வேலா னேர்த்துத்தன் னுபாத்தி சொல்லால்' (சிந்தா. குண. 240.)

உபாத்தியாயம்—புரோகிதத்தொழில்.

உபாத்தியாயன்—1. ஆசாரியன், படிப்பிக்கிறவன். (சூ. நிகண். ௨: ௭). 2. புரோகிதன். 3. வேதத்திற் சிலபாகத்தையாவது வேதாங்கங்களையாவது வேதநம்பெற்றுப் படிப்பிப்பவன். [உவாயாய.]

உபாத்தியாயி— } [உவாயாயீ] படிப்பிப்பவள்.
உபாத்தியாயை— } [உவாயாயா.]

உபாதாநகாரணம்—முதற்காரணம்.

உபாதாநத்திரயம்–மூன்று முதற்காரணம்; அவை: சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை என்பன. (சி. சி. 2: 74. சிவாக்.) [உவா஦ாநத்ரயம்.]

உபாதாநதை — உபாதாநமாயிருக்குந் தன்மை. (சி. சி. ௨: ௧. சிவாக்.) [உவா஦ாநதா.]

உபாதாநம்—1. ஈவு. 2. உபயார்த்தம். 3. எண்ணம். 4. துணைக்காரணம். 5. பற்று. (மணிமே). 6. புலனடக்கல். 7. முதற்காரணம். 'என்னையிது வெனிலுலகுக் குபாதாநம்' (சிவப்பிர. ௨. ௫). 8. விலக்கல். [உவா஦ாந]

உபாதாநரூபம்—அறிவு, கந்தம், இரதம், வன்னம் என்பன. 'அறிவு, கந்தம், இரதம், வன்னம் என்கிற உபாதாநரூபம் நாலும்' (சி. சி. அ: ௧௨. நிரம்ப.)

உபாதாயம்—பற்றப்படுவது. (சி. சி. பரசௌத். ௬. உரை.)

உபாதாயவுரு — வலி, கந்தம், இரதம், வன்னம் என நான்காகும். 'வலிகந்த மிரதம் வன்ன மெண்டரு முபாதா யத்தான்' (சி. சி. பர. சௌத். ௫. உரை.) [சி. சி. பர. ௧௧௩-ஆம் பக்கத்தில் இவை உபாதாந உரு என்று சொல்லப்படும்.]

உபாதி — 1. இடையூறு. 'உம்பரால்வரு முபாதி காப்பன்' (மச்சபு. பிருகுவி. ௬௧.) 2. உபாதியென்னேவலும், தெரிநிலைவினைப் பகுதியும். 3. காரியம். 4. சாத்தியத்தில்

வியாத்தியுடையதாய்ச் சாதனத்தில் வியாபகமில்லாதது. (தர்க்கபா. ௧௮.) 5. தடை. 6. தருமசிந்தை. 7. இயாகம். 8. தேவசம்பந்தங்களில் ஐயம் வந்தால் அவற்றுள் மனஞ்செல்லாமல் நிறுத்தல். 9. நிமித்தம். 'விவேகிக்கு ஒரு உபாதியன்றியில் அவிவேகத்துவங்கூடாது' (சி. சி. ௬: ௮. சிவாக்.) 10. பாதை. 11. பொய்ஞ்ஞானம், அவித்தை. 'உபாதிகெடாதவர் கேவலமாகாரே' (கைவல். சந். ௬௬.) 12. மாரீசம். 13. வருத்தம். 14. வியாதி. 15. மாயையாலுண்டாகும் தோற்றம். 'இந்திரிய வுபாதியால்' (பிரபோத. 39. 30). [உவாயி.]

**உபாதீத்தல்**—உபத்திரவஞ்செய்தல்.

**உபாதித்திரயம்**—மூன்று உபாதிகள்; அவை: அவிச்சிந்நோபாதி, பிரதிவிம்போபாதி, அத்தியாசோபாதி என்பன. இது, 'பாவமுறுமவிச்சிந்நோ பாதிபதி விம்போ பாதியுடனத்தியா சோபாதி யெனவே-மேவுமுபாதிக ளொருமூன் றுள' என்பதனாற் பெறப்படும். (வேதா. சூ. ௮௬.)

**உபாதீதை** — உபாதித்தன்மை. [உவாயிதா.]

**உபாதேயம்**—1. எற்றுக்கொள்ளத்தக்கது. (சி. சி. ௮: ௨௪. சிவாக்.) 2. கூட்டத்தக்கது. (சி. சி. 2. 58. சிவாக்). 3. பிரதானம். 4. மேலானது. [உவாதெய.]

**உபாந்தம்**—1. அணித்தான அயல். 2. எல்லை. 3. கடைக்கண். [உவாஂத]

**உபாந்தியம்**—1. ஈற்றயல். 2. கடைக்கண். 3. சமீபம். [உவாஂத்யஂ]

**உபாநம்** — 1. உபாநவரி. 2. செருப்பு, மிதியடி. 'உத்தமரைமதியாதே யுபாநபதத்தொடேடக்கு-மத்தரையும்' (சிவதரு. சுவர்க்க. நரகவியல். ௧௪௨.)

**உபாநவரி**— கோபுரத்தினடிச்சித்திரவரி.

**உபாம்சு**—1. இரகசியம். 2. வாசகசெபவகையிரண்டின் ஒன்று. அது, பிறர் செவிக்குக்கேளாது மந்திரங்களைச் செபித்தல். 'சிவமந்திரத்தை வாசகமாகத்தான் உபாம்சுவாகத்தான் மானசமாகத்தான் மேற்சொல்லும் பிரகாரத்திலே சபிப்பது சபயக்கியம்' (சி. சி. ௮: ௨௯. சிவாக்). [உவாஂஶு.]

**உபாமிசு**—1. இரகசியம். 2. வாசகசெபவகையிரண்டினொன்று. அது: பிறர் செவிக்குக்கேளாது மந்திரங்களைச்செபித்தல். 'உரைவாசகமற் றுச்ச முபாமிசு வென்றிரண்டாம்' (சூத. நியம. 15.) [உவாஂஶு.]

**உபாயக்காரன்**—தந்திரி.

**உபாயத்திரயம்** — உபாயங்கள் மூன்று; அவை: 'அதத்துவியாவிருத்தியிலக்கணை, தடத்தலக்கணை, சொரூபலக்கணை' என்பன. (த. நி. போ. ௧0௫.)

**உபாயதந்திரம்**—வஞ்சம்.

**உபாயநபத்திரம்**—கையுறையாகக்கொடுக்கும் பொருளைப்பற்றிய பத்திரம் (சுக்கிரநீதி. 93.)

**உபாயநம்** — 1. பெரியோர்க்குச்செய்யும் உபகாரம். 2. காணிக்கை. 'மன்னனுக்கியவுபாயனமென்று கொடுத்தனர். (யசோதர. 3. 5.) [உவாயந.]

**உபாயநிட்டை** — சித்தியடைதற்குரிய நெறிநிற்றல்.

**உபாயபாரமிதை**—தசபாரமிதையுள் ஒன்றான உபாயம். (மணிமே. 26. 45. குறிப்பு. பக். 297.)

**உபாயம்**—1. கிட்டவருதல். 2. சாதனம். 'காசு ஒடுக்க உபாயமில்லாமையாலும்' (S. I. I. v. 370) 3. சித்தியடையும்வழி. 'பூரணப்பொருள்வந்து வாய்க்கும்படிக் குபாயம்-வருவித்து' (தாயுமா. சின்மயாநந்தகுரு. ௨.) 4. சூழ்ச்சி. 'உபாயமெங் கேனு மொன்றுற்-றப்பறச்சூது கொண்டுசதிப்பதே கருமமென்றான்' (பாரத. சூது. ௨௪.) 5. சொற்பம். 6. நான்கு. 'தொடிகாணம்புபாயமாம் படியட்டிப்பின்' (தைல. தைலவ. ௬௪.) 7. தந்திரம். 8. வகை. [1, 2, 3, 4. உவாய:]

**உபாயவிலக்கு** — விலக்கலங்காரவகையுளொன்று; அஃது: ஒருபாயக்காரணமாக விலக்குவது. 'இன்னுயிர் காத்தளிப்பாய் நீயே யிளவேனின்-மன்னவனுங் கூற்றுவனும் வந்தணைந்தால் - அன்னோர் - தமக்கெமைத் தோன்றாத் தகையதோர் விஞ்சை - யெமக்கின் றருள்புரிந்தே யேகு' (தண்டி. பொருள. ௪௪.)

**உபாயி** — உபாயமுடையோன். [உவாயிந்]

உபார்ச்சநம்—தேடுதல். [உவாஜ-்ந.]

உபாலம்பநம்—தூஷித்தல், நிந்தை. 'சந்தி ரோபாலம்பநம்' (நைடத.)

உபாலம்பம்—உபாலம்பநம்.

உபானம்—செருப்பு. 'உபானபதத்தொடு நடக்கும்' (சிவதரு. சுவர்க்க. 142.)

உபானம்—
உபானவரி— } கோபுரத்தின்கீழ்ச் சித்திர வரி.

உபுகீது—உபுக்கென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும்.

உபுக்குதல்—பெருகுதல்.

உபேட்சாபாவனை—சார்புபற்றாது ஒப்ப நோக்குந்தன்மை. (மணிமே. 30. 253. அரும்.)

உபேட்சித்தை—உபேட்சித்தல். (சி. சி. அளவை. க. சிவாக்.)

உபேட்சித்தல் — 1. கைவிடுதல். 2. வெறுத்துவிடுதல். (சி. சி. 8: 5. ஞாநப்.)

உபேட்சியம் — உபேட்சிக்கத்தக்கது. [உவெக்ஷ்ய.]

உபேட்சை—1. அவமதிப்பு, புறக்கணிப்பு. 'மேதகு மறைவிரோத மேவுறா வுபேட்சை' (சூத. சருவவேதாக். ௩). 2. கவனமின்மை. 3. கைவிடுதல். 4. பொறுமை. 5. விருப்பு வெறுப்பின்மை. [உவெக்ஷா.]

உபேட்சையாநம்—தோல்வியடைந்த அரசன் பகைவனைப் புறக்கணித்துத் திரும்புகை. (சுக்கிரநீதி. 337.)

உபேந்திரன்—விட்டுணு, இரண்டாமிந்திரன்; அவன்: திருமாலினவதாரத்துள் வாமனன். 'ஒங்குதன் கூற்றான் முச்சக மளந்த வுபேந்திரன் முதலியோர் சூழ' (தணிகை. விடை. ௧௮.) [வாமநாவதாரத்திலே காசிபனுக்கும் அதிதிக்கும் மகனாய்ப்பிறந்து இந்திரனுக்குத் தம்பியாயின னென்பது புராண கதை. [உவெந்த்ர.]

உபேந்திராசிரியர்— சிநேந்திரமாலையியற்றியவர்.

உபோதகம்—
உபோதகி—
உபோதகை—
உபோதம்— } பேய்ப்பசளை. [உவொதிக.]

உபோற்காதம்—1. ஆரம்பம். 2. உதாகரணம். 3. பாயிரம். (தொல். பாயிர விருத். பக். 16.) [உவொத்ஃாத.]

உம் – 1. உயர்திணைப்படர்க்கையொருமையிலும் அஃறிணையொருமை பன்மைகளிலும் நிகழ்கால எதிர்காலங்களைக் காட்டும் ஒரு தெரிநிலைவினைமுற்றுவிகுதி. 'மேவி நிலத்திலிருக்கும் நிற்கும் வீழும்' (இராமா. கைகேசி. சூழ். ௧௪.) [நிகழ்காலம்]. 'வரும்வருமெனமன மறுகிவைகினாள்' (பாரத. வாரணா. ௨௫.) [எதிர்காலம்]. 2. எதிர்காலங்காட்டும் ஒரு பெயரெச்சவிகுதி. 'நடக்கும் மனிதன்' (நன். வினை. ௨௧.) 3. எதிர்மறை, சிறப்பு, ஐயம், எச்சம், முற்று, அளவை, தெரிநிலை, ஆக்கம்: என்னும் எட்டுப்பொருள்களுள் ஒன்றில் வரும் ஓர் இடைச்சொல். 'கொற்றன் வருதற்கும் உரியன்' இங்கே கொற்றன் வாராமைக்கும் உரியனெனப் பொருள்பட்டது [எதிர்மறை]. 'குறவரும் மருளுங் குன்றம்' இது உயர்வுசிறப்பு. 'புலையனும்விரும்பாப் புன்புலால் யாக்கை' இது இழிவுசிறப்பு. 'பத்தாயினும் எட்டாயினும் கொடு' [ஐயம்]. 'சாத்தனும்வந்தான்' இது கொற்றன் வந்தான் எனப் பொருள்படுமாயின் இறந்ததுதழீஇயது; கொற்றன் வருவான் எனப் பொருள்படுமாயின் எதிரது தழீஇயது. [எச்சம்]. 'தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்' [முற்று]. 'சாத்தனும் கொற்றனும் வந்தார்' [எண்]. 'இருநிலம் அடி தோய்தலிந் திருமகளுமல்லள் அரமகளுமல்லள் இவள் யாராகும்' [தெரிநிலை]. 'நெடியனுமாயினான்' [ஆக்கம்]. 4. ஒரு முன்னிலைப் பன்மை ஏவல்விகுதி. 'நீர் வாரும்' 5. ஒருமைச்சிறப்பில் வரும் ஒரு முன்னிலைவினை விகுதி. 'செப்புமென்றார்' (பெரியபு. தடுத்தா. 64). 6. ஓர் அசைகரண ஓசை 7. தொழிற்பெயரிறுதியில் விகுதியோடிணைந்த ஒடு என்னும் உடனிகழ்ச்சியுருபோடிணைந்து உடனே எனப் பொருள்விளக்கும் ஓரிடைச்சொல். 'கிற்றலோடு மவ்வியற்கை நின்று நோக்கி நெடியவேள்' (கந்தபு. காமதக. 69.) 8. ஒரு வியங்கோள்துணைவிகுதி. 'பழுதுறுவகையியற்றவும்' (பிரபோத. 10. 16). 9. ஓர் அசைநிலை. 'காமக்கடன் மன்னுமுண்டே' (குறள். 1164.)

உம்பர் — 1. அப்பால். 'ஆறைங்காத நம் மகனுட்டும்பர்' (சிலப். நாடு. சஉ). 2. ஆகாயம். 'உம்பருச்சியிற்-கடலினிடு கதிர்பரப்பு கடவுளெய்து மளவும்' (திருவிளை. தண்ணீர். உஉ). 3. உயர்ச்சி. 'அலரியங்கியா-மும்பர் வான்சுடர்களுக்கு' (கந்தபு. பாயிர. ருகூ). 4. உவ்விடம். 5. தேவர். 'உம்பருய்யக்-களமாம் விடமமு தாக்கிய தில்லைத் தொல்லோன்' (திருக்கோ. உஉ). 6. பார்ப்பார். 7. மேல். 'கோலத்தனிக்கொம்ப ரும்பர்புக்கு' (திருக்கோ. சகு). 8. மேலிடம். 'மாடத்தும்பர்' (ஞானு. 9. 6). 9. தேவலோகம். 'உம்பர்க்கிடந்துண்ண' (நாலடி. 37.)

உம்பரம் — மேல்வாயிற்படி. [உதும்பர.]

உம்பரார் — மேனிலத்தில் இருக்கிறவர், தேவர். 'உம்பரார்க்கு முரைப்பருந் தகையரானுர்' (சிந்தா. கனக. கஉஉ.)

உம்பரான்—1. உயர்ந்தோன். 'உவப்பினும்பரான்' (கந்தபு. மாயைப். 33). 2. காமதேநு.

உம்பருலகு—தேவலோகம்.

உம்பநர் — 1. பொன்னுங்காணி. 'வேர்வகை சகுக மெல்லாம் விளம்புதக் குடிநீர்க் கும்ப - ரூர்விலா மிச்சா வாரை' (தைல. தைலவ. கச). 2. பொன்னுலகு.

உம்பல்—1. ஆட்டினுண் (திவா). 2. ஆண்யானை. 3. எருது. 4. எருமையாண். 5. எழுச்சி. (பிங்கல. உகஅஎ). 6. கோத்திரம். 7. மகன். 'எஞ்சலின் மதனனை யும்ப லெய்தலால்' (சேதுபு. கந்தமா. கக). 8. வழித்தோன்றல். 'தம்புகழ்நிறீஇ-யொருதாமாகிய வரவோரும்பல்' (புறநா. 18). 9. முறைமை. 10. யானை. 11. வலிமை. (சூ. நிகண். 8:28.) 12. விலங்கினுண். (சூ. நிகண். ௩: ௩o). 13. குமிழ் (மலை). 14. குடி (பிங்).

உம்பளச்சேய்—செய்த ஊழியத்துக்காக விடப்பட்ட நிலம். 'மடுத்தகுடியம்பலத்தாரும்பளச்செய்' (சரவண. பணவிடு. 186.)

உம்பளம்—1. உபகாரம். 2. கொடை. 3. வெகுமானம். 4. மானியநிலம். 5. உப்பளம். 'உம்பளந்தழீஇய வுயர்மண னெடுக்கோட்டு' (மணிமே. 24. 27.)

உம்பன்—1. கடவுள். 'நீலமேனி-யும்பனை' (காஞ்சிப். அந்தர்வே. 32). 2. உயர்ந்தோன்.

உம்பி—உன் தம்பி. 'பலதேவா வும்பியு நீயு முறங்கேல்' (நாலாயிர. திருப்பாவை. கஎ.)

உம்பிடிக்கோல்—நில அளவுகோல் வகையில் ஒன்று.

உம்பிமார்—உங்கள் தம்பிமார். 'உம்பிமாரொடும் ஒத்துவாழ்க' (பாரத. சூது. கஉஎ.)

உம்பிளிக்கை — 1. இராசாவாற்கொடுக்கப்பட்டநிலம். 2. இலவசப்பொருள். 3. மானியம்.

உம்மங்காய்—கொட்டையில்லாப் பனங்காய்.

உம்மியம் — 1. பிறவிப்பாஷாணம். 2. பாஷாணம்விளை பூமி.

உம்மெனல்—1. உடம்பாடு சினம் முதலியவற்றில் வரும் ஒலிக்குறிப்பு. 2. ஓர் அநுகரண ஓசை. 'உம்மெனத் தெழித் துரப்ப' (கந்தபு. காமத. சூஅ.)

உம்மை — 1. உம்மென்னும் இடைச்சொல். (நன். உயிரீ. உ). 2. நீரென்பது விகாரமாய் இரண்டாம்வேற்றுமையுருபே ற் ற நிலை. 3. முற்பிறப்பு. 'உம்மையதனி லுலகமுண்டோன் றன்மகணி' (கந்தபு. வள். கககக). 4. வருபிறப்பு, மறுமை. 'உம்மை-யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று - பரிவதூஉஞ் சான்றோர் கடன்' (நாலடி. துறவு. அ.)

உம்மைத்தொகை—உம்மென்னும் இடைச்சொல் தொக்குவரும் தொடர் 'இராப்பகல்' (நன். 152. உரை.)

உம்மையேந்சணி—ஓரலங்காரம்.

உம்வரம்—மேல்வாயிற்படி.

உமட்டியர்—உப்புவாணிகர்மகளிர். 'உளரிய லைம்பா லுமட்டிய ரீன்ற' (சிறுபா. சூ0.)

உமண்—உப்பமைப்போர்சாதி. (நன். 210. மயிலை.)

உமணத்தி—உமணசாதிப்பெண்.

உமணர் — 1. உப்பமைப்போர். 2. உப்புவாணிகர். 'நோன்பகட் டுமண ரொழுகை யொடுவந்த' (சிறுபா. ருகு.)

உமணன்—1. உப்பமைக்குஞ் சாதியான். (திவா). 2. உப்புவாணிகன். 'பல்லெருத்துமணர் பதிபோகு நெடுநெறி' (பெரும்பாண். 65.)

உமதகி—சணல் (மலை).

உமது—உம்முடையது.
உமம்—1. இறங்குதுறை. 2. நகரம்.
உமர் — 1. உம்மவர். 'உமர்கூறுநிதி கொணர்ந்து' (திருக்கோ. 268). 2. குதிர்.
உமரி—1. ஒரு பூண்டு(மலை). இது: நொய் தானதும், முறிக்கத்தக்கதும், உப்புச்சுவை யுடையதும், உவர்நிலத்தில் வளர்வதும், ஊறுகாய்க்குப் பிரயோகிக்கப்படுவதுமாயுள் ளது. 2. நத்தை. 3. பவளப்பூண்டு.
உமரிக்காசு—தூரி, பலகறை.
உமரிக்கீரை—கோழிப்பசளை.
உமல்—ஓலையால் இழைக்கப்பட்ட பை.
உமலகம்—அரிதாரம்.
உமலோத்திரம்—விளாம்பிசின்.
உமற்கடம்—தருப்பை (மலை).
உமறுப்புலவர் — சீறுப்புராணம்பாடிய மஹம்மதியப்புலவர்.
உமா—1. உமை. 'உமாமகேசுவரனை' (சி. சி. க: எ௦. சிவாக்). 2. குன்றி. (மூ. அ.)
உமாக்தருவி—உமாபட்சி.
உமாகட்கம்—தருப்பைப்புல்.
உமாகடம்—சணற்கொத்து.
உமாதரு—இமையமலை. [உமாகுரு:]
உமாசத்தி—உருத்திரனுக்குச் சத்தியாகிய உமை. (சி. சி. உ: எடு. நிரம்ப.)
உமாதசி—சணல். (மலை.)
உமாதம்—அறிவின்மை.
உமாதி-1. அறிவில்லாள். 2. அறிவில்லான்.
உமாபட்சி—ஒரு பறவை.
உமாபதி — 1. இருநூற்றிருபத்துநான்கு புவனங்களில் ஒன்று. (கந்தபு. கணங்கள் செல். க௦. உரை.) 2. சிவன். 'அன்றுமாபதி யவர்க் கருள்செய்தானரோ' (பாரத. பதின் மூ. உகஉ.) [உமாபதி:]
உமாபதிசிவாசாரியர் — சந்தானகுரவருள் ஒருவர்; இவர்: தில்லைவாழந்தணருள் ஒருவ ரெனவும், மறைஞானசம்பந்தருடைய சீட ரெனவும், சிவப்பிரகாசம், கோயிற்புராணம் முதலிய சிலநூல்களுக்கு ஆக்கியோரென வும், கொற்றவன்குடிவாசரெனவும் சொல் லப்படுவர்.
உமாமகேச்சுரம் — ஒரு விரதம். 'உமா மகேச் சுரமென் றொருதவ விரதம்' (பிர மோத். உமாம. 17.)

உமாமகேசமூர்த்தி— அநந்தேசுவரருபமாய் இருபத்தைந்து விக்கிரகபேதமாகிக் கிருத் தியபேதத்தைச்செய்யும் உமையோடுகூடிய மூர்த்தி. (சிவபரா. உஎ.)
உமாமகேசன்— } சிவன்.
உமாமகேசுவரன்— }
உமி—1. உமியென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. நெல் முதலிய தானியங்களின் தோல். 'பண்டு முளைப்ப தரிசியே யானாலும்-விண்டுமி போ னன் முளையாதாம்' (வாக்கு. கக.)
உமிக்கரப்பன்—ஒருவகைக் கரப்பன்.
உமிக்கரப்பான் — குழந்தைகட்கு வருஞ் சிரங்கு.
உமிக்காந்தல்—உமியினாலுண்டாய தழல்.
உமிச்சிரங்கு—சொறிசிரங்கு.
உமித்தல்—1. பதராதல். 2. பதனழிதல், சாரமறுதல். 3. கொப்புள்ங்கொள்ளுதல். 'உள்ளடியுமித்துமித்தழன்ற' (சூளா. அரசி. 93.) 4. அழிதல்.
உமித்தேக்கு—பெருக்குமிழ்.
உமிதல்—1. கொப்புளித்தல். 'நீராடும் போது நெறிப்பட்டா ரெஞ்ஞான்று-நீந்தா ருமியார்' (ஆசாரக்கோ. க௦.) 2. நாவினாற் சாரம் வாங்குதல். 3. துப்புதல்.
உமிநகம்—மிக மெல்லிய நகம்.
உமிநீர்—வாயூறு நீர்.
உமிப்புடம்-குழிநிறைய உமியைக்கொட்டி மருந்தை நடுவில் வைத்தெரிப்பது.
உமியல்—வசம்பு. (மலை)
உமியுண்ணி — ஒருவகையுண்ணி, தவிட் டுண்ணி.
உமிரி—1. உமரி (மலை). 2. அமிர்தம்.
உமிலிக்ஷாரம் — க்ஷாரவகையுளொன்று. (பதார்த்த. 1113)
உமிவு—துப்புகை. 'உமிவும் புணரார் பெரியாரகத்து' (ஆசாரக். 71)
உமிழ்தல்—1. கக்குதல். 'ஓல முடைக்கட லுமிழ்கின்ற-நீல விடத்தினை நிகர்மெய்யார்' (கந்தபு. சகத்திர. உ.) 2. காலுதல். 'விலயி வில்லுமிழ் விரிகதிர்மணி' (நைட. நாட். ௩.) 3. கொப்புளித்தல். (திவா) 4. சொரிதல். 5. தெவிட்டல். (திவா). 6. துப்புதல். 7. வெளிப்படுத்துதல். 'உள்ளத்தால் உமிழ வேண்டா. (சீவக. 2149).

உமிழ்நீர்—வாயூறுநீர்.

உமிழ்நீர்பெருக்கி—கொடுவேலி.

உமிழ்வு — 1. உமிழ்நீர். 2. துப்புகை. 'உமிழ்வோடிருபுலனும்' (ஆசாரக். உஅ.) 3. உமிழப்படுவது.

உமேசமூர்த்தி—உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களையும் படைத்துக் காத்துத் துடைக்கும்வகையாய நாநாபேதம்பெற்ற தமது திருவருளாகிய சத்தி உமையம்மையாக வாமபாகத்திலிருக்கக்கொண்டு வீற்றிருந்த மூர்த்தி. (சிவபராக். ௩௧. பக்.)

உமேசன்—சிவன். [உமேஶ:]

உமை—1. அமைதி. 2. காரகத்தி. 3. கீர்த்தி, புகழ். 4. துர்க்கை. 5. பிரகாசம். 6. மஞ்சள். 7. மநோன்மனியிலாயிரத்தி லொருகூற்றிற் றோன்றி உருத்திரருக்காகிய சத்தி. (சி. சி. உ: எடு. மறை.) 8. உமையம்மை, பார்வதி. 'உண்ணாமுலையுமைமைந்தா சரணம்' (கந்தரங். உ.) 9. நெல்வகையில் ஒன்று. 10. சணல். (3. 5. 6. 9. நாநார்த்த)

உமைகரநதி—கங்காநதி. [உமாதேவியின் கையினின்று வந்ததென்றபடி.] (பிங்).

உமைகோணம்—நாற்பத்துமூன்றென்னும் எண்ணைக் கருதும் ஒரு குறிப்புமொழி.

உமைத்தல் — தினவுதின்னல். 'உமைத் துழிச் சொறியப்பெற்றும்' (சீவக. 2617).

உமைமகன்—1. முருகன். 'வேலையங் தலைவன் காலை-பொன்பக லாடி காட்ட வுமைமக னங்க னூற்றான்' (கந்தபு. திருவவ. ௧௧.) 2. விநாயகன். 3. வீரபத்திரன். (பிங்).

உமையவட்பெற்றோன்—இமவான். (பிங்)

உமையவள்—பார்ப்பதி. 'கொடியினெல்லிய நுசுப்புடை யுமையவள் குறிப்பாலே' (கந்தபு. தவங்காண். அ.)

உமையாள்—1. சர்வுக்காரம். [இதனைச் சவுக்காரம் என வழங்குவர்.] 2. பார்ப்பதி. 'இன்னமும் உமையாள் நோற்றிடு மாங்கே' (கந்தபு. திருநகரப். அ௬.) 3. மயிலிறகு.

உய்-உய்யென்னேவலும், தெரிநிலைவினைப் பகுதியும், வினைத்தொகையும் 'உய்வகையிலாத பாவி' (திருவிளை. மாபாத. ௩௪.)

உய்க்கை—உய்த்தல்.

உய்கதியால்—உய்தடி.

உய்கை—1. விக்கிநங்களினின்று நீங்குகை, துன்பநீங்குகை. 'உய்கை பொருளா வொருவர்க்கு மோருதவி-செய்கை யிலனேல்' (கந்தபு. காம. ௫௭.) 2. ஈடேறுகை.

உய்ஞ்சனன்—உய்ந்தனன். 'உய்ஞ்சனனினி யெனவோதே' (கந்தபு. மார்க். ௨௦௨.) [இவ்வினைமுற்றில் நகர தகரங்களுக்குப் போலியாக ஞகர சகரங்கள் வந்தன.]

உய்த்தர—செலுத்துதலைச்செய்ய. 'கையகொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர' (முல்லைப். கடு.)

உய்த்தல்—1. அடைவித்தல். 'வளைமுதல் வேட்டோர்க் குய்த்து' (தணிகைப். நாட். உஅ.) 2. அனுப்புதல். 'பாவகஞ் செய்து தீட்டிப் பட்டிகை யோலை யுய்ப்பான்' (திருவிளை. மெய்க்கா. ௧௩.) 3. அனுபவித்தல். 'காதல காத லறியாமை யுய்க்கிற்பின்' (வள். ௬௪௦.) 4. அறிவித்தல். 'செவ்வழி யாழினூறுந் தீஞ்சொலாட் குற்ற தெல்லா-மவ்வழி யரசற் குய்த்தார்' (சிந்தா. பதுமை. ௨௪௨.) 5. ஆணைசெலுத்தல். 'கடன்ஞாலமுழுதுமுய்த்திடு மகவருளென' (பாரத. சம்பவ. ௧௦.) 6. குறிப்பித்தல். 'உள்ளமெய்த் தன்மைமுன்னையுண்மையுந் தோன்றவுய்ப்பார்' (பெரியபு. தடுத்தா. ௧௩௬.) 7. செய்தல். 'உய்த்திடுஞ்செய்திகெட்டே' (சி. சி. உ. ௧அ.) 8. செய்யுளிலில்லாதசொல்லைவருவித்துரைத்தல். (தண்டி. உ௧.) 9. செலுத்துதல். 'கொலையுடைநெடுங் கூர்வாளி கோடிகோடிகணின்றுய்ப்ப' (கந்தபு. சிங்கமுகா. ௧௧௨.) 10. தாங்கிக்கொண்டுபோதல். 'கயவர்தாங் கேட்ட-மறைபிறர்க் குய்த்துரைக்க லான்' (வள். ௧௦௭௬.) 11. நடத்துதல். 'உய்த்திடு மிச்சைசெய்தி' (சி. சி. க: ௬௨.) 12. முத்தியடைவித்தல். 'உய்த்த வியோமரூபர்' (சதாசிவ. உ௧.) 13. நீக்குதல். 'பல்விளக்கிருளின் றுன்னறவுய்க்கும்' (திருக்கோ. 175.) 14. ஆயுதம்பிரயோகித்தல். 'அம்புய்க்கும்போர்' (கம்பரா. மாரீச. 186). 15. கொண்டுபோதல். வேட்டுவர் உய்த்தனரோவென' (சீவக. 425). 16. கொடுத்தல். 'மீளியாளர்க்கு மிகவுய்த்தன்று' (பு. வெ. 3. 9. கொளு).

உய்த்தலில்பொருண்மை — வைதருப்ப நெறியில்வரும் பத்துக்குணங்களுள் ஒன்று; கவிஞன் தன்னாற் கருதப்பட்ட பொருளை விளங்க விரிக்குஞ் சொல்லையுடையதாய்ப் பிறிதுமொழிகூட்டியுரைக்கும் பெற்றியின்றி வாத்தொடுப்பது. 'கருதியபொருளைத் தெரிவுறவிரித்தற்-குரியசொல் லுடைய துய்த்த வில் பொருண்மை' (தண்டி. பொது. உக.)

உய்த்தறிதல்—ஆராய்ந்தறிதல்.

உய்த்தன்று—கொடுத்தது. (புறப்பொ.)

உய்த்துக்கொண்டுணர்த்தல் — முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; அஃது: ஒருபொருள் சொல்லியக்கால் அதன்கண்ணே மற்றொருபொருளினையும் கொணர்ந்து கொண்டறியுமாறு தோன்றச்செய்தல். (தொல். பொருள். ௬௬௬.)

உய்த்துணர்தல்—ஆராய்ந்தறிதல். 'உய்த்துணர்ந்தவ ருரைத்த நீதிமேல்' (சூளா. சீய. ௩எ.)

உய்த்துணர்மொழி — செய்யுட்குற்றத்தொன்று. (யாப். வி. 525.)

உய்த்துணர்வு-1.'ஆராய்ந்துணரும் அறிவு. உய்த்துணர்வில்லெனின்' (நீதிநெறி. 5) 2. ஞானம். 'உய்த்துணர்வென்னும் ஒளி' (திவ். இயற். 3. 94.)

உய்த்துணரவைப்பு — முப்பத்திரண்டு உத்திகளில் ஒன்று; அது: சில சூத்திரவிதிகளைக்கொண்டு ஆராய்ந்து பொருளுணரவைத்தல். (நன். பொதுப்பா. ௧௭.)

உய்தக்கோர் — பிழைக்கும்வகையோர். 'எவ்வினைஞரேனு-முய்தக்கோ ராதல் செய்கை யுன்னருள் விளையாட் டன்றோ' (திருவிளை. மாபாத. ௩௬.)

உய்தடி—கிளைக்கும் வேலிக்கொம்பு.

உய்தல்–1. ஈடேறுதல். 'யாங்க-ளுய்ந்தே பிறவிப் பயன்பெற்றன மோங்க' (கந்தபு. தெய்வ. ௧அ.) 2. உயிருடையதாய்க் கிளருதல். 3. சீவித்தல், பிழைத்தல். 'வறுங்கடும் புய்தல் வேண்டி - னின்னே சென்மதி' (புறநா. ௧அ௧.) 4. தாழ்தல். 5. நீங்குதல். 'தாவலுய்யுமோ' (பதிற்றுப். 41-17.) 6. தப்புதல். 'சார்புடையாராயினும் உய்யார்' (குறள். 900).

உய்தி—1. ஈடேறும்வழி. 'இதன்கணவிணவுற்றுமுய்தியறியார்' (தணிகை. அகத். 290.) 2. உயிர்வாழ்தல். 3. பரிகாரம். 4. நீங்குதல். 'செய்திகொன்றோர்க் குய்தி யில்லென அறம்பாடிற்றே' (புறநா. 34. உரை.)

உய்ப்பு—உய்த்தல்.

உய்ம்மணல்—கருமணல்.

உய்யக்கொண்டான் — 1. எருமைமுல்லை. (மூ. அ.) 2. கொய்யாமரம். (மூ. அ). 3. உஜ்ஜீவிக்கச்செய்தவன்.

உய்யல்—1. ஏறுதல், கேட்டல். 'அயற்செவிக் - குய்ய லாவண்ண முள்ளத்த டக்கினன்' (திருவிளை. மாபாத. ௯.) 2. சீவித்தல். 'ஓடியுமுய்யலாகா' (கந்தபு. சூரபன். ௬௪.)

உய்யலின்முல்லை — கற்பு. 'உய்யலின் முல்லைவழங்கியுவப்பால்' (இரகு. கடி. ௩௦.)

உய்யவந்ததேவநாயனர் — 1. சைவசித்தாந்த சாத்திரங்களுள் திருவுந்தியாரியற்றியவர். 2. சைவசித்தாந்த சாத்திரங்களுள் திருக்களிற்றுப்படியாரியற்றியவர்.

உய்யாநகம்—உய்யாகம். [உத்யாநக.]

உய்யானம் — 1. அரசர்விளையாடுங்காவற்சோலை, சிங்கார வனம். 'உய்யானத்தி னுறு துணை மகிழ்ச்சியும்' (சிலப். ஊர்கா. ௯௭.) 2. பூந்தோட்டம். 'அளிமலரோடையு மலங்குய்யானமும்' (தணிகை. நகரப். ௩௫.)

உய்வது—உய்யத்தக்கவழி. 'உய்வது வேறிலை' (கந்தபு. மாயையு. ௧௪.)

உய்வனவு—1. ஈடேற்றம். 2. சீவனம். 3. தழைவு. 4. வாழ்வு.

உய்விடம் — உயிர்கொண்டுபிழைப்பதோரிடம். 'உய்விடமறியேமாகி' (குறிஞ்சிப்பா. ௧௬௬.)

உய்வித்தல்—உய்யச்செய்தல். 'உன்னை - யுய்விப்பனேல்' (வைராக். சத. தோத்திர. ௪௪.)

உய்வு—1. உயிர்சீவித்தல். 'எரிபாற்சுடப்படினுமுய்வுண்டாம்' (வள். அ௯௬.) 2. நீக்கமின்று நீக்கும் வாயில். 'எந்நன்றிகொன்றார்க்குமுய்வுண்டாம்' (வள். ௧௧௦.) 3. ஈடேற்றம்.

உய்வை—காடு. (ஆ. நிகண். ௪.)

உயக்கம் — 1. உபத்திரவம். 2. துக்கம். 3. வருத்தம். 'உயக்கமோப்புகாந்தருவத்தையேய்ந்து' (தணிகை. அகத். உ௧௪). 4. வாட்டம்.

உயங்கல்—உயக்குதல்.
உயக்குதல்—வருத்தல்.
உயங்கல்—உயக்குதல்.
**உயங்குதல்**—1. மனக்தளர்தல். 2. வருந்தல். 'உயங்கினு ளென்றுங் குசாதிர்' (கலி. கசாஉ). 3. வாடுதல், சோர்தல். 'வாளியே றுண்டதோர் மயிலின்வீழ்க் துயங்கினுன் மயங்கினுள்' (திருவிளை. வன்னியுங். கஉ). 4. மெலிதல். 'உயங்குசாய்சிறுபுறம்' (அகநா. 19). 5. துவளுதல். 'உயங்குசெங்கழுநீர்' (திருவாத. பு. மண்சுமந்த. 4.)
உயசதி— } வெள்ளைப்பாஷாணம்.
உயந்தி— }
**உயர்**—1. உயரென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. குன்றி (மலை). 3. வருத்தம். 4. உயர்ச்சி. 'உயர்மிக்க' (சீவக. 473.)
**உயர்ச்சி**—1. அடியிலிருந்து மேனோக்கி எழுந்த அளவு. 2. அடியிலிருந்து மேனோக்கி எழும்நிலை. 'அத்தபதி தன்குறிப்பா லமைத்த பெரு மண்டபத்தி னளவு நீளம்-வித்திரமோ டுயர்ச்சியெனும் வனப்பனைத்துங் கண்டோர்கள் வியந்து கூற' (பாரத. இராச. அ). 3. மேல். 4. மேன்மை.
**உயர்சொல்** — மேன்மைப்படுத்திச்சொல் லுஞ்சொல். (தொல். சொல். சேனு. உஎ.)
**உயர்த்தல்**—1. அதிகப்படுத்துதல். 'விலையையுயர்த்தினுன்' (வழக்). 2. இசையெழுப்புதல். 3. உருவஞ்சித்திரித்தகொடியை மேலாகத் தூக்குதல். 'வலனுயர்த்த வண்ணலஞ்சேல்' (நைட. பாயிர.) 4. குவித்தல். உள்ளமீன் குலங்களெல்லாந் தடங்கரையின் வரையேபோ லுயர்த்த வூற்றான்' (கந்தபு. தேவரையே. எ.) 5. மேலுக்கெடுத்தல், உயரச்செய்தல். 6. மேன்மைப்படுத்துதல். 7. மேனிலைக்குக் கொணர்தல்.
**உயர்த்தி** — உயர்ச்சி, மேன்மை. 'அநகவுயர்த்திக டாழ்த்தியறையென' (நல். பாரத. நிருட்டினுர்ச். அங.)
**உயர்த்துகை** — உயர்த்துதல். 'உனைத் தனை யேயொக்க வித்தனை நாளி னுயர்த் துகையே' (திருநூற். அடு.)
உயர்த்துதல்—உயர்த்தல்.
**உயர்தல்**-1. அதிகப்படல். 'மாற்றுயர்ந்த பொன்' 2. இறுமாப்படைதல். 3. நிமிர்தல். 4. மேலெழுதல். 'வடபுவி தாழ்ந்து தென்பா லுயர்தலும்' (கந்தபு. பாயிர. சுங). 5. மேன்மையுறல். 6. வளர்தல். 7. நீங்குதல். 'இனிவரின் உயருமற்பழியென' (கலித். 129. 17)
**உயர்திணை**—1. உயர்ந்தசாதி. 2. மக்கள், தேவர், நரகர் என்னும் முப்பாலாருள் ஒருவர் பெயராயாவது அவர் தொழிலையுணர்த்தும் வினையாயாவது வருஞ்சொல். (நன். பெயர். ச.)
**உயர்ந்ததுளச்சி** — பவளப்புற்றுப் பாஷாணம்.
உயர்ந்தவர்—உயர்ந்தோர்.
உயர்ந்தவன்—1. காமன். 'உயர்ந்தவன் விழவினுள் விறலிளையவரோடு விளையாடு வான்மன்னே' (கலி. ருo.) 2. சிறந்தோன். 3. நெடியவன். 'உயர்ந்தவர் குறளானேர்' (கந்தபு. மார்க். 64).
**உயர்ந்தோர்**—1. அறிஞர். 'உயர்ந்தோர் புகல்-வாசகாதிகள்கற்றும்' (பாரத. ஈசக. கரு.) 2. உயர்குலத்தோர். 3. தேவர். 'வேள்வி வேட்டனை யுயர்ந்தோ ருவப்ப' (பதிற்றுப். 74) 4. நெடியவர். 5. பார்ப்பார் (திவா). 6. முனிவர் (திவா). 7. பெரியோர் (திவா). 8. அந்தணர் முதலிய மூவர். (தொல். பொருள். 26).
உயர்நிலத்தோர்—தேவர். (சூடா).
**உயர்நிலம்**-1. உபரிகை. 2. தேவலோகம். 'உயர்நிலம் அடைந்தான்' (உபதேசகா. உருத்திராக்க. 90). 3. மேடு (பிங்).
உயர்நிலை-1. தெய்வத்தன்மை. 'அணங்கு சாலுயர்நிலைதழீஇ' (திருமுருகாற். உஅக.) 2. தேவலோகம். (பிங்கல. க.) 3. மேலான பதவி. 'உயர்நிலை - வான்றோய் மாடத்து' (பெரும்பா. ருருஉ.) 4. உபரிகை.
உயர்நிலையோர்-தேவர். (பிங்கல. களஎ.)
உயர்நிற்றல்—உச்சமாதல். 'அங்கி உயர் நிற்ப' (பரிபா. 11. 7.)
உயர்ப்பு—1. அதிகப்பாடு. 2. நிமிர்ச்சி. 3. வளர்ச்சி.
உயர்பிறப்பாளன் — அந்தணன். (சிலப். 15. 48).
உயர்பு—1. உயர்வு. (சூடா). 2. உயர்ந்த இடம். 'கல்லுயர்பேறி' (குறுந். 275) 3. மேன்மை. 4. உயர்வானது.

உயர்மிசையவர்—தேவர் (சீவக. 966).

உயர்மொழி — உயர்த்துக்கூறுங் கூற்று. 'உயர்மொழிக் கிளவியும் உரிய' (தொல். பொருள். 240)

உயர்வித்தல் — 1. அதிகப்படுத்தல். 2. உயர்த்துவித்தல். 3. எடுப்பித்தல்.

உயர்வு—1. அதிகம். 2. உயரம். 'உயர் வகலந் திண்மையருமையிந் நான்கி-னமைவர ணென்றுரைக்கு நூல்' (வள். எசஈ.) 3. மேன்மை. 'சேரு மைந்தினு முயர்வினுந் தேசினுஞ் சிறந்து' (பாரத. குருகுல. உ0.) 4. உயர்வுநவிற்சியணி (திவா). 5. வருத்தம் (மாறனலங். 262. மேற். 738)

உயர்வுசிறப்பு—உயர்ச்சியைச்சிறப்பித்தல்.

உயர்வுசிறப்பும்மை—உயர்ச்சியைச் சிறப்பிக்கும் உம்மையிடைச்சொல்.

உயர்வுநவிற்சியணி—ஓரலங்காரம்; அஃது: ஒரு பொருளானது தன் சொல்லாற் சொல்லப்படாமற் கேட்போரை மகிழ்விப்பதும் இஃ தஃதன்றெனத்தெரிந்தும் தன்னிச்சையால் அஃதாமெனக் கொள்ளப்படுவதுமாம்.

உயர்வுவமை—இயைபின்மையணி (வீர சோ. அலங். 14).

உயரம் — 1. அடியிலிருந்து மேனோக்கி எழுந்த அளவு. 'முப்பது கோடிமே லிரண் டிலக்க மொழிந்தமுன் னெல்லையி னுயரம்' (த்ணிகை. அகத். சசக.) 2. மிகுதி. 3. மேல். 4. உயர்நிலை. 5. உச்சம்.

உயராடு—வெள்ளாடு. 'உயராட்டுப்பாற்-றுகையளவைந் தெரிமுகிபால் வாளமெல் லாஞ் சுடரில்வடி' (தைல. தைலவ. கஉ.)

உயரி — 1. உயரமானது. 2. உயர்த்து, எடுத்து: எனப் பொருள்படும் ஒரு வினையெச்சம். 'விசையவெல்கொடியுயரி' (முல்லைப்பா. கூக.)

உயருநட்சோதகம் — மொந்தன்வாழைக் கிழங்குச் சாறு. 'கன்னியாகுமரியமிர்தஞ் சுவச்சம்மொவொருகட முயருருட்சோதகம்' (தைல. தைலவ. ௬௫.)

உயல் — 1. உய்தல். 2. உயிர்வாழ்தல். 3. தப்புகை, நீங்குகை. 'உயலாகா வூழ்த் திறத்த வென்னோர்' (நீதிநெறிவிளக். ரு0.) 4. செய்யாதொழிதல். 'உயற்பாலதோரும் பழி' (வள். சO.) 5. உளதாகை. 'செல்வம் உயற்பால தன்றிக் கெடும்' (குறள். 437).

உயலுதல்—அசைதல். 'உயலுங்கோதை' (பதிற்றுப். 52. 17.)

உயவர்—வருந்தினவர்.

உயவல்—1. ஆலோசனைசெய்தல். 'உன் றுதை தமியேனை டுயவாமல்' (பாரத. புட்பயா. கஉக.) 2. நினைத்தல். 3. வருத்தம். 'சிதாஅர் ஓம்பி யுடுத்த வுயவற் பாண' (புறநா. சாக.)

உயவு-1. சீவிக்கச்செய்யும்மருந்து. 'உய்யா வருநோய்க் குயவாகும் மைய - லுறீஇயா ளீத்தவிம் மா' (கலி. கஙக.) 2. துன்பம். 3. நினைப்பு. 4. வருத்தம். 'உள்ளுதொ றுடையு நின் னுயவுநோய்க் குயிர்ப்பாகி' (கலி. ௬௫.)

உயவுத்துணை—உசாத்துணை. 'சுரஞ்சென் மாக்கட் குயவுத்துணை யாகுங் கல்வரை.' (குறுந். 207.)

உயவுதல்-1. வருந்துதல். 'அடுகளி றுயவுங் கொடிகொள் பாசறை' (புறநா. சாக.) 2. வண்டிச்சக்கரத்துக்கு மையிடுதல். 'தஞ்சாகா டேனும், உயவாமற் சேறலோ வில்' (பழ. 168.) 3. உசாவுதல். 'வஞ்ச மைந்தரோ டுயவி' (பாரத. சஞ்சய. 2)

உயவுநெய் — சகடத்துக்கு இடும் வைக் கோற்கரிப்பொடிகலந்த எண்ணெய். 'அஃ தால், உயவுநெய் யுட்குளிக்கு மாறு' (பழமொழி. 385).

உயவை—1. காக்கணங்கொடி. 'மாறுகொள வொழுகின ஊறுநீ ருயவை' (மலைபடு. கஙசா.) 2. காட்டாறு. (பிங்கல. ௬உ0க.) 3. வெண் கருவிளை (பிங்). 4. காடு (பிங்).

உயா—1. உயங்கல், வருத்தம். 'உயாவே யுயங்கல்' (தொல். சொல். 369.) 2. வினா. (மணிமே.)

உயாவல்—உசாவல், விசாரித்தல்.

உயாவுந்துணை—உசாத்துணை. 'உயாவுத் துணை யாக' (மணி. 20. 93).

உயிர்-1. சரீரத்துக்கன்னியமாய்ச் சரீரத் திலே பொருந்தினின்று இச்சாஞானக்கிரியைகளையுடையதாய் இன்ப துன்பப் பலங்களைப் பொருந்திநிற்கும் வஸ்து. 'உயிரெனப் படுவ திந்த வுடலின்வே றுளதா யுற்றுச், செயிருறு மிச்சா ஞானச் செய்திக ளுடைய தாகிப், பயில்வுறும் இன்ப துன்பப் பலங்களை நுகரும்' (சி. சி. ௬: உ.) 2. இலாமிச்சை.

3. உதயலக்கினம். 'பதியுறு நல்ல வுயிர்க்கு' (விதான. சாதக. 19.) 4. உயிர்போல அருமையானவன். 'நன்றெ னுயிர்போக நானிருப்ப தேயிங்ஙன்' (கந்தபு. அசுரர்யா. கக௦.) 5. உயிரென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 'உயிர்கான்முன் வளியுளர் கிளர்வலி விளிவெய்த' (திருவிளை. நாகமெய். 9). 6. ஓசை. 'வள்ளுயிர்ச் சீறியாழ்' (புறநா. கஙௐ.) 7. காற்று. 'நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன் - புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்' (திருவாச. திருத்தோணோக்க. ௫.) 8. சீவன் (திவா). 9. சுவாசம். 'அழலின்பொறியாருயிர்வெம்பணி' (வாண. 213.) 10. நீரைத் துணைக்காரணமாகக்கொண்டு உய்யும் புல் மரம் முதலியன. 11. பிராணவாயு. 'வைகரியி லுதானன்-பந்தமுறு முயிரணைந்து வந்தமொழி' (சிவப்பிர. 2: 20.) 12. பிராணி. 'எல்லா வுயிருந் தொழும்' (குறள். 260). 13. உயிரெழுத்து. 'உயிரும் உடம்புமாம் முப்பதும்' (நன். 59) 14. ஒருநாழிகையில் 4320-ல் ஒரு கூறு. (கணக்கதி. பக். 13.)

உயிர்க்கட்டை—உடம்பு.

உயிர்க்கணம்—1. இயமானகணம். 2. உயிரெழுத்துக்களின்கூட்டம்.

உயிர்க்கயிறு—உறுதியுள்ள கயிறு. 'வடம்போலேயிருக்கிற வாசுகியை வலிய உயிர்க் கயிறாகச் சுற்றி' (திவ். பெரியாழ். 1. 6. 11. வ்யா. பக். 135).

உயிர்க்கருணேசம்—இச்சாசத்தி.

உயிர்க்கழு—ஒருவகைக் கழு. (திருவாலவா. 38. 27)

உயிர்க்கிழவன் — 'தன்னுயிர்க் கிழவனை யடைந்து' (திருவிளை. மலயத். 9.)

உயிர்க்குதல்—உயிர்த்தல்.

உயிர்க்குயிர்-1. கடவுள். 2. சிவன். 'உரைத்த விப் பாக பேத முயிர்க்குயி ருணர்ந்தார்தம் மை-யருத்தினர்' (சிவதரு. பலவிசிட்ட. 22.)

உயிர்க்கொலை—1. சீவவதை. 2. சித்திரவதை. 'நற்கொலையாகக்கொல்லவொண்ணாது உயிர்க்கொலையாகக்கொல்லவேணும்' (ஈடு. 9. 9. 1)

உயிர்குடித்தல்—கொல்லல். 'வானவரை யெல்லாந்-தின்றுயிர்குடித்து' (கந்தபு. சூர. வதை. சடு௫.)

உயிர்கொள்ளல்—உயிர்வாங்குதல்.

உயிர்ச்சூது-சூதாடலில் ஒருவகை; அஃது: ஆடு, கோழி முதலியவைகளைப் போருக்குப் பொருத்தி யாடுதல். (மிரு-ச. உஉஅ.)

உயிர்த்தல் — 1. உயிர் தாங்கியிருத்தல், உயிரடைதல். 'உயிர்ப்பதுன் பணியி னாலே' (சிந்தா. கனக. சூஅ.) 2. உள்ளேநின்று வெளிவரச்செய்தல். 'பணிலங்களுயிர்த்தவொண் முத்தும்' (நைடத. நாட்டுப். 8). 3. பெருமூச்செறிதல். 'உரைதடுமாறா வுயிர்த்து' (பாரத. பதினெட். களங.) 4. ஈனுதல் 'பனிவரை யுயிர்த்த.' (நைடத. நாட்டுப். க.) 5. மூச்செறிதல். 'உன்னு நெடிதே யுயிரா வுரைக்கின்றான்' (கந்தபு. காமதக. 37). 6. மோத்தல். 'கண்டுகேட்டுண்டுயிர்த்து' (வள். 1101). 7. விடுதல். 8. கமழ்தல். 'கொங்குயிர்த்த பூந்தடத்துலாய்' (நைடத. நாட்டுப். 5). 9. தொழிற்படுதல். 'அவ்வுடலி னின்றுயிர்ப்ப வைம்பொறிகள்' (சி. போ. 3. 4). 10. இறந்துபடுதல். 'உயிர்ப்பதுமோம்பி' (சீவக. 1989) 11. கூறுதல். 'விட்டுயிர்த் தழுங்கினும்' (தொல். பொருள். 111.) 12. பெருக்குதல். அம்மூவாறு முயிரொடு முயிர்ப்ப' (நேமிநா. 3. உரை.)

உயிர்த்தானம்-1. உதயலக்கினம், சென்மத்தானம். 2. உயிர்நிலை. 3. உயிர்ப்பிச்சை.

உயிர்த்தீ—உயிருக் காதாரமான (உதராக்கினி காமாக்கினி கோபாக்கினி என்னும்) மூன்றுவகைத் தீ. (சூடா.)

உயிர்த்துணை — 1. ஆபத்திலுதவுவோன். 2. ஆபத்திலுதவுபவள். 3. கடவுள். 4. கணவன். 5. பிராணசினேகன். 'ஆருயிர்த்துணையாய் வந்தமா மரகத வடிவோன்' (பாரத. இராச. உஅ). 6. பிராணசினேகிதை. 7. மனைவி.

உயிர்த்துணைவன் — 1. உயிர்த்தோழன். 'உங்கள்குலத் தனிநாதற் குயிர்த்துணைவன்' (கம்பரா. குகப். 25.) 2. கணவன்.

உயிர்த்துணைவி — 1. உயிர்த்தோழி. 2. மனைவி. 3. சரசுவதி (பிங்).

உயிர்த்தூண்டிற்காரன்-ஒருதுர்த்தேவதை.

உயிர்த்தெழுதல்-1. அடங்கிப்போன பிராணன் வரப்பெற் றெழுதல். 2. செத்தவன் மீட்டும் உயிர்பெற் றெழுதல்.

உயிர்த்தோழன்—பிராணசினேகன்.

உயிர்த்தோழி—பாங்கி.

உயிர்தருமருந்து–மிருதசஞ்சீவினி (திவா).

உயிர்நிலை — 1. உட்கருத்து. 2. உடம்பு. 'கள்வார்க்குத் தள்ளா முயிர்நிலை' (வள். 290) 3. உடலில் உயிர்நிற்கும் விசேடத்தானம். 'நீ நின துயிர்நிலைகூறா யெனக்கென் னாமுனம்' (பாரத. பதினெட். 173). 4. ஆத்மஸ்வரூபம். 'மெய்யாம் உயிர்நிலையும்' (திவ். திருவாய். தனியன்). 5. பிராணாயாமம். (குறள். 359. உரை.)

உயிர்ப்பழி—1. உயிர்க்கொலைசெய்த குற்றம். 2. பிரமகத்தி.

உயிர்ப்பன—சுவாசமுடையன.

உயிர்ப்பித்தல்—பிழைப்பித்தல்.

உயிர்ப்பிராணி—சீவனுள்ளது.

உயிர்ப்பு–1. இளைப்பாறுகை. 'நின் னுயவு நோய்க் குயிர்ப்பாகி' (கலி. ௩௫). 2. உயிரடைகை. 3. காற்று. 'ஒல்லென வீழ்வுறு முயிர்ப்பின் காவலன்' (கந்தபு. திருவவ. 13). 4. சுகந்தம். 'உயிர்க்குமெல் லுயிர்ப்பெதிரோடி' (பாரத. குருகுல. ௯௧). 5. சுவாசம். 'மண்டலம்பயி லுரகர்பே ருயிர்ப்பினான் மயக்கி' (பாரத. குருகுல. ௩). 6. ஒரு கால அளவு. 'கணம்வளி யுயிர்ப்புத் தோவம்' (மேருமங். 94). 7. செயலறவு. 'கருதலா ராய்ச்சி விரைவுயிர்ப் பெனாஅ' (தொல். பொருள். 260.)

உயிர்ப்புவீங்கல் — பெருமூச்சுவிடுதல். 'உண்ணினைப் போவிநின் றுயிர்ப்பு வீங்கினாள்' (கம்பரா. மீட்சி. 70.)

உயிர்ப்புனல்—இரத்தம். 'புண்ணிடைப் பொழி யுயிர்ப்புனல் பொலிந்துவரவும்' (இராமா. விராதன். ௪௪.)

உயிர்ப்பொறை — உடம்பு. 'உழந்துவிழி பெற்றதொ ருயிர்ப்பொறையும்' (கம்பரா. உருக்காட். 65.)

உயிர்பிழைத்தல்—1. உயிர்வாழ்தல். 2. தப்பிப்பிழைத்தல்.

உயிர்போதல் — 1. இறத்தல். 2. அறிவு போதல். 'உயிர்போ யிருந்தான் மாதோ' (சீவக. 2196.)

உயிர்மருந்து–1. மிருதசஞ்சீவினி. 'தெளிந்தவ ருயிர்மருந்தாய்' (திருவாலவா. 43. 17). 2. சோறு. 'அருந்துயிர் மருந்துமுன் னங் கையிற்.கொண்டு' (மணிமே. 25. 160.)

உயிர்மாய்த்தல்—1. கொலைசெய்தல். 2. தற்கொலை.

உயிர்மெய்–மெய்யும் உயிருங் கூடிப்பிறந்ததாய் ஒற்றொலி முன்னும் உயிரொலி பின்னு முடையதாய் உயிர்மாத்திரையே மாத்திரையாய்வரும் எழுத்து. 'புள்ளிவிட் டவ்வொடு முன்னுரு வாகியும் - ஏனை யுயிரோ டுருவு திரிந்தும் - உயிரள வாயதன் வடிவொழித் திருவயிற் - பெயரொடு மொற்றுமுன் னாய்வரு முயிர்மெய்' (நன். ௮௯.)

உயிர்வாழ்க்கை—சீவனம்.

உயிர்வாழ்தல் — உயிரோடுகூடிவாழ்தல். 'இரந்து முயிர்வாழ்தல் வேண்டின்' (குறள். 1062.)

உயிர்விடுதல்–இறத்தல். 'மட்டிவன் வாரானென் றுயிர் விடுவான் வனக்கனல் வளர்த்து' (ஞானவா. சித்தன். ௨௪.)

உயிர்வேதனை — உயிருக்கு இடர்விளைத்தற் காரணம்; அக்காரணங்கள்: அனல், சீதம், அசனி, புனல், வாதம், ஆயுதம், நஞ்சு, மருந்து, பசி, தாகம், பிணி, முனிவருமை: என்பன. (சூ. நிகண். ௧௨: ௧௧௨.)

உயிர்வைத்தல்—இறத்தல். 'அழனிலை யத்தத் தசைந்துயிர் வைப்ப' (பெருங். இலாவாண. 9. 129.)

உயிரவை–உயிரோடுங்கூடியவுலகம். 'உயிரவையொடுங்கி' (சி. சி. ௧: ௩௨. சிவஞான.)

உயிரளபு–தன்மாத்திரையின் மிக்கொலிக்கும் நெட்டுயிர். 'உயிரள பெழுமூன்று' (நன். எழு. ௬௧.)

உயிரளபெடை—உயிரளபு.

உயிருண்ணல்—உயிரைக்கொள்ளல், உயிரைக்கொல்லல். 'காலனா ருயிருண்ண' (சி. சி. பர. உலோகா. மறு. ௧.)

உயிருதவி — 1. ஆபத்தில் உதவுகை. 2. உயிர்கொடுத்துதவுகை.

உயிருளுயிர்—கடவுள்.

உயிரெழுத்து—உயிர்போலத் தனித்தியங்கும் ஆற்றலுடைய அகாமுதல் ஔகாரம் இறுதியாயுள்ள பன்னிரெழுத்துக்கள்.

உயிரொழித்தல்—கொல்லல்.

உயிரோளித்தல் — உயிர்போனதுபோற் காட்டல்.

உயில்—மரணசாசனம்.

உயிறு—இலாமிச்சை (மலை).

உயுத்தம் — யுத்தம். 'தானவருயுத்தமும்' (பாரத. பதினெட். ௬௮.)

உயோகுதுயில்-யோகநித்திரை. 'ஆலினிலை யதன்மேற், பைய வுயோகுதுயில் கொண்ட பரம்பரனே' (திவ். பெரியாழ். 1. 5. 1.)

உரக்க-1. உறுதியாக. 'அவற்றை யுரக்கப் பிடித்துக்கொண்டேன்' (ஈடு. 10. 8. 3. வ்யா. பக். 263). 2. குரலோங்க.

உரககேதனன் — துரியோதனன். 'வந் தடுத்தா னுரககேதனன்' (பாரத. ஐந்தாம். ௪௦.)

உரககேது—துரியோதனன். 'மறனுடை யுரக கேது வஞ்சம ரழிந்தவாறும்' (பாரத. நிரைமீ. ௧௧௪.)

உரகடல்—பெருங்கடல்.

உரகதம்-பாம்பு. 'உரகத வாரந் தோற்று துயர்மறைப் பரிமேல் வந்தார்' (திருவிளை. நரிபரி. ௮௫.)

உரகதுவசன்—துரியோதனன். 'சொல்ல வாவுரக துவச' (பாரத. நிரை. ௧௧௨.)

உரகபந்தம் — சித்திரகவிகளுள் ஒன்று; அது: நாகபந்தம்.

உரகபந்தனம்—நாகபந்தம்.

உரகம் — 1. நாகமல்லிகை. (மலை). 2. பாம்பு. 'வாளெயிற் றுரகமே' (பாரத. ஆறும். ௧.) 3. மல்லிகை.

உரகமல்லி—நாகமல்லிகை (மலை).

உரகர்—1. சமணர். 2. நாகர். 'மண்ட லம்பயி லுரகர்பே ருயிர்ப்பினுன் மயங்கி' (பாரத. குருகுல. ௩.) 3. படமும் வாலு முடையராய் மனிதவடிவும் தெய்வப்பிறப்பு மான ஒருவகைச் சர்ப்பசாதியார். (கூர்மபு. திருக்கல். ௫௨. உரை.)

உரகவல்லி—வெற்றிலைக்கொடி.

உரகன்—1. ஆதிசேடன். 'மிதித்துரகன் பணாமணிகள்' (பாரத. பன்னிரண். 18). 2. பாம்பு. 'உரகன்வாய் மீண்ட மாதவன்போல' (கல்லா. ௪௬.)

உரகாசனன்-1. கருடப்பறவை. [உரகாஸந.] 2. விட்டுணு. [உரகாஸந.]

உரகாதிபன்-ஆதிசேடன். [உரகாதிப.]

உரகாரி — 1. கருடன். 2. மயில். [உரகாரி.]

உரகேந்திரன்—1. ஆதிசேடன். 2. வாசுகி. [உரகேந்த்ர.]

உரங்கம்—பாம்பு. 'உரங்க வெங்கொடி யுயர்த்த காவலன்' (பாரத. பதினைன். 115.)

உரங்கமம்—பாம்பு.

உரங்கொள்ளல்-1. கடினமுறல். 2. பலங் கொள்ளல்.

உரங்கொள்ளுதல்—1. கெட்டியாதல். 2. பலமாதல்.

உரசல்—1. உரிஞ்சல். 2. தேய்த்தல்.

உரசிசம்—முலை. [உரஸிஜ.]

உரசிருகம்—முலை. [உரஸிருஹ.]

உரசு—1. மார்பு. 2. மேன்மை. [உரஸ்.]

உரசுதல்-உராய்தல். (சிலப். 3. 14. உரை.)

உரஞ்சிவந்தான்-குதிரைவகையிலொன்று. (அசுவசா. 152.)

உரண்டம்— } காகம்.
உரண்டை — }

உரணம்—1. ஆட்டுக்கடா. 2. முகில்.

உரத்தல் — 1. பலத்தல். 2. வலியுறல், கடினமாதல். 'தருமுரத்துத் தரிக்குமுந்து தரணிதானே' (சிவப்பிர. ௨: ௨௭.)

உரத்திதம்—விருத்தி.

உரத்திதன்—விருத்தியானவன்.

உரதம்—1. சுக்கிலம். 2. மாதவிடாய்.

உரந்தை—துன்பம்.

உரப்பம்—பெருங்காயம் (மலை).

உரப்பல்—உரப்புதல்.

உரப்பார்சுவார்த்தமண்டலி—நிருத்தக்கை முப்பதனுள் ஒன்று. (சிலப். பக். 81.)

உரப்பித்தல்—பலமுறச்செய்தல்.

உரப்பிரம்—வெள்ளாடு. (உரி. நி.) [உரப்ர.]

உரப்பு—1. அதட்டு. 2. உரப்பென்னேவ லும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத் தொகையும். 3. திண்மை. 4. பேரொலி. 'வெற்பி-னுரங்கழி தரவே நீங்கா வுரப்பினில் வீழ்வ தேபோல்' (கந்தபு. காவிரிநீ. 44). 5. கடினம். 6. முருடு.

உரப்புதல்—1. உரத்தொலிக்கச்செய்தல். 'உரவுருமுரறிற் றென்ன வொலிமுர சுரப்பி னுனல்' (தணிகை. வள். ௩௮). 2. பெருஞ் சத்தமிட்டதட்டல். 'வீரர்தஞ் சூழ்ச்சியைப் பாரா-வுரப்பி' (கந்தபு. சூர. வதை. ௧௬௫).

3. திரண்டொலித்தல் (பிங்). 4. பயமுறுத்துதல். 'காலனை........உரப்பிய சேவடியான்' (தேவா. 524. 3.)

உரபடி—
உரபிடி— } இடம்.

உரம்—1. உள்ளமிகுதி. 2. ஊக்கம் (பிங்). 3. ஞானம் (பிங்). 4. திண்ணியவறிவு. 'உரமொருவற் குள்ள வெறுக்கை' (வள். 600). 5. மதில். (பிங்கல. 628). 6. மார்பு. 'உரங்களுந் தோளும்' (பாரத. நிவாத. 90). 7. வயிரம். 8. வலிமை. 'உரத்தி னொலொருவீரருமொப்பிலா வுரவோன்' (பாரத. புட்ப. 34). 9. வேகம். 10. திண்மை. 11. வியூகத்தின் முன்னணி. (குறள்.767. உரை). 12. குழந்தைகட்குண்டாகுஞ் சுளுக்குவகையில் ஒன்று.

உரம்விழுதல் — பன்னிரண்டுமாதத்துக்குட்பட்ட குழந்தைகளுக்குத் தரையிற்புரளுதலால் உண்டாகும் ஒரு பிடிப்புநோய்.

உரரீகிருதம்—அங்கீகாரம்.

உரல்—தானியம் முதலியவைகளை உலக்கை முதலியவற்றால் விகாரப்படுத்துதற்காக மரம் முதலியவைகளால் உள்ளே குழியாக அமைக்கப்பட்ட வடிவம். 'தாக்குர லடிகொள் யானை' (பாரத. இந்திர. கச.)

உரல்வரி—வரிவகையில் ஒன்று. (S. I. I. iv 106).

உரலடி-யானை. 'கடுக்கை யுரலடிமீ துற்றனும்' (தனிப்பா. 1. 79. 158)

உரலாணி—1. உரலடிக்கிடும் மரவாணி. 'உரலாணியிட்டாற்போல' (தொல். எழுத். 99. உரை.) 2. உலக்கை.

உரலாமணக்கு—ஓர் ஆமணக்கு. 'உரலாமணக்குக்கு...............குன்மமும்போம்' (பதார்த்த. 248.)

உரலிலை — ஒருவகை மருந்துப் பச்சிலை. (பெரியமாட். 157)

உரவம்-வலிமை. 'உரவமுள்ளதோ ருழையின்னுரி' (தேவா. 344. 8).

உரவர்—1. சமணர். (யாழ். அக.) 2. அறிவுடையோர். 'உரவரும் மடவரும் அறிவுதெரிந் தெண்ணி' (பதிற்றுப். 71. 25)

உரவல்—உலாவல்.

உரவன்-1. அருகன். 2. அறிவுடையோன். 3. வலியோன்.

உரவியன்-வலியோன். 'முன்கை உரவியராயிருப்பார்' (திவ். திருப்பா. 3. வ்யா. 63.)

உரவு—1. அறிவு, மனவலி. 'உரவுசான் முனிவோர்களுக்கு' (சேதுபு. காசிப. சரு.) 2. பரத்தல். 3. மிகுதி. 'உரவுக்கதிதெறூஉம்' (குறிஞ்சிப்பா. சஞ.) 4. வலிமை. 'உரவுச்சினந் தணித்து' (மலைபடு. ௬௨௬.) 5. நஞ்சு. 'உரவு நீர்ப்பொய்கை நாகங் காய்ந்ததும்' (திவ். திருவாய். 6. 4. 1.)

உரவுதல்—1. வலியுறுதல். 'வெவ்வாசிகள் புனலுண் - டுரவாவிடில்' (பாரத. பதினொன். ௫௧.) 2. உலாவுதல். 'உரவுநீரழுவத் தோடுகலம்' (பெரும்பாண். 350)

உரவுநீர் — 1. ஆறு. 2. கடல். 'உரவுநீருலக மேழும்' (கூர்மபு. தக்கன்வே. க.)

உரவுபோலிநடனம்—சூக்குமபஞ்சாக்கர நடனம்.

உரவோர் — 1. அறிஞர். 'உரவோர்தந் தென்னவர்தமையுள்கி' (திருவிளை. நரிபரி. ௬எ.) 2. மூத்தோர். 3. வலியோர். 'ஒருதாமாகிய வுரவோ ரும்பல்' (புறநா. ௧அ.)

உரவோன்—1. வலியவன். 'உரத்தி னொலொருவீரருமொப்பிலா வுரவோன்'(பாரத. புட்ப. ௬௪.) 2. ஊக்கமுடையோன். 3. மூத்தோன் (திவா).

உரற்கட்டை—உரற்கான மரத்துண்டு.

உரற்பணை—திட்டும்போது அரிசி சிந்தாதவாறு உரலின்மேல் வைக்குங் கூடு.

உரற்றல்—1. ஒலித்தல். 'உரற்றிய கனமழை யும்பர் சூழ்ந்தென' (கந்தபு. சூர. ச.) 2. பேரொலி. 'அள்ளி யள்ளியே-யுந்தினன் றிசைதொறு முரற்றி வீழவே' (கந்தபு. நகரழி. உ௬.)

உரற்று-1. உரற்றென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. ஒலி.

உரறல் — 1. இடித்தல். 'நெடுங்கொடி நிழன்மதி நெற்றி தைவர-வுடம்புவேர்த் தினமழை யுரறி நோக்கலின்' (சிந்தா. நாம. ௫௧.) 2. பெருங்கோபங்கொள்ளல். 'ஊசற்கரமெதிர்சுற்றிட வுரறிப்பரி யுழறு' (பெரியபு. திருநாவு. ௧௧௧.) 3. மிக மூர்க்கங்கொள்ளுதல். 'அவுண ருரறியார்த் தெழுந்தார்' (கூர்மபு. அந்தகா. ௧0௬). 4. முழங்குதல். 'மைந்தர் பொம்மென வுரறி' (சிந்தா. விமலை. ௪உ.) 5. பெருங்காயம்.

உரறுதல் — முழங்குதல். 'கனையெரி யுரறிய மருங்கும்' (புறநா. உ௩.)

உரன் — 1. உள்ளமிகுதி. 2. திண்மை. 'உரனென்னுந் தோட்டியான்' (வள். உ௪.) 3. பற்றுக்கோடு. 'ஊரன்மன் னுரனல்ல னமக்கென' (கலி. க௮.) 4. அறிவு. 'உரிய தாகுந் தோழிகண் ணுரனே' (தொல். பொருள். 239). 5. மார்பு. 'உரன் சிங்க நாதங்கிடந்தசைய' (திருவிளை. உலவாக்கிழி. எ.) 6. வெற்றி. 'உரனசைஇ யுள்ளந் துணை யாகச் சென்றார்' (வள். கஉ௬௩.)

உரனர்-சத்துக்கள், மனவலியுடையோர். 'உரன ரெவ்வ மொழிந்தபுந்தியாற் றடுப்பர்' (ஞானவா. உபசாந். ௬௬.)

உராத்துணை — நின்றுழிநில்லாமற் பரந்து செல்லும் விரைவு. 'உராத்துணைத் தேர்த் தென' (சிவஞானபோ. ௬. சிற்.)

உராதாரம்—மூலை. (யாழ். அக)

உராய்—1. உராயென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. பரந்து. 3. பெயர்ந்து (சிந்தா). 4. சென்று.

உராய்ஞ்சல்—உராய்தல்.

உராய்தல்—உரிஞ்சல் (பிங்கல. உ௧௧௭).

உராய்ப்போதல் — 1. உரிஞ்சுதல். (சூ. நிகண். ௯: ௪௪.) 2. தேய்தல்.

உரால்-1. உலாவுதல் (ஐங்குறு). 2. ஓடுதல். 'குருஉமயிர்ப்புரவியுராலின்'(மதுரைக்.387.)

உராவல்—உலாவல்.

உராவுதல்—1. பரவுதல். 2. பரத்தல். 'நிறைகடன் முகந்துராய்' (பரிபா. 6. 1.) 3. இடம்விட்டுப் பெயர்தல். 'பொன்னசும் பாடியளைந்துராய்' (சீவக. 37). 4. செல்லுதல். 'காலென்னக் கடிதுராய்' (மதுரைக். 125) 5. வலியடைதல். 'உராவி விழுங்கப் பட்டது' (ஞானவா. புசுண். 93.)

உரி—1. அரைப்படி. 'உரிவருகாலை' (தொல். எழுத். 240). 2. உரிச்சொல். 'இடை யுரியடுத்து நான்குமாம்' (நன். 270). 3. உரிய. [யகரங் கெட்டுநின்றது]. 4. உரியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 5. தோல். 'உரித்திடு முழுவை வன்றோ லுரி' (கந்தபு. ததீசியுத். க௨௭.) 6. மரப்பட்டை. 'உடுப்பன மரவுரி தழைகள்' (தணிகை. நாட். ௪௭.) 7. கொத்துமல்லி (மலை). 8. நாயுருவி.

உரிச்சீர்—மூவசைச்சீர்; அது: நேரசையீறாயின் வெண்பாவுரிச்சீர் என்றும், நிரையசையீறாயின் வஞ்சியுரிச்சீர் என்றும் சொல்லப்படும். (யாப்-ம். எ.)

உரிச்சொல்—1. நால்வகைச்சொற்களுள் ஒன்று; அது, இசை குறிப்பு பண்பு: என்னும் பொருட்குரியவாய் வரும் சொல். (தொல். சொல். உ௯௭. சேனா.) 2. திரிசொல். 3. உரிச்சொற்பனுவல். 'பிங்கல முதலா நல் லோ ருரிச்சொலின்' (நன். 460)

உரிச்சொற்பனுவல்-நிகண்டுநூல். 'பிங்கல முதலான.........உரிச்சொற்பனுவல்களுள்' (நன். 459. மயிலை.)

உரிச்சொனிகண்டு—காங்கேயர் இயற்றிய வெண்பாவினாலமைந்த ஒரு நிகண்டுநூல்.

உரிசூறைகொள்ளுதல் — ஆடையை அபகரித்தல். 'உரி சூறைகொண்டுபோனவனை' (ஈடு. 7. 3. 4)

உரிசை—தீஞ்சுவை. (சினேந். 244.)

உரிஞ்—உரிஞுதல்.

உரிஞ்சல்—உரிஞ்சுதல். 'போர்மதக்குன் றுரிஞ்சலின்' (இரகு. தேனு. ௮௮.)

உரிஞ்சு — உரிஞ்சென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.

உரிஞ்சுதல் — 1. உராய்தல் (பிங்). 2. தேய்த்தல். 'நறுங்குற டுரிஞ்சுபூந் தேய்வை' (நைடத. நகரப். க௭.) 3. பூசுதல். 'ஊடுமின் னனா ருரிஞ்சி யாட்டினார்' (சீவக. 2418.)

உரிஞு—உரிஞு என்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.

உரிஞுதல்—உரிஞ்சுதல். 'உரிஞுகன்னடுவோர்' (தணிகை. அகத். ௪க௭.)

உரித்தல் — ஒருபொருளில் ஒட்டியிருக்கும் பட்டை முதலியவற்றைப் பிரித்தெடுத்தல். 'உரித்திடு முழுவை வன்றோல்' (கந்தபு. ததீசியுத். க௨௭.)

உரித்தாளி—உரியவன்.

உரித்திரம்—1. மஞ்சள் (மலை). 2. மரமஞ்சள் (மலை).

உரித்து—1. உரியது. 'உரித்துபவிதமும்' (சைவச. ஆசாரிய. ௪௬.) 2. உரிமை. (திவா). 3. கடமை.

உரித்துவைத்தல்—மேல் மறைப்பை நீக்கி வெளிப்படுத்துதல். 'கீழே உரித்துவைத்தாரிறே அவர்கள் ஸ்வரூபத்தை' (ஈடு. 3. 9. 2.)

உரிதல் — ஒருபொருளில் ஒட்டியிருக்கும் தோல் முதலியவை கழலுதல்.

உரிது—உரிமையானது. 'உரிதி னின்னோ டுடன்பிறப் புண்மையின்' (சிலப். 2. 40.)

உரிப்பொருள்—அகத்திணை முப்பொருளி னொன்று; அது: புணர்தல், புணர்தனிமித்தம்; பிரிதல், பிரிதனிமித்தம்; இருத்தல், இருத்தனிமித்தம்; ஊடல், ஊடனிமித்தம்; இரங்கல், இரங்கனிமித்தம்: என்பன. 'புணர்தலும் பிரிதலு மிருத்தலு மூடலு-மிரங்கலு மிவற்றி னிமித்தமு மெனவாங்-கெய்திய வுரிப்பொரு ளோயிரு வகைத் தவை-யோரிரண் டோரிரண் டுரைத்தவைத் திணைக்கும்-நேரு மென்மனார் நெறியுணர்ந் தோரே' (இலக்கணவி. ௩௬௩.)

உரிமை—1. உரித்தாந்தன்மை. 2. ஒருவனுடைய உடைமையை அவனுக்குப்பின் அடைதற்காந் தன்மை, பாத்தியதை. 'உரிமை யைந்தரைப் பெறுகின்றது' (இராமா. மந்திரப். ௬௩.) 3. கடமை. 'தத்தம துரிமை தன்னைத் தவாநெறி தலைக்கொண் டாற்ற' (கந்தபு. பட்டா. ௧௪.) 4. சுவாதீனம். 'மீண்டு-முரிமையின் றெய்த வெஞ்சூ தாடுத லுறுதி' (பாரத. சூது. ௨௭அ.) 5. பிரியம். 'காதல்கூருருத்தகு முரிமையோ டொருவ னேக்கினன்' (பாரத. குருகுல. ௫அ.) 6. உரித்தானது. 7. மனைவி. 'இல்லவளுரிமைபக்னி' (சூ. நிகண். ௨: ௭௧.) 8. தகுதி. 'போய நமதுரிமை' (கந்தபு. தேவர்புல. ௧௧.) 9. குணம். 'நின்றன துரிமையை நிகழ்த்தி' (கந்தபு. பாயிர. ௨௧.) 10. சொத்து. 11. அடிமை. 12. அடிமைத்தொழில். 'எந்தமக் குரிமைசெய்யென' (திவ். பெரியதி. 2. 3. 6)

உரிமைக்கட்டு—இனக்கட்டுப்பாடு.

உரிமைக்கடன்—1. சேர்ந்திருந்த உரிமை பற்றிச் செய்யுங் கடன். 2. புத்திரன் பிதாவுக்குச்செய்யுங் கடமை.

உரிமைக்காணி — தாயபாகமாக வந்த நிலம்.

உரிமைக்காரர்—உரியவர்கள்.

உரிமைச்சுற்றம்-அடிமைத்திரள். 'உரிமைச் சுற்றமோ டொருதனி புணர்க்க' (சிலப். 2. 88.)

உரிமைசெப்புதல்-மணம்பேசுதல். 'துறைவற் குரிமை செப்பினர்' (குறுந்).

உரிமைசெய்தல் — 1. கடமைசெலுத்தல். 2. அடிமைத்தொழில்செய்தல். 'எந்தமக் குரிமைசெய் யெனத்தரியாது' (திவ். பெரியதி. 2. 3. 6.) 3. சாச்சடங்கு நடத்துதல்.

உரிமைத்தத்துவம் — 1. இறந்தவருடைய பொருளைக்குறித்து நியாயாதிபதியிடம் பெறும் அதிகாரம். 2. பாத்தியம்.

உரிமைப்படை-கூலிப்படை. (சுக்கிரநீதி. 303.)

உரிமைப்பள்ளி—அந்தப்புரம். 'உரிமைப் பள்ளியும் விரிபூஞ்சோலையும்' (சிலப். 27. 19)

உரிமைப்பாடு—உரியகடமை.

உரிமைப்பிள்ளை—சுவீகாரபுத்திரன்.

உரிமைபாராட்டுதல் — உரிமைகொண்டாடல்.

உரிமைமண்-சவக்குழியில் உரிமைக்காரர் போடும் மண்.

உரிமைமாணகர் - அந்தப்புரம். 'ஒன்னலர் நுழையா வுரிமை மாணகர்' (பெருங். உஞ்சைக். 35. 4.)

உரிமையாட்சி-சொத்தின் சுதந்திரத்தை அனுபவித்தல்.

உரிமையிடம்—வீட்டில் மனைவிவசிக்கும் பாகம். 'பள்ளியம்பலம் உரிமையிடம் கூத்தப் பள்ளியென இவற்றுள் நீங்கி' (இறை. 21. உரை.)

உரிமையில்—அந்தப்புரம். 'ஒழுகுவனன் மாதோ உரிமையின் மறைந்தென்' (பெருங். மகத. 14. 296.)

உரிமைவழி-1. பரம்பரைச் சுதந்திரம். 2. சம்பந்தமுறை.

உரியசை—நேர்புநிரைபசைகள். (தொல். பொருள். 318.)

உரியது-1. தக்கது. 'உரிய தன்றீங் கொழிகென வொழியீர்' (சிலப். காடு. ௫௫). 2. விசேடமாகவுடையது. 'பெண்ணும் பிணவும் மக்கட் குரிய' (தொல். பொருள். ௬௧௭.)

உரியர் — உரியார். 'அன்பிலா ரெல்லாந் தமக்குரியர்' (வள். ௭௨.)

உரியவன்—1. உடையவன். 2. கணவன் (பிங்). 3. தக்கவன், யோக்கியன், அதிகாரி. 'சிந்தனைத் துயர்கெடச்சித்தைச்சேர்ந்துளானினிதுறாற் குரியவ னென்று கொள்கவே' (ஞானவா. வைராக். ௧௧). 4. தாயத்தான். 5. உறவினன் (பிங்).

உரியள்—1. உரியாள். 'கலேவலீ ரவற்கே யந்தக் கன்னியும் உரிய ளென்ருன்' (பாரத. திரௌபதி. ௩௧). 2. மனைவி.

உரியன்—உரியவன்.

உரியார்—1. அறிஞர். 2. உடையோர். 3. தாயத்தார்.

உரியாழாக்கு — அரையேயரைக்காற்படி.

உரியாள்—மனைவி.

உரியியற்சொல் — இயற்சொல்லாய்வரும் உரிச்சொல்.

உரியோன்—உரியவன்.

உரிவை—1. ஒரு முன்னிலைவினைமுற்று. 2. தோல். 'கைம்மலை யுரிவையோடு' (பாரத. அருச்சுனன் தவ. ௩௪.)

உரீஇ—திற்றி. (மலைபடு. ௨௬.)

உரீகாரம் — 1. அங்கீகாரம். 2. வாக்குத் தத்தம். (யாழ். அக.)

உரு—1. அகலம் (நாநார்த்த). 2. அச்சம். 'உருகெழுசெலவு'(திருமுரு. 51). 3. அட்டை. (சூ. நிகண். ௩: எ௫). 4. அழகு. 'உருவுங் குலனும்' (சிலப். நாடு. ௪௬). 5. உடம்பு. 'உருவினி னிறைந்து நின்றங் குணர்ந்திடு முயிர தென்னின்' (சி. சி. ௪: கஎ). 6. உள். 7. எலுமிச்சை (சித். அக). 8. கண்ணுக்கு விடயமான தோற்றம். 'உருவுயி ரென்னி னிந்த வுடலினுட் காண வேண்டும்' (சி. சி. ௪: க). 9. கரு. 10. கோபம். 11. சன்னதம். 12. நிறம். 'உருவ வோடரித் தடங்கணு ளுருக்கொடு மீண்ட' (நைடத. நாட்டுப். க). 13. நோய். 14. பதுமை. 15. பருமை. 16. இசைப்பாட்டு. 17. பெரிது. 18. தோணி. 19. மிகுதி. 'ஒண்டிறன்மொய்ம்பி னோ னுருகெழுசினஞ்செய்து' (கந்தபு.சதமு. க௬). 20. மேன்மை. 21. வடிவம். 'திரட்டி யாவையு மோருரு வாக்கினன்' (கந்தபு. மார்க்க. 132). 22. விக்கிரகம். 23. வெப்பம். 24. தன்மை. (ஈடு. 1. 5. 3. ஜீ. பக். 232). 25. உருவமுள்ளது. 26. உளியாற்செய்த சித்திரவேலை. 'சிற்றுளிகள் சென்றுசெத் தின உருக்களழுந்தின குறடு' (சிறுபாண். 252. உரை.) 27. பலமுறைசெய்யும் அநுசந்தானம். 'உருவெண்ணும் அந்தியால்' (திவ். இயற். 1. 33.) 28. மான். 'கானிடை யுருவைச் சுடுசரம் துரந்து' (திவ். பெரியதி. 1. 4. 2.)

உருக்கம்—1. அன்பு. 'தந்தாட்-குருக்கங் கனத்திடை லுற்றிடச்செய்தோன்' கலசை. க). 2. இரக்கம். 'உருக்கமில் அவ்வசுரக் குலம்' (இரகு. மாலையீ. 113). 3. மன நெகிழ்ச்சி. 4. தொடை.

உருக்காரம்—வெண்காரம்.

உருக்கல்—1. போரில் இறந்த வீரனது உருச்செதுக்கிய கல். 2. கோயில்முதலிய வற்றைக் கட்டியவர் உருச்செதுக்கிய கல்.

உருக்கள்—அகநாடகங்களுக்கும் புறநாடகங்களுக்குமுரிய பாஷைப்பாட்டுக்கள்; இவை யிக்காலத்து உருப்படியென்று வழங்கும் (மணிமே).

உருக்கன்—1. உடம்பை வாட்டிவரும் ஒரு நோய். 2. சடைவு.

உருக்காங்கட்டி- } உருகிப்போனசெங்கல்.
உருக்காங்கல் – }

உருக்காட்டி—கண்ணுடி.

உருக்காட்டுதல்—உருவெளியாகத் தோன்றுதல். 'மாயவன் வந்துருக் காட்டுகின்ருன்' (திவ். நாய்ச். 12. 3.)

உருக்காரம்—வெண்காரம்.

உருக்கினம்—1. அஞ்சனபாஷாணம். 2. உருக்குச்சரக்கு.

உருக்கு—1. இரும்பாலாகும் ஆயுதங்களைக் கூரியதாக்கும்பொருட்டுச் சேர்க்கப்படும் ஒருவகை இரும்பு; இது: சுத்தக் கரியோடு கலந்து உருவாக்கிய எஃகு. 'உருக்காவீர அயில்விழியாய்' (மறைசையந். உக). 2. உருக்கென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. உருகுதல். 'நிணவூன் சுட்டுருக்கமைய' (மதுரைக். எ௫௫). 4. எருக்கு.

உருக்குக்காரம்—1. உருக்குச் சரக்கு. 2. வெண்காரம்.

உருக்குத்தட்டார்—பொற்கொல்லர். (சிலப். 5. 31. உரை.)

உருக்குத்துதல் — உருவம் அமைய வார்ப்படம் வார்த்தல். (நெடுநல். 57. உரை.)

உருக்குதல் — 1. உருகச்செய்தல், மன நெகிழச்செய்தல். 2. கெடுத்தல், அழித்தல். (திவா). 3. மெலியச்செய்தல். 4. வாட்டல், வருத்துதல். 'ஊனையுருக்குமி ராய தனிப் பெடை' (இரகு. நகரப். கஅ.)

உருக்தப்பிரமியம்—1. இரத்தப்பிரமியம். 2. சலரோகம், நீரிழிவு.

உருக்தமண்—உருக்குமணல்.

உருக்தமணல்—அயமணல்.

உருக்தமணி—1. ஒரு காதணி. 2. கிருட்டிணன் றேவி.

உருக்தமம்—1. பொன். 2. உருக்கு (நாநார்த்த). [ருக்மம்.]

உருக்தமிணி — கிருட்டிணன்தேவிகளில் ஒருத்தி.

உருக்தருக்த—கர்ப்பூரவகையின் ஒன்று. (சிலப். 14. 109. உரை.)

உருக்தலைதல்-1. உடல்மெலிதல். 2. அழகழிதல்.

உருக்தவளை—மெருகாணி.

உருக்கோள்ளல்—உருக்கொள்ளுதல்.

உருக்கோள்ளுதல் — 1. ஆவேசங்கொள்ளல். 2. உறப்படைதல். 3. கருக்கொள்ளல். 4. வடிவமெடுத்தல்.

உருகம்—பிறப்பு. [ருஹ.]

உருகுதல்-1. அன்பினாலே மனநெகிழ்தல், மனமிளகுதல், மனங்கரைதல். 'உருகுதலைச் சென்ற வுள்ளத்தும்' (திருக்கோ. ௧௦௪.) 2. இரங்குதல். 3. வெப்பத்தால் நெகிழ்தல். 4. மெலிதல்.

உருகை—1. அறுகம்புல். 2. புல்லுருவி.

உருகோட்டு — உருகியோடுதல், உருகிப் பெருகுதல். 'உருகோட்டன்பொடும்வணங்கி' (சி. சி. காப்பு.)

உருங்குதல் – உண்ணுதல். 'அரவினுடலுயிருருங்குவணம்' (பரிபா. 4. 42.)

உருசகம்—1. ஆமணக்கு. 2. உப்பு. 3. கொம்மட்டிமாதுளை. 4. மாதுளை. 5. விளங்கம். 6. கோரோசனை.

உருசி—1. மதுரம். 2. விருப்பம். 3. கிரணம். (நாநார்த்த.) 4. காந்தி. (நாநார்த்த). 5. யோகாசனத்தொன்று. (தத்துவப். 107.) 6. இனிமை. 7. சுவை. [ருசி.]

உருசித்தல்-1. சுவைத்தல். 2. சுவையாதல். 3. அனுபவித்தல்.

உருசிதம்—விரும்பப்பட்டது.

உருசு—1. அத்தாட்சி. 2. திருட்டாந்தம்.

உருசுப்படுத்தல்— } மெய்ப்பித்தல்.
உருசுவாக்கல்— }

உருசை—1. ஆசை. 2. இன்சுவை. 'நல்லுருசைச்சேனை' (தைல. தைலவ. ௯௫.) 3. உருசி. 4. விருப்பம். [ருசா.]

உருட்சி—1. உருளுதல். 2. திரட்சி.

உருட்டல்-1. இசைக்கரணங்கள் எட்டனுளொன்று. 'நரம்பை யடிதொட் டிறளவு நன்கின் வருட லுருட்டல்' (கூர்மபு. கன்னன்ம. ௧௪௭.) 2. உண்டைபண்ணல். 'அன்னிப்பிசைந்துருட்டி' (சைவச. பொது. ௧௮௯.) 3. உருளச்செய்தல், செலுத்துதல். 'தனிப் பெருந்தேர்குடபொருப்பின் - சென்னியி னுருள வுருட்டி' (பாரத. சேக. ௪௪.) 4. வருத்துதல். 'உய்ந்துபோம்வழி யுருட்டுவானொருவனை' (சூளா. முத். 9.) 5. கவறெறிதல். 6. தர்க்கம்பேசிப் பிதற்றல். 'கற்றதுங் கேட்டதுந்தானே யேதுக்காகக் கடபட மென் றுருட்டுதற்கோ' (தாயுமா. நின்ற. ௩.) 7. புரட்டித்தள்ளல். 'நெடியவரையுருட்டி' (இராமா. குலமுறை. 8). 8. மத்தளம் விரைந்தடித்தல்.

உருட்டிப்பார்த்தல்— } கோபமாகப்பார்த்தல்.
உருட்டிவிழித்தல்— }

உருட்டு—1. உருட்டுதல். 2. உருட்டென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. திரட்சி. 4. புரட்டு. 5. வெருட்டு.

உருட்டுவண்ணம்— இருபதுவண்ணங்களுளொன்று. 'உருட்டு வண்ண மராகந் தொடுக்கும்' (தொல். பொருள். ௫௪௫.)

உருடை — வண்டி. 'உருடையூடுதிரியும்' (சேது. முத்திர். ௪௨.)

உருண்டை—1. உண்டை. 2. திரட்சி. 3. கவளம்.

உருத்தகம்—ஒரு சன்னிநோய்.

உருத்தரித்தல்—வடிவங்கொள்ளல்.

உருத்தல் — 1. கோபித்தல், அழலுதல். 'ஊழியினுதன்றுரு முருப்பினும்' (பாரத. நிவாத. ௧௪.) 2. தோற்றுதல். 'உம்மை வினைவந்துருத்த லொழியாதெனும்' (மணி. 26. 32). 3. பெருஞ்சினக்கொள்ளல். 'ஒரு பகலெல்லா முருத்தெழுந்து' (கலி. ௩௧.) 4. மிகுதல். 5. முளைத்தல் (திவா). 6. ஒத்தல். 'நின்புகழுருவினகை' (பரிபா. 3. 32.)

7. முதிர்தல். 'பண்டையூழ்வினை யுருத்தென்' (சிலப். 16. 217). 8. உருவெடுத்தல். 'அற முருத்தனையான்' (அரிசமய. பரகால. 91.) 9. சுரத்தல். 'உருத்துருத்தமு தூற்றிருந்து' (உபதேசகா. அயமுகி. 16.)

உருத்திதம்–1. உரியபொருள். 2. தொழிலிலாபம். 3. வளர்தல்.

உருத்திரகசன்னி–ஒருவகைச் சன்னிநோய். (சிகிச். சாஙச-பக்.)

உருத்திரகண்டி—சிலைவகையில் ஒன்று.

உருத்திரகணம்—1. சிவகணம். 2. சிவனடியார்.

உருத்திரகணிகை—தேவதாசி. 'உருத்திர கணிகையர்கவரிவீச' (பரத. ஒழிபி. 29.)

உருத்திரகணிகையர்–வேசியரின் வேறாய்த் தேவாலயத்தில் பூசாகாலத்தில் சுத்தநிருத்தஞ்செய்யும் மகளிர்கள். (பெரியபு. தடுத்தா. கஙஉ. உரை.)

உருத்திரகன்னியர்— உருத்திரகணத்தைச் சேர்ந்த மகளிர். 'சாமரையுருத்திரகன்னியர் இரட்ட' (காஞ்சிப். சார்ந்தாசயப். 36.)

உருத்திரகிரந்தி—மூலாதாரமும் சுவாதிட்டானமும். (ஆ-நிகண். ஙரு.)

உருத்திரகிரி—கயிலாசமலை.

உருத்திரசடை — சிவதுளசி, திருநீற்றுப் பச்சை. (மூ. அ.)

உருத்திரசமகநமகம்—உருத்திரனைக்குறித் துக்கூறும் வேதமந்திரம்.

உருத்திரசம்—பாதரசம்.

உருத்திரசருமன் — 1. உருத்திரசன்மன்; இறையனார்களவியலுரைகேட்டவர். 'திருத் தமிழ் மதுரை தன்னிற்சிவன்பொருணிறுக்கு மாற்ற-வுருத்திர சருமனுகி யுற்றிடு நிமலன்' (கந்தபு. சூர. வதை. உசுக). 2. அகநானூறு தொகுத்தவர்.

உருத்திரசன்–விசயாகமங்கேட்ட ஒருவன். (த. நி. போ. கருக.)

உருத்திரசன்மன் — 1. உருத்திரசருமன். மதுரையிலே வணிககுலத்திலே உப்பூரிகுடி கிழார்மகனாகத்தோன்றி இறையனார்களவியலுரைகேட்ட ஊமைப்பிள்ளையார்; இவரை: முருகமூர்த்தியின் அவதாரமென்பர். 2. அகநானூறுதொகுத்தவர்.

உருத்திரசாதனம் — 1. உருத்திராக்கம். 'போற்றிநீறணிந் துருத்திரசாதனம்பூண்டிடு' (வைராக். சத. சஎ.) 2. சிவசின்னம். எவரேனு முருத்திரசாதனங்கண்டால்' (திருவிளை. மெய்க்கா. கக.)

உருத்திராசாவரணி–பன்னிரண்டாம் மறு.

உருத்திரசூக்தம்—உருத்திரனைப் புகழ்ந்து பேசும் ஒரு வேதமந்திரம்.

உருத்திரசோலை—ஸ்ரீகாஞ்சியிலுள்ளதும் தன்னையடைந்தவர்களின் பிறப்பினை அழிக்க வல்லதாகக் கருதப்படுவதுமான ஒருசோலை. 'சுரர்கள் வந்துசூழ் உருத்திரசோலை'(பெரியபு. குறிப்பு. 84.)

உருத்திரதத்தன்—கச்சந்தனுடைய மந்திரி. (சிந்தா).

உருத்திரதினம்—விட்டுணு ஆயுக்காலம் இரண்டு கூடின காலம். (சை. பி. ருக.)

உருத்திரதேவர்— சுத்தவித்தியாதத்துவத்துக்கு அதிபதியாகிய தேவர்; இவர் ஈசுரதத்துவ அதிபதியாகிய மகேசுரனிடத்தில் ஆயிரத்தில் ஒரு கூறாகத் தோன்றிக் கலையிலிருந்து மூலப்பிரகிருதியை உதிப்பித்து அதிலே நின்று குணத்திரயாதியான சூக்குமசிருட்டிகளைப் பண்ணி மகேசுவரருடைய கோடியமிசமாகத்தோன்றின பிரமாவையும் விட்டுணுவையும் அசுத்தாத்துவ சிருட்டிதிதிகளிலே நியோகித்துத் தாம் காலருத்திரரை அதிட்டித்துக்கொண்டு அசுத்தாத்துவ சங்காரத்தையும் பண்ணுவர். (சி. சி. உ: எசு. சிவாக்.)

உருத்திரபஞ்சமம்—ஒரு பண்.

உருத்திரபூ—மயானம்.

உருத்திரபூடணம்—பாம்பு.

உருத்திரபூமி—மயானம்.

உருத்திரபேதம்–ஆகமங்கள் இருபத்தெட்டனுள் விசயம் முதலிய பதினெட்டு ஆகமங்கள். [பரமசிவன்பால் உபதேசம்பெற்ற அநாதி ருத்திரர் முதலிய பதினெட்டு ருத்திரர்களுக்கும் அருளிச்செய்யப்பட்டமையின்.] (சைவச. பொது. ஙஙஎ. உரை.)

உருத்திரம்—1. அச்சுறுத்தல். 2. ஒரு மந்திரம். 'எண்ணுசி ருருத்திரத்தை' (சேதுபு. இராமநா. சஉ.) 3. சங்காரத்திற் கிடமாகிய சுத்தவித்தை. (சிவப்பிர. கட். ங. அங்கம்.)

4. சுவையலங்காரவகையுளொன்று; அஃது: உள்ளத்துள்ள வெகுளி புறத்துப்புலனாய் விளங்குவது. 'கைபிசையா வாய்மடியாக் கண்சிவவா வெய்துயிரா-மெய்குலையாவேரா வெகுண்டெழுந்தான்' (தண்டி. சுக.) 5. பெருங்கோபம். 6. முப்பத்திரண்டு உபநிட தங்களுளொன்று. (வேதா. சூ. சிறப்பு. ௩. உரை.) 7. மஞ்சள். 8. மரமஞ்சள்.

உருத்திரமணி—உருத்திராக்கமணி. 'உருத்திராக்கத்திருமணியை' (திருவாத. திருப்பெரு. ௩௫.)

உருத்திரமுடிச்சு—பூணூல்முடிச்சின் வகையுள் ஒன்று.

உருத்திரமூர்த்தி—தத்துவாதீதனாகிய பரமசிவன்கொண்ட ஒன்பதுவிதத் திருமேனிகளு ளொன்று; அஃது: 'ஈசுவரமூர்த்தியில் ஆயிரத்தொன்றிலே தோன்றிய ஓர் உருவத் திருமேனி. (சி. சி. உ: எச. மறை.)

உருத்திரர்—1. ஆணவம் கன்மம் என்னும் இருமலமுடைய ஆன்மாக்களாகிய பிரளயாகலருக்குள் மலபரிபாகமுடையராய்த்தீக்கை பெற்றுப் பரமசிவனருளால் பதங்களைப் பெற்றுள்ளவர்; இவர்: நூற்றுப்பதினெண்மர். 2. ஏகாதசருத்திரரால் தத்தம் உருவுபோல் சிருட்டிக்கப்பட்ட உருத்திரர்; இவர்கள் பதினொருகோடிபேர்; இவர்கள்: வானோர் இனத்தோடு கூடியிருப்பர். 'தத்தமுருவுபோற் பதினோர்கோடி யுருத்திரர் தொகையைத் தந்தார்' (கந்தபு. உருத்திரர் கேள்வி. கூ.) 3. ஸ்ரீகண்டருத்திரர். (சி-வி. ஞாந. உ. உரை.)

உருத்திரரோகம்—மாரடைப்பு.

உருத்திரவருடம்—உருத்திரதினம் முந்நூற்றறுபதுகூடின காலம். (சைவப். ௫௧.)

உருத்திரவிருதயம் — நூற்றெட்டுபநிடதங்களுள் ஒன்று.

உருத்திரவீணை—ஒருவகை வீணை. [சிவரகசியத்தில் உருத்திரவீணைவரலாற்றுச்சருக்கம் பார்க்க]

உருத்திரவுப்பு—வெடியுப்பு.

உருத்திரன்—1. அக்கினிதேவன். 'உருத்திரனென்னு நாமம்........செந்தீப் பண்ணவன் மனக்கு மாமால்.' (கந்தபு. ததீசி. 45). 2. ஆன்மாக்களின் துயரைப் போக்குவோன். 'அனகனச்சுத னாருருத்திரன்' (சிவதரு. ஐவகை. 33.) 3. காலாக்கினியுருத்திரனென்னுஞ் சங்காரகாலருத்திரன். (த. நி. போ. 165). 4. சிவகணத்தவன். (கந்தபு. ததீசிப். 45). 5. சிவகுமாரன். (கந்தபு. ததீசிப். 45) 6. சிவசாருபம்பெற்றவன். 7. சிவன். (திவா) 8. ஏகாதசருத்திரருள் ஒருவன் (திவா). 9. சூரியவம்மிசத்தரசர்களிலொருவன். (மணிமே.) 10. பெருங்கோபி.

உருத்திராக்கசாபாலம்—சாமவேத உபநிடதத்தொன்று. (கூர்மபு. அட்டமூர். உசு. உரை.)

உருத்திராக்கம்— } 1. உருத்திராட்சமரத்
உருத்திராட்சம்— } தின் காய். 2. ஒரு மரம். (மூ. அ). 3. தேவர்கள் திரிபுரத்தசுரர்களாலே தங்களுக்கு நிகழ்ந்த துன்பத்தை விண்ணப்பஞ்செய்துகொண்டபொழுது திருக்கயிலாசபதியினுடைய மூன்று திருக்கண்களினின்றும் பொழிந்த நீரிற்றோன்றிய மணி. (2-ஆவது சைவ. வி. சச.) 'வெந்தநீறுருத்தி ராக்கம் விழுமிய வணியுந் தாங்கி' (திருவானை. கோச்செங். சக.)

உருத்திராட்சப்பூனை — அடியார்வேடம் பூண்ட வஞ்சகன். (தண்டலை. 29)

உருத்திராணி—1. துர்க்கை. 2. பார்ப்பதி. 'சுருதிசருவாணிசரச்சோதியுருத் திராணி' (கூர்மபு. திருக்கலி. உஉ.) 3. தாமிரபருணி நதியின் உபநதிகளுள் ஒன்றான பச்சையாறு. (நாமதீப. 523.)

உருத்திராணு—அணுசதாசிவர். (பௌட். உ: ௩௪.)

உருத்திராதிபதி— உருத்திரனுக்குத்தலைவனாகிய ஸ்ரீகண்டபரமேசுவரர். (சி. சி. உ: ௰எ. சிவாக்.)

உருத்திராபிஷேகம் — உருத்திரமந்திரஞ் செபித்துச்செய்யும் அபிஷேகம்.

உருத்திராரி—மன்மதன்.

உருத்திராவாசம் — காசிநகர். உருத்திர-சிவன். ஆவாசம்-இடம். [ருத்ராவாஸ.]

உருத்திரி—ஒருவகை வீணை.

உருத்திரிதல்—உருமாறுதல், மாறுவேடங்கொள்ளல். 'ஒருத்தனுமி யுருத்திரிந்து' (திருவிளை. விடையி. எ.)

உருத்திரேசர்-ஏகாதசருத்திரர். 'பவர்முத லுருத்திரேசர் பதினொரு கோடியுள்ளார்' (கந்தபு. உருத்திரர்கேள். ௪௨.) [இவர் பதினொருகோடி உருத்திரரைச்சிருட்டித்தத னால் வந்த பெயர்.]

உருத்திரை—பார்ப்பதி. (பிங்கல. ௧௦௬.)

உருத்தேறுதல் — கல்லநிலையிலிருத்தல். 'பேர்பாதிச்சரக்காவது உருத்தேறும்' (மதி. களஞ். I. 186.)

உருதம்பண்ணுதல்-உச்சரித்தல். 'வேதத்தை யுருதம்பண்ணு கலத்தாலும்' (திருக் காளத். பு. 5. 49.)

உருதிரோற்காரி — வியாழவட்டமாகிய அறுபதுவருடங்களுள் ஐம்பத்தேழாம் வருடம். [ருத்ரோத்காரி.]

உருது—1. சேனை. 2. பாசறை. 3. வட இந்திய பாஷைகளுள் ஒன்று.

உருநாட்டு—1. சித்திரம். 2. விக்கிரகம்.

உருப்பசி-தேவுலகத்துள்ள அப்ஸரஸ்திரீகளுள் ஒருத்தி; இவள்: பூவுலகத்திலே புரூரவா என்னும் அரசனுக்கு மனைவியாய் ஆயுவென்பவனைப் பெற்றவள். 'கொண்டு போதனு மபயமென் றுருப்பசி கூவ' (பாரத. குருகுல. ௧௧.)

உருப்படல்—1. உருவமாதல். 2. சீர்ப்படல்.

உருப்படி — 1. உருவுடைப்பொருளின் தொகை. 2. உபயோகமான பொருள். 3. இசைப்பாட்டு.

உருப்படுத்தல்—உருவாக்கல்.

உருப்படுதல்-1. உருவாகல். 2. உருவேறுதல். 3. சன்னதங்கொள்ளல். 4. சீர்ப்படுதல்.

உருப்பம்-1. உட்டணம், வெப்பம். 'உருப்பநாகமிவற் காகுமென்ன' (கூர்மபு. வருணச். ௨௨.) 2. கோபம். 3. திண்மை. 4. மிகுதி.

உருப்பிணி — உருக்குமிணி. (திவ். திருவாய். 7. 10. 6)

உருப்பு—1. பூரணம். 2. மிகுதி. (திவா) 3. வெப்பம். 'வெயிலுருப்பொழிய' (வேதாரணியபு நிரையவ. ௬௩.) 4. துக்கம். 5. அடுக்களை. 6. சினத்தி. (பதிற்றுப். 50. 16) 7. கொடுமை. (பெரும்பாண். 447)

உருபகதீவகம்—ஓரலங்காரம்.

உருபட்சா—பெருங்காயம்.

உருபு—1. நிறம். (பதிற்றுப். 52. 40) 2. பகுதி விகுதி இடைநிலை சாரியை எனப் பகுபதத்தின் அகத்துறுப்பாய்வருவது. 'பகுதி விகுதி இடைநிலை என்னும் தெரிநிலையும் குறிப்புமாகிய வினையுருபுகள்' (நன். இடை. விருத்தி. ௧.) 3. பெயர்ச்சொல்லின் பின் அதனையடுத்து அதன்பொருளை வேற்றுமைப்படுத்தற்கு வரும், இடைச்சொல்; அவ்விடைச்சொற்கள்: ஐ, ஆல், கு, இன், அது, கண் என்பன. (நன். உருபு. ௨.) 4. வடிவம். (தொல். சொல். 24. சேனா.) [இதனுரையிலே நச்சினார்க்கினியர் உருபு என்பது வடிவை யுணர்த்தாது என்பர்.] 5. நோய். (அக. நி.)

உருபுகம்—ஆமணக்கு.

உருபுமயக்கம்-ஒரு வேற்றுமையுருபு தன் பொருள்கொடாது பிறிதோருருபின் பொருள்கொடுத்து நிற்றல்; அது: 'காலத்தினாற்செய்த நன்றி' என்பதில், ஆல் என்னும் மூன்றனுருபு ஏழனுருபுப்பொருள்கொடுத்து நிற்றல்போல்வது. (பி. வி. ௧௫. உரை.)

உருபூகம்—ஆமணக்கு.

உரும் — 1. அச்சம். 'பேநா முருமென வருஉங் கிளவி, யாமுறை மூன்று மச்சப் பொருள' (தொல். சொல். ௩௬௫.) 2. இடி. 'உருமினார்த்துடன்றெறு முழுவையோடும் பல்' (தணிகை. நாட்டு. ௬௨.) 3. விடுதல்.

உரும்பரம்—1. பாம்பு. 2. பெருங்காயம். 3. செம்பு.

உரும்பு—கொதிப்பு. 'உரும்பில் கூற்றத் தன்னநின்' (பதிற்றுப். 26. 13.)

உருமணி—கருவிழி. (யாழ். அக).

உருமம்—1. வெப்பம். (பிங்கல. ௧௮௬௩.) 2. நடுப்பகல். 'உருமத்திற்கெதிரே' (சேதுபு. இராமனருச். 218)

உருமலைவாரி—உலோகமணல்.

உருமால்— } 1. தலைப்பாகை. 2. அங்கவஸ்திரம்.
உருமாலை— }

உருமாறுதல்—1. கோலமாறுதல். 2. சரீரம் வேறுபடுதல். 3. வேற்றுருக்கொள்ளல்.

உருமித்தல்—வெப்பங்கொள்ளல்.

உருமு-1. அச்சம். 2. இடி. 'உருமுப்புயல் போற் கவர்வோர்' (பாரத. நிவாத. ௧௧௦.)

உருமுத்துவசன்—இடிக்கொடியையுடையனாகிய இந்திரன். 'உருமுத்துவசன்மைந்தன்' (பாரத. புட்பயா. ௧௨௭.)

உருமுதல் — அச்சமுற வொலித்தல், கர்ச்சித்தல்.

உருமேறு—இடியேறு: 'அச்சொற் றத்தஞ் செவிக்குருமே றாகக் கலங்கு மரவன்னர்' (பாரத. திரௌ. ௩௨.)

உருமேனி—மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் இவைகளையுடைய வடிவம். 'உருமேனிதரித்துக்கொண்டதென்றலும்' (சி. சி. ௧: ௫௫.)

உருரசம்—பாதரசம். (மூ. அ.)

உருவ—1. திரும்பத்திரும்ப. 'பின்னையும் விடமாட்டாளே இங்ஙனே உருவச்சொல்லு மித்தனை' (ஈடு. 10. 3. 4.) 2. நன்றாக.

உருவக்கந்தம்-சித்தத்தால் உணரப்படுஞ் சத்தம் முதலாயின. (சி. போ. பா. அளவை. 38).

உருவக்கோடியோர்— கொடியுருவினோர். (சிலப்.)

உருவகதீபகம்—ஒரு செய்யுளிலே ஓரிடத்திலே நின்ற ஒருசொல் அச்செய்யுளிற் பலவிடத்துஞ் சென்று உருவகப்பிரயோகமாகப் பொருள்படுதல். அது: 'கானற் கயலாம் வயலிற் கமலமா-மேனற் கருவிளையா மின் புறவின்-மானுங்-கடத்துமேல் வேடர் கடுஞ் சுரமா நீங்கிற், கடத்துமே மெல்லியலாள் கண்'. (தண்டி. பொரு. ௬௦. உரை.)

உருவகந்தம் — புத்தர்கள் சொல்லும் மூர்த்தபூதங்களாகிய கந்தம்; அக்கந்தங்கள்: நிலம், நீர், தீ, காற்று என்னும் நான்குபூதமும், அப்பூதங்களிடத்திற்பொருந்திய உபாதேயம் என்னும் கடினம், கந்தம், இரசம், ரூபம் என்னும் நான்குமென எட்டுவகை. (பெரியபு. திருஞான. ௬௬௫. உரை.)

உருவகப்படுத்தல்—உருவகித்தல்.

உருவகம்—1.உவமானத்தையும் உவமேயத்தையும் வேறுபாடொழிவித்து ஒன்றென்பதோர் உள்ளுணர்வுதோன்ற ஒற்றுமைப் படுத்திச்சொல்லல். 'உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித்,தொன்றென மாட்டி னஃ துருவக மாகும்' (தண்டி. பொரு. ௩௫.) 2. நாடகம். (நாநார்த்த).

உருவகவுயர்வுநவிற்சியணி-உருவக அலங்காரவகையு ளொன்று; அஃது: உவமேயத்தை அச்சொல்லாற் சொல்லாமல் உவமானச் சொல்லால் இலக்கணையாகச்சொல்லுதல். அது: 'புயலேசுமந்து பிறையேயணிந்து' என்பதிற்போல. (வாணன். ௧.)

உருவகவுருவகம்—உருவக அலங்காரவகையு ளொன்று; அது உருவகஞ்செய்யப்பட்ட ஒன்றனைப் பெயர்த்தும் உருவகஞ்செய்வது. 'கன்னிதன் கொங்கைக் குவடாங் கடாக் களிற்றை' (தண்டி. ௩௫. உரை.)

உருவகித்தல்— உவமானத்தையும் உவமேயத்தையும் வேறுபாடொழிவித்து ஒன்றென் பதுதோன்ற ஒற்றுமைப்படுத்திச்சொல்லல்.

உருவங்காட்டி—கண்ணாடி. (பிங்)

உருவச்சாதகம் — உருவசாத்திரம். 'உருவச்சாதகத்துக்கேற்ப' (சீவக. 1571).

உருவசாத்திரம்— கலைஞானமறுபத்துநான்கி னொன்று; அது: முகலக்கணம் ரேகாலக்கணம் முதலியவைகளான் மனிதனுக்கு நிகழ்பவைகளை அறிவிப்பது.

உருவசி — உருப்பசி. 'உருவசியென்னும் பேரா ளொப்பிலா வழகுவாய்ந்த-திருநிகர் மங்கைதன்னை' (மச்சபு. அகத்தியர்பூ. ௧௭.) [உவ-ர்ஸீ.]

உருவசித்தம்—சுவரூபசித்தம். (தச. மகா. ௬௬.)

உருவசிவசமவாதி—ஒருமதஸ்தன்; அவன்: முத்தியினும் நித்தியசுத்த மங்களமான திவ்வியசரீரம் உண்டென்பவன். (சி. சி. ௧௧. ௩. சிவஞான.)

உருவப்பரப்பு — கடவுளது சர்வஞ்ஞாதி அஷ்டகுணங்கள். 'தன்னுருவப்பரப்பை யெலாங் கொடுபுகுந்து பதிப்பன்' (சி. சி. 9. 12.)

உருவபாவனை-இறைவனை உருவமுடையவனாகத்தியானிக்கை.(கூர்மபு.வருண.43.உரை)

உருவம்—1. அழகு. 'உருவப் பூணினுப் வந்தமை யெவன்கொலென் றுரைத்தான்' (நைடத. தேவியை. ௩.) 2. உடம்பு. 'ஒரு நெஞ்சமொழி யுருவ முற்றுமா னுடைமையாக' (சேதுபு. நைமி. ௨௧.) 3. காட்சிப் பொருள். 'ஆவிகளனைத்துமாகியருவமாயுருவமாகி' (கந்தபு. மேரு. ௭௫.) 4. விழிமாத்திரத்தாற் கவரப்படுங் குணம், நிறம். (தர்க்க பா. ௧௮.) 5. சிவப்புநிறம். 'உருவப்பல்பூத் தூய்' (திருமுரு. ௨௪௧. உரை.) 6. வடிவம்.

'போரு ளியம்புமிவ் வுருவம்' (திருவாத. திருப்பெரு. ௬௮.) 7. விக்கிரகம். 8. வேடம். 'வலியினிலேமையான் வல்லுருவம்' (குறள். 273). 9. பஞ்சகந்தங்களுள் ஒன்று. (சி. சி. பர. சௌத். 30) 10. மந்திரவுரு. 'நின் றிரண்டுருவமோதி' (சீவக. 1289)

உருவமெடுந்தல்—வடிவமெடுத்தல்.

உருவர்—பெருஞ்சீரகம்.

உருவரை-1. நல்ல நிலம். (சூடா) 2. நிலம். [உர்வரா.]

உருவல் — 1. உருவுதல். 2. காதணியி னென்று.

உருவலி—ஒரு பூண்டு.

உருவறை — உடலழகற்றவன். உடலழ கற்றவள். உடலழகற்றது. 'உருவறைக் கோபாலர்' (திவ். பெரியாழ். 3. 8. 2. வ்யா. பக். 740)

உருவாணி — 1. தேய்ந்துபோனது. 2. மெலிந்தவுடல். 3. அச்சாணி. (உபதேசகா. சிவத்துரோ. 411)

உருவாரச்சம்மட்டி—விழி (மலை.)

உருவாரம்—1. பிரதிமை. 2. வெள்ளரி (சூ. நிகண். ௪. ௩௩.)

உருவாளர்—உருவமுடையவர். 'காயமோ பொய்யெனக் கண்ட-திருவுருவாளர்' (தாயு மா. ஆரண. ௯.)

உருவி — 1. செம்முள்ளி. 2. நாயுருவி. 'எள்ளிரதம்படியுருவி' (தைல. தைலவ. ௬0௩.) 3. புல்லுருவி. 4. பாட்டுடைத்தலை வன். 'உருவியாகிய வொருபெருங் கிழவனை' (யாப். வி. பக். 525.) 5. பூமி. 'பாருருவி நீரெரிகால்' (திவ். திருநெடுக். 2.)

உருவியுப்பு—நாயுருவியுப்பு.

உருவிலாளன்—மன்மதன். 'மீனவிலோ தனத் துருவிலாளன்' (மணிமே. 5. 6.)

உருவிலாளி-மன்மதன். 'உருவிலாளியுடல் பொடித்தவொருவர்' (திருவிளை. வளையல். 35)

உருவிலி—1. உருவில்லாதவன். 2. மன் மதன்.

உருவின்காரணம்—பன்னிரண்டு. (தைல.)

உருவு—1. அச்சம். 2. உருவென்னேவ லும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத் தொகையும். 3. வடிவம். 'உருவுகண் டெள் ளாமை வேண்டும்' (வள். ௬௬எ.)

உருவுடம்பு—தூலசரீரம். (வள். ௩௪௫. பரி.)

உருவுதடம்—சுருக்குக்கயிறு.

உருவுதல்—1. உடம்பினுறுப்பைக் கையி னால் ஊன்றியிழுத்தல். 2. உறைகழித்தல். 'நாந்தகந்தனை யுரீஇக்கொடு' (கந்தபு. சூரப. ௩௬௯.) 3. ஊடுருவப்படுதல். 'கடிதி னுச்சி நின் றுருவியே வச்சிர கம்பத் - தடிதனிற் சென்று' (கந்தபு. அசுரர்யா. ௯௧.) 4. கையிற் பெருவிரலுக்கும் மற்றை விரல்களுக்குமிடை யே ஒன்றனைப் புகுத்தி ஊன்றியிழுத்தல். 5. தடைநீக்கி விடுதல். 'வயப்புலியை வாலுருவி விடுகின்றீரே' (பாரத. சூது. ௨௬௫.) 6. துளைத்தோடுதல். 'மூதகு மண்ட முகட்டுரு வும்' (கந்தபு. சூர. வ. ௯௯.)

உருவுதிரை— திரைவகையி லொன்று. (சீவக. 2471. உரை)

உருவுவமம்-உவமத்தின் ஒருவகை; அது: வண்ணத்தானாய ஒப்புமை. (தொல். பொரு. ௨எ௬. உரை.)

உருவுள்ளு—கொள்ளு.

உருவெடுத்தல்—வடிவெடுத்தல்.

உருவெழுத்து — வரிவடிவுள்ள எழுத்து. (யாப். வி. 535.)

உருவெளி — மனோராச்சியத்திலே ஆகா யத்திலே தோன்றும் போலியுரு. 'உருவெளி யருகு தோன்ற வுற்றன னிறைவ னென்னு' (தணிகைப். வள். ௨௪௫.)

உருவெளிக்காட்சி—, உருவெளித்தோற்றம்—, உருவெளிப்பாடு— } மனத்திலுள்ள பொருளின் மருட்சித்தோற்றம்.

உருவேற்றல் — 1. ஆவேசமேற்றல். 2. செபித்தல். 3. துர்ப்போதனைசெய்தல்.

உருவேறல்—1. தெய்வ ஆவேசமேறல். 2. மந்திரோச்சாரணம் அதிகரித்தல். 3. மூர்க்கம் மிகுதல்.

உருவை—1. சூரை. (மலை). 2. முள்ளி (மலை).

உருள்—1. உருளென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. உரோகிணிநாள். (சூ. நிகண். ௧. ௬௮.) 3. தேருருள். 'உருள்பூந்தண்டார்புரளுமார்பினன்' (திருமுரு. ௧௧.) 4. வண்டி. (திவா) 5. வட்டம்.

உருளரிசி—கொத்துமல்லி (திவா).

உருளல்—உருளுதல்.

உருளாயம்—உருளுங் கவற்றின்கட்பட்ட வரவு. 'உருளாய மோவாது கூறின்' (வள். ௯௩௩.)

உருளி—1. உடம்பின் எலும்புமூட்டு. 2. உரோகிணிநாள். 3. தேருருள். 'முழவினன்ன முழுமரவுருளி' (பெரும்பா. ௪எ). 4. வட்டம். 'உருளிமாமதி' (சீவக. 532.)

உருளிப்பெயர்வு—எலும்புப்புரட்சி.

உருளிபேர்தல்—பொருத்துவிலகுதல்.

உருளுதல் — 1. அழிதல். 'உலகெலாம் உருளும் இன்றென' (சீவக. 2452). 2. உண்டையாய்த் திரளுதல். 3. ஒருகான் மேனின்றபக்கம் மறுகாற்கீழாகவும் ஒருகாற்கீழ் நின்றபக்கம் மறுகான் மேலாகவுஞ் சுழன்று செல்லுதல். 'உருள்பெருந்தேர்க்கு' (வள். ௬௬எ.)

உருளை—1. உண்டை. 2. உரோகிணிநாள். 3. தேர்முதலியவற்றினுருள். 'சகடிரு சக்கர வுருளைகளுய்க்கவே' (பாரத. வேத்திர. ௫௦). 4. வண்டி. 5. முட்டை (வை. மூ). 6. வட்டம். 7. வெள்ளைப்பாஷாணம் (வை. மூ). 8. வயிரவகை. (S. I. I. ii. 78.)

உருளைக்காந்தம்—ஒருவகைக் காந்தக்கல். (மூ. அ.)

உருட்சம் — மொந்தன்வாழைக் கிழங்கு. 'உயருருட்சோதகம்' (தைல. தைலவ. ௩௫.)

உருடபதம் — 1. இயற்சொல். 2. பகாப்பதம்.

உருடம்—1. இடுகுறி. 2. பகாப்பதம். 3. பிரசித்தமாயறியப்பட்டது. [ரூ-ஹ.]

உருடி—1. இடுகுறி. 'வடநூலார் இடுகுறியை உருடியென்றும்' (நன். 62. உரை). 2. பாரம்பரியமானது. 3. காரியத்தைக்கண்டு காரணத்தை நிச்சயிக்கை. (ஞானமி. கரு. உரை.)

உருதி—ஆயிற்பட்டை (தைல).

உருப்பியம்—1. அழகானது. 2. வெள்ளி. (நாநார்த்த). 3. வெள்ளிநகை. 4. வெள்ளிநாணயம். 5. வெள்ளை. [ரூ-ப்யம்.]

உருபகதாளம்—ஒரு தாளம். (பரத. தாள. 5. உரை.)

உருபகம் — 1. அத்தாட்சி. 2. உருவக அலங்காரம். 3. சத்ததாளத்தொன்று.

உருபகாரப்படுத்தல்—மெய்ப்படுத்தல்.

உருபகாரப்படுதல்—மெய்ப்படுதல்.

உருபகாரம்—திருட்டாந்தம், அத்தாட்சி.

உருபகாலங்காரம்—உருவகவணி.

உருபணம்—உருபித்தல்.

உருபத்துவயம்—இரண்டு ரூபம்; அவை: வியட்டி சமட்டி என்பன. 'அநேகவிருக்ஷமுள்ளது ஒரு வனம் என்பதுபோல அநேக சீவரையும் தன்னுத்துமன் என்னும்அபிமானமே ஈசுரனுடைய சமட்டியாம். அந்த வனத்திலே இஃது ஒரு விருக்ஷமென்று குறியிடுவதுபோலப் பிந்நதேகத்துவாபிமானமேசீவனுடைய வியட்டியாம்' (வி-ணி. ௩௨.)

உருபதன்மாத்திரை — பூதாதியகங்காரத்திலே தோன்றிய பஞ்சதன்மாத்திரையில் ஒன்று; அது கண்ணிந்திரியத்திற்கு அறிவையுண்டாக்கும். 'ஓசைநற் பரிச ரூப விரதகந்தங்க ளென்று-பேசுமாத் திரைகளைந்தும் பிறக்கும்பூ தாதி கந்தி-னேசவிந் திரியங்கட்கு நிகழறி விதனுற் காண்டும்' (சி.சி. 2:64.)

உருபப்பிடமர்—உருபப்பிரமர் (மணிமே).

உருபம்—1. அடையாளம். 2. இனம். 3. உருவம். (மணிமே. 6. 177). 4. சாயை. 5. சுபாவம். 6. நிலை. 7. நிறம். 8. பிரதிமை. 9. மந்தை, ஆடுமாடுகளின்றொகுதி. 10. வாய்ப்பாடமாக்கல். 11. வேற்றுமைமாலை. [ரூ-பம்.]

உருபலாவண்ணியம்—சிறந்ததோற்றம்.

உருபவதி—அழகுடையவள்.

உருபா—ஒரு வெள்ளிநாணயம்.

உருபாருபம் — உருவமும் அருவமுமாகிய இரண்டுதன்மையுடையது, சகளநிட்களம். 'அருவமோ ருபாருப மானதோ வன்றிநின்ற-வுருவமோ வுரைக்குங் கத்தா வடிவெனக் குணர்த்திங் கென்னில்' (சி. சி. ௧: ௩அ).

உருபி — 1. உருபமுள்ளது. 'ஆங்கவட்குருபியாய் வழங்கும்' (உபதேச. திருமால். ௩௨). 2. உருபியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

உருபிகை—வெள்ளெருக்கு. [ரூ-பிகா.]

உருபித்தல்—1. அத்தாட்சிப்படுத்தல். 2. ஆராய்தல். 3. சிந்தித்தல். 4. ருஜுப்படுத்தல்.

உருபு—1. உருவம். 2. சாயல்.

உருபை—உருவமுடையவள். (சி. சி. வரலாறு.)

உரோத்திரன்—வீரன். (யாழ். அக.)

உரை—1. ஆகமப்பிரமாணம். (சி. சி. அள. க. மறை). 2. உயர்ச்சி. 3. எழுத்தினொலி. (பிங். ௬௨௦௬). 4. ஒலி, முழக்கம். 'குன்றங் குமுறியவுரை' (பரிபா. 8. 35). 5. சொல். 'அரையன்வா யுரைகள் வரைதருமுடங்கல்' (வைராக். தீ. 5). 6. சொற்பொருள். 'பூரண னெனும்பெயர் விரிக்கினுரை வேறுமுளதோ' (தாயுமா. சின்மயா. ௬). 7. தேய்வு (சூடா). 8. புகழ். 'உரையொடுங் காளையோங்க' (இரகு. யாக. க). 9. பொன். 'அகருளி - தன்னிலுரைக்காப்பணி' (நைல. நைலவ. 135). 10. மாற்றுரை. 'சீரிரும்பினைப் பொன்னென வுரைபெறச் செய்வாம்' (கந்தபு. மார்க்க. 122). 11. வியாக்கியானம். 'ஆசிரிய வசனமென்றீரேழுரையே' (நன். பொதுப் பா. உக.)

உரைஇ—உலாவி. 'கடுங்காற்றெடுப்பக் கல் பொருதுரைஇ' (மதுரைக். ௬௭அ.)

உரைக்கிழத்தி—சரசுவதி. (திருக்காளத். பு. பதி. 3.)

உரைக்கை — விரித்துச் சொல்லுகை. 'அனைத்துமுரைக்கையினால்' (சி. சி. அ: கச.)

உரைக்கோள்—உரைக்கருத்து.

உரைகட்டுதல்—நூலுக்கு உரைசெய்தல்.

உரைகல்—பொன் வெள்ளியுரைக்குங் கல். 'பொன்னைக்கொண்டுரைகல்மீதே நிறமெழ உரைத்தாற்போல்' (திவ். பெரியாழ். 5.4 5.)

உரைகலங்கல்—சொல்லுத் தடுமாறுதல். 'அயோ-ருரைகலங்க' (பாரத. புட்ப. ௨௦.)

உரைகாரன் — உரையாசிரியன். 'தன் மாணாக்கன் றகுமுரைகாரன்' (நன். சிறப். பாயி. ௫.)

உரைகோள் — நூலுக்குச் செய்யப்படு முறையிற் சொல்லப்படுவன; அவை: பதச்சேதம், பதப்பொருள், விக்கிரகம், வாக்கிய யோசனை, சங்கை, உத்தரம் என்பன. (சிவ தரு. சிவஞாந. தாக. ௬௧. உரை.)

உரைகோளாளன் - உரையை விரைவிலே கற்கும் அறிவுடையோன். 'உரைகோளாளற் குரைப்பது நூலே' (நன். பொதுப். ௬௭.)

உரைச்சூத்திரம்—உரையின் ஒரு கூறாக எழுதப்பட்ட சூத்திரம். (பி-வி. உ. உரை.)

உரைச்செய்யுள்—கட்டுரை. 'வார்த்திகப் பொழிப்பென்பது உரைச்செய்யுளானும்பாச் செய்யுளானும் செய்யப்படும்' (சி. போ. பா.)

உரைசல்—உரைசுதல்.

உரைசுதல்—1. உரைசல். 2. சீத்தல். 3. தேய்த்தல். 4. தேய்தல்.

உரைசெயல்–1. சொல்லுதல். 'உரைசெய வேண்டுமென் றுரைப்ப' (பாரத. குருகுல. ௫௫). 2. வியாக்கியானஞ்செய்தல்.

உரைஞ்சல்—உரைசுதல்.

உரைத்தல்–1. ஒலித்தல். 2. சொல்லுதல். 'ஆங்கவனிவ்வாறுரைத்தலும்' (பாரத. நாடு கரங். ௨அ). 3. தேய்த்தல். 'உருண்டவாய் தொறும் பொன்னுரு ளுரைத்துரைத்தோடி' (இராமா. வரைக். அ). 4. பூசுதல். 'உரைக் கும் நானமும்' (சீவக. 831). 5. மாற்றறிய உரைத்தல். (திவ். பெரியாழ். 5. 4. 5). 6. மெருகிடுதல். 'ஓடவைத்துரைத்த' (ஈடு. 3. 1. 2.)

உரைத்தாமென்றல்— முப்பத்திரண்டுத்தி களுள் ஒன்று; அது: முன்னே ஒருநிமித்தத்தினாலே சொல்லப்பட்டதைப் பின்னே சொல்ல வேண்டியவிடத்து இதனை முன்னேதானே சொல்லினோமென்பது தோன்றச் சொல்லாதுவிடுதல். (நன். பொதுப்பா. கச).

உரைத்திவார்–கூறுவார். 'உரைத்திவாரில் வழி' (கலி. எ௬.)

உரைத்துமென்றல்–முப்பத்திரண்டு உத்தி களுள் ஒன்று; அது: பின்னே சொல்லப்படுவதை முன்னே ஒரு நிமித்தத்தினாலே சொல்லவேண்டின் இதனைப் பின்னே சொல் வோமென்பது தோன்ற அங்கே சுருக்கிச் சொல்லுதல். (நன். பொதுப்பா. கச.)

உரைத்தைக்காண்–சொல்லிக்காண். 'தெருளாமற் காப்பதோர் திறனுண்டே லுரைத் தைக்காண்' (கலி. ௬அ.)

உரைதல்—தேய்தல்.

உரைதழுத்தல்—பேச்சுத் தடுமாறல்.

உரைநடை—வாசகநடை.

உரைநூல்–1. உரையெழுதப்பெற்ற நூல். 2. உரையாகியநூல்.

உரைப்படல் — உரைக்கப்படல். 'உலகத் திரைப்பட்டது' (களவெ. கலிநீங். .௪௧.)

உரைப்பாட்டு-கட்டுரைநடை. (சிலப். பதி. 60.)

உரைப்பு—1. உரைத்தல். 'உரைப்பரும் பலபொருளாயும்' (பாரத. அருச்சுனன்றவ. எஅ). 2. தேய்ப்பு.

உரைப்பொருள்—விரித்துரைக்கும் மெய்யுரை. (திவா.)

உரையநுமாநம்-வேதாகமங்களுட் சொல்லியதுகொண்டு அது சொல்லாதபொருளையும் ஒப்புமைபற்றி ஊகித்துத் துணிவது. (சி. சி. அளவை. கஉ. மறை.)

உரையல்—1. உரைத்தல். 'கனவின்றலையிட்டுரையல்' (கலி. கூஉ). 2. உரைதல்.

உரையளவை — காட்சிகருதலளவைகளானறியப்படாத பொருள்களை ஆத்த வாக்கியங்கொண்டு உரைசெய்வதாகிய ஆன்மாவினது ஞானசக்தி; இந்த உரையளவை: தந்திரகலை, மந்திரகலை, உபதேசகலை என மூன்றுவகைப்படும். (சி. சி. அளவை. உ. சிவஞா.)

உரையறிகருவி—1. உரைகல் (திவா). 2. மாற்றறிவிக்கும் ஆணி.

உரையாசிரியர்—1. நூலுக்கு உரைசெய்தவர். 2. தொல்காப்பியத்துக்கு உரைசெய்தவராகிய இளம்பூரணர். (தொல். சொல். சு. சேனா.)

உரையாடல்-பேசுதல். 'உண்டி யுகந்துரையாடலையாகி' (கந்தபு. மார்க்க. கருக.)

உரையாணி—மாற்றறியும் ஆணி.

உரையாலநுமாநம்—உரையநுமாநம். 'நீதியான்முற் கன்மபல நிகழ்வ திப்போ திச்செய்தி-யாதி யாக வரும்பயனென் றறிதலுரையா லநுமாநம்' (சி. சி. அளவை. கஉ.)

உரையிடுதல் —1. நூற்கு உரைசெய்தல். 2. தருக்கஞ்செய்தல். 'ஒருவர்க்கொருவர் உரையிடும் அவ்வேலை' (தெய்வச். விறலி விடு. 99)

உரையிற்கோடல் — தந்திர உத்திகளுள் ஒன்று; அது: மூலத்திற் சொல்லாதவைகளையும் உரையிற் சொல்லுதல். (நன். பொதுப் பா. கச. உரை.)

உரைவன்மை—சாதுரியப்பேச்சு, பேச்சுவன்மை.

உரைவாணன்— உரைகூறவல்ல புலவன். 'உரைவாணர்தங்கணவைகாணின்'(குலோத். கோ. 363).

உரைவு—தேய்வு.

உரொக்கம்—கையிருப்புப்பணம்.

உரொட்டி—அப்பம். [தெலுங்கு.]

உரோககம்-இலங்கையிலுள்ள சிவனொளிபாதம் என்னும் மலை. [ரோஹண.]

உரோககாரி — வைத்தியன். [ரோகஹாரிந்.]

உரோகசஞ்சீவி-ஒருவகைத் தைலம். 'சுகபலேச்சாறு........வாதஞ்சன்னியுகு கொடுஞ்சுவாசகாசங்களும்போ முரோக சஞ்சீவியிதற்குரியபேரே' (தைல. தைலவ. 12.)

உரோகசாந்தநன்—உரோகசாந்தன்.

உரோகசாந்தன்—வைத்தியன். [ரோகசாந்த.]

உரோகசாந்தி — ஆரோக்கியம், நோய் நீக்கம். [ரோகசாந்தி.]

உரோகசிரேட்டம்—சுரம்.

உரோகணி—1. உரோகிணி. 2. அரோகிணிக் கடுக்காய். (பாலவாகட. 171)

உரோகதீ—நாய். (யாழ். அக)

உரோகம்-1. இறங்குதல். 2. உயர்ந்தல். 3. எழும்புதல். 4. ஏறுதல். 5. ஒளியின்மை. 6. தளிர். 7. நோய் (பிங்). 8. பூவரும்பு. 9. வளர்தல். [2,3,6,9. ரோஹ. 7. ரோக.]

உரோகராட்டு—க்ஷயரோகம்.

உரோகாதம்-1. நெஞ்சிவிடித்தல். 2. மார்பிலடித்தல். [உரோவாத.]

உரோகாயதநம்—உடம்பு. [ரோகாயதநம்.]

உரோகி—1. நோயாளி. 2. செம்மரம்.

உரோகிடம்—காவட்டம்புல் (காகார்த்த).

உரோகிணி — 1. ஒன்பதுவயசுப்பெண். (பராசர. ஆசார. கஎ.) 2. கடுக்காய். 3. கடுகுரோகிணி (மலை). 4. நான்காம் நட்சத்திரம். 'இவளுரோகிணி பென்னவே தொழத்தக்காள்' (பாரத. சம்பவ. உச.) 5. பலராமனுடையதாய். 'உன்னுதவத்தி னுரோகிணி தன்பா லுதயஞ்செய்து' (உபதேச. பலரா. க.) 6. பீதரோகிணி (மலை). 7. பெருங்குமிழ் (காகார்த்த). 8. சிறுகாஞ்சொறி. [ரோஹிணீ.]

உரோகிணிதநயன்—பலராமன் (பிங்).

உரோகிதம்—1. செந்நிறம், சிவப்பு (நாநார்த்த). 2. செம்மரம். 3. மஞ்சள். 4. குங்குமம் (நாநார்த்த). 5. செங்கயல் (நாநார்த்த). [ரோஹித.]

உரோகிதாச்சுவன் – 1. அக்கினி. 2. அரிச்சந்திரன்மகன். 'விறலரிச் சந்திரன் மைந்தன் - கைம்மைய ராகி யொன்னலர் மகளிர் கலுழ்ந்தநீர்ப் பெருக்கினெல் வளர்ந்து - செய்ம்முகத் தோங்கச் சினவுவாள் விதிர்க்குமுரோகிதாச் சுவனெனத் தெரிப்பார்' (கூர்மபு. சூரியன்மரா. கூ.)

உரோங்கல்-உலக்கை. (பிங்கல. கஊசுஅ.)

உரோசம்-1. கோபம். 2. மானம். 3. முலை. [1, 2. ரோஷ. 3. உரோஜ.]

உரோசவகம்—எலுமிச்சை.

உரோசனம் — 1. கோரோசனம். 'சினநற்றிரி ரத்தமுரோசனம்' (தைல. வ.தலவ. கக.) 2. முள்ளிலவமரம்.

உரோசனை—1. கடுகு. 2. கோரோசனை. 'உரோசனைநிறத்தபொற்பரியே' (திருவிளை. நரிபரி. கoக.) 3. செங்கழுநீர் (நாநார்த்த). [ரோசநா.]

உரோசல்—உரோஞ்சல்.

உரோசமானம்—குதிரைகளுக்குள்ள நற்சுழிகளுள் ஒன்று. (பெரியபு. தடுத்தா. கக. உரை.)

உரோசனி—1. கடுகு. 2. கோரோசனை. 3. செந்தாமரை. 4. சிறுகாஞ்சொறி.

உரோசி—சூரியகாந்தி.

உரோசித்தல்—1. நாணுதல். 2. மானத்தாற் கிளர்தல்.

உரோசினி—சிறுகாஞ்சொறி.

உரோசுதல்—உராய்தல் (பிங்).

உரோஞ்சல்-உரிஞ்சுதல். (பிங்கல.உககஎ.)

உரோஞ்சுதல்—உரோஞ்சல்.

உரோட்டணம்-1. பாதரசம். 2. உவர்நிலம். (1, 2. நாநார்த்த)

உரோடம்-கோபம். 'சீரொன்று தூதாய்த் துரியோதனன்பக்கல், ஊரொன்று வேண்டிப் பெறாத வுரோடத்தால்' (திவ்.பெரியாழ். வேலிக். 5)

உரோணி — 1. உரோகிணிநட்சத்திரம். 'விண்ணக மிருள்கொள விளங்கு வெண்மதி-யொண்ணிற வுரோணியோ டொளித்ததொத்ததே' (சிந்தா. நாம. கசுக.) [உரோஹிணி என்பதில் ஹி என்பது கெட்டது.] 2. ஒரு நோய். 'உருமிடி நாக முரோணி கழலை' (திருமந்திர. அறன். ௬.)

உரோதம்—1. ஒருநரகம். 'கருவையழித்தோன் உரோதமென்னு நரகத்தையுமடைவன்' (கூர்மபு. வருண. உஉ. உரை.) 2. தடை. 3. நீர்க்கரை. அது: 'சிதரோதக்குருதித்திரையொரீஇ' (இராமா. இராவணன் சோக. க.) [ரோய.]

உரோதனம்—1. அழுதல். 'நீ தோன்றி, உரோதனஞ்செய்துதிராவணஞ்செய்தமையால் உருத்திரனெனப் பெயர்பெறுவாயாக வென்றனன்' (கூர்மபு. அட்டமூ. கக.உரை.) 2. கண்ணீர்.

உரோதனன்—புதன் என்னுங் கிரகம்.

உரோதனி—சிறுகாஞ்சொறி (மலை).

உரோதித்தல்—அழுதல். 'உயிர்களெவற்றினையும்...உரோதிப்பிப்பாய்' (திருக்காளத். பு. 5. 48.)

உரோபணம்—இறங்குதல்.

உரோபம்—அம்பு (நாநார்த்த).

உரோமக்கட்டு—நிறைமயிர்.

உரோமக்கிழங்கு—வசம்பு (வை. மூ).

உரோமகடனர்—சூதமுனிவர். 'புராணங்களைக் கேட்டபொழுது மகிழ்வினால் மயிர் சிலிர்த்திருந்தமைகண்ட வியாதர் அக்காரணத்தினால் உரோமகடனர் என்று பெயர் சூட்டினாரென்க' (கூர்மபு. இந்திரத்துய். கூ. உரை.) [உரோமஹர்ஷண.]

உரோமகருடம்-உரோமபுளகம். [ரோமஹர்ஷ.]

உரோமகி—முதியார்கூந்தல்.

உரோமகுச்சகம்—உரோமகுச்சம்.

உரோமகுச்சம்—சாமரை.

உரோமகூபம் — மயிர்சிலிர்ப்பு. 'உகந்தெதிர் விம்மி யுரோமகூபங்களாய்' (திவ். பெரியாழ். 5. 1. 7.) [ரோமகூப.]

உரோமசன்–1. ஒரு முனிவன். 'சரோருகரண்டம் விண்டா லொருமயிர் சலிக்குஞ் செங்கை - யுரோமச முனியை நோக்கி' (பாரத. நிவாத. கஊo.) 2. மயிருள்ளவன்.

உரோமண்டலி-நிருத்தக்கை முப்பதனுள் ஒன்று. (சிலப். பக். 81)

உரோமத்துவாரம்—மயிர்த்துவாரம்.

உரோமப்பொடிப்பு—
உரோமபுளகம்—
உரோமபுளகிதம்— } மயிர்சிலிர்க்கை.

உரோமபூமி—தோல்.

உரோமம்—1. குறுகிய மயிர். 2. மயிர். 'வேணிமுடித்தலுரோமமுகிர்வீழ்த்தும் வபனஞ்செய்யாமை' (சூத. வான. ௪.) 3. புறமயிர் (திவா).

உரோமமுனி-பதினெண்சித்தரி லொருவர்.

உரோமரந்திரம்–மயிர்த்துவாரம். [ரொமரந்ரு:]

உரோமராசி—மயிரொழுங்கு.

உரோமரேகை — உரோமத்திரொழுங்கு.

உரோமாஞ்சம்—
உரோமாஞ்சலி—
உரோமாஞ்சிதம்— } 1. உரோமப்பொடிப்பு. 2. குதூகலிப்பு. [ரொமாஞ்சு.]

உரோமாம்பரம்–1. கம்பளம். 2. சால்வை. [ரொம - மயிர். அம்பரம் - சீலை.]

உரோமாவலி-நாபிக்குமேலுள்ள உரோமரேகை. [ரொமாவலி.]

உரோமி-
உரோமிகி- } மயிர்ச்சிகைப்பூண்டு (மலை).

உரோருகம்—முலை.

உல்—1. கழு. 2. தேங்காயுரிக்குங் கருவி.

உல்கு—சுங்கம். (பெரும்பா. ௬௬௪. பக்.)

உல்குசெய்தல்–சுங்கம்வாங்குதல். 'உல்குசெய மதிரிறைந்த பலபண்டம்' (பட்டினப். 125)

உல்குபொருள் — சுங்கப்பொருள்; அது: மரக்கலத்தினும் பண்டியினும் வரும் பண்டங்களுக்கு வாங்கும் இறைப்பொருள். 'உறுபொருளு முல்குபொருளுந் தன்னொன்னார்த்-தெறுபொருளும் வேந்தன் பொருள்' (வள். ௭௫௬.)

உல்கூட்டுஞ்சாக்கு– சுங்கந்தரும் பண்டம். (T. A. S. II. 82)

உல்லகசநம் — 1. ஆநந்தம். 2. மயிர்ப்புளகம். [உல்லகஸந.]

உல்லங்கநம் — 1. கடந்துபோதல். 2. பாய்தல். [உல்லங்கந.]

உல்லங்கித்தல்—நெறிகடத்தல். 'குருவம்மிசம் உல்லங்கியாமல்' (பாரதவெண். 171. உரை)

உல்லம்—ஒரு மீன்.

உல்லரி—தளிர்.

உல்லாகன் — 1. நோயுற்றெழுந்தோன். (சூ. நிகண். ௨: ௪௫). 2. சாமர்த்தியமுள்ளோன். [உல்லாக.]

உல்லாசம் — 1. அத்தவாளம் (பிங்கல. 1280). 2. அத்தியாயம். 3. ஆநந்தம். 'உல்லாசமுடனே முடிப்பா னிசைத்தான்' (நல். பாரத. தருமசா. ௬௦௫). 4. உள்ளக்களிப்பு. 5. ஒளி. 6. வர்த்தித்தல். [உல்லாஸ.]

உல்லாசன்—உல்லாசக்காரன். 'உல்லாச நிராகுல யோகவித - சல்லாப விநோதனும்' (கந்தரநு. ௨.)

உல்லாடி—மெல்லிய ஆள். (யாழ். அக.)

உல்லாபம்–1. துக்கம், உரோகம் முதலியவைகளாகிய குரலின் விகாரம். 2. மழலைச் சொல், நிரம்பாமென்மொழி (திவா). 3. மேற்கட்டி. [உல்லாப.]

உல்லாபன்—நோய்நீங்கிச் சுகமுற்றோன் (சூடா).

உல்லி—1. ஒல்லி. 2. மெல்லிய ஆள். 3. மெல்லியது. 4. வெங்காயம். 5. மதில் (அக. நி.)

உல்லியக்கூலி—வரிவகையில் ஒன்று. (S. I. I. ii. 352.)

உல்லியம்—இறைகிணறு.

உல்லியர்—கூபநூலோர். (சூ. நிகண். ௨: ௯௨.)

உல்லு—உல்.

உல்லுகம்—கொள்ளி.

உல்லேகநம்—1. உயர்த்துதல். 2. எழுதுதல். 3. கிண்டுதல். 4. சீவுதல். 5. வாந்திபண்ணல். [உல்லெகநம்.]

உல்லேகம் — 1. உச்சரிப்பு. 2. ஓரலங்காரம். [உல்லெக.]

உல்லேற்றல்—கழுவேற்றல்.

உல்லோசம்—மேற்கட்டி. [உல்லொச.]

உல்லோலம்—1. பெருந்திரை, மகாதரங்கம். 2. கூத்தின் அங்கக்கிரியைகளுள் ஒன்று. (சிலப். பக். 81. சுத்தா.) [உல்லொல.]

உல — உலவென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும்.

உலக்குதல்—உலத்தல்.

உலக்கை—1. அழிதல். 'பொருப்புலக்கை யுற்றலமர' (பாரத. பதினெட். ௫௦.) 2. இரும்பினல் உலக்கைபோலச் செய்யப்பட்ட ஓராயுதம். 'உலக்கை சூலம் வேல்' (கந்தபு. சத. 15). 3. தானியம் முதலியவைகளை உரலி லிட்டுக் குற்றுதற்காக மரமுதலியவைகளாற் செய்து அடியில் இருப்புப்பூண் இடப்பட்ட தண்டம். 'அவலெறி யுலக்கைபோ யதிரத் தாக்கலும்' (தணிகை. நகரப். ௬சு). 4. திருவோணநட்சத்திரம் (சூ. நிகண். க: எசு). 5. வெருகன்கிழங்கு. 'அறற்போக்குலக்கைப் பொடியோர்படி' (தைல. தைலவ. அச). 6. கடல் (அக. நி.)

உலக்கைக்கொழுந்து — 1. உலக்கைநுனி. 2. உலக்கைநுனிபோலக் கூர்மையற்றது.

உலக்கைப்பாட்டு — வள்ளைப்பாட்டு. 'பறவைப்பேடுக ளுலக்கைப்பாட்டால்' (வள்ளுவமா. ரு. உரை.)

உலக்கைப்பாலை —பாலைமரவகையில் ஒன்று.

உலக்கையாணி—பூட்டின் நடுவாணி.

உலக்கைவள்ளி — ஒருவகை வள்ளிக் கிழங்கு.

உலகங்காத்தாள்—அவுரி.

உலகசஞ்சாரம் — உலகஞ் சுற்றிவருகை.

உலகசயன்—புத்தன்.

உலகசீலம்—உலகநோன்பு (மணிமே).

உலகத்தார்—1. உலகிலுள்ளார். 2. உயர்ந்தோர். 'உலகத்தா ருண்டென்ப தில்லென்பான்' (குறள். 850). 3. உலகப்பற்றுடையார்.

உலகதருமணி—உலோகதர்மணி. 'உலக தருமணியிற் பாவு சிவதருமணியிற் பயின்றவர்க்கு முன்னாள்' (தணிகை. அகத். 394.)

உலகதன்மணிதீக்கை — சபீசதீக்கையின் ஒருவகை. இஃது அபரமுத்தியைக்கொடுக்குந் தீக்ஷை. 'அத்தீக்கை யபரமுத்தியைக் கொடுக்கு முலகதன்மணிதீக்கையெனவும் பரமுத்தியைக்கொடுக்குஞ் சிவதன்மணியெனவு மிரண்டாம்' (சி. சி. அ. ரு. மறை.)

உலகநடை — 1. உலகத்தாரொழுகும் ஒழுக்கம். பரிமேலழகர் 'உலகநடையாவது ஒப்புரவுசெய்தல், புரந்தருதல், பிழைத்தன பொறுத்தல் என்றிவை முதலாயின' என்பர். (வள். ௬௭உ). 2. உலகவழக்கு.

உலகநாதன்—1. அரசன். 2. கடவுள். 3. பிரமன்.

உலகநீதி — 1. இயல்பானநீதி. 2. உலகநடை. 3. ஒரு நூல். 4. தேசவியற்கைநீதி. 5. நன்னெறி.

உலகநோன்பு–துறவாது விரதங்காத்தல். (மணிமே.)

உலகப்பற்று—லௌகிகவிஷயப்பற்று.

உலகப்புரட்டன்—மிகுபுரளிக்காரன்.

உலகபாரணன்—விட்டுனு.

உலகபாலர்–அட்டதிக்குப்பாலகர் (குறள். அதி. 39. அவ.)

உலகபுராணம் — ஒரு பழைய புராணம். 'அலகைசான்ற வுலகபுராணமும்' (பெருங். உஞ்சைக். 32. 2.)

உலகம்—1. ஆகாயம் (பிங்). 2. உயர்ந்தோர், நன்மக்கள். 'உலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீர்' (திருமுரு. 124). 3. உலகத்தன்மை. 4. உலகத்துள்ள சீவான்மாக்கள். 'உலகமுவப்ப' (திருமுரு. க). 5. உலகவநுபவம். 'அருளிலார்க்கவ்வுலகமில்லை' (வள். உசஎ). 6. உயர்குணம் (பிங்). 7. சிருட்டிப்பொருள். 8. சிவதத்துவமுதற் சுத்த வித்தியாதத்துவமீறாகிய சுத்தாத்துவப் பொருள்களும், காலதத்துவமுதற் பிரகிருதி தத்துவமீறாகிய சுத்தாசுத்தாத்துவப் பொருள்களும், குணதத்துவமுதற் பிருதிவி தத்துவமீறாகிய அசுத்தாத்துவப்பொருள்களும் ஆகிய ஒருவன், ஒருத்தி, ஒன்று என்று சுட்டியுணரப்படுஞ் சேதந வசேதநப் பிரபஞ்சம். (கூர்மபு. இந்திரத்து. எ. உரை). 9. திசை. 'ஒருவனே டொருத்தி யொன்றென்றுரைத்திடு முலக மெல்லாம்' (சி. சி. க: க). 10. நாடு. 11. நிலத்தின்பகுதி. 'மாயோன் மேய காடுறை யுலகமும்' (தொல். பொருள். 5). 12. பூமி. 'உலகமன்னவன் திருநாளொளி முடியணிந்து'(சிந்தா. கனக. உ). 13. மக்கட் டொகுதி. (தொல். சொல். 57. சேன). 14. வழக்கம். 'ஒழுக்கநடையே யுலகமதாகும்' (மாறன. 320.)

உலகமலையாமை—நூலுக்குரிய பத்தழகி னொன்று; அது: உயர்ந்தோர் வழக்கத்தோடு மாறுபடாமை. (நன். கரு.)

உலகமலைவு — ஓரலங்காரம். அஃது: உலகத்து ஒழுகலாற்றோடு மாறுபட்ட ஒழுக்கம் நிகழ்ந்தனவாகக் கூறுதல். 'அலைகடல்களேழுந்தூர்த் தந்தரத்தி னூடே-மலையனைய மால்யானை யோட்டிக்-கலவாரை-நீருக்கி வையம் நெடுங்குடையின் கீழ்வைத்தான்-மாருச்சீர் மாநிலத்தார் மன்' இதனுள் ஒரு நிலவேந்தனை ஏழுகடலையுந் தூர்த்தானாகவும் ஆகாயத்திலே தன் யானையைச் செலுத்தி வென்றானாகவும் உலகொழுக்கோடு மாறுபடக்கூறினமையின் உலகமலைவாயிற்று. (தண்டி. கககூ.)

உலகமளந்தான்—விட்டுணு. 'உலகமளந்தானே தாலேலோ' (நாலாயிர திவ். பெரியாழ். 1, 3. 2.)

உலகமாதா—1. இலக்குமிதேவி. 2. சரசுவதிதேவி. 3. செம்மணித்தக்காளி. 'உலகமாதாவைச் சேர்வுற் றுயருநிற்குண்டியபேதே. (தைல. தைலவ. ககூ). 4. பார்ப்பதிதேவி.

உலகமீன்றாள்—1. பார்ப்பதிதேவி. 'வந்திடு முலகமீன்றாள் வதுவையஞ் சாலை நண்ணி' (கந்தபு. திருக்கல். சூஎ). 2. திருமகள். 3. கலைமகள்.

உலகமுண்டோன் — விட்டுணு. 'உம்மை யதனி லுலகமுண்டோன் றன்மகனீ' (கந்தபு. வள்ளி. கககூ.)

உலகர்—1. உலகத்தார். 'உலகர்சேருறுதிப் பயனெவற்றினுக்கும்' (சிவதத்து. எ). 2. பாண்டியர் (அக. நி).

உலகரட்சகன்—உலகத்தைக் காப்போன்.

உலகரட்சணியம்—உலகத்தாரை யீடேற்றுகை.

உலகரட்சை—உலகரட்சணியம்.

உலகவழக்கம்—உலகவழக்கு.

உலகவழக்கு—உலகத்தோர் பேசும் பாஷையிலே நடைபெறும் வழக்கம்.

உலகவறவி—தருமசாலை. (மணிமே. 7. 39.)

உலகவாதம்—ஐதிகம். (சி. சி. அளவை. க. சுப்பிர.)

உலகவிடைகழி—ஊர்வாயில் (மணிமே).

உலகளந்தோன்—விட்டுணு (திவா).

உலகாசாரம்—உலகவழக்கம், உலகநடை.

உலகாயதம் — உலோகாயதமதம். புறச்சமயமாறினொன்று. அது: சார்வாகன் கோட்பாட்டின்படி உலகவின்பமே சிரேட்டம் என்னும் ஒரு நிரீச்சுரவாதிமதம்.

உலகாயதன்—உலோகாயத சமயத்தோன்.

உலகிதன்—உலகாயதன். 'பல்லுயிரும்... ........வினையுமில்லென்றுரைக்கு முலகிதர்' (T. C. M. ii. 2. 815.)

உலகியல்—1. உலகநடை. 'கண்ணோட்டத்துள்ள துலகியல்' (வள். ௫எஉ). 2. உலகநீதி. (சீவக. 245. உரை.)

உலகியற்சொல் — உலகவழக்குச்சொல். (மணிமே.)

உலகு — 1. ஆகாயம். 2. உயர்ந்தோர் கூட்டம். 'என்னையின்றென்சொலா துலகே' (பாரத. தற்சிறப். ௬). 3. உயிர்கள். 'தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின்' (வள். உ௫௬). 4. உயர்குணம். 5. திசை. 6. நாடு. 7. நிலம். 'ஏழுலகுடையானலமரவே' (பாரத. ஐந்தாம். கசு). 8. பிரபஞ்சம். 'வாரியா லுலகழிந்திடுமெல்லையும்' (கந்தபு. சூரபன்வதை. கஎ௫.)

உலகுண்டவன் — விட்டுணு. 'உறுதி பேசினன் வாலியாருயி ருண்ப னென்றுல குண்டவன்' (சேதுபு. சேதுவந். அ.)

உலகுய்யக்கோட்டான் — ஒருவகை மருந்துப்பச்சிலை. (பெரியமாட். 157-A.)

உலகுலம்—1. திப்பிலி. 2. திரிபலை.

உலகேசன் — உலோகேசன் என்னும் பிரமா. 'உலகேச னெனும்விரிஞ்ச னுறையு நாளில்' (சேதுபு. சக்கர. கஉ.)

உலகேடணை—உலகவிஷயங்களிற்கொள்ளும் ஆசை. (கட்டளைக். 51.)

உலகோம்பல் — அரசாறுதொழில்களுள் ஒன்று; அஃது: உலகுபுரத்தல்.

உலகோர்—உலகர், பெரியோர். 'தாராதரமெனவுலகோர் பலகலைதருமா' (கோயிற்பு. திருவிழா. ௫0.)

உலங்கலம்—கற்பாத்திரம்.

உலங்காரணை—அவுரி (மலை).

உலங்காரை—மரவகையில் ஒன்று.

உலங்கு—1. கொதுகு. 'அனலிசே ருலங்கென வுலைந்தனர்' (கந்தபு. திருவிளை. அ0.) 2. திரண்டகல் (பிங்கல. ௫0எ).

உலட்டுநூல்—உலண்டாற் செய்த நூல். 'உலட்டுநூல் பருத்திநூல் சிலம்பிநூல்கள்' (சி. சி. பர. சௌத்திராந்திகன்மறு. ௧௦.)

உலண்டம்—கோற்புழு.

உலண்டு—பட்டுநூலை யுண்டாக்குங் கோற்புழு. 'கடத்திறுக்கு மண்ணினையும் நூற்கு உலண்டினையும் காரணமென்பதுபோல'(வேதா. சூ. ௧௩௪. உரை.) [இதனைக் கோசகாரப்புழு என்றுஞ் சொல்வர்.]

உலத்தல்—1. அழிதல். 'கொடிகொடேரிழந்துபோ-யுலக்கவிட்டு' (பாரத. பதினெ. ௨௩.) 2. கெடுதல். 'மலக்குறுமனத்தினும் வருத்தமுற்றவு-முலக்குறநீக்கி' (கந்தபு. திருவவ. ௬௦.) 3. சாதல். 'உலந்தனனசமுகன்' (கந்தபு. முதனாட். ௧௭௦.) 4. குறைதல். 'உலவாக்கோட்டை.' (திருவாலவா. 50. 13.) 5. கழிதல். 'உலந்தபிறவியை...... காட்ட' (மணிமே. 25. 135.) 6. நீங்குதல். 7. முடிவுறல். 'எங்குலக்கவோ துவனே' (திவ். திருவாய். 3. 1. 5.)

உலந்திச்சூலை—ஒருவகைச் சூலை.

உலந்தவர்—அழிந்தவர். 'நட்புலந்தவரால்' (பாரத. நச்சு. ௩௩.)

உலப்பல்—கலப்புக்கட்டோசை (பிங்).

உலப்பு—1. குறைவு. 'உலப்புறுதெவையுமீவோர்' (கந்தபு. திருவவ. ௯.) 2. கேடு, தோல்வி. 'ஊழியினுதன்றுறு முருப்பினுமுலப்பிலாதோர்' (பாரத. நிவாத. ௧௬.) 3. சாவு. 'உலப்புற்றோர்-காடதே நடம்புரியிடம்' (கந்தபு. தவங்காண். ௧௫.) 4. அழிவு. 'உலப்பிலின்பமோடு' (மணிமே. 6. 111.) 5. அளவு. 'மிடைந்தவருலப்பிலர்' (கம்பரா. உருக்கா. 23)

உலப்புதல்—1. அலட்டுதல். 2. ஆர்த்தல்.

உலபம்—1. நெருக்கிப்படர்ந்த கொடித்திரள். 2. விழற்புல் (நாநார்த்த).

உலம்-1. திரண்டகல். 'உலங்கலந்துயர்ந்த தோளான்' (சிந்தா. பது. ௨.) 2. திரட்சி. 'உலங்கொள் சங்கத்தார்கலி' (தேவார. 112. 8.) 3. வலிமை. 4. துன்பம். 5. பிணம். 6. பட்டாடை. 7. வாசல். 8. விசாலம். 9. நீர். 10. காற்று.

உலம்பல்—1. அலப்பல். 'ஒல்காதார் வாய்விட்டுலம்புப' (நீதிநெறி. ௭௨.) 2. ஒலித்தல். 'உலக்கவிட் டளக்கர்வா யுலம்ப வோடுகலமென' (பாரத. பதினன். ௨௩.) 3. ஆரவாரம் (பிங்).

உலம்பு—உலம்பென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும்.

உலம்புதல்—உலம்பல்.

உலம்வரல்—சுழலல். 'வாயா வன்கனிக் குலம்வருவோரே' (புறநா. ௨௦௭.)

உலமரல்—1. அச்சக்குறிப்பு. (சூ. நிகண். அ: ௫௬.) 2. துன்பம். (சூ. நிகண். அ: ௭௩.)

உலமருதல்—உலமரல்.

உலர்ச்சி—1. காய்வு. 2. வாட்டம்.

உலர்த்தல்—1. அதிசுட்கரோகம். 'மேகச்சுடுலர்த்தலும்போ முணரே' (தைல. தைலவ. ௧௧௩. உரை.) 2. உலர்த்துதல்.

உலர்த்தற்பாடு— உலர்த்தப்பட்டநிலைமை.

உலர்த்தி—உலர்ச்சி.

உலர்த்துசூலை—ஒரு நோய்.

உலர்த்துதல்—உலரச்செய்தல். 'நனைந்த வான்றுகிலுலர்த்திய வெடுத்தெடுத் துதறல்' (சேதுபு. கந்த. ௫௧.)

உலர்தல் — 1. அழிதல். 'தங்கண்ட - மீதுலராதசாமவேதமார்ப்பவர்போல்' (திருவிளை. மாமனு. ௨௩.) 2. காய்தல், ஈரம் வறத்தல். 'ஆசென வழித்தெறிந் துலர்ந்த வாப்பியும்' (தணிகை. நாட்டு. ௧௫.) 3. வாடுதல். 'உலர்ந்துபோனே னுடையானே' (திருவாசக. 32. 1.)

உலர்ந்தபுல்—திரணம். (பிங்கல. ௨௧௬அ.)

உலர்ந்தம்—தண்டு (மூ. அ).

உலர்மரம்—வானம். (பிங்கல. ௨அ௩௫.)

உலரல்—காய்தல். 'ஒத்ததிருச் சந்நிதி முன் னுலரப்போட் டிவைசெய்வான்' (திருநெல். நெல்லு. ௨௫.)

உலரி—ஒருவகை மீன்.

உலருதல்—உலர்தல்.

உலவக்காரன்—1. உலோபக்காரன். 2. பிறரிடம் சங்கோசப்படுபவன்.

உலவநாசி—திப்பலி.

உலவம்—1. உலோபம். 2. மனக்கூச்சம்.

உலவமரம்—இலவமரம்.

உலவல்—1. உலாவுதல். 'ஊற்றமொ டுலவல் செய்யு மொருவனை' (கந்தபு. திருவவ. அ.) 2. குறைதல். 'உலவா மாற்றரு நீருறைவன' (சிவப்பிர. ௨. ௨௧.) 3. அறந்தோன். (அக. நி)

உலவாக்கிழி — எடுக்க எடுக்கப் பொருள் குறையாக் கிழிக்கட்டு. 'கன்னி நாடன் றனக் கிசைந்த-படியா லுலவாக் கிழிகொடுத்த படியை யறிந்த படிபகர்வாம்' (திருவிளை. உலவாக்கிழி. க.)

உலவாநிற்றல்—பரத்தல். 'இன்பவெள்ள முலவாநிற்கும்' (தாயு. நின்ற. உ.)

**உலவித்தல்**—1. உலோபமாயிருத்தல். 2. ஒறுத்தல். 3. கூசியொழுகல்.

உலவிபோன் — சுத்தத்தங்கம். 'உலவி பொன் இருபதின்கழஞ்சுபொன்னுக்கும்' (S. I. I. V. 281)

உலவு—1. உலாவல். 'எங்குமுலவுற்றது' (கந்தபு. தகரேறு. கரு). 2. குறைதல். 'உல விறன் படைஞரை' (தணிகைப். சீபரி. 262.)

உலவுதல்—1. உலாவுதல். 2. ஒழிதல். 'ஊழியறுத்திடினும் முலவாதால்' (இராமா. படைத்தலை. க௩.) 3. குறைதல். 4. சஞ்சரித்தல். 'பிரமாதி முடிவில் விடையூர்தியருளா லுலவுவீர்' (தாயு. சித்தர். ௩.) 5. பவனி வருதல். 6. இயங்குதல். 7. வியாபித்தல். 8. சூழ்தல்.

**உலவை**—1. ஊர். 2. ஒடைமரம். 3. ஒடைக் கொடி. 'அடவி தனிலுள வுலவைகள் தளிர் விட' (திருப்பு. 52.) 4. காற்று. 'உற்றவுலவை யிடை யோர்புலிங்க மூட்டியக்கால்' (கந்த பு. மார்க்க. உஅ.) 5. கிலுகிலுப்பை (மலை). 6. குடி. 7. குலம். 8. தழை. 'உரியபுற் கொடி கொடாவீ யுலவையினேப்பி' (இரகு. தேனு. ௩ரு.) 9. மரக்கொம்பு. 'உலவைநீள் வனத்து' (இராமா. வரைக். எ.) 10. மரச்செறிவு. (பிங்) 11. வள்ளிக்கொடி. (அக. நி.) 12. விலங்கின் கொம்பு. 'மதவேழ முலவை-கொண்டலைத் தெறிய (தணிகை. அகத். உஅச.) 13. அவா (அக. நி). 14. குடைவேல் (சூடா). 15. ஒடை (மலை). 16. வாதநோய். 'வழுத்துலவைக் குல முழுதும்' (தைலவ. தைல. 88).

**உலவைநாசி**—திப்பலி.

உலவையான்—வாயுதேவன். 'அண்டரு முலவையானை யவுணர்மாத் தலைவன் பாரா' (கந்தபு. அரசு. எ.)

**உலறல்**-1. காய்தல். 2. சினத்தல். 'தனைத் தான் சிதற மோதித் தகர்த்தே யுலறி யலறி' (ஞானவா. மனத். கூ.) 3. பெருஞ்சினம் (திவா).

உலறுதல்—1. காய்தல். 'உலறுதலை யோமையும்' (சிலப். காடு. எரு.) 2. சிதைத்தல். 3. சிலும்புதல். 4. சினத்தல். 5. பொலிவழிதல். 'வயங்கிழை யுலறியவடியின்' (சிறுபா. கஅ.) 6. வருத்துதல். 'வீழ்க்தலறி நின்றுலறி யங்காக்கும்' (நீலகேசி. 52) 7. வற்றுதல். (அகநா. 19) 8. சிதைதல். 'உடுக்கையுலறி யுடம்பழிந்தக்கண்ணும்' (நாலடி. 141)

உலா—1. ஒரு பிரபந்தம். அஃது: பேதை முதலிய எழு பருவப்பெண்களுங் கண்டு மயங்கும்படி தலைவன் பவனிவருதலைக் கலிவெண்பாவாற் கூறுவது. (வெண்பாப்பாட். உஎ.) 2. பவனி.

உலாதமம்—
உலாதனும்— } மனோசிலை. (மூ. அ)
உலாங்கம்—

உலாங்கிலி — 1. காவட்டம்புல். (மலை) 2. கிலுகிலுப்பை.

உலாங்கு—1. காவட்டம்புல். 2. கிலுகிலுப்பை. 3. பெருஞ்சீரகம்.

**உலாஞ்சுதல்**—1. கிறுகிறுத்தல். 2. தள்ளாடுதல்.

உலாத்தல்—1. உலாவச்செய்தல். 2. உலாவுதல்.

உலாத்து — 1. உலாத்தென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. உலாவுகை.

உலாத்துக்கட்டை—கதவுநின்றாடுஞ் சுழியாணி.

உலாத்துக்கதவு-பிணையற்கதவு (யாழ். அக)

**உலாத்துதல்**—உலாத்தல்.

உலாப்புறுத்தல்—அழித்தல். 'நாளுலாப் புறுத்தும் வாள்வலி' (பெருங்.)

உலாப்போதல்—பவனிவருதல்.

**உலாம்**—ஓர் உவமச்சொல். 'வேயுலாந் தோளினார்' (சிந்தா. 1581)

**உலாமடல்**—ஒரு பிரபந்தம்; அஃது: ஒரு பெண்ணைக் கனவிற் புணர்ந்தோன் விழித்த பின் அவள்பொருட்டு மடலூர்வேனெனக் கலிவெண்பாவாற் கூறுவது. 'கனவி னொருத்தியைக் கண்டுபுணர்ந்தோ-னனவினவள் பொருட் டாக நானே - யூர்வன் மடலென் றுரைப்ப துலாமடல்' (இலக்கணவி. அ௩எ.)

**உலாமா**-1. கச்சமரம் (பச். மூ). 2. கொழுமிச்சை. (சித். அக) 3. கடுகுரோகிணி. (மலை)

உலாய் — 1. இயங்கி, நிலைபெயர்ந்து. (புறப்பொ.) 2. சூழ்ந்து. (சிந்தா.)

உலாவரல்—1. சஞ்சரித்தல். 'காமுலா வரு பைந்தடமும்' (பாரத. நாடு. அ.) 2. பவனிவருதல். 'வால்வளை மணித்தீபங்கண் முதிர-வுழவுசாலணி வீதிதோ றார்ந்துலா வருமால்' (இரகு. நாட்டு. கரு.) 3. அசைதல். 'உலாவரு பதாகையி னீட்டம்.' (கந்தபு. யுத்த. முதனாட். 53)

உலாவல்—உலாவுதல்.

உலாவு—1. உலாவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. சஞ்சரித்தல். 'உலாவுறு காலிலாத முடவனே' (தணிகை. அகத். ௬கரு.)

உலாவுகாட்சை — வரிவகையுள் ஒன்று. (S. I. I. V. 330)

உலாவுதல் — 1. அசைதல். 'உலகங்கள் கீழ்மேல வாசப் பெருங்காற் றுலாவின்' (தாயு. சித்தர். ௬.) 2. ஆடியசைதல். 'துறைத்தோணி நின்றுலாந் தூங்குநீர்ச் சேர்ப்ப' (பழமொ. எ. ரு.) 3. சாரிபோதல். 4. பொழுதுகழித்து விளையாடல். 'மன்றுதொறுலாவு மலர்வாவிதொறுலாவும்' (கந்தபு. திருவிளை. ௬.) 5. மெல்லநடத்தல். 6. விளையாடல். 'உரைதருகா மாதிகளா முலூகநிரை யுணர்வெனும்விண் ணுலாவுமன்றே' (ஞானவா. வைராக். எ௬.) 7. சஞ்சரித்தல். 'நிலவுலாவிய நீர்மலி வேணியன்' (பெரியபு. பாயிர. 1.) 8. வியாபித்தல். 'உயிரென வுலாயதன்றே' (கப்பரா. ஆற்றுப். 20.) 9. சூழ்தல். 'தூசுலாய்க்கிடந்த' (சீவகசிந்தா. 550).

உலிந்தம்—ஒரு தேயம். [உலிநூ०.]

உலிமணி—நாயுருவி (மலை).

உலிற்கள்—வெண்கலம்.

உலு—தினை முதலியவற்றின் பதர்.

உலுக்குதல்—1. குலுக்குதல். 2. நடுக்குதல்.

உலுக்குமரம்-மிண்டிமரம், நெம்புகட்டை.

உலுங்குதல் — கிணிரென்றொலித்தல். 'பாதச்சிலம்புக ளதிர்ந்துலுங்க' (கோபாலகிருஷ்ண. கீர்த். 1)

உலுடநம்—1. உருளுதல். 2. புரளுதல்.

உலுடிதம்—1. தவாரம். 2. நிலத்திலுருளுதல்.

உலுண்டநம்—1. உருட்டுதல். 2. களவுசெய்தல். 3. கொள்ளையிடுதல்.

உலுத்தத்தனம்—உலோபத்தன்மை.

உலுத்தம்—1. உலோபம். 2. பேராசை.

உலுத்தல்—உதிர்த்தல்.

உலுத்தன்—1. பொருளாசைக்காரன். 2. ஈகையில்லாதவன். 3. வாங்கின கடனைக் கொடாதவன். 4. வேடன் (நாநார்த்த).

உலுத்துதல்— } உதிர்த்தல்.
உலுப்புதல்— }

உலுப்பை — 1. அடைந்தோர்க்களிக்கும் ஊண்பண்டம். 'உம்பர்கோன் வைத்த வுலுப்பையென' (வருணகுலா. ௨௨०). 2. காய்வருக்கம். 3. கோயின்முதலியவற்றிற்கு அனுப்புங் காணிக்கை. 4. சாமான்பை. 5. சிறுகாய். 6. பெரியவர்களுக்கு அனுப்பும் ஊண்பண்டம்.

உலுப்பைகட்டுதல் — பெரியார்தயவுசம்பாதித்தற்கு வெகுமதியனுப்புதல்.

உலுப்பைகொடுத்தல்—கீழ்ப்பட்டவர்க்குப் படிகொடுத்தல்.

உலும்பினிவனம் – கௌதமபுத்தர்பிறந்த இடம். (மணிமே.)

உலுவம்—வெந்தயம் (மலை).

உலுவா–1. வெந்தயம் (மலை). 2. பெருஞ்சீரகம் (மலை).

உலுவாவரிசி—வெந்தயம்.

உலூகம்–1. ஒருவகைப் பரி. 2. குங்குலியம். 3. கூகை (பிங்). 4. உரல் (அக. நி.)

உலூகலகம் — 1. குங்குலியப்பூண்டு. 2. குங்குலியம்.

உலூகலம்–1. குங்குலியம் (மலை). 2. மரவுரல். 'காருலூகல நிகரடிக் களிறு' (பாரத. உலூக. ரு). 3. கல்லால். (நாநார்த்த.)

உலூகன் — 1. இந்திரன். 2. ஒரு பிராமணன்.

உலூகாரி—காகம்.

உலூதம்—உலூதை. (நன். 273. மயிலை.)

உலூதை — 1. எறும்பு (நாநார்த்த). 2. சிலந்திப்பூச்சி. 'ஆன வைம்பொறி யுண்டி நித்திரை யச்ச மைதுன மாதியா-லூனில்·வந்திடு முன்பி லாதவை யென்று ரைக்கி னுலூதைபோல்' (சி. சி. பர. உலோ. மறு. 8.) [ஊ-ஓ தா.]

உலூபி—1. அருச்சுனனை விவாகஞ்செய்து கொண்ட ஒரு நாககன்னிகை; இவள்: இராவானுக்குத் தாய். 'ஒடுங்கயல் விழியாரி லுலூபிப்பெய ரவளோடு' (பாரத. அருச்சுனன்றீர்த். அ). 2. ஒருவகை மீன்.

உலூனகம்—1. பின்னம். 2. பசு. (1, 2. நாநார்த்த.)

உலை — 1. உலைச்சாலை. 'புரிபுனிதவுலை' (தைல. வைத்திய. கக). 2. உலையென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. கொல்லர் முதலியோர் இரும்பு முதலிய உலோகங்களைக் காய்ச்சி வேலைசெய்தற்காக அக்கினிமூட்டியிருக்குங் குண்டம். 'கொல்லுலை வேற்கணல்லார்' (நைடத. நாட். உள). 4. மனநடுக்கம். 'உலைதரு மவினமொன்றை' (ஞானவா. வைரா. 24). 5. நெருப்பு மூட்டப்பட்ட அடுப்பு. 6. பாகஞ்செய்தற்கு அடுப்பில்வைத்த பாத்திரத்திற் பெய்யும் நீர். 'தேக்கநி லார மாட்டிச் சிருணத் தசும்ப ரொன்றில்-வாக்கிய வுலைப்பெய் தேற்றி' (கந்தபு. வில்வல-வதை. கஙு.) 7. பாகஞ்செய்தற்கு அடுப்பிலேற்றும் பாத்திரம்.

உலைக்களம் — 1. அடுப்பு. 2. கொல்லனுலைக்கூடம். (பிங்.)

உலைக்குறடு—உலைமுகத்தில் இரும்பெடுக்குங் குறடு.

உலைச்சல்—உலைத்தல்.

உலைசல்—உலைதல்.

உலைத்தண்ணீர் — 1. காய்ந்த இரும்பு தோய்க்கும் நீர். 2. பாகஞ்செய்யவைக்குந் தண்ணீர்.

உலைத்தல்—1. அலைத்தல். 2. அழித்தல். 3. மனங்கலங்கச்செய்தல். 'உலைத்துவிட்ட கமலம்' (நைடத. கைக். கo). 4. கெடுத்தல். 5. கலைத்தல்.

உலைத்துருத்தி—கொல்லுலையிலே நெருப்பெரிதற்காகப் பிரயோகிக்குங் குழலோடிணைந்த தோற்பை (திவா).

உலைதல்—1. அலைதல். 'உலகஞ்சுற்றி... ......உலையவிட்டாயெனில்' (தாயு. சுகவாரி. 6). 2. கலைதல். 'ஒன்னுத் தெவ்வ ருலைவிடத்து' (பெரும்பாண். 491). 3. கெடுதல். 'அலைபாழி மிசைத்துயில்கூர் பண்ணவனே முதலோர்க ளமர்செய் தானு - முலையாது கடந்திடுபோ ராற்றலொடும்' (கந்தபு. வரம். உo). 4. அழிதல் (திவா). 5. நிலைகுலைதல். 'சாரதக்குழாமுலைதலும்' (தணிகைப். சீபரி. 477). 6. வலிமைகுறைதல். 7. மனங்கலங்கல். 'உலைந்தனர் முனிவர்' (கந்தபு. சூரன்ற. அ.) 8. வருந்தித்திரிதல். 'பணித்தன வாற்றியே-யுலைவர் வைகலு மூசலி னீர்மையார்' (கந்தபு. தேவரையே. உ). 9. அஞ்சுதல் (திவா).

உலைநீர்—1. காய்ந்த இரும்புதோய்க்கும் நீர். 2. பாகஞ்செய்யவைக்கும் நீர்.

உலைப்பாடு—மிக்க நடுக்கம். 'உலைப்பாடே படத்தழுவி' (தேவா. 1109. 8.)

உலைப்பு—1. அலைப்பு. 2. அழித்தல். 'உலைப்புறு வனவதி லுவந்து தோய்நர்க்கே' (தணிகைப். அகத். உக). 3. வருத்துதல் (திவா).

உலைமுகம்—கொல்லனுலையிடம்.

உலைமுந்து — கொல்லனுலையின் துவாரம். (பிங்)

உலைமூட்டல்—கொல்லனுலையில் நெருப்பு மூட்டல்.

உலைமூடி — உலைப்பானையின் மேன்மூடி.

உலையாணிக்கோல் — சூட்டுக்கோல். (சூடா).

உலையிற்பிணந்தின்னி—மாமிசபேதி.

உலையேற்றுதல் — உலைவைத்தல். 'தமக்கென் றுலையேற்றுர்' (ஆசாரக். கூ.)

உலைவு—1. அச்சம். 'உலைவுறசைசவத்துடன்' (ஞானவா. வைரா. அசு.) 2. அலைவு. 3. இளைப்பு. 'உலைவின்றித் தாழா துஞற்று பவர்' (வள். சுஉo.) 4. கெடுதல், தோல்வி. 'ஒன்னுத் தெவ்வ ருலைவிடத் தார்த்து' (பெரும்பா.419) 5. தரித்திரம். 'உயக்குபடர் வருந்தமு முலைவு நோக்கி' (புறநா. கடுo.) 6. நடுக்கம். (சூடா). 7. அழிவு. 'உலைவறு மறைகளும்' (தணிகைப்பு. களவு. 109).

உலைவைத்தல்—1. உலைப்பானையை அடுப்பில்வைத்தல். 2. பிறனுக்குக் கேடுசூழ்தல்.

உலோகக்கட்டி — பஞ்சலோகத்தையும் உருக்கிக்கூட்டிய கட்டி.

உலோககர்த்தர்—உலகத்தைச் சிருட்டித்தவர்.

உலோககற்பம்—அபவென்னை.

உலோககாந்தம்—காந்தக்கல்.

உலோககாரன் — கொல்லன். [லோஹகாரு.]

உலோககிட்டம்-இரும்புக்கறை. [லோஹ கிஷ்ட.]

உலோகசாட்சி — துவாதசாதித்தருள் ஒருவன் (பிங்).

உலோகசிந்து—1. உலோகத்தை வென்றவன். 2. புத்தன். 3. வச்சிரக்கல். [1, 2. லோகஜித்: 3. லோஹஜித்.]

உலோகத்தம்பம்-இராசராசேச்சுரநரகங்களுள் ஒன்று. (சி. போ. பா. 2. 3. பக். 204).

உலோகத்திரம்—வெள்ளிலோத்திரம்.

உலோகத்திரயம்-சுவர்க்கம், பூமி, பாதாளம் என்னும் மூன்றுலோகம். [லோகத்ரய.]

உலோகதருமிணி — சபீசதீக்கையினொருவகை; அது: பௌதிகாசாரியர் திரோதானசத்திருபசிகாசேதமின்றிக் கிருகஸ்தனுக்குச் செய்யும் தீக்ஷை; இஃது: அபரமுத்தியைக் கொடுப்பது. (சி. சி. அ: ரு. சிவாக்.)

உலோகதாதா-கடவுள். [லோகதாதா]

உலோகதாது-துத்தபாஷாணம். (மூ. அ)

உலோகதாரம்-நரகம். [லோஹதார.]

உலோகநிமிளை—நிமிளைவகையில் ஒன்று.

உலோகப்பிரகாசன்- துவாதசாதித்தருள் ஒருவன் (பிங்).

உலோகப்பிரசித்தம் — உலோகத்திலே நன்றாயறியப்பட்டது.

உலோகப்பிரதீப்தம்-ஒரு நரகம். (சி.போ. பா. 2. 3. பக். 204)

உலோகப்பிரவாதம் — உலோகவாதம். [லோகப்ரவாத.]

உலோகபற்பம்— அயவெள்ளை. (மூ. அ)

உலோகபாந்தவன் — சூரியன். [லோகபாந்தவ.]

உலோகபாலர் — 1. அரசர். 2. திக்குக்காவலராகிய இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்பவர். 'இந்திரன்முதலாம்லோகபாலரை நன்கேத்தி' (மச்சபு. விருக்க. ரு.) [இவரோடு பிரமவிட்டுணுக்களைச் சேர்த்துப் பதின்மரென்பாருமுளர்.] (சைவச. பொது. ருoஉஅ. உரை.)

உலோகபாலன்—1. அரசன். 2. திக்குக்காவல்செய்யும் தேவன். [லோகபால.]

உலோகம்—1. உலகம் (திவா). 2. ஆயுதம் 3. இரத்தம். 4. இரும்பு. 5. உருக்கு. 6. உலகத்துக்கு அடுத்ததன்மை. 7. கூட்டம். 8. சனம். 9. சுவர்க்கம், பூமி, பாதலம் என்னும் மூன்றையும் உணர்த்தும் ஒரு பொதுப் பெயர். 'அரவுலோகத்திடையாழ்ந்து' (இரகு.திக்கு.264). 10. திரள். 11. பார்வை. 12. பூமி. 13. பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் ஆகிய தாதுக்களையுணர்த்தும் ஒரு பொதுச்சொல். 'பைம்பொனுங்-கிரவு லோகத்தை மீச்சிதறும்' (இரகு. திக்கு. 264). [1, 7, 8, 9, 10, 11. லோக. 2, 3, 4, 5, 13. லோஹ.]

உலோகமணல்—இரும்புமணல்.

உலோகமரியாதை—உலகவழக்கம்.

உலோகமஸ்தம்—ஓமம்.

உலோகமாதா—இலக்குமி.

உலோகமாபாலன் — அச்சணந்தியாசிரியன். (சிந்தா.)

உலோகயாத்திரை—உலகநடை. 'உலோகயாத்திரைக ளதிகரியா தறுநரர்க்கு' (வேதா. சூ. 164.)

உலோகரட்சகன் — 1. உலகத்தைக்காப்பவன். 2. விட்டுணு.

உலோகராட்டு—கடவுள்.

உலோகருடம்-தேசவழக்கம். (யாழ். அக)

உலோகவாசாரம்-உலகநடை. 'நீயுலோகவாசாரமோரணுத்துணையானுநீங்கில' (வைரா. சத. கரு.)

உலோகவாதம்—ஐதிகப்பிரமாணம். (சி. சி. அளவை. க. ஞாந.) [லோகவாத.]

உலோகவிருத்தம்—1. பக்கப்போலிவகையுள் ஒன்று. (மணி. 29. 162) 2. உலகவழக்கொடு மாறுபட்டது.

உலோகவிலாசினி-ஒரு பழைய புராணம். (பெருங். உஞ்சைக். 32. 2. குறிப்பு)

உலோகவேடணை—உலகவிச்சை.

உலோகன்—உலோகவைரவன். (த. நி. போ. உசகூ.)

உலோகாக்கிரம்-சிரேட்டவுலகம். (த: நி. போ. உளச.)

உலோகாசாரம்—உலகநடை, உலகவழக்கம்.

உலோகாதியந்தம்—உலகாரம்பமும் முடிவும்.

உலோகாதீதம்—உலோகத்துக்கு அதிதப்பட்டது; அஃதாவது: உலகத்துக்கெட்டாதது, மேற்பட்டது.

உலோகாந்ததந்தம் — காந்தத்தின் நுனியைப்பற்றியிருக்கும் வேல்.

உலோகாந்தரம்—மற்றவுலகம், வேறுலகம். [லோகாந்தர.]

உலோகாபவாதம்—உலகநிந்தை. [லோகாபவாத.]

உலோகாயதம்—1. மூவகைநாத்திகநூல்களி னொன்று; இது: செய்தவன் பிரகற்பதி பகவான். காட்சி ஒன்றே பிரமாணம் என்றும் காட்சிப்பொருளாகிய பிருதிவி, அப்பு, தேயு, வாயு என்னும் நான்குமே மெய்ப்பொருளென்றும், இந்த நான்கு பூதக்கூட்டமான சரீரமே ஆன்மா என்றும், உடம்பு வளர அறிவு வளரும், உடம்பு தேய அறிவு தேயும் என்றும், ஈசுவரனில்லை என்றும், இம்மையிற் சுகதுக்கங்களே சுவர்க்கநரகங்களென்றும், சரீரம் நசித்தால் மேலைக்காவது ஒருவினை இருப்பதில்லை என்றும் இந்நூலிற் சொல்லப்படும். (சி. பி. கை. பக். ௧௬). 2. சார்வாகமதம். (திருக்காளத். பு. 30. 25)

உலோகாயதர் – உலோகாயதமதத்தோர். (சி. சி. சு: ௨௩. ஞானப்.)

உலோகாயதன்—உலோகாயதநூலை அநுசரிப்போன், சார்வாகன். [இவன் ஈசனும் ஆன்மாவும் இல்லையென்றும் மகளிரிடத்தின்பமொன்றுமே பொருளென்றுங் கொள்வன்.] 'தாரணிமிசை லோகாயதன் சமய நடை சாராமல்' (தாயு. மௌன. ௬.)

உலோகாயதிகன்—உலோகாயத சமயத்தோன். [லோகாயதிக.]

உலோகார்த்தம்—உலகதன்மை.

உலோகாலோக்கியம் — சக்கரவாளகிரி. (கூர்மபு. அந்தகாசு. ௧௯. உரை.)

உலோகாலோகம் — சக்கரவாளமலை. 'உலோகாலோகசக்கரமென்றும், சக்கரவாளகிரி என்றும் பெயராயிருக்கும்' (த. நி. போ. ௩௮௧.) [லோகாலோக.]

உலோகிதசந்தனம்—குங்குமப்பூ.

உலோகிதநதி—பிரமபுத்திராநதி. 'தென்டிரைக்-கரவுலோ கிதநதிக் கரையின் முன்னினான்' (இரகு. திக்கு. ௨௬௪.)

உலோகிதம்—1. இரத்தம். 2. சிவப்பு. 'பாவுலோகிதமலரொடு' (இரகு. திக்கு. ௨௬௪.) 3. செவ்வாயென்னுங் கிரகம். 4. மஞ்சள். 5. யுத்தம். 6. சந்தனம். (மூ. அ) 7. சூதாட்டவகையுள் ஒன்று. [லோஹித.]

உலோகிதன்—செவ்வாயென்னும் கிரகம். (பிங்)

உலோகிதாக்கன்—1. செங்கண்ணன். 2. விட்டுணு. [லோஹிதாக்ஷ.]

உலோகிதாங்கன் — செவ்வாயென்னுங் கிரகம். [லோஹிதாங்க.]

உலோகேசன்—1. அரசன். 2. பிரமா. [பலகாலத்திலும் ஒருவர்பின்னொருவராயிருந்த பிரமாக்களுள் உலகேசன் என்பவன் ஒரு பிரமா என்றுசொல்லப்பட்டது.] 'என் காலந்தன்னி-லிற்றவிதி பலகோடி யுதித்த வேதா விலக்கமெனக் கதிவரிதா மிவர்கடம்மில்' 'உலகேச னெனும்விரிஞ்ச னுறையுநாளில்' (சேதுபு. சக்கர. ௧௧. ௧௨.) [லோகேஶ.]

உலோகேசுவராத்துமசை — ஒரு சைநப்பெண்தேவதை. [உலோகேசுவரர் என்னும் சைநமுனிவன்மகள்.]

உலோகோத்தமம் — பொன். [வெள்ளி முதலியவுலோகங்களில் உத்தமமானது.]

உலோகோத்தரம்—1. எல்லாரும் இச்சிக்கக்கூடியது. 2. விசேஷமானது.

உலோகோத்தி—உலகவார்த்தை. [லோகோக்தி.]

உலோச்சு–தம் தலைமயிரைத் தம்கையாற் பறிக்கை. (சீவக. 2820. விசேடக்குறிப்பு)

உலோசநம்–கண்.' தனவரு முலோசநம் போல்' (பிரபோத. 32. 54). [லோசந.]

உலோசம்—1. ஒருவகைக் காதணி. 2. கண்மணி. 3. சுட்டியென்னும் ஆபரணம். 4. வானம். 5. விண்ணுன்.

உலோசி—பேய்ப்பசளை. (மூ. அ.)

உலோசிதம்—சந்தனம்.

உலோட்டம்-1. இரும்புக்கிட்டம். 2. ஒடு. 'தூமமே காவண முலோட்டமொடு கோமயம்' (தைல. தைலவ. கஉஎ.) 3. மண்ணுங்கட்டி. [வொஷ.]

உலோட்டி—1. சோலி. 2. வெறியுள்ள சாருயம். 3. தொங்கரவு. (யாழ். அக.)

உலோத்திரம்—வெள்ளிலோத்திரம். 'வீசவெள்ளிலோத்திரப் பொதும்பர் பாய்ந்து விம்முமே' (சூளா. இரத. கசு.)

உலோபத்தனம்—
உலோபத்துவம்— } உலோபத்தன்மை.

உலோபம்—1. கடும்பற்றுள்ளம். 'உட்டெறு வெம்பகை யாவ துலோபம்' (இராமா. வேள். ௩௨.) 2. அற்பம். 3. ஆசை. 4. குறைவு. 'மந்திரலோப கிரியாலோப' (சி. சி. ௨. ௨௧. சிவாக்.) 5. கெடுதல். அழிதல். 6. கெடுதல்விகாரம். 'ஆன்ற முலோபத்தொ டாகம மாதேச மாரியத்துள்' (வீர. சந்தி. ௧௦.) 7. பேராசை. [லோஜ.]

உலோபர்—பேராசையுடையவர். 'ஊறு காட்டினர்க்கலா லுலோப ரீவரோ' (கந்தபு. திருநாட். ௩௨.)

உலோபன்—பேராசைக்காரன்.

உலோபனம்—1. ஒறுப்பு. 2. குறைத்தல்.

உலோபாமுத்திரை — அகத்தியன்மனைவி. 'விதர்ப்பர்கோன் பயந்த லோபா-முத்திரை தனைமுன் வேட்டு' (கந்தபு. அகத்திய. ௨அ.)

உலோபி — பேராசையுள்ளவன். [லொபிநு.]

உலோபித்தல் — 1. பேராசைகொள்ளல். 2. சிக்கனமாயிருத்தல். 3. கெடுதல்விகாரமடைவித்தல். 'சவ்வையுலோபித்து' (வீரசோ. வேற். 5. உரை).

உலோபுதல்—பேராசைகொள்ளல். 'எதுமுலோபாய்காண்' (திவ். பெரியாழ். 2. 7. 6)

உலோமகருணம் — 1. புகைப்பொடிப்பு. 2. முபலாகிய விலக்கு. [லொமகண-ல:]

உலோமகிடம்—பேன்.

உலோமசம்—சடாமாஞ்சி. (மூ. அ)

உலோமசன்-1. நிறைந்தமயிருடையவன். 2. மகாபாரதத்திலே சொல்லப்படும் ஒரு முனிவன்.

உலோமம்—1. ஒழுங்கு. 2. வால். (நாநார்த்த) 3. வாலுனி. 4. குதிரை. 5. முதன்மையுள்ளது. 6. திலகம். 7. குதிரையணி. 8. புறமயிர். (4-7. நாநார்த்த)

உலோமன்-1. உரோமன். 2. ஒழுங்குடையான்.

உலோலம்—1. அலைகை (நாநார்த்த). 2. அமைவில்லாதநிலை. 3. ஆசைப்பெருக்கம்.

உலோலன்—1. காமவிகாரமுடையவன். 2. தட்டன்.

உலோலிதம்—1. அசைவு. 2. உலோலிதமுகம். 3. பயம்.

உலோலிதமுகம்-சிந்தனைமிகுதியான் மனந்தளர்ந்து ஒருதோண்மேற் சாய்ந்த முகநிலை.

உலோலை—1. இலக்குமி. 2. நாக்கு.

உலோவுதல்—பேராசைகொள்ளல். 'உயிர்தர வுலோவினீரே' (கம்பரா. கார்முக. 46.)

உவ்—உவை. 'உவ்வுமெவ்வயினேயுநீயே' (பரிபா. 2. 58).

உவ்வாதம்—தவக்கோட்பாடு. (நீலகேசி. அரும்.)

உவ்வி—1. தலை. (சூ. நிகண். ௨: ௯அ.) 2. ஒருவரி. (T. A. S. iii. 32).

உவ்வு—தவம். (பிங்) [உவவு என்பது. சூ. நிகண்டு.]

உவ்வை—உப்பை.

உவ — உவவென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும்.

உவக்காண்—1. அப்பொழுது. 2. உங்கே. 'உவக்காணெங்காதலர்செல்வார்' (வள். ௧௧அ௫.)

உவகுருவாணன் — பிரமசாரியாயிருந்து வேதமுழுதுங் கற்றபின்பு விவாகஞ்செய்துகொண்டவன். 'உவகுரு வாண னென்போன் மறைமுழு துணர்ந்த பின்னர் நவையறுமகளிர் தம்மைவேட்டுளோன்' (கூர்மபு வருண. ௬எ.) [உவகாலவா ணெ.]

உவதலம்—1. திரிபலை (மலை). 2. திப்பலி (மலை).

உவகை—1. காமம். 'உணவி னசையாற் கொல்ல வந்தநீ யுவகை யாசையா லுள்ளழிந்து' (பாரத. வேத். ௧௧.) 2. பிரியம். 3. மகிழ்ச்சி. 'உதியமை யுளத்தின னுவகையொன்கடல்' (இரகு. இரகுவுற்.) 4. சிருங்காரரசம். (திருக்கோ. 1. உரை.)

உவகைப்பறை—மங்கலப்பறை. (திவா)
உவகைமுத்து—உவகைக் கண்ணீர்த்துளி.
உவச்சக்காணி— உவச்சனுக்குக் கோயிற் கொட்டுழியத்துக்காக விடப்படும் மானியம். (சாசனம்)
உவச்சர்—1. பூசாரிகள். 2. சோனகர். (சூ. நிகண். உ: ௩௦.)
உவச்சவரி-உவச்சரிடமிருந்துபெறும் வரி. (S. I. I. i. 81).
உவச்சு—மத்தளம். 'உவச்சும் பறையுங் கொட்டக்கடவதல்லன்' (S. I. I. vii. 456)
உவசமம்-உபசாந்தம். 'உவசமத்தினுய்ப் பனவும்' (நீலகேசி. 113.)
உவட்சி—துவளுகை.
உவட்டல்—1. அருவருத்தல். 'உவட்டி யுந்திடுதிரைப்புனல்' (கந்தபு. ஆற்றுப். கச.) 2. பெருகுதல். 'மதக்கலுழியுவட்ட' (சேதுபு. நாட். சூ.) 3. வெறுத்தல், தெவிட்டல். 'உவட்டாத பேரின்பமான சுகவாரியினை வாய்மடுத்து' (தாயு. சின். உ.)
உவட்டி—அருவருப்பு.
உவட்டித்தல்—1. அருவருத்தல். 2. புரளுதல்.
உவட்டிப்பு—உவட்டி.
உவட்டிற்கூர்மை—மாமிசபேதி.
உவட்டு — 1. அருவருப்பு, குமட்டுகை. 2. உவட்டென்னேவலும், தெரிநிலைவினைப் பகுதியும், வினைத்தொகையும். 3. புரட்சி. 4. பெருக்கு. மேவருஞ்சடைப் பகீரதி யுவட்டெழ' (உபதேச. சூராதி. கஉ.)
உவட்டுதல்—1. அருவருத்தல். 2. புரளுதல். 3. பெருகுதல், மிகுதல். 'மயலுவட்டி... கதமொடு பிளிறும்' (கல்லா. 20. 37) 4. தெவிட்டுதல். 'உவட்டாத பேரின்பமான சுகவாரியினை.' (தாயு. சின்மயா. 2.) 5. வெறுப்புறுதல். 'மாயவாழ்க்கையி லூனமே யிருத்தலென்றுவட்டினோர்களும்' (அருட்பா. குடும்ப. 18).
உவட்டெடுத்தல் — பெருக்கெடுத்தல். 'ஆங்க-னுவட்டெடுத் தொழுகருவி' (தணிகைப்பு. வீராட்ட. எசு.)
உவடு—1. உப்பு. 2. உப்புப்படர்ந்தநிலம்.
உவண்—உவ்விடம், மேலிடம். 'சிறுகால் முகம்பொழில்சேர்-துவணுப்த்திட' (சிந்தா. 2853)
உவணகேதநன்—விட்டுணு. (சூ. நிகண். க: கக.)
உவணம் — 1. உயர்ச்சி. 'உவணவைப் பெனும் பொன்னெயில்வட்டமும்' (கந்தபு. நகரழி. ௩அ.) 2. கருடப்பறவை. 'உவணச் சேவ லுயர்த்தோ னியமமும்' (சிலப். ஊர் காண். 8.) 3. கழுகு. (சூ. நிகண். ௩: ௰௪.) 4. பருந்து.
உவணவுயர்த்தோன்—விட்டுணு.
உவணர் — பதினெண்கணக்களுள் ஒருவகையாராகிய கருடர். 'கதிபடருவணர் சித்தர்' (கந்தபு. வீரவாகுகம். ௩எ.)
உவணவூர்தி-விட்டுணு. 'இராசதத்துவண வூர்தி' (தணிகைப்பு. அகத். ௩எ௦.)
உவணன்-கருடன். 'உவணன் மற்றவனை வெல்வான்' (சேதுபு. கந்தரு. ௰அ.)
உவணி—வாட்படை. (திவா.)
உவணை—1. உவ்விடம். 2. தேவலோகம். 'ஆகசீத் துவணைமே லுறைந்தான்' (சேதுபு. விதூம. ௰௪.)
உவத்தல் — 1. மகிழ்தல். 'உலகமுவப்ப வலனேர்பு' (திருமுரு. க.) 2. விரும்புதல்.
உவதி — யுவதி, பதினறுவயதுப்பெண். [யுவதீ]
உவதை-மலையின்வீழ்பேரருவி. (சூ.நிகண். ௰: கக.)
உவப்பு—1. உயரம் (பிங்). 2. பிரியம், விருப்பம். 'உவப்பொடு தவப்பாதையி னிவர்ச் தன்றி' (வைரா. தீப. கஅ.) 3. பொலிவு. (திவாகர.) 4. மகிழ்வு. 'நுங்களை வைகலு நோக்கி யுவப்பா-யிக்குறை யின்ற திகந்து' (கந்தபு. தெய்வ. ௩க.) 5. விளையாட்டு.
உவமச்சொல் — உவமவுருபு. (சீவக. 2490. உரை.)
உவமப்போலி — 1. உள்ளுறையுவமை. (தொல். பொருள். உகக. நச்.) 2. இட்டாத் தப்போலி; அது: விபாத்தி நிச்சயித்தற் கிடனுதலாகிய உவமையிலக்கணமின்றியும் உவமைபோலத் தோன்றுவது. (சி. சி. அளவை. கச. சிவஞா.)
உவமம் — உவமை. (தொல். பொருள். 276)
உவமவாசகம்—உவமவுருபு. (சீவக. 10. உரை).

உவமவுருபு — உவமானத்தைச்சார்ந்து ஒப்பிப்பதைக்கருதும் இடைச்சொல்; அச் சொற்கள் அன்ன, எய்ப்ப, ஒப்ப முதலியன. (தொல். பொரு. உ௮௧.)

உவமவுருவகம்—உருவக அலங்காரத்தின் ஒருவகை; அஃது: உருவகமாக்கப்பட்ட உவமானத்தையே பின்னும் உவமைப்பொருளாக எடுத்துக்கூறுவது; 'மதுமகிழ்ந்த மாதர் வதனமதிய - முதய மதியமே யொக்கும் - மதிதளர்வேன் - வெம்மை தணிய மதராக மேமிகுக்குஞ் - செம்மை யொளியாற் றிகழ்ந்து' (தண்டி. ௩௭.)

உவமன்—உவமை. 'ஓய்விலாதன வுவமனி லிறந்தன' (திருவாச. திருச்சதக. ௩௧.)

உவமாதீபகம்—ஓரலங்காரம்.

உவமாநிலம்—சுவர். (பிங்கல. ௬௧௦.)

உவமானசங்கிரகம்—ஒருநூல்.

உவமானத்தொகை—உவமானந் தொக்கு நிற்பது.

உவமானப்பிரமாணம்—ஓரளவை; அஃது: ஆமாவை ஆப்போன்றிருக்குமென்றறிதல்.

உவமானம் — உபமானம். 'மருவுநேருவமானம்வகுத்திடப் - பெருகுகாதல் பெறின்' (சேதுபு. இராம. ௩௯.)

உவமானித்தல்—உவமித்தல்.

உவமித்தல்—ஒப்புமைகாட்டிக் கூறல்.

உவமிப்பு—உவமித்தல்.

உவமேயம்—உபமேயம்.

உவமை—1. ஒப்புமை. 'தன்னோ டுவமை யில்லாதவனை' (திருக்கோ. ருக.) 2. ஓரலங்காரம்; அது: பண்பு, தொழில், பயன் என்பன காரணமாகப் பொருளொடு பொருள் இயையவைத்து ஒப்புமைபுலப்படச்சொல்வது. 'பண்புந் தொழிலும் பயனுமென் றிவற்றின்-ஒன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்த், தொப்புமை தோன்றச் செப்புவ துவமை' (தண்டி. ௩௦.)

உவமைத்தொகை—உவமையுருபு தொக்கு நிற்குந் தொடர். (நன். பொது. ௧௫.)

உவமையத்திணை—தானே எடுத்த பொருளை விளக்கவும் மற்றவர் அவற்றை ஒப்புக் கொள்ளவும் பிறிதொன்றனை எடுத்து இரண்டிற்கு ஒப்புமைகாட்டித் தன்பொருடோன்ற விளக்கியுரைப்பது. (தொன்னூல். ௧௫௫.)

உவமையணி—ஓரலங்காரம்.

உவமையாகுபெயர்—உபமேயத்தைக் கருதும் உபமானத்தின்பெயர். 'மயில்வந்தாள்'. இங்கே மயில் என்னும் உவமானத்தின் பெயர் மயில்போலும் பெண் என உவமேயத்திற் காயிற்று. (நன். பெயர். ௩௩. உரை.)

உவமையுருபு—உவமையைச் சார்ந்துவருமுருபு.

உவமையுருவகம்—உவமவுருவகம்.

உவமைவிலக்கு — உவமையணியுள் ஒருவகை. (தண்டி. ௩௨.)

உவமோத்தரபதகருமதாரயன்—பின்மொழியொப்பில்வரும் பண்புத்தொகை. (பி. வி. உஉ. உரை.)

உவர்—1. உப்பு. 'உவர்முதலமைந்தநல்கி' (கந்தபு. வில்வல. வதை. ௧௭.) 2. உயர்திணைப் பலர்பாலில்வரும் சுட்டுப்பெயர். 'உவராலாக்கி' (தணிகைப்பு. அகத். ௩௭௦.) 3. உவர்ப்பு. 4. உவர்மண். 'செழுநவவறுவை சாணியுவர்செறிவித்து' (சி. சி. உ: ௫உ.) 5. கடல். 'வரைநிரைகிடந்த திரையுவர் புகுந்து' (கல்லா. 15. 22) 6. வெறுப்பு. 7. களர்நிலம். 8. இனிமை. 'வீங்குவர்க்கவவி னீங்கல் செல்லேம்' (நற். 52)

உவர்க்கடல் — உப்புநீர்க்கடல். 'உவர்க் கடலன்னசெல்வருமுளரே' (நன். உ௬௧. உரை.)

உவர்க்கம் — கடற்கரை. 'உவர்க்கத்தொரோ வுதவிச் சேர்ப்பன்' (திணைமாலை. 62).

உவர்க்களம் — 1. உப்பளம். (திவா) 2. உவர்நிலம். (பிங்)

உவர்க்காரம்—சவர்க்காரம்.

உவர்ச்சங்கு—முட்சங்கு.

உவர்த்தரை-1. உப்புவிளையும்நிலம். 2. உவர்நிலம்.

உவர்த்தல்—1. அருவருத்தல். (தொல். பொருள். ௨௭௨.) 2. அறுசுவையினொன்றாகிய துவர்ப்பு. 3. உப்புக்கரித்தல். 4. வெறுத்தல். 'உகவாவுனதுள்ளமுவர்த்ததுவோ' (சிந்தா. பதுமை. ௨௧௭.)

உவர்நிலம்—களர்நிலம். 'எங்ஙனு முவர்நிலத்தி னென்முளை வித்திடினும் விளைவெய்திடாது' (பாரத. கிருட். ௨௫.)

உவர்நீர் — உப்புச்சலம். 'உவர்நீர்பருகுமளிமுகிற்குலத்துக்கு' (தணிகை. திருநாட். ௮௪.)

உவர்ப்பு—1. உப்புறைப்பு. 2. துவர்ப்பு. 3. வெறுக்கப்படத்தக்ககுணங்கள்; அவை: ஆசியம், இரதி, அரதி, சோகம், பயம், குற்சை என்பன. 4. வெறுப்பு. 'உறுவர்ப் பேணலுவர்ப்பின்மை' (சிந்தா. முத். உ கஅ) 5. பிறப்பு அநாதியாய்வருதலின் உயிரால் அளவின்றியீட்டப்பட்ட வினைகளின் பயன் களுள் முன்பிறப்பில் அனுபவித்தனவும் பிறந்த உடம்பின் முகந்துநின்றனவும் ஒழி யப் பின்னும் அநுபவிக்கக்கடவனவான வினைப்பயன்கள். இது ஆருகதர் வழக்கு. (குறள். 359. உரை) 6. அவாவின்மை (திவா). 7. இகழ்ச்சி (சூடா).

உவர்மண்—1. உப்புச் சேர்ந்த மண்; இது: புடைவையின் அழுக்குநீக்குதற்கு உபயோக முள்ளது. 2. களர்நிலம்.

உவரகம்—உவர்மண். (அக. நி.)

உவராகம் — கிரகணகாலம். 'உவராக மாயிரத்துக்கொப்பு' (சேதுபு. சேதுபல. 78.)

உவரி—1. கடல். 'உவரியாழ்ந்தவுடம்புவர் ...ான்போல' (சேதுபு. சக்கர. உச.) 2. மகளிர்விளையாட்டு. 3. மூத்திரம். (பிங்.) 4. உப்புநீர். 'மலைசார்ந்தும் உப்பீண்டுவரி பிறத்தலால்' (நாலடி. 245).

உவரிக்கெண்டை—ஒருவகை மீன்.

உவரோதம்—1. உவர்க்கடல். 'உவரோத நிறத்தோன்' (பாரத. பதினேன். சூ௩.) 2. இடையூறு. 'வசையபராதமாய வுபரோதம்' (தேவா. 212. 5.)

உவல்—1. தழை. 'பாசுவலிட்ட புன்காற் பந்தர்' (புறநா. உசூஉ.) 2. சருகு. 'கானவ னுவல்சுடு கமழ்புகை.' (நற். 282)

உவலை—1. ஓட்டை. 2. தழை. 'உவலைக் கண்ணி வன்சொ லிளைஞர்' (மதுரைக்கா. ௩கக.) 3. பொய். 'உவலைச் சமயங்க ளோவ் வாத சாத்திரமாம்' (திருவாச. திருத்தெள். கஎ.) 4. துன்பம். 5. வம்புச்சொல். 6. சருகு. (அகநா. 21) 7. இழிவு. 'சிறுமணிசருவலை யாக்கை'. (திவ். திருவாய். 1. 5. 8)

உவவு—1. அமாவாசை. 2. பூரணை. 'உவ வுத்திங்களை' (தணிகைப்பு. வள். உ0௯). 3. உவப்பு. 'உவவுபொன்றருகென' (விநாயகபு. 54. 12) 4. தவம். (பிங்).

உவவேசம் — இருத்தல். 'பிராயோவ வேசம்' (கூர்மபு. சூதகா. உஎ.)

உவவேசனம்—உவவேசம்.

உவள்—உயர்திணைப் பெண்பாலில்வரும் ஒரு சுட்டுப்பெயர். 'உவர்துவள் பூப்பை யுன்னு' (இரகு. குறை. ௫அ.)

உவளகம்—1. அந்தப்புரம். 'குவளையுண் கணார் நீத்தசாந் தணிமலர் கொண்டே - யுவளகந்தரு மகழிசென் றகன்கட லுறுமால்' (கந்தபு. நகர்புகு. கக.) 2. இடைச்சேரி. (பிங்) 3. உப்பளம். 'பாயுநீருவளகப்பரப்பு மெங்கணும்' (சேதுபு. கந்த. ௬உ.) 4. ஒரு பக்கம். (சீவக. 243. உரை) 5. கல்மதம். 6. குளம். 'உவளகம்புக்கதாழி' (சேதுபு. சக்கா. உச.) 7. சிறைச்சாலை. 'பல்லமாரை யுவளகந்தன்னி - விருத்தினுயென' (கந்தபு. அவைபுகு. ௬அ). 8. பள்ளம் (பிங்). 9. பிரி தல் (பிங்). 10. மதில் (திவா). 11. மதி லுறுப்பு. 12. விசாலம் (பிங்). 13. மனை வாயில். (பிங்). 14. அகழி. 'உவளகக்கண் ணுற் றுவர்க்கடலிஃதென' (குமரகுருபரர் பிரபந். திருவாரூர். ௩உ). 15. நீர்நிலை. (பிங்.)

உவளம்—1. சோறு. 2. யானைக்கவளம்.

உவளல்—துவளல்.

உவளித்தல்—தூய்மைசெய்தல் (பிங்).

உவளுதல் — 1. துவளுதல் (சூடா). 2. கம்பித்தல். 'கடலில முவளுற' (பிரமோத். 4. 46). 3. பரத்தல். 'உவள்தரு மறைபி ளேடு' (கம்பரா. திருவவ. 127.)

உவற்றுதல்-சுரக்கச்செய்தல். 'ஒண்செங் குருதி யுவற்றியுண்டருந்துபு' (அகநா. 3.)

உவறுதல்-ஊறுதல். 'உவறுநீருபரெக்கர்' (கலி. க௩௬.)

உவன்—1. உயர்திணையாண்பாலில்வரும் ஒரு சுட்டுப்பெயர். 'உய்யானேயானு முவன் போற் றளர்வேனே' (கந்தபு. மார்க்கண். கஅ). 2. மத்தியஸ்தன்.

உவன்றி–நீர்நிலை. 'வாய்த்தலைக்கும் உவன் றிக்குமாகப் பங்கொன்றும்' (S. I. I. ii. 220.)

உவன்றிசெய்தல் – நீர்நிலையுண்டாக்குதல். (S. I. I. ii. 521.)

உவனுயம் — தலைத்துக்கட்டும் மருந்து. 'ஆவின்கால்பறித் தவனுயத்தா - லேலவே பொதிந்து கானே பொழித்தனர்' (உபதேச. சிவபுண். ௩சசு.)

உவனித்தல்—1. தூய்மைசெய்தல் (பிங்). 2. ஈரமாதல். 3. எய்யத்தொடங்குதல். 'வில்லன்றே யுவனிப்பாரும்' (சீவக. 2179)

உவனிப்பு—ஈரம்.

உவனியம் — உபநயனம். 'ஓதுவாய்மையு முவனியப்பிறப்பும்' (திவ். பெரியதி. 5. 8. 7.)

உவா—1. அமாவாசை. 'உவாவின் மாதுட னுவாவினுக் கிளையவ னுவாவிற்-றிவாக ரன் மதி யாமென வருதலும்' (கந்தபு. விண்குடி. உ). 2. இளமை. வந்தன வெண்ணரை போயிற் றுவா' (திருநூற். கூ0). 3. இளையோன் (பிங்). 4. கடல் (பிங்). 5. தம்பி. 6. நிறைவு. 7. பூரணை (பிங்). 8. யானை. 'உவாவணி யூர்ந்தாயு நீ' (கலித். 97). 9. உகாமரம்.

உவாக்கள் — இளைஞர். 'வெளிறு மென் னகை மெல்லியன் மாதரு-மொளிறு மேனி யுவாக்களு மொன்றியே' (கந்தபு. தெய்வ. கஅ.)

உவாகருமம்—உபாகருமம்.

உவாத்தி—1. கற்பிப்போன், ஆசாரியன். 'ஊன்பிறங் கொளிறும் வேலா னோர்த்துத் தன் னுவாத்தி சொல்லாற்-றுன்புறங் கட்டப் பட்டு' (சிந்தா. குணமா. உச0). 2. வேத மோதுவிப்போன்.

உவாத்திகன் — உபாத்தியாயன் (மணி. 13. 4. அரும்.)

உவாத்தியன் —
உவாத்தியாயன்— } உபாத்தியாயன்.

உவாத்தியாயனி—உபாத்தியாயனி.

உவாத்தியான்—உபாத்தியாயன் (ஆசாரக். 17.)

உவாத்தினி—உபாத்தியாயனி.

உவாத்து – உபாத்தியாயன். 'பொறைக்கு உவாத்தாவாரும்' (ஈடு. 9. 8. 5.)

உவாத்தேக்கு—உகாமரம்.

உவாதி—1. எல்லை. 'காலத்துவா திதனை' (திவ். திருவாய். நூற். 33). 2. கடுந்துன்பம்.

உவாந்தம் — 1. அமாவாசை. 2. பூரணை.

உவாநாடி—கிரகணபரிசநாடி.

உவாமதி—பூரணசந்திரன். 'உவாமதி யுட லுரிஞ்சுதலால்' (நைடத. நகரப். அ.)

உவாய்—ஒரு மரம்.

உவாலம்பம் —
உவாலம்பனம்— } தூஷணை.

உவாவறுதி — அமாவாசை பூரணைகளின் முடிவு.

உவாவுதல்—நிறைதல். 'பெருமண்ணுவா வும் பேராப் பல்படை' (பெருங். உஞ்சைக். 58. 106.)

உவித்தல்—அவித்தல். 'சாந்தவிறகி னுவித்தபுன்கம்' (புறநா. கசூஅ.)

உவிதல் — 1. அவிதல். 2. சாதல். 3. வற்றுதல்.

உவியல்—சமைத்தகறி. 'நெடுவாளைப் பல் லுவியல்' (புறநா. 395.)

உவை—அஃறிணைப் பன்மைப்பாலில்வரும் ஒரு சுட்டுப்பெயர். 'ஒன்றுபுரிகாட்சி முனிவ னுவைகேட்டு' (கந்தபு. மார்க்கண். கசூ.)

உவைச்சன்—உவச்சன், பூசாரி. (S. I. I. ii. 275.)

உவையம்—இரண்டு. 'உவையம்முறுமுல கின்' (கம்பரா. நிகும். 156.)

உழ — 1. உழவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. உழவுத்தொழில் (சிந்தா.)

உழக்கல்—1. கலக்குதல் 'கண்ணகன்றபே ரகழியி னுழக்கிய கரிகள்'(நைடத.நகரப்.உ). 2. காரியநடத்தல். [வழக்]. 3. கொன்று திரிதல். 'சினஞ்சிறந்து களனுழக்கவும்' (மதுரைக்கா. சஅ). 4. சிலம்பம்பழகுதல். 5. மறுவைத்தல். 6. மிதித்தல். 'அண்ண லங் குன்றின்மேல் வருடைபாய்ந் துழக்க லின்' (சிந்தா. விமலை. கக). 7. வருந்தல். 8. உழுதல் (பிங்). 9. விளையாடுதல். 'உரவுத் திரை யுழக்கியும்' (பட்டினப். 101.)

உழக்கு—1. உழக்கென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. காற்கொத்து. 'உடற்பித்த முழக்கு' (தணிகை. அகத். 308). 3. காற்படி. 4. பிடித்துப் போகடாமற் கவறிட்டுருட்டு முழக்கு. 'குலவும் பவள வுழக்கிற் கோதைபுரளப் பாடி' (சிந்தா. குண. எஎ). 5. மிதிப்பு.

உழக்குதல்—பழகுதல் (நாகார்த்த).

உழக்குருட்டுதல்—சூதாடல்.

உழக்கோல் — தாற்றுக்கோல். 'இல்லை யாகில் உழக்கோலாலே தகர்க்கிறோம்' (ஈடு. 6. 4. 5.)

உழணி—இறைவைமரம்.